18-2

# கம்பராமாயணம்

## இராமாவதாரம்




பதிப்பாசிரியர் குழுவினரால்
ஆய்வு செய்யப்பெற்றது

கம்பன் கழகம்
சென்னை

# பதிப்புரை

1

இந்தியா விடுதலை பெற முயல்வதற்கு அதன் பழம் பெருமை மெல்ல மெல்ல வெளி வந்ததும் ஊக்கம் தந்தது, ஓருலகப் பண்பாட்டை உருவாக்கும் வகையில் அந்தப் பழம் பெருமையை வற்புறுத்துவதும் இயல்பாயிற்று. இந்தியப் பண்பாட்டின் சிறப்பு உறுப்புக்களில் ஒன்ருக அமைவது தமிழ்ப் பண்பாடு. அந்தப் பண்பாட்டின் விளக்கமே கம்பன். ''உலகம் யாவையும்'' என்று தொடங்கும் கம்பன், ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று பாடிய சங்கப் புலவர்கள் வழி வந்தவன்; ஆதலின் அவன், குகன், சுக்கிரீவன், வீடணன் ஆகியோருடன் இராமன் கொள்ளும் தொடர்பின் மூலமாக உலகப் பண்பாட்டை உருவாக்கும் இராமாயணத்தைப் பாடியுள்ளான். இந்த உண்மையை உலகிற்கு அறிவித்தல் தமிழர் கடன். இதனை மனத்திற் கொண்டே கம்பன் கழகம் தமிழ் நாட்டின் தலைநகரில் எழுந்தது.

இலக்கியக் கூட்டமாக ஆண்டுதோறும் கம்பன் விழாவைக் கொண்டாடுவதுடன், பொதுவாக இலக்கிய வகுப்புக்களையும் சிறப்பாகக் கம்பராமாயண வகுப்புக்களையும் நடத்த இக் கழகம் முடிவு செய்தது. தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்க் கலை, தமிழ் விஞ்ஞானம் என்பவற்றை ஆராய்வதுடன் கம்பன் காப்பியத்தை ஆராய்வதற்கும் ஊக்கம் தர விரும்பிற்று. இக் குறிக்கோளை நிறைவேற்றும் முறையில் பழம் பெரு நூல்களை வெளியிடுவதுடன், சிறப்பாகக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் இராம காதையைப் பதிப்பித்து வெளியிடும் கடமையை மேற்கொண்டது. முதலாண்டிலேயே கம்பராமாயணத்தைப் பதிப்பிக்கும் கடமையைக் கம்பன் கழகம் நிறைவேற்றியுள்ளமை, நினைந்து மகிழத்தக்கதாகும்.

2

உலகம் போற்றும் பாவாணர்களில் காப்பியப் புலவர்கள் தலை சிறந்து விளங்குகிருர்கள், தமிழ் நாட்டில் தோன்றிய கம்பன் அக் காப்பியப் புலவர்களின் முதல் வரிசையில் நிற்கிருன். அவன் இயற்றிய காப்பியம் 'கம்பராமாயணம்' என வழங்கினுலும், அவன் அதற்கு இட்ட பெயர் 'இராமாவதாரம்' என்பதேயாகும்.

கம்பன் தனக்கு முன் சென்ற தமிழ்ப் பாவாணர்களின் சிறப்பையெல்லாம் தன்னுடைய காப்பியத்தில் அமைத்துக்

கொண்டதால் அவன் நூலுக்கு ஒரு தனிச் சிறப்புண்டு. அதன் பயனுக, அவனுக்குப் பின்னே வந்த தமிழ்ப் பாவாணர் களும் அவன் காட்டிய வழியேதான் சென்றுள்ளார்கள். தமிழ்ப் பண்பாட்டு விளக்கமாக அவன் எழுதிய இராமா வதாரம் என்றென்றும் நிலைபெற்று நிற்கும். இராமாயணம் தமிழ் நாட்டு வரலாறு அல்லவாஞலும் கம்பன் அந்தக் கதையைச் சொல்லிக்கொண்டு போகும் முறை முழுக்க முழுக்கத் தமிழ் மரபிற்கும், தமிழ்ச் சூழலுக்கும் ஏற்றதாக விளங்குவதால், அது தமிழ்க் காப்பியமாகவே சிறக்கிறது.

தத்துவ ஞானியாகவும், கணித நூற் புலமையும், வானியல் அறிவும் பெற்றதுடன் அவற்றைப் பேசும் விஞ்ஞானியாகவும், கற்பனைத் திறம் மிகுந்த கவிஞனுகவும், சொற்களை ஆட்சி செய்யும் செஞ் சொற் கவியாகவும், இசை நுணுக்கம் பேசும் பேரறிஞனுகவும், நாட்டியக் கலை தெரி நட்டுவனுகவும், உலகியலும் பெரியோர் இயல்பும் அறிந்த அறிஞனுகவும், அரசியல் நுணுக்கம் பேசும் அரசியல் மேதையாகவும், மக்கள் மன ஆழத்தை அறிந்து பேசும் மனவியல் நிபுணனுகவும், கால, தேச வர்த்தமானங்களைக் கடந்து நிற்கும் கருத்துக் களை அள்ளி வீசும் காலங்கடந்த ஞானியாகவும் இராம காதையில் கம்பன் மிளிர்கிருன். இதனுல் கம்ப நாடன் இயற்றிய 'இராமாயணம்' எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழில் தோன்றியதிலிருந்து, சென்ற பத்து நூற்ருண்டுகட்கும் மேலாகத் தமிழ் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்து வரும் ஒப் பற்ற காப்பியமாக விளங்குகிறது. 'கம்ப நாடன் கவிதை யில் போல் கற்ருேர்க்கு இதயம் களியாதே' என்று கூறியது இன்றும் உண்மையே.

3

இத்தகைய காப்பியம் தமிழ் நாட்டில் எங்கும் பரவி இருந்தாலும் எல்லா ஏடுகளையும் பார்த்து, திருத்திய பதிப்பு ஒன்று இல்லையென்ற குறை முன்பெல்லாம் இருந்தது. அந்த நேரத்தில், அண்ணுமலைப் பல்கலைக்கழகம் கிடைத்த ஏடுகளை யெல்லாம் வைத்துக்கொண்டு பாட பேதங்களையெல்லாம் திரட்டிப் பதிப்பித்தது மாபெரும் தமிழ்த் தொண்டாகும். எனினும், எளிய விலையில், எல்லோரும் புரிந்துகொள்ளும் முறையில் சந்தி பிரித்து அச்சிட்ட பிரதி ஒன்றும் வேண்டி யிருந்தது. இத்தகைய பிரதி, திரு. எஸ். ராஜம் அவர்கள் வெளியீடாக, வழிகாட்டியாக அமையும் வகையில் மிகச் சிறந்த முறையிலே வெளி வந்தது பாராட்டத்தக்கது. ஆனுல், இந்தப் பிரதி இப்போது கிடைக்காமையால், வேருெரு

பதிப்பினை அந்த வகையில் வெளியிட வேண்டுமென்ற எண்ணம், 1975 ஜூன் திங்களில் சென்னையில் கம்பன் கழகம் தோன்றியவுடன் எழுந்தது.

இந்தப் பதிப்பை வெளிக்கொணரும் பெரிய பொறுப்பை, ''இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து, அதனை அவன்கண் விடல்'' வேண்டும் என்று நன்கு சிந்தித்து, டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுடைய தலைமையில் ஒரு பதிப்பாசிரியர் குழுவிடம் இக் கழகம் ஒப் படைத்தது. அக் குழுவினர் அடியிற்கண்ட முறையை வகுத் துக்கொண்டு இப் பதிப்பினை ஆக்கித் தந்துள்ளனர்.

பாட பேதக் களஞ்சியத்துடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு விளங்கினாலும், அவற்றில் எந்தப் பாடத்தை எந்தக் காரணத்தால் மேற்கொண்டார்கள் என்கின்ற விளக்கம் அங்கே கிடைப்பதில்லை. அவ்வாறே, 'ராஜம்' பதிப் பிலும் இந்த விளக்கம் நமக்குத் தெளிவாவதில்லை; அண்ணா மலைப் பல்கலைக்கழகப் பாட பேதக் களஞ்சியத்தில் காணாத பாடங்கள் ராஜம் பதிப்பில் இருக்கும்போது, அந்தப் பாடத் தின் மூல ஏடுகளை நாம் அறிந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம். எனவே, இந்தப் பதிப்பின் ஆசிரியர் குழு, இவற்றை முழுவதும் பின்பற்ற முடியாத நிலையில் இருந்தது.

4

பாட பேதங்களை ஆராய்ந்து முடிவு செய்வது மேல் நாட்டில் ஒரு தனிப் பேராராய்ச்சிக் கலையாகவே விளங்கி வருகிறது. 'விவிலியம்' முதலிய நூல்களில் பாட பேதங் களை ஆராய்ந்து முடிவினை எடுக்கவேண்டிய கட்டாயம் பல முறையும் எழுந்ததால், இந்தக் கலையை விஞ்ஞான முறையில் மேல் நாட்டார் உருவாக்கியுள்ளார்கள். 'மூல பாட ஆராய்வியல்' (Textual Criticism) தனிக் கலையாகவே அமைந் துள்ளது. பாட பேதங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுப்ப தென்றால் இரண்டு வகையாக அதனை அணுகலாம். ஒன்று, நம் முடைய மனத்திற்குப் பொருத்தமாக இருப்பதாகத் தோன்று வது ஒன்றனைத் தேர்ந்தெடுப்பது. ஆனால், விருப்பு வெறுப் புக்கள் எல்லோருக்கும் ஒருவகையாகவே இருக்குமென்று சொல்வதற்கில்லை. இதுவரையில் நம் நாட்டில் பாட பேதங் களை, பொருத்தமாக இருக்கிறதா என்ற கண் கொண்டுதான் தேர்ந்தெடுத்து வந்துள்ளார்கள். நாம் மேலே சுட்டிய மூல பாட ஆய்வியல் இந்த அக நிலையிலிருந்து ஆராயாமல், ஆசிரி யன் எப்படி எழுதியிருக்கக்கூடும் என்பதனைப் புற நிலையில் காண முயல்கிறது.

கம்பன் முதலில் ஓர் ஏட்டில்தான் எழுதியிருப்பான். அங்கே பாட பேதங்களுக்கு இடமில்லை. ஆனால், அவனுக்குப் பின்னே, அதனைப் பிரதி செய்தவர்கள் பல வகையால் பாட பேதங்களைத் தம்மையும் அறியாமல் நுழைத்திருக்க இடம் ஏற்பட்டது. தவறாகப் படிப்பதாலோ, கைத் தவறுத லாகவோ, வாய்த் தவறுதலாகவோ, மறதி காரணமாகவோ இப்படி மாற்றங்கள் எழலாயின. ஒரு பிரதியின் பின் ஒரு பிரதி காலந்தோறும் எழுந்தபோது மாறுதல்கள் பல்கின. கைத் தவறுகள் ஒரு புறம் இருக்க, தமிழ் எழுத்துக்கள் காலப் போக்கில் மாறிக்கொண்டே வந்துள்ளன. 'த' என் பதில் கீழிருந்து இடம் செல்லும் கோடு இல்லாதிருந்த காலம் உண்டு. அதனைப் பின் வந்தோர் 'க' என்று படிக்க இடம் உண்டாயிற்று. ஓலையில் செல்லரிப்பதால் 'ய' என்பது 'ப என்று தோன்றலாம். மேலும் ஏடெழுதுவோர் தம் காலத்து வழக்கையே அறிந்திருப்பார்கள். ஆகையால், அதற்கு மாறான பழைய வழக்கு வருமானால், தம்மையும் அறியாது புதிய வழக்காக மாற்றி எழுதிவிடுவார்கள். 'என்' என்பது பழங்காலத் தமிழில் தன்மை ஒருமை விகுதி; அது பிற் காலத்தில் 'அன்' என்று திரிந்தது. 'வந்தனென்' எனக் கம்பன் எழுதியதைப் பின்வந்தோர் 'வந்தனன்' எனப் படிப்பதும், பிரதி செய்வதும் இயல்பே. இத்தகைய மாறு தல்களை மனத்தில்கொண்டு மூல பாடத்தைக் கண்டுபிடிக்க முயன்றார்கள்.

வேறுபட்ட பிரதிகள் இருக்கும்போது, எந்தெந்த இடங் களிலிருந்து பிரதிகள் வந்தனவோ அவற்றை இடம் வாரியாக வரிசைப்படுத்துதலை ஒரு முறையாக மேனாட்டார் கொண் டார்கள். இனம் இனமாகப் பிரிந்த பின்பு, அவை ஒவ் வொன்றுக்குள்ளே ஏற்பட்ட மாறுதல்களைக் கூடியவரையில் விளக்க முடியுமா என்று ஆராய்ந்து, ஒவ்வொரு இனத்திலும் மூலமாக எது அமைந்திருக்குமென்று முடிவு செய்ய முயன் றனர். பின்னர், ஒவ்வோர் இனத்தின் மூல பாடத்தையும் ஆராய்ந்து, ஆசிரியன் எழுதிய ஏட்டின் மூல பாடத்தை வரையறுக்க முயன்றனர். இப்படி ஏடுகளின் குடிவழி (Geneological Tree) ஒன்றினை வரையறுத்துக் காண்பது எளிதாகிறது.

கம்பன் எழுதிய ஏடு தாய் ஏடு. அதனைப் பார்த்து எழுதிய ஏடுகள் மகள் ஏடுகள். மகள் ஏடுகளைப் பார்த்து எழுதிய ஏடுகள் பேர்த்தி ஏடுகள். இப்படியே கொள் பேர்த்தி ஏடுகள், எள் பேர்த்தி ஏடுகள் எனப் பல்கிப்

பெருகின. ஒரு தலைமுறை ஏடுகள் பின் தலைமுறை ஏடுகளை விட ஒற்றுமை மிக்கு விளங்கும். ஒரு தலைமுறை ஏடுகளுக் குள்ளும் வேற்றுமை ஏற்படலாம். அவை எழுந்த இடத்தின் காரணமாக—சோழ மண்டலம், பாண்டி மண்டலம், தொண்டை மண்டலம் ஈழ மண்டலம், சேர மண்டலம் என்பன பேச்சுத் தமிழில் வேறுபடுவது போல—வேறுபட லாம். வேறுபாடுகளின் எண்ணிக்கையைக் கொண்டும், ஒற்றுமைகளின் எண்ணிக்கையைக் கொண்டும் தலைமுறையாக இனம் பிரித்து வகை செய்யலாம். இனம் பிரித்த பின், மேலே கூறிய காரணங்களால் எழுந்த பிரதி பேதங்களை விளங்கிக் கொண்டு, அந்த இனத்தின் மூல பாடத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். இப்படியே தலைமுறை தலைமுறையாகச் சென்று, முடிவில் தாய் ஏட்டின் மூல பாடத்தை முடிவு செய்தல் வேண்டும். ஒப்பிலக்கணத்தார் பல மொழிகளின் மூல மொழியின் வடிவை முடிவு செய்வது போன்ற ஓர் ஆராய்ச்சி இது. இதனுலேயே இங்கேயும் ஏடுகளின் குடிவழி என்று பேசிக் கண்டுபிடிக்க முடிகிறது.

ஆனல், இந்த வகையில் இதுவரையில் ஒரு முயற்சி கம்ப ராமாயணத்தைப் பொறுத்தவரையில் எழவில்லையென்றே சொல்ல வேண்டும். டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையச் சுந்தர காண்டப் பதிப்பு ஒரு சிறிது இந்த வகையில் செல்ல முயல்வதுபோல் தோன்றினுலும், முற்ற முடிய இந்த முறை யைப் பின்பற்றியதென்று சொல்வதற்கில்லை. கம்ப ராமா யணப் பாட பேதங்களை எல்லாம் அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பதிப்புத் தந்திருந்தாலும் ஏடுகளைப்பற்றிய மேலே கண்ட விவரங்கள் அங்கே தரப்பெறவில்லை. ஏடுகளை மறு படியும் நேரில் கண்டு, மேலே கூறியபடி பகுத்து, காலவரை யாலும், இடவரையாலும் பிரித்தாலன்றி இந்த முறையைப் பின்பற்ற முடியாது.

5

இந்த முறையைப் பின்பற்றிப் பதிப்பிப்பதென்ருல் பதிப்பு வெளி வர நீண்ட காலமாகும். ஆனல், மிக விரைவில் இந்தப் பதிப்பைக் கொண்டு வருவதாக மக்களிடம் கம்பன் கழகம் கூறிவிட்டதாலும், கம்பன் நூல் எளிதில் இன்று கிடையாமையாலும் உடனே பதிப்பிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்த நிலையில் எத்தகைய பதிப்பினை உருவாக்க லாமென்பதே முதலில் எழுந்த கேள்வி.

பல பதிப்புக்களில் பல பாடல்கள் விடுபட்டுள்ளன. இப் பாடல்களை விடுவதற்கு ஏற்ற காரணங்கள் இருக்கலாம்.

ஆனல், அந்தக் காரணங்களை எல்லாம் அப் பதிப்புக்கள் எடுத்துக் கூறவில்லை. இந்த நிலையில் என்ன செய்வது? எல்லா ஏடுகளிலும் காணப்படுகின்ற பாடல்களை அவை அமைந்த முறையிலேயே ஒன்றையும் விடாது பதிப்பிக்க வேண்டுமென்ற முடிவு ஒன்றே தோன்றியது. சிலபல பிரதிகளில் இல்லாத பாடல்களை 'மிகைப் பாடல்கள்' என்னும் தலைப்பில் ஒவ்வொரு காண்டத்திலும் பின் இணைப்பாகத் தருவது எளிதாயிற்று. ஒரு சில பிரதிகளில் மட்டும் காணப் படாமல், பெரும்பான்மையான பிரதிகளில் உள்ள பாடல்கள் உடுக்குறியிட்டுக் (*) காட்டப்பெற்றுள்ளன. பெரும் பான்மையான பிரதிகளில் இருந்தபோதிலும் ஒரு சிலர் ஆராய்ச்சி முறையில் ஐயப்படும் பாடல்களும், எல்லாப் பிரதிகளிலும் காணப்பட்டாலும் பொருத்தமில்லாதவை போல் தோன்றும் பாடல்களும் வாட்குறி (†) இடப்பட்டுக் காட்டப்பெற்றுள்ளன. இனி, பாடலுக்குள் பாட பேதங்கள் வரும்போது பெரும்பான்மையான பிரதிகளில் காணப்பெறும் பாடத்தையே தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற முடிவு செய்யப் பெற்றது.

இந்த இரண்டு வகையிலும் ஆராயும்போது பல இடங் களில் இடர்ப்பாடுகள் தோன்றத்தான் செய்தன. இப் போது நமக்குக் கிடைக்கும் ஏடுகள் மூன்று நூற்றாண்டு களுக்கு முற்பட்டனவாக இருக்க முடியாது. இந்த நிலையில் இங்கே கொண்ட முடிவு பெரும்பான்மையும் பிற்கால வழக் கினையே வற்புறுத்துவதாக முடியும். பெரும்பான்மையான கொள்கை என்ற ஒன்றினைக் கொண்டு பின்பற்றும்போது அதுதான் உண்மையாகும் என்று கூறுவதற்கில்லை. ஆனல், நமக்கு ஏற்பட்டிருக்கின்ற இக்கட்டான நிலைமையில் இதைப் பின்பற்றுவது தவிர வேறு வழியில்லை.

மேலும் ஆராயாது, பெரும்பான்மையான கொள்கையைத் தள்ளிக் களைய நெஞ்சுரம் யாருக்கு வரும்? ஏன் இந்தப் பாட பேதம் இங்கே வருகிறதென்ற கேள்விக்குப் 'பெரும் பான்மைக் கொள்கை' என்ற எளிதான விடையை, இந்த வகையைப் பின்பற்றும்போது கூறிவிடலாம். இல்லையானல் விருப்பு வெறுப்புக்கு இடமுண்டாகும். இந்த முறையைப் பின்பற்றுவதால் ஏற்படும் குறைகளை நீக்குவதற்கு ஒரே வழி முன்னே எடுத்துக் காட்டியதுபோல் எல்லாப் பிரதிகளையும் ஆராய்ந்து அவற்றுக்கு ஒரு குடிவழி கண்டு மூல பாடத்தை முடிவு செய்தலேயாகும். அத்தகைய முயற்சியையும் மேற் கொள்ளச் சென்னைக் கம்பன் கழகம் முயலும்.

6

கம்பனில் ஈடுபாடும், அக்கறையும், பற்றும், ஆராய்ச்சியும் உள்ள தமிழ்ப் புலவர் பெருமக்கள் எந்தெந்த இடங்களில் பாட மாற்றங்கள் இன்றியமையாது வேண்டுமென்பதனை, அதற்கான காரணங்களுடன் தெரிவிப்பார்களானால், பின்னைய பதிப்பில் அந்தக் கருத்துக்களை ஆராய்ந்து முடிவெடுப்பதற்கு அந்த அறிவிப்பு உறுதுணையாக இருக்கும்.

7

கம்ப ராமாயணத்தின் இப் பதிப்பில் ஆறு காண்டங்களும் ஒரே தொகுதியாக அமைக்கப்பெற்றுள்ளன. பாடல்களின் எண்ணிக்கை, தொடர் எண்ணிக்கையாகப் பக்கத்தின் மேலே தரப்பெற்றுள்ளது. ஒவ்வொரு படலத்தின் பாடல்களின் எண்ணிக்கை பாடலுக்கு நேரே தரப் பெற்றுள்ளது. பாடல்களின் சந்தம் மாறும் இடங்களில் சந்த வேறுபாடு காட்டப் பாடலின் முதல் எழுத்து, தடித்த அச்சில் கொடுக்கப்பெற்றுள்ளது. பாடல்களெல்லாம் சொற் பிரிப்பு முறையில் பொருட் போக்கினைப் புலப்படுத்தும் நிறுத்தக் குறிகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. அரிய சொற்களுக்கு உரைக் குறிப்புக்கள் அந்தந்தப் பக்கங்களின் அடியில் இடம் பெற்றுள்ளன. விளக்கத்திற்கு வேண்டும் தனிக் குறிப்புக்களும் உரைப் பகுதியிலேயே சேர்க்கப்பெற்றுள்ளன. காவியப் பொருட் போக்கு விளங்கும் வகையில் உரிய இடங்களிலே ஏற்ற குறுந்தலைப்புகள் தரப்பெற்றுள்ளன. நூலின் முதல் பகுதியில் ‘பொருள் மாலை’ என்ற தலைப்பில் படலங்களிலுள்ள பாடல்களின் தலைப்புக்கள் ஒருசேர அமைக்கப்பெற்று, பாடல் எண்ணுடன் நூல் முழுமைக்கும் தரப்பட்டுள்ளன. கம்ப ராமாயணம் ஆறு காண்டங்களிலும் அடங்கிய படலங்களின் அகராதியும் ஈற்றில் இணைக்கப்பெற்றுள்ளது. நூலின் இறுதியில், ‘பாடல் முதற் குறிப்பு அகராதி’ எளிதிற் பயன்படுத்துவதற்கு உதவியாகப் பக்க எண் குறிப்புடன் தரப்பெற்றுள்ளது.

8

நூல் கையடக்கமாக, ஒரே புத்தக வடிவில் அமைய வேண்டுமென்பதற்காக இதற்கெனவே தயாரிக்கப்பெற்ற மெல்லிய தாளில் அச்சடிக்கப்பெற்றுள்ளது. 1976 ஜனவரித் திங்களில் இப் பணி தொடங்கப்பெற்று, இவ்வளவு விரைவில் முடிக்கப் பெற்றமைக்குப் பதிப்பாசிரியர் குழு மிக விரைவாகப் பணியை முடித்தமையும், அச்சகத்தினர் மிக விரைவில் அச்சடித்துக் கொடுத்தமையும் காரணமாகும்.

## 9

கம்பன் எல்லோருடைய இல்லங்களிலும் இருக்க வேண்டுமென்பதற்காக, கம்பன் கழகத்திற்கு என்ன விலையடக்கம் ஆகிறதோ அதற்கும் குறைவாகவே சந்தா முன் பணமாக வசூலிக்கப்பெற்றது. பதிப்பு வெளியீட்டிற்குப் பின் உண்டான விலை வேறுபாட்டின்மூலம் வரும் தொகை, இந்த இழப்பையும், ஏனைய செலவுகளையும் ஈடுகட்டும் வகையிலும், மொத்தத்தில் இலாபம், நட்டம் இன்றி இருக்கும் வகையிலும் நிர்ணயிக்கப்பெற்றுள்ளது.

## 10

இப் பதிப்பை வெளிக் கொணருதற்கு ஓர் அற நிலையம் மிகுந்த உதவியாக இருந்ததென்பதை இங்குக் கூறுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம். அவர்கள் பொருள் உதவி கொடுத்ததுமன்றி, அவர்கள் பெயரையோ அல்லது மற்றவர்கள் பெயர்களையோ பதிப்பில் வெளியிடக்கூடாதென்றும் விரும்பியதால், அவர்களது பெயரும், இப் பதிப்பு வெளிவருவதற்கு உதவியாக இருந்த பல்வேறு அற நிலையங்கள், பொது நிறுவனங்கள், பொருள் உதவி செய்த பொது மக்கள் ஆகியோருடைய பெயர்களையும் தனித்தனியே குறிப்பிட்டுக் கூறாமல், எங்களது உளங் கனிந்த நன்றியை அவர்கள் எல்லோருக்கும் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந் நூல் வெளிவருவதற்குக் காரணமாக இருந்த பதிப்பாசிரியர் குழுவிற்கும், அச்சகத்தார்க்கும் எங்களது உளம் நிறைந்த நன்றி.

சென்னை,
*14-8-1976.*

**கம்பன் கழகம்,**
சென்னை.

# படல அடைவு

92

# பொருள் மாலை

## பால காண்டம்



---

* பொருள்-தலைப்புகளை அடுத்து வரும் எண்கள் பாடல் எண்கள்

## அயோத்தியா காண்டம்

அல்லள்; பரதன் உரிமைக்கு ஆகான்' என்றல் 49; கோசலையின் நிலை 50; கோசலையின் பெருந் துயர் 53; தயரதன் புலம்பல் 54; மன்னனைத் தேற்றி, வசிட்டன் அகல்தல் 66; தயரதன் நிலை 67; கணவன் நிலை கண்டு கோசலை அரற்றல் 68; தயரதன் கோசலை யிடம் 'இராமன் வருவானோ?' எனக் கேட்டு மனம் அழிதல் 70; தயரதன் கோசலைக்குச் சாப வரலாறு கூறுதல் 72; வசிட்ட முனிவன் அரசவை சேர்தல் 88; முனிவனை அரசர் வினவல் 89; வசிட்டன் நிகழ்ந்தவை கூறல் 90; இராமன் காடு செல்வான் என் பதைக் கேட்ட மக்கள் நிலை 92; இலக்குவன் சீற்றம் 111; கைகேயி யின் செயலை இகழ்ந்து, இலக்குவன் போர்க் கோலம் பூண்டு திரிதல் 113; இராமன் நாண் ஒலி கேட்டு இலக்குவன்பால் வருதல் 120; இலக்குவனுடன் இராமன் உரையாடி, அவன் சீற்றத்தைத் தணித்தல் 122; இராமன் இலக்குவனோடு சுமித்திரை கோயிலை அடைதல் 138; சுமித்திரையின் துன்பமும் இராமனின் தேறுதல் மொழியும் 139; கைகேயியின் ஏவல் மகளிர் மரவுரி எடுத்து வருதல் 142; மரவுரியை இலக்குவன் பெற்று, தாயை வணங் குதல் 144; சுமித்திரை இலக்குவனுக்குச் சொன்ன அறிவுரை 146; இராம-இலக்குவர் சுமித்திரைபால் விடை பெறல் 148; இலக்கு வனைப் பெற்றோர்க்குத் துணையாக இருக்குமாறு வேண்டல் 149; இலக்குவன் மறுமொழி 151; இராமன் வாய் திறவாது நெகிழ்ந்து நிற்றல் 156; வசிட்டன் வந்து வருத்தம் மேலிட மொழிதல் 157; வசிட்டனின் வருத்தமும் சிந்தனையும் 158; வசிட்டன், இராமனைக் கான் ஏகாது தடுக்க முயலுதலும் அவன் மறுமொழியும் 161; இராமன் புறப்பாடு 165; மக்கள் கொண்ட துயரம் 166; அரசன் தேவியர் அழுகை 174; இராமன் தன் மனையை நோக்கிச் செல்லுதல் 181; இராமனைக் கண்டார் உற்ற வருத்தம் 183; நகரின் பொலிவழிவு 199; இராமன் சீதைபால் சேரலும் அவள் துணுக் கமுற்று எழுதலும் 213; சீதை, 'உற்றது என்?' என இராமனை வினுதல் 215; இராமன் மறுமொழி 217; சீதையின் வருத்தம் 218; இராமன், 'கானத்தின் வெம்மையை உன் கால்கள் தாங்கா' எனல் 221; சீதை, 'நின் பிரிவினும் சுடுமோ, பெருங்காடு?' எனல் 222; இராமன் சிந்தனை 223; சீதை, மரவுரி உடுத்து இராமன் அருகில் வந்து நிற்றல் 224; சீதையின் செயலைக் கண்டோர் வருந்துதல் 225; 'உடன் வருதல் இடர் தரும்' என்ற இராமனுக்கு சீதையின் மாற்றம் 227; மூவரும் போகும் முறை 230; நகர மாந்தர் இராமனைப் பின் தொடர்தல் 231; இராமன், தாயரைக் கும்பிட்டு, மன்னனை ஆற்றுமாறு கூறுதல் 232; தாய்மார் வாழ்த்துதல் 233; மூவரும் தேர் ஏறிச் சேல்லுதல் 234.

5 **தைலம் ஆட்டு படலம் 302**

யாவரும் தொடர்ந்து வர, இராமன் தேரில் செல்லுதல் 1; சூரியன் மறைய, இரவு தோன்றல் 3; இராமன் முனிவருடன் உறைதல் 7; உடன் வந்த சேனை, சோலையைச் சூழ்ந்துள்ள இடங்களில் தங்கு தல் 8; பலரும் துயில்கொள்ளுதல் 10; சுமந்திரனை இராமன் அழைத்து, தேருடன் நகர் திரும்புமாறு வேண்டுதல் 17; 'வெறுந் தேருடன்சென்று, யாது கூறுவேன்!' எனச் சுமந்திரன் வருந்துதல்19; பெருந் துயரால் பூமியில் புரண்ட சுமந்திரனை இராமன் எடுத்து அணைத்து, பேசுதல் 26; சீதையைச் சுமந்திரன் நோக்க, அவள்

வணங்கிக் கூறல் 34; குகன், இராமன் உறைந்த இடத்தைப் பரத னுக்குக் காட்டுதல் 38; இராமன் உறங்கிய இடம் கண்ட பரதனது செயலும் சிந்தனையும் 39; 'இராமன் துயில, இலக்குவன் யாது செய்தான்? எனக் குகனை வினவி அறிதல் 41; இலக்குவன் நிலை கேட்டு, பரதன் தன்னை நொந்து உரைத்தல் 43; கங்கையின் தென் கரை சேர்க்குமாறு, குகனைப் பரதன் வேண்டுதல் 44; குகன் கட்டளையிட, நாவாய்கள் வருதல் 45; படைகள் கங்கையைக் கடத்தல் 47; மாதர்கள் ஓடத்தில் செல்லுதல் 54; நாவாய்கள் சென்று சென்று மீளும் காட்சி 57; முனிவர் வான் வழியே கங்கை யைக் கடத்தல் 61; பரிவாரங்கள் சென்றபின், பரதன் நாவாயில் ஏறுதல் 62; பரதன் குகனுக்குக் கோசலையை அறிமுகப்படுத்தல் 64; பரதன் கோசலைக்குக் குகனை அறிமுகப்படுத்தல் 65; சுமித்திரை யைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்தல் 67; கைகேயியை, 'யார்?' எனக் குகன் வினவ, பரதன் மொழிதல் 68; கைகேயியைக் குகன் வணங்கத் தோணியும் தென்கரை சேர்தல் 70; தாயர் சிவிகையில் வர, பரதன் முதலியோர் நடந்து செல்லுதல் 71; பரதனைப் பரத்துவாச முனிவன் எதிர்கொள்ளுதல் 72.

13 திருவடி சூட்டு படலம் 379

பரதன் வணங்க, முனிவன் ஆசி கூறி, அவன் வருகை பற்றி வினு தல் 1; பரதன் உரை கேட்டு, முனிவன் மகிழ்தல் 3; பரதன் சேனைக்குப் பரத்துவாசன் விருந்து செய்தல் 6; பரதன் மட்டும் காய் கிழங்கு உண்டு, புழுதியில் வதிதல் 17; கதிரவன் தோன்ற, பரதன் படைகள் சென்று, பாலையைச் சார்தல் 18; படைகள் சித்திரகூடத்தைச் சேர்தல் 24; இலக்குவன், பரதன் சேனையைக் கண்டு, சீற்றமுறுதல் 26; இலக்குவன் போர்க்கோலம் பூண்டு, வீர உரை பகர்தல் 29; இராமன், இலக்குவனை மறுத்துக் கூறுதல் 42; சேனையை நிறுத்திவிட்டு, தம்பியோடு பரதன் இராமனை அணுகு தல் 48; பரதனது நிலையை நோக்கிய இராமன், இலக்குவனிடம் கூறுதல் 49; இலக்குவன் நெஞ்சழிந்து கண்ணீர் வடித்து நிற்றல் 51; பரதன் இராமனின் மலரடி பணிதல் 52; இராமன் பரதனைத் தழுவுதல் 54; தந்தை இறந்தமை கேட்டு, இராமன் சோர்ந்து உள்ளம் கலங்குதல் 56; இராமன் புலம்பல் 60; இராமனைப் பலரும் தாங்க, வசிட்டன் தேற்றுதல் 67; தந்தைக்கு நீர்க்கடன் செய்யுமாறு வசிட்டன் கூறுதல் 78; இராமன் நீர்க்கடன் செய்து, சாலைக்கு மீள்தல் 80; சீதையின் பாதங்களில் விழுந்து பரதன் அரற்றுதல் 83; இராமன், சீதைக்குத் தந்தை இறந்தமை கூறல் 84; சீதையின் துயரம் 86; முனி பத்தினியர் சீதையை நீராட்டி, இராமனிடம் சேர்த்தல் 88; தாயரும் சுமந்திரனும் இராமனிடம் வருதல் 89; இராமனும் தாய்மாரும் அழ, யாவரும் வருந்துதல் 90; தாயர், சானகியைத் தழுவிக்கொண்டு வருந்துதல் 92; யாவரும் இராமனை வந்தடைய, சூரியனும் மறைதல் 93; மறுநாள் யாவரும் தன்னைச் சூழ்ந்திருக்க, இராமன் பரதனை 'விரத வேடம்' குறித்து வினவுதல் 95; பரதன் தன் கருத்தை விளக்கி உரைத்தல் 97; பர தன் வேண்டுகோளை இராமன் மறுத்துரைத்தல் 104; 'அரசு நின்னதே', என்ற இராமனுக்கு, பரதன், 'அவ்வாறுயின் யான் தர, நீ முடி சூடு' எனல் 112; பரதனை அரசாளுமாறு இராமன் ஆணை யிடல் 114; மறுமொழி கூறத்தொடங்கிய பரதனை விலக்கி,

## ஆரணிய காண்டம்

## சுந்தர காண்டம்

## யுத்த காண்டம்

தரன், இராவணனுக்குச் சொல்லிய உறுதி மொழிகள் 34; மகோ தரனை இராவணன் புகழ்தல் 42; இராவணன் ஏவ, வீரர்கள் கும்ப கருணனைத் துயில் எழுப்புதல் 43; எழுந்த கும்பகருணன் உணவு முதலியன உட்கொள்ளுதல் 59; கும்பகருணன் தோற்றம் 62; இராவணன் முன் சென்று கும்பகருணன் வணங்குதல் 70; தம்பி யைத் தழுவி, உணவு அளித்துப் போர்க்கோலம் செய்தல் 72; 'போர்க்கோலம் செய்தது ஏன்?' என, கும்பகருணன் வினவுதல் 77; கும்பகருணனைப் போர் செய்ய இராவணன் ஏவுதல் 78; கும்பகரு ணன் அறிவுரை 79; இராவணன் சினமொழி 90; 'இது பொறுத்தி' என்று கூறி, கும்பகருணன் போருக்கு எழுதல் 94; கும்பகருண னோடு பெரும்படை செல்லுமாறு இராவணன் பணித்தல் 99; படைகளின் பெருக்கம் 101; கும்பகருணன் தேரில் ஏறுதல் 104; ஆயுதங்களும் உணவு முதலியனவும் சேனைகள் சுமந்து செல்லுதல் 105; கும்பகருணனை, 'இவன் யார்?' என, வீடணனிடம் இராமன் வினவல் 109; வீடணன், கும்பகருணனது தன்மையை எடுத்துரைத்தல் 114; சுக்கிரீவன், கும்பகருணனை உடன்சேர்த்துக் கொள்ளுதல் நலம் எனல் 127; கும்பகருணனை அழைத்து வர வீடணன் செல்லுதல் 128; கும்பகருணன், 'வந்தது தகுதி அன்று' என வீடணனுக்குக் கூறுதல் 130; இராமனைச் சரண்புகுமாறு வீட ணன் கும்பகருணனுக்கு உரைத்தல் 139; கும்பகருணன் மறுப் புரை 154; வீடணன் விடை பெறுதல் 167; வீடணன் செல்லுதல் கண்டு, கும்பகருணன் கண்ணீர் உதிர்த்து நிற்றல் 169; வீடணன் உரையைக் கேட்ட இராமன் கூற்று 170; அரக்கர் சேனை வானர சேனையை வளைத்தல் 172; கும்பகருணன் போர் தொடங்குதல் 176; நீலன் பொருது தோற்றல் 184; நீலன் தளர்ந்தது கண்டு, அங்கதன் வந்து பொருதல் 187; கும்பகருணன்-அங்கதன் உரையாடல் 191; அங்கதன் எறிந்த தண்டு பல துண்டமாதல் 195; அங்கதன் தோல்வியுற, அனுமன் அங்கு வந்து எதிர்த்தல் 196; அனுமன் போர் செய்து நிற்க, அங்கதனை வானரர் எடுத்துச் செல்லுதல் 199; அனும-கும்பகருணர் வஞ்சினம் 200; கும்பகருணன் வலிமை கண்டு அனுமன் அப்பால் போதல் 202; குரக்குச் சேனையின் அழிவு 204; இலக்குவன் கும்பகருணனுடன் போரிடுதல் 208; இலக்குவன் வில் ஆண்மையைக் கும்பகருணன் வியத்தல் 228; அனுமன் தோள்மேல் இலக்குவன் ஏறிச் சென்று பொருதல் 230; கும்பகரு ணன் வீரவார்த்தையும், இலக்குவன் மறுமொழியும் 234; இரு வரும் செய்த பெரும்போர் 237; கும்பகருணனும் இலக்குவனும் தரையில் நின்று பொருதல் 245; கும்பகருணன் சுக்கிரீவனோடு போர் விளைத்தல் 254; சுக்கிரீவன்மேல் கும்பகருணன் எறிந்த சூலத்தை அனுமன் முறித்தல் 259; கும்பகருணன், அனுமனைப் போருக்கு அறை கூவ, அனுமன் மறுத்தல் 262; மீண்டும் சுக்கிரீ வனும் கும்பகருணனும் பொருதல் 264; உணர்வு இழந்த சுக்கி ரீவனைக் கும்பகருணன் எடுத்துச் செல்லுதல் 268: அனுமன் கை பிசைந்து கும்பகருணன் பின்போதல் 273; இராமன் கும்பகருணன் செல்லும் வாயிலை அடைத்தல் 275; கும்பகருணன் இராமனைக் காணுதல் 278; கும்பகருணன் இராமனை இடித்துரைத்தல் 280; இராமன் வஞ்சினம் 286; கும்பகருணன் குருதியால் சுக்கிரீவன் மயக்கம் தெளிதல் 288; சுக்கிரீவன் கும்பகருணன் மூக்கையும் காதையும் கடித்துச் செல்லுதல் 290; சுக்கிரீவனைக் கண்டு,

வானரர் அவனைப் பற்றுதலும் 45; இராமன், வானரரை விலக்கி, 'வந்தது ஏன்?' என, மயிடன், இலக்குவனிடமே சொல்ல வேண்டும்' எனல் 46; இலக்குவன் வினவ, தூதன் தான் வந்த செய்தி உரைத்தல் 48; இராமன் இலக்குவனைப் போர்க்குச் செல்லுமாறு பணித்தல் 53; வீடணன் அதிகாயனது திறத்தைக் குறித்துக் கூறியவை 54; வீடணன் உரைத்த அதிகாயனது பூர்வ சரிதம் 66; இராமன் இலக்குவனது வலிமையைத் தெரிவித்தல் 76; வீடணனை உடன் சென்று போரைக் காண இராமன் ஏவுதல் 81; இலக்குவன் வீடணனும் உடன் வர, போர்க்களம் புகுதல் 86; இரு பக்கத்துச் சேனைகளும் நெருங்கிப் பொருதல் 87; சிதறிய வானரர்க்குத் தேறுதல் கூறி, இலக்குவன் விற்போர் விளைத்தல் 100; இலக்குவன் அம்பினால் அழிந்துபட்ட படுகளத்தின் நிலை 106; தாருகன் என்பவன் இலக்குவனுடன் பொருது இறத்தல் 120; இலக்குவன், காலன் முதலிய ஐவரைக் கொல்லுதல் 123; இலக்குவன், அதிகாயன் படையுடன் பொருதல் 125; இராவணன் அனுப்பிய யானைப் படையை இலக்குவன் அழித்தல் 147; அனுமன் யானைப் படையை அழித்தல் 155; தேவாந்தகன் அனுமனோடு பொருது இறத்தல் 164; அதிகாயன்-அனுமன் வீர உரை 171; அனுமன், 'திரிசிரனையும் அழை' என்று கூறல் 175; திரிசிரத்தான் வர, அனுமன் அவனோடு பொருதல் 176; திரிசிரத்தானை அழித்து, அனுமன் மேல்திசை வாயில் சேருதல் 177; அதிகாயன் இலக்குவனுடன் பொரத் தேரைச் செலுத்துதல் 178; அங்கதன் தோள்மேல் நின்று இலக்குவன் பொருதல் 181; இலக்குவன் வினவும், அதிகாயன் மறுமொழியும் 187; இலக்குவன் புன்முறுவலுடன், அதிகாயனோடு பொருதல் 190; காற்றரசன், 'இவன் நான்முகன் படையால் இறப்பான்' எனலும், இலக்குவன் அப்படையால் அதிகாயன் தலையை அறுத்தலும் 204; வீடணன், 'இந்திரசித்தும் இறப்பது உறுதியே' என்று எண்ணுதல் 207; நராந்தகன் அங்கதனுடன் பொருது வீழ்தல் 208; போர்மத்தன் நீலனுடன் பொருது மாள்தல் 214; வயமத்தன்-இடபன் போர் 227; சுக்கிரீவனும் கும்பனும் பொருதல் 236; கும்பன் மாண்டதும், நிகும்பன் உருத்து வர அங்கதன் எதிர்த்தல் 247; நிகும்பன் எடுத்த சூலத்தைத் தடுத்து, அனுமன் கொல்லுதல் 249; அதிகாயனும் பிறரும் இறந்தமையைத் தூதர் இராவணனுக்கு அறிவித்தல் 260; இராவணன் நிலையும் செயலும் 262; தானியமாலி இராவணன் அடியில் விழுந்து, அரற்றுதல் 265; தானியமாலியை உருப்பசியும் மேனகையும் அரண்மனைக்குக் கொண்டு போதல் 273; இலங்கையிலுள்ளார் யாவரும் வருந்துதல் 274.

**18 நாகபாசப் படலம் 1249**

அரக்கியர் அழுவது கண்டு, இந்திரசித்தன் எழுதல் 1; இந்திரசித்தன்-இராவணன் உரையாடல் 3; இந்திரசித்தன் போர்க்கோலம் பூண்டு, களம் புகுதல் 15; 'வருபவன் யார்' என இலக்குவன் வினவலும், வீடணன் விடையும் 27; அனுமன் இலக்குவனை அடைதல் 33; சுக்கிரீவன் முதலியோர் இலக்குவனுக்குத் துணையாக வருதல் 35; இரு திறப் படைகளும் பொருதல் 36; நீலன் முதலிய வானர வீரர் போர்த் திறம் 54; இந்திரசித்தன் பெரும்

போர் நிகழ்தல் 12; மகரக்கண்ணன் வஞ்சினம் 15; மகரக் கண்ணன்-இராமன் போர் 19; மகரக்கண்ணன் மடிதலும் மாயை அகல்தலும் 29; குருதிக் கண்ணன், சிங்கன் வீழ்ச்சி 32.

21 பிரமாத்திரப் படலம் 1316

இராவணன் இந்திரசித்தை அழைத்தல் 1; தந்தையைத் தேற்றி இந்திரசித்தன் போர்க்களம் செல்லுதல் 3; இந்திரசித்து நாண் ஒலி செய்தல் 12; வானர சேனையின் ஓட்டம் 15; அனுமன்-அங்கர் தோள்களில் முறையே இராம-இலக்குவர் 18; இராம-இலக்குவரின் போர்த்திறன் 22; போர் நிகழ்ச்சியை இந்திர சித்தன் வியந்து நோக்குதல் 27; இந்திரசித்தன் தனியனுகப் பொருதல் 37; இலக்குவன் வஞ்சினம் 39; இராமன் பாராட்டு 44; இராமனைத் தொழுது, இலக்குவன் போருக்கு எழுதல் 46; இலக்குவன் தன் வஞ்சினம்பற்றிக் கூறுதல் 62; இந்திரசித்தன் மறுமொழி 63; இலக்குவன் மாற்றுரை 67; இந்திரசித்தன்-இலக்குவன் கடும்போர் 68; இலக்குவன் வெற்றிக்கு வானரர் ஆர்த்தல் 79; இலக்குவன், அயன் படை தொடப்புக, இராமன் தடுத்தல் 80; இந்திரசித்தன் தெய்வப் படையைவிட எண்ணி மறைதல் 82; இராவணி கருத்து உணராத இராம-இலக்குவர் போர்க்கோலம் களைதல் 85; இந்திரசித்தன் இராவணனுக்குத் தன் திட்டத்தைக் கூறல் 91; மகோதரன் போர்க்குச் செல்லல் 97; அரக்கர்க்கும் வானரர்க்கும் நிகழ்ந்த பெரும் போர் 105; கும்ப கருணன் களத்தில் இட்ட தண்டைக் கொண்டு அனுமன் பொருதல் 113; அனுமன்-அகம்பன் போர் 122; அனுமன் முதலியோர் ஒருவரை ஒருவர் காணாது திகைத்தல் 140; அனுமனைத் தழுவி, இலக்குவன் சேனையின் நிலைமை உசாவுதல் 152; அனுமன் மறுமொழி 154; இலக்குவன், சிவன் படை தொடுத்தல் 156; தூதர், இராவணனுக்கும் இந்திரசித்திற்கும் செய்தி கூறல் 160; இந்திரசித்தன் பிரமாத்திரம் ஏவ வேள்வி செய்தல் 162; பிரமாத் திரத்துடன் வானில் மறைந்திருத்தல் 164; மகோதரன் இந்திர வடிவுடன் வந்து பொருதல் 166; இலக்குவன், அனுமனை முனிவர் முதலியோர் பொரும் காரணம் வினவல் 169; இந்திரசித்தன் பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் விடுதலும் அதன் விளைவு களும் 170; இந்திரசித்தன் தந்தையின் இருப்பிடம் சென்று செய்தி சொல்லுதல் 185; 'இராமன் இறந்திலனே?' என்ற இராவணன் வினவும் இந்திரசித்தன் விடையும் 186; இராமன் தெய்வப் படைகளுக்கு வழிபாடு இயற்றிப் போர்க்களம் புகுதல் 188; இராமன், வீழ்ந்து கிடக்கும் சுக்கிரீவன் முதலி யோரைத் தனித் தனி கண்டு வருந்துதல் 190; இலக்குவனைக் கண்டு இராமன் அடைந்த துயரம் 197; சிறிது உணர்வு பெற்ற இராமன் இலக்குவனைக் குறித்துப் புலம்புதல் 205; தேவர்கள் இராமனுக்கு உண்மை உணர்த்துதல் 221; இராவணனிடம் தூதர், 'உன் பகை முடிந்தது' என அறிவித்தல் 229.

22 சீதை களம் காண் படலம் 1349

வெற்றி விழாக் கொண்டாட இராவணன் கட்டளையிடுதல் 1; மாய்ந்த அரக்கர் உடலைக் கடலில் தள்ளல் 2; சீதையைக் களத்

36 இராவணன் வதைப் படலம் 1504

இராமன் தேரில் செல்லுதல் 1; தேரை இராமன் எதிரே விடுமாறு இராவணன் சாரதிக்குக் கூறுதல் 3; இராமன் கருத்துக்கு இயைய மாதலி தேர் ஓட்டுதல் 6; மகோதரனை, இராவணன், 'இலக்குவனோடு போர் செய்' எனல் 8; மகோதரன் இராமனுடன் பொருது மடிதல் 10; மகோதரன் இறந்தபின் இராவணன், இராமனொடு பொர விரைதல் 16; எதிர் எதிரே நிற்கும் இராம-இராவணர் தோற்றம் 24; இராம-இராவணப் போர் தொடக்கம் 32; இராவணன் சின மொழி 44; இராவணன் அம்பு எய்தலும், இராமன் தடுத்தலும் 46; இராமனும் இராவணனும் ஒத்துச் செரு விளைத்தல் 53; இராமன், அரக்கன் படைக்கலங்களைத் தடுத்தல் அன்றிப் போர் செய்யாமை 70; இராமன் தேர்க் கொடியை இராவணன் அறுத்தல் 74; இராமனின் குதிரைகள்மீதும், மாதலிமீதும் இராவணன் சரம் விடுத்தல் 76; மாதலி மார்பில் அம்பு தைத்தமை கண்டு, இராமன் வருந்துதல் 77; இராமனை இராவணன் அம்புகள் மறைத்தல் 78; இராமன், இராவணன் தேர்க் கொடியை வீழ்த்தல் 83; இராவணன் தாமதப் படையை விடுதலும், அதன் தன்மையும் 89; இராமன், சிவன் படையை விட்டு, தாமதப் படையைத் தொலைத்தல் 93; இராவணன் ஆசுரப் படையும், இராமன் அக்கினிப் படையும் 95; மயன் படையும் கந்தருவக் கணையும் 101; தண்டும் அம்பும் 104; இராவணன் மாயையின் படையை விட, இறந்த அரக்கர் எழுந்து ஆரவாரித்தல் 108; இராமன் ஞானக் கணை விடுத்தல் 120; இராவணன் சூலம் கொண்டு வீசுதல் 124; இராமன் அம்புகள் சூலப்படையை அழிக்க முடியாமல் போக, அவன் உங்காரத்தால் அழித்தல் 128; இராமனை 'வேத முதல்வனோ' என இராவணன் கருதுதல் 133; நிருதிப்படையும் கருடக் கணையும் 135; இராவணன் விஞ்சைகள் தளர்தலும், இராமன் வீரமும் வலியும் மிகுதலும் 146; இராமன், இராவணன் தலையை அறுத்தல் 147; இராவணனது கையை இராமன் அறுக்க, அது மீட்டும் முளைத்தல் 153; இராவணன் மாதலியைத் தாக்குதல் 156; இராவணன் தலைகள் அறுபட்டுச் சிதறி வீழ்தல் 160; இராவணன் மேனியை இராமன் முற்றும் அம்பினால் மூடுதல் 166; இராவணன் தேரில் உணர்வு இழந்து கிடக்க, சாரதி தேரினை விலக்கி நிறுத்தல் 169; மாதலி இராவணனைக் கொல்லத் தூண்டலும், இராமன் நீதியன்று எனலும் 172; உணர்வு பெற்ற இராவணன், சாரதியைச் சினத்தல் 174; சாரதி தந்த விளக்கம் 178; இராமன், இராவணன் வில்லைத் துண்டித்தல் 183; அயன் படையால் இராவணன் உயிர் இழத்தல் 193; இறந்த இராவணன் முகப் பொலிவு 198, இராமன், இராவணன் உடம்பைப் பார்த்தல் 200; இராவணன் புறப்புண் கண்ட இராமன் முறுவலித்தல் 204; வீடணன் வருந்திக் கூறுதல் 208; இராவணனுக்கு இறுதிக் கடன் செய்ய வீடணனை ஏவுதல் 214; வீடணன், இராவணன் மேனிமேல் விழுந்து அரற்றுதல் 216; வீடணன் புலம்பல் 218; வீடணன் தேறுதல் 225; மண்டோதரியும் அரக்கியரும் இராவணன் கிடக்கும் இடம் அடைதல் 226; அரக்கிமார் அழுகை 230; மண்டோதரி இராவணன் மார்பில் விழுந்து புலம்புதல் 235; மண்டோதரி உயிர் பிரிதல் 243; வீடணன், யாவர்க்கும் உரிய கடன்களை இயற்றி, இராமனை அடைதல் 247.

37 மீட்சிப் படலம் 1541

இராமன் ஆணைப்படி இலக்குவன் வீடணனுக்கு முடி சூட்டுதல் 1; வணங்கிய வீடணனை இராமன் தழுவி, நீதிகள் உரைத்தல் 11; சீதைக்குச் செய்தி சொல்லி வர, இராமன் அனுமனை அனுப்புதல் 14; அனுமன் சீதையிடம் செய்தி கூறுதல் 15; சீதை மறுமொழி 26; அனுமன் விருப்பும் சீதையின் மறுப்பும் 30; இராமன், வீடணனை நோக்கி, 'தேவியைச் சீரோடும் தா' எனல் 37; கோலம் புனைந்து வருக என வீடணன் கூறல் 39; சீதை, இங்கு இருந்த தன்மையில் வருதலே தக்கது எனல் 40; வீடணன் வற்புறுத்தல் 41; வான மாதர்கள் சீதைக்குக் கோலம் புனைதல் 42; சீதையை இராமனிடம் வீடணன் அழைத்து வருதல் 47; இராமன் கோலம் கண்ட சீதை அனுமன் உதவியைப் பாராட்டல் 55; சீதை இராமனைத் தொழுது, ஏக்கம் நீங்குதல் 58; இராமன் சீதையை அமைய நோக்குதல் 60; சீதையை இராமன் கடிந்து உரைத்தல் 61; இராமனின் சுடுமொழி கேட்ட சீதையின் துயர நிலை 70; சீதை தான் வேண்டியபடி இலக்குவன் அமைத்த தீயை அணுகுதல் 78; சீதை தீயிடைப் புகுதல் 84; சீதை எரியால் வாட்டமுறாது விளங்குதல் 86; அக்கினி தேவன் முறையீடும், இராமன் வினவும் 89; அக்கினி தேவன் மறுமொழி 91; சீதையை இராமன் ஏற்றுக் கொள்ளல் 96, பிரமன், இராமனது உண்மை நிலை உணர்த்துதல் 98; சிவபெருமான் இராமனுக்கு உண்மையை உணர்த்துதல் 112; இராமனைத் தெருட்டுமாறு துறக்கத்திலுள்ள தயரதனுக்குச் சிவபெருமான் பணித்தல் 114; பூதலம் வந்த தயரதன் - இராமன் உரையாடல் 115; வணங்கிய சீதைக்குத் தயரதன் தேறுதல் கூறுதல் 120; தயரதன் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுதல் 124; தயரதன், வரம் கேள் எனலும் இராமன் கேட்ட வரமும் 127; கைகேயியின்மேல் தயரதன் கொண்ட கோபம் தணிதல் 130; இராமன் தேவர்களிடம் வரம் வேண்டல் 133; இராமன் விரைந்து செல்ல விமானம் வேண்டல் 141; இராமன், சீதை இலக்குவன் முதலியோருடன் விமானத்தில் ஏறித் துணைவர்க்கு விடை தரல் 145; துணைவர் முடிசூட்டு விழாக் காண அனுமதி வேண்டலும் இராமன் இசைதலும் 152; யாவரும் புட்பகத்தின் மேல் ஏறுதல் 156; வழிக் காட்சிகளைச் சீதைக்கு இராமன் காட்டுதல் 162; சேதுவைக் காட்டி அதன் தூய்மையைப் புகழ்தல் 166; பரத்துவாசன் ஆச்சிரமத்தில் இராமன் இறங்குதல் 181; பரத்துவாசனது உபசரிப்பு 183; அனுமனைப் பரதன்பால் அனுப்புதல் 200; நந்தியம்பதியில் பரதன் இருந்த நிலை 203; சோதிடர், 'இராமன் வரவேண்டிய நாள் இன்று' எனல் 208; இராமன் வாராமையால் பரதன் அவலமுறுதல் 210; பரதன் சத்துருக்கனை அழைத்தல் 215; பரதன் வரம் வேண்டுதல் 217; கேட்ட சத்துருக்கன் வருந்தி, நொந்து உரைத்தல் 219; பரதன் எரி அமைக்கப் பணித்தல் 223; கோசலை விரைந்து வருதல் 224; கோசலை பரதனைத் தடுத்துக் கூறுதல் 226; கோசலையின் உரையைப் பரதன் மறுத்தல் 234; அனுமன், பரதன் முன் தோன்றி எரியை அவித்தல் 237; இராமனது மோதிரத்தை அடையாளம் காட்டல் 243; மோதிரம் பெற்ற பரதன் நிலை 246; பரதன் அனுமனைப் பாராட்டி, 'நீ யார்?' எனல் 252; அனுமன் தன் வரலாறு கூறுதல் 254; அனுமனுக்குப் பரதன் பரிசு கொடுத்

# பாயிரம்

### கடவுள் வணக்கம்

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார்—அவர்
தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே. 1

சிற்குணத்தர் தெரிவு அரு நல் நிலை
எற்கு உணர்த்த அரிது; எண்ணிய மூன்றனுள்
முற் குணத்தவரே முதலோர்; அவர்
நற்குணக் கடல் ஆடுதல் நன்றுஅரோ. 2

ஆதி, அந்தம், அரி என, யாவையும்
ஓதினர், அலகு இல்லன, உள்ளன,
வேதம் என்பன—மெய்ந் நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றிலர்—பற்று இலார். 3

### அவையடக்கம்

ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு
பூசை, முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற்றேன்—மற்று, இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதைஅரோ! 4

நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்—எனை!—
வைத வைவின் மராமரம் ஏழ் துளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய் தவன் சொல் நின்ற தேயத்தே. 5

வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எய்தவும், இது இயம்புவது யாது எனின்,—
பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக் கவி மாட்சி தெரிக்கவே. 6

1. அலகு இலா - முடிவிலாத; 2. சிற்குணத்தர் - ஞானியர்; முற் குணத்தவர் - சாத்துவிக குணமுடையவர்; 4. பூசை - பூனை; காசு - குற்றம்; கொற்றம் - வெற்றி; 5. நூற்கலுற்றேன் - நூல் செய்யத் தொடங்கினேன்; வைவு - சாபம்; தவன் - தவத்தையுடைய வால்மீகி; 6. வையம் - உலகம்; இயம்புவது - சொல்லுவது; தெரிக்க - தெரிவிக்க.

துறை அடுத்த விருத்தத் தொகைக் கவிக்கு
உறை அடுத்த செவிகளுக்கு ஓதில், யாழ்
நறை அடுத்த அசுண நன் மாச் செவிப்
பறை அடுத்தது போலும்—என் பா அரோ. 7

முத்தமிழ்த் துறையின் முறை நோக்கிய
உத்தமக் கவிஞர்க்கு ஒன்று உணர்த்துவென்:—
'பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்,
பத்தர் சொன்னவும், பன்னப் பெறுபவோ?' 8

அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள்
தறையில் கீறிடின், தச்சரும் காய்வரோ?
இறையும் ஞானம் இலாத என் புன் கவி,
முறையின் நூல் உணர்ந்தாரும், முனிவரோ? 9

**நூல் வரலாறு**

தேவபாடையின் இக் கதை செய்தவர்
மூவர்ஆனவர் தம்முளும், முந்திய
நாவினன் உரையின்படி, நான் தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திய பண்புஅரோ. 10

**காவியம் பிறந்த களம்**

நடையின்நின்று உயர் நாயகன் தோற்றத்தின்
இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல்லூர்வயின் தந்ததே. 11

## 1 ஆற்றுப் படலம்

**மழை வளம்**

ஆசலம் புரி ஐம் பொறி வாளியும்,
காசு அலம்பு முலையவர் கண் எனும்
பூசல் அம்பும், நெறியின் புறம் செலாக்
கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்: 1

7. துறை - அகம் புறம் என்னும் பொருட் கூறுபாடு; நறை - தேன்; அசுணம் - இசையறி விலங்கு; 8. பன்ன - ஆராய; 9. இறை - சிறிது; 10. தேவபாடை - வடமொழி; மூவர் - வால்மீகி, வசிட்டர், போதாயனர்; 11. தோற்றம் - அவதாரங்கள்; தோம் - குற்றம்.

1: 1. ஆசலம் - சஞ்சலம், குற்றமும் துன்பமும்; வாளி - அம்பு; நெறியின் புறம் - தீநெறி.

நீறு அணிந்த கடவுள் நிறத்த வான்
ஆறு அணிந்து சென்று, ஆர்கலி மேய்ந்து, அகில்
சேறு அணிந்த முலைத் திருமங்கைதன்
வீறு அணிந்தவன் மேனியின் மீண்டதே. 2

பம்பி மேகம் பரந்தது, 'பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்;
அம்பின் ஆற்றுதும்' என்று, அகன்குன்றின்மேல்,
இம்பர் வாரி எழுந்தது போன்றதே. 3

புள்ளி மால் வரை பொன் எனல் நோக்கி, வான்,
வெள்ளி வீழ் இடை வீழ்த்தெனத் தாரைகள்,
உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈயும் அவ்
வள்ளியோரின், வழங்கின—மேகமே. 4

**வெள்ளப்பெருக்கு**

மானம் நேர்ந்து, அறம் நோக்கி, மனு நெறி
போன தண் குடை வேந்தன் புகழ் என,
ஞானம் முன்னிய நான்மறையாளர் கைத்
தானம் என்ன, தழைத்தது—நீத்தமே. 5

தலையும் ஆகமும் தாளும் தழீஇ, அதன்
நிலை நிலாது, இறை நின்றது போலவே,
மலையின் உள்ள எலாம் கொண்டு மண்டலால்,
விலையின் மாதரை ஒத்தது—அவ் வெள்ளமே. 6

மணியும், பொன்னும், மயில் தழைப் பீலியும்,
அணியும் ஆனை வெண்கோடும், அகிலும், தண்
இணை இல் ஆரமும், இன்ன கொண்டு ஏகலான்,
வணிக மாக்களை ஒத்தது—அவ் வாரியே. 7

பூ நிரைத்தும், மென் தாது பொருந்தியும்,
தேன் அளாவியும், செம் பொன் விராவியும்,
ஆனை மா மத ஆற்றொடு அளாவியும்,
வான வில்லை நிகர்த்தது—அவ் வாரியே. 8

2. வான் - மேகம்; ஆர்கலி - கடல்; வீறு - பிறிதொன்றற்கில்லாத பேரழகு; 3. பம்பி - நெருங்கி; நம்பன் - சிவன்; மாதுலன் - மாமன் ஆகிய இமயமலை; அம்பு - நீர்; 4. புள்ளி - மதிப்பு; மால்வரை - இமயமலை; வீழ் - விழுது; 5. மானம் - நிலையில் தாழாத பெருமை; மனுநெறி போன - மனு வழியில் நடக்கின்ற; முன்னிய - கருதிய; 7. வாரி - வெள்ளம்; 8. விராவி - கலந்து; அளாவி - சேர்ந்து.

மலை எடுத்து, மரங்கள் பறித்து, மாடு
இலை முதல் பொருள் யாவையும் ஏந்தலான்,
அலை கடல்-தலை அன்று அணை வேண்டிய
நிலையுடைக் கவி நீத்தம்—அந் நீத்தமே. 9

ஈக்கள் வண்டொடு மொய்ப்ப, வரம்பு இகந்து
ஊக்கமே மிகுந்து, உள் தெளிவு இன்றியே,
தேக்கு எறிந்து வருதலின்,—தீம் புனல்—
வாக்கு தேன் நுகர் மாக்களை மானுமே. 10

பணை முகக் களி யானை பல் மாக்களோடு
அணி வகுத்தென ஈர்த்து, இரைத்து ஆர்த்தலின்,
மணி உடைக் கொடி தோன்ற வந்து ஊன்றலான்,
புணரிமேல் பொரப் போவது போன்றதே. 11

**சரயு நதியின் தன்மையும் போக்கும்**

இரவிதன் குலத்து எண் இல் பல் வேந்தர்தம்
பரவு நல் ஒழுக்கின் படி பூண்டது,—
சரயு என்பது—தாய் முலை அன்னது, இவ்
உரவுநீர் நிலத்து ஓங்கும் உயிர்க்கு எலாம். 12

கொடிச்சியர் இடித்த சுண்ணம், குங்குமம், கோட்டம், ஏலம்,
நடுக்குறு சந்தம், சிந்தூரத்தொடு நரந்தம், நாகம்,
கடுக்கை, ஆர், வேங்கை, கோங்கு, பச்சிலை, கண்டில் வெண்ணெய்,
அடுக்கலின் அடுத்த தீந் தேன், அகிலொடு நாறும் அன்றே. 13

எயினர் வாழ் சிறூர் அப்பு மாரியின் இரியல் போக்கி,
வயின் வயின், எயிற்றி மாதர், வயிறு அலைத்து ஓட, ஓடி,
அயில் முகக் கணையும் வில்லும் வாரிக் கொண்டு, அலைக்கும் நீரால்,
செயிர் தரும் கொற்ற மன்னர் சேனையை மானும் அன்றே. 14

9. மாடு - பக்கம்; கவி - குரங்கு; 10. தேக்கு எறிதல் - தேக்க மரங்களை முரித்தல், ஏப்பமிடல்; வாக்கு தேன் - வாக்கப்படுகின்ற கள்; மானும் - ஒக்கும்; 11. ஈர்த்து - இழுத்து; இரைத்து - ஒலி செய்து; ஊன்றல் - தங்குதல்; 12. இரவி - சூரியன்; உரவுநீர் - கடல்; 13. கொடிச்சியர் - குறிஞ்சி நில மகளிர்; சுண்ணம் - வாசனைப் பொடி; கோட்டம் - ஒரு மணப் பொருள்; சிந்தூரம் - வெட்சிப்பூ; நாகம் - சுரபுன்னை; கடுக்கை - கொன்றை; கண்டில் வெண்ணெய் - ஒருவகைப் பூண்டு; 14. எயினர் - பாலை நிலத்து ஆடவர்; அப்பு - அம்பு, நீர்; இரியல் போக்கி - அஞ்சி ஓடச் செய்து; அயில் முகம் - கூரிய முனை; செயிர் - போர்.

செறி நறுந் தயிரும், பாலும், வெண்ணெயும், சேந்த நெய்யும்,
உறியொடு வாரி உண்டு, குருந்தொடு மருதம் உந்தி,
மறி விழி ஆயர் மாதர் வனை துகில் வாரும் நீரால்,
பொறி வரி அரவின் ஆடும் புனிதனும் போலும் அன்றே. 15

கதவினை முட்டி, மள்ளர் கை எடுத்து ஆர்ப்ப எய்தி,
நுதல் அணி ஓடை பொங்க, நுகர் வரி வண்டு கிண்ட,
ததை மணி சிந்த உந்தி, தறி இறத் தடக் கை சாய்த்து,
மத மழை யானை என்ன, மருதம் சென்று அடைந்தது அன்றே. 16

முல்லையைக் குறிஞ்சி ஆக்கி, மருதத்தை முல்லை ஆக்கி,
புல்லிய நெய்தல்தன்னைப் பொரு அரு மருதம் ஆக்கி,
எல்லையில் பொருள்கள் எல்லாம் இடைதடுமாறும் நீரால்,
செல்லுறு கதியின் செல்லும் வினை என, சென்றது அன்றே. 17

காத்த கால் மள்ளர் வெள்ளக் கலிப் பறை கறங்க, கைபோய்ச்
சேர்த்த நீர்த் திவலை, பொன்னும் முத்தமும் திரையின் வீசி,
நீத்தம் ஆன்று, அலைய ஆகி நிமிர்ந்து, பார் கிழிய நீண்டு,
கோத்த கால் ஒன்றின் ஒன்று குலம் எனப் பிரிந்தது அன்றே. 18

கல்லிடைப் பிறந்து, போந்து, கடலிடைக் கலந்த நீத்தம்,
'எல்லை இல் மறைகளாலும் இயம்ப அரும் பொருள் ஈது' என்னத்
தொல்லையில் ஒன்றே ஆகி, துறைதொறும், பரந்த சூழ்ச்சிப்
பல் பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல், பரந்தது அன்றே. 19

தாது உகு சோலைதோறும், சண்பகக் காடுதோறும்,
போது அவிழ் பொய்கைதோறும், புது மணல்—தடங்கள்தோறும்,
மாதவி வேலிப் பூக வனம்தொறும், வயல்கள்தோறும்,
ஓதிய உடம்புதோறும் உயிர் என, உலாயது அன்றே. 20

15. செறிதல் - உறைதல்; மறி - மான்; அரவின் ஆடும் புனிதன் - கண்ணபிரான்; 16. கதவு - மதகின் கதவு, யானைப் பந்தியின் கதவு; மள்ளர் - உழவர், வீரர்; நுதல் - முன்பக்கம், நெற்றி; ஓடை - நீர்நிலை, நெற்றிப் பட்டம்; மணி - இரத்தினம், அடிக்கும் மணி; தறி - வெள்ளம் தடுக்கும் குதிரை மரம், கட்டுத்தறி; தடக்கை - பெரிய அலையாகிய கை, துதிக்கை; 17. எல்லையில் பொருள் - எல்லைக்கு உட்பட்ட பொருள், அளவில்லாத பொருள்; 18. கறங்க - ஒலிக்க; 19. தொல்லையில் - தொடக்கத்தில்; துறை தொறும் - இடங்கள்தோறும்; சூழ்ச்சி - ஆராய்ச்சி. 20. தாது - மகரந்தம்; போது - அலரும் பருவத்து அரும்பு; தடங்கள் - தடாகங்கள்; மாதவி - குருக்கத்திக்கொடி; பூக வனம் - கமுகந்தோட்டம்.

## 2 நாட்டுப் படலம்

**கோசல நாட்டு வளம்**

வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி என்பான்,
தீம் கவி, செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்;
ஆங்கு, அவன் புகழ்ந்த நாட்டை, அன்பு எனும் நறவம் மாந்தி,
மூங்கையான் பேசலுற்றான் என்ன, யான் மொழியலுற்றேன். 1

வரம்பு எலாம் முத்தம்; தத்தும் மடை எலாம் பணிலம்; மா நீர்க்
குரம்பு எலாம் செம் பொன்; மேதிக் குழி எலாம் கழுநீர்க் கொள்ளை;
பரம்பு எலாம் பவளம்; சாலிப் பரப்பு எலாம் அன்னம்; பாங்கர்க்
கரம்பு எலாம் செந் தேன்; சந்தக் கா எலாம் களி வண்டு ஈட்டம். 2

**மருத நில மாட்சி**

ஆறு பாய் அரவம், மள்ளர் ஆலை பாய் அமலை, ஆலைச்
சாறு பாய் ஓதை, வேலைச் சங்கின் வாய்ப் பொங்கும் ஓசை,
ஏறு பாய் தமரம், நீரில் எருமை பாய் துழனி, இன்ன
மாறு மாறு ஆகி, தம்மில் மயங்கும்—மா மருத வேலி. 3

தண்டலை மயில்கள் ஆட, தாமரை விளக்கம் தாங்க,
கொண்டல்கள் முழவின் ஏங்க, குவளை கண் விழித்து நோக்க,
தெண் திரை எழினி காட்ட, தேம் பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட,—மருதம் வீற்றிருக்கும் மாதோ. 4

தாமரைப் படுவ, வண்டும் தகை வரும் திருவும்; தண் தார்க்
காமுகர்ப் படுவ, மாதர் கண்களும் காமன் அம்பும்;
மா முகில் படுவ, வாரிப் பவளமும் வயங்கு முத்தும்;
நாமுதல் படுவ, மெய்யும் நாம நூல் பொருளும் மன்னோ. 5

நீரிடை உறங்கும் சங்கம்; நிழலிடை உறங்கும் மேதி;
தாரிடை உறங்கும் வண்டு; தாமரை உறங்கும் செய்யாள்;
தூரிடை உறங்கும் ஆமை; துறையிடை உறங்கும் இப்பி;
போரிடை உறங்கும் அன்னம்; பொழிலிடை உறங்கும் தோகை. 6

**2 :** 1. மூங்கையான் - ஊமை; 2. தத்தும் மடை - நீர் பாயும் மதகு; பணிலம் - சங்கு; குரம்பு - செய்கரை; 3. ஆலை - கரும்பாலை; வேலை - நீர்க்கரை; வேலி - எல்லை; அரவம், அமலை, ஓதை, ஓசை, தமரம், துழனி என்பன ஒலி வகை; 4. தண்டலை - சோலை; கொண்டல்கள் - மேகங்கள்; முழவு - மத்தளம்; எழினி - திரைச்சீலை; 5. திரு - திருமகள்; நாம நூல் - புகழ் வாய்ந்த நூல்; 6. தார் - பூ; செய்யாள் - இலக்குமி; தூர் - சேறு; இப்பி - முத்துச்சிப்பி; போர் - நெற்போர்; தோகை - மயில்.

படை உழ எழுந்த பொன்னும், பணிலங்கள் உயிர்த்த முத்தும்,
இடறிய பரம்பில் காந்தும் இன மணித் தொகையும், நெல்லின்
மிடை பசுங் கதிரும், மீனும், மென் தழைக் கரும்பும், வண்டும்,
கடைசியர் முகமும், போதும்,—கண்மலர்ந்து ஒளிரும் மாதோ. 7

தெள் விளிச் சிறியாழ்ப் பாணர் தேம் பிழி நறவம் மாந்தி,
வள் விசிக் கருவி பம்ப, வயின் வயின் வழங்கு பாடல்,
வெள்ளி வெண் மாடத்து உம்பர், வெயில் விரி பசும் பொன் பள்ளி,
எள்ள அருங் கருங் கண் தோகை இன் துயில் எழுப்பும் அன்றே. 8

ஆலைவாய்க் கரும்பின் தேனும், அரி தலைப் பாளைத் தேனும்,
சோலை வீழ் கனியின் தேனும், தொடை இழி இருலின் தேனும்,
மாலைவாய் உகுத்த தேனும்,—வரம்பு இகந்து ஓடி, வங்க
வேலைவாய் மடுப்ப—உண்டு, மீன் எலாம் களிக்கும் மாதோ. 9

பண்கள் வாய் மிழற்றும் இன் சொல் கடைசியர் பரந்து நீண்ட
கண், கை, கால், முகம், வாய் ஒக்கும் களை அலால் களை இலாமை,
உண் கள் வார் கடைவாய் மள்ளர், களைகலாது உலாவி நிற்பர்;—
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ, சிறியோர் பெற்றால்? 10

புதுப் புனல் குடையும் மாதர் பூவொடு நாவி பூத்த
கதுப்பு உறு வெறியே நாறும், கருங் கடல் தரங்கம்; என்றால்,
மதுப் பொதி மழலைச் செவ் வாய், வாள்–கடைக் கண்ணின் மைந்தர்
விதுப்பு உற நோக்கும், அன்னார் மிகுதியை விளம்பலாமே? 11

வெண் தளக் கலவைச் சேறும், குங்கும விரை மென் சாந்தும்,
குண்டலக் கோல மைந்தர் குடைந்த, நீர்க் கொள்ளை, சாற்றின்,
தண்டலைப் பரப்பும், சாலி வேலியும், தழீஇய வைப்பும்,
வண்டல் இட்டு ஓடு மண்ணும்—மதுகரம் மொய்க்கும் மாதோ. 12

சேல் உண்ட ஒண் கணாரின் திரிகின்ற செங் கால் அன்னம்,
மால் உண்ட நளினப் பள்ளி, வளர்த்திய மழலைப் பிள்ளை,
கால் உண்ட சேற்று மேதி கன்று உள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பால் உண்டு, துயில, பச்சைத் தேரை தாலாட்டும்—பண்ணை. 13

7. படை - கலப்பை; காந்தும் - ஒளி விடும்; கடைசியர் - உழத்தியர்; 8. தெள் விளி - தெளிந்த இசை; வள் விசிக் கருவி - மத்தளம்; 9. தொடை இழி இருல் - தாரையாக ஒழுகுகின்ற தேனடை; வங்கம் - கப்பல்; 11. நாவி - கத்தூரிக் குழம்பு; கதுப்பு - கூந்தல்; வெறி - மணம்; விதுப்பு - விருப்பம்; 12. வைப்பு - இடம்; 13. சேல் உண்ட - சேல் மீனை வென்ற; மால் உண்ட - பெருமை தங்கிய; கால் உண்ட - காலிற்பட்ட.

குயில் இனம் வதுவை செய்ய, கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை
அயில் விழி மகளிர் ஆடும் அரங்கினுக்கு அழகு செய்ய,
பயில் சிறை அரச அன்னம் பல் மலர்ப் பள்ளிநின்றும்
துயில் எழ, தும்பி காலைச் செவ்வழி முரல்வ—சோலை. 14

மாந்தர் பொழுதுபோக்கு

பொருந்திய மகளிரோடு வதுவையில் பொருந்துவாரும்,
பருந்தொடு நிழல் சென்றன்ன இயல் இசைப் பயன் துய்ப்பாரும்,
மருந்தினும் இனிய கேள்வி செவி உற மாந்துவாரும்,
விருந்தினர் முகம் கண்டு, அன்ன விழா அணி விரும்புவாரும்; 15

கறுப்புறு மனமும், கண்ணில் சிவப்புறு சூட்டும் காட்டி,
உறுப்புறு படையின் தாக்கி, உறு பகை இன்றிச் சீறி,
வெறுப்பு இல, களிப்பின் வெம் போர் மதுகைய, வீர வாழ்க்கை
மறுப்பட ஆவி பேணா வாரணம் பொருத்துவாரும்; 16

எருமை நாகு ஈன்ற செங் கண் ஏற்றையோடு ஏற்றை, 'சீற்றத்து
உரும் இவை' என்னத் தாக்கி, ஊழுற நெருக்கி, ஒன்றாய்
விரி இருள் இரண்டு கூறாய் வெகுண்டன; அதனை நோக்கி,
அரி இனம் குஞ்சி ஆர்ப்ப, மஞ்சுற ஆர்க்கின்றாரும்; 17

முள் அரை முளரி வெள்ளி முளை இற, முத்தும் பொன்னும்
தள்ளுற, மணிகள் சிந்த, சலஞ்சலம் புலம்ப, சாலில்
துள்ளி மீன் துடிப்ப, ஆமை தலை புடை சுரிப்ப, தூம்பின்-
உள் வரால் ஒளிப்ப,—மள்ளர் உழு பகடு உரப்புவாரும்; 18

கடல் வாணிகம்

முறை அறிந்து, அவாவை நீக்கி, முனிவுழி முனிந்து, வெஃகும்
இறை அறிந்து, உயிர்க்கு நல்கும், இசை கெழு வேந்தன் காக்கப்
பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப் பூதலம்தன்னில், பொன்னின்
நிறை பரம் சொரிந்து, வங்கம், நெடு முதுகு ஆற்றும், நெய்தல். 19

14. செவ்வழி - ஒருவகைப் பண், மாலையில் பாடப்படுவது; வண்டு மது உண்ட மயக்கத்தால் மாறிப் பாடியது; முரல்வ - பாடுவன; 15. மாந்துவார் - உட்கொள்ளுவார்; அன்ன விழா - அன்னம் கொடுத்தலாகிய சிறப்பு; 16. சூட்டு - உச்சிக் கொண்டை; மதுகைய - வலிமையுடையன; வாழ்க்கை மறுப்பட - வாழ்க்கை மறுப்படுமாயின்; 17. உரும் - இடி; ஊழுற - பகையுற, முறைமையாக; அரி - வண்டு; குஞ்சி - தலைமயிர்; 18. முளரி - தாமரை; சலஞ்சலம் - ஒருவகைச் சங்கு; புடை - பக்கத்தில் உள்ள உறுப்புகள்; சுரிப்ப - உள் வாங்க; தூம்பு - மதகு; 19. இறை - வரி; பரம் - பாரம்; சொரிந்து - இறக்கிவிட்டு.

உழவரின் உயரிய வாழ்க்கை

எறிதரும் அரியின் சும்மை எடுத்து வான் இட்ட போர்கள்
குறிகளும் போத்தின் கொல்வார்; கொன்ற நெல் குவைகள் செய்வார்;
வறியவர்க்கு உதவி, மிக்க, விருந்து உண மனையின் உய்ப்பார்,
நெறிகளும் புதைய, பண்டி நிறைத்து, மண் நெளிய ஊர்வார். 20

கதிர் படு வயலின் உள்ள, கடி கமழ் புனலின் உள்ள,
முதிர் பயன் மரத்தின் உள்ள, முதிரைகள் புறவின் உள்ள,
பதிபடு கொடியின் உள்ள, படி வளர் குழியின் உள்ள,—
மதுவளம் மலரில் கொள்ளும் வண்டு என—மள்ளர், கொள்வார். 21

முந்து முக் கனியின், நானு முதிரையின், முழுத்த நெய்யின்,
செந் தயிர்க் கண்டம், கண்டம், இடை இடை செறிந்த சோற்றின்,
தம் தம் இல் இருந்து, தாமும், விருந்தொடும், தமரினோடும்,
அந்தணர் அமுத உண்டி அயிலுறும் அமலைத்து எங்கும். 22

செல்வப் பொலிவு

பருவ மங்கையர் பங்கய வாள் முகத்து
உருவ உண் கணை, 'ஒண் பெடை ஆம்' எனக்
கருதி, அன்பொடு காமுற்று, வைகலும்,
மருத வேலியின் வைகின, வண்டுஅரோ. 23

வேளை வென்ற முகத்தியர் வெம் முலை,
ஆளை, நின்று முனிந்திடும், அங்கு ஓர் பால்;
பாளை தந்த மதுப் பருகி, பரு
வாளை நின்று மதர்க்கும் மருங்கு எலாம். 24

ஈர நீர் படிந்து, இந் நிலத்தே சில
கார்கள் என்ன, வரும், கரு மேதிகள்;
ஊரில் நின்ற கன்று உள்ளிட, மென் முலை
தாரை கொள்ள, தழைப்பன சாலியே. 25

20. எறிதரும் - அரிந்த; சும்மை - தொகுதி; போத்து - கடா; குவை - குவியல்; பண்டி - வண்டி; ஊர்வார் - செலுத்துவார்; 21. முதிரை - துவரை முதலிய பருப்பினங்கள்; குழி - பாத்தி; 22. கண்டம் - வெல்லக்கட்டி; 24. வேளை வென்ற - மன்மதனையும் இச்சை வயத்தனுக்கித் தோல்வி அடைவித்த; 25. சாலி - நெற்பயிர்.

முட்டு இல் அட்டில், முழங்குற வாக்கிய
நெட்டுலைக் கழுநீர் நெடு நீத்தம்தான்,
பட்ட மென் கமுகு ஓங்கு படப்பை போய்,
நட்ட செந் நெலின் நாறு வளர்க்குமே. 26

சூட்டுடைத் துணைத் தூ நிற வாரணம்
தாள்-துணைக் குடைய, தகை சால் மணி
மேட்டு இமைப்பன; 'மின்மினி ஆம்' எனக்
கூட்டின் உய்க்கும், குரீஇயின் குழாம்அரோ. 27

தோயும் வெண் தயிர் மத்து ஒலி துள்ளவும்,
ஆய வெள் வளை வாய்விட்டு அரற்றவும்,
தேயும் நுண் இடை சென்று வணங்கவும்,
ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார். 28

தினைச் சிலம்புவ, தீம் சொல் இளங் கிளி;
நனைச் சிலம்புவ, நாகு இள வண்டு; பூம்
புனல் சிலம்புவ, புள் இனம்; வள்ளியோர்
மனைச் சிலம்புவ, மங்கல வள்ளையே. 29

நால் நில வளமை

குற்ற பாகு கொழிப்பன—கோள் நெறி
கற்றிலாத கருங் கண் நுளைச்சியர்
முற்றில் ஆர முகந்து, தம் முன்றிலில்,
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.* 30

துருவை மென் பிணை ஈன்ற துளக்கு இலா
வரி மருப்பு இணை வன் தலை ஏற்றை வான்
உரும் இடித்தெனத் தாக்குறும் ஒல் ஒலி
வெருவி, மால் வரைச் சூல் மழை மின்னுமே. 31

கன்றுடைப் பிடி நீக்கிக் களிற்றினம்
வன் தொடர்ப் படுக்கும், வன வாரி சூழ்
குன்றுடைக் குல மள்ளர் குழூஉக் குரல்,
இன் துணைக் களி அன்னம் இரிக்குமே. 32

26. முட்டு - குறைபாடு; அட்டில் - அடுக்களை; வாக்கிய - வடிக்கப்பட்ட; 27. வாரணம் - கோழி; குரீஇ - குருவி; 28. ஆய - அழகிய; 29. வள்ளை - உலக்கைப்பாட்டு; 30. குற்ற - நெரித்த; பாகு - பாக்கு; கோள் நெறி - களவு நெறி; முற்றில் - சிறு சுளகு; 31. துருவை - செம்மறி ஆடு; 32. வாரி - யானை பிடிக்கும் குழி; இன் துணை - இனிய பெட்டை.

வள்ளி கொள்பவர் கொள்வன, மா மணி;
துள்ளி கொள்வன, தூங்கிய மாங்கனி;
புள்ளி கொள்வன, பொன் விரி புன்னைகள்;
பள்ளி கொள்வன, பங்கயத்து அன்னமே. 33

கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்
கன்று உறக்கும்—குரவை, கடைசியர்,
புன் தலைப் புனம் காப்புடைப் பொங்கரில்
சென்று இசைக்கும்—நுளைச்சியர் செவ்வழி. 34

சேம்பு கால் பொரச் செங்கழுநீர்க் குளத்
தூம்பு கால, சுரி வளை மேய்வன—
காம்பு கால் பொர, கண் அகல் மால் வரை,
பாம்பு நான்றெனப் பாய் பசுந் தேறலே. 35

மங்கையர் மாண்பு

பெருந் தடங் கண் பிறைநுதலார்க்கு எலாம்,
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்,
விருந்தும், அன்றி, விளைவன யாவையே? 36

அறச்சாலை

பிறை முகத் தலை, பெட்பின், இரும்பு போழ்,
குறை நறைக் கறிக் குப்பை, பருப்பொடு,
நிறை வெண் முத்தின் நிறத்து அரிசிக் குவை,
உறைவ—கொட்பின ஊட்டிடம் தோறெலாம். 37

நல்லன கொள்ளலும் அல்லன தள்ளலும்

கலம் சுரக்கும், நிதியம்; கணக்கு இலா,
நிலம் சுரக்கும், நிறை வளம்; நல் மணி
பிலம் சுரக்கும்; பெறுதற்கு அரிய தம்
குலம் சுரக்கும், ஒழுக்கம்—குடிக்கு எலாம். 38

33. வள்ளி - வள்ளிக்கிழங்கு; துள்ளி - தேன் துளி; புள்ளி - புள்ளியாக விழும் தாதுகள்; 34. புன் தலைப் புனம் - புன்செய்ப் பயிர் விளையும் புனங்கள்; பொங்கர் - சோலை; நுளைச்சியர் - நெய்தல் நில மகளிர்; 35. காம்பு - மூங்கில்; நான்றென - தொங்குவது போல; தேறல் - தேன்; 37. பெட்பின் - விருப்பத்தோடு; கொட்பின - ஆரவாரத்தையுடைய; ஊட்டிடம் - அன்ன சத்திரம்; 38. கலம் - மரக்கலம்; பிலம் - சுரங்கம்.

கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லை, தம் சிந்தையின் செம்மையால்;
ஆற்றல் நல் அறம் அல்லது இலாமையால்,
ஏற்றம் அல்லது, இழித்தகவு இல்லையே. 39

நெறி கடந்து பரந்தன, நீத்தமே;
குறி அழிந்தன, குங்குமத் தோள்களே;
சிறிய, மங்கையர் தேயும் மருங்குலே;
வெறியவும், அவர் மென் மலர்க் கூந்தலே. 40

பல்வகைப் புகைகள்

அகில் இடும் புகை, அட்டில் இடும் புகை,
நகல் இன் ஆலை நறும் புகை, நான்மறை
புகலும் வேள்வியில் பூம்புகையோடு அளாய்,
முகிலின் விம்மி, முயங்கின எங்கணும். 41

நங்கையர் அழகும் இயற்கை எழிலும்

இயல் புடைபெயர்வன, மயில்; மணி இழையின்
வெயில் புடைபெயர்வன, மிளிர் முலை; குழலின்
புயல் புடைபெயர்வன, பொழில்; அவர் விழியின்
கயல் புடைபெயர்வன, கடி கமழ் கழனி. 42

இடை இற, மகளிர்கள், எறி புனல் மறுகக்
குடைபவர், துவர் இதழ் மலர்வன, குமுதம்;
மடை பெயர் அனம் என மட நடை, அளகக்
கடைசியர் முகம் என மலர்வன, கமலம். 43

விதியினை நகுவன, அயில் விழி; பிடியின்
கதியினை நகுவன, அவர் நடை; கமலப்
பொதியினை நகுவன, புணர் முலை; கலை வாழ்
மதியினை நகுவன, வனிதையர் வதனம். 44

பகலினொடு இகலுவ, படர் மணி; மடவார்
நகிலினொடு இகலுவ, நளி வளர் இளநீர்;
துகிலினொடு இகலுவ, சுதை புரை நுரை; கார்
முகிலினொடு இகலுவ, கடி மண முரசம். 45

39. கூற்றம் - காலமல்லா இறப்பு; ஆற்றல் - செய்தல்; 40. வெறிய - மணம் உள்ளன; 41. முயங்கின - சேர்ந்து பரவின; 42. இயல் - சாயல்; 44. விதி - உவமையாக விதிக்கப்படும் பொருள்கள், பிரமன்; பொதி - குவிந்து மூடியுள்ள அரும்பு; 45. இகலுவ - மாறுபடுவன; கடி மணம் - கலியாணம்.

**கலை வளர்ச்சியும் காட்சிப் பொருள்களும்**

காரொடு நிகர்வன, கடி பொழில்; கழனிப்
போரொடு நிகர்வன, புணர்மலை; அணை சூழ்
நீரொடு நிகர்வன, நிறை கடல்; நிதி சால்
ஊரொடு நிகர்வன, இமையவர் உலகம். 46

நெல் மலை அல்லன—நிரை வரு தரளம்;
சொல் மலை அல்லன—தொடு கடல் அமிர்தம்;
நல் மலை அல்லன—நதி தரு நிதியம்;
பொன் மலை அல்லன—மணி படு புளினம். 47

பந்தினை இளையவர் பயில் இடம்,—மயில் ஊர்
கந்தனை அனையவர் கலை தெரி கழகம்,—
சந்தன வனம் அல, சண்பக வனம் ஆம்;
நந்தன வனம் அல, நறை விரி புறவம்; 48

கோகிலம் நவில்வன, இளையவர் குதலைப்
பாகு இயல் கிளவிகள்; அவர் பயில் நடமே
கேகயம் நவில்வன; கிளர் இள வளையின்
நாகுகள் உமிழ்வன, நகை புரை தரளம். 49

பழையர்தம் மனையன, பழ நறை; நுகரும்
உழவர்தம் மனையன, உழு தொழில்; புரியும்
மழவர்தம் மனையன, மணஒலி; இசையின்
கிழவர்தம் மனையன, கிளை பயில் வளை யாழ். 50

கோதைகள் சொரிவன, குளிர் இள நறவம்;
பாதைகள் சொரிவன, பரு மணி கனகம்;
ஊதைகள் சொரிவன, உறை உறும் அமுதம்;
காதைகள் சொரிவன, செவி நுகர் கனிகள். 51

இடம் கொள் சாயல் கண்டு, இளைஞர் சிந்தைபோல்,
தடங் கொள் சோலைவாய், மலர் பெய் தாழ் குழல்
வடம் கொள் பூண் முலை மடந்தைமாரொடும்
தொடர்ந்து போவன—தோகை மஞ்ஞையே. 52

46. புணர்மலை - கூட்டமான மலை; 47. புளினம் - மணல்மேடு; 48. இளையவர் – இளமங்கையர்; புறவம் - காடு; 49. கேகயம் - மயில்; நகை - பல்; 50. பழையர் - கள் விற்போர்; இசையின் கிழவர் - பாணர்; 51. பாதைகள் - மரக்கலங்கள்; உறை - துளி.

வறுமை இன்மையும் வளப் பெருக்கமும்

வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்;
திண்மை இல்லை, ஓர் செறுநர் இன்மையால்;
உண்மை இல்லை, பொய் உரை இலாமையால்;
வெண்மை இல்லை, பல் கேள்வி மேவலால். 53

எள்ளும், ஏனலும், இறுங்கும், சாமையும்,
கொள்ளும் கொள்ளையில் கொணரும் பண்டியும்,
அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டியும்,
தள்ளும் நீர்மையின், தலைமயங்குமே. 54

உயரும் சார்வு இலா உயிர்கள் செய் வினைப்
பெயரும் பல் கதிப் பிறக்குமாறுபோல்,
அயிரும், தேனும், இன் பாகும், ஆயர் ஊர்த்
தயிரும், வேரியும், தலைமயங்குமே. 55

விழாவும் வேள்வியும்

கூறு பாடலும், குழலின் பாடலும்,
வேறு வேறு நின்று இசைக்கும் வீதிவாய்,
'ஆறும் ஆறும் வந்து எதிர்ந்த ஆம்' என,
சாறும் வேள்வியும் தலைமயங்குமே. 56

மூக்கில் தாக்குறும் மூரி நந்தும், நேர்
தாக்கின் தாக்குறும் பறையும், தண்ணுமை
வீக்கின் தாக்குறும் விளியும்,—மள்ளர் தம்
வாக்கின் தாக்குறும் ஒலியில் மாயுமே. 57

ஆடவர் மகளிர் ஒழுக்கத்தால் அறம் நிலைபெறுதல்

தாலி ஐம்படை தழுவு மார்பிடை
மாலை வாய் அமுது ஒழுகு மக்களைப்
பாலின் ஊட்டுவார் செங் கை, பங்கயம்
வால் நிலா உறக் குவிவ மானுமே. 58

53. வெண்மை - விளக்கம், விளங்கிய அறிவு; 54. ஏனல் - செந்தினை; இறுங்கு - சோளம்; அமுது - உப்பு; 55. பல்கதி - பல பிறப்பு; மக்கள், தேவர், நரகர், விலங்கு; அயிர் - கண்ட சருக்கரை; வேரி - கள்; 56. சாறு - திருவிழா; வேள்வி - திருமணம்; 57. தாக்கு - குறுந்தடி; தண்ணுமை - மத்தளம்; தாக்குறும் ஒலி - அதட்டும் ஓசை; 58. தாலி ஐம்படை - சங்கு, சக்கரம், தண்டு, வில், வாள் என்னும் திருமாலின் பஞ்சாயுத உருவில் செய்யப்பட்ட ஆபரணம்; வால் - வெண்மை.

பொற்பின் நின்றன, பொலிவு; பொய் இலா
நிற்பின், நின்றன, நீதி; மாதரார்
அற்பின் நின்றன, அறங்கள்; அன்னவர்
கற்பின் நின்றன, கால மாரியே. 59

சோலை மா நிலம் துருவி, யாவரே
வேலை கண்டு தாம் மீள வல்லவர்?—
சாலும் வார் புனல் சரயுவும், பல
காலின் ஓடியும் கண்டது இல்லையே! 60

வீடு சேர, நீர் வேலை, கால் மடுத்து
ஊடு பேரினும், உலைவு இலா நலம்
கூடு கோசலம் என்னும் கோது இலா
நாடு கூறினும்; நகரம் கூறுவாம். 61

## 3 நகரப் படலம்

### அயோத்தி மாநகரின் அழகினை வியத்தல்

செவ்விய மதுரம் சேர்ந்த நல் பொருளின்
சீரிய கூரிய தீம் சொல்
வவ்விய கவிஞர் அனைவரும், வடநூல்
முனிவரும், புகழ்ந்தது; வரம்பு இல்
எவ் உலகத்தோர் யாவரும், தவம் செய்து
ஏறுவான் ஆதரிக்கின்ற
அவ் உலகத்தோர், இழிவதற்கு அருத்தி
புரிகின்றது—அயோத்தி மா நகரம். 1

நிலமகள் முகமோ! திலகமோ! கண்ணோ!
நிறை நெடு மங்கல நாணோ!
இலகு பூண் முலைமேல் ஆரமோ! உயிரின்
இருக்கையோ! திருமகட்கு இனிய
மலர்கொலோ! மாயோன் மார்பில் நன் மணிகள்
வைத்த பொற் பெட்டியோ! வானோர்
உலகின் மேல் உலகோ! ஊழியின் இறுதி
உறையுளோ! யாது என உரைப்பாம்? 2

60. வேலை - எல்லை; கால் - வாய்க்கால்; 61. உலைவு - கெடுதல்.
3: 1. அருத்தி - விருப்பம்; 2. வானோர் உலகின் மேல் உலகு-வைகுந்தம்.

உமைக்கு ஒரு பாகத்து ஒருவனும், இருவர்க்கு
ஒரு தனிக் கொழுநனும், மலர்மேல்
கமைப் பெருஞ் செல்வக் கடவுளும், உவமை
கண்டிலா நகர்அது காண்பான்,
அமைப்பு அருங் காதல்அது பிடித்து உந்த,
அந்தரம், சந்திராதித்தர்
இமைப்பு இலர் திரிவர்; இது அலால் அதனுக்கு
இயம்பல் ஆம் ஏது மற்று யாதோ! 3

அயில் முகக் குலிசத்து அமரர்கோன் நகரும்,
அளகையும் என்று இவை, அயனூர்
பயிலுறவு உற்றபடி, பெரும்பான்மை
இப் பெருந் திரு நகர் படைப்பான்;
மயன் முதல் தெய்வத் தச்சரும் தம்தம்
மனத் தொழில் நாணினர் மறந்தார்;—
புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்து
இந் நகர் புகலுமாறு எவனோ? 4

'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்'
என்னும் ஈது அரு மறைப் பொருளே;
மண்ணிடை யாவர் இராகவன் அன்றி
மா தவம் அறத்தொடும் வளர்த்தார்?
எண் அருங் குணத்தின் அவன், இனிது இருந்து, இவ்
ஏழ் உலகு ஆள் இடம் என்றால்,
ஒண்ணுமோ, இதனின் வேறு ஒரு போகம்
உறைவு இடம் உண்டு என உரைத்தல்? 5

தங்கு பேர் அருளும் தருமமும், துணையாத்
தம் பகைப் புலன்கள் ஐந்து அவிக்கும்
பொங்கு மா தவமும், ஞானமும், புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிடம் ஆன
செங் கண் மால் பிறந்து, ஆண்டு, அளப்ப அருங் காலம்
திருவின் வீற்றிருந்தனன் என்றால்,
அம் கண் மா ஞாலத்து இந் நகர் ஒக்கும்
பொன் நகர் அமரர் நாட்டு யாதோ? 6

3. இருவர் - திருமடந்தை, நிலமடந்தை; கமை - பொறுமை; 4. அயில் - கூர்மை; குலிசத்து அமரர் கோன் - வச்சிராயுதத்தையுடைய இந்திரன்; அளகை - குபேரன் நகராகிய அளகாபுரி; பயிலுறவு உற்றபடி - பயிற்சி செய்தவாறு; குடுமி - சிகரம்; 5. துறக்கம் - சுவர்க்கலோகம்.

அரைசு எலாம் அவண; அணி எலாம் அவண;
அரும் பெறல் மணி எலாம் அவண;
புரைசை மால் களிறும், புரவியும், தேரும்,
பூதலத்து யாவையும் அவண;
விரைசுவார் முனிவர், விண்ணவர், இயக்கர்,
விஞ்சையர், முதலினோர் எவரும்
உரைசெய்வார் ஆனர்; ஆனபோது, அதனுக்கு
உவமைதான் அரிதுஅரோ, உளதோ? 7

மதிலின் மாட்சி

நால் வகைச் சதுரம் விதி முறை நாட்டி
நனி தவ உயர்ந்தன, பனி தோய்
மால் வரைக் குலத்து இனி யாவையும் இல்லை;
ஆதலால், உவமை மற்று இல்லை;
நூல் வரைத் தொடர்ந்து, பயத்தொடு பழகி,
நுணங்கிய நுவல அரும் உணர்வே
போல் வகைத்து; அல்லால், ‘உயர்விேனாடு உயர்ந்தது’
என்னலாம்—பொன் மதில் நிலையே. 8

மேவ அரும் உணர்வு முடிவு இலாமையினல்,
வேதமும் ஒக்கும்; விண் புகலால்,
தேவரும் ஒக்கும்; முனிவரும் ஒக்கும்,
திண் பொறி அடக்கிய செயலால்;
காவலின், கலை ஊர் கன்னியை ஒக்கும்;
சூலத்தால், காளியை ஒக்கும்;
யாவையும் ஒக்கும், பெருமையால்; எய்தற்கு
அருமையால், ஈசனை ஒக்கும். 9

பஞ்சி, வான் மதியை ஊட்டியது அனைய
படர் உகிர், பங்கயச் செங் கால்,
வஞ்சிபோல் மருங்குல், குரும்பைபோல் கொங்கை,
வாங்கு வேய் வைத்த மென் பணைத் தோள்,
அம் சொலார் பயிலும் அயோத்தி மா நகரின்
அழகுடைத்து அன்று என அறிவான்,
இஞ்சி வான் ஓங்கி, இமையவர் உலகம்
காணிய எழுந்தது ஒத்துளதே! 10

9. சூலம் - இடிதாங்கி; 10. பஞ்சி - செம்பஞ்சுக் குழம்பு; இஞ்சி - மதில்.

கோலிடை உலகம் அளத்தலின், பகைஞர்
முடித் தலை கோடலின், மனுவின்
நூல் நெறி நடக்கும் செவ்வையின், யார்க்கும்
நோக்க அருங் காவலின், வலியின்,
வேலொடு வாள், வில், பயிற்றலின், வெய்ய
சூழ்ச்சியின், வெலற்கு அரு வலத்தின்,
சால்புடை உயர்வின், சக்கரம் நடத்தும்
தன்மையின்,—தலைவர் ஒத்துளதே! 11

சினத்து அயில், கொலை வாள், சிலை, மழு, தண்டு,
சக்கரம், தோமரம், உலக்கை,
கனத்திடை உருமின் வெருவரும் கவண் கல்,
என்று இவை கணிப்பு இல: கொதுகின்
இனத்தையும், உவணத்து இறையையும்,
இயங்கும் காலையும், இதம் அல நினைவார்
மனத்தையும், எறியும் பொறி உள என்றால்,
மற்று இனி உணர்த்துவது எவனோ? 12

'பூணினும் புகழே அமையும்' என்று, இனைய
பொற்பில் நின்று, உயிர் நனி புரக்கும்,
யாணர் எண் திசைக்கும் இருள் அற இமைக்கும்
இரவிதன் குலமுதல் நிருபர்—
சேனையும் கடந்து, திசையையும் கடந்து,—
திகிரியும், செந் தனிக் கோலும்,
ஆணையும் காக்கும்; ஆயினும், நகருக்கு
அணி என இயற்றியது அன்றே. 13

அகழியின் அமைப்பும் சிறப்பும்

அன்ன மா மதிலுக்கு ஆழி மால் வரையை
அலைகடல் சூழ்ந்தன அகழி,
பொன் விலை மகளிர் மனம் எனக் கீழ் போய்,
புன் கவி எனத் தெளிவு இன்றி,
கன்னியர் அல்குல்-தடம் என யார்க்கும்
படிவு அருங் காப்பினது ஆகி,
நல் நெறி விலக்கும் பொறி என எறியும்
கராத்தது;—நவிலலுற்றது நாம். 14

12. கனம் - மேகம்; 14. படிவு - தோய்தல்; கராம் - முதலை.

ஏகுகின்ற தம் கணங்களோடும் எல்லை காண்கிலா,
நாகம் ஒன்று அகன் கிடங்கை நாம வேலை ஆம் எனு,
மேகம், மொண்டு கொண்டு எழுந்து, விண் தொடர்ந்த குன்றம் என்று,
ஆகம் நொந்து நின்று தாரை அம் மதிற்கண் வீசுமே. 15

அந்த மா மதில் புறத்து, அகத்து எழுந்து அலர்ந்த, நீள்
சுந்தம் நாறு பங்கயத்த கானம், மான மாதரார்
முந்து வாள் முகங்களுக்கு உடைந்து போன மொய்ம்பு எலாம்
வந்து போர் மலைக்க, மா மதில் வளைந்தது ஒக்குமே. 16

சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த ஆரை சுற்றும் முற்று பார் எலாம்
போழ்ந்த மா கிடங்கிடைக் கிடந்து பொங்கு இடங்கர் மா,—
தாழ்ந்த வங்க வாரியில், தடுப்ப ஒணு மதத்தினல்,
ஆழ்ந்த யானை மீள்கிலாது அழுந்துகின்ற போலுமே. 17

ஈரும் வாளின் வால் விதிர்த்து, எயிற்று இளம் பிறைக் குலம்
பேர மின்னி வாய் விரித்து, எரிந்த கண் பிறங்கு தீச்
சோர, ஒன்றை ஒன்று முன் தொடர்ந்து சீறு இடங்கர் மா,—
போரில் வந்து சீறுகின்ற போர் அரக்கர் போலுமே. 18

ஆளும் அன்னம் வெண் குடைக் குலங்களா, அருங் கராக்
கோள் எலாம் உலாவுகின்ற குன்றம் அன்ன யானையா,
தாள் உலாவு பங்கயத் தரங்கமும் துரங்கமா,
வாளும், வேலும், மீனம் ஆக,—மன்னர் சேனை மானுமே. 19

விளிம்பு சுற்றும் முற்றுவித்து வெள்ளி கட்டி, உள்ளுறப்
பளிங்கு பொன்-தலத்து அகட்டு அடுத்துறப் படுத்தலின்,
'தளிந்த கல்-தலத்தொடு, அச் சலத்தினை, தனித்துறத்
தெளிந்து உணர்த்துகிற்றும்' என்றல் தேவராலும் ஆவதே? 20

அகழி சூழ் சோலை

அன்ன நீள் அகன் கிடங்கு சூழ்கிடந்த ஆழியைத்
துன்னி, வேறு சூழ்கிடந்த தூங்கு, வீங்கு, இருட் பிழம்பு
என்னலாம், இறும்பு சூழ்கிடந்த சோலை; எண்ணில், அப்
பொன்னின் மா மதிட்கு உடுத்த நீல ஆடை போலுமே. 21

15. நாகம் - பாதாளம்; 17. ஆரை - மதில்; 18. வாளின் - வாள் போல; பேர - உவம உருபு; 20. தளித்தல் - பூசுதல்; 21. இறும்பு - சிறுகாடு, சிறு மலையும் ஆம்.

வாயில்களின் தோற்றம்

எல்லை நின்ற வென்றி யானை என்ன நின்ற; முன்னம், மால்,
ஒல்லை, உம்பர் நாடு அளந்த தாளின் மீது உயர்ந்தவால்—
மல்லல் ஞாலம் யாவும் நீதி மாறுறு வழக்கினல்
நல்ல ஆறு சொல்லும் வேதம் நான்கும் அன்ன—வாயிலே. 22

தா இல் பொன்-தலத்தின், நல் தவத்தினோர்கள் தங்கு தாள்
பூ உயிர்த்த கற்பகப் பொதும்பர் புக்கு ஒதுங்குமால்—
ஆவி ஒத்த அன்பு சேவல் கூவ வந்து அணைந்திடா
ஓவியப் புறுவின் மாடு இருக்க ஊடு பேடையே. 23

எழுநிலை மாடம்

கல் அடித்து அடுக்கி, வாய் பளிங்கு அரிந்து கட்டி, மீது
எல்லுடைப் பசும் பொன் வைத்து, இலங்கு பல் மணிக் குலம்
வில்லிடக் குயிற்றி, வாள் விரிக்கும் வெள்ளி மா மரம்
புல்லிடக் கிடத்தி, வச்சிரத்த கால் பொருத்தியே, 24

மரகதத்து இலங்கு போதிகைத் தலத்து வச்சிரம்
புரை தபுத்து அடுக்கி, மீது பொன் குயிற்றி, மின் குலாம்
நிரை மணிக் குலத்தின் ஆளி நீள் வகுத்த ஒளிமேல்
விரவு கைத்தலத்தின் உய்த்த மேதகத்தின் மீதுஅரோ. 25

ஏழ் பொழிற்கும் ஏழ் நிலத்தலம் சமைத்ததென்ன, நூல்,
ஊழ் உறக் குவித்து அமைத்த உம்பர் செம்பொன் வேய்ந்து, மீச்
சூழ் சுடர்ச் சிரத்து நல் மணித் தசும்பு தோன்றலால்,
வாழ் நிலக் குலக் கொழுந்தை மௌலி சூட்டியன்னவே. 26

மாளிகைகளின் அமைப்பும் அழகும்

'திங்களும் கரிது' என வெண்மை தீற்றிய
சங்க வெண் சுதையுடைத் தவள மாளிகை—
வெங் கடுங் கால் பொர, மேக்கு நோக்கிய,
பொங்கு இரும் பாற்கடல்-தரங்கம் போலுமே. 27

23. தாள் - காம்பு; 24. வாய் - முகப்பு; 25. ஒளி - வரிசை; 26. ஏழ் பொழில் - ஏழு தீவு; ஊழ் - முறை; தசும்பு - குடம்; 27. சுதை - சாந்து.

புள்ளி அம் புறவு இறை பொருந்தும் மாளிகை,
தள்ள அருந் தமனியத் தகடு வேய்ந்தன,
எள்ள அருங் கதிரவன் இள வெயிற் குழாம்
வெள்ளி அம் கிரிமிசை விரிந்த போலுமே. 28

வயிர நல் கால் மிசை, மரகதத் துலாம்,
செயிர் அறப் போதிகை, கிடத்தி, சித்திரம்
உயிர் பெறக் குயிற்றிய, உம்பர் நாட்டவர்
அயிர் உற இமைப்பன, அளவு இல் கோடியே. 29

சந்திர காந்தத்தின் தலத்த, சந்தனப்
பந்தி செய் தூணின்மேல் பவளப் போதிகை,
செந் தனி மணித் துலாம் செறிந்த, திண் சுவர்
இந்திர நீலத்த, எண் இல் கோடியே. 30

பாடகக் கால் அடி பதுமத்து ஒப்பன,
சேடரைத் தழீஇயின, செய்ய வாயின,
நாடகத் தொழிலின, நடுவு துய்யன,
ஆடகத் தோற்றத்த, அளவு இலாதன. 31

புக்கவர் கண் இமை பொருந்துறுது, ஒளி
தொக்குடன் தயங்கி, விண்ணவரின் தோன்றலால்,
திக்குற நினைப்பினில் செல்லும் தெய்வ வீடு
ஒக்க நின்று இமைப்பன, உம்பர் நாட்டினும். 32

அணி இழை மகளிரும், அலங்கல் வீரரும்,
தணிவன அறநெறி; தணிவு இலாதன
மணியினும் பொன்னினும் வனைந்த அல்லது
பணி பிறிது இயன்றில; பகலை வென்றன. 33

28. இறை - தங்குமிடம் (வீட்டிறப்பு); 29. அயிர் - ஐயம்; 31. பாடகக் கால் அடி - வேலைப்பாடு அமைந்த தூண்களின் அடிப்பகுதி (பாடகம் அணிந்த காலடி); சேடரை - கடைக்கால் ஆழத்தால் நாகலோகத்தாரை (இளைஞரை); செய்ய வாயின - நேரிய வாயிலினை உடையன (சிவந்த வாயினையுடையன); நாடகம் - நாடு அகம், விரும்பும் உள் வேலைப்பாடு (நாடகம்); நடுவு துய்யன - நடுவிடம் தூய வெளியாய் உள்ளன (இடை பஞ்சின் தொடர் நுனியை ஒத்தன); ஆடகத் தோற்றத்த - பொன்னின் தோற்றத்தை உடையன (பொன்மயமான வடிவத்தை உடையன); 32. தெய்வ வீடு - தேவ விமானம்; 33. பிறிது - வேறான பொருள்; பணி - வேலைப்பாடு.

வானுற நிவந்தன; வரம்பு இல் செல்வத்த;
தான் உயர் புகழ் எனத் தயங்கு சோதிய;
ஊனம் இல் அறநெறி உற்ற எண் இலாக்
கோன் நிகர் குடிகள்தம் கொள்கை சான்றன. 34

அருவியின் தாழ்ந்து, முத்து அலங்கு தாமத்த;
விரி முகிற்குலம் எனக் கொடி விராயின;
பரு மணிக் குவையன; பசும் பொன் கோடிய;
பொரு மயில் கணத்தன;—மலையும் போன்றன. 35

கொடிகளின் கோலக்காட்சி

அகில் இடு கொழும் புகை அளாய் மயங்கின,
முகிலொடு வேற்றுமை தெரிகலா, முழுத்
துகிலொடு நெடுங் கொடிச் சூலம் மின்னுவ;—
பகல் இடு மின் அணிப் பரப்புப் போன்றவே. 36

துடி இடைப் பணை முலைத் தோகை அன்னவர்
அடி இணைச் சிலம்பு பூண்டு அரற்று மாளிகைக்
கொடியிடைத் தரள வெண் கோவை சூழ்வன;—
கடியுடைக் கற்பகம் கான்ற மாலையே. 37

காண் வரு நெடு வரைக் கதலிக் கானம்போல்,
தாள் நிமிர் பதாகையின் குழாம் தழைத்தன;
வாள் நனி மழுங்கிட மடங்கி, வைகலும்
சேண் மதி தேய்வது, அக் கொடிகள் தேய்க்கவே. 38

மாட மாளிகைகளின் ஒளியும் மணமும்

பொன் திணி மண்டபம் அல்ல, பூத்தொடர்
மன்றுகள்; அல்லன மாட மாளிகை;
குன்றுகள் அல்லன மணி செய் குட்டிமம்;
முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே. 39

மின் என, விளக்கு என, வெயிற் பிழம்பு என,
துன்னிய தமனியத் தொழில் தழைத்த அக்
கன்னி நல் நகர் நிழல் கதுவலால் அரோ,
பொன்னுலகு ஆயது, அப் புலவர் வானமே! 40

34. கொள்கை - தன்மை; 39. குட்டிமம் - முன்றில்கள், தளவரிசை செய்த தரை; 40. நிழல் - ஒளி.

7203
R65,9



எழும் இடத்து அகன்று, இடை ஒன்றி, எல் படு
பொழுதிடைப் போதலின், புரிசைப் பொன் நகர்,
அழல் மணி திருத்திய அயோத்தியாளுடை
நிழல் எனப் பொலியுமால்—நேமி வான் சுடர். 41

ஆய்ந்த மேகலையவர் அம் பொன் மாளிகை
வேய்ந்த கார் அகில் புகை உண்ட மேகம் போய்த்
தோய்ந்த மா கடல் நறுந் தூபம் நாறுமேல்,
பாய்ந்த தாரையின் நிலை பகரல் வேண்டுமோ? 42

**ஆடல் பாடல் முதலிய விளையாட்டுகள்**

குழல் இசை மடந்தையர் குதலை, கோதையர்
மழலை,—அம் குழல் இசை; மகர யாழ் இசை.
எழில் இசை மடந்தையர் இன் சொல் இன் இசை,
பழையர் தம் சேரியில் பொருநர் பாட்டு இசை. 43

கண்ணிடைக் கனல் சொரி களிறு, கால் கொடு
மண்ணிடை வெட்டுவ; வேட்கை மைந்தர் தம்
பண்ணைகள் பயில் இடம் குழி படைப்பன;
சுண்ணம் அக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன. 44

பந்துகள் மடந்தையர் பயிற்றுவாரிடைச்
சிந்துவ முத்தினம்; அவை திரட்டுவார்
அந்தம் இல் சிலதியர்; ஆற்ற குப்பைகள்,
சந்திரன் ஒளி கெட, தழைப்ப, தண் நிலா. 45

அரங்கிடை மடந்தையர் ஆடுவார்; அவர்
கருங் கடைக் கண் அயில் காமர் நெஞ்சினை
உருங்குவ; மற்று, அவர் உயிர்கள் அன்னவர்
மருங்குல்போல் தேய்வன; வளர்வது, ஆசையே. 46

பொழிவன சோலைகள் புதிய தேன் சில;
விழைவன தென்றலும் மிஞிறும் மெல்லென
நுழைவன; அன்னவை நுழைய, நோவொடு
குழைவன, பிரிந்தவர் கொதிக்கும் கொங்கையே. 47

41. எழும் இடம் - கதிரவன் எழும் காலம்; எல் படு பொழுது - சூரியன் மறையும் காலம்; 44. பண்ணை - கூட்டம்; 45. சிலதியர் - ஏவல் மகளிர்.



இறங்குவ மகர யாழ் எடுத்த இன் இசை
நிறங் கிளர் பாடலான் நிமிர்வ; அவ் வழி
கறங்குவ வள் விசி கருவி; கண் முகிழ்த்து
உறங்குவ, மகளிரோடு ஓதும் கிள்ளையே. 48

மகளிரின் மேனி அழகு

குதை வரிச் சிலைநுதல் கொவ்வை வாய்ச்சியர்
பதயுகத் தொழில்கொடு, பழிப்பு இலாதன
ததை மலர்த் தாமரை அன்ன தாளினல்,
உதைபடச் சிவப்பன, உரவுத் தோள்களே. 49

பொழுது உணர்வு அரிய அப் பொரு இல் மா நகர்த்
தொழு தகை மடந்தையர் சுடர் விளக்கு எனப்
பழுது அறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்,
எழுது சித்திரங்களும் இமைப்பு இலாதவே? 50

தணி மலர்த் திருமகள் தங்கு மாளிகை
இணர் ஒளி பரப்பி நின்று இருள் துரப்பன,
திணி சுடர் நெய்யுடைத் தீ விளக்கமோ?
மணி விளக்கு; அல்லன மகளிர் மேனியே. 51

பாண்மகளிர் ஆடல் பாடல்

பதங்களில், தண்ணுமை, பாணி, பண் உற
விதங்களின், விதி முறை சதி மிதிப்பவர்
மதங்கியர்; அச் சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைகள்; அல்லன புரவித் தார்களே. 52

மாந்தரின் மகிழ்ச்சி

முளைப்பன முறுவல்; அம் முறுவல் வெந் துயர்
விளைப்பன; அன்றியும், மெலிந்து நாள்தொறும்
இளைப்பன நுண் இடை; இளைப்ப, மென் முலை
திளைப்பன, முத்தொடு செம் பொன் ஆரமே. 53

48. இறங்குவ - (நுனி) வளைந்தனவாகிய; 49. குதை - வில்லில் இட்ட நாணின் முடி; 51. தணி - குளிர்ந்த; 52. சதி - லயம்; மதங்கியர் - ஆடல் பாடல் வல்ல மகளிர்.

இடை இடை, எங்கணும், களி அருதன:—
நடை இள அன்னங்கள்; நளின நீர்க் கயல்;
பெடை இள வண்டுகள்; பிரசம் மாந்திடும்
கட கரி; அல்லன மகளிர் கண்களே! 54

தழல் விழி ஆளியும் துணையும் தாழ் வரை
முழை விழை கிரி நிகர் களிற்றின் மும் மத
மழை விழும்; விழும்தொறும், மண்ணும் கீழ் உறக்
குழை விழும்; அதில் விழும், கொடித் திண் தேர்களே. 55

ஆடு வார் புரவியின் குரத்தை ஆர்ப்பன,
சூடுவார் இகழ்ந்த அத் தொங்கல் மாலைகள்;
ஓடுவார் இழுக்குவது, ஊடல் ஊடு உறக்
கூடுவார் வன முலை கொழித்த சாந்தமே. 56

இளைப்ப அருங் குரங்களால், இவுளி, பாரினைக்
கிளைப்பன; அவ் வழி, கிளர்ந்த தூளியின்
ஒளிப்பன மணி; அவை ஒளிர, மீது தேன்
துளிப்பன, குமரர்தம் தோளின் மாலையே. 57

விலக்க அருங் கரி மதம் வேங்கை நாறுவ;
குலக் கொடி மாதர் வாய் குமுதம் நாறுவ;
கலக் கடை கணிப்ப அருங் கதிர்கள் நாறுவ;
மலர்க் கடி நாறுவ, மகளிர் கூந்தலே. 58

கோவை இந் நகரொடு எண் குறிக்கலாத அத்
தேவர்தம் நகரியைச் செப்புகின்றது என்?
யாவையும் வழங்கு இடத்து இகலி, இந் நகர்
ஆவணம் கண்டபின், அளகை தோற்றதே! 59

அதிர் கழல் ஒலிப்பன; அயில் இமைப்பன;
கதிர் மணி அணி வெயில் கால்வ; மான்மதம்
முதிர்வு உறக் கமழ்வன; முத்தம் மின்னுவ;
மதுகரம் இசைப்பன;—மைந்தர் ஈட்டமே. 60

55. குழை - சேறு; 56. குரம் - குளம்பு; ஊடு உற - தணிய; 58. கலக் கடை - அணிகளிடத்து; கதிர்கள் நாறுவ - ஒளி வீசுவன; 59. கோவை - வரிசை; ஆவணம் - கடைத்தெரு; 60. முதிர்வு உற - முற்றுமாக.

வளை ஒலி, வயிர் ஒலி, மகர வீணையின்
கிளை ஒலி, முழவு ஒலி, கின்னரத்து ஒலி,
துளை ஒலி, பல் இயம் துவைக்கும் சும்மையின்
விளை ஒலி,—கடல் ஒலி மெலிய, விம்முமே. 61

மன்னவர் தரு திறை அளக்கும் மண்டபம்,
அன்னம் மென் நடையவர் ஆடு மண்டபம்,
உன்ன அரும் அரு மறை ஓது மண்டபம்,
பன்ன அருங் கலை தெரி பட்டி மண்டபம். 62

இரவியின் சுடர் மணி இமைக்கும், தோரணம்;
தெருவினின் சிறியன, திசைகள்; சேண் விளங்கு
அருவியின் பெரியன, ஆனைத் தானங்கள்;
பரவையின் பெரியன, புரவிப் பந்தியே. 63

சூளிகை மழை முகில் தொடக்கும் தோரண
மாளிகை மலர்வன, மகளிர் வாள் முகம்;
வாளிகள் அன்னவை மலர்வ; மற்று அவை,
ஆளிகள் அன்னவர் நிறத்தின் ஆழ்பவே. 64

மன்னவர் கழலொடு மாறு கொள்வன,
பொன் அணித் தேர் ஒலி, புரவித் தார் ஒலி;
இன் நகையவர் சிலம்பு ஏங்க, ஏங்குவ,
கன்னியர் குடை துறைக் கமல அன்னமே. 65

நகர மாந்தரின் பொழுதுபோக்கு

ஊடவும், கூடவும், உயிரின் இன் இசை
பாடவும், விறலியர் பாடல் கேட்கவும்,
ஆடவும், அகன் புனல் ஆடி அம் மலர்
சூடவும், பொழுது போம்—சிலர்க்கு, அத் தொல் நகர். 66

முழங்கு திண் கட கரி மொய்ம்பின் ஊரவும்,
எழும் குரத்து இவுளியொடு இரதம் ஏறவும்,
பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும், பொழுது போம்—சிலர்க்கு, அம் மா நகர். 67

61. கிளை - இனம்; கின்னரம் - வீணை வகைகளுள் ஒன்று; 63. தானம் - மதநீர்; 64. சூளிகை - மாளிகைகளின் உச்சி; தொடக்கும் - பிணிக்கும்; நிறம் - மார்பு; 67. பழங்கண் - துன்பம்.

கரியொடு கரி எதிர் பொருத்தி, கைப் படை
வரி சிலை முதலிய வழங்கி, வால் உளைப்
புரவியில் பொரு இல் செண்டு ஆடி, போர்க் கலை
தெரிதலின், பொழுது போம்—சிலர்க்கு, அச் சேண் நகர். 68

நந்தன வனத்து அலர் கொய்து, நவ்விபோல்
வந்து; இளையவரொடு வாவி ஆடி, வாய்ச்
செந் துவர் அழிதரத் தேறல் மாந்தி, சூது
உந்தலின் பொழுது போம்—சிலர்க்கு, அவ் ஒள் நகர். 69

**கொடிகளும் தோரண வாயிலும்**

நானு விதமா நளி மாதிர வீதி ஓடி,
மீன் நாறு வேலைப் புனல் வெண் முகில் உண்ணுமாபோல்,
ஆனாத மாடத்திடை ஆடு கொடிகள் மீப் போய்,
வான் ஆறு நண்ணி, புனல் வற்றிட நக்கும் மன்னோ. 70

வன் தோரணங்கள் புணர் வாயிலும், வானின் உம்பர்
சென்று ஓங்கி, 'மேல் ஓர் இடம் இல்' எனச் செம்பொன் இஞ்சி—
குன்று ஓங்கு தோளார் குணம் கூட்டு இசைக் குப்பை என்ன—
ஒன்றோடு இரண்டும், உயர்ந்து ஓங்கின, ஓங்கல் நாண. 71

**நல்லறப் பள்ளி**

காடும், புனமும், கடல் அன்ன கிடங்கும், மாதர்
ஆடும் குளனும், அருவிச் சுனைக் குன்றும், உம்பர்
வீடும், விரவும் மணப் பந்தரும், வீணை வண்டும்
பாடும் பொழிலும், மலர்ப் பல்லவப் பள்ளி மன்னோ! 72

**செல்வமும் கல்வியும் சிறந்த மாநகர்**

தெள் வார் மழையும், திரை ஆழியும் உட்க, நாளும்,
வள் வார் முரசம் அதிர் மா நகர் வாழும் மாக்கள்—
கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ. 73

68. செண்டு - குதிரையில் ஏறி ஆடும் ஒருவகைப் பந்து; 69. உந்தல் - ஆடுதல்; 70. நளி மாதிரம் - பெரிய வானம்; 71. கூட்டு - நட்பு; இசைக் குப்பை - புகழ்த்தொகுதி; இஞ்சி ஒன்றோடு இரண்டு - மதில் மூன்று: அகநகர், இடைநகர், புறநகர் மதில்கள்; 73. தெள் வார் மழை - தெளிந்த நீரைச் சொரிகின்ற முகில்.

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின், கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே,
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ. 74

ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து, எண் இல் கேள்வி
ஆகும் முதல் திண் பணை போக்கி, அருந் தவத்தின்
சாகம் தழைத்து, அன்பு அரும்பி, தருமம் மலர்ந்து,
போகங் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே. 75

## 4 அரசியற் படலம்

### தயரதனின் தனிப்பெருமை

அம் மாண் நகருக்கு அரசன் அரசர்க்கு அரசன்;
செம் மாண் தனிக் கோல் உலகு ஏழினும் செல்ல நின்றான்;
இம் மாண் கதைக்கு ஓர் இறை ஆய இராமன் என்னும்
மொய்ம் மாண் கழலோன்-தரு நல் அற மூர்த்தி அன்னான். 1

ஆதிம் மதியும், அருளும், அறனும், அமைவும்,
ஏதில் மிடல் வீரமும், ஈகையும், எண் இல் யாவும்,
நீதிந் நிலையும், இவை, நேமியினோர்க்கு நின்ற
பாதி; முழுதும் இவற்கே பணி கேட்ப மன்னோ. 2

மொய் ஆர் கலி சூழ் முது பாரில், முகந்து தானக்
கை ஆர் புனலால் நனையாதன கையும் இல்லை;
மெய் ஆய வேதத் துறை வேந்தருக்கு ஏய்ந்த, யாரும்
செய்யாத, யாகம் இவன் செய்து மறந்த மாதோ. 3

தாய் ஒக்கும் அன்பின்; தவம் ஒக்கும் நலம் பயப்பின்;
சேய் ஒக்கும், முன் நின்று ஒரு செல் கதி உய்க்கும் நீரால்;
நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால், அறிவு ஒக்கும்;—எவர்க்கும், அன்னான். 4

75. ஏகம் முதல் - ஒரு வித்து; பணை - அடிக்கவடுகள்; சாகம் - கிளை.

4: 1. மாண் தனி செம் கோல் - மாட்சிமைப்பட்ட ஒப்பில்லாத செங்கோல்; 2. ஆதிம் மதி - முதன்மையாகிய உண்மையறிவு; அமைவு - நிறைவு; ஏதில் மிடல் - குற்றமற்ற திண்மை. ஏதம் ஏது என நின்றது.

ஈந்தே கடந்தான், இரப்போர் கடல்; எண் இல் நுண் நூல்
ஆய்ந்தே கடந்தான், அறிவு என்னும் அளக்கர்; வாளால்
காய்ந்தே கடந்தான், பகை வேலை; கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான், திருவின் தொடர் போக பௌவம். 5

வெள்ளமும், பறவையும், விலங்கும், வேசையர்
உள்ளமும், ஒரு வழி ஓட நின்றவன்;
தள்ள அரும் பெரும் புகழ்த் தயரதப் பெயர்
வள்ளல்; வள் உறை அயில் மன்னர் மன்னனே. 6

உலகமுழுதுடையான்

நேமி மால் வரை மதில் ஆக, நீள் புறப்
பாமம் மா கடல் கிடங்கு ஆக, பல் மணி
வாமம் மாளிகை மலை ஆக, மன்னற்குப்
பூமியும் அயோத்தி மா நகரம் போலுமே. 7

யாவரும் வன்மை நேர் எறிந்து தீட்டலால்
மே வரும் கை அடை வேலும் தேயுமால்;
கோவுடை நெடு மணி மகுட கோடியால்
சேவடி அடைந்த பொன் கழலும் தேயுமால். 8

குடைச்சிறப்பு

மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து, தேய்வு இன்றி,
தண் நிழல் பரப்பவும், இருளைத் தள்ளவும்,
அண்ணல்தன் குடை மதி அமையும்; ஆதலான்,
விண்ணிடை மதியினை, 'மிகை இது' என்பவே. 9

தயரதன் அரசு செய் திறம்

வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்,
உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்,
செயிர் இலா உலகினில், சென்று, நின்று, வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான். 10

குன்றென உயரிய குவவுத் தோளினான்,
வென்றி அம் திகிரி, வெம் பருதியாம் என,
ஒன்றென உலகிடை உலாவி, மீமிசை
நின்று, நின்று, உயிர்தொறும் நெடிது காக்குமே. 11

6. வள் உறை - தோலால் ஆகிய உறை; 7. பாமம் - பரப்பு; வாமம் - அழகு; 10. வான் - அழகு; சென்று வாழ் உயிர் - (சரம்) இயங்குவன; நின்று வாழ் உயிர் - (அசரம்) நிற்பன.

'எய்' என எழு பகை எங்கும் இன்மையால்,
மொய் பொருத் தினவு உறு முழவுத் தோளினன்,
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து, இனிது அரசு செய்கின்றான். 12

## 5 திரு அவதாரப் படலம்

### மகப் பேறின்மை குறித்துத் தயரதன் வசிட்டனிடம் கூறி வருந்தல்

ஆயவன், ஒரு பகல், அயனையே நிகர்
தூய மா முனிவனைத் தொழுது, 'தொல் குலத்
தாயரும், தந்தையும், தவமும், அன்பினால்
மேய வான் கடவுளும், பிறவும், வேறும், நீ; 1

'எம் குலத் தலைவர்கள், இரவிதன்னினும்
தம் குலம் விளங்குறத் தரணி தாங்கினர்,
மங்குநர் இல் என, வரம்பு இல் வையகம்,
இங்கு, நின் அருளினால், இனிதின் ஓம்பினேன். 2

'அறுபதினாயிரம் ஆண்டும் மாண்டு உற,
உறு பகை ஒடுக்கி, இவ் உலகை ஓம்பினேன்;—
பிறிது ஒரு குறை இலை; என் பின் வையகம்
மறுகுவது என்பது ஓர் மறுக்கம் உண்டுஅரோ. 3

'அருந் தவ முனிவரும், அந்தணாளரும்,
வருந்துதல் இன்றியே வாழ்வின் வைகினர்;
இருந் துயர் உழக்குநர் என் பின் என்பது ஓர்
அருந் துயர் வருத்தும், என் அகத்தை' என்றனன். 4

### வசிட்டன் தேவர்களுக்குத் திருமால் அருளியதைச் சிந்தித்தல்

முரசு அறை செழுங் கடை, முத்த மா முடி,
அரசர்தம் கோமகன் அனைய கூறலும்,
விரை செறி கமல மென் பொகுட்டு மேவிய
வர சரோருகன் மகன் மனத்தில் எண்ணினன்— 5

5: 1. முனிவன் - வசிட்டன்; 2. மங்குநர் - அழிபவர்; 5. வரம் - மேன்மை; சரோருகன் - பிரமன்.

அலை கடல் நடுவண், ஓர் அனந்தன் மீமிசை,
மலை என விழி துயில்வளரும் மா முகில்,
'கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென்' என்று,
உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை. 6

சுடு தொழில் அரக்கரால் தொலைந்து, வான் உளோர்,
கடு அமர் களன் அடி கலந்து கூறலும்,
படு பொருள் உணர்ந்த அப் பரமன், 'யான் இனி
அடுகிலேன்' என மறுத்து, அவரொடு ஏகினன்.† 7

வடவரைக் குடுமியின் நடுவண், மாசு அறு
சுடர் மணி மண்டபம் துன்னி, நான்முகக்
கடவுளை அடி தொழுது, அமர கண்டகர்
இடி நிகர் வினையம்அது இயம்பினன்அரோ.† 8

பாகசாதனன்தனைப் பாசத்து ஆர்த்து, அடல்
மேகநாதன், புகுந்து இலங்கை மேய நாள்,—
போக மா மலர் உறை புனிதன்,—மீட்டமை,
தோகைபாகற்கு உறச் சொல்லினன்அரோ.† 9

'இருபது கரம், தலை ஈர்-ஐந்து, என்னும் அத்
திருஇலி வலிக்கு, ஒரு செயல் இன்று, எங்களால்;
கரு முகில் என வளர் கருணைஅம் கடல்
பொருது, இடர் தணிக்கின் உண்டு' எனும் புணர்ப்பினால்,† 10

திரை கெழு பயோததித் துயிலும், தெய்வ வான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினால்,
கர கமலம் குவித்து இருந்த காலையில்,—
பரகதி உணர்ந்தவர்க்கு உதவு பண்ணவன்,† 11

கரு முகில் தாமரைக் காடு பூத்து, நீடு
இரு சுடர் இரு புறத்து ஏந்தி, ஏந்து அலர்த்
திருவொடும் பொலிய, ஓர் செம்பொன் குன்றின்மேல்
வருவபோல், கலுழன்மேல் வந்து தோன்றினான்.† 12

எழுந்தனர்—கறைமிடற்று இறையும், தாமரைச்
செழுந் தவிசு உவந்த அத் தேவும்—சென்று, எதிர்
விழுந்தனர் அடிமிசை, விண்ணுளோரொடும்;
தொழும்தொறும், தொழும்தொறும், களி துளங்குவார்.† 13

9. பாகசாதனன் - இந்திரன்; 10. புணர்ப்பு - கருத்து; 11. பயோததி - பாற்கடல்; பண்ணவன் - கடவுள்.

ஆடினர்; பாடினர்; அங்கும் இங்குமாய்
ஓடினர்; உவகை மா நறவு உண்டு ஓர்கிலார்;
'வீடினர் அரக்கர்' என்று உவக்கும் விம்மலால்,
சூடினர், முறை முறை துளவத் தாள்-மலர்.† 14

பொன்வரை இழிவது ஓர் புயலின் பொற்பு உற,
என்னை ஆள் உடையவன் தோள்நின்று எம்பிரான்,
சென்னி வான் தடவும் மண்டபத்தில் சேர்ந்து, அரி
துன்னு பொற் பீடமேல் பொலிந்து தோன்றினான்.† 15

விதியொடு முனிவரும், விண்ணுளோர்களும்,—
மதி வளர் சடைமுடி மழுவலாளனும்
அதிசயமுடன் உவந்து, அயல் இருந்துழி—
கொதி கொள் வேல் அரக்கர்தம் கொடுமை கூறினார்:† 16

'ஐ-இரு தலையினோன் அனுசர் ஆதியாம்
மெய் வலி அரக்கரால், விண்ணும் மண்ணுமே
செய் தவம் இழந்தன;—திருவின் நாயக!—
உய் திறம் இல்லை' என்று உயிர்ப்பு வீங்கினார்.† 17

'எங்கள் நீள் வரங்களால், அரக்கர் என்று உளார்,
பொங்கு மூஉலகையும் புடைத்து அழித்தனர்;
செங் கண் நாயக! இனி தீர்த்தல்; இல்லையேல்,
நுங்குவர் உலகை, ஓர் நொடியில்' என்றனர்.† 18

என்றனர், இடர் உழந்து, இறைஞ்சி ஏத்தலும்,
மன்றல் அம் துளவினான், 'வருந்தல்; வஞ்சகர்-
தம் தலை அறுத்து, இடர் தணிப்பென் தாரணிக்கு;
ஒன்று நீர் கேண்ம்' என, உரைத்தல் மேயினான்:† 19

'வான் உளோர் அனைவரும் வானரங்கள் ஆய்,
கானினும், வரையினும், கடி தடத்தினும்,
சேனையோடு அவதரித்திடுமின் சென்று' என,
ஆனனம் மலர்ந்தனன்—அருளின் ஆழியான்:† 20

'மசரதம் அனையவர் வரமும், வாழ்வும், ஓர்
நிசரத கணைகளால் நீறுசெய்ய, யாம்,
கச ரத துரக மாக் கடல்கொள் காவலன்,
தசரதன், மதலையாய் வருதும் தாரணி.† 21

15. என்னை ஆள் உடையவன் - கருடன்; 16. விதி - பிரமன்; கொதி - கோபம்; 17. அனுசர் - தம்பியர்; 20. ஆனனம் - முகம்; 21. மசரதம் - பேய்த்தேர்; நிசரத - பொய்யாது தாக்குகின்ற.

'வளையொடு திகிரியும், வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்,
இளையர்கள் என அடி பரவ ஏகி, நாம்,
வளமதில் அயோத்தியில் வருதும்' என்றனன்.† 22

என்று அவன் உரைத்தபோது, எழுந்து துள்ளினர்;
நன்றிகொள் மங்கல நாதம் பாடினர்;—
'மன்றல் அம் செழுந் துளவு அணியும் மாயனர்,
இன்று எமை அளித்தனர்' என்னும் ஏம்பலால்.† 23

'போயது எம் பொருமல்' என்னு, இந்திரன் உவகை பூத்தான்;
தூய மா மலர் உளோனும், சுடர்மதி சூடினேனும்,
சேய் உயர் விசும்பு உளோரும், 'தீர்ந்தது எம் சிறுமை' என்றார்;
மா இரு ஞாலம் உண்டோன், கலுழன்மேல் சரணம் வைத்தான்.† 24

என்னை ஆளுடைய ஐயன், கலுழன்மீது எழுந்து போய
பின்னர், வானவரை நோக்கி, பிதாமகன் பேசுகின்றான்:
"முன்னரே எண்கின் வேந்தன் யான்"—என, முடுகினேன்; மற்று,
அன்னவாறு எவரும் நீர் போய் அவதரித்திடுமின்' என்றான்.†25

தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான், 'எனது கூறு
மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும்' என்ன;
இரவி, 'மற்று எனது கூறு அங்கு அவர்க்கு இளையவன்' என்று ஓத
அரியும், 'மற்று எனது கூறு நீலன்' என்று அறைந்திட்டானல்.† 26

வாயு, 'மற்று எனது கூறு மாருதி' எனலும், மற்றோர்,
'காயும் மற்கடங்கள் ஆகி, காசினி அதனின்மீது
போயிடத் துணிந்தோம்' என்றார்; புராரி, 'மற்று யானும் காற்றின்
சேய்' எனப் புகன்றான்; மற்றைத் திசையுளோர்க்கு அவதி உண்டோ.† 27

அருள் தரும் கமலக்கண்ணன் அருள்முறை, அலர் உளோனும்,
இருள் தரும் மிடற்றினேனும், அமரரும், இனையர் ஆகி
மருள் தரும் வனத்தில், மண்ணில், வானரர் ஆகி வந்தார்;
பொருள் தரும் இருவர் தம் தம் உறைவிடம் சென்றுபுக்கார்.† 28

25. பிதாமகன் - பிரமன்; எண்கின் வேந்தன் - கரடிகளுக்கு அரசனாகிய சாம்பவன்; 26. தரு - கற்பகத்தரு; அசனி - இடி; அரி - அக்கினி; 27. புராரி - பரமசிவன்; காற்றின் சேய் - அனுமன்; அவதி - எல்லை.

புதல்வரை அளிக்கும் வேள்விசெய்ய வசிட்டன் தூண்டல்

ஈது, முன் நிகழ்ந்த வண்ணம் என, முனி, இதயத்து எண்ணி,
'மாதிரம் பொருத திண் தோள் மன்ன! நீ வருந்தல்; ஏழ்-ஏழ்
பூதலம் முழுதும் தாங்கும் புதல்வரை அளிக்கும் வேள்வி,
தீது அற முயலின், ஐய! சிந்தைநோய் தீரும்' என்றான். 29

தயரதன் அவ் வேள்விக்கு வேண்டுவன வினவல்

என்ன மா முனிவன் கூற, எழுந்த பேர் உவகை பொங்க,
மன்னவர்மன்னன், அந்த மா முனி சரணம் சூடி,
'உன்னையே புகல் புக்கேனுக்கு உறுகண் வந்து அடைவது உண்டோ?
அன்னதற்கு, அடியேன் செய்யும் பணி இனிது அளித்தி' என்றான். 30

வசிட்டன், கலைக்கோட்டு முனிவனைக் கொண்டு வேள்வி செய்யவேண்டும் எனல்

'மாசு அறு சுரர்களோடு மற்றுளோர்தமையும் ஈன்ற
காசிபன் அருளும் மைந்தன், விபாண்டகன், கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற்கு ஒத்தோன், இருங் கலை பிறவும் எண்ணின்
தேசுடைத் தந்தை ஒப்பான், திருவருள் புனைந்த மைந்தன். 31

'வரு கலை பிறவும், நீதி மனுநெறி வரம்பும், வாய்மை
தரு கலை மறையும், எண்ணின், சதுமுகற்கு உவமை சான்றோன்,
திருகலை உடைய இந்தச் செகத்து உளோர் தன்மை தேரா
ஒரு கலை முகச் சிருங்க உயர் தவன் வருதல் வேண்டும். 32

'பாந்தளின் மகுட கோடி பரித்த பார்அதனில் வைகும்
மாந்தர்கள் விலங்கு என்று உன்னும் மனத்தன், மா தவத்தன், எண்ணின்
பூந் தவிசு உகந்து உளோனும், புராரியும், புகழ்தற்கு ஒத்த
சாந்தனால் வேள்வி முற்றின், தனையர்கள் உளர் ஆம்' என்றான். 33

முனிவனை அழைத்து வருவது குறித்துத் தயரதன் கேட்டல்

ஆங்கு, உரை இனைய கூறும் அருந் தவர்க்கு அரசன், செய்ய
பூங் கழல் தொழுது, வாழ்த்தி, பூதல மன்னர்மன்னன்,
'தீங்கு அறு குணத்தால் மிக்க செழுந் தவன் யாண்டை உள்ளான்?
ஈங்கு யான் கொணரும் தன்மை அருளுதி, இறைவ!' என்றான்.† 34

31. விபாண்டகன் - கலைக்கோட்டு முனிவன் தந்தை; 33. சாந்தன் - பொறையாளன்; தனையர் - புதல்வர்.

**வசிட்டன் உரைத்த கலைக்கோட்டு முனிவன் வரலாறு**

'புத்து ஆன கொடு வினையோடு அருந் துயரம்
போய் ஒளிப்ப,—புவனம் தாங்கும்
சத்து ஆன குணம் உடையோன், தயையினொடும்
தண் அளியின் சாலை போல்வான்,
எத்தானும் வெலற்கு அரியான், மனுகுலத்தே
வந்து உதித்தோன், இலங்கும் மோலி
உத்தானபாதன்,—அருள் உரோமபதன்
என்று உளன், இவ் உலகை ஆள்வோன்; † 35

'அன்னவன் தான் புரந்து அளிக்கும் திரு நாட்டில்
நெடுங் காலம் அளவது ஆக,
மின்னி எழு முகில் இன்றி வெந் துயரம்
பெருகுதலும், வேத நல் நூல்
மன்னு முனிவரை அழைத்து, மா தானம்
கொடுத்தும், வான் வழங்காது ஆக,
பின்னும், முனிவரர்க் கேட்ப, ''கலைக்கோட்டு-
முனி வரின், வான் பிலிற்றும்'' என்றார். † 36

' ''ஓத நெடுங் கடல் ஆடை உலகினில் வாழ்
மனிதர் விலங்கு எனவே உன்னும்
கோது இல் குணத்து அருந் தவனைக் கொணரும் வகை
யாவது?'' எனக் குணிக்கும் வேலை,
சோதி நுதல், கரு நெடுங் கண், துவர் இதழ் வாய்,
தரள நகை, துணை மென் கொங்கை,
மாதர் எழுந்து, ''யாம் ஏகி, அருந் தவனைக்
கொணர்தும்'' என, வணக்கம் செய்தார். † 37

'ஆங்கு, அவர் அம் மொழி உரைப்ப, அரசன் மகிழ்ந்து,
அவர்க்கு, அணி, தூசு, ஆதி ஆய
பாங்கு உள மற்றவை அருளி, ''பனிப் பிறையைப்
பழித்த நுதல், பணைத்த வேய்த் தோள்,
ஏங்கும் இடை, தடித்த முலை, இருண்ட குழல்,
மருண்ட விழி, இலவச் செவ் வாய்ப்
பூங்கொடியீர்! ஏகும்'' என, தொழுது இறைஞ்சி,
இரதமிசைப் போயினரே. † 38

35. புத்து ஆன கொடு வினை - புத்து என்னும் நரகம்; சாலை - இருப்பிடம்; 36. வான் பிலிற்றும் - மழை பெய்யும்; 37. ஓதம் - அலை; குணிக்கும் வேலை - சிந்திக்கும் வேளை; மாதர் - விலைமகளிர்.

'ஓசனை பல கடந்து, இனி ஓர் ஓசனை
ஏசு அறு தவன் உறை இடம் இது என்றுழி,
பாசிழை மடந்தையர், பன்னசாலை செய்து,
ஆசு அறும் அருந் தவத்தவரின் வைகினர். † 39

'அருந் தவன் தந்தையை அற்றம் நோக்கியே,
கருந் தடங் கண்ணியர், கலை வலாளன் இல்
பொருந்தினர்; பொருந்துபு, ''விலங்கு எனப் புரிந்து
இருந்தவர் இவர்'' என, இனைய செய்தனர். † 40

அருக்கியம் முதலினோடு ஆசனம் கொடுத்து,
''இருக்க'' என, இருந்த பின், இனிய கூறலும்,
முருக்கு இதழ் மடந்தையர் முனிவனைத் தொழா,
பொருக்கென எழுந்து போய், புரையுள் புக்கனர். † 41

'திருந்து இழையவர், சில தினங்கள் தீர்ந்துழி,
மருந்தினும் இனியன வருக்கை, வாழை, மாத்
தருங் கனி பலவொடு, தாழை இன் கனி,
''அருந் தவ, அருந்து'' என, அருந்தினன்அரோ. † 42

'இன்னன பல் பகல் இறந்தபின், திரு
நல் நுதல் மடந்தையர், நவை இல் மாதவன்—
தன்னை, ''எம் இடத்தினும் சார்தல் வேண்டும்'' என்று,
அன்னவர் தொழுதலும், அவரொடு ஏகினன். † 43

'விம்முறும் உவகையர், வியந்த நெஞ்சினர்,
''அம்ம! ஈது, இது'' என, அகலும் நீள் நெறி,
செம்மையின் முனிவரன் தொடரச் சென்றனர்;—
தம் மனம் என மருள் தையலார்களே. † 44

'வளநகர் முனிவரன் வருமுன், வானவன்
களன் அமர் கடு எனக் கருகி, வான் முகில்,
சளசள என மழைத் தாரை கான்றன—
குளனொடு நதிகள் தம் குறைகள் தீரவே. † 45

'பெரும் புனல், நதிகளும் குளனும், பெட்பு உற,
கரும்பொடு செந்நெலும் கவின் கொண்டு ஓங்கிட,
இரும் புயல் ககனமீது இடைவிடாது எழுந்து
அரும் புனல் சொரிந்தபோது, அரசு உணர்ந்தனன். † 46

41. புரை - பன்னசாலை; 42. வருக்கை - பலாவகை; தாழை இன் கனி - தேங்காய்; 45. வானவன் - சிவன்.

'"காமமும், வெகுளியும், களிப்பும், கைத்த அக்
கோமுனி இவண் அடைந்தனன்கொல்—கொவ்வை வாய்த்
தாமரை மலர் முகத் தரள வாள் நகைத்
தூம மென் குழலினர் புணர்த்த சூழ்ச்சியால்?'' † 47

'என்று எழுந்து, அரு மறை முனிவர் யாரொடும்
சென்று, இரண்டு ஓசனை சேனை சூழ்தர,
மன்றல் அம் குழலியர் நடுவண், மா தவக்
குன்றினை எதிர்ந்தனன்—குவவுத் தோளினன். † 48

'வீழ்ந்தனன் அடிமிசை, விழிகள் நீர் தர;
''வாழ்ந்தனெம் இனி'' என, மகிழும் சிந்தையான்,
தாழ்ந்து எழு மாதரார் தம்மை நோக்கி, ''நீர்
போழ்ந்தனிர் எனது இடர், புணர்ப்பினால்'' என்றான். † 49

'அரசனும் முனிவரும் அடைந்த ஆயிடை,
வர முனி, ''வஞ்சம்'' என்று உணர்ந்த மாலைவாய்,
வெருவினர் விண்ணவர்; வேந்தன் வேண்டலால்,
கரை எறியாது அலை கடலும் போன்றனன். † 50

'வள் உறு வயிர வாள் மன்னன், பல் முறை,
எள்ள அரு முனிவனை இறைஞ்சி, யாரினும்
தள்ள அருந் துயரமும், சமைவும், சாற்றலும்,
உள் உறு வெகுளி போய் ஒளித்ததாம்அரோ. † 51

'அருள் சுரந்து, அரசனுக்கு ஆசியும் கொடுத்து,
உருள் தரும் தேரின்மீது ஒல்லை ஏறி, நல்
பொருள் தரும் முனிவரும் தொடரப் போயினன்—
மருள் ஒழி உணர்வுடை வரத மா தவன். † 52

'அடைந்தனன், வள நகர் அலங்கரித்து எதிர்
மிடைந்திட, முனியொடும் வேந்தன்; கோயில் புக்கு,
ஒடுங்கல் இல் பொன் குழாத்து உறையுள் எய்தி, ஓர்
மடங்கல்-ஆதனத்திடை முனியை வைத்தனன். † 53

'அருக்கியம் முதலிய கடன்கள் ஆற்றி, வேறு
உரைக்குவது இலது என உவந்து, தான் அருள்
முருக்கு இதழ்ச் சாந்தையாம் முகநலாள்தனை,
இருக்கொடு விதிமுறை இனிதின் ஈந்தனன். † 54

47. தூமம் - புகை; 50. மாலை - பொழுது; 51. வள் - கூர்மை; 52. உருள் - சக்கரம்; தரும் - எடுத்துரைக்கும்; 53. ஒடுங்கல் இல் - விசாலமான; பொன் குழாத்து உறையுள் - பொன்னால் செய்யப்பட்ட திரட்சியையுடைய மாளிகை; 54. வேறு உரைக்குவது இலது என - செய்ய வேண்டியன வேறும் உள்ளன என்று சொல்லுதல் இல்லையாம்படி; இருக்கு - வேதமந்திரம்.

'வறுமை நோய் தணிதர வான் வழங்கவே,
உறு துயர் தவிர்ந்தது, அவ் உலகம்; வேந்து அருள்
செறிகுழல் போற்றிட, திருந்து மா தவத்து
அறிஞன், ஆண்டு இருக்குநன்; அரச!' என்றனன். † 55

**கலைக்கோட்டு முனிவனை அழைக்க உரோமபதன் நாட்டுக்குத் தயரதன் போதல்**

என்றலுமே, முனிவரன்தன் அடி இறைஞ்சி,
'ஈண்டு ஏகிக் கொணர்வென்' என்னா,
துன்று கழல் முடிவேந்தர் அடி போற்ற,
சுமந்திரனே முதல்வர் ஆய
வன் திறல் சேர் அமைச்சர் தொழ, மா மணித் தேர்
ஏறுதலும், வானோர் வாழ்த்தி,
'இன்று எமது வினை முடிந்தது' எனச் சொரிந்தார்
மலர் மாரி, இடைவிடாமல். 56

காகளமும் பல் இயமும் கனை கடலின்
மேல் முழங்க, கானம் பாட,
மாகதர்கள், அரு மறை நூல் வேதியர்கள்,
வாழ்த்து எடுப்ப, மதுரச் செவ் வாய்த்
தோகையர் பல்லாண்டு இசைப்ப, கடல்-தானை
புடை சூழ, சுடரோன் என்ன
ஏகி, அரு நெறி நீங்கி, உரோமபதன்
திருநாட்டை எதிர்ந்தான் அன்றே. 57

**உரோமபதன் அளித்த வரவேற்பு**

கொழுந்து ஓடிப் படர் கீர்த்திக் கோவேந்தன்
அடைந்தமை சென்று ஒற்றர் கூற,
கழுந்து ஓடும் வரி சிலைக் கைக் கடல்-தானை
புடை சூழ, கழற் கால் வேந்தன்,
செழுந் தோடும் பல் கலனும் வெயில் வீச,
மாகதர்கள் திரண்டு வாழ்த்த,
எழுந்து ஓடும் உவகையுடன் ஓசனை சென்றனன்—
அரசை எதிர்கோள் எண்ணி. 58

57. காகளம் - எக்காளம்; 58. கழுந்து ஓடும் - கையில் பிடித்திருத்தலால் தேய்வு உண்டாகும்.

எதிர்கொள்வான் வருகின்ற வய வேந்தன்-
　　தனைக் கண்ணுற்று, எழிலி நாண
அதிர்கின்ற பொலந் தேர்நின்று அரசர்பிரான்
　　இழிந்துழி, சென்று அடியில் வீழ,
முதிர்கின்ற பெருங் காதல் தழைத்து ஓங்க,
　　எடுத்து இறுக முயங்கலோடும்,
கதிர் கொண்ட சுடர் வேலான்தனை நோக்கி,
　　இவை உரைத்தான்—களிப்பின் மிக்கான்: 59

'யான் செய்த மா தவமோ! இவ் உலகம்
　　செய் தவமோ! யாதோ! இங்ஙன்,
வான் செய்த சுடர் வேலோய்! அடைந்தது?' என,
　　மனம் மகிழா, மணித் தேர் ஏற்றி,
தேன் செய்த தார் மௌலித் தேர் வேந்தைச்
　　செழு நகரில் கொணர்ந்தான்—தெவ்வர்
ஊன் செய்த சுடர் வடி வேல் உரோமபதன்
　　என உரைக்கும் உரவுத் தோளான். 60

ஆடகப் பொன் சுடர் இமைக்கும் அணி மாடத்
　　திடை, ஓர் மண்டபத்தை அண்மி,
பாடகச் செம் பதும மலர்ப் பாவையர் பல்-
　　லாண்டு இசைப்ப, பைம் பொன் பீடத்து,
ஏடு துற்ற வடிவேலோன்தனை இருத்தி,
　　கடன்முறைகள் யாவும் நேர்ந்து,
தோடு துற்ற மலர்த் தாரான் விருந்து அளிப்ப,
　　இனிது உவந்தான், சுரர் நாடு ஈந்தான். 61

**அயோத்திக்குக் கலைக்கோட்டு முனிவனை அழைத்துவர உரோமபதன் உடன்படுதல்**

செவ்வி நறுஞ் சாந்து அளித்து, தேர் வேந்தன்-
　　தனை நோக்கி, 'இவண் நீ சேர்ந்த
கவ்வை உரைத்து அருள்தி' என, நிகழ்ந்த பரிசு
　　அரசர்பிரான் கழறலோடும்,
'அவ்வியம் நீத்து உயர்ந்த மனத்து அருந் தவனைக்
　　கொணர்ந்து ஆங்கண் விடுப்பென்; ஆன்ற
செவ்வி முடியோய்!' எனலும், தேர் ஏறிச்
　　சேனையொடும் அயோத்தி சேர்ந்தான். 62

60. வான் செய்த - தேவுலகைக் குடியிருத்திய; 61. அண்மி - கிட்டி; ஏடு, தோடு - மாலை; துற்ற - நெருங்கிய; 62. கவ்வை - செயல்; அவ்வியம் - அழுக்காறு.

**உரோமபதன் வேண்டுதலும் கலைக்கோட்டு முனிவனின் புறப்பாடும்**

மன்னர்பிரான் அகன்றதன் பின், வய வேந்தன்,
அரு மறை நூல் வடிவம் கொண்டது
அன்ன முனிவரன் உறையுள்தனை அணுகி,
அடி இணைத் தாமரைகள் அம் பொன்
மன்னு மணி முடி அணிந்து, வரன்முறை செய்-
திட, 'இவண் நீ வருதற்கு ஒத்தது
என்னை?' என, 'அடியேற்கு ஓர் வரம் அருளும்;
அடிகள்!' என, 'யாவது?' என்றான். 63

'புறவு ஒன்றின் பொருட்டாகத் துலை புக்க
பெருந்தகைதன் புகழில் பூத்த
அறன் ஒன்றும் திரு மனத்தான், அமரர்களுக்கு
இடர் இழைக்கும் அவுணர் ஆயோர்
திறல் உண்ட வடி வேலான், ''தசரதன்'' என்று,
உயர் கீர்த்திச் செங்கோல் வேந்தன்,
விறல்கொண்ட மணி மாட அயோத்திநகர்
அடைந்து, இவண் நீ மீள்தல்!' என்றான். 64

'அவ் வரம் தந்தனம்; இனித் தேர் கொணர்தி' என,
அருந் தவத்தோன் அறைதலோடும்,
வெவ் அரம் தின்று அயில் படைக்கும் சுடர் வேலோன்,
அடி இறைஞ்சி, 'வேந்தர்வேந்தன்
கவ்வை ஒழிந்து உயர்ந்தனன்' என்று, அதிர் குரல் தேர்
கொணர்ந்து, 'இதனில், கலை வலாள!
செவ்வி நுதல் திருவினொடும் போந்து ஏறுக!'
என, ஏறிச் சிறந்தான் மன்னோ. 65

**தேவர்களின் மகிழ்ச்சி**

குனி சிலை வயவனும் கரங்கள் கூப்பிட,
துனி அறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர,
வனிதையும், அரு மறை வடிவு போன்று ஒளிர்
முனிவனும், பொறிமிசை நெறியை முன்னினர். 66

65. தின்று - அராவப்பட்டு; கவ்வை - துன்பம்; 66. வயவன் - உரோம பதன்; பொறி - தேர்.

அந்தர துந்துமி முழக்கி, ஆய் மலர்
சிந்தினர், களித்தனர்—அறமும் தேவரும்—
'வெந்து எழு கொடு வினை வீட்டும் மெய்ம்முதல்
வந்து எழ அருள் தருவான்' என்று எண்ணியே. 67

**முனிவனின் வருகையை அறிந்த தயரதன் சென்று எதிர்கொள்ளல்**

தூதுவர் அவ் வழி அயோத்தி துன்னினர்;
மாதிரம் பொருத தோள் மன்னர்மன்னன்முன்
ஓதினர், முனி வரவு; ஓத, வேந்தனும்,
காதல் என்ற அளவு அறு கடலுள் ஆழ்ந்தனன். 68

எழுந்தனன் பொருக்கென, இரதம் ஏறினன்;
பொழிந்தன மலர் மழை, ஆசி பூத்தன;
மொழிந்தன பல் இயம்; முரசம் ஆர்த்தன;
விழுந்தன தீவினை, வேரினோடுமே. 69

**தன் அடிவணங்கிய தயரதனுக்கு முனிவன் ஆசிகூறல்**

'பிதிர்ந்தது எம் மனத் துயர்ப் பிறங்கல்' என்று கொண்டு,
அதிர்ந்து எழு முரசுடை அரசர் கோமகன்
முதிர்ந்த மா தவமுடை முனியை, கண்களால்,
எதிர்ந்தனன், ஓசனை இரண்டொடு ஒன்றினே.* 70

நல் தவம் அனைத்தும், ஓர் நவை இலா உருப்
பெற்று, இவண் அடைந்தெனப் பிறங்குவான்தனை,
சுற்றிய சீரையும், உழையின் தோற்றமும்,
முற்று உறப் பொலிதரு மூர்த்தியான்தனை, 71

அண்டர்கள் துயரமும், அரக்கர் ஆற்றலும்,
விண்டிடப் பொலிதரும் வினை வலாளனை,
குண்டிகை, குடையொடும், குலவு நூல் முறைத்
தண்டொடும், பொலிதரு தடக் கையான்தனை,* 72

இழிந்து போய் இரதம், ஆண்டு, இணை கொள் தாள் மலர்
விழுந்தனன், வேந்தர்தம் வேந்தன்; மெய்ம்மையால்,
மொழிந்தனன் ஆசிகள்—முதிய நான்மறைக்
கொழுந்து மேல் படர்தரக் கொழுகொம்பு ஆயினன். 73

72. குண்டிகை - கமண்டலம்; தண்டு - திரிதண்டம்.

தயரதன் முனிவனோடு அயோத்தி அடைதல்

அயல் வரும் முனிவரும் ஆசி கூறிட,
புயல் பொழி தடக் கையால் தொழுது, பொங்கு நீர்க்
கயல் பொரு விழியொடும் கலை வலாளனை,
இயல்பொடு கொணர்ந்தனன், இரதம் ஏற்றியே. 74

அடி குரல் முரசு அதிர் அயோத்தி மா நகர்
முடியுடை வேந்தன், அம் முனிவனோடும், ஓர்
கடிகையின் அடைந்தனன்,—கமல வாள் முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்து எடுப்பவே. 75

வசிட்டனும் கலைக்கோட்டு முனிவனும் அரசவை சார்தல்

கசட்டுறு வினைத் தொழில் கள்வராய் உழல்
அசட்டர்கள் ஐவரை அறுவர் ஆக்கிய
வசிட்டனும், அரு மறை வடிவு போன்று ஒளிர்
விசிட்டனும், வேத்தவை பொலிய மேவினர். 76

தயரதனின் உவகை மொழி

மா மணி மண்டபம் மன்னி, மாசு அறு
தூ மணித் தவிசிடை, சுருதியே நிகர்
கோ முனிக்கு அரசனை இருத்தி, கொள் கடன்
ஏமுறத் திருத்தி, வேறு, இனைய செப்பினன்: 77

'சான்றவர் சான்றவ! தருமம், மா தவம்,
போன்று ஒளிர் புனித! நின் அருளில் பூத்த என்
ஆன்ற தொல் குலம் இனி அரசின் வைகுமால்;
யான் தவம் உடைமையும், இழப்பு இன்றாம்அரோ.' 78

கலைக்கோட்டு முனிவன் தன்னை அழைத்த காரணம் வினவுதல்

என்னலும், முனிவரன் இனிது நோக்குறா,
'மன்னவர்மன்ன! கேள்: வசிட்டன் என்னும் ஓர்
நல் நெடுந் தவன் துணை; நவை இல் செய்கையால்,
நின்னை இவ் உலகினில் நிருபர் நேர்வரோ?' 79

என்றன பற்பல இனிமை கூறி, 'நல்
குன்று உறழ் வரி சிலைக் குவவுத் தோளினாய்!
நன்றி கொள் அரி மகம் நடத்த எண்ணியோ,
இன்று எனை அழைத்தது இங்கு? இயம்புவாய்!' என்றான். 80

74. கயல்பொரு விழி - சாந்தை; 75. கடிகை - நாழிகை; 76. கசடு - குற்றம்; விசிட்டன் - பெரியோன்; 80. அரி மகம் - அசுவமேத யாகம்.

மைந்தர் இல்லாக் குறையை மன்னன் தெரிவித்தல்

'உலப்பு இல் பல் ஆண்டு எலாம், உறுகண் இன்றியே,
தலப் பொறை ஆற்றினென்; தனயர் வந்திலர்;
அலப்பு நீர் உடுத்த பார் அளிக்கும் மைந்தரை
நலப் புகழ் பெற, இனி நல்க வேண்டுமால்.' 81

மைந்தரை அளிக்கும் வேள்வி இயற்ற வேண்டும் என்றான் முனிவன்

என்றலும், 'அரச! நீ இரங்கல்; இவ் உலகு
ஒன்றுமோ? உலகம் ஈர்-ஏழும் ஓம்பிடும்
வன் திறல் மைந்தரை அளிக்கும் மா மகம்
இன்று நீ இயற்றுதற்கு எழுக, ஈண்டு!' என்றான். 82

மன்னன் வேள்விச்சாலை புகுதல்

ஆயதற்கு உரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர்; நிருபர்க்கு ஏந்தலும்,
தூய நல் புனல் படீஇ, சுருதி நூல் முறை
சாய்வு அறத் திருத்திய சாலை புக்கனன். 83

கலைக்கோட்டு முனிவன் மகவு அருள் ஆகுதி வழங்கல்

முழங்கு அழல் மும்மையும் முடுகி, ஆகுதி
வழங்கியே, ஈர்-அறு திங்கள் வாய்த்த பின்,
தழங்கின துந்துமி; தா இல் வானகம்
விழுங்கினர் விண்ணவர், வெளி இன்று என்னவே. 84

முகமலர் ஒளிதர மொய்த்து, வான் உளோர்,
அக விரை நறு மலர் தூவி, ஆர்த்து எழ,
தகவுடை முனியும், அத் தழலின் நாப்பணே,
மக அருள் ஆகுதி வழங்கினான்அரோ. 85

வேள்வித் தீயில் எழுந்த பூதம் பிண்டம் வைத்து மறைதல்

ஆயிடை, கனலின்நின்று, அம் பொன் தட்டம் மீத்
தூய நல் சுதை நிகர் பிண்டம் ஒன்று,—சூழ்
தீ எரிப் பங்கியும், சிவந்த கண்ணும் ஆய்,
ஏயென, பூதம் ஒன்று எழுந்தது—ஏந்தியே. 86

81. அலம்பு அலப்பு என வலித்தது; 85. நாப்பண் - நடு; 86. சுதை - அமுதம்; பங்கி - மயிர்.

வைத்தது தரைமிசை, மறித்தும் அவ் வழி
தைத்தது பூதம். அத் தவனும், வேந்தனை,
'உய்த்த நல் அமிர்தினை; உரிய மாதர்கட்கு,
அத் தகு மரபினால், அளித்தியால்' என்றான். 87

மனைவியர் மூவர்க்கும் பிண்டத்தைத்
தயரதன் பகிர்ந்து அளித்தல்

மா முனி அருள் வழி, மன்னர்மன்னவன்,
தூம மென் சுரி குழல் தொண்டைத் தூய வாய்க்
காமரு கோசலை கரத்தில், ஓர் பகிர்,
தாம் உற அளித்தனன், சங்கம் ஆர்த்து எழ. 88

கைகயன் தனையைதன் கரத்தும், அம் முறைச்
செய்கையின் அளித்தனன், தேவர் ஆர்த்து எழ—
பொய்கையும், நதிகளும், பொழிலும், ஓதிமம்
வைகுறு கோசல மன்னர்மன்னனே. 89

நமித்திரர் நடுக்குறு நலம் கொள் மொய்ம்புடை
நிமித் திரு மரபுளான், முன்னர், நீர்மையின்
சுமித்திரைக்கு அளித்தனன்—சுரர்க்கு வேந்து, 'இனிச்
சமித்தது என் பகை' என, தமரொடு ஆர்ப்பவே. 90

உதிர்ந்த மிச்சத்தைச் சுமித்திரைக்கு மீட்டும் அளித்தல்

பின்னும், அப் பெருந்தகை, பிதிர்ந்து வீழ்ந்தது-
தன்னையும், சுமித்திரைதனக்கு நல்கினான்—
ஒன்னலர்க்கு இடமும், வேறு உலகின் ஓங்கிய
மன்னுயிர்தமக்கு நீள் வலமும், துள்ளவே. 91

வேள்வி முற்றியபின் மன்னவன் வேத்தவைக்கு வருதல்

வாம் பரி வேள்வியும், மகாரை நல்குவது
ஆம் புரை ஆகுதி பிறவும், அந்தணன்
ஓம்பிட முடிந்தபின், உலகு காவலன்
ஏம்பலோடு எழுந்தனன்—யாரும் ஏத்தவே. 92

89. ஓதிமம் - அன்னம்; 90. நமித்திரர் - பகைவர்; நிமி - இட்சுவாகு
வின் மகன்; சமித்தது-அழிந்தது; 29. புரை - உயர்ச்சி; ஏம்பல் - மகிழ்ச்சி.

முருடொடு பல் இயம் முழங்கி ஆர்த்தன;
இருள் தரும் உலகமும் இடரின் நீங்கின;
தெருள் தரு வேள்வியின் கடன்கள் தீர்ந்துழி,
அருள் தரும் அவையில் வந்து அரசன் எய்தினான். 93

செய்முறைக் கடன் செய்து சரயுவில் மன்னவன் நீராடுதல்

செய்ம் முறைக் கடன்அவை திறம்பல் இன்றியே
மெய்ம் முறைக் கடவுளோர்க்கு ஈந்து, விண்ணுளோர்க்கு
அம் முறை அளித்து, நீடு அந்தணாளர்க்கும்
கைம் முறை வழங்கினன், கனக மாரியே. 94

வேந்தர்கட்கு, அரசொடு, வெறுக்கை, தேர், பரி,
வாய்ந்த நல் துகிலொடு, வரிசைக்கு ஏற்பன
ஈந்தனன்; பல் இயம் துவைப்ப ஏகி, நீர்
தோய்ந்தனன்—சரயு நல் துறைக்கண் எய்தியே. 95

அரசவை மீண்ட தயரதன் வசிட்டனை வணங்கல்

முரசுஇனம் கறங்கிட, முத்த வெண்குடை
விரசி மேல் நிழற்றிட, வேந்தர் சூழ்தர,
அரசவை அடைந்துழி, அயனும் நாண் உற
உரை செறி முனிவன் தாள் வணங்கி, ஓங்கினான். 96

கலைக்கோட்டு முனிவனை வணங்க அவன் மன்னனை வாழ்த்தித் தன் இருப்பிடம் மீளுதல்

அரிய நல் தவமுடை வசிட்டன் ஆணையால்,
இரலை நல் சிருங்க மா இறைவன் தாள் தொழா,
உரிய பற்பல உரை பயிற்றி, 'உய்ந்தனென்;
பெரிய நல் தவம் இனிப் பெறுவது யாது?' என்றான். 97

'எந்தை! நின் அருளினால் இடரின் நீங்கியே
உய்ந்தனென் அடியனேன்' என்ன, ஒண் தவன்,
சிந்தையுள் மகிழ்ச்சியால் வாழ்த்தி, தேர்மிசை
வந்த மா தவரொடும் வழிக்கொண்டு ஏகினான். 98

பாங்குறு முனிவரரும் ஆசிகூறி நீங்குதல்

வாங்கிய துயருடை மன்னன், பின்னரும்,
பாங்குறு முனிவர் தாள் பழிச்சி ஏத்தல்கொண்டு,
ஓங்கிய உவகையர் ஆசியோடு எழா,
நீங்கினர்; இருந்தனன், நேமி வேந்தனே. 99

93. முருடு - மத்தளம்; 96. விரசி - நெருங்கி; 99. பழிச்சி - வணங்கி.

**தேவியர் மூவரும் கருவுறல்**

தெரிவையர் மூவரும், சிறிது நாள் செலீஇ,
மருவிய வயாவொடு வருத்தம் துய்த்தலால்,
பொரு அரு திரு முகம் அன்றி, பொற்பு நீடு
உருவமும், மதியமோடு ஒப்பத் தோன்றினர். 100

**கோசலை வயிற்றில் திருமால் திருவவதாரம் செய்தல்**

ஆயிடை, பருவம் வந்து அடைந்த எல்லையின்,
மா இரு மண்மகள் மகிழ்வின் ஓங்கிட,
வேய் புனர்பூசமும், விண்ணுளோர்களும்,
தூய கற்கடகமும், எழுந்து துள்ளவே, 101

சித்தரும், இயக்கரும், தெரிவைமார்களும்,
வித்தக முனிவரும், விண்ணுளோர்களும்,
நித்தரும், முறை முறை நெருங்கி ஆர்ப்புற,
தத்துறல் ஒழிந்து நீள் தருமம் ஓங்கவே, 102

ஒரு பகல் உலகு எலாம் உதரத்துள் பொதிந்து,
அரு மறைக்கு உணர்வு அரும் அவனை, அஞ்சனக்
கரு முகிற் கொழுந்து எழில் காட்டும் சோதியை,
திரு உறப் பயந்தனள்—திறம் கொள் கோசலை. 103

**கைகேயி மைந்தனைப் பெறுதல்**

ஆசையும், விசும்பும், நின்று அமரர் ஆர்த்து எழ,
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துற,
பூசமும் மீனமும் பொலிய, நல்கினாள்,
மாசு அறு கேகயன் மாது மைந்தனை. 104

**இரு மகவு ஈன்றனள் சுமித்திரை**

தளை அவிழ் தருவுடைச் சயிலகோபனும்,
கிளையும், அந்தரமிசைக் கெழுமி ஆர்ப்புற,
அளை புகும் அரவினோடு அலவன் வாழ்வுற,
இளையவற் பயந்தனள், இளைய மென் கொடி. 105

100. வயா - கருவுற்ற மகளிர்க்கு உண்டாகும் வேட்கை; 101. வேய் புனர்பூசம் - மூங்கில் போன்ற பூசமீன்; கற்கடகம் - நண்டு, கடக ராசி; 102. நித்தர் - நித்திய சூரிகள்; 104. ஆசை - திசை; 105. சயிலகோபன் - இந்திரன்; அரவு - ஆயிலியம்; அலவன் - கடக ராசி.

படம் கிளர் பல் தலைப் பாந்தள் ஏந்து பார்
நடம் கிளர்தர, மறை நவில நாடகம்,
மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட,
விடம் கிளர் விழியினுள், மீட்டும், ஈன்றனள். 106

உம்பரார் உவகை

ஆடினர் அரம்பையர்; அமுத ஏழ் இசை
பாடினர் கின்னரர்; துவைத்த பல் இயம்;
'வீடினர் அரக்கர்' என்று உவக்கும் விம்மலால்,
ஓடினர், உலாவினர், உம்பர் முற்றுமே. 107

சேடிமார் தயரதனுக்குச் சேய்கள் பிறந்தமை செப்பல்

ஓடினர் அரசன்மாட்டு, உவகை கூறி நின்று
ஆடினர், சிலதியர்; அந்தணாளர்கள்
கூடினர்; நாளொடு கோளும் நின்றமை
நாடினர்; 'உலகு இனி நவை இன்று' என்றனர். 108

மகிழ்ச்சியால் தயரதன் புரிந்த நற்பணிகள்

மா முனிதன்னொடு, மன்னர்மன்னவன்,
ஏமுறப் புனல் படீஇ, வித்தொடு இன் பொருள்
தாம் உற வழங்கி, வெண் சங்கம் ஆர்ப்புற,
கோ மகார் திருமுகம் குறுகி நோக்கினன். 109

' ''இறை தவிர்ந்திடுக பார், யாண்டு ஓர் ஏழ்; நிதி
நிறைதரு சாலை தாள் நீக்கி, யாவையும்
முறை கெட, வறியவர் முகந்து கொள்க'' என,
அறை பறை' என்றனன்—அரசர் கோமகன். 110

'படை ஒழிந்திடுக; தம் பதிகளே, இனி,
விடை பெறுகுக, முடி வேந்தர்; வேதியர்,
நடையுறு நியமமும் நவை இன்று ஆகுக;
புடை கெழு விழாவொடு பொலிக, எங்கணும். 111

'ஆலயம் புதுக்குக; அந்தணாளர்தம்
சாலையும், சதுக்கமும், சமைக்க, சந்தியும்;
காலையும் மாலையும், கடவுளர்க்கு, அணி
மாலையும் தீபமும், வழங்குக' என்றனன். 112

106. பல் தலைப் பாந்தள் - ஆதிசேடன்; 111. நியமம் - விரத ஒழுக்கம்.

வள்ளுவர் பறையறை செய்தியும் நகரமாந்தர் மகிழ்வும்

என்புழி, வள்ளுவர், யானை மீமிசை
நன் பறை அறைந்தனர்; நகர மாந்தரும்,
மின் பிறழ் நுசுப்பினார்தாமும், விம்மலால்,
இன்பம் என்ற அளக்க அரும் அளக்கர் எய்தினார். 113

ஆர்த்தனர் முறை முறை அன்பினால்; உடல்
போர்த்தன புளகம்; வேர் பொடித்த; நீள் நிதி
தூர்த்தனர், எதிர் எதிர் சொல்லினார்க்கு எலாம்;—
'தீர்த்தன்' என்று அறிந்ததோ அவர்தம் சிந்தையே? 114

பண்ணையும் ஆயமும், திரளும் பாங்கரும்,
கண் அகன் திரு நகர் களிப்புக் கைம்மிகுந்து,
எண்ணெயும், களபமும், இழுதும், நானமும்,
சுண்ணமும், தூவினார்—வீதிதோறுமே. 115

புதல்வர்களுக்கு வசிட்டன் பெயரிடுதல்

இத்தகை மா நகர், ஈர்-அறு நாளும்,
சித்தம் உறும் களியோடு சிறந்தே,
தத்தமை ஒன்றும் உணர்ந்திலர்; தாவா
மெய்த் தவன் நாமம் விதிப்ப மதித்தான். 116

கரா மலைய, தளர் கைக் கரி எய்த்தே,
'அரா-அணையில் துயில்வோய்!' என, அந் நாள்,
விராவி, அளித்தருள் மெய்ப்பொருளுக்கே,
'இராமன்' எனப் பெயர் ஈந்தனன் அன்றே. 117

கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப் பொருள் மெய்ந்நெறி கண்ட
வரதன், உதித்திடு மற்றைய ஒளியை,
'பரதன்' எனப் பெயர் பன்னினன் அன்றே. 118

உலக்குநர் வஞ்சகர்; உம்பரும் உய்ந்தார்;
நிலக் கொடியும் துயர் நீத்தனள்; இந்த,
விலக்க அரு மொய்ம்பின் விளங்கு ஒளி நாமம்,
'இலக்குவன்' என்ன, இசைத்தனன் அன்றே. 119

115. பண்ணை - மகளிர் கூட்டம்; திரள் - ஆடவர் கூட்டம்; 116. தத்தமை - தங்கள் தங்களை; 117. விராவி - வந்து; 118. வரதன் - வசிட்டன்; 119. உலக்குநர் - இறப்பவர்.

'முத்து உருக்கொண்டு செம் முளரி அலர்ந்தால்
ஒத்திருக்கும் எழிலுடைய இவ் ஒளியால்,
எத் திருக்கும் கெடும்' என்பதை எண்ணு,
'சத்துருக்கன்' எனச் சாற்றினன் நாமம். 120

**தானம் செய்து தயரதன் மகிழ்தல்**

பொய் வழி இல் முனி, புகல்தரு மறையால்,
இவ் வழி, பெயர்கள் இசைத்துழி, இறைவன்
கை வழி, நிதி எனும் நதி கலைமறையோர்
மெய் வழி உவரி நிறைத்தன மேன்மேல். 121

**இராமனிடம் தயரதன் கொண்ட அன்பு**

'காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே,
ஓவிய எழிலுடை ஒருவனை அலது, ஓர்
ஆவியும் உடலமும் இலது' என, அருளின்
மேவினன்—உலகுடை வேந்தர்தம் வேந்தன். 122

**குமரர்களின் வளர்ச்சி**

அமிர்து உகு குதலையொடு அணி நடை பயிலா,
திமிரம்அது அற வரு தினகரன் எனவும்,
தமரமதுடன் வளர் சதுமறை எனவும்,
குமரர்கள் நிலமகள் குறைவு அற வளர் நாள்— 123

**வசிட்டன் கல்வி கற்பித்தல்**

சவுளமொடு உபநயம் விதிமுறை தருகுற்று,
'இ(வ்)அளவது' என ஒரு கரை பிறிது இலவா,
உவள் அரு மறையினொடு ஒழிவு அறு கலையும்,
தவள் மதி புனை அரன் நிகர் முனி தரவே, 124

**மைந்தரின் படைப் பயிற்சி**

யானையும், இரதமும், இவுளியும், முதலா
ஏனைய பிறவும், அவ் இயல்பினில் அடையுற்று,
ஊன் உறு படை பல சிலையொடு பயிலா,
வானவர் தனிமுதல், கிளையொடு வளர, 125

120. திருக்கு-தீமை, மாறுபாடு; 121. மெய் வழி கலை மறையோர் உவரி எனக் கூட்டுக; உவரி-கடல்; 123. திமிரம்-இருள்; தமரம்-ஒலி; 124. சவுளம்-குடுமி வைக்கும் சடங்கு; உவள் - தூய்மை; 125. கிளை - தம்பியர்.

முனிவர் முதலிய எல்லாரும் குமரர்களை விரும்புதல்

அரு மறை முனிவரும், அமரரும், அவனித்
திருவும், அந் நகர் உறை செனமும், 'நம் இடரோடு
இரு வினை துணிதரும், இவர்களின்; இவண்நின்று
ஒரு பொழுது அகல்கிலம், உறை' என உறுவார். 126

இராமனும் இலக்குவனும் இணைபிரியாமை

ஐயனும் இளவலும், அணி நிலமகள்தன்
செய்தவம் உடைமைகள் தெரிதர, நதியும்,
மை தவழ் பொழில்களும், வாவியும், மருவி,
'நெய் குழல் உறும் இழை' என நிலைதிரிவார். 127

பரத சத்துருக்கனரின் ஒட்டுறவு

பரதனும் இளவலும், ஒருநொடி பகிராது,
இரதமும் இவுளியும் இவரினும், மறைநூல்
உரைதரு பொழுதினும், ஒழிகிலர்; எனை ஆள்
வரதனும் இளவலும் என மருவினரே. 128

நால்வரும் முனிவரர் இருப்பிடம் நாடி மாலையில் மீள்தல்

வீரனும், இளைஞரும், வெறி பொழில்களின்வாய்,
ஈரமொடு உறைதரு முனிவரரிடை போய்,
சோர் பொழுது, அணிநகர் துறுகுவர்; எதிர்வார்,
கார் வர அலர் பயிர் பொருவுவர், களியால். 129

ஏழையர் அனைவரும், இவர் தட முலை தோய்
கேழ் கிளர் மதுகையர், கிளைகளும், 'இளையார்
வாழிய!' என, அவர் மனன் உறு கடவுள்-
தாழ்குவர்—கவுசலை தயரதன் எனவே. 130

'கடல் தரு முகில், ஒளிர் கமலம்அது அலரா,
வட வரையுடன் வரு செயல் என, மறையும்
தடவுதல் அறிவு அரு தனி முதலவனும்,
புடை வரும் இளவலும்' என, நிகர் புகல்வார். 131

*129. ஈரம் - அன்பு; சோர் பொழுது - மாலை; துறுகுவர் - அடைவர்; 130. இவர் என்பது ஏழையரைக் குறித்தது; மதுகையர் - வலியுடையோர் (ஆடவர்); 131. வடவரை இலக்குவனுக்கு உவமை; வடவரை - மேருமலை; தடவுதல் - தேடுதல்.*

எதிர்ப்பட்ட குடிமக்களின் நலத்தை இராமன் உசாவல்

எதிர் வரும் அவர்களை, எமையுடை இறைவன்,
முதிர் தரு கருணையின் முகமலர் ஒளிரா,
'எது வினை? இடர் இலை? இனிது நும் மனையும்?
மதி தரு குமரரும் வலியர்கொல்?' எனவே, 132

மக்களின் மகிழ்வுரை

அஃது, 'ஐய! நினை எமது அரசு என உடையேம்;
இஃது ஒரு பொருள் அல; எமது உயிருடன் ஏழ்
மகிதலம் முழுதையும் உறுக, இ மலரோன்
உகு பகல் அளவு' என, உரை நனி புகல்வார். 133

யாவரும் போற்ற இராமன் இனிது இருத்தல்

இப் பரிசு, அணி நகர் உறையும் யாவரும்,
மெய்ப் புகழ் புனைதர, இளைய வீரர்கள்
தப்பு அற அடி நிழல் தழுவி ஏத்துற,
முப் பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும். 134

## 6 கையடைப் படலம்

மகிழ்ச்சியுடன் தயரதன் வாழ்தல்

அரசர்தம் பெருமகன், அகிலம் யாவையும்
விரசுறு தனிக் குடை விளங்க, வென்றி சேர்
முரசு ஒலி கறங்கிட, முனிவர் ஏத்துற,
கரை செயல் அரியது ஓர் களிப்பின் வைகும் நாள், 1

தயரதனிடம் விசுவாமித்திர முனிவன் வருதல்

நனை வரு கற்பக நாட்டு நல் நகர்
வினை தொழில் மதி மிகு மயற்கும் சிந்தையால்
நினையவும் அரியது, விசும்பின் நீண்டது, ஓர்
புனை மணி மண்டபம் பொலிய எய்தினன். 2

133. உகு பகல் அளவு - இறக்கும் காலம் வரை; உறுக - அடைவாயாக.
6: 2. நனை வரு - அரும்பு விரிகின்ற; மயன் - தேவ தச்சன்.

தூய மெல் அரியணைப் பொலிந்து தோன்றினன்;
சேய் இரு விசும்பிடைத் திரியும் சாரணர்,
'நாயகன் இவன்கொல்?' என்று அயிர்த்து, நாட்டம் ஓர்
ஆயிரம் இல்லை என்று ஐயம் நீங்கினர். 3

மடங்கல்போல் மொய்ம்பினன் முன்னர், 'மன்னுயிர்
அடங்கலும் உலகும் வேறு அமைத்து, தேவரோடு
இடம் கொள் நான்முகனையும் படைப்பென் ஈண்டு' எனத்
தொடங்கிய, துனி உறு, முனிவன் தோன்றினன். 4

**தயரதன் எழுந்து முனிவனை வணங்கி வரவேற்றல்**

வந்து முனி எய்துதலும், மார்பில் அணி ஆரம்,
அந்தரதலத்து இரவி அஞ்ச, ஒளி விஞ்ச,
கந்த மலரில் கடவுள்தன் வரவு காணும்
இந்திரன் என, கடிது எழுந்து அடி பணிந்தான். 5

பணிந்து, மணி செற்றுபு குயிற்றி அவிர் பைம் பொன்
அணிந்த தவிசு இட்டு, இனிது அருத்தியொடு இருத்தி,
இணைந்த கமலச் சரண் அருச்சனை செய்து, 'இன்றே
துணிந்தது, என் வினைத் தொடர்' எனத் தொழுது சொல்லும்: 6

'நிலம் செய் தவம் என்று உணரின், அன்று; நெடியோய்! என்
நலம் செய் வினை உண்டு எனினும், அன்று; நகர், நீ, யான்
வலம் செய்து வணங்க, எளிவந்த இது முந்து என்
குலம் செய் தவம்' என்று இனிது கூற, முனி கூறும்: 7

**விசுவாமித்திரனின் புகழுரை**

'என் அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறு ஒன்று உடையரானல்,
பல் நகமும் நகு வெள்ளிப் பனிவரையும்,
பாற்கடலும், பதும பீடத்து
அந் நகரும், கற்பக நாட்டு அணி நகரும்,
மணி மாட அயோத்தி என்னும்
பொன் நகரும், அல்லாது, புகல் உண்டோ?—
இகல் கடந்த புலவு வேலோய்! 8

3. சாரணர் - தேவதூதர்; 5. கந்தமலர் - நறுமணமுள்ள தாமரை;
6. செற்றுபு - நெருக்கி; துணிந்தது - அற்றது; 8. நகம் - மலை.

'இன் தளிர்க் கற்பக நறுந் தேன் இடை துளிக்கும்
நிழல் இருக்கை இழந்து போந்து,
நின்று அளிக்கும் தனிக் குடையின் நிழல் ஒதுங்கி,
குறை இரந்து நிற்ப, நோக்கி,
குன்று அளிக்கும் குல மணித் தோள் சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து, நீ கொண்டு
அன்று அளித்த அரசு அன்றோ, புரந்தரன் இன்று
ஆள்கின்றது?—அரச!' என்றான். 9

தயரதன் கைகூப்பித் தொழுது, 'நான் செய்வது அருளுக' எனல்

உரைசெய்யும் அளவில், அவன் முகம் நோக்கி,
உள்ளத்துள் ஒருவராலும்
கரை செய்ய அரியது ஒரு பேர் உவகைக்
கடல் பெருக, கரங்கள் கூப்பி,
'அரைசு எய்தி இருந்த பயன் எய்தினென்; மற்று,
இனிச் செய்வது அருளுக!' என்று,
முரைசு எய்து கடைத்தலையான் முன் மொழிய,
பின் மொழியும் முனிவன், ஆங்கே: 10

வேள்வி காக்க இராமனைத் தன்னுடன் அனுப்புமாறு கேட்டல்

'தரு வனத்துள் யான் இயற்றும் தகை வேள்விக்கு
இடையூறு, தவம் செய்வோர்கள்
வெருவரச் சென்று அடை காம வெகுளி என,
நிருதர் இடை விலக்கா வண்ணம்,
''செருமுகத்துக் காத்தி'' என, நின் சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி' என, உயிர் இரக்கும்
கொடுங் கூற்றின், உளையச் சொன்னான். 11

தயரதன் துயர்

எண் இலா அருந் தவத்தோன் இயம்பிய சொல்
மருமத்தின் எறி வேல் பாய்ந்த
புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தா-
லெனச் செவியில் புகுதலோடும்,
உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த,
ஆர் உயிர் நின்று ஊசலாட,
'கண் இலான் பெற்று இழந்தான்' என உழந்தான்
கடுந் துயரம்—கால வேலான். 12

9. புரந்தரன் - இந்திரன்; 12. புழை - துவாரம்.

தயரதன், 'நானே உடன் வந்து வேள்வி காப்பேன்' எனல்

தொடை ஊற்றின் தேன் துளிக்கும் நறுந் தாரான்
ஒருவண்ணம் துயரம் நீங்கி,
'படையூற்றம் இலன்; சிறியன் இவன்; பெரியோய்!
பணி இதுவேல், பனி நீர்க் கங்கை
புடை ஊற்றும் சடையானும், புரந்தரனும்,
நான்முகனும், புகுந்து செய்யும்
இடையூற்றுக்கு இடையூருய், யான் காப்பென்;
பெரு வேள்விக்கு எழுக!' என்ருன். 13

முனிவனின் சினமும் விளைவும்

என்றனன்; என்றலும், முனிவோடு எழுந்தனன், மண்
படைத்த முனி; 'இறுதிக் காலம்
அன்று' என, 'ஆம்' என இமையோர் அயிர்த்தனர்; மேல்
வெயில் கரந்தது; அங்கும் இங்கும்
நின்றனவும் திரிந்தன; மேல் நிவந்த கொழுங்
கடைப் புருவம் நெற்றி முற்றச்
சென்றன; வந்தது நகையும்; சிவந்தன கண்;
இருண்டன, போய்த் திசைகள் எல்லாம். 14

வசிட்டன் உரையால் தயரதன் தெளிவடைதல்

கறுத்த மா முனி கருத்தை உன்னி, 'நீ
பொறுத்தி' என்று அவற் புகன்று, 'நின் மகற்கு
உறுத்தல் ஆகலா உறுதி எய்தும் நாள்
மறுத்தியோ?' என, வசிட்டன் கூறினன்: 15

'பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் போய்
மொய் கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்,
ஐய! நின் மகற்கு அளவு இல் விஞ்சை வந்து
எய்து காலம் இன்று எதிர்ந்தது' என்னவே. 16

இராம-இலக்குவர்களை முனிவனிடம் ஒப்படைத்தல்

குருவின் வாசகம் கொண்டு, கொற்றவன்,
'திருவின் கேள்வனைக் கொணர்மின், சென்று' என,—
'வருக என்றனன்' என்னலோடும், வந்து
அருகு சார்ந்தனன், அறிவின் உம்பரான். 17

13. தொடை ஊற்றின் - தேன் கூடு (தேன்) ஊற்றுவது போல; 15. உறுத்தல் ஆகலா - அடைவித்தற்கு அரிய; 16. விஞ்சை - வித்தை.

வந்த நம்பியைத் தம்பிதன்னொடும்
முந்தை நான்மறை முனிக்குக் காட்டி, 'நல்
தந்தை நீ, தனித் தாயும் நீ, இவர்க்கு;
எந்தை! தந்தனென்; இயைந்த செய்க!' என்றான். 18

இராம-இலக்குவர் பின் தொடர விசுவாமித்திரன் போதல்

கொடுத்த மைந்தரைக் கொண்டு, சிந்தை முந்து
எடுத்த சீற்றம் விட்டு, இனிது வாழ்த்தி, 'மேல்
அடுத்த வேள்வி போய் முடித்தும் நாம்' என,
நடத்தல் மேயினான், நவைக்கண் நீங்கினான். 19

வென்றி வாள் புடை விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுறாத் தூணி யாத்து, இரு
குன்றம் போன்று உயர் தோளில், கொற்ற வில்
ஒன்று தாங்கினான்—உலகம் தாங்கினான். 20

அன்ன தம்பியும் தானும், ஐயன் ஆம்
மன்னன் இன் உயிர் வழிக்கொண்டாலென,
சொன்ன மா தவன்-தொடர்ந்து, சாயைபோல்,
பொன்னின் மா நகர்ப் புரிசை நீங்கினான். 21

மூவரும் சரயு நதிக்கரைச் சோலை சார்தல்

வரங்கள் மாசு அற, தவம் செய்தோர்கள் வாழ்
புரங்கள் நேர் இலா நகரம் நீங்கிப் போய்,
அரங்கின் ஆடுவார் சிலம்பின் அன்னம் நின்று
இரங்கு வார் புனல் சரயு எய்தினார். 22

கரும்பு கால் பொரக் கமுகு வார்ந்த தேன்
வரம்பு மீறிடு மருத வேலிவாய்,
அரும்பு கொங்கையார் அம் மெல் ஓதிபோல்
சுரும்பு வாழ்வது ஓர் சோலை நண்ணினார். 23

ஆற்றைக் கடந்து செல்லுங்கால் எரிபட்ட சோலையைக் கண்டு
இராமன் வினவுதல்

தாழும் மா மழை தவழும் நெற்றியால்
சூழி யானைபோல் தோன்றும் மால் வரைப்
பாழி மா முகட்டு உச்சி, பச்சை மா
ஏழும் ஏற, போய் ஆறும் ஏறினார். 24

21. சாயை - நிழல்; 23. ஓதிபோல் - கூந்தலைப்போல்; 24. பாழி - பெருமை; பச்சை மா - சூரியனுடைய குதிரைகள்.

தேவு மாதவன்-தொழுது, தேவர்தம்
நாவுள் ஆகுதி நயக்கும் வேள்வியால்
தாவும் மா புகை தழுவு சோலை கண்டு,
'யாவது ஈது?' என்றான்—எவர்க்கும் மேல் நின்றான். 25

## 7 தாடகை வதைப் படலம்

**அங்க நாட்டில் உள்ள காமன் ஆச்சிரமச் சிறப்பை விசுவாமித்திரன் உரைத்தல்**

'திங்கள் மேவும் சடைத் தேவன்மேல், மாரவேள்,
இங்கு நின்று எய்யவும், எரிதரும் நுதல் விழிப்
பொங்கு கோபம் சுட, பூளை வீ அன்ன தன்
அங்கம் வெந்து, அன்று தொட்டு அனங்கனே ஆயினான். 1

'வாரணத்து உரிவையான் மதனனைச் சினவு நாள்,
ஈரம் அற்று அங்கம் இங்கு உகுதலால், இவண் எலாம்,
ஆரணத்து உறையுளாய்! அங்க நாடு; இதுவும், அக்
காரணக் குறியுடைக் காமன் ஆச்சிரமமே. 2

'பற்று அவா வேரொடும் பசை அற, பிறவி போய்
முற்ற, வால் உணர்வு மேல் முடுகினார் அறிவு சென்று
உற்ற வானவன், இருந்து யோகு செய்தனன்எனின்,
சொற்றவாம் அளவதோ, மற்று இதன் தூய்மையே?' 3

**அன்று அங்கே தங்கி மறுநாள் மூவரும் பாலைவனம் ஒன்றைச் சார்தல்**

என்று, அ(வ்) அந்தணன் இயம்பலும், வியந்து, அவ் வயின்
சென்று, வந்து எதிர் எழும் செந் நெறிச் செல்வரோடு
அன்று உறைந்து, அலர் கதிர்ப் பரிதி மண்டிலம் அகன்
குன்றின்நின்று இவர, ஓர் சுடு சுரம் குறுகினார். 4

**பாலை நிலத்தின் தோற்றமும் தன்மையும்**

பருதிவானவன் நிலம் பசை அறப் பருகுவான்
விருது மேற்கொண்டு உலாம் வேனிலே அல்லது ஓர்
இருது வேறு இன்மையால், எரி சுடர்க் கடவுளும்
கருதின், வேம் உள்ளமும்; காணின், வேம் நயனமும். 5

25. மாதவன் - விசுவாமித்திரன்; தேவர்தம் நா - தேவர்தம் நாவாகிய தீ; தாவும் - பரவும்.

7: 1. பூளை வீ - பூளைப் பூ; 5. விருது - வெற்றி; இருது - பருவம்.

படியின்மேல் வெம்மையைப் பகரினும், பகரும் நா
முடிய வேம்; முடிய மூடு இருளும் வான் முகடும் வேம்;
விடியுமேல், வெயிலும் வேம்; மழையும் வேம்; மின்னிேனாடு
இடியும் வேம்; என்னில், வேறு யாவை வேவாதவே? 6

விஞ்சு வான் மழையின்மேல் அம்பும் வேலும் பட,
செஞ்செவே செருமுகத்து அன்றியே, திறன் இலா
வஞ்சர் தீவினைகளால் மான மா மணி இழந்து
அஞ்சினர் நெஞ்சுபோல், என்றும் ஆருதுஅரோ. 7

பேய் பிளந்து ஒக்க நின்று உலர் பெருங் கள்ளியின்
தாய் பிளந்து உக்க கார் அகில்களும், தழை இலா
வேய் பிளந்து உக்க வெண் தரளமும், விட அரா
வாய் பிளந்து உக்க செம் மணியுமே—வனம் எலாம். 8

பாரும் ஓடாது, நீடாது எனும் பாலதே;
சூரும் ஓடாது, கூடாதுஅரோ; சூரியன்
தேரும் ஓடாது, மா மாகம் மீ; தேரின், நேர்
காரும் ஓடாது; நீள் காலும் ஓடாதுஅரோ. 9

கண் கிழித்து உமிழ் விடக் கனல் அரா-அரசு கார்
விண் கிழித்து ஒளிரும் மின் அனைய பல் மணி, வெயில்
மண் கிழித்திட எழும் சுடர்கள், மண்மகள் உடல்
புண் கிழித்திட எழும் குருதியே போலுமே. 10

புழுங்கு வெம் பசியொடு புரளும் பேர் அரா
விழுங்க வந்து எழுந்து எதிர் விரித்த வாயின்வாய்,
முழங்கு திண் கரி புகும் முடுகி—மீமிசை
வழங்கு வெங் கதிர் சுட, மறைவு தேடியே! 11

ஏக வெங் கனல் அரசிருந்த, காட்டினில்
காகமும் கரிகளும் கரிந்து சாம்பின;—
மாக வெங்கதிர் எனும் வடவைத் தீச் சுட,
மேகமும் கரிந்து இடை வீழ்ந்த போலுமே. 12

6. படி - மண்; 7. செஞ்செவே - மிகவும் செவ்வையாக; மான மா மணி - மானமாகிய சிறந்த இரத்தினம்; 8. கள்ளியின் தாய் - கள்ளியாகிய தாய், கள்ளியின் அடிப்பகுதி; 9. மாகம் - வானம்; 10. வெயில் மண் கிழித்திட எழும் சுடர்கள் - கதிரவன் நிலத்தைப் பிளக்க வெடிப்புகளின் வழியாக மேலெழுகின்ற கிரணங்கள்; 12. ஏகம் - ஒன்று, ஒப்பு இல்லாதது.

கானகத்து இயங்கிய கழுதின் தேர்க் குலம்,
'தான் அகத்து எழுதலால் தலைக்கொண்டு ஓடிப்போய்,
மேல் நிமிர்ந்து எழுந்திடில் விசும்பும் வேம்' என,
வானவர்க்கு இரங்கி, நீர் வளைந்தது ஒத்ததே! 13

ஏய்ந்த அக் கனலிடை எழுந்த கானல்-தேர்,
காய்ந்த அக் கடு வனம் காக்கும் வேனிலின்
வேந்தனுக்கு அரசு வீற்றிருக்கச் செய்தது ஓர்
பாய்ந்த பொன் காலுடைப் பளிக்குப் பீடமே! 14

தா வரும் இரு வினை செற்று, தள்ள அரும்
மூவகைப் பகை அரண் கடந்து, முத்தியில்
போவது புரிபவர் மனமும், பொன் விலைப்
பாவையர் மனமும், போல் பசையும் அற்றதே! 15

பொரி பரல் படர் நிலம் பொடிந்து கீழ் உற
விரிதலின், பெரு வழி விளங்கித் தோன்றலால்,
அரி மணிப் பணத்து அரா-அரசன் நாட்டினும்
எரி கதிர்க்கு இனிது புக்கு இயங்கல் ஆயதே! 16

பாலை வெம்மையைத் தாங்கும்பொருட்டு இராம இலக்குவருக்கு
இரு மந்திரங்களைக் கோசிகன் உபதேசித்தல்

எரிந்து எழு கொடுஞ் சுரம் இனையது எய்தலும்,
அருந் தவன், 'இவர், பெரிது அளவு இல் ஆற்றலைப்
பொருந்தினர் ஆயினும், பூவின் மெல்லியர்;
வருந்துவர் சிறிது' என மனத்தின் நோக்கினன். 17

நோக்கினன் அவர் முகம்; நோக்க, நோக்குடைக்
கோக் குமரரும் அடி குறுக, நான்முகன்
ஆக்கின விஞ்சைகள் இரண்டும் அவ் வழி
ஊக்கினன்; அவை அவர் உள்ளத்து உள்ளினர். 18

உள்ளிய காலையின் ஊழித் தீயையும்
எள்ளுறு கொழுங் கனல் எரியும் வெஞ் சுரம்,
தெள்ளு தண் புனலிடைச் சேறல் ஒத்தது;
வள்ளலும் முனிவனை வணங்கிக் கூறுவான்: 19

13. கழுதின் தேர் - பேய்த்தேர், கானல்; நீர் - நீர்க்கடவுள்; 15. தா - துன்பம்; 18. விஞ்சைகள் இரண்டு - பலை, அதிபலை என்னும் வித்தைகள்.

'சுழி படு கங்கைஅம் தொங்கல் மோலியான்
விழி பட வெந்ததோ? வேறுதான் உண்டோ?
பழி படர் மன்னவன் பரித்த நாட்டினூங்கு
அழிவது என்? காரணம், அறிஞ! கூறு' என்றான். 20

தாடகையின் வரலாறு உரைத்தல்

என்றலும், இராமனை நோக்கி, 'இன் உயிர்
கொன்று உழல் வாழ்க்கையள், கூற்றின் தோற்றத்தள்,
அன்றியும் ஐ-இருநூறு மையல் மா
ஒன்றிய வலியினள், உறுதி கேள்' என, 21

'மண் உருத்து எடுப்பினும், கடலை வாரினும்,
விண் உருத்து இடிப்பினும், வேண்டின், செய்கிற்பாள்;
எண் உருத் தெரிவு அரும் பாவம் ஈண்டி, ஓர்
பெண் உருக் கொண்டெனத் திரியும் பெற்றியாள்; 22

'பெரு வரை இரண்டொடும், பிறந்த நஞ்சொடும்,
உரும் உறழ் முழக்கொடும், ஊழித் தீயொடும்,
இரு பிறை செறிந்து எழும் கடல் உண்டாம்எனின்,
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே; 23

'சூடக அரவு உறழ் சூலக் கையினள்;
காடு உறை வாழ்க்கையள்;—கண்ணின் காண்பரேல்,
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!—
''தாடகை'' என்பது அச் சழக்கி நாமமே;* 24

'உளப் பரும் பிணிப்பு அறு உலோபம் ஒன்றுமே
அளப்ப அருங் குணங்களை அழிக்குமாறுபோல்,
கிளப்ப அருங் கொடுமைய அரக்கி கேடு இலா
வளப் பரு மருத வைப்பு அழித்து மாற்றினாள்; 25

'இலங்கை அரசன் பணி அமைந்து, ஓர் இடையூறு,
விலங்கல் வலிகொண்டு, எனது வேள்வி நலிகின்றாள்;—
அலங்கல் முகிலே!—அவள் இ(வ்) அங்க நிலம் எங்கும்
குலங்களொடு அடங்க நனி கொன்று திரிகின்றாள்; 26

20. தொங்கல் - கொன்றை மாலை; 21. மையல் மா - யானை; 22. எண் - அளவு; உரு - தன்மை; 23. வரை முலைக்கும், நஞ்சு கண்ணுக்கும், ஊழித்தீ தலைமயிருக்கும், பிறை பல்லுக்கும் உவமை; 24. அரவு சூடகம் - நாகமாகிய கங்கணம்; 25. உளப் பரும் பிணிப்பு - மனத்திலே மிக்க பற்று.

'முன் உலகு அளித்து முறை நின்ற உயிர் எல்லாம்
தன் உணவு எனக் கருது தன்மையினள்;—மைந்த!—
என் இனி உணர்த்துவது? இனிச் சிறிது நாளில்
மன்னுயிர் அனைத்தையும் வயிற்றின் இடும்' என்றான். 27

தாடகை எங்குளாள் என இராமன் வினவலும் தாடகையின் வருகையும்

அங்கு, இறைவன் அப் பரிசு உரைப்ப, அது கேளா,
கொங்கு உறை நறைக் குல மலர்க் குழல் துளக்கா,
'எங்கு உறைவது, இத் தொழில் இயற்றுபவள்?' என்றான்—
சங்கு உறை கரத்து ஒரு தனிச் சிலை தரித்தான். 28

கைவரை எனத் தகைய காளை உரை கேளா,
ஐவரை அகத்திடை அடைத்த முனி, 'ஐய!
இவ் வரை இருப்பது அவள்' என்பதனின் முன்பு, ஓர்
மை வரை நெருப்பு எரிய வந்ததென, வந்தாள். 29

தாடகையின் தோற்றம்

சிலம்புகள் சிலம்பிடை செறித்த கழலோடும்
நிலம் புக மிதித்தனள்; நெளித்த குழி வேலைச்
சலம் புக, அனல் தறுகண் அந்தகனும் அஞ்சிப்
பிலம் புக, நிலக் கிரிகள் பின் தொடர, வந்தாள். 30

இறைக்கடை துடித்த புருவத்தள், எயிறு என்னும்
பிறைக் கடை பிறக்கிட மடித்த பில வாயள்,
மறைக் கடை அரக்கி, வடவைக் கனல் இரண்டு ஆய்
நிறைக் கடல் முளைத்தென, நெருப்பு எழ விழித்தாள். 31

கடம் கலுழ் தடங் களிறு கையொடு கை தெற்றா,
வடம் கொள, நுடங்கும் இடையாள், மறுகி வானோர்
இடங்களும், நெடுந் திசையும், ஏழ் உலகும், யாவும்,
அடங்கலும் நடுங்க, உரும் அஞ்ச, நனி ஆர்த்தாள். 32

29. கைவரை-யானை; 30. சிலம்புகள்-மலைகள்; கழலோடு-கால்களினால், ஒடு கருவிப் பொருளில் (ஆல்) வந்தது; பிலம் - பாதாளம்; 31. இறைக் கடை - இறைகடை என்பது விகாரப்பட்டது, சிறிது கடைப்பகுதி; மறைக்கடை - வேத விதிக்குப் புறம்பான ஒழுக்கம்; நிறைக்கடல் - நிறைவை யுடைய கடல்.

தாடகை ஆரவாரித்து, சினந்து, 'வேல் கொண்டு எறிவேன்' எனல்

ஆர்த்து, அவரை நோக்கி நகைசெய்து, எவரும் அஞ்ச,
கூர்த்த நுதி முத் தலை அயில் கொடிய கூற்றைப்
பார்த்து, எயிறு தின்று, பகு வாய்முழை திறந்து, ஓர்
வார்த்தை உரைசெய்தனள்—இடிக்கும் மழை அன்னாள்— 33

'கடக்க அரும் வலத்து எனது காவல் இது; யாவும்
கெட, கருவறுத்தனென்; இனி, ''சுவை கிடக்கும்
விடக்கு அரிது'' எனக் கருதியோ? விதிகொடு உந்த,
படக் கருதியோ?—பகர்மின், வந்த பரிசு!' என்றே. 34

மேகம்அவை இற்று உக விழித்தனள்; புழுங்கா,
மாக வரை இற்று உக உதைத்தனள்; மதித் திண்
பாகம் எனும் முற்று எயிறு அதுக்கி, அயில் பற்றா,
'ஆகம் உற உய்த்து, எறிவென்' என்று, எதிர் அழன்றாள். 35

'பெண்' என்றெண்ணி இராமன் கணை தொடாதிருத்தல்

அண்ணல் முனிவற்கு அது கருத்துஎனினும், 'ஆவி
உண்'என, வடிக் கணை தொடுக்கிலன்; உயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுளளேனும்,
'பெண்' என மனத்திடை பெருந்தகை நினைந்தான். 36

இராமன் கருத்தறிந்த முனிவன் 'இவள் பெண் அல்லள்; அரக்கி; கொல்லுக' எனல்

வெறிந்த செம் மயிர் வெள் எயிற்றாள், தனை
எறிந்து கொல்வென் என்று ஏற்கவும், பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்து எலாம்
அறிந்து, நான்மறை அந்தணன் கூறுவான்: 37

'தீது என்றுள்ளவை யாவையும் செய்து, எமைக்
கோது என்று உண்டிலள்; இத்தனையே குறை;
யாது என்று எண்ணுவது? இக் கொடியாளையும்,
மாது என்று எண்ணுவதோ?—மணிப் பூணினாய்! 38

'நாண்மையே உடையார்ப் பிழைத்தால், நகை;
வாண்மையே பெற்ற வன் திறல் ஆடவர்
தோண்மையே இவள் பேர் சொலத் தோற்குமேல்,
ஆண்மை என்னும் அது ஆரிடை வைகுமே? 39

34. விடக்கு - ஊன்; 37. வெறிந்த - செறிந்த; பார்க்கிலா - பொருட்படுத்தாத; 39. நாண்மை - நாணமாகிய குணம்; பிழைத்தால்- கொன்றால்.

'இந்திரன் இடைந்தான்; உடைந்து ஓடினர்,
தந்திரம் படத் தானவர், வானவர்;
மந்தரம் இவள் தோள்எனின், மைந்தரோடு,
அந்தரம் இனி யாதுகொல், ஆண்மையே?† 40

'கறங்கு அடல் திகிரிப் படி காத்தவர்
பிறங்கடைப் பெரியோய்! பெரியோரொடும்
மறம்கொடு, இத் தரை மன்னுயிர் மாய்த்து, நின்று,
அறம் கெடுத்தவட்கு ஆண்மையும் வேண்டுமோ? 41

'சாற்றும் நாள் அற்றது எண்ணி, தருமம் பார்த்து,
ஏற்றும் விண் என்பது அன்றி, இவளைப்போல்,
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது ஓர்
கூற்றும் உண்டுகொல்?—கூற்று உறழ் வேலினாய்! 42

'மன்னும் பல் உயிர் வாரி, தன் வாய்ப் பெய்து
தின்னும் புன்மையின் தீமை எதோ?—ஐய!—
''பின்னும் தாழ் குழல் பேதைமைப் பெண் இவள்
என்னும் தன்மை, எளிமையின் பாலதே! 43

'ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன்; இவட்
சீறி நின்று இது செப்புகின்றேன்அலேன்;
ஆறி நின்றது அற்ற அன்று; அரக்கியைக்
கோறி' என்று, எதிர் அந்தணன் கூறினான். 44

**முனிவன் ஏவலுக்கு இராமன் இசைதல்**

ஐயன் அங்கு அது கேட்டு, 'அறன் அல்லவும்
எய்தினால், ''அது செய்க!'' என்று ஏவினால்,
மெய்ய! நின் உரை வேதம் எனக் கொடு
செய்கை அன்றோ! அறம் செயும் ஆறு' என்றான். 45

**தாடகை இராமன்மேல் ஏவிய சூலப்படையை அவன் அழித்தல்**

கங்கைத் திம் புனல் நாடன் கருத்தை, அம்
மங்கைத் தீ அனையாளும் மனக்கொளா,
செங் கைச் சூல வெந் தீயினை, தீய தன்
வெங் கண் தீயொடு மேற்செல வீசினாள். 46

40. தந்திரம் - படை; அந்தரம் - வேறுபாடு; 41. பிறங்கடை - வழித் தோன்றல்; 42. சாற்றும் நாள் - நியமித்த ஆயுள்; நாற்றம் கேட்டல் - மணத்தை உணர்தல்; 43. எளிமை - அறியாமை.

புதிய கூற்று அனையாள் புகைந்து ஏவிய
கதிர் கொள் மூஇலைக் கால வெந் தீ, முனி
விதியை மேற்கொண்டு நின்றவன்மேல், உவா
மதியின்மேல் வரும் கோள் என, வந்ததே. 47

மாலும், அக் கணம் வாளியைத் தொட்டதும்,
கோல வில் கால் குனித்ததும், கண்டிலர்;
காலனைப் பறித்து அக் கடியாள் விட்ட
சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர். 48

தாடகையின் கல்மழையை இராமனின் அம்பு மழை தடுத்தல்

அல்லின் மாரி அனைய நிறத்தவள்,
சொல்லும் மாத்திரையின், கடல் தூர்ப்பது ஓர்
கல்லின் மாரியைக் கைவகுத்தாள்; அது
வில்லின் மாரியின், வீரன் விலக்கினான். 49

இராம பாணம் தாடகையைக் கொல்லுதல்

சொல் ஒக்கும் கடிய வேகச் சுடு சரம், கரிய செம்மல்,
அல் ஒக்கும் நிறத்தினாள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது, அப் புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் என, போயிற்று அன்றே! 50

பொன் நெடுங் குன்றம் அன்னான், புகர் முகப் பகழி என்னும்
மன் நெடுங் கால வன் காற்று அடித்தலும்,—இடித்து, வானில்
கல் நெடு மாரி பெய்யக் கடையுகத்து எழுந்த மேகம்,
மின்னொடும் அசனியோடும் வீழ்வதே போல—வீழ்ந்தாள். 51

பொடியுடைக் கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை எயிற்றுப் பேழ் வாய்த் தாடகை, தலைகள்தோறும்
முடியுடை அரக்கற்கு, அந் நாள், முந்தி உற்பாதம் ஆக,
படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள். 52

கான் திரிந்து ஆழி ஆகத் தாடகை கடின மார்பத்து
ஊன்றிய பகழி வாயூடு ஒழுகிய குருதி வெள்ளம்
ஆன்ற அக் கானம் எல்லாம் ஆயினது—அந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானம் தொடக்கு அற்று வீழ்ந்தது ஒத்தே! 53

47. உவாமதி - நிறைமதி; கோள்-இராகு; 48. மால்-திருமால் (இராமன்); 50. சொல் - முனிவர்தம் சுடுசொல், சாபம்; 52. பொடி - புழுதி; தடி - தசை; உற்பாதம் - பின் நிகழும் தீங்கினை அறிவிக்கும் குறி; 53. தொடக்கு - ஆதாரம், பற்றுக்கோடு.

வாச நாள்மலரோன் அன்ன மா முனி பணி மருத,
காசு உலாம் கனகப் பைம் பூண், காகுத்தன் கன்னிப்போரில்,
கூசி, வாள் அரக்கர்தங்கள் குலத்து உயிர் குடிக்க அஞ்சி,
ஆசையால் உழலும் கூற்றும், சுவை சிறிது அறிந்தது அன்றே.

**வானவர் மகிழ்வும் வாழ்த்தும்**

'யாமும் எம் இருக்கை பெற்றேம்; உனக்கு இடையூறும் இல்லை;
கோமகற்கு இனிய தெய்வப் படைக்கலம் கொடுத்தி' என்னு,
மா முனிக்கு உரைத்து, பின்னர், வில் கொண்ட மழை அனன்மேல்
பூமழை பொழிந்து வாழ்த்தி, விண்ணவர் போயினரே. 55

## 8 வேள்விப் படலம்

**இராமனுக்கு விசுவாமித்திரன் படைக்கலம் தருதல்**

விண்ணவர் போய பின்றை, விரிந்த பூமழையினாலே
தண்ணெனும் கானம் நீங்கி, தாங்க அருந் தவத்தின் மிக்கோன்,
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து அன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே அன்ன, படைக்கலம் அருளினானே. 1

ஆறிய அறிவன் கூறி அளித்தலும், அண்ணல்தன்பால்,
ஊறிய உவகையோடும், உம்பர்தம் படைகள் எல்லாம்,
தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்கள் எல்லாம்
மாறிய பிறப்பில் தேடி வருவபோல், வந்த அன்றே. 2

**'இளையவன்போல் பணி புரிவோம்' எனப் படைக்கலம் முன்வரல்**

'மேவினம்; பிரிதல் ஆற்றேம்; வீர! நீ விதியின் எம்மை
ஏவின செய்து நிற்றும், இளையவன் போல' என்று
தேவர்தம் படைகள் செப்ப, 'செவ்விது' என்று அவனும் நேர,
பூவைபோல் நிறத்தினாற்குப் புறத்தொழில் புரிந்த அன்றே. 3

54. காசு - இரத்தினம்; கன்னிப்போர் - முதற்போர்; 55. படைக்கலம்- ஆயுதம்; வில் கொண்ட மழை - வானவில்லாகிய இந்திரவில்லைக்கொண்ட கருமேகம்.

8: 2. ஆறிய - துயர் தணிந்த; 3. இளையவன் - இலக்குவன்; பூவை - காயாம்பூ.

**வழியில் எதிர்ப்பட்ட நதியைக் குறித்து முனிவன் கூறல்**

இனையன நிகழ்ந்த பின்னர், காவதம் இரண்டு சென்றார்;
அனையவர் கேட்க, ஆண்டு ஓர் அரவம் வந்து அணுகித் தோன்ற,
'முனைவ! ஈது யாவது?' என்று, முன்னவன் வினவ, பின்னர்,
வினை அற நோற்று நின்ற மேலவன் விளம்பலுற்றான்: 4

'மானச மடுவில் தோன்றி வருதலால், ''சரயு'' என்றே
மேல் முறை அமரர் போற்றும் விழு நதி அதனினோடும்,
ஆன கோமதி வந்து எய்தும் அரவம்அது' என்ன, அப்பால்
போனபின், பவங்கள் தீர்க்கும் புனித மா நதியை உற்றார்.* 5

'சுரர் தொழுது இறைஞ்சற்கு ஒத்த தூ நதி யாவது' என்று,
வரமுனிதன்னை, அண்ணல் வினவுற, மலருள் வைகும்
பிரமன் அன்று அளித்த வென்றிப் பெருந்தகைக் குசன் என்று ஓதும்
அரசர்கோன் மனைவி தன்பால் அளித்தவர் நால்வர் ஆகும்.* 6

'அவர்களில் குசநாபற்கே ஐ-இருபதின்மர் அம் சொல்
துவர் இதழ்த் தெரிவை நல்லார் தோன்றினர் வளரும் நாளில்
இவர் பொழில்-தலைக்கண் ஆயத்து எய்துழி, வாயு எய்தி,
கவர் மனத்தினனாய், அந்தக் கன்னியர் தம்மை நோக்கி,* 7

'கொடித் தனி மகரம் கொண்டான் குனிசிலைச் சரத்தால் நொந்தேன்;
வடித் தடங் கண்ணீர்! என்னை மணத்திர்' என்று உரைப்ப, ''எந்தை
அடித் தலத்து உரைத்து, நீரோடு அளித்திடின், அணைதும்'' என்ன,
ஒடித்தனன் வெரிநை; வீழ்ந்தார், ஒளி வளை மகளிர் எல்லாம்.* 8

'சமிரணன் அகன்றதன்பின், தையலார், தவழ்ந்து சென்றே
அமிர்து உகு குதலை மாழ்கி, அரசன் மாட்டு உரைப்ப, அன்னான்,
நிமிர்குழல் மடவார்த் தேற்றி, நிறை தவன் சூளி நல்கும்
திமிர் அறு பிரமதத்தற்கு அளித்தனன், திரு அனாரை.* 9

'அவன் மலர்க் கைகள் நீவ, கூன் நிமிர்ந்து, அழகு வாய்த்தார்,
புவனம் முற்றுடைய கோவும், புதல்வர் இல்லாமை, வேள்வி
தவர்களின் புரிதலோடும், தகவு உற, தழலின் நாப்பண்,
கவன வேகத் துரங்கக் காதி வந்து உதயம் செய்தான்.* 10

4. அரவம் - ஓசை; 5. மானச மடு - மானச சரசு; விழு நதி - சிறந்த நதி; பவம் - பிறப்பு; 6. யாவது - யாது; 8. கொடித் தனி மகரம் கொண்டான் - ஒப்பற்ற மீனக்கொடியுடைய மன்மதன்; 9. சமிரணன் - வாயு; திமிரம் என்பது அம் கெட்டுத் திமிர் என நின்றது; திமிரம் - இருள், மயக்கம்.

'அன்னவன் தனக்கு, வேந்தன், அரசொடு முடியும் ஈந்து,
பொன்னகர் அடைந்த பின்னர், புகழ்மகோதயத்தில் வாழும்
மன்னவன் காதிக்கு, யானும், கவுசிகை என்னும் மாதும்,
முன்னர் வந்து உதிப்ப, அந்த முடியுடை வேந்தர்வேந்தன்,* 11

'பிருகுவின் மதலை ஆய, பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா,
இரிசிகன் என்பவற்கு மெல்லியலாளை ஈந்தான்;
அருமறையவனும் சில்நாள் அறம் பொருள் இன்பம் முற்றி,
விரிமலர்த் தவிசோன் தன்பால் விழுத்தவம் புரிந்து மீண்டான்.* 12

காதலன் சேணின் நீங்க, கவுசிகை தரிக்கலாற்றாள்,
மீது உறப் படரலுற்றாள், விழு நதி வடிவம் ஆகி,
மாதவர்க்கு அரசு நோக்கி, ''மா நிலத்து உறுகண் நீக்கப்
போதுக, நதியாய்'' என்னா, பூமகன் உலகு புக்கான்.* 13

'எம் முனாள் நங்கை இந்த இரு நதி ஆயினாள்' என்று,
அம் முனி புகல, கேளா, அதிசயம் மிகவும் தோன்ற,
செம்மலும் இளைய கோவும், சிறிது இடம் தீர்ந்த பின்னர்,
'மைம் மலி பொழில் யாது?' என்ன, மா தவன் கூறலுற்றான்: 14

சோலையின் சிறப்பை இராமன் வினவ முனிவன் எடுத்துரைத்தல்

'தங்கள் நாயகரின் தெய்வம்தான் பிறிது இலை' என்று எண்ணும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது; மற்றும் கேளாய்:
எங்கள் நான்மறைக்கும், தேவர் அறிவிற்கும், பிறர்க்கும், எட்டாச்
செங் கண் மால் இருந்து, மேல்நாள் செய் தவம் செய்தது அன்றே. 15

'"பாரின்பால், விசும்பின்பாலும், பற்று அறப் படிப்பது அன்னான்
பேர்" என்பான்; "அவன் செய் மாயப் பெரும் பிணக்கு ஒருங்கு தேர்வார்
ஆர்?" என்பான்; அமல மூர்த்தி கருதியது அறிதல் தேற்றாம்;
ஈர்-ஐம்பது ஊழிக்காலம் இருந்தனன் யோகத்து, இப்பால். 16

மாவலியின் வரலாற்றை முனிவன் கூறல்

'ஆனவன் இங்கு உறைகின்ற அந் நாள்வாய்
ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண்
ஏனம் எனும் திறல் மாவலி என்பான்,
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்; 17

13. உறுகண் - துன்பம்; பூமகன் - பிரமன்; 16. படிப்பது - ஓதுவது;
17. ஏனம் - ஆதிவராகம்.

'செய்தபின், வானவரும் செயல்ஆற்று
நெய் தவழ் வேள்வியை முற்றிட நின்றான்;
ஐயம் இல் சிந்தையர் அந்தணர்தம்பால்,
வையமும் யாவும் வழங்க, வலித்தான்; 18

'ஆயது அறிந்தனர் வானவர், அந் நாள்;
மாயனை வந்து வணங்கி இரந்தார்;
''தீயவன் வெந் தொழில் தீர்'' என நின்றார்;
நாயகனும், அது செய்ய நயந்தான். 19

'காலம் நுனித்து உணர் காசிபன் என்னும்
வால்-அறிவற்கு அதிதிக்கு ஒரு மகவு ஆய்,
நீல நிறத்து நெடுந்தகை வந்து, ஓர்
ஆல் அமர் வித்தின் அருங் குறள் ஆனான். 20

'முப்புரிநூலினன், முஞ்சியன், விஞ்சை
கற்பது ஓர் நாவன், அனல் படு கையன்,
அற்புதன்,—அற்புதரே அறியும் தன்
சிற்பதம் ஒப்பது ஓர் மெய்க்கொடு—சென்றான். 21

'அன்று அவன் வந்தது அறிந்து, உலகு எல்லாம்
வென்றவன், முந்தி வியந்து எதிர் கொண்டான்;
''நின்தனின் அந்தணர் இல்லை; நிறைந்தோய்!
என்தனின் உய்ந்தவர் யார் உளர்?'' என்றான். 22

'ஆண்தகை அவ் உரை கூற, அறிந்தோன்,
''வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி,
நீண்ட கையாய்! இனி, நின்னுழை வந்தோர்
மாண்டவர்; அல்லவர் மாண்பு இலர்'' என்றான். 23

'சிந்தை உவந்து எதிர், ''என் செய?'' என்றான்;
அந்தணன், ''மூஅடி மண் அருள், உண்டேல்;
வெந் திறலாய்! இது வேண்டும்'' எனுமுன்,
''தந்தனென்'' என்றனன்; வெள்ளி, தடுத்தான்: 24

**18. வலித்தான் - துணிந்தான்; 20. ஆல் அமர் வித்து - ஆலமரத்தின் வடிவம் முழுதும் உள்ளே அமைந்துள்ள விதை; 21. முஞ்சியன் - முஞ்சம் என்னும் புல்லால் ஆகிய அரைஞாண் பூண்டவன்; அனல் படு கையன் - பார்ப்பாரது வலக்கையில் நெருப்பு இருக்கிறது என்பது நூல் துணிபு; சிற்பதம் - ஞானபதம்.**

' ''கண்ட திறத்து இது கைதவம்; ஐய!
கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்;
அண்டமும் முற்றும் அகண்டமும், மேல்நாள்,
உண்டவன்ஆம்; இது உணர்ந்துகொள்'' என்றான். 25

' ''நினைக்கிலை; என் கை நிமிர்ந்திட வந்து,
தனக்கு இயலாவகை தாழ்வது, தாழ்வு இல்
கனக் கரியானது கைத்தலம் என்னின்,
எனக்கு இதன்மேல் நலம் யாதுகொல்?'' என்றான். 26

' ''துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்,
முன்னிய நல் நெறி நூலவர்; 'முன்வந்து,
உன்னிய தானம் உயர்ந்தவர் கொள்க'
என்னின், இவன் துணை யாவர் உயர்ந்தார்? 27

' ''வெள்ளியை ஆதல் விளம்பினை, மேலோர்
வள்ளியர் ஆகில் வழங்குவது அல்லால்,
எள்ளுவ என் சில? இன் உயிரேனும்
கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்றால். 28

' ''மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்; மாயாது
ஏந்திய கைகொடு இரந்தவர்;—எந்தாய்!—
வீந்தவர் என்பவர்; வீந்தவரேனும்,
ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே? 29

' ''அடுப்ப வரும் பழி செய்ஞ்ஞரும் அல்லர்;
கொடுப்பவர் முன்பு, 'கொடேல்' என நின்று,
தடுப்பவரே பகை; தம்மையும் அன்னார்
கெடுப்பவர்; அன்னது ஓர் கேடு இலை'' என்றான். 30

' ''கட்டுரையின், தம கைத்து உள போழ்தே
இட்டு, இசைகொண்டு, அறன் எய்த முயன்றோர்
உள் தெறு வெம் பகைஆவது உலோபம்;
'விட்டிடல்' என்று விலக்கினர்தாமே.'' 31

25. கைதவம் - கபடம், வஞ்சம்; 26. கனக் கரியான் - முகில் போலக் கரியவன்; 28. வெள்ளியை - வெள்ளி என்னும் பெயரை உடையாய் (அறியாமையை உடையாய்); 31. கட்டுரை - உறுதிமிக்க சொல்; விட்டிடல் - விட்டுவிடுக; விலக்கினர் - நூலோர் வெறுத்துக் கூறினர்.

'எடுத்து ஒருவர்க்கு ஒருவர் ஈவதனின் முன்னம்
தடுப்பது நினக்கு அழகிதோ, தகவு இல் வெள்ளி?
கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடுகின்றாய்!* 32

'முடிய இம் மொழி எலாம் மொழிந்து, மந்திரி,
''கொடியன்'' என்று உரைத்த சொல் ஒன்றும் கொண்டிலன்;
''அடி ஒரு மூன்றும், நீ, அளந்து கொள்க'' என,
நெடியவன் குறிய கை நீரில் நீட்டினான். 33

'கயம் தரு நறும் புனல் கையில் தீண்டலும்,
பயந்தவர்களும் இகழ் குறளன், பார்த்து எதிர்
வியந்தவர் வெருக் கொள, விசும்பின் ஓங்கினான்—
உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்பவே. 34

'நின்ற கால் மண் எலாம் நிரப்பி, அப்புறம்
சென்று பாவிற்றிலை, சிறிது பார் எனா;
ஒன்ற, வானகம் எலாம் ஒடுக்கி, உம்பரை
வென்ற கால் மீண்டது, வெளி பெறாமையே. 35

'உலகு எலாம் உள்ளடி அடக்கி, ஓர் அடிக்கு
அலகு இலாது, அவ் அடிக்கு, அன்பன் மெய்யதாம்,
இலை குலாம் துழாய் முடி ஏக நாயகன்,—
சிலை குலாம் தோளினாய்!—சிறியன் சாலவே! 36

' ''உரியது இந்திரற்கு இது'' என்று, உலகம் ஈந்து போய்,
விரி திரைப் பாற்கடல் பள்ளி மேவினான்;
கரியவன், உலகு எலாம் கடந்த தாள் இணை
திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டிற்றே! 37

**வேள்விக்கு ஏற்ற இடம் இதுவே எனல்**

'ஆதலால், அரு வினை அறுக்கும்; ஆரிய!
காதலால் கண்டவர் பிறவி காண்குறார்;
வேதநூல் முறைமையால் வேள்வி முற்றுவேற்கு,
ஈது அலாது இல்லை, வேறு இருக்கற்பாலதே. 38

34. பயந்தவர்கள் - பெற்றவர்கள்; 35. நிரப்பி - மூடி; பாவிற்றிலை - பரவவில்லை; 36. அலகு - அளத்தற்குரிய இடம்.

இராம-இலக்குவர் காவலில் விசுவாமித்திரன் வேள்வி தொடங்குதல்

'ஈண்டு இருந்து இயற்றுவென் யாகம், யான்' என,
நீண்ட பூம் பழுவத்து நெறியின் எய்தி, பின்
வேண்டுவ கொண்டு, தன் வேள்வி மேவினன்,
காண்தகு குமரரைக் காவல் ஏவியே. 39

எண்ணுதற்கு, ஆக்க, அரிது இரண்டு-மூன்று நாள்
விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை,
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்,
கண்ணினைக் காக்கின்ற இமையின் காத்தனர். 40

'தீய அரக்கர் எப்பொழுது வருவர்' என முனிவனை இராமன் கேட்டல்

காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன், முழுது உணர் முனியை முன்னி, 'நீ,
தீத் தொழில் இயற்றுவர் என்ற தீயவர்,
ஏத்த அருங் குணத்தினய்! வருவது என்று?' என்றான். 41

அப்பொழுது அரக்கர் ஆரவாரித்து வரல்

வார்த்தை மாறு உரைத்திலன், முனிவன், மவுனியாய்;
போர்த் தொழில் குமரனும், தொழுது போந்தபின்,
பார்த்தனன் விசும்பினை;—பருவ மேகம்போல்
ஆர்த்தனர், இடித்தனர், அசனி அஞ்சவே. 42

அரக்கர் சேனையின் போர்த்திறம்

எய்தனர்; எறிந்தனர்; எரியும், நீருமாய்ப்
பெய்தனர்; பெரு வரை பிடுங்கி வீசினர்;
வைதனர்; தெழித்தனர்; மழுக் கொண்டு ஓச்சினர்;
செய்தனர், ஒன்று அல தீய மாயமே. 43

ஊன் நகு படைக்கலம் உருத்து வீசின,
கானகம் மறைத்தன, கால மாரிபோல்;
மீன் நகு திரைக் கடல் விசும்பு போர்த்தென,
வானகம் மறைத்தன, வளைந்த சேனையே. 44

39. பழுவம் - காடு; 40. எண்ணுதற்கு ஆக்க அரிது - நினைத்தற்கும் செய்தற்கும் அரிய வேள்வி; இரண்டு மூன்று நாள் - ஆறு நாள்; 44. ஊன் நகு - புலால் விளங்குகின்ற.

வில்லொடு மின்னு, வாள் மிடைந்து உலாவிட,
பல் இயம் கடிப்பினில் இடிக்கும் பல் படை,
'ஒல்' என உரறிய ஊழிப் பேர்ச்சியுள்,
வல்லே வந்து எழுந்தது ஓர் மழையும் போன்றதே. 45

அரக்கர்களை இலக்குவனுக்கு இராமன் காட்டல்

கவருடை எயிற்றினர்; கடித்த வாயினர்;
துவர் நிறப் பங்கியர்; சுழல் கண் தீயினர்;
'பவர் சடை அந்தணன் பணித்த தீயவர்
இவர்' என, இலக்குவற்கு இராமன் காட்டினன். 46

அவர்களை வீழ்த்துவேன் என இலக்குவன் கூறுதல்

கண்ட அக் குமரனும், கடைக் கண் தீ உக,
விண்தனை நோக்கி, தன் வில்லை நோக்கினன்;
'அண்டர் நாயக! இனிக் காண்டி, ஈண்டு அவர்
துண்டம் வீழ்வன' என, தொழுது சொல்லினன். 47

வேள்விச்சாலைமேல் இராமன் சரக்கூடம் அமைத்துக் காத்தல்

'தூம வேல் அரக்கர்தம் நிணமும் சோரியும்
ஓம வெங் கனலிடை உகும்' என்று உன்னி, அத்
தாமரைக் கண்ணனும், சரங்களே கொடு,
கோ முனி இருக்கை, ஓர் கூடம் ஆக்கினன். 48

முனிவர்களைக் கலங்க வேண்டா என்று கூறி அரக்கர்களை அழித்தல்

நஞ்சு அட எழுதலும் நடுங்கி, நாள்மதிச்
செஞ் சடைக் கடவுளை அடையும் தேவர்போல்,
வஞ்சனை அரக்கரை வெருவி, மா தவர்,
'அஞ்சனவண்ண! நின் அபயம் யாம்' என்றார். 49

கவித்தனன் கரதலம்; 'கலங்கலிர்' என,
செவித்தலம் நிறுத்தினன், சிலையின் தெய்வ நாண்;
புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினன்;
குவித்தனன், அரக்கர்தம் சிரத்தின் குன்றமே. 50

46. கவர் - பிளவு; பங்கி - தலைமயிர்; பவர் - செறிவு; 48. தூம வேல் - புகையை உமிழும் வேல்; கூடம் - அம்புகளால் ஆகிய மேல் மறைப்பு; 50. செவித்தலம் நிறுத்தல் - (வில்லின் நாணைக்) காதளவும் இழுத்து நிறுத்தல்.

சுபாகுவைக் கொன்று, மாரீசனைக் கடலில் சேர்த்தல்

திருமகள் நாயகன் தெய்வ வாளிதான்,
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரில் ஒருவனைக் கடலில் இட்டது; அங்கு
ஒருவனை அந்தகபுரத்தின் உய்த்ததே. 51

அரக்கர்கள் அஞ்சி ஓடுதல்

துணர்த்த பூந் தொடையலான் பகழி தூவினன்;
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்,
'பிணத்திடை நடந்து இவர் பிடிப்பர் ஈண்டு' என
உணர்த்தினர், ஒருவர்முன் ஒருவர் ஓடினர். 52

போர்க்களக் காட்சி

ஓடின அரக்கரை உருமின் வெங் கணை
கூடின; குறைத் தலை மிறைத்துக் கூத்து நின்று
ஆடின; அலகையும், ஐயன் கீர்த்தியைப்
பாடின; பரந்தன, பறவைப் பந்தரே. 53

வானவர் வாழ்த்தல்

பந்தரைக் கிழித்தன, பரந்த பூ மழை;
அந்தர துந்துமி முகிலின் ஆர்த்தன;
இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்,
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர். 54

புனித மா தவர் ஆசியின் பூ மழை பொழிந்தார்;
அனைய கானகத்து மரங்களும் அலர் மழை சொரிந்த;
முனியும், அவ் வழி வேள்வியை முறைமையின் முற்றி,
இனிய சிந்தையன், இராமனுக்கு இனையன இசைத்தான்: 55

வேள்வி முடித்த விசுவாமித்திரன் இராமனைப் பாராட்டல்

'பாக்கியம் எனக்கு உளது என நினைவுறும் பான்மை
போக்கி, நிற்கு இது பொருள் என உணர்கிலென்—புவனம்
ஆக்கி, மற்றவை அனைத்தையும் அணி வயிற்று அடக்கி,
காக்கும் நீ, ஒரு வேள்வி காத்தனை எனும் கருத்தே.' 56

51. இருவரில் ஒருவன் - மாரீசன்; மற்றொருவன் சுபாகு; அந்தகபுரம் - யமனுடைய ஊர்; 53. மிறைத்து - விறைத்து; 56. பாக்கியம் - நல்வினை; நினைவுறும் பான்மை - கருதும் முறைமை; போக்கி - விட்டு; பொருள் என - ஒரு பெருஞ்செயல் என்று.

'இனிச் செய்ய வேண்டிய பணி யாது?' என இராமன் கேட்டல்

என்று கூறிய பின்னர், அவ் எழில் மலர்க் கானத்து,
அன்று, தான் உவந்து, அருந் தவ முனிவரோடு இருந்த
குன்றுபோல் குணத்தான் எதிர், கோசலை குருசில்,
'இன்று யான் செயும் பணி என்கொல்? பணி!' என இசைத்தான். 57

சனகன் வேள்வியைக் காண மூவரும் புறப்படல்

'அரிய யான் சொலின், ஐய! நிற்கு அரியது ஒன்று இல்லை;
பெரிய காரியம் உள; அவை முடிப்பது பின்னர்;
விரியும் வார் புனல் மருதம் சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும், காண்டும் நாம்; எழுக!' என்று, போனார். 58

## 9 அகலிகைப் படலம்

விசுவாமித்திரன், இராமன், இலக்குவன் மூவரும் சோணை நதியை அடைந்து சோலையில் தங்குதல்

அலம்பும் மா மணி ஆரத்தோடு அகில் அளை புளின
நலம் பெய் பூண்முலை, நாகு இள வஞ்சியாம் மருங்குல்,
புலம்பும் மேகலைப் புது மலர், புனை அறல் கூந்தல்,
சிலம்பு சூழும் கால், சோணை ஆம் தெரிவையைச் சேர்ந்தார். 1

நதிக்கு வந்து அவர் எய்தலும், அருணன்தன் நயனக்
கதிக்கு முந்துறு கலின மான் தேரொடும், கதிரோன்,
உதிக்கும் காலையில் தண்மை செய்வான், தனது உருவில்
கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான்போல், கடல் குளித்தான். 2

கறங்கு தண் புனல், கடி நெடுந் தாளுடைக் கமலத்து
அறம் கொள் நாள்மலர்க் கோயில்கள் இதழ்க் கதவு அடைப்ப,
பிறங்கு தாமரைவனம் விட்டு, பெடையொடு களி வண்டு
உறங்குகின்றது ஓர் நறு மலர்ச் சோலை புக்கு, உறைந்தார். 3

58. பெரிய காரியம் - இராவண வதமும் அது தொடர்பான செயல்களும்.

9: 1. வஞ்சி - கொடி; சிலம்பு - மலை (காற்சிலம்பு); கால் - வாய்க்கால் (பாதம்); சோணை - சரசுவதியாறு; 3. மலர்க்கோயில் - மலர்களாகிய கோயில்.

**கங்கையைக் காணல்**

காலன் மேனியின் கருகு இருள் கடிந்து, உலகு அளிப்பான்
நீல ஆர்கலி, தேரொடு நிறை கதிர்க் கடவுள்,
மாலின் மா மணி உந்தியில் அயனொடு மலர்ந்த
மூல தாமரை முழு மலர் முளைத்தென, முளைத்தான். 4

அங்கு நின்று எழுந்து, அயன் முதல் மூவரும் அனையார்,
செங் கண் ஏற்றவன் செறி சடைப் பழுவத்தில் நிறை தேன்
பொங்கு கொன்றை ஈர்த்து ஒழுகலால், பொன்னியைப் பொருவும்
கங்கை என்னும் அக் கரை பொரு திரு நதி கண்டார். 5

**மிதிலை நாடு சேரல்**

பள்ளி நீங்கிய, பங்கயப் பழன நல் நாரை,
வெள்ள வான் களை களைவுறும் கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாள் நெடுங் கண் நிழல், கயல் எனக் கருதா,
அள்ளி, நாணுறும், அகன் பணை மிதிலை நாடு அணைந்தார். 6

**மிதிலையின் வளம்**

வரம்பு இல் வான் சிறை மதகுகள் முழவு ஒலி வழங்க,
அரும்பு நாள்மலர் அசோகங்கள் அலர் விளக்கு எடுப்ப,
நரம்பின் நான்ற தேன் தாரை கொள் நறு மலர் யாழின்,
சுரும்பு, பாண் செய, தோகை நின்று ஆடுவ—சோலை. 7

பட்ட வாள் நுதல் மடந்தையர், பார்ப்பு எனும் தூதால்,
எட்ட ஆதரித்து உழல்பவர் இதயங்கள் கொதிப்ப,
வட்ட நாள் மரை மலரின்மேல், வயலிடை மள்ளர்
கட்ட காவி அம் கண் கடை காட்டுவ—கழனி. 8

தூவி அன்னம் தம் இனம் என்று நடை கண்டு தொடர,
கூவும் மென் குயில் குதலையர் குடைந்த தண் புனல்வாய்,
ஓவு இல் குங்குமச் சுவடு உற, ஒன்றொடு ஒன்று ஊடி,
பூ உறங்கினும், புள் உறங்காதன—பொய்கை. 9

முறையினின் முது மேதியின் முலை வழி பாலும்,
துறையின் நின்று உயர் மாங்கனி தூங்கிய சாறும்,
அறையும் மென் கரும்பு ஆட்டிய அமுதமும், அழி தேம்
நறையும் அல்லது, நளிர் புனல் பெருகலா—நதிகள். 10

7. நரம்பின் நான்ற - யாழ் நரம்பு போல ஒழுகுகின்ற; 8. பட்டம் - நெற்றிப்பட்டம்; பார்ப்பு - பார்வை; எட்ட - அணைய; கட்ட - களைந்த; 9. குதலையர் - மழலைச்சொற்களையுடைய மகளிர்; 10. அறையும் - அறுக்கப் படும்.

இழைக்கும் நுண் இடை இடைதர, முகடு உயர் கொங்கை,
மழைக் கண், மங்கையர் அரங்கினில், வயிரியர் முழவம்
முழக்கும் இன் இசை வெருவிய மோட்டு இள மூரி
உழக்க, வாளைகள் பாளையில் குதிப்பன—ஓடை. 11

படை நெடுங் கண் வாள் உறை புக, படர் புனல் மூழ்கி,
கடைய முன் கடல் செழுந் திரு எழும்படி காட்டி,
மிடையும் வெள் வளை புள்ளொடும் ஒலிப்ப, மெல்லியலார்
குடைய, வண்டினம் கடி மலர் குடைவன—குளங்கள். 12

மிதிலை நகரின் மதிற்புறத்தே அகலிகை கல்லாய்க் கிடந்த மேட்டைக் காணல்

இனைய நாட்டினில் இனிது சென்று, இஞ்சி சூழ் மிதிலை
புனையும் நீள் கொடிப் புரிசையின் புறத்து வந்து இறுத்தார்;
மனையின் மாட்சியை அழித்து இழி மா தவன் பன்னி
கனையும் மேட்டு உயர் கருங்கல் ஓர் வெள்ளிடைக் கண்டார். 13

இராமனது பாதம் பட அகலிகை முன்னை வடிவம் பெறல்

கண்ட கல்மிசைக் காகுத்தன் கழல்-துகள் கதுவ,—
உண்ட பேதைமை மயக்கு அற வேறுபட்டு, உருவம்
கொண்டு, மெய் உணர்பவன் கழல் கூடியது ஒப்ப,—
பண்டை வண்ணமாய் நின்றனள்; மா முனி பணிப்பான்: 14

அகலிகை வரலாற்றை இராமன் முனிவனிடம் கேட்டல்

'மா இரு விசும்பின் கங்கை மண்மிசைக் கொணர்ந்தோன் மைந்த!
மேயின உவகையோடு மின் என ஒதுங்கி நின்றாள்,
தீவினை நயந்து செய்த தேவர்கோன்தனக்குச் செங் கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி; அகலிகை ஆகும்' என்றான். 15

பொன்னை ஏர் சடையான் கூறக் கேட்டலும், பூமி கேள்வன்,
'என்னையே! என்னையே! இவ் உலகு இயல் இருந்த வண்ணம்!
முன்னை ஊழ் வினையினாலோ! நடு ஒன்று முடிந்தது உண்டோ?
அன்னையே அனையாட்கு இவ்வாறு அடுத்தவாறு அருளுக!' என்றான்.

11. வயிரியர் - கூத்தர்; 12. உறை - இமையாகிய உறை; 13. பன்னி - பத்தினி; கனையும் - நெருங்கிய; வெள்ளிடை - வெற்றிடம்; 14. உணர்பவன் - இறைவன்; முனி - விசுவாமித்திரன்; 15. கொணர்ந்தோன் - பகீரதன்; மைந்தன் - வழித்தோன்றல்.

**முனிவன் அகலிகையின் வரலாறு உரைத்தல்**

அவ் உரை இராமன் கூற, அறிவனும், அவனை நோக்கி,
'செவ்வியோய்! கேட்டி: மேல்நாள் செறி சுடர்க் குலிசத்து அண்ணல்
அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை அற்றம் நோக்கி,
நவ்விபோல் விழியினாள்தன் வன முலை நணுகலுற்றான்; 17

'தையலாள் நயன வேலும், மன்மதன் சரமும், பாய,
உய்யலாம் உறுதி நாடி உழல்பவன், ஒரு நாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி, மா முனிக்கு அற்றம் செய்து,
பொய் இலா உள்ளத்தான்தன் உருவமே கொண்டு புக்கான். 18

'புக்கு, அவளோடும், காமப் புது மண மதுவின் தேறல்
ஒக்க உண்டு இருத்தலோடும், உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்,
'தக்கது அன்று' என்ன ஓராள்; தாழ்ந்தனள் இருப்ப, தாழா
முக்கணான் அனைய ஆற்றல் முனிவனும், முடுகி வந்தான். 19

'சரம் தரு சாபம் அல்லால் தடுப்ப அருஞ் சாபம் வல்ல
வரம் தரு முனிவன் எய்த வருதலும், வெருவி, மாயா,
நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும் பழி பூண்டாள் நின்றாள்;
புரந்தரன் நடுங்கி, ஆங்கு ஓர் பூசை ஆய்ப் போகலுற்றான். 20

'தீ விழி சிந்த நோக்கி, செய்ததை உணர்ந்து, செய்ய
தூயவன், அவனை, நின் கைச் சுடு சரம் அனைய சொல்லால்,
''ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு உண்டாக'' என்று
ஏயினன்; அவை எலாம் வந்து இயைந்தன, இமைப்பின் முன்னம். 21

'எல்லை இல் நாணம் எய்தி, யாவர்க்கும் நகை வந்து எய்தப்
புல்லிய பழியினோடும் புரந்தரன் போய பின்றை,
மெல்லியலாளை நோக்கி, ''விலைமகள் அனைய நீயும்
கல் இயல் ஆதி'' என்றான்; கருங்கல் ஆய், மருங்கு வீழ்வாள்.

"பிழைத்தது பொறுத்தல் என்றும் பெரியவர் கடனே; அன்பால்,
அழல் தருங் கடவுள் அன்னாய்! முடிவு இதற்கு அருளுக!" என்ன,
"தழைத்து வண்டு இமிரும் தண் தார்த் தசரதராமன் என்பான்
கழல்-துகள் கதுவ, இந்தக் கல் உருத் தவிர்தி" என்றான். 23

17. முனிவன் - கௌதமன்; 18. அற்றம் - பிரிவு; 19. முக்கணான் - மூன்று திருக்கண்களையுடைய சிவன்; 20. சரம் தரு சாபம் - வில்; புரந்தரன் - இந்திரன்; 22. பின்றை - பின்பு; விலைமகள் - பரத்தை; 23. அழல்தருங் கடவுள் - நெருப்பைப் புறப்படவிடுகிற உருத்திரன்; கதுவ - படிய.

'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்: இனி, இந்த உலகுக்கு எல்லாம்
உய்வண்ணம் அன்றி, மற்று ஓர் துயர் வண்ணம் உறுவது உண்டோ?
மை வண்ணத்து அரக்கி போரில், மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன்: கால் வண்ணம் இங்குக் கண்டேன்.'

**அகலிகை இராமனை வணங்குதல்**

தீது இலா உதவிசெய்த சேவடிக் கரிய செம்மல்,
'கோது இலாக் குணத்தான் சொன்ன பொருள் எலாம் மனத்தில் [கொண்டு,
மா தவன் அருள் உண்டாக வழிபடு; படர் உறுதே,
போது நீ, அன்னே!' என்ன, பொன் அடி வணங்கிப் போனுள். 25

**கௌதமரிடம் அகலிகையைச் சேர்ப்பித்து மூவரும் மிதிலைப் புறமதிலைச் சார்தல்**

அருந் தவன் உறையுள்தன்னை அனையவர் அணுகலோடும்,
விருந்தினர் தம்மைக் காணு, மெய்ம்முனி, வியந்த நெஞ்சன்,
பரிந்து எதிர்கொண்டு புக்கு, கடன் முறை பழுதுருமல்
புரிந்தபின், காதி செம்மல் புனித மா தவனை நோக்கி,* 26

'அஞ்சன வண்ணத்தான்தன் அடித் துகள் கதுவாமுன்னம்,
வஞ்சிபோல் இடையாள் முன்னை வண்ணத்தள் ஆகிநின்ருள்;
நெஞ்சினுல் பிழைப்பு இலாளை நீ அழைத்திடுக!' என்ன,
கஞ்ச மா மலரோன் அன்ன முனிவனும், கருத்துள் கொண்டான்.*

குணங்களால் உயர்ந்த வள்ளல் கோதமன் கமலத்தாள்கள்
வணங்கினன், வலம்கொண்டு ஏத்தி மாசு அறு கற்பின் மிக்க
அணங்கினை அவன்கை ஈந்து, ஆண்டு அருந்தவனேடும், வாச
மணம் கிளர் சோலை நீங்கி, மணி மதில் கிடக்கை கண்டார்.*28

## 10    மிதிலைக் காட்சிப் படலம்

**மிதிலைக் கொடிகளின் தோற்றம்**

'மை அறு மலரின் நீங்கி, யான் செய் மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்' என்று, செழு மணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடி நகர், கமலச் செங் கண்
ஐயனை, 'ஒல்லை வா' என்று அழைப்பது போன்றது அம்மா! 1

25. படர் - துன்பம்; போது - செல்க; 26. காதி செம்மல் - காதி என்னும் முனிகுமாரனுகிய விசுவாமித்திரன்; 27. பிழைப்பு - குற்றம்; கஞ்சமா மலரோன்-தாமரையில் வாழும் பிரமன்; 28. மணி மதில் கிடக்கை - மிதிலை நகரின் அழகிய மதிலின் நிலை.

நிரம்பிய மாடத்து உம்பர் நிரை மணிக் கொடிகள் எல்லாம்,
'தரம் பிறர் இன்மை உன்னி, தருமமே தூது செல்ல,
வரம்பு இல் பேர் அழகினுளை மணம் செய்வான் வருகின்ருன்' என்று,
அரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின், ஆடக் கண்டார். 2

பகல் கதிர் மறைய, வானம் பாற்கடல் கடுப்ப, நீண்ட
துகில் கொடி, மிதிலை மாடத்து உம்பரில் துவன்றி நின்ற,
முகில்-குலம் தடவும்தோறும் நனைவன, முகிலின் சூழ்ந்த
அகில்-புகை கதுவும்தோறும் புலர்வன, ஆடக் கண்டார். 3

மூவரும் நகரினுள் புகுதல்

ஆதரித்து, அமுதில் கோல் தோய்த்து, 'அவயவம் அமைக்கும் தன்மை
யாது?' எனத் திகைக்கும் அல்லால், மதனற்கும் எழுத ஒண்ணுச்
சீதையைத் தருதலாலே, திருமகள் இருந்த செய்ய
போது எனப் பொலிந்து தோன்றும், பொன் மதில், மிதிலை புக்கார்.

தெருக்களின் சிறப்பு

சொற்கலை முனிவன் உண்ட சுடர் மணிக் கடலும், துன்னி
அல் கலந்து இலங்கு பல் மீன் அரும்பிய வானும் போல,
வில் கலை நுதலினுரும், மைந்தரும், வெறுத்து நீத்த
பொன் கலன் கிடந்த மாட நெடுந் தெருஅதனில் போனுர். 5

தாறு மாய் தறுகண் குன்றம் தட மத அருவி தாழ்ப்ப,
ஆறும் ஆய், கலின மா விலாழியால் அழிந்து, ஓர் ஆறு ஆய்,
சேறும் ஆய், தேர்கள் ஓடத் துகளும் ஆய், ஒன்ருேடு ஒன்று
மாறு மாறு ஆகி, வாளா கிடக்கிலா மறுகில், சென்ருர். 6

தண்டுதல் இன்றி ஒன்றி, தலைத்தலைச் சிறந்த காதல்
உண்டபின், கலவிப் போரின் ஒசிந்த மென் மகளிரேபோல்,
பண் தரு கிளவியார்தம் புலவியில் பரிந்த கோதை,
வண்டொடு கிடந்து, தேன் சோர், மணி நெடுந் தெருவில் சென்ருர்.

வீதிகளில் கண்ட காட்சிகள்

நெய் திரள் நரம்பின் தந்த மழலையின் இயன்ற பாடல்,
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்க,
கை வழி நயனம் செல்ல, கண் வழி மனமும் செல்ல,
ஐய நுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார். 8

10: 2. தரம் - தகுதி; 3. பகல் கதிர் - பகற் பொழுதிற்குக் காரணமான கதிரவன்; 5. வில் கலை - ஒளியுள்ள பிறை; 6. தாறு - அங்குசம்; விலாழி - குதிரை வாய் நுரை; 7. தண்டுதல் - நீங்குதல்; ஒசிந்த - துவண்ட; 8. நெய் - தேன்; நயனம் - கண்; ஆடக அரங்கு - நடனசாலை.

பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக்கு இரங்கிப் பொங்க,
மாசு உறு பிறவி போல வருவது போவது ஆகி,
காசு அறு பவளச் செங் காய் மரகதக் கமுகு பூண்ட
ஊசலில், மகளிர், மைந்தர் சிந்தையோடு உலவக் கண்டார்.* 9

வரப்பு அறு மணியும், பொன்னும், ஆரமும், கவரி வாலும்,
சுரத்திடை அகிலும், மஞ்ஞைத்தோகையும், தும்பிக்கொம்பும்
குரப்பு அணை நிரப்பும் மள்ளர் குவிப்புற, கரைகள்தோறும்
பரப்பிய பொன்னி அன்ன ஆவணம் பலவும் கண்டார்.* 10

வள் உகிர்த் தளிர்க் கை நோவ மாடகம் பற்றி, வார்ந்த
கள் என நரம்பு வீக்கி, கையொடு மனமும் கூட்டி,
வெள்ளிய முறுவல் தோன்ற, விருந்து என மகளிர் ஈந்த
தெள் விளிப் பாணித் தீம் தேன் செவி மடுத்து, இனிது சென்றார்.

கொட்பு உறு கலினப் பாய் மா, குலால் மகன் முடுக்கி விட்ட
மட் கலத் திகிரி போல, வாளியின் வருவ, மேலோர்
நட்பினின் இடையறாவாய், ஞானிகள் உணர்வின் ஒன்றாய்,
கட்புலத்து இனைய என்று தெரிவு இல, திரியக் கண்டார். 12

தயிர் உறு மத்தின் காம சரம் பட, தலைப்பட்டு ஊடும்
உயிர் உறு காதலாரின், ஒன்றை ஒன்று ஒருவகில்லா,
செயிர் உறு மனத்த ஆகி, தீத் திரள் செங் கண் சிந்த,
வயிர வான் மருப்பு யானை மலை என மலைவ கண்டார். 13

வாளரம் பொருத வேலும், மன்மதன் சிலையும், வண்டின்
கேளொடு கிடந்த நீலச் சுருளும், செங் கிடையும், கொண்டு,
நீள் இருங் களங்கம் நீக்கி, நிரை மணி மாட நெற்றிச்
சாளரம்தோறும் தோன்றும் சந்திர உதயம் கண்டார். 14

பளிக்கு வள்ளத்து வாக்கும் பசு நறுந் தேறல் மாந்தி,
வெளிப்படு நகைய ஆகி, வெறியன மிழற்றுகின்ற,
ஒளிப்பினும், ஒளிக்க ஒட்டா ஊடலை உணர்த்துமாபோல்,
களிப்பினை உணர்த்தும் செவ்விக் கமலங்கள் பலவும் கண்டார்.

10. தும்பி - யானை; குரப்பு - குரம்பு, செய் கரை; நிரப்பும் - அமைக்கும்; 11. மாடகம் - வீணையின் முறுக்காணி; கள் - தேன்; 12. கொட்பு - சுழற்சி, வட்டமாய் ஓடுதல்; குலால் மகன் - குயவன்; 14. செங் கிடை - சிவந்த நெட்டி; வேல், சிலை, நீலச்சுருள், செங்கிடை, சந்திரன் முதலியன முறையே கண், புருவம், கூந்தல், உதடு, முகம் என்பவற்றைக் குறித்து நின்றன; 15. வெறியன - வெறிகொண்ட சொற்கள்.

மெய் வரு போகம் ஒக்க உடன் உண்டு விலையும் கொள்ளும்
பை அரவு அல்குலார்தம் உள்ளமும், பளிங்கும், போல,
மை அரி நெடுங் கண் நோக்கம் படுதலும் கருகி, வந்து
கை புகின் சிவந்து, காட்டும் கந்துகம் பலவும் கண்டார்.* 16

கடகமும், குழையும், பூணும், ஆரமும், கலிங்க நுண் நூல்
வடகமும், மகர யாழும் வட்டினி கொடுத்து, வாசத்
தொடையல் அம் கோதை சோர, பளிக்கு நாய் சிவப்பத் தொட்டு;
படை நெடுங் கண்ணார் ஆடும் பண்ணைகள் பலவும் கண்டார். 17

பங்கயம், குவளை, ஆம்பல், படர் கொடி வள்ளை, நீலம்,
செங் கிடை, தரங்கம், கெண்டை, சினை வரால், இனைய தேம்ப,
தங்கள் வேறு உவமை இல்லா அவயவம் தழுவி, சாலும்
மங்கையர் விரும்பி ஆடும் வாவிகள் பலவும் கண்டார். 18

இயங்கு உறு புலன்கள் அங்கும் இங்கும் கொண்டு ஏக ஏகி,
மயங்குபு திரிந்து நின்று மறுகுறும் உணர்வு இது என்ன,
புயங்களில் கலவைச் சாந்தும், புணர் முலைச் சுவடும் நீங்கா,
பயம் கெழு குமரர் வட்டு-ஆட்டு ஆடு இடம் பலவும் கண்டார்.

வெஞ் சினம் உருவிற்று என்னும் மேனியர், வேண்டிற்று ஈயும்
நெஞ்சினர், ஈசன் கண்ணில் நெருப்பு உரு அனங்கன் அன்னார்,
செஞ் சிலைக் கரத்தர், மாதர் புலவிகள் திருத்திச் சேந்த
குஞ்சியர், சூழ நின்ற மைந்தர்தம் குழாங்கள் கண்டார். 20

பாகு ஒக்கும் சொல் பைங் கிளியோடும் பல பேசி,
மாகத்து உம்பர் மங்கையர் நாண மலர் கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க்கு அன்னம் நடை தோற்றுப்
போகக் கண்டு, வண்டுஇனம் ஆர்க்கும் பொழில் கண்டார். 21

**அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழி**

உம்பர்க்கு ஏயும் மாளிகை ஒளி நிழல் பாய,
இம்பர்த் தோன்றும் நாகர்தம் நாட்டின் எழில் காட்டி,
பம்பிப் பொங்கும் கங்கையின் ஆழ்ந்த, படை மன்னன்
அம் பொன் கோயில் பொன் மதில் சுற்றும், அகழ் கண்டார். 22

16. கந்துகம் - பந்து; 17. வடகம் - மேலாடை; வட்டினி - பந்தயப் பொருள்; நாய் - நாய் வடிவில் செய்யப்பட்ட சூதாடு கருவி; 18. தாமரை முகத்துக்கும், குவளை கண்ணுக்கும், கிடை அதரத்துக்கும், தரங்கம் வயிற்று மடிப்புக்கும், கெண்டை கண்ணுக்கும், வரால் கணைக்காலுக்கும் ஒப்பாகாமல் வருந்தின; 19. சுழலும் அறிவு சுற்றும் வட்டுக்கு உவமை; 20. குஞ்சி - ஆணின் மயிர்; 21. பாகு - சருக்கரைப் பாகு; மாகம் - பெரிய ஆகாயம்; 22. ஒளி - வரிசை; நாகர் - தேவர்; மன்னன் - சனகன்.

**கன்னிமாடத்தில் நின்ற சீதையின் பேரெழில் சிறப்பு**

பொன்னின் சோதி, போதினின் நாற்றம், பொலிவேபோல்
தென் உண் தேனின் தீம் சுவை, செஞ் சொற் கவி இன்பம்—
கன்னிம் மாடத்து உம்பரின் மாடே, களி பேடோடு
அன்னம் ஆடும் முன்துறை கண்டு, அங்கு, அயல் நின்றாள். 23

செப்புங்காலை, செங் கமலத்தோன் முதல் யாரும்,
எப் பெண்பாலும் கொண்டு உவமிப்போர் உவமிக்கும்,
அப் பெண் தானே ஆயின போது, இங்கு, அயல் வேறு ஓர்
ஒப்பு எங்கே கொண்டு, எவ் வகை நாடி, உரை செய்வேம்? 24

உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம் வைக்கும்
கமையாள் மேனி கண்டவர், காட்சிக் கரை காணார்,
'இமையா நாட்டம் பெற்றிலம்' என்றார்; 'இரு கண்ணால்
அமையாது' என்றார்—அந்தர வானத்தவர் எல்லாம். 25

வென்று அம் மானை, தார் அயில் வேலும் கொலை வாளும்
பின்ற, மானப் பேர் கயல் அஞ்ச, பிறழ் கண்ணாள்,
குன்றம் ஆட, கோவின் அளிக்கும் கடல் அன்றி,
அன்று அம் மாடத்து உம்பர் அளிக்கும் அமுது ஒத்தாள். 26

'பெருந் தேன் இன் சொல் பெண் இவள் ஒப்பாள் ஒரு பெண்ணைத்
தரும், தான்' என்றால், நான்முகன் இன்னும் தரலாமே?—
அருந்தா அந்தத் தேவர் இரந்தால், அமிழ்து என்னும்
மருந்தே அல்லாது, என் இனி நல்கும் மணி ஆழி? 27

அனையாள் மேனி கண்டபின், அண்டத்து அரசு ஆளும்
வினையோர் மேவும் மேனகை ஆதி மிளிர் வேற் கண்
இனையோர், உள்ளத்து இன்னலினோர்; தம் முகம் என்னும்
பனி தோய் வானின் வெண்மதிக்கு என்றும் பகல் அன்றே? 28

மலர்மேல்நின்று இம் மங்கை இவ் வையத்திடை வைக,
பல காலும் தம் மெய் நனி வாடும்படி நோற்றார்
அலகு ஒவு இல்லா அந்தணரோ? நல் அறமேயோ?
உலகோ? வானோ? உம்பர்கொலோ? ஈது உணரேமால்! 29

23. நாற்றம் - நறுமணம்; தென் - வண்டு; 28. அண்டத்து அரசு ஆளும் வினையோர் - விண்ணுலகாளும் இந்திரன் முதலிய தேவர்; பகல் - (சீதையின் முகம்), சூரியன்.

தன் நேர் இல்லா மங்கையர், 'செங்கைத் தளிர் மானே!
அன்னே! தேனே! ஆர் அமிழ்தே!' என்று அடி போற்றி,
முன்னே, முன்னே, மொய்ம் மலர் தூவி, முறை சார,
பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றாள். 30

பொன் சேர் மென் கால் கிண்கிணி, ஆரம், புனை ஆரம்,
கொன் சேர் அல்குல் மேகலை, தாங்கும் கொடி அன்னார்
தன் சேர் கோலத்து இன் எழில் காண, சத கோடி
மின் சேவிக்க மின் அரசு என்னும்படி, நின்றாள். 31

'கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவை எல்லாம்
வெல்லும் வெல்லும்' என்ன மதர்க்கும் விழி கொண்டாள்;
சொல்லும் தன்மைத்து அன்று அது; குன்றும், சுவரும், திண்
கல்லும், புல்லும், கண்டு உருக, பெண் கனி நின்றாள். 32

வெங் களி விழிக்கு ஒரு விழவும் ஆய், அவர்
கண்களின் காணவே களிப்பு நல்கலால்,
மங்கையர்க்கு இனியது ஓர் மருந்தும் ஆயவள்,
எங்கள் நாயகற்கு, இனி, யாவது ஆம்கொலோ? 33

இழைகளும் குழைகளும் இன்ன, முன்னமே,
மழை பொரு கண் இணை மடந்தைமாரொடும்
பழகிய எனினும், இப் பாவை தோன்றலால்,
அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றதே! 34

**இராமனும் சீதையும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்ளுதல்**

எண்ண அரு நலத்தினள் இனையள் நின்றுழி,
கண்ணொடு கண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள். 35

நோக்கிய நோக்கு எனும் நுதி கொள் வேல் இணை
ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன;
வீக்கிய கனை கழல் வீரன் செங்கணும்
தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே. 36

பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து,
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரி சிலை அண்ணலும் வாள்-கண் நங்கையும்,
இருவரும் மாறிப் புக்கு, இதயம் எய்தினார். 37

30. பொன் - மகரந்தம்; 31. பொன் - அழகு; கொன் - பெருமை; 36. நுதி - கூர்மை; ஆக்கிய - தேடிக்கொண்ட.

மருங்கு இலா நங்கையும், வசை இல் ஐயனும்,
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்—
கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால், பேசல் வேண்டுமோ? 38

சிந்தையைச் சீதையிடத்துவிட்டு இராமன் முனிவருடன் போதல்

அந்தம் இல் நோக்கு இமை அணைகிலாமையால்,
பைந்தொடி, ஓவியப் பாவை போன்றனள்;
சிந்தையும், நிறையும், மெய்ந் நலனும், பின் செல,
மைந்தனும், முனியொடு மறையப் போயினன். 39

சீதையின் காதல் நோய்

பிறை எனும் நுதலவள் பெண்மை என் படும்?—
நறை கமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும், மனம் எனும் மத்த யானையின்
நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து போயதே! 40

மால் உற வருதலும், மனமும் மெய்யும், தன்
நூல் உறு மருங்குல்போல், நுடங்குவாள்; நெடுங்
கால் உறு கண் வழிப் புகுந்த காதல் நோய்,
பால் உறு பிரை என, பரந்தது எங்குமே. 41

நோம்; உறும் நோய் நிலை நுவலகிற்றிலள்;
ஊமரின், மனத்திடை உன்னி, விம்முவாள்;
காமனும், ஒரு சரம் கருத்தின் எய்தனன்—
வேம் எரிஅதனிடை விறகு இட்டென்னவே. 42

நிழல் இடு குண்டலம்அதனின், நெய் இடா,
அழல் இடா, மிளிர்ந்திடும் அயில் கொள் கண்ணினாள்,
சுழலிடு கூந்தலும் துகிலும் சோர்தர,
தழல் இடு வல்லியே போல, சாம்பினாள். 43

தழங்கிய கலைகளும், நிறையும், சங்கமும்,
மழுங்கிய உள்ளமும், அறிவும், மாமையும்,
இழந்தவள்—இமையவர் கடைய, யாவையும்
வழங்கிய கடல் என—வறியள் ஆயினாள். 44

38. கருங் கடல் - பெருங்கடல்; 40. நயன கோசரம் - கண் பார்வையின் எல்லை; 41. கால் உறு - வாய்க்காலாகப் பொருந்திய, வழியாக; 44. தழங்கிய - ஒலித்த; மாமை - நிறம்.

சோர்ந்த சீதையைத் தோழியர் மலர்ப்படுக்கையில் சேர்த்தல்

கலம் குழைந்து உக, நெடு நாணும் கண் அற,
நலம் குழைதர, நகில்முகத்தின் ஏவுண்டு,
மலங்கு உழை என, உயிர் வருந்திச் சோர்தர,
பொலங் குழை மயிலைக் கொண்டு, அரிதின் போயினார். 45

காதொடும் குழை பொரு கயற் கண் நங்கைதன்
பாதமும் கரங்களும் அனைய பல்லவம்
தாதொடும் குழையொடும் அடுத்த, தண் பனிச்
சீத நுண் துளி, மலர் அமளிச் சேர்த்தினார். 46

சீதையின் துன்பநிலை

நாள் அரு நறு மலர் அமளி நண்ணினாள்—
பூளை வீ புரை பனிப் புயற்குத் தேம்பிய
தாள தாமரைமலர் ததைந்த பொய்கையும்,
வாள் அரா நுங்கிய மதியும், போலவே. 47

மலை முகட்டு இடத்து உகு மழைக்கண் ஆலிபோல்,
முலை முகட்டு உதிர்ந்தன, நெடுங் கண் முத்து இனம்;
சிலை நுதற்கடை உறை செறிந்த வேர்வு, தன்
உலை முகப் புகை நிமிர் உயிர்ப்பின் மாய்ந்ததே. 48

கம்பம் இல் கொடு மனக் காம வேடன் கை
அம்பொடு சோர்வது ஓர் மயிலும் அன்னவள்,
வெம்புறு மனத்து அனல் வெதுப்ப, மென் மலர்க்
கொம்பு என, அமளியில் குழைந்து சாய்ந்தனள். 49

சொரிந்தன நறு மலர் சுறுக் கொண்டு ஏறின;
பொரிந்தன கலவைகள், பொரியின் சிந்தின;
எரிந்த வெங் கனல் சுட, இழையில் கோத்த நூல்
பரிந்தன; கரிந்தன, பல்லவங்களே. 50

தாதியர் செய்த பரிகாரம்

தாதியர், செவிலியர், தாயர், தவ்வையர்,
மா துயர் உழந்து உழந்து அழுங்கி மாழ்கினர்;
'யாதுகொல் இது?' என, எண்ணல் தேற்றலர்;
போதுடன் அயினி நீர் சுழற்றிப் போற்றினர். 51

45. கண் அற - அகல; 47. ததைந்த - நெருங்கின; 48. ஆலி - துளி; 49. கம்பம் - நடுக்கம், இரக்கம்; 50. பரிந்தன - அற்றன; 51. அயினி நீர் - ஆலத்தி.

காதல் நோயுற்ற சீதையின் தோற்றம்

அருகில் நின்று அசைக்கின்ற ஆலவட்டக் கால்
எரியினை மிகுத்திட, இழையும், மாலையும்,
கரிகுவ, தீகுவ, கனல்வ, காட்டலால்,
உருகு பொற் பாவையும் ஒத்துத் தோன்றினள். 52

'அல்லினை வகுத்தது ஓர் அலங்கற் காடு' எனும்;
'வல் எழு; அல்லவேல், மரகதப் பெருங்
கல்' எனும், 'இரு புயம்'; 'கமலம் கண்' எனும்;
'வில்லொடும் இழிந்தது ஓர் மேகம்' என்னுமால். 53

'நெருக்கி உள் புகுந்து, அரு நிறையும் பெண்மையும்
உருக்கி, என் உயிரொடு உண்டு போனவன்
பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது
கருப்பு வில் அன்று; அவன் காமன் அல்லனே! 54

'உரைசெயின், தேவர்தம் உலகு உளான் அலன்—
விரை செறி தாமரை இமைக்கும் மெய்ம்மையால்;
வரி சிலைத் தடக் கையன், மார்பின் நூலினன்,
அரசிளங் குமரனே ஆகல்வேண்டுமால். 55

'பெண்வழி நலனொடும், பிறந்த நாணொடும்,
எண்வழி உணர்வும், நான் எங்கும் காண்கிலேன்—
மண்வழி நடந்து, அடி வருந்தப் போனவன்,
கண்வழி நுழையும் ஓர் கள்வனே கொலாம்? 56

இராமனை நினைந்து சீதை உருகுதல்

'இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணி வரைத் தோளுமே, அல;
முந்தி, என் உயிரை, அம் முறுவல் உண்டதே! 57

'படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகமும்,
தடந் தரு தாமரைத் தாளுமே, அல;
கடம் தரு மா மதக் களி நல் யானைபோல்,
நடந்தது, கிடந்தது, என் உள்ளம் நண்ணியே. 58

52. ஆலவட்டம் - விசிறி; 53. எழு - தூண்; கல் - மலை; 56. எண்வழி உணர்வு - எண்ணத்தின்வழிப்படும் உணர்வு; 57. இந்திர நீலம் - சிறந்த நீலமணி வகை; மணி - நீலமணி.

'பிறந்துடை நலம் நிறை பிணித்த எந்திரம்,
கறங்குபு திரியும் என் கன்னி மா மதில்
எறிந்த அக் குமரனை, இன்னும், கண்ணிற் கண்டு,
அறிந்து, உயிர் இழக்கவும் ஆகுமேகொலாம்?' 59

என்று இவை இனையன விளம்பும் ஏல்வையின்,
'நின்றனன், இவண்' எனும்; 'நீங்கினன்' எனும்;
கன்றிய மனத்து உறு காம வேட்கையால்,
ஒன்று அல, பல நினைந்து, உருகும்காலையே, 60

**கதிரவன் மறைதலும் அந்திமாலையின் தோற்றமும்**

அன்ன மென் நடையவட்கு அமைந்த காமத் தீ,
தன்னையும் சுடுவது தரிக்கிலான் என,
நல் நெடுங் கரங்களை நடுக்கி, ஓடிப் போய்,—
முன்னை வெங் கதிரவன்—கடலில் மூழ்கினன். 61

விரி மலர்த் தென்றல் ஆம் வீசு பாசமும்,
எரி நிறச் செக்கரும், இருளும், காட்டலால்,
அரியவட்கு அனல் தரும் அந்திமாலையாம்
கரு நிறச் செம் மயிர்க் காலன் தோன்றினன். 62

மீது அறை பறவை ஆம் பறையும், கீழ் விளி
ஓத மென் சிலம்பொடும், உதிரச் செக்கரும்,
பாதக இருள் செய் கஞ்சுகமும், பற்றலால்,
சாதகர் என்னவும் தகைத்து—அம் மாலையே. 63

**மாலை வருகையும் சீதையின் புலம்பலும்**

கயங்கள் என்னும் கனல் தோய்ந்து, கடி நாள்மலரின் விடம் பூசி,
இயங்கு தென்றல் மன்மதவேள் எய்த புண்ணினிடை நுழைய,
உயங்கும் உணர்வும், நல் நலமும், உருகிச் சோர்வாள் உயிர் உண்ண
வயங்கு மாலை வான் நோக்கி, 'இதுவோ கூற்றின் வடிவு?' என்றாள்.

'கடலோ? மழையோ? முழு நீலக் கல்லோ? காயா நறும் போதோ?
படர் பூங் குவளை நாள்மலரோ? நீலோற்பலமோ? பானலோ?—
இடர் சேர் மடவார் உயிர் உண்பது யாதோ?' என்று தளர்வாள்முன்,
மடல் சேர் தாரான் நிறம் போலும் அந்தி மாலை வந்ததுவே!

59. எந்திரம் - மதில் உறுப்பு; 60. ஏல்வை - பொழுது; 61. நடுக்கி - அசைத்து; 63. கஞ்சுகம் - சட்டை; சாதகர் - தேவி உபாசகர்.

'மை வான் நிறத்து, மீன் எயிற்று, வாடை உயிர்ப்பின், வளர் செக்கர்ப்
பை வாய் அந்திப் பட அரவே! என்னை வளைத்துப் பகைத்தியால்
எய்வான் ஒருவன் கை ஓயான்; உயிரும் ஒன்றே; இனி இல்லை;
உய்வான் உற, இப் பழி பூண, உன்னோடு எனக்குப் பகை உண்டோ?

'ஆலம் உலகில் பரந்ததுவோ? ஆழி கிளர்ந்ததோ? அவர்தம்
நீல நிறத்தை எல்லோரும் நினைக்க, அதுவாய் நிரம்பியதோ?
காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்து, காயத்தின்
மேலும் நிலத்தும், மெழுகியதோ?—விளக்கும் இருளாய் விளைந்ததுவே!

'வெளி நின்றவரோ போய் மறைந்தார்; விலக்க ஒருவர்தமைக் காணே
"எளியள், பெண்" என்று இரங்காதே, எல்லி யாமத்து இருளூடே, [ன்;
ஒளி அம்பு எய்யும் மன்மதனார், உனக்கு இம் மாயம் உரைத்தாரோ?
அளியென் செய்த தீவினையோ! அன்றில் ஆகி வந்தாயோ? 68

**தோழியர் நெய்விளக்கு அகற்றி மணிவிளக்கு அமைத்தல்**

ஆண்டு, அங்கு அனையாள், இனைய நினைந்து அழுங்கும் எல்லை, அகல்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில், சீத மணியின் வேதிகைவாய், [வானம்
'நீண்ட சோதி நெய் விளக்கம் வெய்ய' என்று, அங்கு அவை நீக்கி,
தூண்டல் செய்யா மணி விளக்கின் சுடரால், இரவைப் பகல் செய்தார்.

**திங்களின் தோற்றம்**

பெருந்திண் நெடுமால்வரை நிறுவி, பிணித்த பாம்பின் மணித் தாம்பின்
விரிந்த திவலை பொதிந்த மணி விசும்பின் மீனின் மேல் விளங்க,
அருந்த அமரர் கலக்கிய நாள், அமுதம் நிறைந்த பொற்கலசம்
இருந்தது இடை வந்து எழுந்தது என எழுந்தது—ஆழி வெண் திங்கள்.

வண்டு ஆய் அயன், நான்மறை பாட, மலர்ந்தது ஒரு தாமரைப் போது,
பண்டு ஆலிலையின்மிசைக் கிடந்து, பாரும் நீரும், பசித்தான் போல்,
உண்டான் உந்திக் கடல் பூத்தது; ஓதக் கடலும், தான் வேறு ஓர்
வெண் தாமரையின் மலர் பூத்தது ஒத்தது—ஆழி வெண் திங்கள்.

புள்ளிக் குறி இட்டென ஒள் மீன் பூத்த வானம் பொலி கங்குல்
நள்ளில், சிறந்த இருட் பிழம்பை நக்கி நிமிரும் நிலாக் கற்றை,—
கிள்ளைக் கிளவிக்கு என்னும்கொல்?—கீழ்பால் திசையின்மிசை வைத்த
வெள்ளிக் கும்பத்து இளங் கமுகின் பாளை போன்று விரிந்துளதால்.

67. ஆலம் - ஆலகாலவிடம்; காயம் - ஆகாயம்; 68. எல்லி - இராக்காலம்; ஒளி அம்பு - மறைந்து நின்று எய்யும் அம்பு; 69. சீதமணி - சந்திரகாந்தக்கல்; வேதிகை - திண்ணை; 70. மீனின்மேல் - நட்சத்திரங்களைக் காட்டிலும்; 71. அயன் வண்டாய் நான்மறை பாட என மாற்றுக; 72. புள்ளி - கோலமிடுதற்கு வைத்த புள்ளி; கங்குல் நள் - நடு இராப்பொழுது.

வண்ண மாலைக் கைபரப்பி, உலகை வளைந்த இருள் எல்லாம்
உண்ண எண்ணி தண் மதியத்து உதயத்து எழுந்த நிலாக் கற்றை,—
விண்ணும் மண்ணும் திசை அனைத்தும் விழுங்கிக் கொண்ட, விரி நல் நீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன் புகழ்போல்-எங்கும் பரந்துளதால்.

நீத்தம் அதனில் முளைத்து எழுந்த நெடு வெண் திங்கள் எனும் தச்சன்,
மீ, தன் கரங்கள் அவை பரப்பி, மிகு வெண் நிலவு ஆம் வெண் சுதை
'காத்த கண்ணன் மணி உந்திக் கமல நாளத்திடைப் பண்டு [யால்
பூத்த அண்டம் பழையது' என்று புதுக்குவானும் போன்றுளதால். 74

**தாமரை குவிய ஆம்பல் அலர்தல்**

விரை செய் கமலப் பெரும் போது, விரும்பிப் புகுந்த திருவினொடும்
குரை செய் வண்டின் குழாம் இரிய, கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்;
உரை செய் திகிரிதனை உருட்டி, ஒரு கோல் ஓச்சி, உலகு ஆண்ட
அரைசன் ஒதுங்க, தலை எடுத்த குறும்பு போன்றது, அரக்கு ஆம்பல்.

**சீதை திங்களைப் பழித்தல்**

'நீங்கா மாயையவர் தமக்கு நிறமே தோற்றுப் புறமே போய்,
ஏங்காக் கிடக்கும் எறி கடற்கும், எனக்கும், கொடியை ஆனாயே—
ஓங்கா நின்ற இருளாய் வந்து, உலகை விழுங்கி, மேன்மேலும்
வீங்கா நின்ற கரு நெருப்பினிடையே எழுந்த வெண் நெருப்பே!

'கொடியை அல்லை; நீ யாரையும் கொல்கிலாய்;
வடு இல் இன் அமுதத்தொடும், வந்தனை,
பிடியின் மென் நடைப் பெண்ணொடு; என்றால், எனைச்
சுடுதியோ?—கடல் தோன்றிய திங்களே! 77

**காதல் நோயால் சீதை பட்ட துன்பம்**

மீது மொய்த்து எழு வெண் நிலவின் கதிர்
மோது மத்திகை மென் முலைமேல் பட,
ஓதிமப் பெடை வெங் கனல் உற்றென,
போது மொய்த்த அமளிப் புரண்டாள்அரோ! 78

நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக் கதிர்
தாக்க, வெந்து தளர்ந்து சரிந்தனள்;
சேக்கை ஆகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டது அப் பூவையும் பட்டனள். 79

73. மாலைக் கை - மாலைப் பொழுதாகிய கை; 74. வெண் சுதை - வெள்ளைச் சுண்ணும்புச்சாந்து; 75. குரை - ஒலி; கூம்பிச் சாம்பி - வாடி; குறும்பு - குறுநில மன்னர்; 78. கதிர் மோது மத்திகை - கிரணமாகிய அடிக்கின்ற சம்மட்டி; 79. பட்டது - கூம்பிச் சாம்பிய வாட்டம்.

வாச மென் கலவைக் களி வாரி, மேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச வெதும்பினள், மென் முலை;—
ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாம்கொலோ? 80

மலர்ப்படுக்கை வெம்மையால் கரிந்துபோதல்

தாயரின் பரி சேடியர், தாது உகு
வீ, அரித் தளிர், மெல் அணை, மேனியில்
காய் எரிக் கரியக் கரிய, கொணர்ந்து,
ஆயிரத்தின் இரட்டி அடுக்கினர். 81

கன்னி நல் நகரில், கமழ் சேக்கையுள்,
அன்னம், இன்னணம் ஆயினள்; ஆயவள்,
மின்னின் மின்னிய, மேனி கண்டான் எனச்
சொன்ன அண்ணலுக்கு உற்றது சொல்லுவாம். 82

விசுவாமித்திரர் முதலிய மூவரும் சனகன் எதிர்கொள்ளச் சென்று மாளிகையில் தங்குதல்

ஏகி, மன்னனைக் கண்டு, எதிர் கொண்டு அவன்
ஓகையோடும் இனிது கொண்டு உய்த்திட,
போக பூமியில் பொன்னகர் அன்னது ஓர்
மாக மாடத்து, அனைவரும் வைகினர். 83

சதானந்த முனிவர் வந்து முகமன் உரைத்தல்

வைகும் அவ் வழி, மா தவம் யாவும் ஓர்
செய்கை கொண்டு நடந்தென, தீது அறு
மொய் கொள் வீரன் முளரி அம் தாளினால்
மெய் கொள் மங்கை அருள் முனி மேவினான்.* 84

வந்து எதிர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை ஆர வணங்கலும், சென்று எதிர்,
அந்தம் இல் குணத்தான் நெடிது ஆசிகள்
தந்து, கோசிகன்தன் மருங்கு எய்தினான்.† 85

கோதமன் தரு கோ முனி கோசிக
மாதவன்தனை மா முகம் நோக்கி, 'இப்
போது நீ இவண் போத, இப் பூதலம்
ஏது செய்த தவம்?' என்று இயம்பினான்.* 86

81. அரித்தளிர் - மெல்லிய தளிர்; 83. ஓகை - உவகை; பொன்னகர் - பொற்கோயில்; 84. இது முதல் 138 ஆம் பாடல் வரையுள்ளவற்றை மிகைப்பாடல் எனச் சிலர் கருதுவர்; 85. சென்று எதிர் கோசிகன் என்க.

விசுவாமித்திரன் இராமனது பெருமை பேசுதல்

பூந் தண் சேக்கைப் புனிதனையே பொரு
ஏய்ந்த கேண்மைச் சதானந்தன் என்று உரை
வாய்ந்த மா தவன் மா முகம் நோக்கி, நூல்
தோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான்:* 87

'வடித்த மாதவ! கேட்டி இவ் வள்ளல்தான்
இடித்த வெங் குரல் தாடகை யாக்கையும்,
அடுத்து என் வேள்வியும், நின் அன்னை சாபமும்,
முடித்து, என் நெஞ்சத்து இடர் முடித்தான்' என்றான். 88

சதானந்தர் கோசிகனைப் பாராட்டுதல்

என்று கோசிகன் கூறிட, ஈறு இலா
வன் தபோதனன், 'மா தவ! நின் அருள்
இன்றுதான் உளதேல், அரிது யாது, இந்த
வென்றி வீரர்க்கு?' எனவும் விளம்பி, மேல், 89

இராமனுக்குச் சதானந்தர் உரைத்த விசுவாமித்திரர் வரலாறு

எள் இல் பூவையும், இந்திர நீலமும்,
அள்ளல் வேலையும், அம்புத சாலமும்,
விள்ளும் வீயுடைப் பானலும், மேவும் மெய்
வள்ளல்தன்னை மதிமுகம் நோக்கியே,* 90

விசுவாமித்திரன் அரசனாய் ஆண்டமை

'நறு மலர்த் தொடை நாயக! நான் உனக்கு
அறிவுறுத்துவென், கேள்: இவ் அருந் தவன்
இறை எனப் புவிக்கு ஈறு இல் பல் ஆண்டு எலாம்
முறையினின் புரந்தே அருள் முற்றினன். 91

வேட்டைமேற் காடு சென்ற மன்னன் வசிட்டனைச் சார்தல்

'அரசின் வைகி அறனின் அமைந்துழி,
விரசு கானிடைச் சென்றனன், வேட்டைமேல்;
உரைசெய் மா தவத்து ஓங்கல் வசிட்டனும்
பரசு வானவன்பால் அணைந்தான்அரோ. 92

87. சேக்கை - இருக்கை; 90. பூவை - காயா மலர்; அம்புத சாலம் - மேகக் கூட்டம்; 92. விரசு கான் - செறிந்த காடு.

வசிட்டன் சுரபிமூலம் விருந்து அளித்தல்

'அருந்ததி கணவன் வேந்தற்கு அருங் கடன் முறையின் ஆற்றி,
''இருந்தருள் தருதி'' என்ன, இருந்துழி, ''இனிது நிற்கு
விருந்து இனிது அமைப்பென்'' என்று, சுரபியை விளித்து, ''நீயே
சுரந்தருள் அமிர்தம்'' என்ன, அருள்முறை சுரந்தது அன்றே.

' ''அறு சுவைத்து ஆய உண்டி, அரச! நின் அனிகத்தோடும்
பெறுக!'' என அளித்து, வேந்தோடு யாவரும் துய்த்த பின்றை,
நறு மலர்த் தாரும் வாசக் கலவையும் நல்கலோடும்,
உறு துயர் தணிந்து, மன்னன் உய்த்து உணர்ந்து உரைக்கலுற்றான்:

சுரபியை அரசன் விரும்புதலும் முனிவர் விடையும்

''மாதவ! எழுந்திலாய், நீ; வயப்புடைப் படைகட்கு எல்லாம்
கோது அறும் அமுதம் இக் கோ உதவிய கொள்கைதன்னால்,
தீது அறு குணத்தால் மிக்க செழு மறை தெரிந்த நூலோர்,
'மே தகு பொருள்கள் யாவும் வேந்தருக்கு' என்கைதன்னால்,

' ''நிற்கு இது தகுவது அன்றால், நீடு அருஞ் சுரபிதன்னை
எற்கு அருள்'' என்றலோடும், இயம்பலன் யாதும்; பின்னர்,
''வற்கலை உடையென் யானோ வழங்கலென்; வருவது ஆகின்,
கொற் கொள் வேல் உழவ! நீயே கொண்டு அகல்க!'' என்று கூற, 96

விசுவாமித்திரன் சுரபியைப் பற்ற அதன் மேனியிலிருந்து வெளிவந்த வீரர் பொருதல்

''பணித்தது புரிவென்'' என்னா, பார்த்திபன் எழுந்து, பொங்கி,
பிணித்தனன் சுரபிதன்னை; பெயர்வுழி, பிணியை வீட்டி,
''மணித் தடந் தோளினார்க்குக் கொடுத்தியோ, மறைகள் யாவும்
கணித்த எம் பெரும?'' என்ன, கலை மறை முனிவன் சொல்வான் : 97

''கொடுத்திலென், யானே; மற்று இக் குடைகெழு வேந்தன்தானே
பிடித்து அகல்வுற்றது'' என்ன, பெருஞ் சினம் கதுவும் நெஞ்சோடு,
''இடித்து எழு முரச வேந்தன் சேனையை யானே இன்று
முடிக்குவென், காண்டி'' என்னா, மொய்ம் மயிர் சிலிர்த்தது அன்றே.

'பப்பரர் யவனர் சீனர் சோனகர் முதல பல்லோர்
கைப்படைஅதனினோடும் கபிலைமாட்டு உதித்து, வேந்தன்
துப்புடைச் சேனை யாவும் தொலைவுறத் துணித்தலோடும்,
வெப்புடைக் கொடிய மன்னன் தனயர்கள் வெகுண்டு மிக்கார்.

93. சுரபி - காமதேனு என்னும் தெய்வப் பசு; 96. வற்கலை - மரவுரி; கொற் கொள் வேல் - அச்சம் தருதலைக் கொண்ட வேலாயுதம்; 97. பார்த்திபன் - அரசன்.

**வசிட்டன் சினத்தால் அரச குமாரர் இறப்பு**

' ''சுரபிதன் வலி இது அன்றால்; சுருதி நூல் உணர வல்ல
வர முனி வஞ்சம்'' என்னு, ''மற்று அவன் சிரத்தை இன்னே
அரிகுதும்'' என்னப் பொங்கி, அடர்த்தனர்; அடர, அன்னான்
எரி எழ விழித்தலோடும், இறந்தனர் குமரர் எல்லாம்.

**விசுவாமித்திரன்–வசிட்டன் போர்**

'ஐ-இருபதின்மர் மைந்தர் அவிந்தமை அரசன் காணு,
நெய் பொழி கனலின் பொங்கி, நெடுங் கொடித் தேர் கடாவி,
கை தொடர் கணையினேடும் கார்முகம் வளைய வாங்கி,
எய்தனன்; முனியும், தன் கைத் தண்டினை, ''எதிர்க'' என்ருன்.

'கடவுளர் படைகள் ஈருக் கற்றன படைகள் யாவும்
விட விட, முனிவன் தண்டம் விழுங்கி, மேல் விளங்கல் காணு,
வடவரைவில்லிதன்னை வணங்கினன் வழுத்தலோடும்,
அடல் உறு படை ஒன்று ஈயா, அன்னவன் அகன்ருன் அன்றே.

விட்டனன் படையை வேந்தன்; விண்ணுளோர், "உலகை எல்லாம்
சுட்டனன்'' என்ன, அஞ்சித் துளங்கினர்; முனியும் தோன்றி,
கிட்டிய படையை உண்டு கிளர்ந்தனன், கிளரும் மேனி
முட்ட வெம் பொறிகள் சிந்த; பொரு படை முரணது இற்றே.

**கௌசிகன் தவம் மேற்கொள்ளல்**

'கண்டனன் அரசன்; காணு, ''கலை மறை முனிவர்க்குஅல்லால்
திண் திறல் வலியும் தேசும் உள எனல் சீரிது அன்றால்;
மண்டலம் முழுதும் காக்கும் மொய்ம்பு ஒரு வலன் அன்று'' என்னு,
ஒண் தவம் புரிய எண்ணி, உம்பர்கோன் திசையை உற்ருன்.

**இந்திரன் அவனுடைய தவத்தைக் கெடுத்தல்**

'மாண்ட மா தவத்தோன் செய்த வலனையே மனத்தின் எண்ணி'
பூண்ட மா தவத்தன் ஆகி அரசர்கோன் பொலியும் நீர்மை
காண்டலும், அமரர் வேந்தன் துணுக்குறு கருத்திஞேடும்
தூண்டினன், அரம்பைமாருள் திலோத்தமை எனும் சொல் மானை.

*101.* கடாவி - செலுத்தி; கார்முகம் - வில்; *102.* வடவரை வில்லி - மகாமேருவை வில்லாகக் கொண்ட உருத்திரமூர்த்தி; *104.* உம்பர்கோன் திசை - இந்திரனது திக்காகிய கிழக்குத் திசை; *105.* மாண்ட - மாட்சிமைப் பட்ட.

'அன்னவள் மேனி காணு, அனங்க வேள் சரங்கள் பாய,
தன் உணர்வு அழிந்து காதற் சலதியின் அழுந்தி, வேந்தன்,
பன்ன அரும் பகல் தீர்வுற்று, பரிணிதர் தெரித்த நூலில்
நல் நயம் உணர்ந்தோன் ஆகி, நஞ்சு எனக் கனன்று, நக்கான்.

விசுவாமித்திரன் தென்திசை சென்று தவம் செய்தல்

' ''விண் முழுது ஆளி செய்த வினை'' என வெகுண்டு, ''நீ போய்,
மண்மகள் ஆதி'' என்று, மடவரல்தன்னை ஏவி,
கண் மலர் சிவப்ப, உள்ளம் கறுப்புறக் கடிதின் ஏகி,
எண்மரின் வலியன் ஆய யமன்திசைதன்னை உற்ருன். 107

திரிசங்கு வசிட்டனைக் கிட்டிப் பெற்ற சாபம்

'தென் திசைஅதனை நண்ணிச் செய் தவம் செய்யும் செவ்வி,
வன் திறல் அயோத்தி வாழும் மன்னவன் திரிசங்கு என்பான்
தன் துணைக் குருவை நண்ணி, ''தனுவொடும் துறக்கம் எய்த
இன்று எனக்கு அருளுக!'' என்ன, 'யான் அறிந்திலென் அது' என்ருன்.

' ''நினக்கு ஒலாது ஆகின், ஐய! நீள் நிலத்து யாவரேனும்
மனக்கு இனியாரை நாடி, வகுப்பல் யான், வேள்வி'' என்ன,
''சினக் கொடுந் திறலோய்! முன்னர்த் தேசிகற் பிழைத்து, வேறு ஓர்
நினக்கு இதன் நாடி நின்ருய்; நீசன் ஆய் விடுதி'' என்ருன்.

'மலர் உளோன் மைந்தன்—மைந்த!—வழங்கிய சாபம்தன்ஞல்
அலரியோன்தானும் நாணும் வடிவு இழந்து, அரசர் கோமான்,
புலரிஅம் கமலம்போலும் பொலிவு ஒரீஇ, வதனம், பூவில்
பலரும் ஆங்கு இகழ்தற்கு ஒத்த படிவம் வந்துற்றதுஅன்றே.

'காசொடு முடியும் பூணும் கரியதாம் கனகம் போன்றும்,
தூசொடும் அணியும் முந்நூல் தோல் தரும் தோற்றம் போன்றும்,
மாசொடு கருகி, மேனி வனப்பு அழிந்திட, ஊர் வந்தான்;
''சீசி'' என்று யாரும் எள்ள, திகைப்பொடு பழுவம் சேர்ந்தான்.

கௌசிகனிடம் திரிசங்கு தன் செய்தி தெரிவித்தல்

'கானிடைச் சிறிது வைகல் கழித்து, ஓர் நாள், கௌசிகப் பேர்க்
கோன் இனிது உறையும் சோலை குறுகினன்; குறுக, அன்னுன்,
''ஈனன் நீ யாவன்? என்னை நேர்ந்தது, இவ் இடையில்?'' என்ன,
மேல் நிகழ் பொருள்கள் எல்லாம் விளம்பினன், வணங்கி, வேந்தன்.

106. பரிணிதர் - அறிவின் மிக்கோர்; 109. தேசிகன் - ஆசிரியன்;
நீசன் - புலையன்.

**கௌசிகன் வேள்விசெய்து திரிசங்குவை வானுலகு ஏற்றுதல்**

' "இற்றதோ?" என நக்கு, அன்னான் "யான் இரு வேள்வி முற்றி,
மற்று உலகு அளிப்பென்" என்ன, மா தவர்தம்மைக் கூவ,
சுற்றுறு முனிவர் யாரும் தொக்கனர்; வசிட்டன் மைந்தர்,
"கற்றிலம், அரசன் வேள்வி கனல் துறை புலையற்கு ஈவான்."

'என்று உரைத்து, "யாங்கள் ஒல்லோம்"என்றனர்; என்னப் பொங்கி,
"புன்தொழில் கிராதர் ஆகிப் போக" எனப் புகறலோடும்,
அன்று அவர் எயினர் ஆகி, அடவிகள்தோறும் சென்றார்;
நின்று வேள்வியையும் முற்றி, 'நிராசனர் வருக!' என்றான்.

' "அரைசன் இப் புலையற்கு என்னே அனல்துறை முற்றி, எம்மை
விரைசுக வல்லை என்பான்! விழுமிது!" என்று இகழ்ந்து நக்கார்,
புரைசை மா களிற்று வேந்தை, "போக நீ துறக்கம்; யானே
உரைசெய்தேன், தவத்தின்" என்ன, ஓங்கினன் விமானத்து உம்பர்.

**தேவர்கள் தள்ளிய திரிசங்குவைக் கௌசிகன் மேலேயே நிற்கச் செய்தல்**

'ஆங்கு அவன் துறக்கம் எய்த, அமரர்கள் வெகுண்டு, "நீசன்
ஈங்கு வந்திடுவது என்னே? இரு நிலத்து இழிக!" என்ன,
தாங்கல் இல் கவிழ்வான், மற்று, "தாபதா! சரணம்" என்ன,
ஓங்கினன், "நில் நில்!" என்ன உரைத்து, உரும் ஒக்க நக்கான்.

**கௌசிகன் சினத்தினால் வேறோர் உலகு படைத்தல்**

'"பேணலாது இகழ்ந்த விண்ணோர் பெரும் பதம் முதலா மற்றைச்
சேண் முழுது அமைப்பல்" என்ன, "செழுங் கதிர், கோள், நாள், திங்கள்,
மாண் ஒளி கெடாது, தெற்கு வடக்கவாய் வருக!" என்று,
"தாணுவோடு ஊர்வ எல்லாம் சமைக்குவென்" என்னும் வேலை. 117

**தேவர்கள் கௌசிகனைச் சார்தப்படுத்துதல்**

'நறைத் தரு உடைய கோனும், நான்முகக் கடவுள்தானும்,
கறைத் தரு களனும், மற்றைக் கடவுளர் பிறரும், தொக்கு,
"பொறுத்தருள், முனிவ ! நின்னைப் புகல் புகுந்தவனைப் போற்றும்
அறத் திறன் நன்று; தாரா கணத்தொடும் அமைக, அன்னான்

114. கிராதர் - வேடர்; 117. சமைக்குவென் - படைத்திடுவேன்; வேலை - பொழுது.

**கௌசிகன் மேலைத்திசை சென்று தவம் புரிதல்**

‘‘‘அரச மா தவன் நீ ஆதி; ஐந்து நாள் தென்பால் வந்து, உன்
புரை விளக்கிடுக!’’ என்னா, கடவுளர் போய பின்னர்,
நிரை தவன் விரைவின் ஏகி, நெடுங் கடற்கு இறைவன் வைகும்
உரவு இடம்அதனை நண்ணி, உறு தவம் உஞற்றும் காலை, 119

**அம்பரீடன் நரமேதம் செய்ய மகவு பெறுதல்**

‘குதை வரி சிலை வாள் தானைக் கோமகன் அம்பரீடன்,
சுதை தரு மொழியன், வையத்து உயிர்க்கு உயிர் ஆய தோன்றல்,
வதை புரி புருடமேதம் வகுப்ப ஓர் மைந்தற் கொள்வான்,
சிதைவு இலன், கனகம் தேர் கொண்டு, அடவிகள் துருவிச் சென்றான்.

‘நல் தவ ரிசிகன் வைகும் நனை வரும் பழுவம் நண்ணி,
கொற்றவன் வினவலோடும், இசைந்தனர்; குமரர் தம்முள்
பெற்றவள், ‘‘இளவல் எற்கே’’ என்றனள்; பிதா, ‘‘முன்’’ என்றான்;
மற்றைய மைந்தன் நக்கு, மன்னவன் தன்னை நோக்கி, 121

**சுனச்சேபனைப் பெற்ற அம்பரீடன் வழியில் கோசிகனைக் காணல்**

‘‘‘கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற்று, ஒற்கம் ஆம் விழுமம் குன்ற,
எடுத்து எனை வளர்த்த தாதைக்கு’’ என்று அவன்-தொழுது, வேந்தன்
தடுப்ப அருந் தேரின் ஏறி, தடை இலாப் படர்தலோடும்,
சுடர்க் கதிர்க் கடவுள் வானத்து உச்சி அம் சூழல் புக்கான்.

‘அவ் வயின் இழிந்து வேந்தன் அருங் கடன் முறையின் ஆற்ற,
செவ்விய குரிசில்தானும் சென்றனன், நியமம் செய்வான்;
அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை ஆண்டுக் காணா,
கவ்வையினோடும் பாத கமலம்அது உச்சி சேர்த்தான். 123

**சுனச்சேபன் தன் குறையைக் கோசிக முனிக்குக் கூறல்**

‘விறப்பொடு வணக்கம் செய்த விடலையை இனிது நோக்கி,
சிறப்புடை முனிவன், ‘‘என்னை தெருமரல்? செப்புக!’’ என்ன,
‘‘அறப் பொருள் உணர்ந்தோய்! என் தன் அன்னையும் அத்தன்தானும்,
உறப்பொருள் கொண்டு, வேந்தற்கு உதவினர்’’ என்றான், உற்றோன்.

**கோசிகன் அவனுக்குப் பதில் தன் மக்களுள் ஒருவரை ஏகுமாறு சொல்ல அவர் மறுத்தல்**

‘மைத்துனனோடு முன்னோள் வழங்கிய முறைமை கேளா,
‘‘தத்துறல் ஒழி நீ; யானே தடுப்பென், நின் உயிரை’’ என்னா,
புத்திரர் தம்மை நோக்கி, ‘‘போக வேந்தோடும்’’ என்ன,
அத் தகு முனிவன் கூற, அவர் மறுத்து அகறல் காணா, 125

122. வெறுக்கை - செல்வம்; 123. முனிவன் - கோசிக முனிவன்; 124. விறப்பு - அச்சம்; விடலை - இளங்குமரன்; தெருமரல் - கலங்குதல்.

மறுத்த மைந்தர்களைக் கௌசிகன் சபித்தல்

'எழும் கதிரவனும் நாணச் சிவந்தனன் இரு கண்; நெஞ்சம்
புழுங்கினன்; வடவை தீய மயிர்ப்புறம் பொறியின் துள்ள,
அழுங்கல் இல் சிந்தையீர்! நீர் அடவிகள்தோறும் சென்றே,
ஒழுங்கு அறு புளிஞர் ஆகி, உறு துயர் உறுக!' என்றான். 126

கௌசிகன் சுனச்சேபனுக்கு மந்திரம் உரைத்து விடை தரல்

'மா முனி வெகுளிதன்னால் மடிகலா மைந்தர் நால்வர்
தாம் உறு சவரர் ஆகச் சபித்து, எதிர், ''சலித்த சிந்தை
ஏமுறல் ஒழிக! இன்னே பெறுக!'' என இரண்டு விஞ்சை
கோ மருகனுக்கு நல்கி, பின்னரும் குணிக்கலுற்றான்: 127

'''அரசனோடு ஏகி யூபத்து அணைக்குபு இம் மறையை ஓதின்,
விரசுவர் விண்ணுளோரும் விரிஞ்சனும் விடைவலோனும்;
உரை செறி வேள்வி முற்றும்; உனது உயிர்க்கு ஈறு உண்டாகா;
பிரச மென் தாரோய்!'' என்ன, பழிச்சொடும் பெயர்ந்து போனான். 128

வேள்வி முற்றலும் கௌசிகன் வடதிசை ஏகலும்

'மறை முனி உரைத்த வண்ணம் மகத்து உறை மைந்தன் ஆய,
சிறை உறு கலுழன், அன்னம், சே, முதல் பிறவும் ஊரும்
இறைவர் தொக்கு அமரர் சூழ, இளவல்தன் உயிரும், வேந்தன்
முறை தரு மகமும், காத்தார்; வடதிசை முனியும் சென்றான்.

கௌசிகன் தவ மகிமை

'வடா திசை முனியும் நண்ணி, மலர்க் கரம் நாசி வைத்து, ஆங்கு,
இடாவு பிங்கலையால் நைய, இதயத்தூடு எழுத்து ஒன்று எண்ணி,
விடாது பல் பருவம் நிற்ப, மூல மா முகடு விண்டு,
தடாது இருள் படலை மூட, சலித்தது எத் தலமும், தாவி.

'எயில் உரித்தவன் யானை உரித்த நாள்,
பயிலுறுத்து உரி போர்த்த நல் பண்பு என,
புயல் விரித்து எழுந்தாலென, பூதலம்
குயிலுறுத்தி, கொழும் புகை விம்மவே. 131

'தமம் திரண்டு உலகு யாவையும் தாவுற,
நிமிர்ந்த வெங் கதிர்க் கற்றையும் நீங்குற,
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்,
சுமந்த நாகமும், கண் சும்புளித்தவே. 132

126. புளிஞர் - வேடர்; 127. குணித்தல் - வரையறுத்து உரைத்தல்; 128. பிரசம் - தேன்; பழிச்சு - துதிமொழிகள்; 132. தமம் - இருள்; சும் புளித்த - கூசின.

'திரிவ நிற்ப செக தலத்து யாவையும்,
வெருவலுற்றன; வெங் கதிர் மீண்டன;
கருவி உற்ற ககனம் எலாம் புகை
உருவி உற்றிட, உம்பர் துளங்கினர். 133

தேவர்கள் கௌசிகனைப் பிரம இருடியாக்கல்

'புண்டரீகனும், புள் திருப் பாகனும்,
குண்டை ஊர்தி, குலிசியும், மற்று உள
அண்டர்தாமும், வந்து, அவ் வயின் எய்தி, வேறு,
எண் தபோதனன்தன்னை எதிர்ந்தனர். 134

'பாதி மா மதி சூடியும், பைந் துழாய்ச்
சோதியோனும், அத் தூய் மலராளியும்,
''வேத பாரகர், வேறு இலர், நீ அலால்;
மா தபோதன!'' என்ன வழங்கினர். 135

'அன்ன வாசகம் கேட்டு உணர் அந்தணன்,
சென்னி தாழ்த்து, இரு செங்கை மலர் குவித்து,
''உன்னு நல் வினை உற்றது'' என்று ஓங்கினன்;
துன்னு தேவர்தம் சூழலுள் போயினர். 136

சதானந்தர் குமரர்களை வாழ்த்திப் பெயர்தல்

'ஈது முன்னர் நிகழ்ந்தது; இவன் துணை
மா தவத்து உயர் மாண்பு உடையார் இலை;
நீதி வித்தகன்தன் அருள் நேர்ந்தனிர்;
யாது உமக்கு அரிது?' என்றனன், ஈறு இலான். 137

என்று கோதமன் காதலன் கூறிட,
வென்றி வீரர் வியப்பொடு உவந்து எழா,
ஒன்று மா தவன் தாள் தொழுது ஓங்கிய
பின்றை, ஏத்திப் பெயர்ந்தனன், தன் இடம். 138

இராமன் சீதையை நினைத்தல்

முனியும் தம்பியும் போய், முறையால் தமக்கு
இனிய பள்ளிகள் எய்தியபின், இருட்
கனியும் போல்பவன், கங்குலும், திங்களும்,
தனியும், தானும், அத் தையலும், ஆயினன். 139

134. குண்டை - இடபம்; 135. வேத பாரகர் - வேதங்களின் கரை கண்டு உணர்ந்தவர்; 138. கோதமன் காதலன் - கௌதமன் குமாரனான சதானந்தன்.

சீதையின் உருவெளிப்பாடு கண்ட இராமனின் நிலை

'விண்ணின் நீங்கிய மின் உரு, இம் முறை,
பெண்ணின் நல் நலம் பெற்றது உண்டேகொலோ?
எண்ணின், ஈது அலது என்று அறியேன்; இரு
கண்ணினுள்ளும் கருத்துளும் காண்பெனால். 140

வள்ளல் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல்போல் மிளிர் கண்ணினள்,
அள்ளல் பூமகள் ஆகும்கொலோ—எனது
உள்ளத் தாமரையுள் உறைகின்றதே? 141

'அருள் இலாள் எனினும், மனத்து ஆசையால்,
வெருளும் நோய் விடக் கண்ணின் விழுங்கலால்,
தெருள் இலா உலகில், சென்று, நின்று, வாழ்
பொருள் எலாம், அவள் பொன் உரு ஆயவே! 142

'பூண் உலாவிய பொற் கலசங்கள் என்
ஏண் இல் ஆகத்து எழுதலஎன்னினும்;
வாள் நிலா முறுவல் கனி வாய் மதி
காணல் ஆவது ஓர் காலம் உண்டாம்கொலோ? 143

'வண்ண மேகலைத் தேர் ஒன்று, வாள் நெடுங்
கண் இரண்டு, கதிர் முலைதாம் இரண்டு,
உண்ண வந்த நகையும் என்று ஒன்று உண்டால்;
எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ? 144

'கன்னல் வார் சிலை கால் வளைத்தே மதன்,
பொன்னை முன்னிய பூங் கணை மாரியால்,
என்னை எய்து தொலைக்கும்என்றால், இனி,
வன்மை என்னும் இது ஆரிடை வைகுமே? 145

'கொள்ளை கொள்ளக் கொதித்து எழு பாற்கடல்
பள்ள வெள்ளம் எனப் படரும் நிலா,
உள்ள உள்ள உயிரைத் துருவிட,
வெள்ளை வண்ண விடமும் உண்டாம்கொலோ? 146

*141. வள்ளல் சேக்கை - பாம்பாகிய படுக்கை; 142. நோய் விட - காமநோய் நீங்க; 143. ஏண் - வலிமை; 145. பொன்னை - திருமகள் போன்றவளை; முன்னிய - நினைக்குமாறு; 146. பாற்கடல் (இருந்து) எழுநிலா, படரும் நிலா என இயைக்க.*

ஆகும் நல்வழி; அல்வழி என் மனம்
ஆகுமோ? இதற்கு ஆகிய காரணம்,
பாகுபோல் மொழிப் பைந்தொடி, கன்னியே
ஆகும்; வேறு இதற்கு ஐயுறவு இல்லையே' 147

திங்களின் மறைவு

கழிந்த கங்குல் அரசன் கதிர்க் குடை
விழுந்தது என்னவும், மேல் திசையாள் சுடர்க்
கொழுந்து சேர் நுதற் கோது அறு சுட்டி போய்
அழிந்தது என்னவும், ஆழ்ந்தது—திங்களே. 148

வீசுகின்ற நிலாச் சுடர் வீந்ததால்—
ஈசன் ஆம் மதி ஏகலும், சோகத்தால்
பூசு வெண் கலவைப் புனை சாந்தினை
ஆசை மாதர் அழித்தனர் என்னவே. 149

கதிரவன் தோற்றம்

ததையும் மலர்த் தார் அண்ணல் இவ் வண்ணம்
மயல் உழந்து, தளரும் ஏல்வை,
சிதையும் மனத்து இடருடைய செங்கமலம்
முகம் மலர, செய்ய வெய்யோன்,
புதை இருளின் எழுகின்ற புகர் முக யா-
னையின் உரிவைப் போர்வை போர்த்த
உதைய கிரி எனும் கடவுள் நுதல் கிழித்த
விழியேபோல், உதயம் செய்தான். 150

விசை ஆடல் பசும் புரவிக் குரம் மிதிப்ப,
உதயகிரி விரிந்த தூளி
பசை ஆக, மறையவர் கைந் நறை மலரும்
நிறை புனலும் பரந்து பாய,
அசையாத நெடு வரையின் முகடுதொறும்
இளங் கதிர் சென்று அளைந்து, வெய்யோன்,
திசை ஆளும் மத கரியைச் சிந்தூரம்
அப்பியபோல் சிவந்த மாதோ! 151

148. கங்குல் அரசன் - இரவாகிய அரசன்; சுட்டி - மகளிர் நெற்றியில் அணியும் ஓர் அணி; 149. ஆசை மாதர் - திசைகளாகிய மகளிர்; 151. விசை - வேகம்; ஆடல் - வெற்றி.

பண்டு வரும் குறி பகர்ந்து, பாசறையின்,
பொருள் வயினின், பிரிந்து போன
வண்டு தொடர் நறுந் தெரியல் உயிர் அனைய
கொழுநர் வர மணித் தேரோடும்,
கண்டு மனம் களி சிறப்ப, ஒளி சிறந்து,
மெலிவு அகலும் கற்பினார்போல்,
புண்டரிகம் முகம் மலர, அகம் மலர்ந்து
பொலிந்தன—பூம் பொய்கை எல்லாம். 152

எண்ண அரிய மறையினொடு கின்னரர்கள்
இசை பாட, உலகம் ஏத்த,
விண்ணவரும், முனிவர்களும், வேதியரும்,
கரம் குவிப்ப, வேலை என்னும்
மண்ணும் மணி முழவு அதிர, வான் அரங்கில்
நடம் புரிவாள் இரவி ஆன
கண்ணுதல் வானவன், கனகச் சடை விரிந்தா
லென விரிந்த—கதிர்கள் எல்லாம். 153

**இராமன் துயில் நீங்கியபின் முனிவரோடும் தம்பியோடும் சனகனது வேள்விச் சாலையைச் சார்தல்**

கொல் ஆழி நீத்து, அங்கு ஓர் குனி வயிரச்
சிலைத் தடக் கைக் கொண்ட கொண்டல்,
எல் ஆழித் தேர் இரவி இளங் கரத்தால்
அடி வருடி அனந்தல் தீர்ப்ப,
அல் ஆழிக் கரை கண்டான்—ஆயிர வாய்
மணி விளக்கம் அழலும் சேக்கைத்
தொல் ஆழித் துயிலாதே, துயர் ஆழி-
நெடுங் கடலுள் துயில்கின்றானே. 154

ஊழி பெயர்ந்தெனக் கங்குல் ஒருவண்ணம்
புடை பெயர, உறக்கம் நீத்த
சூழி யானையின் எழுந்து, தொல் நியமத்
துறை முடித்து, சுருதி அன்ன
வாழி மாதவற் பணிந்து, மனக்கு இனிய
தம்பியொடும், வம்பின் மாலை
தாழும் மா மணி மௌலித் தார்ச் சனகன்
பெரு வேள்விச் சாலை சார்ந்தான். 155

153. மண்ணும் மணி முழவு - மார்ச்சனை பூசப்பட்ட அழகிய முழவு; மண் - மத்தளத்திற்குத் தடவும் மாப்பசை; 154. கொல் ஆழி - சுதரிசனம் என்னும் சக்கரப் படை; 155. ஒருவண்ணம் - ஒருவாறு.

வேள்வி முற்றிய சனகன் முனிவர் முதலாயினேர் புடைசூழ வீற்றிருத்தல்

முடிச் சனகர் பெருமானும், முறையாலே
பெரு வேள்வி முற்றி, சுற்றும்
இடிக் குரலின் முரசு இயம்ப, இந்திரன்போல்,
சந்திரன் தோய், கோயில் எய்தி,
எடுத்த மணி மண்டபத்துள், எண் தவத்து
முனிவரொடும், இருந்தான்—பைந் தார்
வடித்த குனி வரி சிலைக் கைம் மைந்தனும், தம்-
பியும், மருங்கின் இருப்ப மாதோ. 156

சனகன் வினவும் விசுவாமித்திரன் உரையும்

இருந்த குலக் குமரர்தமை, இரு கண்ணின்
முகந்து அழகு பருக நோக்கி,
அருந் தவனை அடி வணங்கி, 'யாரை இவர்?
உரைத்திடுமின், அடிகள்!' என்ன,
'விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி
காணிய வந்தார்; வில்லும் காண்பார்;
பெருந் தகைமைத் தயரதன் தன் புதல்வர்' என,
அவர் தகைமை பேசலுற்முன்: 157

## 11 குலமுறை கிளத்து படலம்

இராம-இலக்குவரின் குலமரபை முனிவன் மொழிதல்

'ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யார் அறியாதார்?
பேதித்த உயிர் அனைத்தும் பெரும் பசியால் வருந்தாமல்,
சோதித் தன் வரி சிலையால் நிலமடந்தை முலை சுரப்ப,
சாதித்த பெருந் தகையும், இவர் குலத்து ஓர் தராபதிகாண்!

'பிணி அரங்க, வினை அகல, பெருங் காலம் தவம் பேணி,—
மணி அரங்கு நெடு முடியாய்!—மலர் அயனே வழிபட்டு,
பணி அரங்கப் பெரும் பாயற் பரஞ் சுடரை யாம் காண,
அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்! 2

156. எண் தவம் - மதிக்கத்தக்க தவம்; வடித்த - நீண்ட; 157. பெருந்தகைமை - சிறந்த குணம்; தகைமை - மேன்மை.

11: 1. தராபதி - மன்னன்; 2. பிணி அரங்க - பிணி கெட; மணி அரங்கு - மணிகள் அழுந்திய; பணி அரங்கம் - பாம்பாகிய இடம்; அணி அரங்கம் தந்தான் இட்சுவாகு மன்னன்.

'தான், தனக்கு வெலற்கு அரிய தானவரை, ''தலை துமித்து, என்
வான் தரக்கிற்றிகொல்?'' என்று குறை இரப்ப, வரம் கொடுத்து, ஆங்கு
ஏன்று எடுத்த சிலையினன் ஆய், இகல் புரிந்த இவர் குலத்து ஓர்
தோன்றலை, பண்டு, இந்திரன்காண், விடை ஏருய்ச் சுமந்தானும். 3

'அரைசன் அவன் பின்னேரை, என்னுலும் அளப்பு அரிதால்;
உரை குறுக நிமிர் கீர்த்தி இவர் குலத்தோன் ஒருவன்காண்—
நரை திரை மூப்பு இவை மாற்றி இந்திரனும் நந்தாமல்,
குரை கடலை நெடு வரையால் கடைந்து, அமுது கொடுத்தானும். 4

'கருதல் அரும் பெருங் குணத்தோர், இவர் முதலோர் கணக்கு இறந்
திரி புவனம் முழுது ஆண்டு சுடர் நேமி செல நின்ரேர்;— [தோர்;
பொருது உறை சேர் வேலிஞய்!—புலிப் போத்தும் புல்வாயும்
ஒரு துறையில் நீர் உண்ண, உலகு ஆண்டான் உளன் ஒருவன்.

'மறை மன்னும் மணிமுடியும் ஆரமும் வாளொடு மின்ன,
பொறை மன்னு வானவரும் தானவரும் பொரும் ஒரு நாள்;—
விறல் மன்னர் தொழு கழலாய்!—இவர் குலத்தோன், வில் பிடித்த
அறம் என்ன, ஒரு தனியே திரிந்து, அமராபதி காத்தோன். 6

'இன் உயிர்க்கும் இன் உயிராய் இரு நிலம் காத்தார் என்று
பொன் உயிர்க்கும் கழலவரை யாம் போலும், புகழ்கிற்பாம்?—
மின் உயிர்க்கும் நெடு வேலாய்!—இவர் குலத்தோன், மென் புறவின்
மன் உயிர்க்கு, தன் உயிரை மாருக வழங்கினனுல்! 7

'இடறு ஒட்ட, இன நெடிய வரை உருட்டி, இவ் உலகம்
திடல், தோட்டம், எனக் கிடந்தது என இரங்கி,—தெவ் வேந்தர்
உடல் தோட்ட நெடு வேலாய்!—இவர் குலத்தோர், உவரி நீர்க்
கடல் தோட்டார் எனின், வேறு ஓர் கட்டுரையும் வேண்டுமோ?

'தூ நின்ற சுடர் வேலாய்! அனந்தனுக்கும் சொலற்கு அரிதேல்,
யான் இன்று புகழ்ந்துரைத்தற்கு எளிதோ? எடு அவிழ் கொன்றைப்
பூ நின்ற மவுலியையும் புக்கு அளைந்த புனற் கங்கை,
வான்நின்று கொணர்ந்தானும், இவர் குலத்து ஓர் மன்னவன்காண்!

3. தரக்கிற்றிகொல் - கொடுக்க வல்லேயோ; தோன்றல் - கருத்தனைக் குறித்தது; 4. ஒருவன் - நிமி என்பவனைக் குறித்தது; 5. உலகு ஆண்ட ஒருவன் மாந்தாதா; 6. இங்குக் குறிக்கப்பட்டவன் திலீபன்; 7. இதில் குறிக்கப்பட்டவன் சிபி; 8. இடறு - தடை, இடையூறு; திடல் - மேடு; தோட்டம் - பள்ளம்; உவரி தோண்டினர் சகரர்; 9. இதில் குறிக்கப்பட்டவன் பகீரதன்; அனந்தன் - ஆதிசேடன்.

'கயற் கடல் சூழ் உலகு எல்லாம் கைந் நெல்லிக் கனி ஆக்கி,
இயற்கை நெறி முறையாலே இந்திரற்கும் இடர் இயற்றி,—
முயற் கறை இல் மதிக் குடையாய்!—இவர் குலத்தோன் முன் ஒருவன்,
செயற்கு அரிய பெரு வேள்வி ஒரு நூறும் செய்து அமைத்தான். 10

'சந்திரனை வென்றானும், உருத்திரனைச் சாய்த்தானும்,
துந்து எனும் தானவனைச் சுடு சரத்தால் துணித்தானும்,
வந்த குலத்திடை வந்த ரகு என்பான், வரி சிலையால்,
இந்திரனை வென்று, திசை இரு-நான்கும் செரு வென்றான். 11

'வில் என்னும் நெடு வரையால் வேந்து என்னும் கடல் கலக்கி,
எல் என்னும் மணி முறுவல் இந்துமதி எனும் திருவை,
அல் என்னும் திரு நிறத்த அரி என்ன,—அயன் என்பான்—
மல் என்னும் திரள் புயத்துக்கு அணி என்ன வைத்தானே! 12

**தயரதன் மகப்பேற்று வரலாற்றை உரைத்தல்**

'அயன் புதல்வன் தயரதனை அறியாதார் இல்லை; அவன்
பயந்த குலக் குமரர் இவர்தமை உள்ள பரிசு எல்லாம்
நயந்து உரைத்துக் கரை ஏறல் நான்முகற்கும் அரிது ஆம்;—பல்
இயம் துவைத்த கடைத் தலையாய்!—யான் அறிந்தபடி கேளாய்: 13

'துனி இன்றி உயிர் செல்ல, சுடர் ஆழிப் படை வெய்யோன்
பனி வென்றபடி என்ன, பகை வென்று படி காப்போன்,
தனு அன்றித் துணை இல்லான், தருமத்தின் கவசத்தான்,
மனு வென்ற நீதியான், மகவு இன்றி வருந்துவான்; 14

'சிலைக் கோட்டு நுதல், குதலைச் செங் கனி வாய், கரு நெடுங் கண்,
விலைக்கு ஒட்டும் பேர் அல்குல், மின் நுடங்கும் இடையாரை,
''முலைக் கோட்டு விலங்கு'' என்று, தொடர்ந்து அணுகி முன் நின்ற
கலைக் கோட்டுப் பெயர் முனியால், துயர் நீங்கக் கருதினான்;15

' ''தார் காத்த நறுங் குஞ்சித் தனயர்கள், என் தவம் இன்மை,
வார் காத்த வன முலையார் மணி வயிறு வாய்த்திலரால்;
நீர் காத்த கடல் புடை சூழ் நிலம் காத்தேன்; என்னின் பின்,
பார் காத்தற்கு உரியாரைப் பணி, நீ'' என்று அடி பணிந்தான்.

10. இச் செய்யுள் கூறுவது சுதாசன்; 11. சந்திரனை வென்றவன் திலீபன்; உருத்திரனைச் சாய்த்தவன் பகீரதன்; துந்து என்பவனைக் கொன்றவன் குவலயாசுவன்; 14. ஆழிப் படை வெய்யோன் - சக்கரப்படை போன்ற கதிரவன்.

‘அவ் உரை கேட்டு, அம் முனியும், அருள் சுரந்த உவகையன் ஆய்,
‘‘இவ் உலகம் அன்றியே, எவ் உலகும் இனிது அளிக்கும்
செவ்வி இளஞ் சிறுவர்களைத் தருகின்றேன்; இனித் தேவர்
வவ்வி நுகர் பெரு வேள்விக்கு உரிய எலாம் வருக’’ என்றான்.

‘காதலரைத் தரும் வேள்விக்கு உரிய எலாம் கடிது அமைப்ப,
மா தவரில் பெரியோனும், மற்றதனை முற்றுவித்தான்;
சோதி மணிப் பொற் கலத்துச் சுதை அனைய வெண் சோறு ஓர்
பூதகணத்து அரசு ஏந்தி, அனல்நின்றும் போந்ததால். 18

‘பொன்னின் மணிப் பரிகலத்தில் புறப்பட்ட இன் அமுதை,
பன்னு மறைப்பொருள் உணர்ந்த பெரியோன்தன் பணியினால்,
தன் அனைய நிறை குணத்துத் தசரதனும், வரன்முறையால்,
நல் நுதலார் மூவருக்கும், நாலு கூறிட்டு, அளித்தான். 19

‘விரிந்திடு தீவினை செய்த வெவ்விய தீவினையாலும்,
அருங் கடை இல் மறை அறைந்த அறம் செய்த அறத்தாலும்,
இருங் கடகக் கரதலத்து இவ் எழுத அரிய திருமேனிக்
கருங்கடலைச் செங் கனி வாய்க் கவுசலை என்பாள் பயந்தாள்.

‘தள்ள அரிய பெரு நீதித் தனி ஆறு புக மண்டும்
பள்ளம் எனும் தகையானை, பரதன் எனும் பெயரானை,
எள்ள அரிய குணத்தாலும் எழிலாலும் இவ் இருந்த
வள்ளலையே அனையானை, கேகயர்கோன் மகள் பயந்தாள். 21

‘அரு வலிய திறலினர் ஆய், அறம் கெடுக்கும் விறல் அரக்கர்
வெருவரு திண் திறலார்கள், வில் ஏந்தும் எனில் செம்பொன்
பரு வரையும், நெடு வெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்,
இருவரையும், இவ் இருவர்க்கு இளையாளும் ஈன்று எடுத்தாள்.

**குமரர்கள் கல்வி கற்ற வரலாறு**

‘தலை ஆய பேர் உணர்வின் கலைமகட்குத் தலைவர் ஆய்,
சிலை ஆயும் தனு வேதம் தெவ்வரைப்போல் பணி செய்ய,
கலை ஆழிக் கதிர்த் திங்கள் உதயத்தில் கலித்து ஓங்கும்
அலை ஆழி என வளர்ந்தார்—மறை நான்கும் அனையார்கள். 23

‘திறையோடும் அரசு இறைஞ்சும் செறி கழற் கால் தசரதன் ஆம்
பொறையோடும் தொடர் மனத்தான் புதல்வர் எனும் பெயரேகாண்!—
உறை ஓடும் நெடு வேலாய்!—உபநயன விதி முடித்து,
மறை ஓதுவித்து, இவரை வளர்த்தானும் வசிட்டன்காண்.

18. சுதை - அமுது; 19. பரிகலம் - பாத்திரம்; தன் அனைய - தனக்குத் தானே நிகரான; 23. கலை ஆழிக் கதிர்த்திங்கள் - கலைகளையுடைய வட்டமாகிய சந்திரன்; 24. உறை ஓடும் - பகைவென்று உறையில் அடங்கும்.

இராமன் வேள்வி காத்த திறம்

'ஈங்கு, இவரால், என் வேள்விக்கு இடையூறு கடிது இயற்றும்
தீங்குடைய கொடியோரைக் கொல்விக்கும் சிந்தையன் ஆய்,
பூங் கழலார்க் கொண்டுபோய் வனம் புக்கேன், புகாமுன்னம்,
தாங்க அரிய பேர் ஆற்றல் தாடகையே தலைப்பட்டாள். 25

'அலை உருவக் கடல் உருவத்து ஆண்தகைதன் நீண்டு உயர்ந்த
நிலை உருவப் புய வலியை நீ உருவ நோக்கு ஐயா!
உலை உருவக் கனல் உமிழ் கண் தாடகைதன் உரம் உருவி,
மலை உருவி, மரம் உருவி, மண் உருவிற்று, ஒரு வாளி! 26

'செக்கர் நிறத்து எரி குஞ்சிச் சிரக் குவைகள் பொருப்பு என்ன
உக்கனவோ முடிவு இல்லை; ஓர் அம்பினொடும், அரக்கி
மக்களில், அங்கு ஒருவன் போய் வான் புக்கான்; மற்றையவன்
புக்க இடம் அறிந்திலேன்; போந்தனென், என் வினை முடித்தே.

இராமனது வில்லாற்றல்

'ஆய்ந்து ஏற உணர்—ஐய!—அயற்கேயும் அறிவு அரிய;
காய்ந்து ஏவின், உலகு அனைத்தும் கடலோடும் மலையோடும்
தீய்ந்து ஏறச் சுடுகிற்கும் படைக் கலங்கள், செய் தவத்தால்
ஈந்தேனும் மனம் உட்க, இவற்கு ஏவல் செய்குனவால். 28

அகலிகைக்கு முன்னை உருத் தந்த பெருமை

'கோதமன்தன் பன்னிக்கு முன்னை உருக் கொடுத்தது, இவன்,
போது நின்றது எனப்பொலிந்த, பொலங் கழற் கால் பொடி கண்டாய்;
காதல் என்தன் உயிர்மேலும் இக் கரியோன்பால் உண்டால்;
ஈது, இவன்தன் வரலாறும், புய வலியும்' என உரைத்தான்.

## 12 கார்முகப் படலம்

இராமன் வில்லை நாணேற்றினுல் துயர் நீங்கும் எனச் சனகன் கூறுதல்

'மாற்றம் யாது உரைப்பது? மாய விற்கு நான்
தோற்றனென் என மனம் துளங்குகின்றதால்;
நோற்றனள் நங்கையும்; நொய்தின் ஐயன் வில்
ஏற்றுமேல், இடர்க் கடல் ஏற்றும்' என்றனன். 1

26. நிலை உருவம் - நிலையாகிய அழகினையுடைய; உருவ நோக்கு - உற்றுப் பார்; 28. ஏற - முடிய.

ஏவலர் வில்லினை அவைக்குக் கொண்டுவரல்

என்றனன், ஏன்று, தன் எதிர் நின்றுரை, 'அக்
குன்று உறழ் வரி சிலை கொணர்மின், ஈண்டு' என,
'நன்று' என வணங்கினர், நால்வர் ஓடினர்;
பொன் திணி கார்முகச் சாலை புக்கனர். 2

உறு வலி யானையை ஒத்த மேனியர்,
செறி மயிர்க் கல் எனத் திரண்ட தோளினர்,
அறுபதினாயிரர், அளவு இல் ஆற்றலர்,
தறி மடுத்து, இடையிடை, தண்டில் தாங்கினர்;* 3

நெடு நிலமகள் முதுகு ஆற்ற, நின்று உயர்
தட நிமிர் வடவரைதானும் நாண் உற,
'இடம் இலை உலகு' என வந்தது,—எங்கணும்
கடல் புரை திரு நகர் இரைத்துக் காணவே. 4

வில்லினைக் கண்டோர் விளம்பியமை

'சங்கொடு சக்கரம் தரித்த செங் கை அச்
சிங்க ஏறு அல்லனேல், இதனைத் தீண்டுவான்
எங்கு உளன் ஒருவன்? இன்று ஏற்றின், இச் சிலை,
மங்கைதன் திருமணம் வாழுமால்' என்பார். 5

'கைதவம், தனு எனல்; கனகக் குன்று' என்பார்;
'செய்தது, அத் திசைமுகன் தீண்டி அன்று; தன்
மொய் தவப் பெருமையின் முயற்சியால்' என்பார்;
'எய்தவன் யாவனோ, ஏற்றிப் பண்டு?' என்பார். 6

'திண் நெடு மேருவைத் திரட்டிற்றோ?' என்பார்;
'வண்ண வான் கடல் பண்டு கடைந்த மத்து' என்பார்;
'அண்ணல் வாள் அரவினுக்கு அரசனோ?' என்பார்;
'விண் இடு நெடிய வில் வீழ்ந்ததோ?' என்பார். 7

'என், ''இது கொணர்க'' என, இயம்பினான்?' என்பார்;
'மன்னவர் உளர்கொலோ மதி கெட்டார்?' என்பார்;
'முன்னை ஊழ் வினையினால் முடிக்கில் ஆம்' என்பார்;
'கன்னியும் இச் சிலை காணுமோ?' என்பார். 8

12: 2. கார்முகச்சாலை - வில் வைக்கப்பட்ட சாலை; 4. தட நிமிர்-பெருமை மிகுந்த, மலைப்பக்கம் உயர்ந்த; 5. வாழும் - நிகழப்பெறும்; 6. கைதவம் - வஞ்சகம்.

'இச் சிலை உதைத்த கோற்கு இலக்கம் யாது?' என்பார்;
'நச் சிலை நங்கைமேல் நாட்டும், வேந்து' என்பார்;
'நிச்சயம் எடுக்கும்கொல் நேமியான்!' என்பார்;
சிற்சிலர், 'விதி செய்த தீமை ஆம்' என்பார். 9

**வில்லைக் கண்ட வேந்தர்கள் கைவிதிர்த்தல்**

மொய்த்தனர் இன்னணம் மொழிய, மன்னன் முன்
உய்த்தனர், நிலம் முதுகு உளுக்கிக் கீழ் உற,
வைத்தனர்: 'வாங்குநர் யாவரோ?' என,
கைத்தலம் விதிர்த்தனர், கண்ட வேந்தரே. 10

**சதானந்த முனிவன் வில்லின் வரலாறு உரைத்தல்**

போதகம் அனையவன் பொலிவை நோக்கி, அவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கி, தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறல்மேயினான்: 11

'இமைய வில் வாங்கிய ஈசன், ''பங்கு உறை
உமையினை இகழ்ந்தனன் என்ன'' ஓங்கிய
கமை அறு சினத் தனிக் கார்முகம் கொளா,
சமை உறு தக்கனார் வேள்வி சாரவே.* 12

'உக்கன பல்லொடு கரங்கள், ஓடினர்;
புக்கனர், வானவர் புகாத சூழல்கள்;
தக்கன் நல் வேள்வியில் தழலும் ஆறின;
முக் கண் எண் தோளவன் முனிவும் மாறினான். 13

'தாளுடை வரி சிலை, சம்பு, உம்பர்தம்
நாள் உடைமையின், அவர் நடுக்கம் நோக்கி, இக்
கோளுடை விடை அனான் குலத்துள் தோன்றிய
வாளுடை உழவன் ஓர் மன்னன்பால் வைத்தான். 14

'கார்முக வலியை யான் கழறல் வேண்டுமோ?
வார் சடை அரன் நிகர் வரத! நீ அலால்,
யார் உளர் அறிபவர்? இவற்குத் தோன்றிய
தேர் முக அல்குலாள் செவ்வி கேள்' என, 15

9. நச் சிலை - பெருமை பொருந்திய வில்; 10. உளுக்கி - நெளித்து; 11. கோதமன் காதலன் - சதானந்த முனிவன்; 12. கமை - பொறுமை; சமை உறு - நடந்துகொண்டிருக்கிற; 14. சம்பு - சிவன்; நாள் - வாழ்நாள்; ஓர் மன்னன் - தேவராதன்.

'இரும்பு அனைய கரு நெடுங் கோட்டு இணை ஏற்றின் பணை ஏற்ற
பெரும் பியலில் பளிக்கு நுகம் பிணைத்து, அதனோடு அணைத்து ஈர்க்கும்
வரம்பு இல் மணிப் பொன்-கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு
உரம் பொரு இல் நிலம், வேள்விக்கு, அலகு இல் பல சால் உழுதேம்.

'உழுகின்ற கொழு முகத்தின், உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற, புவி மடந்தை திரு வெளிப்பட்டென, புணரி
எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவளும், இழிந்து ஒதுங்கித்
தொழுகின்ற நல் நலத்துப் பெண் அரசி தோன்றினள். 17

'குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்து, அவை உய்யப்
பிணங்குவன; அழகு, இவளைத் தவம் செய்து பெற்றதுகாண்;
கணங் குழையாள் எழுந்ததற்பின், கதிர் வானில் கங்கை எனும்
அணங்கு இழியப் பொலிவு இழந்த ஆறு ஒத்தார், வேறு உற்றார். 18

'சித்திரம் இங்கு இது ஒப்பது எங்கு உண்டு—செய்வினையால்
வித்தகமும் விதி வசமும் வெவ்வேறே புறம் கிடப்ப,
அத் திருவை அமரர் குலம் ஆதரித்தார் என, அறிஞ!
இத் திருவை நில வேந்தர் எல்லாரும் காதலித்தார்? 19

'கலித் தானைக் கடலோடும் கைத் தானக் களிற்று அரசர்
ஒலித்து ஆனை என வந்து, மணம் மொழிந்தார்க்கு எதிர், "உருத்த
புலித் தானை, களிற்று உரிவைப் போர்வையான் வரி சிலையை
வலித்தானே மங்கை திருமணத்தான்" என்று, யாம் வலித்தேம். 20

'வல் வில்லுக்கு ஆற்றார்கள், மார வேள் வளை கருப்பின்
மெல் வில்லுக்கு ஆற்றாராய், தாம் எம்மை விளிகுற்றார்;
கல் வில்லோடு உலகு ஈந்த கனங் குழையைக் காதலித்து,—
சொல் வில்லால் உலகு அளிப்பாய்!—போர் செய்யத் தொடங்கினர்.† 21

'எம் மன்னன் பெருஞ் சேனை ஈவதனை மேற்கொண்ட
செம் மன்னர் புகழ் வேட்ட பொருளேபோல் தேய்ந்ததால்;
பொம்மென்ன வண்டு அலம்பும் புரி குழலைக் காதலித்த
அம் மன்னர் சேனை, தமது ஆசைபோல் ஆயிற்றால்.† 22

'மல் காக்கும் மணிப் புயத்து மனனன் இவன், மழவிடையோன்
வில் காக்கும் வாள் அமருள் மெலிகின்றான் என இரங்கி,
எல் காக்கும் முடி விண்ணோர் படை ஈந்தார் என, வேந்தர்,
அல் காக்கை கூகையைக் கண்டு அஞ்சினவாம் என, அகன்றார்.†

16. பியல் - பிடரி, கழுத்து; 18. பிணங்குவன - நீயோ நானோ முற்பட்டுச் சேர்வது என்று மாறுபட்டு வந்து விழுகின்றன; 19. வித்தகம் - அறிவு; 20. கலி - பேராரவாரம், மன எழுச்சி; புலித் தானை-புலித்தோலாகிய ஆடை; 21. விளிகுற்றார் - அழைத்தார்; 23. கூகை - கோட்டான்.

'அன்று முதல், இன்று அளவும், ஆரும் இந்தச் சிலை அருகு
சென்றும் இலர்; போய் ஒளித்த தேர் வேந்தர் திரிந்தும் இலர்;
''என்றும் இனி மணமும் இலை'' என்று இருந்தேம்; இவன் ஏற்றின்,
நன்று; மலர்க் குழல் சீதை நலம் பழுது ஆகாது' என்றான். 24

விசுவாமித்திரன் முகக்குறிப்பை அறிந்த இராமன் வில்லினை நோக்கி எழுதல்

நினைந்த முனி பகர்ந்த எலாம் நெறி உன்னி, அறிவனும் தன்
புனைந்த சடைமுடி துளக்கி, போர் ஏற்றின் முகம் பார்த்தான்;
வனைந்தனைய திருமேனி வள்ளலும், அம் மா தவத்தோன்
நினைந்த எலாம் நினைந்து, அந்த நெடுஞ் சிலையை நோக்கினான்.

பொழிந்த நெய் ஆகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங் கனல் என்ன எழுந்தான்;
'அழிந்தது, வில்' என, விண்ணவர் ஆர்த்தார்;
மொழிந்தனர் ஆசிகள், முப் பகை வென்றார். 26

மங்கையரின் மனநிலையும் வாய்மொழியும்

தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல் வில் இறுப்பதன் முன்னம்,
சேயிழை மங்கையர் சிந்தைதொறு எய்யா,
ஆயிரம் வில்லை அனங்கன் இறுத்தான். 27

'காணும் நெடுஞ் சிலை கால் வலிது' என்பார்;
'நாணுடை நங்கை நலம் கிளர் செங் கேழ்ப்
பாணி, இவன் படர் செங் கை படாதேல்,
வாள் நுதல் மங்கையும் வாழ்வு இலள்' என்பார். 28

கரங்கள் குவித்து, இரு கண்கள் பனிப்ப,
'இருங் களிறு இச் சிலை ஏற்றிலன் ஆயின்,
நரந்த நறைக் குழல் நங்கையும், நாமும்,
முருங்கு எரியில் புக மூழ்குதும்' என்பார். 29

''வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்
''கொள்'' என முன்பு கொடுப்பதை அல்லால்,
வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து, இப்
பிள்ளை முன் இட்டது பேதைமை' என்பார். 30

25. நெறி - முறைமையாக; 29. நரந்தம் - கத்தூரி; முருங்கு - அழிக்கும்; 30. வெள்ளம் அணைத்தவன் - சிவன்.

'ஞான முனிக்கு ஒரு நாண் இலை' என்பார்;
'கோன் இவனின் கொடியோன் இலை' என்பார்;
'மானவன் இச் சிலை கால் வளையானேல்,
பீன தனத்தவள் பேறு இலள்' என்பார். 31

**வில்லினை எடுத்து இராமன் நாண் ஏற்றலும் வில்லொடிந்த ஓசையை அனைவரும் கேட்டலும்**

தோகையர் இன்னன சொல்லிட, நல்லோர்
ஓகை விளம்பிட, உம்பர் உவப்ப,
மாக மடங்கலும், மால் விடையும், பொன்
நாகமும், நாகமும், நாண நடந்தான். 32

ஆடக மால் வரை அன்னதுதன்னை,
'தேட அரு மா மணி, சீதை எனும் பொன்
சூடக வால் வளை, சூட்டிட நீட்டும்
ஏடு அவிழ் மாலை இது' என்ன, எடுத்தான். 33

தடுத்து இமையாமல் இருந்தவர், தாளில்
மடுத்ததும், நாண் நுதி வைத்ததும், நோக்கார்;
கடுப்பினில் யாரும் அறிந்திலர்; கையால்
எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார். 34

**வில் இற்ற ஓசையால் மூவுலகத்தும் தோன்றிய அச்சம்**

'ஆரிடைப் புகுதும் நாம்?' என்று, அமரர்கள், கமலத்தோன்தன்
பேருடை அண்ட கோளம் பிளந்தது' என்று ஏங்கி, நைந்தார்;
பாரிடை உற்ற தன்மை பகர்வது என்? பாரைத் தாங்கி,
வேரெனக் கிடந்த நாகம் இடி என வெருவிற்று அன்றே! 35

**வானகத்தார் வாழ்த்தும் மண்ணகத்தார் மகிழ்ச்சியும்**

பூ மழை சொரிந்தார் விண்ணோர்; பொன் மழை பொழிந்த மேகம்;
பாம மா கடல்கள் எல்லாம் பல் மணி தூவி ஆர்த்த;
கோ முனிக் கணங்கள் எல்லாம் கூறின ஆசி;—'கொற்ற
நாம வேல் சனகற்கு, இன்று, நல்வினை பயந்தது' என்னா. 36

மாலையும், இழையும், சாந்தும், சுண்ணமும், வாச நெய்யும்,
வேலை வெண் முத்தும், பொன்னும், காசும், நுண் துகிலும், வீசி;
பால் வளை, வயிர்கள், ஆர்ப்ப; பல் இயம் துவைப்ப; முந்நீர்
ஓல் கிளர்ந்து உவா உற்றென்ன, ஒலி நகர் கிளர்ந்தது அன்றே!

31. முனி - விசுவாமித்திரன்; மானவன் - வீரன்; பீனம் - பருமை; 32. மாக மடங்கல் - பெருமை பொருந்திய சிங்கம்; பொன் நாகம் - மேரு; நாகம் - யானை; 34. கடுப்பு - வேகம்; 36. பாமம் - பரப்பு; 37. ஓல் - ஒலி.

நல் இயல் மகர வீணைத் தேன் உக, நகையும் தோடும்
வில் இட, வாளும் வீச, வேல் கிடந்தனைய நாட்டத்து
எல் இயல் மதியம் அன்ன முகத்தியர், எழிலி தோன்றச்
சொல்லிய பருவம் நோக்கும் தோகையின் ஆடினரே! 38

உண் நறவு அருந்தினரின் சிவந்து ஒளிர் கருங் கண் மாதர்,
புண் உறு புலவி நீங்க, கொழுநரைப் புல்லிக்கொண்டார்;
வெண் நிற மேகம் மேன்மேல் விரி கடல் பருகுமாபோல்,
மண் உறை வேந்தன் செல்வம், வறியவர் முகந்துகொண்டார்.

வயிரியர் மதுர கீதம், மங்கையர் அமுத கீதம்,
செயிரியர் மகர யாழின் தேம் பிழி தெய்வ கீதம்,
பயிர் கிளை வேயின் கீதம், என்று இவை பருகி, விண்ணோர்
உயிருடை உடம்பும் எல்லாம் ஓவியம் ஒப்ப நின்றார். 40

ஐயன் வில் இறுத்த ஆற்றல் காணிய, அமரர் நாட்டுத்
தையலார் இழிந்து, பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார்—
செய்கையின், வடிவின், ஆடல் பாடலின் தெளிதல் தேற்றார்,—
மை அரி நெடுங் கண் நோக்கம் இமைத்தலும், மயங்கி நின்றார்.

**மிதிலை நகர மக்களின் உவகை மொழிகள்**

'தயரதன் புதல்வன்' என்பார்; 'தாமரைக் கண்ணன்' என்பார்;
'புயல் இவன் மேனி' என்பார்; 'பூவையே பொருவும்' என்பார்;
'மயல் உடைத்து உலகம்' என்பார்; 'மானிடன் அல்லன்' என்பார்;
'கயல் பொரு கடலுள் வைகும் கடவுளே காணும்' என்பார்.

'நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்;
கொம்பினைக் காணும்தோறும், குரிசிற்கும் அன்னதே ஆம்;
தம்பியைக் காண்மின்!' என்பார்; 'தவம் உடைத்து உலகம்' என்பார்;
'இம்பர், இந் நகரில் தந்த முனிவனை இறைஞ்சும்' என்பார்.

**காதல் நோயால் சீதை உள்ளம் நைந்து உருகுதல்**

இற்று, இவண் இன்னது ஆக,—மதியொடும் எல்லி நீங்கப்
பெற்று, உயிர் பின்னும் காணும் ஆசையால், சிறிது பெற்ற,
சிற்றிடை, பெரிய கொங்கை, சேயரிக் கரிய வாள்-கண்,
பொன்-தொடி,—மடந்தைக்கு அப்பால் உற்றது புகலலுற்றாம்:

38. வில் - விட்டு விட்டு வீசும் ஒளி; வாள் - இடைவிடாது பரப்பும் ஒளி; 40. வயிரியர் - கூத்தர்; செயிரியர் - நரம்புக்கருவியை மீட்டுவோர்; பயிர் - ஒலிக்கின்ற; கிளை - ஏழிசையில் ஒன்று.

ஊசல் ஆடு உயிரினோடும், உருகு பூம் பள்ளி நீங்கி,
பாசிழை மகளிர் சூழ, போய், ஒரு பளிக்கு மாட,
காசு இல் தாமரையின் பொய்கை, சந்திர காந்தம் ஈன்ற
சீத நீர் தெளித்த மென் பூஞ் சேக்கையை அரிதின் சேர்ந்தாள்.

''பெண் இவண் உற்றது'' என்னும் பெருமையால், அருமையான
வண்ணமும் இலைகளாலே காட்டலால், வாட்டம் தீர்ந்தேன்;–
தண் நறுங் கமலங்காள்!—என் தளிர் நிறம் உண்ட கண்ணின்
உள் நிறம் காட்டினீர்; என் உயிர் தர உலோவினீரே! 46

'நாண் உலாவு மேருவோடு நாண் உலாவு பாணியும்,
தூண் உலாவு தோளும், வாளியூடு உலாவு தூணியும்,
வாள் நிலாவின் நூல் உலாவும் மாலை மார்பும், மீளவும்
காணல் ஆகும்? ஆகின், ஆவி காணல் ஆகுமேகொலாம். 47

'விண்தலம் கலந்து இலங்கு திங்களோடு, மீது சூழ்
வண்டு அலம்பு அலங்கல் தங்கு பங்கியோடும், வார் சிலைக்
கொண்டல் ஒன்று, இரண்டு கண்ணின் மொண்டுகொண்டு, என் ஆவியை
உண்டது உண்டு; என் நெஞ்சில் இன்னும் உண்டு; அது என்றும் உண்டு
அரோ! 48

'பஞ்சு அரங்கு தீயின் ஆவி பற்ற, நீடு கொற்ற வில்
வெஞ் சரங்கள் நெஞ்சு அரங்க, வெய்ய காமன் எய்யவே,
சஞ்சலம் கலந்தபோது, தையலாரை, உய்ய வந்து,
"அஞ்சல்! அஞ்சல்!" என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே? 49

'இளைக்கலாத கொங்கைகாள்! எழுந்து விம்மி என் செய்வீர்?
முளைக்கலா மதிக்கொழுந்து போலும் வாள் முகத்தினன்,
வளைக்கலாத விற் கையாளி, வள்ளல், மார்பின் உள்ளுறத்
திளைக்கல் ஆகும்ஆகில், ஆன செய் தவங்கள் செய்ம்மினே! 50

'எங்கு நின்று எழுந்தது, இந்த இந்து? வந்து என் நெஞ்சு உலா
அங்கு இயன்று, அனங்கன் எய்த அம்பின் வந்த சிந்தை நோய்
பொங்குகின்ற கொங்கைமேல் விடம் பொழிந்தது; என்னினும்,
கங்குல் வந்த திங்கள் அன்று; அகம் களங்கம் இல்லையே! 51

46. உலோவினீர் - பின்வாங்கினீர்; 47. தூண் உலாவு - உலாவு உவம உருபு; 49. அரங்குதல் - அழித்தல்; 50. முளைக்கலா - வானில் தோன்றாத, முளைக்கின்ற கலையையுடைய; 51. உலா - பவனி; இப் பாடல் இராமன் முகத்தை உருவெளித் தோற்றத்தில் கண்டு சீதை கூறியதாகும்.

'அடர்ந்து வந்து, அனங்கன், நெஞ்சு அழன்று சிந்தும் அம்பு எனும்
விடம் குடைந்த மெய்யின்நின்று வெந்திடாது எழுந்து, வெங்
கடம் துதைந்த காரி யானை அன்ன காளை தாள் அடைந்து,
உடன் தொடர்ந்துபோன ஆவி வந்தவா என்?—உள்ளமே! 52

'விண்ணுளே எழுந்த மேகம் மார்பின் நூலின் மின்னொடு, இம்
மண்ணுளே இழிந்தது என்ன, வந்து போன மைந்தனர்,
எண்ணுளே இருந்த போதும், யாவரென்று தேர்கிலென்;
கண்ணுளே இருந்த போதும், என்கொல் காண்கிலாதவே? 53

'பெய் கடல் பிறந்து, அயல் பிறக்கொணு மருந்து பெற்று,
ஐய பொற் கலத்தொடு அங்கை விட்டு இருந்த ஆதர்போல்,
மொய் கிடக்கும் அண்ணல் தோள் முயங்கிடாது முன்னமே,
கைகடக்க விட்டு இருந்து கட்டுரைப்பது என்கொலோ?' 54

என்று கொண்டு, உள் நைந்து நைந்து, இரங்கி, விம்மி விம்மியே,
பொன் திணிந்த கொங்கை மங்கை இடரின் மூழ்கு போழ்தின்வாய்,
குன்றம் அன்ன சிலை முறிந்த கொள்கை கண்டு, குளிர் மனத்து
ஒன்றும் உண்கண் மதி முகத்து ஒருத்தி செய்தது உரைசெய்வாம்: 55

**நீலமாலை உரைத்த மகிழ்ச்சிச் செய்தி**

வடங்களும் குழைகளும் வான வில்லிட,
தொடர்ந்த பூங் கலைகளும் குழலும் சோர்தர,
நுடங்கிய மின் என நொய்தின் எய்தினள்,
நெடுந் தடங் கிடந்த கண் நீலமாலையே.* 56

வந்து அடி வணங்கிலள்; வழங்கும் ஓதையள்;
அந்தம் இல் உவகையள், ஆடிப் பாடினள்;
'சிந்தையுள் மகிழ்ச்சியும், புகுந்த செய்தியும்,
சுந்தரி! சொல்' என, தொழுது சொல்லுவாள்: 57

'கய ரத துரகமாக் கடலன், கல்வியன்,
தயரதன் எனும் பெயர்த் தனிச் செல் நேமியான்,
புயல் பொழி தடக் கையான், புதல்வன்; பூங் கணை
மயல் விளை மதனற்கும் வடிவு மேன்மையான்; 58

52. குடைந்த - முழுகிய; 54. பெய் கடல் - இந்திரனுடைய செல்வங்கள் இடப்பட்ட கடல்; ஆதர் - மூடர்; 55. குளிர் மனத்து ஒன்றும் - குளிர்ந்த மனத்தோடு கூடி இருக்கின்ற.

'மரா மரம் இவை என வலிய தோளினன்;
''அரா-அணை அமலன்'' என்று அயிர்க்கும் ஆற்றலான்;
'இராமன்' என்பது பெயர்; இளைய கோவொடும்,
பராவ அரு முனியொடும், பதி வந்து எய்தினன்; 59

' ''பூண் இயல் மொய்ம்பினன், புனிதன் எய்த வில்
காணிய வந்தனன்'' என்ன, காவலன்
ஆணையின் அடைந்த வில்அதனை, ஆண்தகை,
நாண் இனிது ஏற்றினன்; நடுங்கிற்று உம்பரே! 60

'மாத்திரை அளவில் தாள் மடுத்து, முன் பயில்
''சூத்திரம் இது'' என, தோளின் வாங்கினன்;
ஏத்தினர் இமையவர்; இழிந்த, பூ மழை;
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே!' 61

**சீதை தன் ஐயம் நீங்கலும் அகத்துள் உறுதி பூணலும்**

'கோமுனியுடன் வரு கொண்டல்' என்ற பின்,
'தாமரைக் கண்ணினன்' என்ற தன்மையால்,
'ஆம்; அவனேகொல்' என்று, ஐயம் நீங்கினள்;
வாம மேகலையினுள் வளர்ந்தது, அல்குலே! 62

'இல்லையே நுசுப்பு' என்பார், 'உண்டு, உண்டு' என்னவும்,
மெல்லியல், முலைகளும் விம்ம விம்முவாள்;
'சொல்லிய குறியின், அத் தோன்றலே அவன்;
அல்லனேல், இறப்பென்' என்று, அகத்துள் உன்னினள், 63

**சனகன் உவந்து கோசிகனிடம் திருமணம் குறித்து வினவுதல்**

ஆசையுற்று அயர்பவள் அன்னள் ஆயினள்;
பாசடைக் கமலத்தோன் படைத்த வில் இறும்
ஓசையின் பெரியது ஓர் உவகை எய்தி, அக்
கோசிகற்கு ஒரு மொழி, சனகன் கூறுவான்: 64

'உரை செய்—எம் பெரும! உன் புதல்வன் வேள்விதான்,
விரைவின், இன்று, ஒரு பகல் முடித்தல் வேட்கையோ?
முரசு எறிந்து அதிர் கழல் முழங்கு தானை அவ்
அரசையும், இவ் வழி அழைத்தல் வேட்கையோ? 65

60. மொய்ம்பு - தோள்; 61. சூத்திரம் - யந்திரம்; 62. வாமம் - அழகு; 64. பாசடை - பசுமையான இலை; 65. அதிர் கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல்.

முனிவன் மொழிந்தபடியே சனகன் தயரதனுக்குத் தூது விடுத்தல்

மல் வலான் அவ் உரை பகர, மா தவன்,
'ஒல்லையில் அவனும் வந்துறுதல், நன்று' என,
எல்லை இல் உவகையான், 'இயைந்தவாறு எலாம்
சொல்லுக' என்று, ஓலையும் தூதும் போக்கினான். 66

# 13 எழுச்சிப் படலம்

சனகன் தூதர் தயரதனையடுத்துச் செய்தி தெரிவித்தல்

கடுகிய தூதரும், காலில் காலின் சென்று,
இடி குரல் முரசு அதிர் அயோத்தி எய்தினர்;
அடி இணை தொழ இடம் இன்றி, மன்னர்தம்
முடியொடு முடி பொரு வாயில் முன்னினர். 1

முகந்தனர் திருவருள், முறையின் எய்தினர்;
திகழ்ந்து ஒளிர் கழல் இணை தொழுது, செல்வனைப்
புகழ்ந்தனர்; 'அரச! நின் புதல்வர் போய பின்
நிகழ்ந்ததை இது' என, நெடிது கூறினர். 2

சனகனது ஓலையை வாசிக்கக் கேட்டுத் தயரதன் உவகை கொள்ளல்

கூறிய தூதரும், கொணர்ந்த ஓலையை,
'ஈறு இல் வண் புகழினாய்! இது அது' என்றனர்;
வேறு ஒரு புலமகன் விரும்பி வாங்கினான்;
மாறு அதிர் கழலினான், 'வாசி' என்றனன். 3

இலை முகப் படத்து அவன் எழுதிக் காட்டிய
தலை மகன் சிலைத் தொழில் செவியில் சார்தலும்,
நிலை முக வலையங்கள் நிமிர்ந்து நீங்கிட,
மலை என வளர்ந்தன, வயிரத் தோள்களே. 4

66. ஓலை - திருமணப் பத்திரிகை; தூது - தூதுவர்.

13 : 2. திருவருள் முகந்தனர் - உள்ளே செல்ல உத்தரவு பெற்றனர்; 3. புலமகன் - அறிஞன்; மாறு - ஒன்றற்கொன்று மாறாக; 4. இலை முகப் படம் - பனையோலையாகிய கிழி; நிலை முக வலயம் - நிலைத்த இடம் பெற்ற தோள்வளை.

வெற்றிவேல் மன்னவன், 'தக்கன் வேள்வியில்,
கற்றை வார் சடை முடிக் கணிச்சி வானவன்,
முற்ற ஏழ் உலகையும் வென்ற மூரி வில்
இற்ற பேர் ஒலிகொல் அன்று இடித்தது, ஈங்கு?' என்றான். 5

**தூதருக்கு அணிகலன் முதலியன வழங்குதல்**

என்று உரைத்து எதிர் எதிர், இடைவிடாது, 'நேர்
துன்றிய கனை கழல் தூதர் கொள்க!' எனா,
பொன் திணி கலங்களும் தூசும் போக்கினான்—
குன்று என உயரிய குவவுத் தோளினான்.* 6

**தயரதன் ஆணைப்படி வள்ளுவன் மணமுரசு அறைதல்**

'வானவன் குலத்து எமர் வரத்தினால் வரும்
வேனில் வேள் இருந்த அம் மிதிலை நோக்கி, நம்
சேனையும் அரசரும் செல்க, முந்து!' எனா,
'ஆனைமேல் மணமுரசு அறைக!' என்று ஏவினான். 7

வாம் பரி விரி திரைக் கடலை, வள்ளுவன்,—
தேம் பொழி துழாய் முடிச் செங் கண் மாலவன்,
ஆம் பரிசு, உலகு எலாம் அளந்துகொண்ட நாள்,
சாம்புவன் திரிந்தென,—திரிந்து சாற்றினான். 8

**நால்வகைப் படைகளின் எழுச்சி**

விடை பொரு நடையினான் சேனை வெள்ளம், 'ஓர்
இடை இலை, உலகினில்' என்ன, ஈண்டிய;
கடையுக முடிவினில், எவையும் கால் பட,
புடை பெயர் கடல் என, எழுந்து போயதே. 9

சில் இடம் உலகு எனச் செறிந்த தேர்கள்தாம்
புல்லிடு சுடர் எனப் பொலிந்த, வேந்தரால்;
எல் இடு கதிர் மணி எறிக்கும் ஓடையால்,
வில் இடும் முகில் எனப் பொலிந்த, வேழமே. 10

கால் விரிந்து எழு குடை, கணக்கு இல் ஓதிமம்,
பால் விரிந்து, இடை இடை பறப்ப போன்றன;
மேல் விரிந்து எழு கொடிப் படலை, விண் எலாம்
தோல் உரிந்து உகுவன போன்று தோன்றுமால்! 11

6. நேர் துன்றிய - ஒன்றை ஒன்று ஒத்த; 7. வானவன் - சூரியன்; வேள் - மன்மதன் போன்ற இராமன்; 8. வள்ளுவன் - முரசு அறைந்து செய்தி தெரிவிப்போன்; 10. சில் இடம் - சிறிய இடம்; 11. கால் விரிந்து - காம்பினின்றும் விரிந்து; படலை - கூட்டம்.

நுடங்கிய துகிற் கொடி நூழைக் கைம் மலைக்
கடம் கலுழ் சேனையை, 'கடல் இது ஆம்' என,
இடம் பட எங்கணும் எழுந்த வெண் முகில்,
தடம் புனல் பருகிடத் தாழ்வ போன்றவே. 12

இழையிடை இள வெயில் எறிக்கும்; அவ் வெயில்,
தழையிடை நிழல் கெடத் தவழும்; அத் தழை,
மழையிடை எழில் கெட மலரும்; அம் மழை,
குழைவுற முழங்கிடும், குழாம் கொள் பேரியே. 13

மன் மணிப் புரவிகள் மகளிர் ஊர்வன,
அன்னம் உந்திய திரை ஆறு போன்றன;
பொன் அணி புணர் முலைப் புரி மென் கூந்தலார்
மின் என, மடப் பிடி மேகம் போன்றவே. 14

இணை எடுத்து இடை இடை நெருக்க, ஏழையர்
துணை முலைக் குங்குமச் சுவடும், ஆடவர்
மணி வரைப் புயத்து மென் சாந்தும், மாழ்கி, மெல்
அணை எனப் பொலிந்தது—அக் கடல் செல் ஆறுஅரோ. 15

மகளிர் ஆடவர் திரள்

முத்தினால், முழு நிலா எறிக்கும்; மொய்ம் மணிப்
பத்தியால், இள வெயில் பரப்பும்;—பாகினும்
தித்தியாநின்ற சொல் சிவந்த வாய்ச்சியர்
உத்தராசங்கம் இட்டு ஒளிக்கும் கூற்றமே. 16

வில்லினர்; வாளினர்; வெறித்த குஞ்சியர்;
கல்லினைப் பழித்து உயர் கனகத் தோளினர்;
வல்லியின் மருங்கினர் மருங்கு, மாப் பிடி
புல்லிய களிறு என, மைந்தர் போயினர். 17

மன்றல் அம் புது மலர் மழையில் சூழ்ந்தெனத்
துன்று இருங் கூந்தலார் முகங்கள் தோன்றலால்,
ஒன்று அலா முழுமதி ஊரும் மானம்போல்,
சென்றன தரள வான் சிவிகை ஈட்டமே. 18

12. நூழை - துளை; 13. தழை - பீலிக்குடை; 15. இணை எடுத்து - இரண்டாக இணைந்து; மாழ்கி - உதிர்ந்து; மெல் அணை - படுக்கை; 16. உத்தராசங்கம் - மேலாடை; கூற்றம் - முலைகளுக்கு ஆகி வந்தது; 18. மானம் - விமானம்.

யானை குதிரைகளின் செலவு

மொய் திரைக் கடல் என முழங்கு மூக்குடைக்
கைகளின், திசை நிலைக் களிற்றை ஆய்வன,—
மையல் உற்று, இழி மத மழை அருமையால்,
தொய்யலைக் கடந்தில, சூழி யானையே. 19

சூருடை நிலை என, தோய்ந்தும் தோய்கிலா
வாருடை வன முலை மகளிர் சிந்தைபோல்,
தாரொடும் சதியொடும் தாவும்ஆயினும்,
பாரிடை மிதிக்கில—பரியின் பந்தியே. 20

ஊடிய மகளிரின் போக்கு

ஊடிய மனத்தினர், உருத நோக்கினர்,
நீடிய உயிர்ப்பினர், நெரிந்த நெற்றியர்;
தோடு அவிழ் கோதையும் துறந்த கூந்தலர்;
ஆடவர் உயிர் என அருகு போயினர். 21

மாறு எனத் தடங்களைப் பொருது, மா மரம்
ஊறு பட்டு இடையிடை ஒடித்து, சாய்த்து, உராய்,
ஆறு எனச் சென்றன—அருவி பாய் கவுள்,
தாறு எனக் கனல் உமிழ் தறுகண் யானையே. 22

படைப் பெருக்கம்

உழுந்து இட இடம் இலை உலகம் எங்கணும்,
அழுந்திய உயிர்க்கு எலாம் அருட் கொம்பு ஆயினன்
எழுந்திலன்; எழுந்து இடைப் படரும் சேனையின்
கொழுந்து போய்க் கொடி மதில் மிதிலை கூடிற்றே! 23

வண்டியில் வயங்கிய மகளிர்

கண்டவர் மனங்கள் கைகோப்பக் காதலின்,
வண்டு இமிர் கோதையர் வதன ராசியால்,
பண் திகழ் பண்டிகள் பரிசின் செல்வன,
புண்டரிகத் தடம் போவ போன்றவே. 24

பாண்டிலின் வையத்த ஓர் பாவைதன்னொடும்
ஈண்டிய அன்பினோடு ஏகுவான், இடைக்
காண்டலும், நோக்கிய கடைக்கண் அஞ்சனம்,
ஆண்தகைக்கு இனியது ஓர் அமுதம் ஆயதே! 25

19. தொய்யல் - சேறு; 20. சூர் - தெய்வம்; தார் - கிங்கிணி மாலை; சதி - தாளம்; 22. தடம் - மலை; தாறு - இருப்புமுள்; 23. கொழுந்து - முன்னணி; 24. பண் - பூட்டு; பண்டி - வண்டி; பரிசு - தன்மை; 25. பாண்டில் - வண்டி.

ஓர் ஆடவன் நிலை

பிள்ளை மான் நோக்கியைப் பிரிந்து போகின்றான்,
அள்ளல் நீர் மருத வைப்புஅதனில், அன்னம் ஆம்
புள்ளும் மென் தாமரைப் பூவும் நோக்கினான்,
உள்ளமும் தானும் நின்று ஊசலாடினான். 26

தானையின் செலவுக்காட்சி

அம் கண் ஞாலத்து அரசு மிடைந்து, அவர்
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்,
கங்கை யாறு கடுத்தது—கார் எனச்
சங்கு, பேரி, முழங்கிய தானையே. 27

அமரர் அம் சொல் அணங்கு அனையார் உயிர்
கவரும் கூர் நுதிக் கண் எனும் காலவேல்,
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்,
சமர பூமியும் ஒத்தது—தானையே. 28

தோள் மிடைந்தன, தூணம் மிடைந்தென;
வாள் மிடைந்தன, வான்மின் மிடைந்தென;
தாள் மிடைந்தன, தம்மி மிடைந்தென;
ஆள் மிடைந்தன, ஆளி மிடைந்தென. 29

காதல் நாடகம்

வார் குலாம் முலை வைத்த கண் வாங்கிடப்
பேர்கிலாது பிறங்கு முகத்தினான்
தேர்கிலான், நெறி; அந்தரில் சென்று, ஒரு
மூரி மா மத யானையை முட்டினான். 30

சுழி கொள் வாம் பரி துள்ள, ஓர் தோகையாள்
வழுவி வீழலுற்றாளை, ஓர் வள்ளல்தான்,
எழுவின் நீள் புயத்தால் எடுத்து ஏந்தினான்;
தழுவி நின்று ஒழியான்; தரைமேல் வையான். 31

துணைத்த தாமரை நோவத் தொடர்ந்து, அடர்
கணைக் கருங் கணினாளை ஓர் காளைதான்,
'பணைத்த வெம் முலைப் பாய் மத யானையை
அணைக்க, நங்கைக்கு, அகல் இடம் இல்' என்றான். 32

26. வைப்பு - நிலம்; 28. சமர பூமி - போர்க்களம்; 29. தம்மி - தாமரைப்பூ; 30. அந்தர் - குருடர்; 31. சுழி கொள் - நற்சுழிகளையுடைய; வீழலுற்றாள் - குதிரையிலிருந்து நழுவி வீழ்ந்தவள்; 32. அகல் இடம் - பரந்த இடம், அகன்ற மார்பு.

சுழியும் குஞ்சிமிசைச் சுரும்பு ஆர்த்திட,
பொழியும் மா மத யானையின் போகின்றான்,
சுழிய கூரிய என்று ஒரு காரிகை
விழியை நோக்கி, தன் வேலையும் நோக்கினான். 33

தரங்க வார் குழல் தாமரைச் சீறடிக்
கருங் கண் வாள் உடையாளை, ஓர் காளைதான்,
'நெருங்கு பூண் முலை நீள் வளைத் தோளினீர்!
மருங்குல் எங்கு மறந்தது நீர்?' என்றான். 34

கூற்றம் போலும் கொலைக் கணினால் அன்றி,
மாற்றம் பேசுகிலாளை, ஓர் மைந்தன்தான்,
'ஆற்று நீரிடை, அம் கைகளால் எடுத்து
ஏற்றுவார் உமை, யாவர் கொலோ?' என்றான். 35

ஒட்டகம் சென்ற பான்மை

தள்ள அரும் பரம் தாங்கிய ஒட்டகம்,
தெள்ளு தேம் குழை யாவையும் தின்கில;
உள்ளம் என்னத் தம் வாயும் உலர்ந்தன,
கள் உண் மாந்தரின் கைப்பன தேடியே. 36

பப்பரர் பாரம் சுமந்து செல்லுதல்

அரத்த நோக்கினர், அல் திரள் மேனியர்,
பரித்த காவினர், பப்பரர் ஏகினர்—
திருத்து கூடத்தைத் திண் கணையத்தொடும்
எருத்தின் ஏந்திய மால் களிறு என்னவே. 37

பிடியின்மேல் ஏகும் மங்கையர்

பித்த யானை பிணங்கி, பிடியில் கை
வைத்த; மேல் இருந்து அஞ்சிய மங்கைமார்,
எய்த்து இடுக்கண் உற்றார், புதைத்தார்க்கு இரு
கைத்தலங்களில் கண் அடங்காமையே. 38

சிந்தர்தம் செலவு

வாம மேகலையாரிடை, வாலதி
பூமி தோய் பிடி, சிந்தரும் போயினர்—
காமர் தாமரை நாள்மலர்க் கானத்துள்,
ஆமைமேல் வரும் தேரையின் ஆங்குஅரோ. 39

36. தெள்ளு தேம் குழை - தெளிந்த இனிய தளிர்கள்; 37. காவு - காவடி; பப்பரர் - பப்பர சாதியார்; கணையம் - யானைகள் ஒன்றையொன்று முட்டாமல் இடையே கிடத்தும் மரம்; 39. வாலதி - வால்.

**மாது ஒருத்தியைக் கொண்டு ஓடும் குதிரைத் தோற்றம்**

'இம்பர் நாட்டின் தரம் அல்லள், ஈங்கு இவள்;
உம்பர் கோமகற்கு' என்கின்றது ஒக்குமால்—
கம்ப மா வர, கால்கள் வளைத்து, ஒரு
கொம்பு அனைக் கொண்டு ஓடும் குதிரையே! 40

**மகளிர் மனம் களித்து ஓடுதல்**

சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்,
சிந்து மேகலை சிந்தையும் செய்கலார்,
'எந்தை வில் இறுத்தான்' எனும் இன் சொலை
மைந்தர் பேச, மனம் களித்து ஓடுவார். 41

**அந்தணர் முற்பட்டுச் செல்லுகை**

குடையர், குண்டிகை தூக்கினர், குந்திய
நடையர், நாசி புதைத்த கை நாற்றலர்,—
கட களிற்றையும் காரிகையாரையும்
அடைய அஞ்சிய, அந்தணர்—முந்தினர். 42

**நங்கையர் திரளின் செலவு**

நாறு பூங் குழல் நங்கையர் கண்ணின் நீர்
ஊறு நேர்வந்து உருவு வெளிப்பட,
'மாறு கொண்டனை வந்தனை ஆகில், வந்து
ஏறு தேர்' எனக் கைகள் இழிச்சுவார்.† 43

குரைத்த தேரும், களிறும் குதிரையும்,
நிரைத்த வார் முரசும், நெளிந்து எங்கணும்
இரைத்த பேர் ஒலியால், இடை, யாவரும்
உரைத்த உணர்ந்திலர்; ஊமரின் ஏகினர். 44

நுண் சிலம்பி வலந்தன நுண் துகில்,
கள் சிலம்பு கருங் குழலார் குழு
உள் சிலம்பு சிலம்ப ஒதுங்கலால்,
புள் சிலம்பிடு பொய்கையும் போன்றதே. 45

40. கம்பமா - யானை. 42. குண்டிகை தூக்கினர் - கமண்டலம் தாங்கியவர்; குந்துதல் - குதிக்கால் படாது நடத்தல்; 44. குரைத்த - ஒலித்த; 45. சிலம்பி - சிலந்தி; வலந்தன - பின்னின போன்ற; கள் - வண்டு; ஒதுங்கல் - நடத்தல்.

**மகளிர் கண்களைக் கண்ட ஆடவர் மகிழ்ச்சி**

தெண் திரைப் பரவைத் திரு அன்னவர்,
நுண் திரைப் புரை நோக்கிய நோக்கினை,
கண்டு இரைப்பன, ஆடவர் கண்; களி
வண்டு இரைப்பன, ஆனை மதங்களே.* 46

உழை கலித்தன என்ன, உயிர்த் துணை
நுழை கலிக் கருங் கண்ணியர் நூபுர
இழை கலித்தன; இன் இயமா, எழும்
மழை கலித்தென, வாசி கலித்தவே. 47

மண் களிப்ப நடப்பவர் வாள் முக
உண் களிக் கமலங்களின் உள் உறை
திண் களிச் சிறு தும்பி என, சிலர்
கண் களித்தன, காமன் களிக்கவே. 48

**தூளி எழுந்து நிறைய யாவரும் செல்லுதல்**

எண்ண மாத்திரமும் அரிதாம் இடை,
வண்ண மாத் துவர் வாய், கனி வாய்ச்சியர்,
திண்ணம் மாத்து ஒளிர் செவ் இளநீர், இழி
சுண்ணம் ஆத்தன; தூளியும் ஆத்தவே. 49

சித்திரத் தடந் தேர் மைந்தர் மங்கையர்,
உய்த்து உரைப்ப, நினைப்ப, உலப்பிலர்,
இத் திறத்தினர் எத்தனையோ பலர்,
மொய்த்து இரைத்து வழிக்கொண்டு முன்னினர். 50

குசை உறு பரியும், தேரும், வீரரும், குழுமி, எங்கும்
விசையொடு கடுகப் பொங்கி வீங்கிய தூளி விம்மி,
பசை உறு துளியின் தாரைப் பசுந் தொளை அடைத்த, மேகம்;
திசைதொறும் நின்ற யானை மதத் தொளை செம்மிற்று அன்றே.

**மங்கையர் ஆடவர் மகிழ்ந்துசெல் காட்சி**

கேடகத் தடக் கையாலே, கிளர் ஒளி வாளும் பற்றி,
சூடகத் தளிர்க் கை, மற்றைச் சுடர் மணித் தடக் கை பற்றி,
ஆடகத்து ஓடை யானை அழி மதத்து இழுக்கல் ஆற்றில்,
பாடகக் காலினாரை, பயப் பயக் கொண்டு போனார். 52

46. திரைப்புரை - திரைச்சீலைத் துவாரம்; 47. உயிர்த்துணை நுழை - உயிர் வரைக்கும் நுழைகின்ற; வாசி - குதிரை; 49. மாத்திரம் - அளவு; ஆத்தன - நீங்காது பொருந்தின; 50. சித்திரம் - அழகு; 51. குசை - கடிவாளம்; 52. சூடகம் - வளையல்; பாடகம் - காலணி வகை; பயப்பய - மெல்லமெல்ல.

செய்களின் மடுவில், நல் நீர்ச் சிறைகளில், நிறையப் பூத்த
நெய்தலும், குமுதப் பூவும், நெகிழ்ந்த செங் கமலப் போதும்,
கைகளும், முகமும், வாயும், கண்களும், காட்ட, கண்டு,
'கொய்து, அவை தருதிர்' என்று, கொழுநரைத் தொழுகின்றூரால்.

**யானை வரவு கேட்டு மகளிர் நிலைகெட்டு ஓடுதல்**

பந்தி அம் புரவிநின்றும் பாரிடை இழிந்தோர், வாசக்
குந்தள பாரம் சோர, குலமணிக் கலன்கள் சிந்த,
சந்த நுண் துகிலும் வீழ, தளிர்க் கையால் அணைத்து, 'சார
வந்தது வேழம்' என்ன, மயில் என இரியல் போவார். 54

**குடை கொடிகளின் நெருக்கம்**

குடையொடு பிச்சம், தொங்கல் குழாங்களும், கொடியின் காடும்,
இடை இடை மயங்கி, எங்கும் வெளி கரந்து இருளைச் செய்ய,
படைகளும், முடியும், பூணும், படர் வெயில் பரப்பிச் செல்ல—
இடை ஒரு கணத்தினுள்ளே, இரவு உண்டு; பகலும் உண்டே!

**மகளிர்க்கு வழிவிட்டு ஆடவர் விலகுதல்**

முருக்கு இதழ் முத்த மூரல் முறுவலார் முகங்கள் என்னும்
திருக் கிளர் கமலப் போதில் தீட்டின கிடந்த கூர் வாள்,
'நெருக்கு இடை அறுக்கும்; நீவிர் நீங்குமின் நீங்கும்' என்று என்று,
அருக்கனில் ஒளிரும் மேனி ஆடவர் அகலப் போவார். 56

நீந்த அரு நெறியின் உற்ற நெருக்கினுல் சுருக்குண்டு அற்று,
காந்தின மணியும் முத்தும் சிந்தின, கலாபம் சூழ்ந்த
பாந்தளின் அல்குலார்தம் பரிபுரம் புலம்பு பாதப்
பூந் தளிர் உறைப்ப, மாழ்கி, 'போக்கு அரிது' என்ன நிற்பார்.

**இசை ஒலியும் எருதுகளும்**

கொற்ற நல் இயங்கள் எங்கும் கொண்டலின் துவைப்ப, பண்டிப்
பெற்ற ஏறு, அன்னப் புள்ளின் பேதையர் வெருவி நீங்க,
முற்று உறு பரங்கள் எல்லாம், முறை முறை, பாசத்தோடும்
பற்று அற வீசி ஏகி, யோகியின் பரிவு தீர்ந்த. 58

53. நீர்ச் சிறை - நீர்நிலை; 55. பிச்சம் - பீலிக் குஞ்சக்குடை; தொங்கல் - மாலை; 57. கலாபம் - பதினறு கோவையுள்ள மாதர் இடையணி; பாந்தள் - பாம்பு; பரிபுரம் - சிலம்பு; 58. பரம் - பாரம், சுமை; பரங்களைப் பாசத் தோடும் பற்றற வீசுதல் ஏற்றுக்கும் யோகிக்கும் பொது.

நீர்நிலைகளில் படிந்த யானை

கால் செறி வேகப் பாகர் கார்முக உண்டை பாரா,
வார்ச் செறி கொங்கை அன்ன கும்பமும் மருப்பும் காணப்
பால் செறி கடலில் தோன்றும் பனைக் கை மால் யானை என்ன,
நீர்ச் சிறை பற்றி, ஏறு நின்ற—குன்று அனைய வேழம். 59

பாணர் விறலியர் இசை

அறல் இயல் கூந்தல், கண் வாள், அமுது உகு குமுதச் செவ் வாய்,
விறலியரோடு, நல் யாழ்ச் செயிரியர், புரவி மேலார்,
நறை செவிப் பெய்வது என்ன, நைவள அமுதப் பாடல்
முறை முறை பகர்ந்து போனார், கின்னர மிதுனம் ஒப்பார். 60

மதயானைகளின் போக்கு

அருவி பெய் வரையின் பொங்கி, அங்குசம் நிமிர, எங்கும்
இரியலின் சனங்கள் சிந்த, இளங் களிச் சிறு கண் யானை,
விரி சிறைத் தும்பி, வேறு ஓர் வீழ் மதம் தோய்ந்து, மாதர்
சுரி குழல் படிய, வேற்றுப் பிடியொடும் தொடர்ந்து செல்ப.

தயரதன் நேய மாதரும் பட்டத்து அரசியரும் போதல்

நிறை மதித் தோற்றம் கண்ட நீல் நெடுங் கடலிற்று ஆகி,
அறை பறை துவைப்ப, தேரும், ஆனையும், ஆடல் மாவும்,
கறை கெழு வேல் கணும், மைந்தரும், கவினி, ஒல்லை
நெறியிடைப் படர, வேந்தன் நேய மங்கையர் தாம் செல்வார்.*

பொய்கை அம் கமலக் கானில் பொலிவது ஓர் அன்னம் என்ன,
கைகயர் வேந்தன் பாவை, கணிகையர் ஈட்டம் பொங்கி
ஐ-இருநூறு சூழ்ந்த, ஆய் மணிச் சிவிகைதன்மேல்,
தெய்வ மங்கையரும் நாண, தேன் இசை முரல, போனாள். 63

விரி மணித் தார்கள் பூண்ட வேசரி வெரிநில் தோன்றும்
அரி மலர்த் தடங் கண் நல்லார் ஆயிரத்து இரட்டி சூழ,
குரு மணிச் சிவிகைதன்மேல், கொண்டலின் பின் இது என்ன,
இருவரைப் பயந்த நங்கை, யாழ் இசை முரல, போனாள். 64

59. செறி - ஒத்த; கார்முக உண்டை - வில்லுண்டை; 60. செயிரியர் - பாணர்; கின்னர மிதுனம் - ஆணும் பெண்ணும் இணை பிரியாதிருக்கும் ஒரு தேவ சாதி; 62. கவினி - அழகாகக் கூடி; 64. வேசரி - கோவேறு கழுதை; வெரிந் - முதுகு.

வெள் எயிற்று இலவச் செவ் வாய் முகத்தை வெண் மதியம் என்று,
கொள்ளையின் சுற்று மீன்கள் குழுமிய அனைய ஊர்தி,
தெள் அரிப் பாண்டி பாணிச் செயிரியர் இசைத் தேன் சிந்த,
வள்ளலைப் பயந்த நங்கை, வானவர் வணங்க, போனாள். 65

செங் கையில், மஞ்ஞை, அன்னம், சிறு கிளி, பூவை, பாவை,
சங்கு உறை கழித்த அன்ன சாமரை, முதல தாங்கி,
'இங்கு அலது, எண்ணுங்கால், இவ் எழு திரை வளாகம் தன்னில்
மங்கையர் இல்லை' என்ன, மடந்தையர், மருங்கு போனார். 66

**மெய்காப்பாளர் காவல் புரிகை**

காரணம் இன்றியேயும் கனல் எழ விழிக்கும் கண்ணார்,
வீர வேத்திரத்தார், தாழ்ந்து விரிந்த கஞ்சுகத்து மெய்யார்,
தார் அணி புரவி மேலார், தலத்து உளார், கதித்த சொல்லார்,
ஆர் அணங்கு அனைய மாதர், அடி முறை காத்துப் போனார். 67

கூனொடு குறளும், சிந்தும், சிலதியர் குழாமும், கொண்ட
பால் நிறப் புரவி அன்னப் புள் எனப் பாரில் செல்ல,
தேனொடு மிஞிறும் வண்டும் தும்பியும் தொடர்ந்து செல்லப்
பூ நிறை கூந்தல் மாதர் புடை பிடி நடையில் போனார். 68

துப்பினின், மணியின், பொன்னின், சுடர் மரகதத்தின், முத்தின்,
ஒப்பு அற அமைத்த வையம், ஓவியம் புகழ ஏறி,
முப்பதிற்று-இரட்டி கொண்ட ஆயிரம், முகிழ் மென் கொங்கைச்
செப்ப அருந் திருவின் நல்லார், தெரிவையர் சூழப் போனார்.

**சிவிகையில் வசிட்டர் செல்ல, பரதசத்துருக்கனர் அவர்பின் போதல்**

செவி வயின் அமிர்தக் கேள்வி தெவிட்டினார், தேவர் நாவின்
அவி கையின் அளிக்கும் நீரார், ஆயிரகோடி சூழ,
கவிகையின் நீழல், கற்பின் அருந்ததி கணவன், வெள்ளைச்
சிவிகையில், அன்னம் ஊரும் திசைமுகன் என்ன, சென்றான்.

பொரு களிறு, இவுளி பொன் தேர் பொலங் கழல் குமரர், முந்நீர்
அரு வரை சூழ்ந்தது என்ன, அருகுபின் முன்னும் செல்ல,
திரு வளர் மார்பர், தெய்வச் சிலையினர், தேரர், வீரர்,
இருவரும், முனி பின் போன இருவரும் என்ன, போனார். 71

65. பாண்டி பாணி - தக்கேசிப் பண்; 67. வேத்திரம் - பிரம்பு; கதித்த - உரத்த; 70. தேவர் நா - தேவரது நாக்கு, ஓமாக்கினி; 71. தேரர் - தேரில் ஏறினவர்.

**தயரதன் சென்ற காட்சி**

நித்திய நியமம் முற்றி, நேமியான் பாதம் சென்னி
வைத்த பின், மறை வல்லோர்க்கு வரம்பு அறு மணியும் பொன்னும்,
பத்தி ஆன் நிரையும், பாரும், பரிவுடன் நல்கி, போனான்—
முத்து அணி வயிரப் பூணான், மங்கல முகிழ்த்த நல் நாள். 72

இருபிறப்பாளர் எண்ணாயிரர், மணிக் கலசம் ஏந்தி,
அரு மறை வருக்கம் ஓதி, அறுகு நீர் தெளித்து வாழ்த்தி,
வரன்முறை வந்தார், கோடி மங்கல மழலைச் செவ் வாய்ப்
பரு மணிக் கலாபத்தார், பல்லாண்டு இசை பரவப் போனான்.

'கண்டிலன் என்னை' என்பார்; 'கண்டனன் என்னை' என்பார்;
'குண்டலம் வீழ்ந்தது' என்பார்: 'குறுக அரிது, இனிச் சென்று' என்பார்;
'உண்டுகொல், எழுச்சி?' என்பார்; 'ஒலித்தது சங்கம்' என்பார்;
மண்டல வேந்தர் வந்து நெருங்கினர், மயங்க மாதோ. 74

பொற்றொடி மகளிர் ஊரும் பொலன் கொள் தார்ப் புரவி வெள்ளம்,
சுற்றுறு கமலம் பூத்த தொடு கடல் திரையின் செல்ல,
கொற்ற வேல் மன்னர் செங் கைப் பங்கயக் குழாங்கள் கூம்ப,
மற்று ஒரு கதிரோன் என்ன, மணி நெடுந் தேரில் போனான்.

ஆர்த்தது, விசும்பை முட்டி; மீண்டு, அகன் திசைகள் எல்லாம்
போர்த்தது: அங்கு ஒருவர்தம்மை ஒருவர் கட்புலம் கொளாமை
தீர்த்தது; செறிந்தது ஓடி, திரை நெடுங் கடலை எல்லாம்
தூர்த்தது, சகரரோடு பகைத்தென,—தூளி வெள்ளம். 76

சங்கமும் பணையும் கொம்பும் தாளமும் காளத்தோடு
மங்கல பேரி செய்த பேர் ஒலி மழையை ஓட்ட,
தொங்கலும் குடையும் தோகைப் பிச்சமும் சுடரை ஓட்ட,
திங்கள் வெண்குடை கண்டு ஓட, தேவரும் மருள,—சென்றான்.

மந்திர கீத ஓதை, வலம்புரி முழங்கும் ஓதை,
அந்தணர் ஆசி ஓதை, ஆர்த்து எழு முரசின் ஓதை,
கந்து கொல் களிற்றின் ஓதை, கடிகையர் கவியின் ஓதை,—
இந்திர திருவன் செல்ல—எழுந்தன. திசைகள் எல்லாம். 78

72. முகிழ்த்த நல் நாள் - நல்ல முகூர்த்த நாளில்; 75. வெள்ளம் - மிகுதி, கூட்டம்; 76. ஆர்த்தல் - நிறைத்தல்; கட்புலம் கொளாமை - பார்க்க முடியாதபடி; 77. பணை - புல்லாங்குழல்; காளம் - எக்காளம்; மங்கல பேரி - மங்கலத்தைத் தெரிவிக்கும் பேரிகை; 78. கடிகையர் - நாழிகைக் கணக்கர்.

நோக்கிய திசைகள் எல்லாம் தன்னையே நோக்கிச் செல்ல,
வீக்கிய கழற் கால் வேந்தர் விரிந்த கைம் மலர்கள் கூப்ப,
தாக்கிய களிறும் தேரும் புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி, விண்ணும் மண்ணுலகு ஆக்க,—போனான். 79

வீரரும், களிறும், தேரும், புரவியும் மிடைந்த சேனை,
பேர்வு இடம் இல்லை; மற்று ஓர் உலகு இல்லை; பெயர்க்கலாகா;
நீருடை ஆடையாளும் நெளித்தனள் முதுகை என்றால்,
'பார் பொறை நீக்கினான்' என்று உரைத்தது எப் பரிசு மன்னோ? 80

**சந்திரசயிலச் சாரலில் தங்குதல்**

இன்னணம் ஏகி, மன்னன் யோசனை இரண்டு சென்றான்;
பொன் வரை போலும் இந்துசயிலத்தின் சாரல் புக்கான்;
மன்மதக் களிறும், மாதர் கொங்கையும், மாரன் அம்பும்,
தென்வரைச் சாந்தும், நாறச் சேனை சென்று, இறுத்தது அன்றே. 81

## 14　　சந்திரசயிலப் படலம்

**யானைகளின் செயல்கள்**

கோவை ஆர் வடக் கொழுங் குவடு ஒடிதர நிவந்த,
ஆவி வேட்டன, வரி சிலை அனங்கன் மேல் கொண்ட,
பூவை வாய்ச்சியர் முலை சிலர் புயத்தொடும் பூட்ட,
தேவதாரத்தும், சந்தினும், பூட்டின—சில மா. 1

நேர் ஒடுங்கல் இல் பகையினை நீதியால் வெல்லும்
சோர்வு இடம் பெறு உணர்வினன் சூழ்ச்சியே போல,
காரொடும் தொடர் கவட்டு எழில், மராமரக் குவட்டை
வேரொடும் கொடு, கிரி என நடந்தது—ஓர் வேழம். 2

திரண்ட தாள் நெடுஞ் செறி பணை மருது இடை ஒடியப்
புரண்டு பின் வரும் உரலொடு போனவன் போல,
உருண்டு கால் தொடர் பிறகிடு தறியொடும், ஒருங்கே
இரண்டு மா மரம் இடை இற நடந்தது—ஓர் யானை. 3

80. நீருடை ஆடையாள் - நில மடந்தை; 81. மன்மதக் களிறு - மன்மதனுடைய யானையாகிய இருளைப் போன்ற கரிய கூந்தல்; தென்வரை - பொதிய மலை.

14 : 1. கொங்கைக்கும் யானைக்கும் சிலேடை; பூவை வாய்ச்சியர் - பூவை போன்ற சொல்லினிமையுடையவர்; சந்து - சந்தன மரம்; 2. சோர்வு இடம் பெறு - தளராத; 3. போனவன் - கண்ணன்; பிறகிடும் - பின்வரும்.

கதம் கொள் சீற்றத்தை ஆற்றுவான், இனியன கழறி,
பதம் கொள் பாகனும் மந்திரி ஒத்தனன்; பல் நூல்
விதங்களால், அவன், மெல்லென மெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா இறைவனை ஒத்தது—ஓர் யானை, 4

மாறு காண்கிலதாய் நின்று, மழை என முழங்கும்
தாறு பாய் கரி, வன கரி தண்டத்தைத் தடவி,
பாறு பின் செல, கால் எனச் செல்வது, பண்டு ஓர்
ஆறு போகிய ஆறு போம் ஆறு போன்றதுவே. 5

பாத்த யானையின் பதங்களில் படு மதம் நாற,
காத்த அங்குசம் நிமிர்ந்திட, கால் பிடித்து ஓடி,
பூத்த ஏழிலைப் பாலையைப் பொடிப் பொடி ஆக,
காத்திரங்களால், தலத்தொடும் தேய்த்தது—ஓர் களிறு. 6

அலகு இல் ஆனைகள் அநேகமும், அவற்றொடு மிடைந்த
திலக வாள் நுதல் பிடிகளும், குருளையும், செறிந்த
உலவை நீள் வனத்து, ஊதமே ஒத்த; அவ் ஊதத்
தலைவனே ஒத்துப் பொலிந்தது, சந்திரசயிலம். 7

**கருங்கல்லைப் பொன்னாக்கிய தேர்கள்**

'தெருண்ட மேலவர், சிறியவர்ச் சேரினும், அவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவர்' எனும் இது வழக்கே:
உருண்ட வாய்தொறும், பொன் உருள் உரைத்து உரைத்து ஓடி,
இருண்ட கல்லையும் தன் நிறம் ஆக்கிய—இரதம். 8

**மகளிர் இளைப்பாறித் துயில்கொள்ளுதல்**

கொவ்வை நோக்கிய வாய்களை, இந்திர கோபம்
கவ்வி நோக்கின என்றுகொல்—காட்டு இன மயில்கள்,
நவ்வி நோக்கியர், நலம் கொள் மேகலை, பொலஞ் சாயல்-
செவ்வி நோக்கின திரிவன போல்வன, திரிந்த? 9

உய்க்கும் வாசிகள் இழிந்து, இள அன்னத்தின் ஒதுங்கி,
மெய்க் கலாபமும் குழைகளும், இழைகளும் விளங்க,
தொக்க மென் மர நிழல் படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர், பூத்த கொம்பு ஆம் எனப் பொலிந்தார். 10

4. பதம் - பக்குவம்; இதங்கள் - நன்மை பயக்கும் சொற்கள்; 5. தண்டம் - யானை செல்வழி; பாறு - பருந்துகள்; 6. பாத்த - அணி அணியாகப் பகுக்கப்பட்ட; பதம் - இடம்; கால் பிடித்து - மணம் பிடித்து; காத்திரம் - முன்கால்; 7. உலவை - மரச்செறிவு; ஊதம் - காட்டு யானைக் கூட்டம்; 8. தெருண்ட மேலவர் - தெளிந்த அறிவுடைய பெரியோர்; வழக்கு - உலகியல் முறைமை.

தளம் கொள் தாமரை என, தளிர் அடியினும், முகத்தும்,
வளம் கொள் மாலே வண்டு அலமர, வழி வருந்தினர் ஆய்,
விளங்கு தம் உருப் பளிங்கிடை வெளிப்பட, வேறு ஓர்
துளங்கு பாறையில், தோழியர் அயிர்த்திடத் துயின்ருர். 11

பிடி புக்கு ஆயிடை, மின்ஞெடும் பிறங்கிய மேகம்
படி புக்காலெனப் படிதர, பரிபுரம் புலம்ப,
துடி புக்கா இடைத் திருமகள் தாமரை துறந்து
குடிபுக்காலென, குடில் புக்கார்—கொடி அன்ன மடவார். 12

**வரிசையாகக் குதிரைகளேக் கட்டிவைத்தல்**

உண் அமுதம் ஊட்டி, இளேயோர் நகர் கொணர்ந்த,
துண்ணெனும் முழக்கின, துருக்கர் தர வந்த,
மண்மகள்தன் மார்பின் அணி வன்ன சரம் என்ன,
பண் இயல் வயப் பரிகள், பந்தியில் நிரைத்தார். 13

நீர் திரை நிரைத்த என, நீள் திரை நிரைத்தார்;
ஆர்கலி நிரைத்த என, ஆவணம் நிரைத்தார்;
கார் நிரை என, களிறு காவிடை நிரைத்தார்;
மாருதம் நிரைத்த என, வாசிகள் நிரைத்தார். 14

**மைந்தரும் மங்கையரும் திரிந்த காட்சி**

நடிக்கும் மயில் என்ன வரும் நவ்விவிழியாரும்,
வடிக்கும் அயில் வீரரும், மயங்கினர் திரிந்தார்;
இடிக்கும் முரசக் குரலின், எங்கும் முரல் சங்கின்,
கொடிக்களின் உணர்ந்து, அரசர் கோநகர் அடைந்தார். 15

மிதிக்க நிமிர் தூளியின் விளக்கம் அறு மெய்யை,
சுதைக் கண் நுரையைப் பொருவு தூசு கொடு, தூய்தா
உதிர்த்தனர், இளங் குமரர், ஓவியரின்; ஓவம்
புதுக்கினர் என, தருண மங்கையர் பொலிந்தார். 16

11. தளம் - இதழ்; அயிர்த்திட - ஐயுறும்படி; 12. துடி புக்கா - துடி உவமையாகாத, புக்கா - புகா என்பதன் விகாரம்; 13. துருக்கர் - சோனகர், அரபு நாட்டவர்; 14. நீள் திரை - நீண்ட திரைச்சீலே; ஆவணம் - கடைத் தெரு; மாருதம் - காற்று; 15. கொடிக்கள் - கொடிகள்; 16. மெய் - உடம்பு; சுதை - பால்; தூசு - ஆடை; தருணம் - இளமை.

படமாடங்களில் வதிதல்

தாள் உயர் தடக் கிரி இழிந்து தரை சேரும்
கோள் அரி என, கரிகள் கொற்றவர் இழிந்தார்;
பாளை விரி ஒத்து உலவு சாமரை படப் போய்,
வாள் எழ நிரைத்த படமாடம்அவை புக்கார். 17

தூசிஞெடு வெண் படமுடைக் குடில்கள்தோறும்,
வாச நகை மங்கையர் முகம் பொலிவ, வானில்,
மாசு இல் மதியின் கதிர் வழங்கு நிழல் எங்கும்,
வீசு திரை வெண் புனல், விளங்கியன போலும். 18

புழுதி படிய வரும் யானை

மண் உற விழுந்து, நெடு வான் உற எழுந்து,—
கண்ணுதல் பொருந்த வரு கண்ணனில் வரும்—கார்
உண் நிற நறும் பொடியை வீசி, ஒரு பாகம்
வெண் நிற நறும் பொடி புனைந்த மத வேழம். 19

குதிரைகள் அடங்கி வருதல்

தீயவரொடு ஒன்றிய திறத்து அரு நலத்தோர்,
ஆயவரை, அந் நிலை அறிந்தனர், துறந்தாங்கு,
ஏய அரு நுண் பொடி படிந்து, உடன் எழுந்து ஒண்
பாய் பரி விரைந்து உதறி நின்றன, பரந்தே. 20

மும்மை புரி வன் கயிறு கொய்து, செயல் மொய்ம்பால்
தம்மையும் உணர்ந்து, தரை கண்டு, விரைகின்ற,
அம்மையிஞெடு இம்மையை அறிந்து நெறி செல்லும்
செம்மையவர் என்ன, நனி சென்றன—துரங்கம். 21

கழங்காடும் மங்கையர் கண்கள்

விழுந்த பனி அன்ன, திரை வீசு புரைதோறும்,
கழங்கு பயில் மங்கையர் கருங் கண் மிளிர்கின்ற—
தழங்கு கழி சிந்திய தரம் பயில் தரங்கத்து,
எழுந்து இடை பிறழ்ந்து ஒளிர் கொழுங் கயல்கள் என்ன. 22

17. தாள் - தாழ்வரை; படமாடம் - கூடாரம்; 18. நிழல் - பிரதிபிம்பம்; 19. கண்ணுதல் பொருந்த வரு கண்ணன் - சங்கரநாராயணன்; 21. ஞானிகளுக்கும் குதிரைகளுக்கும் சிலேடை; தரை கண்டு - உலகியல் தெளிந்து, பரம்பொருளின் நிலைகண்டு; 22. புரை - வசிக்குமிடம்; ஈண்டுப் படமாடம், தழங்கு - ஒலிக்கின்ற.

**ஆறு உதவும் ஊற்று நீர்**

வெள்ள நெடு வாரி அற வீசி உளவேனும்,
கிள்ள எழுகின்ற புனல், கேளிரின் விரும்பி,—
தெள்ளு புனல் ஆறு—சிறிதே உதவுகின்ற;
உள்ளது மருது உதவும் வள்ளலேயும் ஒத்த. 23

**படமாடத்தினுள் நுழைகின்ற வீரர்**

துன்றி நெறி பங்கிகள் துளங்க, அழலோடும்
மின் திரிவ என்ன, மணி ஆரம் மிளிர் மார்பர்,
மன்றல் மணம் நாறு படமாடம் நுழைகின்ருர்,
குன்றின் முழைதோறும் நுழை கோள் அரிகள் ஒத்தார். 24

**நீரைக் கலக்கும் யானைகள்**

நெருங்கு அயில் எயிற்றனைய செம் மயிரின் நெற்றிப்
பொருங் குலிகம் அப்பியன, போர் மணிகள் ஆர்ப்ப,—
பெருங் களிறு—அலைப் புனல் கலக்குவன; பெட்கும்
கருங் கடல் கலக்கும் மதுகயிடவரை ஒத்த. 25

ஒக்க நெறி உய்ப்பவர் உரைத்த குறி கொள்ளா,
பக்கம் இனம் ஒத்து, அயல் அலேக்க, நனி பாரா,—
மைக் கரி, மதத்த—விலே மாதர் கலே அல்குல்
புக்கவரை ஒத்தன, புனல் சிறைகள் ஏரு. 26

**அட்டிலில் எழும் புகை**

துகில் இடை மடந்தையரொடு ஆடவர் துவன்றி,
பகல் இடைய, அட்டிலில் மடுத்து, எரி பரப்பும்
அகில் இடு கொழும் புகை அழுங்கலின், முழங்கா
முகில் படு நெடுங் கடலே ஒத்து உளது, அம் மூதூர். 27

**சேனே மிகுதியின் பொலிவு**

கமர் உறு பொருப்பின் வாழும் விஞ்சையர் காண வந்தார்,
தமரையும் அறியார் நின்று திகைப்புறு தகைமை சான்ற
குமரரும் மங்கைமாரும் குழுமலால், வழுவி விண்நின்று
அமரர் நாடு இழிந்தது என்னப் பொலிந்தது, அவ் அனீக வெள்ளம்.

23. நெடுவாரி - மிக்க நீர்; 24. பங்கி - ஆண் மக்கள் தலேமயிர்; மன்றல் மணம் - புது மணம்; 25. பொருங்குலிகம் - தனக்குத்தானே நிகரான சாதி லிங்கம்; 26. புனல்சிறைகள் - நீர் நிலேகள்; 27. துவன்றி - நெருங்கி; அழுங்கல் - செறிதல்; 28. கமர் - பிளவு; விஞ்சையர் - வித்தியாதரர், மலேவாழ் தேவகணத்தாருள் ஒருவர்; அனீக வெள்ளம் - சேனேகளின் பெருக்கம்.

மகளிரும் மைந்தரும் திரியும் காட்சி

வெயில் நிறம் குறையச் சோதி மின் நிழல் பரப்ப, முன்னம்
துயில் உணர் செவ்வியோரும், துனி உறு முனிவினேரும்,
குயிலொடும் இனிது பேசி, சிலம்பொடும் இனிது கூவி,
மயிலினம் திரிவ என்ன, திரிந்தனர்—மகளிர் எல்லாம். 29

தாள் இணை கழல்கள் ஆர்ப்ப, தார் இடை அளிகள் ஆர்ப்ப,
வாள் புடை இலங்க, செங் கேழ் மணி அணி வலயம் மின்ன,
தோள் என உயர்ந்த குன்றின் சூழல்கள் இனிது நோக்கி,
வாள் அரி திரிவ என்ன, திரிந்தனர்—மைந்தர் எல்லாம். 30

## 15 வரைக் காட்சிப் படலம்

சந்திரசயிலத்தின் தோற்றமும் மாண்பும்

சுற்றிய கடல்கள் எல்லாம் சுடர் மணிக் கனகக் குன்றைப்
பற்றிய வளைந்தவென்ன, பரந்து வந்து இறுத்த சேனை;
கொற்றவர், தேவிமார்கள், மைந்தர்கள், கொம்பனூர், வந்து
உற்றவர், காணலுற்ற மலை நிலை உரைத்தும் அன்றே! 1

பம்பு தேன் மிஞிறு தும்பி பரந்து இசை பாடி ஆட,
உம்பர் வானகத்து நின்ற ஒளி வளர் தருவின் ஓங்கும்
கொம்புகள், பனைக் கை நீட்டி, குழையொடும் ஒடித்து, கோட்டுத்
தும்பிகள், உயிரே அன்ன துணை மடப் பிடிக்கு நல்கும். 2

பண் மலர் பவளச் செவ் வாய்ப் பனி மலர்க் குவளை அன்ன
கண் மலர்க் கொடிச்சிமார்க்குக் கணித் தொழில் புரியும் வேங்கை
உண் மலர் வெறுத்த தும்பி, புதிய தேன் உதவும் நாகத்
தண் மலர் என்று, வானத் தாரகை தாவும் அன்றே! 3

மீன் எனும் பிடிகளோடும் விளங்கும் வெண் மதி நல் வேழம்
கூனல் வான் கோடு நீட்டிக் குத்திட, குமுறிப் பாயும்
தேன் உகு மடையை மாற்றி, செந் தினைக் குறவர், முந்தி
வான நீர் ஆறு பாய்ச்சி, ஐவனம் வளர்ப்பர் மாதோ! 4

29. துனி - ஊடல்; சிலம்பொடு கூவுதல் - மலை எதிரொலிக்கக் கூச்சலிடல்.

15 : 1. பற்றிய - கவரும்பொருட்டு; 2. பம்புதல் - நெருங்குதல்; கோட்டுத் தும்பி - களிற்று யானை; 3. நாகம் - சுரபுன்னை.

குப்புறற்கு அருமையான குல வரைச் சாரல் வைகி,
ஒப்புறத் துளங்குகின்ற உடுபதி ஆடியின்கண்,
இப் புறத்தேயும் காண்பார், குறத்தியர், இயைந்த கோலம்;
அப் புறத்தேயும் காண்பார், அரம்பையர், அழகு மாதோ! 5

உதி உறு துருத்தி ஊதும் உலே உறு தீயும், வாயின்
அதி விட நீரும், நெய்யும், உண்கிலாது, ஆவி உண்ணும்
கொதி நுனே வேல் கண் மாதர் குறத்தியர் நுதலினேடு,
மதியினே வாங்கி, ஒப்புக் காண்குவர், குறவர் மன்னே! 6

பேணுதற்கு அரிய கோலக் குருளே, அம் பிடிகள் ஈன்ற
காணுதற்கு இனிய வேழக் கன்றெடு களிக்கும் முன்றில்,
கோணுதற்கு உரிய திங்கட் குழவியும், குறவர் தங்கள்
வாள் நுதல் கொடிச்சி மாதர் மகவொடு, தவழும் மாதோ! 7

அஞ்சனக் கிரியின் அன்ன அழி கவுள் யானே கொன்ற
வெஞ் சினத்து அரியின் திண் கால் சுவட்டொடு,—விஞ்சை வேந்தர்
குஞ்சி அம் தலத்தும், நீலக் குல மணித் தலத்தும்,—மாதர்
பஞ்சி அம் கமலம் பூத்த பசுஞ் சுவடு உடைத்து மன்னே! 8

செங் கயல் அனேய நாட்டம் செவி உரு, முறுவல் தோன்ரு,
பொங்கு இருங் கூந்தல் சோரா, புருவங்கள் நெரியா, பூவின்
அம் கையும் மிடறும் கூட்டி, நரம்பு அளேந்து, அமுதம் ஊறும்
மங்கையர் பாடல் கேட்டு, கின்னரம் மயங்கும் மாதோ! 9

கள் அவிழ் கோதை மாதர், காதொடும் உறவு செய்யும்
கொள்ளே வாள்-கண்ணினர்தம் குங்குமக் குழம்பு தங்கும்
தெள்ளிய பளிக்குப் பாறைத் தெளி சுனே, மணியில் செய்த
வள்ளமும் நறவும் என்ன, வரம்பு இல பொலியும் மன்னே! 10

ஆடவர் ஆவி சோர, அஞ்சன வாரி சோர,
ஊடலின் சிவந்த நாட்டத்து உம்பர்தம் அரம்பை மாதர்,
தோடு அவிழ் கோதைநின்றும் துறந்த மந்தார மாலே,
வாடல, நறவு அருத, வயின் வயின் வயங்கும் மாதோ! 11

5. குப்புறல் - கடத்தல்; உடுபதி - சந்திரன்; ஆடி - கண்ணுடி; சந்திர சயிலம் என்னும் பெயர்க் காரணம் இப் பாடலில் புலப்படும்; 6. உதி உறு துருத்தி - காற்று உண்டாகும் உலேத்துருத்தி; 7. கோலக்குருளே - பன்றிக் குட்டி; 8. விஞ்சை வேந்தர் - வித்தியாதர அரசர்; 9. கின்னரம் - இசையறி விலங்கு, தேவ சாதியினர் என்றும் கூறுவர்; 11. அரம்பை மாதர் - தேவ மகளிர்; மந்தார மாலே - தேவலோகத்து மந்தார மரத்தின் மலராலான மாலே.

மாந் தளிர் அனைய மேனிக் குறத்தியர் மாலை சூட்டி,
கூந்தல் அம் கமுகின் பாளை குழலினோடு ஒப்புக் காண்பார்;
ஏந்து இழை அரம்பை மாதர் எரி மணிக் கடகம் வாங்கி,
காந்தள் அம் போதில் பெய்து, கைகளோடு ஒப்புக் காண்பார்.

சரம் பயில் சாபம் என்னப் புருவங்கள் தம்மின் ஆடா,
நரம்பினோடு இனிது பாடி, நாடக மயிலோடு ஆடி,
அரம்பையர் வெறுத்து நீத்த அவிர் மணிக் கோவை ஆரம்,
மரம் பயில் கடுவன் பூண, மந்தி கண்டு உவக்கும் மாதோ! 13

சாந்து உயர் தடங்கள்தோறும் தாதுராகத்தின் சார்ந்த
கூந்தல் அம் பிடிகள் எல்லாம் குங்குமம் அணிந்த போலும்;
காந்து இன மணியின் சோதிக் கதிரொடும் கலந்து வீசச்
சேந்து, வானகம், எப்போதும் செக்கரை ஒக்கும் அன்றே. 14

நிலமகட்கு அணிகள் என்ன நிரை கதிர் முத்தம் சிந்தி,
மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ் கங்கை மான,
அலகு இல் பொன் அலம்பி ஓடி, சார்ந்து வீழ் அருவி மாலை,
உலகு அளந்தவன்தன் மார்பின் உத்தரீயத்தை ஒத்த. 15

### மலை நிகழ்ச்சிகளை மாந்தர் காணுதல்

கோடு உலாம் நாகப் போதோடு இலவங்க மலரும் கூட்டிச்
சூடுவார், களி வண்டு ஓச்சித் தூ நறுந் தேறல் உண்பார்,
கேடு இலா மகர யாழில் கின்னர மிதுனம் பாடும்
பாடலால் ஊடல் நீங்கும் பரிமுக மாக்கள் கண்டார். 16

பெருங் களிறு ஏயும் மைந்தர் பேர் எழில் ஆகத்தோடு [மாடே,
பொரும் துணைக் கொங்கை அன்ன, பொரு இல், கோங்கு அரும்பின்
மருங்கு எனக் குழையும் கொம்பின் மடப் பெடை வண்டும், தங்கள்
கருங் குழல் களிக்கும் வண்டும், கடிமணம் புணரக் கண்டார்.

‘படிகத்தின் தலம்’ என்று எண்ணி, படர் சுனை முடுகிப் புக்க
சுடிகைப் பூங் கமலம் அன்ன சுடர் மதி முகத்தினார்தம்
வடகத்தோடு உடுத்த தூசு மாசு இல் நீர் நனைப்ப, நோக்கி,
கடகக் கை எறிந்து, தம்மில் கருங் கழல் வீரர் நக்கார். 18

12. கூந்தல் அம் கமுகு - கமுகின் ஒருவகையான கூந்தல் கமுகு; 13. கடுவன் - ஆண் குரங்கு; மந்தி - பெண் குரங்கு; 14. சாந்து - சந்தன மரம்; தாதுராகம் - காவிக்கல்லின் செந்நிறம்; 15. உத்தரீயம் - மேலாடை; 16. பரிமுக மாக்கள் - மனித உடலும் குதிரை முகமும் கொண்ட தெய்வ மக்கள்; 17. கடிமணம் - புதுமணம்; 18. சுடிகை - நெற்றிச்சுட்டி; வடகம் - மேலாடை.

பூ அணை பலவும் கண்டார்; பொன்னரிமாலை கண்டார்,
மே வரும் கோபம் அன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார்;
ஆவியின் இனிய கொண்கர்ப் பிரிந்து, அறிவு அழிந்த விஞ்சைப்
பாவையர் வைக, தீய்ந்த பல்லவ சயனம் கண்டார்.* 19

பானல் அம் கண்கள் ஆட, பவள வாய் முறுவல் ஆட,
பீன வெம் முலையின் இட்ட பெரு விலை ஆரம் ஆட,
தேன் முரன்று அளகத்து ஆட, திரு மணிக் குழைகள் ஆட,
வானவர் மகளிர் ஆடும், வாசம் நாறு ஊசல் கண்டார். 20

சுந்தர வான மாதர் துவர் இதழ்ப் பவள வாயும்,
அந்தம் இல் சுரும்பும், தேனும், மிஞிறும் உண்டு—அல்குல் விற்கும்
பைந் தொடி மகளிர், 'கைத்து ஓர் பசை இல்லை' என்ன விட்ட
மைந்தரின்—நீத்த தீம் தேன் வள்ளங்கள் பலவும் கண்டார்.

அல் பகல் ஆக்கும் சோதிப் பளிக்கு அறை அமளிப் பாங்கர்,
மல் பக மலர்ந்த திண் தோள் வானவர் மணந்த, கோல,
வில் பகை நுதலினர், தம் கலவியில் வெறுத்து நீத்த
கற்பகம் ஈன்ற மாலை கலனொடும் கிடப்பக் கண்டார். 22

கை என மலர வேண்டி அரும்பிய காந்தள் நோக்கி,
பை அரவு இது என்று அஞ்சி, படைக் கண்கள் புதைக்கின்றாரும்;
நெய் தவழ் வயிரப் பாறை நிழலிடைத் தோன்றும் போதை,
'கொய்து இவை தருதிர்' என்று, கொழுநரைத் தொழுகின்றாரும்; 23

பின்னங்கள் உகிரின் செய்து, பிண்டி அம் தளிர்க் கைக் கொண்ட
சின்னங்கள் முலையின் அப்பி, தே மலர் கொய்கின்றாரும்;
வன்னங்கள் பலவும் தோன்ற மணி ஒளிர் மலையின் நில்லார்
அன்னங்கள் புகுந்த என்ன, அகன் சுனை குடைகின்றாரும். 24

**சிறந்த மலைக் காட்சிகள்**

ஈனும் மாழை இளந் தளிர் ஏய் ஒளி
ஈனும், மாழை இளந் தளிரே—இடை,
மானும், வேழமும், நாகமும், மாதர் தோள்
மானும் வேழமும், நாகமும்—மாடு எலாம்.† 25

19. வெள்ளிலை - வெற்றிலை; தம்பல் - தம்பலம்; 20. பீன - பருத்துள்ள; ஊசல் - ஊஞ்சல்; 21. சுரும்பு, தேன், மிஞிறு - வண்டு வகைகள்; 22. மல் பக - மல்லர் தோற்றோடும்படி; 23. பை அரவு - படத்தையுடைய பாம்பு; கொழுநர் - கணவர்; 25. மாழை - மாமரம், பொன்; இடை - மலையின் நடுப்பாகம்; நாகம் - பாம்பு, சுரபுன்னை.

திமிர மா உடல் குங்குமச் சேதகம்
திமிர, மாவொடும் சந்தொடும் தேய்க்குமால்;
அமர மாதரை ஒத்து ஒளிர் அம் சொலார்
அமர, மா தரை ஒத்தது, அவ் வானமே.† 26

பேர் அவாவொடு மாசுணம் பேர, வே
பேர, ஆவொடு மா சுணம் பேரவே!
ஆர, ஆரத்தினேடும் மருவியே,
ஆரவாரத்தின் ஓடும் அருவியே!† 27

புகலும் வாள் அரிக்கு அண்ணியர் பொன் புயம்,
புகலும், வாள் அரிக் கண்ணியர் பூண் முலே,
அகிலும் ஆரமும் ஆர அங்கு ஓங்குமே!
அகிலும், ஆரமும் மாரவம் கோங்குமே.† 28

துன் அரம்பை நிரம்பிய, தொல் வரை,
துன் அரம்பையர் ஊருவின் தோன்றுமால்;
கின்னரம் பயில் கீதங்கள் என்ன, ஆங்கு,
இன் நரம்பு அயில்கின்றனர், ஏழைமார்.† 29

ஊறு, மா கடம் மா, உற ஊங்கு எலாம்,
ஊறுமா கட மா மதம் ஓடுமே;
ஆறு சேர் வனம் ஆ, வரை, ஆடுமே;
ஆறு சேர்வன, மா, வரையாடுமே.† 30

கல் இயங்கு கருங் குற மங்கையர்,
கல்லி அங்கு அகழ் காமர் கிழங்கு எடா,
வல்லியங்கள் நெருங்கு மருங்கு எலாம்,
வல் இயங்கள் நெருங்கி மயங்குமே.† 31

கோள் இபம் கயம் மூழ்க, குளிர் கயக்
கோளி, பங்கயம், ஊழ்கக் குலேந்தவால்;
ஆளி பொங்கும் மரம் பையர் ஓதி, ஏய்,
ஆளி பொங்கும், அரம்பையர் ஓதியே.† 32

26. திமிர மா - யானே; சேதகம் - சேறு; அமர - பொருந்த; 27. வே - மூங்கில், சுணம் - புழுதி; மாசுணம் - பெரும்பாம்பு; ஆர - மிகவும்; 28. அரிக்கு அண்ணியர் - சிங்கத்தை யொத்த ஆடவர்; மாரவம் - (மரவம்) குங்கும மரம்; 29. அரம்பை - வாழை; ஊரு - தொடை; 30. மாகடம் மா ஊறு உற - பெரிய காட்டுப் பசுக்களும் செல்லவியலாது துன்புறும்படி; கடமா மதம் - யானேயின் மதம்; வனம் ஆ - காட்டில் உள்ள ஆச்சா மரங்கள்; வரை - மூங்கில்; மா - விலங்கு; வரையாடு - மலேயாடு; 31. கிழங்கு எடா - கிழங்கு எடுப்பதற்காக; வல் இயங்கள் - வலிய பறைகள்; 32. கயக்கோளி - பெரிய ஆலமரம்; ஊழ்க - பதனழிந்து; ஆளி - சிங்கம்; பொங்கும் - செருக்கித் திரிகின்ற; மரம் பையர் ஓதி ஏய் - மரங்களேப் பக்கத்தேயுடைய மலேயில் பொருந்திய; ஆளி - (அளி) வண்டு.

ஆகம் ஆலயம் ஆக உளாள் பொலி-
வாக மால் ஐயன் நின்றெனல் ஆகுமால்—
மேக மாலை மிடைந்தன மேல் எலாம்
ஏக, மாலை கிடந்தது, கீழ் எலாம்.† 33

**மலைமேல் இனிது விளையாடல்**

பொங்கு தேன் நுகர் பூ மிஞிறு ஆம் என,
எங்கும் மாதரும் மைந்தரும் ஈண்டி, அத்
துங்க மால் வரைச் சூழல்கள் யாவையும்
தங்கி, நீங்கலர், தாம் இனிது ஆடுவார்.† 34

இறக்கம் என்பதை எண்ணிலர், எண்ணுங்கால்,
பிறக்கும் என்பது ஓர் பீழையது ஆதலால்,
துறக்கம் எய்திய தூயவரே என,
மறக்ககிற்றிலர், அன்னதன் மாண்பு எலாம்.† 35

**அந்திக் காலத்தில் மலைக்காட்சி**

மஞ்சு ஆர் மலை வாரணம் ஒத்தது; வானின் ஓடும்
வெஞ் சாயையுடைக் கதிர், அங்கு, அதன்மீது பாயும்
பஞ்சானனம் ஒத்தது; மற்று அது பாய, ஏறு
செஞ் சோரி எனப் பொலிவுற்றது, செக்கர் வானம். 36

திணி ஆர் சினை மா மரம் யாவையும் செக்கர் பாய,
தணியாத நறுந் தளிர் தந்தன போன்று தாழ,
அணி ஆர் ஒளி வந்து நிரம்பலின், அங்கம் எங்கும்,
மணியால் இயன்ற மலை ஒத்தது—அம் மை இல் குன்றம். 37

கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய காட்சியாலும்,
எண்ணற்கு அரிது ஆகி இலங்கு சிரங்களாலும்,
வண்ணக் கொழுஞ் சந்தனச் சேதகம் மார்பு அணிந்த
அண்ணல் கரியோன்தனை ஒத்தது—அவ் ஆசு இல் குன்றம்.*

**மலையில் நின்றும் இறங்குதல்**

ஊனும் உயிரும் அனையார் ஒருவர்க்கு ஒருவர்,
தேனும், மிஞிறும், சிறு தும்பியும், பம்பி ஆர்ப்ப,
ஆனை இனமும் பிடியும், இகல் ஆளி ஏறும்,
மானும் கலையும், என, மால் வரை வந்து இழிந்தார். 39

33. வாக - அழகிய; மேக மாலை - மேக வரிசை; 35. இறக்கம் - இறங்குவது; பீழை - துன்பம்; 36. சாயை - கிரணம்; பஞ்சானனம் - சிங்கம்; 37. தாழ - விளங்க; 38. சேதகம் - குழம்பு.

### இருளும் தீப ஒளியும்

கால் வானகத் தேருடை வெய்யவன், காய் கடுங் கண்
கோல் மாய் கதிர்ப் புல் உளைக் கொல் சினக் கோள்அரிம்மா,
மேல்பால் மலையில் புக, வீங்கு இருள், வேறு இருந்த
மால் யானை ஈட்டம் என, வந்து பரந்தது அன்றே. 40

மந்தாரம் முந்து மகரந்த மணம் குலாவும்
அம் தார் அரசர்க்கு அரசன்தன் அனீக வெள்ளம்,
நந்தாது ஒலிக்கும் நரலைப் பெரு வேலை எல்லாம்
செந்தாமரை பூத்தென, தீபம் எடுத்தது அன்றே. 41

### மதியம் தோன்ற மகளிர் முகமலர்தல்

தண் நல் கடலில் துளி சிந்து தரங்கம் நீங்கி,
விண்ணில் சுடர் வெண் மதி வந்தது, மீன்கள் சூழ—
வண்ணக் கதிர் வெண் நிலவு ஈன்றன வாலுகத்தோடு
ஒள் நித்திலம் ஈன்று, ஒளிர் வால் வளை, ஊர்வது ஒத்தே. 42

மீன் நாறு வேலை ஒரு வெண் மதி ஈனும் வேலை,
நோனாது அதனை, நுவலற்கு அருங் கோடி வெள்ளம்
வான் நாடியரின் பொலி மாதர் முகங்கள் என்னும்
ஆனா மதியங்கள் மலர்ந்தது, அனீக வேலை. 43

### கூத்தர் ஆடலும் மகளிர் கோலமும்

மண்ணும் முழவின் ஒலி, மங்கையர் பாடல் ஓதை,
பண்ணும் நரம்பின் பகையா இயல் பாணி ஓதை,
கண்ணும் முடை வேய் இசை,—கண்ணுளர் ஆடல்தோறும்—
விண்ணும் மருளும்படி விம்மி எழுந்த அன்றே. 44

மணியின் அணி நீக்கி, வயங்கு ஒளி முத்தம் வாங்கி,
அணியும் முலையார், அகில் ஆவி புலர்த்தும் நல்லார்,
தணியும் மது மல்லிகைத் தாமம் வெறுத்து, வாசம்
திணியும் இதழ்ப் பித்திகைக் கத்திகை சேர்த்துவாரும். 45

### பலவகை ஓசைகள்

புதுக் கொண்ட வேழம் பிணிப்போர் புனை பாடல் ஓதை,
மதுக் கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்றும் ஓதை,
பொதுப்பெண்டிர் அல்குல் புனை மேகலைப் பூசல் ஓதை,
கதம் கொண்ட யானை களியால் களிக்கின்ற ஓதை. 46

40. கால் - உருளை; 41. நரலை - முழக்கம்; 42. வாலுகம் - வெண் மணற் குவியல்; 43. நோனாது - பொறுது, வான் நாடியர் - தெய்வப்பெண்கள்; 45. பித்திகை - கருமுகை, இருவாட்சி; கத்திகை - மாலை; 46. பொதுப் பெண்டிர் - வேசையர்.

மாந்தர் இராப்பொழுதைக் கழித்த வகை

உண்ணு அமுது அன்ன கலைப் பொருள் உள்ளது உண்டும்,
பெண் ஆர் அமுதம் அனையார் மனத்து ஊடல் பேர்த்தும்,
பண் ஆன பாடல் செவி மாந்திப் பயன் கொள் ஆடல்
கண்ணால் நனி துய்க்கவும், கங்குல் கழிந்தது அன்றே. 47

## 16 பூக் கொய் படலம்

காலையில் சோணை ஆற்றை அடைதல்

மீனுடை எயிற்றுக் கங்குல்-கனகனை வெகுண்டு, வெய்ய
கானுடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சி,
தானுடை உதயம் என்னும் தமனியத் தறியுள்நின்று,
மானுட மடங்கல் என்ன, தோன்றினன்,—வயங்கு வெய்யோன். 1

முறை எலாம் முடித்த பின்னர், மன்னனும், மூரித் தேர்மேல்
இறை எலாம் வலங்கப் போனான்; எழுந்து, உடன், சேனை வெள்ளம்,
குறை எலாம் சோலை ஆகி; குழி எலாம் கழுநீர் ஆகி,
துறை எலாம் கமலம் ஆன சோணை ஆறு அடைந்தது அன்றே.

உச்சிவேளையில் சோலையைச் சார்தல்

அடைந்து, அவண் இறுத்த பின்னர், அருக்கனும் உம்பர்ச் சேர்ந்தான்;
மடந்தையர் குழாங்களோடு, மன்னரும், மைந்தர்தாமும்,
குடைந்து வண்டு உறையும் மென் பூக் கொய்து நீராட, மை தீர்
தடங்களும், மடுவும் சூழ்ந்த, தண் நறுஞ் சோலை சார்ந்தார். 3

மாதரைக் கண்ட மயில் முதலிய பறவைகள்

திண் சிலை புருவம் ஆக, சேயரிக் கருங் கண் அம்பால்,
புண் சிலர் செய்வர் என்று போவன போன்ற, மஞ்ஞை;
பண் சிலம்பு அணி வாய் ஆர்ப்ப, நாணினால் பறந்த, கிள்ளை;
ஒண் சிலம்பு அரற்ற, மாதர் ஒதுங்குதோறு, ஒதுங்கும் அன்னம்.

47. துய்க்கவும் - அனுபவிக்கவும்.

16 : 1. கனகன் - இரணியன்; தமனியத் தறி - பொற்றூண்; மானுட மடங்கல் - நரசிங்கமூர்த்தி; 2. குறை - ஆற்றிடைக்குறை.

மாதர் ஆடலும் மைந்தர் மயங்கி நிற்றலும்

செம் பொன் செய் சுருளும் தெய்வக் குழைகளும் சேர்ந்து மின்ன,
பம்பு தேன் அலம்ப ஒல்கி, பண்ணையின் ஆடல் நோக்கி,
கொம்பொடும், கொடி அனுரைக் குறித்து அறிந்து உணர்தல் தேற்ருர்,
வம்பு அவிழ் அலங்கல் மார்பின் மைந்தரும், மயங்கி நின்ருர்.

குயில்களின் நாணம்

பாசிழைப் பரவை அல்குல், பண் தரு கிளவி, தண் தேன்
மூசிய கூந்தல், மாதர் மொய்த்த பேர் அமலே கேட்டு,
கூசின அல்ல; பேச நாணின, குயில்கள் எல்லாம்—
வாசகம் வல்லார் முன் நின்று, யாவர் வாய் திறக்க வல்லார்?

மாதர் தீண்டப் பூங்கொம்பு தாழ்தல்

நஞ்சினும் கொடிய நாட்டம் அமுதினும் நயந்து நோக்கி,
செஞ்செவே கமலக் கையால் தீண்டலும், நீண்ட கொம்பும்,
தம் சிலம்பு அடியில் மென் பூச் சொரிந்து உடன் தாழ்ந்த என்ருல்,
வஞ்சிபோல் மருங்குலார்மாட்டு யாவரே வணங்கலாதார்? 7

அம்புயத்து அணங்கின் அன்னுர் அம் மலர்க் கைகள் தீண்ட,
வம்பு இயல் அலங்கல் பங்கி, வாள் அரி மருளும் கோளார்-
தம் புய வரைகள் வந்து தாழ்வன; தளிர்த்த மென் பூங்
கொம்புகள் தாழும் என்றல், கூறல் ஆம் தகைமைத்து ஒன்ரே!

வண்டுகள் மொய்த்தல்

நதியினும் குளத்தும் பூவா நளினங்கள் குவளையோடு
மதி நுதல் வல்லி பூப்ப, நோக்கிய மழலைத் தும்பி
அதிசயம் எய்தி, புக்கு வீழ்ந்தன; அலேக்கப் போகா—
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்? 9

மலர்கொய் மகளிர் செயல்கள்

உலம் தரு வயிரத் திண் தோள் ஒழுகி, வார் ஒளி கொள் மேனி
மலர்ந்த பூந் தொடையல் மாலே மைந்தர்பால், மயிலின் அன்னுர்
கலந்தவர் போல, ஒல்கி ஒசிந்தன, சில; கை வாராப்
புலந்தவர் போல நின்று, வளேகில, பூத்த கொம்பர். 10

5. சுருள் - ஓலே என்னும் காதணி; பண்ணே - தோழியர் கூட்டம்; வம்பு அவிழ் அலங்கல் - மணம் கமழும் மாலே; 6. மூசிய - மொய்த்த; வாசகம் வல்லார் - நன்கு பேசவல்லவர்; 8. பங்கி - மயிர்முடி; தாழ்வன - வணங்கி நிற்பன; 9. நளினங்கள் என்றது முகங்களே; புதுமை பார்ப்பார் - புதிய பொருளே நாடி நிற்பவர்; 10. உலம் - திரண்ட கல்; கொம்பர் - கிளேகள்.

பூ எலாம் கொய்து கொள்ள, பொலிவு இல துவள நோக்கி,
'யாவை ஆம் கணவர் கண்ணுக்கு? அழகு இல இவை' என்று எண்ணி,
கோவையும், வடமும், நாணும், குழைகளும், குழையப் பூட்டி,
பாவையர், பனி மென் கொம்பை நோக்கினர், பரிந்து நிற்பார்.

மகளிர் கூந்தல் காட்சியும் அவர்தம் நிலையும்

துறும் போதினில் தேன் துவைத்து உண்டு உழல் தும்பி ஈட்டம்,
நறுங் கோதையோடு நனை சின்னமும் நீத்த நல்லார்
வெறுங் கூந்தல் மொய்க்கின்றன; வேண்டல, வேண்டு போதும்;—
உறும் போகம் எல்லாம், நலன் உள் வழி, உண்பர் அன்றே!

மெய்ப் போதின் நங்கைக்கு அணி அன்னவள், வெண் பளிங்கில்
பொய்ப் போது தாங்கிப் பொலிகின்ற தன் மேனி நோக்கி,
'இப் பாவை எம் கோற்கு உயிர் அன்னவள்' என்ன உன்னி,
கைப் போதினோடு நெடுங் கண் பனி சோர நின்றாள். 13

கோள் உண்ட திங்கள் முகத்தாள் ஒரு கொம்பு, ஓர் மன்னன்,
தோள் உண்ட மாலை ஒரு தோகையைச் சூட்ட நோக்கி,
தாள் உண்ட கச்சின் தகை உண்ட முலைக்கண், ஆலி,
வாள் உண்ட கண்ணின் மழை உண்டு என, வார நின்றாள். 14

கணவன் மறைவிடம் நிற்க மனைவி மறுகுதல்

மயில் போல் வருவாள் மனம் காணிய, காதல் மன்னன்,
செயிர் தீர் மலர்க் காவின் ஓர் மாதவிச் சூழல் சேர,
பயில்வாள், இறை பண்டு பிரிந்து அறியாள், பதைத்தாள்;
உயிர் நாடி ஒல்கும் உடல்போல் அலமந்து உழந்தாள். 15

மகளிரிடையே புலவிக் காட்சிகள்

மை தாழ் கருங் கண்கள் சிவப்பு உற வந்து தோன்ற,
நெய் தாவும் வேலானொடு, நெஞ்சு புலந்து நின்றாள்,
எய்தாது நின்றம் மலர் நோக்கி, 'எனக்கு இது ஈண்டக்
கொய்து ஈதி' என்று, ஓர் குயிலை, கரம் கூப்புகின்றாள். 16

11. பாவையர் - பதுமை போன்ற மகளிர்; 12. துறும் - செறிந்த; சின்னம் - விடுபூ; போது - பூ; 13. போதின் நங்கை - திருமகள்; வெண் பளிங்கு - வெண்ணிறமுள்ள பளிங்குப் பாறை; 14. கோள் - மேகம்; தாள் - வார்க்கச்சின் அடிமுடிப்பு; தாள் உண்ட முலை - அடி பெருத்த முலை என்னலும் ஆம்; ஆலி - நீர்த்துளி.

செம்மாந்த தெங்கின் இளநீரை, ஓர் செம்மல் நோக்கி,
'அம்மா! இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்' என்ன,
'எம் மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன?' என்று, ஓர் ஏழை,
விம்மா, வெதும்பா, வெயரா, முகம் வெய்துயிர்த்தாள். 17

'போர்' என்ன வீங்கும் பொருப்பு அன்ன பொலங் கொள் திண் தோள்
மாரன் அனையான், மலர் கொய்து இருந்தானை, வந்து ஓர்
கார் அன்ன கூந்தல், குயில் அன்னவள், கண் புதைப்ப,
'ஆர்?' என்னலோடும், அனல் என்ன அயிர்த்து உயிர்த்தாள்.

ஊற்று ஆர் நறை நாள்மலர், மாதர், ஒருங்கு வாசச்
சேற்றுல் விளையாத செந்தாமரைக் கைகள் நீட்டி,
ஏற்றுரை நோக்கான், இடை ஏந்தினன், நின்று ஒழிந்தான்—
மாற்றுன், உதவான், கடு வச்சையன்போல்—ஓர் மன்னன். 19

தைக்கின்ற வேல் நோக்கினள், தன் உயிர் அன்ன மன்னன்,
மைக் கொண்ட கண்ணுள் எதிர், மாற்றவள் பேர் விளம்ப,
மெய்க் கொண்ட நாணம் தலைக்கொண்டிட விம்மி, மென் பூக்
கைக் கொண்டு மோந்தாள்; உயிர்ப்புண்டு கரிந்தது அன்றே!

**தேவிமாரொடு திரிந்த மன்னன்**

திண் தேர் அரசன் ஒருவன், குலத் தேவிமார்தம்
ஒண் தாமரை வாள் முகத்துள் மிளிர் உண்கண் எல்லாம்
கண்டு ஆதரிக்கத் திரிவான், மதம் கவ்வி உண்ண
வண்டு ஆதரிக்கத் திரி மா மத யானை ஒத்தான். 21

**மனைவியர் சினந்து புலத்தல்**

சந்திக் கலா வெண் மதி வாள் நுதலாள்தனக்கும்,
வந்திக்கல் ஆகும் மடவாட்கும், வகுத்து நல்கி,
நிந்திக்கல் ஆகா உருவத்தினன் நிற்ப, மென் பூச்
சிந்தி, கலாப மயிலின், கண் சிவந்து, போனர். 22

**பல்திற மகளிர் ஆடவர்களின் செயல்கள்**

வந்து, எங்கும், தம் மன் உயிரேயோ, பிறிது ஒன்றே?—
கந்தம் துன்றும் சோர் குழல் காணுர்; கலை பேணுர்;
அந்தம்தோறும் அற்று உகும் முத்தம் அவை பாரார்;—
சிந்தும் சந்தத் தே மலர் நாடித் திரிவாரும்; 23

17. வெய்துயிர்த்தாள் - பெருமூச்செறிந்தாள்; 18. மாரன் - மன்மதன்; அயிர்த்து - சந்தேகம் கொண்டு; 19. மாற்றுன் - இல்லை என்று மறுத்துரையான்; கடு வச்சையன் - கொடிய உலோபி; 20. மாற்றவள் - சக்களத்தி; 12. ஆதரிக்க - விரும்ப; 22. சந்தி - மாலைப் பொழுது; 23. சந்தம்-அழகு-

யாழ் ஒக்கும் சொல் பொன் அனையாள், ஓர் இகல் மன்னன்,
தாழத் தாழாள்; தாழ்ந்த மனத்தாள் தளர்கின்றாள்;
ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்; அவன் நிற்கும்
சூழற்கே, தன் கிள்ளையை ஏவித் தொடர்வாளும்; 24

அம் தார் ஆகத்து ஐங் கணை நூறுயிரம் ஆகச்
சிந்தாநின்ற சிந்தையினான், செய்குவது ஓரான்,
'மந்தாரம் கொண்டு ஈகுதியோ, மாதவி?' என்று, ஓர்
சந்து ஆர் கொங்கைத் தாழ் குழலாள்பால் தளர்வானும்; 25

நாடிக் கொண்டாள், குற்றம் நயந்தாள்; முனிவு ஆறாள்;
ஊடிக் காணக் காட்டும் நலத்தாள் உடன் நில்லாள்;
தேடித் தேடிச் சேர்த்த செழும் பூ நறு மாலை
சூடிச் சூடி, கண்ணடி நோக்கித் துவள்வாளும்; 26

'மறலிக்கு ஊண் நாடும் கதிர் வேலான், இடையே வந்து
உற, இக் கோலம் பெற்றிலென்என்றால், உடன் வாழ்வு இப்
பிறவிக்கு ஒல்லேன்; என் செய்வது, இப் பேர் அணி?' என்று, ஓர்
விறலிக்கு ஈவாள் ஒத்து, இழை எல்லாம் விடுவாளும்;* 27

வம்பின் பொங்கும் கொங்கை சுமக்கும் வலி இன்றிக்
கம்பிக்கின்ற நுண் இடை நோவ, கசிவாளும்;
பைம் பொன் கிண்ணம் மெல் விரல் தாங்கி, பயில்கின்ற
கொம்பில் கிள்ளைப் பிள்ளை ஒளிக்க, குழைவாளும்; 28

தன்னைக் கண்டாள்; மென் நடை கண்டாள்; தமரேபோல்
துன்னக் கண்டாள்; தோழமை கொண்டாள்; துணை என்றாள்;
'உன்னைக் கண்டார் எள்ளுவர்; பொல்லாது; உடு நீ' என்று,
அன்னக் கன்னிக்கு, ஆடை அளிப்பான் அமைவாளும்; 29

பாகு ஒக்கும் சொல் நுண் கலையாள்தன் படர் அல்குல்
ஆகக் கண்டு, ஓர் ஆடு அரவு ஆம் என்று, அயல் நண்ணும்
தோகைக்கு அஞ்சி, கொம்பின் ஒதுங்கி, துணர் ஈன்ற
சாகைத் தம் கை, கண்கள் புதைத்துத் தளர்வாளும்; 30

24. கிள்ளை - கிளி; 25. ஐங்கணை - மன்மதனின் ஐந்து மலரம்புகள்; ஓரான் - ஆராய்ந்து அறியான்; 26. கண்ணடி - கண்ணாடி; 27. மறலி - யமன்; 28. கம்பிக்கின்ற - நடுங்குகின்ற; 29. துன்ன - நெருங்க; எள்ளுவர் இகழ்வார்; 30. துணர் - பூங்கொத்து; சாகை - கிளை.

'பொன்னே, தேனே, பூமகளே, காண், எனை' என்னு,
தன் நேர் இல்லாள், அங்கு, ஒரு கொய்யல் தழை மூழ்கி,
'இன்னே என்னைக் காணுதி நீ' என்று, இகலி, தன்
நல் நீலக் கண் கையின் மறைத்து, நகுவாளும்; 31

வில்லில் கோதை நாண் உற மிக்கோன், இகல் அங்கம்
புல்லிக் கொண்ட தாமரை மென் பூ மலர் தாங்கி,
அல்லின் கோதை மாதர் முகப் பேர் அரவிந்தச்
செல்வக் கானில், செங்கதிர் என்னத் திரிவாரும்; 32

செய்யில் கொள்ளும் தெள் அமுதச் செஞ் சிலை ஒன்று
கையில் பெய்யும் காமனும் நாணும் கவினர், தம்
மையல் பேதை மாதர் மிழற்றும் மழலைச் சொல்,
தெய்வப் பாடல் சொற்கலை என்ன, தெரிவாரும்; 33

சோலைத் தும்பி மென் குழல் ஆக, தொடை மேவும்
கோலைக் கொண்ட மன்மத ஆயன், குறி உய்ப்ப,
நீலத்து உண்கண் மங்கையர் சூழ, நிரை ஆவின்,
மாலைப் போதில் மால் விடை என்ன வருவாரும். 34

'ஊக்கம் உள்ளத்து உடைய முனிவரால்
காக்கல் ஆவது, காமன் கை வில்' எனும்
வாக்கு மாத்திரம்; அல்லது, வல்லியில்
பூக் கொய்வாள் புருவக் கடை போதுமே! 35

நாறு பூங் குழல் நன்னுதல், புன்னைமேல்
ஏறினன் மனத்து உம்பர் சென்று, ஏறினள்;—
ஊறு ஞானத்து உயர்ந்தவர் ஆயினும்,
வீறு சேர் முலை மாதரை வெல்வரோ! 36

சினையின்மேல் இருந்தான், உருத் தேவரால்
வனையவும் அரியாள் வனப்பின்தலை,
நினைவும், நோக்கமும், நீக்கலன்; கைகளால்,
நனையும் நாள் முறியும் கொய்து, நல்கினன். 37

31. இகலுதல் - விளையாட்டில் தன் வெற்றி கூறி மாறுபடுதல்; 32. கோதை - வில் பயில்வோர் இடக்கையில் அணியும் தோற்கவசம்; இகல் அங்கம் - போர் செய்தற்குரிய வலக்கை; அல்லின் கோதை - இருள்போல் கரிய கூந்தல்; செங்கதிர் - சூரியன்; 33. தெய்வப் பாடல் - வேதம்; சொற்கலை - கலை நூல்கள்; 34. மன்மத ஆயன் - மன்மதனாகிய இடையன், உருவகம்; 35. போதும் - அமையும், போதியதாம்; 36. ஊறு ஞானம் - மேன்மேல் தோன்றுகின்ற அறிவு; 37. நாள் முறி - புதிய தளிர்.

வண்டு வாழ் குழலாள் முகம் நோக்கி,—ஓர்
தண்டுபோல் புயத்தான் தடுமாறினுன்,
'உண்டு கோபம்' என்று உள்ளத்து உணர்ந்து;—அவள்
தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்லவே. 38

பூக்கொய்தலை விடுத்துப் புனலாடப் புகுதல்

ஏயும் தன்மையர் இவ் வகையார் எலாம்,
தூய தண் நிழல் சோலை, துறு மலர்
வேயும் செய்கை வெறுத்தனர்; வெண் திரை
பாயும் தீம் புனல்-பண்ணை சென்று எய்தினர். 39

## 17 நீர் விளையாட்டுப் படலம்

நீர் நிலை நோக்கி மகளிர் - ஆடவர் வந்த காட்சி

புனை மலர்த் தடங்கள் நோக்கி, பூசல் வண்டு ஆர்த்துப் பொங்க,
வினை அறு துறக்க நாட்டு விண்ணவர் கணமும் நாண,
அனகரும், அணங்கனுரும், அம் மலர்ச் சோலைநின்று,
வன கரி பிடிகளோடும் வருவன போல வந்தார். 1

அங்கு, அவர், பண்ணை நல் நீராடுவான் அமைந்த தோற்றம்,
கங்கை வார் சடையோன் அன்ன மா முனி கனல, மேல்நாள்,
மங்கையர் கூட்டத்தோடும் வானவர்க்கு இறைவன் செல்வம்,
பொங்கு மா கடலில் செல்லும் தோற்றமே போன்றது அன்றே.

புனலிடை மைந்தரும் மாதரும் விளையாடல்

மை அவாம் குவளை எல்லாம், மாதர் கண்மலர்கள் பூத்த;
கை அவாம் உருவத்தார்தம் கண்மலர், குவளை பூத்த;
செய்ய தாமரைகள் எல்லாம், தெரிவையர் முகங்கள் பூத்த;
தையலார் முகங்கள், செய்ய தாமரை பூத்த அன்றே. 3

38. தண்டு - தண்டாயுதம்; தொண்டை வாய் -கொவ்வைக்கனி போன்ற வாய்; 39. புனல்-பண்ணை - நீர் விளையாட்டு.

17 : 1. பூசல் - ஆரவாரம்; அனகர் - குற்றமற்ற ஆடவர்; கரி - ஆண் யானை; 2. மா முனி - துருவாசன்; 3. கை அவாம் - சிறந்த ஒழுக்கத்தை விரும்பும்.

தாளை ஏய் கமலத்தாளின் மார்பு உறத் தழுவுவாரும்;
தோளையே பற்றி வெற்றித் திரு எனத் தோன்றுவாரும்;
பாளை வீ விரிந்தது என்ன, பரந்து நீர் உந்துவாரும்;
வாளைமீன் உகள, அஞ்சி, மைந்தரைத் தழுவுவாரும்; 4

வண்டு உணக் கமழும் சுண்ணம், வாச நெய் நானத்தோடும்
கொண்டு, எதிர் வீசுவாரும்; கோதை கொண்டு ஒச்சுவாரும்;
தொண்டை வாய்ப் பெய்து, தூ நீர், கொழுநர்மேல் தூகின்றாரும்;
புண்டரீகக் கை கூப்பி, புனல் முகந்து இறைக்கின்றாரும்; 5

மின் ஒத்த இடையினாரும், வேய் ஒத்த தோளினாரும்,
சின்னத்தின் அளக பந்தி திருமுகம் மறைப்ப நீக்கி,
அன்னத்தை, 'வருதி, என்னோடு ஆட' என்று அழைக்கின்றாரும்;
பொன் ஒத்த முலையின் வந்து பூ ஒற்ற, உளைகின்றாரும்; 6

பண் உளர் பவளத் தொண்டை, பங்கயம் பூத்தது அன்ன
வண்ண வாய், குவளை வாள்-கண், மருங்கு இலாக் கரும்பின் அன்னார்,
உள் நிறை கயலை நோக்கி, 'ஓடு நீர்த் தடங்கட்கு எல்லாம்
கண் உள ஆம்கொல்?' என்று, கணவரை வினவுவாரும்; 7

தேன் நகு நறவ மாலைச் செறி குழல் தெய்வம் அன்னாள்,
தானுடைக் கோல மேனி தடத்திடைத் தோன்ற, நோக்கி,
'நான் நக நகுகின்றாள் இந் நல் நுதல்; தோழி ஆம்' என்று,
ஊனம் இல் விலையின் ஆரம், உளம் குளிர்ந்து உதவுவாரும்; 8

குண்டலம் திரு வில் வீச, குல மணி ஆரம் மின்ன,
விண் தொடர் வரையின் வைகும் மென் மயிற் கணங்கள் போல,
வண்டு உளர் கோதை மாதர் மைந்தர்தம் வயிரத் திண் தோள்
தண்டுகள் தழுவும் ஆசைப் புனற் கரை சார்கின்றாரும்; 9

அங்கு இடை உற்ற குற்றம் யாவது என்று அறிதல் தேற்றும்;
செங் கயல் அனைய நாட்டம் சிவப்பு உறச் சீறிப் போன
மங்கை, ஓர் கமலச் சூழல் மறைந்தனள்; மறைய, மைந்தன்,
'பங்கயம்', 'முகம்', என்று ஓராது, ஐயுற்றுப் பார்க்கின்றானும்;

4. தாளை ஏய் - நாளத்தைப் பொருந்திய; பாளை - கமுகம் பாளை; உகள - பிறழ; 5. சுண்ணம் - வாசனைப்பொடி; நானம் - கத்தூரி; 8. தேன் - வண்டு; நறவம் - தேன்; ஊனம் - குற்றம்; 9. திரு வில் - அழகிய ஒளி; குல மணி - சிறந்த இரத்தினங்கள்.

பொன்-தொடி தளிர்க் கைச் சங்கம் வண்டொடு புலம்பி ஆர்ப்ப,
எற்று நீர் குடையும்தோறும், ஏந்து பேர் அல்குல்நின்றும்
கற்றை மேகலைகள் நீங்கி, சீறடி கவ்வ, 'காலில்
சுற்றிய நாகம்' என்று, துணுக்கத்தால் துடிக்கின்றாரும். 11

குடைந்து நீராடும் மாதர் குழாம் புடைசூழ, ஆழித்
தடம் புயம் பொலிய, ஆண்டு, ஓர் தார் கெழு வேந்தன் நின்றான்—
கடைந்த நாள், அமிழ்தினோடும் கடலிடை வந்து தோன்றும்
மடந்தையர் சூழ நின்ற மந்தரம் போல மாதோ. 12

தொடி உலாம் கமலச் செங் கை, தூ நகை துவர்த்த செவ் வாய்க்
கொடி உலாம் மருங்குல் நல்லார் குழாத்து, ஒரு குரிசில் நின்றான்,—
கடி உலாம் கமல வேலிக் கண் அகன் கான யாற்று,
பிடி எலாம் சூழ நின்ற பெய் மத யானை ஒத்தான். 13

கான மா மயில்கள் எல்லாம் களி கெடக் களிக்கும் சாயல்
சோனை வார் குழலினார்தம் குழாத்து, ஒரு தோன்றல் நின்றான் -
வான யாறுஅதனை நண்ணி, வயின் வயின் வயங்கித் தோன்றும்
மீன் எலாம் சூழ நின்ற விரி கதிர்த் திங்கள் ஒத்தான். 14

மேவல் ஆம் தகைமைத்து அல்லால், வேழ வில் தடக் கை வீரற்கு
ஏ எலாம் காட்டுகின்ற இணை நெடுங் கண் ஓர் ஏழை,
பாவைமார் பரந்த கோலப் பண்ணையில் பொலிவாள், வண்ணப்
பூ எலாம் மலர்ந்த பொய்கைத் தாமரை பொலிவது ஒத்தாள்.

மிடலுடைக் கொடிய வேலே என்னலாய் மிளிர்வது என்ன,
சுடர் முகத்து உலவு கண்ணாள், தோகையர் சூழ நின்றாள்;
மடலுடைப் போது காட்டும் வளர் கொடி பலவும் சூழ,
கடலிடைத் தோன்றும் மென் பூங் கற்பக வல்லி ஒத்தாள். 16

தேரிடைக் கொண்ட அல்குல், தெங்கிடைக் கொண்ட கொங்கை,
ஆரிடைச் சென்றும் கொள்ள ஒண்கிலா அழகு கொண்டாள்,
வாரிடைத் தனம் மீது ஆட மூழ்கினாள்; வதனம், மை தீர்
நீரிடைத் தோன்றும் திங்கள் நிழல் என, பொலிந்தது அன்றே!

11. எற்று நீர் - அலை மோதுகின்ற நீர்; சீறடி கவ்வ - சிறிய பாதங்களை மேகலை சூழ்ந்துகொள்ள; 12. ஆழி - வாகு வலையம், தோள்வளை; மந்தரம் - மந்தரமலை; 13. குரிசில் - பெருமையில் சிறந்தோன்; கடி - வாசனை; பிடி - பெண் யானை; 14. சோனை - இடை விடாது மழை பொழி கா௱ மேகம்; தோன்றல் - குரிசில்; 15. மேவல் ஆம் - விரும்பப்படும்; ஏ - அம்பு; 16. மடலுடைப்போது - இதழ்களையுடைய மலர்; கற்பகவல்லி - கற்பக மரத்தில் படர்ந்த காமவல்லி; 17. கொள்ள ஒண்கிலா - கொள்ள இயலாத; வார் - கச்சு: மீது ஆட - வெளியிலே தோன்றுமாறு.

நீராடிய பொய்கையும் பூம்புனலும்

மலை கடந்த புயங்கள், மடந்தைமார்
கலை கடந்து அகல் அல்குல், கடம் படு
முலைகள், தம்தமின் முந்தி நெருங்கலால்,
நிலை கடந்து பரந்தது, நீத்தமே. 18

செய்ய வாய் வெளுப்ப, கண் சிவப்புற,
மெய் அராகம் அழிய, துகில் நெக,
தொய்யில் மா முலை மங்கையர் தோய்தலால்,
பொய்கை, காதல் கொழுநரும் போன்றதே! 19

ஆன தூயவரோடு உடன் ஆடினர்
ஞான நீரவர் ஆகுதல் நன்றுஅரோ!—
தேனும், நாவியும், தேக்கு, அகில் ஆவியும்,
மீனும், நாறின; வேறு இனி வேண்டுமோ? 20

மிக்க வேந்தர்தம் மெய் அணி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்,
ஒக்க, நீல முகில்தலை ஓடிய
செக்கர் வானகம் ஒத்தது, அத் தீம் புனல். 21

காகதுண்ட நறுங் கலவைக் களி,
ஆகம் உண்டது, அடங்கலும் நீங்கலால்,
பாகு அடர்ந்த பனிக் கனி வாய்ச்சியர்,
வேகடம் செய் மணி என, மின்னினர். 22

பாய் அரித் திறலான் பசுஞ் சாந்தினால்
தூய பொன்-புயத்துப் பொதி தூக் குறி
மீ அரித்து விளர்க்க ஓர் மெல்லியல்
சேயரிக் கருங் கண்கள் சிவந்தவே. 23

கதம்ப நாள் விரை, கள் அவிழ் தாதொடும்
ததும்பு, பூந் திரைத் தண் புனல் சுட்டதால்—
நிதம்ப பாரத்து ஓர் நேரிழை, காமத்தால்
வெதும்புவாள் உடல், வெப்பம் வெதுப்பவே! 24

18. கடம் படு - குடத்தை ஒத்த; 19. மெய் அராகம் - உடம்பிற் பூசிய சந்தனம்; தோய்தல் - மூழ்குதல், புணர்தல்; 20. நாவி - கத்தூரி; ஆவி - புகை; 21. ஒக்க - ஒருசேர; நீலமுகில் - கருமேகம்; செக்கர் வானகம் - செவ் வானம். 22. காகதுண்டம் - அகில்; வேகடம் - சாணை பிடித்தல்; 23. அரி - சிங்கம்; தூக் குறி - தூய்மையான கோலம்; அரித்தல் - தீண்டி அழித்தல்; 24. கதம்ப நாள் விரை - புதுமணம் கமழும் பல வகைச் சுண்ணம்; நிதம்பம்- இடையின் பின்புறக் கீழ்ப்பக்கம்.

தையலாளை ஓர் தார் அணி தோளினன்,
நெய் கொள் ஓதியின் நீர் முகந்து எற்றினன்—
செய்ய தாமரைச் செல்வியை, தீம் புனல்,
கையின் ஆட்டும் களிற்று அரசு என்னவே! 25

சுளியும் மென் நடை தோற்க நடந்தவர்
ஒளி கொள் சீறடி ஒத்தன ஆம் என,
விளிவு தோன்ற, மிதிப்பன போன்றன—
நளினம் ஏறிய நாகு இள அன்னமே. 26

**ஆடவர் வேட்கை**

எரிந்த சிந்தையர், எத்தனை என்கெனோ?
அரிந்த கூர் உகிரால் அழி சாந்து போய்,
தெரிந்த கொங்கைகள், செவ்விய நூல் புடை
வரிந்த பொற் கலசங்களை மானவே! 27

தாழ நின்ற ததை மலர்க் கையினால்,
ஆழி மன் ஒருவன் உரைத்தான்; அது
வீழியின் கனிவாய் ஒரு மெல்லியல்,
தோழி கண்ணில், கடைக்கணிற் சொல்லினாள். 28

தள்ளி ஓடி அலை தடுமாறலால்,
தெள்ளு நீரின் மூழ்கு செந்தாமரை,
புள்ளி மான் அனையார் முகம் போல்கிலாது,
உள்ளம் நாணி, ஒளிப்பன போன்றவே. 29

**நீராடியபின் ஆடையாபரணங்கள் அணிதல்**

இனைய எய்தி இரும் புனல் ஆடிய,
வனை கருங் கழல் மைந்தரும், மாதரும்,
அனைய நீர் வறிது ஆக வந்து ஏறினர்,
புனை நறுந் துகில், பூணொடும் தாங்கினர். 30

மேவினர் பிரிந்தார்; அந்த வீங்கு நீர்,
தாவு தண் மதிதன்னொடும் தாரகை
ஓவு வானமும், உள் நிறை தாமரைப்
பூ எலாம் குடி போனதும், போன்றதே. 31

25. முகந்து - மொண்டு; 26. சுளியும் - கோபிக்கின்ற; விளிவு - அழிவு; நளினம் - தாமரை மலர்; நாகு இள அன்னம் - மிக்க இளமையையுடைய அன்னம்; 27. உகிரால் - நகக் குறிகளோடு; 28. தாழ நின்ற - முழந்தாள் அளவும் நீண்டு நின்ற; ததை - அடர்ந்த; வீழியின் கனி - வீழிப்பழம்; 29. ஒளிப்பன - மறைவன; 30. புனை நறுந் துகில் - அணிதற்கு உரிய நல்லாடை; 31. தாரகை - நட்சத்திரங்கள்; ஓவுதல் - நீங்குதல்; குடிபோதல் - நீங்குதல்.

கதிரவன் கடல் புகலும் சந்திரன் எழுச்சியும்

மானின் நோக்கியர் மைந்தரொடு ஆடிய
ஆன நீர் விளையாடலை நோக்கினன்;
தானும், அன்னது காதலித்தான் என,
மீன வேலையை, வெய்யவன் எய்தினன். 32

ஆற்றல் இன்மையினால் அழிந்தேயும், தம்
வேற்று மன்னர்தம்மேல் வரும் வேந்தர்போல்,
ஏற்று மாதர் முகங்களொடு எங்கணும்
தோற்ற சந்திரன், மீளவும் தோற்றினன். 33

## 18 உண்டாட்டுப் படலம்

எங்கும் நிலாப் பரந்து பெருகிய தோற்றம்

வெண் நிற நறை நிறை வெள்ளம் என்னவும்,
பண் நிறம் செறிந்து இடை பரந்தது என்னவும்,
உள் நிறை காமம் மிக்கு ஒழுகிற்று என்னவும்,
தண் நிறை நெடு நிலாத் தழைத்தது, எங்குமே. 1

கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளும் ஆய், பிரிந்து
உலந்தவர்க்கு உயிர் சுடு விடமும் ஆய், உடன்
புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதும் ஆய்,
மலர்ந்தது, நெடு நிலா—மதனன் வேண்டவே. 2

ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழிதாம்,
கூறு பாற்கடலையே ஒத்த; குன்று எலாம்
ஈறு இலான் கயிலையே இயைந்த; என் இனி
வேறு நாம் புகல்வது, நிலவின் வீக்கமே? 3

எள்ள அருந் திசைகளோடு யாரும், யாவையும்,
கொள்ளை வெண் நிலவினால் கோலம் கோடலால்,
வள் உறை வயிர வாள் மகர கேதனன்
வெள்ளணி ஒத்தது—வேலை ஞாலமே. 4

32. வேலை - கடல்; வெய்யவன் - சூரியன்; 33. மேல் வரும் - மீண்டும் படையெடுத்து வரும்; தோற்றினன் - உதித்தான்.

**18:** 1. பண் நிறம் செறிந்து - இசை உருவம் கொண்டு; ஒழுகிற்று - பொங்கி வழிந்தது; தழைத்தது - செழித்து நிரம்பியது; 2. உலந்தவர் - வாடியவர்; 3. ஆழி - கடல்; ஈறு இலான் - அழிவில்லாதவனாகிய சிவபெருமான்; வீக்கம் - மிகுதி; 4. கொள்ளை - மிகுதி; மகர கேதனன் - மீன் கொடி கொண்ட மன்மதன்; வெள்ளணி - பிறந்த நாளில் புனையும் வெண்ணிற அணி.

### மகளிர் மதுப் பருகுதல்

தயங்கு தாரகை புரை தரள நீழலும்,
இயங்கு கார் மிடைந்த கா எழினிச் சூழலும்,
கயங்கள் போன்று ஒளிர் பளிங்கு அடுத்த கானமும்,
வயங்கு பூம் பந்தரும், மகளிர் எய்தினர். 5

பூக் கமழ் ஓதியர், போது போக்கிய
சேக்கையின் விளை செருச் செருக்கும் சிந்தையர்,
ஆக்கிய அமிழ்து என, அம் பொன் வள்ளத்து
வாக்கிய பசு நறு, மாந்தல் மேயினர். 6

மீனுடைய விசும்பினர், விஞ்சை நாட்டவர்,
ஊனுடை உடம்பினர் உருவம் ஒப்பு இலார்,
மானுடை நோக்கினர் வாயின் மாந்தினர்—
தேனுடை மலரிடைத் தேன் பெய்தென்னவே. 7

உக்க பால்புரை நறு உண்ட வள்ளமும்,
கைக் கொள் வாள் ஒளிபடச் சிவந்து காட்ட, தன்
மைக் கணும் சிவந்தது; ஓர் மடந்தை வாய்வழிப்
புக்க தேன் அமிழ்தமாய்ப் பொலிந்த போன்றவே. 8

தாமமும் நானமும் ததைந்த, தண் அகில்
தூமம் உண், குழலியர் உண்ட தூ நறை,
ஓம வெங் குழி உகு நெய்யின், உள் உறை
காம வெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே. 9

### கள் மயக்கத்தால் நிகழ்ந்த தடுமாற்றங்கள்

விடன் ஒக்கும் நெடிய நோக்கின் அமிழ்து ஒக்கும் இன்சொலார்தம்
மடன் ஒக்கும் மடனும் உண்டே?—வாள் நுதல் ஒருத்தி காண,
தடன் ஒக்கும் நிழலை, 'பொன் செய் தண் நறுந் தேறல் வள்ளத்து
உடன் ஒக்க உவந்து நீயே உண்ணுதி, தோழி!' என்றாள். 10

அச்ச நுண் மருங்குலாள், ஓர் அணங்கு அனாள், அளகபந்தி
நச்சுவேல் கருங் கண் செவ் வாய் நளிர் முகம், மதுவுள் தோன்ற,
'பிச்சி நீ என் செய்தாய்? இப் பெரு நறவு இருக்க, வாளா,
எச்சிலை நுகர்தியோ?' என்று, எயிற்று அரும்பு இலங்க நக்காள்.

5. கா எழினிச் சூழல் - காவில் திரையால் சூழப்பட்ட இடம்; கயம் - ஆழமான நீர்நிலை; 6. போக்கிய - மிகப் பரப்பிய; பொன் வள்ளம் - பொற்கிண்ணம்; மாந்தல் - பருகல்; 7. தேன் - வண்டு, பூந் தேன்; 10. தடன் ஒக்கும் - பெருமையால் ஒத்த; 11. பிச்சி - பைத்தியம் பிடித்தவள்.

புறம் எலாம் நகைசெய்து ஏசப் பொரு அரு மேனி வேறு ஓர்
மறம் உலாம் கொலை வேல் கண்ணாள், மணியின் வள்ளத்து, வெள்ளை
நிற நிலாக் கற்றை பாய, நிறைந்தது போன்று தோன்ற,
நறவு என, அதனை, வாயின் வைத்தனள்; நாண் உட்கொண்டாள். 12

'யாழ்க்கும், இன் குழற்கும், இன்பம் அளித்தன இவை ஆம்' என்ன
கேட்கும் மென் மழலைச் சொல் ஓர் கிஞ்சுகம் கிடந்த வாயாள்,
தாள் கருங் குவளை தோய்ந்த தண் நறைச் சாடியுள், தன்
வாள்-கணின் நிழலைக் கண்டாள்; வண்டு என ஓச்சுகின்றாள்.

களித்த கண் மதர்ப்ப, ஆங்கு ஓர் கனங் குழை, கள்ளின் உள்ளால்
வெளிப்படுகின்ற காட்சி வெண் மதி நிழலை நோக்கி,
'அளித்தனென் அபயம்; வானத்து அரவினை அஞ்சி நீ வந்து
ஒளித்தனை; அஞ்சல்!' என்று ஆங்கு, இனியன உணர்த்துகின்றாள். 14

அழிகின்ற அறிவினாலோ, பேதைமையாலோ, ஆற்றில்
சுழி ஒன்றி நின்றது அன்ன உந்தியாள் தூய செந்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் புரைத்துக் கீழ்வந்து
இழிகின்ற கொழு நிலாவை, நறவு என, வள்ளத்து ஏற்றாள்.

மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி, வெள்ளை
இன் அமிழ்து அனைய தீம் சொல், இடை தடுமாறி என்ன,
வன்ன மேகலையை நீக்கி, மலர்த் தொடை அல்குல் சூழ்ந்தாள்;
பொன்னரிமாலை கொண்டு, புரி குழல் புனையலுற்றாள். 16

கள் மணி வள்ளத்துள்ளே களிக்கும் தன் முகத்தை நோக்கி,
விண் மதி மதுவின் ஆசை வீழ்ந்தது என்று ஒருத்தி உன்னி,
'உள் மகிழ் துணைவனோடும் ஊடு நாள், வெம்மை நீங்கி,
தண் மதி ஆகின், யானும் தருவென், இந் நறவை' என்றாள். 17

எள் ஒத்த கோல மூக்கின் ஏந்திழை ஒருத்தி, முன்கை
தள்ள, தண் நறவை எல்லாம் தவிசிடை உகுத்தும், தேறாள்,
உள்ளத்தின் மயக்கம் தன்னால், 'உப் புறத்து உண்டு' என்று எண்ணி,
வள்ளத்தை, மறித்து வாங்கி, மணி நிற இதழின் வைத்தாள்.

12. புறம் - புறத்திலுள்ளோர்; கற்றை - தொகுதி; நறவு - மது; 13. கிஞ்சுகம் - முருக்கம்பூ, கட்சாடியுள் மணத்திற்காகப் பூவிட்டு வைத்தல் வழக்கம்; 14. அபயம் - அடைக்கலம்; 15. புரைத்து - துளைத்து; 16. பொன்னரிமாலை - பொன்னாலாகிய சதங்கை மாலை; சொல் தடுமாறினதுமன்றித் தலைக்கிடுவன அரைக்கிட்டும் அரைக்கிடுவன தலைக்கிட்டும் செயல் தடுமாறினாள்; 18. தள்ள - நடுங்க.

வான்தனைப் பிரிதல் ஆற்று வண்டு இனம் வச்சை மாக்கள்
ஏன்ற மா நிதியம் வேட்ட இரவலர் என்ன ஆர்ப்ப,
தேன் தரு கமலச் செவ் வாய் திறந்தனள் நுகர நாணி,
ஊன்றிய கழுநீர் நாளத் தாளினுல், ஒருத்தி, உண்டாள். 19

புள் உறை கமல வாவிப் பொரு கயல் வெருவி ஓட,
வள் உறை கழித்த வாள்போல் வசி உற வயங்கு கண்ணுள்,
கள் உறை மலர் மென் கூந்தல் களி இள மஞ்ஞை அன்னுள்,
'உள் உறை அன்பன் உண்ணுன்' என உன்னி, நறவை உண்ணுள். 20

கூற்று உறழ் நயனங்கள் சிவப்ப, கூன் நுதல்
ஏற்றி, வாள் எயிறுகள் அதுக்கி, இன் தளிர்
மாற்ற அருங் கரதலம் மறிக்கும்—மாது, ஒரு
சீற்றம் ஆம் அவிநயம் தெரிக்கின்றுரினே. 21

துடித்த வான் துவர் இதழ்த் தொண்டை, தூ நிலாக்
கடித்த வாள் எயிறுகள் அதுக்கி, கண்களால்
வடித்த வெங் குருதி வேல் விழிக்கும் மாதர் மெய்
பொடித்த வேர், புறத்து உகு நறவம் போன்றவே! 22

கனித் திரள் இதழ் பொதி செம்மை கண் புக,
நினைப்பது ஒன்று, உரைப்பது ஒன்று, ஆம் ஓர் நேரிழை,
தனிச் சுடர்த் தாமரை முகத்துச் சாபமும்
குனித்தது; பனித்தது, குழவித் திங்களே.* 23

இலவு இதழ் துவர் விட, எயிறு தேன் உக,
முலை மிசை, கச்சொடு கலையும் மூட்டு அற,
அலை குழல் சோர்தர, அசதி ஆடலால்,
கலவி செய் கொழுநரும் கள்ளும் ஒத்தவே. 24

'கனை கழல் காமனுல் கலக்கம் உற்றதை,
அனகனுக்கு அறிவி' என்று, அறியப் போக்கும் ஓர்
இன மணிக் கலையினுள், 'தோழி! நீயும் என்
மனம் எனத் தாழ்தியோ? வருதியோ?' என்றுள். 25

19. வச்சை மாக்கள் - உலோபிகள்; ஏன்ற - பொருந்திய; நாளம் - தண்டு; 20. வசி - கூர்மை; மஞ்ஞை - மயில்; உன்னி - நினைந்து; 21. கூன் - வளைவு; மறித்தல் - முன் பின்னுகத் திருப்புதல்; 22. தொண்டை - கொவ்வைக் கனி; நிலாக் கடித்த - நிலாவைக் கோபித்த; 23. முகத்துச்சாபம் - முகத்திலுள்ள புருவமாகிய வில்; 24. துவர் விட - செந்நிறம் நீங்க; அசதி ஆடல் - நகையாடல்; கலவி - புணர்ச்சி; 25. அனகன் - குற்றமில்லாதவன், இங்கு நாயகன்.

மான் அமர் நோக்கி, ஓர் மதுகை வேந்தன்பால்,
ஆன தன் பாங்கியர் ஆயினர் எலாம்,
போனவர் போனவர் தொடரப் போக்கினாள்;
தானும், அங்கு, அவர்கள்பின் தமியள் ஏகினாள். 26

விரை செய் பூஞ் சேக்கையின் அடுத்த மீமிசை,
கரை செயா ஆசை விம் கடல் உளாள், ஒரு
பிரைச மென் குதலையாள், கொழுநன் பேர் எலாம்
உரைசெயும் கிள்ளையை உவந்து புல்லினாள். 27

மன்றல் நாறு ஒரு சிறை இருந்து, ஓர் வாணுதல்,
தன் துணைக் கிள்ளையைத் தழீஇ, ‘என் ஆவியை
இன்றுபோய்க் கொணர்கிலை; என் செய்வாய்? எனக்கு
அன்றிலோடு ஒத்தி’ என்று அழுது, சீறினாள். 28

வளை பயில் முன்கை ஓர் மயில் அனாள்தனக்கு
இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்,
முளை எயிறு இலங்கிட முறுவல் வந்தது;
களகள உதிர்ந்தது கயற்கண் ஆலியே. 29

செற்றம் முன் புரிந்தது ஓர் செம்மல், வெம்மையால்
பற்றலும், அல்குலில் பரந்த மேகலை
அற்று உகு முத்தின் முன்பு, அவனி சேர்ந்தன,
பொன்-தொடி ஒருத்தி கண் பொழுத முத்தமே. 30

தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி, ‘தோன்றலோடு
ஊடுகெனோ? உயிர் உருகு நோய் கெடக்
கூடுகெனோ? அவன் குணங்கள் வீணையில்
பாடுகெனோ?’ எனப் பலவும் பன்னினாள். 31

மாடகம் பற்றினள்; மகர வீணை தன்
தோடு விவிழ் மலர்க் கரம் சிவப்பத் தொட்டனள்;
பாடினள்—ஒருத்தி, தன் பாங்குளார்களோடு
ஊடினது உரைசெயாள்,—உள்ளத்து உள்ளதே. 32

26. மதுகை - வலிமை; தமியள் - தனிப்பட்டவள்; 27. பிரைசம் - பிரசம், தேன்; கொழுநன் - கணவன்; 28. மன்றல் - மணம்; அன்றில் - நெய்தல் நிலத்து வாழ் பறவை; 29. களகள - நீர் சிந்தும் ஒலிக்குறிப்பு; ஆலி - நீர்த்துளி; 30. செம்மல் - சிறந்த ஆண்மகன்; அவனி - பூமி; 31. பன்னினாள் - கூறினாள்; 32. மாடகம் - முறுக்காணி; உள்ளத்து உள்ளது - மனத்தில் உள்ள குறை.

குழைத்த பூங் கொம்பு வினுள் ஒருத்தி, கூடலை
இழைத்தனள்; அது, அவள் இட்டபோது எலாம்
பிழைத்தலும், அனங்க வேள் பிழைப்பு இல் அம்பொடும்
உழைத்தனள்; உயிர்த்தனள், உயிர் உண்டு என்னவே. 33

பந்து அணி விரலினுள் ஒருத்தி, பையுளாள்,
சுந்தரன் ஒருவன்பால் தூது போக்கினுள்;
'வந்தனன்' என, கடை அடைத்து மாற்றினுள்;
சிந்தனை தெரிந்திலம்; சிவந்த, நாட்டமே. 34

உய்த்த பூம் பள்ளியின் ஊடல் நீங்குவான்
சித்தம் உண்டு, ஒருத்திக்கு; அது, அன்பன் தேர்கிலான்;
பொய்த்தது ஓர் மூரியால் நிமிர்ந்து போக்குவாள்,
'எத்தனை இறந்தன கடிகை, ஈண்டு?' என்றுள். 35

விதைத்த மென் காதலின் வித்து, வெஞ் சிறை
இதைப் புனல் நனைத்திட முளைத்ததே என—
பதைத்தனள், ஒருத்தன்மேல், ஒருத்தி பஞ்சு அடி
உதைத்தலும்,—பொடித்தன, உரோம ராசியே. 36

பொலிந்த வாள் முகத்தினுன், பொங்கி, தன்னையும்
மலிந்த பேர் உவகையால்,—மாற்று வேந்தரை
நலிந்த வாள் உழவன், ஓர் நங்கை கொங்கை போய்
மெலிந்தவா நோக்கி,—தன் புயங்கள் வீங்கினுன். 37

ஏய்ந்த பேர் எழிலினுன் ஒருவன் எய்தினுன்,
வேய்ந்தபோல் எங்கணும் அனங்கன் வெங் கணை
பாய்ந்த பூம் பள்ளியில் படுத்த பல்லவம்
தீய்ந்தன நோக்கினன், திசைக்கும் சிந்தையான். 38

ஊட்டிய சாந்து வெந்து உலரும் வெம்மையால்,—
'நாட்டினை அளித்தி நீ' என்று நல்லவர்,
ஆட்டு நீர்க் கலசமே என்னல் ஆன—ஓர்
வாள் தொழில் மைந்தற்கு, ஓர் மங்கை கொங்கையே. 39

33. கூடலை இழைத்தல் - மணலில் வட்டமாகச் சுழியிட்டுக் குறி பார்த்தல்; உழைத்தனள் - வருந்தினுள்; 34. பந்து அணி விரல் - பந்தை அழகு செய்கின்ற விரல்; சுந்தரன் - அழகன்; கடை - வாயிற்கதவு; 35. தேர்கிலான் - அறியான்; மூரி-சோம்பல் முரிப்பு; கடிகை - நாழிகை; 36. இதை - புதுக்கொல்லை; ராசி - கூட்டம்; 37. வாள் உழவன் - வாட்படையை யுடைய வீரன்; வீங்கினுன் - பூரித்தான்; 38. படுத்த - பரப்பிய; பல்லவம் - தளிர்கள்; 39. காம வெப்பத்தோடு வருந்தும் தனங்கள் பொற்கலசம் போன்றன; ஆட்டு நீர்க் கலசம் - திருமுடி சூட்டுவதற்கு நீராட்ட வைத்த பொற்கலசம்.

பயிர் உறு கிண்கிணி, பரந்த மேகலே,
வயிர வான் பூண் அணி, வாங்கி நீக்கினுள்;
உயிர் உறு தலேவன்பால் போக உன்னினுள்;
செயிர் உறு திங்களேத் தீய நோக்கினுள். 40

ஏலும் இவ் வன்மையை என் என்று உன்னுதும்—
ஆலே மென் கரும்பு அனுன் ஒருவற்கு, ஆங்கு, ஒரு
சோலே மென் குயில் அனுள் சுற்றி வீக்கிய
மாலேயை நிமிர்ந்தில, வயிரத் தோள்களே? 41

சோர் குழல் ஒருத்தி தன் வருத்தம் சொல்லுவான்,
மாரனே நோக்கி, ஓர் மாதை நோக்கினுள்;
காரிகை இவள், அவள் கருத்தை நோக்கி, ஓர்
வேரி அம் தெரியலான் வீடு நோக்கினுள். 42

சினம் கெழு வாட் கை ஓர் செம்மல்பால், ஒரு
கனங் குழை மயில் அனுள் கடிது போயினுள்;
மனம் குழை நறவமோ? மாலேதான் கொலோ?
அனங்கனே? யார் கொலோ, அழைத்த தூதரே?* 43

தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்து ஓர்
வகிர் மதி நெற்றியாள் மழைக் கண் ஆலி வந்து
உகுதலும், 'உற்றது என்?' என்று, கொற்றவன்
நகுதலும், நக்கனள், நாணும் நீங்கினுள், 44

பொய்த் தலே மருங்குலாள் ஒருத்தி, புல்லிய
கைத்தலம் நீக்கினள், கருத்தின் நீக்கலள்;
சித்திரம் போன்ற அச் செயல், ஓர் தோன்றற்குச்
சத்திரம் மார்பிடைத் தைத்தது ஒத்ததே. 45

மெல்லியல் ஒருத்தி, தான் விரும்பும் சேடியை,
புல்லிய கையினள், 'போதி தூது' எனச்
சொல்லுவான் உறும்; உற, நாணும்; சொல்லலள்;
எல்லே இல் பொழுது எலாம் இருந்து, விம்மினுள். 46

40. பயிர் உறு - ஒலிக்கின்ற; செயிர் உறு - குற்றம் பொருந்திய; 41. ஏலும் - பொருந்திய; சுற்றி வீக்கிய - சுற்றிக் கட்டிய; 42. சொல்லு வான் - சொல்லும்பொருட்டு; காரிகை - பெண், இங்கே பாங்கி; வேரி அம் தெரியல் - தேன் பெருகும் அழகிய மாலே; 43. மாலே - மாலேக்காலம் 44. வகிர் மதி - பிளவுபட்ட சந்திரன், பிறை; கொற்றவன் - வெற்றியை யுடைய காதலன்; 45. சத்திரம் - வாள்.

ஊறு பேர் அன்பினுள் ஒருத்தி, தன் உயிர்
மாறு இலாக் காதலன் செயலை, மற்று ஒரு
நாறு பூங் கோதைபால் நவில நாணுவாள்;
வேறு வேறு உற, சில மொழி விளம்பினள். 47

கருத்து ஒரு தன்மையது; உயிரும் ஒன்று; தம்
அருத்தியும் அத் துணை ஆய நீரினர்;
ஒருத்தியும் ஒருத்தனும் உடம்பும் ஒன்று எனப்
பொருத்துவர் ஆம் எனப் புல்லினர் அரோ.* 48

வெதிர் பொரு தோளினுள் ஒருத்தி, வேந்தன் வந்து
எதிர்தலும், தன் மனம் எழுந்து முன் செல,
மதிமுகம் கதுமென வணங்கினள்; அது,
புதுமை ஆதலின், அவற்கு அச்சம் பூத்ததே. 49

துனி வரு நலத்தொடு சோர்கின்றாள், ஒரு
குனி வரு நுதலிக்கு, கொழுநன் இன்றியே
தனி வரும் தோழியும், தாயை ஒத்தனள்—
இனி வரும் தென்றலும் இரவும் என்னவே. 50

ஆக்கிய காதலாள் ஒருத்தி, அந்தியில்
தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்,
நோக்கினள், நின்றனள்; நுவன்றது ஓர்கிலள்;
போக்கின தூதினோடு, உணர்வும் போக்கினள். 51

மறப்பிலள், கொழுநனை வரவு நோக்குவாள்,
பிறப்பினொடு இறப்பு எனப் பெயரும் சிந்தையாள்,—
துறப்ப அரு முகிலிடைத் தோன்றும் மின் என,
புறப்படும்; புகும்;—ஒரு பூத்த கொம்பு அனாள். 52

எழுத அருங் கொங்கைமேல் அனங்கன் எய்த அம்பு
உழுத வெம் புண்களில், வளைக் கை ஒற்றினள்;
அழுதனள்; சிரித்தனள்; அற்றம் சொல்லினள்;
தொழுதனள் ஒருத்தியை, தூது வேண்டுவாள்! 53

47. விளம்பினள் - சொன்னாள்; 48. அருத்தி - ஆசை; புல்லினர் - தழுவினர்; 49. வெதிர் - மூங்கில்; கதுமென - விரைவாக; முகம் வணங்கினள் - தலை குனிந்தாள்; பூத்தது - உண்டாயிற்று; 50. துனி - நீடித்த புலவி; 51. தாக்கிய தெய்வம் - தீண்டி வருத்தும் தெய்வம், அணங்கு; நுவன்றது - சொன்னது; 52. பெயரும் - மாறி மாறி வரும்; மின் - மின்னல்; 53. அற்றம் - மெலிவு, துன்பம்.

'ஆர்த்தியும், உற்றதும், அறிஞர்க்கு, அற்றம்தான்
வார்த்தையின் உணர்த்துதல் வறிது அன்றோ?' என
வேர்த்தனள்; வெதும்பினள்; மெலிந்து சோர்ந்தனள்;
பார்த்தனள், ஒருத்தி தன் பாங்கு அனளையே. 54

தனங்களின் இளையவர்தம்மின், மும் மடி,
கனம் கனம் இடை இடைக் களிக்கும் கள்வன் ஆய்,
மனங்களில் நுழைந்து, அவர் மாந்து தேறலை
அனங்கனும் அருந்தினன் ஆதல் வேண்டுமால். 55

ஊடலும் கூடலும்

நறை கமழ் அலங்கல் மாலை நளிர் நறுங் குஞ்சி மைந்தர்,
துறை அறி கலவிச் செவ்வித் தோகையர் தூசு வீசி,
நிறை அகல் அல்குல் புல்கும் கலன் கழித்து அகல நீத்தார்—
அறை பறை அனைய நீரார் அரு மறைக்கு ஆவரோ தான்? 56

பொன் அருங் கலனும், தூசும், புறத்து உள துறத்தல் வம்போ?
நல் நுதல் ஒருத்தி, தன்பால் அகத்து உள நாணும், நீத்தாள்;—
உன்ன அருந் துறவு பூண்ட உணர்வுடை ஒருவனேபோல்,
தன்னையும் துறக்கும் தன்மை காமத்தே தங்கிற்று அன்றே. 57

பொரு அரு மதனன் போல்வான் ஒருவனும், பூவின்மேல் அத்
திருவினுக்கு உவமை சால்வாள் ஒருத்தியும், சேக்கைப் போரில்,
ஒருவருக்கு ஒருவர் தோலார், ஒத்தனர்;—'உயிரும் ஒன்றே
இருவரது உணர்வும் ஒன்றே' என்ற போது யாவர் வெல்வார்?

கொள்ளைப் போர் வாள்-கணாள் அங்கு ஒருத்தி, ஓர் குமரன் அன்னான்
வள்ளத் தார் அகலம்தன்னை மலர்க்கையால் புதைப்ப நோக்கி,
'"உள்ளத்து, ஆர் உயிர் அன்னாள்மேல் உதைபடும்" என்று, நீர் நும்
கள்ளத்தால் புதைத்தி' என்னா, முன்னையின் கனன்று மிக்காள்.

பால் உள பவளச் செவ் வாய், பல் வளை, பணைத்த வேய்த் தோள்,
வேல் உள நோக்கினாள், ஓர் மெல்லியல், வேலை அன்ன
மால் உள சிந்தை ஆங்கு, ஓர் மழை உள தடக் கையாற்கு,
மேல் உள அரம்பை மாதர் என்பது ஓர் விருப்பை, ஈந்தாள்.

54. ஆர்த்தி - விருப்பம்; 55. மும் மடி - மூன்று மடங்கு; கனம் கனம் - மிகவும் அதிகமான; இடை இடை - அவ்வவ்விடங்களில்; 56. தூசு - ஆடை; அறைபறை - ஒலிக்கின்ற பறை; மறை - இரகசியம்; 57. வம்போ - புதுமையோ; உணர்வுடை ஒருவன் - மெய்ஞ்ஞானி; 58. சேக்கைப் போர் - படுக்கையில் நிகழ்ந்த கலவிப்போர்; 59. கொள்ளைப் போர் - உயிரைக் கொள்ளு தலையுடைய போர்; வள்ளத் தார் - வளம் பொருந்திய மாலை; கனன்று மிக்காள் - மிகுதியாகச் சீறினாள்; 60. பணைத்த - பெருத்த; வேல் உள நோக்கினாள் - வேல் போன்ற கண்களையுடையவள்; மால் - காம மயக்கம்.

புனத்து உள மயில் அனுள், கொழுநன் பொய் உரை
நினைத்தனள் சீறுவாள் ஒருத்தி, நீடிய
சினத்தொடு காதல்கள் செய்த போரிடை,
மனத்து உறை காதலே வாகை கொண்டதே. 61

கொலை உரு அமைந்தெனக் கொடிய நாட்டத்து ஓர்
கலை உருவு அல்குலாள், கணவற் புல்குவாள்,
சிலை உரு அழிதரச் செறிந்த மார்பில் தன்
முலை உருவின என, முதுகை நோக்கினுள். 62

குங்குமம் உதிர்ந்தன; கோதை சோர்ந்தன;
சங்கு இனம் முரன்ற; கலையும் சாறின;
பொங்கின சிலம்புகள் பூசலிட்டன;—
மங்கையர் இள நலம் மைந்தர் உண்ணவே. 63

துனி உறு புலவியைக் காதல், சூழ் சுடர்
பனி என, துடைத்தலும் பதைக்கும் சிந்தையாள்,
புனை இழை ஒரு மயில், பொய் உறங்குவாள்,
கனவு எனும் நலத்தினுல், கணவற் புல்லினுள்.* 64

வட்ட வாள் முகத்து ஒரு மயிலும், மன்னனும்,
கிட்டிய போது, உடல் கிடைக்கப் புல்லினுர்;—
விட்டிலர்; கங்குலின் விடிவு கண்டிலர்;—
ஒட்டிய உடல் பிரிப்பு உணர்கிலாமையால். 65

அருங் களி மால் களிறு அனைய வீரர்க்கும்,
கருங் குழல் மகளிர்க்கும், கலவிப் பூசலால்,
நெருங்கிய வன முலை சுமக்க நேர்கலா
மருங்குல் போல் தேய்ந்தது—அம் மாலைக் கங்குலே. 66

**சந்திரன் மறைவும் சூரியன் தோற்றமும்**

கடை உற நல் நெறி காண்கிலாதவர்க்கு
இடை உறு திரு என, இந்து நந்தினுன்.
படர் திரைக் கருங் கடல் பரமன் மார்பிடைச்
சுடர் மணிக்கு அரசு என, இரவி தோன்றினுன். 67

61. வாகை கொண்டது - வெற்றி கொண்டது; 62. கலை உருவு - ஆடையை உருவி வெளிப்படுகின்ற; புல்குவாள் - தழுவுபவள்; சிலை - மலை; 63. முரன்ற - ஒலித்தன; சாறின - அவிழ்ந்தன; இள நலம் - புதிய இன்பம்; 64. கனவு எனும் நலத்தினுல் - கனவு என்னும் நல்ல உதவியினுல்; 65. கிட்டிய போது - நெருங்கிய போது; கிடைக்க - பொருந்த; 66. கலவிப் பூசல் - புணர்ச்சியாகிய போர்; மருங்குல்- இடை; மாலைக் கங்குல் - மாலையை முதலாக உடைய இரவு; 67. கடை உற - முடிவு பொருந்த, நிறைவாக; இந்து நந்தினுன் - சந்திரன் மறைந்தான்; சுடர் மணிக்கு அரசு - கௌத்துப மணி; இரவி - சூரியன்.

# 19 எதிர்கொள் படலம்

### தயரதன் பரிவாரங்களுடன் கங்கையைக் கடந்து மிதிலை சார்தல்

அடா நெறி அறைதல்செல்லா அரு மறை அறைந்த நீதி
விடா நெறிப் புலமைச் செங்கோல் வெண்குடை வேந்தர் வேந்தன்,
படா முக மலையில் தோன்றிப் பருவம் ஒத்து அருவி பல்கும்
கடா நிறை ஆறு பாயும் கடலொடும், கங்கை சேர்ந்தான். 1

கப்புடை நாவின் நாகர் உலகமும் கண்ணில் தோன்ற,
துப்புடை மணலிற்று ஆகி, கங்கை நீர் சுருங்கிக் காட்ட,
அப்புடை அனீக வேலை அகன் புனல் முகந்து மாந்த,
உப்புடைக் கடலும், தெண் நீர் உண் நசை உற்றது அன்றே. 2

ஆண்டு நின்று எழுந்து போகி, அகன் பணை மிதிலை என்னும்
ஈண்டு நீர் நகரின் பாங்கர் இரு நிலக் கிழவன் எய்த,
தாண்டு மா புரவித் தானைத் தண்ணளிச் சனகன் என்னும்
தூண் தரு வயிரத் தோளான் செய்தது சொல்லலுற்றாம்: 3

### தயரதனைச் சனகன் எதிர்கொள வருதல்

'வந்தனன் அரசன்' என்ன, மனத்து எழும் உவகை பொங்க,
கந்து அடு களிறும், தேரும், கலின மாக் கடலும், சூழ,
சந்திரன் இரவிதன்னைச் சார்வது ஓர் தன்மை தோன்ற,
இந்திரதிருவன்தன்னை எதிர்கொள்வான் எழுந்து வந்தான். 4

கங்கை நீர் நாடன் சேனை, மற்று உள கடல்கள் எல்லாம்
சங்கு இனம் ஆர்ப்ப வந்து சார்வன போல, சார,
பங்கயத்து அணங்கைத் தந்த பாற்கடல் எதிர்வதேபோல்,
மங்கையைப் பயந்த மன்னன் வள நகர் வந்தது அன்றே. 5

### தயரத மன்னனின் தானைச் சிறப்பு

இலை குலாவு அயிலினன் அனிகம், ஏழ் என உலாம்
நிலை குலாம் மகர நீர் நெடிய மா கடல் எலாம்,
அலகு இல் மா களிறு, தேர், புரவி, ஆள், என விராய்,
உலகு எலாம் நிமிர்வதே பொருவும் ஓர் உவமையே. 6

19 : 1. படா முக மலை - முகபடாத்தையுடைய மலை போன்ற யானை; பருவம் - மழைக்காலம்; கடல் - சேனைக்கடல்; 2. கப்புடை நா - பிளவுபட்ட நாக்கு; நாகர் உலகம் - பாதாளம்; துப்பு - தூய்மை; அப்பு - அம்பு; அனீக வேலை - சேனைக்கடல்; 3. தரு - ஒத்த; வயிரத்தோளான் - உறுதியான தோள்களையுடையவன்; 4. கந்து - கட்டுத்தறி; கலினம் - கடிவாளம்; இந்திர திருவன் - இந்திரனது செல்வத்தை ஒத்த செல்வமுடையவன், தயரதன்; 5. நகர் - நகர மாந்தர், நகரிலுள்ள சேனை; 6. நிமிர்வது - பொங்கிப் பரந்து வருவது.

தொங்கல், வெண்குடை, தொகைப் பிச்சம், உட்பட விராய்,
எங்கும் விண் புதைதரப் பகல் மறைந்து, இருள் எழ,
பங்கயம், செய்யவும், வெளியவும், பலபடத்
தங்கு தாமரையுடைத் தானமே போலுமே. 7

கொடி உளாளோ? தனிக் குடை உளாளோ? குலப்
படி உளாளோ? கடற் படை உளாளோ? பகர்
மடி இலா அரசினுன் மார்பு உளாளோ? வளர்
முடி உளாளோ? தெரிந்து உணர்கிலாம்—முளரியாள். 8

வார்முகம் கெழுவு கொங்கையர் கருங் குழலின் வண்டு
ஏர் முழங்கு அரவம்—ஏழ் இசை முழங்கு அரவமே!
தேர் முழங்கு அரவம்—வெண் திரை முழங்கு அரவமே!
கார் முழங்கு அரவம்—வெங் கரி முழங்கு அரவமே! 9

சூழு மா கடல்களும் திடர் பட, துகள் தவழ்ந்து,
ஏழு பாரகமும் உற்றுளது எனற்கு எளிதுஅரோ—
ஆழியான் உலகு அளந்த அன்று, தாள் சென்ற அப்
பூழையூடே பொடித்து, அப்புறம் போயதே! 10

மன் நெடுங் குடை மிடைந்து அடைய வான் மறைதர,
துன்னிடும் நிழல் வழங்கு இருள் துரப்பு எளிதுஅரோ—
பொன் இடும், புவி இடும், புனை மணிக் கலன் எலாம்
மின் இடும்; வில் இடும்; வெயில் இடும்; நிலவு இடும்! 11

**சனக மன்னன் வருகின்ற வழிக் காட்சி**

தா இல் மன்னவர்பிரான் வர, முரண் சனகனும்
ஏ வரும் சிலையினுன், எதிர் வரும் நெறி எலாம்,
தூவு தண் சுண்ணமும், கனக நுண் தூளியும்,
பூவின் மென் தாது உகும் பொடியுமே—பொடி எலாம். 12

நறு விரைத் தேனும், நானமும், நறுங் குங்குமச்
செறி அகில் தேய்வையும், மான்மதத்து எக்கரும்,
வெறியுடைக் கலவையும், விரவு செஞ் சாந்தமும்,
செறி மதக் கலுழி பாய் சேறுமே—சேறு எலாம். 13

7. தொகைப் பிச்சம் - தொகுதியான மயிற்பீலிக் குஞ்சங்கள்; தாமரையுடைத் தானம் - தாமரைத் தடாகம்; 8. குலப் படி - சிறந்த நாடு; மடி - சோம்பல்; முளரியாள் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; 9. அரவம் - ஒலி; 10. பூழை - துளை; பொடித்து - நுழைந்து; 11. புவி இடும் - பூமியிலுள்ளார் (சேனைகள்) அணிந்துள்ள; 12. தா இல் - கெடுதல் இல்லாத; முரண் - வலிமை; 13. தேய்வை - குழம்பு; மான்மதம் - கத்தூரி; எக்கர் - வண்டல்.

மன்றல் அம் கோதையார் மணியினும் பொன்னினும்,
சென்று வந்து உலவும் அச் சிதைவு இலா நிழலின் நேர்,
வென்ற திண் கொடியொடும், நெடு விதானமும் விராய்,
நின்ற வெண்குடைகளின் நிழலுமே—நிழல் எலாம். 14

இருபெரு மன்னர் சேனையும் ஒன்றுதல்

மாறு இலா மதுகையான் வரு பெருந் தானைமேல்,
ஊறு பேர் உவகையான் அனிகம் வந்து உற்றபோது,
ஈறு இல் ஓதையினொடும், எறி திரைப் பரவைமேல்
ஆறு பாய்கின்றது ஓர் அமலைபோல் ஆனதே. 15

தன்னைச் சார்ந்த சனகனைத் தயரதன் தழுவுதல்

கந்தையே பொரு கரிச் சனகனும், காதலோடு
உந்த, ஓத அரியது ஓர் தன்மையோடு, உலகு உளோர்
தந்தையே அனைய அத் தகவினோன் முன்பு, தன்
சிந்தையே பொரு, நெடுந் தேரின் வந்து எய்தினான். 16

எய்த, அத் திரு நெடுந் தேர் இழிந்து, இனிய தன்
மொய் கொள் திண் சேனை பின் நிற்க, முன் சேறலும்,
கையின் வந்து, 'ஏறு' என, கடிதின் வந்து ஏறினான்;
ஐயனும், முகம் மலர்ந்து, அகம் உறத் தழுவினான். 17

தழுவி நின்று, அவன் இருங் கிளையையும், தமரையும்,
வழு இல் சிந்தனையினான், வரிசையின் அளவளாய்,
'எழுக முந்துற' எனா, இனிது வந்து எய்தினான்,—
உழுவை முந்து அரி அனான், எவரினும் உயரினான். 18

இராமனின் வருகை

இன்னவாறு, இருவரும், இனியவாறு ஏக, அத்
துன்னு மா நகரின்நின்று எதிர்வரத் துன்னினான்—
தன்னையே அனையவன், தழலையே அனையவன்,
பொன்னின் வார் சிலை இறப் புயம் நிமிர்த்து அருளினான். 19

14. விதானம் - மேற்கட்டி; 15. மாறு - ஒப்பு; ஊறுதல் - மேன்மேல் பெருகுதல்; 17. கையின் வந்து - கை கொடுத்து, கையினால் சைகை செய்து, அகம் - மார்பு, ஆகம் என்பதன் குறுக்கம்; 18. கிளை - உறவினர்; தமர் - நண்பர்; உழுவை முந்து அரி - புலிகளின் முன்னின்ற சிங்கம்; 19. துன்னினான் - நெருங்கினான்; தழலையே அனையவன் - சிவன்.

தம்பியும், தானும், அத் தானை மன்னவன் நகர்ப்
பம்பு திண் புரவியும், படைஞரும், புடை வர,
செம் பொனின், பசு மணித் தேரின் வந்து எய்தினன்—
உம்பரும் இம்பரும் உரகரும் தொழ உளான். 20

யானையோ, பிடிகளோ, இரதமோ, இவுளியோ,
ஆன பேர் உறை இலா நிறைவை யார் அறிகுவார்—
தானை ஏர் சனகன் ஏவலின், நெடுந் தாதை முன்
போன பேர் இருவர்தம் புடை வரும் படையினே? 21

பணிந்த இராம-இலக்குவரைத் தயரதன் தழுவுதல்

காவியும், குவளையும், கடி கொள் காயாவும் ஒத்து,
ஓவியம் சுவை கெடப் பொலிவது ஓர் உருவொடே,
தேவரும் தொழு கழல் சிறுவன், முன் பிரிவது ஓர்
ஆவி வந்தென்ன வந்து, அரசன்மாடு அணுகினன். 22

அனிகம் வந்து அடி தொழ, கடிது சென்று, அரசர்கோன்
இனிய பைங் கழல் பணிந்து எழுதலும், தழுவினன்;
மனு எனும் தகையன் மார்பிடை மறைந்தன, மலைத்
தனி நெடுஞ் சிலை இறத் தவழ் தடங் கிரிகளே. 23

இளைய பைங் குரிசில் வந்து, அடி பணிந்து எழுதலும்,
தளை வரும் தொடையல் மார்பு உற உறத் தழுவினன்,
களைவு அருந் துயர் அறக் ககனம் எண் திசை எலாம்
விளைதரும் புகழினன், எவரினும் மிகுதியான். 24

இராமன் தாயரை வணங்குதல்

கற்றை வார் சடையினன் கைக் கொளும் தனு இற,
கொற்ற நீள் புயம் நிமிர்த்தருளும் அக் குரிசில், பின்
பெற்ற தாயரையும், அப் பெற்றியின் தொழுது, எழுந்து
உற்றபோது, அவர் மனத்து உவகை யார் உரை செய்வார்? 25

20. பம்பு - நெருங்கின; பசு மணி - மரகதமணி; உம்பர் - மேலுலகத்தவராகிய தேவர்; இம்பர் - இவ்வுலகத்தவராகிய மனிதர்; 21. உறை - பொருளை எண்ணிக் கணக்கிடுங்கால் எண் மறவாதிருத்தற்பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கும் ஒவ்வொன்றாக இடும் பொருள்; 22. சிறுவன் - இங்கே இராமன்; ஆவி - உயிர்; அரசன்மாடு - அரசனிடம்; 24. ககனம் - ஆகாயம்; 25. கற்றை வார் சடையினன் - தொகுதியாக நீண்ட சடையினையுடைய சிவன்.

### தொழுத பரதனை இராமன் தழுவுதல்

உன்னு பேர் அன்பு மிக்கு ஒழுகி ஒத்து, ஒண் கண் நீர்
பன்னு தாரைகள் தர, தொழுது எழும் பரதனை,
பொன்னின் மார்பு உற அணைத்து, உயிர் உறப் புல்லினன்—
தன்னை அத் தாதை முன் தழுவினன் என்னவே. 26

### இராம இலக்குவரைப் பரத சத்துருக்கனர் பணிதல்

கரியவன் பின்பு சென்றவன், அருங் காதலின்
பெரியவன் தம்பி, என்று இனையது ஓர் பெருமை அப்
பொரு அருங் குமரர், தம் புனை நறுங் குஞ்சியால்,
இருவர் பைங் கழலும், வந்து, இருவரும் வருடினர். 27

### குமரர்கள் நால்வரும் விளங்கிய காட்சி

'கோல் வரும் செம்மையும், குடை வரும் தண்மையும்,
சால் வரும் செல்வம்' என்று உணர் பெருந் தாதைதன்,
மேல் வரும் தன்மையால், மிக விளங்கினர்கள், தாம்—
நால்வரும் பொரு இல் நான்மறை எனும் நடையினர். 28

### இராமனுக்குத் தயரதன் தந்த பணி

சான்று எனத் தகைய செங்கோலினன், உயிர்கள்தாம்
ஈன்ற நல் தாய் எனக் கருது பேர் அருளினன்,
'ஆன்ற இச் செல்வம் இத்தனையும் மொய்த்து அருகு உற,'
தோன்றலை, 'கொண்டு முன் செல்க!' எனச் சொல்லினன். 29

காதலோ! அறிகிலம், கரிகளைப் பொருவினர்;
தீது இலா உவகையும், சிறிதுஅரோ? பெரிதுஅரோ?
கோதை சூழ் குஞ்சி அக் குமரர் வந்து எய்தலும்,
தாதையோடு ஒத்தது, அத் தானையின் தன்மையே! 30

### இராமனும் தம்பியரும் சென்ற காட்சி

தொழுது இரண்டு அருகும், அன்புடைய தம்பியர் தொடர்ந்து,
அழிவு இல் சிந்தையின் உவந்து, ஆடல் மாமிசை வர,
தழுவு சங்குடன் நெடும் பணை தழங்கிட, எழுந்து,
எழுத அருந் தகையது ஓர் தேரின்மேல் ஏகினன். 31

26. உயிர் உற - உயிரோடு பொருந்த; 27. பெரியவன் தம்பி - பரதன் தம்பி சத்துருக்கனன்; கரியவன் பின்பு சென்ற இலக்குமணன் பரதனையும் சத்துருக்கனன் இராமனையும் பணிந்தனர். 28. செம்மை - நீதி; தண்மை - கருணை; சால்வரும் - நிறைந்த; நடையினர் - ஒழுக்கமுடையவர்; 29. சான்று- சாட்சி; 31. ஆடல் மா-வெற்றியையுடைய குதிரை.

**மிதிலை நகர வீதிக்கு இராமன் வருகை**

பஞ்சி சூழ் மெல் அடிப் பாவைமார் பண்ணைசூழ்,
மஞ்சு சூழ் நெடிய மாளிகையின் வந்து, இடை விராய்,
நஞ்சு சூழ் விழிகள் பூ மழையின் மேல் விழ நடந்து,
இஞ்சி சூழ் மிதிலை மா வீதி சென்று எய்தினன். 32

சூடகம் துயல்வர, கோதை சோர்தர, மலர்ப்
பாடகம் பரதநூல் பகர, வெங் கட கரிக்
கோடு அரங்கிட எழும் குவி தடங் கொங்கையார்,
ஆடு அரங்கு அல்லவே—அணி அரங்கு அயல் எலாம். 33

பேதைமார் முதல் கடைப் பேரிளம்பெண்கள்தாம்,
ஏதி ஆர் மாரவேள் ஏவ, வந்து எய்தினர்,
ஆதி வானவர் பிரான் அணுகலால், அணி கொள் கார்
ஓதியார் வீதிவாய் உற்றவாறு உரைசெய்வாம்: 34

## 20 உலாவியற் படலம்

**இராமனைக் காண வந்த மகளிரின் தன்மை**

மான் இனம் வருவ போன்றும், மயில் இனம் திரிவ போன்றும்,
மீன் இனம் மிளிர வானில் மின் இனம் மிடைவ போன்றும்,
தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப, சிலம்பு இனம் புலம்ப எங்கும்,—
பூ நனை கூந்தல் மாதர்—பொம்மெனப் புகுந்து, மொய்த்தார்.

விரிந்து வீழ் கூந்தல் பாரார்; மேகலை அற்ற நோக்கார்;
சரிந்த பூந் துகில்கள் தாங்கார்; இடை தடுமாறத் தாழார்;
நெருங்கினர்; நெருங்கிப் புக்கு, 'நீங்குமின், நீங்குமின்' என்று—
அருங் கலம் அனைய மாதர்—தேன் நுகர் அளியின் மொய்த்தார்.

பள்ளத்துப் பாயும் நல் நீர் அனையவர், பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார், மென் சிலம்பு அலம்ப, மென் பூத்
தள்ள, தம் இடைகள் நோவ, தமை வலித்து, 'அவன்பால் செல்லும்
உள்ளத்தைப் பிடித்தும் நாம்' என்று, ஓடுகின்றாரும் ஒத்தார்.*

32. பஞ்சி - செம்பஞ்சு; மஞ்சு - மேகம்; இஞ்சி - மதில்; 33. சூடகம் - கைவளை; துயல்வர - அசைய; பாடகம் - மகளிர் காலணி; அரங்கிட - வருந்தி அழிய; அணி அரங்கு - அழகிய மாளிகைகள்; 34. ஏதி - போர்க்கருவிகள்; மாரவேள் - மன்மதன்.

20 : 1. மிடைவ - நெருங்குவ; புலம்ப - ஒலிக்க; பொம்மென - விரைவாக; 2. தாழார் - தாமதியார்; அருங் கலம் - பெறுதற்கரிய அணிகலன்கள்; 3. தள்ள - அசைய.

'கண்ணினல் காதல் என்னும் பொருளேயே காண்கின்ருேம்; இப்
பெண்ணின் நீர்மையினுல் எய்தும் பயன் இன்று பெறுதும் என்பார்;
மண்ணின் நீர் உலந்து, வானம் மழை அற வறந்த காலத்து,
உண்ணும் நீர் கண்டு வீழும் உழைக் குலம் பலவும் ஒத்தார். 4

அரத்தம் உண்டனைய மேனி அகலிகைக்கு அளித்த தாளும்,
விரைக் கருங் குழலிக்காக வில் இற நிமிர்ந்து வீங்கும்
வரைத் தடந் தோளும், காண, மறுகினில் வீழும் மாதர்,
இரைத்து வந்து, அமிழ்தின் மொய்க்கும் ஈஇனம் என்னல் ஆனுர்.

வீதிவாய்ச் செல்கின்ருன்போல், விழித்து இமையாது நின்ற
மாதரார் கண்களூடே வாவும் மான் தேரில் செல்வான்,
யாதினும் உயர்ந்தோர், தன்னை, 'யாவர்க்கும் கண்ணன்' என்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறு பொருள் உணர்த்திவிட்டான்.

'எண் கடந்து, அலகு இலாது, இன்று, எகுறும் இவன் தேர்' என்று
பெண்கள் தம்தம்மின் நொந்து பேதுறுகின்ற காலை,
'மண் கடந்து, அமரர் வைகும் வான் கடந்தானை, தான் தன்
கண் கடவாது காத்த காரிகை பெரியளே காண்!' 7

பயிர் ஒன்று கலையும், சங்கும், பழிப்ப அரு நலனும், பண்பும்,
செயிர் இன்றி அலர்ந்த பொற்பும், சிந்தையும், உணர்வும், தேசும்,
வயிரம் செய் பூணும், நாணும், மடனும், தன் நிறையும், மற்றும்
உயிர் ஒன்றும், ஒழிய எல்லாம் உகுத்து, ஒரு தெரிவை நின்ருள்.

குழை உரு மிளிரும் கெண்டை கொண்டலின் ஆலி சிந்த,
தழை உருக் கரும்பின் சாபத்து அனங்க வேள் சரங்கள் பாய்ந்த
இழை உருப் புண் அருத இள முலை ஒருத்தி சோர்ந்து,
மழை உரு மின்னின் அன்ன மருங்குல்போல் நுடங்கி, நின்ருள்.

பஞ்சு அணி விரலினர்தம் படை நெடுங் கண்கள் எல்லாம்,
செஞ்செவே ஐயன் மெய்யின் கருமையைச் சேர்ந்தவோ தாம்?
மஞ்சு அன மேனியான்தன் மணி நிறம், மாதரார்தம்
அஞ்சன நோக்கம் போர்க்க, இருண்டதோ? அறிகிலேமால். 10

4. உழைக்குலம் - மான் கூட்டங்கள்; 5. அரத்தம் - செந்நிறம். 6. வாவும் மான் - தாவிச் செல்கின்ற குதிரை; கண்ணன் - கண்வழிச் செல்பவன், கண்ணோட்டமுடையவன்; 7. எண் - மனத்தின் வேகம்; கடத்தல் - அளத்தல்; காரிகை - அழகி, சீதை; 8. பயிர் - பயிர்ப்பு என்னும் குணம்; செயிர் - குற்றம் ; பொற்பு - அழகு; தேசு - ஒளி; உகுத்து - சிந்தவிட்டு; 9. கெண்டை - கெண்டைமீன் போன்ற கண்; சாபம் - வில்; மின் - மின்னல்; 10. செஞ்செவே - மிகவும் நன்ருக.

மாந் தளிர் மேனியாள் ஓர் வாணுதல், மதனன், எங்கும்
பூந் துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி,
'வேந்தர் கோன் ஆணை நோக்கான்; வீரன் வில் ஆண்மை பாரான்;
ஏந்து இழையாரை எய்வான் யாவனோ ஒருவன்?' என்றாள். 11

சொல் நலம் கடந்த காமச் சுவையை ஓர் உருவம் ஆக்கி,
இன் நலம் தெரிய வல்லார் எழுதியது என்ன நின்றாள்—
பொன்னையும் பொருவு நீராள், புனைந்தன எல்லாம் போக,
தன்னையும் தாங்கலாதாள், துகில் ஒன்றும் தாங்கி நின்றாள். 12

வில் தங்கு புருவம் நெற்றி வெயர் வர, பசலை விம்மிச்
சுற்று எங்கும் எறிப்ப, உள்ளம் சோர, ஓர் தோகை நின்றாள்,—
கொற்றம் செய் கொலை வேல் என்னக் கூற்று எனக் கொடிய கண்ணாள்—
மற்று ஒன்றும் காண்கிலாதாள், 'தமியனோ வள்ளல்?' என்றாள். 13

மைக் கருங் கூந்தல், செவ் வாய், வாள் நுதல், ஒருத்தி உள்ளம்
நெக்கனள் உருகுகின்றாள், 'நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன்; போகாவண்ணம், கண் எனும் புலம் கொள் வாயில்
சிக்கென அடைத்தேன்; தோழி! சேருதும் அமளி' என்றாள். 14

தாக்கு அணங்கு அனைய மேனி, தைத்த வேள் சரங்கள் பாராள்;
வீக்கிய கலனும் தூசும் வேறு வேறு ஆனது ஓராள்;—
ஆக்கிய பாவை அன்னாள் ஒருத்தி—ஆண்டு, அமலன் மேனி
நோக்குறுவாரை எல்லாம் எரி எழ நோக்குகின்றாள். 15

களிப்பன, மதர்ப்ப, நீண்டு கதுப்பினை அளப்ப, கள்ளம்
ஒளிப்பன, வெளிப்பட்டு ஓடப் பார்ப்பன, சிவப்பு உள் ஊற
வெளுப்பன, கறுப்ப, ஆன வேல்கணாள் ஒருத்தி, உள்ளம்
குளிர்ப்பொடு காண வந்தாள், வெதுப்பொடு கோயில் புக்காள்.

கருங் குழல் பாரம், வார் கொள் கன முலை, கலை சூழ் அல்குல்,
நெருங்கின மறைப்ப, ஆண்டு ஓர் நீக்கிடம் பெறாது விம்மும்
பெருந் தடங் கண்ணி, காணும் பேர் எழில் ஆசை தூண்ட,
மருங்குலின் வெளிகளூடே, வள்ளலை நோக்குகின்றாள். 17

11. பூந் துணர் - பூங்கொத்து; வேந்தர்கோன் - சனகன், தயரதன் என்றும் கூறுவர்; 12. சொல் நலம் கடந்த - சொல்லால் உணர்த்த முடியாத; பொன் - இலக்குமி; 13. வெயர் - வேர்வை; எறிப்ப - பரக்க; தமியனோ - தனியாய் உள்ளானோ; 14. சிக்கென - உறுதியாக; அமளி - படுக்கை; 15. தாக்கு அணங்கு - தீண்டி வருத்தும் மோகினி; எரி எழ - தீப்பொறி தோன்ற; 16. மதர்ப்பு - செழிப்பினால் உண்டான செருக்கு; கதுப்பு - கன்னம்; வெளுப்பன - வெளுத்திருப்பவை; வெதுப்பு - வெப்பம்; 17. நீக்கிடம் - இடைவெளி; மருங்குல் - இடை.

### இராமன் உலா வந்த வீதிகளின் நிலை

வரிந்த வில் அனங்கன் வாளி மனங்களில் தைப்ப மாதர்
எரிந்த பூண் இனமும், கொங்கை வெயர்த்தபோது இழிந்த சாந்தும்,
சரிந்த மேகலையும், முத்தும், சங்கமும் தாழ்ந்த கூந்தல்
வரிந்த பூந்தொடையும், அன்றி வெள்ளிடை அரிது—அவ் வீதி. 18

### இராமனின் மேனி அழகு

தோள் கண்டார், தோளே கண்டார், தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார், தாளே கண்டார்; தடக் கை கண்டாரும், அஃதே;
வாள் கொண்ட கண்ணார் யாரே, வடிவினை முடியக்கண்டார்?—
ஊழ் கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார். 19

### பற்பல மகளிரின் நிலைகள்

தையல், சிற்றிடையாள், ஒரு தாழ்குழல்,
உய்ய மற்றுஅவள் உள்ளத்து ஒடுங்கினான்—
வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய
ஐயனின் பெரியார் இனி யாவரே? 20

அலம்பு பாரக் குழலி ஓர் ஆயிழை,
சிலம்பும் மேகலையும் ஒலி செய்திட,
நலம் பெய் கொம்பின் நடந்து வந்து எய்தினாள்,
புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள். 21

அருப்பு மென் முலையாள், அங்கு, ஓர் ஆயிழை,
'இருப்பு நெஞ்சினையேனும், ஓர் ஏழைக்கா,
பொருப்பு வில்லைப் பொடி செய்த புண்ணியா!
கருப்பு வில் இறுத்து ஆட்கொண்டு கா' என்றாள்.* 22

மை தவழ்ந்த கருங் கண் ஓர் வாணுதல்,
'செய் தவன் தனித் தேர்மிசைச் சேறல் விட்டு,
எய்த வந்து எதிர் நின்றமைதான் இது
கைதவம்கொல்? கனவுகொலோ?' என்றாள். 23

18. வெள்ளிடை - வெற்றிடம்; 19. வாள்கொண்ட - வாளை ஒத்த; ஊழ் - முறைமை; சமயம் - மதம்; 20. ஐயன் - தலைவன்; 21. அலம்பு - வண்டுகள் ஒலிக்கின்ற; குழலி - கூந்தலையுடையவள்; 22. அருப்பு - அரும்பு, தாமரை அல்லது கோங்கின் முகை; ஏழை - இளம்பெண், சீதை; கா - காத்தருள்க; 23. கைதவம் - பொய்; உருவெளித்தோற்றத்தில் இராமனைக் கண்டவள் கூற்று.

மாது ஒருத்தி, மனத்தினை அல்லது ஓர்
தூது பெற்றிலள், இன் உயிர் சோர்கின்றாள்,
'போது அரிக் கண் பொலன் குழைப் பூண் முலைச்
சீதை எத் தவம் செய்தனளோ?' என்றாள். 24

பழுது இலா ஒரு பாவை அன்னாள், பதைத்து,
அழுது, வெய்துயிர்த்து, அன்புடைத் தோழியைத்
தொழுது, சோர்ந்து அயர்வாள், 'இந்தத் தோன்றலை
எழுதலாம்கொல், இம் மன்மதனால்?' என்றாள். 25

வண்ண வாய் ஒரு வாணுதல், 'மானிடற்கு,
எண்ணுங்கால், இவ் இலக்கணம் எய்திட
ஒண்ணுமோ? இது உணர்த்துகின்றேன், இவன்
கண்ணனே! இது கண்டிரும், பின்' என்றாள். 26

கனக நூபுரம் கை வளையோடு உக,
மனம் நெகும்படி வாடி, ஓர் வாணுதல்,
'அனகன் இந் நகர் எய்தியது, ஆதியில்,
சனகன் செய்த தவப் பயனால்' என்றாள். 27

நனி வருந்தி, நலம் குடிபோயிட,
பனி வரும் கண் ஓர் பாசிழை அல்குலாள்,
'முனிவரும் குல மன்னரும் மொய்ப்பு அற,
தனி வரும்கொல் கனவின்தலை?' என்றாள். 28

புனம் கொள் கார் மயில் போலும் ஓர் பொற்கொடி,
மனம் கொள் காதல் மறைத்தலை எண்ணினாள்;
அனங்கவேள், அது அறிந்தனன்;—அற்றம்தான்,
மனங்கள் போல, முகமும் மறைக்குமே? 29

இணை நெடுங் கண் ஓர் இந்து முகத்தி பூ-
அணை அடைந்து, இடியுண்ட அரா என,
புணர் நலம் கிளர் கொங்கை புழுங்கிட,
உணர்வு அழுங்க, உயிர்த்தனள் ஆவியே. 30

24. சோர்கின்றாள் - தளர்ந்தொழியப் பெறுகின்றாள்; 25. வெய்துயிர்த்து - பெருமூச்சுவிட்டு; 26. கண்டிரும் - ஆராய்ந்து அறிவீர்; 27. நெகும்படி - உருகும்படி; 28. குடிபோயிட - விட்டகல; மொய்ப்பு அற - பக்கத்தில் சூழ்ந்து வருதலின்றி; கனவின்தலை - கனவினிடத்து, தலை ஏழனுருபு; 29. புனம் - காடு; அற்றம் - இரகசியம்; 30. பூ அணை - மலர்ப்படுக்கை; அரா - பாம்பு; புழுங்கிட - வியர்க்க; உணர்வு அழுங்க - அறிவு கெட.

ஆம்பல் ஒத்து அமுது ஊறு செவ் வாய்ச்சியர்,
தாம் பதைத்து உயிர் உள் தடுமாறுவார்,
தேம்பு சிற்றிடைச் சீதையைப்போல், சிறிது
ஏம்பல் பெற்றிலர்; எங்ஙனம் உய்வரே? 31

'வேர்த்து, மேனி தளர்ந்து, உயிர் விம்மலோடு
ஆர்த்தி உற்ற மடந்தையர் ஆரையும்,
தீர்த்தன், இத்தனை, சிந்தையின், செங் கணின்,
பார்த்திலான்; உள் பரிவு இலனோ?' என்றாள். 32

வையம் பற்றிய மங்கையர் எண்ணிலர்,
ஐயன் பொற்புக்கு அளவு இலை ஆதலால்,
எய்யும் பொன் சிலை மாரனும், என் செய்வான்?
கை அம்பு அற்று, உடைவாளினும் கை வைத்தான். 33

நான வார் குழல் நாரியரோடு அலால்,
வேனில் வேளொடு, மேல் உறைவார்களோடு,
ஆன பூசல் அறிந்திலம்; அம்பு போய்
வான நாடியர் மார்பினும் தைத்தவே. 34

'மருள் மயங்கு மடந்தையர்மாட்டு ஒரு
பொருள் நயந்திலன் போகின்றதே; இவன்
கருணை என்பது கண்டு அறியான்; பெரும்
பருணிதன்கொல்? படு கொலையான்!' என்றாள். 35

தொய்யில் வெய்ய முலை, துடி போல் இடை
நையும் நொய்ய மருங்குல், ஓர் நங்கைதான்,
கையும் மெய்யும் அறிந்திலள்; கண்டவர்,
'உய்யும், உய்யும்!' எனத் தளர்ந்து ஓய்வுற்றாள். 36

பூக ஊசல் புரிபவர்போல், ஒரு
பாகின் மென்மொழி, தன் மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தர, சேவகன் தேரின்பின்,
ஏகும், மீளும்; இது என் செய்தவாறுஅரோ? 37

31. தடுமாறுவார் - கலங்கப்பெறுவார்; தேம்பு - வருந்துகிற; ஏம்பல் - மகிழ்ச்சி; 32. ஆர்த்தி உற்ற - வேதனை மிக்க; தீர்த்தன் - தூயவன்; 33. வையம் - நகரம்; 34. நாரியர் - பெண்கள்; வேனில் வேள் - வசந்த காலத்திற்குரிய மன்மதன்; வான நாடியர் - வானுலகத்துத் தெய்வப் பெண்கள்; 35. பருணிதன் - ஞானி; 36. கை - ஒழுகலாறு; மெய் - உடம்பு; ஓய்வுற்றாள் - செயலற்றாள்; 37. பூக ஊசல் - கமுக மரத்தில் தொங்கவிட்ட ஊஞ்சல்; சேகு - காழ்ப்பு.

பெருத்த காதலின் பேதுறு மாதரின்
ஒருத்தி, மற்று அங்கு ஒருத்தியை நோக்கி, 'என்
கருத்தும் அவ் வழிக் கண்டது உண்டோ?' என்றாள்—
அருத்தி உற்றபின் நாணம் உண்டாகுமோ? 38

நங்கை, அங்கு ஒரு பொன், 'நயந்தார் உய்ய,
தங்கள் இன் உயிரும் கொடுத்தார், தமர்;
எங்கள் இன் உயிர் எங்களுக்கு ஈகிலா
வெங்கண், எங்ஙன் விளைந்தது, இவற்கு?' என்றாள். 39

நாமத்தால் அழிவாள் ஒரு நன்னுதல்,
'சேமத்து ஆர் வில் இறுத்தது, தேருங்கால்,
தூமத்து ஆர் குழல் தூ மொழித் தோகைபால்
காமத்தால் அன்று, கல்வியினால்' என்றாள். 40

ஆரமும், துகிலும், கலன் யாவையும்,
சோர, இன் உயிர் சோரும் ஓர் சோர்குழல்,
'கோர வில்லிமுன்னே எனைக் கொல்கின்ற
மாரவேளின் வலியவர் யார்?' என்றாள். 41

முனிவர் ஏவ, இராமன் ஆசனத்து அமர்தல்

மாதர் இன்னணம் எய்திட, வள்ளல் போய்,
கோது இல் சிந்தை வசிட்டனும் கோசிக
வேத பாரனும் மேவிய மண்டபம்,
ஏதி மன்னர் குழாத்தொடும் எய்தினன். 42

திருவின் நாயகன், மின் திரிந்தாலெனத்
துருவு மா மணி ஆரம் துயல்வர,
பருவ மேகம் படிந்ததுபோல் படிந்து,
இருவர் தாளும் முறையின் இறைஞ்சினன். 43

38. பேதுறு - மதி மயக்கமடைந்த; கருத்து - மனம்; அருத்தி - ஆசை; 39. இன் உயிரும் கொடுத்தார் - சிபி; தமர் - இராமன் முன்னோர்; வெங்கண் - கொடுந்தன்மை; 40. நாமம் - பெயர்; சேமம் - பாதுகாப்பு; தூமம் - புகை; கல்வி - திறமை; 41. கோர வில்லி - கொடிய வில் ஏந்திய இராமன்; 42. வேத பாரன் - வேதத்தின் கரை கண்ட விசுவாமித்திரமுனி; ஏதி - ஆயுதங்கள்; குழாம் - கூட்டம்; 43. துருவுதல் - தேடி ஆராய்தல்; மணி ஆரம் - இரத்தினமாலை; துயல்வரல் - அசைந்து புரளல்.

இறைஞ்ச, அன்னவர் ஏத்தினர்; ஏவ, ஓர்
நிறைஞ்ச பூந் தவிசு ஏறி, நிழல்கள்போல்,
புறஞ்செய் தம்பியருள் பொலிந்தான்அரோ—
அறம் செய் காவற்கு அயோத்தியில் தோன்றினன். 44

தயரதனும் மண்டபத்திற்கு வந்து அமர்தல்

ஆன மா மணி மண்டபம்அன்னதில்
தானை மன்னன் தமரொடும் சார்ந்தனன்—
மீன் எலாம் தன் பின் வர, வெண்மதி,
வான் நிலா உற வந்தது மானவே. 45

வந்து, மா தவர் பாதம் வணங்கி, மேல்
சிந்து தே மலர் மாரி சிறந்திட,
அந்தணாளர்கள் ஆசியொடு, ஆசனம்,
இந்திரன் முகம் நாணுற, ஏறினன். 46

மண்டபத்துள் வந்து திரண்ட மன்னர்கள்

கங்கர், கொங்கர், கலிங்கர், குலிங்கர்கள்,
சிங்களாதிபர், சேரலர், தென்னவர்,
அங்க ராசர், குலிந்தர், அவந்திகர்,
வங்கர், மாளவர், சோளர், மராடரே,† 47

மான மாகதர், மச்சர், மிலேச்சர்கள்,
ஏனை வீர இலாடர், விதர்ப்பர்கள்,
சீனர், தெங்கணர், செஞ் சகர், சோமகர்,
சோனகேசர், துருக்கர், குருக்களே,† 48

ஏதி யாதவர், ஏழ் திறல் கொங்கணர்,
சேதி ராசர், தெலுங்கர், கருநடர்,
ஆதி வானம் கவித்த அவனி வாழ்
சோதி நீள் முடி மன்னரும் துன்னினர்.† 49

மங்கையரின் சாமரை வீச்சும் பல்லாண்டும்

தீங் கரும்பினும் தித்திக்கும் இன் சொலார்
தாங்கு சாமரை, மாடு தயங்குவ:
ஓங்கி ஓங்கி வளர்ந்து, உயர் கீர்த்தியின்
பூங் கொழுந்து பொலிவன போன்றவே. 50

44. புறஞ்செய்தல் - புறந்தருதல், பாதுகாத்தல்; 45. வான் நிலா உற - வானம் விளங்க; மான - ஒக்கும்படி; 46. ஆசி - ஆசீர்வாதம், வாழ்த்து; 47-49. பல நாட்டு மன்னரும் பரிவாரங்களும் வந்தமை கூறப்படுகிறது; துன்னினர் - நெருங்கிவந்து கூடினர்கள். 50. கீர்த்தி - புகழ்.

சுழலும் வண்டும், மிஞிறும், சுரும்பும், சூழ்ந்து
உழலும் வாச மது மலர் ஓதியர்,
குழலினோடு உற, கூறு பல்லாண்டு ஒலி,
மழலை யாழ் இசையோடு மலிந்தவே. 51

வெண்குடை விளங்கிய காட்சி

வெங் கண் ஆனையினான் தனி வெண்குடை,
திங்கள், தங்கள் குலக்கொடிச் சீதை ஆம்
மங்கை மா மணம் காணிய வந்து, அருள்
பொங்கி ஓங்கித் தழைப்பது போன்றதே. 52

தயரதனின் படைப் பெருக்கம்

ஊடு போர்விடம் இன்றி, ஒன்று ஆம் வகை
நீடு மா கடல் தானை நெருங்கலால்,
ஆடல் மா மத ஆனைச் சனகர் கோன்
நாடு எலாம், ஒரு நல் நகர் ஆயதே. 53

அனைவரையும் சனகன் உபசரித்தல்

ஒழிந்த என் இனி? ஒண்ணுதல் தாதைதன்
பொழிந்த காதல் தொடர, பொருள் எலாம்
அழிந்து மன்றல் கொண்டாடலின், அன்புதான்
இழந்துளார்க்கும் இராமற்கும் ஒத்ததே. 54

## 21 கோலங் காண் படலம்

சீதையைக் கொணருமாறு வசிட்டன் சனகனுக்குக் கூறுதல்

தேவியர் மருங்கு சூழ, இந்திரன் இருக்கை சேர்ந்த
ஓவியம் உயிர் பெற்றென்ன உவந்து, அரசு இருந்தகாலை,
தா இல் வெண் கவிகைச் செங்கோல் சனகனை இனிது நோக்கி,
'மா இயல் நோக்கினாளைக் கொணர்க!' என, வசிட்டன் சொன்னான். 1

51. வண்டு, மிஞிறு, சுரும்பு - வண்டின் வகைகள்; பல்லாண்டு - பல ஆண்டுகள் வாழ்ந்திட வேண்டும் எனப் பாடும் வாழ்த்துப் பாடல்; 53. ஊடு போர்விடம் - இடையில் நீங்கிச் செல்வதற்குரிய வெற்றிடைவெளி.

21: 1. அரசு - அரசன், தயரதன்.

### சனகன் ஏவிய மாதர் தாதியர்க்குச் செய்தி அறிவித்தல்

உரைசெய, தொழுத கையன், உவந்த உள்ளத்தன், 'பெண்ணுக்கு
அரைசியைத் தருதிர் ஈண்டு என்று, ஆயிழையவரை ஏவ,
கரை செயற்கு அரிய காதல் கடாவிட, கடிது சென்றார்,
பிரைசம் ஒத்து இனிய சொல்லார், பேதை தாதியரில் சொன்னார். 2

### தாதியர் சீதைக்கு அழகு செய்தல்

அமிழ் இமைத் துணைகள், கண்ணுக்கு அணி என அமைக்குமாபோல்,
உமிழ் சுடர்க் கலன்கள், நங்கை உருவினை மறைப்பது ஓரார்,
அமிழ்தினைச் சுவை செய்தென்ன, அழகினுக்கு அழகு செய்தார்—
இமிழ் திரைப் பரவை ஞாலம் ஏழைமை உடைத்து மாதோ! 3

### கேசாதி பாதமாகச் சீதைக்கு அணிந்த அணிகள்

கண்ணன்தன் நிறம், தன் உள்ளக் கருத்தினை நிறைத்து, மீதிட்டு,
உள்நின்றும் கொடிகள் ஓடி, உலகு எங்கும் பரந்ததன்ன
வண்ணம் செய் கூந்தல் பார வலயத்து, மழையில் தோன்றும்
விண் நின்ற மதியின், மென் பூஞ் சிகழிகைக் கோதை வேய்ந்தார். 4

விதியது வகையால் வான மீன்இனம் பிறையை வந்து
கதுவுறுகின்றதென்னக் கொழுந்து ஒளி கஞலத் தூக்கி,
மதியினைத் தந்த மேகம் மருங்கு நா வளைப்பதென்ன,
பொதி இருள் அளக பந்தி பூட்டிய பூட்டும் இட்டார். 5

'வெள்ளத்தின் சடிலத்தான்தன் வெஞ் சிலை இறுத்த வீரன்
தள்ளத் தன் ஆவி சோர, தனிப் பெரும் பெண்மைதன்னை
அள்ளிக்கொண்டு அகன்ற காளை அல்லன்கொல்? ஆம்கொல்?' என்பாள்
உள்ளத்தின் ஊசலாடும் குழை நிழல் உமிழ இட்டார். 6

கோன் அணி சங்கம் வந்து குடியிருந்தனைய கண்டத்து,
ஊனம் இல் கலங்கள் தம்மின் இயைவன அணிதல் செய்தார்;
மான் அணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக்கு எல்லாம்
தான் அணி ஆன போது, தனக்கு அணி யாது மாதோ? 7

2. ஆயிழையவர் - அழகிய அணிகளை அணிந்த மகளிர்; காதல் - அன்பு; கடாவிட - தூண்ட; பிரைசம் - பிரசம், தேன்; தாதியர் - தோழிமார், செவிலித் தாயர்; 3. ஓரார் - உணரார்; ஏழைமை - அறியாமை; 4. கண்ணன் - இராமன்; பார வலயம் - கனத்த வட்டம்; சிகழிகைக் கோதை - தலையில் அணியும் வாசிகை என்னும் வளைந்த பூமாலை; 5. கொழுந்து - சுட்டி; அளக பந்தி - மயிர் ஒழுங்கு; பூட்டு - தலைக் கோல அணிகளுள் ஒன்று; 6. பெண்மை - நாண், மடம் முதலியன; 7. கோன் - திருமால்; ஊனம் - குறைவு; மங்கலம் - மாங்கலியம், திரு.

கோண் இலா வான மீன்கள் இயைவன கோத்தது என்கோ?
வாள் நிலா வயங்கு செவ்வி வளர் பிறை வகிர்ந்தது என்கோ?
நாணில் ஆம் நகையில் நின்ற நளிர் நிலாத் தவழ்ந்தது என்கோ?—
பூண் நிலாம் முலைமேல் ஆர முத்தை—யான் புகல்வது என்னே?

மொய் கொள் சிறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த
தையலாள் அமிழ்த மேனி தயங்கு ஒளி தழுவிக்கொள்ள,
வெய்ய பூண் முலையில் சேர்ந்த வெண் முத்தம் சிவந்த;—என்றால்,
செய்யவர்ச் சேர்ந்துளாரும் செய்யராய்த் திகழ்வர் அன்றே?

கொமை உற வீங்குகின்ற குலிகச் செப்பு அனைய கொங்கைச்
சுமை உற நுடங்குகின்ற நுசுப்பினுள் பூண் செய் தோளுக்கு,
இமை உற இமைக்கும் செங் கேழ் இன மணி முத்தினோடும்
அமை உற அமைவது உண்டு ஆம் ஆகின், ஒப்பு ஆகும் அன்றே.

'தளை அவிழ் கோதை ஓதிச் சானகி தளிர்க்கை என்னும்
முளரிகள், இராமன் செங் கை முறைமையின் தீண்ட நோற்ற;
அளியன; கங்குல் போதும் குவியல ஆகும்' என்று, ஆங்கு,
இள வெயில் சுற்றியன்ன எரி மணிக் கடகம் இட்டார். 11

சில் இயல் ஓதி கொங்கைத் திரள் மணிக் கனகச் செப்பில்,
வல்லியும் அனங்கன் வில்லும் மான்மதச் சாந்தின் தீட்டி,
பல் இயல் நெறியின் பார்க்கும் பரம் பொருள் என்ன, யார்க்கும்,
'இல்லை', 'உண்டு', என்ன நின்ற இடையினுக்கு இடுக்கண் செய்தார். 12

நிறம் செய் கோசிக நுண் தூசு நீவி நீவாத அல்குல்-
புறம் செய் மேகலையின் தாழத் தாரகைச் சும்மை பூட்டி,
திறம் செய் காசு ஈன்ற சோதி பேதை சேயொளியின் சேந்து
கறங்குபு திரிய, தாமும் கண் வழுக்குற்று நின்றார். 13

ஐய ஆம் அனிச்சப் போதின் அதிகமும் நொய்ய, ஆடல்
பை அரவு அல்குலாள்தன் பஞ்சு இன்றிப் பழுத்த பாதம்;
செய்ய பூங் கமலம் மன்னச் சேர்த்திய சிலம்பு, 'சால
நொய்யவே; நொய்ய' என்றோ, பலபட நுவல்வது? அம்மா! 14

8. கோண் - குற்றம், மாறுபாடு; ஆர முத்து - முத்துமாலை; 9. மொய் - போர்; முளரி - தாமரை மலர்; செய்யவர் - செந்நிறமுள்ளவர், செம்மைக் குணமுள்ளவர்; 10. கொமை - கொம்மை, திரட்சி; குலிகச் செப்பு - இங்குலிகம் வைக்கப்பெற்ற கிண்ணம்; சுமை - பாரம்; இமை உற - கண் கூச; செங் கேழ் இன மணி - செந்நிறம் வாய்ந்த ஓரின மணிகளாகிய பதுமராகம்; அமை - மூங்கில்; 11. அளியன - போற்றத்தக்கன; 12. வல்லி - காமவல்லி; பரம் பொருள் - மேம்பட்ட பொருளாகிய கடவுள்; 13. கோசிகம் - பட்டு; நீவி - கொய்சகம்; நீவாத - நீங்காத; தாரகைச் சும்மை - ஓர் ஆபரணம்; 14. பழுத்த - சிவந்துள்ள; மன்ன - பொருந்த; நொய்ய - மெல்லியன.

நஞ்சினோடு அமுதம் கூட்டி நயனங்கள் ஆன என்ன,
செஞ்செவே நீண்டு, மீண்டு, சேயரி சிதறி, தீய
வஞ்சமும் களவும் இன்றி, மழை என மதர்த்த கண்கள்,
அஞ்சன நிறமோ? அண்ணல் வண்ணமோ? அறிதல் தேற்றும்.

மொய் வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த, முந்நாள்
மெய் வளர் மதியின் நாப்பண் மீன் உண்டேல், அனையது ஏய்ப்ப,
வையக மடந்தைமார்க்கும், நாகர் கோதையர்க்கும், வானத்
தெய்வ மங்கையர்க்கும், எல்லாம், திலகத்தைத் திலகம் செய்தார். 16

சின்னப் பூ, செருகும் மென் பூ, சேகரப் போது, கோது இல்
கன்னப் பூ, கழுல, மீது, கற்பகக் கொழுந்து மான
மின்ன, பூஞ் சுரும்பும் வண்டும் மிஞிறும் தும்பிகளும் பம்ப,
புன்னைப் பூந் தாது மானும் பொற் பொடி அப்பிவிட்டார்.* 17

தோழியர் சீதைக்கு அயினி சுற்றிக் காப்பு இடுதல்

நெய் வளர் விளக்கம் ஆட்டி, நீரொடு பூவும் தூவி,
தெய்வமும் பராவி, வேத பாரகர்க்கு ஈந்து, செம் பொன்
ஐயவி நுதலில் சேர்த்தி, ஆய் நிற அயினி சுற்றி,
கை வளர் மயில் அனை வலம் செய்து, காப்பும் இட்டார். 18

சீதையின் அழகில் மங்கையர் மயங்கல்

கஞ்சத்துக் களிக்கும் இன் தேன் கவர்ந்து உணும் வண்டு போல,
அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினள் அழகை மாந்தி,
தம் சொற்கள் குழறி, தம்தம் தகை தடுமாறி நின்றார்—
மஞ்சர்க்கும், மாதரார்க்கும், மனம் என்பது ஒன்றே அன்றே?*

இழை குலாம் முலையினாளை, இடை உவா மதியின் நோக்கி,
மழை குலாவு ஓதி நல்லார், களி மயக்குற்று நின்றார்—
உழை குலாம் நயனத்தார்மாட்டு, ஒன்று ஒன்றே விரும்பற்கு ஒத்த
அழகு எலாம் ஒருங்கே கண்டால், யாவரே ஆற்றவல்லார்? 20

சங்கம் கை உடைமையாலும், தாமரைக் கோயிலாலும்,
எங்கு எங்கும் பரந்து வெவ்வேறு உள்ளத்தின் எழுதிற்றென்ன,
அங்கு அங்கே தோன்றலாலும், அருந்ததி அனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள்; நாம் இனிப் புகல்வது என்னோ? 21

15. தேற்றும் - தெளிகிலம்; 16. திலகம் செய்தார் - திலகம் தீட்டினர்; திலகம் - நெற்றிப்பொட்டு; 17. சின்னப் பூ - விடுபூ; சேகரப் போது - தலையிற் சூடும் பூ; கன்னப் பூ - ஒருவகைக் காதணி; 18. பராவி - வேண்டி; ஐயவி - சிறு வெண்கடுகின் பொடி; அயினி - ஆலத்தி நீர்; காப்பு - இரட்சை, திருநீற்றுக்காப்பு; 20. களி மயக்கு - களிப்பை விளைக்கும் மயக்கம்; 21. நங்கை - பெண்களில் சிறந்த சீதை; நம்பி - ஆடவரில் சிறந்த இராமன்.

**தோழிமார் புடை சூழச் சீதை மன்னர் வீற்றிருந்த மண்டபம் அடைதல்**

பரந்த மேகலையும், கோத்த பாத சாலகமும், நாகச்
சிரம் செய் நூபுரமும், வண்டும், சிலம்பொடு சிலம்பி ஆர்ப்ப,
புரந்தரன் கோற்கீழ் ஆனோர் அரம்பையர் புடை சூழ்ந்தென்ன,
வரம்பு அறு சும்மைத் தீம் சொல் மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.

சிந்தொடு, குறளும், கூனும், சிலதியர் குழாமும், தெற்றி
வந்து, அடி வணங்கிச் சுற்ற, மணி அணி விதான நீழல்,
இந்துவின் கொழுந்து விண்மீன் இனத்தொடும் வருவது என்ன,
நந்தல் இல் விளக்கம் அன்ன நங்கையும் நடக்கலுற்றாள். 23

வல்லியை உயிர்த்த நிலமங்கை, 'இவள் பாதம்
மெல்லிய உறைக்கும்' என அஞ்சி, வெளி எங்கும்,
பல்லவ மலர்த் தொகை பரப்பினள் என, தன்
நல் அணி மணிச் சுடர் தவழ்ந்திட, நடந்தாள். 24

தொழும் தகைய மென் நடை தொலைந்து, களி அன்னம்,
எழுந்து, இடைவிழுந்து, அயர்வது என்ன, அயல் எங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவ, ஓர் கலாபம்
வழங்கு நிழல் மின்ன வரும் மஞ்ஞை என, வந்தாள். 25

மண் முதல் அனைத்து உலகின் மங்கையருள் எல்லாம்,
கண் மணி எனத் தகைய கன்னி எழில் காண,
அண்ணல் மரபின் சுடர், அருத்தியொடு தான் அவ்
விண் இழிவது ஒப்பது ஓர் விதான நிழல் வந்தாள். 26

கற்றை விரி பொற்கடை பயிற்றுறு கலாபம்,
சுற்றும் மணி புக்க இழை மிக்கு, இடை துவன்றி,
வில் தவழ, வாள் நிமிர, மெய் அணிகள் மின்ன,
சிற்றிடை நுடங்க, ஒளிர் சீறடி பெயர்த்தாள். 27

பொன்னின் ஒளி, பூவின் வெறி, சாந்து பொதி சீதம்,
மின்னின் எழில், அன்னவள்தன் மேனி ஒளி மான,
அன்னமும், அரம்பையரும், ஆர் அமிழ்தும், நாண,
மன் அவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள். 28

22. பாத சாலகம் - காலணி; நாகச்சிரம் செய் நூபுரம் - பாம்பின் தலை போன்று செய்யப்பட்ட நூபுரம், சிலம்பு வகை; 23. சிந்து - குறள் வடிவினும் சற்று உயர்ந்த வடிவம்; சிலதியர் - சேடியர்; தெற்றி - நெருங்கி; நந்தல் இல் விளக்கம் - அணையாத விளக்கு; 24. உறைக்கும் - உறுத்தும்; பல்லவம் - தளிர்; 25. கலாபம் - தோகை, இடையணி; 26. சுடர் - சூரியன்; விதானம் - மேற்கட்டி; 27. வில், வாள் - ஒளி; மின்ன - விளங்க; 28. வெறி-மணம்; மன் அவை - அரசரது பேரவை.

யாவரும் சீதையின் அழகில் ஈடுபடுதல்

சமைத்தவரை இன்மை மறைதானும் எனலாம், அச்
சுமைத் திரள், முலைத் தெரிவை தூய் வடிவு கண்டார்,
அமைத் திரள் கொள் தோளியரும், ஆடவரும் எல்லாம்,
இமைத்திலர், உயிர்த்திலர்கள், சித்திரம் எனத் தாம். 29

சீதையைக் கண்ட இராமனது நிலை

அன்னவளை, 'அல்லள்' என, 'ஆம்' என, அயிர்ப்பான்,
கன்னி அமிழ்தத்தை எதிர் கண்ட கடல் வண்ணன்,
உன் உயிர் நிலைப்பது ஓர் அருத்தியொடு உழைத்து, ஆண்டு,
இன் அமிழ்து எழ, களி கொள் இந்திரனை ஒத்தான். 30

'நறத்து உறை முதிர்ச்சி உறு நல் அமுது பில்குற்று,
அறத்தின் விளைவு ஒத்து, முகடு உந்தி, அருகு உய்க்கும்,
நிறத் துவர் இதழ்க் குயில் நினைப்பினிடை அல்லால்,
புறத்தும் உளதோ?' என மனத்தொடு புகன்றான். 31

வசிட்ட முனிவரின் மகிழ்ச்சி

'எங்கள் செய் தவத்தினில், இராமன் என வந்தோன்,
சங்கினொடு சக்கரமுடைத் தனி முதற் பேர்
அம் கண் அரசு; ஆதலின், அவ் அல்லி மலர் புல்லும்
மங்கை இவள் ஆம்' என, வசிட்டன் மகிழ்வுற்றான். 32

துன்று புரி கோதை எழில் கண்டு, உலகு சூழ்வந்து
ஒன்று புரி கோலொடு தனித் திகிரி உய்ப்பான்,
'என்றும், உலகு ஏழும், அரசு எய்தி உளனேனும்,
இன்று திரு எய்தியது; இது என்ன வயம்!' என்றான்.* 33

சீதையைத் தெய்வம் எனக் கைகூப்புதல்

நைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்,
வையம் நுகர் கொற்றவனும், மா தவரும், அல்லார்
கைகள் தலைபுக்கன; கருத்துளதும் எல்லாம்
தெய்வம் என உற்ற; உடல் சிந்தை வசம் அன்றோ? 34

29. சமைத்தவர் - படைத்தவர்; தெரிவை - சீதாபிராட்டி; 30. உன் உயிர் - அகத்ததோ புறத்ததோ எனக் கருதப்படும் உயிர்; 31. நறத்து - தேனிடத்து; பில்குற்று - துளித்து, சிந்தி; முகடு - மேலிடம், கன்னிமாடம்; 32. அல்லி மலர் - அகவிதழையுடைய தாமரை மலர்; 33. தனித் திகிரி - ஒப்பற்ற ஆணைச்சக்கரம்; வயம் - வசமானது; 34. நைவளம் - நட்ட பாடை என்னும் குறிஞ்சிப்பண்; நவிற்று மொழி - பேசுகின்ற சீதை; வையம் நுகர் கொற்றவன் - உலகை ஆண்டனுபவித்த தயரதன், உலகை உண்ட இராமன்; கருத்துளது - மனமும் மற்றும் உள்ள கரணங்களும்.

**முறைப்படி சீதை வணங்கற்குரியாரை வணங்கித் தந்தையின் அருகிருந்தல்**

மா தவரை முற்கொள வணங்கி, நெடு மன்னன்
பாத மலரைத் தொழுது, கண்கள் பனி சோரும்
தாதை அருகு இட்ட தவிசில், தனி இருந்தாள்—
போதினை வெறுத்து, அரசர் பொன் மனை புகுந்தாள். 35

**விசுவாமித்திரரின் வியப்பு**

அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைந்தான்:
'பச்சை மலை ஒத்த படிவத்து, அடல் இராமன்,
நச்சுடை வடிக் கண் மலர் நங்கை இவள் என்றால்,
இச் சிலை கிடக்க; மலை ஏழையும் இருனே?' 36

**கடைக்கண்ணினால் சீதை இராமனைக் கண்டு களித்தல்**

எய்ய வில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்,
மெய் விளைவு இடத்து, முதல் ஐயம் விடலுற்றாள்,
ஐயனை, அகத்து வடிவே அல, புறத்தும்,
கை வளை திருத்துபு, கடைக் கணின் உணர்ந்தாள். 37

கருங் கடை நெடுங் கண் ஒளி யாறு நிறை கண்ணப்
பெருங் கடலின் மண்ட, உயிர் பெற்று இனிது உயிர்க்கும்,
அருங் கலன் அணங்கு-அரசி, ஆர் அமிழ்து அனைத்தும்,
ஒருங்குடன் அருந்தினரை ஒத்து, உடல் தடித்தாள். 38

கணங் குழை, 'கருத்தின் உறை கள்வன் எனல் ஆனான்,
வணங்கு வில் இறுத்தவன்' எனத் துயர் மறந்தாள்;
அணங்குறும் அவிச்சை கெட, விச்சையின் அகம்பாடு
உணர்ந்து, அறிவு முற்று பயன் உற்றவரை ஒத்தாள். 39

**திருமண நாள் குறித்தல்**

கொல் உயர் களிற்று அரசர் கோமகன் இருந்தான்,
கல்வி கரை உற்ற முனி கௌசிகனை, 'மேலோய்!
வல்லி பொரு சிற்றிடை மடந்தை மண நாள் ஆம்,
எல்லையில் நலத்த, பகல் என்று? உரைசெய்க!' என்றான். 40

36. அச்சு - அச்சாணி; அந்தணன் - கோசிகன்; நச்சு - நஞ்சு; வடிக் கண் - மாவடுவின் பிளவுபோன்ற கண்; 37. முதல் ஐயம் - முன்னர்க் கொண்ட ஐயம்; 38. கண்ணக் கடல் - யாவர்க்கும் கண்ணன் எனப்பட்ட இராமனாகிய கடல்; தடித்தாள் - பூரித்தாள்; 39. அகம்பாடு - உள்ளுறைப் பொருள்; 40. பகல் - நாள்.

'வாளை உகள, கயல்கள் வாவி படி மேதி
மூளை முதுகைக் கதுவ, மூரிய வரால் மீன்
பாளை விரியக் குதி கொள் பண்ணை வள நாடா!
நாளை' என, 'உற்ற பகல்' நல் தவன் உரைத்தான். 41

**தயரதன் முதலியோர் தத்தம் இருப்பிடம் செல்லச் சூரியன் மறைதல்**

சொற்ற பொழுதத்து, அரசர் கைதொழுது எழ, தன்
ஒற்றை வயிரச் சுரி கொள் சங்கின் ஒலி பொங்க,
பொன்-தடமுடிப் புது வெயில் பொழிதர, போய்,
நல் தவர் அனுச்சை கொடு, நல் மனை புகுந்தான். 42

அன்னம் அரிதின் பிரிய, அண்ணலும் அகன்று, ஓர்
பொன்னின் நெடு மாட வரை புக்கனன்; மணிப் பூண்
மன்னவர் பிரிந்தனர்கள்; மா தவர்கள் போனார்;
மின்னு சுடர் ஆதவனும், மேருவில் மறைந்தான். 43

## 22 கடிமணப் படலம்

**மிதிலையில் யாவரும் மகிழ்ந்திருத்தல்**

இடம் படு புகழ்ச் சனகர் கோன் இனிது பேண,
கடம் படு களிற்று அரசர் ஆதி, இடை கண்டோர்,
தடம் படு புயத்த சிறு தம்பியர்கள்காறும்,
உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார். 1

**சீதையின் சிந்தையும் சொல்லும்**

தேட அரு நலத்த புனல் ஆசை தெறலுற்றார்,
மாடு ஓர் தடம் உற்று, அதனை எய்தும் வகை காணார்,
ஈடு அழிவுற, தளர்வொடு ஏமுறுவர் அன்றே?
ஆடக வளைக் குயிலும், அந்நிலையள் ஆனாள். 2

41. மேதி - எருமை; மூரிய - வலிமையுடைய; பண்ணை - கழனி; உற்ற பகல் - திருமணத்திற்குரிய நாள்; 42. அனுச்சை - இசைவு; 43. ஆதவன் - சூரியன்.

**22 :** 1. துறக்க நகர் - சுவர்க்க லோக அமராவதி நகரம்; 2. ஏமுறுவர் - கலக்கமடைவர்.

'''உரவு ஏதும் இலார் உயிர் ஈதும்'' என,
கரவே புரிவார் உளரோ? கதிரோன்
வரவே, எனை ஆள் உடையான் வருமே!—
இரவே!—கொடியாய், விடியாய்' எனுமால். 3

'கரு நாயிறு போல்பவர் காலொடு போய்,
வரு நாள், அயலே வருவாய்;—மனனே!—
பெரு நாள், உடனே, பிரியாது உழல்வாய்;
ஒரு நாள் தரியாது ஒழிவார் உளரோ? 4

'கனை ஏழ் கடல்போல், கரு நாழிகைதான்,
வினையேன் வினையால் விடியாவிடின், நீ
தனியே பறவாய்; தகவு ஏதும் இலாய்—
பனைமேல் உறைவாய்!—பழி பூணுதியோ? 5

'அயில் வேல் அனல் கால்வன ஆம்; நிழல் ஆய்,
வெயிலே என நீ விரிவாய்;—நிலவே!
செயிர் ஏதும் இலார், உடல் தேய்வு உறுவார்,
உயிர் கோள் உறுவார், உளரோ? உரையாய்! 6

'மன்றல் குளிர் வாசம் வயங்கு அனல் வாய்,
மின் தொத்து, நிலா நகை, வீழ் மலயக்
குன்றில், குல மா முழையில், குடிவாழ்
தென்றற் புலியே! இரை தேடுதியோ? 7

'தெருவே திரிவார், ஒரு சேவகனார்,
இரு போதும் விடார்; இது என்னை கொலாம்?
கரு மா முகில் போல்பவர், கன்னியர்பால்
வருவார் உளரோ, குல மன்னவரே? 8

'தெருளா வினை தீயவர் சேர் நரகோ?
அருளான் நெறி ஓடும் அவாவதுவோ?
கருள் ஆர் கடலோ? கரை காண்பு அரிதால்!—
இருளானதுதான்—எனை ஊழிகொலாம்? 9

3. உரவு - வலிமை; ஈதும் - அளிப்போம்; கரவு - வஞ்சனை; 4. தரியாது - பொறுத்திராது; 5. கரு நாழிகை - இரவு; பனைமேல் உறைவாய் என்றது அன்றில் பறவையை; 6. கோள் உறுவார் - கைக்கொள்ளும் தொழில் உடையார்; 7. வாசம் - வாழிடம்; மலயக் குன்று - பொதிய மலை; முழை - குகை; தென்றல் புலி - தென்றற் காற்றாகிய புலி; 8. திரிதல் - பலகாற் செல்லல்; சேவகனார் - வீரர்; இராமனது உருவெளி கண்டு கூறியது; 9. கருள் - கருமை.

'பண்ணோ ஒழியா; பகலோ புகுதாது;
எண்ணோ தவிரா; இரவோ விடியாது;
உள் நோவு ஒழியா; உயிரோ அகலா;
கண்ணோ துயிலா; இதுவோ கடனே? 10

'இடையே வளை சோர, எழுந்து, விழுந்து,
அடல் ஏய் மதனன் சரம் அஞ்சினையோ?
உடல் ஒய்வுற, நாளும், உறங்கலையால்!—
கடலே!—உரை! நீயும், ஓர் கன்னிகொலாம்?' 11

**இரவில் இராமனது எண்ண அலைகள்**

என, இன்னன பன்னி, இருந்து உளைவாள்,
துனி உன்னி, நலம்கொடு சோர்வுறுகால்,
மனைதன்னில், வயங்குறும் வைகு இருள்வாய்,
அனகன் நினைகின்றன யாம் அறைவாம்: 12

'முன் கண்டு, முடிப்ப அரு வேட்கையினால்,
என் கண் துணைகொண்டு, இதயத்து எழுதி,
பின் கண்டும், ஓர் பெண் கரை கண்டிலெனால்;—
மின் கண்டவர் எங்கு அறிவார் வினையே? 13

'திருவே அனையாள் முகமே! உயிரின்
கருவே, கனியே, விளை காம விதைக்கு
எருவே! மதியே! இது என் செய்தவா?
ஒருவேனொடு நீ உறவாகலையோ? 14

'கழியா உயிர் உந்திய காரிகைதன்
விழி போல வளர்ந்தது; வீகிலதால்;
அழி போர் இறைவன் பட, அஞ்சியவன்
பழி போல, வளர்ந்தது—பாய் இருளே! 15

'நினையாய் ஒரு கால்; நெடிதோ நெறிதான்?
வினவாதவர்பால், விடை கொண்டிலையோ?—
புன மான் அனையாரொடு போயின என்
மனனே!—எனை நீயும் மறந்தனையோ? 16

10. கடன் - கடமை, முறைமை; 11. கன்னி - திருமணம் ஆகா இள நங்கை; 12. இன்னன - இத்தன்மையவான; உளைவாள் - வருந்துபவள்; துனி - துன்பம்; அனகன் - குற்றமற்றவனாகிய இராமன்; அறைவாம் - சொல்லுவோம்; 13. முன் - முதலில், கன்னிமாடத்தில்; பின் - மண்டபத்தில்; பெண் - பெண்ணழகு, மின் - மின்னல்; 14. ஒருவேனொடு - தனித்துள்ள என்னோடு; உறவு - நட்பு; 15. உந்திய - வெளியேற்றுதற்கு; 16. நெறி - வழி; வினவாதவர் - கேளாதவர், சீதை.

'தன் நோக்கு எரி கால், தகை, வாள் அரவின்
பல் நோக்கினது என்பது பண்டுகொலாம்;
என் நோக்கினும், நெஞ்சினும், என்றும் உளார்
மென் நோக்கினதே—கடு வல் விடமே! 17

'கல், ஆர் மலர் சூழ் கழி, வார் பொழிலோடு,
எல்லாம் உளஆயினும், என் மனமோ—
சொல் ஆர் அமுதின் சுவையோடு இனிது ஆம்
மெல் ஓதியர்தாம் விளையாடு இடமே!'* 18

**திருமண முரசு அறையச் சனகன் ஆணையிடல்**

மானவர் பெருமானும், மண நினைவினன் ஆக,
'''தேன் அமர் குழலாள்தன் திருமணவினை, நாளை;
பூ, நகு மணி வாசம், புனை நகர் அணிவீர்!'' என்று
ஆணையின்மிசை, யாணர், அணி, முரசு அறைக!' என்றான். 19

**நகரமாந்தரின் மகிழ்ச்சி**

முரசு அறைதலும், மான முதியரும், இளையோரும்,
விரை செறி குழலாரும், விரவினர் விரைகின்றார்;
உரை செறி கிளையோடும், உவகையின் உயர்கின்றார்;
கரை தெரிவு அரிது ஆகும் இரவு ஒரு கரை கண்டார். 20

**சூரியன் ஒளி வீசி விளங்குதல்**

'அஞ்சன ஒளியானும், அலர்மிசை உறைவாளும்,
எஞ்சல் இல் மணம், நாளைப் புணர்குவர்' எனலோடும்,
செஞ் சுடர் இருள் கீறி, தினகரன், ஒரு தேர்மேல்,
மஞ்சனை அணி கோலம் காணிய என, வந்தான். 21

**நகரை மாந்தர் அணி செய்தல்**

தோரணம் நடுவாரும், தூண் உறை பொதிவாரும்,
பூரண குடம் எங்கும் புனை துகில் புனைவாரும்,
கார் அணி நெடு மாடம் கதிர் மணி அணிவாரும்,
ஆரண மறைவாணர்க்கு இன் அமுது அடுவாரும், 22

17. வாள் அரவு - கொடிய பாம்பு; பல் நோக்கினது - பல்லை இடமாகக் கொண்டது; 18. கல் - மலை; 19. மானவர் - மானிடர்; யாணர் - அழகிய; 20. மான முதியர் - பெருமை மிக்க பெரியோர்; கரை கண்டார் - முடிவைக் கண்டார்; 21. அஞ்சன ஒளியான் - மை வண்ணனான இராமன்; அலர் - மலர்; எஞ்சல் - குறைதல்; சுடர் - கிரணம்; தினகரன் - சூரியன்; 22. ஆரண மறைவாணர் - வேதம் ஓதும் அந்தணர்; அமுது - உணவு; அடுவார் - சமைப்பார்.

அன்ன மென் நடையாரும், மழ விடை அனையாரும்,
கன்னி நல் நகர், வாழை கமுகொடு நடுவாரும்,
பன்ன அரு நிறை முத்தம் பரியன தெரிவாரும்,
பொன் அணி அணிவாரும், மணி அணி புனைவாரும், 23

சந்தனம், அகில், நாறும் சாந்தொடு, தெரு எங்கும்
சிந்தினர் திரிவாரும், செழுமலர் சொரிவாரும்,
இந்திரதனு நாணும் எரி மணி நிரை மாடத்து,
அந்தம் இல் விலை ஆரக் கோவைகள் அணிவாரும், 24

தளம் கிளர் மணி கால, தவழ் சுடர் உமிழ் தீபம்,
இளங் குளிர் முளை ஆர் நல் பாலிகை இனம், எங்கும்,
விளிம்பு பொன் விரை நாற, வெயிலொடு நிலவு ஈனும்,
பளிங்குடை உயர் திண்ணைப் பத்தியின் வைப்பாரும், 25

மந்தர மணி மாட முன்றிலின்வயின் எங்கும்,
அந்தம் இல் ஒளி முத்தின், அகல் நிரை ஒளி நாறி,
அந்தர நெடு வான் மீன் அவண் அலர்குவது என்ன,
பந்தரின் நிழல் வீச, படர் வெயில் கடிவாரும், 26

வயிரம் மின் ஒளி ஈனும், மரகத மணி வேதி,
செயிர் அற ஒளிர் தீபம் சிலதியர் கொணர்வாரும்,
வெயில் விரவிய பொன்னின் மிடை கொடி, மதி தோயும்
எயிலினில் நடுவாரும், அகில் எரி இடுவாரும், 27

பண்டியில் நிறை வாசப் பனி மலர் கொணர்வாரும்,
தண்டலை இலையோடு, கனி பல தருவாரும்,
குண்டலம் வெயில் வீசக் குரவைகள் புரிவாரும்,
உண்டை கொள் மத வேழத்து ஓடைகள் அணிவாரும்,* 28

கலவைகள் புனைவாரும், கலை நல தெரிவாரும்,
மலர் குழல் மலைவாரும், மதிமுகம் மணி ஆடித்
திலகம் முன் இடுவாரும், சிகழிகை அணிவாரும்,
இலவு இதழ் பொலி கோலம் எழில் பெற இடுவாரும்,* 29

23. மழ விடை - இளங்காளை; கன்னி - அழியாமை; 24. சாந்து - தைலம்; இந்திரதனு - வானவில்; ஆரக் கோவை - முத்து வடம்; 25. தளம் கிளர் மணி - விளக்குத்தண்டின் அடிப்பகுதியில் பதிக்கப்பட்ட இரத்தினங்கள்; தீபம் - விளக்கு; பாலிகை - முளைப்பாலிகை; பத்தி - வரிசை; 26. ஒளி நாறி - ஒளிவீசி; கடிவார் - தடுப்பார்; 27. வேதி - மேடை; 28. குரவை - கை கோத்து ஆடல்; உண்டை - கவளம்; 29. கலை நல - ஆடைகளில் நல்லன; சிகழிகை - முடிமாலை; கோலம் - செம்பஞ்சிக் கோலம்.

தப்பின மணி காசும், சங்கமும், மயில் அன்னார்
ஒப்பனை புரி போதும், ஊடலின் உகு போதும்,
துப்பு உறழ் இள வாசச் சுண்ணமும், உதிர் தாதும்,
குப்பைகள் என, வாரிக்கொண்டனர் கலைவாரும், 30

மன்னவர் வருவாரும், மறையவர் நிறைவாரும்,
இன் இசை மணி யாழின் இசை மது நுகர்வாரும்,
சென்னியர் திரிவாரும், விறலியர் செறிவாரும்,
கன்னலின் மண வேலைக் கடிகைகள் தெரிவாரும், 31

கணிகையர் தொகுவாரும், கலை பல பயில்வாரும்,
பணி அணி இன முத்தம், பல இரு நில மன்னர்
அணி நெடு முடி ஒன்று ஒன்று அறைதலின், உகும் அம்பொன்
மணி மலை தொகுமன்னன் வாயிலின் மிடைவாரும், 32

கேடகம் வெயில் வீச, கிளர் அயில் நிலவு ஈன,
கோடு உயர் நெடு விஞ்சைக் குஞ்சரம்அது போல,
ஆடவர் திரிவாரும், அரிவையர் களி கூர,
நாடகம் நவில்வாரும், நகை உயிர் கவர்வாரும், 33

கதிர் மணி ஒளி கால, கவர் பொருள் தெரியாவாறு,
எதிர் எதிர் சுடர் விம்முற்று எழுதலின், இளையோரும்,
மது விரி குழலாரும், மதிலுடை நெடுமாடம்
அது, இது, என ஓராது, அலமரல் உறுவாரும்,* 34

தேர்மிசை வருவாரும், சிவிகையில் வருவாரும்,
ஊர்தியில் வருவாரும், ஒளி மணி நிரை ஓடைக்
கார்மிசை வருவாரும், கரிணியில் வருவாரும்,
பார்மிசை வருவாரும், பண்டியில் வருவாரும்,* 35

முத்து அணி அணிவாரும், மணி அணி முனிவாரும்,
பத்தியின் நிமிர் செம் பொற் பல கலன் மகிழ்வாரும்,
தொத்து உறு தொழில் மாலை சுரி குழல் அணிவாரும்,
சித்திர நிரை தோயும் செந் துகில் புனைவாரும், 36

30. தப்பின - தவறி வீழ்ந்த; 31. சென்னியர் - பாணர்; கன்னல் - நாழிகை வட்டில்; கடிகைகள் - நாழிகைகள்; 32. கணிகையர் -பொதுமகளிர், நாடகம் நிகழ்த்துவோர்; 33. வெயில் - ஒளி; விஞ்சை - போர்க்கல்வி; குஞ்சரம் - யானை; நகை - சிரிப்பு; 34. கவர் பொருள் - விரும்பிய பொருள்; 35. ஓடைக்கார் - நெற்றிப் பட்டத்தையுடைய மேகம் போன்ற ஆண் யானை; கரிணி - பெண் யானை.

விடம் நிகர் விழியாரும், அமுது எனும் மொழியாரும்,
கிடை புரை இதழாரும், கிளர் நகை வெளியாரும்,
தட முலை பெரியாரும், தனி இடை சிறியாரும்,
பெடை அன நடையாரும், பிடி என வருவாரும்,— 37

உள்நிறை நிமிர் செல்வம் ஒரு துறை செல என்றும்
கண்ணுறல் அரிது என்றும் கருதுதல் அரிது அம்மா!
எண்ணுறு சுடர் வானத்து இந்திரன் முடி சூடும்
மண்ணுறு திருநாளே ஒத்தது—அம் மண நாளே. 38

மணவினை மண்டபத்திற்குத் தயரதன் வருகை

கரை தெரிவு அரியது, கனகம் வேய்ந்தது,
வரை என உயர்ந்தது, மணியின் செய்தது,
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்,
அரைசர்தம் அரசனும் அணுகல் மேயினன். 39

வெண்குடை இள நிலா விரிக்க, மின் எனக்
கண் குடை இன மணி வெயிலும் கான்றிட,
பண் குடை வண்டினம் பாட, ஆடல் மா
மண் குடை தூளி விண் மறைப்ப,—ஏகினன். 40

மங்கல முரசு இனம் மழையின் ஆர்த்தன;
சங்குகள் முரன்றன; தாரை, பேரிகை,
பொங்கின; மறையவர் புகலும் நான்மறை,
கங்குலின் ஒலிக்கும் மா கடலும் போன்றதே. 41

பரந்த தேர், களிறு, பாய் புரவி, பண்ணையில்
தரம் தரம் நடந்தன; தானை வேந்தனை
நிரந்தரம் தொழுது எழும் நேமி மன்னவர்,
புரந்தரன் புடை வரும், அமரர் போன்றனர். 42

தயரதன், சனகன் முதலியோர் ஆசனத்து அமர்தல்

அனையவன், மண்டபம் அணுகி, அம் பொனின்
புனை மணி ஆதனம் பொலியத் தோன்றினன்;
முனிவரும், மன்னரும், முறையின் ஏறினர்;
சனகனும், தன் கிளை தழுவ, ஏறினன். 43

37. கிடை - நெட்டி; 38. நிமிர் - மிக்க; மண்ணுறு - அலங்கரிக்கின்ற; 39. நிரைவளை - சீதை; அரைசர்தம் அரசன் - தயரதன்; 40. கண் குடை - கண்ணைக் கூசச் செய்கின்ற; 42. பண்ணையில் - கூட்டமாய்.

திருமண மண்டபத்தின் தனியழகு

மன்னரும், முனிவரும், வானுளோர்களும்,
அன்ன மென் நடை அணங்கு அனைய மாதரும்,
துன்னினர் துவன்றலின், சுடர்கள் சூழ்வரும்
பொன் மலை ஒத்தது—அப் பொரு இல் கூடமே. 44

புயல் உள, மின் உள, பொரு இல் மீன் உள,
இயல் மணிஇனம் உள, சுடர் இரண்டு உள,
மயன் முதல் திருத்திய மணி செய் மண்டபம்,
அயன் முதல் திருத்திய அண்டம் ஒத்ததே. 45

எண் தவ முனிவரும், இறைவர் யாவரும்,
அண்டரும், பிறரும், புக்கு அடங்கிற்று; ஆதலால்,
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணி அணி உதரம் ஒத்ததே.* 46

தராதலம் முதல் உலகு அனைத்தும் தள்ளுற,
விராவின, குவிந்தன, விளம்ப வேண்டுமோ?
அரா-அணை துறந்து போந்து, அயோத்தி எய்திய
இராகவன் செய்கையை இயம்புவாம்அரோ: 47

மங்கல நீராடி இராமன் மணக்கோலம் பூணல்

சங்கு இனம் தவழ் கடல் ஏழில் தந்தவும்,
சிங்கல் இல் அரு மறை தெரிந்த தீர்த்தமும்,
கங்கையே முதலிய கலந்த நீரினால்,
மங்கல மஞ்சனம் மரபின் ஆடியே, 48

கோது அறு தவத்துத் தம் குலத்துளோர் தொழும்
ஆதி அம் சோதியை அடி வணங்கினான்—
காது இயல், கயல் விழிக் கன்னிமார்களை,
வேதியர்க்கு அரு மறை விதியின் நல்கியே. 49

அழி வரு தவத்தினொடு, அறத்தை ஆக்குவான்,
ஒழிவு அருங் கருணை ஓர் உருவு கொண்டென,
எழுத அரு வடிவு கொண்டு, இருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவு என, கலவை, சாத்தியே; 50

44. துவன்றல் - நிறைதல்; பொன் மலை - மேருமலை; கூடம் - மண்டபம்; 45. மீன் - விண்மீன், மகளிர் கண்கள்; 46. உதரம் - வயிறு; 47. தராதலம் - பூமி; தள்ளுற - தள்ளாட; 48. சிங்கல் - கெடுதல்; 49. ஆதி அம் சோதி - குலதெய்வமான அரங்கநாதன்; 50. கலவை - கலவைச் சந்தனம்.

மங்கல முழு நிலா மலர்ந்த திங்களை,
பொங்கு இருங் கருங் கடல் பூத்தது ஆம் என,
செங்கிடைச் சிகழிகை, செம் பொன் மாலையும்,
தொங்கலும், துயல்வர, சுழியம் சூடியே; 51

ஏதம் இல் இரு குழை, இரவு, நன் பகல்,
காதல் கண்டு உணர்ந்தன, கதிரும் திங்களும்,
சீதைதன் கருத்தினைச் செவியின் உள்ளுற,
தூது சென்று உரைப்பன போன்று தோன்றவே; 52

கார் விடக் கறையுடை, கணிச்சி, வானவன்
வார் சடைப் புடையின், ஓர் மதி மிலைச்ச, தான்
சூர் சுடர்க் குலம் எலாம் சூடினான் என,
வீர பட்டத்தொடு திலகம் மின்னவே; 53

சக்கரத்து அயல் வரும் சங்கம் ஆம் என
மிக்கு ஒளிர் கழுத்து அணி தரள வெண் கொடி
மொய்க் கருங் குழலினாள், முறுவல் உள்ளுறப்
புக்கன நிறைந்து, மேல் பொடிப்ப போன்றவே. 54

பந்தி செய் வயிரங்கள் பொறியின் பாடு உற
அந்தம் இல் சுடர் மணி அழலின் தோன்றலால்,
சுந்தரத் தோள் அணி வலயம், தொல்லை நாள்
மந்தரம் சுற்றிய அரவை மானுமே. 55

கோவையின் பெரு வட முத்தம் கோத்தன,
காவல் செய் தடக் கையின் நடுவண் காந்துவ,
'மூவகை உலகிற்கும் முதல்வன் ஆம்' என,
ஏ வரும் பெருங் குறி இட்ட போன்றவே. 56

மாண்ட பொன் மணி அணி வலயம் வந்து, எதிர்
வேண்டினர்க்கு உதவுவான் விரும்பி, கற்பகம்
ஈண்டு, தன் கொம்பிடை ஈன்றது ஆம் என,
காண்தகு தடக் கையில் கடகம் மின்னவே; 57

51. சிகழிகை - செங்கிடேச்சால் செய்த மாலை; சுழியம் - உச்சிக் கொண்டையில் அணியும் அணிவகை; 52. காதல் - சீதையின் காதல்; 53. சூர் - தெய்வத்தன்மையுள்ள; வீர பட்டம் - வீரர் நெற்றியில் அணியும் வீர பட்டிகை; 55. பொறியின் - பாம்பின் படப் பொறிகள் போல; பாடு உற - ஒளி விட; மானும் - ஒக்கும்; 56. ஏ வரும் - உயர்ச்சி பொருந்திய, சிறிய.

தேனுடை மலர்மகள் திளைக்கும் மார்பினில்,
தான் இடை விளங்கிய தகையின் ஆரம்தான்,
மீனொடு சுடர்விட விளங்கும் மேகத்து,
வான் இடு வில் என, வயங்கிக் காட்டவே; 58

நணுகவும் அரியதா நடக்கும் ஞானத்தர்
உணர்வு என, ஒளி திகழ் உத்தரீயம்தான்,
தணிவு அருங் கருணையான் கழுத்தில் சாத்திய,
மணி உமிழ் கதிர் என, மார்பில் தோன்றவே; 59

மேவ அருஞ் சுடர் ஒளி விளங்கும் மார்பின் நூல்,
'ஏவரும் தெரிந்து இனிது உணர்மின் ஈண்டு' என,
தேவரும், முனிவரும், தெரிக்கலா முதல்
மூவரும், தான் என, முடித்தது ஒத்ததே. 60

சுற்றும் நீள் தமனியச் சோதி பொங்க, மேல்
ஒற்றை மா மணி உமிழ் உதரபந்தனம்,
மற்றும் ஓர் அண்டமும், அயனும், வந்து எழ,
பொன் தடந் தாமரை பூத்த போன்றதே. 61

'மண்ணுறு சுடர் மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங் கடல்அதனை, கை வளர்
தண் நிறப் பாற்கடல் தழீஇயது ஆம்' என,
வெண் நிறப் பட்டு, ஒளி விளங்கச் சாத்தியே; 62

சலம் வரு தரளமும், தயங்கு நீலமும்,
அலம்வரு நிழல் உமிழ் அம் பொன் கச்சினுல்,
குலம் வரு கனக வான் குன்றை நின்று உடன்
வலம்வரு கதிர் என, வாளும் வீக்கியே; 63

முகை விரி சுடர் ஒளி முத்தின் பத்தி வான்
தொகை விரி பட்டிகைச் சுடரும் சுற்றிட,
தகை உடைவாள் எனும் தயங்கு வெய்யவன்
நகை இள வெயில் என, தொங்கல் நாற்றியே; 64

58. மீன் - மின், மின்னல், நீட்டல்விகாரம்; வான் இடு வில் - இந்திர வில்; 59. உத்தரீயம் - மேலாடை; 60. மார்பின் நூல் - பூணூல்; 61. உதர பந்தனம் - அரைப் பட்டிகை; 62. கண்ணுறு - பெருமை மிகுந்த; 64. பத்தி - வரிசை; பட்டிகை - அரைப் பட்டிகை.

காசொடு கண் நிழல் கஞல, கைவினை
ஏசறு கிம்புரி எயிறு வெண் நிலா
வீசலின், மகரவாய் விளங்கும் வாள் முகம்,
ஆசையை ஒளிகளால் அளந்து காட்டவே; 65

'இனிப் பரந்து உலகினை அளப்பது எங்கு?' என,
தனித்தனி தடுப்பன போலும் சால்பின;
நுனிப்ப அரு நுண் வினைச் சிலம்பு நோன் கழல்,
பனிப் பருந் தாமரைப் பாதம் பற்றவே; 66

இன்னணம் ஒளிர்தர, இமையவர்க்கு எலாம்,
தன்னையே அனையது ஓர் கோலம் தாங்கினன்—
பன்னக மணி விளக்கு அழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினல் அனந்தல் நீங்கினன். 67

முப் பரம் பொருளிற்குள் முதலை, மூலத்தை
இப் பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை,
அப்பனை, அப்பினுள் அமிழ்தை, தன்னையே
ஒப்பனை, ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ? 68

**இராமன் தேர் ஏறி வரு காட்சி**

பல் பதினுயிரம் பசுவும், பைம் பொனும்,
எல்லை இல் நிலனொடு, மணிகள் யாவையும்,
நல்லவர்க்கு உதவினன்; நவிலும் நான்மறைச்
செல்வர்கள் வழுத்துற, தேர் வந்து ஏறினன். 69

பொன் திரள் அச்சது; வெள்ளிச் சில்லி புக்கு
உற்றது; வயிரத்தின் உற்ற தட்டது;
சுற்று உறு நவ மணி சுடரும் தோற்றத்தது;
ஒற்றை ஆழிக் கதிர்த் தேரொடு ஒப்பதே. 70

நூல் வரும் தகையன, நுனிக்கும் நோன்மைய,
சால் பெருஞ் செவ்விய, தருமம் ஆதிய
நாலையும் அனையன, புரவி நான்கு, ஒரு
பாலமை உணர்ந்தவன் பக்கம் பூண்டவே.* 71

65. கிம்புரி - சுறுமீனின் திறந்த வாய் வடிவில் செய்த தொடையணி, குறங்கு செறி; 66. நோன் கழல் - வலிய வீரக்கழல்; 67. பன்னகம் - பாம்பு, ஆதிசேடன்; அனந்தல் - யோகநித்திரை; 68. இப் பரம் - இவ்வுலக பாரம்; 70. சில்லி - சக்கரம்; 71. தகையன - குணங்களையுடையன; நுனிக்கும் - சாரதியின் கருத்தைக் கூர்ந்தறியும்; பாலமை - தகுதி.

அனையது ஓர் தேரினில், அருணன் நின்றெனப்
பனி வரு மலர்க்கண் நீர்ப் பரதன் கோல் கொள,
குனி சிலைத் தம்பி பின் கூட, ஏனையன்
இனிய பொற் கவரி கால் இயக்க, ஏகினான். 72

மண்ணவரும் விண்ணவரும் மகிழ்வுற்றமை

அமைவு அரு மேனியான் அழகின் ஆயதோ?
கமை உறு மனத்தினால் கருத வந்ததோ?
சமைவு உற அறிந்திலம்; தக்கது ஆகுக—
இமையவர் ஆயினர் இங்கு உளாருமே! 73

'வரம்பு அறும் உலகினை வலிந்து, மாய்வு இன்றி,
திரம் பயில் அரக்கர்தம் வருக்கம் தேய்வு இன்று
நிரம்பியது' எனக் கொடு, நிறைந்த தேவரும்,
அரம்பையர் குழாத்தொடும், ஆடல் மேயினர். 74

சொரிந்தனர் மலர் மழை; சுண்ணம் தூவினர்;
விரிந்து ஒளிர் காசு, பொன், தூசு, வீசினர்;
பரிந்தனர்; அழகினைப் பருகினர்கொலோ?
தெரிந்திலம், திருநகர் மகளிர் செய்கையே! 75

வள்ளலை நோக்கிய மகளிர், மேனியின்
எள்ள அரும் பூண் எலாம் இரிய, நிற்கின்றார்—
'உள்ளன யாவையும் உதவி, பூண்டவும்
கொள்ளையிற் கொள்க!' எனக் கொடுக்கின்றாரினே. 76

திருமண மண்டபம் சார்ந்த இராமன் முனிவரையும்
தந்தையையும் தொழுது அமர்தல்

எஞ்சல் இல் உலகத்து உள்ள எறி படை அரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்தின் சுற்ற, கொற்றவன் இருந்த கூடம்,
வெஞ் சினத் தனுவலானும், மேரு மால் வரையில் சேரும்
செஞ் சுடர்க் கடவுள் என்ன, தேரிடைச் சென்று சேர்ந்தான்.

இரதம் ஆண்டு இழிந்த பின்னர், இரு மருங்கு, இரண்டு கையும்,
பரதனும் இளைய கோவும், பரிந்தனர் ஏந்த, பைந் தார்
வரதனும் எய்தி, மை தீர் மா தவர்த் தொழுது, நீதி
விரத மெய்த் தாதை பாதம் வணங்கி, மாடு இருந்த வேலை,

72. அருணன் - சூரியனது தேர்ப்பாகன்; கோல் - குதிரையைச் செலுத்தும் கோல்; 73. கமை - பொறுமை; சமைவு - பொருத்தம்; இமையவர் - இமையாத கண்ணர்; 74. திரம் - நிலைபேறு; 75. சுண்ணம் - வாசனைப் பொடி; காசு - இரத்தினம்; 77. செஞ் சுடர்க் கடவுள் - சூரியன்; 78. வரதன் - வரமளிப்பவன், இராமன்; மாடு - பக்கம்; வேலை - பொழுது.

மண மண்டபத்துள் சீதை வந்த காட்சி

சிலையுடைக் கயல், வாள் திங்கள், ஏந்தி, ஓர் செம் பொன் கொம்பர்,
முலை இடை முகிழ்ப்ப, தேர்மேல் முன்திசை முளைத்தது அன்னாள்,
அலை கடல் பிறந்து, பின்னை அவனியில் தோன்றி, மீள
மலையிடை உதிக்கின்றாள்போல், மண்டபம்அதனில் வந்தாள். 79

மணவணி காண வானவர் வானத்து வருதல்

நின்றி வானவர் எலாம், இருந்த நம்பியை,
'துன்று இருங் கருங் கடல் துவைப்பத் தோன்றிய
மன்றல் அம் கோதையாள் மாலை சூட்டிய
அன்றினும், இன்று உடைத்து அழகு' என்றார்அரோ. 80

ஒலி கடல் உலகினில், உம்பர், நாகரில்,
பொலிவது மற்று இவள் பொற்பு; என்றால், இவள்
மலிதரு மணம் படு திருவை, வாயினால்,
மெலிதரும் உணர்வினேன், என் விளம்புகேன்? 81

இந்திரன் சசியொடும் எய்தினான்; இளஞ்
சந்திர மௌலியும் தையலாளொடும்
வந்தனன்; மலர் அயன் வாக்கினாளுடன்
அந்தரம் புகுந்தனன்;—அழகு காணவே. 82

வசிட்டன் திருமணச் சடங்கு செய்தல்

நீந்த அருங் கடல் என, நிறைந்த வேதியர்,
தோய்ந்த நூல் மார்பினர், சுற்ற, தொல் நெறி
வாய்ந்த நல் வேள்விக்கு, வசிட்டன், மை அற
ஏய்ந்தன கலப்பையோடு இனிதின் எய்தினான். 83

தண்டிலம் விரித்தனன்; தருப்பை சாத்தினன்;
மண்டலம் விதிமுறை வகுத்து, மென் மலர்
கொண்டு நெய் சொரிந்து, எரி குழும, மூட்டினன்;
பண்டு உள மறை நெறி பரவிச் செய்தனன். 84

மணத் தவிசில் இராமனும் சீதையும்

மன்றலின் வந்து, மணத் தவிசு ஏறி,
வென்றி நெடுந் தகை வீரனும், ஆர்வத்து
இன் துணை அன்னமும், எய்தி இருந்தார்;
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார். 85

79. முன்திசை - கீழ்த்திசை; 81. பொற்பு - அழகு; 82. சசி - இந்திராணி; இளஞ்சந்திர மௌலி - சிவபெருமான்; வாக்கினாள் - கலைமகள்; அந்தரம் - வானம்; 83. கலப்பை - துணைக்கருவிகள்; 84. தண்டிலம் - மணல்; அக்கினி வளர்க்குமிடத்துப் பரப்பப்படுவது; மண்டலம் - வட்டம்; 85. மன்றல் - மணவறை.

சனகன் தாரை வார்த்துக் கொடுத்தல்

கோமகன் முன் சனகன், குளிர் நல் நீர்,
'பூமகளும் பொருளும் என, நீ என்
மா மகள்தன்னெடும் மன்னுதி' என்ன,
தாமரை அன்ன தடக் கையின், ஈந்தான். 86

வாழ்த்து ஒலியும் மலர்மாரி முதலியனவும்

அந்தணர் ஆசி, அருங் கல மின்னர்
தந்த பல்லாண்டு இசை, தார் முடி மன்னர்
வந்தனை, மா தவர் வாழ்த்து ஒலியோடு
முந்திய சங்கம் முழங்கின மாதோ. 87

வானவர் பூ மழை, மன்னவர் பொன் பூ,
ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம்,
தான் நகு நாள்மலர், என்று இவைதம்மால்,
மீன் நகு வானின் விளங்கியது, இப் பார். 88

இராமன் சீதையுடன் தீ வலம் வருதல்

வெய்ய கனல்தலை வீரனும், அந் நாள்,
மை அறு மந்திரம் மும்மை வழங்கா,
நெய் அமை ஆவுதி யாவையும் நேர்ந்தான்,
தையல் தளிர்க் கை தடக் கை பிடித்தான். 89

இடம் படு தோளவனேடு, இயை வேள்வி
தொடங்கிய வெங் கனல் சூழ்வரு போதின்,
மடம் படு சிந்தையள், மாறு பிறப்பின்,
உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள். 90

அம்மி மிதித்து அருந்ததி காணல்

வலம்கொடு தீயை வணங்கினர், வந்து,
பொலம் பொரி செய்வன செய் பொருள் முற்றி,
இலங்கு ஒளி அம்மி மிதித்து, எதிர் நின்ற
கலங்கல் இல் கற்பின் அருந்ததி கண்டார். 91

மனைவியுடன் இராமன் மாளிகை புகுதல்

மற்று உள, செய்வன செய்து, மகிழ்ந்தார்;
முற்றிய மா தவர் தாள் முறை சூடி,
கொற்றவனைக் கழல் கும்பிடலோடும்,
பொற்றெடி கைக்கொடு நல் மனை புக்கான். 92

87. அருங் கலம் - அணிகலம்; 88. நகு - மலர்ந்த, விளங்கிய; 39. மும்மை - மும்முறை; 90. மடம் - கணவன் கற்பித்தபடி ஒழுகும் குணம்; மாறு பிறப்பு - மறு பிறவி.

மங்கல ஆரவாரம்

ஆர்த்தன பேரிகள்; ஆர்த்தன சங்கம்;
ஆர்த்தன நான்மறை; ஆர்த்தனர் வானோர்;
ஆர்த்தன பல் கலை; ஆர்த்தன பல்லாண்டு;
ஆர்த்தன வண்டு இனம்; ஆர்த்தன வேலை. 93

சீதையுடன் இராமன் சென்று அன்னைமாரை வணங்குதல்

கேகயன் மா மகள் கேழ் கிளர் பாதம்,
தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா,
ஆய தன் அன்னை அடித் துணை சூடி,
தூய சுமித்திரை தாள் தொழலோடும், 94

மாமியர் மகிழ்ச்சியுரையும் பரிசும்

அன்னமும், அன்னவர் அம் பொன் மலர்த் தாள்
சென்னி புனைந்தனள்; சிந்தை உவந்தார்,
கன்னி, அருந்ததி, காரிகை, காணா,
'நல் மகனுக்கு இவள் நல் அணி' என்றார். 95

சங்க வளைக் குயிலைத் தழீஇ நின்றார்,
'அம் கணனுக்கு உரியார் உளர் ஆவார்
பெண்கள் இனிப் பிறர் யார் உளர்?' என்றார்;
கண்கள் களிப்ப, மனங்கள் களிப்பார். 96

'எண் இல கோடி பொன், எல்லை இல் கோடி
வண்ண அருங் கலம், மங்கையர் வெள்ளம்,
கண் அகல் நாடு, உயர் காசொடு தூசும்,
பெண்ணின் அணங்கு அனையாள் பெறுக!' என்றார். 97

இராமன் சீதையோடு பள்ளி சேர்தல்

நூற் கடல் அன்னவர் சொற் கடன் நோக்கி,
மால் கடல் பொங்கும் மனத்தவளோடும்,
கால் கடல்போல் கருணைக்கடல்; பண்டைப்
பாற்கடல் ஒப்பது ஓர் பள்ளி அணைந்தான். 98

மங்கல அங்கியை வசிட்டன் வளர்த்தல்

பங்குனி உத்தரம் ஆன பகற்போது,
அங்க இருக்கினில், ஆயிர நாமச்
சிங்கம் மணத் தொழில் செய்த திறத்தால்,
மங்கல அங்கி, வசிட்டன் வகுத்தான். 99

94. வணங்கா - வணங்கி; 95. காரிகை - கட்டழகுடைய சீதை; 96. அம் கணன் - அழகிய திருக்கண்களுடையவன்; 98. மால் - வேட்கை; கால் கடல் - கரு நிறமுள்ள கடல்; 99. இருக்கினில் - வேத விதிப்படி.

**பரதன் முதலிய மூவருக்கும் திருமணம்**

வள்ளல் தனக்கு இளையோர்கள்தமக்கும்
எள்ளல் இல் கொற்றவன், 'எம்பி அளித்த
அள்ளல் மலர்த் திரு அன்னவர்தம்மைக்
கொள்ளும்' எனத் தமரோடு குறித்தான்.* 100

கொய்ந் நிறை தாரன், குசத்துவசப் பேர்
நெய்ந் நிறை வேலவன், மங்கையர் நேர்ந்தார்;
மைந் நிறை கண்ணியர், வான் உறை நீரார்,
மெய்ந் நிறை மூவரை மூவரும் வேட்டார். 101

**மிதிலையில் சில நாள் தயரதன் தங்கியிருத்தல்**

வேட்டு அவர் வேட்டபின், வேந்தனும், மேல்நாள்
கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால்,
ஈட்டிய மெய்ப் பொருள் உள்ளன எல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டளவு ஈந்தான். 102

ஈந்து, அளவு இல்லது ஓர் இன்பம் நுகர்ந்தே,
ஆய்ந்து உணர் கேள்வி அருந் தவரோடும்,
வேந்தனும், அந் நகர் வைகினன்; மெள்ளத்
தேய்ந்தன நாள் சில; செய்தது உரைப்பாம்; 103

## 23 பரசுராமப் படலம்

**விசுவாமித்திரர் ஆசி கூறி விடைபெற்றுச் செல்லுதல்**

தான் ஆவது ஓர் வகையே நனி சனகன் தரு தயலும்
நானு விதம் உறு போகமும் நுகர்கின்ற அந் நாள்வாய்,
ஆனு மறை நெறி ஆசிகள் முனி கோசிகன் அருளி,
போனுன் வட திசைவாய், உயர் பொன் மால் வரை புக்கான்.

100. தமர் - சுற்றத்தார்; குறித்தான் - பேசி நிச்சயித்தான்; 101. குசத்துவசன் - சனகன் தம்பி; நேர்ந்தார் - ஒத்தார், பொருந்தினர்; மெய்ந் நிறை மூவர் - பருவம் நிரம்பிய கன்னியர் மூவர்: மாண்டவி, ஊர்மிளை, சுருதகீர்த்தி; 102. சீர்த்தி - மிகுபுகழ்; 103. மெள்ளத்தேய்ந்தன - மெல்லக் கழிந்தன.

23: 1. நானு விதம் - பலவகை; போகம் நுகர்தல் - இன்பம் துய்த்தல்.

### தயரதன் சுற்றத்தாருடன் அயோத்திக்குப் பயணமாதல்

அப் போதினில், முடி மன்னவன், 'அணி மா நகர் செலவே,
இப்போது, நம் அனிகம்தனை எழுக!' என்று இனிது இசையா,
கைப் போதகம் நிகர் காவலர் குழு வந்து, அடி கதுவ,
ஒப்பு ஓத அரு தேர்மீதினில், இனிது ஏறினன், உரவோன். 2

தன் மக்களும், மருமக்களும், நனி தன் கழல் தழுவ,
மன் மக்களும், அயல் மக்களும், வயின் மொய்த்திட, மிதிலைத்
தொல் மக்கள்தம் மனம் உக்கு, உயிர் பிரிவு என்பது ஓர் துயரின்,
வன்மைக் கடல் புக, உய்ப்பது ஓர் வழி புக்கனன் மறவோன்.

### தம்பிமாரோடு இராமன் சென்ற காட்சி

முன்னே நெடு முடி மன்னவன் முறையில் செல, மிதிலை
நன் மா நகர் உறைவார் மனம் நனி பின் செல, நடுவே,
தன் ஏர் புரை தரு தம்பியர் தழுவிச் செல, மழைவாய்
மின்னே புரை இடையாளொடும், இனிது ஏகினன் வீரன். 4

### பறவைச் சகுனத் தடையால் தயரதன் தயங்கி நிற்றல்

ஏகும் அளவையின் வந்தன, வலமும் மயில், இடமும்
காகம் முதலிய, முந்திய தடை செய்வன; கண்டான்;
நாகம் அனன், 'இடை இங்கு உளது இடையூறு' என நடவான்;
மாகம் மணி அணி தேரொடு நின்றான், நெறி வந்தான். 5

### மன்னன் நிமித்திகனை வினவ, அவன் 'இடையூறு இன்றே வந்து நன்றாய் விடும்' எனல்

நின்றே, நெறி உணர்வான், ஒரு நினைவாளனை அழையா,
'நன்றோ? பழுது உளதோ? நடு உரை நீ, நயம்' என்ன,
குன்றே புரை தோளான் எதிர், புள்ளின் குறி கொள்வான்,
'இன்றே வரும் இடையூறு; அது நன்றாய்விடும்' என்றான். 6

### பரசுராமனது வருகையும் தயரதன் சோர்வும்

என்னும் அளவினில், வானகம் இருள் கீறிட, ஒளியாய்
மின்னும்படி புடை வீசிய சடையான்; மழு உடையான்;
பொன்னின் மலை வருகின்றது போல்வான்; அனல் கால்வான்;
உன்னும் தழல் விழியான்; உரும் அதிர்கின்றது ஓர் மொழியான்;

2. இசையா - இசைத்து, கூறி; போதகம் - யானை; காவலர் - அரசர்; 5. நாகம் அனன் - யானை போன்றவன், தயரதன்; மாகம் அணி - வானளவு சென்ற; 6. நெறி - சகுன நெறி; நினைவாளன் - ஆராய்ச்சியாளன்; பழுது - தீங்கு; நயம் - விளைவு; 7. உரும் - இடி.

கம்பித்து, அலை எறி நீர் உறு கலம் ஒத்து, உலகு உலைய,
தம்பித்து, உயர் திசை யானைகள் தளர, கடல் சலியா
வெம்பித் திரிதர, வானவர் வெருவுற்று இரிதர, ஓர்
செம் பொன் சிலை தெறியா, அயில் முக வாளிகள் தெரிவான்; 8

'விண் கீழுற என்றோ? படி மேல்கீழ் உற என்றோ?
எண் கீறிய உயிர் யாவையும் யமன் வாய் இட என்றோ?—
புண் கீறிய குருதிப் புனல் பொழிகின்றன புரையக்
கண் கீறிய கனலான் முனிவு—யாது?' என்று அயல் கருத; 9

போரின்மிசை எழுகின்றது ஓர் மழுவின் சிகை புகைய,
தேரின்மிசை மலை சூழ் வரு கதிரும் திசை திரிய,
நீரின்மிசை வடவைக் கனல் நெடு வான் உற முடுகி,
பாரின்மிசை வருகின்றது ஓர் படி வெஞ் சுடர் படர, 10

பாழிப் புயம் உயர் திக்கிடை அடையப் புடை படர,
சூழிச் சடைமுடி விண் தொட, அயல் வெண் மதி தோற்ற,
ஆழிப் புனல், எரி, கால், நிலம், ஆகாயமும், அழியும்
ஊழிக் கடை முடிவில், தனி உமை கேள்வனை ஒப்பான்; 11

அயிர் துற்றிய கடல் மா நிலம் அடைய, தனி படரும்
செயிர் சுற்றிய படையான், அடல் மற மன்னவர் திலகன்,
உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என, ஓர் ஆயிரம் உயர்தோள்
வயிரப் பணை துணிய, தொடு வடி வாய் மழு உடையான்; 12

நிருபர்க்கு ஒரு பழி பற்றிட, நில மன்னவர் குலமும்
கரு அற்றிட, மழுவாள் கொடு களை கட்டு, உயிர் கவரா,
இருபத்தொரு படிகால், இமிழ் கடல் ஒத்து அலை எறியும்
குருதிப் புனல்அதனில், புக முழுகித் தனி குடைவான்; 13

கமை ஒப்பது ஓர் தவமும், சுடு கனல் ஒப்பது ஓர் சினமும்,
சமையப் பெரிது உடையான்; நெறி தள்ளுற்று, இடை தளரும்
அமையத்து, உயர் பறவைக்கு இனிது ஆறு ஆம் வகை, சீறு,
சிமையக் கிரி உருவ, தனி வடி வாளிகள் தெரிவான்; 14

8. கம்பித்து - நடுங்கி; உலைய - நிலைகெட; தம்பித்து - அசைவற்று நின்று; 9. படி - பூமி; மேல்கீழ் உற - தலைகீழாக; எண் கீறிய - எண்ணற்ற; அயல் - அயலில் உள்ளவர்; 10. முடுகி - விரைந்து; படர - பரவ; 11. பாழி - பெருமை; உமை கேள்வன் - உமாதேவி கணவனான உருத்திர மூர்த்தி; 12. அயிர் - கருமணல்; செயிர் - கோபம்; மன்னவர் திலகன் - கார்த்தவீரியார்ச்சுனன்; வடி வாய் மழு - கூர்மையான நுனியுடைய பரசு என்னும் ஆயுதம்; 13. நிருபர் - அரசர்; களை கட்டு - களை பறித்து; படிகால் - தலைமுறை; 14. சமைய - அமைய; சிமையக் கிரி - சிகரத்தையுடைய மலை, கிரவுஞ்ச மலை; இம் மலையைப் பரசுராமன் துளைத்தனன் என்பர்.

சையம் புக நிமிர் அக் கடல் தழுவும்படி சமைவான்;
மையின் உயர் மலை நூறிய மழுவாளவன் வந்தான்.
ஐயன்தனை அரிதின் தரும் அரசன் அது கண்டான்,
'வெய்யன் வர நிபம் என்னைகொல்?' என வெய்துறும் வேலை,

எதிரே வந்த பரசுராமனை, 'யார்?' என, இராமன் கேட்டல்

பொங்கும் படை இரிய, கிளர் புருவம் கடை நெரிய,
வெங் கண் பொறி சிதற, கடிது உரும்ஏறு என விடையா,
சிங்கம் என உயர் தேர் வரு குமரன் எதிர், சென்றான்,
அம் கண் அரசவனும் இவன் ''ஆரோ?'' எனும் அளவில், 16

தயரதன் வணங்கவும் சினம் தணியாது பரசுராமன் பேசுதல்

அரைசன், அவனிடை வந்து, இனிது ஆராதனை புரிவான்,
விரை செய் முடி படிமேல் உற அடி மேல் உற விழவும்,
கரை சென்றிலன் அனையான், நெடு முடிவின் கனல் கால்வான்;
முரைசின் குரல் பட, வீரனது எதிர் நின்று, இவை மொழிவான்:

'உன் தோள்வலி அறிய வந்தேன்' என இராமனை நோக்கிப் பரசுராமன் சொல்லல்

'இற்று ஓடிய சிலையின் திறம் அறிவென்; இனி, யான் உன்
பொன் தோள் வலி நிலை சோதனை புரிவான் நசை உடையேன்;
செற்று ஓடிய திரள் தோள் உறு தினவும் சிறிது உடையேன்;
மற்று ஓர் பொருள் இலை; இங்கு இது என் வரவு' என்றனன் உரவோன்.

பரசுராமனிடம் தயரதன் அபயம் வேண்டல்

அவன் அன்னது பகரும் அளவையின், மன்னவன் அயர்வான்,
'புவனம் முழுவதும் வென்று, ஒரு முனிவற்கு அருள்புரிவாய்!
சிவனும், அயன், அரியும் அலர்; சிறு மானிடர் பொருளோ?
இவனும், எனது உயிரும், உனது அபயம், இனி' என்றான். 19

'விளிவார் விளிவது, தீவினை விழைவாருழை அன்றோ?
களியால், இவன் அயர்கின்றன உளவோ?—கனல் உமிழும்
ஒளி வாய் மழு உடையாய்!—பொர உரியாரிடை அல்லால்,
எளியாரிடை வலியார் வலி என் ஆகுவது?' என்றான். 20

15. மழுவாளவன் - பரசுப் படையினையுடைய பரசுராமன்; நிபம் - காரணம்; 16. விடைத்தல் - பெருஞ்சினம் கொள்ளுதல்; 17. ஆராதனை - அதிதி பூசை; 18. தினவு - அரிப்பு; 19. அபயம் - அடைக்கலப் பொருள்; 20. விளிவார் - சினங்கொள்வார்.

'நனி மாதவம் உடையாய்! ''இது பிடி நீ'' என நல்கும்
தனி நாயகம், உலகு ஏழையும் உடையாய்! இது தவிராய்:
பனி வார் கடல் புடைசூழ் படி நரபாலரை அருளா,
முனிவு ஆறினை; முனிகின்றது முறையோ?' என மொழிவான்.*

'புறன் நின்றவர் இகழும்படி, நடுவின் தலை புணராத்
திறன் நின்று, உயர் வலி என்? அது ஓர் அறிவின் தகுசெயலோ?
அறன் நின்றதன் நிலை நின்று, உயர் புகழ் ஒன்றுவது அன்றோ,
மறன் என்பது? மறவோய்! இது வலி என்பது வலியோ! 22

'சலத்தோடு இயைவு இலன், என் மகன்; அனையான் உயிர் தபுமேல்,
உலத்தோடு எதிர் தோளாய்! எனது உறவோடு, உயிர் உகுவேன்;
நிலத்தோடு உயர் கதிர் வான் உற நெடியாய்! உனது அடியேன்;
குலத்தோடு அற முடியேல்; இது குறை கொண்டனென்' என்றான்.

**மன்னன் உரையை மதியாது பரசுராமன் இராமன் எதிர்செல்ல, தயரதன் துயரத்தில் ஆழ்தல்**

என்னா அடி விழுவானையும் இகழா, எரி விழியா,
பொன் ஆர் கலை அணிவான் எதிர் புகுவான் நிலை உணரா,
தன்னால் ஒரு செயல் இன்மையை நினையா, உயிர் தளரா,
மின்னால் அயர்வுறும் வாள் அரவு என, வெய்துறல் உற்றான்.

**பரசுராமன் தன் வில்லின் சிறப்புரைத்து, 'வல்லையேல் என் வில்லை வளை' என வீரம் பேசல்**

மானம் மணி முடி மன்னவன், நிலை சோர்வுறல் மதியான்,
தான் அந் நிலை உறுவான் உறு வினை உண்டது தவிரான்;
'ஆன(ம்) முடை உமை அண்ணலை அந் நாள் உறு சிலைதான்
ஊனம் உளது; அதன் மெய்ந்நெறி கேள்!' என உரைப்பான்:

'ஒரு கால் வரு கதிர் ஆம் என ஒளி கால்வன, உலையா
வரு கார் தவழ் வட மேருவின் வலி சால்வன, வையம்
அருகா வினை புரிவான் உளன்; அவனால் அமைவனதாம்
இரு கார்முகம் உள; யாவையும் ஏலாதன, மேல் நாள்: 26

21. நாயகம் - உரிமை; நரபாலர் - அரசர்; 22. திறன் - தன்மை; 23. சலம் - பகை; தபுதல் - இறத்தல்; உலம் - திரண்ட கல்; குறை - வேண்டுகோள்; 25. ஆனம் - இடபம்; 26. ஒரு கால் - ஒற்றைச் சக்கரம்; வினை புரிவான் - சிற்பத்தொழில் வல்லவனாகிய விசுவகன்மன்; கார்முகம் - வில்.

'ஒன்றினை உமையாள் கேள்வன் உவந்தனன்; மற்றை ஒன்றை
நின்று உலகு அளந்த நேமி நெடிய மால் நெறியின் கொண்டான்;
என்று இது உணர்ந்த விண்ணோர், ''இரண்டினும் வன்மை எய்தும்
வென்றியது யாவது?'' என்று விரிஞ்சனை வினவ, அந் நாள், 27

'''சீரிது தேவர்தங்கள் சிந்தனை'' என்பது உன்னி,
வேரி அம் கமலத்தோனும், இயைவது ஓர் வினயம்தன்னால்
யாரினும் உயர்ந்த மூலத்து ஒருவர் ஆம் இருவர்தம்மை,
மூரி வெஞ் சிலை மேல் இட்டு, மொய் அமர் மூட்டிவிட்டான்; 28

'இருவரும், இரண்டு வில்லும் ஏற்றினர்; உலகம் ஏழும்
வெருவர, திசைகள் பேர, வெங் கனல் பொங்க, மேன்மேல்,
செரு மலைகின்ற போழ்தில், திரிபுரம் எரித்த தேவன்,
வரி சிலை இற்றது ஆக, மற்றவன் முனிந்து மன்னோ, 29

'மீட்டும் போர் தொடங்கும் வேலை, விண்ணவர் விலக்க, வல் வில்
நீட்டினன் தேவர்கோன் கை, நெற்றியில் கண்ணன்; வெற்றி
காட்டிய கரிய மாலும், கார்முகம்அதனை, பாரில்,
ஈட்டிய தவத்தின் மிக்க இரிசிகற்கு ஈந்து போனான்; 30

'இரிசிகன் எந்தைக்கு ஈய, எந்தையும் எனக்குத் தந்த
வரி சிலை இது, நீ நொய்தின் வாங்குதிஆயின், மைந்த!
குரிசில்கள் நின்னொடு ஒப்பார் இல்லை; யான் குறித்த போரும்
புரிகிலென், நின்னொடு; இன்னம் புகல்வது கேட்டி' என்றான்.

'ஊன வில் இறுத்த மொய்ம்பை நோக்குவது ஊக்கம் அன்றால்;
மானவ! மற்றும் கேளாய்; வழிப் பகை உடையன் நும்பால்;
ஈனம் இல் எந்தை, ''சீற்றம் நீக்கினன்'' என்ன, முன் ஓர்
தானவன் அனைய மன்னன் கொல்ல, யான் சலித்து மன்னோ, 32

'மூ-எழு முறைமை, பாரில் முடியுடை வேந்தை எல்லாம்,
வேவு எழு மழுவின் வாயால், வேர் அறக் களைகட்டு, அன்னார்
தூ எழு குருதி வெள்ளத் துறையிடை, முறையின், எந்தைக்கு,
ஆவன கடன்கள் நேர்ந்தேன்; அருஞ் சினம் அடக்கி நின்றேன்.

27. விரிஞ்சன் - பிரமன்; 28. வினயம் - உபாயம், தந்திரம்; இருவர் - திருமால், சிவன்; 30. இரிசிகன் - பரசுராமனுடைய பாட்டன்; 31. எந்தை - என் தந்தை, சமதக்கினி; நொய்தின் வாங்குதி - எளிதாக வளைப்பாய்; 32. ஊக்கம் - வலிமை; தானவன் - அசுரன்; மன்னன் - கார்த்தவீரியன்; 33. வேவு எழு - வேகின்ற; தூ - தசை.

'உலகு எலாம் முனிவற்கு ஈந்தேன், உறு பகை ஒடுக்கிப் போந்தேன்,
அலகு இல் மா தவங்கள் செய்து, ஓர் அரு வரை இருந்தேன்; ஆண்டை
சிலையை நீ இறுத்த ஓசை செவி உற, சீறி வந்தேன்;
மலைகுவென்; வல்லைஆகின், வாங்குதி, தனுவை!' என்றான். 34

**வில்லை வாங்கி இராமன் வளைத்து, 'இலக்கு யாது?' எனப் பரசுராமனைக் கேட்டல்**

என்றனன் என்ன, நின்ற இராமனும் முறுவல் எய்தி,
நன்று ஒளிர் முகத்தன் ஆகி, 'நாரணன் வலியின் ஆண்ட
வென்றி வில் தருக!' என்ன, கொடுத்தனன்; வீரன் கொண்டு, அத்
துன்று இருஞ் சடையோன் அஞ்ச, தோளுற வாங்கி, சொல்லும்:

'பூதலத்து அரசை எல்லாம் பொன்றுவித்தனை; என்றாலும்,
வேத வித்து ஆய மேலோன் மைந்தன் நீ; விரதம் பூண்டாய்;
ஆதலின் கொல்லல் ஆகாது; அம்பு இது பிழைப்பது அன்றால்,
யாது இதற்கு இலக்கம் ஆவது? இயம்புதி விரைவின்!' என்றான்.

**பரசுராமன் தன் தவத்தை அம்புக்கு இலக்காக்குதல்**

'நீதியாய்! முனிந்திடேல்; நீ இங்கு யாவர்க்கும்
ஆதி; யான் அறிந்தனென்; அலங்கல் நேமியாய்!
வேதியா இறுவதே அன்றி, வெண் மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ? 37

'பொன்னுடை வனை கழல் பொலம் கொள் தாளினாய்!
மின்னுடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்;
என் உளது உலகினுக்கு இடுக்கண்? யான் தந்த
உன்னுடை வில்லும், உன் உரத்துக்கு ஈடு அன்றால். 38

'எய்த அம்பு இடை பழுது எய்திடாமல், என்
செய் தவம் யாவையும் சிதைக்கவே!' என,
கை அவண் நெகிழ்தலும், கணையும் சென்று, அவன்
மை அறு தவம் எலாம் வாரி, மீண்டதே. 39

**பரசுராமன் இராமனை வாழ்த்தி விடை பெறுதல்**

'எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!
மண்ணிய மணி நிற வண்ண! வண் துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய
புண்ணிய! விடை' எனத் தொழுது போயினான். 40

34. முனிவன் - காசியப முனிவன்; வரை - மகேந்திர மலை; மலைகுவென் - போர் புரிவேன்; 36. வேத வித்து - வேதம் அறிந்தவன்; இலக்கம் - குறிப்பொருள்; 37. வேதியா - வேறுபட்டு; 38. ஈடு - ஏற்றது; 39. வாரி - கவர்ந்து; 40. கண்ணிய - மாலை அணிந்தவனே; களைகண் - புகலிடம்.

இராமன் தந்தையைத் தொழுது அவர் துயர் போக்கல்

அழிந்து, அவன் போனபின், அமலன், ஐ-உணர்வு
ஒழிந்து, தன் உயிர் உலைந்து, உருகு தாதையை,
பொழிந்த பேர் அன்பினால், தொழுது, முன்பு புக்கு,
இழிந்த வான் துயர்க் கடல் கரைநின்று ஏற்றினான். 41

தயரதன் மகிழ்ந்து மகனை உச்சி மோந்து பாராட்டுதல்

வெளிப்படும் உணர்வினன், விமுமம் நீங்கியே,
தளிர்ப்பு உறு மத கரித் தானையான், இடை
குளிப்ப அருந் துயர்க் கடற் கோடு கண்டவன்,
களிப்பு எனும் கரை இலாக் கடலுள் ஆழ்ந்தனன். 42

பரிவு அறு சிந்தை, அப் பரசுராமன் கை
வரி சிலை வாங்கி, ஓர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின்று, உச்சி மோந்து, தன்
அருவி அம் கண் எனும் கலசம் ஆட்டினான். 43

'பொய்ம்மை இல், சிறுமையில் புரிந்த, ஆண் தொழில்,
மும்மையின் உலகினால் முடிக்கல் ஆவதோ?
மெய்ம்மை இச் சிறுவனே, வினை செய்தோர்களுக்கு,
இம்மையும் மறுமையும் ஈயும்' என்றனன். 44

மலர்மழை பொழிந்த தேவர்களுள் வருணனிடம் பரசுராமனின்
வில்லைச் சேமிக்கக் கொடுத்து இராமன் அயோத்தி சேர்தல்

பூ மழை பொழிந்தனர் புகுந்த தேவருள்
வாம வேல் வருணனை, 'மான வெஞ் சிலை
சேமி' என்று உதவி, தன் சேனை ஆர்த்து எழ,
நாம நீர் அயோத்தி மா நகரம் நண்ணினான். 45

யாவரும் அயோத்தியில் இன்பமுடன் வாழும் நாளில் தயரதன்
பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்புதல்

நண்ணினர், இன்பத்து வைகும் நாளிடை,
மண்ணுறு முரசு இனம் வயங்கு தானையான்,
அண்ணல், அப் பரதனை நோக்கி, ஆண்தகை,
எண்ண அருந் தகையது ஓர் பொருள் இயம்புவான்: 46

41. ஐ உணர்வு - ஐம்புல உணர்ச்சி; 42. கோடு - கரை; 43. வசை - பழி; 44. சிறுமை - இளமை; 45. மான வெஞ் சிலை - பெருமையும் கொடுமையும் கொண்ட வில், திருமாலின் வில்; சேமி - காப்பாற்றி வை; நாம நீர் - புகழ் மிக்க நீர்வளம், அச்சம் தரும் அகழி நீர்.

'ஆணையின் நின்து மூதாதை, ஐய! நிற்
காணிய விழைவது ஓர் கருத்தன்; ஆதலால்,
கேணியில் வளை முரல் கேகயம் புக,
பூண் இயல் மொய்ம்பினாய்! போதி' என்றனன். 47

பரதன் இராமனை வணங்கிக் கேகய நாட்டிற்குப் புறப்படுதல்

ஏவலும், இறைஞ்சிப் போய், இராமன் சேவடிப்
பூவினைச் சென்னியில் புனைந்து, போயினான்—
ஆவி அங்கு அவன் அலது இல்லை ஆதலான்,
ஓவல் இல் உயிர் பிரிந்து உடல் சென்றென்னவே. 48

பரதன் சத்துருக்கனோடு உதாசித்து என்பான் உடன்வர
ஏழு நாளில் கேகய நாடு சேர்தல்

உளை விரி புரவித் தேர் உதாசித்து எனும்
வளை முரல் தானையான் மருங்கு போதப் போய்,
இளையவன்தன்னொடும், ஏழு நாளிடை,
நளிர் புனல் கேகய நாடு நண்ணினான். 49

ஆனவன் போனபின், அரசர் கோமகன்
ஊனம் இல் பேர் அரசு உய்க்கும் நாளிடை,
வானவர் செய்த மா தவம் உண்டு ஆதலால்,
மேல் நிகழ் பொருள் இனி விளம்புவாம்அரோ. 50

47. மூதாதை - பாட்டன், கேகயதேச மன்னன்; கேணி - நீர்நிலை; 48. ஓவல் - நீங்குதல்; 49. உளை - பிடரிமயிர்; உதாசித்து - பரதனுடைய மாமன்; இளையவன் - தம்பியான சத்துருக்கன்; மேல் நிகழ் பொருள் - பின்னர் நடைபெற்ற செய்திகள்.

## மிகைப் பாடல்கள்

காப்பு

ஒன்று ஆய், இரண்டு சுடர் ஆய், ஒரு மூன்றும் ஆகி,
பொன்றாத வேதம் ஒரு நான்கொடு, ஐம் பூதம் ஆகி,
அன்று ஆகி, அண்டத்து அகத்து ஆகி, புறத்தும் ஆகி,
நின்றான் ஒருவன்; அவன் நீள் கழல் நெஞ்சில் வைப்பாம். 1

நீலம் ஆம் கடல் நேமி அம் தடக் கை
மாலை மால் கெட, வணங்குதும் மகிழ்ந்தே. 2

காயும் வெண் பிறை நிகர் கடு ஒடுங்கு எயிற்று
ஆயிரம் பணாமுடி அனந்தன் மீமிசை,
மேய நான்மறை தொழ, விழித்து உறங்கிய
மாயன் மா மலர் அடி வணங்கி ஏத்துவாம். 3

மாதுளங் கனியை, சோதி வயங்கு இரு நிதியை, வாசத்
தாது உகு நறு மென் செய்ய தாமரைத் துணை மென் போதை,
மோது பாற்கடலின் முன்நாள், முளைத்த நால்கரத்தில் ஏந்தும்
போது தாயாகத் தோன்றும் பொன் அடி போற்றிசெய்வாம். 4

பராவ அரு மறை பயில் பரமன், பங்கயக்
கராதலம் நிறைபயில் கருணைக் கண்ணினன்,
அரா-அணைத் துயில் துறந்து அயோத்தி மேவிய
இராகவன், மலர்அடி இறைஞ்சி ஏத்துவாம். 5

கலங்கா மதியும், கதிரோன் புரவிப்
பொலன் கா மணித் தேரும், போகா இலங்கா
புரத்தானை, வானோர் புரத்து ஏறவிட்ட
சரத்தானை, நெஞ்சே! தரி. 6

'நாராயணாய நம!' என்னும் நல் நெஞ்சர்
பார் ஆளும் பாதம் பணிந்து, ஏத்துமாறு அறியேன்;
கார் ஆரும் மேனிக் கருணாகர மூர்த்திக்கு
ஆராதனை என் அறியாமை ஒன்றுமே. 7

பராவரும் இராமன், மாதோடு இளவல் பின் படரக் கான் போய்,
விராதனை, கரனை, மானை, கவந்தனை, வென்றிகொண்டு,
மராமரம், வாலி மார்பு, துளைத்து, அணை வகுத்து, பின்னர்,
இராவணன் குலமும் பொன்ற எய்து, உடன் அயோத்தி வந்தான்.

தருகை நீண்ட தயரதன்தான் தரும்
இரு கை வேழத்து இராகவன்தன் கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிட,
குருகை நாதன் குரை கழல் காப்பதே. 9

அஞ்சிலே ஒன்று பெற்றான், அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக, ஆர் உயிர் காக்க ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு, அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான், அவன் எம்மை அளித்துக் காப்பான்.

எவ் இடத்தும், இராமன் சரிதை ஆம்
அவ் இடத்திலும், அஞ்சலி அத்தனாய்,
பவ்வ மிக்க புகழ்த் திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தை செய்வாம்அரோ. 11

பொத்தகம், படிகமாலை, குண்டிகை, பொருள் சேர் ஞான
வித்தகம் தரித்த செங் கை விமலையை, அமலைதன்னை,
மொய்த்த கொந்து அளக பார முகில் முலைத் தவள மேனி
மைத் தகு கருங் கண் செவ் வாய் அணங்கினை, வணங்கல் செய்வாம்.

தழை செவி, சிறு கண், தாழ் கைத் தந்த சிந்துரமும், தாரை
மழை மதத் தறுகண் சித்ர வாரண முகத்து வாழ்வை,
இழைஇடைக் கலசக் கொங்கை இமகிரி மடந்தை ஈன்ற
குழவியைத் தொழுவன், அன்பால்—'குறைவு அற நிறைக' என்றே.

எக் கணக்கும் இறந்த பெருமையன்,
பொக்கணத்தன், புலி அதள் ஆடையன்,
முக்கண் அத்தன், வரம் பெற்ற மூப்பனை,
அக் கணத்தின் அவன் அடி தாழ்ந்தனம். 14

தனியன்

நாரணன் விளையாட்டு எல்லாம் நாரத முனிவன் கூற,
ஆரணக் கவிதை செய்தான், அறிந்த வான்மீகி என்பான்;
சீர் அணி சோழ நாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்,
கார் அணி கொடையான், கம்பன், தமிழினால் கவிதை செய்தான்.

அம்பிலே சிலையை நாட்டி அமரர்க்கு அன்று அமுதம் ஈந்த
தம்பிரான் என்ன, தானும் தமிழிலே தாலை நாட்டி,
கம்ப நாடு உடைய வள்ளல், கவிச் சக்ரவர்த்தி, பார்மேல்
நம்பு பாமாலையாலே நரர்க்கும் இன் அமுதம் ஈந்தான். 2

வாழ்வு ஆர்தரு வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துப் பெற,
தாழ்வார் உயர, புலவோர் அகஇருள் தான் அகல,
போழ் வார் கதிரின் உதித்த தெய்வப் புலமைக் கம்ப நாட்டு
ஆழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு யாதும் அரியது அன்றே.

அம்பு அரா அணி சடை அரன் அயன் முதல்
உம்பரால், முனிவரால், யோகரால், உயர்
இம்பரால், பிணிக்க அரும் இராம வேழம் சேர்
கம்பர் ஆம் புலவரைக் கருத்து இருத்துவாம். 4

சம்பு, அ(ந்)நாள், தன் உமை செவி சாற்று பூங்
கொம்பு அனுள்தன் கொழுநன் இராமப் பேர்
பம்ப நாள் தழைக்கும் கதை பாச் செய்த
கம்பநாடன் கழல் தலையில் கொள்வாம். 5

இம்பரும் உம்பர்தாமும் ஏத்திய இராம காதை
தம்பமா முத்தி சேர்தல் சத்தியம் சத்தியம்மே;
அம்பரம்தன்னில் மேவும் ஆதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன் செங் கமல பாதம் கருத்துற இருத்துவாமே. 6

ஆதவன் புதல்வன், முத்தி அறிவினை அளிக்கும் ஐயன்,
போதவன் இராம காதை புகன்றருள் புனிதன், மண்மேல்
கோது அவம் சற்றும் இல்லான், கொண்டல் மால்தன்னை ஒப்பான்,
மா தவன் கம்பன் செம்பொன் மலர்அடி தொழுது வாழ்வாம்.

ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறு ஒழித்து,
தேவன் திருவழுந்தூர் நல் நாட்டு, மூவலூர்ச்
சீர் ஆர் குணுதித்தன் சேய் அமையப் பாடினான்—
கார் ஆர் காகுத்தன் கதை. 8

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல், சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய்நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்,
கண்ணிய அரங்கர் முன்னே, கவி அரங்கேற்றினானே. 9

கமுந்தராய் உன கழல் பணியாதவர் கதிர் மணி முடிமீதே
அழுந்த வாளிகள் தொடு சிலை இராகவ! அபிநவ கவிநாதன்
விழுந்த நாயிறுஅது எழுவதன்முன், மறை வேதியருடன் ஆராய்ந்து,
எழுந்த நாயிறு விழுவதன்முன் கவி பாடியது எழுநூறே. 10

கரை செறி காண்டம் ஏழு, கதைகள் ஆயிரத்து எண்ணூறு,
பரவுறு சமரம் பத்து, படலம் நூற்றிருபத்தெட்டே;
உரைசெயும் விருத்தம் பன்னீராயிரத்து ஒருபத்தாறு;
வரம் மிகு கம்பன் சொன்ன வண்ணமும் தொண்ணூற்றாறே.

தராதலத்தின் உள்ள தமிழ்க் குற்றம் எல்லாம்
அராவும் அரம் ஆயிற்று அன்றே—இராவணன்மேல்
அம்பு நாட்டு ஆழ்வான் அடி பணியும் ஆதித்தன்
கம்ப நாட்டு ஆழ்வான் கவி. 12

இம்பர் நாட்டில் செல்வம் எல்லாம் எய்தி, அரசு ஆண்டு இருந்தாலும்,
உம்பர் நாட்டில் கற்பகக் கா ஓங்கும் நீழல் இருந்தாலும்,
செம்பொன்மேரு அனைய புயத் திறல் சேர் இராமன் திருக் கதையில்
கம்பநாடன் கவிதையில்போல், கற்றோர்க்கு இதயம் களியாதே. 13

நாரதன் கருப்பஞ் சாறாய், நல்ல வான்மீகன் பாகாய்,
சீர் அணி போதன் வட்டாய், செய்தனன்; காளிதாசன்,
பார் அமுது அருந்தப் பஞ்சதாரையாய்ச் செய்தான்; கம்பன்,
வாரம் ஆம் இராமகாதை வளம் முறை திருத்தினானே. 14

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே;
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே;
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே—
இம்மையே இ'ராம' என்று இரண்டு எழுத்தினால். 15

ஓர் ஆயிரம் மகம் புரி பயனை உய்க்குமே;
நராதிபர் செல்வமும் புகழும் நல்குமே,
விராய் எணும் பவங்களை வேர் அறுக்குமே—
'இராம' என்று ஒரு மொழி இயம்பும்காலையே. 16

மற்று ஒரு தவமும் வேண்டா; மணி மதில் இலங்கை மூதூர்
செற்றவன் விசயப் பாடல் தெளிந்து, அதில் ஒன்றுதன்னைக்
கற்றவர், கேட்போர், நெஞ்சில் கருதுவோர், இவர்கள் பார்மேல்
உற்று அரசு ஆள்வர்; பின்னும் உம்பராய் வீட்டில் சேர்வார்.

வென்றி சேர் இலங்கையானை வென்ற மால் வீரம் ஓத
நின்ற ராமாயணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமும், உரைத்திடக் கேட்டோர் தாமும்,
'நன்று இது' என்றோர்தாமும், நரகம்அது எய்திடாரே. 18

இறு வரம்பில் 'இராம' என்றோர், உம்பர்
நிறுவர் என்பது நிச்சயம்; ஆதலால்,
மறு இல் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ? 19

அன்னதானம், அகில நல் தானங்கள்,
கன்னி தானம், கபிலையின் தானமே,
சொன்ன தானப் பலன் எனச் சொல்லுவார்—
மன் இராம கதை மறவார்க்குஅரோ. 20

வட கலை, தென் கலை, வடுகு, கன்னடம்,
இடம் உள பாடை யாது ஒன்றின்ஆயினும்,
திடம் உள ரகு குலத்து இராமன்தன் கதை
அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே. 21

இத் தலத்தின் இராமாவதாரமே
பத்திசெய்து, பரிவுடன் கேட்பரேல்,
புத்திரர்த் தரும்; புண்ணியமும் தரும்;
அத் தலத்தில் அவன் பதம் எய்துமே. 22

'ஆதி ''அரி ஓம் நம'' நாராயணர் திருக் கதை
அறிந்து, அனுதினம் பரவுவோர்,
நீதி அனுபோக நெறி நின்று, நெடுநாள் அதின்
இறந்து, சகதண்டம் முழுதுக்கு
ஆதிபர்களாய் அரசு செய்து, உளம் நினைத்தது
கிடைத்து, அருள் பொறுத்து, முடிவில்
சோதி வடிவு ஆய், அழிவு இல் முத்தி பெறுவார்' என
உரைத்த, சுருதித் தொகைகளே. 23

இராகவன் கதையில், ஒரு கவிதன்னில்
ஏக பாதத்தினை உரைப்போர்,
பராவ அரும் மலரோன் உலகினில், அவனும்
பல் முறை வழுத்த, வீற்றிருந்து,
புராதன மறையும் அண்டர் பொன் பதமும்
பொன்றும் நாள்அதனினும், பொன்றா
அரா-அணை அமலன் உலகு எனும் பரம
பதத்தினை அடைகுவர் அன்றே. 24

இனைய நல் காதை முற்றும் எழுதினோர், வியந்தோர், கற்றோர்,
அனையதுதன்னைச் சொல்வோர்க்கு அரும் பொருள் கொடுத்துக் கேட்டோர்,
கனை கடல் புடவி மீது காவலர்க்கு அரசு ஆய் வாழ்ந்து,
வினையம் அது அறுத்து, மேல் ஆம் விண்ணவன் பதத்தில் சேர்வார்.

நாடிய பொருள் கைகூடும்; ஞானமும் புகழும் உண்டாம்;
வீடு இயல் வழிஅது ஆக்கும்; வேரி அம் கமலை நோக்கும்;—
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய, வாகை
சூடிய சிலை இராமன் தோள் வலி கூறுவோர்க்கே. 26

வான் வளம் சுரக்க! நீதி மனு நெறிமுறை எந் நாளும்
தான் வளர்ந்திடுக! நல்லோர்தம் கிளை தழைத்து வாழ்க!
தேன் வளர்ந்து அறாத மாலைத் தெசரத ராமன் செய்கை
யான் அளந்து அறிந்த பாடல் இடையறாது ஒளிர்க, எங்கும்!

பாயிரம்

எறிகடல் உலகம்தன்னுள் இன் தமிழ்ப் புலவர்க்கு எல்லாம்
முறுவலுக்கு உரியதாக மொழிந்தெனன்; மொழிந்த என் சொல்
சிறுமையும், சிலே இராமன் கதைவழிச் செறிதல்தன்னல்,
அறிவுடை மாந்தர்க்கு எல்லாம் அமிழ்தம் ஒத்து இருக்கும் அன்றே.
9-1

2 நாட்டுப் படலம்

காளையர் சேறுதன்னேக் கலந்து, உடன் மிதித்து, நட்ட
தாள்களும் கழுநீர் நாறும்; தடக் கையும் அதுவே நாறும்;
ஆளையும் சீறிப் பீறி, அணி மலர்க் கமுகில் பாய்ந்த
வாளையும், பாளை நாறும்; வயல்களும் அதுவே நாறும். 14-1

3 நகரப் படலம்

எங்கும் பொலியும் பரஞ் சுடர் ஆகி, எவ் உயிரும்
மங்கும் பிறவித் துயர் அற, மாற்று நேசம்
தங்கும் தருமத்து உரு ஆகி, தரணி மீது
பொங்கும் கருணைப் புத்தேள் கருத்து யாம் எவன் புகல்வோம்?
74-1

வேதம்அதனுள் விளே பொருள் விகற்பத்துள் அடங்காச்
சோதி மயமாய்த் துலங்கி, தொல் உயிர்த் தொகை பலவாய்,
ஓது புவனம் உதரத்துள் ஒடுக்கியே, பூக்கும்
ஆதி முதல்வன் அமர் இடம் அயோத்தி மா நகரம். 74-2

4 அரசியற் படலம்

விரி கதிர் பரப்பி, மெய்ப் புவனம் மீது இருள்
பருகுறும் பரிதி அம் குலத்தில், பார்த்திவன்
இரகு, மற்று அவன் மகன் அயன் என்பான், அவன்
பெருகு மா தவத்தினில் பிறந்த தோன்றலே. 5-1

5 திரு அவதாரப் படலம்

'பொறை இலா அறிவு, போகப் புணர்ப்பு இலா இளமை, மேவத்
துறை இலா வனச வாவி, தூசு இலார் போலித் தூய்மை,
நறை இலா மலரும், கல்வி நலம் இலாப் புலமை, நன்னீர்ச்
சிறை இலா நகரும், போலும், சேய் இலாச் செல்வம்' என்ருன்.
4-1

கறை மிடற்று அண்ணலும் கடவுளோர்களும்
மறை முதற் கிழவனே வந்து நண்ணலும்,
முறைமையின் கடன் முறை முற்றி, முண்டகத்து
இறைவனும், அவரொடும் இனிதின் ஏகினன். 5-2

என்று இனையன பல இயம்பி, 'எங்கணும்,
கன்றி, அவ் அரக்கரை அழித்துக் காத்தியேல்,
ஒன்றிய உயிர்களும் உலகு யாவையும்
இன்று நீ படைத்தி' என்று இசைத்து, பின்னரும், 5-4

ஆயவர் அயன் முதல் அமரர், ஈறு இலா
நாயகன் இரு பதம் நயந்து, சிந்தைமீது
ஒய்வு இலாது, அவன் அரு மறைகள் ஓதியே,
நேயமோடு இருந்து, இவை நிகழ்த்தல் மேயினார். 8-1

'காத்தி நீ எமை; காக்கிலர் தம்மை யாம்
ஏத்திபே இளைத்தோம்; இறைவா! இடர்ப்
பார்த்திபோ?—திருப் பாற்கடற் பள்ளியின்
மூர்த்தியே! முதல்வா! முகில் மேனியாய்! 8-2

'அந்தகாரத்து அரக்கர் செய் தீமையால்,
நொந்துளோம்! இறைவா! நொடிப் போதினில்
வந்து மாற்றிடும் வண்ணம் எமக்கு அருள்—
எந்தையே! கருணாகரனே!' என, 8-3

அறி துயில் எழுந்தனன், அமரர் கூப்பிடும்
மறை மொழித் துதி ஒலி வந்து இசைக்கவே;
நிறை குணத்து அமரர்கள் நினைத்து அழைப்பதை,
இறைவனும், திரு உளத்து அறிந்து, அங்கு எய்தவே. 9-1

வானவர் அம் முறை வழங்க, மா மதித்
தேன் உறும் இதழி அம் தெரியல் வேணியான்
ஆனவர்தமைக் கரம் அமைத்து, அங்கு, ஐயனைத்
தான் முகம் நோக்கியே சாற்றல் மேயினான். 15-1

எனக் கலை மா முகச் சிருங்கன் இவ் உரை-
தனைச் சொல, தரணிபர்க்கு அரசன்தான் மகிழ்ந்து,
அனைத்து உலகு உயிரொடும் அறங்கள் உய்ய, தம்
மனத் துயர் அகன்றிட, வணங்கிக் கூறுவான். 78-1

மேடம் ஆம் மதி; திதி நவமி; மீன் கழை;
நீடு உறு மாலை கற்கடகம்; நீதி சேர்
ஓடை மா களிறு அனான் உதய ராசி கோள்
நாடின், ஏகாதசர் நால்வர் உச்சரே. 106-1

என்றனர் சாதகம் ஈசற்கு; ஏனையர்
தம் தமக்கும் தகும் முறையில், தாம் தெரிந்து,
ஒன்றிய தமனியத்து எழுதி ஓதினார்—
வன் திறல் சுரர்குரு வாழ்த்து எடுப்பவே. 106-2

நோக்கினன் களிப்பு எழ; நுணங்கு கேள்வி நூல்
ஆக்கிய முனிவனை வணங்கி, 'ஐய! என்
பாக்கியம் பலித்தது, இப் பாலர்' என்று, பார்
காக்குறும் அரசனும், கழறல் மேயினன். 107-1

சுந்தரப் பொடிகளும் செம் பொற் சுண்ணமும்
சந்தனம் நீரொடு கலந்து, தையலார்
பந்தியில், சிவறியால் சிதற, பார்மிசை
இந்திரவில் எனக் கிடந்தது எங்குமே. 115-1

அரு மறை நெறி வழி, அரசனும், அன்னப்
பிரசனம் மதலையர் பெறு வழி உதவி,
கரை அறு திரு நகர் விழவொடு களியா,
இருமையும் உதவுறு தானமும் ஈந்தான். 120-1

6 கையடைப் படலம்

அப் பெருந் திருவொடும் 'அகில நாதன்' என்று,
எப் பெரும் புவனமும் இறைஞ்சி ஏத்தவே,
தப்ப அருந் தருமமும் தயாவும் தாங்கியே,
ஒப்புரவுடன் அவன் உவந்து வாழும் நாள். 1-1

அரி அணைமிசைதனில், அழகு மன்றினில்,
புரி தவம் மிகு பதப் பொற்பின் நீடு அருள்
அரசர்கள் முடி படி அணைய, அம் பொனின்
உரை பொடி மலை குவை ஒப்ப குப்பையோ. 1-2

' ''இனைய சோலை மற்று யாவது?'' என்று, மா
முனிவ! கூறு' என முதல்வன் கூறலும்,
பனுவல் வேத நூல் பகரும் மா தவன்,
'தனு வலாய்! இதன் தன்மை கேள்' என, 24-1

'சம்பரப் பெயர்த் தானவ(ன்)னுடன்
உம்பர் கோமகன் அமர் உடன்ற நாள்,
வெம்பி, மற்று அவன் வெற்றி கொண்ட போது,
அம்பரம் இழந்து, அவனி வந்தனன்; 24-2

'அவனி வந்து, மன்னவர் இடம்தொறும்,
தவனன் என்னவே தான் உழன்று, அறிந்து,
''இவனில் வேறு மற்று இல்லை எற்கு'' என,
உவன் விரும்பி வந்து, உந்தை நாடு உரு, 24-3

'இந்த இவ் இடத்து எய்தி, இந்திரன்,
''சந்த வார் பொழில் தரு ஓர் ஐந்தையும்
வந்து நிற்க'' என, மன நினைப்பின்முன்,
முந்து வந்து மா முரல நின்றவால். 24-4

'நின்ற சோலைவாய், நியமம் நித்தமும்
குன்றல் இன்றியே செய்து கொண்டு, அவன்
நன்றியால் இருந்து, அரசை நண்ணியே,
துன்று சோலையின் தொழில் உணர்த்தினன். 24-5

'உருவம் மாறி, வேறு உருவமாகியே,
நிருப! நின் குடை நிழலின் நிற்றலும்,
பரிவின் நோக்கி, ''நீ பகர்தியால்'' எனத்
தருவின் நாயகன்தான் விளம்பினன்: 24-6

' ''சதமகன்தனைச் சம்பரன் எனும்
மத மகன் துரந்து அரசு வவ்வினன்;
சுதம் அகன்றிடாக் கனக வெற்பு அவன்
விதம் அகன்று வந்து, உன்னை மேவினேன்.'' 24-7

'என்றபோது தன் இரதம் ஏறியே
சென்று, மற்று அவன் சேனையோடு உகக்
கொன்று, வாசவன் அரசு கொள்ளவே
அன்று அளித்து, மீண்டு அயோத்தி மேவினன். 24-8

'அன்னது ஆதலின் அவனி வந்த கா
இன்ன நாமம், இச் சோலை' என்றலும்,
மன்னர்மன்னவன் மதலை, 'நன்று' என,
பின்னை நன்று உயிர்ப் பிரியம் ஆயினர். 24-9

## 7 தாடகை வதைப் படலம்

'கல் நவில் தோளினாய்! கமலத்தோன் அருள்
மன்னுயிர் அனைத்தையும் வாரி வாய் மடுத்து,
இன் உயிர் வளர்க்கும் ஓர் எரி கொள் கூற்றமே
அன்னவள் யாவள் என்று அறையக் கேட்டியால்: 20-1

'இயக்கர்தம் குலத்துளான், உலகம் எங்கணும்
வியக்குறும் மொய்ம்பினன், எரியின் வெம்மையான்,
மயக்கு இல் சற்சரன், எனும் வலத்தினன், அருள்
துயக்கு இலன் சுகேது என்று உளன் ஓர் தூய்மையான். 20-2

'அன்னவன் மகவு இலாது அயரும் சிந்தையான்,
மன் நெடுந் தாமரை மலரின் வைகுறும்
நல் நெடு முதல்வனை வழுத்தி, நல் தவம்
பல் நெடும் பகல் எலாம் பயின்ற பான்மையான். 20-3

'முந்தினன் அரு மறைக் கிழவன், ''முற்றும் நின்
சிந்தனை என்?'' என, ''சிறுவர் இன்மையால்
நொந்தனென்; அருள்க'' என, ''நுணங்கு கேள்வியாய்!
மைந்தர்கள் இலை; ஒரு மகள் உண்டாம்'' என்ருன். 20-4

' ''பூ மட மயிலினைப் பொருவும் பொற்பொடும்,
ஏமுறு மதமலை ஈர்-ஐஞ்ஞூறுடைத்
தாம் மிகு வலியொடும், தனயை தோன்றும்; நீ
போ'' என, மலர் அயன் புகன்று போயினுன். 20-5

'ஆயவன் அருள்வழி, அலர்ந்த தாமரைச்
சேயவள் என வளர் செவ்வி கண்டு, ''இவட்கு
ஆயவன் யார்கொல்?'' என்று ஆய்ந்து, தன் கிளை
நாயகன், சுந்தன் என்பவற்கு நல்கினுன். 20-6

' ''காமனும் இரதியும் கலந்த காட்சி ஈது
ஆம்'' என, இயக்கனும் அணங்கு அனுளும், வேறு
யாமமும் பகலும் ஓர் ஈறு இன்று என்னலாய்,
தாம் உறு பெருங் களிச் சலதி மூழ்கினுர். 20-7

'பற்பல நாள் செலீஇ, பதுமை போலிய
பொற்பினுள் வயிற்றிடை, புவனம் ஏங்கிட,
வெற்பு அன புயத்து மாரீசனும், விறல்
மல் பொரு சுவாகுவும், வந்து தோன்றினுர். 20-8

'மாயமும், வஞ்சமும், வரம்பும் இல் ஆற்றலும்,
தாயினும் பழகினுர் தமக்கும் தேர்வு ஒணுது,
ஆயவர் வளர்வுழி, அவரை ஈன்ற அக்
காய் சினத்து இயக்கனும், களிப்பின் மேன்மையான். 20-9

தீது உறும் அவுணர்கள் தீமை தீர்தர,
மோதுறு கடல் எலாம் ஒரு கை மொண்டிடு
மா தவன் உறைவிடம்அதனின் வந்து, நீள்
பாதவம் அனைத்தையும் பறித்து வீசினுன். 20-10

'விழைவு அறு மா தவம் வெஃகினேர் விரும்பு
உழை, கலை, இரலையை உயிர் உண்டு, ஓங்கிய
வழை முதல் மரன் எலாம் மடிப்ப, மா தவன்
தழல் எழ விழித்தனன்; சாம்பல் ஆயினுன். 20-11

'மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டு, வெங் கனலின் பொங்குறு,
'முற்றுற முடிக்குவென் முனியை' என்று எழா,
நற்றவன் உறைவிடம் அதனை நண்ணினள். 20-12

'இடியொடு மடங்கலும் வளியும் ஏங்கிட,
கடி கெட அமரர்கள், கதிரும் உட்கிட,
தடியுடை முகில் குலம் சலிப்ப, அண்டமும்
வெடிபட, அதிர்த்து, எதிர் விளித்து மண்டவே. 20-13

'தமிழ் எனும் அளப்ப அருஞ் சலதி தந்தவன்
உமிழ் கனல் விழி வழி ஒழுக, உங்கரித்து
''அழிவன செய்தலால் அரக்கர் ஆகியே
இழிக!'' என, உரைத்தனன், அசனி எஞ்சவே. 20-14

'வெருக்கொள, உலகையும் விண்ணுளோரையும்
முருக்கி, எவ் உயிரும் உண்டு, உழலும் மூர்க்கராம்
அரக்கர்கள் ஆயினர், அக் கணத்தினில்
உருக்கிய செம்பென உமிழ் கண் தீயினர். 20-15

'ஆங்கு அவன், வெகுளியும், அறைந்த சாபமும்
தாங்கினர்; எதிர் செயும் தருக்கு இலாமையின்,
நீங்கினர்; சுமாலியை நேர்ந்து, ''நிற்கு யாம்
ஓங்கிய புதல்வர்'' என்று, உறவு கூர்ந்தனர். 20-16

'அவனொடும் பாதலத்து அநேக நாள் செலீஇ,
தவன் உறு தசமுகன் தனக்கு மாதுலர்
இவர் என, புடைத்து அழித்து, உலகம் எங்கணும்,
பவனனின் திரிகுநர், பதகி மைந்தர்கள். 20-17

'மிகும் திறல் மைந்தரை வேறு நீங்குறு,
தகும் தொழில் முனிவரன் சலத்தை உன்னியே,—
வகுந்துவின் வசுவரி வதிந்தது இவ் வனம்
புகுந்தனள்,—அழல் எனப் புழுங்கும் நெஞ்சினள். 20-18

'மன்னர் மன்னவன் காதல! மற்றும் ஒன்று
இன்னம் யான் உரைக்கின்றது யாது எனின்,
முன் ஓர் காலம் நிகழ்ந்த முறைமை ஈது'
என்ன ஓதலுற்றான் தவத்து ஈறு இலான். 39-1

'பிருகு என்னும் பெருந் தவன்தன் மனை
வரு கயல் கண் கியாதி, வல் ஆசுரர்க்கு
உருகு காதலுற, உறவாதலே
கருதி, ஆவி கவர்ந்தனன், நேமியான். 39-2

' ''வானகத்தினில், மண்ணினில், மன்னுயிர்
போனகம் தனக்கு'' என்று எணும் புந்திய
தானவள் குமுதிப் பெயராள்தனை
ஊன் ஒழித்தனன் வச்சிரத்து உம்பர்கோன். 39-3

'ஆதலால், அரிக்கு, ஆகண்டலன்தனக்கு,
ஓது கீர்த்தி உண்டாயது அல்லால், இடை
ஏதம் என்பன எய்தியவோ? சொலாய்—
தாது அடர்ந்து தயங்கிய தாரினாய்!' 39-4

ஏக்கமோடும் இமையவர் எங்கணும்,
வாக்கின் முந்துற மாயை வளர்ப்பவள்,
மூக்கும் வார் செவியும் முறை போயிட,
தாக்கும் வள்ளற்கு இளவலும் தாக்கினான். 48-1

விலக்கி நின்று, அவன் வெங் கணை விரைவினில் விலக்கி,
கலக்கம் வானவர் தவிர்ந்திட, காலனும் கலங்கத்
துலக்கி, வையகத்து இடுக்கணும் முனிவர்தம் துயரும்
உலக்க, ஊழித் தீ ஒப்பது ஓர் கணை தொடுத்து எய்தான். 48-2

## 8 வேள்விப் படலம்

'குசன், குசநாபன், கோது இல் குணத்தின் ஆதூர்த்தன், கொற்றத்து
இசை கெழு வசு, என்று ஓதும் இவர் பெயர்; இவர்கள் தம்முள்
குசன் கவுசாம்பி, நாபன் குளிர் மகோதயம், ஆதூர்த்தன்
வசை இல் தன்மவனம், மற்றை வசு கிரிவிரசம், வாழ்ந்தார். 4-1

குறியவன் கையில் நீர் விழாமல், குண்டிகை
மறிபட, வாமனன் மலர்க் கைத் தர்ப்பையால்,
செறிவது நீக்கிட, சிதைந்து கண் உடைந்து
உறு துயர் வெள்ளியும் ஒதுங்கிப் போயினான். 23-1

நீட்டிய வேலையில் நீரை மாற்றினான்;
நாட்டம்அது அகத்துளான், சிலம்பின் நாமத்தான்,
ஓட்டினன் தருப்பையை; உடை கண் நீர் விழ,
வாட்டம் இல் அந்தணன் மலர்க் கை நீட்டினான். 23-2

## 9 அகலிகைப் படலம்

'இனைய சோலை மற்று யாது?' என இராகவன் வினவ,
வினை எலாம் அற நோற்றவன் விளம்புவான்: 'மேல்நாள்,
தனையவர் ஆனவர்க்கு இரங்கியே, காசிபன் தனது
மனையுளாள் தவம் புரிந்தனள், இவண்' என வலித்தான். 3-1

'அண்ட கோளகைக்கு அப்புறத்து, என்னை ஆளுடைய
கொண்டல் நீள் பதத்து எய்தி, ஓர் விஞ்சையர் கோதை,
புண்டரீக மென் பதத்தியைப் புகழ்ந்தனள்; புகழ,
வண்டு அரு மது மாலிகை கொடுத்தனள் மகிழ்ந்து. 3-2

'அன்ன மாலையை யாழிடைப் பிணித்து, அயன் உலகம்,
கன்னி மீடலும், கசட்டுறு முனி எதிர் காண,
''என்னை ஆளுடை நாயகிக்கு இசை எடுப்பவள்'' என்று,
அன்னள் தாள் இணை வணங்கி நின்று ஏத்தலும், அனையாள், 3-3

'''உலகம் யாவையும் படைத்து, அளித்து, உண்டு, உமிழ், ஒருவன்
இலகு மார்பகத்து இருந்து, உயிர் யாவையும் ஈன்ற
திலக வாணுதல் சென்னியில் சூடிய தெரியல்,
அலகு இல் மா முனி! பெறுக'' என அளித்தனள் அளியால்,
3-4

'''தெய்வ நாயகி சென்னியில் சூடிய தெரியல்,
ஐய! யான் பெறப் புரிந்தது எத் தவம்?'' என ஆடி,
வெய்ய மா முனி சென்னியில் சூடியே, வினை போய்
உய்யும் ஆறு இது என்று உவந்து வந்து, உம்பர் நாடு அடைந்தான்.
3-5

'பெய்யும் மா முகில் வெள்ளிஅம் பிறங்கல் மீப் பிறழும்
செய்ய தாமரை ஆயிரம் மலர்ந்து, செங் கதிரின்
மொய்ய சோதியை மிலைச்சிய முறைமை போன்று ஒளிரும்
மெய்யினோடு, அயிராவதக் களிற்றின்மேல் விளங்க, 3-6

'அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி, அனங்கன்
சரம் பெய் தூணியின் தளிர் அடி நூபுரம் தழைப்ப,
கரும்பையும் சுவை கைப்பித்த குதலையர், விளரி
நிரம்பு பாடலோடு ஆடினர், வீதிகள் நெருங்க, 3-7

'நீல மால் வரை தவழ்தரு கதிர் நிலாக் கற்றை
போலவே, இரு புடையினும், சாமரை புரள,
கோல மா மதி குறைவு அற நிறைந்து, ஒளி குலாவி,
மேல் உயர்ந்தென வெள்ளி அம் தனிக் குடை விளங்க, 3-8

'தழங்கு பேரியும், குறட்டொடு பாண்டிலும், சங்கும்,
வழங்கு கம்பலை மங்கல கீதத்தை மறைப்ப,
முழங்கு நான்மறை, மூரி நீர் முழக்கு என, உலகை
விழுங்க, மால் வரும் விழா அணி கண்டு உளம் வியந்தான்.
3-9

'தனை ஒவ்வாதவன் மகிழ்ச்சியால், வாசவன்தன் கை
வனையும் மாலையை நீட்டலும், தோட்டியால் வாங்கி,
துனை வலத்து அயிராவதத்து எருத்திடைத் தொடுத்தான்;
பனை செய் கையினால் பறித்து அடிப்படுத்தது, அப் பகடு. 3-10

' ''கண்ட மா முனி விழி வழி ஒழுகு வெங் கனலால்,
அண்ட கூடமும் சாம்பராய் ஒழியும்'' என்று, அழியா,
விண்டு நீங்கினர் விண்ணவர்; இரு சுடர் மீண்ட;
எண் திசாமுகம் இருண்டது; சுழன்றது எவ் உலகும். 3-11

'புகை எழுந்தன, உயிர்த்தொறும்; எயில் பொடித்தவனின்
நகை எழுந்தன; நிவந்தன புருவம், நல் நுதலில்;
சிகை எழும் சுடர் விழியினன், அசனியும் திகைப்ப,
''மிகை எழுந்திடு சதமக! கேள்'' என வெகுண்டான். 3-12

' ''பூத நாயகன், புவிமகள் நாயகன், பொரு இல்
வேத நாயகன், மார்பகத்து இனிது வீற்றிருக்கும்
ஆதி நாயகி விருப்புறு தெரியல் கொண்டு அணைந்த
மாதராள்வயின் பெற்றனென், முயன்ற மா தவத்தால். 3-13

' ''இன்று நின் பெருஞ் செவ்வி கண்டு, உவகையின் ஈந்த
மன்றல்அம் தொடை இகழ்ந்தனை; நினது மா நிதியும்
ஒன்று அலாத பல் வளங்களும் உவரி புக்கு ஒளிப்ப,
குன்றி, நீ துயர் உறுக'' என உரைத்தனன், கொதித்தே.
3-14

'அரமடந்தையர், கற்பகம், நவ நிதி, அமிர்தம்,
சுரபி, வாம் பரி, மதமலை, முதலிய தொடக்கத்து
ஒரு பெரும் பொருள் இன்றியே உவரி புக்கு ஒளிப்ப
வெருவி ஓடின, கண்ணன் வாழ் வெண்ணெய் மேவாரின். 3-15

'அந்த வேலையில், இந்திரன் சிந்தை நொந்து அழிந்து,
வந்து, வானவ முனிவனை வழிபட்டு வழுத்த,
''நந்தும் நின் பெருஞ் செல்வம் மால் அருளினால், நயக்க
முந்தும்'' என்று சாபத்தினின் மோக்கமும் மொழிந்தான்.
3-16

'வெய்ய மா முனி வெகுளியால் விண்ணகம் முதலாம்
வையம் யாவையும் வறுமை நோய் நலிய, வானோரும்,
தையல் பாகனும், சதுமுகக் கடவுளும், கூடி,
செய்ய தாமரைத் திரு மறு மார்பனைச் சேர்ந்தார். 3-17

'வெஞ் சொல் மா முனி வெகுளியால் விளைந்தமை விளம்பி,
கஞ்ச நாள்மலர்க் கிழவனும், கடவுளர் பிறரும்,
''தஞ்சம் இல்லை; நின் சரணமே சரண்'' எனச் செப்ப,
''அஞ்சல், அஞ்சல்!'' என்று உரைத்தனன், உலகு எலாம் அளந்தோன்.
3-18

' ''மத்து மந்தரம்; வாசுகி கடை கயிறு; அடை தூண்
மெத்து சந்திரன்; சுராசுரர் வேறு வேறு உள்ள
கொத்து இரண்டு பால் வலிப்பவர்; ஓடதி கொடுத்து,
கத்து வாரிதி மறுகுற, அமிழ்து எழக் கடைமின்; 3-19

'"யாமும் அவ் வயின் வருதும்; நீர் கதுமென எழுந்து
போமின்" என்று அருள்புரிதலும், இறைஞ்சினர் புகழ்ந்து,
"நாமம் இன்று" எனக் குனித்தனர், நல்குரவு ஒழிந்தது
ஆம் எனும் பெருங் களி துளக்குறுதலால், அமரர். 3-20

'மலை பிடுங்கினர்; வாசுகி பிணித்தனர்; மதியை
நிலை பெறும்படி நட்டனர்; ஓடதி நிரைத்தார்;
அலை பெறும்படி பயோததி கடைந்தனர்; அவனி
நிலை தளர்ந்திட, அனந்தனும் கீழுற நெளித்தான். 3-21

'திறல் கொள் ஆமை ஆய், முதுகினில் மந்தரம் திரிய,
விறல் கொள் ஆயிரம் தடக் கைகள் பரப்பி, மீ வலிப்ப,
மறன் நிலாம் முனி வெகுளியால் மறைந்தன வரவே,
அறன் இலா மனத்து அடைகிலா நெடுந் தகை அமைத்தான்.
3-22

'இறந்து நீங்கின யாவையும், எம்பிரான் அருளால்,
பிறந்த; அவ்வயின் சுராசுரர் தங்களில் பிணங்க,
சிறந்த மோகினி மடந்தையால், அவுணர்தம் செய்கை
துறந்து மாண்டனர்; ஆர் அமிர்து அமரர்கள் துய்த்தார். 3-23

'வெருவும் ஆலமும் பிறையும் வெள் விடையவற்கு அளித்து,
தருவும் வேறு உள தகைமையும் சதமகற்கு அருளி,
மருவு தொல் பெரு வளங்களும் வேறு உற வழங்கி,
திருவும் ஆரமும் அணிந்தனன், சீதர மூர்த்தி. 3-24

'அந்த வேலையில் திதி பெருந் துயர் உழந்து அழிவாள்,
வந்து காசிபன் மலரடி வணங்கி, "என் மைந்தர்
இந்திராதியர் புணர்ப்பினுல் இறந்தனர்; எனக்கு ஓர்
மைந்தன் நீ அருள், அவர்தமை மடித்தலுக்கு" என்றாள். 3-25

'என்று கூறலும், "மகவு உனக்கு அளித்தனம்; இனி, நீ,
சென்று பாரிடை, பரூவம் ஓர் ஆயிரம் தீர,
நின்று, மா தவம் புரிதியேல், நினைவு முற்றுதி" என்று
அன்று கூறிட, புரிந்தனள் அருந் தவம், அனையாள். 3-26

'கேட்ட வாசவன், அன்னவட்கு அடிமையில் கிடைத்து,
வாட்டம் மா தவத்து உணர்ந்து, அவள் வயிற்று உறு மகவை
வீட்டியே எழு கூறு செய்திடுதலும், விம்மி,
நாட்டம் நீர் தர, "மருத்து" எனும் நாமமும் நவின்றான்.
3-27

'ஆயது இவ் இடம்; அவ் இடம் அவிர் மதி அணிந்த
தூயவன் தனக்கு உமையவின் தோன்றியே, தொல்லை
வாயுவும் புனல் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய் வளர்ந்தருள் சரவணம் என்பதும் தெரித்தான்.' 3-28

'இந்த மா நதிக்கு உற்று உள தகைமைய யாவும்,
எந்தை! கூறுக' என்று இராகவன் வினவுற, 'எனை ஆள்
மைந்த! நின் திரு மரபு உளான், அயோத்தி மா நகர் வாழ்
விந்தை சேர் புயன், சகரன், இம் மேதினி புரந்தான். 5-1

'விறல் கொள் வேந்தனுக்கு உரியவர் இருவரில், விதர்ப்பை
பொறையின் நல்கிய அசமஞ்சற்கு அஞ்சுமான் புதல்வன்;
பறவை வேந்தனுக்கு இளைய மென் சுமதி முன் பயந்த
அறனின் மைந்தர்கள் அறுபதினுயிரர் வலத்தார். 5-2

'திண் திறல் புனை சகரனும், தனையர் சேவகங்கள்
கண்டு, முற்றிய அய மகம் புரிதலும், கனன்று,
வண்டு துற்று தார் வாசவற்கு உணர்த்தினர், வானோர்;
ஒண் திறல் பரி கபிலனது இடையினில் ஒளித்தான். 5-3

'வாவு வாசிபின் சென்றனன் அஞ்சுமான் மறுகி,
பூவில் ஓர் இடம் இன்றியே நாடினன் புகுந்து,
தேவர் கோமகன் கரந்தமை அறிந்திலன், திகைத்து,
மேவு தாதைதன் தாதைபால் உரைத்தனன், மீண்டு. 5-4

'கேட்ட வேந்தனும், மதலையர்க்கு அம் மொழி கிளத்த,
வாட்டம் மீக்கொள, சகரர்கள் வடவையின் மறுகி,
நாட்டம் வெங் கனல் பொழிதர, நானிலம் துருவி,
தோட்டு நுங்கினர் புவியினை, பாதலம் தோன்ற. 5-5

'நூறு யோசனை அகலமும் ஆழமும் நுடங்கக்
கூறு செய்தனர், என்பரால், வட குணதிசையின்;
ஏறு மா தவக் கபிலன்பின் இவுளி கண்டு, எரியின்
சீறி, வைதனர்; செருக்கினர், நெருக்கினர்; செறுத்தார். 5-6

'மூளும் வெஞ் சினத்து அருந் தவன் முனிந்து, எரி விழிப்ப,
பூளைசூடிதன் நகையினில் எயில் பொடிந்தனபோல்,
ஆளும் மைந்தர் ஆறு-அயுதரும் சாம்பர் ஆய் அவிந்தார்;
வேள்வி கண்ட நல் வேந்தனுக்கு உரைத்தனர், வேயர். 5-7

'உழைத்த வெந் துயர்க்கு ஈறு காண்கிலன்; உணர்வு ஒழியா,
அழைத்து மைந்தன்தன் மைந்தனை, ''அவர் கழிந்தனரேல்,
இழைத்த வேள்வி இன்று இழப்பதோ?'' என, அவன் எழுந்து,
தழைத்த மா தவக் கபிலன் வாழ் பாதலம் சார்ந்தான். 5-8

'விண்டு நீங்கினர் உடல் உகு பிறங்கல் வெண் நீறு
கண்டு, துண்ணெனும் மனத்தினன், கபில மா முனிதன்
புண்டரீக மென் தாள் தொழுது எழுந்தனன் புகழ,
''கொண்டு போக, நின் இவுளி!'' என்று உற்றதும் குறித்தான். 5-9

'பழுதிலாதவன் உரைத்த சொல் கேட்டலும், பரிவால்
தொழுது, வாம் பரி கொணர்ந்து, அவி சுரர்களுக்கு ஈயா,
முழுதும் வேள்வியை முற்றுவித்து, அரசனும் முடிந்தான்—
எழுது கீர்த்தியாய்!—மைந்தனுக்கு அரசியல் ஈந்து. 5-10

'சகரர் தொட்டலால், ''சாகரம்'' எனப் பெயர் தழைப்ப,
மகர வாரிதி சிறந்தது; மகிதலம் முழுதும்
நிகர் இல் மைந்தனே புரந்தனன்; இவன் நெடு மரபில்,
பகிரதன் எனும் பார்த்திபன் பருதி ஒத்து உதித்தான். 5-11

'உலகம் யாவையும் பொது அறத் திகிரியை உருட்டி,
இலகும் மன்னவன் இருந்துழி, இறந்தவர் சரிதம்,
அலகு இல் தொல் முனி ஆங்கவற்கு உரைத்திட, அரசன்
திலகம் மண் உற வணங்கி நின்று, ஒரு மொழி செப்பும்: 5-12

' ''கொடிய மா முனி வெகுளியின் மடிந்த எம் குரவர்
முடிய நீள் நிரயத்தினில் அழுந்திடு முறைமை
கடியுமாறு, எனக்கு அருந் தவம் அமைகுறு கருமம்,
அடிகள்! சாற்றுக'' என்றலும், அந்தணன் அறைவான்: 5-13

' ''வையம் ஆளுடை மன்னவர் மன்னவ! மடிந்தோர்
உய்ய, நீள் தவம் ஒழிவு அறு பகல் எலாம் ஒருங்கே,
செய்ய நாள்மலர்க் கிழவனே நோக்கி, நீ செய்தி;
நையல்!'' என்று இனிது உரைத்தனன், நவை அறு முனிவன்.
5-14

'ஞாலம் யாவையும் சுமந்திரன்தன்வயின் நல்கி,
கோலும் மா தவத்து இமகிரி மருங்கினில் குறுகி,
காலம் ஓர் பதினுயிரம் அருந் தவம் கழிப்ப,
மூல நான்மறைக் கிழவனும் வந்து, இவை மொழிவான்: 5-15

' ''நின் பெருந் தவம் வியந்தனம்; நினது நீள் குரவர்,
முன்பு இறந்தனர், அருந் தவன் முனிவின்; ஆதலினல்,
மன் பெரும் புவிஅதனில், வான் நதி கடிது அணுகி,
என்பு தோயுமேல், இருங் கதி பெறுவர்'' என்று இசைத்தான்.
5-16

' ''மாக மா நதி புவியிடை நடக்கின், மற்று அவள்தன்
வேகம் ஆற்றுதல் கண்ணுதற்கு அன்றி வேறு அரிதால்;
தோகை பாகனே நோக்கி, நீ அருந் தவம் தொடங்கு'' என்று
ஏகினன், உலகு அனைத்தும் எவ் உயிர்களும் ஈன்றுன். 5-17

'மங்கை பாகனே நோக்கி, முன் மொழிந்தன வருடம்
தங்கு மா தவம் புரிதலும், தழல் நிறக் கடவுள்
அங்கு வந்து, ''நின் கருத்தினே முடித்தும்'' என்று அகன்றுன்;
கங்கையைத் தொழ, காலம் ஐயாயிரம் கழித்தான். 5-18

'ஒரு மடக் கொடி ஆகி வந்து, ''உனது மா தவம் என்?
பொரு புனல் கொடி வரின், அவள் வேகம் ஆர் பொறுப்பார்?
அரன் உரைத்த சொல் வினேதம்; மற்று இன்னும் நீ அறிந்து,
பெருகு நல் தவம் புரிக!'' என, வர நதி பெயர்ந்தாள். 5-19

'கரந்தை, மத்தமோடு, எருக்குஅலர், கூவிளே, கடுக்கை,
நிரந்த பொற் சடை நின்மலக் கொழுந்தினை நினேயா,
அரந்தை உற்றவன், இரண்டரை ஆயிரம் ஆண்டு
புரிந்து நல் தவம் பொலிதர, வரை உறை புனிதன், 5-20

'எதிர்ந்து,''நின் நினேவு என்?'' என, இறைஞ்சி,''எம் பெரும!
அதிர்ந்து, கங்கை ஈது அறைந்தனள்'' என்றலும், ''அஞ்சேல்!
பிதிர்ந்திடா வகை காத்தும்'' என்று ஏகிய பின்றை,
முதிர்ந்த மா தவம் இரண்டரை ஆயிரம் முடித்தான். 5-21

'பெருகும் நீரொடு, பூதியும், வாயுவும், பிறங்கு
சருகும், வெங் கதிர் ஒளியையும், துய்த்து, மற்று எதையும்
பருகல் இன்றியே, முப்பதினுயிரம் பருவம்,
உருகு காதலின் மன்னவன் அருந் தவம் உழந்தான். 5-22

'உந்தி அம்புயத்து உதித்தவன் உறைதரும் உலகும்,
இந்திராதியர் உலகமும், நடுக்குற இரைத்து,
வந்து தோன்றினள் வர நதி; மலேமகள் கொழுநன்
சிந்திடாது, ஒரு சடையினில் கரந்தனன் சேர. 5-23

'புல் நுனித் தரு பனி என, வர நதி, புனிதன்
சென்னியில் கரந்து ஒளித்தலும், வணங்கினன், திகைத்து,
மன்னன் நிற்றலும், ''வருந்தல்; நம் சடையள், வான் நதி இன்று''
என்ன விட்டனன், ஒரு சிறிது; அவனி போந்து இழிந்தாள்.
5-24

'இழிந்த கங்கைமுன், மன்னவன் விரைவொடும் ஏக,
கழிந்த மன்னவர் கதி பெற முடுகிய கதியால்,
அழுந்தும் மா தவச் சன்னுவின் வேள்வியை அழிப்ப,
கொழுந்து விட்டு எரி வெகுளியன், குடங்கையில் கொள்ளா,
5-25

'உண்டு உவந்தனன், மறை முனிக் கணங்கள் கண்டு உவப்ப,
கண்ட வேந்தனும் வணங்கி, முன் நிகழ்ந்தன கழற,
''கொண்டு போக!'' என, செவிவழிக் கொடுத்தனன்; குதித்து,
விண்டு நீங்கினர் உடல் உகு பொடியில் மேவினளே. 5-26

'நிரையம் உற்று உழல் சகரர்கள் நெடுங் கதி செல்ல,
விரை மலர் பொழிந்து ஆர்த்தன, விண்ணவர் குழாங்கள்;
முரைசம் முற்றிய பல்லியம் முறை முறை முழங்க,
அரைசன் அப்பொழுது, அணி மதில் அயோத்தி மீண்டு அடைந்தான்.

'அண்ட கோளகைப் புறத்தது ஆய், அகிலம் அன்று அளந்த
புண்டரீக மென் மலரடிப் பிறந்து, பூமகனுர்
கொண்ட தீர்த்தம் ஆய், பகிரதன் தவத்தினுல் கொணர,
மண்தலத்து வந்து அடைந்தது, இம் மா நதி, மைந்த! 5-28

'சகரர்தம்பொருட்டு அருந் தவம் பெரும் பகல் தள்ளி,
பகிரதன் கொணர்ந்திடுதலால், ''பகிரதி'' ஆகி,
மகிதலத்திடைச் சன்னுவின் செவி வழி வரலால்,
நிகர் இல், ''சானவி'' எனப் பெயர் படைத்தது, இந் நீத்தம்.' 5-29

என்று கூறலும், வியப்பினேடு உவந்தனர், இறைஞ்சி,
சென்று தீர்ந்தனர் கங்கையை; விசாலே வாழ் சிகரக்
குன்றுபோல் புயத்து அரசன் வந்து, அடி இணே குறுக,
நின்று, நல் உரை விளம்பி, மற்று அவ் வயின் நீங்கா, 5-30

மது மலேந்த வெண் தரளமும், (வயிரமும்), மணியும்,
கதிர் வளம் செயும் பவளமும், கழுத்திடைக் காட்டி,
எதிர் மலேந்த பைங் கூந்தலே இன வண்டு (நணுக),
புது மணம் செயும் மடந்தையர் போன்றன—பூகம். 7-1

அந்த இந்திரனேக் கண்ட அமரர்கள், பிரமன் முன்ன
வந்து, கோதமனே வேண்ட, மற்று அவை தவிர்த்து, மாருச்
சிந்தையின் முனிவு தீர்ந்து, சிறந்த ஆயிரம் கண் ஆக்க,
தம் தமது உலகு புக்கார்; தையலும் கிடந்தாள், கல் ஆய். 23-1

'வண்ண வார் குழலினுட்கும் வானவர்தமக்கும் ஆகேன்;
எண்ணி நான் செய்த குற்றம், முனிவ! நீ பொறுத்தி' என்ன,
'பண்ணிய உறுப்பில் கோடல் பத்து நூறு அவையும் போக,
அண்ணிய விண்ணில் ஆளிக்கு ஆயிர நயனம்' என்ருன். 23-2

10 மிதிலேக் காட்சிப் படலம்

இன்ன பல் வளங்கள் எல்லாம் இனிதுற நோக்கி, யார்க்கும்
முன்னவன் ஆய தேவும், முனிவனும், இளேய கோவும்,
பொன்னகர் இறையும் மற்றைப் பூதலத்து அரசும் ஒவ்வா
மன்னவன் சனகன் கோயில் மணி மதில் புறத்தைச் சேர்ந்தார். 20-1

நங்கையர் விழிக்கு நல் விழவும் ஆய், அவர்
இங்கிதத்தொடு தொழுது இறைஞ்சும் தேவும் ஆய்,
அங்கு அவர்க்கு அமுதும் ஆய், வந்த சானகி
எங்கள் நாயகற்கு இனி யாவது ஆம்கொலோ? 32-1

தீங்கு செய் அரக்கர்தம் வருக்கம் தீயவும்,
ஓங்கிய தவங்களும், உலகும், வேதமும்
தாங்கி மேல் வளரவும், தழைத்த சானகி
ஆங்கு அவன் வடிவினை அகத்தில் உன்னுவாள். 52-1

அப் புறத்து அலை கடல் அலர்ந்த தாமரை
ஒப்புற இந்து என்று உதித்த ஒள் அழல்
வெப்புறு வெங் கதிர் வரப்ப, விண் எலாம்
கொப்புளங் கொண்டென, உடுக்கண் கூர்ந்தவே. 76-1

நின்றனன் அரசன் வன்றான்; நீ எனைக் கொண்டு போகை
நன்று என மொழிந்து நின்றான், நல்கிய தாயை நோக்கி, [நின்றான்;
'இன்று எனைக் கொடுத்தியோ?' என்று இறைஞ்சினன் கசிந்து
தன் துணை மார்பில் சேர்த்துத் தழுவலும், அவனை நோக்கி, 121-1

'என்று கூறி, இமையவர் தங்கள்முன்
வன் தபோத வதிட்டன் வந்து, என்னையே,
''நின்ற அந்தணனே'' என நேர்ந்தவன்
வென்றி வெந் திறல் தேவர் வியப்புற, 135-1

காதலால் ஒருத்தியை நினைப்ப, கண் துயில்
மாதராள் அவன்திறம் மறுப்ப, கங்குல் மான்,
'ஏதிலான் தமியன்' என்று, 'ஏகலேன்' என,
ஆதலால் இருந்தனன்; அளியன் என் செய்வான்? 143-1

11　　　　குலமுறை கிளத்து படலம்

அந்தரத்தில் உருள்சேர, அடு சனி வந்து உறும் அளவில்,
சிந்தை மகிழ் தசரதனும் சென்று அவன்மேல் சரங்கள் தொடுத்து,
'இந்த வழி போகு அரிது' என்று இயைந்தவனை எந்நாளும்
உந்தும் என உலகுதனக்கு உறுதுயர் தீர்த்திடும் உரவோன். 15-1

'கோதமன் தன் மனைக்கிழத்திக்கு உரைத்த கொடுஞ் சாபம் எனும்
ஓத அருங் கல் உருத் தவிர்த்து, முன்னை உருக் கொடுத்தது இவன்
பாதமிசைத் துவண்டு எழுந்த பசும் பொடி மற்று அது கண்டாய்;
ஈது இவன்தன் அருள் வடிவம் வரலாறும்' என உரைத்தான். 31-1

12　　　　கார்முகப் படலம்

புக்கனர்; சனகர் கோன், 'பொரு இல் நீங்கள்தாம்
ஒக்கவே வில்லினை உரத்து அடுத்து எடுத்து,
இக் கணத்து எய்துவீர்' என்றனன்; என,
மிக்கவர் அவ் உரை விளம்பினர் அரோ. 2-1

புக்கனர், அவர்களைப் பொருந்த நோக்கி, 'இம்
முக்கணன் வில்லினை மொய்ம்பின் ஆற்றலோடு
இக் கணத்து அளித்திர் என்று, எம்மை ஆளுடை
மிக்குறு சனகனும் விளம்பினன்' என்றார். 2-2

என்று சாலவே வெதும்பி இன்ன இன்னவாறெலாம்
ஒன்றலாது பன்னி ஆவி ஊசலாட வாடுவாள்
மன்றல் நாறு மாலை மீளி மான யானை போல முன்
சென்ற வீதியூடு பார்வை செல்லநிற்கும் எல்லையே. 54-1

என்று மாதராள் நினைந்து, இவ் இடரின் மூழ்கு போதினில்,
குன்றுபோல் எழுந்த கொங்கை மங்கை கொம்பை அன்னவள்,
'வென்றி வீரன் இங்கு வந்து வில் இறுத்த மேன்மையைச்
சென்று கூறுவோம்' எனத் தெளிந்து சிந்தை முந்துவாள். 55-1

13 எழுச்சிப் படலம்

'ஓது நீதியின் கோசிக மா முனி ஓலை
தாது சேர் தொடைத் தயரதன் காண்க! தற் பிரிந்து
போது கானிடைத் தாடகை பொருப்பு எனப் புகுந்து,
வாது செய்து நின்று, இராகவன் வாளியால் மாண்டாள். 3-1

'சிறந்த வேள்வி ஒன்று அமைத்தனென்; அதுதனைச் சிதைக்க,
இறந்த தாடகை புதல்வர் ஆம் இருவர் வந்து எதிர்த்தார்;
அறம் கொள் மாலவன் வாளியால் ஒருவன் தன் ஆவி
குறைந்து போயினன்; ஒருவன் போய்க் குரை கடல் குளித்தான். 3-2

'கூட மேவு போர் அரக்கரை இளையவன் கொன்று,
நீடு வேள்வியும் குறை படாவகை நின்று நிரப்பி,
பாடல் மா மறைக் கோதமன் பன்னி சாபத்தை,
ஆடல் மா மலர்ச்சோலையில், இராகவன் அகற்றி, 3-3

'பொரு இல் மா மதில் மிதிலையில் புகுந்து, போர் இராமன்
மருவு வார் சிலை முறித்தலின், சனகன் தன் மகளை,
''தருவென் யான்'' என இசைந்தனன்; தான் இங்கு விரைவின்
வருக' என்பதாம் வாசகம் கேட்டு, உளம் மகிழ்ந்தான். 3-4

பன்னும் நான்மறை வசிட்டனும் பராவ அரு முனிக்கும்,
அன்னைமார்க்கும், தன் அமைச்சர்க்கும், சோபனம் அறிவித்து,
இன்ன வாசக ஓலை அங்கு இட்ட தூதர்க்குச்
சொன்னம் ஆயிரம் கோடியும் தூசுடன் கொடுத்தான். 3-5

மாண்ட பின்னரும் மந்திர வேள்வியும் இயற்றித்
தூண்டு அரும் பெரும் ........ ........ ........
........ ........ ........ ........ ........
...... ...... சனகனும் மகட்கொடை நேர்ந்தான். 3-6

மன்னன் அங்கு அவர் பெருமகம் காணிய வருவான்
அன்ன வாசிட்டன் அந்தணர் அரசர் ஆபாலர்
இன்னர் இன்றியே வருக என எழுதினன்; இச் சொல்
சொன்ன வாசகம் சொல்தொறும் அமுது எனச் சொரிந்த. 3-7

சாற்றிய முரசு ஒலி செவியில் சாருமுன்,
கோல் தொடி மகளிரும், கோல மைந்தரும்,
வேல் தரு குமரரும், வென்றி வேந்தரும்,
காற்று எறி கடல் எனக் களிப்பின் ஓங்கினர். 8-1

எதிர் கொண்டு ஏந்தி ஓர் ஏந்திழை கொங்கை பூண்
அதிர, மார்பம் அழுந்தத் தழுவினன்,
'முதிரும் தோள் மலையோ முலைக் குன்றமோ
அதிகம் என்பது அறிக வந்தேன்' என்றான். 37-1

## 18 உண்டாட்டுப் படலம்

அரம்பையரினும், இவர் ஆடல் நன்று எனப்
புரந்தரன் கலவியின் பூசல் நோக்கி, வான்
நிரம்பிய கண்களை முகிழ்த்து, நீள் நகர்
கரந்தது கடுத்து உடுக்கணங்கள் மாண்டவே. 66-1

## 22 கடிமணப் படலம்

எரி கால் சுடர் ஏக, எழுந்த நிலா
வரும் ஈரமும், மா மயில் சானகிதன்
திருமேனியின்மீது சினந்து சுட,
தரியாது, உளம் நொந்து, தனித்து உறைவாள். 2-1

என்று, ஐயன் மனத்தொடும் எண்ணினன்; மற்று
அன்று அங்கு அவை நிற்க, அருட் சனகன்
முன் தந்த தவத்து உறு மொய்குழலாள்
துன்றும் மணம் உற்றது சொல்லிடுவாம். 18-1

கதிரவன் எழலோடும், கடி நகர் இடம் எங்கும்
மதி முக மடவாரும் மைந்தரும் முதியோரும்
விதி புரி செயல்போலும், மேல் உலகினும் இல்லாப்
புதுமையின் உறு, கோலம் புனைதலை முயல்வுற்றார். 21-1

என்றும், நான்முகன் முதல் யாரும், யாவையும்,
நின்ற பேர் இருளினை நீக்கி, நீள் நெறி
சென்று மீளாக் குறி சேரச் சேர்த்திடு
தன் திரு நாமத்தைத் தானும் சாத்தியே. 48-1

23 பரசுராமப் படலம்

கயிலைக் கிரிதனை மூடிய அன்றிற்கிரி கந்தன்
அயிலைப் புக விடர்விட்டதுபோல் ஏழ் வழியாகச்
சயிலத் துளைபட எய்தனை, அயில் தெற்றிய அதனல்
முயலுற்றவர் நிருபக்குலம் மூ-ஏழ் முறை முடித்தான். 14-1

கடவுள் வாழ்த்து

வான்நின்று இழிந்து, வரம்பு இகந்த
மா பூதத்தின் வைப்பு எங்கும்,
ஊனும் உயிரும் உணர்வும்போல்,
உள்ளும் புறத்தும் உளன் என்ப—
கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்ப, கோல் துறந்து,
கானும் கடலும் கடந்து, இமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்.

## 1 மந்திரப் படலம்

தயரதன் மந்திராலோசனை மண்டபத்தை அடைதல்

மண்ணுறு முரசுஇனம் மழையின் ஆர்ப்புற,
பண்ணுறு படர் சினப் பருமயானையான்,
கண்ணுறு கவரியின் கற்றை சுற்றுற,
எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினான். 1

மந்திரக் கிழவரை வருவித்தல்

புக்கபின், 'நிருபரும், பொரு இல் சுற்றமும்,
பக்கமும், பெயர்க' என, பரிவின் நீக்கினான்;
ஒக்க நின்று உலகு அளித்து, யோகின் எய்திய
சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினான். 2

சந்திரற்கு உவமை செய் தரள வெண்குடை
அந்தரத்தளவும் நின்று அளிக்கும் ஆணையான்,
இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த, தன்
மந்திரக் கிழவரை, 'வருக' என்று ஏவினான். 3

வசிட்டன் வருகை

பூ வரு பொலன் கழல் பொரு இல் மன்னவன்
காவலின் ஆணைசெய் கடவுள் ஆம் என,
தேவரும் முனிவரும், உணரும், தேவர்கள்
மூவரின் நால்வர் ஆம், முனி வந்து எய்தினான். 4

1 : 1. பருமம் - யானைமேல் தவிசு; 3. அந்தரம் - விண்ணுலகம்; இமையவர் குரு - வியாழ பகவான்.

அமைச்சர் மாண்பு

குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்,
பல முதல் கேள்வியும், பயனும், எய்தினர்;
நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார்;
சலம் முதல்அறுத்து, அருந் தருமம் தாங்கினர்; 5

உற்றது கொண்டு, மேல்வந்து உறு பொருள் உணரும் கோளார்;
மற்று அது வினையின் வந்தது ஆயினும், மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அரிய நூலும்
கற்றவர்; மானம் நோக்கின், கவரிமா அனைய நீரார்; 6

காலமும் இடனும் ஏற்ற கருவியும் தெரிந்து கற்ற
நூல் உற நோக்கி, தெய்வம் நுனித்து, அறம் குணித்த மேலோர்;
சீலமும், புகழ்க்கு வேண்டும் செய்கையும், தெரிந்துகொண்டு,
பால் வரும் உறுதி யாவும் தலைவற்குப் பயக்கும் நீரார்;* 7

தம் உயிர்க்கு இறுதி எண்ணார்; தலைமகன் வெகுண்ட போதும்,
வெம்மையைத் தாங்கி, நீதி விடாதுநின்று, உரைக்கும் வீரர்;
செம்மையின் திறம்பல் செல்லாத் தேற்றத்தார்; தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்; ஒருமையே மொழியும் நீரார்; 8

நல்லவும் தீயவும் நாடி, நாயகற்கு,
எல்லை இல் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லை வந்து உறுவன உற்ற பெற்றியின்,
தொல்லை நல்வினை என உதவும் சூழ்ச்சியார்; 9

அமைச்சர்கள் வருகை

அறுபதினாயிரர் எனினும், ஆண்தகைக்கு
உறுதியில் ஒன்று இவர்க்கு உணர்வு என்று உன்னலாம்;
பெறல் அருஞ் சூழ்ச்சியர்; திருவின் பெட்பினர்;—
மறி திரைக் கடல் என வந்து சுற்றினர். 10

முறைமையின் எய்தினர் முந்தி, அந்தம் இல்
அறிவனை வணங்கி, தம் அரசைக் கைதொழுது,
இறையிடை வரன்முறை ஏறி, ஏற்ற சொல்
துறை அறி பெருமையான் அருளும் சூடினர். 11

தயரதன் தன் உளக் கருத்தை வெளியிடுதல்

அன்னவர், அருள் அமைந்து இருந்த ஆண்டையில்,
மன்னனும், அவர் முகம் மரபின் நோக்கினன்;
'உன்னிய அரும் பெறல் உறுதி ஒன்று உளது;
என் உணர்வு அனைய நீர் இனிது கேட்டிரால்! 12

7. குணித்தல் - ஆராய்தல்; 9. உறுவன - பொருந்தும் இடையூறுகள்; தொல்லை - பழமை; 11. இறை - தவிசு.

'வெய்யவன் குல முதல் வேந்தர், மேலவர்,
செய்கையின் ஒரு முறை திறம்பல் இன்றியே,
வையம் என் புயத்திடை, நுங்கள் மாட்சியால்,
ஐ-இரண்டு ஆயிரத்து ஆறு தாங்கினேன். 13

'கன்னியர்க்கு அமைவரும் கற்பின், மா நிலம்-
தன்னை இத் தகைதரத் தருமம் கைதர,
மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்;
என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன். 14

'விரும்பிய மூப்பு எனும் வீடு கண்ட யான்,
இரும் பியல் அனந்தனும், இசைந்த யானையும்,
பெரும் பெயர்க் கிரிகளும் பெயர, தாங்கிய
அரும் பொறை இனிச் சிறிது ஆற்ற ஆற்றலேன். 15

'நம் குலக் குரவர்கள், நவையின் நீங்கினர்,
தம் குலப் புதல்வரே தரணி தாங்கப் போய்,
வெங் குலப் புலன் கெட, வீடு நண்ணினர்;
எங்கு உலப்புறுவர், என்று எண்ணி, நோக்குகேன். 16

'வெள்ள நீர் உலகினில், விண்ணில், நாகரில்,
தள்ள அரும் பகை எலாம் தவிர்த்து நின்ற யான்,
கள்ளரின் கரந்து உறை காமம் ஆதி ஆம்
உள் உறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனோ? 17

'பஞ்சி மென் தளிர் அடிப் பாவை கோல் கொள,
வெஞ் சினத்து அவுணர் தேர் பத்தும் வென்றுளேற்கு,
எஞ்சல் இல் மனம் எனும் இழுதை ஏறிய
அஞ்சு தேர் வெல்லும் ஈது அருமை ஆவதோ? 18

'ஒட்டிய பகைஞர் வந்து உருத்த போரிடைப்
பட்டவர் அல்லரேல், பரம ஞானம் போய்த்
தெட்டவர் அல்லரேல், ''செல்வம் ஈண்டு'' என
விட்டவர் அல்லரேல், யாவர் வீடு உளார்? 19

'இறப்பு எனும் மெய்ம்மையை, இம்மை யாவர்க்கும்,
மறப்பு எனும் அதனின்மேல் கேடு மற்று உண்டோ?
துறப்பு எனும் தெப்பமே துணை செய்யாவிடின்,
பிறப்பு எனும் பெருங் கடல் பிழைக்கல் ஆகுமோ? 20

15. பியல் - பிடரி; 16. புலன் - ஐம்புல ஆசை; உலப்புறுதல் - முடிவுறுதல்; 18. இழுதை - பேய்.

'அருஞ் சிறப்பு அமைவரும் துறவும், அவ் வழித்
தெரிஞ்சு உறவு என மிகும் தெளிவும் ஆய், வரும்
பெருஞ் சிறை உள எனின், பிறவி என்னும் இவ்
இருஞ் சிறை கடத்தலின் இனியது யாவதோ? 21

'இனியது போலும் இவ் அரசை எண்ணுமோ—
துனி வரு புலன் எனத் தொடர்ந்து தோற்கலா
நனி வரும் பெரும் பகை நவையின் நீங்கி, அத்
தனி அரசாட்சியில் தாழும் உள்ளமே? 22

'உம்மை யான் உடைமையின், உலகம் யாவையும்
செம்மையின் ஓம்பி, நல் அறமும் செய்தனென்;
இம்மையின் உதவி, நல் இசை நடாய நீர்,
அம்மையும் உதவுதற்கு அமையவேண்டுமால். 23

'இழைத்த தொல் வினையையும் கடக்க எண்ணுதல்,
தழைத்த பேர் அருளுடைத் தவத்தின் ஆகுமேல்,
குழைத்தது ஓர் அமுதுடைக் கோரம் நீக்கி, வேறு
அழைத்த தீ விடத்தினை அருந்தல் ஆகுமோ? 24

'கச்சை அம் கடக் கரிக் கழுத்தின்கண் உறப்
பிச்சமும் கவிகையும் பெய்யும் இன் நிழல்
நிச்சயம் அன்றுஎனின், நெடிது நாள் உண்ட
எச்சிலை நுகருவது இன்பம் ஆகுமோ? 25

'மைந்தரை இன்மையின் வரம்பு இல் காலமும்
நொந்தனென்; இராமன் என் நோவை நீக்குவான்
வந்தனன்; இனி, அவன் வருந்த, யான் பிழைத்து,
உய்ந்தனென் போவது ஓர் உறுதி எண்ணினேன். 26

' ''இறந்திலன் செருக் களத்து இராமன் தாதை; தான்,
அறம்தலை நிரம்ப, மூப்பு அடைந்த பின்னரும்,
துறந்திலன்'' என்பது ஓர் சொல் உண்டானபின்,
பிறந்திலென் என்பதின் பிறிது உண்டாகுமோ? 27

'பெருமகன் என்வயின் பிறக்க, சீதை ஆம்
திருமகள் மணவினை தெரியக் கண்ட யான்,
அரு மகன் நிறை குணத்து அவனி மாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன். 28

21. சிறை - சிறைச்சாலை; 24. கோரம் - வட்டில்.

'நிவப்புறு நிலன் எனும் நிரம்பு நங்கையும்,
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்,
உவப்புறு கணவனை உயிரின் எய்திய
தவப் பயன் தாழ்ப்பது தருமம் அன்றுஅரோ. 29

'ஆதலால், இராமனுக்கு அரசை நல்கி, இப்
பேதைமைத்தாய் வரும் பிறப்பை நீக்குறு
மா தவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன்;
யாது நும் கருத்து?' என, இனைய கூறினன். 30

மன்னன் மாற்றம் கேட்ட மந்திரக் கிழவரின் மன நிலை

திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும், சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர், ஆங்கே
வெருண்டு, மன்னவன் பிரிவு எனும் விம்முறு நிலையால்,
இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார். 31

அன்னர் ஆயினும், அரசனுக்கு, அது அலது உறுதி
பின்னர் இல் எனக் கருதியும், பெரு நில வரைப்பில்
மன்னும் மன்னுயிர்க்கு இராமனின் மன்னவர் இல்லை
என்ன உன்னியும், விதியது வலியினும், இசைந்தார். 32

வசிட்டன் பேச்சு

இருந்த மந்திரக் கிழவர்தம் எண்ணமும், மகன்பால்
பரிந்த சிந்தை அம் மன்னவன் கருதிய பயனும்,
பொருந்து மன்னுயிர்க்கு உறுதியும், பொதுவுற நோக்கி,
தெரிந்து, நான்மறைத் திசைமுகன் திருமகன் செப்பும்: 33

'நிருப! நின் குல மன்னவர் நேமி பண்டு உருட்டிப்
பெருமை எய்தினர்; யாவரே இராமனைப் பெற்றார்?
கருமமும் இது; கற்று உணர்ந்தோய்க்கு இனிக் கடவ
தருமமும் இது; தக்கதே உரைத்தனை;—தகவோய்! 34

'புண்ணியம் தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த
அண்ணலே! இனி, அருந் தவம் இயற்றவும் அடுக்கும்;
வண்ண மேகலை நிலமகள், மற்று, உனைப் பிரிந்து
கண் இழந்திலள் எனச் செயும், நீ தந்த கழலோன். 35

'புறத்து, நாம் ஒரு பொருள் இனிப் புகல்கின்றது எவனோ,
அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான் என்பது அல்லால்?
பிறத்து, யாவையும் காத்து, அவை பின் உறத் துடைக்கும்,
திறத்து மூவரும் திருந்திடத் திருத்தும், அத் திறலோன். 36

33. திசைமுகன் திருமகன் - வசிட்டன்.

'பொன் உயிர்த்த பூ மடந்தையும், புவி எனும் திருவும்,
''இன் உயிர்த் துணை இவன்'' என, நினைக்கின்ற இராமன்,
''தன் உயிர்க்கு'' என்கை புல்லிது; தற் பயந்து எடுத்த
உன் உயிர்க்கு என நல்லன், மன் உயிர்க்கு எலாம்;—உரவோய்!

வாரம் என் இனிப் பகர்வது? வைகலும், அனையான்
பேரினல், வரும் இடையூறு பெயர்கின்ற பயத்தால்,
வீர, நின் குல மைந்தனே, வேதியர் முதலோர்
யாரும், ''யாம் செய்த நல் அறப் பயன்'' என, இருப்பார். 38

'மண்ணினும் நல்லள்; மலர்மகள், கலைமகள், கலை ஊர்
பெண்ணினும் நல்லள்; பெரும் புகழ்ச் சனகியோ நல்லள்—
கண்ணினும் நல்லன்; கற்றவர், கற்றிலாதவரும்,
உண்ணும் நீரினும், உயிரினும், அவனையே உவப்பார். 39

மனிதர், வானவர், மற்றுளோர் அற்றம் காத்து அளிப்பார்
இனிய மன்னுயிர்க்கு இராமனின் சிறந்தவர் இல்லை;
அனையது ஆதலின், அரச! நிற்கு உறு பொருள் அறியின்,
புனித மா தவம் அல்லது ஒன்று இல்' எனப் புகன்றான். 40

தயரதன் மகிழ்ச்சி உரை

மற்று, அவன் சொன்ன வாசகம் கேட்டலும், மகனைப்
பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப் பெரு வில்
இற்ற அன்றினும், எறி மழுவாளவன் இழுக்கம்
உற்ற அன்றினும், பெரியது ஓர் உவகையன் ஆனான். 41

அனையது ஆகிய உவகையன், கண்கள் நீர் அரும்ப,
முனிவன் மா மலர்ப் பாதங்கள் முறைமையின் இறைஞ்சி,
'இனிய சொல்லினை; எம்பெருமான் அருள் அன்றோ,
தனியன் நானிலம் தாங்கியது? அவற்கு இது தகாதோ? 42

எந்தை! நீ உவந்து இதம் சொல, எம் குலத்து அரசர்,
அந்தம் இல் அரும் பெரும் புகழ் அவனியில் நிறுவி,
முந்து வேள்வியும் முடித்து, தம் இரு வினை முடித்தார்;
வந்தது, அவ் அருள் எனக்கும்' என்று உரைசெய்து மகிழ்ந்தான்.

சுமந்திரன் கூற்று

பழுது இல் மா தவன், பின் ஒன்றும் பணித்திலன், இருந்தான்;
முழுதும் எண்ணுறும் மந்திரக் கிழவர் தம் முகத்தால்
எழுதி நீட்டிய இங்கிதம், இறை மகற்கு ஏற்க,
தொழுத கையினன், சுமந்திரன் முன் நின்று, சொல்லும்: 44

38. வாரம் - அன்பு; 40. அற்றம் காத்தல் - துன்பம் வாராமல் தடுத்துக் காத்தல்.

'''உறத் தகும் அரசு இராமற்கு'' என்று உவக்கின்ற மனத்தை
''துறத்தி நீ'' எனும் சொல் சுடும்; நின் குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கு அன்று;
அறத்தின்ஊங்கு இனிக் கொடிது எனல் ஆவது ஒன்று யாதோ?

'புரைசை மாக் கரி நிருபர்க்கும், புரத்து உறைவோர்க்கும்,
உரைசெய் மந்திரக் கிழவர்க்கும், முனிவர்க்கும், உள்ளம்
முரைசம் ஆர்ப்ப, நின் முதல் மணிப் புதல்வனை, முறையால்
அரைசன் ஆக்கி, பின் அப் புறத்து அடுத்தது புரிவாய்!' 46

**இராமனை அழைத்துவர மன்னன் சுமந்திரனை அனுப்புதல்**

என்ற வாசகம், சுமந்திரன் இயம்பலும், இறைவன்,
'நன்று சொல்லினை; நம்பியை நளி முடி சூட்டி-
நின்று, நின்றது செய்வது; விரைவினில், நீயே
சென்று, கொண்டு அணை, திருமகள் கொழுநனை' என்றான். 47

**சுமந்திரன் இராமனைத் திருமனையில் கண்டு செய்தி தெரிவித்தல்**

அலங்கல் மன்னனை அடிதொழுது, அவன் மனம் அனையான்,
விலங்கல் மாளிகை வீதியில் விரைவொடு சென்றான்,
தலங்கள் யாவையும் பெற்றனன் தான் எனத் தளிர்ப்பான்,
பொலன் கொள் தேரொடும் இராகவன் திருமனை புக்கான். 48

பெண்ணின் இன் அமுது அன்னவள்தன்னொடும், பிரியா
வண்ண வெஞ் சிலைக் குரிசிலும், மருங்கு இனிது இருப்ப,
அண்ணல் ஆண்டு இருந்தான்; அழகு அரு நறவு என, தன்
கண்ணும் உள்ளமும் வண்டு என, களிப்புறக் கண்டான். 49

கண்டு, கைதொழுது, 'ஐய, இக் கடலிடைக் கிழவோன்,
''உண்டு ஓர் காரியம்; வருக!'' என, உரைத்தனன்' எனலும்,
புண்டரீகக் கண் புரவலன் பொருக்கென எழுந்து, ஓர்
கொண்டல்போல்பவன், கொடி நெடுந் தேர்மிசைக் கொண்டான். 50

**தேரில் சென்ற இராமனைக் கண்ட பெண்டிர் செயல்**

முறையின் மொய்ம் முகில் என முரசு ஆர்த்திட, மடவார்
இறை கழன்ற சங்கு ஆர்த்திட, இமையவர், 'எங்கள்
குறை முடிந்தது' என்று ஆர்த்திட, குஞ்சியைச் சூழ்ந்த
நறை அலங்கல் வண்டு ஆர்த்திட, தேர்மிசை நடந்தான். 51

46. புரைசை - யானையின் கழுத்தில் இடப்படும் கயிறு; 48. தலங்கள் - நாடுகள்.

பணை நிரந்தன; பாட்டு ஒலி நிரந்தன; அனங்கன்
கணை நிரந்தன; நாண் ஒலி கறங்கின; நிறைப் பேர்
அணை நிரந்தன, அறிவு எனும் பெரும் புனல்; அனையார்,
பிணை நிரந்தெனப் பரந்தனர்; நாணமும் பிரிந்தார். 52

நீள் எழுத் தொடர் வாயிலில், குழையொடு நெகிழ்ந்த
ஆளகத்தினோடு அரமியத் தலத்தினும் அலர்ந்த;
வாள் அரத்த வேல் வண்டொடு கெண்டைகள் மயங்க,
சாளரத்தினும் பூத்தன, தாமரை மலர்கள். 53

மண்டலம் தரு மதி கெழு, மழை முகில் அனைய,
அண்டர் நாயகன் வரை புரை அகலத்துள் அலங்கல்,
தொண்டை வாய்ச்சியர் நிறையொடும், நாணொடும், தொடர்ந்த
கெண்டையும் உள; கிளை பயில் வண்டொடும் கிடந்த. 54

சரிந்த பூ உள, மழையொடு கலை உறத் தாழ்வ;
பரிந்த பூ உள, பனிக் கடை முத்துஇனம் படைப்ப;
எரிந்த பூ உள, இள முலை இழை இடை நுழைய;
விரிந்த பூ உள, மீனுடை வானின்றும் வீழ்வ. 55

வள் உறை கழித்து ஒளிர்வன வாள் நிமிர் மதியம்
தள்ளுறச் சுமந்து, எழுதரும் தமனியக் கொம்பில்,—
புள்ளி நுண் பனி பொடிப்பன, பொன்னிடைப் பொதிந்த,
எள்ளுடைப் பொரி விரவின,—உள சில இளநீர். 56

**இராமன் தயரதன் இருந்த இடம் சேர்தல்**

ஆயது, அவ்வழி நிகழ்தர, ஆடவர் எல்லாம்
தாயை முன்னிய கன்று என நின்று உயிர் தளிர்ப்ப,
தூய தம்பியும், தானும், அச் சுமந்திரன் தேர்மேல்
போய், அகம் குளிர் புரவலன் இருந்துழிப் புக்கான். 57

**தயரதன் இராமனைத் தழுவுதல்**

மாதவன்தனை வரன்முறை வணங்கி, வாள் உழவன்
பாத பங்கயம் பணிந்தனன்; பணிதலும், அனையான்,
காதல் பொங்கிட, கண் பனி உகுத்திட, கனி வாய்ச்
சீதை கொண்கனைத் திரு உறை மார்பகம் சேர்த்தான். 58

52. நிரத்தல் - பரத்தல்; அறிவு - உணர்ச்சி; பிணை - பெண் மான்; 53. ஆளகம் - அளகம், கூந்தல்; அரமியம் - நிலா முற்றம்; 56. நுண் பனி - நுண்ணிய வியர்வைத் துளிகள்.

'நலம் கொள் மைந்தனைத் தழுவினன்' என்பது என்? நளி நீர்
நிலங்கள் தாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்,
விலங்கல் அன்ன திண் தோளையும், மெய்த் திரு இருக்கும்
அலங்கல் மார்பையும், தனது தோள், மார்பு, கொண்டு அளந்தான். 59

**தயரதன் இராமனை வேண்டுதல்**

ஆண்டு, தன் மருங்கு இரீஇ, உவந்து, அன்புற நோக்கி,
'பூண்ட போர் மழு உடையவன் பெரும் புகழ் குறுக
நீண்ட தோள் ஐய! நிற் பயந்தெடுத்த யான், நின்னை
வேண்டி, எய்திட விழைவது ஒன்று உளது' என, விளம்பும்: 60

'ஐய! சாலவும் அலசினென்; அரும் பெரு மூப்பும்
மெய்யது ஆயது; வியல் இடப் பெரும் பரம் விசித்த
தொய்யல் மா நிலச் சுமை உறு சிறை துறந்து, இனி யான்
உய்யல் ஆவது ஓர் நெறி புக, உதவிட வேண்டும். 61

' ''உரிமை மைந்தரைப் பெறுகின்றது, உறு துயர் நீங்கி,
இருமையும் பெறற்கு'' என்பது பெரியவர் இயற்கை;
தருமம் அன்ன நின்-தந்த யான், தளர்வது தகவோ?
கருமம் என்வயின் செய்யின், என் கட்டுரை கோடி. 62

'மைந்த! நம் குல மரபினில் மணி முடி வேந்தர்,
தம்தம் மக்களே கடன்முறை நெடு நிலம் தாங்க,
ஐந்தொடு ஆகிய முப் பகை மருங்கு அற அகற்றி,
உய்ந்து போயினர்; ஊழிநின்று எண்ணினும் உலவார். 63

'முன்னை ஊழ்வினைப் பயத்தினும், முற்றிய வேள்விப்
பின்னை எய்திய நலத்தினும், அரிதினின் பெற்றேன்;
இன்னம், யான் இந்த அரசியல் இடும்பையின் நின்றால்,
நின்னை ஈன்றுள பயத்தினின் நிரம்புவது யாதோ? 64

'ஒருத்தலைப் பரத்து ஒருத்தலை பங்குவின் ஊர்தி
எருத்தின், ஈங்கு நின்று, இயல்வரக் குழைந்து, இடர்உழக்கும்
வருத்தம் நீங்கி, அவ் வரம்பு அறு திருவினை மருவும்
அருத்தி உண்டு, எனக்கு; ஐய! ஈது அருளிடவேண்டும். 65

'ஆளும் நல் நெறிக்கு அமைவரும் அமைதி இன்றாக
நாளும் நம் குல நாயகன் நறை விரி கமலத்
தாளின் நல்கிய கங்கையைத் தந்து, தந்தையரை
மீள்வு இலா உலகு ஏற்றினன் ஒருமகன், மேல்நாள்.† 66

59. நிலையிடல் - அளவிடல்; 65. ஒருத்தலைப் பரத்து ஒருத்தல் - ஒரு பக்கம் பாரம் தாங்குவதால் உளதாகிய துன்பம்; பங்கு - முடம்.

'மன்னர் ஆனவர் அல்லர்; மேல் வானவர்க்கு அரசு ஆம்
பொன்னின் வார் கழல் புரந்தரன் போலியர் அல்லர்;
பின்னும், மா தவம் தொடங்கி, நோன்பு இழைத்தவர் அல்லர்;
சொல் மறு மகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார். 67

'அனையது ஆதலின், ''அருந் துயர்ப் பெரும் பரம், அரசன்
வினையின் என்வயின் வைத்தனன்'' எனக் கொள வேண்டா;
புனையும் மா முடி புனைந்து, இந்த நல் அறம் புரக்க
நினையல் வேண்டும்; யான் நின்வயின் பெறுவது ஈது' என்றான்.

**இராமன் தயரதன் கட்டளைக்கு இசைதல்**

தாதை, அப் பரிசு உரைசெய, தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; 'கடன் இது' என்று உணர்ந்தும்,
'யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ,
நீதி எற்கு?' என நினைந்தும், அப் பணி தலைநின்றான். 69

**தயரதன் மகிழ்ந்து, தன் அரண்மனைக்குப் போதல்**

குருசில் சிந்தையை மனக்கொண்ட கொற்ற வெண்குடையான்,
'தருதி இவ் வரம்' எனச் சொலி, உயிர் உறத் தழுவி,
சுருதி அன்ன தன் மந்திரச் சுற்றமும் சுற்ற,
பொரு இல் மேருவும் பொரு அருங் கோயில் போய்ப் புக்கான்.

**இராமன் தன் அரண்மனை சேர்தல்**

நிவந்த அந்தணர், நெடுந் தகை மன்னவர், நகரத்து
உவந்த மைந்தர்கள், மடந்தையர், உழைஉழை தொடர,
சுமந்திரன் தடந் தேர்மிசை, சுந்தரத் திரள் தோள்
அமைந்த மைந்தனும், தன் நெடுங் கோயில் சென்று அடைந்தான். 71

**தயரதன் அரசர்களுக்கு ஓலை போக்கி, முடிசூட்டுவதற்கு வேண்டுவன செய்ய வசிட்டனிடம் கூறுதல்**

வென்றி வேந்தரை, 'வருக' என்று, உவணம் வீற்றிருந்த
பொன் திணிந்த தோட்டு அரும் பெறல் இலச்சினை போக்கி,
'நன்று சித்திர நளிர் முடி கவித்தற்கு, நல்லோய்!
சென்று, வேண்டுவ வரன்முறை அமைக்க' எனச் செப்ப, 72

**மன்னர்களிடம் இராமன் முடிபுனைதலைத் தயரதன் தெரிவித்தல்**

உரிய மா தவன் ஒள்ளிது என்று உவந்தனன், விரைந்து, ஓர்
பொரு இல் தேர்மிசை, அந்தணர் குழாத்தொடும் போக,—
'நிருபர்! கேண்மின்கள், இராமற்கு நெறி முறைமையினால்
திருவும் பூமியும் சீதையின் சிறந்தன' என்றான். 73

71. நிவப்பு - உயர்ச்சி.

**மன்னர்கள் விரும்பி வரவேற்றல்**

இறைவன் சொல் எனும் இன் நறவு அருந்தினர் யாரும்,
முறையில் நின்றிலர்; முந்துறு களியிடை மூழ்கி,
நிறையும் நெஞ்சிடை உவகை போய் மயிர் வழி நிமிர,
உறையும் விண்ணகம் உடலொடும் எய்தினர் ஒத்தார். 74

ஒத்த சிந்தையர் உவகையின்; ஒருவரின் ஒருவர்
தத்தமக்கு உற்ற அரசு எனத் தழைக்கின்ற மனத்தர்;
முத்த வெண்குடை மன்னனே முறைமுறை தொழுதார்;
'அத்த! நன்று' என, அன்பினேடு அறிவிப்பது ஆனர். 75

'மூ-எழு முறைமை எம் குலங்கள் முற்றுறப்
பூ எழு மழுவினுல் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு,
ஆவ இவ் உலகம்; ஈது அறன்' என்றூர்அரோ. 76

**'என் கருத்திற்கு இசைந்தது எதனுல்?' என, மன்னரைத் தயரதன் வினுவுதல்**

வேறு இலா மன்னரும் விரும்பி, இன்னது
கூறினர்; அது மனம் கொண்ட கொற்றவன்,
ஊறின உவகையை ஒளிக்கும் சிந்தையான்,
மாறும் ஓர் அளவை சால் வாய்மை கூறினன். 77

'மகன்வயின் அன்பினுல் மயங்கி, யான் இது
புகல, நீர் புகன்ற இப் பொம்மல் வாசகம்,
உகவையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ?
தகவு என நினைந்தது எத் தன்மையால்?' என்றுன். 78

**வேத்தவையோரின் விடை**

இவ்வகை உரைசெய இருந்த வேந்துஅவை,
'செவ்வியோய்! நின் திருமகற்குத் தேயத்தோர்
அவ்வவர்க்கு, அவ்வவர் ஆற்ற ஆற்றும்
எவ்வம்இல் அன்பினை, இனிது கேள்' என, 79

'தானமும், தருமமும், தகவும், தன்மை சேர்
ஞானமும், நல்லவர்ப் பேணும் நன்மையும்—
மானவ!—வையம், நின் மகற்கு; வைகலும்,
ஈனம் இல் செல்வம் வந்து இயைக என்னவே. 80

76. சேவகன் - வீரன், ஈண்டுப் பரசுராமன்.

'ஊருணி நிறையவும், உதவும் மாடு உயர்
பார் கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்,
கார் மழை பொழியவும், கழனி பாய் நதி
வார் புனல் பெருகவும், மறுக்கின்றுர்கள் யார்? 81

'பனே அவாம் நெடுங் கரப் பரும யானேயாய்!
நினே அவாம் தன்மையை! நிமிர்ந்த மன்னுயிர்க்கு,
எனேயவாறு அன்பினன் இராமன், ஈண்டு, அவற்கு
அனேயவாறு அன்பின அவையும்' என்றனர். 82

தயரதன் மகிழ்ச்சி பொங்க மன்னரை நோக்கிப் பேசுதல்

மொழிந்தது கேட்டலும், மொய்த்து நெஞ்சினேப்
பொழிந்த பேர் உவகையன், பொங்கு காதலன்,
'கழிந்தது ஓர் இடரினன்' எனக் களிக்கும் சிந்தையன்,
வழிந்த கண்ணீரினன், மன்னன் கூறுவான்: 83

'செம்மையின், தருமத்தின், செயலின், தீங்கின்பால்
வெம்மையின் ஒழுக்கத்தின், மெய்ம்மை மேவினீர்,
என் மகன் என்பது என்? நெறியின், ஈங்கு, இவன்
நும் மகன்; கையடை; நோக்கும் ஈங்கு' என்றுன். 84

முடி புனேயும் நாள் குறித்தற்காகத் தயரதன் போதல்

அரசவை விடுத்தபின், ஆணே மன்னவன்,
புரை தபு நாளொடு பொழுது நோக்குவான்
உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு, ஒரு
வரை பொரு மண்டபம் மருங்கு போயினுன். 85

## 2 மந்தரை சூழ்ச்சிப் படலம்

கோசலேயிடம் செய்தி சொல்ல, மங்கையர் நால்வர் மகிழ்ச்சியோடு போதல்

ஆண்டை அந் நிலே ஆக—அறிந்தவர்,
பூண்ட காதலர், பூட்டு அவிழ் கொங்கையர்,
நீண்ட கூந்தலர், நீள் கலே தாங்கலர்,
ஈண்ட ஓடினர், இட்டு இடை இற்றிலர். 1

81. மறுக்கின்றுர்கள் - வேண்டாம் என்று மறுத்துக் கூறுவோர்; 84. கையடை - அடைக்கலம்; 85. புரை தபு - குற்றமற்ற.

2 : 1. ஈண்ட - விரைந்து; இட்டு இடை - நுண்ணிய இடை.

ஆடுகின்றனர்; பண் அடைவு இன்றியே
பாடுகின்றனர்; பார்த்தவர்க்கே கரம்
சூடுகின்றனர்; சொல்லுவது ஓர்கிலர்;
மாடு சென்றனர்;—மங்கையர் நால்வரே. 2

**கோசலை வினவும், அம் மங்கையர் மறுமொழியும்**

கண்ட மாதரைக் காதலின் நோக்கினள்,
கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை;
'உண்டு பேர் உவகைப் பொருள்; அன்னது,
தொண்டை வாயினிர்! சொல்லுமின் ஈண்டு!' என்றாள். 3

'மன் நெடுங் கழல் வந்து வணங்கிட,
பல் நெடும் பகல் பார் அளிப்பாய்!' என,
நின் நெடும் புதல்வன்தனை, நேமியான்,
தொல் நெடும் முடி சூட்டுகின்றான்' என்றார். 4

**கோசலையின் உள்ள நிலை**

'சிறக்கும், செல்வம் மகற்கு' என, சிந்தையில்
பிறக்கும் பேர் உவகைக் கடல் பெட்பு அற,
வறக்கும் மா வடவைக் கனல் ஆனதால்—
துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே. 5

**கோசலை சுமித்திரையுடன் கோயிலுக்குப் போதல்**

அன்னளாயும், அரும் பெறல் ஆரமும்,
நல் நிதிக் குவையும், நனி நல்கி, தன்
துன்னு காதல் சுமித்திரையோடும் போய்,
மின்னும் நேமியன் மேவு இடம் மேவினள். 6

மேவி, மென் மலராள், நிலமாது, எனும்
தேவிமாரொடும், தேவர்கள் யாவர்க்கும்
ஆவியும், அறிவும், முதல் ஆயவன்
வாவி மா மலர்ப் பாதம் வணங்கினள். 7

**கோசலை திருமாலை வணங்குதலும், கோதானம் புரிதலும்**

'என்வயின் தரும் மைந்தற்கு, இனி, அருள்
உன்வயத்தது' என்றாள்—உலகு யாவையும்
மன்வயிற்றின் அடக்கிய மாயனைத்
தன்வயிற்றின் அடக்கும் தவத்தினள். 8

2. சூடுகின்றனர் - கூப்புகின்றனர்; 5. பெட்பு அற - தன்மை நீங்குமாறு; 8. மன் - நிலைபேறு.

என்று இறைஞ்சி, அவ் இந்திரை கேள்வனுக்கு
ஒன்றும் நான்மறை ஓதிய பூசனை
நன்று இழைத்து, அவண், நல்ல தவர்க்கு எலாம்,
கன்றுடைப் பசுவின் கடல் நல்கினுள். 9

தயரதன் வசிட்டனை வரவழைத்தல்

'பொருந்து நாள் நாளை, நின் புதல்வற்கு' என்றனர்,
திருந்தினர்; அன்ன சொல் கேட்ட செய் கழல்
பெருந் திண் மால் யானையான், 'பிழைப்பு இல் செய் தவம்
வருந்தினன் வருக' என, வசிட்டன் எய்தினன். 10

தயரதன் இராமனுக்கு அரசியல் அறங்கூற வேண்டுதல்

'நல் இயல் மங்கல நாளும் நாளை; அவ்
வில் இயல் தோளவற்கு ஈண்டு, வேண்டுவ
ஒல்லையின் இயற்றி, நல் உறுதி வாய்மையும்
சொல்லுதி பெரிது' என, தொழுது சொல்லினன். 11

வசிட்டன் இராமன் மனை புக, அவன் எதிர்கொண்டு வரவேற்றல்

முனிவனும், உவகையும் தானும் முந்துவான்,
மனுகுல நாயகன் வாயில் முன்னினன்;
அனையவன் வரவு கேட்டு, அலங்கல் வீரனும்,
இனிது எதிர்கொண்டு, தன் இருக்கை எய்தினன். 12

வசிட்டன் முடிசூட்டு விழா நாளை எனல்

ஒல்கல் இல் தவத்து உத்தமன், ஓது நூல்
மல்கு கேள்விய வள்ளலை நோக்கினன்;
'புல்கு காதல் புரவலன், போர் வலாய்!
நல்கும் நானிலம் நாளை நினக்கு' என்றான். 13

வசிட்டன் இராமனுக்குக் கூறிய உறுதிப்பொருள்

என்று, பின்னும் இராமனை நோக்கி, 'நான்
ஒன்று கூறுவது உண்டு, உறுதிப்பொருள்;
நன்று கேட்டு, கடைப்பிடி நன்கு' என,
துன்று தாரவற் சொல்லுதல் மேயினன்: 14

'கரிய மாலினும், கண்ணுதலானினும்,
உரிய தாமரைமேல் உறைவானினும்,
விரியும் பூதம் ஓர் ஐந்தினும், மெய்யினும்,
பெரியர் அந்தணர்; பேணுதி உள்ளத்தால். 15

11. வாய்மை - வாய்ச்சொற்கள்.

‘அந்தணாளர் முனியவும், ஆங்குஅவர்
சிந்தையால் அருள் செய்யவும், தேவருள்
நொந்து உளாரையும், நொய்து உயர்ந்தாரையும்,
மைந்த! எண்ண, வரம்பும் உண்டாம்கொலோ? 16

‘அனையர் ஆதலின், ஐய! இவ் வெய்ய தீ-
வினையின் நீங்கிய மேலவர் தாள் இணை
புனையும் சென்னியையாய்ப் புகழ்ந்து ஏத்துதி;
இனிய கூறி நின்று ஏயின செய்தியால். 17

‘ஆவதற்கும், அழிவதற்கும், அவர்
ஏவ, நிற்கும் விதியும் என்றால், இனி
ஆவது எப் பொருள், இம்மையும் அம்மையும்
தேவரைப் பரவும் துணை சீர்த்ததே? 18

‘உருளும் நேமியும், ஒண் கவர் எஃகமும்,
மருள் இல் வாணியும், வல்லவர் மூவர்க்கும்;
தெருளும் நல் அறமும், மனச் செம்மையும்,
அருளும், நீத்தபின், ஆவது உண்டாகுமோ? 19

‘சூது முந்துறச் சொல்லிய மாத் துயர்;
நீதி மைந்த! நினக்கு இலை; ஆயினும்,
ஏதம் என்பன யாவையும் எய்துதற்கு
ஓதும் மூலம் அவை என ஓர்தியே. 20

‘யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்,
போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது; தன்
தார் ஒடுங்கல் செல்லாது; அது தந்தபின்,
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ? 21

‘கோளும் ஐம்பொறியும் குறைய, பொருள்
நாளும் கண்டு, நடுக்குறு நோன்மையின்
ஆளும் அவ் அரசே அரசு; அன்னது,
வாளின் மேல் வரு மா தவம், மைந்தனே! 22

‘உமைக்கு நாதற்கும், ஓங்கு புள் ஊர்திக்கும்,
இமைப்பு இல் நாட்டம் ஓர் எட்டு உடையானுக்கும்,
சமைத்த தோள் வலி தாங்கினர் ஆயினும்,
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே. 23

18. சீர்த்தது - சிறந்தது; 19. வாணி - வேத வாக்கு; 21. தார் - படை;
22. நடுக்குறு நோன்மை - பிற மன்னர் நடுங்குதற்குக் காரணமான வலிமை;
23. சமைத்த - பொருந்திய.

'என்பு தோல் உடையார்க்கும், இலார்க்கும், தம்
வன் பகைப் புலன் மாசு அற மாய்ப்பது என்?
முன்பு பின்பு இன்றி, மூஉலகத்தினும்,
அன்பின் நல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ? 24

'வையம் மன் உயிர் ஆக, அம் மன் உயிர்
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு,
ஐயம் இன்றி, அறம் கடவாது, அருள்
மெய்யில் நின்றபின், வேள்வியும் வேண்டுமோ? 25

' ''இனிய சொல்லினன்; ஈகையன்; எண்ணினன்;
வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்;
நினையும் நீதி நெறி கடவான்'' எனில்,
அனைய மன்னற்கு அழிவும் உண்டாம்கொலோ? 26

'சீலம் அல்லன நீக்கி, செம் பொன் துலைத்
தாலம் அன்ன தனி நிலை தாங்கிய
ஞால மன்னற்கு, நல்லவர் நோக்கிய
காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ? 27

''ஓர்வின் நல் வினை ஊற்றத்தினர் உரை,
பேர்வு இல் தொல் விதி பெற்று உளது'' என்றுஅரோ,
தீர்வு இல் அன்பு செலுத்தலின், செவ்வியோர்
ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே. 28

'தூமகேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லைஎனின், கடுங் கேடு எனும்
நாமம் இல்லை; நரகமும் இல்லையே.' 29

**வசிட்டன் இராமனுடன் நாகணை வள்ளல் கோயிலை அடைதல்**

ஏனை நீதி இனையன, வையகப்
போனகற்கு விளம்பி, புலன் கொளீஇ,
ஆனவன்னெடும் ஆயிரமௌலியான்
தானம் நண்ணினன், தத்துவம் நண்ணினன். 30

24. என்பு தோல் உடையார் - மனிதர்; என்பு தோல் இலார் - தேவர்கள்; 26. எண்ணினன் - ஆராய்ச்சி உடையவன்; 27. தாலம் - நாக்கு; தனி நிலை - நடுவு நிலைமை; 28. ஊற்றத்தினர் - அமைச்சர், புரோகிதர் முதலிய பெரியோர்கள்; 29. தூமகேது - புகைக் கொடி, வால் நட்சத்திரம்; 30. வையகப் போனகன் - உலகம் உண்ட திருமால்.

வசிட்டன் இராமனுக்கு உரிய சடங்குகள் இயற்றல்

நண்ணி, நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணியப் புனல்ஆட்டி, புலமையோர்
எண்ணும் நல்வினை முற்றுவித்து, ஏற்றினன்,
வெண் நிறத்த தருப்பை விரித்துஅரோ. 31

தயரதன் நகரை அணிசெய ஆணையிடல்

ஏற்றிட, ஆண்தகை இனிது இருந்துழி,
நூல் தட மார்பனும், நொய்தின் எய்தப்போய்,
ஆற்றல் சால் அரசனுக்கு அறிவித்தான்; அவன்,
'சாற்றுக, நகர் அணி சமைக்க' என்றனன். 32

வள்ளுவன் முரசறைதல்

ஏவின வள்ளுவர், 'இராமன், நாளையே
பூமகள் கொழுநனாய், புனையும் மௌலி; இக்
கோ நகர் அணிக!' என, கொட்டும் பேரி அத்
தேவரும் களி கொள, திரிந்து சாற்றினர். 33

மாந்தர் மகிழ்ந்து, நகரை அழகு செய்தல்

'கவி அமை கீர்த்தி அக் காளை நாளையே
புவி அமை மணி முடி புனையும்' என்ற சொல்,
செவி அமை நுகர்ச்சியது எனினும், தேவர்தம்
அவி அமுது ஆனது, அந் நகர் உளார்க்கு எலாம். 34

ஆர்த்தனர்; களித்தனர்; ஆடிப் பாடினர்;
வேர்த்தனர்; தடித்தனர்; சிலிர்த்து மெய்ம் மயிர்
போர்த்தனர்; மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்;
தூர்த்தனர் நீள் நிதி, சொல்லினார்க்கு எலாம்.* 35

திணி சுடர் இரவியைத் திருத்துமாறுபோல்,
பணியிடைப் பள்ளியான் பரந்த மார்பிடை
மணியினை வேகடம் வகுக்குமாறுபோல்,
அணி நகர் அணிந்தனர்—அருத்தி மாக்களே. 36

வெள்ளிய, கரியன, செய்ய, வேறு உள,
கொள்ளை வான் கொடி நிரைக் குழாங்கள் தோன்றுவ—
கள் அவிழ் கோதையான் செல்வம் காணிய,
புள்எலாம் திருநகர் புகுந்த போன்றவே. 37

36. வேகடம் வகுத்தல் - சாணை பிடித்தல், மாசு போக்குதல்.

மங்கையர் குறங்கு என வகுத்த, வாழைகள்;—
அங்கு—அவர் கழுத்து எனக் கமுகம் ஆர்ந்தன;
தங்கு ஒளி முறுவலின் தாமம் நான்றன;
கொங்கையை நிகர்த்தன, கனக கும்பமே. 38

முதிர் ஒளி உயிர்த்தன, முடுகிக் காலையில்
கதிரவன் வேறு ஒரு கவின் கொண்டான் என—
மதி தொட நிவந்து உயர் மகர தோரணம்
புதியன அலர்ந்தன புதவ ராசியே. 39

துனி அறு செம்மணித் தூணம் நீல் நிறம்
வனிதை-ஓர்-கூறினன் வடிவு காட்டின;
புனை துகில் உறைதொறும் பொலிந்து தோன்றின,
பனி பொதி கதிர் எனப் பவளத் தூண்களே. 40

முத்தினின் முழுநிலவு எறிப்ப, மொய்ம் மணிப்
பத்தியின் இள வெயில் பரப்ப, நீலத்தின்
தொத்துஇனம் இருள் வரத் தூண்ட, சோதிட
வித்தகர் விரித்த நாள் ஒத்த, வீதியே. 41

ஆடல் மான் தேர்க் குழாம், அவனி காணிய,
வீடு எனும் உலகின் வீழ் விமானம் போன்றன;
ஓடை மாக் கட களிறு, உதய மால் வரை
தேட அருங் கதிரொடும் திரிவ போன்றவே. 42

வளம் கெழு திரு நகர்—வைகும் வைகலும்,
பளிங்குடை நெடுஞ் சுவர் படுத்த பத்தியில்
கிளர்ந்து எறி சுடர் மணி இருளைக் கீறலால்,—
வளர்ந்தில, பிறந்தில, செக்கர் வானமே. 43

பூ மழை, புனல் மழை, புதுமென் சுண்ணத்தின்
தூ மழை, தரளத்தின் தோம் இல் வெண் மழை,
தாம் இழை நெரிதலின் தகர்ந்த பொன் மழை,
மா மழை நிகர்த்தன—மாட வீதியே. 44

காரொடு தொடர் மதக் களிறு சென்றன,
வாரொடு தொடர் கழல் மைந்தர் ஆம் என;
தாரொடு நடந்தன பிடிகள், தாழ் கலைத்
தேரொடு நடக்கும் அத் தெரிவைமாரினே. 45

39. புதவ ராசி - வாயில் வரிசை; 45. தார் - கிண்கிணி மாலைகள்.

ஏய்ந்து எழு செல்வமும், அழகும், இன்பமும்,
தேய்ந்தில; அனையது தெரிந்திலாமையால்,
ஆய்ந்தனர் பெருகவும்—அமரர், இம்பரில்
போந்தவர், 'போந்திலம்' என்னும் புந்தியால். 46

**கூனியின் கோபம்**

அந் நகர் அணிவுறும் அமலை, வானவர்
பொன்னகர் இயல்பு எனப் பொலியும் ஏல்வையில்,
இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்,
துன்ன அருங் கொடு மனக் கூனி தோன்றினாள். 47

தோன்றிய கூனியும், துடிக்கும் நெஞ்சினள்;
ஊன்றிய வெகுளியாள்; உளைக்கும் உள்ளத்தாள்;
கான்று எரி நயனத்தாள்; கதிக்கும் சொல்லினள்;
மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள். 48

**கூனி கைகேயியின் அரண்மனை அடைந்து, அவளை எழுப்புதல்**

தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்
மண்டினாள்—வெகுளியின் மடித்த வாயினள்,
பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள். 49

நாற் கடல் படு மணி நளினம் பூத்தது ஓர்
பாற்கடல் படு திரைப் பவளவல்லியே-
போல், கடைக் கண் அளி பொழிய, பொங்கு அணை-
மேல் கிடந்தாள்தனை, விரைவின் எய்தினாள். 50

எய்தி, அக் கேகயன் மடந்தை, ஏடு அவிழ்
நொய்து அலர் தாமரை நோற்ற நோன்பினால்
செய்த பேர் உவமைசால் செம் பொன், சீறடி
கைகளின் தீண்டினள்—காலக் கோள் அனாள். 51

**கூனி பேசத் தொடங்குதல்**

தீண்டலும் உணர்ந்த அத் தெய்வக் கற்பினாள்,
நீண்ட கண் அனந்தரும் நீங்குகிற்றிலள்;
மூண்டு எழு பெரும் பழி முடிக்கும் வெவ் வினை
தூண்டிட, கட்டுரை சொல்லல் மேயினாள்: 52

47. ஏல்வை - பொழுது; 49. தொண்டை - கொவ்வைக்கனி; 50. அளி - அருள்; 51. காலக்கோள் - தீங்கு பயக்கும் கேது என்னும் கோள்; 52. அனந்தர் - தூக்க மயக்கம்.

'அணங்கு, வாள் விட அரா அணுகும் எல்லையும்
குணம் கெடாது ஒளி விரி குளிர் வெண் திங்கள்போல்,
பிணங்கு வான் பேர் இடர் பிணிக்க நண்ணவும்,
உணங்குவாய் அல்லை; நீ உறங்குவாய்' என்றாள். 53

கூனிக்குக் கைகேயியின் மறுமொழி

வெவ் விடம் அனையவள் விளம்ப, வேற்கணாள்,
'தெவ் அடு சிலைக் கை என் சிறுவர் செவ்வியர்;
அவ்அவர் துறைதொறும் அறம் திறம்பலர்;
எவ் இடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு?' என, 54

'பராவ அரும் புதல்வரைப் பயக்க, யாவரும்
உராவ அருந் துயரை விட்டு, உறுதி காண்பரால்;
விராவ அரும் புவிக்கு எலாம் வேதமே அன
இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?' என்றாள். 55

'வாழ்ந்தனள் கோசலை' என்ற கூனியை, எவ்வாறு எனக்
கைகேயி வினவுதல்

ஆழ்ந்த பேர் அன்பினாள் அனைய கூறலும்,
சூழ்ந்த தீவினை நிகர் கூனி சொல்லுவாள்,
'வீழ்ந்தது நின் நலம்; திருவும் வீந்தது;
வாழ்ந்தனள் கோசலை, மதியினால்' என்றாள். 56

அன்னவள் அவ் உரை உரைப்ப, ஆயிழை,
'மன்னவர் மன்னனேல் கணவன், மைந்தனேல்
பன்ன அரும் பெரும் புகழ்ப் பரதன்; பார்தனில்
என் இதன்மேல் அவட்கு எய்தும் வாழ்வு?' என்றாள். 57

கூனி, 'நாளை இராமன் முடி சூடுவான்' எனல்

'ஆடவர் நகை உற, ஆண்மை மாசு உற,
தாடகை எனும் பெயர்த் தையலாள் பட,
கோடிய வரி சிலை இராமன் கோமுடி,
சூடுவன் நாளை; வாழ்வு இது' எனச் சொல்லினாள். 58

கைகேயி மகிழ்ந்து மாலை பரிசளித்தல்

மாற்றம் அஃது உரைசெய, மங்கை உள்ளமும்
ஆற்றல் சால் கோசலை அறிவும் ஒத்தவால்;
வேற்றுமை உற்றிலள், வீரன் தாதை புக்கு
ஏற்று அவள் இருதயத்து இருக்கவே கொலாம்? 59

55. பராவுதல் - புகழ்தல்; உராவ அருந் துயர் - பிறரால் நீக்குதற்கு அரிய வலிய துன்பம்; 58. கோடுதல் - வளைதல்; 59. வீரன் தாதை - தயரதன்.

ஆய பேர் அன்பு எனும் அளக்கர் ஆர்த்து எழ,
தேய்வுஇலா முக மதி விளங்கித் தேசுற,
தூயவள் உவகை போய் மிக, சுடர்க்கு எலாம்
நாயகம் அனையது ஓர் மாலை நல்கினாள். 60

மாலையை எறிந்து, கூனி கூறிய மாற்றம்

தெழித்தனள்; உரப்பினள்; சிறு கண் தீ உக
விழித்தனள்; வைதனள்; வெய்து உயிர்த்தனள்;
அழித்தனள்; அழுதனள்; அம் பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தை—அக் கொடிய கூனியே. 61

வேதனைக் கூனி, பின் வெகுண்டு நோக்கியே,
'பேதை நீ பித்தி; நிற்-பிறந்த சேயொடும்
நீ துயர் படுக; நான் நெடிது உன் மாற்றவள்
தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன்' என்றாள். 62

'சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்
நிவந்த ஆசனத்து இனிது இருப்ப, நின் மகன்,
அவந்தனாய், வெறு நிலத்து இருக்கல் ஆன போது,
உவந்தவாறு என்? இதற்கு உறுதி யாது?' என்றாள். 63

'மறந்திலள் கோசலை, உறுதி; மைந்தனும்,
சிறந்த நல் திருவினில் திருவும் எய்தினான்,
இறந்திலன் இருந்தனன்; என் செய்து ஆற்றுவான்?
பிறந்திலன் பரதன், நீ பெற்றதால்' என்றாள். 64

'சரதம் இப் புவி எலாம், தம்பியோடும் இவ்
வரதனே காக்குமேல், வரம்பு இல் காலமும்,
பரதனும் இளவலும், பதியின் நீங்கிப் போய்,
விரத மா தவம் செய விடுதல் நன்று' என்றாள். 65

'பண்ணுறு கட கரிப் பரதன், பார் மகள்
கண்ணுறு கவினராய் இனிது காத்த அம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்
எண்ணுறப் பிறந்திலன்; இறத்தல் நன்று' என்றாள். 66

'பாக்கியம் புரிந்திலாப் பரதன்தன்னை, பண்டு
ஆக்கிய பொலங் கழல் அரசன், ஆணையால்,
தேக்கு உயர் கல் அதர், கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால்.' 67

61. தெழித்தல் - அதட்டுதல்; 63. அவந்தன் - தலைகுனிந்து வணங்குபவன்; 66. பண்ணுதல் - அலங்கரித்தல்.

மந்தரை, பின்னரும் வகைந்து கூறுவாள்:
'அந்தரம் தீர்ந்து உலகு அளிக்கும் நீரினுல்
தந்தையும் கொடியன்; நற்ருயும் தீயளால்;
எந்தையே! பரதனே! என் செய்வாய்?' என்ருள். 68

'அரசர் இல் பிறந்து, பின் அரசர் இல் வளர்ந்து,
அரசர் இல் புகுந்து, பேர் அரசி ஆன நீ
கரை செயற்கு அருந்துயர்க் கடலில் வீழ்கின்ருய்;
உரைசெயக் கேட்கிலே; உணர்தியோ?' என்ருள். 69

'கல்வியும், இளமையும், கணக்கு இல் ஆற்றலும்,
வில் வினை உரிமையும், அழகும், வீரமும்,
எல்லை இல் குணங்களும், பரதற்கு எய்திய;
புல்லிடை உகுத்த அமுது ஏயும்போல்' என்ருள். 70

மந்தரை மாற்றத்தால் சினமுற்ற கைகேயி கடிந்து கூறுதல்

வாய் கயப்புற மந்தரை வழங்கிய வெஞ் சொல்,
காய் கனல்தலை நெய் சொரிந்தென, கதம் கனற்ற,
கேகயர்க்கு இறை திருமகள், கிளர் இள வரிகள்
தோய், கயல் கண்கள் சிவப்புற நோக்கினள், சொல்லும்: 71

'வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்,
உயிர் முதல் பொருள் திறம்பினும், உரை திறம்பாதோர்;
மயில் முறைக் குலத்து உரிமையை, மனு முதல் மரபை;
செயிர் உற, புலைச் சிந்தையால், என் சொனுய்?—தீயோய்! 72

'எனக்கு நல்லையும் அல்லை நீ; என் மகன் பரதன்-
தனக்கு நல்லையும் அல்லை; அத் தருமமே நோக்கின்,
உனக்கு நல்லையும் அல்லை; வந்து ஊழ்வினை தூண்ட,
மனக்கு நல்லன சொல்லினை—மதி இலா மனத்தோய்! 73

'பிறந்து இறந்து போய்ப் பெறுவதும், இழப்பதும், புகழே;
நிறம் திறம்பினும், நியாயமே திறம்பினும், நெறியின்
திறம் திறம்பினும், செய் தவம் திறம்பினும், செயிர் தீர்
மறம் திறம்பினும், வரன்முறை திறம்புதல் வழக்கோ? 74

'போதி, என் எதிர்நின்று; நின் புன் பொறி நாவைச்
சேதியாது இது பொறுத்தனன்; புறம் சிலர் அறியின்,
நீதி அல்லவும், நெறி முறை அல்லவும், நினைந்தாய்
ஆதி; ஆதலின், அறிவு இலி! அடங்குதி' என்ருள். 75

68. வகைந்து - வகைப்படுத்தி; அந்தரம் - நடுவு நிலைமை; 75. சேதித்தல் - அறுத்தல்.

**மந்தரை மீண்டும் உரை வழங்கல்**

அஞ்சி மந்தரை அகன்றிலள், அம் மொழி கேட்டும்,
நஞ்சு தீர்க்கினும் தீர்கிலாது அது நலிந்தென்ன,
'தஞ்சமே! உனக்கு உறு பொருள் உணர்த்துகை தவிரேன்;
வஞ்சி போலி!' என்று, அடிமிசை வீழ்ந்து, உரைவழங்கும்: 76

'மூத்தவற்கு உரித்து அரசு எனும் முறைமையின் உலகம்
காத்த மன்னனின் இளையன் அன்றோ கடல்வண்ணன்?
ஏத்து நீள் முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால்,
மீத் தரும் செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ? 77

'அறன் நிரம்பிய அருளுடை அருந் தவர்க்கேனும்,
பெறல் அருந் திருப் பெற்றபின், சிந்தனை பிறிது ஆம்;
மறம் நினைந்து உமை வலிகிலர் ஆயினும், மனத்தால்
இறல் உறும்படி இயற்றுவர், இடையறா இன்னல். 78

'புரியும் தன் மகன் அரசு எனின், பூதலம் எல்லாம்
விரியும் சிந்தனைக் கோசலைக்கு உடைமைஆம்; என்றால்,
பரியும் நின் குலப் புதல்வற்கும், நினக்கும், இப் பார்மேல்
உரியது என், அவள் உதவிய ஒரு பொருள் அல்லால்! 79

'தூண்டும் இன்னலும், வறுமையும், தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்து உனை இரந்தவர்க்கு, இரு நிதி, அவளை
வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால்
மாண்டு போதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி? 80

'சிந்தை என் செயத் திகைத்தனை? இனி, சில நாளில்,
தம்தம் இன்மையும், எளிமையும், நிற்கொண்டு தவிர்க்க,
உந்தை, உன் ஐ, உன் கிளைஞர், மற்று உன் குலத்து உள்ளோர்,
வந்து காண்பது உன் மாற்றவள் செல்வமோ? மதியாய்! 81

'காதல் உன் பெருங் கணவனை அஞ்சி, அக் கனிவாய்ச்
சீதை தந்தை, உன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
மாதுலன் அவன்; நுந்தைக்கு வாழ்வு இனி உண்டோ?
பேதை! உன் துணை யார் உளர் பழிபடப் பிறந்தார்? 82

'மற்றும் நுந்தைக்கு வான் பகை பெரிது உள; மறத்தார்
செற்றபோது, இவர் சென்று உதவார்எனில், செருவில்
கொற்றம் என்பது ஒன்று, எவ் வழி உண்டு? அது கூறாய்!
சுற்றமும் கெட, சுடு துயர்க் கடல் விழத் துணிந்தாய்! 83

76. நலிதல் - துன்புறுத்தல்; 83. இவர் - இக் கோசல நாட்டு மன்னர்.

'கெடுத்து ஒழிந்தனை உனக்கு அரும் புதல்வனை; கிளர் நீர்
உடுத்த பாரகம் உடையவன்; ஒரு மகற்கு எனவே
கொடுத்த பேர் அரசு, அவன் குலக் கோமைந்தர்தமக்கும்,
அடுத்த தம்பிக்கும் ஆம்; பிறர்க்கும் ஆகுமோ?' என்றாள். 84

கைகேயியின் தூய சிந்தையும் திரிதல்

தீய மந்தரை இவ் உரை செப்பலும், தேவி
தூய சிந்தையும் திரிந்தது—சூழ்ச்சியின் இமையோர்
மாயையும், அவர் பெற்ற நல் வரம் உண்மையாலும்,
ஆய அந்தணர் இயற்றிய அருந் தவத்தாலும். 85

அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்,
துரக்க, நல் அருள் துறந்தனள் தூ மொழி மடமான்;
இரக்கம் இன்மை அன்றோ, இன்று, இவ் உலகங்கள், இராமன்
பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே? 86

கைகேயி பரதன் முடிசூட வழி கேட்டல்

அனைய தன்மையள் ஆகிய கேகயன் அன்னம்,
வினை நிரம்பிய கூனியை விரும்பினள், நோக்கி,
'எனை உவந்தனை; இனியை என் மகனுக்கும்; அனையான்
புனையும் நீள் முடி பெறும்படி புகலுதி' என்றாள். 87

கூனி உரைத்த உபாயம்

மாழை ஒண் கணி உரைசெய, கேட்ட மந்தரை, 'என்
தோழி வல்லள்; என் துணை வல்லள்' என்று, அடி தொழுதாள்;
'தாழும் மன் நிலை; என் உரை தலைநிற்பின், உலகம்
ஏழும் ஏழும் உன் ஒரு மகற்கு ஆக்குவென்' என்றாள். 88

'நாடி ஒன்று உனக்கு உரைசெய்வென்; நளிர் மணி நகையாய்!
தோடு இவர்ந்த தார்ச் சம்பரன் தொலைவுற்ற வேலை,
ஆடல் வென்றியான் அருளிய வரம் அவை இரண்டும்
கோடி' என்றனள், உள்ளமும் கோடிய கொடியாள். 89

'இரு வரத்தினில், ஒன்றினால் அரசு கொண்டு, இராமன்
பெரு வனத்திடை ஏழ்-இரு பருவங்கள் பெயர்ந்து
திரிதரச் செய்தி, ஒன்றினால்; செழு நிலம் எல்லாம்
ஒருவழிப்படும் உன் மகற்கு; உபாயம் ஈது' என்றாள். 90

88. மாழை - மாவடு; மன் - தயரதன்; மன் நிலை - இராமனுக்கு முடி சூட்ட விரும்பிய அவன் மன நிலை; தாழ்தல் - முடிவு பெறாது போதல்.

கூனியைக் கைகேயி உவந்து போற்றுதல்

உரைத்த கூனியை உவந்தனள், உயிர் உறத் தழுவி,
நிரைத்த மா மணி ஆரமும் நிதியமும் நீட்டி,
'இரைத்த வேலை சூழ் உலகம் என் ஒரு மகற்கு ஈந்தாய்;
தரைக்கு நாயகன் தாய் இனி நீ' எனத் தணியா, 91

கைகேயியின் உறுதிமொழி

'நன்று சொல்லினை; நம்பியை நளிர் முடி சூட்டல்;
துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்; இவ் இரண்டும்
அன்றதுஆம் எனில், அரசன் முன் ஆர் உயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென் யான்; போதி நீ' என்றாள். 92

## 3 கைகேயி சூழ்வினைப் படலம்

கைகேயி தன் அலங்காரத்தை அழித்தல்

கூனி போன பின், குல மலர்க் குப்பைநின்று இழிந்தாள்;
சோனை வார் குழல் கற்றையில் சொருகிய மாலை,
வான மா மழை நுழைதரு மதி பிதிர்ப்பாள்போல்,
தேன் அவாவுறு வண்டினம் அலமர, சிதைத்தாள். 1

விளையும் தன் புகழ் வல்லியை வேர் அறுத்தென்ன,
கிளை கொள் மேகலை சிந்தினள்; கிண்கிணியோடும்
வளை துறந்தனள்; மதியினில் மறுத் துடைப்பாள்போல்,
அளக வாள் நுதல் அரும் பெறல் திலகமும் அழித்தாள். 2

தா இல் மா மணிக் கலன் மற்றும் தனித் தனி சிதறி,
நாவி ஓதியை நானிலம் தைவரப் பரப்பி,
காவி உண் கண் அஞ்சனம் கான்றிடக் கலுழா,
பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப் புவிமிசைப் புரண்டாள். 3

நவ்வி வீழ்ந்தென, நாடக மயில் துயின்றென்ன,
'கவ்வை கூர்தரச் சனகி ஆம் கடி கமழ் கமலத்து
அவ்வை நீங்கும்' என்று அயோத்தி வந்து அடைந்த அம் மடந்தை
தவ்வை ஆம் என, கிடந்தனள், கேகயன் தனையை. 4

92. நளிர் - பெரிய.

3 : 1. சோனை - விடா மழை, இங்கு மேகத்தை உணர்த்திற்று;
4. கவ்வை - துன்பம்; அவ்வை - தாய்; தவ்வை - தமக்கை, மூதேவி.

### தயரதன் கைகேயியின் மாளிகைக்கு வருதல்

நாழிகை கங்குலின் நள் அடைந்த பின்றை,
யாழ் இசை அஞ்சிய அம் சொல் ஏழை கோயில்,
'வாழிய' என்று அயில் மன்னர் துன்ன, வந்தான்—
ஆழி நெடுங் கை மடங்கல் ஆளி அன்னான். 5

வாயிலில் மன்னர் வணங்கி நிற்ப, வந்து ஆங்கு,
ஏயின செய்யும் மடந்தைமாரொடு ஏகி,
பாயல் துறந்த படைத் தடங்கண் மென் தோள்,
ஆயிழைதன்னை அடைந்த ஆழி மன்னன். 6

### கைகேயியைத் தயரதன் எடுத்தலும், அவள் பேசாது நெட்டுயிர்த்தலும்

அடைந்து, அவண் நோக்கி, 'அரந்தை என்கொல் வந்து
தொடர்ந்தது?' எனத் துயர்கொண்டு சோரும் நெஞ்சன்,
மடந்தையை, மானை எடுக்கும் ஆனையேபோல்,
தடங்கைகள் கொண்டு தழீஇ, எடுக்கலுற்றான். 7

நின்று தொடர்ந்த நெடுங் கைதம்மை நீக்கி,
மின் துவள்கின்றது போல, மண்ணில் வீழ்ந்தாள்;
ஒன்றும் இயம்பலள்; நீடு உயிர்க்கலுற்றாள்—
மன்றல் அருந் தொடை மன்னன் ஆவி அன்னாள். 8

### தயரதன் நிகழ்ந்தது கூற வேண்டுதல்

அன்னது கண்ட அலங்கல் மன்னன் அஞ்சி,
'என்னை நிகழ்ந்தது? இவ் ஏழு ஞாலம் வாழ்வார்,
உன்னை இகழ்ந்தவர் மாள்வர்; உற்றது எல்லாம்
சொன்னபின் என் செயல் காண்டி; சொல்லிடு' என்றான். 9

### கைகேயி வரம் கேட்டல்

வண்டு உளர் தாரவன் வாய்மை கேட்ட மங்கை,
கொண்ட நெடுங் கணின் ஆலி கொங்கை கோப்ப,
'உண்டு கொலாம் அருள் என்கண்? உன்கண் ஒக்கின்,
பண்டைய இன்று பரிந்து அளித்தி' என்றாள். 10

### தயரதன் மறுக்காமல் தருவேன் எனல்

கள் அவிழ் கோதை கருத்து உணராத மன்னன்,
வெள்ள நெடுஞ் சுடர் மின்னின் மின்ன நக்கான்;
'உள்ளம் உவந்துள செய்வென்; ஒன்றும் லோபேன்;
வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை' என்றான். 11

7. அரந்தை - துன்பம்; 11. லோபேன் - கொடாமல் இறுகப் பிடித்துக் கொள்ளேன்.

**முன் அளித்த இரு வரங்களைத் தருமாறு கைகேயி கேட்டல்**

ஆன்றவன் அவ் உரை கூற, ஐயம் இல்லாள்,
'தோன்றிய பேர் அவலம் துடைத்தல் உண்டேல்,
சான்று இமையோர்குலம் ஆக, மன்ன! நீ அன்று
ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி' என்றாள். 12

**தயரதன், 'இப்பொழுதே ஈவேன்' எனல்**

'வரம் கொள இத்துணை மன்னும் அல்லல் எய்தி
இரங்கிட வேண்டுவது இல்லை; ஈவென்; என்பால்
பரம் கெட இப்பொழுதே, பகர்ந்திடு' என்றான்—
உரம் கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான். 13

**கைகேயி கேட்ட இரு வரம்**

'ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால், என்
சேய் அரசு ஆள்வது; சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனம் ஆள்வது' எனப் புகன்று, நின்றாள்—
தீயவை யாவையினும் சிறந்த தீயாள். 14

**தயரதன் உற்ற துயரம்**

நாகம் எனும் கொடியாள், தன் நாவின் ஈந்த
சோக விடம் தொடர, துணுக்கம் எய்தா,
ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து, அராவின்
வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான். 15

பூதலம் உற்று, அதனில் புரண்ட மன்னன்
மா துயரத்தினை யாவர் சொல்ல வல்லார்?
வேதனை முற்றிட, வெந்து வெந்து, கொல்லன்
ஊது உலையில் கனல் என்ன, வெய்து உயிர்த்தான். 16

உலர்ந்தது நா; உயிர் ஓடலுற்றது; உள்ளம்
புலர்ந்தது; கண்கள் பொடித்த, பொங்கு சோரி;
சலம் தலைமிக்கது; 'தக்கது என்கொல்?' என்று என்று
அலந்து அலையுற்ற, அரும் புலன்கள் ஐந்தும். 17

மேவி நிலத்தில் இருக்கும்; நிற்கும்; வீழும்;
ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும்;
பாவியை உற்று எதிர் பற்றி எற்ற எண்ணும்;—
ஆவி பதைப்ப, அலக்கண் எய்துகின்றான். 18

12. ஏன்ற - கொடுப்பதாக ஏற்றுக்கொண்ட; 15. ஆகம் - உடம்பு; 17. சோரி - இரத்தம்; சலம் - கோபம்.

பெண் என உட்கும்; பெரும் பழிக்கு நாணும்;
உள் நிறை வெப்பொடு உயிர்த்து, உயிர்த்து, உலாவும்;
கண்ணினில் நோக்கும் அயர்க்கும்—வன் கைவேல் வெம்-
புண் நுழைகிற்க உழைக்கும் ஆனை போல்வான். 19

கைகேயியின் கலங்கா உள்ளம்

கம்ப நெடுங் களி யானை அன்ன மன்னன்
வெம்பி விழுந்து எழும் விம்மல் கண்டு, வெய்துற்று,
உம்பர் நடுங்கினர்; ஊழி பேர்வது ஒத்தது;
அம்பு அன கண்ணவள் உள்ளம் அன்னதேயால். 20

அஞ்சலள், ஐயனது அல்லல் கண்டும்; உள்ளம்
நஞ்சிலள்; 'நாண் இலள்' என்ன, நாணம் ஆமால்;
'வஞ்சனை பண்டு மடந்தை வேடம்' என்றே
தஞ்சு என மாதரை உள்ளலார்கள், தக்கோர். 21

தயரதன் மீண்டும் வினவுதல்

இந் நிலை நின்றவள்தன்னை எய்த நோக்கி,
நெய்ந் நிலை வேலவன், 'நீ திசைத்தது உண்டோ?
பொய்ந் நிலையோர்கள் புணர்த்த வஞ்சம் உண்டோ?
உன் நிலை சொல்; எனது ஆணை உண்மை!' என்றான். 22

கைகேயியின் கொடுஞ் சொற்கள்

'திசைத்ததும் இல்லை; எனக்கு வந்து தீயோர்
இசைத்ததும் இல்லை; முன் ஈந்த இவ் வரங்கள்,
குசைப் பரியோய்! தரின், இன்று கொள்வென்; அன்றேல்,
வசைத் திறன் நின்வயின் வைத்து, மாள்வென்' என்றாள். 23

தயரதன் பெருந் துயர் கொள்ளுதல்

இந்த நெடுஞ் சொல் அவ் ஏழை கூறும் முன்னே,
வெந்த கொடும் புணில் வேல் நுழைந்தது ஒப்ப,
சிந்தை திரிந்து, திகைத்து, அயர்ந்து, வீழ்ந்தான்;—
மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன். 24

'ஆ கொடியாய்!' எனும்; ஆவி காலும்; 'அந்தோ!
ஓ கொடிதே அறம்!' என்னும்; 'உண்மை ஒன்றும்
சாக!' எனா எழும்; மெய் தளாடி வீழும்—
மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான். 25

23. குசை - கடிவாளம்.

'''நாரியர் இல்லை இஞ் ஞாலம் எங்கும்'' என்ன,
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி, யானும்,
பூரியர் எண்ணிடை வீழ்வென்' என்று, பொங்கும்—
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான். 26

கையொடு கையைப் புடைக்கும்; வாய் கடிக்கும்;
'மெய்யுரை குற்றம்' எனப் புழுங்கி விம்மும்;
நெய் எரி உற்றென நெஞ்சு அழிந்து சோரும்—
வையகம் முற்றும் நடந்த வாய்மை மன்னன். 27

'ஒறுப்பினும் அந்தரம், உண்மை ஒன்றும் ஓவா
மறுப்பினும் அந்தரம்' என்று, வாய்மை மன்னன்,
'பொறுப்பினும் இந் நிலை போகிலாளை வாளால்
இறுப்பினும் ஆவது இரப்பது' என்று எழுந்தான். 28

**கைகேயியின் காலில் விழுந்து, தயரதன் இரத்தல்**

'கோல் மேற்கொண்டும் குற்றம் அகற்றக் குறிகொண்டார்-
போல், மேல் உற்றது உண்டுஎனின் நன்று ஆம் பொறை' என்னா,
கால்மேல் வீழ்ந்தான்—கந்து கொல் யானைக் கழல் மன்னர்
மேல் மேல் வந்து முந்தி வணங்கி மிடை தாளான். 29

'கொள்ளான் நின் சேய் இவ் அரசு; அன்னான் கொண்டாலும்,
நள்ளாது இந்த நானிலம்; ஞாலம்தனில் என்றும்
உள்ளார் எல்லாம் ஓத உவக்கும் புகழ் கொள்ளாய்;
எள்ளா நிற்கும் வன் பழி கொண்டு என் பயன்?' என்றான். 30

'வானோர் கொள்ளார்; மன்னவர் உய்யார்; இனி, மற்று என்
ஏனோர் செய்கை? யாரொடு நீ இவ் அரசு ஆள்வாய்?
யானே சொல்ல, கொள்ள இசைந்தான்; முறையாலே
தானே நல்கும் உன் மகனுக்கும் தரை' என்றான். 31

'''கண்ணே வேண்டும்'' என்னினும், ஈயக் கடவேன்; என்
உள் நேர் ஆவி வேண்டினும், இன்றே உனது அன்றோ?—
பெண்ணே! வண்மைக் கேகயன் மானே!—பெறுவாயேல்,
மண்ணே கொள் நீ; மற்றையது ஒன்றும் மற' என்றான். 32

'வாய் தந்தேன் என்றேன்; இனி, யானோ அது மாற்றேன்;
நோய் தந்து என்னை நோவன செய்து நுவலாதே;
தாய் தந்தென்ன, தன்னை இரந்தால், தழல் வெங் கண்
பேய் தந்தீயும்; நீ இது தந்தால் பிழை ஆமோ?' 33

26. பூரியர் - கீழ்மக்கள்; 30. நள்ளுதல் - விரும்பி உடன்படல்; 33. வாய் - வாயால், வாய்மையாக எனலும் ஆம்.

**கைகேயி மறுத்து உரைக்க, மன்னன் மீண்டும் இரத்தல்**

இன்னே இன்னே பன்னி இரந்தான் இகல் வேந்தன்:
தன் நேர் இல்லாத் தீயவள் உள்ளம் தடுமாறுள்,
'முன்னே தந்தாய் இவ் வரம்; நல்காய்; முனிவாயேல்,
என்னே? மன்னு! யார் உளர் வாய்மைக்கு இனி?' என்றுள். 34

அச் சொல் கேளா, ஆவி புழுங்கா, அயர்கின்றுன்,
பொய்ச் சொல் பேணு வாய்மொழி மன்னன், பொறை கூர,
'நச்சுத் தீயே பெண் உரு அன்றோ?' என, நாணு,
முச்சு அற்றுர்போல், பின்னும் இரந்தே மொழிகின்றுன்: 35

'நின் மகன் ஆள்வான்; நீ, இனிது ஆள்வாய்; நிலம் எல்லாம்
உன் வயம் ஆமே; ஆளுதி; தந்தேன்; உரை குன்றேன்;
என் மகன், என் கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும்
நன் மகன், இந்த நாடு இறவாமை நய' என்றுன். 36

'மெய்யே: என்தன் வேர் அற நூறும் வினை நோக்கி
நையாநின்றேன்; நாவும் உலர்ந்தேன்; நளினம்போல்
கையான், இன்று, என் கண் எதிர்நின்றும் கழிவானேல்,
உய்யேன்; நங்காய்! உன் அபயம் என் உயிர்' என்றுன். 37

**கைகேயி, 'தந்த வரத்தைத் "தவிர்க" எனல் அறமோ?' என்றல்**

இரந்தான் சொல்லும் இன் உரை கொள்ளாள், முனிவு எஞ்சாள்,
மரம்தான் என்னும் நெஞ்சினள், நாணுள், வசை பாராள்,
'சரம் தாழ் வில்லாய்! தந்த வரத்தை, ''தவிர்க'' என்றல்,
உரம்தான் அல்லால், நல் அறம் ஆமோ? உரை' என்றுள். 38

**மண்ணில் விழுந்து, மன்னன் புலம்புதல்**

கொடியாள் இன்ன கூறினள்; கூற, குல வேந்தன்,
'முடி சூடாமல் காத்தலும், மொய் கானிடை, மெய்யே
நெடியான் நீங்க, நீங்கும் என் ஆவி இனி' என்னு,
இடி ஏறுண்ட மால் வரைபோல், மண்ணிடை வீழ்ந்தான். 39

வீழ்ந்தான்; வீழா, வெந் துயரத்தின் கடல் வெள்ளத்து
ஆழ்ந்தான்; ஆழா, அக் கடலுக்கு ஓர் கரை காணுன்;
சூழ்ந்தாள் துன்பம் சொற் கொடியாள், சொல்கொடு நெஞ்சம்
போழ்ந்தாள், உள்ளப் புன்மையை நோக்கிப் புலர்கின்றுன். 40

35. முச்சு - மூச்சு; 39. காத்தல் - தடுத்தல்.

' ''ஒன்றுநின்ற ஆர் உயிரோடும், உயர் கேள்வர்
பொன்று முன்னம் பொன்றினர்'' என்னும் புகழ் அல்லால்,
இன்றுஓர்காறும், எல் வளையார், தம் இறையோரைக்
கொன்றார் இல்லை; கொல்லுதியோ நீ?—கொடியோளே! 41

'ஏவம் பாராய்; இல் முறை நோக்காய்; அறம் எண்ணாய்;
''ஆ!'' என்பாயோ அல்லை; மனத்தால் அருள் கொன்றாய்;
நா அம்பால், என் ஆர் உயிர் உண்டாய்; இனி, ஞாலம்
பாவம் பாராது, இன் உயிர் கொள்ளப் படுகின்றாய்! 42

'ஏண்பால் ஓவா நாண், மடம், அச்சம், இவையே தம்
பூண்பால் ஆகக் காண்பவர் நல்லார்; புகழ் பேணி
நாண்பால் ஓரா நங்கையர்தம்பால் நணுகாரே;
ஆண்பாலாரே; பெண்பால் ஆரோடு அடைவு அம்மா? 43

'மண் ஆள்கின்றார் ஆகி, வலத்தால் மதியால் வைத்து
எண்ணாநின்றார் யாரையும், எல்லா இகலாலும்,
விண்ணோர்காறும், வென்ற எனக்கு, என் மனை வாழும்
பெண்ணால் வந்தது, அந்தரம் என்னப் பெறுவேனே?' 44

என்று, என்று, உன்னும்; பன்னி இரக்கும்; இடர் தோயும்;
ஒன்று ஒன்று ஒவ்வா இன்னல் உழக்கும்; 'உயிர் உண்டோ?
இன்று! இன்று!' என்னும் வண்ணம் மயங்கும்; இடியும்—பொன்-
குன்று ஒன்று ஒன்றோடு ஒன்றியது என்னக் குவி தோளான்; 45

**கைகேயி, 'உரை மறுத்தால், உயிர் விடுவேன்' எனல்**

ஆழிப் பொன்-தேர் மன்னவன் இவ்வாறு அயர்வு எய்தி,
பூழிப் பொன்-தோள் முற்றும் அடங்கப் புரள் போழ்தில்,
' ''ஊழின் பெற்றாய்'' என்று உரை; இன்றேல், உயிர் மாய்வென்;
பாழிப் பொன்-தார் மன்னவ!' என்றாள், பசை அற்றாள். 46

'அரிந்தான், முன் ஓர் மன்னவன் அன்றே அரு மேனி,
வரிந்து ஆர் வில்லாய்! வாய்மை வளர்ப்பான்! வரம் நல்கி,
பரிந்தால், என் ஆம்?' என்றனள்—பாயும் கனலேபோல்,
எரிந்து ஆறாதே இன் உயிர் உண்ணும் எரி அன்னாள். 47

**வரம் நல்கி மன்னவன் மூர்ச்சிக்க, கைகேயி துயில்தல்**

'வீய்ந்தாளே இவ் வெய்யவள்' என்னா, மிடல் வேந்தன்
'ஈந்தேன்! ஈந்தேன்! இவ் வரம்; என் சேய் வனம் ஆள,
மாய்ந்தே நான் போய் வான் உலகு ஆள்வென்; வசை வெள்ளம்
நீந்தாய், நீந்தாய், நின் மகனோடும் நெடிது!' என்றான். 48

42. ஏவம் - குற்றம்; 43. ஏண் - வலிமை; 46. பூழி - புழுதி.

கூறு முன்னம், கூறுபடுக்கும் கொலை வாளின்
ஏறு ஆம் என்னும் வன் துயர் ஆகத்திடை மூழ்க,
தேறுன் ஆகிச் செய்கை மறந்தான்: செயல் முற்றி,
ஊறு நின்ற சிந்தையினாளும் துயிலுற்றாள். 49

**இரவு ஏகலும், விடியற்கால நிகழ்ச்சிகளும்**

**சே**ண் உலாவிய நாள் எலாம் உயிர் ஒன்று போல்வன செய்து, பின்
ஏண் உலாவிய தோளினான் இடர் எய்த, ஒன்றும் இரங்கிலா
வாள் நிலா நகை மாதராள் செயல் கண்டு, மைந்தர் முன் நிற்கவும்
நாணினாள் என ஏகினாள்—நளிர் கங்குல் ஆகிய நங்கையே. 50

எண் தரும் கடை சென்ற யாமம் இயம்புகின்றன—ஏழையால்,
வண்டு தங்கிய தொங்கல் மார்பன் மயங்கி விம்மியவாறு எலாம்
கண்டு, நெஞ்சு கலங்கி, அம் சிறை ஆன காமர் துணைக் கரம்
கொண்டு, தம் வயிறு எற்றி எற்றி விளிப்ப போன்றன—கோழியே.

தோய் கயத்தும், மரத்தும், மென் சிறை துள்ளி, மீது எழு புள் எலாம்
தேய்கை ஒத்த மருங்குல் மாதர் சிலம்பின் நின்று சிலம்புவ—
கேகயத்து அரசன் பயந்த விடத்தை, இன்னது ஓர் கேடு சூழ்
மா கயத்தியை, உள் கொதித்து, மனத்து வைவன போன்றவே.

சேமம் என்பன பற்றி, அன்பு திருந்த இன் துயில் செய்தபின்,
'வாம மேகலை மங்கையோடு வனத்துள், யாரும் மறக்கிலா
நாம நம்பி, நடக்கும்' என்று நடுங்குகின்ற மனத்தவாய்,
'யாமும் இம் மண் இறத்தும்' என்பனபோல் எழுந்தன—யானையே.

சிரித்த பங்கயம் ஒத்த செங் கண் இராமனை, திருமாலை, அக்
கரிக் கரம் பொரு கைத்தலத்து, உயர் காப்பு நாண் அணிதற்குமுன்
வரித்த தண் கதிர் முத்தது ஆகி, இம் மண் அனைத்தும் நிழற்ற, மேல்
விரித்த பந்தர் பிரித்தது ஆம் என, மீன் ஒளித்தது—வானமே.

'நாம விற் கை இராமனைத் தொழும் நாள் அடைந்த நமக்கு எலாம்,
காம விற்கு உடை கங்குல் மாலை கழிந்தது' என்பது கற்பியா,
தாம் ஒலித்தன பேரி; அவ் ஒலி, சாரல் மாரி தழங்கலால்,
மா மயில் குலம் என்ன, முன்னம் மலர்ந்து எழுந்தனர், மாதரே.

49. வாளின் ஏறு; - வாள் பாய்ந்ததால் உளதாய புண்; ஊறுதல் - மகிழ்ச்சி சுரத்தல்; 53. சேமம் - பாதுகாப்பான இடம்; 55. கங்குல் மாலை - கங்குற்போது.

இன மலர்க் குலம் வாய் விரித்து, இள வாச மாருதம் வீச, முன்
புனை துகிற்கலை சோர, நெஞ்சு புழுங்கினர் சில பூவைமார்;
மனம் அனுக்கம் விட, தனித்தனி, வள்ளலைப் புணர் கள்ள வன்-
கனவினுக்கு இடையூறு அடுக்க, மயங்கினர் சில கன்னிமார். †

சாய் அடங்க, நலம் கலந்து தயங்கு தன் குல நன்மையும்
போய் அடங்க, நெடுங் கொடும் பழி கொண்டு, அரும் புகழ் சிந்தும் அத்
தீ அடங்கிய சிந்தையாள் செயல் கண்டு, சீரிய நங்கைமார்
வாய் அடங்கின என்ன வந்து குவிந்த—வண் குமுதங்களே. 57

மொய் அராகம் நிரம்ப, ஆசை முருங்கு தீயின் முழங்க, மேல்
வை அராவிய மாரன் வாளியும், வான் நிலா நெடு வாடையும்,
மெய் அராவிட, ஆவி சோர வெதும்பு மாதர்தம் மென் செவி,
பை அரா நுழைகின்ற போன்றன—பண் கனிந்து எழு பாடலே.

'ஆழியான் முடி சூடும் நாள், இடை ஆன பாவி இது ஓர் இரா
ஊழி ஆயினவாறு' எனா, உயர் போதின்மேல் உறை பேதையும்,
ஏழ் உலோகமும், எண் தவம் செய்த கண்ணும், எங்கள் மனங்களும்,
வாழும் நாள் இது' எனா எழுந்தனர்—மஞ்சு தோய் புய மஞ்சரே. 59

ஐயுறும் சுடர் மேனியான் எழில் காண மூளும் அவாவினால்,
கொய்யுறும் குல மா மலர்க் குவை நின்று எழுந்தனர்—கூர்மை கூர்
நெய் உறும் சுடர் வேல் நெடுங் கண் முகிழ்த்து, நெஞ்சில் நினைப்பொடும்
பொய் உறங்கும் மடந்தைமார்—குழல் வண்டு பொம்மென விம்மவே.

ஆடகம் தரு பூண் முயங்கிட அஞ்சி அஞ்சி, அனந்தரால்
ஏடு அகம் பொதி தார் பொருந்திட, யாம பேரி இசைத்தலால்,
சேடகம் புனை கோதை மங்கையர் சிந்தையில் செறி திண்மையால்,
ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர், நையும் மைந்தர்கள் உய்யவே. 61

தழை ஒலித்தன; வண்டு ஒலித்தன; தார் ஒலித்தன; பேரி ஆம்
முழவு ஒலித்தன; தேர் ஒலித்தன; முத்து ஒலித்து எழும் அல்குலார்
இழை ஒலித்தன; புள் ஒலித்தன; யாழ் ஒலித்தன; எங்கணும்
மழை ஒலித்தனபோல் கலித்த, மனத்தின் முந்துறு வாசியே.

வையம் ஏழும் ஓர் ஏழும் ஆர் உயிரோடு கூட வழங்கும் அம்
மெய்யன், வீரருள் வீரன், மா மகன்மேல் விளைந்தது ஓர்காதலால்
நைய நைய, நல் ஐம்புலன்கள் அவிந்து அடங்கி நடுங்குவான்
தெய்வ மேனி படைத்த சேயொளிபோல் மழுங்கின—தீபமே.

57. சாய்தல் - சுருங்குதல்; 58. மொய் அராகம் - வலிய வேட்கை; 61. யாம பேரி - கடையாமத்திற்குரிய முரசு; சேடு - அழகு; 62. வாசி - குதிரை.

வங்கியம் பல தேன் விளம்பின; வாணி முந்தின பாணியின்
பங்கி அம்பரம் எங்கும் விம்மின; பம்பை பம்பின; பல் வகைப்
பொங்கு இயம் பலவும் கறங்கின; நூபுரங்கள் புலம்ப, வெண்
சங்கு இயம்பின; கொம்பு அலம்பின, சாம கீதம் நிரந்தவே. 64

தூபம் முற்றிய கார் இருட் பகை துள்ளி ஓடிட, உள் எழும்
தீபம் முற்றவும் நீத்து அகன்றென சேயது ஆர் உயிர் தேய, வெம்
பாபம் முற்றிய பேதை செய்த பகைத் திறத்தினில், வெய்யவன்
கோபம் முற்றி மிகச் சிவந்தனன் ஒத்தனன், குண குன்றிலே.

மூவர் ஆய், முதல் ஆகி, மூலம் அது ஆகி, ஞாலமும் ஆகிய
தேவதேவர் பிடித்த போர் வில் ஒடித்த சேவகன், சேண் நிலம்
காவல் மா முடி சூடு பேர் எழில் காணலாம் எனும் ஆசை கூர்
பாவைமார் முகம் என்ன முன்னம் மலர்ந்த—பங்கய ராசியே.

**முடி சூட்டு விழாவைக் கொண்டாடும் நகர மாந்தர் நிலை**

இன்ன வேலையின், எழு வேலையும் ஒத்த போல இரைத்து எழுந்து,
அன்ன மா நகர், 'மைந்தன் மா முடி சூடும் வைகல்இது ஆம்' எனு,
துன்னு காதல் துரப்ப வந்தவை சொல்லல் ஆம் வகை எம்மனோர்க்கு
உன்னல் ஆவன அல்ல என்னினும், உற்ற பெற்றி உணர்த்துவாம். 67

குஞ்சரம் அனையார் சிந்தை கொள் இளையார்,
பஞ்சினை அணிவார்; பால் வளை தெரிவார்;
அஞ்சனம் என, வாள் அம்புகள் இடையே,
நஞ்சினை இடுவார்; நாள்மலர் புனைவார்.* 68

பொங்கிய உவகை வெள்ளம் பொழிதர, கமலம் பூத்த
சங்கை இல் முகத்தார்,—நம்பி தம்பியர் அனையர் ஆனர்—
செங் கயல் நறவம் மாந்திக் களிப்பன சிவணும் கண்ணார்
குங்குமச் சுவடு நீங்காக் குவவுத் தோள் குமரர் எல்லாம். 69

மாதர்கள், கற்பின் மிக்கார், கோசலை மனத்தை ஒத்தார்;
வேதியர் வசிட்டன் ஒத்தார்; வேறு உள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார்; அன்னள் திருவினை ஒத்தாள்; அவ் ஊர்ச்
சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை ஒத்தார். 70

64. வங்கியம் - புல்லாங்குழல்; வாணி - சொல்; பாணி - இசைப் பாடல்; 69. சங்கை - குற்றம்; 70. சாதுகை மாந்தர் - சாந்தமான ஒழுக்கம் உள்ள முதிய ஆடவர்.

இமிழ் திரைப் பரவை ஞாலம் எங்கணும் வறுமை கூர,
உமிழ்வது ஒத்து உதவு காதல் உந்திட, வந்தது அன்றே—
குமிழ் முலைச் சீதை கொண்கன் கோமுடி புனை தல் காண்பான்,
அமிழ்து உணக் குழுமுகின்ற அமரரின், அரச வெள்ளம். 71

பாகு இயல் பவளச் செவ் வாய், பணை முலை, பரவை அல்குல்,
தோகையர் குழாமும், மைந்தர் சும்மையும் துவன்றி, எங்கும்,
'ஏகுமின், ஏகும்' என்று என்று, இடை இடை நிற்றல் அல்லால்,
போகில; மீளகில்லா—பொன் நகர் வீதி எல்லாம். 72

'வேந்தரே பெரிது' என்பாரும், 'வேதியர் பெரிது' என்பாரும்,
'மாந்தரே பெரிது' என்பாரும், 'மகளிரே பெரிது' என்பாரும்,
'போந்ததே பெரிது' என்பாரும், 'புகுவதே பெரிது' என்பாரும்,
தேர்ந்ததே தேரின் அல்லால், யாவரே தெரியக் கண்டார்? 73

குவளையின் எழிலும், வேலின் கொடுமையும், குழைத்துக் கூட்டி,
திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த நஞ்சினைத் தெரியத் தீட்டி,
தவள ஒண் மதியுள் வைத்த தன்மை சால் தடங் கண் நல்லார்,
துவளும் நுண் இடையார், ஆடும் தோகைஅம் குழாத்தின் தொக்கார்.

நலம் கிளர் பூமி என்னும் நங்கையை நறுந் துழாயின்
அலங்கலான் புணரும் செல்வம் காண வந்து அடைந்திலாதார்—
இலங்கையின் நிருதரே; இவ் ஏழ் உலகத்து வாழும்
விலங்கலும், ஆசை நின்ற விடா மத விலங்கலேயால். 75

முடி சூட்டு மண்டபத்துள் அரசர், அந்தணர் முதலியோர் புகுதல்

சந்திரர் கோடி என்னத் தரள வெண் கவிகை ஓங்க,
அந்தரத்து அன்னம் எல்லாம் ஆர்ந்தெனக் கவரி துன்ன,
இந்திரற்கு உவமை சாலும் இருநிலக் கிழவர் எல்லாம்
வந்தனர்; மௌலி சூட்டும் மண்டபம் மரபின் புக்கார். 76

முன் பயந்து எடுத்த காதல் புதல்வனை முறையினோடும்
இற் பயன் சிறப்பிப்பாரின், ஈண்டிய உவகை தூண்ட,
அற்புதன் திருவைச் சேரும் அரு மணம் காணப் புக்கார்—
நல் பயன் தவத்தின் உய்க்கும் நான்மறைக் கிழவர் எல்லாம்.

விண்ணவர் விசும்பு தூர்த்தார்; விரிதிரை உடுத்த கோல
மண்ணவர் திசைகள் தூர்த்தார்; மங்கலம் இசைக்கும் சங்கம்,
கண் அகல் முரசின், ஓதை கண்டவர் செவிகள் தூர்த்த;
எண் அருங் கனக மாரி எழு திரைக் கடல்கள் தூர்த்த. 78

74. திவளுதல் - விளங்குதல்.

விளக்கு ஒளி மறைத்த, மன்னர் மின் ஒளி; மகுட கோடி
துளக்கு ஒளி, விசும்பின் ஊரும் சுடரையும் மறைத்த; சூழ்ந்த
அளக்கர் வாய் முத்த மூரல் முறுவலார் அணியின் சோதி,
'வளைக்கலாம்' என்று, அவ் வானோர் கண்ணையும் மறைத்தஅன்றே. 79

வசிட்டன் வந்து, முடி சூட்டற்கு வேண்டுவன செய்தல்

ஆயது ஓர் அமைதியின்கண், ஐயனை மகுடம் சூட்டற்கு
ஏயும் மங்கலங்கள் ஆன யாவையும் இயையக் கொண்டு,
தூய நான்மறைகள் வேதபாரகர் சொல்ல, தொல்லை
வாயில்கள் நெருக்கம் நீங்க, மா தவக் கிழவன் வந்தான். 80

கங்கையே முதல ஆய கன்னி ஈறு ஆன தீர்த்த
மங்கலப் புனலும், நாலு வாரியின் நீரும், பூரித்து,
அங்கியின் வினையிற்கு ஏற்ற யாவையும் அமைத்து, வீரச்
சிங்க ஆசனமும் வைத்து, செய்வன பிறவும் செய்தான். 81

மன்னனை அழைத்து வரச் சுமந்திரன் போதல்

கணித நூல் உணர்ந்த மாந்தர், 'காலம் வந்து அடுத்தது' என்ன,
பிணி அற நோற்று நின்ற பெரியவன், 'விரைவின் ஏகி
மணி முடி வேந்தன் தன்னை வல்லையின் கொணர்தி' என்ன,
பணி தலைநின்ற காதல் சுமந்திரன் பரிவின் சென்றான். 82

கைகேயி சுமந்திரனிடம், 'இராமனைக் கொணர்க' எனல்

விண் தொட நிவந்த கோயில், வேந்தர்தம் வேந்தன் தன்னைக்
கண்டிலன்; வினவக் கேட்டான்; கைகயள் கோயில் நண்ணி,
தொண்டை வாய் மடந்தைமாரின் சொல்ல, மற்று அவரும் சொல்ல,
பெண்டிரில் கூற்றம் அன்னாள், 'பிள்ளையைக் கொணர்க' என்றாள். 83

சுமந்திரன் சென்று இராமனை அழைத்தல்

'என்றனள்' என்னக் கேட்டான்; எழுந்த பேர் உவகை பொங்க
பொன் திணி மாட வீதி பொருக்கென நீங்கி, புக்கான்;
தன் திருஉள்ளத்துள்ளே தன்னையே நினையும் மற்று அக்
குன்று இவர் தோளினானைத் தொழுது, வாய் புதைத்து, கூறும்:

'கொற்றவர், முனிவர், மற்றும் குவலயத்து உள்ளார், உன்னைப்
பெற்றவன் தன்னைப் போல, பெரும் பரிவு இயற்றி நின்றார்;
சிற்றவை தானும், ''ஆங்கே கொணர்க!'' எனச் செப்பினாள்; அப்
பொன்-தட மகுடம் சூடப் போதுதி, விரைவின்' என்றான். 85

81. வாரி - கடல்.

**தேரில் செல்லும் இராமனைக் கண்ட மக்கள் மகிழ்ச்சி**

ஐயனும், அச் சொல் கேளா, ஆயிர மௌலியானைக்
கைதொழுது, அரச வெள்ளம் கடல் எனத் தொடர்ந்து சுற்ற,
தெய்வ கீதங்கள் பாட, தேவரும் மகிழ்ந்து வாழ்த்த,
தையலார் இரைத்து நோக்க, தார் அணி தேரில் சென்றான். 86

திரு மணி மகுடம் சூடச் சேவகன் செல்கின்றான் என்று,
ஒருவரின் ஒருவர் முந்த, காதலோடு உவகை உந்த,
இரு கையும் இரைத்து மொய்த்தார்; இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப்
பொரு அரு தேரில் செல்ல, புறத்திடைக் கண்டார் போல்வார்.

துண்ணெனும் சொல்லாள் சொல்ல, சுடர் முடி துறந்து, தூய
மண் எனும் திருவை நீங்கி, வழிக்கொளாமுன்னம், வள்ளல்
பண் எனும் சொல்லினார்தம் தோள் எனும் பணைத்த வேயும்,
கண் எனும் கால வேலும், மிடை நெடுங் கானம் புக்கான். 88

சுண்ணமும் மலரும் சாந்தும் கனகமும் தூவ வந்து,
வண்ண மேகலையும் நாணும் வளைகளும் தூவுவாரும்;
புண் உற அனங்கன் வாளி புழைத்த தம் புணர் மென் கொங்கை
கண் உறப் பொழிந்த காம வெம் புனல் கழுவுவாரும்; 89

'"அங்கணன் அவனி காத்தற்கு ஆம் இவன்" என்னல் ஆமோ?
நம் கண் அன்பு இலன்' என்று, உள்ளம் தள்ளுற நடுங்கி நைவார்,
'செங் கணும், கரிய கோல மேனியும், தேரும், ஆகி,
எங்கணும் தோன்றுகின்றான்; எனைவரோ இராமன்?' என்பார்.

இனையராய் மகளிர் எல்லாம் இரைத்தனர், நிரைத்து மொய்த்தார்;
முனைவரும், நகர மூதூர் முதிஞரும் இளைஞர்தாமும்,
அனையவன் மேனி கண்டார், அன்பினுக்கு எல்லை காணார்,
நினைவன மனத்தால், வாயால் நிகழ்ந்தது, நிகழ்த்தலுற்றார்:

'உய்ந்தது இவ் உலகம்' என்பார்; 'ஊழி காண்கிற்பாய்' என்பார்;
'மைந்த! நீ கோடி எங்கள் வாழ்க்கை நாள் யாவும்' என்பார்;
'ஐந்து அவித்து அரிதின் செய்த தவம் உனக்கு ஆக' என்பார்;
'பைந் துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க' என்பார். 92

'உயர் அருள் ஒண் கண் ஒக்கும் தாமரை, நிறத்தை ஒக்கும்
புயல் பொழி மேகம், என்ன புண்ணியம் செய்த!' என்பார்;
'செயல் அருந் தவங்கள் செய்து, இச் செம்மலைத் தந்த செல்வத்
தயரதற்கு என்ன கைம்மாறு உடையம் யாம் தக்கது?' என்பார்.

87. கை - பக்கம்; 89. புழைத்தல் - துளைத்தல்; 90. எனைவர் - எத்தனை பேர்; 91. முனைவர் - முனிவர்.

'வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி
நாரணன் ஒக்கும், இந்த நம்பிதன் கருணை' என்பார்;
ஆரணம் அறிதல் தேற்றா ஐயனை அணுகி நோக்கி,
காரணம் இன்றியேயும், கண்கள் நீர் கலுழ நிற்பார். 94

'நீல மா முகில் அனான்தன் நிறையினோடு அறிவும் நிற்க,
சீலம் ஆர்க்கு உண்டு? கெட்டேன்! தேவரின் அடங்குவானோ?
காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற
மூலம் ஆய், முடிவு இலாத மூர்த்தி இம் முன்பன்' என்பார். 95

'ஆர்கலி அகழ்ந்தோர், கங்கை அவனியில் கொணர்ந்தோர், முந்தைப்
போர் கெழு புலவர்க்கு ஆகி அசுரரைப் பொருது வென்றோர்,
பேர்கெழு சிறப்பின் வந்த பெரும் புகழ் நிற்பது, ஐயன்
தார் கெழு திரள் தோள் தந்த புகழினைத் தழுவி' என்பார். 96

'சந்தம் இவை; தா இல் மணி ஆரம் இவை; யாவும்
சிந்துரமும் இங்கு இவை; செறிந்த மத வேழப்
பந்திகள், வயப் பரி, பசும் பொனின் வெறுக்கை,
மைந்த! வறியோர் கொள வழங்கு' என நிரைப்பார். 97

மின் பொருவு தேரின்மிசை வீரன் வரு போழ்தில்,
தன் பொருவு இல் கன்று தனி தாவி வரல் கண்டாங்கு
அன்பு உருகு சிந்தையொடும் ஆ உருகுமாபோல்,
என்பு உருகி, நெஞ்சு உருகி, யார் உருககில்லார்? 98

'சத்திரம் நிழற்ற, நிமிர் தானையொடு நானா
அத்திரம் நிழற்ற, அருளோடு அவனி ஆள்வார்,
புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது' என, நல்லோர்,
சித்திரம் எனத் தனி திகைத்து, உருகி, நிற்பார். 99

'கார் மினொடு உலாயது என நூல் கஞலும் மார்பன்,
தேர்மிசை, நம் வாயில் கடிது ஏகுதல் செய்வானோ?
கூர் கனக ராசியொடு கோடி மணியாலும்
தூர்மின், நெடு வீதியினை' என்று சொரிவாரும். 100

'தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது, தவத்தால்
கேகயன் மடந்தை; கிளர் ஞாலம் இவன் ஆள,
ஈகையில் உவந்த அவ் இயற்கை இது என்றால்,
தோகை அவள் பேர் உவகை சொல்லல் அரிது?' என்பார். 101

95. முன்பன் - வலியன், இங்கு இராமனைக் குறித்தது; 96. அசுரரைப் பொருது வென்றோர் - ககுத்தன், முசுகுந்தன் முதலியோர்; 99. சத்திரம் - குடை; அத்திரம் - படை.

'பாவமும் அருந் துயரும் வேர் பறியும்' என்பார்;
'பூவலயம் இன்று தனி அன்று; பொது' என்பார்;
'தேவர் பகை உள்ளன இவ் வள்ளல் தெறும்' என்பார்;
'ஏவல் செயும் மன்னர் தவம் யாவதுகொல்?' என்பார். 102

ஆண்டு, இனையராய் இனைய கூற, அடல் வீரன்,
தூண்டு புரவிப் பொரு இல் சுந்தர மணித் தேர்,
நீண்ட கொடி மாட நிரை வீதி நிறையப் போய்,
பூண்ட புகழ் மன்னன் உறை கோயில் புகலோடும்— 103

**அரண்மனையில் அரசனை இராமன் காணுனாய்க்**
**கைகேயி கோயில் புகுதல்**

ஆங்கு வந்து அடைந்த அண்ணல், ஆசையின் கவரி வீச,
பூங் குழல் மகளிர் உள்ளம் புதுக் களி ஆட, நோக்கி,
வீங்கு இருங் காதல் காட்டி, விரி முகக் கமல பீடத்து
ஓங்கிய மகுடம் சூடி, உவ்கை வீற்றிருப்பக் காணான்.† 104

வேத்தவை, முனிவரோடு, விருப்பொடு களிக்கும் மெய்ம்மை
ஏத்து அவை இசைக்கும், செம் பொன் மண்டபம் இனிதின் எய்தான்,
ஒத்து அவை, உலகத்து எங்கும் உள்ளவை, உணர்ந்தார் உள்ளம்
பூத்தவை, வடிவை ஒப்பான்,—சிற்றவை கோயில் புக்கான்.†

புக்கவன்தன்னை நோக்கி, புரவலர், முனிவர், யாரும்,
'தக்கதே நினைந்தான்; தாதை தாமரைச் சரணம் சூடி,
திக்கினை நிமிர்த்த கோலச் செங்கதிர்ச் செல்வன் ஏய்ந்த
மிக்கு உயர் மகுடம் சூட்ட, சூடுதல் விழுமிது' என்றார். 106

**இராமன் எதிரே கைகேயி வருதல்**

ஆயன நிகழும் வேலை, அண்ணலும் அயர்ந்து தேரூத்
தூயவன் இருந்த சூழல் துருவினன் வருதல் நோக்கி,
'நாயகன் உரையான் வாயால்; நான் இது பகர்வென்' என்னா,
தாய் என நினைவான்முன்னே கூற்று எனத் தமியள் வந்தாள்.

**இராமன் வணங்கி நிற்க, அவனிடம் கைகேயி கூறுதல்**

வந்தவள்தன்னைச் சென்னி மண் உற வணங்கி, வாசச்
சிந்துரப் பவளச் செவ்வாய் செங் கையின் புதைத்து, மற்றைச்
சுந்தரத் தடக் கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்—
அந்தி வந்து அடைந்த தாயைக் கண்ட ஆன் கன்றின் அன்னான்.

104. ஆசை - திசை, ஈண்டு இரு புறங்களை உணர்த்திற்று.

நின்றவன்தன்னை நோக்கி, இரும்பினல் இயன்ற நெஞ்சின்
கொன்று உழல் கூற்றம் என்னும்பெயர் இன்றிக்கொடுமைபூண்டாள்,
'இன்று எனக்கு உணர்த்தல்ஆவது ஏயதேஎன்னின், ஆகும்;
ஒன்று உனக்கு உந்தை, மைந்த! உரைப்பது ஓர் உரை உண்டு' என்றாள்.

இராமனின் பணிவு மொழி

'எந்தையே ஏவ, நீரே உரைசெய இயைவது உண்டேல்,
உய்ந்தனென் அடியேன்; என்னின் பிறந்தவர் உளரோ? வாழி!
வந்தது, என் தவத்தின் ஆய வரு பயன்; மற்று ஒன்று உண்டோ?
தந்தையும், தாயும், நீரே; தலைநின்றேன்; பணிமின்' என்றான்.

கைகேயி, 'மன்னன் ஆணை இது' எனல்

' ''ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீபோய்,
தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந் தவம் மேற்கொண்டு,
பூழி வெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,
ஏழ்-இரண்டு ஆண்டின் வா'' என்று, இயம்பினன் அரசன்' என்றாள்.

அதுபோழ்து, இராமனின் தோற்றப் பொலிவு

இப் பொழுது, எம்மனோரால் இயம்புதற்கு எளிதே? யாரும்
செப்ப அருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்,
ஒப்பதே முன்பு பின்பு; அவ் வாசகம் உணரக் கேட்ட
அப் பொழுது, அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா!

தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி,
இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்றான்,
உருளுடைச் சகடம் பூண்ட, உடையவன் உய்த்த கார் ஏறு
அருளுடை ஒருவன் நீக்க, அப் பிணி அவிழ்ந்தது ஒத்தான். 113

கைகேயியினிடம் இராமன் விடை கொள்ளுதல்

'மன்னவன் பணி அன்றாகின், நும் பணி மறுப்பெனோ? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?
என் இனி உறுதி அப்பால்? இப் பணி தலைமேல் கொண்டேன்;
மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்.'

கோசலையின் இருப்பிடத்திற்கு இராமன் ஏகுதல்

என்று கொண்டு இனைய கூறி, அடி இணை இறைஞ்சி, மீட்டும்,
தன் துணைத் தாதை பாதம் அத் திசை நோக்கித் தாழ்ந்து,
பொன் திணி போதினாளும், பூமியும், புலம்பி நைய,
குன்றினும் உயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான். 115

# 4 நகர் நீங்கு படலம்

**கோசலை—இராமன் உரையாடல்**

குழைக்கின்ற கவரி இன்றி, கொற்ற வெண்குடையும் இன்றி,
இழைக்கின்ற விதி முன் செல்ல, தருமம் பின் இரங்கி ஏக,
'மழைக் குன்றம் அனையான் மௌலி கவித்தனன் வரும்' என்று என்று
தழைக்கின்ற உள்ளத்து அன்னாள்முன், ஒரு தமியன் சென்றான். 1

'புனைந்திலன் மௌலி; குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன்; என்கொல்?' என்னும், ஐயத்தாள் நளின பாதம்,
வனைந்த பொன் கழற்கால் வீரன் வணங்கலும், குழைந்து வாழ்த்தி,
'நினைந்தது என்? இடையூறு உண்டோ நெடு முடிபுனைதற்கு?' என்றாள்.

மங்கை அம் மொழி கூறலும், மானவன்
செங் கை கூப்பி, 'நின் காதல் திரு மகன்,
பங்கம் இல் குணத்து எம்பி, பரதனே,
துங்க மா முடி சூடுகின்றான்' என்றான். 3

'முறைமை அன்று என்பது ஒன்று உண்டு; மும்மையின்
நிறை குணத்தவன்; நின்னினும் நல்லனால்;
குறைவு இலன்' எனக் கூறினள்—நால்வர்க்கும்
மறு இல் அன்பினில், வேற்றுமை மாற்றினாள். 4

என்று, பின்னரும், 'மன்னவன் ஏவியது
அன்று எனாமை, மகனே! உனக்கு அறன்;
நன்று, நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து,
ஒன்றி வாழுதி, ஊழி பல' என்றாள். 5

தாய் உரைத்த சொல் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தை அத் தோம் இல் குணத்தினான்,
'நாயகன், எனை நல் நெறி உய்ப்பதற்கு
ஏயது உண்டு, ஓர் பணி' என்று இயம்பினான். 6

'ஈண்டு உரைத்த பணி என்னை?' என்றவட்கு,
' ''ஆண்டு ஓர் ஏழினொடு ஏழ், அகன் கானிடை,
மாண்ட மா தவத்தோருடன் வைகி, பின்,
மீண்டு நீ வரல் வேண்டும்'' என்றான்' என்றான். 7

4: 7. மாண்ட - மாட்சிமைப்பட்ட.

**இராமன் கான் புகல் கேட்ட கோசலையின் துயர் நிலை**

ஆங்கு, அவ் வாசகம் என்னும் அனல், குழை
தூங்கு தன் செவியில் தொடராமுனம்,
ஏங்கினாள்; இளைத்தாள்; திகைத்தாள்; மனம்
வீங்கினாள்; விம்மினாள்; விழுந்தாள்அரோ. 8

'வஞ்சமோ, மகனே! உனை, ''மா நிலம்
தஞ்சம் ஆக நீ தாங்கு'' என்ற வாசகம்?
நஞ்சமோ! இனி, நான் உயிர் வாழ்வெனோ?
அஞ்சும்; அஞ்சும்; என் ஆர் உயிர் அஞ்சுமால்!' 9

கையைக் கையின் நெரிக்கும்; தன் காதலன்
வைகும் ஆல் இலை அன்ன வயிற்றினைப்
பெய் வளைத் தளிரால் பிசையும்; புகை
வெய்து உயிர்க்கும்; விழுங்கும், புழுங்குமால். 10

'நன்று மன்னன் கருணை' எனா நகும்;
நின்ற மைந்தனை நோக்கி, 'நெடுஞ் சுரத்து
என்று போவது?' எனா எழும்; இன் உயிர்
பொன்றும் போது உற்றது உற்றனள் போலுமே. 11

'அன்பு இழைத்த மனத்து அரசற்கு, நீ
என் பிழைத்தனை?' என்று, நின்று ஏங்குமால்—
முன்பு இழைத்த வறுமையின் முற்றினோர்,
பொன் பிழைக்கப் பொதிந்தனர் போலவே. 12

'அறம் எனக்கு இலையோ?' எனும்; 'ஆவி நைந்து
இறவு அடுத்தது என், தெய்வதங்காள்?' எனும்;
பிற உரைப்பது என்? கன்று பிரிந்துழிக்
கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள். 13

**இராமன் கோசலையைத் தேற்றுதல்**

இத் திறத்தின் இடர் உறுவாள்தனை,
கைத்தலத்தின் எடுத்து, 'அருங் கற்பினோய்!
பொய்த் திறத்தினன் ஆக்குதியோ?—புகல்—
மெய்த் திறத்து நம் வேந்தனை, நீ?' என்றான். 14

12. பிழைக்கப் பொதிதல் - நழுவிவிடுமாறு முடிதல்.

பொற்புறுத்தன, மெய்ம்மை பொதிந்தன,
சொற்புறுத்தற்கு உரியன, சொல்லினன்—
கற்பு உறுத்திய கற்பு உடையாள்தனை
வற்புறுத்தி, மனம் கொளத் தேற்றுவான். 15

'சிறந்த தம்பி திரு உற, எந்தையை
மறந்தும் பொய் இலன் ஆக்கி, வனத்திடை
உறைந்து தீரும் உறுதி பெற்றேன்; இதின்,
பிறந்தது யான் பெறும் பேறு என்பது யாவதோ? 16

'விண்ணும் மண்ணும், இவ் வேலையும், மற்றும் வேறு
எண்ணும் பூதம் எலாம் அழிந்து ஏகினும்,
அண்ணல் ஏவல் மறுக்க, அடியனேற்கு
ஒண்ணுமோ? இதற்கு உள் அழியேல்' என்றான். 17

**கோசலை தன்னையும் வனத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுதல்**

'ஆகின், ஐய! அரசன்தன் ஆணையால்
ஏகல் என்பது யானும் உரைக்கிலென்;
சாகலா உயிர் தாங்க வல்லேனையும்,
போகின், நின்னொடும் கொண்டனை போகு' என்றாள். 18

**கோசலையைத் தடுத்து இராமன் உரைத்த மறுமொழி**

'என்னை நீங்கி இடர்க் கடல் வைகுறும்
மன்னர்மன்னனை வற்புறுத்தாது, உடன்
துன்னு கானம் தொடரத் துணிவதோ?
அன்னையே! அறம் பார்க்கிலை ஆம்' என்றான். 19

'வரி வில் எம்பி இம் மண் அரசு ஆய், அவற்கு
உரிமை மா நிலம் உற்றபின், கொற்றவன்
திருவின் நீங்கித் தவம் செயும் நாள், உடன்,
அருமை நோன்புகள் ஆற்றுதி ஆம் அன்றே! 20

'சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்
ஒத்த மா தவம் செய்து உயர்ந்தார் அன்றே?
எத்தனைக்கு உள ஆண்டுகள்? ஈண்டு, அவை
பத்தும் நாலும் பகல் அலவோ?' என்றான். 21

15. பொற்புறுத்தன - அழகு மிக்கன; சொற்புறுத்தல் - சொல்லி வற்புறுத்தல்; கற்பு உறுத்திய கற்பு - இத்தகையது என்று நிலைநிறுத்தும் கற்பு. இருமுது குரவர் முதலியோர் கற்பித்த கற்பு எனலும் ஆம்; 21. ஒத்த - உடல்நிலைக்கு ஏற்ற.

'முன்னர், கோசிகன் என்னும் முனிவரன்-
தன் அருள்தலை தாங்கிய விஞ்சையும்,
பின்னர் எய்திய பேறும் பிழைத்தவோ?
இன்னம் நன்று அவர் ஏயின செய்தலே. 22

'மா தவர்க்கு வழிபாடு இழைத்து, அரும்
போதம் முற்றி, பொரு அரு விஞ்சைகள்
ஏதம் அற்றன தாங்கி, இமையவர்
காதல் பெற்று, இந் நகர் வரக் காண்டியால். 23

மகர வேலை மண் தொட்ட, வண்டு ஆடு தார்,
சகரர் தாதை பணி தலைநின்று, தம்
புகர் இல் யாக்கையின் இன் உயிர் போக்கிய
நிகர் இல் மாப் புகழ் நின்றதுஅன்றோ?' என, 24

'மான் மறிக் கரத்தான் மழு ஏந்துவான்,
தான் மறுத்திலன் தாதை சொல்; தாயையே,
ஊன் அறக் குறைத்தான்; உரவோன் அருள்
யான் மறுப்பது என்று எண்ணுவதோ?' என்றான். 25

**கோசலை, மகனைத் தடுக்கும் வகை எண்ணித் தயரதனிடம் போதல்**

இத் திறத்த எனைப் பல வாசகம்
உய்த்து உரைத்த மகன் உரை உட்கொளா,
' எத் திறத்தும் இறக்கும் இந் நாடு' என,
மெய்த் திறத்து விளங்கிழை உன்னுவாள். 26

'அவனி காவல் பரதனது ஆகுக;
இவன் இஞ் ஞாலம் இறந்து, இருங் கானிடைத்
தவன் நிலாவகை காப்பென், தகவினால்
புவனி நாதன்-தொழுது' என்று, போயினாள். 27

**இராமன், சுமித்திரையின் மாளிகை சேர்தல்**

போகின்றாளைத் தொழுது, 'புரவலன்
ஆகம் மற்று அவள்தன்னையும் ஆற்றி, இச்
சோகம் தீர்ப்பவள்' என்று, சுமித்திரை
மேகம் தோய் தனிக் கோயிலை மேயினான். 28

22. விஞ்சை - வித்தை; 24. மகரம் - சுறுமீன்; 25. மழு ஏந்துவான் - பரசுராமன்; தாய் - ரேணுகை; 28. புரவலன் - தயரதன்; இராமன் இதில் தோன்று எழுவாய்.

**கோசலை, தயரதன் நிலை கண்டு அரற்றல்**

நடந்த கோசலை, கேகய நாட்டு இறை
மடந்தை கோயிலை எய்தினள்; மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள்—கெட்டு உயிர்
உடைந்த போழ்தின் உடல் விழுந்தென்னவே. 29

'பிறியார் பிரிவு எது?' என்னும்; 'பெரியோய் தகவோ!' என்னும்;
'நெறியோ, அடியேம் நிலை? நீ நினையா நினைவு ஏது?' என்னும்;
'வறியோர் தனமே!' என்னும்; 'தமியேன் வலியே!' என்னும்;
'அறிவோ? வினையோ? என்னும்; 'அரசே! அரசே!' என்னும்.

'இருள் அற்றிட உற்று ஒளிரும் இரவிக்கு எதிரும் திகிரி
உருளத் தனி உய்த்து, ஒரு கோல் நடையின், கடை காண் உலகம்,
பொருள் அற்றிட முற்றுறும் அப் பகலில் புகுதற்கு என்றோ,
அருளக் கருதுற்று இதுவோ? அரசர்க்கு அரசே!' என்னும். 31

'திரை ஆர் கடல் சூழ் உலகின் தவமே! திருவின் திருவே!
நிரை ஆர் கலையின் கடலே! நெறி ஆர் மறையின் நிலையே!
கரையா அயர்வேன்; எனை, நீ, கருணாலயனே! ''என்?'' என்று
உரையா இதுதான் அழகோ? உலகு ஏழ் உடையாய்!' என்னும்.

'மின் நின்றனைய மேனி, வெறிதாய்விட நின்றதுபோல்
உன்னும் தகைமைக்கு அடையா உறு நோய் உறுகின்று உணரான்;
என் என்று உரையான்; என்னே? இதுதான் யாது என்று அறியேன்;
மன்னன் தகைமை காண வாராய்; மகனே!' என்னும். 33

**வசிட்டன் அங்கு வருதல்**

இவ்வாறு அழுவாள் இரியல் குரல் சென்று இசையாமுன்னம்,
'ஒவ்வாது, ஒவ்வாது' என்னா, ஒளி வாள் நிருபர், முனிவர்,
'அவ் ஆறு அறிவாய்' என்ன, வந்தான் முனிவன்; அவனும்,
வெவ் வாள் அரசன் நிலை கண்டு, 'என் ஆம் விளைவு?' என்று உன்னா,

**வசிட்டன் நினைவு**

'இறந்தான் அல்லன் அரசன்; இறவாது ஒழிவான் அல்லன்;
மறந்தான் உணர்வு' என்று உன்னா, 'வன் கேகயர்கோன் மங்கை
துறந்தாள் துயரம்தன்னை; துறவாது ஒழிவாள் இவளே;
பிறந்தார் பெயரும் தன்மை பிறரால் அறிதற்கு எளிதோ?' 35

30. பிரிவு ஏது - பிரிவுக்குக் காரணம் யாது? 35. பெயரும் தன்மை - மனம் மாறும் தன்மை.

**கைகேயி நிகழ்ந்தவை கூறல்**

என்னா உன்னா, முனிவன், 'இடரால் அழிவாள் துயரம்
சொன்னாள் ஆகாள்' என, முன் தொழு கேகயர்கோன் மகளை,
'அன்னாய்! உரையாய்; அரசன் அயர்வான் நிலை என்?' என்ன,
தன்னால் நிகழ்ந்த தன்மை தானே தெரியச் சொன்னாள். 36

**வசிட்டன் மன்னனைத் தேற்றுதல்**

சொற்றாள், சொல்லாமுன்னம், சுடர் வாள் அரசர்க்கு அரசை,
பொன்-தாமரை போல் கையால், பொடி சூழ் படிநின்று எழுவி,
'கற்றாய், அயரேல்; அவளே தரும், நின் காதற்கு அரசை;
எற்றே? செயல் இன்று ஒழி நீ' என்று என்று இரவாநின்றான். 37

சீதப் பனி நீர் அளவி, திண் கால் உக்கம் மென் கால்
போதத்து அளவே தவழ்வித்து, இன்சொல் புகலாநின்றான்;
ஓதக் கடல் நஞ்சு அனையாள் உரை நஞ்சு ஒருவாறு அவிய,
காதல் புதல்வன் பெயரே புகல்வான் உயிரும் கண்டான். 38

காணா, 'ஐயா! இனி, நீ ஒழிவாய் கழிபேர் அவலம்;
ஆண் நாயகனே, இனி, நாடு ஆள்வான்; இடையூறு உளதோ?
மாணா உரையாள், தானே தரும்; மா மழையே அனையான்
பூணாது ஒழிவான் எனின், யாம் உளமோ? பொன்றேல்' என்றான்.

**தயரதன் வசிட்டனிடம் வேண்டுகோள் விடுத்தல்**

என்ற அம் முனிவன்தன்னை, 'நினையா வினையேன், இனி, யான்
பொன்றும் அளவில் அவனைப் புனை மா மகுடம் புனைவித்து,
ஒன்றும் வனம் என்று உன்னாவண்ணம் செய்து, என் உரையும்,
குன்றும் பழி பூணாமல், காவாய்; கோவே!' என்றான். 40

**வசிட்டன் அறிவுரையும், கைகேயியின் மறுமொழியும்**

முனியும், முனியும் செய்கைக் கொடியாள் முகமே முன்னி,
'இனி, உன் புதல்வற்கு அரசும், எனையோர் உயிர்க்கு உயிரும்
மனுவின் வழி நின் கணவற்கு உயிரும் உதவி, வசை தீர்
புனிதம் மருவும் புகழே புனையாய்; பொன்னே!' என்றான். 41

மொய்ம் மாண் வினை வேர் அற வென்று உயர்வான் மொழியாமுன்
விம்மா அழுவாள், 'அரசன் மெய்யின் திரிவான்என்னின், [னம்
இம் மாண் உலகத்து உயிரோடு இனி வாழ்வு உகவேன்; என் சொல்
பொய்ம் மாணாமற்கு, இன்றே, பொன்றாதுஒழியேன்' என்றாள்.

38. திண்கால் - திண்ணிய பிடி; உக்கம் - விசிறி; 40. அவன் - பரதன்.

**கைகேயியை வசிட்டன் கடிந்து மொழிதல்**

'கொழுநன் துஞ்சும் எனவும், கொள்ளாது உலகம் எனவும்,
பழி நின்று உயரும் எனவும், பாவம் உளது ஆம் எனவும்,
ஒழிகின்றிலை; அன்றியும், ஒன்று உணர்கின்றிலை; யான் இனிமேல்
மொழிகின்றன என்?' என்னா, முனியும், 'முறை அன்று' என்பான். 43

'கண்ணோடாதே, கணவன் உயிர் ஓடு இடர் காணாதே,
''புண்ணோடு ஓடும் கனலோ? விடமோ?'' என்னப் புகல்வாய்;
பெண்ணோ? தீயோ? மாயாப் பேயோ? கொடியாய்! நீ; இம்
மண்ணோடு உன்னோடு என் ஆம்? வசையோ வலிதே!' என்றான்.†

'வாயால், மன்னன், மகனை, ''வனம் ஏகு'' என்னாமுன்னம்,
நீயோ சொன்னாய்; அவனோ, நிமிர் கானிடை வெந் நெறியில்
போயோ புகலோ தவிரான்; புகழோடு உயிரைச் சுடு வெந்
தீயோய்! நின்போல் தீயார் உளரோ? செயல் என்?' என்றான்.

**தயரதன் கைகேயியை நிந்தித்தல்**

தா இல் முனிவன் புகலத் தளரா நின்ற மன்னன்,
நாவில் நஞ்சம் உடைய நங்கைதன்னை நோக்கி,
'பாவி! நீயே, ''வெங் கான் படர்வாய்'' என்று, என் உயிரை
ஏவினாயோ? அவனும் ஏகினானோ?' என்றான். 46

'கண்டேன் நெஞ்சம்; கனிவாய்க் கனி வாய் விடம் நான் நெடு நாள்
உண்டேன்; அதனால், நீ என் உயிரை முதலோடு உண்டாய்;
பண்டே, எரிமுன், உன்னை, பாவி! தேவி ஆகக்
கொண்டேன் அல்லேன்; வேறு ஓர் கூற்றம் தேடிக் கொண்டேன்.

'விழிக்கும் கண் வேறு இல்லா, வெங் கான், என் கான்முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய்; என்னைப் போழ்வாய்;
பழிக்கும் நாணாய்; மாணாப் பாவி! இனி, என் பல? உன்
கழுத்தின் நாண், உன் மகற்குக் காப்பின் நாண் ஆம்' என்றான்.

**தயரதன், 'கைகேயி என் தாரம் அல்லள்; பரதன் உரிமைக்கு ஆகான்' என்றல்**

இன்னே பலவும் பகர்வான், இரங்காதாளை நோக்கி,
'சொன்னேன் இன்றே; இவள் என் தாரம் அல்லள்; துறந்தேன்;
மன்னே ஆவான் வரும் அப் பரதன்தனையும் மகன் என்று
உன்னேன்; முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு' என்றான்.

48. சுழிக்கும் வினை - சூழ்வினை, வஞ்சகச் செயல்.

கோசலையின் நிலை

'என்னைக் கண்டும் ஏகா வண்ணம் இடையூறு உடையான்
உன்னைக் கண்டும் இலனோ?' என்றான், உயர் கோசலையை;
பின்னைக் கண்டான் அனையான் பிரியக் கண்ட துயரம்,
தன்னைக் கண்டே தவிர்வாள், தளர்வான் நிலையில் தளர்வாள்.

மாற்றாள் செயல் ஆம் என்றும், கணவன் வரம் ஈந்து உள்ளம்
ஆற்றாது அயர்ந்தான் என்றும், அறிந்தாள்; அவளும், அவனைத்
தேற்றாநின்றாள்; மகனைத் திரிவான் என்றாள்; 'அரசன்
தோற்றான் மெய்' என்று, உலகம் சொல்லும் பழிக்கும் சோர்வாள்.

'தள்ளா நிலை சால் மெய்ம்மை தழுவா வழுவா வகை நின்று,
எள்ளா நிலை கூர் பெருமைக்கு இழிவுஆம் என்றால், உரவோய்!
விள்ளா நிலை சேர் அன்பால் மகன்மேல் மெலியின், உலகம்
கொள்ளாது அன்றோ!' என்றாள், கணவன் குறையக் குறைவாள்.

கோசலையின் பெருந் துயர்

'போவாது ஒழியான்' என்றாள், புதல்வன்தன்னை; கணவன்
சாவாது ஒழியான் என்று என்று, உள்ளம் தள்ளுற்று அயர்வாள்;
'காவாய்' என்னாள் மகனை; கணவன் புகழுக்கு அழிவாள்;
ஆ! ஆ! உயர் கோசலை ஆம் அன்னம் என் உற்றனளே! 53

தயரதன் புலம்பல்

உணர்வான், அனையாள் உரையால், 'உயர்ந்தான் உரைசால் குமரன்
புணரான் நிலமே, வனமே போவானே ஆம்' என்னா;—
இணர் ஆர் தரு தார் அரசன்—இடரால் அயர்வான்; 'வினையேன்
துணைவா! துணைவா' என்றான்; 'தோன்றாய், தோன்றாய்!' என்றான்.

'கண்ணும் நீராய், உயிரும் ஒழுக, கழியாநின்றேன்;
எண்ணும் நீர் நான்மறையோர், எரிமுன் நின்மேல் சொரிய,
மண்ணும் நீராய் வந்த புனலை, மகனே! வினையேற்கு
உண்ணும் நீராய் உதவி, உயர் கான் அடைவாய்!' என்றான். 55

'படை மாண் அரசைப் பல கால் பழுவாய் மழுவால் எறிவான்,
மிடை மா வலி தான் அனையான், வில்லால் அடுமா வல்லாய்!
"உடை மா மகுடம் புனை" என்று உரையா, உடனே கொடியேன்
சடை மா மகுடம் புனையத் தந்தேன்; அந்தோ!' என்றான். 56

52. தழுவா - தழுவி; வழுவா - வழுவாத; 55. எண்ணும் நீர் - மதிக்கத் தக்க நீர்மை; 56. அடுமா - அழிக்கும் நெறி.

'கறுத்தாய் உருவம்; மனமும் கண்ணும் கையும் செய்யாய்;
பொறுத்தாய் பொறையே; இறைவன், புரம் மூன்று எரித்த, போர் வில்
இறுத்தாய்; "தமியேன்" என்னுது, என்னை இம் மூப்பிடையே
வெறுத்தாய்; இனி, நான் வாழ்நாள் வேண்டேன்! வேண்டேன்!' என்ருன்.

'பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே! புகழின் புகழே!
மின்னின் மின்னும் வரி வில் குமரா! மெய்யின் மெய்யே!
என்னின் முன்னம் வனம் நீ அடைதற்கு, எளியேன் அல்லேன்;
உன்னின் முன்னம் புகுவேன், உயர் வானகம், யான்' என்ருன்.

'நெகுதற்கு ஒத்த நெஞ்சும், நேயத்தாலே ஆவி
உகுதற்கு ஒத்த உடலும், உடையேன்; உன்போல் அல்லேன்;
தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணல், போகக் காணேன்' என்ருன். 59

'எற்றே பகர்வேன், இனி, யான்? என்னே! உன்னின் பிரிய
வற்றே உலகம் எனினும், வானே வருந்தாதுஎனினும்,
பொன்-தேர் அரசே! தமியேன் புகழே! உயிரே! உன்னைப்
பெற்றேன்; அருமை அறிவேன்; பிழையேன்! பிழையேன்!' என்ருன்.

'அள்ளற் பள்ளப் புனல் சூழ் அகல் மா நிலமும், அரசும்,
கொள்ளக் குறையா நிதியின் குவையும், முதலா எவையும்,
கள்ளக் கைகேசிக்கே உதவி, புகழ் கைக்கொண்ட
வள்ளல்தனம் என் உயிரை மாய்க்கும்! மாய்க்கும்!' என்ருன்.

'ஒலி ஆர் கடல் சூழ் உலகத்து, உயர் வானிடை, நாகரினும்,
பொலியாநின்ருர் உன்னைப் போல்வார் உளரோ? பொன்னே!
வலி யார் உடையார்?' என்ருன்; 'மழுவாள் உடையான் வரவும்
சலியா நிலையாய் என்ருல், தவிர்வார் உளரோ?' என்ருன். 62

'கேட்டே இருந்தேன்எனினும், கிளர் வான் இன்றே அடைய
மாட்டேன்ஆகில் அன்றே, வன்கண் என்கண்? மைந்தா!
காட்டே உறைவாய் நீ! இக் கைகேசியையும் கண்டு, இந்
நாட்டே உறைவேன்என்ருல், நன்று என் நன்மை!' என்ருன்.

'மெய் ஆர் தவமே செய்து, உன் மிடல் மார்பு அரிதின் பெற்ற
செய்யாள் என்னும் பொன்னும், நிலமாது என்னும் திருவும்,
உய்யார்! உய்யார்! கெடுவேன்; உன்னைப் பிரியின், வினையேன்,
ஐயா! கைகேசியை நேராகேனே நான்?' என்ருன். 64

59. தகுதல் - தகுதி; 60. வற்று - வல்லது.

'பூண் ஆர் அணியும், முடியும், பொன் ஆசனமும், குடையும்,
சேண் ஆர் மார்பும், திருவும், தெரியக் காணக் கடவேன்,
மாணு மர வற்கலையும், மானின் தோலும் அவை நான்
காணுது ஒழிந்தேன்என்ருல், நன்று ஆய்த்து அன்ரே கருமம்?'

**மன்னனைத் தேற்றி, வசிட்டன் அகல்தல்**

ஒன்ரேடு ஒன்று ஒன்று ஒவ்வா உரை தந்து, அரசன், 'உயிரும்
சென்ருன் இன்ரேடு' என்னும் தன்மை எய்தித் தேய்ந்தான்;
மென் தோல் மார்பின் முனிவன், 'வேந்தே! அயரேல்; அவனை,
இன்று ஏகாதவண்ணம் தகைவென் உலகோடு' என்ன, 66

**தயரதன் நிலை**

முனிவன் சொல்லும் அளவில், 'முடியும்கொல்?' என்று, அரசன்
தனி நின்று உழல் தன் உயிரைச் சிறிதே தகைவான்; 'இந்தப்
புனிதன் போனல், இவனல் போகாதுஒழிவான்' என்ன,
மனிதன் வடிவம் கொண்ட மனுவும் தன்னை மறந்தான். 67

**கணவன் நிலை கண்டு கோசலை அரற்றல்**

'மறந்தான் நினைவும் உயிரும், மன்னன்' என்ன மறுகா,
'இறந்தான் கொல்லோ அரசன்?' என்ன, இடர் உற்று அழிவாள்,
'துறந்தான் மகன் முன் எனையும்; துறந்தாய் நீயும்; துணைவா!
அறம்தான் இதுவோ? ஐயா! அரசர்க்கு அரசே!' என்ருள். 68

'மெய்யின் மெய்யே! உலகின் வேந்தர்க்கு எல்லாம் வேந்தே!
உய்யும்வகை நின் உயிரை ஓம்பாது இங்ஙன் தேம்பில்,
வையம் முழுதும் துயரால் மறுகும்; முனிவனுடன் நம்
ஐயன் வரினும் வருமால்; அயரேல்; அரசே!' என்ருள். 69

**தயரதன் கோசலையிடம், 'இராமன் வருவானு?' எனக் கேட்டு, மனம் அழிதல்**

என்று என்று, அரசன் மெய்யும், இரு தாள் இணையும், முகனும்,
தன்தன் செய்ய கையால் தைவந்திடு கோசலையை,
ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத்து அரசன், மெள்ள,
'வன் திண் சிலை நம் குரிசில் வருமே? வருமே?' என்ருன். 70

'வன் மாயக் கைகேசி, வாக்கால், என்தன் உயிரை
முன் மாய்விப்பத் துணிந்தாளேனும், கூனி மொழியால்,
தன் மா மகனும் தானும் தரணி பெறுமாறு அன்றி,
என் மா மகனை, ''கான் ஏகு'' என்ருள்; என்ருள்' என்ருன். 71

66. உலகு - நாட்டுமக்களை உணர்த்திற்று.

தயரதன் கோசலைக்குச் சாப வரலாறு கூறுதல்

'பொன் ஆர் வலயத் தோளான், கானோ புகுதல் தவிரான்;
என் ஆர் உயிரோ அகலாது ஒழியாது; இது, கோசலை கேள்;
முன் நாள், ஒரு மா முனிவன் மொழியும் சாபம் உளது' என்று,
அந் நாள் உற்றது எல்லாம் அவளுக்கு அரசன் அறைவான்: 72

'வெய்ய கானத்திடையே, வேட்டை வேட்கை மிகவே,
ஐய, சென்று, கரியோடு அரிகள் துருவித் திரிவேன்,
கையும் சிலையும் கணையும் கொடு, கார் மிருகம் வரும் ஓர்
செய்ய நதியின் கரைவாய்ச் சென்றே மறைய நின்றேன். 73

'ஒரு மா முனிவன் மனையோடு, ஒளி ஒன்றிலவாய் நயனம்
திரு மா மகனே துணையாய், தவமே புரி போழ்தினின்வாய்,
அரு மா மகனே, புனல் கொண்டு அகல்வான் வருமாறு, அறியேன்,
பொரு மா கணை விட்டிடலும், புவிமீது அலறிப் புரள, 74

'புக்குப் பெரு நீர் நுகரும் பொரு போதகம் என்று, ஒலிமேல்
கைக்கண் கணை சென்றது அலால், கண்ணின் தெரியக் காணேன்;
அக் கைக் கரியின் குரலே அன்று ஈது' என்ன வெருவா, [னனால்.
'மக்கள்–குரல்' என்று அயர்வேன், மனம் நொந்து, அவண் வந்த

'கையும் கடனும் நெகிழக் கணையோடு உருள்வோற் காணா,
மெய்யும் தனுவும் மனனும் வெறிது ஏகிட, மேல் வீழா,
''ஐய! நீதான் யாவன்? அந்தோ! அருள்க'' என்று அயர,
பொய் ஒன்று அறியா மைந்தன், ''கேள் நீ'' என்னப் புகல்வான்:

'''இரு கண்களும் இன்றிய தாய் தந்தைக்கும், ஈங்கு, அவர்கள்
பருகும் புனல் கொண்டு அகல்வான் படர்ந்தேன்; பழுது ஆயினதால்;—
இரு குன்று அனைய புயத்தாய்!—இபம் என்று, உணராது எய்தாய்;
உருகும் துயரம் தவிர், நீ; ஊழின் செயல் ஈது!'' என்றே, 77

' ''உண் நீர் வேட்கை மிகவே உயங்கும் எந்தைக்கு, ஒரு நீ,
தண்ணீர் கொடு போய் அளித்து, என் சாவும் உரைத்து, உம் புதல்வன்
விண்மீது அடைவான் தொழுதான்' எனவும், அவர்பால் விளம்பு''
எண் நீர்மையினன் விண்ணோர் எதிர்கொண்டிட, எகினனால். [என்று,

'மைந்தன் வரவே நோக்கும், வள மா தவன்பால், மகனோடு
அம் தண் புனல் கொண்டு அணுக, ''ஐயா, இதுபோது அளவாய்
வந்து இங்கு அணுகாய்; என்னோ வந்தது? என்றே, நொந்தேம்;
சந்தம் கமழும் தோளாய், தழுவிக் கொள வா'' எனவே, 79

72. முனிவன் - சலபோசனன்; 74. மகன் - சுரோசனன்; 76. கடன் - குடம்; 77. இபம் - யானை.

' ''ஐயா! யான் ஓர் அரசன்; அயோத்தி நகரத்து உள்ளேன்;
மை ஆர் களபம் துருவி, மறைந்தே வதிந்தேன், இருள்வாய்;
பொய்யா வாய்மைப் புதல்வன் புனல் மொண்டிடும் ஓதையின்மேல்,
கை ஆர் கணை சென்றதுஅலால், கண்ணின் தெரியக் காணேன்;

' ''வீட்டுண்டு அலறும் குரலால், வேழக் குரல் அன்று எனவே
ஓட்டந்து எதிரா, 'நீ யார்?' என, உற்ற எலாம் உரையா,
வாட்டம் தரும் நெஞ்சினன் ஆய், நின்றான் வணங்கா, வானோர்
ஈட்டம் எதிர் வந்திடவே, இறந்து ஏகினன் விண்ணிடையே. 81

' ''அறுத்தாய் கணையால் எனவே, அடியேன் தன்னை, ஐயா!
கறுத்தே அருளாய், யானோ கண்ணின் கண்டேன் அல்லேன்,
மறுத் தான் இல்லான் வனம் மொண்டிடும் ஓதையின் எய்ததுஅலால்;
பொறுத்தே அருள்வாய்!'' என்னா, இரு தாள் சென்னி புனைந்தேன்.

'வீழ்ந்தார்; அயர்ந்தார்; புரண்டார்; ''விழி போயிற்று, இன்று''
ஆழ்ந்தார் துன்பக் கடலுள்; ''ஐயா! ஐயா!'' என்றார்; [என்றார்;
''போழ்ந்தாய் நெஞ்சை'' என்றார்; ''பொன்நாடு அதனில் போய், நீ
வாழ்ந்தே இருப்பத் தரியேம்; வந்தேம்! வந்தேம்! இனியே.'' 83

'என்று என்று அயரும் தவரை, இரு தாள் வணங்கி, ''யானே
இன்று உம் புதல்வன்; இனி, நீர் ஏவும் பணி செய்திடுவேன்;
ஒன்றும் தளர்வுற்று அயரீர்; ஒழிமின் இடர்'' என்றிடலும்,
''வன் திண் சிலையாய் கேண்மோ'' எனவே, ஒரு சொல் வகுத்தான்:

' ''கண்ணுள் மணிபோல் மகவை இழந்தும் உயிர் காதலியா,
உண்ண எண்ணி இருந்தால், உலகோர் என் என்று உரையார்?
விண்ணின் தலை சேருதும் யாம்; எம்போல், விடலை பிரிய,
பண்ணும் பரி மா உடையாய்! அடைவாய், படர் வான்'' என்னா,

' ''தாவாது ஒளிரும் குடையாய்! 'தவறு இங்கு இது; நின் சரணம்,
காவாய்' என்றாய்; அதனால், கடிய சாபம் கருதேம்;
ஏவா மகவைப் பிரிந்து, இன்று எம்போல் இடர் உற்றனை நீ
போவாய், அகல் வான்'' என்னா, பொன்நாட்டிடை போயினரால்.

'சிந்தை தளர்வுற்று, அயர்தல் சிறிதும் இலெனாய், ''இன் சொல்
மைந்தன் உளன்'' என்றதனால், மகிழ்வோடு இவண் வந்தனெனால்;
அந்த முனி சொற்றமையின், அண்ணல் வனம் ஏகுதலும்,
எம்தம் உயிர் வீகுதலும், இறையும் தவறா' என்றான். 87

80. களபம் - யானைக்கன்று; 86. ஏவா மகவு - ஏவாமுன் குறிப்பு அறிந்து செய்யும் மகன்.

வசிட்ட முனிவன் அரசவை சேர்தல்

உரை செய் பெருமை உயர் தவத்தோர் ஓங்கல்,
புரைசை மத களிற்றான் பொற் கோயில்முன்னர்,
முரைசம் முழங்க, முடி சூட்ட மொய்த்து, ஆண்டு
அரைசர் இனிது இருந்த நல் அவையின் ஆயினான். 88

முனிவனை அரசர் வினவல்

வந்த முனிவனை முகம் நோக்கி, வாள் வேந்தர்,
'எந்தை! புகுதற்கு இடையூறு உண்டாயதோ?
அந்தம் இல் சோகத்து அழுத குரல்தான் என்ன?
சிந்தை தெளிந்தோய்! தெரி, எமக்கு ஈது' என்று உரைத்தார்.

வசிட்டன் நிகழ்ந்தவை கூறல்

'கொண்டாள் வரம் இரண்டு, கேகயர்கோன் கொம்பு; அவட்கு,
தண்டாத செங்கோல் தயரதனும்தான் அளித்தான்;
''ஒண் தார் முகிலை வனம் போகு'' என்று, ஒருப்படுத்தாள்;
எண்தானும் வேறு இல்லை; ஈது அடுத்தவாறு' என்றான். 90

'வேந்தன் பணியினால், கைகேசி மெய்ப் புதல்வன்,
பாந்தள்மிசைக் கிடந்த பார் அளிப்பான் ஆயினான்;
ஏந்து தடந் தோள் இராமன், திரு மடந்தை
காந்தன், ஒரு முறை போய்க் காடு உறைவான் ஆயினான்.' 91

இராமன் காடு செல்வான் என்பதைக் கேட்ட மக்கள் நிலை

வார் ஆர் முலையாரும், மற்று உள்ள மாந்தர்களும்,
ஆராத காதல் அரசர்களும், அந்தணரும்,
பேராத வாய்மைப் பெரியோன் உரை செவியில்
சாராத முன்னம், தயரதனைப்போல் வீழ்ந்தார். 92

புண் உற்ற தீயின் புகை உற்று உயிர் பதைப்ப,
மண் உற்று அயர்ந்து மறுகிற்று, உடம்பு எல்லாம்;
கண் உற்ற வாரி கடல் உற்றது; அந் நிலையே,
விண் உற்றது, எம் மருங்கும் விட்டு அழுத பேர் ஓசை. 93

மாதர் அருங் கலமும் மங்கலமும் சிந்தி, தம்
கோதை புடைபெயர, கூற்று அனைய கண் சிவப்ப,
பாத மலர் சிவப்ப, தாம் பதைத்துப் பார் சேர்ந்தார்—
ஊதை எறிய ஒசி பூங் கொடி ஒப்பார். 94

'ஆ! ஆ! அரசன் அருள் இலனே ஆம்' என்பார்;
'காவா, அறத்தை இனிக் கைவிடுவேம் யாம்' என்பார்;—
தாவாத மன்னர்—தலைத்தலை வீழ்ந்து ஏங்கினார்;
மா வாதம் சாய்த்த மராமரமே போல்கின்றார். 95

கிள்ளையொடு பூவை அழுத; கிளர் மாடத்து-
உள் உறையும் பூசை அழுத; உரு அறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என் சொல்ல?—
'வள்ளல் வனம் புகுவான்' என்று, உரைத்த மாற்றத்தால். 96

சேதாம்பல் போது அனைய செங் கனி வாய் வெண் தளவப்
போது ஆம் பல் தோன்ற, புணர் முலைமேல் பூந் தரளம்
மா தாம்பு அற்றென்ன மழைக் கண்ணீர் ஆலி உக,
நா தாம் பற்றா மழலை நங்கைமார் ஏங்கினார். 97

ஆவும் அழுத; அதன் கன்று அழுத; அன்று அலர்ந்த
பூவும் அழுத; புனல் புள் அழுத; கள் ஒழுகும்
காவும் அழுத; களிறு அழுத; கால் வயப் போர்
மாவும் அழுத;—அம் மன்னவனை மானவே. 98

ஞானியும் உய்கலான் என்னாதே, நாயகனைக்
'கான் ஈயும்' என்று உரைத்த கைகேசியும், கொடிய
கூனியும் அல்லால், கொடியார் பிறர் உளரோ?—
மேனியும் இன்றி, வெறு நீரே ஆயினார். 99

தேறாது அறிவு அழிந்தார் எங்கு உலப்பார்? தேர் ஓட
நீறு ஆகி, சுண்ணம் நிறைந்த தெரு எல்லாம்,
ஆறு ஆகி ஓடின கண்ணீர்; அரு நெஞ்சம்
கூறு ஆகி ஓடாத இத்துணையே குற்றமே. 100

'மண் செய்த பாவம் உளது' என்பார்; 'மா மலர்மேல்
பெண் செய்த பாவம் அதனின் பெரிது' என்பார்;
'புண் செய்த நெஞ்சை, விதி' என்பார்; 'பூதலத்தோர்
கண் செய்த பாவம் கடலின் பெரிது' என்பார். 101

'ஆளான் பரதன் அரசு' என்பார்; 'ஐயன், இனி
மீளான்; நமக்கு விதி கொடிதேகாண்' என்பார்;
'கோள் ஆகி வந்தவா, கொற்ற முடிதான்' என்பார்;
'மாளாத நம்மின் மனம் வலியார் ஆர்?' என்பார். 102

95. தாவாமை - கெடுதியில்லாமை; 97. நா தாம் பற்றா மழலை - நாவின் கண் பொருந்தாத மழலை, எழுத்து நிரம்பாத மொழி.

'ஆதி அரசன், அருங் கேகயன் மகள்மேல்
காதல் முதிர, கருத்து அழிந்தான் ஆம்' என்பார்;
'சீதை மணவாளன்தன்னோடும் தீக் கானம்
போதும்; அது அன்றேல், புகுதும் எரி' என்பார். 103

கையால் நிலம் தடவி, கண்ணீர் மெழுகுவார்;
'உய்யாள் போல் கோசலை' என்று, ஓவாது வெய்து உயிர்ப்பார்;
'ஐயா! இளங் கோவே! ஆற்றுதியோ நீ' என்பார்;
நெய் ஆர் அழல் உற்றது உற்றார், அந் நீள் நகரார். 104

'தள்ளூறு வேறு இல்லை; தன் மகற்குப் பார் கொள்வான்,
எள்ளூறு தீக் கருமம் நேர்ந்தாள் இவள்' என்னா,
கள் ஊறு செவ் வாய்க் கணிகையரும், 'கைகேசி,
உள் ஊறு காதல் இலள்போல்' என்று, உள் அழிந்தார். 105

'நின்று தவம் இயற்றித் தான் தீர நேர்ந்ததோ?
அன்றி, உலகத்துள் ஆர் உயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருளதுவோ?
நன்று! வரம் கொடுத்த நாயகற்கு, நன்று!' என்பார். 106

'பெற்றுடைய மண் அவளுக்கு ஈந்து, பிறந்து உலகம்
முற்று உடைய கோவைப் பிரியாது மொய்த்து ஈண்டி,
உற்று உறைதும்; யாரும் உறையவே, சில் நாளில்,
புற்று உடைய காடு எல்லாம் நாடாகிப் போம்' என்பார். 107

'என்னே, நிருபன் இயற்கை இருந்தவா!
தன் நேர் இலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து, முறை திறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்?' என்பார். 108

'கோதை வரி வில் குமரற் கொடுத்த நில
மாதை ஒருவர் புணர்வராம்? வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின் பார்த்து நிற்குமே,
சீதை பிரியினும் தீராத் திரு?' என்பார். 109

உந்தாது, நெய் வார்த்து உதவாது, கால் எறிய
நந்தா விளக்கின் நடுங்குகின்ற நங்கைமார்,
'செந்தாமரைத் தடங் கண் செவ்வி அருள் நோக்கம்,
அந்தோ! பிரிதுமோ? ஆ! விதியே! ஓ!' என்பார். 110

103. ஆதி அரசன் - தயரதன்; 110. உந்துதல் - தூண்டுதல்.

இலக்குவன் சீற்றம்

கேட்டான் இளையோன்; 'கிளர் ஞாலம் வரத்தினாலே
மீட்டாள்; அளித்தாள் வனம் தம்முனை, வெம்மை முற்றி;—
தீட்டாத வேல் கண் சிறு தாய்' என, யாவராலும்
மூட்டாத காலக் கடைத் தீ என மூண்டு எழுந்தான். 111

கண்ணின் கடைத் தீ உக, நெற்றியில் கற்றை நாற,
விண்ணில் சுடரும் சுடர் தோன்ற, மெய்ந்நீர் விரிப்ப,
உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க, நின்ற
அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான். 112

கைகேயியின் செயலை இகழ்ந்து, இலக்குவன்
போர்க் கோலம் பூண்டு திரிதல்

'சிங்கக் குருளைக்கு இடு தீம் சுவை ஊனை, நாயின்
வெங் கண் சிறு குட்டனை ஊட்ட விரும்பினாளே!
நங்கைக்கு அறிவின் திறம்! நன்று, இது! நன்று, இது!' என்னா,
சுங்கைக்கு இறைவன் கடகக் கை புடைத்து நக்கான். 113

சுற்று ஆர்ந்த கச்சில் சுரிகை புடை தோன்ற ஆர்த்து,
வில் தாங்கி, வாளிப் பெரும் புட்டில் புறத்து வீக்கி,
பற்று ஆர்ந்த செம் பொன் கவசம், பனி மேரு ஆங்கு ஓர்
புற்று ஆம் என ஓங்கிய தோளொடு, மார்பு போர்க்க, 114

அடியில் சுடர் பொன் கழல் ஆர்கலி நாண ஆர்ப்ப,
பிடியில் தடவும் சிலை நாண் பெரும் பூசல் ஓசை,
இடியின் தொடர, கடல் ஏழும் மடுத்து, இஞ் ஞால
முடிவில் குமுறும் மழை மும்மையின்மேல் முழங்க, 115

வானும் நிலனும் முதல் ஈறு இல் வரம்பு இல் பூதம்
மேல்நின்று கீழ்காறும் விரிந்தன வீழ்வபோல,
தானும், தன தம்முனும் அல்லது, மும்மை ஞாலத்து
ஊனும் உயிரும் உடையார்கள் உளைந்து ஒதுங்க, 116

'புவிப் பாவை பரம் கெட, போரில் வந்தோரை எல்லாம்
அவிப்பானும், அவித்து அவர் ஆக்கையை அண்டம் முற்றக்
குவிப்பானும், எனக்கு ஒரு கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானும், நின்றேன்; இது காக்குநர் காமின்' என்றான். 117

113. சிறு குட்டன் - இளங் குட்டி; 115. பிடியில் - கைப்பிடியால்.

விண் நாட்டவர், மண்ணவர், விஞ்சையர், நாகர், மற்றும்
எண் நாட்டவர், யாவரும் நிற்க; ஓர் மூவர் ஆகி,
மண் நாட்டுநர், காட்டுநர், வீட்டுநர் வந்தபோதும்,
பெண் நாட்டம் ஒட்டேன், இனிப் பேர் உலகத்துள்' என்று,

காலைக் கதிரோன் நடு உற்றது ஓர் வெம்மை காட்டி,
ஞாலத்தவர் கோமகன், அந் நகரத்து நாப்பண்,
மாலைச் சிகரத் தனி மந்தர மேரு முந்தை
வேலைத் திரிகின்றதுபோல், திரிகின்ற வேலை,— 119

**இராமன் நாண் ஒலி கேட்டு இலக்குவன்பால் வருதல்**

வேற்றுக் கொடியாள் விளைவித்த வினைக்கு விம்மி,
தேற்றத் தெளியாது அயர் சிற்றவைபால் இருந்தான்,
ஆற்றல் துணைத் தம்பிதன் வில்-புயல், அண்ட கோளம்
கீற்று ஒத்து உடைய, படும் நாண் உரும்ஏறு கேளா, 120

வீறு ஆக்கிய பொற் கலன் வில்லிட, ஆரம் மின்ன,
மாறாத் தனிச் சொல் துளி மாரி வழங்கி வந்தான்—
கால் தாக்க நிமிர்ந்து, புகைந்து, கனன்று, பொங்கும்
ஆறாக் கனல் ஆற்றும் ஓர் அஞ்சன மேகம் என்ன. 121

**இலக்குவனுடன் இராமன் உரையாடி, அவன் சீற்றத்தைத் தணித்தல்**

மின் ஒத்த சீற்றக் கனல் விட்டு விளங்க நின்ற,
பொன் ஒத்த மேனிப் புயல் ஒத்த தடக் கையானை,
'என் அத்த! என், நீ, இமையோரை முனிந்திலாதாய்,
சன்னத்தன் ஆகித் தனு ஏந்துதற்கு ஏது?' என்றான். 122

'மெய்யைச் சிதைவித்து, நின்மேல் முறை நீத்த நெஞ்சம்
மையின் கரியாள் எதிர், நின்னை அம் மௌலி சூட்டல்
செய்யக் கருதி, தடை செய்குநர் தேவரேனும்,
துய்யைச் சுடு வெங் கனலின் சுடுவான் துணிந்தேன்; 123

'வலக் கார்முகம் என் கையது ஆக, அவ் வானுளோரும்
விலக்கார்; அவர் வந்து விலக்கினும், என் கை வாளிக்கு
இலக்கா எரிவித்து, உலகு ஏழினொடு ஏழும், மன்னர்
குலக் காவலும், இன்று, உனக்கு யான் தரக் கோடி' என்றான்.

118. மண் நாட்டுநர் - காக்கின்ற திருமால்; காட்டுநர் - படைக்கின்ற நான்முகன்; வீட்டுநர் - அழிக்கின்ற உருத்திரன்; 120. வேற்றுக் கொடியாள் - மாற்றவளாகிய கொடிய கைகேயி; 123. துய் - பஞ்சுத்துய்; 124. கார்முகம் - வில்.

இளையான் இது கூற, இராமன், 'இயைந்த நீதி
வளையாவரும் நல் நெறி நின் அறிவு ஆகும் அன்றே?
உளையா அறம் வற்றிட, ஊழ் வழுவுற்ற சீற்றம்,
விளையாத நிலத்து, உனக்கு எங்ஙன் விளைந்தது?' என்றான். 125

நீண்டான் அது உரைத்தலும், நித்திலம் தோன்ற நக்கு,
' "சேண்தான் தொடர் மாநிலம் நின்னது" என்று, உந்தை செப்பப்
பூண்டாய்; "பகையால் இழந்தே, வனம் போதி" என்றால்,
யாண்டோ, அடியேற்கு இனிச் சீற்றம் அடுப்பது?' என்றான். 126

'நின்கண் பரிவு இல்லவர் நீள் வனத்து உன்னை நீக்க,
புன்கண் பொறி யாக்கை பொறுத்து, உயிர் போற்றுகேனே—
என் கட்புலமுன் உனக்கு ஈந்துவைத்து, "இல்லை" என்ற
வன்கண் புலம் தாங்கிய மன்னவன் காண்கொல்?' என்றான். 127

' "பின், குற்றம் மன்னும் பயக்கும் அரசு" என்றல், பேணேன்;
முன், கொற்ற மன்னன், "முடி கொள்க" எனக் கொள்ள மூண்டது
என் குற்றம் அன்றோ? இகல் மன்னவன் குற்றம் யாதோ?—
மின் குற்று ஒளிரும் வெயில் தீக்கொடு அமைந்த வேலோய்!

'நதியின் பிழை அன்று நறும் புனல் இன்மை; அற்றே,
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது?' என்றான். 129

உதிக்கும் உலையுள் உறு தீ என ஊதை பொங்க,
'கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென்? கோள் இழைத்தாள்
மதிக்கும் மதி ஆய், முதல் வானவர்க்கும் வலீஇது ஆம்,
விதிக்கும் விதி ஆகும், என் வில்-தொழில் காண்டி' என்றான். 130

ஆய்தந்து, அவன் அவ் உரை கூறலும், 'ஐய! நின்தன்
வாய் தந்தன கூறுதியோ, மறை தந்த நாவால்?
நீ தந்தது, அன்றே, நெறியோர்கண் நிலாதது? ஈன்ற
தாய் தந்தை என்றால், அவர்மேல் சலிக்கின்றது என்னோ?' 131

'நல் தாதையும் நீ; தனி நாயகன் நீ; வயிற்றில்
பெற்றாயும் நீயே; பிறர் இல்லை; பிறர்க்கு நல்கக்
கற்றாய்! இது காணுதி இன்று' என, கைம்மறித்தான்—
முற்றா மதியம் மிலைந்தான் முனிந்தானை அன்னான். 132

127. வன்கண் புலம் - வன்கண்மை; 128. மன்னும் - மிகுதியும்;
130. உலையுள் உதிக்கும் உறு தீ என மாற்றுக.

வரதன் பகர்வான்; 'வரம் பெற்றவள்தான் இவ் வையம்
சரதம் உடையாள்; அவள், என் தனித் தாதை, செப்பப்
பரதன் பெறுவான்; இனி, யான் படைக்கின்ற செல்வம்
விரதம்; இதின் நல்லது வேறு இனி யாவது?' என்ருன். 133

ஆன்ருன் பகர்வான் பினும்: 'ஐய! இவ் வைய மையல்
தோன்ரு நெறி வாழ் துணைத் தம்முனைப் போர் தொலைத்தோ?
சான்ரோர் புகழும் தனித் தாதையை வாகை கொண்டோ?
ஈன்ருளை வென்ரோ, இனி, இக் கதம் தீர்வது?' என்ருன். 134

செல்லும் சொல் வல்லான் எதிர், தம்பியும், 'தெவ்வர் சொல்லும்
சொல்லும் சுமந்தேன்; இரு தோள் எனச் சோம்பி ஓங்கும்
கல்லும் சுமந்தேன்; கணைப் புட்டிலும், கட்டு அமைந்த
வில்லும், சுமக்கப் பிறந்தேன்; வெகுண்டு என்னை?' என்ருன்.

'நன் சொற்கள் தந்து ஆண்டு, எனை நாளும் வளர்த்த தாதை-
தன் சொல் கடந்து, எற்கு அரசு ஆள்வது தக்கதுஅன்ருல்;
என் சொல் கடந்தால், உனக்கு யாது உளது ஈனம்?' என்ருன்—
தென்சொல் கடந்தான், வடசொல்-கலைக்கு எல்லை தேர்ந்தான்.

சீற்றம் துறந்தான்; எதிர்நின்று தெரிந்து செப்பும்
மாற்றம் துறந்தான்; மறை நான்கு என வாங்கல் செல்லா
நால் தெண் திரை வேலையின், நம்பி தன் ஆணையாலே,
ஏற்றம் தொடங்காக் கடலின், தணிவு எய்தி நின்ருன். 137

#### இராமன் இலக்குவனெடு சுமித்திரை கோயிலை அடைதல்

அன்னன்தனை, ஐயனும், ஆதியொடு அந்தம் ஒன்ரும்
தன்னுலும் அளப்ப அருந் தானும், தன் பாங்கர் நின்ற
பொன் மான் உரியானும் தழீஇ எனப் புல்லி, பின்னை,
சொல் மாண்புடை அன்னை சுமித்திரை கோயில் புக்கான். 138

#### சுமித்திரையின் துன்பமும் இராமனின் தேறுதல் மொழியும்

கண்டாள், மகனும் மகனும் தன கண்கள் போல்வார்,
தண்டாவனம் செல்வதற்கே சமைந்தார்கள்தம்மை;
புண் தாங்கு நெஞ்சத்தனளாய்ப் படிமேல் புரண்டாள்;
உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதாள். 139

134. தம்முன் - தமையன், பரதன்; 137. ஏற்றம் - கரை கடத்தல்; 138. பொன் மான் உரியான் - உருத்திரன்; 139. தண்டாவனம் - தண்டக வனம்; விந்திய மலைக்கும் சைவல மலைக்கும் இடையிலுள்ள காடு.

சோர்வாளை, ஒடித் தொழுது ஏந்தினன்; துன்பம் என்னும்
ஈர் வாளை வாங்கி, மனம் தேறுதற்கு ஏற்ற செய்வான்;
'போர் வாள் அரசர்க்கு இறை பொய்த்தனன் ஆக்ககில்லேன்;
கார் வான் நெடுங் கான் இறை கண்டு, இஙன் மீள்வென்' என்றான். 140

'கான் புக்கிடினும், கடல் புக்கிடினும், கலிப் பேர்
வான் புக்கிடினும், எனக்கு அன்னவை மாண் அயோத்தி
யான் புக்கது ஒக்கும்; எனை யார் நலிகிற்கும் ஈட்டார்?
ஊன் புக்கு, உயிர் புக்கு, உணர் புக்கு, உலையற்க!' என்றான்.

**கைகேயியின் ஏவல்மகளிர் மரவுரி எடுத்து வருதல்**

தாய், ஆற்றுகிலாள்தனை, ஆற்றுகின்றார்கள்தம்பால்,
தீ ஆற்றுகிலார், தனி சிந்தையினின்று செற்ற
நோய் ஆற்றுகில்லார், உயிர் போல நுடங்கு இடையார்,
மாயாப் பழியாள் தர, வற்கலை ஏந்தி வந்தார்.* 142

கார் வானம் ஒப்பான்தனைக் காண்தொறும் காண்தொறும் போய்
நீர் ஆய் உக, கண்ணினும் நெஞ்சு அழிகின்ற நீரார்,
'பேரா இடர்ப்பட்டு அயலார் உறு பீழை கண்டும்
தீரா மனத்தாள் தர, 'வந்தன சீரம்' என்றார். 143

**மரவுரியை இலக்குவன் பெற்று, தாயை வணங்குதல்**

வாள் நித்தில வெண் நகையார் தர, வள்ளல் தம்பி,
'யாணர்த் திருநாடு இழப்பித்தவர் ஈந்த எல்லாம்
பூணப் பிறந்தானும் நின்றான்; அவை போர் விலோடும்
காணப் பிறந்தேனும் நின்றேன்; அவை காட்டும்' என்றான்.

அன்னான், அவர் தந்தன, ஆதரத்தோடும் ஏந்தி,
இன்னா இடர் தீர்ந்து, ''உடன் ஏகு'' என, எம்பிராட்டி
சொன்னால், அதுவே துணை ஆம்' என, தூய நங்கை
பொன் ஆர் அடிமேல் பணிந்தான்; அவளும் புகன்றாள்: 145

**சுமித்திரை இலக்குவனுக்குச் சொன்ன அறிவுரை**

'ஆகாதது அன்றால் உனக்கு; அவ் வனம் இவ் அயோத்தி;
மா காதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங் குழல் சீதை—என்றே
ஏகாய்; இனி, இவ் வயின் நிற்றலும் ஏதம்' என்றாள். 146

144. யாணர் - புது வருவாய், அழகும் ஆம்.

பின்னும் பகர்வாள், 'மகனே! இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரினின் ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா; அது அன்றேல்,
முன்னம் முடி' என்றனள், வார் விழி சோர நின்றாள். 147

**இராம-இலக்குவர் சுமித்திரைபால் விடை பெறல்**

இருவரும் தொழுதனர்; இரண்டு கன்று ஒரீஇ
வெருவரும் ஆவினின் தாயும் விம்மினாள்;
பொரு அருங் குமரரும் போயினார், புறம்
திரு அரைத் துகில் ஒரீஇ, சீரை சாத்தியே. 148

**இலக்குவனைப் பெற்றோர்க்குத் துணையாக இருக்குமாறு வேண்டல்**

தான் புனை சீரையைத் தம்பி சாத்திட,
தேன் புனை தெரியலான் செய்கை நோக்கினான்;
'வான் புனை இசையினாய்! மறுக்கிலாது, நீ
யான் புகல் இனையது ஓர் உறுதி கேள்' எனா, 149

'அன்னையர் அனைவரும், ஆழி வேந்தனும்,
முன்னையர் அல்லர்; வெந் துயரின் மூழ்கினார்;
என்னையும் பிரிந்தனர்; இடர் உருவகை,
உன்னை நீ என்பொருட்டு உதவுவாய்' என்றான். 150

**இலக்குவன் மறுமொழி**

ஆண்தகை அம் மொழி பகர, அன்பனும்,
தூண் தகு திரள் புயம் துளங்க, துண்ணெனா,
மீண்டது ஓர் உயிர் இடை விம்ம விம்முவான்,
'ஈண்டு, உனக்கு அடியனேன் பிழைத்தது யாது?' என்றான்.

'நீர் உளஎனின் உள, மீனும் நீலமும்;
பார் உளஎனின் உள, யாவும்; பார்ப்புறின்,
நார் உள தனு உளாய்! நானும் சீதையும்
ஆர் உளர்எனின் உளம்? அருளுவாய்!' என்றான். 152

'பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு, பார்மகள்
நைந்து உயிர் நடுங்கவும், ''நடத்தி கான்'' எனா,
உய்ந்தனன் இருந்தனன் உண்மை காவலன்
மைந்தன் என்று, இனைய சொல் வழங்கினாய்?' எனா, 153

151. மீண்டது - இறப்பினின்றும் மீண்டது; 152. நார் - நாண்.

'"மாறு இனி என்னை? நீ வனம் கொள்வாய்" என
ஏறின வெகுளியை, யாதும் முற்றுற
ஆறினை, தவிர்க' என, 'ஐய! ஆணையின்
கூறிய மொழியினும், கொடியது ஆம்' என்றான்.* 154

'செய்துடைச் செல்வமோ, யாதும் தீர்ந்து, எமை,
கை துடைத்து ஏகவும் கடவையோ?—ஐயா!
நெய் துடைத்து, அடையலர் நேய மாதர் கண்
மை துடைத்து, உறை புகும் வயம் கொள் வேலினாய்!' 155

**இராமன் வாய் திறவாது நெகிழ்ந்து நிற்றல்**

உரைத்தபின், இராமன் ஒன்று உரைக்க நேர்ந்திலன்;
வரைத் தடந் தோளினான் வதனம் நோக்கினான்;
விரைத் தடந் தாமரைக் கண்ணை மிக்க நீர்
நிரைத்து இடை இடை விழ, நெடிது நிற்கின்றான். 156

**வசிட்டன் வந்து வருத்தம் மேலிட மொழிதல்**

அவ்வயின், அரசவை நின்றும் அன்பினன்
எவ்வம் இல் இருந் தவ முனிவன் எய்தினான்;
செவ்விய குமரரும் சென்னி தாழ்ந்தனர்;
கவ்வை அம் பெருங் கடல், முனியும் கால் வைத்தான். 157

**வசிட்டனின் வருத்தமும் சிந்தனையும்**

அன்னவர் முகத்தினோடு அகத்தை நோக்கினான்;
பொன் அரைச் சீரையின் பொலிவு நோக்கினான்;
என் இனி உணர்த்துவது? எடுத்த துன்பத்தால்,
தன்னையும் உணர்ந்திலன், உணரும் தன்மையான். 158

'வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்,
தாழ் வினைஅது வர, சீரை சாத்தினான்;
சூழ் வினை நான்முகத்து ஒருவன் சூழினும்,
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ! 159

'வெவ் வினையவள் தர விளைந்ததேயும் அன்று;
இவ் வினை இவன்வயின் எய்தற்பாற்றும் அன்று;
எவ் வினை நிகழ்ந்ததோ? ஏவர் எண்ணமோ?
செவ்விதின், ஒருமுறை தெரியும் பின்' என்றான். 160

154. மாறு - ஒப்பு, என்னை, 'இங்குத் தங்குக' என்று கூறிய சொல்லின் கொடுமைக்கு ஒப்பு; 155. செய்துடைச் செல்வம் - நின் முன்னோர்களால் ஈட்டப்பட்டு நினக்கு உரியதாக உள்ள செல்வம்; கை துடைத்தல் - துறத்தல்; 157. கவ்வை - துன்பம்.

வசிட்டன், இராமனைக் கான் ஏகாது தடுக்க முயலுதலும் அவன் மறுமொழியும்

வில் தடந் தாமரைச் செங் கண் வீரனை
உற்று அடைந்து, 'ஐய! நீ ஒருவி, ஓங்கிய
கல் தடம் காணுதிஎன்னின், கண் அகல்
மல் தடந் தானையான் வாழ்கிலான்' என்றான். 161

'அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல்
என்னது கடன்; அவன் இடரை நீக்குதல்
நின்னது கடன்; இது நெறியும்' என்றனன்—
பன்னகப் பாயலின் பள்ளி நீங்கினான். 162

' ''வெவ் வரம்பை இல் சுரம் விரவு'' என்றான் அலன்;
தெவ்வர் அம்பு அனைய சொல் தீட்டினாள்தனக்கு,
அவ் அரம் பொருத வேல் அரசன், ஆய்கிலாது,
''இவ் வரம் தருவென்'' என்று ஏன்றது உண்டு' என்றான். 163

'ஏன்றனன் எந்தை இவ் வரங்கள்; ஏவினாள்
ஈன்றவள்; யான் அது சென்னி ஏந்தினேன்;
சான்று என நின்ற நீ தடுத்தியோ?' என்றான்—
தோன்றிய நல் அறம் நிறுத்தத் தோன்றினான். 164

இராமன் புறப்பாடு

என்றபின், முனிவன் ஒன்று இயம்ப நேர்ந்திலன்;
நின்றனன், நெடுங் கணீர் நிலத்து நீர்த்து உக;
குன்றன தோளவன் தொழுது, கொற்றவன்
பொன் திணி நெடு மதில் வாயில் போயினான். 165

மக்கள் கொண்ட துயரம்

சுற்றிய சீரையன், தொடரும் தம்பியன்,
முற்றிய உவகையன், முளரிப் போதினும்
குற்றம் இல் முகத்தினன், கொள்கை கண்டவர்
உற்றதை ஒருவகை உணர்த்துவாம்அரோ. 166

ஐயனைக் காண்டலும், அணங்குஅனார்கள்தாம்,
மொய் இளந் தளிர்களால் முளரிமேல் விழும்
மையலின் மதுகரம் கடியுமாறு என,
கைகளின் மதர் நெடுங் கண்கள் எற்றினார். 167

163. வரம்பை - வரம்பு, எல்லை.

தம்மையும் உணர்ந்திலர்—தணிப்பு இல் அன்பினல்
அம்மையின் இரு வினை அகற்றவோ? அன்றேல்,
விம்மிய பேர் உயிர் மீண்டிலாமைகொல்?—
செம்மல்தன் தாதையின் சிலவர் முந்தினர். 168

விழுந்தனர் சிலர்; சிலர் விம்மி விம்மி மேல்
எழுந்தனர்; சிலர் முகத்து இழி கண்ணீரிடை
அழுந்தினர்; சிலர் பதைத்து, அளகவல்லியின்
கொழுந்து எரி உற்றென, துயரம் கூர்கின்றார். 169

கரும்பு அன மொழியினர், கண் பனிக்கிலர்,—
வரம்பு அறு துயரினல் மயங்கியேகொலாம்,
இரும்பு அன மனத்தினர் என்ன நின்றனர்!—
பெரும் பொருள் இழந்தவர் போலும் பெற்றியார். 170

நெக்கன உடல்; உயிர் நிலையில் நின்றில;
இக் கணம்! இக் கணம்! என்னும் தன்மையும்
புக்கன; புறத்தன; புண்ணின் கண் மலர்
உக்கன, நீர் வறந்து, உதிர வாரியே! 171

இரு கையின் கரி நிகர் எண்இறந்தவர்,
பெருகு ஐயில் பெயர்த்தனர், தலையைப் பேணலர்,
ஒரு கையில் கொண்டனர், உருட்டுகின்றனர்;
சுரிகையின் கண் மலர் சூன்று நீக்கினர். 172

சிந்தின அணி; மணி சிதறி வீழ்ந்தன;
பைந் துணர் மாலையின் பரிந்த, மேகலை;
நந்தினர், நகை ஒளி விளக்கம்; நங்கைமார்
சுந்தர வதனமும், மதிக்குத் தோற்றவே. 173

அரசன் தேவியர் அழுகை

அறுபதினயிரர் அரசன் தேவியர்,
மறு அறு கற்பினர், மழைக் கண்ணீரினர்,
சிறுவனைத் தொடர்ந்தனர்; திறந்த வாயினர்;
எறி திரைக் கடல் என இரங்கி ஏங்கினர். 174

கன்னி நல் மயில்களும், குயில் கணங்களும்,
அன்னமும், சிறை இழந்து அவனி சேர்ந்தன
என்ன, வீழ்ந்து உழந்தனர்—இராமன் அல்லது,
மன் உயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார். 175

168. முந்துதல் - ஈண்டு இறப்பதில் முந்துதல்; 172. பெருகு ஐயில் - பெருகு அயில், பெரிய கைவாள்; சூன்று - தோண்டி.

கிளையினும், நரம்பினும், நிரம்பும் கேழன,
அளவு இறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால்,
தொளை படு குழலினோடு, யாழ்க்குத் தோற்றன—
இளையவர் அமுதினும் இனிய சொற்களே. 176

'புகல் இடம், கொடு வனம் போலும், என்று, தம்
மகன்வயின் இரங்குறும் மகளிர் வாய்களால்,
அகல் மதில் நெடு மனை, அரத்த ஆம்பல்கள்
பகலிடை மலர்ந்தது ஓர் பழனம் போன்றவே. 177

திடருடைக் குங்குமச் சேறும், சாந்தமும்,
இடை இடை வண்டல் இட்டு ஆரம் ஈர்த்தன;
மிடை முலைக் குவடு ஒரீஇ, மேகலைத் தடங்
கடலிடைப் புகுந்த, கண் கலுழி ஆறுஅரோ. 178

தண்டலைக் கோசலத் தலைவன் மாதரைக்
கண்டனன் இரவியும், கமல வாள் முகம்—
விண் தலத்து உறையும் நல் வேந்தற்கு ஆயினும்,
உண்டு இடர் உற்ற போது என் உருதன? 179

தாயரும், கிளைஞரும், சார்ந்துளார்களும்,
சேயரும், அணியரும், சிறந்த மாதரும்,
காய் எரி உற்றனர் அனைய கவ்வையர்;
வாயிலும் முன்றிலும் மறைய மொய்த்தனர். 180

**இராமன் தன் மனையை நோக்கிச் செல்லுதல்**

இரைத்தனர், இரைத்து எழுந்து ஏங்கி, எங்கணும்,
திரைப் பெருங் கடல் எனத் தொடர்ந்து பின் செல;
உரைப்பதை உணர்கிலன், ஒழிப்பது ஓர்கிலன்,
வரைப் புயத்து அண்ணல் தன் மனையை நோக்கினான். 181

நல் நெடு நளிர் முடி சூட, நல் மணிப்
பொன் நெடுந் தேரொடும் பவனி போனவன்,
துன் நெடுஞ் சீரையும் சுற்றி, மீண்டும், அப்
பொன் நெடுந் தெருவிடைப் போதல் மேயினான். 182

**இராமனைக் கண்டார் உற்ற வருத்தம்**

அந்தணர், அருந் தவர், அவனி காவலர்,
நந்தல் இல் நகருளார், நாட்டுளார்கள், தம்
சிந்தை என் புகல்வது? தேவர் உள்ளமும்
வெந்தனர், மேல் வரும் உறுதி வேண்டலர்.* 183

176. கிளை - மூங்கில், ஈண்டுக் குழல்; கேழ் - சுவைச் சிறப்பு.

'அஞ்சன மேனி இவ் அழகற்கு எய்திய
வஞ்சனை கண்டபின், வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலிது உயிர்; நினைப்பது என் சில?
நஞ்சினும் வலிய, நம் நலம்' என்றார்—சிலர். 184

' ''மண்கொடு வரும்'' என, வழி இருந்தது, யாம்,
எண்கொடு சுடர் வனத்து எய்தல் காணவோ?
பெண் கொடுவினை செயப்பெற்ற நாட்டினில்,
கண்கொடு பிறத்தலும் கடை' என்றார்—சிலர். 185

'முழுவதே பிறந்து உலகு உடைய மொய்ம்பினேன்,
''உழுவை சேர் கானகத்து உறைவென் யான்'' என,
எழுவதே? எழுதல் கண்டு இருப்பதே? இருந்து,
அழுவதே? அழகிது இவ் அன்பு!' என்றார்—சிலர். 186

வலம் கடிந்து, ஏழையர் ஆய மன்னரை,
'நலம் கடிந்து, அறம் கெட, நயக்கலீர்கள்; நும்
குலம் கடிந்தான் வலி கொண்ட கொண்டலை,
நிலம் கடிந்தாளொடு நிகர்' என்றார்—சிலர். 187

'திரு அரை சுற்றிய சீரை ஆடையன்,
பொரு அருந் துயரினன், தொடர்ந்து போகின்றான்,
இருவரைப் பயந்தவள் ஈன்ற கான்முளை
ஒருவனோ, இவற்கு இவ் ஊர் உறவு?' என்றார்—சிலர். 188

'முழுக் கலின் வலிய நம் மூரி நெஞ்சினை,
மழுக்களின் பிளத்தும்' என்று, ஓடுவார்; வழி
ஒழுக்கிய கண்ணின் நீர்க் கலுழி ஊற்றிடை
இழுக்கலில் வழுக்கி வீழ்ந்து, இடர் உற்றார்—சிலர். 189

பொன் அணி, மணி அணி, மெய்யின் போக்கினர்,
மின் என மின் என விளங்கும் மெய் விலைப்
பல் நிறத் துகிலினைப் பறித்து நீக்கினர்,
சின்ன நுண் துகிலினைச் செறிக்கின்றார்—சிலர்.* 190

'நிறை மக உடையவர், நெறி செல் ஐம்பொறி
குறை மக குறையினும், கொடுப்பராம் உயிர்;
முறை மகன் வனம் புக, மொழியைக் காக்கின்ற
இறைமகன் திருமனம் இரும்பு' என்றார்—சிலர். 191

184. நெஞ்சு - மார்பு; நலம் - அன்பு; 186. உழுவை - புலி;
187. குலம் கடிந்தான் - பரசுராமன்; 191. குறைதல் - இறத்தல்.

வாங்கிய மருங்குலே வருத்தும் கொங்கையர்,
பூங் கொடி ஒதுங்குவபோல், ஒதுங்கினர்;
ஏங்கிய குரலினர்; இணைந்த காந்தளின்
தாங்கிய செங் கை தம் தலையின்மேல் உளார்.* 192

தலைக் குவட்டு அயல் மதி தவழும் மாளிகை
நிலைக் குவட்டு இடை இடை நின்ற நங்கைமார்,
முலைக் குவட்டு இழி கணீர் ஆலி மொய்த்து உக,
மலைக் குவட்டு அகவுறு மயிலின் மாழ்கினர். 193

மஞ்சு என அகிற் புகை வழங்கும் மாளிகை
எஞ்சல் இல் சாளரத்து, இரங்கும் இன் சொலார்
அஞ்சனக் கண்ணின் நீர் அருவி சோர்தர,
பஞ்சரத்து இருந்து அழும் கிளியின் பன்னினர். 194

நல் நெடுங் கண்களின் நான்ற நீர்த் துளி-
தன் நெடுந் தாரைகள் தளத்தின் வீழ்தலால்,
மன் நெடுங் குமரன்மாட்டு அழுங்கி, மாடமும்
பொன் நெடுங் கண் குழித்து, அழுவ போன்றவே. 195

மக்களை மறந்தனர் மாதர்; தாயரைப்
புக்க இடம் அறிந்திலர் புதல்வர்; பூசலிட்டு
உக்கனர்; உயங்கினர்; உருகிச் சோர்ந்தனர்—
துக்கம் நின்று அறிவினைச் சூறையாடவே. 196

காமரம் கனிந்தெனக் கனிந்த மென் மொழி
மா மடந்தையர் எலாம் மறுகு சேர்தலால்,
தே மரு நறுங் குழல் திருவின் நீங்கிய
தாமரை ஒத்தன—தவள மாடமே. 197

மழைக் குலம் புரை குழல் விரிந்து மண் உற,
குழைக் குல முகத்தியர் குழாம் கொண்டு ஏகினர்—
இழைக் குலம் சிதறிட, ஏவுண்டு ஒய்வுறும்
உழைக் குலம் உழைப்பன ஒத்து, ஓர் பால் எலாம். 198

நகரின் பொலிவழிவு

கொடி அடங்கின மணிக் குன்றம்; கோ முரசு
இடி அடங்கின; முழக்கு இழந்த பல் இயம்;
படி அடங்கலும், நிமிர் பசுங் கண் மாரியால்,
பொடி அடங்கின, மதில் புறத்து வீதியே. 199

197. மா - திருமகள்; 198. ஏ - அம்பு.

அட்டிலும் இழந்தன புகை; அகிற் புகை
நெட்டிலும் இழந்தன; நிறைந்த பால், கிளி
வட்டிலும் இழந்தன; மகளிர்—கால் மணித்
தொட்டிலும் இழந்தன, மகவும்—சோரவே. 200

ஒளி துறந்தன முகம், உயிர் துறந்தென;
துளி துறந்தன, முகில் தொகையும்; தூய நீர்
தளி துறந்தன; பரி தான யானையும்
களி துறந்தன, மலர்க் கள் உண் வண்டினே. 201

நிழல் பிரிந்தன குடை; நெடுங் கண் ஏழையர்
குழல் பிரிந்தன மலர்; குமரர் தாள் இணை
கழல் பிரிந்தன; சினக் காமன் வாளியும்
அழல் பிரிந்தன; துணை பிரிந்த, அன்றிலே. 202

தார் ஒலி நீத்தன, புரவி; தண்ணுமை
வார் ஒலி நீத்தன, மழையின் விம்முறும்;
தேர் ஒலி நீத்தன, தெருவும்—தெண் திரை
நீர் ஒலி நீத்தன நீத்தம் போலவே. 203

முழவு எழும் ஒலி இல; முறையின் யாழ் நரம்பு
எழ எழும் ஒலி இல; இமைப்பு இல் கண்ணினர்
விழவு எழும் ஒலி இல; வேறும் ஒன்று இல,
அழ எழும் ஒலி அலது—அரச வீதியே. 204

தெள் ஒலிச் சிலம்புகள் சிலம்பு பொன் மனை
நள் ஒலித்தில; நளிர் கலையும் அன்னவே;
புள் ஒலித்தில, புனல்; பொழிலும் அன்னவே;
கள் ஒலித்தில, மலர்; களிறும் அன்னவே.* 205

செய்ம் மறந்தன புனல்; சிவந்த வாய்ச்சியர்
கைம் மறந்தன, பசுங் குழவி; காந்து எரி
நெய்ம் மறந்தன; நெறி அறிஞர் யாவரும்
மெய்ம் மறந்தனர்; ஒலி மறந்த, வேதமே. 206

ஆடினர் அழுதனர்; அமுத ஏழ் இசை
பாடினர் அழுதனர்; பரிந்த கோதையர்,
ஊடினர் அழுதனர்; உயிரின் அன்பரைக்
கூடினர் அழுதனர்—குழாம் குழாம்கொடே. 207

205. கள் - வண்டு; 206. மெய் - மெய்ப்பொருள்.

நீட்டில, களிறு கை நீரின்; வாய் புதல்
பூட்டில, புரவிகள்; புள்ளும், பார்ப்பினுக்கு
ஈட்டில இரை; புனிற்று ஈன்ற கன்றையும்
ஊட்டில, கறவை; நைந்து உருகிச் சோர்ந்தவே. 208

மாந்தர்தம் மொய்ம்பினின், மகளிர் கொங்கை ஆம்
ஏந்து இளநீர்களும் வறுமை எய்தின,
சாந்தம்; அம் மகிழ்நர்தம் முடியின்; தையலார்
கூந்தலும் வறுமைய மலரின் கூலமே.* 209

ஓடை நல் அணி முனிந்தன, உயர் களிறு; உச்சிச்
சூடை நல் அணி முனிந்தன, தொடர் மனே; கொடியின்
ஆடை நல் அணி முனிந்தன, அம் பொன் செய் இஞ்சி;
பேடை நல் அணி முனிந்தன, மென் நடைப் புறவம். 210

'திக்கு நோக்கிய தீவினைப் பயன்' எனச் சிந்தை
நெக்கு நோக்குவோர், 'நல்வினைப் பயன்' என நேர்வோர்,
பக்கம் நோக்கல் என்? பருவரல் இன்பம் என்று இரண்டும்
ஒக்க நோக்கிய யோகரும், அருந் துயர் உழந்தார். 211

ஓவு இல் நல் உயிர் உயிர்ப்பினேடு உடல் பதைத்து உலைய,
மேவு தொல் அழகு எழில் கெட, விம்மல் நோய் விம்ம,
தாவு இல் ஐம்பொறி மறுகுற, தயரதன் என்ன,
ஆவி நீக்கின்றது ஒத்தது—அவ் அயோத்தி மா நகரம். 212

**இராமன் சீதைபால் சேரலும் அவள் துணுக்கமுற்று எழுதலும்**

உயங்கி அந் நகர் உலேவுற, ஒருங்கு, உழைச்சுற்றம்
மயங்கி ஏங்கினர், வயின்வயின் வரம்பு இலர் தொடர,
இயங்கு பல் உயிர்க்கு ஓர் உயிர் என நின்ற இராமன்
தயங்கு பூண் முலேச் சானகி இருந்துழிச் சார்ந்தான். 213

அழுது, தாயரோடு அருந் தவர், அந்தணர், அரசர்,
புழுதி ஆடிய மெய்யினர், புடை வந்து பொரும,
பழுது சீரையின் உடையினன் வரும்படி பாரா,
எழுது பாவை அன்னுள், மனத் துணுக்கமொடு எழுந்தாள்.

**சீதை, 'உற்றது என்?' என இராமனே வினுதல்**

எழுந்த நங்கையை, மாமியர் தழுவினர்; ஏங்கிப்
பொழிந்த உண் கண் நீர்ப் புதுப் புனல் ஆட்டினர்; புலம்ப,
அழிந்த சிந்தையள் அன்னம், 'ஈது இன்னது' என்று அறியாள்;
வழிந்த நீர் நெடுங் கண்ணினள், வள்ளலே நோக்கி, 215

208. புதல் - புல்; புல் நிறைந்த பையினைக் குதிரையின் வாயில் பூட்டித் தின்னச்செய்வது வழக்கம்.

'பொன்னை உற்ற பொலங் கழலோய்! புகழ்-
மன்னை உற்றது உண்டோ, மற்று இவ் வன் துயர்
என்னை உற்றது? இயம்பு' என்று, இயம்பினள்—
மின்னை உற்ற நடுக்கத்து மேனியாள். 216

இராமன் மறுமொழி

'பொரு இல் எம்பி புவி புரப்பான்; புகழ்
இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்று போய்,
கருவி மா மழைக் கல்-கடம் கண்டு, நான்
வருவென் ஈண்டு; வருந்தலை நீ' என்றான். 217

சீதையின் வருத்தம்

நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்,
மேய மண் இழந்தான் என்றும், விம்மலள்;
'நீ வருந்தலை; நீங்குவென் யான்' என்ற
தீய வெஞ் சொல் செவி சுடத் தேம்புவாள். 218

'துறந்து போம்' எனச் சொற்ற சொல் தேறுமோ—
உறைந்த பாற்கடற் சேக்கை உடன் ஒரீஇ,
அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில்
பிறந்த பின்பும், பிரியலள் ஆயினாள்? 219

அன்ன தன்மையள், 'ஐயனும், அன்னையும்,
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே;
என்னை, என்னை, ''இருத்தி'' என்றான்?' எனா,
உன்ன, உன்ன, உயிர் உமிழாநின்றாள். 220

இராமன், 'கானத்தின் வெம்மையை உன் கால்கள் தாங்கா' எனல்

'வல் அரக்கரின் மால் வரை போய் விழுந்து,
அல் அரக்கின் உருக்கு அழல் காட்டு அதர்க்
கல் அரக்கும் கடுமைய அல்ல—நின்
சில் அரக்குண்ட சேவடிப் போது' என்றான். 221

சீதை, 'நின் பிரிவினும் சுடுமோ, பெருங் காடு?' எனல்

'பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது
ஒருவுகின்றனை; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்
பிரிவினும் சுடுமோ, பெருங் காடு?' என்றாள். 222

221. சில் அரக்கு - குளிர்ந்த செம்பஞ்சுக் குழம்பு.

இராமன் சிந்தனை

அண்ணல், அன்ன சொல் கேட்டனன்; அன்றியும்,
உள் நிவந்த கருத்தும் உணர்ந்தனன்;
கண்ணின் நீர்க் கடல் கைவிட நேர்கிலன்,
எண்ணுகின்றனன், 'என் செயற்பாற்று?' என, 223

சீதை, மரவுரி உடுத்து இராமன் அருகில் வந்து நிற்றல்

அனைய வேலை, அக மனை எய்தினள்;
புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்;
நினைவின், வள்ளல் பின் வந்து, அயல் நின்றனள்—
பனையின் நீள் கரம் பற்றிய கையினள். 224

சீதையின் செயலைக் கண்டோர் வருந்துதல்

ஏழைதன் செயல் கண்டவர் யாவரும்,
வீழும் மண்ணிடை வீழ்ந்தனர்; வீந்திலர்;
வாழும் நாள் உள என்றபின் மாள்வரோ?—
ஊழி பேரினும் உய்குநர் உய்வரே! 225

தாயர், தவ்வையர், தன் துணைச் சேடியர்,
ஆயம் மன்னிய அன்பினர், என்று இவர்
தீயில் மூழ்கினர் ஒத்தனர்; செங்கணான்
தூய தையலை நோக்கினன், சொல்லுவான்: 226

'உடன் வருதல் இடர் தரும்' என்ற இராமனுக்குச்
சீதையின் மாற்றம்

'முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்,
வெல்லும் வெண் நகையாய்! விளைவு உன்னுவாய்-
அல்லை; போத அமைந்தனை ஆதலின்,
எல்லை அற்ற இடர் தருவாய்' என்றான். 227

கொற்றவன் அது கூறலும், கோகிலம்
செற்றது அன்ன குதலையள் சீறுவாள்,
'உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே?
என்-துறந்தபின், இன்பம் கொலாம்?' என்றாள். 228

பிறிது ஓர் மாற்றம் பெருந்தகை பேசலன்;
மறுகி வீழ்ந்து அழ மைந்தரும் மாதரும்
செறுவின் வீழ்ந்த நெடுந் தெருச் சென்றனன்—
நெறி பெருமை அரிதினின் நீங்குவான்.* 229

244. சீரம் - மரவுரி; 229. செறு - வயல்.

மூவரும் போகும் முறை

சீரை சுற்றித் திருமகள் பின் செல,
மூரி விற் கை இளையவன் முன் செல,
காரை ஒத்தவன் போம்படி கண்ட, அவ்
ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ? 230

நகர மாந்தர் இராமனைப் பின் தொடர்தல்

ஆரும் பின்னர் அழுது அவலித்திலர்;
சோரும் சிந்தையர், யாவரும் சூழ்ந்தனர்;
'வீரன்முன் வனம் மேவுதும் யாம்' என,
போரென்று ஒல்லொலி கைம்மிகப் போயினார். 231

இராமன், தாயரைக் கும்பிட்டு, மன்னனை ஆற்றுமாறு கூறுதல்

தாதை வாயில் குறுகினன் சார்தலும்,
கோதை வில்லவன் தாயரைக் கும்பிடா,
'ஆதி மன்னனை ஆற்றுமின் நீர்' என்றான்;
மாதராரும் விழுந்து மயங்கினார். 232

தாய்மார் வாழ்த்துதல்

ஏத்தினார், தம் மகனை, மருகியை;
வாழ்த்தினார், இளையோனை; வழுத்தினார்,
'காத்து நல்குமின், தெய்வதங்காள்!' என்றார்—
நாத் தழும்ப அரற்றி நடுங்குவார். 233

மூவரும் தேர் ஏறிச் செல்லுதல்

அன்ன தாயர் அரிதின் பிரிந்தபின்,
முன்னர் நின்ற முனிவனைக் கைதொழா,
தன்னது ஆர் உயிர்த் தம்பியும், தாமரைப்
பொன்னும், தானும், ஓர் தேர்மிசைப் போயினான். 234

## 5 தைலம் ஆட்டு படலம்

யாவரும் தொடர்ந்து வர, இராமன் தேரில் செல்லுதல்

ஏவிய குரிசில்பின் யாவர் ஏகிலார்?
மா இயல் தானை அம் மன்னை நீங்கலாத்
தேவியர் ஒழிந்தனர்; தெய்வ மா நகர்
ஓவியம் ஒழிந்தன, உயிர் இலாமையால். 1

கைகள் நீர் பரந்து, கால் தொடர, கண் உகும்
வெய்ய நீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்,
உய்ய, ஏழ் உலகும் ஒன்று ஆன நீர் உழல்
தெய்வ மீன் ஒத்தது—அச் செம் பொன் தேர்அரோ! 2

சூரியன் மறைய, இரவு தோன்றல்

மீன் பொலிதர, வெயில் ஒதுங்க, மேதியோடு
ஆன் புக, கதிரவன் அத்தம் புக்கனன்—
'கான் புகக் காண்கிலேன்' என்று, கல்லதர்
தான் புக முடுகினன் என்னும் தன்மையான். 3

பகுத்த வான் மதி கொடு பதுமத்து அண்ணலே
வகுத்த வாள் நுதலியர் வதன ராசிபோல்,
உகுத்த கண்ணீரினின் ஒளியும் நீங்கின,
முகிழ்த்து, அழகு இழந்தன, முளரி ஈட்டமே. 4

அந்தியில் வெயில் ஒளி அழிய, வானகம்,
நந்தல் இல் கேகயன் பயந்த நங்கைதன்,
மந்தரை உரை எனும் கடுவின் மட்கிய
சிந்தையின் இருண்டது, செம்மை நீங்கியே. 5

பரந்து மீன் அரும்பிய பசலை வானகம்,
அரந்தை இல் முனிவரன் அறைந்த சாபத்தால்,
நிரந்தரம் இமைப்பு இலா நெடுங் கண் ஈண்டிய
புரந்தரன் உரு எனப் பொலிந்தது, எங்குமே. 6

இராமன் முனிவருடன் உறைதல்

திரு நகர்க்கு ஓசனை இரண்டு சென்று, ஒரு
விரை செறி சோலையை விரைவின் எய்தினன்;
இரதம்நின்று இழிந்து, பின், இராமன், இன்புறும்
உரை செறி முனிவரோடு உறையும் காலையே. 7

உடன் வந்த சேனை, சோலையைச் சூழ்ந்துள்ள இடங்களில் தங்குதல்

வட்டம் ஓர் ஓசனை வளைவிற்றாய், நடு
எள்தனை இடவும் ஓர் இடம் இலாவகை,
புள் தகு சோலையின் புறத்துப் போர்த்தென
விட்டது—குரிசிலை விடாத சேனையே. 8

5: 2. தெய்வ மீன் - மச்சாவதாரமூர்த்தி; பண்டு சோமுகன் என்னும் அசுரன் வேதங்களைக் கைப்பற்றி மறைந்தபோது திருமால் மீனுரு எடுத்துச் சென்று, அவனைக் கொன்று அவற்றை மீட்டனன் என்பது வரலாறு. 5. மட்குதல் - மழுங்குதல்; 6. முனிவரன் - கௌதமன்; 8. விடுதல் - தங்குதல்.

குயின்றன குலமணி நதியின் கூலத்தில்,
பயின்று உயர் வாலுகப் பரப்பில், பைம் புலில்,
வயின்தொறும் வயின்தொறும் வைகினர்; ஒன்றும்
அயின்றிலர்; துயின்றிலர்; அழுது விம்மினர். 9

பலரும் துயில்கொள்ளுதல்

வாவி விரி தாமரையின் மா மலரின் வாசக்
காவி விரி நாள் மலர் முகிழ்த்தனைய கண்ணார்,
ஆவி விரி பால் நுரையின் ஆடை அணை ஆக,
நாவி விரி கூழை இள நவ்வியர் துயின்றார். 10

பெரும் பகல் வருந்தினர், பிறங்கு முலை தெங்கின்
குரும்பைகள் பொரும் செவிலி மங்கையர் குறங்கில்,
அரும்பு அனைய கொங்கை, அயில் அம்பு அனைய உண் கண்,
கரும்பு அனைய செஞ்சொல் நவில், கன்னியர் துயின்றார். 11

பூ அகம் நிறைந்த புளினத் திரள்கள்தோறும்,
மா வகிரின் உண் கணர் மடப் பிடியின் வைக,
சேவகம் அமைந்த சிறு கண் கரிகள் என்ன,
தூ அகல் இல் குந்த மற மைந்தர்கள் துயின்றார். 12

மாக மணி வேதிகையில், மாதவி செய் பந்தர்,
கேகய நெடுங் குலம் எனச் சிலர் கிடந்தார்;
பூக வனம் ஊடு, படுகர்ப் புளின முன்றில்,
தோகை இள அன்ன நிரையின் சிலர் துயின்றார். 13

சம்பக நறும் பொழில்களில், தருண வஞ்சிக்
கொம்பு அழுது ஒசிந்தன என, சிலர் குழைந்தார்;
வம்பு அளவு கொங்கையொடு, வாலுகம் வளர்க்கும்
அம் பவள வல்லிகள் எனச் சிலர் அசைந்தார்; 14

தகவும் மிகு தவமும் இவை தழுவ, உயர் கொழுநர்
முகமும் அவர் அருளும் நுகர்கிலர்கள், துயர் முடுக,
அகவும் இள மயில்கள், உயிர் அலசியன அனையார்,
மகவு முலை வருட, இள மகளிர்கள் துயின்றார். 15

குங்கும மலைக் குளிர் பனிக் குழுமி என்ன,
துங்க முலையில் துகள் உற, சிலர் துயின்றார்;
அங்கை அணையில், பொலிவு அழுங்க, முகம் எல்லாம்
பங்கயம் முகிழ்த்தன என, சிலர் படிந்தார். 16

9. கூலம் - கரை; 12. சேவகம் - யானைக் கூடம்; 13. படுகர் - நீர்நிலை; 15. தகவு - நடுவுநிலை; தவம் - இல்லறம்; அலசுதல் - சோர்தல்.

சுமந்திரனை இராமன் அழைத்து, தேருடன் நகர் திரும்புமாறு வேண்டுதல்

ஏனையரும் இன்னணம் உறங்கினர்; உறங்கா
மானவனும், மந்திரி சுமந்திரனை, 'வா' என்று,
'ஊனம் இல் பெருங் குணம் ஒருங்கு உடைய உன்னால்
மேல் நிகழ்வது உண்டு; அவ் உரை கேள்' என விளம்பும்: 17

'பூண்ட பேர் அன்பினாரைப் போக்குவது அரிது; போக்காது,
ஈண்டுநின்று ஏகல் பொல்லாது; எந்தை! நீ இரதம் இன்னே
தூண்டினை மீள்வது ஆக்கின், சுவட்டை ஓர்ந்து, என்னை, "அங்கே
மீண்டனன்" என்ன மீள்வர்; இது நின்னை வேண்டிற்று' என்றான். 18

'வெறுந் தேருடன் சென்று, யாது கூறுவேன்!' எனச் சுமந்திரன் வருந்துதல்

செவ்விய குரிசில் கூற, தேர் வலான் செப்புவான், 'அவ்
வெவ்விய தாயின், தீய விதியினின் மேலன் போலாம்;
இவ் வயின் நின்னை நீக்கி, இன் உயிர் தீர்ந்து இன்று ஏகி,
அவ் வயின் அனைய காண்டற்கு அமைதலால் அளியன்' என்றான். 19

'தேவியும் இளவலும் தொடர, செல்வனைப்
பூ இயல் கானகம் புக உய்த்தேன் என்கோ?
கோவினை உடன் கொடு குறுகினேன் என்கோ?
யாவது கூறுகேன், இரும்பின் நெஞ்சினேன்? 20

' "தாருடை மலரினும் ஒதுங்கத் தக்கிலா
வாருடை முலையொடும், மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன், பழைய நண்பினேன்,
தேரிடை வந்தனென், தீது இலேன்" என்கோ? 21

'வன் புலக் கல் மன மதி இல் வஞ்சனேன்,
என்பு உலப்புற உடைந்து இரங்கும் மன்னன்பால்,
உன் புலக்கு உரிய சொல் உணர்த்தச் செல்கெனோ?
தென்புலக் கோமகன் தூதின் செல்கெனோ? 22

' "நால் திசை மாந்தரும், நகர மாக்களும்,
தேற்றினர் கொணர்வர் என் சிறுவன்தன்னை" என்று
ஆற்றின அரசனை, ஐய! வெய்ய என்
கூற்று உறழ் சொல்லினால், கொலை செய்வேன்கொலோ? 23

22. புலம் - பொறிகள்; புலக்கு - அறிவுக்கு.

'''அங்கிமேல் வேள்வி செய்து அரிதின் பெற்ற நின்
சிங்க ஏறு அகன்றது'' என்று உணர்த்தச் செல்கெனோ?
எங்கள் கோமகற்கு, இனி, என்னின், கேகயன்
நங்கையே கடைமுறை நல்லள் போலுமால்!' 24

முடிவுற, இன்னன மொழிந்த பின்னரும்,
அடி உறத் தழுவினன், அழுங்கு பேர் அரா
இடி உறத் துவளுவது என்னும் இன்னலன்;
படி உறப் புரண்டனன்; பலவும் பன்னினான். 25

பெருந் துயரால் பூமியில் புரண்ட சுமந்திரனை இராமன் எடுத்து அணைத்து, பேசுதல்

தடக் கையால் எடுத்து, அவன்-தழுவி, கண்ண நீர்
துடைத்து, வேறு இருத்தி, மற்று இனைய சொல்லினான்—
அடக்கும் ஐம் பொறியொடு கரணத்து அப் புறம்
கடக்கும் வால் உணர்விநுக்கு அணுகும் காட்சியான். 26

'பிறத்தல் ஒன்று உற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி உணர்வது ஓர் செம்மை உள்ளத்தாய்!
புறத்துறு பெரும் பழி பொது இன்று எய்தலும்,
அறத்தினை மறத்தியோ, அவலம் உண்டு என? 27

'முன்பு நின்று இசை நிறீஇ, முடிவு முற்றிய
பின்பும் நின்று, உறுதியைப் பயக்கும் பேரறம்,
இன்பம் வந்து உறும்எனின் இனிது; ஆயிடைத்
துன்பம் வந்து உறும்எனின், துறக்கல் ஆகுமோ? 28

'நிறப் பெரும் படைக்கலம் நிறத்தின் நேர் உற,
மறப் பயன் விளைக்குறும் வன்மை அன்றுஅரோ;
இறப்பினும், திரு எலாம் இழப்ப எய்தினும்,
துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே. 29

'கான்புறம் சேறலில் அருமை காண்டலால்,
வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல் குலம்,
யான் பிறந்து, அறத்தினின்று இழுக்கிற்று என்னவோ?—
ஊன் திறந்து உயிர் குடித்து உழலும் வேலினாய்! 30

'''வினைக்கு அரு மெய்ம்மையின் வனத்து விட்டனன்,
மனக்கு அரும் புதல்வனை'' என்றல் மன்னவன்-
தனக்கு அருந் தவம்; அது தலைக்கொண்டு ஏகுதல்
எனக்கு அருந் தவம்; இதற்கு இரங்கல், எந்தை! நீ. 31

27. திறத்துளி - முறையால்; 29. நிறம் - ஒளி, மார்பு.

'முந்தினை முனிவனைக் குறுகி, முற்றும் என்
வந்தனை முதலிய மாற்றம் கூறினை,
எந்தையை அவனொடும் எய்தி, ''ஈண்டு, என
சிந்தனை உணர்த்துதி'' என்று, செப்புவான். 32

'முனிவனை, எம்பியை, ''முறையில் நின்று, அரும்
புனித வேதியர்க்கும், மேல் உறை புத்தேளிர்க்கும்,
இனியன இழைத்தி'' என்று இயம்பி, ''எற் பிரி
தனிமையும் தீர்த்தி'' என்று உரைத்தி, தன்மையால். 33

'''வெவ்வியது, அன்னையால் விளைந்தது, ஈண்டு ஒரு
கவ்வை என்று இறையும் தன் கருத்தின் நோக்கலன்,
எவ் அருள் என்வயின் வைத்தது, இன் சொலால்,
அவ் அருள் அவன்வயின் அருளுக!'' என்றியால். 34

'வேண்டினென் இவ் வரம் என்று, மேலவன்
ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி, ஏகினை,
பூண்ட மா தவனொடும் கோயில் புக்கு, இனிது
ஆண் தகை வேந்தனை அவலம் ஆற்றி, பின், 35

'''ஏழ்-இரண்டு ஆண்டும் நீத்து, ஈண்ட வந்து உனைத்
தாழ்குவென் திருவடி; தப்பிலேன்'' எனச்
சூழி வெங் களிற்று இறைதனக்குச் சோர்வு இலா
வாழி மா தவன் சொலால் மனம் தெருட்டுவாய். 36

'முறைமையால் எற் பயந்தெடுத்த மூவர்க்கும்
குறைவு இலா என் நெடு வணக்கம் கூறி, பின்
இறைமகன் துயர் துடைத்து இருத்தி, மாடு' என்றான்—
மறைகளை மறைந்து போய் வனத்துள் வைகுவான். 37

**சீதையைச் சுமந்திரன் நோக்க, அவள் சொன்ன செய்தி**

'ஆள்வினை, ஆணையின் திறம்பல் அன்று' எனா,
தாள்முதல் வணங்கிய தனித் திண் தேர் வலான்,
'ஊழ்வினை வரும் துயர் நிலை' என்று உன்னுவான்,
வாழ்வினை நோக்கியை வணங்கி நோக்கினன். 38

அன்னவள் கூறுவாள், 'அரசர்க்கு, அத்தையர்க்கு,
என்னுடை வணக்கம் முன் இயம்பி, யானுடைப்
பொன் நிறப் பூவையும், கிளியும், போற்றுக என்று
உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய்' என்றாள். 39

33. முனிவனை - முனிவனிடம்; 38. ஆள்வினை - பணி.

**இராமன் தேற்றவும், சுமந்திரன் பொருமி விம்முதல்**

தேர் வலான், அவ் உரை கேட்டு, 'தீங்கு உறின்
யார் வலார்? உயிர் துறப்பு எளிது அன்றே?' எனப்
போர் வலான் தடுக்கவும், பொருமி விம்மினன்—
சோர்வு இலாள் அறிகிலாத் துயர்க்குச் சோர்கின்றான். 40

**இராமனிடம் விடை பெற்ற சுமந்திரன், இலக்குவனிடம், 'கூறுவது யாது?' எனல்**

ஆறினன்போல் சிறிது அவலம், அவ் வழி,
வேறு இலா அன்பினன், 'விடை தந்தீக' என
ஏறு சேவகன்-தொழுது, இளைய மைந்தனை,
'கூறுவது யாது?' என, இனைய கூறினன்: 41

**இலக்குவன் மறுமொழி**

'உரைசெய்து எம் கோமகற்கு உறுதி ஆக்கிய
தரைகெழு செல்வத்தைத் தவிர, மற்று ஒரு
விரை செறி குழலிமாட்டு அளித்த மெய்யனை
அரைசன் என்று இன்னம் ஒன்று அறையற்பாலதோ? 42

'கானகம் பற்றி நல் புதல்வன் காய் உண,
போனகம் பற்றிய பொய் இல் மன்னற்கு, இங்கு
ஊனகம் பற்றிய உயிர்கொடு, இன்னும் போய்
வானகம் பற்றிலா வலிமை கூறு' என்றான். 43

'மின்னுடன் பிறந்த வாள் பரத வேந்தற்கு, ''என்
மன்னுடன் பிறந்திலென்; மண்கொண்டு ஆள்கின்றான்-
தன்னுடன் பிறந்திலென்; தம்பி முன் அலென்;
என்னுடன் பிறந்த யான் வலியென்'' என்றியால். 44

**'சீரியன அல்லன செப்பாதே' என்று இளவலை இராமன் அடக்க, சுமந்திரன் தேரைத் திருப்பி ஓட்டிச் செல்லுதல்**

ஆரியன் இளவலை நோக்கி, 'ஐய! நீ
சீரிய அல்லன செப்பல்' என்றபின்,
பாரிடை வணங்கினன், பதைக்கு நெஞ்சினன்;
தேரிடை வித்தகன் சேறல் மேயினன். 45

கூட்டினன் தேர்ப் பொறி; கூட்டி, கோள்முறை
பூட்டினன் புரவி; அப் புரவி போம் நெறி
காட்டினன்; காட்டி, தன் கல்வி மாட்சியால்
ஓட்டினன், ஒருவரும் உணர்வுறுமலே. 46

46. கோள்முறை - அனுபவமுறை.

**இராமன் முதலிய மூவரும் இரவில் வழி நடத்தல்**

தையல்தன் கற்பும், தன் தகவும், தம்பியும்,
மை அறு கருணையும், உணர்வும், வாய்மையும்,
செய்ய தன் வில்லுமே, சேமமாகக் கொண்டு,
ஐயனும் போயினன், அல்லின் நாப்பணே. 47

**சந்திரன் தோன்றி ஒளி செய்ய, நிலவொளியில் மூவரும் செல்லல்**

பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரைப் பொருந்தி, அன்னார்
செய் வினைக்கு உதவும் நட்பால் செல்பவர்த் தடுப்பது எய்க்கும்,
மை விளக்கியதே அன்ன வயங்கு, இருள் துரக்க, வானம்
கைவிளக்கு எடுத்ததுஎன்ன, வந்தது—கடவுள் திங்கள். 48

மருமத்துத் தன்னை ஊன்றும் மறக் கொடும் பாவம் தீர்க்கும்
உரும் ஒத்த சிலையினோரை ஒருப்படுத்து உதவி நின்ற
கருமத்தின் விளைவை எண்ணி, களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது— தனி வெண் திங்கள். 49

காம்பு உயர் கானம் செல்லும் கரியவன் வறுமை நோக்கி,
தேம்பின குவிந்தபோலும் செங்கழுநீரும்; சேரைப்
பாம்பின தலைய ஆகிப் பரிந்தன, குவிந்து சாய்ந்த,
ஆம்பலும்; என்றபோது, நின்ற போது அலர்வது உண்டோ?

அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும், அழகன்தன்னை
எஞ்சல் இல் பொன் போர்த்தன்ன இளவலும், இந்து என்பான்
வெஞ் சிலைப் புருவத்தாள்தன் மெல் அடிக்கு ஏற்ப, வெண் நூல்
பஞ்சு இடைப் படுத்தாலன்ன வெண் நிலாப் பரப்ப, போனார்.

சிறு நிலை மருங்குல் கொங்கை ஏந்திய செல்வம் என்னும்
நெறி இருங் கூந்தல் நங்கை சீறடி, நீர்க் கொப்பூழின்
நறியன, தொடர்ந்து சென்று நடத்தலின், 'நவையின் நீங்கும்
உறு வலி, அன்பின் ஊங்கு ஒன்று உண்டு' என உணர்வது உண்டோ?*

**சூரியன் உதிக்கும் முன், மூவரும் தென் திசையில் இரண்டு யோசனை செல்லல்**

பரிதி வானவனும், கீழ்பால் பரு வரை பற்றுமுன்னம்,
திருவின் நாயகனும், தென்பால் யோசனை இரண்டு போனான்;
அருவி பாய் கண்ணும், புண்ணாய் அழிகின்ற மனமும், தானும்,
துரித மான் தேரில் போனான் செய்தது சொல்லலுற்றாம். 53

50. சேரைப்பாம்பு - சாரைப்பாம்பு; 52. சிறு நிலை - நுணுகிய தன்மை; 53. மான் - குதிரை.

ஐந்து நாழிகைக்குள் சுமந்திரன் அயோத்தி சென்று, முனிவனிடம் செய்தி சொல்லுதல்

கடிகை ஓர் இரண்டு மூன்றில், கடி மதில் அயோத்தி கண்டான்;
அடி இணை தொழுதான், ஆதி முனிவனை; அவனும், உற்ற
படி எலாம் கேட்டு, நெஞ்சில் பருவரல் உழந்தான்; முன்னே
முடிவு எலாம் உணர்ந்தான், 'அந்தோ! முடிந்தனன், மன்னன்' [என்றான். 54

வசிட்டன் சுமந்திரனோடு மன்னனை அணுகுதல்

'நின்று உயர் பழியை அஞ்சி நேர்ந்திலன் தடுக்க, வள்ளல்;
ஒன்றும் நான் உரைத்தல் நோக்கான், தருமத்திற்கு உறுதி பார்ப்பான்;
வென்றவர் உளரோ மேலை விதியினை?' என்று விம்மி,
பொன் திணி மன்னன் கோயில் சுமந்திரனோடும் போனான். 55

'தேர் கொண்டு வள்ளல் வந்தான்' என்று தம் சிந்தை உந்த,
ஊர் கொண்ட திங்கள் என்ன மன்னனை உழையர் சுற்றி,
கார் கொண்ட மேனியானைக் கண்டிலர்; கண்ணில், வற்றா
நீர் கொண்ட நெடுந் தேர்ப் பாகன் நிலை கண்டே, நிலையின் தீர்ந்தார்.

'இரதம் வந்தது' என்பது கேட்டதும், தயரதன் கண் விழித்து, 'இராமன் வந்தானோ?' எனல்

'இரதம் வந்து உற்றது' என்று, ஆங்கு யாவரும் இயம்பலோடும்,
வரதன் வந்துற்றான் என்ன, மன்னனும் மயக்கம் தீர்ந்தான்;
புரை தபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி,
விரத மா தவனைக் கண்டான், 'வீரன் வந்தனனோ? என்றான்.

வசிட்டன் வாய் பேசாது ஏங்கி அகல, தேர்ப் பாகனை அழைத்துச் செய்தி உணர்ந்ததும் மன்னன் ஆவி நீத்தல்

'இல்லை' என்று உரைக்கலாற்றான் ஏங்கினன், முனிவன் நின்றான்;
வல்லவன் முகமே, 'நம்பி வந்திலன்' என்னும் மாற்றம்
சொல்லலும், அரசன் சோர்ந்தான்; துயர் உறு முனிவன், 'நான் இவ்
அல்லல் காண்கில்லேன்' என்னா, ஆங்கு நின்று அகலப் போனான்.

நாயகன், பின்னும், தன் தேர்ப்பாகனை நோக்கி, 'நம்பி
சேயனோ? அணியனோ?' என்று உரைத்தலும், தேர் வலானும்,
'வேய் உயர் கானம், தானும், தம்பியும், மிதிலைப் பொன்னும்,
போயினன்' என்றான்; என்ற போழ்தத்தே ஆவி போனான். 59

56. ஊர் - பரிவேடம்; 57. புரை தபு - குற்றமற்ற; 58. வல்லவன் - வலவன்.

இந்திரன் முதல்வராய கடவுளர் யாரும் ஈண்டி,
சந்திரன் அனையது ஆங்கு ஓர் மானத்தின் தலையில் தாங்கி,
'வந்தனன், எந்தை தந்தை!' என மனம் களித்து, வள்ளல்
உந்தியான் உலகின் உம்பர் மீள்கிலா உலகத்து உய்த்தார். †60

**தயரதன் மாண்டமை அறிந்து, கோசலை வருந்திப் புலம்புதல்**

'உயிர்ப்பு இலன், துடிப்பும் இல்லன்' என்று உணர்ந்து, உருவம் தீண்டி,
அயிர்த்தனள் நோக்கி, மன்னற்கு ஆர் உயிர் இன்மை தேறி,
மயில் குலம் அனைய நங்கை கோசலை மறுகி வீழ்ந்தாள்—
வெயில் சுடு கோடைதன்னில் என்பு இலா உயிரின் வேவாள்.

இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன்தன்னை ஈனப்
பெருந் தவம் செய்த நங்கை, கணவனில் பிரிந்து, தெய்வ
மருந்து இழந்தவரின் விம்மி, மணி பிரி அரவின் மாழ்கி,
அருந் துணை இழந்த அன்றிற் பெடை என, அரற்றலுற்றாள்:

'தானே! தானே! தஞ்சம் இலாதான், தகைவு இல்லான்,
போனான்! போனான்! எங்களை நீத்து, இப்பொழுது' என்னா,
வான் நீர் சுண்டி மண் அற வற்றி, மறுகுற்ற
மீனே என்ன, மெய் தடுமாறி விழுகின்றாள். 63

'ஒன்றோ, நல் நாட்டு உய்க்குவர்; இந் நாட்டு உயிர் காப்பார்
அன்றே? மக்கள் பெற்று உயிர் வாழ்வார்க்கு அவம் உண்டே?
இன்றே வந்து, ஈண்டு, ''அஞ்சல்'' எனாது, எம் மகன் என்பான்
கொன்றான் அன்றோ தந்தையை?' என்றாள் குலைகின்றாள். 64

'நோயும் இன்றி, நோன் கதிர் வாள், வேல், இவை இன்றி,
மாயும் செல்வ மக்களின் ஆக; மற மன்னன்
காயும் புள்ளிக் கர்க்கடம், நாகம், கனி வாழை,
வேயும், போன்றான்' என்று மயங்கா விழுகின்றாள்.* 65

'வடித் தாழ் கூந்தற் கேகயன் மாதே! மதியாலே
பிடித்தாய் வையம்: பெற்றனை பேரா வரம்; இன்னே
முடித்தாய் அன்றே மந்திரம்?' என்றாள்—முகில்வாய் மின்
துடித்தாலென்ன, மன்னவன் மார்பில் துவள்கின்றாள். 66

60. மானம் - விமானம்; உந்தியான் - திருமாலின் உந்திக் கமலத்தில் உள்ளவனான பிரமன்; 62. அந்தணன் - பிரமன்; தெய்வ மருந்து - அமுதம்; 63. வான் நீர் - மழை நீர்; 65. கர்க்கடம் - நண்டு; 66. வடி - நீட்சி; மந்திரம் - சூழ்ச்சி.

'அருந் தேரானைச் சம்பரனைப் பண்டு அமர் வென்றாய்;
இருந்தார், வானோர், நின் அருளாலே இனிது; அன்னார்
விருந்து ஆகின்றாய்' என்றனள்—வேழத்து அரசு ஒன்றைப்
பெருந் தாள் அன்பின் சூழ் பிடி என்னப் பிணியுற்றாள். 67

'வேள்விச் செல்வம் துய்த்திகொல்? மெய்ம்மைத் துணை இன்மை
சூழ்வின் செல்வம் துய்த்திகொல்? தோலா மனு நூலின்
வாழ்வின் செல்வம் துய்த்திகொல்மன்?' என்றனள்—வானோர்
கேள்விச் செல்வம் துய்க்க வயிற்று ஓர் கிளை தந்தாள். 68

**கோசலையும் சுமித்திரையும் புலம்புகையில், அறுபதினாயிரம் தேவிமாரும் வந்து கூடி வருந்துதல்**

ஆழி வேந்தன் பெருந்தேவி அன்ன பன்னி அழுது அரற்ற,
தோழி அன்ன சுமித்திரையும் துளங்கி ஏங்கி உயிர் சோர,
ஊழி திரிவது எனக் கோயில் உலையும் வேலை, மற்று ஒழிந்த
மாழை உண் கண் தேவியரும், மயிலின் குழாத்தின் வந்து இரைத்தார்.

துஞ்சினானை, தம் உயிரின் துணையை, கண்டார்; துணுக்கத்தால்
நஞ்சு நுகர்ந்தார் என உடலம் நடுங்காநின்றார்; என்றாலும்,
அஞ்சி அழுங்கி விழுந்திலரால்;—அன்பின் தறுகண் பிறிது உண்டோ?—
வஞ்சம் இல்லா மனத்தானை வானில் தொடர்வான் மனம் வலித்தார்.

அளம் கொள் அளக்கர் இரும் பரப்பில், அண்டர் உலகில், அப் புறத்தில்
விளங்கும் மாதர், 'கற்பினார், இவரின் யாரோ!' என, நின்றார்;
களங்கம் நீத்த மதி முகத்தார்; கான வெள்ளம் கால் கோப்ப,
துளங்கல் இல்லாத் தனிக் குன்றில் தொக்க மயிலின் சூழ்ந்து இருந்தார்.

கைத்த சொல்லால் உயிர் இழந்தும், புதல்வற் பிரிந்தும், கடை ஓட
மெய்த்த வேந்தன் திரு உடம்பைப் பிரியார் பற்றி விட்டிலரால்;
பித்த மயக்கு ஆம் சுறவு எறியும் பிறவிப் பெரிய கடல் கடக்க,
உய்த்து மீண்ட நாவாயில், தாமும் போவார் ஒக்கின்றார். 72

**சுமந்திரன் சென்று செய்தி சொல்ல, வசிட்ட முனிவன் வந்து வருந்துதல்**

மாதரார்கள் அறுபதினாயிரரும் உள்ளம் வலித்து இருப்ப,
கோது இல் குணத்துக் கோசலையும் இளைய மாதும் குழைந்து எங்க,
சோதி மணித் தேர்ச் சுமந்திரன் சென்று, அரசன் தன்மை சொல, வந்த
வேத முனிவன், விதி செய்த வினையை நோக்கி விம்முவான். 73

68. கிளை - மகன்; 70. தறுகண் - கொடுமை; 71. அளம் - உப்பளம்; கால் கோத்தல் - இடமெங்கும் வளைந்து கொள்ளுதல்; 72. பித்த மயக்கு - பித்துக் கொள்வதற்குக் காரணமாகிய அவிச்சை.

வந்த முனிவன், 'வரம் கொடுத்து மகனை நீத்த வன்கண்மை
எந்தை தீர்ந்தான்' என உள்ளத்து எண்ணி எண்ணி இரங்குவான்,
உந்து கடலில் பெருங் கலம் ஒன்று உடையா நிற்கத் தனி நாய்கன்
நைந்து நீங்கச் செயல் ஓரா மீகாமனைப் போல், நலிவுற்றான். 74

**மன்னன் உடலைத் தைலத்தில் இடுதல்**

'செய்யக் கடவ செயற்கு உரிய சிறுவர், ஈண்டையார் அல்லர்;
எய்தக் கடவ பொருள் எய்தாது இகவா' என்ன, இயல்பு எண்ணி,
'மையற் கொடியாள் மகன் ஈண்டு வந்தால் முடித்தும் மற்று', என்ன,
தையற் கடல்நின்று எடுத்து, அவனைத் தயிலக் கடலின்தலை உய்த்தான்.

**தேவிமாரை அந்தப்புரத்திற்கு அனுப்பி, பரதனுக்கு ஓலை விடுத்தல்**

தேவிமாரை, 'இவற்கு உரிமை செய்யும் நாளில், செந் தீயின்
ஆவி நீத்திர்' என நீக்கி, அரிவைமார்கள் இருவரையும், [என்று,
தா இல் கோயில்தலை இருத்தி, 'தண் தார்ப் பரதற் கொண்டு அணைக'
ஏவினான், மன்னவன் ஆணை எழுது முடங்கல் கொடுத்து, அவரை. 76

போனார் அவரும், கேகயர்கோன் பொன் மா நகரம் புகஎய்த,
ஆனா அறிவின் அருந் தவனும், அறம் ஆர் பள்ளிஅது சேர்ந்தான்;
சேனாபதியின் சுமந்திரனை, 'செயற்பாற்கு உரிய செய்க' என்றான்;
மேல் நாம் சொன்ன மாந்தர்க்கு விளைந்தது இனி நாம் விளம்புவாம்:

**சூரியன் தோன்ற, காட்டில் விழித்தெழுந்த மக்கள் இராமனைக் காணாது அயர்தல்**

மீன் நீர் வேலை முரசு இயம்ப, விண்ணோர் ஏத்த, மண் இறைஞ்ச,
தூ நீர் ஒளி வாள் புடை இலங்க, சுடர்த் தேர் ஏறித் தோன்றினான்—
'வானே புக்கான் அரும் புதல்வன்; மக்கள் அகன்றார்; வரும் அளவும்
யானே காப்பென், இவ் உலகை' என்பான் போல, எறி கதிரோன். 78

வருந்தா வண்ணம் வருந்தினார்; மறந்தார், தம்மை; 'வள்ளலும் ஆங்கு
இருந்தான் என்றே இருந்தார்கள் எல்லாம் எழுந்தார்; அருள் இருக்கும்
பெருந் தாமரைக் கண் கரு முகிலைப் பெயர்ந்தார், காணார்; பேதுற்றார்;
'பொருந்தா நயனம் பொருந்தி, நமைப் பொன்றச் சூழ்ந்த' எனப் [புரண்டார்.

எட்டுத் திசையும் ஓடுவான், எழுவார்; விழுவார் இடர்க் கடலுள்;
'விட்டு நீத்தான் நமை' என்பார்; 'வெய்ய, ஐயன் வினை' என்பார்;
'ஒட்டிப் படர்ந்த தண்டகம், இவ் உலகத்து உளது அன்றோ? உணர்வைச்
சுட்டுச் சோர்தல் பழுது அன்றோ? தொடர்தும் தேரின் சுவடு' என்பார்.

76. உரிமை - உரிய இறுதிக்கடன்; 80. ஒட்டி - துணிந்து; சுட்டு - கெடுத்து.

**தேர்ச் சுவடு நகர் நோக்கிச் செல்லக் கண்டு, மக்கள் மகிழ்ந்து நகரத்திற்கு மீளுதல்**

தேரின் சுவடு நோக்குவார்; திரு மா நகரின் மிசைத் திரிய
ஊரும் திகிரிக் குறி ஒற்றி உணர்ந்தார்; எல்லாம் உயிர் வந்தார்;
'ஆரும் அஞ்சல்; ஐயன் போய் அயோத்தி அடைந்தான்' என, அசனிக்
காரும், கடலும், ஒருவழிக் கொண்டு ஆர்த்த என்னக் கடிது ஆர்த்தார்.

மான அரவின் வாய்த் தீய வளை வான் தொளை வாள் எயிற்றின்வழி
ஆன கடுவுக்கு, அரு மருந்தா அருந்தும் அமுதம் பெற்று உய்ந்து,
போன பொழுதில் புகுந்த உயிர் பொறுத்தார் ஒத்தார்—பொரு அரிய
வேனில் மதனை மதன் அழித்தான் மீண்டான் என்ன ஆண்டையோர்.

ஆறு செல்லச் செல்ல, தேர் ஆழி கண்டார், அயற்பால
வேறு சென்ற நெறி காணார்; விம்மா நின்ற உவகையராய்,
மாறி உலகம் வகுத்த நாள் வரம்பு கடந்து மண் முழுதும்
ஏறி ஒடுங்கும் எறிகடல்போல், எயில் மா நகரம் எய்தினர். 83

**நகர் வந்தோர் உண்மை உணர்ந்து வருந்த, வசிட்ட முனிவன் அவரைத் தேற்றுதல்**

புக்கார், 'அரசன் பொன்னுலகம் போனான்' என்னும் பொருள் கேட்டார்;
உக்கார், நெஞ்சம்; உயிர் உகுத்தார்; உற்றது எம்மால் உரைப்ப அரிதால்:
'தக்கான் போனான் வனம்' என்னும் தகையும் உணர்ந்தார்;—மிகை ஆவி
அக் காலத்தே அகலுமோ, அவதி என்று ஒன்று உளதானல்? 84

மன்னற்கு அல்லார்; வனம் போன மைந்தற்கு அல்லார்; வாங்க அரிய
இன்னற் சிறையின் இடைப்பட்டார், இருந்தார்; நின்ற அருந் தவனும்
'உன்னற்கு அரிய பழிக்கு அஞ்சி அன்றோ ஒழிந்தது யான்?' என்று,
பன்னற்கு அரிய பல நெறியும் பகர்ந்து, பதைப்பை நீக்கினன். 85

வெள்ளத்திடை வாழ் வட அனலை அஞ்சி வேலை கடவாத
பள்ளக் கடலின், முனி பணியால், பையுள் நகரம் வைகிட, மேல்
வள்ளல் தாதை பணி என்னும் வானோர் தவத்தால், வயங்கு இருளின்
நள்ளில் போன வரி சிலைக் கை நம்பி செய்கை நடத்துவாம். 86

82. மானம் - வலிமை, சினமும் ஆம்; 85. வாங்குதல் - நீக்குதல்;
86. பையுள் நகரம் - துன்புற்ற நகரமாந்தர்.

# 6 கங்கைப் படலம்

**இராமன் சீதையோடும் இலக்குவனேடும் வழி நடத்தல்**

வெய்யோன் ஒளி தன் மேனியின் விரி சோதியின் மறைய,
பொய்யோ எனும் இடையாளொடும், இளையானெடும் போனன்—
'மையோ, மரகதமோ, மறி கடலோ, மழை முகிலோ,
ஐயோ, இவன் வடிவு!' என்பது ஒர் அழியா அழகு உடையான். 1

**வழியிலுள்ள காட்சிகளைக் கண்டு, மூவரும் மகிழ்ந்து செல்லுதல்**

அளி அன்னது ஒர் அறல் துன்னிய குழலாள், கடல் அமுதின் [லாள்,
தெளிவு அன்னது ஒர் மொழியாள், நிறை தவம் அன்னது ஒர் செய
வெளி அன்னது ஒர் இடையாளொடும்—விடை அன்னது ஒர் நடையான்—
களி அன்னமும் மட அன்னமும் நடம் ஆடுவ கண்டான். 2

அஞ்சு அம்பையும் ஐயன் தனது அலகு அம்பையும் அளவா,
நஞ்சங்களை வெல ஆகிய நயனங்களை உடையாள்,
துஞ்சும் களி வரி வண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள். 3

மா கந்தமும், மகரந்தமும், அளகம் தரும் மதியின்
பாகம் தரும் நுதலாளொடு, பவளம் தரும் இதழான்,
மேகம் தனி வருகின்றது மின்னேடு என, மிளிர் பூண்
நாகம் தனி வருகின்றது பிடியோடு என, நடவா, 4

தொளை கட்டிய கிளை முட்டிய சுருதிச் சுவை அமுதின்,
கிளை கட்டிய கருவிக் கிளர் இசையின், பசை நறவின்,
விளை கட்டியின், மதுரித்து எழு கிளவிக் கிளி விழிபோல்,
களை கட்டவர் தளை விட்டு எறி குவளைத் தொகை கண்டான். 5

'அருப்பு ஏந்திய கலசத் துணை, அமுது ஏந்திய மத மா
மருப்பு ஏந்திய' எனல் ஆம் முலை, மழை ஏந்திய குழலாள்,
கருப்பு ஏந்திரம் முதலாயின கண்டாள், இடர் காணுள்,
பொருப்பு ஏந்திய தோளானெடு விளையாடினள், போனள். 6

6 : 2. அறல் - மயிரின் நெறிப்பு; வெளி - ஆகாயம்; 3. அலகு - கூர்மை; குழலின்படி - நெய் குழல் போல; 5. தொளை கட்டிய கிளை - வேய்ங்குழல்; கிளை கட்டிய கருவி - நரம்புகள் இணைக்கப்பட்ட யாழ்; பசை - சாரம்; கிளி - சீதை; தளை - வயல்; 6. கருப்பு ஏந்திரம் - கரும்பாலை.

பல் நந்து உகு தரளம் தொகு படர் பந்திகள் படு நீர்
அன்னம் துயில் வதி தண்டலை, அயல் நந்து உறை புளினம்,
சின்னம் தரும் மலர் சிந்திய செறி நந்தனவனம், நன்
பொன் உந்திய நதி, கண்டு உளம் மகிழ்தந்தனர், போனர். 7

கால் பாய்வன முது மேதிகள், கதிர் மேய்வன, கடைவாய்
பால் பாய்வன; நறை பாய்வன மலர்வாய் அளி படரச்
சேல் பாய்வன; கயல் பாய்வன; செங் கால் மட அன்னம்
போல், பாய் புனல், மடவார் படி நெடு நாடுஅவை போனர். 8

**கங்கைக் கரை சேர்தலும், தபோதனர் இராமனைக் காண வருதலும்**

பருதி பற்றிய பல் கலன் முற்றினர்,
மருத வைப்பின் வளம் கெழு நாடு ஒரீஇ,
கருதி சுற்று உயர் தோமிலர் சுற்றுறும்
விரி திரைப் புனல் கங்கையை மேவினர். 9

கங்கை என்னும் கடவுள் திரு நதி
தங்கி வைகும் தபோதனர் யாவரும்,
'எங்கள் செல் கதி வந்தது' என்று ஏமுறு,
அம் கண் நாயகற் காண, வந்து அண்மினர். 10

பெண்ணின் நோக்கும் சுவையை, பிறர் பிறர்க்கு
எண்ணி நோக்கி இயம்ப அரும் இன்பத்தை,
பண்ணின் நோக்கும் பரா அமுதை, பசுங்
கண்ணின் நோக்கினர், உள்ளம் களிக்கின்றார். 11

எதிர்கொடு ஏத்தினர்; இன் இசை பாடினர்;
வெதிர் கொள் கோலினர், ஆடினர்; வீரனை,
கதிர் கொள் தாமரைக் கண்ணனை, கண்ணினால்,
மதுர வாரி அமுது என, மாந்துவார். 12

**தவப் பள்ளிக்கு அழைத்துச் சென்று, தபோதனர் உபசரித்தல்**

மனையின் நீங்கிய மக்களை வைகலும்
நினையும் நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்,
அனையர் வந்துற, ஆண்டு எதிர்ந்தார்கள்போல்,
இனிய மா தவப் பள்ளிகொண்டு எய்தினர். 13

7. நீர் - நீர்த்துறைகள்; சின்னம் - விடு பூ; 9. முற்றுதல் - வெறுத்தல்; 11. பரா அமுது - மேலான அமுதம்; 12. வெதிர் - மூங்கில்; 13. நேடுதல் - தேடுதல்.

பொழியும் கண்ணின் புதுப் புனல் ஆட்டினர்;
மொழியும் இன் சொலின், மொய்ம் மலர் சூட்டினர்;
அழிவு இல் அன்பு எனும் ஆர் அமிர்து ஊட்டினர்;
வழியில் வந்த வருத்தத்தை வீட்டினர். 14

**நீராடி, எரி ஓம்பி அமுது செய்யுமாறு, இராமனை முனிவர் வேண்டுதல்**

காயும், கானில் கிழங்கும், கனிகளும்,
தூய தேடிக் கொணர்ந்தனர்; 'தோன்றல்! நீ
ஆய கங்கை அரும் புனல் ஆடினை,
தீயை ஓம்பினை, செய் அமுது' என்றனர். 15

**இராமன் சீதையோடு கங்கையில் நீராடுதல்**

மங்கையர்க்கு விளக்கு அன்ன மானையும்,
செங் கை பற்றினன், தேவரும் துன்பு அற,
பங்கயத்து அயன், பண்டு, தன் பாதத்தின்,
அம் கையின் தரும் கங்கையின் ஆடினான்.† 16

கன்னி நீக்க அருங் கங்கையும் கைதொழா,
'பன்னி நீக்க அரும் பாதகம், பாருளோர்,
என்னின் நீக்குவர்; யானும், இன்று என்-தந்த
உன்னின் நீக்கினென்; உய்ந்தனென் யான்' என்றாள்.† 17

வெங் கண் நாகக் கரத்தினன், வெண் நிறக்
கங்கை வார் சடைக் கற்றையன், கற்புடை
மங்கை காண நின்று ஆடுகின்றான், வகிர்த்
திங்கள் சூடிய செல்வனின் தோன்றினான்.† 18

தள்ளும் நீர்ப் பெருங் கங்கைத் தரங்கத்தால்,
வள்ளி நுண் இடை மா மலராளொடும்,
வெள்ளி வெண் நிறப் பாற் கடல், மேலைநாள்,
பள்ளி நீங்கிய பான்மையின், தோன்றினான்.† 19

வஞ்சி நாண இடைக்கு, மட நடைக்கு
அஞ்சி அன்னம் ஒதுங்க, அடி அன்ன
கஞ்சம் நீரில் ஒளிப்ப, கயல் உக,
பஞ்சி மெல் அடிப் பாவையும் ஆடினாள்.† 20

தேவதேவன் செறி சடைக் கற்றையுள்
கோவை மாலை எருக்கொடு கொன்றையின்
பூவும் நாறலள்; பூங்குழல் கற்றையின்
நாவி நாள்மலர் கங்கையும் நாறினாள்.† 21

நுரைக் கொழுந்து எழுந்து ஓங்கி நுடங்கலால்
நரைத்த கூந்தலின் நங்கை மந்தாகினி,
உரைத்த சீதை தனிமையை உன்னுவாள்,
திரைக்கை நீட்டி, செவிலியின் ஆட்டினள்.† 22

மங்கை வார் குழல் கற்றை மழைக் குலம்,
தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைப்பன,
கங்கை யாற்றுடன் ஆடும் கரியவள்
பொங்கு நீர்ச் சுழி போவன போன்றவே.† 23

சுழிபட்டு ஓங்கிய தூங்கு ஒலி ஆற்று, தன்
விழியின் சேல் உகள் வால் நிற வெள்ளத்து,
முழுகித் தோன்றுகின்றாள், முதல் பாற்கடல்-
அமுவத்து அன்று எழுவாள் எனல் ஆயினாள்.† 24

செய்ய தாமரைத் தாள் பண்டு தீண்டலால்,
வெய்ய பாதகம் தீர்த்து விளங்குவாள்
ஐயன் மேனி எலாம் அளைந்தாள், இனி,
வையம் மா நரகத்திடை வைகுமே?† 25

**இராமன் எரி ஓம்பி, முனிவர் அளித்த விருந்தை ஏற்று இருத்தல்**

துறை நறும் புனல் ஆடி, சுருதியோர்
உறையுள் எய்தி, உணர்வுடையோர் உணர்
இறைவற் கைதொழுது, ஏந்து எரி ஓம்பி, பின்
அறிஞர் காதற்கு அமை விருந்து ஆயினான். 26

வருந்தித் தான் தர வந்த அமுதையும்,
'அருந்தும் நீர்' என்று, அமரரை ஊட்டினான்,
விருந்து மெல் அடகு உண்டு விளங்கினான்—
திருந்தினார் வயின் செய்தன தேயுமோ? 27

## 7 குகப் படலம்

**குகன் காணிக்கை ஏந்தி, இராமனைக் காணத் தவப் பள்ளிக்கு வருதல்**

ஆய காலையின், ஆயிரம் அம்பிக்கு
நாயகன், போர்க் குகன் எனும் நாமத்தான்,
தூய கங்கைத் துறை விடும் தொன்மையான்,
காயும் வில்லினன், கல் திரள் தோளினான். 1

23. கரியவள் - காளிந்தி; 24. தூங்கு ஒலி - செறிந்த ஒலி; 25. பண்டு - திருமால் உலகளந்த பண்டைக்காலம்; 26. அறிஞர் - சுருதியோர்.

7: 1. அம்பி - ஓடம்.

துடியன், நாயினன், தோற் செருப்பு ஆர்த்த பேர்-
அடியன், அல் செறிந்தன்ன நிறத்தினன்,
நெடிய தானை நெருங்கலின், நீர் முகில்
இடியினேடு எழுந்தாலன்ன ஈட்டினன், 2

கொம்பு துத்தரி கோடு அதிர் பேரிகை
பம்பை பம்பு படையினன், பல்லவத்து
அம்பன், அம்பிக்கு நாதன், அழி கவுள்
தும்பி ஈட்டம் புரை கிளை சுற்றத்தான், 3

காழம் இட்ட குறங்கினன், கங்கையின்
ஆழம் இட்ட நெடுமையினன், அரை
தாழ விட்ட செந் தோலன், தயங்குறச்
சூழ விட்ட தொடு புலி வாலினன், 4

பல் தொடுத்தன்ன பல் சூல் கவடியன்,
கல் தொடுத்தன்ன போலும் கழலினன்,
அல் தொடுத்தன்ன குஞ்சியன், ஆளியின்
நெற்றொடு ஒத்து நெரிந்த புருவத்தான். 5

பெண்ணை வன் செறும்பின் பிறங்கிச் செறி
வண்ண வன் மயிர் வார்ந்து உயர் முன் கையன்,
கண் அகன் தட மார்பு எனும் கல்லினன்,
எண்ணெய் உண்ட இருள் புரை மேனியான், 6

கச்சொடு ஆர்த்த கறைக் கதிர் வாளினன்,
நச்சு அராவின் நடுக்குறு நோக்கினன்,
பிச்சராம் அன்ன பேச்சினன், இந்திரன்
வச்சிராயுதம் போலும் மருங்கினன், 7

ஊற்றமே மிக ஊனொடு மீன் நுகர்
நாற்றம் மேய நகை இல் முகத்தினன்,
சீற்றம் இன்றியும் தீ எழ நோக்குவான்,
கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினன்.* 8

சிருங்கிபேரம் எனத் திரைக் கங்கையின்
மருங்கு தோன்றும் நகர் உறை வாழ்க்கையன்,
ஒருங்கு தேனொடு மீன் உபகாரத்தன்,—
இருந்த வள்ளலைக் காண வந்து எய்தினன். 9

2. ஈட்டினன் - ஆற்றலுடையவன்; 3. பல்லவத்து அம்பு - இலை வடிவிலான அம்பு; கவுள் - கன்னம்; தும்பி ஈட்டம் - யானைக் கூட்டம்; 4. காழம் - ஒருவகை உடை; 5. கவடி - பலகறை; ஆளியின் நெற்று - ஆளி என்னும் செடியின் வற்றியுலர்ந்த காய்; 6. பெண்ணை - பனை.

சுற்றம் அப் புறம் நிற்க, சுடு கணை
வில் துறந்து, அரை வீக்கிய வாள் ஒழித்து,
அற்றம் நீத்த மனத்தினன், அன்பினன்,
நல் தவப் பள்ளி வாயிலை நண்ணினான். 10

குகனை இலக்குவன், 'யார்?' என வினாவி அறிந்து,
இராமனுக்கு அறிவித்தல்

கூவா முன்னம், இளையோன் குறுகி, 'நீ
ஆவான் யார்?' என, அன்பின் இறைஞ்சினான்;
'தேவா! நின் கழல் சேவிக்க வந்தனென்;
நாவாய் வேட்டுவன், நாய் அடியேன்' என்றான். 11

'நிற்றி ஈண்டு' என்று, புக்கு நெடியவன்-தொழுது, தம்பி,
'கொற்றவ! நின்னைக் காணக் குறுகினன், நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும், தானும்; உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்;
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை; குகன் ஒருவன்' என்றான்.

குகன் இராமனைக் கண்டு பணிந்து நிற்றல்

அண்ணலும் விரும்பி, 'என்பால் அழைத்தி நீ அவனை' என்ன,
பண்ணவன், 'வருக' என்ன, பரிவினன் விரைவில் புக்கான்;
கண்ணனைக் கண்ணின் நோக்கிக் கனிந்தனன்; இருண்ட குஞ்சி
மண் உறப் பணிந்து, மேனி வளைத்து, வாய் புதைத்து நின்றான்.

இராமன் குகனை, 'இரு' என, அவன் தான் கொணர்ந்த
கையுறைப் பொருளை அறிவித்தல்

'இருத்தி ஈண்டு' என்னலோடும் இருந்திலன்; எல்லை நீத்த
அருத்தியன், 'தேனும் மீனும் அமுதினுக்கு அமைவது ஆகத்
திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல் திருஉளம்?' என்ன, வீரன்
விருத்த மா தவரை நோக்கி முறுவலன், விளம்பலுற்றான்: 14

இராமன், குகனது அன்பைப் பாராட்டி, 'நாளை விடியலில்
நாவாயுடன் வருக' எனல்

'அரிய, தாம் உவப்ப, உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்தஎன்றால், அமிழ்தினும் சீர்த்த அன்றே?
பரிவினின் தழீஇயஎன்னின் பவித்திரம்; எம்மனோர்க்கும்
உரியன; இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?' என்றான்.

13. பண்ணவன் - வலிமையுடையவன்; 14. அருத்தி - அளவு கடந்த அன்பு.

சிங்கஏறு அனைய வீரன், பின்னரும் செப்புவான், 'யாம்
இங்கு உறைந்து, எறி நீர்க் கங்கை ஏறுதும் நாளை; யாணர்ப்
பொங்கும் நின் சுற்றத்தோடும் போய் உவந்து, இனிது உன் ஊரில்
தங்கி, நீ நாவாயோடும் சாருதி விடியல்' என்றான். 16

**குகன் வேண்டுகோள்**

கார் குலாம் நிறத்தான் கூற, காதலன் உணர்த்துவான், 'இப்
பார் குலாம் செல்வ! நின்னை, இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான், இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன்; ஆனது, ஐய! செய்குவென் அடிமை' என்றான். 17

கோதை வில் குரிசில், அன்னான் கூறிய கொள்கை கேட்டான்;
சீதையை நோக்கி, தம்பி திரு முகம் நோக்கி, 'தீராக்
காதலன் ஆகும்' என்று, கருணையின் மலர்ந்த கண்ணன்,
'யாதினும் இனிய நண்ப! இருத்தி ஈண்டு, எம்மொடு' என்றான்.

அடி தொழுது உவகை தூண்ட அழைத்தனன், ஆழி அன்ன
துடியுடைச் சேனை வெள்ளம் பள்ளியைச் சுற்ற ஏவி,
வடி சிலை பிடித்து, வாளும் வீக்கி, வாய் அம்பு பற்றி,
இடியுடை மேகம் என்ன இரைத்து அவண் காத்து நின்றான்.*

**நகர் நீங்கியமை அறிந்து, குகன் அங்கு இருத்தல்**

'திரு நகர் தீர்ந்த வண்ணம், மானவ! தெரித்தி' என்ன,
பருவரல் தம்பி கூற, பரிந்தவன் பையுள் எய்தி,
இரு கண் நீர் அருவி சோர, குகனும் ஆண்டு இருந்தான், 'என்னே!
பெரு நிலக் கிழத்தி நோற்றும், பெற்றிலள் போலும்' என்னா.

**கதிரவன் மறைதல்**

விரி இருட் பகையை ஓட்டி, திசைகளை வென்று, மேல் நின்று,
ஒரு தனித் திகிரி உந்தி, உயர் புகழ் நிறுவி, நாளும்
இரு நிலத்து எவர்க்கும் உள்ளத்து இருந்து, அருள் புரிந்து வீந்த
செரு வலி வீரன் என்ன, செங் கதிர்ச் செல்வன் சென்றான். 21

**இராமனும் சீதையும் உறங்க, இலக்குவன் காத்து நிற்றல்**

மாலைவாய் நியமம் செய்து மரபுளி இயற்றி, வைகல்,
வேலைவாய் அமுது அன்னாளும் வீரனும் விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர்; வரி வில் ஏந்திக்
காலைவாய் அளவும், தம்பி இமைப்பிலன், காத்து நின்றான். 22

22. நியமம் - கடமை; மாலை விரித்த நாணல்வாய் என இயையும்.

குகன், இராம-இலக்குவரை நோக்கிக் கண்ணீர் சோர நிற்றல்

தும்பியின் குழாத்தின் சுற்றும் சுற்றத்தன், தொடுத்த வில்லன்,
வெம்பி வெந்து அழியாநின்ற நெஞ்சினன், விழித்த கண்ணன்
தம்பி நின்றானை நோக்கி, தலைமகன் தன்மை நோக்கி,
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவி சோர் குன்றின் நின்றான்.

சூரியன் தோன்றத் தாமரை மலர்தல்

துறக்கமே முதல ஆய தூயன யாவையேனும்
மறக்குமா நினையல் அம்மா!—வரம்பு இல தோற்றும் மாக்கள்
இறக்குமாறு இது என்பான்போல் முன்னை நாள் இறந்தான், பின் நாள்,
பிறக்குமாறு இது என்பான்போல் பிறந்தனன்—பிறவா வெய்யோன்.

செஞ்செவே சேற்றில் தோன்றும் தாமரை, தேரில் தோன்றும்
வெஞ் சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த; வேறு ஓர்
அஞ்சன நாயிறு அன்ன ஐயனை நோக்கி, செய்ய
வஞ்சி வாழ் வதனம் என்னும் தாமரை மலர்ந்தது அன்றே. 25

காலைக் கடன் முடித்த இராமன், நாவாய் கொணருமாறு
குகனுக்குக் கட்டளையிடல்

நாள் முதற்கு அமைந்த யாவும் நயந்தனன் இயற்றி, நாமத்
தோள் முதற்கு அமைந்த வில்லான், மறையவர் தொடரப் போனான்,
ஆள் முதற்கு அமைந்த கேண்மை அன்பனை நோக்கி, 'ஐய!
கோள் முதற்கு அமைந்த நாவாய் கொணருதி விரைவின்' என்றான்.

குகன் தன் ஊரிலேயே இராமனைத் தங்குமாறு வேண்டுதல்

ஏவிய மொழி கேளா, இழி புனல் பொழி கண்ணான்,
ஆவியும் உலைகின்றான், அடி இணை பிரிகல்லான்,
காவியின் மலர், காயா, கடல், மழை, அனையானைத்
தேவியொடு அடி தாழா, சிந்தனை உரை செய்வான்: 27

'பொய்ம் முறை இலரால்; எம் புகல் இடம் வனமேயால்;
கொய்ம் முறை உறு தாராய்! குறைவிலெம்; வலியேமால்;
செய்ம்முறை குற்றேவல் செய்குதும்; அடியோமை
இம் முறை உறவு என்னா இனிது இரு நெடிது, எம் ஊர்; 28

'தேன் உள; தினை உண்டால்; தேவரும் நுகர்தற்கு ஆம்
ஊன் உள; துணை நாயேம் உயிர் உள; விளையாடக்
கான் உள; புனல் ஆடக் கங்கையும் உளது அன்றோ?
நான் உளதனையும் நீ இனிது இரு; நட, எம்பால்; 29

24. மறக்குமா - மறக்கும்படி; நினையல் - நினைக; 25. செஞ்செவே - மிக்க அழகுடையவாக; 26. நாள்முதல் - நாளின் முற்கூறாகிய காலை.

'தோல் உள, துகில்போலும்; சுவை உள; தொடர் மஞ்சம்
போல் உள பரண்; வைகும் புரை உள; கடிது ஓடும்
கால் உள; சிலை பூணும் கை உள; கலி வானின்-
மேல் உள பொருளேனும், விரைவொடு கொணர்வேமால்; 30

'ஐ-இருபத்தோடு ஐந்து ஆயிரர் உளர், ஆணை
செய்குநர், சிலை வேடர்; தேவரின் வலியாரால்;
உய்குதும் அடியேம்; எம் குடிலிடை, ஒரு நாள், நீ
வைகுதிஎனின், மேல் ஓர் வாழ்வு இலை பிறிது' என்றான். 31

இராமன், மீண்டு வரும்போது, குகனிடத்திற்கு வருவதாகக் கூறல்

அண்ணலும் அது கேளா, அகம் நிறை அருள் மிக்கான்,
வெண் நிற நகைசெய்தான்; 'வீர! நின்னுழை யாம் அப்
புண்ணிய நதி ஆடி, புனிதரை வழிபாடு உற்று,
எண்ணிய சில நாளில் குறுகுதும் இனிது' என்றான். 32

குகன் நாவாய் கொணர, மூவரும் ஏறிக் கங்கையைக் கடத்தல்

சிந்தனை உணர்கிற்பான் சென்றனன், விரைவோடும்;
தந்தனன் நெடு நாவாய்; தாமரை நயனத்தான்,
அந்தணர்தமை எல்லாம், 'அருளுதிர் விடை' என்னா,
இந்துவின் நுதலாளோடு இளவலொடு இனிது ஏறா, 33

'விடு, நனி கடிது' என்றான்; மெய உயிர் அனையானும்,
முடுகினன், நெடு நாவாய்; முரி திரை நெடு நீர்வாய்;
கடிதினின், மட அன்னக் கதிஅது செல, நின்றார்
இடர் உற, மறையோரும் எரி உறு மெழுகு ஆனார். 34

பால் உடை மொழியாளும், பகலவன் அனையானும்,
சேலுடை நெடு நல் நீர் சிந்தினர், விளையாட;
தோலுடை நிமிர் கோலின் துழவிட, எழு நாவாய்,
காலுடை நெடு ஞெண்டின், சென்றது கடிது அம்மா! 35

சாந்து அணி புளினத்தின் தட முலை உயர் கங்கை,
காந்து இன மணி மின்ன, கடி கமழ் கமலத்தின்
சேந்து ஒளி விரியும் தெண் திரை எனும் நிமிர் கையால்,
ஏந்தினள்; ஒரு தானே ஏற்றினள், இனிது அப்பால். 36

30. புரை - சிறு வீடு; 36. புளினம் - மணற்குன்று.

'சித்திரகூடத்திற்குச் செல்லும் வழி யாது?' என்று இராமன் குகனை வினுதல்

அத் திசை உற்று, ஐயன், அன்பனை முகம் நோக்கி,
'சித்திரகூடத்தின் செல் நெறி பகர்' என்ன,
பத்தியின் உயிர் ஈயும் பரிவினன் அடி தாழா,
'உத்தம! அடி நாயேன், ஓதுவது உளது' என்றான்: 37

தன்னையும் உடன் கொண்டு செல்லக் குகன் வேண்டுதல்

'நெறி, இடு நெறி வல்லேன்; நேடினென், வழுவாமல்,
நறியன கனி காயும், நறவு, இவை தர வல்லேன்;
உறைவிடம் அமைவிப்பேன்; ஒரு நொடி வரை, உம்மைப்
பிறிகிலென், உடன் ஏகப் பெறுகுவென்எனின், நாயேன்; 38

'தீயன வகை யாவும் திசை திசை செல நூறி,
தூயன உறை கானம் துருவினென் வர வல்லேன்;
மேயின பொருள் நாடித் தருகுவென்; வினை முற்றும்
ஏயின செய வல்லேன்; இருளினும் நெறி செல்வேன்; 39

'கல்லுவென் மலை; மேலும், கவலையின் முதல் யாவும்;
செல்லுவென் நெறி தூரம்; செறி புனல் தர வல்லேன்;
வில்இனம் உளென்; ஒன்றும் வெருவலென்; இருபோதும்,
மல்லினும் உயர் தோளாய்! மலர் அடி பிரியேனல்; 40

'திருஉளம்எனின், மற்று என் சேனையும் உடனே கொண்டு,
ஒருவலென் ஒருபோதும் உறைகுவென்; உளர் ஆனார்
மருவலர்எனின், முன்னே மாள்குவென்; வசை இல்லேன்;
பொரு அரு மணி மார்பா! போதுவென், உடன்' என்றான். 41

இராமன், குகனை அவன் கிளைஞர்களுடன் இருக்கப் பணித்தல்

அன்னவன் உரை கேளா, அமலனும் உரைநேர்வான்:
'என் உயிர் அனையாய் நீ; இளவல் உன் இளையான்; இந்
நன்னுதலவள் நின் கேள்; நளிர் கடல் நிலம் எல்லாம்
உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்.'

'துன்பு உளதுஎனின் அன்றோ சுகம் உளது? அது அன்றிப்
பின்பு உளது; "இடை, மன்னும் பிரிவு உளது" என, உன்னேல்;
முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா
அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்; 43

38. நெறி - பெருவழி; இடு நெறி - சிறு வழி, ஒற்றையடிப் பாதை;
40. கவலை - குறிஞ்சி நிலத்தில் கிடைக்கும் ஒருவகைக் கிழங்கு.

'படர் உற உளன், உம்பி, கான் உறை பகல் எல்லாம்;
இடர் உறு பகை யா? போய், யான் என உரியாய் நீ;
சுடர் உறு வடி வேலாய்! சொல் முறை கடவேன் யான்;
வட திசை வரும் அந் நாள், நின்னுழை வருகின்றேன். 44

'அங்கு உள கிளை காவற்கு அமைதியின் உளன், உம்பி;
இங்கு உள கிளை காவற்கு யார் உளர்? உரை செய்யாய்;
உன் கிளை எனது அன்றோ? உறு துயர் உறல் ஆமோ?
என் கிளை இது கா, என் ஏவலின் இனிது' என்றான். 45

**குகன் விடை பெற, மூவரும் வனத்துள் செல்லுதல்**

பணி மொழி கடவாதான், பருவரல் இகவாதான்,
பிணி உடையவன் என்னும் பிரிவினன், விடைகொண்டான்;
அணி இழை மயிலோடும் ஐயனும் இளையோனும்
திணி மரம் நிறை கானில் சேணுறு நெறி சென்றார். 46

## 8 வனம் புகு படலம்

**காட்டு வழியில் இராமன் முதலியோர் செல்லுதல்**

பூரியர் புணர் மாதர் பொது மனம் என, மன்னும்
ஈரமும், 'உளது, இல்' என்று அறிவு அரும் இளவேனில்,
ஆரியன் வரலோடும், அமுது அளவிய சீதக்
கார் உறு குறி மானக் காட்டியது, அவண் எங்கும். 1

வெயில், இள நிலவேபோல், விரி கதிர் இடை வீச,
பயில் மரம் நிழல் ஈன, பனி புரை துளி மேகப்
புயல் தர, இள மென் கால் பூ அளவியது எய்த,
மயிலினம் நடம் ஆடும் வழி இனியன போனார். 2

**இராமன், சீதைக்கு வழியிடைக் காட்சி காட்டல்**

'மன்றலின் மலி கோதாய்! மயில் இயல் மட மானே!—
இன் துயில் வதி கோபத்து இனம் விரிவன எங்கும்,
கொன்றைகள் சொரி போதின் குப்பைகள், குல மாலைப்
பொன் திணி மணி மானப் பொலிவன—பல—காணாய்! 3

8: 1. பூரியர் - கீழ்மக்கள்; ஈரம் - அன்பு, நீர்க்கசிவு; 2. பயிலுதல் - செறிதல்.

'பாண், இள மிஞிறு ஆக, படு மழை பணை ஆக,
நாணின தொகு பீலி கோலின நடம் ஆடல்,
''பூணியல் நின சாயல் பொலிவது பல கண்ணின்
காணிய'' எனல் ஆகும், களி மயில்—இவை காணாய்! 4

'சேந்து ஒளி விரி செவ் வாய்ப் பைங் கிளி, செறி கோலக்
காந்தளின் மலர் ஏறிக் கோதுவ,—கவின் ஆரும்
மாந் தளிர் நறு மேனி மங்கை!—நின் மணி முன்கை
ஏந்தின எனல் ஆகும் இயல்பின; இவை காணாய்! 5

'நெய்ஞ் ஞிறை நெடு வேலின் நிறம் உறு திறம் முற்றிக்
கைஞ் ஞிறை நிமிர் கண்ணாய்!—கருதின இனம் என்றே
மெய்ஞ் ஞிறை விரி சாயல் கண்டு, நின் விழி கண்டு,
மஞ்ஞையும் மட மானும் வருவன பல—காணாய்! 6

'பூ அலர் குரவோடும் புடை தவழ் பிடவு ஈனும்
மா அலர் சொரி சூழல், துயில் எழு மயில் ஒன்றின்
தூவியின் மணம் நாற, துணை பிரி பெடை, தான் அச்
சேவலொடு உற ஊடித் திரிவதன் இயல் காணாய்! 7

'அருந்ததி அனையாளே! அமுதினும் இனியாளே!—
செருந்தியின் மலர் தாங்கும் செறி இதழ்வன சோகம்
பொருந்தின களி வண்டின் பொலிவன, பொன் ஊதும்
இருந்தையின் எழு தீ ஒத்து எழுவன;—இயல் காணாய்! 8

'ஏந்து இள முலையாளே! எழுத அரு எழிலாளே!
காந்தளின் முகை கண்ணின் கண்டு, ஒரு களி மஞ்ஞை,
'பாந்தள் இது' என உன்னி, கவ்விய படி பாரா,
தேம் தளவுகள் செய்யும் சிறு குறுநகை—காணாய்! 9

'குன்று உறை வய மாவின் குருளையும், இருள் சிந்திப்
பின்றினது எனல் ஆகும் பிடி தரு சிறு மாவும்,
அன்றில பிரிவு ஒல்லா; அண்டர்தம் மனை ஆவின்
கன்றொடு விளையாடும் களியன பல—காணாய்! 10

4. நாணுதல் - குவிதல்; கோலுதல் - விரித்தல்; 5. சேந்து - சிவந்து; 6. நிறம் உறு திறம் - மார்பை ஊடுருவிச் செல்லும் ஆற்றல்; 8. செருந்திப் பூவுக்குப் பொன்னும், அசோக மலருக்கு நெருப்பும், வண்டுக்குக் கரியும் உவமை; இருந்தை - கரி; 9. பாந்தள் - பாம்பு; தளவு - முல்லை; 10. வய மா - சிங்கம், புலியும் ஆம்; பின்றுதல் - பின்னுதல், இணைத்தல்; அன்று - பகை.

'அகில் புனை குழல் மாதே! அணி இழை எனல் ஆகும்
நகு மலர் நிறை மாலைக் கொம்புகள், நதிதோறும்
துகில் புரை திரை நீரில் தோய்வன, துறை ஆடும்
முகிழ் இள முலையாரின் மூழ்குவ பல—காணாய்! 11

'முற்றுறு முகை கிண்டி, முரல்கில சில தும்பி,
வில் திரு நுதல் மாதே! அம் மலர் விரி கோங்கின்
சுற்று உறு மலர் ஏறித் துயில்வன, சுடர் மின்னும்
பொன் தகடு உறு நீலம் புரைவன பல—காணாய்! 12

'கூடிய நறை வாயில் கொண்டன, விழி கொள்ளா
மூடிய களி மன்ன, முடுகின நெறி காணா,
ஆடிய, சிறை மா வண்டு, அந்தரின், இசை முன்னம்
பாடிய பெடை கண்ணா வருவன பல—காணாய்! 13

'கன்னியர் அணி கோலம் கற்று அறிகுநர் என்ன,
பொன் அணி நிற வேங்கை கோங்குகள், புது மென் பூ,
அன்ன மென் நடையாய்! நின் அளக நல் நுதல் அப்பும்
சின்ன மென் மலர் மானச் சிந்துவ பல—காணாய்! 14

'மணம் கிளர் மலர், வாச மாருதம் வர வீச,
கணம் கிளர்தரு சுண்ணம், கல்லிடையன, கானத்து;
அணங்கினும் இனியாய்! உன் அணி வட முலை முன்றில்
சுணங்கினம் அவை மானத் துறுவன—அவை காணாய்! 15

' ''அடி இணை பொறைகல்லா'' என்றுகொல், அதர் எங்கும்,
இடை இடை மலர் சிந்தும் இன மரம்?—இவை காணாய்!
கொடியினொடு இள வாசக் கொம்புகள், குயிலே! உன்
துடி புரை இடை நாணித் துவள்வன—அவை காணாய்! 16

'வாள் புரை விழியாய்! உன் மலர் அடி அணி மானத்
தாள் புரை தளிர் வைகும் தகை ஞிமிறு—இவை காணாய்!
கோள் புரை இருள் வாசக் குழல் புரை மழை—காணாய்!
தோள் புரை இள வேயின் தொகுதிகள்—அவை காணாய்! 17

'பூ நனை சினை துன்றி; புள் இடை இடை பம்பி,
நால் நிற நளிர் வல்லிக் கொடி நவை இல பல்கி,
மான்இனம், மயில் மாலை, குயில்இனம், வதி கானம்—
தீ நிகர் தொழில் ஆடைத் திரை பொருவன—பாராய்!' 18

13. அந்தர் - குருடர்; 14. சின்னம் - விடு பூ; 15. துறுதல் - செறிதல்; 16. பொறைகல்லா - பொறுக்கலாற்று; 17. தாள் - காம்பு; 18. பம்புதல் - நிறைதல்; தொழில் - சித்திர வேலைப்பாடு; ஆடைத்திரை - திரைச்சீலை.

சித்திரகூட மலையின் தோற்றம்

என்று, நல் மடவாளோடு இனிதினின் விளையாடி,
பொன் திணி திரள் தோளான்; போயினன் நெறி; போதும்
சென்றது குடபால்; 'அத் திரு மலை இது அன்றோ?'
என்றனன்; 'வினை வென்றோர் மேவு இடம்' எனலோடும், 19

பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொள்ள வருதல்

அருத்தியின் அகம் விம்மும் அன்பினன், 'நெடு நாளில்
திருத்திய வினை முற்றிற்று இன்று' எனல் தெரிகின்றான்,
பரத்துவன் எனும் நாமப் பர முனி, பவ நோயின்
மருத்துவன் அனையானை, வரவு எதிர்கொள வந்தான். 20

குடையினன்; நிமிர் கோலன்; குண்டிகையினன்; மூரிச்
சடையினன்; உரி மானின் சருமன்; நல் மர நாரின்
உடையினன்; மயிர் நாலும் உருவினன்; நெறி பேணும்
நடையினன்; மறை நாலும் நடம் நவில்தரு நாவான்; 21

செந் தழல் புரி செல்வன்; திசைமுக முனி செவ்வே
தந்தன உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும்
அந்தணன்; 'உலகு ஏழும் அமை' எனின், அமரேசன்
உந்தியின் உதவாமே, உதவிடு தொழில் வல்லான். 22

முனிவன், இராமன் வனம் வந்த காரணம் வினவுதல்

அம் முனி வரலோடும், அழகனும், அலர் தூவி
மும் முறை தொழுதான்; அம் முதல்வனும், எதிர் புல்லி,
'இம் முறை உருவோ நான் காண்குவது?' என உள்ளம்
விம்மினன்; இழி கண்ணீர் விழி வழி உக நின்றான். 23

'அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை; அது தீர,
புகல் இடம் எமது ஆகும் புரையிடை, இது நாளில்,
தகவு இல தவ வேடம் தழுவினை வருவான் என்—
இகல் அடு சிலை வீர!—இளையவனொடும்?' என்றான். 24

இராமன் கூறியவை கேட்டு, முனிவன் நொந்து உரைத்தல்

உற்று உள பொருள் எல்லாம் உணர்வுற உரைசெய்தான்;
நல் தவ முனி, 'அந்தோ! விதி தரு நவை!' என்பான்,
'இற்றது செயல் உண்டோ இனி?' என, இடர் கொண்டான்,
'பெற்றிலள் தவம், அந்தோ! பெரு நிலமகள்' என்றான். 25

19. குடபால் - மேலைத்திசை; 21. மூரிச்சடை - பெரிய சடை; சருமம் - தோல்; 22. திசைமுக முனி - பிரமன்.

'''துப்பு உறழ் துவர் வாயின் தூய் மொழி மயிலோடும்
அப்பு உறு கடல் ஞாலம் ஆளுதி கடிது'' என்ன,
ஒப்பு அறும் மகன் உன்னை, ''உயர் வனம் உற ஏகு'' என்று,
எப் பரிசு உயிர் உய்ந்தான் என் துணையவன்?' என்றான். 26

முனிவன் விருந்தோம்பல்

'அல்லலும் உள; இன்பம் அணுகலும் உள அன்றோ?
நல்லவும் உள; செய்யும் நவைகளும் உள; அந்தோ!
இல்லை ஓர் பயன் நான் இன்று இடர் உறும் இதின்' என்னா,
புல்லினன், உடனே கொண்டு, இனிது உறை புரை புக்கான். 27

புக்கு, உறைவிடம் நல்கி, பூசனை முறை பேணி,
தக்கன கனி காயும் தந்து, உரைதரும் அன்பால்
தொக்க நல் முறை கூறி, தூயவன் உயிர்போலும்
மக்களின் அருள் உற்றான்; மைந்தரும் மகிழ்வு உற்றார். 28

முனிவன் தன்னுடன் உறையுமாறு இராமனை வேண்டுதல்

வைகினர் கதிர் நாறும் அளவையின் மறையோனும்,
'உய்குவெம் இவனோடு யாம் உடன் உறைதலின்' என்பான்,
செய்தனன் இனிது எல்லாம்; செல்வனை முகம் முன்னா,
'கொய் குல மலர் மார்ப! கூறுவது உளது' என்றான்: 29

'நிறையும், நீர், மலர், நெடுங் கனி, கிழங்கு, காய் கிடந்த;
குறையும் தீயவை; தூயவை குறைவு இல; எம்மோடு
உறையும் இவ் வழி, ஒருங்கினில் உயர் தவம் முயல்வார்க்கு
இறையும், ஈது அலாது இனியது ஓர் இடம் அரிது: இன்னும்,

'கங்கையாளொடு கரியவள், நாமகள், கலந்த
சங்கம் ஆதலின், பிரியலென்; தாமரைச் செங்கண்
அம் கண் நாயக! அயனுக்கும், அரும் பெறல் தீர்த்தம்;
எங்கள் போலியர் தரத்தது அன்று; இருத்திர் ஈண்டு' என்றான்.

இராமன் தன் இயலாமை கூறல்

பூண்ட மா தவன், அம் மொழி விரும்பினன் புகல,
'நீண்டது அன்று இது நிறை புனல் நாட்டுக்கு; நெடு நாள்,
மாண்ட சிந்தைய! இவ் வழி வைகுவென் என்றால்,
ஈண்ட யாவரும் நெருங்குவர்' என்றனன் இராமன். 32

26. துப்பு - பவழம்; துவர் - சிவப்பு; 30. நெடுங் கனி - அளவற்ற பழம்;
31. கரியவள் - யமுனை.

முனிவனின் அறிவுரை

'ஆவது உள்ளதே; ஐய! கேள்; ஐ-இரண்டு அமைந்த
காவதப் பொழிற்கு அப் புறம் கழிந்தபின், காண்டி;
மேவு காதலின் வைகுதிர்—விண்ணினும் இனிதால்;
தேவர் கைதொழும் சித்திரகூடம் என்று உளதே.' 33

முனிவனிடம் விடைபெற்று யமுனைக்கரை அடைதல்

என்று காதலின் ஏயினன்; அடி தொழுது ஏத்தி,
கொன்றை வேய்ங் குழல் கோவலர் முல்லை, அம் குடுமி
சென்று செங் கதிர்ச் செல்வனும் நடு உற, சிறு மான்
கன்று நீர் நுகர் காளிந்தி எனும் நதி கண்டார். 34

அந்த ஆற்றில் நீராடி, கனி கிழங்கு உண்டு, நீர் அருந்துதல்

ஆறு கண்டனர்; அகம் மகிழ்ந்து இறைஞ்சினர்; அறிந்து,
நீறு தோய் மணி மேனியர் நெடும் புனல் படிந்தார்;
ஊறும் மென் கனி கிழங்கினோடு உண்டு, நீர் உண்டார்;
'ஏறி ஏகுவது எங்ஙனம்?' என்றலும், இளையோன், 35

இலக்குவன் தெப்பம் அமைத்து, இருவரையும் அக்கரை சேர்த்தல்

வாங்கு வேய்ங் கழை துணித்தனன்; மாணையின் கொடியால்,
ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து, அதன் உம்பரின், உலம்போல்
வீங்கு தோள் அண்ணல் தேவியோடு இனிது வீற்றிருப்ப,
நீங்கினான், அந்த நெடு நதி, இரு கையால் நீந்தி. 36

ஆலை பாய் வயல் அயோத்தியர் ஆண்தகைக்கு இளையான்
மாலை மால் வரைத் தோள் எனும் மந்தரம் திரிய,
காலை வேலையைக் கடந்தது, கழிந்த நீர்; கடிதின்
மேலை வேலையில் பாய்ந்தது, மீண்ட நீர் வெள்ளம். 37

பின்னர், பாலை நிலம் ஒன்றில் புகுதல்

அனையர், அப் புனல் ஏறினர்; அக் கரை அணைந்தார்;
புனையும் வற்கலைப் பொற்பினர் நெடு நெறி போனார்;
சினையும் மூலமும் முகடும் வெந்து, இரு நிலம் தீய்ந்து,
நினையும் நெஞ்சமும் சுடுவது ஓர் நெடுஞ் சுரம் நேர்ந்தார். 38

34. காளிந்தி - யமுனை; 36. உலம் - திரண்ட கல்; 37. காலை வேலை - கீழ் கடல்; மேலை வேலை - மேல் கடல்; 38. மூலம் - வேர்; முகடு - வான் முகடு.

இராமன் நினைவால் பாலை மாறிய பாங்கு

'நீங்கல் ஆற்றலள் சனகி' என்று, அண்ணலும் நினைந்தான்;
ஓங்கு வெய்யவன், உடுபதி எனக் கதிர் உகுத்தான்;
தாங்கு வெங் கடத்து உலவைகள் தழை கொண்டு தழைத்த;
பாங்கு வெங் கனல், பங்கய வனங்களாய்ப் பரந்த; 39

வறுத்து வித்திய அனையன வல் அயில் பரல்கள்,
பறித்து வித்திய மலர் எனக் குளிர்ந்தன; பசைந்த;
இறுத்து எறிந்தன வல்லிகள் இளந் தளிர் ஈன்ற;
கறுத்த வாள் அரவு எயிற்றினூடு அமுது உகக் களித்த; 40

குழுமி மேகங்கள் குமுறின, குளிர் துளி கொணர்ந்த;
முழு வில் வேடரும், முனிவரின் முனிகிலர், உயிரை;
தழுவி நின்றன, பசி இல, பகை இல, தணிந்த,
உழுவையின் முலை மான் இளங் கன்றுகள் உண்ட; 41

கல் அளைக் கிடந்து அகடு வெந்து அயர்கின்ற கதழ் பாம்பு,
அல்லல் உற்றில, அலை புனல் கிடந்தன அனைய;
வல்லை உற்ற வேய், புற்றெடும் எரிவன, மணி வாழ்
புல் எயிற்று இளங் கன்னியர் தோள் எனப் பொலிந்த; 42

படர்ந்து எழுந்த புல், பசு நிறக் கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன; கேகயம் தோகைகள் கிளர,
மடந்தைமார் என, நாடகம் வயின்தொறும் நவின்ற;
தொடர்ந்து பாணரின் பாங்கு இசை முரன்றன தும்பி; 43

காலம் இன்றியும் கனிந்தன கனி; நெடுங் கந்தம்,
மூலம் இன்றியும் முகிழ்த்தன, நிலன் உற முழுதும்;
கோல மங்கையர் ஒத்தன, கொம்பர்கள்;—இன்பச்
சீலம் அன்றியும், செய் தவம் வேறும் ஒன்று உளதோ? 44

எயினர் தங்கு இடம் இருடிகள் இருப்பிடம் ஏய்ந்த;
வயின்வயின்தொறும், மணி நிறக் கோபங்கள் மலர்ந்த;
பயில் மரம்தொறும், பரிந்தன பேடையைப் பயிலும்
குயில் இரங்கின; குருந்தம் நின்று அரும்பின முருந்தம்; 45

பந்த ஞாட்புறு பாசறை, பொருள்வயின், பருவம்
தந்த கேள்வரை உயிர் உறத் தழுவினர், பிரிந்த
கந்த ஓதியர் சிந்தையின் கொதிப்பது—அக் கழலோர்
வந்த போது, அவர் மனம் எனக் குளிர்ந்தது—அவ் வனமே! 46

41. உழுவை - பெண்புலி; 42. கல் அளை - கல்லிடுக்கு; வல்லை - பெருங் காடு; புல் எயிறு - சிறிய பல்; 45. முருந்தம் - மயிலிறகின் அடிக்குருத்து; குருந்தின் அரும்புக்கு மயிலிறகின் அடிக்குருத்து உவமை; 46. ஞாட்பு - போர்.

**மூவரும் சித்திரகூடத்தைக் காணுதல்**

வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப் போனார்,
குளிறும் வான் மதிக் குழவி, தன் சூல் வயிற்று ஒளிப்ப,
பிளிறு மேகத்தைப் பிடி என, பெரும் பனைத் தடக் கை
களிறு நீட்டும் அச் சித்திரகூடத்தைக் கண்டார். 47

## 9 சித்திரகூடப் படலம்

**இராமன் சீதைக்குச் சித்திரகூடத்தின் இயற்கை வளங்களைக் காட்டுதல்**

நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து, ஒரு நெறி நின்ற
அனகன், அம் கணன், ஆயிரம் பெயருடை அமலன்,
சனகன் மா மடமயிற்கு அந்தச் சந்தனம் செறிந்த
கனக மால் வரை இயல்பு எலாம் தெரிவுறக் காட்டும். 1

'வாளும் வேலும் விட்டு அளாயின அனைய கண் மயிலே!
தாளின் ஏலமும் தமாலமும் தொடர்தரு சாரல்,
நீள மாலைய துயில்வன நீர் உண்ட கமஞ் சூல்
காளமேகமும் நாகமும் தெரிகில—காணாய்! 2

'குருதி வாள் எனச் செவ் அரி பரந்த கண் குயிலே!
மருவி மால் வரை உம்பரில் குதிக்கின்ற வருடை,
சுருதிபோல் தெளி மரகதக் கொழுஞ் சுடர் சுற்ற,
பருதி வானவன் பசும் பரி புரைவன—பாராய்! 3

'வடம் கொள் பூண் முலை மட மயிலே! மதக் கதமா
அடங்கு பேழ் வயிற்று அரவு உரி அமைதொறும் தொடக்கி,
தடங்கள்தோறும் நின்று ஆடுவ, தண்டலை அயோத்தி
நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன—நோக்காய்! 4

'உவரிவாய் அன்றிப் பாற்கடல் உதவிய அமுதே!
துவரின் நீள் மணித் தடம்தொறும் இடம்தொறும் துவன்றி,
கவரி மால் நிற வால் புடைபெயர்வன, கடிதின்
பவள மால் வரை அருவியைப் பொருவிய—பாராய்! 5

47. வெளிறு - குற்றம்.

9: 2. தமாலம் - பச்சிலை மரங்கள்; நாகம் - யானை; 3. வருடை - மலையாடு; சுருதி - இசை; 4. பேழ்வயிறு - பெரிய வயிறு.

'சலம் தலைக்கொண்ட சீயத்தால், தனி மதக் கத மா
உலந்து வீழ்தலின் சிந்தின உதிரத்தில், மடவார்
புலந்த காலை அற்று உக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்து என, வேழ முத்து இமைப்பன—காணாய்!* 6

'நீண்ட மால் வரை மதி உற, நெடு முடி நிவந்த
தூண்டு மா மணிச் சுடர் சடைக் கற்றையின் தோன்ற,
மாண்ட வால் நிற அருவி அம் மழ விடைப் பாகன்
காண் தகும் சடைக் கங்கையை நிகர்ப்பன—காணாய்!* 7

'தொட்ட வார் சுனை, சுடர் ஒளி மணியொடும் தூவி
விட்ட சென்றன, விடா மத மழை அன வேழம்
வட்ட வேங்கையின் மலரொடும் ததைந்தன, வயங்கும்
பட்டம் நெற்றியில் சுற்றிய போல்வன—பாராய்! 8

'இழைந்த நூல் இணை மணிக் குடம் சுமக்கின்றது என்னக்
குழைந்த நுண் இடைக் குவி இள வன முலைக் கொம்பே!
தழைந்த சந்தனச் சோலை தன் செலவினைத் தடுப்ப,
நுழைந்து போகின்றது ஒக்கின்ற மதியினை நோக்காய்! 9

'உருகு காதலின் தழைகொண்டு மழலை வண்டு ஓச்சி,
முருகு நாறு செந் தேனினை முழைநின்றும் வாங்கி,
பெருகு சூல் இளம் பிடிக்கு ஒரு பிறை மருப்பு யானை,
பருக, வாயினில், கையின்நின்று அளிப்பது—பாராய்! 10

'அளிக்கும் நாயகன் மாயை புக்கு அடங்கினன்எனினும்,
களிப்பு இல் இந்தியத்து யோகியைக் கரக்கிலன்; அதுபோல்,
ஒளித்து நின்றுளர் ஆயினும் உருத் தெரிகின்ற
பளிக்கு அறைச் சில பரிமுக மாக்களைப்—பாராய்! 11

'ஆடுகின்ற மா மயிலினும் அழகிய குயிலே!
கூடுகின்றிலர், கொடிச்சியர் தம் மனம் கொதிப்ப
ஊடுகின்றனர், கொழுநரை உருகினர் நோக்கப்
பாடுகின்றன, கின்னர மிதுனங்கள்—பாராய்! 12

6. உலத்தல் - சாதல்; குங்குமப் பொதி - குங்குமக் குழம்பு; 7. மாணிக்க மணியின் ஒளி சடைக் கற்றைக்கு உவமை; 8. தொடுதல் - கைக்கொள்ளுதல்; வார் சுனை - நீண்ட சுனை, இங்குச் சுனை நீர்; 9. இழைந்த - நுணுகிய; 11. அளிக்கும் நாயகன் - காக்கும் தலைவனாகிய திருமால்; பரிமுக மாக்கள் - கின்னரர்.

'வில்லி வாங்கிய சிலை எனப் பொலி நுதல் விளக்கே!
வல்லிதாம் குழை தாக்கலின் வழிந்து இழி பிரசம்,
கொல்லி வாங்கிய குன்றவர் கொடி நெடுங் கவலை
கல்லி வாங்கிய குழிகளை நிறைப்பன—காணாய்! 13

'ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே!
மருவு காதலின் இனிது உடன் ஆடிய மந்தி
அருவி நீர்கொடு வீச, தான் அப் புறத்து ஏறி,
கருவி மா மழை உதிர்ப்பது ஓர் கடுவனைக்—காணாய்! 14

'வீறு பஞ்சினில் அமிழ்த நெய் மாட்டிய விளக்கே!
சீறு வெங் கதிர் செறிந்தன, பேர்கல, திரியா
மாறு இல் மண்டிலம் நிரம்பிய மாணிக்க மணிக்கல்-
பாறை மற்று ஒரு பரிதியின் பொலிவது—பாராய்! 15

'சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே!
நீல வண்டினம் படிந்து எழ, வளைந்து உடன் நிமிர்வ
கோல வேங்கையின் கொம்பர்கள், பொன் மலர் தூவிக்
காலினில் தொழுது எழுவன நிகர்ப்பன—காணாய்! 16

'வில் கொள் வாள் நுதல், விளங்கு இழை, இளந் தளிர்க் கொழுந்தே!
எல் கொள் மால் வரை உம்பரின், இரும் புனம் காக்கும்
கொல் கொள் வேல் கணார் குரீஇஇனத்து எறி குருவிந்தக்
கற்கள், வானிடை மீன் என வீழ்வன—காணாய்! 17

'வரி கொள் ஒண் சிலை வயவர்தம் கணிச்சியின் மறித்த
பரிய கால் அகில் சுட, நிமிர் பசும் புகைப் படலம்,
அரிய வேதியர் ஆகுதிப் புகையொடும் அளவி,
கரிய மால் வரைக் கொழுந்து எனப் படர்வன—காணாய்! 18

'நானம், நாள்மலர், நறை, அகில், நாவி, தேன், நாறும்
சோலை வார் குழற் சுமை பொருது இறும் இடைத் தோகாய்!
வான யாறு மீன் மலர்ந்தன என, புனல் வறந்த
கான யாறுகள் கதிர் மணி இமைப்பன—காணாய்! 19

13. வாங்குதல் - வளைத்தல், கேட்டல், எடுத்தல்; கொல்லி - ஒரு வகைப் பண்; 14. ஒருவுதல் - நீங்குதல்; கருவி - தொகுதி; 15. வீறு பஞ்சு - சிறந்த பஞ்சினாலாகிய திரி; சீறுதல் - காய்தல்; 17. உம்பர் - உச்சி; குருவிந்தக் கற்கள் - மாணிக்கக் கற்கள்; 18. கணிச்சி - கோடாலி; கொழுந்து - சிகரம்; 19. நானம் - புழுகு; நாவி - கத்தூரி.

'மஞ்சு அளாவிய மாணிக்கப் பாறையில் மறைவ,
செஞ்செவே நெடு மரகதப் பாறையில் தெரிவ,
விஞ்சை நாடியர் கொழுநரோடு ஊடிய விமலப்
பஞ்சு அளாவிய சீறடிச் சுவடுகள்—பாராய்! 20

'சுழித்த செம்பொனின் தொளைபுரை உந்தியின் துணையே!
கொழித்த மா மணி அருவியொடு இழிவன, கோலம்
அழித்து மேவிய அரம்பையர் அறல் புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக நறு மலர்—காணுய்! 21

'அறை கழல் சிலைக் குன்றவர் அகன் புனம் காவல்
பறை எடுத்து, ஒரு கடுவன் நின்று அடிப்பது—பாராய்!
பிறையை எட்டினள் பிடித்து, ''இதற்கு இது பிழை'' என்ன,
கறை துடைக்குறும் பேதை ஓர் கொடிச்சியைக்—காணுய்! 22

'அடுத்த பல் பகல் அன்பரின் பிரிந்தவர் என்பது
எடுத்து நம்தமக்கு இயம்புவ என, கரிந்து இருண்ட
தொடுத்த மாதவிச் சூழலில், சூர் அரமகளிர்
படுத்து வைகிய பல்லவ சயனங்கள்—பாராய்! 23

'நினைந்த போதினும் அமிழ்து ஒக்கும் நேரிழை! நிறை தேன்
வனைந்த வேங்கையில், கோங்கினில், வயின்தொறும் தொடுத்துக்
குனிந்த ஊசலில், கொடிச்சியர் எடுத்த இன் குறிஞ்சி
கனிந்த பாடல் கேட்டு, அசுணமா வருவன—காணுய்! 24

'இலவும் இந்திரகோபமும் புரை இதழ் இனியோய்!
அலவும் நுண் துளி அருவி நீர், அரம்பையர் ஆட,
கலவை, சாந்து, செங் குங்குமம், கற்பகம் கொடுத்த
பலவும், தோய்தலின் பரிமளம் கமழ்வன—பாராய்! 25

'செம் பொனுல் செய்து, குலிகம் இட்டு எழுதிய செப்பு ஓர்
கொம்பு தாங்கியது எனப் பொலிவன முலைக் கொடியே!
அம் பொன் மால் வரை, அலர் கதிர் உச்சி சென்று அணுக,
பைம் பொன் மா முடி மிலைச்சியது ஒப்பது—பாராய்! 26

'மடந்தைமார்களில் திலதமே! மணி நிறத் திணி கல்
தொடர்ந்த பாறையில், வேயினம் சொரி கதிர் முத்தம்
இடம்தொறும் கிடந்து இமைப்பன, எக்கு இளஞ் செக்கர்
படர்ந்த வானிடை, தாரகை நிகர்ப்பன—பாராய்!* 27

20. செஞ்செவே - நன்ருக; விஞ்சை நாடியர் - வித்தியாதர மகளிர்; 22. புனம் காவல் பறை - தொண்டகம் என்னும் பறை; பிழை - குறை; 24. குனிந்த - தாழ்ந்த; 25. இலவு - இலவம்பூ; அலவுதல் - சிதறுதல்; 26. குலிகம் - இங்குலிகம்; மிலைச்சுதல் - சூட்டுதல்; 27. எக்குதல் - மேலெழுதல்.

'குழுவு நுண் தொளை வேயினும், குறி நரம்பு எறிவுற்று
எழுவு தண் தமிழ் யாழினும், இனிய சொல் கிளியே!
முழுவதும் மலர் விரிந்த நாள் முருக்கு இடை மிடைந்த
பழுவம், வெங் கனல் கதுவியது ஒப்பன—பாராய்! 28

'வளைகள் காந்தளில் பெய்தன அனைய கைம் மயிலே!
தொளை கொள் தாழ் தடக் கைந் நெடுந் துருத்தியில் தூக்கி,
அளவு இல் மூப்பினர் அருந் தவர்க்கு, அருவி நீர் கொணர்ந்து,
களப மால் கரி குண்டிகைச் சொரிவன—காணாய்! 29

'வடுவின் மா வகிர் இவை எனப் பொலிந்த கண் மயிலே!
இடுகு கண்ணினர், இடர் உறு மூப்பினர் ஏக,
நெடுகு கூனல் வால் நீட்டின, உருகுறு நெஞ்சக்
கடுவன், மா தவர்க்கு அரு நெறி காட்டுவ—காணாய்!* 30

'பாந்தள், தேர், இவை பழிபடப் பரந்த பேர் அல்குல்!
ஏந்து நூல் அணி மார்பினர் ஆகுதிக்கு இயைய,
கூந்தல் மென் மயில் குறுகின நெடுஞ் சிறை கோலி,
காந்து குண்டத்தில் அடங்கு எரி எழுப்புவ—காணாய்!* 31

'அலம்பு வார் குழல் ஆய் மயில் பெண் அருங்கலமே!
நலம் பெய் வேதியர் மார்பினுக்கு இயைவுற நாடி,
சிலம்பி, பஞ்சினில், சிக்கு அறத் தெரிந்த நூல், தே மாம்-
பலம் பெய் மந்திகள் உடன் வந்து கொடுப்பன—பாராய்! 32

'தெரிவைமார்க்கு ஒரு கட்டளை எனச் செய்த திருவே!
பெரிய மாக் கனி, பலாக் கனி, பிறங்கிய வாழை
அரிய மாக் கனி, கடுவன்கள் அன்பு கொண்டு அளிப்ப,
கரிய மா கிழங்கு அகழ்ந்தன கொணர்வன—காணாய்! 33

'ஐவனக் குரல், ஏனலின் கதிர், இறுங்கு, அவரை,
மெய் வணக்குறு வேய்இனம் ஈன்ற மெல் அரிசி,
பொய் வணக்கிய மா தவர் புரைதொறும் புகுந்து, உன்
கை வணத்த வாய்க் கிள்ளை தந்து அளிப்பன—காணாய்! 34

28. குறி நரம்பு - தனித்தனி பெயர்கள் கொண்ட நரம்பு; எழுவுதல் - எழுப்புதல்; 29. கைந்நெடுந் துருத்தி - தும்பிக்கையாகிய தோற்பை; 31. கூந்தல் - தோகை; 33. கரிய மா - பன்றி; 34. ஐவனம் - மலை நெல்; குரல் - கதிர்; ஏனல் - செந்தினை; இறுங்கு - ஒருவகைச் சோளம்; மெய் வணக்குறு வேய் - உடல் வளைவு பொருந்திய மூங்கில்.

‘இடி கொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்து உடன் விழுங்கும்
கடிய மாசுணம், கற்று அறிந்தவர் என அடங்கி,
சடை கொள் சென்னியர், தாழ்வு இலர் தாம் மிதித்து ஏற,
படிகளாம் எனத் தாழ்வரை கிடப்பன—பாராய்! 35

‘அசும்பு பாய் வரை அருந் தவம் முடித்தவர், துணைக் கண்
தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர்தமக்கு, விண் தருவான்
விசும்பு தூர்ப்பன ஆம் என, வெயில் உக விளங்கும்
பசும் பொன் மானங்கள் போவன வருவன—பாராய்!’ 36

**இராமன் வேதியரின் விருந்தினனாதல்**

இனைய யாவையும் ஏந்திழைக்கு இயம்பினன் காட்டி,
அனைய மால் வரை அருந் தவர் எதிர்வர, வணங்கி,
வினையின் நீங்கிய வேதியர் விருந்தினன் ஆனான்—
மனையில் மெய் எனும் மா தவம் புரிந்தவன் மைந்தன். 37

**சூரியன் மறைய, அந்திப் பொழுது அணுகுதல்**

மா இயல் உதயம் ஆம் துளப வானவன்,
மேவிய பகை இருள் அவுணர் வீந்து உக,
கா இயல் குட வரை, காலநேமிமேல்,
ஏவிய திகிரிபோல், இரவி ஏகினான். 38

சக்கரம் தானவன் உடலில் தாக்குற,
எக்கிய சோரியின் பரந்தது, எங்கணும்
செக்கர்; அத் தீயவன் வாயின் தீர்ந்து, வேறு
உக்க வான் தனி எயிறு ஒத்தது, இந்துவே! 39

ஆனனம் மகளிருக்கு அளித்த தாமரைப்
பூ நனி முகிழ்த்தன, புலரி போன பின்;
மீன் என விளங்கிய வெள்ளி ஆம்பல் வீ,
வான் எனும் மணித் தடம், மலர்ந்த எங்குமே! 40

மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின;
தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின;
நிந்தை இல் சகுந்தங்கள் நீளம் நோக்கின;
அந்தியை நோக்கினான், அறிவை நோக்கினான். 41

36. அசும்பு - நீர்க் கசிவு; துணைக்கண் தசும்பு - இரு கண்களாகிய நீர்க் குடங்கள்; வேய்தல் - தாங்குதல்; 38. துளப வானவன் - துழாய் மாலை அணிந்த திருமால்; காலநேமி - ஓர் அசுரர் தலைவன்; உதயமால்வரை திருமாலாகவும், அத்தகிரி கால நேமியாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளன; 40. புலரி - சூரியன்; 41. தந்தி - களிறு; தடம் - வழி; சகுந்தம் - பறவை; நீளம் - கூடு.

மூவரும் மாலை வழிபாடு நிகழ்த்தல்

மொய் உறு நறு மலர் முகிழ்த்தவாம் சில;
மை அறு நறு மலர் மலர்ந்தவாம் சில;
ஐயனோடு, இளவற்கும் அமுதனாளுக்கும்
கைகளும், கண்களும், கமலம் போன்றவே. 42

இலக்குவன் அமைத்த சாலையில் சீதையோடு இராமன் குடி புகுதல்

மாலை வந்து அகன்றபின், மருங்கு இலாளொடும்,
வேலை வந்து உறைவிடம் மேயது ஆம் என,
கோலை வந்து உமிழ் சிலைத் தம்பி கோலிய
சாலை வந்து எய்தினன், தவத்தின் எய்தினான். 43

நெடுங் கழைக் குறுந் துணி நிறுவி, மேல் நிரைத்து,
ஒடுங்கல் இல் நெடு முகடு ஒழுக்கி, ஊழுற
இடுங்கல் இல் கை விசித்து ஏற்றி, எங்கணும்
முடங்கல் இல் வரிச்சு மேல் விரிச்சு மூட்டியே, 44

தேக்கு அடைப் படலையின் செறிவு செய்து, பின்,
பூக் கிளர் நாணலின் புல்லு வேய்ந்து, கீழ்த்
தூக்கிய வேய்களின் சுவரும் சுற்றுறப்
போக்கி, மண் எறிந்து, அவை புனலின் தீற்றியே, 45

வேறு இடம், இயற்றினன் மிதிலைநாடிக்கும்,
கூறின நெறி முறை குயிற்றி, குங்குமச்
சேறு கொண்டு அழகுறத் திருத்தி, திண் சுவர்
ஆறு இடு மணியொடு தரளம் அப்பியே, 46

மயிலுடைப் பீலியின் விதானம் மேல் வகுத்து,
அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கு அறுத்து,
எயில் இளங் கழைகளால் இயற்றி, ஆறு இடு
செயலுடைப் புது மலர் பொறப்பச் சிந்தியே, 47

இன்னணம் இளையவன் இழைத்த சாலையில்,
பொன் நிறத் திருவொடும் குடி புக்கான்அரோ!—
நல் நெடுந் திசைமுகன் அகத்தும், நம்மனோர்க்கு
உன்ன அரும் உயிருளும், ஒக்க வைகுவான். 48

43. கோல் - அம்பு; 44. நெடுங் கழை, குறுந்தறி, முகடு, கை, வரிச்சு என்பவை பன்னசாலையின் உறுப்புகள்; இடுங்கல் - நெருங்குதல்; முடங்கல் - வளைதல்; 45. தேக்கு அடை - தேக்க மரத்தின் இலை; தீற்றுதல் - பூசுதல்.

மாயம் நீங்கிய சிந்தனை, மா மறை,
தூய பாற்கடல், வைகுந்தம், சொல்லல் ஆம்
ஆய சாலை, அரும் பெறல் அன்பினன்,
நேய நெஞ்சின் விரும்பி, நிரம்பினான். 49

**சாலை அமைத்த இலக்குவனை நோக்கி இராமன் வருந்திக்கூறல்**

மேவு கானம், மிதிலையர்கோன் மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன;
தா இல் எம்பி கை சாலை சமைத்தன—
யாவை, யாதும் இலார்க்கு இயையாதவே? 50

என்று சிந்தித்து, இளையவற் பார்த்து, 'இரு
குன்று போலக் குவவிய தோளினாய்!
என்று கற்றனை நீ இதுபோல்?' என்றான்—
துன்று தாமரைக் கண் பனி சோர்கின்றான். 51

'அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்,
படரும் நல் அறம் பாலித்து, இரவியின்
சுடரும் மெய்ப் புகழ் சூடினென் என்பது என்?
இடர் உனக்கு இழைத்தேன் நெடு நாள்' என்றான். 52

**இலக்குவன் மறுமொழி**

அந்த வாய்மொழி ஐயன் இயம்பலும்,
நொந்த சிந்தை இளையவன் நோக்கினான்,
'எந்தை! காண்டி, இடரினுக்கு அங்குரம்
முந்தி வந்து முளைத்தது அன்றோ?' என்றான். 53

**இலக்குவனை இராமன் தேற்றுதல்**

'ஆக, செய்தக்கது இல்லை; அறத்தினின்று
ஏகல் என்பது அரிது' என்றும் எண்ணினான்,
ஓகை கொண்டவன் உள் இடர் நோக்கினான்;
'சோக பங்கம் துடைப்பு அரிதால்' என, 54

பின்னும், தம்பியை நோக்கி, பெரியவன்,
'மன்னும் செல்வத்திற்கு உண்டு வரம்பு; இதற்கு
என்ன கேடு உண்டு? இவ் எல்லை இல் இன்பத்தை
உன்னு, மேல் வரும் ஊதியத்தோடு' என்றான். 55

49. மாயம் - மயக்கம்; 50. தா - குற்றம்; 51. குவவு - திரட்சி; 52. பாலித்தல் - காத்தல்; 53. அங்குரம் - முளை; 55. இதற்கு - இந்தத் தவச் செல்வத்துக்கு.

இராமன் நோன்பு நோற்று, இனிது இருத்தல்

தேற்றித் தம்பியை, தேவரும் கைதொழ,
நோற்று இருந்தனன், நோன் சிலையோன்; இப்பால்,
ஆற்றல் மா தவன் ஆணையின் போனவர்
கூற்றின் உற்றது கூறலுற்றும்அரோ. 56

# 10 பள்ளிபடைப் படலம்

தூதுவர் வர, பரதன் தந்தை முதலியோரின் நலன் வினவல்

பொரு இல் தூதுவர் போயினர், பொய் இலார்;
இரவும் நன் பகலும் கடிது ஏகினூர்;
பரதன் கோயில் உற்றூர், 'படிகாரிர்! எம்
வரவு சொல்லுதிர் மன்னவற்கே!' என்றூர். 1

'தூதர் வந்தனர், உந்தை சொல்லோடு' என,
காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்,
'போதுக ஈங்கு' என, புக்கு, அவர் கைதொழ,
'தீது இலன்கொல் திரு முடியோன்?' என்றுன். 2

'வலியன்' என்று அவர் கூற மகிழ்ந்தனன்;
'இலை கொள் பூண் இளங்கோன் எம்பிரானெடும்
உலைவு இல் செல்வத்தனே?' என, 'உண்டு' என,
தலையின் ஏந்தினன், தாழ் தடக் கைகளே. 3

மற்றும் சுற்றத்துளார்க்கும் வரன்முறை
உற்ற தன்மை வினவி உவந்தபின்,
'இற்றது ஆகும், எழுது அரு மேனியாய்!
கொற்றவன்தன் திருமுகம் கொள்க' என்றூர். 4

பரதன் திருமுகத்தைப் பெற்று மகிழ்தல்

என்று கூறலும், ஏத்தி இறைஞ்சினன்,
பொன் திணிந்த பொரு இல் தடக் கையால்,
நின்று வாங்கி, உருகிய நெஞ்சினன்
துன்று நாள்மலர்ச் சென்னியில் சூடினன். 5

56. மாதவன் - வசிட்டன்.

10 : 1. படிகாரிர் - விளி; படிகாரர் - வாயிற்படி காப்போர்; 4. இற்றது - இது.

சூடி, சந்தனம் தோய்த்துடைச் சுற்று மண்
மூடு தோட்டின் முடங்கல் நிமிர்த்தனன்;
ஈடு நோக்கி வந்து எய்திய தூதர்க்குக்
கோடி மேலும் நிதியம் கொடுத்தனன்.* 6

பரதன் சத்துருக்கனேடு அயோத்திக்குப் புறப்படுதல்

வாள் நிலா நகை தோன்ற, மயிர் புறம்
பூண, வான் உயர் காதலின் பொங்கினன்,
தாள் நிலாம் மலர் தூவினன்—தம்முனைக்
காணலாம் எனும் ஆசை கடாவவே. 7

'எழுக சேனை' என்று ஏவினன்; எய்தினன்
தொழுது, கேகயர் கோமகன் சொல்லொடும்,
தழுவு தேரிடைத் தம்பியொடு ஏறினன்;
பொழுதும் நாளும் குறித்திலன் போயினன். 8

பரதனேடு வந்த சேனையின் செலவு

யானை சுற்றின; தேர் இரைத்து ஈண்டின;
மான வேந்தர் குழுவினர்; வாளுடைத்
தானை சூழ்ந்தன; சங்கம் முரன்றன;
மீன வேலையின் விம்மின, பேரியே.† 9

கொடி நெருங்கின; தொங்கல் குழீஇயின;
வடி நெடுங் கண் மடந்தையர் ஊர் மடப்
பிடி துவன்றின; பூண் ஒளி பேர்ந்தன,
இடி துவன்றின மின் என, எங்குமே.† 10

பண்டி எங்கும் பரந்தன; பல் இயம்
கொண்டு இயம்பின கொண்டலின்; கோதையில்
வண்டு இயம்பின; வாளியின் வாவுறும்,
செண்டு இயங்கு பரியும் செறிந்தவே.† 11

துளை முகத்தின் சுருதி விளம்பின;
உளை முகத்தின உம்பரின் ஏகிட,
விளை முகத்தன வேலையின் மீது செல்
வளை முகத்தன வாசியும் வந்தவே.† 12

7. மயிர் புறம் பூணல் - மெய்ம்மயிர் சிலிர்த்தல்; நிலாம் மலர் - விளக்கம் மிக்க மலர்; 8. பொழுது - முழுத்தம்; நாள் - நட்சத்திரம்; 9. மான வேந்தர் - குதிரையை ஊர்தியாகவுடைய மன்னர்; மான் - குதிரை; 10. பிடியின் ஒலிக்கு இடியும் பூணின் ஒளிக்கு மின்னலும் உவமை; 11. செண்டு - செண்டு வெளி, வையாளி வீதி.

வில்லின் வேதியர், வாள் செறி வித்தகர்,
மல்லின் வல்லர், சுரிகையின் வல்லவர்,
கொல்லும் வேல் குந்தம் கற்று உயர் கொற்றவர்,
தொல்லை வாரணப் பாகரும், சுற்றினர்.† 13

எறி பகட்டினம், ஆடுகள், ஏற்றை மா,
குறி கொள் கோழி, சிவல், குறும்பூழ், நெடும்
பொறி மயிர்க் கவுதாரிகள், போற்றுறு
நெறியின் மாக்களும் முந்தி நெருங்கினர்.† 14

நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினில்,
'பறந்து போதும்கொல்' என்று, பதைக்கின்றார்,
பிறந்து, தேவர், உணர்ந்து, பெயர்ந்து முன்
உறைந்த வான் உறுவார்களை ஒக்கின்றார்.† 15

ஊன் அளைந்த உடற்கு உயிர் ஆம் எனத்
தான் அளைந்து தழுவின, தண்ணுமை;
தேன் அளைந்து செவி உற வார்த்தென,
வான் அளைந்தது, மாகதர் பாடலே.† 16

ஊறு கொண்ட முரசு உமிழ் ஓதையை
வீறு கொண்டன, வேதியர் வாழ்த்து ஒலி;
ஏறு கொண்டு எழும் மல்லர் இடிப்பினை
மாறு கொண்டன, வந்திகர் வாழ்த்துஅரோ!† 17

### பரதன் கோசல நாட்டை அடைதல்

ஆறும் கானும் அகல் மலையும் கடந்து
ஏறி, ஏழ் பகல் நீந்தி, பின், எந்திரத்து
ஊறு பாகு மடை உடைத்து ஒண் முளை
நாறு பாய் வயல் கோசலம் நண்ணினன். 18

### நாட்டின் அலங்கோலத் தோற்றம்

ஏர் துறந்த வயல்; இள மைந்தர் தோள்
தார் துறந்தன; தண் தலை நெல்லினும்,
நீர் துறந்தன; தாமரை நீத்தெனப்
பார் துறந்தனள், பங்கயச் செல்வியே. 19

13. வில்லின் வேதியர் - வில்வீரர்; 16. மாகதர் - இருந்து ஏத்துவோர்; 17. வந்திகர் - நின்று துதி பாடுவோர்; 19. தண்தலை - வயல்.

பிதிர்ந்து சாறு பெருந் துறை மண்டிடச்
சிதர்ந்து சிந்தி அழிந்தன தேம் கனி;
முதிர்ந்து, கொய்யுநர் இன்மையின், மூக்கு அவிழ்ந்து
உதிர்ந்து உலர்ந்தன, ஒண் மலர் ஈட்டமே. 20

'ஏய்ந்த காலம் இது இதற்கு ஆம்' என
ஆய்ந்து, மள்ளர் அரிகுநர் இன்மையால்,
பாய்ந்த சூதப் பசு நறுந் தேறலால்
சாய்ந்து, ஒசிந்து, முளைத்தன சாலியே. 21

எள் குலா மலர் ஏசிய நாசியர்,
புள் குலா வயல் பூசல் கடைசியர்,
கட்கிலார் களை; காதல் கொழுநரோடு
உள் கலாம் உடையாரின், உயங்கினர். 22

ஓதுகின்றில கிள்ளையும்; ஓதியர்
தூது சென்றில, வந்தில, தோழர்பால்;
மோதுகின்றில பேரி, முழா; விழாப்
போதுகின்றில, பொன் அணி வீதியே. 23

பாடல் நீத்தன, பண் தொடர் பாண் குழல்;
ஆடல் நீத்த, அரங்கொடு அகன் புனல்;
சூடல் நீத்தன, சூடிகை; சூளிகை
மாடம் நீத்தன, மங்கல வள்ளையே. 24

நகை இழந்தன, வாள் முகம்; நாறு அகிற்
புகை இழந்தன, மாளிகை; பொங்கு அழல்
சிகை இழந்தன, தீவிகை; தே மலர்த்
தொகை இழந்தன, தோகையர் ஓதியே. 25

அலர்ந்த பைங் கூழ், அயன் குளக் கீழன,
மலர்ந்த வாயில் புனல் வழங்காமையால்,
உலர்ந்த—வன்கண் உலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே. 26

நாவின் நீத்து அரு நல் வளம் துன்னிய,
பூவின் நீத்தென, நாடு, பொலிவு ஒரீஇ,
தேவி, நீத்து அருஞ் சேண் நெறி சென்றிட,
ஆவி நீத்த உடல் எனல் ஆயதே. 27

20. மூக்கு - பூவின் காம்பு; 21. சூதம் - மா; 23. ஓதியர் - ஓதி. அன்னப் பறவை; 24. சூடிகை - தலையில் அணியும் பொன்னணி; சூளிகை மாடம் - நிலாமுற்றத்தையுடைய மாடங்கள்; 25. தீவிகை - விளக்குகள்; 26. வாயில் - மதகு.

பொலிவு இழந்த நாட்டைக் கண்ட பரதன் நிலை

என்ற நாட்டினை நோக்கி, இடர் உழந்து,
ஒன்றும் உற்றது உணர்ந்திலன், உன்னுவான்,
'சென்று கேட்பது ஓர் தீங்கு உளது ஆம்' என,
நின்று நின்று, நெடிது உயிர்த்தான்அரோ! 28

பரதன், அழகு இழந்த நகரின் நிலையை நோக்குதல்

மீண்டும் ஏகி, அம் மெய் எனும் நல் அணி
பூண்ட வேந்தன் திரு மகன், புந்திதான்
தூண்டு தேரினும் முந்துறத் தூண்டுவான்,
நீண்ட வாயில் நெடு நகர் நோக்கினன். 29

'அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்தாய்; அமுது
உண்டு போதி' என்று, ஒண் கதிர்ச் செல்வனை,
விண் தொடர்ந்து விலக்குவ போல்வன,
கண்டிலன், கொடியின் நெடுங் கானமே. 30

'ஈட்டு நல் புகழ்க்கு ஈட்டிய யாவையும்,
வேட்ட, வேட்டவர் கொண்மின், விரைந்து' எனக்,
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன,
கேட்டிலன், முரசின் கிளர் ஓதையே. 31

கள்ளை, மா, கவர் கண்ணியன் கண்டிலன்—
பிள்ளை மாக் களிறும், பிடி ஈட்டமும்,
வள்ளைமாக்கள், நிதியும், வயிரியர்,
கொள்ளை மாக்களின் கொண்டனர் ஏகவே. 32

காவல் மன்னவன் கான்முளை கண்டிலன்—
ஆவும், மாவும், அழி கவுள் வேழமும்,
மேவு காதல் நிதியின் வெறுக்கையும்,
பூவின் வானவர் கொண்டனர் போகவே. 33

சூழ் அமைந்த சுரும்பும், நரம்பும், தம்
ஏழ் அமைந்த இசை இசையாமையால்,
மாழை உண் கண் மயில் எனும் சாயலார்
கூழை போன்ற, பொருநர் குழாங்களே. 34

31. கோட்டி மாக்கள் - கூட்டமான இரவலர்கள்; 32. மா - வண்டு; வயிரியர் - பாணர்; 33. பூவின் வானவர் - பார்ப்பனர்; 34. பொருநர் - கூத்தர்.

தேரும், மாவும், களிறும், சிவிகையும்,
ஊரும் பண்டியும், ஊருநர் இன்மையால்,
யாரும் இன்றி, எழில் இல; வீதிகள்,
வாரி இன்றிய வாலுக ஆற்றினே. 35

**பரதன் வினவும், சத்துருக்கன் மறுமொழியும்**

அன்ன தன்மை அக நகர் நோக்கினன்,
பின்னை, அப் பெரியோர்தம் பெருந்தகை,
'மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?
என்ன தன்மை? இளையவனே!' என்றான். 36

'வேற்று அடங்கலர் ஊர் என மெல்லிதால்;
சூல் தடங் கருங் கார் புரை தோற்றத்தான்
சேல் தடங் கண் திருவொடும் நீங்கிய
பால் தடங் கடல் ஒத்தது, பார்' என்றான். 37

குரு மணிப் பூண் அரசிளங் கோளரி
இரு கை கூப்பி இறைஞ்சினன், 'எய்தியது—
ஒரு வகைத்து அன்று உறு துயர்; ஊழி வாழ்
திரு நகர்த் திரு தீர்ந்தனள் ஆம்' என்றான். 38

**அரண்மனையில் தந்தை வாழும் இடத்தை அடைதல்**

அனைய வேலையில், அக் கடைத் தோரண
மனையின் நீள் நெடு மங்கல வீதிகள்
நினையும் மாத்திரத்து ஏகிய நேமியான்
தனையனும், தந்தை சார்விடம் மேவினான். 39

**தந்தையைக் காணாது ஐயுற்ற பரதனிடம் கைகேயி அழைப்பதாக ஒருத்தி உரைத்தல்**

விருப்பின், எய்தினன், வெந் திறல் வேந்தனை,
இருப்பு நல் இடம் எங்கணும் கண்டிலன்;
'அருப்பம் அன்று இது' என்று, ஐயுறவு எய்தினான்—
பொருப்பு நாண உயர்ந்த புயத்தினான். 40

ஆய காலையில், ஐயனை நாடித் தன்
தூய கையின் தொழல் உறுவான்தனை,
'கூயள் அன்னை; குறுகுதிர் ஈண்டு' என,
வேய் கொள் தோளி ஒருத்தி விளம்பினாள். 41

37. அடங்கலர் - பகைவர்; 40. அருப்பம் - சிறியது.

பரதன் சென்று தாயை வணங்க, அவள் தன் தந்தை முதலியோர் நலனை உசாவுதல்

வந்து, தாயை அடியில் வணங்கலும்,
சிந்தை ஆரத் தழுவினள், 'தீது இலர்
எந்தை, என்னையர், எங்கையர்?' என்றனள்;
அந்தம் இல் குணத்தானும், 'அது ஆம்' என்றான். 42

'தந்தை எங்குளார்?' என்ற பரதனுக்குக் கைகேயி தந்த விடை

'மூண்டு எழு காதலால், முளரித் தாள் தொழ
வேண்டினென், எய்தினென், உள்ளம் விம்முமால்;
ஆண் தகை நெடு முடி அரசர் கோமகன்
யாண்டையான்? பணித்திர்' என்று, இரு கை கூப்பினான். 43

ஆனவன் உரைசெய, அழிவு இல் சிந்தையாள்,
'தானவர் வலி தவ நிமிர்ந்த தானை அத்
தேன் அமர் தெரியலான், தேவர் கைதொழ,
வானகம் எய்தினான்; வருந்தல் நீ' என்றாள். 44

தாயின் உரை கேட்டு, பரதன் பெருந் துயர் கொள்ளுதல்

எறிந்தன கடிய சொல் செவியுள் எய்தலும்,
நெறிந்து அலர் குஞ்சியான், நெடிது வீழ்ந்தனன்;
அறிந்திலன்; உயிர்த்திலன்;—அசனி ஏற்றினால்
மறிந்து உயர் மராமரம் மண் உற்றென்னவே. 45

தாயைப் பரதன் கடிந்து உரைத்தல்

வாய் ஒளி மழுங்க, தன் மலர்ந்த தாமரை
ஆய் மலர் நயனங்கள் அருவி சோர்தர,
'தீ எரி செவியில் வைத்தனைய தீய சொல்,
நீ அலது உரைசெய நினைப்பரோ?' என்றான். 46

துயர மிகுதியால் பரதன் புலம்புதல்

எழுந்தனன்; ஏங்கினன்; இரங்கிப் பின்னரும்
விழுந்தனன்; விம்மினன்; வெய்து உயிர்த்தனன்;
அழிந்தனன்; அரற்றினன்; அரற்றி, இன்னன
மொழிந்தனன், பின்னரும்—முருகன் செவ்வியான்: 47

'அறம்தனை வேர் அறுத்து, அருளைக் கொன்றனை,
சிறந்த நின் தண்ணளித் திருவைத் தேசு அழித்து,
இறந்தனைஆம் எனின், இறைவ! நீதியை
மறந்தனை; உனக்கு, இதின் மாசு மேல் உண்டோ? 48

44. தவ - கெட.

'சினக் குறும்பு எறிந்து, எழு காமத் தீ அவித்து,
இனக் குறும்பு யாவையும் எற்றி, யாவர்க்கும்
மனக்கு உறு நெறி செலும் வள்ளியோய்! மறந்து,
உனக்கு உறு நெறி செலல் ஒழுக்கின்பாலதோ? 49

'முதலவன் முதலிய முந்தையோர் பழங்
கதையையும் புதுக்கிய தலைவன், கண்ணுடை
நுதலவன் சிலை விலின் நோன்மை நூறிய
புதல்வனை, எங்ஙனம் பிரிந்து போயினாய்? 50

'செவ் வழி உருட்டிய திகிரி மன்னவ!—
எவ் வழி மருங்கினும் இரவலாளர்தாம்,
இவ் வழி உலகின் இல்; இன்மை நண்பினோர்
அவ் வழி உலகினும் உளர்கொலோ?—ஐயா! 51

'பல் பகல் நிழற்றும் நின் கவிகைப் பாய் நிழல்
நிற்பன பல் உயிர் உணங்க, நீ நெடுங்
கற்பக நறு நிழல் காதலித்தியோ?—
மல் பக மலர்ந்த தோள் மன்னர் மன்னனே! 52

'இம்பர் நின்று ஏகினை; இருக்கும் சார்பு இழந்து,
உம்பர் வந்து உன் கழல் ஒதுங்கினார்களோ?
சம்பரன் அனைய அத் தானைத் தானவர்,
அம்பரத்து இன்னமும் உளர்கொலாம்?—ஐயா! 53

'இயம் கெழு தானையர் இறுத்த மாத் திறை,
உயங்கல் இல் மறையவர்க்கு உதவி, உம்பரின்,
அயம் கெழு வேள்வியோடு, அமரர்க்கு ஆக்கிய,
வயங்கு எரி வளர்க்கலை, வைக வல்லையோ? 54

'ஏழ் உயர் மத களிற்று இறைவ! ஏகினை—
வாழிய கரியவன், வறியன் கை என,
பாழி அம் புயத்து நின் பணியின் நீங்கலா
ஆழியை, இனி, அவற்கு அளிக்க எண்ணியோ? 55

'பற்று இலை, தவத்தினின் பயந்த மைந்தற்கு
முற்று உலகு அளித்து, அது முறையின் எய்திய
கொற்றவன் முடி மணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும், நின் பெரிய கண்களால்?' 56

49. இனக் குறும்பு - ஈண்டு மயக்கம்; குறும்பு - பகை; 50. முதலவன் - மனு; 53. இம்பர் - இம் மண்ணுலகம்; உம்பர் - தேவர்; 55. ஏழ் உயர் களிறு - ஏழு முழம் உயர்ந்துள்ள யானை.

பரதன் சிறிது தேறி, 'இராமனை வணங்கினால் அன்றித் துயர் போகாது' எனல்

ஆற்றலன், இன்னன பன்னி ஆவலித்து,
ஊற்று உறு கண்ணினன், உருகுவான்; தனைத்
தேற்றினன் ஒரு வகை; சிறிது தேறிய,
கூற்று உறழ் வரி சிலைக் குரிசில் கூறுவான்: 57

'எந்தையும், யாயும், எம் பிரானும், எம் முனும்,
அந்தம் இல் பெருங் குணத்து இராமன்; ஆதலால்,
வந்தனை அவன் கழல் வைத்தபோது அலால்,
சிந்தை வெங் கொடுந் துயர் தீர்கலாது' என்றான். 58

கைகேயி, இராமன் கானகம் சென்றமையைக் கூறுதல்

அவ் உரை கேட்டலும், அசனிஏறு என,
வெவ் உரை வல்லவள், மீட்டும் கூறுவாள்:
'தெவ் அடு சிலையினாய்! தேவி, தம்பி, என்று
இவ் இருவோரொடும் கானத்தான்' என்றாள். 59

பரதன் நைந்து ஏங்குதல்

'வனத்தினன்' என்று, அவள் இசைத்த மாற்றத்தை
நினைத்தனன்; இருந்தனன், நெருப்புண்டான் என;
வினைத் திறம் யாது இனி விளைப்பது? இன்னமும்
எனைத்து உள கேட்பன துன்பம், யான்?' என்றான். 60

இராமன் வனம் போயது குறித்துப் பரதன் வினவல்

ஏங்கினன் விம்மலோடு இருந்த ஏந்தல், 'அப்
பூங் கழல் காலவன் வனத்துப் போயது,
தீங்கு இழைத்த-அதனினோ? தெய்வம் சீறியோ?
ஓங்கிய விதியினோ? யாதினோ?' என, 61

'தீயன இராமனே செய்யுமேல், அவை
தாய் செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்?
போயது தாதை விண் புக்க பின்னரோ?
ஆயதன் முன்னரோ? அருளுவீர்' என்றான். 62

கைகேயி விடையும், பரதன் மறுமொழியும்

'குருக்களை இகழ்தலின் அன்று; கூறிய
செருக்கினால் அன்று; ஒரு தெய்வத்தாலும் அன்று;
அருக்கனே அனைய அவ் அரசர் கோமகன்
இருக்கவே, வனத்து அவன் ஏகினான்' என்றாள். 63

57. ஆவலித்தல் - அழுதல்.

'குற்றம் ஒன்று இல்லையேல், கொதித்து வேறு உளோர்
செற்றதும் இல்லையேல், தெய்வத்தால் அன்றேல்,
பெற்றவன் இருக்கவே, பிள்ளை கான் புக
உற்றது என்? தெரிதர உரைசெய்வீர்?' என்றான். 64

கைகேயி தனது வரத்தினால் இவை நேர்ந்தன எனல்

'வாக்கினால் வரம் தரக் கொண்டு, மைந்தனைப்
போக்கினேன், வனத்திடை; போக்கி, பார் உனக்கு
ஆக்கினேன்; அவன் அது பொறுக்கலாமையால்,
நீக்கினான் தன் உயிர், நேமி வேந்து' என்றாள். 65

பரதன் சின நிலை

சூடின மலர்க் கரம், சொல்லின் முன், செவி
கூடின; புருவங்கள் குனித்துக் கூத்து நின்று
ஆடின; உயிர்ப்பினோடு, அழல் கொழுந்துகள்,
ஓடின; உமிழ்ந்தன, உதிரம் கண்களே! 66

துடித்தன கபோலங்கள்; சுற்றும் தீச் சுடர்
பொடித்தன மயிர்த் தொளை; புகையும் போர்த்தது;
மடித்தது வாய்; நெடு மழைக் கை, மண் பக
அடித்தன, ஒன்றொடு ஒன்று அசனி அஞ்சவே. 67

பாதங்கள் பெயர்தொறும், பாரும் மேருவும்,
போதம் கொள் நெடுந் தனிப் பொரு இல் கூம்பொடு,
மாதங்கம் வரு கலம் மறுகி, கால் பொர,
ஓதம் கொள் கடலினின்று உலைவ போன்றவே. 68

அஞ்சினர் வானவர்; அவுணர் அச்சத்தால்
துஞ்சினர் எனப் பலர்; சொரி மதத் தொளை
எஞ்சின, திசைக் கரி; இரவி மீண்டனன்;
வெஞ் சினக் கூற்றும், தன் விழி புதைத்ததே! 69

இராமனுக்கு அஞ்சித் தாயைக் கொல்லாது, அவளைக் கடிந்து கூறுதல்

கொடிய வெங் கோபத்தால் கொதித்த கோளரி,
கடியவள் தாய் எனக் கருதுகின்றிலன்;
'நெடியவன் முனியும்' என்று அஞ்சி நின்றனன்;
இடிஉரும் அனைய வெம் மொழி இயம்புவான்: 70

67. கபோலம் - கன்னம்; 68. போதம் கொள் கூம்பு - முதலில் அறிதற்கு உரியதாக இருக்கும் பாய்மரம்; மாதங்கம் - யானை; ஓதம் - அலை.

'மாண்டனன் எந்தை, என் தம்முன் மா தவம்
பூண்டனன், நின் கொடும் புணர்ப்பினால்; என்றால்,
கீண்டிலென் வாய்; அது கேட்டும், நின்ற யான்
ஆண்டனெனோ அன்றோ அரசை ஆசையால்? 71

'நீ இனம் இருந்தனை; யானும், நின்றனென்;
''ஏ'' எனும் மாத்திரத்து எற்றுகிற்றிலென்;
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன்அலால்,
''தாய்'' எனும் பெயர் எனைத் தடுக்கற்பாலதோ? 72

'மாளவும் உளன், ஒரு மன்னன் வன் சொலால்;
மீளவும் உளன் ஒரு வீரன்; மேய பார்
ஆளவும் உளன் ஒரு பரதன்; ஆயினால்,
கோள் இல அறநெறி! குறை உண்டாகுமோ? 73

' ''சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்,
வழியுடைத்தாய் வரும் மரபை மாய்த்து, ஒரு
பழி உடைத்துஆக்கினன், பரதன் பண்டு'' எனும்,
மொழி உடைத்துஆக்கலின் முறைமை வேறு உண்டோ? 74

'கவ்வு அரவு இது என இருந்திர்; கற்பு எனும்
அவ் வரம்பு அழித்து, உமை அகத்துளே வைத்த
வெவ் அரம் பொருத வேல் அரசை வேர் அறுத்து,
இவ் வரம் கொண்ட நீர் இனி என் கோடிரோ? 75

'நோயீர் அல்லீர்; நும் கணவன்தன் உயிர் உண்டீர்;
பேயீரே நீர்! இன்னம் இருக்கப் பெறுவீரே?
மாயீர்! மாயா வன் பழி தந்தீர்! முலை தந்தீர்!
தாயீரே நீர்? இன்னும் எனக்கு என் தருவீரே? 76

'ஒன்றும் பொய்யா மன்னனை வாயால், உயிரோடும்
தின்றும், தீரா வன் பழி கொண்டீர்; திரு எய்தி
என்றும் நீரே வாழ உவந்தீர்; அவன் ஏக,
கன்றும் தாயும் போல்வன கண்டும் கழியீரே! 77

'இறந்தான் தந்தை, ''ஈந்த வரத்துக்கு இழிவு'' என்னா;
''அறந்தான் ஈது'' என்று, அன்னவன் மைந்தன், அரசு எல்லாம்
துறந்தான்; ''தாயின் சூழ்ச்சியின், ஞாலம், அவனோடும்
பிறந்தான், ஆண்டான்'' என்னும் இது, என்னால் பெறலாமே?

71. புணர்ப்பு - சூழ்ச்சி; 73. கோள் - குற்றம்; 74. சுழி - வஞ்சம்.

'''மாளும்'' என்றே தந்தையை உன்னுன்; வசை கொண்டாள்
கோளும் என்னுலே எனல் கொண்டான்; அது அன்றேல்,
மீளும் அன்றே? என்னையும், ''மெய்யே உலகு எல்லாம்
ஆளும்'' என்றே போயினன் அன்றே?—அரசு ஆள்வான். 79

'ஓதா நின்ற தொல் குல மன்னன் உணர்வு அப்பால்
யாதானும்தான் ஆக; ''எனக்கே பணி செய்வான்,
தீதா நின்ற சிந்தனே செய்தான் அவன்'' என்னப்
போதாதோ, என் தாய் இவள் கொண்ட பொருள் அம்மா? 80

'உய்யா நின்றேன் இன்னமும்; என்முன் உடன் வந்தான்,
கை ஆர் கல்லைப் புல் அடகு உண்ண, கலம் ஏந்தி,
வெய்யோன் நான் இன் சாலியின் வெண் சோறு, அமுது என்ன,
நெய்யோடு உண்ண நின்றது, நின்றூர் நினையாரோ? 81

' ''வில் ஆர் தோளான் மேவினன், வெங் கானகம்'' என்ன,
நல்லான் அன்றே துஞ்சினன்; நஞ்சே அனையாளைக்
கொல்லேன், மாயேன்; வன் பழியாலே குறைவு அற்றேன்-
அல்லேனே யான்! அன்பு உடையார்போல் அழுகின்றேன். 82

'பாரோர் கொள்ளார்; யான் உயிர் பேணிப் பழி பூணேன்;
தீராது ஒன்றுல் நின் பழி; ஊரில் திரு நில்லாள்;
ஆரோடு எண்ணிற்று? ஆர் உரை தந்தார்? அறம் எல்லாம்
வேரோடும் கேடு ஆக முடித்து, என் விளைவித்தாய்? 83

'கொன்றேன், நான் என் தந்தையை, மற்று உன் கொலை வாயால்—
ஒன்றூ? கானத்து அண்ணலை உய்த்தேன்; உலகு ஆள்வான்
நின்றேன்; என்றால், நின் பிழை உண்டோ? பழி உண்டோ?
என்றேனும்தான் என் பழி மாயும் இடம் உண்டோ? 84

'கண்ணுலே, என் செய் வினை, இன்னும் சில காண்பார்;
மண்ணோர் பாராது எள்ளுவர்; வாளா பழி பூண்டாய்;
''உண்ணு நஞ்சம் கொல்கிலது' என்னும் உரை உண்டு'' என்று
எண்ணுநின்றேன்; அன்றி இரேன், என் உயிரோடே. 85

'ஏன்று, உன் ப்ராவிக் கும்பி வயிற்றினிடை வைகித்
தோன்றும் தீராப் பாதகம் அற்று, என் துயர் தீர,
சான்றும்தானே நல் அறம் ஆக, தகை ஞாலம்
மூன்றும் காண, மா தவம் யானே முயல்கின்றேன். 86

79. கோள் - வரங்கொள்ளுதல்; 80. மன்னன் - இராமன்; 81. கல்லை - தொன்னை; புல் அடகு - புல்லிய கீரை; சாலி - சம்பா; 86. கும்பி - நரகம்.

'சிறந்தார் சொல்லும் நல் உரை சொன்னேன்; செயல் எல்லாம்
மறந்தாய் செய்தாய்ஆகுதி; மாயா உயிர்தன்னைத்
துறந்தாய்ஆகின் தூயையும் ஆதி; உலகத்தே
பிறந்தாய் ஆதி; ஈது அலது இல்லைப் பிறிது' என்றான். 87

பரதன், தூய கோசலையின் அடி தொழச் செல்லுதல்

இன்னணம், இனையன இயம்பி, 'யானும், இப்
பன்ன அருங் கொடு மனப் பாவிபாடு இரேன்;
துன்ன அருந் துயர் கெட, தூய கோசலை
பொன் அடி தொழுவென்' என்று, எழுந்து போயினான். 88

கோசலையின் பாதங்களில் விழுந்து, பரதன் அழுது புலம்புதல்

ஆண்தகை, கோசலை அருகர் எய்தினன்;
மீண்டும், மண் கிழிதர வீழ்ந்து, கேழ் கிளர்
காண் தகு தடக் கையின் கமலச் சேறடி
பூண்டனன்; கிடந்தனன்; புலம்பினான்அரோ! 89

'எந்தை எவ் உலகு உளான்? எம் முன் யாண்டையான்?
வந்தது, தமியென், இம் மறுக்கம் காணவோ?
சிந்தையின் உறு துயர் தீர்த்திரால்' எனும்,
அந்தரத்து அமரரும் அழுது சோரவே. 90

'அடித்தலம் கண்டிலென் யான், என் ஐயனே;
படித்தலம் காவலன், பெயரற்பாலனோ?
பிடித்திலிர் போலும் நீர்; பிழைத்திரால்' எனும்—
பொடித் தலம் தோள் உறப் புரண்டு சோர்கின்றான். 91

'கொடியவர் யாவரும் குலங்கள் வேர்அற
நொடிகுவென் யான்; அது நுவல்வது எங்ஙனம்?
கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்,
முடிகுவென், அருந் துயர் முடிய' என்னுமால், 92

'இரதம் ஒன்று ஊர்ந்து, பார் இருளை நீக்கும் அவ்
வரதனில் ஒளி பெற மலர்ந்த தொல் குலம்,
''பரதன்'' என்று ஒரு பழி படைத்தது' என்னுமால்—
மரதக மலை என வளர்ந்த தோளினான். 93

88. பாடு - பக்கம்; 92. நொடிகுவென் - அழிவேன்.

'வாள்தொடு தானையான் வானில் வைகிட,
காடு ஒரு தலைமகன் எய்த, கண் இலா
நாடு ஒரு துயரிடை நைவதே' எனும்—
தாள் தொடு தடக் கை அத் தருமமே அனான். 94

**கோசலை, பரதன் தூயன் என உணர்தல்**

புலம்புறு குரிசில்தன் புலர்வு நோக்கினள்,
குலம் பொறை கற்பு இவை சுமந்த கோசலை;
'நிலம் பொறை ஆற்றலன், நெஞ்சம் தூய்து' என,
சலம் பிறிது உற, மனம் தளர்ந்து, கூறுவாள்: 95

**கோசலை, 'கைகேயியின் வஞ்சனை அறியாயோ?' எனல்**

'மை அறு மனத்து ஒரு மாசு உளான் அலன்;
செய்யனே' என்பது தேறும் சிந்தையாள்,
'கைகயர் கோமகள் இழைத்த கைதவம்,
ஐய! நீ அறிந்திலை போலுமால்?' என்றாள். 96

**கோசலை சொற் கேட்ட பரதன் சூளுரை**

தாள் உறு குரிசில், அத் தாய் சொல் கேட்டலும்,
கோள் உறு மடங்கலின் குமுறி விம்முவான்,
நாள் உறு நல் அறம் நடுங்க, நாவினால்
சூளுறு கட்டுரை சொல்லல் மேயினான்: 97

'அறம் கெட முயன்றவன், அருள் இல் நெஞ்சினன்,
பிறன்கடைநின்றவன், பிறரைச் சீறினோன்,
மறம்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்,
துறந்த மா தவர்க்கு அருந் துயரம் சூழ்ந்துளோன், 98

'குரவரை, மகளிரை, வாளின் கொன்றுளோன்,
புரவலன்தன்னொடும் அமரில் புக்கு உடன்
விரவலர் வெரிநிடை விழிக்க, மீண்டுளோன்,
இரவலர் அரு நிதி எறிந்து வௌவினோன், 99

' ''தழைத்த தண் துளவினோன் தலைவன் அல்லன்'' என்று
அழைத்தவன், அறநெறி அந்தணாளரில்
பிழைத்தவன், பிழைப்பு இலா மறையைப் பேணலாது,
''இழைத்த வன் பொய்'' எனும் இழுதை நெஞ்சினோன்,† 100

95. நிலம் பொறை ஆற்றல் - அரசாளுதல்; சலம் பிறிது உறல் - கோபம் நீங்கல்; 97. நாள் உறல் - எந்நாளும் நிலைபெறல்; 99. வெரிந் - முதுகு; 100. இழுதை - பேய்.

'தாய் பசி உழந்து உயிர் தளர, தான் தனி,
பாய் பெரும் பாழ் வயிறு அளிக்கும் பாவியும்,
நாயகன் பட நடந்தவனும், நண்ணும் அத்
தீ எரி நரகத்துக் கடிது செல்க, யான். 101

'தாளினில் அடைந்தவர்தம்மை, தற்கு ஒரு
கோள் உற, அஞ்சினன் கொடுத்த பேதையும்,
நாளினும் அறம் மறந்தவனும், நண்ணுறும்
மீள அரு நரகிடைக் கடிது வீழ்க, யான். 102

'பொய்க் கரி கூறினேன், போருக்கு அஞ்சினேன்,
கைக் கொளும் அடைக்கலம் கரந்து வவ்வினேன்,
எய்த்த இடத்து இடர் செய்தோன், என்று இன்னோர் புகும்
மெய்க் கொடு நரகிடை விரைவின் வீழ்க, யான். 103

'அந்தணர் உறையுளை அனலி ஊட்டினேன்,
மைந்தரைக் கொன்றுளோன், வழக்கில் பொய்த்துளோன்,
நிந்தனை தேவரை நிகழ்த்தினேன், புகும்
வெந் துயர் நரகத்து வீழ்க, யானுமே. 104

'கன்று உயிர் ஒய்ந்து உகக் கறந்து பால் உண்டோன்,
மன்றிடைப் பிறர் பொருள் மறைத்து வவ்வினேன்,
நன்றியை மறந்திடும் நயம் இல் நாவினேன்,
என்று இவர் உறு நரகு என்னது ஆகவே.* 105

'ஆறு தன்னுடன் வரும் அம் சொல் மாதரை
ஊறு கொண்டு அலைக்க, தன் உயிர் கொண்டு ஓடினேன்,
சோறு தன் அயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்,
ஏறும் அக் கதியிடை யானும் ஏறவே. 106

'எஃகு எறி செருமுகத்து, ஏற்ற தெவ்வருக்கு
ஒஃகினன், உயிர் வளர்த்து உண்ணும் ஆசையான்,
அஃகல் இல் அறநெறி ஆக்கியோன் பொருள்
வெஃகிய மன்னன், வீழ் நரகின் வீழ்க, யான், 107

'அழிவு அரும் அரசியல் எய்தி, ஆகும் என்று,
இழி வரு சிறு தொழில் இயற்றி, ஆண்டு, தன்
வழி வரு தருமத்தை மறந்து, மற்று ஒரு
பழி வரு நெறி படர் பதகன் ஆக, யான். 108

102. கோள் - துன்பம்; 103. கரி - சான்று; 107. எஃகு - படை; ஒஃகினன் - வணங்கினவன்.

'தஞ்சு என ஒதுங்கினர் தனது பார் உளோர்,
எஞ்சல் இல் மறுக்கினேடு இரியல் போயுற,
வஞ்சி சென்று இறுத்தவன் வாகை மீக்கொள,
அஞ்சின மன்னவன் ஆக, யானுமே. 109

'கன்னியை அழி செயக் கருதினேன், குரு
பன்னியை நோக்கினேன், பருகினேன் நறை,
பொன் இகழ் களவினில் பொருந்தினேன், எனும்
இன்னவர் உறு கதி என்னது ஆகவே. 110

'ஊண் அல உண் வழி நாயின் உண்டவன்,
''ஆண் அலன், பெண் அலன், ஆர்கொலாம்?'' என
நாணலன், நரகம் உண்டு என்னும் நல் உரை
பேணலன், பிறர் பழி பிதற்றி, ஆக யான். 111

'மறு இல் தொல் குலங்களை மாசு இட்டு ஏற்றினேன்,
சிறு விலை எளியவர் உணவு சிந்தினேன்,
நறியன அயலவர் நாவில் நீர் வர
உறு பதம் நுங்கிய ஒருவன், ஆக யான்.* 112

'வில்லினும் வாளினும் விரிந்த ஆண் தொழில்
புல்லிடை உகுத்தனென், பொய்ம்மை யாக்கையைச்
சில் பகல் ஓம்புவான் செறுநர் சீறிய
இல்லிடை இடு பதம் ஏற்க, என் கையால். 113

'ஏற்றவற்கு, ஒரு பொருள் உள்ளது, இன்று என்று
மாற்றலன், உதவலன், வரம்பு இல் பல் பகல்
ஆற்றினன் உழற்றும் ஓர் ஆதன் எய்தும் விக்
கூற்று உறு நரகின் ஓர் கூறு கொள்க, யான். 114

'பிணிக்கு உறு முடை உடல் பேணி, பேணலார்த்
துணிக் குறு வயிர வாள் தடக் கை தூக்கிப் போய்,
மணிக் குறு நகை இள மங்கைமார்கள் முன்,
தணிக்குறு பகைஞரைத் தாழ்க, என் தலை. 115

109. வஞ்சி - புறத்திணைகளுள் ஒன்று; நிலம் பெறும் ஆசையால் பகைவர் நாட்டின்மீது படை எடுத்துச் செல்லும் ஒழுக்கம்; 110. பன்னி - பத்தினி; 111. நாயின் உண்ணல் - நாயைப் போலப் பிறரைத் துரத்திவிட்டுத் தான் மட்டும் உண்ணல்; 112. சிறு விலை உணவு - விலையில் உயர்ந்ததாய் அளவில் குறைந்ததாய் உள்ள உணவு, பஞ்ச காலத்துக் கொண்ட உணவு; எளியவர் - ஏழையர்; 113. செறுநர் சீறிய இல் - சிறைச்சாலை; 114. ஆதன் - கண்ணோட்டம் இல்லாதவன்; 115. தணிக்குறு பகைஞர் - வென்று அடக்குதற்குரிய எளிய பகைவர்.

'கரும்பு அலர் செந் நெல் அம் கழனிக் கான நாடு
அரும் பகை கவர்ந்து உண, ஆவி பேணினென்,
இரும்பு அலர் நெடுந் தளை ஈர்த்த காலொடும்,
விரும்பலர் முகத்து, எதிர் விழித்து நிற்க, யான்.' 116

**கோசலை பரதனை வாழ்த்தி, 'தந்தைக்கு இறுதிக் கடன் செய்' எனல்**

தூய வாசகம் சொன்ன தோன்றலை,
தீய கானகம் திருவின் நீங்கி முன்
போயினான் வரக் கண்ட பொம்மலாள்
ஆய காதலால், அழுது புல்லினாள். 117

செம்மை நல் மனத்து அண்ணல் செய்கையும்,
அம்மை தீமையும், அறிதல் தேற்றினாள்;
கொம்மை வெம் முலை குமுறு பால் உக,
விம்மி விம்மி நின்று, இவை விளம்புவாள்:* 118

'முன்னை நும் குல முதலுளோர்கள்தாம்,
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?
மன்னர் மன்னவா!' என்று, வாழ்த்தினாள்—
உன்ன உன்ன நைந்து உருகி விம்முவாள். 119

உன்ன நைந்து நைந்து, உருகும் அன்புகூர்
அன்னை தாளில் வீழ்ந்து, இளைய அண்ணலும்,
சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினான்;
இன்ன வேலைவாய், முனிவன் எய்தினான்.* 120

வந்த மாதவன் தாளில், வள்ளல் வீழ்ந்து,
'எந்தை யாண்டையான்? இயம்புவீர்?' என,
நொந்து மாழ்கினான்; நுவல்வது ஓர்கிலா
அந்த மா தவன் அழுது புல்லினான்.* 121

'மறு இல் மைந்தனே! வள்ளல், உந்தையார்,
இறுதி எய்தி நாள் ஏழ்-இரண்டின;
சிறுவர் செய் கடன் செய்து தீர்த்தி' என்று,
உறுவல் மேயினாள் உரையின் மேயினாள். 122

**பரதன், வசிட்ட முனிவனோடு சென்று, தந்தையின் உருவைக் கண்டு அழுதல்**

அன்னை ஏவினாள், அடி இறைஞ்சினான்;
பொன்னின் வார் சடைப் புனிதனோடும் போய்,
தன்னை நல்கி, அத் தருமம் நல்கினான்
பன்னு தொல் அறப் படிவம் நோக்கினான். 123

116. இரும்பு அலர் நெடுந் தளை - இரும்பாலாகிய விலங்கு; 117. பொம்மல் - மகிழ்ச்சி; 118. அம்மை - தாய்; 122. உறுவல் - துன்பம்.

மண்ணின்மேல் விழுந்து அலறி மாழ்குவான்,
அண்ணல், ஆழியான், அவனி காவலான்,
எண்ணெய் உண்ட பொன் எழில் கொள் மேனியை,
கண்ண நீரினால் கழுவி ஆட்டினான். 124

**தயரதன் உடலை விமானத்தில் வைத்து, யானைமேல் கொண்டு செல்லுதல்**

பற்றி, அவ்வயின் பரிவின் வாங்கினார்,
சுற்று நான்மறைத் துறை செய் கேள்வியார்;
கொற்ற மண்கணை குமுற, மன்னனை,
மற்று ஓர் பொன்னின் மா மானம் ஏற்றினார். 125

கரை செய் வேலைபோல், நகரி, கை எடுத்து,
உரை செய் பூசலிட்டு, உயிர் துளங்குற,
அரச வேலை சூழ்ந்து, அழுது, கைதொழ,
புரசை யானையில் கொண்டு போயினார். 126

**சாப் பறை முதலியன ஒலிக்க, தயரதன் உடலம் சரயு நதியை அடைதல்**

சங்கு பேரியும், தழுவு சின்னமும்
எங்கும் எங்கும் நின்று இரங்கி ஏங்குவ,
மங்குல் தோய் நகர் மகளிர் ஆம் என,
பொங்கு கண் புடைத்து அழுவ போன்றவே. 127

மாவும், யானையும், வயங்கு தேர்களும்,
கோவும், நான் மறைக் குழுவும், முன் செல,
தேவிமாரொடும் கொண்டு, தெண் திரை
தாவு வார் புனல் சரயு எய்தினார். 128

**ஈமப் பள்ளியில் தயரதனை ஏற்றி, பரதனை இறுதிக்கடன் செய அழைத்தல்**

எய்தி, நூலுளோர் மொழிந்த யாவையும்
செய்து, தீக் கலம் திருத்தி, செல்வனை,
வெய்தின் ஏற்றினார்; ‘வீர! நுந்தைபால்
பொய் இல் மாக் கடன் கழித்தி போந்து’ என்றார். 129

**கடன் செய்ய எழுந்த பரதனை முனிவன் தடுத்துக்கூறல்**

என்னும் வேலையில் எழுந்த வீரனை,
‘அன்னை தீமையால் அரசன் நின்னையும்,
துன்னு துன்பத்தால், துறந்து போயினான்,
முன்னரே’ என முனிவன் கூறினான். 130

125. கொற்ற மண்கணை - அரசனுக்குரிய மார்ச்சனையுடைய திரண்ட முரசு.

**துயர மிகுதியால் பரதன் அழுது சொல்லுதல்**

'துறந்து போயினுன் நுந்தை; தோன்றல்! நீ
பிறந்து, பேர் அறம் பிழைத்தது' என்றபோது,
இறந்து போயினுன்; இருந்தது, ஆண்டு, அது
மறந்து வேறு ஒரு மைந்தன் ஆம் கொலாம். 131

இடிக்கண் வாள் அரா இடைவது ஆம் என,
படிக்கண் வீழ்ந்து அகம் பதைக்கும் நெஞ்சினன்,
தடுக்கல் ஆகலாத் துயரம் தன்னுளே
துடிக்க, விம்மி நின்று அழுது சொல்லுவான்: 132

'உரை செய் மன்னர் மற்று என்னில் யாவரே?
இரவிதன் குலத்து, எந்தை முந்தையோர்
பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன்;
அரசு செய்யவோ ஆவது ஆயினேன்! 133

'பூவில் நான்முகன் புதல்வன் ஆதி ஆம்
தா இல் மன்னர், தம் தரும நீதியால்
தேவர் ஆயினர்; சிறுவன் ஆகியே,
ஆவ! நான் பிறந்து அவத்தன் ஆனவா! 134

'துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்
பன்னு வான் குலைப் பதடி ஆயினேன்;
என்னை! என்னையே ஈன்று காத்த என்
அன்னையார் எனக்கு அழகு செய்தவா!' 135

**வசிட்டன் சத்துருக்கனைக் கொண்டு ஈமக் கடன் செய்வித்தல்**

என்று கூறி நொந்து இடரின் மூழ்கும் அத்
துன்று தாரவற்கு இளைய தோன்றலால்,
அன்று நேர் கடன் அமைவது ஆக்கினன்—
நின்று நான்மறை நெறி செய் நீர்மையான். 136

**பெருந் தேவியரை ஒழிந்த மன்னன் தேவிமார் தீக் குளித்து நற்கதி சேர்தல்**

இழையும் ஆரமும் இடையும் மின்னிட,
குழையும் மா மலர்க் கொம்பு அனர்கள்தாம்
தழை இல் முண்டகம் தழுவு கானிடை
முழையில் மஞ்ஞைபோல், எரியில் மூழ்கினர். 137

133. பிரதம் - பிணம், பிரேதம் என்பதன் மரூஉ; 134. நான்முகன் புதல்வன் - காசிபன்; 134. அவத்தன் - வீணன்; 135. தாழை - தென்னை; பதடி - உள்ளீடில்லாத காய், இதனை வெறும்பாடை எனவும் தேரை ஏறிய காய் எனவும் கூறுவர்; 137. முண்டகம் - தாமரை.

அங்கி நீரினும் குளிர, அம்புயத்
திங்கள் வாள் முகம் திரு விளங்குற,
சங்கை தீர்ந்து, தம் கணவர் பின் செலும்
நங்கைமார் புகும் உலகம் நண்ணினர். 138

ஈமக் கடன் முடித்த பரதன் மனை சேர்தல்

அனைய மா தவன், அரசர் கோமகற்கு
இனைய தன்மையால் இயைவ செய்த பின்,
மனையின் எய்தினன்—மரபின் வாழ்வினை
வினையின் எய்தும் ஓர் பிணியின் வேலையான். 139

பத்து நாள்கள் சடங்குகள் நடைபெறுதல்

ஐந்தும் ஐந்தும் நாள் ஊழி ஆம் என,
மைந்தன், வெந் துயர்க் கடலின் வைகினன்;
தந்தை தன்வயின் தருமம் யாவையும்,
முந்து நூலுளோர் முறையின் முற்றினன். 140

வசிட்டன் முதலியோர் பரதனை அடுத்தல்

முற்றும் முற்றுவித்து உதவி, மும்மை நூல்
சுற்றம் யாவையும் தொடரத் தோன்றினன்,
வெற்றி மா தவன்—வினை முடித்த அக்
கொற்ற வேல் நெடுங் குமரற் கூறுவான்: 141

'மன்னர் இன்றியே வையம் வைகல்தான்
தொன்மை அன்று' எனத் துணியும் நெஞ்சினர்,
அன்ன மா நிலத்து அறிஞர் தம்மொடும்,
முன்னை மந்திரக் கிழவர் முந்தினர். 142

## 11  ஆறு செல் படலம்

மந்திரக் கிழவர் முதலியோர் அரசவை அடைதல்

வரன்முறை தெரிந்து உணர் மறையின் மா தவத்து
அரு மறை முனிவனும், ஆண்டையான் என,
விரைவின் வந்து ஈண்டினர்; விரகின் எய்தினர்;
பரதனை வணங்கினர்; பரியும் நெஞ்சினர். 1

138. அம்புயத் திங்கள் - தாமரைக்கு இடையே தோன்றும் சந்திரன்.
11 : 1. விரகு - திறமை, ஈண்டுப் பணிவு.

மந்திரக் கிழவரும், நகர மாந்தரும்,
தந்திரத் தலைவரும், தரணிபாலரும்,
அந்தர முனிவரோடு அறிஞர் யாவரும்,
சுந்தரக் குரிசிலை மரபின் சுற்றினர். 2

சுமந்திரன் நோக்கால் உணர்த்திய குறிப்பை முனிவன் பரதனுக்கு வாக்கால் உரைத்தல்

சுற்றினர் இருந்துழி, சுமந்திரப் பெயர்ப்
பொன் தடந் தேர் வலான், புலமை உள்ளத்தான்,
கொற்றவர்க்கு உறு பொருள் குறித்த கொள்கையான்,
முற்று உணர் முனிவனை முகத்து நோக்கினன். 3

நோக்கினல் சுமந்திரன் நுவலலுற்றதை,
வாக்கினல் அன்றியே உணர்ந்த மா தவன்,
'காக்குதி உலகம்; நின் கடன் அது ஆம்' என,
கோக் குமரனுக்கு அது தெரியக் கூறுவான்: 4

'வேதியர், அருந் தவர், விருத்தர், வேந்தர்கள்,
ஆதியர், நின்வயின் அடைந்த காரியம்,
நீதியும் தருமமும் நிறுவ; நீ இது,
கோது அறு குணத்தினய்! மனத்துக் கோடியால். 5

'தருமம் என்று ஒரு பொருள் தந்து நாட்டுதல்
அருமை என்பது பெரிது; அறிதி; ஐய! நீ
இருமையும் தருவதற்கு இயைவது; ஈண்டு, இது,
தெருள் மனத்தார் செயும் செயல் இது ஆகுமால்? 6

'வள் உறு வயிர வாள் அரசு இல் வையகம்,
நள் உறு கதிர் இலாப் பகலும், நாளொடும்
தெள்ளுறு மதி இலா இரவும், தேர்தரின்,
உள் உறை உயிர் இலா உடலும், ஒக்குமே. 7

'தேவர்தம் உலகினும், தீமை செய்து உழல்
மா வலி அவுணர்கள் வைகும் நாட்டினும்,
ஏவெவை உலகம் என்று இசைக்கும் அன்னவை,
காவல் செய் தலைவரை இன்மை கண்டிலம். 8

'முறை தெரிந்து ஒரு வகை முடிய நோக்குறின்,
மறையவன் வகுத்தன, மண்ணில், வானிடை,
நிறை பெருந் தன்மையின் நிற்ப, செல்வன,
இறைவரை இல்லன யாவும் காண்கிலம். 9

2. தந்திரத் தலைவர் - படைத் தலைவர்; 5. விருத்தர் - முதியவர்;
7. வள் - வாளின் உறை; வயிரம் - கூர்மை; நள் - விருப்பம்.

'பூத்த, நாள்மலர் அயன் முதல புண்ணியர்
ஏத்து, வான் புகழினர், இன்றுகாறும் கூக்
காத்தனர்; பின், ஒரு களைகண் இன்மையால்,
நீத்த நீர் உடை கல நீரது ஆகுமால். 10

'உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;
வந்ததும், அன்னைதன் வரத்தில்; மைந்த! நீ
அந்தம் இல் பேர் அரசு அளித்தி; அன்னது
சிந்தனை எமக்கு' எனத் தெரிந்து கூறினான். 11

**வசிட்டன் சொற் கேட்ட பரதன் நிலை**

'தஞ்சம் இவ் உலகம், நீ தாங்குவாய்' என,
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலும்,
'நஞ்சினை நுகர்' என, நடுங்குவாரினும்
அஞ்சினன் அயர்ந்தனன்—அருவிக் கண்ணினான். 12

நடுங்கினன்; நாத் தடுமாறி, நாட்டமும்
இடுங்கினன்; மகளிரின் இரங்கும் நெஞ்சினன்;
ஒடுங்கிய உயிரினன்; உணர்வு கைதர,
தொடங்கினன், அரசவைக்கு உள்ளம் சொல்லுவான்: 13

**பரதன் தன் உளக் கருத்தை உரைத்தல்**

'மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன் ஆய், முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்,
சான்றவர் உரைசெயத் தருமம் ஆதலால்,
ஈன்றவள் செய்கையில் இழுக்கு உண்டாகுமோ? 14

'அடைவு அருங் கொடுமை என் அன்னை செய்கையை,
நடைவரும் தன்மை நீர், ''நன்று இது'' என்றிரேல்,
இடை வரும் காலம் ஈண்டு இரண்டும் நீத்து, இது
கடை வரும் தீ நெறிக் கலியின் ஆட்சியோ! 15

'வேத்தவை இருந்த நீர், விமலன் உந்தியில்
பூத்தவன் முதலினர் புவியுள் தோன்றினர்,
மூத்தவர் இருக்கவே, முறைமையால் நிலம்
காத்தவர் உளர்எனின், காட்டிக் காண்டிரால். 16

10. கூ - பூமி; உடை கல நீரது - உடைந்த கப்பலின் தன்மைத்து; 13. கைதரல் - உதவல்; 15. இடை வரும் காலம் இரண்டு - திரேதாயுகம், துவாபரயுகம்.

'நல் நெறி என்னினும், நான், இந் நானில
மன் உயிர்ப் பொறை சுமந்து இருந்து வாழ்கிலேன்;
அன்னவன்தனைக் கொணர்ந்து, அலங்கல் மா முடி
தொல் நெறி முறைமையின் சூட்டிக் காண்டிரால். 17

'அன்றுஎனின், அவனொடும் அரிய கானிடை
நின்று, இனிது இருந் தவம், நெறியின் ஆற்றுவென்;
ஒன்று இனி உரைக்கின், என் உயிரை நீக்குவென்'
என்றனன்; என்றபோது; இருந்த பேர் அவை, 18

### அரசவையோர் பரதனைப் புகழ்தல்

'ஆன்ற பேர் அரசனும் இருப்ப, ஐயனும்
ஏன்றனன், மணி முடி ஏந்த; ஏந்தல் நீ,
வான் தொடர் திருவினை மறுத்தி; மன் இளந்
தோன்றல்கள் யார் உளர் நின்னின் தோன்றினர்? 19

'ஆழியை உருட்டியும், அறங்கள் போற்றியும்,
வேள்வியை இயற்றியும், வளர்க்க வேண்டுமோ?
ஏழினோடு ஏழ் எனும் உலகம் எஞ்சினும்,
வாழிய நின் புகழ்!' என்று வாழ்த்தினர். 20

### இராமனை அழைத்து வருதல் பற்றி முரசு அறைவிக்கத் தம்பியிடம் பரதன் கூறுதல்

குரிசிலும், தம்பியைக் கூவி, 'கொண்டலின்
முரசு அறைந்து, ''இந் நகர் முறைமை வேந்தனைத்
தருதும் ஈண்டு'' என்பது சாற்றி, தானையை,
''விரைவினில் எழுக!'' என, விளம்புவாய்' என்றான். 21

### சத்துருக்கன் உரை கேட்ட மக்கள் மகிழ்ச்சி

நல்லவன் உரைசெய, நம்பி கூறலும்,
அல்லலின் அழுங்கிய அன்பின் மா நகர்,
ஒல்லென இரைத்ததால்—உயிர் இல் யாக்கை அச்
சொல் எனும் அமிழ்தினல் துளிர்த்தது என்னவே. 22

அவித்த ஐம் புலத்தவர் ஆதியாய் உள
புவித்தலை உயிர் எலாம், 'இராமன் பொன் முடி
கவிக்கும்' என்று உரைக்கவே, களித்ததால்—அது
செவிப் புலம் நுகர்வது ஓர் தெய்வத் தேன்கொலாம்? 23

19. ஏந்த - சூட; 22. நல்லவன் - பரதன்; நம்பி - சத்துருக்கனன்;
23. அவித்த ஐம் புலத்தவர் - முனிவர்.

படு முரசு அறைந்தனர், 'பரதன் தம்முனைக்
கொடி நகர்த் தரும்; அவற் கொணர, சேனையும்
முடுகுக' என்ற சொல் மூரி மா நகர்,
உடுபதி வேலையின் உதயம் போன்றதே! 24

**சேனையின் எழுச்சி**

எழுந்தது பெரும் படை; ஏழு வேலையின்,
மொழிந்த பேர் ஊழியில், முழங்கி, முந்து எழ,
அழிந்தது கேகயன் மடந்தை ஆசை; போய்க்
கழிந்தது துயர், நெடுங் காதல் தூண்டவே. 25

பண்ணின புரவி, தேர், பகடு, பண்டியும்,
மண்ணினை மறைத்தன; மலிந்த மாக் கொடி
விண்ணினை மறைத்தன; விரிந்த மாத் துகள்,
கண்ணினை மறைத்தன, கமலத்தோனையே. 26

ஈசன் இவ் உலகினை அழிக்கும் நாள் எழும்
ஓசையின் நிமிர்ந்துளது, ஒல்லென் பேர் ஒலி;
காசையின் கரியவற் காண மூண்டு எழும்
ஆசையின் நிமிர்ந்தது, அவ் அனிக ராசியே. 27

படியொடு திரு நகர் துறந்து, பல் மரம்
செடியொடு தொடர் வனம் நோக்கி, சீதை ஆம்
கொடியொடு நடந்த அக் கொண்டல் ஆம் எனப்
பிடியொடு நடந்தன—பெருங் கை வேழமே. 28

சேற்று இள மரை மலர் சிறந்தவாம் எனக்
கால் தளம் பொலிதரு கன்னிமாரொடும்—
ஏற்று இளம் பிடிக் குலம்—இகலி, இன் நடை
தோற்று, இள மகளிரைச் சுமப்ப போன்றவே. 29

வேதனை வெயிற் கதிர் தணிக்க, மென் மழைச்
சீத நீர் தொடு நெடுங் கொடியும் சென்றன;
கோதை வெஞ் சிலையவன் கோலம் காண்கிலா
மாதரின் நுடங்குவ, வரம்பு இல் கோடியே. 30

வெண் மதி மீச்செல மேகம் ஊர்ந்தென,
அண்ணல் வெங் கதிரவன், அளவு இல் மூர்த்தி ஆய்,
மண்ணிடை இழிந்து ஒரு வழிக்கொண்டாலென,
எண்ண அரு மன்னவர் களிற்றின் ஏகினர். 31

26. பண்ணுதல் - அலங்கரித்தல்; பகடு - யானை; 27. காசை - காயாம்பூ; 28. படி - பூமி, ஈண்டுக் கோசல நாடு; 29. கால் தளம் - பாதம்; 31. வெண் மதி குடைக்கும், மேகம் யானைக்கும், கதிரவன் அரசர்க்கும் உவமை.

தேர்மிசைச் சென்றது ஓர் பரவை; செம் முகக்
கார்மிசைச் சென்றது ஓர் உவரி; கார்க்கடல்,
ஏர்முகப் பரிமிசை ஏகிற்று; எங்கணும்
பார்மிசைப் படர்ந்தது, பதாதிப் பௌவமே. 32

தாரையும், சங்கமும், தாளம், கொம்பொடு,
பார்மிசைப் பம்பையும், துடியும், மற்றவும்,
பேரியும், இயம்பல சென்ற—பேதைமைப்
பூரியர் குழாத்திடை அறிஞர் போலவே. 33

தா அரு நாண் முதல் அணி அலால், தகை
மே வரு கலங்களை வெறுத்த மேனியர்,
தேவரும் மருள் கொளத் தெரியும் காட்சியர்,
பூ உதிர் கொம்பு என, மகளிர் போயினர். 34

அதிர் கடல் வையகம் அனைத்தும் காத்தவன்
விதி வரும் தனிக் குடை மீது இலாப் படை,
பொதி பல கவிகை மீன் பூத்தது ஆகிலும்,
கதிர் மதி நீங்கிய கங்குல் போன்றதே. 35

செல்லிய செலவினுல், 'சிறிய திக்கு' எனச்
சொல்லிய சேனையைச் சுமந்ததே எனில்,
ஒல்லொலி வேலை நீர் உடுத்த பாரை, 'ஓர்
மெல்லியல்' என்றவர் மெலியரேகொலாம்? 36

தங்கு செஞ் சாந்து அகில் கலவை சார்கில,
குங்குமம் கொட்டில, கோவை முத்து இல,—
பொங்கு இளங் கொங்கைகள்—புதுமை வேறு இல,
தெங்கு இளநீர் எனத் தெரிந்த காட்சிய. 37

இன் துணையவர் முலை எழுது சாந்தினும்
மன்றல் அம் தாரினும் மறைந்திலாமையால்,
துன்று இளங் கொடி முதல் தூறு நீங்கிய
குன்று எனப் பொலிந்தன—குவவுத் தோள்களே. 38

நறை அறு கோதையர் நாள் செய் கோலத்தின்
துறை அற, அஞ்சனம் துறந்த நாட்டங்கள்
குறை அற நிகர்த்தன—கொற்றம் முற்றுவான்,
கறை அறக் கழுவிய கால வேலையே. 39

32. பதாதி - காலாட்படை; 34. நாண் - மங்கல நாண்; 35. பொதிதல் - நெருங்குதல்; 36. செல்லிய - பரவிய; 39. நறை - மணப்புகை; கொற்றம் முற்றுதல் - வெற்றி பெறுதல்; கறை அறக் கழுவுதல் - துரு நீங்கச் சாணை பிடித்தல்; கால வேல் - காலனைப் போன்ற வேல்.

விரி மணி மேகலை விரவி ஆர்க்கில
தெரிவையர் அல்குல், தார் ஒலி இல் தேர் என;
பரிபுரம் ஆர்க்கில பவளச் சீறடி,
அரிஇனம் ஆர்க்கிலாக் கமலம் என்னவே. 40

மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கியது அரிவையர் நடுவிற்கே கொலாம்!—
புல்கிய மணி வடம் பூண்கிலாமையால்,
ஒல்கிய ஒரு வகைப் பொறை உயிர்த்தவே. 41

'கோமகன் பிரிதலின், கோலம் நீத்துள
தாமரைச் செல்வியும், தவத்தை மேவினள்;
காமனும், அருந் துயர்க் கடலில் மூழ்கினன்
ஆம்' என, நிகழ்ந்தது—அவ் அளவு இல் சேனையே. 42

மண்ணையும், வானையும், வயங்கு திக்கையும்,
உண்ணிய நிமிர் கடல் ஒக்கும் என்பது என்?
கண்ணினும், மனத்தினும், கமலத்து அண்ணல்தன்
எண்ணினும், நெடிது—அவண் எழுந்த சேனையே! 43

அலை நெடும் புனல் அறக் குடித்தலால், அகம்
நிலைபெற நிலை நெறி நிறுத்தலால், நெடு
மலையினை மண் உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது—அத் தயங்கு தானையே.* 44

அறிஞரும், சிறியரும் ஆதி அந்தமா,
செறி பெருந் தானையும் திருவும் நீங்கலால்,
குறியவன் புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள்,
மறி கடல் ஒத்தது—அவ் அயோத்தி மா நகர். 45

பெருந் திரை நதிகளும், வயலும், பெட்புறு
மரங்களும், மலைகளும், மண்ணும், கண் உறத்
திருந்தல் இல் அயோத்தி ஆம் தெய்வ மா நகர்
அருந் தெரு ஒத்தது—அப் படை செல் ஆறுஅரோ! 46

'தார்கள்தாம், கோதைதாம், தாமம்தாம், தகை
ஏர்கள்தாம், கலவைதாம், கமழ்ந்தின்று' என்பரால்—
கார்கள்தாம் என மிகக் கடுத்த கைம்மலை
வார் கடாம் அல்லது, அம் மன்னன் சேனையே. 47

41. நடு - இடை; 42. மைந்தர் மகளிரிடைக் காதற் குறிப்பு இன்மையின் மன்மதன் துன்பக் கடலில் மூழ்கினன் என எண்ண நேர்ந்தது என்பது கருத்து; 44. தமிழ்த் தலைவன் - அகத்திய முனிவன்; 45. குறியவன் - அகத்தியன்; 47. தார் - அடையாள மாலை; கோதை - தலையில் சூடும் கண்ணி; தாமம் - அழகுக்காக அணியும் மாலை.

ஆள் உலாம் கடலினும் அகன்ற அக் கடல்,
தோள் உலாம் குண்டலம் முதல தொல் அணி
கேள் உலாம் மின் ஒளி கிளர்ந்தது இல்லையால்—
வாள் உலாம் நுதலியர் மருங்குல் அல்லதே. 48

மத்தளம் முதலிய வயங்கு பல் இயம்
ஒத்தன சேறலின், உரை இலாமையின்,
சித்திரச் சுவர் நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்தது—அப் படையின் ஈட்டமே. 49

ஏடு அறு கோதையர் விழியின் எய்த கோல்
ஊடு உற உரம் தொளைத்து, உயிர் உணுவகை,
ஆடவர்க்கு அரும் பெருங் கவசம் ஆயது—
காடு உறை வாழ்க்கையைக் கண்ணன் நண்ணலே. 50

கனங் குழைக் கேகயன் மகளின் கண்ணிய
சினம் கிடந்து எரிதலின், தீர்ந்தவே கொலாம்—
அனங்கன் ஐங் கொடுங் கணை அடரும் ஆடவர்
மனம் கிடந்து உண்கில, மகளிர் கொங்கையே? 51

பரதன் சீரை அணிந்து, சத்துருக்கனுடன் தேரில் செல்லுதல்

இன்னணம் நெடும் படை ஏக, ஏந்தலும்,
தன்னுடைத் திரு அரைச் சீரை சாத்தினன்;
பின் இளையவனொடும், பிறந்த துன்பொடும்,
நல் நெடுந் தேர்மிசை நடத்தல் மேயினன். 52

தாயரும், அருந் தவத்தவரும், தந்தையின்
ஆய மந்திரியரும், அளவு இல் சுற்றமும்,
தூய அந்தணர்களும், தொடர்ந்து சூழ்வரப்
போயினன்—திரு நகர்ப் புரிசை வாயிலே. 53

சத்துருக்கன் கூனியைப் பற்ற, பரதன் விலக்குதல்

மந்தரைக் கூற்றமும், வழிச் செல்வாரொடும்
உந்தியே போதல் கண்டு, இளவல் ஓடி, ஆர்த்து
அந்தரத்து எற்றுவான் அழன்று பற்றலும்,
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்: 54

48. கேள் - நிறம், ளகரம் போலி; 50. ஏடு - பூ; 51. ஐங் கணை - மன்மதனுக்குரிய ஐந்து மலர் அம்புகள்: தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன; 53. ஆயம் - இரகசியம், மந்தணம்.

'முன்னையர் முறை கெட முடித்த பாவியைச்
சின்னபின்னம் செய்து, என் சினத்தைத் தீர்வெனேல்,
''என்னை இன்று என் ஐயன் துறக்கும்'' என்று அலால்,
''அன்னை'' என்று, உணர்ந்திலென், ஐய! நான்' என்ருன். 55

'ஆதலால், முனியும் என்று ஐயன், அந்தம் இல்
வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்,
கோது இலா அரு மறை குலவும் நூல் வலாய்!
போதும் நாம்' என்று கொண்டு, அரிதின் போயினுன்.* 56

பரதன், இராமன் தங்கிய சோலையில் தங்குதல்

மொய் பெருஞ் சேனையும் மூரி ஞாலமும்
கைகலந்து அயல் ஒரு கடலின் சுற்றிட,
ஐயனும் தேவியும் இளைய ஆளியும்
வைகிய சோலையில் தானும் வைகினுன். 57

அல் அணை நெடுங் கணீர் அருவி ஆடினன்,
கல் அணை கிழங்கொடு கனியும் உண்டிலன்,
வில் அணைத்து உயர்ந்த தோள் வீரன் வைகிய
புல் அணை மருங்கில், தான் பொடியின் வைகினுன். 58

பரதன் ஊர்திகளை விடுத்து நடந்து செல்லுதல்

'ஆண்டு நின்று, ஆண்தகை அடியின் ஏகினுன்
ஈண்டிய நெறி' என, தானும் ஏகினுன்—
தூண்டிடு தேர்களும் துரக ராசியும்
காண்தகு கரிகளும் தொடர, காலினே. 59

## 12 கங்கை காண் படலம்

பரதன் சேனையோடு கங்கைக் கரை அடைதல்

பூ விரி பொலன் கழல், பொரு இல் தானையான்,
காவிரி நாடு அன்ன கழனி நாடு ஒரீஇ,
தாவர சங்கமம் என்னும் தன்மைய
யாவையும் இரங்கிட, கங்கை எய்தினுன். 1

12: 1. தாவரம் - நிலைத்திணை; சங்கமம் - இயங்கு திணை.

சேனையின் சிறப்பும் பெருக்கமும்

எண்ண அருஞ் சுரும்பு தம் இனத்துக்கு அல்லது,
கண் அகன் பெரும் புனல் கங்கை எங்கணும்
அண்ணல் வெங் கரி மதத்து அருவி பாய்தலால்,
உண்ணவும், குடையவும், உரித்துஅன்றுஆயதே. 2

அடிமிசைத் தூளி புக்கு, அடைந்த தேவர்தம்
முடி உறப் பரந்தது ஓர் முறைமை தேர்ந்திலெம்;
நெடிது உயிர்த்து உண்டவும், நீந்தி நின்றவும்,
பொடிமிசைப் புரண்டவும், புரவி ஈட்டமே. 3

பாலை ஏய் நிறத்தொடு, பண்டு தான் படர்
ஓலை ஏய் நெடுங் கடல், ஓடிற்று இல்லையால்;—
மாலை ஏய் நெடு முடி மன்னன் சேனை ஆம்
வேலையே மடுத்தது, அக் கங்கை வெள்ளமே. 4

கான்தலை நண்ணிய காளைபின் படர்
தோன்றலை, அவ் வழித் தொடர்ந்து சென்றன—
ஆன்றவர் உணர்த்திய அக்குரோணிகள்
மூன்று பத்து ஆயிரத்து இரட்டி முற்றுமே. 5

பரதன் வருகையை ஐயுற்று, குகன் சேனையோடு தென் கரை வருதல்

அப் படை கங்கையை அடைந்த ஆயிடை,
'துப்புடைக் கடலின் நீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை அண்ணலோடு உடற்றவே கொலாம்
இப் படை எடுத்தது?' என்று, எடுத்த சீற்றத்தான். 6

குகன் எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்
தொகை முரண் சேனையைத் துகளின் நோக்குவான்—
நகை மிக, கண்கள் தீ நாற, நாசியில்
புகை உற, குனிப்புறும் புருவப் போர்விலான். 7

மை உற உயிர் எலாம் இறுதி வாங்குவான்
கை உறு கவர் அயில் பிடித்த காலன்தான்
ஐ-ஐந் நூறுயிரம் உருவம் ஆயின
மெய் உறு தானையான், வில்லின் கல்வியான், 8

4. ஓலை ஏய் நெடுங்கடல் - ஒலி பொருந்திய பெருங்கடல்; ஓல் - ஒலி; மடுத்தல் - உண்ணல்; 5. அக்குரோணி - படையளவு: 21870 தேரும், 21870 யானையும், 65,610 குதிரையும், 109350 காலாளும் உடையது ஓர் அக்குரோணி; 7. தொகை முரண் சேனை - கூட்டமான வலிய படை.

கட்டிய சுரிகையன், கடித்த வாயினன்,
வெட்டிய மொழியினன், விழிக்கும் தீயினன்,
கொட்டிய துடியினன், குறிக்கும் கொம்பினன்,
'கிட்டியது அமர்' எனக் கிளரும் தோளினன், 9

'எலி எலாம் இப் படை; அரவம், யான்' என,
ஒலி உலாம் சேனையை உவந்து கூவினன்—
வலி உலாம் உலகினில் வாழும் வள் உகிர்ப்
புலி எலாம் ஒரு வழிப் புகுந்த போலவே. 10

மருங்கு அடை தென் கரை வந்து தோன்றினன்—
ஒருங்கு அடை நெடும் படை ஒல்லென் ஆர்ப்பினோடு
அருங் கடையுகம்தனில், அசனி மா மழை
கருங் கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே. 11

குகன் சேனைக்கு இட்ட கட்டளை

தோன்றிய புளிஞரை நோக்கி, 'சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு,
ஏன்றனென், என் உயிர்த் துணைவற்கு ஈகுவான்
ஆன்ற பேர் அரசு; நீர் அமைதிர் ஆம்' என்றான். 12

'துடி எறி; நெறிகளும், துறையும், சுற்றுற
ஒடியெறி; அம்பிகள் யாதும் ஓட்டலிர்;
கடி எறி கங்கையின் கரை வந்தோர்களைப்
பிடி; எறி, பட' என, பெயர்த்தும் கூறுவான்: 13

குகன் உரைத்த வீர உரை

'அஞ்சன வண்ணன், என் ஆர் உயிர் நாயகன், ஆளாமே,
வஞ்சனையால் அரசு எய்திய மன்னரும் வந்தாரே!
செஞ் சரம் என்பன தீ உமிழ்கின்றன, செல்லாவோ?
உஞ்சு இவர் போய்விடின், "நாய்க் குகன்" என்று, எனை ஓதாரோ? 14

'ஆழ நெடுந் திரை ஆறு கடந்து இவர் போவாரோ?
வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
'"தோழமை" என்று, அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?
"ஏழைமை வேடன் இறந்திலன்" என்று எனை ஏசாரோ? 15

9. சுரிகை - உடைவாள்; குறித்தல் - ஊதுதல்; 12. ஆன்ற - அமைந்த; அமைதிர் - ஆயத்தமாவீர்; 15. ஏழைமை - அறியாமை.

'''முன்னவன்'' என்று நினைந்திலன்; ''மொய் புலி அன்னான் ஓர்
பின்னவன் நின்றனன்'' என்றிலன்; அன்னவை பேசானேல்,
என் இவன் என்னை இகழ்ந்தது? இவ் எல்லை கடந்து அன்றோ?
மன்னவர் நெஞ்சினில், வேடர் விடும் சரம் வாயாவோ? 16

'பாவமும் நின்ற பெரும் பழியும், பகை நண்போடும்,
ஏவமும், என்பவை மண் உலகு ஆள்பவர் எண்ணாரோ?
ஆவது போக, என் ஆர் உயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது, சேனையும் ஆர் உயிரும் கொடு போய் அன்றோ? 17

'அருந் தவம் என் துணை ஆள, இவன் புவி ஆள்வானோ?
மருந்துஎனின் அன்று உயிர்; வண் புகழ் கொண்டு, பின் மாயேனோ?
பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று; கழிக்குவென், என் கடன் இன்றோடே. 18

'தும்பியும் மாவும் மிடைந்த பெரும் படை சூழ்வு ஆரும்,
வம்பு இயல் தார் இவர் வாள் வலி கங்கை கடந்து அன்றோ?
வெம்பிய வேடர் உளீர்! துறை ஓடம் விலக்கீரோ?
நம்பி முன்னே, இனி நம் உயிர் மாய்வது நன்று அன்றோ? 19

'போன படைத் தலை வீரர்தமக்கு இரை போதா இச்
சேனை கிடக்கிடு; தேவர் வரின், சிலை மா மேகம்
சோனை பட, குடர் சூறை பட, சுடர் வாளோடும்
தானை பட, தனி யானை பட, திரள் சாயேனோ? 20

'நின்ற கொடைக் கை என் அன்பன் உடுக்க நெடுஞ் சீரை
அன்று கொடுத்தவள் மைந்தர் பலத்தை, என் அம்பாலே
கொன்று குவித்த நிணம்கொள் பிணக் குவை கொண்டு ஓடி,
துன்று திரைக் கடல், கங்கை மடுத்து இடை தூராதோ? 21

' ''ஆடு கொடிப் படை சாடி, அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது, பார்'' எனும் இப் புகழ் மேவீரோ?
நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர், நாம் ஆளும்
காடு கொடுக்கிலர்ஆகி, எடுத்தது காணீரோ? 22

' ''மா முனிவர்க்கு உறவாகி வனத்திடையே வாழும்
கோ முனியத் தகும்'' என்று, மனத்துஇறை கொள்ளாதே,
ஏ முனை உற்றிடில், ஏழு கடற் படை என்றாலும்,
ஆ முனையின் சிறு கூழ் என இப்பொழுது ஆகாதோ?' 23

16. வாய்தல் - சேர்தல்; 17. ஏவம் - குற்றம்; 19. வம்பு - மணம்; வெம்புதல் - கொதித்தல்; 20. சிலை மா மேகம் - வில்லாகிய பெரிய மேகம்; கிடக்கிடு - கிடக்க; சோனை - விடாமழை; 21. பலம் - படை; 23. ஏ முனை - அம்பு எய்யும் போர்; முனையின் - முனைந்தால்.

என்பன சொல்லி, இரும்பு அன மேனியர் ஏனோர்முன்,
வன் பணை வில்லினன், மல் உயர் தோளினன், வாள் வீரற்கு
அன்பனும், நின்றனன்; நின்றது கண்டு, அரிஏறு அன்ன
முன்பனில் வந்து, மொழிந்தனன், மூரிய தேர் வல்லான்: 24

சுமந்திரன் குகனைக் குறித்துப் பரதனுக்குத் தெரிவித்தல்

'கங்கை இரு கரை உடையான்; கணக்கு இறந்த நாவாயான்;
உங்கள் குலத் தனி நாதற்கு உயிர்த் துணைவன்; உயர் தோளான்;
வெங்கரியின் ஏறு அனையான்; வில் பிடித்த வேலையினான்;
கொங்கு அலரும் நறுந் தண் தார்க் குகன் என்னும் குறி உடையான்;

'கல் காணும் திண்மையான்; கரை காணாக் காதலான்;
அற்கு ஆணி கண்டனைய அழகு அமைந்த மேனியான்;—
மல் காணும் திரு நெடுந் தோள் மழை காணும் மணி நிறத்தாய்!—
'நிற் காணும் உள்ளத்தான், நெறி எதிர் நின்றனன்' என்றான்.

குகனைக் காண, பரதன் விரைதல்

தன் முன்னே, அவன் தன்மை, தந்தை துணை முந்து உரைத்த
சொல் முன்னே உவக்கின்ற துரிசு இலாத் திரு மனத்தான்,
'மன் முன்னே தழீஇக் கொண்ட மனக்கு இனிய துணைவனேல்,
என் முன்னே அவற் காண்பென், யானே சென்று' என எழுந்தான்.

பரதன் நிலை கண்டு, குகன் துணுக்குற்றுத் தன்னுள் வியத்தல்

என்று எழுந்த தம்பியொடும், எழுகின்ற காதலொடும்,
குன்று எழுந்து சென்றது எனக் குளிர் கங்கைக் கரை குறுகி
நின்றவனை நோக்கினான், திரு மேனி நிலை உணர்ந்தான்,
துன்று கரு நறுங் குஞ்சி எயினர் கோன்; துண்ணென்றான். 28

வற்கலையின் உடையானை, மாசு அடைந்த மெய்யானை,
நற் கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தானை,
கல் கனியக் கனிகின்ற துயரானை, கண்ணுற்றான்;
வில் கையினின்று இடை வீழ, விம்முற்று, நின்று ஒழிந்தான்.

'நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்; அயல் நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான்; தவ வேடம் தலைநின்றான்;
துன்பம் ஒரு முடிவு இல்லை; திசை நோக்கித் தொழுகின்றான்;
எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு?' என்றான். 30

24. முன்பன் - ஆற்றலுடையவன், இங்குப் பரதன்; 29. வற்கலை - மரவுரி.

குகன் நாவாயில் தனியே வந்து, பரதனைத் தொழுதல்

'உண்டு இடுக்கண் ஒன்று உடையான், உலையாத அன்பு உடையான்,
கொண்ட தவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பு எல்லாம்
கண்டு, உணர்ந்து, பெயர்கின்றேன்; காமின்கள் நெறி' என்னு,
தண் துறை, ஓர் நாவாயில், ஒரு தனியே தான் வந்தான். 31

ஒருவரை ஒருவர் வணங்கித் தழுவ, குகன் பரதனிடம் வந்த காரணம் வினவல்

வந்து எதிரே தொழுதானை வணங்கினன்; மலர் இருந்த
அந்தணனும் தனை வணங்கும் அவனும், அவன் அடிவீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத் தழுவினன்—தகவு உடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான். 32

தழுவின புளிஞர் வேந்தன் தாமரைச் செங்கணானை,
'எழுவினும் உயர்ந்த தோளாய்! எய்தியது என்னை?' என்ன,
'முழுது உலகு அளித்த தந்தை முந்தையோர் முறையினின்றும்
வழுவினன்; அதனை நீக்க, மன்னனைக் கொணர்வான்' என்றான். 33

பரதன் பெருந் தகைமை உணர்ந்த குகன் அவனை வணங்கிக் கூறல்

கேட்டனன், கிராதர் வேந்தன்; கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி,
மீட்டும், மண் அதனில் வீழ்ந்தான்; விம்மினன், உவகை வீங்க;
திட்ட அரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன், பொய் இல் உள்ளத்தன், புகலலுற்றான்: 34

'தாய் உரைகொண்டு தாதை உதவிய தரணிதன்னை,
''தீவினை'' என்ன நீத்து, சிந்தனை முகத்தில் தேக்கி,
போயினை என்றபோழ்து, புகழினோய்! தன்மை கண்டால்,
ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ, தெரியின் அம்மா! 35

'என் புகழ்கின்றது, ஏழை எயினனேன்? இரவி என்பான்-
தன் புகழ்க் கற்றை, மற்றை ஒளிகளைத் தவிர்க்குமாபோல்,
மன் புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன் புகழ் ஆக்கிக் கொண்டாய்—உயர் குணத்து உரவுத் தோளாய்!' 36

என இவை அன்ன மாற்றம் இயைவன பலவும் கூறி,
புனை கழல், புலவு வேற் கை, புளிஞர்கோன் பொரு இல் காதல்
அனையவற்கு அமைவின் செய்தான்; ஆர் அவற்கு அன்பு இலாதார்?—
நினைவு அருங் குணம்கொடு அன்றோ, இராமன்மேல் நிமிர்ந்த காதல்?

33. புளிஞர் - வேடர்; எழு - கணையமரம்; 34. கிராதர் - வேடர்; பூட்டிய - பிணித்த; 35. கேழ் - ஒப்பு; 36. உரவு - வலிமை; 37. அவற்கு - குகனுக்கு.

**குகன், இராமன் உறைந்த இடத்தைப் பரதனுக்குக் காட்டுதல்**

அவ் வழி அவனை நோக்கி, அருள்தரு வாரி அன்ன
செவ் வழி உள்ளத்து அண்ணல், தென் திசைச் செங் கை கூப்பி,
'எவ் வழி உறைந்தான் நம் முன்?' என்றலும், எயினர் வேந்தன்,
'இவ் வழி, வீர! யானே காட்டுவல்; எழுக!' என்றான். 38

**இராமன் உறங்கிய இடம் கண்ட பரதனது செயலும் சிந்தனையும்**

கார் எனக் கடிது சென்றான்; கல்லிடைப் படுத்த புல்லின்,
வார் சிலைத் தடக் கை வள்ளல், வைகிய பள்ளி கண்டான்;
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான்; பருவரற்பரவை புக்கான்—
வார் மணிப் புனலால் மண்ணை மண்ணுநீர் ஆட்டும் கண்ணான்.

'இயன்றது, என் பொருட்டினால், இவ் இடர் உனக்கு என்ற போழ்தும்,
அயின்றனை, கிழங்கும் காயும் அமுது என; அரிய புல்லில்
துயின்றனை; எனவும், ஆவி துறந்திலென்; சுடரும் காசு
குயின்று உயர் மகுடம் சூடும் செல்வமும் கொள்வென் யானே!'

**'இராமன் துயில, இலக்குவன் யாது செய்தான்?' எனக் குகனை வினவி அறிதல்**

தூண்தர நிவந்த தோளான் பின்னரும் சொல்லுவான்: 'அந்
நீண்டவன் துயின்ற சூழல் இதுஎனின், நிமிர்ந்த நேயம்
பூண்டவன், தொடர்ந்து பின்னே போந்தவன், பொழுது நீத்தது
யாண்டு?' என, இனிது கேட்டான்; எயினர்கோன், இதனைச் சொன்னான்:

'அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச,
வில்லை ஊன்றிய கையோடும், வெய்து உயிர்ப்போடும், வீரன்,
கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!— கண்கள் நீர் சொரிய, கங்குல்
எல்லை காண்பு அளவும் நின்றான்; இமைப்பிலன் நயனம்' என்றான்.

**இலக்குவன் நிலை கேட்டு, பரதன் தன்னை நொந்து உரைத்தல்**

என்பதஃது கேட்ட மைந்தன், 'இராமனுக்கு இளையார் என்று
முன்பு ஒத்த தோற்றத்தேமில், யான் என்றும் முடிவு இலாத
துன்பத்துக்கு ஏது ஆனேன்; அவன், அது துடைக்க நின்றான்;
அன்பத்துக்கு எல்லை உண்டோ? அழகிது, என் அடிமை!' என்றான்.

39. பருவரற் பரவை - துன்பக்கடல்; 40. காசு - மணி; 41. நிமிர்ந்த நேயம் - அளவு கடந்த அன்பு.

கங்கையின் தென் கரை சேர்க்குமாறு, குகனைப் பரதன் வேண்டுதல்

அவ் இடை, அண்ணல்தானும், அன்று, அரும் பொடியின் வைகி,
'தெவ் இடைதர நின்று ஆர்க்கும் செறி கழல் புளிஞர் கோமான்!
இவ் இடை, கங்கை ஆற்றின் ஏற்றினை ஆயின், எம்மை
வெவ் இடர்க் கடல் நின்று எற்றி, வேந்தன்பால் விடுத்தது' என்றான்.

குகன் கட்டளையிட, நாவாய்கள் வருதல்

'நன்று' எனப் புளிஞர் வேந்தன் நண்ணினன் தமரை; 'நாவாய்
சென்று இனித் தருதிர்' என்ன, வந்தன—சிவன் சேர் வெள்ளிக்
குன்று என, குனிக்கும் அம் பொன் குவடு என, குபேரன் மானம்
ஒன்று என, நாணிப் பல் வேறு உருவு கொண்டனைய ஆன. 45

நங்கையர் நடையின் அன்னம் நாண் உறு செலவின் நாவாய்,
கங்கையும் இடம் இலாமை மிடைந்தன—கலந்த எங்கும்,—
அங்கொடு, இங்கு, இழித்தி ஏற்றும் அமைதியின், அமரர் வையத்து
இங்கொடு அங்கு இழித்தி ஏற்றும் இரு வினை என்னல் ஆன. 46

படைகள் கங்கையைக் கடத்தல்

'வந்தன, வரம்பு இல் நாவாய்; வரி சிலைக் குரிசில் மைந்த!
சிந்தனை யாவது?' என்று, சிருங்கிபேரியர்கோன் செப்ப,
சுந்தர வரி விலானும் சுமந்திரன் தன்னை நோக்கி,
'எந்தை! இத் தானைதன்னை ஏற்றுதி, விரைவின்' என்றான். 47

குரிசிலது ஏவலால், அக் குரகதத் தேர் வலானும்,
வரிசையின் வழாமை நோக்கி, மரபுளி வகையின் ஏற்ற,
கரி, பரி, இரதம், காலாள், கணக்கு அறு கரை இல் வேலை,
எரி மணி திரையின் வீசும் கங்கை யாறு ஏறிற்று அன்றே! 48

இடிபடு முழக்கம் பொங்க, இன மழை மகர நீரை
முடிவு உற முகப்ப, ஊழி இறுதியின் மொய்ப்ப போல,
கொடியொடு வங்கம் வேலை கூம்பொடு படர்வ போல,
நெடிய கை எடுத்து நீட்டி நீந்தின, நெடுங் கை வேழம். 49

44. இடைதரல் - வருந்தல்; 45. குனித்தல் - வளைத்தல்; பொன்குவடு - மேரு; குபேரன் மானம் - குபேரனது புட்பக விமானம்; 46. அன்னம் நாணுறு நங்கையர் நடையின் செலவின் நாவாய் என இயையும்; இழித்தி - இறக்கி; 47. சிருங்கிபேரம் - குகனுடைய ஊர்; 48. குரகதம் - குதிரை; 49. மகரநீர் - கடல்; வங்கம் கொடியொடு கூம்பொடு வேலை படர்வதுபோல என இயையும்.

சங்கமும் மகர மீனும் தரளமும் மணியும் தள்ளி,
வங்க நீர்க் கடலும் வந்து தன் வழிப் படர, மானப்
பொங்கு வெங் களிறு நூக்க, கரை ஒரீஇப் போயிற்றுஅம்மா—
கங்கையும் இராமற் காணும் காதலது என்ன மாதோ! 50

பாங்கின் உத்தரியம் மானப் படர் திரை தவழ, பாரின்
வீங்கு நீர் அழுவம்தன்னுள், விழு மதக் கலுழி வெள்ளத்து
ஓங்கல்கள் தலைகள் தோன்ற,ஒளித்து அவண் உயர்ந்த கும்பம்,
பூங் குழற் கங்கை நங்கை முலை எனப் பொலிந்த மாதோ! 51

கொடிஞ்சொடு தட்டும், அச்சும், ஆழியும், கோத்த மொட்டும்,
நெடுஞ் சுவர்க் கொடியும், யாவும், நெறி வரு முறையின் நீக்கி,
விடும் சுவல் புரவியோடும் வேறு வேறு ஏற்றிச் சென்ற—
மடிஞ்சபின் உடம்பு கூட்டும் வினை என—வயிரத் தேர்கள்! 52

நால்-இரண்டு ஆய கோடி, நவை இல் நாவாய்கள்மீதா,
சேல் திரண்டனைய ஆய கதியொடும், நிமிரச் சென்ற—
பால் திரண்டனைய மெய்ய, பயம் திரண்டனைய நெஞ்ச,
கால் திரண்டனைய கால, கடு நடைக் கலினப் பாய் மா. 53

**மாதர்கள் ஓடத்தில் செல்லுதல்**

ஊடு உற நெருக்கி, ஓடத்து, ஒருவர்முன் ஒருவர் கிட்டி,
சூடகத் தளிர்க் கைம் மாதர் குழுமினர் துவன்றித் தோன்ற,
பாடு இயல் களி நல் யானைப் பந்தி அம் கடையின் குத்தக்
கோடுகள் மிடைந்த என்ன, மிடைந்தன குவவுக் கொங்கை. 54

பொலங் குழை மகளிர், நாவாய்ப் போக்கின் ஒன்று ஒன்று தாக்க,
மலங்கினர்; இரண்டு பாலும் மறுகினர் வெருவி நோக்க,
அலங்கு நீர் வெள்ளம் தள்ளி அழிதர, அங்கும் இங்கும்
கலங்கலின், வெருவிப் பாயும் கயற்குலம் நிகர்த்த, கண்கள்.

இயல்வு உறு செலவின் நாவாய், இரு கையும் எயினர் தூண்ட,
துயல்வன துடுப்பு வீசும் துவலைகள், மகளிர் மென் தூசு
உயல்வு உறு பரவை அல்குல் ஒளிப்பு அறத் தளிப்ப,உள்ளத்து
அயர்வுறும் மதுகை மைந்தர்க்கு அயாவுயிர்ப்பு அளித்தது அம்மா! 56

50. நூக்குதல் - உந்தி நீந்துதல்; கரை ஒரீஇ - கரை கடந்து; 52. கொடிஞ்சு - தேரின் மேல் முகடு; மொட்டு - தேரின் கூம்பு; மடிஞ்சபின் - மடிந்த பின்; 53. கலினம் - கடிவாளம்; 54. பாடு - பெருமை; கடை - நுனி; 55. மலங்குதல் - கலங்குதல்; 56. இரு கை - இரு பக்கம்; அயாவுயிர்ப்பு - தளர்ச்சி நீக்கம்.

நாவாய்கள் சென்று சென்று மீளும் காட்சி

இக் கரை இரைத்த சேனை எறி கடல் முகந்து, வெஃகி,
அக் கரை அடைய வீசி, வறியன அணுகும் நாவாய்—
புக்கு அலை ஆழி நல் நீர் பொறுத்தன போக்கிப் போக்கி,
அக் கணத்து உவரி மீளும் அகல் மழை நிகர்த்த அம்மா! 57

அகில் இடு தூபம் அன்ன ஆய் மயில் பீலி ஆர்த்த
முகிழுடை முரண் மாத் தண்டு கூம்பு என, முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம் பொன் தகட்டிடை தொடுத்த முத்தின்
நகு கொடி நெடிய பாயா, நவ் எனச் சென்ற நாவாய். 58

ஆனனம் கமலத்து அன்ன, மின் அன்ன, அமுதச் செவ் வாய்,
தேன் நனை, குழலார் ஏறும் அம்பிகள் சிந்து முத்தம்
மீன் என, விரிந்த கங்கை விண் என, பண்ணை முற்றி
வானவர் மகளிர் ஊரும் மானமே நிகர்த்த மாதோ! 59

துளி படத் துழாவு திண் கோல் துடுப்பு இரு காலின் தோன்ற,
நளிர் புனல் கங்கை ஆற்றில் நண்டு எனச் செல்லும் நாவாய்,
களியுடை மஞ்ஞை அன்ன, கனங் குழை, கயல் கண், மாதர்
ஒளிர் அடிக் கமலம் தீண்ட, உயிர் படைத்தனவே ஒத்த. 60

முனிவர் வான் வழியே கங்கையைக் கடத்தல்

மை அறு விசும்பில், மண்ணில், மற்றும் ஓர் உலகில், முற்றும்
மெய் வினை தவமே அன்றி மேலும் ஒன்று உளதோ? கீழோர்
செய் வினை நாவாய் ஏறித் தீண்டலர்; மனத்தின் செல்லும்
மொய் விசும்பு ஓடம் ஆக, தேவரின் முனிவர் போனர். 61

பரிவாரங்கள் சென்றபின், பரதன் நாவாயில் ஏறுதல்

'அறுபதினாயிரம் அக்குரோணி' என்று
இறுதி செய் சேனையும், எல்லை தீர் நகர்
மறு அறு மாந்தரும், மகளிர் வெள்ளமும்,
செறி திரைக் கங்கை, பின் கிடக்கச் சென்றவே. 62

சுழித்து நீர் வரு துறை ஆற்றை, சூழ் படை
கழித்து நீங்கியது என, கள்ள ஆசையை
அழித்து, வேறு அவனி பண்டு ஆண்ட வேந்தரை
இழித்து, மேல் ஏறினன்தானும் ஏறினன். 63

58. நவ் - கடலிற் செல்லும் பெரிய மரக்கலம்; 59. ஆனனம் - முகம்; பண்ணை - விளையாட்டு; கங்கை நீர்ப்பரப்புக்கு ஆகாயமும், கங்கை சிந்தும் முத்துக்களுக்கு விண்மீன்களும், மகளிர்க்குத் தேவமாதரும், ஓடங்களுக்கு விமானமும் உவமை.

பரதன் குகனுக்குக் கோசலையை அறிமுகப்படுத்தல்

சுற்றத்தார், தேவரொடும் தொழ நின்ற
கோசலையைத் தொழுது நோக்கி,
'கொற்றத் தார்க் குரிசில்! இவர் ஆர்?' என்று
குகன் வினவ, 'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல் தேவி; மூன்று
உலகும் ஈன்றானை முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம், யான்
பிறத்தலால், துறந்த பெரியாள்' என்றான். 64

பரதன் கோசலைக்குக் குகனை அறிமுகப்படுத்தல்

என்றலுமே, அடியின்மிசை நெடிதுவீழ்ந்து
அழுவானை, 'இவன் யார்?' என்று,
கன்று பிரி காராவின் துயர் உடைய
கொடி வினவ, கழல் கால் மைந்தன்,
'இன் துணைவன் இராகவனுக்கு; இலக்குவற்கும்,
இளையவற்கும், எனக்கும், மூத்தான்;
குன்று அனைய திரு நெடுந் தோள்
குகன் என்பான், இந் நின்ற குரிசில்' என்றான். 65

'நைவீர் அலீர் மைந்தீர்! இனித் துயரால்;
நாடு இறந்து காடு நோக்கி,
மெய் வீரர் பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்று
ஆம் அன்றே! விலங்கல் திண் தோள்
கை வீரக் களிறு அனைய காளை இவன்
தன்னோடும் கலந்து, நீவிர்
ஐவீரும் ஒருவீர் ஆய், அகல் இடத்தை நெடுங்
காலம் அளித்திர்' என்றாள். 66

சுமித்திரையைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்தல்

அறம் தானே என்கின்ற அயல் நின்றாள்தனை
நோக்கி, 'ஐய! அன்பின்
நிறைந்தானை உரை' என்ன, 'நெறி திறம்பாத்
தன் மெய்யை நிற்பது ஆக்கி
இறந்தான்தன் இளந் தேவி; யாவர்க்கும்
தொழு குலம் ஆம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்தனைப்
பயந்த பெரியாள்' என்றான். 67

65. காரா - கார் ஆ, புனிற்றா, அப்பொழுது கன்று ஈன்ற பசு; 67. மெய் - வாய்மை.

**கைகேயியை, 'யார்?' எனக் குகன் வினவ, பரதன் மொழிதல்**

சுடு மயானத்திடை தன் துணை ஏக,
தோன்றல் துயர்க் கடலின் ஏக,
கடுமை ஆர் கானகத்துக் கருணை ஆர்கலி
ஏக, கழல் கால் மாயன்
நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்,
தன் மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையால், அளந்தாளை, '"ஆர் இவர்?"
என்று உரை' என்ன; குரிசில் கூறும்: 68

'படர் எலாம் படைத்தாளை, பழி வளர்க்கும்
செவிலியை, தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங் காலம் கிடந்தேற்கும்
உயிர்ப் பாரம் குறைந்து தேய,
உடர் எலாம் உயிர் இலா எனத் தோன்றும்
உலகத்தே, ஒருத்தி அன்றே.
இடர் இலா முகத்தாளை, அறிந்திலையேல்,
இந் நின்றாள் என்னை ஈன்றாள்.' 69

**கைகேயியைக் குகன் வணங்கத் தோணியும் தென்கரை சேர்தல்**

என்னக் கேட்டு, அவ் இரக்கம் இலாளையும்
தன் நல் கையின் வணங்கினன் தாய் என;
அன்னப் பேடை சிறை இலது ஆய்க் கரை
துன்னிற்று என்னவும் வந்தது, தோணியே. 70

**தாயர் சிவிகையில் வர, பரதன் முதலியோர் நடந்து செல்லுதல்**

இழிந்த தாயர் சிவிகையின் ஏற, தான்,
பொழிந்த கண்ணின் புதுப் புனல் போயினான்—
ஒழிந்திலன் குகனும் உடன் ஏகினான்—
கழிந்தனன், பல காவதம் காலினே. 71

**பரதனைப் பரத்துவாச முனிவன் எதிர்கொள்ளுதல்**

பரத்தின் நீங்கும் பரத்துவன் என்னும் பேர்
வரத்தின் மிக்கு உயர் மாதவன் வைகு இடம்,
அருத்தி கூர, அணுகினன்; ஆண்டு, அவன்
விருத்தி வேதியரோடு எதிர் மேவினான். 72

68. கருணை ஆர்கலி - அருட்கடல், இங்கு இராமனைக் குறித்தது; 69. படர் - துன்பம்; பாழ்த்தல் - பயனறுதல்; 72. பரம் - பாரம், வினைச் சுமை; விருத்தி - தொழில்: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறு தொழில்.

# 13 திருவடி சூட்டு படலம்

**பரதன் வணங்க, முனிவன் ஆசி கூறி, அவன் வருகை பற்றி வினுதல்**

வந்த மா தவத்தோனே, அம் மைந்தனும்
தந்தை ஆம் எனத் தாழ்ந்து, வணங்கினுன்;
இந்துமோலி அன்னுனும் இரங்கினுன்,
அந்தம் இல் நலத்து ஆசிகள் கூறினுன். 1

'எடுத்த மா முடி சூடி, நின்பால் இயைந்து
அடுத்த பேர் அரசு ஆண்டிலே; ஐய! நீ
முடித்த வார் சடைக்கற்றையை, மூசு தூசு
உடுத்து நண்ணுதற்கு உற்றுளது யாது?' என்றுன். 2

**பரதன் உரை கேட்டு, முனிவன் மகிழ்தல்**

சினக் கொடுந் திறல் சீற்ற வெந் தீயினுன்,
மனக் கடுப்பினன், மா தவத்து ஓங்கலே,
' ''எனக்கு அடுத்தது இயம்பிலே நீ'' என்றுன்;
'உனக்கு அடுப்பது அன்றுல், உரவோய்!' என்றுன். 3

மறையின் கேள்வற்கு மன் இளந் தோன்றல், 'பின்,
முறையின் நீங்கி, முது நிலம் கொள்கிலேன்;
இறைவன் கொள்கிலன் ஆம்எனின், யாண்டு எலாம்
உறைவென் கானத்து ஒருங்கு உடனே' என்றுன். 4

உரைத்த வாசகம் கேட்டலும், உள் எழுந்து
இரைத்த காதல் இருந் தவத்தோர்க்கு எலாம்,
குரைத்த மேனியொடு உள்ளம் குளிர்ந்ததால்—
அரைத்த சாந்து கொடு அப்பியது என்னவே. 5

**பரதன் சேனைக்குப் பரத்துவாசன் விருந்து செய்தல்**

ஆய காதலோடு ஐயனைக் கொண்டு, தன்
தூய சாலை உறைவிடம் துன்னினுன்;
'மேய சேனைக்கு அமைப்பென் விருந்து' எனு,
தீயின் ஆகுதிச் செல்வனும் சிந்தித்தான். 6

13: 1. இந்து மோலி - சந்திரனைத் தலையில் அணிந்தவன், சிவன்; இரங்குதல் - பரிவு காட்டுதல்; 2. மூசு - மொய்த்த; 3. ஓங்கல் - மலே; 4. இறைவன் - இராமன்; 5. குரைத்தல் - பூரித்தல்.

துறந்த செல்வன் நினைய, துறக்கம்தான்
பறந்து வந்து படிந்தது; பல் சனம்,
பிறந்து வேறு ஓர் உலகு பெற்றாரென,
மறந்து வைகினர், முன்னைத் தம் வாழ்வு எலாம். 7

நந்தல் இல் அறம் நந்தினர் ஆம் என,
அந்தரத்தின் அரம்பையர், அன்பினர்,
வந்து உவந்து எதிர் ஏத்தினர்; மைந்தரை,
இந்துவின் சுடர் கோயில் கொண்டு ஏகினர். 8

நானம் நன்கு உரைத்தார்; நளிர் வானிடை
ஆன கங்கை அரும் புனல் ஆட்டினர்;
தான மா மணிக் கற்பகம் தாங்கிய
ஊனம் இல் மலர் ஆடை உடுத்தினர். 9

கொம்பின் நின்று நுடங்குறு கொள்கையார்,
செம்பொனின் கல ராசி திருத்தினர்;
அம்பரத்தின் அரம்பையர், அன்பொடும்,
உம்பர்கோன் நுகர் இன் அமுது ஊட்டினர். 10

அஞ்சு அடுத்த அமளி, அலத்தகப்
பஞ்சு அடுத்த பரிபுரப் பல்லவ
நஞ்சு அடுத்த நயனியர், நவ்வியின்
துஞ்ச, அத்தனை மைந்தரும் துஞ்சினர். 11

ஏந்து செல்வத்து இமையவர் ஆம் என,
கூந்தல் தெய்வ மகளிர் கொண்டாடினர்—
வேந்தர் ஆதி, சிவிகையின் வீங்கு தோள்
மாந்தர்காறும், வரிசை வழாமலே. 12

மாதர் யாவரும், வானவர் தேவியர்
கோது இல் செல்வத்து வைகினர்—கொவ்வை வாய்த்
தீது இல் தெய்வ மடந்தையர், சேடியர்,
தாதிமார் எனத் தம் பணி கேட்பவே. 13

நந்து அம் நந்தவனங்களில், நாள் மலர்க்
கந்தம் உந்திய கற்பகக் காவினின்று,
அந்தர் வந்தென, அந்தி தன் கை தர,
மந்த மந்த நடந்தது வாடையே. 14

7. துறந்த செல்வன் - பரத்துவாசன்; 8. நந்தல் - கேடு; நந்தினர் - செழிக்கப்பெற்றவர்; 10. கொள்கை - இயல்பு; கல ராசி - உண்கலங்கள்; 11. அஞ்சு அடுத்த அமளி - சிறு பூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு; சேணம், உறு தூவி ஆகியவற்றை வைத்துத் தைத்த மெத்தை; 13. சேடி - தோழி.

மான்று, அளிக் குலம் மா மதம் வந்து உண,—
தேன் தளிர்த்த கவளமும், செங் கதிர்
கான்ற நெல் தழைக் கற்றையும், கற்பகம்
ஈன்று அளிக்க, நுகர்ந்தன—யானையே. 15

நரகதர்க்கு அறம் நல்கும் நலத்த நீர்,
கர கதக் கரி கால் நிமிர்த்து உண்டன;
மரகதத்தின் கொழுந்து என வார்ந்த புல்
குரகதத்தின் குழாங்களும் கொண்டவே. 16

பரதன் மட்டும் காய் கிழங்கு உண்டு, புழுதியில் வதிதல்

இன்னர், இன்னணம் யாவரும், இந்திரன்
துன்னு போகங்கள் துய்த்தனர்; தோன்றல்தான்,
அன்ன காயும், கிழங்கும், உண்டு, அப் பகல்
பொன்னின் மேனி பொடி உற, போக்கினான். 17

கதிரவன் தோன்ற, பரதன் படைகள் சென்று, பாலையைச் சார்தல்

நீல வல் இருள் நீங்கலும், நீங்குறும்
மூலம் இல் கனவின் திரு முற்றுற,
ஏலும் நல் வினை துய்ப்பவர்க்கு ஈறு செல்
காலம் என்ன, கதிரவன் தோன்றினான். 18

ஆறி நின்று அறம் ஆற்றலர் வாழ்வு என
பாறி வீந்தது செல்வம்; பரிந்திலர்,
தேறி முந்தைத் தம் சிந்தையர் ஆயினார்,
மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார். 19

காலை என்று எழுந்தது கண்டு, வானவர்,
'வேலை அன்று; அனிகமே' என்று விம்முற,
சோலையும் கிரிகளும் சுண்ணமாய் எழ,
பாலை சென்று அடைந்தது—பரதன் சேனையே. 20

எழுந்தது துகள்; அதின், எரியும் வெய்யவன்
அழுந்தினன்; அவிப்ப அரும் வெம்மை ஆறினான்;
பொழிந்தன கரி மதம், பொடி வெங் கானகம்
இழிந்தன, வழி நடந்து ஏற ஒணாமையே. 21

15. மான்று - மயங்கி; 16. நரகதர் - நரகத்தை அடையக்கூடிய பாவிகள்;
19. ஆறி நிற்றல் - ஐம்புலன் அடங்கி நிற்றல்; பாறி - நிலைமாறி.

வடியுடை அயிற் படை மன்னர் வெண்குடை,
செடியுடை நெடு நிழல் செய்ய, தீப் பொதி
படியுடைப் பரல் உடைப் பாலை, மேல் உயர்
கொடியுடைப் பந்தரின், குளிர்ந்தது எங்குமே. 22

'பெருகிய செல்வம் நீ பிடி' என்றுள்வயின்
திருகிய சிற்றத்தால் செம்மையான், நிறம்
கருகிய அண்ணலைக் கண்டு, காதலின்
உருகிய தளிர்த்தன—உலவை ஈட்டமே. 23

படைகள் சித்திரகூடத்தைச் சேர்தல்

வன் தெறு பாலையை மருதம் ஆம் எனச்
சென்றது; சித்திரகூடம் சேர்ந்ததால்—
ஒன்று உரைத்து, 'உயிரினும் ஒழுக்கம் நன்று' எனப்
பொன்றிய புரவலன் பொரு இல் சேனையே. 24

தூளியின் படலையும், துரகம், தேரொடு,
மூள் இருஞ் சினக் கரி முழங்கும் ஓதையும்,
ஆள் இருங் குழுவினர் ஆரவாரமும்,
'கோள்இரும் படை இது' என்று, உணரக் கூறவே, 25

இலக்குவன், பரதன் சேனையைக் கண்டு, சீற்றமுறுதல்

எழுந்தனன், இளையவன்; ஏறினன், நிலம்
கொழுந்து உயர்ந்தனையது ஓர் நெடிய குன்றின்மேல்;
செழுந் திரைப் பரவையைச் சிறுமை செய்த அக்
கழுந்துடை வரி சிலைக் கடலை நோக்கினன். 26

'பரதன், இப் படைகொடு, பார்கொண்டவன், மறம்
கருதி, உள் கிடந்தது ஓர் கறுவு காதலால்,
விரதம் உற்று இருந்தவன்மேல் வந்தான்; இது
சரதம்; மற்று இலது' எனத் தழங்கு சீற்றத்தான், 27

குதித்தனன் பாரிடை; குவடு நீறு எழ
மிதித்தனன்; இராமனை விரைவின் எய்தினன்;
'மதித்திலன் பரதன், நின்மேல் வந்தான், மதில்
பதிப் பெருஞ் சேனையின் பரப்பினன்' என்றான். 28

22. செடி - நெருக்கம்; 23. உலவை - பட்டமரம்; 26. கழுந்து - வழு
வழுப்பேறிய கைப்பிடி.

**இலக்குவன் போர்க் கோலம் பூண்டு, வீர உரை பகர்தல்**

கட்டினன் சுரிகையும் கழலும்; பல் கணைப்
புட்டிலும் பொறுத்தனன்; கவசம் பூட்டு அமைத்து
இட்டனன்; எடுத்தனன் வரி வில்; ஏந்தலைத்
தொட்டு, அடி வணங்கி நின்று, இனைய சொல்லினன்: 29

'இருமையும் இழந்த அப் பரதன் ஏந்து தோள்
பருமையும், அன்னவன் படைத்த சேனையின்
பெருமையும், நின் ஒரு பின்பு வந்த என்
ஒருமையும், கண்டு, இனி உவத்தி, உள்ளம் நீ. 30

'படர் எலாம் படப் படும் பரும யானையின்
திடர் எலாம் உருட்டின, தேரும் ஈர்த்தன,
குடர் எலாம் திரைத்தன, குருதி ஆறுகள்,
கடர் எலாம் மடுப்பன, பலவும் காண்டியால். 31

'கருவியும், கைகளும், கவச மார்பமும்,
உருவின; உயிரினோடு உதிரம் தோய்வு இல
திரிவன—சுடர்க் கணை—திசைக் கை யானைகள்
வெருவரச் செய்வன; காண்டி, வீர! நீ. 32

'கோடகத் தேர், படு குதிரை தாவிய,
ஆடகத் தட்டிடை, அலகை அற்று உகு
கேடகத் தடக் கைகள் கவ்வி; கீதத்தின்
நாடகம் நடிப்பன—காண்டி; நாத! நீ.' 33

'பண் முதிர் களிற்றொடு பரந்த சேனையின்
எண் முதல் அறுத்து, நான் இமைப்பின் நீக்கலால்,
விண் முதுகு உளுக்கவும், வேலை ஆடையின்
மண் முதுகு ஆற்றவும் காண்டி—வள்ளல்! நீ. 34

'நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி மெய்
சிவந்த சாதகரொடு சிறு கண் கூளியும்,
கவந்தமும், ''உலகம் நின் கையது ஆயது'' என்று
உவந்தன குனிப்பன காண்டி, உம்பர்போல். 35

'சூழி வெங் கட கரி, துரக ராசிகள்,
பாழி வன் புயத்து இகல் வயவர், பட்டு அற,
வீழி வெங் குருதியால் அலைந்த வேலைகள்
ஏழும் ஒன்றாகி நின்று இரைப்பக் காண்டியால். 36

31. படர் - படைவீரர்; குடர் - குடல்; கடர் - கடல்; 33. கோடகம் - குதிரை; 35. சாதகர் - பூதகணங்கள்; கூளி - குறும்பூதம்; கவந்தம் - தலையறுந்த உடல்.

'ஆள் அற; அலங்கு தேர் அழிய; ஆடவர்
வாள் அற; வரி சிலை துணிய; மாக் கரி
தாள் அற, தலை அற; புரவி தாளொடும்
தோள் அற—வடிக் கணை தொடுப்ப—காண்டியால். 37

'தழைத்த வான் சிறையன, தசையும் கவ்வின,
அழைத்த வான் பறவைகள், அலங்கு பொன் வடிம்பு
இழைத்த வான் பகழி புக்கு இருவர் மார்பிடைப்
புழைத்த வான் பெரு வழி போக—காண்டியால். 38

'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த
பெருமகன் ஏவலின் பரதன் தான் பெறும்
இரு நிலம் ஆள்கை விட்டு, இன்று, என் ஏவலால்
அரு நரகு ஆள்வது காண்டி—ஆழியாய்! 39

'"வையகம் துறந்து வந்து அடவி வைகுதல்
எய்தியது உனக்கு" என, நின்னை ஈன்றவள்
நைதல் கண்டு உவந்தவள், நவையின் ஓங்கிய
கைகயன் மகள், விழுந்து அரற்ற—காண்டியால். 40

'அரம் சுட அழல் நிமிர் அலங்கல் வேலினாய்!
விரைஞ்சு ஒரு நொடியில், இவ் அனிக வேலையை
உரம் சுடு வடிக் கணை ஒன்றில் வென்று, முப்
புரம் சுடும் ஒருவனின் பொலிவென் யான்' என்றான். 41

இராமன் இலக்குவனை மறுத்துக் கூறுதல்

'இலக்குவ! உலகம் ஓர் ஏழும், ஏழும், நீ,
"கலக்குவென்" என்பது கருதினால் அது,
விலக்குவது அரிது; அது விளம்பல் வேண்டுமோ?—
புலக்கு உரித்து ஒரு பொருள், புகலக் கேட்டியால்: 42

'நம் குலத்து உதித்தவர், நவையின் நீங்கினர்
எங்கு உலப்புறுவர்கள்? எண்ணின், யாவரே
தம் குலத்து ஒருவ அரும் தருமம் நீங்கினர்?—
பொங்கு உலத் திரளொடும் பொருத தோளினாய்! 43

'எனைத்து உள மறை அவை இயம்பற்பாலன,
பனைத் திரள் கரக் கரிப் பரதன் செய்கையே;
அனைத் திறம் அல்லன அல்ல; அன்னது
நினைத்திலை, என் வயின் நேய நெஞ்சினால். 44

42. புலக்கு - புலத்துக்கு, அறிவுக்கு.

‘ ‘‘பெருமகன் என்வயின் பிறந்த காதலின்
வரும் என நினைகையும், மண்ணை என்வயின்
தரும் என நினைகையும்’’ தவிர, ‘‘தானையால்
பொரும்’’ என நினைகையும் புலமைப்பாலதோ? 45

‘பொன்னெடும், பொரு கழல் பரதன் போந்தனன்,
நல் நெடும் பெரும் படை நல்கல் அன்றியே,
என்னொடும் பொரும் என இயம்பற்பாலதோ?—
மின்னெடும் பொருவுற விளங்கு வேலினாய்! 46

‘சேண் உயர் தருமத்தின் தேவை, செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ?
பூண் இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டு, எனைக்
காணிய; நீ இது பின்னும் காண்டியால்.’ 47

சேனையை நிறுத்திவிட்டு, தம்பியோடு பரதன் இராமனை அணுகுதல்

என்றனன், இளவலை நோக்கி, ஏந்தலும்
நின்றனன்; பரதனும், நிமிர்ந்த சேனையை,
‘பின் தருக’ என்று, தன் பிரிவு இல் காதலின்,
தன் துணைத் தம்பியும் தானும் முந்தினான். 48

பரதனது நிலையை நோக்கிய இராமன், இலக்குவனிடம் கூறுதல்

தொழுது உயர் கையினன்; துவண்ட மேனியன்;
அழுது அழி கண்ணினன்; ‘அவலம் ஈது’ என
எழுதிய படிவம் ஒத்து எய்துவான்தனை,
முழுது உணர் சிந்தையான், முடிய நோக்கினான். 49

கார்ப் பொரு மேனி அக் கண்ணன் காட்டினான்,
‘ஆர்ப்பு உறு வரி சிலை இளைய ஐய! நீ,
தேர்ப் பெருந் தானையால் பரதன் சீறிய
போர்ப் பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு’ என. 50

இலக்குவன் நெஞ்சழிந்து கண்ணீர் வடித்து நிற்றல்

எல் ஒடுங்கிய முகத்து இளவல் நின்றனன்—
மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்
சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர,
வில்லொடும் கண்ண நீர் நிலத்து வீழவே. 51

பரதன் இராமனின் மலரடி பணிதல்

கோது அறத் தவம் செய்து குறிப்பின் எய்திய
நாதனைப் பிரிந்தனள், நலத்தின் நீங்கினாள்,
வேதனைத் திருமகள் மெலிகின்றாள், விடு
தூது என, பரதனும் தொழுது தோன்றினான். 52

'அறம்தனை நினைந்திலை; அருளை நீத்தனை;
துறந்தனை முறைமையை' என்னும் சொல்லினான்,
மறந்தனன், மலர்அடி வந்து வீழ்ந்தனன்—
இறந்தனன் தாதையை எதிர்கண்டென்னவே. 53

இராமன் பரதனைத் தழுவுதல்

'உண்டுகொல் உயிர்?' என ஒடுங்கினான் உருக்
கண்டனன்; நின்றனன்—கண்ணன் கண் எனும்
புண்டரீகம் பொழி புனல், அவன் சடா
மண்டலம் நிறைந்து போய் வழிந்து சோரவே. 54

அயாவுயிர்த்து, அழு கணீர் அருவி மார்பிடை,
உயாவுற, திருஉளம் உருக, புல்லினான்—
நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்—
தயா முதல் அறத்தினைத் தழீஇயது என்னவே. 55

தந்தை இறந்தமை கேட்டு, இராமன் சோர்ந்து உள்ளம் கலங்குதல்

புல்லினன் நின்று, அவன் புனைந்த வேடத்தைப்
பல் முறை நோக்கினான்; பலவும் உன்னினான்;
'அல்லலின் அழுங்கினை; ஐய! ஆளுடை
மல் உயர் தோளினான் வலியனோ?' என்றான். 56

அரியவன் உரைசெய, பரதன், 'ஐய! நின்
பிரிவு எனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்
கரியவள் வரம் எனும் காலனால், தனக்கு
உரிய மெய்ந் நிறுவிப் போய், உம்பரான்' என்றான். 57

'விண்ணிடை அடைந்தனன்' என்ற வெய்ய சொல்,
புண்ணிடை அயில் எனச் செவி புகாமுனம்,
கண்ணொடு மனம், சுழல் கறங்கு போல ஆய்,
மண்ணிடை விழுந்தனன்—வானின் உம்பரான். 58

52. வேதனைத் திருமகள் - துன்புறும் மண்மகளாகிய இலக்குமி.

இரு நிலம் சேர்ந்தனன்; இறை உயிர்த்திலன்;
'உரும் இடை அரவு' என, உணர்வு நீங்கினான்;
அருமையின் உயிர் வர, அயாவுயிர்த்து, அகம்
பொருமினன்; பல் முறைப் புலம்பினான்அரோ: 59

**இராமன் புலம்பல்**

'நந்தா விளக்கு அனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயா நிலையே!
எந்தாய்! இகல் வேந்தர் ஏறே! இறந்தனையே!
அந்தோ! இனி, வாய்மைக்கு ஆர் உளரே மற்று?' என்றான். 60

'சொல் பெற்ற நோன்பின் துறையோன் அருள் வேண்டி,
நல் பெற்ற வேள்வி நவை நீங்க நீ இயற்றி,
எற் பெற்று, நீ பெற்றது இன் உயிர் போய் நீங்கலோ?—
கொல் பெற்ற வெற்றிக் கொலை பெற்ற கூர் வேலோய்! 61

'மன் உயிர்க்கு நல்கு உரிமை மண் பாரம் நான் சுமக்க,
பொன் உயிர்க்கும் தாரோய்!—பொறை உயிர்த்த ஆறு இதுவோ?
உன் உயிர்க்குக் கூற்றாய் உலகு ஆள உற்றேனே?—
மின் உயிர்க்கும் தீ வாய் வெயில் உயிர்க்கும் வெள் வேலோய்!

'எம் பரத்தது ஆக்கி அரசு உரிமை, இந்தியங்கள்
வெம் பவத்தின் வீய, தவம் இழைத்தவாறு ஈதோ?—
சம்பரப் பேர்த் தானவனைத் தள்ளி, சதமகற்கு, அன்று,
அம்பரத்தின் நீங்கா அரசு அளித்த ஆழியாய்! 63

'வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ் உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்,
மாண்டு முடிவது அல்லால், மாயா உடம்பு இது கொண்டு
ஆண்டு வருவது, இனி, யார் முகத்தே நோக்கவோ? 64

'தேன் அடைந்த சோலைத் திரு நாடு கைவிட்டுக்
கான் அடைந்தேன் என்னத் தரியாது, காவல! நீ
வான் அடைந்தாய்; இன்னம் இருந்தேன் நான், வாழ்வு உகந்தே!—
ஊன் அடைந்த தெவ்வர் உயிர் அடைந்த ஒள் வேலோய்! 65

'வண்மைஇயும், மானமும், மேல் வானவர்க்கும் பேர்க்கிலாத்
திண்மைஇயும், செங்கோல் நெறியும், திறம்பாத
உண்மைஇயும், எல்லாம் உடனே கொண்டு ஏகினையே!—
தண்மைஇ தகை மதிக்கும் ஈந்த தனிக் குடையோய்!' 66

59. உரும் இடை அரவு - இடியால் வருந்தும் பாம்பு; 61. துறையோன்- கலைக்கோட்டு முனிவன்; 63. சதமகன் - நூறு யாகம் செய்தவன், இந்திரன்.

இராமனைப் பலரும் தாங்க, வசிட்டன் தேற்றுதல்

என்று எடுத்துப் பற்பலவும் பன்னி, இடர் உழக்கும்
குன்று எடுத்த போலும் குவவுத் தோள் கோளரியை,
வன் தடக் கைத் தம்பியரும், வந்து அடைந்த மன்னவரும்,
சென்று எடுத்துத் தாங்கினர்; மா வதிட்டன் தேற்றினன். 67

பன்ன அரிய நோன்பின் பரத்துவனே ஆதி ஆம்
பின்னு சடையோரும், பேர் உலகம் ஓர் ஏழின்
மன்னவரும், மந்திரியர் எல்லாரும், வந்து அடைந்தார்;
தன் உரிமைச் சேனைத் தலைவோரும்தாம் அடைந்தார். 68

மற்றும் வரற்பாலர் எல்லாரும் வந்து அடைந்து,
சுற்றும் இருந்த அமைதியினில், துன்பு உழக்கும்
கொற்றக் குரிசில் முகம் நோக்கி, கோ மலரோன்
பெற்ற பெருமைத் தவ முனிவன் பேசுவான்: 69

'துறத்தலும் நல் அறத் துறையும் அல்லது
புறத்து ஒரு துணை இலை, பொருந்தும் மன்னுயிர்க்கு;
''இறத்தலும் பிறத்தலும் இயற்கை'' என்பதை
மறத்தியோ, மறைகளின் வரம்பு கண்ட நீ? 70

' ''உண்மை இல் பிறவிகள், உலப்பு இல் கோடிகள்,
தண்மையில் வெம்மையில் தழுவின'' எனும்
வண்மையை நோக்கிய, அரிய கூற்றின்பால்,
கண்மையும் உளது எனக் கருதல் ஆகுமோ? 71

'பெறுவதன் முன் உயிர் பிரிதல் காண்டியால்?
மறு அறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன்
இறுவது கண்டு, அவற்கு, இரங்கல் வேண்டுமோ? 72

'சீலமும், தருமமும், சிதைவு இல் செய்கையாய்!
சூலமும், திகிரியும், சொல்லும், தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்,
காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ? 73

71. கண்மை - கண்ணோட்டம்; 72. பெறுவது - ஈன்றெடுப்பது; கற்பு - பூமிக்குக் கற்பு அரசர் பலருக்கும் பொதுவாகாமல், தசரதப் பேரரசனுக்கே உரியதாய் இருத்தல்; 73. சொல் - வேதம், கலைமகள் எனலும் ஆம்.

'கண் முதல் காட்சிய, கரை இல் நீளத்த,
உள் முதல் பொருட்கு எலாம் ஊற்றம் ஆவன,
மண் முதல் பூதங்கள் மாயும் என்றபோது,
எண்முதல் உயிர்க்கு நீ இரங்கல் வேண்டுமோ? 74

'புண்ணிய நறு நெயில், பொரு இல் காலம் ஆம்
திண்ணிய திரியினில், விதி என் தீயினில்,
எண்ணிய விளக்கு அவை இரண்டும் எஞ்சினுல்,
அண்ணலே! அவிவதற்கு, ஐயம் யாவதோ? 75

'இவ் உலகத்தினும் இடருளே கிடந்து,
அவ் உலகத்தினும் நரகின் ஆழ்ந்து, பின்
வெவ் வினை துய்ப்பன விரிந்த யோனிகள்,
எவ் அளவில் செல எண்ணல் ஆகுமோ? 76

'உண்டுகொல் இது அலது உதவி நீ செய்வது?
எண் தகு குணத்தினுய்! தாதை என்றலால்,
புண்டரீகத் தனி முதற்கும் போக்கு அரு
விண்டுவின் உலகிடை விளங்கினுன்அரோ! 77

தந்தைக்கு நீர்க்கடன் செய்யுமாறு வசிட்டன் கூறுதல்

'ஐய! நீ யாது ஒன்றும் அவலிப்பாய்அலே;
உய் திறம் அவற்கு இனி இதனின் ஊங்கு உண்டோ?
செய்வன வரன் முறை திருத்தி, சேந்த நின்
கையினுல் ஒழுக்குதி கடன் எலாம்' என்ருன். 78

'விண்ணு நீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணி, நீ அழுங்குதல் இழுதைப்பாலதால்;
கண்ணின் நீர் உகுத்தலின் கண்டது இல்லே; போய்
மண்ணு நீர் உகுத்தி, நீ மலர்க்கையால்' என்ருன். 79

இராமன் நீர்க்கடன் செய்து, சாலேக்கு மீள்தல்

என்றபின், ஏந்தலே ஏந்தி வேந்தரும்,
பொன் திணிந்தன சடைப் புனிதனேடும் போய்ச்
சென்றனர், செறி திரைப் புனலில்; 'செய்க' என,
நின்றனர்; இராமனும் நெறியை நோக்கினுன். 80

74. எண் முதல் உயிர் - முதலிலேயே எண்ணி வரையறுக்கப்பட்ட ஆயுளே உடைய உயிர்; 75. எஞ்சுதல் - நீங்குதல்; 76. யோனிகள் - பிறப்பு வகைகள்; 79. விண்ணு நீர் - மழை நீர்; இழுதை - அறிவின்மை; மண்ணு நீர் - தருப்பண நீர்.

புக்கனன் புனலிடை, முழுகிப் போந்தனன்,
தக்க நல் மறையவன் சடங்கு காட்ட, தான்,
முக் கையின் நீர் விதி முறையின் ஈந்தனன்—
ஒக்க நின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான். 81

ஆனவன் பிற உள யாவும் ஆற்றி, பின்,
மான மந்திரத்தவர், மன்னர், மா தவர்,
ஏனையர் பிறர்களும், சுற்ற ஏகினன்;
சானகி இருந்த அச் சாலை எய்தினன். 82

சீதையின் பாதங்களில் விழுந்து பரதன் அரற்றுதல்

எய்திய வேலையில், தமியள் எய்திய
தையலை நோக்கினன்; சாலை நோக்கினன்;
கைகளின் கண்மலர் புடைத்து, கால்மிசை,
ஐயன், அப் பரதன் வீழ்ந்து அரற்றினன்அரோ! 83

இராமன், சீதைக்குத் தந்தை இறந்தமை கூறல்

வெந் துயர் தொடர்தர விம்மி விம்மி, நீர்
உந்திய நிரந்தரம்; ஊற்று மாற்றில;
சிந்திய—குரிசில் அச் செம்மல் சேந்த கண்—
இந்தியங்களில் எறி கடல் உண்டு என்னவே! 84

அந் நெடுந் துயர் உறும் அரிய வீரனைத்
தன் நெடுந் தடக் கையால் இராமன் தாங்கினன்;
நல் நெடுங் கூந்தலை நோக்கி, 'நாயகன்,
என் நெடும் பிரிவினால், துஞ்சினன்' என்றான். 85

சீதையின் துயரம்

துண்ணெனும் நெஞ்சினள்; துளங்கினள்; துணைக்
கண் எனும் கடல் நெடுங் கலுழி கான்றிட,
மண் எனும் செவிலிமேல் வைத்த கையினள்,
பண் எனும் கிளவியால் பன்னி, ஏங்கினள். 86

கல் நகு திரள் புயக் கணவன் பின் செல,
நல் நகர் ஒத்தது, நடந்த கானமும்;
'மன்னவன் துஞ்சினன்' என்ற மாற்றத்தால்
அன்னமும் துயர்க் கடல் அடிவைத்தாள்அரோ! 87

84. இந்தியங்கள் - பொறிகள், இங்கே கண்கள்; 86. கலுழி - நீர்ப் பெருக்கு.

முனி பத்தினியர் சீதையை நீராட்டி, இராமனிடம் சேர்த்தல்

ஆயவள்தன்னை நேர்ந்து அங்கை ஏந்தினர்,
தாயரின், முனிவர்தம் தருமப் பன்னியர்;
தூய நீர் ஆட்டினர்; துயரம் நீக்கினர்;
நாயகற் சேர்த்தினர்; நவையுள் நீங்கினர். 88

தாயரும் சுமந்திரனும் இராமனிடம் வருதல்

தேன் தரும் தெரியல் அச் செம்மல் நால்வரை
ஈன்றவர் மூவரோடு, இருமை நோக்குறும்
சான்றவர் குழாத்தொடும், தருமம் நோக்கிய
தோன்றல்பால், சுமந்திரன் தொழுது தோன்றினன். 89

இராமனும் தாய்மாரும் அழ, யாவரும் வருந்துதல்

'எந்தை யாண்டையான் இயம்புவீர்?' என,
வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன், சேந்த கண்ண நீர்—
முந்தை நான்முகத்தவற்கும் முந்தையான். 90

தாயரும் தலைப்பெய்து தாம் தழீஇ,
ஒய்வு இல் துன்பினால் உரறல் ஓங்கினர்;
ஆய சேனையும், அணங்கனார்களும்,
தீயில் வீழ்ந்து தீ மெழுகின் தேம்பினர். 91

தாயர், சானகியைத் தழுவிக்கொண்டு வருந்துதல்

பின்னர் வீரரைப் பெற்ற பெற்றி அப்
பொன் அனார்களும், சனகன் பூவையைத்
துன்னி, மார்பு உறத் தொடர்ந்து புல்லினர்;
இன்னல் வேலை புக்கு இழிந்து அழுந்துவார். 92

யாவரும் இராமனை வந்தடைய, சூரியனும் மறைதல்

சேனைவீரரும், திரு நல் மா நகர்
மான மாந்தரும், மற்றுளோர்களும்,
ஏனை வேந்தரும், பிறரும், யாவரும்,—
கோனை எய்தினர்—குறையும் சிந்தையார். 93

படம் செய் நாகணைப் பள்ளி நீங்கினன்
இடம் செய் தொல் குலத்து இறைவன் ஆதலால்,
தடம் செய் தேரினன், தானும் நீரினால்
கடம் செய்வான் என, கடலில் மூழ்கினன். 94

91. தலைப்பெய்து - ஒருங்கு கூடி; உரறல் - முழங்கல்; 93. மானம் - பெருமை; 94. இறைவன் - முதல்வன்; கடம் - கடன்.

மறு நாள் யாவரும் தன்னைச் சூழ்ந்திருக்க, இராமன் பரதனை, 'விரத வேடம்' குறித்து வினவுதல்

அன்று தீர்ந்தபின், அரச வேலையும்,
துன்று செஞ் சடைத் தவரும், சுற்றமும்,
தன் துணைத் திருத் தம்பிமார்களும்,
சென்று சூழ ஆண்டு இருந்த செம்மல்தான், 95

'வரதன் துஞ்சினன்; வையம் ஆணையால்,
சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்,
விரத வேடம், நீ என்கொல் வேண்டுவான்?
பரத! கூறு' எனப் பரிந்து கூறினன். 96

பரதன் தன் கருத்தை விளக்கி உரைத்தல்

என்றலும் பதைத்து எழுந்து, கைதொழா
நின்று, தோன்றலை நெடிது நோக்கி, 'நீ
அன்றி யாவரே அறத்து உளோர்? அதில்
பின்றுவாய்கொலாம்?' என்னப் பேசுவான்: 97

'மனக்கு ஒன்றுதன வரத்தின் நின்னையும்,
நினக்கு ஒன்று நிலை நிறுவி, நேமியான்-
தனைக் கொன்றுள் தரும் தனையன் ஆதலால்,
எனக்கு ஒன்று, தவம் அடுப்பது எண்ணினல்? 98

'நோவது ஆக இவ் உலகை நோய் செய்த
பாவகாரியின் பிறந்த பாவியேன்,
சாவது ஓர்கிலேன்; தவம் செய்வேன்அலேன்;
யாவன் ஆகி, இப் பழிநின்று ஏறுவேன்? 99

'நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்,
பொறையின் நீங்கிய தவமும், பொங்கு அருள்
துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமோ? 100

'பிறந்து நீயுடைப் பிரிவு இல் தொல் பதம்
துறந்து, மா தவம் தொடங்குவாய் என்றால்,
மறந்து, நீதியின் திறம்பி, வாளின் கொன்று
அறம் தின்றான் என, அரசுஅது ஆள்வெனோ? 101

97. பின்றுதல் - பின்வாங்குதல்; 100. முந்துதல் - (கொடுமையில்) முற்படுதல்.

'தொகை இல் அன்பினுல் இறைவன் துஞ்ச, நீ
புகையும் வெஞ் சுரம் புகுத, புந்தியால்
வகை இல் வஞ்சனுய் அரசு வவ்வ, யான்
பகைவனேகொலாம்? இறவு பார்க்கின்றேன்! 102

'உந்தை தீமையும், உலகு உருத நோய்
தந்த தீவினைத் தாய் செய் தீமையும்,
எந்தை! நீங்க, மீண்டு அரசு செய்க' எனு,
சிந்தை யாவதும் தெரியக் கூறினுன். 103

பரதன் வேண்டுகோளை இராமன் மறுத்துரைத்தல்

சொற்ற வாசகத் துணிவு உணர்ந்த பின்,
'இற்றதோ இவன் மனம்?' என்று எண்ணுவான்,
'வெற்றி வீர! யான் விளம்பக் கேள்' எனு,
முற்ற நோக்கினுன் மொழிதல் மேயினுன்: 104

'முறையும், வாய்மையும், முயலும் நீதியும்,
அறையும் மேன்மையோடு அறனும் ஆதி ஆம்
துறையுள் யாவையும், சுருதி நூல் விடா
இறைவர் ஏவலால் இயைவ காண்டியால், 105

'பரவு கேள்வியும், பழுது இல் ஞானமும்,
விரவு சீலமும், வினையின் மேன்மையும்,—
உர விலோய்!—தொழற்கு உரிய தேவரும்,
''குரவரே'' எனப் பெரிது கோடியால். 106

'அந்த நல் பெருங் குரவர் ஆர் எனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினுல்,
''தந்தை தாயர்'' என்று இவர்கள்தாம் அலால்,
எந்தை! கூற வேறு எவரும் இல்லையால். 107

'தாய் வரம் கொள, தந்தை ஏவலால்,
மேய நம் குலத் தருமம் மேவினேன்;
நீ வரம் கொளத் தவிர்தல் நீர்மையோ?—
ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினுய்! 108

'தனையர் ஆயினுர் தந்தை தாயரை
வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ?
நினையல் ஓவிடா நெடிய வன் பழி
புனைதலோ?—ஐய! புதல்வர் ஆதல்தான். 109

102. இறவு - அற்றம், சோரும் சமயம்; 105. இறைவர் - அரசர்;
106. குரவர் - பெரியோர்; 108. புலம் - வேதம்.

'இம்மை, பொய் உரைத்து, இவறி, எந்தையார்
அம்மை வெம்மை சேர் நரகம் ஆள, யான்,
கொம்மை வெம் முலைக் குவையின் வைகி வாழ்
செம்மை சேர் நிலத்து அரசு செய்வெனோ? 110

'வரன் நில் உந்தை சொல் மரபினால், உடைத்
தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்,
உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்,
அரசு நின்னதே; ஆள்க' என்னவே,— 111

**'அரசு நின்னதே' என்ற இராமனுக்குப் பரதன், 'அவ்வாறாயின் யான் தர, நீ முடி சூடு' எனல்**

'முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பு இலா நீ, பிறந்த பார்
என்னது ஆகில், யான் இன்று தந்தனென்;
மன்ன! போந்து நீ மகுடம் சூடு' எனா, 112

'மலங்கி வையகம் வருந்தி வைக, நீ,
உலம் கொள் தோள் உனக்கு உறுவ செய்தியோ?
கலங்குறுவணம் காத்தி போந்து' எனா,
பொலம் குலாவு தாள் பூண்டு, வேண்டினான். 113

**பரதனை அரசாளுமாறு இராமன் ஆணையிடல்**

'பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்
வசம் செய்தால், அது முறைமையோ? வசைக்கு
அசைந்த எந்தையார் அருள, அன்று நான்
இசைந்த ஆண்டு எலாம் இன்றொடு ஏறுமோ? 114

'வாய்மை என்னும் ஈது அன்றி, வையகம்,
''தூய்மை'' என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ?
தீமைதான், அதின் தீர்தல் அன்றியே,
ஆய் மெய்யாக; வேறு அறையல் ஆவதே? 115

'எந்தை ஏவ, ஆண்டு ஏழொடு ஏழ் எனா
வந்த காலம் நான் வனத்துள் வைக, நீ
தந்த பாரகம்தன்னை, மெய்ம்மையால்
அந்த நாள் எலாம் ஆள், என் ஆணையால். 116

110. இவறுதல் - விரும்புதல்; 114. பசைந்த சிந்தை - அன்பு மிக்க மனம்; அசைதல் - நடுங்குதல்.

'மன்னவன் இருக்கவேயும், ''மணி அணி மகுடம் சூடுக''
என்ன, யான் இயைந்தது அன்னுன் ஏயது மறுக்க அஞ்சி;
அன்னது நினைந்தும், நீ என் ஆணையை மறுக்கலாமோ?
சொன்னது செய்தி; ஐய! துயர் உழந்து அயரல்' என்ருன். 117

**மறுமொழி கூறத் தொடங்கிய பரதனை விலக்கி, வசிட்டன் மொழிதல்**

ஒள்ளியோன் இனைய எல்லாம் உரைத்தலும், உரைக்கலுற்ற
பள்ள நீர் வெள்ளம் அன்ன பரதனை விலக்கி, 'பண்டு
தெள்ளிய குலத்தோர் செய்கை சிக்கு அறச் சிந்தை நோக்கி,
'வள்ளியோய்! கேட்டி' என்னு, வசிட்ட மா முனிவன் சொன்னுன்: 118

'கிளர் அகன் புனலுள் நின்று, அரி, ஓர் கேழல் ஆய்,
இளை எனும் திருவினை ஏந்திஞன்அரோ—
உளைவு அரும் பெருமை ஓர் எயிற்றின் உள்புரை
வளர் இளம் பிறையிடை மறுவின் தோன்றவே. 119

'ஆதிய அமைதியின் இறுதி, ஐம் பெரும்
பூதமும் வெளி ஒழித்து எவையும் புக்கபின்,
நாதன் அவ் அகன் புனல் நல்கி, நண்ண அருஞ்
சோதி ஆம் தன்மையின் துயிறல் மேயினுன். 120

'ஏற்ற இத் தன்மையின், அமரர்க்கு இன் அமுது
ஊற்றுடைக் கடல்வணன் உந்தி உந்திய
நூற்று இதழ்க் கமலத்தில், நொய்தின் யாவையும்
தோற்றுவித்து உதவிட, முதல்வன் தோன்றினுன். 121

'அன்று அவன் உலகினை அளிக்க ஆகியது
உன் தனிக் குலம்; முதல் உள்ள வேந்தர்கள்,
இன்று.அளவினும் முறை இகந்துளார் இலே;
ஒன்று உளது உரை இனம்; உணரக் கேட்டியால்: 122

' ''இத இயல் இயற்றிய குரவர் யாரினும்,
மத இயல் களிற்றினுய்! மறு இல் விஞ்சைகள்
பதவிய இருமையும் பயக்க, பண்பினுல்
உதவிய ஒருவனே, உயரும்'' என்பரால். 123

'என்றலால், யான் உனை எடுத்து விஞ்சைகள்
ஒன்று அலாதன பல உதவிற்று உண்மையால்,
''அன்று'' எனுது, இன்று எனது ஆணை; ஐய! நீ
நன்று போந்து அளி, உனக்கு உரிய நாடு' என்ருன். 124

120. வெளி ஒழித்து - வெளி வரும் தன்மையை நீக்கி, பருநிலை நீங்கி நுண்ணிலை எய்தி; 123. இத இயல் - நன்மையான செயல்கள்.

வசிட்டனைத் தொழுது, இராமன் மறுத்துரைத்தல்

கூறிய முனிவனைக் குவிந்த தாமரை
சிறிய கைகளால் தொழுது, செங்கணான்,
'ஆறிய சிந்தனை அறிஞ! ஒன்று உரை
கூறுவது உளது' எனக் கூறல் மேயினான்: 125

'சான்றவர் ஆக; தன் குரவர் ஆக; தாய்
போன்றவர் ஆக; மெய்ப் புதல்வர் ஆக; தான்—
தேன் தரு மலருளான் சிறுவ!—''செய்வென்'' என்று
ஏன்றபின், அவ் உரை மறுக்கும் ஈட்டதோ? 126

'தாய் பணித்து உவந்தன, தந்தை, ''செய்க'' என
ஏய எப் பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத்
தீய அப் புலையனின், செய்கை தேர்கிலா
நாய் எனத் திரிவது நல்லது அல்லதோ? 127

'முன் உறப் பணித்தவர் மொழியை யான் என்
சென்னியில் கொண்டு, ''அது செய்வென்'' என்றதன்
பின்னுறப் பணித்தனை; பெருமையோய்! எனக்கு
என் இனிச் செய்வகை? உரைசெய் ஈங்கு' என்றான். 128

பரதன் தானும் காடுறைவதாகக் கூறல்

முனிவனும், 'உரைப்பது ஓர் முறைமை கண்டிலெம்
இனி' என இருந்தனன்; இளைய மைந்தனும்,
'அனையதேல் ஆள்பவர் ஆள்க நாடு; நான்
பனி படர் காடு உடன் படர்தல் மெய்' என்றான். 129

இமையவர் பரதன் நாடாள வேண்டும் எனல்

அவ் வழி, இமையவர் அறிந்து கூடினர்,
'இவ் வழி இராமனை இவன் கொண்டு ஏகுமேல்,
செவ் வழித்து அன்று நம் செயல்' என்று எண்ணினர்,
கவ்வையர், விசும்பிடைக் கழறல் மேயினர்: 130

'ஏத்த அரும் பெருங் குணத்து இராமன் இவ் வழிப்
போத்து அரும் தாதை சொல் புரக்கும் பூட்சியான்;
ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அந் நிலம்
காத்தல் உன் கடன்; இவை கடமை' என்றனர். 131

125. ஆறிய சிந்தனை - அடங்கிய மனம்; 126. ஈட்டது - தன்மையது; 130. கவ்வையர் - ஆரவாரமுடையவர்; 131. போத்து - பொத்து, மனக் குற்றம்; பூட்சி - கொள்கை; ஆத்த - யாத்த, நியமித்த.

பரதனைக் குறித்த காலம் வரை அரசாளும்படி இராமன் ஆணையிடல்

வானவர் உரைத்தலும், 'மறுக்கற்பாலதுஅன்று;
யான் உனை இரந்தனென்; இனி என் ஆணையால்
ஆனது ஓர் அமைதியின் அளித்தி, பார்' என,
தான் அவன் துணை மலர்த் தடக் கை பற்றினான். 132

பரதனும் ஒருப்பட்டு, ஒரு வேண்டுகோள் விடுக்க, இராமன் இணங்குதல்

'ஆம் எனில், ஏழ்-இரண்டு ஆண்டில், ஐய! நீ
நாம நீர் நெடு நகர் நண்ணி, நானிலம்
கோ முறை புரிகிலைஎன்னின், கூர் எரி
சாம் இது சரதம்; நின் ஆணை சாற்றினேன்.' 133

என்பது சொல்லிய பரதன் யாதும் ஓர்
துன்பு இலன்; அவனது துணிவை நோக்கினான்
அன்பினன், உருகினன்; 'அன்னது ஆக' என்றான்—
தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான். 134

பரதன், இராமன் திருவடிகளை முடிமேற் சூடிச் செல்லுதல்

விம்மினன் பரதனும், வேறு செய்வது ஒன்று
இன்மையின், 'அரிது' என எண்ணி, ஏங்குவான்,
'செம்மையின் திருவடித்தலம் தந்தீக' என,
எம்மையும் தருவன இரண்டும் நல்கினான். 135

அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,
'முடித்தலம் இவை' என, முறையின் சூடினான்;
படித்தலத்து இறைஞ்சினன், பரதன் போயினான்—
பொடித் தலம் இலங்குறு பொலம் கொள் மேனியான். 136

ஈன்றவர் முதலிய யாவரும் மீளுதல்

ஈன்றவர் முதலிய எண் இல் சுற்றமும்,
சான்றவர் குழுவொடு தவத்துளோர்களும்,
வான் தரு சேனையும், மற்றும் சுற்றுற,
மூன்று நூல் கிடந்த தோள் முனியும் போயினான். 137

பண்டை நூல் தெரி பரத்துவனும் போயினான்;
மண்டு நீர் நெடு நகர் மாந்தர் போயினர்;
விண்டு உறை தேவரும் விலகிப் போயினர்;
கொண்டல்தன் ஆணையால் குகனும் போயினான். 138

136. முடித்தலம் - கிரீடம்; 138. விண்டு - வானம்.

### நந்தியம்பதியிடை இருந்து பரதன் செங்கோல் செலுத்துதல்

பாதுகம் தலைக்கொடு, பரதன் பைம் புனல்
மோது கங்கையின் கரை கடந்து முந்தினான்;
போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்;
ஓது கங்குலில் நெடிது உறக்கம் நீங்கினான்; 139

நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்
செந் தனிக் கோல் முறை செலுத்த, சிந்தையான்
இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினான்,
அந்தியும் பகலும் நீர் அருத கண்ணினான். 140

### இராமன் சீதையோடும், இலக்குவனோடும் தென் திசை வழிப்படல்

' ''குன்றினில் இருந்தனன்'' என்னும் கொள்கையால்,
நின்றவர் நலிவரால், நேயத்தால்' என,
தன் துணைத் தம்பியும் தானும் தையலும்
தென் திசை நெறியினைச் சேறல் மேயினான். 141

140. நந்தியம்பதி - அயோத்தி நகருக்கு அருகில் உள்ளதோர் ஊர்.

## மிகைப் பாடல்கள்

1 மந்திரப் படலம்

'மன்னனே! அவனியை மகனுக்கு ஈந்து, நீ
பன்ன அருந்தவம் புரி பருவம் ஈது' என,
கன்ன மூலத்தினில் கழற வந்தென,
மின் எனக் கருமை போய் வெளுத்தது—ஓர் மயிர்.

தீங்கு இழை இராவணன் செய்த தீமைதான்
ஆங்கு ஒரு நரையது ஆய் அணுகிற்றும் என,
பாங்கில் வந்திடு நரை படிமக் கண்ணடி
ஆங்கு அதில் கண்டனன்—அவனி காவலன்.

[இந்த இரண்டு செய்யுட்களும், 'மண்ணுறு முரசு இனம்' எனத் தொடங்கும் முதற் பாடலின்முன், படலத்தின் தொடக்கத்தில் உள்ளன.]

எய்திய முனிவரன் இணைகொள் தாமரை
செய்ய பூங் கழலவன் சென்னி சேர்த்த பின்,
'வையகத்து அரசரும் மதி வல்லாளரும்
வெய்தினில் வருக' என மேயினன்அரோ. 4-1

ஆளும் நல் நெறிக்கு அமைவரும் அமைவினன் ஆகி,
நாளும் நல் தவம் புரிந்து, நல் நளிர் மதிச் சடையோன்
தாளில் பூசையின் கங்கையைத் தந்து, தந்தையரை
மீள்வு இல் இன் உலகு ஏற்றினன் ஒரு மகன், மேல்நாள். 66-1

'நறைக் குழற் சீதையும் ஞால நங்கையும்,
மறுத்தும், இங்கு ஒருவற்கு மணத்தின்பாலரோ—
கறுத்த மா மிடறுடைக் கடவுள் கால வில்
இறுத்தவற்கு அன்றி?' என்று இரட்டர் கூறினர். 76-1

'ஏத்த வந்து உலகு எலாம் ஈன்ற வேந்தனைப்
பூத்தவன் அல்லனேல், புனித வேள்வியைக்
காத்தவன் உலகினைக் காத்தல் நன்று' என,
வேத்தவை வியப்புற, விதர்ப்பர் கூறினர். 76-2

'பெருமையால் உலகினைப் பின்னும் முன்னும் நின்று
உரிமையோடு ஓம்புதற்கு உரிமை பூண்ட அத்
தருமமே தாங்கலில் தக்கது; ஈண்டு ஒரு
கருமம் வேறு இலது' எனக் கலிங்கர் கூறினர். 76-3

'கேடு அகல் படியினைக் கெடுத்து, கேடு இலாத்
தாடகை வலிக்கு ஒரு சரம் அன்று ஏவிய
ஆடக வில்லிக்கே ஆக, பார்!' எனத்
தோடு அவிழ் மலர் முடித் துருக்கர் சொல்லினர். 76-4

'கற்ற நான்மறையவர் கண்ணே, மன்னுயிர்
பெற்ற தாய் என அருள் பிறக்கும் வாரியை,
உற்றதேல் உலகினில் உறுதி யாது?' என,
கொற்றவேல் கனை கழல் குருக்கள் கூறினர். 76-5

'வாய் நனி புரந்த மா மனுவின் நூல் முறைத்-
தாய் நனி புரந்தனை, தரும வேலினாய்!
நீ நனி புரத்தலின் நெடிது காலம் நின்
சேய் நனி புரக்க!' எனத் தெலுங்கர் கூறினர் 76-6

'வையமும் வானமும் மதியும் ஞாயிறும்
எய்திய எய்துப; திகழும் யாண்டு எலாம்,
நெய் தவழ் வேலினாய்! நிற்கும் வாசகம்;
செய் தவம் பெரிது!' எனச் சேரர் கூறினர். 76-7

'பேர் இசை பெற்றனை; பெறுதது என், இனி?
சீரியது எண்ணினை; செப்புகின்றது என்?
ஆரிய! நம் குடிக்கு அதிப! நீயும் ஓர்
சூரியன் ஆம்' எனச் சோழர் சொல்லினர். 76-8

ஒன்றிய உவகையர்; ஒருங்கு சிந்தையர்,
தென் தமிழ் சேண் உற வளர்த்த தென்னரும்,
'என்றும் நின் புகழொடு தருமம் ஏமுற,
நின்றது நிலை' என நினைந்து கூறினர். 76-9

'வாள் தொழில் உழவ! நீ உலகை வைகலும்
ஊட்டினை அருள் அமுது; உரிமை மைந்தனைப்
பூட்டினை ஆதலின், பொரு இல் நல் நெறி
காட்டினை; நன்று' எனக் கங்கர் கூறினர். 76-10

'தொழு கழல் வேந்த! நின் தொல் குலத்துளோர்
முழு முதல் இழித்தகை முறைமை ஆக்கி, ஈண்டு
எழு முகில் வண்ணனுக்கு அளித்த இச் செல்வம்
விழுமிது, பெரிது!' என மிலேச்சர் கூறினர். 76-11

'கொங்கு அலர் நறு விரைக் கோதை மோலியாய்!
சங்க நீர் உலகத்துள், தவத்தின் தன்மையால்,
அங்கணன் அரசு செய்தருளும் ஆயிடின்'—
சிங்களர்—'இங்கு இதில் சிறந்தது இல்' என்றார். 76-12

ஆதியின் மனுவும் நின் அரிய மைந்தற்குப்
பாதியும் ஆகிலன்; பரிந்து வாழ்த்தும் நல்
வேதியர் தவப் பயன் விளைந்ததாம்' என,
சேதியர் சிந்தனை தெரியச் செப்பினர். 76-13

'அளம் படு குரை கடல் அகழி ஏழுடை
வளம் படு நெடு நில மன்னர்மன்னனே!
உளம் படிந்து உயிர் எலாம் உவப்பது ஓர் பொருள்
விளம்பினை பெரிது!' என விராடர் கூறினர். 76-14

2 மந்தரை சூழ்ச்சிப் படலம்

பொன்னும், மா மணியும், புனை சாந்தமும்,
கன்னிமாரொடு காசினி ஈட்டமும்,
இன்ன யாவையும் ஈந்தனள், அந்தணர்க்கு;
அன்னமும் தளிர் ஆடையும் நல்கினள். 9-1

நல்கி, நாயகன் நாள்மலர்ப் பாதத்தைப்
புல்லிப் போற்றி, வணங்கி, புரை இலா
மல்லல் மாளிகைக் கோயில் வலங்கொளா,
தொல்லை நோன்புகள் யாவும் தொடங்கினள். 9-2

கடி கமழ் தாரினன், கணித மாக்களை
முடிவு உற நோக்கி, ஓர் முகமன் கூறி, பின்,
'வடி மழுவாளவற் கடந்த மைந்தற்கு
முடி புனை முதன்மை நாள் மொழிமின்' என்றனன். 9-3

3 கைகேயி சூழ்வினைப் படலம்

வந்து மன் நகரில் தம்தம் வகைப்படும் உருவம் மாற்றி,
சுந்தரத் தடந்தோள் மாந்தர் தொல் உருச் சுமந்து தோன்றாது,
அந்தரத்து அமரர், சித்தர், அரம்பையர், ஆதி ஆக
இந்திரை கொழுநற் போற்றி இரைத்துமே எய்தி நின்றார். 75-1

4 நகர் நீங்கு படலம்

விழுந்து பார்மிசை, வெய்து உயிர்த்து, ஆவி சோர்ந்து,
எழுந்து, 'என் நாயகனே! துயர் ஏது எனத்
தெளிந்திலேன்; இது செப்புதி நீ' எனா,
அழுந்தினள்; பின்னர் அரற்றத் தொடங்கினள். 29-1

அன்னாள் இன்ன பன்னி அழியத் துயரால், மன்னர்
மன்னனவனும் இடரின் மயங்கி, 'மைந்தா! மைந்தா!
முன்னே வனம் ஏகிடல் நீ முறையோ? முதல்வா! முறையோ?
என்னே, யான் செய் குறைதான்?' என்றே இரங்கி மொழிவான்: 53-1

உணர்வு ஏதும் இலாள் உரையால் உரை சால் குமரன் நெடு நாள்
புணரான் நிலம்; மா வனமே போவானேயாம்; என்னில்,
இணரே பொலி தார் நிருபா! இடரால் அயர்வாய்; இதுவும்
துணையோ?—துணைவா!' என்றாள்; 'துயரேல்! துயரேல்!' என்றாள். 53-2

'''சேல் ஆகிய மா முதல்வன் திரு உந்தியின் நீள் மலரின்-
மேல் ஆகிய நான்முகனுல், வேதங்களின் மா முறையின்-
பால் ஆகிய யோனிகளின் பல ஆம் வருணம் தருவான்,
நால் ஆகியது ஆம் வருணம்தனின், முன் எமை நல்கினனுல், 76-1

'''அந் நான்மறையோன் வழியில், அருள் காசிபன் நல் மைந்தன்,
மின் ஆர் புரி நூல் மார்பன், விருத்தேசனன் மெய்ப் புதல்வன்,
நல் நான்மறை நூல் தெரியும் நாவான் சலபோசன் எனச்
சொன்னுன் முனிவன் தரு சுரோசனன் யான்'' என்றுன். 76-2

'தாவாத அருந்தவர் சொல் தவருததனுல், தமியேன்
சாவாதவரும் உளரோ? தண்டா மகவு உண்டு' என்றே
ஓவாதவர் முன் நின்றேன்; ஒரு சொல் உடையாது அவரும்,
பூவார் அனலுள்பொன்றி, பொன்-நாடு அதனில் புக்கார்.' 86-1

இம் மா மொழி தந்து அரசன் இடர் உற்றிடு போழ்தினில், அச்
செம் மா மயில் கோசலையும், திகையா, உணர்வு ஓவினளால்;
மெய்ம்மாண் நெறியும், விதியின் விளைவும், தளர்வின்றி உணரும்
அம் மா தவனும் விரைவோடு அவலம் தரு நெஞ்சினனுய். 87-1

என்று என்று சீற்றத்து இளையோன் இது இயம்பிடாமுன்,
கன்று ஒன்றும் ஆவின் பல யோனியும் காத்த நேமி
வன் திண் சிலைக் கைம் மனு என்னும் வயங்கு சீர்த்திக்
குன்று ஒன்று தோளான் மருமான் இவை கூறலுற்றுன்: 127-1

ஆய் தந்த மென் சீரை அணிந்து அடி தாழ்ந்து நின்ற
சேய் உந்து நிலை நோக்கினள், சேய் அரிக் கண்கள் தேம்ப,
வேய் தந்த மென் தோளி தன் மென் முலை பால் உகுப்ப-
தாய், 'நிந்தை இன்றிப் பல ஊழி தழைத்தி!' என்றுள். 147-1

'வானமே அனையது ஓர் கருணை மாண்பு அலால்
ஊனம் வேறு இலானுடன், உலகம் யாவையும்,
கானமே புகும்எனின், காதல் மைந்தனும்
தானுமே ஆளும்கொல் தரை?' என்றுர் சிலர். 191-1

போயினன் நகர் நீங்கி—பொலிதரு
தூய பேர் ஒளி ஆகி, துலங்கு அருள்
ஆய மூவரும் ஆகி, உயிர்த் தொகைக்கு
ஆயும் ஆகி, அளித்தருள் ஆதியான். 234-1

## 5 தைலம் ஆட்டு படலம்

தொடுத்த கலிடைச் சிலர் துவண்டனர், துயின்றுர்;
அடுத்த அடையில் சிலர் அழுந்தனர் அயர்ந்தார்;
உடுத்த துகில் சுற்று ஒரு தலைச் சிலர் உறைந்தார்;
படுத்த தளிரில் சிலர் பசைந்தனர் அசைந்தார். 16-1

ஒரு திறத்து உயிர் எலாம் புரந்து, மற்று அவண்
இரு திறத்து உள வினை இயற்றும் எம் பிரான்
தரு திறத்து ஏவலைத் தாங்கி, தாழ்வு இலாப்
பொரு திறல் சுமந்திரன் போய பின்னரே. 46-1

துந்துமி முழங்க, தேவர் தூய் மலர் பொழிந்து வாழ்த்த,
சந்திர வதனத்து ஏயும் அரம்பையர் தழுவ, தங்கள்
முந்து தொல் குலத்துளோரும் முக்கணன் கணமும் சூழ,
அந்தரத்து அரசன் சென்றான், ஆன தேர்ப் பாகன் சொல்லால். 59-1

6 கங்கைப் படலம்

அன்ன காரணத்து ஐயனும், ஆங்கு அவர்
உன்னு பூசனை யாவும் உவந்தபின்,
மின்னு செஞ் சடை மெய்த் தவர் வேண்டிட,
பன்ன சாலையின்பாடு இருந்தான்அரோ. 27-1

7 குகப் படலம்

நின்றான் நெஞ்சில் நிரம்புறும் அன்பால்,
'இன்றே நின் பணி செய்திட, இறைவா!
நன்றே வந்தனென்; நாய் அடியேன் யான்'
என்றே கூவினன்—எயினரின் இறையோன். 10-1

வெயில் விரி கனகக் குன்றத்து எழில் கெட விலகு சோதிக்
கயில் விரி வயிரப் பைம் பூண் கடுந் திறல் மடங்கல் அன்னான்
துயில் எனும் அணங்கு வந்து தோன்றலும், அவளை,'நாமே
எயிலுடை அயோத்தி மூதூர் எய்து நாள் எய்துக!' என்றான்.
22-1

மறக் கண் வாள் இளைய வீரன் ஆணையை மறுத்தல்செல்லா
உறக்க மா மாதும், அண்ணல் உபய பங்கயங்கள் போற்றி,
'துறக்கமாம் என்னல் ஆய தூய் மதில் அயோத்தி எய்தி
இறுக்கும் நாள், எந்தை பாதம் எய்துவல்' என்னப் போனாள்.
22-2

மற்றவள் இறைஞ்சி ஏக, மா மலர்த் தவிசின் நீங்காப்
பொற்றொடியோடும் ஐயன் துயில்தரும் புன்மை நோக்கி,
இற்றது ஓர் நெஞ்சன் ஆகி, இரு கண் நீர் அருவி சோர,
உற்ற ஓவியம்அது என்ன, ஒரு சிலை அதனின் நின்றான். 22-3

9 சித்திரகூடப் படலம்

'நெய் கொள் நீர் உண்டு, நெருப்பு உண்டு, நீண்டு, மைந் நிறைந்த
வை கொள் வேல் எனக் காலனும் மறுகுறும் கண்ணாய்!
மெய்கள் நோகின்ற பிடிகளை விரும்பிய வேழம்
கைகள் நோகில தாங்கின நிற்பன காணாய்!' 36-1

'விடம் கொள் நோக்கி! நின் இடையினை மின் என வெருவி,
படம் கொள் நாகங்கள் முழை புகப் பதைப்பன பாராய்!
மடங்கல் ஆளிகள் எனக் கொடு மழைஇனம் முழங்க,
கடம் கொள் கார் மதக் கைம்மலை இரிவன காணாய்!' 36-2

'எய்த இன்னல் வந்த போது யாவரேனும் யாவையும்
செய்ய வல்லர் என்று கொள்க; சேண் நெறிக்கண் நீங்கிட,
மைய கண்ணி செய்ய பாதம் வல்ல ஆய; எம்பிதன்
கைகள் இன்று பன்னசாலை கட்ட வல்ல ஆயவே.' 50-1

'தினைத் துணை வயிறு இலாச் சிற்றெறும்புகள்
வனத்திடைக் கரிகளை வருத்தி வாழ்வன;
அனைத்து உள உயிர்களும் யாவும் அங்ஙனே;
மனத்து இடர் நீங்கினார் இல்லை, மன்னனே!' 55-1

## 10 பள்ளிபடைப் படலம்

ஆய காதல் தனையனைத் தந்த அத்
தூய தையல் தொழிலுறுவார், 'உனக்
கூயள் அன்னை' என்றே சென்று கூறலும்,
ஏய அன்பினன்தானும் சென்று எய்தினான். 41-1

'தீ அன கொடியவள் செய்த செய்கையை
நாயினேன் உணரின், நல் நெறியின் நீங்கலாத்
தூயவர்க்கு இடர் இழைத்து உழலும் தோமுடை
ஆயவர் வீழ் கதிஅதனின் வீழ்க, யான்.' 116-1

உந்து பொன் தடந் தேர் வலானொடும்,
மந்திரப் பெருந் தலைவர், மற்றுளோர்,
தந்திரத் தனித் தலைவர், நண்பினோர்,
வந்து சுற்றும் உற்று, அழுது மாழ்கினார். 125-1

என்று கொண்டு மா தவன் இயம்பலும்,—
நின்று நின்று தான் நெடிது உயிர்த்தனன்;
'நன்று, நன்று!' எனா நகை முகிழ்த்தனன்;—
குன்று குன்றுறக் குலவு தோளினான். 131-1

அன்னதாக, அங்கு, ஆறு பத்து எனச்
சொன்ன ஆயிரம் தோகைமார்களும்,
துன்னி வந்தனர்—சோர்வு இலாது, அவர்
மின்னும் வாள் எரிமீது வீழவே. 136-1

12 கங்கை காண் படலம்

வந்து எதிரே விழுந்தவனும் வணங்கினன்; வணங்காமுன்,
சந்த நெடுந் திரள் புயத்தான் தழுவினன்; தழுவியபின்,
இந்த இடர் வடிவுடன் நீ எங்கு எழுந்தாய்—இமையோர்தம்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியாய்! 32-1

ஏறினர் இளவலோடு, இரங்கு நெஞ்சு கொண்டு
ஊறிய தாயரும் உரிய சுற்றமும்;
பேறு உள பெரு நதி நீங்கி, பெட்பொடும்
சூறு தென் கரையிடைக் குழீஇய போதிலே. 63-1

தன் அன தம்பியும், தாயர் மூவரும்,
சொன்ன தேர் வலவனும், தூய தோழனும்,
துன்னினர் ஏறலும், துழா துடுப்பு எனும்
நல் நயக் காலினல் நடத்தல் மேயினன். 63-2

13 திருவடி சூட்டு படலம்

அன்ன காதல் அருந் தவர், 'ஆண் தகை!
நின்னை ஒப்பவர் யார் உளர், நீ அலால்?'
என்ன வாழ்த்திடும் ஏல்வையில், இரவியும்
பொன்னின் மேருவில் போய் மறைந்திட்டதே. 5-1

இன்ன ஆய எறி கடல் சேனையும்,
மன்னர் யாவரும், மன் இளந் தோன்றலும்,
அன்ன மா முனியோடு எழுந்து, ஆண்தகை
துன்னு நீள் வரைக்கு ஏகிய சொல்லுவாம். 19-1

'ஐய! நின்னுடைய அன்னை மூவரும்,
வைய மன்னரும், மற்றும் மாக்களும்,
துய்ய நாடு ஒரீஇத் தோன்றினர்; அவர்க்கு
உய்ய நல் அருள் உதவுவாய்' என்றான். 89-1

கங்குல் வந்திடக் கண்டு, யாவரும்
அங்கணே துயில் அமைய, ஆர் இருள்
பொங்கு வெம் பகை போக, மற்றை நாள்,
செங் கதிர் குண திசையில் தோன்றினன். 94-1

'வானின் நுந்தை சொல் மரபினல் உடைத்
தானம் நின்னது என்று இயைந்த தன்மையால்,
ஊனினில் பிறந்து உரிமையாகையின்
யான் அது ஆள்கிலேன்' என, அவன் சொல்வான். 111-1

கடவுள் வாழ்த்து

பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா,
ஓதி ஓதி உணரும்தொறும் உணர்ச்சி உதவும்
வேதம், வேதியர், விரிஞ்சன், முதலோர் தெரிகிலா,
ஆதி தேவர்; அவர் எம் அறிவினுக்கு அறிவுஅரோ.

## 1 விராதன் வதைப் படலம்

இராமன் முதலியோர் அத்திரி முனிவரின் உறையுள் அடைதல்

முத்து இருத்தி, அவ் இருந்தனைய மொய்ந் நகையொடும்,
சித்திரக் குனி சிலைக் குமரர், சென்று அணுகினர்—
அத்திரிப் பெயர் அருந் தவன் இருந்த அமைதி,
பத்திரப் பழுமரப் பொழில் துவன்று, பழுவம். 1

திக்கு உறும் செறி பரம் தெரிய நின்ற, திரள் பொன்
கைக் குறுங் கண் மலைபோல், குமரர் காமம் முதல் ஆம்
முக் குறும்பு அற எறிந்த வினை, வால், முனிவனைப்
புக்கு இறைஞ்சினர். அருந் தவன் உவந்து புகலும்: 2

'குமரர்! நீர் இவண் அடைந்து உதவு கொள்கை எளிதோ?
அமரர் யாவரொடும், எவ் உலகும் வந்த அளவே!
எமரின் யார் தவம் முயன்றவர்கள்?' என்று உருகினன்—
தமர் எலாம் வர, உவந்தனைய தன்மை முனிவன். 3

தண்டக வனம் புகுதல்

அன்ன மா முனியொடு அன்று, அவண் உறைந்து, அவன் அரும்
பன்னி, கற்பின் அனசூயை பணியால், அணிகலன்,
துன்னு தூசினொடு சந்து, இவை சுமந்த சனகன்
பொன்னொடு ஏகி, உயர் தண்டக வனம் புகுதலும், 4

விராதன் எதிர்ப்படுதல்

எட்டொடு எட்டு மத மா கரி, இரட்டி அரிமா,
வட்ட வெங் கண் வரை ஆளி பதினாறு, வகையின்
கிட்ட இட்டு இடை கிடந்தன செறிந்தது ஒரு கைத்
தொட்ட முத் தலை அயில் தொகை, மிடல் கழுவொடே, 5

1: 1. மொய்ந்நகை - நெருங்கிய பற்களையுடைய சீதை; அத்திரி - காம வெகுளி மயக்கங்கள் அற்றவன்; பத்திரம் - இலை, அழகு; பழுவம் - காடு; 2. மலை - மலை போன்ற யானை; 3. கொள்கை - தன்மை; 5. கழு - சூலம்.

செஞ் சுடர்ச் செறி மயிர்ச் சுருள் செறிந்த செனியன்,
நஞ்சு வெற்பு உருவு பெற்று இடை நடந்ததென, மா
மஞ்சு சுற்றிய வயங்கு கிரி வாத விசையில்
பஞ்சு பட்டது பட, படியின்மேல் முடுகியே, 6

புண் துளங்கியன கண்கள் கனல் பொங்க, மழை சூழ்
விண் துளங்கிட, விலங்கல்கள் குலுங்க, வெயிலும்
கண்டு, உளம் கதிர் குறைந்திட, நெடுங் கடல் சுலாம்
மண் துளங்க, வய அந்தகன் மனம் தளரவே, 7

புக்க வாள் அரி முழங்கு செவியின் பொறி உற,
பக்கம் மின்னும் மணி மேரு சிகரம் குழைபட,
செக்கர் வான் மழை நிகர்க்க, எதிர் உற்ற செருவத்து
உக்க வீரர் உதிரத்தின் ஒளிர் செச்சையினெடே, 8

படையொடு ஆடவர்கள், பாய் புரவி, மால் களிறு, தேர்,
நடைய வாள் அரிகள், கோள் உழுவை, நண்ணிய எலாம்
அடைய வாரி, அரவால் முடி, அனேக வித, வன்
தொடையல் மாலை துயல்வந்து உலவு தோள் பொலியவே, 9

குன்று துன்றின எனக் குமுறு கோப மதமா
ஒன்றின் ஒன்று இடை அடுக்கின தடக் கை உதவ,
பின்றுகின்ற பிலனின் பெரிய வாயின் ஒரு பால்
மென்று, தின்று, விளியாது விரியும் பசியொடே, 10

பன்னகாதிபர் பணு மணி பறித்து, அவை பகுத்-
தென்ன, வானவர் விமானம் இடையிட்டு அரவிடைத்
துன்னு கோளினெடு தாரகை, தொடுத்த துழனிச்
சன்னவீரம் இடை மின்னு தட மார்பினெடுமே, 11

பம்பு செக்கர், எரி, ஒக்கும் மயிர் பக்கம் எரிய,
கும்பம் உற்ற உயர் நெற்றியின் விசித்து, ஒளி குலாம்
உம்பருக்கு அரசன் மால் கரியின் ஓடை, எயிறு ஒண்
கிம்புரிப் பெரிய தோள்வளையொடும் கிளரவே, 12

6. வாதவிசை - நடை வேகத்தால் உண்டான காற்றின் விசை; 7. துளங்குதல் - விளங்குதல்; 8. செச்சை - சந்தனக் குழம்பு; 9. நடைய - நடையினையுடைய; 10. பின்றுதல் - செல்லச் செல்ல தொலையாதிருத்தல்; சன்ன வீரம் - ஒருவகை வெற்றி மாலை; 12. எரிய - விளங்க; உற்ற - போல; கரி - ஈண்டு ஐராவதம், விராதனுக்கு ஐராவதத்தின் ஓடை நெற்றிப் பட்டமும் அதன் கிம்புரி வாகுவலயமும் ஆயின.

தங்கு திண் கரிய காளிமை தழைந்து தவழ,
பொங்கு வெங் கொடுமை என்பது புழுங்கி எழ, மா
மங்கு பாதகம், விடம், கனல், வயங்கு திமிரக்
கங்குல், பூசி வருகின்ற கலி காலம் எனவே, 13

செற்ற வாள் உழுவை வன் செறி அதள் திருகுறச்
சுற்றி, வாரண உரித் தொகுதி நீவி தொடர,
கொற்றம் மேவு திசை யானையின் மணிக் குலமுடைக்
கற்றை மாசுணம் விரித்து வரி, கச்சு ஒளிரவே, 14

செங் கண் அங்க அரவின் பொரு இல் செம் மணி விராய்,
வெங் கண் அங்கவலயங்களும், இலங்க விரவிச்
சங்கு அணங்கிய சலஞ்சலம் அலம்பு தவளக்
கங்கணங்களும், இலங்கிய கரம் பிறழவே, 15

முந்து வெள்ளிமலை பொன்னின் மலையோடு முரண,
பந்து முந்து கழல் பாடுபட ஊடு படர்வோன்,
வந்து மண்ணினிடையோன்எனினும், வானினிடையோர்
சிந்தையுள்ளும் விழியுள்ளும் உளன் என்ற திறலோன்.* 16

பூதம் அத்தனையும் ஓர் வடிவு கொண்டு, புதிது என்று
ஓத ஒத்த உருவத்தன்; உரும் ஒத்த குரலன்;
காதலித்து அயன் அளித்த, கடை இட்ட கணிதப்
பாத லக்கம் மதவெற்புஅவை படைத்த வலியான். 17

சார வந்து, அயல் விலங்கினன்—மரங்கள் தறையில்
பேர, வன் கிரி பிளந்து உக, வளர்ந்து இகல் பெரு
வீர வெஞ் சிலையினோர் எதிர், விராதன் எனும் அக்
கோர வெங் கண் உரும்ஏறு அன கொடுந் தொழிலினன். 18

**விராதன், சீதையைக் கவர்ந்து செல்லுதல்**

'நில்லும், நில்லும்' என வந்து, நிணம் உண்ட நெடு வெண்
பல்லும், வல் எயிறும், மின்னு பகு வாய் முழை திறந்து,
அல்லி புல்லும் அலர் அன்னம் அனையாளை, ஒரு கை,
சொல்லும் எல்லையில், முகந்து உயர் விசும்பு தொடர, 19

13. காளிமை - கறுப்பு; 14. உரித்தொகுதி - தோலின் தொகுதி; நீவி - உடை; 15. வெங் கண் அங்கவலயங்கள் - கொடிய கண்ணோடு கூடிய உறுப்பினையுடைய வளை, இது பாம்பின் தலைவடிவமாக அமைந்த பூட்டு வாயினையுடைய வளையாகும்; சலஞ்சலம் - வலம்புரி ஆயிரம் சூழ்ந்த சங்கு; 16. வெள்ளி மலை - கயிலை மலை; பொன்னின் மலை - மேரு மலை; 17. கடை இட்ட கணிதப் பாத லக்கம் - இறுதியில் இடப்பட்ட எண்ணுகிய கால் என்பதனையுடைய லட்சம், அது ஒன்றேகால் இலக்கம்.

காளை மைந்தர் அது கண்டு, கதம் வந்து கதுவ,
தோளில் வெஞ் சிலை இடங் கொடு தொடர்ந்து, சுடர் வாய்
வாளி தங்கிய வலங் கையவர், 'வஞ்சனை; அடா!
மீள்தி; எங்கு அகல்தி' என்பது விளம்ப, அவனும், 20

'ஆதி நான்முகன் வரத்தின் எனது ஆவி அகலேன்;
ஏதி யாவதுவும் இன்றி, உலகு யாவும் இகலின்,
சாதியாதனவும் இல்லை; உயிர் தந்தனென்; அடா!
போதிர், மாது இவளை உந்தி, இனிது' என்று புகல, 21

இராமன் போர் தொடுத்தல்

வீரனும் சிறிது மென் முறுவல் வெண் நிலவு உக,
'போர் அறிந்திலன் இவன்; தனது பொற்பும் முரணும்
தீரும், எஞ்சி' என, நெஞ்சின் உறு சிந்தை தெரிய,
பார வெஞ் சிலையின் நாண் ஒலி படைத்த பொழுதே, 22

இலை கொள் வேல் அடல் இராமன், எழு மேக உருவன்,
சிலை கொள் நாண் நெடிய கோதை ஒலி ஏறு, திரை நீர்,
மலைகள், நீடு தலம், நாகர் பிலம், வானம் முதல் ஆம்
உலகம் ஏழும், உரும்ஏறு என ஒலித்து உரறவே, 23

விராதன், சீதையை விடுத்து இராம-இலக்குவரை எதிர்த்தல்

வஞ்சகக் கொடிய பூசை நெடு வாயில் மறுகும்
பஞ்சரக் கிளி எனக் கதறு பாவையை விடா,
நெஞ்சு உளுக்கினன் என, சிறிது நின்று நினையா,
அஞ்சனக் கிரி அனன் எதிர் அரக்கன் அழலா, 24

பேய்முகப் பிணி அற, பகைஞர் பெட்பின் உதிரம்
தோய் முகத்தது, கனத்தது, சுடர்க் குதிரையின்
வாய் முகத்திடை நிமிர்ந்து வட வேலை பருகும்
தீ முகத் திரி சிகைப் படை திரித்து எறியவே, 25

திசையும், வானவரும், நின்ற திசை மாவும், உலகும்,
அசையும் ஆலம் என, அன்ன அயில் மின்னி வரலும்,
வசை இல் மேரு முதல் மால் வரைகள் ஏழின் வலி சால்
விசைய வார் சிலை இராமன் ஒரு வாளி விடவே, 26

21. ஏதி - படைக்கலம்; உந்தி - கைவிட்டு; 22. எஞ்சித் தீரும் - குறைந்தழியும்; 23. கோதை - வில் வீரர் விரலில் அணியும் உறை; 24. பஞ்சரம் - கூடு; உளுக்குதல் - சிதைதல்; 25. பேய்முகப் பிணி - பேயின்பால் உளதாகிய பசி நோய்; திரிசிகைப் படை - முத்தலை வேல்; 26. அசைதல் - கலங்குதல்.

‘இற்றது இன்றொடு இவ் அரக்கர் குலம்’ என்று, பகலே,
வெற்ற விண்ணினிடைநின்று நெடு மீன் விழுவபோல்,
சுற்று அமைந்த சுடர் எஃகம்அது இரண்டு துணியா
அற்ற கண்டம்அவை ஆசையினது அந்தம் உறவே, 27

சூர் ஒடுங்கு அயில் துணிந்து இறுதல் கண்டு, சிறிதும்
போர் ஒடுங்கலன், மறம்கொடு புழுங்கி, நிருதன்
பார் ஒடுங்குறு கரம்கொடு பருப்பதம் எலாம்
வேரொடும் கடிது எடுத்து, எதிர் விசைத்து, விடலும், 28

வட்டம் இட்ட கிரி அற்று உக, வயங்கு வயிரக்
கட்டு அமைந்த கதிர் வாளி, எதிரே கடவலால்,
விட்ட விட்ட மலை மீள, அவன் மெய்யில், விசையால்
பட்ட பட்ட இடம் எங்கும், உடல் ஊறுபடலும்,† 29

ஓம் அ ராமரை, ஒருங்கும் உணர்வோர் உணர்வுறும்
நாமர் ஆம் அவரை, நல் அறம் நிறுத்த நணுகித்
தாம் அரா-அணை துறந்து தரை நின்றவரை, ஓர்
மா மராமரம் இறுத்து, அதுகொடு எற்ற வரலும்,† 30

ஏறு சேவகன் இரண்டினொடு இரண்டு கணையால்
வேறு வேறு துணிசெய்து, அது விழுத்தி, விசையால்
மாறு மாறு, நிமிர் தோளிடையும் மார்பினிடையும்
ஆறும் ஆறும் அயில் வெங் கணை அழுத்த, அவனும், 31

மொய்த்த முள் தனது உடல்-தலை தொளைப்ப, முடுகி,
கைத்தவற்றின் நிமிரக் கடிது கன்றி, விசிறும்
எய்த்த மெய்ப் பெரிய கேழல் என, எங்கும், விசையின்
தைத்த அக் கணை தெறிப்ப, மெய் சிலிர்த்து, உதறவே, 32

எரியின் வார் கணை இராமன் விட, எங்கும் நிலையாது
உருவி ஓட, மறம் ஒடுதல்செயா உணர்வினன்,
அருவி பாயும் வரைபோல் குருதி ஆறு பெருகிச்
சொரிய, வேக வலி கெட்டு, உணர்வு சோர்வுறுதலும், 33

**இராம-இலக்குவர், விராதன் தோள்மேல் ஏறி வெட்டி வீழ்த்தல்**

மெய் வரத்தினன், ‘மிடல்-படை விடப் படுகிலன்;
செய்யும் மற்றும் இகல்’ என்று, சின வாள் உருவி, ‘வன்
கை துணித்தும்’ என, முந்து கடுகி, படர் புயத்து,
எய்வு இல் மல் பொருவு தோள் இருவர் ஏற, நிருதன், 34

28. சூர் - கொடுந்தெய்வம்; 30. ஓம் அ ராமர் - ஓம் என்னும் பிரணவ எழுத்தில் அதன் பொருளாய் நின்ற இராமன்; 32. கைத்தவற்றின் - வெறுக்கப்பட்ட பகை விலங்குகளின்மேல்.

உண்டு எழுந்த உணர்வு அவ்வயின் உணர்ந்து, முடுகி,
தண்டு எழுந்தனைய தோள்கொடு சுமந்து, தழுவி,
பண்டு எழும் தனது வன் கதி பதிற்றின் முடுகி,
கொண்டு எழுந்தனன்—விழுந்து இழி கொழுங் குருதியான். 35

முந்து வான் முகடு உற, கடிது முட்டி, முடுகி,
சிந்து சோரியொடு சாரிகை திரிந்தனன்அரோ—
வந்து மேருவினை நாள்தொறும் வலம்செய்து உழல்வோர்,
இந்து சூரியரை ஒத்து, இருவரும் பொலியவே. 36

சுவண வண்ணனொடு கண்ணன் உறை தோளன் விசை தோய்
அவண விண்ணிடை நிமிர்ந்து படர்கின்றவன், அறம்
சிவண, தன்ன சிறைமுன் அவரொடு, ஏகு செலவத்து
உவணன் என்னும் நெடு மன்னவனும் ஒத்தனன்அரோ.† 37

மா தயா உடைய தன் கணவன், வஞ்சன் வலியின்
போதலோடும் அலமந்தனள்; புலர்ந்து, பொடியில்,
கோதையோடும் ஒசி கொம்பு என, விழுந்தனள்—குலச்
சீதை, சேவல் பிடியுண்ட சிறை அன்னம் அனையாள். 38

பின்னை, ஏதும் உதவும் துணை பெருள்; உரை பெருள்;
மின்னை ஏய் இடை நுடங்கிட, விரைந்து தொடர்வாள்;
'அன்னையே அனைய அன்பின் அறவோர்கள்தமை விட்டு,
என்னையே நுகர்தி' என்றனள்—எழுந்து விழுவாள். 39

அழுது, வாய் குழறி, ஆர் உயிர் அழுங்கி, அலையா,
எழுது பாவை அனையாள் நிலை உணர்ந்து, இளையவன்
தொழுது, 'தேவி துயர் கூர விளையாடல் தொழிலோ?
பழுது, வாழி' என, ஊழி முதல்வன் பகர்வுறும்: 40

'ஏக நின்ற நெறி எல்லை கடிது ஏறி, இனிதின்
போகல் நன்று என நினைந்தனென்; இவன், பொரு இலோய்!
சாகல் இன்று பொருள் அன்று' என, நகும் தகைமையோன்,
வேக வெங் கழலின் உந்தலும், விராதன் விழவே, 41

35. தண்டு - தண்டாயுதம்; 36. சாரிகை - வட்டமிட்டோடல்; 37. சுவணம் - பொன்; சுவண வண்ணன் - இலக்குவன்; உவணன் - கருடன்; 38. கோதை - கூந்தல்; 39. நுகர்தி - உண்பாய்.

**விராதனைப் புதைத்தலும் அவன் சாபம் நீங்கி விண்ணில் தோன்றலும்**

தோள் இரண்டும் வடி வாள்கொடு துணித்து, விசையால்
மீளி மொய்ம்பினர் குதித்தலும், வெகுண்டு, புருவத்
தேள் இரண்டும் நெரிய, சினவு செங் கண் அரவக்
கோள் இரண்டு சுடரும் தொடர்வதின், குறுகலும், 42

புண்ணிடைப் பொழி உயிர்ப் புனல் பொலிந்து வரவும்,
விண்ணிடைப் படர்தல் விட்டு, எழு விகற்பம் நினையா,
எண்ணுடைக் குரிசில் எண்ணி, 'இளையோய்! இவனை, இம்
மண்ணிடைக் கடிது பொத்துதல் வழக்கு' எனலுமே, 43

மத நல் யானை அனையான் நிலம் வகிர்ந்த குழிவாய்,
நதம் உலாவு நளி நீர்வயின் அழுந்த, நவை தீர்
அதவம் ஆய் நறு நெய் உண்டு உலகில் அன்பர் கருதிற்று
உதவு சேவடியினல், அமலன், உந்துதலுமே, 44

பட்ட தன்மையும் உணர்ந்து, படர் சாபம் இட, முன்
கட்ட வன் பிறவி தந்த, கடை ஆன, உடல்தான்
விட்டு, விண்ணிடை விளங்கினன்—விரிஞ்சன் என ஓர்
முட்டை தந்ததனில் வந்த முதல் முன்னவனினே. 45

பொறியின் ஒன்றி, அயல் சென்று திரி புந்தி உணரா,
நெறியின் ஒன்றி நிலை நின்ற நினைவு உண்டதனினும்,
பிறிவு இல் அன்பு நனி பண்டு உடைய பெற்றிதனினும்,
அறிவு வந்து உதவ, நம்பனை அறிந்து, பகர்வான்: 46

**விராதன் இராமனைத் துதித்தல்**

'வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னின், படிவங்கள் எப்படியோ?
ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினொடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள்தொறும் உறைந்தால், அவை உன்னைப் பொறுக்குமோ? 47

42. மீளி - வலிமை; மொய்ம்பு - தோள்; 43. உயிர்ப்புனல் - உயிருக்கு உறுதி தரும் குருதி; பொத்துதல் - புதைத்தல்; 44. நதம் - மேற்கு நோக்கிச் செல்லும் ஆறு; அதவம் - அத்திக்கட்டை, ஈண்டு அத்திக்கட்டையால் செய்த அகப்பை; 45. முட்டை - அண்டம்; 46. நம்பன் - விரும்பப்படுபவன், ஈண்டு இராமன்.

'கடுத்த கராம் கதுவ, நிமிர் கை எடுத்து, மெய் கலங்கி,
உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலி கொள்ள, உறு துயரால்,
''அடுத்த பெருந் தனி மூலத்து அரும் பரமே! பரமே!'' என்று
எடுத்து ஒரு வாரணம் அழைப்ப, நீயோ அன்று ''ஏன்?'' என்றாய்? 48

'புறம் காண, அகம் காணப் பொது முகத்தின் அருள் நோக்கம்
இறங்காத தாமரைக் கண் எம்பெருமான்! இயம்புதியால்;
அறம் காத்தற்கு, உனக்கு ஒருவர் ஆரும் ஒரு துணை இன்றி,
கறங்கு ஆகும் எனத் திரிய, நீயேயோ கடவாய்தான்? 49

'துறப்பதே தொழிலாகத் தோன்றினோர் தோன்றியக்கால்,
மறப்பரோ தம்மை அது அன்றாகில், மற்று அவர் போல்
பிறப்பரோ? எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ!
இறப்பதே, பிறப்பதே, எனும் விளையாட்டு இனிது உகந்தோய்!

'பனி நின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும் புணை பற்றி,
நனி நின்ற சமயத்தோர் எல்லாரும், ''நன்று'' என்ன,
தனி நின்ற தத்துவத்தின் தகை மூர்த்தி நீ ஆகின்,
இனி, நின்ற முதல் தேவர் என்கொண்டு, என் செய்வாரே? 51

'ஓயாத மலர் அயனே முதல் ஆக உளர் ஆகி,
மாயாத வானவர்க்கும், மற்று ஒழிந்த மன்னுயிர்க்கும்,
நீ ஆதி முதல் தாதை, நெறி முறையால் ஈன்று எடுத்த
தாய் ஆவார் யாவரே?—தருமத்தின் தனி மூர்த்தி! 52

'நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின் அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால்; வெளி நின்றால் தீங்கு உண்டோ?
வீயாத பெரு மாய விளையாட்டும் வேண்டுமோ? 53

'தாய்தன்னை அறியாத கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாய் ஆகின், ஐய!
நீ அறிதி எப் பொருளும்; அவை உன்னை நிலை அறியா;
மாயை இது என்கொலோ?—வாராதே வர வல்லாய்! 54

' ''பன்னல் ஆம்'' என்று உலகம் பலபலவும் நினையுமால்;
உன் அலால் பெருந் தெய்வம் உயர்ந்துளோர் ஒழுக்கு அன்றே;
அன்ன ஊர்தியை முதல் ஆம் அந்தணர்மாட்டு அருந் தெய்வம்
நின் அலால் இல்லாமை நெறிநின்றார் நினையாரோ? 55

49. புறம் - புறத்தவர்; அகம் - அகத்தவர்; 51. பனி - அச்சம், துன்பமும் ஆம்; 53. பரம்பரம் - மேலான இறைவன்; நின் அடியவே - உன்னைக் காரணமாகப் பற்றியவையே; 55. பன்னல் - பன்னுதல், துதித்தல்.

'பொரு அரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்,
இரு வினையும் உடையார்போல், அருந் தவம் நின்று இயற்றுவார்;
திரு உறையும் மணி மார்ப! நினக்கு என்னை செயற்பால?
ஒரு வினையும் இல்லார்போல் உறங்குதியால்—உறங்காதாய்!

'அரவு ஆகிச் சுமத்தியால், அயில் எயிற்றின் ஏந்துதியால்,
ஒரு வாயில் விழுங்குதியால், ஓர் அடியால் ஒளித்தியால்—
திரு ஆன நிலமகளை: இஃது அறிந்தால் சீறுளோ,
மரு ஆரும் துழாய் அலங்கல் மணி மார்பில் வைகுவாள்? 57

'மெய்யைத் தான் சிறிது உணர்ந்து, நீ விதித்த மன்னுயிர்கள்,
உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன குறை உண்டோ?
வையத்தார், வானத்தார், மழுவாளிக்கு அன்று அளித்த
ஐயத்தால், சிறிது ஐயம் தவிர்ந்தாரும் உளர்; ஐயா! 58

'அன்னம் ஆய் அரு மறைகள் அறைந்தாய் நீ; அவை உன்னை
முன்னம் ஆர் ஓதுவித்தார்? எல்லாரும் முடிந்தாரோ?
பின்னம் ஆய் ஒன்று ஆதல், பிரிந்தேயோ? பிரியாதோ?
என்ன மா மாயம் இவை?—ஏனம் ஆய் மண் இடந்தாய்! 59

'ஒப்பு இறையும் பெறல் அரிய ஒருவா! முன் உவந்து உறையும்
அப்பு உறையுள் துறந்து, அடியேன் அருந் தவத்தால் அணுகுதலால்,
இப் பிறவிக் கடல் கடந்தேன்; இனிப் பிறவேன்; இரு வினையும்,
துப்பு உறழும் நீர்த்த சுடர்த் திருவடியால், துடைத்தாய் நீ.'

**விராதன் தன் வரலாறு கூறி ஏகல்**

இற்று எலாம் இயம்பினன்
நிற்றலோடும், 'நீ இவ்வாறு
உற்றவாறு உணர்த்து' என,
வெற்றியான் விளம்பினன். 61

'கள்ள மாய வாழ்வு எலாம்
விள்ள, ஞானம் வீசு தாள்
வள்ளல், வாழி! கேள்' என,
உள்ளவாறு உணர்த்தினன்: 62

'இம்பர் உற்று இது எய்தினேன்
வெம்பு விற் கை வீர! பேர்
தும்புரு; தனதன் சூழ்
அம்பரத்து உளேன்அரோ; 63

58. மழுவாளி - சிவன்; ஐயம் - பிச்சை, சந்தேகம்; 59. உன்னை - உனக்கு; பின்னம் - வேறுபாடு; 60. நீர்த்த - தன்மையுடைய; 63. வெம்புதல் - சினத்தல்; தனதன் - குபேரன்.

'கரக்க வந்த காம நோய்
துரக்க வந்த தோமினால்,
இரக்கம் இன்றி ஏவினான்;
அரக்கன் மைந்தன் ஆயினேன்; 64

'அன்ன சாபம் மேவி நான்,
''இன்னல் தீர்வது ஏது'' என,
''நின்ன தாளின் நீங்கும்'' என்று,
உன்னும் எற்கு, உணர்த்தினான்; 65

அன்று மூலம், ஆதியாய்!
இன்றுகாறும் ஏழையேன்
நன்று தீது நாடலேன்;
தின்று, தீய தேடினேன்; 66

'தூண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேத நூல்
பூண்ட நின் பொலம் கொள் தாள்
தீண்ட, இன்று தேறினேன்; 67

'திறத்தின் வந்த தீது எலாம்
அறுத்த உன்னை ஆதனேன்
ஒறுத்த தன்மை, ஊழியாய்!
பொறுத்தி' என்று போயினான். 68

**இராமன் முதலியோர் முனிவர் வாழ் சோலையை அடைதல்**

'தேவு காதல் சீரியோன்
ஆவி போயினான்' என,
பூ உலாவு பூவையோடு
ஏ வலாரும் ஏகினார். 69

கை கொள் கால வேலினார்,
மெய் கொள் வேத மெய்யர் வாழ்
மொய் கொள் சோலை, முன்னினார்;
வைகலானும் வைகினான். 70

64. கரக்க - அறிவு மறைய; 67. தூண்டுதல் - செலுத்துதல்; தொன்மை - பழவினை; 68. ஆதன் - அறிவுகேடன்; 70. வேத மெய்யர் - வேத உருவினராகிய முனிவர்கள்.

# 2  சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்

**சரபங்கனுடைய தவக்குடில் அடைதல்**

குரவம், குவி கோங்கு, அலர் கொம்பினொடும்,
இரவு, அங்கண், உகும் பொழுது எய்தினரால்—
சரவங்கன் இருந்து தவம் கருதும்,
மரவம் கிளர், கோங்கு ஒளிர், வாச வனம். 1

**இந்திரன் வருகை**

செவ் வேலவர் சென்றனர்; சேறல் உறும்
அவ் வேலையின் எய்தினன்—ஆயிரமாம்,
தவ்வாது இரவும் பொலி தாமரையின்
வெவ்வேறு அலர், கண்ணினன், விண்ணவர் கோன். 2

அன்னச் செலவின், படிமேல், அயல் சூழ்
பொன்னின் பொலி வார் அணி பூண் ஒளிமேல்
மின்னின் செறி கற்றை விரிந்தனபோல்,
பின்னிச் சுடரும், பிறழ், பேர் ஒளியான்; 3

வானில் பொலி தோகையர் கண்மலர் வண்
கானில் படர் கண்-களி வண்டொடு, தார்
மேனித் திரு நாரதன் வீணை இசைத்
தேனில் படியும் செவி வண்டு உடையான்; 4

அனையின் துறை ஐம்பதொடு ஐம்பதும், நூல்
வினையின் தொகை வேள்வி நிரப்பிய மா
முனைவன்; முது தேவரில் மூவர் அலார்
புனையும் முடி துன்று பொலங் கழலான்; 5

செம் மா மலராள் நிகர் தேவியொடும்,
மும் மா மத வெண் நிற முன் உயர் தாள்
வெம் மா மிசையான்; விரி வெள்ளி விளங்கு
அம் மா மலை அண்ணலையே அனையான்: 6

தான், இன்று அயல் நின்று ஒளிர் தண் கதிரோன்,
'யான் நின்றது என்?' என்று, ஒளி எஞ்சிட, மா
வான் நின்ற பெரும் கதம் வந்து, உரு ஆய்
மேல் நின்றென, நின்று ஒளிர் வெண் குடையான்; 7

2: 1. கொம்பு - கொம்பு போன்ற சீதை; சரவங்கன் - சரபங்கன், மன் மதன் அம்புகளை வென்றவன்; 2. தவ்வாது - கூம்பாமல்; 5. அனை - அனல், ஈண்டு வேள்வித் தீ.

திசை கட்டிய மால் கரி தெட்ட மதப்
பசை கட்டின, கிட்டின பற்பல போர்
விசை கட்டழி தானவர் விட்டு அகல் பேர்
இசை கட்டிய ஒத்து இவர், சாமரையான்; 8

தேரில் திரி செங் கதிர் தங்குவது ஓர்
ஊர் உற்றது எனப் பொலி ஒண் முடியான்;
போர் வித்தகன்; நேமி பொறுத்தவன் மா
மார்வில் திருவின் பொலி மாலையினுன்; 9

செற்றி, கதிரின் பொலி செம் மணியின்
கற்றைச் சுடர் விட்டு எரி கஞ்சுகியான்;
வெற்றித் திருவின் குளிர் வெண் நகைபோல்
சுற்றிக் கிளரும் சுடர் தோள்வளையான்; 10

பல் ஆயிரம் மா மணி பாடம்உறும்
தொல் ஆர் அணி கால் சுடரின் தொகைதாம்
எல்லாம் உடன் ஆய் எழலால், ஒரு தன்
வில்லால், ஒளிர் மேகம் எனப் பொலிவான்; 11

மாறு உலகம்தனில், மன்றல் பொரும்,
தேன் நாறு, நலம் செறி, தொங்கலினுன்;
மீனோடு கடுத்து உயர் வென்றி அவாம்
வான் நாடியர் கண் எனும் வாள் உடையான்; 12

வெல்வான் நகையால், விசையால், விடு நாள்,
எல் வான் சுடர் மாலை இராவணன்மேல்,
நெல் வாலும் அருத, நிறம் பிறழா,
வல் வாய் மடியா, வயிரப் படையான்;— 13

**சரபங்கன் இந்திரனை வரவேற்று வினவல்**

நின்றான். எதிர் நின்ற நெடுந் தவனும்
சென்றான், எதிர்கொண்டு; சிறப்பு அமையா,
'என்தான் இவண் எய்தியவாறு?' எனலும்,
பொன்றாத பொலங் கழலோன் புகலும்: 14

8. தெட்ட - தெளிவான; 10. செற்றி - பதிக்கப்பட்டு; கஞ்சுகி - கவசம்; 11. பாடம் - ஒளி; 12. நாறுதல் - ஒழுகுதல்; வான் நாடியர் - தேவ மகளிர்; 13. வெல்வான் - வெல்லும்பொருட்டு; வல்வாய் - வலிய நுனி; 14. நெடுந் தவன் - சரபங்கன்.

**இந்திரன் பிரம லோகத்திற்கு அழைத்தலும், முனிவன் மறுத்தலும்**

'''நின்னால் இயல் நீதி நெடுந் தவம், இன்று,
என்னாலும் விளம்ப அரிது'' என்று உணர்வான்
அந் நான்முகன், நின்னை அழைத்தனனால்;
பொன் ஆர் சடை மாதவ! போதுதியால்; 15

'எந்தாய்! உலகு யாவையும் எவ் உயிரும்
தந்தான் உறையும் நெறி தந்தனனால்;
நந்தாத பெருந் தவ! நாடுஅது நீ
வந்தாய்எனின், நின் எதிரே வருவான்; 16

'எல்லா உலகிற்கும் உயர்ந்தமை, யான்
சொல்லாவகை, நீ உணர் தொன்மையையால்;
நல்லாளுடனே நட, நீ' எனலும்,
'அல்லேன்' என, வால் அறிவான் அறைவான்: 17

'சொல் பொங்கு பெரும் புகழோய்! தொழில் மாய்
சிற்பங்களின் வீவன சேர்குவெனோ?
அற்பம் கருதேன்; என் அருந் தவமோ
கற்பம் பல சென்றது; காணுதியால்; 18

'சொற்றும் தரம் அன்று இது; சூழ் கழலாய்!
பெற்றும், பெறுகில்லது ஓர் பெற்றியதே;
மற்று என் பல? நீ இவண் வந்ததனால்,
முற்றும் பகல்தானும் முடிந்துளதால்; 19

'சிறு காலை இலா, நிலையோ திரியா,
குறுகா, நெடுகா, குணம் வேறுபடா,
உறு கால் கிளர் பூதம் எலாம் உகினும்
மறுகா, நெறி எய்துவென்;—வான் உடையாய்!' 20

**இந்திரன் வந்திருத்தலை இராமன் உய்த்து உணர்தல்**

என்று, இன்ன விளம்பிடும் எல்லையின்வாய்,
வன் திண் சிலை வீரரும் வந்து அணுகா,
ஒன்றும் கிளர் ஓதையினால் உணர்வார்,
நின்று, 'என்னைகொல் இன்னது?' எனா நினைவார்: 21

16. உறையும் நெறி - வாழும் இடம்; 19. பெறுகில்லது - பெறாதது; முற்றும் பகல் - தவம் முற்றுப்பெறும் காலம்; 20. நெறி - பதவி, இடமும் ஆம்.

'கொம்பு ஒத்தன நால் ஒளிர் கோள் வயிரக்
கம்பக் கரி நின்றது கண்டனமால்;
இம்பர், தலை மா தவர்பால், இவன் ஆம்
உம்பர்க்கு அரசு எய்தினன்' என்று உணரா, 22

மானே அனையாளொடு மைந்தனை அப்
பூ நேர் பொழிலின் புறமே நிறுவா,
ஆன்ஏறு என, ஆள் அரிஏறு இது என,
தானே அவ் அகன் பொழில் சாருதலும், 23

**இந்திரன் இராமனைத் தொழுது துதித்தல்**

கண்தாம் அவை ஆயிரமும் கதுவ,
கண் தாமரைபோல் கரு ஞாயிறு எனக்
கண்டான், இமையோர் இறை—காசினியின்-
கண்தான், அரு நான்மறையின் கனியை. 24

காணா, மனம் நொந்து கவன்றனனால்,
ஆண் நாதனை, அந்தணர் நாயகனை,
நாள் நாளும் வணங்கிய நன் முடியால்,
தூண் ஆகிய தோள்கொடு, அவன்- தொழுவான், 25

துவசம் ஆர் தொல் அமருள், துன்னாரைச் செற்றும்,
சுருதிப் பெருங் கடலின் சொல் பொருள் கற்பித்தும்,
திவசம் ஆர் நல் அறத்தின் செந்நெறியில் உய்த்தும்,
திரு அளித்தும், வீடு அளித்தும், சிங்காமைத் தங்கள்
கவசம் ஆய், ஆர் உயிர் ஆய், கண் ஆய், மெய்த் தவம் ஆய்,
கடை இலா ஞானம் ஆய், காப்பானைக் காணா,
அவசம் ஆய், சிந்தை அழிந்து, அயலே நின்றான்,
அறியாதான் போல, அறிந்த எலாம் சொல்வான்: 26

'தோய்ந்தும், பொருள் அனைத்தும் தோயாது நின்ற
சுடரே! தொடக்கு அறுத்தோர் சுற்றமே! பற்றி
நீந்த அரிய நெடுங் கருணைக்கு எல்லாம்
நிலயமே! வேதம் நெறி முறையின் நேடி
ஆய்ந்த உணர்வின் உணர்வே! பகையால்
அலைப்புண்டு அடியேம் அடி போற்ற, அந் நாள்
ஈந்த வரம் உதவ எய்தினையே? எந்தாய்!
இரு நிலத்தவோ, நின் இணை அடித் தாமரைதாம்? 27

22. கம்பம் - கட்டுத் தறி; 23. மைந்தன் - இளைஞன், இலக்குவன்; 26. திவசம் ஆர் நல் அறம் - நாள்தோறும் கொள்ளுதற்குரிய நித்திய கன்மம் முதலியவை; சிங்காமை - அழியாதவாறு.

'மேவாதவர் இல்லை, மேவினரும் இல்லை;
　வெளியோடு இருள் இல்லை, மேல் கீழும் இல்லை;
மூவாதமை இல்லை, மூத்தமையும் இல்லை;
　முதல் இடையோடு ஈறு இல்லை, முன்னொடு பின் இல்லை;
தேவா! இங்கு இவ்வோ நின் தொன்று நிலை என்றால்,
　சிலை ஏந்தி வந்து, எம்மைச் சேவடிகள் நோவ,
காவாது ஒழியின், பழி பெரிதோ? அன்றே;
　கருங் கடலில் கண்வளராய்! கைம்மாறும் உண்டோ? 28

'நாழி, நவை தீர் உலகு எலாம் ஆக,
　நளினத்து நீ தந்த நான்முகனார்தாமே
ஊழி பலபலவும் நின்று அளந்தால், என்றும்
　உலவாப் பெருங் குணத்து எம் உத்தமனே! மேல்நாள்,
தாழி தரை ஆக, தண் தயிர் நீர் ஆக,
　தட வரையே மத்து ஆக, தாமரைக் கை நோவ
ஆழி கடைந்து, அமுதம் எங்களுக்கே ஈந்தாய்;
　—அவுணர்கள்தாம் நின் அடிமை அல்லாமை உண்டோ? 29

'ஒன்று ஆகி, மூலத்து உருவம் பல ஆகி,
　உணர்வும் உயிரும் பிறிது ஆகி, ஊழி
சென்று ஆசறும் காலத்து அந் நிலையது ஆகி,
　திறத்து உலகம்தான் ஆகி, செஞ்செவே நின்ற
நன்று ஆய ஞானத் தனிக் கொழுந்தே! எங்கள்
　நவை தீர்க்கும் நாயகமே! நல் வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி; அயலாரைக் காய்தி;
　நிலை இல்லாத் தீவினையும் நீ தந்தது அன்றே? 30

'வல்லை வரம்பு இல்லாத மாய வினைதன்னால்
　மயங்கினரோடு எய்தி, மதி மயங்கி, மேல்நாள்,
''அல்லை இறையவன் நீ ஆதி'' என, பேதுற்று
　அலமருவேம்; முன்னை அறப் பயன் உண்டாக,
''எல்லை வலயங்கள் நின்னுழை'' என்று, அந் நாள்
　எரியோனைத் தீண்டி, எழுவர் என நின்ற
தொல்லை முதல் முனிவர், சூளுற்ற போதே,
　தொகை நின்ற ஐயம் துடைத்திலையோ?—எந்தாய்!' 31

29. நாழி - முகத்தல் அளவைக் கருவி; உலவா - அளந்து முடிவுகட்ட இயலாத; 30. ஆசறும் காலம் - முடியுங் காலம்; திறத்து உலகம் - பலவகைப் பட்ட உலகம்.

இன்னன பல நினைந்து, ஏத்தினன் இயம்பா,
துன்னுதல் இடை உளது என நனி துணிவான்,
தன் நிகர் முனிவனை, 'தர விடை' என்னா,
பொன் ஒளிர் நெடு முடிப் புரந்தரன் போனான். 32

இராமன் முதலியோர் சரபங்கன் தவக்குடிலில் தங்குதல்

போனவன் அக நிலை புலமையின் உணர்வான்
வானவர் தலைவனை வரவு எதிர்கொண்டான்;
ஆனவன் அடி தொழ, அருள் வர, அழுதான்
தானுடை இட வகை தழுவினன், நுழைவான். 33

'ஏழையும் இளவலும் வருக' என, இனிதா
வாழிய அவரொடும் வள்ளலும் மகிழ்வால்,
ஊழியின் முதல் முனி உறையுளை அணுக,
ஆழியில் அறிதுயிலவன் என மகிழ்வான். 34

அவ் வயின், அழகனும் வைகினன்—அறிஞன்
செவ்விய அற உரை செவிவயின் உதவ,
நவ்வியின் விழியவளொடு, நனி இருளைக்
கவ்விய நிசி ஒரு கடையுறும் அளவின். 35

விலகிடு நிழலினன், வெயில் விரி அயில் வாள்
இலகிடு சுடரவன், இசையன திசை தோய்,
அலகிடல் அரிய, தன் அவிர் கர நிரையால்,
உலகு இடு நிறை இருள் உறையினை உரிவான். 36

சரபங்கன் தீப் புக்கு வீடு பெறல்

ஆயிடை, அறிஞனும், அவன் எதிர் அழுவத்
தீயிடை நுழைவது ஓர் தெளிவினை உடையான்,
'நீ விடை தருக' என நிறுவினன், நெறியால்,
காய் எரி வரன் முறை கடிதினில் இடுவான். 37

வரி சிலை உழவனும், மறை உழவனை, 'நீ
புரி தொழில் எனை? அது புகலுதி' எனலும்,
'திருமகள் தலைவ! செய் திருவினை உற, யான்
எரி புக நினைகுவென்; அருள்' என, இறைவன்: 38

33. தானுடை இட வகை - தான் உடைமையாகக் கருதுகின்ற பரமபத மாகிய வகுத்த இடம்; 38. திருவினை உற - வீடு பேறு என்னும் செல்வத்தை அடைய.

‘யான் வரும் அமைதியின் இது செயல் எவனோ?—
மான் வரு தனி உரி மார்பினை!’ எனலும்,
மீன் வரு கொடியவன் விறல் அடும் மறவோன்
ஊன் விடும் உவகையின் உரை நனி புரிவான்: 39

‘ஆயிர முகம் உள தவம் அயர்குவென், யான்;
“நீ இவண் வருகுதி” எனும் நினைவு உடையேன்;
போயின இரு வினை; புகலுறு விதியால்
மேயினை; இனி ஒரு வினை இலை;—விறலோய்! 40

‘இந்திரன் அருளினன் இறுதி செய் பகலா
வந்தனன், “மருவுதி மலர் அயன் உலகம்;
தந்தனென்” என, ‘அது சாரலென்,—உரவோய்!—
அந்தம் இல் உயர் பதம் அடைதலை முயல்வேன். 41

‘ஆதலின், இது பெற அருள்’ என உரையா,
காதலி அவளொடு கதழ் எரி முழுகி,
போதலை மருவினன், ஒரு நெறி—புகலா
வேதமும் அறிவு அரு மிகு பொருள் உணர்வோன். 42

தேவரும், முனிவரும், உறுவது தெரிவோர்,
மா வரும் நறு விரை மலர் அயன் முதலோர்,
ஏவரும், அறிவினில் இரு வினை ஒருவி,
போவது கருதும் அவ் அரு நெறி புக்கான். 43

அண்டமும் அகிலமும் அறிவு அரு நெறியால்
உண்டவன் ஒரு பெயர் உணர்குநர் உறு பேறு
எண் தவ நெடிதுஎனின், இறுதியில் அவனைக்
கண்டவர் உறு பொருள் கருதுவது எளிதோ? 44

## 3 அகத்தியப் படலம்

**இராமன் முதலியோர் சரபங்கன் தவக்குடிலினின்று போதல்**

அனையவன் இறுதியின் அமைவு நோக்கலின்,
இனியவர், இன்னலின் இரங்கும் நெஞ்சினர்,
குனி வரு திண் சிலைக் குமரர், கொம்பொடும்,
புனிதனது உறையுள்நின்று அரிதின் போயினர். 1

44. எண் தவ நெடிது - நினைப்பிற்கும் எட்டாது மிகவும் பெரியது.

மலைகளும், மரங்களும், மணிக் கற்பாறையும்,
அலை புனல் நதிகளும், அருவிச் சாரலும்,
இலை செறி பழுவமும், இனிய சூழலும்,
நிலை மிகு தடங்களும், இனிது நீங்கினர். 2

**இராமன் தண்டக வனத்திற்கு வர, தவமுனிவரர் மகிழ்தல்**

பண்டைய அயன் தரு பாலகில்லரும்,
முண்டரும், மோனரும், முதலினோர்கள், அத்
தண்டக வனத்து உறை தவத்துளோர் எலாம்
கண்டனர் இராமனை, களிக்கும் சிந்தையார். 3

கனல் வரு கடுஞ் சினத்து அரக்கர் காய, ஓர்
வினை பிறிது இன்மையின், வெதும்புகின்றனர்;
அனல் வரு கானகத்து, அமுது அளாவிய
புனல் வர, உயிர் வரும் உலவை போல்கின்றார். 4

ஆய் வரும் பெரு வலி அரக்கர் நாமமே
வாய் வெரீஇ அலமரும் மறுக்கம் நீங்கினர்;
தீ வரு வனத்திடை இட்டுத் தீர்ந்தது ஓர்
தாய் வர, நோக்கிய கன்றின் தன்மையார். 5

கரக்க அருங் கடுந் தொழில் அரக்கர் காய்தலின்,
பொரற்கு இடம் இன்மையின் புழுங்கிச் சோருநர்,
அரக்கர் என் கடலிடை ஆழ்கின்றார், ஒரு
மரக்கலம் பெற்றென, மறுக்கம் நீங்கினர். 6

தெரிஞ்சுற நோக்கினர்—செய்த செய் தவம்
அருஞ் சிறப்பு உதவ, நல் அறிவு கைதர,
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந் துயர்ப்
பெருஞ் சிறை வீடு பெற்றனைய பெற்றியார். 7

வேண்டின வேண்டினர்க்கு அளிக்கும் மெய்த் தவம்
பூண்டுளர் ஆயினும், பொறையின் ஆற்றலால்,
மூண்டு எழு வெகுளியை முதலின் நீக்கினர்;
ஆண்டு உறை அரக்கரால் அலைப்புண்டார்அரோ 8

3: 2. நிலை மிகு தடம் - ஆழம் மிகுந்த தடாகங்கள்; 3. பாலகில்லர் - வாலகில்யர்; பிரமன் உடம்பிலுள்ள உரோமத்தில் தோன்றியவர்கள்; முண்டர் - மழித்த தலையையுடையவர்கள்; 4. வினை - உபாயம்; உலவை - உலர்ந்த மரம்; 5. ஆய் வரல் - பெருகுதல்; கன்றின் தன்மையார் - கன்றின் தன்மை அச்சம் நீங்கி மகிழ்தல், அத்தன்மையினையுடையவர்கள்.

**இராமனை முனிவரர் வாழ்த்தி, தம் அல்லலைக் கூறல்**

எழுந்தனர், எய்தினர், இருண்ட மேகத்தின்
கொழுந்து என நின்ற அக் குரிசில் வீரனை;
பொழிந்து எழு காதலின் பொருந்தினர், அவன்
தொழும்தொறும் தொழும்தொறும், ஆசி சொல்லுவார். 9

இனியது ஓர் சாலை கொண்டு ஏகி, 'இவ் வயின்
நனி உறை' என்று, அவற்கு அமைய நல்கி, தாம்
தனி இடம் சார்ந்தனர்; தங்கி, மாதவர்
அனைவரும் எய்தினர், அல்லல் சொல்லுவான். 10

எய்திய முனிவரை இறைஞ்சி, ஏத்து உவந்து,
ஐயனும் இருந்தனன்; 'அருள் என்? என்றலும்,
'வையகம் காவலன் மதலை! வந்தது ஓர்
வெய்ய வெங் கொடுந் தொழில் விளைவு கேள்' என,  11

'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர் என்று உளர் சிலர், அறத்தின் நீங்கினர்,
நெருக்கவும், யாம் படர் நெறி அலா நெறி
துரக்கவும், அருந் தவத் துறையுள் நீங்கினேம். 12

'வல்லியம் பல திரி வனத்து மான் என,
எல்லியும் பகலும், நொந்து இரங்கி ஆற்றலெம்;
சொல்லிய அற நெறித் துறையும் நீங்கினெம்;
வில் இயல் மொய்ம்பினய்! வீடு காண்டுமோ? 13

'மா தவத்து ஒழுகலெம்; மறைகள் யாவையும்
ஓதலெம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம்;
மூதெரி வளர்க்கிலெம்; முறையின் நீங்கினேம்;
ஆதலின், அந்தணரேயும் ஆகிலேம்! 14

'இந்திரன் எனின், அவன் அரக்கர் ஏயின
சிந்தையில், சென்னியில், கொள்ளும் செய்கையான்;
எந்தை! மற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?
வந்தனை, யாம் செய்த தவத்தின் மாட்சியால். 15

10. சாலை - பன்னசாலை; 11. ஏத்து - வாழ்த்துதல், துதித்தல்; 12. துரக்கவும் - செலுத்துவதனாலும்; தவத் துறையுள் - தவத்தினது வழியினின்றும்.

'உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ! போக்கிலா
இருளுடை வைகலெம்; இரவி தோன்றினுய்;
அருளுடை வீர! நின் அபயம் யாம்' என்ருர். 16

**இராமன் அபயம் அளித்தல்**

'புகல் புகுந்திலரேல்; புறத்து அண்டத்தின்
அகல்வரேனும், என் அம்பொடு வீழ்வரால்;
தகவு இல் துன்பம் தவிருதிர் நீர்' என,
பகலவன் குல மைந்தன் பணிக்கின்ருன். 17

'வேந்தன் வியவும், யாய் துயர் மேவவும்,
ஏந்தல் எம்பி வருந்தவும், என் நகர்
மாந்தர் வன் துயர் கூரவும், யான் வனம்
போந்தது, என்னுடைப் புண்ணியத்தால்' என்ருன். 18

'அறம் தவா நெறி அந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலி தொலையேன்எனின்,
இறந்துபோகினும் நன்று; இது அல்லது,
பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ? 19

'நிவந்த வேதியர் நீவிரும், தீயவர்
கவந்தபந்தக் களிநடம் கண்டிட,
அமைந்த வில்லும் அருங் கணைத் தூணியும்
சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால். 20

'ஆவுக்கு ஆயினும், அந்தணர்க்கு ஆயினும்,
யாவர்க்கு ஆயினும், எளியவர்க்கு ஆயினும்,
சாவப்பெற்றவரே, தகை வான் உறை
தேவர்க்கும் தொழும் தேவர்கள் ஆகுவார்.† 21

'சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்,
ஊர் அறுத்த ஒருவனும், ஓம்பினும்,
ஆர் அறத்தினொடு அன்றி நின்ருர் அவர்
வேர் அறுப்பென்; வெருவன்மின் நீர்' என்ருன். 22

16. இருள் - துன்பமாகிய இருள்; 17. புகல் புகுதல் - அடைக்கலம் புகுதல்; 18. யாய் - தாய், ஈண்டுக் கோசலை; 20. நிவந்த - உயர்ந்த; கவந்தம் - தலையற்ற உடற்குறைகள்; பந்தம் - தொகுதி; 22. சூர் - சூரபன்மா; ஊர் - திரிபுரம்.

உரைத்த வாசகம் கேட்டு உவந்து ஓங்கிட,
இரைத்த காதலர், ஏகிய இன்னலர்,
திரித்த கோலினர், தே மறை பாடினர்;
நிருத்தம் ஆடினர்; நின்று விளம்புவார்: 23

'தோன்றல்! நீ முனியின், புவனத் தொகை
மூன்று போல்வன முப்பது கோடி வந்து
ஏன்ற போதும், எதிர் அல; என்றலின்
சான்றலோ, எம் தவப் பெரு ஞானமே. 24

'அன்னது ஆகலின், ஏயின ஆண்டு எலாம்,
இன்னல் காத்து இங்கு இனிது உறைவாய்' எனச்
சொன்ன மா தவர் பாதம் தொழுது, உயர்
மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினன். 25

இராமன் பத்து ஆண்டுகள் தண்டக வனத்தில் தங்கியிருத்தல்

ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு, அவண்,
மைந்தர், தீது இலர் வைகினர்; மா தவர்
சிந்தை எண்ணி, 'அகத்தியற் சேர்க' என,
இந்து-நன்னுதல் தன்னொடும் ஏகினர். 26

அகத்தியன்பால் செல்லும் இராமனைச் சுதீக்கணன் உபசரித்தல்

விடரகங்களும், வேய் செறி கானமும்,
படரும் சில் நெறி பைப்பய நீங்கினர்;
சுடரும் மேனிச் சுதீக்கணன் என்னும் அவ்
இடர் இலான் உறை சோலை சென்று, எய்தினர். 27

அருக்கன் அன்ன முனிவனை அவ் வழி,
செருக்கு இல் சிந்தையர், சேவடி தாழ்தலும்,
'இருக்க ஈண்டு' என்று, இனியன கூறினன்;
மருக் கொள் சோலையில் மைந்தரும் வைகினர். 28

வைகும் வைகலின், மா தவன், மைந்தன்பால்
செய்கை யாவையும் செய்து, 'இவண், செல்வ! நீ
எய்த யான் செய்தது எத் தவம்?' என்றனன்;
ஐயனும், அவற்கு அன்பினன் கூறுவான்: 29

23. இரைத்த காதலர் - பொங்கி எழுந்த அன்பினர்; 26. இந்து - பிறைச்சந்திரன்; 27. விடரகம் - மலை; சுதீக்கணன் - கடுந்தவமுடையவன்; 28. அருக்கன் - சூரியன்; மரு - நறுமணம்; 29. செய்கை - உபசாரங்கள்.

'சொன்ன நான்முகன்தன் வழித் தோன்றினர்
முன்னையோருள், உயர் தவம் முற்றினர்
உன்னின் யார் உளர்? உன் அருள் எய்திய
என்னின் யார் உளர், இற் பிறந்தார்?' என்றான். 30

உவமை நீங்கிய தோன்றல் உரைக்கு, எதிர்,
நவமை நீங்கிய நல் தவன் சொல்லுவான்:
'அவம் இலா விருந்து ஆகி, என்னால் அமை
தவம் எலாம் கொளத் தக்கனையால்' என்றான். 31

மறைவலான் எதிர், வள்ளலும் கூறுவான்:
'இறைவ! நின் அருள் எத் தவத்திற்கு எளிது?
அறைவது ஈண்டு ஒன்று; அகத்தியற் காண்பது ஓர்
குறை கிடந்தது, இனி' எனக் கூறினான். 32

'நல்லதே நினைந்தாய்; அது, நானும் முன்
சொல்லுவான் துணிகின்றது; தோன்றல்! நீ
செல்தி ஆண்டு; அவற் சேருதி; சேர்ந்தபின்,
இல்லை, நின்வயின் எய்தகில்லாதவே. 33

'அன்றியும் நின் வரவினை ஆதரித்து,
இன்றுகாறும் நின்று ஏமுறுமால்; அவற்
சென்று சேருதி; சேருதல், செவ்வியோய்!
நன்று தேவர்க்கும்; யாவர்க்கும் நன்று' என, 34

**இராமன் அகத்தியனைச் சேர்தல்**

வழியும் கூறி, வரம்பு அகல் ஆசிகள்
மொழியும் மா தவன் மொய்ம் மலர்த் தாள் தொழா,
பிழியும் தேனின் பிறங்கு அருவித் திரள்
பொழியும் சோலை விரைவினில் போயினார். 35

ஆண்தகையர் அவ் வயின் அடைந்தமை அறிந்தான்;
ஈண்டு, உவகை வேலை துணை ஏழ் உலகம் எய்த,
மாண்ட வரதன் சரண் வணங்க, எதிர் வந்தான்—
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான். 36

31. நவமை நீங்கிய தவன் - புதுமை நீங்கிய (பழைய) தவத்தையுடையவன்; அவம் இலா - வீண் போகாத; தக்கனை - தகுந்தவனாவாய்; 32. குறை - செய்ய வேண்டிய செயல்; 34. ஏமுறும் - மகிழ்ச்சியடையும்.

அகத்தியன் பெருமை

பண்டு, 'அவுணர் மூழ்கினர்; படார்கள்' என வானோர்,
'எண் தவ! எமக்கு அருள்க' எனக் குறையிரப்பக்
கண்டு, ஒரு கை வாரினன் முகந்து, கடல் எல்லாம்
உண்டு, அவர்கள் பின், 'உமிழ்க' என்றலும், உமிழ்ந்தான். 37

தூய கடல் நீர் அடிசில் உண்டு, அது துரந்தான்;
ஆய அதனுல் அமரும் மெய் உடையன் அன்னுன்;
மாய-வினை வாள் அவுணன் வாதவிதன் வன்மைக்
காயம் இனிது உண்டு, உலகின் ஆர் இடர் களைந்தான். 38

யோகமுறு பேர் உயிர்கள்தாம், 'உலைவுருமல்
ஏகு நெறி யாது?' என, மிதித்து அடியின் ஏறி,
மேக நெடு மாலை தவழ் விந்தம் எனும் விண் தோய்
நாகம்அது நாகம் உற, நாகம் என நின்ருன். 39

மூசு அரவு சூடு முதலோன், உரையின், 'மூவா
மாசு இல் தவ! ஏகு' என, வடாது திசை மேல்நாள்
நீசம் உற, வானின் நெடு மா மலயம் நேரா,
ஈசன் நிகர் ஆய், உலகு சீர் பெற இருந்தான். 40

உழக்கும் மறை நாலினும், உயர்ந்து உலகம் ஓதும்
வழக்கினும், மதிக் கவியினும், மரபின் நாடி,—
நிழல் பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங் கண்
தழல் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்—தந்தான். 41

அகத்தியன், இராமனை வரவேற்று, அளவளாவல்

' ''விண்ணினில், நிலத்தினில், விகற்ப உலகில், பேர்
எண்ணினில், இருக்கினில், இருக்கும்'' என யாரும்
உள் நினை கருத்தினை, உறப் பெறுவெனுல், என்
கண்ணினில்' எனக் கொடு களிப்புறு மனத்தான். 42

'இரைத்த மறை நாலினெடு இயைந்த பிற யாவும்
நிரைத்த நெடு ஞானம் நிமிர் கல்லில் நெடு நாள் இட்டு
அரைத்தும், அயனும் அறியாத பொருள் நேர் நின்று
உரைக்கு உதவுமால்' எனும் உணர்ச்சியின் உவப்பான். 43

39. யோகமுறு உயிர்கள் - யோக நெறியில் நின்ற முனிவர்கள்; நாகம் - மலை, பாதாளம், யானை; 40. மூசுதல் - மொய்த்தல்; நீசம் உறல் - தாழ்ச்சி உறல்; நேரா - நேர்ந்து, சேர்ந்து; 41. உழக்கும் மறை - வருந்திப் பயிலுதற்குரிய வேதம்; 42. விகற்ப உலகு - வேருய் உள்ள உலகங்கள்; பேர் எண் - பேரறிவு.

'உய்ந்தனர் இமைப்பிலர்; உயிர்த்தனர் தவத்தோர்;
அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள்; ஆறு
வெந் திறல் அரக்கர் விட வேர் முதல் அறுப்பான்
வந்தனன் மருத்துவன்' என, தனி வலிப்பான். 44

ஏனை உயிர் ஆம் உலவை யாவும் இடை வேவித்து
ஊன் நுகர் அரக்கர் உருமைச் சுடு சினத்தின்
கான அனலைக் கடிது அவித்து, உலகு அளிப்பான்,
வான மழை வந்தது' என, முந்துறு மனத்தான். 45

கண்டனன் இராமனை வர; கருணை கூர,
புண்டரிக வாள் நயனம் நீர் பொழிய, நின்றான்—
எண் திசையும் ஏழ் உலகும் எவ் உயிரும் உய்ய,
குண்டிகையினில், பொரு இல், காவிரி கொணர்ந்தான். 46

நின்றவனை, வந்த நெடியோன் அடி பணிந்தான்;
அன்று, அவனும் அன்பொடு தழீஇ, அழுத கண்ணால்,
'நன்று வரவு' என்று, பல நல் உரை பகர்ந்தான்—
என்றும் உள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான். 47

வேதியர்கள் வேத மொழி வேறு பல கூற,
காதல் மிக நின்று, எழில் கமண்டலுவின் நல் நீர்
மா தவர்கள் வீசி, நெடு மா மலர்கள் தூவ,
போது மணம் நாறு குளிர் சோலை கொடு புக்கான். 48

பொருந்த, அமலன் பொழிலகத்து இனிது புக்கான்;
விருந்து அவன் அமைத்தபின், விரும்பினன்; 'விரும்பி,
இருந் தவம் இழைத்த எனது இல்லிடையில் வந்து, என்
அருந் தவம் முடித்தனை; அருட்கு அரச!' என்றான். 49

என்ற முனியைத் தொழுது, இராமன், 'இமையோரும்,
நின்ற தவம் முற்றும் நெடியோரின் நெடியோரும்,
உன்தன் அருள் பெற்றிலர்கள்; உன் அருள் சுமந்தேன்;
வென்றனென் அனைத்து உலகும்; மேல் இனி என்?' என்றான்.

' "தண்டக வனத்து உறைதி" என்று உரைதரக் கொண்டு,
உண்டு வரவு இத் திசை என, பெரிது உவந்தேன்;
எண் தகு குணத்தினை!' எனக் கொடு, உயர் சென்னித்
துண்ட மதி வைத்தவனை ஒத்த முனி சொல்லும்: 51

44. இமைப்பிலர் - தேவர்கள்; 46. குண்டிகை - கமண்டலம்;
51. உரைதர - சொல்ல.

'ஈண்டு உறைதி, ஐய! இனி, இவ் வயின் இருந்தால்,
வேண்டியன மா தவம் விரும்பினை முடிப்பாய்;
தூண்டு சின வாள் நிருதர் தோன்றியுளர் என்றால்,
மாண்டு உக மலைந்து, எமர் மனத் துயர் துடைப்பாய்; 52

'வாழும் மறை; வாழும் மனு நீதி; அறம் வாழும்;
தாழும் இமையோர் உயர்வர்; தானவர்கள் தாழ்வார்;
ஆழி உழவன் புதல்வ! ஐயம் இலை; மெய்யே;
ஏழ் உலகும் வாழும்; இனி, இங்கு உறைதி' என்றான். 53

'செருக்கு அடை அரக்கர் புரி தீமை சிதைவு எய்தித்
தருக்கு அழிதர, கடிது கொல்வது சமைந்தேன்;
வருக்க மறையோய்! அவர் வரும் திசையில் முந்துற்று
இருக்கை நலம்; நிற்கு அருள் என்?' என்றனன் இராமன். 54

இராமனுக்கு அகத்தியன் படைக்கலங்கள் வழங்குதல்

'விழுமியது சொற்றனை; இவ் வில் இது இவண், மேல்நாள்
முழுமுதல்வன் வைத்துளது; மூஉலகும், யானும்,
வழிபட இருப்பது; இதுதன்னை வடி வாளிக்
குழு, வழு இல் புட்டிலொடு கோடி' என, நல்கி, 55

இப் புவனம் முற்றும் ஒரு தட்டினிடை இட்டால்
ஒப்பு வரவிற்று என உரைப்ப அரிய வாளும்,
வெப்பு உருவு பெற்ற அரன் மேரு வரை வில்லாய்
முப்புரம் எரித்த தனி மொய்க் கணையும், நல்கா, 56

பஞ்சவடியின் சிறப்பு

'ஓங்கும் மரன் ஓங்கி, மலை ஓங்கி, மணல் ஓங்கி,
பூங் குலை குலாவு குளிர் சோலை புடை விம்மி,
தூங்கு திரை ஆறு தவழ் சூழலது ஓர் குன்றின்
பாங்கர் உளதால், உறையுள் பஞ்சவடி—மஞ்ச! 57

'கன்னி இள வாழை கனி ஈவ; கதிர் வாலின்
செந்நெல் உள; தேன் ஒழுகு போதும் உள; தெய்வப்
பொன்னி எனல் ஆய புனல் ஆறும் உள; போதா,
அன்னம் உள, பொன் இவளொடு அன்பின் விளையாட. 58

54. தருக்கு - வலிமை, களிப்பும் ஆம்; வருக்கம் - தொகுதி; இருக்கை - இருத்தல்; 56. மொய் - வலிமை; 57. மஞ்ச - மைந்த; 58. கன்னி - இளமை; பொன்னி - காவிரி; போதா - பெருநாரை.

இராமன், அகத்தியனிடம் விடைபெற்றுப் புறப்படுதல்

'ஏகி, இனி அவ் வயின் இருந்து உறைமின்' என்றான்;
மேக நிற வண்ணனும் வணங்கி, விடை கொண்டான்;
பாகு அனைய சொல்லியொடு தம்பி பரிவின் பின்
போக, முனி சிந்தை தொடர, கடிது போனான். 59

## 4 சடாயு காண் படலம்

இராமன் முதலியோர் சடாயுவைக் காணுதல்

நடந்தனர் காவதம் பலவும்; நல் நதி
கிடந்தன, நின்றன; கிரிகள் கேண்மையின்
தொடர்ந்தன, துவன்றின; சூழல் யாவையும்
கடந்தனர்; கண்டனர் கழுகின் வேந்தையே. 1

உருக்கிய சுவணம் ஒத்து, உதயத்து உச்சி சேர்
அருக்கன் இவ் அகல் இடத்து அலங்கு திக்கு எல்லாம்
தெரிப்புறு செறி சுடர்ச் சிகையினால் சிறை
விரித்து இருந்தனன் என, விளங்குவான் தனை, 2

முந்து ஒரு கரு மலை முகட்டு முன்றிலின்
சந்திரன் ஒளியொடு தழுவச் சார்த்திய,
அந்தம் இல் கனை கடல் அமரர் நாட்டிய,
மந்தரகிரி என வயங்குவான் தனை, 3

மால் நிற விசும்பு ஏழில் மறைய, தன் மணிக்
கால் நிறச் சேயொளி கதுவ, கண் அகல்
நீல் நிற வரையினில் பவள நீள் கொடி
போல் நிறம் பொலிந்தென, பொலிகின்றான் தனை. 4

தூய்மையன், இருங் கலை துணிந்த கேள்வியன்,
வாய்மையன், மறு இலன், மதியின் கூர்மையன்,
ஆய்மையின் மந்திரத்து அறிஞன் ஆம் எனச்
செய்மையின் நோக்குறு சிறு கணான் தனை, 5

வீட்டி வாள் அவுணரை, விருந்து கூற்றினை
ஊட்டி, வீழ் மிச்சில் தான் உண்டு, நாள்தொறும்
தீட்டி, மேல் இந்திரன் சிறு கண் யானையின்
தோட்டிபோல் தேய்ந்து ஒளிர் துண்டத்தான் தனை; 6

4: 2. அலங்குதல் - பொருந்துதல்; 3. முந்து - முன், இடமுன்; 4. மால் நிறம் - நீல நிறம்; 5. ஆய்மை - ஆராய்ச்சி; 6. தோட்டி - அங்குசம்.

கோள் இரு-நாலினேடு ஒன்று கூடின
ஆளுறு திகிரிபோல் ஆரத்தான்தனை,
நீளுறு மேருவின் நெற்றி முற்றிய
வாள் இரவியின் பொலி மௌலியான்தனை, 7

சொல் பங்கம் உற நிமிர் இசையின் சும்மையை,
அல் பங்கம் உற வரும் அருணன் செம்மலை,
சிற்பம் கொள் பகல் எனக் கடிது சென்று தீர்
கற்பங்கள் எனைப் பல கண்டுளான்தனை, 8

ஓங்கு உயர் நெடு வரை ஒன்றில் நின்று, அது
தாங்கலது இரு நிலம் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய வலியினில் இருந்த வீரனை—
ஆங்கு அவர் அணுகினர், அயிர்க்கும் சிந்தையார். 9

இராம-இலக்குவரும், சடாயுவும் ஒருவரை ஒருவர் ஐயுறல்

'இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினன்
அறிவு இலி அரக்கன் ஆம்; அல்லனும் எனின்,
எறுழ் வலிக் கலுழனே?' என்ன உன்னி, அச்
செறி கழல் வீரரும், செயிர்த்து நோக்கினர். 10

வனை கழல் வரி சிலை மதுகை மைந்தரை,
அனையவன்தானும் கண்டு, அயிர்த்து நோக்கினன்—
'வினை அறு நோன்பினர் அல்லர்; வில்லினர்;
புனை சடை முடியினர்; புலவரோ?' என. 11

'புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தரம் நோக்குவென்; நேமியானும், அவ்
வரம் தரும் இறைவனும், மழுவலாளனும்,
கரந்திலர் என்னை; யான் என்றும் காண்பெனல். 12

'காமன் என்பவனையும், கண்ணின் நோக்கினேன்;
தாமரைச் செங் கண் இத் தடக் கை வீரர்கள்
பூ மரு பொலங் கழற் பொடியினேடும், ஒப்பு
ஆம் என அறிகிலென்; ஆர்கொலாம் இவர்? 13

7. ஆளுறு திகிரி - ஆளுதலையுடைய துருவச் சக்கரம், துருவன் தான் நடுவே இருந்து சுற்றிக்கொண்டு காற்றின் வடிவமான கயிறுகளினலே கட்டப்பட்ட ஒன்பது கோள்களையும் சுற்றித் திருப்புகின்ற சக்கரம்; 8. சும்மை - மிகுதி; சிற்பம் - விரைந்து கழியும் சிறுமை; 9. தாங்கலது - தாங்க இயலாது; 11. புலவர் - தேவர்; 13. கழற் பொடி - பாத தூளி.

'உலகு ஒரு மூன்றும் தம் உடைமை ஆக்குறும்
அலகு அறும் இலக்கணம் அமைந்த மெய்யினர்;
மலர்மகட்கு உவமையாளோடும் வந்த இச்
சிலை வலி வீரரைத் தெரிகிலேன்' என, 14

'கரு மலை செம் மலை அனைய காட்சியர்;
திரு மகிழ் மார்பினர்; செங் கண் வீரர்தாம்,
அருமை செய் குணத்தின் என் துணைவன் ஆழியான்
ஒருவனை, இருவரும் ஒத்துளார்அரோ.' 15

'நீவிர் யார்?' எனச் சடாயு வினவுதல்

எனப் பல நினைப்புஇனம் மனத்துள் எண்ணுவான்,
சினப் படை வீரர்மேல் செல்லும் அன்பினன்,
'கனப் படை வரி சிலைக் காளை நீவிர் யார்?
மனப்பட, எனக்கு உரைவழங்குவீர்' என்றான். 16

'தயரதன் மைந்தர்' எனக் கேட்டு, சடாயு மகிழ்தல்

வினவிய காலையில், மெய்ம்மை அல்லது
புனை மலர்த் தாரவர் புகல்கிலாமையால்,
'கனை கடல் நெடு நிலம் காவல் ஆழியான்,
வனை கழல் தயரதன், மைந்தர் யாம்' என்றார். 17

உரைத்தலும், பொங்கிய உவகை வேலையன்,
தரைத்தலை இழிந்து, அவர்த் தழுவு காதலன்,
'விரைத் தடந் தாரினன், வேந்தர் வேந்தன்தன்,
வரைத் தடந் தோள் இணை வலியவோ?' என்றான். 18

தயரதன் மறைவுகேட்டு, சடாயு அரற்றல்

'மறக்க முற்றாத தன் வாய்மை காத்து அவன்
துறக்கம் உற்றான்' என, இராமன் சொல்லலும்,
இறக்கம் உற்றான் என ஏக்கம் எய்தினன்;
உறக்கம் உற்றான் என உணர்வு நீங்கினன். 19

தழுவினர், எடுத்தனர், தடக் கையால்; முகம்
கழுவினர் இருவரும், கண்ணின் நீரினால்;
வழுவிய இன் உயிர் வந்த மன்னனும்,
அழிவுறு நெஞ்சினன், அரற்றினன்அரோ. 20

15. ஆழியான் ஒருவன் - ஆணைச் சக்கரத்தையுடைய தயரத மன்னன்; 16. கனம் - சிறப்பு; 19. முற்றாத - இயலாத; இறக்கம் உறுதல் - இறப்பின் எல்லையடைதல்; 20. மன்னவன் - கழுகரசனாகிய சடாயு.

'பரவல் அருங் கொடைக்கும், நின்தன் பனிக் குடைக்கும்,
பொறைக்கும், நெடும் பண்பு தோற்ற
கரவல் அருங் கற்பகமும், உடுபதியும்,
கடல் இடமும், களித்து வாழ—
புரவலர்தம் புரவலனே! பொய்ப் பகையே!
மெய்க்கு அணியே! புகழின் வாழ்வே!—
இரவலரும், நல் அறமும், யானும், இனி
என் பட நீத்து ஏகினுயே? 21

'அலங்காரம் என உலகுக்கு அமுது அளிக்கும்
தனிக் குடையாய்! ஆழி சூழ்ந்த
நிலம் காவல்அது கிடக்க, நிலேயாத
நிலே உடையேன் நேய நெஞ்சின்
நலம் காண நடந்தனேயோ? நாயகனே!
தீவினேயேன், நண்பினின்றும்,
விலங்கு ஆனேன் ஆதலினுல், விலங்கினேன்;
இன்னும் உயிர் விட்டிலேனுல். 22

'தயிர் உடைக்கும் மத்து என்ன உலகை நலி
சம்பரனேத் தடிந்த அந் நாள்,
அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய,
''நீ உடல்; நான் ஆவி'' என்று
செயிர் கிடத்தல் செய்யாத திரு மனத்தாய்!
செப்பினுய்; திறம்பா, நின் சொல்;
உயிர் கிடக்க, உடலே விசும்பு ஏற்றினுர்,
உணர்வு இறந்த கூற்றினுரே. 23

'எழுவது ஓர் இசை பெருக, இப்பொழுதே,
ஒப்பு அரிய எரியும் தீயில்
விழுவதே நிற்க, மட மெல்லியலார்-
தம்மைப்போல் நிலத்தின்மேல் வீழ்ந்து
அழுவதே யான்?' என்ன, அறிவுற்ருன்
என எழுந்து, ஆங்கு அவரை நோக்கி,
'முழுவது ஏழ் உலகு உடைய மைந்தன்மீர்!
கேண்மின்' என முறையின் சொல்வான்: 24

21. உடுபதி - திங்கள்.

**சடாயு தன் வரலாறு கூறி, இறக்கத் துணிதல்**

'அருணன்தன் புதல்வன் யான்; அவன் படரும்
உலகு எல்லாம் படர்வேன்; ஆழி
இருள் மொய்ம்பு கெடத் துரந்த தயரதற்கு இன்
உயிர்த் துணைவன்; இமையோரோடும்
வருணங்கள் வகுத்திட்ட காலத்தே
வந்து உதித்தேன்; கழுகின் மன்னன்;—
தருணம் கொள் பேர் ஒளியீர்!—
சம்பாதிபின் பிறந்த சடாயு' என்றான். 25

ஆண்டு அவன் ஈது உரைசெய்ய, அஞ்சலித்த
மலர்க்கையார் அன்பினோடும்
மூண்ட பெருந் துன்பத்தால் முறை முறையின்
நிறை மலர்க்கண் மொய்த்த நீரார்,—
பூண்ட பெரும் புகழ் நிறுவி; தம் பொருட்டால்
பொன்னுலகம் புக்க தாதை,
மீண்டனன் வந்தான் அவனைக் கண்டனரே
ஒத்தனர்—அவ் விலங்கல் தோளார். 26

மருவ இனிய குணத்தவரை இரு சிறகால்
உறத் தழுவி, 'மக்காள்! நீரே
உரிய கடன் வினையேற்கும் உதவுவீர்;
உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனான்
பிரியவும், தான் பிரியாதே இனிது இருக்கும்
உடல் பொறை ஆம்; பீழை பாராது,
எரிஅதனில்இன்றே புக்கு இறவேனேல்,
இத் துயரம் மறவேன்' என்றான். 27

**இராம–இலக்குவர் தடுத்து உரைத்தலும் சடாயு இணங்குதலும்**

உய்விடத்து உதவற்கு உரியானும், தன்
மெய் விடக் கருதாது, விண் ஏறினான்;
இவ் இடத்தினில், எம்பெருமாஅன்! எமைக்
கைவிடின், பினை யார் களைகண் உளார்? 28

' ''தாயின், நீங்க அருந் தந்தையின், தண் நகர்
வாயின், நீங்கி, வனம் புகுந்து, எய்திய
நோயின் நீங்கினெம் நுன்னின்'' என் எங்களை
நீயும் நீங்குதியோ?—நெறி நீங்கலாய்!'' 29

25. வருணங்கள் - சாதிகள்; தருணம் - இளமை; 28. உய்விடம் - துன்பத்தினின்றும் பிழைக்கவேண்டிய காலம்.

என்று சொல்ல, இருந்து அழி நெஞ்சினன்,
நின்ற வீரரை நோக்கி நினைந்தவன்,
' ''அன்று அது'' என்னின், அயோத்தியின், ஐயன்மீர்
சென்றபின் அவற் சேர்குவென் யான்' என்றான். 30

**சடாயு, 'நீவிர் வனம் புகுந்தமை என்?' என வினவல்**

'வேந்தன் விண் அடைந்தான்எனின், வீரர் நீர்
ஏந்து ஞாலம் இனிது அளியாது, இவண்
போந்தது என்னை? புகுந்த என்? புந்தி போய்க்
காந்துகின்றது, கட்டுரையீர்' என்றான். 31

'தேவர், தானவர், திண் திறல் நாகர், வேறு
ஏவர் ஆக, இடர் இழைத்தார்எனின்,—
பூ அராவு பொலங் கதிர் வேலினீர்!—
சாவர் ஆக்கி, தருவென் அரசு' என்றான். 32

**இராமன் குறிப்பினால் இலக்குவன் விடையிறுத்தல்**

தாதை கூறலும், தம்பியை நோக்கினான்
சீதை கேள்வன்; அவனும், தன் சிற்றவை-
மாதரால் வந்த செய்கை, வரம்பு இலா
ஓத வேலை, ஒழிவு இன்று உணர்த்தினான். 33

**சடாயு இராமனைப் போற்றுதல்**

'உந்தை உண்மையன் ஆக்கி, உன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு, தாரணி,
வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே!
எந்தை வல்லது யாவர் வல்லார்?' என, 34

அல்லித் தாமரைக் கண்ணனை அன்பு உறப்
புல்லி, மோந்து, பொழிந்த கண்ணீரினன்,
'வல்லை மைந்த! அம் மன்னையும் என்னையும்
எல்லை இல் புகழ் எய்துவித்தாய்' என்றான். 35

**சடாயு, சீதையைப்பற்றி வினவ, இலக்குவன் இயம்புதல்**

பின்னரும், அப் பெரியவன் பெய் வளை
அன்னம் அன்ன அணங்கினை நோக்கினான்;
'மன்னர் மன்னவன் மைந்த! இவ் வாணுதல்
இன்னள் என்ன இயம்புதியால்' என்றான். 36

31. காந்துகின்றது - வெதும்புகின்றது; 32. பூ - கூர்மை; அராவுதல் - தீட்டுதல்; 33. ஓதம் - அலை; 35. அல்லி - அகவிதழ்; வல்லை மைந்த - வல்லவனாகிய மைந்தனே.

அல் இறுத்தன தாடகை ஆதியா,
வில் இறுத்தது இடை என, மேலைநாள்
புல் இறுத்தது யாவும் புகன்று, தன்
சொல் இறுத்தனன்—தோன்றல்பின் தோன்றினன். 37

பஞ்சவடியில் தங்கும் தன் விருப்பை இராமன் உரைத்தல்

கேட்டு உவந்தனன், கேழ் கிளர் மௌலியான்;
'தோட்டு அலங்கலினீர்! துறந்திர், வள
நாட்டின்; நீவிரும் நல்நுதல்தானும் இக்
காட்டில் வைகுதிர்; காக்குவென் யான்' என்றான். 38

'இறைவ! எண்ணி, அகத்தியன் ஈந்துளது,
அறையும் நல் மணி ஆற்றின் அகன் கரைத்
துறையுள் உண்டு ஒரு சூழல்; அச் சூழல் புக்கு
உறைதும்' என்றனன்—உள்ளத்து உறைகுவான். 39

சடாயு வழி காட்ட, பஞ்சவடியை அடைதல்

'பெரிதும் நன்று; அப் பெருந் துறை வைகி, நீர்
புரிதிர் மா தவம்; போதுமின்; யான் அது
தெரிவுறுத்துவென்' என்று, அவர், திண் சிறை
விரியும் நீழலில் செல்ல, விண் சென்றனன். 40

ஆய சூழல் அறிய உணர்த்திய
தூய சிந்தை அத் தோம் இல் குணத்தினன்
போய பின்னை, பொரு சிலை வீரரும்
ஏய சோலை இனிது சென்று எய்தினர். 41

வார்ப் பொற் கொங்கை மருகியை, மக்களை,
ஏற்பச் சிந்தனையிட்டு,—அவ் அரக்கர்தம்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்—சேக்கையில்
பார்ப்பைப் பார்க்கும் பறவையின் பார்க்கின்றான். 42

37. புல் இறுத்தது - வனம் அடைந்து புல்லில் படுத்தது; 39. ஈந்துளது - சொல்லியருளியது; 40. தெரிவுறுத்துவென் - காட்டுவேன்; 42. ஏற்ப - தக்கபடியாக; சிந்தனையிட்டு - ஆலோசித்து, விழிப்புடன்; சீர்ப்பு - சிறப்பு; சேக்கை - பறவைக்கூடு.

# 5 சூர்ப்பணகைப் படலம்

**கோதாவரியின் பொலிவு**

புவியினுக்கு அணி ஆய், ஆன்ற பொருள் தந்து, புலத்திற்று ஆகி,
அவி அகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவி,
சவி உறத் தெளிந்து, தண்ணென் ஒழுக்கமும் தழுவி, சான்றோர்
கவி என, கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார். 1

வண்டு உறை கமலச் செவ்வி வாள் முகம் பொலிய, வாசம்
உண்டு உறை குவளை ஒண் கண் ஒருங்குற நோக்கி, ஊழின்
தெண் திரைக் கரத்தின் வாரி, திரு மலர் தூவி, செல்வர்க்
கண்டு அடி பணிவதென்ன, பொலிந்தது கடவுள் யாறு. 2

எழுவுறு காதலாரின் இரைத்து இரைத்து, ஏங்கி ஏங்கி,
பழுவ நாள் குவளைச் செவ்விக் கண் பனி பரந்து சோர,
வழு இலா வாய்மை மைந்தர் வனத்து உறை வருத்தம் நோக்கி,
அழுவதும் ஒத்ததால், அவ் அலங்கு நீர் ஆறு மன்னோ. 3

**இராமனும் சீதையும் இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்தல்**

நாளம் கொள் நளினப் பள்ளி, நயனங்கள் அமைய, நேமி-
வாளங்கள் உறைவ கண்டு, மங்கைதன் கொங்கை நோக்கும்,
நீளம் கொள் சிலையோன்; மற்றை நேரிழை, நெடிய நம்பி
தோளின்கண் நயனம் வைத்தாள், சுடர் மணித் தடங்கள் கண்டாள். 4

ஓதிமம் ஒதுங்க, கண்ட உத்தமன், உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கி, சிறியது ஓர் முறுவல் செய்தான்;
மாதுஅவள்தானும், ஆண்டு வந்து, நீர் உண்டு, மீளும்
போதகம் நடப்ப நோக்கி, புதியது ஓர் முறுவல் பூத்தாள். 5

வில் இயல் தடக் கை வீரன், வீங்கு நீர் ஆற்றின் பாங்கர்,
வல்லிகள் நுடங்கக் கண்டான், மங்கைதன் மருங்குல் நோக்க,
எல்லிஅம் குவளைக் கானத்து, இடை இடை மலர்ந்து நின்ற
அல்லிஅம் கமலம் கண்டாள், அண்ணல்தன் வடிவம் கண்டாள்.

5 : 1. புவி - மக்கள், நிலமகள்; அணி ஆதல் - அலங்காரம் உடையதாதல், அணிகலன் ஆதல்; பொருள் - உறுதிப் பொருள், மலைபடு பொருள்; புலம் - அறிவு, விளைநிலம்; அவி அகத் துறைகள் - அமைந்த அகப்பொருள் துறைகள், வெப்பம் தணிக்கும் இடத்தையுடைய நீர்த்துறைகள்; ஐந்திணை நெறி - ஐவகை நிலத்துக்குரிய ஒழுக்கங்கள், ஐவகை நிலத்தின் வழி; சவியுறத் தெளிதல் - அழகு மிகும்படி நன்றாகப் பொருள் விளங்குதல், ஆழத்தில் உள்ள பொருளும் தெரியும்படி தெளிந்திருத்தல்; தண்ணென் ஒழுக்கம் - இனிய நடைப்போக்கு, குளிர்ந்த நீரோட்டம்; 3. பழுவம் - காடு, ஈண்டுத் தொகுதி; அலங்குதல் - அசைதல்; 4. தடங்கள் - மணற்குன்றுகள்; 5. ஓதிமம் - அன்னப் பறவை; போதகம் - ஆண் யானை.

அனையது ஓர் தன்மை ஆன அருவி நீர் ஆற்றின் பாங்கர்,
பனி தரு தெய்வப் 'பஞ்சவடி' எனும், பருவச் சோலைத்
தனி இடம்அதனை நண்ணி, தம்பியால் சமைக்கப்பட்ட
இனிய பூஞ் சாலை எய்தி இருந்தனன் இராமன். இப்பால், 7

சூர்ப்பணகை வருகை

நீல மா மணி நிற நிருதர் வேந்தனை
மூல நாசம்பெற முடிக்கும் மொய்ம்பினள்,
மேலைநாள் உயிரொடும் பிறந்து, தான் விளை
காலம் ஓர்ந்து, உடன் உறை கடிய நோய் அனள், 8

செம் பராகம் படச் செறிந்த கூந்தலாள்,
வெம்பு அராகம் தனி விளைந்த மெய்யினள்,
உம்பர் ஆனவர்க்கும், ஒண் தவர்க்கும், ஓத நீர்
இம்பர்ஆனவர்க்கும், ஓர் இறுதி ஈட்டுவாள், 9

வெய்யது ஓர் காரணம் உண்மை மேயினள்,
வைகலும் தமியள் அவ் வனத்து வைகுவாள்,
நொய்தின் இவ் உலகு எலாம் நுழையும் நோன்மையாள்,—
எய்தினள், இராகவன் இருந்த சூழல்வாய். 10

எண் தகும் இமையவர், 'அரக்கர் எங்கள்மேல்
விண்டனர்; விலக்குதி' என்ன, மேலைநாள்
அண்டசத்து அருந் துயில் துறந்த ஐயனைக்
கண்டனள், தன் கிளைக்கு இறுதி காட்டுவாள். 11

இராமன் அழகைச் சூர்ப்பணகை வியத்தல்

'சிந்தையின் உறைபவற்கு உருவம் தீர்ந்ததால்;
இந்திரற்கு ஆயிரம் நயனம்; ஈசற்கு
முந்திய மலர்க் கண் ஓர் மூன்று; நான்கு தோள்,
உந்தியில் உலகு அளித்தாற்கு' என்று உன்னுவாள். 12

'கற்றைஅம் சடையவன் கண்ணின் காய்தலால்
இற்றவன், அன்றுதொட்டு இன்றுகாறும், தான்
நல் தவம் இயற்றி, அவ் அனங்கன், நல் உருப்
பெற்றனனும்' எனப் பெயர்த்தும் எண்ணுவாள். 13

9. செம் பராகம் - சிவந்த புழுதி; அராகம் - காம இச்சை; 10. வெய்யது ஓர் காரணம் - இராவணன் வேரோடு அழியும்படியான கொடியதோர் ஊழ் வினை; 11. விண்டனர் - பகைத்தனர்; அண்டசம் - முட்டையிற் பிறப்பது, ஈண்டு ஆதிசேடன்.

'தரங்களின் அமைந்து, தாழ்ந்து, அழகின் சார்பின;
மரங்களும் நிகர்க்கல; மலையும் புல்லிய;
உரங்களின் உயர் திசை ஓம்பும் ஆனையின்
கரங்களே, இவன் மணிக் கரம்' என்று உன்னுவாள். 14

'வில் மலை வல்லவன் வீரத் தோளொடும்
கல்மலை நிகர்க்கல; கனிந்த நீலத்தின்
நல் மலை அல்லது, நாம மேருவும்
பொன்மலை ஆதலால், பொருவலாது' என்பாள். 15

'தாள் உயர் தாமரைத் தளங்கள்தம்மொடும்
கேள் உயர் நாட்டத்துக் கிரியின் தோற்றத்தான்
தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின்,
நீளிய அல்ல கண்; நெடிய, மார்பு!' என்பாள். 16

'அதிகம் நின்று ஒளிரும் இவ் அழகன் வாள் முகம்,
பொதி அவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ?
கதிர் மதி ஆம் எனின், கலைகள் தேயும்; அம்
மதி எனின், மதிக்கும் ஓர் மறு உண்டு' என்னுமால். 17

'எவன் செய, இனிய இவ் அழகை எய்தினேன்?
அவம் செயத் திரு உடம்பு அலச நோற்கின்றான்;
நவம் செயத்தகைய இந் நளின நாட்டத்தான்
தவம் செய, தவம் செய்த தவம் என்?' என்கின்றாள். 18

'உடுத்த நீர் ஆடையள், உருவச் செவ்வியள்,
பிடித் தரு நடையினள், பெண்மை நன்று; இவன்
அடித்தலம் தீண்டலின் அவனிக்கு அம் மயிர்
பொடித்தன போலும், இப் புல்' என்று உன்னுவாள். 19

'வாள் நிலா முறுவலன் வயங்கு சோதியைக்
காணலனேகொலாம், கதிரின் நாயகன்?
சேண் எலாம் புல் ஒளி செலுத்தி, சிந்தையில்
நாணலன், மீமிசை நடக்கின்றான்' என்றாள். 20

'குப்புறற்கு அரிய மாக் குன்றை வென்று உயர்
இப் பெருந் தோளவன் இதழுக்கு ஏற்பது ஓர்
ஒப்பு என, உலகம் மேல் உரைக்க ஒண்ணுமோ?
துப்பினில் துப்புடை யாதைச் சொல்லுகேன்? 21

15. நாமம் - பெருமை; 18. அலச - வருந்த; நவம் - புதுமை;
21. குப்புறல் - கடத்தல்.

'நல் கலை மதி உற வயங்கு நம்பிதன்
எல் கலை திரு அரை எய்தி ஏமுற,
வற்கலை நோற்றன; மாசு இலா மணிப்
பொன்-கலை நோற்றில போலுமால்' என்றாள். 22

'தொடை அமை நெடு மழைத் தொங்கல் ஆம் எனக்
கடை குழன்று, இடை நெறி, கரிய குஞ்சியைச்
சடை எனப் புனைந்திலன்என்னின், தையலா-
ருடை உயிர் யாவையும் உடையுமால்' என்றாள். 23

'நாறிய நகை அணி நல்ல, புல்லினால்,
ஏறிய செவ்வியின் இயற்றுமோ?' என,
'யாறு அகல் முழு மணிக்கு அரசின் மாட்சிதான்
வேறு ஒரு மணியினால் விளங்குமோ?' என்பாள். 24

'கரந்திலன், இலக்கணம் எடுத்துக் காட்டிய,
பரம் தரு நான்முகன்; பழிப்பு உற்றான்அரோ—
இரந்து, இவன் இணை அடிப் பொடியும், ஏற்கலாப்
புரந்தரன், உலகு எலாம் புரக்கின்றான்' என்றாள். 25

சூர்ப்பணகையின் காம வெறி

நீத்தமும் வானமும் குறுக, நெஞ்சிடைக்
கோத்த அன்பு உணர்விடைக் குளிப்ப மீக்கொள,
ஏத்தவும், பரிவின் ஒன்று ஈகலான், பொருள்
காத்தவன், புகழ் எனத் தேயும் கற்பினாள். 26

வான்தனில், வரைந்தது ஓர் மாதர் ஓவியம்
போன்றனள்; புலர்ந்தனள்; புழுங்கும் நெஞ்சினள்;
தோன்றல்தன் சுடர் மணித் தோளில் நாட்டங்கள்
ஊன்றினள், பறிக்க ஓர் ஊற்றம் பெற்றிலள், 27

நின்றனள்—'இருந்தவன் நெடிய மார்பகம்
ஒன்றுவென்; அன்றுஎனின், அமுதம் உண்ணினும்
பொன்றுவென்; போக்கு இனி அரிது போன்ம்' என,
சென்று, எதிர் நிற்பது ஓர் செய்கை தேடுவாள். 28

22. எல் கலை - இருளை விலக்கும், சூரியன் நிலைகுலையும்படியான; திரு அரை - அழகிய இடை; 23. மழைத் தொங்கல் - மேகக் கூறுகளின் கீழிறங்கிய வரிசை; உடையும் - நிலைகுலையும்; 24. நாறிய - விளங்கிய; ஏறிய - மிக்க; மணிக்கு அரசு - சிறந்த மணி; 26. நீத்தம் - ஆற்று வெள்ளப் பெருக்கு.

சூர்ப்பணகை கோல வடிவம் கொள்ளுதல்

' ''எயிறுடை அரக்கி, எவ் உயிரும் இட்டது ஓர்
வயிறுடையாள்'' என மறுக்கும்; ஆதலால்,
குயில் தொடர் குதலை, ஓர் கொவ்வை வாய், இள
மயில் தொடர் இயலி ஆய், மருவல் நன்று' என, 29

பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா,
அங்கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்தனள்;
திங்களின் சிறந்து ஒளிர் முகத்தள், செவ்வியள்,
பொங்கு ஒளி விசும்பினில் பொலியத் தோன்றினள். 30

சூர்ப்பணகையின் நடையழகு

பஞ்சி ஒளிர், விஞ்சு குளிர் பல்லவம் அனுங்க,
செஞ் செவிய கஞ்சம் நிகர், சீறடியள் ஆகி,
அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம் என, மின்னும்
வஞ்சி என, நஞ்சம் என, வஞ்ச மகள் வந்தாள். 31

பொன் ஒழுகு பூவில் உறை பூவை, எழில் பூவை,
பின் எழில் கொள் வாள் இணை பிறழ்ந்து ஒளிர் முகத்தாள்,
கன்னி எழில் கொண்டது, கலைத் தட மணித் தேர்,
மின் இழிவ தன்மை, இது, விண் இழிவதுஎன்ன, 32

கானில் உயர் கற்பகம் உயிர்த்த கதிர் வல்லி
மேனி நனி பெற்று, விளை காமம் நிறை வாசத்
தேனின் மொழி உற்று, இனிய செவ்வி நனி பெற்று, ஓர்
மானின் விழி பெற்று, மயில் வந்ததுஎன,—வந்தாள். 33

இராமன் வியப்படைதல்

'நூபுரமும், மேகலையும், நூலும், அறல் ஓதிப்
பூ முரலும் வண்டும், இவை பூசலிடும் ஓசை-
தாம் உரைசெய்கின்றது; ஒரு தையல் வரும்' என்னா,
கோ மகனும், அத் திசை குறித்து, எதிர் விழித்தான். 34

30. அங்கையின் ஆய - கை வந்த; 31. பஞ்சி - செம்பஞ்சு; பல்லவம் - தளிர்; 32. பொன் - பொன்னிறத் தாதுகள்; பூவை - இலக்குமி,. நாகண வாய்ப் புள்; 33. கான் - நறுமணம்; கதிர் வல்லி - கற்பகத் தருவைச் சார்ந்து படரும் ஒளியுள்ளதொரு கொடி, காமவல்லி என்னும் பெயருடையது; 34. நூபுரம் - சிலம்பு; மேகலை - இடையில் அணியும் அணி வகை; நூல் - நூலில் கோத்த ஆரங்கள்; தையல் - பெண்.

விண் அருள வந்தது ஒரு மெல் அமுதம் என்ன,
வண்ண முலை கொண்டு, இடை வணங்க வரு போழ்தத்து,—
எண் அருளி, ஏழைமை துடைத்து, எழு மெய்ஞ்ஞானக்
கண் அருள்செய் கண்ணன் இரு கண்ணின் எதிர் கண்டான். 35

பேர் உழைய நாகர்-உலகில், பிறிது வானில்,
பாருழையின், இல்லது ஒரு மெல் உருவு பாரா,
'ஆருழை அடங்கும்? அழகிற்கு அவதி உண்டோ?
நேரிழையர் யாவர், இவர் நேர்?' என நினைந்தான். 36

சூர்ப்பணகை இராமனை வணங்கி, நாணி, நிற்றல்

அவ் வயின், அவ் ஆசை தன் அகத்துடைய அன்னாள்,
செவ்வி முகம் முன்னி, அடி செங்கையின் இறைஞ்சா,
வெவ்விய நெடுங் கண்-அயில் வீசி, அயல் பாரா,
நவ்வியின் ஒதுங்கி, இறை நாணி, அயல் நின்றாள். 37

இராமன்-சூர்ப்பணகை உரையாடல்

'தீது இல் வரவு ஆக, திரு! நின் வரவு; சேயோய்!
போத உளது, எம்முழை ஓர் புண்ணியம்அது அன்றோ?
ஏது பதி? ஏது பெயர்? யாவர் உறவு?' என்றான்.
வேத முதல்; பேதைஅவள் தன் நிலை விரிப்பாள்: 38

'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி; முப்புரங்கள் செற்ற
சே-வலோன் துணைவன் ஆன செங்கையோன் தங்கை; திக்கின்
மா எலாம் தொலைத்து, வெள்ளிமலை எடுத்து, உலகம் மூன்றும்
காவலோன் பின்னை; காமவல்லி ஆம் கன்னி' என்றாள். 39

அவ் உரை கேட்ட வீரன், ஐயுறு மனத்தான், 'செய்கை
செவ்விது அன்று; அறிதல் ஆகும் சிறிதின்' என்று உணர, '"செங் கண்
வெவ் உரு அமைந்தோன் தங்கை" என்றது மெய்ம்மைஆயின்
இவ் உரு இயைந்த தன்மை இயம்புதி இயல்பின்' என்றான். 40

தூயவன் பணியாமுன்னம் சொல்லுவாள், சோர்வு இலாள்; 'அம்
மாய வல் அரக்கரோடு வாழ்வினை மதிக்கலாதேன்,
ஆய்வுறு மனத்தேன் ஆகி, அறம் தலைநிற்பது ஆனேன்;
தீவினை தீய, நோற்றுத் தேவரின் பெற்றது' என்றாள். 41

35. எண் - எண்ணம்; ஏழைமை - அறியாமை; 36. உழைய - இடத்தை யுடைய; அவதி - எல்லை; 38. போத - வர; 39. பூவிலோன் புதல்வன் மைந் தன் - பிரமன் மகன் புலத்தியனுக்கு மகனாகிய விச்சிரவசு; சே - விடை; செங் கையோன் - சிவந்த கையையுடைய குபேரன்; பின்னை - பின் பிறந்தவள், தங்கை.

'இமையவர் தலைவனேயும் எளிமையின் ஏவல் செய்யும்
அமைதியின், உலகம் மூன்றும் ஆள்பவன் தங்கைஆயின்,
சுமையுறு செல்வத்தோடும் தோன்றலை; துணையும் இன்றி,
தமியை நீ வருதற்கு ஒத்த தன்மை என்? தையல்!' என்ருன்.

வீரன் அஃது உரைத்தலோடும், மெய்இலாள், 'விமல! யான் அச்
சீரியரல்லார் மாட்டுச் சேர்கிலென்; தேவர்பாலும்
ஆரிய முனிவர்பாலும் அடைந்தனென்; இறைவ! ஈண்டு ஓர்
காரியம் உண்மை, நின்னைக் காணிய வந்தேன்' என்ருள். 43

அன்னவள் உரைத்தலோடும், ஐயனும், 'அறிதற்கு ஒவ்வா
நல் நுதல் மகளிர் சிந்தை நல் நெறிப் பால அல்ல;
பின் இது தெரியும்' என்னு, 'பெய் வளைத் தோளி! என்பால்
என்ன காரியத்தை? சொல்; அஃது இயையுமேல் இழைப்பல்' என்ருன்.

'தாம் உறு காமத் தன்மை தாங்களே உரைப்பது என்பது
ஆம் எனல் ஆவது அன்ருல், அருங் குல மகளிர்க்கு அம்மா!
ஏமுறும் உயிர்க்கு நோவேன்; என் செய்கேன்? யாரும் இல்லேன்;
காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக் காத்தி' என்ருள்.

சேண் உற நீண்டு, மீண்டு, செவ் அரி சிதறி, வெவ்வேறு
வண் உற மிளிர்ந்து, நானுவிதம் புரண்டு, இருண்ட வாள்-கண்
பூண் இயல் கொங்கை அன்னுள் அம் மொழி புகறலோடும்,
'நாண் இலள், ஐயள், நொய்யள்; நல்லளும் அல்லள்' என்ருன்.

பேசலன், இருந்த வள்ளல் உள்ளத்தின் பெற்றி ஓராள்;
பூசல் வண்டு அரற்றும் கூந்தல் பொய்ம் மகள், 'புகன்ற என்கண்
ஆசை கண்டருளிற்று உண்டோ? அன்று எனல் உண்டோ?' என்னும்
ஊசலின் உலாவுகின்ருள்; மீட்டும் ஓர் உரையைச் சொல்வாள்:

'எழுத அரு மேனியாய்! ஈண்டு எய்தியது அறிந்திலாதேன்;
முழுது உணர் முனிவர் ஏவல் செய் தொழில் முறையின் முற்றி,
பழுது அறு பெண்மையோடும் இளமையும் பயனின்று ஏக,
பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலும்' என்ருள். 48

'நிந்தனை அரக்கி நீதி நிலை இலாள்; வினை மற்று எண்ணி
வந்தனள் ஆகும்' என்றே வள்ளலும் மனத்துள் கொண்டான்;
'சுந்தரி! மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிவிற்று அன்ருல்;
அந்தணர் பாவை நீ; யான் அரசரில் வந்தேன்' என்ருன். 49

46. நொய்யள் - இழிகுணமுடையவள்.

'ஆரண மறையோன் எந்தை; அருந்ததிக் கற்பின் எம் மோய்,
தாரணி புரந்த சாலகடங்கட மன்னன் தையல்;
போர் அணி பொலம் கொள் வேலாய்! பொருந்தலை இகழ்தற்கு ஒத்த
காரணம் இதுவே ஆயின், என் உயிர் காண்பென்' என்றாள். 50

அருத்தியள் அனைய கூற, அகத்துறு நகையின் வெள்ளைக்
குருத்து எழுகின்ற நீகைக் கொண்டல் உண்டாட்டம் கொண்டான்,
' "வருத்தம் நீங்கு அரக்கர்தம்மில் மானிடர் மணத்தல், நங்கை!
பொருத்தம் அன்று" என்று, சாலப் புலமையோர் புகல்வர்' என்றான்.

'பராவ அருஞ் சிரத்தை ஆரும் பத்தியின் பயத்தை ஓராது,
"இராவணன் தங்கை" என்றது ஏழைமைப் பாலது' என்னா,
'அரா-அணை அமலன் அன்னாய்! அறிவித்தேன் முன்னம்; தேவர்ப்
பராவினின் நீங்கினேன், அப் பழிபடு பிறவி' என்றாள். 52

'ஒருவனே உலகம் மூன்றிற்கு ஓங்கு ஒரு தலைவன், ஊங்கில்
ஒருவனே குபேரன், நின்னொடு உடன்பிறந்தவர்கள்; அன்னார்
தருவரேல், கொள்வென்; அன்றேல், தமியை வேறு இடத்துச் சார;
வெருவுவென்;—நங்கை!' என்றான்; மீட்டு அவள் இனைய சொன்னாள்:

'காந்தர்ப்பம் என்பது உண்டால்: காதலின் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்;
ஏந்தல்-பொன்-தோளினாய்! ஈது இயைந்தபின், எனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற்று ஆகும்; வேறும் ஓர் உரை உண்டு' என்றாள்.

'முனிவரோடு உடையர், முன்னே முதிர் பகை; முறைமை நோக்கார்;
தனியை நீ; ஆதலால், மற்று அவரொடும் தழுவற்கு ஒத்த
வினையம் ஈது அல்லது இல்லை; விண்ணும் நின் ஆட்சி ஆக்கி,
இனியர் ஆய், அன்னர் வந்து உன் ஏவலின் நிற்பர்' என்றாள்.

'நிருதர்தம் அருளும் பெற்றேன்; நின் நலம் பெற்றேன்; நின்னோடு
ஒருவ அருஞ் செல்வத்து யாண்டும் உறையவும் பெற்றேன்; ஒன்றோ,
திரு நகர் தீர்ந்த பின்னர், செய் தவம் பயந்தது?' என்னா,
வரி சிலை வடித்த தோளான் வாள் எயிறு இலங்க நக்கான். 56

50. எம்மோய் - எம் தாயாகிய கேகசி; சால கடங்கடன் - அரசு மேற்கொண்டு வாழ்ந்த அரக்கர் மரபினன்; என் உயிர் காண்பென் - உய்ந்தேன்; 51. உண்டாட்டம் - விளையாட்டு; 52. சிரத்தை - ஊக்கம்; பத்தியின் பயத்தை ஓராது - பக்தியின் பயனாகும் இப்பிறவி என்பதை மட்டும் கூற அறியாமல்; 54. காந்தர்ப்பம் - கந்தருவம்; கூட்டம் - மணம்; 56. தீர்ந்த - நீங்கிய.

சீதையைக் கண்ட சூர்ப்பணகை கொண்ட எண்ணங்கள்

விண்ணிடை, இம்பர், நாகர், விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம்
கண்ணிடை ஒளியின் பாங்கர், கடி கமழ் சாலேநின்றும்,
பெண்ணிடை அரசி, தேவர் பெற்ற நல் வரத்தால், பின்னர்
மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள், வந்தாள்.

ஊன் சுட உணங்கு பேழ் வாய் உணர்வுஇலி, உருவில் நாறும்
வான் சுடர்ச் சோதி வெள்ளம் வந்து இடை வயங்க, நோக்கி,
மீன் சுடர் விண்ணும் மண்ணும் விரிந்த போர் அரக்கர் என்னும்
கான் சுட முளேத்த கற்பின் கனலியைக் கண்ணின் கண்டாள்.

'மரு ஒன்று கூந்தலாளே வனத்து இவன் கொண்டு வாரான்;
உரு இங்கு இது உடையர் ஆக, மற்றையோர் யாரும் இல்லே;
அரவிந்த மலருள் நீங்கி, அடி இணே படியில் தோய,
திரு இங்கு வருவாள்கொல்லோ?' என்று அகம் திகைத்து நின்றாள்.

பண்பு உற நெடிது நோக்கி, 'படைக்குநர் சிறுமை அல்லால்,
எண் பிறங்கு அழகிற்கு எல்லே இல்லே ஆம்' என்று நின்றாள்;
'கண் பிற பொருளில் செல்லா; கருத்து எனின், அஃதே; கண்ட
பெண் பிறந்தேனுக்கு என்றால், என்படும் பிறருக்கு?' என்றாள்.

பொரு திறத்தானே நோக்கி, பூவையை நோக்கி, நின்றாள்;
'கருத மற்று இனி வேறு இல்லே; கமலத்துக் கடவுள்தானே,
ஒரு திறத்து உணர நோக்கி, உருவினுக்கு, உலகம் மூன்றின்
இரு திறத்தார்க்கும், செய்த வரம்பு இவர் இருவர்' என்றாள்.

'பொன்னேப்போல் பொரு இல் மேனி, பூவைப் பூ வண்ணத்தான், இம்
மின்னேப்போல் இடையாளோடும் மேவும் மெய் உடையன் அல்லன்;
தன்னேப்போல் தகையோர் இல்லா, தளிரைப்போல் அடியினாலும்,
என்னேப்போல் இடையே வந்தாள்; இகழ்விப்பென் இவளே' என்னா, 62

சூர்ப்பணகை, சீதையை அரக்கி எனல்

'வரும் இவள் மாயம் வல்லள்; வஞ்சனே அரக்கி; நெஞ்சம்
தெரிவு இல; தேறும் தன்மை, சீரியோய்! செவ்விது அன்றால்;
உரு இது மெய்யது அன்றால்; ஊன் நுகர் வாழ்க்கையாளே
வெருவினென்; எய்நிடாமல் விலக்குதி, வீர!' என்றாள். 63

57. கண்ணிடை ஒளி - கண்ணின் ஒளியாய் நின்று உதவும் இராமன்;
60. பண்பு - சீதையின் அழகுப் பண்பு.

'ஒள்ளிது உன் உணர்வு; மின்னே! உன்னை ஆர் ஒளிக்கும் ஈட்டார்?
தெள்ளிய நலத்தினால், உன் சிந்தனை தெரிந்தது; அம்மா!
கள்ள வல் அரக்கி போலாம் இவளும்? நீ காண்டி' என்னா,
வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட, வீரன் நக்கான். 64

சீதையைச் சூர்ப்பணகை வெகுளலும், இராமன் அவளைக் கடிதலும்

ஆயிடை, அமுதின் வந்த, அருந்ததிக் கற்பின் அம் சொல்
வேய் இடை தோளினாளும், வீரனைச் சேரும் வேலை,
'நீ இடை வந்தது என்னை? நிருதர்தம் பாவை!' என்னா,
காய் எரி அனைய கள்ள உள்ளத்தாள் கதித்தலோடும். 65

அஞ்சினள்; அஞ்சி அன்னம், மின் இடை அலச ஓடி,
பஞ்சின் மெல் அடிகள் நோவப் பதைத்தனள்; பருவக் கால
மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்ன,
குஞ்சரம் அனைய வீரன் குவவுத் தோள் தழுவிக் கொண்டாள்.

'வளை எயிற்றவர்களோடு வரும் விளையாட்டு என்றாலும்,
விளைவன தீமையே ஆம்' என்பதை உணர்ந்து, வீரன்,
'உளைவன இயற்றல்; ஒல்லை உன் நிலை உணருமாகில்,
இளையவன் முனியும்; நங்கை! ஏகுதி விரைவில்' என்றான். 67

பொற்புடை அரக்கி, 'பூவில், புனலினில், பொருப்பில், வாழும்
அற்புடை உள்ளத்தாரும், அனங்கனும், அமரர் மற்றும்,
எற் பெறத் தவம் செய்கின்றார்; என்னை நீ இகழ்வது என்னே,
நல் பொறை நெஞ்சில் இல்லாக் கள்வியை நச்சி?' என்றாள். 68

'தன்னொடும் தொடர்வு இலாதேம் என்னவும் தவிராள்; தான் இக்
கல் நெடு மனத்தி சொல்லும், கள்ள வாசகங்கள்' என்னா,
மின்னொடு தொடர்ந்து செல்லும் மேகம்போல், மிதிலை வேந்தன்
பொன்னொடும் புனிதன் போய், அப் பூம் பொழிற் சாலை புக்கான். 69

சூர்ப்பணகை மனம் நைந்து ஏகுதல்

புக்க பின், போனது என்னும் உணர்வினள்; பொறையுள் நீங்கி
உக்கது ஆம் உயிரள்; ஒன்றும் உயிர்த்திலள்; ஒடுங்கி நின்றாள்;
'தக்கிலன்; மனத்துள் யாதும் தழுவிலன்; சலமும் கொண்டான்;
மைக் கருங் குழலினாள்மாட்டு அன்பினில் வலியன்' என்பாள்.

65. வேய் இடை தோள் - மூங்கில் தோற்றுப் பின்னிடும்படியான தோள்; 70. பொறை - உடம்பு.

நின்றிலள்; அவனைச் சேரும் நெறியினை நினைந்து போனாள்;
'இன்று, இவன் ஆகம் புல்லேன்எனின், உயிர் இழப்பென்' என்னா,
பொன் திணி சரளச் சோலை, பளிக்கறைப் பொதும்பர் புக்காள்;
சென்றது, பரிதி மேல் பால்; செக்கர் வந்து இறுத்தது அன்றே.

சூர்ப்பணகையின் காமத் தீ

அழிந்த சிந்தையளாய் அயர்வாள்வயின்,
மொழிந்த காமக் கடுங் கனல் மூண்டதால்—
வழிந்த நாகத்தின் வன் தொளை வாள் எயிற்று
இழிந்த கார் விடம் ஏறுவது என்னவே. 72

தாடகைக் கொடியாள் தட மார்பிடை,
ஆடவர்க்கு அரசன் அயில் அம்புபோல்,
பாடவத் தொழில் மன்மதன் பாய் கணை
ஓட, உட்கி, உயிர் உளைந்தாள்அரோ! 73

கலை உவா மதியே கறி ஆக, வன்
சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினள்,
மலயமாருத மா நெடுங் கால வேல்
உலைய மார்பிடை ஊன்றிட, ஓயுமால். 74

அலைக்கும் ஆழி அடங்கிட, அங்கையால்,
மலைக் குலங்களின், தூர்க்கும் மனத்தினள்;
நிலைக்கும் வானில் நெடு மதி நீள் நிலா
மலைக்க, நீங்கும் மிடுக்கு இலள்; மாந்துவாள். 75

'பூ எலாம் பொடி ஆக, இப் பூமியுள்
கா எலாம் ஒடிப்பென்' என, காந்துவாள்;
சேவலோடு உறை செந் தலை அன்றிலின்
நாவினால் வலி எஞ்ச, நடுங்குவாள். 76

'அணைவு இல் திங்களை நுங்க, அராவினைக்
கொணர்வென், ஓடி' எனக் கொதித்து உன்னுவாள்;
பணை இன் மென் முலைமேல் பனி மாருதம்
புணர, ஆர் உயிர் வெந்து புழுங்குமால். 77

71. செக்கர் - செவ்வானம்; 72. வழிந்த நாகம் - தோலுரிந்த நல்ல பாம்பு; 73. பாடவம் - திறமை; 74 உவாமதி - பூர்ணச் சந்திரன்; 75. மாந்துவாள் - உள்ளழிவாள்; 76. எஞ்ச - குறைய.

கைகளால், தன் கதிர் இளங் கொங்கைமேல்,
ஐய தண் பனி அள்ளினள், அப்பினாள்;
மொய் கொள் தீயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால். 78

அளிக்கும் மெய், உயிர், காந்து அழல் அஞ்சினள்;
குளிக்கும் நீரும் கொதித்து எழ, கூசுமால்;
'விளிக்கும் வேலையை, வெங் கண் அனங்கனை,
ஒளிக்கல் ஆம் இடம் யாது?' என, உன்னுமால். 79

வந்து கார் மழை தோன்றினும், மா மணிச்
சந்து காணினும், கைத்தலம் கூப்புமால்;
இந்துகாந்தத்தின் ஈர நெடுங் கலும்
வெந்து காந்த, வெதுப்புறு மேனியாள். 80

வாம மா மதியும், பனி வாடையும்,
காமனும், தனைக் கண்டு உணராவகை,
நாம வாள் எயிற்று ஓர் கத நாகம் வாழ்
சேம மால் வரையின் முழை சேருமால். 81

அன்ன காலை, அழல் மிகு தென்றலும்
முன்னின் மும் மடி ஆய், முலை வெந்து உக,
இன்னவா செய்வது என்று அறியாது, இளம்
பொன்னின் வார் தளிரில் புரண்டாள்அரோ. 82

வீரன் மேனி வெளிப்பட, வெய்யவள்,
கார் கொள் மேனியைக் கண்டனளாம் என,
சோரும்; வெள்கும்; துணுக்கெனும்; அவ் உருப்
பேருங்கால், வெம் பிணியிடைப் பேருமால். 83

ஆகக் கொங்கையின், ஐயன் என்று, அஞ்சன
மேகத்தைத் தழுவும்; அவை வெந்தன
போகக் கண்டு புலம்பும், அப் புன்மையாள்—
மோகத்துக்கு ஓர் முடிவும் உண்டாம்கொலோ? 84

சூர்ப்பணகை மோக வெறியால் புலம்பல்

'ஊழி வெங் கனல் உற்றனள் ஒத்தும், அவ்
ஏழை ஆவி இறந்திலள்' என்பரால்—
'ஆழியானை அடைந்தனள், பின்னையும்
வாழலாம் எனும் ஆசை மருந்தினே.' 85

79. அளிக்கும் - அன்போடு காப்பாற்றப்படும்; 80. மணிக் கந்து - நீலமணியாலாகிய தூண்; 81. வாமம் - அழகு; நாமம் - அச்சம்.

'வஞ்சனைக் கொடு மாயை வளர்க்கும் என்
நெஞ்சு புக்கு, எனது ஆவத்தை நீக்கு' எனும்;
'அஞ்சனக் கிரியே! அருளாய்' எனும்;
நஞ்சு நக்கினர் போல நடுங்குவாள். 86

'காவியோ, கயலோ, எனும் கண் இணைத்
தேவியோ திருமங்கையின் செவ்வியாள்;
பாவியேனையும் பார்க்கும்கொலோ?' எனும்—
ஆவி ஒயினும், ஆசையின் ஒய்வு இலாள். 87

'மாண்ட கற்புடையாள் மலர் மா மகள்,
ஈண்டு இருக்கும் நல்லாள் மகள்' என்னுமால்;
வேண்டகிற்பின் அனல் வர மெய்யிடைத்
தீண்டகிற்பது அன்றோ, தெறும் காமமே?' 88

ஆன்ற காதல் அஃது உற எய்துழி,
மூன்று உலோகமும் மூடும் அரக்கர் ஆம்
ஏன்ற கார் இருள் நீக்க இராகவன்
தோன்றினன் என, வெய்யவன் தோன்றினன். 89

**சீதையைத் தூக்கிச் செல்லச் சூர்ப்பணகை முயலுதல்**

விடியல் காண்டலின், ஈண்டு, தன் உயிர் கண்ட வெய்யாள்,
'படி இலாள் மருங்கு உள்ள அளவு, எனை அவன் பாரான்;
கடிதின் ஓடினென் எடுத்து, ஒல்லைக் கரந்து, அவள் காதல்
வடிவினனுடன் வாழ்வதே மதி' என மதியா, 90

வந்து, நோக்கினள்; வள்ளல் போய், ஒரு மணித் தடத்தில்
சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள்; தம்பி,
இந்து நோக்கிய நுதலியைக் காத்து, அயல், இருண்ட,
கந்தம் நோக்கிய, சோலையில் இருந்தது காணாள். 91

'தனி இருந்தனள்; சமைந்தது என் சிந்தனை; தாழ்வுற்று
இனி இருந்து எனக்கு எண்ணுவது இல்' என, எண்ணா,
துனி இருந்த வல் மனத்தினள் தோகையைத் தொடர்ந்தாள்;
கனி இரும் பொழில், காத்து, அயல் இருந்தவன் கண்டான். 92

89. ஆன்ற - நிறைந்த; ஏன்ற - எதிர்ந்த; 90. படி - ஒப்பு; 91. சந்தி - காலை வழிபாடு; கந்தம் - மணம்; 92. தாழ்வுற்று - காலந்தாழ்த்து, துனி - வெறுப்பு.

**இலக்குவன், சூர்ப்பணகையின் உறுப்புக்களை அறுத்தல்**

'நில் அடீஇ' என, கடுகினன், பெண் என நினைத்தான்;
வில் எடாது, அவள் வயங்கு எரி ஆம் என விரிந்த
சில் வல் ஓதியைச் செங் கையில் திருகுறப் பற்றி,
ஒல்லை ஈர்த்து, உதைத்து, ஒளி கிளர் சுற்று-வாள் உருவி, 93

'ஊக்கித் தாங்கி, விண் படர்வென்' என்று உருத்து எழுவாளை,
நூக்கி, நொய்தினில், 'வெய்து இழையேல்' என நுவலா,
மூக்கும், காதும், வெம் முரண் முலைக் கண்களும், முறையால்
போக்கி, போக்கிய சினத்தொடும், புரி குழல் விட்டான். 94

**சூர்ப்பணகையின் ஓலம்**

அக் கணத்து அவள் வாய் திறந்து அரற்றிய அமலை,
திக்கு அனைத்தினும் சென்றது; தேவர்தம் செவியும்
புக்கது; உற்றது புகல்வது என்? மூக்கு எனும் புழையூடு
உக்க சோரியின் ஈரம் உற்று, உருகியது உலகம். 95

கொலை துமித்து உயர் கொடுங் கதிர் வாளின், அக் கொடியாள்
முலை துமித்து, உயர் மூக்கினை நீக்கிய மூத்தம்,
மலை துமித்தென, இராவணன் மணியுடை மகுடத்
தலை துமித்தற்கு நாள் கொண்டது, ஒத்தது, ஓர் தன்மை. 96

அதிர, மா நிலத்து, அடி பதைத்து அரற்றிய அரக்கி—
கதிர் கொள் கால வேல் கரன் முதல் நிருதர், வெங் கதப் போர்
எதிர் இலாதவர், இறுதியின் நிமித்தமா எழுந்து, ஆண்டு,
உதிர மாரி பெய் கார் நிற மேகம் ஒத்து,—உயர்ந்தாள். 97

உயரும் விண்ணிடை; மண்ணிடை விழும்; கிடந்து உழைக்கும்;
அயரும்; கை குலைத்து அலமரும்; ஆர் உயிர் சோரும்;
பெயரும்; 'பெண் பிறந்தேன் பட்ட பிழை' எனப் பிதற்றும்;—
துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல் குடிப் பிறந்தாள்.

ஒற்றும் மூக்கினை; உலை உறு தீ என உயிர்க்கும்;
எற்றும் கையினை, நிலத்தினில்; இணைத் தடங் கொங்கை
பற்றும்; பார்க்கும்; மெய் வெயர்க்கும்; தன் பரு வலிக் காலால்
சுற்றும்; ஓடும்; போய், சோரி நீர் சொரிதரச் சோரும். 99

93. சுற்றுவாள் - உடைவாள்; 94. ஊக்கி - முயன்று; 95. உருகியது - கரைந்தது; 96. கொலை துமித்து - கொல்லுதலை ஒழித்து; 98. பிழை - துன்பம், சிறுமையும் ஆம்.

ஊற்றும் மிக்க நீர் அருவியின் ஒழுகிய குருதிச்
சேற்று வெள்ளத்துள் திரிபவள், தேவரும் இரிய,
கூற்றும் உட்கும் தன் குலத்தினோர் பெயர் எலாம் கூறி,
ஆற்றுகிற்கிலள்; பற்பல பன்னி நின்று, அழைத்தாள். 100

உறவினரைக் கூவி அழைத்தல்

நிலை எடுத்து, நெடு நிலத்து நீ இருக்க, தாபதர்கள்
சிலை எடுத்துத் திரியும்இது சிறிது அன்றே? தேவர் எதிர்
தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே! தழல் எடுத்தான்
மலை எடுத்த தனி மலையே! இவை காண வாராயோ? 101

'"புலிதானே புறத்து ஆக, குட்டி கோட்படாது" என்ன,
ஒலி ஆழி உலகு உரைக்கும் உரை பொய்யோ? ஊழியினும்
சலியாத மூவர்க்கும், தானவர்க்கும், வானவர்க்கும்,
வலியானே! யான் பட்ட வலி காண வாராயோ? 102

'ஆர்த்து, ஆனைக்கு-அரசு உந்தி, அமரர் கணத்தொடும் அடர்ந்த
போர்த் தானை இந்திரனைப் பொருது, அவனைப் போர் தொலைத்து,
வேர்த்தானை, உயிர் கொண்டு மீண்டானை, வெரிந் பண்டு
பார்த்தானே! யான் பட்ட பழி வந்து பாராயோ? 103

'காற்றினையும், புனலினையும், கனலினையும், கடுங் காலக்
கூற்றினையும், விண்ணினையும், கோளினையும், பணி கொண்டற்கு
ஆற்றினை நீ; ஈண்டு, இருவர் மானுடவர்க்கு ஆற்றுது
மாற்றினையோ, உன் வலத்தை? சிவன் தடக்கை வாள் கொண்டாய்!

'உருப் பொடியா மன்மதனை ஒத்துளரே ஆயினும், உன்
செருப்பு அடியின் பொடி ஒவ்வா மானிடரைச் சீறுதியோ?
நெருப்பு அடியில் பொடி சிதற, நிறைந்த மதத் திசை யானை
மருப்பு ஒடிய, பொருப்பு இடிய, தோள் நிமிர்த்த வலியோனே! 105

'தேனுடைய நறுந் தெரியல் தேவரையும் தெறும் ஆற்றல்
தான் உடைய இராவணற்கும், தம்பியர்க்கும், தவிர்ந்ததோ?
ஊனுடைய உடம்பினர் ஆய், எம் குலத்தோர்க்கு உணவு ஆய
மானுடவர் மருங்கே புக்கு ஒடுங்கினதோ வலி? அம்மா! 106

'மரன் ஏயும் நெடுங் கானில் மறைந்து உறையும் தாபதர்கள்
உரனேயோ? அடல் அரக்கர் ஒய்வேயோ? உற்று எதிர்ந்தார்,
"அரனேயோ? அரியேயோ? அயனேயோ?" எனும் ஆற்றல்
கரனேயோ! யான் பட்ட கையறவு காணுயோ? 107

101. நிலை - தலைமை நிலை; 102. புறத்து ஆக - பின்னே இருக்க; வலி - நோய்.

'இந்திரனும், மலர் அயனும், இமையவரும், பணி கேட்ப,
சுந்தரி பல்லாண்டு இசைப்ப, உலகு ஏழும் தொழுது ஏத்த,
சந்திரன்போல் தனிக் குடைக்கீழ் நீ இருக்கும் சவை நடுவே
வந்து, அடியேன் நாணுது, முகம் காட்ட வல்லேனே? 108

'உரன் நெரிந்து விழ, என்னை உதைத்து, உருட்டி, மூக்கு அரிந்த
நரன் இருந்து தோள் பார்க்க, நான் கிடந்து புலம்புவதோ?
கரன் இருந்த வனம் அன்றே? இவை படவும் கடவேனே?—
அரன் இருந்த மலை எடுத்த அண்ணாவோ! அண்ணாவோ!! 109

'நசையாலே, மூக்கு இழந்து, நாணம் இலா நான் பட்ட
வசையாலே, நினது புகழ் மாசுண்டது ஆகாதோ?—
திசை யானை விசை கலங்கச் செருச் செய்து, மருப்பு ஒசித்த
இசையாலே நிறைந்த புயத்து இராவணவோ! இராவணவோ!!

'கானம்அதினிடை, இருவர், காதொடு மூக்கு உடன் அரிய,
மானமதால், பாவியேன், இவண் மடியக் கடவேனே?—
தானவரைக் கரு அறுத்து, சதமகனைத் தளை இட்டு,
வானவரைப் பணி கொண்ட மருகாவோ! மருகாவோ!! 111

'ஒரு காலத்து, உலகு ஏழும் உருத்து எதிர, தனு ஒன்றால்,
திருகாத சினம் திருகி, திசை அனைத்தும் செல நூறி,
இரு காலில், புரந்தரனை இருந் தளையில் இடுவித்த
மருகாவோ! மானிடவர் வலி காண வாராயோ? 112

'கல் ஈரும் படைத் தடக் கை, அடல், கர தூடணர் முதலா,
அல் ஈரும் சுடர் மணிப் பூண், அரக்கர் குலத்து அவதரித்தீர்!
கொல் ஈரும் படைக் கும்பகருணனைப்போல், குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ? யான் அழைத்தல் கேளீரோ?' 113

**இராமன் வர, அவனிடம் முறையிடுதல்**

என்று, இன்ன பல பன்னி, இகல் அரக்கி அழுது இரங்கி,
பொன் துன்னும் படியகத்துப் புரள்கின்ற பொழுதகத்து,
நின்று, அந்த நதியகத்து, நிறை தவத்தின் குறை முடித்து,
வன் திண் கைச் சிலை நெடுந்தோள் மரகதத்தின் மலை வந்தான்.

வந்தானை முகம் நோக்கி, வயிறு அலைத்து, மழைக் கண்ணீர்,
செந் தாரைக் குருதியொடு செழு நிலத்தைச் சேறு ஆக்கி,
'அந்தோ! உன் திருமேனிக்கு அன்பு இழைத்த வன்பிழையால்
எந்தாய்! யான் பட்டபடி இது காண்' என்று, எதிர் விழுந்தாள்.

108. சுந்தரி - தேவ மகளிர்; 111. சதமகன் - நூறு பரிவேள்விகளைச் செய்தவனாகிய இந்திரன்; 113. கொல் ஈரும் - கொல்லனால் அராவப்பட்ட.

விரிந்து ஆய கூந்தலாள், வெய்ய வினை யாதானும்
புரிந்தாள் என்பது, தனது பொரு அரிய திருமனத்தால்
தெரிந்தான்; இன்று, இளையானே இவளை நெடுஞ் செவியொடு மூக்கு
அரிந்தான் என்பதும் உணர்ந்தான்; அவளை, 'நீயார்?' என்றான்.

அவ் உரை கேட்டு, அடல் அரக்கி, 'அறியாயோ நீ, என்னை?
தெவ் உரை என்று ஓர் உலகும் இல்லாத சீற்றத்தான்;
வெவ் இலை வேல் இராவணனும், விண் உலகம் முதல் ஆக
எவ் உலகும் உடையானுக்கு உடன்பிறந்தேன் யான்' என்றாள்.

'தாம் இருந்த தகை அரக்கர் புகல் ஒழிய, தவம் இயற்ற
யாம் இருந்த நெடுஞ் சூழற்கு என் செய வந்தீர்?' எனலும்,
'வேம் இருந்தில் எனக் கனலும் வெங் காம வெம் பிணிக்கு
மா மருந்தே! நெருநலினும் வந்திலெனோ யான்?'' என்றாள்.

' ''செங் கயல்போல் கரு நெடுங் கண், தே மரு தாமரை உறையும்
நங்கை இவர்'' என நெருநல் நடந்தவரோ நாம்?' என்ன,
'கொங்கைகளும், குழைக்காதும், கொடி மூக்கும், குறைந்து அழித்தால்,
அம் கண் அரசே! ஒருவர்க்கு அழியாதோ அழகு?' என்றாள்.

**இராமன், 'இவள் இழைத்த பிழை என்?' என இலக்குவன் விடையிறுத்தல்**

மூரல் முறுவலன், இளைய மொய்ம்பினோன் முகம் நோக்கி,
'வீர! விரைந்தனை, இவள்தன் விடு காதும், கொடி மூக்கும்,
ஈர, நினைந்து இவள் இழைத்த பிழை என்?' என்று இறை வினவ,
சூர நெடுந்தகை அவனை அடி வணங்கி, சொல்லுவான். 120

'தேட்டம்தான் வாள் எயிற்றில் தின்னவோ? தீவினையோர்
கூட்டம்தான் புறத்து உளதோ? குறித்த பொருள் உணர்ந்திலனால்;
நாட்டம்தான் எரி உமிழ, நல்லாள்மேல் பொல்லாதாள்
ஓட்டந்தாள்; அரிதின் இவள் உடன்று எழுந்தாள்' என உரைத்தான்.

**சூர்ப்பணகை இடை மறித்து உரைத்தல்**

ஏற்ற வளை வரி சிலையோன் இயம்பாமுன், இகல் அரக்கி,
'சேற்ற வளை தன் கணவன் அருகு இருப்ப, சினம் திருகி,
சூல் தவளை, நீர் உழக்கும் துறை கெழு நீர் வள நாட!
மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம்?' என்றாள். 122

117. தெவ் உரை - பகை என்ற சொல்; 118. இருந்தில் - கரி; 119. நாம் - நீர் என்னும் பொருளில் வந்துள்ளது; 120. விடு காது - தொங்கும் காது; 121. தேட்டம் - தேடுதல்; ஓட்டந்தாள் - ஓடிவிட்டாள்; 122. சேற்ற வளை - சேற்றில் உள்ள சங்கு.

'ஓடிப் போ' என்று இராமன் கடிதலும், அவள் தன்னை ஏற்குமாறு இறைஞ்சலும்

'பேடிப் போர் வல் அரக்கர் பெருங் குலத்தை ஒருங்கு அவிப்பான்
தேடிப் போந்தனம்; இன்று, தீ மாற்றம் சில விளம்பி,
வீடிப் போகாதே; இம் மெய் வனத்தை விட்டு அகல
ஓடிப் போ' என்று உரைத்த உரைகள் தந்தாற்கு, அவள் உரைப்பாள்:

'நரை திரை என்று இல்லாத நான்முகனே முதல் அமரர்
கரை இறந்தோர், இராவணற்குக் கரம் இறுக்கும் குடி என்றால்,
விரையும் இது நன்று அன்று; வேறு ஆக யான் உரைக்கும்
உரை உளது, நுமக்கு உறுதி உணர்வு உளதேல்' என்று உரைப்பாள்:

'''ஆக்க அரிய மூக்கு, உங்கை அரியுண்டாள்'' என்றுரை
நாக்கு அரியும் தயமுகனார்; நாகரிகர் அல்லாமை,
மூக்கு அரிந்து, நும் குலத்தை முதல் அரிந்தீர்; இனி, உமக்குப்
போக்கு அரிது; இவ் அழகை எல்லாம் புல்லிடையே உகுத்தீரே! 125

'வான் காப்போர், மண் காப்போர், மா நகர் வாழ் உலகம்-
தான் காப்போர், இனி தங்கள் தலை காத்து நின்று, உங்கள்
ஊன் காக்க உரியார் யார்? என்னை, உயிர் நீர் காக்கின்,
யான் காப்பென்; அல்லால், அவ் இராவணனார் உளர்!' என்றாள். 126

'காவல் திண் கற்பு அமைந்தார் தம் பெருமை தாம் கழறார்;
ஆவல் பேர் அன்பினால், அறைகின்றேன்ஆம் அன்றோ?
'''தேவர்க்கும் வலியான்தன் திருத் தங்கையாள் இவள்; ஈண்டு
ஏவர்க்கும் வலியாள்'' என்று, இளையானுக்கு இயம்பீரோ?

'மாப் போரில் புறங் காப்பேன்; வான் சுமந்து செல வல்லேன்;
தூப் போல, கனி பலவும், சுவை உடைய, தர வல்லேன்;
காப்போரைக் கைத்து என்? நீர் கருதியது தருவேன்; இப்
பூப் போலும் மெல்லியலால் பொருள் என்னோ? புகல்வீரே. 128

'குலத்தாலும், நலத்தாலும், குறித்தனவே கொணர் தக்க
வலத்தாலும், மதியாலும், வடிவாலும், மடத்தாலும்,
நிலத்தாரும், விசும்பாரும், நேரிழையார், என்னைப்போல்
சொலத்தான் இங்கு உரியாரைச் சொல்லீரோ, வல்லீரேல்? 129

'போக்கினீர் என் நாசி; போய்த்து என்? நீர் பொறுக்குவிரேல்,
ஆக்குவென் ஓர் நொடி வரையில்; அழகு அமைவென்; அருள்கூரும்
பாக்கியம் உண்டெனின், அதனால், பெண்மைக்கு ஓர் பழுது உண்டோ?
மேக்கு உயரும் நெடு மூக்கும் மடந்தையர்க்கு மிகை அன்றோ?

*124. கரம் - கப்பம், இறைப் பொருள்; 125. நாகரிகர் - கண்ணோட்டம் உடையவர்; 128. தூ - மாமிசம்; 130. நொடி வரை - நொடிப்பொழுது.*

'விண்டாரே அல்லாரோ, வேண்டாதார்? மனம் வேண்டின்,
உண்டாய காதலின், என் உயிர் என்பது உமது அன்றோ?
கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடம் அன்றோ?
கொண்டாரே கொண்டாடும் உருப் பெற்றால், கொள்ளீரோ?

'சிவனும், மலர்த் திசைமுகனும்; திருமாலும், தெறு குலிசத்து-
அவனும், அடுத்து ஒன்றாகி நின்றன்ன உருவோனே!
புவனம் அனைத்தையும், ஒரு தன் பூங் கணையால் உயிர் வாங்கும்
அவனும், உனக்கு இளையானோ? இவனேபோல் அருள் இலனால்.

பொன் உருவப் பொரு கழலீர்! புழை காண,
 மூக்கு அரிவான் பொருள் வேறு உண்டோ?
''இன் உருவம் இது கொண்டு, இங்கு இருந்துஒழியும்
 நம் மருங்கே; ஏகாள் அப்பால்;
பின், இவளை அயல் ஒருவர் பாரார்'' என்றே,
 அரிந்தீர்; பிழை செய்தீரோ?
அன்னதனை அறிந்து அன்றோ, அன்பு இரட்டி
 பூண்டது நான்? அறிவு இலேனோ? 133

'வெப்பு அழியா நெடு வெகுளி வேல் அரக்கர்
 ஈது அறிந்து வெகுண்டு நோக்கின்,
அப் பழியால், உலகு அனைத்தும், நும் பொருட்டால்
 அழிந்தன ஆம்; அறத்தை நோக்கி,
ஒப்பழியச் செய்கிலார் உயர் குலத்துத்
 தோன்றினோர்; உணர்ந்து, நோக்கி,
இப் பழியைத் துடைத்து உதவி, இனிது இருத்திர்,
 என்னொடும்' என்று, இறைஞ்சி நின்றாள். 134

இராமன் சினந்து, சூர்ப்பணகையை அச்சுறுத்தல்

'நாடு அறியாத் துயர் இழைத்த நவை அரக்கி,
 நின் அன்னை தன்னை நல்கும்
தாடகையை, உயிர் கவர்ந்த சரம் இருந்தது;
 அன்றியும், நான் தவம் மேற்கொண்டு,
தோள் தகையத் துறு மலர்த் தார் இகல் அரக்கர்
 குலம் தொலைப்பான், தோன்றி நின்றேன்;
போடு, அகல, புல் ஒழுக்கை; வல் அரக்கி!'
 என்று இறைவன் புகலும், பின்னும்: 135

134. ஒப்பழிய - ஒப்ப அழிய, ஒரு சேர மாய்ந்துபட; 135. நின் அன்னை தன்னை நல்கும் தாடகை - இராவணன் தாயாகிய கேகசியைத் தாடகை பெறுளாயினும் இராவணன் அவளைப் பாட்டி முறையில் வைத்திருந்தான்; தகைய - அழகுடைய.

'தரை அளித்த தனி நேமித் தயரதன்தன்
புதல்வர் யாம்; தாய்சொல் தாங்கி,
விரை அளித்த கான் புகுந்தேம்; வேதியரும்
மா தவரும் வேண்ட, நீண்டு
கரை அளித்தற்கு அரிய படைக் கடல் அரக்கர்
குலம் தொலைத்து, கண்டாய், பண்டை,
வரை அளித்த குல மாட, நகர் புகுவேம்;
இவை தெரிய மனக்கொள்' என்றான். 136

'''நெறித் தாரை செல்லாத நிருதர் எதிர்
நில்லாதே, நெடிய தேவர்
மறித்தார்; ஈண்டு, இவர் இருவர்; மானிடவர்''
என்னாது, வல்லைஆகின்,
வெறித் தாரை வேல் அரக்கர், விறல் இயக்கர்,
முதலினர், நீ, மிடலோர் என்று
குறித்தாரை யாவரையும், கொணருதியேல்,
நின் எதிரே கோறும்' என்றான். 137

சூர்ப்பணகை மீண்டும் வற்புறுத்துதல்

'கொல்லலாம்; மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாம்; கொற்ற முற்ற
வெல்லலாம்; அவர் இயற்றும் வினை எல்லாம்
கடக்கலாம்;—''மேல் வாய் நீங்கி,
பல் எலாம் உறத் தோன்றும் பகு வாயள்''
என்னாது, பார்த்திஆயின்,
நெல் எலாம் சுரந்து அளிக்கும் நீர் நாட!
கேள்' என்று, நிருதி கூறும்: 138

'காம்பு அறியும் தோளாளைக் கைவிடீர்;
என்னினும், யான் மிகையோ? கள்வர்
ஆம், பொறி இல், அடல் அரக்கர்அவரோடே
செருச் செய்வான் அமைந்தீர் ஆயின்,
தாம் பொறியின் பல மாயம் தரும் பொறிகள்
அறிந்து, அவற்றைத் தடுப்பென் அன்றே?
''பாம்பு அறியும் பாம்பின் கால்'' என மொழியும்
பழமொழியும் பார்க்கிலீரோ? 139

136. அளித்த - போன்ற; 137. நெறித்தாரை - நல்லொழுக்கத்தின் வழி; 138. நிருதி - அரக்கி; 139. அறியும் - போலும்; பாம்பின்கால் - பாம்பு தங்கும் இடம்.

'''உளம் கோடல் உனை இழைத்தாள் உளள் ஒருத்தி''
என்னுதியேல், நிருதரோடும்
களம் கோடற்கு உரிய செருக் கண்ணியக்கால்,
ஒரு மூவேம் கலந்தகாலை,
குளம் கோடும் என்று இதுவும் உறுகோளே?
என்று உணரும் குறிக்கோள் இல்லா
இளங்கோவோடு எனை இருத்தி, இரு கோளும்
சிறை வைத்தாற்கு இளையேன்' என்ருள். 140

'பெருங் குலா உறு நகர்க்கே ஏகும் நாள்,
வேண்டும் உருப் பிடிப்பேன்; அன்றேல்,
அருங் கலாம் உற்று இருந்தான்என்னினும் ஆம்;
இளையவன்தான், ''அரிந்த நாசி
ஒருங்கு இலா இவளோடும் உறைவெனே?''
என்பானேல், இறைவ! ''ஒன்றும்
மருங்கு இலாதவளோடும் அன்றே'', நீ,
''நெடுங் காலம் வாழ்ந்தது'' என்பாய். 141

சூர்ப்பணகை அவர்களை அச்சுறுத்தி அகலுதல்

என்றவள்மேல், இளையவன்தான், இலங்கு இலை வேல்
கடைக்கணியா, 'இவளை ஈண்டு
கொன்று களையேம்என்ருல், நெடிது அலைக்கும்;
அருள் என்கொல்? கோவே!' என்ன,
'நன்று, அதுவே ஆம் அன்றே? போகாளேல்
ஆக!' என நாதன் கூற,
'ஒன்றும் இவர் எனக்கு இரங்கார்; உயிர் இழப்பென்,
நிற்கின்' என, 'அரக்கி உன்னு, 142

'ஏற்ற நெடுங் கொடி மூக்கும், இரு காதும்,
முலை இரண்டும், இழந்தும், வாழ
ஆற்றுவனே? வஞ்சனையால், உமை உள்ள
பரிசு அறிவான் அமைந்தது அன்றே?
காற்றினிலும் கனலினிலும் கடியானை,
கொடியானை, கரனை, உங்கள்
கூற்றுவனை, இப்பொழுதே கொணர்கின்றேன்'
என்று, சலம்கொண்டு போனுள். 143

140. குளம் கோடல் - போர்க்களத்தை இரத்த வெள்ளமாகச் செய்தல்; 141. குலா - குலாவு, கொண்டாட்டம்; 143. சலம் - நெடிது நிற்கும் சினம், வயிரம்.

# 6 கரன் வதைப் படலம்

**சூர்ப்பணகை கரன்முன் விழுந்து முறையிடுதல்**

இருந்த மாக் கரன் தாள் இணையின்மிசை,
சொரிந்த சோரியள், கூந்தலள், தூம்பு எனத்
தெரிந்த மூக்கினள், வாயினள், செக்கர்மேல்
விரிந்த மேகம் என விழுந்தாள்அரோ. 1

'அழுங்கு நாள் இது' என்று, அந்தகன் ஆணையால்
தழுங்கு பேரி எனத் தனித்து ஏங்குவாள்;
முழங்கு மேகம் இடித்த வெந் தீயினுல்
புழுங்கு நாகம் எனப் புரண்டாள்அரோ. 2

வாக்கிற்கு ஒக்க, புகை முந்து வாயினுன்
நோக்கி, 'கூசலர், நுன்னை இத் தன்மையை
ஆக்கிப் போனவர் ஆர்கொல்?' என்ருன்—அவள்
மூக்கின் சோரி முழீஇக் கொண்ட கண்ணினுன். 3

'இருவர் மானிடர்; தாபதர்; ஏந்திய
வரி வில், வாள், கையர்; மன்மதன் மேனியர்;
தரும நீரர்; தயரதன் காதலர்;
செருவில் நேரும் நிருதரைத் தேடுவார். 4

'ஒன்றும் நோக்கலர் உன் வலி; ஓங்கு அறன்
நின்று நோக்கி, நிறுத்தும் நினைப்பினுர்;
''வென்றி வேற் கை நிருதரை வேர் அறக்
கொன்று நீக்குதும்'' என்று உணர் கொள்கையார். 5

'மண்ணில், நோக்க அரு வானினில், மற்றினில்,
எண்ணி நோக்குறின், யாவரும் நேர்கிலாப்
பெண்ணின் நோக்குடையாள் ஒரு பேதை, என்
கண்ணின் நோக்கி உரைப்ப அருங் காட்சியாள்; 6

'கண்டு, ''நோக்க அருங் காரிகையாள்தனைக்
கொண்டு போவன், இலங்கையர் கோக்கு'' என,
விண்டு மேல் எழுந்தேனை வெகுண்டு, அவர்
துண்டம் ஆக்கினர், மூக்கு' எனச் சொல்லினுள். 7

6 : 2. அழுங்குதல் - அழிதல்; 3. முழீஇக் கொண்ட - முழுகடிக்கப்பட்ட;
6. பெண்ணின் நோக்கு - பெண்களுக்குரிய அழகு.

**கரன் கொதித்து எழுதல்**

கேட்டனன் உரை; கண்டனன் கண்ணினால்,
தோட்ட நுங்கின் தொளை உறு மூக்கினை;
'காட்டு' என, எழுந்தான், எதிர் கண்டவர்
நாட்டம் தீய;—உலகை நடுக்குவான். 8

எழுந்து நின்று, உலகு ஏழும் எரிந்து உகப்
பொழிந்த கோபக் கனல் உக, பொங்குவான்;
' ''கழிந்து போயினர் மானிடர்'' என்னுங்கால்,
அழிந்ததோ இவ் அரும் பழி?' என்னுமால். 9

**கரனை விலக்கி, பதினான்கு வீரர்கள் போரிடச் செல்லுதல்**

'வருக, தேர்!' எனும் மாத்திரை, மாடுளோர்,
இரு கை மால் வரை ஏழினொடு ஏழ் அனார்,
ஒரு கையால் உலகு ஏந்தும் உரத்தினார்,
'தருக இப் பணி எம்வயின்தான்' என்றார். 10

சூலம், வாள், மழு, தோமரம், சக்கரம்,
கால பாசம், கதை, பொரும் கையினார்;
வேலை ஞாலம் வெருவுறும் ஆர்ப்பினார்;
ஆலகாலம் திரண்டன்ன ஆக்கையார். 11

வெம்பு கோபக் கனலர் விலக்கினார்,
'நம்பி! எம் அடிமைத் தொழில் நன்று' என,
'உம்பர்மேல் இன்று உருத்தனை போதியோ?
இம்பர்மேல் இனி யாம் உளெமோ?' என்றார், 12

'நன்று சொல்லினிர்; நான் இச் சிறார்கள்மேல்
சென்று போர் செயின், தேவர் சிரிப்பரால்;
கொன்று, சோரி குடித்து, அவர் கொள்கையை
வென்று, மீளுதிர் மெல்லியலோடு' என்றான். 13

என்னலோடும், விரும்பி இறைஞ்சினார்;
சொன்ன நாண்இலி அந்தகன் தூது என,
அன்னர் பின் படர்வார் என, ஆயினார்;
மன்னன் காதலர் வைகு இடம் நண்ணினார். 14

8. நுங்கு - இளம் பனங்காய்; 11. தோமரம் - கைவேல், உலக்கை எனவுமாம்; 13. மெல்லியல் - சீதை, சூர்ப்பணகை என்பாரும் உண்டு; 14. நாண் இலி - வெட்கமற்றவள்; ஈண்டுச் சூர்ப்பணகை.

**சூர்ப்பணகை இராமனைச் சுட்டிக் காட்டுதல்**

துமிலப் போர் வல் அரக்கர்க்குச் சுட்டினாள்,
அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்
நிமலப் பாத நினைவில் இருந்த அக்
கமலக் கண்ணனை, கையினில் காட்டினாள். 15

'எற்றுவாம் பிடித்து; ஏந்துதும்' என்குநர்,
'பற்றுவாம் நெடும் பாசத்தின்' என்குநர்,
'முற்றுவாம் இறை சொல் முறையால்' என,
சுற்றினார்—வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார். 16

**இராமன் போருக்கு எழுதல்**

ஏத்து வாய்மை இராமன், இளவலை,
'காத்தி தையலை' என்று, தன் கற்பகம்
பூத்தது அன்ன பொரு இல் தடக் கையால்,
ஆத்த நாணின் அரு வரை வாங்கினான். 17

வாங்கி, வாளொடு வாளி பெய் புட்டிலும்
தாங்கி, தாமரைக் கண்ணன், அச் சாலையை
நீங்கி, 'இவ்வழி நேர்மின், அடா!' என,
வீங்கு தோளன் மலைதலை மேயினான். 18

**அரக்க வீரர் மடிய, சூர்ப்பணகை கரனிடம் ஓடுதல்**

மழுவும், வாளும், வயங்கு ஒளி முச் சிகைக்
கழுவும், கால வெந் தீ அன்ன காட்சியார்,
எழுவின் நீள் தடக் கை எழு நான்கையும்,
தழுவும் வாளிகளால், தலம் சார்த்தினான். 19

மரங்கள்போல், நெடு வாளொடு தோள் விழ,
உரங்களான் அடர்ந்தார்; உரவோன் விடும்
சரங்கள் ஓடின தைக்க, அரக்கர்தம்
சிரங்கள் ஓடின; தீயவள் ஓடினாள். 20

**கரன் வெகுண்டு எழுதல்**

ஒளிறு வேல் கரற்கு, உற்றது உணர்த்தினாள்—
குளிறு கோப வெங் கோள் அரிமா அட,
களிறு எலாம் பட, கை தலைமேல் உற,
பிளிறி ஓடும் பிடி அன்ன பெற்றியாள். 21

15. துமிலம் - பேராரவாரம்; ஆழியான் - இராமனுடைய் குலதெய்வ மான அரங்கநகரப்பன்; 17. ஆத்த - கட்டப்பட்ட.

'அங்கு அரக்கர் அவிந்து அழிந்தார்' என,
பொங்கு அரத்தம் விழிவழிப் போந்து உக,
வெங் கரப் பெயரோன், வெகுண்டான், விடைச்
சங்கரற்கும் தடுப்ப அருந் தன்மையான். 22

'அழை, என் தேர்; எனக்கு ஆக்கு, வெம் போர்ப் படை;
உழையர் ஓடி, ஒரு நொடி ஓங்கல்மேல்,
மழையின், மா முரசு எற்றுதிர், வல்' என்றான்—
முழையின் வாள் அரி அஞ்ச முழங்குவான். 23

போர்ப் பறை கேட்டு, நாற்படை எழுதல்

பேரி ஓசை பிறத்தலும், பெட்புறு
மாரி மேகம் வரம்பு இல வந்தென,
தேரின் சேனை திரண்டது; தேவர்தம்
ஊரும், நாகர் உலகும் உலைந்தவே. 24

போர்ப் பெரும் பணை 'பொம்' என் முழக்கமா,
நீர்த் தரங்கம் நெடுந் தடந் தோள்களா,
ஆர்த்து எழுந்தது—இறுதியில், ஆர் கலிக்
கார்க் கருங் கடல் கால் கிளர்ந்தென்னவே. 25

காடு துன்றி, விசும்பு கரந்தென
நீடி, எங்கும் நிமிர்ந்த நெடுங் கொடி—
'ஓடும் எங்கள் பசி' என்று, உவந்து, எழுந்து,
ஆடுகின்ற அலகையின் ஆடவே, 26

தறியின் நீங்கிய, தாழ் தடக் கைத் துணை,
குறிகொளா, மத வேழக் குழு அனர்,
செறியும் வாளொடு வாளிடை தேய்ந்து உகும்
பொறியின், கான் எங்கும் வெங் கனல் பொங்கவே, 27

முருடு இரண்டு முழங்குறத் தாக்கு ஒலி
உருள் திரண்டு எழும் தேர் ஒலியுள் புக,
அருள் திரண்ட அருக்கன்தன்மேல், அழன்று
இருள் திரண்டு வந்து ஈண்டியதுஎன்னவே, 28

23. ஓங்கல் - யானை; 27. குறி கொளல் - ஒரு பொருளாக மதித்தல், பாகர் கூறும் குறிப்பு மொழிகளைக் கொள்ளலும் ஆம்; 28. முருடு - ஒரு வகைப் பறை; அருக்கன் - சூரியன், ஈண்டு இராமன்.

தலையில், மாசுணம், தாங்கிய தாரணி
நிலை நிலாது, முதுகை நெளிப்புற,
உலைவு இல் ஏழ் உலகத்தினும் ஓங்கிய
மலை எலாம், ஒரு மாடு தொக்கென்னவே. 29

'வல்லியக் குழாங்களோ? மழையின் ஈட்டமோ?
ஒல் இபத் தொகுதியோ? ஓங்கும் ஓங்கலோ?
அல்ல, மற்று அரிகளின் அனிகமோ?' என,
பல் பதிஞயிரம் படைக் கை வீரரே. 30

ஆளிகள் பூண்டன, அரிகள் பூண்டன,
மீளிகள் பூண்டன, வேங்கை பூண்டன,
ஞாளிகள் பூண்டன, நரிகள் பூண்டன,
கூளிகள் பூண்டன, குதிரை பூண்டன, 31

ஏற்றுஇனம் ஆர்த்தன, ஏனம் ஆர்த்தன,
காற்றுஇனம் ஆர்த்தன, கழுதை ஆர்த்தன,
தோற்றின மாத்திரத்து உலகு சூழ்வரும்
பாற்றுஇனம் ஆர்த்தன, பணிலம் ஆர்த்தன. 32

தேர்இனம் துவன்றின; சிறு கண் செம் முகக்
கார்இனம் நெருங்கின; காலின், கால் வரு
தார்இனம் குழுமின;—தடை இல் கூற்று எனப்
பேர்இனம் கடல் எனப் பெயருங்காலையே. 33

**கரன் படையினர் ஏந்திய போர்க் கருவிகள்**

மழுக்களும், அயில்களும், வயிர வாள்களும்,
எழுக்களும், தோமரத் தொகையும், ஈட்டியும்,
முழுக் கலும், முசுண்டியும், தண்டும், முத் தலைக்
கழுக்களும், உலக்கையும், காலபாசமும், 34

குந்தமும், குலிசமும், கோலும், பாலமும்,
அந்தம் இல் சாபமும், சரமும், ஆழியும்,
வெந் தொழில் வலயமும், விளங்கு சங்கமும்
பந்தமும், கப்பணப் படையும், பாசமும், 35

31. மீளி - பேய்; ஞாளி - நாய்; கூளி - பூதம்; 33. தார் இனம் - குதிரைப்படை; பேர் இனம் - பெரிய அரக்கர் கூட்டம்; 34. எழு - குத்துக் கோல்; முசுண்டி - சிறு வாள்; 35. குந்தம் - எறிகோல், சிறிய ஈட்டி; குலிசம் - வச்சிராயுதம்; பாலம் - பிண்டிபாலம் என்னும் முறுக்குத் தடி; பந்தம் - தீப்பந்தம்; கப்பணம் - இரும்பால் ஆனை நெருஞ்சி முள் வடிவில் செய்த கருவி; பாசம் - கயிறு.

ஆதியின், அருக்கனும் அனலும் அஞ்சுறும்
சோதிய, சோரியும் தூவும் துன்னிய,—
ஏதிகள் மிடைந்தன,—இமையவர்க்கு எலாம்
வேதனை கொடுத்தன, வாகை வேய்ந்தன. 36

தானைத் தலைவரும் சேனை வீரரும்

ஆயிரம் ஆயிரம் களிற்றின் ஆற்றலர்;
மா இரு ஞாலத்தை விழுங்கும் வாயினர்;
தீ எரி விழியினர்;—நிருதர் சேனையின்
நாயகர், பதின்மரோடு அடுத்த நால்வரே. 37

ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம்
கூறின ஒரு படை; குறித்த அப் படை
ஏறின ஏழினது இரட்டி என்பரால்—
ஊறின சேனையின் தொகுதி உன்னுவார். 38

உரத்தினர்; உரும் என உரறும் வாயினர்;
கரத்து எறி படையினர்; கமலத்தோன் தரும்
வரத்தினர்; மலை என, மழை துயின்று எழு
சிரத்தினர்; தருக்கினர்; செருக்கும் சிந்தையார். 39

விண் அளவிட நிமிர்ந்து உயர்ந்த மேனியர்;
கண் அளவிடல் அரு மார்பர்; காலினல்,
மண் அளவிடு நெடு வலத்தர்; வானவர்
எண் அளவிடல் அருஞ் செரு வென்று ஏறினர். 40

இந்திரன் முதலினோர் எறிந்த மாப் படை
சிந்தின தெறித்து உக, செறிந்த தோளினர்;
அந்தகன், அடி தொழுது அடங்கும் ஆணையார்;
வெந் தழல் உருவு கொண்டனைய மேனியார். 41

சூலமும், பாசமும், தொடர்ந்த செம் மயிர்ச்
சாலமும், தறுகணும், எயிறும், தாங்கினர்;
'ஆலமும் வெளிது' எனும் நிறத்தர்; ஆற்றலால்,
காலனும், 'காலன்' என்று, அயிர்க்கும் காட்சியார். 42

கழலினர்; தாரினர்; கவச மார்பினர்;
நிழலுறு பூணினர்; நெறித்த நெற்றியர்;
அழலுறு குஞ்சியர்; அமரை வேட்டு, உவந்து,
எழலுறு மனத்தினர்; ஒருமை எய்தினர். 43

38. ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம் - அறுபது லட்சம்; 40. ஏறினர் - மேம்பட்டவர்; 42. சாலம் - திரள்; 43. நிழல் - ஒளி; ஒருமை - ஒற்றுமை.

மருப்பு இரு மத களிற்று அமரர் மன்னனும்,
விருப்புறு, முகத்து எதிர் விழிக்கின், வெந்நிடும்;
உருப் பொருது உலைவுறும் உலகம் மூன்றினும்
செருப் பெறுத் தினவுறு சிகரத் தோளினர். 44

'குஞ்சரம், குதிரை, பேய், குரங்கு, கோள்அரி,
வெஞ் சினக் கரடி, நாய், வேங்கை, யாளி' என்று,
அஞ்சுற, கனல் புரை முகத்தர்; ஆர்கலி
நஞ்சு தொக்கெனப் புரை நயனத்தார்களும்— 45

எண் கையர்; எழு கையர்; ஏழும் எட்டும் ஆய்க்
கண் கனல் சொரிதரு முகத்தர்; காலினர்;
வண் கையின் வளைத்தி, உயிர் வாரி, வாயின் இட்டு
உண்கையில் உவகையர்; உலப்பு இலார்களும். 46

இயக்கரின் பறித்தன, அவுணர் இட்டன,
மயக்குறுத்து அமரரை வலியின் வாங்கின,
துயக்கு இல் சுந்தர்ப்பரைத் துரந்து வாரின,
நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின, 47

கொடி, தழை, கவிகை, வான் தொங்கல், குஞ்சரம்
படியுறு பதாகை, மீ விதானம், பல் மணி
இடையிலாது எங்கணும் இசைய மீமிசை
மிடைதலின், உலகு எலாம் வெயில் இழக்கவே. 48

**பெருந் தானையோடு கரன் இராமன் உறைவிடம் சேர்தல்**

எழுவரோடு எழுவர் ஆம், உலகம் ஏழொடு ஏழ்
தழுவிய வென்றியர், தலைவர்; தானையர்:—
மழுவினர்; வாளினர்; வயங்கு சூலத்தர்;
உழுவையோடு அரி என உடற்றும் சீற்றத்தார்; 49

வில்லினர்; வாளினர்; இதழின்மீது இடும்
பல்லினர்; மேருவைப் பறிக்கும் ஆற்றலர்;
புல்லினர் திசைதொறும்; புரவித் தேரினர்;
சொல்லின முடிக்குறும் துணிவின் நெஞ்சினர். 50

தூடணன், திரிசிராத் தோன்றல், ஆதியர்,
கோடணை முரசினம் குளிறு சேனையர்,
ஆடவர் உயிர் கவர் அலங்கல் வேலினர்,
பாடவ நிலையினர், பலரும் சுற்றினர். 51

48. தழை - மயிற்பீலிக் குடை; தொங்கல் - குஞ்சம்; 51. கோடணை - கோஷணம், ஆரவாரம்; பாடவம் - களிப்பு, திறமையுமாம்.

ஆன்று அமை எறி படை அழுவத்து ஆர்கலி,
வான் தொடர் மேருவை வளைத்ததாம் என,
ஊன்றின தேரினன், உயர்ந்த தோளினன்,
தோன்றினன் யாவரும் துணுக்கம் எய்தவே. 52

அசும்புறு மத கரி, புரவி, ஆடகத்
தசும்புறு சயந்தனம், அரக்கர் தாள், தர,
விசும்புறு தூளியால், வெண்மை மேயின—
பசும் பரி, பகலவன், பைம் பொன் தேர்அரோ. 53

வனம் துகள்பட்டன, மலையின் வான் உயர்
கனம் துகள்பட்டன, கடல்கள் தூர்ந்தன,
இனம் தொகு தூளியால்; இசைப்பது என் இனி?—
சினம் தொகு நெடுங் கடற் சேனை செல்லவே. 54

நிலமிசை, விசும்பிடை, நெருக்கலால், நெடு
மலைமிசை மலைஇனம் வருவபோல், மலைத்
தலைமிசை, தலைமிசை, தாவிச் சென்றனர்—
கொலைமிசை நஞ்சு எனக் கொதிக்கும் நெஞ்சினர். 55

வந்தது சேனை வெள்ளம், வள்ளியோன் மருங்கு—மாயா-
பந்த மா வினையம் மாளப் பற்று அறு பெற்றியோர்க்கும்
உந்த அரு நிலையது ஆகி, உடன் உறைந்து உயிர்கள்தம்மை
அந்தகர்க்கு அளிக்கும் நோய்போல், அரக்கி முன் ஆக அம்மா!

தூரியக் குரலின், வானின் முகிற் கணம் துணுக்கம்கொள்ள;
வார் சிலை ஒலியின், அஞ்சி, உரும் எலாம், மறுக்கம்கொள்ள;
ஆர்கலி, ஆர்ப்பின், உட்கி அசைவுற; அரக்கர் சேனை,
போர் வனத்து இருந்த வீரர் உறைவிடம் புக்கது அன்றே. 57

வாய் புலர்ந்து அழிந்த மெய்யின் வருத்தத்த, வழியில் யாண்டும்
ஒய்வில, நிமிர்ந்து வீங்கும் உயிர்ப்பின, உலைந்த கண்ண,
தீயவர் சேனை வந்து சேர்ந்தமை தெரிய, சென்று,
வேய் தெரிந்து உரைப்ப போன்ற—புள்ளொடு விலங்கும் அம்மா!

தூளியின் படலை வந்து தொடர்வுற, மரமும் தூறும்
தாள் இடை ஒடியும் ஓசை 'சடசட' ஒலிப்ப, கானத்து
ஆளியும் அரியும் அஞ்சி இரிதரும் அமலை நோக்கி,
மீளி மொய்ம்பினரும், 'சேனை மேல்வந்தது உளது' என்று உன்ன, 59
—

53. தசும்பு - கலசம்; சயந்தனம் - தேர்; 54. கனம் - மேகம்; 55. கொலைமிசை - கொலைத்தொழில்; 56. உந்துதல் - நீக்குதல்; 57. வேய் - ஒற்று; 59. மீளி மொய்ம்பு - மிக்க வலிமை.

**இலக்குவனைத் தடுத்து, இராமன் போருக்கு எழுதல்**

மின் நின்ற சிலையன், வீரக் கவசத்தன், விசித்த வாளன்,
பொன் நின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன், புகையும் நெஞ்சன்,
'நில்; நின்று காண்டி, யான் செய் நிலை' என, விரும்பி நேரா
முன் நின்ற பின்வந்தோனை நோக்கினன், மொழியலுற்றான்: 60

'நெறி கொள் மா தவர்க்கு, முன்னே நேர்ந்தனென்; "நிருதர் ஆவி
பறிக்குவென் யானே" என்னும் பழமொழி பழுதுறுமே,
வெறி கொள் பூங் குழலினாளை, வீரனே! வேண்டினேன் யான்,
குறிக்கொடு காத்தி; இன்னே கொல்வென், இக் குழுவை' என்னா, 61

மரம் படர் கானம் எங்கும் அதர்பட வந்த சேனை
கரன் படை என்பது எண்ணி, கரு நிறக் கமலக்கண்ணன்,
சரம் படர் புட்டில் கட்டி, சாபமும் தரித்தான்; தள்ளா
உரம் படர் தோளில் மீளாக் கவசம் இட்டு, உடைவாள் ஆர்த்தான்.

**'இப் போரினை எனக்கு அருள்க' என, இலக்குவன் மீண்டும் வேண்டுதல்**

'மீளா அருஞ் செருவில், விண்ணும் மண்ணும் என்மேல் வந்தாலும்,
நாள் உலந்து அழியும் அன்றே? நான் உனக்கு உரைப்பது என்னே?
ஆளியின் துப்பினாய்! இவ் அமர் எனக்கு அருளி நின்று, என்
தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத் துடைத்தி' என்றான்.

**இலக்குவற்கு இசையா இராமன் தானே போர்மேல் செல்லுதல்**

என்றனன் இளைய வீரன்; இசைந்திலன் இராமன், ஏந்தும்
குன்று அன தோளின் ஆற்றல் உள்ளத்தில் உணரக் கொண்டான்;
அன்றியும், அண்ணல் ஆணை மறுக்கிலன்; அங்கை கூப்பி-
நின்றனன், இருந்து கண்ணீர் நிலன் உறப் புலர்கின்றாள்பால்.

குழையுறு மதியம் பூத்த கொம்பனாள் குழைந்து சோர,
தழையுறு சாலைநின்றும், தனிச் சிலை தரித்த மேரு,
மழை என முழங்குகின்ற வாள் எயிற்று அரக்கர் காண,
முழையின்நின்று எழுந்து செல்லும் மடங்கலின், முனிந்து, சென்றான்.

**சூர்ப்பணகை, கரனுக்கு இராமனைக் காட்டுதல்**

தோன்றிய தோன்றல்தன்னைச் சுட்டினள் காட்டி, சொன்னாள்—
வான் தொடர் மூங்கில் தந்த வயங்கு வெந் தீ இது என்ன,
தான் தொடர் குலத்தை எல்லாம் தொலைக்குமா சமைந்து நின்றாள்—
'ஏன்று வந்து எதிர்ந்த வீரன் இவன், இகல் இராமன்' என்றே.

60. வடிம்பு - நுனி; 62. மீளா - நிலை பெயராத.

கரன் இராமனுடன் தானே பொருவேன் எனல்

கண்டனன், கனகத் தேர்மேல், கதிரவன் கலங்கி நீங்க,
விண்டனன் நின்ற, வென்றிக் கரன் எனும் விலங்கல் தோளான்;
'மண்டு அமர் யானே செய்து, இம் மானிடன் வலியை நீக்கி,
கொண்டனென் வாகை' என்று, படைஞரைக் குறித்துச் சொன்னான்.

' ''மானிடன் ஒருவன்; வந்த வலி கெழு சேனைக்கு, அம்மா!
கான் இடம் இல்லை'' என்னும் கட்டுரை கலந்த காலை,
யானுடை வென்றி என் ஆம்? யாவரும் கண்டு நிற்றிர்;
ஊனுடை இவனை, யானே, உண்குவென் உயிரை' என்றான். 68

தீய குறிகளைக் கண்ட அகம்பன் அறிவுரை

அவ் உரை கேட்டு வந்தான், அகம்பன் என்று அமைந்த கல்விச்
செவ்வியான் ஒருவன்; 'ஐய! செப்புவென்; செருவில் சால
வெவ்வியர் ஆதல் நன்றே; வீரரில் ஆண்மை வீர!
இவ் வயின் உள ஆம் தீய நிமித்தம்' என்று, இயம்பலுற்றான்.

'குருதி மா மழை சொரிந்தன, மேகங்கள் குமுறி;
பருதி வானவன் ஊர் வளைப்புண்டது; பாராய்,—
கருது வீர!—நின் கொடிமிசைக் காக்கையின் கணங்கள்
பொருது வீழ்வன, புலம்புவ, நிலம் படப் புரள்வ; 70

'வாளின் வாய்களை ஈ வளைக்கின்றன; வயவர்
தோளும் நாட்டமும் இடம் துடிக்கின்றன; தூங்கி,
மீளி மொய்ம்புடை இவுளி வீழ்கின்றன; விரவி,
ஞாளியோடு நின்று, உளைக்கின்ற நரிக் குலம் பலவால்; 71

'பிடி எலாம் மதம் பெய்திட, பெருங் கவுள் வேழம்
ஒடியுமால் மருப்பு; உலகமும் கம்பிக்கும்; உயர் வான்
இடியும் வீழ்ந்திடும்; எரிந்திடும் பெருந்திசை; எவர்க்கும்
முடியின் மாலைகள் புலாலொடு முழு முடை நாறும். 72

'இனைய ஆதலின், ''மானிடன் ஒருவன்'' என்று, இவனை
நினையலாவது ஒன்று அன்று அது;—நீதியோய்!—நின்ற
வினை எலாம் செய்து வெல்லல் ஆம் தன்மையன் அல்லன்;
புனையும் வாகையாய்! பொறுத்தி, என் உரை' எனப் புகன்றான். 73

68. கட்டுரை - உறுதிப் பேச்சு; 69. வெவ்வியர் ஆதல் - கடுமையுடையராதல்; 70. ஊர் - பரிவேடம், சந்திர சூரியர்களைச் சுற்றித் தோன்றும் வட்டம்; 72. முடை - தீய நாற்றம்.

அறிவுரையைக் கரன் புறக்கணிக்க, படைகள் போர்மேல் செல்லல்

உரைத்த வாசகம் கேட்டலும், உலகு எலாம் உலையச்
சிரித்து, 'நன்று நம் சேவகம்! தேவரைத் தேய
அரைத்த அம்மி ஆம் அலங்கு எழில் தோள், அமர் வேண்டி
இரைத்து வீங்குவ, மானிடற்கு எளியவோ?' என்ருன்.* 74

என்னும் மாத்திரத்து, எறி படை இடி என இடியா,
மன்னர் மன்னவன் மதலையை, வளைந்தன—வனத்து
மின்னும் வால் உளை மடங்கலை, முனிந்தன வேழம்
துன்னிஞலென, சுடு சினத்து அரக்கர்தம் தொகுதி. 75

படை எலாம் இராம பாணத்தால் அழிதல்

வளைந்த காலையில், வளைந்தது, அவ் இராமன் கை வரி வில்;
விளைந்த போரையும் ஆவதும் விளம்புதும்; விசையால்,
புளைந்த பாய் பரி புரண்டன; புகர் முகப் பூட்கை
உளைந்த, மால் வரை உரும் இடி பட ஒடிந்தென்ன. 76

சூலம் அற்றன; அற்றன சுடர் மழு; தொகை வாள்
மூலம் அற்றன; அற்றன முரண் தண்டு; பிண்டி-
பாலம் அற்றன; அற்றன பகழி; வெம் பகு வாய்
வேலும் அற்றன; அற்றன வில்லொடு பல்லம். 77

தொடி துணிந்தன தோளொடு; தோமரம் துணிந்த;
அடி துணிந்தன கட களிறு; அச்சொடு, நெடுந் தேர்,
கொடி துணிந்தன; குரகதம் துணிந்தன; குல மா
முடி துணிந்தன; துணிந்தன, முளையொடு முசலம். 78

கருவி மாவொடு, கார் மதக் கைம்மலைக் கணத்து ஊடு-
உருவி மாதிரத்து ஓடின, சுடு சரம்; உதிரம்
அருவி மாலையின் தேங்கினது; அவனியில் அரக்கர்
திரு இல் மார்பகம் திறந்தன; துறந்தன சிரங்கள். 79

ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், கோடி, என்று உணரா,
துன்று பத்திய, இராகவன் சுடு சரம் துரப்ப,
சென்று, பத்திரத் தலையின மலை திரண்டென்ன,
கொன்று, பத்தியில் குவித்தன பிணப் பெருங் குன்றம். 80

74. சேவகம் - வீரம்; 76. புளைந்த - துளைபட்ட; 77. பல்லம் - ஒரு வகைக் கணை; 78. முளை-தண்டாயுதம்; முசலம்-உலக்கை; 80. பத்திரம்-அம்பு.

காடு கொண்ட கார் உலவைகள் கதழ் எரி கதுவ,
சூடு கொண்டன எனத் தொடர் குருதி மீத்தோன்ற,
ஆடுகின்றன அறுகுறை; அயில் அம்பு, விண்மேல்
ஓடுகின்றன, உயிரையும் தொடர்வன ஒத்த. 81

கைகள் வாளொடு களம் பட, கழுத்து அற, கவச
மெய்கள் போழ்பட, தாள் விழ, வெருவிட, நிருதர்
செய்ய மாத் தலை சிந்திட, திசை உறச் சென்ற—
தையலார் நெடு விழி எனக் கொடியன சரங்கள். 82

மாரி ஆக்கிய வடிக் கணை, வரை புரை நிருதர்
பேர் யாக்கையின் பெருங் கரை வயின்தொறும் பிறங்க,
ஏரி ஆக்கின; ஆறுகள் இயற்றின; நிறையச்
சோரி ஆக்கின; போக்கின, வனம் எனும் தொன்மை. 83

அலை மிதந்தன குருதியின் பெருங் கடல், அரக்கர்
தலை மிதந்தன; நெடுந் தடி மிதந்தன; தடக் கைம்-
மலை மிதந்தன; வாம் பரி மிதந்தன; வயப் போர்ச்
சிலை மிதந்தன; மிதந்தன, கொடி நெடுந் தேர்கள். 84

ஆய காலையில், அனல் விழித்து ஆர்த்து இகல் அரக்கர்,
தீய வார் கணை முதலிய தெறு சினப் படைகள்,
மேய மால் வரை ஒன்றினை வளைத்தன மேகம்
தூய தாரைகள் சொரிவன ஆம் என, சொரிந்தார். 85

சொரிந்த பல் படை துணிபட, துணிபட, சரத்தால்
அரிந்து போந்தன சிந்திட, திசை திசை அகற்றி,
நெரிந்து பார்மகள் நெளிவுற, வனம் முற்றும் நிறைய,
விரிந்த செம் மயிர்க் கருந் தலை மலை என வீழ்த்தான். 86

கவந்தபந்தங்கள் களித்தன, குளித்த கைம்மலைகள்,
சிவந்து பாய்ந்த வெங் குருதியில்; திருகிய சினத்தால்
நிவந்த வெந் தொழில் நிருதர்தம் நெடு நிணம் தெவிட்டி,
உவந்த, வன் கழுது; உயிர் சுமந்து உளுக்கியது உம்பர். 87

மருள் தரும் களி வஞ்சனை வளை எயிற்று அரக்கர்,
கருடன் அஞ்சுறு, கண் மணி காகமும் கவர்ந்த;
இருள் தரும் புரத்து இழுதையர் பழுது உரைக்கு எளிதோ?
அருள் தரும் திறத்து அறன் அன்றி, வலியது உண்டாமோ? 88

81. சூடுகொள்ளல் - எரிதல்; அறுகுறை - கவந்தம்; 82. விழி - கண்; கூர்மை, இலக்கில் தைத்து வருத்துதல் ஆகியன விழிக்கும் அம்புக்கும் பொதுத் தன்மை; 84. தடி - தசைகள்; 87. கழுது - பேய்; 88. புரம் - உடல்; இழுதையர் - வஞ்சகர்; பழுது - தீங்கு.

பல் ஆயிரம் இருள் கீறிய பகலோன் என ஒளிரும்
வில்லாளனை முனியா, வெயில் அயில் ஆம் என விழியா,—
கல் ஆர் மழை, கண மா முகில் கடைநாள், விழுவனபோல்,—
எல்லாம் ஒரு தொடையா உடன் எய்தார்; வினை செய்தார்.

எறிந்தார் என, எய்தார் என, நினைந்தார் என, எறிய
அறிந்தார் என, அறியாவகை, அயில் வாளியின் அறுத்தான்;
செறிந்தாரையும், பிரிந்தாரையும், செறுத்தாரையும், சினத்தால்
மறிந்தாரையும், வலித்தாரையும், மடித்தான்—சிலை பிடித்தான். 90

வானத்தன; கடலின் புற வலயத்தன; மதி சூழ்
மீனத்தன; மிளிர் குண்டல வதனத்தன மிடல் வெங்
கானத்தன; மலையத்தன; திசை சுற்றிய கரியின்
தானத்தன—காகுத்தன சரம் உந்திய சிரமே. 91

மண் மேலன; மலை மேலன; மழை மேலன; மதி தோய்
விண் மேலன; நெடு வேலையின் மேல் கீழன; மிடலோர்
புண் மேலன;—குருதிப் பொழி திரை ஆறுகள் பொங்க,
திண் மேருவை நகு மார்பினை உருவித் திரி சரமே. 92

பொலந் தாரினர், அனலின் சிகை பொழி கண்ணினர், எவரும்
வலம் தாங்கிய வடி வெம் படை விடுவார், சர மழையால்
உலந்தார்; உடல் கடலோடு உற, உலவா உடல் உற்றார்;
'அலந்தார் நிசிசரர் ஆம்' என, இமையோர் எடுத்து ஆர்த்தார்.

ஈரல் செறி கமலத்தன, இரதத் திரள் புளினம்,
வீரக் கரி முதலைக் குலம், மிதக்கின்றன உதிக்கும்
பாரக் குடர் மிடை பாசடை படர்கின்றன பலவா,
மூரித் திரை உதிரக் குளம் முழுகிக் கழுது எழுமே. 94

அழைத்தார் சிலர், அயர்த்தார் சிலர், அழிந்தார் சிலர், கழிந்தார்;
உழைத்தார் சிலர், உயிர்த்தார் சிலர், உருண்டார் சிலர், புரண்டார்;
குழைத் தாழ் திரைக் குருதிக் கடல் குளித்தார் சிலர், கொலை வாய்
மழைத் தாரைகள் படப் பாரிடை மடிந்தார் சிலர், உடைந்தார். 95

படைத் தலைவர் பதினால்வரும் பொருதல்

உடைந்தார்களை நகைசெய்தனர், உருள் தேரினர், உடன்ஆய்
அடைந்தார், படைத் தலைவீரர்கள் பதினால்வரும்; அயில் வாள்
மிடைந்தார், நெடுங் கடல்-தானையர், மிடல் வில்லினர், விரிநீர்
கடைந்தார் வெருவுற மீது எழு கடு ஆம் எனக் கொடியார்.

90. மறிந்தார் - மீண்டும் வந்தார்; 92. மிடலோர் - வலிய வீரர்.

நாகத் தனி ஒரு வில்லியை, நளிர் முப்புரர், முன் நாள்
மாகத்திடை வளைவுற்றனர் என, வள்ளலை மதியார்,
ஆகத்து எழு கனல் கண்வழி உக, உற்று எதிர் அழன்றார்;
மேகத்தினை நிகர் வில்லியை வளைத்தார், செரு விளைத்தார். 97

எய்தார் பலர்; எறிந்தார் பலர்; மழு ஓச்சினர்; எழுவால்
பொய்தார் பலர்; புடைத்தார் பலர்; கிடைத்தார் பலர்; பொருப்பால்
பெய்தார் மழை; பிதிர்த்தார் எரி;—பிறை வாள் எயிற்று அரக்கர்—
வைதார் பலர்; தெழித்தார் பலர்; மலை ஆம் என வளைத்தார்.

தேர் பூண்டன விலங்கு யாவையும், சிலை பூண்டு எழு கொலையால்,
பார் பூண்டன; மத மா கரி பலி பூண்டன; பரிமா
தார் பூண்டன, உடல் பூண்டில தலை; வெங்கதிர் தழிவந்து
ஊர் பூண்டன பிரிந்தாலென, இரிந்தார் உயிர் உலைந்தார். 99

மால் பொத்தின மறவோர் உடல் மழை பொத்தின; வழி செம்-
பால் பொத்தின, நதியின் கிளர் படி பொத்தின; படர் வான்-
மேல் பொத்தின குழு விண்ணவர் விழி பொத்தினர்; விரை வெங்
கால் பொத்தினர் நமன் தூதுவர், கடிது உற்று, உயிர் கவர்வார். 100

பேய் ஏறின செரு வேட்டு எழு பித்து ஏறினர் பில வாய்,
நாய் ஏறின; தலைமேல் நெடு நரி ஏறின; எரி கால்
வாய் ஏறின வடி வாளியின் வான் ஏறினர், வந்தார்;
தீ ஏறு, இகல் அரி ஏறு என, முகில் ஏறு எனச் செறிந்தார்.

தலை சிந்தின; விழி சிந்தின, தழல் சிந்தின; தரைமேல்
மலை சிந்தினபடி சிந்தின, வரி சிந்துரம்; மழைபோல்,
சிலை சிந்தின கணை சிந்தின, திசை சிந்தின; திசையூடு
உலை சிந்தின, பொறி சிந்தின, உயிர் சிந்தின, உடலம். 102

படைப் பெருந் தலைவரும், படைத்த தேர்களும்,
உடைத் தடம் படைகளும், ஒழிய, உற்று எதிர்
விடைத்து அடர்ந்து எதிர்ந்தவர், வீரன் வாளியால்,
முடைத்த வெங் குருதியின் கடலில் மூழ்கினர். 103

சுற்றுற நோக்கினர், தொடர்ந்த சேனையில்
'அற்றில தலை' எனும், ஆக்கை கண்டிலர்;
தெற்றினர் எயிறுகள்; திருகினர் சினம்;
முற்றினர் இராமனை, முடுகு தேரினர். 104

97. நாகவில்லி - மேரு மலையாகிய வில்லையுடைய சிவன்; 98. பொய் தார் - தாக்கினர்; கிடைத்தார் - நெருங்கினர்; 100. செம்பால் - குருதி; பொத்துதல் - நிறைதல், மறைதல், மூடுதல்; பொத்தினர் - ஒத்தவர்கள்; 102. சிந்துரம் - யானை.

ஏழ்-இரு தேரும் வந்து, இமைப்பின் முன்பு, இடை
சூழ்வன, கணைகளின் துணிய நூறினான்;
ஆழியும், புரவியும், ஆளும் அற்று, அவை
ஊழி வெங் கால் எறி ஓங்கல் ஒத்தவே. 105

அழிந்தன தேர்; அவர், அவனி கீண்டு உக,
இழிந்தனர்; வரி சிலை எடுத்த கையினர்;
ஒழிந்திலர்; சரங்களை உருமின் ஏறு எனப்
பொழிந்தனர், பொழி கனல் பொடிக்கும் கண்ணினார். 106

நூறிய சரம் எலாம் நுறுங்க வாளியால்
ஈறுசெய்து, அவர் சிலை ஏழொடு ஏழையும்
ஆறினோடு ஆறும் ஓர் இரண்டும் அம்பினால்,
கூறுசெய்து, அமர்த் தொழிற் கொதிப்பை நீக்கினான். 107

வில் இழந்து, அனைவரும் வெகுளி மீக்கொள,
கல் உயர் நெடு வரை கடிதின் ஏந்தினார்,
ஒல்லையில் உருத்து, உயர் விசும்பில் ஓங்கி நின்று,
எல் உயர் பொறி உக, எறிதல் மேயினார். 108

கலைகளின் பெருங் கடல் கடந்த கல்வியான்
இலை கொள் வெம் பகழி ஏழ்-இரண்டும் வாங்கினான்;
கொலை கொள் வெஞ் சிலையொடு புருவம் கோட்டினான்;
மலைகளும் தலைகளும் விழுந்த, மண்ணினே. 109

**படைத் தலைவர்கள் மாய, திரிசிரா போர்மேல் வருதல்**

படைத் தலைத் தலைவர்கள் படலும், பல் படை
புடைத்து, அடர்ந்து, எதிர் அழல் புரையும் கண்ணினர்,
கிடைத்தனர், அரக்கர்கள்; கீழும் மேலும் மொய்த்து
அடைத்தனர் திசைகளை; அமரர் அஞ்சினார். 110

முழங்கின பெரும் பணை, மூரி மால் கரி;
முழங்கின வரி சிலை முடுகு நாண் ஒலி;
முழங்கின சங்கொடு புரவி; மொய்த்து உற
முழங்கின அரக்கர்தம் முகிலின் ஆர்ப்புஅரோ. 111

வெம் படை, நிருதர், வீச விண்ணிடை மிடைந்த; வீரன்
அம்பு இடை அறுக்க, சிந்தி அற்றன படும்' என்று, அஞ்சி,
உம்பரும் இரியல்போனார்; உலகு எலாம் உலைந்து சாய்ந்த;
கம்பம் இல் திசையில் நின்ற களிறும், கண் இமைத்த அன்றே.†

107. நுறுங்க - பொடியாக; 111. உற - மிகவும்; 112. கம்பம் - அசைவு.

அத் தலைத் தானையன், அளவு இல் ஆற்றலன்,
முத் தலைக் குரிசில், பொன் முடியன்; முக்கணான்
கைத்தலைச் சூலமே அனைய காட்சியான்;
வைத் தலைப் பகழியால் மழை செய் வில்லினான். 113

அன்னவன் நடுவுற, 'ஊழி ஆழி ஈது'
என்ன, வந்து, எங்கணும் இரைத்த சேனையுள்,
தன் நிகர் வீரனும், தமியன், வில்லினன்,
துன் இருள் இடையது ஓர் விளக்கின் தோன்றினான். 114

**சேனையோடு திரிசிராவை இராமன் எதிர்த்துப் பொருதல்**

ஓங்கு ஒளி வாளினன், உருமின் ஆர்ப்பினன்,
வீங்கிய கவசத்தன், வெய்ய கண்ணினன்—
ஆங்கு—அவன் அணிக்கு எதிர் அணிகள் ஆக, நேர்
தாங்கினன் இராமனும், சரத்தின் தானையால். 115

தாள் இடை அற்றன; தலையும் அற்றன;
தோள் இடை அற்றன; தொடையும் அற்றன;
வாள் இடை அற்றன; மழுவும் அற்றன;
கோள் இடை அற்றன; குடையும் அற்றன. 116

கொடியொடு கொடுஞ்சு இற, புரவிக் கூட்டு அற,
படியொடு படிந்தன, பருத்த தேர்; பணை
நெடியவன் கட கரி புரண்ட, நெற்றியின்
இடியொடு முறிந்து வீழ் சிகரம் என்னவே. 117

'அற்றன சிரம்' என அறிதல் தேற்றலர்,
கொற்ற வெஞ் சிலை சரம் கோத்து வாங்குவார்
இற்றவர்; இருதவர் எழுந்து, விண்ணினைப்
பற்றின மழை எனப் படை வழங்குவார். 118

கேடகத் தடக் கைய, கிரியின் தோற்றத்த,
ஆடகக் கவசத்த, கவந்தம் ஆடுவ—
பாடகத்து அரம்பையர் மருள, பல்வித
நாடகத் தொழிலினை நடிப்ப ஒத்தவே. 119

113. தலைத் தானை - சிறந்த படை; வை - கூர்மை; 117. கொடுஞ்சு - தேர்த்தட்டின் மேற்கட்டி; புரவிக் கூட்டு - குதிரைகளைப் பூட்டும் நுகம், குதிரைகளின் தொடர்ச்சியும் ஆம்; 119. பாடகம் - ஒருவகைக் காலணி.

கவரி வெண் குடை எனும் நுரைய; கைம்மலைச்
சுவரன; கவந்தம் ஆழ் சுழிய; தண் துறை
பவர் இனப்படு மணி குவிக்கும் பண்ணைய;
உவரியைப் புதுக்கின—உதிர-ஆறுஅரோ. 120

சண்ட வெங் கடுங் கணை தடிய, தாம், சில
திண் திறல் வளை எயிற்று அரக்கர், தேவர் ஆய்,
வண்டு உழல் புரி குழல் மடந்தைமாரொடும்
கண்டனர், தம் உடல்-கவந்த நாடகம். 121

ஆய் வளை மகளிரொடு அமரர் ஈட்டத்தர்,—
தூய வெங் கடுங் கணை துணித்த தங்கள் தோள்,
பேய் ஒருதலை கொள, பிணங்கி, வாய்விடா
நாய் ஒருதலை கொள—நகையுற்றார், சிலர். 122

தெரி கணை மூழ்கலின் திறந்த மார்பினர்,
இரு வினை கடந்து போய் உம்பர் எய்தினார்,
'நிருதர்தம் பெரும் படை நெடிது; நின்றவன்
ஒருவன்' என்று, உள்ளத்தின் உலைவுற்றார், சிலர். 123

கைக் களிறு அன்னவன் பகழி, கண்டகர்
மெய்க் குலம் வேரொடும் துணித்தி வீழ்த்தின—
மைக் கரு மனத்து ஒரு வஞ்சன், மாண்பு இலன்,
பொய்க் கரி கூறிய கொடுஞ் சொல் போலவே. 124

அஞ்சிறை அறுபதம் அடைந்த கீடத்தைத்
தஞ்சு எனத் தன் மயம் ஆக்கும் தன்மைபோல்,
வஞ்சகத்து அரக்கரை வளைத்து, வள்ளல்தான்,
செஞ் சரத் தூய்மையால், தேவர் ஆக்கினான். 125

'வலம் கொள் போர், மானிடன் வலிந்து கொன்றமை,
அலங்கல் வேல் இராவணற்கு அறிவிப்பாம்' என,
சலம்கொள் போர் அரக்கர்தம் உருக்கள் தாங்கின,
இலங்கையின் உற்ற, அக் குருதி ஆறுஅரோ. 126

120. பவர் - செறிவு; 122. அமரர் ஈட்டத்தர் - போரில் இறந்து தேவர் கூட்டத்தில் சேர்ந்த அரக்கர்; 124. குலம் வேரொடும் துணித்து வீழ்த்தல் பகழிக்கும் கொடுஞ் சொற்கும் பொதுத்தன்மை; 125. அறுபதம் - குளவி; கீடம் - புழு; தஞ்சு - எளிது; தன் மயம் ஆக்கும் தன்மை- கொட்டிக் கொட்டி தன் வடிவமாகச் செய்யும் தன்மை; 126. உருக்கள் - உடல்கள்.

திரிசிரா இரு சிரம் இழத்தல்

சூழ்ந்த தார் நெடும் படை, பகழி சுற்றுறப்
போழ்ந்து உயிர் குடித்தலின், புரளப் பொங்கினான்,
தாழ்ந்திலன்; முத் தலைத் தலைவன், சோரியின்
ஆழ்ந்த தேர், அம்பரத்து ஓட்டி ஆர்க்கின்றான். 127

ஊன்றிய தேரினன் உருமின் வெங் கணை,
வான் தொடர் மழை என, வாய்மை யாவர்க்கும்
சான்று என நின்ற அத் தரும மன்னவன்
தோன்றல்தன் திரு உரு மறையத் தூவினான். 128

தூவிய சரம் எலாம் துணிய, வெங் கணை
ஏவினன் இராமனும்; ஏவி, ஏழ்-இரு
பூ இயல் வாளியால், பொலம் கொள் தேர் அழித்து,
ஆவி, வெம் பாகனை, அழித்து மாற்றினான். 129

அன்றியும், அக் கணத்து, அமரர் ஆர்த்து எழ,
பொன் தெரி வடிம்புடைப் பொரு இல் வாளியால்,
வன் தொழில் தீயவன் மகுட மாத் தலை
ஒன்று ஒழித்து, இரண்டையும் உருட்டினான்அரோ. 130

திரிசிரா ஒரு தலையுடன் பொருதல்

தேர் அழிந்து, அவ் வழி, திரிசிரா எனும்
பேர் அழிந்ததனினும், மறம் பிழைத்திலன்;
வார் அழிந்து உமிழ் சிலை, வான நாட்டுழிக்
கார் இழிந்தாலென, கணை வழங்கினான். 131

ஏற்றிய நுதலினன் இருண்ட கார் மழை
தோற்றிய வில்லொடும் தொடர, மீமிசைக்
காற்று இடை அழித்தென, கார்முகத்தையும்
மாற்ற அரும் பகழியால், அறுத்து மாற்றினான். 132

வில் இழந்தனன்என்னினும், விழித்த வாள் முகத்தின்
எல் இழந்திலன்; இழந்திலன் வெங் கதம்; இடிக்கும்
சொல் இழந்திலன்; தோள் வலி இழந்திலன்; சொரியும்
கல் இழந்திலன்; இழந்திலன் கறங்கு எனத் திரிதல். 133

ஆள் இரண்டு-நூறு உள என, அந்தரத்து ஒருவன்
மூள் இரும் பெரு மாய வெஞ் செரு முயல்வானை,
தாள் இரண்டையும் இரண்டு வெங் கணைகளால் தடிந்து,
தோள் இரண்டையும் இரண்டு வெங் கணைகளால் துணித்தான்.

127. தார் - அணி வகுப்பு; 128. தரும மன்னவன் - தயரதன்.

திரிசிரா மடிய, நிருதர் சேனை சிதறி ஓடல்

அற்ற தாளொடு தோளிலன், அயில் எயிறு இலங்க,
பொற்றை மா முழைப் புலாலுடை வாயினின், புகுந்து
பற்ற ஆதரிப்பான்தனை நோக்கினன்; பரிவான்,
கொற்ற வார் சரத்து, ஒழிந்தது ஓர் சிரத்தையும் குறைத்தான்.

திரிசிரா எனும் சிகரம் மண் சேர்தலும், செறிந்த
நிருதர் ஓடினர், தூடணன் விலக்கவும் நில்லார்;—
பருதி வாளினர், கேடகத் தடக் கையர், பரந்த
குருதி நீரிடை, வார் கழல் கொழுங் குடர் தொடக்க. 136

கணத்தின் மேல் நின்ற வானவர் கை புடைத்து ஆர்ப்ப,
பணத்தின்மேல் நிலம் குழியுற, கால் கொடு பதைப்பார்,
நிணத்தின்மேல் விழுந்து அழுந்தினர் சிலர்; சிலர், நிவந்த
பிணத்தின்மேல் விழுந்து உருண்டனர், உயிர் கொடு பிழைப்பார். 137

வேய்ந்த வாளொடு வேல் இடை மிடைந்தன வெட்ட,
ஒய்ந்துளார் சிலர்; உலந்தனர் உதிர நீர் ஆற்றில்
பாய்ந்து, கால் பறித்து அழுந்தினர் சிலர்; சிலர் பயத்தால்
நீந்தினர், நெடுங் குருதிஅம் கடல் புக்கு நிலையார். 138

மண்டி ஓடினர் சிலர், நெடுங் கட கரி வயிற்றுப்
புண் திறந்த மா முழையிடை வாளொடும் புகுவார்,
தொண்டை நீங்கிய கவந்தத்தை, 'துணைவ! நீ எம்மைக்
''கண்டிலேன்'' எனப் புகல்' என, கை தலைக் கொள்வார். 139

கச்சும் வாளும் தம் கால் தொடர்ந்து ஈர்வன காணார்,
அச்சம் என்பது ஒன்று உருவு கொண்டாலென, அழிவார்;
உச்ச வீரன் கைச் சுடு சரம் நிருதர் நெஞ்சு உருவத்
தச்சு நின்றன கண்டனர், அவ் வழித் தவிர்ந்தார். 140

புறங்கொடுப்பாரைத் தேற்றி, தூடணன் வீர உரை கூறல்

அனையர் ஆகிய அரக்கரை, '''ஆண் தொழிற்கு அமைந்த
வினையம் நீங்கிய மனித்தரை வெருவன்மின்'' என்னு,
நினையும் நான் உமக்கு உரைப்பதும் உண்டு' என, நின்றே,
துணையும் வாம் பரித் தேரினன் தூடணன் சொன்னன். 141

135. பொற்றை - மலை; வாயினின் - வாயினுல்; புகுந்து - தன்மேல் விழுந்து; 136. தொடக்க - தடுக்க; 137. கணம் - கூட்டம்; 138. வேய்ந்த - அலங்காரமாகத் தரித்த; 140. கச்சு - அரைப்பட்டிகை; உச்சம் - உயர்வு; 141. ஆண் தொழில் - போர்த்தொழில்.

'வச்சை ஆம் எனும் பயம் மனத்து உண்டு என வாழும்
கொச்சை மாந்தரைக் கோல் வளை மகளிரும் கூசார்;
நிச்சயம் எனும் கவசம்தான் நிலைநிற்பது அன்றி,
அச்சம் என்னும் ஈது ஆர் உயிர்க்கு அருந் துணை ஆமோ? 142

'பூ அராவு வேல் புரந்தரனோடுதான், பொன்று
மூவரோடுதான், முன் நின்று முட்டிய முனையில்
ஏவர் ஓடினர் இராக்கதர்? நுமக்கு இடைந்து ஓடும்
தேவரோடு கற்றறிந்துளிரோ? மனம் திகைத்தீர்! 143

'இங்கு ஓர் மானிடற்கு, இத்தனை வீரர்கள், இடைந்தீர்;
உம் கை வாளொடு போய் விழுந்து, ஊர் புகலுற்றீர்;
கொங்கை மார்பிடைக் குளிப்புறக் களிப்புறு கொழுங் கண்
நங்கைமார்களைப் புல்லுதிரோ? நலம் நுகர்வீர்! 144

'செம்பு காட்டிய கண் இணை பால் எனத் தெளிந்தீர்!
வெம்பு காட்டிடை நுழைதொறும், வெரிந் உறப் பாய்ந்த
கொம்பு காட்டுதிரோ, தட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதிரோ, குல மங்கையர்க்கு? அம்மா! 145

'ஏக்கம் இங்கு இதன்மேலும் உண்டோ? இகல் மனிதன்
ஆக்கும் வெஞ் சமத்து, ஆண்மை அவ் அமரர்க்கும் அரிதாத்
தாக்க அரும் புயத்து உம் குலத் தலைமகன் தங்கை
மூக்கொடு அன்றி, நும் முதுகொடும் போம் பழி முயன்றீர். 146

'ஆர வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ? அயில் வேல்
வீர வாள் கொழு என மடுத்து உழுதிரோ?—வெறிப் போர்த்
தீர வாழ்க்கையின் தெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீர வாட் கையீர்!—எங்ஙனம் வாழ்திரோ? விளம்பீர்.' 147

**தூடணன் எதிர்த்து வர, இராமன் எதிர்த்தல்**

என்று, தானும், தன் எறி கடற் சேனையும், 'இறை, நீர்
நின்று காண்டிர் என் நெடுஞ் சிலை வலி' என நேராச்
சென்று தாக்கினன்; தேவரும் மருள்கொண்டு திகைத்தார்;
'நன்று! காத்தி' என்று, இராமனும் எதிர் செல நடந்தான்.

142. வச்சை - வசை; கொச்சை - இழிவு; 145. செம்பு காட்டிய - சினத்தால் செம்பின் நிறத்தைக் காட்டிய; பால் எனத் தெளிதல் - அச்சத்தால் பால் போல வெளுத்தல்; 146. ஏக்கம் - இழிவு; 147. ஆர வாழ்க்கை - முத்து முதலியவற்றை விற்று வாழும் வாழ்க்கை.

ஊடு அறுப்புண்ட, மொய் படை; கையொடும் உயர்ந்த
கோடு அறுப்புண்ட, குஞ்சரம்; கொடிஞ்சொடு கொடியின்
காடு அறுப்புண்ட, கால் இயல் தேர்; கதிர்ச் சாலி
சூடு அறுப்புண்ட எனக் கழுத்து அறுப்புண்ட, துரகம். 149

துருவி ஓடின, உயிர் நிலை, சுடு சரம், துரந்த;
கருவி ஓடின, கச்சையும் கவசமும் கழல;
அருவி ஓடின என அழி குருதி ஆறு ஒழுக,
உருவி ஓடின, கேடகத் தட்டொடும் உடலம். 150

ஆய்ந்த கங்கபத்திரங்கள் புக்கு, அரக்கர்தம் ஆவி
தோய்ந்த; தோய்வு இலாப் பிறை முகச் சரம் சிரம் துமித்த;
காய்ந்த வெஞ் சரம் நிருதர்தம் கவச மார்பு உருவப்
பாய்ந்த; வஞ்சகர் இதயமும் பிளந்தன, பல்லம். 151

தூடணன் விடு சுடு சரம் யாவையும் துணியா,
மாடு நின்றவர் வழங்கிய படைகளும் மாற்றா
ஆடல் கொண்டனன், அளப்ப அரும் பெரு வலி அரக்கர்
கூடி நின்ற அக் குரை கடல் வறள்படக் குறைத்தான். 152

ஆர்த்து எழுந்தனர் வானவர்; அரு வரை மரத்தோடு
ஈர்த்து எழுந்தன, குருதியின் பெரு நதி; இராமன்
தூர்த்த செஞ் சரம் திசைதொறும் திசைதொறும் தொடர்ந்து,
போர்த்த வெஞ் சினத்து அரக்கரைப் புரட்டின, புவியில். 153

தோன்றும் மால் வரைத் தொகை எனத் துவன்றிய நிணச் சேறு
ஆன்ற பாழ் வயிற்று அலகையைப் புகல்வது என்? அமர் வேட்டு
ஊன்றினர் எலாம் உலந்தனர்; ஒல்லையில் ஒழிந்தார்;
கான்ற இன் உயிர் காலனும் கவர்ந்து, மெய்ம்மறந்தான். 154

களிறு, தேர், பரி, கடுத்தவர் முடித் தலை, கவந்தம்,
ஒளிறு பல் படை, தம் குலத்து அரக்கர்தம் உடலம்,
வெளிறு சேர் நிணம், பிறங்கிய அடுக்கலின் மீதாக்
குளிறு தேர் கடிது ஓட்டினன் தூடணன், கொதித்தான். 155

அறம் கொளாதவர் ஆக்கைகள் அடுக்கிய அடுக்கல்
பிறங்கி நீண்டன, கணிப்பு இல; பெருங் கடு விசையால்,
கறங்கு போன்றுளதுஆயினும், பிணப் பெருங் காட்டில்
இறங்கும், ஏறும்; அத் தேர் பட்டது யாது என இசைப்பாம்?

151 கங்கபத்திரம், பிறைமுகச்சரம், சரம், பல்லம் ஆகியவை அம்பு வகைகள்; 152. ஆடல் - வெற்றி; 155. கடுத்தவர் - சினந்த அரக்கர்; வெளிறு - வெண்ணிறம்.

அரிதின் எய்தினன்—ஐ-ஐந்து கொய் உளைப் பரியால்
உருளும் ஆழியது ஒரு தனித் தேரினன், மேகத்து
இருளை நீங்கிய இந்துவின் பொலிகின்ற இராமன்
தெருளும் வார் கணைக் கூற்று எதிர், ஆவி சென்றென்ன. 157

தூடணன் மாய்தல்

சென்ற தேரையும், சிலையுடை மலை எனத் தேர்மேல்
நின்ற தூடணன்தன்னையும் நெடியவன் நோக்கி,
'நன்று-நன்று, நின் நிலை!' என, அருள், இறை நயந்தான்
என்ற காலத்து, அவ் வெய்யவன் பகழி மூன்று எய்தான். 158

தூர வட்ட எண் திசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார எட்டினோடு இரண்டினில் ஒன்று பார் புரக்கப்
பேர விட்டவன், நுதல் அணி ஓடையின் பிறங்கும்,
வீர பட்டத்தில் பட்டன, விண்ணவர் வெருவ. 159

'எய்த காலமும் வலியும் நன்று' என நினைத்து, இராமன்,
செய்த சேயொளி முறுவலன், கடுங் கணை தெரிந்தான்;
நொய்தின், அங்கு அவன் நொறில் பரித் தேர் பட நூறி,
கையில் வெஞ் சிலை அறுத்து, ஒளிர் கவசமும் கடிந்தான். 160

தேவர் ஆர்த்து எழ, முனிவர்கள் திசைதொறும் சிலம்பும்
ஓவு இல் வாழ்த்து ஒலி கார்க் கடல் முழக்கு என ஓங்க,
'கா அடா இது, வல்லையேல், நீ' என, கணை ஒன்று
ஏவினான்; அவன் எயிறுடை நெடுந் தலை இழந்தான். 161

கரன் வெகுண்டு, பெரும் படையுடன் போருக்கு எழுதல்

தம்பி தலை அற்ற படியும், தயரதன் சேய்
அம்பு படையைத் துணிபடுத்ததும், அறிந்தான்,
வெம்பு படை விற் கை விசயக் கரன் வெகுண்டான்—
கொம்பு தலை கட்டிய கொலைக் கரியொடு ஒப்பான். 162

அந்தகனும் உட்கிட, அரக்கர் கடலோடும்
சிந்துரம், வயப் புரவி, தேர், திசை பரப்பி,
இந்துவை வளைக்கும் எழிலிக் குலம் என, தான்
வந்து, வரி விற் கை மத யானையை வளைத்தான். † 163

159. எட்டு - எண்திசை யானைகள்; இரண்டு - ஆதி கூர்மம், ஆதிசேடன்; ஒன்று - ஆதிசேடன், அதாவது அவன் கூறுபாடாகிய பாதுகை, எட்டுத் திசைகளிலும் எட்டு யானைகளும், நடுவில் ஆதிசேடனும், அதன் கீழ் ஆதி கூர்மமும் இருந்து பூமியைக் காப்பதாகக் கூறுவது கவி மரபு; 163. சிந்துரம் - யானை.

அடங்கல் இல் கொடுந் தொழில் அரக்கர், அவ் அனந்தன்
படம் கிழிதர, படிதனில், பலவிதப் போர்,
கடம் கலுழ் தடங் களிறு, தேர், பரி, கடாவி,
தொடங்கினர்; நெடுந்தகையும் வெங் கணை துரந்தான். 164

துடித்தன கடக் கரி; துடித்தன பரித் தேர்;
துடித்தன முடித் தலை; துடித்தன தொடித் தோள்;
துடித்தன மணிக் குடர்; துடித்தன தசைத் தோல்;
துடித்தன கழல்-துணை; துடித்தன இடத் தோள். 165

வாளின் வனம், வேலின் வனம், வார் சிலை வனம், திண்
தோளின் வனம், என்று இவை துவன்றி, நிருதப் பேர்
ஆளின் வனம் நின்றதனை, அம்பின் வனம் என்னும்
கோளின் வன வன் குழுவினின், குறைபடுத்தான். 166

தான் உருவு கொண்ட தருமம் தெரி சரம்தான்
மீன் உருவும்; மேருவை விரைந்து உருவும்; மேல் ஆம்
வான் உருவும்; மண் உருவும்; 'வாள் உருவி வந்தார்
ஊன் உருவும்' என்னும் இது உணர்த்தவும் உரித்தோ? 167

அன்று இடை வளைந்தவர் குலங்களொடு அடங்கச்
சென்று உலைவுறும்படி, தெரிந்து கணை சிந்த,
மன்றிடை நலிந்து வலியோர்கள் எளியோரைக்
கொன்றனர், நுகர்ந்த பொருளின், கடிது கொன்ற 168

கடுங் கரன் எனப் பெயர் படைத்த கழல் வீரன்,
அடங்கலும் அரக்கர் அழிவுற்றிட, அழன்றான்;
ஒடுங்கல் இல் நிணக் குருதி ஓதம்அதில் உள்ளான்
நெடுங் கடலில் மந்தரம் என, தமியன் நின்றான். 169

**இராமன் முன் கரன் எதிர்ப்படல்**

செங் கண் எரி சிந்த, வரி வில் பகழி சிந்த,
பொங்கு குருதிப் புணரியுள், புகையும் நெஞ்சன்—
கங்கமொடு காகம் மிடைய, கடலின் ஓடும்
வங்கம் எனல் ஆயது ஒரு தேரின்மிசை—வந்தான். 170

செறுத்து, இறுதியில் புவனி தீய எழு தீயின்,
மறத்தின் வயிரத்து ஒருவன் வந்து அணுகும் முந்தை,
கறுத்த மணிகண்டர் கடவுட்சிலை கரத்தால்
இறுத்தவனும், வெங் கணை தெரிந்தனன், எதிர்ந்தான். 171

166. வனம் - முன்னவை மூன்றும் தொகுதி, பின்னது அழகு, கோள் - கொலைத்தொழில்; 169. ஓதம் - வெள்ளம்; 170. கங்கம் - கழுகு.

தீ உருவ, கால் விசைய, செவ்வியன, வெவ் வாய்
ஆயிரம் வடிக் கணை அரக்கர்பதி எய்தான்;
தீ உருவ, கால் விசைய, செவ்வியன, வெவ் வாய்
ஆயிரம் வடிக் கணை இராமனும் அறுத்தான். 172

ஊழி எரியின் கொடிய பாய் பகழி ஒன்பான்,
ஏழ் உலகினுக்கும் ஒரு நாயகனும், எய்தான்;
சூழ் சுடர் வடிக் கணை அவற்று எதிர் தொடுத்தே,
ஆழி வரி விற் கரனும், அன்னவை அறுத்தான். 173

கள்ள வினை மாய அமர் கல்வியின் விளைத்தான்;
வள்ளல் உருவைப் பகழி மாரியின் மறைத்தான்;
உள்ளம் உலைவுற்று, அமரர் ஓடினர் ஒளித்தார்;
வெள் எயிறு இதழ்ப் பிறழ, வீரனும் வெகுண்டான். 174

**இராமன் பிடித்த வில் ஒடிதலும் வானவர் ஏங்கி அஞ்சுதலும்**

'முடிப்பென் இன்று, ஒரு மொய் கணையால்' என,
தொடுத்து நின்று, உயர் தோள் உற வாங்கினன்;
பிடித்த திண் சிலை, பேர் அகல் வானிடை
இடிப்பின் ஓசை பட, கடிது இற்றதே. 175

வெற்றி கூறிய வானவர், வீரன் வில்
இற்ற போது, துணுக்கம் உற்று ஏங்கினர்;
மற்று ஓர் வெஞ் சிலை இன்மை மனக் கொளா,
'அற்றதால் எம் வலி' என, அஞ்சினர். 176

**வருணன் கொடுத்த வில்லை இராமன் பெறுதல்**

என்னும் மாத்திரத்து, ஏந்திய கார்முகம்
சின்னம் என்றும், தனிமையும், சிந்தியான்;
மன்னர் மன்னவன் செம்மல், மரபினால்,
பின் உறத் தன் பெருங் கரம் நீட்டினன். 177

கண்டு நின்று, கருத்து உணர்ந்தான் என,
அண்டர் நாதன் தடக் கையில், அத் துணை,
பண்டு போர் மழுவாளியைப் பண்பினால்
கொண்ட வில்லை, வருணன் கொடுத்தனன். 178

172. உருவ - உருவம் உடையவை; 177. மரபு - போரில் கைப்படை அற்ற நிலையில் பணியாளன் பக்கம் கையை நீட்டி வேண்டும் படைகளைப் பெறும்முறை; 178. பண்பு - வீரப்பாடு.

கொடுத்த வில்லை, அக் கொண்டல் நிறத்தினன்
எடுத்து வாங்கி, வலம் கொண்டு, இடக் கையில்
பிடித்த போது, நெறி பிழைத்தோர்க்கு எலாம்
துடித்தவால், இடக் கண்ணொடு தோளுமே. 179

**இராமனும் கரனும் எதிர் எதிர் பொருதல்**

ஏற்றி நாண், இமையாமுன் எடுத்து, அது,
கூற்றினும் குனிக்க, குனித்து, எதிர்
ஆற்றினன்அவன் ஆழிஅம் தேர், சரம்
நூற்றினல், நுண் பொடிபட, நூறினன். 180

எந்திரத் தடந் தேர் இழந்தான்; இழந்து,
அந்தரத்திடை ஆர்த்து எழுந்து, அம்பு எலாம்
சுந்தரத் தனி வில்லிதன் தோள் எனும்
மந்தரத்தில் மழையின் வழங்கினன். 181

தாங்கி நின்ற தயரத ராமனும்,
தூங்கு தூணியிடைச் சுடு செஞ் சரம்
வாங்குகின்ற வலக் கை ஓர் வாளியால்,
வீங்கு தோளொடு பாரிடை வீழ்த்தினன். 182

வலக் கை வீழ்தலும், மற்றைக் கையால் வெற்றி
உலக்கை, வானத்து உரும் என, ஓச்சினன்;
இலக்குவற்கு முன் வந்த இராமனும்
விலக்கினன், ஒரு வெங் கதிர் வாளியால். 183

விராவரும் கடு வெள் எயிறு இற்றபின்,
அரா அழன்றது அனைய தன் ஆற்றலால்
மரா மரம் கையில் வாங்கி வந்து எய்தினன்;
இராமன் அங்கு ஓர் தனிக் கணை ஏவினன். 184

வரம் அரக்கன் படைத்தலின், மாயையின்,
உரமுடைத் தன்மையால், உலகு ஏழையும்
பரம் முருக்கிய பாவத்தினல், வலக்
கரம் என, கரன் கண்டம் உற்றான்அரோ. 185

180. குனிக்க - அஞ்சும்படி; குனித்து - வளைத்து; 185. பரம் - மிகுதி; முருக்கிய - அழித்த.

கரன் மடிய, வானவர் மகிழ்தல்

ஆர்த்து எழுந்தனர், ஆடினர், பாடினர்,
தூர்த்து அமைந்தனர், வானவர் தூய் மலர்;
தீர்த்தனும் பொலிந்தான், கதிரோன் திசை
போர்த்த மென் பனி போக்கியது என்னவே. 186

இராமன் சீதையை அணுகுதல்

முனிவர் வந்து முறை முறை மொய்ப்புற,
இனிய சிந்தை இராமனும் ஏகினன்,
அனிக வெஞ் சமத்து ஆர் உயிர் போகத் தான்
தனி இருந்த உடல் அன்ன, தையல்பால். 187

விண்ணின் நீங்கிய வெய்யவர் மேனியில்
புண்ணின் நீரும் பொடிகளும் போய் உக,
அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினர். 188

மூத்தம் ஒன்றில், முடிந்தவர் மொய் புண்ணீர்
நீத்தம் ஓடி, நெடுந் திசை நேர் உற
கோத்த வேலைக் குரல் என, வானவர்
ஏத்த, வீரன் இனிது இருந்தான் அரோ. 189

சூர்ப்பணகை அழுது புலம்பி, இலங்கைக்கு ஏகுதல்

இங்கு நின்றது உரைத்தும்: இராவணன்
தங்கை தன் கை, வயிறு தகர்த்தனள்;
கங்குல் அன்ன கரனைத் தழீஇ, நெடும்
பொங்கு வெங் குருதிப் புரண்டாள்அரோ. 190

'ஆக்கினேன் மனத்து ஆசை; அவ் ஆசை என்
மூக்கினோடு முடிய, முடிந்திலேன்;
வாக்கினால், உங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கினேன்; கொடியேன்' என்று போயினள். 191

அலங்கல் வேற் கை அரக்கரை ஆசு அறக்
குலங்கள் வேர்அறுப்பான் குறித்தாள், உயர்
கலங்கு சூறை வன் போர் நெடுங் கால் என,
இலங்கை மா நகர் நொய்தின் சென்று எய்தினள். 192

189. மூத்தம் - முகூர்த்தம்; 192. ஆசு அற - பற்றுக்கோடு இன்றி.

# 7 சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம்

### சூர்ப்பணகை வரும்பொழுது, இராவணன் இருந்த நிலை

இரைத்த நெடும் படை அரக்கர் இறந்ததனை
மறந்தனள், போர் இராமன் துங்க
வரைப் புயத்தினிடைக் கிடந்த பேர் ஆசை
மனம் கவற்ற, ஆற்றுள் ஆகி,
திரைப் பரவைப் பேர் அகழித் திண்
நகரில் கடிது ஓடி, 'சீதை தன்மை
உரைப்பென்' எனச் சூர்ப்பணகை வர,
இருந்தான் இருந்த பரிசு உரைத்தும் மன்னோ. 1

நிலை இலா உலகினிடை நிற்பனவும்
நடப்பனவும் நெறியின் ஈந்த
மலரின்மேல் நான்முகற்கும் வகுப்பு அரிது,
நுனிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல்
உலைவு இலா வகை இழைத்த தருமம் என,
நினைந்த எலாம் உதவும் தச்சன்
புலன் எலாம் தெரிப்பது, ஒரு புனை மணி
மண்டபம்அதனில் பொலிய மன்னோ, 2

புலியின் அதள் உடையானும், பொன்னுடை
புனைந்தானும், பூவினானும்
நலியும் வலத்தார் அல்லர்; தேவரின் இங்கு
யாவர், இனி நாட்டல் ஆவார்?
மெலியும் இடை, தடிக்கும் முலை, வேய் இளந் தோள்,
சேயரிக் கண், வென்றி மாதர்
வலிய நெடும் புலவியினும் வணங்காத
மகுட நிரை வயங்க மன்னோ, 3

வண்டு அலங்கு நுதல் திசைய வயக் களிற்றின்
மருப்பு ஒடிய அடர்த்த பொன்-தோள்
விண் தலங்கள் உற வீங்கி, ஓங்கு உதய
மால் வரையின் விளங்க, மீதில்
குண்டலங்கள், குல வரையை வலம்வருவான்
இரவி கொழுங் கதிர் சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டும், நால்-ஐந்து ஆய்ப்
பொலிந்த என வயங்க மன்னோ, 4

7: 2. புலன் - அறிவு.

வாள் உலாம் முழு மணிகள் வயங்கு ஒளியின்
தொகை வழங்க, வயிரக் குன்றத்
தோள் எலாம் படி சுமந்த விட அரவின்
பட நிரையின் தோன்ற, ஆன்ற
நாள் எலாம் புடை தயங்க, நாம நீர்
இலங்கையில் தான் நலங்க விட்ட
கோள் எலாம் கிடந்த நெடுஞ் சிறை அன்ன
நிறை ஆரம் குலவ மன்னோ. 5

ஆய்வு அரும் பெரு வலி அரக்கர் ஆதியோர்
நாயகர் நளிர் மணி மகுடம் நண்ணலால்,
தேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து, செஞ் சுடர்
ஆய் மணிப் பொலன் கழல் அடி நின்று ஆர்ப்பவே, 6

மூவகை உலகினும் முதல்வர் முந்தையோர்,
ஓவலர் உதவிய பரிசின் ஓங்கல்போல்,
தேவரும் அவுணரும் முதலினோர், திசை
தூவிய நறு மலர்க் குப்பை துன்னவே. 7

இன்னபோது இவ் வழி நோக்கும் என்பதை
உன்னலர், கரதலம் சுமந்த உச்சியர்,
மின் அவிர் மணி முடி விஞ்சை வேந்தர்கள்
துன்னினர், முறை முறை துறையில் சுற்றவே, 8

மங்கையர் திறத்து ஒரு மாற்றம் கூறினும்,
தங்களை ஆம் எனத் தாழும் சென்னியர்,
அங்கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர்,
சிங்க ஏறு என, திறல் சித்தர் சேரவே. 9

அன்னவன் அமைச்சரை நோக்கி, ஆண்டு ஒரு
நல் மொழி பகரினும் நடுங்கும் சிந்தையர்,
'என்னைகொல் பணி?' என இறைஞ்சுகின்றனர்.
கின்னரர், பெரும் பயம் கிடந்த நெஞ்சினர். 10

பிரகர நெடுந் திசைப் பெருந் தண்டு ஏந்திய
கரதலத்து அண்ணலைக் கண்ணின் நோக்கிய
நரகினர் ஆம் என, நடுங்கும் நாவினர்,
உரகர்கள், தம் மனம் உலைந்து சூழவே,† 11

5. வயங்குதல், தயங்குதல், குலவுதல் என்பன விளங்குதல் என்னும் பொருள் தருவன; நாள் - நட்சத்திரம்; கோள் - கிரகம்; ஆரம் - சன்னவீரம் என்னும் இரத்தின மாலை; 8. துறை - அவரவர்க்கு வகுத்த தானம்; 11. பிரகரம் - அடி, ஈண்டு தண்டித்தல்; நெடுந் திசை - தென் திசை; அண்ணல் - பெரியோன், இயமன்; உரகர்கள் - நாகராசர்கள்.

திசை உறு கரிகளைச் செற்று, தேவனும்
வசையுறக் கயிலையை மறித்து, வான் எலாம்
அசைவுறப் புரந்தரன் அடர்த்த தோள்களின்
இசையினைத் தும்புரு இசையின் ஏத்தவே. 12

சேண் உயர் நெறி முறை திறம்பல் இன்றியே
பாணிகள் பணி செய, பழுது இல் பண் இடை
வீணையின் நரம்பிடை விளைத்த தேமறை,
வாணியின், நாரதன், செவியின் வார்க்கவே. 13

மேகம் என் துருத்தி கொண்டு, விண்ணவர் தருவும் விஞ்சை
நாகமும் சுரந்த தீந் தேன் புனலொடும் அளாவி, நவ்வித்
தோகையர் துகிலில் தோயும் என்பது ஓர் துணுக்கத்தோடும்
சீகர மகர வேலைக் காவலன், சிந்த மன்னோ,† 14

நறை மலர்த் தாதும் தேனும், நளிர் நெடு மகுட கோடி
முறை முறை அறையச் சிந்தி முரிந்து உகும் மணியும் முத்தும்,
தறையிடை உகாதமுன்னம் தாங்கினன் தழுவி வாங்கி,
துறைதொறும் தொடர்ந்து நின்று, சமீரணன் துடைப்ப மன்னோ,† 15

மின்னுடை வேத்திரக் கையர், மெய் புகத்
துன் நெடுங் கஞ்சுகத் துகிலர், சோர்விலர்,
பொன்னொடு வெள்ளியும், புரந்தராதியர்க்கு
இன் இயல் முறை முறை இருக்கை ஈயவே,† 16

சூலமே முதலிய துறந்து, சுற்றிய
சேலையால் செறிய வாய் புதைத்த செங்கையன்,
தோலுடை நெடும் பணை துவைக்குந்தோறு எலாம்,
காலன் நின்று, இசைக்கும் நாள் கடிகை கூறவே,† 17

நயம் கிளர் நான நெய் அளாவி, நந்தல் இல்
வியன் கருப்பூரம் மென் பஞ்சின் மீக்கொளீஇ,
கயங்களில் மரை மலர்க் காடு பூத்தென,
வயங்கு எரிக் கடவுளும், விளக்கம் மாட்டவே. 18

12. தேவன் - சிவன்; தும்புரு - இசைக்கலை வல்ல ஒரு கந்தருவன்; 14. துருத்தி - நீர் தூவும் கருவி, பீச்சாங் குழல்; சீகரம் - துளி; மகரம் - சுறுமீன்; வேலைக் காவலன் - வருணன்; 15. சமீரணன் - வாயு தேவன்; 16. வேத்திரம் - பிரம்பு; பொன் - வியாழன், தேவகுரு; வெள்ளி - சுக்கிரன், அசுர குரு; 17. சேலை - ஆடை; 18. நயம் - நன்மை.

அதிசயம் அளிப்பதற்கு அருள் அறிந்து, நல்
புதிது அலர் கற்பகத் தருவும், பொய் இலாக்
கதிர் நெடு மணிகளும், கறவை ஆன்களும்,
நிதிகளும், முறை முறை நின்று, நீட்டவே, 19

குண்டலம் முதலிய குலம் கொள் பேர் அணி
மண்டிய பேர் ஒளி வயங்கி வீசலால்,
'உண்டுகொல் இரவு, இனி உலகம் ஏழினும்?
எண் திசை மருங்கினும் இருள் இன்று' என்னவே, 20

கங்கையே முதலிய கடவுட் கன்னியர்
கொங்கைகள் சுமந்து இடை கொடியின் ஒல்கிட,
செங் கையில் அரிசியும் மலரும் சிந்தினர்,
மங்கல முறை மொழி கூறி, வாழ்த்தவே, 21

ஊருவில் தோன்றிய உயிர் பெய் ஓவியம்
காரினில் செருக்கிய கலாப மஞ்ஞைபோல்,
வார் விசிக் கருவியோர் வகுத்த பாணியின்,
நாரியர், அரு நடம் நடிப்ப, நோக்கியே, 22

இருந்தனன்—உலகங்கள் இரண்டும் ஒன்றும், தன்
அருந் தவம் உடைமையின், அளவு இல் ஆற்றலின்
பொருந்திய இராவணன், புருவக் கார்முகக்
கருந் தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே. 23

சூர்ப்பணகையைக் கண்ட இலங்கை மாந்தர் துயரம்

தங்கையும், அவ் வழி, தலையில் தாங்கிய
செங் கையள், சோரியின் தாரை சேந்து இழி
கொங்கையள், மூக்கிலள், குழையின் காதிலள்,
மங்குலின் ஒலி படத் திறந்த வாயினள், 24

முடையுடை வாயினள், முறையிட்டு, ஆர்த்து எழு
கடையுகக் கடல் ஒலி காட்டக் காந்துவாள்,
குட திசைச் செக்கரின் சேந்த கூந்தலாள்,
வட திசை வாயிலின் வந்து தோன்றினாள். 25

19. அதிசயம் - மிகுதி; மணி - சிந்தாமணி முதலிய இரத்தினங்கள்; கறவை ஆன்கள் - காமதேனுக்கள்; நிதி - சங்க நிதி, பதும நிதி; 22. வார் விசிக் கருவியோர் - மத்தளக்காரர்; 23. கண்ணின் வெள்ளம் - கண்ணின் பார்வை மிகுதி.

தோன்றலும், தொல் நகர் அரக்கர் தோகையர்
ஏன்று எதிர், வயிறு அலைத்து, இரங்கி ஏங்கினார்;
மூன்று உலகு உடையவன் தங்கை மூக்கு இலள்,
தான் தனியவள் வர, தரிக்க வல்லரோ? 26

பொருக்கென நோக்கினர், புகல்வது ஓர்கிலர்,
அரக்கரும் இரைத்தனர்; அசனி ஆம் எனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்து, கண்களில்
நெருப்பு எழ விழித்து, வாய் மடித்து, நிற்கின்றார். 27

'இந்திரன் மேலதோ? உலகம் ஈன்ற பேர்
அந்தணன் மேலதோ? ஆழியானதோ?
சந்திரமௌலிபால் தங்குமேகொலோ,
அந்தரம்?' என்று நின்று அழல்கின்றார் சிலர். 28

'செப்புறற்கு உரியவர் தெவ்வர் யார் உளர்?
முப் புறத்து உலகமும் அடங்க மூடிய
இப் புறத்து அண்டத்தோர்க்கு இயைவதுஅன்று இது;
அப் புறத்து அண்டத்தோர் ஆர்?' என்றார் சிலர். 29

'என்னையே! ''இராவணன் தங்கை'' என்றபின்,
''அன்னையே'' என்று, அடி வணங்கல் அன்றியே,
உன்னவே ஒண்ணுமோ, ஒருவரால்? இவள்
தன்னையே அரிந்தனள், தான்' என்றார் சிலர். 30

'போர் இலான் புரந்தரன், ஏவல் பூண்டனன்;
ஆர் உலாம் நேமியான், ஆற்றல் தோற்றுப்போய்
நீரினான்; நெருப்பினான், பொருப்பினான்; இனி
ஆர் கொலாம் ஈது?' என, அறைகின்றார் சிலர். 31

'சொல்-பிறந்தார்க்கு இது துணிய ஒண்ணுமோ?
''இற்பிறந்தார்தமக்கு இயைவ செய்திலள்;
கற்பு இறந்தாள்'' என, கரன்கொலாம் இவள்
பொற்பு அறையாக்கினன்போல்?'' என்றார் சிலர். 32

'தத்து உறு சிந்தையர், தளரும் தேவர் இப்
பித்து உற வல்லரே? பிழைப்பு இல் சூழ்ச்சியார்,
முத் திறத்து உலகையும் முடிக்க எண்ணுவார்,
இத் திறம் புணர்த்தனர்' என்கின்றார் சிலர். 33

26. எதிர் ஏன்று - எதிர்சென்று; 28. அந்தரம் - தீமை; 32. சொல் - பிறந்தார் - புகழ் உண்டாகப் பெற்ற மகளிர்; 33. தத்து - தடுமாற்றம்.

'இனி ஒரு கற்பம் உண்டுஎன்னின் அன்றியே,
வனை கழல் வயங்கு வாள் வீரர் வல்லரோ?
பனி வரும் கானிடைப் பழிப்பு இல் நோன்புடை
முனிவரர் வெகுளியின் முடிபு' என்றார் சிலர். 34

கரை அரு திரு நகர்க் கருங் கண் நங்கைமார்
நிரை வளைத் தளிர்க் கரம் நெரித்து நோக்கினர்;
பிரை உறு பால் என, நிலையின் பின்றிய
உரையினர், ஒருவர்முன் ஒருவர் ஓடினார். 35

முழவினில், வீணையில், முரல் நல் யாழினில்,
தழுவிய குழலினில், சங்கில், தாரையில்,
எழு குரல் இன்றியே, என்றும் இல்லது ஓர்
அழு குரல் பிறந்தது, அவ் இலங்கைக்கு அன்றுஅரோ. 36

கள்ளுடை வள்ளமும், களித்த தும்பியும்,
உள்ளமும், ஒரு வழிக் கிடக்க ஓடினார்;—
வெள்ளமும் நாண் உற விரிந்த கண்ணினார்—
தள்ளுறும் மருங்கினர், தழீஇக் கொண்டு ஏகினார். 37

நாந்தக உழவர்மேல் நாடும் தண்டத்தர்,
காந்திய மனத்தினர், புலவி கைம்மிகச்
சேந்த கண் அதிகமும் சிவந்து நீர் உக,
வேந்தனுக்கு இளையவள் தாளில் வீழ்ந்தனர். 38

பொன்-தலை மரகதப் பூகம் நேர்வு உறச்
சுற்றிய மணிவடம் தூங்கும் ஊசலின்
முற்றிய ஆடலில் முனிவுற்று ஏங்கினார்,
சிற்றிடை அலமரத் தெருவு சேர்கின்றார். 39

எழு என, மலை என, எழுந்த தோள்களைத்
தழுவிய வளைத் தளிர் நெகிழ, தாமரை
முழு முகத்து இரு கயல் முத்தின் ஆலிகள்
பொழிதர, சிலர் உளம் பொருமி விம்முவார். 40

'நெய்ந் நிலைய வேல் அரசன், நேருநரை இல்லான்,
இந் நிலை உணர்ந்த பொழுது, எந் நிலையம்?' என்னா,
மைந் நிலை நெடுங் கண் மழை வான் நிலையது ஆக,
பொய்ந்நிலை மருங்கினர் புலம்பினர், புரண்டார். 41

34. கற்பம் - காலத்தின் பேரெல்லை; 35. பின்றிய - வேறுபட்ட; 37. தும்பி - வண்டு; வெள்ளம் - கடல்; 38. நாந்தகம் - வாள்; 40. தளிர் - தளிர் போலும் கை.

மனந்தலை வரும் கனவின் இன் சுவை மறந்தார்;
கனம் தலை வரும் குழல் சரிந்து, கலை சோர,
நனந் தலைய கொங்கைகள் ததும்பிட, நடந்தார்;—
அனந்தர் இள மங்கையர்—அழுங்கி அயர்கின்றார். 42

'அங்கையின் அரன் கயிலை கொண்ட திறல் ஐயன்
தங்கை நிலை இங்கு இதுகொல்?' என்று, தளர்கின்றார்;
கொங்கை இணை செங் கையின் மலைந்து,—குலை கோதை
மங்கையர்கள்—நங்கை அடி வந்து விழுகின்றார். 43

'இலங்கையில் விலங்கும் இவை எய்தல் இல, என்றும்,
வலங் கையில் இலங்கும் அயில் மன்னன் உளன் என்னு;
நலம் கையில் அகன்றதுகொல், நம்மின்?' என, நைந்தார்;
கலங்கல் இல் கருங் கண் இணை வாரி கலுழ்கின்றார். 44

**இராவணன் அடிகளில் சூர்ப்பணகை விழுதல்**

என்று, இனைய வன் துயர் இலங்கைநகர் எய்த,
நின்றவர் இருந்தவரொடு ஓடு நெறி தேட,
குன்றின் அடி வந்து படி கொண்டல் என, மன்னன்
பொன் திணி கருங் கழல் விழுந்தனள், புரண்டாள். 45

மூடினது இருட் படலம் மூஉலகும் முற்ற;
சேடனும் வெருக்கொடு சிரத் தொகை நெளித்தான்;
ஆடின குலக் கிரி; அருக்கனும் வெயர்த்தான்;
ஓடின திசைக் கரிகள்; உம்பரும் ஒளித்தார். 46

விரிந்த வலயங்கள் மிடை தோள் படர, மீதிட்டு
எரிந்த நயனங்கள் எயிறின் புறம் இமைப்ப,
நெரிந்த புருவங்கள் நெடு நெற்றியினை முற்ற,
திரிந்த புவனங்கள்; வினை, தேவரும், அயர்த்தார். 47

தென் திசை நமன்தனொடு தேவர் குலம் எல்லாம்,
'இன்று, இறுதி வந்தது நமக்கு' என, இருந்தார்,
நின்று உயிர் நடுங்கி, உடல் விம்மி, நிலை நில்லார்,
ஒன்றும் உரையாடல் இலர், உம்பரினொடு இம்பர். 48

42. நனந் தலைய - அடி பரந்த.

**இராவணன், 'இது புரிந்தார் யாவர்?' எனல்**

மடித்த பில வாய்கள்தொறும், வந்து புகை முந்த,
துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப,
கடித்த கதிர் வாள் எயிறு மின் கஞல, மேகத்து
இடித்த உரும் ஒத்து உரறி, 'யாவர் செயல்?' என்றான். 49

'கானிடை அடைந்து புவி காவல் புரிகின்றார்;
மீனுடை நெடுங் கொடியினேன் அனையர்; மேல் கீழ்
ஊனுடை உடம்பு உடைமையோர் உவமை இல்லா
மானிடர்; தடிந்தனர்கள் வாள் உருவி' என்றாள். 50

**இராவணன் மீண்டும் சூர்ப்பணகையை வினவல்**

'செய்தனர்கள் மானிடர்' என, திசை அனைத்தும்
எய்த, நகை வந்தது; எரி சிந்தின, கண் எல்லாம்;
'நொய்து அவர் வலித் தொழில்; நுவன்ற மொழி ஒன்றோ?
பொய் தவிர்; பயத்தை ஒழி; புக்க புகல்' என்றான். 51

**இராம-இலக்குவரை அவள் வருணித்தல்**

'மன்மதனை ஒப்பர், மணி மேனி; வட மேருத்
தன் எழில் அழிப்பர், திரள் தாளின் வலிதன்னால்;
என், அதனை இப்பொழுது இசைப்பது? உலகு ஏழின்
நல் மதம் அழிப்பர், ஓர் இமைப்பின், நனி, வில்லால். 52

'வந்தனை முனித்தலைவர்பால் உடையர்; வானத்து
இந்துவின் முகத்தர்; எறி நீரில் எழு நாளக்
கந்த மலரைப் பொருவு கண்ணர்; கழல், கையர்;
அந்தம் இல் தவத் தொழிலர்; ஆர் அவரை ஒப்பார்? 53

'வற்கலையர்; வார் கழலர்; மார்பின் அணி நூலர்;
விற் கலையர்; வேதம் உறை நாவர்; தனி மெய்யர்;
உற்கு அலையர்; உன்னை ஓர் துகள்-துணையும் உன்னார்;
சொற் கலை எனத் தொலைவு இல் தூணிகள் சுமந்தார். 54

'மாரர் உளரே இருவர், ஓர் உலகில் வாழ்வார்?
வீரர் உளரே, அவரின் வில் அதனின் வல்லார்?
ஆர் ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள், ஐயா?
ஓர் ஒருவரே இறைவர் மூவரையும் ஒப்பார். 55

49. சுறுக்கொள - கருகித் தீய நாற்றம் உண்டாக; 50. மேல் - விண்ணுலகு; கீழ் - மண்ணுலகு. 51. ஒன்றோ? - உண்மையானதோ? 54. உற்கு அலையர் - உனக்கு அஞ்சாதவர்கள்.

' ''ஆறு மனம் அஞ்சினம், அரக்கரை'' எனச் சென்று
ஏறு நெறி அந்தணர் இயம்ப, ''உலகு எல்லாம்
வேறும்'' எனும் நுங்கள் குலம், ''வேரொடும் அடங்கக்
கோறும்'' என, முந்தை ஒரு சூளுறவு கொண்டார். 56

'தராவலய நேமி உழவன், தயரதப் பேர்ப்
பராவ அரு நலத்து ஒருவன், மைந்தர்; பழி இல்லார்;
விராவ அரு வனத்து, அவன் விளம்ப, உறைகின்றார்;
இராமனும் இலக்குவனும் என்பர், பெயர்' என்றாள். 57

**இராவணன் தன்னைத் தானே பழித்துக் கூறுதல்**

'மருந்து அனைய தங்கை மணி நாசி வடி வாளால்
அரிந்தவரும் மானிடர்; அறிந்தும், உயிர் வாழ்வார்;
விருந்து அனைய வாளொடும், விழித்து, இறையும் வெள்காது,
இருந்தனன் இராவணனும் இன் உயிரொடு, இன்னும். 58

'கொற்றம் அது முற்றி, வலியால் அரசு கொண்டேன்;
உற்ற பயன் மற்று இதுகொலாம்? முறை இறந்தே
முற்ற, உலகத்து முதல் வீரர் முடி எல்லாம்
அற்ற பொழுதத்து, இது பொருந்தும் எனல் ஆமே? 59

'மூளும் உளது ஆய பழி என்வயின் முடித்தோர்
ஆளும் உளதாம்; அவரது ஆர் உயிரும் உண்டாம்;
வாளும் உளது; ஓத விடம் உண்டவன் வழங்கும்
நாளும் உள; தோளும் உள; நானும் உளென் அன்றோ? 60

''பொத்துற உடற்பழி புகுந்தது'' என நாணி,
தத்துறுவது என்னை? மனனே! தளரல் அம்மா!
எத் துயர் உனக்கு உளது? இனி, பழி சுமக்க,
பத்து உள தலைப் பகுதி; தோள்கள் பல அன்றே? 61

**இராவணன், 'கரன் முதலியோர் அவர்களைக் கொல்லவில்லையா?' என வினவல்**

என்று உரைசெயா, நகைசெயா, எரி விழிப்பான்,
'வன் துணை இலா இருவர் மானிடரை வாளால்
கொன்றிலர்களா, நெடிய குன்றுடைய கானில்
நின்ற கரனே முதலினோர் நிருதர்?' என்றான். 62

56. ஆறு மனம் - அமைதியுற்ற மனம்; ஏறு நெறி - சிறந்த ஒழுக்கம்;
57. தராவலயம் - நிலவட்டம்; 60. ஆள் - ஆண் தன்மைகள்,

**சூர்ப்பணகை நிகழ்ந்தமை கூறல்**

அற்று அவன் உரைத்தலோடும், அழுது இழி அருவிக் கண்ணள்,
எற்றிய வயிற்றள், பாரினிடை விழுந்து ஏங்குகின்றாள்,
'சுற்றமும் தொலைந்தது, ஐய! நொய்து' என, சுமந்த கையள்,
உற்றது தெரியும்வண்ணம், ஒருவகை உரைக்கலுற்றாள்: 63

' ''சொல்'' என்று என் வாயில் கேட்டார்; தொடர்ந்து எழு சேனையோடும்
''கல்'' என்ற ஒலியில் சென்றார், கரன் முதல் காளை வீரர்;
எல் ஒன்று கமலச் செங் கண் இராமன் என்று இசைத்த ஏந்தல்
வில் ஒன்றில், கடிகை மூன்றில், ஏறினர் விண்ணில்' என்றாள்.

தாருடைத் தானையோடும் தம்பியர், தமியன் செய்த
போரிடை, மடிந்தார் என்ற உரை செவி புகாதமுன்னம்,
காரிடை உருமின், மாரி, கனலொடு பிறக்குமாபோல்
நீரொடு நெருப்புக் கான்ற, நிரை நெடுங் கண்கள் எல்லாம். 65

**'நீ புரிந்த குற்றம் என்ன?' என்ற இராவணனுக்கு அவள் மறுமொழி கூறல்**

ஆயிடை எழுந்த சீற்றத்து அழுந்திய துன்பம் மாறி,
தீயிடை உகுத்த நெய்யின், சீற்றத்திற்கு ஊற்றம் செய்ய,
'நீ இடை இழைத்த குற்றம் என்னைகொல், நின்னை, இன்னே,
வாயிடை இதழும் மூக்கும் வலிந்து அவர் கொய்ய?' என்றான்.

'என்வயின் உற்ற குற்றம், யாவர்க்கும் எழுத ஒணாத
தன்மையன் இராமனோடும் தாமரை தவிரப் போந்தாள்,
மின்வயின் மருங்குல் கொண்டாள், வேய்வயின் மென் தோள் கொண்டாள்,
பொன்வயின் மேனி கொண்டாள், பொருட்டினால் புகுந்தது' என்றாள்.

**சீதையின் அழகினை அரக்கி விரித்துரைத்தல்**

'ஆர் அவள்?' என்னலோடும், அரக்கியும், 'ஐய! ஆழித்
தேர், அவள் அல்குல்; கொங்கை, செம் பொன் செய் குலிகச் செப்பு;
பார் அவள் பாதம் தீண்டப் பாக்கியம் படைத்தது அம்மா!
பேர் அவள், சீதை' என்று வடிவு எலாம் பேசலுற்றாள்: 68

'காமரம் முரலும் பாடல், கள், எனக் கனிந்த இன் சொல்;
தே மலர் நிறைந்த கூந்தல்; ''தேவர்க்கும் அணங்கு ஆம்'' என்னத்
தாமரை இருந்த தையல், சேடி ஆம் தரமும் அல்லள்;
யாம் உரை வழங்கும் என்பது ஏழைமைப்பாலது அன்றோ? 69

63. சுமந்த - தலைமிசைத் தாங்கிய; 65. தம்பியர் - கரதூடணர்;
66. ஊற்றம் - வலிமை.

'மஞ்சு ஒக்கும் அளக ஓதி; மழை ஒக்கும் வடிந்த கூந்தல்;
பஞ்சு ஒக்கும் அடிகள்; செய்ய பவளத்தின் விரல்கள்; ஐய!
அம் சொற்கள் அமுதில் அள்ளிக்கொண்டவள் வதனம் மை தீர்
கஞ்சத்தின் அளவிற்றேனும், கடலினும் பெரிய கண்கள்! 70

' "ஈசனுர் கண்ணின் வெந்தான்" என்னும் ஈது இழுதைச்சொல்; இவ்
வாசம் நாறு ஓதியாளைக் கண்டனன், வவ்வல் ஆற்ருன்,
பேசல் ஆம் தகைமைத்து அல்லாப் பெரும் பிணி பிணிப்ப, நீண்ட
ஆசையால் அழிந்து தேய்ந்தான் அனங்கன், அவ் உருவம் அம்மா!

'தெவ் உலகத்தும் காண்டி; சிரத்தினில் பணத்தினேர்கள்
அவ் உலகத்தும் காண்டி; அலை கடல் உலகில் காண்டி;
வெவ் உலை உற்ற வேலை, வாளினை, வென்ற கண்ணுள்
எவ் உலகத்தாள்? அங்கம் யாவர்க்கும் எழுத ஒணுதால்! 72

'தோளையே சொல்லுகேனே? சுடர் முகத்து உலவுகின்ற
வாளையே சொல்லுகேனே? அல்லவை வழுத்துகேனே?
மீளவும் திகைப்பதல்லால், தனித்தனி விளம்பல் ஆற்றேன்;
நாளையே காண்டி அன்றே? நான் உனக்கு உரைப்பது என்னே?

'வில் ஒக்கும் நுதல் என்ருலும், வேல் ஒக்கும் விழி என்ருலும்,
பல் ஒக்கும் முத்து என்ருலும், பவளத்தை இதழ் என்ருலும்,
சொல் ஒக்கும்; பொருள் ஒவ்வாதால்; சொல்லல் ஆம் உவமை உண்டோ?
"நெல் ஒக்கும் புல்" என்ருலும், நேர் உரைத்து ஆகவற்ருே!

'இந்திரன் சசியைப் பெற்ருன்; இரு-மூன்று வதனத்தோன் தன்
தந்தையும் உமையைப் பெற்ருன்; தாமரைச் செங்கணுனும்
செந் திருமகளைப் பெற்ருன்; சீதையைப் பெற்ருய் நீயும்;
அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கு இலை உனக்கே; ஐயா! 75

'பாகத்தில் ஒருவன் வைத்தான்; பங்கயத்து இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்; அந்தணன் நாவில் வைத்தான்;
மேகத்தில் பிறந்த மின்னை வென்ற நுண் இடையினளை—
மாகத் தோள் வீர!—பெற்ருல், எங்ஙனம் வைத்து வாழ்தி? 76

'பிள்ளைபோல் பேச்சினளைப் பெற்றபின், பிழைக்கலாற்ருய்;
கொள்ளை மா நிதியம் எல்லாம் அவளுக்கே கொடுத்தி; ஐய!
வள்ளலே! உனக்கு நல்லேன்; மற்று, நின் மனையில் வாழும்
கிள்ளைபோல் மொழியார்க்கு எல்லாம் கேடு சூழ்கின்றேன் அன்றே? 77

71. இழுதைச் சொல் - பொய்ம்மொழி.

'தேர் தந்த அல்குல் சீதை, தேவர்தம் உலகின், இம்பர்,
வார் தந்த கொங்கையார்தம் வயிறு தந்தாளும் அல்லள்;
தார் தந்த கமலத்தாளை, தருக்கினர் கடைய, சங்க
நீர் தந்தது; அதனை வெல்வான் நிலம் தந்து நிமிர்ந்தது அன்றே.

'மீன் கொண்டு ஊடாடும் வேலை மேகலை உலகம் ஏத்த,
தேன் கொண்டு ஊடாடும் கூந்தல், சிற்றிடை, சீதை என்னும்
மான் கொண்டு ஊடாடு நீ; உன் வாள் வலி உலகம் காண,
யான் கொண்டு ஊடாடும்வண்ணம், இராமனைத் தருதி என்பால். 79

'தருவது விதியே என்றால், தவம் பெரிது உடையரேனும்,
வருவது வரும் நாள் அன்றி, வந்து கைகூட வற்றோ?
ஒருபது முகமும், கண்ணும், உருவமும், மார்பும், தோள்கள்
இருபதும், படைத்த செல்வம் எய்துதி இனி, நீ, எந்தாய்! 80

'அன்னவள்தன்னை நின்பால் உய்ப்பல் என்று எடுக்கலுற்ற
என்னை, அவ் இராமன் தம்பி இடைப் புகுந்து, இலங்கு வாளால்
முன்னை மூக்கு அரிந்து விட்டான்; முடிந்தது என் வாழ்வும்; உன்னின்
சொன்னபின், உயிரை நீப்பான் துணிந்தனென்' என்னச் சொன்னாள்.

இராவணன் காம வெறியன் ஆதல்

கோபமும், மறனும், மானக் கொதிப்பும், என்று இனைய எல்லாம்,
பாபம் நின்ற இடத்து நில்லாப் பெற்றிபோல், பற்று விட்ட;
தீபம் ஒன்று ஒன்றை உற்றால் என்னல் ஆம் செயலின், புக்க
தாபமும் காமநோயும் ஆர் உயிர் கலந்த அன்றே. 82

கரனையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான்; உற்ற பழியையும் மறந்தான்; வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால், முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட மங்கையை மறந்திலாதான். 83

சிற்றிடைச் சீதை என்னும் நாமமும் சிந்தைதானும்
உற்று, இரண்டு ஒன்று ஆய் நின்றால், ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன
மற்றொரு மனமும் உண்டோ? மறக்கல் ஆம் வழி மற்று யாதோ?
கற்றனர் ஞானம் இன்றேல், காமத்தைக் கடக்கல் ஆமோ? 84

மயிலுடைச் சாயலாளை வஞ்சியாமுன்னம், நீண்ட
எயிலுடை இலங்கை நாதன், இதயம் ஆம் சிறையில் வைத்தான்;
அயிலுடை அரக்கன் உள்ளம், அவ் வழி, மெல்ல மெல்ல,
வெயிலுடை நாளில் உற்ற வெண்ணெய்போல், வெதும்பிற்று அன்றே.

78. வயிறு தந்தாள் - வயிற்றிலிருந்து பிறந்தவள்; 82. பெற்றி - விரதம்.

விதியது வலியினுலும், மேல் உள விளைவினுலும்,
பதி உறு கேடு வந்து குறுகிய பயத்தினுலும்,
கதி உறு பொறியின் வெய்ய காம நோய், கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல், வளர்ந்தது அன்றே. 86

பொன் மயம் ஆன நங்கை மனம் புக, புன்மை பூண்ட
தன்மையோ—அரக்கன் தன்னை அயர்த்தது ஓர் தகைமையாலோ—
மன்மதன் வாளி தூவி நலிவது ஓர் வலத்தன் ஆனுன்?
வன்மையை மாற்றும் ஆற்றல் காமத்தே வதிந்தது அன்றே? 87

எழுந்தனன் இருக்கைநின்று; ஆண்டு, ஏழ் உலகத்துளோரும்
மொழிந்தனர் ஆசி; ஓசை முழங்கின, சங்கம் எங்கும்;
பொழிந்தன பூவின் மாரி; போயினர் புறத்தோர் எல்லாம்;
அழிந்து ஒழி சிந்தையோடும் ஆடகக் கோயில் புக்கான். 88

**இராவணன் காம நோய் மேலும் முதிர்தல்**

பூவினுல் வேய்ந்து செய்த பொங்கு பேர் அமளிப் பாங்கர்,
தேவிமார் குழுவும் நீங்கச் சேர்ந்தனன்; சேர்தலோடும்,
நாவி நாறு ஓதி நவ்வி நயனமும், குயமும், புக்குப்
பாவியா, கொடுத்த வெம்மை பயப்பயப் பரந்தது அன்றே. 89

நூக்கல் ஆகலாத காதல் நூறு நூறு கோடி ஆய்ப்
பூக்க, வாச வாடை வீசு சீத நீர் பொதிந்த மென்
சேக்கை வீ கரிந்து, திக்கயங்கள் எட்டும் வென்ற தோள்,
ஆக்கை, தேய, உள்ளம் நைய, ஆவி வேவது ஆயினுன். 90

தாது கொண்ட சீதம் மேவு சாந்து, சந்த மென் தளிர்,
போது, கொண்டு அடுத்தபோது, பொங்கு தீ மருந்தினுல்
வேது கொண்டதென்ன, மேனி வெந்து வெந்து, விம்மு தீ
ஊது வன் துருத்திபோல், உயிர்த்து உயிர்த்து, உயங்கினுன்.

தாவியாது, தீது எனுது, தையலாளை மெய் உறப்
பாவியாத போது இலாத பாவி—மாழை, பானல், வேல்,
காவி, ஆன கண்ணி மேனி காண மூளும் ஆசையால்,
ஆவி சால நொந்து நொந்து,—அழுங்குவானும் ஆயினுன். 92

86. பதி - இலங்கை நகர்; கேடு - இலங்கை வானரரால் அழியும் என்று நந்தியிட்ட சாபம்; பொறி - மனம்; 89. குயம் - முலை; பயப்பய - மெல்ல மெல்ல; 90. நூக்கல் - விலக்கல்; 91. சந்தம் - அழகு; வேது கொள்ளல் - நோய் நீங்க மருந்துகளிலிருந்து எழும் ஆவியை உடல் முழுதும் பரவும்படி செய்து கொள்ளுதல்.

பரம் கிடந்த மாதிரம் பரித்த, பாழி யானையின்
கரம் கிடந்த கொம்பு ஒடிந்து அடங்க வென்ற காவலன்—
மரம் குடைந்த தும்பிபோல், அனங்கன் வாளி வந்து வந்து
உரம் குடைந்து, நொந்து நொந்து, உளைந்து உளைந்து—ஒடுங்கினான். 93

'கொன்றை துன்று கோதையோடு ஓர் கொம்பு வந்து என் நெஞ்சிடை
நின்றது, உண்டு கண்டது' என்று, அழிந்து அழுங்கும் நீர்மையான்,
மன்றல் தங்கு அலங்கல் மாரன் வாளி போல, மல்லிகைத்
தென்றல் வந்து எதிர்ந்த போது, சிறுவானும் ஆயினான். 94

**இராவணன் ஒரு குளிர் சோலை அடைதல்**

அன்ன காலை, அங்குநின்று எழுந்து, அழுங்கு சிந்தையான்,
'இன்ன ஆறு செய்வென்' என்று, ஓர் எண் இலான், இரங்குவான்;
பன்னு கோடி தீப மாலை, பாலை யாழ் பழித்த சொல்
பொன்னனார், எடுக்க, அங்கு, ஓர் சோலையூடு போயினான். 95

மாணிக்கம், பனசம்; வாழை மரகதம்; வயிரம், தேமா;
ஆணிப் பொன், வேங்கை; கோங்கம் அரவிந்தராகம்; பூகம்
சேண் உய்க்கும் நீலம்; சாலம் குருவிந்தம்; தெங்கு வெள்ளி;
பாணித் தண் பளிங்கு, நாகம்; பாடலம் பவளம் மன்னோ. 96

வான் உற நிவந்த செங் கேழ் மணி மரம் துவன்றி, வான
மீனொடு மலர்கள்தம்மின் வேற்றுமை தெரிதல் தேற்றா,
தேன் உகு, சோலை நாப்பண், செம்பொன் மண்டபத்துள், ஆங்கு ஓர்
பால் நிற அமளி சேர்ந்தான்; பையுள் உற்று உயங்கி நைவான்.

**பறவைகள் ஒலி அடங்கலும், பருவங்கள் தடுமாறலும்**

கனிகளின், மலரின், வந்த கள் உண்டு களிகொள் அன்னம்,
வனிதையர் மழலை இன்சொல் கிள்ளையும், குயிலும், வண்டும்.
இனியன மிழற்றுகின்ற யாவையும், 'இலங்கை வேந்தன்
முனியும்' என்று அவிந்த வாய; மூங்கையர் போன்ற அன்றே.

பருவத்தால் வாடை தந்த பசும் பனி, அனங்கன் வாளி
உருவிப் புக்கு ஒளித்த புண்ணில், குளித்தலும், உளைந்து விம்மி,
'இருதுத்தான் யாது அடா?' என்று இயம்பினன்; இயம்பலோடும்,
வெருவிப் போய், சிசிரம் நீங்கி, வேனில் வந்து இறுத்தது அன்றே.

93. பரம் - பாரம்; உரம் - மார்பு; 94. கொன்றை துன்று கோதை - கொன்றைப் பழம் போன்ற கூந்தல்; 96. பனசம் - பலா மரம்; அரவிந்த ராகம் - பதுமராகம்; சாலம் - ஆச்சா மரம்; நாகம் - புன்னை மரம்; பாடலம் - பாதிரி மரம்; 99. இருது - பருவம்; சிசிரம் - பின்பனிக் காலம்.

வன் பணை மரமும், தியும், மலைகளும் குளிர வாழும்
மென் பனி எரிந்தது என்றால், வேனிலை விளம்பலாமோ?
அன்பு எனும் விடம் உண்டாரை ஆற்றல் ஆம் மருந்தும் உண்டோ?—
இன்பமும் துன்பம்தானும் உள்ளத்தோடு இயைந்த அன்றே?

மாதிரத்து இறுதிகாறும், தன் மனத்து எழுந்த மையல்-
வேதனை வெப்பம் செய்ய, வேனிலும் வெதுப்பும் காலை,
'யாது இது இங்கு? இதனின் முன்னைச் சீதம் நன்று; இதனை நீக்கி,
கூதிர்ஆம் பருவம்தன்னைக் கொணருதிர் விரைவின்' என்றான்.

கூதிர் வந்து அடைந்த காலை, கொதித்தன குவவுத் திண் தோள்;
'சீதமும் சுடுமோ? முன்னைச் சிசிரமேகாண் இது' என்றான்;
'ஆதியாய்! அஞ்சும் அன்றே, அருள்அலது இயற்ற?' என்ன,
'யாதும், இங்கு, இருது ஆகாது; யாவையும் அகற்றும்' என்றான். 102

என்னலும், இருது எல்லாம் ஏகின; யாவும் தம்தம்
பன் அரும் பருவம் செய்யா, யோகிபோல் பற்று நீத்த;
பின்னரும், உலகம் எல்லாம், பிணி முதல் பாசம் வீசித்
துன் அருந் தவத்தின் எய்தும் துறக்கம்போல், தோன்றிற்று அன்றே.

கூலத்துஆர் உலகம் எல்லாம் குளிர்ப்பொடு வெதுப்பும் நீங்க,
நீலத்து ஆர் அரக்கன் மேனி நெய் இன்றி, எரிந்தது அன்றே—
காலத்தால் வருவது ஒன்றோ? காமத்தால் கனலும் வெந் தீ
சீலத்தால் அவிவது அன்றி, செய்யத்தான் ஆவது உண்டோ?

**இராவணன் சந்திரனைக் கொணரும்படி கூறல்**

நாரம் உண்டு எழுந்த மேகம், தாமரை வளையம், நானச்
சாரம் உண்டு இருந்த சீதச் சந்தனம், தளிர், மென் தாதோடு,
ஆரம், உண்டு எரிந்த சிந்தை அயர்கின்றான்; அயல் நின்றாரை,
'ஈரம் உண்டு என்பர் ஓடி, இந்துவைக் கொணர்மின்' என்றான்.

வெஞ் சினத்து அரக்கன் ஆண்ட வியல் நகர்மீது போதும்
நெஞ்சு இலன், ஒதுங்குகின்ற நிறை மதியோனை நேடி,
'அஞ்சலை; வருதி; நின்னை அழைத்தனன் அரசன்' என்ன,
சஞ்சலம் துறந்துதான், அச் சந்திரன் உதிக்கலுற்றான். 106

அயிர் உறக் கலந்த நல் நீர் ஆழிநின்று, ஆழி இந்து—
செயிர் உற்ற அரசன், ஆண்டு ஓர் தேய்வு வந்துற்ற போழ்தில்,
வயிரம் உற்று உடைந்து சென்றோர் வலியவன்—செல்லுமாபோல்
உயிர் தெற உவந்து வந்தான் ஒத்தனன்,—உதயம் செய்தான்.

102. ஆதியாய் - தலைவனே; அருள் - கட்டளை; 104. கூலம் - கடற்கரை; 105. நாரம் - நீர்; 106. அயிர் - நுண்மணல்.

பராவ அருங் கதிர்கள் எங்கும் பரப்பி, மீப் படர்ந்து, வானில்
தராதலத்து, எவரும் பேண, அவனியே சலிக்கும் நீரால்,
அரா-அணைத் துயிலும் அண்ணல், காலம் ஓர்ந்து, அற்றம் நோக்கி,
இராவணன் உயிர்மேல் உய்த்த திகிரியும், என்னல் ஆன. 108

அருகுறு பாலின் வேலை அமுது எலாம் அளைந்து வாரிப்
பருகின, பரந்து பாய்ந்த நிலாச் சுடர்ப் பனி மென் கற்றை,
நெரியுறு புருவச் செங் கண் அரக்கற்கு, நெருப்பின் நாப்பண்
உருகிய வெள்ளி அள்ளி வீசினல் ஒத்தது அன்றே. 109

மின் நிலம் திரிந்தது அன்ன விழுநிலா—மிதிலை சூழ்ந்த
செந்நெல் அம் கழனி நாடன் திரு மகள் செவ்வி கேளா,
நல் நலம் தொலைந்து சோரும் அரக்கனை, நாளும் தோலாத்
துன்னலன் ஒருவன் பெற்ற புகழ் என—சுட்டது அன்றே. 110

கருங் கழல் காலன் அஞ்சும் காவலன், கறுத்து நோக்கி,
'தரும் கதிர்ச் சீத யாக்கைச் சந்திரன்-தருதிர் என்ன,
முருங்கிய கனலின், மூரி விடத்தினை முருக்கும் சீற்றத்து,
அருங் கதிர் அருக்கன்தன்னை ஆர் அழைத்தீர்கள்?' என்றான்.

அவ் வழி, சிலதர் அஞ்சி, 'ஆதியாய்! அருள் இல்லாரை
இவ் வழித் தருதும் என்பது இயம்பல் ஆம் இயல்பிற்று அன்றால்;
செவ் வழிக் கதிரோன் என்றும் தேரின்மேல் அன்றி வாரான்;
வெவ் வழித்து எனினும், திங்கள், விமானத்தின் மேலது' என்றார்.

**இராவணன் சந்திரனைப் பழித்தல்**

பணம் தாழ் அல்குல் பனி மொழியார்க்கு அன்புபட்டார் படும் காமக்
குணம்தான் முன்னம் அறியாதான் கொதியாநின்றான்; மதியாலே,
தண் அம் தாமரையின் தனிப் பகைஞன் என்னும் தன்மை, ஒருதானே
உணர்ந்தான்; உணர்வுற்று, அவன்மேல் இட்டு, உயிர்தந்து உய்க்க
[உரைசெய்வான்: 113

'தேயாநின்றாய்; மெய் வெளுத்தாய்; உள்ளம் கறுத்தாய்; நிலை திரிந்து
காயா நின்றாய்; ஒரு நீயும், கண்டார் சொல்லக் கேட்டாயோ?
பாயாநின்ற மலர் வாளி பறியாநின்றார் இன்மையால்
ஓயாநின்றேன்; உயிர் காத்தற்கு உரியார் யாவர்?—உடுபதியே!

'ஆற்றார் ஆகின், தம்மைக் கொண்டு அடங்காரோ? என் ஆர் உயிர்க்குக்
கூற்றாய் நின்ற குலச் சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத்   [கினாய்;
தோற்றாய்; அதனால், அகம் கரிந்தாய்; மெலிந்தாய்; வெதும்பத் தொடங்
மாற்றார் செல்வம் கண்டு அழிந்தால், வெற்றி ஆக வற்று ஆமோ?' 115

112. சிலதர் - பணியாளர்; சூரியன் தேர்மீதும் சந்திரன் விமானத்திலும் வருவர்.

**இராவணன் ஆணைப்படி பகலவன் வருதல்**

என்னப் பன்னி, இடர் உழவா, 'இரவோடு இவளைக் கொண்டு அகற்றி;
முன்னைப் பகலும் பகலோனும் வருக' என்றான்; மொழியாமுன்,
உன்னற்கு அரிய உடுபதியும் இரவும் ஒழிந்த; ஒரு நொடியில்
பன்னற்கு அரிய பகலவனும் பகலும் வந்து பரந்தவால். 116

இருக்கின் மொழியார் எரிமுகத்தின் ஈந்த நெய்யின், அவிர்செம்பொன்
உருக்கி அனைய கதிர் பாய, அனல்போல் விரிந்தது உயர் கமலம்;
அருக்கன் எய்த, அமைந்து அடங்கி வாழா, அடாத பொருள் எய்திச்
செருக்கி, இடையே, திரு இழந்த சிறியோர் போன்ற, சேதாம்பல்.

நாணிநின்ற ஒளி மழுங்கி, நடுங்காநின்ற உடம்பினன் ஆய்,
சேணில்நின்று புறம் சாய்ந்து, கங்குல்-தாரம் பின்செல்ல,
பூணின் வெய்யோன் ஒரு திசையே புகுதப் போவான், புகழ் வேந்தர்
ஆணை செல்ல, நிலை அழிந்த அரசர்போன்றான்—அல்-ஆண்டான். 118

மணந்த பேர் அன்பரை, மலரின் சேக்கையுள்,
புணர்ந்தவர், இடை ஒரு வெகுளி பொங்கலால்,
கணம் குழை மகளிர்கள் கங்குல் வீந்தது என்று
உணர்ந்திலர்; கனவினும் ஊடல் தீர்ந்திலர். 119

தள்ளுறும் உயிரினர், தலைவர் நீங்கலால்,
நள் இரவிடை உறும் நடுக்கம் நீங்கலர்—
கொள்ளையின் அலர் கருங் குவளை நாள்மலர்
கள் உகுவன என, கலுழும் கண்ணினர். 120

அணைமலர்ச் சேக்கையுள் ஆடல் தீர்ந்தனர்,
பணைகளைத் தழுவிய பவள வல்லிபோல்,
இணை மலர்க் கைகளின் இறுக, இன் உயிர்த்
துணைவரைத் தழுவினர், துயில்கின்றார் சிலர். 121

அளிஇனம் கடம்தொறும் ஆர்ப்ப, ஆய் கதிர்
ஒளிபட உணர்ந்தில, உறங்குகின்றன;
தெளிவுஇல இன் துயில் விளையும் சேக்கையுள்
களிகளை நிகர்த்தன, களி நல் யானையே. 122

116. பன்னல் - சொல்லுதல்; 118. சேண் - உயர்வு, ஈண்டு வான முகடு; 121. ஆடல் - கலவி விளையாட்டு; 122. களிகள் - கட்குடியர்.

விரிந்து உறை துறைதொறும் விளக்கம் யாவையும்,
எரிந்து இழுது அஃகல, ஒளி இழந்தன—
அருந் துறை நிரம்பிய உயிரின் அன்பரைப்
பிரிந்து உறைதரும் குலப் பேதைமாரினே. 123

புனைந்து இதழ் உரிஞ்சுறு பொழுது புல்லியும்,
வனைந்தில, வைகறை மலரும் மா மலர்;
நனந் தலை அமளியில் துயிலும் நங்கைமார்
அனந்தரின் நெடுங் கணோடு ஒத்த ஆம்அரோ. 124

இச்சையில் துயில்பவர் யாவர் கண்களும்,
நிச்சயம், பகலும் தம் இமைகள் நீக்கல—
'பிச்சையும் இடுதும்' என்று, உணர்வு பேணலா
வச்சையர் நெடு மனை வாயில் மானவே. 125

நஞ்சு உறு பிரிவினர், நாளின் நீளம் ஓர்
தஞ்சு உற விடுவது ஓர் தயாவு தாங்கலால்,
வெஞ் சிறை நீங்கிய வினையினர் என,
நெஞ்சு உறக் களித்தன—நேமிப்புள் எலாம். 126

நாள்மதிக்கு அல்லது, நடுவண் எய்திய
ஆணையின் திறக்கலா அலரில் பாய்வன,
மாண் வினைப் பயன்படா மாந்தர் வாயில் சேர்
பாணரின் தளர்ந்தன—பாடல்-தும்பியே. 127

அரு மணிச் சாளரம் அதனினூடு புக்கு
எரி கதிர் இன் துயில் எழுப்ப எய்தவும்,
மருளொடு தெருளுறும் நிலையர், மங்கையர்—
தெருளுற மெய்ப் பொருள் தெரிந்திலாரினே. 128

ஏவலின் வன்மையை எண்ணல் தேற்றலர்,
நாவலர் இயற்றிய நாழி நாம நூல்
காவலின் நுனித்து உணர் கணித மாக்களும்,
கூவுறு கோழியும், துயில்வு கொண்டவே. 129

இனையன உலகினில் நிகழும் எல்லையில்,
கனை கழல் அரக்கனும், கண்ணின் நோக்கினன்;
'நினைவுறு மனத்தையும் நெருப்பின் தீய்க்குமால்;
அனைய அத் திங்களே ஆகுமால்' என்றான். 130

123. உறை துறை - வசிக்கும் இடம்; 124. வனைந்தில - மலர்ந்து அழகு செய்யாதன; 125. வச்சையர் - உலோபர்; 129. நாழி நாம நூல் - புகழ் வாய்ந்த சோதிட நூல்.

'திங்களோ அன்று இது; செல்வ! செங் கதிர்
பொங்கு உளைப் பச்சை அம் புரவித் தேரதால்;
வெங் கதிர் சுடுவதே அன்றி, மெய் உறத்
தங்கு தண் கதிர் சுடத் தகாது' என்றார் சிலர். 131

**இரவியைப் போக்கி, இளம் பிறையைக் கொணரும்படி கூறல்**

'நீலச் சிகரக் கிரி அன்னவன், 'நின்ற வெய்யோன்,
ஆலத்தினும் வெய்யன்; அகற்றி, அரற்றுகின்ற
வேலைக் குரலைத் ''தவிர்க'' என்று விலக்கி, மேலை
மாலைப் பிறைப் பிள்ளையைக் கூவுதிர் வல்லை' என்றான். 132

சொன்னான் நிருதர்க்கு இறை; அம் மொழி சொல்லலோடும்,
அந் நாளில் நிரம்பிய அம் மதி, ஆண்டு ஓர் வேலை
முந் நாளின் இளம் பிறை ஆகி முளைத்ததுஎன்றால்,
எந் நாளும் அருந் தவம் அன்றி, இயற்றல் ஆமோ? 133

**பிறையையும் பழித்தல்**

குடபாலின் முளைத்தது கண்ட குணங்கள்-தீயோன்,
'வடவாஅனல்; அன்று எனின், மண் பிடர் வைத்த பாம்பின்
விட வாள் எயிறு; அன்று எனின், என்னை வெகுண்டு, மாலை
அட, வாள் உருவிக்கொடு தோன்றியது ஆகும் அன்றே. 134

'தாது உண் சடிலத் தலை வைத்தது—தண் தரங்கம்
மோதும் கடலிற்கிடை முந்து பிறந்தபோதே,
ஓதும் கடுவைத் தன் மிடற்றில் ஒளித்த தக்கோன்,
''ஈதும் கடு ஆம்'', என எண்ணிய எண்ணம் அன்றே? 135

'உரும் ஒத்த வலத்து உயிர் நுங்கிய திங்கள், ஓடித்
திருமு இச் சிறு மின் பிறை, தீமை குறைந்தது இல்லை—
கருமைக் கறை நெஞ்சினில் நஞ்சு கலந்த பாம்பின்
பெருமை சிறுமைக்கு ஒரு பெற்றி குறைந்தது உண்டோ?' 136

'கன்னக் கனியும் இருள்தன்னையும் காண்டும் அன்றே?
முன்னைக் கதிர் நன்று; இது அகற்றுதிர்; மொய்ம்பு சான்ற
என்னைச் சுடும்என்னின், இவ் ஏழ் உலகத்தும் வாழ்வோர்
பின்னைச் சிலர் உய்வர் என்று அங்கு ஒரு பேச்சும் உண்டோ?

133. ஓர் வேலை - ஒரு புறம்; 136. திருமுதல் - திரும்பி வருதல்; கருமை - கொடுமை; 137. கன்னக் கனியும் - நன்கு முதிரும்.

**இருளினைப் பழித்தல்**

ஆண்டு, அப் பிறை நீங்கலும், எய்தியது அந்தகாரம்:
தீண்டற்கு எளிது ஆய், பல தேய்ப்பன தேய்க்கல் ஆகி,
வேண்டின், கரபத்திரத்து ஈர்த்து விழுத்தல் ஆகி,
காண்டற்கு இனிதாய், பல கந்து திரட்டல் ஆகி, 138

முருடு ஈர்ந்து உருட்டற்கு எளிது என்பது என்? முற்றும் முற்றிப்
பொருள் தீங்கு இல் கேள்விச் சுடர் புக்கு வழங்கல் இன்றிக்
குருடு ஈங்கு இது என்ன, குறிக்கொண்டு, கண்ணோட்டம் குன்றி,
அருள் தீர்ந்த நெஞ்சின் கரிது என்பது அவ் அந்தகாரம். 139

விள்ளாது செறிந்து இடை, மேல் உற ஓங்கி, எங்கும்
நள்ளா இருள் வந்து, அகன் ஞாலம் விழுங்கலோடும்,
'எள்ளா உலகு யாவையும் யாவரும் வீவது என்பது
உள்ளாது, உமிழ்ந்தான், விடம் உண்ட ஒருத்தன்' என்றான்.

'வேலைத்தலை வந்து ஒருவன் வலியால் விழுங்கும்
ஆலத்தின் அடங்குவது அன்று இது: அறிந்து உணர்ந்தேன்;
ஞாலத்தொடு விண் முதல் யாவையும் நாவின் நக்கும்
காலக் கனல் கார் விடம் உண்டு கறுத்தது அன்றே. 141

**சீதையின் உருவெளிப்பாடு காண்டல்**

'அம்பும் அனலும் நுழையாக் கன அந்தகாரத்
தும்பு, மழைகொண்டு,—அயல் ஒப்பு அரிது ஆய துப்பின்
கொம்பர்—குரும்பைக் குலம் கொண்டது, திங்கள் தாங்கி,
வெம்பும் தமியேன்முன், விளக்கு என, தோன்றும் அன்றே!

'மருளூடு வந்த மயக்கோ? மதி மற்றும் உண்டோ?
தெருளேம்; இது என்னோ? திணி மை இழைத்தாலும் ஒவ்வா
இருளூடு, இரு குண்டலம் கொண்டும் இருண்ட நீலச்
சுருளோடும் வந்து, ஓர் சுடர் மா மதி தோன்றும் அன்றே! 143

'புடை கொண்டு எழு கொங்கையும், அல்குலும், புல்கி நிற்கும்
இடை, கண்டிலம்; அல்லது எல்லா உருவும் தெரிந்தாம்;
விடம் நுங்கிய கண் உடையார் இவர்; மெல்ல மெல்ல,
மட மங்கையர் ஆய், என் மனத்தவர் ஆயினரே. 144

138. கரபத்திரம் - வாள்; 141. காலக் கனல் - ஊழித் தீ; 144. நுங்கிய - உட்கொண்ட, ஆற்றல் அழித்த.

'பண்டு ஏய் உலகு ஏழினும் உள்ள படைக்கணாரைக்
கண்டேன்; இவர் போல்வது ஓர் பெண் உருக் கண்டிலேனால்;
உண்டே எனின், வேறு இனி, எங்கை உணர்த்தி நின்ற
வண்டு ஏறு கோதை மடவாள் இவள் ஆகும் அன்றே. 145

'பூண்டு இப் பிணியால் உறுகின்றது, தான் பொறாதாள்,
தேண்டிக் கொடு வந்தனள்; செய்வது ஓர் மாறும் உண்டோ?
காண்டற்கு இனியாள் உருக் கண்டவட் கேட்கும் ஆற்றால்,
ஈண்டு, இப்பொழுதே, விரைந்து, எங்கையைக் கூவுக' என்றான்.

என்றான் எனலும், கடிது ஏகினர் கூவும் எல்லை,
வன் தாள் நிருதக் குலம் வேர்அற மாய்த்தல் செய்வாள்,
ஒன்றாத காமக் கனல் உள் தெறலோடும், நாசி,
பொன் தாழ் குழைதன்னொடும் போக்கினள் போய்ப் புகுந்தாள்.

#### இராவணனுக்கும் சூர்ப்பணகைக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல்

பொய்ந் நின்ற நெஞ்சின் கொடியாள் புகுந்தாளை நோக்கி,
நெய்ந் நின்ற கூர் வாளவன், 'நேர் உற நோக்கு; நங்காய்!
மைந் நின்ற வாள்-கண் மயில் நின்றென வந்து, என் முன்னர்
இந் நின்றவள் ஆம்கொல், இயம்பிய சீதை?' என்றான். 148

'செந் தாமரைக் கண்ணொடும், செங் கனி வாயினோடும்,
சந்து ஆர் தடந் தோளொடும், தாழ் தடக் கைகளோடும்,
அம் தார் அகலத்தொடும், அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன் ஆகும், அவ் வல் வில் இராமன்' என்றாள். 149

'பெண்பால் உரு, நான், இது கண்டது; பேதை! நீ ஈண்டு,
எண்பாலும் இலாதது ஓர் ஆண் உரு என்றி; என்னே!
கண்பால் உறும் மாயை கவற்றுதல் கற்ற நம்மை,
மண்பாலவரேகொல், விளைப்பவர் மாயை?' என்றான். 150

'ஊன்றும் உணர்வு அப்புறம் ஒன்றினும் ஓடல் இன்றி,
ஆன்றும் உளது ஆம் நெடிது ஆசை கனற்ற நின்றாய்க்கு
ஏன்று, உன் எதிரே, விழி நோக்கும் இடங்கள்தோறும்,
தோன்றும், அனையாள்; இது தொல் நெறித்து ஆகும்' என்றாள்.

அன்னாள் அது கூற, அரக்கனும், 'அன்னது ஆக;
நின்னால் அவ் இராமனைக் காண்குறும் நீர் என்?' என்றான்;
'எந் நாள், அவன் என்னை இத் தீர்வு அரும் இன்னல் செய்தான்.
அந் நாள்முதல், யானும் அயர்த்திலென் ஆகும்' என்றாள். 152

'ஆம் ஆம்; அது அடுக்கும்; என் ஆக்கையொடு ஆவி நைய
வேமால்; வினையேற்கு இனி என் விடிவு ஆகும்?' என்ன,
'கோமான்! உலகுக்கு ஒரு நீ, குறைகின்றது என்னே?
பூ மாண் குழலாள்தனை வவ்வுதி, போதி' என்றாள். 153

என்றாள் அகன்றாள்; அவ் அரக்கனும் ஈடழிந்தான்;
ஒன்றானும் உணர்ந்திலன்; ஆவி உலைந்து சோர்ந்தான்;
நின்றாரும் நடுங்கினர்; நின்றுள நாளினாலே
பொன்றாது உளன்ஆயினன்; அத்துணைபோலும் அன்றே. 154

**சந்திரகாந்த மண்டபம் ஆக்குவித்து, அதனுள் இராவணன் வதிதல்**

'இறந்தார் பிறந்தார்' என, இன் உயிர் பெற்ற மன்னன்,
மறம் தான் உணர்ந்தான், அவண், மாடு நின்றாரை நோக்கி,
' ''கறந்தால் என நீர் தரு சந்திரகாந்தத்தாலே,
சிறந்து ஆர் மணி மண்டபம் செய்க'' எனச் செப்புக' என்றான்.

வந்தான் நெடு வான் உறை தச்சன்; மனத்து உணர்ந்தான்;
சிந்தாவினை அன்றியும், கைவினையாலும் செய்தான்—
அம் தாம நெடுந் தறி ஆயிரத்தால் அமைத்த
சந்து ஆர் மணி மண்டபம், தாமரையோனும் நாண. 156

காந்தம், அமுதின் துளி கால்வன, கால மீனின்
வேந்தன் ஒளி அன்றியும், மேலொடு கீழ் விரித்தான்;
பூந் தென்றல் புகுந்து உறை சாளரமும் புனைந்தான்;
ஏந்தும் மணிக் கற்பகச் சீதளக் கா இழைத்தான். 157

ஆணிக்கு அமை பொன் கை, மணிச் சுடர் ஆர் விளக்கம்
சேண் உற்ற இருள் சீப்ப, அத் தெய்வ மடந்தைமார்கள்
பூணின் பொலிவார் புடை ஏந்திட, பொங்கு தோளான்
மாணிக்க மானத்திடை மண்டபம் காண வந்தான். 158

அல் ஆயிரகோடி அடுக்கியது ஒத்ததேனும்,
நல்லார் முகம் ஆம், நளிர் வால் நிலவு ஈன்ற, நாமப்
பல் ஆயிரகோடி பனிச் சுடர் ஈன்ற, திங்கள்
எல்லாம் உடன் ஆய், இருள் ஓட இரித்தது அன்றே. 159

156. தச்சன் - விசுவகருமன்; சிந்தாவினை - மனத்தால் நினைத்த மாத்திரத்தே தோற்றுவித்தல்; 157. கால மீனின் வேந்தன் - சந்திரன்.

பொற்பு உற்றன ஆய் மணி ஒன்பதும் பூவில் நின்ற
கற்பத் தருவின் கதிர் நாள் நிழற் கற்றை நாற,
அல் பற்று அழிய, பகல் ஆக்கியதால்—அருக்கன்
நிற்பத் தெரிக்கின்றது நீள் சுடர் மேன்மை அன்றோ? 160

ஊறு, ஓசை, முதல் பொறி யாவையும், ஒன்றின் ஒன்று
தேறு நிலை உற்றது ஓர் சிந்தையன்; செய்கை ஓரான்;
வேறு ஆய பிறப்பிடை, வேட்கை விசித்தது ஈர்ப்ப,
மாறு ஓர் உடல் புக்கென, மண்டபம் வந்து புக்கான். 161

தண்டல் இல் தவம் செய்வோர், தாம் வேண்டிய, தாயின் நல்கும்
மண்டல மகர வேலை அமுதொடும் வந்ததென்ன,
பண் தரு சுரும்பு சேரும் பசு மரம் உயிர்த்த பைம் பொன்
தண் தளிர் மலரின் செய்த சீதளச் சேக்கை சார்ந்தான். 162

தென்றலைச் சீறல்

நேரிழை மகளிர் கூந்தல் நிறை நறை வாசம் நீந்தி,
வேரி அம் சரளச் சோலை வேனிலான் விருந்து செய்ய,
ஆர் கலி அழுவம் தந்த அமிழ்தென, ஒருவர் ஆவி
தீரினும் உதவற்கு ஒத்த தென்றல் வந்து இறுத்தது அன்றே.

சாளரத்தூடு வந்து தவழ்தலும், தரித்தல் தேற்றான்;
நீள் அரத்தங்கள் சிந்தி, நெருப்பு உக, நோக்கும் நீரான்;
வாழ் மனை புகுந்தது ஆண்டு ஓர் மாசுணம் வரக் கண்டன்ன
கோள் உறக் கொதித்து விம்மி, உழையரைக் கூவிச் சொன்னான்:

'கூவலின் உயிர்த்த சில் நீர் உலகினைக் குப்புற்றென்ன,
தேவரில் ஒருவன் என்னை இன்னலும் செயத்தக்கானோ?
ஏவலின் அன்றி, தென்றல் எவ் வழி எய்திற்று' என்னா,
'காவலின் உழையர் தம்மைக் கொணருதிர் கடிதின்' என்றான்.

அவ் வழி, உழையர் ஓடி, ஆண்டு அவர்க் கொணர்தலோடும்,
வெவ் வழி அமைந்த செங் கண் வெருவுற நோக்கி, வெய்யோன்,
'செவ் வழி, தென்றலோற்குத் திருத்தினிர் நீர்கொல்?' என்ன,
'இவ் வழி இருந்தகாலைத் தடை அவற்கு இல்லை' என்றார். 166

'வேண்டிய நினைந்து செய்வான் விண்ணவர் வருவது என்றால்,
மாண்டது போலும் கொள்கை, யானுடை வன்மை? வல்லைத்
தேண்டி, நீர் திசைகள்தோறும் சேணுற விசையில் செல்குற்று,
ஈண்டு, இவன் தன்னைப் பற்றி, இருஞ் சிறை இடுதிர்' என்றான்.†

162. தண்டல் - கெடுதல்; 163. சரளம் - இனிமை; 165. கூவலின் உயிர்த்த - கிணற்றில் ஊறிய; குப்புற்றென்ன - முழுகுவித்தாற் போல.

மந்திரியரோடு ஆய்ந்து, இராவணன் மாரீசனை அடைதல்

'காற்றினேன்தன்னை வாளா முனிதலின் கண்டது இல்லை;
கூற்றும் வந்து என்னை இன்னே குறுகுமால், குறித்த ஆற்றால்
வேல் தரும் கருங் கட் சீதை மெய் அருள் புனையேன்என்றால்;
ஆற்றலால் அடுத்தது எண்ணும் அமைச்சரைக் கொணர்திர்' என்றான்.

ஏவின சிலதர் ஓடி, 'ஏ' எனும் துணையில், எங்கும்
கூவினர்; கூவலோடும் குறுகினர்—கொடித் திண் தேர்மேல்,
மாவினில், சிவிகை தன்மேல், மழை மதக் களிற்றின்—வையத்
தேவரும், வானம்தன்னில் தேவரும், சிந்தை சிந்த. 169

வந்த மந்திரிகளோடு மாசு அற மனத்தின் எண்ணி,
சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன், தெளிவு இல் நெஞ்சன்,
அந்தரம் செல்வது ஆண்டு ஓர் விமானத்தில், ஆரும் இன்றி,
இந்தியம் அடக்கி நின்ற மாரீசன் இருக்கை சேர்ந்தான். 170

## 8 மாரீசன் வதைப் படலம்

'வந்த கருத்து என்?' என, மாரீசன் வினவுதல்

இருந்த மாரீசன், அந்த இராவணன் எய்தலோடும்,
பொருந்திய பயத்தன், சிந்தை பொருமுற்று வெருவுகின்றான்,
கருந் தட மலைஅன்னானை எதிர்கொண்டு, கடன்கள் யாவும்
திருந்திய செய்து, செவ்வித் திருமுகம் நோக்கிச் செப்பும்: 1

'சந்த மலர்த் தண் கற்பக நீழல் தலைவற்கும்,
அந்தகனுக்கும், அஞ்ச அடுக்கும் அரசு ஆள்வாய்!
இந்த வனத்து, என் இன்னல் இருக்கைக்கு, எளியோரின்
வந்த கருத்து என்? சொல்லுதி' என்றான்—மருள்கின்றான். 2

இராவணன், நங்கையைக் கவரத் துணை வேண்டுதல்

'ஆனது அனைத்தும்; ஆவி தரித்தேன், அயர்கின்றேன்;
போனது, பொற்பும்; மேன்மையும் அற்றேன், புகழோடும்;
யான் அது உனக்கு இன்று எங்ஙன் உரைக்கேன் இனி?' என்னா,
'வானவருக்கும் நாண அடுக்கும் வசை மன்னே?' 3

'வன்மை தரித்தோர் மானிடர்; மற்று அங்கு, அவர் வாளால்
நின் மருகிக்கும் நாசி இழக்கும் நிலை நேர்ந்தார்;
என் மரபுக்கும் நின் மரபுக்கும் இதன்மேல் ஓர்
புன்மை, தெரிப்பின், வேறு இனி எற்றே? புகல்—வேலோய்! 4

'திருகு சினத்தார் முதிர மலைந்தார்; சிறியோர், நாள்
பருகினர் என்றால், வென்றி நலத்தின் பழி அன்றோ?
இரு கை சுமந்தாய்! இனிதின் இருந்தாய்! இகல் வேல் உன்
மருகர் உலந்தார்; ஒருவன் மலைந்தான், வரி வில்லால். 5

'வெப்பு அழியாது என் நெஞ்சும் உலர்ந்தேன், விளிகின்றேன்.
ஒப்பு இலர் என்றே, போர் செயல் ஒல்லேன்; உடன் வாழும்
துப்புஅழி செவ் வாய் வஞ்சியை வௌவ, துணை கொண்டிட்டு
இப் பழி நின்னால் தீரிய வந்தேன், இவண்' என்றான். 6

மாரீசன் அறிவுரை

இச் சொல் அனைத்தும் சொல்லி, அரக்கன், எரிகின்ற
கிச்சின் உருக்கு இட்டு உய்த்தனன் என்னக் கிளராமுன்,
'சிச்சி' என, தன் மெய்ச் செவி பொத்தி; தெருமந்தான்;
அச்சம் அகற்றி, செற்ற மனத்தோடு அறைகின்றான்: 7

'மன்னா! நீ உன் வாழ்வை முடித்தாய்; மதி அற்றாய்;
உன்னால் அன்று ஈது; ஊழ்வினை என்றே உணர்கின்றேன்;
இன்னாவேனும் யான் இது உரைப்பென் இதம்' என்னா,
சொன்னான் அன்றே அன்னவனுக்குத் துணிவு எல்லாம். 8

'அற்ற கரத்தோடு, உன் தலை நீயே அனல் முன்னில்
பற்றினை உய்த்தாய்; பற்பல காலம் பசி கூர
உற்று, உயிர் உள்ளே தேய, உலந்தாய்; பினை அன்றோ
பெற்றனை செல்வம்? பின் அது இகழ்ந்தால் பெறல் ஆமோ? 9

'திறத் திறனாலே, செய் தவம் முற்றித் திரு உற்றாய்,
மறத் திறனாலோ? சொல்லுதி—சொல் ஆய் மறை வல்லோய்!
அறத் திறனாலே எய்தினை அன்றோ? அது, நீயும்
புறத் திறனாலே பின்னும் இழக்கப் புகுவாயோ? 10

'நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார், நடை அல்லா
வாரம் கொண்டார், மற்று ஒருவற்காய் மனை வாழும்
தாரம் கொண்டார், என்ற இவர்தம்மைத் தருமம்தான்
ஈரும் கண்டாய்; கண்டகர் உய்ந்தார் எவர்? ஐயா! 11

**8: 5. திருகுதல் - முதிர்தல்; சிறியோர் - தம்பியர்; 6. வெப்பு - சினம்; 7. இச்சு - நெருப்பு; சிச்சி - சீசீ; 9. உலந்தாய் - வருந்தி நோற்றனை; 11. நாரம் - அன்பு; வாரம் - இறைப்பொருள்.**

'அந்தரம் உற்ருன், அகலிகை பொற்பால் அழிவுற்ருன்,
இந்திரன் ஒப்பார் எத்தனையோர்தாம் இழிவுற்ருர்?
செந் திரு ஒப்பார் எத்தனையோர் நின் திரு உண்பார்;
மந்திரம் அற்ருர் உற்றது உரைத்தாய்; மதி அற்ருய். 12

'செய்தாயேனும், தீவினையோடும் பழி அல்லால்
எய்தாது, எய்தாது; எய்தின், இராமன், உலகு ஈன்ருன்,
வைதால் அன்ன வாளிகள் கொண்டு, உன் வழியோடும்
கொய்தான் அன்றே, கொற்றம் முடித்து, உன் குழு எல்லாம்?

'என்ருல், என்னே! எண்ணலையே நீ, கரன் என்பான்,
நின் தானைக்கு மேல் உளன் என்னும் நிலை? அம்மா!
தன் தானைத் திண் தேரொடும் மாளத் தனு ஒன்ருல்
கொன்ருன்; முற்றும் கொல்ல, மனத்தில் குறிகொண்டான்.

'வெய்யோர் யாரே, வீர விராதன் துணை வெய்யோர்?
ஐயோ! போனுன், அம்பொடும், உம்பர்க்கு அவன் என்ருல்,
உய்வார் யாரே நம்மில் எனக் கொண்டு, உணர்தோறும்,
நையாநின்றேன்; நீ இது உரைத்து நலிவாயோ? 15

'மாண்டார், மாண்டார்; நீ இனி மாள்வார் தொழில் செய்ய
வேண்டா, வேண்டா; செய்திடின், உய்வான் விதி உண்டோ?
ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கேன்? அறம் நோனுர்,
ஈண்டார்; ஈண்டு ஆர் நின்றவர்? எல்லாம் இலர் அன்ருே? 16

'எம்பிக்கும் என் அன்னைதனக்கும் இறுதிக்கு ஓர்
அம்பு உய்க்கும் போர் வில்லிதனக்கும், அயல் நிற்கும்
தம்பிக்கும், என் ஆண்மை தவிர்ந்தே தளர்வுற்றேன்;
கம்பிக்கும் என் நெஞ்சு, அவன் என்றே; கவல்கின்றேன். 17

' ''நின்றும், சென்றும், வாழ்வன யாவும் நிலையாவால்;
பொன்றும்'' என்னும் மெய்ம்மை உணர்ந்தாய்; புலை ஆடற்கு
ஒன்றும் உன்னுய்; என் உரை கொள்ளாய்; உயர் செல்வத்து,
என்றும், என்றும், வைகுதி; ஐயா! இனி' என்ருன். 18

**இராவணன் மாரீசனை முனிதல்**

' ''கங்கை சடை வைத்தவனொடும் கயிலை வெற்பு ஓர்
அங்கையின் எடுத்த எனது ஆடு எழில் மணித் தோள்,
இங்கு ஓர் மனிதற்கு எளிய'' என்றனை' என, தன்
வெங் கண் எரிய, புருவம் மீதுற, விடைத்தான். 19

16. ஈண்டார் - உயரமாட்டார்; 17. எம்பி - என் தம்பி, சுபாகு; அன்னை - தாய், தாடகை; 18. உன்னுய் - நினையற்க; கொள்ளாய் - கொள்க.

'நிகழ்ந்ததை நினைத்திலை; என் நெஞ்சின் நிலை, அஞ்சாது
இகழ்ந்தனை; எனக்கு இளைய நங்கை முகம் எங்கும்
அகழ்ந்த வரை ஒப்பு உற அமைத்தவரை, ஐயா!
புகழ்ந்தனை; தனிப் பிழை; பொறுத்தனென் இது' என்றான். 20

மாரீசன் மீண்டும் கூறுதல்

தன்னை முனிவுற்ற தறுகண் தகவிலோனை,
பின்னை முனிவுற்றிடும் எனத் தவிர்தல் பேணான்,
'உன்னை முனிவுற்று உன குலத்தை முனிவுற்றாய்;
என்னை முனிவுற்றிலை; இது என்?' என இசைத்தான். 21

'எடுத்த மலையே நினையின், ''ஈசன், இகல் வில்லாய்
வடித்த மலை, நீ இது, வலித்தி'' என, வாரிப்
பிடித்த மலை, நாண் இடை பிணித்து ஒருவன் மேல்நாள்
ஒடித்த மலை, அண்ட முகடு உற்ற மலை அன்றோ? 22

'யாதும் அறியாய்; உரை கொளாய்; இகல் இராமன்
கோதை புனையாமுன், உயிர் கொள்ளைபடும் அன்றே;
பேதை மதியால், ''இஃது ஓர் பெண் உருவம்'' என்றாய்;
சிதை உருவோ? நிருதர் தீவினைஅது அன்றோ? 23

' ''உஞ்சு பிழையாய் உறவினோடும்'' என உன்னா,
நெஞ்சு பறைபோதும்; அது நீ நினையகில்லாய்;
அஞ்சும் எனது ஆர் உயிர்; அறிந்து அருகு நின்றார்,
நஞ்சு நுகர்வாரை, ''இது நன்று'' எனலும் நன்றோ? 24

'ஈசன் முதல் மற்றும் இமையோர் உலகும், மற்றைத்
தேசம் முதல் முற்றும், ஓர் இமைப்பின் உயிர் தின்ப—
கோசிகன் அளித்த கடவுட் படை, கொதிப்போடு
ஆசு இல, கணிப்பு இல, இராமன் அருள் நிற்ப, 25

'வேதனை செய் காம விடம் மேலிட மெலிந்தாய்;
தீது உரைசெய்தாய்; இனைய செய்கை சிதைவு அன்றோ?
மாதுலனும் ஆய், மரபின் முந்தை உற வந்தேன்,
ஈது உரை செய்தேன்; அதனை, எந்தை! தவிர்க' என்றான். 26

22. வலித்தி - வளைத்திடுவாய்; 23. கோதை - போர்க்குரிய தும்பை மாலை; 26. முந்தை உற - முற்பட.

**இராவணன், மறுத்து உரைப்பின், அவனை ஒறுப்பேன் எனல்**

என்ன, உரை இத்தனையும், எத்தனையும் எண்ணிச்
சொன்னவனை ஏசின அரக்கர் பதி சொன்னான்:
'அன்னை உயிர் செற்றவனை அஞ்சி உறைகின்றாய்;
உன்னை, ஒருவற்கு ஒருவன் என்று உணர்கை நன்றோ? 27

'திக்கயம் ஒளிப்ப, நிலை தேவர் கெட, வானம்
புக்கு, அவர் இருக்கை புகைவித்து, உலகம் யாவும்
சக்கரம் நடத்தும் எனையோ, தயரதன்தன்
மக்கள் நலிகிற்பர்? இது நன்று வலி அன்றோ? 28

'மூஉலகினுக்கும் ஒரு நாயகம் முடித்தேன்;
மேவலர் கிடைக்கின், இதன்மேல் இனியது உண்டோ?
ஏவல் செயகிற்றி, எனது ஆணை வழி; எண்ணிக்
காவல் செய் அமைச்சர் கடன் நீ கடவது உண்டோ? 29

'மறுத்தனை எனப் பெறினும், நின்னை வடி வாளால்
ஒறுத்து, மனம் உற்றது முடிப்பென்; ஒழிகல்லேன்;
வெறுப்பன கிளத்தலுறும் இத் தொழிலை விட்டு, என்
குறிப்பின்வழி நிற்றி, உயிர்கொண்டு உழலின்' என்றான். 30

**மாரீசன் உடன்படல்**

அரக்கன் அஃது உரைத்தலோடும், அறிந்தனன் அடங்கி, '"நெஞ்சம்
தருக்கினர் கெடுவர்" என்றல் தத்துவ நிலையிற்று அன்றோ?
"செருக்குநர்த் தீர்த்தும்" என்பார்தம்மின் ஆர் செருக்கர்?' என்னா,
உருக்கிய செம்பின் உற்ற நீர் என, உரைக்கலுற்றான்: 31

உன்வயின் உறுதி நோக்கி, உண்மையின் உணர்த்தினேன்; மற்று,
என்வயின் இறுதி நோக்கி, அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்;
நன்மையும் தீமை அன்றே, நாசம் வந்து உற்ற போது?
புன்மையின் நின்ற நீராய்! செய்வது புகல்தி' என்றான். 32

**சீதையை அடையச் செய்திடும் சூழ்ச்சி**

என்றலும், எழுந்து புல்லி, ஏறிய வெகுளி நீங்கி,
'குன்று எனக் குவிந்த தோளாய்! மாரவேள் கொதிக்கும் அம்பால்
பொன்றலின் இராமன் அம்பால் பொன்றலே புகழ் உண்டு அன்றோ?
தென்றலைப் பகையைச் செய்த சீதையைத் தருதி' என்றான். 33

27. ஒருவற்கு ஒருவன் - ஒருவனுக்கு உதவி செய்யக்கூடிய ஒருவன்;
29. செயகிற்றி - செய்யக்கடவாய்; 30. உழலின் - திரிய விரும்பின்.

ஆண்டையான் அனைய கூற, 'அரக்கர் ஓர் இருவரோடும்,
பூண்ட என் மானம் தீரத் தண்டகம் புக்க காலை,
தூண்டிய சரங்கள் பாய, துணைவர் பட்டு உருள, அஞ்சி [ருன்.
மீண்ட யான், சென்று செய்யும் வினை என்கொல்? விளம்புக!' என

ஆயவன் அனைய கூற, அரக்கர் கோன், 'ஐய! நொய்து உன்
தாயை ஆர் உயிர் உண்டானை, யான் கொலச் சமைந்து நின்றேன்;
போய், ஐயா! புணர்ப்பது என்னை என்பது பொருந்திற்று ஒன்றோ?
மாயையால் வஞ்சித்து அன்றோ வவ்வுதல் அவளை' என்ருன்.

'புறத்து இனி உரைப்பது என்னே? புரவலன் தேவிதன்னைத்
திறத்துழி அன்றி, வஞ்சித்து எய்துதல் சிறுமைத்து ஆகும்;
அறத்து உளது ஒக்கும் அன்றே? அமர்த்தலை வென்று கொண்டு, உன்
மறத் துறை வளர்த்தி, மன்ன!' என்ன மாரீசன் சொன்ஞன்.

ஆனவன் உரைக்க, நக்க அரக்கர்கோன், 'அவரை வெல்லத்
தானையும் வேண்டுமோ? என் தடக் கை வாள் தக்கது அன்றோ?
ஏனையர் இறக்கின், தானும் தமியளாய் இறக்கும் அன்றே
மானவள்? ஆதலாலே, மாயையின் வலித்தும்' என்ருன். 37

'தேவியைத் திண்டாமுன்னம், இவன் தலை சரத்தின் சிந்திப்
போம்வகை புணர்ப்பன் என்று, புத்தியால் புகல்கின்றேற்கும்
ஆம் வகை ஆயிற்று இல்லை; யார் விதி விளைவை ஓர்வார்?
ஏவிய செய்வது அல்லால், இல்லை வேறு ஒன்று' என்று, எண்ணு, 38

'என்ன மா மாயம் யான் மற்று இயற்றுவது? இயம்புக' என்ருன்,
'பொன்னின் மான் ஆகிப் புக்கு, பொன்னை மால் புணர்த்துக' என்ன,
'அன்னது செய்வென்' என்னு, மாரீசன் அமைந்து போனுன்;
மின்னு வேல் அரக்கர்கோனும் வேறு ஒரு நெறியில் போனுன். 39

**மாரீசனின் மனநிலையும் செயலும்**

மேல்நாள் அவர் வில் வலி கண்டமையால்,
தான் ஆக நினைந்து சமைந்திலனுல்;
'மான் ஆகுதி' என்றவன் வாள் வலியால்
போனுன் மனமும், செயலும் புகல்வாம். 40

வெஞ் சுற்றம் நினைந்து உகும்; வீரரை வேறு
அஞ்சுற்று மறுக்குறும்; ஆழ் குழி நீர்
நஞ்சு உற்றுழி, மீனின் நடுக்குறுவான்
நெஞ்சு உற்றது ஓர் பெற்றி நினைப்பு அரிதால். 41

34. தண்டகம் - தண்டக வனம்; துணைவர் - துணையாக வந்தவர்; 38. ஓர்தல் - அறிதல்; 39. மால் புணர்த்தல் - மயக்குதல்; அமைந்து - இசைந்து.

அக் காலமும், வேள்வியின், அன்று தொடர்ந்து
இக் காலும், நலிந்தும் ஓர் ஈறு பெறான்;
முக் காலின் முடிந்திடுவான் முயல்வான்
புக்கான், அவ் இராகவன் வைகு புனம். 42

மாயப் பொன் மானாய் மாரீசன் தோன்றுதல்

தன் மானம் இலாத, தயங்கு ஒளி சால்
மின் வானமும் மண்ணும் விளங்குவது ஓர்
பொன் மான் உருவம் கொடு போயினனால்—
நன் மான் அனையாள்தனை நாடுறுவான். 43

கலைமான் முதல் ஆயின கண்ட எலாம்,
அலை மானுறும் ஆசையின், வந்தனவால்—
நிலையா மன, வஞ்சனை, நேயம் இலா,
விலை மாதர்கண் யாரும் விழுந்தெனவே. 44

பொய் ஆம் என ஓது புறஞ்சொலினால்
நையா இடை நோவ நடந்தனளால்—
வைதேவி, தன் வால் வளை மென் கை எனும்
கொய்யா மலரால் மலர் கொய்குறுவாள்.* 45

உண்டாகிய கேடு உடையார், துயில்வாய்
எண் தானும் இயைந்து இயையா உருவம்
கண்டார் எனலாம் வகை, கண்டனளால்—
பண்டு ஆரும் உரு இடர்பாடுறுவாள்.† 46

காணா இது, கைதவம் என்று உணராள்;
பேணாத நலம்கொடு பேணினளால்—
வாழ்நாள் அவ் இராவணன் மாளுதலால்,
வீழ் நாள் இல் அறம் புவி மேவுதலால்.† 47

மானைக் கண்டு மயங்கிய சானகி இராமனை அடைதல்

நெற்றிப் பிறையாள் முனம் நின்றிடலும்,
முற்றிப் பொழி காதலின் முந்துறுவாள்,
'பற்றித் தருக என்பென்' எனப் பதையா,
வெற்றிச் சிலை வீரனை மேவினளால். 48

43. மானம் - ஒப்பு; 45. புறஞ்சொல் - அயலார் கூறும் சொல்; 47. கைதவம் - வஞ்சனை வடிவம்.

'ஆணிப் பொனின் ஆகியது; ஆய் கதிரால்
சேணில் சுடர்கின்றது; திண் செவி, கால்,
மாணிக்க மயத்து ஒரு மான் உளதால்;
காணத் தகும்' என்றனள், கை தொழுவாள். 49

'இம் மான் இந் நிலத்தினில் இல்லை' எனு,
எம்மான் இதனைச் சிறிது எண்ணல் செயான்,
செம் மானவள் சொல்கொடு, தே மலரோன்
அம்மானும், அருத்தியன் ஆயினனல். 50

**இலக்குவன் இராமனிடம் அது மாயமான் என்றல்**

ஆண்டு, அங்கு, இளையான் உரையாடினனல்,
'வேண்டும் எனலாம் விழைவு அன்று இது' எனு;
'பூண் துஞ்சு பொலங் கொடியோய்! அது நாம்
காண்டும்' எனும் வள்ளல் கருத்து உணர்வான். 51

'காயம், கனகம்; மணி, கால், செவி, வால்;
பாயும் உருவோடு இது பண்பு அலவால்;
மாயம் எனல் அன்றி, மனக் கொளவே
ஏயும்? இறை மெய் அல' என்ற அளவே. 52

**'இயல்பானதாயும் இருக்கலாம்' என இராமன் எடுத்துரைத்தல்**

'நில்லா உலகின் நிலை, நேர்மையினல்
வல்லாரும் உணர்ந்திலர்; மன் உயிர்தாம்
பல் ஆயிரகோடி பரந்துளவால்;
இல்லாதன இல்லை—இளங் குமரா! 53

'என் என்று நினைத்தது, இழைத்து உளம்? நம்
கன்னங்களின் வேறு உள காணுதுமால்;
பொன்னின் ஒளி மேனி பொருந்திய ஏழ்
அன்னங்கள் பிறந்தது அறிந்திலையோ? 54

'முறையும் முடிவும் இலை, மொய் உயிர்' என்று,
இறைவன் இளையானெடு இயம்பினனல்;
'பறையும் துணை, அன்னது பல் நெறி போய்
மறையும்' என, ஏழை வருந்தினளால். 55

49. ஆணிப் பொன் - மாற்று உயர்ந்த பொன்; 52. காயம் - உடம்பு; 53. மன் உயிர் - நிலைபெற்ற உயிர்கள்; 54. அன்னங்கள் - பரத்துவாச முனி மைந்தர் எழுவர் வினைப்பயனல் மானச மடுவில் ஏழு அன்னமாயினர் என்பது புராண வரலாறு; 55. முறை - இப்படித்தான் இருக்கவேண்டும் என்னும் முறைமை; முடிவு - இப்படித்தான் இருக்கவேண்டும் என்னும் எல்லை; மொய் உயிர் - நிறைந்துள்ள பிராணிகள்.

இராமன் சீதையொடு சென்று மானைக் காணுதல்

அனையவள் கருத்தை உன்னு, அஞ்சனக் குன்றம் அன்னான்,
'புனையிழை! காட்டு அது' என்று போயினன்; பொருத சிந்தைக்
கனை கழல் தம்பி பின்பு சென்றனன்; கடக்க ஒண்ணு
வினை என வந்து நின்ற மான் எதிர் விழித்தது அன்றே. 56

நோக்கிய மானை நோக்கி, நுதியுடை மதியின் ஒன்றும்
தூக்கிலன்; 'நன்று இது' என்றான்; அதன் பொருள் சொல்லல் ஆகும்?
சேக்கையின் அரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த
பாக்கியம் உடைமை அன்றோ? அன்னது பழுது போமோ? 57

'என் ஒக்கும் என்னல் ஆகும்? இளையவ! இதனை நோக்காய்;
தன் ஒக்கும் உவமை அல்லால், தனை ஒக்கும் உவமை உண்டோ?
பல், நக்க தரளம் ஒக்கும்; பசும் புல்மேல் படரும் மெல் நா
மின் ஒக்கும்; செம் பொன், மேனி; வெள்ளியின் விளங்கும் புள்ளி. 58

'வரி சிலை மறை வலோனே! மான் இதன் வடிவை, உற்ற
அரிவையர், மைந்தர், யாரே ஆதரம் கூர்கிலாதார்?
உருகிய மனத்த ஆகி, ஊர்வன, பறப்ப, யாவும்
விரி சுடர் விளக்கம் கண்ட விட்டிலின் வீழ்வ காணாய்!' 59

ஆரியன் அனைய கூற, அன்னதுதன்னை நோக்கி,
'சீரியது அன்று இது' என்று, சிந்தையில் தெளிந்த தம்பி,
'காரியம் என்னை, ஈண்டுக் கண்டது கனக மானேல்?
வேரி அம் தெரியல் வீர! மீள்வதே மேன்மை' என்றான். 60

அற்று அவன் பகராமுன்னம், அழகனை, அழகியாளும்,
'கொற்றவன் மைந்த! மற்றைக் குழைவுடை உழையை, வல்லை
பற்றினை தருதி ஆயின், பதியிடை அவதி எய்தப்
பெற்றுழி, இனிது உண்டாடப் பெறற்கு அருந் தகைமைத்து' என்றாள்.

மானைப்பற்றி இராம–இலக்குவர் மாறுபாடு கொள்ளல்

ஐய நுண் மருங்குல் நங்கை அஃது உரைசெய்ய, ஐயன்,
'செய்வென்' என்று அமைய, நோக்கத் தெளிவுடைத் தம்பி செப்பும்:
'வெய்ய வல் அரக்கர் வஞ்சம் விரும்பினர் வினையின் செய்த
கைதவ மான் என்று, அண்ணல்! காணுதி கடையின்' என்றான்.

59. ஆதரம் - ஆசை; 61. உண்டாடல் - விளையாடல்.

'மாயமேல், மடியும் அன்றே வாளியின்; மடிந்தபோது
காய் சினத்தவரைக் கொன்று கடன் கழித்தோமும் ஆதும்;
தூயதேல், பற்றிக் கோடும்; சொல்லிய இரண்டின் ஒன்று
தீயதே? உரைத்தி' என்ருன்—தேவரை இடுக்கண் தீர்ப்பான்.

'பின் நின்ருர் இளையர் என்றும் உணர்கிலம்; பிடித்த மாயம்
என் என்றும் தெளிதல் தேற்ரும்; யாவது ஈது என்றும் ஓராம்;
முன் நின்ற முறையின் நின்ருர் முனிந்துள வேட்டம் முற்றல்,
பொன் நின்ற வயிரத் தோளாய்! புகழ்உடைத்தாம் அன்று' என்ருன்.

'பகையுடை அரக்கர் என்றும், பலர் என்றும், பயிலும் மாயம்
மிகையுடைத்து என்றும், பூண்ட விரதத்தை விடுதும் என்றல்
நகையுடைத்து ஆகும் அன்றே? ஆதலின் நன்று இது' என்ன,
தகையுடைத் தம்பிக்கு, அந் நாள், சதுமுகன் தாதை சொன்னன். 65

'அடுத்தவும் எண்ணிச் செய்தல், அண்ணலே! அமைதி அன்ரே?
விடுத்து, இதன் பின் நின்ருர்கள் பலர் உளர்எனினும், வில்லால்
தொடுத்த வெம் பகழி தூவித் தொடர்ந்தனென், விரைந்து சென்று,
படுக்குவென்; அது அன்று ஆயின், பற்றினென் கொணர்வென்' என்ருன். 66

ஆயிடை, அன்னம் அன்னுள், அமுது உகுத்தனைய செய்ய
வாயிடை, மழலை இன் சொல் கிளியினின் குழறி, மாழ்கி,
'நாயக! நீயே பற்றி நல்கலைபோலும்' என்ன,
சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப் போனள். 67

**இளையவனை இருத்தி, இராமன் மானைத் தொடர்தல்**

போனவள் புலவி நோக்கி, புரவலன், 'பொலன் கொள் தாராய்!
மான் இது நானே பற்றி, வல்லையின் வருவென், நன்றே;
கான் இயல் மயில் அன்னளைக் காத்தனை இருத்தி' என்ன,
வேல் நகு சரமும், வில்லும், வாங்கினன் விரையலுற்ருன். 68

'முன்னமும் மகவாய் வந்த மூவரில் ஒருவன் போனன்;
அன்ன மாரீசன் என்றே அயிர்த்தனன், இதனை; ஐய!
இன்னமும் காண்டி; வாழி, ஏகு' என, இரு கை கூப்பி,
பொன் அனள் புக்க சாலை காத்தனன், புறத்து நின்றே. 69

63. பற்றிக் கோடும் - பிடித்துக்கொள்வோம்; 65. சதுமுகன் தாதை - பிரமனது தந்தையான இராமன்; 67. முத்தம் சிந்துபு - முத்துப் போன்ற கண்ணீர்த்துளிகளை வடியவிட்டு; 68. புலவி - பிணக்கு; வேல் நகு சரம் - வேல் போல் கூரிய அம்பு.

மந்திரத்து இளையோன் சொன்ன வாய்மொழி மனத்துக் கொள்ளான்;
சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கி,
சிந்துரப் பவளச் செவ் வாய் முறுவலன், சிலைச் செவ்விச்
சுந்தரத் தோளினான், அம் மானினைத் தொடரலுற்றான். 70

மிதித்தது மெல்ல மெல்ல; வெறித்தது வெருவி; மீதில்
குதித்தது; செவியை நீட்டி, குரபதம் உரத்தைக் கூட்டி,
உதித்து எழும் ஊதை, உள்ளம், என்று இவை உருவச் செல்லும்
கதிக்கு ஒரு கல்வி வேறே காட்டுவது ஒத்தது அன்றே. 71

நீட்டினான், உலகம் மூன்றும் நின்று எடுத்து அளந்த பாதம்;
மீட்டும் தாள் நீட்டற்கு, அம்மா! வேறும் ஓர் அண்டம் உண்டோ?
ஓட்டினான், தொடர்ந்த தன்னை, ஒழிவு அற நிறைந்த தன்மை,
காட்டினான் அன்றி, அன்று, அக் கடுமை யார் கணிக்கற்பாலார்? 72

குன்றிடை இவரும்; மேகக் குழுவிடைக் குதிக்கும்; கூடச்
சென்றிடின், அகலும்; தாழின், தீண்டல் ஆம் தகைமைத்து ஆகும்;
நின்றதே போல நீங்கும்; நிதிவழி நேயம் நீட்டும்
மன்றல் அம் கோதை மாதர் மனம் எனப் போயிற்று, அம்மா!

'காயம் வேறு ஆகி, செய்யும் கருமம் வேறு ஆகிற்று அன்றே?
ஏயுமே; என்னின் முன்னம் எண்ணமே இளவற்கு உண்டே;
ஆயுமேல் உறுதல் செல்லாம்; ஆதலால், அரக்கர் செய்த
மாயமே ஆயதே; நான் வருந்தியது' என்றான்—வள்ளல். 74

**இராமன் அம்பு தொடுக்க மாரீசன் அலறி வீழ்தல்**

'பற்றுவான், இனி, அல்லன்; பகழியால்
செற்று, வானில் செலுத்தல் உற்றான்' என
மற்று அம் மாய அரக்கன் மனக்கொளா,
உற்ற வேகத்தின் உம்பரின் ஓங்கினான். 75

அக் கணத்தினில், ஐயனும், வெய்ய தன்
சக்கரத்தின் தகைவு அரிது ஆயது ஓர்,
செக்கர் மேனிப் பகழி செலுத்தினான்—
'புக்க தேயம் புக்கு இன் உயிர் போக்கு' எனா. 76

நெட்டிலைச் சரம் வஞ்சனை நெஞ்சுறப்
பட்டது: அப்பொழுதே, பகு வாயினால்,
அட்ட திக்கினும், அப்புறமும் புக
விட்டு அழைத்து, ஒரு குன்று என வீழ்ந்தனன். 77

71. குரபதம் - குளப்படி; உரம் - மார்பு; 72. கணிக்கற் பாலார் - மதிக்கவல்லவர்; 74. வள்ளல் - வரையாது அருள்புரியும் இராமன்; 75. உம்பரின் - வானத்தில்; 77. அட்ட திக்கு - எட்டுத் திசை.

'மாயம் உண்டு' என மதித்து, இராகவன் சாலைக்கு விரைதல்

வெய்யவன், தன் உருவொடு வீழ்தலும்,
'செய்யது அன்று' எனச் செப்பிய தம்பியை,
'ஐயன் வல்லன்; என் ஆர் உயிர் வல்லன்; நான்
உய்ய வந்தவன் வல்லன்' என்று உன்னினன். 78

ஆசை நீளத்து அரற்றினன் வீழ்ந்த அந்
நீசன் மேனியை, நின்று உற நோக்கினன்;
மாசு இல் மா தவன் வேள்வியில் வந்த மா-
ரீசனே இவன் என்பதும் தேறினன். 79

'புழைத்த வாளி உரம் புக, புல்லியோன்,
இழைத்த மாயையின், என் குரலால் எடுத்து
அழைத்தது உண்டு; அது கேட்டு அயர்வு எய்துமால்,
மழைக் கண் ஏழை' என்று, உள்ளம் வருந்தினன். 80

'மாற்றம் இன்னது, ''மாய மாரீசன்'' என்று,
ஏற்ற காலையின் முன்உணர்ந்தான் எனது
ஆற்றல் தேரும் அறிவினன்; ஆதலால்,
தேற்றுமால் இளையோன்' எனத் தேறினன். 81

'மாள்வதே பொருள் ஆக வந்தான்அலன்;
சூழ்வது ஓர் பொருள் உண்டு; இவன் சொல்லினல்
மூள்வது ஏதம்; அது முடியாமுனம்
மீள்வதே நலன்' என்று, அவன் மீண்டனன். 82

## 9 இராவணன் சூழ்ச்சிப் படலம்

சங்கு அடுத்த தனிக் கடல் மேனியாற்கு
அங்கு அடுத்த நிலைமை அறைந்தனம்;
கொங்கு அடுத்த மலர்க் குழல் கொம்பனுட்கு
இங்கு அடுத்த தகைமை இயம்புவாம். 1

79. ஆசை - திசை; 81. மாற்றம் - சொல்; 82. ஏதம் - தீங்கு.

9 : 1. அறைந்தனம் - சொன்னேம்; .கொங்கு - நறுமணம்; தகைமை - தன்மை.

சீதையின் துயர்நிலை

எயிறு அலைத்து முழை திறந்து ஏங்கிய,
செயிர் தலைக்கொண்ட, சொல் செவி சேர்தலும்,
குயில் தலத்திடை உற்றது ஓர் கொள்கையாள்,
வயிறு அலைத்து விழுந்து மயங்கினாள். 2

' ''பிடித்து நல்கு, இவ் உழை'' என, பேதையேன்
முடித்தனென், முதல் வாழ்வு' என, மொய் அழல்
கொடிப் படிந்தது என, நெடுங் கோள் அரா
இடிக்கு உடைந்தது என, புரண்டு ஏங்கினாள். 3

'குற்றம் வீந்த குணத்தின் எம் கோமகன்,
மற்று அவ் வாள் அரக்கன் புரி மாயையால்,
இற்று வீழ்ந்தனன் என்னவும், என் அயல்
நிற்றியோ, இளையோய்! ஒரு நீ?' என்றாள். 4

'இராமனுக்குத் தீங்கு நேராது' என்று இலக்குவன் அறிவுறுத்தல்

'எண்மை ஆர் உலகினில், இராமற்கு ஏற்றம் ஓர்
திண்மையார் உளர் எனச் செப்பற்பாலரோ?
பெண்மையால் உரைசெயப் பெறுதிரால்' என,
உண்மையான், அனையவட்கு உணரக் கூறினான். 5

'ஏழுமே கடல், உலகு ஏழும் ஏழுமே,
சூழும் ஏழ் மலை, அவை தொடர்ந்த சூழல்வாய்
வாழும் ஏழையர் சிறு வலிக்கு, வாள் அமர்,
தாழுமே இராகவன் தனிமை? தையலீர்! 6

'பார் என, புனல் என, பவன, வான், கனல்,
பேர் எனைத்து, அவை, அவன் முனியின் பெருமால்;
கார் எனக் கரிய அக் கமலக் கண்ணனை
யார் எனக் கருதி, இவ் இடரின் ஆழ்கின்றீர்? 7

'இடைந்துபோய் நிசிசரற்கு, இராமன், எவ்வம் வந்து
அடைந்த போது அழைக்குமே? அழைக்குமாம் எனின்,
மிடைந்த பேர் அண்டங்கள், மேல, கீழன,
உடைந்துபோம்; அயன் முதல் உயிரும் வீயுமால். 8

'மாற்றம் என் பகர்வது? மண்ணும் வானமும்
போற்ற, வன் திரிபுரம் எரித்த புங்கவன்
ஏற்றி நின்று எய்த வில் இற்றது; எம்பிரான்
ஆற்றலின் அமைவது ஓர் ஆற்றல் உண்மையோ? 9

5. எண்மை - எளிமை.

'காவலன், ஈண்டு நீர் கருதிற்று எய்துமேல்,
மூவகை உலகமும் முடியும்; முந்து உள
தேவரும், முனிவரும் முதல செவ்வியோர்
ஏவரும், வீழ்ந்துளார்; மற்று அறமும் எஞ்சுமால். 10

'பரக்க என் பகர்வது? பகழி, பண்ணவன்
துரக்க, அங்கு அது பட, தொலைந்து சோர்கின்ற
அரக்கன் அவ் உரை எடுத்து அரற்றினான்; அதற்கு
இரக்கம் உற்று இரங்கலிர்; இருத்திர் ஈண்டு' என்றான். 11

**சீதை கடுஞ்சொல் செப்பலும், இலக்குவன் ஏகலும்**

என்று அவன் இயம்பலும், எடுத்த சீற்றத்தள்,
கொன்றன இன்னலள், கொதிக்கும் உள்ளத்தள்,
'நின்ற நின் நிலை, இது, நெறியிற்று அன்று' எனா,
வன் தறுகண்ணினள், வயிர்த்துக் கூறுவாள்: 12

'ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்;
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும், நீ
வெருவலை நின்றனை; வேறு என்? யான், இனி,
எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென், ஈண்டு' எனா, 13

தாமரை வனத்திடைத் தாவும் அன்னம்போல்,
தூம வெங் காட்டு எரி தொடர்கின்றாள்தனை,
சேம விற் குமரனும் விலக்கி, சீறடிப்
பூ முகம் நெடு நிலம் புல்லி, சொல்லுவான்: 14

'துஞ்சுவது என்னை? நீர் சொன்ன சொல்லை யான்
அஞ்சுவென்; மறுக்கிலென்; அவலம் தீர்ந்து இனி,
இஞ்சு இரும்; அடியனேன் ஏகுகின்றனென்;
வெஞ் சின விதியினை வெல்ல வல்லமோ? 15

'போகின்றேன் அடியனேன்; புகுந்து வந்து, கேடு
ஆகின்றது; அரசன்தன் ஆணை நீர் மறுத்து,
''ஏகு'' என்றிர்; இருக்கின்றீர் தமியிர்' என்று, பின்
வேகின்ற சிந்தையான் விடைகொண்டு ஏகினான். 16

10. எஞ்சும் - சிதையும்; 11. பண்ணவன் - தேவன், ஈண்டு இராமன்; 14. முகம் - முன்னர்; 15. இஞ்சு - இங்கு.

'இருப்பெனேல், எரியிடை இறப்பரால் இவர்;
பொருப்பு அனையானிடைப் போவெனேஎனின்,
அருப்பம் இல் கேடு வந்து அடையும்; ஆர் உயிர்
விருப்பனேற்கு என் செயல்?' என்று, விம்மினள். 17

'அறம்தனால் அழிவு இலது ஆகல் ஆக்கலாம்;
இறந்துபாடு இவர்க்கு உறும், இதனின் இவ் வழித்
துறந்து போம் இதனையே துணிவென்; தொல் வினைப்
பிறந்து, போந்து, இது படும், பேதையேன்' என, 18

'போவது புரிவல் யான்; புகுந்தது உண்டுஎனின்,
காவல்செய் எருவையின் தலைவன் கண்ணுறும்;
ஆவது காக்கும்' என்று அறிவித்து, அவ் வழி,
தேவர் செய் தவத்தினால் செம்மல் ஏகினான். 19

இலக்குவன் பெயர்ந்ததும், இராவணன் தவக் கோலத்துடன் தோன்றுதல்

இளையவன் ஏகலும், இறவு பார்க்கின்ற
வளை எயிற்று இராவணன், வஞ்சம் முற்றுவான்,
முளை வரித் தண்டு ஒரு மூன்றும், முப் பகைத்
தளை அரி தவத்தவர் வடிவம், தாங்கினான். 20

ஊண் இலனாம் என உலர்ந்த மேனியன்;
சேண் நெறி வந்தது ஓர் வருத்தச் செய்கையன்;
பாணியின் அளந்து இசை படிக்கின்றான் என,
வீணையின் இசைபட வேதம் பாடுவான். 21

பூப் பொதி அவிழ்ந்தன நடையன்; பூதலம்
தீப் பொதிந்தாமென மதிக்கும் செய்கையன்;
காப்பு அரு நடுக்குறும் காலன், கையினன்;
மூப்பு எனும் பருவமும் முனிய முற்றினான். 22

தாமரைக் கண்ணொடு ஏர் தவத்தின் மாலையன்;
ஆமையின் இருக்கையன்; வளைந்த ஆக்கையன்;
நாம நூல் மார்பினன்; நணுகினான் அரோ—
தூ மனத்து அருந்ததி இருந்த சூழல்வாய். 23

17. அருப்பம் இல் கேடு - தடை இல்லாத கேடு; 20. இறவு - நீக்கம்; முளை - மூங்கில்; 23. ஆமையின் இருக்கை - ஆமை வடிவாகச் செய்யப்பட்ட மணை.

தோம் அறு சாலையின் வாயில் துன்னினான்;
நா முதல் குழறிட நடுங்கும் சொல்லினன்;
'யாவர் இவ் இருக்கையுள் இருந்துளீர்?' என்றான்—
தேவரும் மருள்தரத் தெரிந்த மேனியான். 24

**சீதை வரவேற்றல்**

தோகையும், அவ் வழி, 'தோம் இல் சிந்தனைச்
சேகு அறு நோன்பினர்' என்னும் சிந்தையால்,
பாகு இயல் கிளவியாள், பவளக் கொம்பர் போன்று,
'ஏகுமின் ஈண்டு' என, எதிர்வந்து எய்தினாள். 25

வெற்பிடை மதம் என வெயர்க்கும் மேனியன்,
அற்பின் நல் திரை புரள் ஆசை வேலையன்,
பொற்பினுக்கு அணியினை, புகழின் சேக்கையை,
கற்பினுக்கு அரசியை, கண்ணின் நோக்கினான். 26

தூங்கல் இல் குயில் கெழு சொல்லின், உம்பரும்
ஓங்கிய அழகினாள் உருவம் காண்டலும்,
ஏங்கினன் மன நிலை யாது என்று உன்னுவாம்?
வீங்கின, மெலிந்தன, வீரத் தோள்களே. 27

புன மயில் சாயல்தன் எழிலில், பூ நறைச்
சுனை மடுத்து உண்டு இசை முரலும் தும்பியின்-
இனம் எனக் களித்துளது என்பது என்? அவன்
மனம் எனக் களித்தது, கண்ணின் மாலையே. 28

'சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்து இவண்
மேயவள் மணி நிற மேனி காணுதற்கு,
ஏயுமே இருபது? இங்கு இமைப்பு இல் நாட்டங்கள்
ஆயிரம் இல்லை!' என்று, அல்லல் எய்தினான். 29

'அரை கடை இட்ட முக்கோடி ஆயுவும்
புரை தபு தவத்தின் யான் படைத்த போதுமே,
நிரை வளை முன் கை இந் நின்ற நங்கையின்
கரை அறு நல் நலக் கடற்கு?' என்று உன்னினான். 30

'தேவரும், அவுணரும், தேவிமாரொடும்
கூவல்செய் தொழிலினர், குடிமை செய்திட,
மூஉலகமும் இவர் முறையின் ஆள, யான்
ஏவல் செய்து உய்குவென், இனி' என்று உன்னினான். 31

25. சேகு - குற்றம்; 26. சேக்கை - இருப்பிடம்; 27. தூங்கல் - சோம்புதல்; 31. கூவல் - குற்றேவல்; குடிமை - குடிக்கு அடிமை.

'உளைவுறு துயர் முகத்து ஒளி இது ஆம் எனின்,
முளை எயிறு இலங்கிடும் முறுவல் என்படும்?
தளை அவிழ் குழல் இவட் கண்டு தந்த என்
இளையவட்கு அளிப்பென், என் அரசு' என்று எண்ணினன். 32

ஆண்டையான் அனையன உன்னி, ஆசை மேல்
மூண்டு எழு சிந்தனை, முறை இலோன்தனைக்
காண்டலும், கண்ணின் நீர் துடைத்த கற்பினள்,
'ஈண்டு எழுந்தருளும்' என்று, இனிய கூறினள். 33

**இராவணன் இருத்தலும், இயற்கைகள் நடுங்கலும்**

ஏத்தினள்; எய்தலும், 'இருத்திர் ஈண்டு' என,
வேத்திரத்து ஆசனம் விதியின் நல்கினள்;
மாத் திரிதண்டு அயல் வைத்த வஞ்சனும்,
பூத் தொடர் சாலையின் இருந்த போழ்தினே, 34

நடுங்கின, மலைகளும் மரனும்; நா அவிந்து
அடங்கின, பறவையும்; விலங்கும் அஞ்சின;
படம் குறைந்து ஒதுங்கின, பாம்பும்;—பாதகக்
கடுந் தொழில் அரக்கனைக் காணும் கண்ணினே. 35

**தீயவன் வினவும் தூயவள் விடையும்**

இருந்தவன், 'யாவது இவ் இருக்கை? இங்கு உறை
அருந் தவன் யாவன்? நீர் யாரை?' என்றலும்,
'விருந்தினர்; இவ் வழி விரகு இலார்' என,
பெருந் தடங் கண்ணவள் பேசல் மேயினள்: 36

'தயரதன் தொல் குலத் தனையன்; தம்பியோடு,
உயர் குலத்து அன்னை சொல் உச்சி ஏந்தினன்,
அயர்வுஇலன், இவ் வழி உறையும்; அன்னவன்
பெயரினைத் தெரிகுதிர், பெருமையீர்!' என்றாள். 37

'கேட்டனென், கண்டிலென்; கெழுவு கங்கை நீர்
நாட்டிடை ஒருமுறை நண்ணினேன்; மலர்
வாள் தடங் கண்ணி! நீர் யாவர் மா மகள்,
காட்டிடை அரும் பகல் கழிக்கின்றீர்?' என்றான். 38

34. வேத்திரத்து ஆசனம் - பிரம்பினாலாகிய இருக்கை; 36. விருந்தினர் - புதியவர்; இவ்வழி விரகு இலார் - இந்த இடத்தைப்பற்றிய முன்னறிவு இல்லாதவர்.

'அனக மா நெறி படர் அடிகள்! நும் அலால்,
நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன்
சனகன் மா மகள்; பெயர் சனகி; காகுத்தன்
மனைவி யான்' என்றனள், மறு இல் கற்பினாள். 39

**'எங்கிருந்து வருகிறீர்?' என்ற சீதைக்கு வேடதாரியின் கபட உரை**

அவ் வழி அனையன உரைத்த ஆயிழை,
'வெவ் வழி வருந்தினிர், விளைந்த மூப்பினிர்,
இவ் வழி இரு வினை கடக்க எண்ணினிர்,
எவ் வழிநின்றும் இங்கு எய்தினீர்?' என்றாள். 40

'இந்திரற்கு இந்திரன்; எழுதல் ஆகலாச்
சுந்தரன்; நான்முகன் மரபில் தோன்றினான்;
அந்தரத்தோடும் எவ் உலகும் ஆள்கின்றான்;
மந்திரத்து அரு மறை வைகும் நாவினான். 41

'ஈசன் ஆண்டு இருந்த பேர் இலங்கு மால் வரை
ஊசி-வேரொடும் பறித்து எடுக்கும் ஊற்றத்தான்;
ஆசைகள் சுமந்த பேர் அளவில் யானைகள்
பூசல் செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான். 42

'நிற்பவர், கடைத்தலை நிறைந்து தேவரே;
சொல் பகும், மற்று, அவன் பெருமை சொல்லுங்கால்;
கற்பகம் முதலிய நிதியம் கையன;
பொற்பு அகம், மான நீர் இலங்கைப் பொன் நகர். 43

'பொன்னகரத்தினும், பொலன்கொள் நாகர்தம்
தொல் நகரத்தினும், தொடர்ந்த மா நிலத்து
எந் நகரத்தினும், இனிய; ஈண்டு, அவன்
நல் நகரத்தன நவை இலாதன. 44

'தாளுடை மலருளான் தந்த, அந்தம் இல்
நாளுடை வாழ்க்கையன்; நாரி பாகத்தன்
வாளுடைத் தடக் கையன்; வாரி வைத்த வெங்
கோளுடைச் சிறையினன்; குணங்கள் மேன்மையான். 45

39. அனகம் - குற்றமற்ற; 40. விளைந்த மூப்பினிர் - முதிர்ந்த மூப்பினை யுடையீர்; 42. ஊசிவேர் - ஆணிவேர்; 43. பொற்பு அகம் - அழகிய இருப்பிடம்; 44. பொன்னகர் - தேவர்கோன் நகராகிய அமராவதி; பொலன் - அழகு; நாகர்தம் நகர் - நாகர் வாழ் போகவதி; 45. நாரி - பெண், ஈண்டு உமை.

'வெம்மை தீர் ஒழுக்கினன்; விரிந்த கேள்வியன்;
செம்மையோன்; மன்மதன் திகைக்கும் செவ்வியன்;
எம்மையோர் அனைவரும், ''இறைவர்'' என்று எணும்
மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான். 46

'அனைத்து உலகினும் அழகு அமைந்த நங்கையர்
எனைப் பலர், அவன்தனது அருளின் இச்சையோர்;
நினைத்து, அவர் உருகவும், உதவ நேர்கிலன்;
மனக்கு இனியாள் ஒரு மாதை நாடுவான். 47

'ஆண்டையான் அரசு வீற்றிருந்த அந் நகர்,
வேண்டி, யான் சில் பகல் உறைதல் மேவினேன்;
நீண்டனென் இருந்து, அவற் பிரியும் நெஞ்சிலேன்,
மீண்டனென்' என்றனன், வினயம் உன்னுவான். 48

வைதேகி-இராவண வாக்குவாதம்

'வேதமும், வேதியர் அருளும் வெஃகலா,
சேதன மன் உயிர் தின்னும், தீவினைப்
பாதக அரக்கர்தம் பதியின் வைகுதற்கு
ஏது என்?—உட்லமும் மிகை என்று எண்ணுவீர்! 49

'வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர்;
புனல் திரு நாட்டிடைப் புனிதர் ஊர் புக
நினைத்திலிர்; அற நெறி நினைக்கிலாதவர்
இனத்திடை வைகினிர்; என் செய்தீர்!' என்றாள். 50

மங்கை அஃது உரைத்தல் கேட்ட வரம்பு இலான், ''மறுவின் தீர்ந்தார்,
வெங் கண் வாள் அரக்கர்'' என்ன வெருவலம்; மெய்ம்மை நோக்கின்,
திங்கள் வாள் முகத்தினாளே! தேவரின் தீயர் அன்றே;
எங்கள் போலியர்க்கு நல்லார் நிருதரே போலும்' என்றான். 51

சேயிழை—அன்ன சொல்ல,—'தீயவர்ச் சேர்தல் செய்தார்
தூயவர் அல்லர், சொல்லின், தொல் நெறி தொடர்ந்தோர்' என்றாள்;
'மாய வல் அரக்கர் வல்லர், வேண்டு உரு வரிக்க' என்பது,
ஆயவள் அறிதல் தேற்றாள்; ஆதலின், அயல் ஒன்று எண்ணாள்.

46. செவ்வியன் - அழகுடையவன்; 48. வினயம் - சூழ்ச்சி; 49. சேதனம் - அறிவு; 52. உரு வரிக்க - வடிவம் கொள்ள.

‘அயிர்த்தனள் ஆகும்’ என்று, ஓர் ஐயுறவு அகத்துக் கொண்டான்;
பெயர்த்து, அது துடைக்க எண்ணி, பிறிதுறப் பேசலுற்றான்:
‘மயக்கு அறும் உலகம் மூன்றின் வாழ்பவர்க்கு, அனைய வல்லோர்
இயற்கையின் நிற்பது அல்லால், இயற்றல் ஆம் நெறி என்?’ என்றான்.

திறம் தெரி வஞ்சன், அச் சொல் செப்பலும், செப்பம் மிக்காள்,
‘அறம் தரு வள்ளல், ஈண்டு இங்கு அருந் தவம் முயலும் நாளுள்,
மறம் தலை திரிந்த வாழ்க்கை அரக்கர் தம் வருக்கத்தோடும்
இறந்தனர் முடிவர்; பின்னர், இடர் இலை உலகம்’ என்றாள்.

மானவள் உரைத்தலோடும், ‘மானிடர், அரக்கர்தம்மை,
மீன் என மிளிரும் கண்ணாய்! வேர்அற வெல்வர்என்னின்,
யானையின் இனத்தை எல்லாம் இள முயல் கொல்லும்; இன்னும்,
கூன் உகிர் மடங்கல் ஏற்றின் குழுவை மான் கொல்லும்’ என்றான்.

‘மின் திரண்டனைய பங்கி விராதனும், வெகுளி பொங்கக்
கன்றிய மனத்து வென்றிக் கரன் முதல் கணக்கிலோரும்,
பொன்றிய பூசல் ஒன்றும் கேட்டிலிர் போலும்’ என்றாள்—
அன்று அவர்க்கு அடுத்தது உன்னி, மழைக் கண் நீர் அருவி சோர்வாள்.

‘வாள் அரி வள்ளல்; சொன்ன மான் கணம் நிருதரானார்;
கேளொடு மடியுமாறும், வானவர் கிளருமாறும்,
நாளையே காண்டிர் அன்றே; நவை இலிர், உணர்கிலீரோ?
‘மீள அருந் தருமம்தன்னை வெல்லுமோ பாவம்?’ என்றாள். 57

**இராவணன் சீற்றமும் மாய வேடம் கலைதலும்**

தேனிடை அமுது அளாய அன்ன மென் சில சொல் மாலை,
தானுடைச் செவிகளூடு தவழுற, தளிர்த்து வீங்கும்
ஊனுடை உடம்பினானும், உரு கெழு மானம் ஊன்ற,
‘மானிடர் வலியர்’ என்ற மாற்றத்தால், சீற்றம் வைத்தான்.

சீறினன், உரைசெய்வான், ‘‘அச் சிறு வலிப் புல்லியோர்கட்கு
ஈறு, ஒரு மனிதன் செய்தான்’’ என்று எடுத்து இயம்பினாயேல்,
தேறுதி நாளையே; அவ் இருபது திண் தோள் வாடை
வீறிய பொழுது, பூளைவீ என வீவன் அன்றே? 59

53. ஐயுறவு - சந்தேகம்; 55. மானவள் - மான் போன்றவள்; பெருமையையுடையவள்; கூன் உகிர் - வளைந்த நகம்; மடங்கல் ஏறு - ஆண் சிங்கம்; 56. பங்கி - ஆண் மக்களின் மயிர்; 58. வீங்கும் - பூரிக்கும்; உரு கெழு மானம் - அச்சம் மிகும் மான உணர்ச்சி.

'மேருவைப் பறிக்க வேண்டின், விண்ணினை இடிக்க வேண்டின்,
நீரினைக் கலக்க வேண்டின், நெருப்பினை அவிக்க வேண்டின்,
பாரினை எடுக்க வேண்டின், பல வினை,—சில சொல் ஏழாய்!
யார் எனக் கருதிச் சொன்னாய்?—இராவணற்கு அரிது என்?' என்றான்.

'அரண் தரு திரள் தோள் சால உள எனின், ஆற்றல் உண்டோ?
கரண்ட நீர் இலங்கைவேந்தைச் சிறைவைத்த கழற்கால் வீரன்
திரண்ட தோள் வனத்தை எல்லாம், சிறியது ஓர் பருவம்தன்னில்,
இரண்டு தோள் ஒருவன் அன்றோ, மழுவினால் எறிந்தான்?' என்றாள்.

என்று அவள் உரைத்தலோடும், எரிந்தன நயனம்; திக்கில்
சென்றன திரள் தோள்; வானம் தீண்டின மகுடம்; திண் கை
ஒன்றொடு ஒன்று அடித்த, மேகத்து உரும் என; எயிற்றின் ஒளி
மென்றன; வெகுளி பொங்க, விட்டது மாய வேடம். 62

**சீதையின் ஐயப்பாடும் அரக்கனின் கோர வடிவமும்**

'இரு வினை துறந்த மேலோர் அல்லர்கொல் இவர்?' என்று எண்ணி,
அரிவையும, ஐயம் எய்தா, 'ஆர் இவன்தான்?' என்று, ஒன்றும்,
தெரிவு அரு நிலையளாக, தீ விடத்து அரவம் தானே
உரு கெழு சீற்றம் பொங்கி, பணம் விரித்து உயர்ந்தது ஒத்தாள். 63

ஆற்ற வெந் துயரத்து அன்னாள் ஆண்டு உற்ற அலக்கண் நோக்கின்,
ஏற்றம் என் நினைக்கல் ஆகும்? எதிர் எடுத்து இயம்பல் ஆகும்
மாற்றம் ஒன்று இல்லை; செய்யும் வினை இல்லை; வரிக்கல் ஆகாக்
கூற்றம் வந்து உற்ற காலத்து உயிர் என, குலைவு கொண்டாள்.

'விண்ணவர் ஏவல் செய்ய, வென்ற என் வீரம் பாராய்;
மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர் வலியர் என்றாய்;
பெண் எனப் பிழைத்தாய் அல்லை; உன்னை யான் பிசைந்து தின்ன
எண்ணுவென் என்னின், பின்னை என் உயிர் இழப்பென்' என்றான்.

'குலைவுறல், அன்னம்! முன்னம், யாரையும் கும்பிடா என்
தலைமிசை மகுடம் என்ன, தனித்தனி இனிது தாங்கி,
அலகு இல் பூண் அரம்பை மாதர் அடிமுறை ஏவல் செய்ய,
உலகம் ஈர்-ஏழும் ஆளும் செல்வத்துள் உறைதி' என்றான். 66

61. கரண்ட நீர் - நீர்க்காக்கைகளையுடைய கடல்; இலங்கை வேந்து - இராவணன்; இலங்கை வேந்தைச் சிறை வைத்த வீரன் - கார்த்தவீரியார்ச்சுனன், ஆயிரம் தோள்களையுடையவன்; இரண்டு தோள் ஒருவன் - பரசுராமன்; 64. அலக்கண் - துன்பம்; ஏற்றம் - மிகுதி; மாற்றம் - சொல்; குலைவு - நடுக்கம்.

**கற்பின் கனலி கனன்று எழுதல்**

செவிகளைத் தளிர்க் கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்;
'கவினும் வெஞ் சிலைக் கை வென்றிக் காகுத்தன் கற்பினேனை,
புவியிடை ஒழுக்கம் நோக்காய்; பொங்கு எரி, புனிதர் ஈயும்
அவியை நாய் வேட்டதென்ன, என் சொனாய்? அரக்க!' என்னா,

'புல் நுனை நீரின் நொய்தாப் போதலே புரிந்து நின்ற
என் உயிர் இழத்தல் அஞ்சி, இற் பிறப்பு அழிதல் உண்டோ?
மின் உயிர்த்து உருமின் சீறும் வெங் கணை விரவாமுன்னம்,
உன் உயிர்க்கு உறுதி நோக்கி, ஒளித்தியால் ஓடி' என்றாள். 68

**ஆசையை விளம்பி, அரக்கன் சீதையை அடி வணங்கல்**

என்று அவள் உரைக்க, நின்ற இரக்கம் இல் அரக்கன், 'எய்த
உன் துணைக் கணவன் அம்பு, அவ் உயர் திசை சுமந்த ஓங்கல்
வன் திறல் மருப்பின் ஆற்றல் மடித்த என் மார்பில் வந்தால்,
குன்றிடைத் தொடுத்து விட்ட பூங் கணைகொல் அது' என்றான்.

அணங்கினுக்கு அணங்கனாளே! ஆசை நோய் அகத்துப் பொங்க,
உணங்கிய உடம்பினேனுக்கு உயிரினை உதவி, உம்பர்க்
கணம் குழை மகளிர்க்கு எல்லாம் பெரும் பதம் கைக்கொள்' என்னா,
வணங்கினன்—உலகம் தாங்கும் மலையினும் வலிய தோளான்.

**'இறைவா! இளையோய்!' எனச் சீதை ஏங்கி அழைத்தல்**

தறைவாய் அவன் வந்து அடி தாழுதலும்,
கறை வாள் பட ஆவி கலங்கினள்போல்,
'இறைவா! இளையோய்!' என ஏங்கினளால்—
பொறைதான் உரு ஆனது ஓர் பொற்பு உடையாள். 71

**இராவணன் பன்னசாலையோடு சீதையை எடுத்தல்**

ஆண்டு, ஆயிடை, தீயவன் ஆயிழையைத்
தீண்டான், அயன் மேல் உரை சிந்தைசெயா;
தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால்,
கீண்டான் நிலம்; யோசனை கீழொடு மேல். 72

67. சிக்குறச் சேமம் செய்தாள் - அழுத்தமாக மூடிக் கொண்டாள்; 68. நொய்தா - எளிதாக; இற்பிறப்பு - நற்குடிப் பிறப்பிற்குரிய ஒழுக்கம்; 70. பெரும் பதம் - மேலான பதவி; 71. கறை வாள் - ரத்தக் கறை படிந்த வாள்; பொறை - பொறுமை; 72. கீண்டான் - அகழ்ந்து எடுத்தான்.

கொண்டான் உயர் தேர்மிசை; கோல் வளையாள்
கண்டாள்; தனது ஆர் உயிர் கண்டிலளால்;
மண்தான் உறும் மின்னின் மயங்கினளால்;
விண்தான் வழியா எழுவான் விரைவான். 73

சீதையின் அரற்றல்

'விடு தேர்' என, வெங் கனல் வெந்து அழியும்
கொடிபோல் புரள்வாள்; குலைவாள்; அயர்வாள்;
துடியா எழுவாள்; துயரால் அழுவாள்;
'கடிதா, அறனே! இது கா' எனுமால். 74

'மலையே! மரனே! மயிலே! குயிலே!
கலையே! பிணையே! களிறே! பிடியே!
நிலையா உயிரே? நிலை நேடினிர் போய்,
உலையா வலியாருழை நீர் உரையீர்! 75

'செஞ் சேவகனுர் நிலை நீர் தெரிவீர்;
மஞ்சே! பொழிலே! வன தேவதைகாள்!
''அஞ்சேல்'' என நல்குதிரேல், அடியேன்
உஞ்சால், அதுதான் இழிவோ?' உரையீர்! 76

'நிருதாதியர் வேர்அற, நீல் முகில்போல்
சர தாரைகள் வீசினிர், சார்கிலிரோ?
வரதா! இளையோய்! மறு ஏதும் இலாப்
பரதா! இளையோய்! பழி பூணுதிரோ? 77

'கோதாவரியே! குளிர்வாய், குழைவாய்!
மாதா அனையாய்! மனனே தெளிவாய்;
ஓதாது உணர்வாருழை, ஓடினை போய்,
நீதான் வினையேன் நிலை சொல்லலையோ? 78

'முந்தும் சுனைகாள்! முழை வாழ் அரிகாள்!
இந்தந் நிலனேடும் எடுத்த கை நால்-
ஐந்தும், தலை பத்தும், அலைந்து உலையச்
சிந்தும்படி கண்டு, சிரித்திடுவீர். 79

74. கடிதா - விரைவாக; 76. உஞ்சால் - உய்ந்தால், பிழைத்தால்; செஞ்சேவகனுர் - நேர்மையான நல்ல வீரன், இராமன்; 79. முந்தும் - முன்னே தோன்றும்.

**இராவணன் ஏளனமும் சீதையின் இடித்துரையும்**

என்று, இன்ன பலவும் பன்னி, இரியலுற்று அரற்றுவாளை, [என்னைக்
'பொன் துன்னும் புணர் மென் கொங்கைப் பொலன்குழாய்! போரில்
கொன்று, உன்னை மீட்பர்கொல், அம் மானிடர்? கொள்க' என்னா,
வன் திண் கை எறிந்து நக்கான்—வாழ்க்கைநாள் வறிது வீழ்ப்பான். 80

வாக்கினால் அன்னான் சொல்ல, 'மாயையால் வஞ்ச மான் ஒன்று
ஆக்கினாய்; ஆக்கி, உன்னை ஆர் உயிர் உண்ணும் கூற்றைப்
போக்கினாய்; புகுந்து கொண்டுபோகின்றாய்; பொருது நின்னைக்
காக்குமா காண்டி ஆயின், கடவல் உன் தேரை' என்றாள். 81

மீட்டும் ஒன்று உரைசெய்வாள்: 'நீ வீரனேல், "விரைவில் மற்று உன்
கூட்டம் ஆம் அரக்கர்தம்மைக் கொன்று, உங்கை கொங்கை மூக்கும்
வாட்டினார் வனத்தில் உள்ளார், மானிடர்" என்ற வார்த்தை
கேட்டும், இம் மாயம் செய்தது அச்சத்தின் கிளர்ச்சி அன்றோ?'

**அரக்கன் மறுமொழியும் சீதையின் எதிர்மொழியும்**

மொழிதரும் அளவில், 'நங்கை! கேள் இது; முரண் இல் யாக்கை
இழிதரு மனிதரோடே யான் செரு ஏற்பன் என்றால்,
விழி தரும் நெற்றியான் தன் வெள்ளி வெற்பு எடுத்த தோட்குப்
பழி தரும்; அதனின் சாலப் பயன் தரும், வஞ்சம்' என்றான்.

பாவையும் அதனைக் கேளா, 'தம் குலப் பகைஞர்தம்பால்
போவது குற்றம்! வாளின் பொருவது நாணம் போலாம்!
ஆவது, கற்பினாரை வஞ்சிக்கும் ஆற்றலே ஆம்!
ஏவம் என், பழிதான் என்னே, இரக்கம் இல் அரக்கர்க்கு? என்றாள்.

## 10 சடாயு உயிர் நீத்த படலம்

**சானகியைக் கவர்ந்து செல்லும் அரக்கனைச் சடாயு எதிர்த்தல்**

என்னும் அவ் வேலையின்கண், 'எங்கு அடா போவது?' என்னா,
'நில் நில்' என்று, இடித்த சொல்லன், நெருப்பு இடைப் பரப்பும் [கண்ணன்;
மின் என விளங்கும் வீரத் துண்டத்தன்; மேரு என்னும்
பொன் நெடுங் குன்றம் வானில் வருவதே பொருவும் மெய்யான்; 1

81. காக்குமா - காத்துக்கொள்ளும் வகை; கடவல் - செலுத்தாதே; 82. கிளர்ச்சி - மிகுதி; 83. முரண் - வலிமை; 84. ஏவம் - குற்றம்.

10 : 1. சொல்லன், கண்ணன், துண்டத்தன், மெய்யான் என்னும் குறிப்பு வினை, எருவையின் மன்னன் வந்தனன் என்னும் 6ஆம் செய்யுளில் முடியும்; வீரத் துண்டத்தன் - வலிய அலகினையுடையவன்.

பாழி வன் கிரிகள் எல்லாம் பறித்து, எழுந்து, ஒன்றோடு ஒன்று
பூழியின் உதிர, விண்ணில் புடைத்து, உறக் கிளர்ந்து பொங்கி,
ஆழியும் உலகும் ஒன்றாய் அழிதர, முழுதும் வீசும்
ஊழி வெங் காற்று இது என்ன, இரு சிறை ஊதை மோத, 2

சாகை வன் தலையொடு மரமும் தாழ, மேல்
மேகமும் விண்ணின் மீச்செல்ல, 'மீமிசை
மாக வெங் கலுழன் ஆம் வருகின்றான்' என,
நாகமும் படம் ஒளித்து ஒதுங்கி நையவே, 3

யானையும், யாளியும், முதல யாவையும்,
கான் நெடு மரத்தொடு தூறு கல் இவை
மேல் நிமிர்ந்து, இரு சிறை விசையின் ஏறலால்,
வானமும் கானமும் மாறு கொள்ளவே. 4

'உத்தமன் தேவியை, உலகொடு ஓங்கு தேர்
வைத்தனை! ஏகுவது எங்கு? வானினோடு
இத்தனை திசையையும் மறைப்பென், ஈண்டு' என,
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினான்; 5

வந்தனன்—எருவையின் மன்னன்; மாண்பு இலான்
எந்திரத் தேர் செலவு ஒழிக்கும் எண்ணினான்;
சிந்துரக் கால், சிரம், செக்கர் சூடிய
கந்தரக் கயிலையை நிகர்க்கும் காட்சியான். 6

'அஞ்சேல்' எனச் சீதைக்கு அருளி, அரக்கனுக்கு அறிவுரை கூறல்

ஆண்டு உற்ற அவ் அணங்கினை, 'அஞ்சல்' என,
தீண்டுற்றிலன் என்று உணர் சிந்தையினான்,
மூண்டுற்று எழு வெங் கதம் முற்றிலனாய்,
மீண்டுற்று, உரையாடலை மேயினனால்: 7

'கெட்டாய் கிளையோடும்; நின் வாழ்வை எலாம்
சுட்டாய்; இது என்னை தொடங்கினை? நீ
பட்டாய் எனவே கொடு பத்தினியை
விட்டு ஏகுதியால், விளிகின்றிலையால்.* 8

2. சிறை - சிறகு; ஊதை - காற்று; 3. சாகை - கிளை, கலுழன் - கருடன்; 4. தூறு - புதர்; 5. பத்திரம் - பாதுகாப்பு; 6. கந்தரம் - கழுத்து; 8. விளிகின்றிலை - இறக்கமாட்டாய்.

'பேதாய்! பிழை செய்தனை; பேர் உலகின்
மாதா அனையாளை மனக்கொடு, நீ
யாது ஆக நினைத்தனை? எண்ணம் இலாய்?
ஆதாரம் நினக்கு இனி யார் உளரோ? 9

'உய்யாமல் மலைந்து, உமர் ஆர் உயிரை
மெய்யாக இராமன் விருந்திடவே,
கை ஆர முகந்து கொடு, அந்தகனார்,
ஐயா! புதிது உண்டது அறிந்திலையோ? 10

'கொடு வெங் கரி கொல்லிய வந்ததன்மேல்
விடும் உருண்டை கடாவ விரும்பினையே?
அடும் என்பது உணர்ந்திலை ஆயினும், வன்
கடு உண்டு, உயிரின் நிலை காணுதியால்! 11

'எல்லா உலகங்களும், இந்திரனும்,
அல்லாதவர் மூவரும், அந்தகனும்,
புல்வாய் புலி கண்டதுபோல்வர் அலால்;
வில்லாளனை வெல்லும் மிடுக்கு உளரோ? 12

'இம்மைக்கு, உறவோடும் இறந்தழியும்
வெம்மைத் தொழில், இங்கு, இதன்மேல் இலையால்;
அம்மைக்கு, அரு மா நரகம் தருமால்;
எம்மைக்கு இதம் ஆக இது எண்ணினை, நீ? 13

'முத் தேவரின் மூல முதற் பொருள் ஆம்
அத் தேவர் இம் மானிடர்; ஆதலினால்,
எத் தேவரொடு எண்ணுவது? எண்ணம் இலாய்!
பித்தேறினை ஆதல் பிழைத்தனையால். 14

'புரம் பற்றிய போர் விடையோன் அருளால்
வரம் பெற்றவும், மற்று உள விஞ்சைகளும்,
உரம் பெற்றன ஆவன—உண்மையினோன்
சரம் பற்றிய சாபம் விடும்தனையே. 15

9. ஆதாரம் - பற்றுக்கோடு; 10. உமர் - உம் இனத்தவராகிய கர தூடணர் முதலியோர்; அந்தகனார் - எமன்; 11. வன் கடு - வலிய நஞ்சு; 12. புல்வாய் - மான்; 13. அம்மை - மறுபிறப்பு; எம்மைக்கு - எப் பிறவிக்கு; 14. பிழைத்தனை - குற்றம் செய்தாய்; 15. விஞ்சை - வித்தை; சாபம் பற்றிய சரம் என்க; சாபம் - வில்.

'வான் ஆள்பவன் மைந்தன், வளைத்த விலான்,
தானே வரின், நின்று தடுப்பு அரிதால்;
நானே அவண் உய்ப்பென், இந் நன்னுதலை;
போ, நீ கடிது' என்று புகன்றிடலும், 16

#### இராவணன், 'சீதையை விடேன்' எனல்

கேட்டான் நிருதர்க்கு இறை; கேழ் கிளர் தன்
வாள் தாரை நெருப்பு உக, வாய் மடியா,
'ஒட்டாய்; இனி நீ உரை செய்குநரைக்
காட்டாய் கடிது' என்று, கனன்று உரையா, 17

'வரும் புண்டரம்! வாளி உன் மார்பு உருவிப்
பெரும் புண் திறவாவகை பேருதி நீ;
இரும்பு உண்ட நிர் மீளினும், என்னுழையின்
கரும்பு உண்ட சொல் மீள்கிலள்; காணுதியால்.' 18

#### அச்சம் மிக்குற்ற சீதைக்குச் சடாயு அபயம் அளித்தல்

என்னும் அளவில், பயம் முன்னின் இரட்டி எய்த,
அன்னம் அயர்கின்றது நோக்கி, 'அரக்கன் ஆக்கை
சின்னம் உறும் இப்பொழுதே; ''சிலை ஏந்தி, நங்கள்
மன்னன் மகன் வந்திலன்'' என்று, வருந்தல்; அன்னே! 19

'முத்து உக்கனபோல் முகத்து ஆலி முலைக்கண் வீழ,
தத்துற்று அயரேல்; தலை, தால பலத்தின் ஏலும்
கொத்து ஒப்பன கொண்டு, இவன் கொண்டன என்ற ஆசை
பத்திற்கும், இன்றே பலி ஈவது பார்த்தி' என்றான். 20

#### சடாயுவின் போர்

இடிப்பு ஒத்த முழக்கின், இருஞ் சிறை வீசி எற்றி,
முடிப் பத்திகளைப் படி இட்டு, முழங்கு துண்டம்
கடிப்பக் கடிது உற்றவன், காண்தகும் நீண்ட வீணைக்
கொடிப் பற்றி ஒடித்து, உயர் வானவர் ஆசி கொண்டான். 21

அக் காலை, அரக்கன், அரக்கு உருக்கு அன்ன கண்ணன்,
எக் காலமும், இன்னது ஓர் ஈடு அழிவுற்றிலாதான்
நக்கான், உலகு ஏழும் நடுங்கிட; நாகம் அன்ன
கைக் கார்முகத்தோடு கடைப் புருவம் குனித்தான். 22

17. கேழ் - ஒளி; வாள் தாரை - ஒளியுள்ள கண்ணின் கருவிழி; 18. புண்டரம் - கழுகு; 20. தால பலம் - பனம்பழம்; ஆசை - திக்கு; பலி - தேவர்க்கு இடும் உணவு.

சண்டப் பிறை வாள் எயிற்றுன் சர தாரை மாரி
மண்ட, சிறகால் அடித்தான் சில; வள் உகிரால்
கண்டப்படுத்தான் சில; காலனும் காண உட்கும்
துண்டப் படையால், சில துண்ட துண்டங்கள் கண்டான். 23

மீட்டும் அணுகா,—நெடு வெங் கண் அனந்த நாகம்
வாட்டும் கலுழன் என, வன் தலை பத்தின்மீதும்
நீட்டும் நெடு மூக்கு எனும் நேமியன்—சேம வில் கால்
கோட்டும் அளவில், மணிக் குண்டலம் கொண்டு எழுந்தான்.

எழுந்தான் தட மார்பினில், ஏழினெடு ஏழு வாளி
அழுந்தாது கழன்றிடப் பெய்து, எடுத்து ஆர்த்து, அரக்கன்
பொழிந்தான், புகர் வாளிகள் மீளவும்; 'போர்ச் சடாயு
விழுந்தான்' என, அஞ்சினர், விண்ணவர் வெய்து உயிர்த்தார்.

புண்ணின் புது நீர் பொழியப் பொலி புள்ளின் வேந்தன்,
மண்ணில், கரனே முதலோர் உதிரத்தின் வாரிக்-
கண்ணில் கடல் என்று கவர்ந்தது கான்று, மீள
விண்ணில் பொலிகின்றது ஓர் வெண் நிற மேகம் ஒத்தான். 26

ஒத்தான் உடனே உயிர்த்தான்; உருத்தான்; அவன் தோள்
பத்தோடு பத்தின் நெடும் பத்தியில் தத்தி, மூக்கால்
கொத்தா, நகத்தால் குடையா, சிறையால் புடையா,
முத்து ஆர மார்பில் கவசத்தையும் மூட்டு அறுத்தான். 27

அறுத்தானை, அரக்கனும், ஐம்பதொடு ஐம்பது அம்பு
செறித்தான் தட மார்பில்; செறித்தலும், தேவர் அஞ்சி
வெறித்தார்; வெறியாமுன், இராவணன் வில்லைப் பல்லால்
பறித்தான் பறவைக்கு இறை, விண்ணவர் பண்ணை ஆர்ப்ப. 28

எல் இட்ட வெள்ளிக் கயிலைப் பொருப்பு, ஈசனேடும்
மல் இட்ட தோளால் எடுத்தான் சிலை வாயின் வாங்கி,
வில் இட்டு உயர்ந்த நெடு மேகம் எனப் பொலிந்தான்—
சொல் இட்டு அவன் தோள் வலி, யார் உளர், சொல்ல வல்லார்? 29

23. சண்டம் - கொடுமை; உகிரால் - உகிரால், நகத்தால், நீட்டல் விகாரம்; துண்டப்படை - அலகாகிய ஆயுதம்; 24. சேம வில் - உற்றகாலத்து உதவும்படி துணையாகக் கொள்ளும் வில்; 28. பண்ணை - கூட்டம்; 29. எல் - ஒளி.

மீளா நிறத்து ஆயிரங் கண்ணவன் விண்ணின் ஓட,
வாளால் ஒறுத்தான் சிலை வாயிடைநின்றும் வாங்கி,
தாளால் இறுத்தான்,—தழல்வண்ணன் தடக் கை வில்லைத்
தோளால் இறுத்தான் துணைத் தாதைதன் அன்பின் தோழன்.

ஞாலம் படுப்பான், தனது ஆற்றலுக்கு ஏற்ற நல் வில்
மூலம் ஒடிப்புண்டது கண்டு, முனிந்த நெஞ்சன்,
ஆலம் மிடற்றான் புரம் அட்டது ஓர் அம்பு போலும்
சூலம் எடுத்து ஆர்த்து எறிந்தான், மறம் தோற்றிலாதான். 31

'ஆற்றான் இவன் என்று உணராது, எனது ஆற்றல் காண்' என்று,
ஏற்றான் எருவைக்கு இறை, முத்தலை எஃகம், மார்பில்;
'மேல் தான் இது செய்பவர் யார்?' என, விண்ணுளோர்கள்
தோற்றாது நின்றார், தம தோள்புடை கொட்டி ஆர்த்தார். 32

பொன் நோக்கியர்தம் புலன் நோக்கிய புன்கணோரும்,
இன் நோக்கியர் இல் வழி எய்திய நல் விருந்தும்,
தன் நோக்கிய நெஞ்சுடை யோகியர்தம்மைச் சார்ந்த
மென் நோக்கியர் நோக்கமும், ஆம் என மீண்டது, அவ் வேல்.

வேகம்முடன், வேல் இழந்தான் படை வேறு எடாமுன்,
மாகம் மறையும்படி நீண்ட வயங்கு மான் தேர்ப்
பாகன் தலையைப் பறித்து, படர் கற்பினாள்பால்
மோகம் படைத்தான் உளைவு எய்த, முகத்து எறிந்தான். 34

எறிந்தான்தனை நோக்கி, இராவணன், நெஞ்சின் ஆற்றல்
அறிந்தான்; முனிந்து, ஆண்டது ஓர் ஆடகத் தண்டு வாங்கி,
பொறிந்தாங்கு எரியின் சிகை பொங்கி எழ, புடைத்தான்;
மறிந்தான் எருவைக்கு இறை, மால் வரை போல மண்மேல். 35

மண்மேல் விழுந்தான் விழலோடும், வயங்கு மான் தேர்,
கண்மேல் ஒளியும் தொடராவகை, தான் கடாவி,
விண்மேல் எழுந்தான்; எழ, மெல்லியலாளும், வெந் தீ
புண்மேல் நுழையத் துடிக்கின்றனள்போல், புரண்டாள். 36

கொழுந்தே அனையாள் குழைந்து ஏங்கிய கொள்கை கண்டான்;
'அழுந்தேல் அவலத்திடை; அஞ்சலை அன்னம்!' என்னா,
எழுந்தான்; உயிர்த்தான்; 'அட! எங்கு இனிப் போவது?' என்னா,
விழுந்தான் அவன் தேர் மிசை, விண்ணவர் பண்ணை ஆர்ப்ப.

30. மீளா நிறம் - பின்னிடாத மார்பு; ஒறுத்தான் - வருத்தினவன், இராவணன்; 33. பொன் நோக்கியர் - பொருட் பெண்டிர்: புலன் - ஐம்புல இன்பம்; 34. மோகம் - ஆசை மயக்கம்; 35. ஆடகத் தண்டு - பொன் மயமான கதாயுதம்.

பாய்ந்தான்; அவன் பல் மணித் தண்டு பறித்து எறிந்தான்;
ஏய்ந்து ஆர் கதித் தேர்ப் பரி எட்டினொடு எட்டும் எஞ்சித்
தேய்ந்து ஆசு அற வீசி, அத் திண் திறல் துண்ட வாளால்
காய்ந்தான்; கவர்ந்தான் உயிர்; காலனும் கைவிதிர்த்தான். 38

திண் தேர் அழித்து, ஆங்கு அவன் திண் புறம் சேர்ந்த தூணி
விண்தான் மறைப்பச் செறிகின்றன, வில் இலாமை,
மண்டு ஆர் அமர்தான் வழங்காமையின், வச்சைமாக்கள்
பண்டாரம் ஒக்கின்றன, வள் உகிரால் பறித்தான். 39

மாச் சிச்சிரல் பாய்ந்தென, மார்பினும் தோள்கள்மேலும்
ஓச்சி, சிறகால் புடைத்தான்; உலையா விழுந்து
மூச்சித்த இராவணனும் முடி சாய்ந்து இருந்தான்;
'போச்சு; இத்தனை போலும் நின் ஆற்றல்?' எனப் புகன்றான்.

அவ் வேலையினே முனிந்தான்; முனிந்து, ஆற்றலன்; அவ்
வெவ் வேல் அரக்கன் விடல் ஆம் படை வேறு காணான்;
'இவ் வேலையினே, இவன் இன் உயிர் உண்பென்' என்னா,
செவ்வே, பிழையா நெடு வாள் உறை தீர்த்து, எறிந்தான். 41

**இராவணன் எறிந்த தெய்வ வாளால் சடாயு வீழ்தல்**

வலியின்தலை தோற்றிலன்; மாற்ற அருந் தெய்வ வாளால்
நலியும் தலை என்றது அன்றியும், வாழ்க்கை நாளும்
மெலியும் கடை சென்றுளது; ஆகலின், விண்ணின் வேந்தன்
குலிசம் எறியச் சிறை அற்றது ஓர் குன்றின், வீழ்ந்தான். 42

**சானகி துயரத்தில் ஆழ்தல்**

விரிந்து ஆர் சிறை கீழ் உற வீழ்ந்தனன், மண்ணின்; விண்ணோர்
இரிந்தார்; 'இழந்தாள் துணை' என்ன, முனிக் கணங்கள்
பரிந்தார்; படர் விண்டுவின் நாட்டவர் பைம் பொன் மாரி
சொரிந்தார்; அது நோக்கிய சீதை துளக்கம் உற்றாள். 43

38. கைவிதிர்த்தான் - கைந் நடுக்கமுற்றான்; 39. திண்புறம் - வலிய தோள்களின் புறம்; வச்சைமாக்கள் - உலோபிகள்; பண்டாரம் - கருவூலம்; 40. சிச்சிரல் - சிச்சிலி, மீன்கொத்தி; போச்சு - போயிற்று; 42. தெய்வ வாள் - சிவன் கொடுத்த சந்திரகாசம் என்னும் வாள்; குலிசம் - வச்சிரப் படை; 43. இரிந்தோர் - ஓடினார்; விண்டுவின் நாட்டவர் - திருமால் வீற்றிருக்கும் வைகுண்டத்தில் வாழ்பவர்; நித்திய சூரிகள்; துளக்கம் - நடுக்கம்.

வெள்கும் அரக்கன் நெடு விண் புக ஆர்த்து, மிக்கான்;
தொள்கின்தலை எய்திய மான் எனச் சோர்ந்து நைவாள்,
உள்கும்; உயிர்க்கும்; உயங்கும்; ஒரு சார்வு காணுள்,
கொள் கொம்பு ஒடிய, கொடி வீழ்ந்தது போல் குலைந்தாள். 44

'வன் துணை உளன் என வந்த மன்னனும்
பொன்றினன்; எனக்கு இனிப் புகல் என்?' என்கின்ருள்;
இன் துணை பிரிந்து, இரிந்து, இன்னல் எய்திய
அன்றில்அம் பெடை என அரற்றினுள்அரோ. 45

'அல்லல் உற்றேனை, வந்து, ''அஞ்சல்'' என்ற, இந்
நல்லவன் தோற்பதே? நரகன் வெல்வதே?
வெல்வதும் பாவமோ? வேதம் பொய்க்குமோ?
இல்லையோ அறம்?' என, இரங்கி ஏங்கினுள். 46

'நாண் இலேன் உரைகொடு நடந்த நம்பிமீர்!
நீள் நிலை அறநெறி நின்றுளோர்க்கு எலாம்
ஆணியை, உந்தையர்க்கு அமைந்த அன்பனை,
காணிய வம்' என, கலங்கி விம்மினுள். 47

'கற்பு அழியாமை என் கடமை; ஆயினும்,
பொற்பு அழியா வலம் பொருந்தும் போர்வலான்
வில் பழியுண்டது; வினையினேன் வந்த
இல் பழியுண்டது' என்று, இரங்கி ஏங்கினுள். 48

'எல் இயல் விசும்பிடை இருந்த நேமியாய்!
சொல்லிய அற நெறி தொடர்ந்த தோழமை
நல் இயல் அருங் கடன் கழித்த நம்பியைப்
புல்லுதியோ?' என, பொருமிப் பொங்கினுள். 49

**மண்ணெடு சீதையைத் தோளில் தாங்கி, வான் வழி அரக்கன் ஏகுதல்**

ஏங்குவாள் தனிமையும், இறகு இழந்தவன்
ஆங்குறு நிலைமையும், அரக்கன் நோக்கினுன்;
வாங்கினன், தேரிடை வைத்த மண்ணெடும்,
வீங்கு தோள்மீக் கொடு, விண்ணின் ஏகினுன். 50

44. தொள்கு - வலை; கொள் கொம்பு - கொடிகள் ஏறிப் படர்வதற்கு நடும் கொம்பு; 45. அன்றில் - ஆணும் பெண்ணும் பிரியாமல் பனைமரத்தில் வாழும் ஒருவகைப் பறவை; 46. நரகன் - நரகைச் சேர்தற்குரியான், இராவணன்; 47. உந்தையர் - உம் தந்தையார்; வம் - வாருங்கள்; 48. இல் - குடி.

விண்ணிடை வெய்யவன் ஏகும் வேகத்தால்,
கண்ணொடு மனம் அவை சுழன்ற கற்பினள்,
உள் நிறை உணர்வு அழிந்து ஒன்றும் ஓர்ந்திலள்;
மண்ணிடை, தன்னையும் மறந்து, சாம்பினள். 51

சடாயு விண் நோக்கி இரங்குதல்

ஏகினன் அரக்கனும்; எருவை வேந்தனும்,
மோக வெந் துயர் சிறிது ஆறி, முன்னியே,
மாகமே நோக்கினென்; வஞ்சன் வல்லையில்
போகுதல் கண்டு, அகம் புலர்ந்து சொல்லுவான்: 52

'வந்திலர் மைந்தர்தாம்; ''மருகிக்கு எய்திய
வெந் துயர் துடைத்தனென்'' என்னும் மெய்ப் புகழ்
தந்திலர், விதியினர்; தரும வேலியைச்
சிந்தினர்; மேல் இனிச் செயல் என் ஆம்கொலோ? 53

'வெற்றியர் உளர்எனின், மின்னின் நுண் இடைப்
பொன்-தொடிக்கு, இந் நிலை புகுதற்பாலதோ?
உற்றதை இன்னது என்று உணரகிற்றிலேன்;
சிற்றவை வஞ்சனை, முடியச் செய்ததோ? 54

'பஞ்சு அணை பாம்பணை ஆகப் பள்ளி சேர்
அஞ்சனவண்ணனே இராமன்; ஆதலால்,
வெஞ் சின அரக்கனால் வெல்லற்பாலனோ?
வஞ்சனை இழைத்தனன், கள்ள மாயையால். 55

'வேர்அற அரக்கரை வென்று, வெம் பழி
தீரும், என் சிறுவனும்; தீண்ட அஞ்சுமால்
ஆரியன் தேவியை அரக்கன், நல் மலர்ப்
பேர் உலகு அளித்தவன் பிழைப்பு இல் சாபத்தால்.' 56

பருஞ் சிறை இன்னன பன்னி உன்னுவான்,
'அருஞ் சிறை உற்றனள் ஆம்' எனா, மனம்;
'பொரும் சிறை அற்றதேல், பூவை கற்பு எனும்
இருஞ் சிறை அழுது' என, இடரின் நீங்கினான். 57

51. சாம்பினள் - சோர்ந்து கிடந்தாள்; 52. அகம் புலர்ந்து - மனம் வருந்தி; 53. மருகி - மருமகள்; 54. சிற்றவை - சிறிய தாய்; கைகேயி; 56. சிறுவன் - மகன், ஈண்டு - இராமன்; 57. பருஞ் சிறை - பெரிய சிறகுகள்.

அம் சிறை குருதி ஆறு அழிந்து சோரவும்,
'வஞ்சியை மீட்டிலென்' என்னும் மானமும்,
செஞ்செவே மக்கள்பால் சென்ற காதலும்,
நெஞ்சுற, துயின்றனன் உணர்வு நீங்கலான். 58

**சீதை அசோக வனத்தில் சிறைப்படல்**

வஞ்சியை அரக்கனும் வல்லை கொண்டுபோய்,
செஞ்செவே திரு உருத் தீண்ட அஞ்சுவான்,
நஞ்சு இயல் அரக்கியர் நடுவண், ஆயிடை,
சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத்தான்அரோ. 59

**இராம-இலக்குவரின் எதிர்பாராச் சந்திப்பு**

இந் நிலை இனையவன் செயல் இயம்பினும்;
'பொன் நிலை மானின்பின் தொடர்ந்து போகிய
மன் நிலை அறிக' என, மங்கை ஏவிய
பின் இளையவன் நிலை பேசுவாம்அரோ. 60

ஒரு மகள் தனிமையை உன்னி, உள் உறும்
பருவரல் மீதிடப் பதைக்கும் நெஞ்சினன்,
பெருமகன்தனைத் தனிப் பிரிந்து பேதுறும்,
திரு நகர்ச் செல்லும், அப் பரதன் செய்கையான், 61

தெண் திரைக் கலம் என விரைவில் செல்கின்றான்;
புண்டரீகத் தடங் காடு பூத்து, ஒரு
கொண்டல் வந்து இழிந்தன கோலத்தான்தனைக்
கண்டனன்; மனம் எனக் களிக்கும் கண்ணினன். 62

'துண்ணெனும் அவ் உரை தொடர, தோகையும்,
பெண் எனும் பேதைமை மயக்க, பேதினல்
உள் நிறை சோரும்' என்று, ஊசலாடும் அக்
கண்ணனும் இளவலைக் கண்ணுற்றான்அரோ. 63

'புன் சொற்கள் தந்த பகுவாய் அரக்கன் உரை
பொய் எனாது, புலர்வாள்,
வன் சொற்கள் தந்து மட மங்கை ஏவ,
நிலை தேர வந்த மருளோ?
தன் சொல் கடந்து தளர்கின்ற நெஞ்சம்
உடையேன் மருங்கு, தனியே,
என் சொல் கடந்து, மனமும் தளர்ந்த
இள வீரன் வந்த இயல்பே. † 64

58. செஞ்செவே - நேராக; 62. கலம் - மரக்கலம்; புண்டரீகம் - செந்தாமரை; 63. பேதைமை - அறியாத்தன்மை; இளவல் - தம்பி, இலக்குமணன்; 64. நிலை - உண்மை நிலை.

என்று உன்னி, 'என்னை விதியார் முடிப்பது?'
    என எண்ணி நின்ற இறையை,
பொன் துன்னும் வில் கை இள வீரன்
    வந்து புனை தாள் இறைஞ்சு பொழுதில்,
மின் துன்னு நூலின் மணி மார்பு
    அழுந்த, விரைவோடு புல்லி, உருகா-
நின்று, 'உன்னி வந்த நிலை என்கொல்?'
    என்று, நெடியோன் விளம்ப, நொடிவான்: † 65

'இல்லா, நிலத்தின் இயையாத, வெஞ் சொல்
    எழ, வஞ்சி எவ்வமுற, யான்,
''வல் வாய் அரக்கன் உரை ஆகும்''
    என்ன, மதியாள், மறுக்கம் உறுவாள்,
''நில்லாது, மற்று இது அறி, போதி'' என்ன,
    நெடியோய் புயத்தின் வலி என்
சொல்லால் மனத்தின் அடையாள், சினத்தின்
    முனிவோடு நின்று துவள்வாள், 66

'''ஏகாது நிற்றிஎனின், யான் நெருப்பினிடை
    வீழ்வென்'' என்று, முடுகா,
மா கானகத்தினிடை ஓடலோடும், மனம்
    அஞ்சி, வஞ்ச வினையேன்,
போகாது இருக்கின், இறவாதிருக்கை
    புணராள் எனக்கொடு உணரா,
ஆகாது இறக்கை; அறன் அன்று; எனக்கொடு,
    இவண் வந்தது' என்ன, அமலன், 67

'சாவாதிருத்தல் இலள் ஆனது உற்றது;
    அதையோ, தடுக்க முடியாது;
ஆஆ! அலக்கண் உறுவாள், உரைத்த
    பொருளோ, அகத்தின் அடையாள்;
காவா நிலத்தின் வரும் ஏதம்; மற்று
    அது ஒழியாது; கைக்கொடு அகலப்
போவார், பிரிக்க முயல்வார், புணர்த்த பொருள்
    ஆம் இது' என்று தெருளா, 68

65. விளம்ப - கேட்க; நொடிவான் - விடை கூறுவான்; 66. துவள்தல் - தளர்தல்; 67. இறக்கை - இறத்தல்.

'வந்தாய் திறத்தில் உளதன்று, குற்றம்;
மடவாள் மறுக்கம் உறுவாள்,
சிந்தாகுலத்தொடு உரைசெய்த செய்கை
அது தீரும் என்று தெளிவாய்;
முந்தே தடுக்க, ஒழியாது, எடுத்த
வினையேன் முடித்த முடிவால்,
அந்தோ கெடுத்தது' என, உன்னி உன்னி
அழியாத உள்ளம் அழிவான். 69

'பாணிக்க நின்று பயன் ஆவது என்னை?
பயில் பூவை அன்ன குயிலைக்
காணின், கலந்த துயர் தீரும்; அன்றி,
அயல் இல்லை' என்று, கடுகி,
சேண் உற்று அகன்ற நெறியூடு சென்று,
சிலை வாளி அன்னவிசை போய்,
ஆணிப் பசும் பொன் அனையாள் இருந்த
அவிர் சோலை வல்லை அணுகா, 70

**வைதேகியைக் காணாது இராமன் திகைத்தல்**

ஓடி வந்தனன்; சாலையில், சோலையின் உதவும்
தோடு இவர்ந்த பூஞ் சுரி குழலாள்தனைக் காணான்;
கூடு தன்னுடையது பிரிந்து, ஆர் உயிர், குறியா,
நேடி வந்து, அது கண்டிலது ஆம் என, நின்றான். 71

கைத்த சிந்தையன், கனங் குழை அணங்கினைக் காணான்—
உய்த்து வாழ்தர வேறு ஒரு பொருள் இலான்; உதவ
வைத்த மா நிதி, மண்ணொடும் மறைந்தன, வாங்கிப்
பொய்த்துளோர் கொள, திகைத்து நின்றானையும் போன்றான்.

மண் சுழன்றது; மால் வரை சுழன்றது; மதியோர்
எண் சுழன்றது; சுழன்ற, அவ் எறி கடல் ஏழும்;
விண் சுழன்றது; வேதமும் சுழன்றது; விரிஞ்சன்
கண் சுழன்றது; சுழன்றது, கதிரொடு மதியும். 73

'அறத்தைச் சீறும்கொல்? அருளையே சீறும்கொல்? அமரர்
திறத்தைச் சீறும்கொல்? முனிவரைச் சீறும்கொல்? தீயோர்
மறத்தைச் சீறும்கொல்? "என்கொலோ முடிவு?" என்று, மறையின்
நிறத்தைச் சீறும்கொல் நெடுந்தகையோன்?' என, நடுங்கா, 74

69. சிந்தாகுலம் - மனத்தில் தோன்றிய பெருந்துயரம்; உன்னி உன்னி - நினைத்து நினைத்து; 70. பாணித்தல் - காலம் நீட்டித்தல்; பூவை அன்ன குயில் - நாகணவாய்ப் பறவை போன்ற சீதை; 71. தோடு - மலர்; சுரி குழலாள் - கடை குழன்ற கூந்தலையுடையாள்; 72. உய்த்து - செலவழித்து; வாங்கி - தோண்டி; 73. மதியோர் - ஞானிகள்; கதிர் - சூரியன்.

நீல மேனி அந் நெடியவன் மன நிலை திரிய,
மூல காரணத்தவனெடும் உலகெலாம் முற்றும்
காலம் ஆம் என, கடையிடு கணிக்க அரும் பொருள்கள்
மேல கீழுற, கீழன மேலுறும் வேலை, 75

**தேர்த் தடம் பற்றித் தேடிச் செல்லுதல்**

'தேரின் ஆழியும் தெரிந்தனம்; தீண்டுதல் அஞ்சிப்
பாரினேடு கொண்டு அகழ்ந்ததும் பார்த்தனம்; பயன் இன்று
ஒரும் தன்மை ஈது என் என்பது, உரன் இலாதவர்போல்;
தாரம் போதல்முன் தொடர்தும்' என்று, இளையவன் தொழலும், 76

'ஆம்; அதே இனி அமைவது' என்று, அமலனும், மெய்யில்
தாம வார் கணைப் புட்டிலும் முதலிய தாங்கி,
வாம மால் வரை மரன் இவை மடிதர, வயவர்,
பூமிமேல் அவன் தேர் சென்ற நெடு நெறி போனர். 77

மண்ணின்மேல் அவன் தேர் சென்ற சுவடு எலாம் மாய்ந்து,
விண்ணின் ஓங்கியது ஒரு நிலை; மெய் உற வெந்த
புண்ணினூடு உறு வேல் என, மனம் மிகப் புழுங்கி,
எண்ணி, 'நாம் இனிச் செய்வது என்? இளவலே!' என்முன். 78

'தெற்கு நோக்கியது எனும் பொருள் தெரிந்தது, அத் திண் தேர்;
மற்கு நோக்கிய திரள் புயத்து அண்ணலே! வானம்,
விற்கு நோக்கிய பகழியின் நெடிது அன்று; விம்மி,
நிற்கும் நோக்கு இது என் பயத்தது?' என, இளையவன் நேர்ந்தான்.

**தகர்ந்த வீணைக்கொடி கண்டு, சடாயு போர் செய்தமை அறிதல்**

'ஆகும்; அன்னதே கருமம்' என்று, அத் திசை நோக்கி
ஏகி, யோசனை இரண்டு சென்றார்; இடை எதிர்ந்தார்,
மாக மால் வரை கால் பொர மறிந்தது மான,
பாக வீணையின் கொடி ஒன்று கிடந்தது பார்மேல். 80

கண்டு, 'கண்டகரோடும், அக் காரிகை பொருட்டால்,
அண்டர் ஆதியர்க்கு ஆர் அமர் விளைந்தது?' என்று அயிர்த்தார்;
துண்ட வாளினின் சுடர்க் கொடி துணிந்தது என்று உணரா,
புண்டரீகக் கண் புனல் வர, புரவலன் புகல்வான்: 81

76. ஆழி - சக்கரம்; 77. வாமம் - அழகு; 78. ஒரு நிலை - ஓர் இடம்;
80. பாக வீணையின் கொடி - துணிபட்ட வீணை வடிவம் எழுதிய கொடி.

'நோக்கினுல், ஐய! நொய்து இவண் எய்திய நுந்தை
மூக்கினுல் இது முறிந்தமை முடிந்ததால்; மொய்ம்பின்
தாக்கினுன்; நடு அடுத்தது தெரிகிலம்; தமியன்;
யாக்கை தேம்பிடும்; எண் அரும் பருவங்கள் இறந்தான்; 82

'நன்று சாலவும்; நடுக்க அரும் மிடுக்கினன்; நாமும்,
சென்று கூடல் ஆம்; பொழுது எலாம் தடுப்பது திடனுல்;
வென்று மீட்கினும் மீட்குமால்; வேறுற எண்ணி,
நின்று தாழ்த்து ஒரு பயன் இலே' என்றலும், நெடியோன், 83

**வில், சூலம், புட்டில் முதலியன வீழ்ந்து கிடப்பன காணல்**

'தொடர்வதே நலம் ஆம்' என, படிமிசைச் சுற்றிப்
படரும் கால் என, கறங்கு என, செல்லுவார் பார்த்தார்;
மிடல் கொள் வெஞ் சிலே, விண் இடு வில் முறிந்தென்ன,
கடலின்மாடு உயர் திரை என, கிடந்தது கண்டார். 84

'சிலே கிடந்ததால், இலக்குவ! தேவர் நீர் கடைந்த
மலே கிடந்தென வலியது; வடிவினுல் மதியின்
கலே கிடந்தன்ன காட்சியது; இது கடித்து ஒடித்தான்;
நிலே கிடந்தவா நோக்கு' என, நோக்கினன் நின்றுன். 85

நின்று, பின்னரும் நெடு நெறி கடந்து, உற நிமிரச்
சென்று நோக்கினர்; திரி சிகைக் கொடு நெடுஞ் சூலம்
ஒன்று, பல் கணே மழை உறு புட்டிலோடு இரண்டு
குன்று போல்வன கிடந்த கண்டு அதிசயம் கொண்டார். 86

மறித்தும் சென்றனர்; வானிடை வயங்குற வழங்கி
எறிக்கும் சோதிகள் யாவையும் தொக்கன எனலாம்,
நெறிக் கொள் கானகம் மறைதர, நிருதர்கோன் நெஞ்சின்,
பறித்து வீசிய, கவசமும் கிடந்தது பார்த்தார். 87

கான் கிடந்தது மறைதர, கால் வயக் கலிமாத்
தான் கிடந்துழிச் சாரதி கிடந்துழிச் சார்ந்தார்;
ஊன் கிடந்து ஒளிர் உதிரமும் கிடந்துளது; உலகின்
வான் கிடந்தது போல்வது கிடந்துழி வந்தார். † 88

கண்டு, அலங்கு தம் கைத்தலம் விதிர்த்தனர்—கவின் ஆர்
விண்தலம் துறந்து, இறுதியின் விரி கதிர் வெய்யோன்
மண்டலம் பல மண்ணிடைக் கிடந்தென, மணியின்
குண்டலம் பல, குலமணிப் பூண்களின் குவியல். 89

82. நடு அடுத்தது - நடுவில் நேர்ந்தது; 84. படி - பூமி; கால் - காற்று; 87. மறித்தும் - மீண்டும்; 88. வயக் கலிமா - வலிமை படைத்த கடிவாளத்தை யுடைய குதிரை.

**இராமன், 'பொருதவர் பலர்' எனல்**

'தோள் அணிக் குலம் பல உள; குண்டலத் தொகுதி
வாள் இமைப்பன பல உள; மணி முடி பலவால்;
நாள் அனைத்தையும் கடந்தனன், தமியன், நம் தாதை;
யாளி போல்பவர் பலர் உளர் பொருதனர்; இளையோய்! 90

**பொருதவன் இராவணன் ஒருவனே என இலக்குவன் கூறல்**

திருவின் நாயகன் உரைசெய, சுமித்திரை சிங்கம்,
'தருவின் நீளிய தோள் பல, தலை பல, என்றால்,
பொருது தாதையை இத்தனை நெறிக் கொடு போனான்
ஒருவனே, அவன் இராவணன் ஆம்' என உரைத்தான். 91

**சடாயுவைக் கண்டு, இராமன் புலம்பிச் சோர்தல்**

மடல் உள் நாட்டிய தார் இளையோன் சொலை மதியா,
மிடலுண் நாட்டங்கள் தீ உக நோக்கினன் விரைவான்,
உடலுள் நாட்டிய குருதிஅம் பரவையின் உம்பர்,
கடலுள் நாட்டிய மலை அன்ன தாதையைக் கண்டான். 92

துள்ளி, ஓங்கு செந் தாமரை நயனங்கள் சொரிய,
தள்ளி ஓங்கிய அமலன், தன் தனி உயிர்த் தந்தை
வள்ளியோன் திரு மேனியில், தழல் நிற வண்ணன்
வெள்ளி ஓங்கலில் அஞ்சன மலை என, வீழ்ந்தான். 93

உயிர்த்திலன் ஒரு நாழிகை; உணர்விலன்கொல் என்று
அயிர்த்த தம்பி புக்கு, அம் கையின் எடுத்தனன், அருவிப்
புயல் கலந்த நீர் தெளித்தலும், புண்டரீகக் கண்
பெயர்த்து, பைப்பைய அயர்வு தீர்ந்து, இனையன பேசும்: 94

'தம் தாதையரைத் தனையர் கொலை நேர்ந்தார்
முந்து ஆரே உள்ளார்? முடிந்தான் முனை ஒருவன்;
எந்தாயே! எற்காக நீயும் இறந்தனையால்;
அந்தோ! வினையேன் அருங் கூற்றம் ஆனேனே! 95

'பின் உறுவது ஓராதே பேதுறுவேன் பெண்பாலாள்-
தன் உறுவல் தீர்ப்பான், தனி உறுவது ஓராதே,
உன் உறவு நீ தீர்த்தாய்; ஓர் உறவும் இல்லாதேன்
என் உறுவான் வேண்டி இடர் உறுவேன்? எந்தாயே! 96

90. குண்டலம் - காதணி; 91. சுமித்திரை சிங்கம் - சுமித்திரையின் குமாரனை சிங்கம் போன்ற இலக்குவன்; 92. தாதை - தந்தை, சடாயு; 93. வள்ளியோன் - வள்ளல் தன்மையுடைய சடாயு; 96. உறுவல் - துன்பம்.

'மாண்டேனே அன்றே? மறையோர் குறை முடிப்பான்
பூண்டேன் விரதம்; அதனுல் உயிர் பொறுப்பேன்;
நீண்டேன் மரம் போல, நின்று ஒழிந்த புன் தொழிலேன்;
வேண்டேன், இம் மா மாயப் புன் பிறவி வேண்டேனே! 97

'என் தாரம் பற்றுண்ண ஏன்றுயை, சான்றேயை,
கொன்றுனும் நின்றான்; கொலையுண்டு நீ கிடந்தாய்;
வன் தாள் சிலை ஏந்தி, வாளிக் கடல் சுமந்து,
நின்றனேனும் நின்றேன்; நெடு மரம்போல் நின்றேனே! 98

'சொல் உடையார் என் போல் இனி உளரோ? தொல் வினையேன்
இல் உடையாள் காண, இறகு உடையாய்! எண் இலாப்
பல் உடையாய்! உன்னைப் படை உடையான் கொன்று அகல,
வில் உடையேன் நின்றேன்; விறல் உடையேன் அல்லேனே?† 99

உயிர்ப்புற்ற சடாயு இருவரையும் உச்சி மோந்து உரைத்தல்

அன்னு! பல பலவும் பன்னி அழும்; மயங்கும்;
தன் நேர் இலாதானும் தம்பியும் அத் தன்மையனுய்;
உன்னு, உணர்வு சிறிது உள் முளைப்ப, புள்ளரசும்,
இன்னு உயிர்ப்பான், இருவரையும் நோக்கினுன். 100

உற்றது உணராது, உயிர் உலைய வெய்துயிர்ப்பான்
கொற்றவரைக் கண்டான்; தன் உள்ளம் குளிர்ப்புற்றுன்;
இற்ற இரு சிறகும், இன்னுயிரும், ஏழ் உலகும்,
பெற்றனனே ஒத்தான்; 'பெயர்த்தேன் பழி' என்றுன். 101

'பாக்கியத்தால், இன்று, என் பயன் இல் பழி யாக்கை
போக்குகின்றேன்; கண்ணுற்றேன், புண்ணியரே! வம்மின்' என்று
தாக்கி அரக்கன் மகுடத் தலை தகர்த்த
மூக்கினுல் உச்சி முறைமுறையே மோக்கின்றுன். 102

'வஞ்சனையால் வந்த வரவு என்பது என்னுடைய
நெஞ்சகமே முன்னே நினைவித்தது; ஆனுலும்,
அம் சொல் மயிலை, அருந்ததியை, நீங்கினிரோ,
எஞ்சல் இலா ஆற்றல் இருவீரும்?' என்று உரைத்தான், 103

98. தாரம் - மனைவி; வாளிக் கடல் - அம்புகளின் தொகுதி; 99. சொல் - புகழ்ச்சிச் சொல்; 101. பெயர்த்தேன் - போக்கிவிட்டேன்; 102. பாக்கியம் - நல்வினைப் பயன்.

என்று அவன் இயம்பலும், இளைய கோமகன்,
ஒன்றும் ஆண்டு உறு பொருள் ஒழிவுறுவகை,
வன் திறல் மாய மான் வந்தது ஆதியா
நின்றதும், நிகழ்ந்ததும், நிரப்பினன்அரோ. 104

சடாயு மைந்தர்க்கு ஆறுதல் கூறல்

ஆற்றலோன் அவ் உரை அறைய, ஆணையால்
ஏற்று, உணர்ந்து, எண்ணி, அவ் எருவை வேந்தனும்,
'மாற்ற அருந் துயர் இவர் மனக் கொளாவகை
தேற்றுதல் நன்று' என, இனைய செப்புவான்: 105

'அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ?
''துதி அறு பிறவியின் இன்ப துன்பம்தான்
விதி வயம்'' என்பதை மேற்கொளாவிடின்,
மதி வலியால் விதி வெல்ல வல்லமோ? 106

'தெரிவுறு துன்பம் வந்து ஊன்ற, சிந்தையை
எரிவுசெய்து ஒழியும் ஈது இழுதை நீரதால்;
பிரிவுசெய்து உலகு எலாம் பெறுவிப்பான் தலை
அரிவுசெய் விதியினர்க்கு அரிது உண்டாகுமோ?† 107

'அலக்கணும் இன்பமும் அணுகும் நாள், அவை
விலக்குவம் என்பது மெய்யிற்று ஆகுமோ?
இலக்கு முப்புரங்களை எய்த வில்லியார்,
தலைக் கலத்து, இரந்தது தவத்தின் பாலதோ? 108

'பொங்கு வெங் கோள் அரா, விசும்பு பூத்தன
வெங் கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்;
அம் கண் மா ஞாலத்தை விளக்கும் ஆய் கதிர்த்
திங்களும், ஒரு முறை வளரும் தேயுமால். 109

'அந்தரம் வருதலும், அனைய தீர்தலும்,
சுந்தரத் தோளினிர்! தொன்மை நீரவால்;
மந்திர இமையவர்-குருவின் வாய் மொழி
இந்திரன் உற்றன எண்ண ஒண்ணுமோ? 110

105. ஆற்றலோன் - சொல்லாற்றலினையுடைய இலக்குவன்; 106. அதிசயம் - புதுமை; 107. இழுதை - அறியாமை; 108. தலைக்கலம் - பிரமனது மண்டை; 109. கோள் அரா - கொடிய கொலைத் தொழிலையுடைய பாம்பு, கேது.

‘தடைக்க அரும் பெரு வலிச் சம்பரப் பெயர்க்
கடைத் தொழில் அவுணனுல், குலிசக்கையினன்
படைத்தனன் பழி; அது, பகழி வில் வலாய்!
துடைத்தனன் நுந்தை, தன் குவவுத் தோளினல். 111

‘பிள்ளைச் சொல் கிளிஅனுளைப் பிரிவுறல் உற்ற பெற்றி,
தள்ளுற்ற அறமும் தேவர் துயரமும், தந்ததேயால்;
கள்ளப் போர் அரக்கர் என்னும் களையினைக் களைந்து வாழ்தி;
புள்ளிற்கும், புலன் இல் பேய்க்கும், தாய் அன்ன புலவு வேலோய்! 112

‘வடுக் கண், வார் கூந்தலாளை, இராவணன் மண்ணினேடும்
எடுத்தனன் ஏகுவானை, எதிர்ந்து, எனது ஆற்றல்கொண்டு
தடுத்தனென், ஆவது எல்லாம்; தவத்து, அரன் தந்த வாளால்
படுத்தனன்; இங்கு வீழ்ந்தேன்; இது இன்று பட்டது’ என்ருன்.

இராமன் சீற்றம்

கூறின மாற்றம் சென்று செவித்தலம் குறுகாமுன்னம்,
ஊறின உதிரம், செங் கண்; உயிர்த்தன, உயிர்ப்புச் செந் தீ;
ஏறின புருவம் மேல்மேல்; இரிந்தன சுடர்கள் எங்கும்;
கீறினது அண்டகோளம்; கிழிந்தன கிரிகள் எல்லாம். 114

மண்ணகம் திரிய, நின்ற மால் வரை திரிய, மற்றைக்
கண் அகன் புனலும் காலும் கதிரொடும் திரிய, காவல்
விண்ணகம் திரிய, மேலை விரிஞ்சனும் திரிய, ‘வீரன்,
எண் அரும் பொருள்கள் எல்லாம்’ என்பது தெரிந்ததுஅன்றே?

‘குறித்த வெங் கோபம் யார்மேல் கோளுறும்கொல்?’ என்று அஞ்சி,
வெறித்துநின்று, உலகம் எல்லாம் விம்முறுகின்ற வேலை,
பொறிப் பிதிர் படலை, செந் தீப் புகையொடும் பொடிப்ப ‘பொம்’
எறிப்பது ஓர் முறுவல் தோன்ற இராமனும் இயம்பலுற்ருன்: [என்று

‘பெண் தனி ஒருத்திதன்னை, பேதை வாள் அரக்கன் பற்றிக்-
கொண்டனன் ஏக, நீ இக் கோளுற, குலுங்கல் செல்லா
எண் திசை இறுதி ஆன உலகங்கள் இவற்றை, இன்னே,
கண்ட வானவர்களோடும் களையுமாறு, இன்று காண்டி. 117

111. நுந்தை - உன் ; தந்தை, தயரதன்; 112. பிள்ளைச்சொல் - மழலைப்பேச்சு; 113. வடு - மாவடு; 114. கீறுதல் - பிளவுபடுதல்; கிழிதல் - உடைபடுதல், பிதிர்தல்.

'தாரகை உதிருமாறும், தனிக் கதிர் பிதிருமாறும்,
பேர் அகல் வானம் எங்கும் பிறங்கு எரி பிறக்குமாறும்,
நீரொடு நிலனும் காலும், நின்றவும், திரிந்த யாவும்,
வேரொடு மடியுமாறும், விண்ணவர் விளியுமாறும், 118

'இக் கணம் ஒன்றில், நின்ற, ஏழினோடு ஏழு சான்ற
மிக்கன போன்று தோன்றும், உலகங்கள் வீயுமாறும்,
திக்குடை அண்ட கோளப் புறத்தவும் தீந்து, நீரின்
மொக்குளின் உடையுமாறும், காண்' என, முனியும் வேலை,

வெஞ் சுடர்க் கடவுள் மீண்டு, மேருவில் மறையலுற்றான்;
எஞ்சல் இல் திசையில் நின்ற யானையும் இரியல்போன;
துஞ்சின உலகம் எல்லாம் என்பது என்? துணிந்த நெஞ்சின்,
அஞ்சினன், இளைய கோவும்; அயல உளோர்க்கு அவதி உண்டோ?

**இராகவன் சீற்றத்தைச் சடாயு தணித்தல்**

இவ் வழி நிகழும் வேலை, எருவைகட்கு இறைவன், 'யாதும்,
செவ்வியோய்! முனியல்; வாழி! தேவரும் முனிவர்தாமும்,
வெவ் வலி வீர! நின்னால் வெல்லும் என்று ஏமுற்று உய்வார்
எவ் வலி கொண்டு வெல்வார், இராவணன் செயலை?' என்றான்.

'நாள்செய்த கமலத்து அண்ணல் நல்கிய நவை இல் ஆற்றல்
தோள் செய்த வீரம் என்னில் கண்டனை; சொல்லும் உண்டோ?
தாள் செய்ய கமலத்தானே முதலினர், தலை பத்து உள்ளாற்கு
ஆட் செய்கின்றார்கள்; அன்றி, அறம் செய்கின்றார்கள் யாரே?

'தெண் திரை உலகம்தன்னில், செறுநர்மாட்டு ஏவல்செய்து
பெண்டிரின் வாழ்வர் அன்றே? இது அன்றோ தேவர் பெற்றி!
பண்டு உலகு அளந்தோன் நல்க, பாற்கடல் அமுதம் அந் நாள்
உண்டிலர்ஆகில், இந் நாள் அன்னவர்க்கு உய்தல் உண்டோ?

'வம்பு இழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைக,
கொம்பு இழை மானின் பின் போய், குலப் பழி கூட்டிக்கொண்டீர்;
அம்பு இழை வரி வில் செங் கை ஐயன்மீர்! ஆயும்காலை,
உம் பிழை என்பது அல்லால், உலகம் செய் பிழையும் உண்டோ?

119. வீதல் - அழிதல்; மொக்குள் - குமிழ்; 122. நாள் செய்த கமலம்- அன்று மலர்ந்த செந்தாமரை; ஆட் செய்தல் - அடிமைத் தொழில் செய்தல்; 124. வம்பு - கச்சு.

'ஆதலால், முனிவாய்அல்லே; அருந்ததி அனைய கற்பின்
காதலாள் துயரம் நீக்கி, தேவர்தம் கருத்தும் முற்றி,
வேதநூல் முறையின் யாவும் விதியுளி நிறுவி, வேறும்
தீது உள துடைத்தி' என்ருன்—சேவடிக் கமலம் சேர்வான்.

புயல் நிற வண்ணன், ஆண்டு, அப் புண்ணியன் புகன்ற சொல்லே,
'தயரதன் பணி ஈது' என்ன, சிந்தையில் தழுவிநின்ருன்;
'அயல் இனி முனிவது என்னே? அரக்கரை வருக்கம் தீர்க்கும்
செயல் இனிச் செயல்' என்று எண்ணி, கண்ணிய சீற்றம் தீர்ந்தான்.

வீரச் சடாயுவின் தெய்வ மரணம்

ஆயபின், அமலன்தானும், '"ஐய! நீ அமைதி" என்ன
வாயிடை மொழிந்தது அன்றி, மற்று ஒரு செயலும் உண்டோ?
போயது அவ் அரக்கன் எங்கே? புகல்' என, புள்ளின் வேந்தன்
ஒய்வினன்; உணர்வும் தேய, உரைத்திலன்; உயிரும் தீர்ந்தான்.

சீதம் கொள் மலருளோனும் தேவரும் என்பது என்னே?
வேதங்கள் காண்கிலாமை, வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணின் பார்த்தான்; படிவம் கொள் நெடிய பஞ்ச
பூதங்கள் விளியும் நாளும் போக்கு இலா உலகம் புக்கான். 128

வீடு அவன் எய்தும் வேலே, விரிஞ்சனே முதல மேலோர்,
ஆடவர்க்கு அரசனேடு தம்பியும், அழுது சோர,
காடு அமர் மரமும் மாவும் கற்களும் கரைந்து சாய்ந்த;
சேடரும் பாருளோரும் கரம் சிரம் சேர்த்தார் அன்றே. 129

இராமன் தளர இளவல் தேற்றுதல்

'அறம்தலே நின்றிலாத அரக்கனின், ஆண்மை தீர்ந்தேன்;
துறந்தனென், தவம் செய்கேனே? துறப்பெனே உயிரை? சொல்லாய்;
பிறந்தனென் பெற்று நின்ற பெற்றியால், பெற்ற தாதை [ருன்.
இறந்தனன்; இருந்துளேன் யான்; என் செய்கேன்? இளவல்!' என்

என்றலும், இளைய கோ அவ் இராமனை இறைஞ்சி, 'யாண்டும்,
வென்றியாய்! விதியின் தன்மை பழியல விளைந்தது ஒன்ருே?
நின்று இனி நினைவது என்னே? நெருக்கி அவ் அரக்கர்தம்மைக்
கொன்றபின் அன்ருே, வெய்ய கொடுந் துயர் குளிப்பது?' என்ருன்.

128. சீதம் - குளிர்ச்சி; போக்கு இலா உலகம் - அழியாத பரமபதம்;
129. சேடர் - கீழுலகத்தவராகிய நாகர்கள்; பாருளோர் - நிலவுலகத்தவர்.

'எந்தை! நீ இயம்பிற்று என்னே? எண்மையன் ஆகி, ஏழைச்
சந்த வார் குழலினாளைத் துறந்தனை தணிதியேனும்,
உந்தையை உயிர்கொண்டானை உயிருண்ணும் ஊற்றம் இல்லாச்
சிந்தையை ஆகிநின்று, செய்வது என் செய்கை?'' என்றான்.

**இராம-இலக்குவர் சடாயுவுக்கு இறுதிக்கடன் இயற்றுதல்**

அவ் வழி இளவல் கூற, அறிவனும் அயர்வு நீங்கி,
'இவ் வழி இனைய எண்ணின் ஏழைமைப்பாலது' என்னா,
வெவ் வழி பொழியும் கண்ணீர் விலக்கினன், 'விளிந்த தாதை
செவ் வழி உரிமை யாவும் திருத்துவம்; சிறுவ!' என்றான். 133

இந்தனம் எனைய என்ன, கார் அகில் ஈட்டத்தோடும்
சந்தனம் குவித்து, வேண்டும் தருப்பையும் திருத்தி, பூவும்
சிந்தினன்; மணலின் வேதி தீது அற இயற்றி, தெண் நீர்
தந்தனன்; தாதைதன்னைத் தடக் கையான் எடுத்துச் சார்வான், 134

ஏந்தினன் இரு கைதன்னால்; ஏற்றினன் ஈமம்தன்மேல்;
சாந்தொடு மலரும் நீரும் சொரிந்தனன்; தலையின் சாரல்
காந்து எரி கஞல மூட்டி, கடன்முறை கடவாவண்ணம்
நேர்ந்தனன்—நிரம்பும் நல் நூல் மந்திர நெறியின் வல்லான்.

தளிர்த்தன கிளர்ந்த மேனித் தாமரைக் கெழுமு செம்பூத்
துளித்தன அனைய என்னத் துள்ளி சோர் வெள்ளக் கண்ணன்
குளித்தனன், கொண்டல், ஆற்று; குளித்தபின், கொண்ட நல் நீர்
அளித்தனன்—அரக்கர்ச் செற்ற சீற்றத்தான்—அவலம் தீர்ந்தான்.

மீட்டு இனி உரைப்பது என்னே? விரிஞ்சனே முதல மேல், கீழ்
காட்டிய உயிர்கள் எல்லாம் அருந்தின; களித்த போலாம்;
பூட்டிய கைகளால், அப் புள்ளினுக்கு அரசை, 'கொள்க' என்று,
ஊட்டிய நல் நீர் ஐயன் உண்ட நீர் ஒத்தது அன்றே! 137

பல் வகைத் துறையும், வேதப் பலிக் கடன் பலவும், முற்றி,
வெல் வகைக் குமரன் நின்ற வேலையின், வேலை சார்ந்தான்—
தொல் வகைக் குலத்தின் வந்தான் துன்பத்தால், புனலும் தோய்ந்து,
செல் வகைக்கு உரிய எல்லாம் செய்குவான் என்ன, வெய்யோன். 138

*132. எண்மையன் - எளிய தன்மையன்; 133. உரிமை - கடன்கள்; 134. இந்தனம் - விறகு; மணலின் வேதி - மணல் மேடை; 135. கஞலுதல் - நெருங்குதல்; 136. கொண்டல் - மேகம் போன்ற இராமன்; அவலம் - துன்பம்; 137. விரிஞ்சன் - பிரமன்; 138. துறை - சடங்கு; வேலை - பொழுது, கடல்.*

# 11 அயோமுகிப் படலம்

**ஒரு பெரு மலையில் இருவரும் தங்குதல்**

அந்தி வந்து அணுகும்வேலை, அவ் வழி, அவரும் நீங்கி,
சிந்துரச் செந் தீக் காட்டு ஓர் மை வரைச் சேக்கை கொண்டார்;
இந்திரற்கு அடங்கல்செல்லா இராக்கதர் எழுந்ததென்ன,
வெந் துயர்க்கு ஊற்றம் ஆய விரி இருள் வீங்கிற்று அன்றே. 1

**தூக்கம் இன்றித் துயரால் நலிதல்**

தேன் உக அருவி சிந்தி, தெருமரல் உறுவ போல,
கானமும், மலையும், எல்லாம் கண்ணின் நீர் உகுக்கும் கங்குல்,
மானமும் சினமும் தாதை மரணமும், மைந்தர் சிந்தை,
ஞானமும் துயரும் தம்முள் மலைந்தென, நலிந்த அன்றே. 2

மெய் உற உணர்வு செல்லா அறிவினை வினையின் ஊக்கும்
பொய் உறு பிறவிபோல, போக்க அரும் பொங்கு கங்குல்,
நெய் உறு நெருப்பின் வீங்கி நிமிர்தர, உயிர்ப்பு நீள,
கையறவு உறுகின்றூரால்; காணல் ஆம் கரையிற்று அன்றே. 3

யாம் அது தெரிதல் தேற்றும்; இன் நகைச் சனகி என்னும்
காமரு திருவை நீத்தோ? முகமதி காண்கிலாதோ?
தே மரு தெரியல் வீரன் கண் எனத் தெரிந்த செய்ய
தாமரை, கங்குற் போதும், குவிந்திலாத் தன்மை என்னே? 4

பெண் இயல் தீபம் அன்ன பேர் எழிலாட்டிமாட்டு
நண்ணிய பிரிவு செய்த நவையினர் நவையில் உள்ளத்து,
எண்ணியது அறிதல் தேற்றும்; இமைத்தில, இராமன் என்னும்
புண்ணியன் கண்ணும், வன் தோள் தம்பி கண் போன்ற அன்றே. 5

'வண்டு உளர் கோதைச் சீதை வான் முகம் பொலிய வானில்
கண்டனென்' என்று, வீரற்கு, ஆண்டு ஒரு காதல் காட்ட,
தண் தமிழ்த் தென்றல் என்னும் கோள் அராத் தவழும் சாரல்,
விண்தலம் விளக்கும் செவ்வி வெண் மதி விரிந்தது அன்றே. 6

களியுடை அனங்கக் கள்வன் கரந்து உறை கங்குற்காலம்
வெளிபடுத்து, உலகம் எங்கும் விளக்கிய நிலவின் வெள்ளம்—
நளி இருள் பிழம்பு என்று, ஈண்டு, நஞ்சொடு கலந்த நாகத்
துளை எயிற்று ஊறல் உற்றதாம் என—சுட்டது அன்றே. 7

11: 1. அந்தி - பகற்பொழுதின் பிற்கூறு, பொழுது சாயும் காலம்; 2. தெருமரல் - மனச்சுழற்சி; மானம் - அவமானம்; 6. தண் தமிழ்த் தென்றல் - குளிர்ந்த இனிமையுடைய தென்றல்; 7. துளை எயிறு - துளைபொருந்திய நச்சுப்பல்.

இடம்படு மானத் துன்பம், இருள்தர, எண்ணின் தீர்ந்தான்
விடம் பரந்தனையது ஆய வெண் நிலா வெதுப்ப, வீரன்,
படம் பரந்தனைய அல்குல், பால் பரந்தனைய இன் சொல்,
தடம் பெருங் கண்ணினாள்தன் தனிமையை நினையலுற்றான். 8

**இராகவன் சீதையை நினைந்து வருந்துதல்**

மடித்த வாயன்; வயங்கும் உயிர்ப்பினன்,
துடித்து வீங்கி, ஒடுங்குறு தோளினன்;
பொடித்த தண் தளிர்ப் பூவொடு மால் கரி
ஒடித்த கொம்பு அனையாள்திறத்து உன்னுவான்: 9

'''வாங்கு வில்லன் வரும், வரும்'' என்று, இரு
பாங்கும், நீள் நெறி பார்த்தனளோ?' எனும்—
வீங்கும் வேலை விரி திரை ஆம் என,
ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினான். 10

'தன் நினைந்திலள் என்பது சாலுமோ—
மின் நினைந்த விலங்கும் எயிற்றினான்,
''நில் நில்'' என்று, நெருங்கியபோது அவள்
என் நினைந்தனளோ?' என எண்ணுமால். 11

'நஞ்சு காலும் நகை நெடு நாகத்தின்
வஞ்ச வாயில் மதி என மட்குவாள்,
''வெஞ் சினம் செய் அரக்கர்தம் வெம்மையை
அஞ்சினான்கொல்?'' என்று ஐயுறுமால்' என்பான். 12

பூண்ட மானமும், போக்க அருங் காதலும்,
தூண்ட நின்று, இடை தோமுறும் ஆர் உயிர்,
மீண்டு மீண்டு வெதுப்ப, வெதும்பினான்,
'வேண்டுமோ எனக்கு இன்னமும் வில்?' என்பான். 13

வில்லை நோக்கி நகும்; மிக வீங்கு தோட்-
கல்லை நோக்கி நகும்; கடைக்கால் வரும்
சொல்லை நோக்கித் துணுக்கெனும்—தொல் மறை
எல்லை நோக்கினர் யாவரும் நோக்குவான். 14

8. படம் - பாம்பின் படம்; 9. கொம்பு - பூங்கொம்பு; 10. பாங்கு - பக்கம்; 11. தன் என்றது இராமனை; சாலுமோ - பொருந்துமோ; 12. மட்குவாள் - ஒளி மங்கிக் குறைவாள்; 14. நகுதல் - சிரித்தல்; கடைக்கால் - முடிவில்.

கூதிர் வாடை வெங் கூற்றினை நோக்கினன்;
'வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை என்வயின் தீர்ந்தனளோ?' எனும்—
போதகம் எனப் 'பொம்' என் உயிர்ப்பினன். 15

'நின்று பல் உயிர் காத்தற்கு நேர்ந்த யான்,
என் துணைக் குல மங்கை ஓர் ஏந்திழை-
தன் துயர்க்குத் தகவு இலென் ஆயினேன்;
நன்று நன்று, என் வலி!' என, நாணுமால். 16

சாயும், தம்பி திருத்திய தண் தளிர்;
தீயும், அங்கு அவை; தீய்தலும், செவ் இருந்து
ஆயும்; ஆவி புழுங்க அழுங்குமால்—
வாயும் நெஞ்சும் புலர மயங்குவான். 17

பிரிந்த ஏதுகொல்? பேர் அபிமானம்கொல்?
தெரிந்தது இல்லை; திரு மலர்க்கண் இமை
பொருந்த, ஆயிரம் கற்பங்கள் போக்குவான்;
இருந்தும் கண்டிலன்; கங்குலின் ஈறுஅரோ. 18

'வென்றி விற் கை இளவலை! மேல் எலாம்
ஒன்று போல உலப்பு இல நாள்கள்தாம்
நின்று காண்டி அன்றே? நெடுங் கங்குல்தான்
இன்று நீள்வதற்கு ஏது என்?' என்னுமால். 19

நீண்ட மாலை மதியினை, 'நித்தமும்,
மீண்டு மீண்டு மெலிந்தனை, வெள்குவாய்;
பூண்ட பூணவள் வாள் முகம் போதலால்,
ஈண்டு, சால விளங்கினை' என்னுமால். 20

'நீள் நிலாவின் இசை நிறை தன் குலத்து,
ஆணி ஆய பழி வர, அன்னது
நாணி, நாடு கடந்தனனும்கொலோ,
சேண் உலாம் தனித் தேரவன்?' என்னுமால். 21

சுட்ட கங்குல் நெடிது எனச் சோர்கின்றான்,
'முட்டு அமைந்த நெடு முடக்கோனொடு
கட்டி, வாள் அரக்கன், கதிரோனையும்
இட்டனன்கொல் இருஞ் சிறை?' என்னுமால். 22

15. போதகம் - யானைக்கன்று; 17. செவ் இருந்து - சாயாது நேரே நிமிர்ந்து அமர்ந்து; 21. நாடு கடத்தல் - நாட்டுமக்களின் கண் காணாத தேயத்திற்குச் செல்லுதல்; சேண் - வானம்; உலாம் - உலாவும்; 22. முட்டு அமைந்த - கடிவாளத்தைக் கையில் கொண்ட.

'துடியின் நேர் இடை தோன்றலளாம்எனின்,
கடிய கார் இருள் கங்குலின் கற்பம் போய்
முடியும்ஆகின், முடியும், இம் மூரி நீர்
நெடிய மா நிலம்' என்ன, நினைக்குமால். 23

'திறத்து இனுதன, செய் தவத்தோர் உற
ஒறுத்து, ஞாலத்து உயிர்தமை உண்டு, உழல்
மறத்தினுர்கள் வலிந்தனர் வாழ்வரேல்,
அறத்தினுல் இனி ஆவது என்?' என்னுமால். 24

தேனின் தெய்வத் திரு நெடு நாண் சிலைப்
பூ நின்று எய்யும் பொரு கணை வீரனும்,
மேல் நின்று எய்ய விமலனை நோக்கினுன்;
தான் நின்று எய்யகில்லான், தடுமாறினுன். 25

உழந்த யோகத்து ஒருமுதல் கோபத்தால்
இழந்த மேனியும் எண்ணி இரங்கினுன்—
கெழுந்தகைக்கு ஒரு வன்மை கிடைக்குமோ,
பழந் துயர்க்குப் பரிவுறும் பான்மையால்? 26

நீலமான நிறத்தன் நினைந்தவை
சூலம் ஆகத் தொலைவுறும் எல்லையில்,
மூல மா மலர் முன்னவன் முற்றுறும்
காலம் ஆம் என, கங்குல் கழிந்ததே. 27

வெள்ளம் சிலம்பு பாற்கடலின் விரும்பும்
துயிலை வெறுத்து, அளியும்
கள்ளும் சிலம்பும் பூங் கோதைக்
கற்பின் கடலில் படிவாற்கு,
புள்ளும் சிலம்பும்; பொழில் சிலம்பும்;
புனலும் சிலம்பும்; புனை கோலம்
உள்ளும் சில் அம்பும் சிலம்பாவேல்,
உயிர் உண்டாகும் வகை உண்டோ? 28

23. மூரி நீர் - கடல்; 25. சிலைப் பூ - மலர் வில், மன்மதனுக்குக் கருப்பு வில்லேயன்றிக் காம நூல் என்னும் பூ வில்லும் உண்டு; 26. ஒருமுதல் - தனி முதல்வனுகிய சிவன்; கெழுந்தகை - கெழுதகை, உரிமை; 27. தொலைவுறுதல் - அழிதல்; 28. கள் - தேன்; சிலம்புதல் - ஒலித்தல்; புனை கோலம் - இராமன் கொண்ட போர்க்கோலம்; சில் அம்பு - சில அம்புகள்.

மயிலும் பெடையும் உடன் திரிய,
மானும் கலையும் மருவி வர,
பயிலும் பிடியும் கட கரியும்
வருவ, திரிவ, பார்க்கின்றான்;
குயிலும், கரும்பும், செழுந் தேனும்,
குழலும், யாழும், கொழும் பாகும்,
அயிலும் அமுதும், சுவை தீர்த்த
மொழியைப் பிரிந்தான் அழியானோ? 29

முடி நாட்டிய கோட்டு உதயத்து
முற்றம் உற்றான்—முது கங்குல்
விடி நாள் கண்டும், கிளி மிழற்றும்
மென் சொல் கேளா வீரற்கு, 'ஆண்டு,
அடிநாள், செந் தாமரை ஒதுங்கும்
அன்னம் இலளால், யான் அடைத்த
கடி நாள் கமலத்து' என அவிழ்த்துக்
காட்டுவான்போல், கதிர் வெய்யோன். 30

பொழிலை நோக்கும்; பொழில் உறையும்
புள்ளை நோக்கும்; பூங்கொம்பின்
எழிலை நோக்கும்; இள மயிலின்
இயலை நோக்கும்; இயல்பு ஆனாள்
குழலை நோக்கி, கொங்கை இணைக்
குவட்டை நோக்கி, அக் குவட்டின்
தொழிலை நோக்கி, தன்னுடைய தோளை
நோக்கி, நாள் கழிப்பான். 31

**சீதையைக் கவர்ந்த அரக்கனைத் தேட முற்படல்**

அன்னகாலை, இள வீரன், அடியின்
வணங்கி, 'நெடியோய்! அப்
பொன்னை நாடாது, ஈண்டு இருத்தல்
புகழோ?' என்ன, புகழோனும்,
'சொன்ன அரக்கன் இருக்கும் இடம்
துருவி அறிதும் தொடர்ந்து' என்ன,
மின்னும் சிலையார் மலை தொடர்ந்த
வெயில் வெங் கானம் போயினரால். 32

29. கலை - ஆண் மான்; பிடி - பெண் யானை; 31. புள் - ஈண்டுச் சக்கர வாகப் பறவை; குவடு - மலை; குவட்டின் தொழில் - தொய்யில், முலை மேல் எழுதப்படும் சித்திரங்கள்.

ஆசை சுமந்த நெடுங் கரி அன்னர்
பாசிலை துன்று வனம் பல பின்னு,
காசு அறு குன்றினெடு ஆறு கடந்தார்;
யோசனை ஒன்பதொடு ஒன்பது சென்றார். 33

மண்படி செய்த தவத்தினில் வந்த
கள் படி கோதையை நாடினர், காணர்,
உள் படி கோபம் உயிர்ப்பொடு பொங்க,
புள் படியும் குளிர் வார் பொழில் புக்கார். 34

ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான்;
நாரியை எங்கணும் நாடினன்; நாடி,
பேர் உலகு எங்கும் உழன்று, இருள் பின்னு,
மேருவின்—வெங் கதிர்—மீள மறைந்தான். 35

அரண்டு, அருகும் செறி அஞ்சன புஞ்சம்
முரண்டனபோல், இருள் எங்கணும் முந்த,
தெருண்ட அறிவில்லவர் சிந்தையின் முந்தி,
இருண்டன, மாதிரம் எட்டும் இரண்டும். 36

இளிக்கு அறை இன் சொல் இயைந்தன, பூவை,
கிளிக்கு அறையும் பொழில், கிஞ்சுக வேலி,
ஒளிக் கறை மண்டிலம் ஒத்துளது, ஆங்கு ஓர்
பளிக்கு அறை; கண்டு; அதில் வைகல் பயின்றார். 37

#### இலக்குவன் நீர் தேடிச் செல்லுதல்

அவ் இடை எய்திய அண்ணல் இராமன்
வெவ் விடைபோல் இள வீரனை, 'வீர!
இவ் இடை நாடினை, நீர் கொணர்க' என்றான்;
தெவ் இடை வில்லவனும் தனி சென்றான். 38

#### இலக்குவனைக் கண்டு அயோமுகி காமுறுதல்

எங்கணும் நாடினன்; நீர் இடை காணன்;
சிங்கம் எனத் தமியன் திரிவானை,
அங்கு, அவ் வனத்துள், அயோமுகி என்னும்
வெங் கண் அரக்கி விரும்பினள் கண்டாள். 39

34. மண்படி - மண்ணுலகு; 36. புஞ்சம் - திரட்சி; மாதிரம் - திசை; 37. இளி - ஏழிசைகளுள் ஒன்று; கிஞ்சுகம் - முள்முருக்க மரம்; கறை - முயற் கறை; 38. வெவ்விடை - சினம் மிக்க ஆனேறு; தெவ் - பகை; இடைதல் - தோற்றேடுதல்.

நல் மதியோர் புகல் மந்திர நாமச்
சொல் மதியா அரவின் சுடர்கிற்பாள்
தன் மதனோடு தன் வெம்மை தணிந்தாள்;
'மன்மதன் ஆம் இவன்' என்னும் மனத்தாள். 40

அழுந்திய சிந்தை அரக்கி, அலக்கண்
எழுந்து உயர் காதலின் வந்து, எதிர் நின்றாள்;
'புழுங்கும் என் நோவொடு புல்லுவென்; அன்றி,
விழுங்குவெனே' என விம்மல் உழந்தாள். 41

'இரந்தனென் எய்தியபோது, இசையாது
கரந்தனனேல், நனி கொண்டு கடந்து, என்
முரஞ்சினில் மேவி முயங்குவென்' என்று,
விரைந்து எதிர் வந்தனள், தீயினும் வெய்யாள்.† 42

உயிர்ப்பின் நெருப்பு உமிழ்கின்றனள்; ஒன்ற
எயிற்றின் மலைக் குலம் மென்று இனிது உண்ணும்
வயிற்றள்; வயக் கொடு மாசுணம் வீசு
கயிற்றின் அசைத்த முலை, குழி கண்ணள்; 43

பற்றிய கோள் அரி, யாளி, பணிக்கண்
தெற்றிய பாத சிலம்பு சிலம்ப,
இற்று உலகு, யாவையும் ஈறுறும் அந் நாள்,
முற்றிய ஞாயிறு போலும் முகத்தாள்;† 44

ஆழி வறக்க முகக்க அமைந்த
மூழை எனப் பொலி மொய் பில வாயாள்;
கூழை புறத்து விரிந்தது ஓர் கொட்பால்,
ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பாள்; 45

தடி தடவ, பல தலை தழுவ, தாள்
நெடிது அடைய, குடர் கெழுமு நிணத்தாள்;
அடி தடவ, பட அரவம் இசைக்கும்
கடிதடம் உற்றவள்; உருமு கறிப்பாள்;† 46

40. மதன் - வலி, செருக்கு; வெம்மை - சினம்; 42. முரஞ்சு - பாறை, இங்கு, மலை முழைஞ்சாகிய குகையினைச் சுட்டியது; 43. மாசுணம் - பெரும் பாம்பு; 44. அரி - சிங்கம்; யாளி - யானையைப் போன்று துதிக்கையும் சிங்கத்தினைப் போன்ற உடலமைப்புமுடையதொரு வலிய விலங்கு; பணி - பாம்பு; தெற்றிய - சேர்த்துக் கட்டிய; 45. மூழை - முகக்கும் கருவியாகிய அகப்பை; 46. கெழுமு - பொருந்திய; கடிதடம் - அரையிடம்.

இவை இறை ஒப்பன என்ன, விழிப்பாள்;
அவை குளிர, கடிது அழலும் எயிற்ருள்;
குவை குலையக் கடல் குமுற உரைப்பாள்;
நவை இல் புவித்திரு நாண நடப்பாள். 47

நீள் அரவச் சரி, தாழ் கை, நிரைத்தாள்;
ஆள் அரவப் புலி ஆரம் அணித்தாள்;
யாளியினைப் பல தாலி இசைத்தாள்;
கோள் அரியைக் கொடு தாழ் குழை இட்டாள்;† 48

அயோமுகியை இலக்குவன், 'யார்?' எனக் கேட்டல்

நின்றனள், ஆசையின் நீர் கலுழும் கண்
குன்றி நிகர்ப்ப, குளிர்ப்ப விழிப்பாள்,
மின் திரிகின்ற எயிற்றின் விளக்கால்,
கன்று இருளில் திரி கோளரி கண்டான். 49

'பண்டையில் நாசி இழந்து பதைக்கும்
திண் திறலாளொடு தாடகை சீராள்;
கண்டகர் ஆய அரக்கர் கணத்து ஓர்
ஒண்தொடி ஆம், இவள்' என்பது உணர்ந்தான். 50

'பாவியர் ஆம் இவர்; பண்பு இலர்; நம்பால்
மேவிய காரணம் வேறு இலை' என்பான்;
'மா இயல் கானின் வயங்கு இருள் வந்தாய்!
யாவள் அடீ? உரைசெய், கடிது' என்றான். 51

அயோமுகியின் காம வெறியும் இலக்குவன் மறுப்பும்

பேசினன்; அங்கு அவள் பேசுற நாணாள்;
ஊசல் உழன்று அழி சிந்தையளும்தான்,
'நேசம் இல், அன்பினளாயினும், நின்பால்
ஆசையின் வந்த அயோமுகி' என்றாள். 52

பின்னும் உரைப்பவள், 'பேர் எழில் வீரா!
முன்னம் ஒருத்தர் தொடா முலையோடு உன்
பொன்னின் மணித் தட மார்பு புணர்ந்து, என்
இன் உயிரைக் கடிது ஈகுதி' என்றாள். 53

48. சரி - வளையல்; ஆரம் - மார்பில் அணியும் மாலை; 50. கண்டகர் - வழிச் செல்வாரைத் தடுத்து முள்ளைப்போன்று வருத்தும் கொடியோர்; 51. பாவியர் - தீத்தொழிலராகிய கொடியோர்.

ஆறிய சிந்தையள் அஃது உரைசெய்ய,
சீறிய கோளரி கண்கள் சிவந்தான்;
'மாறு இல வார் கணை, இவ் உரை வாயின்
கூறிடின், நின் உடல் கூறிடும்' என்றான்.† 54

மற்று அவன் அவ் உரை செப்ப, மனத்தால்
செற்றிலள்; கைத் துணை சென்னியில் வைத்தாள்;
'கொற்றவ! நீ எனை வந்து உயிர் கொள்ளப்
பெற்றிடின், இன்று பிறந்தனென்' என்றாள். 55

வெங் கதம் இல்லவள் பின்னரும், 'மேலோய்!
இங்கு நறும் புனல் நாடுதி என்னின்,
அங்கையினால் எனை, ''அஞ்சலை'' என்றால்,
கங்கையின் நீர் கொணர்வென் கடிது' என்றாள். 56

சுமித்திரை சேய் அவள் சொன்ன சொல் அன்ன
கமித்திலன்; 'நின் இரு காதொடும் நாசி
துமிப்பதன் முன்பு அகல்' என்பது சொல்ல,
இமைத்திலள், நின்றனள், இன்ன நினைந்தாள்: 57

'எடுத்தனென் ஏகினென், என் முழைதன்னுள்
அடைத்து, இவன் வெம்மை அகற்றிய பின்னை,
உடற்படுமால்; உடனே உறும் நன்மை;
திடத்து இதுவே நலன்' என்று, அயல் சென்றாள். 58

**இலக்குவனை அயோமுகி தூக்கிச் செல்லுதல்**

மோகனை என்பது முந்தி முயன்றாள்;
மாக நெடுங் கிரி போலியை வவ்வா
ஏகினள்—உம்பரின் இந்துவொடு ஏகும்
மேகம் எனும்படி—நொய்தினின் வெய்யாள். 59

மந்தரம் வேலையில் வந்ததும், வானத்து
இந்திரன் ஊர் பிடி என்னலும், ஆனாள்;
வெந் திறல் வேல் கொடு சூர் அடும் வீரச்
சுந்தரன் ஊர்தரு தோகையும் ஒத்தாள். 60

54. மாறு இல - ஒப்பு இல்லாத; 56. கதம் - கோபம்; 57. கமித்திலன் - பொறுத்திலன்; 58. திடம் - உறுதி; 59. மோகனை - மோகத்தை உண்டாக்கும் மாயை.

ஆங்கு அவள் மார்பொடு கையின் அடங்கி,
பூங் கழல் வார் சிலை மீளி பொலிந்தான்;
வீங்கிய வெஞ் சின வீழ் மத வெம் போர்
ஓங்கல் உரிக்குள் உருத்திரன் ஒத்தான். 61

இப்படி ஏகினள், அன்னவள். இப்பால்,
'அப்பு இடை தேடி நடந்த என் ஆவித்
துப்புடை மால் வரை தோன்றலன்' என்னு,
வெப்புடை மெய்யொடு வீரன் விரைந்தான். 62

**இலக்குவனைக் காணுத இராமன் துயரம்**

'வெய்து ஆகிய கானிடை மேவரும் நீர்
ஐது ஆதலினே? அயல் ஒன்று உளதோ?
நொய்தாய் வர, வேகமும் நொய்திலனல்;
எய்தாது ஒழியான்; இது என்னைகொலாம்? 63

' ''நீர் கண்டனை இவ் வழி நேடினை போய்,
சார், கொண்டு'' என, இத்துணை சார்கிலனல்;
வார் கொண்டு அணி கொங்கையை வவ்வினர்பால்
போர் கொண்டனனே? பொருள் உண்டு இது' என, 64

'அம் சொல் கிளி அன்ன அணங்கினை முன்
வஞ்சித்த இராவணன் வவ்வினனே?
நஞ்சின் கொடியான் நடலைத் தொழிலால்,
துஞ்சுற்றனனே, விதியின் துணிவால்? 65

'வரி விற் கை என் ஆர் உயிர் வந்திலனல்;
''தரு சொல் கருதேன்; ஒரு தையலை யான்
பிரிவித்தனென்'' என்பது ஓர் பீழை பெருத்து
எரிவித்திட, ஆவி இழந்தனனே? 66

'உண்டாகிய கார் இருள் ஓடு ஒருவன்
கண்தான்; அயல் வேறு ஒரு கண் இலெனல்;
புண்தான் உறு நெஞ்சு புழுங்குறுவென்;
எண்தான் இலென்; எங்ஙனம் நாடுகெனே? 67

'தள்ளா வினையேன் தனி ஆர் உயிர் ஆய்-
உள்ளாய்! ஒரு நீயும் ஒளித்தனையோ?
பிள்ளாய்! பெரியாய்! பிழை செய்தனையால்;
கொள்ளாது உலகு உன்னை; இதோ கொடிதே! 68

63. ஐது - நுண்மை, ஈண்டு இன்மை; நொய்தாய் - விரைவாய்; 64. பொருள் - காரணம்; 65. நடலை - வஞ்சனை.

'பேரா இடர் வந்தன பேர்க்க வலாய்!
தீரா இடர் தந்தனை; தெவ்வர் தொழும்
வீரா! எனை இங்ஙன் வெறுத்தனையோ?
வாராய், புறம் இத்துணை வைகுதியோ? 69

'என்னைத் தரும் எந்தையை, என்னையரை,
பொன்னைப் பொருகின்ற பொலங் குழையாள்-
தன்னை, பிரிவேன்; உளென் ஆவதுதான்,
உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ? 70

'பொன் தோடு இவர்கின்ற பொலங் குழையாள்-
தன்-தேடி வருந்து தவம்புரிவேன்,
நின்-தேடி வருந்த நிரப்பினையோ?
என்-தேடினை வந்த இளங் களிறே! 71

'இன்றே இறவாது ஒழியேன்; எமரோ,
பொன்றுது ஒழியார், புகல்வார் உளரால்;
ஒன்றுகிய உன் கிளையோரை எலாம்
கொன்றாய்; கொடியாய்! இதுவும் குணமோ? 72

'மாந்தா முதல் மன்னவர்தம் வழியில்,
வேந்து ஆகை துறந்தபின், மெய் உறவோர்
தாம்தாம் ஒழிய, தமியேனுடனே
போந்தாய்; எனை விட்டனை போயினையோ?' 73

என்று உரையா, எழும்; வீழும்; இருந்து
உன்னு, உணர்வு ஒய்வுறும்; ஒன்று அலவால்;
'மின்னுது இடியாது; இருள்வாய் விளைவு ஈது
என் ஆம்? எனும், என் தனி நாயகனே. 74

நாடும், பல சூழல்கள்தோறும் நடந்து;
ஓடும், பெயர் சொல்லி உளைந்து; உயிர் போய்
வாடும்வகை சோரும்; மயங்குறுமால்—
ஆடும் களி மா மத யானை அனுன். 75

'கமையாளொடும் என் உயிர் காவலில் நின்று
இமையாதவன், இத்துணை தாழ்வுறுமோ?
சுமையால் உலகூடு உழல் தொல் வினையேற்கு,
அமையாதுகொல் வாழ்வு? அறியேன்' எனுமால். 76

71. தோடு - மகளிர் காதணி; 73. மாந்தா - மாந்தாதா; ஆகை - ஆதல்.

இரக்கத் துணிந்த இராமன் அரக்கியின் அலறலைக் கேட்டல்

'அறப் பால் உளதேல், அவன் முன்னவன் ஆய்ப்
பிறப்பான் உறில், வந்து பிறக்க' என,
மறப் பால் வடி வாள் கொடு, மன் உயிரைத்
துறப்பான் உறுகின்ற தொடர்ச்சியின்வாய், 77

பேர்ந்தான், நெடு மாயையினில் பிரியா;
ஈர்ந்தான், அவள் நாசி பிடித்து, இளையோன்;
சோர்ந்தாள் இடு பூசல் செவித் துளையில்
சேர்ந்து ஆர்தலுமே, திருமால் தெருளா, 78

'பரல் தரு கானகத்து அரக்கர், பல் கழல்
முரற்று அரு வெஞ் சமம் முயல்கின்றார், எதிர்
உரற்றிய ஓசை அன்று; ஒருத்தி ஊறுபட்டு
அரற்றிய குரல்; அவள் அரக்கியாம்' என, 79

அழல் அம்பின் ஒளியில் செல்லும் இராமன், தம்பியை அடைதல்

அங்கியின் நெடும் படை வாங்கி, அங்கு அது
செங் கையில் கரியவன் திரிக்கும் எல்லையில்,
பொங்கு இருள் அப் புறத்து உலகம் புக்கது;
கங்குலும், பகல் எனப் பொலிந்து காட்டிற்றே. 80

நெடு வரை பொடிபட, நிவந்த மா மரம்,
ஒடிவுற, நிலமகள் உலைய, ஊங்கு எலாம்,
'சட சட' எனும் ஒலி தழைப்பத் தாக்கவும்,
முடுகினன் இராமன், வெங் காலின் மும்மையான். 81

ஒருங்கு உயர்ந்து, உலகின்மேல், ஊழிப் பேர்ச்சியுள்
கருங் கடல் வருவதே அனைய காட்சித் தன்
பெருந் துணைத் தம்முனை நோக்கி, பின்னவன்,
'வருந்தலை வருந்தலை வள்ளியோய்!' என, 82

'வந்தனென் அடியனேன்; வருந்தல், வாழி! நின்
அந்தம் இல் உள்ளம்' என்று, அறியக் கூறுவான்,
சந்த மென் தளிர் புரை சரணம் சார்ந்தனன்;
சிந்தின நயனம் வந்தனைய செய்கையான். 83

77. அறப்பால் - அறப்பயனாகிய நல்லூழ்; 79. உரற்றுதல் - உரக்க ஒலித்தல்; ஊறுபடுதல் - உடற்குறைபட்டு வருந்துதல்; 80. அங்கி - அக்கினி; 81. வெங்கால் - கடுங்காற்று; 83. சிந்தின - இழந்த.

ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன்,
ஈற்று இளங் கன்றினைப் பிரிவுற்று, ஏங்கி நின்று,
ஆற்றலாது அரற்றுவது, அரிதின் எய்திட,
பால் துறும் பனி முலை ஆவின் பான்மையான். 84

**இலக்குவனைத் தழுவி, நிகழ்ந்தது கேட்டு அறிதல்**

தழுவினன் பல் முறை; தாரைக் கண்ணின் நீர்
கழுவினன், ஆண்டு அவன் கனக மேனியை;
'வழுவினையாம் என மனக் கொடு ஏங்கினேன்;
எழு என, மலை என, இயைந்த தோளினாய்! 85

'என்னை அங்கு எய்தியது? இயம்புவாய்' என,
அன்னவன் அஃது எலாம் அறியக் கூறலும்,
இன்னலும், உவகையும், இரண்டும், எய்தினான்—
தன் அலாது ஒரு பொருள் தனக்கு மேல் இலான். 86

'ஆய்வுறு பெருங் கடல் அகத்துள் ஏயவன்
பாய் திரை வருதோறும், பரிதற்பாலனோ?
தீவினைப் பிறவி வெஞ் சிறையில் பட்ட யாம்,
நோய், உறு துயர் என நுடங்கல் நோன்மையோ? 87

'மூவகை அமரரும், உலகம் மும்மையும்,
மேவ அரும் பகை எனக்கு ஆக மேல்வரின்,
ஏவரே கடப்பவர்? எம்பி! நீ உளை
ஆவதே வலி; இனி, அரணும் வேண்டுமோ? 88

'பிரிபவர் யாவரும் பிரிக; பேர் இடர்
வருவன யாவையும் வருக; வார் கழல்
செரு வலி வீர! நின்-தீரும் அல்லது,
பருவரல், என்வயின் பயிலற்பாலதோ? 89

'வன் தொழில் வீர! ''போர் வலி அரக்கியை
வென்று, போர் மீண்டனென்'' என, விளம்பினாய்;
புன் தொழில் அனையவள், புகன்ற சீற்றத்தால்
கொன்றிலபோலுமால்? கூறுவாய்' என்றான். 90

84. துறும் - வெளிப்படும்; 85. வழுவினை - தவறினை; 87. ஏயவன் - அகப்பட்டவன்; 88. மூவகை அமரர் - முத்தொழில் இயற்றும் பிரமன், திருமால், சிவன்.

'துளைபடு மூக்கொடு செவி துமித்து உக,
வளை எயிறு இதழொடு அரிந்து, மாற்றிய
அளவையில், பூசலிட்டு அரற்றினுள்' என,
இளையவன் விளம்பிநின்று இரு கை கூப்பினுன். 91

'தொல் இருள், தனைக் கொலத் தொடர்கின்ருளையும்,
கொல்லலை; நாசியைக் கொய்து நீக்கினுய்;
வல்லை நீ; மனு முதல் மரபினேய்!' என,
புல்லினன்—உவகையின் பொருமி விம்முவான். 92

வருண மந்திரத்தால் வான நீர் பருகி, மலை ஒன்றில் தங்குதல்

பேர அருந் துயர் அறப் பேர்ந்துளோர் என,
வீரனும் தம்பியும் விடிவு நோக்குவார்,
வாருணம் நினைந்தனர்; வான நீர் உண்டு,
தாரணி தாங்கிய கிரியில் தங்கினுர். 93

கல் அகல் வெள்ளிடை, கானின் நுண் மணல்,
பல்லவம், மலர், கொடு படுத்த பாயலின்,
எல்லை இல் துயரினேடு இருந்து சாய்ந்தனன்,
மெல் அடி, இளையவன் வருட, வீரனே. 94

சீதையின் பிரிவாற்ருது இராமன் துயருறல்

மயில் இயல் பிரிந்தபின், மான நோயினுல்,
அயில்விலன் ஒரு பொருள்; அவலம் எய்தலால்,
துயில்விலன் என்பது சொல்லற்பாலதோ?
உயிர், நெடிது உயிர்ப்பிடை, ஊசலாடுவான். 95

'மானவள் மெய் இறை மறக்கலாமையின்
ஆனதோ? அன்றுஎனின், அரக்கர் மாயமோ?—
கானகம் முழுவதும், கண்ணின் நோக்குங்கால்
சானகி உரு எனத் தோன்றும் தன்மையே! 96

கருங்குழல், சேயரிக் கண்ணி, கற்பினேர்க்கு
அருங் கலம், மருங்கு வந்து இருப்ப, ஆசையால்
ஒருங்குறத் தழுவுவென்; ஒன்றும் காண்கிலென்;
மருங்குல்போல் ஆனதோ வடிவும், மெல்லவே? 97

92. தொல் இருள் - முதிர்ந்த இருள்; 93. வாருணம் - வருண மந்திரம்; 94. வெள்ளிடை - மேல் மறைவில்லாத இடம்; 96. மானவள் - பெருமையையுடையவள், மான் போன்றவள்.

'புண்டரிகப் புது மலரில் தேன் பொதி
தொண்டைஅம் சேயொளித் துவர்த்த வாய் அமுது
உண்டனென்; ஈண்டு அவள் உழையள் அல்லளால்;
கண் துயில் இன்றியும் கனவு உண்டாகுமோ? 98

'மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்,
எண்ணினும், பெரியது ஓர் இடர் வந்து எய்தினுல்,
தண் நறுங் கருங் குழல் சனகன் மா மகள்
கண்ணினும், நெடியதோ, கொடிய கங்குலே? 99

'அப்புடை அலங்கு மீன் அலர்ந்ததாம் என—
உப்புடை இந்து என்று உதித்த ஊழித் தீ,
வெப்புடை விரி கதிர் வெதுப்ப—மெய் எலாம்
கொப்புளம் பொடித்ததோ, கொதிக்கும் வானமே?' 100

இன்னன இன்னன பன்னி, ஈடு அழி
மன்னவர் மன்னவன் மதி மயங்கினுன்;
அன்னது கண்டனன், அல்கினுன் என,
துன்னிய செங் கதிர்ச் செல்வன் தோன்றினுன். 101

'நிலம் பொறை இலது' என, நிமிர்ந்த கற்பினுள்,
நலம் பொறை கூர்தரும் மயிலை நாடிய,
அலம்புறு பறவையும் அழுவவாம் எனப்
புலம்புறு விடியலில், கடிது போயினுர். 102

## 12 கவந்தன் படலம்

**கவந்தன் வனத்தின் தன்மை**

ஐ–ஐந்து அடுத்த யோசனையின் இரட்டி, அடவி புடைபடுத்த
வையம் திரிந்தார்; கதிரவனும் வானின் நாப்பண் வந்துற்றுன்;
எய்யும் சிலைக் கை இருவரும் சென்று, இருந்தே நீட்டி எவ் உயிரும்
கையின் வளைத்து வயிற்று அடக்கும் கவந்தன் வனத்தைக் கண்ணுற்றுர்.

98. தொண்டை - தொண்டைக்கனி, கொவ்வைப் பழம்; துவர்த்த - பவளத்தின் தன்மை வாய்ந்த; 100. உப்பு - இனிமை, அழகு; 101. அல்குதல் - சுருங்குதல், மெலிதல்; 102. அலம்புறு பறவை - அலைதலைக் கொண்ட பறவை.

எறுப்புஇனம் கடையுற, யானையே முதல்
உறுப்புடை உயிர் எலாம் உலைந்து சாய்ந்தன;
வெறிப்புறு நோக்கின, வெருவுகின்றன;
பறிப்பு அரு வலையிடைப் பட்ட பான்மைய; 2

மரபுளி நிறுத்திலன், புரக்கும் மாண்பிலன்,
உரன் இலன் ஒருவன் நாட்டு உயிர்கள் போல்வன;
வெருவுவ, சிந்துவ, குவிவ, விம்மலோடு
இரிவன, மயங்குவ, இயல்பு நோக்கினர். 3

மால் வரை உருண்டன வருவ; மா மரம்
கால் பறிந்திடுவன; கான யாறுகள்
மேல் உள திசையொடு வெளிகள் ஆவன;
சூல் முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன; 4

**கவந்தன் கையுள் அகப்பட்ட இருவரும் பலவாறு எண்ணுதல்**

நால் திசைப் பரவையும், இறுதி நாள் உற,
காற்று இசைத்து எழ எழுந்து, உலகைக் கால் பரந்து
ஏற்று இசைத்து உயர்ந்து வந்து இடுங்குகின்றன
போல், திசை சுற்றிய கரத்துப் புக்குளார். 5

தேமொழி திறத்தினால், அரக்கர் சேனை வந்து
ஏமுற வளைந்தது என்று, உவகை எய்தினர்;
நேமி மால் வரை வர நெருக்குகின்றதே
ஆம் எனல் ஆய, கைம் மதிட்குள் ஆயினர். 6

இளவலை நோக்கினன் இராமன், 'ஏழையை
உளைவு செய் இராவணன் உறையும் ஊரும், இவ்
அளவையது ஆகுதல் அறிதி; ஐய! நம்
கிளர் பெருந் துயரமும் கீண்டது ஆம்' என, 7

'முற்றிய அரக்கர்தம் முழங்கு தானையேல்,
எற்றிய முரசு ஒலி, ஏங்கும் சங்கு இசை,
பெற்றிலது; ஆதலின், பிறிது ஒன்று ஆம்' எனச்
சொற்றனன் இளையவன், தொழுது முன் நின்றான். 8

'தெள்ளிய அமுது எழத் தேவர் வாங்கிய
வெள் எயிற்று அரவம்தான்? வேறு ஓர் நாகம்தான்?
தள்ள அரு வாலொடு தலையினால் வளைத்து,
உள் உறக் கவர்வதே ஒக்கும்; ஊழியாய்!' 9

12 : 2. பறிப்பு அரு - நீக்க முடியாத; 5. இடுங்குதல் - நெருங்குதல்;
7. அளவையது - இடத்தது.

கவந்தன் இருந்த காட்சி

என்று இவை விளம்பிய இளவல் வாசகம்
நன்று என நினைந்தனன், நடந்த நாயகன்;
ஒன்று இரண்டு யோசனை உள் புக்கு, ஓங்கல்தான்
நின்றென இருந்த அக் கவந்தன் நேர் சென்றுர். 10

வெயில் சுடர் இரண்டினை மேரு மால் வரை
குயிற்றியதாம் எனக் கொதிக்கும் கண்ணினன்;
எயிற்று இடைக்குஇடை இரு காதம்; ஈண்டிய
வயிற்றிடை வாய் எனும் மகர வேலையான். 11

ஈண்டிய புலவரோடு அவுணர், இந்துவைத்
தீண்டிய நெடு வரைத் தெய்வ மத்தினைப்
பூண்டு உயர் வடம், இரு புடையும் வாங்கலின்,
நீண்டன கிடந்தென நிமிர்ந்த கையினன். 12

தொகைக் கனல் கருமகன் துருத்தித் தூம்பு என,
புகைக் கொடி, கனலொடும் பொடிக்கும் மூக்கினன்;
பகைத் தகை நெடுங் கடல் பருகும் பாவகன்
சிகைக் கொழுந்து இது எனத் திருகு நாவினன். 13

புரண்டு பாம்பு இடை வர வெருவி, புக்கு உறை
அரண்தனை நாடி, ஓர் அருவி மால் வரை
முரண் தொகு முழை நுழை, முழு வெண் திங்களை
இரண்டு கூறிட்டென, இலங்கு எயிற்றினன். 14

ஓத நீர், மண், இவை முதல ஓதிய
பூதம் ஓர் ஐந்தினில் பொருந்திற்று அன்றியே,
வேத நூல் வரன்முறை விதிக்கும் ஐம் பெரும்
பாதகம் திரண்டு, உயிர் படைத்த பண்பினன். 15

வெய்ய வெங் கதிர்களை விழுங்கும் வெவ் அரா,
செய் தொழில் இல, துயில் செவியின் தொள்ளையான்;
பொய் கிளர் வன்மையில் புரியும் புன்மையோர்
வைகுறும் நரகையும் நகும் வயிற்றினன். 16

முற்றிய உயிர் எலாம் முருங்க வாரி, தான்
பற்றிய கரத்தினன், பணைத்த பண்ணையில்
துற்றிய புகுதரும் தோற்றத்தால், நமன்
கொற்ற வாய்தல் செயல் குறித்த வாயினன். 17

12. புலவர் - தேவர்; 13. தொகைக் கனல் - மிக்க நெருப்பையுடைய உலைக்களம்; பாவகன் - வடவைக் கனல்; 16. தொள்ளை - தொளை; 17. துற்றுதல் - உண்ணுதல்.

ஒலம் ஆர் கடல் என முழங்கும் ஓதையான்;
ஆலமே என இருண்டு அழன்ற ஆக்கையான்;
நீல மால், நேமியின் தலையை நீக்கிய
காலநேமியைப் பொரும் கவந்தக் காட்சியான். 18

தாக்கிய தணப்பு இல் கால் எறிய, தன்னுடை
மேக்கு உயர் கொடு முடி இழந்த மேரு நேர்
ஆக்கையின் இருந்தவன்தன்னை, அவ் வழி,
நோக்கினர் இருவரும், நுணங்கு கேள்வியார். 19

கவந்தன் வாயைப் பார்த்து இராம-இலக்குவர் ஐயுறல்

நீர் புகும் நெடுங் கடல் அடங்கும், நேமி சூழ்
பார் புகும், நெடும் பகு வாயைப் பார்த்தனர்;
'சூர் புகல் அரியது ஓர் அரக்கர் தொல் மதில்
ஊர் புகு வாயிலோ இது?' என்று, உன்னினர். 20

அவ் வழி, இளையவன் அமர்ந்து நோக்கியே,
'வெவ்வியது, ஒரு பெரும் பூதம், வில் வலாய்!
வவ்விய தன் கையின் வளைத்து, வாய்ப் பெயும்;
செய்வது என் இவண்?' என, செம்மல் சொல்லுவான்; 21

'பழி சுமந்து வாழேன்' என்று, இராமன் கூறல்

'தோகையும் பிரிந்தனள்; எந்தை துஞ்சினன்;
வேக வெம் பழி சுமந்து உழல வேண்டலேன்;
ஆகலின், யான், இனி, இதனுக்கு ஆமிடம்;
ஏகுதி ஈண்டுநின்று, இளவலே!' என்றான். 22

'ஈன்றவர் இடர்ப்பட, எம்பி துன்புற,
சான்றவர் துயருற, பழிக்குச் சார்வுமாய்த்
தோன்றலின், என் உயிர் துறந்தபோது அலால்,
ஊன்றிய பெரும் படர் துடைக்க ஒண்ணுமோ? 22

' ''இல் இயல்புடைய, நீர் அளித்த, இன் சொலாம்
வல்லி, அவ் அரக்கர்தம் மனை உளாள்'' எனச்
சொல்லினென், மலை எனச் சுமந்த தூணியென்,
வில்லினென், செல்வெனோ, மிதிலை வேந்தன்பால்? 24

19. தணப்பு - தடை; 22. ஆமிடம் - உணவு.

'''தளே அவிழ் கோதையைத் தாங்கல் ஆற்றலன்,
இளே புரந்து அளித்தல்மேல் இவர்ந்த காதலன்,
உளன்'' என, உரைத்தலின், ''உம்பரான்'' என
விளேதல் நன்று; ஆதலின், விளிதல் நன்று' என்ருன். 25

'முன்னே முடிவன் யான்' என்று இலக்குவன் மொழிதல்

ஆண்டான் இன்ன பன்னிட, ஐயற்கு இள வீரன்,
'ஈண்டு, யான், உன்பின் ஏகியபின், இவ் இடர் வந்து
மூண்டால், முன்னே ஆர் உயிரோடும் முடியாதே,
மீண்டே போதற்கு ஆம் எனின், நன்று என் வினே!' என்ருன்.

என்ருன் என்னுப் பின்னும் இசைப்பான், 'இடர்தன்னே
வென்ருர்அன்றே வீரர்கள் ஆவார்? விரவாரின்,
தன் தாய், தந்தை, தம்முன், எனும் தன்மையர்முன்னே
பொன்ருன்என்ருல், நீங்குவது அன்ருே புகழ் அம்மா? 27

'''மானே அன்னுள்தன்னெடு தம்முன் வரை ஆரும்
கானே வைக, கண்துயில் கொள்ளாது அயல் காத்தற்கு
ஆனுன்; என்னே!'' என்றவர் முன்னே, ''அவர் இன்றித்
தானே வந்தான்'' என்றலின், வேறு ஓர் தவறு உண்டோ? 28

'என் தாய், ''உன்முன் ஏவிய யாவும் இசை; இன்னல்
பின்ருது எய்தி, பேர் இசையாளற்கு அழிவு உண்டேல்,
பொன்ருமுன்னம் பொன்றுதி'' என்ருள்; உரை பொய்யா
நின்ருல் அன்ருே நிற்பது வாய்மை நிலே அம்மா? 29

'என்-பெற்ருளும், யானும், எனேத்து ஓர் வகையாலும்,
நின்-பெற்ருட்கும், நிற்கும், நினேப்புப் பிழையாமல்,
நல் பொன் தோளாய்! நல்லவர் பேண நனி நிற்கும்
சொல் பெற்ருல், மற்று ஆர் உயிர் பேணி, துறவேமால். 30

'ஓதுங்கால், அப் பல் பொருள் முற்றுற்று, ஒருவாத
வேதம் சொல்லும் தேவரும் வீயும் கடை வீயாய்;
மாதங்கம் தின்று உய்ந்து இவ் வனத்தின்தலே வாழும்
பூதம் கொல்லப் பொன்றுதிஎன்னின், பொருள் உண்டோ? 31

'கேட்டார் கொள்ளார்; கண்டவர் பேணுர்; ''கிளர் போரில்
தோட்டார் கோதைச் சோர் குழல்தன்னேத் துவளாமல்
மீட்டான் என்னும் பேர் இசை கொள்ளான், செரு வெல்ல
மாட்டான், மாண்டான்'' என்றலின்மேலும் வசை உண்டோ?

25. இளே - பூமி; இளேயோனும் ஆம்; உம்பரான் - இறந்தான்; 29. பின்ருது - பின்வாங்காது; 31. மாதங்கம் - யானே.

இலக்குவன், 'பூதத்தின் கையும் வாயும் துணிப்பதே கருமம்' எனல்

'தணிக்கும் தன்மைத்து அன்றுஎனின், இன்று இத் தகை வாளால்,—
கணிக்கும் தன்மைத்து அன்று, விடத்தின் கனல் பூதம்—
பிணிக்கும் கையும், பெய் பில வாயும் பிழையாமல்
துணிக்கும் வண்ணம் காணுதி; துன்பம் துற' என்றான். 33

என்னா முன்னே, செல்லும் இளங்கோ, இறையோற்கு
முன்னே செல்லும்; முன்னவன், அன்னானினும் முந்த,
தன் நேர் இல்லாத் தம்பி தடுப்பான்; பிறர் இல்லை;
அன்னோ! கண்டார் உம்பரும் வெய்துற்று அழுதாரால். 34

இருவரும் கவந்தனை எதிர்த்துப் பொருதல்

இனையர் ஆகிய இருவரும், முகத்து இரு கண்போல்,
கனையும் வார் கழல் வீரர் சென்று அணுகலும், கவந்தன்,
'வினையின் எய்திய வீரர் நீர் யாவர்கொல்?' என்ன,
நினையும் நெஞ்சினர், இமைத்திலர்; உருத்தனர், நின்றார். 35

'அழிந்துளார்அலர்; இகழ்ந்தனர் என்னை' என்று அழன்றான்;
பொழிந்த கோபத்தன்; புதுப் பொறி மயிர்ப்புறம் பொடிப்ப,
'விழுங்குவேன்' என வீங்கலும், விண் உற, வீரர்,
எழுந்த தோள்களை வாள்களால் அரிந்தனர், இட்டார். 36

கைகள் அற்று வெங் குருதி ஆறு ஒழுகிய கவந்தன்,
மெய்யின், மேற்கொடு கிழக்கு உறப் பெரு நதி விரவும்,
சைய மா நெடுந் தாழ் வரைத் தனி வரைதன்னோடு,
ஐயம் நீங்கிய, பேர் எழில் உவமையன் ஆனான். 37

கவந்தன் உருப் பெற்று, விண்ணில் மேவுதல்

ஆளும் நாயகன் அம் கையின் தீண்டியஅதனால்,
மூளும் சாபத்தின் முந்திய தீவினை முடித்தான்;
தோளும் வாங்கிய தோமுடை யாக்கையைத் துறவா,
நீளம் நீங்கிய பறவையின், விண் உற நிமிர்ந்தான். 38

விண்ணில் நின்றவன், 'விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணில் நின்றவன் இவன்' எனக் கருத்துற உணர்ந்தான்;
எண் இல் அன்னவன் குணங்களை, வாய் திறந்து, இசைத்தான்:
புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப் பொருளே? 39

33. கணிக்கும் - மதிக்கும்; 38. நீளம் - கூடு.

இராமனைத் துதித்தல்

'ஈன்றவனோ எப் பொருளும்? எல்லை தீர் நல் அறத்தின்
சான்றவனோ? தேவர் தவத்தின் தனிப் பயனோ?
மூன்று கவடு ஆய் முளைத்து எழுந்த மூலமோ?
தோன்றி, அரு வினையேன் சாபத் துயர் துடைத்தாய்! 40

'மூலமே இல்லா முதல்வனே! நீ முயலும்
கோலமோ, யார்க்கும் தெரிவு அரிய கொள்கையவால்;
ஆலமோ? ஆலின் அடையோ? அடைக் கிடந்த
பாலனோ? வேலைப் பரப்போ? பகராயே! 41

'காண்பார்க்கும் காணப்படு பொருட்கும் கண் ஆகி,
பூண்பாய்போல் நிற்றியால், யாது ஒன்றும் பூணாதாய்;
மாண்பால் உலகை வயிற்று ஒளித்து வாங்குதியால்;
ஆண்பாலோ? பெண்பாலோ? அப்பாலோ? எப்பாலோ? 42

'ஆதிப் பிரமனும் நீ? ஆதிப் பரமனும் நீ!
ஆதி எனும் பொருளுக்கு அப்பால் உண்டாகிலும் நீ!
''சோதிச் சுடர்ப் பிழம்பு நீ!'' என்று சொல்லுகின்ற
வேதம் உரைசெய்தால், வெள்காரோ வேறு உள்ளார்? 43

'எண் திசையும் திண் சுவரா, ஏழ் ஏழ் நிலை வகுத்த
அண்டப் பெருங் கோயிற்கு எல்லாம் அழகுடைய
மண்டலங்கள் மூன்றின்மேல், என்றும் மலராத
புண்டரிக மொட்டின் பொகுட்டே புரை; அம்மா! 44

'மண்பால்-அமரர் வரம்பு ஆரும் காணாத,
எண்பால் உயர்ந்த, எரி ஓங்கும் நல் வேள்வி
உண்பாய் நீ; ஊட்டுவாய் நீ; இரண்டும் ஒக்கின்ற
பண்பு ஆர் அறிவார்? பகராய், பரமேட்டி! 45

'நிற்கும் நெடு நீத்த நீரில் முளைத்தெழுந்த
மொக்குளே போல, முரண் இற்ற அண்டங்கள்,
ஒக்க உயர்ந்து, உன்னுளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு, எளிதோ? பரம்பரனே! 46

41. முயலும் கோலம் - நினைத்து மேற்கொள்ளும் வடிவம்; 43. வெள்குதல் - நாணுதல்; 44. மண்டலங்கள் மூன்று - சந்திர சூரிய நட்சத்திர மண்டலங்கள்; புரை - இருப்பிடம்; 45. மண்பால் அமரர் - அந்தணர்.

'நின் செய்கை கண்டு நினைந்தனவோ, நீள் மறைகள்?
உன் செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ?
என் செய்தேன் முன்னம்? மறம் செய்கை எய்தினர்-
பின் செல்வது இல்லாப் பெருஞ் செல்வம் நீ தந்தாய்! 47

'மாயப் பிறவி மயல் நீக்கி, மாசு இலாக்
காயத்தை நல்கி, துயரின் கரை ஏற்றி,
பேய் ஒத்தேன் பேதைப் பிணக்கு அறுத்த எம் பெருமான்!
நாய் ஒத்தேன்; என்ன நலன் இழைத்தேன் நான்?' என்றான்.

**இருவரும் கவந்தனைக் காணலும், 'நீ யார்?' என இலக்குவன் வினவலும்**

என்று, ஆங்கு, இனிது இயம்பி, 'இன்று அறியக் கூறுவெனேல்,
ஒன்றாது, தேவர் உறுதிக்கு' என உன்னா,
தன் தாயைக் கண்ணுற்ற கன்று அனைய தன்மையன் ஆய்,
நின்றானைக் கண்டான்,—நெறி நின்றார் நேர் நின்றான். 49

'பாராய், இளையவனே! பட்ட இவன், வேறே ஓர்
பேராளன்தானாய், ஒளி ஓங்கும் பெற்றியனாய்,
நேர், ஆகாயத்தின்மிசை நிற்கின்றான்; நீ இவனை
ஆராய்! என, அவனும், 'ஆர்கொலோ நீ?' என்றான். 50

**கவந்தன் தன் வரலாறு கூறுதல்**

'சந்தப் பூண் அலங்கல் வீர! தனு எனும் நாமத்தேன்; ஓர்
கந்தர்ப்பன்; சாபத்தால், இக் கடைப்படு பிறவி கண்டேன்;
வந்துற்றீர் மலர்க்கை தீண்ட, முன்னுடை வடிவம் பெற்றேன்;
எந்தைக்கும் எந்தை நீர்; யான் இசைப்பது கேண்மின்' என்றான். 51

**'சவரியைக் கேட்டு, சுக்கிரீவனின் நட்பைப் பெறுக' என்றல்**

'கணை உலாம் சிலையினீரைக் காக்குநர் இன்மையேனும்,
இணை இலாள்தன்னை நாடற்கு ஏயன செய்தற்கு ஏற்கும்;
புணை இலாதவற்கு வேலை போக்கு அரிது; அன்னதேபோல்,
துணை இலாதவருக்கு இன்னா, பகைப் புலம் தொலைத்து நீக்கல்:

'பழிப்பு அறு நிலைமை ஆண்மை பகர்வது என்? பதும பீடத்து-
உழிப் பெருந் தகைமை சான்ற அந்தணன் உயிர்த்த எல்லாம்
அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணலும், அறிதிர் அன்றே,
ஒழிப்ப அருந் திறல் பல் பூத கணத்தொடும் உறையும் உண்மை?

47. பெருஞ்செல்வம் - சுவர்க்க இன்பம்; 51. சந்தம் - அழகு; கந்தர்ப்பன் - கந்தருவன்.

'ஆயது செய்கை என்பது, அறத் துறை நெறியின் எண்ணி,
தீயவர்ச் சேர்க்கிலாது, செவ்வியோர்ச் சேர்த்து, செய்தல்;
தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட்டு, அன்னாள்
ஏயது ஓர் நெறியின் எய்தி, இரலையின் குன்றம் ஏறி, 54

'கதிரவன் சிறுவன் ஆன கனக வாள் நிறத்தினானை
எதிர் எதிர் தழுவி, நட்பின் இனிது அமர்ந்து, அவனின், ஈண்ட,
வெதிர் பொரும் தோளினானை நாடுதல் விழுமிது' என்றான்.
அதிர் கழல் வீரர்தாமும், அன்னதே அமைவது ஆனார். 55

இராம-இலக்குவர் மதங்கன் இருக்கை அடைதல்

ஆனபின், தொழுது வாழ்த்தி, அந்தரத்து அவனும் போனான்;
மானவக் குமரர்தாமும் அத் திசை வழிக் கொண்டு ஏகி,
கானமும் மலையும் நீங்கி, கங்குல் வந்து இறுக்கும் காலை,
யானையின் இருக்கை அன்ன, மதங்கனது இருக்கை சேர்ந்தார்.

## 13 சவரி பிறப்பு நீங்கு படலம்

மதங்கனது தவப் பள்ளியின் மாண்பு

கண்ணிய தருதற்கு ஒத்த கற்பகத் தருவும் என்ன,
உண்ணிய நல்கும் செல்வம் உறு நறுஞ் சோலை—ஞாலம்
எண்ணிய இன்பம் அன்றி, துன்பங்கள் இல்லை ஆன,
புண்ணியம் புரிந்தோர் வைகும்—துறக்கமே போன்றது அன்றே!

சவரியைக் கண்டு, விருந்து உண்ணல்

அன்னது ஆம் இருக்கை நண்ணி, ஆண்டுநின்று, அளவு இல் காலம்
தன்னையே நினைந்து நோற்கும் சவரியைத் தலைப்பட்டு, அன்னாட்கு
இன்னுரை அருளி, 'தீது இன்று இருந்தனைபோலும்' என்றான்—
முன் இவற்கு இது என்று எண்ணல் ஆவது ஓர் மூலம் இல்லான்.

ஆண்டு, அவள் அன்பின் ஏத்தி, அழுது இழி அருவிக்கண்ணள்,
'மாண்டது என் மாயப் பாசம்; வந்தது, வரம்பு இல் காலம்
பூண்ட மா தவத்தின் செல்வம்; போயது பிறவி' என்பாள்,
வேண்டிய கொணர்ந்து நல்க, விருந்துசெய்து இருந்த வேலை. 3

54. இரலையின் குன்றம் - மானின் முகம் போன்று காணப்படும் மலை, ருசிய முகப் பருவதம்.

'ஈசனும், கமலத்தோனும், இமையவர் யாரும், எந்தை!
வாசவன்தானும், ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி,
''ஆசு அறு தவத்திற்கு எல்லை அணுகியது; இராமற்கு ஆய
பூசனை விரும்பி, எம்பால் போதுதி'' என்று, போனார். 4

'இருந்தனென், எந்தை! நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை
பொருந்திட; இன்றுதான் என் புண்ணியம் பூத்தது' என்ன,
அருந் தவத்து அரசிதன்னை அன்புற நோக்கி, 'எங்கள்
வருந்துறு துயரம் தீர்த்தாய்; அம்மனை! வாழி' என்றார். 5

**சுக்கிரீவன் உறையும் இரலை மலைக்கு வழி கூறல்**

அனகனும் இளைய கோவும் அன்று அவண் உறைந்தபின்றை,
வினை அறு நோன்பினாளும் மெய்ம்மையின் நோக்கி, வெய்ய
துனை பரித் தேரோன் மைந்தன் இருந்த அத் துளக்கு இல் குன்றம்
நினைவு அரிது ஆயற்கு ஒத்த நெறி எலாம் நினைந்து சொன்னாள்.

வீட்டினுக்கு அமைவது ஆன மெய்ந்நெறி வெளியிற்று ஆகக்
காட்டுறும் அறிஞர் என்ன, அன்னவள் கழறிற்று எல்லாம்
கேட்டனன் என்ப மன்னோ—கேள்வியால் செவிகள் முற்றும்
தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின் சுவையாய் நின்றான்.

**சவரி வீடு எய்த, இருவரும் பம்பைப் பொய்கை சேர்தல்**

பின், அவள் உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே
தன் உடல் துறந்து, தான் அத் தனிமையின் இனிது சார்ந்தாள்;
அன்னது கண்ட வீரர் அதிசயம் அளவின்று எய்தி,
பொன் அடிக் கழல்கள் ஆர்ப்ப, புகன்ற மா நெறியில் போனார்.

தண் நறுங் கானும், குன்றும், நதிகளும், தவிரப் போனார்;
மண்ணிடை, வைகல்தோறும், வரம்பு இலா மாக்கள் ஆட,
கண்ணிய வினைகள் என்னும் கட்டு அழல் கதுவலாலே,
புண்ணியம் உருகிற்றன்ன பம்பை ஆம் பொய்கை புக்கார். 9

13 : 6. துனை - வேகம்; 7. வெளியிற்று ஆக - வெளிப்படையாக, நன்றாக;
9. கட்டு அழல் - பெருந் தீ.

## மிகைப் பாடல்கள்

1 **விராதன் வதைப் படலம்**

ஆதியானிடம் அமர்ந்தவளை அன்பின் அணையா,
ஏதில் இன்னல் அனசூயையை இறைஞ்ச, 'இறையோய்!
வேத கீதம் அவை வெண் கடல் வெறிப்பு அரு புவி
ஓது முன் பிறவி ஒண் மதி தண்டம் உமிழ்வோய். 3-1

'உன்ன அங்கி தர, யோகிபெலை யோக சயனன்-
தன்னது அன்ன சரிதத் தையல் சமைத்த வினை இன்று
உன்னி, உன்னி மறை உச்ச மதி கீத மதுரத்து
உன்னி மாதவி உவந்து மன வேகம் உதவி. 3-2

'பருதியைத் தரும் முன் அத்திரி பதத்து அனுசனைக்
கருதி உய்த்திடுதல் காணுதி, கவந்த பெலையோய்
சுருதி உய்த்த கலனைப் பொதி சுமந்து கொள்' என,
தருதல் அங்கு அணைச் சயத்து அரசி சாரும் எனலும். 3-3

பாற்கடல் பணிய பாம்புஅணை பரம் பரமனை
ஏற்கை ஏத்தி இவண் எய்துதலின், என்னை எதிர
வாற்கலன் பொதி அசைந்தென கரத்தின் அணையா,
ஊர்க்க முன், பணி உவந்து அருள் எனப் பெரிதுஅரோ. 3-4

அன்றது அக் கடல் அளித்து அகல நின்று அளிதுஅரோ;
சென்று தக்க பணி சேர் முனி திறத்து எனின்அரோ;
வென்று இதற்கு மொழி மேல் இடுதல் வேண்டுதல்அரோ;
இன்று இதற்கும் ஓர் எல்லை பொருள் உள்ளுள் உளரோ. 3-5

யோசனைப் புகுத யோகி முனி யோக வரையின்
பாச பத்திர் இடர் பற்று அற அகற்று பழையோர்
ஓசை உற்ற பொருள் உற்றன எனப் பெரிது உவந்து,
ஆசை உற்றவர் அறிந்தனர் அடைந்தனர் அவண். 4-1

ஆதி நான்மறையினுளரை அடித்தொழில் புரிந்து
ஏது நீரில் இடை எய்தியது நாமம் எனலும்
சோதியோ உள புரந்தர துடர்ச்சி மடவார்
மாதர் மாண்டு அவையின் மாயையினில் வஞ்ச நடமே. 4-2

விண்ணை ஆளி செய்ந மாயையினில் மெய் இல் மடவார்
அண்ணல் மாமுனிவன் ஆடும் என அப்பி நடமாம்
என்ன உன்னி, அதை எய்தினர் இறைஞ்சி, அவனின்
அண்ணு வைகினர் அகன்றனர் அசைந்தனன் அரோ. 4-3

ஆடு அரம்பை நீடு அரங்கு-
ளூடு நின்று பாடலால்,
ஊடு வந்து கூட, இக்
கூடு வந்து கூடினேன். 62-1

வலம்செய்து இந்த வான் எலாம்
நலிஞ்சு தின்னும் நாம வேல்
பொலிஞ்ச வென்றி பூணும் அக்
கிலிஞ்சன் மைந்தன் ஆயினேன். 64-1

வெம்பு விற்கை வீர! நீ
அம்பரத்து நாதனுல்,
தும்புருத்தன் வாய்மையால்,
இம்பர் உற்றது ஈதுஅரோ. 65-1

3 அகத்தியப் படலம்

'அருந் திறல் உலகு ஒரு மூன்றும் ஆணையின்
புரந்திடும் தசமுகத்து ஒருவன், பொன்றிலாப்
பெருந் தவம் செய்தவன், பெற்ற மாட்சியால்
வருந்தினெம் நெடும் பகல்—வரத!—யாம் எலாம். 14-1

'தேவர்கள்தமைத் தினம் துரந்து, மற்று அவர்
தேவியர்தமைச் சிறைப்படுத்தி, திக்கு எலாம்
கூவிடத் தடிந்து, அவர் செல்வம் கொண்ட போர்
மா வலித் தசமுகன் வலத்துக்கு யார் வலார்? 14-2

'அவன் வலி படைத்து, மற்று அரக்கர் யாவரும்,
சிவன் முதல் மூவரை, தேவர் சித்தரை,
புவனியின் முனிவரை, மற்றும் புங்கவர்
எவரையும் துரந்தனர்—இறைவ!—இன்னுமே. 14-3

'ஆயிர கோடி என்று உரைக்கும் அண்டமேல்
மேய போர் அரக்கரே மேவல் அல்லதை,
தூய சீர் அமரர் என்று உரைக்கும் தொல் கணத்து
ஆயவர் எங்ஙன் என்று அறிந்திலோம், ஐயா! 14-4

'வெள்ளியங் கிரியிடை விமலன் மேலை நாள்,
''கள்ளிய அரக்கரைக் கடிகிலேன்'' என,
ஒள்ளிய வரம் அவர்க்கு உதவினுன்; கடற்
பள்ளிகொள்பவன் பொருது இளைத்த பான்மையான். 14-5

'நான் முகன் அவர்க்கு நல் மொழிகள் பேசியே
தான் உறு செய் வினைத்தலையில் நிற்கின்றான்;
வானில் வெஞ் சுடர் முதல் வயங்கு கோள் எலாம்
மேன்மை இல் அருஞ் சிறைப்பட்டு மீண்டுளார்.' 14-6

என்று, பினும், மா தவன் எடுத்து இனிது உரைப்பான்:
'அன்று, அமரர் நாதனை அருஞ் சிறையில் வைத்தே
வென்றி தரு வேல் தச முகப் பதகன் ஆதி
வன் திறல் அரக்கர் வலிமைக்கு நிகர் யாரே! 53-1

'ஆயவர்கள் தங்கள் குலம் வேர்அற மலைந்தே,
தூய தவ வாணரொடு தொல் அமரர் தம்மை
நீ தனி புரந்திடுதல் நின் கடனது' என்றான்;
நாயகனும், 'நன்று!' என அவற்கு நவில்கின்றான்: 53-2

4 சடாயு காண் படலம்

'தக்கன் நனி வயிற்று உதித்தார் ஐம்பதின்மர்
தடங் கொங்கைத் தையலாருள்,
தொக்க பதின்மூவரை அக் காசிபனும்
புணர்ந்தனன்; அத் தோகைமாருள்,
மிக்க அதிதிப் பெயராள் முப்பத்து
முக் கோடி விண்ணோர் ஈன்றாள்;
மைக் கருங் கண் திதி என்பாள் அதின்
இரட்டி அசுரர்தமை வயிறு வாய்த்தாள். 24-1

தானவரே முதலோரைத் தனு பயந்தாள்;
மதி என்பாள் மனிதர்தம்மோடு-
ஆன வருணங்கள் அவயவத்து அடைவே
பயந்தனளால்; சுரபி என்பாள்
தேனுவுடன் கந்தருவம் மற்று உள்ள
பிற பயந்தாள்; தெரிக்குங்காலை,
மானமுடைக் குரோதவசை கழுதை, மரை,
ஒட்டை, பிற, வயிறு வாய்த்தாள். 24-2

மழை புரை பூங் குழல் விநதை, வான்,
இடி, மின், அருணனுடன் வயினதேயன்,
தழை புரையும் சிறைக் கூகை, பாறு முதல்
பெரும் பறவைதம்மை ஈன்றாள்;
இழை புரையும் தாம்பிரை ஊர்க்குருவி, சிவல்,
காடை, பல பிறவும் ஈன்றாள்;
கழை எனும் அக்கொடி பயந்தாள், கொடியுடனே
செடி முதலாக் கண்ட எல்லாம். 24-3

வெருட்டி எழும் கண பணப்பை வியாளம்
எலாம் கத்துரு ஆம் மின்னும் ஈன்றுள்;
மருள் திகழும் ஒரு தலைய புயங்கம்
எலாம் சுதை என்னும் மாது தந்தாள்;
அருட்டை என்னும் வல்லி தந்தாள், ஓந்தி,
உடும்பு, அணில்கள் முதலான எல்லாம்;
தெருட்டிடும் மாது இளை ஈந்தாள், செலசரம்
ஆகிய பலவும், தெரிக்குங்காலை. 24-4

'அதிதி, திதி, தனு, அருட்டை, சுதை,
கழையே, சுரபி, அணி விநதை, ஆன்ற
மதி, இளை, கத்துருவுடனே, குரோதவசை,
தாம்பிரை, ஆம் மட நலார்கள்,
விதி முறையே, இவை அனைத்தும் பயந்தனர்கள்;
விநதை சுதன் அருணன் மென்தோள்,
புது மதி சேர் நுதல், அரம்பைதனைப்
புணர, உதித்தனம் யாம், புவனிமீதே. 24-5

என்று உரைத்த எருவை அரசனைத்
துன்று தாரவர் நோக்கித் தொழுது, கண்
ஒன்றும் முத்தம் முறை முறையாய் உக-
நின்று, மற்று இன்ன நீர்மை நிகழ்த்தினர். 27-1

5

## சூர்ப்பணகைப் படலம்

கண்டு தன் இரு விழி களிப்ப, கா.....கத்து
எண் தரும் புளகிதம் எழுப்ப, ஏதிலாள்
கொண்ட தீவினைத் திறக் குறிப்பை ஓர்கிலாள்
அண்டர் நாதனை, 'இவன் ஆர்?' என்று உன்னுவாள். 11-1

பொன்னொடு மணிக் கலை சிலம்பொடு புலம்ப,
மின்னொடு மணிக் கலைகள் விம்மி இடை நோவ,
துன்னு குழல் வன் கவரி தோகை பணிமாற,
அன்னம் என, அல்ல என, ஆம் என, நடந்தாள். 33-1

6

## கரன் வதைப் படலம்

ஆற்றேன் ஆற்றேன், அது கெட்டேன்;
அறுத்தான் அறுத்தான் என் மூக்கை;
கூற்றே கூற்றே என் உடலை,
குலையும் குலையும்; அது கண்டீர்;
காற்றே தீயே எனத் திரியும்
கரனே! கரனுக்கு இளையோரே!
தோற்றேன் தோற்றேன்; வல்லபங்கள்
எல்லா வகையும் தோற்றேனே. 7-1

பத்துடன் ஆறு எனப் பகுத்த ஆயிரம்
வித்தக வரத்தர்கள் வீர வேள்வியில்
முத் தலைக் குரிசிலுக்கு அன்று முக்கணன்
அத்துணைப் படைத்து அவன் அருள உற்றுளார். 35-1

ஆறு நூறுயிரம் கோடி ஆழித் தேர்,
கூறிய அவற்றினுக்கு இரட்டி குஞ்சரம்,
ஏறிய பரி அவற்று இரட்டி, வெள்ளம் நூறு
ஈறு இல் ஆள், கரன் படைத் தொகுதி என்பரால். 38-1

நடந்து தன் இரு கரத்தினின் நலம் பெறும் சிலைவாய்
தொடர்ந்த நாண் ஒலி எழுப்பினன்; தொகைப்படும் அண்டம்
இடிந்ததென்ன நின்று அதிர்ந்தது: அங்கு இறைவனும் இமைப்பில்
மிடைந்த வெஞ் சரம் மழை விடு தாரையின் விதைத்தான்.
148-1

விழுந்த வெம் படை தூடணன் சிரம் என வெருவுற்று
அழிந்த சிந்தையர் திசை திசை ஓடினர் அரக்கர்;
எழுந்த காதலின் இடைவிடாது, இமையவர், முனிவர்,
பொழிந்து பூ மழை போற்றினர்; இறைவனைப் புகழ்ந்தார்.
161-1

7 சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம்

பரிக்கும் அண்டப் பரப்பு எவைக்கும் தனியரசு
என்று அரன் கொடுத்த வரத்தின் பான்மை
உரைக்கு உவமை பெற, குலிசத்தவன் முதலாம்
உலகு இறைமைக்கு உரிய மேலோர்
இருக்கும் அரித் தவிசு எவைக்கும் நாயகம்
ஈது எனக் குறித்து அங்கு இமையோர் தச்சன்
அருக்கர் வெயில் பறித்து அமைத்த அரிமுகத்தின்
மணிப் பீடத்து அமர்ந்தான் மன்னோ. 2-1

பொருப்பினையும் கடந்த புயப் பரப்பினிடைப்
பொழி கதிரின் ஒளி குலாவி,
பரப்பும் இருட் குறும்பு எறிந்த பகல்
ஒளியும் கெடத் துரந்து, பருவ மேகத்து
உருப் பயில் இந்திர நீலச் சோதி தளைத்து,
உலகம் எலாம் உவந்து நோக்க,
திருப் பயில் உத்தரிகமொடு செறி
வாகுவலய நிரை திகழ மன்னோ. 5-1

இலங்கு மரகதப் பொருப்பின் மருங்கு தவழ்
இளங் கதிரின் வெயில் சூழ்ந்தென்ன,
அலங்கு செம் பொன் இழைப் பயிலும்
அருந் துகிலின் பொலிந்த அரைத் தலத்தின்மீது,
நலம் கொள் சுடர்த் தொகை பரப்பும்
நவமணிப் பத்தியின் இழைத்த நலம் ஆர் கச்சு
துலங்க அசைத்து அதில் சுரிகையுடை வடி
வாள் மருங்கினிடைத் தொடர மன்னே. 5-2

வானுலகு அளிக்கும் புரந்தரன் ஆதி,
மருவும் எண் திசைப் படு நிருபர்
ஆனவர்தமது புகழ் எலாம் ஒருங்கே
அன்ன மென் புள் உருத் தாங்கி,
தான் இடைவிடாது தசமுகத்து அரக்கன்
பதத்து இடைத் தாழ்ந்து தாழ்ந்து எழல்போல்
பால் நிறக் கவரி மயிர்க் குலம் கோடி
பாங்கினில் பயின்றிட மன்னே. 5-3

தேவ கன்னியர்கள், இயக்கர் தம் குலத்துத்
தெரிவையர், சித்தர் மங்கையர்கள்,
மேவ அருந் திறல் சேர் நாகர் மெல்லியர்கள்,
விளங்கு கந்திருவர், மேல் விஞ்சைக்
காவலர் குலத்தில் தோன்று கன்னியர்கள்,
ஆதியாய்க் கணிப்பு இல் பல் கோடிப்
பாவையர் எவரும் பாங்குற நெருங்கி,
பலாண்டு இசை பரவிட மன்னே. 5-4

தண் கதிர் பொழியும் ஓர் தவள மா மதி
விண் பிரிந்து இரு நிலத்து இருந்து, வேறு வேறு
எண் கடந்து உரு எடுத்து இருளை ஓட்டல்போல்
வெண் குடைத் தொகை பல கோடி மேவவே. 7-1

ஏவலின் புரி தொழில் எவையும் செய்து, செய்து
ஓவு இலர், துயர்க் கடற்கு ஒழிவு காண்கிலர்,
மேவரும் பெரும் பயம் பிடித்து, விண்ணவர்
தாவினர், தலைத் தலை தாழ்ந்து நிற்கவே. 7-2

வியக்கும் முப் புவனமும் வெகுண்டு, மேலைநாள்
கயக்கிய கடுந் திறல் கருத்துளே கிடந்து,
உயக்கிய பயத்தினர் அவுணரோடு மற்று
இயக்கரும் திசை திசை இறைஞ்சி நிற்கவே. 11-1

பெருந் திசை இரிந்திடப் பெயர்த்தும் வென்ற நாள்,
பருந் திறல் புயம் பிணிப்புண்டு, பாசத்தால்
அருந் தளைப்படும் துயர் அதனுக்கு அஞ்சியே,
புரந்தரன் களாஞ்சி கை எடுத்துப் போற்றவே. 11-2

கடி நகர் அழித்துத் தன் காவல் மாற்றிய
கொடியவன்தனக்கு உளம் குலைந்து கூசியே,
வடதிசைப் பரப்பினுக்கு இறைவன் மா நெதி
இடு திறை அளந்தனன், இரந்து நிற்கவே. 15-1

நிகர் அறு புவனம் மூன்று என நிகழ்த்திய
தொகையினில் தொகுத்திடும் அண்டச் சூழலில்
வகையினைக் குரு முறை மரபின் வஞ்சியாப்
புகரவன் விரித்து எடுத்து இயம்பிப் போகவே. 15-2

மதியினில் கருதும் முன் வந்து வேண்டின
எது விதப் பொருள்களும் இமைப்பின் நல்கியே,
திதி முதல் அங்கம் அஞ்சுஅவையும் தெற்றென,
விதி முறை பெறத் தனி விளம்பிப் போகவே. 15-3

'உரிய நும் குலத்து உளேன் ஒருவன் யான்' எனப்
பரிவுறும் பழமைகள் எடுத்துப் பன்னியே,
விரை மலர் சிதறி, மெய் அன்பு மீக்கொளா,
நிருதி அங்கு அடிமுறை காத்து நிற்கவே. 17-1

என்ற பொழுதில், கடிது எழுந்து அலறி, வாய் விட்டு,
அன்று அருகு நின்ற பல தேவர் கணம் அஞ்ச,
புன் தொழில் அரக்கர் மனதில் புகை எழும்ப,
கன்றிய மனத்தள் கழறுற்றிடுவதானாள். 49-1

என்பதை மனக் கொடு இடர் ஏறிய கருத்தாள்,
முன்ப! உன் முகத்தின் எதிர் பொய் மொழியகில்லேன்;
நின் பதம்; நின் ஆணை இது; நீ கருதுவாய் என்று
அன்பின் உரியோர் நிலை எடுத்து அறைசெய்கிற்பாள். 51-1

'ஈது அவர்கள்தங்கள் செயல்' என்று அவள் உரைப்ப,
கோது உறு மனத்து எரி பிறந்து, குறை நாளில்
மோது வடவைக் கனல் முகந்து, உலகம் எல்லாம்
காதுறு சினத்தன் இதனைக் கழறுகின்றான். 57-1

இற்று எலாம் அரக்கி ஆங்கே எடுத்து அவள் இயம்பக் கேட்ட
கொற்ற வாள் அரக்கன் முன்னே, கொண்ட வெங் கோபத் தீயில்
சொற்ற ஆதரத்தின் வாய்மை எனும் புனல் சொரிதலோடும்
அற்றதால்; பின்பு ஆங்கு அன்னோன் கருத்தும் வேறுயது அன்றே. 81-1

8 மாரீசன் வதைப் படலம்

ஆயிரம் அடல் கையுடையானை மழு வாளால்
'ஏ' எனும் உரைக்குள் உயிர் செற்ற எதிர் இல்லோன்
மேய விறல் முற்றும் வரி வெஞ் சிலையினோடும்
தாயவன் வலித் தகைமை யாம் உறு தகைத்தோ. 25-1

9 இராவணன் சூழ்ச்சிப் படலம்

ஓவரு கவனம்மீது உற்றுச் சென்றுளான்,
பூ வரு சாலையுள் பொருந்த நோக்குறு,
'யாவர், இவ் இருக்கையுள் இருந்த நீர்?' என்றான்—
தேவரும் இடர் உறத் திரிந்த மேனியான். 24-1

'மேனகை, திலோத்தமை, முதல ஏழையர்,
வானகம் துறந்து வந்து, அவன்தன் மாட்சியால்,
ஊனம் இல் அடைப்பை, கால் வருடல், ஒண் செருப்பு,
ஆனவை முதல் தொழில் அவரது ஆகுமே. 43-1

'சந்திரன், இரவி என்பவர்கள்தாம், அவன்
சிந்தனை வழி நிலை திரிவர்; தேசுடை
இந்திரன் முதலிய அமரர், ஈண்டு, அவன்
கந்து அடு கோயிலின் காவலாளரே. 43-2

என்றனள்; அபயம், புட்காள்!
விலங்குகாள்! இராமன் தேவி,
வென்றி கொள் சனகன் பேதை,
விதியினால் அரக்கன் தேர்மேல்
தென் திசை சிறைபோகின்றேன்;
சீதை என் பெயரும் என்றாள்;
சென்று அது சடாயு வேந்தன்
செவியிடை உற்றது அன்றே. 84-1

10 சடாயு உயிர் நீத்த படலம்

'பின்னவன் உரையினை மறுத்து, பேதையேன்,
அன்னவன்தனைக் கடிது அகற்றினேன்; பொரு
மன்னவன் சிறை அற மயங்கினேன்; விதி
இன்னமும் எவ் வினை இயற்றுமோ?' என, 45-1

சடாயுவைத் தடிந்த வாளைச் சடுதியில் விதிர்க்கக் கண்டாள்;
'தடால்' எனக் கபாடம் சாத்தி, சாலையுள் சலித்தாள் அந்தோ;
விடாது அட மண்ணை விண்மேல் விரைந்து எடுத்து உச்சி வேட்டான்,
குடா மதி கோனைச் சேரும் கோமுகன்-குறளி ஒத்தான். 58-1

'பெண்ணை விட்டு அமைந்திடின் பிழையது ஆம்' என,
உள் நிறை கூடமும் உவந்த சாலையும்,
மண்ணினில் இராமன் மார்பு அமர்ந்த ஆதியும்
விண்ணினில் மேதினி வேண்டி எய்தினள். 58-2

முன்னமே பூமியை முகந்து, பாதலம்-
தன்னிலே தரித்தன சயமும் தந்திலது
என்னவே, மாகம்மீது ஏகினான் செய
உன்னியே இராவணன் உவந்ததொத்துஅரோ. 58-3

சடாயுவும் சாய்ந்தனன்; சனகி சாய்ந்தனள்;
விடா செயம் ஏதியும் பிற கதி வேறு உளோர்
தொடா மறைக் கிரியையும் சுவைத்த கோமகன்
அடாத மேற் செயல் எலாம் அமைத்தல் என் சயம்? 58-4

மூன்று பத்து ஒருபது முந்து யோசனை
ஏன்றது; பாவையும், 'ஏது?' என்று எண்ணும்முன்,
தோன்றினன் சுபாரிசன்; தொழுது, 'தொல் உலகு
ஈன்றவள் இவள்' என, இசைத்து இறைஞ்சியும். 58-5

'இசைக் கடல் உறைபவ! இலங்கை வேந்தன் நீ;
திசைப்படாப் புவனம் உன் செல்வம்; என்னதோ
வசைக் கடல் வாழ்வு; இது வழக்கு என்று எண்ணியோ,
துசக் கடல் மொழி செலத் தொழுது போயினான்? 58-6

தேன்றிரும் இராவணன் சேற என்று எதிர்ந்து,
ஊன்று செம்பாதி சேய் தூண்டத் தூண்டிட,
மூன்று தன் பதத்தில் ஒன்று இழிந்த மொய் கரத்து
ஊன்று தண்டு ஒடிந்தென வீழ ஓடினான். 59-1

11 அயோமுகிப் படலம்

என்று அவள் கூறலும், மைந்தனும், 'இன்னே
நன்றியதாய நறும் புனல் நாடி,
வென்றி கொள் வீரன் விடாய்அது தீர்ப்பான்
இன்று இவண் வந்தனன்' என்று உரைசெய்தான். 55-1

12 கவந்தன் படலம்

'பாரிடமே இது; பரவை சுற்றுறும்
பார் இடம் அரிது எனப் பரந்த மெய்யது;
பார், இடம் வலம் வரப் பரந்த கையது:—
பார் இடந்து எடுத்த மா அனைய பாழியாய்! 21-1

காவாய் என்பால், தன் ஐயரான் கைவிட வல்லேன்;
வேவா நின்றே நிற்க, 'இவ் வெய்யோற்கு இணை ஆவார்
நீ வா' என்ன, அன்னது கண்டும், அயர்கில்லேன்;
போவேன் யானே; எவ் உலகோ, என் புகல் அம்மா! 29-1

13 சவரி பிறப்பு நீங்கு படலம்

'மாங்கனி, தாழையின் காய், வாழையின் கனிகளோடும்,
ஆம் கனி ஆவதே என்று அருந்தி, நான் விரும்பி வைத்தேன்;
பாங்கின் நல் அமுது செய்மின்' என்று அவள் பரவி, நல்கும்
தேம் கனி இனிதின் உண்டு, திருஉளம் மகிழ்ந்தான், வீரன். 5-1

கடவுள் வாழ்த்து

மூன்று உரு எனக் குணம் மும்மை ஆம் முதல்,
தோன்று உரு எவையும், அம் முதலைச் சொல்லுதற்கு
ஏன்று உரு அமைந்தவும், இடையில் நின்றவும்,
சான்று உரு உணர்வினுக்கு உணர்வும், ஆயினான்.

## 1 பம்பை வாவிப் படலம்

### பம்பைப் பொய்கையின் தோற்றம்

தேன் படி மலரது; செங் கண், வெங் கைம்மா-
தான் படிகின்றது; தெளிவு சான்றது;
மீன் படி மேகமும் படிந்து, வீங்கு நீர்,
வான் படிந்து, உலகிடைக் கிடந்த மாண்பது; 1

ஈர்ந்த நுண் பளிங்கு எனத் தெளிந்த ஈர்ம் புனல்
பேர்ந்து, ஒளிர் நவ மணி படர்ந்த பித்திகை
சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்,
ஓர்ந்து உணர்வு இல்லவர் உள்ளம் ஒப்பது; 2

குவால் மணித் தடம்தொறும் பவளக் கோல் இவர்
கவான் அரசுஅன்னமும், பெடையும் காண்டலின்,
தவா நெடு வானகம் தயங்கு மீனொடும்,
உவா மதி, உலப்பு இல உதித்தது ஒப்பது; 3

ஓத நீர் உலகமும், உயிர்கள் யாவையும்,
வேதபாரகரையும், விதிக்க வேட்ட நாள்,
சீதம் வீங்கு உவரியைச் செகுக்குமாறு ஒரு
காதி காதலன் தரு கடலின் அன்னது; 4

**கடவுள் வாழ்த்து:** முதல் - மூலப்பிரகிருதி; தோன்று உரு - தோன்றிய தத்துவங்கள்; உரு அமைந்த - வடிவு அமைந்த பிரபஞ்சங்கள்; இடையில் நின்ற - உலகிடைப்புகுந்து நின்ற உயிர்கள்.

**1:** 1. மீன் - மின், மின்னல்; 2. ஈர்தல் - அறுத்தல்; 3. குவால் - கூட்டம்; இவர்தல் - ஒத்தல்; கவான் - கால்; தவா - அழியாத; 4. வேத பாரகர் - வேதத்தைக் கரை கண்டோர்; விதிக்க - படைக்க; செகுக்குமாறு - வெல்லும்படி; காதி காதலன் - காதியின் அன்புக்குரியவன், விசுவாமித்திரன்.

'எல் படர் நாகர்தம் இருக்கை ஈது' எனக்-
கிற்பது ஓர் காட்சியதுஎனினும், கீழ் உற,
கற்பகம் அனைய அக் கவிஞர் நாட்டிய
சொற் பொருள் ஆம் எனத் தோன்றல் சான்றது; 5

களம் நவில் அன்னமே முதல, கண் அகன்
தள மலர்ப் புள் ஒலி தழங்க, இன்னது ஓர்
கிளவி என்று அறிவு அருங் கிளர்ச்சித்து; ஆதலின்,
வள நகர்க் கூலமே போலும் மாண்பது. 6

அரி மலர்ப் பங்கயத்து அன்னம், எங்கணும்,
'புரிகுழல் புக்க இடம் புகல்கிலாத யாம்,
திருமுகம் நோக்கலம்; இறந்து தீர்தும்' என்று,
எரியினில் புகுவன எனத் தோன்றும் ஈட்டது; 7

காசு அடை விளங்கிய காட்சித்து ஆயினும்,
மாசு அடை பேதைமை இடை மயக்கலால்,
'ஆசு அடை நல் உணர்வு அனையது ஆம்' என,
பாசடை வயின்தொறும் பரந்த பண்பது; 8

'களிப் படா மனத்தவன் காணின், ''கற்பு எனும்
கிளிப் படா மொழியவள் விழியின் கேள்'' என,
துளிப் படா நயனங்கள் துளிப்பச் சோரும்' என்று,
ஒளிப் படாது, ஆயிடை ஒளிக்கும் மீனது; 9

கழை படு முத்தமும், கலுழிக் கார் மத
மழை படு தரளமும், மணியும், வாரி, நேர்
இழை படர்ந்தனைய நீர் அருவி எய்தலால்,
குழை படு முகத்தியர் கோலம் ஒப்பது; 10

பொங்கு வெங் கட கரி, பொதுவின் ஆடலின்,—
கங்குலின், எதிர் பொரு கலவிப் பூசலில்
அங்கம் நொந்து அலசிய, விலையின் ஆய் வளை
மங்கையர் வடிவு என,—வருந்தும் மெய்யது; 11

5. எல் - சூரியன்; நாகர்தம் இருக்கை - பாதாளம்; காட்சி - தோற்றம், கண்டு ஆழம்; 6. களம் - இன்னோசை; தளம் - இதழ்; தழங்க - ஒலிக்க; கூலம் - கடைத்தெரு; 7. அரி - செம்மை, வண்டும் ஆம்; ஈடு - தன்மை; 8. அடை காசு - அடியில் தங்கிய மணிகள்; ஆசு அடைதல் - பழைய பயிற்சி வயத்தால் புலன்களின் மேல் ஒரோவழி நினைவு சென்று கெடுதல்; 9. களி - மகிழ்ச்சி; ஒளிப் படாது - ஒளி பரவிய இடங்களில் தோன்றாது; 10. கலுழி - வெள்ளம்; 11. பொதுவின் - பொதுவாக; அலசிய - வருந்திய.

விண் தொடர் நெடு வரைத் தேனும், வேழத்தின்
வண்டு உளர் நறு மத மழையும் மண்டலால்,
உண்டவர் பெருங் களி உறலின், ஓதியர்
தொண்டைஅம் கனி இதழ்த் தோன்றல் சான்றது; 12

ஆரியம் முதலிய பதினெண் பாடையில்
பூரியர் ஒரு வழிப் புகுந்தது ஆம் என,
ஓர்கில கிளவிகள் ஒன்ருெடு ஒப்பு இல,
சோர்வு இல, விளம்பு புள் துவன்றுகின்றது; 13

தான் உயிர் உறத் தனி தழுவும் பேடையை,
ஊன் உயிர் பிரிந்தென, பிரிந்த ஓதிமம்,
வான் அரமகளிர்தம் வயங்கு நூபுரத்
தேன் உகு மழலையைச் செவியின் ஓர்ப்பது; 14

ஈறு இடல் அரிய மால் வரை நின்று ஈர்த்து இழி
ஆறு இடு விரை அகில் ஆரம் ஆதிய
ஊறிட, ஒள் நகர் உரைத்த ஒண் தளச்
சேறு இடு பரணியின் திகழும் தேசது. 15

பொய்கையில் நிகழும் செயல்கள்

நவ்வி நோக்கியர் இதழ் நிகர் குமுதத்து நறுந் தேன்
வவ்வு மாந்தரின் களி மயக்கு உறுவன, மகரம்;
எவ்வம் ஓங்கிய இறப்பொடு பிறப்பு இவை என்ன,
கவ்வு மீனெடு முழுகின, எழுவன, கரண்டம். 16

கவள யானை அன்னுற்கு, 'அந்தக் கடி நறுங் கமலத்-
தவளை ஈகிலம்; ஆவது செய்தும்' என்று அருளால்,
திவள அன்னங்கள் திரு நடை காட்டுவ; செங் கண்
குவளை காட்டுவ; துவர் இதழ் காட்டுவ குமுதம். 17

பெய் கலன்களின் இலங்கு ஒளி மருங்கொடு பிறழ,
வைகலும் புனல் குடைபவர் வான் அரமகளிர்;
செய்கை அன்னங்கள் ஏந்திய சேடியர் என்னப்
பொய்கை அன்னங்கள் ஏந்திய பூங் கொம்பர் பொலிவ. 18

12. ஓதியர் - கூந்தல் அழகுள்ள மகளிர்; 13. பூரியர் - புல்லறிவாளர்; துவன்றுகின்றது - நெருங்கியிருக்கப்பெற்றது; 14. ஓதிமம் - சிலம்பொலியைத் தன் பெடையின் ஒலியெனக் காது கொடுத்துக் கேட்டது; 15. நகர் - நகர மக்கள்; ஒண் தளச் சேறு - ஒள்ளிய கற்பூரம் சேர்ந்த சந்தனக் குழம்பு; பரணி - கிண்ணம்; 16. மகரம் - மீன்; கரண்டம் - நீர்க்காக்கை; 17. திவளு தல் - விளங்குதல்; 18. செய்கை அன்னங்கள் - விளையாடுவதற்காக இயற்றிய செயற்கை அன்னங்கள்.

ஏலும் நீள் நிழல், இடை இடை எறித்தலின், படிகம்
போலும் வார் புனல் புகுந்துளவாம் எனப் பொங்கி,
ஆலும் மீன் கணம் அஞ்சின அலம்வர, வஞ்சிக்
கூல மா மரத்து, இருஞ் சிறை புலர்த்துவ—குரண்டம். 19

அங்கு ஓர் பாகத்தில், அஞ்சனமணி நிழல் அடைய,
பங்கு பெற்று ஒளிர் பதுமராகத்து ஒளி பாய,
கங்குலும் பகலும் மெனப் பொலிவன கமலம்;
மங்கைமார் தட முலை எனப் பொலிவன, வாளம். 20

வலி நடத்திய வாள் என வாளைகள் பாய,
ஒலி நடத்திய திரைதொறும் உகள்வன, நீர்நாய்
கலிநடக் கழைக் கண்ணுளர் என நடம் கவின,
பொலிவு உடைத்து என, தேரைகள் புகழ்வனபோலும். 21

**சீதையின் நினைவால் இராமன் புலம்பல்**

அன்னது ஆகிய அகன் புனல் பொய்கையை அணுகி,
கன்னி அன்னமும் கமலமும் முதலிய கண்டான்;
தன்னின் நீங்கிய தளிரியற்கு உருகினன் தளர்வான்,
உன்னும் நல் உணர்வு ஒடுங்கிட, புலம்புதலுற்முன்: 22

வரி ஆர் மணிக் கால் வாளமே! மட அன்னங்காள்! எனை, நீங்கத்
தரியாள் நடந்தாள்; இல்லளேல் தளர்ந்த போதும் தகவேயோ?
எரியாநின்ற ஆர் உயிருக்கு இரங்கினல், ஈது இசை அன்ருே?
பிரியாது இருந்தேற்கு ஒரு மாற்றம் பேசின், பூசல் பெரிது ஆமோ? 23

'வண்ண நறுந் தாமரை மலரும், வாசக் குவளை நாள்மலரும்,
புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம் பொதியும் மருந்தின், தரும் பொய்
கண்ணும் முகமும் காட்டுவாய்; வடிவும் ஒருகால் காட்டாயோ? [காய்!
ஒண்ணும் என்னின், அஃது உதவாது, உலோவினுரும் உயர்ந்தாரோ?

விரிந்த குவளை, சேதாம்பல், விரை மென் கமலம், கொடி வள்ளை,
தரங்கம், கெண்டை, வரால், ஆமை என்று இத்தகையதமை நோக்கி,
'மருந்தின் அனையாள் அவயவங்கள்ஆவை நிற் கண்டேன்; வல் அரக்
அருந்தி அகல்வான் சிந்தினவோ? ஆவி! உரைத்திஆம் அன்றே!'[கன்,

19. ஏலும் - பொருந்திய; எறித்தல் - விளங்குதல்; கூலம் - கரை; குரண்டம் - கொக்கு; 20. அஞ்சன மணி - நீல மணி; பதுமராகம் - செம் மணி; வாளம் - சக்கரவாளப் பறவை; 21. வலி நடத்திய - வலிமையோடு வீசிய; கழைக் கண்ணுளர் - கழைக் கூத்தாடிகள்; 23. பூசல் - பொல்லாங்கு; 24. ஒன்னும் - இயலும்; 25. குவளை, ஆம்பல், கமலம், வள்ளை, தரங்கம், கெண்டை, வரால், ஆமை முறையே கண், வாய், முகம், காது, வயிற்று மடிப்பு, கன், கணைக்கால், புறவடி ஆகியவற்றை நினைவூட்டின; ஆவி - பொய்கை.

'ஓடாநின்ற களி மயிலே! சாயற்கு ஒதுங்கி, உள் அழிந்து,
கூடாதாரின் திரிகின்ற நீயும், ஆகம் குளிர்ந்தாயோ?
தேடாநின்ற என் உயிரைத் தெரியக் கண்டாய்; சிந்தை உவந்து
ஆடாநின்றாய்; ஆயிரம் கண் உடையாய்க்கு ஒளிக்குமாறு உண்டோ? 26

'அடையீர்எனினும் ஒரு மாற்றம் அறிந்தது உரையீர்;—அன்னத்தின்
பெடையீர்!—ஒன்றும் பேசீரோ? பிழையாதேற்குப் பிழைத்தீரோ?
நடை நீர் அழியச் செய்தாரே நடு இலாதார்; நனி அவரோடு
உடையீர் பகைதான்; உமை நோக்கி உவக்கின்றேனை முனிவீரோ? 27

'பொன் பால் பொருவும் விரை அல்லி புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பால் தழுவும் குழல் வண்டு, தமிழ்ப் பாட்டு இசைக்கும் தாமரையே!
என்பால் இல்லை; அப் பாலோ இருப்பார் அல்லர்; விருப்புடைய
உன்பால் இல்லை என்றபோது ஒளிப்பாரோடும் உறவு உண்டோ? 28

'ஒரு வாசகத்தை வாய் திறந்து இங்கு
உதவாய், பொய்கைக் குவிந்து ஒடுங்கும்
திரு வாய் அனைய சேதாம்பற்கு
அயலே கிடந்த செங் கிடையே!
வெருவாது எதிர் நின்று அமுது உயிர்க்கும்
வீழிச் செவ்விக் கொழுங் கனி வாய்
தருவாய்; அவ் வாய் இன் அமுதும்,
தண்ணென் மொழியும் தாராயோ? 29

'அலக்கண் உற்றேற்கு உற்று உதவற்கு,
அடைவு உண்டு அன்றோ?—கொடி வள்ளாய்!
மலர்க் கொம்பு அனைய மடச் சீதை
காதே; மற்று ஒன்று அல்லையால்;
பொலக் குண்டலமும், கொடுங் குழையும்,
புனை தாழ் முத்தின் பொன்-தோடும்,
விலக்கி வந்தாய்; காட்டாயோ?
இன்னும் பூசல் விரும்புதியோ? 30

'பஞ்சு பூத்த விரல், பதுமம் பவளம் பூத்த அடியாள், என்
நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம் பூத்தாள், நிறம் பூத்த
மஞ்சு பூத்த மழை அனைய குழலாள், கண்போல் மணிக் குவளாய்!
நஞ்சு பூத்ததாம் அன்ன நகையால் என்னை நலிவாயோ?'* 31

26. கண் - பீலிக்கண்; 28. தமிழ் - இனிமை; 29. வீழி - விழுதிக் கனி; 30. அடைவு - இயைபு; 31. பதுமம் - தாமரை; பூத்தது - படர்ந்தது; நகை - மலர்ச்சி.

என்று அயா உயிர்க்கின்றவன், ஏடு அவிழ்
கொன்றை ஆவிப்புறத்து இவை கூறி, 'யான்
பொன்ற, யாதும் புகல்கிலை போலுமால்,
வன் தயாவிலி!' என்ன வருந்தினன்; 32

வார் அளித் தழை மாப் பிடி வாயிடை,
கார் அளிக் கலுழிக் கருங் கைம் மலை
நீர் அளிப்பது நோக்கினன், நின்றனன்—
பேர் அளிக்குப் பிறந்த இல் ஆயினன். 33

### மாலைக் கடன் முடித்தல்

ஆண்டு, அவ் வள்ளலை, அன்பு எனும் ஆர் அணி
பூண்ட தம்பி, 'பொழுது கழிந்ததால்;
ஈண்டு இரும் புனல் தோய்ந்து, உன் இசை என
நீண்டவன் கழல் தாழ், நெடியோய்!' என்றான். 34

அரைசும், அவ் வழி நின்று அரிது எய்தி, அத்
திரை செய் தீர்த்தம், முன் செய் தவம் உண்மையால்,
வரை செய் மா மத வாரணம் நாணுற,
விரை செய் பூம் புனல் ஆடலை மேயினன். 35

நீத்த நீரில் நெடியவன் மூழ்கலும்,
தீத்த காமத் தெறு கதிர்த் தீயினால்,
காய்த்து இரும்பை, கருமகக் கம்மியன்,
தோய்த்த தண் புனல் ஒத்தது, அத் தோயமே. 36

ஆடினான், அன்னம் ஆய் அரு மறைகள் பாடினான்,
நீடு நீர்; முன்னை நூல் நெறி முறையின், நேமி தாள்
சூடினான்; முனிவர்தம் தொகுதி சேர் சோலைவாய்,
மாடுதான் வைகினான்; எரி கதிரும் வைகினான். 37

### சந்திரன் தோற்றம்

அந்தியாள் வந்து தான் அணுகவே, அவ் வயின்
சந்த வார் கொங்கையாள் தனிமைதான் நாயகன்
சிந்தியா, நொந்து தேய் பொழுது, தெறு சீத நீர்
இந்து வான் உந்துவான், எரி கதிரினான் என. 38

32. ஆவிப்புறம் - பொய்கையின் பக்கம்; 33. அளித்தழை - இனிப்பான தழை; 34. நீண்டவன் - திருமால்; 37. நீடு நீர் - மிக்க நீர்.

பூ ஒடுங்கின; விரவு புள் ஒடுங்கின, பொழில்கள்;
மா ஒடுங்கின; மரனும் இலை ஒடுங்கின; கிளிகள்
நா ஒடுங்கின; மயில்கள் நடம் ஒடுங்கின; குயில்கள்
கூ ஒடுங்கின; பிளிறு குரல் ஒடுங்கின, களிறு. 39

மண் துயின்றன; நிலைய மலை துயின்றன; மறு இல்
பண் துயின்றன; விரவு பணி துயின்றன; பகரும்
விண் துயின்றன; கழுதும் விழி துயின்றன; பழுது இல்
கண் துயின்றில, நெடிய கடல் துயின்றன களிறு. 40

**சீதையைத் தேடி, மேலும் நடத்தல்**

பொங்கி முற்றிய உணர்வு புணர்தலும், புகையினொடு
பங்கம் உற்றனைய வினை பரிவுறும்படி, முடிவு இல்
கங்குல் இற்றது; கமலம் முகம் எடுத்தன;—கடலின்
வெங் கதிர்க் கடவுள் எழ, விமலன் வெந் துயரின் எழ. 41

காலையே கடிது நெடிது ஏகினர்—கடல் கவினு
சோலை ஏய் மலை தழுவு கான நீள் நெறி தொலைய,
ஆலை ஏய் துழனி அகநாடர், ஆர்கலி அமுது
போலவே உரைசெய் புன மானை நாடுதல் புரினர். 42

## 2 அனுமப் படலம்

**இராம-இலக்குவரைக் கண்டு சுக்கிரீவன் ஓடி ஒளிதல்**

எய்தினர், சவரி, நெடிது, ஏய மால் வரை எளிதின்;
நொய்தின் ஏறினர், அதனின்; நோன்மை சால் கவி அரசு,
செய்வது ஓர்கிலன்; அனையர் தெவ்வர் ஆம் என வெருவி,
'உய்தும் நாம்' என, விரைவின் ஓடினன், மலை முழையின். 1

'காலின் மா மதலை! இவர் காண்மினோ; கறுவு உடைய
வாலி ஏவலின் வரவினர்கள் தாம்; வரி சிலையர்;
நீல மால் வரை அனையர்; நீதியா நினைதி' என,
மூலம் ஓர்கிலர் மறுகி ஓடினர், முழைஅதனின். 2

40. பணி - பாம்பு; விண் - வான்மிசை உயிர்கள்; 41. உணர்வு - மெய்யறிவு; பங்கம் - சேறு; பரிவுறும்படி - நீங்கும் தன்மை போல; 42. கவினு - போல விளங்கும்; துழனி - ஒலி; நாடர் - கோசலநாட்டினராகிய இராம இலக்குவர்; புரினர் - செய்வோர்.

2: 2. நீதியா - முறையாக; ஓர்கிலர் - உணராதவர்களாகிய அமைச்சர் கள்.

இராம-இலக்குவரை அனுமன் அணுகி, மறைய நின்று சிந்தித்தல்

அவ் இடத்து, அவர் மருகி, அஞ்சி, நெஞ்சு அழி அமைதி,
வெவ் விடத்தினை மறுகு தேவர், தானவர், வெருவல்
தவ்விட, தனி அருளு தாழ் சடைக் கடவுள் என,
'இவ் இடத்து இனிது இருமின்; அஞ்சல்' என்று இடை உதவி,

அஞ்சனைக்கு ஒரு சிறுவன், அஞ்சனக் கிரி அனைய
மஞ்சனைக் குறுகி, ஒரு மாணவப் படிவமொடு,
'வெஞ் சமத் தொழிலர், தவ மெய்யர், கைச் சிலையர்' என,
நெஞ்சு அயிர்த்து, அயல் மறைய நின்று, கற்பினின் நினையும்:

'தேவருக்கு ஒரு தலைவர் ஆம் முதல் தேவர் எனின்,
மூவர்; மற்று, இவர் இருவர்; மூரி வில் கரர்; இவரை
யாவர் ஒப்பவர், உலகில்? யாது, இவர்க்கு அரிய பொருள்?
கேவலத்து இவர் நிலைமை தேர்வது எக் கிழமை கொடு? 5

'சிந்தையில் சிறிது துயர் சேர்வுற, தெருமரலின்
நொந்து அயர்த்தவர் அனையர்; நோ உறச் சிறியர் அலர்;
அந்தரத்து அமரர் அலர்; மானிடப் படிவர்; மயர்
சிந்தனைக்கு உரிய பொருள் தேடுதற்கு உறு நிலையர்; 6

'தருமமும் தகவும், இவர்; தனம் எனும் தகையர், இவர்;
கருமமும் பிறிது ஓர் பொருள் கருதி அன்று; அது கருதின்,
அரு மருந்து அனையது, இடை அழிவு வந்துளது; அதனை,
இரு மருங்கினும், நெடிது துருவுகின்றனர், இவர்கள். 7

'கதம் எனும் பொருண்மை இலர்; கருணையின் கடல் அனையர்;
இதம் எனும் பொருள் அலது, ஓர் இயல்பு உணர்ந்திலர் இவர்கள்;
சதமன் அஞ்சுறு நிலையர்; தருமன் அஞ்சுறு சரிதர்;
மதனன் அஞ்சுறு வடிவர்; மறலி அஞ்சுறு விறலர்.' 8

அனுமன், 'இவர்களே தருமம்' என்று துணிதல்

என்பன பலவும் எண்ணி, இருவரை எய்த நோக்கி,
அன்பினன், உருகுகின்ற உள்ளத்தன், ஆர்வத்தோரை
முன் பிரிந்து, வினையர்தம்மை முன்னினான் என்ன நின்றான்—
தன் பெருங் குணத்தால் தன்னைத் தான் அலது ஒப்பு இலாதான்.

3. அழி அமைதி - அழியும்போது; தவ்விட - நீங்கிட; 4. மஞ்சன் - மைந்தன்; மாணவப் படிவம் - பிரமசாரி வேடம்; கற்பு - உய்த்துணர்ச்சி, கல்வியறிவு; 5. கேவலம் - எளிமை; 6. மயர் சிந்தனை - மயங்கும் மனம்; 7. தகவு - நல்லொழுக்கம்; 8. கதம் - கோபம்; பொருண்மை - பொருளின் தன்மை; சதமன் - சதமகன், இந்திரன்; சரிதர் - ஒழுக்கமுடையவர்; . முன்னினான் - திரும்பவும் எதிர்ப்பட்டவன்.

'தன் கன்று கண்ட அன்ன தன்மைய, தறுகண் பேழ் வாய்
மின் கன்றும் எயிற்றுக் கோள் மா, வேங்கை, என்று இனையவேயும்,
பின் சென்று, காதல் கூரப் பேழ்கணித்து இரங்குகின்ற;
என் கன்றுகின்றது, எண்ணிப் பற்பல இவரை? அம்மா! 10

'மயில் முதல் பறவை எல்லாம், மணி நிறத்து இவர்கள் மேனி
வெயில் உறற்கு இரங்கி, மீதா, விரி சிறைப் பந்தர் வீசி,
எயில் வகுத்து எய்துகின்ற; இன முகில் கணங்கள், எங்கும்
பயில்வுற, திவலை சிந்தி, பயப் பயத் தழுவும், பாங்கர். 11

'காய் எரி கனலும் கற்கள், கள்ளுடை மலர்களேபோல்,
தூய செங் கமல பாதம் தோய்தொறும், குழைந்து தோன்றும்;
போயின திசைகள்தோறும், மரனொடு புல்லும் எல்லாம்
சாய்வுறும், தொழுவபோல்; இங்கு, இவர்களோ தருமம் ஆவார்? 12

'துன்பினைத் துடைத்து, மாயத் தொல் வினை தன்னை நீக்கி,
தென் புலத்து அன்றி, மீளா நெறி உய்க்கும் தேவரோ தாம்?
என்பு எனக்கு உருகுகின்றது; இவர்கின்றது அளவு இல் காதல்;
அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு என்கொல்? அறிதல் தேற்றேன்.

**அனுமன் எதிர் சென்று வரவேற்றலும், 'நீ யார்?' என இராமன் வினவுதலும்**

இவ் வகை எண்ணி, ஆண்டு, அவ் இருவரும் எய்தலோடும்,
செவ் வழி உள்ளத்தானும், தெரிவுற எதிர் சென்று எய்தி,
'கவ்வை இன்றாக, நுங்கள் வரவு!' என, கருணையோனும்,
'எவ் வழி நீங்கியோய்! நீ யார்?' என, விளம்பலுற்றான்: 14

**அனுமன் விடை**

'மஞ்சு எனத் திரண்ட கோல மேனிய! மகளிர்க்கு எல்லாம்
நஞ்சு எனத் தகைய ஆகி, நளிர் இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண! யான் காற்றின் வேந்தற்கு
அஞ்சனை வயிற்றில் வந்தேன்; நாமமும் அனுமன் என்பேன்; 15

'இம் மலை இருந்து வாழும் எரி கதிர்ப் பரிதிச் செல்வன்
செம்மலுக்கு ஏவல் செய்வேன்; தேவ! நும் வரவு நோக்கி
விம்மல் உற்று அனையன் ஏவ, வினவிய வந்தேன்' என்றான்—
எம் மலைக் குலமும் தாழ, இசை சுமந்து, எழுந்த தோளான்.

10. கோள் மா - சிங்கம்; பேழ்கணித்து - மருண்டு விழுந்து; கன்றுகின்றது - வருந்துவது; 13. மீளா நெறி - முத்தி நெறி; இவர்தல் - வளர்தல்; அவதி - எல்லை; அடைவு - காரணம்; 14. கவ்வை - துன்பம்; 16. விம்மல் - பூரிப்பு, துன்பம்; வினவிய - உசாவி அறியும்பொருட்டு.

**அனுமனை இராமன் பாராட்டி, இளவலுக்கு உரைத்தல்**

மாற்றம் அஃது உரைத்தலோடும், வரி சிலைக் குரிசில் மைந்தன்
தேற்றம் உற்று, இவனின் ஊங்குச் செவ்வியோர் இன்மை தேறி,
'ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும், என்னும்
வேற்றுமை இவனோடு இல்லையாம்' என, விளம்பலுற்றான்: 17

' ''இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும், வேதக் கடலுமே'' என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்றுஅன்றே? யார்கொல் இச் சொல்லின்செல்
வில் ஆர் தோள் இளைய வீர!—விரிஞ்சனோ? விடைவலானோ? [வன்?—

'மாணி ஆம் படிவம் அன்று, மற்று இவன் வடிவம்; மைந்த!
ஆணி இவ் உலகுக்கு எல்லாம் என்னலாம் ஆற்றற்கு ஏற்ற
சேண் உயர் பெருமைதன்னைச் சிக்கு அறத் தெளிந்தேன்; பின்னர்க்
காணுதி மெய்ம்மை' என்று, தம்பிக்குக் கழறி, கண்ணன், 19

**சுக்கிரீவனைக் காட்டுமாறு இராமன் வேண்டுதல்**

'எவ் வழி இருந்தான், சொன்ன கவிக் குலத்து அரசன்? யாங்கள்,
அவ் வழி அவனைக் காணும் அருத்தியால் அணுக வந்தேம்;
இவ் வழி நின்னை உற்ற எமக்கு, நீ இன்று சொன்ன
செவ் வழி உள்ளத்தோனைக் காட்டுதி, தெரிய' என்றான். 20

**அனுமன் கூறிய முகமன் உரை**

'மாதிரப் பொருப்போடு ஓங்கு வரம்பு இலா உலகில், மற்றுப்
பூதரப் புயத்து வீரர் நும் ஒக்கும் புனிதர் யாரே?
ஆதரித்து அவனைக் காண்டற்கு அணுகினிர் என்னின், அன்னான்,
தீது அவித்து அமையச் செய்த, செய் தவச் செல்வம் நன்றே!

'இரவிதன் புதல்வன்தன்னை, இந்திரன் புதல்வன் என்னும்
பரிவுஇலன் சீற, போந்து, பருவரற்கு ஒருவன் ஆகி,
அருவிஅம் குன்றில், என்னோடு இருந்தனன்; அவன்பால் செல்வம்
வருவது ஓர் அமைவின் வந்தீர்; வரையினும் வளர்ந்த தோளீர்!

18. காட்சி - அறிவு; விரிஞ்சன் - பிரமன்; விடைவலான் - உருத்திரன்; 19. சேண் உயர் - மிக்க உயர்ந்த; காணுதி - காண்பாய்; 20. அருத்தி - விருப்பம்; 21. மாதிரப் பொருப்பு - திசைகளின் இறுதியில் உள்ள சக்கர வாள கிரி; 22. இந்திரன் புதல்வன் - வாலி; பருவரல் - துன்பம்; அமைவு - தன்மை.

'ஒடுங்கல் இல் உலகம் யாவும் உவந்தன உதவி வேள்வி
தொடங்கின, மற்றும், முற்றத் தொல் அறம் துணிவர் அன்றே;
கொடுங் குலப் பகைஞன் ஆகிக் கொல்லிய வந்த கூற்றை
நடுங்கினர்க்கு, அபயம் நல்கும் அதனினும், நல்லது உண்டோ?

' "எம்மையே காத்திர்" என்றற்கு எளிதுஅரோ? இமைப்பு இலாதோர்—
தம்மையே முதல் இட்டு, ஆன்ற சராசரம் சமைந்த ஆற்றல்
மும்மை ஏழ் உலகும் காக்கும் முதல்வர் நீர்; முருகற் செவ்வி
உம்மையே புகல் புக்கேமுக்கு, இதின் வரும் உறுதி உண்டோ?

அனுமனுக்கு, இலக்குவன் தங்கள் நிலைமையை உரைத்தல்

'யார் என விளம்புகேன் நான், எம் குலத் தலைவற்கு, உம்மை?
வீர! நீர் பணித்திர்!' என்றான், மெய்ம்மையின் வேலி போல்வான்;
வார் கழல் இளைய வீரன், மரபுளி, வாய்மை யாதும்
சோர்வு இலன், நிலைமை எல்லாம் தெரிவுறச் சொல்லலுற்றான்:

'சூரியன் மரபில் தோன்றி; சுடர் நெடு நேமி ஆண்ட
ஆரியன்; அமரர்க்காக அசுரரை ஆவி உண்ட
வீரியன்; வேள்வி செய்து விண் உலகோடும் ஆண்ட
காரியன் கருணை அன்ன கண் அகன் கவிகை மன்னன்; 26

'புயல் தரு மதத் திண் கோட்டுப் புகர் மலைக்கு இறையை ஊர்ந்து,
மயல் தரும் அவுணர் யாரும் மடிதர, வரி வில் கொண்ட,
இயல் தரும் புலமைச் செங்கோல் மனு முதல் யாரும் ஒவ்வாத்
தயரதன்; கனக மாடத் தட மதில் அயோத்தி வேந்தன்;* 27

'அன்னவன் சிறுவன், இவ் ஆண்தகை; அன்னை ஏவ,
தன்னுடை உரிமைச் செல்வம் தம்பிக்குத் தகவின் நல்கி,
நல் நெடுங் கானம் சேர்ந்தான்; நாமமும் இராமன் என்பான்;
இந் நெடுஞ் சிலைவலானுக்கு ஏவல் செய் அடியென் யானே.' 28

அனுமன், இராமன் திருவடிகளை வணங்குதல்

என்று, அவன் தோற்றம் ஆதி இராவணன் இழைத்த மாயப்
புன் தொழில் இறுதி ஆக, புகுந்து உள பொருள்கள் எல்லாம்,
ஒன்றும் ஆண்டு ஒழிவுறாமல், உணர்த்தினன்; உணர்த்தக் கேட்டு,
நின்ற அக் காலின் மைந்தன், நெடிது உவந்து, அடியில் தாழ்ந்தான்.

24. காத்திர் - காப்பாற்றுக; முதல் இட்டு - முதற்கொண்டு; சமைந்த - நிரம்பிய; 25. மரபுளி - முறையினால்; 26. ஆரியன் - தலைமையுடையவன்; 27. புகர் மலைக்கு இறை - பட்டத்து அரச யானை; 29. பொருள்கள் - செய்திகள்.

**'தன்னை வணங்குவது முறையோ?' என்ற இராமனுக்கு அனுமன் மறுமொழி**

தாழ்தலும், 'தகாத செய்தது என்னை, நீ? தருமம் அன்றால்;
கேள்வி நூல் மறை வலாள!' என்றனன்; என்னக் கேட்ட
பாழிஅம் தடந் தோள் வென்றி மாருதி, 'பதுமச் செங் கண்
ஆழியாய்! அடியனேனும் அரிக் குலத்து ஒருவன்' என்றான். 30

**அனுமன் தன் பெரிய வானர உருவத்துடன் நிற்றல்**

மின் உருக் கொண்ட வில்லோர் வியப்புற, வேத நல் நூல்
பின் உருக் கொண்டது என்னும் பெருமை ஆம் பொருளும் தாழ,
பொன் உருக் கொண்ட மேரு, புயத்திற்கும் உவமை போதாத்
தன் உருக் கொண்டு நின்றான், தருமத்தின் தனிமை தீர்ப்பான்.

கண்டிலன், உலகம் மூன்றும் காலினால் கடந்து கொண்ட
புண்டரீகக் கண் ஆழிப் புரவலன், பொலன் கொள் சோதிக்
குண்டல வதனம் என்றால், கூறலாம் தகைமைத்து ஒன்றோ,
பண்டை நூல் கதிரோன் சொல்ல, படித்தவன் படிவம்? அம்மா! 32

**இராமன், அனுமனைக் குறித்து இலக்குவனிடம் வியந்து பேசுதல்**

தாள் படாக் கமலம் அன்ன தடங் கணான், தம்பிக்கு, 'அம்மா!
கீழ்ப் படா நின்ற நீக்கி, கிளர் படாது ஆகி, என்றும்
நாட் படா மறைகளாலும், நவை படா ஞானத்தாலும்,
கோட்படாப் பதமே, ஐய! குரக்கு உருக்கொண்டது' என்றான்.

'நல்லன நிமித்தம் பெற்றேம்; நம்பியைப் பெற்றேம்; நம்பால்
இல்லையே, துன்பம்ஆனது; இன்பமும் எய்திற்று; இன்னும்,
வில்லினாய்! இவனைப் போலாம் கவிக் குலக் குரிசில் வீரன்
சொல்லினால் ஏவல் செய்வான்; அவன் நிலை சொல்லற்பாற்றோ?' 34

**சுக்கிரீவனை அழைத்துவர, அனுமன் விடைபெற்றுச் செல்லுதல்**

என்று, அகம் உவந்து, கோல முகம் மலர்ந்து, இனிதின் நின்ற
குன்று உறழ் தோளினாரை நோக்கி, அக் குரக்குச் சீயம்,
'சென்று, அவன்தன்னை, இன்னே கொணர்கின்றேன்; சிறிது போது,
வென்றியிர்! இருத்திர்' என்று விடைபெற்று, விரைவில் போனான். 35

30. தகாத செய்தது - அந்தணனாகிய நீ மன்னனாகிய என்னை வணங்கியது; 32. ஆழி - சக்கரப்படை; புரவலன் - திருவிக்கிரமாவதாரம் செய்த திருமாலாகிய இராமன்; பண்டை நூல் - பழமையான வியாகரணம் முதலியன; படித்தவன் - கற்றவனாகிய அனுமன்; 33. தாள்படா - நாளத்தை விட்டு நீங்காத, நாளத்தில் பொருந்தாத எனலும் ஆம்; நாட்படா மறை - கால வரையறைக்கு உட்படா வேதங்கள்; கோட்படா - அறிந்துகொள்ள இயலாத; 34. அவன் - சுக்கிரீவன்.

# 3 நட்புக் கோட் படலம்

**அனுமன், சுக்கிரீவனிடம் இராமன் சிறப்புக்களைக் கூறுதல்**

போன, மந்தர மணிப் புய நெடும் புகழினன்,—
ஆன தன் பொரு சினத்து அரசன்மாடு அணுகினன்—
'யானும், என் குலமும், இவ் உலகும், உய்ந்தனம்' எனா,
மானவன் குணம் எலாம் நினையும் மா மதியினன். 1

மேலவன், திருமகற்கு உரைசெய்தான், 'விரை செய் தார்
வாலி என்ற அளவு இலா வலியினன் உயிர் தெறக்
காலன் வந்தனன்; இடர்க் கடல் கடந்தனம்' எனா,
ஆலம் உண்டவனின் நின்று, அரு நடம் புரிகுவான். 2

'மண் உளார், விண் உளார், மாறு உளார், வேறு உளார்,
எண் உளார், இயல் உளார், இசை உளார், திசை உளார்,
கண் உளார் ஆயினார்; பகை உளார், கழி நெடும்
புண் உளார், ஆர் உயிர்க்கு அமுதமேபோல் உளார். 3

'சூழி மால் யானையார் தொழு கழல் தயரதன்,
பாழியால் உலகு எலாம் ஒரு வழிப் படர வாழ்
ஆழியான், மைந்தர்; பேர் அறிவினார்; அழகினார்;
ஊழியார்; எளிதின் நிற்கு அரசு தந்து உதவுவார். 4

'நீதியார்; கருணையின் நெறியினார்; நெறிவயின்
பேதியா நிலைமையார்; எவரினும் பெருமையார்;
போதியாது அளவு இலா உணர்வினார்; புகழினார்;
காதி சேய் தரு நெடுங் கடவுள் வெம் படையினார். 5

'வேல் இகல் சினவு தாடகை விளிந்து உருள, வில்
கோலி, அக் கொடுமையாள் புதல்வனைக் கொன்று, தன்
கால் இயல் பொடியினால், நெடிய கற் படிவம் ஆம்
ஆலிகைக்கு, அரிய பேர் உரு அளித்தருளினான். 6

**3 :** 1. மந்தரம் - மந்தரமலை; மானவன் - மனுவின் குலத்தில் தோன்றியவன்; 3. மாறு உளார்-(மண் விண் இவற்றிற்கு) மாறாகிய பாதாளத்தில் உள்ள நாகர்கள்; ஆயினார் - இராம இலக்குவர்; 4. சூழி - முகபடாம்; ஒரு வழிப் படரல் - தன் ஆணையின்கீழ் நிற்றல்; ஊழியார் - நற்குணமுடையவர்; 5. பேதியா - மாறுபடாத; உணர்வு - அறிவு; காதி சேய் - விசுவாமித்திரன்; 6. புதல்வன் - சுபாகு; ஆலிகை - அகலிகை.

'நல் உறுப்பு அமையும் நம்பியரில் முன்னவன்—நயந்து,
எல் உறுப்பு அரிய பேர் எழு சுடர்க் கடவுள்தன்
பல் இறுத்தவன் வலிக்கு அமை தியம்பகம் எனும்
வில் இறுத்தருளினான்—மிதிலை புக்க அனைய நாள். 7

'உளை வயப் புரவியான் உதவ உற்று, ஒரு சொலால்,
அளவு இல் கற்பு உடைய சிற்றவை பணித்தருளலால்,
வளையுடைப் புணரி சூழ் மகிதலத் திரு எலாம்
இளையவற்கு உதவி, இத் தலை எழுந்தருளினான். 8

'தெவ் இரா வகை, நெடுஞ் சிகை விரா மழுவினான்
அவ் இராமனையும், மா வலி தொலைத்தருளினான்,
இவ் இராகவன்; வெகுண்டு எழும் இரா அனையன் ஆம்
அவ் விராதனை இராவகை துடைத்தருளினான். 9

'கரன் முதல் கருணை அற்றவர், கடற்படையொடும்
சிரம் உகச் சிலை குனித்து உதவுவான்; திசை உளார்
பரம் உகப் பகை துமித்தருளுவான்; பரமர் ஆம்
அரன் முதல் தலைவருக்கு அதிசயத் திறலினான்; 10

'ஆய மால் நாகர் தாழ் ஆழியானே அலால்,
காயமான் ஆயினான் ஆவனே? காவலா!
நீ அம் மான் நேர்தியால்; நேர் இல் மாரீசன் ஆம்
மாய மான் ஆயினான் மா யமான் ஆயினான். 11

'உக்க அந்தமும், உடல் பொறை துறந்து உயர் பதம்
புக்க அந்தமும், நமக்கு உரை செயும் புரையவோ—
திக்கு அவம் தர, நெடுந் திரள் கரம், சினவு தோள்,
அக் கவந்தனும், நினைந்து அமரர் தாழ் சவரிபோல்? 12

'முனைவரும் பிறரும், மேல், முடிவு அரும் பகல் எலாம்,
இனையர் வந்து உறுவர் என்று, இயல் தவம் புரிகுவார்;
வினை எனும் சிறை துறந்து உயர் பதம் விரவினார்
எனையர் என்று உரைசெய்கேன்?—இரவிதன் சிறுவனே! 13

7. பல் இறுத்தவன் - சிவன், வீரபத்திரர் செயலைச் சிவன் செயலாகச் சொன்னது உபசார வழக்கு; 8. மகிதலம் - பூமி; 9. சிகை - ஒளிக்கொழுந்து; விரா - விராவு, பொருந்திய; அவ் இராமன் - அந்தப் பரசுராமன்; 10. பரம் - பாரம்; உக - கெட; துமித்தல் - அழித்தல்; அதிசயத் திறல் - மிகுதியான வலிமை; 11. ஆயம் - கூட்டம்; நாகர் - தேவர்; காயமான் - உடம்பு கொண்ட மனிதன்; நேர்தி - நட்புச் செய்வாய்; 12. உக்க அந்தம் - இறந்து பட்ட முடிவு; புக்க அந்தம் - புகுந்த அழகு; அவம் தர - அழிவு அடையும்படி; 13. முனைவர் - முனிவர்; எனையர் - எத்தனை பேர்.

'மாயையால், மதி இலா நிருதர்கோன், மனைவியைத்
தீய கான் நெறியின் உய்த்தனன்; அவள்-தேடுவார்,
நீ, ஐயா, தவம் இழைத்துடைமையால், நெடு மனம்
தூயையா உடைமையால், உறவினைத் துணிகுவார். 14

'தந்திருந்தனர் அருள்; தகை நெடும் பகைஞன் ஆம்
இந்திரன் சிறுவனுக்கு இறுதி, இன்று இசை தரும்;
புந்தியின் பெருமையாய்! போதரு' என்று உரை செய்தான்—
மந்திரம் கெழுமு நூல் மரபு உணர்ந்து உதவுவான். 15

சுக்கிரீவன் இராமனை வந்து காணுதல்

அன்ன ஆம் உரை எலாம் அறிவினால் உணர்குவான்,
'உன்னையே உடைய எற்கு அரியது எப் பொருள்அரோ?
பொன்னையே பொருவுவாய்! போது' என, போதுவான்,
தன்னையே அனையவன் சரணம் வந்து அணுகினான். 16

கண்டனன் என்ப மன்னோ—கதிரவன் சிறுவன், காமர்
குண்டலம் துறந்த கோல வதனமும், குளிர்க்கும் கண்ணும்,
புண்டரிகங்கள் பூத்துப் புயல் தழீஇப் பொலிந்த திங்கள்
மண்டலம் உதயம் செய்த மரகதக் கிரி அனானை. 17

சுக்கிரீவன் சிந்தனை

நோக்கினான்; நெடிது நின்றான்; 'நொடிவு அருங் கமலத்து அண்ணல்
ஆக்கிய உலகம் எல்லாம், அன்றுதொட்டு இன்றுகாறும்,
பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்து, இரு படிவம் ஆகி,
மேக்கு உயர் தடந் தோள் பெற்று, வீரர் ஆய் விளைந்த' என்பான். 18

தேறினன்—'அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம் தேவர் அன்றே,
மாறி, இப் பிறப்பில் வந்தார் மானிடர் ஆகி மன்னோ;
ஆறு கொள் சடிலத்தானும், அயனும், என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம் வென்றது' அன்றே! 19

சுக்கிரீவனை இராமன் வரவேற்றல்

என நினைந்து, இனைய எண்ணி, இவர்கின்ற காதல் ஓதக்
கனை கடல் கரைநின்று ஏற, கண் இணை களிப்ப நோக்கி,
அனகனைக் குறுகினான்; அவ் அண்ணலும், அருத்தி கூர,
புனை மலர்த் தடக் கை நீட்டி, 'போந்து இனிது இருத்தி' என்றான். 20

14. உய்த்தனன் - எடுத்துக்கொண்டு போனான்; உறவு - நட்பு; 16. பொன் - தேவேந்திரன் குருவும் அமைச்சனுமான வியாழன்; 17. புண்டரிகங்கள் - தாமரை; 18. நொடிவு - சொல்லுதல்; பாக்கியம் - நல்வினை; மேக்கு - மேல்; 20. அனகன் - குற்றமில்லாதவன், ஈண்டு இராமன்.

தவா வலி அரக்கர் என்னும் தகா இருள் பகையைத் தள்ளி,
குவால் அறம் நிறுத்தற்கு ஏற்ற காலத்தின் கூட்டம் ஒத்தார்;
அவா முதல் அறுத்த சிந்தை அனகனும், அரியின் வேந்தும்,
உவா உற வந்து கூடும், உடுபதி, இரவி, ஒத்தார். 21

கூட்டம் உற்று இருந்த வீரர், குறித்தது ஓர் பொருட்கு முன்நாள்
ஈட்டிய தவமும், பின்னர் முயற்சியும் இயைந்தது ஒத்தார்;
மீட்டும், வாள் அரக்கர் என்னும் தீவினை வேரின் வாங்க,
கேட்டு உணர் கல்வியோடு ஞானமும் கிடைத்தது ஒத்தார். 22

**சுக்கிரீவன்-இராமன் உரையாடல்**

ஆயது ஓர் அவதியின்கண், அருக்கன் சேய், அரசை நோக்கி,
'தீவினை தீய நோற்ருர் என்னின் யார்? செல்வ! நின்னை,
நாயகம் உலகுக்கு எல்லாம் என்னல் ஆம் நலம் மிக்கோயை,
மேயினென்; விதியே நல்கின், மேவல் ஆகாது என்?' என்ருன்.

'மை அறு தவத்தின் வந்த சவரி, இம் மலையில் நீ வந்து
எய்தினை இருந்த தன்மை, இயம்பினள்; யாங்கள் உற்ற
கை அறு துயரம், நின்னல் கடப்பது கருதி வந்தேம்;
ஐய! நின்-தீரும்' என்ன, அரிக் குலத்து அரசன் சொல்வான்;

'முரணுடைத் தடக் கை ஓச்சி, முன்னவன், பின்வந்தேனை,
இருள்நிலைப் புறத்தின்காறும், உலகு எங்கும், தொடர, இக் குன்று
அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்; ஆர் உயிர் துறக்கலாற்றேன்;
சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்' என்ருன். 25

என்ற அக் குரக்கு வேந்தை, இராமனும் இரங்கி நோக்கி,
'உன்தனக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள, முன்நாள்
சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்கும் நேர்' என மொழியும் நேரா, 26

'மற்று, இனி உரைப்பது என்னே? வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்ருர்; தீயரேஎனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்ருர்; உன் கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என் இன் உயிர்த் துணைவன்' என்ருன்.

ஆர்த்தது குரக்குச் சேனை; அஞ்சனை சிறுவன் மேனி,
போர்த்தன, பொடித்து உரோமப் புளகங்கள்; பூவின் மாரி
தூர்த்தனர், விண்ணோர், மேகம் சொரிந்தென, அனகன் சொன்ன
வார்த்தை, எக் குலத்துளோர்க்கும், மறையினும் மெய் என்று உன்ன.

21. குவால் - கூட்டம்; உவா உற - அமாவாசை வர, சந்திரன் கதிரவனோடு கூடி உறையும் நாள் அமாவாசை; 25. முரண் - வலிமை.

ஆண்டு எழுந்து, அடியில் தாழ்ந்த அஞ்சனை சிங்கம், 'வாழி!
தூண் திரள் தடந் தோள் மைந்த! தோழனும் நீயும் வாழி!
ஈண்டு, நும் கோயில் எய்தி, இனிதின் நும் இருக்கை காண
வேண்டும்; நும் அருள் என்?' என்றான்; வீரனும், 'விழுமிது' என்றான்.

எல்லோரும் புதுமலர்ச் சோலை சென்று சேர்தல்

ஏகினர்—இரவி சேயும், இருவரும், அரிகள் ஏறும்,
ஊக வெஞ் சேனை சூழ, அறம் தொடர்ந்து உவந்து வாழ்த்த—
நாகமும், நரந்தக் காவும், நளின வாவிகளும் நண்ணி,
போக பூமியையும் ஏசும் புது மலர்ச் சோலை புக்கார். 30

ஆரமும் அகிலும் துன்றி, அவிர் பளிக்கு அறை அளாவி,
நாரம் நின்றனபோல் தோன்றி, நவ மணித் தடங்கள் நீடும்
பாரமும், மருங்கும், தெய்வத் தருவும், நீர்ப் பண்ணை ஆடும்
சூர் அரமகளிர் ஊசல் துவன்றிய சும்மைத்து அன்றே. 31

அயர்வு இல் கேள்வி சால் அறிஞர்-வேலை முன்,
பயில்வு இல் கல்வியார் பொலிவு இல் பான்மைபோல்,
குயிலும் மா மணிக் குழுவு சோதியால்,
வெயிலும், வெள்ளி வெண் மதியும், மேம்படா. 32

இராமன் சுக்கிரீவனோடு விருந்துண்ணுதல்

ஏய அன்னது ஆம் இனிய சோலைவாய்,
மேய மைந்தரும், கவியின் வேந்தனும்,
தூய பூ அணைப் பொலிந்து தோன்றினர்,
ஆய அன்பினோடு அளவளாவுவார். 33

கனியும், கந்தமும், காயும், தூயன
இனிய யாவையும் கொணர, யாரினும்
புனிதன் மஞ்சனத் தொழில் புரிந்து, பின்
இனிது இருந்து, நல் விருந்தும் ஆயினன். 34

29. அருள் - திருவுள்ளம்; 30. ஊகம் - வானரம்; ஏசும் - இகழும்; 31. அளாவி - பொருந்தப் பெற்று; நாரம் - நீர்; பாரம் - கரை; மருங்கு - பக்கம்; பண்ணை ஆடும் - கூட்டமாக விளையாடும்; சும்மை - ஆரவாரம்; 32. குயிலுதல் - பதித்தல்; குழுவு சோதி - திரண்ட ஒளி; 33. ஏய - தகுதியான; 34. கந்தம் - கிழங்கு; புனிதன் - இராமன்; மஞ்சனத் தொழில் - நீராட்டம்.

**'நீயும் மனைவியைப் பிரிந்துள்ளாயோ?' என இராமன் சுக்கிரீவனை வினவுதல்**

விருந்தும் ஆகி, அம் மெய்ம்மை அன்பினோடு
இருந்து, நோக்கி, நொந்து, இறைவன், சிந்தியா,
'பொருந்து நன் மனைக்கு உரிய பூவையைப்
பிரிந்துளாய்கொலோ நீயும் பின்?' என்றான். 35

**மாருதி, சுக்கிரீவன் நிலையை உரைத்தல்**

என்ற வேலையில் எழுந்து, மாருதி,
குன்று போல நின்று, இரு கை கூப்பினான்—
'நின்ற நீதியாய்! நெடிது கேட்டியால்!
ஒன்று, யான் உனக்கு உரைப்பது உண்டு' எனா: 36

**வாலியின் சிறப்பு**

'நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி
வேலி அன்னவன், மலையின்மேல் உளான்,
சூலிதன் அருள் துறையின் முற்றினான்,
வாலி என்று உளான், வரம்பு இல் ஆற்றலான்; 37

'சுழறு தேவரோடு, அவுணர் கண்ணின் நின்று,
உழலும் மந்தரத்து உருவு தேய, முன்,
அழலும் கோள் அரா அகடு தீ விட,
சுழலும் வேலையைக் கடையும் தோளினான். 38

'நிலனும், நீரும், மாய் நெருப்பும், காற்றும், என்று
உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்;
அலையின் வேலை சூழ் கிடந்த ஆழி மா
மலையின்நின்றும் இம் மலையின் வாவுவான்; 39

'கிட்டுவார் பொரக் கிடைக்கின், அன்னவர்
பட்ட நல் வலம் பாகம் எய்துவான்;
எட்டு மாதிரத்து இறுதி, நாளும் உற்று,
அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்; 40

'கால் செலாது அவன் முன்னர்; கந்த வேள்
வேல் செலாது அவன் மார்பில்; வென்றியான்
வால் செலாத வாய் அலது, இராவணன்
கோல் செலாது; அவன் குடை செலாதுஅரோ. 41

35. பூவை - கிளி போன்ற மனைவி; 37. சூலி - சிவன்; 38. அகடு - நடுவுடம்பு; 40. கிட்டுதல் - வருதல்; அட்ட மூர்த்தி - சிவபிரான்; 41. கால் - காற்று.

'மேருவே முதல் கிரிகள் வேரொடும்
பேருமே, அவன் பேருமேல்; நெடுங்
காரும், வானமும், கதிரும், நாகமும்,
தூருமே, அவன் பெரிய தோள்களால். 42

'பார் இடந்த வெம் பன்றி, பண்டை நாள்
நீர் கடைந்த பேர் ஆமை, நேர் உளான்;
மார்பு இடந்த மா எனினும், மற்றவன்
தார் கிடந்த தோள் தகைய வல்லதோ! 43

'படர்ந்த நீள் நெடுந் தலை பரப்பி, மீது,
அடர்ந்து பாரம் வந்து உற, அனந்தனும்
கிடந்து தாங்கும் இக் கிரியை மேயினன்,
நடந்து தாங்கும், இப் புவனம், நாள் எலாம். 44

'கடல் உளைப்பதும், கால் சலிப்பதும்,
மிடல் அருக்கர் தேர்மீது செல்வதும்,
தொடர மற்றவன் சுளியும் என்று அலால்,—
அடலின் வெற்றியாய்!—அயலின் ஆவவோ? 45

'வெள்ளம் ஏழு பத்து உள்ள, மேருவைத்
தள்ளல் ஆன தோள் அரியின் தானையான்;
உள்ளம் ஒன்றி எவ் உயிரும் வாழுமால்,—
வள்ளலே!—அவன் வலியின் வன்மையால். 46

'மழை இடிப்பு உரு; வய வெஞ் சீய மா
முழை இடிப்பு உரு; முரண் வெங் காலும் மென்
தழை துடிப்புறச் சார்வு உருது;—அவன்
விழைவிடத்தின்மேல், விளிவை அஞ்சலால். 47

'மெய்க்கொள் வாலினல், மிடல் இராவணன்
தொக்க தோள் உறத் தொடர்ப்படுத்த நாள்,
புக்கிலாதவும், பொழி அரத்த நீர்
உக்கிலாத வேறு உலகம் யாவதோ? 48

42. பேருதல் - பெயர்தல், நடத்தல்; 43. நேர் உளான் - தனக்கு ஒப்பாகக் கொண்டுள்ளவன்; மார்பு இடந்த மா - நரசிங்கம்; தகைய - எதிர்க்க; 44. அனந்தன் - ஆதிசேடன்; கிடந்து தாங்குதல் - சுமந்து தாங்குதல்; மேயினன் - வாலி; நடந்து தாங்குதல் - காத்தல்; 45. உளைப்பது - ஒலிப்பது; சுளியும் - வெகுளும்; 46. தள்ளல் - புரட்டிவிடல்; அரி - குரங்கு; 47. இடிப்பு - முழக்கம்; விளிவு - அழிவு; 48. தொடர்ப்படுத்தல் - கட்டுதல்.

'இந்திரன் தனிப் புதல்வன், இன் அளிச்
சந்திரன் தழைத்தனைய தன்மையான்,
அந்தகன்தனக்கு அரிய ஆணையான்,
முந்தி வந்தனன், இவனின்—மொய்ம்பினேய்! 49

சுக்கிரீவனேடு வாலி பகைமை கொண்ட காரணத்தை உரைத்தல்

'அன்னவன் எமக்கு அரசன் ஆகவே,
இன்னவன் இளம் பதம் இயற்றும் நாள்,
முன்னவன் குலப் பகைஞன்,—முட்டிஞன்—
மின் எயிற்று வாள் அவுணன், வெம்மையான். 50

'முட்டி நின்று, அவன் முரண் உரத்தின் நேர்
ஒட்ட, அஞ்சி, நெஞ்சு உலைய ஓடினன்;
''வட்ட மண்டலத்து அரிது வாழ்வு'' என,
எட்ட அரும் பெரும் பிலனுள் எய்தினன். 51

'எய்து காலை, அப் பிலனுள் எய்தி, ''யான்
நொய்தின் அங்கு அவற் கொணர்வென்;—நோன்மையாய்!—
செய்தி, காவல், நீ, சிறிது போழ்து'' என,
வெய்தின் எய்தினன், வெகுளி மேயினன். 52

'ஏகி, வாலியும் இருது ஏழொடு ஏழ்
வேக வெம் பிலம் தடவி, வெம்மையான்
மோக வென்றிமேல் முயல்வின் வைகிட,
சோகம் எய்தினன், துணை துளங்கினன்; 53

'அழுது அழுங்குறும் இவனை, அன்பினின்
தொழுது இரந்து, ''நின் தொழில் இது; ஆதலால்,
எழுது வென்றியாய்! அரசு செய்க!'' என,
''பழுது இது'' என்றனன், பரியும் நெஞ்சினன். 54

'என்று, தானும், ''அவ் வழி இரும் பிலம்
சென்று, முன்னவன்-தேடுவேன்; அவற்
கொன்றுளான்தனைக் கொல ஒணுது எனின்,
பொன்றுவேன்'' என, புகுதல் மேயினன், 55

50. இளம் பதம் - இளவரசப் பதவி; 51. முரண் உரம் - வலிய ஆற்றல்; ஒட்ட - பொருதற்கு; எட்ட அரும் - பாய்ந்து செல்வதற்கு அரிய; பிலன் - பிலம், பூமிக்குள் செல்லும் சுரங்க வழி; 52. வெய்தின் - விரைவாக; 53. முயல்வு - முயற்சி; வைகிட - கழிக்க.

'தடுத்து, வல்லவர் தணிவு செய்து, நோய்
கெடுத்து, மேலையோர் கிளத்து நீதியால்
அடுத்த காவலும், அரிகள் ஆணையால்
கொடுத்தது உண்டு; இவன் கொண்டனன் கொலாம்? 56

'அன்ன நாளில், மாயாவி, அப் பிலத்து,
இன்ன வாயினூடு எய்தும் என்ன, யாம்,
பொன்னின் மால் வரைப் பொருப்பு ஒழித்து, வேறு
உன்னு குன்று எலாம் உடன் அடுக்கினேம். 57

'சேமம் அவ் வழிச் செய்து, செங் கதிர்க்
கோமகன்தனைக் கொண்டுவந்து, யாம்
மேவு குன்றின்மேல் வைகும் வேலைவாய்,
ஆவி உண்டனன் அவனை, அன்னவன். 58

'ஒளித்தவன் உயிர்க் கள்ளை உண்டு, உளம்
களித்த வாலியும், கடிதின் எய்தினான்;
விளித்து நின்று, வேறு உரை பெறான்; ''இருந்து
அளித்தவாறு நன்று, இளவலார்!'' எனா, 59

வால் விசைத்து, வான் வளி நிமிர்ந்தெனக்
கால் விசைத்து, அவன் கடிதின் எற்றலும்,
நீல் நிறத்து விண் நெடு முகட்டவும்,
வேலை புக்கவும், பெரிய வெற்பு எலாம். 60

'ஏறினான் அவன்; எவரும் அஞ்சுறச்
சீறினான்; நெடுஞ் சிகரம் எய்தினான்;
வேறு இல், ஆதவன் புதல்வன், மெய்ம்மை ஆம்
ஆறினானும், வந்து அடி வணங்கினான். 61

'வணங்கி, ''அண்ணல்! நின் வரவு இலாமையால்,
உணங்கி, உன் வழிப் படர உன்னுவேற்கு,
இணங்கர் இன்மையால், இறைவ! நும்முடைக்
கணங்கள், 'காவல், உன் கடன்மை'' ' என்றனர்; 62

' ''ஆணை அஞ்சி, இவ் அரசை எய்தி வாழ்
நாண் இலாத என் நவையை, நல்குவாய்;
பூண் நிலாவு தோளினை! பொறாய்!'' என,
கோணினான், நெடுங் கொடுமை கூறினான். 63

57. வாயினூடு - வழியால்; 61. ஆறினான் - வழிச் செல்வோன்! 62. இணங்கர் - இணக்கம், உடன்படல்; 63. கோணினான் - மனம் மாறு பட்டவன்.

'அடல் கடந்த தோள் அவனை அஞ்சி, வெங்
குடல் கலங்கி, எம் குலம் ஒடுங்க, முன்
கடல் கடைந்த அக் கரதலங்களால்,
உடல் கடைந்தனன்; இவன் உலைந்தனன். 64

'பற்றி, அஞ்சலன் பழியை; வெஞ் சினம்
முற்றி நின்ற, தன் முரண் வலிக் கையால்,
எற்றுவான் எடுத்து எழுதலும், பிழைத்து,
அற்றம் ஒன்று பெற்று, இவன், அகன்றனன். 65

வாலிக்குப் பயந்து, சுக்கிரீவன் மலையில் வாழ்தலைக் குறிப்பித்தல்

'எந்தை! மற்று அவன் எயிறு அதுக்குமேல்,
அந்தகற்கும் ஓர் அரணம் இல்லையால்;
இந்த வெற்பின் வந்து இவன் இருந்தனன்—
முந்தை உற்றது ஓர் சாபம் உண்மையால். 66

'உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
அரு மருந்தையும், அவன் விரும்பினான்;
இருமையும் துறந்து, இவன் இருந்தனன்;
கருமம் இங்கு இது; எம் கடவுள்!' என்றனன். 67

இராமன் சினந்து, வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்தல்

பொய் இலாதவன் வரன்முறை இம் மொழி புகல,
ஐயன், ஆயிரம் பெயருடை அமரர்க்கும் அமரன்,
வையம் நுங்கிய வாய் இதழ் துடித்தது; மலர்க் கண்-
செய்ய தாமரை, ஆம்பல் அம் போது எனச் சிவந்த. 68

ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்ன,
ஆரம் வீங்கு தோள் தம்பிக்குத் தன் அரசு உரிமைப்
பாரம் ஈந்தவன், 'பரிவு இலன், ஒருவன் தன் இளையோன்
தாரம் வௌவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ? 69

'உலகம் ஏழினோடு ஏழும் வந்து அவன் உயிர்க்கு உதவி
விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டி,
தலைமையோடு, நின் தாரமும், உனக்கு இன்று தருவென்;
புலமையோய்! அவன் உறைவிடம் காட்டு' என்று புகன்றான்.

64. உடல் கடைதல் - உடம்பைத் தாக்கிக் குருதி கலங்குமாறு செய்தல்; 65. எற்றுவான் - மோதுதற்கு; அற்றம் - சோர்ந்திருக்கும் சமயம்; 66. ஓர் சாபம் - மதங்க முனிவரின் வசை மொழி; 67. இருமை - செல்வம், மனைவி ஆகிய இரண்டு; கருமம் - நடந்த செயல்; 69. ஈரம் - அன்பு; 70. விலகும் - தடுக்கும்.

எழுந்து, பேர் உவகைக் கடற் பெருந் திரை இரைப்ப,
அழுந்து துன்பினுக்கு அக் கரை கண்டனன் அனையான்,
'விழுந்ததே இனி வாலி தன் வலி!' என, விரும்பா,
மொழிந்த வீரற்கு, 'யாம் எண்ணுவது உண்டு' என மொழிந்தான். 71

அமைச்சர்களோடு கூடிச் சுக்கிரீவன் சிந்திக்க, அனுமன் பேசுதல்

அனைய ஆண்டு உரைத்து, அனுமனே முதலிய அமைச்சர்,
நினைவும், கல்வியும், நீதியும், சூழ்ச்சியும் நிறைந்தார்
எனையர், அன்னவரோடும் வேறு இருந்தனன், இரவி
தனையன்; அவ் வழி, சமீரணன் மகன் உரைதருவான்: 72

'உன்னினேன், உன்தன் உள்ளத்தின் உள்ளதை, உரவோய்!
''அன்ன வாலியைக் காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல்
இன்ன வீரர்பால் இல்லை'' என்று அயிர்த்தனை; இனி, யான்
சொன்ன கேட்டு, அவை கடைப்பிடிப்பாய்' எனச் சொன்னான்.

'சங்கு சக்கரக் குறி உள, தடக் கையில், தாளில்;
எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை;
செங் கண் விற் கரத்து இராமன், அத் திரு நெடு மாலே;
இங்கு உதித்தனன், ஈண்டு அறம் நிறுத்துதற்கு; இன்னும், 74

'செறுக்கும் வன் திறல் திரிபுரம் தீ எழச் சினவிக்
கறுக்கும், வெஞ் சினக் காலன்தன் காலமும் காலால்
அறுக்கும் புங்கவன் ஆண்ட பேர் ஆடகத் தனி வில்
இறுக்கும் தன்மை, அம் மாயவற்கு அன்றியும் எளிதோ? 75

'என்னை ஈன்றவன், ''இவ் உலகு யாவையும் ஈன்றான்-
தன்னை ஈன்றவற்கு அடிமை செய்; தவம் உனக்கு அஃதே;
உன்னை ஈன்ற எற்கு உறு பதம் உளது'' என உரைத்தான்;
இன்ன தோன்றலே அவன்; இதற்கு எது உண்டு;—இறையோய்! 76

'துன்பு தோன்றிய பொழுது, உடன் தோன்றுவன்; ''எவர்க்கும்
முன்பு தோன்றலை அறிதற்கு முடிவு என்?'' என்று இயம்ப,
''அன்பு சான்று'' என உரைத்தனன்; ஐய! என் ஆக்கை,
என்பு தோன்றல உருகினஎனின், பிறிது எவனோ? 77

71. வீரன் - இராமன்; 72. சமீரணன் - வாயு; 73. கடைப்பிடிப்பாய் - உறுதியாகக் கொள்வாய்; 75. காலம் - வாழ்நாள்; 76. உறுபதம் - சிறந்த பதவி; 77. முடிவு - வழி; என்பு தோன்றல் - என்பும் உருத் தோன்றுதவாறு.

இராமன் ஆற்றல் அறிதற்கு அனுமன் உரைத்த உபாயம்

'பிறிதும், அன்னவன் பெரு வலி ஆற்றலை, பெரியோய்!
அறிதி என்னின், உண்டு உபாயமும்; அஃது அரு மரங்கள்
நெறியில் நின்றன ஏழில், ஒன்று உருவ, இந் நெடியோன்
பொறி கொள் வெஞ் சரம் போவது காண்!' எனப் புகன்றான்.

சுக்கிரீவன், இராமனை அடுத்து, தன் எண்ணம் உரைத்தல்

'நன்று நன்று' என, நல் நெடுங் குன்றமும் நாணும்
தன் துணைத் தனி மாருதி தோளிணை தழுவி,
சென்று, செம்மலைக் குறுகி, 'யான் செப்புவது உளதால்,
ஒன்று உனக்கு' என, இராமனும், 'உரைத்தி அஃது' என்றான்.

## 4 மராமரப் படலம்

இராமனை மராமரங்களுள் ஒன்றை அம்பினால் எய்ய வேண்டுதல்

'ஏகவேண்டும் இந் நெறி' என, இனிது கொண்டு ஏகி,
'மாகம் நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆக ஐந்தினோடு இரண்டின் ஒன்று உருவ, நின் அம்பு
போகவே, என்தன் மனத்து இடர் போம்' எனப் புகன்றான். 1

மறு இலான் அது கூறலும், வானவர்க்கு இறைவன்,
முறுவல் செய்து, அவன் முன்னிய முயற்சியை உன்னி,
எறுழ் வலித் தடந் தோள்களால் சிலையை நாண் ஏற்றி,
அறிவினால் அளப்ப அரியவற்று அருகு சென்று, அணைந்தான். 2

மராமரங்கள் நின்ற காட்சி

ஊழி பேரினும் பேர்வில; உலகங்கள் உலைந்து
தாழும் காலத்தும், தாழ்வில; தயங்கு பேர் இருள் சூழ்
ஆழி மா நிலம் தாங்கிய அருங் குலக் கிரிகள்
ஏழும், ஆண்டுச் சென்று ஒரு வழி நின்றென, இயைந்த; 3

கலை கொண்டு ஓங்கிய மதியமும், கதிரவன்தானும்,
'தலைகண்டு ஓடுதற்கு அருந் தவம் தொடங்குறும் சாரல்
மலை கண்டோம்' என்பது அல்லது, மலர்மிசை அயற்கும்,
'இலை கண்டோம்' என, தெரிப்ப அருந் தரத்தன ஏழும்; 4

4 : 1. நீண்டன மாகம் - நீண்டனவாகிய வானம்; 2. எறுழ் வலி - மிக்க வலி; 4. தலை - உச்சி.

ஒக்க நாள் எலாம் உழல்வன, உலைவு இல ஆக,
மிக்கது ஓர் பொருள் உளது என வேறு கண்டிலமால்—
திக்கும், வானமும், செறிந்த அத் தரு நிழல் சீதம்
புக்கு நீங்கலின், தளர்வு இல, இரவி தேர்ப் புரவி; 5

நீடு நாள்களும், கோள்களும், என்ன, மேல் நிமிர்ந்து
மாடு தோற்றுவ மலர் எனப் பொலிகின்ற வளத்த;
ஓடு மாச் சுடர் வெண் மதிக்கு, உட்கறுப்பு, உயர்ந்த
கோடு தேய்த்தலின், களங்கம் உற்று ஆம் அன்ன குறிய; 6

தீது அறும் பெருஞ் சாகைகள் தழைக்கின்ற செயலால்
வேதம் என்னவும் தகுவன; விசும்பினும் உயர்ந்த
ஆதி அண்டம் முன்பு அளித்தவன் உலகின், அங்கு அவன் ஊர்
ஓதிமம், தனிப் பெடையொடும் புடை இருந்து உறைவ. 7

நாற்றம் மல்கு போது, அடை, கனி, காய், முதல் நாளு
வீற்று, மண்தலத்து யாவையும் வீழ்கில, யாண்டும்
காற்று அலம்பினும்; கலி நெடு வானிடைக் கலந்த
ஆற்றின் வீழ்ந்து போய், அலை கடல் பாய்தரும் இயல்ப; 8

அடியினுல் உலகு அளந்தவன் அண்டத்துக்கு அப்பால்
முடியின்மேல் சென்ற முடியனஆதலின், முடியா
நெடிய மால் எனும் நிலையன; நீரிடைக் கிடந்த
படியின்மேல் நின்ற மேரு மால் வரையினும், பரிய, 9

வள்ளல் இந்திரன் மைந்தற்கும், தம்பிக்கும் வயிர்த்த
உள்ளமே என, ஒன்றின் ஒன்று உள் வயிர்ப்பு உடைய;
தெள்ளு நீரிடைக் கிடந்த பார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண் படம் குடைந்து கீழ் போகிய வேர; 10

சென்று திக்கினை அளந்தன, பணைகளின்; தேவர்,
'என்றும் நிற்கும்' என்று இசைப்பன; இரு சுடர் திரியும்
குன்றினுக்கு உயர்ந்து அகன்றன; ஒன்றினும் குறுகா;
ஒன்றினுக்கு ஒன்றின் இடை, நெடிது யோசனை உடைய. 11

5. உலைவு - களைப்பு; ஆக - ஆதற்கு; மிக்கது - மேம்பட்டது; பொருள் - காரணம்; 6. நீடு நாள் - பெருகிய நட்சத்திரங்கள்; 7. சாகை - வேதங்களின் கிளைப் பகுதி, மரக்கிளை; ஓதிமம் - அன்னப் பறவை; 9. முடியன - நுனியினை உடையன; முடியா - அளவிடப்படாத; 10. வயிர்த்த - பகைமை கொண்ட; வயிர்ப்பு - வயிரத்தன்மை; 11. பணைகள் - கிளைகள்; குன்று - மேருமலை; குறுகா - குறைவில்லாதவை.

இராமன் நாண் எறிந்து, அம்பு எய்தல்

ஆய மா மரம் அனைத்தையும் நோக்கி நின்று, அமலன்,
தூய வார் கணை துரப்பது ஓர் ஆதரம் தோன்ற,
சேய வானமும், திசைகளும், செவிடு உற, தேவர்க்கு
ஏய்வு இலாதது ஓர் பயம் வர, சிலையின் நாண் எறிந்தான். 12

ஒக்க நின்றது, எவ் உலகமும் அங்கு அங்கே ஓசை;
பக்கம் நின்றவர்க்கு உற்றது பகர்வது எப்படியோ?
திக்கயங்களும் மயங்கின; திசைகளும் திகைத்த;
புக்கு, அயன் பதி சலிப்புற ஒலித்தது, அப் பொரு வில். 13

அரிந்தமன் சிலை நாண் நெடிது ஆர்த்தலும், அமரர்
இரிந்து நீங்கினர், கற்பத்தின் இறுதி என்று அயிர்த்தார்;
பரிந்த தம்பியே பாங்கு நின்றான்; மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை உரைசெயின், பழி, அவர்ப் புணரும். 14

எய்தல் காண்டும்கொல், இன்னம்?' என்று, அரிதின் வந்து எய்தி,
பொய் இல் மாருதி முதலினோர் புகழ்வுறும் பொழுதில்,
மொய் கொள் வார் சிலை நாணினை முறை உற வாங்கி,
வெய்ய வாளியை, ஆளுடை வில்லியும், விட்டான். 15

ஏழு மா மரம் உருவி, கீழ் உலகம் என்று இசைக்கும்
ஏழும் ஊடு புக்கு உருவி, பின் உடன் அடுத்து இயன்ற
ஏழ் இலாமையான் மீண்டது, அவ் இராகவன் பகழி;
ஏழு கண்டபின், உருவுமால்; ஒழிவது அன்று, இன்னும். 16

ஏழு வேலையும், உலகம் மேல் உயர்ந்தன ஏழும்,
ஏழு குன்றமும், இருடிகள் எழுவரும், புரவி
ஏழும், மங்கையர் எழுவரும், நடுங்கினர் என்ப—
'ஏழு பெற்றதோ இக் கணைக்கு இலக்கம்?' என்று எண்ணி. 17

அன்னது ஆயினும், அறத்தினுக்கு ஆர் உயிர்த் துணைவன்
என்னும் தன்மையை நோக்கினர் யாவரும், எவையும்;
பொன்னின் வார் கழல் புது நறுந் தாமரை பூண்டு,
சென்னிமேல் கொளூஉ அருக்கன் சேய், இவை இவை செப்பும்:

12. ஆதரம் - விருப்பம்; சேய - தூரத்தில் உள்ள; 14. அரிந்தமன் - பாவத்தைப் போக்குபவன்; பகைவரை அடக்குபவன் எனலும் ஆம்.

**சுக்கிரீவன் இராமனைப் புகழ்ந்து உரைத்தல்**

'வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின்மேல்
ஐயன் நீ! ஆழிமேல் ஆழி வாழ் கையன் நீ!
செய்ய தீ அனைய அத் தேவும் நீ! நாயினேன்,
உய்ய வந்து உதவினாய், உலகம் முந்து உதவினாய்! 19

'என் எனக்கு அரியது, எப்பொருளும் எற்கு எளிது அலால்?
உன்னை இத் தலை விடுத்து உதவினார், விதியினார்;
அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியென் யான்;
மன்னவர்க்கு அரச!' என்று உரைசெய்தான்—வசை இலான்.

**வானர வீரர்களின் மகிழ்ச்சி**

ஆடினார்; பாடினார்; அங்கும் இங்கும் களித்து
ஓடினார்; உவகை இன் நறவை உண்டு உணர்கிலார்;—
'நேடினம் வாலி காலனை' எனா, நெடிது நாள்
வாடினார் தோள் எலாம் வளர, மற்று அவர் எலாம். 21

## 5 துந்துபிப் படலம்

**துந்துபியின் உடலைப் பார்த்து, இராமன் வினவுதல்**

அண்டமும், அகிலமும் அடைய, அன்று அனலிடைப்
பண்டு வெந்தன நெடும் பசை வறந்திடினும், வான்
மண்டலம் தொடுவது, அம் மலையின்மேல் மலை எனக்
கண்டனன், துந்துபி, கடல் அனான், உடல்அரோ! 1

'தென் புலக் கிழவன் ஊர் மயிடமோ? திசையின் வாழ்
வன்பு உலக் கரி மடிந்தது கொலோ? மகரமீன்
என்பு உலப்புற உலர்ந்தது கொலோ? இது எனா,
அன்பு உலப்பு அரிய நீ, உரை செய்வாய்' என, அவன், 2

**துந்துபியின் வரலாறு**

'துந்துபிப் பெயருடைச் சுடு சினத்து அவுணன், மீது
இந்துவைத் தொட நிமிர்ந்து எழு மருப்பு இணையினான்,
மந்தரக் கிரி எனப் பெரியவன், மகர நீர்
சிந்திட, கரு நிறத்து அரியினைத் தேடுவான். 3

19. தேவு - சிவன்; 20. விதியினார் - நல்லூழ், ஆர் சிறப்புப் பொருளில் வந்தது.

5: 2. மயிடம் - எருமைக் கடா; உலம் - திரண்ட கல்; உலப்புற - ஒழியும்படி.

'அங்கு வந்து அரி எதிர்ந்து, ''அமைதி என்?'' என்றலும்,
''பொங்கு வெஞ் செருவினில் பொருதி'' என்று உரைசெய,
''கங்கையின் கணவன், அக் கறை மிடற்று இறைவனே
உங்கள் வெங் கத வலிக்கு ஒருவன்'' என்று உரைசெய்தான். 4

'கடிது சென்று, அவனும், அக் கடவுள்தன் கயிலையை,
கொடிய கொம்பினின் மடுத்து எழுதலும், குறுகி, ''முன்
நொடிதி; நின் குறை என்?'' என்றலும், நுவன்றனன்அரோ,
''முடிவு இல வெஞ் செரு, எனக்கு அருள் செய்வான் முயல்க!'' எனா, 5

' ''மூலமே, வீரமே மூடினாயோடு, போர்
ஏலுமே? தேவர்பால் ஏகு'' எனா, ஏவினான்—
''சால நாள் போர் செய்வாய் ஆதியேல், சாரல்; போர்
வாலிபால் ஏகு'' எனா—வான் உளோர் வான் உளான். 6

'அன்னவன் விட, உவந்து, அவனும் வந்து, ''அரிகள்தம்
மன்னவன்! வருக! போர் செய்க!'' எனா, மலையினைச்
சின்னபின்னம் படுத்திடுதலும், சினவி, என்
முன்னவன், முன்னர் வந்து அனையவன் முனைதலும், 7

'இருவரும் திரிவுறும்பொழுதின் இன்னவர்கள் என்று
ஒருவரும் சிறிது உணர்ந்திலர்கள்; எவ்உலகினும்,
வெருவரும் தகைவுஇலர், விழுவர், நின்று எழுவரால்;
மருவ அருந் தகையர், தானவர்கள் வானவர்கள்தாம். 8

'தீ எழுந்தது, விசும்புற; நெடுந் திசை எலாம்
போய் எழுந்தது, முழக்கு; உடன் எழுந்தது, புகை;
தோய நன் புணரியும், தொடர் தடங் கிரிகளும்,
சாய் அழிந்தன;—அடித்தலம் எடுத்திடுதலால். 9

'அற்றது ஆகிய செருப் புரிவுறும் அளவினில்,
கொற்ற வாலியும், அவன், குலவு தோள் வலியொடும்
பற்றி, ஆசையின் நெடும் பணை மருப்பு இணை பறித்து,
எற்றினான்; அவனும், வான் இடியின் நின்று உரறினான். 10

'தலையின்மேல் அடி பட, கடிது சாய் நெடிய தாள்
உலைய, வாய் முழை திறந்து உதிரஆறு ஒழுக, மா
மலையின்மேல் உரும் இடித்தென்ன, வான் மண்ணொடும்
குலைய, மா திசைகளும் செவிடுற,—குத்தினான்.† 11

6. மூலமே - பண்டுதொட்டு; மூடுதல் - மிகுந்திருத்தல்; வான் உளோர் வான் உளான் - தேவ லோகத்தில் உள்ள தேவர்களுள் உயர்ந்துள்ளவனான இந்திரன்; 8. தகைவு - தன்மை; 9. தோயம் - நீர்; சாய் - (தத்தமது) நிலைமை; 11. சாய் - சாய்ந்து; வீழ்ந்து.

'கவரி இங்கு இது என, கரதலம்கொடு திரித்து
இவர்தலும், குருதி பட்டு இசைதொறும் திசைதொறும்,
துவர் அணிந்தன என, பொசி துதைந்தன—துணைப்
பவர் நெடும் பணை மதம் பயிலும் வன் கரிகளே. 12

'புயல் கடந்து, இரவிதன் புகல் கடந்து, அயல் உளோர்
இயலும் மண்டிலம் இகந்து, எனையவும் தவிர, மேல்
வயிர வன் கரதலத்து அவன் வலித்து எறிய, அன்று
உயிரும் விண் படர, இவ் உடலும் இப் பரிசுஅரோ! 13

'முட்டி, வான் முகடு சென்று அளவி, இம் முடை உடற்
கட்டி, மால் வரையை வந்து உறுதலும், கருணையான்
இட்ட சாபமும், எனக்கு உதவும்' என்று இயல்பினின்,
பட்டவா முழுவதும், பரிவினுல் உரைசெய்தான். 14

**இலக்குவன் துந்துபியின் உடலை உந்துதல்**

கேட்டனன், அமலனும், கிளந்தவாறு எலாம்,
வாள் தொழில் இளவலை, 'இதனை, மைந்த! நீ
ஓட்டு' என, அவன் கழல் விரலின் உந்தினுன்;
மீட்டு, அது விரிஞ்சன் நாடு உற்று மீண்டதே! 15

## 6                    கலன் காண் படலம்

**இராமனிடம், சுக்கிரீவன் சில செய்திகள் தெரிவித்தல்**

ஆயிடை, அரிக்குலம் அசனி அஞ்சிட
வாய் திறந்து ஆர்த்தது; வள்ளல், ஓங்கிய
தூய நல் சோலையில் இருந்த சூழல்வாய்,
'நாயக! உணர்த்துவது உண்டு நான்' எனு, 1

'இவ் வழி, யாம் இயைந்து இருந்தது ஓர் இடை,
வெவ் வழி இராவணன் கொணர, மேலைநாள்,
செவ் வழி நோக்கி, நின் தேவியே கொலாம்,
கவ்வையின் அரற்றினள், கழிந்த சேண் உளாள்? 2

12. கவரி - சாமரம், எருமைக்கடா; இவர்தல் - உலாவுதல்; துவர் - சிவப்பு; 14. கட்டி - பிண்டம்; கருணையான் - மதங்க முனிவன்.

6 : 1. சூழல் - சமயம்; 2. கழிந்த சேண் - கண்ணுக்குப் புலப்படாத மிக்க உயரம்; சேண் - வானம்.

' ''உழையரின் உணர்த்துவது உளது'' என்று உன்னியோ?
குழை பொரு கண்ணினாள் குறித்தது ஓர்ந்திலம்;
மழை பொரு கண் இணை வாரியோடு தன்
இழை பொதிந்து இட்டனள்; யாங்கள் ஏற்றனம். 3

சீதையின் அணிகலன்களைக் கண்ட இராமன் நிலை

'வைத்தனம் இவ் வழி;—வள்ளல்!—நின் வயின்
உய்த்தனம் தந்தபோது உணர்தியால்' எனா,
கைத்தலத்து அன்னவை கொணர்ந்து காட்டினான்;—
நெய்த்தலைப் பால் கலந்தனைய நேயத்தான். 4

தெரிவுற நோக்கினன், தெரிவை மெய் அணி;
எரி கனல் எய்திய மெழுகின் யாக்கைபோல்
உருகினன் என்கிலம்; உயிருக்கு ஊற்றம் ஆய்ப்
பருகினன் என்கிலம்; பகர்வது என்கொல் யாம்? 5

நல்குவது என் இனி? நங்கை கொங்கையைப்
புல்கிய பூணும், அக் கொங்கை போன்றன;
அல்குலின் அணிகளும், அல்குல் ஆயின;
பல் கலன் பிறவும், அப் படிவம் ஆனவே. 6

விட்ட பேர் உணர்வினை விளித்த என்கெனோ?
அட்டன உயிரை அவ் அணிகள் என்கெனோ?
கொட்டின சாந்து எனக் குளிர்ந்த என்கெனோ?
சுட்டன என்கெனோ? யாது சொல்லுகேன்? 7

மோந்திட, நறு மலர் ஆன; மொய்ம்பினில்
ஏந்திட, உத்தரியத்தை ஏய்ந்தன;
சாந்தமும் ஆய், ஒளி தழுவ, போர்த்தலால்,
பூந் துகில் ஆய, அப் பூவை பூண்களே. 8

ஈர்த்தன, செங் கண் நீர் வெள்ளம், யாவையும்;
போர்த்தன, மயிர்ப் புறம் புளகம்; பொங்கு தோள்,
வேர்த்தன என்கெனோ? வெதும்பினான் என்கோ?
தீர்த்தனை, அவ் வழி, யாது செப்புகேன்? 9

3. உழையரின் - தூதர்கள் போல; 4. நெய்த்தலை - நெய்யினிடத்து; தலை - ஏழன் உருபு; நெய் - தேனும் ஆம்; 6. படிவம் - உறுப்புகள்; 7. விட்ட - நீங்கிய; விளித்த - வருவித்தன; 8. மொய்ம்பு - தோள்; 9. ஈர்த்தன - இழுத்துச் சென்றன.

சுக்கிரீவன் தேறுதல் மொழி

விடம் பரந்தனையது ஓர் வெம்மை மீக்கொள,
நெடும் பொழுது, உணர்வினோடு உயிர்ப்பு நீங்கிய
தடம் பெருங் கண்ணனைத் தாங்கினான், தனது
உடம்பினில் செறி மயிர் சுறுக்கென்று ஏறவே. 10

தாங்கினன் இருத்தி, அத் துயரம் தாங்கலாது
ஏங்கிய நெஞ்சினன், இரங்கி விம்முவான்—
'வீங்கிய தோளினாய்! வினையினேன் உயிர்
வாங்கினென், இவ் அணி வருவித்தே' எனா, 11

அயனுடை அண்டத்தின் அப் புறத்தையும்
மயர்வு அற நாடி என் வலியும் காட்டி, உன்
உயர் புகழ்த் தேவியை உதவற்பாலெனால்;
துயர் உழந்து அயர்தியோ, சுருதி நூல் வலாய்? 12

'திருமகள் அனைய அத் தெய்வக் கற்பினாள்
வெருவரச் செய்துள வெய்யவன் புயம்
இருபதும், ஈர்-ஐந்து தலையும், நிற்க; உன்
ஒரு கணைக்கு ஆற்றுமோ, உலகம் ஏழுமே? 13

'ஈண்டு நீ இருந்தருள்; ஏழொடு ஏழ் எனாப்
பூண்ட பேர் உலகங்கள் வலியின் புக்கு, இடை
தேண்டி, அவ் அரக்கனைத் திருகி, தேவியைக்
காண்டி; யான் இவ் வழிக் கொணரும் கைப்பணி.' 14

'ஏவல் செய் துணைவரேம், யாங்கள்; ஈங்கு, இவன்,
தா அரும் பெரு வலித் தம்பி; நம்பி! நின்
சேவகம் இதுஎனின், சிறுக நோக்கல் என்?
மூவகை உலகும் நின் மொழியின் முந்துமோ? 15

'பெருமையோர் ஆயினும், பெருமை பேசலார்;
கருமமே அல்லது பிறிது என் கண்டது?
தருமம், நீ அல்லது தனித்து வேறு உண்டோ?
அருமை ஏது உனக்கு? நின்று அவலம் கூர்தியோ? 16

'முளரிமேல் வைகுவான், முருகன்-தந்த அத்
தளிரியல் பாகத்தான், தடக் கை ஆழியான்,
அளவி ஒன்று ஆவரே அன்றி,—ஐயம் இல்
கிளவியாய்!—தனித் தனி கிடைப்பரோ துணை? 17

14. கைப்பணி - கைத்தொண்டு, குற்றேவல்; 15. சேவகம் - வீரம்; சிறுக நோக்கல் - (உன்னை நீ) குறையுடையவனாகக் கருதுதல்; 17. அளவி - இணைந்து; துணை - ஒப்பு.

'என்னுடைச் சிறு குறை முடித்தல் ஈண்டு ஒரீஇப்
பின்னுடைத்து ஆயினும் ஆக! பேதுறும்
மின் இடைச் சனகியை மீட்டு, மீள்துமால்—
பொன்னுடைச் சிலையினாய்!—விரைந்து போய்' என்றான். 18

இராமன் சிறிது தெளிந்து, மறுமொழி பகர்தல்

எரி கதிர்க் காதலன் இனைய கூறலும்,
அருவி அம் கண் திறந்து, அன்பின் நோக்கினான்;
திரு உறை மார்பனும், தெளிவு தோன்றிட,
ஒருவகை உணர்வு வந்து, உரைப்பதுஆயினான்: 19

'விலங்கு எழில் தோளினாய், வினையினேனும், இவ்
இலங்கு வில் கரத்திலும், இருக்கவே, அவள்
கலன் கழித்தனள்; இது, கற்பு மேவிய
பொலன் குழைத் தெரிவையர் புரிந்துளோர்கள் யார்? 20

'வாள் நெடுங் கண்ணி என் வரவு நோக்க, யான்,
தாள் நெடுங் கிரியொடும், தடங்கள்தம்மொடும்,
பூணொடும், புலம்பினென் பொழுது போக்கி, இந்
நாண் நெடுஞ் சிலை சுமந்து, உழல்வென்; நாண் இலேன். 21

'ஆறுடன் செல்பவர், அம் சொல் மாதரை
வேறு உளார் வலி செயின், விலக்கி, வெஞ் சமத்து
ஊறுற, தம் உயிர் உகுப்பர்; என்னையே
தேறினள் துயரம், நான் தீர்க்ககிற்றிலேன். 22

'கருங் கடல் தொட்டனர்; கங்கை தந்தனர்;
பொரும் புலி மானொடு புனலும் ஊட்டினர்;
பெருந் தகை என் குலத்து அரசர்; பின், ஒரு
திருந்திழை துயரம் நான் தீர்க்ககிற்றிலேன். 23

'இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் தீர்த்து, இகல்
அந்தகற்கு அரிய போர் அவுணன்-தேய்த்தனன்,
எந்தை; மற்று, அவனின் வந்து உதித்த யான், உளேன்,
வெந் துயர்க் கொடும் பழி வில்லின் தாங்கினேன். 24

20. விலங்கு தோள் - மலைபோன்ற தோள்; 23. கடல் தொட்டவர் சகரரும், கங்கை தந்தவர் பகீரத மன்னரும், புலியையும் மானையும் ஒரு துறையில் நீருண்ணச் செய்தவர் மாந்தாதாவும் ஆவர்; புலி மானொடு புனலும் ஊட்டினர் என்பது வலியவை எளியவற்றை வருத்தாதபடி ஆட்சி செய்தனர் எனப் பொருள்படும்.

'"விரும்பு எழில் எந்தையார் மெய்ம்மை வீயுமேல்,
வரும் பழி" என்று, யான் மகுடம் சூடலேன்;
கரும்பு அழி சொல்லியைப் பகைஞன் கைக்கொள,
பெரும் பழி சூடினேன்; பிழைத்தது என்அரோ?' 25

**இராமன் துயரால் மீண்டும் சோர, சுக்கிரீவன் ஆற்றுவித்தல்**

என்ன நொந்து, இன்னன பன்னி, ஏங்கியே,
துன்ன அருந் துயரத்துச் சோர்கின்றான்தனை,
பன்ன அருங் கதிரவன் புதல்வன், பையுள் பார்த்து,
அன்ன வெந் துயர் எனும் அளக்கர் நீக்கினான். 26

**இராமன், 'நின் குறை முடித்தன்றி வேறு யாதும் செய்கலேன்' எனல்**

'ஐய, நீ ஆற்றலின் ஆற்றினேன்அலது,
உய்வெனோ? எனக்கு இதின் உறுதி வேறு உண்டோ?
வையகத்து, இப் பழி தீர மாய்வது
செய்வென்; நின்குறை முடித்து அன்றிச் செய்கலேன்.' 27

**அப்பொழுது அனுமன், இராமனை நோக்கிப் பேசுதல்**

என்றனன் இராகவன்; இனைய காலையில்,
வன் திறல் மாருதி வணங்கினான்; 'நெடுங்
குன்று இவர் தோளினாய்! கூற வேண்டுவது
ஒன்று உளது; அதனை நீ உணர்ந்து கேள்!' எனா, 28

'கொடுந் தொழில் வாலியைக் கொன்று, கோமகன்
கடுங் கதிரோன் மகன் ஆக்கி, கை வளர்
நெடும் படை கூட்டினால் அன்றி, நேட அரிது,
அடும் படை அரக்கர்தம் இருக்கை—ஆணையாய்! 29

'வானதோ? மண்ணதோ? மற்று வெற்பதோ?
ஏனை மா நாகர்தம் இருக்கைப் பாலதோ?—
தேன் உலாம் தெரியலாய்!—தெளிவது அன்று, நாம்,
ஊன் உடை மானிடம் ஆனது உண்மையால்! 30

'எவ் உலகங்களும் இமைப்பின் எய்துவர்,
வவ்வுவர், அவ் வழி மகிழ்ந்த யாவையும்;
வெவ் வினை வந்தென வருவர், மீள்வரால்;
அவ் அவர் உறைவிடம் அறியற்பாலதோ? 31

25. பிழைத்தது என்? - பழியினின்று நீங்கியது எங்ஙனம்? 26. பையுள் - துன்பம்; 27. உய்வெனோ - உயிர் தாங்கி இருப்பேனோ? உறுதி - நல்லது; 28. இவர்தல் - ஒத்தல்; 29. கை வளர் - செழித்து வளர்ந்துள்ள; 30. ஊன் - ஊனம், குறைபாடு.

'ஒரு முறையே பரந்து உலகம் யாவையும்,
திரு உறை வேறு இடம் தேரவேண்டுமால்;
வரன்முறை நாடிட, வரம்பு இன்ருல் உலகு;
அருமை உண்டு; அளப்ப அரும் ஆண்டும் வேண்டுமால். 32

'ஏழு-பத்து ஆகிய வெள்ளத்து எம் படை,
ஊழியில் கடல் என உலகம் போர்க்குமால்;
ஆழியைக் குடிப்பினும், அயன் செய் அண்டத்தைக்
கீழ் மடுத்து எடுப்பினும், கிடைத்த செய்யுமால். 33

வாலி இருக்கும் இடத்திற்கு அனைவரும் செல்லுதல்

'ஆதலால், அன்னதே அமைவது ஆம் என,
நீதியாய்! நினைந்தனென்' என, நிகழ்த்தினன்;
'சாது ஆம்' என்ற, அத் தனுவின் செல்வனும்,
'போதும் நாம் வாலிபால்' என்ன, போயினர். 34

## 7 வாலி வதைப் படலம்

இராமன் முதலியோர் சென்ற மலைவழி

வெங் கண் ஆளிஏறும், மீளி மாவும், வேக நாகமும்,
சிங்கஏறு இரண்டொடும் திரண்ட அன்ன செய்கையார்,
தங்கு சாலம், மூலம் ஆர் தமாலம், ஏலம், மாலைபோல்
பொங்கு நாகமும், துவன்று, சாரலூடு போயினர். 1

உழை உலாம் நெடுங் கண் மாதர் ஊசல்; ஊசல் அல்லவேல்,
தழை உலாவு சந்து அலர்ந்த சாரல்; சாரல் அல்லவேல்,
மழை உலாவு முன்றில்; அல்ல, மன்றல் நாறு சண்பகக்
குழை உலாவு சோலை; சோலை அல்ல, பொன் செய் குன்றமே. 2

அறங்கள் நாறும் மேனியார், அரிக் கணங்களோடும், அங்கு
இறங்கு போதும், ஏறு போதும், ஈறு இலாத ஓதையால்,
கறங்கு வார் கழல் கலன் கலிப்ப, முந்து கண் முகிழ்த்து
உறங்கு மேகம், நன்கு உணர்ந்து, மாக மீது உலாவுமே. 3

33. கீழ் மடுத்து - கையைக் கீழே செலுத்தி; 34. சாது - தக்கது, நல்லது; அங்கீகாரத்தை உணர்த்தும் வடசொல்.

7: 1. மீளி மா - புலிப்போத்து; 2. உலாம் - போலும், உவம உருபு; 3. நாறும் - விளங்கும்.

நீடு நாகமூடு மேகம் ஓட, நீரும் ஓட, நேர்
ஆடு நாகம் ஓட, மான் யானை ஓட, ஆளி போம்—
மாடு நாகம் நீடு சாரல், வாளை ஓடும் வாவியூடு
ஓடு நாகம் ஓட, வேங்கை ஓடும், யூகம் ஓடவே. 4

மருண்ட மா மலைத் தடங்கள் செல்லல் ஆவ அல்ல—மால்
தெருண்டிலாத மத்த யானை சீறி நின்று சிந்தலால்,
இருண்ட காழ் அகில், தடத்தொடு இற்று வீழ்ந்த சந்து வந்து
உருண்டபோது, அழிந்த தேன் ஒழுக்கு பேர் இழுக்கினே! 5

மினல் மணிக் குலம் துவன்றி, வில் அலர்ந்து, விண் குலாய்,
அனல் பரப்பல் ஒப்ப, மீது இமைப்ப, வந்து அவிப்பபோல்
புனல் பரப்பல் ஒப்பு இருந்த பொன் பரப்பும் என்பரால்—
இனைய வில் தடக் கை வீரர் ஏகுகின்ற குன்றமே. 6

மருவி ஆடும் வாவிதோறும் வான யாறு பாயும், வந்து;
இருவி ஆர் தடங்கள்தோறும் ஏறு பாயுமாறுபோல்,
அருவி பாயும்; முன்றில், ஒன்றி யானை பாயும்; ஏனலில்,
குருவி பாயும்; ஓடி, மந்தி கோடு பாயும்—மாடு எலாம். 7

தேன் இழுக்கு சாரல் வாரி செல்ல, மீது செல்லும் நாள்-
மீன் இழுக்கும்; அன்றி, வானவில் இழுக்கும்; வெண் மதிக்
கூன் இழுக்கும்; மற்று உலாவு கோள் இழுக்கும்; என்பரால்—
வான் இழுக்கும் ஏல வாச மன்றல் நாறு குன்றமே. 8

**வாலியின் இருப்பிடம் சார்ந்து, ஒருவர்க்கொருவர் ஆலோசித்தல்**

அன்னது ஆய குன்றின் ஆறு, சென்ற வீரர், ஐந்தொடு ஐந்து
உன்னல் ஆய யோசனைக்கும் உம்பர் ஏறி, இம்பரில்
பொன்னின் நாடு இழிந்தது அன்ன, வாலி வாழ் பொருப்பு இடம்
துன்னினார்கள்; 'செய்வது என்னை?' என்று நின்று சொல்லுவார்: 9

**இராமன் தன் கருத்தை வெளியிடுதல்**

அவ் இடத்து, இராமன், 'நீ அழைத்து, வாலி ஆனது ஓர்
வெவ் விடத்தின் வந்து போர் விளைக்கும் எல்வை, வேறு நின்று
எவ்விடத் துணிந்து அமைந்தது; என் கருத்து இது' என்றனன்;
தெவ் அடக்கும் வென்றியானும், 'நன்று இது' என்று சிந்தியா,

4. நாகம் - மலை, பாம்பு, சுரபுன்னை, நீர்ப் பாம்பு; யூகம் - கருங்குரங்கு; 5. செல்லல் ஆவ - செல்லத்தக்கன; சிந்தலால் - தாக்குதலினால்; தடம் - மலைப்பக்கம்; 6. வில் அலர்ந்து - ஒளியினால் பரவி; பொன் பரப்பும் - பொன்னொளியைப் பரவச் செய்யும்; 7. இருவி - கதிர் கொய்யப்பட்ட தட்டை; ஏறு - காளை; 8. வாரி செல்ல - வெள்ளம் பெருகுதலால்; வான் - வானத்தில் உள்ள தேவர்கள்; ஏலம் - ஏலக்காய்; 10. எல்வை - பொழுது; எவ்விட - ஏ விட, அம்பு விட.

### சுக்கிரீவன் வாலியைப் போருக்கு அழைத்தல்

வார்த்தை அன்னது ஆக, வான் இயங்கு தேரினான் மகன்,
நீர்த் தரங்க வேலை அஞ்ச, நீல மேகம் நாணவே,
வேர்த்து மண்உளோர் இரிந்து, விண்உளோர்கள் விம்ம, மேல்
ஆர்த்த ஓசை, ஈசன் உண்ட அண்டம் முற்றும் உண்டதே. 11

இடித்து, உரப்பி, 'வந்து போர் எதிர்த்தியேல் அடர்ப்பென்' என்று,
அடித்தலங்கள் கொட்டி, வாய் மடித்து, அடுத்து, அலங்கு தோள்
புடைத்து நின்று, உளைத்த பூசல் புக்கது என்ப—மிக்கு இடம்
துடிப்ப, அங்கு, உறங்கு வாலி திண் செவித் துளைக்கணே. 12

### வாலி போருக்கு எழுதல்

மால் பெருங் கட கரி முழக்கம் வாள் அரி
ஏற்பது செவித்தலத்து என்ன, ஓங்கிய
ஆர்ப்பு ஒலி கேட்டனன்—அமளிமேல் ஒரு
பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான். 13

உருத்தனன் பொர எதிர்ந்து இளவல் உற்றமை,
வரைத் தடந் தோளினான், மனத்தின் எண்ணினான்;
சிரித்தனன்; அவ் ஒலி, திசையின் அப் புறத்து
இரித்தது, அவ் உலகம் ஓர் ஏழொடு ஏழையும். 14

எழுந்தனன், வல் விரைந்து, இறுதி ஊழியில்
கொழுந் திரைக் கடல் கிளர்ந்தனைய கொள்கையான்;
அழுந்தியது, அக் கிரி; அருகில் மால் வரை
விழுந்தன, தோள் புடை விசித்த காற்றினே. 15

போய்ப் பொடித்தன மயிர்ப் புறத்த, வெம் பொறி;
காய்ப்பொடு உற்று எழு வட கனலும் கண் கெட,
தீப் பொடித்தன, விழி; தேவர் நாட்டினும்
மீப் பொடித்தன புகை, உயிர்ப்பு வீங்கவே. 16

கைக் கொடு கைத்தலம் புடைப்ப, காவலின்
திக் கயங்களும் மதச் செருக்குச் சிந்தின;
உக்கன உரும்இனம்; உலைந்த உம்பரும்;
நெக்கன, நெரிந்தன, நின்ற குன்றமே. 17

12. அடித்தலங்கள் - கால்கள்; 14. உருத்தல் - சினந்து நோக்குதல்; 16. காய்ப்பு - கொதிப்பு, கோபமும் ஆம்.

'வந்தனென்! வந்தனென்!' என்ற வாசகம்
இந்திரி முதல் திசை எட்டும் கேட்டன;
சந்திரன் முதலிய தாரகைக் குழாம்
சிந்தின, மணி முடிச் சிகரம் தீண்டவே. 18

வீசின காற்றின் வேர் பறிந்து, வெற்புஇனம்
ஆசையை உற்றன; அண்டப் பித்திகை
பூசின, வெண் மயிர் பொடித்த வெம் பொறி;
கூசினன் அந்தகன்; குலைந்தது உம்பரே. 19

கடித்த வாய் எயிறு உகு கனல்கள் கார் விசும்பு
இடித்த வாய் உகும் உரும்இனத்தின் சிந்தின;
தடித்து வீழ்வன எனத் தகர்ந்து சிந்தின,
வடித்த தோள்வலயத்தின் வயங்கு காசுஅரோ. 20

ஞாலமும், நால் திசைப் புனலும், நாகரும்,
மூலமும், முற்றிட முடிவில் தீக்கும் அக்
காலமும் ஒத்தனன்; கடலில் தான் கடை
ஆலமும் ஒத்தனன், எவரும் அஞ்சவே. 21

தாரை விலக்கவும், வாலி மறுத்துக் கூறுதல்

ஆயிடை, தாரை என்று அமிழ்தின் தோன்றிய
வேயிடைத் தோளினாள், இடை விலக்கினாள்;
வாயிடைப் புகை வர, வாலி கண் வரும்
தீயிடை, தன் நெடுங் கூந்தல் தீகின்றாள். 22

'விலக்கலை; விடு; விடு; விளித்துளான் உரம்
கலக்கி, அக் கடல் கடைந்து அமுது கண்டென,
உலக்க இன் உயிர் குடித்து, ஒல்லை மீள்குவல்,
மலைக் குல மயில்!' என, மடந்தை கூறுவாள்: 23

'கொற்றவ! நின் பெருங் குவவுத் தோள் வலிக்கு
இற்றனன், முன்னை நாள், ஈடு உண்டு ஏகினான்;
பெற்றிலன் பெருந் திறல்; பெயர்த்தும் போர் செயற்கு
உற்றது, நெடுந் துணை உடைமையால்' என்றாள். 24

81. இந்திரி - கிழ்த்திசை; 19. அண்டப் பித்திகை - அண்டகோளத்தின் சுற்றுச்சுவர்; 20. தடித்து - மின்னல்; 21. மூலம் - முதற்காரணமாகிய மகத் தத்துவம்; 23. குல மயில் - சிறந்த மயில்; 24. ஈடு உண்டு - வருத்தமுற்று.

'மூன்று என முற்றிய முடிவு இல் பேர் உலகு
ஏன்று, உடன் உற்றன, எனக்கு நேர் எனத்
தோன்றினும், தோற்று, அவை தொலையும் என்றலின்
சான்று உள; அன்னவை—தையல்!—கேட்டியால்: 25

'மந்தர நெடு வரை மத்து, வாசுகி
அந்தம் இல் கடை கயிறு, அடை கல் ஆழியான்,
சந்திரன் தூண், எதிர் தருக்கின் வாங்குநர்,
இந்திரன் முதலிய அமரர், ஏனையோர்; 26

'பெயர்வுற வலிக்கவும், மிடுக்கு இல் பெற்றியார்
அயர்வுறல் உற்றதை நோக்கி, யான், அது
தயிர் எனக் கடைந்து, அவர்க்கு அமுதம் தந்தது,
மயில் இயல் குயில்மொழி! மறக்கல் ஆவதோ? 27

'ஆற்றல் இல் அமரரும், அவுணர் யாவரும்,
தோற்றனர்; ஏனையவர் சொல்லற்பாலரோ?
கூற்றும், என் பெயர் சொலக் குலையும்; ஆர், இனி
மாற்றவர்க்கு ஆகி வந்து, எதிரும் மாண்பினர்? 28

'பேதையர் எதிர்குவர்எனினும், பெற்றுடை
ஊதிய வரங்களும், உரமும், உள்ளதில்
பாதியும், என்னதால்; பகைப்பது எங்ஙனம்?
நீ, துயர் ஒழிக!' என, நின்று கூறினான். 29

அன்னது கேட்டவள், 'அரச!' ''ஆயவற்கு
இன் உயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன்,
உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான்'' என,
துன்னிய அன்பினர் சொல்லினார்' என்றாள். 30

'உழைத்த வல் இரு வினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறு எலாம்
இழைத்தவற்கு, இயல்பு அல இயம்பி என் செய்தாய்?
பிழைத்தனை; பாவி! உன் பெண்மையால்' என்றான். 31

'இருமையும் நோக்குறும் இயல்பினாற்கு இது
பெருமையோ? இங்கு இதில் பெறுவது என்கொலோ?
அருமையின் நின்று, உயிர் அளிக்கும் ஆறுடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான்அரோ? 32

25. ஏன்று - இணங்கி; நேர் - பகை; 26. அடை கல் - ஆதாரமான பீடம்; ஆழியான் - ஆமை வடிவு கொண்ட திருமால்; 31. உழைத்த - தாம் செய்து சேர்த்த; ஊறு - அழிவு.

'ஏற்ற பேர் உலகு எலாம் எய்தி, ஈன்றவள்
மாற்றவள் ஏவ, மற்று, அவள்தன் மைந்தனுக்கு
ஆற்ற அரும் உவகையால் அளித்த ஐயனைப்
போற்றலை; இன்னன புகறல்பாலையோ?' 33

'நின்ற பேர் உலகு எலாம் நெருக்கி நேரினும்,
வென்றி வெஞ் சிலை அலால், பிறிது வேண்டுமோ?
தன் துணை ஒருவரும், தன்னில் வேறு இலான்,
புன் தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ? 34

'தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர்
இம்பரின் இலது என எண்ணி ஏய்ந்தவன்,
எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்
அம்பு இடை தொடுக்குமோ, அருளின் ஆழியான்? 35

'இருத்தி, நீ, இறை, இவண், இமைப்பு இல் காலையில்,
உருத்தவன் உயிர் குடித்து, உடன் வந்தாரையும்
கருத்து அழித்து, எய்துவென்; கலங்கல்' என்றனன்;
விரைக் குழல், பின், உரை விளம்ப அஞ்சினள். 36

வாலி போரை விரும்பி, குன்றின் புறத்து வருதல்

ஒல்லை, செரு வேட்டு, உயர் வன் புய ஓங்கல் உம்பர்
எல்லைக்கும் அப்பால் இவர்கின்ற இரண்டினோடும்,
மல்லல் கிரியின்தலை வந்தனன், வாலி—கீழ்பால்,
தொல்லைக் கிரியின்தலை தோற்றிய ஞாயிறு என்ன. 37

நின்றான், எதிர் யாவரும் நெஞ்சு நடுங்கி அஞ்ச,
தன் தோள் வலியால் தகை மால் வரை சாலும் வாலி,
குன்றூடு வந்து உற்றனன்—கோள் அவுணன் குறித்த
வன் தூணிடைத் தோன்றிய மா நரசிங்கம் என்ன. 38

ஆர்க்கின்ற பின்னோன்தனை நோக்கினன்; தானும் ஆர்த்தான்;
வேர்க்கின்ற வானத்து உரும்ஏறு வெறித்து வீழப்
போர்க்கின்றது, எல்லா உலகும் பொதிர்வுற்ற பூசல்—
கார்க் குன்றம் அன்னான் நிலம் தாவிய கால் இது என்ன. 39

33. ஈன்றவள் மாற்றவள் - மாற்றாந்தாய்; 34. வேண்டுமோ? - துணையாக வேண்டுமோ? 36. இறை - சிறிது நேரம்; 38. கோள் - கொடுமை; அவுணன் - இரணியன்; 39. பொதிர்வுறுதல் - பக்கங்களில் பரந்து திமிர்தல்.

### வாலி-சுக்கிரீவர்களை இராமன் வியந்து, இளவலுக்குக் கூறுதல்

அவ் வேலை, இராமனும், அன்புடைத் தம்பிக்கு, ‘ஐய!
செவ்வே செல நோக்குதி; தானவர் தேவர் நிற்க,
எவ் வேலை, எம் மேகம், எக் காலொடு எக் கால வெந் தீ,
வெவ் வேறு உலகத்து இவர் மேனியை மானும்?’ என்றான். 40

### இலக்குவன் சுக்கிரீவனை ஐயுற்றுக் கூறுதல்

வள்ளற்கு, இளையான் பகர்வான், ‘இவன், தம்முன் வாழ்நாள்
கொள்ள, கொடுங் கூற்றுவனைக் கொணர்ந்தான்; குரங்கின்
எள்ளற்குறு போர் செய எண்ணினன் என்னும் இன்னல்
உள்ளத்தின் ஊன்ற, உணர்வு உற்றிலன் ஒன்றும்,’ என்றான்.

ஆற்றாது, பின்னும் பகர்வான், ‘அறத்தாறு அழுங்கத்
தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்விது அன்றால்;
மாற்றான் எனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்றான்,
வேற்றார்கள் திறத்து இவன் தஞ்சம் என்? வீர!’ என்றான். 42

### இளவலுக்கு இராமன் மறுமொழி பகர்தல்

‘அத்தா! இது கேள்’ என, ஆரியன் கூறுவான், ‘இப்
பித்து ஆய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?
எத் தாயர் வயிற்றினும், பின் பிறந்தார்கள் எல்லாம்
ஒத்தால், பரதன் பெரிது உத்தமன் ஆதல் உண்டோ? 43

‘வில் தாங்கு வெற்பு அன்ன விலங்கு எழில் தோள! ‘‘மெய்ம்மை
உற்றார் சிலர்; அல்லவரே பலர்’’ என்பது உண்மை.
பெற்றாருழைப் பெற்ற பயன் பெறும் பெற்றி அல்லால்,
அற்றார் நவை என்றலுக்கு ஆகுநர், ஆர்கொல்?’ என்றான். 44

### வாலி-சுக்கிரீவன் போர்

வீரத் திறலோர், இவை இன்ன விளம்பும் வேலை,
தேரில் திரிவான் மகன், இந்திரன் செம்மல், என்று இப்
பாரில் திரியும் பனி மால் வரை அன்ன பண்பார்,
மூரித் திசை யானை இரண்டு என, முட்டினாரே. 45

குன்றோடு குன்று ஒத்தனர்; கோள் அரிக் கொற்ற வல் ஏறு
ஒன்றோடு சென்று, ஒன்று எதிர் உற்றனவேயும் ஒத்தார்;
நின்றார்; திரிந்தார் நெடுஞ் சாரி; நிலம் திரிந்த,
வன் தோள் குயவன் திரி மட்கலத்து ஆழி என்ன, 46

42. தஞ்சம் - உற்ற துணை; 43. அத்தா! - அப்பா! பித்து ஆய - பகுத்தறிவு அற்றதாகிய; 44. பெற்ற பயன் - காணப்பெற்ற நற் பண்புகளால் விளையும் நலன்கள்; 46. சாரி - வலமுறை இட முறையாகச் சுற்றல்.

தோளோடு தோள் தேய்த்தலின், தொல் நிலம் தாங்கல் ஆற்றுத்
தாளோடு தாள் தேய்த்தலின், தந்த தழல் பிறங்கல்,
வாளோடு மின் ஓடுவபோல், நெடு வானின் ஓடும்—
கோளோடு கோள் உற்றென ஒத்து அடர்ந்தார், கொதித்தார்.

தம் தோள் வலி மிக்கவர், தாம் ஒரு தாய் வயிற்றின்
வந்தோர், மட மங்கை பொருட்டு மலைக்கலுற்றார்;
சிந்து ஓடு அரி ஒண் கண் திலோத்தமை காதல் செற்ற
சுந்தோபசுந்தப் பெயர்த் தொல்லையினேரும் ஒத்தார். 48

கடல் ஒன்றினொடு ஒன்று மலைக்கவும், காவல் மேருத்
திடல் ஒன்றினொடு ஒன்று அமர் செய்யவும், சீற்றம் என்பது
உடல் கொண்டு இரண்டு ஆகி உடற்றவும், கண்டிலாதேம்,
மிடல், இங்கு, இவர் வெந் தொழிற்கு ஒப்புரை வேறு காணேம்.

ஊகங்களின் நாயகர் வெங் கண் உமிழ்ந்த தீயால்,
மேகங்கள் எரிந்தன; வெற்பும் எரிந்த; திக்கின்
நாகங்கள் நடுங்கின; நானிலமும் குலைந்த;
மாகங்களை நண்ணிய விண்ணவர் போய் மறைந்தார். 50

'விண் மேலினரோ? நெடு வெற்பின் முகட்டினரோ?
மண் மேலினரோ? புற மாதிர வீதியாரோ?
கண் மேலினரோ?' என, யாவரும் காண நின்றார்,
புண்மேல் இரத்தம் பொடிப்ப, கடிப்பார், புடைப்பார். 51

ஏழ் ஒத்து, உடன் ஆம் திசை எட்டொடு இரண்டும் முட்டும்,
ஆழிக் கிளர் ஆர் கலிக்கு ஐம் மடங்கு ஆர்ப்பின் ஓசை;
பாழித் தடந் தோளினும் மார்பினும் கைகள் பாய,
ஊழிக் கிளர் கார் இடி ஒத்தது, குத்தும் ஓதை. 52

வெவ் வாய் எயிற்றால் மிடல் வீரர் கடிப்ப, மீச் சென்று,
அவ் வாய் எழு சோரிஅது, ஆசைகள்தோறும் வீச,
எவ் வாயும் எழுந்த கொழுஞ் சுடர் மீன்கள் யாவும்,
செவ்வாயை நிகர்த்தன; செக்கரை ஒத்த, மேகம். 53

48. மங்கை - உருமை; சிந்து - சிதறி; சுந்தோபசுந்தர் - சுந்தன் உபசுந்தன் என்னும் பெயரையுடைய பழைய அசுரர்கள், ஒரு தாய் மக்கள்; திலோத்தமை குறித்துத் தம்முள் மலைந்து மாண்டனர். 49. திடல் - மேடு, மலை; 50. ஊகம் - குரங்கு; 52. ஏழ் - ஏழ் கடல்கள்; 53. செவ்வாய் - செவ்வாய் என்னும் கோள்.

வெந்த வல் இரும்பிடை நெடுங் கூடங்கள் வீழ்ப்ப,
சிந்தி எங்கணும் சிதறுவபோல், பொறி தெறிப்ப,
இந்திரன் மகன் புயங்களும், இரவி சேய் உரனும்,
சந்த வல் நெடுந் தடக் கைகள் தாக்கலின், தகர்வ. 54

உரத்தினல் மடுத்து உந்துவர்; பாதம் இட்டு உதைப்பர்;
கரத்தினல் விசைத்து எற்றுவர்; கடிப்பர்; நின்று இடிப்பர்;
மரத்தினல் அடித்து உரப்புவர்; பொருப்புஇனம் வாங்கிச்
சிரத்தின்மேல் எறிந்து ஒறுக்குவர்; தெழிப்பர்; தீ விழிப்பர்.

எடுப்பர் பற்றி; உற்று ஒருவரை ஒருவர் விட்டு எறிவர்;
கொடுப்பர், வந்து, உரம்; குத்துவர் கைத்தலம் குளிப்ப;
கடுப்பினில் பெருங் கறங்கு எனச் சாரிகை பிறங்கத்
தடுப்பர்; பின்றுவர்; ஒன்றுவர்; தழுவுவர்; விழுவர். 56

வாலினல் உரம் வரிந்தனர், நெரிந்து உக வலிப்பர்;
காலினல் நெடுங் கால் பிணித்து உடற்றுவர்; கழல்வர்;
வேலினல் அற எறிந்தென, விறல் வலி உகிரால்,
தோலினல், உடன் நெடு வரை முழை எனத் தொளைப்பர். 57

மண்ணகத்தன மலைகளும், மரங்களும், மற்றும்
கண்ணகத்தினில் தோன்றிய யாவையும், கையால்,
எண் நகப் பறித்து எறிதலின், எற்றலின், இற்ற,
விண்ணகத்தினை மறைத்தன; மறி கடல் வீழ்ந்த. 58

வெருவிச் சாய்ந்தனர், விண்ணவர்; வேறு என்னை விளம்பல்?
ஒருவர்க்கு ஆண்டு அமர், ஒருவரும் தோற்றிலர்; உடன்று
செருவில் தேய்த்தலின், செங் கனல் வெண் மயிர்ச் செல்ல,
முரி புல் கானிடை எரி பரந்தன என முனைவார். 59

அன்ன தன்மையர், ஆற்றலின் அமர் புரி பொழுதின்,
வல் நெடுந் தடந் திரள் புயத்து அடு திறல் வாலி,
சொன்ன தம்பியை, தும்பியை அரி தொலைத்தென்ன,
கொல் நகங்களின், கரங்களின், குலைந்து, உக மலைந்தான். 60

54. சந்தம் - அழகு; 58. எண் நக - வலிமை விளங்க; 59. வெண் மயிர்ச் செல்ல - வெள்ளிய மயிர்க்கால்தோறும் வெளிப்பட; முரி புல் - உலர்ந்த புல்; 60. தும்பி - யானை.

இராமன் சுக்கிரீவனை, கொடிப் பூ அணிந்து சென்று பொரச் சொல்ல, அவ்வாறே சென்று சுக்கிரீவன் மலைதல்

மலைந்தபோது இளைந்து, இரவி சேய், ஐயன்மாடு அணுகி,
உலைந்த சிந்தையோடு உணங்கினன், வணங்கிட, 'உள்ளம்
குலைந்திடேல்; உமை வேற்றுமை தெரிந்திலம்; கொடிப் பூ
மிலைந்து செல்க; என விடுத்தனன்; எதிர்த்தனன் மீட்டும். 61

தயங்கு தாரகை நிரை தொடுத்து அணிந்தன போல
வயங்கு சென்னியன், வயப் புலி வான வல் ஏற்றொடு
உயங்கும் ஆர்ப்பினன், ஒல்லை வந்து, அடு திறல் வாலி
பயம் கொளப் புடைத்து, எற்றினன்; குத்தினன் பல கால்.*

அயிர்த்த சிந்தையன், அந்தகன் குலைகுலைந்து அஞ்ச,
செயிர்த்து நோக்கினன்; சினத்தொடு சிறு நகை செய்யா,
வயிர்த்த கையினும், காலினும் கதிர்மகன் மயங்க,
உயிர்த் தலந்தொறும் புடைத்தனன்; அடித்தனன்; உதைத்தான்.* 63

சுக்கிரீவன் உயிர், உயிர்ப்பொடும்; செவிகளின், கண்ணின்,
உக்கது, ஆங்கு, எரிப் படலையோடு உதிரத்தின் ஓதம்;
திக்கு நோக்கினன், செங் கதிரோன் மகன்; செருக்கிப்
புக்கு, மீக் கொடு நெருக்கினன், இந்திரன் புதல்வன். 64

சுக்கிரீவனை வாலி மேலே தூக்கலும், இராமன் அம்பு துரத்தலும்

'எடுத்துப் பாரிடை எற்றுவென், பற்றி' என்று, இளவல்
கடித்தலத்தினும், கழுத்தினும், தன் இரு கரங்கள்
மடுத்து, மீக் கொண்ட வாலிமேல், கோல் ஒன்று வாங்கி,
தொடுத்து, நாணொடு தோள் உறுத்து, இராகவன் துரந்தான்.

கார் உண் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேரும் ஊசியின் சென்றது—நின்றது என், செப்ப?—
நீரும், நீர் தரு நெருப்பும், வன் காற்றும், கீழ் நிவந்த
பாரும், சார் வலி படைத்தவன் உரத்தை அப் பகழி. 66

வாலி மண்ணில் சாய்தல்

அலங்கு தோள் வலி அழிந்த அத் தம்பியை அருளான்,
வலம் கொள் பாரிடை எற்றுவான் உற்ற போர் வாலி,
கலங்கி, வல் விசைக் கால் கிளர்ந்து எறிவுற, கடைக்கால்
விலங்கல் மேருவும் வேர் பறிந்தாலென, வீழ்ந்தான்.* 67

63. வயிர்த்த - வயிரத்தின் தன்மை வாய்ந்த, திண்மை கொண்ட;
64. மீக் கொடு - மேலே தூக்கிக்கொண்டு.

சையம் வேரொடும் உரும் உறச் சாய்ந்தென, சாய்ந்து,
வையம் மீதிடைக் கிடந்த போர் அடு திறல் வாலி,
வெய்யவன் தரு மதலையை மிடல் கொடு கவரும்
கை நெகிழ்ந்தனன்; நெகிழ்ந்திலன், கடுங் கணை கவர்தல்.* 68

வாலி அம்பினை வெளியில் எடுத்தல்

எழுந்து, 'வான் முகடு இடித்து உகப்படுப்பல்' என்று, இவரும்;
'உழுந்து பேரு முன், திசை திரிந்து ஒறுப்பல்' என்று, உறுக்கும்;
'விழுந்து, பாரினை வேரொடும் பறிப்பல்' என்று, ஒரும்;
'அழுந்தும் இச் சரம் எய்தவன் ஆர்கொல்?' என்று, அயிர்க்கும். 69

எற்றும் கையினை நிலத்தொடும்; எரிப் பொறி பறப்ப,
சுற்றும் நோக்குறும்; சுடு சரம்தனைத் துணைக் கரத்தால்
பற்றி, வாலினும் காலினும் வலி உற, பறிப்பான்
உற்று, உருமையின் உலைவுறும்; மலை என உருளும். 70

'தேவரோ?' என அயிர்க்கும்; 'அத் தேவர், இச் செயலுக்கு
ஆவரோ? அவர்க்கு ஆற்றல் உண்டோ?' எனும்; 'அயலோர்
யாவரோ?' என நகைசெயும்; 'ஒருவனே, இறைவர்
மூவரோடும் ஒப்பான், செயல் ஆம்' என மொழியும். 71

'நேமிதான் கொலோ? நீலகண்டன் நெடுஞ் சூலம்,
ஆம் இது, ஆம் கொலோ? அன்று எனின், குன்று உருவு அயிலும்,
நாம இந்திரன் வச்சிரப் படையும், என் நடுவண்
போம் எனும் துணை போதுமோ? யாது?' எனப் புழுங்கும். 72

'வில்லினல் துரப்ப அரிது, இவ் வெஞ் சரம்' என வியக்கும்;
'சொல்லினல் நெடு முனிவரோ தூண்டினர்' என்னும்;
பல்லினல் பறிப்புறும்; பல காலும் தன் உரத்தைக்
கல்லி ஆர்ப்பொடும் பறிக்கும் அப் பகழியைக் கண்டான். 73

'சரம் எனும்படி தெரிந்தது; பல படச் சலித்து என்?
உரம் எனும் பதம், உயிரொடும் உருவிய ஒன்றை,
கரம் இரண்டினும், வாலினும், காலினும், கழற்றி,
பரமன் அன்னவன் பெயர் அறிகுவென்' என, பறிப்பான். 74

69. உறுத்தல் - வெகுளுதல்.

வாலி தன் மார்பினின்று அம்பைப் பறிக்க, இரத்த வெள்ளம் பெருகுதல்

ஓங்கு அரும் பெருந் திறலினும், காலினும், உரத்தின்
வாங்கினுன், மற்று அவ் வாளியை, ஆளிபோல் வாலி.
ஆங்கு நோக்கினர், அமரரும் அவுணரும் பிறரும்,
வீங்கினுர்கள் தோள்;—வீரரை யார் வியவாதார்? 75

மோடு தெண் திரை முரிதரு கடல் என முழங்கி,
ஈடு பேர் உலகு இறந்துளது ஆம் எனற்கு எளிதோ?
காடு, மா நெடு விலங்கல்கள், கடந்தது; அக் கடலின்-
ஊடு போதல் உற்றதனை ஒத்து உயர்ந்துளது உதிரம். 76

உடன்பிறந்த பாசத்தால் சுக்கிரீவன் வருந்தி வீழ்தல்

வாசத் தாரவன் மார்பு எனும் மலை வழங்கு அருவி
ஓசைச் சோரியை நோக்கினன்; உடன்பிறப்பு என்னும்
பாசத்தால் பிணிப்புண்ட அத் தம்பியும், பசுங் கண்
நேசத் தாரைகள் சொரிதர, நெடு நிலம் சேர்ந்தான். 77

வாலி அம்பில் இராம நாமம் காணல்

பறித்த வாளியை, பரு வலித் தடக் கையால் பற்றி,
'இறுப்பென்' என்று கொண்டு எழுந்தனன், மேருவை இறுப்போன்;
'முறிப்பென் என்னினும், முறிவது அன்று ஆம்' என மொழியா,
பொறித்த நாமத்தை அறிகுவான் நோக்கினன், புகழோன். 78

மும்மை சால் உலகுக்கு எல்லாம் மூல மந்திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதத்தை, தானே
இம்மையே, எழுமை நோய்க்கும் மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மை சேர் நாமம்தன்னை, கண்களின் தெரியக் கண்டான்.

வாலி இராமனை இகழ்தல்

'இல்லறம் துறந்த நம்பி, எம்மனோர்க்காகத் தங்கள்
வில் அறம் துறந்த வீரன் தோன்றலால், வேத நல் நூல்
சொல் அறம் துறந்திலாத சூரியன் மரபும், தொல்லை
நல் அறம் துறந்தது' என்னு, நகை வர நாண் உட்கொண்டான்.

76. மோடு - உயர்ச்சி; ஈடு - வன்மை; 77. சோரி - குருதி; 79. தமர் - அடியார்.

வெள்கிடும்; மகுடம் சாய்க்கும்; வெடிபடச் சிரிக்கும்; மீட்டும்
உள்கிடும்; 'இதுவும்தான் ஓர் ஓங்கு அறமோ?' என்று உன்னும்
முள்கிடும் குழியில் புக்க மூரி வெங் களி நல் யானை
தொள்கொடும் கிடந்தது என்ன, துயர் உழந்து அழிந்து சோர்வான்,

வாலியின் எதிரில் இராமன் தோன்றலும், அவனை
வாலி இகழ்தலும்

'இறை திறம்பினனால்; என்னே, இழிந்துளோர் இயற்கை! என்னின்,
முறை திறம்பினனால்' என்று மொழிகின்ற முகத்தான் முன்னர்,
மறை திறம்பாத வாய்மை மன்னர்க்கு முன்னம் சொல்லும்
துறை திறம்பாமல் காக்கத் தோன்றினான், வந்து தோன்ற, 82

கண்ணுற்றான் வாலி, நீலக் கார் முகில் கமலம் பூத்து,
மண் உற்று, வரி வில் ஏந்தி, வருவதே போலும் மாலை;
புண் உற்றது அனைய சோரி பொறியொடும் பொடிப்ப, நோக்கி,
'எண்ணுற்றாய்! என் செய்தாய்!' என்று ஏசுவான் இயம்பலுற்றான்:

'வாய்மையும், மரபும், காத்து, மன் உயிர் துறந்த வள்ளல்,
தூயவன், மைந்தனே! நீ, பரதன்முன் தோன்றினாயே!
தீமைதான், பிறரைக் காத்து, தான் செய்தால் தீங்கு அன்று ஆமோ?
தாய்மையும் அன்றி, நட்பும், தருமமும், தழுவி நின்றாய்! 84

'குலம் இது; கல்வி ஈது; கொற்றம் ஈது; உற்று நின்ற
நலம் இது; புவனம் மூன்றின் நாயகம் உன்னது அன்றோ?
வலம் இது; இவ் உலகம் தாங்கும் வண்மை ஈது; என்றால்—திண்மை
அலமரச் செய்யலாமோ, அறிந்திருந்து அயர்ந்துளார்போல்?

'கோ இயல் தருமம், உங்கள் குலத்து உதித்தோர்கட்கு எல்லாம்—
ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்!—உடைமை அன்றோ?
ஆவியை, சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியை, பிரிந்த பின்னை, திகைத்தனை போலும், செய்கை! 86

'அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல், அதற்கு வேறு ஓர்
குரக்குஇனத்து அரசைக் கொல்ல, மனு நெறி கூறிற்று உண்டோ?
இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால் எப் பிழை கண்டாய்? அப்பா!
பரக்கழி இது நீ பூண்டால், புகழை யார் பரிக்கற்பாலார்? 87

81. முள்கிடும் குழி - முழுகி அழுந்தத்தக்க பெரும் பள்ளம், படுகுழி; தொள்கு - சேறு; 85. திண்மை - மன உறுதியாகிய நம்பிக்கை; 87. பரக்கழி - பெரும்பழி; பரித்தல் - தரித்தல். சுமத்தல்.

'ஒலி கடல் உலகம்தன்னில் ஊர்தரு குரங்கின்மாடே,
கலியது காலம் வந்து கலந்ததோ?—கருணை வள்ளால்!—
மெலியவர் பாலதேயோ, ஒழுக்கமும் விருப்பம்தானும்?
வலியவர் மெலிவு செய்தால், புகழ் அன்றி, வசையும் உண்டோ?

'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ! பெற்ற தாதை
பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து,
நாட்டு ஒரு கருமம் செய்தாய்; எம்பிக்கு, இவ் அரசை நல்கி,
காட்டு ஒரு கருமம் செய்தாய்; கருமம்தான் இதன்மேல் உண்டோ? 89

'அறை கழல் அலங்கல் வீரர் ஆயவர் புரிவது ஆண்மைத்
துறை எனல் ஆயிற்று அன்றே? தொன்மையின் நல் நூற்கு எல்லாம்
இறைவ! நீ, என்னைச் செய்தது ஈது எனில், ''இலங்கை வேந்தன்
முறை அல செய்தான்'' என்று, முனிதியோ?— முனிவு இலாதாய்! 90

'இருவர் போர் எதிரும்காலை, இருவரும் நல் உற்றாரே;
ஒருவர்மேல் கருணை தூண்டி, ஒருவர்மேல், ஒளித்து நின்று,
வரி சிலை குழைய வாங்கி, வாய் அம்பு மருமத்து எய்தல்
தருமமோ? பிறிது ஒன்று ஆமோ? தக்கிலது என்னும் பக்கம்.

'வீரம் அன்று; விதி அன்று; மெய்ம்மையின்
வாரம் அன்று; நின் மண்ணினுக்கு என் உடல்
பாரம் அன்று; பகை அன்று; பண்பு அழிந்து
ஈரம் இன்றி, இது என் செய்தவாறுஅரோ? 92

'இருமை நோக்கி நின்று, யாவர்க்கும் ஒக்கின்ற
அருமை ஆற்றல் அன்றோ, அறம் காக்கின்ற
பெருமை என்பது? இது என்? பிழை பேணல் விட்டு,
ஒருமை நோக்கி ஒருவற்கு உதவலோ? 93

'செயலைச் செற்ற பகை தெறுவான் தெரிந்து,
அயலைப் பற்றித் துணை அமைந்தாய்எனின்,
புயலைப் பற்றும் அப் பொங்கு அரி போக்கி, ஓர்
முயலைப் பற்றுவது என்ன முயற்சியோ? 94

88. கலி - துன்பத்திற்குக் காரணமாகிய கலி புருடன்; வலியவர் தவறு செய்தாலும் அதற்கும் ஒரு காரணம் காட்டி உலகம் அவர்களைப் புகழவே தலைப்படுகின்றது! எனவே அவர்க்குப் பழியுண்டோ? இல்லை என்பது நான்காம் அடியின் கருத்து. 92. வாரம் - கூறுபாடு; 93. இருமை - இரு பக்கத்தார் செயல்களின் இயல்பு, இம்மை மறுமைப் பயன்களும் ஆம்; பிழை பேணல் - தன் பக்கம் குற்றம் வாராதபடி குறிக்கொண்டு காத்தல்; 94. செயல் - (உங்கள்) பாதுகாவல்; செற்ற பகை - அழித்த இராவணன்.

'கார் இயன்ற நிறத்த களங்கம் ஒன்று
ஊர் இயன்ற மதிக்கு உளதாம் என,
சூரியன் மரபுக்கும் ஓர் தொல் மறு,
ஆரியன் பிறந்து ஆக்கினையாம்அரோ! 95

'மற்று ஒருத்தன் வலிந்து அறைகூவ வந்து
உற்ற என்னை, ஒளித்து, உயிர் உண்ட நீ,
இற்றையில், பிறர்க்கும் இகல் ஏறு என,
நிற்றிபோலும், கிடந்த நிலத்துஅரோ! 96

'நூல் இயற்கையும், நும் குலத்து உந்தையர்
போல் இயற்கையும், சீலமும், போற்றலை;
வாலியைப் படுத்தாய்அலை; மன் அற
வேலியைப் படுத்தாய்—விறல் வீரனே! 97

'தாரம் மற்று ஒருவன் கொள, தன் கையில்
பார வெஞ் சிலை வீரம் பழுதுற,
நேரும் அன்று, மறைந்து, நிராயுதன்
மார்பின் எய்யவோ, வில் இகல் வல்லதே?' 98

என்று, தானும் எயிறு பொடிபடத்
தின்று, காந்தி, விழிவழித் தீ உக,
அன்று அவ் வாலி, அனையன சொல்லினான்.
நின்ற வீரன், இனைய நிகழ்த்தினான்: 99

**இராமன் தன் செய்கை 'முறை' என மொழிதல்**

' ''பிலம் புக்காய் நெடு நாள் பெயராய்'' எனப்
புலம்புற்று, உன் வழிப் போதலுற்றானதனை,
குலம்புக்கு ஆன்ற முதியர், ''குறிக் கொள் நீ—
அலம் பொன் தாரவனே!—அரசு'' என்றலும், 100

' ''வானம் ஆள என் தம்முனை வைத்தவன்
தானும் மாள, கிளையும் இறத் தடிந்து,
யானும் மாள்வென்; இருந்து அரசு ஆள்கிலென்;
ஊனம் ஆன உரை பகர்ந்தீர்'' என, 101

'பற்றி, ஆன்ற படைத் தலை வீரரும்,
முற்று உணர்ந்த முதியரும், முன்பரும்,
''எற்றும் நும் அரசு எய்துவையாம்'' என,
கொற்ற நன் முடி கொண்டது, இக் கோது இலான். 102

100. புக்கு - பிறந்து; 102. எற்றும் - (நிகழ்ந்த செயல்) எத்தன்மைத்தாயினும்.

'வந்த உன்னை வணங்கி மகிழ்ந்தனன்;
''எந்தை! என்கண், இனத்தவர் ஆற்றலின்,
தந்தது உன் அரசு'' என்று தரிக்கிலான்
முந்தை உற்றது சொல்ல, முனிந்து நீ, 103

'கொல்லல் உற்றனை, உம்பியை; கோது அவற்கு
இல்லை என்பது உணர்ந்தும், இரங்கலை;
''அல்லல் செய்யல்; உனக்கு அபயம்; பிழை
புல்லல்'' என்னவும், புல்லலை, பொங்கினாய். 104

'ஊற்றம் உற்று உடையான், ''உனக்கு ஆர் அமர்
தோற்றும்'' என்று, தொழுது உயர் கையனை,
''கூற்றம் உண்ணக் கொடுப்பென்'' என்று எண்ணினாய்;
நால் திசைக்கும் புறத்தையும் நண்ணினான். 105

'அன்ன தன்மை அறிந்தும், அருளலை;
பின்னவன் இவன் என்பதும் பேணலை;
வன்னிதான் இடு சாப வரம்புடைப்
பொன் மலைக்கு அவன் நண்ணலின், போகலை; 106

'ஈரம் ஆவதும், இற் பிறப்பு ஆவதும்,
வீரம் ஆவதும், கல்வியின் மெய்ந் நெறி,
வாரம் ஆவதும், மற்று ஒருவன் புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கும்அதோ? 107

'மறம் திறம்பல், ''வலியம்'' எனா, மனம்
புறம் திறம்ப எளியவர்ப் பொங்குதல்;
அறம் திறம்பல், அருங் கடி மங்கையர்
திறம் திறம்பல்;—தெளிவு உடையோர்க்கு எலாம். 108

'தருமம் இன்னது எனும் தகைத் தன்மையும்,
இருமையும் தெரிந்து, எண்ணலை; எண்ணினால்,
அருமை உம்பிதன் ஆர் உயிர்த் தேவியை,
பெருமை நீங்கினை, எய்தப் பெறுதியோ? 109

'ஆதலானும், அவன் எனக்கு ஆர் உயிர்க்
காதலான் எனலானும், நிற் கட்டனென்;
ஏதிலாரும், எளியர் என்றால், அவர்
தீது தீர்ப்பது என சிந்தைக் கருத்துஅரோ. 110

106. வன்னி - வர்ணீ, பிரமசாரி, இங்கு மதங்க முனிவன்; 108. திறம்பல் - வழுவுதல்; புறம் - வீரம்; திறம் - கற்பின் வலி; 110. கட்டல் -உயிர் பறித்தல்; ஏதிலார் - அயலார்.

**வாலியின் எதிர்மொழி**

'பிழைத்த தன்மை இது' எனப் பேர் எழில்
தழைத்த வீரன் உரைசெய, தக்கிலாது
இழைத்த வாலி, 'இயல்பு அல, இத் துணை;
விழைத் திறம், தொழில்' என்ன விளம்புவான்: 111

'ஐய! நுங்கள் அருங் குலக் கற்பின், அப்
பொய் இல் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சிபோல்
செய்திலன், எமைத் தே மலர் மேலவன்;
எய்தின் எய்தியது ஆக, இயற்றினன். 112

'மணமும் இல்லை, மறை நெறி வந்தன;
குணமும் இல்லை, குல முதற்கு ஒத்தன;—
உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு அலால்—
நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்! 113

'பெற்றி மற்று இது; பெற்றது ஓர் பெற்றியின்
குற்றம் உற்றிலன்; நீ, அது கோடியால்—
வெற்றி உற்றது ஓர் வெற்றியினாய்!' எனச்
சொற்ற சொல் துறைக்கு உற்றது, சொல்லுவான்: 114

**இராமனது மறுப்புரை**

'நலம் கொள் தேவரின் தோன்றி, நவை அறக்
கலங்கலா அற நல் நெறி காண்டலின்,
விலங்கு அலாமை விளங்கியது; ஆதலால்,
அலங்கலார்க்கு, ஈது அடுப்பது அன்று ஆம்அரோ. 115

'பொறியின் யாக்கையதோ? புலன் நோக்கிய
அறிவின் மேலது அன்றோ, அறத்தாறுதான்?
நெறியும் நீர்மையும் நேரிது உணர்ந்த நீ
பெறுதியோ, பிழை உற்றுறு பெற்றிதான்? 116

'மாடு பற்றி இடங்கர் வலித்திட,
கோடு பற்றிய கொற்றவற் கூயது ஓர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினால்,
வீடு பெற்ற விலங்கும் விலங்குஅதோ? 117

115. அலங்கலார்க்கு - வெற்றிமாலை அணிந்த வீரர்களாகிய உங்களுக்கு; 116. நோக்கிய - நன்றும் தீதும் ஆராய்ந்து அறிகின்ற; 117. கோடு - சங்கு, பாஞ்சசன்னியம்; பாடு - பெருமை; விலங்கு - கசேந்திரன் என்னும் யானை.

'சிந்தை, நல் அறத்தின் வழிச் சேறலால்,
பைந் தொடித் திருவின் பரிவு ஆற்றுவான்,
வெந் தொழில் துறை வீடு பெற்று எய்திய
எந்தையும், எருவைக்கு அரசு அல்லனோ? 118

'நன்று, தீது, என்று இயல் தெரி நல் அறிவு
இன்றி வாழ்வது அன்றோ, விலங்கின் இயல்?
நின்ற நல் நெறி, நீ அறியா நெறி
ஒன்றும் இன்மை, உன் வாய்மை உணர்த்துமால். 119

'தக்க இன்ன, தகாதன இன்ன, என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல், அவ் விலங்கும் புத்தேளிரே. 120

'காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான்-
பாலின் ஆற்றிய பத்தி பயத்தலால்,
மாலினால் தரு வன் பெரும் பூதங்கள்
நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினாய். 121

'மேவ அருந் தருமத் துறை மேவினார்,
ஏவரும், பவத்தால் இழிந்தோர்களும்;
தா அருந் தவரும், பல தன்மை சால்
தேவரும், உளர், தீமை திருத்தினார். 122

'இனையது ஆதலின், எக் குலத்து யாவர்க்கும்,
வினையினால் வரும், மேன்மையும் கீழ்மையும்;
அனைய தன்மை அறிந்தும், அழித்தனை,
மனையின் மாட்சி' என்றான், மனு நீதியான். 123

'மறைந்து எய்தது என்?' என வாலி வினவலும் இலக்குவன் விடையும்

அவ் உரை அமையக் கேட்ட அரி குலத்து அரசும், 'மாண்ட
செவ்வியோய்! அனையது ஆக! செருக் களத்து உருத்து எய்யாதே,
வெவ்விய புளினர் என்ன, விலங்கியே மறைந்து, வில்லால்
எவ்வியது என்னை?' என்றான்; இலக்குவன் இயம்பலுற்றான்:

119. வாய்மை - வாய்ச்சொல்; 121. மாலினால் தரு பூதங்கள் - திருமாலால் படைக்கப்பட்ட பூதங்கள்; நால் - நான்கு, வளி நீங்கலான ஏனையவை; 122. ஏவர் - குற்றம் உடையவர்; தா - வலி; ஆற்றல், குற்றமும் ஆம்; திருத்தினார் - செய்தவர்; 124. புளினர் - வேடர்; எவ்வியது - ஏவியது.

'முன்பு, நின் தம்பி வந்து சரண் புக, ''முறை இலோயைத்
தென் புலத்து உய்ப்பென்'' என்று செப்பினன்; செருவில், நீயும்,
அன்பினை உயிருக்கு ஆகி, ''அடைக்கலம் யானும்'' என்றி
என்பது கருதி, அண்ணல், மறைந்து நின்று எய்தது' என்றான்.

வாலியின் மன மாற்றம்

கவி குலத்து அரசும் அன்ன கட்டுரை கருத்தில் கொண்டான்;
அவியுறு மனத்தன் ஆகி, 'அறத் திறன் அழியச் செய்யான்
புவியுடை அண்ணல்' என்பது எண்ணினன் பொருந்தி, முன்னே
செவியுறு கேள்விச் செல்வன் சென்னியின் இறைஞ்சி, சொன்னான்:

'தாய் என உயிர்க்கு நல்கி, தருமமும், தகவும், சால்பும்,
நீ என நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை
நாய் என நின்ற எம்பால், நவை அற உணரலாமே?
தீயன பொறுத்தி' என்றான்—சிறியன சிந்தியாதான். 127

இரந்தனன் பின்னும்; 'எந்தை! யாவதும் எண்ணல் தேற்றாக்
குரங்கு எனக் கருதி, நாயேன் கூறிய மனத்துக் கொள்ளேல்;
அரந்தை வெம் பிறவி நோய்க்கும் அரு மருந்து அனைய ஐயா!
வரம் தரும் வள்ளால்! ஒன்று கேள்!' என மறித்தும் சொல்வான்:

இராமனைத் துதித்து, வாலி ஓர் வரம் வேண்டுதல்

'ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்;
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ! 129

'புரம் எலாம் எரி செய்தோன் முதலினோர் பொரு இலா
வரம் எலாம் உருவி, என் வசை இலா வலிமை சால்
உரம் எலாம் உருவி, என் உயிர் எலாம் நுகரும் நின்
சரம் அலால், பிறிது வேறு உளதுஅரோ, தருமமே? 130

' ''யாவரும் எவையும் ஆய், இருதுவும் பயனும் ஆய்,
பூவும் நல் வெறியும் ஒத்து; ஒருவ அரும் பொதுமையாய்
ஆவ நீ ஆவது'' என்று அறிவினர் அருளினர்;
தா அரும் பதம் எனக்கு அருமையோ? தனிமையோய்! 131

126. அவியுறல் - அடங்குதல்; 129. ஏவு கூர் வாளி - தொடுத்துச் செலுத்திய அம்பு; 130. உருவி - சிதைத்து, துளைத்து.

'உண்டு எனும் தருமமே உருவமா உடைய நிற்
கண்டு கொண்டேன்; இனிக் காண என் கடவெனே?
பண்டொடு இன்று அளவுமே என் பெரும் பழவினைத்
தண்டமே; அடியனேற்கு உறு பதம் தருவதே! 132

'மற்று இனி உதவி உண்டோ?—வானினும் உயர்ந்த மானக்
கொற்றவ!—நின்னை, என்னைக் கொல்லிய கொணர்ந்து, தொலைச்
சிற்றினக் குரங்கினோடும் தெரிவு உறச் செய்த செய்கை,
வெற்று அரசு எய்தி, எம்பி, வீட்டு அரசு எனக்கு விட்டான்.

'ஓவிய உருவ! நாயேன் உளது ஒன்று பெறுவது உன்பால்;
பூ இயல் நறவம் மாந்தி, புந்தி வேறு உற்றபோழ்தில்,
தீவினை இயற்றுமேனும், எம்பிமேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்' என்றான். 134

'இன்னம் ஒன்று இரப்பது உண்டால்; எம்பியை, உம்பிமார்கள்
"தன்முனைக்கொல்வித்தான்" என்று இகழ்வரேல், தடுத்தி, தக்கோய்!
முன்முனே மொழிந்தாய் அன்றே, இவன் குறை முடிப்பது ஐயா!
பின் இவன் வினையின் செய்கை அதனையும் பிழைக்கல்ஆமோ? 135

அனுமனின் ஆற்றலைக் குறித்து வாலி இராமனுக்குக் கூறுதல்

'மற்று இலென் எனினும், மாய அரக்கனை வாலின் பற்றி,
கொற்றவ! நின்கண் தந்து, குரக்கு இயல் தொழிலும் காட்டப்
பெற்றிலென்; கடந்த சொல்லின், பயன் இலை; பிறிது ஒன்றேனும்,
"உற்றது செய்க!" என்றாலும், உரியன் இவ் அனுமன் என்றான். 136

'அனுமன் என்பவனை—ஆழி ஐய!—நின் செய்ய செங் கைத்
தனு என நினைதி; மற்று, என் தம்பி நின் தம்பி ஆக
நினைதி; ஓர் துணைவர் இன்னோர் அனையவர் இலை; நீ, ஈண்டு, அவ்
வனிதையை நாடிக் கோடி—வானினும் உயர்ந்த தோளாய்!'

சுக்கிரீவனுக்கு வாலி புகன்ற அறவுரை

என்று, அவற்கு இயம்பி, பின்னர், இருந்தனன் இளவல் தன்னை
வன் துணைத் தடக் கை நீட்டி வாங்கினன் தழுவி, 'மைந்த!
ஒன்று உனக்கு உரைப்பது உண்டால்; உறுதி அஃது உணர்ந்து கோடி;
குன்றினும் உயர்ந்த தோளாய்! வருந்தலை!' என்று கூறும்: 138

'மறைகளும், முனிவர் யாரும், மலர்மிசை அயனும், மற்றைத்
துறைகளின் முடிவும், சொல்லும் துணி பொருள், துணி வில் தூக்கி,
அறை கழல் இராமன் ஆகி, அற நெறி நிறுத்த வந்தது;
இறை ஒரு சங்கை இன்றி எண்ணுதி; எண்ணம் மிக்கோய்! 139

139. சங்கை - ஐயம்.

'நிற்கின்ற செல்வம் வேண்டி நெறி நின்ற பொருள்கள் எல்லாம்
கற்கின்றது இவன்தன் நாமம்; கருதுவது இவனைக் கண்டாய்;
பொன் குன்றம் அனைய தோளாய்! பொது நின்ற தலைமை நோக்கின்,
எற் கொன்ற வலியே சாலும்; இதற்கு ஒன்றும் ஏது வேண்டா.

'கைதவம் இயற்றி, யாண்டும் கழிப்ப அருங் கணக்கு இல் தீமை
வைகலும் புரிந்துளாரும், வான் உயர் நிலையை, வள்ளல்
எய்தவர் பெறுவர்என்றால், இணை அடி இறைஞ்சி, ஏவல்
செய்தவர் பெறுவது, ஐயா! செப்பல் ஆம் சீர்மைத்து ஆமோ?

'அருமை என், விதியினாரே உதவுவான் அமைந்தகாலை?
இருமையும் எய்தினாய்; மற்று இனிச் செயற்பாலது எண்ணின்,
திரு மறு மார்பன் ஏவல் சென்னியில் சேர்த்தி, சிந்தை
ஒருமையின் நிறுவி, மும்மை உலகினும் உயர்தி அன்றே. 142

'மத இயல் குரக்குச் செய்கை மயர்வொடு மாற்றி, வள்ளல்
உதவியை உன்னி, ஆவி உற்றிடத்து உதவுகிற்றி;
பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் பணித்த யாவும்
சிதைவு இல செய்து, நொய்தின் தீர்வு அரும் பிறவி தீர்தி. 143

'அரசியல்-பாரம் பூரித்து அயர்ந்தனை இகழாது, ஐயன்
மரை மலர்ப் பாதம் நீங்கா வாழுதி; மன்னர் என்பார்
எரி எனற்கு உரியார் என்றே எண்ணுதி; எண்ணம் யாவும்
புரிதி; "சிற்றடிமை குற்றம் பொறுப்பர்" என்று எண்ணவேண்டா. 144

**சுக்கிரீவனை இராமனிடம் அடைக்கலப்படுத்தல்**

என்ன, இத் தகைய ஆய உறுதிகள் யாவும், ஏங்கும்
பின்னவற்கு இயம்பி, நின்ற பேர் எழிலானை நோக்கி,
'மன்னவர்க்கு அரசன் மைந்த! மற்று இவன் சுற்றத்தோடும்
உன் அடைக்கலம்' என்று உய்த்தே, உயர்கரம் உச்சி வைத்தான். 145

**அங்கதன் வருகை**

வைத்தபின், உரிமைத் தம்பி மா முகம் நோக்கி, 'வல்லை
உய்த்தனை கொணர்தி, உன்தன் ஒங்கு அரு மகனை' என்ன,
அத் தலை அவனை ஏவி அழைத்தலின், அணைந்தான் என்ப,
கைத்தலத்து உவரி நீரைக் கலக்கினான் பயந்த காளை. 146

143. மதம் - மடமை; பதவி - உயர்நிலை.

**அங்கதன் புலம்பல்**

சுடருடை மதியம் என்னத் தோன்றினன்; தோன்றி, யாண்டும்
இடருடை உள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்,
மடலுடை நறு மென் சேக்கை மாலை அன்றி, உதிர வாரிக்
கடலிடைக் கிடந்த காதல் தாதையை, கண்ணின் கண்டான்.

கண்ட கண் கனலும் நீரும் குருதியும் கால, மாலை,
குண்டலம் அலம்புகின்ற குவவுத் தோள் குரிசில், திங்கள்
மண்டலம் உலகில் வந்து கிடந்தது; அம் மதியின் மீதா
விண்தலம்தன்னின்நின்று ஓர் மீன் விழுந்தென்ன, வீழ்ந்தான்.

'எந்தையே! எந்தையே! இவ் எழு திரை வளாகத்து, யார்க்கும்,
சிந்தையால், செய்கையால், ஓர் தீவினை செய்திலாதாய்!
நொந்தனை! அதுதான் நிற்க, நின் முகம் நோக்கிக் கூற்றம்
வந்ததே அன்றோ, அஞ்சாது? ஆர் அதன் வலியைத் தீர்ப்பார்?

'தறை அடித்ததுபோல் தீராத் தகைய, இத் திசைகள் தாங்கும்
கறையடிக்கு அழிவு செய்த கண்டகன் நெஞ்சம், உன்தன்
நிறை அடிக் கோல வாலின் நிலைமையை நினையும்தோறும்,
பறை அடிக்கின்ற அந்தப் பயம் அறப் பறந்தது அன்றே? 150

'குல வரை, நேமிக் குன்றம், என்ற வான் உயர்ந்த கோட்டின்
தலைகளும், நின் பொன்-தாளின் தழும்பு, இனி, தவிர்ந்த அன்றே?
மலை கொளும் அரவும், மற்றும், மதியமும், பலவும் தாங்கி,
அலை கடல் கடைய வேண்டின், ஆர் இனிக் கடைவர்?—ஐயா!

'பஞ்சின் மெல் அடியாள் பங்கன் பாதுகம் அலாது, யாதும்
அஞ்சலித்து அறியாச் செங் கை ஆணையாய்! அமரர் யாரும்
எஞ்சலர் இருந்தார் உன்னால்; இன் அமுது ஈந்த நீயோ,
துஞ்சினை; வள்ளியோர்கள், நின்னின் யார் சொலற்பாலார்?'

**வாலியின் தேறுதல் மொழி**

ஆயன பலவும் பன்னி, அழுங்கினன் புழுங்கி, நோக்கி,
தீ உறு மெழுகின் சிந்தை உருகினன் செங் கண் வாலி,
'நீ இனி அயர்வாய்அல்லை' என்று தன் நெஞ்சில் புல்லி,
'நாயகன், இராமன், செய்த நல்வினைப் பயன் இது' என்றான்.

*150. தறை அடித்தல் - ஆணி அடித்தல்; கறையடி - யானை; நிறை அடி - பருத்த அடி; 152. பஞ்சின் மெல் அடியாள் பங்கன் - சிவன்; எஞ்சுதல் - (இறந்து) குறைதல்.*

'தோன்றலும், இறத்தல்தானும், துகள் அறத் துணிந்து நோக்கின்,
மூன்று உலகத்தினோர்க்கும், மூலத்தே முடிந்த அன்றே?
யான் தவம் உடைமையால், இவ் இறுதி வந்து இசைந்தது; யார்க்கும்
சான்று என நின்ற வீரன் தான் வந்து, வீடு தந்தான். 154

'பாலமை தவிர் நீ; என் சொல் பற்றுதிஆயின், தன்னின்
மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள், வில்லும் தாங்கி,
கால் தரை தோய நின்று, கட்புலக்கு உற்றது அம்மா!
''மால் தரும் பிறவி நோய்க்கு மருந்து'' என, வணங்கு, மைந்த!

'என் உயிர்க்கு இறுதி செய்தான் என்பதை இறையும் எண்ணாது,
உன் உயிர்க்கு உறுதி செய்தி; இவற்கு அமர் உற்றது உண்டேல்,
பொன் உயிர்த்து ஒளிரும் பூணாய்! பொது நின்று, தருமம் நோக்கி,
மன்னுயிர்க்கு உறுதி செய்வான் மலர்அடி சுமந்து வாழ்தி.'

**வாலி அங்கதனை இராமனிடம் கையடைப் படுத்தல்**

என்றனன், இனைய ஆய உறுதிகள் யாவும் சொல்லி,
தன் துணைத் தடக் கை ஆரத் தனையனைத் தழுவி, சாலக்
குன்றினும் உயர்ந்த திண் தோள் குரக்குஇனத்து அரசன், கொற்றப்
பொன் திணி வயிரப் பைம் பூண் புரவலன்தன்னை நோக்கி.†

'நெய் அடை நெடு வேல் தானை நீல் நிற நிருதர் என்னும்
துய் அடை கனலி அன்ன தோளினன், தொழிலும் தூயன்;
பொய் அடை உள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ! மற்று உன்
கையடை ஆகும்' என்று, அவ் இராமற்குக் காட்டும் காலை,

**வாலி வீடு பெறுதல்**

தன் அடி தாழ்தலோடும், தாமரைத் தடங் கணும்,
பொன் உடைவாளை நீட்டி, 'நீ இது பொறுத்தி' என்றான்;
என்னலும், உலகம் ஏழும் ஏத்தின; இறந்து, வாலி,
அந் நிலை துறந்து, வானுக்கு அப் புறத்து உலகன் ஆனான். 159

**இராமன் அம்பு அவனிடம் மீள்தல்**

கை அவண் நெகிழ்தலோடும், கடுங் கணை, கால வாலி
வெய்ய மார்பு அகத்துள் தங்காது உருவி, மேக்கு உயர மீப் போய்,
துய்ய நீர்க் கடலுள் தோய்ந்து, தூய் மலர் அமரர் சூட்ட,
ஐயன் வெந் விடாத கொற்றத்து ஆவம் வந்து அடைந்தது அன்றே.†

158. துய் அடை - பஞ்சு மூட்டை; 159. இது பொறுத்தி - இந்த உடைவாளை ஏற்றுக் கொள்வாய், வாலியை மறைந்து கொன்ற இச் செயலை மன்னிப்பாய் என்பாரும் உண்டு; 160. வெந் - வெரிந், முதுகு; ஆவம் - அம்பறுத்தூணி.

**தாரை வாலிமேல் வீழ்ந்து புலம்பல்**

வாலியும் ஏக, யார்க்கும் வரம்பு இலா உலகில் இன்பம்
பாலியா, முன்னர் நின்ற பரிதி சேய் செங் கை பற்றி,
ஆல் இலைப் பள்ளியானும், அங்கதனோடும், போனான்;
வேல் விழித் தாரை கேட்டாள்; வந்து, அவன் மேனி வீழ்ந்தாள்.

குங்குமம் கொட்டி என்ன, குவி முலைக் குவட்டுக்கு ஒத்த
பொங்கு வெங் குருதி போர்ப்ப, புரி குழல் சிவப்ப, பொன்–தோள்
அங்கு அவன் அலங்கல் மார்பில் புரண்டனள்—அகன்ற செக்கர்,
வெங் கதிர் விசும்பில் தோன்றும் மின் எனத் திகழும் மெய்யாள். 162

வேய்ங் குழல், விளரி நல் யாழ், வீணை, என்று இனைய நாண,
ஏங்கினள்; இரங்கி விம்மி உருகினள்; இரு கை கூப்பித்
தாங்கினள் தலையில்; சோர்ந்து, சரிந்து தாழ் குழல்கள் தள்ளி,
ஓங்கிய குரலால் பன்னி, இனையன உரைக்கலுற்றாள்: 163

'வரை சேர் தோளிடை நாளும் வைகுவேன்,
கரை சேரா இடர் வேலை காண்கிலேன்;
உரை சேர் ஆர் உயிரே! என் உள்ளமே!
அரைசே! யான் இது காண அஞ்சினேன். 164

'துயராலே தொலையாத என்னையும்,
பயிராயோ? பகையாத பண்பினாய்!
செயிர் தீரா விதி ஆன தெய்வமே!
உயிர் போனால், உடலாரும் உய்வரோ? 165

'நறிது ஆம் நல் அமிழ்து உண்ண நல்கலின்,
பிறியா இன் உயிர் பெற்ற பெற்றி, தாம்
அறியாரோ நமனார்? அது அன்றுஎனின்,
சிறியாரோ, உபகாரம் சிந்தியார்? 166

'அணங்கு ஆர் பாகனை ஆசைதோறும் உற்று,
உணங்கா நாள்மலர் தூய், உள் அன்பினால்
இணங்கா, காலம் இரண்டொடு ஒன்றினும்
வணங்காது, இத் துணை வைக வல்லையோ? 167

161. பாலியா - பாவித்து, இனிதின் வழங்கி; 163. விளரி - இரங்கற் பண்; 165. பயிர்தல் - அழைத்தல்; 167. இத்துணை - இவ்வளவு நேரம்.

''வரை ஆர் தோள் பொடி ஆட வைகுவாய்!
தரை மேலாய்! உறு தன்மை ஈது?'' எனக்
கரையாதேன் இடு பூசல் கண்டும், ஒன்று
உரையாய், என்வயின் ஊனம் யாவதோ? 168

'நையா நின்றனென், நான் இருந்து இங்ஙன்;
மெய் வானோர் திரு நாடு மேவினாய்;
ஐயா! நீ எனது ஆவி என்பதும்,
பொய்யோ? பொய் உரையாத புண்ணியா! 169

'செரு ஆர் தோள! நின் சிந்தை உளேன்எனின்,
மருவார் வெஞ் சரம் எனையும் வவ்வுமால்;
ஒருவேனுள் உளை ஆகின், உய்தியால்;
இருவேமுள் இருவேம் இருந்திலேம். 170

' ''எந்தாய்! நீ அமிழ்து ஈய, யாம் எலாம்
உய்ந்தேம்'' என்று, உபகாரம் உன்னுவார்,
நந்தா நாள்மலர் சிந்தி, நண்பொடும்
வந்தாரோ எதிர், வான்உளோர் எலாம்? 171

'ஓயா வாளி ஒளித்து நின்று எய்வான்
ஏயா வந்த இராமன் என்று உளான்,
வாயால் ஏயினன்என்னின், வாழ்வு எலாம்
ஈயாயோ? அமிழ்தேயும் ஈகுவாய்! 172

'சொற்றேன், முந்துற; அன்ன சொல் கொளாய்;
''அற்றான், அன்னது செய்கலான்'' என,
உற்றாய், உம்பியை; ஊழி காணும் நீ,
இற்றாய்; நான் உனை என்று காண்கெனோ? 173

'நீறு ஆம், மேருவும், நீ நெருக்கினால்;
மாறு ஓர் வாளி, உன் மார்பை ஈர்வதோ?
தேறேன் யான் இது; தேவர் மாயமோ?
வேறு ஓர் வாலி கொலாம், விளிந்துளான்? 174

'தகை நேர் வண் புகழ் நின்று, தம்பியார்,
பகை நேர்வார் உளர் ஆன பண்பினால்,
உக நேர் சிந்தி உலந்து அழிந்தனன்;
மகனே! கண்டிலையோ, நம் வாழ்வு எலாம்? 175

168. பூசல் - அழுகை, பேரொலி; 172. ஏயா - ஏய்ந்து, இசைந்து; வாயால் ஏவுதல் - வாய் திறந்து கூறுதல்; 173. அற்றான் - விருப்பு வெறுப்பு அற்ற இராமன்; 174. மாறு - எதிர்; 175. தம்பியார் - சுக்கிரீவன்.

'அரு மைந்து அற்றம் அகற்றும் வில்லியார்,
ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினுர்;
தருமம் பற்றிய தக்கவாக்கு எலாம்,
கருமம் கட்டளை என்றல் கட்டதோ?' 176

**மாருதி வாலியின் இறுதிக் கடன் செய்வித்தல்**

என்ருள், இன்னன பன்னி, இன்னலோடு
ஒன்று ஆனுள்; உணர்வு ஏதும் உற்றிலாள்;
நின்ருள்; அந் நிலை நோக்கி, நீதி சால்,
வன் தாள் மால் வரை அன்ன, மாருதி. 177

மடவாரால், அம் மடந்தை முன்னர் வாழ்
இடம் மேவும்படி ஏவி, வாலிபால்
கடன் யாவும் கடைகண்டு, கண்ணனேடு
உடன் ஆய், உற்றது எலாம் உணர்த்தலும், 178

**சூரியன் மறைவும், இராமன் இராப்பொழுதைக் கழித்த வகையும்**

அகம் வேர் அற்று உக வீசு அருக்கனுர்,
புகழ் மேலைக் கிரி புக்க போதினின்,
நகமே ஒத்த குரக்கு நாயகன்
முகமே ஒத்தது, மூரி மண்டிலம்.† 179

மறைந்தான் மாலை அருக்கன்; வள்ளியோன்
உறைந்தான், மங்கை திறத்தை உன்னுவான்;
குறைந்தான், நெஞ்சு குழைந்து அழுங்குவான்,
நிறைந்து ஆர் கங்குலின் வேலை நீந்தினுன்.† 180

## 8 அரசியற் படலம்

**சுக்கிரீவனுக்கு முடி சூட்டுதல்**

புதல்வன் பொன் மகுடம் பொறுத்தலால்,
முதல்வன், பேர் உவகைக்கு முந்துவான்,
உதவும் பூமகள் சேர, ஒண் மலர்க்
கதவம் செய்ய கரத்தின் நீக்கினுன்.† 1

176. அற்றம் - பெருந்துன்பம்; கட்டளை - உரைகல்; கட்டது - புனைந்துரையாகிறது; 177. தாள் - முயற்சி, கால் எனலும் ஆம்; 179. அகம் - பாவம், ஈண்டு இருள்; நகம் - மலை; மூரி மண்டிலம் - பெரிய சூரிய மண்டிலம்.

8: 1. உவகைக்கு முந்துவான் - மகிழ்ச்சியடைதற்கு முற்பட்டவனுய்.

அது காலத்தில், அருட்கு நாயகன்,
மதி சால் தம்பியை வல்லை ஏவினான்—
'கதிரோன் மைந்தனை, ஐய! கைகளால்,
விதியால் மௌலி மிலைச்சுவாய்' என. 2

அப்போதே, அருள் நின்ற அண்ணலும்,
மெய்ப் போர் மாருதிதன்னை, 'வீர! நீ,
இப்போதே கொணர், இன்ன செய் வினைக்கு
ஒப்பு ஆம் யாவையும், என்று உணர்த்தலும், 3

மண்ணும் நீர் முதல் மங்கலங்களும்,
எண்ணும் பொன் முடி ஆதி யாவையும்,
நண்ணும் வேலையில், நம்பி தம்பியும்,
திண்ணம் செய்வன செய்து, செம்மலை, 4

மறையோர் ஆசி வழங்க, வானுளோர்
நறை தோய் நாள்மலர் தூவ, நல் நெறிக்கு
இறையோன்தன் இளையோன், அவ் ஏந்தலை,
துறையோர் நூல் முறை மௌலி சூட்டினான். 5

**சுக்கிரீவனுக்கு இராமன் அறிவுரை**

பொன் மா மௌலி புனைந்து, பொய் இலான்,
தன் மானக் கழல் தாழும் வேலையில்,
நன் மார்பில் தழுவுற்று, நாயகன்,
சொன்னான், முற்றிய சொல்லின் எல்லையான்: 6

'ஈண்டுநின்று ஏகி, நீ நின் இயல்பு அமை இருக்கை எய்தி,
வேண்டுவ மரபின் எண்ணி, விதி முறை இயற்றி, வீர!
பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற யாவையும் புரிந்து, போரில்
மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி, நல் திருவின் வைகி. 7

'வாய்மை சால் அறிவின் வாய்த்த மந்திர மாந்தரோடும்,
தீமை தீர் ஒழுக்கின் வந்த திறத் தொழில் மறவரோடும்,
தூய்மை சால் புணர்ச்சி பேணி, துகள் அறு தொழிலை ஆகி,
சேய்மையோடு அணிமை இன்றி, தேவரின் தெரிய நிற்றி. 8

4. மண்ணும் நீர் - நீராட்டத்திற்கு உரிய புனித நீர்; 8. புணர்ச்சி - நட்பு; சேய்மை - அகலுதல்; அணிமை - அணுகுதல்.

இராமன் உணர்த்தும் நல்லரசு

'"புகை உடைதது என்னின், உண்டு பொங்கு அனல் அங்கு" என்று உன்
மிகை உடைத்து உலகம்; நூலோர் வினையமும் வேண்டற்பாற்றே; [னும்
பகையுடைச் சிந்தையார்க்கும், பயன் உறு பண்பின் தீரா
நகையுடை முகத்தை ஆகி, இன் உரை நல்கு, நாவால். 9

'தேவரும் வெஃகற்கு ஒத்த செயிர் அறு செல்வம்அஃது உன்
காவலுக்கு உரியதுஎன்றால், அன்னது கருதிக் காண்டி;
ஏ வரும் இனிய நண்பர், அயலவர், விரவார், என்று இம்
மூவகை இயலோர் ஆவர், முனிவர்க்கும் உலக முன்னே. 10

'செய்வன செய்தல், யாண்டும் தீயன சிந்தியாமை,
வைவன வந்தபோதும் வசை இல இனிய கூறல்,
மெய்யன வழங்கல், யாவும் மேவின வெஃகல் இன்மை,
உய்வன ஆக்கித் தம்மோடு உயர்வன: உவந்து செய்வாய். 11

'சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல்; மற்று, இந்
நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,
குறியது ஆம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்!
வெறியன எய்தி, நொய்தின் வெந் துயர்க் கடலின் வீழ்ந்தேன்.

'"மங்கையர் பொருட்டால் எய்தும் மாந்தர்க்கு மரணம்" என்றல்,
சங்கை இன்று உணர்தி; வாலி செய்கையால் சாலும்; இன்னும்,
அங்கு அவர் திறத்தினாலே, அல்லலும் பழியும் ஆதல்
எங்களின் காண்டி அன்றே; இதற்கு வேறு உவமை உண்டோ?

'"நாயகன் அல்லன்; நம்மை நனி பயந்து எடுத்து நல்கும்
தாய்" என, இனிது பேணி, தாங்குதி தாங்குவாரை;
ஆயது தன்மையேனும், அற வரம்பு இகவாவண்ணம்,
தீயன வந்தபோது, சுடுதியால் தீமையோரை. 14

'இறத்தலும் பிறத்தல்தானும் என்பன இரண்டும், யாண்டும்,
திறத்துளி நோக்கின், செய்த வினை தரத் தெரிந்த அன்றே?
புறத்து இனி உரைப்பது என்னே? பூவின்மேல் புனிதற்கேனும்,
அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி, அன்ப!

9. மிகை - மிகுதியான அறிவு; வினையம் - சூழ்ச்சி, வஞ்சனை; 15. திறம் - உண்மை நெறி; உளி - மூன்றும் வேற்றுமைப் பொருள்படுவதோர் இடைச் சொல்.

'ஆக்கமும், கேடும், தாம் செய் அறத்தொடு பாவம் ஆய
போக்கி, வேறு உண்மை தேறார், பொரு அரும் புலமை நூலோர்;
தாக்கின ஒன்றோடு ஒன்று தருக்குறும் செருவில், தக்கோய்!
பாக்கியம் அன்றி, என்றும், பாவத்தைப் பற்றலாமோ? 16

' ''இன்னது தகைமை'' என்ப, இயல்புளி மரபின் எண்ணி,
மன் அரசு இயற்றி, என்கண் மருவுழி மாரிக் காலம்
பின்னுறு முறையின், உன்தன் பெருங் கடற் சேனையோடும்
துன்னுதி; போதி' என்றான், சுந்தரன். அவனும் சொல்வான்:

சுக்கிரீவன் கிட்கிந்தைக்கு அழைத்தலும் இராமன் மறுத்தலும்

' ''குரங்கு உறை இருக்கை'' என்னும் குற்றமே குற்றம் அல்லால்,
அரங்கு எழு துறக்க நாட்டுக்கு அரசு எனல் ஆகும் அன்றே,
மரம் கிளர் அருவிக் குன்றம்; வள்ளல்! நீ, மனத்தின் எம்மை
இரங்கிய பணி யாம் செய்ய, இருத்தியால், சில் நாள், எம்பால்.

'அரிந்தம! நின்னை அண்மி, அருளுக்கும் உரியேம் ஆகி,
பிரிந்து, வேறு எய்தும் செல்வம் வெறுமையின் பிறிது அன்றாமால்;
கருந் தடங் கண்ணினாளை நாடல் ஆம் காலம்காறும்
இருந்து, அருள் தருதி, எம்மோடு' என்று, அடி இணையின் வீழ்ந்தான்.

ஏந்தலும், இதனைக் கேளா, இன் இள முறுவல் நாற,
'வேந்து அமை இருக்கை. எம்போல் விரதியர் விழைதற்கு ஒவ்வா;
போந்து அவண் இருப்பின், எம்மைப் போற்றவே பொழுது போமால்;
தேர்ந்து, இனிது இயற்றும் உன்தன் அரசியல் தருமம் தீர்தி.

ஏழ்-இரண்டு ஆண்டு, யான் போந்து எரி வனத்து இருக்க என்றேன்;
வாழியாய்! அரசர் வைகும் வள நகர் வைகல் ஒல்லேன்;
பாழி அம் தடந் தோள் வீர! பார்த்திலைபோலும் அன்றே!
யாழ் இசை மொழியோடு அன்றி, யான் உறும் இன்பம் என்னோ? 21

' ''தேவி வேறு அரக்கன் வைத்த சேமத்துள் இருப்ப, தான் தன்
ஆவிபோல் துணைவரோடும் அளவிடற்கு அரிய இன்பம்
மேவினான், இராமன்'' என்றால், ஐய! இவ் வெய்ய மாற்றம்,
மூவகை உலகம் முற்றும் காலத்தும், முற்ற வற்றோ? 22

16. பாக்கியம் - நல்வினை; 18. அரங்கு - சுதர்மை முதலிய சபைகள்; 19. அரிந்தம - பகைவர்களை அழிப்பவனே; 20. தீர்தி - தவறியவனாவாய்; யாழ் இசை மொழி - சீதை.

'இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும், போரின்
வில் அறம் துறந்தும், வாழ்வேற்கு. இன்னன மேன்மை இல்லாச்
சில் அறம்; புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு,
நல் அறம் தொடர்ந்த நோன்பின், நலைவ அற நோற்பல் நாளும். 23

'நான்கு திங்கள் சென்றபின் படையொடு வருக' என இராமன்
கூறுதலும் சுக்கிரீவன் விடைபெறுதலும்

'அரசியற்கு உரிய யாவும் ஆற்றுழி ஆற்றி, ஆன்ற
திரை செயற்கு உரிய சேனைக் கடலொடும், திங்கள் நான்கின்
விரசுக, என்பால்; நின்னை வேண்டினென், வீர!' என்றான்—
உரை செயற்கு எளிதும் ஆகி, அரிதும் ஆம் ஒழுக்கில் நின்றான்.

'மறித்து ஒரு மாற்றம் கூறான், 'வான் உயர் தோற்றத்து அன்னான்
குறிப்பு அறிந்து ஒழுகல் மாதோ, கோது இலர் ஆதல்' என்னா;
நெறிப் பட, கண்கள் பொங்கி நீர் வர, நெடிது தாழ்ந்து,
பொறிப்ப அருந் துன்பம் முனாா, கவி குலத்து அரசன் போனான். 25

அங்கதனுக்கு இராமன் அறிவுரை

வாலி காதலனும், ஆண்டு, மலர் அடி வணங்கினானை,
நீல மா மேகம் அன்ன நெடியவன், அருளின் நோக்கி,
'சீலம் நீ உடையை ஆதல், இவன் சிறு தாதை என்னா,
மூலமே தந்த நுந்தை ஆம் என, முறையின் நிற்றி.' 26

என்ன, மற்று இனைய கூறி, 'ஏகு அவன்-தொடர' என்றான்;
பொன் அடி வணங்கி, மற்று அப் புகழுடைக் குரிசில் போனான்;
பின்னர், மாருதியை நோக்கி, 'பேர் எழில் வீர! நீயும்,
அன்னவன் அரசுக்கு ஏற்றது ஆற்றுதி, அறிவின்' என்றான். 27

மாருதி, 'இங்கிருந்து அடிமை செய்வேன்' எனல்

பொய்த்தல் இல் உள்ளத்து அன்பு பொழிகின்ற புணர்ச்சியாலும்,
'இத் தலை இருந்து, நாயேன், ஏயின எனக்குத் தக்க
கைத் தொழில் செய்வென்' என்று, கழல் இணை வணங்கும் காலை,
மெய்த் தலை நின்ற வீரன், இவ் உரை விளம்பி விட்டான்: 28

அனுமனைக் கிட்கிந்தைக்குச் செல்ல இராமன் வற்புறுத்தல்

'நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன் வலிதின் கொண்டால்,
அரும்புவ, நலனும் தீங்கும்; ஆகலின், ஐய! நின்போல்
பெரும் பொறை அறிவினோரால், நிலையினைப் பெறுவது அம்மா!

23. சில் அறம் - சிறப்பு இல்லாத அற்ப ஒழுக்கங்கள்; 24. விரசுக - வந்து சேர்க.

'ஆன்றவற்கு உரியது ஆய அரசினை நிறுவி, அப்பால்,
ஏன்று எனக்கு உரியது ஆய கருமமும் இயற்றற்கு ஒத்த
சான்றவர், நின்னின் இல்லை; ஆதலால், தருமம்தானே
போன்ற நீ, யானே வேண்ட, அத் தலை போதி' என்றான். 30

அனுமன் கிட்கிந்தை செல்ல, இராம-இலக்குவர் வேறு ஓர் மலையை அடைதல்

ஆழியான் அனைய கூற, 'ஆணை ஈது ஆயின், அஃதே,
வாழியாய்! புரிவென்' என்று வணங்கி, மாருதியும் போனான்;
சூழி மால் யானை அன்ன தம்பியும், தானும் தொல்லை
ஊழி நாயகனும், வேறு ஓர் உயர் தடங் குன்றம் உற்றார். 31

சுக்கிரீவன் அரசு புரிதல்

ஆரியன் அருளின் போய்த் தன் அகல் மலை அகத்தன் ஆன
சூரியன் மகனும், மானத் துணைவரும், கிளையும், சுற்ற,
தாரையை வணங்கி, அன்னாள் தாய் என, தந்தை முந்தைச்
சீரியன் சொல்லே என்ன, செவ்வியின் அரசுசெய்தான். 32

வள அரசு எய்தி, மற்றை வானர வீரர் யாரும்
கிளைஞரின் உதவ, ஆணை கிளர் திசை அளப்ப, கேளோடு,
அளவு இலா ஆற்றல் ஆண்மை அங்கதன், அறம் கொள் செல்வத்து
இளவரசு இயற்ற, ஏவி, இனிதினின் இருந்தான். இப்பால், 33

## 9 கார்காலப் படலம்

கதிரவன் தென்திசை ஏகல்

மா இயல் வட திசைநின்று, வானவன்,
ஓவியமே என ஒளிக் கவின் குலாம்
தேவியை நாடிய, முந்தி, தென் திசைக்கு
ஏவிய தூது என, இரவி ஏகினான். 1

மேகம் பரத்தல்

பை அணைப் பல் தலைப் பாந்தள் ஏந்திய
மொய் நிலத் தகளியில், முழங்கு நீர் நெயின்,
வெய்யவன் விளக்கமா, மேருப் பொன் திரி,
மை எடுத்து ஒத்தது—மழைத்த வானமே. 2

9 : 1. மா - பெருமை; இயலுதல் - பொருந்துதல்; நாடிய - தேடும் பொருட்டு; 2. மழைத்தவானம் - கார்காலமேகத்தால் மூடுண்ட ஆகாயம்.

நண்ணுதல் அருங் கடல் நஞ்சம் நுங்கிய
கண்ணுதல் கண்டத்தின் காட்சி ஆம் என
விண்ணகம் இருண்டது; வெயிலின் வெங் கதிர்
தண்ணிய மெலிந்தன; தழைத்த. மேகமே. 3

நஞ்சினின், நளிர் நெடுங் கடலின், நங்கையர்
அஞ்சன நயனத்தின், அவிழ்ந்த கூந்தலின்,
வஞ்சனை அரக்கர்தம் வடிவின், செய்கையின்,
நெஞ்சினின், இருண்டது—நீல வானமே. 4

நாட்களின், நளிர் கடல் நாரம் நா உற
வேட்கையின் பருகிய மேகம், மின்னுவ,
வாட் கைகள் மயங்கிய செருவின், வார் மதப்
பூட்கைகள் நிறத்த புண் திறப்ப போன்றவே. 5

நீல் நிறப் பெருங் கரி நிரைத்த நீர்த்து என,
சூல் நிற முகிற் குலம், துவன்றி, சூழ் திரை
மால் நிற நெடுங் கடல் வாரி, மூரி வான்
மேல் நிரைத்துளது என, முழக்கம் மிக்கதே. 6

அரிப் பெரும் பெயரவன் முதலினோர் அணி,
விரிப்பவும் ஒத்தன; வெற்பு மீது, தீ
எரிப்பவும் ஒத்தன; ஏசு இல் ஆசைகள்
சிரிப்பவும் ஒத்தன;—தெரிந்த மின் எலாம். 7

மாதிரக் கருமகன், மாரிக் கார் மழை—
யாதினும் இருண்ட விண்—இருந்தைக் குப்பையின்,
கூதிர் வெங் கால் நெடுந் துருத்திக் கோள் அமைத்து,
ஊது வெங் கனல் உமிழ் உலையும், ஒத்ததே. 8

சூடின மணி முடித் துகள் இல் விஞ்சையர்
கூடு உறை நீக்கிய குருதி வாட்களும்,
ஆடவர் பெயர்தொறும் ஆசை யானையின்
ஓடைகள் ஒளி பிறழ்வனவும், ஒத்ததே. 9

பிரிந்து உறை மகளிரும், பிலத்த பாந்தளும்,
எரிந்து உயிர் நடுங்கிட, இரவியின் கதிர்
அரிந்தன ஆம் என, அசனி நா என,
விரிந்தன, திசைதொறும்—மிசையின் மின் எலாம். 10

5. நாட்களின் - நாட்படு கள்ளைப் பருகுவதுபோல; பூட்கை - புழைக்கை, துளை பொருந்திய கைகளையுடைய யானை; 6. கடல் வாரி - கடலின் தண்ணீர்; 7. அரிப் பெரும் பெயரவன் - இந்திரன்; 8. இருந்தைக் குப்பை - கரிக்குவியல்; 9. ஆடவர் - திசை காக்கும் பாலகர்கள்.

எண் வகை நாகங்கள், திசைகள் எட்டையும்
நண்ணின நா வளைத்தனைய மின் நக;
கண்ணுதல் மிடறு எனக் கருகி, கார் விசும்பு
உள் நிறை உயிர்ப்பு என, ஊதை ஓடின. 11

ஊதைக் காற்று வீசுதல்

தலைமையும் கீழ்மையும் தவிர்தல் இன்றியே,
மலையினும் மரத்தினும் மற்றும் முற்றினும்,
விலை நினைந்து உள வழி விலங்கு வேசையர்
உலைவுறும் மனம் என, உலாய ஊதையே. 12

அழுங்குறு மகளிர், தம் அன்பர்த் தீர்ந்தவர்,
புழுங்குறு புணர் முலை கொதிப்பப் புக்கு உலாய்,
கொழுங் குறைத் தசை என ஈர்ந்து கொண்டு, அது
விழுங்குறு பேய் என, வாடை வீங்கிற்றே. 13

பருவ மழை பெய்தல்

ஆர்த்து எழு துகள் விசும்பு அடைத்தலானும், மின்
கூர்த்து எழு வாள் எனப் பிறழும் கொட்பினும்,
தார்ப் பெரும் பணையின் விண் தழங்கு காரினும்,
போர்ப் பெருங் களம் எனப் பொலிந்தது—உம்பரே. 14

இன் நகைச் சனகியைப் பிரிந்த ஏந்தல்மேல்,
மன்மதன் மலர்க் கணை வழங்கினன் என,
பொன் நெடுங் குன்றின்மேல் பொழிந்த, தாரைகள்—
மின்னொடும் துவன்றின மேக ராசியே. 15

கல்லிடைப் படும் துளித் திவலை, கார் இடு
வில்லிடைச் சரம் என, விசையின் வீழ்ந்தன;
செல்லிடைப் பிறந்த செங் கனல்கள் சிந்தின,
அல்லிடை, மணி சிறந்து, அழல் இயற்றல்போல்.* 16

மள்ளர்கள் மறு படை, மான யானைமேல்
வெள்ளி வேல் எறிவன போன்ற, மேகங்கள்;
தள்ள அரும் துளி பட, தகர்ந்து சாய் கிரி,
புள்ளி வெங் கட கரி புரள்வ போன்றவே. 17

12. தலைமை - மேலான இடம்; கீழ்மை - கீழான இடம்; உள வழி - பொருள் உள்ள இடங்கள்; விலங்கும் - பாய்ந்து செல்லும்; 14. கொட்பு - சுழற்சி; பணை - முரசு; 16. கார் இடு வில் - மேகங்களில் காணப்படும் இந்திர வில்; அல் - இரவுக்காலம்; 17. மேகங்களுக்கு மள்ளர்களும் கிரிக்குக் கரிகளும் உவமைகள்.

வான் இடு தனு, நெடுங் கருப்பு வில்; மழை,
மீன் நெடுங் கொடியவன்; பகழி, வீழ் துளி;
தான் நெடுஞ் சார் துணை பிரிந்த தன்மையர்
ஊனுடை உடம்பு எலாம் உக்கது ஒத்ததே. 18

'தீர்த்தனும் கவிகளும் செறிந்து, நம் பகை
பேர்த்தனர் இனி' எனப் பேசி, வானவர்
ஆர்த்தென, ஆர்த்தன மேகம்; ஆய் மலர்
தூர்த்தன ஒத்தன, துள்ளி வெள்ளமே. 19

வண்ண வில் கரதலத்து அரக்கன், வாளினன்,
விண்ணிடைக் கடிது கொண்டு ஏகும் வேலையில்,
பெண்ணினுக்கு அருங் கலம் அனைய பெய்வளை
கண் என, பொழிந்தது—கால மாரியே. 20

பரஞ்சுடர்ப் பண்ணவன், பண்டு, விண் தொடர்
புரம சுட விடு சரம் புரையும் மின்இனம்,
அரம் சுடப் பொறி நிமிர் அயிலின், ஆடவர்
உரம் சுட உளைந்தனர், பிரிந்துளோர் எலாம். 21

பொருள் தரப் போயினர்ப் பிரிந்த பொய் உடற்கு,
உருள்தரு தேர்மிசை உயிர்கொண்டு உய்த்தலான்,
மருள்தரு பிரிவின் நோய் மாசுணம் கெட,
கருடனைப் பொருவின—கால மாரியே. 22

முழங்கின முறை முறை மூரி மேகம், நீர்
வழங்கின, மிடைவன,—மான யானைகள்,
தழங்கின, பொழி மதத் திவலை தாழ்தரப்
புழுங்கின, எதிர் எதிர் பொருவ போன்றவே. 23

விசைகொடு மாருதம் மறித்து வீசலால்,
அசைவுறு சிறு துளி அப்பு மாரியின்,
இசைவுற எய்வன இயைவவாய், இருந்
திசையொடு திசை செருச் செய்தல் ஒத்தவே.* 24

**மரங்கள் பூத்தல்**

விழைவுறு பொருள் தரப் பிரிந்த வேந்தர் வந்து
உழை உற, உயிர் உற உயிர்க்கும மாதரின்,
மழை உற, மா முகய மலர்ந்து தோன்றின,
குழை உறப் பொலிந்தன—உலவைக் கொம்பு எலாம். 25

19. பேர்த்தல் - அழித்தல்; துள்ளி வெள்ளம் - மழைத் துளிகளின் தொகுதிகள்; 20. பெய்வளை - சீதை; 21. பண்ணவன் - கடவுள், இங்குச் சிவன்; அரம் சுட - அரத்தினால் அராவப்பட்டு; 22. உயிர் - (தலைவர் களாகிய) உயிர்கள்; 23. தழங்கின - பிளிறிக்கொண்டு; புழுங்கின - சினந்து; 24. மறித்து வீசல் - மாறி மாறி வீசுதல்; 25. வேந்தர் - தலைவர்.

பாடலம் வறுமை கூர, பகலவன் பசுமை கூர,
கோடல்கள் பெருமை கூர, குவலயம் சிறுமை கூர,
ஆடின மயில்கள்; பேசாது அடங்கின குயில்கள்—அன்பர்
கேடுறத் தளர்ந்தார் போன்றும், திரு உறக் கிளர்ந்தார் போன்றும். 26

நால் நிறச் சுரும்பும், வண்டும், நவ மணி அணியின் சார,
தேன் உக மலர்ந்த சந்தச் சேயிதழ்க் காந்தட் செம் பூ,
'வேனிலை வென்றது அம்மா, கார்!' என வியந்து நோக்கி,
மா நிலக் கிழத்தி கைகள் மறித்தன போன்ற மன்னோ. 27

வாள் எயிற்று அரவம் போல வான் தலை தோன்ற வார்ந்த
தாளுடைக் கோடல் தம்மைத் தழீஇயின, காதல் தங்க
மீளல; அவையும் அன்ன விழைவன, உணர்வு வீந்த
கோள் அரவு என்னப் பின்னி, அவற்றொடும் குழைந்து சாய்ந்த.* 28

**இந்திரகோபம்**

எள் இட இடமும் இன்றி எழுந்தன இலங்கு கோபம்,
தள்ளுற, தலைவர் தம்மைப் பிரிந்து, அவர் தழீஇய தூமக்
கள்ளுடை ஓதியார் தம் கலவியில், பலகால் கான்ற
வெள்ளடைத் தம்பல் குப்பை சிதர்ந்தென, விரிந்த மாதோ.

**மலை அருவி**

தீம் கனி நாவல் ஓங்கும் சேண் உயர் குன்றின், செம் பொன்
வாங்கின கொண்டு, பாரில் மண்டும் மால் யாறு மான,
வேங்கையின் மலரும், கொன்றை விரிந்தன வீயும், ஈர்த்து,
தாங்கின கலுழி, சென்று தலைமயக்குறுவ தம்மில். 30

**காந்தளில் கொன்றையும் கோபமும்**

நல் நெடுங் காந்தள் போதில், நறை விரி கடுக்கை மென் பூ,
துன்னிய கோபத்தோடும் தோன்றிய தோற்றம்—தும்பி
இன் இசை முரல்வ நோக்கி, இரு நில மகள் கை ஏந்தி,
பொன்னொடும் காசை நீட்டிக் கொடுப்பதே போன்றது அன்றே!

26. பாடலம் - பாதிரி மரம்; பசுமை - குளிர்ந்த தன்மை; கோடல் - வெண் காந்தள்; குவலயம் - குவளை மலர்கள்; 27. நால் நிறம் - பல நிறம்; அணி - வளையல்; மறித்தன - (அதிசயத்தைக் காட்டுமாறு) மடக்கி வைத்தன; 29. தள்ளுற - (பிரிவாற்றாமையால்) தடுமாறும்படி, சிலகாலம் கழிய எனலும் ஆம்; வெள்ளடைத் தம்பல் - வெற்றிலைத் தம்பலங்கள்; 30. குன்று - மேருமலை; யாறு - சம்பூ என்னும் ஆறு; கலுழி - நீர்ப்பெருக்கு; 31. காசு - இரத்தினம்.

நாடக அரங்கு

கிளைத் துணை மழலை வண்டு கின்னரம் நிகர்த்த; மின்னும்
துளிக் குரல் மேகம் வள் வார்த் தூரியம் துவைப்ப போன்ற;
வளைக் கையர் போன்ற, மஞ்ஞை; தோன்றிகள், அரங்கின்மாடே
விளக்குஇனம் ஒத்த; காண்போர் விழி ஒத்த, விளையின் மென் பூ.* 32

பேடையும் ஞிமிறும் பாயப் பெயர்வுழிப் பிறக்கும் ஓசை
ஊடுறத் தாக்கும்தோறும் ஒல் ஒலி பிறப்ப, நல்லார்
ஆடு இயல் பாணிக்கு ஒக்கும்; ஆரிய அமிழ்தப் பாடல்
கோடியர் தாளம் கொட்டல், மலர்ந்த கூதாளம் ஒத்த.* 33

காட்டாறும் கொன்றையும்

வழை துறு கான யாறு, மா நிலக் கிழத்தி, மக்கட்கு
உழை துறு மலை மாக் கொங்கை சுரந்த பால் ஒழுக்கை ஒத்த;
விழைவுறு வேட்கையோடும் வேண்டினர்க்கு உதவ வேண்டி,
குழைதொறும் கனகம் தூங்கும் கற்பகம் நிகர்த்த, கொன்றை.

மான்கள்

பூ இயல் புறவம் எங்கும் பொறி வரி வண்டு போர்ப்ப,
தீவிய களிய ஆகிச் செருக்கின; காமச் செவ்வி,
ஓவிய மரன்கள்தோறும் உரைத்து, அற உரிஞ்சி, ஒண் கேழ்
நாவிய செவ்வி நாற, கலையொடும் புலந்த நவ்வி. 35

குவளை குவிய முல்லை அரும்புதல்

தேரில் நல் நெடுந் திசை செலச் செருக்கு அழிந்து ஒடுங்கும்
கூர் அயில் தரும் கண் எனக் குவிந்தன குவளை;
மாரன் அன்னவர் வரவு கண்டு உவக்கின்ற மகளிர்
மூரல் மென் குறு முறுவல் ஒத்து அரும்பின, முல்லை. 36

அருவி பெருகலும் தாமரை மலர்தலும்

களிக்கும் மஞ்ஞையை, கண்ணுளர்இனம் எனக் கண்ணுற்று,
அளிக்கும் மன்னரின், பொன் மழை வழங்கின அருவி;
வெளிக்கண் வந்த கார் விருந்து என, விருந்து கண்டு உள்ளம்
களிக்கும் மங்கையர் முகம் என, பொலிந்தன, கமலம். 37

32. கிளைத் துணை - கைக்கிளை என்னும் இசைக்குச் சமமான; கின்னரம் - யாழ்; வள் - செறிவு; தூரியம் - மத்தளம்; தோன்றி - செங்காந்தள் மலர்; விளை - கருவிளை மலர்; 33. பேடை - பெண் வண்டு; ஞிமிறு - ஆண் வண்டு; பாணி - கூத்து; கோடியர் - நாடக மகளிர்; 34. வழை - சுரபுன்னை; உழை துறு கொங்கை - புடை பருத்த நகில்கள்; குழை - தளிர்; 35. தீவிய களிய - இனிமையும் களிப்பையும் உடையன; உரிஞ்சி - உராய்ந்து; நாவிய செவ்வி - கத்தூரிக்குரிய மணம்; 36. நெடுந்திசை - நெடுந்தொலைவு; மூரல் - பற்கள்; 37. கண்ணுளர் இனம் - கூத்தரின் இனமாக வரும் விறலியர்; வெளி - வான வெளி.

தேனீ

சரத நாள்மலர் யாவையும் குடைந்தன, தடவிச்
சுரத நூல் தெரி விடர் என, தேன் கொண்டு தொகுப்ப,
பரத நூல் முறை நாடகம் பயன் உறப் பகுப்பான்,
இரதம் ஈட்டுறும் கவிஞரைப் பொருவின—தேனீ. 38

மான்களின் களிப்பு

' ''நோக்கினுல் நமை நோக்கு அழி கண்ட நுண் மருங்குல்
தாக்கு அணங்கு அருஞ் சீதைக்கு, தாங்க அருந் துன்பம்
ஆக்கினுன் நமது உருவின்'' என்று, அரும் பெறல் உவகை
வாக்கினுல் உரையாம்' என, களித்தன—மான்கள். 39

அன்னம், கொக்கு முதலிய பறவை இனங்கள்

நீடு நெஞ்சு உறு நேயத்தால் நெடிது உறப் பிரிந்து
வாடுகின்றன, மருளுறு காதலின் மயங்கி,
கூடு நல் நதித் தடம்தொறும் குடைந்தன, படிவுற்று
ஆடுகின்றன—கொழுநரைப் பொருவின—அன்னம். 40

கார் எனும் பெயர்க் கரியவன் மார்பினில் கதிர் முத்து-
ஆரம் என்னவும் பொலிந்தன—அளப்ப அரும் அளக்கர்
நீர் முகந்த மா மேகத்தின் அருகு உற நிரைத்து,
கூரும் வெண் நிறத் திரை எனப் பறப்பன குரண்டம். 41

மருவி நீங்கல்செல்லா நெடு மாலைய, வானில்
பருவ மேகத்தின் அருகு உறக் குருகுஇனம் பறப்ப,
'திருவின் நாயகன் இவன்' எனத் தே மறை தெரிக்கும்
ஒருவன் மார்பினின் உத்தரியத்தினை ஒத்த. 42

பசும் புல்லின் எழுச்சியும், மயிலின் அகவலும்

உற வெதுப்புறும் கொடுந் தொழில் வேனிலான் ஒழிய,
திறம் நினைப்ப அருங் கார் எனும் செவ்வியோன் சேர,
நிற மனத்து உறு குளிர்ப்பினின், நெடு நில மடந்தை,
புற மயிர்த்தலம் பொடித்தன போன்றன—பசும் புல். 43

தேன் அவாம் மலர்த் திசைமுகன் முதலினர் தெளிந்தோர்,
ஞான நாயகன் நவை உற, நோக்கினர் நல்க,
கானம் யாவையும் பரப்பிய கண் என, சனகன்
மானை நாடி நின்று அழைப்பன போன்றன—மஞ்ஞை. 44

38. சரதம் - சரசம், தேனுகிய ரசத்தோடு கூடியது; சுரத நூல் - காம நூல்; விடர் - காமுகர்; இரதம் - ரசம், சுவை; 41. அளக்கர் - கடல்; மா - கருமை; கூர்தல் - மிகுதல்; குரண்டம் - கொக்குகள்; 42. குருகு - நாரை; 43. உற - மிகுதியாக; திறம் - மேன்மை; நிற மனம் - மாட்சி பெற்ற மனம்; 44. தேன் - வண்டு ; ஞான நாயகன் - இராமன்; நவை - துன்பம்.

செந்தாமரை மலர்களும், கொடிகளும்

செஞ் செவ் வேலவர், செறி சிலைக் குரிசிலர், இருண்ட
குஞ்சி சேயொளி கதுவுறப் புது நிறம் கொடுக்கும்
பஞ்சி போர்த்த மெல் அடி எனப் பொலிந்தன, பதுமம்;
வஞ்சி போலியர் மருங்கு என நுடங்கின, வல்லி. 45

குயில்கள் குரல் காட்டாமை

'நீயிர், அன்னவள் குதலையிர் ஆதலின், நேடி,
போய தையலைத் தருதிர்' என்று, இராகவன் புகல,
தேயம் எங்கணும் திரிந்தன போந்து, இடைத் தேடிக்
கூய ஆய், குரல் குறைந்தபோல் குறைந்தன—குயில்கள். 46

ஆம்பியும் பிடவமும்

பொழிந்த மா நிலம் புல் தர, குமட்டிய புனிற்று
எழுந்த ஆம்பிகள் இடறின, செறி தயிர் ஏய்ந்த;
மொழிந்த தேனுடை முகிழ் முலை ஆய்ச்சியர் முழவில்
பிழிந்த பால் வழி நுரையினைப் பொருவின—பிடவம். 47

நானில மலர்கள்

வேங்கை நாறின, கொடிச்சியர் வடிக் குழல்; விரை வண்டு
ஏங்க, நாகமும் நாறின, நுளைச்சியர் ஐம்பால்;
ஓங்கு நாள்முல்லை நாறின, ஆய்ச்சியர் ஓதி;—
ஞாங்கர், உற்பலம் உழத்தியர் பித்திகை நாற. 48

கார்காலத்தைக் கண்ட இராமனின் மன நிலை

தேரைக் கொண்ட பேர் அல்குலாள் திருமுகம் காணான்;
ஆரைக் கண்டு உயிர் ஆற்றுவான்? நல் உணர்வு அழிந்தான்;
மாரற்கு எண் இல் பல் ஆயிரம் மலர்க் கணை வகுத்த
காரைக் கண்டனன்; வெந் துயர்க்கு ஒரு கரை காணான். 49

அளவு இல் கார் எனும் அப் பெரும் பருவம் வந்து அணைந்தால்,
தளர்வர் என்பது தவம் புரிவோர்கட்கும் தகுமால்;
கிளவி தேனினும் அமிழ்தினும் குழைத்தவள் கிளைத்தோள்
வளவி உண்டவன், வருந்தும்என்றால், அது வருத்தோ? 50

45. செஞ் செவ் வேல் - செக்கச் சிவந்த வேல்; 47. பொழிந்த நிலம் - மழை பொழியப் பெற்ற பூமி; குமட்டிய - மேய்ந்து தெவிட்டிய; ஆம்பி - காளான்; பிழிந்த - கறந்த; 48. வடிக்குழல் - சிறந்த கூந்தல்; நுழைச்சியர் - செம்படவச்சிகள்; உற்பலம் - செங்கழுநீர் மலர்; பித்திகை - கூந்தல்; 50. வளவி - தழுவி.

இராமன் முகில் முதலியவற்றோடு புலம்பல்

காவியும், கருங் குவளையும், நெய்தலும், காயாம்-
பூவையும் பொருவான் அவன், புலம்பினன் தளர்வான்,
'ஆவியும் சிறிது உண்டு கொலாம்' என, அயர்ந்தான்,
தூவி அன்னம் அன்னாள் திறத்து, இவை இவை சொல்லும்: 51

'வார் ஏர் முலையாளை மறைக்குநர் வாழ்
ஊரே அறியேன்; உயிரோடு உழல்வேன்;
நீரே உடையாய், அருள் நின் இலையோ?
காரே! எனது ஆவி கலக்குதியோ? 52

'வெப்பு ஆர் நெடு மின்னின் எயிற்றை; வெகுண்டு,
எப் பாலும், விசும்பின் இருண்டு எழுவாய்;
அப் பாதக வஞ்ச அரக்கரையே
ஒப்பாய்; உயிர் கொண்டு அலது ஓவலையோ? 53

'அயில் ஏய் விழியார், விளை ஆர் அமுதின்
குயில் ஏய் மொழியார்க் கொணராய்; கொடியாய்!
துயிலேன் ஒருவேன் உயிர் சோர்வு உணர்வாய்;
மயிலே! எனை நீ வலி ஆடுதியோ? 54

'மழை வாடையொடு ஆடி, வலிந்து, உயிர்மேல்
நுழைவாய்; மலர்வாய் நொடியாய்—கொடியே!—
இழை வாள் நுதலாள் இடைபோல் இடையே
குழைவாய்; எனது ஆவி குழைக்குதியோ? 55

'விழையேன் விழைவானவை; மெய்ம்மையின் நின்று
இழையேன், உணர்வு என்வயின் இன்மையினால்;
பிழையேன்; உயிரோடு பிரிந்தனரால்;
உழையே! அவர் எவ் உழையார்? உரையாய்! 56

'பயில் பாடக மெல் அடி பஞ்சு அனையார்
செயிர் ஏதும் இலாரொடு தீருதியோ?
அயிராது உடனே அகல்வாய்அலையோ?
உயிரே! கெடுவாய்! உறவு ஓர்கிலையோ? 57

'ஒன்றைப் பகராய், குழலுக்கு உடைவாய்;
வன் தைப்புறு நீள் வயிரத்தினையோ!—
கொன்றைக் கொடியாய்!—கொணர்கின்றிலையோ!
என்றைக்கு உறவு ஆக இருந்தனையோ? 58

53. ஓவல் - நீங்குதல்; 54. ஒருவேன் - தனித்திருப்பவன்; 55. நொடியாய் - சொல்லாய்; 57. தீருதல் - நீங்கிச் செல்லல்; 58. உடைதல் - தோல்வியுறல்; தைப்புறல் - ஊன்றல்; வயிரம் - பகை.

'குரா அரும்பு அனைய கூர் வாள் எயிற்று வெங் குருளை நாகம்
விராவு வெங் கடுவின் கொல்லும் மெல் இணர் முல்லை, வெய்தின்
உராவ அருந் துயரம் மூட்டி, ஓய்வு அற மலைவது ஒன்றோ?
இராவண கோபம் நிற்க, இந்திரகோபம் என்னோ? 59

'ஓடை வாள் நுதலினாளை ஒளிக்கலாம் உபாயம் உன்னி,
நாடி, மாரீசனார் ஓர் ஆடக நவ்வி ஆனார்;
வாடை ஆய், கூற்றினாரும், உருவினை மாற்றி வந்தார்;
கேடு சூழ்வார்க்கு வேண்டும் உருக் கொளக் கிடைத்த அன்றே?

'அரு வினை அரக்கர் என்ன, அந்தரம்அதனில் யாரும்
வெருவர, முழங்குகின்ற மேகமே! மின்னுகின்றாய்;
''தருவல்'' என்று இரங்கினாயோ? தாமரை மறந்த தையல்
உருவினைக் காட்டிக் காட்டி, ஒளிக்கின்றாய், ஒளிக்கின்றாயால்!

'உள் நிறைந்து உயிர்க்கும் வெம்மை உயிர் சுட, உலைவேன் உள்ளம்
புண் உற, வாளி தூர்த்தல் பழுது, இனி; போதி;—மார!—
எண் உறு கல்வி உள்ளத்து இளையவன், இன்னே, உன்னைக்
கண்ணுறும்ஆயின், பின்னை, யார், அவன் சீற்றம் காப்பார்? 62

'வில்லும், வெங் கணையும், வீரர், வெஞ் சமத்து அஞ்சினார்மேல்
புல்லுந அல்ல; ஆற்றல் போற்றலர்க் குறித்தல் போலாம்;—
அல்லும் நன் பகலும் நீங்கா அனங்க! நீ அருளின் தீர்ந்தாய்; [ஆமோ?'
''செல்லும்'' என்று, எளிவந்தோர்மேல், செலுத்தலும் சீர்மைத்து

**இலக்குவன் தேறுதல் மொழிகள்**

என்ன இத் தகைய பன்னி, ஈடு அழிந்து, இரங்குகின்ற
தன்னை ஒப்பானை நோக்கி, தகை அழிந்து அயர்ந்த தம்பி,
'நின்னை எத் தகையை ஆக நினைந்தனை?—நெடியோய்!' என்ன,
சென்னியில் சுமந்த கையன் தேற்றுவான், செப்பலுற்றான்: 64

'''காலம் நீளிது, காரும் மாரியும்
வந்தது'' என்ற கவற்சியோ?
நீலமேனி அரக்கர் வீரம்
நினைந்து அழுங்கிய நீர்மையோ?
வாலி சேனை மடந்தை வைகு இடம்
நாட வாரல் இலாமையோ?
சாலும் நூல் உணர் கேள்வி வீர!—
தளர்ந்தது என்னை?—தவத்தினோய்! 65

59. குருளை நாகம் - குட்டிப் பாம்பு; 62. இன்னே - இப்பொழுதே.

மறை துளங்கினும், மதி துளங்கினும்,
வானும் ஆழ் கடல் வையமும்
நிறை துளங்கினும், நிலை துளங்குறு
நிலைமை நின்வயின் நிற்குமோ?
பிறை துளங்குவ அனைய பேர் எயிறு
உடைய பேதையர் பெருமை, நின்
இறை துளங்குறு புருவ வெஞ் சிலை
இடை துளங்குற, இசையுமோ? 66

'அனுமன் என்பவன் அளவு அறிந்தனம்;
அறிஞ! அங்கதன் ஆதியோர்
எனையர் என்பது ஓர் இறுதிகண்டிலம்;
எழுபது என்று எணும் இயல்பினர்;
வினையின் வெந் துயர் விரவு திங்களும்,
விரைவு சென்றன, எளிதின்; நின்
தனு எனும் திரு நுதலி வந்தனள்;
சரதம்; வன் துயர் தவிர்தியே! 67

'மறை அறிந்தவர் வரவு கண்டு, ''உமை
வலியும் வஞ்சகர் வழியொடும்
குறைய வென்று, இடர் களைவென்'' என்றனை;
குறை முடிந்தது விதியினால்;
இறைவ! அங்கு அவர் இறுதி கண்டு,
இனிது இசை புனைந்து, இமையவர்கள்தாம்,
உறையும் உம்பரும் உதவி நின்றருள்;
உணர்வு அழிந்திடல் உறுதியோ! 68

'காது கொற்றம் நினக்கு அலாது
பிறர்க்கு எவ்வாறு கலக்குமோ?
வேதனைக்கு இடம் ஆதல் வீரதை
அன்று; மேதமை ஆம்அரோ;
போது பிற்படல் உண்டு; இது ஓர்
பொருள் அன்று; நின்று புணர்த்தியேல்,
யாது உனக்கு இயலாதது? எந்தை!
வருந்தல்' என்ன இயம்பினான். 69

66. நிலை - இயற்கை நிலை; பேதையர் - அறிவில்லா அரக்கர்; 67. திங்கள் - மாதங்கள்; 69. காது கொற்றம் - பகைவரை அழித்தலால் பெறும் வெற்றி; கலத்தல் - கிடைத்தல்; வீரதை - வீரத்தன்மை; புணர்த்தல் - முயற்சி செய்தல்.

கூதிர் காலம்

சொற்ற தம்பி உரைக்கு உணர்ந்து,
　　உயிர் சோர்வு ஒடுங்கிய தொல்லேயோன்;
இற்ற இன்னல் இயக்கம் எய்திட,
　　வைகல் பற்பல ஏக, மேல்
உற்று நின்ற வினேக் கொடும் பிணி,
　　ஒன்றின்மேல் உடன் ஒன்று உராய்,
மற்றும் வெம் பிணி பற்றினுலென,
　　வந்து எதிர்ந்தது மாரியே. 70

நிறைந்தன நெடுங் குளம்; நெருங்கின தரங்கம்;
குறைந்தன கருங் குயில்; குளிர்ந்த உயர் குன்றம்;
மறைந்தன தடந் திசை; வருந்தினர் பிரிந்தார்;
உறைந்தன, மகன்றிலுடன் அன்றில் உயிர் ஒன்றி. 71

பாசிழை அரம்பையர், பழிப்பு இல் அகல் அல்குல்
தூசு, தொடர் ஊசல், நனி வெம்மை தொடர்வுற்றே
வீசியது, வாடை—எரி வெந்த விரி புண் வீழ்
ஆசு இல் அயில் வாளி என, ஆசைபுரிவார்மேல். 72

வேலே நிறைவுற்றன; வெயில் கதிர் வெதுப்பும்
சீலம் அழிவுற்ற; புனல் உற்று உருவு செப்பின்
காலம் அறிவுற்று உணர்தல், கன்னல் அளவு அல்லால்,
மாலே பகல் உற்றது என, ஓர்வு அரிது மாதோ! 73

நெல் கிழிய நெற் பொதி நிரம்பின, நிரம்பாச்
சொற்கு இழிய நல் கிளிகள்; தோகையவர், தூ மென்
பற்கு இழி மணிப் படர் திரைப் பரதர் முன்றில்,
பொற் கிழி விரித்தன, சினேப் பொதுளு புன்னே. 74

நிறம் கருகு கங்குல், பகல், நின்ற நிலே நீவா
அறம் கருது சிந்தை முனி அந்தணரின், ஆலிப்
பிறங்கு அரு நெடுந் துளி படப் பெயர்வு இல் குன்றில்,
உறங்கல, பிறங்கல் அயல் நின்ற, உயர் வேழம். 75

70. இயக்கம்- நடமாட்டம்; 71. குறைதல் - மெலிதல்; மறைதல் - மேகங்களால் மறைதல்; மகன்றில் - நீர்வாழ் பறவை; அன்றில் - பனே மரத்துவாழ் பறவை; மகன்றிலும் அன்றிலும் தத்தம் பேடையைத் தழுவி நின்றன; 73. புனல் உற்று உருவு செப்பு - நீர் வந்து சேரப் பெறும் நாழிகை வட்டில்; கன்னல் அளவு - நாழிகைக் கணக்கு; 74. கிழிய - உதிருமாறு; இழிய - தோற்ற; மணி - முத்து; 75. நீவா - நீங்காத; பிறங்கல் - மலே.

சந்தின் அடையின் படலை வேதிகை தடம்தோறு,
அந்தி இடு அகில் புகை நுழைந்த, குளிர் அன்னம்;
மந்தி துயில் உற்ற, முழை; வன் கடுவன், அங்கத்து
இந்தியம் அவித்த தனி யோகியின் இருந்த. 76

ஆசு இல் சுனை வால் அருவி, ஆய் இழையர் ஐம்பால்
வாச மணம் நாறல் இல ஆன; மணி வன் கால்
ஊசல் வறிது ஆன; இதண் ஒண் மணிகள் விண்மேல்
வீசல் இல வான;—நெடு மாரி துளி வீச. 77

கருந் தகைய, தண் சினைய, கைதை மடல், காதல்
தரும் தகைய போது கிளையில் புடை தயங்க,
பெருந் தகைய பொற் சிறை ஒடுக்கி, உடல் பேராது,
இருந்த, குருகின் பெடை—பிரிந்தவர்கள் என்ன. 78

பதங்கள் முகில் ஒத்த, இசை பல் ஞிமிறு பன்ன,
விதங்களின் நடித்திடு விகற்ப வழி மேவும்
மதங்கியரை ஒத்த, மயில்; வைகு மர மூலத்து
ஒதுங்கின, உழைக் குலம்;—மழைக் குலம் முழக்க.* 79

விளக்கு ஒளி அகில் புகை விழுங்கு அமளி, மென் கொம்பு
இளைக்கும் இடை மங்கையரும், மைந்தர்களும், ஏற;
தளத் தகு மலர்த் தவிசு இகந்து, நகு சந்தின்
துளைத் துயில் உவந்து, துயில்வுற்ற, குளிர் தும்பி. 80

தாமரை மலர்த் தவிசு இகந்து, தகை அன்னம்,
மாமரம் நிரைத் தொகு பொதும்பருழை வைக;
தே மரம் அடுக்கு இதணிடைச் செறி குரம்பை,
தூ மருவு எயிற்றியரொடு அன்பர் துயில்வுற்றார். 81

வள்ளி புடை சுற்றி உயர் சிற்றலை மரம்தோறு,
எள்ள அரு மறிக் குருளொடு அண்டர்கள் இருந்தார்;
கள்ளரின் ஒளித்து உழல் நெடுங் கழுது ஒடுங்கி,
முள் எயிறு தின்று, பசி மூழ்கிட இருந்த.* 82

சரம் பயில் நெடுந் துளி நிரந்த புயல் சார,
உரம் பெயர்வு இல் வன் கரி கரந்து உற ஒடுங்கா,
வரம்பு அகல் நறும் பிரசம் வைகல் பல வைகும்
முரம்பினில் நிரம்பல; முழைஞ்சிடை நுழைந்த.* 83

76. படலை - மேற்கூரை; வேதிகை - மேடை; தடம் - ஓம குண்டம்; 77. இதண் - பரண்; 79. பதங்கள் - பறவைகள், இங்குப் பறவைகளின் ஒலி; மூலம் - அடிப்பகுதி; 80. தளம் - இதழ்; 81. தே மரம் - மணமிக்க மரங்கள்; குரம்பை - குடிசை; 82. வள்ளி - கொடி; மறிக்குருள் - ஆட்டுக் குட்டி; அண்டர் - இடையர்; கழுது - பேய்; 83. பிரசம் - தேன் கூடுகள்; முரம்பு - பாறை.

இராமனின் விரகதாபம்

இத் தகைய மாரியிடை, துன்னி இருள் எய்த,
மைத் தகு மணிக் குறு நகைச் சனகன் மான்மேல்
உய்த்த உணர்வத்தினன், நெருப்பிடை உயிர்ப்பான்,
வித்தகன், இலக்குவனை முன்னினன், விளம்பும்: 84

'மழைக் கரு மின் எயிற்று அரக்கன் வஞ்சனை
இழைப்ப, அருங்கொங்கையும் எதிர்வுற்று, இன்னலின்
உழைத்தனள், உலைந்து உயிர் உலக்கும்; ஒன்றினும்
பிழைப்ப அரிது, எனக்கும்; இது என்ன பெற்றியோ? 85

'தூ நிறச் சுடு சரம், தூணி தூங்கிட,
வான் உறப் பிறங்கிய வைரத் தோளொடும்,
யான் உறக் கடவதே இதுவும்? இந் நிலை
வேல் நிறத்து உற்றது ஒத்துழியும், வீகிலேன்.  86

'தெரி கணை மலரொடும் திறந்த நெஞ்சொடும்,
அரிய வன் துயரொடும், யானும் வைகுவேன்;
எரியும் மின்மினி மணி விளக்கின், இன் துணைக்
குரிஇனம், பெடையொடும் துயில்வ, கூட்டினுள்.* 87

'வானகம் மின்னினும், மழை முழங்கினும்,
யான் அகம் மெலிகுவென், எயிற்று அரா என;
கானகம் புகுந்து யான் முடித்த காரியம்,
மேல் நகும், கீழ் நகும்; இனி என் வேண்டுமோ? 88

'மறந்திருந்து உய்கிலேன்; மாரி ஈதுஎனின்,
இறந்து விண் சேர்வது சரதம்; இப் பழி,
பிறந்து பின் தீர்வலோ? பின்னர், அன்னது
துறந்து சென்று உறுவலோ? துயரின் வைகுவேன்!* 89

'ஈண்டு நின்று, அரக்கர்தம் இருக்கை யாம் இனிக்
காண்டலின், பற்பல காலம் காண்டுமால்;
வேண்டுவது அன்று இது; வீர! ''நோய் தெற
மாண்டனன் என்றது'' மாட்சிப்பாலது ஆம். 90

84. உணர்வத்தினன் - அறிவையுடையவன்; 85. எதிர்வுற்று - இலக்காகி; 86. தூ நிறச் சரம் - ஊன் படிந்த முகப்பினையுடைய அம்பு; நிறம் - முகப்பு; நிறத்து - மார்பகத்து; 89. சரதம் - உறுதி; 90. நோய் - பிரிவாற்றுத நோய்.

'செப்பு உருக்கு அனைய இம் மாரிச் சீகரம்
வெப்புறப் புரம் சுட, வெந்து வீவதோ—
அப்பு உருக் கொண்ட வாள் நெடுங் கண் ஆயிழை
துப்பு உருக் குமுத வாய் அமுதம் துய்த்த யான்?* 91

'நெய் அடை தீ எதிர் நிறுவி, ''நிற்கு இவள்
கையடை'' என்ற அச் சனகன் கட்டுரை
பொய் அடை ஆக்கிய பொறி இலேனொடு,
மெய் அடையாது; இனி, விளிதல் நன்றுஅரோ. 92

'தேற்றுவாய், நீ உளையாக, தேறி நின்று
ஆற்றுவேன், நான் உளனாக, ஆய்வளை
தோற்றுவாள் அல்லள்; இத் துன்பம் ஆர் இனி
மாற்றுவார்? துயர்க்கு ஒரு வரம்பு உண்டாகுமோ? 93

'விட்ட போர் வாளிகள் விரிஞ்சன் விண்ணையும்
சுட்டபோது, இமையவர் முதல தொல்லையோர்
பட்டபோது, உலகமும் உயிரும் பற்று அறக்
கட்டபோது, அல்லது, மயிலைக் காண்டுமோ? 94

'தருமம் என்ற ஒரு பொருள்தன்னை அஞ்சி, யான்
தெருமருகின்றது; செறுநர் தேவரோடு
ஒருமையின் வந்தனரேனும் உய்கலார்;—
உரும் என ஒலிபடும் உர விலோய்!' என்றான். 95

**இலக்குவன் மேலும் தேறுதல் கூறுதல்**

இளவலும் உரைசெய்வான், 'எண்ணும் நாள் இனும்
உள அல; கூதிரும், இறுதி உற்றதால்;
களவு செய்தவன் உறை காணும் காலம் வந்து
அளவியது; அயர்வது என்?—ஆணை ஆழியாய்! 96

'திரைசெய் அத் திண் கடல், அமிழ்தம் செங் கணான்
உரைசெயத் தரினும், அத் தொழில் உவந்திலன்;
வரை முதல் கலப்பைகள் மாடு நாட்டி, தன்
குரை மலர்த் தடக் கையால் கடைந்து கொண்டனன். 97

91. சீகரம் - துளிகள்; புரம் - உடம்பு; துப்பு - பவழம்; 92. நெய் அடை தீ - ஓமத்தீ; பொறி - நல்வினை; மெய் - மெய்ம்மை; 96. எண்ணும் நாள் - சுக்கிரீவனுக்குத் தவணையாகக் கொடுத்த நான்கு மாத காலம்; 97. கலப்பைகள் - கருவிகள்; மாடு - இடம், ஈண்டுக் கடல்.

'மனத்தினின் உலகு எலாம் வகுத்து, வாய்ப் பெயும்
நினைப்பினன்ஆயினும், நேமியோன் நெடும்
எனைப் பல படைக்கலம் ஏந்தி, யாரையும்,
வினைப் பெருஞ் சூழ்ச்சியின் பொருது வெல்லுமால். 98

'கண்ணுடை நுதலினன், கணிச்சி வானவன்,
விண்ணிடைப் புரம் சுட வெகுண்ட மேலைநாள்,
எண்ணிய சூழ்ச்சியும், ஈட்டிக்கொண்டவும்,—
அண்ணலே!—ஒருவரால் அறியற்பாலதோ? 99

'ஆகுநர் யாரையும் துணைவர் ஆக்கி, பின்
ஏகுறு நாளிடை எய்தி, எண்ணுவ
சேகு அறப் பல் முறை தெருட்டி, செய்தபின்,
வாகை என்று ஒரு பொருள் வழுவற்பாலதோ?* 100

'அறத் துறை திறம்பினர், அரக்கர்; ''ஆற்றலர்
மறத் துறை நமக்கு'' என வலிக்கும் வன்மையோர்-
திறத்து உறை நல் நெறி திறம்பல் உண்டுஎனின்,
புறத்து, இனி யார் திறம் புகழும் வாகையும்? 101

'பைந்தொடிக்கு இடர் களை பருவம் பையவே
வந்து அடுத்துளது; இனி, வருத்தம் நீங்குவாய்;
அந்தணர்க்கு ஆகும் நாம், அரக்கர்க்கு ஆகுமோ?—
சுந்தரத் தனு வலாய்!—சொல்லு, நீ' என்றான். 102

**கூதிர்ப்பருவம் தேய்ந்து மாய்தல்**

உறுதி அஃதே என உணர்ந்த ஊழியான்,
'இறுதி உண்டேகொல் இம் மாரிக்கு?' என்பது ஓர்
தெறு துயர் உழந்தனன் தேய, தேய்வு சென்று
அறுதியை அடைந்தது, அப் பருவம், ஆண்டு போய். 103

மள்கல் இல் பெருங் கொடை மருவி, மண்உளோர்
உள்கிய பொருள் எலாம் உதவி, அற்ற போது
எள்கல் இல் இரவலர்க்கு ஈவது இன்மையால்,
வெள்கிய மாந்தரின், வெளுத்த—மேகமே. 104

தீவினை, நல்வினை, என்னத் தேற்றிய
பேய் வினைப் பொருள்தனை அறிந்து பெற்றது ஓர்
ஆய் வினை மெய்யுணர்வு அணுக, ஆசு அறும்
மாயையின் மாய்ந்தது—மாரிப் பேர் இருள். 105

98. வாய்ப்பெய்தல் - உண்ணல், இங்கு அழித்தல்; 100. சேகு - உறுதி; 104. மள்கல் - குறைதல், பின் வாங்குதல்; 105. மாயை - அஞ்ஞானம்.

மூள் அமர் தொலைவுற, முரசு அவிந்தபோல்,
கோள் அமை கண முகில் குமுறல் ஓவின;
நீள் அடு கணை எனத் துளியும் நீங்கின;
வாள் உறை உற்றென மறைந்த, மின் எலாம். 106

தடுத்த தாள் நெடுந் தடங் கிரிகள் தாழ்வரை
அடுத்த நீர் ஒழிந்தன; அருவி தூங்கின;
எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்தி நின்று,
உடுத்த வால் நிறத் துகில் ஒழிந்த போன்றவே. 107

மேகம் மா மலைகளின் புறத்து வீதலால்,
மாக யாறு யாவையும் வாரி அற்றன;
ஆகையால், தகவு இழந்து, அழிவு இல் நன் பொருள்
போக, ஆறு ஒழுகலான் செல்வம் போன்றவே. 108

கடம் திறந்து எழு களிறு அனைய கார் முகில்
இடம் திறந்து ஏகலின், பொலிந்தது இந்துவும்—
நடம் திறன் நவில்வுறு நங்கைமார் முகம்,
படம் திறந்து உருவலின், பொலியும் பான்மைபோல். 109

பாசிழை மடந்தையர் பகட்டு வெம் முலை
பூசிய சந்தனம், புழுகு, குங்குமம்,
மூசின முயங்கு சேறு உலர, மொண்டு உற
வீசின, நறும் பொடி விண்டு, வாடையே.* 110

மன்னவன் தலைமகன் வருத்தம் மாற்றுவான்,
அந் நெறிப் பருவமும் நணுகிற்று ஆதலால்,
''பொன்னினை நாடிய போதும்'' என்பபோல்,
அன்னமும், திசை திசை அகன்ற, விண்ணின்வாய். 111

தம் சிறை ஒடுக்கின, தழுவும் இன்னல,
நெஞ்சு உறு மம்மரும் நினைப்பும் நீண்டன,—
மஞ்சு உறு நெடு மழை பிரிதலால், மயில்—
அஞ்சின, மிதிலை நாட்டு அன்னம் என்னவே.* 112

வஞ்சனை, தீவினை, மறந்த மா தவர்
நெஞ்சு எனத் தெளிந்த நீர் நிரந்து தோன்றுவ;
'பஞ்சு' என, சிவக்கும் மென் பாதப் பேதையர்
அஞ்சனக் கண் எனப் பிறழ்ந்த, ஆடல் மீன்.* 113

107. தாள் - அடிப்பகுதி; 108. தகவு - பெருந் தன்மை; ஆறு ஒழுகலான் - அறநெறியில் நடவாதவன்; 113. ஆடல் - விளையாட்டு.

ஊடிய மடந்தையர் வதனம் ஒத்தன,
தாள்தொறு மலர்ந்தன, முதிர்ந்த தாமரை;
கூடினர் துவர் இதழ்க் கோலம் கொண்டன,
சேடு உறு நறு முகை விரிந்த செங்கிடை.* 114

கல்வியின் திகழ் கணக்காயர் கம்பலைப்
பல் விதச் சிறுர் எனப் பகர்வ பல் அரி,
செல் இடத்து அல்லது ஒன்று உரைத்தல்செய்கலா
நல் அறிவாளரின், அவிந்த, நா எலாம்.* 115

செறி புனல் பூந் துகில் திரைக் கையால் திரைத்து,
உறு துணைக் கால் மடுத்து ஓடி, ஓத நீர்
எறும் வலிக் கணவனை எய்தி, யாறு எலாம்,
முறுவலிக்கின்றன போன்ற, முத்து எலாம்.* 116

சொல் நிறை கேள்வியின் தொடர்ந்த மாந்தரின்,
இல், நிறப் பசலை உற்று இருந்த மாதரின்,
தன் நிறம் பயப் பய நீங்கி, தள்ள அரும்
பொன் நிறம் பொருந்தின, பூகத் தாறு எலாம்.* 117

பயின்று உடல் குளிர்ப்பவும் பழனம் நீத்து, அவண்
இயன்றன இள வெயில் ஏய்ந்த மெய்யின,
வயின்தொறும், வயின்தொறும், மடித்த வாயின,
துயின்றன, இடங்கர் மா, தடங்கள்தோறுமே.* 118

கொஞ்சுறு கிளி நெடுங் குதலை கூடின,
அஞ்சிறை அறுபத அளக ஓதிய,
எஞ்சல் இல் குழையன, இடை நுடங்குவ—
வஞ்சிகள் பொலிந்தன, மகளிர் மானவே.* 119

அளித்தன முத்துஇனம் தோற்ப, மான் அனார்
வெளித்து எதிர் விழிக்கவும் வெள்கி, மேன்மையால்
ஒளித்தன ஆம் என, ஒடுங்கு கண்ணன,
குளித்தன, மண்ணிடை—கூனல் நந்து எலாம்.* 120

மழை படப் பொதுளிய மருதத் தாமரை
தழை படப் பேர் இலைப் புரையில் தங்குவ,
விழைபடு பெடையொடும், மெள்ள, நள்ளிகள்,
புழை அடைத்து ஒடுங்கின, வச்சை மாக்கள்போல். 121

114. சேடு - அழகு; 117. தொடர்ந்த - பிரிந்து சென்ற; பூகத் தாறு - பாக்குமரக் குலைகள்; 121. வச்சை மாக்கள் - உலோபிகள்.

# 10 கிட்கிந்தைப் படலம்

**சுக்கிரீவன் வாராமையால் இராமன் சினந்து, இலக்குவனை அனுப்புதல்**

அன்ன காலம் அகலும் அளவினில்,
முன்னை வீரன், இளவலை, 'மொய்ம்பினோய்!
சொன்ன எல்லையின் ஊங்கினும் தூங்கிய
மன்னன் வந்திலன்; என் செய்தவாறுஅரோ? 1

'பெறல் அருந் திருப் பெற்று, உதவிப் பெருந்
திறம் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;
அறம் மறந்தனன்; அன்பு கிடக்க, நம்
மறம் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான். 2

'நன்றி கொன்று, அரு நட்பினை நார் அறுத்து,
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்
கொன்று நீக்குதல் குற்றத்தில் தங்குமோ?
சென்று, மற்று அவன் சிந்தையைத் தேர்குவாய். 3

' ''வெம்பு கண்டகர் விண் புக வேர்அறுத்து,
இம்பர் நல் அறம் செய்ய எடுத்த விற்
கொம்பும் உண்டு; அருங் கூற்றமும் உண்டு; உங்கள்
அம்பும் உண்டு'' என்று சொல்லு, நம் ஆணையே. 4

'நஞ்சம் அன்னவரை நலிந்தால், அது
வஞ்சம் அன்று; மனு வழக்கு ஆதலால்;
அஞ்சில், ஐம்பதில், ஒன்று அறியாதவன்
நெஞ்சில் நின்று நிலாவ, நிறுத்துவாய். 5

' ''ஊரும், ஆளும், அரசும், உம் சுற்றமும்,
நீரும், ஆளுதிரேஎனின், நேர்ந்த நாள்
வாரும்; வாரலிர் ஆம் எனின், வானரப்
பேரும் மாளும்'' எனும் பொருள் பேசுவாய். 6

' ''இன்னும் நாடுதும், இங்கு இவர்க்கும் வலி
துன்னினாரை'' எனத் துணிந்தார்எனின்,
உன்னை வெல்ல, உலகு ஒரு மூன்றினும்,
நின் அலால் பிறர் இன்மை நிகழ்த்துவாய். 7

10 : 1. காலம் - ஈண்டு கூதிர்ப்பருவம்; 3. நார் - கயிறு, ஈண்டு அன்பு; 5. அஞ்சு, ஐம்பது என்பன முறையே இளமை முதுமைகளைக் குறித்தன; 6. ஆள் - குடிகள்.

'நீதி ஆதி நிகழ்த்தினை, நின்று, அது,
வேதியாத பொழுது, வெகுண்டு, அவண்
சாதியாது, அவர் சொல் தரத் தக்கனை;
போதி ஆதி' என்றான்—புகழ்ப் பூணினான். 8

இலக்குவன் கிட்கிந்தை செல்லுதல்

ஆணை சூடி, அடி தொழுது, ஆண்டு, இறை
பாணியாது, படர் வெரிந் பாழ்படாத்
தூணி பூட்டி, தொடு சிலை தொட்டு, அருஞ்
சேணின் நீங்கினன்—சிந்தையின் நீங்கலான். 9

மாறு நின்ற மரனும், மலைகளும்,
நீறு சென்று நெடு நெறி நீங்கிட,
வேறு சென்றனன்; மேன்மையின் ஓங்கிடும்
ஆறு சென்றிலன்—ஆணையின் ஏகுவான். 10

விண் உறத் தொடர் மேருவின் சீர் வரை
மண் உறப் புக்கு அழுந்தின, மாதிரம்;
கண் உறத் தெரிவுற்றது, கட்செவி—
ஒண் நிறக் கழல் சேவடி ஊன்றலால். 11

வெம்பு கானிடைப் போகின்ற வேகத்தால்,
உம்பர் தோயும் மராமரத்து ஊடு செல்
அம்பு போன்றனன், அன்று—அடல் வாலிதன்
தம்பிமேல் செலும் மானவன் தம்பியே. 12

மாடு வென்றி ஒர் மாதிர யானையின்
சேடு சென்று செடில், ஒரு திக்கின் மா
நாடுகின்றதும், நண்ணிய கால் பிடித்து
ஓடுகின்றதும், ஒத்துளன்ஆயினான். 13

உருக் கொள் ஒண் கிரி ஒன்றின்நின்று ஒன்றினைப்
பொருக்க எய்தினன், பொன் ஒளிர் மேனியான்—
அருக்கன் மா உதயத்தின்நின்று அத்தம் ஆம்
பருப்பதத்தினை எய்திய பண்புபோல். 14

8. வேதித்தல் - (மாறுபாட்டை) மாற்றுதல்; சாதியாது - கொன்றுவிடாமல்; 9. பாணித்தல் - காலம் தாழ்த்தல்; 11. மேருவின் சீர் வரை - மேரு மலையின் உச்சியின் எல்லை அளவு (அதன் உயரம் எவ்வளவோ அவ்வளவு ஆழம்); மாதிரம் - மலை; 13. செடில் - தவறிப்போனால்; நண்ணிய கால் பிடித்து - சென்ற அடிச்சுவட்டைப் பின்பற்றி; 14. ஒண் கிரி ஒன்று - மாலியவான் என்னும் மலை; ஒன்று - கிட்கிந்தை என்னும் மற்றொரு மலை.

தன் துணைத் தமையன் தனி வாளியின்
சென்று, சேண் உயர் கிட்கிந்தை சேர்ந்தவன்,
குன்றின்நின்று ஒரு குன்றினில் குப்புறும்
பொன் துளங்கு உளைச் சீயமும் போன்றனன். 15

வானரர் அங்கதனுக்குச் செய்தி அறிவித்தல்

கண்ட வானரம் காலனைக் கண்டபோல்
மண்டி ஓடின; வாலி மகற்கு, 'அமர்
கொண்ட சீற்றத்து இளையோன் குறுகினான்,
சண்ட வேகத்தினால்' என்று, சாற்றலும், 16

அங்கதன் சுக்கிரீவனிடத்திற்குப் போதல்

அன்ன தோன்றலும், ஆண் தொழிலான் வரவு
இன்னது என்று அறிவான், மருங்கு எய்தினான்;
மன்னன் மைந்தன் மனக் கருத்து உட்கொளா,
பொன்னின் வார் கழல் தாதை இல் போயினான். 17

சுக்கிரீவன் நிலை

நளன் இயற்றிய நாயகக் கோயிலுள்,
தள மலர்த் தகைப் பள்ளியில், தாழ் குழல்
இள முலைச்சியர் ஏந்து அடி தைவர,
விளை துயிற்கு விருந்து விரும்புவான்; 18

தெள்ளியோர் உதவ, பெருஞ் செல்வம் ஆம்
கள்ளினால் அதிகம் களித்தான்; கதிர்ப்
புள்ளி மா நெடும் பொன் வரை புக்கது ஓர்
வெள்ளி மால் வரை என்ன விளங்குவான்.* 19

சிந்துவாரத் தரு, நறை, தேக்கு, அகில்,
சந்தம், மா மயிற் சாயலர் தாழ் குழல்
கந்த மா மலர்க் காடுகள், தாவிய
மந்த மாருதம் வந்து உற, வைகுவான்; 20

தித்தியாநின்ற செங் கிடை வாய்ச்சியர்
முத்த வாள் நகை முள் எயிற்று ஊறு தேன்,
பித்தும், மாலும், பிறவும், பெருக்கலால்,
மத்த வாரணம் என்ன மயங்கினான்; 21

15. குப்புறும் - குதிக்கும்; 20. சிந்துவாரம் - கருநொச்சி; நறை - ஒருவகை வாசனைக் கொடி.

மகுட குண்டலம் ஏய் முகமண்டலத்து
உகு நெடுஞ் சுடர்க் கற்றை உலாவலால்,
பகலவன் சுடர் பாய் பனி மால் வரை
தக மலர்ந்து, பொலிந்து தயங்குவான்; 22

அங்கதன் சுக்கிரீவனைத் துயில் எழுப்புதல்

கிடந்தனன்—கிடந்தானைக் கிடைத்து இரு
தடங் கை கூப்பினன், தாரை முன்நாள் தந்த
மடங்கல் வீரன், நல் மாற்றம் விளம்புவான்
தொடங்கினன், அவனைத் துயில் நீக்குவான். 23

'எந்தை! கேள்: அவ் இராமற்கு இளையவன்,
சிந்தையுள் நெடுஞ் சீற்றம் திரு முகம்
தந்து அளிப்ப, தடுப்ப அரும் வேகத்தன்
வந்தனன்; உன் மனக் கருத்து யாது?' என்றான்; 24

இனைய மாற்றம் இசைத்தனன் என்பது ஓர்
நினைவு இலான், நெடுஞ் செல்வம் நெருக்கவும்,
நனை நறுந் துளி நஞ்சு மயக்கவும்,
தனை உணர்ந்திலன், மெல் அணைத் தங்கினான். 25

பின், அங்கதன் அனுமனிடம் செல்லுதல்

ஆதலால், அவ் அரசு இளங் கோள் அரி,—
யாதும் முன் நின்று இயற்றுவது இன்மையால்,
கோது இல் சிந்தை அனுமனைக் கூவுவான்
போதல் மேயினன்—போதகமே அனான். 26

அங்கதன் அனுமனுடன் தாரையின் கோயிலை அடைதல்

மந்திரத் தனி மாருதிதன்னொடும்,
வெந் திறல் படை வீரர் விராய் வர,
அந்தரத்தின் வந்து, அன்னைதன் கோயிலை,
இந்திரற்கு மகன் மகன் எய்தினான். 27

தாரையின் பேச்சு

எய்தி, 'மேல் செயத்தக்கது என்?' என்றலும்,
'செய்திர், செய்தற்கு அரு நெடுந் தீயன;
நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்;
உய்திர் போலும், உதவி கொன்றீர்?' என, 28

23. கிடைத்து - நெருங்கி; 25. நனை - கள்; 27. அந்தரம் - வெளிப்புறம், மனக் கலக்கம்.

மீட்டும் ஒன்று விளம்புகின்றாள்: ' ''படை
கூட்டும்'' என்று, உமைக் கொற்றவன், ''கூறிய
நாள் திறம்பின், உம் நாள் திறம்பும்'' எனக்
கேட்டிலீர்; இனிக் காண்டிர்; கிடைத்திரால். 29

'வாலி ஆர் உயிர் காலனும் வாங்க, விற்
கோலி, வாலிய செல்வம் கொடுத்தவர்
போலுமால், உம் புறத்து இருப்பார்! இது
சாலுமால், உங்கள் தன்மையினோர்க்கு எலாம். 30

'தேவி நீங்க, அத் தேவரின் சீரியோன்
ஆவி நீங்கினன்போல் அயர்வான்; அது
பாவியாது, பருகுதிர் போலும், நும்
காவி நாள்மலர்க் கண்ணியர் காதல் நீர். 31

'திறம்பினீர் மெய்; சிதைத்தீர் உதவியை;
நிறம் பொலீர்; உங்கள் தீவினை நேர்ந்ததால்,
மறம் செய்வான்உறின், மாளுதிர்; மற்று இனிப்
புறஞ்செய்து ஆவது என்?' என்கின்ற போதின்வாய், 32

குரங்குகள் வாயிலைத் தாளிட்டுப் போருக்குச் சித்தமாதல்

கோள் உறுத்தற்கு அரிய குரக்கினம்,
நீள் எழுத் தொடரும் நெடு வாயிலைத்
தாள் உறுத்தி, தட வரை தந்தன
மூளுறுத்தி அடுக்கின, மொய்ம்பினால். 33

சிக்குறக் கடை சேமித்த செய்கைய,
தொக்குறுத்த மரத்த, துவன்றின;
'புக்கு உறுக்கிப் புடைத்தும்' என, புறம்
மிக்கு இறுத்தன; வெற்பும் இறுத்தன. 34

இலக்குவன் சினத்தினால் கதவு முதலியன உடைதல்

'காக்கவோ கருத்து?' என்று, கதத்தினால்
பூக்க மூரல், புரவலர் புங்கவன்,
தாக்கணங்கு உறை தாமரைத் தாளினால்,
நூக்கினான் அக் கதவினை, நொய்தினின். 35

29. கிடைத்திர் - (குற்றத்தில்) அகப்பட்டுக் கொண்டீர்; 31. காதல் நீர் - அன்பின் வழிப்பட்ட இன்பரசம்; 32. நிறம் பொலீர் - நிறம் பொல்லீர், குணம் கெட்டவரானீர்; நிறம் - குணம்; 33. தாள் உறுத்தி - உள்ளே தாளிட்டு; மூளுறுத்தி - ஊக்கத்துடன் முற்பட்டு; 34. உறுக்கி - அச்சுறுத்தி; இறுத்தல் - முன்னையது தங்குதல், பின்னையது உடைத்தல்; 35. தாக்கணங்கு - அறம் செய்வோர்பால் அருளினால் பற்றியிருக்கும் திருமகள்; தாக்குதல் - பற்றியிருத்தல்.

காவல் மா மதிலும், கதவும், கடி
மேவும் வாயில் அடுக்கிய வெற்பொடும்,
தேவு சேவடி தீண்டலும், தீண்ட அரும்
பாவம் ஆம் என, பற்று அழிந்து இற்றவால். 36

**குரங்குகள் அஞ்சி ஓடுதல்**

நொய்தின் நோன் கதவும், முது வாயிலும்,
செய்த கல் மதிலும், திசை, யோசனை
ஐ-இரண்டின் அளவு அடி அற்று உக,
வெய்தின் நின்ற குரங்கும், வெருக் கொளா, 37

பரிய மா மதிலும், படர் வாயிலும்,
சரிய வீழ்ந்த; தடித்தின் முடித் தலை
நெரிய, நெஞ்சு பிளக்க, நெடுந் திசை
இரியலுற்றன; இற்றில இன் உயிர். 38

பகரவேயும் அரிது; பரிந்து எழும்
புகர் இல் வானரம் அஞ்சிய பூசலால்,
சிகர மால் வரை சென்று திரிந்துழி
மகர வேலையை ஒத்தது, மா நகர். 39

வானரங்கள் வெருவி, மலை ஒரீஇ,
கான் ஒருங்கு படர, அக் கார் வரை,
மீ நெருங்கிய வானகம், மீன் எலாம்
போன பின், பொலிவு அற்றது போன்றதே. 40

**'என் செய்வது?' எனத் தாரையை வினவுதல்**

அன்ன காலையில், ஆண் தகை ஆளியும்,
பொன்னின் நல் நகர் வீதியில் புக்கனன்;
சொன்ன தாரையைச் சுற்றினர், நின்றவர்,
'என்ன செய்குவது? எய்தினன்!' என்றனர். 41

**அனுமன் உரைத்த வழி**

'அனையன் உள்ளமும்—ஆய்வளையாய்!—அலர்
மனையின் வாயில் வழியினை மாற்றினால்,
நினையும்; வீரன் அந் நீள் நெறி நோக்கலன்;
வினையம் ஈது' என்று அனுமன் விளம்பினன். 42

37. வெய்தின் நிற்றல் - கொடிய துன்பம் அடைதல்; 38. தடித்து - மின்னல், ஈண்டு இடி; 42. மாற்றுதல் - தடை செய்தல்; வினையம் - தந்திரம்.

### தாரை வழியினைத் தடுத்து நிற்றல்

'நீர் எலாம், அயல் நீங்குமின்; நேர்ந்து, யான்,
வீரன் உள்ளம் வினவுவல்' என்றலும்,
பேர நின்றனர், யாவரும்; பேர்கலாத்
தாரை சென்றனள், தாழ் குழலாரொடும். 43

உரைசெய் வானர வீரர் உவந்து உறை
அரசர் வீதி கடந்து, அகன் கோயிலைப்
புரசை யானை அன்னான் புகலோடும், அவ்
விரை செய் வார் குழல் தாரை விலக்கினாள். 44

விலங்கி, மெல் இயல், வெண் நகை, வெள் வளை,
இலங்கு நுண் இடை, ஏந்து இள மென் முலை,
குலம் கொள் தோகை மகளிர் குழாத்தினால்,
வலம் கொள் வீதி நெடு வழி மாற்றினாள். 45

வில்லும், வாளும், அணிதொறும் மின்னிட,
மெல் அரிக் குரல் மேகலை ஆர்த்து எழ,
பல் வகைப் புருவக் கொடி பம்பிட,
வல்லி ஆயம் வலத்தினில் வந்ததே. 46

### இலக்குவன் மகளிரைப் பார்க்க அஞ்சுதல்

ஆர்க்கும் நூபுரங்கள் பேரி, அல்குல் ஆம் தடந் தேர் சுற்ற,
வேற் கண் வில் புருவம் போர்ப்ப மெல்லியர் வளைந்தபோது,
பேர்க்க அருஞ் சீற்றம் பேர, முகம் பெயர்ந்து ஒதுங்கிற்று அல்லால்,
பார்க்கவும் அஞ்சினான், அப் பனையினும் பெரிய தோளன். 47

### தாரை இலக்குவனை நோக்கிப் பேசுதல்

தாமரை வதனம் சாய்த்து, தனு நெடுந் தரையில் ஊன்றி,
மாமியர் குழுவின் வந்தான் ஆம் என, மைந்தன் நிற்ப,
பூமியில் அணங்கு அனார்தம் பொதுவிடைப் புகுந்து, பொன்–தோள்
தூமன நெடுங் கண் தாரை, நடுங்குவாள், இனைய சொன்னாள்:

'அந்தம் இல் காலம் நோற்ற ஆற்றல் உண்டாயின் அன்றி,
இந்திரன் முதலினோரால் எய்தல் ஆம் இயல்பிற்று அன்றே?
மைந்த! நின் பாதம் கொண்டு எம் மனை வரப் பெற்று, வாழ்ந்தேம்;
உய்ந்தனம்; வினையும் தீர்ந்தேம்; உறுதி வேறு இதனின் உண்டோ? 49

43. பேர்கலா - பின்னிடாத; 44. புரசை - யானையின் கழுத்தில் இடப் பெறும் கயிறு; 46. அரிக்குரல் மேகலை - அரிப்பறை என்னும் பறை முழக் கத்தினைப் போன்று ஒலிக்கும் மேகலை; 47. பேரி - பேரிகை என்னும் பறை.

'வெய்தின் நீ வருதல் நோக்கி, வெருவுறும் சேனை, வீர!
செய்திதான் உணர்கிலாது; திருவுளம் தெரித்தி' என்றார்;
'ஐய! நீ ஆழி வேந்தன் அடி இணை பிரிகலாதாய்;
எய்தியது என்னை?' என்றாள், இசையினும் இனிய சொல்லாள்.

**இலக்குவன் தன் தாயரை நினைந்து நைதல்**

'ஆர் கொலோ உரை செய்தார்?' என்று அருள் வர, சீற்றம் அஃக,
பார் குலாம் முழு வெண் திங்கள், பகல் வந்த படிவம்போலும்
ஏர் குலாம் முகத்தினாளை, இறை முகம் எடுத்து நோக்கி,
தார் குலாம் அலங்கல் மார்பன், தாயரை நினைந்து நைந்தான்.

மங்கல அணியை நீக்கி, மணி அணி துறந்து, வாசக்
கொங்கு அலர் கோதை மாற்றி, குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம் முலைகள், பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல், நயனங்கள் பனிப்ப நைந்தான்.*

**தாரைக்கு இலக்குவன் உரைத்த மாற்றம்**

'இனையர் ஆம், என்னை ஈன்ற இருவரும்' என்ன வந்த
நினைவினால் அயர்ப்புச் சென்ற நெஞ்சினன், நெடிது நின்றான்;
'வினவினாட்கு எதிர் ஓர் மாற்றம் விளம்பவும் வேண்டும்' என்று, அப்
புனை குழலாட்கு வந்த காரியம் புகல்வது ஆனான்: 53

' ''சேனையும் யானும் தேடித் தேவியைத் தருவென்'' என்று,
மானவற்கு உரைத்த மாற்றம் மறந்தனன், அருக்கன் மைந்தன்;
''ஆனவன் அமைதி வல்லை அறி'' என, அருளின் வந்தேன்;
மேல் நிலை அனையான் செய்கை விளைந்தவா விளம்புக!' என்றான். 54

**தாரையின் மறுமொழி**

சீறுவாய்அல்லை—ஐய!—சிறியவர் தீமை செய்தால்,
ஆறுவாய்; நீ அலால், மற்று ஆர் உளர்? அயர்ந்தான் அல்லன்;
வேறு வேறு உலகம் எங்கும் தூதரை விடுத்து, அவ் எல்லை
ஊறுமா நோக்கித் தாழ்த்தான்; உதவி மாறு உதவி உண்டோ?

'ஆயிர கோடி தூதர், அரிக் கணம் அழைக்க, ஆணை
போயினர்; புகுதும் நாளும் புகுந்தது; புகல் புக்கோர்க்குத்
தாயினும் நல்ல நீரே தணிதிரால்; தருமம் அஃதால்;
தீயன செய்யார் ஆயின், யாவரே செறுநர் ஆவார்? 56

50. வெய்து - வெகுளி; 52. பூகம் - கமுக மரம்; 54. அமைதி - எண்ணம்;
55. ஊறுமா நோக்கி - வந்து சேர்தலை எதிர்பார்த்து.

'அடைந்தவர்க்கு அபயம் நீவிர் அருளிய அளவில் செல்வம்
தொடர்ந்து, நும் பணியின் தீர்ந்தால், அதுவும் நும் தொழிலே அன்றோ?
மடந்தைதன் பொருட்டால் வந்த வாள் அமர்க் களத்து மாண்டு
கிடந்திலர்என்னின், பின்னை, நிற்குமோ கேண்மை அம்மா? 57

'செம்மை சேர் உள்ளத்தீர்கள் செய்த பேர் உதவி தீரா;
வெம்மை சேர் பகையும் மாற்றி, அரசு வீற்றிருக்கவிட்டீர்;
உம்மையே இகழ்வர்என்னின், எளிமையாய் ஒழிவது ஒன்றோ?
இம்மையே வறுமை எய்தி, இருமையும் இழப்பர் அன்றே? 58

'ஆண்டு போர் வாலி ஆற்றல் மாற்றியது அம்பு ஒன்றுஆயின்,
வேண்டுமோ, துணையும் நும்பால்? வில்லினும் மிக்கது உண்டோ?
தேண்டுவார்த் தேடுகின்றீர், தேவியை; அதனைச் செவ்வே
பூண்டு நின்று உய்தற்பாலார், நும் கழல் புகுந்துளோரும்.' 59

**இலக்குவன் அருகில் அனுமன் வருதல்**

என்று அவள் உரைத்த மாற்றம் யாவையும் இனிது கேட்டு,
நன்று உணர் கேள்வியாளன், அருள்வர, நாண உட்கொண்டான்,
நின்றனன்; நிற்றலோடும், 'நீத்தனன் முனிவு' என்று உன்னி,
வன் துணை வயிரத் திண் தோள் மாருதி மருங்கின் வந்தான். 60

**இலக்குவன் வினவும் அனுமன் விடையும்**

வந்து அடி வணங்கி நின்ற மாருதி வதனம் நோக்கி,
'அந்தம் இல் கேள்வி நீயும் அயர்த்தனை ஆகும் அன்றே,
முந்திய செய்கை?' என்றான், முனிவினும் முனிக்கும் அன்பான்,
'எந்தை கேட்டு அருளுக!' என்ன இயம்பினன், இயம்ப வல்லான்: 61

'சிதைவு அகல் காதல் தாயை, தந்தையை, குருவை, தெய்வப்
பதவி அந்தணரை, ஆவை, பாலரை, பாவைமாரை,
வதை புரிகுநர்க்கும் உண்டாம் மாற்றல் ஆம் ஆற்றல்; மாயா
உதவி கொன்றார்க்கு ஒன்றானும் ஒழிக்கலாம் உபாயம் உண்டோ? 62

'ஐய! நும்மோடும், எங்கள் அரிக் குலத்து அரசனோடும்,
மெய் உறு கேண்மை ஆகி, மேலை நாள் விளைவது ஆன
செய்கை, என் செய்கை அன்றோ? அன்னது சிதையும்ஆயின்,
உய் வகை எவர்க்கும் உண்டோ? உணர்வு மாசுண்டது அன்றோ? 63

58. ஒழிவது ஒன்றோ - ஒழிவது மட்டுமோ? 61. அயர்த்தல் - மறத்தல்;
62. சிதைவு - குற்றம்.

'தேவரும், தவமும், செய்யும் நல் அறத் திறமும், மற்றும்
யாவையும், நீரே என்பது, என்வயின் கிடந்தது; எந்தாய்!
ஆவது நிற்க, சேரும் அரண் உண்டோ? அருள் உண்டு அன்றே—
மூவகை உலகும் காக்கும் மொய்ம்பினீர்!—முனிவு உண்டானால்? 64

'மறந்திலன், கவியின் வேந்தன்; வயப் படை வருவிப்பாரைத்
திறம் திறம் ஏவி, அன்னார் சேர்வது பார்த்துத் தாழ்த்தான்;
அறம் துணை நுமக்கு உற்றான் தன் வாய்மையை அழிக்கும் ஆயின்,
பிறந்திலன் அன்றே? ஒன்றோ? நரகமும் பிழைப்பது அன்றால்.

'உதவாமல் ஒருவன் செய்த உதவிக்குக் கைம்மாறாக,
மத யானை அனைய மைந்த! மற்றும் உண்டாக வற்றோ—
சிதையாத செருவில் அன்னான் முன் சென்று, செறுநர் மார்பில்
உதையானேல், உதையுண்டு ஆவி உலவானேல், உலகில் மன்னோ? 66

'ஈண்டு, இனி, நிற்றல் என்பது இனியது ஓர் இயல்பிற்று அன்றால்;
வேண்டலர் அறிவரேனும், கேண்மை தீர் வினையிற்று ஆமால்;
ஆண் தகை ஆளி மொய்ம்பின் ஐய! நீர் அளித்த செல்வம்
காண்டியால், உன்முன் வந்த கவிக் குலக் கோனொடு' என்றான்.

**இலக்குவன் சீற்றம் தணிந்து, பேசுதல்**

மாருதி மாற்றம் கேட்ட, மலை புரை வயிரத் தோளான்,
தீர்வினை சென்று நின்ற சீற்றத்தான், சிந்தை செய்தான்—
'ஆரியன் அருளின் தீர்ந்தான் அல்லன்; வந்து அடுத்த செல்வம்
பேர்வு அரிதாகச் செய்த சிறுமையான்' என்னும் பெற்றி. 68

அனையது கருதி, பின்னர், அரிக் குலத்தவனை நோக்கி,
'நினை; ஒரு மாற்றம் இன்னே நிகழ்த்துவது உளது, நின்பால்;
இனையன உணர்தற்கு ஏற்ற; எண்ணிய நீதி' என்னா,
வனை கழல் வயிரத் திண் தோள் மன் இளங் குமரன் சொல்வான்: 69

'தேவியைக் குறித்துச் செற்ற சீற்றமும், மானத் தீயும்,
ஆவியைக் குறித்து நின்றது, ஐயனை; அதனைக் கண்டேன்;
கோ இயல் தருமம் நீங்க, கொடுமையோடு உறவு கூடி,
பாவியர்க்கு ஏற்ற செய்கை கருதுவன்; பழியும் பாரேன். 70

'ஆயினும், என்னை யானே ஆற்றி நின்று, ஆவி உற்று,
நாயகன்தனையும் தேற்ற நாள் பல கழிந்த; அன்றேல்,
தீயும், இவ் உலகம் மூன்றும்; தேவரும் வீவர்; ஒன்றோ?
வீயும், நல் அறமும்; போகா விதியை யார் விலக்கற்பாலார்? 71

65. திறம் திறம் - தொகுதி தொகுதியாக.

'உனைக் கண்டு, உம் கோன்தன்னை உற்ற இடத்து உதவும் பெற்றி,
என்னைக் கண்டனன்போல் கண்டு, இங்கு இத் துணை நெடிது வைகி,
தன்னைக் கொண்டு இருந்தே தாழ்த்தான்; அன்று எனின், தனு ஒன்
மின்னைக் கண்டனையாள்தன்னை நாடுதல் விலக்கற்பாற்றோ? [றுலே

'ஒன்றுமோ, வானம்? அன்றி உலகமும் பதினால் உள்ள
வென்றி மா கடலும் ஏழ் ஏழ் மலை உள்ள என்னவேயாய்
நின்றது ஓர் அண்டத்துள்ளே எனின், அது நெடியது ஒன்றோ?
அன்று நீர் சொன்ன மாற்றம் தாழ்வித்தல் தருமம் அன்றால்.

'தாழ்வித்தீர் அல்லீர்; பல் நாள் தருக்கிய அரக்கர்தம்மை
வாழ்வித்தீர்; இமையோர்க்கு இன்னல் வருவித்தீர்; மரபின் தீராக்
கேள்வித் தீயாளர் துன்பம் கிளர்வித்தீர்; பாவம்தன்னை
மூள்வித்தீர்; முனியாதானை முனிவித்தீர், முடிவின்' என்றான். 74

**அனுமன் இலக்குவனைச் சுக்கிரீவன்பால் அழைத்தல்**

தோன்றல் அஃது உரைத்தலோடும், மாருதி தொழுது, 'தொல்லை
ஆன்ற நூல் அறிஞ! போன பொருள் மனத்து அடைப்பாய் அல்லை;
என்றது முடியேம்என்னின், இறத்தும்; இத் திறத்துக்கு எல்லாம்
சான்று இனி அறனே; போந்து, உன் தம்முனைச் சார்தி' என்றான். 75

**இலக்குவன் மாருதியோடு செல்லுதல்**

'முன்னும், நீ சொல்லிற்று அன்றோ முயன்றது; முயற்றுங்காறும்,
இன்னும் நீ இசைத்த செய்வான் இயைந்தனம்' என்று கூறி,
அன்னது ஓர் அமைதியான்தன் அருள் சிறிது அறிவான் நோக்கி,
பொன்னின் வார் சிலையினானும், மாருதியோடும் போனான். 76

**தாரை திரும்பிப் போதல்**

அயில் விழி, குமுதச் செவ் வாய், சிலை நுதல், அன்னப் போக்கின்,
மயில் இயல், கொடித் தேர் அல்குல், மணி நகை, திணி வேய் மென்
குயில்மொழி, கலசக்கொங்கை, மின்இடை, குமிழ் ஏர் மூக்கின், [தோள்
புயல் இயல் கூந்தல், மாதர் குழாத்தொடும் தாரை போனாள். 77

**அங்கதன் இலக்குவனை வணங்கி, சுக்கிரீவனிடம் செல்லுதல்**

வல்ல மந்திரியரோடும், வாலி காதலனும், மைந்தன்
அல்லி அம் கமலம் அன்ன அடி பணிந்து, அச்சம் தீர்ந்தான்;
வில்லியும் அவனை நோக்கி, 'விரைவின் என் வரவு, வீர!
சொல்லுதி நுந்தைக்கு' என்றான்;' 'நன்று'என, தொழுது போனான்.

72. என்னைக் கண்டனன்போல் கண்டு - என்னைப் போலத் தம்பியாகக் கருதி; தன்னைக் கொண்டு - தன் உயிரைத் தாங்கி; 74. தீயாளர் - தீயோம்பும் முனிவர்கள்.

இலக்குவன் சினம் கேட்டு, சுக்கிரீவன் காரணம் வினுதல்

போனபின், தாதை கோயில் புக்கு, அவன் பொலம் கொள் பாதம்
தான் உறப் பற்றி, முற்றும் தைவந்து, 'தடக் கை வீர!
மானவற்கு இளையோன் வந்து, உன் வாசலின் புறத்தான்; சீற்றம்
மீன் உயர் வேலைமேலும் பெரிது; இது விளைந்தது' என்ருன்.

அறிவுற்று, மகளிர் வெள்ளம் அலமரும் அமலை நோக்கிப்
பிறிவு உற்ற மயக்கத்தால், முந்து உற்றது ஓர் பெற்றி ஓரான்,
'செறி பொன்-தார் அலங்கல் வீர! செய்திலம் குற்றம்; நம்மைக்
கறுவுற்ற பொருளுக்கு என்னே காரணம் கண்டது?' என்ருன்.

அங்கதன் கூற்று

' "இயைந்த நாள் எந்தை, நீ சென்று எய்தலை; செல்வம் எய்தி
வியந்தனை; உதவி கொன்ருய்; மெய் இலை" என்ன வீங்கி,
உயர்ந்தது சீற்றம்; மற்று, ஈது உற்றது செய்கை; முற்றும்
நயம் தெரி அனுமன் வேண்ட, நல்கினன், நம்மை இன்னும்.

'வருகின்ற வேகம் நோக்கி, வானர வீரர், வானைப்
பொருகின்ற நகர வாயில் பொற் கதவு அடைத்து, கற் குன்று
அருகு ஒன்றும் இல்லா வண்ணம் வாங்கினர் அடுக்கி, மற்றும்
தெரிகின்ற சினத் தீப் பொங்க, செருச் செய்வான் செருக்கி நின்ருர். 82

'ஆண்தகை, அதனை நோக்கி, அம் மலர்க் கமலத் தாளால்
தீண்டினன்; தீண்டாமுன்னம், தெற்கொடு வடக்குச் செல்ல
நீண்ட கல் மதிலும், கொற்ற வாயிலும், நிரைத்த குன்றும்,
கீண்டன தகர்ந்து, பின்னைப் பொடியொடும் கெழீஇய அன்றே.

'அந் நிலை கண்ட, திண் தோள் அரிக் குலத்து அனிகம், அம்மா!
எந் நிலை நின்றது என்கேன்? யாண்டுப் புக்கு ஒளித்தது என்கேன்?
இந் நிலை கண்ட அன்னை, ஏந்து இழை ஆயத்தோடு,
மின் நிலை வில்லினனை வழி எதிர் விலக்கி நின்ருள். 84

'மங்கையர் மேனி நோக்கான், மைந்தனும், மனத்து வந்து
பொங்கிய சீற்றம் பற்றிப் புகல்கிலன்; பொருமி நின்ருன்;
நங்கையும், இனிது கூறி, "நாயக! நடந்தது என்னே,
எங்கள்பால்?" என்னச் சொன்னுள்; அண்ணலும் இனைய சொன்னுன்.

80. கறுவுறல் - வெகுளுதல்; 83. கீண்டன - உடைந்தன; கெழீஇய - கலந்தன.

'அது பெரிது அறிந்த அன்னை, அன்னவன் சீற்றம் மாற்றி,
''விதி முறை மறந்தான் அல்லன்; வெஞ் சினச் சேனை வெள்ளம்
கதுமெனக் கொணரும் தூது கல் அதர் செல்ல ஏவி,
எதிர் முறை இருந்தான்'' என்றாள்; இது இங்குப் புகுந்தது' என்றான்.

சுக்கிரீவன், இலக்குவன் வரவை முன்னமே தெரிவியாமை ஏன் என வினுதல்

சொற்றலும், அருக்கன் தோன்றல் சொல்லுவான், 'மண்ணில் விண்ணில்
நிற்க உரியார்கள் யாவர், அனையவர் சினத்தின் நேர்ந்தால்?
விற்கு உரியார், இத் தன்மை வெகுளியின் விரைவின் எய்த,
எற்கு உரையாது, நீர் ஈது இயற்றியது என்கொல்?' என்றான்.

அங்கதன் மறுமொழி

'உணர்த்தினேன் முன்னர்; நீ அஃது உணர்ந்திலை; உணர்வின் தீர்ந்தாய்;
புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி, மாருதிக்கு உரைக்கப் போனேன்;
இணர்த் தொகை ஈன்ற பொன்–தார் எறுழ் வலித் தடந் தோள் எந் [தாய்!
கணத்திடை, அவனை, நீயும் காணுதல் கருமம்' என்றான்.

மது உண்டு மயங்கியதற்குச் சுக்கிரீவன் இரங்குதல்

உறவுண்ட சிந்தையானும் உரை செய்வான்; 'ஒருவற்கு இன்னம்
பெறல் உண்டோ, அவரால் ஈண்டு யான் பெற்ற பேர் உதவி? உற்றது
இறல் உண்டோ? என்னின் தீர்வான் இருந்த பேர் இடரை எல்லாம்,
நறவு உண்டு மறந்தேன்; காண நாணுவல், மைந்த!' என்றான். 89

'ஏயின இது அலால், மற்று, ஏழைமைப் பாலது என்னோ?
"தாய் இவள், மனைவி" என்னும் தெளிவு இன்றேல், தருமம் என் ஆம்?
தீவினை ஐந்தின் ஒன்று ஆம்; அன்றியும், திருக்கு நீங்கா
மாயையின் மயங்குகின்றாம்; மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம்! 90

' ''தெளிந்து தீவினையைச் செற்றார் பிறவியின் தீர்வர்'' என்ன,
விளிந்திலா உணர்வினோரும், வேதமும், விளம்பவேயும்,
நெளிந்து உறை புழுவை நீக்கி, நறவு உண்டு நிறைகின்றேனுல்—
அளிந்து அகத்து எரியும் தீயை நெய்யினால் அவிக்கின்றாரின். 91

' ''தன்னைத் தான் உணரத் தீரும், தகை அறு பிறவி'' என்பது
என்னத் தான் மறையும் மற்றத் துறைகளும் இசைத்த எல்லாம்,
முன்னை, தான் தன்னை ஓரா முழுப் பிணி அழுக்கின்மேலே,
பின்னைத் தான் பெறுவது, அம்மா! நறவு உண்டு திகைக்கும் பித்தோ?

88. எறுழ்வலி - மிக்க வலி; 90. திருக்கு - குற்றம், வஞ்சனை; 91. நிறைகின்றேன் - களித்துக் கிடக்கின்றேன்; 92. அழுக்கு - அழுக்குடம்பு.

'அளித்தவர், அஞ்சும் நெஞ்சின் அடைத்தவர், அறிவில் மூழ்கிக்
குளித்தவர், இன்ப துன்பம் குறைத்தவர், அன்றி, வேரி
ஒளித்தவர் உண்டு, மீண்டு, இவ் உலகு எலாம் உணர ஓடிக்
களித்தவர் எய்தி நின்ற கதி ஒன்று கண்டது உண்டோ? 93

'செற்றதும் பகைஞர், நட்டார் செய்த பேர் உதவிதானும்,
கற்றதும், கண்கூடாகக் கண்டதும், கலைவலாளர்
சொற்றதும், மானம் வந்து தொடர்ந்ததும், படர்ந்த துன்பம்
உற்றதும், உணரார்ஆயின், இறுதி வேறு இதனின் உண்டோ?

வஞ்சமும், களவும், பொய்யும், மயக்கமும், மரபு இல் கொட்பும்,
தஞ்சம் என்றோரை நீக்கும் தன்மையும், களிப்பும், தாக்கும்;
கஞ்ச மெல் அணங்கும் தீரும், கள்ளினால்; அருந்தினாரை
நஞ்சமும் கொல்வது அல்லால், நரகினை நல்காது அன்றே? 95

'கேட்டனென், "நறவால் கேடு வரும்" என; கிடைத்த அச் சொல்
காட்டியது; அனுமன் நீதிக் கல்வியால் கடந்தது அல்லால்,
மீட்டு இனி உரைப்பது என்னே? விரைவின், வந்து அடைந்த வீரன்
மூட்டிய வெகுளியால் யாம் முடிவதற்கு ஐயம் உண்டோ? 96

'ஐய! நான் அஞ்சினேன், இந் நறவினின் அரிய கேடு;
கையினால் அன்றியேயும் கருதுதல் கருமம் அன்றால்;
வெய்யது ஆம் மதுவை இன்னம் விரும்பினேன் என்னின், வீரன்
செய்ய தாமரைகள் அன்ன சேவடி சிதைக்க' என்றான். 97

**இலக்குவனைச் சுக்கிரீவன் எதிர்கொள்ளல்**

என்று கொண்டு இயம்பி, அண்ணற்கு எதிர்கொளற்கு இயைந்த எல்லாம்
நன்று கொண்டு, 'இன்னும் நீயே நணுகு!' என, அவனை ஏவி,
தன் துணைத் தேவிமாரும், தமரொடும் தழுவ, தானும்
நின்றனன், நெடிய வாயில் கடைத்தலை, நிறைந்த சீரான். 98

உரைத்த செஞ் சாந்தும், பூவும், சுண்ணமும், புகையும், ஊழின்
நிரைத்த பொற் குடமும், தீப மாலையும், நிகர் இல் முத்தும்,
குரைத்து எழு விதானத்தோடு தொங்கலும், கொடியும், சங்கும்,
இரைத்து இமிழ் முரசும், முற்றும் இயங்கின, வீதி எல்லாம்.†

93. அஞ்சு - ஐம்பொறி; வேரி - மது; 94. படர்ந்த துன்பம் - பெருந் துன்பம். 95. கொட்பு - கலக்கம்; 96. கிடைத்த - பொருந்திய; காட்டியது - பயனால் உணர்த்தியது; 99. குரைத்தல் - அசைதல்.

தூய திண் பளிங்கின் செய்த சுவர்களின் தலத்தில், சுற்றில்,
நாயக மணியின் செய்த நனி நெடுந் தூணின் நாப்பண்,
சாயை புக்கு உறலால், கண்டோர் அயர்வுற, 'கை விலோடும்
ஆயிரம் மைந்தர் வந்தார் உளர்' எனப் பொலிந்தது அவ் ஊர். † 100

அங்கதன், பெயர்த்தும் வந்து, ஆண்டு அடி இணை தொழுதான், 'ஐய!
எங்கு இருந்தான் நும் கோமான்?' என்றலும், 'எதிர்கோள் எண்ணி,
மங்குல் தோய் கோயில் கொற்றக் கடைத்தலை மருங்கு நின்றான்—
சிங்க ஏறு அனைய வீர!—செய் தவச் செல்வன்' என்றான். 101

சுண்ணமும் தூசும் வீசி, சூடகத் தொடிக் கைம் மாதர்,
கண் அகன் கவரிக் கற்றைக் கால் உற, கலை வெண் திங்கள்
விண் உற வளர்ந்தது என்ன வெண் குடை விளங்க, வீர
வண்ண வில் கரத்தான் முன்னர், கவிக் குலத்து அரசன் வந்தான்.

அருக்கியம் முதல ஆன அருச்சனைக்கு அமைந்த யாவும்
முருக்கு இதழ் மகளிர் ஏந்த, முரசுஇனம் முகிலின் ஆர்ப்ப,
இருக்குஇனம் முனிவர் ஓத, இசை திசை அளப்ப, யாணர்த்
திருக் கிளர் செல்வம் நோக்கி, தேவரும் மருளச் சென்றான்.

வெம் முலை மகளிர் வெள்ளம் மீன் என விளங்க, விண்ணில்
சும்மை வான் மதியம் குன்றில் தோன்றியது எனவும் தோன்றி,
செம்மலை எதிர்கோள் எண்ணி, திருவொடு மலர்ந்த செல்வன்,
அம் மலை உதயம் செய்த தாதையும் அனையன் ஆனான். 104

சுக்கிரீவனைக் கண்டவுடன் எழுந்த சீற்றத்தை இலக்குவன்
ஆற்றிக்கொள்ளுதல்

தோற்றிய அரிக் குலத்து அரசை, தோன்றலும்,
ஏற்று எதிர்நோக்கினன்; எழுந்தது, அவ் வழிச்
சீற்றம்; அங்கு; அதுதனை, தெளிந்த சிந்தையால்
ஆற்றினன், தருமத்தின் அமைதி உன்னுவான். 105

அனைவரும் மாளிகையை அடைதல்

எழுவினும், மலையினும், எழுந்த தோள்களால்,
தழுவினர், இருவரும்; தழுவி, தையலார்
குழுவொடும், வீரர்தம் குழாத்தினோடும் புக்கு,
ஒழிவு இலாப் பொற் குழாத்து உறையுள் எய்தினர். 106

100. சாயை - நிழல், பிரதிபிம்பம்; 102. தூசு - ஆடை; 103. அருக்கியம் - கை கழுவ நீர் தருதல்; இருக்கு - வேதம்; 104. சும்மை - சுமை, ஈண்டுக் கலைகளின் நிறைவு.

அரியணையில் இலக்குவன் அமர்தற்கு ஒருப்படாது, கல் தரையில் இருத்தல்

அரியணை அமைந்தது காட்டி, 'ஐய! ஈண்டு
இரு' எனக் கவிக் குலத்து அரசன் ஏவலும்,
'திருமகள் தலைமகன் புல்லில் சேர, எற்கு
உரியதோ இஃது?' என மனத்தின் உன்னுவான், 107

'கல் அணை மனத்தினையுடைக் கைகேசியால்,
எல் அணை மணி முடி துறந்த எம்பிரான்
புல் அணை வைக, யான் பொன் செய் பூத் தொடர்
மெல் அணை வைகவும் வேண்டுமோ?' என்றான். 108

என்று அவன் உரைத்தலும், இரவி காதலன்
நின்றனன்; விம்மினன், மலர்க்கண் நீர் உக;
குன்று என உயர்ந்த அக் கோயில் குட்டிம
வன் தலத்து இருந்தனன், மனுவின் கோ மகன். 109

கண்டவர் உற்ற வருத்தம்

மைந்தரும், முதியரும், மகளிர் வெள்ளமும்,
அந்தம் இல் நோக்கினர், அழுத கண்ணினர்,
இந்தியம் அவித்தவர் என இருந்தனர்;
நொந்தனர்; தளர்ந்தனர்; நுவல்வது ஓர்கிலார். 110

அமுது உண்ணச் சுக்கிரீவன் வேண்ட இலக்குவன் மறுத்தல்

'மஞ்சன விதி முறை மரபின் ஆடியே,
எஞ்சல் இல் இன் அமுது அருந்தின், யாம் எலாம்
உய்ஞ்சனம் இனி' என அரசு உரைத்தலும்,
அஞ்சன வண்ணனுக்கு அனுசன் கூறுவான்: 111

'வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள,
இருத்தும்என்றால், எமக்கு இனியது யாவதோ?
அருத்தி உண்டுஆயினும், அவலம்தான் தழீஇ,
கருத்து வேறு உற்றபின், அமிர்தும் கைக்குமால். 112

'மூட்டிய பழி எனும் முருங்கு தீ அவித்து,
ஆட்டினை கங்கை நீர்—அரசன் தேவியைக்
காட்டினைஎனின்—எமைக் கடலின் ஆர் அமிர்து
ஊட்டினையால்; பிறிது உயவும் இல்லையால். 113

109. குட்டிமம் - கற்பாவிய தரை; இந்தியம் - இந்திரியம், ஐம்பொறி; 111. அனுசன் - தம்பி, ஈண்டு இலக்குவன்; 112. மீக்கொள - நிரப்பி மேலோங்க; 113. முருங்கு தீ - அழிக்கவல்ல நெருப்பு.

'பச்சிலை, கிழங்கு, காய், பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது; வேறு நான் ஒன்றும்
நச்சிலேன்; நச்சினேன்ஆயின், நாய் உண்ட
எச்சிலே அது; இதற்கு ஐயம் இல்லையால். 114

'அன்றியும் ஒன்று உளது; ஐய! யான் இனிச்
சென்றனென் கொணர்ந்து அடை திருத்தினல், அது
நுன் துணைக் கோ மகன் நுகர்வது; ஆதலான்,
இன்று, இறை தாழ்த்தலும் இனிது அன்றும்' என்ருன். 115

வானர வேந்தனும், 'இனிதின் வைகுதல்,
மானவர் தலைமகன் இடரின் வைகவே,
ஆனது, குரக்குஇனத்து எமர்கட்கு ஆம்!' என,
மேல் நிலை அழிந்து, உயிர் விம்மினன்அரோ. 116

அனுமனைச் 'சேனையுடன் வருக' என ஏவி, சுக்கிரீவன் இராமனிடம் செல்லுதல்

எழுந்தனன் பொருக்கென, இரவி கான்முளை;
விழுந்த கண்ணீரினன், வெறுத்த வாழ்வினன்,
அழிந்து அயர் சிந்தையன், அனுமற்கு, ஆண்டு, ஒன்று
மொழிந்தனன், வரன்முறை போதல் முன்னுவான். 117

'போயின தூதரின் புகுதும் சேனையை,
நீ உடன் கொணருதி, நெறி வலோய்!' என,
ஏயினன், அனுமனை, 'இருத்தி ஈண்டு' என,
நாயகன் இருந்துழிக் கடிது நண்ணுவான்.* 118

சுக்கிரீவன் இராமனை அடைந்து சேவடி தொழுதல்

அங்கதன் உடன் செல, அரிகள் முன் செல,
மங்கையர் உள்ளமும் வழியும் பின் செல,
சங்கை இல் இலக்குவன்-தழுவி, தம்முனின்,
செங் கதிரோன் மகன், கடிது சென்றனன்.* 119

ஒன்பதினுயிர கோடி யூகம், தன்
முன் செல, பின் செல, மருங்கு மொய்ப்புற,
மன் பெருங் கிளைஞரும் மருங்கு சுற்றுற,
மின் பொரு பூணினன் செல்லும் வேலையில், 120

115. அடை - இலை, கீரை; 118. புகுதும் சேனை - வர இருக்கும் படை; 119. சங்கை - ஐயம்; தம்முன் - தமையன்; 120. யூகம் - ஊகம், குரங்கு.

கொடி வனம் மிடைந்தன; குமுறு பேரியின்
இடி வனம் மிடைந்தன; பணிலம் ஏங்கின;
தடி வனம் மிடைந்தன, தயங்கு பூண் ஒளி;
பொடி வனம் எழுந்தன; வானம் போர்த்தவே. 121

பொன்னினின், முத்தினின், புனை மென் தூசினின்,
மின்னின மணியினின், பளிங்கின், வெள்ளியின்,
பின்னின; விசும்பினும் பெரிய; பெட்புறத்
துன்னின, சிவிகை; வெண் கவிகை சுற்றின. 122

வீரனுக்கு இளையவன் விளங்கு சேவடி
பாரினில் சேறலின், பரிதி மைந்தனும்,
தாரினின் பொலங் கழல் தழங்க, தாரணித்
தேரினில் சென்றனன், சிவிகை பின் செல. 123

எய்தினன், மானவன் இருந்த மால் வரை,
நொய்தினின்—சேனை பின்பு ஒழிய, நோன் கழல்
ஐய வில் குமரனும், தானும், அங்கதன்
கை துறந்து அயல் செல, காதல் முன் செல. 124

கண்ணிய கணிப்ப அருஞ் செல்வக் காதல் விட்டு,
அண்ணலை அடி தொழ அணையும் அன்பினால்,
நண்ணிய கவிக் குலத்து அரசன், நாள்தொறும்
புண்ணியன்-தொழு கழல் பரதன் போன்றனன். 125

பிறிவு அருந் தம்பியும் பிரிய, பேர் உலகு
இறுதியில் தான் என இருந்த ஏந்தலை,
அறை மணித் தாரினோடு, ஆரம் பார் தொட,
செறி மலர்ச் சேவடி முடியின் தீண்டினான். 126

இராமன் சுக்கிரீவனை நலன் உசாவுதல்

தீண்டலும், மார்பிடைத் திருவும் நேர்வுற,
நீண்ட பொன் தடக் கையால் நெடிது புல்லினான்;
மூண்டு எழு வெகுளி போய் ஒளிப்ப, முன்புபோல்
ஈண்டிய கருணை தந்து, இருக்கை ஏவியே, 127

121. வனம் - தொகுதி; குமுறுதல் - முழங்குதல்; 122. பின்னின - செய்யப்பட்டன; சிவிகை - பல்லக்கு; 123. தார் - கிங்கிணி மாலை; தாரணித்தேர் - நிலமாகிய தேர்; 124. ஐய - அழகிய; கை - பக்கம்.

அயல் இனிது இருத்தி, 'நின் அரசும் ஆணையும்
இயல்பினின் இயைந்தவே? இனிதின் வைகுமே,
புயல் பொரு தடக் கை நீ புரக்கும் பல் உயிர்?
வெயில் இலதே, குடை?' என வினவினன். 128

**சுக்கிரீவன் தன் பிழைக்கு வருந்தல்**

பொருளுடை அவ் உரை கேட்டபோழ்து, வான்
உருளுடைத் தேரினோன் புதல்வன், 'ஊழியாய்!
இருளுடை உலகினுக்கு இரவி அன்ன நின்
அருளுடையேற்கு அவை அரியவோ?' என்றான். 129

பின்னரும் விளம்புவான், 'பெருமையோய்! நினது
இன் அருள் உதவிய செல்வம் எய்தினேன்;
மன்னவ! நின் பணி மறுத்து வைகி, என்
புல் நிலைக் குரக்கு இயல் புதுக்கினேன்' என்றான். 130

'பெருந் திசை அனைத்தையும் பிசைந்து தேடினென்
தரும் தகை அமைந்தும், அத் தன்மை செய்திலேன்;
திருந்திழை திறத்தினால், தெளிந்த சிந்தை நீ,
வருந்தினை இருக்க, யான் வாழ்வின் வைகினேன். 131

'இனையன யானுடை இயல்பும், எண்ணமும்,
நினைவும், என்றால், இனி, நின்று யான் செயும்
வினையும், நல் ஆண்மையும், விளம்ப வேண்டுமோ?—
வனை கழல், வரி சிலை, வள்ளியோய்!' என்றான்.* 132

**இராமன் குற்றம் நீக்கிப் பாராட்டுதல்**

திரு உறை மார்பனும், 'தீர்ந்ததேயும் வந்து
ஒருவ அருங் காலம், உன் உரிமையோர் உரை-
தரு வினைத்து ஆகையின், தாழ்விற்று ஆகுமோ?
பரதன் நீ! இனையன, பகரற்பாலையோ?' 133

**'மாருதி எங்கே?' என இராமன், சுக்கிரீவனை வினவ, 'அவன் சேனையுடன் வருவன்' என்றல்**

ஆரியன், பின்னரும் அமைந்து, 'நன்கு உணர்
மாருதி எவ் வழி மருவினான்?' என,
சூரியன் கான்முளை, 'தோன்றுமால், அவன்
நீர் அரும் பரவையின் நெடிய சேனையான்.' 134

133. தீர்ந்ததேயும் - தீர்ந்ததாயினும்.

'கோடி ஓர் ஆயிரம் குறித்த கோது இல் தூது
ஓடின; நெடும் படை கொணர்தல் உற்றதால்;
நாள் தரக் குறித்ததும், இன்று; நாளை, அவ்
ஆடல் அம் தானையோடு அவனும் எய்துமால். 135

'ஒன்பதினுயிர கோடி உற்றது
நின் பெருஞ் சேனை; அந் நெடிய சேனைக்கு
நன்கு உறும் அவதி நாள் நாளை; நண்ணிய
பின், செயத்தக்கது பேசற்பாற்று' என்றுன். 136

விரும்பிய இராமனும், 'வீர! நிற்கு அது ஓர்
அரும் பொருள் ஆகுமோ? அமைதி நன்று' எனு,
'பெரும் பகல் இறந்தது; பெயர்தி; நின் படை
பொருந்துழி வா' என, தொழுது போயினுன். 137

அங்கதனையும் சுக்கிரீவனுடன் அனுப்பி, இராமன் தம்பியுடன் வைகுதல்

அங்கதற்கு இனியன அருளி, 'ஐய! போய்த்
தங்குதி உந்தையோடு' என்று, தாமரைச்
செங் கணுன், தம்பியும், தானும், சிந்தையின்
மங்கையும், அவ் வழி, அன்று வைகினுன். 138

## 11　　தானை காண் படலம்

தானைத்தலைவர் தத்தம் படையுடன் வந்து சேர்தல்

அன்று அவண் இறுத்தனர்; அலரி கீழ்ட்டிசைப்
பொன் திணி நெடு வரை பொலிவுறுதமுன்,
வன் திறல் தூதுவர் கொணர, வானரக்
குன்று உறழ் நெடும் படை அடைதல் கூறுவாம்: 1

ஆனை ஆயிரம் ஆயிரத்து எறும் வலி அமைந்த
வானராதிபர் ஆயிரர் உடன் வர, வகுத்த
கூனல் மாக் குரங்கு ஐ-இரண்டு ஆயிர கோடித்
தானையோடும்,—அச் சதவலி என்பவன்—சார்ந்தான். 2

135. ஆடல் - வெற்றி.

11 : 1. இறுத்தல் - தங்குதல்; 2. சதவலி - முகத்தில் நூறு மடிப்புகளை உடையவன்.

ஊன்றி மேருவை எடுக்குறும் மிடுக்கினுக்கு உரிய
தேன் தெரிந்து உண்டு தெளிவுறு வானரச் சேனே,
ஆன்ற பத்து நூறு ஆயிர கோடியோடு அமையத்
தோன்றினன், வந்து—சுசேடணன் எனும் பெயர்த் தோன்றல்.

ஈறு இல் வேலையை இமைப்புறும் அளவினில் கலக்கிச்
சேறு காண்குறும் திறல் கெழு வானரச் சேனே
ஆறு-எண் ஆயிர கோடியது உடன் வர,—அமிழ்தம்
மாறு இலா மொழி உருமையைப் பயந்தவன்—வந்தான். 4

ஐம்பது ஆய நூறுயிர கோடி எண் அமைந்த,
மொய்ம்பு மால் வரை புரை நெடு வானரம் மொய்ப்ப,—
இம்பர் ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி
நம்பனேத் தந்த கேசரி—கடல் என நடந்தான். 5

மண் கொள் வாள் எயிற்று ஏனத்தின் வலியின, வயிரத்
திண் கொள் மால் வரை மயிர்ப் புறத்தன எனத் திரண்ட
கண் கொள் ஆயிர கோடியின் இரட்டியின் கணித்த
எண்ணின் ஈட்டம் கொண்டு,—ஏறும் வலித் தூமிரன்—இறுத்தான். 6

முனியும்ஆம் எனின் அருக்கனே முரண் அற முருக்கும்,
தனிமை தாங்கிய உலகையும் சலம் வரின் குமைக்கும்,
இனிய மாக் குரங்கு ஈர்-இரண்டு ஆயிர கோடி
அனிகம் முன் வர,—ஆன் பெயர்க் கண்ணன்—வந்து அடைந்தான். 7

தனி வரும் தடங் கிரி எனப் பெரியவன், சலத்தால்
நினேயும் நெஞ்சு இற உரும் என உறுக்குறு நிலேயன்,
பனசன் என்பவன்—பன்னிரண்டு ஆயிர கோடிப்
புனித வெஞ் சின வானரப் படை கொடு—புகுந்தான். 8

இடியும், மாக் கடல் முழக்கமும் வெருக் கொள இசைக்கும்
முடிவு இல் பேர் உறுக்கு உடையன, விசையன, முரண,
கொடிய கூற்றையும் ஒப்பன, பதிற்றைந்து கோடி
நெடிய வானரப் படை கொண்டு புகுந்தனன்—நீலன்.* 9

3. தேன் - மது; சுசேடணன் - வாலியின் மனேவி தாரைக்குத் தந்தை, வருணதேவன் மகன்; 4. மாறு - ஒப்பு; உருமையைப் பயந்தவன் - தாரன், தேவகுருவாகிய பிரகற்பதியின் மகன்; 5. நம்பன் - அனுமன்; கேசரி - அஞ்சனேயின் கணவன், அஞ்சனேயை வாயுதேவன் பரிசித்தமையால் பிறந்த வன் அனுமன்; 6. கணித்தல் - பரவுதல்; தூமிரன் - சாம்பவானுக்கு உடன் பிறந்தவன், ஒரு கரடித் தலேவன்; 7. சலம் - பெருஞ்சினம்; குமைத்தல் - குத்தி அழித்தல்; ஆன் பெயர்க் கண்ணன் - கவாட்சன்; 8. உறுக்குதல் - அதட்டுதல்; நீலன் - அக்கினியின் மகன்.

மா கரத்தன, உரத்தன, வலியன, நிலைய,
வேகரத்த, வெங் கண் உமிழ் வெயிலன, மலையின்
ஆகரத்தினும் பெரியன, ஆறு-ஐந்து கோடி
சாகரத்தொடும்—தரீமுகன் என்பவன்—சார்ந்தான். 10

இளைத்து வேறு ஒரு மா நிலம் வேண்டும் என்று இரங்க,
முளைத்த முப்பதினாயிர கோடியின் முற்றும்,
விளைத்த வெஞ் சினத்து, அரிஇனம் வெருவுற விழிக்கும்
அளக்கரோடும்,— அக்கயன் எனும் பெயரன்—வந்து அடைந்தான். 11

ஆயிரத்து அறுநூறு கோடியின் கடை அமைந்த
பாயிரப் பெரும் படை கொண்டு, பரவையின் திரையின்
தாய், உருத்து உடனே வர—தட நெடு வரையை
ஏய் உருப் புயச் சாம்பன் என்பவனும்,—வந்து இறுத்தான்.

வகுத்த தாமரை மலர் அயன், நிசிசரர் வாழ்நாள்
உகுத்த தீவினை பொருவரும் பெரு வலி உடையான்,
பகுத்த பத்து நூறாயிரப் பத்தினின் இரட்டி
தொகுத்த கோடி வெம் படை கொண்டு,—துன்முகன்—தொடர்ந்தான்.

இயைந்த பத்து நூறாயிரப் பத்து எனும் கோடி
உயர்ந்த வெஞ் சின வானரப் படையொடும், ஒருங்கே,—
சயம்தனக்கு ஒரு வடிவு எனத் திறல் கொடு தழைத்த
மயிந்தன்—மல் கசகோமுகன்தன்னொடும், வந்தான்.* 14

கோடி கோடி நூறாயிரம் எண் எனக் குவிந்த
நீடு வெஞ் சினத்து அரிஇனம் இரு புடை நெருங்க,
மூடும் உம்பரும், இம்பரும், பூழியில் மூழ்க,—
தோடு இவர்ந்த தார்க் கிரி புரை துமிந்தனும்—தொடர்ந்தான். 15

கறங்கு போல்வன, காற்றினும் கூற்றினும் கடிய,
பிறங்கு தெண் திரைக் கடல் புடைபெயர்ந்தெனப் பெயர்வ,
மறம் கொள் வானரம் ஒன்பது கோடி எண் வகுத்த,
திறம் கொள், வெஞ் சினப் படைகொடு,—குமுதனும்—சேர்ந்தான். 16

10. வேகரம் - கொடுமை; தரீமுகன் - மலைக்குகை போன்ற முகமுடையவன்; 12. பாயிரப் படை - சிறந்த படை; தாய் - தாவி; 13. வகுத்தல் - (எல்லாப் பொருள்களையும்) படைத்தல்; துன்முகன் - அழகில்லாத முகத்தினன்; 14. மயிந்தன் - இவனும் துமிந்தனும் அசுவினி தேவர்களின் அமிசத்தால் பிறந்த வானரர்; 15. மூடும் உம்பர் - மேற்கவிந்த வானம்.

ஏழின் ஏழு நூறுயிர கோடி என்று இசைந்த
பாழி நல் நெடுந் தோள் கிளர் படை கொண்டு, பரவை
ஊழி பேரினும் உலேவில, உலகினில் உயர்ந்த
பூழி விண் புக,—பதுமுகன் என்பவன்—புகுந்தான்.* 17

ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் எவையும்
தாழும் காலத்தும், தாழ்வு இலாத் தட வரைக் குலங்கள்
சூழும் தோற்றத்த, வலி கொள் தொள்ளாயிரகோடிப்
பாழி வெம் புயத்து அரியொடும்,—இடபனும்—படர்ந்தான்.*

தீர்க்கபாதனும், வினதனும், சரபனும்,—திரைக்கும்
மால் கருங் கடற்கு உயர்ந்துள மைம் முகத்து அனிகம்
ஆர்க்கும் எண்ண அருங் கோடி கொண்டு, அண்டமும் புறமும்
போர்க்கும் பூழியில் மறைதர,—முறையினின் புகுந்தார்.* 19

கை அஞ்சு ஆயுதம் உடைய அக் கடவுளேக் கண்டும்
மெய் அஞ்சாதவன், மாதிரம் சிறிது என விரிந்த,
வையம் சாய்வரத் திரிதரு வானர சேனே [தான்.
ஐ-அஞ்சு ஆயிரகோடி கொண்டு, அனுமன் வந்து அடைந்

நொய்தின் கூடிய சேனே, நூறுயிரகோடி
எய்த, தேவரும், 'என்கொலோ முடிவு?' என்பது எண்ண,
மையல் சிந்தையால் அந்தகன் மறுக்குற்று மயங்க,—
தெய்வத் தச்சன் மெய்த் திரு நெடுங் காதலன்—சேர்ந்தான்.

கும்பனும், குலச் சங்கனும், முதலினர், குரங்கின்
தம் பெரும் படைத்தலேவர்கள் தர வந்த தானே,
இம்பர் நின்றவர்க்கு எண்ண அரிது, இராகவன் ஆவத்து
அம்பு எனும் துணேக்கு உரிய; மற்று உரைப்பு அரிது அளவே.

வானர சேனேகளின் ஆற்றலும், சிறப்பும்

தோயின், ஆழி ஓர் ஏழும் நீர் சுவறி வெண் துகள் ஆம்;
சாயின், அண்டமும் மேருவும் ஒருங்குடன் சாயும்;
ஏயின், மண்டலம் எள் இட இடம் இன்றி இரியும்;
காயின், வெங் கனல்-கடவுளும் இரவியும் கரியும். 23

19. தீர்க்கபாதன் - நீண்ட காலுடையவன்; வினதன் - மிகுந்த வணக்கமுடையவன்; சரபன் - எண்காற்புள்ளாகிய சரபம் போன்ற வலிமையுடையவன். 21. தெய்வத் தச்சன் காதலன் - விசுவகர்மாவின் மகன் நளன்; 22. ஆவம் - அம்புப்புட்டில்; துணே - அளவு; 23. ஏயின் - எழுந்து திரிந்தால்.

எண்ணின், நான்முகர் எழுபதினுயிரர்க்கு இயலா;
உண்ணின், அண்டங்கள் ஓர் பிடி உண்ணவும் உதவா;
கண்ணின் நோக்குறின், கண்ணுதலானுக்கும் கதுவா,—
மண்ணின்மேல் வந்த வானர சேனையின் வரம்பே! 24

ஒடிக்குமேல், வட மேருவை வேரொடும் ஒடிக்கும்;
இடிக்குமேல், நெடு வானக முகட்டையும் இடிக்கும்;
பிடிக்குமேல், பெருங் காற்றையும் கூற்றையும் பிடிக்கும்;
குடிக்குமேல், கடல் ஏழையும் குடங்கையின் குடிக்கும். 25

ஆறு பத்து எழு கோடியாம் வானரர்க்கு அதிபர்,
கூறு திக்கினுக்கு அப்புறம் குப்புறற்கு உரியார்,
மாறு இல் கொற்றவன் நினைத்தன முடிக்குறும் வலியர்,—
ஊறும் இப் பெருஞ் சேனை கொண்டு—எளிதின் வந்துற்றார்.

**படைத் தலைவர்கள் சுக்கிரீவனை வணங்குதல்**

ஏழு மா கடல் பரப்பினும் பரப்பு என இசைப்பச்
சூழும் வானரப் படையொடு, அவ் வீரரும் துவன்றி,
'ஆழி மா பரித் தேரவன் காதலன் அடிகள்
வாழி! வாழி!' என்று உரைத்து, அலர் தூவினர், வணங்கி.*

**இராமன் படைகளைக் காணல்**

அனையது ஆகிய சேனை வந்து இறுத்தலும், அருக்கன்
தனையன், நொய்தினின் தயரதன் புதல்வனைச் சார்ந்தான்;
'நினையும் முன்னம் வந்து அடைந்தது, நின் பெருஞ் சேனை;
வினையின் கூற்றுவ, கண்டருள், நீ' என விளம்ப. 28

ஐயனும் உவந்து, அகம் என முகம் மலர்ந்தருளி,
தையலாள் வரக் கண்டனன் ஆம் எனத் தளிர்ப்பான்,
எய்தினன், அங்கு ஓர் நெடு வரைச் சிகரத்தின் இருக்கை;
வெய்யவன் மகன், பெயர்த்தும், அச் சேனையின் மீண்டான்.

அஞ்சொடு ஐ-இரண்டு யோசனை அகலத்தது ஆகி,
செஞ்செவே வட திசைநின்று தென் திசை செல்ல,
எஞ்சல் இல் பெருஞ் சேனையை, 'எழுக' என ஏவி,
வெஞ் சினப் படை வீரரை உடன் கொண்டு மீண்டான்.* 30

25. குடங்கை - உள்ளங்கை; 26. குப்புறல் - குதித்தல்; ஊறும் - பெருகும்.

### சுக்கிரீவன் இராமனுக்குத் தானையை வரன்முறை காட்டுதல்

மீண்டு, இராமனை அடைந்து, 'இகல் வீரருள் வீர!
காண்டி, நீ' என, வரன்முறை தெரிவுறக் காட்டி,
ஆண்டு இருந்தனன்; ஆர்த்து உருத்து எழுந்ததையன்றே,
ஈண்டு சேனை, பால் எறி கடல் நெறி படர்ந்தென்ன.* 31

### வானரப்படையின் பெருக்கம்

எட்டுத் திக்கையும், இரு நிலப் பரப்பையும், இமையோர்
வட்ட விண்ணையும், மறி கடல் அனைத்தையும், மறையத்
தொட்டு மேல் எழுந்து ஓங்கிய தூளியின் பூழி,
அட்டிச் செம்மிய நிறை குடம் ஒத்தது, இவ் அண்டம். 32

அத்தி ஒப்பு எனின், அன்னவை உணர்ந்தவர் உளரால்;
வித்தகர்க்கு இனி உரைக்கலாம் உவமை வேறு யாதோ?
பத்து இரட்டி நன் பகல் இரவு ஒருவலர் பார்ப்பார்,
எத் திறத்தினும் நடுவு கண்டிலர், முடிவு எவனோ? 33

### படையைக் குறித்து இராம-இலக்குவர் உரையாடல்

விண்ணின் தீம்புனல் உலகத்தின், நாகரின், வெற்றி
எண்ணின், தன் அலது ஒப்பு இலன் என நின்ற இராமன்,
கண்ணின், சிந்தையின், கல்வியின், ஞானத்தின், கருதி,
அண்ணல்-தம்பியை நோக்கினன், உரைசெய்வதானான்: 34

'அடல்கொண்டு ஓங்கிய சேனைக்கு, நாமும் நம் அறிவால்
உடல் கண்டோம்: இனி முடிவு உள காணுமாறு உளதோ?—
மடல் கொண்டு ஓங்கிய அலங்கலாய்!—மண்ணிடை மாக்கள்,
''கடல் கண்டோம்'' என்பர்; யாவரே முடிவு உறக் கண்டார்?

'ஈசன் மேனியை, ஈர்-ஐந்து திசைகளை, ஈண்டு இவ்
ஆசு இல் சேனையை, ஐம் பெரும் பூதத்தை, அறிவை,
பேசும் பேச்சினை, சமயங்கள் பிணக்குறும் பிணக்கை,—
வாச மாலையாய்!—யாவரே முடிவு எண்ண வல்லார்? 36

'இன்ன சேனையை, முடிவுற இருந்து இவண் நோக்கி,
பின்னை காரியம் புரிதுமேல், நாள் பல பெயரும்;
உன்னி, செய்கைமேல் ஒருப்படல் உறுவதே உறுதி'
என்ன—வீரனைக் கைதொழுது, இளையவன் இயம்பும்: 37

32. செம்மிய - மூடிய; 33. அத்தி - கடல்; 34. கல்வி - நூலறிவு; ஞானம் - இயற்கையறிவு; 35. உடல் - நடு இடம்.

'யாவது எவ் உலகத்தினின், இங்கு, இவர்க்கு இயற்றல்-
ஆவது ஆகுவது; அரியது ஒன்று உளது எனல் ஆமே?—
தேவ!—தேவியைத் தேடுவது என்பது சிறிதால்;
பாவம் தோற்றது, தருமமே வென்றது, இப் படையால். 38

'தரங்க நீர் எழு தாமரை நான்முகன் தந்த
வரம் கொள் பேர் உலகத்தினில், மற்றை மன்னுயிர்கள்,
உரம் கொள் மால் வரை உயிர் படைத்து எழுந்தன ஒக்கும்
குரங்கின் மாப் படைக்கு, உறையிடப் படைத்தனன்கொல்லாம்? 39

'ஈண்டு, தாழ்க்கின்றது என், இனி— என்ன திசை மருங்கும்,
தேண்டுவார்களை வல்லையில் செலுத்துவது அல்லால்?
நீண்ட நூல்வலாய்!' என்றனன், இளையவன்; நெடியோன்,
பூண்ட தேரவன் காதலற்கு, ஒரு மொழி புகலும்: 40

## 12　　　　நாட விட்ட படலம்

**படை அளவு பற்றிச் சுக்கிரீவன்-இராமன் உரையாடல்**

'வகையும், மானமும், மாறு எதிர்ந்து ஆற்றுறும்
பகையும் இன்றி, நிரைந்து, பரந்து எழும்
தகைவு இல் சேனைக்கு, அலகு சமைந்தது ஓர்
தொகையும் உண்டுகொலோ?' எனச் சொல்லினன். 1

' ''ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற'' என்று
ஆற்றலாளர் அறிவின் அமைந்தது ஓர்
மாற்றம் உண்டு; அது அல்லது, மற்றும் ஓர்
தோற்றம் என்று இதற்கு எண்ணி முன் சொல்லுமோ? 2

'ஆறு பத்து எழு கோடி அனிகருக்கு
ஏறு கொற்றத் தலைவர், இவர்க்கு முன்
கூறு சேனைப் பதி, கொடுங் கூற்றையும்
நீறு செய்திடும் நீலன்' என்று ஓதினன்.* 3

**இராமன், 'நடக்கவேண்டுவன குறித்துச் சிந்தனை செய்க' எனல்**

என்று உரைத்த எரிகதிர் மைந்தனை,
வென்றி விற் கை இராமன் விருப்பினால்,
'நின்று இனிப் பல பேசி என்னோ? நெறி
சென்று இழைப்பன சிந்தனை செய்க' என்றான். 4

12: 1. வகை - அணிவகுப்பு; அலகு - அளவு.

#### சுக்கிரீவன், அனுமனை அங்கதன் முதலியவர்களுடன் தென்திசைக்கு அனுப்புதல்

அவனும்—அண்ணல் அனுமனை, 'ஐய! நீ,
புவனம் மூன்றும் நின் தாதையின் புக்கு உழல்
தவன வேகத்தை ஓர்கிலை; தாழ்த்தனை;
கவன மாக் குரங்கின் செயல் காண்டியோ? 5

'ஏகி, ஏந்திழைதன்னை, இருந்துழி,
நாகம் நாடுக; நானிலம் நாடுக;
போக பூமி புகுந்திட வல்ல நின்
வேகம் ஈண்டு வெளிப்பட வேண்டுமால். 6

'தென் திசைக்கண், இராவணன் சேண் நகர்
என்று இசைக்கின்றது, என் அறிவு, இன்னணம்;
வன் திசைக்கு, இனி, மாருதி நீ அலால்,
வென்று, இசைக்கு உரியார் பிறர் வேண்டுமோ? 7

'வள்ளல் தேவியை வஞ்சித்து வௌவிய
கள்ள வாள் அரக்கன் செலக் கண்டது,
தெள்ளியோய்! ''அது தென் திசை என்பது ஓர்
உள்ளமும் எனக்கு உண்டு'' என உன்னுவாய். 8

'தாரை மைந்தனும், சாம்பனும், தாம் முதல்
வீரர் யாவரும், மேம்படும் மேன்மையால்
சேர்க நின்னொடும்; திண் திறல் சேனையும்,
பேர்க வெள்ளம் இரண்டொடும் பெற்றியால். 9

#### பிற திசைகளுக்கு மற்றவர்களை அனுப்புதல்

'குட திசைக்கண், சுடேணன்; குபேரன் வாழ்
வட திசைக்கண், சதவலி; வாசவன்
மிடல் திசைக்கண், வினதன்; விறல் தரு
படையொடு உற்றுப் படர்க' எனப் பன்னினான்.* 10

#### 'ஒரு மாதத்திற்குள் தேடித் திரும்புக' எனச் சுக்கிரீவன் ஆணையிடல்

வெற்றி வானர வெள்ளம் இரண்டொடும்
சுற்றி ஓடித் துருவி, ஒரு மதி
முற்றுறாதமுன், முற்றுதிர், இவ் இடை;
கொற்ற வாகையினீர்!' எனக் கூறினான்.* 11

5. தவன வேகம் - மிக்க வேகம்; கவனம் - வேகம்; 8. உள்ளம் - எண்ணம்; 9. சாம்பன் - சாம்பவான், கரடிகட்கு அரசன்; 10. வாசவன் மிடல் திசை - கிழக்கு; வாசவன் - இந்திரன்.

**தென்திசைச் செல்லும் வானர வீரர்க்குச் சுக்கிரீவன் வழி கூறுதல்**

'ஈண்டுநின்று எழுந்து, ஈர்-ஐந்து நூறு எழில்
தூண்டு சோதிக் கொடு முடி தோன்றலால்,
நீண்ட நேமி கொலாம் என நேர் தொழ
வேண்டும் விந்தமலையினை மேவுவீர். 12

'தேடி, அவ் வரை தீர்ந்த பின், தேவரும்
ஆடுகின்றது, அறுபதம் ஐந்தினைப்
பாடுகின்றது, பல் மணியால் இருள்
ஓடுகின்ற நருமதை உன்னுவீர். 13

'வாம மேகலை வானவர் மங்கையர்,
காம ஊசல் களி இசைக் கள்ளினால்,
தூம மேனி அசுணம் துயில்வுறும்
ஏமகூடம் எனும் மலை எய்துவீர். 14

'நொய்தின், அம் மலை நீங்கி, நுமரொடும்
பொய்கையின் கரை பிற்படப் போதிரால்;
செய்ய பெண்ணை, கரிய பெண்ணைச் சில
வைகல் தேடி, கடிது வழிக்கொள்வீர். 15

'தாங்கும் ஆர் அகில், தண் நறுஞ் சந்தனம்,
வீங்கு வேலி விதர்ப்பமும், மெல்லென
நீங்கி, நாடு நெடியென பிற்பட,
தேங்குவார் வார் புனல் தண்டகம் சேர்திரால். 16

'பண்டு அகத்தியன் வைகியதாப் பகர்
தண்டகத்தது, தாபதர்தம்மை உள்
கண்டு, அகத் துயர் தீர்வது காண்டிரால்,
முண்டகத்துறை என்று ஒரு மொய் பொழில். 17

'ஞாலம் நுங்குறு நல் அறத்தோர் பொருள்
போல நின்று பொலிவது, பூம் பொழில்;
சீல மங்கையர் வாய் எனத் தீம் கனி
காலம் இன்றிக் கனிவது காண்டிரால். 18

14. வாமம் - அழகு; தூமமேனி - புகைபோன்ற உடல் நிறம்; ஏமகூடம் - பொன்னிறமான சிகரங்களையுடையது என்னும் பொருளது; 15. கரிய பெண்ணை - கரிய நீரையுடைய வடபெண்ணையாறு; வேன்கங்கா என்பர் ஆராய்ச்சியாளர்; 16. தாங்கும் - நறுமணத்தைத் தாங்கும்.

'நயனம் நன்கு இமையார்; துயிலார் நனி;
அயனம் இல்லை அருக்கனுக்கு அவ் வழி;
சயன மாதர் கலவித்தலைத் தரும்
பயனும், இன்பமும், நீரும், பயக்குமால்.' 19

ஆண்டு இறந்தபின், அந்தரத்து இந்துவைத்
தீண்டுகின்றது, செங் கதிர்ச் செல்வனும்
ஈண்டு உறைந்து அலது ஏகலம் என்பது—
பாண்டுவின் மலை என்னும் பருப்பதம். 20

'முத்து ஈர்த்து, பொன் திரட்டி, மணி உருட்டி,
முது நீத்தம் முன்றில் ஆயர்
மத்து ஈர்த்து, மரன் ஈர்த்து, மலை ஈர்த்து,
மான் ஈர்த்து, வருவது; யார்க்கும்
புத்து ஈர்த்திட்டு அலையாமல், புலவர் நாடு
உதவுவது; புனிதம் ஆன
அத் தீர்த்தம் அகன் கோதாவரி என்பர்;
அம் மலையின் அருகிற்று அம்மா! 21

'அவ் ஆறு கடந்து அப்பால், அறத்து ஆறே
எனத் தெளிந்த அருளின் ஆறும்,
வெவ் ஆறு ஆம் எனக் குளிர்ந்து, வெயில் இயங்கா
வகை இலங்கும் விரி பூஞ் சோலை,
எவ் ஆறும் உறத் துவன்றி, இருள் ஓட
மணி இமைப்பது, இமையோர் வேண்ட,
தெவ் ஆறு முகத்து ஒருவன், தனிக் கிடந்த
சுவணத்தைச் சேர்திர் மாதோ! 22

'சுவணநதி கடந்து, அப்பால், சூரிய காந்-
தகம் என்னத் தோன்றி, மாதர்
சுவண் உமிழ் கல் வெயில் இயங்கும் கன வரையும்,
சந்திரகாந்தகமும், காண்பீர்;
அவண் அவை நீத்து ஏகிய பின், அகல் நாடு
பல கடந்தால், அனந்தன் என்பான்
உவண பதிக்கு ஒளித்து உறையும் கொங்கணமும்,
குலிந்தமும், சென்று உறுதிர் மாதோ. 23

19. அயனம் - வழி; 21. புத்து - மகப்பெறுதவர் அடைவதோர் நரகம்;
22. தெவ் - தே, கடவுள்; சுவணம் - ஓர் ஆற்றின் பெயர்.

' ''அரன் அதிகன்; உலகு அளந்த அரி அதிகன்''
　　என்று உரைக்கும் அறிவிலோர்க்குப்
பர கதி சென்று அடைவு அரிய பரிசேபோல்,
　　புகல் அரிய பண்பிற்று ஆமால்;
சுர நதியின் அயலது, வான் தோய் குடுமிச்
　　சுடர்த் தொகைய, தொழுதோர்க்கு எல்லாம்
வரன் அதிகம் தரும் தகைய, அருந்ததி ஆம்
　　நெடு மலையை வணங்கி, அப்பால், 24

'அஞ்சு வரும் வெஞ் சுரனும், ஆறும், அகன்
　　பெருஞ் சுனையும், அகில் ஓங்கு ஆரம்
மஞ்சு இவரும் நெடுங் கிரியும், வள நாடும்
　　பிற்படப் போய் வழிமேல் சென்றால்,
நஞ்சு இவரும் மிடற்று அரவுக்கு, அமிர்து நனி
　　கொடுத்து, ஆயைக் கலுழன் நல்கும்
எஞ்சு இல் மரகதப் பொருப்பை இறைஞ்சி, அதன்
　　புறம் சார ஏகி மாதோ, 25

'வட சொற்கும் தென் சொற்கும் வரம்பு ஆகி,
　　நான் மறையும், மற்றை நூலும்,
இடை சொற்ற பொருட்கு எல்லாம் எல்லை ஆய்,
　　நல் அறிவுக்கு ஈறு ஆய், வேறு
புடை சுற்றும் துணை இன்றி, புகழ் பொதிந்த
　　மெய்யேபோல் பூத்து நின்ற
அடை சுற்றும் தண் சாரல் ஓங்கிய
　　வேங்கடத்தில் சென்று அடைதிர் மாதோ; 26

'இருவினையும், இடைவிடா எவ் வினையும்,
　　இயற்றாதே, இமையோர் ஏத்தும்
திருவினையும், இடு பதம் தேர் சிறுமையையும்,
　　முறை ஒப்பத் தெளிந்து நோக்கி,
''கரு வினையது இப் பிறவிக்கு'' என்று உணர்ந்து, அங்கு
　　அது களையும், கடை இல் ஞானத்து,
அரு வினையின் பெரும் பகைஞர் ஆண்டு உளர்; ஈண்டு
　　இருந்தும் அடி வணங்கற்பாலார். 27

24. சுரநதி - தேவகங்கை; 25. கத்துருவின் மக்களாகிய பாம்புகளுக்குக் கருடன் அமுத கலசத்தைக் கொணர்ந்து கொடுத்து அடிமைப்பட்டுக் கிடந்த தன் தாய் விநதையை மீட்ட வரலாற்றை மூன்றும் அடி சுட்டுகிறது. ஆய் - தாய்; 26. வேங்கடம் - தன்னை அடைந்தோர் பாவங்களை ஒழிப்பது; வேம் - பாவம், கடம் - எரித்தல்; 27. இடுபதம் - பிச்சைச் சோறு; ஒப்பத்தெளிதல் - சமமாகக் கருதல்.

'சூது அகற்றும் திரு மறையோர் துறை ஆடும்
நிறை ஆறும், சுருதித் தொல் நூல்
மாதவத்தோர் உறை இடமும், மழை உறங்கும்
மணித் தடமும், வான மாதர்
கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு
வருடுதொறும் கிளக்கும் ஓதை
போதகத்தின் மழக் கன்றும் புலிப் பறழும்
உறங்கு இடனும், பொருந்திற்று அம்மா! 28

'கோடு உறு மால் வரைஅதனைக் குறுகுதிரேல்,
உம் நெடிய கொடுமை நீங்கி,
வீடு உறுதிர்; ஆதலினுல் விலங்குதிர்; அப்
புறத்து; நீர் மேவு தொண்டை-
நாடு உறுதிர்; உற்று, அதனை நாடுறுதிர்;
அதன்பின்னை, நளி நீர்ப் பொன்னிச்
சேடு உறு தண் புனல் தெய்வத் திரு நதியின்
இரு கரையும் தெரிதிர் மாதோ. 29

'துறக்கம் உற்ருர் மனம் என்ன, துறை கெழு நீர்ச்
சோணுடு கடந்தால், தொல்லை
மறக்கம் உற்ருர் அதன் அயலே மறைந்து உறைவர்;
அவ் வழி நீர் வல்லை ஏகி,
உறக்கம் உற்ருர் கனவு உற்ருர் எனும் உணர்விஞெடும்
ஒதுங்கி, மணியால் ஓங்கல்
பிறக்கம் உற்ற மலை நாடு நாடி, அகன்
தமிழ்நாட்டில் பெயர்திர் மாதோ. 30

'தென் தமிழ் நாட்டு அகன் பொதியில் திரு முனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்,
என்றும் அவன் உறைவிடம் ஆம்; ஆதலினுல்,
அம் மலையை இறைஞ்சி ஏகி,
பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும்
திரு நதி பின்பு ஒழிய, நாகக்
கன்று வளர் தடஞ் சாரல் மயேந்திர மா
நெடு வரையும், கடலும், காண்டிர். 31

29. சேடு - சிறப்பு; 30. துறக்கம் உற்ருர் மனத்துக்கும் துறை கெழு நீர்க்கும் பொதுத் தன்மை தெளிவு; தொல்லை மறக்கம் உற்ருர் - பழவினைத் தொல்லைகளை மறத்தல் பொருந்திய முனிவர்கள்.

'ஆண்டு கடந்து, அப் புறத்தும், இப் புறத்தும்,
　ஒரு திங்கள் அவதி ஆக,
தேண்டி, இவண் வந்து அடைதிர்; விடை கோடிர்,
　கடிது' என்னச் செப்பும் வேலை,
நீண்டவனும், மாருதியை நிறை அருளால் உற
　நோக்கி, 'நீதி வல்லோய்!
காண்டி எனின், குறி கேட்டி!' என, வேறு கொண்டு
　இருந்து, கழறலுற்றான்: 32

**இராமன் அனுமனுக்குச் சீதையின் அங்க அடையாளங்கள் கூறுதல்**

'பாற்கடல் பிறந்த செய்ய பவளத்தை, பஞ்சி ஊட்டி,
மேற்பட மதியம் சூட்டி, விரகுற நிரைத்த மெய்ய
கால் தகை விரல்கள்—ஐய!—கமலமும் பிறவும் எல்லாம்
ஏற்பில என்பது அன்றி, இணை அடிக்கு உவமை என்னோ? 33

'நீர்மையால் உணர்தி—ஐய!—நிரை வளை மகளிர்க்கு எல்லாம்
வாய்மையால் உவமை ஆக, மதி அறி புலவர் வைத்த
ஆமை ஆம் என்ற போதும், அல்லன சொல்லினாலும்,
யாம யாழ் மழலையாள்தன் புறவடிக்கு இழுக்கம் மன்னோ. 34

'வினைவரால் அரிய கோதைப் பேதை மென் கணைக் கால் மெய்யே
நினைவரால் அரிய நன்னீர் நேர்பட, புலவர் போற்றும்
சினை வரால், பகழி ஆவம், நெற் சினை, என்னும் செப்பம்
ஏனைவரால் பகரும் ஈட்டம்; யான் உரைத்து இன்பம் என்னோ?

'அரம்பை என்று, அளக மாதர் குறங்கினுக்கு அமைந்த ஒப்பின்
வரம்பையும் கடந்தபோது, மற்று உரை வகுக்கல் ஆமோ?
நரம்பையும், அமிழ்த நாறும் நறவையும், நல் நீர்ப் பண்ணைக்
கரும்பையும் கடந்த சொல்லாள், கவாற்கு இது கருது கண்டாய். 36

'வார் ஆழிக் கலசக் கொங்கை வஞ்சிபோல் மருங்குலாள்தன்
தார் ஆழிக் கலை சார் அல்குல் தடங் கடற்கு உவமை—தக்கோய்!—
பார் ஆழி பிடரில் தாங்கும் பாந்தளும், பனி வென்று ஓங்கும்
ஓர் ஆழித் தேரும் ஒவ்வார், உனக்கு நான் உரைப்பது என்னோ?
37

34. யாமயாழ் - குறிஞ்சிப்பண்; 35. வினைவர் - சித்திரம் தீட்டுவோர்; ஒப்பனை செய்யும் பணிப்பெண்டிரும் ஆம்; 36. அரம்பை - வாழை; கவான் - தொடை; 37. ஆழி - சக்கரவாகப் புள்.

'சட்டகம் தன்னை நோக்கி, யாரையும் சமைக்கத் தக்காள்
இட்டு இடை இருக்கும் தன்மை இயம்பக் கேட்டு உணர்தி என்னின்,
கட்டுரைத்து உவமை காட்ட, கண்பொறி கதுவா; கையில்
தொட்ட எற்கு உணரலாம்; மற்று உண்டு எனும் சொல்லும் இல்லை.

'ஆல் இலை, படிவம் திட்டும் ஐய நுண் பலகை, நொய்ய
பால் நிறத் தட்டம், வட்டக் கண்ணடி, பலவும் இன்ன,
போலும் என்று உரைத்த போதும், புனைந்துரை; பொதுமை பார்க்கின்,
ஏலும் என்று இசைக்கின், ஏலா; இது, வயிற்று இயற்கை; இன்னும்,

'சிங்கல் இல் சிறு சூதாளி, நந்தியின் திரட் பூ, சேர்ந்த
பொங்கு பொன்—துளை, என்றாலும் புல்லிது; பொதுமைத்து ஆமால்;
அங்கு அவள் உந்தி ஒக்கும் சுழி எனக் கணித்தது உண்டால்;
கங்கையை நோக்கிச் சேறி—கடலினும் நெடிது கற்றோய்! 40

'மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டால், வல்லி சேர் வயிற்றில்; மற்று என்,
உயிர் ஒழுக்கு; அதற்கு வேண்டும் உவமை ஒன்று உரைக்கவேண்டின்,
செயிர் இல் சிற்றிடை ஆய் உற்ற சிறு கொடி நுடக்கம் தீர,
குயிலுறுத்து அமைய வைத்த கொழுகொம்பு, என்று உணர்ந்து கோடி.

' "அல்லி ஊன்றிடும்" என்று அஞ்சி, அரவிந்தம் துறந்தாட்கு, அம் பொன்
வல்லி மூன்று உளவால், கோல வயிற்றில்; மற்று அவையும் மார-
வில்லி, மூன்று உலகின் வாழும் மாதரும், தோற்ற மெய்ம்மை
சொல்லி ஊன்றிய ஆம், வெற்றி வரை எனத் தோன்றும் அன்றே! 42

'செப்பு என்பென்; கலசம் என்பென்; செவ் இளநீரும் தேர்வென்;
துப்பு ஒன்று திரள் சூது என்பென்; சொல்லுவென் தும்பிக் கொம்பை;
தப்பு இன்றிப் பகலின் வந்த சக்கரவாகம் என்பென்;
ஒப்பு ஒன்றும் உலகில் காணேன்; பல நினைந்து உலைவென், இன்னும்.

'கரும்பு கண்டாலும், மாலைக் காம்பு கண்டாலும், ஆலி
அரும்பு கண், தாரை சோர அழுங்குவேன்; அறிவது உண்டோ?
சுரும்பு கண்டு ஆலும் கோதை தோள் நினைந்து, உவமை சொல்ல,
இரும்பு கண்டனைய நெஞ்சம், எனக்கு இல்லை; இசைப்பது என்னோ? 44

38. சட்டகம் - வடிவம்; 39. ஏலும் - பொருந்தும்; 40. சிங்கல் - கெடுதல்; 42. அல்லி - அகவிதழ்கள்; ஊன்றுதல் - உறுத்தல்; வரை - இரேகை, கோடு; 43. தும்பி - யானை; சக்கரவாகம் - சக்கரவாளம், சூரிய கிரணங்களை அருந்தும் இயல்புடைய இணை பிரியாப் பறவை; 44. மாலைக் காம்பு - ஒழுங்காக அமைந்த மூங்கில்.

'"முன்கையே ஒப்பது ஒன்றும் உண்டு, மூன்று உலகத்துள்ளும்"
என்கையே இழுக்கம் அன்றே? இயம்பினும், காந்தள் என்றல்,
வன் கை; யாழ் மணிக் கை என்றல், மற்று ஒன்றை உணர்த்தல் அன்றி,
நன் கையாள் தடக் கைக்கு ஆமோ? நலத்தின்மேல் நலம் உண்டாமோ?

'ஏலக் கோடு ஈன்ற பிண்டி இளந் தளிர் கிடக்க; யாணர்க்
கோலக் கற்பகத்தின் காமர் குழை, நறுங் கமல மென் பூ,
நூல் ஒக்கும் மருங்குலாள்தன் நூபுரம் புலம்பும் கோலக்
காலுக்குத் தொலையும்என்றால், கைக்கு ஒப்பு வைக்கலாமோ?

'வெள்ளிய முறுவல், செவ் வாய், விளங்கு இழை, இளம் பொற் கொம்
வன் உகிர்க்கு, உவமை நம்மால் மயர்வு அற வகுக்கலாமோ? [பின்
''எள்ளுதிர் நீரே மூக்கை'' என்று கொண்டு, இவறி, என்றும்,
கிள்ளைகள், முருக்கின் பூவைக் கிழிக்குமேல், உரைக்கலாமோ?

'அங்கையும் அடியும் கண்டால், அரவிந்தம் நினையுமாபோல்
செங் களி சிதறி, நீலம் செருக்கிய தெய்வ வாட் கண்
மங்கைதன் கழுத்தை நோக்கின், வளர் இளங் கமுகும், வாரிச்
சங்கமும், நினைதிஆயின், அவை என்று துணிதி; தக்கோய்! 48

'பவளமும், கிடையும், கொவ்வைப் பழனும், பைங் குமுதப் போதும்,
துவள்வு இல இலவம், கோபம், முருக்கு என்று இத் தொடக்கம், "சாலத்
தவளம்" என்று உரைக்கும் வண்ணம் சிவந்து, தேன் ததும்பும்ஆயின்,
குவளை உண் கண்ணி வண்ண வாய் அது ; குறியும் அஃதே. 49

'சிவந்தது ஓர் அமிழ்தம் இல்லை; தேன் இல்லை; உள என்றாலும்,
கவர்ந்த போது அன்றி, உள்ளம் நினைப்ப ஓர் களிப்பு நல்கா;
பவர்ந்த வாள் நுதலினாள்தன் பவள வாய்க்கு உவமை பாவித்து
உவந்தபோது, உவந்த வண்ணம் உரைத்தபோது, உரைத்தது ஆமோ?

'முல்லையும், முருந்தும், முத்தும், முறுவல் என்று உரைத்தபோது,
சொல்லையும், அமிழ்தும், பாலும், தேனும் என்று உரைக்கத் தோன்
அல்லது ஒன்று ஆவது இல்லை; அமிர்திற்கும் உவமை உண்டோ? [றும்;
வல்லையேல், அறிந்து கோடி, மாறு இலா ஆறு—சான்றோய்! 51

45. வன் கை - கடுமையானது; யாழ் மணிக் கை - யாழின் முனையில் அமைந்த அழகிய வார்க்கட்டு; 46. ஏலக் கோடு ஈன்ற - கொம்பு போலத் தளிர்த்த; 48. செங்களி - செவ்வரி; சிதறல் - படர்தல்; 50. பவர்ந்த - செறிந்த; 51. முருந்து - மயில் இறகின் அடிப்பகுதி; மாறு இலா ஆறு - உவமையில்லாத தன்மை.

'ஓதியும், எள்ளும், தொள்ளைக் குமிழும் மூக்கு ஒக்கும் என்றால்,
சோதி செம் பொன்னும், மின்னும், மணியும்போல், துளங்கித் தோன்
ஏதுவும் இல்லை; வல்லார் எழுதுவார்க்கு எழுத ஒண்ணா [று;
நீதியை நோக்கி, நீயே நினைதியால்,—நெடிது காண்பாய்! 52

'வள்ளை, சுத்தரிகை வாம மயிர் வினைக் கருவி என்ன,
பிள்ளைகள் உரைத்த ஒப்பைப் பெரியவர் உரைக்கின் பித்து ஆம்;
வெள்ளி வெண் தோடு செய்த விழுத் தவம் விளைந்தது என்றே
உள்ளுதி; உலகுக்கு எல்லாம் உவமைக்கும், உவமை உண்டோ?

'பெரிய ஆய், பரவை ஒவ்வா; பிறிது ஒன்று நினைந்து பேச
உரிய ஆய், ஒருவர் உள்ளத்து ஒடுங்குவ அல்ல; உண்மை
தெரிய, ஆயிரக் கால் நோக்கின், தேவர்க்கும் தேவன் என்னக்
கரிய ஆய், வெளிய ஆகும், வாள் தடங் கண்கள் அம்மா! 54

'கேள் ஒக்கும் அன்றி, ஒன்று கிளத்தினால் கீழ்மைத்து ஆமே;
கோள் ஒக்கும்என்னின் அல்லால், குறி ஒக்கக் கூறலாமே?
வாள் ஒக்கும் வடிக் கணாள்தன் புருவத்துக்கு உவமை வைக்கின்,
தாள் ஒக்க வளைந்து நிற்ப இரண்டு இல்லை, அனங்க சாபம். 55

'நல் நாளும் நளினம் நாணும் நளிரடி நுதலை நாணி,
பல் நாளும் பன்னி ஆற்றா மதி எனும் பண்பதாகி,
முன் நாளில் முளை வெண் திங்கள் முழுநாளும் குறையே ஆகி,
எந் நாளும் வளராதுஎன்னின், இறை ஒக்கும் இயல்பிற்று ஆமே. 56

'வனைபவர் இல்லை அன்றே, வனத்துள் நாம் வந்த பின்னர்?
அனையன எனினும், தாம் தம் அழகுக்கு ஓர் அழிவு உண்டாகா;
வினை செயக் குழன்ற அல்ல; விதி செய விளைந்த; நீலம்
புனை மணி அளகம் என்றும் புதுமை ஆம்; உவமை பூணா. 57

'கொண்டலின் குழவி, ஆம்பல், குனி சிலை, வள்ளை, கொற்றக்
கெண்டை, ஒண் தரளம் என்று இக் கேண்மையின் கிடந்த திங்கள்—
மண்டலம் வதனம் என்று வைத்தனன், விதியே; நீ, அப்
புண்டரிகத்தை உற்ற பொழுது, அது பொருந்தி ஓர்வாய். 58

52. ஓதி - பச்சோந்தி; தொள்ளைக்குமிழ் - தொளையுடைய குமிழம்பூ; நீதி - தன்மை; 53. வள்ளை - வள்ளையிலை; 54. தேவர்க்கும் தேவன் - திருமால்; 55. கேள் ஒத்தல் - தமக்குள் ஒன்றை ஒன்று ஒத்தல்; கோள் - உவமையாகக் காட்டும் கொள்கை; குறி - கருத்து; தாள் - முனை; 57. குழன்ற - சுரிந்தன; 58. விதி - பிரமன்.

‘காரினைக் கழித்துக் கட்டி, கள்ளினேடு ஆவி காட்டி,
பேர் இருட் பிழம்பு தோய்த்து, நெறி உறீஇ, பிறங்கு கற்றைச்
சோர் குழல் தொகுதி என்று சும்மை செய்தனையது அம்மா!—
நேர்மையைப் பருமை செய்த நிறை நறுங் கூந்தல் நீத்தம்! 59

‘புல்லிதழ் கமலத் தெய்வப் பூவிற்கும் உண்டு; பொற்பின்
எல்லையின் மதிக்கும் உண்டாம், களங்கம் என்று உரைக்கும் ஏதம்;
அல்லவும் சிறிது குற்றம் அகன்றில; அன்னம் அன்ன
நல் இயலாளுக்கு, எல்லாம் நலன் அன்றி, பிறிது உண்டாமோ?* 60

‘மங்கையர்க்கு ஓதி வைத்த இலக்கணம், வண்ண வாசப்
பங்கயத்தவட்கும்,—ஐயா!—நிரம்பல; பற்றி நோக்கின்,
செங் கயல் கருங் கண் செவ் வாய்த் தேவரும் வணங்கும் தெய்வக்
கொங்கை அக் குயிலுக்கு ஒன்றும் குறைவு இலே; குறியும் அஃதே. 61

‘குழல் படைத்து, யாழைச் செய்து, குயிலொடு கிளியும் கூட்டி,
மழலையும் பிறவும் தந்து, வடித்ததை, மலரின் மேலான்,
இழை பொரும் இடையினுள்தன் இன் சொற்கள் இயையச் செய்தான்;
பிழை இலது உவமை காட்டப் பெற்றிலன்; பெறும்கொல் இன்னும்? 62

‘வான் நின்ற உலகம் மூன்றும் வரம்பு இன்றி வளர்ந்தவேனும்,
நா நின்ற சுவை மற்று ஒன்றே அமிழ்து அன்றி நல்லது இல்லை;
மீன் நின்ற கண்ணினுள்தன் மென் மொழிக்கு உவமை வேண்டின்,
தேன் ஒன்றே? அமிழ்தம் ஒன்றே? அவை செவிக்கு இன்பம் செய்யா.

‘பூ வரும் மழலை அன்னம், புனை மடப் பிடி என்று இன்ன,
தேவரும் மருளத் தக்க செலவினஎனினும் தேறேன்;
பா வரும் கிழமைத் தொன்மைப் பருணிதர் தொடுத்த, பத்தி
நா அருங் கிளவிச் செவ்வி நடை வரும் நடையள்—நல்லோய்!

‘எந் நிறம் உரைக்கேன்?—மாவின் இள நிறம் முதிரும்; மற்றைப்
பொன் நிறம் கருகும்; என்றல், மணி நிறம் உவமை போதா;
மின் நிறம் நாணி எங்கும் வெளிப்படா ஒளிக்கும்; வேண்டின்,
தன் நிறம் தானே ஒக்கும்; மலர் நிறம் சமழ்க்கும் அன்றே! 65

59. கழித்து - வெட்டி; ஆவி - நறும்புகை; நெறிவு - வளைவு; நேர்மை - நுண்மை; 60. புல்லிதழ் - புறவிதழ்; 61. பற்றி நோக்குதல் - ஆழ்ந்து சிந்தித்தல்; 64. செலவு - நடை; பருணிதர் - புலவர்; 65. சமழ்க்கும் - நாணும்.

'"மங்கையர் இவளை ஒப்பார், மற்று உளார் இல்லர்" என்னும்
சங்கை இல் உள்ளம் தானே சான்று எனக் கொண்டு,—சான்றோய்!—
அங்கு அவள் நிலைமை எல்லாம் அளந்து அறிந்து, அருகு சார்ந்து,
திங்கள் வாள் முகத்தினாட்கு, செப்பு' எனப் பின்னும் செப்பும்:

**அனுமனுக்கு இராமன் புகன்ற அடையாளச் செய்திகள்**

'முன்னை நாள், முனியொடு, முதிய நீர் மிதிலைவாய்,
சென்னி நீள் மாலையான் வேள்வி காணிய செல,
அன்னம் ஆடும் துறைக்கு அருகு நின்றாளை, அக்
கன்னிமாடத்திடைக் கண்டதும், கழறுவாய். 67

'"வரை செய் தாள் வில் இறுத்தவன், அம் மா முனியொடும்
விரசினான் அல்லனேல், விடுவல் யான் உயிர்" என,
கரை செயா வேலையின் பெரிய கற்பிலள் தெரிந்து
உரைசெய்தாள்; அஃது எலாம் உணர, நீ உரைசெய்வாய். 68

'சூழி மால் யானையின் துணை மருப்பு இணை எனக்
கேழ் இலா வன முலைக் கிரி சுமந்து இடைவது ஓர்
வாழி வான் மின் இளங் கொடியின் வந்தாளை, அன்று,
ஆழியான் அரசவைக் கண்டதும் அறைகுவாய். 69

'முன்பு நான் அறிகிலா முளி நெடுங் கானிலே,
"என் பினே போதுவான் நினைதியோ, ஏழை நீ?
இன்பம் ஆய், ஆர் உயிர்க்கு இனியை ஆயினை, இனித்
துன்பம் ஆய் முடிதியோ?" என்றதும், சொல்லுவாய். 70

'"ஆன பேர் அரசு இழந்து, அடவி சேர்வாய்; உனக்கு
யான் அலாதன எலாம் இனியவோ? இனி" என,
மீன் உலாம் நெடு மலர்க் கண்கள் நீர் விழ, விழுந்து,
ஊன் இலா உயிரின் வெந்து, அயர்வதும், உரைசெய்வாய். 71

'மல்லல் மா நகர் துறந்து ஏகும் நாள், மதி தொடும்
கல்லின் மா மதிள் மணிக் கடை கடந்திடுதல்முன்,
"எல்லை தீர்வு அரிய வெங் கானம் யாதோ?" எனச்
சொல்லினாள்; அஃது எலாம் உணர, நீ சொல்லுவாய்.' 72

**இராமன் மோதிரம் அளித்து, விடைகொடுத்தல்**

இனைய ஆறு உரைசெயா, 'இனிதின் ஏகுதி' எனா,
வனையும் மா மணி நல் மோதிரம் அளித்து, 'அறிஞ! நின்
வினை எலாம் முடிக!' எனா, விடை கொடுத்து உதவலும்,
புனையும் வார் கழலினான் அருளொடும், போயினான். 73

72. மணிக் கடை - அழகிய வாயில்.

அங்கதக் குரிசிலோடு, அடு சினத்து உழவர் ஆம்
வெங் கதத் தலைவரும், விரி கடற் படையொடும்,
பொங்கு வில்-தலைவரைத் தொழுது, முன் போயினர்—
செங்கதிர்ச் செல்வனைப் பணிவுறும் சென்னியார். 74

## 13 பிலம் புக்கு நீங்கு படலம்

**வானர வீரர் நான்கு திசையிலும் செல்லுதல்**

போயினர்; போன பின், புற நெடுந் திசைகள்தோறு,
ஏயினான், இரவி காதலனும்; ஏயின பொருட்கு
ஆயினர், அவரும்; அங்கு அன்ன நாள் அவதியில்
தாயினர் உலகினை, தகை நெடுந் தானையார். 1

குன்று இசைத்தன எனக் குலவு தோள் வலியினர்,
மின் திசைத்திடும் இடைக் கொடியை நாடினர் விராய்,
வன் திசைப் படரும் ஆறு ஒழிய, வண் தமிழுடைத்
தென் திசைச் சென்றுளார் திறன் எடுத்து உரைசெய்வாம். 2

**விந்தமலைப் பக்கங்களில் தேடுதல்**

சிந்துராகத்தொடும் திரள் மணிச் சுடர் செறிந்து,
அந்தி வானத்தின் நின்று அவிர்தலான், அரவினோடு
இந்து யாறு எய்தலான், இறைவன் மா மௌலிபோல்
விந்த நாகத்தின் மாடு எய்தினர், வெய்தினால். 3

அந் நெடுங் குன்றமோடு, அவிர் மணிச் சிகரமும்,
பொன் நெடுங் கொடுமுடிப் புரைகளும், புடைகளும்,
நல் நெடுந் தாழ்வரை நாடினர்,—நவை இலார்—
பல் நெடுங் காலம் ஆம் என்ன, ஓர் பகலிடை. 4

மல்லல் மா ஞாலம் ஓர் மறு உருவகையின், அச்
சில் அல் ஓதியை இருந்த உறைவிடம் தேடுவார்,
புல்லினர் உலகினை, பொது இலா வகையினால்,
எல்லை மா கடல்களே ஆகுமாறு, எய்தினர். 5

74. அடு சினத்து உழவர் - வீரர்.

13 : 4. புரை - குகை; 5. ஆகுமாறு - ஒப்பெனச் சொல்லுமாறு.

விண்டு போய் இழிவர்; மேல் நிமிர்வர்; விண் படர்வர்; வேர்
உண்ட மா மரனின், அம் மலையின்வாய், உறையும் நீர்
மண்டு பார்அதனின், வாழ் உயிர்கள் அம் மதியினோர்
கண்டிலாதன, அயன் கண்டிலாதனகொலாம். 6

நருமதைக் கரையில் வானரர்

ஏகினர், யோசனை ஏழொடு ஏழு; பார்
சேகு அறத் தென் திசைக் கடிது செல்கின்றார்,
மேக மாலையினொடும் விரவி, மேதியின்
நாகு சேர் நருமதை யாறு நண்ணினர். 7

அன்னம் ஆடு இடங்களும், அமரர் நாடியர்
துன்னி ஆடு இடங்களும், துறக்கம் மேயவர்
முன்னி ஆடு இடங்களும், சுரும்பு மூசு தேன்
பன்னி ஆடு இடங்களும், பரந்து சுற்றினர். 8

பெறல் அருந் தெரிவையை நாடும் பெற்றியார்,
அறல் நறுங் கூந்தலும், அளக வண்டு சூழ்
நிறை நறுந் தாமரை முகமும், நித்தில
முறுவலும், காண்பரால், முழுதும் காண்கிலார். 9

செரு மத யாக்கையர், திருக்கு இல் சிந்தையர்,
தருமம தயா இவை தழுவும் தன்மையர்,
பொரு மத யானையும் பிடியும் புக்கு, உழல்
நருமதை ஆம் எனும் நதியை நீங்கினர். 10

ஏமகூட மலையை வானர வீரர் அடைதல்

தாம கூடத் திரைத் தீர்த்த சங்கம் ஆம்,
நாம கூடு அப் பெருந் திசையை நல்கிய,
வாம கூடச் சுடர் மணி வயங்குறும்,—
ஏமகூடத் தடங் கிரியை எய்தினர். 11

மாடு உறு கிரிகளும், மரனும், மற்றவும்,
சூடு உறு பொன் எனப் பொலிந்து தோன்றுறப்
பாடு உறு சுடர் ஒளி பரப்புகின்றது;
வீடு உறும் உலகினும் விளங்கும் மெய்யது; 12

7. சேகு - திண்மை; நாகு - பெண் எருமை; 11. தாமம் - ஒளி; நாமம் - பெருமை.

பறவையும், பல் வகை விலங்கும், பாடு அமைந்து
உறைவன, கனக நுண் தூளி ஒற்றலான்,
நிறை நெடு மேருவைச் சேர்ந்த நீர ஆய்,
பொறை நெடும் பொன் ஒளி மிளிரும் பொற்பது. 13

பரவிய கனக நுண் பராகம் பாடு உற
எரி சுடர்ச் செம் மணி ஈட்டத்தோடு இழி
அருவிஅம் திரள்களும் அலங்கு தீயிடை
உருகு பொன் பாய்வ போன்று, ஒழுகுகின்றது; 14

விஞ்சையர் பாடலும், விசும்பின் வெள் வளைப்
பஞ்சின் மெல் அடியினர் ஆடல் பாணியும்,
குஞ்சர முழக்கமும், குமுறு பேரியின்
மஞ்சுஇனம் உரற்றலும், மயங்கும் மாண்பது; 15

அதனை இராவணன் தலை என ஐயுறுதல்

அனையது நோக்கினர், அமிர்த மா மயில்
இனைய, வேல் இராவணன் இருக்கும் வெற்பு எனும்
நினைவினர், உவந்து உயர்ந்து ஓங்கும் நெஞ்சினர்,
சினம் மிகக் கனல் பொறி சிந்தும் செங் கணர். 16

'இம் மலை காணுதும், ஏழை மானை; அச்
செம்மலை நீக்குதும், சிந்தைத் தீது' என
விம்மலுற்று உவகையின் விளங்கும் உள்ளத்தார்,
அம் மலை ஏறினர், அச்சம் நீங்கினர். 17

இரிந்தன, கரிகளும் யாளி ஈட்டமும்;
விரிந்த கோள் அரிகளும் வெருவி நீங்கின;
திரிந்தனர், எங்கணும் திருவைக் காண்கிலார்,
பரிந்தன சிந்தனை பரிகின்றும் என, 18

சீதையைக் காணாது இரங்கி வருதல்

ஐம்பதிற்று இரட்டி காவதத்தினல் அகன்று,
உம்பரைத் தொடுவது ஒத்து, உயர்வின் ஓங்கிய,
செம் பொன் நல் கிரியை ஓர் பகலில் தேடினர்;
கொம்பினைக் கண்டிலர் குப்புற்று ஏகினர். 19

14. பராகம் - துகள்; பாடு உற - தம்பால் பொருந்தியிருக்க; 17. செம்மல் - இராமன்.

அங்கதன், 'பல பகுதியாகப் பிரிந்து தேடி, மயேந்திரத்தில் கூடுமின்' எனல்

வெள்ளம் ஓர் இரண்டு என விரிந்த சேனையை,
'தெள்ளு நீர் உலகு எலாம் தெரிந்து தேடி, நீர்
எள்ள அரும் மயேந்திரத்து எம்மில் கூடும்' என்று
உள்ளினர், உயர் நெடும் ஓங்கல் நீங்கினர். 20

மாருதி முதலியோர் ஒரு சுரத்தை அடைதல்

மாருதி முதலிய வயிரத் தோள் வயப்
போர் கெழு வீரரே குழுமிப் போகின்றார்;
நீர் எனும் பெயரும் அந் நெறியின் நீங்கலால்,
சூரியன் வெருவும் ஓர் சுரத்தைத் துன்னினர். 21

சுரத்தின் வெம்மை

புள் அடையா; விலங்கு அரிய; புல்லொடும்
கள் அடை மரன் இல; கல்லும் தீந்து உகும்;
உள் இடை யாவும் நுண் பொடியொடு ஓடிய;
வெள்ளிடை அல்லது ஒன்று அரிது;—அவ் வெஞ் சுரம். 22

நன் புலன் நடுக்குற, உணர்வு நைந்து அற,
பொன் பொலி யாக்கைகள் புழுங்கிப் பொங்குவார்,
தென் புலம் தங்கு எரி நரகில் சிந்திய
என்பு இல் பல் உயிர் என, வெம்மை எய்தினர். 23

நீட்டிய நாவினர்; நிலத்தில் தீண்டுதோறு
ஊட்டிய வெம்மையால் உலையும் காலினர்;
காட்டினும் காய்ந்து, தம் காயம் தீதலால்,
சூட்டு அகல்மேல் எழு பொரியின் துள்ளினர். 24

வருந்திய வானரர் பிலத்தில் புகுதல்

ஒதுங்கல் ஆம் நிழல் இறை காண்கிலாது, உயிர்
பிதுங்கல் ஆம் உடலினர், முடிவு இல் பீழையார்,
பதங்கள் தீப் பருகிடப் பதைக்கின்றார், பல
விதங்களால், நெடும் பில வழியில் மேவினர் 25

'மீச் செல அரிது இனி, விளியின் அல்லது;
தீச் செல ஒழியவும் தடுக்கும்; திண் பில-
வாய்ச் செலல் நன்று' என, மனத்தின் எண்ணினர்;
'போய்ச் சில அறிதும்' என்று, அதனில் புக்கனர். 26

20. ஓங்கல் - மலை; 22. வெள்ளிடை - வெற்றிடம்; 23. பொங்குவார் - தவிப்பார்; 24. சூட்டு அகல் - சூடேறிய சட்டி; 26. சில - சிறிது.

**வானரர் இருளில் வருந்துதல்**

அக் கணத்து, அப் பிலத்து அகணி எய்தினர்,
திக்கினொடு உலகு உறச் செறிந்த தேங்கு இருள்,
எக்கிய கதிரவற்கு அஞ்சி, ஏமுறப்
புக்கதே அனையது ஓர் புரை புக்கு எய்தினர். 27

எழுகிலர்; கால் எடுத்து ஏகும் எண் இலர்;
வழி உளது ஆம் எனும் உணர்வு மாற்றினர்;
இழுகிய நெய் எனும் இருட் பிழம்பினுள்,
முழுகிய மெய்யர் ஆய், உயிர்ப்பு முட்டினர்.* 28

**வானரர் வேண்ட, அனுமன் அவர்களைக் கொண்டு செல்லுதல்**

நின்றனர், செய்வது ஓர் நிலைமை ஓர்கிலர்,
'பொன்றினம் யாம்' எனப் பொருமும் புந்தியர்,
'வன் திறல் மாருதி! வல்லையோ எமை
இன்று இது காக்க?' என்று, இரந்து கூறினர். 29

'உய்வுறுத்துவென்; மனம் உலையிர்; ஊழின் வால்
மெய்யுறப் பற்றுதிர்; விடுகிலீர்' என,
ஐயன், அக் கணத்தினில், அகலும் நீள் நெறி
கையினில் தடவி, வெங் காலின் ஏகினன். 30

பன்னிரண்டு யோசனை படர்ந்த மெய்யினன்,
மின் இரண்டு அனைய குண்டலங்கள் வில் இட,
துன் இருள் தொலைந்திட, துரிதத்து ஏகினன்—
பொன் நெடுங் கிரி எனப் பொலிந்த தோளினன். 31

**வானரர் ஓர் அழகிய நகரைக் காணுதல்**

கண்டனர், கடி நகர்; கமலத்து ஒண் கதிர்-
மண்டலம் மறைந்து உறைந்தனைய மாண்பது;
விண்தலம் நாணுற விளங்குகின்றது;
புண்டரிகத்தவள் வதனம் போன்றது; 32

கற்பகக் கானது; கமலக் காடது;
பொன் பெருங் கோபுரப் புரிசை புக்கது;
அற்புதம் அமரரும் எய்தலாவது;
சிற்பமும், மயன் மனம் வருந்திச் செய்தது; 33

27. அகணி - உள்ளிடம்; 28. இழுகிய - உறைந்த; 33. அற்புதம் - வியப்பு; மயன் - அசுரர் தச்சன்.

இந்திரன் நகரமும் இணை இலாதது;
மந்திர மணியினின், பொன்னின், மண்ணினில்,
அந்தரத்து எழு சுடர்அவை இன்றுஆயினும்,
உந்த அரும் இருள் துரந்து, ஒளிர நிற்பது; 34

புவி புகழ் சென்னி, பேர் அமலன், தோள் புகழ்
கவிகள்தம் மனை என, கனக ராசியும்,
சவியுடைத் தூசும், மென் சாந்தும், மாலையும்,
அவிர் இழைக் குப்பையும், அளவு இலாதது; 35

பயில் குரல் கிண்கிணிப் பதத்த பாவையர்,
இயல்புடை மைந்தர், என்று இவர் இலாமையால்,
துயில்வுறு நோக்கமும் துணைப்பது அன்றியும்,
உயிர் இலா, ஓவியம் என்ன ஒப்பது; 36

அமிழ்து உறழ் அயினியை அடுத்த உண்டியும்,
தமிழ் நிகர் நறவமும், தனித் தண் தேறலும்,
இமிழ் கனிப் பிறக்கமும், பிறவும், இன்னன
கமழ்வுறத் துவன்றிய கணக்கு இல் கொட்பது; 37

கன்னி நெடு மா நகரம் அன்னது எதிர் கண்டார்;
'இந் நகரம் ஆம், இகல் இராவணனது ஊர்' என்று,
உன்னி உரையாடினர்; உவந்தனர்; வியந்தார்;
பொன்னின் நெடு வாயில்அதனூடு நனி புக்கார். 38

புக்க நகரத்து இனிது நாடுதல் புரிந்தார்;
மக்கள் கடை, தேவர் தலை, வான் உலகின், வையத்து,
ஒக்க உறைவோர் உருவம் ஓவியம் அலால், மற்று
எக் குறியின் உள்ளவும், எதிர்ந்திலர், திரிந்தார். 39

மனிதர்களைக் காணாது, வானரர் திகைத்தல்

வாவி உள; பொய்கை உள; வாச மலர் நாறும்
காவும் உள; காவி விழியார்கள் மொழி என்னக்
கூவும் இள மென் குயில்கள், பூவை, கிளி, கோலத்
தூவி மட அன்னம், உள; தோகையர்கள் இல்லை. 40

34. இந்திரன் நகரம் - அமராவதி; 36. துணைப்பது - ஒத்திருப்பது, உதவுவது; 37. அயினி - சோறு; கொட்பு - பெருமை; 38. கன்னி நகரம் - பிறரால் கைப்பற்றப்படாத புதுமையுடைய நகரம்; 39. எதிர்ந்திலர் - சந்தித்திலர்.

ஆய நகரத்தின் இயல்பு உள் உற அறிந்தார்;
'மாயைகொல்?' எனக் கருதி, மற்றும் நினைவுற்ருர்,
'தீய முன் உடற் பிறவி சென்ற அது அன்ருே,
தூயது துறக்கம்?' என நெஞ்சு துணிவுற்ருர். 41

'இறந்திலம்; இதற்கு உரியது எண்ணுகிலம்; ஏதும்
மறந்திலம்; அயிர்ப்பினெடு இமைப்பு உள; மயக்கம்
பிறந்தவர் செயற்கு உரிய செய்தல் பிழை இன்ருல்;
திறம் தெரிவது என்?' என இசைத்தனர், திசைத்தார். 42

அப்போது சாம்பன் கலங்கி, மொழிதல்

சாம்பன்அவன் ஒன்று உரைசெய்வான், 'எழு சலத்தால்,
காம்பு அனைய தோளியை ஒளித்த படு கள்வன்,
நாம் புக அமைத்த பொறி நன்று; முடிவு இன்ருல்;
ஏம்பல் இனி மேலே விதியால் முடியும்' என்ருன். 43

மாருதி சாம்பனைத் தேற்றுதல்

'இன்று, பிலன் ஈது இடையின் ஏற அரிது எனின், பார்
தின்று, சகரர்க்கு அதிகம் ஆகி, நனி சேறும்;
அன்று அது எனின், வஞ்சனை அரக்கரை அடங்கக்
கொன்று எழுதும்; அஞ்சல்' என மாருதி கொதித்தான். 44

அந் நகரின் நடுவில் சுயம்பிரபையைக் காணுதல்

மற்றவரும் மற்று அது மனக் கொள வலித்தார்;
உற்றனர், புரத்தின் இடை; ஒண் சுடரினுள் ஓர்
நல் தவம் அனைத்தும் உரு நண்ணி, ஒளி பெற்ற
கற்றை விரி பொன் சடையினளை எதிர் கண்டார். 45

மருங்கு அலச வற்கலை வரிந்து, வரி வாளம்
பொரும், கலசம் ஒக்கும், முலை மாசு புடை பூசி,
பெருங் கலை மதித் திரு முகத்த பிறழ் செங் கேழ்க்
கருங் கயல்களின் பிறழ் கண் மூக்கின் நுதி காண, 46

தேர் அனைய அல்குல், செறி திண் கதலி செப்பும்
ஊருவினெடு ஒப்பு உற ஒடுக்கி, உற ஒல்கும்
நேர் இடை சலிப்பு அற நிறுத்தி, நிமிர் கொங்கைப்
பாரம் உள் ஒடுக்குற, உயிர்ப்பு இடை பரப்ப, 47

41. தூயது துறக்கம் - தூய்மை பொருந்திய வீடு; 43. சலம் - வஞ்சனை; படுகள்வன் - பெரிய திருடன், இராவணன்; ஏம்பல் - ஊக்கம், வருத்தமும் ஆம்; 45. புரம் - நகரம்; 46. அலச - வருந்த; 47. ஊரு - தொடை.

தாமரை மலர்க்கு உவமை சால்புறு தளிர்க் கை,
பூ மருவு பொன் செறி குறங்கிடை பொருந்த,
காமம் முதல் உற்ற பகை கால் தளர, ஆசை
நாமம் அழிய, புலனும் நல் அறிவு புல்ல, 48

நெறிந்து நிமிர் கற்றை நிறை ஓதி நெடு நீலம்
செறிந்து சடை உற்றன தலத்தில் நெறிசெல்ல,
பறிந்து வினை பற்று அற, மனப் பெரிய பாசம்
பிறிந்து பெயர, கருணை கண்வழி பிறங்க, 49

**சுயம்பிரபையைச் சீதையோ என ஐயுறுதல்**

இருந்தனள்—இருந்தவனை எய்தினர் இறைஞ்சா,
அருந்ததி எனத் தகைய சீதை அவளாகப்
பரிந்தனர்; பதைத்தனர்; 'பணித்த குறி, பண்பின்
தெரிந்து உணர்தி; மற்று இவள்கொல், தேவி?' எனலோடும்,

'எக் குறியொடு எக் குணம் எடுத்து இவண் உரைக்கேன்?
இக் குறியுடைக் கொடி இராமன் மனையாளோ?
அக்கு வடம், முத்தமணி ஆரம்அதன் நேர் நின்று
ஒக்கும்எனின், ஒக்கும்' என, மாருதி உரைத்தான். 51

**அவள் வினவும் வானரர் விடையும்**

அன்ன பொழுதின்கண் அவ் அணங்கும், அறிவுற்றாள்;
முன், அனையர் சேறல் முறை அன்று, என முனிந்தாள்;
'துன்ன அரிய பொன் நகரியின் உறைவிர்அல்லீர்;
என்ன வரவு? யாவர்? உரைசெய்க!' என இசைத்தாள். 52

'வேதனை அரக்கர் ஒரு மாயை விளைவித்தார்;
சீதையை ஒளித்தனர்; மறைத்த புரை தேர்வுற்று
ஏதம் இல் அறத் துறை நிறுத்திய இராமன்
தூதர்; உலகில் திரிதும்' என்னும் உரை சொன்னார். 53

என்றலும், இருந்தவள் எழுந்தனள், இரங்கி,
குன்று அனையது ஆயது ஒரு பேர் உவகை கொண்டாள்;
'நன்று வரவு ஆக! நடனம் புரிவல்' என்னா,
நின்றனள்; நெடுங் கண் இணை நீர் கலுழி கொள்ள, 54

48. கால் தளரல் - நிலை பேறு இன்றிக் கெட்டழிதல்; 49. ஓதி - கூந்தல்; நெறிசெல்ல - புரள; பாசம் - தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பற்று; 51. அக்கு வடம் - சங்கு மணி மாலை.

**இராமனைப் பற்றிச் சுயம்பிரபை வினவ, அனுமன் விடை பகர்தல்**

‘எவ் உழை இருந்தனன் இராமன்?’ என, யாணர்ச்
செவ் உழை நெடுங் கண் அவள் செப்பிடுதலோடும்,
அவ் உழை, நிகழ்ந்ததனை ஆதியினொடு அந்தம்,
வெவ் விழைவு இல் சிந்தை நெடு மாருதி விரித்தான். 55

**சுயம்பிரபை விருந்து அளித்து, தன் வரலாறு கூறுதல்**

கேட்டு, அவளும், ‘என்னுடைய கேடு இல் தவம் இன்னே
காட்டியது வீடு!’ என விரும்பி, நனி கால் நீர்
ஆட்டி, அமிழ்து அன்ன சுவை இன் அடிசில் அன்போடு
ஊட்டி, மனன் உள் குளிர, இன் உரை உரைத்தாள். 56

மாருதியும், மற்று அவள் மலர்ச்சரண் வணங்கி,
‘யார் இந் நகருக்கு இறைவர்? யாது நின் இயற் பேர்?
பார் புகழ் தவத்தினை! பணித்தருளுக!’ என்றான்;
சோர்குழலும், மற்று அவனொடு, உற்றபடி சொன்னாள்: 57

‘நூல்முகம் நுனித்த நெறி நூறு வர, நொய்தா
மேல் முகம் நிமிர்த்து, வெயில் காலொடு விழுங்கா,
மான் முக நலத்தவன், மயன், செய்த தவத்தால்,
நான்முகன் அளித்துளது, இம் மா நகரம்—நல்லோய்! 58

‘அன்னது இது; தானவன் அரம்பையருள், ஆங்கு ஓர்,
நல் நுதலினாள் முலை நயந்தனன்; அந் நல்லாள்
என் உயிர் அனாள்; அவளை யான், அவன் இரப்ப,
பொன்னுலகின்நின்று, ஒளிர் பிலத்திடை புணர்த்தேன். 59

‘புணர்ந்து, அவளும் அன்னவனும், அன்றில் விழை போகத்து
உணர்ந்திலர், நெடும் பகல் இம் மா நகர் உறைந்தார்;
கணங் குழையினாளொடு உயர் காதல் ஒருவாது உற்று,
இணங்கி வரு பாசமுடையேன் உடன் இருந்தேன். 60

‘இருந்து, பல நாள் கழியும் எல்லையினில், நல்லோய்!
திருந்திழையை நாடி வரு தேவர்இறை சீறி,
பெருந் திறலினானை உயிர் உண்டு, ‘‘பிழை’’ என்று, அம்
முருந்து நிகர் மூரல் நகையாளையும், முனிந்தான். 61

55. செவ் உழை - அழகிய மான்; 58. நூல் முகம் - சிற்ப நூலின்கண், யோக நூலின்கண் எனலும் ஆம்; 59. தானவன் - அசுரனாகிய மயன்; அவனால் காதலிக்கப்பட்டவள் ஏமை என்னும் பெயரினள் என்பது வான்மீகம்; 61. மூரல் - பற்கள்.

'முனிந்து, அவனை, ''உற்ற செயல் முற்றும் மொழிக'' என்ன,
கனிந்த துவர் வாயவளும், என்னை, ''இவள்கண் ஆய்,
வனைந்து முடிவுற்றது'' என, மன்னனும், இது எல்லாம்
நினைந்து, ''இவண் இருத்தி; நகர் காவல் நினது'' என்றான்.

என்றலும்; வணங்கி, ''இருள் ஏகும் நெறி எந் நாள்?
ஒன்று உரை, எனக்கு முடிவு'' என்று உரைசெயாமுன்,
'வன் திறல் அவ் வானரம், இராமன் அருள் வந்தால்,
அன்று முடிவு ஆகும், இடர்'' என்று அவன் அகன்றான். 63

'உண்ண உள; பூச உள; சூட உள; ஒன்றோ?
வண்ண மணி ஆடை உள; மற்றும் உள பெற்றேன்;
அண்ணல்! அவை முற்றும் அற விட்டு, வினை வெல்வான்,
எண்ண அரிய பல் பகல் இருந் தவம் இழைத்தேன். 64

'ஐ-இருபது ஓசனை அமைந்த பிலம், ஐயா!
மெய் உளது; மேல் உலகம் ஏறும் நெறி காணேன்;
உய்யும் நெறி உண்டு, உதவுவீர்எனின்; உபாயம்
செய்யும்வகை சிந்தையில் நினைத்திர், சிறிது' என்றாள். 65

அனுமன் மறுமொழி

அன்னது சுயம்பிரபை கூற, அனுமானும்
மன்னு புலன் வென்று வரு மாதுஅவள் மலர்த்தாள்
சென்னியின் வணங்கி, 'நனி வானவர்கள் சேரும்
பொன்னுலகம் ஈகுவல், நினக்கு' எனல் புகன்றான். 66

இருளிலிருந்து மீளுதற்கு உரிய வினை செய்யுமாறு, அனுமனை வானரர் வேண்டுதல்

'முழைத்தலை இருட் கடலின் மூழ்கி முடிவேமைப்
பிழைத்து உயிர் உயிர்க்க அருள் செய்த பெரியோனே!
இழைத்தி, செயல் ஆய வினை' என்றனர் இரந்தார்;
வழுத்த அரிய மாருதியும் அன்னது வலிப்பான், 67

அனுமன் பேருருக்கொண்டு, பிலத்தைப் பிளந்து, வானுற ஓங்கி நிற்றல்

'நடுங்கல்மின்' எனும் சொலை நவின்று, நகை நாற
மடங்கலின் எழுந்து, மழை ஏற அரிய வானத்து
ஒடுங்கல் இல் பிலம் தலை திறந்து உலகொடு ஒன்ற,
நெடுங் கைகள் சுமந்து, நெடு வான் உற நிமிர்ந்தான். 68

63. இருள் - துன்பம்; 67. இழைத்தி - செய்வாய்.

எருத்து உயர் சுடர்ப் புயம் இரண்டும் எயிறு என்ன,
மருத்து மகன் இப் படி இடந்து, உற வளர்ந்தான்;
கருத்தின் நிமிர் கண்ணின் எதிர் கண்டவர் கலங்க,
உருத்து, உலகு எடுத்த கருமாவினையும் ஒத்தான். 69

மா வடிவுடைக் கமல நான்முகன் வகுக்கும்
தூ வடிவுடைச் சுடர் கொள் விண் தலை துளைக்கும்
மூஅடி குறித்து முறை ஈர்-அடி முடித்தான்
பூ வடிவுடைப் பொரு இல் சேவடி புரைந்தான்.* 70

பிலத்தின் மேற்பகுதியை மேலைக்கடலில் அனுமன் எறிதல்

ஏழ்-இருபது ஓசனை இடந்து, படியின்மேல்
ஊழுற எழுந்து, அதனை, உம்பரும் ஒடுங்க,
பாழி நெடு வன் பிலனுள்நின்று, படர் மேல்பால்
ஆழியின் எறிந்து, அனுமன் மேகம் என ஆர்த்தான். 71

சுயம்பிரபை பொன்னுலகம் செல்லுதல்

இன்றும் உள மேல் கடல் இயக்கு இல் பில தீவா
நின்று, நிலைபெற்றுளது; நீள் நுதலியோடும்,
குன்று புரை தோளவர், எழுந்து நெறி கொண்டார்;
பொன் திணி விசும்பினிடை நல் நுதலி போனாள். 72

வானரர் பொய்கைக் கரை அடைதல்

மாருதி வலித் தகைமை பேசி, மறவோரும்,
பாரிடை நடந்து, பகல் எல்லை படரப் போய்,
நீருடைய பொய்கையினின் நீள் கரை அடைந்தார்;
தேருடை நெடுந்தகையும் மேலை மலை சென்றான். 73

## 14 ஆறு செல் படலம்

பொய்கைக் கரையில் வானரர் உறங்க, துமிரன் வருதல்

கண்டார், பொய்கைக் கண் அகல் நல் நீர்க் கரை தாம் உற்று,
உண்டார், தேனும் ஒண் கனி காயும்; ஒரு சூழல்,
கொண்டார் அன்றே, இன் துயில்; கொண்ட குறி உன்னி,
தண்டா வென்றித் தானவன் வந்தான், தகவு இல்லான். 1

69. எருத்து - பிடரி; மருத்து - வாயுதேவன்; கருமா - பன்றி; 70. மா - சிறப்பு; ஈர் அடி முடித்தான் - திருவிக்கிரமன்; புரைதல் - ஒத்தல்; 71. மேல்பால் ஆழி - மேலைக்கடல்; 72. இயக்கு - மக்கள் இயக்கம்.

14 : 1. சூழல் - இடம்; தண்டாத - நீங்காத.

மலையே போல்வான்; மால் கடல் ஒப்பான்; மறம் முற்ற,
கொலையே செய்வான்; கூற்றை நிகர்ப்பான்; கொடுமைக்கு ஓர்
நிலையே போல்வான்; நீர்மை இலாதான்; நிமிர் திங்கட்
கலையே போலும் கால எயிற்றன்; கனல் கண்ணன்; 2

கருவி மா மழை கைகள் தாவி மீது
உருவி, மேனி சென்று உலவி ஒற்றலால்,
பொரு இல் மாரி மேல் ஒழுகு பொற்பினல்,
அருவி பாய்தரும் குன்றமே அனன்; 3

வானவர்க்கும், மற்று அவர் வலிக்கு நேர்
தானவர்க்குமே அரிய தன்மையான்;
ஆனவர்க்கு அலால் அவனெடு ஆட, வேறு
ஏனவர்க்கும் ஒன்று எண்ண ஒண்ணுமோ? 4

பிறங்கு பங்கியான்; பெயரும் பெட்பினில்
கறங்கு போன்றுளான், பிசையும் கையினன்;
அறம் கொள் சிந்தையார், நெறி செல் ஆய்வினல்
உறங்குவாரை வந்து, ஒல்லை எய்தினன். 5

அங்கதன் மார்பில் அசுரன் கையால் அறைதல்

'பொய்கை என்னது என்று உணர்ந்தும், புல்லியோர்
எய்தினர்கள் யார்? இது எனு?' என,
ஐயன் அங்கதன் அலங்கல் மார்பினில்,
கையின் மோதினன்;—காலனே அனன். 6

அங்கதன் அறைய, அசுரன் அலறி வீழ்தல்

மற்று அம் மைந்தனும் உறக்கம் மாறினன்;
'இற்று இவன் கொலாம் இலங்கை வேந்து' என,
எற்றினனே, நேர் எற்றினன்; அவன்
முற்றினன், இகற்கு ஆதி மூர்த்தியான். 7

இடியுண்டு ஆங்கண் ஓர் ஓங்கல் இற்றது ஒத்து,
அடியுண்டான் தளர்ந்து அலறி வீழ்தலும்,
தொடியின் தோள் விசைத்து எழுந்து சுற்றினர்,—
பிடியுண்டார் எனத் துயிலும் பெற்றியார். 8

4. ஆட - போர் செய்ய; 5. பங்கி - செம்பட்டை மயிர்; ஆய்வு - இளைப்பு; 7. இற்று இவன் - இத்தன்மையுடைய இவன்; முற்றினன் - இறந்தான்; 8. தொடியின் தோள் - வளையணிந்த தோள்.

அசுரனைப்பற்றி அனுமன் வினவும் அங்கதன் விடையும்

'யார் கொலாம் இவன்? இழைத்தது என்?' என,
தாரை சேயினைத் தனி வினவினன்.
மாருதேயன்; மற்று அவனும், 'வாய்மை சால்
ஆரியா! தெரிந்து அறிகிலேன்' என்றான். 9

சாம்பவான் துமிரன் வரலாறு கூறுதல்

'யான் இவன்தனைத் தெரிய எண்ணினேன்;
தூ நிவந்த வேல் துமிரன் என்னும் பே-
ரான், இவ் ஆழ் புனல் பொய்கை ஆளும் ஓர்
தானவன்' என, சாம்பன் சாற்றினான். 10

வானரர் சீதையைத் தேடிப் பெண்ணையாற்றை அடைதல்

'வேறும் எய்துவார் உளர் கொலாம்' என,
தேறி, இன் துயில் செலவு தீர்ந்துளார்,
வீறு செஞ் சுடர்க் கடவுள் வேலைவாய்
நாற, நாள்மலர்ப் பெண்ணை நாடுவார். 11

புள் நை வெம் முலைப் புளினம், ஏய் தடத்து
உண்ண ஆம்பல் இன் அமிழ்தம் ஊறு வாய்,
வண்ண வெண் நகைத் தரள வாள் முகப்
பெண்ணை நண்ணினார்—பெண்ணை நாடுவார். 12

துறையும், தோகை நின்று ஆடு சூழலும்,
குறையும், சோலையும், குளிர்ந்த சாரல் நீர்ச்
சிறையும், தெள்ளு பூந் தடமும், தெண் பளிக்கு
அறையும், தேடினார்—அறிவின் நீடினார். 13

அணி கொழித்து வந்து, எவரும் ஆடுவார்
பிணி கொழித்து, வெம் பிறவி வேரின் வன்
துணி கொழித்து, அருஞ் கழிகள்தோறும், நல்
மணி கொழிப்பதன் துறையின் வைகினார். 14

தசநவ நாடு அடைதல்

ஆடு பெண்ணை நீர் ஆறும் ஏறினார்;
காடு நண்ணினார்; மலை கடந்துளார்;
வீடு நண்ணினார் என்ன, வீசும் நீர்-
நாடு நண்ணினார்—நாடு நண்ணினார். 15

10. தூ - புலால்; 11. நாள்மலர்ப் பெண் - திருமகள், ஈண்டுச் சீதை; 13. குறை - தீவு; நீர்ச்சிறை - நீர்நிலை; அறை - பாறை; 14. துணி - துண்டு; 15. பெண்ணை - வேன் கங்கா எனப்படும் ஆறு; நாடு - முன்னது தசநவ நாடு, பின்னது நாடுதல் தொழில்.

தசநவப் பெயர்ச் சரள சண்பகத்து,
அசந அப் புலத்து அகணி நாடு ஒரீஇ,
உசநவப் பெயர்க் கவி உதித்த பேர்
இசை விதர்ப்ப நாடு எளிதின் எய்தினர். 16

**விதர்ப்ப நாட்டில் தேடுதல்**

வைதருப்ப மண்டலனில் வந்து புக்கு,
எய்து அருப்பம் அத்தனையும் எய்தினர்;
பெய் தருப்பை நூல் பிறழும் மேனியார்,
செய் தவத்துளார் வடிவின், தேடினர். 17

**தண்டக வனத்தில் துருவி, முண்டகத் துறையை அடைதல்**

அன்ன தன்மையால், அறிஞர் நாடி, அச்
செந் நெல் வேலி சூழ் திரு நல் நாடு ஒரீஇ,
தன்னை எண்ணும் அத் தகை புகுந்துளார்
துன்னு தண்டகம், கடிது துன்னினர். 18

உண்டு, அகத்துளார், உறையும் ஐம் பொறிக்
கண்டகர்க்கு அருங் காலன் ஆயினர்,
தண்டகத்தையும் தடவி ஏகினர்;
முண்டகத்துறை கடிது முற்றினர். 19

அள்ளல் நீர் எலாம், அமரர் மாதரார்,
கொள்ளை மா முலைக் கலவை, கோதையின்
கள்ளு, நாறலின், கமல வேலி வாழ்
புள்ளும், மீன் உணா, புலவு தீர்தலால். 20

குஞ்சரம் குடைந்து ஒழுகு கொட்பதால்—
விஞ்சை மன்னர்பால் விரக மங்கைமார்,
நஞ்சு, வீணையின் நடத்து பாடலான்,
அஞ்சுவார், கணீர் அருவி ஆறுஅரோ! 21

16. தசநவப் பெயர் - 'தசார்ணம்' என்னும் பெயருடைய நாடு; சரளம் - தொகுதி, அழகு; அசநம் - உணவு; அகணி - மருதம்; உசநவப் பெயர்க் கவி - சுக்கிரன், இதனுல் சுக்கிரன் விதர்ப்ப நாட்டில் பிறந்தவன் என் பது தெரிகிறது; 17. அருப்பம் - ஊர்; 18. தன்னை எண்ணல் - உயிரின் இயல்பை (ஜீவாத்மாவின் நிலையை) அறிதல்; 19. கண்டகர் - தீயவர்; 20. கமலவேலி - முண்டகத் துறை; 21. கொட்பு - தன்மை.

கமுக வார் நெடுங் கனக ஊசலில்,
குமுத வாயினர், குயிலை ஏசுவார்;
சமுக வாளியும், தனுவும் வாழ் முகத்து
அமுத பாடலார், மருவி ஆடுவார். 22

இனைய ஆய ஒண் துறையை எய்தினர்;
நினையும் வேலைவாய் நெடிது தேடுவார்;
வினைய வார் குழல் திருவை மேவலார்;
புனையும் நோயினர், கடிது போயினர். 23

பாண்டு மலையின் சிகரத்தை வானரர் அடைதல்

நீண்ட மேனியான், நெடிய தாளின்நின்று
ஈண்டு கங்கை வந்து இழிவது என்னல் ஆம்,
பாண்டு அம் மலைப் படர் விசும்பினைத்
தீண்டுகின்ற தண் சிகரம் எய்தினர். 24

இருள் உறுத்து மீது எழுந்த தெண் நிலா,
மருள் உறுத்து, வண் சுடர் வழுங்கலால்,
அருள் உறுத்திலா அடல் அரக்கன்மேல்
உருள் உறுத்த திண் கயிலை ஒத்ததால். 25

விண் உற நிவந்த சோதி வெள்ளிய குன்றம் மேவி,
கண்ணுற நோக்கலுற்றார், களி உறக் கனிந்த காமர்
பண் உறு கிளவிச் செவ் வாய், படை உறும் நோக்கினாளை,
எண்ணுறு திறத்தும் காணார்; இடர் உறும் மனத்தர் எய்த்தார். 26

கோதாவரியை அடைதல்

ஊதைபோல் விசையின், வெங் கண் உழுவை போல் வயவர், ஓங்கல்
ஆதியை அகன்று செல்வார்; அரக்கனால் வஞ்சிப்புண்ட
சீதை போகின்றாள் கூந்தல் வழீஇ வந்து, புவனம் சேர்ந்த
கோதைபோல் கிடந்த கோதாவரியினைக் குறுகிச் சென்றார். 27

22. சமுக வாளி - மன்மதனுடைய அம்புக் கூட்டம்; 23. வினைய வார்குழல் - முடி, குழல், தொங்கல், பனிச்சை, சுருள் என்னும் ஐவகைத் தொழிற்கும் உரிய கூந்தல்; 24. பாண்டு மலை - வெண்ணிறமுடைய மலை; 25. உறுத்தல் - சினத்தல், அடைவித்தல், பதித்தல், அழுத்தல் என முறையே பொருள்படும்; 26. படை - வேற்படை, வாட்படையும் ஆம்; திறம் - வழி; 27. ஊதை - காற்று; உழுவை - புலி; கோதை - மாலை.

எழுகின்ற திரையிற்று ஆகி, இழிகின்ற மணி நீர் யாறு,—
தொழுகின்ற சனகன் வேள்வி தொடங்கிய, சுருதிச் சொல்லால்
உழுகின்ற பொழுதின், ஈன்ற ஒரு மகட்கு இரங்கி, ஞாலம்
அழுகின்ற கலுழி மாரி ஆம் என—பொலிந்தது அன்றே. 28

ஆசு இல் பேர் உலகில் காண்போர் அளவை நூல் எனலும் ஆகி,
காசொடு கனகம் தூவி, கவின் உறக் கிடந்த கான் யாறு,—
ஏசு இல் போர் அரக்கன் மார்பினிடை பறித்து, எருவை வேந்தன்
வீசிய வடக மீக் கோள் ஈது என—விளங்கிற்று அன்றே. 29

சுவணகத் துறையில் வானர வீரர் புகுந்து, குலிந்த தேசத்தைக் கடத்தல்

அந் நதி முழுதும் நாடி, ஆய் வளை மயிலை, யாண்டும்
சந்நிதி உற்றிலாதார், நெடிது பின் தவிரச் சென்றார்;
'இன்ன தீதுஇலாத, தீது' என்று யாவையும் எண்ணும் கோளார்,
சொன்ன தீவினைகள் தீர்க்கும் சுவணகத் துறையில் புக்கார்.

சுரும்பொடு தேனும், வண்டும், அன்னமும், துவன்றி; புள்ளும்,
கரும்பொடு செந் நெல் காடும், கமல வாவிகளும், மல்கி;
பெரும் புனல் மருதம் சூழ்ந்த கிடக்கை பின் கிடக்கச் சென்றார்;
குரும்பை நீர் முரஞ்சும் சோலைக் குலிந்தமும், புறத்துக் கொண்டார்.

அருந்ததி மலை, மரகத மலைகளைக் கடந்து, வேங்கட மலை சேர்தல்

கொங்கணம் ஏழும் நீங்கி, குட கடல் தரளக் குப்பைச்
சங்கு அணி பானல் நெய்தல்-தண் புனல் தவிர ஏகி,
திங்களின் கொழுந்து சுற்றும் சிமய நீள் கோட்டுத் தேவர்
அங்கைகள் கூப்ப, நின்ற அருந்ததிக்கு அருகர் ஆனார். 32

அருந்ததிக்கு அருகு சென்று, ஆண்டு அழகினுக்கு அழகு செய்தாள்
இருந்த திக்கு உணர்ந்திலாதார் ஏகினார்; இடையர் மாதர்
பெருந் ததிக்கு அருந் தேன் மாறும் மரகதப் பெருங் குன்று எய்தி,
இருந்து, அதின் தீர்ந்து சென்றார், வேங்கடத்து இறுத்த எல்லை— 33

முனைவரும், மறை வலோரும், முந்தைநாள் சிந்தை மூண்ட
வினை வரும் நெறியை மாற்றும் மெய் உணர்வோரும், விண்ணோர்
எனைவரும், அமரர் மாதர் யாவரும், சித்தர் என்போர்
அனைவரும், அருவி நல் நீர் நாளும் வந்து ஆடுகின்றார். 34

28. தொடங்கிய - தொடங்குவதற்காக; கலுழி மாரி - கண்ணீர்ப் பெருக்கு; 29. வடக மீக்கோள், மீக்கோள் வடகம் - மேலே அணியும் முத்தாரம், உடை வகைகளுள் ஒன்று எனலும் ஆம்; 30. கோளார் - தன்மையர்; 31. முரஞ்சுதல் - நிறைதல்; குலிந்தம் - குலிந்த நாடு; 33. ததி - தயிர்; இறுத்த எல்லை - தங்கியபொழுது; 34. சித்தர் - தேவ கணத்துள் ஒரு பிரிவினர்.

பெய்த ஐம் பொறியும், பெருங் காமமும்,
வைத வெஞ் சொலின், மங்கையர் வாட் கணின்,
எய்த வஞ்சக வாளியும், வென்று நல்,
செய் தவம் பல செய்குநர் தேவரால். 35

வலம் கொள் நேமி மழை நிற வானவன்
அலங்கு தாள் இணை தாங்கிய அம் மலை
விலங்கும் வீடு உறுகின்றன; மெய்ந் நெறி
புலன் கொள்வார்கட்கு அணியது பொய்க்குமோ? 36

ஆய குன்றினை எய்தி, அருந் தவம்
மேய செல்வரை மேயினர், மெய்ந் நெறி
நாயகன்தனை நாளும் வணங்கிய
தூய நல் தவர் பாதங்கள் சூடினர். 37

தொண்டை நாட்டை அடைதல்

சூடி, ஆண்டு அச் சுரி குழல் தோகையைத்
தேடி, வார் புனல் தெண் திரைத் தொண்டை நல்
நாடு நண்ணுகின்றார், மறை நாவலர்
வேடம் மேயினர், வேண்டு உரு மேவுவார். 38

குன்று சூழ்ந்த கடத்தொடும், கோவலர்
முன்றில் சூழ்ந்த படப்பையும், மொய் புனல்
சென்று சூழ்ந்த கிடக்கையும், தெண் திரை
மன்று சூழ்ந்த பரப்பும்—மருங்கு எலாம். 39

சூல் அடிப் பலவின் சுளை தூங்கு தேன்,
கோல் அடிப்ப வெரீஇ, குல மள்ளர் ஏர்ச்
சால் அடித் தரும் சாலியின் வெண் முளை,
தோல் அடிக் கிளை அன்னம், துவைப்பன. 40

செருகுறும் கணின் தேம் குவளைக் குலம்
அருகு உறங்கும் வயல் மருங்கு, ஆய்ச்சியர்
இரு குறங்கு பிறங்கிய வாழையில்
குருகு உறங்கும்; குயிலும் துயிலுமால். 41

தெருவின் ஆர்ப்புறும் பல் இயம் தேர் மயில்
கருவி மா மழை என்று களிப்புறு;
பொருநர் தண்ணுமைக்கு அன்னமும் போகலா;—
மருவினர்க்கும் மயக்கம் உண்டாம்கொலோ? 42

35. பெய்த - உடலில் பிரமன் அமைத்து வைத்த; 36. அலங்குதல் - விளங்குதல்; 37. மெய்ந்நெறி நாயகன் - திருவேங்கடமுடையான்; 39. மன்று - வெளியான இடம்; 40. சூல் அடிப் பலா - வேர்ப்பலா.

தேரை வன் தலைத் தெங்கு இளம் பாளையை
நாரை என்று இளங் கெண்டை நடுங்குவ;
தாரை வன் தலைத் தண் இள ஆம்பலைச்
சேரை என்று, புலம்புவ, தேரையே. 43

நள்ளி வாங்கு கடை இள நவ்வியர்,
வெள்ளி வால் வளை வீசிய வெண் மணி,
'புள்ளி நாரைச் சினை பொரியாத' என்று
உள்ளி, ஆமை முதுகின் உடைப்பரால். 44

சேட்டு இளங் கடுவன் சிறு புன் கையில்
கோட்ட தேம் பலவின் கனிக் கூன் சுளை,
தோட்டு அமைந்த பொதும்பரில் தூங்கு தேன்
ஈட்டம் என்னச் சென்று, ஈ இனம் மொய்ப்பன. 45

சோழ நாட்டை அடைதல்

அன்ன தண்டக நாடு கடந்து, அகன்
பொன்னி நாடு பொரு இலர் எய்தினர்;
செந்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து,
இன்னல் செய்யும் நெறி அரிது ஏகுவார். 46

கொடிறு தாங்கிய வாய்க் குழு நாரை வாழ்
தடறு தாங்கிய கூன் இளந் தாழையின்
மிடறு தாங்கும் விருப்புடைத் தீம் கனி
இடறுவார்; நறுந் தேனின் இழுக்குவார். 47

குழுவும் மீன் வளர் குட்டம் எனக் கொளா,
எழுவு பாடல் இமிழ் கருப்பு ஏந்திரத்து
ஒழுகு சாறு அகன் கூனையின் ஊழ் முறை
முழுகி, நீர்க் கருங் காக்கை முளைக்குமே. 48

பூ நெருங்கிய புள் உறு சோலைகள்
தேன் ஒருங்கு சொரிதலின், தேர்வு இல,
மீன் நெருங்குறும் வெள்ளம் வெரீஇ, பல
வானரங்கள் மரங்களின் வைகுமால். 49

43. தேரை - தவளை; நாரை - கொக்கு; தாரை வன் தலை - கூரிய வலிய நுனி; சேரை - சாரைப் பாம்பு; 44. நள்ளி - பெண் வண்டு; 45. சேடு - இளமை; கடுவன் - ஆண் குரங்கு; தோட்டு - தொட்டு, தோண்டி; பொதும்பர் - பொந்து; 47. கொடிறு - குறடு; தடறு - நீர்க்கரை; இழுக்குவார் - வழுக்கிவிழுவார்; 48. குழுவும் - திரளும்; எழுவுதல் - எழுப்புதல்; கூனை - கருப்பஞ்சாறு காய்ச்சுதற்குரிய வாயகன்ற பாத்திரம்.

தாறு நாறுவ, வாழைகள்; தாழையின்
சோறு நாறுவ, தூம்புகள்; மாங்கனி
நாறு நாறுவ; நாறு வளர்க்குறும்
சேறு நாறுவ, செங்கழுநீர்அரோ.* 50

**மலைநாடு கடந்து பாண்டி நாடு அடைதல்**

அனைய பொன்னி அகன் புனல் நாடு ஒரீஇ,
மனையின் மாட்சி குலாம் மலை மண்டலம்
வினையின் நீங்கிய பண்பினர் மேயினார்;
இனிய தென் தமிழ் நாடு சென்று எய்தினார். 51

அத் திருத் தகு நாட்டினை அண்டர்நாடு
ஒத்திருக்கும் என்றால், உரை ஒக்குமோ—
எத் திறத்தினும் ஏழ் உலகும் புகழ்
முத்தும் முத் தமிழும் தந்து, முற்றலால்?* 52

**மயேந்திரமலையை அடைதல்**

என்ற தென் தமிழ் நாட்டினை எங்கணும்
சென்று நாடித் திரிந்து, திருந்தினார்,
பொன்றுவாரின் பொருந்தினர் போயினார்—
துன்று அல் ஓதியைக் கண்டிலர், துன்பினார்.* 53

வன் திசைக் களிறு அன்ன மயேந்திரக்
குன்று இசைத்தது வல்லையில் கூடினார்—
தென் திசைக் கடற் சீகர மாருதம்
நின்று இசைக்கும் நெடு நெறி நீங்கினார். 54

## 15 சம்பாதிப் படலம்

**வானரர் தென் கடலைக் காணுதல்**

மழைத்த விண்ணகம் என முழங்கி, வான் உற
இழைத்த வெண் திரைக் கரம் எடுத்து, 'இலங்கையாள்,
உழைத் தடங் கண்ணி' என்று உரைத்திட்டு, ஊழின் வந்து
அழைப்பதே கடுக்கும் அவ் ஆழி நோக்கினார். 1

51. மலை மண்டலம் - சேரநாடு; 52. முற்றுதல் - நிறைதல், பெருமை பெறுதல்; 54. இசைத்தது - சிறப்பித்துக் கூறப்படுவது.

ஏமகூடத்தில் பிரிந்த யாவரும் மயேந்திரத்தில் ஒன்றுகூடுதல்

'விரிந்து, நீர், எண் திசை மேவி, நாடினீர்,
பொருந்துதிர் மயேந்திரத்து' என்று போக்கிய
அருந் துணைக் கவிகள் ஆம் அளவு இல் சேனையும்
பெருந் திரைக் கடல் எனப் பெரிது கூடிற்றே.* 2

வானரர் சீதையைக் காணாமையால் வருந்தி உரைத்தல்

யாவரும் அவ் வயின் எளிதின் எய்தினர்;
பூ வரு புரி குழல், பொரு இல் கற்புடைத்
தேவியைக் காண்கிலார், செய்வது ஓர்கிலார்,
நா உறக் குழறிட நவில்கின்றார்அரோ:* 3

'அற்றது நாள் வரை அவதி; காட்சியும்
உற்றிலம்; இராகவன் உயிரும் பொன்றுமால்;
கொற்றவன் ஆணையும் குறித்து நின்றனம்;
இற்றது நம் செயல், இனி' என்று எண்ணினர். 4

'அருந் தவம் புரிதுமோ? அன்னது அன்றுஎனின்,
மருந்து அரு நெடுங் கடு உண்டு மாய்துமோ?
திருந்தியது யாது? அது செய்து தீர்தும்' என்று
இருந்தனர்—தம் உயிர்க்கு இறுதி எண்ணுவார். 5

அங்கதன் உடன்வந்தவரிடம் ஒன்று உரைத்தல்

கரை பொரு கடல் அயல், கனக மால் வரை
நிரை துவன்றிய என நெடிது இருந்தவர்க்கு,
'உரைசெயும் பொருள் உளது' என உணர்த்தினன்—
அரசு இளங் கோள் அரி, அயரும் சிந்தையான்: 6

' ''நாடி நாம் கொணருதும், நளினத்தாளை, வான்
மூடிய உலகினை முற்றும் முட்டி'' என்று
ஆடவர் திலகனுக்கு அன்பினர் எனப்
பாடவம் விளம்பினம்; பழியில் மூழ்குவாம். 7

' ''செய்தும்'' என்று அமைந்தது செய்து தீர்ந்திலம்;
நொய்து சென்று, உற்றது நுவலகிற்றிலம்;
''எய்தும் வந்து'' என்பது ஓர் இறையும் கண்டிலம்;
உய்தும்என்றால், இது ஓர் உரிமைத்து ஆகுமோ? 8

15: 5. மருந்து அரு நெடுங் கடு - மாற்று மருந்தில்லாப் பெருநஞ்சு; திருந்தியது - தகுதியானது; 7. ஆடவர் திலகன் - இராமன்; பாடவம் - வீண் வாய்ப்பெருமை, வல்லமை; 8. உரிமைத்து - நட்புரிமையோடு கூடியது.

'எந்தையும் முனியும்; எம் இறை இராமனும்
சிந்தனை வருந்தும்; அச் செய்கை காண்குறேன்;
நுந்துவென் உயிரினை; நுணங்கு கேள்வியீர்!
புந்தியின் உற்றது புகல்விர் ஆம்' என்றான். 9

**சாம்பன் உரை**

'விழுமியது உரைத்தனை;—விசயம் வீற்றிருந்து,
எழுவொடும் மலையொடும் இகலும் தோளினாய்!—
அழுதுமோ, இருந்து? நம் அன்பு பாழ்படத்
தொழுதுமோ, சென்று?' எனச் சாம்பன் சொல்லினான்: 10

'மீண்டு இனி ஒன்று நாம் விளம்ப மிக்கது என்?
''மாண்டுறுவது நலம்'' என வலித்தனம்;—
ஆண் தகை அரசு இளங் குமர!—அன்னது
வேண்டலின், நின் உயிர்க்கு உறுதி வேண்டுமால்.' 11

**அங்கதன் மறுமொழி**

என்று அவன் உரைத்தலும், இருந்த வாலி சேய்,
'குன்று உறழ்ந்தென வளர் குவவுத் தோளினீர்!
பொன்றி நீர் மடிய, யான் போவெனேல், அது
நன்றதோ? உலகமும் நயக்கற்பாலதோ? 12

' ''சான்றவர் பழி உரைக்கு அஞ்சித் தன் உயிர்
போன்றவர் மடிதர, போந்துளான்'' என
ஆன்ற பேர் உலகு உளோர் அறைதல் முன்னம், யான்
வான் தொடர்குவென்' என மறித்தும் கூறுவான்: 13

'எல்லை நம் இறுதி, யாய்க்கும் எந்தைக்கும், யாவரேனும்
சொல்லவும் கூடும்; கேட்டால், துஞ்சவும் அடுக்கும்; கண்ட
வில்லியும் இளைய கோவும் வீவது திண்ணம்; அச் சொல்
மல்லல் நீர் அயோத்தி புக்கால், வாழ்வரோ பரதன் மற்றோர்?*

'பரதனும், பின்னுளோனும், பயந்தெடுத்தவரும், ஊரும்,
சரதமே முடிவர்; கெட்டேன்! ''சனகி'' என்று உலகம் சாற்றும்
விரத மா தவத்தின் மிக்க விளக்கினால், உலகத்து யார்க்கும்
கரை தெரிவு இலாத துன்பம் விளைந்தவா!' எனக் கலுழ்ந்தான்.* 15

9. நுந்துவென் - மாய்த்துக்கொள்வேன்; 14. இறுதி எல்லை - இறத்தலாகிய முடிவு.

**சாம்பவான் அங்கதனை நோக்கிக் கூறல்**

பொருப்பு உறழ் வயிரத் திண் தோள் பொரு சினத்து ஆளி போல்வான்
தரிப்பு இலாது உரைத்த மாற்றம், தடுப்ப அருந் தகைத்தது ஆய
நெருப்பையே விளைத்த போல, நெஞ்சமும் மறுகக் கேட்டு,
விருப்பினால் அவனை நோக்கி, விளம்பினன் எண்கின் வேந்தன்:

'நீயும் நின் தாதையும் நீங்க, நின் குலத்
தாயம் வந்தவரொடும் தனையர் இல்லையால்;
ஆயது கருதினம்; அன்னது அன்று எனின்,
நாயகர் இறுதியும் நவிலற்பாலதோ? 17

'ஏகு நீ; அவ் வழி எய்தி, இவ் வழித்
தோகையைக் கண்டிலாவகையும் சொல்லி, எம்
சாகையும் உணர்த்துதி; தவிர்தி சோகம்;—போர்
வாகையாய்!' என்றனன்—வரம்பு இல் ஆற்றலான். 18

**அனுமன் கூற்று**

அவன் அவை உரைத்தபின், அனுமன் சொல்லுவான்:
'புவனம் மூன்றினும் ஒரு புடையில் புக்கிலம்;
கவனம் மாண்டவர் என, கருத்திலார் என,
தவன வேகத்தினீர்! சலித்திரோ?' என்றான். 19

பின்னரும் கூறுவான்: 'பிலத்தில், வானத்தில்,
பொன் வரைக் குடுமியில், புறத்துள் அண்டத்தில்,
நல் நுதல் தேவியைக் காண்டும் நாம் எனின்,
சொன்ன நாள் அவதியை இறைவன் சொல்லுமோ? 20

'நாடுதலே நலம் இன்னும்; நாடி, அத்
தோடு அலர் குழலிதன் துயரின் சென்று, அமர்
வீடிய சடாயுவைப் போல வீடுதல்
பாடவும்; அல்லது பழியிற்று ஆம்' என்றான். 21

**'சடாயு மாண்டான்' என்ற சொற் கேட்டு, சம்பாதி அங்கு வந்து வருந்துதல்**

என்றலும், கேட்டனன், எருவை வேந்தன்—தன்
பின் துணை ஆகிய பிழைப்பு இல் வாய்மையான்
பொன்றினன் என்ற சொல்; புலம்பும் நெஞ்சினன்;
குன்று என நடந்து, அவர்க் குறுகல் மேயினான். 22

17. தாயம் - உரிமை; 18. சாகை - சாவு; 19. கவனம் மாண்டவர் - வேகம் குறைந்தவர், ஆற்றல் அற்றவர்; தவன வேகம் - சூரியனை ஒத்த வேகம்; 21. பாடவம் - பெருமை; 22. எருவை வேந்தன் - கழுகரசனாகிய சம்பாதி; பின் துணை - இளையவன், பின் பிறந்த தம்பி.

'முறையுடை எம்பியார் முடிந்தவா' எனப்
பறையிடு நெஞ்சினன்; பதைக்கும் மேனியன்;
இறையுடைக் குலிசவேல் எறிதலால், முனம்
சிறை அறு மலை எனச் செல்லும் செய்கையான்; 23

'மிடலுடை எம்பியை வீட்டும் வெஞ் சினப்
படையுளர் ஆயினர் பாரில் யார்?' என,
உடலினை வழிந்து போய், உவரி நீர் உக,
கடலினைப் புரையுறும் அருவிக் கண்ணினன்; 24

உழும் கதிர் மணி அணி உமிழும் மின்னினன்;
மழுங்கிய நெடுங் கணின் வழங்கும் மாரியான்;
புழுங்குவான், அழுங்கினன்; புடவிமீதினில்,
முழங்கி, வந்து, இழிவது ஓர் முகிலும் போல்கின்றான்; 25

வள்ளியும் மரங்களும் மலையும் மண் உற,
தெள்ளு நுண் பொடிபட, கடிது செல்கின்றான்;
தள்ளு வன் கால் பொர, தரணியில் தவழ்
வெள்ளி அம் பெரு மலை பொருவு மேனியான்; 26

#### சம்பாதி நெருங்கக் கண்ட அனுமன் செயல்

எய்தினன்—இருந்தவர் இரியல்போயினர்;
ஐயன், அம் மாருதி, அழலும் கண்ணினன்,
'கைதவ நிசிசர! கள்ள வேடத்தை!
உய்திகொல் இனி?' என உருத்து, முன் நின்றான். 27

வெங் கதம் வீசிய மனத்தன், விம்மலன்,
பொங்கிய சோரி நீர் பொழியும் கண்ணினன்,
சங்கையில் சழக்கு இலன் என்னும் தன்மையை,
இங்கித வகையினால், எய்த நோக்கினன். 28

#### 'சடாயுவைக் கொன்றவர் யார்?' எனச் சம்பாதி வினவுதல்

நோக்கினன், நின்றனன், நுணங்கு கேள்வியான்,
வாக்கினால் ஒரு மொழி வழங்குறாதமுன்,
'தாக்க அருஞ் சடாயுவைத் தருக்கினால் உயிர்
நீக்கினர் யார்? அது நிரப்புவீர்!' என்றான். 29

23. முறை - ஒழுக்கம்; 24. உடலினை - உடலிலிருந்து; 25. உழும் கதிர் மணி - சாணை பிடித்த ஒளி பொருந்திய இரத்தினம்; 26. கால் - வாயு தேவன்; 28. வீசிய - நீக்கிய; சங்கை - மனம்; சழக்கு - குற்றம்; இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில்; 29. நிரப்புதல் - விரித்துரைத்தல்.

### சம்பாதி தன் வரலாறு உரைத்தல்

'உன்னை நீ உள்ளவாறு உரைப்பின், உற்றதைப்
பின்னை யான் நிரப்புதல் பிழைப்பு இன்றுகுமால்'
என்ன, மாருதி எதிர், எருவை வேந்தனும்,
தன்னை ஆம் தன்மையைச் சாற்றல் மேவினன்:* 30

'மின் பிறந்தாலென விளங்கு எயிற்றினய்!
என், பிறந்தார்க்கு இடை எய்தலாத? என்
பின் பிறந்தான் துணை பிரிந்த பேதையேன்
முன் பிறந்தேன்' என முடியக் கூறினன். 31

### அனுமன், சடாயு இறந்தமை உரைத்தல்

கூறிய வாசகம் கேட்ட, கோது இலான்
ஊறிய துன்பத்தின் உவரியுள் புகா
ஏறினன், உணர்த்தினன், 'இகல் இராவணன்
வீறிய வாளிடை விளிந்தது ஆம்' என்றுன். 32

### சம்பாதியின் புலம்பல்

அவ் உரை கேட்டலும், அசனி ஏற்றினல்
தவ்விய கிரி எனத் தரையின் வீழ்ந்தனன்;
வெவ் உயிரா, உயிர் பதைப்ப, விம்மினன்;
இவ் உரை, இவ் உரை, எடுத்து இயம்பினன்: 33

'விளையா நீள் சிறகு இன்றி வெந்து உகத்
தளை ஆனேன் உயிர் போதல் தக்கதால்;
வளையான் நேமியன் வன்மை சால் வலிக்கு
இளையானே! இது என்ன மாயமோ? 34

'மலரோன் நின்றுளன்; மண்ணும் விண்ணும் உண்டு;
உலையா நீடு அறம் இன்னும் உண்டுஅரோ;
நிலை ஆர் கற்பமும் நின்றது; இன்று நீ
இலையானய்; இது என்ன தன்மையோ? 35

'உடனே, அண்டம் இரண்டும் முந்து உயிர்த்து-
இடு அந் நாள் வந்து இருவேமும் எய்தி, யான்
விட, நீயே தனிச் சென்ற வீரமும்
கடனே;—வெங் கலுழற்கும் மேன்மையாய்! 36

32. வீறிய - பெருமையினையுடைய; 33. தவ்விய - சிதைந்த; 34. தளை ஆனேன் - சிறைப்பட்டவன் போலானேன்; 35. கற்பம் - கால அளவில் ஒரு பேரெல்லை; 36. அண்டம் - முட்டை; கடனே - முறையோ.

‘ஒன்று மூன்று உலகத்துளோரையும்
வென்றான் என்னினும், வீர! நிற்கு நேர்
நின்றானே, அவ் அரக்கன்! நின்னையும்
கொன்றானே! இது என்ன கொள்கையோ?’ 37

என்று என்று ஏங்கி, இரங்கி, இன்னலால்
பொன்றும் தன்மை புகுந்தபோது, அவற்கு
ஒன்றும் சொற் கொடு உணர்ச்சி நல்கினான்—
வன் திண் தோள் வரை அன்ன மாருதி. 38

சம்பாதி வினாவும் அனுமன் விடையும்

தேற்றத் தேறி இருந்த செங்கணான்,
‘கூற்று ஒப்பான், கொலை வாள் அரக்கனோடு
ஏற்று, போர் செய்தது என் நிமித்து?’ என,
காற்றின் சேய் இது கட்டுரைக்குமால்: 39

‘எம் கோமான், அவ் இராமன், இல் உளாள்,
செங்கோலான் மகள், சீதை செவ்வியாள்,
வெங் கோல் வஞ்சன் விளைத்த மாயையால்,
தம் கோனைப் பிரிவுற்ற தன்மையாள்; 40

‘கொண்டு ஏகும் கொலை வாள் அரக்கனைக்
கண்டான் நும்பி; அறம் கடக்கலான்,
‘‘வண்டு ஆர் கோதையை வைத்து நீங்கு’’ எனா,
திண் தேரான் எதிர் சென்று சீறினான். 41

‘சீறி, தீயவன் ஏறு தேரையும்
கீறி, தோள்கள் கிழித்து அழித்தபின்,
தேறி, தேவர்கள் தேவன் தெய்வ வாள்
வீற, பொன்றினன் மெய்ம்மையோன்’ என்றான். 42

சம்பாதி சடாயுவைப் பாராட்டுதல்

விளித்தான் அன்னது கேட்டு, ‘மெய்ம்மையோய்!
தெளித்த ஆடத் தகு தீர்த்தன்மாட்டு, உயிர்
அளித்தானே! அது நன்று! நன்று!’ எனாக்
களித்தான்—வாரி கலுழ்ந்த கண்ணினான்.* 43

39. செங்கணான் - சம்பாதி; 42. வீற - எறிய; 43. தெளிந்து ஆடத் தகு தீர்த்தன் - அனுபவித்தற்குரிய தூயமூர்த்தி, சரணம் அடைதற்கு ஏற்ற புண்ணியமூர்த்தி எனலும் ஆம்.

'பைந் தார் எங்கள் இராமன் பத்தினி,
செந் தாள் வஞ்சி, திறத்து இறந்தவன்,
மைந்தா! எம்பி வரம்பு இல் சீர்த்தியோடு
உய்ந்தான் அல்லது, உலந்தது உண்மையோ? 44

'அறம் அன்னானுடன் எம்பி அன்பினோடு
உறவு உன்னா, உயிர் ஒன்ற ஒவினான்;
பெற ஒண்ணாதது ஓர் பேறு பெற்றவர்க்கு
இறவு என் ஆம்? இதின் இன்பம் யாவதோ?' 45

சம்பாதி நீர்க்கடன் செய்து, வானரரை நோக்கி மொழிதல்

என்று என்று ஏங்கி, இரங்கி, இன் புனல்
சென்று, அங்கு ஆடுதல் செய்து தீர்ந்தபின்,
வன் திண் தோள் வலி மாறு இலாதவன்
துன்றும் தாரவர்க்கு இன்ன சொல்லினான்:* 46

'வாழ்வித்தீர் எனை;—மைந்தர்!—வந்து, நீர்
ஆழ்வித்தீர் அலிர் துன்ப ஆழிவாய்;
கேள்வித் தீவினை கீறினீர்; இருள்
போழ்வித்தீர்; உரை பொய்யின் நீங்கினீர். 47

'எல்லீரும் அவ் இராம நாமமே
சொல்லீர்; சொல்ல, எனக்கு ஓர் சோர்வு இலா
நல் ஈரப் பயன் நண்ணும்;—நல்ல சொல்
வல்லீர்! வாய்மை வளர்க்கும் மாண்பினீர்!' 48

இராம நாமம் கேட்டு, சம்பாதியின் சிறை வளர்தல்

என்றான், 'அன்னது காண்டும் யாம்' எனா,
நின்றார் நின்றுழி, நீல மேனியான்
நன்று ஆம் நாமம் நவின்று நல்கினார்,
வன் தோளான் சிறை வானம் தாயவே. 49

சிறை பெற்றான், திகழ்கின்ற மேனியான்,
முறை பெற்று ஆம் உலகு எங்கும் மூடினான்—
நிறை பெற்று ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள்
உறை பெற்றால் எனல் ஆம் உறுப்பினான். 50

44. உலந்தது - இறந்தது; 45. ஒவினான் - விட்டான்; இறவு - இறப்பு; 50. நிறை - வலிமை; வாயிடை இணைந்த சம்பாதி மூக்குக்கு உறையிட்ட வாள் உவமை.

வானரர் சம்பாதியின் முன்னைய வரலாற்றை வினவுதல்

தெருண்டான் மெய்ப் பெயர் செப்பலோடும், வந்து
உருண்டான் உற்ற பயத்தை உன்னினர்;
மருண்டார்; வானவர் கோனை வாழ்த்தினர்;
வெருண்டார்; சிந்தை வியந்து விம்முவார். 51

அன்னனைக் கடிது அஞ்சலித்து, 'நீ
முன் நாள் உற்றது முற்றும் ஓது' எனச்
சொன்னர்; சொற்றது சிந்தை தோய்வுற,
தன்னல் உற்றது தான் விளம்புவான்: 52

சம்பாதி தன் முன்னை வரலாறு உரைத்தல்

'தாய் எனத் தகைய நண்பீர்! சம்பாதி, சடாயு, என்பேம்;
சேயொளிச் சிறைய வேகக் கழுகினுக்கு அரசு செய்வேம்;
பாய் திரைப் பரவை ஞாலம் படர் இருள் பருகும் பண்பின்
ஆய் கதிர்க் கடவுள் தேர்ஊர் அருணனுக்கு அமைந்த மைந்தர்;

' ''ஆய் உயர் உம்பர் நாடு காண்டும்'' என்று அறிவு தள்ள,
மீ உயர் விசும்பினூடு மேக்கு உறச் செல்லும் வேலை,
காய் கதிர்க் கடவுள் தேரைக் கண்ணுற்றேம்; கண்ணுறுமுன்,
தீயையும் தீக்கும் தெய்வச் செங் கதிர்ச் செல்வன் சீறி, 54

'முந்திய எம்பி மேனி முருங்கு அழல் முடுகும் வேலை,
''எந்தை! நீ காத்தி'' என்றான்; யான் இரு சிறையும் ஏந்தி
வந்தனென் மறைத்தலோடும், மற்று அவன் மறையப்போனன்;
வெந்து மெய், இறகு தீந்து, விழுந்தனென், விளிகிலாதேன். 55

'மண்ணிடை விழுந்த என்னை வானிடை வயங்கு வள்ளல்,
கண்ணிடை நோக்கி, உற்ற கருணையான், ''சனகன் காதல்
பெண் இடையீட்டின் வந்த வானரர் இராமன் பேரை
எண்ணிடை உற்ற காலத்து, இறகு பெற்று எழுதி'' என்றான்.
56

51. தெருண்டான் - பரம்பொருள் எனத் தெளியப்பட்டான்; பயம் - பயன்; 53. சேயொளி - சிவந்த ஒளி; 54. ஆய் உயர் உம்பர் நாடு - அந்தச் சிறந்த தேவருலகை, அகரச்சுட்டு நீண்டு யகரமெய் பெற்று 'ஆயுயர்' என்றாயிற்று; 55. முருங்குதல் - தகித்தல்; முடுகுதல் - விரைதல்; 56. இடையீடு - பிரிவு.

'எம்பியும் இடரின் வீழ்வான், ஏயது மறுக்க அஞ்சி,
அம்பரத்து இயங்கும் யாணர்க் கழுகினுக்கு அரசன் ஆனான்;
நம்பிமீர்! ஈது என் தன்மை? நீர் இவண் நடந்தவாற்றை,
உம்பரும் உவக்கத் தக்கீர்! உணர்த்துமின், உணர' என்றான்.

வானரர்க்குச் சீதையின் இருப்பிடத்தைச் சம்பாதி தெரிவித்தல்

என்றலும், இராமன் தன்னை ஏத்தினர் இறைஞ்சி, 'எந்தாய்!
''புன் தொழில் அரக்கன் மற்று அத் தேவியைக் கொண்டு போந்தான்,
தென் திசை'' என்ன உன்னித் தேடி நாம் வருதும்' என்றார்;
'நன்று நீர் வருந்தல் வேண்டா; நான் அது நவில்வென்' என்றான்.

'பாகு ஒன்று குதலையாளைப் பாதக அரக்கன் பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன்; புக்கனன் இலங்கை; புக்கு,
வேகின்ற உள்ளத்தாளை வெஞ் சிறையகத்து வைத்தான்;
ஏகுமின் காண்டிர்; ஆங்கே இருந்தனள் இறைவி, இன்னும். 59

'ஓசனை ஒரு நூறு உண்டால், ஒலி கடல் இலங்கை; அவ் ஊர்,
பாச வெங் கரத்துக் கூற்றும் கட்புலன் பரப்ப அஞ்சும்;
நீசன் அவ் அரக்கன் சீற்றம் நெருப்புக்கும் நெருப்பு; நீங்கள்
ஏச அருங் குணத்தீர்! சேறல் எப் பரிசு இயைவது?' என்றான்.

'நான்முகத்து ஒருவன், மற்றை நாரி ஓர் பாகத்து அண்ணல்,
பால்முகப் பரவைப் பள்ளிப் பரம்பரன், பணி என்றாலும்,
காலனுக்கேயும், சேறல் அரிது; இது காவல் தன்மை;
மேல் உமக்கு உறுவது எண்ணிச் செல்லுமின்;—விளிவு இல் நாளீர்!

'எல்லீரும் சேறல் என்பது எளிது அன்று, அவ் இலங்கை மூதூர்;
வல்லீரேல் ஒருவர் ஏகி, மறைந்து அவண் ஒழுகி, வாய்மை
சொல்லீரே துயரை நீக்கித் தோகையைத் தெருட்டி, மீள்திர்;
அல்லீரேல், என் சொல் தேறி, உணர்த்துமின் அழகற்கு அம்மா!

வானரரிடம் சம்பாதி விடைபெற்று, விசும்பில் செல்லுதல்

'காக்குநர் இன்மையால், அக் கழுகுஇனம் முழுதும் கன்றி,
சேக்கை விட்டு, இரியல்போகித் திரிதரும்; அதனைத் தீர்ப்பான்
போக்கு எனக்கு அடுத்த, நண்பீர்! நல்லது புரிமின்' என்னா,
மேக்கு உற விசையின் சென்றான், சிறையினால் விசும்பு போர்ப்பான். 63

63. சேக்கை - கூடு.

# 16 மயேந்திரப் படலம்

**'கடலைக் கடப்போர் யார்?' என வானரர் தமக்குள் பேசிக்கொள்ளுதல்**

'பொய் உரைசெய்யான், புள்அரசு' என்றே புகலுற்றார்,
'கை உறை நெல்லித் தன்மையின் எல்லாம் கரை கண்டாம்;
உய் உரை பெற்றும்; நல்லவை எல்லாம் உற எண்ணிச்
செய்யுமின் ஒன்றே, செய் வகை நொய்தின் செய வல்லீர்! 1

'சூரியன் வெற்றிக் காதலனோடும் சுடர் விற் கை
ஆரியனைச் சென்றே தொழுது, உற்றது அறைகிற்பின்,
சீர் நிலை முற்றும்; தேறுதல் கொற்றச் செயல் அம்மா;
வாரி கடப்போர் யாவர்?' என, தம் வலி சொல்வார்;* 2

**நீலன், அங்கதன், சாம்பன் முதலியோர் தம் இயலாமை கூறுதல்**

'மாள வலித்தேம்; என்றும் இம் மாளா வசையோடும்
மீளவும் உற்றேம்; அன்னவை தீரும் வெளி பெற்றேம்;
காள நிறத்தோடு ஒப்பவர் மாய, கடல் தாவுற்று,
ஆளும் நலத்தீர்! ஆளுமின், எம் ஆர் உயிர் அம்மா!' 3

நீலன் முதல் பேர், போர் கெழு கொற்ற நெடு வீரர்,
சால உரைத்தார்; வாரி கடக்கும் தகவு இன்மை;
'வேலை கடப்பென்; மீள மிடுக்கு இன்று' என விட்டான்,
வாலி அளிக்கும் வீர வயப் போர் வசை இல்லான்.* 4

'வேதம் அனைத்தும் தேர்தர, எட்டா ஒரு மெய்யன்
பூதலம் முற்றும் ஓர்-அடி வைத்துப் பொலி போழ்து, யான்
மாதிரம் எட்டும் சூழ் பறை வைத்தே வர, மேரு
மோத இளைத்தே தாள் உலைவுற்றேன்—விறல் மொய்ம்பீர்!* 5

'ஆதலின், இப் பேர் ஆர்கலி குப்புற்று, அகழ் இஞ்சி
மீது கடந்து, அத் தீயவர் உட்கும் வினையோடும்,
சீதைதனைத் தேர்ந்து, இங்கு உடன் மீளும் திறன் இன்று' என்று
ஓதி இறுத்தான்—நாலுமுகத்தான் உதவுற்றான். 6

16: 2. கொற்றச் செயல் - வீரச் செயல்; 3. வலித்தேம் - துணிவு கொண்டோம்; வெளி - வழி; 6. நாலுமுகத்தான் உதவுற்றான் - பிரமன் அருளிய சாம்பவன்.

'அனுமனே தக்கவன்' எனச் சாம்பவன் உரைத்தல்

'யாம் இனி இப்போது ஆர் இடர் துய்த்து, இங்கு, ''இனி யாரைப்
போம் என வைப்போம்'' என்பது புன்மை; புகழ் அன்றே;
கோ முதல்வர்க்கு ஏறு ஆகிய கொற்றக் குமரா! நம்
நாமம் நிறுத்திப் பேர் இசை வைக்கும் நவை இல்லோன்,* 7

'ஆரியன் முன்னர்ப் போதுற உற்ற அதனாலும்,
காரியம் எண்ணிச் சோர்வு அற முற்றும் கடனாலும்,
மாருதி ஒப்பார் வேறு இலை' என்னா, அயன் மைந்தன்
சீரியன் மல் தோள் ஆண்மை விரிப்பான், இவை செப்பும்:* 8

சாம்பன் அனுமனது ஆண்மையைப் புகழ்தல்

'மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகை நாளீர்;
நூலை நயந்து, நுண்ணிது உணர்ந்தீர்; நுவல் தக்கீர்;
காலனும் அஞ்சும் காய் சின மொய்ம்பீர்; கடன் நின்றீர்;
ஆலம் நுகர்ந்தான் ஆம் என வெம் போர் அடர்கிற்பீர்; 9

'வெப்புறு செந் தீ, நீர், வளியாலும் விளியாதீர்;
செப்புறு தெய்வப் பல் படையாலும் சிதையாதீர்;
ஒப்பு உறின், ஒப்பார் நும் அலது இல்லீர்; ஒருகாலே
குப்புறின், அண்டத்து அப் புறமேயும் குதிகொள்வீர்; 10

'நல்லவும் ஒன்றே, தீயவும் நாடி, நவை தீரச்
சொல்லவும் வல்லீர்; காரியம் நீரே துணிவுற்றீர்;
வெல்லவும் வல்லீர்; மீளவும் வல்லீர்; மிடல் உண்டே;
கொல்லவும் வல்லீர்; தோள் வலி என்றும் குறையாதீர்; 11

'மேரு கிரிக்கும் மீது உற நிற்கும் பெரு மெய்யீர்;
மாரி துளிக்கும் தாரை இடுக்கும், வர வல்லீர்;
பாரை எடுக்கும் நோன்மை வலத்தீர்; பழி அற்றீர்;
சூரியனைச் சென்று, ஒண் கையகத்தும் தொட வல்லீர்; 12

'அறிந்து, திறத்து ஆறு எண்ணி, அறத்து ஆறு அழியாமை
மறிந்து உருள, போர் வாலியை வெல்லும் மதி வல்லீர்;
பொறிந்து இமையோர் கோன் வச்சிர பாணம் புக மூழ்க
எறிந்துழி, இற்று ஓர் புன் மயிரேனும் இழவாதீர்; 13

'போர்முன் எதிர்ந்தால் மூஉலகேனும் பொருள் ஆகா;
ஓர்வு இல் வலம் கொண்டு, ஒல்கல் இல் வீரத்து உயர் தோளீர்;
பார் உலகு எங்கும் பேர் இருள் சீக்கும் பகலோன்முன்,
தேர் முன் நடந்தே, ஆரிய நூலும் தெரிவுற்றீர்; 14

12. தாரை - நீர் ஒழுக்கு; இடுக்கு - இடை; 13. பொறிந்து - தீப்பொறியைக் கக்கிக்கொண்டு.

'நீதியில் நின்றீர்; வாய்மை அமைந்தீர்; நினைவாலும்
மாதர் நலம் பேணாது வளர்ந்தீர்; மறை எல்லாம்
ஓதி உணர்ந்தீர்; ஊழி கடந்தீர்; உலகு ஈனும்
ஆதி அயன்தானே என யாரும் அறைகின்றீர்; 15

'அண்ணல் அம் மைந்தர்க்கு அன்பு சிறந்தீர்; அதனாலே
கண்ணி உணர்ந்தீர் கருமம்; நுமக்கே கடன் என்னத்
திண்ணிது அமைந்தீர்; செய்து முடிப்பீர்; சிதைவு இன்றால்;
புண்ணியம் ஒன்றே என்றும் நிலைக்கும் பொருள் கொண்டீர்;

'அடங்கவும் வல்லீர்; காலம்அது அன்றேல்; அமர் வந்தால்,
மடங்கல் முனிந்தாலன்ன வலத்தீர்; மதி நாடித்
தொடங்கியது ஒன்றோ? முற்றும் முடிக்கும் தொழில் அல்லால்,
இடம் கெட, வெவ் வாய் ஊறு கிடைத்தால் இடையாதீர்; 17

'ஈண்டிய கொற்றத்து இந்திரன் என்பான் முதல் யாரும்
பூண்டு நடக்கும் நல் நெறியானும் பொறையானும்
பாண்டிதர் நீரே; பார்த்து இனிது உய்க்கும்படி வல்லீர்;
வேண்டிய போதே வேண்டுவ எய்தும் வினை வல்லீர். 18

'ஏகுமின்; ஏகி, எம் உயிர் நல்கி, இசை கொள்ளீர்;
ஓகை கொணர்ந்து உம் மன்னையும் இன்னல் குறைவு இல்லாச்
சாகரம் முற்றும் தாவிடும் நீர், இக் கடல் தாவும்
வேகம் அமைந்தீர்!' என்று விரிஞ்சன் மகன் விட்டான். 19

அனுமன் இலங்கை செல்ல உடன்படல்

சாம்பன் இயம்ப, தாழ் வதனத் தாமரை நாப்பண்
ஆம்பல் விரிந்தாலன்ன சிரிப்பன், அறிவாளன்,
கூம்பலொடும் சேர் கைக் கமலத்தன், குலம் எல்லாம்
ஏம்பல் வர, தன் சிந்தை தெரிப்பான், இவை சொன்னான்:* 20

'"இலங்கையை இடந்து வேரோடு இவ் வயின் தருக" என்றாலும்,
"விலங்கினர்தம்மை எல்லாம் வேரொடும் விளிய நூறி,
பொலங் குழை மயிலைக் கொண்டு போது" எனப் புகன்றிட்டாலும்,
கலங்கலீர்! உரைத்த மாற்றம் முடிக்குவல் கடிது; காண்டிர்!*

'ஓசனை ஒன்று நூறும் உள் அடி உள்ளது ஆக,
ஈசன் மண் அளந்தது ஏய்ப்ப, இருங் கடல் இனிது தாவி,
வாசவன் முதலோர் வந்து மலையினும், இலங்கை வாழும்
நீசரை எல்லாம் நூறி நினைத்தது முடிப்பல்; பின்னும், 22

16. கண்ணி - ஆராய்ந்து; 18. பார்த்து - சிந்தித்து; 19. ஓகை - மகிழ்ச்சிச் செய்தி; தாவிடும் - கரையேறச் செய்யும்; 20. ஏம்பல் - மகிழ்ச்சி; 22. உள் அடி உள்ளது ஆக - உள்ளங்காலின் வைப்புக்குள் அடங்கும்படியாக.

' ''நீயிரே நினைவின் முன்னம், நெடுந் திரைப் பரவை ஏழும்
தாய், உலகு அனைத்தும் வென்று, தையலைத் தருதற்கு ஒத்தீர்;
போய், இது புரிதி!'' என்று, புலமை தீர் புன்மை காண்டற்கு
ஏயினீர் என்னின், என்னின் பிறந்தவர் யாவர்? இன்னும், 23

'முற்றும் நீர் உலகம் முற்றும் விழுங்குவான், முழங்கி முந்நீர்,
உற்றதேஎனினும், அண்டம் உடைந்துபோய் உயர்ந்ததேனும்,
இற்றை நும் அருளும், எம் கோன் ஏவலும், இரண்டு பாலும்
சுற்றை வார் சிறைகள் ஆக, கலுழனின் கடப்பல் காண்டீர்!

அனுமன் மயேந்திர மலையின் உச்சிக்குச் செல்லுதல்

'ஈண்டு இனிது உறைமின், யானே எறி கடல் இலங்கை எய்தி,
மீண்டு இவண் வருதல்காறும்; விடை தம்மின், விரைவின்' என்னா,
ஆண்டு, அவர் உவந்து வாழ்த்த, அலர் மழை அமரர் தூவ,
சேண் தொடர் சிமயத் தெய்வ மயேந்திரத்து உம்பர்ச் சென்றான். 25

கடல் தாவ அனுமன் பெரு வடிவு கொள்ளல்

பொரு அரு வேலை தாவும் புந்தியான், புவனம் தாய
பெரு வடிவு உயர்ந்த மாயோன் மேக்கு உறப் பெயர்ந்த தாள்போல்
உரு அறி வடிவின் உம்பர் ஓங்கினன்; உவமையாலும்
திருவடி என்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான். 26

பார் நிழல் பரப்பும் பொன் தேர் வெயில் கதிர்ப் பரிதி மைந்தன்
போர் நிழல் பரப்பும் மேலோர் புகழ் என உலகம் புக்கு,
தார் நிழல் பரப்பும் தோளான், தடங் கடல் தாவா முன்னம்,
நீர் நிழல் உவரி தாவி இலங்கைமேல் செல்ல, நின்றான். 27

பகு வாய மடங்கல் வைகும் படர் வரை முழுதும் மூழ்க,
உகு வாய விடம் கொள் நாகத்து ஒத்த வால் சுற்றி, ஊழின்
நெகு வாய சிகர கோடி நெரிவன தெரிய நின்றான்;
மக ஆமை முதுகில் தோன்றும் மந்தரம் எனலும் ஆனான். 28

மின் நெடுங் கொண்டல் தாளின் வீக்கிய கழலின் ஆர்ப்ப,
தன் நெடுந் தோற்றம் வானோர் கட்புலத்து எல்லை தாவ,
வல் நெடுஞ் சிகர கோடி மயேந்திரம், அண்டம் தாங்கும்
பொன் நெடுந் தூணின் பாத சிலை என, பொலிந்து நின்றான். 29

26. தாய - தாவியளந்த; 27. நிழல் - ஒளி; 28. மக - பெரிய; 29. பாத சிலை - அடியில் இட்ட கல், அனுமன் உலகைத் தாங்கும் தூண் போல நின்றான் என்பதும், அவன் நின்ற மலை அத்தூணின் அடியில் இட்ட கல்போல விளங்கிற்று என்பதும் விளங்கும்.

## மிகைப் பாடல்கள்

2 அனுமப் படலம்

அன்ன ஆம் என வெருவி, அங்கண் நில்லாது, அருகு
துன்னு வானரர்களொடு தோம் இலா மேரு நிகர்
என்னும் மாமலை முழையில் எய்தினர்; எய்தியபின்,
நல் நலம் தெரி மனதின் நாடி மாருதி மொழியும்: 2-1

தாரன், நீலனை, மருவு தாம மாருதியை, முதல்
வீரரோடு, இரவிசுதன், மேரு மால் வரையை நிகர்
பார மா மலையின் ஒரு பாகம் ஒடுதல் புரிய,
ஆர மார்பரும், அதனின் ஆகுமாறு உறல் கருதி, 2-2

மானை நாடுதல் புரிஞர்—'வாலி ஏவலின் வருதல்
ஆனவாறு' என மறுகி, ஆவி சோர் நிலையர், தொடர்
ஏனை வானரர் சிலரும் ஏக, மா முழையில், முழு
ஞான நாதரை, அறிவின் நாடி, மாருதி மொழியும்: 2-3

உலகு தங்கிய பல தொல் உயிர்கள் உயர்ந்திடு பரிசில்
இலகும் இங்கிதம் உடையர்; இசையின் இன்புறு சுருதி
அலகு இல் விஞ்சைகள் உடையர்; அகிலமும் தொழு கழலர்;
விலகு திண் கொடு வினைகள் வெகுளிகொண்டு அடு விறலர்.
8-1

சிவனும் அம்புய மலரில் அயனும் இந்திரை கொழுநன்
அவனும் வந்திட உதவும் அரி எனும் பிரமம்அது
துவளும் அஞ்சன உருவு தொடரு செங் கமல மலர்
உவமை கொண்டு இதில் ஒருவன் உலகில் வந்ததுகொல் என.
8-2

மற்றும், இவ் உலகத்து உள்ள முனிவர், வானவர்கள், ஆர், இச்
சொல் திறம் உடையார்? மற்று எச் சுருதியின் தொகுதி யாவும்
முற்று அறிதரும் இம் மாணி மொழிக்கு எதிர், முதல்வர் ஆய
பெற்றியர் மூவர்க்கேயும், பேர் ஆற்றல் அரிது மன்னோ'. 19-1

இருக்கன் மா மைந்தரான வாலியும், இளவல்தானும்,
செருக்கினோடு இருக்கும்காலை, செறுநரின் சீறி வாலி
நெருக்குற, வெருவி, இந்த நெடுங் குவட்டு இறுத்தான்தன்பால்—
மருக் குலாம் தாரீர்!—வந்தது அவன் செய் மா தவத்தின் அன்றோ?
21-1

3 நட்புக் கோட் படலம்

'பிரிவு இல் கான் அதுதனில், பெரிய சூர்ப்பணகைதன்
கரிய மா நகிலொடும், காதொடும், நாசியை
அரியினர்; அவள் சொல, திரிசிராஅவனொடும்,
கரனொடும், அவுணரும், காலன் வாய் ஆயினர்.' 10-1

கடுத்து எழு தமத்தைச் சீறும் கதிர்ச் சுடர்க் கடவுள் ஆய்ந்து
வடித்த நூல் முழுதும் தான் ஓர் வைகலின், வரம்பு தோன்றப்
படித்தவன் வணங்கி, வாழ்த்தி, பரு மணிக் கனகத் தோள்மேல்
எடுத்தனன், இரண்டுபாலும் இருவரை; ஏகலுற்றான். 29-1

'இவன், உலைந்து உலைந்து, எழு கடல் புறத்து
அவனியும் கடந்து, எயில் அடைந்தனன்;
கவனம் ஒன்று இலான், கால் கடாயென,
அவனி வேலை ஏழ், அரியின் வாவினன். 64-1

'என்று கால்மகன் இயம்ப, ஈசனும்,
''நன்று நன்று'' எனா, நனி தொடர்ந்து பின்
சென்ற வாலிமுன் சென்ற செம்மல்தான்
அன்று வாவுதற்கு அறிந்தனன்கொலாம்?' 64-2

இனையவா வியந்து இளவல் தன்னொடும்,
வனையும் வார் கழல் கருணை வள்ளல், பின்பு,
'இனைய வீரர் செய்தமை இயம்பு' என,
புனையும் வாகையான் புகறல் மேயினான்: 64-3

'நக்கரக் கடல் புறத்து நண்ணும் நாள்,
செக்கர் மெய்த் தனிச் சோதி சேர்கலாச்
சக்கரப் பொருப்பின் தலைக்கும் அப்
பக்கம் உற்று, அவன் கடிது பற்றினான். 64-4

'திறத்து மா மறை அயனொடு ஐம்முகன், பிறர், தேடிப்
புறத்து அகத்து உணர் அரிய தன் பொலன் அடிக் கமலம்
உறச் சிவப்ப இத் தரைமிசை உறல், அறம் ஆக்கல்,
மறத்தை வீட்டுதல், அன்றியே, பிறிது மற்று உண்டோ?'
70-1

'நீலகண்டனும், நேமியும், குலிசனும், மலரின்-
மேல் உளானும், வந்து, அவன் உயிர்க்கு உதவினும், வீட்டி
ஆலும் உன் அரசு உரிமையோடு அளிக்குவென்; அனலோன்
சாலும், இன்று எனது உரைக்கு அருஞ் சான்று' எனச் சமைந்தான்.
71-1

'மண்ணுள் ஓர் அரா முதுகிடை முளைத்த மா மரங்கள்
எண்ணில் ஏழ் உள; அவற்றில் ஒன்று உருவ எய்திடுவோன்,
விண்ணுள் வாலிதன் ஆர் உயிர் விடுக்கும்' என்று உலகின்-
கண் உளோர்கள்தாம் கழறிடும் கட்டுரை உளதால். 80-1

5 துந்துபிப் படலம்

'புயலும், வானகமும், அப் புணரியும், புணரி சூழ்
அயலும், வீழ் தூளியால் அறிவு அருந் தகையவாம்
மயனின் மா மகனும் வாலியும் மறத்து உடலினர்,
இயலும் மா மதியம் ஈர்-ஆறும் வந்து எய்தவே.' 9-1

7 வாலி வதைப் படலம்

பேர்வுற வலிக்கவும் மிடுக்கு இல் பெற்றியார்
நோவுற உலந்தனர்; அதனை நோக்கி, யான்
ஆர்கலிதனைக் கடைந்து, அமுது கொண்டனென்;
போர் வலி அழிந்து போய், புறம் தந்து ஓடலேன். 27-1

ஆற்றலன் வாலிக்கு ஆகி, அருங் கதிர்ப் புதல்வன் மீண்டும்
ஏற்றிய சிலை இராமன் இணை அடி இறைஞ்சி வீழ்ந்து,
'தோற்று முன், ஆவி கொண்டு, இத் தொல் உறை இருந்தேன்; உந்தன்
மாற்றமே வலி ஆய்ச் சென்றேன்; உடல் வலி மாய்ந்தது' என்றான். 61-1

என்றலும், இராமன், 'நீங்கள் இருவரும் எதிர்ந்த போரில்,
ஒன்றிடும் உடலினாலே உருத் தெரிவு அரியது ஆகி,
கொன்றிடு பாணம் ஏவக் குறித்திலேன்; குறியால் செய்த
மன்றலர் மாலை சூட்டி ஏவுதும், மறித்தும்' என்றான். 61-2

இராமன் அஃது உரைப்பக் கேட்டே, இரவி சேய் ஏழது ஆகும்
தராதலத்து அதிர ஆர்த்து, தம் முனோன் முன்னர்ச் செல்ல,
பராபரம் ஆய மேருப் பருப்பதம் தோற்றிற்று என்ன
கராதலம் மடித்து வாலி கனல்-துகள் சிவந்து காட்ட, 61-3

சிவந்த கண்ணுடை வாலியும், செங் கதிர்ச் சேயும்,
வெவந்தபோது, அவர் இருவரும் நோக்கின்ற வேலை,
கவந்த தம்பியைக் கையினால் எடுத்து, அவன் உயிரை
அவந்த மற்றவன் ஆர் உயிர் அந்தகற்கு அளிப்போன். 62-1

வெற்றி வீரனது அடு கணை, அவன் மிடல் உரத்தூடு
உற்றது; அப் புறத்து உருதமுன், உறு வலிக் கரத்தால்
பற்றி, வாலினும் காலினும் பிணித்து, அகப்படுத்தான்;
கொற்ற வெங் கொடு மறலியும், சிரதலம் குலைந்தான். 66-1

ஒன்றாக நின்னோடு உறும் செற்றம் இல்லை;
உலகுக்கு நான் செய்தது ஓர் குற்றம் இல்லை;
வென்று ஆள்வதே என்னில், வேறு ஒன்றும் இல்லை;
வீணே பிடித்து, என்தன்மேல் அம்பு விட்டாய்;
தன் தாதை மாதா உடன் கூடி உண்ணத்
தண்ணீர் சுமக்கும் தவத்தோனை எய்தான்,
நின் தாதை; அன்றேயும், நீயும் பிடித்தாய்;
நெறி பட்டவாறு இன்று நேர்பட்டது ஆமே! 89-1

மா வலச் சூலியார் வாழ்த்துநர்க்கு உயர் வரம்
ஓவல் அற்று உதவல், நின் ஒரு தனிப் பெயர் இயம்பு
ஆவலிப்பு உடைமையால் ஆகும்; அப் பொருளை ஆம்
தேவ! நிற் கண்ட எற்கு அரிது எனோ, தேரினே? 128-1

இடைக்கலம் அல்லன்; ஏவியது ஓர் பணி
கிடைத்த போது, அது செய்யும் இக் கேண்மையன்;
படைக்கலக் கைப் பழம் பேர் அருளே! நினது
அடைக்கலம்—அடியேன் பெற்ற ஐயனே. 158-1

8 அரசியற் படலம்

வள்ளலும், அவண் நின்று ஏகி, மதங்கனது இருக்கை ஆன
வெள்ள வான் குடுமிக் குன்றத்து ஒருசிறை மேவி, மெய்ம்மை
அள்ளுறு காதல் தம்பி, அன்பினால் அமைக்கப்பட்ட
எள்ளல் இல் சாலை எய்தி, இனிதினின் இருந்த காலை, 33-1

10 கிட்கிந்தைப் படலம்

சென்று மாருதிதன்னிடம் சேர்ந்து, அவண்
நின்ற தன்மைகள் யாவும் நிகழ்த்தலும்,
வென்றி வீரன் வியப்பொடு மேல்வினை
ஒன்றுவான் அவன்தன்னை உசாவினான். 25-1

நீளும் மால் வரையின் நெறிதான் கடந்து,
ஊழி காலத்து ஒருமுதல் ஆகிய
ஆழிநாதனுக்கு அன்புடைத் தம்பியாம்
மீளிதான் வரும் வேகத்துக்கு அஞ்சியே. 32-1

மேவினான் கடை சேமித்த மென்மை கண்டு
ஓவு இலா மனத்து உன்னினன்—எங்கள்பால்
பாவியார்கள்தம் பற்று இதுவோ எனத்
தேவரானும் சினத்தொடு நோக்கியே. 34-1

அன்னை போன பின், அங்கதக் காளையை,
தன்னை நேர் இல் அச் சமீரணன் காதலன்,
'இன்னம் நீ சென்று, இருந் துயில் நீக்கு' என,
மன்னன் வைகு இடத்து ஏகினன், மாசு இலான். 41-1

சேய் உயர் கீர்த்தியான், 'கதிரின் செம்மல்பால்
போயதும், அவ் வயின் புகுந்த யாவையும்,
ஒய்வுறுது உணர்த்து' என, உணர்த்தினான்அரோ,
வாய்மையா—உணர்வுறு வலி கொள் மொய்ம்பினோன். 137-1

11　　தானை காண் படலம்

அன்று அவண் வானரச் சேனை யாவையும்,
வென்றி கொள் தலைவரும், எண்கின் வீரரும்,
குன்றுகள் ஒரு வழிக் கூடினாலென,
வன் திறல் இராமனை வாழ்த்தி, வந்தவே.　　1-1

இன்னது ஆகிய திறத்து அவர் இருக்க, முன் போகச்
சொன்ன ஆயிர கோடியில் தூதர்தம் திறத்தால்,
பன்ன ஆறு-இரு வெள்ளம் ஆம் கவிப் படை பயில,—
பொன்னின் வார் கழல் இடபன்—அக் கிட்கிந்தை புகுந்தான்.
1-2

'தாமரைப் பெருந் தவிசு உறை சதுமுகக் கடவுள்
ஓம அங்கியில் உதித்தன, உலப்பு இல கோடி
ஆம்' எனப் புகல் வானரத் தானை அங்கு அணித்தா,—
மா வயப் புயத்து எறும் வலி மயிந்தன்—வந்து அடைந்தான்.
1-3

கங்கைசூடிதன் கருணை பெற்றுடைய முன் வாலி
பொங்கும் ஆணையின் எண்திசைப் பொருப்பினும் பொலியத்
தங்கி வாழ் கவித் தானை அங்கு ஆறு-ஐந்து கோடி
வங்க வேலையின் பரந்திட,—வசந்தன்—வந்து அடைந்தான்.
1-4

வட்ட விண்ணையும் மண்ணையும் எடுக்குறும் வலிய,
நெட்டு அராவினைச் சினத்தொடு பிடுங்குவ நிமிர்வ,
அட்ட திக்கையும் மறைப்பன, ஆயிரம் கோடி
துட்ட எண்கு வெம் படையொடு தூமிரன் வந்தான்.　19-1

ஓங்கு மேருவை வேருடன் பறித்து, ஒரு கையால்
வாங்கும் எண் அருங் கோடி மேல் மந்தியின் சேனை
பாங்கு சூழ்தர, பரவைஅது ஆம் எனப் படியில்
ஆங்கு உயர்ந்திடு கபாடனும் அக் கணத்து உற்றான்.　19-2

வீரை ஏழையும் கலக்குறு மிடுக்கினர், விரிந்த
பாரை வேரொடும் பறித்திட வேண்டினும் பறிப்பர்,
ஈர்-ஐஞ்ஞூற்று எழு கோடி வானரப் படை ஈண்ட,
தாரையைத் தந்த ததிமுகன் நொடியினில் சார்ந்தான்.　19-3

12　　நாட விட்ட படலம்

சாரும் வீரர் சதவலிதம்மொடும்
கூரும் வீரர்கள் யாவரும் கூடியே,
நீரும் நும் பெருஞ் சேனையும் நின்றிடாப்
பேரும், பேதையைத் தேடுறும் பெற்றியால்.　　9-1

குட திசைப் படு பூமி, குபேரன் வாழ்
வட திசைப் படு மா நிலம் ஆறும் ஏற்று,
இடு திசைப் பரப்பு எங்கணும் ஓர் மதி
தொடர உற்றுத் துருவி இங்கு உற்றிரால். 10-1

குடதிசைக்கண் இடபன், குணதிசைக்
கடலின் மிக்க பனசன், சதவலி
வடதிசைக்கண் அன்று ஏவினன்—மான மாப்
படையின் வெள்ளத்துடன் செலப் பான்மையால். 10-2

என்று கூறி, ஆங்கு ஏவினன்; யாவரும்
நின்று வாழ்த்தி விடை கொடு நீங்கினர்
அன்று மாருதிஆம் முதல் வீரர்க்குத்
துன்று செங்கதிரோன் மகன் சொல்லுவான்: 10-3

13 பிலம் புக்கு நீங்கு படலம்

'இந் நெடுங் கிரிகொலோ, எதுகொலோ?' என
அந் நெடு மேருவோடு அயிர்க்கலாவது;
தொல் நெடு நிலம் எனும் மங்கை சூடிய
பொன் நெடு முடி எனப் பொலியும் பொற்பது; 12-1

வச்சிரமுடைக் குரிசில் வாள் அமரின் மேல் நாள்,
மெச்சு அவுணர் யாவரும் விளிந்தனர்களாக,
அச்சம் உறு தானவர்கள் கம்மியனும் அஞ்சி,
வைச்ச பிலமுடிதன் மறைந்து அயல் இருந்தான். 57-1

மாதுஅவள் உயிர்த்த மகவோர் இருவர்; வாசப்
போது உறை நறைக் குழல் ஒருத்தி;—புகழ் மேலோய்!—
ஏதம் உறு மைந்தர் தவம் எய்த அயல் போனர்;
சீதள முலைச் சிறுமி தாதையொடு சென்றாள். 61-1

மத்த நெடு மா களிறு வைத்த குலிசி வன் தாள்
சித்தமொடு மான்முகன் வணங்கி, அயல் சென்றான்;
வித்தகனும், ஆயிர விலோசனனும், மேன்மேல்,
முத்த நகையாளை நனி நோக்கினன், முனிந்தான். 61-2

மேரு சவ்வருணி எனும் மென்சொலினள், விஞ்சும்
ஏர் உறு மடந்தை, யுகம் எண்ண அரு தவத்தாள்,
சீர் உறு சுயம்பிரபை, ஏமை செறிவு எய்தும்
தாரு வளர் பொற்றலமிசைக் கடிது சார்ந்தாள். 72-1

மேரு வரை மா முலையள், மென்சொலினள்,—விஞ்சு
மாருதியினைப் பல உவந்து, மகிழ்வுற்றே,—
ஏர் உறு சுயம்பிரபை, ஏமை நெறி எய்த,
தாரு வளர் பொன்-தலனிடைக் கடிது சார்ந்தாள். 72-2

14 ஆறு செல் படலம்

இருவரும் கதம் எய்தி அங்கையில்
செரு மலைந்திடும் பொழுது, திண் திறல்
நிருதன் வெஞ்சினம் கதுவ, நின்றது ஓர்
பரு மராமரம் பறித்து வீசினான். 7-1

வீசு மா மரம் சிந்த, வென்றி சேர்
ஆசு இல் அங்கதன் அங்கையால் மலைந்து,
ஓசை கொண்டு உறக் குத்தினான் உடல்;
கூசுருத வன் குன்று ஒன்று ஏந்தினான். 7-2

குன்று கையிடைக் கொண்டு எழுந்த, முன்
நின்ற அங்கதன், நெடு மராமரம்
ஒன்று வாங்கி, மற்றவன் ஒடிந்திடச்
சென்று தாக்கினான், தேவர் வாழ்த்தவே. 7-3

ஆகையால் அங்கு அடைந்தவர் யாவர்க்கும்
ஓகையால் அமுது ஊட்டினர்; உண்டு உரம்
சோகம் மாறி, பின் தோகையை, அவ் வழி,
சேகு சேறு உறத் தேடினர், காண்கிலார். 45-1

இனைய தண்டக நாட்டினுள் எய்தினார்;
அனைய நாட்டின் அருந் தவர் யாவரும்
நனி விரும்பி நயந்தனர், நான்மறைப்
புனிதர் என்று கொண்டு உள்ளுறும் புந்தியார். 45-2

'செல்வர்' என்றும், 'வட கலை, தென் தமிழ்ச்
சொல், வரம்பினர்' என்றும், 'சுமடரைக்
கொல்வர்' என்றும், 'கொடுப்பவர்' என்றும்,—அவ்
இல் வரம்பினர்க்கு ஈ தேனும் ஈட்டதே. 45-3

15 சம்பாதிப் படலம்

யாவரும் அவ் வயின்நின்றும், 'மன் இயல்
பூ வரும், அருந்ததி பொருவும் கற்புடைத்
தேவியை எங்கணும் தேடிக் கண்டிலம்;
மேவினம்' என்பது விளம்பினர்அரோ. 3-1

அன்னதோர் அளவையின் அங்க நாடு ஒரீஇ,
தென் மலைநாட்டினைத் தேடிச் சென்று, உடன்
இன் இசைத் தலைவரோடு இரண்டு வெள்ளமும்
மன்னு மா மயேந்திரத் தலத்து வந்ததால். 3-2

தாழ்ந்த மா தவத்து உலோகசாரங்கன் உறையும் சாரல்
வீழ்ந்தனென்; சிறைகள் தீய, வெவ்வுயிர்த்து, உளமும் மெய்யும்
போழ்ந்தன துன்பம் ஊன்ற, உயிர்ப்பொறை போற்றகில்லாது,
ஆழ்ந்தனென்; ஆழ்ந்த என்னை அருந் தவன் எதிர்ந்து தேற்றி,
56-1

'"கற்றிலார் போல உள்ளக் களிப்பினால் அமரர் காப்பூடு
உற்றிடக் கருதி, மீப் போய், ஆதபத்து உனது மேனி
முற்று அழல் முருங்க, மண்ணை முயங்கினை; இனி என்? சில் நாள்
மற்று நின் உயிரை ஓம்பாது இகழ்வது மாலைத்து அன்றால்.
56-2

'"களித்தவர் கெடுதல் திண்ணம்; சனகியைக் கபடன் வவ்வி,
ஒளித்த வாய் துருவி உற்ற வானரர், இராம நாமம் [அன்று
விளித்திட, சிறை வந்து ஓங்கும்; வெவ்வுயிர்த்து அயரல்" என்று,
அளித்தனன்; அதனால் ஆவி ஆற்றினேன்—ஆற்றல் மொய்ம்பீர்!
56-3

'அன்றியும், அலருள் வைகும் அயனைநேர் முனிவன், வாய்மை
நன்றிகொள் ஈசற் காண்பான் நணுகலும், வினையேன் உற்றது
ஒன்று ஒழிவுறாமல் கேட்டு, அது யோகத்தின் உணர்ச்சி பேணி,
"பொன்றுதல் ஒழிமின்; யானே புகல்வது கேண்மின்" என்றான்.
56-4

'"தசரத ராமன் தேவர் தவத்தினால், தாய் சொல் தாங்கி,
கச ரத துரகம் இன்றிக் கானிடை இறுத்த காலை,
வசை தரும் இலங்கை வேந்தன் வவ்விய திருவை நாடித்
திசை திரி கவிகள் உற்றால், சிறகு பெற்று எழுதி" என்ன,
56-5

'எனக்கு உணவு இயற்றும் காதல் என் மகன் சுபார்சுபன் பேர்
சினக் கொலை அரக்கன் மூதூர் வடதிசைநின்று செல்வான்,
நினைக்குமுன் திருவோடு அந்த நீசனை நோக்கி, "எந்தை-
தனக்கு இரை எய்திற்று" என்னா, சிறகினால் தகைந்து கொண்டான்.
58-1

'"காமத்தால் நலியப்பட்டு, கனங்குழைதன்னைக் கொண்டு
போம் மத்தா! போகல்; எந்தை புன் பசிக்கு அமைந்தாய்" என்று,
தாமத் தார் மௌலி மைந்தன் தடுத்து இடை விலக்க, நீசன்
நாமத்தால் விரலைக் கவ்வ, நாணி மீண்டு, எனக்குச் சொன்னான்.' 58-2

முன்னர் அந் நிசாகர முனி மொழிந்ததும்,
பின்னர் அச் சுபார்சுபன் பெலத்து இராவணன்-
தன்னொடும் அமர் பொரச் சமைந்து நின்றதும்,
கொன் இயல் சனகியைக் கொண்டு போனதும், 58-3

நினைந்து சம்பாதியும், நீதி யாவையும்
இனைந்தனன், வானரர் எவரும் கேட்கவே;
நினைந்து, கண்ணீர் விழ, நெடிது உயிர்த்தனர்;
வினைந்தனர், புரண்டனர்; விதியை நொந்தனர். 58-4

16 மயேந்திரப் படலம்

புள்ளரசு இன்ன வாய்மை சொல்லி விண் போந்த பின்னர்,
தெள்ளிதின் உணர்ந்தார் யாரும்; அங்கு அது சாம்பன் சிந்தித்து,
உள்ளவர் தன்னில் வல்லார் யார் என உன்னி, யாண்டும்
தள்ளரும் புகழோன் வாயுத் தனையனை நோக்கிச் செப்பும்:

ஆயவன் அங்குப் போகிய பின்னர், அகமீதே
நோய் உறு தன்மைத்து ஆகிய வீரர்தமை நோக்கி,
தூய மனத்தன் ஆகிய வாலி தரு தொன்மைச்
சேயும் அவர்க்கே செப்பினன், நாடும் செயல் ஓர்வான்.

(இப் படலத்தின் முதற் பாடலாக ஓர் ஏட்டில் 'புள்ளரசு' எனத் தொடங்கும் பாடலும், பிறிதோர் ஏட்டில் 'ஆயவன்' எனத் தொடங்கும் பாடலும் காணப்பட்டது.)

'ஆரியன் மின்னின் பேர் எழில் கூறும் அமைவாலும்,
''காரியம் உன்னால் முற்றும்'' எனச் சொல் கடனாலும்,
மாருதி ஒப்பார் வேறு இலை என்னா, மனம் எண்ணி,
சீரியன் மல் தோள் ஆண்மை உரைத்தால் செயும், என்றே' 8-1

நாலு மறைக்கும் வேலியும் ஆகி, நடு நிற்கும்
சீலம் மிகுந்தீர்! திங்கள் மிலைச்சித் திகழ் வேணி,
ஆல மிடற்றுன்மேலும் உதித்தீர்! அது போதில்
காலின் நிறைக்கோ காலனும் ஆகக் கடிது உற்றீர். 18-1

ஆதியர் இப் புத்தேள் அடிப்பாரித்து அணவு ஆதற்கு
ஓது கருத்தில் சால நினைத்திட்டு, ஒழிவு இல்லாப்
போது தளத்தில் புக்கிய செய்கைத் திறனாலே
சாதல் கெடுத்துத் தான் அழியாதீர் அதனாலே. 18-2

கடவுள் வாழ்த்து

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு என, பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்,
கலங்குவது எவரைக் கண்டால்? அவர், என்பர்—'கை வில் ஏந்தி,
இலங்கையில் பொருதார் அன்றே, மறைகளுக்கு இறுதி ஆவார்!'

## 1 கடல் தாவு படலம்

துறக்க நாட்டை இலங்கை என்று அனுமன் ஐயுற்றுத் தெளிதல்

ஆண்தகை, ஆண்டு, அவ் வானோர் துறக்க நாடு அருகில் கண்டான்;
'ஈண்டு, இதுதான்கொல் வேலை இலங்கை?' என்று ஐயம் எய்தா,
வேண்டு அரு விண்ணுடு என்னும் மெய்ம்மை கண்டு, உள்ளம் மீட்
'காண் தகு கொள்கை உம்பர் இல்' என, கருத்துள் கொண்டான். [டான்; 1

இலங்கையைக் கண்டு, அனுமன் ஆர்த்தல்

கண்டனன், இலங்கை மூதூர்க் கடி பொழில் கனக நாஞ்சில்
மண்டல மதிலும், கொற்ற வாயிலும், மணியின் செய்த
வெண் தளக் களப மாட வீதியும், பிறவும் எல்லாம்;
அண்டமும் திசைகள் எட்டும் அதிர, தோள் கொட்டி ஆர்த்தான். 2

மயேந்திர மலையில் நிகழ்ந்த குழப்பம்

வன் தந்த வரி கொள் நாகம், வயங்கு அழல் உமிழும் வாய,
பொன் தந்த முழைகள்தோறும் புறத்து உராய்ப் புரண்டு பேர்வ—
நின்று, அந்தம் இல்லான் ஊன்ற—நெரிந்து கீழ் அழுந்தும் நீலக்
குன்றம் தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கள் மான. 3

புகல் அரும் முழையுள் துஞ்சும் பொங்கு உளைச் சீயம் பொங்கி,
உகல் அருங் குருதி கக்கி, உள்ளுற நெரிந்த; ஊழின்,
அகல் இரும் பரவை நாண அரற்றுறு குரல ஆகி,
பகல் ஒளி கரப்ப, வானை மறைத்தன, பறவை எல்லாம். 4

**கடவுள் வாழ்த்து:** விலங்குதல் - பஞ்ச பூதங்களும் தனித்தனியே இருக்கும் தன்மை விட்டு ஊடுருவிக் கலத்தல்; விகாரப்பாடு - இருத்தல், பிறத்தல், பருத்தல், வளர்தல், தேய்தல், அழிதல் என்னும் அறுவகை மாற்றங்கள்; வீக்கம் - கட்புலனாகத் தோன்றும் உடல், ஈண்டுப் பிறப்பு; அறியாமையின் மிகுதி என்பதும் ஆம்; கலங்குதல் - நீங்குதல்.

**1:** *1.* வேண்டு அரு விண்ணுடு - வேண்டிப் பெறுவதற்கு அருமையான தேவலோகம்; 2. நாஞ்சில் - மதிலின் ஒருவகை உறுப்பு; மண்டலம் - வட்டம்; களபம் - சுண்ணாம்புக் காரை.

மொய் உறு செவிகள் தாவி முதுகு உற, முறை கால் தள்ள,
மை அறு விசும்பினூடு நிமிர்ந்த வாலதிய, மஞ்சின்
மெய் உறத் தழீஇய, மெல்லென் பிடியொடும், வெருவலோடும்,
கை உற மரங்கள் சுற்றி, பிளிறின—களி நல் யானை. 5

பொன் பிறழ் சிமயக் கோடு பொடியுற, பொறியும் சிந்த,
மின் பிறழ் குடுமிக் குன்றம் வெரிந் உற விரியும் வேலை,
புன் புற மயிரும் பூவா, கண்புலம் புறத்து நாறா,
வன் பறழ் வாயில் கவ்வி, வல்லியம் இரிந்த மாதோ. 6

தேக்கு உறு சிகரக் குன்றம் திரிந்து மெய்ந் நெரிந்து சிந்த,
தூக்குறு தோலர், வாளர், துரிதத்தின் எழுந்த தோற்றம்,
தாக்குறு செருவில், நேர்ந்தார் தாள் அற வீச, தாவி,
மேக்குற விசைத்தார் என்னப் பொலிந்தனர்—விஞ்சை வேந்தர். 7

தாரகை, சுடர்கள், மேகம் என்று இவை தவிரத் தாழ்ந்து,
பாரிடை அழுந்துகின்ற படர் நெடும் பனி மாக் குன்றம்,
கூர் உகிர்க் குவவுத் தோளான் கூம்பு என, குமிழி பொங்க
ஆர் கலி அழுவத்து ஆழும் கலம் எனல் ஆயிற்று அன்றே! 8

தாது உகு நறு மென் சாந்தம், குங்குமம், குலிகம், தண் தேன்,
போது உகு பொலன் தாது, என்று இத் தொடக்கத்த யாவும் பூசி,
மீது உறு சுனை நீர் ஆடி, அருவி போய் உலகின் வீழ்வ,
ஓதிய குன்றம் கீண்டு குருதி நீர் சொரிந்தால் ஒத்த. 9

'கடல் உறு மத்து இது' என்ன, கரு வரை திரியும்காலை,
மிடல் உறு புலன்கள் வென்ற மெய்த் தவர் விசும்பின் உற்றார்;
திடல் உறு கிரியில் தம்தம் செய்வினை முற்றி, முற்றா
உடல் உறு பாசம் வீசாது, உம்பர் செல்வாரை ஒத்தார். 10

வெயில் இயல் குன்றம் கீண்டு வெடித்தலும், நடுக்கம் எய்தி,
மயில் இயல் தளிர்க் கை மாதர் தழீஇக் கொளப் பொலிந்த வானோர்,
அயில் எயிற்று அரக்கன் அள்ளத் திரிந்த நாள், அணங்கு புல்லக்
கயிலையில் இருந்த தேவைத் தனித் தனி கடுத்தல் செய்தார். 11

5. மொய் - வலிமை; வாலதிய - வால்களை உடையன; 6. வெரிந் - (மலையின்) முதுகு; உற - மிகுதியாக; விரிதல் - பிளவுபடுதல்; பூவா - முளையாதன; புறத்து நாறா - மலராதன; வல்லியம் - புலிகள்; 7. தோல் - கேடகம்; நேர்ந்தார் - எதிர்த்தவர்; மேக்குற - மேலெழுந்து; 9. குலிகம் - இங்குலிகம்; 10. திடல் உறு - மேடு பொருந்திய.

ஊறிய நறவும் உற்ற குற்றமும் உணர்வை உண்ண,
சீறிய மனத்தர், தெய்வ மடந்தையர் ஊடல் தீர்வுற்று
ஆறினர், அஞ்சுகின்றார், அன்பரைத் தழுவி உம்பர்
ஏறினர், இட்டு நீத்த பைங் கிளிக்கு இரங்குகின்றார். 12

அனுமன் கடலைக் கடக்க விரைதல்

இத் திறம் நிகழும் வேலை, இமையவர், முனிவர், மற்றும்
முத் திறத்து உலகத்தாரும், முறை முறை விரைவில் மொய்த்தார்,
தொத்து உறு மலரும், சாந்தும், சுண்ணமும், இனைய தூவி,
'வித்தக! சேறி' என்றார்; வீரனும், விரைவது ஆனான். 13

'குறுமுனி குடித்த வேலை குப்புறும் கொள்கைத்து ஆதல்
வெறுவிது; விசயம் வைகும் விலங்கல்-தோள் அலங்கல் வீர!
''சிறிது இது'' என்று இகழற்பாலை அல்லை; நீ சேறி' என்னா,
உறு வலித் துணைவர் சொன்னார்; ஒருப்பட்டான், பொருப்பை ஒப்பான்.

காலை ஊன்றி எழுந்தபோது நிகழ்ந்த மாறுதல்கள்

'இலங்கையின் அளவிற்று அன்றால், இவ் உரு எடுத்த தோற்றம்;
விலங்கவும் உளது அன்று' என்று, விண்ணவர் வியந்து நோக்க,
அலங்கல் தாழ் மார்பன் முன் தாழ்ந்து, அடித் துணை அழுத்தலோடும்,
பொலன் கெழு மலையும் தாளும் பூதலம் புக்க மாதோ! 15

வால் விசைத்து எடுத்து, வன் தாள் மடக்கி, மார்பு ஒடுக்கி, மானத்
தோள் விசைத் துணைகள் பொங்கக் கழுத்தினைச் சுருக்கி, தூண்டும்
கால் விசைத் தடக் கை நீட்டி, கண்புலம் கதுவா வண்ணம்
மேல் விசைத்து எழுந்தான், உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச—வீரன். 16

ஆயவன் எழுதலோடும், அரும் பணை மரங்கள் யாவும்,
வேய் உயர் குன்றும், வென்றி வேழமும், பிறவும், எல்லாம்,
'நாயகன் பணி இது' என்னா, நளிர் கடல் இலங்கை, தாமும்
பாய்வன என்ன, வானம் படர்ந்தன, பழுவம் மான. 17

இசையுடை அண்ணல் சென்ற வேகத்தால், எழுந்த குன்றும்,
பசையுடை மரனும், மாவும், பல் உயிர்க் குலமும், வல்லே
திசை உறச் சென்று சென்று, செறி கடல் இலங்கை சேரும்
விசை இலவாக, தள்ளி வீழ்ந்தன என்ன வீழ்ந்த. 18

12. உற்ற குற்றம் - கணவர் தம்பால் செய்த பிழை; 13. தொத்து உறு மலர் - கொத்துக் கொத்தாக உள்ள பூ; 16. மானம் - பெருமை; கதுவுதல் - பற்றுதல்; விரிஞ்சன் - பிரமன்; உரிஞ்சுதல் - உராய்தல்; நளிர் - குளிர்ச்சி.

மாவொடு மரனும், மண்ணும், வல்லியும், மற்றும் எல்லாம்,
போவது புரிந்த வீரன் விசையினுல், புணரி போர்க்கத்
தூவின; கீழும் மேலும் தூர்த்தன; சுருதி அன்ன
சேவகன் சீருமுன்னம் சேதுவும் இயன்ற மாதோ! 19

கீண்டது வேலை நல் நீர்; கீழ் உறக் கிடந்த நாகர்
வேண்டிய உலகம் எல்லாம் வெளிப்பட, மணிகள் மின்ன,
ஆண்தகை அதனை நோக்கி, 'அரவினுக்கு அரசன் வாழ்வும்
காண்தகு தவத்தென் ஆனேன் யான்!' எனக் கருத்துள் கொண்டான்.

வெய்தின் வான் சிறையினுல் நீர் வேலையைக் கிழிய வீசி,
நொய்தின் ஆர் அமுதம் கொண்ட நோன்மையே நுவலும் நாகர்,
'உய்தும் நாம் என்பது என்னே? உறு வலிக் கலுழன் ஊழின்
எய்தினுன் ஆம்' என்று அஞ்சி, அலக்கண் உற்று, இரியல்போனுர். 21

துள்ளிய மகர மீன்கள் துடிப்பு அற, சுறவு தூங்க,
ஒள்ளிய பனைமீன் துஞ்சும் திவலைய, ஊழிக் காலின்,
வள் உகிர் வீரன் செல்லும் விசை பொர மறுகி, வாரி
தள்ளிய திரைகள் முந்துற்று, இலங்கைமேல் தவழ்ந்த மாதோ.

**வானில் செல்லும் அனுமன் தோற்றம்**

இடுக்கு உறு பொருள்கள் என் ஆம்? எண் திசை சுமந்த யானை
நடுக்கு உற விசும்பில் செல்லும் நாயகன் தூதன், நாகம்
ஒடுக்குறு காலை, வன் காற்று அடியொடும் ஒடித்த அந் நாள்,
முடுக்குறக் கடலில் செல்லும் முத்தலைக் கிரியும் ஒத்தான். 23

கொட்புறு புரவித் தெய்வக் கூர் நுதிக் குலிசத்தாற்கும்,
கண்புலன் கதுவல் ஆகா வேகத்தான், கடலும் மண்ணும்
உட்படக் கூடி அண்டம் உற உள செலவின், ஒற்றைப்
புட்பக விமானம்தான் அவ் இலங்கைமேல் போவது ஒத்தான்.

விண்ணவர் ஏத்த, வேத முனிவரர் வியந்து வாழ்த்த,
மண்ணவர் இறைஞ்ச, செல்லும் மாருதி, மறம் உள் கூர,
'அண்ணல் வாள் அரக்கன்தன்னை அமுக்குவென் இன்னம்' என்னு,
கண்ணுதல் ஒழியச் செல்லும் கைலைஅம் கிரியும் ஒத்தான். 25

23. இடுக்கு உறு பொருள்கள் - இடையில் உள்ள சராசரப் பொருள்கள்; 24. கொட்புறு புரவி - மண்டல கதியில் செல்லும் (உச்சைச்சிரவம் என்னும்) வெண்குதிரை; குலிசம் - வச்சிராயுதம்; 25. மறம் - பகை.

மாணி ஆம் வேடம் தாங்கி, மலர் அயற்கு அறிவு மாண்டு, ஓர்
ஆணி ஆய் உலகுக்கு எல்லாம், அறம் பொருள் நிரப்பும் அண்ணல்,
சேண் உயர் நெடு நாள் தீர்ந்த திரிதலைச் சிறுவன்தன்னைக்
காணிய, விரைவில் செல்லும் கனக மால் வரையும் ஒத்தான்.

மழை கிழித்து உதிர, மீன்கள் மறி கடல் பாய, வானம்
குழைவுற, திசைகள் கீற, மேருவும் குலுங்க, கோட்டின்
முழையுடைக் கிரிகள் முற்ற முடுக்குவான், முடிவுக் காலத்து
அழிவுறக் கடுக்கும் வேகத் தாதையும் அனையன் ஆனான். 27

தடக் கை நால்-ஐந்து பத்துத் தலைகளும் உடையான்தானே
அடக்கி ஐம் புலன்கள் வென்ற தவப் பயன் அறுதலோடும்,
கெடக் குறி ஆக, மாகம் கிழக்கு எழு வழக்கு நீங்கி,
வடக்கு எழுந்து இலங்கை செல்லும் பரிதி வானவனும் ஒத்தான். 28

புறத்து உறல் அஞ்சி, வேறு ஓர் அரணம் புக்கு உறைதல் போக்கி,
மறத் தொழில் அரக்கன் வாழும் மா நகர், மனுவின் வந்த
திறத் தகை இராமன் என்னும் சேவகற் பற்றி, செல்லும்
அறத்தகை அரசன் திண் போர் ஆழியும் அனையன் ஆனான். 29

கேழ் உலாம் முழு நிலாவின் கிளர் ஒளி இருளைக் கீற,
பாழி மா மேரு நாண, விசும்பு உறப் படர்ந்த தோளான்,
ஆழி சூழ் உலகம் எல்லாம் அருங் கனல் முருங்க உண்ணும்
ஊழி நாள், வட பால் தோன்றும் உவா முழு மதியும் ஒத்தான்.* 30

அடல் உலாம் திகிரி மாயற்கு அமைந்த தன் ஆற்றல் காட்ட,
குடல் எலாம் அவுணர் சிந்த, குன்று எனக் குறித்து நின்ற
திடல் எலாம் தொடர்ந்து செல்ல, சேண் விசும்பு ஒதுங்க, தெய்வக்
கடல் எலாம் கலங்க, தாவும் கலுழனும் அனையன் ஆனான்.* 31

**வாலைத் தூக்கி, அனுமன் வானில் சென்ற காட்சி**

நாலினோடு உலகம் மூன்றும் நடுக்குற, அடுக்கு நாகர்
மேலின் மேல் நின்றகாறும் சென்ற கூலத்தன், ‘விண்டு
காலினால் அளந்த வான முகட்டையும் கடக்கக் கால
வாலினால் அளந்தான்’ என்று வானவர் மருள, சென்றான். 32

26. மாணி - பிரமசாரி; மாண்டு - சிறந்து; ஆணி - அச்சாணி; திரிதலை - மூன்று தலை, மேருவின் சிகரமே திரிகூடம் என ஒரு மலையாய் நிற்றலின், கனகமால் வரையின் சிறுவன் எனப்பட்டது; 27. முடுக்குவான் - விரைந்து செலுத்துவான், அனுமனுக்கும் ஊழிக் காலத்து வாயுவுக்கும் அழிவுறக் கடுகுதல் பொதுத் தன்மை; 28. மாகம் - வானம்; 29. அரணம் - புகலிடம்; அறத்தகை அரசன் - தரும தேவதை; 30. ஒளி - (அனுமனது) உடம்பின் ஒளி; பாழி - வலிமை; 32. கூலம் - வால்; விண்டு - திருமால்; கால வால் - கால பாசத்தை ஒத்த வால்.

விளித்துப் பின் வேலை தாவும் வீரன் வால், வேதம் எய்க்கும்
அளி, துப்பின் அனுமன் என்னும் அருந் துணை பெற்றதாயும்,
களித்துப் புன் தொழில்மேல் நின்ற அரக்கர் கண்ணுறுவர் என்ன,
ஒளித்து, பின் செல்லும் கால பாசத்தை ஒத்தது அன்றே. 33

மேருவை முழுதும் சூழ்ந்து, மீதுற்ற வேக நாகம்,
கார் நிறத்து அண்ணல் ஏவ, கலுழன் வந்துற்ற காலை
சோர்வுறு மனத்தது ஆகி, சுற்றிய சுற்று நீங்கிப்
பேர்வுறுகின்றவாறும் ஒத்தது, அப் பிறங்கு பேழ் வால். 34

குன்றொடு குணிக்கும் கொற்றக் குவவுத் தோள் குரக்குச் சீயம்,
சென்றுறு வேகத் திண் கால் எறிதர, தேவர் வைகும்
மின் தொடர் வானத்து ஆன விமானங்கள், விசையின் தம்மின்
ஒன்றொடு ஒன்று உடையத் தாக்கி, மாக் கடல் உற்ற மாதோ.

வலங் கையின் வயிர ஏதி வைத்தவன் வைகும் நாடும்
கலங்கியது, 'ஏகுவான்தன் கருத்து என்கொல்?' என்னும் கற்பால்;
'விலங்கு அயில் எயிற்று வீரன் முடுகிய வேகம் வெய்யோர்
இலங்கையின் அளவு அன்று' என்று, இம்பர் நாடு இரிந்தது இப் பால்.

'ஓசனை உலப்பு இலாத உடம்பு அமைந்துடைய' என்னத்
தேசமும் நூலும் சொல்லும் திமிங்கிலகிலங்களோடும்,
ஆசையை உற்ற வேலை கலங்க, அன்று, அண்ணல் யாக்கை
வீசிய காலின் வீந்து மிதந்தன, மீன்கள் எல்லாம்.* 37

பொரு அரும் உருவத்து அன்னோன் போகின்ற பொழுது, வேகம்
தருவன தடக் கை, தள்ளா நிமிர்ச்சிய, தம்முள் ஒப்ப,
ஒருவு அருங் குணத்து வள்ளல் ஓர் உயிர்த் தம்பி என்னும்
இருவரும் முன்னர்ச் சென்றால் ஒத்த, அவ் இரண்டு பாலும். 38

மைந்நாக மலையின் தோற்றம்

இந் நாகம் அன்னோன் எறி கால் என ஏகும் வேலை,
திந் நாக மாவில், செறி கீழ்த் திசை காவல் செய்யும்
கைந் நாகம், அந் நாள் கடல் வந்தது ஓர் காட்சி தோன்ற,
மைந் நாகம் என்னும் மலை வான் உற வந்தது அன்றே. 39

33. விளித்து - பேராரவாரம் செய்து; எய்க்கும் - அறியும்; அளி - திருவருள்; 34. பேழ் - பெரிய; 35. குணிக்கும் - நிகர்க்கும்; 36. வயிர ஏதி - வச்சிராயுதம்; கற்பு - எண்ணம்; 37. ஆசை - திக்குகள், ஈண்டு - திக்குகளின் எல்லை; 38. உயிர்த்தம்பி - இலக்குவன்; 39. இந் நாகம் - இந்த மலை போன்ற அனுமன்; திந் நாகம் - திக் நாகம், திசை யானை; கைந் நாகம் - யானை, ஈண்டு ஐராவதம்.

மீ ஓங்கு செம்பொன் முடி ஆயிரம் மின் இமைப்ப,
ஓயா அருவித் திரள் உத்தரியத்தை ஒப்ப,
தீயோர் உளர் ஆகியகால், அவர் தீமை தீர்ப்பான்,
மாயோன் மகரக் கடல்நின்று எழு மாண்பது ஆகி, 40

நூல் ஏந்து கேள்வி நுகரார், புலன் நோக்கல் உற்ருர்
போல், ஏந்தி நின்ற தனியாள் மெய் பொருது நீங்க,
கால் ஆழ்ந்து அழுந்திக் கடல் புக்குழி, கச்சம் ஆகி,
மால் ஏந்த ஓங்கு நெடு மந்தர வெற்பு மான,* 41

தள்ளற்கு அரு நல் சிறை மாடு தழைப்பொடு ஓங்க,
எள்ளற்கு அரு நல் நிறம் எல்லே இலாது புல்ல,
வள்ளல் கடலேக் கெட நீக்கி, மருந்து வவ்வி,
உள் உற்று எழும் ஓர் உவணத்து அரசேயும் ஒக்க,* 42

ஆன்று ஆழ் நெடு நீரிடை, ஆதியொடு அந்தம் ஆகித்
தோன்ருது நின்ருன் அருள் தோன்றிட, முந்து தோன்றி,
மூன்று ஆம் உலகத்தொடும், முற்று உயிர் ஆய மற்றும்,
ஈன்ருனே ஈன்ற சுவணத் தனி அண்டம் என்ன,* 43

'இந் நீரின் என்னேத் தரும் எந்தையை எய்தி அன்றி,
செந் நீர்மை செய்யேன்' என, சிந்தனே செய்து, நொய்தின்
அந் நீரில் வந்த முதல் அந்தணன் ஆதி நாள் அம்
முந்நீரில் மூழ்கி, தவம் முற்றி முளேத்தவாபோல்,* 44

பூவால் இடையூறு புகுந்து, பொருத நெஞ்சின்
கோ ஆம் முனி சீறிட, வேலே குளித்த எல்லாம்
மூவா முதல் நாயகன் மீள முயன்ற அந் நாள்,
தேவாசுரர் வேலேயில் வந்து எழு திங்கள் என்ன,* 45

நிறம் குங்குமம் ஒப்பன, நீல் நிறம் வாய்ந்த நீரின்
இறங்கும் பவளக் கொடி சுற்றின, செம்பொன் ஏய்ந்த
பிறங்கும் சிகரம் படர் முன்றில்தொறும், பிணுவொடு
உறங்கும் மகரங்கள் உயிர்ப்பொடு உணர்ந்து பேர,* 46

41. தனியாள் - ஒப்பற்ற நிலமகள்; கச்சம் - ஆமை, ஈண்டுக் கூர்மாவதாரம்; 42. உவணத்து அரசு - சுபர்ணன் என்னும் பெயரையுடைய பறவைகட்கு அரசனுகிய கருடன்; 43. ஆன்று ஆழ் நெடு நீர் - நிறைந்து ஆழ்ந்த பிரளய வெள்ளம்; தோன்ருது நின்ருன் - தன் உண்மை வடிவு ஒருவராலும் அறியப்படாது நின்ற திருமால்; தனிச் சுவண அண்டம் - ஒப்பற்ற பொன்மயமான அண்டம், பிரமன் சுவண அண்டத்தில் பிறந்தவன் என்பர்; 44. செந் நீர்மை - செம்மையான நல்ல செய்கை; 46. நீரின் இறங்கும் - நீரில் வேர் வீழ்த்த; பிணு - பெட்டை; மகரங்கள் - சுருமீன்கள்.

கூன் சூல் முதிர் இப்பி குரைக்க, நிரைத்த பாசி
வான் சூல் மழை ஒப்ப, வயங்கு பளிங்கு முன்றில்,
தான் சூலி நாளில் தகை முத்தம் உயிர்த்த சங்கம்
மீன் சூழ்வரும் அம் முழு வெண் மதி வீறு, கீற,* 47

பல் ஆயிரம் ஆயிரம் காசு இனம் பாடு இமைக்கும்
கல் ஆர் சிமயத் தடங் கைத்தலம் நீண்டு காட்டி,
தொல் ஆர்கலியுள் புக மூழ்கி, வயங்கு தோற்றத்து
எல் ஆர் மணி ஈட்டம் முகந்து, எழுகின்றது என்ன,* 48

மணியில் பொலி மாக நெடுங் கொடி மாலை ஏய்ப்ப,
வினையின் திரள் வெள் அருவித் திரள் தூங்கி வீழ,
நினைவின் கடலூடு எழலோடும், உணர்ந்து நீங்காச்
சுனையில், பனைமீன் திமிலோடு தொடர்ந்து துள்ள,* 49

கொடு நாலொடு இரண்டு சூலப் பகை, குற்றம் மூன்றும்,
சுடு ஞானம் வெளிப்பட, உய்ந்த துயக்கு இலார்போல்,
விட நாகம் முழைத்தலை விம்மல் உழந்து, வீங்கி,
நெடு நாள், பொறை உற்ற உயிர்ப்பு நிமிர்ந்து நிற்ப,* 50

எழுந்து ஓங்கி விண்ணொடு மண் ஒக்க, இலங்கும் ஆடி
உழுந்து ஓடு காலத்திடை, உம்பரின் உம்பர் ஓங்கிக்
கொழுந்து ஓடி நின்ற கொழுங் குன்றை வியந்து நோக்கி,
அழுங்கா மனத்து அண்ணல், 'இது என்கொல்?' என்று அயிர்த்தான். 51

மைந்நாகத்தைக் கீழே தள்ளுதல்

'நீர் மேல் படரா, நெடுங் குன்று நிமிர்ந்து நிற்றல்
சீர் மேல் படராது' என, சிந்தை உணர்ந்து, செல்வான்,
வேர் மேல்பட வன் தலை கீழ்ப்பட நூக்கி, விண்ணோர்
ஊர் மேல் படர, கடிது, உம்பரின்மீது உயர்ந்தான். 52

47. சூலி நாள் - கரு உயிர்க்கவேண்டிய காலம்; வீறு - பெருமை; கீறுதல் - குலைதல்; 49. கொடி மாலை - கொடி வரிசை; வினையின் - முறைமையாக; நல்வினைபோல எனலும் ஆம்; தூங்கி - அசைந்து; தொடர்ந்து - ஒரு சேர; 50. நாலொடு இரண்டு குலப்பகை-ஆறாகிய கூட்டமாகிய பகை; அவை காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்பன; துயக்கு இலார் - மயக்கமற்ற பெரியோர்கள்; 52. படரா - படர்ந்து; விண்ணோர் ஊர் - அமராவதி; படர - அடையும்படி.

**மைந்நாகம் அனுமனொடு உரையாடல்**

உந்தா முன் உலைந்து, உயர் வேலை ஒளித்த குன்றம்,
சிந்தாகுலம் உற்றது; பின்னரும் தீர்வு இல் அன்பால்
வந்து ஓங்கி, ஆண்டு ஓர் சிறு மானிட வேடம் ஆகி,
'எந்தாய்! இது கேள்' என, இன்ன இசைத்தது அன்றே: 53

'வேற்றுப் புலத்தோன் அலென்; ஐய! ''விலங்கல் எல்லாம்
மாற்றுச் சிறை'' என்று, அரி வச்சிரம் மாண ஓச்ச,
வீற்றுப் பட நூறிய வேலையின், வேலை உய்த்து,
காற்றுக்கு இறைவன் எனைக் காத்தனன், அன்பு காந்த. 54

'அன்னான் அருங் காதலன் ஆதலின், அன்பு தூண்ட,
என்னால் உனக்கு ஈண்டு செயற்கு உரித்து ஆயது இன்மை,
பொன் ஆர் சிகரத்து, இறை ஆறினை போதி என்னா,
உன்னா உயர்ந்தேன்—உயர்விற்கும் உயர்ந்த தோளாய்! 55

' ''கார் மேக வண்ணன் பணி பூண்டனன்; காலின் மைந்தன்,
தேர்வான் வருகின்றனன், சீதையை; தேவர் உய்யப்
பேர்வான் அயல் சேறி; இதில் பெறும் பேறு இல்'' என்ன,
நீர் வேலையும் என்னை உரைத்தது—நீதி நின்றாய்! 56

' ''நல் தாயினும் நல்லன் எனக்கு இவன்'' என்று நாடி,
இற்றே, இறை எய்தினை, ஏய்ந்தது கோடி, என்னால்;
பொன்-தார் அகல் மார்ப! தம் இல்லுழை வந்தபோதே,
உற்றார் செயல் மற்றும் உண்டோ?' என, உற்று உரைத்தான்.

உரைத்தான் உரையால்,'இவன் ஊறு இலன்' என்பது உன்னி,
விரைத் தாமரை வாள் முகம் விட்டு விளங்க, வீரன்
சிரித்தான், அளவே; சிறிது அத் திசை செல்ல நோக்கி,
வரைத் தாள் நெடும் பொன் குடுமித் தலை, மாடு கண்டான்.

'வருந்தேன்; அது என் துணை வானவன் வைத்த காதல்;
அருந்தேன் இனி யாதும், என் ஆசை நிரப்பி அல்லால்;
பெருந் தேன் பிழி சாலும் நின் அன்பு பிணித்த போதே
இருந்தேன்; நுகர்ந்தேன்; இதன்மேல் இனி ஈவது என்னோ?59

55. ஆறினை போதி - இளைப்பாறிச் செல்வாய்; 56. தேர்வான் - தேடுவதற்கு; 57. இற்றே - இப்பொழுதே; ஏய்ந்தது கோடி - என் நிலைக்கு ஏற்ப யான் செய்யும் விருந்தை ஏற்றுக் கொள்க; 58. முகம் வாள் விட்டு - முகம் ஒளி வீசி.

'முன்பில் சிறந்தார், இடை உள்ளவர், காதல் முற்றப்
பின்பில் சிறந்தார், குணம் நன்று; இது பெற்ற யாக்கைக்கு
என்பின் சிறந்தாயது ஓர் ஊற்றம் உண்டு என்னல் ஆமே?
அன்பின் சிறந்தாயது ஓர் பூசனை யார்கண் உண்டே? 60

'ஈண்டே கடிது ஏகி, இலங்கை விலங்கல் எய்தி,
ஆண்டான் அடிமைத் தொழில் ஆற்றலின் ஆற்றல் உண்டே?
மீண்டால் நுகர்வென் நல் விருந்து' என வேண்டி, மெய்ம்மை
பூண்டான் அவன் கண்புலம் பின்பட, முன்பு போனான். 61

செவ் வான் கதிரும், குளிர் திங்களும், தேவர் வைகும்
வெவ் வேறு விமானமும், மீனொடு மேகம், மற்றும்,
எவ் வாய் உலகத்தவும், ஈண்டி இருந்த; தம்மின்
ஒவ்வாதன ஒத்திட, ஊழி வெங் காலும் ஒத்தான்.* 62

நீர் மாக் கடல்மேல் நிமிர்கின்ற நிமிர்ச்சி நோக்கா,
'பார் மேல் தவழ் சேவடி பாய் நடவாப் பதத்து, என்
தேர் மேல் குதிகொண்டவன், இத் திறன் சிந்தைசெய்தான்
ஆர்மேல்கொல்?' என்று எண்ணி, அருக்கனும் ஐயம் உற்றான்.

வாள் ஒத்து ஒளிர் வால் எயிறு ஊழின் மருங்கு இமைப்ப,
நீள் ஒத்து உயர் வாலின், விசும்பு நிரம்பு மெய்யன்,
கோள் ஒத்த பொன் மேனி; விசும்பு இரு கூறு செய்யும்
நாள் ஒத்தது; மேல் ஒளி கீழ் இருள் உற்ற ஞாலம்.* 64

**சுரசை தோன்றுதலும், அனுமன் அவளை வென்று விரைதலும்**

மூன்று உற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பான்
ஏன்றுற்று வந்தான் வலி மெய்ம்மை உணர்த்து நீ' என்று,
ஆன்றுற்ற வானோர் குறை நேர, அரக்கி ஆகித்
தோன்றுற்று நின்றாள், சுரசைப் பெயர்ச் சிந்தை தூயாள். 65

பேழ் வாய் ஓர் அரக்கி உருக்கொடு, பெட்பின் ஓங்கி,
'கோள் வாய் அரியின் குலத்தாய்! கொடுங் கூற்றும் உட்க
வாழ்வாய்! எனக்கு ஆமிடம் ஆய் வருவாய்கொல்?' என்னா,
நீள் வாய் விசும்பும் தனது உச்சி நெருக்க நின்றாள். 66

60. முன்பில் சிறந்தார் - முன்னாகச் சிறந்த முதல் வள்ளல்கள்; இடை உள்ளவர் - இடை வள்ளல்கள்; பின்பில் சிறந்தார் - கடை வள்ளல்கள்; 62. அனுமனுக்கும் ஊழிக்காற்றுக்கும் ஒவ்வாதன ஒத்திட விரைதல் பொதுத் தன்மை; 63. பாய் - பரவி; 65. சுரசை - தக்கன் மகள்; காசிபர் மனைவி; இவள் நாகமாதா எனவும் கூறப்படுவாள்; 66. பேழ்வாய் - பிளந்த வாய்; பெட்பு - விருப்பம்; ஆமிடம் - உணவுப் பொருள்.

'தீயே எனல் ஆய பசிப் பிணி தீர்த்தல் செய்வாய்
ஆயே, விரைவுற்று எனை அண்மினை, வண்மையாள!
நீயே இனி வந்து, என் நிணம் கொள் பிணங்கு எயிற்றின்
வாயே புகுவாய்; வழி மற்று இலை, வானின்' என்றாள். 67

'பெண்பால் ஒரு நீ; பசிப் பீழை ஒறுக்க நொந்தாய்;
உண்பாய் எனது ஆக்கையை; யான் உதவற்கு நேர்வல்—
விண்பாலவர் நாயகன் ஏவல் இழைத்து மீண்டால்,
நண்பால்' எனச் சொல்லினன், நல் அறிவாளன்; நக்காள், 68

'காய்ந்து, ஏழ் உலகங்களும் காண, நின் யாக்கைதன்னை,
ஆர்ந்தே பசி தீர்வென்; இது ஆணை' என்று அன்னள் சொன்னாள்;
ஓர்ந்தானும், உவந்து, 'ஒருவேன்; நினது ஊழ் இல் பேழ் வாய்
சேர்ந்து ஏகுகின்றேன்; வலையாம்எனின் தின்றிடு' என்றான். 69

அக்காலை, அரக்கியும், அண்டம் அனந்தம் ஆகப்
புக்கால் நிறையாத புழைப் பெரு வாய் திறந்து,
விக்காது விழுங்க நின்றாள்; அது நோக்கி வீரன்,
திக்கு ஆர் அவள் வாய் சிறிது ஆம் வகை சேணில் நீண்டான்.

நீண்டான் உடனே சுருங்கா, நிமிர்வாள் வயிற்றின்
ஊண்தான் என உற்று, ஓர் உயிர்ப்பு உயிராத முன்னர்,
மீண்டான்; அது கண்டனர் விண் உறைவோர்கள்; 'எம்மை
ஆண்டான் வலன்' என்று அலர் தூஉய், நெடிது ஆசி சொன்னார். 71

அனுமன் மேற்செல்லல்

மின்மேல் படர் நோன்மையனாய் உடல் வீக்கம் நீங்கி,
தன் மேனியளாய், அவள், தாயினும் அன்பு தாழ,
'என் மேல் முடியாதன?' என்று, இனிது ஏத்தி நின்றாள்;
பொன் மேனியனும் நெடிது ஆசி புனைந்து, போனான்— 72

கீதங்கள் இசைத்தனர் கின்னரர்; கீதம் நின்ற
பேதங்கள் இயம்பினர் பேதையர்; ஆடல் மிக்க
பூதங்கள் தொடர்ந்து புகழ்ந்தன; பூசுரேசர்
வேதங்கள் இயம்பினர்; தென்றல் விருந்து செய்ய, 73

68. இழைத்து - செய்து; நண்பு - அன்பு; 70. அண்டம் அனந்தம் ஆகப் புக்கால் - பல அண்டங்கள் ஒரு சேர வந்து புகுந்தாலும்; சேண் - வானம்.

மந்தாரம் உந்து மகரந்தம் மணந்த வாடை
செந்தாமரை வாள் முகத்தில் செறி வேர் சிதைப்ப,
தம்தாம் உலகத்திடை விஞ்சையர் பாணி தள்ளும்
கந்தார வீணைக் களி செஞ் செவிக் காது நுங்க. 74

வான்வழியை அடைத்து நின்ற அங்காரதாரையுடன் அனுமன் உரையாடல்

வெங் கார் நிறப் புணரி வேறேயும் ஒன்று அப்
பொங்கு ஆர்கலிப் புனல் தரப் பொலிவதேபோல்,
'இங்கு ஆர் கடத்திர் எனை?' என்னா, எழுந்தாள்,
அங்காரதாரை, பெரிது ஆலாலம் அன்னாள். 75

காதக் கடுங் குறி கணத்து இறுதி கண்ணாள்,
பாதச் சிலம்பின் ஒலி வேலை ஒலி பம்ப,
வேதக் கொழுஞ் சுடரை நாடி, நெடு மேல்நாள்,
ஓதத்தின் ஓடும் மதுகைடவரை ஒத்தாள். 76

துண்டப் பிறைத் துணை எனச் சுடர் எயிற்றாள்;
கண்டத்திடைக் கறையுடைக் கடவுள், கைம்மா
முண்டத்து உரித்த உரியால், முளரிவந்தான்
அண்டத்தினுக்கு உறை அமைத்தனைய வாயாள். 77

நின்றாள் நிமிர்ந்து, அலை நெடுங் கடலின் நீர் தன்
வன் தாள் அலம்ப, முடி வான் முகடு வவ்வ;
அன்று, ஆய்திறத்தவன், 'அறத்தை அருளோடும்
தின்றாள் ஒருத்தி இவள்' என்பது தெரிந்தான். 78

பேழ் வாயகத்து அலது, பேர் உலகம் மூடும்
நீள் வானகத்தினிடை ஏகு நெறி நேரா
ஆழ்வான், அனுக்கன், அவள் ஆழ் பில வயிற்றைப்
போழ்வான் நினைத்து, இனைய வாய்மொழி புகன்றான்: 79

'சாயா வரம் தழுவினாய்; தழிய பின்னும்,
ஓயா உயர்ந்த விசை கண்டும் உணர்கில்லாய்;
வாயால் அளந்து நெடு வான் வழி அடைத்தாய்;
நீ யாரை? என்னை இவண் நின்ற நிலை?' என்றான். 80

74. பாணி தள்ளும் - கை விரல்களினால் தடவி மீட்டுகின்ற; செஞ் செவிக் காது - மிக்க அழகினை உடைய காது; செவி - செவ்வி; 75. புணரி - கடல்; ஆலாலம் - ஆலகால விடம்; 76. மதுகைடவர் - திருமாலைப் பகைத்து அழிந்த அசுரர்கள்; மது - அண்ணன், கைடவன் - தம்பி; 80. சாயாவரம் தழுவினாய் - நிழலைப் பற்றிப் பிணிக்கும் வரத்தால் என்னைப் பிணித்தாய்.

'பெண்பால் எனக் கருது பெற்றி ஒழி; உற்ருல்,
விண்பாலவர்க்கும், உயிர் வீடுறுதல் மெய்யே;
கண்பால் அடுக்க உயர் காலன் வருமேனும்,
உண்பேன் ஒருத்தி; அது ஒழிப்பது அரிது' என்ருள். 81

அனுமன், அங்காரதாரை வயிற்றைக் கிழித்து இலங்கை ஏகுதல்

திறந்தாள் எயிற்றை, அவள்; அண்ணல் இடை சென்ருன்;
அறம்தான் அரற்றியது, அயர்த்து அமரர் எய்த்தார்,
இறந்தான் எனக் கொடு; ஓர் இமைப்புஅதனின் முன்னம்,
பிறந்தான் என, பெரிய கோள் அரி பெயர்ந்தான். 82

கள் வாய் அரக்கி கதற, குடர் கணத்தில்
கொள், வார், தடக் கையன் விசும்பின்மிசை கொண்டான்;
முள் வாய் பொருப்பின் முழை எய்தி, மிக நொய்தின்,
உள் வாழ் அரக் கொடு எழு திண் கலுழன் ஒத்தான். 83

சாகா வரத் தலைவரில் திலகம் அன்ஞன்,
ஏகா, அரக்கி குடர் கொண்டு, உடன் எழுந்தான்,
மா கால் விசைக்க, வடம் மண்ணில் உற, வாலோடு
ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆஞன். 84

ஆர்த்தனர்கள் வானவர்கள்; தானவர் அழுங்கா
வேர்த்தனர்; விரிஞ்சனும் வியந்து, மலர் வெள்ளம்
தூர்த்தனன்; அகன் கயிலையில் தொலைவு இலோனும்
பார்த்தனன்; முனித் தலைவர் ஆசிகள் பகர்ந்தார். 85

மாண்டாள் அரக்கி; அவள் வாய் வயிறுகாறும்
கீண்டான்; இமைப்பினிடை மேரு கிரி கீழா
நீண்டான்; வயக் கதி நினைப்பின் நெடிது என்னப்
பூண்டான்; அருக்கன் உயர் வானின் வழி போஞன். 86

இராம நாமம் இடையூறு நீக்கும் எனத் துணிதல்

'சொற்ருர்கள் சொற்ற தொகை அல்ல துணை ஒன்ருே?
முற்று முடிந்த நெடு வானினிடை, முந்நீ-
ரில் தாவி, எற்று எனினும், யான் இனி இலங்கை
உற்ருல், விலங்கும் இடையூறு' என, உணர்ந்தான். 87

81. அடுக்க - அணித்தாக; 83. அர - அரா, பாம்பு; அங்கார தாரையின் வாய்க்குக் குகையும் பல்லுக்கு முள்ளும் உவமை; 84. விசைக்க - வீச; கதலி - காற்றுடி, பட்டம்; 86. வயக் கதி - வலிய விரைவு.

'ஊறு, கடிது ஊறுவன; ஊறு இல் அறம் உன்ன,
தேறல் இல் அரக்கர் புரி தீமைஅவை தீர,
ஏறும் வகை எங்கு உளது? "இராம!" என எல்லாம்
மாறும்; அதின் மாறு பிறிது இல்' என வலித்தான். 88

அனுமன் பவள மலையில் பாய்ந்து, இலங்கையை நோக்கல்

தசும்புடைக் கனக நாஞ்சில் கடி மதில் தணித்து நோக்கா,
அசும்புடைப் பிரசத் தெய்வக் கற்பக நாட்டை அண்மி,
விசும்பிடைச் செல்லும் வீரன் விலங்கி வேறு, இலங்கை மூதூர்ப்
பசுஞ் சுடர்ச் சோலைத்து ஆங்கு ஓர் பவள மால் வரையில் பாய்ந்தான்.

மேக்குறச் செல்வோன் பாய, வேலைமேல் இலங்கை வெற்பு
நூக்குறுத்து, அங்கும் இங்கும் தள்ளுற, நுடங்கும் நோன்மை,
போக்கினுக்கு இடையூறு ஆகப் புயலொடு பொதிந்த வாடை
தாக்குற, தகர்ந்து சாயும் கலம் எனத் தக்கது அன்றே. 90

மண் அடி உற்று, மீது வான் உறு வரம்பின் தன்மை
எண் அடி அற்ற குன்றில் நிலைத்து நின்று எய்த நோக்கி,
விண்ணிடை, உலகம் என்னும் மெல்லியல், மேனி நோக்கக்
கண்ணடி வைத்தது அன்ன இலங்கையைத் தெரியக் கண்டான்.

நல் நகர் அதனை நோக்கி, நளினக் கைம் மறித்து, 'நாகர்
பொன்னகர் இதனை ஒக்கும் என்பது புல்லிது, அம்மா!
அந் நகர் இதனில் நன்றேல், அண்டத்தை முழுதும் ஆள்வான்
இந் நகர் இருந்து வாழ்வான்? இது அதற்கு ஏது' என்றான்.†
[அன்றால்;
'"மாண்டது ஓர் நலத்திற்று ஆம்" என்று உணர்த்துதல் வாய்மைத்து
வேண்டிய வேண்டின் எய்தி, வெறுப்பு இன்றி விழைந்து துய்க்கும்
ஈண்ட அரும் போக இன்பம் ஈறு இலது யாண்டுக் கண்டாம்,
ஆண்டு அது துறக்கம்; அஃதே அரு மறைத் துணிவும் அம்மா!†

'உட்புலம் எழு நூறு என்பர் ஓசனை; உலகம் மூன்றில்
தெட்புறு பொருள்கள் எல்லாம் இதனுழைச் செறிந்த என்றால்,
நுண் புலம் நுணங்கு கேள்வி நுழைவினர் எனினும், நோக்கும்
கண்புலம் வரம்பிற்று ஆமே? காட்சியும் கரையிற்று ஆமே?† 94

88. கடிது ஊறுவன ஊறு - விரைந்து மிகும் இடையூறு; ஏறும் வகை - கரையேறும் வழி; 89. தசும்பு - கலசம்; பிரசம் - தேன்; 90. மேக்குற - வானின் மேல்; நூக்குறுத்து - அசைத்து; புயல் - மழை; 92. ஆள்வான் - இராவணன்; 93. மாண்டது - சிறந்தது; 94. உட்புலம் - உள்ளிடம், பரப்பு; தெட்பு - உயர்வு.

# 2　ஊர் தேடு படலம்

### இலங்கை மாநகர வருணனை

'பொன் கொண்டு இழைத்த? மணியைக் கொடு பொதிந்த?
மின் கொண்டு அமைத்த? வெயிலைக் கொடு சமைத்த?
என் கொண்டு இயற்றிய எனத் தெரிவு இலாத—
வன் கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம். 1

நாகாலயங்களொடு நாகர் உலகும், தம்
பாகு ஆர் மருங்கு துயில்வென்ன உயர் பண்ப;
ஆகாயம் அஞ்ச, அகல் மேருவை அனுக்கும்
மா கால் வழங்கு சிறு தென்றல் என நின்ற. 2

'மா காரின் மின் கொடி மடக்கினர் அடுக்கி,
மீகாரம் எங்கணும் நறுந் துகள் விளக்கி,
ஆகாய கங்கையினை அங்கையினின் அள்ளி,
பாகு ஆய செஞ் சொலவர் வீசுபடு காரம். 3

'பஞ்சி ஊட்டிய பரட்டு, இசைக் கிண்கிணிப் பதுமச்
செஞ் செவிச் செழும் பவளத்தின் கொழுஞ் சுடர் சிதறி,
மஞ்சின் அஞ்சன நிறம் மறைத்து, அரக்கியர் வடித்த
அம் சில் ஓதியோடு உவமைய ஆக்குற அமைவ. 4

'நான நாள் மலர்க் கற்பக நறு விரை நான்ற
பானம் வாய் உற வெறுத்த, தாள் ஆறுடைப் பறவை
தேன் அவாம் விரைச் செழுங் கழுநீர்த் துயில்செய்ய,
வான யாறு தம் அரமியத் தலம்தொறும் மடுப்ப. 5

'குழலும் வீணையும் யாழும் என்று இனையன குழைய,
மழலை மென் மொழி, கிளிக்கு இருந்து அளிக்கின்ற மகளிர்,
சுழலும் நல் நெடுந் தட மணிச் சுவர்தொறும் துவன்றும்
நிழலும், தம்மையும், வேற்றுமை தெரிவு அரு நிலைய. 6

2: 2. நாகாலயங்கள் - நாக சாதியினர் வாழும் இடங்களையுடைய கீழுலகு; நாகர் உலகு - தேவர்கள் வாழும் மேலுலகு; பாகு - பக்கம்; துயில்வென்ன - தங்குதற்கு உரியவை என்னுமாறு; 3. மீகாரம் - மேல் மாடம்; காரம் - வீடுகள்; 4. பரட்டு - கணைக்கால்; பதுமம் - தாமரை போன்ற பாதங்கள்; பவளத்தின் சுடர் - பவளம் போன்ற விரல்களின் ஒளி; 5. நானம் - நறு மணம்; நான்ற - பெருக்கெடுத்த; வாய் உற வெறுத்தல் - தேக்கெறிந்து தம் வாயில் பெருகுதல்; அரமியத் தலம் - நிலா முற்றம்; 6. சுழலும் - சுற்றிலும் உள்ள.


கோவிலூர் ஆண்டவர்
A. No. 7203

'இனைய மாடங்கள் இந்திரற்கு அமைவர எடுத்த
மனையின் மாட்சிய என்னின், அச் சொல்லும் மாசுண்ணும்:
அனையது ஆம் எனின், அரக்கர்தம் திருவுக்கும் அளவை
நினையலாம்? அன்றி, உவமையும் அன்னதாய் நிற்கும்! 7

'மணிகள் எத்துணை பெரியவும், மால் திரு மார்பின்
அணியும் காசினுக்கு அகன்றன உள எனல் அரிதால்;
திணியும் நல் நெடுந் திருநகர், தெய்வ மாத் தச்சன்
துணிவின் வந்தனன், தொட்டு அழகு இழைத்த அத் தொழில்கள். 8

'மரம் அடங்கலும் கற்பகம்; மனை எலாம் கனகம்;
அரமடந்தையர் சிலதியர், அரக்கியர்க்கு; அமரர்
உரம் மடங்கி வந்து உழையராய் உழல்குவர்; ஒருவர்
தரம் அடங்குவது அன்று இது; தவம் செய்த தவமால். 9

'தேவர் என்பவர் யாரும், இத் திரு நகர்க்கு இறைவற்கு
ஏவல் செய்பவர்; செய்கிலாதவர் எவர் என்னின்,
மூவர்தம்முளும் ஒருவன் அங்கு உழையனா முயலும்!
தா இல் மா தவம் அல்லது, பிறிது ஒன்று தகுமோ? 10

' ''போர் இயன்றன தோற்ற'' என்று இகழ்தலின், புறம் போய்
நேர் இயன்ற வன் திசைதொறும் நின்ற மா நிற்க,
ஆரியன் தனி ஐங் கரக் களிறும், ஓர் ஆழிச்
சூரியன் தனித் தேருமே, இந் நகர் தொகாத. 11

'வாழும் மன் உயிர் யாவையும் ஒரு வழி வாழும்
ஊழி நாயகன் திரு வயிறு ஒத்துளது, இவ் ஊர்;
ஆழி அண்டத்தின் அருக்கன்தன் அலங்கு தேர்ப் புரவி
ஏழும் அல்லன, ஈண்டு உள குதிரைகள் எல்லாம். 12

'தழங்கு பேரியின் அரவமும், தகை நெடுங் களிறு
முழங்கும் ஓதையும், மூரி நீர் முழக்கொடு முழங்கும்;
கொழுங் குழல் புதுக் குதலையர் நூபுரக் குரலின்,
வழங்கு பேர் அருஞ் சதிகளும், வயின்தொறும் மறையும். 13

8. மால் திரு மார்பின் அணியும் காசு - கவுத்துவ மணி; அகன்றன - மேம்பட்டன; 9. சிலதியர் - குற்றேவல் செய்யும் மகளிர்; உழையர் - குற்றேவல் செய்பவர்; ஒருவர் தரம் அடங்குவது - ஒருவருக்கு இயல்பாகக் கூடுவது; 10. ஒருவன் - பிரமன்; 11. ஆரியன் தனி ஐங் கரக் களிறு - விநாயகக் கடவுளாகிய யானை; 12. ஆழி அண்டம் - வட்ட வடிவமாகிய உலக கோளம்; 13. மூரி நீர் - பெரிய நீர், கடல்; நூபுரம் - சிலம்பு.

'மரகதத்தினும், மற்று உள மணியினும், வனைந்த
குரகதத் தடந் தேர்இனம்அவை பயில் கொட்டில்
இரவி வெள்க நின்று இமைக்கின்ற இயற்கைய என்றால்,
நரகம் ஒக்குமால் நல் நெடுந் துறக்கம், இந் நகர்க்கு. 14

'திருகு வெஞ் சினத்து அரக்கரும் கரு நிறம் தீர்ந்தார்;
அருகு போகின்ற திங்களும் மறு அற்றது;—அழகைப்
பருகும் இந் நகர்த் துன் ஒளி பாய்தலின்,—பசும் பொன்
உருகுகின்றது போன்று உளது, உலகு சூழ் உவரி. 15

'அண்டம் முற்றவும் வீங்கு இருள் அகற்றி நின்று, அகல் வான்
கண்ட, அத் தனிக் கடி நகர் நெடு மனை; கதிர்கட்கு
உண்டு அவ ஆற்றல் என்று உரைப்பு அரிது! ஒப்பிடின், தம் முன்
விண்ட வாய்ச் சிறு மின்மினி என்னவும் விளங்கா. 16

'தேனும், சாந்தமும், மான்மதச் செறி நறுஞ் சேறும்,
வான நாள்மலர்க் கற்பக மலர்களும், வய மாத்
தான வாரியும், நீரொடு மடுத்தலின், தழீஇய
மீனும் தானும் ஓர் வெறி மணம் கமழும், அவ் வேலை. 17

'தெய்வத் தச்சனைப் புகழ்துமோ? செங் கண் வாள் அரக்கன்
மெய் ஒத்து ஆற்றிய தவத்தையே வியத்துமோ? விரிஞ்சன்
ஐயப்பாடு இலா வரத்தையே மதித்துமோ? அறியாத்
தொய்யல் சிந்தையேம், யாவரை யாதென்று துதிப்பேம்? 18

வானும் நிலனும் பெறுமாறு, இனி, மற்றும் உண்டோ—
கானும், பொழிலும், இவை செங் கனகத்தினாலும்,
ஏனம் மணியாலும் இயற்றியவேனும், யாவும்
தேனும், மலரும், கனியும், தரச் செய்த செய்கை?* 19

'நீரும், வையமும், நெருப்பும், மேல் நிமிர் நெடுங் காலும்,
வாரி வானமும், வழங்கல ஆகும், தம் வளர்ச்சி;
ஊரின் இந் நெடுங் கோபுரத்து உயர்ச்சி கண்டு உணர்ந்தால்,
மேரு எங்ஙனம் விளர்க்குமோ, முழுமுற்றும் வெள்கி? 20

'முன்னம் யாவரும், ''இராவணன் முனியும் என்று எண்ணி,
பொன்னின் மா நகர் மீச் செலான் கதிர்'' எனப் புகல்வார்—
கன்னி ஆரையின் ஒளியினில், கண் வழுக்குறுதல்
உன்னி, நாள்தொறும் விலங்கினன் போதலே உணரார். 21

14. குரகதம் - குதிரை; 16. விண்டவாய் - தோற்றனவாய்; 17. வய மா - வலிமை மிகுந்த யானை; தான வாரி - மதவெள்ளம்; 18. மெய் ஒத்து - மெய்ம்மை தவறாமல்; தொய்யல் - சோர்வு; 20. விளர்த்தல் - வெண்ணிறம் அடைதல்; 21. ஆரை - மதில்.

' ''தீய செய்குநர் தேவரால்; அனையவர் சேரும்
வாயில் இல்லது ஓர் வரம்பு அமைக்குவென்'' என மதியா,
காயம் என்னும் அக் கணக்கு அறு பதத்தையும் கடக்க
ஏயும் நன் மதில் இட்டனன்—கயிலையை எடுத்தான். 22

'கறங்கு கால் புகா; கதிரவன் ஒளி புகா; மறலி
மறம் புகாது; இனி, வானவர் புகார் என்கை வம்பே!
திறம்பு காலத்துள் யாவையும் சிதையினும், சிதையா
அறம் புகாது, இந்த அணி மதிள் கிடக்கைநின்று அகத்தின்!*

'கொண்ட வான் திரைக் குரை கடல் இடையதாய், குடுமி
எண் தவா விசும்பு எட்ட நின்று, இமைக்கின்ற எழிலால்,
பண்டு அரா-அணைப் பள்ளியான் உந்தியில் பயந்த
அண்டமேயும் ஒத்து இருந்தது, இவ் அணி நகர் அமைதி. 24

அரக்கர் பெருமித வாழ்வு

'பாடுவார் பலர் என்னின், மற்று அவரினும் பலரால்
ஆடுவார்கள்; மற்று அவரினும் பலர் உளர், அமைதி
கூடுவாரிடை இன்னியம் கொட்டுவார்; முட்டு இல்
வீடு காண்குறும் தேவரால் விழு நடம் காண்பார். 25

'வான மாதரோடு இகலுவர் விஞ்சையர் மகளிர்;
ஆன மாதரோடு ஆடுவர் இயக்கியர்; அவரைச்
சோனை வார் குழல் அரக்கியர் தொடர்குவர்; தொடர்ந்தால்,
ஏனை நாகியர் அரு நடக் கிரியை ஆய்ந்திருப்பார். 26

'இழையும் ஆடையும் மாலையும் சாந்தமும் ஏந்தி,
உழையர் என்ன நின்று, உதவுவ நிதியங்கள்; ஒருவர்
விழையும் போகமே, இங்கு இது? வாய்கொடு விளம்பின்,
குழையும்; நெஞ்சினுல் நினையினும், மாசு என்று கொள்ளும். 27

'பொன்னின் மால் வரைமேல் மணி பொழிந்தன பொருவ,
உன்னி, நான்முகத்து ஒருவன் நின்று ஊழ் முறை உரைப்ப,
பன்னி, நாள் பல பணி உழந்து, அரிதினின் படைத்தான்—
சொன்ன வானவர் தச்சனும், இந் நகர் துதிப்பான்! 28

22. பதம் - இடம்; 23. வம்பு - வீண்; 24. எண் தவா விசும்பு - ஓர் எல்லைக்கு அடங்காத வானம்; 25. அமைதி கூடுவார் - சமயம் நேர்ந்து கூடியவர்களான அவையோர்; முட்டு இல் - முட்டுப்பாடு இல்லாத, எல்லா வளமும் நிரம்பிய; 26. சோனை - காளமேகம்; நாகியர் - நாகர் மகளிர்; நடக்கிரியை - நடனத்தின் அடைவுகள்; 28. வானவர் தச்சன் - தேவ சிற்பியான விசுவ கருமன்.

'மகர வீணையின் மந்தர கீதத்து மறைந்த,
சகர வேலையின் ஆர் கலி; திசைமுகம் தடவும்
சிகர மாளிகைத் தலம்தொறும் தெரிவையர் தீற்றும்
அகரு தூமத்தின் அழுந்தின, முகிற் குலம் அனைத்தும். 29

'பளிக்கு மாளிகைத் தலம்தொறும், இடம்தொறும், பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண் நறுஞ் சோலைகள்தோறும்,
அளிக்கும் தேறல் உண்டு, ஆடுநர் பாடுநர் ஆகி,
களிக்கின்றார் அலால், கவல்கின்றார் ஒருவரைக் காணேன். 30

'தேறல் மாந்தினர்; தேன் இசை மாந்தினர்; செவ் வாய்
ஊறல் மாந்தினர்; இன் உரை மாந்தினர்; ஊடல்
கூறல் மாந்தினர்; அனையவர்த் தொழுது, அவர் கோபத்து
ஆறல் மாந்தினர்—அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர். 31

'எறித்த குங்குமத்து இள முலை எழுதிய தொய்யில்
கறுத்த மேனியில் பொலிந்தன; ஊடலில் கனன்று
மறித்த நோக்கியர் மலர் அடி மஞ்சுளப் பஞ்சி
குறித்த கோலங்கள் பொலிந்தில, அரக்கர்தம் குஞ்சி. 32

'விளரிச் சொல்லியர் வாயினால், வேலையுள் மிடைந்த
பவளக் காடு எனப் பொலிந்தது; படை நெடுங் கண்ணால்,
குவளைக் கோட்டகம் கடுத்தது; குளிர் முகக் குழுவால்,
முளரிக் கானமும் ஒத்தது—முழங்கு நீர் இலங்கை. 33

'"எழுந்தனர் திரிந்து வைகும் இடத்ததாய், இன்றுகாறும்
கிழிந்திலது அண்டம்" என்னும் இதனையே கிளப்பது அல்லால்,
அழிந்துநின்று ஆவது என்னே? அலர்உளோன் ஆதியாக
ஒழிந்த வேறு உயிர்கள் எல்லாம், அரக்கருக்கு உறையும் போதா. 34

'காயத்தால் பெரியர்; வீரம் கணக்கு இலர்; உலகம் கல்லும்
ஆயத்தார்; வரத்தின் தன்மை அளவு அற்றார்; அறிதல் தேற்றா
மாயத்தார்; அவர்க்கு எங்கேனும் வரம்பும் உண்டாமோ? மற்று ஓர்
தேயத்தார் தேயம் சேறல் தெறு விலோர் செருவில் சேறல். 35

29. மந்தர கீதம் - கம்பீரமான ஓசை, மெலிவுத் தானத்து ஓசை என்பாரும் உண்டு; அகரு தூமம் - அகிற்புகை; 32. எறித்த - ஒளி வீசுகின்ற; மஞ்சுளப் பஞ்சி - அழகிய செம்பஞ்சுக் குழம்பு; 33. விளரி - ஏழிசைகளுள் ஒன்று; கோட்டகம் - நீர்நிலை; 34. அழிந்து நிற்றல் - (அரக்கர் தொகை இவ்வளவு என்று அறிய முடியாமையின்) வருந்துதல்; 35. ஆயத்தார் - ஆற்றல் உடைய கூட்டத்தார்; தெறுவிலோர் - வருத்தும் வில் வீரர்.

'கழல் உலாம் காலும், கால வேல் உலாம் கையும், காந்தும்
அழல் உலாம் கண்ணும், இல்லா ஆடவர் இல்லை; அன்னார்
குழல் உலாம் களி வண்டு ஆர்க்கும் குஞ்சியால், பஞ்சி குன்று
மழலை யாழ்க் குதலைச் செவ்வாய் மாதரும் இல்லை மாதோ. 36

'கள் உறக் கனிந்த பங்கி அரக்கரைக் கடுத்த—காதல்
புள் உறத் தொடர்வ, மேனி புலால் உறக் கடிது போவ,
வெள் உறுப்பு எயிற்ற, செய்ய தலையன, கரிய மெய்ய,
உள் உறக் களித்த, குன்றின் உயர்ச்சிய,—ஓடை யானை. 37

'வள்ளி நுண் மருங்குல் என்ன, வானவர் மகளிர், உள்ளம்
தள்ளுற, பாணி தள்ளா நடம் புரி தடங் கண் மாதர்,
வெள்ளிய முறுவல் தோன்றும் நகையர், தாம் வெள்குகின்றார்—
கள் இசை அரக்கர் மாதர் களி இடும் குரவை காண்பார். 38

'ஒறுத்தலோ நிற்க; மற்று, ஓர் உயர் படைக்கு ஒருங்கு இவ் ஊர் வந்து
இறுத்தலும் எளிதாம்? மற்றும் யாவர்க்கும் இயக்கம் உண்டே?
கறுத்த வாள் அரக்கிமாரும், அரக்கரும், கழித்து வீசி
வெறுத்த பூண் வெறுக்கையாலே தூரும், இவ் வீதி எல்லாம்.

'வடங்களும், குழையும், பூணும், மாலையும், சாந்தும், யானைக்
கடங்களும், கலின மா விலாழியும், கணக்கு இலாத
இடங்களின் இடங்கள்தோறும் யாற்றெடும் எடுத்த எல்லாம்
அடங்கியது என்னில், என்னே! ஆழியின் ஆழ்ந்தது உண்டோ?

'விற் படை பெரிது என்கேனோ? வேற் படை மிகும் என்கேனோ?
மற் படை உடைத்து என்கேனோ? வாட் படை வலிது என்கேனோ?
கற்பணம், தண்டு, பிண்டிபாலம் என்று இனைய காந்தும்
நல் படை பெரிது என்கேனோ?—நாயகற்கு உரைக்கும் நாளில்.'

**குறுக்கிய வடிவுடன் அனுமன் பவளக் குன்றில் இருத்தல்**

என்றனன், இலங்கை நோக்கி, இனையன பலவும் எண்ணி-
நின்றனன்; 'அரக்கர் வந்து நேரினும் நேர்வர்' என்னா,
தன் தகை அனைய மேனி சுருக்கி, அச் சரளச் சாரல்
குன்றிடை இருந்தான்; வெய்யோன் குட கடல் குளிப்பது ஆனான். 42

36. குன்று - குலைவுபடாத; 38. பாணி தள்ளா - தாள முறை வழுவாத; 40. கலினமா - கடிவாளம் பூண்ட குதிரை; விலாழி - வாய்நுரை; 41. கற்பணம் - கப்பணம், யானை நெருஞ்சி முள் போல இரும்பினால் செய்த படை; தண்டு - கதை; பிண்டி பாலம் - ஒரு வகை எறிபடை; 42. சரளம் - அழகு-

இருள் பரவுதல்

எய் வினை இறுதி இல் செல்வம் எய்தினன்,
ஆய்வினை மனத்து இலான், அறிஞர் சொல் கொளான்,
வீவினை நினைக்கிலான், ஒருவன், மெய் இலான்,
தீவினை என, இருள் செறிந்தது எங்குமே. 43

கரித்த மூன்று எயிலுடைக் கணிச்சி வானவன்,
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை,
உரித்த பேர் உரிவையால் உலகுக்கு ஓர் உறை
புரித்தனனும் என, பொலியும் பொற்பதே. 44

அணங்கு அரா அரசர் கோன், அளவு இல் ஆண்டு எலாம்,
பணம் கிளர் தலைதொறும் உயிர்த்த பாய் விடம்
உணங்கல் இல் உலகு எலாம் முறையின் உண்டு வந்து,
இணங்கு எரி புகையொடும் எழுந்தது என்னவே, 45

வண்மை நீங்கா நெடு மரபின் வந்தவன்
பெண்மை நீங்காத கற்புடைய பேதையை,
திண்மை நீங்காதவன் சிறை வைத்தான் எனும்,
வெண்மை நீங்கிய புகழ் விரிந்தது என்னவே, 46

இருளிலும் அரக்கர் இயங்குதல்

அவ் வழி, அவ் இருள் பரந்த ஆயிடை,
எவ் வழி மருங்கினும் அரக்கர் எய்தினர்;
செவ் வழி மந்திரத் திசையர் ஆகையால்,
வெவ் வழி இருள் தர, மிதித்து, மீச்செல்வார். 47

இந்திரன் வள நகர்க்கு ஏகுவார்; எழில்
சந்திரன் உலகினைச் சார்குவார்; சலத்து
அந்தகன் உறையுளை அணுகுவார்; அயில்
வெந் தொழில் அரக்கனது ஏவல் மேயினர். 48

பொன்னகர் மடந்தையர், விஞ்சைப் பூவையர்,
பன்னக வனிதையர், இயக்கர் பாவையர்,
முன்னின பணி முறை மாறி முந்துவார்,
மின் இனம் மிடைந்தென, விசும்பின் மீச் செல்வார். 49

43. வீவினை - அழிவினை; 44. எரித்தலை - வேள்வித் தீயில்; அந்தணர் - தாருகாவனத்து முனிவர்; 46. வெண்மை நீங்கிய புகழ் - வெண்ணிறமில்லாத புகழ்; அஃதாவது கரு நிறமுள்ள பழி; 47. அவ் வழி - அவ்விடத்தில்; மந்திரத் திசையர் - மந்திரத்தினால் கருதிய திசைக்குச் செல்ல வல்லவர்; 49. மாறி - செய்து.

தேவரும், அவுணரும், செங் கண் நாகரும்,
மேவரும் இயக்கரும், விஞ்சை வேந்தரும்,
யாவரும், விசும்பு இருள் இரிய ஈண்டினர்,
தா அரும் பணி முறை தழுவும் தன்மையார். 50

சித்திரப் பத்தியின் தேவர் சென்றனர்,
'இத்துணைத் தாழ்த்தனம்; முனியும்' என்று, தம்
முத்தின் ஆரங்களும், முடியும், மாலையும்,
உத்தரீயங்களும், சரிய ஓடுவார். 51

**நிலவு தோன்றிப் பரவுதல்**

தீண்ட அருந் தீவினை தீக்கத் தீந்து போய்,
மாண்டு, அற உலர்ந்தது, மாருதிப் பெயர்
ஆண்தகை மாரி வந்து அளிக்க, ஆயிடை,
ஈண்டு அறம் முளைத்தென, முளைத்தது இந்துவே. 52

'வந்தனன் இராகவன் தூதன்; வாழ்ந்தனன்
எந்தையே இந்திரன் ஆம்' என்று ஏமுறு,
அந்தம் இல் கீழ்த் திசை அளக வாள் நுதல்
சுந்தரி முகம் எனப் பொலிந்து தோன்றிற்றே. 53

கற்றை வெண் கவரிபோல், கடலின் வெண் திரை
சுற்றும் நின்று அலமர, பொலிந்து தோன்றிற்றால்—
'இற்றது என் பகை' என, எழுந்த இந்திரன்
கொற்ற வெண் குடை எனக் குளிர் வெண் திங்களே. 54

தெரிந்து ஒளிர் திங்கள் வெண் குடத்தினால், திரை
முரிந்து உயர் பாற்கடல் முகந்து, மூரி வான்
சொரிந்ததே ஆம் என, துள்ளும் மீனொடும்
விரிந்தது, வெண் நிலா, மேலும் கீழுமே. 55

அருந் தவன் சுரபியே ஆதி வான்மிசை
விரிந்த பேர் உதயமா, மடி வெண் திங்களா,
வருந்தல் இல் பசுங் கதிர் வழங்கு தாரையா,
சொரிந்த பால் ஒத்தது நிலவின் தோற்றமே. 56

50. தா அரும் பணி - கெடுதல் இல்லாத குற்றேவல்கள்; 51. பத்தி - வரிசை; 55. தெரிந்து - தோன்றி; 56. தவன் - வசிட்டன்; சுரபி - காம தேனுவாகிய பசு; உதயமா - உதிக்கின்ற இடமாக.

எண்ணுடை அனுமன் மேல் இழிந்த பூ மழை
மண்ணிடை வீழ்கில, மறித்தும் போகில,
அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி, ஆய் கதிர்
விண்ணிடைத் தொத்தின போன்ற, மீன் எலாம். 57

எல்லியின் நிமிர் இருட் குறையும், அவ் இருள்
கல்லிய நிலவின் வெண் முறியும், கவ்வின;
புல்லிய பகை எனப் பொருவ போன்றன—
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டு எலாம். 58

வீசுறு பசுங் கதிர்க் கற்றை வெண் நிலா
ஆசுற எங்கணும் நுழைந்து அளாயது,
காசு உறு கடி மதில் இலங்கைக் காவல் ஊர்த்
தூசு உறை இட்டது போன்று தோன்றிற்றே. 59

இகழ்வு அரும் பெருங் குணத்து இராமன் எய்தது ஓர்
பகழியின் செலவு என, அனுமன் பற்றினுல்,
அகழ் புகுந்து, அரண் புகுந்து, இலங்கை, அன்னவன்
புகழ் புகுந்து உலாயது ஓர் பொலிவும் போன்றதே. 60

அனுமன் மதிலின் மாண்பு கண்டு வியத்தல்

அவ் வழி, அனுமனும், அணுகலாம் வகை
எவ் வழி என்பதை, உணர்வின் எண்ணினுன்;
செவ் வழி ஒதுங்கினன், தேவர் ஏத்தப் போய்,
வெவ் வழி அரக்கர் ஊர் மேவல் மேயினுன். 61

ஆழி அகழ் ஆக, அருகா அமரர் வாழும்
ஏழ் உலகின் மேலை வெளிகாறும் முகடு ஏறி,
கேழ் அரிய பொன் கொடு சமைத்த, கிளர் வெள்ளத்து
ஊழி திரி நாளும் உலையா, மதிலை உற்ருன். 62

' ''கலங்கல் இல் கடுங் கதிர்கள், மீது கடிது ஏகா,
அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி'' எனின், அன்ருல்;
இலங்கை மதில் இங்கு இதனை ஏறல் அரிது என்றே,
விலங்கி அகல்கின்றன, விரைந்து' என, வியந்தான். 63

'தெவ் அளவு இலாத; இறை தேறல் அரிது அம்மா!
அவ்வளவு அகன்றது அரண், அண்டம் இடை ஆக
எவ் அளவின் உண்டு வெளி! ஈறும் அது!' என்னு,
வெவ் வள அரக்கனை மனக் கொள வியந்தான். 64

59. ஆசுற - விரைவாக; தூசு - ஆடை; 60. பற்று - ஆதாரம்.

மடங்கல் அரிஏறும் மத மால் களிறும் நாண
நடந்து, தனியே புகுதும் நம்பி, நனி மூதூர்—
அடங்கு அரிய தானை அயில் அந்தகனது ஆணைக்
கடுந் திசையின் வாய் அனைய—வாயில் எதிர் கண்டான். 65

'மேருவை நிறுத்தி வெளி செய்ததுகொல்? விண்ணோர்
ஊர் புக அமைத்த படுகால்கொல்? உலகு ஏழும்
சோர்வு இல நிலைக்க நடு இட்டது ஒரு தூணோ?
நீர் புகு கடற்கு வழியோ?' என நினைந்தான். 66

'ஏழ் உலகின் வாழும் உயிர் யாவையும் எதிர்ந்தால்,
ஊழின் முறை இன்றி, உடனே புகும்; இது ஒன்றோ?
வாழியர் இயங்கு வழி ஈது என வகுத்தால்,
ஆழி உள ஏழின் அளவு அன்று பகை' என்றான். 67

**அனுமன் வாயில் காவலை வியத்தல்**

வெள்ளம் ஒரு நூறொடு இரு நூறும் மிடை வீரர்,
கள்ள வினை வெவ் வலி அரக்கர், இரு கையும்
முள் எயிறும் வாளும் உற, முன்னம் முறை நின்றார்;
எள் அரிய காவலினை அண்ணலும் எதிர்ந்தான். 68

சூலம், மழு, வாளொடு, அயில், தோமரம், உலக்கை,
கால வரி வில், பகழி, கப்பணம், முசுண்டி,
கோல், கணையம், நேமி, குலிசம், சுரிகை, குந்தம்,
பாலம், முதல் ஆயுதம் வலத்தினர் பரித்தார். 69

அங்குசம், நெடுங் கவண், அடுத்து உடல் விசிக்கும்
வெங் குசைய பாசம், முதல் வெய்ய பயில் கையர்;
செங் குருதி அன்ன செறி குஞ்சியர், சினத்தோர்,
பங்குனி மலர்ந்து ஒளிர் பலாச வனம் ஒப்பார்.* 70

அளக்க அரிது ஆகிய கணக்கொடு அயல் நிற்கும்
விளக்குஇனம் இருட்டினை விழுங்கி ஒளி கால,
உளக் கடிய காலன் மனம் உட்கும் மணி வாயில்
இளக்கம் இல் கடற்படை இருக்கையை எதிர்ந்தான். 71

65. புகுதும் - செல்லும்; 66. படுகால் - ஏணி, படிக்கட்டு; 67. வாழியர் - வாழ்பவர்; 70. குசைய - தருப்பைப் புல் போல அறுக்கவல்ல; பலாச வனம் - செம்முருக்க மரக் காடு; 71. இளக்கம் - தளர்ச்சி.

'எவ் அமரர், எவ் அவுணர், ஏவர் உளர்,—என்னே!—
கவ்வை முது வாயிலின் நெடுங் கடை கடப்பார்?
தெவ்வர் இவர்; சேமம் இது; சேவகனும் யாமும்
வெவ் அமர் தொடங்கிடின், எனுய் விளையும்?' என்றான். 72

கருங் கடல் கடப்பது அரிது அன்று; நகர் காவற்
பெருங் கடல் கடப்பது அரிது; எண்ணம் இறை பேரின்,
அருங் கடன் முடிப்பது அரிது ஆம்; அமர் கிடைக்கின்,
நெருங்கு அமர் விளைப்பர் நெடு நாள்' என நினைந்தான்.* 73

'வாயில் வழி சேறல் அரிது; அன்றியும், வலத்தோர்;
ஆயில், அவர் வைத்த வழி ஏகல் அழகு அன்றால்;
காய் கதிர் இயக்கு இல் மதிலைக் கடிது தாவிப்
போய், இந் நகர் புக்கிடுவென்' என்று, ஓர் அயல் போனான். 74

இலங்காதேவி அனுமனைத் தடுத்தல்

நாள் நாளும் தான் நல்கிய காவல் நனி மூதூர்
வாழ்நாள் அன்னாள்—போவதின் மேலே வழி நின்றாள்,
தூண் ஆம் என்னும் தோள் உடையானை,—சுடரோனைக்
காண வந்த கட்செவி என்னக் கனல் கண்ணாள். 75

எட்டுத் தோளாள்; நாலு முகத்தாள்; உலகு ஏழும்
தொட்டுப் பெரும் சோதி நிறத்தாள்; சுழல் கண்ணாள்;
முட்டிப் போரில், மூஉலகத்தை முதலோடும்
கட்டிச் சீறும் காலன் வலத்தாள்; கமை இல்லாள்; 76

பாரா நின்றாள், எண் திசைதோறும், 'பலர் அப்பால்
வாரா நின்றாரோ?' என; மாரி மழையேபோல்
ஆரா நின்றாள்; நூபுரம் அச்சம் தரு தாளாள்;
வேரா நின்றாள்; மின்னின் இமைக்கும் மிளிர் பூணாள்; 77

வேல், வாள், சூலம், வெங் கதை, பாசம், விளி சங்கம்,
கோல், வாள், சாபம், கொண்ட கரத்தாள்; வட குன்றம்
போல்வாள்; திங்கள்-போழின் எயிற்றாள்; புகை வாயில்
கால்வாள்; காணின், காலனும் உட்கும் கதம் மிக்காள். 78

73. எண்ணம் - ஆலோசனை; பேரின் - தவறினால்; 75. கட்செவி - பாம்பு; 76. கமை - பொறுமை; 77. ஆரா - ஆர்த்து; வேரா - வியர்த்து.

அஞ்சு வணத்தின் ஆடை உடுத்தாள்; அரவு எல்லாம்
அஞ்சு உவணத்தின் வேகம் மிகுத்தாள்; அருள் இல்லாள்;
அம் சுவணத்தின் உத்தரியத்தாள்; அலை ஆரும்
அம்சு வள் நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணி கொண்டாள்;†

சிந்து ஆரத்தின் செச்சை அணிந்தாள்; தெளி நூல் யாழ்
அம் தாரத்தின் நேர் வரு சொல்லாள்; அறை தும்பி
கந்தாரத்தின் இன் இசை பன்னிக் களி கூரும்
மந்தாரத்தின் மாலை அலம்பும் மகுடத்தாள்; 80

எல்லாம் உட்கும் ஆழி இலங்கை இகல் மூதூர்
நல்லாள்; அவ் ஊர் வைகு உறை ஒக்கும் நயனத்தாள்;—
'நில்லாய்! நில்லாய்!' என்று உரை நேரா, நினையாமுன்
வல்லே சென்றாள்; மாருதி கண்டான், 'வருக' என்றான். 81

'ஆகா செய்தாய்! அஞ்சலை போலும்? அறிவு இல்லாய்!
சாகா மூலம் தின்று உழல்வார்மேல் சலம் என் ஆம்?
பாகு ஆர் இஞ்சிப் பொன் மதில் தாவிப் பகையாதே;
போகாய்' என்றாள்—பொங்கு அழல் என்னப் புகை கண்ணாள்.

**அனுமனும் இலங்காதேவியும் உரையாடுதல்**

களியா உள்ளத்து அண்ணல், மனத்தில் கதம் மூள,
விளியா நின்றே, நீதி நலத்தின் வினை ஓர்வான்,
'அளியால் இவ் ஊர் காணும் நலத்தால் அணைகின்றேன்;
எளியேன் உற்றால், யாவது உனக்கு இங்கு இழவு?' என்றான்.

என்னுமுன்னம், ' ''ஏகு'' என, ஏகாது, எதிர் மாற்றம்
சொன்னாயே? நீ யாவன் அடா? தொல் புரம் அட்டான்
அன்னாரேனும் அஞ்சுவர், எய்தற்கு; அளி உற்றால்,
உன்னால் எய்தும் ஊர்கொல் இவ் ஊர்?' என்று, உற நக்காள்.

நக்காளைக் கண்டு, ஐயன், மனத்து ஓர் நகை கொண்டான்;
'நக்காய்! நீ யார்? ஆர் சொல வந்தாய்? உனது ஆவி
உக்கால் ஏது ஆம்? ஓடலை?' என்றாள்; 'இனி, இவ் ஊர்
புக்கால் அன்றிப் போகலென்' என்றான், புகழ் கொண்டான்.

79. அஞ்சுவணம் - வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை ஆகிய ஐந்து நிறங்கள்; உவணம் - கருடன்; சுவணம் - பொன்; அம்சு வள் நத்து - கடல் நீரில் உள்ள அழகிய சங்கு; 80. செச்சை - குழம்பு; தாரம் - ஏழிசையுள் ஒன்று; மந்தாரம் - தேவருலக மரம்; 82. சாகா மூலம் - இலையும் வேரும்; பாகு - பாங்கு, அழகு; 83. அளி - விருப்பம்; நலம் - நல்லெண்ணம்.

இலங்காதேவி அனுமனுடன் பொருதல்

'வஞ்சம் கொண்டான்; வானரம் அல்லன்; வரு காலன்
துஞ்சும், கண்டால் என்னை; இவன் சூழ் திரை ஆழி
நஞ்சம் கொண்ட கண்ணுதலைப்போல் நகுகின்றான்'
நெஞ்சம் கண்டே, கல் என நின்றே, நினைகின்றாள்: 86

'கொல்வாம்; அன்றேல், கோளுறும் இவ் ஊர்' எனல் கொண்டாள்,
'வெல்வாய் நீயேல், வேறி' என, தன் விழிதோறும்,
வல் வாய்தோறும், வெங் கனல் பொங்க, மதி வானில்
செல்வாய்' என்னு, மூவிலைவேலைச் செல விட்டாள்.* 87

தடித்து ஆம் என்னத் தன் எதிர் செல்லும் தழல் வேலைக்
கடித்தான், நாகம் விண்ணில் முரிக்கும் கலுழன்போல்,
ஒடித்தான் கையால்—உம்பர் உவப்ப, உயர் காலம்
பிடித்தாள் நெஞ்சம் துண்ணென,—எண்ணம் பிழையாதான்.

இற்றுச் சூலம் நீறு எழல் காணு, எரி ஒப்பாள்,
மற்றும் தெய்வப் பல் படை கொண்டே மலைவானை
உற்று, கையால், ஆயுதம் எல்லாம் ஒழியாமல்
பற்றிக் கொள்ளா, விண்ணில் எறிந்தான், பழி இல்லான்.* 89

வழங்கும் தெய்வப் பல் படை காணாள், மலைவான்மேல்,
முழங்கும் மேகம் என்ன முரற்றி முனிகின்றாள்—
கழங்கும் பந்தும் குன்றுகொடு ஆடும் கரம் ஓச்சித்
தழங்கும் செந் தீச் சிந்த அடித்தாள்—தகவு இல்லாள். 90

அடியாமுன்னம், அம் கை அனைத்தும் ஒரு கையால்
பிடியா, 'என்னே? பெண் இவள்; கொல்லின் பிழை' என்னு,
ஒடியா நெஞ்சத்து ஓர் அடி கொண்டான்; உயிரோடும்,
இடிஏறு உண்ட மால் வரைபோல், மண்ணிடை வீழ்ந்தாள். 91

விழுந்தாள் நொந்தாள்; வெங் குருதிச் செம் புனல் வெள்ளத்து
அழுந்தாநின்றாள்; நான்முகனார்தம் அருள் ஊன்றி
எழுந்தாள்; யாரும், யாவையும், எல்லா உலகத்தும்,
தொழும் தாள் வீரன் தூதுவன் முன் நின்று, இவை சொன்னாள்: 92

87. கோளுறும் - அழிவு அடையும்; 88. தடித்து - மின்னல்; உயர் காலம் - நெடுங்காலம் 91. ஒடியா நெஞ்சம் - தளராத மார்பு.

இலங்காதேவி தன் வரலாறு கூறல்

'ஐய! கேள்; வையம் நல்கும் அயன் அருள் அமைதி ஆக
எய்தி, இம் மூதூர் காப்பென்; இலங்கைமாதேவி என் பேர்;
செய் தொழில் இழுக்கினுலே திகைத்து, இந்தச் சிறுமை செய்தேன்;
''உய்தி'' என்று, அளித்தி ஆயின், உணர்த்துவல் உண்மை' என்ருள்.

'எத்தனை காலம் காப்பல், யான் இந்த மூதூர்? என்று, அம்
முத்தனை வினவினேற்கு,''முரண் வலிக் குரங்கு ஒன்று உன்னைக்
கைத்தலம்அதனுல் திண்டிக் காய்ந்த அன்று, என்னைக் காண்டி;
சித்திர நகரம், பின்னை, சிதைவது திண்ணம்'' என்ருன். 94

'அன்னதே முடிந்தது; ஐய, ''அறம் வெல்லும்; பாவம் தோற்கும்''
என்னும் ஈது இயம்ப வேண்டும் தகையதோ? இனி, மற்று, உன்னுல்
உன்னிய எல்லாம் முற்றும்; உனக்கும் முற்ருதது உண்டோ?
பொன் நகர் புகுதி' என்னுப் புகழ்ந்து, அவள் இறைஞ்சிப் போனுள்.

இலங்கையுள் அனுமன் புகுதல்

வீரனும், விரும்பி நோக்கி, 'மெய்ம்மையே; விளைவும் அஃது' என்று,
ஆரியன் கமல பாதம் அகத்து உற வணங்கி, ஆண்டு, அப்
பூரியர் இலங்கை மூதூர்ப் பொன் மதில் தாவிப் புக்கான்—
சீரிய பாலின் வேலைச் சிறு பிரை தெறித்தது அன்னுன். 96

இலங்கையின் ஒளியை வியத்தல்

வான் தொடர், மணியின் செய்த, மை அறு, மாட கோடி
ஆன்ற பேர் இருளைச் சீத்துப் பகல் செய்த அழகை நோக்கி,
'ஊன்றிய உதயத்து உச்சி ஒற்றை வான் உருளைத் தேரோன்
தோன்றினன்கொல்லோ?' என்னு, அறிவனும் துணுக்கம் கொண்டான்.

'மொய்ம் மணி மாட மூதூர் முழுது இருள் அகற்ருநின்ற
மெய்ம்மையை உணர்ந்து, நாணு, ''மிகை'' என விலங்கிப் போனுன்;
இம் மதில் இலங்கை நாப்பண் எய்துமேல், தன் முன் எய்தும்.
மின்மினி அல்லனே, அவ் வெயில் கதிர் வேந்தன்? அம்மா!' 98

'பொசிவுறு பசும் பொன் குன்றில், பொன் மதில் நடுவண் பூத்து,
வசை அற விளங்கும் சோதி மணியினுல் அமைந்த மாடத்து
அசைவு இல் இவ் இலங்கை மூதூர் ஆர் இருள் இன்மையாலோ,
நிசிசரர் ஆயிற்று அம்மா, நெடு நகர் நிருதர் எல்லாம்! 99

94. முத்தன் - பற்றற்ற நான்முகன்; 96. சிறு பிரை - சிறிய உறை மோர்த் துளி; 99. பொசிவு - நெகிழ்வு; அசைவு - அழிவு; நிசிசரர் - இரவில் திரிவோர்.

**அனுமன் மறைந்து செல்லுதல்**

என்றனன் இயம்பி, 'வீதி ஏகுதல் இழுக்கம்' என்னு,
தன் தகை அனைய மேனி சுருக்கி, மாளிகையில் சார,
சென்றனன்—என்ப மன்னே—தேவருக்கு அமுதம் ஈந்த
குன்று என, அயோத்தி வேந்தன் புகழ் என, குலவு தோளான்.

ஆத் துறு சாலைதோறும், ஆனையின் கூடம்தோறும்
மாத் துறு மாடம்தோறும், வாசியின் பந்திதோறும்,
காத்து உறு சோலைதோறும், கருங் கடல் கடந்த தாளான்,
பூத்தொறும் வாவிச் செல்லும் பொறி வரி வண்டின், போனுன். 101

பெரிய நாள் ஒளி கொள் நானுவித மணிப் பித்திப் பத்தி
சொரியும் மா நிழல் அங்கங்கே சுற்றலால், காலின்தோன்றல்,
கரியன் ஆய், வெளியன் ஆகி, செய்யன் ஆய், காட்டும்—காண்டற்கு
அரியன் ஆய், எளியன் ஆய், தன் அகத்து உறை அழகனேபோல். 102

**சீதையைத் தேடும் அனுமன் பற்பல நிலையிலுள்ள அரக்கர்களைக் காணுதல்**

ஈட்டுவார், தவம் அலால் மற்று ஈட்டினுல், இயைவது இன்மை
காட்டினுர் விதியார்; அஃது காண்கிற்பார் காண்மின் அம்மா!—
பூட்டு வார் முலை பொருத பொய் இடை நைய, பூ நீர்
ஆட்டுவார் அமரர் மாதர்; ஆடுவார் அரக்கர் மாதர்.† 103

கானக மயில்கள் என்ன, களி மட அன்னம் என்ன,
ஆனனக் கமலப் போது பொலிதர, அரக்கர் மாதர்,
தேன் உகு சரளச் சோலை, தெய்வ நீர் ஆற்றின் தெண் நீர்,
வானவர் மகளிர் ஆட்ட, மஞ்சனம் ஆடுவாரை— 104

'இலக்கண மரபிற்கு ஏற்ற எழு வகை நரம்பின் நல் யாழ்,
அலத்தகத் தளிர்க்கை நோவ, அளந்து எடுத்து அமைத்த பாடல்
கலக்குற முழங்கிற்று' என்று, கன்னியர் சேடிமார்கள்,
மலர்க்கையால், மாடத்து உம்பர் மழையின் வாய் பொத்துவாரை—105

சந்தப் பூம் பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில், தம்தம்
சிந்தித்தது உதவும் தெய்வ மணி விளக்கு ஒளிரும் சேக்கை,
வந்து ஒத்தும் நிருத மாக்கள் விளம்பின நெறி வழாமை
கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம் காண்கின்ருரை— 106

100. குன்று - மந்தர மலை; 101. ஆத் துறு சாலை - பசுக்கள் நிரம்பிய கொட்டில்கள்; மாத் துறு மாடம் - பெரியனவாகிய தேர்கள் நிற்கும் இடம்; வாசியின் பந்தி - குதிரைகள் உள்ள சாலைகள்; 102. பித்திப் பத்தி - சுவர் வரிசைகள்; 104. ஆனனம் - முகம்.

திருத்திய பளிக்கு வேதி, தெள்ளிய வேல்கள் என்ன,
கருத்து இயல்பு உரைக்கும் உண் கண் கருங் கயல், செம்மை காட்ட,
வருத்திய கொழுநர்தம்பால் வரம்பு இன்றி வளர்ந்த காம
அருத்திய பயிர்க்கு நீர்போல், அரு நறவு அருந்துவாரை—107

கோது அறு குவளை நாட்டம் கொழுநர் கண் வண்ணம் கொள்ள,
தூதுளங் கனியை வென்று துவர்த்த வாய் வெண்மை தோன்ற,
மாதரும் மைந்தர்தாமும், ஒருவர்பால் ஒருவர் வைத்த
காதல்அம் கள் உண்டார்போல், முறை முறை களிக்கின்றாரை—

வில் படர் பவளப் பாதத்து அலத்தகம் எழுதி, மேனி
பொற்பு அளவு இல்லா வாசப் புனை நறுங் கலவை பூசி,
அற்புத வடிக் கண் வாளிக்கு அஞ்சனம் எழுதி, அம் பொற்
கற்பகம் கொடுக்க வாங்கி, கலன் தெரிந்து அணிகின்றாரை—

புலி அடு மதுகை மைந்தர் புதுப் பிழை உயிரைப் புக்கு
நலிவிட, அமுத வாயால் நச்சு உயிர்த்து, அயில் கண் நல்லார்,
மெலிவுடை மருங்குல் மின்னின் அலமர, சிலம்பு விம்மி
ஒலிபட, உதைக்கும்தோறும், மயிர்ப் புளகு உறுகின்றாரை—

உள்ளுடை மயக்கால் உண் கண் சிவந்து, வாய் வெண்மை ஊறி,
துள் இடைப் புருவம் கோட்டித் துடிப்ப, வேர் பொடிப்ப, தூய
வெள்ளிடை மருங்குலார், தம் மதி முகம் வேறு ஒன்று ஆகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கி, கணவரைக் கனல்கின்றாரை—

ஆலையில், மலரில் சாரல் முழையினில், அமுத வாரிச்
சோலையில், துவசர் இல்லில், சோனகர் மனையில், தூய
வேலையில், கொள ஒணாத, வேற்கணார் குமுதச் செவ் வாய்
வால் எயிற்று ஊறு, தீம் தேன் மாந்தினர் மயங்குவாரை—

நலன் உறு கணவர்தம்மை நவை உறப் பிரிந்து, விம்மும்
முலை உறு கலவை தீய, முள் இலா முளரிச் செங் கேழ்
மலர்மிசை மலர் பூத்தென்ன, மலர்க்கையால் வதனம் தாங்கி,
அலமரும் உயிரினோடும் நெடிது உயிர்த்து அயர்கின்றாரை—113

107. வேதி - மேடை; அருத்திய - ஊட்டி வளர்க்குமாறு ஏற்பட்ட; 109. வில் - ஒளி; 110. மதுகை - வலிமை; புளகு - சிலிர்ப்பு; 111. துள் இடை - துடிக்கும்போது; வெள்ளிடை மருங்குல் - வானம் போல வடிவு தோன்றாத இடை; 112. துவசர் - கள் விற்பவர்; சோனகர் - மிலேச்சர்.

ஏதிஅம் கொழுநர் தம்பால் எய்திய காதலாலே,
தாது இயங்கு அமளிச் சேக்கை, உயிர் இலா உடலின் சாய்வார்,
மா துயர்க் காதல் தூண்ட, வழியின்மேல் வைத்த கண்ணர்,
தூதியர் முறுவல் நோக்கி, உயிர் வந்து துடிக்கின்றாரை— 114

சங்கொடு, சிலம்பும், நூலும், பாத சாலகமும் தாழ,
பொங்கு பல் முரசம் ஆர்ப்ப, இல் உறை தெய்வம் போற்றி,
கொங்கு அலர் கூந்தல், செவ் வாய், அரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட, மலர்ப் பலி வகுக்கின்றாரை— 115

இழை தொடர் வில்லும் வாளும் இருளொடு மலைய, யாணர்க்
குழை தொடர் நயனம் கூர் வேல் குமரர் நெஞ்சு உருவக் கோட்டி,
முழை தொடர் சங்கு, பேரி, முகில் என முழங்க, மூரி
மழை தொடர் மஞ்ஞை என்ன, விழாவொடு வருகின்றாரை—

பள்ளியில், மைந்தரோடும் ஊடிய பண்பு நீங்கி,
ஒள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற்கு உருத்த நெஞ்சர்,
மெள்ளவே இமையை நீக்கி, அஞ்சன இழுது வேய்ந்த
கள்ள வாள் நெடுங் கண் என்னும் வாள் உறை கழிக்கின்றாரை—

ஓவியம் அனைய மாதர் ஊடினர், உணர்வோடு உள்ளம்
மேவிய கரணம் மற்றும் கொழுநரோடு ஒழிய, யாணர்த்
தூவி அம் பேடை என்ன, மின் இடை துவள, ஏகி,
ஆவியும் தாமுமே புக்கு, அருங் கதவு அடைக்கின்றாரை—118

கின்னர மிதுனம் பாட, கிளர் மழை கிழித்துத் தோன்றும்
மின் என, தரளம் வேய்ந்த வெண் நிற விமானம் ஊர்ந்து,
பன்னக மகளிர் சுற்றிப் பலாண்டு இசை பரவ, பண்ணைப்
பொன் நகர் வீதிதோறும்; புது மனை புகுகின்றாரை— 119

கோவையும் குழையும் மின்ன, கொண்டலின் முரசம் ஆர்ப்ப,
தேவர் நின்று ஆசி கூற, முனிவர் சோபனங்கள் செப்ப,
பாவையர் குழாங்கள் சூழ, பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூற, புது மணம் புணர்கின்றாரை— 120

114. ஏதி - படைக்கலன்; தூதியர் - தூது விடப்பட்ட மகளிர்; 115. நூல் - நூலாற் கட்டிய மேகலை; பாத சாலகம் - பாதசரம் என்னும் காலணி; 116. முழை - உள் துளை; 117. உருத்த - எழுந்த; 118. உள்ளம் மேவிய கரணம் முற்றும் - அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை முற்றும்; 119. பண்ணை - மகளிர் கூட்டம்; பொன்னகர் - அழகிய இலங்கை; 120. சோபனம் - மங்கல வாழ்த்து.

அனுமன் கும்பகருணனைக் காணுதல்

இயக்கியர், அரக்கிமார்கள், நாகியர், எஞ்சு இல் விஞ்சை
முயல் கறை இலாத திங்கள் முகத்தியர், முதலினோரை—
மயக்கு அற நாடி ஏகும் மாருதி, மலையின் வைகும்,
கயக்கம் இல் துயிற்சிக் கும்பகருணனைக் கண்ணின் கண்டான்;

ஓசனை ஏழ் அகன்று உயர்ந்தது; உம்பரின்
வாசவன் மணி முடி கவித்த மண்டபம்
ஏசுற விளங்கியது; இருளை எண் வகை
ஆசையின் நிலைகெட, அலைக்கல் ஆன்றது. 122

அன்னதன் நடுவண், ஓர் அமளி மீமிசை,
பன்னக அரசு என, பரவைதான் என,
துன் இருள் ஒருவழித் தொக்கது ஆம் என,
உன்ன அருந் தீவினை உருக் கொண்டென்னவே, 123

முன்னிய கனை கடல் முழுகி, மூவகைத்
தன் இயல் கதியொடு தழுவி, தாது உகு
மன் நெடுங் கற்பக வனத்து வைகிய
இன் இளந் தென்றல் வந்து இழுகி ஏகவே, 124

வானவர் மகளிர் கால் வருட, மா மதி
ஆனனம் கண்ட, மண்டபத்துள் ஆய் கதிர்க்
கால் நகு, காந்தம் மீக் கான்ற காமர் நீர்த்
தூ நிற நறுந் துளி முகத்தில் தூற்றவே, 125

மூசிய உயிர்ப்பு எனும் முடுகு வாதமும்,
வாசலின் புறத்திடை நிறுவி, வன்மையால்,
நாசியின் அளவையின் நடத்த, கண்டவன்
கூசினன்; குதித்தனன், விதிர்த்த கையினன். 126

பூழியின் தொகை விசும்பு அணவப் போய்ப் புகும்
கேழ் இல் வெங் கொடியவன் உயிர்ப்பு—கேடு இலா
வாழிய உலகு எலாம் துடைக்கும் மாருதம்
ஊழியின் வரவு பார்த்து உழல்வது ஒத்ததே. 127

121. மலையின் - மலை போல; கயக்கம் - கலக்கம்; 122. வாசவன் - இந்திரன்; முடி கவித்த மண்டபம் - முடி சூடிக்கொள்ளும் சுதர்மை என்னும் மண்டபம்; ஏசுற - இகழ்ச்சியுறும்படி; 123. பன்னக அரசு - ஆதிசேடன்; 124. முன்னிய - முன்னுள்ள; கதி - நடை; இழுகி - உராய்ந்து; 125. ஆனனம் - முகம்; கால் - தூண்; 126. மூசிய - அடர்ந்த; முடுகு வாதம் - விரைந்து செல்லும் காற்று; 127. பூழியின் தொகை - புழுதியின் கூட்டம்; கேழ் - ஒப்பு.

பகை என, மதியினைப் பகுத்து, பாடு உற
அகை இல் பேழ் வாய் மடுத்து அருந்துவான் என,
புகையொடு முழங்கு பேர் உயிர்ப்புப் பொங்கிய
நகை இலா முழு முகத்து எயிறு நாறவே, 128

தடை புகு மந்திரம் தகைந்த நாகம்போல்,
இடை புகல் அரியது ஓர் உறக்கம் எய்தினன்—
கடை யுக முடிவு எனும் காலம் பார்த்து, அயல்
புடை பெயரா நெடுங் கடலும் போலவே. 129

**அனுமன், 'இராவணனோ?' எனச் சினந்து, அல்லன் என்று தணிதல்**

ஆவது ஆகிய தன்மைய அரக்கனை, 'அரக்கர்
கோ எனு நின்ற குணம்இலி இவன்' எனக் கொண்டான்;
கா வல் நாட்டங்கள் பொறி உக, கனல் எனக் கனன்றான்;
'ஏவனோ இவன்? மூவரின் ஒருவன் ஆம் ஈட்டான்!' 130

குறுகி நோக்கி, மற்று, 'அவன் தலை ஒருபதும், குறித்த
இறுகு திண் புயம் இருபதும், இவற்கு இலை' என்னு,
மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெங் கனலை,
அறிவு எனும் பெரும் பரவைஅம் புனலினால், அவித்தான். 131

**வேறு இடங்களில் தேடுதல்**

அவித்து நின்று, 'எவன் ஆயினும் ஆக' என்று, அங்கை
கவித்து, 'நீங்கிடச் சில பகல்' என்பது கருதா,
செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன், அனையவன் உறையுளைக் கடந்தான். 132

மாட கூடங்கள், மாளிகை ஒளிகை, மகளிர்
ஆடு அரங்குகள், அம்பலம், தேவர் ஆலயங்கள்,
பாடல் வேதிகை, பட்டிமண்டபம், முதல் பலவும்
நாடி ஏகினன்—இராகவன் புகழ் எனும் நலத்தான்.* 133

மணி கொள் வாயிலில், சாளரத் தலங்களில், மலரில்,
கணிகொள் நாளத்தில், கால் என, புகை என, கலக்கும்;
நுணுகும், வீங்கும்;—மற்று அவன் நிலை யாவரே நுவல்வார்?
அணுவில் மேருவில் ஆழியான் எனச் செலும், அனுமன். 134

128. அகை இல் பேழ் வாய் - கெடாத பெருத்த வாய்; 129. தகைந்த - கட்டுப்பட்ட; 130. காவல் - (தன்னைச் சரண் அடைந்தவர்களைக்) காக்க வல்ல; ஈட்டான் - பெருமையுடையவன்; 132. நீங்கிட - அழிதற்கு; திருத்தும் - சொல்லும்; 133. ஒளிகை - வரிசை; வேதிகை - மேடைகள்; 134. கணி கொள் நாளம் - ஊன்றி உணரத்தக்க பூந்தண்டுகளின் உள்துளை; ஆழியான் - திருமால்.

வீடணன் மாளிகை புக்கு, அவன் நல்லன் எனத் தேர்ந்து செல்லுதல்

ஏந்தல், இவ் வகை, எவ் வழிமருங்கினும் எய்தி,
காந்தன் மெல் விரல் மடந்தையர் யாரையும் காண்பான்,
வேந்தர், வேதியர், மேல் உளோர், கீழ் உளோர், விரும்பப்
போந்த புண்ணியன் கண் அகன் கோயிலுள் புக்கான். 135

'பளிக்கு வேதிகைப் பவளத்தின் கூடத்து, பசுந் தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில், கருநிறத்தோர்பால்
வெளித்து வைகுதல் அரிது' என, அவர் உரு மேவி,
ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான்தனை உற்றான். 136

உற்று நின்று, அவன் உணர்வைத் தன் உணர்வினால் உணர்ந்தான்;
'குற்றம் இல்லது ஓர் குணத்தினன் இவன்' எனக் கொண்டான்;
செற்றம் நீங்கிய மனத்தினன், ஒரு சிறைச் சென்றான்;
பொற்றை மாடங்கள் கோடி ஓர் நொடியிடைப் புக்கான். 137

உறங்கும் இந்திரசித்தின் வீரப் பொலிவை வியந்து மேற்செல்லல்

முந்து அரம்பையர் முதலினர், முழுமதி முகத்துச்
சிந்துரம் பயில் வாய்ச்சியர், பலரையும் தெரிந்து,
மந்திரம் பல கடந்து, தன் மனத்தின் முன் செல்வான்,
இந்திரன் சிறை இருந்த வாயிலின் கடை எதிர்ந்தான். 138

ஏதி ஏந்திய தடக் கையர், பிறை எயிறு இலங்க
மூதுரைப் பெருங் கதைகளும் பிதிர்களும் மொழிவார்,
ஓதில், ஆயிரம் ஆயிரம் உறு வலி அரக்கர்,
காது வெஞ் சினக் களியினர், காவலைக் கடந்தான். 139

முக்கண் நோக்கினன் முதல் மகன் அறுவகை முகமும்,
திக்கு நோக்கிய புயங்களும், சில கரந்தனையான்
ஒக்க, நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானைப்
புக்கு நோக்கினன்—புகை புகா வாயிலும் புகுவான். 140

'வளையும் வாள் எயிற்று அரக்கனோ? கணிச்சியான் மகனோ?—
அளையில் வாள் அரி அனையவன்—யாவனோ? அறியேன்;
இளைய வீரனும், ஏந்தலும், இருவரும், பலநாள்
உளைய உள்ள போர் இவனொடும் உளது' என உணர்ந்தான்.

136. வெளித்து வைகுதல் - வெளிப்படையாய்த் தனக்கு உரிய வெண்ணிற உருக்கொண்டு வாழ்தல்; 137. அவன் உணர்வை - வீடணனது மனப் பண்பை; தன் உணர்வு - தன் நுண்ணறிவு; பொற்றை மாடங்கள் - மலை போன்ற மாளிகைகள்; 138. சிந்துரம் - சிவப்பு நிறம்; மந்திரம் - மாளிகை; 139. ஏதி - ஆயுதம்; பிதிர் - விடுகதை; 140. முதல் மகன் - சிறந்த மகன், ஈண்டு முருகன்.

'இவனை இன் துணை உடைய போர் இராவணன், என்னே,
புவனம் மூன்றையும் வென்றது ஓர் பொருள் எனப் புகறல்?
சிவனை, நான்முகத்து ஒருவனை, திரு நெடுமால் ஆம்
அவனை, அல்லவர் நிகர்ப்பவர் என்பதும், அறிவோ? 142

என்று, கைம் மறித்து, 'இடை நின்று காலத்தை இகப்பது
அன்று; போவது' என்று, ஆயிரம் ஆயிரத்து அடங்காத்
துன்று மாளிகை ஒளிகள் துரிசு அறத் துருவிச்
சென்று தேடினன், இந்திரசித்தினைத் தீர்ந்தான். 143

அக்கன் மாளிகை கடந்து போய், மேல், அதிகாயன்
தொக்க கோயிலும் தம்பியர் இல்லமும் துருவி,
தக்க மந்திரத் தலைவர் மா மனைகளும் தாவிப்
புக்கு நீங்கினன், இராகவன் சரம் என, புகழோன்.* 144

இடைநகர் அகழியைக் கண்டு, அனுமன் வியத்தல்

இன்னர் ஆம் இரும் பெரும் படைத் தலைவர்கள் இருக்கைப்
பொன்னின் மாளிகை ஆயிர கோடியும் புக்கான்,
கன்னி மா நகர்ப்புறத்து அகன் கரந்துறை காண்பான்,
சொன்ன மூன்றினுள் நடுவணது அகழியைத் தொடர்ந்தான்.

தனிக் கடக் களிறு என ஒரு துணை இலான் தாய
'பனிக் கடல் பெருங் கடவுள்தன் பரிபவம் துடைப்பான்,
இனி, கடப்ப அரிது ஏழ் கடல் கிடந்தது' என்று, இசைத்தான்—
கனிக்கு அடல் கதிர் தொடர்ந்தவன், அகழியைக் கண்டான்.

' ''பாழி நல் நெடுங் கிடங்கு எனப் பகர்வரேல்'' பல் பேர்,
ஊழிகாலம் நின்று, உலகு எலாம் கல்லினும் உலவாது;
ஆழி வெஞ் சினத்து அரக்கனை அஞ்சி, ஆழ் கடல்கள்
ஏழும், இந் நகர் சுலாயகொலாம்' என, இசைத்தான். 147

ஆயது ஆகிய அகன் புனல் அகழியை அடைந்தான்,
'தாய வேலையின் இரு மடி விசைகொடு தாவிப்
போய காலத்தும் போக்கு அரிது' என்பது புகன்றான்—
நாயகன் புகழ் நடந்த பேர் உலகு எலாம் நடந்தான். 148

143. துரிசு - ஐயம் திரிபு என்னும் குற்றம்; தீர்ந்தான் - நீங்கினான்; 144. அக்கன் - அட்சகுமாரன், இராவணனுக்கு மண்டோதரியிடம் பிறந்த இளைய மகன்; அதிகாயன் - இராவணனுக்குத் தானியமாலினியிடம் பிறந்தவன், பெரிய உடம்பையுடையவன் என்ப பொருள்; 145. கரந்துறை - ஒளிப்பிடம்; 146. கடல் பெருங் கடவுள் - வருண தேவன்; பரிபவம் - மானக்கேடு; 147. பாழி - அகலம்; சுலாய - சூழ்ந்தன; 148. இருமடி - இருமடங்கு.

### இடைநகர் அகழியின் ஏற்றம்

மேக்கு நால் வகை மேகமும் கீழ் விழத்
தூக்கினுலன்ன தோயத்ததுஆய், துயர்
ஆக்கினுன் படை அன்ன அகழியை,
வாக்கினுல் உரைவைக்கலும் ஆகுமோ? 149

ஆனை மும் மதமும், பரி ஆழியும்,
மான மங்கையர் குங்கும வாரியும்,
நானம் ஆர்ந்த நறைக் குழல் ஆவியும்,
தேனும், ஆரமும், தேய்வையும், நாறுமால், 150

உன்னம், நாரை, மகன்றில், புதா, உளில்,
அன்னம், கோழி, வண்டானங்கள், ஆழிப்புள்,
கின்னரம், குரண்டம், கிலுக்கம், சிரல்,
சென்னம், காகம், குணுலம், சிலம்புமே. 151

நலத்த மாதர் நறை அகில், நாவியும்,
அலத்தகக் குழம்பும், செறிந்து, ஆடிய
இலக்கணக் களிறோடு, இள மெல் நடைக்
குலப் பிடிக்கும், ஓர் ஊடல் கொடுக்குமால். 152

நறவு நாறிய நாள் நறுந் தாமரை
துறைகள்தோறும் முகிழ்த்தன தோன்றுமால்—
சிறையின் எய்திய செல்வி முகத்திேனுடு
உறவு தாம் உடையார் ஒடுங்கார்களோ? 153

பளிங்கு செற்றிக் குயிற்றிய பாய் ஒளி
விளிம்பும், வெள்ளமும், மெய் தெரியாது, மேல்—
தெளிந்த சிந்தையரும், சிறியார்களோடு
அளிந்தபோது, அறிதற்கு எளிது ஆவரோ? 154

நீலமே முதல் நல் மணி நித்திலம்,
மேல கீழ, பல் வேறு ஒளி வீசலால்,
'பாலின் வேலே முதல் பல வேலேயும்
கால் கலந்தனவோ?' என, காட்டுமே. 155

149. மேக்கு - மேலிடம், வானம்; தோயம் - நீர்; 150. ஆழி - விலாழி, வாய் நுரை; நானம் - கத்தூரிக் குழம்பு; 151. உன்னம் - அன்னப் பறவையுள் ஒருவகை; புதா - பெருநாரை; உளில் - உள்ளான்; வண்டானம் - நாரையில் ஒருவகை; ஆழிப்புள் - சக்கரவாளம்; குரண்டம் - கொக்கு; கிலுக்கம், சென்னம், குணுலம் என்பன நீர்ப்பறவை இனங்கள்; 153. முகிழ்த்தல் - குவிதல்; 154. செற்றி - செதுக்கி; 155. கால் - காற்று.

**அனுமன் அகழியைக் கடந்து, இடைநகருள் தேடுதல்**

அன்ன வேலே அகழியை, ஆர்கலி
என்னவே கடந்து, இஞ்சியும் பிற்பட,
துன்ன அருங் கடி மா நகர் துன்னினுன்;
பின்னர் எய்திய தன்மையும், பேசுவாம்: 156

கரிய நாழிகை பாதியில், காலனும்
வெருவி ஓடும் அரக்கர்தம் வெம் பதி,
ஒருவனே, ஒரு பன்னிரு யோசனேத்
தெருவு மும்மை நூருயிரம் தேடினுன். 157

வேரியும் அடங்கின; நெடுங் கடல் விளம்பும்,
பாரியும் அடங்கின; அடங்கியது பாடல்;
காரியம் அடங்கினர்கள், கம்மியர்கள்; மும்மைத்
தூரியம் அடங்கின; தொடங்கியது உறக்கம். 158

இறங்கின, நிறம் கொள் பரி; ஏமம் உற எங்கும்
கறங்கின, மறம் கொள் எயில் காவலர் துடிக் கண்;
பிறங்கு இணர் நறுங் குழலர் அன்பர் பிரியாதோர்,
உறங்கினர், பிணங்கி எதிர் ஊடினவர் அல்லார்.* 159

வடம் தரு தடங் கொள் புய மைந்தர், கலவிப் போர்
கடந்தனர்; இடைந்தனர், களித்த மயில் போலும்
மடந்தையர் தடந் தன முகட்டிடை மயங்கிக்
கிடந்தனர்; நடந்தது, புணர்ச்சி தரு கேதம். 160

வாம நறையின் துறை மயங்கினர் மறந்தார்;
காம நறையின் திறம் நுகர்ந்தனர் களித்தார்;
பூ மன் நறை வண்டு அறை இலங்கு அமளி புக்கார்,
தூம நறையின் துறை பயின்றிலர், துயின்ருர். 161

பண் இமை அடைத்த, பல கள்-பொருநர் பாடல்;
விண் இமை அடைத்தென, விளைந்தது இருள்; வீணை
தண் இமை அடைத்தன; தழங்கு இசை வழங்கும்
கண் இமை அடைத்தன; அடைத்தன கபாடம். 162

156. இஞ்சி - மதில்; 157. கரிய நாழிகை - இராப்பொழுது; 158. வேரி - கள் குடிப்பார் முழக்கம்; பாரி - பாரிப்பு, ஆரவாரம்; கம்மியர் - கொல்லர் முதலிய தொழிலாளிகள்; தூரியம் - முரசு; 159. இறங்கின - தலே சாய்ந்து தூங்கலாயின; 160. இடைந்தனர் - களேப்பு உற்றனர்; நடந்தது - நீங்கியது; கேதம் - கலவியால் ஏற்பட்ட களேப்பு; 161. வாம நறை - தீமை தரும் கள்; தூம நறை - மணப் புகையால் வரும் இன்பம்; 162. இமை அடைதல் - இமைகளே மூடுதல், உறங்குதல்.

விரிந்தன நரந்தம் முதல் வெண் மலர் வளாகத்து
உரிஞ்சி வரு தென்றல், உணர்வு உண்டு அயல் உலாவ,
சொரிந்தன கருங்கண், வரு துள்ளி தரு வெள்ளம்;
எரிந்தன, பிரிந்தவர் தம் எஞ்சு தனி நெஞ்சம். 163

இளக்கர் இழுது எஞ்ச, விழும் எண் அரு விளக்கைத்
துளக்கியது தென்றல், பகை சோர உயர்வோரின்;
அளக்கரொடு அளக்க அரிய ஆசை உற வீசா,
விளக்கு இனம் விளக்குமணி மெய் உறு விளக்கம்.* 164

நித்தம் நியமத் தொழிலர் ஆய், நிறையும் ஞானத்து
உத்தமர் உறங்கினர்கள்; யோகியர் துயின்றார்;
மத்த மத வெங் களிறு உறங்கின; மயங்கும்
பித்தரும் உறங்கினர்; இனிப் பிறரிது என் ஆம்? 165

அகரகரினுள் தேடுதல்

ஆய பொழுது, அம் மதில் அகத்து, அரசர் வைகும்
தூய தெரு ஒன்றொடு ஒரு கோடி துருவிப் போய்,
தீயவன் இருக்கை அயல், செய்த அகழ் இஞ்சி
மேயது கடந்தனன்—வினைப் பகையை வென்றான். 166

போர் இயற்கை இராவணன் பொன் மனை
சீர் இயற்கை நிரம்பிய திங்களா,
தாரகைக் குழுவின் தழுவித் தொடர்,
நாரியர்க்கு உறைவு ஆம், இடம் நண்ணினான். 167

முயல் கருங் கறை நீங்கிய மொய்ம் மதி
அயர்க்கும் வாள் முகத்து ஆர் அமுது அன்னவர்,
இயக்கர்மங்கையர், யாவரும் ஈண்டினர்,
நயக்கும் மாளிகை வீதியை நண்ணினான்.* 168

தழைந்த மொய் ஒளி பெய்ம் மணித் தாழ் தொறும்,
இழைந்த நூலினும், இன் இளங்காலினும்,
நுழைந்து நொய்தினின் மெய் உற நோக்கினான்—
விழைந்த வெவ் வினை வேர்அற வீசினான். 169

163. நரந்தம் - ஒருவகை வாசனைப் புல்; உரிஞ்சி - உராய்ந்து; 164. இளக்கர் இழுது - இளகுதலையுடைய நெய்; விழும் விளக்கு - தளரும் விளக்கு; துளக்கியது - அவித்தது; 168. அயர்க்கும் - ஒப்பாக மாட்டாமல் சோர்வு உறும்; 169. தாழ்தொறும் - திறவுகோல் செல்லும் துளைகள்தோறும்.

இராவணன் உரிமை மகளிருள் இயக்கியர் நிலை

அத்திரம் புரை யானை அரக்கன்மேல்
வைத்த சிந்தையர், வாங்கும் உயிர்ப்பிலர்,
பத்திரம் புரை நாட்டம் பதைப்பு அற,
சித்திரங்கள் என, இருந்தார் சிலர். 170

அள்ளல் வெஞ் சர மாரனை அஞ்சியோ?
மெள்ள இன் கனவின் பயன் வேண்டியோ?
கள்ளம் என்கொல்? அறிந்திலம்—கண் முகிழ்த்து,
உள்ளம் இன்றி, உறங்குகின்றார் சிலர். 171

பழுது இல் மன்மதன் எய் கணை பல் முறை
உழுத கொங்கையர், ஊசல் உயிர்ப்பினர்,
'அழுது செய்வது என்? ஆணை அரக்கனை
எழுதலாம்கொல்?' என்று, எண்ணுகின்றார் சிலர். 172

'ஆவது ஒன்று அருளாய்; எனது ஆவியைக்
கூவுகின்றிலை; கூறலை சென்று' என,
பாவை பேசுவபோல், கண் பனிப்பு உற,
பூவையோடும் புலம்புகின்றார் சிலர். 173

ஈரத் தென்றல் இழுக மெலிந்து, தம்
பாரக் கொங்கையைப் பார்த்தனர்; பாதகன்
வீரத் தோள்களின் வீக்கம் நினைந்து, உயிர்
சோரச் சோரத் துளங்குகின்றார் சிலர்.* 174

நக்க செம் மணி நாறிய நீள் நிழல்
பக்கம் வீசுறு பள்ளியில், பல் பகல்
ஒக்க ஆசை உலக்க உலந்தவர்,
செக்கர் வான் தரு திங்கள் ஒத்தார் சிலர்.* 175

வாளின் ஆற்றிய கற்பக வல்லியர்
தோளின் நாற்றிய தூங்கு அமளித் துயில்
நாளினால், செவியில் புகும் நாம யாழ்த்
தேளினால், திகைப்பு எய்துகின்றார் சிலர்.* 176

170. அத்திரம் - மலை; பத்திரம் - அம்பு, பூவிதழும் ஆம்; 173. ஆவி - உயிர் போன்ற இராவணன்; பூவை - நாகணவாய்ப் பறவை; 174. இழுக - உராய்ந்து செல்ல; 175. நக்க செம்மணி - விளங்குகின்ற இரத்தினம்; 176. துயில் நாளினால் - துயிலும்பொழுது.

கவ்வு திக் கணை, மேருவைக் கால் வளைத்து,
எவ்விஞன் மலை ஏந்திய ஏந்து தோள்
வவ்வு சாந்து, தம் மா முலை வவ்விய
செவ்வி கண்டு, குலாவுகின்ருர் சிலர்.* 177

கூடி நான்கு உயர் வேலையும் கோக்க நின்று
ஆடிஞன் புகழ், அம் கை நரம்பினல்
நாடி, நால் பெரும் பண்ணும் நயப்பு உறப்
பாடிஞன் புகழ் பாடுகின்ருர் சிலர்.* 178

**இராவணனின் உரிமை மகளிராம் அரக்கியரின் நிலைமை**

இனைய தன்மை இயக்கியர் ஈண்டிய
மனை ஓர் ஆயிரம் ஆயிரம் வாயில் போய்,
அனையவன் குலத்து ஆயிழையார் இடம்
நினைவின் எய்தினன்—நீதியின் எய்திஞன். 179

**அரக்கியர் நிலை**

எரி சுடர் மணியின் செங் கேழ் இள வெயில் இடைவிடாது
விரி இருள் பருகி, நாளும் விளக்கு இன்றி விளங்கும் மாடத்து,
அரிவையர் குழுவும் நீங்க, ஆசையும் தாமுமே ஆய்,
ஒரு சிறை இருந்து, போன உள்ளத்தோடு ஊடுவாரும். 180

நகை எரிக் கற்றை நெற்றி நாவி தோய்ந்தனைய ஓதி,
புகை எனத் தும்பி சுற்ற, புது மலர்ப் பொங்கு சேக்கை
பகை என ஏகி, யாணர்ப் பளிங்குடைச் சீதப் பள்ளி,
மிகை ஒடுங்காத காம விம்மலின், வெதும்புவாரும்.* 181

சவி படு தகை சால் வானம் தான் ஒரு மேனி ஆக,
குவியும் மீன் ஆரம் ஆக, மின் கொடி மருங்குல் ஆக,
கவிர் ஒளிச் செக்கர் கற்றை ஓதியா, மழை உண் கண்ணு,
அவிர் மதி நெற்றி ஆக, அந்தி வான் ஒக்கின்ருரும்.* 182

பானல் உண் கண்ணும் வண்ணம் படி முறை மாற, பண்ணைச்
சோனை போன்று அளிகள் பம்பும் சுரி குழல் கற்றை சோர,
மேல் நிவந்து எழுந்த மாட வெண் நிலா முன்றில் நண்ணி,
வான மீன் கையின் வாரி, மணிக் கழங்கு ஆடுவாரும். 183

178. ஆடிஞன் - ஆடியவஞகிய சிவன்; நால் பெரும் பண் - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன; 181. எரிக்கற்றை நெற்றி - நெருப்புக் கொழுந்தின்மீது; யாணர் - அழகிய; மிகை ஒடுங்காத - வளர்தல் தணியாத; 182. சவி - ஒளி; கவிர் - முள்முருக்க மலர்; 183. பானல் - குவளை மலர்.

உழை உழைப் பரந்த வான யாற்றுநின்று, உம்பர் நாட்டுக்
குழை முகத்து ஆயம், தந்த புனல் குளிர்ப்பு இல என்று ஊடி,
இழை தொடுத்து இலங்கும் மாடத்து, இடை தடுமாற ஏறி,
மழை பொதுத்து, ஒழுகு நீரால், மஞ்சனம் ஆடுவாரும். 184

'பன்னக அரசர் செங் கேழ்ப் பணு மணி வலிதின் பற்றி,
இன் உயிர்க் கணவன் ஈந்தான்; ஆம்' என, இருத்தி, விஞ்சை
மன்னவர் முடியும், பூணும், மாலேயும், பணயம் ஆக,
பொன் அணி பலகைச் சூது, துயில்கிலர் பொருகின்ருரும். 185

தென் நகு குடம், உள்-பாடல், சித்தியர் இசைப்ப, தீம் சொல்
பன்னக மகளிர் வள் வார்த் தண்ணுமைப் பாணி பேண,
பொன்னகர்த் தரளப் பந்தர், கற்பகப் பொதும்பர், பொன்–தோள்
இன் நகை அரம்பைமாரை ஆடல் கண்டு இருக்கின்ருரும். 186

ஆணியின் கிடந்த காதல் அகம் சுட, அருவி உண் கண்
சேண் உயர் உறக்கம் தீர்ந்த சிந்தையர், செய்வது ஓரார்,
வீணேயும், குழலும், தம்தம் மிடறும், வேற்றுமையின் தீர்ந்த,
பாணிகள் அளந்த பாடல் அமிழ்து உகப் பாடுவாரும். 187

தண்டலே வாழை அன்ன குறங்கிடை, அல்குல் தட்டில்,
கொண்ட பூந் துகிலும், கோவைக் கலேகளும், சோர, கூர்ங் கள்
உண்டு அலமந்த கண்ணர், ஊசலிட்டு உலாவுகின்ற
குண்டலம் திரு வில் வீச, குரவையில் குழறுவாரும். 188

நச்சு எனக் கொடிய நாகக் கள்ளொடு குருதி நக்கி,
பிச்சரின் பிதற்றி, அல்குல் பூந் துகில் கலாபம் பீறி,
குச்சரித் திறத்தின் ஓசை களம் கொள்ள, குழூக் கொண்டு ஈண்டி,
சச்சரிப் பாணி கொட்டி, நிறை தடுமாறுவாரும். 189

தயிர் நிறத்து உறு கள் உள்ளம் தள்ளுற, அறிவு தள்ளி,
பயிர் உற, 'தெய்வம் என்மேல் படிந்தது; பார்மின்!' என்ணு,
உயிர் உயிர்த்து, இரண்டு கையும் உச்சிமேல் உயர நீட்டி,
மயிர் சிலிர்த்து, உடலம் கூசி, வாய் விரித்து ஒடுங்குவாரும்.

184. பொதுத்து - துளேத்து; 185. கணவன் - இராவணன்; 186. தென் நகு குடம் - இனிமையாக ஒலிக்கின்ற குடமுழா; 188. கூர்ங் கள் - உறைப்பான கள்; 189. கலாபம் - இருபத்தைந்து கோவையுள்ள இடை அணி; பீறி - கிழித்துக்கொண்டு; குச்சரித்திறம் - குச்சரி என்னும் பண்; களம் - கழுத்து; சச்சரிப் பாணி கொட்டல் - சச்சரி என்னும் தோற்கருவி போலக் கைகளேக் கொட்டுதல்; நிறை - மனநிலே; 190. பயிர் உற - கூவுதல் மிக.

இத் திறத்து அரக்கிமார்கள் ஈர்-இரு கோடி. ஈட்டம்
பத்தியர் உறையும், பத்திப் படர் நெடுந் தெருவும் பார்த்தான்;
சித்தியர் உறையும் மாடத் தெருவும் பின்னுகச் சென்றான்;
உத் திசை விஞ்சை மாதர் உறையுளை முறையின் உற்றான். 191

விஞ்சை மகளிர் நிலை

வளர்ந்த காதலர், மகரிகை நெடு முடி
அரக்கனை வரக் காணார்,
தளர்ந்த சிந்தை தம் இடையினும் நுடங்கிட,
உயிரொடு தடுமாறி,
களம் தவா நெடுங் கருவியில், கைகளில்,
செயிரியர், கலைக் கண்ணால்
அளந்த பாடல் வெவ் அரவு தம் செவி புக,
அலமரலுறுகின்றார். 192

'புரியும் நல் நெறி முனிவரும், புலவரும்,
புகல் இலாப் பொறைகூர,
எரியும் வெஞ் சினத்து இகல் அடு கொடுந் திறல்
இராவணற்கு, எஞ் ஞான்றும்
பரியும் நெஞ்சினர் இவர்' என வயிர்த்து ஒரு
பகை கொடு, பனித் திங்கள்
சொரியும் வெங் கதிர் துணை முலைக் குவை சுட,
கொடிகளின் துடிக்கின்றார். 193

சிறுகு காலங்கள் ஊழிகள் ஆம் வகை,
திரிந்து சிந்தனை சிந்த,
முறுகு காதலின் வேதனை உழப்பவர்,
முயங்கிய முலை முன்றில்
இறுகு சாந்தமும், எழுதிய குறிகளும்,
இன் உயிர்ப் பொறை ஈர,
மறுகு வாட் கண்கள் சிவப்புற நோக்கினர்;
வயிர்த்தனர்; உயிர்க்கின்றார். 194

192. மகரிகை முடி - சுறாமீன் வடிவு பொறித்த கிரீடம்; களம் தவா கருவி - மிடற்றோடு மாறுபடாத வாத்தியம்; செயிரியர் - பாணர்; கலைக்கண் - நூல்களாகிய கண்.

அனுமன் மண்டோதரியைக் காணல்

ஆய விஞ்சையர் மடந்தையர் உறைவிடம்
　　ஆறு-இரண்டு அமை கோடித்
தூய மாளிகை நெடுந் தெருத் துருவிப் போய்,
　　தொலைவு இல் மூன்று உலகிற்கும்
நாயகன் பெருங் கோயிலை நண்ணுவான்,
　　கண்டனன், நளிர் திங்கள்
மாய நந்திய வாள் முகத்து ஒரு தனி
　　மயன் மகள் உறை மாடம். 195

கண்டு, கண்ணுெடும் கருத்தொடும் கடாவினன்,
　　'காரணம் கடை நின்றது;
உண்டு வேறு ஒரு சிறப்பு; எங்கள் நாயகற்கு
　　உயிரினும் இனியாளைக்
கொண்டு போந்தவன் வைத்தது ஓர் உறையுள்கொல்?
　　குல மணி மனைக்கு எல்லாம்
விண்டுவின் தட மார்பினின் மணி ஒத்தது
　　இது!' என, வியப்புற்ருன். 196

அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி
　　ஆதியர், மலர்க் காமன்
சரம் பெய் தூணிபோல் தளிர் அடி தாம் தொட,
　　சாமரை பணிமாற,
கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர்,
　　காமரம் கனி யாழின்
நரம்பின் இன் இசை செவி புக, நாசியில்
　　கற்பக விரை நாற,— 197

'விழைவு நீங்கிய மேன்மையர் ஆயினும்,
　　கீழ்மையர் வெகுள்வுற்ருல்,
பிழைகொல் நன்மைகொல் பெறுவது?' என்று ஐயுறு
　　பீழையால், பெருந் தென்றல்,
உழையர் கூவ, புக்கு, 'ஏகு' என, பெயர்வது ஓர்
　　ஊசலின் உளதாகும்—
'பழையம் யாம்' என, பண்பு அல செய்வரோ
　　பருணிதர், பயன் ஓர்வார்? 198

195. நந்திய - விளங்கிய; 196. கடை நின்றது - முடிந்தது; 198. விழைவு - உலகப் பற்று.

இன்ன தன்மையின், எரி மணி விளக்கங்கள்
எழில் கெடப் பொலிகின்ற
தன்னது இன் ஒளி தழைப்புறத் துயில்வுறு
தையலை, தகைவு இல்லான்,
'அன்னள் ஆகிய சானகி இவள்' என
அயிர்த்து, அகத்து எழு வெந் தீ,
துன்னும் ஆர் உயிர் உடலொடு சுடுவது ஓர்
துயர் உழந்து, இவை சொன்னான்: 199

'எற்பு வான் தொடர் யாக்கையால் பெறும் பயன்
இழந்தனள்! இது நிற்க;
அற்பு வான் தளை இற் பிறப்புஅதனொடும்
இகந்து தன் அருந் தெய்வக்
கற்பு நீங்கிய கனங் குழை இவள் எனின்,
காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானும், இவ் இலங்கையும் அரக்கரும்,
பொன்றுதும் இன்று' என்றான். 200

'மானுயர்த் திரு வடிவினள் அவள்; இவள்
மாறு கொண்டனள்; கூறின்,
தான் இயக்கியோ? தானவர் தையலோ?
ஐயுறும் தகை ஆனாள்!
கான் உயர்த்த தார் இராமன்மேல் நோக்கிய
காதல் காரிகையார்க்கு
மீன் உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ?
நினைந்தது மிகை' என்றான். 201

'இலக்கணங்களும் சில உள என்னினும்,
எல்லை சென்று உறுகில்லா
அலக்கண் எய்துவது அணியது உண்டு' என்று, எடுத்து
அறைகுவது, இவள் யாக்கை;
மலர்க் கருங் குழல் சோர்ந்து, வாய் வெரீஇ, சில
மாற்றங்கள் பறைகின்றாள்;
உலக்கும் இங்கு இவள் கணவனும்; அழிவும், இவ்
வியன் நகர்க்கு உளது!' என்றான். 202

200. வான் தொடர் - வலிய இணைப்பு; 201. மானுயர் - மனித சாதி; கான் - மணம்.

இராவணன் மனையுள் அனுமன் புகுதலும், தீக்குறி காணலும்

என்று உணர்ந்துநின்று ஏமுறும் நிலையினில்,
　　'நிற்க இத் திறன்' என்னா,
பின்று சிந்தையன் பெயர்ந்தனன்; அம் மனை
　　பிற்பட, பெரு மேருக்
குன்று குன்றிய தகை உற ஓங்கிய
　　கொற்ற மாளிகைதன்னில்
சென்று புக்கனன், இராவணன் எடுப்பு அருங்
　　கிரி எனத் திரள் தோளான். 203

நிலம் துடித்தன; நெடு வரை துடித்தன;
　　நிருதர் தம் குல மாதர்
பொலந் துடிக்கு அமை மருங்குல்போல், கண்களும்,
　　புருவமும், பொன்-தோளும்
வலம் துடித்தன; மாதிரம் துடித்தன;
　　தடித்து இன்றி, நெடு வானம்
கலந்து இடித்தன; வெடித்தன, பூரண
　　மங்கல கலசங்கள். 204

புக்கு நின்று, தன் புலன் கொடு நோக்கினன்;
　　பொரு அருந் திரு உள்ளம்
நெக்கு நின்றனன்; 'நீங்கும், அந்தோ இந்த
　　நெடு நகர்த் திரு!' என்னா,
'எக் குலங்களின் யாவரே ஆயினும்,
　　இரு வினை எல்லோர்க்கும்
ஒக்கும்; ஊழ் முறை அல்லது, வலியது ஒன்று
　　இல்' என, உணர்வுற்றான். 205

இராவணன் துயில் நிலையும் அனுமன் நினைவும்

நூல்-பெருங்கடல் நுணங்கிய கேள்வியன்,
　　நோக்கினன்; மறம் கூரும்
வேல்-பெருங்கடல் புடை பரந்து ஈண்டிய
　　வெள்ளிடை வியன் கோயில்,
பால்-பெருங்கடல் பல் மணிப் பல் தலைப்
　　பாப்புடைப் படர் வேலை
மால்-பெருங்கடல் வதிந்ததே அனையது ஓர்
　　வனப்பினன், துயில்வானை— 206

203. ஏமுறல் - மயங்குதல்; பின்று சிந்தையன் - மீண்ட மனத்தினன்; 204. மாதிரம் - திசை; தடித்து - மின்னல்; 206. வெள்ளிடை - வெளியிடம்; பாப்பு - பாம்பு, ஈண்டு ஆதிசேடன்; மால் பெருங் கடல் - திருமாலாகிய பெருங்கடல்.

குழவி ஞாயிறு குன்று இவர்ந்தனையன
குரு மணி நெடு மோலி
இழைகளோடு நின்று இள வெயில் எறித்திட,
இரவு எனும் பொருள் வீய,
முழை கொள் மேருவின் முகட்டிடைக் கனகனை
முருக்கிய முரண் சீயம்,
தழை கொள் தோளொடு தலை பல பரப்பி, முன்,
துயில்வது ஓர் தகையானை— 207

ஆய பொன்-தலத்து ஆய் வளை அரம்பையர்
ஆயிரர் அணி நின்று
தூய வெண் கவரித் திரள் இயக்கிட,
சுழி படு பசுங் காற்றின்,
மீய கற்பகத் தேன்துளி விராயன
வீழ்தொறும், நெடு மேனி
தீய, நல் தொடிச் சீதையை நினைதொறும்
உயிர்த்து, உயிர் தேய்வானை— 208

குழந்தை வெண் மதிக் குடுமியன் நெடு வரை
குலுக்கிய குலத் தோளைக்
கழிந்து புக்கு, இடை கரந்தன, அனங்கன் வெங்
கடுங் கணை பல பாய,
உழந்த வெஞ் சமத்து உயர் திசை யானையின்
ஒளி மருப்பு உற்று இற்ற
பழந் தழும்பினுக்கு இடை இடையே, சில
பசும் புண்கள் அசும்பு ஊற, 209

சாந்து அளாவிய கலவைமேல் தவழ்வுறு
தண் தமிழ்ப் பசுந் தென்றல்,
ஏந்து காம வெங் கனல் உயிர்த்து, இரு மடி
துருத்தியின் உயிர்ப்பு ஏற,
காந்தள் மெல் விரல் சனகிமேல் மனம் முதல்
கரணங்கள் கடிது ஓட,
பாந்தள் நீங்கிய முழை என, குழைவுறு
நெஞ்சு பாழ்பட்டானை— 210

207. கனகன் - இரணியன்; சீயம் - நரசிம்மம்; 209. அசும்பு உறல் - குருதி நீர் வடிதல்; 210. பாந்தள் - பாம்பு.

கொண்ட பேர் ஊக்கம் மூள, திசைதொறும் குறித்து மேல்நாள்
மண்டிய செருவில், மானத் தோள்களால் வாரி வாரி
உண்டது தெவிட்டி, பேழ் வாய்க் கடைகள்தோறு ஒழுகிப் பாயும்
அண்டர்தம் புகழின் தோன்றும், வெள் எயிற்று அமைதியானை—*

வெள்ளி வெண் சேக்கை வெந்து, பொறி எழ, வெதும்பும் மேனி
புள்ளி வெண் மொக்குள் என்னப் பொடித்து வேர் கொதித்துப்
கள் அவிழ் மாலைத் தும்பி வண்டொடும் கரிந்து சாம்ப, [பொங்க,
ஒள்ளிய மாலை நீய, உயிர்க்கின்ற உயிர்ப்பினானை—* 212

தே இயல் நேமியானின், சிந்தை மெய்த் திருவின் ஏக,
பூ இயல் அமளி மேலாப் பொய் உறக்கு உறங்குவானை,
காவி அம் கண்ணிதன்பால் கண்ணிய காதல் நீரின்,
ஆவியை உயிர்ப்பு என்று ஓதும் அம்மி இட்டு அரைக்கின்றானை—* 213

மிகும் தகை நினைப்பு முற்ற உரு வெளிப்பட்ட வேலை,
நகும் தகை முகத்தன், காதல் நடுக்குறு மனத்தன், 'வார் தேன்
உகும் தகை மொழியாள் முன்னம் ஒருவகை உறையுளுள்ளே.
புகுந்தனள் அன்றோ?' என்று, மயிர் புறம் பொடிக்கின்றானை—*

மென் தொழில் கலாப மஞ்ஞை வேட்கை மீக்கூருமேனும்,
குன்று ஒழித்து ஒரு மாக் குன்றின் அரிதின் சேர் கொள்கை போல,
வன்தொழில்கொற்றப்பொன்-தோள் மணந்து, அரு மயிலே அன்னார்,
ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக, அரிய தோள் ஒழுக்கினானை—*

தழுவா நின்ற கருங் கடல்மீது உதயகிரியில் சுடர் தயங்க
எழுவான் என்ன, மின் இமைக்கும் ஆரம் புரளும் இயல்பிற்று ஆய்,
முழு வானவர்ஆய் உலகம் ஒரு மூன்றும் காக்கும் முதல் தேவர்
மழு வாள், நேமி, குலிசத்தின் வாய்மை துடைத்த மார்பானை— 216

தோடு உழுத தார் வண்டும், திசை யானை
மதம் துதைந்த வண்டும், சுற்றி
மாடு உழுத நறுங் கலவை வயக் களிற்றின்
சிந்துரத்தை மாறுகொள்ள,
கோடு உழுத மார்பானை, கொலை உழுத
வடி வேலின் கொற்றம் அஞ்சி,
தாள் தொழுத பகை வேந்தர் முடி உழுத
தழும்பு இருந்த சரணத்தானை— 217

212. மொக்குள் - கொப்புளம்; 214. மிகும் தகை நினைப்பு - மேன்மேல் வளரும் தன்மை உடைய (சீதை பற்றிய) சிந்தனை; 215. அரிதின் சேர் கொள்கை - சேர முடியாத தன்மை; 216. தழுவா நின்ற - (நிலத்தைத்) தழுவிக் கிடக்கும்; சுடர் - கிரணங்கள்; எழுவான் - எழுபவனாகிய சூரியன்; வாய்மை - தவறாத வலிமை.

கண்டனன்; காண்டலோடும், கருத்தின் முன் காலச் செந் தீ
விண்டன கண்கள்; கிண்டு வெடித்தன; கீழும் மேலும்;—
கொண்டது ஓர் உருவம் மாயோன் குறளினும் குறுக நின்ருன்—
திண் தலை பத்தும், தோள்கள் இருபதும், தெரிய நோக்கி. 218

தோள் ஆற்றல் என் ஆகும்? மேல் நிற்கும் சொல் என் ஆம்?
வாள் ஆற்று கண்ணுளை வஞ்சித்தான் மணி முடி என்
தாள் ஆற்றலால் இடித்து, தலை பத்தும் தகர்த்து, இன்று என்
ஆள் ஆற்றல் காட்டேனேல், அடியேனுய் முடியேனே! 219

'நடித்து வாழ் தகைமையதோ அடிமைதான்? நன்னுதலைப்
பிடித்து, வாழ் அரக்கனுர், யான் கண்டும் பிழைப்பாரோ?
ஒடித்து வான் தோள் அனைத்தும், தலை பத்தும் உதைத்து உருட்டி,
முடித்து, இவ் ஊர் முடித்தால், மேல் முடிவது எலாம் முடிந்து ஒழிக!'

அனுமன் அந் நினைவு ஒழிதல்

என்று, ஊக்கி, எயிறு கடித்து, இரு கரனும் பிசைந்து, எழுந்து,
நின்று, ஊக்கி உணர்ந்து உரைப்பான், 'நேமியோன் பணி அன்ருல்;
ஒன்று ஊக்கி, ஒன்று இழைத்தல், உணர்வு உடைமைக்கு உரித்து அன்
பின் தூக்கின், இது சாலப் பிழை பயக்கும்' எனப் பெயர்ந்தான். [ருல்;

ஆலம் பார்த்து உண்டவன்போல் ஆற்றல் அமைந்துளர்எனினும்,
சீலம் பார்க்க உரியோர்கள் எண்ணுது செய்பவோ?—
மூலம் பார்க்குறின், உலகை முற்றுவிக்கும் முறை தெரினும்,
காலம் பார்த்து, இறை வேலை கடவாத கடல் ஒத்தான். 222

'இற்றைப் போர்ப் பெருஞ் சீற்றம் என்னேடும் முடிந்திடுக;
''கற்றைப் பூங் குழலாளைச் சிறை வைத்த கண்டகனை
முற்றப் போர் முடித்தது, ஒரு குரங்கு'' என்ருல், முனை வீரன் [தான்.
கொற்றப் போர்ச் சிலைத் தொழிற்குக் குறை உண்டாம்'என, குறைந்

அந் நிலையான், பெயர்த்து உரைப்பான்: 'ஆய் வளைக் கை அணி இழை
இந் நிலையானுடன் துயில்வார் உளர்அல்லர்; இவன் நிலையும் [யார்
புல் நிலைய காமத்தால் புலர்கின்ற நிலை; பூவை
நல் நிலையின் உளள் என்னும் நலன் எனக்கு நல்குமால்!' 224

221. ஊக்கி - மன எழுச்சி கொண்டு; ஊக்கி உணர்ந்து - முயன்று ஆலோசித்து; ஒன்று ஊக்கி - ஒரு செயலில் முனைந்து; 223. கண்டகன் - கொடியவன்.

சீதையைக் காணாமையால் அனுமன் இலங்கையை அழித்து, மாள எண்ணுதல்

என்று எண்ணி, 'ஈண்டு இனி ஓர் பயன் இல்லை' என நினையா,
குன்று அன்ன தோளவன் தன் கோமனை பிற்பட, பெயர்ந்தான்;
நின்று எண்ணி உன்னுவான், 'அந்தோ! இந் நெடு நகரில்
பொன் துன்னும் மணிப் பூணுள் இலள்' என்ன, பொருமுவான்.

'கொன்றானோ, கற்பு அழியாக் குல மகளை? கொடுந் தொழிலால்
தின்றானோ? எப் புறத்தே செறித்தானோ, சிறை? சிறியேன்
ஒன்றானும் உணரகிலேன்; மீண்டு, இனிப் போய் என் உரைக்கேன்?
பொன்றாத பொழுது, எனக்கு, இக் கொடுந் துயரம் போகாதால். 226

' ''கண்டு வரும்'' என்று இருக்கும் காகுத்தன்; கவிகுலக் கோன்,
''கொண்டு வரும்'' என்று இருக்கும்; யான் இழைத்த கோள் இதுவால்;
புண்டரிக நயனத்தான்பால், இனி, யான் போவேனோ?
விண்டவரோடு உடன் வீயாது, யான் வாளா விளிவேனோ? 227

' ''கண்ணிய நாள் கழிந்துளவால்; கண்டிலமால் கனங்குழையை;
விண் அடைதும்'' என்றாரை ஆண்டு இருத்தி, விரைந்த யான்
எண்ணியது முடிக்ககிலேன்! இனி முடியாது இருப்பேனோ?
புண்ணியம் என்று ஒரு பொருள் என்னுழைநின்றும் போயதால். 228

'ஏழு நூறு ஓசனை சூழ்ந்து எயில் கிடந்தது இவ் இலங்கை
வாழும் மா மன் உயிர், யான் காணாத மற்று இல்லை;
ஊழியான் பெருந் தேவி ஒருத்தியுமே யான் காணேன்;
ஆழி தாய், இடர்-ஆழியிடையே வீழ்ந்து, அழிவேனோ? 229

'வல் அரக்கன்தனைப் பற்றி, வாயாறு குருதி உக,
கல் அரக்கும் கரதலத்தால், ''காட்டு'' என்று காண்கேனோ?
எல் அரக்கும் அயில் நுதி வேல் இராவணனும், இவ் ஊரும்,
மெல் அரக்கின் உருகி உக, வெந் தழலால் வேய்கேனோ? 230

'வானவரே முதலோரை வினவுவெனேல், வல் அரக்கன்-
தான் ஒருவன் உளன் ஆக, உரைசெய்யும் தருக்கு இலரால்;
ஏனையர்கள் எங்கு உரைப்பார்? எவ்வண்ணம் தெரிகேனோ?
ஊன் அழிய நீங்காத உயிர் சுமந்த உணர்வு இல்லேன்? 231

227. கோள் - செயல்; 228. கண்ணிய நாள் - தவணையாகக் குறிக்கப் பட்ட நாள்; 230. அரக்கும் - பொடியாக்கும், அழிக்கும்.

'எருவைக்கு முதல் ஆய சம்பாதி, ''இலங்கையில், அத்
திருவைக் கண்டனென்'' என்றான்; அவன் உரையும் சிதைந்ததால்;
கரு வைக்கும் நெடு நகரைக் கடலிடையே கரையாதே,
உருவைக் கொண்டு, இன்னமும் நான், உளென் ஆகி உழல்கேனோ?

' ''வடித்து ஆய் பூங் குழலாளை, வான் அறிய, மண் அறிய,
பிடித்தான் இவ் அடல் அரக்கன்'' எனும் மாற்றம், பிழையாதால்;
எடுத்து ஆழி இலங்கையினை இருங் கடல் இட்டு, இன்று, இவனை
முடித்தாலே, யான் முடிதல் முறை மன்ற!' என்று உணர்வான். 233

எள் உறையும் ஒழியாமல் யாண்டையுளும் உளன் ஆய், தன்
உள் உறையும் ஒருவனைப் போல், எம் மருங்கும் உலாவுவான்;
புள் உறையும் மானத்தை உற நோக்கி அயல் போவான்,
கள் உறையும் மலர்ச் சோலை அயல் ஒன்று கண்ணுற்றான். 234

## 3 காட்சிப் படலம்

#### அனுமன் அசோகவனத்தை அடைதல்

மாடு நின்ற அம் மணி மலர்ச் சோலையை மருவி,
'தேடி, அவ் வழிக் காண்பெனேல், தீரும் என் சிறுமை;
ஊடு கண்டிலென் என்னின், பின், உரியது ஒன்று இல்லை;
வீடுவேன், மற்று இவ் விலங்கல்மேல் இலங்கையை வீட்டி.' 1

என்று, சோலை புக்கு எய்தினன், இராகவன் தூதன்;
ஒன்றி வானவர் பூ மழை பொழிந்தனர் உவந்தார்;
அன்று, அவ் வாள் அரக்கன் சிறை அவ் வழி வைத்த
துன்று அல் ஓதிதன் நிலை இனிச் சொல்லுவான் துணிந்தாம். 2

#### அரக்கியர் கூட்டத்திடையே சீதையின் துயர நிலை

வன் மருங்குல் வாள் அரக்கியர் நெருக்க, அங்கு இருந்தாள்;
கல் மருங்கு, எழுந்து என்றும் ஓர் துளி வரக் காணா
நல் மருந்துபோல், நலன் அற உணங்கிய நங்கை,
மென் மருங்குல்போல், வேறு உள அங்கமும் மெலிந்தாள். 3

232. கரு வைத்தல் - நகரைத் தோற்றுவிக்க நாள் கொள்ளல்; 234. எள் உறை - எள்ளளவு இடம்.

3 : 1. மாடு - பக்கம்; சிறுமை - துன்பம்; ஊடு - (சோலையின்) உள்ளே; வீடுவேன் - இறப்பேன்; 3. மருந்து - மருந்தாக உதவும் செடி.

துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்;
வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள்;
மயில் இயல், குயில் மழலையாள், மான் இளம் பேடை
அயில் எயிற்று வெம் புலிக் குழாத்து அகப்பட்டதன்னாள். 4

விழுதல், விம்முதல், மெய் உற வெதும்புதல், வெருவல்,
எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்
தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல்,
அழுதல், அன்றி, மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்.

தழைத்த பொன் முலைத் தடம் கடந்து, அருவி போய்த் தாழப்
புழைத்த போல, நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்,
இழைக்கும் நுண்ணிய மருங்குலாள், இணை நெடுங் கண்கள்,
'மழைக்கண்' என்பது காரணக் குறி என வகுத்தாள். 6

அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதல் இவை அதிகம்
கரிய காண்டலும், கண்ணின் நீர் கடல் புகக் கலுழ்வாள்;
உரிய காதலின் ஒருவரோடு ஒருவரை உலகில்
பிரிவு எனும் துயர் உருவு கொண்டாலன்ன பிணியாள். 7

துப்பினால் செய்த கையொடு கால் பெற்ற துளி மஞ்சு
ஒப்பினான்தனை நினைதொறும், நெடுங் கண்கள் உகுத்த
அப்பினால் நனைந்து, அருந் துயர் உயிர்ப்புடை யாக்கை
வெப்பினால் புலர்ந்து, ஒரு நிலை உறாத மென் துகிலாள். 8

'அரிது—போகவோ, விதி வலி கடத்தல்!' என்று அஞ்சி,
'பரிதிவானவன் குலத்தையும், பழியையும், பாரா,
சுருதி நாயகன், வரும் வரும்' என்பது ஓர் துணிவால்
கருதி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள். 9

கமையினாள் திரு முகத்து அயல் கதுப்பு உறக் கவ்வி,
சுமையுடைக் கற்றை, நிலத்திடைக் கிடந்த, தூ மதியை
அமைய வாயில் பெய்து, உமிழ்கின்ற அயில் எயிற்று அரவின்,
குமையுறத் திரண்டு, ஒரு சடை ஆகிய குழலாள். 10

5. துளங்குதல் - நடுங்குதல்; அயல் - வேறு; 6. இழைக்கும் - பஞ்சு நூல் இழையினும்; 7. அரிய மஞ்சு - அழகிய மேகம்; 8. துப்பு - பவளம்; அப்பு - நீர்; 10. கமையினாள் திரு முகத்து அயல் கதுப்பு உறக் கவ்வி நிலத்திடைக் கிடந்த சுமையுடைக் கற்றைத் தூமதியை எனக் கூட்டுக. கமை - பொறுமை; சுமையுடைக் கற்றை - பாரமான மயிர்த் தொகுதி; குமையுற - நெருக்கமாக.

ஆவி அம் துகில் புனைவது ஒன்று அன்றி வேறு அறியாள்;
தூவி அன்னம் மென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்;
தேவுதெண் கடல் அமிழ்து கொண்டு அனங்கவேள் செய்த
ஓவியம் புகையுண்டதே ஒக்கின்ற உருவாள். 11

'கண்டிலன்கொலாம் இளவலும்? கனை கடல் நடுவண்
உண்டு இலங்கை என்று உணர்ந்திலர்? உலகு எலாம் ஒறுப்பான்
கொண்டு இறந்தமை அறிந்திலராம்?' எனக் குழையா,
புண் திறந்ததில் எரி நுழைந்தாலெனப் புகைவாள். 12

**கொல்லாது கொல்லும் நினைவுகள்**

'மாண்டு போயினன் எருவைகட்கு அரசன் மன்; மற்றோர்,
யாண்டை என் நிலை அறிவுறுப்பார்கள்? இப் பிறப்பில்
காண்டலோ அரிது' என்று, என்று, விம்முறும்; கலங்கும்;
மீண்டு மீண்டு புக்கு எரி நுழைந்தாலென, மெலிவாள். 13

'என்னை, நாயகன், இளவலை, எண்ணலா வினையேன்
சொன்ன வார்த்தை கேட்டு, "அறிவு இலள்" எனத் துறந்தானோ?
முன்னை ஊழ்வினை முடிந்ததோ?' என்று, என்று, முறையால்
பன்னி, வாய் புலர்ந்து, உணர்வு தேய்ந்து, ஆர் உயிர் பதைப்பாள். 14

'அருந்தும் மெல் அடகு ஆர் இட அருந்தும்?' என்று அழுங்கும்;
'விருந்து கண்டபோது என் உறுமோ?' என்று விம்மும்;
'மருந்தும் உண்டுகொல் யான் கொண்ட நோய்க்கு?' என்று மயங்கும்—
இருந்த மா நிலம் செல் அரித்து எழவும் ஆண்டு எழாதாள். 15

' "வன்கண் வஞ்சனை அரக்கர், இத்துணைப் பகல் வையார்;
தின்பர்; என் இனிச் செயத்தக்கது?" என்று, தீர்ந்தானோ?
தன் குலப் பொறை தன் பொறை எனத் தணிந்தானோ?
என்கொல் எண்ணுவேன்?' என்னும்—அங்கு, இராப் பகல் இல்லாள்.

'பெற்ற தாயரும், தம்பியும், பெயர்த்தும் வந்து எய்தி,
கொற்ற மா நகர்க் கொண்டு இறந்தார்களோ? குறித்துச்
சொற்ற ஆண்டு எலாம் உறைந்தன்றி, அந் நகர் துன்னன்,
உற்றது உண்டு' எனா, படர் உழந்து, உருதன உறுவாள். 17

11. தேவு - தெய்வத்தன்மை; 13. எருவைகட்கு அரசன் - கழுகுகளுக்கு அரசனாகிய சடாயு; 16. வன்கண் - கொடுமை; தீர்தல் - நீங்குதல்.

'முரன் எனத் தகும் மொய்ம்பினோர் முன் பொருதவர்போல்,
வரனும், மாயமும், வஞ்சமும், வரம்பு இல வல்லோர்
பொர நிகழ்ந்தது ஓர் பூசல் உண்டாம்?' எனப் பொருமா,
கரன் எதிர்ந்தது கண்டனள் ஆம் எனக் கவல்வாள். 18

இராமனைக் குறித்த பழைய நினைவுகள்

'தெவ் மடங்கிய சேண் நிலம்'—கேகயர்-
தம் மடந்தை—'உன் தம்பியது ஆம்' என,
மும் மடங்கு பொலிந்த முகத்தினன்
வெம் மடங்கலை உன்னி, வெதும்புவாள். 19

'மெய்த் திருப்பதம் மேவு' என்ற போதினும்,
'இத் திருத் துறந்து ஏகு' என்ற போதினும்,
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள். 20

தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்
வாங்கு கோல வடவரை வார் சிலை,
ஏங்கு மாத்திரத்து, இற்று இரண்டாய் விழ
வீங்கு தோளை நினைந்து மெலிந்துளாள். 21

இன்னல் அம்பர வேந்தற்கு இயற்றிய
பல் நலம் பதினாலாயிரம் படை,
கன்னல் மூன்றில், களப் பட, கால் வளை
வில் நலம் புகழ்ந்து, ஏங்கி வெதும்புவாள். 22

ஆழ நீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, 'எம்பி நின் தம்பி; நீ
தோழன்; மங்கை கொழுந்தி' எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி, மயங்குவாள். 23

மெய்த்த தாதை விரும்பினன் நீட்டிய
கைத்தலங்களை, கைகளின் நீக்கி, வேறு
உய்த்த போது, தருப்பையில் ஒண் பதம்
வைத்த வேதிகைச் செய்தி மனக்கொள்வாள். 24

18. முரன் - நரகாசுரன் அமைச்சன்; திருமாலால் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்; இவனைக் கொன்றதுபற்றித் திருமாலுக்கு 'முராரி' என்று ஒரு திருநாமம். முன் பொருதவர் - முன்னே ஜனஸ்தானத்தில் போர் செய்த கரன் முதலியோர்; 19. தெவ் - பகை; மடங்கல் - சிங்கம் போல்பவனாகிய இராமன்; 20. திருப்பதம் - அரச செல்வமாகிய பதவி; 21. வாங்கு - வளைத்த; 22. அம்பர வேந்தன் - இந்திரன்; கன்னல் - நாழிகை; கால் - வில்லின் இரு தலை; 24. மெய்த்த தாதை - நல்லொழுக்கம் தவறாத தந்தை; வேதிகைச் செய்தி - மணவறைச் செயல்.

உரம் கொள் தே மலர்ச் சென்னி, உரிமை சால்
வரம் கொள் பொன் முடி, தம்பி வனைந்திலன்,
திரங்கு செஞ் சடை கட்டிய செய்வினைக்கு
இரங்கி ஏங்கியது எண்ணி, இரங்குவாள். 25

பரித்த செல்வம் ஒழியப் படரும் நாள்,
அருத்தி வேதியற்கு ஆன் குலம் ஈந்து, அவன்
கருத்தின் ஆசைக் கரை இன்மை கண்டு, இறை
சிரித்த செய்கை நினைந்து, அழும் செய்கையாள். 26

மழுவின் வாளினன், மன்னரை மூ-எழு
பொழுதில் நூறி, புலவு உறு புண்ணின் நீர்
முழுகினன் தவ மொய்ம்பொடு மூரி வில்
தழுவும் மேன்மை நினைந்து, உயிர் சாம்புவாள். 27

ஏக வாளி அவ் இந்திரன் காதல் மேல்
போக ஏவி, அது கண் பொடித்த நாள்,
காகம் முற்றும் ஓர் கண் இல ஆகிய
வேக வென்றியைத் தன் தலைமேல் கொள்வாள். 28

வெவ் விராதனை மேவு அருந் தீவினை
வவ்வி, மாற்ற அருஞ் சாபமும் மாற்றிய
அவ் இராமனை உன்னி, தன் ஆர் உயிர்
செவ்விராது, உணர்வு ஓய்ந்து, உடல் தேம்புவாள்.— 29

அரக்கியர் துயிலுதல்

இருந்தனள்; திரிசடை என்னும் இன் சொலின்
திருந்தினாள் ஒழிய, மற்று இருந்த தீவினை
அருந் திறல் அரக்கியர், அல்லும் நள் உறப்
பொருந்தலும், துயில் நறைக் களி பொருந்தினர். 30

சீதை திரிசடையிடம் உற்றதுரைத்தல்

ஆயிடை, திரிசடை என்னும், அன்பினால்
தாயினும் இனியவள்தன்னை நோக்கினாள்,
'தூய நீ கேட்டி, என் துணைவி ஆம்' என,
மேயது ஓர் கட்டுரை விளம்பல் மேயினாள்: 31

25. உரம் - சிறப்பு; வரம் கொள் - (கைகேயி) வரத்தினால் கொண்ட, மேன்மை கொண்ட எனினும் ஆம்; 26. பரித்த செல்வம் - தாங்கிய அரச பதவி; அருத்தி - ஆசை; வேதியன் - திரிசடன் என்னும் அந்தணன்; 27. முழுகினான் - பரசுராமன்; 28. இந்திரன் காதல் - இந்திரன் மகனாகிய சயந்தன்; பொடித்தல் - கெடுத்தல்; 30. நள் - நடுப்பொழுது.

'நலம் துடிக்கின்றதோ? நான் செய் தீவினைச்
சலம் துடித்து, இன்னமும் தருவது உண்மையோ?—
பொலந் துடி மருங்குலாய்!—புருவம், கண், முதல்
வலம் துடிக்கின்றில; வருவது ஓர்கிலேன். 32

'முனியொடு மிதிலையில் முதல்வன் முந்து நாள்,
துனி அறு புருவமும், தோளும், நாட்டமும்,
இனியன துடித்தன; ஈண்டும், ஆண்டு என
நனி துடிக்கின்றன; ஆய்ந்து நல்குவாய். 33

'மறந்தனென்; இதுவும் ஓர் மாற்றம் கேட்டியால்:
அறம் தரு சிந்தை என் ஆவி நாயகன்,
பிறந்த பார் முழுவதும் தம்பியே பெறத்
துறந்து, கான் புகுந்த நாள், வலம் துடித்ததே. 34

'நஞ்சு அனையான், வனத்து இழைக்க நண்ணிய
வஞ்சனை நாள், வலம் துடித்த; வாய்மையால்
எஞ்சல; ஈண்டு தாம் இடம் துடிக்குமால்;
''அஞ்சல்'' என்று இரங்குவாய்! அடுப்பது யாது?' என்றாள். 35

**திரிசடை நற்குறிப் பயன் உரைத்தல்**

என்றலும், திரிசடை, 'இயைந்த சோபனம்!
நன்று இது! நன்று!' என, நயந்த சிந்தையாள்,
'உன் துணைக் கணவனை உறுதல் உண்மையால்;
அன்றியும், கேட்டி' என்று, அறைதல் மேயினாள்: 36

'உன் நிறம் பசப்பு அற, உயிர் உயிர்ப்புற,
இன் நிறத் தேன் இசை, இனிய நண்பினால்,—
மின் நிற மருங்குலாய்!—செவியில், மெல்லென,
பொன் நிறத் தும்பி வந்து, ஊதிப் போயதால். 37

'ஆயது தேரின், உன் ஆவி நாயகன்
ஏயது தூது வந்து எதிரும் என்னுமால்;
தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம்; என்
வாயது கேள்' என, மறித்தும் கூறுவாள்: 38

32. நலம் - நன்மை; சலம் - கொடுமை; 33. முதல்வன் - தலைவனாகிய இராமன்; துனி - குற்றம்; 36. சோபனம் - மங்களக் குறி, நன்மை; 37. இன் நிறம் - இனிய இயல்பு.

'துயில் இலை ஆதலின், கனவு தோன்றல;
அயில்விழி அனைய கண் அமைந்து நோக்கினேன்;
பயில்வன பழுது இல, பழுதின் நாடு என;
வெயிலினும் மெய்யன விளம்பக் கேட்டியால்: 39

'எண்ணெய் பொன் முடிதொறும் இழுகி, ஈறு இலாத்
திண் நெடுங் கழுதை பேய் பூண்ட தேரின்மேல்,
அண்ணல் அவ் இராவணன், அரத்த ஆடையன்,
நண்ணினன், தென்புலம்—நவை இல் கற்பினாய்!' 40

'மக்களும், சுற்றமும், மற்றுளோர்களும்,
புக்கனர் அப் புலம்; போந்தது இல்லையால்;
சிக்கு அற நோக்கினென்; தீய, இன்னமும்
மிக்கன, கேட்க' என, விளம்பல் மேயினாள்: 41

'ஆண் தகை இராவணன் வளர்க்கும் அவ் அனல்
ஈண்டில; பிறந்தவால், இனம் கொள் செஞ் சிதல்;
தூண்ட அரு மணி விளக்கு அழலும் தொல் மனை
கீண்டதால், வான ஏறு எறிய, கீழை நாள். 42

'பிடி மதம் பிறந்தன; பிறங்கு பேரியும்,
இடி என முழங்குமால், இரட்டல் இன்றியே;
தடியுடை முகிற்குலம் இன்றி, தா இல் வான்
வெடிபட அதிருமால்; உதிரும், மீன் எலாம். 43

'வில்-பகல் இன்றியே, இரவு விண்டு அற,
எல் பகல் எறித்துளது என்னத் தோன்றுமால்;
மல் பக மலர்ந்த தோள் மைந்தர் சூடிய
கற்பக மாலையும் புலவு காலுமால். 44

'திரியுமால், இலங்கையும் மதிலும்; திக்கு எலாம்
எரியுமால்; கந்தர்ப்ப நகரம் எங்கணும்
தெரியுமால்; மங்கல கலசம் சிந்தின
விரியுமால்; விளக்கினை விழுங்குமால், இருள். 45

39. பழுதின் நாடு - குற்றத்துக்கு உறைவிடமான நாடு; 41. சிக்கு - ஐயம்; 42. ஈண்டில - வளர்ந்து ஓங்காமல் அவிந்தன; கீழை நாள் - விடியற் காலை; 43. இரட்டல் - கொட்டுதல்; தடி - மின்னல்; 44. வில் பகல் - ஒளியோடு கூடிய பகல்; மல் பக - வலிமை மிக; 45. விரிதல் - உடைதல்.

'தோரணம் முறியுமால், துளங்கி; சூழி மால்
வாரணம் முறியுமால், வலத்த வாள் மருப்பு;
ஆரண மந்திரத்து அறிஞர் நாட்டிய
பூரண குடத்து நீர் நறவின் பொங்குமால். 46

'விண் தொடர் மதியினைப் பிளந்து, மீன் எழும்;
புண் தொடர் குருதியின் பொழியுமால் மழை;
தண்டொடு, திகிரி, வாள், தனு என்று இன்னன,
மண்டு அமர் புரியுமால், ஆழி மாறு உற. 47

'மங்கையர் மங்கலத் தாலி, மற்றையோர்
அங்கையின் வாங்குநர் எவரும் இன்றியே,
கொங்கையின் வீழ்ந்தன; குறித்த ஆற்றினால்,
இங்கு, இதின் அற்புதம், இன்னும் கேட்டியால்: 48

'மன்னவன் தேவி, அம் மயன் மடந்தைதன்
பின் அவிழ் ஓதியும், பிறங்கி வீழ்ந்தன;
துன் அருஞ் சுடர் சுடச் சுறுக்கொண்டு ஏறின;
இன்னல் உண்டு எனும் இதற்கு ஏது ஈது என.' 49

என்றனள் இயம்பி, 'வேறு இன்னும் கேட்டியால்,
இன்று, இவண், இப்பொழுது, இயைந்தது ஓர் கனா:
வன் துணைக் கோள்அரி இரண்டு மாறு இலாக்
குன்றிடை உழுவைஅம் குழுக் கொண்டு ஈண்டியே, 50

'வரம்பு இலா மத கரி உறையும் அவ் வனம்
நிரம்புற வளைந்தன; நெருக்கி நேர்ந்தன;
வரம்பு அறு பிணம்படக் கொன்ற; மாறு இலாப்
புரம் புக இருந்தது ஓர் மயிலும், போயதால். 51

'ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய
சேயொளி விளக்கம் ஒன்று ஏந்தி, செய்யவள்,
நாயகன் திருமனைநின்று, நண்ணுதல்
மேயினள், வீடணன் கோயில்;—மென் சொலாய்! 52

'பொன் மனை புக்க அப் பொரு இல் போதினில்,
என்னை நீ உணர்த்தினை; முடிந்தது இல்' என,
'அன்னையே! அதன் குறை காண்' என்று, ஆயிழை,
'இன்னமும் துயில்க' என, இரு கை கூப்பினாள். 53

46. வலத்த - வலிமையுள்ள; ஆரணம் - வேதம்; 47. ஆழி மாறு உற - கடலோடு மாறுபடும்படி; 51. புரம் - நகரம்.

### அனுமன் சீதையின் இருக்கையைக் காணுதல்

இவ் இடை, அண்ணல் அவ் இராமன் ஏவிய
வெவ் விடை அனைய போர் வீரத் தூதனும்,
அவ் இடை எய்தினன், அரிதின் நோக்குவான்,
நொவ் இடை மடந்தைதன் இருக்கை நோக்கினன். 54

### துயிலுணர்ந்த அரக்கியர் நிலை

அவ் வயின் அரக்கியர் அறிவுற்று, 'அம்மவோ!
செவ்வை இல் துயில் நமைச் செகுத்தது ஈது!' என,
எவ் வயின் மருங்கினும் எழுந்து வீங்கினர்—
வெவ் அயில், மழு, எழு, சூல வெங் கையார். 55

வயிற்றிடை வாயினர்; வளைந்த நெற்றியில்
குயிற்றிய விழியினர்; கொடிய நோக்கினர்;
எயிற்றினுக்கு இடை இடை, யானை, யாளி, பேய்,
துயில் கொள் வெம் பிலன் என, தொட்ட வாயினர்.* 56

ஒருபது கையினர், ஒற்றைச் சென்னியர்;
இருபது தலையினர், இரண்டு கையினர்;
வெருவரு தோற்றத்தர்; விகட வேடத்தர்;
பருவரை என, முலை பலவும் நாற்றினர்.* 57

சூலம், வாள், சக்கரம், தோட்டி, தோமரம்,
கால வேல், கப்பணம், கற்ற கையினர்;
ஆலமே உருவு கொண்டனைய மேனியர்;
பாலமே தரித்தவன் வெருவும் பான்மையர்.* 58

கரி, பரி, வேங்கை, மாக் கரடி, யாளி, பேய்,
அரி, நரி, நாய் என அணி முகத்தினர்;
வெரிந் உறு முகத்தினர்; விழிகள் மூன்றினர்;
புரிதரு கொடுமையர்; புகையும் வாயினர்.* 59

எண்ணினுக்கு அளவிடல் அரிய ஈட்டினர்,
கண்ணினுக்கு அளவிடல் அரிய காட்சியர்,
பெண் எனப் பெயர் கொடு திரியும் பெற்றியர்,
துண்ணெனத் துயில் உணர்ந்து, எழுந்து சுற்றினர். 60

54. நொவ் இடை - வருந்தும் இடை; 57. விகட வேடத்தர் - நகை விளைக்கும் கோலத்தினர்; 58. பாலம் தரித்தவன் - மழுப்படை ஏந்திய சிவபெருமான்.

சீதையின் வருத்தத்தை அனுமன் காணுதல்

ஆயிடை, உரை அவிந்து, அழகன் தேவியும்,
தீ அனையவர் முகம் நோக்கித் தேம்பினாள்;
நாயகன் தூதனும், விரைவில் நண்ணினன்,
ஒய்விலன், உயர் மரப் பணையின் உம்பரான். 61

'அரக்கியர், அயில் முதல் ஏந்தும் அங்கையர்,
நெருக்கிய குழுவினர், துயிலும் நீங்கினர்,
இருக்குநர்; மற்று இதற்கு ஏது என்?' எனா,
பொருக்கென அவரிடைப் பொருந்த நோக்கினான். 62

விரி மழைக் குலம் கிழித்து ஒளிரும் மின் என,
கரு நிறத்து அரக்கியர் குழுவில், கண்டனன்—
குரு நிறத்து ஒரு தனிக் கொண்டல் ஊழியான்
இரு நிறத்து உற்றவேற்கு இயைந்த காந்தத்தை. 63

'கடக்க அரும் அரக்கியர் காவல் சுற்று உளாள்!
மடக் கொடி சீதையாம் மாதரேகொலாம்?
கடல் துணை நெடிய தன் கண்ணின் நீர்ப் பெருந்
தடத்திடை இருந்தது ஓர் அன்னத் தன்மையாள். 64

'அரக்கியர் நடுவே இருப்பவள் சீதையே' என அனுமன் தெளிதல்

'எள் அரும் உருவின் அவ் இலக்கணங்களும்,
வள்ளல் தன் உரையொடு மாறு கொண்டில,
கள்ள வாள் அரக்கன் அக் கமலக் கண்ணனார்
உள் உறை உயிரினை ஒளித்து வைத்தவா! 65

'மூவகை உலகையும் முறையின் நீக்கிய
பாவி தன் உயிர் கொள்வான் இழைத்த பண்பு இதால்;
ஆவதே; அரவணைத் துயிலின் நீங்கிய
தேவனே அவன்; இவள் கமலச்செல்வியே. 66

அனுமன் மகிழ்ச்சி

'வீடினதுஅன்று அறன்; யானும் வீகலேன்;
தேடினென் கண்டனென்; தேவியே!' எனா,—
ஆடினன்; பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து,
ஓடினன்; உலாவினன்;—உவகைத் தேன் உண்டான். 67

63. இரு நிறத்து உற்ற வேல் - பெரிய மார்பின்கண் பொருந்திய பிரிவுத் துன்பமாகிய வேல்; 64. கடல் துணை - கடலளவு; 65. 'ஒளித்து வைத்தவா' என் என ஒரு சொல் கூட்டுக; 66. தன் உயிர் கொள்வான் - தன் உயிரை இராமன் வாங்கும்பொருட்டு.

**சீதையின் தூய்மையை அனுமன் வியத்தல்**

'மாசுண்ட மணி அனாள், வயங்கு வெங் கதிர்த்
தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்;
காசுண்ட கூந்தலாள் கற்பும், காதலும்
ஏசுண்டது இல்லையால்; அறத்துக்கு ஈறு உண்டோ? 68

'புனை கழல் இராகவன் பொன் புயத்தையோ?
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ?
வனை கழல் அரசரின் வண்மை மிக்கிடும்
சனகர்தம் குலத்தையோ? யாதைச் சாற்றுகேன்? 69

'தேவரும் பிழைத்திலர்; தெய்வ வேதியர்
ஏவரும் பிழைத்திலர்; அறமும் ஈறு இன்றால்;
யாவது இங்கு இனிச் செயல் அரியது, எம்பிராற்கு?
ஆவ! என் அடிமையும் பிழைப்பு இன்றாம்அரோ. 70

' ''கேழ் இலாள் நிறை இறை கீண்டதாம்எனின்,
ஆழியான் முனிவு எனும் ஆழி மீக்கொள,
ஊழியின் இறுதி வந்துறும்'' என்று உன்னினேன்;
வாழிய உலகு, இனி வரம்பு இல் நாள் எலாம்! 71

'வெங் கனல் முழுகியும், புலன்கள் வீக்கியும்,
நுங்குவ, அருந்துவ, நீக்கி, நோற்பவர்
எங்கு உளர்?—குலத்தில் வந்து, இல்லின் மாண்புடை
நங்கையர் மனத் தவம் நவிலற்பாலதோ? 72

'பேண நோற்றது மனைப் பிறவி, பெண்மைபோல்
நாணம் நோற்று உயர்ந்தது, நங்கை தோன்றலால்;
மாண நோற்று, ஈண்டு இவள் இருந்தவாறு எலாம்
காண நோற்றிலன், அவன் கமலக் கண்களால்! 73

'முனிபவர் அரக்கியர், முறையின் நீங்கினார்;
இனியவள்தான் அலாது, யாரும் இல்லையால்;
தனிமையும், பெண்மையும், தவமும், இன்னதே!—
வனிதையர்க்கு ஆக, நல் அறத்தின் மாண்பு எலாம்! 74

தருமமே காத்ததோ? சனகன் நல் வினைக்
கருமமே காத்ததோ? கற்பின் காவலோ?
அருமையே! அருமையே! யார் இது ஆற்றுவார்?
ஒருமையே, எம்மனோர்க்கு, உரைக்கற்பாலதோ? 75

68. வெங் கதிர்த் தேசு - சூரியன் ஒளி; காசு - அழுக்கு; 70. ஆவ - அதிசயக் குறிப்பு; 71. கேழ் - ஒப்பு; 72. வீக்குதல் - அடங்குதல்; நுங்குவ - உண்பன; 75. ஒருமை - ஒருபடியாக.

'செல்வமோ அது? அவர் தீமையோ இது?
அல்லினும் பகலினும் அமரர் ஆட் செய்வார்,
ஒல்லுமோ ஒருவர்க்கு ஈது? உறுகண் யாது இனி?
வெல்லுமோ தீவினை, அறத்தை மெய்ம்மையால்?' 76

**இராவணன் அங்கே தோன்றுதல்**

என்று, இவை இனையன எண்ணி, வண்ண வான்
பொன் திணி நெடு மரப் பொதும்பர் புக்கு, அவண்
நின்றனன்; அவ் வழி நிகழ்ந்தது என் எனின்,
துன்று பூஞ் சோலைவாய் அரக்கன் தோன்றினன். 77

**இராவணன் வருகின்ற மாட்சி**

சிகர வண் குடுமி நெடு வரை எவையும்
ஒரு வழித் திரண்டன சிவண,
மகரிகை வயிர குண்டலம் அலம்பும்
திண் திறல் தோள் புடை வயங்க,
சகர நீர் வேலை தழுவிய கதிரின்,
தலைதொறும் தலைதொறும் தயங்கும்
வகைய பல் மகுடம் இள வெயில் எறிப்ப,
கங்குலும் பகல்பட, வந்தான். 78

உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர,
மேனகை வெள்ளடை உதவ,
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல,
அரம்பையர் குழாம் புடை சுற்ற,
கருப்புரச் சாந்தும், கலவையும், மலரும்,
கலந்து உமிழ் பரிமளகந்தம்,
மருப்புடைப் பொருப்பு ஏர் மாதிரக் களிற்றின்
வரிக் கை வாய் மூக்கிடை மடுப்ப; 79

நான நெய் விளக்கு நால்-இரு கோடி,
நங்கையர் அங்கையில் எடுப்ப,
மேல் நிவந்து எழுந்த மணியுடை அணியின்
விரி கதிர் இருள் எலாம் விழுங்க,
கால்முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்ப,
கிண்கிணி கலையொடும் கலிப்ப,
பால் நிறத்து அன்னக் குழாம் படர்ந்தென்னப்
பற்பல மங்கையர் படர; 80

78. சிவண - ஒப்ப; மகரிகை - சுறுமீன்; 79. வெள்ளடை - வெற்றிலை; வரிக் கை - புள்ளிகளையுடைய கை; 80. நால் இரு கோடி - எட்டு வரிசையாக, எண்கோணமாக.

'அந்தரம் புகுந்தது உண்டு என, முனிவுற்று,
அருந் துயில் நீங்கினன்; ஆண்டைச்
சந்திர வதனத்து அருந்ததி இருந்த
தண் நறுஞ் சோலையின் தனையோ?
வந்தது இங்கு யாதோ? யாரொடும் போமோ?'
என்று, தம் மனம் மறுகுதலால்,
இந்திரன் முதலோர், இமைப்பிலா நாட்டத்து
எனைவரும், உயிர்ப்பு அவிந்திருப்ப; 81

நீல் நிறக் குன்றின் நெடிது உறத் தாழ்ந்த
நீத்த வெள் அருவியின் நிமிர்ந்த
பால் நிறப் பட்டின் மாலை உத்தரியம்
பண்புற, பசும்பொன் ஆரத்தின்
மால் நிற மணிகள் இடை உறப் பிறழ்ந்து
வளர் கதிர் இள வெயில் பொருவ,
சூல் நிறக் கொண்மூக் கிழித்து இடை துடிக்கும்
மின் என, மார்பில் நூல் துளங்க; 82

தோள்தொறும் தொடர்ந்த, மகரிகை வயிரக்
கிம்புரி வலய மாச் சுடர்கள்
நாள்தொறும் சுடரும் கலி கெழு விசும்பில்,
நாளொடு கோளினை நக்க,
தாள்தொறும் தொடர்ந்த தழங்கு பொற்கழலின்
தகை ஒளி நெடு நிலம் தடவ,
கேள்தொறும் தொடர்ந்த முறுவல் வெண் நிலவின்
முகமலர் இரவினும் கிளர; 83

தன் நிறத்தோடு மாறு தந்து இமைக்கும்
நீவி அம் தழைபட உடுத்த
பொன் நிறத் தூசு, கரு வரை மருங்கில்
தழுவிய புது வெயில் பொருவ;
மின் நிறக் கதிரின் சுற்றிய பசும் பொன்
விரல்தலை அவிர் ஒளிக் காசின்
கல் நிறக் கற்றை, நெடு நிழல் பூத்த
கற்பக முழு வனம் கவின; 84

81. அந்தரம் - தீங்கு; சோலையின் தனையோ - சோலை அளவேயோ? 82. மால் நிறம் - பேரொளி; கொண்மூ - மேகம்; 83. கிம்புரி வலயம் - தோளணியாகிய வலயம்; நாள் - நட்சத்திரம்; கோள் - கிரகங்கள்; கேள்தொறும் - சுற்றத்தார் ஒவ்வொருவரிடத்தும்; 84. நீவி - ஆடைமுடிச்சு; தழை - கொய்சகம்; பசும்பொன் - பசும் பொன்னாலாகிய மோதிரங்கள்; காசின் கல் - இரத்தினக் கல்.

சன்னவீரத்த கோவை வெண் தரளம்,
　　ஊழியின் இறுதியில் தனித்த
பொன் நெடுவரையில் தொத்திய கோளும்,
　　நாளும் ஒத்து, இடை இடை பொலிய;
மின் ஒளிர் மௌலி உதய மால்வரையின்
　　மீப்படர் வெங் கதிர்ச் செல்வர்
பன்னிருவரினும், இருவரைத் தவிர்வுற்று,
　　உதித்தது ஓர் படி, ஒளி பரப்ப; 85

பயில் எயிற்று இரட்டைப் பணை மருப்பு ஒடிய,
　　படியினில் பரிபவம் சுமந்த
மயில் அடித்து ஒழுக்கின் அனைய மா மதத்த
　　மாதிரக் காவல் மால் யானை,
கயிலையின் திரண்ட முரண் தொடர் தடந் தோள்
　　கனகனது உயர் வரம் கடந்த
அயில் எயிற்று அரியின் சுவடு தன் கரத்தால்
　　அளைந்த மாக் கரியின், நின்று அஞ்ச; 86

அம் கயல் கருங் கண் இயக்கியர், துயக்கு இல்
　　அரம்பையர், விஞ்சையர்க்கு அமைந்த
நங்கையர், நாக மடந்தையர், சித்த
　　நாரியர், அரக்கியர் முதலாம்,
குங்குமக் கொம்மைக் குவி முலை, கனி வாய்,
　　கோகிலம் துயர்ந்த மென் குதலை,
மங்கையர் ஈட்டம் மால் வரை தழீஇய
　　மஞ்ஞை அம் குழு என மயங்க; 87

தொளை உறு புழை வேய்த் தூங்கு இசைக் கானம்
　　துயலுருது ஒரு நிலை தொடர,
இளையவர் மிடறும் இந் நிலை இசைப்ப,
　　கின்னரர் முறை நிறுத்து எடுத்த
கிளை உறு பாடல், சில்லரிப் பாண்டில்
　　தழுவிய முழவொடு கெழுமி,
அளை உறும் அரவும் அமுது வாய் உகுப்ப,
　　அண்டமும் வையமும், அளப்ப; 88

85. சன்னவீரத்த கோவை - வெற்றிமாலையாகிய பொன்னாரம்; 86. படி - பூமி; மயில் அடித்து ஒழுக்கின் - மயிலின் காலில் உள்ள விரலின் செலவை ஒத்த, மூன்றாக உள்ள.

அன்ன பூஞ் சதுக்கம், சாமரை, உக்கம்
ஆடியாம் வரிசையின் அமைந்த,
உன்னரும் பொன்னின், மணியினின் புனைந்த
இழைக் குலம், மழைக் கருங் கடைக் கண்,
மின் இடை, செவ் வாய், குவி முலை, பணைத் தோள்
வீங்கு தேர் அல்குலார் தாங்கி,
நல் நிறக் காரின் வரவு கண்டு உவக்கும்
நாடக மயில் என நடப்ப; 89

தந்திரி நெறியில் தாக்குறு கருவி
தூக்கினர் எழுவிய சதியின்,
முந்துறு குணிலோடு இயைவுறு குறட்டில்,
சில்லரிப் பாண்டிலில், முறையின்,
மந்தர கீதத்து இசைப் பதம் தொடர,
வகை உறு கட்டளை வழாமல்,
அந்தர வானத்து அரம்பையர், கரும்பின்
பாடலார், அருகு வந்து ஆட; 90

அந்தியில், அநங்கன், அழல்படத் துரந்த
அயில் முகப் பகழி வாய் அறுத்த
வெந்துறு புண்ணின் வேல் நுழைந்தென்ன,
வெண் மதிப் பசுங் கதிர் விரவ,
மந்த மாருதம் போய் மலர்தொறும் வாரி
வயங்கு நீர் மம்மரின் வரு தேன்
சிந்து நுண் துளியின் சீகரத் திவலை,
உருக்கிய செம்பு எனத் தெறிப்ப; 91

இழை புரை மருங்குல் இறும் இறும் எனவும்,
இறுகலா வன முலை இரட்டை
உழை புகு செப்பின் ஒளிதர மறைத்த
உத்தரியத்தினர் ஒல்கி
குழை புகு கமலம் கோட்டினர் நோக்கும்,
குறு நகைக் குமுத வாய் மகளிர்
மழை புரை ஒண் கண் செங் கடை ஈட்டம்,
மார்பினும் தோளினும், மலைய; 92

89. பூஞ் சதுக்கம் - பூ வேலைப்பாடு உள்ள சதுரமான மணைப் பலகை, பூக்கள் வைக்கப்பட்ட சதுரமான பலகையும் ஆம்; உக்கம் - ஆலவட்டம்; 90. நெறியில் தாக்குறு கருவி தந்திரி எனக் கூட்டுக; கருவி தந்திரி - இசைக் கருவியாகிய தந்திரி யாழ்; எழுவிய சதி - எழுப்பிய தாளவொத்து; குணில் - குறுந்தடி; குறடு - ஒருவகை மத்தளம்; மந்தர கீதம் - படுத்தல் ஓசை; இசைப்பதம் - இசைப்பாடல்; கட்டளை - சீர்; 91. மம்மரின் - மயக்கத்தோடு, (காமம் மிகும்படி): சீகரத் திவலை - மிகச் சிறிய துளி; 92. கோட்டினர் நோக்கும் - நாணத்தினால் வளைத்துப் பார்க்கும்.

மாலையும், சாந்தும், கலவையும், பூணும்,
வயங்கு நுண் தூசொடு, காசும்,
சோலையின் தொழுதிக் கற்பகத் தருவும்,
நிதிகளும், கொண்டு பின் தொடர,
பாலின் வெண் பரவைத் திரை கருங் கிரிமேல்
பரந்தெனச் சாமரை பதைப்ப,
வேலைநின்று உயரும் முயல் இல் வெண் மதியின்,
வெண்குடை மீதுற விளங்க; 93

ஆர்கலி அகழி, அரு வரை, இலங்கை,
அடி பெயர்த்து இடுதொறும் அழுந்த,
நேர்தரும் பரவைப் பிறழ் திரை, தவழ்ந்து
நெடுந் தடந் திசைதொறும் நிமிர,
சார்தரும் கடுவின் எயிறுடைப் பகு வாய்
அனந்தனும் தலை தடுமாற,
மூரி நீர் ஆடை இரு நில மடந்தை,
முதுகு உளுக்குற்றனள் முரல; 94

கேடகத்தோடு, மழு, எழு, சூலம்,
அங்குசம், கப்பணம், கிடுகோடு,
ஆடகச் சுடர் வாள், அயில், சிலை, குலிசம்
முதலிய ஆயுதம் அனைத்தும்,
தாடகைக்கு இரட்டி எறுழ் வலி தழைத்த
தகைமையர், தட வரை பொறுக்கும்
சூடகத் தடக் கை, சுடு சினத்து, அடு போர்,
அரக்கியர் தலைதொறும், சுமப்ப; 95

விரி தளிர், முகை, பூ, கொம்பு, அடை, முதல், வேர்
இவை எலாம், மணி, பொனால், விரிந்த
தரு உயர் சோலை திசைதொறும் கரியத்
தழல் உமிழ் உயிர்ப்பு முன் தவழ,
திருமகள் இருந்த திசை அறிந்திருந்தும்,
திகைப்புறு சிந்தையான், கெடுத்தது
ஒரு மணி நேடும் பல் தலை அரவின்,
உழைதொறும், உழைதொறும், உலாவி; 96

93. தொழுதி - கூட்டம்; 94. முரல - கதற; 96. கெடுத்தது - இழந்தது; நேடும் - தேடும்.

இனையது ஓர் தன்மை எறுழ் வலி அரக்கர்
ஏந்தல் வந்து எய்துகின்றானை,
அனையது ஓர் தன்மை அஞ்சனை சிறுவன்
கண்டனன், அமைவுற நோக்கி,
'வினையமும் செயலும், மேல் வினை பொருளும்,
இவ் வழி விளங்கும்' என்று எண்ணி,
வனை கழல் இராமன் பெரும் பெயர் ஓதி
இருந்தனன், வந்து அயல் மறைந்தே. 97

ஆயிடை, அரக்கன், அரம்பையர் குழுவும்,
அல்லவும், வேறு அயல் அகல,
மேயினன், பெண்ணின் விளக்கு எனும் தகையாள்
இருந்துழி; ஆண்டு, அவள், வெருவி,
போயின உயிரளாம் என நடுங்கி,
பொறி வரி, எறுழ் வலி, புகைக் கண்,
காய் சின, உழுவை தின்னிய வந்த
கலை இளம் பிணை என, கரைந்தாள். 98

மூவர் மனநிலை

கூசி ஆவி குலைவுறுவாளையும்,
ஆசையால் உயிர் ஆசு அழிவானையும்,
காசு இல் கண் இணை சான்று எனக் கண்டனன்—
ஊசல் ஆடி உளையும் உளத்தினன். 99

அனுமன், சீதையைத் தன் மனத்துள் வாழ்த்தல்

'வாழி சானகி! வாழி இராகவன்!
வாழி நான்மறை! வாழியர் அந்தணர்!
வாழி நல் அறம்!' என்று உற வாழ்த்தினன்—
ஊழிதோறும் புதிது உறும் கீர்த்தியான். 100

இராவணன் சீதையை இரத்தல்

அவ் இடத்து அருகு எய்தி, அரக்கன்தான்,
'எவ் இடத்து எனக்கு இன் அருள் ஈவது?
நொவ் இடைக் குயிலே! நுவல்க' என்றனன்,
வெவ் விடத்தை அமிழ்து என வேண்டுவான். 101

99. ஆசு - பற்றுக்கோடு, ஈண்டு உடல்; 101. நொவ் இடை - வருந்தும் இடை.

ஈசற்கு ஆயினும் ஈடு அழிவுற்று, இறை
வாசிப்பாடு அழியாத மனத்தினன்,
ஆசைப்பாடும் அந் நாணும் அடர்த்திட,
கூசிக் கூசி, இனையன கூறினன்: 102

'இன்று இறந்தன; நாளை இறந்தன;
என் திறம் தரும் தன்மை இதால்; எனைக்
கொன்று, இறந்தபின் கூடுதியோ?—குழை
சென்று, இறங்கி, மறம் தரு செங் கணாய்! 103

'உலகம் மூன்றும் ஒருங்குடன் ஓம்பும் என்
அலகு இல் செல்வத்து அரசியல் ஆணையில்,
திலகமே! உன் திறத்து அனங்கன் தரு
கலகம் அல்லது, எளிமையும் காண்டியோ? 104

'பூந் தண் வார் குழல் பொன் கொழுந்தே! புகழ்
ஏந்து செல்வம் இகழ்ந்தனை; இன் உயிர்க்
காந்தன் மாண்டிலன், காடு கடந்து போய்,
வாய்ந்து வாழ்வது மானிட வாழ்வு அன்றோ? 105

'நோற்கின்றார்களும், நுண் பொருள் நுண்ணிதின்
பார்க்கின்றாரும், பெறும் பயன் பார்த்தியேல்,
வார்க் குன்றா முலை! என் சொல், மவுலியால்
ஏற்கின்றாரொடு உடன் உறை இன்பமால். 106

'பொருளும், யாழும், விளரியும், பூவையும்,
மருள, நாளும், மழலை வழங்குவாய்!
தெருளும நான்முகன் செய்தது, உன் சிந்தையின்
அருளும, மின் மருங்கும், அரிது ஆக்கியோ? 107

'ஈண்டு நாளும், இளமையும், மீண்டில;
மாண்டு மாண்டு பிறிது உறும் மாலைய;
வேண்டு நாள் வெறிதே விளிந்தால், இனி,
யாண்டு வாழ்வது? இடர் உழந்து ஆழ்தியோ? 108

'இழவு, எனக்கு, உயிர்க்கு எய்தினும் எய்துக,
குழை முகத்து நின் சிந்தனை கோடினல்:
பழக நிற்புறும் பண்பு இவை, காமத்தோடு,
அழகினுக்கு, இனி யார் உளர் ஆவரே? 109

102. ஈடு - வலி; வாசிப்பாடு - பெருமிதம்; 103. என் திறம் - என்பால்; 104. எளிமை - இழிவு தரக்கூடிய செயல்; 108. பிறிது உறும் மாலைய - ஒழிந்து போகின்ற இயல்புடையன; 109. கோடினல் - (என்மீது இரங்காது) மாறுபட்டால்.

'பெண்மையும், அழகும், பிறழா மனத்
திண்மையும், முதல் யாவையும், செய்ய ஆய்,
கண்மையும் பொருந்தி, கருணைப் படா
வண்மை என்கொல்?—சனகரின் மடந்தையே! 110

'வீட்டும் காலத்து அலறிய மெய்க் குரல்
கேட்டும், காண்டற்கு இருத்திகொல்?—கிள்ளை! நீ—
நாட்டுங்கால், நெடு நல் அறத்தின் பயன்
ஊட்டும் காலத்து, இகழ்வது உறும்கொலோ? 111

'தக்கது என் உயிர் வீடு எனின், தாழ்கிலாத்
தொக்க செல்வம் தொலையும்; ''ஒருத்தி நீ
புக்கு உயர்ந்தது'' எனும் புகழ் போக்கி, வேறு
உக்கது என்னும் உறு பழி கோடியோ? 112

'தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தா இல் மூஉலகின் தனி நாயகம்
மேவுகின்றது, நுன்கண்; விலக்கிலை;
ஏவர் ஏழையர் நின்னின், இலங்கிழாய்? 113

'குடிமை மூன்று உலகும் செயும் கொற்றத்து என்
அடிமை கோடி; அருளுதியால்' என,
முடியின் மீது முகிழ்த்து உயர் கையினன்,
படியின்மேல் விழுந்தான், பழி பார்க்கலான். 114

**இராவணனுக்குச் சீதை உரைத்த வெய்ய மாற்றம்**

காய்ந்தன சலாகை அன்ன உரை வந்து கதுவாமுன்னம்,
தீய்ந்தன செவிகள்; உள்ளம் திரிந்தது; சிவந்த சோரி
பாய்ந்தன, கண்கள்; ஒன்றும் பரிந்திலள், உயிர்க்கும்; பெண்மைக்கு
ஏய்ந்தன அல்ல, வெய்ய, மாற்றங்கள் இனைய சொன்னாள்: 115

'மல் அடு திரள் தோள் வஞ்சன் மனம் பிறிது ஆகும் வண்ணம்,
கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம், கற்பின்மேல் கண்டது உண்டோ?
இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல, வெய்ய
சொல்; இது தெரியக் கேட்டி, துரும்பு!' எனக் கனன்று, சொன்னாள்.†

110. யார் உளர் - என்னையன்றி (உனக்கு ஏற்றவர்) வேறு யார் இருக்கிறார்கள்; கண்மை - கண்ணோட்டம்; 111. வீட்டுதல் - கொல்லுதல்; 112. தக்கது என் உயிர் - தகுதியுடையதாகிய என் உயிர்; வீடு - அழிவு; 113. நுன்கண் - உன்னிடம்; 115. சலாகை - இரும்புக் கம்பி.

'மேருவை உருவ வேண்டின், விண் பிளந்து ஏக வேண்டின்,
ஈர்-எழு புவனம் யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின்,
ஆரியன் பகழி வல்லது; அறிந்து இருந்து,—அறிவு இலாதாய்!—
சீரிய அல்ல சொல்லி, தலை பத்தும் சிந்துவாயோ? 117

'அஞ்சினை ஆதலான், அன்று, ஆரியன் அற்றம் நோக்கி,
வஞ்சனை மான் ஒன்று ஏவி, மாயையால் மறைந்து வந்தாய்;
உஞ்சனை போதிஆயின், விடுதி; உன் குலத்துக்கு எல்லாம்
நஞ்சினை எதிர்ந்தபோது, நோக்குமோ நினது நாட்டம்? 118

'பத்து உள தலையும், தோளும், பல பல பகழி தூவி,
வித்தக வில்லினுற்கு, திருவிளையாடற்கு ஏற்ற
சித்திர இலக்கம் ஆகும்; அல்லது, செருவில் ஏற்கும்
சத்தியை போலும்?'—மேல் நாள், சடாயுவால் தரையில் வீழ்ந்தாய்!

'தோற்றனை பறவைக்கு அன்று; துள்ளு நீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்; அன்றுஎனின், இறத்தி அன்றே?
நோற்ற நோன்பு, உடைய வாழ் நாள், வரம், இவை நுனித்த எல்லாம்,
கூற்றினுக்கு அன்றே? வீரன் சரத்திற்கும் குறித்தது உண்டோ?

'பெற்றுடை வாளும் நாளும், பிறந்துடை உரனும், பின்னும்
மற்றுடை எவையும், தந்த மலர் அயன் முதலோர் வார்த்தை,
வில் தொடை இராமன் கோத்து விடுதலும், விலக்குண்டு, எல்லாம்
இற்று இடைந்து இறுதல் மெய்யே;—விளக்கின் முன் இருள் உண்
[டாமோ?

'குன்று நீ எடுத்த நாள், தன் சேவடிக் கொழுந்தால் உன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச் சரம் துரந்த மேரு,
என் துணைக் கணவன் ஆற்றற்கு உரன் இலாது, இற்று வீழ்ந்த
அன்று எழுந்து உயர்ந்த ஓசை கேட்டிலை போலும் அம்மா! 122

'''மலை எடுத்து, எண் திசை காக்கும் மாக்களை
நிலை கெடுத்தேன்'' எனும் மாற்றம் நேரும் நீ,
சிலை எடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை;
தலை எடுத்து, இன்னமும், மகளிர்த் தாழ்தியோ? 123

'ஏழை! நின் ஒளித்துறை இன்னது ஆம் என,
வாழி எம் கோமகன் அறிய வந்த நாள்,
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ?
ஊழியும் திரியும்; உன் உயிரொடு ஒயுமோ? 124

118. அற்றம் - மறைவு; 120. பறவை - சடாயு; நுனித்த - ஆராய்ந்து கொண்டன; 124. ஒளித்துறை - மறைந்து வாழும் இடம்.

**இராவணனுக்குச் சீதை உரைத்த நயமொழிகள்**

'வெஞ் சின அரக்கரை வீய்த்து வீயுமோ?
வஞ்சனை நீ செய, வள்ளல் சீற்றத்தால்,
எஞ்சல் இல் உலகு எலாம் எஞ்சும், எஞ்சும்! என்று
அஞ்சுகின்றேன்; இதற்கு அறனும் சான்றுஅரோ! 125

'அங்கண் மா ஞாலமும், விசும்பும், அஞ்ச வாழ்
வெங்கணாய்!—புன் தொழில் விலக்கி மேற்கொளாய்;
செங் கண் மால், நான்முகன், சிவன் என்றே கொலாம்,
எங்கள் நாயகனையும் நினைந்தது?—ஏழை, நீ! 126

' ''மானுயர் இவர்'' என மனக் கொண்டாய்எனின்,
கான் உயர் வரை நிகர் கார்த்தவீரியன்-
தான் ஒரு மனிதனால் தளர்ந்துளான்எனின்,
தேன் உயர் தெரியலான் தன்மை தேர்தியால். 127

'இருவர் என்று இகழ்ந்தனைஎன்னின், யாண்டு எல்லை,
ஒருவன் அன்றே உலகு அழிக்கும் ஊழியான்;
செரு வருங்காலை, என் மெய்ம்மை தேர்தியால்—
பொரு அருந் திரு இழந்து, அநாயம் பொன்றுவாய். 128

'பொற்கணன், தம்பி, என்று இனைய போர்த் தொழில்
வில் கொள் நாண் பொருத தோள் அவுணர், வேறு உளார்,
நற்கண் ஆர் நல் அறம் துறந்த நாளினும்,
இற்கணார் இறந்திலர்; இறந்து நீங்கினார். 129

'பூவிலோன் ஆதியாக, புலன்கள் போம் நெறியில் போகாத்
தேவரோ, அவுணர்தாமோ, நிலை நின்று வினையின் தீர்ந்தார்?
ஏவல் எவ் உலகும் செல்வம் எய்தினார் இசையின், ஏழாய்!
பாவமோ? முன் நீ செய்த தருமமோ? தெரியப் பாராய்! 130

'இப் பெருஞ் செல்வம் நின்கண் ஈந்த பேர் ஈசன், யாண்டும்
அப் பெருஞ் செல்வம் துய்ப்பான், நின்று மா தவத்தின் அன்றே?
ஒப்பு அருந் திருவும் நீங்கி, உறவொடும் உலக்க உன்னி,
தப்புதி அறத்தை; ஏழாய்! தருமத்தைக் காமியாயோ? 131

125. எஞ்சுதல் - அழிதல்; 127. மனிதன் - பரசுராமன்; 128. அநாயம் - நீதி அற்ற செயல்; 129. பொற்கணன் - இரணியாட்சன் தம்பி - இரணியகசிபு; இறந்திலர் - வரம்பு கடந்தார் அல்லர்.

'மறம் திறம்பாத தோலா வலியினர்எனினும், மாண்டார்,
அறம் திறம்பினரும், மக்கட்கு அருள் திறம்பினரும் அன்றே?
பிறந்து இறந்து உழலும் பாசப் பிணக்குடைப் பிணியின் தீர்ந்தார்,
துறந்து அரும் பகைகள் மூன்றும் துடைத்தவர், பிறர் யார்? சொல்லாய்!

'தென் தமிழ் உரைத்தோன் முன்னுத் தீது தீர் முனிவர் யாரும்,
புன் தொழில் அரக்கர்க்கு ஆற்றேம்; நோற்கிலெம்' புகுந்த போதே,
கொன்று அருள்; நின்னுல் அன்னுர் குறைவது சரதம்; கோவே!
என்றனர்; யானே கேட்டேன்; நீ அதற்கு இயைவ செய்தாய்.

'உன்னையும் கேட்டு, மற்று உன் ஊற்றமும், உடைய நாளும்,
பின்னை இவ் அரக்கர் சேனைப் பெருமையும், முனிவர் பேணிச்
சொன்னபின், உங்கை மூக்கும், உம்பியர் தோளும் தாளும்,
சின்னபின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ? 134

'ஆயிரம் தடக்கையால் நின் ஐந் நான்கு கரமும் பற்றி,
வாய் வழி குருதி சோரக் குத்தி வான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம்
நீ அறிந்திலையோ?—நீதி நிலை அறிந்திலாத நீசா! 135

'கடிக்கும் வல் அரவும் கேட்கும், மந்திரம்; களிக்கின்றேயை,
"அடுக்கும், ஈது அடாது" என்று, ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி,
இடிக்குநர் இல்லை; உள்ளார், எண்ணியது எண்ணி, உன்னை
முடிக்குநர்; என்றபோது, முடிவு அன்றி முடிவது உண்டோ?'

**இராவணன் சீற்றம்**

என்று அறத் துறை கேட்டலும், இருபது நயனம்
மின் திறப்பன ஒத்தன; வெயில் விடு பகு வாய்
குன்று இறத் தெழித்து உரப்பின; குறிப்பது என்? காமத்
தின் திறத்தையும் கடந்தது, சீற்றத்தின் தகைமை. 137

வளர்ந்த தாளினன்; மாதிரம் அனைத்தையும் மறைவித்து
அளந்த தோளினன்; அனல் சொரி கண்ணினன்; 'இவளைப்
பிளந்து தின்பென்' என்று உடன்றனன்; பெயர்ந்தனன்; பெயரான்;
கிளர்ந்த சீற்றமும், காதலும், எதிர் எதிர் கிடைப்ப. 138

132. பாசப் பிணக்கு - பாச பந்தம்; அரும் பகைகள் மூன்று - காமம், வெகுளி, மயக்கம்; 134. உங்கை - உன் தங்கை (சூர்ப்பணகை); உம்பியர் - உன் தம்பியர் (கரன், தூடணன், திரிசிரா); 135. தூயவன் - குற்றமற்றவன் (கார்த்தவீரியார்ச்சுனன்); துணித்தவன் - கார்த்தவீரியனைக் கொன்ற பரசு ராமன்; 138. எதிர் எதிர் கிடைப்ப - மாறி மாறித் தோன்ற.

அப்பொழுது, அனுமன் உளத்து எழுந்த சிந்தனை

அன்ன காலையில், அனுமனும், ''அருந்ததிக் கற்பின்,
என்னை ஆளுடை நாயகன், தேவியை, என் முன்,
சொன்ன நீசன், கை தொடுவதன்முன், துகைத்து உழக்கி,
பின்னை, நின்றது செய்குவென்' என்பது பிடித்தான். 139

'தனியன் நின்றனன்; தலை பத்தும் கடிது உகத் தாக்கி,
பனியின் வேலையில் இலங்கையைக் கீழ் உறப் பாய்ச்சி,
புனித மா தவத்து அணங்கினைச் சுமந்தனென் போவென்,
இனிதின்' என்பது நினைந்து, தன் கரம் பிசைந்திருந்தான். 140

சீற்றம் தணிந்து, சீதையை நோக்கி இராவணன் மீண்டும் பேசுதல்

ஆண்டு, அவ் வாள் அரக்கன் அகத்து, அண்டத்தை அழிப்பான்
மூண்ட கால வெந் தீ என முற்றிய சீற்றம்,
நீண்ட காம நீர் நீத்தத்தின் வீவுறு நிலையின்
மீண்டு நின்று, ஒரு தன்மையால் இவை இவை விளம்பும்: 141

'கொல்வென் என்று உடன்றேன்; உன்னைக் கொல்கிலென்; குறித்துச் [சொன்ன
சொல் உள; அவற்றுக்கு எல்லாம் காரணம் தெரியச் சொல்லின்,
"ஒல்வது ஈது; ஒல்லாது ஈது" என்று, எனக்கும் ஒன்று உலகத்து உண்
வெல்வதும் தோற்றல்தானும் விளையாட்டின் விளைந்த, மேல்நாள். [டோ?

'ஒன்று கேள், உரைக்க: "நிற்கு ஓர் உயிர் என உரியோன் தன்னைக்
கொன்று கோள் இழைத்தால், நீ நின் உயிர் விடின், கூற்றம் கூடும்;
என் தன் ஆர் உயிரும் நீங்கும்'' என்பதை இயைய எண்ணி,
அன்று நான் வஞ்சம் செய்தது; ஆர், எனக்கு அமரில் நேர்வார்?

'மான் என்பது அறிந்து போன மானிடர் ஆவார், மீண்டு,
யான் என்பது அறிந்தால் வாரார்; ஏழைமை, எண்ணி நோக்கல்;
தேன் என்பது அறிந்த சொல்லாய்! தேவர்தாம் யாவரே, எம்
கோன் என்பது அறிந்த பின்னை, திறம்புவார், குறையின் அல்லால்?

'வென்றோரும் இருப்ப; யார்க்கும் மேலவர், விளிவு இலாதோர்,
என்றோரும் இருப்ப; அன்றே, இந்திரன் ஏவல் செய்ய,
ஒன்றாக உலகம் மூன்றும் உணர்கின்ற ஒருவன், யானே!
மென் தோளாய்! இதற்கு வேறு ஓர் காரணம் விரிப்பது உண்டோ? 145

143. கோள் - கவர்தல்.

'மூவரும் தேவர்தாமும் முரண் உக முற்றும் கொற்றம்,
பாவை! நின் பொருட்டினால், ஓர் பழி பெற, பயன் தீர் நோன்பின்
ஆ இயல் மனிதர்தம்மை அடுகிலேன்; அவரை ஈண்டுக்
கூவி நின்று, ஏவல் கொள்வென்; காணுதி—குதலைச் சொல்லாய்! 146

'சிற்றியல், சிறுமை ஆற்றல், சிறு தொழில், மனிதரோடே
முற்றிய தா இல் வீர முனிவு என்கண் விளையாதேனும்,
இற்றை, இப் பகலில், நொய்தின், இருவரை ஒரு கையாலே
பற்றினென் கொணரும் தன்மை காணுதி;—பழிப்பு இலாதாய்!

'பதவிய மனிதரேனும், பைந்தொடி! நின்னைத் தந்த
உதவியை உணர நோக்கின், உயிர்க் கொலைக்கு உரியர் அல்லர்;
சிதைவுறல் அவர்க்கு வேண்டின், செய் திறன் தேர்ந்தது எண்ணின்,
இதன் நினக்கு ஈதே ஆகின், இயற்றுவல்; காண்டி! இன்னும்,

**இராவணன் சீதையை அச்சுறுத்திச் செல்லுதல்**

'பள்ள நீர் அயோத்தி நண்ணி, பரதனே முதலினோர், ஆண்டு
உள்ளவர்தம்மை எல்லாம் உயிர் குடித்து, ஊழித் தீயின்
வெள்ள நீர் மிதிலையோரை வேர்அறுத்து, எளிதின் எய்திக்
கொள்வென், நின் உயிரும்; என்னை அறிந்திலை—முறைந்த நாளோய்!'

ஈது உரைத்து, அழன்று பொங்கி, எரி கதிர் வாளை நோக்கி,
'தீது உயிர்க்கு இழைக்கும் நாளும் திங்கள் ஓர் இரண்டில் தேய்ந்தது;
ஆதலின், பின்னை, நீயே அறிந்தவாறு அறிதி' என்னா,
போது அரிக் கண்ணினாளை அகத்து வைத்து, உரப்பிப் போனான்.

'அஞ்சுவித்தானும், ஒன்றால் அறிவுறத் தேற்றியானும்,
வஞ்சியின் செவ்வியாளை வசித்து, என்பால் வருவீர்; அன்றேல்,
நஞ்சு உமக்கு ஆவென்' என்னா, நகை இலா முகத்து, பேழ் வாய்,
வெஞ்சினத்து அரக்கிமார்க்கு, வேறு வேறு உணர்த்திப் போனான்.*

**அரக்கிமார்கள் சீதையை அதட்டுதல்**

போயினன் அரக்கன்; பின்னை, பொங்கு அரா நுங்கிக் கான்ற
தூய வெண் மதியம் ஒத்த தோகையைத் தொடர்ந்து சுற்றி,
தீய வல் அரக்கிமார்கள், தெழித்து, இழித்து, உரப்பி, சிந்தை
மேயின வண்ணம் எல்லாம் விளம்புவான், உடன்று மிக்கார். 152

146. ஆ இயல் மனிதர் - பசுவின் தன்மை வாய்ந்த மனிதர்; 147. சிற்றியல் - சிறு தன்மை; சிறுமை ஆற்றல் - புல்லிய வீரம்; 148. பதவிய - (தின்னுவதற்குப்) பக்குவமான; இதன் - நன்மை; 151. வசித்து - வசப்படுத்தி; 152. தெழித்து - வருத்தி.

மூன் முன் நின்றார், கண் கனல் சிந்த முடுகுற்றார்;
மின் மின் என்னும் சூலமும் வேலும் மிசை ஓச்சி,
'கொல்மின்! கொல்மின்! கொன்று குறைத்து, குடர் ஆரத்
தின்மின்! தின்மின்!' என்று தெழித்தார், சிலர் எல்லாம். 153

'வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்,
ஐயன், வேதம் ஆயிரம் வல்லான், அறிவாளன்,
மெய் அன்பு உன்பால் வைத்துளது அல்லால், வினை வென்றோன்
செய்யும் புன்மை யாதுகொல்?' என்றார், சிலர் எல்லாம். 154

'மண்ணில் தீய மானுயர் தத்தம் வழியோடும்,
பெண்ணில் தீயோய்! நின் முதல் மாயும் பிணி செய்தாய்,
புண்ணில் கோல் இட்டாலன சொல்லி; பொது நோக்காது
எண்ணிக் காணாய், மெய்ம்மையும்' என்றார், சிலர் எல்லாம்.

'புக்க வழிக்கும், போந்த வழிக்கும், புகை வெந் தீ
ஒக்க விதைப்பான் உற்றனை அன்றோ? உணர்வு இல்லாய்!
இக் கணம் இற்றாய்; உன் இனம் எல்லாம் இனி வாழா;
சிக்க உரைத்தேம்' என்று தெழித்தார், சிலர் எல்லாம். 156

கொல்வான் உற்றோர் பெற்றியும்,—யாதும் குறையாதாள்—
'வெல்வான், நம் கோன்; தின்னுமின்; வம்!' என்பவர் மெய்யும்,
வல் வாய் வெய்யோன் ஏவலும், எல்லாம் மனம் வைத்தாள்,
நல்லாள்; நல்ல கண்கள் கலுழ்ந்தே நகுகின்றாள். 157

திரிசடை சொல்லால் சீதை தேறுதல்

இன்னோரன்ன எய்திய காலத்து, இடை நின்றாள்,
'முன்னே சொன்னேன் கண்ட கனாவின் முடிவு, அம்மா!
பின்னே, வாளா பேதுறுவீரேல், பிழை' என்றாள்.
'அன்னே, நன்று!' என்றாள்; அவர் எல்லாம் அவிவுற்றார். 158

அறிந்தார், அன்ன முச்சடை என்பாள் அது சொல்ல;
பிறிந்தார் சீற்றம்; மன்னனை அஞ்சிப் பிறிகில்லார்;
செறிந்தார் ஆய தீவினை அன்னார் தெறல் எண்ணார்;
நெறிந்து ஆர் ஓதிப் பேதையும் ஆவி நிலை நின்றாள். 159

156. சிக்க - உறுதியாக; 157. மெய் - உடம்பு, ஈண்டு உடம்பின் பரபரப்பு.

# 4 உருக் காட்டு படலம்

**அனுமன் விஞ்சையால் அரக்கியர் உறங்குதல்**

'காண்டற்கு ஒத்த காலமும் ஈதே; தெறு காவல்
தூண்டற்கு ஒத்த சிந்தையினுரும் துயில்கில்லார்;
வேண்டத் துஞ்சார்' என்று, ஒரு விஞ்சை வினை செய்தான்;
மாண்டு அற்ருராம் என்றிட, எல்லாம் மயர்வு உற்ருர். 1

**சீதையின் துயர மொழி**

துஞ்சாதாரும் துஞ்சுதல் கண்டாள்; துயர் ஆற்ருள்;
நெஞ்சால் ஒன்றும் உய் வழி காணுள், நெகுகின்ருள்;
அஞ்சாநின்ருள், பல் நெடு நாளும் அழிவுற்ருள்,
எஞ்சா அன்பால், இன்ன பகர்ந்து, ஆங்கு, இடர் உற்ருள். 2

'கரு மேகம், நெடுங் கடல், கா அனையான்
தருமே, தனியேன் எனது ஆர் உயிர்தான்?
உரும்ஏறு உறழ் வெஞ் சிலை நாண் ஒலிதான்
வருமே? உரையாய், வலியார் வலியே! 3

'கல்லா மதியே! கதிர் வாள் நிலவே!
செல்லா இரவே! சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர்; நினையா
வில்லாளனை, யாதும் விளித்திலிரோ?† 4

'தழல் வீசி உலர்வு வாடை தழீஇ
அழல்வீர்; எனது ஆவி அறிந்திலிரோ?
நிழல் வீரை அனுனுடனே நெடு நாள்
உழல்வீர்; கொடியீர்! உரையாடிலிரோ?† 5

'வாராது ஒழியான் எனும் வண்மையினுல்,
ஓர் ஆயிர கோடி இடர்க்கு உடையேன்;
தீராய் ஒரு நாள் வலி—சேவகனே!
நாராயணனே! தனி நாயகனே!† 6

'தரு ஒன்றிய கான் அடைவாய், ''தவிர் நீ;
வருவென் சில நாளினில்; மா நகர்வாய்
இரு'' என்றனை; இன் அருள்தான் இதுவோ?
ஒருவென் தனி ஆவியை உண்ணுதியோ?† 7

4: 3. கா - (கற்பகச்) சோலை; 4. வில்லாளன் - இராமன்; 5. நிழல் - உடல் ஒளி; வீரை அனுன் - கடலை ஒத்தவன்; கொடியீர் - பூங்கொடிகளே.

'பேணும் உணர்வே! உயிரே! பெரு நாள்
நாண் இன்று உழல்வீர்; தனி நாயகனைக்
காணும் துணையும் கழிவீர்அலிர்; நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ? 8

'முடியா முடி மன்னன் முடிந்திடவும்,
படி ஏழும் நெடுந் துயர் பாவிடவும்,
மடியா நெறி வந்து வனம் புகுதும்
கொடியார் வரும் என்று, குலாவுவதோ?' 9

சீதை உயிர் விடத் துணிதல்

என்று என்று, உயிர் விம்மி, இருந்து அழிவாள்,
மின் துன்னும் மருங்குல் விளங்கு இழையாள்;
'ஒன்று என் உயிர் உண்டு எனின், உண்டு இடர்; யான்
பொன்றும் பொழுதே, புகழ் பூணும்' என, 10

'பொறை இருந்து ஆற்றி, என் உயிரும் போற்றினேன்,
அறை இருங் கழலவற் காணும் ஆசையால்;
நிறை இரும் பல் பகல், நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேனை, அப் புனிதன் தீண்டுமோ? 11

'உன்னினர் பிறர் என உணர்ந்தும், உய்ந்து, அவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்,
மன் உயிர் காத்து, இருங் காலம் வைகினேன்;
என்னின், வேறு அரக்கியர், யாண்டையார்கொலோ? 12

'சொல் பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்;
நல் பிறப்பு உடைமையும் நாணும் நன்றுஅரோ!
கற்புடை மடந்தையர், கதையுளோர்கள்தாம்,
இல் பிரிந்து உய்ந்தவர் யாவர் யான் அலால்? 13

' ''பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறன் அலது'' என்று, உயிர்க்கு இறைவன் தீர்ந்தனன்;
புறன் அலர், அவன் உற, போது போக்கி, யான்,
அறன் அலது இயற்றி, வேறு என் கொண்டு ஆற்றுகேன்? 14

9. முடியா - அழிவில்லா; மடியா நெறி - நடக்க நடக்க முடியாத வழி; கொடியார் - கொடிய இராமபிரான்; 13. சொல் பிரியா - சொல்லுதல் நீங்காத; கதையுளோர்கள்தாம் - பழைய கதைகளில் வந்துள்ளவர்கள் தம்மில்; 14. என் கொண்டு - எந்த நன்மை கருதி.

'எப் பொழுது, இப் பெரும் பழியின் எய்தினேன்,
அப் பொழுதே, உயிர் துறக்கும் ஆணையேன்;
ஒப்பு அரும் பெரு மறு உலகம் ஓத, யான்,
துப்பு அழிந்து உய்வது, துறக்கம் துன்னவோ? 15

'அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர்,
வன் பழி சுமக்கினும் சுமக்க; வான் உயர்,
துன்பு அழி, பெரும் புகழ்க் குலத்துள் தோன்றினேன்;
என் பழி துடைப்பவர், என்னின் யாவரே? 16

'வஞ்சனை மானின் பின் மன்னனைப் போக்கி, என்
மஞ்சனை வைது, ''பின் வழிக் கொள்வாய்'' என,
நஞ்சு அனையான் அகம் புகுந்த நங்கை யான்
உய்ஞ்சனென் இருத்தலும், உலகம் கொள்ளுமோ? 17

'வல் இயல் மறவர், தம் வடுவின் தீர்பவர்,
வெல்லினும் வெல்க, போர்; விளிந்து வீடுக;
இல் இயல் அறத்தை யான் இறந்து வாழ்ந்த பின்,
சொல்லிய என் பழி அவரைச் சுற்றுமோ? 18

'வருந்தல் இல் மானம், மா அனைய மாட்சியர்
பெருந் தவம் மடந்தையர் முன்பு, பேதையேன்,
''கருந் தனி முகிலினைப் பிரிந்து, கள்வர் ஊர்
இருந்தவள், இவள்'' என, ஏச நிற்பெனோ? 19

'அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,
வில் பணி கொண்டு, அருஞ் சிறையின் மீட்ட நாள்,
''இல் புகத் தக்கலை'' என்னில், யானுடைக்
கற்பினை, எப் பரிசு இழைத்துக் காட்டுகேன்? 20

**சீதை மாதவிப் பொதும்பர் அடைதலும், அனுமன் தோன்றுதலும்**

'ஆதலான், இறத்தலே அறத்தின் ஆறு' என,
'சாதல் காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்;
ஈது அலாது இடமும் வேறு இல்லை' என்று, ஒரு
போது உலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள். 21

15. ஆணை - முறைமை; துப்பு - பெருமை; 17. மஞ்சன் - மைந்தன்; மைத்துனனை மைந்தன் என்றது அன்புபற்றியது; 19. மா - கவரி மான்.

கண்டனன் அனுமனும்; கருத்தும் எண்ணினன்;
கொண்டனன் துணுக்கம்; மெய் தீண்டக் கூசுவான்,
'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' என,
தொண்டை வாய் மயிலினைத் தொழுது, தோன்றினன். 22

அனுமன், தன்னை 'இராம தூதன்' என மொழிதல்

'அடைந்தனென் அடியனேன், இராமன் ஆணையால்;
குடைந்து உலகு அனைத்தையும் நாடும் கொட்பினால்
மிடைந்தவர் உலப்பு இலர்; தவத்தை மேவலால்,
மடந்தை! நின் சேவடி வந்து நோக்கினேன். 23

'ஈண்டு நீ இருந்ததை, இடரின் வைகுறும்
ஆண்தகை அறிந்திலன்; அதற்குக் காரணம்
வேண்டுமே? அரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில; ஈது அலால், மாறு வேறு உண்டோ? 24

'ஐயுறல்; உளது அடையாளம்; ஆரியன்
மெய் உற உணர்த்திய உரையும் வேறு உள;
கை உறு நெல்லியங் கனியின் காண்டியால்;
நெய் உறு விளக்கு அனாய்! நினையல் வேறு' என்றான். 25

சீதை, அனுமனைத் தெளிந்து வினவல்

என்று அவன் இறைஞ்ச நோக்கி, இரக்கமும் முனிவும் எய்தி,
'நின்றவன் நிருதன் அல்லன்; நெறி நின்று, பொறிகள் ஐந்தும்
வென்றவன்; அல்லனாகில், விண்ணவன் ஆக வேண்டும்;
நன்று உணர்வு உரையன்; தூயன்; நவை இலன் போலும்!' என்னா, 26

'அரக்கனே ஆக: வேறு ஓர் அமரனே ஆக; அன்றிக்
குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக; கொடுமை ஆக;
இரக்கமே ஆக; வந்து, இங்கு, எம்பிரான் நாமம் சொல்லி,
உருக்கினன் உணர்வை; தந்தான் உயிர்; இதின் உதவி உண்டோ?' 27

என நினைத்து, எய்த நோக்கி, 'இரங்கும் என் உள்ளம்; கள்ளம்
மனன் அகத்து உடையர் ஆய வஞ்சகர் மாற்றம் அல்லன்;
நினைவுடைச் சொற்கள் கண்ணீர் நிலம் புக, புலம்பா நின்றான்;
வினவுதற்கு உரியன்' என்னா, 'வீர! நீ யாவன்?' என்றாள். 28

22. தொண்டை - கோவைப் பழம்; 23. கொட்பு - கோட்பாடு; 25. மெய் உற - உண்மை விளங்கும்படி; 28. நினைவு - நல்ல எண்ணம்; வருத்தமும் ஆம்.

**அனுமன் தன் வரலாறு கூறுதல்**

ஆய சொல் தலைமேல் கொண்ட அங்கையன், 'அன்னை! நின்னைத்
தூயவன் பிரிந்த பின்பு தேடிய துணைவன், தொல்லைக்
காய் கதிர்ச் செல்வன் மைந்தன், கவிக்குலம் அவற்றுக்கு எல்லாம்
நாயகன், சுக்கிரீவன் என்று உளன், நவையின் தீர்ந்தான். 29

'மற்று, அவன் முன்னோன் வாலி; இராவணன் வலி தன் வாலின்
இற்று உகக் கட்டி, எட்டுத் திசையினும் எழுந்து பாய்ந்த
வெற்றியன்; தேவர் வேண்ட, வேலையை, விலங்கல் மத்தில்
சுற்றிய நாகம் தேய, அமுது எழ, கடைந்த தோளான். 30

'அன்னவன் தன்னை, உம் கோன், அம்பு ஒன்றால் ஆவி வாங்கி,
பின்னவற்கு அரசு நல்கி, துணை எனப் பிடித்தான்; எங்கள்
மன்னவன் தனக்கு, நாயேன், மந்திரத்து உள்ளோன்; வானின்
நல் நெடுங் காலின் மைந்தன்; நாமமும் அனுமன் என்பேன். 31

'எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன; உலகம் எல்லாம்
தழுவி நின்று எடுப்ப; வேலை தனித் தனி கடக்கும் தாள;
குழுவின, உம் கோன் செய்யக் குறித்தது குறிப்பின் உன்னி,
வழு இல, செய்தற்கு ஒத்த—வானரம் வானின் நீண்ட. 32

'துப்பு உறு பரவை ஏழும், சூழ்ந்த பார் ஏழும், ஆழ்ந்த
ஒப்பு உறு நாகர் நாடும், உம்பர்நின்று இம்பர்காறும்,
இப் புறம் தேடி நின்னை எதிர்ந்திலஎன்னின், அண்டத்து
அப் புறம் போயும் தேட, அவதியின் அமைந்து போன. 33

'புன் தொழில் அரக்கன் கொண்டு போந்த நாள், பொதிந்து தூசில்
குன்றின் எம் மருங்கின் இட்ட அணிகலக் குறியினாலே,
வென்றியான் அடியேன் தன்னை வேறு கொண்டு இருந்து கூறி,
"தென் திசைச் சேறி" என்றான்; அவன் அருள் சிதைவது ஆமோ? 34

கொற்றவற்கு, ஆண்டு, காட்டிக் கொடுத்த போது, அடுத்த தன்மை,
பெற்றியின் உணர்தற்பாற்றோ? உயிர் நிலை பிறிதும் உண்டோ?
இற்றை நாள் அளவும், அன்னாய்! அன்று நீ இழித்து நீத்த
மற்றை நல் அணிகள்காண், உன் மங்கலம் காத்த மன்னோ! 35

'ஆயவன் தன்மை நிற்க; அங்கதன், வாலி மைந்தன்,
ஏயவன் தென் பால் வெள்ளம் இரண்டினோடு எழுந்து சேனை
மேயின படர்ந்து தீர, அனையவன் விடுத்தான் என்னை,
பாய் புனல் இலங்கை மூதூர்க்கு' என்றனன், பழியை வென்றான். 36

31. மந்திரம் - அமைச்சர் அவை; 33. ஒப்பு - அழகு; 36. ஏயவன் - ஏவப்பட்டவன்.

ஐயன் மேனிபற்றிச் சீதை வினவ, அனுமன் விவரித்தல்

எய்து அவன் உரைத்தலோடும், எழுந்து, பேர் உவகை ஏற,
வெய்து உற ஒடுங்கும் மேனி வான் உற விம்மி ஓங்க,
'உய்தல் வந்து உற்றதோ?' என்று அருவி நீர் ஒழுகு கண்ணள்,
'ஐய! சொல், ஐயன் மேனி எப்படிக்கு அறிதி?' என்றாள். 37

'படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்து அன்று, படிவம்; பண்பின்
முடிவு உள உவமம் எல்லாம் இலக்கணம் ஒழியும், முன்னர்;
துடிஇடை! அடையாளத்தின் தொடர்வையே தொடர்தி' என்னா,
அடி முதல் முடியின்காறும், அறிவுற அனுமன் சொல்வான். 38

' ''சேயிதழ்த் தாமரை'' என்று, சேண் உளோர்
ஏயினர்; அதன் துணை எளியது இல்லையால்,
நாயகன் திருஅடி குறித்து நாட்டுறின்;
பாய் திரைப் பவளமும் குவளைப் பண்பிற்றால்! 39

'தளம் கெழு கற்பக முகிழும், தண் துறை
இளங் கொடிப் பவளமும் கிடக்க; என் அவை?
துளங்கு ஒளி விரற்கு எதிர், உதிக்கும் சூரியன்
இளங் கதிர் ஒக்கினும் ஒக்கும்—ஏந்திழாய்! 40

'சிறியவும் பெரியவும் ஆகி, திங்களோ,
மறு இல பத்து உளஅல்ல; மற்று இனி;
எறி சுடர் வயிரமோ திரட்சி எய்தில;
அறிகிலென், உகிர்க்கு, யான், உவமம் ஆவன. 41

'பொருந்தில நிலனொடு, போந்து கானிடை
வருந்தினஎனின், அது நூலை மாறுகொண்டு
இருந்தது; நின்றது, புவனம் யாவையும்
ஒருங்கு உடன் புணர; அஃது உரைக்கற்பாலதோ? 42

'தாங்கு அணைப் பணிலமும் வளையும் தாங்கு நீர்
வீங்கு அணைப் பணிமிசை மேகம் அன்னவன்
பூங் கணைக்காற்கு ஒரு பரிசுதான் பொரு,
ஆம் கணைக்கு ஆவமோ, ஆவது? அன்னையே! 43

38. படி - ஒத்தபிறிதொன்று, உவமை; இலக்கணம் - உவமைத்தன்மை; தொடர்வு - தொடர்ச்சி; தொடர்தி - கேட்டு அறிவாய்; 39. ஏயினர் - பணித்தனர்; அதன் துணை - அத் தாமரை மலரின் அளவு; எளியது - தாழ்ந்தது; 41. திரட்சி - உருட்சி; உகிர் - நகம்; 42. நூலை மாறு கொள்ளல் - உடற்கூற்று இலக்கணத்தையும் கடந்து மிக அழகியதாக இருத்தல்; 43. அணை தாங்க பணிலம் - நீர்க் கரைகளில் தங்கும் சங்கு; வளை - சக்கரம்; ஆவம் - அம்பறாத் தூணி.

'அறம் கிளர் பறவையின் அரசன் ஆடு எழில்
பிறங்கு எருத்து அணவன பெயரும், பொற்புடை,
மறம் கிளர் மத கரிக் கரமும் நாணின,
குறங்கினுக்கு உவமை, இவ் உலகில் கூடுமோ? 44

'வலம் சுழித்து ஒழுகு நீர் வழங்கு கங்கையின்
பொலஞ் சுழி என்றலும் புன்மை; பூவொடு
நிலம் சுழித்து எழு மணி உந்தி நேர், இனி,
இலஞ்சியும் போலும்? வேறு உவமை யாண்டுஅரோ? 45

'பொரு அரு மரகதப் பொலன் கொள் மால் வரை
வெருவுற விரிந்து உயர் விலங்கல் ஆகத்தைப்
பிரிவு அற நோற்றனள் என்னின், பின்னை, அத்
திருவினின் திரு உளார் யாவர்? தெய்வமே! 46

'நீடுறு கீழ்த் திசை நின்ற யானையின்
கோடு உறுகரம் என, சிறிது கூறலாம்,
தோடு உறு மலர் எனச் சுரும்பு சுற்று அருத்
தாள் தொடு தடக் கை; வேறு உவமை சாலுமே? 47

'பச்சிலைத் தாமரை பகல் கண்டால் எனக்
கைச் செறி முகிழ் உகிர், கனகன் என்பவன்
வச்சிர யாக்கையை வகிர்ந்த வன் தொழில்
நிச்சயம்; அன்று எனின், ஐயம் நீக்குமே. 48

'திரண்டில; ஒளி இல; திருவின் சேர்வு இல;
முரண் தரு மேரு வில் முரிய மூரி நாண்
புரண்டில; புகழ் இல; பொருப்பு என்று ஒன்று போன்று
இரண்டு இல; புயங்களுக்கு உவமம் ஏற்குமோ? * 49

' ''கடற் படு பணிலமும், கன்னிப் பூகமும்,
மிடற்றினுக்கு உவமை'' என்று உரைக்கும் வெள்ளியோர்க்கு
உடன்பட ஒண்ணுமோ—உரகப் பள்ளியான்
இடத்து உறை சங்கம் ஒன்று இருக்க, எங்களால்? 50

'அண்ணல்தன் திரு முகம் கமலம் ஆம் எனின்,
கண்ணினுக்கு உவமை வேறு யாது காட்டுகேன்?
தண் மதி ஆம் என உரைக்கத் தக்கதோ,
வெண் மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்? 51

44. அறம் கிளர் பறவை - தரும வடிவாய் விளங்கும் கருடன்; எருத்து - பிடரி; 45. பூ - தாமரை மலர்; நிலம் - உலகங்கள்; இலஞ்சி - மகிழம்பூ; 48. பகல் - சூரியன்; 50. கன்னிப் பூகம் - இளமையான பாக்குமரம்; வெள்ளியோர் - அறிவிலிகள்; சங்கம் - பாஞ்ச சன்னியம்.

'''ஆரமும் அகிலும் நீவி அகன்ற தோள் அமலன் செவ்வாய்
நாரம் உண்டு அலர்ந்த, செங் கேழ் நளினம்'' என்று உரைக்க நாணும்;
ஈரம் உண்டு, அமுதம் ஊறும் இன் உரை இயம்பாதேனும்,
மூரல் வெண் முறுவல் பூவாப் பவளமோ, மொழியற்பாற்றே?

'முத்தம் கொல்லோ? முழு நிலவின்
முறியின் திறனோ? முறை அமுதச்
சொத்தின் துள்ளி வெள்ளி இனம்
தொடுத்த கொல்லோ? துறை அறத்தின்
வித்து முளைத்த அங்குரம்கொல்?
வேறே சிலகொல்? மெய்ம் முகிழ்த்த
தொத்தின் தொகைகொல்? யாது என்று
பல்லுக்கு உவமை சொல்லுகேன்? 53

'எள்ளா நிலத்து இந்திரநீலத்து
எழுந்த கொழுந்தும் மரகதத்தின்
விள்ளா முழு மா நிழற் பிழம்பும்
வேண்ட வேண்டும் மேனியதோ?
தள்ளா ஓதி கோபத்தைக்
கௌவ வந்து சார்ந்ததுவும்
கொள்ளா, வள்ளல் திரு மூக்கிற்கு;
உவமை பின்னும் குணிப்பு ஆமோ? 54

'பனிக்க, சுரத்து, கரன் முதலோர்
கவந்தப் படையும், பல் பேயும்,
தனிக் கைச் சிலையும், வானவரும்,
முனிவர் குழுவும், தனி அறனும்,
''இனிக் கட்டழிந்தது அரக்கர் குலம்''
என்னும் சுருதி ஈர்-இரண்டும்,
குனிக்க, குனித்த புருவத்துக்கு
உவமம், நீயே, கோடியால். 55

'வரு நாள் தோன்றும் தனி மறுவும்,
வளர்வும், தேய்வும், வாள் அரவம்
ஒரு நாள் கவ்வும் உறு கோளும்,
இறப்பும், பிறப்பும் ஒழிவுற்றால்,
இரு-நால் பகலின் இலங்கு மதி,
அலங்கல் இருளின் எழில் நிழற் கீழ்ப்
பெரு நாள் நிற்பின், அவன் நெற்றிப்
பெற்றித்து ஆகப் பெறும் மன்னோ! 56

52. நாரம் - நீர்; மூரல் - பற்கள்; 53. தொத்து - பூங்கொத்து, ஈண்டு அரும்பு; 54. தள்ளா ஓதி - குறி தவறாத பச்சோந்தி; குணிப்பு - சொல்லுதல்; 55. பனிக்க - நடுங்க; குனிக்க - கூத்தாட; 56. கோள் - துன்பம்.

'நீண்டு, குழன்று, நெய்த்து, இருண்டு,
நெறிந்து, செறிந்து, நெடு நீலம்
பூண்டு, புரிந்து, சரிந்து, கடை
சுருண்டு, புகையும் நறும் பூவும்
வேண்டும் அல்ல என, தெய்வ
வெறியே கமழும் நறுங் குஞ்சி,
ஈண்டு சடை ஆயினது என்றால்,
மழை என்று உரைத்தல் இழிவு அன்றோ? 57

'புல்லல் ஏற்ற திருமகளும்,
பூவும், பொருந்தப் புவி ஏழும்
எல்லை ஏற்ற நெடுஞ் செல்வம்
எதிர்ந்த ஞான்றும், அஃது இன்றி
அல்லல் ஏற்ற கானகத்தும்,
அழியா நடையை, இழிவான
மல்லல் ஏற்றின் உளது என்றால்,
மத்த யானை வருந்தாதோ?' 58

இன்ன மொழிய, அம் மொழி கேட்டு,
எரியின் இட்ட மெழுகு என்ன,
தன்னை அறியாது அயர்வாளை,
தரையின் வணங்கி, 'நாயகனார்
சொன்ன குறி உண்டு; அடையாளச்
சொல்லும் உளவால், அவை, தோகை
அன்ன நடையாய், கேட்க!' என,
அறிவன் அறைவான் ஆயினன்: 59

அனுமன் கூறிய அடையாள உரைகள்

'"நடத்தல் அரிது ஆகும் நெறி; நாள்கள் சில; தாயர்க்கு
அடுத்த பணி செய்து இவண் இருத்தி" என, அச் சொற்கு,
உடுத்த துகிலோடும், உயிர் உக்க உடலோடும்,
எடுத்த முனிவோடும், அயல் நின்றதும் இசைப்பாய். 60

'"நீண்ட முடி வேந்தன் அருள் ஏந்தி, நிறை செல்வம்
பூண்டு, அதனை நீங்கி, நெறி போதலுறு நாளின்,
ஆண்ட நகர் ஆரையொடு வாயில் அகலாமுன்,
யாண்டையது கான்?" என, இசைத்ததும் இசைப்பாய். 61

57. குழன்று - சுருண்டு; நெய்த்து - பளபளப்போடு கூடி; நெறித்து - ஒழுங்குபட்டு; 58. பூ - பூதேவி; மல்லல் ஏறு - வளமான காளை; 60. நெறி நடத்தல் அரிது ஆகும் எனக் கூட்டுக; நெறி - காட்டு வழி; 61. ஆரை - மதில்.

' ''எள் அரிய தேர் தரு சுமந்திரன்! இசைப்பாய்,
வள்ளல் மொழி வாசகம்; மனத் துயர் மறந்தாள்;
கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல் கிள'' என்னும்,
பிள்ளை உரையின் திறம் உணர்த்துதி, பெயர்த்தும். 62

அனுமன் திரு ஆழியைக் காட்டலும், சீதை நிலையும்

' ''மீட்டும் உரை வேண்டுவன இல்லை'' என, ''மெய்ப் பேர்
தீட்டியது; தீட்ட அரிய செய்கையது; செவ்வே,
நீட்டு இது'' என, நேர்ந்தனன்' எனு, நெடிய கையால்,
காட்டினன் ஓர் ஆழி; அது வாள் நுதலி கண்டாள். 63

இறந்தவர் பிறந்த பயன் எய்தினர்கொல் என்கோ?
மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர்கொல் என்கோ?
துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்ததுகொல் என்கோ?
திறம் தெரிவது என்னைகொல், இந் நல் நுதலி செய்கை? 64

இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனுள்;
பழந் தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்;
குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்;
உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப் பொறையும் ஒத்தாள். 65

வாங்கினள்; முலைக் குவையில் வைத்தனள்; சிரத்தால்
தாங்கினள்; மலர்க் கண்மிசை ஒற்றினள்; தடந் தோள்
வீங்கினள்; மெலிந்தனள், குளிர்ந்தனள்; வெதுப்போடு
ஏங்கினள்; உயிர்த்தனள், இது இன்னது எனல் ஆமே? 66

மோக்கும்; முலை வைத்து உற முயங்கும்; ஒளிர் நல் நீர்
நீக்கி, நிறை கண் இணை ததும்ப, நெடு நீளம்
நோக்கும்; நுவலக் கருதும், ஒன்றும் நுவல்கில்லாள்;
மேக்கு நிமிர் விம்மலள்; விழுங்கலுறுகின்றுள். 67

நீண்ட விழி நேரிழைதன் மின்னின் நிறம் எல்லாம்
பூண்டது, ஒளிர் பொன் அனைய பொம்மல் நிறம்; மெய்யே!
ஆண்தகைதன் மோதிரம் அடுத்த பொருள் எல்லாம்
தீண்டு அளவில், வேதிகை செய் தெய்வ மணிகொல்லோ? 68

இருந்து பசியால் இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும் அமுது ஆகியது; அறத்தவரை அண்மும்
விருந்தும் எனல் ஆகியது; வீயும் உயிர் மீளும்
மருந்தும் எனல் ஆகியது; வாழி மணி ஆழி! 69

67. நல் நீர் - மகிழ்ச்சிக் கண்ணீர்; நெடு நீளம் - நீண்ட நேரம்; 68. பொம்மல் - பொலிவு; தெய்வ மணி - தெய்வத்தன்மை பொருந்திய ரச குளிகை.

சீதை அனுமனை வாழ்த்துதல்

இத் தகையள் ஆகி, உயிர் ஏமுற விளங்கும்,
முத்த நகையாள், விழியின் ஆலி முலை முன்றில்
தத்தி உக, மென் குதலை தள்ள, 'உயிர் தந்தாய்!
உத்தம!' என, இனைய வாசகம் உரைத்தாள்: 70

'மும்மை ஆம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன் தூது ஆய்,
செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியது உண்டே?
அம்மை ஆய், அப்பன் ஆய அத்தனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமைதானும் நல்கினை, இசையோடு' என்றாள். 71

'பாழிய பணைத் தோள் வீர! துணை இலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறு இலா மனத்தேன்என்னின்,
ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம், உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும், இன்று என இருத்தி' என்றாள். 72

இராம-இலக்குவரைப்பற்றி வினவிய சீதைக்கு அனுமன் விடையிறுத்தல்

மீண்டு உரை விளம்பலுற்றாள், 'விழுமிய குணத்தோய்! வீரன்
யாண்டையான், இளவலோடும்? எவ் வழி எய்திற்று உன்னை?
ஆண்தகை, அடியேன் தன்மை யார் சொல, அறிந்தது?' என்றாள்;
தூண் திரள் தடந் தோளானும், உற்றது சொல்லலுற்றான்: 73

'உழைக் குலத் தீய மாய உருவு கொண்டு, உறுதல் செய்தான்,
மழைக் கரு நிறத்து மாய அரக்கன், மாரீசன் என்பான்;
இழைத் தட மார்பத்து அண்ணல் எய்ய, போய், வையம் சேர்வான்
அழைத்தது அவ் ஓசை; உன்னை மயக்கியது அரக்கன் சொல்லால். 74

' "இக் குரல் இளவல் கேளாது ஒழிக" என, இறைவன் இட்டான்
மெய்க் குரல் சாபம்; பின்னை, விளைந்தது விதியின் வெம்மை;
"பொய்க் குரல் இன்று, பொல்லாப் பொருள் பின்பு பயக்கும்" என்பான்,
கைக் குரல் வரி வில்லானும், இளையவன் வரவு கண்டான். 75

'கண்ட பின், இளைய வீரன் முகத்தினால் கருத்தை ஓர்ந்த
புண்டரிகக் கணனும், உற்றது புகலக் கேட்டான்;
வண்டு உறை சாலை வந்தான், நின் திரு வடிவு காணான்,
உண்டு உயிர், இருந்தான்; இன்னல் உழப்பதற்கு ஏது ஒன்றோ?

72. பாழிய - வலிமை பொருந்திய; 74. வையம் சேர்வான் - மண்ணில் வீழ்பவன்; 75. சாபம் - வில்.

'தேண்டி நேர் கண்டேன்; வாழி! தீது இலன் எம் கோன்; ஆகம்
பூண்ட மெய் உயிரே நீ! அப் பொய் உயிர் போயே நின்ற
ஆண்தகை நெஞ்சில்நின்றும் அகன்றிலே; அழிவு உண்டாமோ?
ஈண்டு நீ இருந்தாய்; ஆண்டு, அங்கு, எவ் உயிர் விடும் இராமன்?

'அந் நிலே ஆய அண்ணல், ஆண்டு நின்று, அன்னே! நின்னேத்
துன் இருங் கானும் யாறும் மலேகளும் தொடர்ந்து நாடி,
இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்,
தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான். 78

'வந்து, அவன் மேனி நோக்கி, வான் உயர் துயரின் வைகி,
''எந்தை! நீ உற்ற தன்மை இயம்பு'' என, இலங்கை வேந்தன்,
சுந்தரி! நின்னேச் செய்த வஞ்சனே சொல்லச் சொல்ல,
வெந்தன உலகம் என்ன, நிமிர்ந்தது சீற்ற வெந் தீ. 79

'சீறி, ''இவ் உலகம் மூன்றும் தீந்து உக, சின வாய் அம்பால்
நூறுவென்'' என்று, கை வில் நோக்கியகாலே, நோக்கி,
''ஊறு ஒரு சிறியோன் செய்ய, முனிதியோ உலகை? உள்ளம்
ஆறுதி'' என்று, தாதை ஆற்றலின் சீற்றம் ஆறி, 80

' ''எவ் வழி ஏகியுற்ருன்? யாண்டையான்? உறையுள் யாது?
செவ்வியோய், கூறுக!'' என்ன, செப்புவான் உற்ற செவ்வி,
வெவ்விய விதியின் கொட்பால், வீடினன் கழுகின் வேந்தன்;
எவ்விய வரி விற் செங் கை இருவரும், இடரின் வீழ்ந்தார். 81

'அயர்த்தவர், அரிதின் தேறி, ஆண் தொழில் தாதைக்கு, ஆண்டு,
செயத் தகு கடன்மை யாவும், தேவரும் மருளச் செய்தார்;
''கயத் தொழில் அரக்கன் தன்னே நாடி, நாம் காண்டும்'' என்னு,
புயல் தொடு குடுமிக் குன்றும், கானமும், கடிது போனர். 82

'அவ் வழி, நின்னேக் காணுது, அயர்த்தவர் அரிதின் தேறி,
செவ் வழி நயனம், செல்லும் நெடு வழி சேறு செய்ய,
வெவ் அழல் உற்ற மெல்லென் மெழுகு என அழியும் மெய்யன்,
இவ் வழி இனைய பன்னி, அறிவு அழிந்து, இரங்கலுற்ருன். 83

'கன்மத்தை ஞாலத்தவர் யார் உளரே கடப்பார்?
பொன் மொய்த்த தோளான், மயல் கொண்டு, புலன்கள் வேருய்,
நல் மத்தை நாகத்து அயல் சூடிய நம்பனேபோல்,
உன்மத்தன் ஆனுன், தனே ஒன்றும் உணர்ந்திலாதான். 84

80. தாதை - தந்தை, சடாயு; 81. கொட்பு - கொடுந்தன்மை; 82. கயத்தொழில் - கீழ்மைச் செயல்; 84. நல் மத்தை - நல்ல ஊமத்தம் பூவை.

'''போது ஆயினபோது, உன தண் புனல் ஆடல் பொய்யோ?
சீதா, பவளக் கொடி அன்னவள்-தேடி, என்கண்
நீ தா; தருகிற்றிலேயேல், நெருப்பு ஆதி!'' என்னு,
கோதாவரியைச் சினம் கொண்டனன், கொண்டல் ஒப்பான். 85

'''குன்றே! கடிது ஓடினை, கோமளக் கொம்பர் அன்ன
என் தேவியைக் காட்டுதி; காட்டலைஎன்னின், இவ் அம்பு
ஒன்றே அமையும், உனுடைக் குலம் உள்ள எல்லாம்
இன்றே பிளவா, எரியா, கரி ஆக்க'' என்றான். 86

'''பொன் மான் உருவால் சில மாயை புணர்க்க அன்றோ,
என் மான் அகல்வுற்றனள் இப்பொழுது என்கண்?'' என்னு,
நன் மான்களை நோக்கி, ''நும் நாமமும் மாய்ப்பென் இன்றே,
வில் மாண் கொலை வாளியின்'' என்று, வெகுண்டு நின்றான். 87

'வேறுற்ற மனத்தவன், இன்ன விளம்பி நோவ,
ஆறுற்ற நெஞ்சின் தனது ஆர் உயிர் ஆய தம்பி
கூறுற்ற சொல் என்று உள கோது அறு நல் மருந்தால்
தேறுற்று, உயிர் பெற்று, இயல்பும் சில தேறலுற்றான். 88

'வந்தான் இளையானொடு, வான் உயர் தேரின் வைகும்
நந்தா விளக்கின் வரும் எம் குல நாதன் வாழும்
சந்து ஆர் தடங் குன்றினில்; தன் உயிர்க் காதலோனும்
செந் தாமரைக் கண்ணனும், நட்டனர் தேவர் உய்ய. 89

'உண்டாயதும், உற்றதும், முற்றும் உணர்த்தி, உள்ளம்
புண்தான் என நோய் உற விம்முறுகின்ற போழ்தின்,
எண்தான் உழந்து இட்ட நும் ஏந்து இழை, யாங்கள் காட்ட,
கண்டான், உயர் போதமும் வேதமும் காண்கிலாதான். 90

'தணிகின்ற நம் சொல் தொடர் தன்மையது அன்று தன்மை;
துணி கொண்டு இலங்கும் சுடர் வேலவன், தூய நின்கண்
அணி கண்டுழியே, அமுதம் தெளித்தாலும் ஆறுப்
பிணி கொண்டது; பண்டு அது உண்டு ஆயினும், பேர்ப்பது அன்றால். 91

'அயர்வு உற்று, அரிதின் தெளிந்து, அம் மலைக்கு அப் புறத்து ஓர்
உயர் பொன் கிரி உற்று உளன், வாலி என்று ஓங்கல் ஒப்பான்,
துயர்வு உற்று அவ் இராவணன் வாலிடைப் பண்டு தூங்க,
மயர்வு உற்ற பொருப்பொடு, மால் கடல் தாவி வந்தான். 92

85. நெருப்பு ஆதி - (என் அம்பால்) வெந்துவிடுவாய்; 86. ஓடினை - ஓடி வந்து; 90. எண் - மனம்; 92. மயர்வு உற்ற - கண்டவர் மயங்குதல் காரணமான.

'ஆயானை, ஓர் அம்பினில் ஆர் உயிர் வாங்கி, அன்பின்
தூயான்வயின், அவ் அரசு ஈந்தவன், ''சுற்று சேனை
மேயான் வருவான்'' என விட்டனன்; மேவுகாறும்
ஏயான், இருந்தான், இடைத் திங்கள் இரண்டு இரண்டும். 93

'பின் கூடிய சேனை பெருந் திசை பின்ன ஆக,
வில் கூடு நுதல் திரு! நின்னிடை மேவ ஏவி,
தெற்கு ஊடுருவக் கடிது ஏவினன் என்னை' என்ன,
முன் கூடின கூறினன், காலம் ஓர் மூன்றும் வல்லான். 94

இராமனது வருத்தத்தை எண்ணிய சீதையின் மன நிலை

அன்பினன் இவ் உரை உணர்த்த, ஆரியன்
வன் பொறை நெஞ்சினன் வருத்தம் உன்னுவாள்,
என்பு உற உருகினள்; இரங்கி ஏங்கினள்;
துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்.' 95

கடல் கடந்தவாற்றைச் சீதை வினவலும், அனுமன் விடையிறுத்தலும்

நையுறு சிந்தையள், நயன வாரியின்
தொய்யல் வெஞ் சுழியிடைச் சுழிக்கும் மேனியள்,
'ஐய! நீ அளப்ப அரும் அளக்கர் நீந்தினை
எய்தியது எப் பரிசு? இயம்புவாய்!' என்றாள். 96

'சுருங்கு இடை! உன் ஒரு துணைவன் தூய தாள்
ஒருங்குடை உணர்வினோர், ஒய்வு இல் மாயையின்
பெருங் கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்,
கருங் கடல் கடந்தனென், காலினால்' என்றான். 97

'இத் துணைச் சிறியது ஓர் ஏண் இல் யாக்கையை;
தத்தினை கடல்; அது, தவத்தின் ஆயதோ?
சித்தியின் இயன்றதோ? செப்புவாய்' என்றாள்—
முத்தினும், நிலவினும், முறுவல் முற்றினாள். 98

அனுமன் தன் பேர் உருக் காட்டுதல்

சுட்டினன், நின்றனன்—தொழுத கையினன்;
விட்டு உயர் தோளினன்; விசும்பின் மேக்கு உயர்
எட்ட அரு நெடு முகடு எய்தி, நீளுமேல்
முட்டும் என்று, உருவொடு வளைந்த மூர்த்தியான். 99

93. ஏயான் - ஏவப்பட்ட சுக்கிரீவன்; 98. ஏண் - வலிமை; தத்தினை - தாண்டினாய்; 99. சுட்டினன் - தன் பேருருவத்தைச் சீதைக்குக் காட்டி.

'செவ் வழிப் பெருமை என்று உரைக்கும் செம்மைதான்,
வெவ் வழிப் பூதம் ஓர் ஐந்தின் மேலதோ?
அவ் வழித்து அன்று எனின், அனுமன் பாலதோ?
எவ் வழித்து ஆகும்?' என்று எண்ணும் ஈட்டதே. 100

ஒத்து உயர் கனக வான் கிரியின் ஓங்கிய
மெய்த் துறு மரம்தொறும் மின்மினிக் குலம்
மொய்த்து உளவாம் என, முன்னும் பின்னரும்,
தொத்தின தாரகை, மயிரின் சுற்று எலாம். 101

கண்தலம் அறிவொடு கடந்த காட்சிய,
விண்தலம் இரு புடை விளங்கும் மெய்ம்மைய,
குண்டலம் இரண்டும், அக் கோளின் மாச் சுடர்
மண்டலம் இரண்டொடும், மாறு கொண்டவே. 102

'ஏண் இலது ஒரு குரங்கு ஈது' என்று எண்ணலா
ஆணியை, அனுமனை, அமைய நோக்குவான்,
'சேண் உயர் பெருமை ஓர் திறத்தது அன்று' என,
நாண் உறும்—உலகு எலாம் அளந்த நாயகன். 103

எண் திசை மருங்கினும், உலகம் யாவினும்,
தண்டல் இல் உயிர் எலாம் தன்னை நோக்கின;
அண்டம் என்றதின் உறை அமரர் யாரையும்
கண்டனன், தானும், தன் கமலக் கண்களால். 104

எழுந்து உயர் நெடுந்தகை இரண்டு பாதமும்
அழுந்துற அழுத்தலின், இலங்கை ஆழ் கடல்
விழுந்தது; நிலமிசை விரிந்த வெண் திரை
தழைந்தன; புரண்டன மீனம்தாம் எலாம். 105

**பேர் உருவை ஒடுக்குமாறு அனுமனைச் சீதை வேண்டுதல்**

வஞ்சிஅம் மருங்குல் அம் மறு இல் கற்பினள்,
கஞ்சமும் புரைவன கழலும் கண்டிலாள்;
'துஞ்சினர் அரக்கர்' என்று உவக்கும் சூழ்ச்சியாள்,
'அஞ்சினென் இவ் உரு; அடக்குவாய்' என்றாள். 106

'முழுவதும் இவ் உருக் காண முற்றிய
குழு இலது உலகு; இனி, குறுகுவாய்' என்றாள்,—
எழுவினும் எழில் இலங்கு இராமன் தோள்களைத்
தழுவினளாம் என, தளிர்க்கும் சிந்தையாள். 107

100. செவ் வழிப் பெருமை - நன்னெறி வாயிலாக எய்தும் பெருமை;
104. தண்டல் - நீக்குதல்.

ஆண்தகை அனுமனும், 'அருளது ஆம்' என,
மீண்டனன், விசும்பு எனும் பதத்தை மீச் செல்வான்,
காண்டலுக்கு உரியது ஓர் உருவு காட்டினன்;
தூண்டல் இல் விளக்கு அனாள் இனைய சொல்லினாள். 108

இடந்தாய் உலகை மலையோடும், எடுத்தாய் விசும்பை, இவை சுமக்கும்
படம் தாழ் அரவை ஒரு கரத்தால் பறித்தாய், எனினும், பயன் இன்றால்;
நடந்தாய் இடையே என்றாலும், நாண் ஆம் நினக்கு; நளிர் கடலைக்
கடந்தாய் என்றல் என் ஆகும்?—காற்றும் அன்ன கடுமையாய்! 109

'ஆழி நெடுங் கை ஆண்தகைதன் அருளும், புகழும், அழிவு இன்றி,
ஊழி பலவும் நிலைநிறுத்தற்கு, ஒருவன் நீயே உளை ஆனாய்;—
பாழி நெடுந் தோள் வீரா!—நின் பெருமைக்கு ஏற்ப, பகை இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்தது ஆகாதிருந்தது இழிவு அன்றோ? 110

'அறிவும் ஈதே, உரு ஈதே, ஆற்றல் ஈதே, ஐம் புலத்தின்
செறிவும் ஈதே, செயல் ஈதே, தேற்றம் ஈதே, தேற்றத்தின்
நெறியும் ஈதே, நினைவு ஈதே, நீதி ஈதே, நினக்கு என்றால்,
வெறியர் அன்றோ, குணங்களான் விரிஞ்சன் முதலாம் மேலானோர்? 111

'மின் நேர் எயிற்று வல் அரக்கர் வீக்கம் நோக்கி, வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லது ஓர் துணை இலாத பிழை நோக்கி,
உன்னா நின்றே உடைகின்றேன், ஒழிந்தேன் ஐயம்; உயிர் உயிர்த்தேன்;
என்னே? நிருதர் என் ஆவர், நீயே எம் கோன் துணை என்றால்?

'மாண்டேன் எனினும் பழுது அன்றே; இன்றே, மாயச் சிறைநின்றும்
மீண்டேன்; என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும் வேர் அறுத்தேன்,
பூண்டேன் எம் கோன் பொலங் கழலும்; புகழே அன்றி, புன் பழியும்
தீண்டேன்' என்று, மனம் மகிழ்ந்தாள், திருவின் முகத்துத் திருஆனாள்.

அனுமன் பணிமொழி

அண்ணற் பெரியோன், அடி வணங்கி, அறிய உரைப்பான், 'அருந்ததியே!
வண்ணக் கடலினிடைக் கிடந்த மணலின் பலரால், வானரத்தின்
எண்ணற்கு அரிய படைத் தலைவர், இராமற்கு அடியார்; யான் அவர்தம்
பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன்; ஏவல் கூவல் பணி செய்வேன்.

வானரப் படையின் சிறப்பை அனுமன் உரைத்தல்

'வெள்ளம் எழுபது உளது அன்றோ வீரன் சேனை? இவ் வேலைப்
பள்ளம், ஒரு கை நீர் அள்ளிக் குடிக்க, சாலும் பான்மையதோ?
கள்ள அரக்கர் கடி இலங்கை காணாது ஒழிந்ததால் அன்றோ,
உள்ள துணையும் உளது ஆவது? அறிந்தபின்னும் உளது ஆமோ?

111. வெறியர் - வெறுமையுடையவர்.

'வாலி இளவல், அவன்மைந்தன், மயிந்தன், துமிந்தன், வயக் குமுதன்,
நீலன், இடபன், குமுதாக்கன், பனசன், சரபன், நெடுஞ் சாம்பன்,
காலன் அனைய துன்மருடன், காம்பன், கவயன், கவயாக்கன்,
ஞாலம் அறியும் நளன், சங்கன், விந்தன், துவிந்தன், மதன் என்பான்;

'தம்பன், தூமத் தனிப் பெயரோன், ததியின் வதனன், சதவலி என்று
இம்பர் உலகோடு எவ் உலகும் எடுக்கும் மிடுக்கர், இராமன் கை
அம்பின் உதவும் படைத் தலைவர்; அவரை நோக்கின், இவ் அரக்கர்,
வம்பின் முலையாய்! உறை இடவும் போதார்; கணக்கு வரம்பு உண்டோ?'

## 5 சூடாமணிப் படலம்

### அனுமன் விண்ணப்பம்

'உண்டு துணை என்ன எளிதோ உலகின்? அம்மா!
புண்டரிகை போலும் இவள் இன்னல் புரிகின்றாள்;
அண்ட முதல் நாயகனது ஆவி அனையாளைக்
கொண்டு அகல்வதே கருமம்' என்று உணர்வுகொண்டான். 1

'கேட்டி, அடியேன் உரை; முனிந்தருளல்; கேள், ஆய்!
வீட்டியிடும் மேல் அவனை; வேறல் வினை அன்றால்;
ஈட்டி இனி என் பல; இராமன் எதிர், நின்னைக்
காட்டி, அடி தாழ்வென்; இது காண்டி இது காலம்; 2

'பொன் திணி பொலங்கொடி! என் மென் மயிர் பொருந்தித்
துன்றிய புயத்து இனிது இருக்க; துயர் விட்டாய்,
இன் துயில் விளைக்க; ஓர் இமைப்பின், இறை வைகும்
குன்றிடை, உனைக் கொடு குதிப்பென்; இடை கொள்ளேன். 3

'அறிந்து, இடை, அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்,
முறிந்து உதிர நூறி, என் மனச் சினம் முடிப்பேன்;
நெறிந்த குழல்! நின் நிலைமை கண்டும், நெடியோன்பால்,
வெறுங் கை பெயரேன்—ஒருவராலும் விளியாதேன். 4

' ''இலங்கையொடும் ஏகுதிகொல்'' என்னினும், இடந்து, என்
வலம்கொள் ஒரு கைத்தலையில் வைத்து, எதிர் தடுப்பான்
விலங்கினரை நூறி, வரி வெஞ் சிலையினோர்தம்
பொலங் கொள் கழல் தாழ்குவென்; இது, அன்னை! பொருள் அன்றால்.

5: 1. புண்டரிகை - இலக்குமி; 2. ஆய் - தாயே; பல ஈட்டி - பல சொற்களைத் திரட்டிச் சொல்லி; 3. இடை கொள்ளல் - நடுவில் தங்குதல், வருந்துதலும் ஆம்.

'அருந்ததி! உரைத்தி—அழகற்கு அருகு சென்று, ''உன்
மருந்து அனைய தேவி, நெடு வஞ்சர் சிறை வைப்பில்,
பெருந் துயரினோடும், ஒரு வீடு பெறுகில்லாள்,
இருந்தனள்'' எனப் பகரின், என் அடிமை என் ஆம்? 6

'புண் தொடர்வு அகற்றிய புயத்தினொடு புக்கேன்,
விண்டவர் வலத்தையும் விரித்து உரைசெய்கேனோ?
''கொண்டு வருகிற்றிலென்; உயிர்க்கு உறுதி கொண்டேன்;
கண்டு வருகிற்றிலென்'' எனக் கழறுகேனோ? 7

'''இருக்கும் மதில் சூழ் கடி இலங்கையை இமைப்பின்
உருக்கி எரியால், இகல் அரக்கனையும் ஒன்றா
முருக்கி, நிருதக் குலம் முடித்து, வினை முற்றிப்
பொருக்க அகல்க'' என்னினும், அது இன்று புரிகின்றேன். 8

'இந்துநுதல்! நின்னொடு இவண் எய்தி, இகல் வீரன்,
சிந்தை உறு வெந் துயர் தவிர்ந்து, தெளிவோடும்,
அந்தம் இல் அரக்கர் குலம் அற்று அவிய நூறி,
நந்தல் இல் புவிக்கண் இடர், பின் களைதல் நன்றால். 9

'வேறு இனி விளம்ப உளதன்று; விதியால், இப்
பேறு பெற, என்கண் அருள் தந்தருளு; பின் போய்
ஆறு துயர்; அம் சொல் இள வஞ்சி! அடியேன் தோள்
ஏறு, கடிது,' என்று, தொழுது இன் அடி பணிந்தான். 10

அனுமன் வேண்டுகோளைச் சீதை மறுத்து உரைத்தல்

ஏய நல் மொழி எய்த விளம்பிய
தாயை முன்னிய கன்று அனையான்தனக்கு,
'ஆய தன்மை அரியது அன்றால்' என,
தூய மென்சொல் இனையன சொல்லினள்: 11

'அரியது அன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே;
தெரிய எண்ணினை; செய்வதும் செய்தியே;
உரியது அன்று என ஓர்கின்றது உண்டு, அது, என்
பெரிய பேதைமைச் சில் மதிப் பெண்மையால். 12

'வேலையின்னிடையே வந்து, வெய்யவர்,
கோலி, நின்னொடும் வெஞ் சரம் கோத்தபோது,
ஆலம் அன்னவர்க்கு அல்லை, எற்கு அல்லையால்;
சாலவும் தடுமாறும்; தனிமையோய்! 13

7. புண் தொடர்வு - புண்படுதல்; விண்டவர் - பகைவர்; 11. முன்னிய - முன் சென்று நின்ற; 12. செய்வதும் செய்தி - செய்யவும் செய்வாய்.

'அன்றியும், பிறிது உள்ளது ஒன்று; ஆரியன்
வென்றி வெஞ் சிலை மாசுணும்; வேறு இனி
நன்றி என்? பதம் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை, நீயும் நினைத்தியோ? 14

'கொண்ட போரின் எம் கொற்றவன் வில் தொழில்
அண்டர் ஏவரும் நோக்க, என் ஆக்கையைக்
கண்ட வாள் அரக்கன் விழி, காகங்கள்
உண்டபோது அன்றி, யான் உளென் ஆவெனோ? 15

'வெற்றி நாணுடை வில்லியர் வில் தொழில்
முற்ற, நாண் இல் அரக்கியர், மூக்கொடும்
அற்ற நாணினர் ஆயின போது அன்றி,
பெற்ற நாணமும் பெற்றியது ஆகுமோ? 16

'பொன் பிறங்கல் இலங்கை, பொருந்தலர்
என்பு மால் வரை ஆகிலதேஎனின்,
இற் பிறப்பும், ஒழுக்கும், இழுக்கம் இல்
கற்பும், யான் பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன்? 17

'அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்
சொல்லினால் சுடுவேன்; அது, தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று, வீசினேன். 18

'வேறும் உண்டு உரை; கேள் அது; மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி அல்லால், இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும், ''ஆண்'' எனக்
கூறும்; இவ் உருத் தீண்டுதல் கூடுமோ? 19

'தீண்டினான்எனின், இத்தனை சேண் பகல்
ஈண்டுமோ உயிர் மெய்யின்? ''இமைப்பின்முன்
மாண்டு தீர்வென்'' என்றே, நிலம் வன் கையால்
கீண்டு கொண்டு, எழுந்து ஏகினன், கீழ்மையான். 20

' ''மேவு சிந்தை இல் மாதரை மெய் தொடின்,
தேவு வன் தலை சிந்துக நீ'' என,
பூவில் வந்த புராதனனே புகல்
சாவம் உண்டு; எனது ஆர் உயிர் தந்ததால். 21

14. பதம் - சோறு; 19. ஏறு சேவகன் - நாளும் வளரும் வீரம் உடையவன் (இராமன்); இடை ஐம்பொறி - வருத்தும் இயல்புடைய ஐம் பொறி; ஆறும் - அடங்கப்பெற்ற.

'அன்ன சாவம் உளது என, ஆண்மையான்,
மின்னும் மௌலியன், மெய்ம்மையன், வீடணன்
கன்னி, என்வயின் வைத்த கருணையாள்,
சொன்னது உண்டு, துணுக்கம் அகற்றுவான். 22

'ஆயது உண்மையின், நானும்—அது அன்று எனின்,
மாய்வென் மன்ற;—அறம் வழுவாது என்றும்,
நாயகன் வலி எண்ணியும், நானுடைத்
தூய்மை காட்டவும், இத்துணை தூங்கினேன். 23

'ஆண்டுநின்றும், அரக்கன் அகழ்ந்து கொண்டு,
ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய
நீண்ட சாலையொடு நிலைநின்றது;
காண்டி, ஐய! நின் மெய் உணர் கண்களால். 24

'தீர்விலேன், இது ஒரு பகலும்; சிலை
வீரன் மேனியை மானும் இவ் வீங்கு நீர்
நார நாள்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்,
சோரும் ஆர் உயிர் காக்கும் துணிவினால். 25

'ஆதலான், அது காரியம் அன்று; ஐய!
வேத நாயகன்பால், இனி, மீண்டனை
போதல் காரியம்' என்றனள் பூவை; அக்
கோது இலானும், இனையன கூறினான்: 26

'இராமனிடம் யாது கூறவேண்டும்?' என அனுமன் கேட்டல்

'நன்று! நன்று! இவ் உலகுடை நாயகன்
தன் துணைப் பெருந்தேவி தவத் தொழில்'
என்று சிந்தை களித்து, உவந்து, ஏத்தினான்—
நின்ற சங்கை இடரொடு நீங்கினான். 27

'இருளும் ஞாலம் இராவணனால்; இது
தெருளும், நீ இனிச் சில் பகல் தங்குறின்;
மருளும் மன்னவற்கு, யான் சொலும் வாசகம்
அருளுவாய்' என்று, அடியின் இறைஞ்சினான். 28

22. வீடணன் கன்னி - திரிசடை; 23. இத்துணை - இவ்வளவு நாள்; தூங்கினேன் - உயிரை விடாமல் தாமதித்தேன்; 25. தீர்தல் - நீங்குதல்.

**அனுமனிடம் சீதை கூறியவை**

'இன்னும், ஈண்டு, ஒரு திங்கள் இருப்பல் யான்;
நின்னை நோக்கிப் பகர்ந்தது, நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்ககிலேன்; அந்த
மன்னன் ஆணை; இதனை மனக் கொள் நீ. 29

' ''ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்தது ஓர்
தாரம்தான் அலளேனும், தயா எனும்
ஈரம்தான் அகத்து இல்லை என்றாலும், தன்
வீரம் காத்தலை வேண்டு'' என்று வேண்டுவாய். 30

'ஏத்தும் வென்றி இளையவற்கு, ஈது ஒரு
வார்த்தை கூறுதி; ''மன் அருளால் எனைக்
காத்து இருந்த தனக்கே கடன், இடை
கோத்த வெஞ் சிறை வீடு'' என்று கூறுவாய். 31

' ''திங்கள் ஒன்றின் என் செய் தவம் தீர்ந்ததால்;
இங்கு வந்திலனேஎனின், யாணர் நீர்க்
கங்கை யாற்றங்கரை, அடியேற்கும், தன்
செங் கையால் கடன் செய்க'' என்று செப்புவாய். 32

' ''சிறக்கும் மாமியர் மூவர்க்கும், சீதை ஆண்டு
இறக்கின்றாள் தொழுதாள்'' எனும் இன்ன சொல்,
அறத்தின் நாயகன்பால்; அருள் இன்மையால்
மறக்கும்ஆயினும், நீ மறவேல், ஐயா! 33

'வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்,
''இந்த, இப் பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்'' என்ற, செவ் வரம்
தந்த வார்த்தை திருச் செவி சாற்றுவாய். 34

' ''ஈண்டு நான் இருந்து, இன் உயிர் மாயினும்,
மீண்டு வந்து பிறந்து, தன் மேனியைத்
தீண்டலாவது ஓர் தீவினை தீர் வரம்
வேண்டினாள், தொழுது'' என்று விளம்புவாய். 35

'அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய் மணிப்
புரசை யானையின் வீதியில் போதவும்,
விரசு கோலங்கள் காண விதி இலேன்;
உரை செய்து என்னை? என் ஊழ்வினை உன்னுவேன். 36

36. புரசை - யானையின் கழுத்தில் கட்டப்படும் கயிறு; விரசு கோலம் - அவ்வப்பொழுது கொள்ளும் திருக்கோலம்.

'தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்,
அன்னை நோய்க்கும், பரதன் அங்கு ஆற்றுறும்
இன்னல் நோய்க்கும், அங்கு ஏகுவது அன்றியே,
என்னை நோக்கி, இங்கு, எங்ஙனம் எய்துமோ? 37

'எந்தை, யாய், முதலிய கிளைஞர் யார்க்கும், என்
வந்தனை விளம்புதி; கவியின் மன்னனை,
''சுந்தரத் தோளனைத் தொடர்ந்து, காத்துப் போய்,
அந்தம் இல் திரு நகர்க்கு அரசன் ஆக்கு'' என்பாய். 38

அனுமன் சீதையைத் தேற்றுதல்

இத் திறம் அனையவள் இயம்ப, 'இன்னமும்,
தத்துறல் ஒழிந்திலை, தையல் நீ!' எனா,
எத்திறத்து ஏதுவும் இயைந்த இன் உரை,
ஒத்தன, தெரிவுற உணர்த்தினன்அரோ: 39

'வீவாய், நீ இவண்; மெய் அஃதே?
ஓய்வான், இன் உயிர், உய்வானும்!
போய், வான் அந் நகர் புக்கு அன்றோ
வேய்வான் மௌலியும்? மெய் அன்றோ? 40

'கைத்து ஓடும் சிறை, கற்போயை
வைத்தோன் இன் உயிர் வாழ்வானும்!
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்!
இத்தோடு ஒப்பது யாது உண்டே? 41

'நல்லோய்! நின்னை நலிந்தோரைக்
கொல்லோம், எம் உயிர் கொண்டு அங்கே
எல்லோமும் செல, எம் கோனும்
வில்லோடும் செல வேண்டாவோ? 42

'நீந்தா இன்னலில் நீந்தாமே,
தேய்ந்து ஆறுத பெருஞ் செல்வம்
ஈந்தானுக்கு உனை ஈயாதே
ஓய்ந்தால், எம்மின் உயர்ந்தார் யார்? 43

39. தத்துறல் - துன்பப்படுதல்; 40. இன் உயிர் ஓய்வான் - இனிய உயிர் அழிந்துகொண்டிருப்பவன் (இராமன்); 41. கைத்து - வெறுத்து; 43. நீந்தா இன்னல் - வாலியால் நேர்ந்த கரை காண முடியாத துன்ப மிகுதி.

' ''நன்று ஆம் நல்வினை நல்லோரைத்
தின்றார்தம் குடர் பேய் தின்னக்
கொன்றால் அல்லது, கொள்ளேன் நாடு''
என்றானுக்கு, இவை ஏலாவோ? 44

'மாட்டாதார் சிறை வைத்தோயை,
''மீட்டாம்'' என்கிலம் மீள்வாமேல்,
நாட்டார், நல்லவர், நல் நூலும்
கேட்டார், இவ் உரை கேட்பாரோ? 45

' ''பூண்டாள் கற்புடையாள் பொய்யாள்,
தீண்டா வஞ்சகர் தீண்டாமுன்,
மாண்டாள்'' என்று, மனம் தேறி
மீண்டால், வீரம் விளங்காதோ? 46

'கெட்டேன்! நீ உயிர் கேதத்தால்
விட்டாய்என்றிடின், வெவ் அம்பால்,
ஒட்டாரோடு, உலகு ஓர் ஏழும்
சுட்டாலும், தொலையா அன்றோ? 47

'முன்னே, கொல்வான் மூஉலகும்,
பொன்னே பொங்கிய போர் வில்லான்,
என்னே! நின் நிலை ஈது என்றால்,
பின்னே, செம்மை பிடிப்பானோ? 48

'கோள் ஆனார் உயிர் கோளோடும்,
மூளா வெஞ் சினம், முற்று ஆகா;
மீளாவேல், அயல் வேறு உண்டோ?
மாளாதோ புவி வானோடும்? 49

'தாழித் தண் கடல்தம்மோடும்,
ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம், அன்று,
ஆழிக் கையவன் அம்பு, அம்மா!
ஊழித் தீ என உண்ணாவோ? 50

' ''படுத்தான், வானவர் பற்றாரை;
தடுத்தான், தீவினை; தக்கோரை
எடுத்தான்; நல்வினை, எந் நாளும்
கொடுத்தான்'' என்று, இசை கொள்ளாயோ? 51

45. வைத்தோயை - வைக்கப்பட்ட உன்னை; 47. கேதம் - துக்கம்; 48. செம்மை - பொறுமை; 49. கோள் - வலிமை, கொள்ளுதல்; மீளா வேல் - தணியாவிட்டால்.

'சில் நாள் நீ இடர் தீராதாய்
இன்று வைகலின், எல்லோரும்
நல் நாள் காணுதல் நன்று அன்றே—
உன்னால் நல் அறம் உண்டானால்? 52

'புளிக்கும் கண்டகர் புண்ணீருள்
குளிக்கும் பேய் குடையும்தோறும்,
ஒளிக்கும் தேவர் உவந்து, உள்ளம்
களிக்கும் நல்வினை காணுயோ? 53

'ஊழியின் இறுதியின் உரும் எறிந்தென,
கேழ் கிளர் சுடு கணை கிழித்த புண் பொழி
தாழ் இருங் குருதியால், தரங்க வேலைகள்
ஏழும் ஒன்றாக நின்று, இரைப்பக் காண்டியால். 54

'சூல் இரும் பெரு வயிறு அலைத்துச் சோர்வுறும்
ஆலிஅம் கண்ணியர் அறுத்து நீத்தன,
வாலியும் கடப்ப அரு வனப்ப, வான் உயர்
தாலி அம் பெரு மலை தயங்கக் காண்டியால். 55

'விண்ணின் நீளிய நெடுங் கழுதும், வெஞ் சிறை
எண்ணின் நீளிய பெரும் பறவை ஈட்டமும்,
புண்ணின் நீர்ப் புணரியில் படிந்து, பூவையர்
கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்பக் காண்டியால். 56

'கரம் பயில் முரசுஇனம் கறங்க, கை தொடர்
நரம்பு இயல் இமிழ் இசை நவில, நாடகம்
அரம்பையர் ஆடிய அரங்கின், ஆண் தொழில்
குரங்குகள் முறை முறை குனிப்பக் காண்டியால். 57

'புரை உறு புன் தொழில் அரக்கர் புண் பொழி
திரை உறு குருதி யாறு ஈர்ப்பச் செல்வன,
வரை உறு பிணப் பெரும் பிறக்கம் மண்டின,
கரை உறு நெடுங் கடல் தூர்ப்பக் காண்டியால். 58

'வினையுடை அரக்கர் ஆம் இருந்தை வெந்து உக,
சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கலான்,
அனகன் கை அம்பு எனும் அளவு இல் ஊதையால்,
கனகம் நீடு இலங்கை நின்று உருகக் காண்டியால். 59

53. புளிக்கும் - வெறுக்கும்; 54. கேழ் - ஒளி; 55. வனப்ப - வளர்ச்சியுடையன; 56. கழுது - பேய்; 58. பிறக்கம் - குவியல், உருவம்; 59. இருந்தை - கரிகள்; அனகன் - குற்றமற்றவன் (இராமன்); ஊதை - காற்று.

'தாக்கு இகல் இராவணன் தலையில் தாவின,
பாக்கியம் அனைய நின் பழிப்பு இல் மேனியை
நோக்கிய கண்களை, நுதி கொள் மூக்கினால்,
காக்கைகள் கவர்ந்து கொண்டு, உண்ணக் காண்டியால். 60

'மேல் உற இராவணற்கு அழிந்து வெள்கிய
நீல் உறு திசைக் கரி திரிந்து நிற்பன
ஆல் உற அனையவன் தலையை வவ்வி, வில்
கால் உறு கணை தடிந்து, இடுவ காண்டியால். 61

'நீர்த்து எழு கணை மழை வழங்க, நீல வான்
வேர்த்தது என்று இடை இடை வீசும் தூசுபோல்,
போர்த்து எழு பொலங் கொடி இலங்கை, பூழியோடு
ஆர்த்து எழு கழுது இரைத்து ஆடக் காண்டியால். 62

'நீல் நிற அரக்கர்தம் குருதி நீத்தம் நீர்
வேலை மிக்கு, ஆற்றொடு மீள, வேலை சூழ்
ஞாலம் முற்றுறு கடையுகத்து நச்சு அருக்
காலனும், வெறுத்து, உயிர் காலக் காண்டியால். 63

'அணங்கு இள மகளிரொடு அரக்கர் ஆடுறும்
மணம் கிளர் கற்பகச் சோலை வாவிவாய்,
பிணங்குறு வால் முறை பிடித்து, மாலைய
கணம் கொடு குரக்குஇனம் குளிப்பக் காண்டியால். 64

'செப்புறல் என் பல? தெய்வ வாளிகள்,
இப் புறத்து அரக்கரை முருக்கி ஏகின,
முப் புறத்து உலகையும் முடிக்க மூட்டலால்,
அப் புறத்து அரக்கரும் அவியக் காண்டியால். 65

'ஈண்டு, ஒரு திங்கள், இவ் இடரின் வைகுதல்
வேண்டுவது அன்று; யான், விரைவின் வீரனைக்
காண்டலே குறை; பினும் காலம் வேண்டுமோ?
ஆண்தகை இனி ஒருபொழுதும் ஆற்றுமோ? 66

61. நீல் உறு - நீல நிறம் பொருந்திய; ஆல் உற - களிக்கும்படி; 62. நீர்த்து - நீரின் தன்மை கொண்டு; தூசு - ஆடை; 63. நச்சு - (உயிர்களைத் தின்பதில்) விருப்பம்; உயிர் காலல் - உயிர்களைக் கக்கி வெளிப்படுத்தல்; உயிர் - உயிர்ப்பு என்பாரும் உண்டு; 64. பிணங்குறு - ஒன்றுடன் ஒன்று பின்னிக் கிடக்கின்ற.

' ''ஆவி உண்டு'' என்னும் ஈது உண்டு: உன் ஆர் உயிர்ச்
சேவகன் திரு உருத் தீண்ட, தீய்ந்திலாப்
பூ இலை; தளிர் இலை; பொரிந்து வெந்திலாக்
கா இலை; கொடி இலை;—நெடிய கான் எலாம். 67

'சோகம் வந்து உறுவது, தெளிவு தோய்ந்து அன்றோ?
மேகம் வந்து இடித்து உரும்ஏறு வீழ்கினும்,
ஆகமும் புயங்களும் அழுந்த, ஐந் தலை
நாகம் வந்து அடர்ப்பினும், உணர்வு நாறுமோ? 68

'மத்து உறு தயிர் என வந்து சென்று, இடை
தத்துறும் உயிரொடு புலன்கள் தள்ளுறும்
பித்து, நின் பிரிவினில் பிறந்த வேதனை,
எத்தனை உள? அவை எண்ணும் ஈட்டவோ? 69

' ''இந் நிலை உடையவன் தரிக்கும்'' என்றியேல்,
மெய்ந் நிலை உணர்ந்துழி விடை தந்தீதியேல்,
பொய்ந் நிலை காண்டியால்; புகன்ற யாவும், உன்
கைந் நிலை நெல்லியங்கனியின் காட்டுகேன். 70

'தீர்த்தனும், கவிக் குலத்து இறையும், தேவி! நின்
வார்த்தை கேட்டு உவப்பதன் முன்னர், மாக் கடல்
தூர்த்தன, இலங்கையைச் சூழ்ந்து, மாக் குரங்கு
ஆர்த்தது கேட்டு, உவந்து இருத்தி, அன்னை! நீ. 71

'எண்ண அரும் பெரும் படை, நாளை, இந் நகர்
நண்ணிய பொழுது, அதன் நடுவண், நங்கை! நீ,
விண் உறு கலுழன்மேல் விளங்கும் விண்டுவின்,
கண்ணனை என் நெடும் வெரிநில் காண்டியால். 72

'அங்கதன் தோள்மிசை, இளவல், அம் மலை
பொங்கு வெங்கதிர் எனப் பொலிய, போர்ப் படை
இங்கு வந்து இறுக்கும்; நீ இடரும் ஐயமும்
சங்கையும் நீங்குதி; தனிமை நீங்குவாய். 73

'குரா வரும் குழலி! நீ குறித்த நாளினே,
விராவு அரு நெடுஞ் சிறை மீட்கிலான்எனின்,
பரா வரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு,
இராவணன் அவன்; இவன் இராமன்' என்றனன். 74

68. உணர்வு நாறல் - தன்னினைவு தோன்றல்; 70. என்றி - என்கிறாயா? 73. மலை - உதயகிரி; 74. குரா - மருதோன்றி மரம், ஈண்டு அதன் மலர்கள்.

அனுமன் உரையால் தேறிய சீதையின் கூற்று

ஆக இம் மொழி ஆசு இல கேட்டு, அறிவுற்றாள்;
ஓகை கொண்டு களிக்கும் மனத்தள், உயர்ந்தாள்;
'போகை நன்று இவன்' என்பது, புந்தியின் வைத்தாள்;
தோகையும், சில வாசகம் இன்னன சொன்னாள்: 75

'சேறி, ஐய! விரைந்தனை; தீயவை எல்லாம்
வேறி; யான் இனி ஒன்றும் விளம்பலென்; மேலோய்!
கூறுகின்றன, முன் குறி உற்றன, கோமாற்கு
ஏறும்' என்று, இவை சொல்லினள் இன்சொல் இசைப்பாள்: 76

'நாகம் ஒன்றிய நல் வரையின்தலை, மேல்நாள்,
ஆகம் வந்து, எனை, அள் உகிர் வாளின் அளைந்த
காகம் ஒன்றை முனிந்து, அயல் கல் எழு புல்லால்,
வேக வெம் படை விட்டது, மெல்ல விரிப்பாய். 77

' ''என் ஒர் இன் உயிர் மென் கிளிக்கு யார் பெயர் ஈகேன்?
மன்ன!'' என்றலும், ''மாசு அறு கேகயன் மாது, என்
அன்னைதன் பெயர் ஆக'' என அன்பினொடு, அந் நாள்,
சொன்ன மெய்ம் மொழி சொல்லுதி— மெய்ம்மை தொடர்ந்தோய்! 78

சூடாமணியை அனுமனிடம் கொடுத்தல்

என்று உரைத்து, 'இனிது இத்தனை பேர் அடையாளம்;
ஒன்று உணர்த்துவது இல்' என எண்ணி உணர்ந்தாள்,
தன் திருத் துகிலில் பொதிவுற்றது, தானே
வென்றது அச் சுடர், மேலொடு கீழ் உற மெய்யால், 79

வாங்கினாள், தன் மலர்க்கையில்; மன்னனை முன்னா,
ஏங்கினாள்; அவ் அனுமனும், 'என்கொல் இது?' என்னா,
வீங்கினான்; வியந்தான்; உலகு ஏழும் விழுங்கித்
தூங்கு கார் இருள் முற்றும் இரிந்தது சுற்றும். 80

'மஞ்சு அலங்கு ஒளியோனும், இம் மா நகர் வந்தான்,
அஞ்சலன்' என, வெங் கண் அரக்கர் அயிர்த்தார்;
சஞ்சலம் புரி சக்கரவாகமுடன், தாழ்
கஞ்சமும், மலர்வுற்றன; காந்தின காந்தம். 81

76. கோமாற்கு ஏறும் - இராமபிரான் திருவுள்ளத்தில் பதியும்; 77. நாகம் - யானை, மேல் உலகம் எனவும் ஆம்; வரை - சித்திரகூட மலை; அள் - கூர்மை; 81. மஞ்சு அலங்கு ஒளியோன் - மேகத்துள் செல்லும் கதிரவன்; சஞ்சலம் - (பிரிவினால் விளைந்த) துன்பம்.

கூந்தல் மென் மழை கொள் முகில்மேல் எழு கோளின்
வேந்தன் அன்னது, மெல்லியல்தன் திரு மேனி
சேந்தது, அந்தம் இல் சேவகன் சேவடி என்னக்
காந்துகின்றது, காட்டினள்; மாருதி கண்டான். 82

'சூடையின்மணி கண் மணி ஒப்பது, தொல் நாள்
ஆடையின்கண் இருந்தது, பேர் அடையாளம்;
நாடி வந்து எனது இன் உயிர் நல்கினை, நல்லோய்!
கோடி' என்று கொடுத்தனள், மெய்ப் புகழ் கொண்டாள். 83

சூடாமணி பெற்று அனுமன் செல்லுதல்

தொழுது வாங்கினன்; சுற்றிய தூசினன், முற்றப்
பழுது உருவகை பந்தனை செய்தனன்; வந்தித்து,
அழுது, மும்மை வலம் கொடு இறைஞ்சினன்; அன்போடு,
எழுது பாவையும், ஏத்தினள்; ஏகினன் இப்பால். 84

# 6 பொழில் இறுத்த படலம்

விடைபெற்ற அனுமன் உள்ள நிலை

நெறிக் கொடு வடக்கு உறும் நினைப்பினில் நிமிர்ந்தான்,
பொறிக் குல மலர்ப் பொழிலிடைக் கடிது போவான்,
'சிறுத் தொழில் முடித்து அகல்தல் தீது' எனல், தெரிந்தான்;
மறித்தும் ஓர் செயற்கு உரிய காரியம் மதித்தான். 1

'ஈனம் உறு பற்றலரை எற்றி, எயில் மூதூர்
மீன நிலயத்தின் உக வீசி, விழி மானை
மானவன் மலர்க் கழலில் வைத்தும்இலென் என்றால்,
ஆன பொழுது, எப் பரிசின், நான் அடியன் ஆவேன்? 2

'வஞ்சனை அரக்கனை நெருக்கி, நெடு வாலால்
அஞ்சினுடன் அஞ்சு தலை தோள் உற அசைத்தே,
வெஞ் சிறையில் வைத்தும்இலென்; வென்றும்இலென்; என்றால்,
தஞ்சம் ஒருவர்க்கு ஒருவர் என்றல் தகும் அன்றே? 3

82. கோளின் வேந்தன் - கிரகங்களுக்கு அரசனாகிய சூரியன்; 48. பந்தனை செய்தல் - முடித்து வைத்தல்.

6: 1. பொறி - புள்ளி, இங்கு வண்டு; திருமகள் எனலும் ஆம்; 2. மீன நிலயம் - மீன் இனங்கள் வாழும் இடம், கடல்; ஆனபொழுது - அப்பொழுது; 3. அசைத்து - கட்டி; தஞ்சம் - உதவி.

'கண்ட நிருதக் கடல் கலக்கினென், வலத்தின்
திண் திறல் அரக்கனும் இருக்க ஓர் திறத்தின்
மண்டவுதரத்தவள் மலர்க் குழல் பிடித்து,
கொண்டு சிறை வைத்திடுதலில் குறையும் உண்டோ? 4

'மீட்டும் இனி, எண்ணும் வினை வேறும் உளது அன்றால்;
ஓட்டி இவ் அரக்கரை உலைத்து, உரிமை எல்லாம்
காட்டும் இதுவே கருமம்; அன்னவர் கடும் போர்
மூட்டும் வகை யாவதுகொல்?' என்று முயல்கின்றான். 5

'இப் பொழிலினைக் கடிது இறுக்குவென்; இறுத்தால்,
அப் பெரிய பூசல் செவி சார்தலும், அரக்கர்
வெப்புறு சினத்தர் எதிர் மேல்வருவர்; வந்தால்,
துப்பு உற முருக்கி, உயிர் உண்பல், இது சூதால். 6

'வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால்,
வெந் திறல் அரக்கனும், விலக்க அரு வலத்தால்
முந்தும்; எனின், அன்னவன் முடித் தலை முசித்து, என்
சிந்தை உறு வெந் துயர் தவிர்த்து, இனிது செல்வேன்.' 7

அசோக வனத்தை அனுமன் அழித்தல்

என்று நினையா, இரவி சந்திரன் இயங்கும்
குன்றம் இரு தோள் அனைய தன் உருவு கொண்டான்;
அன்று, உலகு எயிற்றிடை கொள் ஏனம் எனல் ஆனான்;
துன்று கடி காவினை, அடிக்கொடு துகைத்தான். 8

முடிந்தன; பிளந்தன; முரிந்தன; நெரிந்த;
மடிந்தன; பொடிந்தன; மறிந்தன; முறிந்த;
இடிந்தன; தகர்ந்தன; எரிந்தன; கரிந்த;
ஒடிந்தன; ஒசிந்தன; உதிர்ந்தன; பிதிர்ந்த. 9

வேரொடு மறிந்த சில; வெந்த சில; விண்ணில்
காரொடு செறிந்த சில; காலினொடு வேலைத்
தூரொடு பறிந்த சில; தும்பியொடு வானோர்
ஊரொடு மலைந்த சில; உக்க, சில நெக்க; 10

4. வலத்தின் - பலத்தால்; மண்டவுதரத்தவள் - மண்டோதரி; 6. சூது - உபாயம்; 7. முசித்து - சிதற அடித்து; 8. குன்றம் அனைய இரு தோள் எனக் கூட்டுக; ஏனம் - ஆதி வராகமூர்த்தி; 9. முரிந்தன - வளைந்து போயின; முறிந்த - சிதைந்து போயின; 10. பறிந்த - வீழ்ந்தன; தும்பி - வண்டு; நெக்க - பிளந்தன.

சோலை முதல் மற்றவை சுழற்றிய திசைப் போர்
ஆனை நுகரக் குளகும் ஆன; அடி பற்று
மேல் நிமிர விட்டன, விசும்பின் வழி மீப் போய்,
வானவர்கள் நந்தன வனத்தையும் மடித்த. 11

அலைந்தன கடல் திரை; அரக்கர் அகல் மாடம்
குலைந்து உக இடிந்தன; குலக் கிரிகளோடு
மலைந்து பொடி உற்றன; மயங்கி நெடு வானத்து
உலைந்து விழும் மீனினொடு வெண் மலர் உதிர்ந்த. 12

முடக்கு நெடு வேரொடு முகந்து உலகம் முற்றும்
கடக்கும்வகை வீசின, களித்த திசை யானை,
மடப் பிடியினுக்கு உதவ மையின் நிமிர் கை வைத்து
இடுக்கியன ஒத்தன, எயிற்றின் இடை ஞால்வ. 13

விஞ்சை உலகத்தினும், இயக்கர் மலைமேலும்,
துஞ்சுதல் இல் வானவர் துறக்க நகரத்தும்,
பஞ்சி அடி வஞ்சியர்கள் மொய்த்தனர், பறித்தார்,
நஞ்சம் அனையானுடைய சோலையின் நறும்பூ. 14

பொன் திணி மணிப் பரு மரன், திசைகள் போவ,
மின் திரிவ ஒத்தன; வெயில் கதிரும் ஒத்த;
ஒன்றினொடும் ஒன்று இடை புடைத்து உதிர, ஊழின்
தன் திரள் ஒழுக்கி, விழு தாரகையும் ஒத்த. 15

புள்ளினொடு வண்டும், மிஞிறும், கடிகொள் பூவும்,
கள்ளும், முகையும், தளிர்களோடு இனிய காயும்,
வெள்ள நெடு வேலையிடை, மீன்இனம் விழுங்கித்
துள்ளின; மரன் பட, நெரிந்தன துடித்த. 16

தூவிய மலர்த்தொகை சுமந்து, திசைதோறும்,
பூவின் மணம் நாறுவ, புலால் கமழ்கிலாத,
தேவியர்களோடும் உயர் தேவர் இனிது ஆடும்
ஆவி எனல் ஆய, திரை ஆர்கலிகள் அம்மா! 17

11. சோலை முதல் சுழற்றிய மற்றவை - மேகம் வரை சுழற்றி எறிந்த மற்ற மரங்கள், மேகத்தை அடியிற் கொண்ட மரங்கள் எனவும் ஆம்; குளகு - இலையுணவு; 13. முடக்கு வேர் - வளைந்துள்ள வேர்; மையின் நிமிர் கை - மேக மண்டலம் வரையிலும் உயரும் கை; 14. நஞ்சம் அனையான் - இராவணன்; 15. ஊழின் - கற்ப முடிவில்; 17. ஆவி - பொய்கை.

இடந்த மணி வேதியும், இறுத்த கடி காவும்,
தொடர்ந்தன துரந்தன படிந்து, நெறி தூர,
கடந்து செலவு என்பது கடந்தது, இரு காலால்
நடந்து செலல் ஆகும் எனல் ஆகியது, நல் நீர். 18

வேனில் விளையாடு சுடரோனின் ஒளி விம்மும்
வானினிடை வீசிய அரும் பணை மரத்தால்,
தானவர்கள் மாளிகை தகர்ந்து பொடி ஆய—
வான இடியால் ஒடியும் மால் வரைகள் மான. 19

எண் இல் தரு கோடிகள் எறிந்தன செறிந்தே,
தண்ணென் மழைபோல் இடை தழைந்தது; சலத்தால்,
அண்ணல் அனுமான், 'அடல் இராவணனது, அந் நாள்,
விண்ணினும் ஓர் சோலை உளது ஆம்' என, விதித்தான். 20

தேன் உறை துளிப்ப, நிறை புள் பல சிலம்ப,
பூ நிறை மணித் தரு விசும்பினிடை போவ,
மீன் முறை நெருக்க, ஒளி வாளொடு வில் வீச,
வானிடை நடாய நெடு மானம் எனல் ஆன. 21

சாகம் நெடு மாப் பணை தழைத்தன; தனிப் போர்
நாகம் அனையான் எறிய, மேல் நிமிர்வ—நாளும்
மாக நெடு வானிடை இழிந்து, புனல் வாரும்
மேகம் எனல் ஆய—நெடு மா கடலின் வீழ்வ. 22

ஊனம் உற்றிட, மண்ணின் உதித்தவர்,
ஞானம் முற்றுபு நண்ணினர் வீடு என,
தான கற்பகத் தண்டலை விண்தலம்
போன, புக்கன, முன் உறை பொன்னகர். 23

மணி கொள் குட்டிமம் மட்டித்து, மண்டபம்
துணி படுத்து, அயல் வாவிகள் தூர்த்து, ஒளிர்
திணி சுவர்த் தலம் சிந்தி, செயற்கு அரும்
பணி படுத்து, உயர் குன்றம் படுத்துஅரோ; 24

வேங்கை செற்று, மராமரம் வேர் பறித்து,
ஓங்கு கற்பகம் பூவொடு ஒடித்து உராய்,
பாங்கர் சண்பகப் பத்தி பறித்து, அயல்
மாங்கனிப் பணை மட்டித்து மாற்றியே; 25

18. கடந்தது - காலாவதியாயிற்று; 20. சலம் - கோபம்; 21. மானம் - விமானம்; 23. ஊனம் - குறைபாடு, இங்குத் தீவினை; முற்றுபு - நிரம்பி; தான கற்பகம் - கொடைச் சிறப்புள்ள கற்பக மரம்; 24. குட்டிமம் - திண்ணை; மட்டித்து - தகர்த்து.

சந்தனங்கள் தகர்ந்தன—தாள் பட,
இந்தனங்களின் வெந்து எரி சிந்திட,
முந்து அனங்க வசந்தன் முகம் கெட,
நந்தனங்கள் கலங்கி நடுங்கவே. 26

காமரம் களி வண்டு கலங்கிட,
மா மரங்கள் மடிந்தன, மண்ணொடு;
தாம், அரங்க அரங்கு தகர்ந்து உக,
பூ மரங்கள் எரிந்து பொரிந்தவே. 27

குழையும், கொம்பும், கொடியும், குயிற்குலம்
விழையும் தண் தளிர்ச் சூழலும், மென் மலர்ப்
புழையும், வாசப் பொதும்பும், பொலன் கொள் தேன்
மழையும், வண்டும், மயிலும், மடிந்தவே. 28

பவள மாக் கொடி வீசின, பல் மழை
துவளும் மின் என, சுற்றிட; சூழ் வரை,
திவளும் பொன் பணை மா மரம் சேர்ந்தன,
கவள யானையின் ஓடையின் காந்தவே. 29

பறவை ஆர்த்து எழும் ஓசையும், பல் மரம்
இற எடுத்த இடிக் குரல் ஓசையும்,
அறவன் ஆர்த்து எழும் ஓசையும், அண்டத்தின்
புற நிலத்தையும் கைம்மிகப் போயதே. 30

பாடலம் படர் கோங்கொடும், பண் இசைப்
பாடல் அம் பனி வண்டொடும், பல் திரைப்
பாடு அலம்பு உயர் வேலையில் பாய்ந்தன,—
பாடு அலம் பெற, புள்இனம், பார்ப்பொடே. 31

வண்டு அலம்பு நல் ஆற்றின் மராமரம்,
வண்டல் அம் புனல் ஆற்றில் மடிந்தன;
விண்டு அலம்பு கம் நீங்கிய வெண் புனல்,
விண்தலம் புக நீள் மரம், வீழ்ந்தவே. 32

26. இந்தனங்களின் - விறகுகள் போல; வசந்தன் - காமன்; 27. அரங்க அரங்கு - நீரிடைக் குறையில் அமைந்த நாடக சாலைகள்; 28. புழை - நுழைவாயில்; 30. அறவன் - தருமமூர்த்தி, அனுமன்; 31. பாடலம் - பாதிரி மரம்; 32. நல் ஆற்றின் - அழகிய சாலையில்; வெண்புனல் - ஆகாய கங்கை; நீள்மரம் வெண்புனல் வீழ்ந்த என்க.

தாமரைத் தடம் பொய்கை, செஞ் சந்தனம்-
தாம் அரைத்தன ஒத்த; துகைத்தலின்,
காமரம் களி வண்டொடும், கள்ளொடும்,
காமர் அக் கடல், பூக் கடல் கண்டவே. 33

சிந்துவாரம் திசைதொறும் சென்றன,
சிந்து வார் அம் புரை திரை சேர்ந்தன;
தந்து, ஆரம், புதவொடு தாள் அற,
தம் துவாரம் துகள் பட, சாய்ந்தவே. 34

நந்தவானத்து நாள் மலர் நாறின,
நந்த, வானத்து நாள் மலர் நாறின;
சிந்து அவ் வானம் திரிந்து உக, செம் மணி
சிந்த, வால் நந்து இரிந்த, திரைக் கடல். 35

புல்லும் பொன் பணைப் பல் மணிப் பொன் மரம்,
'கொல்லும் இப்பொழுதே' எனும் கொள்கையால்,
எல்லில் இட்டு விளக்கிய இந்திரன்
வில்லும் ஒத்தன, விண் உற வீசின. 36

ஆனைத் தானமும், ஆடல் அரங்கமும்,
பானத் தானமும், பாய் பரிப் பந்தியும்,
ஏனைத் தார் அணி தேரொடும் இற்றன—
கானத்து ஆர் தரு அண்ணல் கடாவவே. 37

மயக்கு இல் பொன் குல வல்லிகள், வாரி நேர்
இயக்குறத் திசைதோறும் எறிந்தன,
வெயில் கதிர்க் கற்றை அற்று உற வீழ்ந்தன,
புயல் கடல்தலை புக்கன போல்வன. 38

பெரிய மா மரமும், பெருங் குன்றமும்,
விரிய வீசலின், மின் நெடும் பொன் மதில்
நெரிய, மாடம் நெருப்பு எழ, நீறு எழ,
இரியல்போன, இலங்கையும் எங்கணும். 39

' ''தொண்டை அம் கனி வாய்ச் சீதை துயக்கினால் என்னைச் சுட்டாய்;
விண்ட வானவர் கண் முன்னே விரி பொழில் இறுத்து வீசக்
கண்டனை நின்றாய்'' என்று, காணுமேல், அரக்கன் காய்தல்
உண்டு' என வெருவினான்போல், ஒளித்தனன், உடுவின் கோமான். 40

34. சிந்துவாரம் - நொச்சி மரம்; சிந்து - கடல்; புரை திரை - உயர்ந்த அலைகள்; புதவு - கதவு; தாள் - தாழ்ப்பாள்; தந்து - வீசி எறியப்பட்டு; துவாரம் - வாயில்; 35. சிந்து - புளிய மரம்; வானம் - பறித்த குழி, கடல்; 39. இரியல் போதல் - அச்சத்தால் நிலைகுலைதல்; 40. துயக்கு - தொடர்பு.

காசு அறு மணியும், பொன்னும், காந்தமும், கஞல்வது ஆய
மாசு அறு மரங்கள் ஆகக் குயிற்றிய மதனச் சோலை,
ஆசைகள்தோறும், ஐயன் கைகளால் அள்ளி அள்ளி
வீசிய, விளக்கலாலே, விளங்கின உலகம் எல்லாம். 41

கதறின வெருவி, உள்ளம் கலங்கின, விலங்கு; கண்கள்
குதறின பறவை, வேலை குளித்தன; குளித்திலாத
பதறின; பதைத்த; வானில் பறந்தன; பறந்து பார் வீழ்ந்து
உதறின, சிறையை; மீள ஒடுக்கின உலந்து போன. 42

தோட்டொடும் துதைந்த தெய்வ மரம்தொறும் தொடுத்த புள் தம்
கூட்டொடும் துறக்கம் புக்க, குன்று எனக் குவவுத் திண் தோள்
சேட்டு அகன் பரிதி மார்பன் சிறியும் தீண்டல்தன்னால்;
மீட்டு, அவன் கருணைசெய்தால், பெறும் பதம் விளம்பலாமோ?

**சீதை சிறை இருந்த மரம் மட்டும் அழியாது திகழ்தல்**

பொய்ம் முறை அரக்கர் காக்கும் புள் உறை புது மென் சோலை,
விம்முறும் உள்ளத்து அன்னம் இருக்கும் அவ் விருக்கம் ஒன்றும்,
மும் முறை உலகம் எல்லாம் முற்றுற முடிவது ஆன
அம் முறை, ஐயன் வைகும் ஆல் என, நின்றது அம்மா! 44

உறு சுடர்ச் சூடைக் காசுக்கு அரசினை உயிர் ஒப்பானுக்கு
அறிகுறியாக விட்டாள்; ஆதலான், வறியள் அந்தோ!
செறி குழல் சீதைக்கு அன்று, ஓர் சிகாமணி தெரிந்து வாங்கி,
எறி கடல் ஈவது என்ன, எழுந்தனன், இரவி என்பான். 45

**அசோக வனத்தை அழித்து நின்ற அனுமன் நிலை**

தாழ் இரும் பொழில்கள் எல்லாம் துடைத்து, ஒரு தமியன் நின்றான்,
ஏழினொடு ஏழு நாடும் அளந்தவன் எனலும் ஆனான்;
ஆழியின் நடுவண் நின்ற அரு வரைக்கு அரசும் ஒத்தான்;
ஊழியின் இறுதிக் காலத்து உருத்திரமூர்த்தி ஒத்தான். 46

**அனுமனைக் கண்டு அஞ்சிய அரக்கியர் வினவும், சீதையின் மறுமொழியும்**

இன்னன நிகழும் வேலை, அரக்கியர் எழுந்து பொங்கி,
பொன்மலை என்ன நின்ற புனிதனைப் புகன்று நோக்கி,
'அன்னை! ஈது என்ன மேனி? யார்கொல்?' என்று, அச்சம் உற்றார்,
நன்னுதல்தன்னை நோக்கி, 'அறிதியோ நங்கை?' என்றார். 47

41. கஞல்வது - விளங்குவது; குயிற்றிய - இயன்ற; 42. குதறின - கலங்கப்பெற்றன; 43. சேடு - அழகு; 44. விருக்கம் - மரம்.

'தீயவர் தீய செய்தல் தீயவர் தெரியின்அல்லால்,
தூயவர் துணிதல் உண்டே, நும்முடைச் சூழல் எல்லாம்?
ஆய மான் எய்த, அம் மான், இளையவன், ''அரக்கர் செய்த
மாயம்'' என்று உரைக்கவேயும், மெய்என மையல் கொண்டேன்.' 48

அனுமன் சயித்தத்தை உடைத்து வீசுதல்

என்றனள்; அரக்கிமார்கள் வயிறு அலைத்து, இரியல்போகி,
குன்றமும், உலகும், வானும், கடல்களும், குலைய ஓட,
நின்றது ஓர் சயித்தம் கண்டான்; 'நீக்குவல் இதனை' என்னு,
தன் தடக் கைகள் நீட்டிப் பற்றினன், தாதை ஒப்பான். 49

கண் கொள அரிது; மீது கார் கொள அரிது; திண் கால்
எண் கொள அரிது; இராவும் இருள் கொள அரிது; மாக
விண் கொள நிவந்த மேரு வெள்குற, வெதும்பி உள்ளம்
புண் கொள, உயர்ந்தது; இப் பார் பொறை கொள அரிது போலாம். 50

பொங்கு ஒளி நெடு நாள் ஈட்டி, புதிய பால் பொழிவது ஒக்கும்
திங்களை நக்குகின்ற இருள் எலாம் வாரித் தின்ன,
அம் கை பத்து-இரட்டியான்தன் ஆணையால், அழகு மாணப்
பங்கயத்து ஒருவன்தானே, பசும் பொனுல் படைத்தது அம்மா!

தூண் எலாம் சுடரும் காசு; சுற்று எலாம் முத்தம்; சொன்னம்
பேணல் ஆம் மணியின் பத்தி, பிடர் எல்லாம்; ஒளிகள் விம்ம,
சேண் எலாம் விரியும் கற்றைச் சேயொளிச் செல்வற்கேயும்
பூணலாம்; எம்மனோரால் புகழலாம் பொதுமைத்து அன்றே. 52

'வெள்ளியங்கிரியை, பண்டு, வெந் தொழில் அரக்கன், வேரோடு
அள்ளினன்' என்னக் கேட்டான்; அத் தொழிற்கு இழிவு தோன்ற,
புள்ளி மா மேரு என்னும் பொன்மலை எடுப்பான் போல,
வள் உகிர்த் தடக் கைதன்னல் மண்நின்றும் வாங்கி, அண்ணல்,

விட்டனன், இலங்கைதன்மேல்; விண் உற விரிந்த மாடம்;
பட்டன, பொடிகள் ஆன; பகுத்தன பாங்கு நின்ற;
சுட்டன பொறிகள் வீழத் துளங்கினர், அரக்கர்தாமும்;
கெட்டனர் வீரர், அம்மா!—பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்? 54

காவலர் இராவணனிடம் ஓடிச் செய்தி தெரிவித்தல்

நீர் இடு துகிலர்; அச்ச நெருப்பு இடு நெஞ்சர்; நெக்குப்
பீரிடும் உருவர்; தெற்றிப் பிணங்கிடு தாளர்; பேழ் வாய்,
ஊர் இடு பூசல் ஆர உளைத்தனர்; ஓடி உற்ருர்;—
பார் இடு பழுவச் சோலை பாரிக்கும் பருவத் தேவர். 55

50. எண் கொளல் - (பற்றுதற்கு) எண்ணம் கொள்ளல்; 51. இருள் - திங்களின் களங்கம்; 52. சொன்னம் - பொன்; பிடர் - பின்பக்கம்; சேயொளிச் செல்வன் - சூரியன்; 55. நீர் - சிறு நீர்; தெற்றி - பின்னிக்கொண்டு.

அரி படு சீற்றத்தான்தன் அருகு சென்று, அடியின் வீழ்ந்தார்;
'கரி படு திசையின் நீண்ட காவலாய்! காவல் ஆற்ருேம்!
கிரி படு குவவுத் திண் தோள் குரங்கு இடை கிழித்து வீச,
எரி படு துகிலின், நொய்தின் இற்றது கடி கா' என்ருர். 56

'சொல்லிட எளியது அன்ருல்; சோலையை, காலின், கையின்,
புல்லொடு துகளும் இன்றி, பொடிபட நூறி, பொன்ஞல்
வில் இடு வேரம் தன்னை வேரொடு வாங்கி வீச,
சில் இடம் ஒழிய, தெய்வ இலங்கையும் சிதைந்தது' என்ருர்.

இராவணன் இகழ்தலும், காவலர் அனுமனைப் புகழ்தலும்

'ஆடகத் தருவின் சோலை பொடி படுத்து, அரக்கர் காக்கும்
தேட அரு வேரம் வாங்கி, இலங்கையும் சிதைத்தது அம்மா!
கோடரம் ஒன்றே! நன்று இது! இராக்கதர் கொற்றம்! சொற்றல்
மூடரும் மொழியார்' என்ன மன்னனும் முறுவல் செய்தான்.

தேவர்கள், பின்னும், 'மன்ன! அதன் உருச் சுமக்கும் திண்மைப்
பூவலயத்தை அன்ருே புகழ்வது! புலவர் போற்றும்
மூவரின் ஒருவன் என்று புகல்கினும், முடிவு இலாத
ஏவம், அக் குரங்கை, ஐய! காணுதி இன்னே' என்ருர். 59

அனுமன் ஆரவாரம்

மண்தலம் கிழிந்த வாயில் மறி கடல் மோழை மண்ட,
எண் திசை சுமந்த மாவும், தேவரும் இரியல்போக,
தொண்டை வாய் அரக்கிமார்கள் சூல் வயிறு உடைந்து சோர,
'அண்டமும் பிளந்து விண்டது ஆம்' என, அனுமன் ஆர்த்தான்.

## 7 கிங்கரர் வதைப் படலம்

அனுமனைப் பிடித்து வருமாறு இராவணன் ஏவுதல்

அரு வரை முழையில் முட்டும் அசனியின் இடிப்பும், ஆழி
வெருவரு முழக்கும், ஈசன் வில் இறும் ஒலியும், என்ன,
குரு மணி மகுட கோடி முடித் தலை குலுங்கும் வண்ணம்,
இருபது செவியினூடும் நுழைந்தது, அவ் எழுந்த ஓசை. 1

56. அரி படு சீற்றம் - அறிவிப்பவர்களை அரிந்துவிடும்படியான கோபம்;
57. வேரம் - செய்குன்று; 58. கோடரம் - குரங்கு; 59. ஏவம் - குற்றம்;
60. மோழை - குமிழி.

புல்லிய முறுவல் தோன்ற, பொருமையும் சிறிது பொங்க,
எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை ஏவி,
'வல்லையின் அகலா வண்ணம், வானையும் வழியை மாற்றி,
கொல்லலிர் குரங்கை, நொய்தின் பற்றுதிர், கொணர்திர்' என்றான்.

அரக்க வீரர் விரைந்து போருக்குச் செல்லுதல்

சூலம், வாள், முசலம், கூர் வேல், தோமரம், தண்டு, பிண்டி-
பாலமே முதலா உள்ள படைக்கலம் பரித்த கையர்;
ஆலமே அனைய மெய்யர்; அகலிடம் அழிவு செய்யும்
காலம் மேல்எழுந்த மூரிக் கடல் என, கடிது செல்வார். 3

'நானிலம்அதனில் உண்டு போர்' என நவிலின், அச் சொல்,
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர், தெரித்தும் என்னின்,
கானினும் பெரியர்; ஓசை கடலினும் பெரியர்; கீர்த்தி
வானினும் பெரியர்; மேனி மலையினும் பெரியர் மாதோ! 4

திருகுறும் சினத்து, தேவர், தானவர், என்னும் தெவ்வர்
இரு குறும்பு எறிந்து நின்ற இசையினர் வசை என்று எண்ணி,
'பொரு குறும்பு ஏன்று, வென்று புணர்வது, பூ உண் வாழ்க்கை
ஒரு குறுங் குரங்கு!' என்று எண்ணி, நெடிது நாண் உழக்கும் நெஞ்சர்;

கட்டிய வாளர்; இட்ட கவசத்தர்; கழலர்; திக்கைத்
தட்டிய தோளர்; மேகம் தடவிய கையர்; வானை
எட்டிய முடியர்; தாளால் இடறிய பொருப்பர்; ஈட்டிக்
கொட்டிய பேரி என்ன, மழை என, குமுறும் சொல்லார்; 6

வானவர் எறிந்த தெய்வ அடு படை வடுக்கள், மற்றைத்
தானவர் துரந்த ஏதித் தழும்பொடு தயங்கும் தோளர்;
யானையும் பிடியும் வாரி இடும் பில வாயர்; ஈன்ற
கூனல் வெண் பிறையின் தோன்றும் எயிற்றினர்; கொதிக்கும் [கண்ணர்; 7

சக்கரம், உலக்கை, தண்டு, தாரை, வாள், பரிகம், சங்கு,
முற்கரம், முசுண்டி, பிண்டிபாலம், வேல், சூலம், முட்கோல்,
பொன் கரக் குலிசம், பாசம், புகர் மழு, எழு பொன் குந்தம்,
வில், கருங் கணை, விட்டேறு, கழுக்கடை, எழுக்கள் மின்ன; 8

7: 5. பொரு குறும்பு - போரிடும் சிறு பகை; 6. ஈட்டி - பலவாகச் சேர்ந்து; 8. தாரை - ஊதுங்குழல்; பரிகம் - வளை தடி; முற்கரம் - சம்மட்டி; முசுண்டி - ஆயுத வகை; பிண்டிபாலம் - எறி ஈட்டி; குந்தம் - ஈட்டி.

பொன் நின்று கனலும் தெய்வப் பூணினர்; பொருப்புத் தோளர்;
மின் நின்ற படையும், கண்ணும், வெயில் விரிக்கின்ற மெய்யர்;
'என்?' என்றார்க்கு, 'என்? என்?' என்றார்; எய்தியது அறிந்திலாதார்;
முன் நின்றார் முதுகு தீய, பின் நின்றார் முடுகுகின்றார். 9

வெய்துறு படையின் மின்னர்; வில்லினர்; வீசு காலர்;
மையுறு விசும்பின் தோன்றும் மேனியர்; மடிக்கும் வாயர்;
கை பரந்து உலகு பொங்கிக் கடையுகம் முடியும்காலை,
பெய்ய என்று எழுந்த மாரிக்கு உவமை சால் பெருமை பெற்றார்.

'பனி உறு செயலை சிந்தி, வேரமும் பறித்தது, அம்மா!
தனி ஒரு குரங்கு போலாம்! நன்று நம் தருக்கு!' என்கின்றார்!
'இனி ஒரு பழி மற்று உண்டோ இதனின்?' என்று இரைத்துப் பொங்கி,
முனிவுறு மனத்தின் தாவி, முந்துற முடுகுகின்றார். 11

எற்றுறு முரசும், வில், நாண் ஏறவிட்டு எடுத்த ஆர்ப்பும்,
சுற்றுறு கழலும், சங்கும், தெழி தெழித்து உரப்பும் சொல்லும்,
உற்று உடன்று ஒன்றாய், ஓங்கி ஒலித்து எழுந்து, ஊழிப் பேர்வில்
நல் திரைக் கடல்களோடு மழைகளை, நா அடக்க. 12

'தெரு இடம் இல்' என்று எண்ணி, வானிடைச் செல்கின்றாரும்,
புருவமும் சிலையும் கோட்டி, புகை உயிர்த்து உயிர்க்கின்றாரும்,
ஒருவரின் ஒருவர் முந்தி, முறை மறுத்து உருக்கின்றாரும்,
'விரிவு இலது இலங்கை' என்று, வழி பெறார் விளிக்கின்றாரும்,

வாள் உறை விதிர்க்கின்றாரும், வாயினை மடிக்கின்றாரும்,
தோள் உறத் தட்டிக் கல்லைத் துகள்படத் துகைக்கின்றாரும்,
தாள் பெயர்த்து இடம் பெறாது தருக்கினர் நெருக்குவாரும்,
கோள் வளை எயிறு தின்று தீ எனக் கொதிக்கின்றாரும், 14

அனைவரும், மலை என நின்றார்; அளவு அறு படைகள் பயின்றார்;
அனைவரும், அமரின் உயர்ந்தார்; அகலிடம் நெளிய நடந்தார்;
அனைவரும், வரனின் அமைந்தார்; அசனியின் அணிகள் அணிந்தார்;
அனைவரும், அமரரை வென்றார்; அசுரரை உயிரை அயின்றார்.

குறுகின கவசரும், மின்போல் குரை கழல் உரகரும், வன் போர்
முறுகின பொழுதின், உடைந்தார் முதுகிட, முறுவல் பயின்றார்;
இறுகின நிதி கிழவன் பேர் இசை கெட, அளகை எறிந்தார்;
தெறுகுநர் இன்மையின், வன் தோள், தினவுற உலகு திரிந்தார்.

11. செயலை - அசோக மரம், இங்கு அசோக வனம்; 13. முறை மறுத்து உருத்தல் - முற்பட்டுச் செல்லுதற்காக வரிசை குலைத்தார்க்கு இடங்கொடாது கோபித்தல்; 16. இறுகின - நிலைபேறுடைய.

'வரைகளை இடறுமின்' என்றால், 'மறிகடல் பருகுமின்' என்றால்,
'இரவியை விழ விடும்' என்றால், 'எழு மழை பிழியுமின்' என்றால்,
'அரவினது அரசனை, ஒன்றோ, தரையினோடு அரையுமின்' என்றால்,
'தரையினை எடும், எடும்' என்றால், ஒருவர் அது அமைதல் சமைந்தார்.

தூளியின் நிமிர் படலம் போய் இமையவர் விழி துற, வெம் போர்
மீளியின் இனம் என, வன் தாள் விரை புலி நிரை என, விண் தோய்
ஆளியின் அணி என, அன்றேல், அலை கடல் விடம் என, அஞ்சார்,
வாளியின் விசைகொடு திண் கார் வரை வருவன என, வந்தார்.

பொறி தர விழி, உயிர் ஒன்றோ? புகை உக, அயில் ஒளி மின்போல்
தெறி தர, உரும் அதிர்கின்றார்; திசைதொறும் விசைகொடு சென்றார்
எறிதரு கடையுக வன் கால் இடறிட, உடுவின் இனம் போய்
மறிதர, மழை அகல் விண்போல் வடிவு அழி பொழிலை, வளைந்தார்.

அரக்க வீரர் வருவது கண்டு அனுமன் உவத்தல்

வயிர் ஒலி, வளை ஒலி, வன் கார் மழை ஒலி முரசு ஒலி, மண்பால்
உயிர் உலைவுற நிமிரும் போர் உறும் ஒலி, செவியின் உணர்ந்தான்;
வெயில் விரி கதிரவனும் போய் வெருவிட, வெளியிடை, விண் தோய்
கயிலையின்மலை என நின்றான்; அனையவர் வரு தொழில் கண்டான்.

'இத இயல் இது' என, முந்தே இயைவுற இனிது தெரிந்தான்;
பத இயல் அறிவு பயந்தால், அதின் நல பயன் உளது உண்டோ?
சிதவு இயல் கடி பொழில் ஒன்றே சிதறிய செயல் தரு திண் போர்
உதவு இயல் இனிதின் உவந்தான்,—எவரினும் அதிகம் உயர்ந்தான்.

வீரர்கள் படைகளை ஏவ, அனுமன் ஒரு மரத்தால் எதிர்த்தல்

'இவன்! இவன்! இவன்!' என நின்றார்; 'இது!' என, முதலி எதிர்ந்
பவனனின் முடுகி நடந்தார், பகல் இரவு உற மிடைகின்றார்— [தார்;—
புவனியும், மலையும், விசும்பும், பொரு அரு நகரும், உடன் போர்த்
துவனியில் அதிர, விடம்போல் சுடர் விடு படைகள் துரந்தார். 22

மழைகளும், மறி கடலும், போய் மதம் அற முரசம் அறைந்தார்;
முழைகளின் இதழ்கள் திறந்தார்; முது புகை கதுவ முனிந்தார்;
பிழை இல பட அரவின் தோள் பிடர் உற, அடி இடுகின்றார்;
கழை தொடர் வனம் எரியுண்டாலென, எறி படைஞர் கலந்தார். 23

19. உயிர் ஒன்றோ? - நெடுமூச்சு மாத்திரமோ? 21. இது இதம் இயல் - (அசோக வனத்தை அழிக்கின்ற) இதுதான் நல்ல செயல்; பத இயல் அறிவு - பக்குவமான இயல்புள்ள அறிவு; சிதவு இயல் - சிதைத்த செயல்; 22. பவனனின் - காற்றை விட; 23. முழைகளின் இதழ் - குகை போன்ற வாயின் உதடுகள்.

அறவனும் அதனை அறிந்தான்; அருகினில் அழகின் அமைந்தார்
இற இனின் உதவு நெடுந் தார் உயர் மரம் ஒரு கை இயைந்தான்;
உற வரு துணை என அன்றோ, உதவிய அதனை, உவந்தான்;
நிறை கடல் கடையும் நெடுந் தாள் மலை என, நடுவண் நிமிர்ந்தான். 24

பரு வரை புரைவன வன் தோள், பனிமலை அருவி நெடுங் கால்
சொரிவன பல என, மண் தோய் துறை பொரு குருதி சொரிந்தார்;
ஒருவரை ஒருவர் தொடர்ந்தார்; உயர் தலை உடைய உருண்டார்—
அரு வரை நெரிய விழும் பேர் அசனியும் அசைய அறைந்தான்.

அரக்க வீரர் சிதைந்து அழிதல்

பறை புரை விழிகள் பறிந்தார்; படியிடை நெடிது படிந்தார்;
பிறை புரை எயிறும் இழந்தார்; பிடரொடு தலைகள் பிளந்தார்;
குறை உயிர் சிதற நெரிந்தார்; குடரொடு குருதி குழைந்தார்;—
முறை முறை படைகள் எறிந்தார்—முடை உடல் மறிய முறிந்தார். 26

புடையொடு விடு கனலின் காய் பொறியிடை, மயிர்கள் புகைந்தார்;
தொடையொடு முதுகு துணிந்தார்; சுழிபடு குருதி சொறிந்தார்;
படை இடை ஒடிய, நெடுந் தோள் பறி தர, வயிறு திறந்தார்;
இடை இடை, மலையின் விழுந்தார்—இகல் பொர முடுகி எழுந்தார். 27

புதைபட இருளின் மிடைந்தார், பொடியிடை நெடிது புரண்டார்;
விதைபடும் உயிரர் விழுந்தார்; விளியொடு விழியும் இழந்தார்;
கதையொடு முதிர மலைந்தார், கணை பொழி சிலையர் கலந்தார்,
உதைபட உரனும் நெரிந்தார்; உதறொடு குருதி உமிழ்ந்தார்.

அயல், அயல், மலையொடு அறைந்தான்: அடு பகை அளகை அடைந்தார்;
வியல் இடம் மறைய விரிந்தார்; மிசை உலகு அடைய மிடைந்தார்;
புயல் தொடு கடலின் விழுந்தார்; புடை புடை சிதைவொடு சென்றார்.
உயர்வுற விசையின் எறிந்தான்; உடலொடும் உலகு துறந்தார். 29

பற்றித் தாளொடு தோள் பறித்து எறிந்தனன்; பாரின்,
இற்ற வெஞ் சிறை வெற்புஇனம் ஆம் எனக் கிடந்தார்;
கொற்ற வாலிடைக் கொடுந் தொழில் அரக்கரை அடங்கச்
சுற்றி வீசலின், பம்பரம் ஆம் எனச் சுழன்றார். 30

24. இற - சாவதற்கு; இனின் - இனிதாக; 27. புடை - தாக்கு, அடி; பறிதர - வேருகிப் போக; 28. புதைபட - (பொருள்கள் யாவும்) மறையும் படி; உதறு - உதறுதல், துடித்தல்.

வாள்கள் இற்றன; இற்றன வரி சிலை; வயிரத்
தோள்கள் இற்றன; இற்றன சுடர் மழுச் சூலம்;
நாள்கள் இற்றன; இற்றன நகை எயிற்று ஈட்டம்;
தாள்கள் இற்றன; இற்றன படையுடைத் தடக் கை. 31

தெறித்த வன் தலை; தெறித்தன செறி சுடர்க் கவசம்;
தெறித்த பைங் கழல்; தெறித்தன சிலம்பொடு பொலந் தார்;
தெறித்த பல் மணி; தெறித்தன பெரும் பொறித் திறங்கள்;
தெறித்த குண்டலம்; தெறித்தன கண் மணி சிதறி. 32

உக்க பற் குவை; உக்கன, துவக்கு எலும்பு உதிர்வுற்று;
உக்க முற்கரம்; உக்கன, முசுண்டிகள் உடைவுற்று;
உக்க சக்கரம்; உக்கன, உடல் திறந்து உயிர்கள்;
உக்க கப்பணம்; உக்கன, உயர் மணி மகுடம். 33

தாள்களால் பலர், தடக் கைகளால் பலர், தாக்கும்
தோள்களால் பலர், சுடர் விழியால் பலர், தொடரும்
கோள்களால் பலர், குத்துகளால் பலர், தம் தம்
வாள்களால் பலர், மரங்களினால் பலர்,—மடிந்தார். 34

ஈர்க்க, பட்டனர் சிலர்; சிலர் இடிப்புண்டு பட்டார்;
பேர்க்க, பட்டனர் சிலர்; சிலர் பிடியுண்டு பட்டார்;
ஆர்க்க, பட்டனர் சிலர்; சிலர் அடியுண்டு பட்டார்;
பார்க்க, பட்டனர் சிலர்; சிலர் பயமுண்டு பட்டார். 35

ஓடிக் கொன்றனன் சிலவரை; உடல் உடல்தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரை; கொடி நெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரை; பிணம்தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரை—கறங்கு எனத் திரிவான். 36

முட்டினர் பட, முட்டினன்; முறை முறை முடுகிக்
கிட்டினர் பட, கிட்டினன்; கிரி என நெருங்கிக்
கட்டினர் பட, கட்டினன்; கைகளால் மெய்யில்
தட்டினர் பட, தட்டினன்—மலை எனத் தகுவான். 37

உறக்கினும் கொல்லும்; உணரினும் கொல்லும்; மால் விசும்பில்
பறக்கினும் கொல்லும்; படரினும் கொல்லும்; மின் படைக் கை,
நிறக் கருங் கழல், அரக்கர்கள் நெறிதொறும் பொறிகள்
பிறக்க நின்று எறி படைகளைத் தடக் கையால் பியையும். 38

32. சிலம்பு - ஓசை; 33. துவக்கு - உடம்புகள்; 38. உறக்கினும் - (தன்னை நினையாமல்) மறந்திருந்தாலும்; பியைதல் - பிசைதல்.

சேறும் வண்டலும் மூளையும் நிணமுமாய்த் திணிய,
நீறு சேர் நெடுந் தெரு எலாம் நீத்தமாய் நிரம்ப,
ஆறு போல் வரும் குருதி, அவ் அனுமனல் அலைப்புண்டு,
ஈறு இல் வாய்தொறும் உமிழ்வதே ஒத்தது, அவ் இலங்கை. 39

**அனுமன் பெரும் போர் விளைத்தல்**

கருது காலினும், கையினும், வாலினும் கட்டி,
சுருதியே அன்ன மாருதி மரத்திடை துரப்பான்;
நிருதர், எந்திரத்து இடு கரும்பு ஆம் என நெரிவார்;
குருதி சாறு எனப் பாய்வது, குரை கடல் கூனில். 40

எடுத்து அரக்கரை எறிதலும், அவர் உடல் எற்ற,
கொடித் திண் மாளிகை இடிந்தன; மண்டபம் குலைந்த;
தடக் கை யானைகள் மறிந்தன; கோபுரம் தகர்ந்த;
பிடிக் குலங்களும் புரவியும் அவிந்தன, பெரிய. 41

தம் தம் மாடங்கள் தம் உடலால் சிலர் தகர்த்தார்;
தம் தம் மாதரைத் தம் கழலால் சிலர் சமைத்தார்;
தம் தம் மாக்களைத் தம் படையால் சிலர் தடிந்தார்;—
எற்றி மாருதி தடக் கைகளால் விசைத்து எறிய. 42

ஆடல் மாக் களிறு அனையவன், அரக்கியர்க்கு அருளி,
'வீடு நோக்கியே செல்க' என்று, சிலவரை விட்டான்;
கூடினார்க்கு அவர் உயிர் எனச் சிலவரைக் கொடுத்தான்;
ஊடினார்க்கு அவர் மனைதொறும் சிலவரை உய்த்தான். 43

தரு எலாம் உடல்; தெற்றி எலாம் உடல்; சதுக்கத்து
உரு எலாம் உடல்; உவரி எலாம் உடல்; உள்ளூர்க்
கரு எலாம் உடல்; காயம் எலாம் உடல்; அரக்கர்
தெரு எலாம் உடல்; தேயம் எலாம் உடல்—சிதறி. 44

ஊன் எலாம் உயிர் கவர்வுறும் காலன் ஓய்ந்து உலந்தான்;—
தான், எலாரையும், மாருதி சாடுகை தவிரான்;—
மீன் எலாம் உயிர்; மேகம் எலாம் உயிர்; மேல்மேல்
வான் எலாம் உயிர்; மற்றும் எலாம் உயிர்—சுற்றி. 45

**அரக்கர்களின் நடுவே அனுமன் விளங்கிய காட்சி**

ஆக இச் செரு விளைவுறும் அமைதியின், அரக்கர்
மோகம் உற்றனர் ஆம் என, முறை முறை முனிந்தார்;
மாகம் முற்றவும், மாதிரம் முற்றவும், வளைந்தார்,
மேகம் ஒத்தனர்—மாருதி வெய்யவன் ஒத்தான். 46

40. கூன் - பெரும்பாத்திரம்; 42. மாக்கள் - குழந்தைகள்; 46. மோகம் - அறிவு மயக்கம்.

அடல் அரக்கரும், ஆர்த்தலின், அலைத்தலின், அயரப்
புடை பெருத்து உயர் பெருமையின், கருமையின் பொலிவின்,
மிடல் அயில் படை மீன் என விலங்கலின், கலங்கும்
கடல் நிகர்த்தனர்—மாருதி மந்தரம் கடுத்தான். 47

கரதலத்தினும் காலினும் வாலினும் கதுவ,
நிரை மணித் தலை நெரிந்து உக, சாய்ந்து உயிர் நீப்பார்,
சுரர் நடுக்குற அமுது கொண்டு எழுந்த நாள், தொடரும்
உரகர் ஒத்தனர்—அனுமனும் கலுழனே ஒத்தான். 48

மானம் உற்ற தம் பகையினுல், முனிவுற்று வளைந்த
மீனுடைக் கடல் உலகினின், உள எலாம் மிடைந்த
ஊன் அறக் கொன்று துகைக்கவும், ஒழிவு இலா நிருதர்
ஆனை ஒத்தனர்—ஆள் அரி ஒத்தனன் அனுமன். 49

**அனுமன் விழுப் புண் படலும் தேவர்கள் பூமாரி பொழிதலும்**

எய்த, எற்றின, எறிந்தன, ஈர்த்தன, இகலின்
பொய்த, குத்தின, பொதுத்தன, துளைத்தன, போழ்ந்த,
கொய்த, சுற்றின, பற்றின, குடைந்தன, பொலிந்த
ஐயன் மல் பெரும் புயத்தன, புண் அளப்பு அரிதால். 50

கார்க் கருந் தடங் கடல்களும், மழை முகில் கணனும்,
வேர்க்க, வெஞ் செரு விளைத்து எழும் வெள் எயிற்று அரக்கர்
போர்க் குழாம் படி பூசலின், ஐயனைப் புகழ்வுற்று
ஆர்க்கும் விண்ணவர் அமலையே, உயர்ந்தது, அன்று அமரில்.

மேவும் வெஞ் சினத்து அரக்கர்கள், முறை முறை, விசையால்
ஏவும் பல் படை, எத்தனை கோடிகள் எனினும்,
தூவும் தேவரும், மகளிரும், முனிவரும் சொரிந்த
பூவும், புண்களும், தெரிந்தில, மாருதி புயத்தில். 52

**எதிர்ந்த அரக்கர்கள் யாவரும் பட்டொழிதல்**

பெயர்க்கும் சாரிகை கறங்கு எனத் திசைதொறும் பெயர்வின்,
உயர்க்கும் விண்மிசை ஓங்கலின், மண்ணின் வந்து உறலின்,
அயர்த்து வீழ்ந்தனர், அழிந்தனர், அரக்கராய் உள்ளார்;
வெயர்த்திலன் மிசை; உயிர்த்திலன்—நல் அற வீரன். 53

50. பொய்த - சொரிந்தன; பொதுத்தன - பொத்தின; 53. மிசை - உடம்பு.

எஞ்சல் இல் கணக்கு அறிந்திலம்; இராவணன் ஏவ,
நஞ்சம் உண்டவராம் என அனுமன்மேல் நடந்தார்;
துஞ்சினர் அல்லது யாவரும் மறத்தொடும் தொலேவுற்று,
எஞ்சினர் இல்லே; அரக்கரின் வீரர் மற்று யாரே? 54

கிங்கரர் மடிந்ததைக் காவலர் இராவணனுக்கு உணர்த்துதல்

வந்த கிங்கரர் 'ஏ' எனும் மாத்திரை மடிந்தார்;
நந்தவானத்து நாயகர் ஓடினர், நடுங்கி,
பிந்து காலினர், கையினர்; பெரும் பயம் பிடரின்
உந்த, ஆயிரம் பிணக் குவைமேல் விழுந்து உளேவார். 55

விரைவின் உற்றனர்; விம்மலுற்று யாது ஒன்றும் விளம்பார்;
கரதலத்தினுல், பட்டதும், கட்டுரைக்கின்ருர்;
தரையில் நிற்கிலர்; திசைதொறும் நோக்கினர், சலிப்பார்;
அரசன், மற்றவர் அலக்கணே உரைத்திட, அறிந்தான். 56

இராவணன் வினவும், காவலர் விடையும்

'இறந்து நீங்கினரோ? இன்று, என் ஆணையை இகழ்ந்து
துறந்து நீங்கினரோ? அன்றி, வெஞ் சமர் தொலேந்தார்
மறந்து நீங்கினரோ? என்கொல் வந்தது?' என்று உரைத்தான்—
நிறம் செருக்குற, வாய்தொறும் நெருப்பு உமிழ்கின்ருன். 57

'சலம் தலேக்கொண்டனர் ஆய தன்மையார்
அலந்திலர்; செருக்களத்து அஞ்சினர் அலர்;
புலம் தெரி பொய்க் கரி புகலும் புன்கணர்
குலங்களின், அவிந்தனர், குரங்கினுல்' என்ருர். 58

இராவணன் நாணி, மீட்டும் வினவுதல்

ஏவலின் எய்தினர் இருந்த எண் திசைத்
தேவரை நோக்கினன், நாணும் சிந்தையான்;
'யாவது என்று அறிந்திலிர் போலுமால்?' என்ருன்—
மூவகை உலகையும் விழுங்க மூள்கின்ருன். 59

மீட்டு அவர் உரைத்திலர்; பயத்தின் விம்முவார்;
தோட்டு அலர் இன மலர்த் தொங்கல் மோலியான்,
'வீட்டியது அரக்கரை என்னும் வெவ் உரை,
கேட்டதோ? கண்டதோ? கிளத்துவீர்' என்ருன். 60

55. கிங்கரர் - ஏவலாளர்; 58. அலந்திலர் - வருந்தியோடினர் அல்லர்.

காவலர், 'கண்களால் கண்டனம்' என்றல்

'கண்டனம், ஒருபுடை நின்று, கண்களால்;
தெண் திரைக் கடல் என வளைந்த சேனையை,
மண்டலம் திரிந்து, ஒரு மரத்தினால், உயிர்
உண்டது, அக் குரங்கு; இனம் ஒழிவது அன்று' என்றார். 61

## 8 சம்புமாலி வதைப் படலம்

அனுமனைப் பிணித்துவரச் சம்புமாலியை இராவணன் ஏவுதல்

கூம்பின கையன், நின்ற குன்று எனக் குவவுத் திண் தோள்,
பாம்பு இவர் தறுகண், சம்புமாலி என்பவனைப் பாரா,
'வாம் பரித் தானையோடு வளைத்து, அதன் மறனை மாற்றி,
தாம்பினின் பற்றி, தந்து, என் மனச்சினம் தணித்தி' என்றான்:

சம்புமாலி போருக்குப் புறப்படுதல்

ஆயவன் வணங்கி, 'ஐய! அளப்பரும் அரக்கர் முன்னர்,
''நீ இது முடித்தி'' என்று நேர்ந்தனை; நினைவின் எண்ணி
ஏயினை; என்னப்பெற்றால், என்னின் யார் உயர்ந்தார்?' என்னா,
போயினன், இலங்கை வேந்தன் போர்ச் சினம் போவது ஒப்பான். 2

சம்புமாலியுடன் சென்ற படைகள்

தன்னுடைத் தானையோடும், தயமுகன், 'தருக' என்று ஏய
மன்னுடைச் சேனையோடும், தாதை வந்து ஈந்த வாளின்
மின்னுடைப் பரவையோடும், வேறுளோர் சிறப்பின் விட்ட
பின்னுடை அனிகத்தோடும், பெயர்ந்தனன்,—பெரும் போர்பெற்றான்.

உரும் ஒத்த முழக்கின், செங் கண், வெள் எயிற்று, ஓடை நெற்றிப்
பருமித்த கிரியின் தோன்றும், வேழமும்—பதுமத்து அண்ணல்
நிருமித்த எழிலி முற்றிற்று என்னலாம் நிலைய, நேமி,
சொரி முத்த மாலை சூழும், துகிற்கொடி, தடந் தேர்—சுற்ற; 4

காற்றினை மருங்கில் கட்டி, கால் வகுத்து, உயிரும் கூட்டி,
கூற்றினை ஏற்றியன்ன குலப் பரி குழுவ; குன்றின்
தூற்றினின் எழுப்பி, ஆண்டு, தொகுத்தென, சுழல் பைங் கண்ண
வேற்று இனப் புலிஏறு என்ன வியந்து எழும் பதாதி ஈட்டம், 5

8 : 3. தாதை - பிரகத்தன்; 4. பருமித்த - (போர்க்குரிய) அலங்காரத்தைக் கொண்ட.

தோமரம், உலக்கை, கூர் வாள், சுடர் மழு, குலிசம், தோட்டி,
தாம் அரம் தின்ற கூர் வேல், தழல் ஒளி வட்டம், சாபம்,
காமர் தண்டு, எழுக்கள், காந்தும் சுப்பணம், கால பாசம்,
மா மரம், வலயம், வெங் கோல் முதலிய வயங்க மாதோ; 6

எத்திய அயில், வேல், குந்தம், எழு, கழு முதல ஏந்தி,
குத்திய திளைப்ப; மீதில் குழுவின மழை மாக் கொண்டல்
பொத்து உகு பொரு இல் நல் நீர் சொரிவன போவ போல,
சித்திரப் பதாகை ஈட்டம் திசைதொறும் செறிவ செல்ல; 7

பல்லியம் துவைப்ப, நல் மாப் பணிலங்கள் முரல, பொன் தேர்ச்
சில்லிகள் இடிப்ப, வாசி சிரித்திட, செறி பொன் தாரும்
வில்லும் நின்று இசைப்ப, யானை முழக்கம் விட்டு ஆர்ப்ப, விண் தோய்
ஒல் ஒலி வானில் தேவர் உரை தெரிவு ஒழிக்க மன்னோ; 8

மின் நகு கிரிகள் யாவும் மேருவின் விளங்கித் தோன்ற,
தொல் நகர் பிறவும் எல்லாம் பொலிந்தன, துறக்கம் என்ன—
அன்னவன் சேனை செல்ல, ஆர்கலி இலங்கை ஆய
பொன் நகர் தகர்ந்து, பொங்கி ஆர்த்து எழு தூளி போர்ப்ப.

ஆயிரம் ஐந்தொடு ஐந்து ஆம், ஆழி அம் தடந் தேர்; அத் தேர்க்கு
ஏயின இரட்டி யானை; யானையின் இரட்டி பாய் மா;
போயின பதாதி, சொன்ன புரவியின் இரட்டி போலாம்—
தீயவன் தடந் தேர் சுற்றித் தெற்றெனச் சென்ற சேனை. 10

வில் மறைக் கிழவர்; நாண் விஞ்சையர்; வரத்தின் மிக்கார்;
வன் மறக் கண்ணர்; ஆற்றல் வரம்பு இலா வயிரத் தோளார்;
தொல் மறக் குலத்தர்; தூணி தூக்கிய புறத்தர்; மார்பின்
கல் மறைத்து ஒளிரும் செம் பொன் கவசத்தர்—கடுந் தேர் ஆட்கள். 11

பொரு திசை யானை ஊரும் புனிதனைப் பொருவும் பொற்பர்;
சுரிபடைத் தொழிலும், மற்றை அங்குசத் தொழிலும், தொக்கார்;
நிருதியின் பிறந்த வீரர்; நெருப்பு இடை பரப்பும் கண்ணர்;
பரிதியின் பொலியும் மெய்யர்—படு மதக் களிற்றின் பாகர். 12

ஏர் கெழு திசையும், சாரி பதினெட்டும், இயல்பின் எண்ணிப்
போர் கெழு படையும் கற்ற வித்தகப் புலவர், போரில்,
தேர் கெழு மறவர், யானைச் சேவகர், சிரத்தில் செல்லும்
தார் கெழு புரவி என்னும் தம் மனம் தாவப் போனார். 13

10. தெற்றென - விரைவாக; 12. புனிதன் - இந்திரன்; சுரிபடை - வாட்படை; நிருதி - தென்மேற்குத் திசைப் பாலகி; 13. திசை - செல்ல வேண்டிய திசையிடம்.

அந் நெடுந் தானை சுற்ற, அமரரை அச்சம் சுற்ற,
பொன் நெடுந் தேரில் போனான்—பொருப்பிடை நெருப்பின் பொங்கி,
தன் நெடுங் கண்கள் காந்த, தாழ் பெருங் கவசம் மார்பில்
மின்னிட, வெயிலும் வீச,—வில் இடும் எயிற்று வீரன். 14

தோரண வாயில்மேல் ஏறி, அனுமன் ஆர்த்தல்

நந்தனவனத்துள் நின்ற நாயகன் தூதன்தானும்,
'வந்திலர் அரக்கர்' என்னும் மனத்தினன், வழியை நோக்கி,
சந்திரன் முதல வான மீன் எலாம் தழுவ நின்ற
இந்திர தனுவின் தோன்றும் தோரணம் இவர்ந்து, நின்றான். 15

கேழ் இரு மணியும் பொன்னும், விசும்பு இருள் கிழித்து நீங்க,
ஊழ் இருங் கதிர்களோடும் தோரணத்து உம்பர் மேலான்,
சூழ் இருங் கதிர்கள் எல்லாம் தோற்றிடச் சுடரும் சோதி,
ஆழியின் நடுவண் தோன்றும் அருக்கனே அனையன் ஆனான். 16

செல்லொடு மேகம் சிந்த, திரைக் கடல் சிலைப்புத் தீர,
கல் அளைக் கிடந்த நாகம் உயிரொடு விடமும் கால,
கொல் இயல் அரக்கர் நெஞ்சில் குடி புக அச்சம், வீரன்
வில் என இடிக்க, விண்ணோர் நடுக்குற, வீரன் ஆர்த்தான். 17

நின்றன திசைக்கண் வேழம் நெடுங் களிச் செருக்கு நீங்க,
தென் திசை நமனும் உள்ளம் துணுக்கென, சிந்தி வானில்
பொன்றல் இல் மீன்கள் எல்லாம் பூ என உதிர, பூவும்
குன்றமும் பிளக்க, வேலை துளக்குற, கொட்டினான் தோள். 18

அனுமனை அணுக முடியாது அரக்க வீரர் தவித்தல்

அவ் வழி, அரக்கர் எல்லாம், அலை நெடுங் கடலின் ஆர்த்தார்;
செவ் வழிச் சேறல் ஆற்றார், பிணப் பெருங் குன்றம் தெற்றி,
வெவ் வழி குருதி வெள்ளம் புடை மிடைந்து உயர்ந்து வீங்க,
'எவ் வழிச் சேறும்' என்றார்; தமர் உடம்பு இடறி வீழ்வார்.

சம்புமாலி அணி வகுத்துவர, அனுமன் போருக்கு அமைந்து நிற்றல்

ஆண்டு நின்று, அரக்கன், வெவ்வேறு அணி வகுத்து, அனிகம்தன்னை,
மூண்டு இரு புடையும், முன்னும், முறை முறை முடுக ஏவி,
தூண்டினன், தானும் திண் தேர்; தோரணத்து இருந்த தோன்றல்,
வேண்டியது எதிர்ந்தான் என்ன, வீங்கினன், விசயத் திண் தோள். 20

16. ஊழ் - முறைமை; 17. செல் - இடி; சிலைப்பு - பேரொலி; 19. செவ் வழி - நேர் வழி; தெற்றுதல் - தடுத்தல்.

ஐயனும், அமைந்து நின்றான், ஆழியான் அளவின் நாமம்
நெய் சுடர் விளக்கின் தோன்றும் நெற்றியே நெற்றியாக,
மொய் மயிர்ச் சேனை பொங்க, முரண் அயில் உகிர் வாள் மொய்த்த
கைகளே கைகள் ஆக, கடைக் கூழை திரு வால் ஆக. 21

அரக்கர்கள் படை விட, அனுமன் கடும் போர் செய்தல்

வயிர்கள் வால் வளைகள் விம்ம, வரி சிலை சிலைப்ப, மாயப்
பயிர்கள் ஆர்ப்பு எடுப்ப, முரிப் பல்லியம் குமுற, பற்றி—
செயிர் கொள் வாள் அரக்கர், சீற்றம் செருக்கினர்,—படைகள் சிந்தி,
வெயில்கள்போல் ஒளிகள் வீச, வீரன்மேல் கடிது விட்டார். 22

கருங் கடல் அரக்கர்தம் படைக்கலம் கரத்தால்
பெருங் கடல் உறப் புடைத்து, இறுத்து, உக, பிசைந்தான்;
விரிந்தன பொறிக் குலம்; நெருப்பு என வெகுண்டு, ஆண்டு
இருந்தவன், கிடந்தது ஓர் எழுத் தெரிந்து எடுத்தான். 23

இருந்தனன், எழுந்தனன், இழிந்தனன், உயர்ந்தான்,
திரிந்தனன், புரிந்தனன், என நனி தெரியார்;
விரிந்தவர், குவிந்தவர், விலங்கினர், கலந்தார்,
பொருந்தினர், நெருங்கினர், களம் படப் புடைத்தான். 24

எறிந்தன, எய்தன, இடி உரும் என மேல்
செறிந்தன படைக்கலம், இடக் கையின் சிதைத்தான்,—
முறிந்தன தெறும் கரி; முடிந்தன தடந் தேர்;
மறிந்தன பரி நிரை—வலக் கையின் மலைந்தான்.* 25

இழந்தன நெடுங் கொடி; இழந்தன இருங் கோடு;
இழந்தன நெடுங் கரம்; இழந்தன வியன் தாள்;
இழந்தன முழங்கு ஒலி; இழந்தன மதம் பாடு;
இழந்தன பெருங் கதம்—இருங் கவுள் யானை. 26

நெரிந்தன தடஞ் சுவர்; நெரிந்தன பெரும் பார்;
நெரிந்தன நுகம் புடை; நெரிந்தன அதன் கால்;
நெரிந்தன கொடிஞ்சிகள்; நெரிந்தன வியன் தார்;
நெரிந்தன கடும் பரி; நெரிந்தன நெடுந் தேர். 27

21. அளவின் நாமம் - அளவுடன் இட்ட திருமண் காப்பு; நெற்றி - முன்னணிப் படை; கைகள் - பக்கப் படைகள்; கடைக் கூழை - பின்னணிப் படை; 23. எழு - இருப்புத் தடி; 27. சுவர் - தேரின் பக்கங்களில் அமைந்த மரத்தால் அமைந்த மறைப்பு; பார் - தேரின் அடிப்பக்கத்துள்ள மரம்; கால் - சக்கரம்.

ஒடிந்தன; உருண்டன; உலந்தன; புலந்த;
இடிந்தன; எரிந்தன; நெரிந்தன; ஏழுந்த;
மடிந்தன; மறிந்தன; முறிந்தன; மலைபோல்,
படிந்தன; முடிந்தன; கிடந்தன—பரி மா. 28

வெருண்டனர், வியந்தனர், விழுந்தனர், எழுந்தார்;
மருண்டனர், மயங்கினர், மறிந்தனர், இறந்தார்;
உருண்டனர், உலைந்தனர், உழைத்தனர், பிழைத்தார்;
சுருண்டனர், புரண்டனர், தொலைந்தனர்;—மலைந்தார். 29

கரிகொடு கரிகளைக் களப் படப் புடைத்தான்;
பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்;
வரி சிலை வயவரை வயவரின் மடித்தான்;
நிரை மணித் தேர்களைத் தேர்களின் நெரித்தான். 30

மூளையும் உதிரமும் முழங்கு இருங் குழம்பு ஆய்
மீள் இருங் குழைபட, கரி விழுந்து அழுந்த,
தாளொடும் தலை உக, தட நெடுங் கிரிபோல்
தோளொடும் நிருதரை, வாளொடும்—துகைத்தான். 31

மல்லொடு மலை மலைத் தோளரை, வளை வாய்ப்
பல்லொடும், நெடுங் கரப் பகட்டொடும், பருந் தாள்
வில்லொடும், அயிலொடும், விறலொடும், விளிக்கும்
சொல்லொடும், உயிரொடும், நிலத்தொடும்,—துகைத்தான்.

புகை நெடும் பொறி புகும் திசைதொறும் பொலிந்தான்;
சிகை நெடுஞ் சுடர் விடும் தேர்தொறும் சென்றான்;
தகை நெடுங் கரிதொறும், பரிதொறும், சரித்தான்;
நகை நெடும் படைதொறும், தலைதொறும், நடந்தான். 33

வென்றி வெம் புரவியின் வெரிநினும், விரவார்
மன்றல் அம் தார் அணி மார்பினும், மணித் தேர்
ஒன்றின்நின்று ஒன்றினும், உயர் மத மழை தாழ்
குன்றினும்,—கடையுகத்து உரும் எனக் குதித்தான். 34

பிரிவு அரும் ஒரு பெருங் கோல் என, பெயரா
இருவினை துடைத்தவர் அறிவு என, எவர்க்கும்
வரு முலை விலைக்கு என மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனம் என, கறங்கு என,—திரிந்தான். 35

31. முழங்குதல் - கொதிப்பால் ஒலித்தல்; மீள் இருங்குழை - (கண்டவர் அஞ்சி) மீளும் மிக்க சேறு; 32. நெடுங் கரப் பகடு - ஆண் யானை; 35. பெருங் கோல் - செங்கோல், அரசாணை எங்கும் செல்ல வல்லது.

அண்ணல்—அவ் அரியினுக்கு அடியவர் அவன் சீர்
நண்ணுவர் எனும் பொருள் நவை அறத் தெரிப்பான்,
மண்ணினும், விசும்பினும், மருங்கினும், வலித்தார்
கண்ணினும், மனத்தினும்,—தனித் தனி கலந்தான். 36

கொடித் தடந் தேரொடும் குரகதக் குழுவை
அடித்து, ஒரு தடக் கையின் நிலத்திடை அரைத்தான்;
இடித்து நின்று அதிர் கதத்து, எயிற்று வன் பொருப்பை,
பிடித்து, ஒரு தடக் கையின், உயிர் உகப் பிழிந்தான். 37

கறுத்து எழு நிறத்தினர், எயிற்றினர், கயிற்றார்,
செறுத்து எரி விழிப்பவர், சிகைக் கழு வலத்தார்,
மறுத்து எழு மறலிகள் இவர் என அதிர்ந்தார்,
ஒறுத்து, உருத்திரன் என, தனித் தனி உதைத்தான். 38

சக்கரம், தோமரம், உலக்கை, தண்டு, அயில், வாள்,
மிக்கன தேர், பரி, குடை, கொடி, விரவி
உக்கன; குருதிஅம் பெருந் திரை உருட்டிப்
புக்கன கடலிடை, நெடுங் கரப் பூட்கை. 39

எட்டின விசும்பினை;—எழுப் பட எழுந்த—
முட்டின மலைகளை; முயங்கின திசையை;
ஒட்டின ஒன்றை ஒன்று; ஊடு அடித்து உதைந்து
தட்டுமுட்டு ஆடின, தலையொடு—தலைகள். 40

சம்புமாலி சீற்றமுற்றுப் போர்க்கு விரைதல்

கானே காவல் வேழக் கணங்கள் கத வாள் அரி கொன்ற
வானே எய்த, தனியே நின்ற மத மால் வரை ஒப்பான்,
தேனே புரை கண் கனலே சொரிய, சீற்றம் செருக்கினான்,
தானே ஆனான்—சம்புமாலி, காலன் தன்மையான். 41

காற்றின் கடிய கலினப் புரவி நிருதர் களத்து உக்கார்;
ஆற்றுக் குருதி நிணத்தோடு அடுத்த அள்ளல் பெருங் கொள்ளைச்
சேற்றில் செல்லாத் தேரின் ஆழி ஆழும்; நிலை தேரா,
வீற்றுச் செல்லும் வெளியோ இல்லை; அளியன் விரைகின்றான்;

தனித்து நின்ற சம்புமாலிபால் அனுமன் இரக்கமுற்று மொழிதல்

'ஏதி ஒன்றால்; தேரும் அஃதால்; எளியோர் உயிர் கோடல்
நீதி அன்றால்; உடன் வந்தாரைக் காக்கும் நிலை இல்லாய்!
சாதி; அன்றேல், பிறிது என் செய்தி? அவர் பின் தனி நின்றாய்!
போதி' என்றான்—பூத்த மரம்போல் புண்ணால் பொலிகின்றான்;

39. பூட்கை - யானை; 40. தட்டுமுட்டு ஆடுதல் - முன் கிடந்த தலைகளோடு தட்டுமுட்டுப் பண்டங்கள் போலக் கலத்தல்.

சம்புமாலி சினந்து போரிட, அனுமன் எழுவால் தடுத்தல்

'நன்று, நன்று, உன் கருணை!' என்னு, நெருப்பு நக நக்கான்;
'பொன்றுவாரின் ஒருவன் என்ருய் போலும் எனை' என்னு,
வன் திண் சிலையின் வயிரக் காலால், வடித் திண் சுடர் வாளி,
ஒன்று, பத்து, நூறு, நூருயிரமும், உதைப்பித்தான். 44

'செய்தி, செய்தி, சிலை கைக் கொண்டால், வெறுங் கை திரிவோரை,
நொய்தின் வெல்வது அரிதோ?' என்னு, முறுவல் உக நக்கான்;
ஐயன், அங்கும் இங்கும் காலால் அழியும் மழை என்ன,
எய்த எய்த பகழி எல்லாம், எழுவால் அகல்வித்தான். 45

அனுமன் கை எழுவைச் சம்புமாலி அறுத்து வீழ்த்தல்

முற்ற முனிந்தான் நிருதன்; முனியா, முன்னும் பின்னும் சென்று,
உற்ற பகழி உருது, முறியா உதிர்கின்றதை உன்னு,
சுற்றும் நெடுந் தேர் ஓட்டித் தொடர்ந்தான்; தொடரும் துறை காணுன்;
வெற்றி எழுவை மழுவாய் அம்பால் அறுத்து வீழ்த்திஞன். 46

சம்புமாலியை அனுமன் கொல்லுதல்

சலித்தான் ஐயன்; கையால், எய்யும் சரத்தை உகச் சாடி,
ஒலித் தார் அமரர் கண்டார் ஆர்ப்ப, தேரினுள் புக்கு,
கலித்தான் சிலையைக் கையால் வாங்கி, கழுத்தினிடை இட்டு
வலித்தான், பகுவாய் மடித்து மலைபோல் தலை மண்ணிடை வீழ.

குதித்து, தேரும், கோல் கொள் ஆளும், பரியும், குழம்பு ஆக
மிதித்து, பெயர்த்தும், நெடுந் தோரணத்தை வீரன் மேற்கொண்டான்;
கதித் துப்பு அழிந்து கழிந்தார் பெருமை கண்டு, களத்து அஞ்சி,
உதித்துப் புலர்ந்த தோல்போல் உருவத்து அமரர் ஓடினர். 48

பரிந்து புலம்பும் மகளிர் காண, கணவர் பிணம் பற்றி,
விரிந்த குருதிப் பேராறு ஈர்த்து மனைகள்தொறும் வீச,
இரிந்தது இலங்கை; எழுந்தது அழுகை; 'இன்று, இங்கு, இவனுலே
சரிந்தது, அரக்கர் வலி' என்று எண்ணி, அறமும் தளிர்த்ததால்.

காவல் தேவர் இராவணனிடம் செய்தி சொல்லல்

புக்கார் அமரர், பொலந் தார் அரக்கன் பொரு இல் பெருங் கோயில்
விக்காநின்ருர்; விளம்பல் ஆற்ருர்; வெருவி விம்முவார்;
நக்கான் அரக்கன்; 'நடுங்கல்' என்ருன்; 'ஐய! நமர் எல்லாம்
உக்கார்; சம்புமாலி உலந்தான்; ஒன்றே குரங்கு' என்ருர். 50

48. கோல் - குதிரை செலுத்தும் உளவுகோல்; கதித் துப்பு - விரைந்து செல்லும் வலிமை.

அநுமனைப் பிடிக்க எழுந்த இராவணனிடம் படைத்தலைவர் பேசுதல்

என்னும் அளவின், எரிந்து வீங்கி எழுந்த வெகுளியான்,
உன்ன, உன்ன, உதிரக் குமிழி விழியூடு உமிழ்கின்றான்,
'சொன்ன குரங்கை, யானே பிடிப்பென், கடிது தொடர்ந்து' என்றான்,
அன்னது உணர்ந்த சேனைத் தலைவர் ஐவர் அறிவித்தார். 51

## 9 பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம்

சேனைத் தலைவர் ஐவர் வேண்டுகோளும் இராவணன் இசைவும்

'சிலந்தி உண்பது ஓர் குரங்கின்மேல் சேறியேல், திறலோய்!
கலந்த போரில் நின் கண்புலக் கடுங் கனல் கதுவ,
உலந்த மால் வரை அருவி ஆறு ஒழுக்கு அற்ற ஒக்கப்
புலர்ந்த மா மதம் பூக்கும் அன்றே, திசைப் பூட்கை? 1

'இலங்கு வெஞ் சினத்து அம் சிறை எறுழ் வலிக் கலுழன்
உலங்கின்மேல் உருத்தென்ன, நீ குரங்கின்மேல் உருக்கின்,
அலங்கல் மாலை நின் புயம் நினைந்து, அல்லும் நன் பகலும்
குலுங்கும் வன் துயர் நீங்குமால், வெள்ளியங் குன்றம். 2

'உறுவது என்கொலோ? உரன் அழிவு என்பது ஒன்று உடையார்
பெறுவது யாது ஒன்றும் காண்கிலர், கேட்கிலர், பெயர்ந்தார்;
சிறுமை ஈது ஒப்பது யாது? நீ குரங்கின்மேல் செல்லின்,
முறுவல் பூக்கும் அன்றே, நின்ற மூவர்க்கும் முகங்கள்? 3

'அன்றியும், உனக்கு ஆள் இன்மை தோன்றுமால், அரச!
வென்றி இல்லவர் மெல்லியோர்தமைச் செல விட்டாய்;
நன்றி இன்று ஒன்று காண்டியேல், எமைச் செல நயத்தி'
என்று, கைதொழுது இறைஞ்சினர்; அரக்கனும் இசைந்தான்.

பஞ்ச சேனாபதிகளின் கட்டளைப்படி படைகள் திரளுதல்

உலகம் மூன்றிற்கும் முதன்மை பெற்றோர் என உயர்ந்தார்,
திலகம் மண் உற வணங்கினர்; கோயிலின் தீர்ந்தார்;
'அலகு இல் தேர், பரி, கரியொடு ஆள் மிடைந்த போர் அரக்கர்,
தொலைவு இலாதன கதுமென வருக' எனச் சொன்னார். 5

9: 2. உலங்கு - கொசுகு.

ஆனைமேல் முரசு அறைந்தனர் வள்ளுவர் அமைந்தார்;
பேன வேலையின் புடை பரந்தது, பெருஞ் சேனை;
சோனை மா மழை முகில் எனப் போர்ப் பணை துவைத்த;
மீன வான் இடு வில் எனப் படைக்கலம் மிடைந்த. 6

தானை மாக் கொடி, மழை பொதுத்து உயர் நெடுந் தாள,
மானம் மாற்ற அரு மாருதி முனிய, நாள் உலந்து
போன மாற்றலர் புகழ் எனக் கால் பொரப் புரண்ட;
வானயாற்று வெண் திரை என வரம்பு இல பரந்த. 7

விரவு பொற் கழல் விசித்தனர், வெரிந் உற்று விளங்கச்
சரம் ஒடுக்கின புட்டிலும் சாத்தினர், சமையக்
கருவி புக்கனர், அரக்கர்; மாப் பல்லணம் கலினப்
புரவி இட்ட; தேர் பூட்டின; பருமித்த பூட்கை. 8

ஆறு செய்தன ஆனையின் மதங்கள்; அவ் ஆற்றைச்
சேறு செய்தன தேர்களின் சில்லி; அச் சேற்றை
நீறு செய்தன புரவியின் குரம்; மற்று அந் நீற்றை
வீறு செய்தன, அப் பரிக் கலின மா விலாழி. 9

வழங்கு தேர்களின் இடிப்பொடு வாசியின் ஆர்ப்பும்,
முழங்கு வெங் களிற்று அதிர்ச்சியும், மொய் கழல் ஒலியும்,
தழங்கு பல்லியத்து அமலையும், கடையுகத்து, ஆழி
முழங்கும் ஓதையின், மும் மடங்கு எழுந்தது முடுகி. 10

ஆழித் தேர்த் தொகை ஐம்பதினுயிரம்; அஃதே
சூழிப் பூட்கைக்குத் தொகை; அவற்று இரட்டியின்தொகைய,
ஊழிக் காற்று அன்ன புரவி; மற்று அவற்றினுக்கு இரட்டி,
பாழித் தோள் நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி. 11

கூய்த் தரும்தொறும், தரும்தொறும், தானை வெங் குழுவின்
நீத்தம், வந்து வந்து, இயங்கிடும் இடன் இன்றி நெருங்க,
காய்த்து அமைந்த வெங் கதிர்ப் படை, ஒன்று ஒன்று கதுவி,
தேய்த்து எழுந்தன, பொறிக் குலம், மழைக் குலம் தீய. 12

பண் மணிக் குல யானையின் புடைதொறும் பரந்த
ஒண் மணிக் குலம் மழையிடை உரும் என ஒலிப்ப,
கண் மணிக் குலம் கனல் எனக் காந்துவ; கதுப்பின்
தண் மணிக் குலம் மழை எழும் கதிர் எனத் தழைப்ப.* 13

6. பேனம் - நுரை; போர்ப் பணை - போர் முரசு; 7. தாள - கால்களை (கம்பங்களை) உடையன; 8. கருவி - கவசம்; மா - சிறந்த; பல்லணம் - சேணம்; 9. வீறு செய்தல் - வேருக (குழை சேருக)ச் செய்தல்; 12. கூய்த் தரும்தொறும் - கூப்பிடுந்தொறும்; 13. பண் யானை - போர்க்கோலம் பூண்ட யானை; மணி - அழகிய.

### அரக்க வீரரை அவர்தம் சுற்றத்தார் தடுத்து இரங்குதல்

தொக்கது ஆம் படை, சுரி குழல் மடந்தையர், தொடிக் கை
மக்கள், தாயர், மற்று யாவரும் தடுத்தனர், மறுகி;
'ஒக்க ஏகுதும், குரங்கினுக்கு உயிர் தர; ஒருவர்
புக்கு மீண்டிலர்' என்று, அழுது இரங்கினர், புலம்பி. 14

### ஐவரும் தம் படையோடு செல்லல்

கை பரந்து எழு சேனைஅம் கடலிடைக் கலந்தார்;
செய்கைதாம் வரும் தேரிடைக் கதிர் எனச் செல்வார்—
மெய் கலந்த மா நிகர்வரும் உவமையை வென்றார்,
ஐவரும், பெரும் பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார். 15

முந்து இயம் பல கறங்கிட, முறை முறை பொறிகள்
சிந்தி, அம்பு உறு கொடுஞ் சிலை உரும் எனத் தெறிப்பார்;
வந்து இயம்புறு முனிவர்க்கும், அமரர்க்கும், வலியார்;
இந்தியம் பகை ஆயவை ஐந்தும் ஒத்து, இயைந்தார். 16

வாசவன் வயக் குலிசமும், வருணன் வன் கயிறும்,
ஏசு இல் தென்திசைக்கிழவன்தன் எரி முனை எழுவும்,
ஈசன் வன் தனிச் சூலமும், என்று இவை ஒன்றும்
ஊசி போழ்வது ஓர் வடுச் செயா, நெடும் புயம் உடையார். 17

சூர் தடிந்தவன் மயிலிடைப் பறித்த வன் தோகை,
பார் பயந்தவன் அன்னத்தின் இறகிடைப் பறித்த
மூரி வெஞ் சிறகு, இடை இட்டுத் தொடுத்தன முறுக்கி,
வீர சூடிகை நெற்றியின் அயல் இட்டு விசித்தார். 18

பொன் திணிந்த தோள் இராவணன் மார்பொடும் பொருத
அன்று இழந்த கோடு அரிந்து இடும் அழகு உறு குழையர்;
நின்ற வன் திசை நெடுங் களி யானையின் நெற்றி
மின் திணிந்த அன ஓடையின் வீர பட்டத்தர். 19

நிதி நெடுங் கிழவனை நெருக்கி, நீள் நகர்ப்
பதியொடும் பெருந் திருப் பறித்த பண்டை நாள்,
'விதி' என, அன்னவன் வெந்நிட்டு ஓடவே,
பொதியொடும் வாரிய பொலன் கொள் பூணினர். 20

இந்திரன் இசை இழந்து ஏகுவான், இகல்
தந்தி முன் கடாவினன் முடுக, தாம் அதன்
மந்தர வால் அடி பிடித்து, 'வல்லையேல்
உந்துதி, இனி' என, வலிந்த ஊற்றத்தார். 21

15. மெய் கலந்த மா - நரசிங்கம்; 20. பொதி - மூட்டை; 21. தந்தி - யானை; உந்துதி - செலுத்துவாய்.

'பால் நிறுத்து அந்தணன் பணியன் ஆகி, நின்
கோல் நினைத்திலன்' என, உலகம் கூறலும்,
நீல் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான்,
காலனை, காலினில், கையில், கட்டினர். 22

மலைகளை நகும் தட மார்பர்; மால் கடல்
அலைகளை நகும் நெடுந் தோளர்; அந்தகன்
கொலைகளை நகும் நெடுங் கொலையர்; கொல்லன் ஊது
உலைகளை நகும் அனல் உமிழும் கண்ணினர். 23

தோல் கிளர் திசைதொறும் உலகைச் சுற்றிய
சால் கிளர் முழங்கு எரி தழங்கி ஏறினும்,
கால் கிளர்ந்து ஓங்கினும், காலம் கையுற
மால் கடல் கிளரினும், சரிக்கும் வன்மையார். 24

**அரக்கர் படையை அனுமன் நோக்குதல்**

இவ் வகை அனைவரும் எழுந்த தானையர்,
மொய் கிளர் தோரணம் அதனை முற்றினர்;
கையொடு கை உற அணியும் கட்டினர்;
ஐயனும், அவர்நிலை, அமைய நோக்கினன். 25

அரக்கரது ஆற்றலும், அளவு இல் சேனையின்
தருக்கும், அம் மாருதி தனிமைத் தன்மையும்,
பொருக்கென நோக்கிய புரந்தராதியர்,
இரக்கமும், அவலமும், துளக்கும், எய்தினர். 26

'இற்றனர் அரக்கர் இப் பகலுளே' என,
கற்று உணர் மாருதி களிக்கும் சிந்தையான்,
முற்றுறச் சுலாவிய முடிவு இல் தானையைச்
சுற்றுற நோக்கி, தன் தோளை நோக்கினன். 27

**அனுமனைக் கண்ட அரக்க வீரரின் ஐயப்பாடு**

'புன் தலைக் குரங்கு இது போலுமால் அமர்
வென்றது! விண்ணவர் புகழை வேரொடும்
தின்ற வல் அரக்கரைத் திருகித் தின்றதால்!'
என்றனர், அயிர்த்தனர், நிருதர் எண்ணிலார். 28

22. அந்தணன் - பிரமதேவன்; காலனை - யமனையும், உம்மை தொக்கது; 24. தோல் - யானை; சால் - மிக; கையுற - பொருந்த; 25. கையொடு கை உற - எல்லாப் பக்கங்களிலும் பொருந்துமாறு; 27. சுலாவிய - சூழ்ந்துள்ள.

### அனுமன் பேருருக் கொள்ளலும், அரக்கர்கள் படை வழங்கலும்

ஆயிடை, அனுமனும், அமரர்கோன் நகர்
வாயில்நின்று அவ் வழிக் கொணர்ந்து வைத்த மாச்
சேயொளித் தோரணத்து உம்பர், சேண் நெடு
மீ உயர் விசும்பையும் கடக்க வீங்கினன். 29

வீங்கிய வீரனை வியந்து நோக்கிய
தீங்கு இயல் அரக்கரும், திருகினர் சினம்,
வாங்கிய சிலையினர், வழங்கினர் படை;
ஏங்கிய சங்குஇனம்; இடித்த பேரியே! 30

எறிந்தனர், எய்தனர், எண் இறந்தன
பொறிந்து எழு படைக்கலம், அரக்கர் போக்கினர்;
செறிந்தன மயிர்ப்புறம்; தினவு தீர்வுறச்
சொறிந்தனர் என இருந்து, ஐயன் தூங்கினன். 31

### அனுமன் செய்த போர்

உற்று, உடன்று, அரக்கரும், உருத்து உடற்றினர்;
செற்றுற நெருக்கினர்; 'செருக்கும் சிந்தையர்
மற்றையர் வரும் பரிசு, இவரை, வல் விரைந்து
எற்றுவென்' என, எழு, அனுமன் ஏந்தினன். 32

ஊக்கிய படைகளும், உருத்த வீரரும்,
தாக்கிய பரிகளும், தடுத்த தேர்களும்,
மேக்கு உயர் கொடியுடை மேக மாலைபோல்
நூக்கிய கரிகளும், புரள நூக்கினன். 33

வார் மதக் கரிகளின் கோடு வாங்கி, மாத்
தேர் படப் புடைக்கும்; அத் தேரின் சில்லியால்,
வீரரை உருட்டும்; அவ் வீரர் வாளினால்,
தாருடைப் புரவியைத் துணியத் தாக்குமால். 34

இரண்டு தேர் இரண்டு கைத்தலத்தும் ஏந்தி, வேறு
இரண்டு மால் யானை பட்டு உருள, எற்றுமால்;
இரண்டு மால் யானை கை இரண்டின் ஏந்தி, வேறு
இரண்டு பாலினும் வரும் பரியை எற்றுமால். 35

மா இரு நெடு வரை வாங்கி, மண்ணில் இட்டு,
ஆயிரம் தேர் பட அரைக்குமால்; அழித்து,
ஆயிரம் களிற்றை ஓர் மரத்தினால் அடித்து,
'ஏ' எனும் மாத்திரத்து எற்றி முற்றுமால். 36

32. வரும் பரிசு - வரும் வண்ணம்.

உதைக்கும் வெங் கரிகளை; உழக்கும் தேர்களை;
மிதிக்கும் வன் புரவியை; தேய்க்கும் வீரரை;
மதிக்கும் வல் எழுவினுல்; அரைக்கும் மண்ணிடை;
குதிக்கும் வன் தலையிடை; கடிக்கும்; குத்துமால். 37

விசையின் மான் தேர்களும், களிறும் விட்டு, அகல்
திசையும் ஆகாயமும் செறிய, சிந்துமால்;
குசை கொள் பாய் பரியொடும், கொற்ற வேலொடும்,
பிசையுமால் அரக்கரை, பெருங் கரங்களால். 38

தீ உறு பொறியுடைச் செங் கண் வெங் கைமா,
மீ உற, தடக் கையால் வீரன் வீசுதோறு,
ஆய் பெருங் கொடியன, கடலின் ஆழ்வன,
பாயுடை நெடுங் கலம் படுவ போன்றவே. 39

தாரொடும், உருளொடும், தடக் கையால் தனி
வீரன் விட்டு எறிந்தன, கடலின் வீழ்வன,
வாரியின் எழும் சுடர்க் கடவுள் வானவன்
தேரினை நிகர்த்தன, புரவித் தேர்களே. 40

மீ உற விண்ணிடை முட்டி வீழ்வன,
ஆய் பெருந் திரைக் கடல் அழுவத்து ஆழ்வன,
ஓய்வில புரவி, வாய் உதிரம் கால்வன,
வாயிடை எரியுடை வடவை போன்றவே. 41

வரிந்து உற வல்லிதின் சுற்றி, வாலினுல்
விரிந்து உற வீசலின், கடலின் வீழ்குநர்
திரிந்தனர்—செறி கயிற்று அரவினுல் திரி
அருந் திறல் மந்தரம் அனையர் ஆயினர். 42

வீரன் வன் தடக் கையால் எடுத்து வீசிய
வார் மதக் கரியினின், தேரின், வாசியின்,
மூரி வெங் கடல் புகக் கடிதின் முந்தின,
ஊரின் வெங் குருதி ஆறு ஈர்ப்ப ஓடின. 43

பிறைக் கடை எயிற்றின, பிலத்தின் வாயின,
கறைப் புனல் பொறிகளோடு உமிழும் கண்ணன,
உறைத் தபு படையின, உதிர்ந்த யாக்கைகள்,
மறைத்தன, மகர தோரணத்தை, வான் உற. 44

40. தார் - தேரை அணி செய்யும் தொங்கல்; 44. உறைத் தபு - உறைகளினின்று நீக்கி எடுத்த.

குன்று உள; மரம் உள; குலம் கொள் பேர் எழு
ஒன்று அல, பல உள; உயிர் உண்பான் உள;
அன்றினர் பலர் உளர்; ஐயன் கை உள;
பொன்றுவது அல்லது, புறத்துப் போவரோ? 45

முழு முதல், கண்ணுதல், முருகன் தாதை, கைம்
மழு எனப் பொலிந்து ஒளிர் வயிர வான் தனி
எழுவினின், பொலங் கழல் அரக்கர் ஈண்டிய
குழுவினை, களம் படக் கொன்று நீக்கினான். 46

தானை அழிய, ஐவரும் அனுமனொடு பொருது வீழ்தல்

உலந்தது தானை; உவந்தனர் உம்பர்;
அலந்தலை உற்றது, அவ் ஆழி இலங்கை;
கலந்தது, அழும் குரலின் கடல் ஓதை;
வலம் தரு தோளவர் ஐவரும் வந்தார். 47

ஈர்த்து எழு செம்புனல் எக்கர் இழுக்க,
தேர்த் துணை ஆழி அழுந்தினர், சென்றார்;
ஆர்த்தனர்; ஆயிரம் ஆயிரம் அம்பால்
தூர்த்தனர்; அஞ்சனை தோன்றலும் நின்றான். 48

எய்த கடுங் கணை யாவையும், எய்தா
நொய்து அகலும்படி, கைகளின் நூறா,
பொய்து அகடு ஒன்று பொருந்தி, நெடுந் தேர்
செய்த கடும் பொறி ஒன்று, சிதைத்தான். 49

உற்று உறு தேர் சிதையாமுன் உயர்ந்தான்,
முற்றின வீரனை, வானில் முனிந்தான்;
பொன் திரள் நீள் எழு ஒன்று பொறுத்தான்,
எற்றினன்; அஃது அவன் வில்லினில் ஏற்றான். 50

முறிந்தது மூரி வில்; அம் முறியேகொடு
எறிந்த அரக்கன், ஓர் வெற்பை எடுத்தான்;
அறிந்த மனத்தவன், அவ் எழுவே கொடு
எறிந்த அரக்கனை இன் உயிர் உண்டான். 51

ஒழிந்தவர் நால்வரும், ஊழி உருத்த
கொழுந்துறு தீ என வெய்துறு கொட்பர்,
பொழிந்தனர், வாளி; புகைந்தன கண்கள்;
விழுந்தன சோரி, அவ் வீரன் மணித் தோள். 52

49. பொய்து - தொளை செய்து; அகடு - நடு.

ஆயிடை வீரனும், உள்ளம் அழன்றான்;
மாய அரக்கர் வலத்தை உணர்ந்தான்;
மீ எரி உய்ப்பது ஓர் கல் செலவிட்டான்;
தீயவர் அச் சிலையைப் பொடிசெய்தார். 53

தொடுத்த, தொடுத்த, சரங்கள் துரந்த;
அடுத்து, அகன் மார்பின் அழுந்தி, அகன்ற;
மிடல் தொழிலான், விடு தேரொடு நொய்தின்
எடுத்து, ஒருவன்தனை, விண்ணில் எறிந்தான். 54

ஏய்ந்து எழு தேர் இமிழ் விண்ணினை எல்லாம்
நீந்தியது; ஓடி நிமிர்ந்தது; வேகம்
ஓய்ந்தது; வீழ்வதன்முன், உயர் பாரில்
பாய்ந்தவன்மேல், உடன் மாருதி பாய்ந்தான். 55

மதித்த களிற்றினில் வாள் அரிஏறு
கதித்தது பாய்வதுபோல், கதி கொண்டு
குதித்தனன்; மால் வரை மேனி குழம்ப
மிதித்தனன்—வெஞ் சின வீரருள் வீரன். 56

மூண்ட சினத்தவர் மூவர் முனிந்தார்;
தூண்டிய தேரர், சரங்கள் துரந்தார்;
வேண்டிய வெஞ் சமம் வேறு விளைப்பார்,
'யாண்டு இனி ஏகுதி?' என்று, எதிர் சென்றார். 57

திரண்டு உயர் தோள் இணை அஞ்சனை சிங்கம்,
அரண் தரு விண் உறைவார்களும் அஞ்ச,
முரண் தரு தேர் அவை ஆண்டு ஒருமூன்றில்
இரண்டை இரண்டு கையின்கொடு எழுந்தான். 58

தூங்கின பாய் பரி; சூதர் உலைந்தார்;
வீங்கின தோளவர் விண்ணின் விசைத்தார்;
ஆங்கு, அது கண்டு, அவர் போய் அகலாமுன்,
ஓங்கிய மாருதி, ஒல்லையின் உற்றான். 59

கால் நிமிர் வெஞ் சிலை கையின் இறுத்தான்;
ஆனவர் தூணியும், வாளும், அறுத்தான்;
ஏனைய வெம் படை இல்லவர், எஞ்சார்,
வானிடை நின்று, உயர் மல்லின் மலைந்தார். 60

56. மதித்த - மதங்கொண்ட; கதித்தது - வேகங் கொண்டதாய்;
59. சூதர் - தேர்ப்பாகர்.

வெள்ளை எயிற்றர், கறுத்து உயர் மெய்யர்,
பிள்ள விரித்த பிலப் பெரு வாயர்,
கொள்ள உருத்து அடர் கோள் அரவு ஒத்தார்;
ஒள் இகல் வீரன், அருக்கனை ஒத்தான். 61

தாம்பு என வாலின் வரிந்து, உயர் தாளோடு
ஏம்பல் இலார் இரு தோள்கள் இறுத்தான்;
பாம்பு என நீங்கினர், பட்டனர் வீழ்ந்தார்—
ஆம்பல் நெடும் பகைபோல் அவன் நின்றான். 62

நின்றனன் ஏனையன்; நின்றது கண்டான்;
குன்றிடை வாவுறு கோள் அரி போல,
மின் திரி வன் தலைமீது குதித்தான்;
பொன்றி, அவன், புவி, தேரொடு புக்கான். 63

வஞ்சமும் களவும் வெஃகி, வழி அலா வழிமேல் ஓடி,
நஞ்சினும் கொடியர் ஆகி, நவை செயற்கு உரிய நீரார்,
வெஞ் சின அரக்கர் ஐவர்; ஒருவனே!—வெல்லப்பட்டார்
அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார்; அவனும், நல் அறிவை ஒத்தான். 64

நெய் தலை உற்ற வேற் கை நிருதர், அச் செருவில் நேர்ந்தார்,
உய் தலை உற்று மீண்டார் ஒருவரும் இல்லை; உள்ளார்,
கை தலைப் பூசல் பொங்கக் கடுகினர்; காலன் உட்கும்
ஐவரும் உலந்த தன்மை, அனைவரும் அமையக் கண்டார். 65

**ஐவர் அழிவினைக் காவலர் இராவணனுக்கு அறிவித்தல்**

'இறுக்குறும், இன்னே நம்மை, குரங்கு' என இரங்கி ஏங்கி,
மறுக்குறுகின்ற நெஞ்சின் மாதரை வைது நோக்கி,
உறுக்குறும் சொல்லான், ஊழித் தீ என உலகம் ஏழும்
சுறுக் கொள நோக்குவான்தன் செவித் தொளை தீய, சொன்னார்.

'தானையும் உலந்தது; ஐவர் தலைவரும் சமைந்தார்; தாக்கப்
போன பின் மீள்வேம் யாமே; அதுவும் போர் புரிகிலாமை;
வானையும் வென்றுளோரை வல்லையின் மடிய நூறி,
ஏனையர் இன்மை, சோம்பி இருந்தது, அக் குரங்கும்' என்றார்.

61. பிள்ள - விரியும்படி; 62. ஏம்பல் - சலிப்பு; ஆம்பல் நெடும் பகை - கதிரவன்; 67. சமைந்தார் - இறந்தனர்.

# 10 அக்ககுமாரன் வதைப் படலம்

**இராவணனிடம், அக்ககுமாரன் தன்னை அனுப்ப வேண்டல்**

கேட்டலும், வெகுளி வெந் தீக் கிளர்ந்து எழும் உயிர்ப்பனுகி,
தோட்டு அலர் தெரியல் மாலை வண்டொடும் சுறுக்கொண்டு ஏற,
ஊட்டு அரக்கு உண்ட போலும் நயனத்தான் ஒருப்பட்டானை,
தாள்–துணை தொழுது, மைந்தன் தடுத்து, 'இடை தருதி' என்ருன். 1

'முக்கணன் ஊர்தி அன்றேல், மூன்று உலகு அடியின் தாயோன்
ஒக்க ஊர் பறவை அன்றேல், அவன் துயில் உரகம் அன்றேல்,
திக்கயம் அல்லதேல், புன் குரங்கின்மேல் சேறி போலாம்!
இக் கடன் அடியேற்கு ஈதி; இருத்தி ஈண்டு இனிதின்; எந்தாய்!

'"அண்டர்கோன்தன்னைப் பற்றித் தருக" எனு, அடியேன் நிற்க,
கொண்டனை என்முன்தன்னைப் பணி என, நெஞ்சம் கோடல்
உண்டு; அது தீரும் அன்றே? உரன் இலாக் குரங்கு ஒன்றேனும்,
எண் திசை வென்ற நீயே, ஏவுதி என்னை' என்ருன். 3

'கொய் தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத்து உருவு கொண்டு,
கைதவம் கண்ணி, ஈண்டு ஓர் சிறு பழி இழைக்கும் கற்பான்,
எய்தினன், இமையா முக்கண் ஈசனே என்ற போதும்,
நொய்தினின் வென்று, பற்றித் தருகுவென், நொடியில் நுன்பால். 4

'துண்டத் தூண் அதனில் தோன்றும் கோளரி, சுடர் வெண் கோட்டு
மண் தொத்த நிமிர்ந்த பன்றி ஆயினும், மலைதல் ஆற்ரு;
அண்டத்தைக் கடந்து போகி அப் புறத்து அகலின், என்பால்
தண்டத்தை இடுதி அன்றே, நின்வயின் தந்திலேனேல்!' 5

**அக்ககுமாரன் போருக்குப் போதல்**

என, இவை இயம்பி, 'ஈதி விடை' என, இறைஞ்சி நின்ற
வனை கழல் வயிரத் திண் தோள் மைந்தனை மகிழ்ந்து நோக்கி,
'துனை பரித் தேர்மேல் ஏறிச் சேறி' என்று, இனைய சொன்ஞன்;
புனை மலர்த் தாரினனும், போர் அணி அணிந்து போஞன். 6

ஏறினன் என்ப மன்னே, இந்திரன் இகலின் இட்ட,
நூறெடு நூறு பூண்ட நொறில் வயப் புரவி நோன் தேர்;
கூறினர் அரக்கர் ஆசி; குமுறின முரசக் கொண்மூ;
ஊறின உரவுத் தானை, ஊழி பேர் கடலை ஒப்ப. 7

**10:** 1. ஒருப்பட்டான் - உடன்பட்டவன் (இராவணன்); இடை தருதி - வாய்ப்புத் தருவாய்; 3. என்முன் - என் தமையன் (இந்திரசித்து); 4. கோடரம் - குரங்கு; கைதவம் - வஞ்சனை; கற்பு - நினைவு; 7. நொறில் - விரைவு; கொண்மூ - மேகம்; ஊறின - மேலும் மேலும் பெருகின.

பொரு கடல் மகரம் எண்ணில், எண்ணலாம் பூட்கை, பொங்கித்
திரிவன மீன்கள் எண்ணில் எண்ணலாம் செம் பொன் திண் தேர்;
உரு உறு மணலை எண்ணில், எண்ணலாம் உரவுத் தானை;
வரு திரை மரபின் எண்ணில், எண்ணலாம் வாவும் வாசி. 8

ஆறு-இரண்டு அடுத்த எண்ணின் ஆயிரம் குமரர், ஆவி
வேறு இலாத் தோழர், வென்றி அரக்கர்தம் வேந்தர் மைந்தர்,
ஏறிய தேரர், சூழ்ந்தார்—இறுதியின் யாவும் உண்பான்
சீறிய காலத் தீயின் செறி சுடர்ச் சிகைகள் அன்னார். 9

மந்திரக் கிழவர் மைந்தர், மதி நெறி அமைச்சர் மக்கள்,
தந்திரத் தலைவர் ஈன்ற தனயர்கள், பிறரும், தாதைக்கு
அந்தரத்து அரம்பைமாரில் தோன்றினர் ஆதி ஆனோர்,
எந்திரத் தேரர், சூழ்ந்தார்—ஈர்-இரண்டு இலக்கம் வீரர். 10

தோமரம், உலக்கை, சூலம், சுடர் மழு, குலிசம், தோட்டி,
ஏ மரு வரி வில், வேல், கோல், ஈட்டி, வாள், எழு, விட்டேறு,
மா மரம், வீசு பாசம், எழு முளை, வயிரத் தண்டு,
காமரு கணையம், குந்தம், கப்பணம், கால நேமி 11

என்று, இவை முதல ஆய எறிதரு படைகள் ஈண்டி,
மின் திரண்டனைய ஆகி, வெயிலொடு நிலவு வீச,
துன்று இருந் தூளி பொங்கித் துறுதலால், இறுதிசெல்லாப்
பொன் திணி உலகம் எல்லாம், பூதலம் ஆய மாதோ! 12

காகமும், கழுகும், பேயும், காலனும், கணக்கு இல் காலம்
சேகு உற வினையின் செய்த தீமையும், தொடர்ந்து செல்ல;
பாகு இயல் கிளவிச் செவ் வாய்ப் படை விழிப் பணைத்த வேய்த் தோள்
தோகையர் மனமும், தொக்க தும்பியும், தொடர்ந்து சுற்ற;

உழைக் குல நோக்கினார்கள், உலந்தவர்க்கு உரிய மாதர்,
அழைத்து அழு குரலின், வேலை அமலையின், அரவச் சேனை
தழைத்து எழும் ஒலியின், நாணுப் பல் இயம் துவைக்கும் தா இல்
மழைக் குரல் இடியின், சொன்ன மாற்றங்கள் ஒழிப்ப மன்னோ;

வெயில் கர மணிகள் வீசும் விரி கதிர் விழுங்க, வெய்ய
அயில் கர மணிகள் காலும் அவிர் ஒளி பருக, அஃகா
எயிற்று இளம் பிறைகள் ஈன்ற இலங்கு ஒளி ஒதுங்க, யாணர்,
உயிர்க்கு உலவு இரவும் அன்று, பகல் அன்று என்று உணர்வு தோன்ற;

8. உரு உறு மணல் - தனித்தனியாகப் பிரித்து வைத்த மணல்.

ஓங்கு இருந் தடந் தேர் பூண்ட உளை வயப் புரவி ஒல்கித்
தூங்கின வீழ, தோளும் கண்களும் இடத்துத் துள்ள,
வீங்கின மேகம் எங்கும் குருதி நீர்த் துள்ளி வீழ்ப்ப,
ஏங்கின காகம் ஆர்ப்ப, இருள் இல் விண் இடிப்ப மாதோ; 16

வெள்ள வெஞ் சேனை சூழ, விண் உளோர் வெருவி விம்ம,
உள்ளம் நொந்து அனுங்கி, வெய்ய கூற்றமும் உறுவது உன்ன,
துள்ளிய சுழல் கண் பேய்கள் தோள் புடைத்து ஆர்ப்ப தோன்றும்
கள் அவிழ் அலங்கலானைக் காற்றின் சேய் வரவு கண்டான். 17

அக்ககுமாரனைக் கண்டு அனுமன் ஐயுற்று நோக்குதல்

'இந்திரசித்தோ? மற்று அவ் இராவணனேயோ?' என்னு,
சிந்தையின் உவகை கொண்டு முனிவுற்ற குரக்குச் சீயம்,
'வந்தனன்; முடிந்தது அன்றே மனக் கருத்து?' என்ன வாழ்த்தி,
சுந்தரத் தோளை நோக்கி, இராமனைத் தொழுது சொன்னான்:

'எண்ணிய இருவர் தம்முள் ஒருவனால்; யான் முன் செய்த
புண்ணியம் உளதால்; எம் கோன் தவத்தொடும் பொருந்தினானே;
நண்ணினன் நானும் நின்றேன்; காலனும், நணுகி நின்றான்;
கண்ணிய கருமம் இன்றே முடிக்குவென், கடிதின்' என்றான்.

'பழி இலது உரு என்றாலும், பல் தலை அரக்கன் அல்லன்;
விழிகள் ஆயிரமும் கொண்ட வேந்தை வென்றானும் அல்லன்; [லன்;
மொழியின் மற்று அவர்க்கு மேலான்; முரண் தொழில் முருகன் அல்
அழிவு இல் ஒண் குமரன் யாரோ, அஞ்சனக் குன்றம் அன்னான்?'

அனுமனை அக்ககுமாரன் எள்ள, தேர்ப்பாகன், 'தகாது' எனல்

என்றவன், உவந்து, விண் தோய் இந்திர சாபம் என்ன
நின்ற தோரணத்தின் உம்பர் இருந்த ஓர் நீதியானை,
வன் தொழில் அரக்கன் நோக்கி, வாள் எயிறு இலங்க நக்கான்;
'கொன்றது இக் குரங்கு போலாம், அரக்கர்தம் குழாத்தை!' என்றான்.

அன்னதாம் அச் சொல் கேட்ட சாரதி, 'ஐய! கேண்மோ!
இன்னதாம் என்னல் ஆமோ உலகியல்? இகழல் அம்மா;
மன்னனோடு எதிர்ந்த வாலி குரங்கு என்றால், மற்றும் உண்டோ?
சொன்னது துணிவில் கொண்டு சேறி' என்று, உணரச் சொன்னான். 22

அக்ககுமாரன் வஞ்சினம்

விடம் திரண்டனைய மெய்யான், அவ் உரை விளம்பக் கேளா,
'இடம் புகுந்து இனைய செய்த இதனொடு சீற்றம் எஞ்சேன்;
தொடர்ந்து சென்று உலகம் மூன்றும் துருவினென், ஒழிவுறாமல்
கடந்து, பின் குரங்கு என்று ஓதும் கருவையும் களைவென்' என்றான்.

### அரக்கர் படையோடு அனுமன் பொருதல்

ஆர்த்து எழுந்து அரக்கர் சேனை, அஞ்சனைக்கு உரிய குன்றைப்
போர்த்தது; பொழிந்தது, அம்மா! பொரு படைப் பருவ மாரி;
வேர்த்தனர் திசை காப்பாளர்; சலித்தன விண்ணும் மண்ணும்;
தார்த் தனி வீரன், தானும் தனிமையும், அவர்மேல் சார்ந்தான்.

எறிந்தன நிருதர் வெய்தின் எய்தன படைகள் யாவும்
முறிந்தன; வீரன் மேனி முட்டின மூரி யானை
மறிந்தன; மடிந்த, தேரும், மாவும் மாக் குழுவும்; ஆவி
நெறிந்தன வரம்பு இல் யாக்கை, இலங்கை தன் நிலையின் பேர.

காய் எரி, முளி புல் கானில் கலந்தென, காற்றின் செம்மல்,
'ஏ' எனும் அளவில் கொல்லும் நிருதர்க்கு ஓர் எல்லை இல்லை;
போயவர் உயிரும் போகித் தென் புலம் படர்தல் பொய்யாது;
ஆயிர கோடி தூதர் உளர்கொலோ நமனுக்கு அம்மா? 26

வர உற்றார், வாராநின்றார், வந்தவர், வரம்பு இல் வெம் போர்
பொர உற்ற பொழுது, வீரன் மும் மடங்கு ஆற்றல் பொங்க
எரியின் போய், கதிரோன் ஊழி இறுதியின் என்னல் ஆனான்;
உரவுத் தோள் அரக்கர் எல்லாம், என்புஇலா உயிர்கள் ஒத்தார்.

பிள்ளப்பட்டன நுதல் ஓடைக் கரி,
    பிறழ் பொன் தேர், பரி, பிழையாமல்,
அள்ளப்பட்டு அழி குருதிப் பொரு புனல்
    ஆறாக, படி சேறு ஆக,
'வள்ளப்பட்டன மகரக் கடல் என
    மதில் சுற்றிய பதி மறலிக்கு ஓர்
கொள்ளைப்பட்டன உயிர்' என்னும்படி
    கொன்றான்—ஐம் புலன் வென்றானே! 28

'தேரே பட்டன' என்றார் சிலர்; சிலர்,
    'தெறு கண் செம் முக வயிரத் தோள்
பேரே பட்டன' என்றார்; சிலர் சிலர்,
    'பரியே பட்டன பெரிது' என்றார்.
'காரே பட்டன நுதல் ஓடைக் கட
    கரியே பட்டன கடிது' என்றார்;
நேரே பட்டவர் பட, மாடே, தனி,
    நில்லா உயிரொடு நின்றாரே. 29

24. தானும் தனிமையும் - தனித்த நிலையில்; 25. மூரி - வலிமை, தலைமை; 26. காய் எரி - எரிகின்ற தீ; முளி புல் - உலர்ந்த புல்; 27. எரியின் போய் - எரிக்கும் தன்மையினால் மிக்கு; 28. பிள்ளப்பட்டன - சிதைக்கப் பட்டன.

ஆழிப் பொரு படை நிருதப் பெரு வலி
அடலோர், ஆய்மகள் அடு பேழ் வாய்த்
தாழிப் படு தயிர் ஒத்தார்; மாருதி,
தனி மத்து என்பது ஓர் தகை ஆனான்;
ஏழ் இப் புவனமும் மிடை வாழ் உயிர்களும்,
எறி வேல் இளையவர் இனம் ஆக,
ஊழிப் பெயர்வது ஓர் புனல் ஒத்தார்; அனல்
ஒத்தான்; மாருதம் ஒத்தானே. 30

### அக்ககுமாரன் தேரையும் ஆயுதங்களையும் அனுமன் அழித்தல்

கொன்றான் உடன் வரு குழுவை; சிலர் பலர்
குறைகின்றார், உடல் குலைகின்றார்;
பின்றா நின்றனர்; உதிரப் பெரு நதி
பெருகாநின்றன; அருகு ஆரும்
நின்றார் நின்றிலர்; தனி நின்றான், ஒரு
நேமித் தேரொடும், அவன் நேரே
சென்றான்; வன் திறல் அயில் வாய் அம்புகள்
தெரிகின்றான்; விழி எரிகின்றான். 31

உற்றான் இந்திரசித்துக்கு இளையவன்;
ஒரு நாளே பலர் உயிர் உண்ணக்
கற்றானும் முகம் எதிர் வைத்தான்; அது
கண்டார் விண்ணவர்; கசிவுற்றார்;
'எற்றாம் மாருதி நிலை?' என்பார்; இனி
'இமையா விழியினை இவை ஒன்றோ.
பெற்றாம்; நல்லது பெற்றாம்' என்றனர்;
பிரியாது எதிர் எதிர் செறிகின்றார். 32

எய்தான், வாளிகள், எரி வாய் உமிழ்வன,
ஈர்-ஏழ்; எதிர் அவை பார் சேரப்
பொய்தான், மணி எழு ஒன்றால்; அன்று, அது,
பொடியாய் உதிர்வுற, வடி வாளி,
வெய்தாயின, பல விட்டான்; வீரனும்,
வேறு ஓர் படை இலன், மாறா வெங்
கைதானே பொரு படை ஆக, தொடர்
கால் ஆர் தேர்அதன் மேல் ஆனான். 33

33. பொய்தான் - பயனிலவாகச் செய்தான்.

தேரில் சென்று, எதிர் கோல் கொள்வான் உயிர்
தின்றான்; அப் பொரு செறி திண் தேர்,
பாரில் சென்றது; பரி பட்டன; அவன்
வரி வில் சிந்திய பகழிக் கோல்,
மார்பில் சென்றன சில; பொன் தோளிடை
மறைவுற்றன சில; அறவோனும்,
நேரில் சென்று, அவன் வயிரக் குனி சிலை
பற்றிக் கொண்டு, எதிர் உற நின்றான். 34

ஒரு கையால் அவன் வயிரத் திண் சிலை
உற்றுப் பற்றலும், உரவோனும்,
இரு கையால் இவன் வலியாமுன்னம், அது
இற்று ஓடியது; இவர் பொன் தோளின்,
சுரிகையால் அவன் உருவிக் குத்தலும்,
அதனை, சொல் கொடு வரு தூதன்,
பொரு கையால் இடை பிதிர்வித்தான், முறி
பொறி ஓடும்படி பறியாவே. 35

அக்ககுமாரன் அனுமனொடு மற்போர் செய்து மடிதல்

வாளாலே பொரல் உற்றான், இற்று அது
மண் சேராமுனம், வயிரத் திண்
தோளாலே பொர முடுகிப் புக்கு, இடை
தழுவிக் கோடலும், உடல் முற்றும்,
நீள் ஆர் அயில் என மயிர் தைத்திட, மணி
நெடு வால் அவன் உடல் நிமிர்வுற்று
மீளாவகை, புடை சுற்றிக்கொண்டது;
பற்றிக் கொண்டனன் மேலானோன். 36

பற்றிக் கொண்டவன், வடி வாள் என ஒளிர்,
பல் இற்று உக, நிமிர் படர் கையால்
எற்றி, கொண்டலின் இடைநின்று உமிழ் சுடர்
இன மின் இனம் விழுவன என்ன,
முற்றிக் குண்டலம் முதல் ஆம் மணி உக,
முழை நால் அரவு இவர் குடர் நால,
கொற்றத் திண் சுவல், வயிரக் கைகொடு
குத்தி, புடை ஒரு குதிகொண்டான். 37

34. கோல்கொள்வான் - தேர்ப்பாகன்; 35. முறிபொறி - முறிந்ததனால் எழுந்த நெருப்புப் பொறி; 37. சுவல் - பிடரி, முதுகு.

நீத்து ஆய் ஓடின உதிரப் பெரு நதி
　நீராக, சிலை பாராக,
போய்த் தாழ் செறி தசை அரிசிந்தினபடி
　பொங்க, பொரும் உயிர் போகாமுன்,
மீத் தாம் நிமிர் சுடர் வயிரக் கைகொடு
　பிடியா, விண்ணொடு மண் காண,
தேய்த்தான்—ஊழியின் உலகு ஏழ் தேயினும்,
　ஒரு தன் புகழ் இறை தேயாதான். 38

எஞ்சிய படைகள் அஞ்சி ஓடி மறைதல்

புண் தாழ் குருதியின் வெள்ளத்து, உயிர் கொடு
　புக்கார் சிலர்; சிலர் பொதி பேயின்
பண்டாரத்திடை இட்டார் தம் உடல்;
　பட்டார் சிலர்; சிலர் பயம் உந்த,
திண்டாடித் திசை அறியா மறுகினர்;
　செற்றார் சிலர்; சிலர் செலவு அற்றார்;
கண்டார் கண்டது ஓர் திசையே விசைகொடு
　கால் விட்டார்; படை கைவிட்டார். 39

மீன் ஆய், வேலையை உற்றார் சிலர்; சிலர்
　பசு ஆய் வழிதொறும் மேய்வுற்றார்;
ஊன் ஆர் பறவையின் வடிவு ஆனார் சிலர்;
　சிலர் நான்மறையவர் உரு ஆனார்;
மான் ஆர் கண் இள மடவார் ஆயினர்
　முன்னே, தம் குழல் வகிர்வுற்றார்
ஆனார் சிலர்; சிலர், 'ஐயா! நின் சரண்'
　என்றார்; நின்றவர் 'அரி' என்றார். 40

தம் தாரமும், உறு கிளையும், தமை எதிர்
　தழுவும்தொறும், 'நும தமர் அல்லேம்;
வந்தேம், வானவர்' என்று, ஏகினர் சிலர்;
　சிலர், 'மானுயர்' என, வாய் விட்டார்;
மந்தாரம் கிளர் பொழில்வாய் வண்டுகள்
　ஆனார் சிலர்; சிலர் மருள்கொண்டார்;
இந்து ஆர் எயிறுகள் இறுவித்தார் சிலர்;
　எரிபோல் குஞ்சியை இருள்வித்தார். 41

38. நீத்து ஆய் - வெள்ளமாய்; சிலை - கல், இங்கு அம்மிக்கல்; அரி - அரிசி; 39. பேயின் பண்டாரம் - பேய்களின் கருவூலமாகிய பிணக்குவியல்.

அரக்கிமாரின் அவலநிலை

குண்டலக் குழை முகக் குங்குமக் கொங்கையார்,
வண்டு அலைத்து எழு குழல் கற்றை கால் வருடவே,
விண்டு, அலத்தக விரைக் குமுத வாய் விரிதலால்,
அண்டம் உற்றுளது, அவ் ஊர் அழுத பேர் அமலையே! 42

கதிர் எழுந்தனைய செந் திரு முகக் கணவன்மார்
எதிர் எழுந்து, அடி விழுந்து, அழுது சோர் இள நலார்
அதி நலம் கோதை சேர் ஓதியோடு, அன்று, அவ் ஊர்
உதிரமும் தெரிகிலாது, இடை பரந்து ஒழுகியே! 43

தா இல் வெஞ் செரு நிலத்திடை, உலந்தவர்தம்மேல்,
ஓவியம் புரை நலார் விழுதொறும், சிலர் உயிர்த்து,
ஏவு கண்களும் இமைத்திலர்களாம்; இது எலாம்
ஆவி ஒன்று, உடல் இரண்டு, ஆயதாலேகொலாம்? 44

ஓடினார், உயிர்கள் நாடு உடல்கள்போல்; உறுதியால்
வீடினார்; வீடினார் மிடை உடல் குவைகள்வாய்,
நாடினார், மட நலார்; நவை இலா நண்பரைக்
கூடினார்; ஊடினார் உம்பர் வாழ் கொம்பு அனார். 45

தீட்டு வாள் அனைய கண் தெரிவை, ஓர் திரு அனாள்,
ஆட்டில்நின்று அயர்வது ஓர் அறு தலைக் குறையினைக்
கூட்டி, 'நின் ஆர் உயிர்த் துணைவன், எம் கோனை, நீ,
காட்டுவாயாதி' என்று, அழுது கை கூப்பினாள். 46

ஏந்தினாள் தலையை, ஓர் எழுத அருங் கொம்பு அனாள்;
காந்தன் நின்று ஆடுவான் உயர் கவந்தத்தினை,
'வேந்த! நீ அலசினாய்; விடுதியால் நடம்' எனா,
பூந் தளிர்க் கைகளான், மெய் உறப் புல்லினாள். 47

இராவணனிடம் மண்டோதரி முதலியோர் அழுது புலம்புதல்

கயல் மகிழ் கண் இணை கலுழி கான்று உக,
புயல் மகிழ் புரி குழல் பொடி அளாவுற,
அயன் மகன் மகன் மகன் அடியின் வீழ்ந்தனள்,
மயன் மகள்; வயிறு அலைத்து அலறி மாழ்கினாள். 48

42. விண்டு - திறந்து; அலத்தகவாய் - செம்பஞ்சு ஊட்டிய வாய்; 43. அதி நலம் - மிக்க அழகு; 46. ஆட்டில் நிற்றல் - கூத்தாடல் தொழிலை மேற்கொள்ளல்; 47. அலசினாய் - களைத்தாய்; 48. மயன் மகள் - மண்டோதரி.

தா அருந் திரு நகர்த் தையலார் முதல்
ஏவரும், இடை விழுந்து இரங்கி ஏங்கினர்;
காவலன் கால்மிசை விழுந்து, காவல் மாத்
தேவரும் அழுதனர், களிக்கும் சிந்தையார். 49

## 11 பாசப் படலம்

**இந்திரசித்து போருக்கு எழுதல்**

அவ் வழி, அவ் உரை கேட்ட ஆண்தகை,
வெவ் விழி எரி உக, வெகுளி வீங்கினன்—
எவ் வழி உலகமும் குலைய, இந்திரத்
தெவ் அழிதர உயர் விசயச் சீர்த்தியான். 1

அரம் சுடர் வேல் தனது அனுசன் இற்ற சொல்
உரம் சுட, எரி உயிர்த்து, ஒருவன் ஓங்கினன்—
புரம் சுட வரி சிலைப் பொருப்பு வாங்கிய
பரஞ்சுடர் ஒருவனைப் பொருவும் பான்மையான். 2

ஏறினன், விசும்பினுக்கு எல்லை காட்டுவ
ஆறு-இருநூறு பேய் பூண்ட ஆழித் தேர்;
கூறின கூறின சொற்கள் கோத்தலால்,
பீறின நெடுந் திசை; பிளந்தது அண்டமே. 3

ஆர்த்தன, கழலும் தாரும் பேரியும், அசனி அஞ்ச;
வேர்த்து, உயிர் குலைய, மேனி வெதும்பினன், அமரர் வேந்தன்;
'சீர்த்தது போரும்' என்னு, தேவர்க்கும் தேவர் ஆய
மூர்த்திகள்தாமும், தம்தம் யோகத்தின் முயற்சி விட்டார். 4

தம்பியை உன்னும்தோறும், தாரை நீர் ததும்பும் கண்ணன்,
வம்பு இயல் சிலையை நோக்கி, வாய் மடித்து உருத்து நக்கான்;
'கொம்பு இயல் மாய வாழ்க்கைக் குரங்கினல், குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்ந்தான்? எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது?' என்றான்.

**11 :** 2. அனுசன் - தம்பி; 3. கோத்தலால் - ஒரு சேரக் கூடி மோதிய தனல்; 4. சீர்த்தது - வெகுளியோடு தொடங்கியது; யோகத்தின் முயற்சி - செய்தொழிலின் முயற்சி; 5. குரங்கா - தாழாத, நிலை கெடாத.

இந்திரசித்தைச் சூழ்ந்த படையின் பெருக்கம்

வேல் திரண்டனவும், வில்லு மிடைந்தவும், வெற்பு என்றாலும்
கூறு இரண்டு ஆக்கும் வாள் கைக் குழுவையும் குணிக்கல் ஆற்றேம்;
சேறு இரண்டு அருகு செய்யும் செறி மதச் சிறு கண் யானை,
ஆறு-இரண்டு அஞ்சுநூற்றின் இரட்டி; தேர்த் தொகையும் அஃதே. 6

இராவணன் மாளிகை சென்று, இந்திரசித்து பேசுதல்

ஆய மாத் தானைதான் வந்து அண்மியது; அண்ம, ஆண்மைத்
தீய வாள் நிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேர, தேரின்
'ஏ' எனும் அளவில் வந்தான்; இராவணன் இருந்த, யாணர்
வாயில் தோய் கோயில் புக்கான்;—அருவி சோர் வயிரக் கண்ணன். 7

தாள் இணை வீழ்ந்தான், தம்பிக்கு இரங்குவான்; தறுகணானும்
தோள் இணை பற்றி ஏந்தித் தழுவினன், அழுது சோர்ந்தான்;
வாள் இணை நெடுங் கண் மாதர் வயிறு அலைத்து அலறி மாழ்க,
மீளிபோல் மொய்ம்பினானும் விலக்கினன்; விளம்பலுற்றான்: 8

'ஒன்று நீ உறுதி ஓராய்; உற்றிருந்து உளையகிற்றி;
வன் திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும், அன்னோ!
"சென்று நீர் பொருதிர்" என்று, திறத் திறம் செலுத்தி, தேயக்
கொன்றனை நீயே அன்றோ, அரக்கர்தம் குழுவை எல்லாம்? 9

'கிங்கரர், சம்புமாலி, கேடு இலா ஐவர் என்று இப்
பைங் கழல் அரக்கரோடும் உடன் சென்ற பகுதிச் சேனை,
இங்கு ஒருபேரும் மீண்டார் இல்லையேல், குரங்கு அது, எந்தாய்!
சங்கரன், அயன், மால் என்பார்தாம் எனும் தகையது ஆமே!

'திக்கய வலியும், மேல்நாள் திரிபுரம் தீயச் செற்ற
முக்கணன் கைலையோடும் உலகு ஒரு மூன்றும் வென்றாய்;
"அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை, ஆற்றல் காண்டி;
புக்கு இனி வென்றும்" என்றால், புலம்பு அன்றி, புலமைத்து ஆமோ?

இராவணனிடம் விடைபெற்று, இந்திரசித்து போர்க்குச் செல்லுதல்

'ஆயினும், ஐய! நொய்தின், ஆண் தொழில் குரங்கை, யானே,
"ஏ" எனும் அளவில் பற்றித் தருகுவென்; இடர் என்று ஒன்றும்
நீ இனி உழக்கற்பாலை அல்லை; நீடு இருத்தி' என்னா,
போயினன்—அமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான்.

6. குணிக்கல் - கணக்கிடல்; இரண்டு அருகு - இருபுறம்; 7. அண்ம - அருகில் வர; யாணர் வாயில் தோய் - அழகிய வாயில் பொருந்திய; 8. மீளி - சிங்கம், கூற்றுவனும் ஆம்.

பத்தியில் தேர்கள் செல்ல, பவளக் கால் குடைகள் சுற்ற,
முத்தினின் சிவிகைதன்னை முகில் எனத் தேர்கள் சுற்ற,
மத்த வெங் கரிகள் எல்லாம் மழை என இருண்டு தோன்ற,
தத்திய பரிகள்தன்னின் சாமரை பதைப்ப,—வந்தான்.* 13

சங்குகள் முழங்க, பேரி சகடைகள் இடியின் வீழ,
வெங் குரல் திமிலையோடு கடுவையின் மரங்கள் வீங்க,
தொங்கலின் குழாமும் தூளி வெள்ளமும் விசும்பைத் தூர்க்க,
திங்களின் குடைகள் பூப்ப, திசைக் களிறு இரிய,—வந்தான்.*

தீயினில் செவ்வே வைத்து, சின்னங்கள் வேறு வேறு
வாயினில் ஊது வீரர் வழியிடம் பெறுது செல்ல,
தாயவள் சொல் மாறுது தவம் புரிந்து அறத்தின் நின்ற
நாயகன் தூதன் தானும், நோக்கினன்; நகையும் கொண்டான்.*

செம் பொனின் தேரின் பாங்கர்ச் செங்குடைத் தொங்கற் காடும்,
உம்பரின் கொம்பர் ஒத்த, ஒரு பிடி நுசுப்பின், செவ் வாய்,
வம்பு அவிழ் குழலினுர்கள் சாமரை பதைத்து வீச,
கொம்பொடும் கோடு தாரை குடர் பறித்து ஊத வந்தான்.* 16

தொங்கலின் காடு நூருயிரம் என்பர்; தோகைப் பிச்சம்,
பங்கம் இல் பணிலம் பத்துப் பத்து நூறு ஆகும் என்பர்;
செங் குடை வெண்மை, நீலம், பச்சையோடு இனைய எல்லாம்
பொங்கு ஒளி மன்னு கோடி புரந்தராதித்தர் சுற்ற.* 17

தீ எழு பொன்னின் சின்னம் மேவி வீழ் அரக்கர் சேர
வாய்களில் ஊத, மண்ணும் வானமும் மறுகிச் சோர்ந்த;
'ஆயது முடிவு காலம்; கிளர்ந்தனர் அரக்கர்' என்று
வாய்களின் பேசி வானேர் மண்டினர், மலைதல் நோக்கி.* 18

அரம் தெறும் அயிலின் காடும், அழல் உமிழ் குந்தக் காடும்,
சரம் தரு சிலையின் காடும், தானவர் கடலும், இன்ன
நிரந்தரம் சங்கு தாரை நில மகள் முதுகை ஆற்றுள்;
'புரந்தரசித்து வந்தான்' என்றன, பொன்னின் சின்னம்.* 19

புலித் தோலின் பலகை எல்லாம் பொரு கடல் புரவி என்னக்
கலித்து ஓடி, உம்பரோடும் ஓடின, காலன் அஞ்ச;
ஒலித்து ஆழி உவாவுற்றென்ன உம்பர் தோரணத்தை முட்ட,
வலித்தார் திண் சிலைகள் எல்லாம்; மண்டின சரத்தின் மாரி.*20

14. சகடைகள் - பெரிய முரசுகள்; திமிலை - ஒருவகைப் பறை; 20. புலித் தோலின் பலகை - புலித்தோலால் ஆகிய நெடும் பரிசை.

தடுவையின் மரங்களோடு சகடைகள் திமிலை தாக்க,
உடுஇனம் ஆனது எல்லாம் உதிர்ந்தன, பூ இது என்ன;
அடு புலி அனைய வீரர் அமரினில் ஆர்ப்பும், ஆனை
நெடு மணிமுழக்கும் ஓதை மண்ணகம் நிறைந்தது அன்றே.* 21

எண்பதினுயிர கோடி இருஞ் சிலை
புண் பயில் வெஞ் சரம் பூட்டினர், ஒன்றோ?
விண் புகு தோரணம் மெல்ல மறைந்த;
மண் புகழ் சீர்த்தியன் மாருதி வாழ்ந்தான்.* 22

பாறு எழு வாட் படை பத்திரு வெள்ளம்;
ஆறு இரு கோடியின் வேலின் அமைந்தார்;
கூறிடு வெள்ளம் மிடைந்தது குந்தம்;—
வீறுடை மாருதிமேல் வரு சேனை.* 23

பந்து என ஆடிய பாய் பரி எல்லாம்;
சிந்தையின் முந்தின தேர்கள் செறிந்த;
அந்தியின் மேனிய ஆனைகள் எல்லாம்
வந்தன, மண்ணை அடித் துகள் மாய்ப்ப.* 24

சங்கொடு தாரைகள், சச்சரி, சின்னம்,
எங்கும் இயம்பின; பேரி இடித்த;
வெங் குரலின் பறை விண்ணில் நிறைந்த;
பொங்கி அரக்கர் பொருக்கென வந்தார்.* 25

பார்த்தன பார்த்தன பாய் பரி எங்கும்;
தேர்த் திரள் தேர்த் திரளே திசை எங்கும்;
கார்த் திரள் மேனியின் இன் கயம் எங்கும்;
ஆர்த்தனர் மண்டும் அரக்கர்கள் எங்கும்.* 26

நுகம் படு தேர்அவை நூற்று இரு கோடி;
யுகம் பிறிது ஒன்று வந்து உற்றது என்ன,
அகம் படு காவில் அரக்கர்கள், இன்னம்
அகம்படி வீரர்கள் ஐ-இரு வெள்ளம்.* 27

வெள்ளம் ஓர் நூறுடை விற் படை என்பார்;
துள்ளிய வாட் படை சொல்லிட ஒண்ணு;
பொள்ளல் தரும் கரப் பூட்கையும் அஃதே;—
கள்ள அரக்கனைச் சுற்றினர் காப்பார்.* 28

23. பாறுதல் - போரிடல்.

ஆய பெரும் படை செல்வது கண்டு
மாயம் மிகும் திறல் வானர வீரன்,
நாயகனைத் திசை நோக்கி வணங்கி,
மேயது ஓர் இன்பம் விளங்கிட நின்றான்.* 29

ஆழியின் ஆய அரக்கர் பெரும் படை
ஏழ் உலகும் இடம் இல் என ஈண்டிச்
சூழும் எழுந்தனர் தோன்றினர் தம்மைக்
கோழியின் ஒக்குவ கூவிடுகின்றான்.* 30

மாருதி கூவ மகிழ்ந்தனன் ஆகி,
கூரிய புந்தியின் கோவன் குறிக்கொடு,
கார் அன மேனி அரக்கர்கள் காண,
வாரிகளூடு மடுத்தன வாளி.* 31

தூளி மிடைந்து, உருத் தோன்றல ஆகி,
யாளி அனைய அறிந்திலன் ஆகி,
சூழுற நோக்கினன், சோதனை பெற்றான்;
கோள் அமைந்து அன்னவை கூறுதலுற்றான்.* 32

இந்திரன் முன்பும் இடும் திரள் சோதிச்
சந்திர வெண் குடை தான் எதிர் கண்டான்;
அந்தம் இல் கேள்வியன் ஆனைகள் காண,
சிந்தை உவந்து, சிரித்து உடன் நின்றான்.* 33

சிந்தை உவந்தவன் ஆகி அரக்கன்
முந்தி எழுந்து முனிந்தமை நோக்கி,
'வெந் திறலாய்! விரைவின் வருக!' என்றான்;
'இந்திரசித்து இவன்' என்பது இசைத்தான்.* 34

என்று அவன் மாற்றம் இயம்புதல் கேட்டு,
குன்றம் எனும் புய வானர வீரன்,
'நன்று இது! நன்று இது!' என்ன நயந்தான்;
சென்று அணைவுற்றது அரக்கன சேனை;* 35

ஊழி எழுந்து உலகத்தை ஒடுக்க,
ஆழ் இயல் தானை அரக்கர் அடங்க,
ஏழ் உலகும் இடம் இல்லை எனும்படி
ஆழி கிளர்ந்தன என்ன அழைத்தான்.* 36

'சந்திரன் அருக்கனுெடு தாரகைஇனங்கள்
சிந்திட எழுந்து, திசை ஈண்ட, எதிர் செவ்வே
வந்த இவ் அரக்கர் குழு வன்மை இது என்ருல்,
இந்திரனை அன்றி உலகு ஏழும் வெலும்' என்ருன்.* 37

உடைந்த வல் இருள் நோற்று, பல் உருக் கொடு, அக் கதிர்க் குழாங்கள்
மிடைந்தன மிலேச்சியாங்கு, மெய் அணி பலவும் மின்ன,
குடைந்து வெம் பகைவர் ஊன் தோய் கொற்றப் போர் வாள் வில் வீச,
அடைந்த, கார் அரக்கர் தானை, அகலிடம் இடம் இன்று என்ன.

ஆழிஅம் தேரும், மாவும், அரக்கரும், உருக்கும் செங் கண்
சூழி வெங் கோப மாவும், துவன்றிய நிருதர் சேனை,
ஊழி வெங் கடலின் சுற்ற, ஒரு தனி நடுவண் நின்ற
பாழி மா மேரு ஒத்தான்—வீரத்தின் பன்மை தீர்ப்பான். 39

சென்றனன் என்ப மன்னே; திசைகளோடு உலகம் எல்லாம்
வென்றவன் இவன் என்ருலும், வீரத்தே நின்ற வீரன்,
அன்று அது கண்ட ஆழி அனுமனை, 'அமரின் ஆற்றல்
நன்று' என உவகை கொண்டான்; யாவரும் நடுக்கம்உற்ருர். 40

போர்க் களத்தை நோக்கிய இந்திரசித்தின் மன நிலை

இலை குலாம் பூணினுனும், 'இரும் பிணக் குருதி ஈரத்து,
அலகு இல் வெம் படைகள் தெற்றி, அளவிடற்கு அரிய ஆகி,
மலைகளும், கடலும், யாறும், கானமும் பெற்று, மற்று ஓர்
உலகமே ஒத்தது, அம்மா! போர்ப் பெருங் களம்' என்று உன்னு,

வெப்பு அடைகில்லா நெஞ்சில், சிறியது ஓர் விம்மல் கொண்டான்;
'அப்பு அடை வேலை அன்ன பெருமையார், ஆற்றலோடும்
ஒப்பு அடைகில்லார், எல்லாம் உலந்தனர்; குரங்கும் ஒன்றே!
எப் படை கொண்டு வெல்வது, இராமன் வந்து எதிர்க்கின்?' என்ருன்.

கண் அனுர், உயிரே ஒப்பார், கைப் படைக்கலத்தின் காப்பார்,
எண்ணல் ஆம் தகைமை இல்லார், இறந்து இடைக் கிடந்தார்தம்மை
மண்ணுளே நோக்கி நின்று, வாய் மடித்து, உருத்து, மாயாப்
புண்ணுளே கோல் இட்டன்ன மானத்தால், புழுங்குகின்ருன்.

'கானிடை அத்தைக்கு உற்ற குற்றமும், கரனுர் பாடும்,
யானுடை எம்பி வீந்த இடுக்கணும், பிறவும் எல்லாம்,
மானிடர் இருவராலும், வானரம் ஒன்றினுலும்,
ஆனிடத்து உள; என் வீரம் அழகிற்றே அம்ம!' என்ருன். 44

41. தெற்றி - அலைத்து; 42. வெப்பு - தவிப்பு; விம்மல் - ஏக்கம்;
44. ஆனிடத்து - உண்டாயின என்ருல்.

தம்பியின் உடலைக் கண்டு, சோகமும் கோபமும் கொள்ளுதல்

நீப்புண்ட உயிர ஆகி, நெருப்புண்ட நிறத்தில் தோன்றி,
ஈர்ப்புண்டற்கு அரிய ஆய பிணக் குவடு இடறச் செல்வான்;
தேய்ப்புண்ட தம்பி யாக்கை, சிவப்புண்ட கண்கள் தீயில்
காய்ப்புண்ட செம்பின் தோன்ற, கறுப்புண்ட மனத்தன், கண்டான். 45

தாருகன் குருதி அன்ன குருதியில், தனி மாச் சீயம்
கூர் உகிர் கிளைத்த கொற்றக் கனகன் மெய்க் குழம்பின் தோன்ற,
தேர் உக, கையின் வீரச் சிலை உக, வயிரச் செங் கண்
நீர் உக, குருதி சிந்த, நெருப்பு உக உயிர்த்து நின்றான். 46

'வெவ் இலை அயில் வேல் உந்தை வெம்மையைக் கருதி நோக்கி,
வவ்வுதல் கூற்றும் ஆற்றான்; மாறு மாறு உலகின் வாழ்வார்,
அவ் உலகத்து உளாரும், அஞ்சுவர் ஒளிக்க; ஐயா!
எவ் உலகத்தை உற்றாய், எம்மை நீத்து, எளிதின்? எந்தாய்!' 47

ஆற்றலன் ஆகி, அன்பால் அறிவு அழிந்து அயரும் வேலை,
சீற்றம் என்று ஒன்றுதானே மேல் நிமிர் செலவிற்று ஆகி,
தோற்றிய துன்ப நோயை உள்ளுறத் துரந்தது அம்மா!—
ஏற்றம் சால் ஆணிக்கு ஆணி எதிர் செலக் கடாயது என்ன. 48

இந்திரசித்தை நோக்கிய அனுமன் சிந்தனை

ஈண்டு இவை நிகழ்வுழி, இரவி தேர் எனத்
தூண்டுறு தேரின்மேல் தோன்றும் தோன்றலை,
மூண்டு முப்புரம் சுட முடுகும் ஈசனின்,
ஆண் தகை வனை கழல் அனுமன், நோக்கினான். 49

'வென்றேன், இதன் முன், சில வீரரை என்னும் மெய்ம்மை
அன்றே முடுகிக் கடிது எய்த அழைத்தது அம்மா!
ஒன்றே, இனி வெல்லுதல் தோற்றல்; அடுப்பது உள்ளது
இன்றே சமையும்; இவன் இந்திரசித்து!' என்பான். 50

'கட்டு ஏறு, நறுங் கமழ் கண்ணி, இக் காளை என் கைப்
பட்டால், அதுவே அவ் இராவணன் பாடும் ஆகும்;
''கெட்டேம்'' என எண்ணி, அக் கேடு அருங் கற்பினாளை
விட்டு ஏகும்; அது அன்றி, அரக்கரும் வெம்மை தீர்வார். 51

45. நீப்புண்ட - நீங்குதல் அடைந்த; 48. துரந்தது - செலுத்தி அடக்கி விட்டது; 51. கட்டு ஏறு - உறுதிமிக்க.

'ஒன்றோ இதனுல் வரும் ஊதியம்? ஒண்மையானைக்
கொன்றேன்எனின், இந்திரனும் துயர்க் கோளும் நீங்கும்;
இன்றே, கடி கெட்டது, அரக்கர் இலங்கை; யானே
வென்றேன், அவ் இராவணன்தன்னையும், வேரொடு' என்றான். 52

அரக்கர் படையுடன் அனுமன் பொருதல்

அக் காலை, அரக்கரும், யானையும், தேரும், மாவும்,
முக் கால் உலகம் ஒரு மூன்றையும் வென்று முற்றிப்
புக்கானின் முன் புக்கு, உயர் பூசல் பெருக்கும் வேலை,
மிக்கானும், வெகுண்டு ஓர் மராமரம் கொண்டு மிக்கான். 53

உதையுண்டன யானை; உருண்டன யானை; ஒன்றோ?
மிதியுண்டன யானை; விழுந்தன யானை; மேல் மேல்,
புதையுண்டன யானை; புரண்டன யானை; போரால்
வதையுண்டன யானை; மறிந்தன யானை, மண்மேல். 54

மூடிந்த தேர்க் குலம்; முறிந்தன தேர்க் குலம்; முரண் இற்று
இடிந்த தேர்க் குலம்; இற்றன தேர்க் குலம்; அச்சு இற்று
ஒடிந்த தேர்க் குலம்; உக்கன தேர்க் குலம்; நெக்குப்
படிந்த தேர்க் குலம்; பறிந்தன தேர்க் குலம், படியில். 55

சிரன் நெரிந்தவும், கண் மணி சிதைந்தவும், செறி தாள்
தரன் நெரிந்தவும், முதுகு இறச் சாய்ந்தவும், தார் பூண்
உரன் நெரிந்தவும், உதிரங்கள் உமிழ்ந்தவும், ஒளிர் பொற்
குரன் நெரிந்தவும், கொடுங் கழுத்து ஒடிந்தவும்—குதிரை. 56

பிடியுண்டார்களும், பிளத்தலுண்டார்களும், பெருந் தோள்
ஒடியுண்டார்களும், தலை உடைந்தார்களும், உருவக்
கடியுண்டார்களும், கழுத்து இழந்தார்களும், கரத்தால்
அடியுண்டார்களும், அச்சமுண்டார்களும்—அரக்கர். 57

வட்ட வெஞ் சிலை ஒட்டிய வாளியும், வயவர்
விட்ட விட்ட வெம் படைகளும், வீரன்மேல் வீழ்ந்த,
சுட்ட வல் இரும்பு அடைகலைச் சுடுகலாததுபோல்,
பட்ட பட்டன திசையொடும் பொறியொடும் பரந்த. 58

55. முரண் இற்று - வலிமை அற்று; பறிந்தன - சாய்ந்தன; 58. வட்ட வெஞ் சிலை - மிக வளைந்த கொடிய வில்; அடை கல் - பட்டடைக்கல், கம்மாளர் காய்ச்சிய உலோகங்களை வைத்து அடிக்கும் கல்.

சிகை எழும் சுடர் வாளிகள், இந்திரசித்து,
மிகை எழும் சினத்து அனுமன்மேல் விட்டன, வெந்து,
புகை எழுந்தன, எரிந்தன, கரிந்தன போத,—
நகை எழுந்தன, அழிந்தன, வான் உளோர் நாட்டம். 59

**இந்திரசித்துக்கும் அனுமனுக்கும் பெரும் போர் நிகழ்தல்**

தேரும், யானையும், புரவியும், அரக்கரும், சிந்திப்
பாரின் வீழ்தலும், தான் ஒரு தனி நின்ற பணைத் தோள்
வீரர் வீரனும், முறுவலும் வெகுளியும் வீங்க,
'வாரும், வாரும்' என்று அழைக்கின்ற அனுமன்மேல் வந்தான்.

புரந்தரன் தலை பொதிர் எறிந்திட, புயல் வானில்
பரந்த பல் உரும்ஏற்றுஇனம் வெறித்து உயிர் பதைப்ப,
நிரந்தரம் புவி முழுவதும் சுமந்த நீடு உரகன்
சிரம் துளங்கிட, அரக்கன் வெஞ் சிலையை நாண் தெறித்தான். 61

ஆண்ட நாயகன் தூதனும், அயனுடை அண்டம்
கீண்டதாம் என, கிரி உக, நெடு நிலம் கிழிய,
நீண்ட மாதிரம் வெடிபட, அவன் நெடுஞ் சிலையில்
பூண்ட நாண் இற, தன் நெடுந் தோள் புடைத்து ஆர்த்தான்.

'நல்லை! நல்லை! இஞ் ஞாலத்துள், நின் ஒக்க நல்லார்
இல்லை! இல்லையால்! எறுழ் வலிக்கு யாரொடும் இகல
வல்லை! வல்லை! இன்று ஆகும், நீ படைத்துள வாழ்நாட்கு
எல்லை! எல்லை!' என்று, இந்திரசித்துவும் இசைத்தான். 63

'நாளுக்கு எல்லையும், நிருதராய் உலகத்தை நலியும்
கோளுக்கு எல்லையும், கொடுந் தொழிற்கு எல்லையும், கொடியீர்!
வாளுக்கு எல்லையும் வந்தன; வகை கொண்டு வந்தேன்
தோளுக்கு எல்லை ஒன்று இல்லை' என்று அனுமனும் சொன்னான்.

'இச் சிரத்தையைத் தொலைப்பென்' என்று, இந்திரன் பகைஞன்,
பச்சிரத்தம் வந்து ஒழுகிட, வானவர் பதைப்ப,
வச்சிரத்தினும் வலியன, வயிர வான் கணைகள்,
அச் சிரத்தினும் மார்பினும் அழுத்தலும்—அனுமன், 65

குறிது வான் என்று குறைந்திலன், நெடுஞ் சினம் கொண்டான்,
மறியும் வெண் திரை மா கடல் உலகு எலாம் வழங்கி,
சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியில் சூடி,
நெறியில் நின்ற தன் நாயகன் புகழ் என, நிமிர்ந்தான். 66

61. பொதிர் எறிதல் - அஞ்சி நடுங்கல்; 64. வகை - திறமை; 65. சிரத்தை - உள்ளத்தின் உறுதி.

பாகம் அல்லது கண்டிலன்; அனுமனைப் பார்த்தான்;
மாக வன் திசை பத்தொடும் வரம்பு இலா உலகிற்கு
ஏக நாதனை எறும் வலித் தோள் பிணித்து ஈர்த்த
மேக நாதனும், மயங்கினனும் என வியந்தான். 67

நீண்ட வீரனும், நெடுந் தடங் கைகளை நீட்டி,
ஈண்டு வெஞ் சரம் எய்தன எய்திடாவண்ணம்,
மீண்டு போய் விழ வீசி, ஆங்கு அவன் மிடல் தடந் தேர்
பூண்ட பேயொடு, சாரதி தரைப்பட, புடைத்தான். 68

ஊழிக் காற்று அன்ன ஒரு பரித் தேர் அவண் உதவ,
பாழித் தோளவன், அத் தடந் தேர்மிசைப் பாய்ந்தான்;
ஆழிப் பல் படை அனையன, அளப்ப அருஞ் சரத்தால்,
வாழிப் போர் வலி மாருதி மேனியை மறைத்தான். 69

உற்ற வாளிகள் உரத்து அடங்கின உக உதரு,
கொற்ற மாருதி, மற்றவன் தேர்மிசைக் குதித்து,
பற்றி வன் கையால், பறித்து எழுந்து, உலகு எலாம் பலகால்
முற்றி வென்ற போர் மூரி வெஞ் சிலையினை, முறித்தான். 70

முறிந்த வில்லின் வல் ஓசை போய் முடிவதன்முன்னர்,
மறிந்து போரிடை வழிக்கொள்வான், வயிர வாட் படையால்
செறிந்த வான் பெரு மலைகளைச் சிறகு அறச் செயிரா
எறிந்த இந்திரன் இட்ட, வான் சிலையினை எடுத்தான். 71

நூறு நூறு போர் வாளி, ஓர் தொடை கொடு, நொய்தின்,
மாறு இல் வெஞ் சினத்து இராவணன் மகன் சிலை வளைத்தான்;
ஊறு, தன் நெடு மேனியில், பல பட, ஒல்கி,
ஏறு சேவகன் தூதனும், சிறிது போது இருந்தான். 72

ஆர்த்த வானவர் ஆகுலம் கொளீஇ, அறிவு அழிந்தார்;
பார்த்த மாருதி, தாரு ஒன்று அங்கையில் பற்றி,
தூர்த்த வாளிகள் துணிபட முறை முறை சுற்றி,
போர்த்த பொன் நெடு மணி முடித் தலையிடைப் புடைத்தான்.

பார மா மரம் முடியுடைத் தலையிடைப் படலும்,
தாரையின் நெடுங் கற்றைகள் சொரிவன தயங்க,
ஆர மால் வரை அருவியின் அழி கொழுங் குருதி
சோர நின்று, உடல் துளங்கினன்—அமரரைத் தொலைத்தான்.

நின்று, போதம் வந்துறுதலும், நிறை பிறை எயிற்றைத்
தின்று, தேவரும் முனிவரும் அவுணரும் திகைப்ப,
குன்றுபோல் நெடு மாருதி ஆகமும் குலுங்க,
ஒன்று போல்வன, ஆயிரம் பகழி கோத்து உய்த்தான். 75

உய்த்த வெஞ் சரம் உரத்தினும் கரத்தினும் ஒளிப்ப,
கைத்த சிந்தையன் மாருதி, நனி தவக் கனன்றான்;
வித்தகன் சிலை விடு கணை விசையினும் கடுகி,
அத் தடம் பெருந் தேரொடும் எடுத்து, எறிந்து, ஆர்த்தான்.

கண்ணின் மீச் சென்ற இமை இடை கலப்பதன்முன்னம்,
எண்ணின் மீச் சென்ற எறுழ் வலித் திறலுடை இகலோன்,
புண்ணின் மீச் சென்று பொழி புனல் பசும் புலால் பொடிப்ப,
விண்ணின் மீச் சென்று, தேரொடும் பார்மிசை வீழ்ந்தான்.

விழுந்து பார் அடையாமுனம், மின் எனும் எயிற்றான்,
எழுந்து, மா விசும்பு எய்தினன்; இடை, அவன் படையில்,
செழுந் திண் மா மணித் தேர்க் குலம் யாவையும் சிதைய
உழுந்து பேர்வதன்முன், நெடு மாருதி உதைத்தான். 78

**இந்திரசித்து அயன் படையை விடுத்தல்**

ஏறு தேர் இலன்; எதிர் நிற்கும் உரன் இலன்; எரியின்,
சீறு வெஞ் சினம் திருகினன், அந்தரம் திரிவான்,
வேறு செய்வது ஓர் வினை பிறிது இன்மையின், விரிஞ்சன்
மாறு இலாப் பெரும் படைக்கலம் தொடுப்பதே மதித்தான். 79

பூவும், பூ நிற அயினியும், தீபமும், புகையும்,
தா இல் பாவனையால் கொடுத்து, அருச்சனை சமைத்தான்;
தேவு யாவையும், உலகமும், திருத்திய தெய்வக்
கோவில் நான்முகன் படைக்கலம் தடக் கையில் கொண்டான்.

கொண்டு, கொற்ற வெஞ் சிலை நெடு நாணொடு கூட்டி,
சண்ட வேகத்த மாருதி தோளொடு சாத்தி,
மண் துளங்கிட, மாதிரம் துளங்கிட, மதி தோய்
விண் துளங்கிட, மேருவும் துளங்கிட, விட்டான். 81

**அயன் படைக்கு அடங்கிய அனுமனிடம் இந்திரசித்து வருதல்**

தணிப்ப அரும் பெரும் படைக்கலம், தழல் உமிழ் தறுகண்
பணிக் குலங்களுக்கு அரசினது உருவினைப் பற்றி,
துணிக்க உற்று, உயர் கலுழனும் துணுக்குற, சுற்றிப்
பிணித்தது, அப் பெரு மாருதி தோள்களைப் பிறங்க. 82

திண்ணென் யாக்கையைத் திசைமுகன் படை சென்று திருக,
அண்ணல் மாருதி, அன்று, தன் பின் சென்ற அறத்தின்
கண்ணின் நீரொடும், கனக தோரணத்தொடும், கடைநாள்,
தண்ணென் மா மதி கோளொடும் சாய்ந்தென, சாய்ந்தான். 83

80. பூ நிற அயினி - வெண்ணிறச் சோறு; பாவனையால் - தியான வகையால்.

சாய்ந்த மாருதி, சதுமுகன் படை எனும் தன்மை
ஆய்ந்து, 'மற்று இதன் ஆணையை அவமதித்து அகறல்
ஏய்ந்தது அன்று' என எண்ணினன், கண் முகிழ்த்து இருந்தான்;
'ஓய்ந்தது ஆம் இவன் வலி' என, அரக்கன் வந்துற்றான். 84

**அரக்கர் அனுமனைச் சூழ்ந்து ஆரவாரித்தல்**

உற்ற காலையின், உயிர்கொடு திசைதொறும் ஒதுங்கி
அற்றம் நோக்கினர் நிற்கின்ற வாள் எயிற்று அரக்கர்—
சுற்றும் வந்து, உடல் சுற்றிய தொளை எயிற்று அரவைப்
பற்றி ஈர்த்தனர்; ஆர்த்தனர்; தெழித்தனர்—பலரால். 85

**அயன் படையில் கட்டுண்ட அனுமன் தோற்றம்**

'குரக்கு நல் வலம் குறைந்தது' என்று, ஆவலம் கொட்டி
இரைக்கும் மா நகர் எறி கடல் ஒத்தது; எம் மருங்கும்
திரைக்கும் மாசுணம் வாசுகி ஒத்தது; தேவர்,
அரக்கர் ஒத்தனர்; மந்தரம் ஒத்தனன், அனுமன். 86

கறுத்த மாசுணம், கனக மா மேனியைக் கட்ட,
அறத்துக்கு ஆங்கு ஒரு தனித் துணை என நின்ற அனுமன்,
மறத்து, மாருதம் பொருத நாள், வாள் அரா அரசு
புறத்துச் சுற்றிய மேரு மால் வரையையும் போன்றான். 87

**இலங்கையர் மகிழ்ச்சி**

வந்து இரைத்தனர், மைந்தரும், மகளிரும்; மழைபோல்,
அந்தரத்தினும், விசும்பினும், திசைதொறும் ஆர்ப்பார்;
முந்தி உற்ற பேர் உவகைக்கு ஓர் கரை இலை; மொழியின்,
இந்திரன் பிணிப்புண்ட நாள் ஒத்தது, அவ் இலங்கை. 88

## 12 பிணி வீட்டு படலம்

**கட்டுப்பட்ட அனுமனைக் கண்ட அரக்கரின் நிலை**

'எய்யுமின்; ஈருமின்; எறிமின்; போழுமின்;
கொய்யுமின் குடரினை; கூறு கூறுகள்
செய்யுமின்; மண்ணிடைத் தேய்மின்; தின்னுமின்;
உய்யுமேல், இல்லை நம் உயிர்' என்று ஓடுவார். 1

86. ஆவலம் கொட்டல் - தோற்றாரை ஏளனம் செய்து, கைதட்டி ஆர்த்து வாய் கொட்டுதல்.

மைத் தடங் கண்ணியர், மைந்தர், யாவரும்,
பைத் தலை அரவு எனக் கனன்று, 'பைதலை
இத்தனை பொழுதுகொண்டு இருப்பதோ?' எனா,
மொய்த்தனர்; கொலை செய முயல்கின்றார், சிலர். 2

'நச்சு அடை படைகளால் நலியும் ஈட்டதோ,
வச்சிர உடல்? மறி கடலின்வாய் மடுத்து,
உச்சியின் அழுத்துமின், உருத்து; அது அன்றுஎனின்,
கிச்சிடை இடும்' எனக் கிளக்கின்றார் சிலர். 3

'எந்தையை, எம்பியை, எம் முனோர்களைத்
தந்தனை போக' என, தடுக்கின்றார் பலர்;
'அந்தரத்து அமரர்தம் ஆணையால், இவன்
வந்தது' என்று, உயிர்கொள மறுகினார் பலர். 4

'ஓங்கல்அம் பெரு வலி உயிரின் அன்பரை
நீங்கலம்; இன்றொடு நீங்கினும்; இனி
ஏங்கலம்; இவன் சிரத்து இருந்து அலால் திரு
வாங்கலம்' என்று அழும் மாதரார் பலர். 5

கொண்டனர் எதிர் செலும் கொற்ற மா நகர்,
அண்டம் உற்றது, நெடிது ஆர்க்கும் ஆர்ப்புஅது—
கண்டம் உற்றுள அருங் கணவர்க்கு ஏங்கிய
குண்டல முகத்தியர்க்கு உவகை கூரவே. 6

**இலங்கையின் அழிவுபாடுகளைக் கண்டவாறு அனுமன் செல்லுதல்**

வடியுடைக் கனல் படை வயவர், மால் கரி,
கொடியுடைத் தேர், பரி கொண்டு வீசலின்,
இடி படச் சிதைந்த மால் வரையின், இல் எலாம்
பொடிபடக் கிடந்தன கண்டு, போயினான். 7

**அனுமனைக் கண்டோர் செயல்**

முயிறு அலைத்து எழு முது மரத்தின், மொய்ம்பு தோள்
கயிறு அலைப்புண்டது கண்டும், காண்கிலாது,
எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் ஏழையர்
வயிறு அலைத்து இரியலின், மயங்கினார் பலர். 8

12 : 2. பைதல் - பயல்; 3. கிச்சு - நெருப்பு; 8. முயிறு அலைத்து எழு முதுமரம் - எறும்புகளால் சூழப் பெற்று வளர்ந்த முதிய மரம்; முயிறு - முசிறு என்னும் எறும்புவகை.

ஆர்ப்பு உற அஞ்சினர்; அடங்கினார் பலர்;
போர்ப்புறச் செயலினைப் புகல்கின்றார் பலர்;
பார்ப்புற, பார்ப்புற, பயத்தினால் பதைத்து,
ஊர்ப் புறத்து இரியலுற்று ஓடுவார், பலர். 9

'காந்துறு கதழ் எயிற்று அரவின் கட்டு, ஒரு
பூந் துணர் சேர்த்தெனப் பொலியும், வாள் முகம்;
தேர்ந்து, உறு பொருள் பெற எண்ணி, செய்யுமின்;
வேந்து உறல் பழுது' என விளம்புவார், சிலர். 10

'ஒளி வரும் நாகத்துக்கு ஒல்கி அன்று, தன்
எளிவரவு; இன்று இதன் எண்ணம் வேறு' எனா,
'களி வரு சிந்தையால் காண்டி! நங்களைச்
சுளிகிலையாம்' எனத் தொழுகின்றார், சிலர். 11

பைங் கழல் அனுமனைப் பிணித்த பாந்தளை,
கிங்கரர், ஒருபுடைக் கிளர்ந்து பற்றினார்—
ஐம்பதினாயிரர், அளவு இல் ஆற்றலர்,
மொய்ம்பினின் எறுழ் வலிக் கருளன் மும்மையார். 12

'திண் திறல் அரக்கர்தம் செருக்குச் சிந்துவான்,
தண்டல் இல் தன் உருக் கரந்த தன்மையான்,
மண்டு அமர் தொடங்கினன், வானரத்து உருக்
கொண்டனன், அந்தகன்கொல்?' என்றார் பலர். 13

அரமியத் தலம்தொறும், அம் பொன் மாளிகைத்
தரம் உறு நிலைதொறும், சாளரம்தொறும்,
முரசு எறி கடைதொறும், இரைத்து மொய்த்தனர்—
நிரை வளை மகளிரும், நிருத மைந்தரும். 14

'கயிலையின் ஒரு தனிக் கணிச்சி வானவன்,
மயில் இயல் சீதைதன் கற்பின் மாட்சியால்,
எயிலுடைத் திரு நகர் சிதைப்ப எய்தினன்,
அயில் எயிற்று ஒரு குரங்கு ஆய்' என்பார், பலர். 15

அரம்பையர், விஞ்சை நாட்டு அளக வல்லியர்,
நரம்பினும் இனிய சொல் நாக நாடியர்,
கரும்பு இயல் சித்தியர், இயக்கர் கன்னியர்,
வரம்பு அறு சும்மையர், தலைமயங்கினார். 16

14. தரம் உறு நிலை - மேன்மை பொருந்திய நிலை.

'நீரிடைக் கண் துயில் நெடிய நேமியும்,
தாருடைத் தனி மலர் உலகின் தாதையும்,
ஓர் உடல் கொண்டு, தம் உருவம் மாற்றினர்,
பாரிடைப் புகுந்தனர் பகைத்து' என்பார் பலர்.* 17

அரக்கரும் அரக்கியர் குழாமும் அல்லவர்
கரக்கிலர், நெடு மழைக் கண்ணின் நீர்; அது,
விரைக் குழல் சீதைதன் மெலிவு நோக்கியோ?
இரக்கமோ? அறத்தினது எளிமை எண்ணியோ? 18

**கட்டுப்பட்டுச் செல்லும் அனுமன் கருத்து**

ஆண் தொழில் அனுமனும், அவரொடு ஏகினன்;
மீண்டிலன்; வேறலும் விரும்பலுற்றிலன்;
'ஈண்டு இதுவே தொடர்ந்துபோய் இலங்கை வேந்தனைக்
காண்டலே நலன்' எனக் கருத்தின் எண்ணினன். 19

'எந்தையது அருளினும், இராமன் சேவடி
சிந்தை செய் நலத்தினும், சீதை, வானவர்,
தந்து உள வரத்தினும், தறுகண் பாசமும்
சிந்துவென்; அயர்வுறு சிந்தை சிரிதால்; 20

'வளை எயிற்று அரக்கனை உற்று, மந்திரத்து
அளவுறு முதியரும் அறிய, ஆணையால்
விளைவினை விளம்பினல், மிதிலை நாடியை,
இளகினன், என்வயின் ஈதல் ஏயுமால்; 21

'அல்லதூஉம், அவனுடைத் துணைவர் ஆயினர்க்கு
எல்லையும் தெரிவுறும்; எண்ணும் தேறலாம்;
வல்லவன் நிலைமையும் மனமும் தேறலாம்;—
சொல் உக, முகம் எனும் தூது சொல்லவே;

'வாலிதன் இறுதியும், மரத்துக்கு உற்றதும்,
கூல வெஞ் சேனையின் குணிப்பு இலாமையும்,
மேலவன் காதலன் வலியும், மெய்ம்மையான்,
நீல் நிறத்து இராவணன் நெஞ்சில் நிற்குமால். 23

21. மிதிலை நாடி - மிதிலை நாட்டுப் பெண், சீதை; 23. மேலவன் காதலன் - மேற்சொன்ன வாலியின் மகனாகிய அங்கதன்; சூரியன் மகன் சுக்கிரீவன் என்பாரும் உண்டு.

'ஆதலான், அரக்கனை எய்தி, ஆற்றலும்
நீதியும் மனக் கொள நிறுவி, நின்றவும்
பாதியின் மேல்செல நூறி, பைப்பையப்
போதலே கருமம்' என்று, அனுமன் போயினன். 24

#### இந்திரசித்து, அனுமனை உடன்கொண்டு, இராவணன் மாளிகை அடைதல்

கடவுளர்க்கு அரசனைக் கடந்த தோன்றலும்,
புடை வரும் பெரும் படைப் புணரி போர்த்து எழ,
விடை பிணிப்புண்டது போலும் வீரனை,
குடை கெழு மன்னன் இல், கொண்டு போயினன். 25

#### தூதுவர் நற்செய்தி சொல்ல, இராவணன் பரிசு அளித்தல்

தூதுவர் ஓடினர்; தொழுது, தொல்லை நாள்
மாதிரம் கடந்தவற் குறுகி, 'மன்ன! நின்
காதலன் மரை மலர்க் கடவுள் வாளியால்,
ஏதில் வானரம் பிணிப்புண்டதாம்' என்றார். 26

கேட்டலும்—கிளர் சுடர் கெட்ட வான் என
ஈட்டு இருள் விழுங்கிய மார்பின், யானையின்
கோட்டு எதிர் பொருத பேர் ஆரம் கொண்டு, எதிர்
நீட்டினன்—உவகையின் நிமிர்ந்த நெஞ்சினன். 27

#### குரங்கைக் கொல்லாது கொணர, இராவணன் பணித்தல்

எல்லை இல் உவகையால் இவர்ந்த தோளினன்,
புல்லுற மலர்ந்த கண் குமுதப் பூவினன்,
'ஒல்லையின் ஓடி, நீர் உரைத்து, என் ஆணையால்,
''கொல்லலை தருக'' எனக் கூறுவீர்' என்றான். 28

அவ் உரை, தூதரும், ஆணையால், வரும்
தெவ் உரை நீக்கினன் அறியச் செப்பினர்;
இவ் உரை நிகழ்வழி, இருந்த சீதையாம்
வெவ் உரை நீங்கினாள் நிலை விளம்புவாம்: 29

#### அனுமனுக்கு உற்றதைத் திரிசடை சொல்ல, சீதை புலம்புதல்

'இறுத்தனன் கடி பொழில், எண்ணிலோர் பட
ஒறுத்தனன்' என்று கொண்டு உவக்கின்றாள், உயிர்
வெறுத்தனள் சோர்வுற, வீரற்கு உற்றதை,
கறுத்தல் இல் சிந்தையாள் கவன்று கூறினாள். 30

25. கடவுளர்க்கு அரசன் - இந்திரன்.

ஓவியம் புகையுண்டதுபோல், ஒளிர்
பூவின் மெல்லியல் மேனி பொடி உற,
பாவி வேடன் கைப் பார்ப்பு உற, பேதுறும்
தூவி அன்னம் அன்னாள், இவை சொல்லினாள்: 31

'உற்று உண்டாய விசும்பை உருவினாய்,
முற்றுண்டாய்; கலை யாவையும் முற்றுறக்
கற்றுண்டாய்; ஒரு கள்ள அரக்கனால்
பற்றுண்டாய்; இதுவோ அறப் பான்மையே? 32

'கடர் கடந்து புகுந்தனை; கண்டகர்
உடர் கடந்தும் நின் ஊழி கடந்திலை;
அடர் கடந்த திரள் புயத்து ஐய! நீ
இடர்கள் தந்தனை, வந்து இடர் மேலுமே? 33

'ஆழி காட்டி, என் ஆர் உயிர் காட்டினாய்க்கு,
''ஊழி காட்டுவென்'' என்று உரைத்தேன்; அது
வாழி காட்டும் என்று உண்டு; உன் வரைப் புயப்
பாழி காட்டி, அரும் பழி காட்டினாய். 34

'கண்டு போயினை, நீள் நெறி காட்டிட,
''மண்டு போரில் அரக்கனை மாய்த்து, எனைக்
கொண்டு மன்னவன் போம்'' எனும் கொள்கையைத்
தண்டினாய்—எனக்கு ஆர் உயிர் தந்த நீ!' 35

ஏய பன்னினள் இன்னன; தன் உயிர்
தேய, கன்று பிடியுறத் தீங்கு உறு
தாயைப் போல, தளர்ந்து மயர்ந்தனள்—
தீயைச் சுட்டது ஓர் கற்பு எனும் தீயினாள். 36

இந்திரசித்து, அனுமனை அரண்மனையுள் கொண்டு சேர்தல்

பெருந் தகைப் பெரியோனைப் பிணித்த போர்
முருந்தன், மற்றை உலகு ஒரு மூன்றையும்
அருந் தவப் பயனால் அரசு ஆள்கின்றான்
இருந்த, அப் பெருங் கோயில் சென்று எய்தினான். 37

இராவணன் அரசவையில் வீற்றிருக்கும் காட்சி

தலங்கள் மூன்றிற்கும் பிறிது ஒரு மதி தழைத்தென்ன,
அலங்கல் வெண்குடைத் தண் நிழல் அவிர் ஒளி பரப்ப,
வலம் கொள் தோளினான் மண்நின்று வான் உற எடுத்த,
பொலம் கொள் மா மணி வெள்ளியங்குன்று எனப் பொலிய,

33. ஊழி - வாழ்நாள்; 35. தண்டினாய் - நீக்கிவிட்டாய்; 37. முருந்தன் - வல்லவன்.

புள் உயர்த்தவன் திகிரியும், புரந்தரன் அயிலும்,
தள் இல் முக்கணான் கணிச்சியும், தாக்கிய தழும்பும்,
கள் உயிர்க்கும் மென் குழலியர் முகிழ் விரல் கதிர் வாள்
வள் உகிர்ப் பெருங் குறிகளும், புயங்களில் வயங்க, 39

துன்று செம் மயிர்ச் சுடர் நெடுங் கற்றைகள் சுற்றி,
நின்று திக்குற, நிரல்படக் கதிர்க் குழாம் நிமிர,
ஒன்று சீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும் புகை உயிர்ப்ப,
தென் திசைக்கும் ஓர் வடவனல் திருத்தியது என்ன, 40

மரகதக் கொழுங் கதிரொடு மாணிக்க நெடு வாள்
நரக தேயத்துள் நடுக்குறு இருளையும் நக்க,
சிரம் அனைத்தையும் திசைதொறும் திசைதொறும் செலுத்தி,
உரகர்கோன் இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப, 41

குவித்த பல் மணிக் குப்பைகள் கலையொடும் கொழிப்ப,
சவிச் சுடர்க் கலன் அணிந்த பொன் தோளொடு தயங்க,
புவித் தடம் படர் மேருவைப் பொன் முடி என்னக்
கவித்து, மால் இருங் கருங்கடல் இருந்தது கடுப்ப, 42

சிந்து ராகத்தின் செறி துகில் கச்சொடு செறிய,
பந்தி வெண் முத்தின் அணிகலன் முழு நிலாப் பரப்ப,
இந்து வெண்குடை நீழலில், தாரகைஇனம் பூண்டு,
அந்தி வான் உடுத்து, அல்லு வீற்றிருந்ததாம் என்ன, 43

வண்மைக்கும், திரு மறைகட்கும், வானினும் பெரிய
திண்மைக்கும், தனி உறையுளாம் முழு முகம், திசையில்
கண் வைக்கும்தொறும், களிற்றொடு மாதிரம் காக்கும்
எண்மர்க்கும் மற்றை இருவர்க்கும் பெரும் பயம் இயற்ற, 44

ஏகநாயகன் தேவியை எதிர்ந்ததன் பின்னை,
நாகர் வாழ் இடம் முதல் என, நான்முகன் வைகும்
மாக மால் விசும்பு ஈறு என, நடுவண வரைப்பில்
தோகை மாதர்கள், மைந்தரின் தோன்றினர், சுற்ற, 45

வானரங்களும், வானவர் இருவரும், மனிதர்
ஆன புன் தொழிலோர் என இகழ்கின்ற அவரும்,
ஏனை நின்றவர் இருடியர் சிலர், ஒழிந்து யாரும்,
தூ நவின்ற வேல் அரக்கர்தம் குழுவொடு சுற்ற, 46

39. தள் - தவறுதல்; 42. கலை - அரைப்பட்டிகை; சவி - ஒளி; 43. சிந்து ராகத்தின் துகில் - சிந்தூரம் போன்ற செந்நிறம் பொருந்திய ஆடை; 45. எதிர்தல் - சந்தித்தல்; 46. வானவர் இருவர் - அரி, அரன்.

நரம்பு கண்ணகத்துள் உறை நறை, நிறை பாண்டில்
நிரம்பு சில்லரிப் பாணியும், குறடும், நின்று இசைப்ப,
அரம்பை மங்கையர் அமிழ்து உகுத்தாலன்ன பாடல்
வரம்பு இல் இன்னிசை, செவிதொறும் செவிதொறும் வழங்க.*

கூடு பாணியின் இசையொடும், முழவொடும் கூட,
தோடு சீறுஅடி விழி மனம் கையொடு தொடரும்
ஆடல் நோக்குறின், அருந் தவ முனிவர்க்கும் அமைந்த
வீடு மீட்குறும் மேனகைமேல், நகை விளங்க,† 48

ஊடினர் முகத்து உறு நறை ஒரு முகம் உண்ண,
கூடினர் முகக் களி நறை ஒரு முகம் குடிப்ப,
பாடினர் முகத்து ஆர் அமுது ஒரு முகம் பருக,
ஆடினர் முகத்து அணி அமுது ஒரு முகம் அருந்த, 49

தேவரோடு இருந்து அரசியல் ஒரு முகம் செலுத்த,
மூவரோடு மா மந்திரம் ஒரு முகம் முயல,
பாவகாரிதன் பாவகம் ஒரு முகம் பயில,
பூவை சானகி உருவெளி ஒரு முகம் பொருந்த, 50

'காந்தள் மெல் விரல் சனகிதன் கற்பு எனும் கடலை
நீந்தி ஏறுவது எங்ஙன்?' என்று ஒரு முகம் நினைய,
சாந்து அளாவிய கொங்கை நன் மகளிர் தற்சூழ்ந்தார்
ஏந்தும் ஆடியின் ஒரு முகம் எழிலினை நோக்க, 51

பொதும்பர் வைகு தேன் புக்கு அருந்துதற்கு அகம் புலரும்
மதம் பெய் வண்டு எனச் சனகிமேல் மனம் செல, மறுகி
வெதும்புவார், அகம் வெந்து அழிவார், நகில் விழி நீர்
ததும்புவார், விழித் தாரை வேல், தோள்தொறும் தாக்க,† 52

மாறு அளாவிய, மகரந்த நறவு உண்டு மகளிர்
வீறு அளாவிய முகிழ் முலை மெழுகிய சாந்தின்
சேறு அளாவிய சிறு நறுஞ் சீகரத் தென்றல்,
ஊறு அளாவிய கடு என, உடலிடை நுழைய,† 53

திங்கள் வாள் நுதல் மடந்தையர் சேயரி கிடந்த
அம் கயத் தடந் தாமரைக்கு அலரியோன் ஆகி,
வெங் கண் வானவர் தானவர் என்று இவர் விரியாப்
பொங்கு கைகள் ஆம் தாமரைக்கு இந்துவே போன்று, 54

48. பாணி - கொட்டு; தோடு சீறு அடி - பூவிதழினும் மேம்பட்ட அடிகள்; 50. பாவகாரி - தீவினையாளன்; பாவகம் - (தீய) சிந்தனை; உரு வெளி - உருவெளிப்பாடு; 53. மாறு அளாவிய - பகைமை கொண்ட.

### இராவணனைக் கண்ணுற்ற மாருதியின் மன நிலை

இருந்த எண் திசைக் கிழவனை, மாருதி எதிர்ந்தான்;
கருந் திண் நாகத்தை நோக்கிய கலுழனின் கனன்றான்;
'திருந்து தோளிடை வீக்கிய பாசத்தைச் சிந்தி,
உருந்து நஞ்சு போல்பவன்வயின் பாய்வென்' என்று உடன்றான். 55

'உறங்குகின்றபோது உயிருண்டல் குற்றம்' என்று ஒழிந்தேன்;
பிறங்கு பொன் மணி ஆசனத்து இருக்கவும் பெற்றேன்;
திறங்கள் என் பல சிந்திப்பது? இவன் தலை சிதறி,
அறம் கொள் கொம்பினை மீட்டு, உடன் அகல்வென்' என்று அமைந்தான்.

'தேவர், தானவர், முதலினர், சேவகன் தேவி
காவல் கண்டு இவண் இருந்தவர், கண்புலன் கதுவ,
பாவகாரிதன் முடித் தலை பறித்திலென்என்றால்,
ஏவது யான் இனிமேல் செயும் ஆள்வினை?' என்றான். 57

' ''மாடு இருந்த மற்று இவன் புணர் மங்கையர் மயங்கி
ஊடு இரிந்திட, முடித் தலை திசைதொறும் உருட்டி,
ஆடல்கொண்டு நின்று ஆர்க்கின்றது; அது கொடிது அம்மா!
தேடி வந்தது, ஓர் குரங்கு'' எனும் வாசகம் சிறிதோ?† 58

'நீண்ட வாள் எயிற்று அரக்கனைக் கண்களின் நேரே
காண்டல் வேண்டி, இவ் உயிர் சுமந்து, எதிர் சில கழறி,
மீண்டபோது உண்டு வசைப்பொருள்; வென்றிலேன்எனினும்,
மாண்ட போதினும், புகழ் அன்றி மற்றும் ஒன்று உண்டோ?'†

என்று, தோளிடை இறுக்கிய பாசம் இற்று ஏக,
குன்றின்மேல் எழு கோள் அரிஏறு என, குதியின்
சென்று கூடுவல் என்பது சிந்தனை செய்யா-
நின்று, 'காரியம் அன்று' என, நீதியின் நினைந்தான். 60

'**கொ**ல்லலாம் வலத்தனும் அல்லன்; கொற்றமும்
வெல்லலாம் தரத்தனும் அல்லன்; மேலை நாள்
அல் எலாம் திரண்டன நிறத்தன் ஆற்றலை
வெல்லலாம் இராமனால்; பிறரும் வெல்வரோ? 61

'என்னையும் வெலற்கு அரிது இவனுக்கு; ஈண்டு இவன்-
தன்னையும் வெலற்கு அரிது எனக்கு; தாக்கினால்,
அன்னவே காலங்கள் கழியும்; ஆதலான்,
துன்ன அருஞ் செருத் தொழில் தொடங்கல் தூயதோ? 62

55. உருந்து - உருத்து, கோபித்து; 59. கழறி - இடித்துரைத்து;
60. குதி - பாய்ச்சல்.

' ''ஏழ் உயர் உலகங்கள் யாவும் இன்புற,
பாழி வன் புயங்களோடு அரக்கன் பல் தலை,
பூழியில் புரட்டல் என் பூணிப்பு ஆம்'' என,
ஊழியான் விளம்பிய உரையும் ஒன்று உண்டால். 63

' ''இங்கு ஒரு திங்களே இருப்பல் யான்'' என,
அம் கண் நாயகன்தனது ஆணை கூறிய
மங்கையும் இன் உயிர் துறத்தல் வாய்மையால்—
பொங்கு வெஞ் செருவிடைப் பொழுது போக்கினுல். 64

'ஆதலான், அமர்த்தொழில் அழகிற்று அன்று; அருந்
தூதன் ஆம் தன்மையே தூய்து' என்று, உன்னினுன்;
வேத நாயகன் தனித் துணைவன், வென்றி சால்
ஏதில் வாள் அரக்கனது இருக்கை எய்தினுன். 65

**இராவணனிடம் இந்திரசித்து அனுமனைப் பற்றிக் கூறுதல்**

தீட்டிய வாள் எனத் தெறு கண் தேவியர்
ஈட்டிய குழுவிடை இருந்த வேந்தற்குக்
காட்டினன், அனுமனை—கடலின் ஆர் அமுது
ஊட்டிய உம்பரை உலைய ஓட்டினுன். 66

புவனம் எத்தனை அவை அனைத்தும் போர் கடந்-
தவனை உற்று, 'அரி உருவான ஆண்தகை,
சிவன் எனச் செங்கணுன் எனச் செய் சேவகன்,
இவன்' எனக் கூறி நின்று, இரு கை கூப்பினுன்.† 67

**இராவணன் அனுமனைச் சினந்து, 'நீ யார்?' என, வினவுதல்**

நோக்கிய கண்களால் நொறில் கனல்-பொறி
தூக்கிய அனுமன் மெய்ம் மயிர் சுறுக்கொள,
தாக்கிய உயிர்ப்பொடும் தவழ்ந்த வெம் புகை
வீக்கினன், அவ்வுடல் விசித்த பாம்பினே. 68

அன்ன ஓர் வெகுளியன், அமரர் ஆதியர்
துன்னிய துன்னலர் துணுக்கம் சுற்றுற,
'என் இவண் வரவு? நீ யாரை?' என்று, அவன்
தன்மையை வினயினுன்—கூற்றின் தன்மையான். 69

63. பூணிப்பு - விரதம், முடிந்த கருத்து; 67. அரி - குரங்கு; 68. நொறில் - வேகம்.

'நேமியோ? குலிசியோ? நெடுங் கணிச்சியோ?
தாமரைக் கிழவனோ? தறுகண் பல் தலைப்
பூமி தாங்கு ஒருவனோ?—பொருது முற்றுவான்,
நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்! 70

'நின்று இசைத்து உயிர் கவர் நீலக் காலனோ?
குன்று இசைத்து அயில் உற எறிந்த கொற்றனோ?
தென் திசைக் கிழவனோ? திசை நின்று ஆட்சியர்
என்று இசைக்கின்றவர் யாருள், யாவன் நீ? 71

'அந்தணர் வேள்வியின் ஆக்கி, ஆணையின்
வந்துற விடுத்தது ஓர் வய வெம் பூதமோ?
முந்து ஒரு மலருளோன், ''இலங்கை முற்றுறச்
சிந்து'' எனத் திருத்திய தெறு கண் தெய்வமோ? 72

'யாரை நீ? என்னை, இங்கு எய்து காரணம்?
ஆர் உனை விடுத்தவர்? அறிய, ஆணையால்
சோர்விலை சொல்லுதி' என்னச் சொல்லினான்—
வேரொடும் அமரர்தம் புகழ் விழுங்கினான். 73

**அனுமன் விடை**

'சொல்லிய அனைவரும் அல்லென்; சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்;
அல்லி அம் கமலமே அனைய செங் கண் ஓர்
வில்லிதன் தூதன் யான்; இலங்கை மேயினேன். 74

'அனையவன் யார்? என, அறிதியாதியேல்,
முனைவரும், அமரரும், மூவர் தேவரும்,
எனையவர் எனையவர் யாவர், யாவையும்,
நினைவு அரும் இரு வினை முடிக்க, நின்றுளோன்; 75

'ஈட்டிய வலியும், மேல்நாள் இயற்றிய தவமும், யாணர்க்
கூட்டிய படையும், தேவர் கொடுத்த நல் வரமும், கொட்பும்,
தீட்டிய பிறவும், எய்தித் திருத்திய வாழ்வும் எல்லாம்,
நீட்டிய பகழி ஒன்றால், முதலொடு நீக்க நின்றான்; 76

'தேவரும் பிறரும் அல்லன்; திசைக் களிறு அல்லன்; திக்கின்
காவலர் அல்லன்; ஈசன் கைலைஅம்கிரியும் அல்லன்;
மூவரும் அல்லன்; மற்றை முனிவரும் அல்லன்; எல்லைப்
பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன் போலாம்; 77

71. இசைத்தல் - (பாசக் கயிற்றால்) கட்டுதல்; குன்று இசைத்து - மலையில் பட்டு; 75. அறிதியாதியேல் - அறிய வேண்டுவாயானால்.

'போதமும், பொருந்து கேள்விப் புரை அறு பயனும், பொய் தீர்
மா தவம் சார்ந்த தீரா வரங்களும், மற்றும், முற்றும்,
யாது அவன் நினைந்தான், அன்ன பயத்தன; ஏது வேண்டின்,
வேதமும் அறனும் சொல்லும்; மெய் அறமூர்த்தி, வில்லோன்;

'காரணம் கேட்டிஆயின், கடை இலா மறையின்கண்ணும்,
ஆரணம் காட்டமாட்டா அறிவினுக்கு அறிவும், அன்னோன்;
போர் அணங்கு இடங்கர் கவ்வ, பொது நின்று, "முதலே" என்ற
வாரணம் காக்க வந்தான் அமரரைக் காக்க வந்தான்; 79

'மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய
காலமும், கணக்கும், நீத்த காரணன்—கை வில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்பொருப்பும் விட்டு,—அயோத்தி வந்தான்;

'அறம் தலைநிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து, உலகம் பூணச் செந் நெறி செலுத்தி, தீயோர்
இறந்து உக நூறி, தக்கோர் இடர் துடைத்து, ஏக, ஈண்டுப்
பிறந்தனன்—தன் பொன்–பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான். 81

'அன்னவற்கு அடிமை செய்வேன்; நாமமும் அனுமன் என்பேன்;
நன்னுதல்தன்னைத் தேடி நாற் பெருந் திசையும் போந்த
மன்னரில், தென்பால் வந்த தானைக்கு மன்னன், வாலி-
தன் மகன், அவன்தன் தூதன் வந்தனென், தனியேன்' என்றான்.

இராவணன், வாலியின் நலன் உசாவலும் அனுமன் விடையும்

என்றலும், இலங்கை வேந்தன், எயிற்றினம் எழிலி நாப்பண்
மின் திரிந்தென்ன நக்கு, 'வாலி சேய் விடுத்த தூத!
வன் திறல் ஆய வாலி வலியன்கொல்? அரசின் வாழ்க்கை
நன்றுகொல்?' என்னலோடும், நாயகன் தூதன் நக்கான். 83

'அஞ்சலை, அரக்க! பார் விட்டு அந்தரம் அடைந்தான் அன்றே,
வெஞ் சின வாலி; மீளான்; வாலும் போய் விளிந்தது அன்றே;
அஞ்சன மேனியான்தன் அடு கணை ஒன்றால் மாழ்கித்
துஞ்சினன்; எங்கள் வேந்தன், சூரியன் தோன்றல்' என்றான். 84

78. அன்ன பயத்தன - அப் பயன்களையே விளைப்பன; 79. ஆரணம் - உபநிடதங்கள்; 80. காரணன் - எல்லாப் பொருளுக்கும் காரணனான முழு முதற்பொருள்; கரகம் - குண்டிகை, கமண்டலம்.

இராவணன் மேலும் வினுக்கள் தொடுக்க, அனுமன் நிகழ்ந்தமை விவரித்தல்

'என்னுடை ஈட்டினுல், அவ் வாலியை எறும் வாய் அம்பால்
இன் உயிர் உண்டது? இப்போது யாண்டையான் இராமன் என்பான்?
அன்னவன் தேவிதன்னை அங்கதன் நாடலுற்ற
தன்மையை உரைசெய்க' என்ன, சமீரணன் தனயன் சொல்வான்: 85

'தேவியை நாடி வந்த செங்கணற்கு, எங்கள் கோமான்,
ஆவி ஒன்று ஆக நட்டான்; ''அருந் துயர் துடைத்தி'' என்ன,
ஓவியர்க்கு எழுத ஒண்ணு உருவத்தன், உருமையோடும்
கோ இயல் செல்வம் முன்னே கொடுத்து, வாலியையும் கொன்ருன். 86

'ஆயவன் தன்னெடு, ஆண்டு, திங்கள் ஓர் நான்கும் வைகி,
மேய வெஞ் சேனை சூழ வீற்று இனிது இருந்த வீரன்,
''போயினிர் நாடும்'' என்ன, போந்தனம், புகுந்தது ஈது' என்று,
ஏய வன் தூதன் சொன்னன். இராவணன் இதனைச் சொல்வான்: 87

சுக்கிரீவன் முதலியோரை இராவணன் இகழ்ந்து பேசுதல்

'உம் குலத் தலைவன், தன்னேடு ஒப்பு இலா உயர்ச்சியோனை [ரேல்,
வெங் கொலை அம்பின் கொன்ருர்க்கு ஆள்–தொழில் மேற்கொண்டீ
எங்கு உலப்புறும் நும் சீர்த்தி? நும்மொடும் இயைந்தது என்ருல்,
மங்குலின் பொலிந்த ஞாலம் மாதுமை உடைத்து மாதோ! 88

'தம்முனைக் கொல்வித்து, அன்னற் கொன்றவற்கு அன்பு சான்ற
உம் இனத் தலைவன் ஏவ, யாது எமக்கு உரைக்கலுற்றது?
எம் முனைத் தூது வந்தாய்! இகல் புரி தன்மை என்னை?
நும்மினைக் கொல்லாம்; நெஞ்சம் அஞ்சலை; நுவல்தி' என்ருன்.

அனுமன், இராவணனை நோக்கி உரைத்தல்

துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
புணர்த்து நோக்கி, 'பொது நின்ற நீதியை
உணர்த்தினுல், அது உறும்' என, உன்ன அருங்
குணத்தினுனும், இனையன கூறினன்: 90

'தூது வந்தது, சூரியன் கான்முளை
ஏது ஒன்றிய நீதி இயைந்தன;
சாது என்று உணர்கிற்றியேல், தக்கன,
கோது இறந்தன, நின் வயின் கூறுவாம்: 91

85. என்னுடை - எந்த வகையாற் பெற்ற; ஈட்டினுல் - வலிமை கொண்டு; சமீரணன் - வாயுதேவன்; 88. மாதுமை - பெண் தன்மை; 91. சாது - நல்லவை.

' ''வறிது வீழ்த்தனை வாழ்க்கையை; மன் அறம்
சிறிதும் நோக்கலை; தீமை திருத்தினாய்;
இறுதி உற்றுளது; ஆயினும், இன்னும் ஓர்
உறுதி கேட்டி; உயிர் நெடிது ஓம்புவாய்! 92

' ''போய் இற்றீர், நும் புலன் வென்று போற்றிய
வாயில் தீர்வு அரிதாகிய மா தவம்—
காயின் தீர்வு அருங் கேடு அருங் கற்பினாள்,
தீயின் தூயவளைத் துயர் செய்ததால். 93

' ''இன்று வீந்தது; நாளை, சிறிது இறை
நின்று வீந்தது; அலால், நிறை நிற்குமோ?
ஒன்று வீந்தது, நல் உணர் உம்பரை
வென்று வீங்கிய வீக்கம், மிகுத்ததால். 94

' ''தீமை நன்மையைத் தீர்த்தல் ஒல்லாது'' எனும்
வாய்மை நீக்கினை; மா தவத்தால் வந்த
தூய்மை, தூயவள்தன்வயின் தோன்றிய
நோய்மையால் துடைக்கின்றனை; நோக்கலாய்! 95

' ''திறம் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து, தம்தம் மதியின் மயங்கினார்,
இறந்து இறந்து, இழிந்து ஏறுவதே அலால்,
அறம் திறம்பினர், ஆர் உளர் ஆயினார்? 96

' ''நாமத்து ஆழ் கடல் ஞாலத்து அவிந்தவர்,
ஈமத்தால் மறைந்தார், இள மாதர்பால்
காமத்தால் இறந்தார், சுளி வண்டு உறை
தாமத் தாரினர், எண்ணினும் சால்வரோ? 97

' ''பொருளும், காமமும், என்று இவை போக்கி, வேறு
இருள் உண்டாம் என எண்ணலர்; ஈதலும்,
அருளும், காதலின் தீர்தலும், அல்லது, ஓர்
தெருள் உண்டாம் என எண்ணலர்—சீரியோர். 98

' ''இச்சைத் தன்மையினில் பிறர் இல்லினை
நச்சி, நாளும் நகை உற, நாண் இலன்,
பச்சை மேனி புலர்ந்து, பழி படூஉம்
கொச்சை ஆண்மையும், சீர்மையில் கூடுமோ? 99

94. நிறை நிற்றல் - அழிவின்றி நிலைத்து நிற்றல்; 97. தாமம் - மலர், ஒழுங்கும் ஆம்.

' ''ஓதநீர் உலகு ஆண்டவர், உன் துணைப்
போத நீதியர், ஆர் உளர் போயினார்?
வேத நீதி விதி வழி மேல்வரும்
காதல் நீ, அறத்து எல்லை கடத்தியோ? 100

' ''வெறுப்பு உண்டாய ஒருத்தியை வேண்டினால்,
மறுப்பு உண்டாயபின், வாழ்கின்ற வாழ்வினின்,
உறுப்பு உண்டாய் நடு ஓங்கிய நாசியை
அறுப்புண்டால், அது அழகு எனல் ஆகுமே. 101

' ''பாரை நூறுவ பற் பல பொற் புயம்,
ஈர்-ஐஞ்ஞூறு தலை உள; என்னினும்,—
ஊரை நூறும் கடுங் கனல் உட்பொதி
சீரை நூறு, அவை—சேமம் செலுத்துமோ? 102

' ''புரம் பிழைப்பு அருந் தீப் புகப் பொங்கியோன்,
நரம்பு இழைத்தன பாடலின் நல்கிய
வரம் பிழைக்கும்; மறை பிழையாதவன்
சரம் பிழைக்கும் என்று எண்ணுதல் சாலுமோ? 103

' ''ஈறு இல் நாண் உக, எஞ்சல் இல் நல் திரு
நூறி, நொய்தினை ஆகி, நுழைதியோ?—
வேறும், இன்னும் நகை ஆம் வினைத் தொழில்
தேறினார் பலர் காமிக்கும் செவ்வியோய்! 104

' ''பிறந்துளார், பிறவாத பெரும் பதம்
சிறந்துளார், மற்றும் தேவர்க்கும் தேவர் ஆய்
இறந்துளார், பிறர் யாரும், இராமனை
மறந்துளார் உளர் ஆகிலர்; வாய்மையால். 105

' ''ஆதலால், தன் அரும் பெறல் செல்வமும்,
ஓது பல் கிளையும், உயிரும் பெற,
சீதையைத் தருக'' என்று எனச் செப்பினான்,
சோதியான் மகன், நிற்கு' எனச் சொல்லினான். 106

100. உலகு ஆண்டவர் போயினார், உன் துணைப் போத நீதியர் ஆர் உளர்? என்க; மேல்வருதல் - முன்னேறிச் செல்லுதல்; 102. நூறுவ - நூறுவ, அழிக்க வல்லன; சீரை நூறு - சேலைகள் நூறுனும்; 105. இறந்துளார் - மேம்பட்டுள்ளவர்; 106. என்று என - என்று கூறும்படி.

**இராவணன் நகைத்து, 'தூதனாகிய நீ அரக்கரைக் கொன்றது ஏன்?' என்றல்**

என்றலும், 'இவை சொல்லியது, எற்கு, ஒரு
குன்றின் வாழும் குரங்குகொலாம்! இது
நன்று! நன்று!' என மா நகை செய்தனன்—
வென்றி என்று ஒன்றுதான் அன்றி வேறு இலான். 107

'குரக்கு வார்த்தையும், மானிடர் கொற்றமும்,
இருக்க; நிற்க; நீ, என்கொல், அடா! இரும்
புரத்தினுள் தரும் தூது புகுந்தபின்
அரக்கரைக் கொன்றது? அஃது உரையாய்!' என்றான். 108

**அனுமன் அளித்த விடை**

'காட்டுவார் இன்மையால், கடி காவினை
வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டினேன்; பின்னும் மென்மையினால் உன்தன்-
மாட்டு வந்தது, காணும் மதியினால். 109

**இராவணன், 'அனுமனைக் கொல்மின்' என, வீடணன் தடுத்தல்**

என்னும் மாத்திரத்து, ஈண்டு எரி நீண்டு உக,
மின்னும் வாள் எயிற்றன், சினம் வீங்கினான்;
'கொல்மின்' என்றனன்; கொல்லியர் சேர்தலும்,
'நில்மின்' என்றனன், வீடணன் நீதியான். 110

ஆண்டு, எழுந்து நின்று, அண்ணல் அரக்கனை,
நீண்ட கையன் வணங்கினன்; 'நீதியாய்,
மூண்ட கோபம் முறையது அன்றாம்' என,
வேண்டும் மெய்உரை பைய விளம்பினான்: 111

'அந்தணன், உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்
தந்தவன், அன்புக்கு ஆன்ற தவ நெறி உணர்ந்து, தக்கோய்!
இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ; ''இயம்புதூது
வந்தனென்'' என்ற பின்னும், கோறியோ, மறைகள் வல்லோய்? 112

'பூதலப் பரப்பின், அண்டப் பொகுட்டினுள், புறத்துள், பொய் தீர்
வேதம் உற்று இயங்கு வைப்பின், வேறு வேறு இடத்து வேந்தர்,
மாதரைக் கொலை செய்தார்கள் உளர் என வரினும், வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே, தொல்லை நல்லோர்? 113

109. மென்மையினால் - எளிமை நிலையோடு, அடக்கத்தோடு.

'பகைப் புலன் நணுகி, உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து, பற்றார்
மிகைப் புலன் அடக்கி, மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட
தகைப் புலக் கருமத்தோரைக் கோறலின், தக்கார் யார்க்கும்
நகைப் புலன் பிறிது உண்டாமே? நம் குலம் நவை உண்டாமே!

'மூத் தலை எஃகன், மற்றை முராந்தகன், முனிவன், முன்னா
அத் தலை நம்மை நோனா அமரர்க்கும், நகையிற்றாமால்;
எத் தலை உலகும் காக்கும் வேந்த! நீ, வேற்றோர் ஏவ,
இத் தலை எய்தினானைக் கொல்லுதல் இழுக்கம்; இன்னும், 115

'இளையவள் தன்னைக் கொல்லாது, இரு செவி மூக்கொடு ஈர்ந்து,
"விளைவு உரை" என்று விட்டார், வீரர் ஆய்; மெய்ம்மை ஓர்வார்;
களைதியேல் ஆவி, நம்பால் இவன் வந்து கண்ணின் கண்ட
அளவு உரையாமல் செய்தி ஆதி' என்று, அமையச் சொன்னான்.

**இராவணன், அனுமன் வாலில் தீக்கொளுவப் பணித்தல்**

'நல்லது உரைத்தாய், நம்பி! இவன் நவையே செய்தான் ஆனாலும்,
கொல்லல் பழுதே'—'போய் அவரைக் கூறிக் கொணர்தி கடிது' என்னா,
'தொல்லை வாலை மூலம் அறச் சுட்டு, நகரைச் சூழ்போக்கி,
எல்லை கடக்க விடுமின்கள்' என்றான்; நின்றார் இரைத்து எழுந்தார்.

**அரக்கர், அயன்படை நீக்கி அனுமன் வாலில் தீக்கொளுவுதல்**

'ஆய காலத்து, அயன் படையோடு இருப்ப, ஆகாது அனல் இடுதல்;
தூய பாசம் எனப் பலவும் கொணர்ந்து பிணிமின் தோள்' என்னா,
மேய தெய்வப் படைக்கலத்தை மீட்டான், அமரர் போர் வென்றான்;
'ஏ' எனாமுன், இடை புக்கு, தொடை வன் கயிற்றால் பிணித்து ஈர்த்தார்.

நாட்டின், நகரின், நடு உள்ள கயிறு நவிலும் தகைமையவே—
வீட்டின் ஊசல், நெடும் பாசம் அற்ற; தேரும், விசி துறந்த;
மாட்டும் புரவி ஆயம் எலாம், மருவி வாங்கும் தொடை அழிந்த;
பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை இழந்த, போர் யானை! 119

மண்ணில் கண்ட, வானவரை வலியின் கவர்ந்த, வரம் பெற்ற,
எண்ணற்கு அரிய ஏனையரை இகலின் பறித்த—தமக்கு இயைந்த
பெண்ணிற்கு இசையும் மங்கலத்தில் பிணித்த கயிறே இடை பிழைத்த—
கண்ணில் கண்ட வன் பாசம் எல்லாம் இட்டு, கட்டினார். 120

*114. மிகைப் புலன் அடக்கல் - (அவர்கள்) கோப உணர்ச்சியைத் தாம் மீளவும் சொல்லும் சொற்களால் தணித்தல்; தகைப் புலக் கருமத்தோர் - சீரிய அறிவும் செய்கையும் உடைய தூதுவர்; 115. நோனா - பொறாத; 119. பாசம், விசி, தொடை, வல்லி, புரசை என்பன கயிற்றின் வகைகள்.*

'கடவுள்–படையைக் கடந்து அறத்தின் ஆணை கடந்தேன் ஆகாமே
விடுவித்து அளித்தார், தெவ்வரே; வென்றேன் அன்றோ இவர் வென்றி;
சுடுவிக்கின்றது, "இவ் வூரைச் சுடுக" என்று உரைத்த துணிவு' என்று,
நடு உற்று அமைய உற நோக்கி, முற்றும் உவந்தான்—நவை அற்றான்.

நொய்ய பாசம் புறம் பிணிப்ப, நோன்மை இலன்போல் உடல் நுணங்கி,
வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப, வீடும் உணர்ந்தே, விரைவு இல்லா
ஐயன், விஞ்சைதனை அறிந்தும் அறியாதான்போல், அவிஞ்சை எனும்
பொய்யை மெய்போல் நடிக்கின்ற யோகி போன்றான்; போகின்றான். 122

வேந்தன் கோயில் வாயிலொடு விரைவில் கடந்து, வெள்ளிடையின்
போந்து, புறம் நின்று இரைக்கின்ற பொறை தீர் மறவர் புறம் சுற்ற,
ஏந்து நெடு வால் கிழி சுற்றி, முற்றும் தோய்த்தார், இழுது எண்ணெய்;
காந்து கடுந் தீக் கொளுத்தினார்; ஆர்த்தார், அண்டம் கடி கலங்க.

ஒக்க ஒக்க உடல் விசித்த உலப்பு இலாத உரப் பாசம்,
பக்கம் பக்கம் இரு கூறு ஆய், நூறுயிரவர் பற்றினார்;
புக்க படைஞர் புடை காப்போர் புணரிக் கணக்கர்; புறம் செல்வோர்,
திக்கின் அளவால்; அயல் நின்று காண்போர்க்கு எல்லை தெரிவு அரிதால்.

'அந்த நகரும் கடி காவும் அழிவித்து, அக்கன் முதலாயோர்
சிந்த நூறி, சீதையொடும் பேசி, மனிதர் திறம் செப்ப
வந்த குரங்கிற்கு உற்றதனை, வம்மின், காண வம்' என்று,
தம்தம் தெருவும், வாயில்தொறும், யாரும் அறியச் சாற்றினார். 125

அனுமனுக்கு உற்றது கேட்டுச் சானகி எரியைச் 'சுடாதே' எனல்

ஆர்த்தார், அண்டத்து அப் புறத்தும் அறிவிப்பார்போல்; அங்கோடு இங்கு
ஈர்த்தார்; முரசம் எற்றினார்; இடித்தார்; தெழித்தார், எம் மருங்கும்
பார்த்தார்; ஓடிச் சானகிக்கும் பகர்ந்தார்; அவளும் உயிர் பதைத்தாள்;
வேர்த்தாள்; உலந்தாள்; விம்மினாள்; விழுந்தாள்; அழுதாள்; வெய்து
உயிர்த்தாள்.

'தாயே அனைய கருணையான் துணையை, ஏதும் தகைவு இல்லா
நாயே அனைய வல் அரக்கர் நலியக் கண்டால், நல்காயோ?
நீயே உலகுக்கு ஒரு சான்று; நிற்கே தெரியும் கற்பு;—அதனில் [ருள்.
தூயேன் என்னின், தொழுகின்றேன்,—எரியே!—அவனைச் சுடல்!' என்

124. புணரிக் கணக்கர் - சமுத்திரம் என்னும் அளவை உடையவர். சமுத்திரம் இருபத்தாறு தானம் உடைய எண்.

**அனல் குளிர்ந்தமை கண்டு அனுமன் மகிழ்தல்**

வெளுத்த மென் நகையவள் விளம்பும் ஏல்வையின்,
ஒளித்த வெங் கனலவன் உள்ளம் உட்கினான்;
தளிர்த்தன மயிர்ப் புறம் சிலிர்ப்ப, தண்மையால்,
குளிர்த்தது, அக் குரிசில் வால், என்பு கூரவே. † 128

மற்று இனிப் பல என்? வேலை வட அனல், புவி அளாய
கற்றை வெங் கனலி, மற்றைக் காயத் தீ, முனிவர் காக்கும்
முற்றுறு மும்மைச் செந் தீ, முப்புரம் முருங்கச் சுட்ட
கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னியும், குளிர்ந்த அன்றே.

அண்டமும் கடந்தான் அங்கை அனலியும் குளிர்ந்தது;—அங்கிக்
குண்டமும் குளிர்ந்த; மேகத்து உரும் எலாம் குளிர்ந்த; கொற்றச்
சண்ட வெங் கதிர ஆகித் தழங்கு இருள் விழுங்கும் தா இல்
மண்டலம் குளிர்ந்த; மீளா நரகமும் குளிர்ந்த மாதோ. 130

வெற்பினால் இயன்றது அன்ன மேனியை விழுங்கி, வெந் தீ
நிற்பினும் சுடாது நின்ற நீர்மையை நினைவின் நோக்கி,
அற்பின் நார் அறாத சிந்தை அனுமனும், 'சனகன் பாவை
கற்பினால் இயன்றது' என்பான், பெரியது ஓர் களிப்பன் ஆனான்.

**அனுமன் இலங்கை நகர் முழுதும் காணுதல்**

அற்றை அவ் இரவில், தான் தன் அறிவினால் முழுதும் உன்னப்
பெற்றிலன் எனினும், ஆண்டு, ஒன்று உள்ளது பிழை உறுமே,
மற்று உறு பொறி முன் செல்ல, மறைந்து செல் அறிவு மான,
கற்றிலா அரக்கர் தாமே காட்டலின், தெரிய, கண்டான். 132

**அனுமன் மேலெழ, அரக்கர் தோள் அற்று விழுதல்**

முழுவதும் தெரிய நோக்கி, முற்றும் ஊர் முடிவில் சென்றான்,
'வழு உறு காலம் ஈது' என்று எண்ணினன், வலிதின் பற்றித்
தழுவினன், இரண்டு நூறாயிரம் புயத் தடக் கை தாம்போடு
எழு என நால, விண்மேல் எழுந்தனன்; விழுந்த எல்லாம்.

**விசும்பில் பொலிந்த அனுமன் தோற்றம்**

இற்ற வாள் அரக்கர் நூறாயிரவரும், இழந்த தோளார்,
முற்றினார் உலந்தார்; ஐயன் மொய்ம்பினோடு உடலை மூழ்கச்
சுற்றிய கயிற்றினோடும் தோன்றுவான், அரவின் சுற்றம்
பற்றிய கலுழன் என்ன, பொலிந்தனன் விசும்பின் பாலான்.

132. பொறி - இந்திரியங்கள்; 133. வழு உறு காலம் - தப்பிப்போதற்கு உரிய சமயம்.

அனுமன் தன் வாலை இலங்கைமீது நீட்டுதல்

துன்னலர் புரத்தை முற்றும் சுடு தொழில் தொல்லையோனும்,
பன்னின பொருளும், நாண, 'பாதகர் இருக்கை பற்ற,
மன்னனை வாழ்த்தி, பின்னை வயங்கு எரி மடுப்பென்' என்று,
பொன் நகர் மீதே, தன் போர் வாலினைப் போக விட்டான். 135

அப்பு உறழ் வேலைகாறும் அலங்கு பேர் இலங்கைதன்னை,
எப் புறத்து அளவும் தீய, ஒரு கணத்து எரித்த கொட்பால்,
துப்பு உறழ் மேனி அண்ணல், மேரு வில் குழைய, தோளால்
முப்புரத்து எய்த கோலை ஒத்தது—அம் மூரிப் போர் வால். 136

வெள்ளியின் பொன்னின், நானா விளங்கு பல் மணியின், விஞ்சை
தெள்ளிய கடவுள்-தச்சன் கை முயன்று அரிதின் செய்த
தள்ள அரு மனைகள்தோறும், முறை முறை தாவிச் சென்றான்;
ஒள் எரியோடும், குன்றத்து ஊழி வீழ் உருமொடு ஒத்தான்.

இலங்கை நகர் எரியுண்ணுதல்

நீல் நிற நிருதர், யாண்டும் நெய் பொழி வேள்வி நீக்க,
பால் வரு பசியன், அன்பான் மாருதி வாலைப் பற்றி,
ஆலம் உண்டவன் நன்று ஊட்ட, உலகு எலாம் அழிவின் உண்ணும்
காலமே என்ன மன்னோ, கனலியும் கடிதின் உண்டான். 138

## 13 இலங்கை எரியூட்டு படலம்

மாளிகைகளில் தீப் பற்ற, மாந்தர் பூசலிட்டு ஓடுதல்

கொடியைப் பற்றி, விதானம் கொளுவி, தான்
நெடிய தூணைத் தழுவி, நெடுஞ் சுவர்
முடியச் சுற்றி, முழுதும் முருக்கிற்றால்—
கடிய மா மனைதோறும் கடுங் கனல். 1

வாசல் இட்ட எரி மணி மாளிகை
மூச முட்டி, முழுதும் முருக்கலால்,—
ஊசலிட்டென ஓடி, உலைந்து உளை
பூசலிட்ட—இரியல் புரம் எலாம். 2

135. பன்னின பொருள் - (சிவபிரானுக்குத் துணையாக வந்தன என்று) சொல்லப்பட்ட பொருள்; மன்னன் - இராமபிரான்; 138. பால் வரு பசியன் கனலி - தன்னிடத்தே மிக்க பசியையுடைய அக்கினி தேவன்.

13: 2. மூச - நெருங்க; உளைபூசல் - வருந்தி அழைக்கும் கூப்பீடு.

மாதர்கள் வருந்திய வகை

மணியின் ஆய வயங்கு ஒளி மாளிகை,
பிணியின் செஞ் சுடர்க் கற்றை பெருக்கலால்,
திணி கொள் தீ உற்றது, உற்றில, தேர்கிலார்
அணி வளைக் கை நல்லார், அலமந்துளார். 3

வானகத்தை நெடும் புகை மாய்த்தலால்,
போன திக்கு அறியாது புலம்பினர்—
தேன் அகத்த மலர் பல சிந்திய
கானகத்து மயில் அன்ன காட்சியார். 4

கூய், கொழும் புனல், குஞ்சியில், கூந்தலில்,
மீச் சொரிந்தனர், வீரரும், மாதரும்;
ஏய்த்த தன்மையினால், எரி இன்மையும்,
தீக் கொளுந்தினவும், தெரிகின்றிலார். 5

தீயும் புகையும் ஓங்கிப் பரவுதல்

இல்லில் தங்கு வயங்கு எரி யாவையும்,
சொல்லின் தீர்ந்தன போல்வன, தொல் உருப்
புல்லிக் கொண்டன—மாயைப் புணர்ப்பு அறக்
கல்லி, தம் இயல்பு எய்தும் கருத்தர்போல். 6

ஆயது அங்கு ஓர் குறள் உரு ஆய், அடித்
தாய் அளந்து, உலகங்கள் தரக் கொள்வான்,
மீ எழுந்த கரியவன் மேனியின்,
போய் எழுந்து பரந்தது—வெம் புகை. 7

நிலம் நின்ற நிறத்தன, கீழ் நிலை
மாலின் வெஞ் சின யானையை மானுவ;
மேல் விழுந்து எரி முற்றும் விழுங்கலால்
தோல் உரிந்து கழன்றன, தோல் எலாம். 8

மீது இமம் கலந்தாலன்ன வெம் புகை,
சோதி மங்கலத் தீயொடு சுற்றலால்,
மேதி மங்குலின் வீழ் புனல், வீழ் மட
ஓதிமங்களின், மாதர் ஒதுங்கினர். 9

3. பிணியின் - தொகுதியாக; 6. சொல் - (இராவணனது) கட்டளை; தொல் உரு - பழைய கடுந்தன்மை; புணர்ப்பு - கலப்பு, கல்லி - தோண்டி, நீக்கி; கருத்தர் - ஞானியர்; 8. கீழ் நிலை மால் - கிழக்குத் திசைக்குத் தலைவனாகிய இந்திரன்; அவன் யானை ஐராவதம்; 9. இமம் - பனி; மேதி - எருமை; ஓதிமம் - அன்னப்பறவை.

பொடித்து எழுந்து பெரும் பொறி போவன
இடிக் குலங்களின் வீழ்தலும், எங்கணும்
வெடித்த; வேலை வெதும்பிட, மீன் குலம்
துடித்து, வெந்து, புலர்ந்து, உயிர் சோர்ந்தவால். 10

பருகு தீ மடுத்து, உள்ளுறப் பற்றலால்,
அருகு நீடிய ஆடகத் தாரைகள்
உருகி, வேலையின் ஊடு புக்கு உற்றன,
திருகு பொன் நெடுந் தண்டின் திரண்டவால். 11

உரையின் முந்து உலகு உண்ணும் எரிஅதால்,
வரை நிவந்தன பல் மணி மாளிகை
நிரையும் நீள் நெடுஞ் சோலையும் நிற்குமோ?
தரையும் வெந்தது, பொன் எனும் தன்மையால். 12

கல்லினும் வலிதாம் புகைக் கற்றையால்
எல்லி பெற்றது, இமையவர் நாடு; இயல்
வல்லி கோலி நிவந்தன; மா மணிச்
சில்லியோடும் திரண்டன, தேர் எலாம்.† 13

பேய மன்றினில் நின்று, பிறங்கு எரி,
மாயர் உண்ட நறவு மடுத்ததால்;
தூயர் என்றிலர் வைகு இடம் துன்னினுல்,
தீயர்; அன்றியும், தீமையும் செய்வரால். 14

தழுவு இலங்கை தழங்கு எரி தாய்ச் செல,
வழு இல் வேலை உலையின் மறுகின;
எழும் எழும் சுடர்க் கற்றை சென்று எய்தலால்,
குழுவு தண் புனல் மேகம் கொதித்தவே. 15

ஊனில் ஓடும் எரியொடு உயங்குவார்,
'கானில் ஓடும் நெடும் புனல் காண்' எனு,
வானில் ஓடும் மகளிர் மயங்கினர்,
வேனில் ஓடு அருந் தேரிடை வீழ்ந்தனர்.* 16

11. திருகு - கோணல்; தண்டு - கட்டிப்பட்ட பாளம்; 12. உரை - பெரியோர் சுடுமொழி; 13. எல்லி - இருள்; இயல்வல்லி - அழகிய கற்பகக் கொடிகள் போன்ற கொடிகள்; கோலி - சுற்றி; 14. பேய மன்று - கள் மூதலிய குடிக்கும் பொருள் பொருந்திய சாலை; மாயர் - வஞ்சனைத் தொழில் மிக்க அரக்கர்; 16. வேனில் ஓடு அருந் தேர் - பேய்த்தேர்; கானல் நீர்.

தேன் அவாம் பொழில் தீப் பட, சிந்திய
சோனைமா மலர்த் தும்பி, 'தொடர்ந்து, அயல்
போன தீச் சுடர் புண்டரிகத் தடங்
கானம் ஆம்' என, வீழ்ந்து, கரிந்தவே,* 17

'நல் கடன் இது; நம் உயிர் நாயகர்
மற்கடம் தெற மாண்டனர்; வாழ்வு இலம்;
இல் கடந்து இனி ஏகலம் யாம்' எனு,
வில் கடந்த நுதல் சிலர் வீடினர்.* 18

பூக் கரிந்து, முறி பொறி ஆய், அடை
நாக் கரிந்து, சினை நறுஞ் சாம்பர் ஆய்,
மீக் கரிந்து நெடும் பணை, வேர் உறக்
காக் கரிந்து, கருங் கரி ஆனவே. 19

கார் முழுக்க எழும் கனல் கற்றை போய்
ஊர் முழுக்க வெதுப்ப உருகின;
சோர் ஒழுக்கம் அருமையின்; துன்று பொன்
வேர் விடுப்பது போன்றன, விண் எலாம்.* 20

நெருக்கி மீ மிசை ஓங்கு நெருப்பு அழல்
செருக்கும் வெண் கதிர்த் திங்களைச் சென்று உற
உருக்க, மெய்யின் அமுதம் உகுத்தலால்,
அரக்கரும் சிலர் ஆவி பெற்றுர் அரோ.* 21

பருதி பற்றி நிமிர்ந்து எழு பைங் கனல்,
கருகி முற்றும் எரிந்து, எழு கார் மழை,
அருகு சுற்றும் இருந்தையதாய், அதின்
உருகு பொன்-திரள் ஒத்தனன், ஒண் கதிர்.* 22

தளை கொளுத்திய தாவு எரி, தாமணி
முளை கொளுத்தி, முகத்திடை மொய்த்த பேர்
உளை கொளுத்த, உலந்து உலைவு உற்றன—
வளை குளப்பின் மணி நிற வாசியே. 23

17. சோனை மலர் - இடைவிடாது தேன்மழை சொரியும் மலர்; 18. மற்கடம் - குரங்கு; 19. முறி - இளந்தளிர்; அடை - இலை; நா - இலைகளின் நடுவே அமைந்த ஈர்க்கு; சினை - சிறு கிளை; பணை - பெருங்கிளை; 20. கார் முழுக்க - மேகம் எல்லாம் முழுகும்படி; 22. இருந்தை - கரி; 23. தளை - குதிரையின் பின்கால்களைப் பிணிக்கும் கயிறு; தாமணி - குதிரை கட்டும் கயிறு; முளை - கட்டுத்தறி.

அரக்கரும் அரக்கியரும் உற்ற அவலம்

எழுந்து பொன்தலத்து ஏறலின், நீள் புகைக்
கொழுந்து சுற்ற, உயிர்ப்பு இலர், கோளும் உற்று
அழுந்துபட்டுளர் ஒத்து, அயர்ந்து, ஆர் அழல்
விழுந்து முற்றினர்—கூற்றை விழுங்குவார். 24

கோசிகத் துகில் உற்ற கொழுங் கனல்
தூசின் உத்தரிகத்தொடு சுற்றுற,
வாச மைக் குழல் பற்ற மயங்கினர்—
பாசிழைப் பரவைப் படர் அல்குலார். 25

நிலவு இலங்கிய துகிலினை நெருப்பு உண, நிருதர்,
இலவினும் சில முத்து உள எனும் நகை இளையார்,
புலவியின் கரை கண்டவர், அமுது உகப் புணரும்
கலவியின் கரை கண்டிலர், மண்டினர் கடல்மேல். 26

பஞ்சரத்தொடு, பசு நிறக் கிளி வெந்து பதைப்ப,
அஞ்சனக் கணின் அருவி நீர் முலை முன்றில் அலைப்ப,
குஞ்சரத்து அன கொழுநரைத் தழுவுறும் கொதிப்பால்,
மஞ்சு உறப் புகும் மின் என, புகையிடை மறைந்தார். 27

வரையினைப் புரை மாடங்கள் எரி புக, மகளிர்,
புரை இல் பொன் கலன் வில்லிட விசும்பிடைப் போவார்,
கரை இல் நுண் புகைப் படலையில் கரந்தனர்; கலிங்கத்
திரையினுள் பொலி சித்திரப் பாவையின் செயலார். 28

நந்தனவனங்கள் முதலியன வெந்தொழிந்த காட்சி

அகருவும் நறுஞ் சாந்தமும் முதலிய, அனேகம்
புகர் இல் நல் மரத்து உறு வெறி, உலகு எலாம் போர்ப்ப,
பகரும் ஊழியில் கால வெங் கடுங் கனல் பருகும்
மகர வேலையின், வெந்தன—நந்தனவனங்கள். 29

மினைப் பரந்து எழு கொழுஞ் சுடர் உலகு எலாம் விழுங்கி,
நினைவு அரும் பெருந் திசை உற விரிகின்ற நிலையால்,
சினைப் பரந்து எரி சேர்ந்திலா நின்றவும், சில வெங்
கனல் பரந்தவும், தெரிகில—கற்பகக் கானம். 30

24. அழுந்துபட்டுளர் ஒத்து - ஆழமான நீர்நிலையில் அழுந்தியவர்களைப் போன்று; 25. கோசிகம் - (அரையில் உடுத்த) பட்டு; 27. பஞ்சரம் - கூடு; கொதிப்பு - பதைப்பு; 30. மினை - மின்னலை; பரந்து - போல; சினைப் பரந்து - சினைகளில் தாவி; சில - சிறிது.

மூளும் வெம் புகை விழுங்கலின், சுற்றுற முழு நீர்
மாளும் வண்ணம், மா மலை நெடுந் தலைதொறும் மயங்கிப்
பூளை வீய்ந்தன்ன போவன, புணரியில் புனல் மீன்
மீள, யாவையும் தெரிந்தில, முகில் கணம் விசைப்ப.† 31

மிக்க வெம் புகை விழுங்கலின், வெள்ளியங்கிரியும்,
ஒக்க, வெற்பினேடு; அன்னமும் காக்கையின் உருவ;
பக்க வேலையின் படியது, பாற்கடல்; முடிவில்
திக்கயங்களும் கயங்களும் வேற்றுமை தெரியா. 32

**கனலுக்குப் பயந்து கடலில் வீழ்தல்**

கரிந்து சிந்திடக் கடுங் கனல் தொடர்ந்து உடல் கதுவ,
உரிந்த மெய்யினர், ஓடினர், நீரிடை ஒளிப்பார்,
விரிந்த கூந்தலும், குஞ்சியும் மிடைதலின், தாமும்
எரிந்து வேகின்ற ஒத்தன, எறி திரைப் பரவை. 33

மருங்கின்மேல் ஒரு மகவு கொண்டு, ஒரு தனி மகவை
அருங் கையால் பற்றி, மற்ருெரு மகவு பின் அரற்ற,
நெருங்கிஞரொடு நெறி குழல் சுறுக் கொள நீங்கிக்
கருங் கடல்தலை வீழ்ந்தனர், அரக்கியர், கதறி. 34

**படைக்கலச் சாலையின் அழிவு**

வில்லும், வேலும், வெங் குந்தமும் முதலிய விறகாய்
எல்லுடைச் சுடர் எனப் புகர் எஃகு எலாம் உருகி,
தொல்லை நல் நிலை தொடர்ந்த, பேர் உணர்வு அன்ன தொழிலால்
சில்லி உண்டையின் திரண்டன படைக்கலச் சாலை. 35

**யானைகள் ஓடல்**

செய் தொடர்க் கன வல்லியும், புரசையும், சிந்தி,
நொய்தின், இட்ட வன் தறி பறித்து, உடல் எரி நுழைய,
மொய் தடச் செவி நிறுத்தி, வால் முதுகினில் முறுக்கி,
கை எடுத்து அழைத்து ஓடின—ஓடை வெங் களி மா. 36

**பறவைகள் கடலில் வீழ்ந்து மாய்தல்**

வெருளும் வெம் புகைப் படலையின் மேற்செல வெருவி,
இருளும் வெங் கடல் விழுந்தன, எழுந்தில, பறவை;
மருளின் மீன்கணம் விழுங்கிட, உலந்தன—மனத்து ஓர்
அருள் இல் வஞ்சரைத் தஞ்சம் என்று அடைந்தவர் அனைய. 37

31. புகை, மீன்கள் இல்லையாகக் கடல் நீரைக் குடித்து விட, இது தெரியாது நீர் முகக்க விரைந்து வரும் மேகங்கள் மலைகளில் மோதுண்டு பூளைப் பூப் போலச் சிதறின; மீள - இல்லையாக.

இராவணன் மனையில் தீப் பற்றுதல்

நீரை வற்றிடப் பருகி, மா நெடு நிலம் தடவி,
தாருவைச் சுட்டு, மலைகளைத் தழல்செய்து, தனி மா
மேருவைப் பற்றி எரிகின்ற கால வெங் கனல்போல்,
ஊரை முற்றுவித்து, இராவணன் மனை புக்கது—உயர் தீ. 38

வான மாதரும், மற்றுள மகளிரும், மறுகிப்
போன போன திக்கு அறிகிலர், அனைவரும் போனார்;
ஏனை நின்றவர் எங்கணும் இரிந்தனர்; இலங்கைக்
கோன் அவ் வானவர் பதி கொண்ட நாள் எனக் குலைந்தார். 39

நாவியும், நறுங் கலவையும், கற்பகம் நக்க
பூவும், ஆரமும், அகிலும் என்று இனையன புகைய,
தேவ தேன் மழை செறி பெருங் குலம் எனத் திசையின்
பாவைமார் நறுங் குழல்களும், பரிமளம் கமழ்ந்த. 40

சூழும் வெஞ் சுடர் தொடர்ந்திட, யாவரும் தொடரா
ஆழி வெஞ் சினத்து ஆண் தொழில் இராவணன் மனையில்—
ஊழி வெங் கனல் உண்டிட, உலகம் என்று உயர்ந்த
ஏழும் வெந்தென—எரிந்தன, நெடு நிலை ஏழும். 41

பொன் திருத்தியது ஆதலால், இராவணன் புரை தீர்
குன்றம் ஒத்து உயர் தட நெடு மா நிலைக் கோயில்,
நின்று துற்று எரி பருகிட, நெகிழ்வுற உருகி,
தென் திசைக்கும் ஓர் மேரு உண்டாம் என, தெரிந்த. 42

இராவணன் முதலியோர் வெளியேறுதல்

அனைய காலையில் அரக்கனும், அரிவையர் குழுவும்,
புனை மணிப் பொலி புட்பக விமானத்துப் போனார்;
நினையும் மாத்திரை யாவரும் நீங்கினர்; நினையும்
வினை இலாமையின், வெந்தது, அவ் விலங்கல்மேல் இலங்கை.

இராவணன், நகர் எரிந்த காரணம் வினவுதல்

ஆழித் தேரவன் அரக்கரை அழல் எழ நோக்கி,
'ஏழுக்கு ஏழ் என அடுக்கிய உலகங்கள் எரியும்
ஊழிக் காலம் வந்து உற்றதோ? பிறிது வேறு உண்டோ?
பாழித் தீச் சுட வெந்தது என், நகர்?' எனப் பகர்ந்தான். 44

40. பெருங் குலம் - பெரிய மேகக் கூட்டம்.

**அரக்கர் நிகழ்ந்தது கூற, இராவணன் சினத்தல்**

கரங்கள் கூப்பினர், தம் கிளை திருவொடும் காணார்,
இரங்குகின்ற வல் அரக்கர் ஈது இயம்பினர்; 'இறையோய்!
தரங்க வேலையின் நெடிய தன் வால் இட்ட தழலால்,
குரங்கு சுட்டது ஈது' என்றலும், இராவணன் கொதித்தான்.

'இன்று புன் தொழில் குரங்குதன் வலியினுல், இலங்கை
நின்று வெந்து, மா நீறு எழுகின்றது; நெருப்புத்
தின்று தேக்கிடுகின்றது; தேவர்கள் சிரிப்பார்;
நன்று! நன்று! போர் வலி' என, இராவணன் நக்கான். 46

**எரியையும் அனுமனையும் பற்றிவர இராவணன் கட்டளையிடல்**

'உண்ட நெருப்பைக்
கண்டனர் பற்றிக்
கொண்டு அணுக' என்ருன்—
அண்டரை வென்ருன். 47

'உற்று அகலாமுன்,
செற்ற குரங்கைப்
பற்றுமின்' என்ருன்—
முற்றும் முனிந்தான். 48

சார் அயல் நின்ருர்,
வீரர் விரைந்தார்;
'நேருதும்' என்ருர்;
தேரினர் சென்ருர். 49

எல்லை இகந்தார்
வில்லர்; வெகுண்டார்
பல் அதிகாரத்
தொல்லர், தொடர்ந்தார். 50

நீர் கெழு வேலை நிமிர்ந்தார்;
தார் கெழு தானை சமைந்தார்;—
போர் கெழு மாலை புனைந்தார்
ஓர் எழு வீரர்—உயர்ந்தார். 51

விண்ணினை, வேலை விளிம்பு ஆர்
மண்ணினை, ஓடி வளைந்தார்;
அண்ணலை நாடி அணைந்தார்;
கண்ணினின் வேறு அயல் கண்டார். 52

**அரக்கர்கள் அனுமனுடன் பொருது அழிதல்**

'பற்றுதிர்! பற்றுதிர்!' என்பார்;
'எற்றுதிர்! எற்றுதிர்!' என்பார்;
முற்றினர், முற்றும் முனிந்தார்;
கற்று உணர் மாருதி கண்டான். 53

ஏல்கொடு வஞ்சர் எதிர்ந்தார்;
கால்கொடு கைகொடு, கார்போல்,
வேல்கொடு கோலினர்; வெந் தீ
வால்கொடு தானும் வளைந்தான். 54

பாதவம் ஒன்று பகுத்தான்;
மாதிரம் வாலின் வளைத்தான்;
மோதினன்; மோத, முனிந்தார்
ஏதியும் நாளும் இழந்தார். 55

நூறிட மாருதி, நொந்தார்
ஊறிட, ஊன் இடு புண்ணீர்,
சேறு இட, ஊர் அடு செந் தீ
ஆறிட, ஓடினது ஆறாய். 56

தோற்றினர் துஞ்சினர் அல்லார்
ஏற்று இகல் வீரர், எதிர்ந்தார்;
காற்றின் மகன், கலை கற்றான்,
கூற்றினும் மும் மடி கொன்றான். 57

மஞ்சு உறழ் மேனியர் வன் தோள்
மொய்ம்பினர் வீரர் முடிந்தார்
ஐம்பதினாயிரர்; அல்லார்,
பைம் புனல் வேலை படிந்தார். 58

தோய்த்தனன் வால்; அது தோயக்
காய்ச்சின வேலை கலந்தார்,
போய்ச் சிலர் பொன்றினர் போனார்
'ஏச்சு' என, மைந்தர் எதிர்ந்தார். 59

சுற்றின தேரினர் தோலா
வில் தொழில் வீரம் விளைத்தார்;
எற்றினன் மாருதி; எற்ற,
உற்று எழுவோரும் உலந்தார். 60

54. ஏல்கொடு - ஏற்றுக்கொண்டு; 55. பாதவம் - மரம்; 59. ஏச்சு - இழிவு.

**சீதையின் பாதங்களை வணங்கி, அனுமன் மீள, அழலும் மறைதல்**

விட்டு உயர் விஞ்சையர், 'வெந் தீ
வட்ட முலைத் திரு வைகும்
புள் திரள் சோலை புறத்தும்
சுட்டிலது' என்பது சொன்னார். 61

வந்தவர் சொல்ல மகிழ்ந்தான்;
வெந் திறல் வீரன் வியந்தான்;
'உய்ந்தனென்' என்ன, உயர்ந்தான்,
பைந்தொடி தாள்கள் பணிந்தான். 62

பார்த்தனள், சானகி, பாரா
'வேர்த்து எரி மேனி குளிர்ந்தாள்,
'வார்த்தை என்?' 'வந்தனை' என்னா,
போர்த் தொழில் மாருதி போனான். 63

'தெள்ளிய மாருதி சென்றான்;
கள்ள அரக்கர்கள் கண்டால்,
எள்ளுவர், பற்றுவர்' என்னா,
ஒள் எரியோனும் ஒளித்தான். 64

## 14 திருவடி தொழுத படலம்

**வான் வழி மீளும் அனுமன், மயேந்திரத்தில் குதித்தல்**

'நீங்குவென் விரைவின்' என்னும் நினைவினன், மருங்கு நின்றது
ஆங்கு ஒரு குடுமிக் குன்றை அருக்கனின் அணைந்த ஐயன்,
வீங்கினன், உலகை எல்லாம் விழுங்கினன் என்ன; வீரன்
பூங் கழல் தொழுது வாழ்த்தி, விசும்பிடைக் கடிது போனான். 1

மைந்நாகம் என்ன நின்ற குன்றையும், மரபின் எய்தி,
கைந் நாகம் அனையோன் உற்றது உணர்த்தினன், கணத்தின் காலை,
பைந் நாகம் நிகர்க்கும் வீரர் தன் நெடு வரவு பார்க்கும்,
கொய்ந் நாகம் நறுந் தேன் சிந்தும், குன்றிடைக் குதியும் கொண்டான்.

**வானர வீரர் அனுமனைக் கண்டு மகிழ்தல்**

போய் வரும் கருமம் முற்றிற்று என்பது ஓர் பொம்மல் பொங்க,
வாய் வெரீஇ நின்ற வென்றி வானர வீரர் மன்னோ,
பாய்வரு நீளத்து ஆங்கண் இருந்தன பறவைப் பார்ப்புத்
தாய் வரக் கண்டதன்ன உவகையின் தளிர்த்தார் அம்மா! 3

14 : 3. பார்ப்பு - குஞ்சு.

அழுதனர் சிலவர்; முன் நின்று ஆர்த்தனர் சிலவர்; அண்மித்
தொழுதனர் சிலவர்; ஆடித் துள்ளினர் சிலவர்; அள்ளி
முழுதுற விழுங்குவார்போல் மொய்த்தனர் சிலவர்; முற்றும்
தழுவினர் சிலவர்; கொண்டு சுமந்தனர் சிலவர், தாங்கி. 4

'தேனொடு கிழங்கும் காயும் நறியன அரிதின் தேடி,
மேல் முறை வைத்தேம்; அண்ணல்! நுகர்ந்தனை, மெலிவு தீர்தி;
மான வாள் முகமே நங்கட்கு உரைத்தது மாற்றம்' என்று,
தாம் நுகர் சாகம் எல்லாம் முறை முறை சிலவர் தந்தார். 5

**அனுமன் மேனியிலுள்ள புண்களை நோக்கி, வானரர் வருந்துதல்**

தாள்களில், மார்பில், தோளில், தலையினில், தடக் கை தம்மில்,
வாள்களின், வேலின், வாளி மழையினின் வகிர்ந்த புண்கள்,
நாள்கள் மேல் உலகில் சென்ற எண் என, நம்பி கண்ண
ஊழ் கொள நோக்கி நோக்கி, உயிர் உக, உளைந்து உயிர்த்தார்.

**அங்கதன் முதலியோரிடம் அனுமன் சீதை கூறிய ஆசியைத் தெரிவித்தல்**

வாலி காதலனை முந்தை வணங்கினன்; எண்கின் வேந்தைக்
காலுறப் பணிந்து, பின்னை, கடன்முறை, கடவோர்க்கு எல்லாம்
ஏலுற இயற்றி, ஆங்கண் இருந்து, 'இவண் இருந்தோர்க்கு எல்லாம்,
ஞால நாயகன்தன் தேவி சொல்லினள், நன்மை' என்றான். 7

**வானரர் விரும்பியவண்ணம் அனுமன் நடந்த செய்திகளைக் கூறுதல்**

என்றலும், கரங்கள் கூப்பி எழுந்தனர், இறைஞ்சித் தாழ்ந்து
நின்றனர், உவகை பொங்க விம்மலால் நிமிர்ந்த நெஞ்சர்,
'சென்றது முதலா, வந்தது இறுதியாச் செப்பற்பாலை,
வன் திறல் உரவோய்!' என்ன, சொல்லுவான் மருத்தின் மைந்தன்:

ஆண்தகை தேவி உள்ளத்து அருந் தவம் அமையச் சொல்லி,
பூண்ட பேர் அடையாளம் கைக்கொண்டதும் புகன்று, போரில்
நீண்ட வாள் அரக்கரோடு நிகழ்ந்ததும், நெருப்புச் சிந்தி
மீண்டதும், விளம்பான்—தான் தன் வென்றியை உரைப்ப வெள்கி. 9

**பிறவற்றைக் குறிப்பால் உணர்ந்த வானர வீரர் வினவுதல்**

'பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர் தீ இட்டது ஓங்கு இரும் புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்ட,
தெரிதர உணர்ந்தேம்; பின்னர், என் இனிச் செய்தும்?' என்றார். 10

5. மான வாள் முகம் - பெருமையும் ஒளியும் பொருந்திய முகம்; சாகம் - இலையுணவு.

### யாவரும் இராமனைக் காணுதற்கு விரைதல்

'யாவதும், இனி, வேறு எண்ணல் வேண்டுவது இறையும் இல்லை;
சேவகன் தேவிதன்னைக் கண்டமை விரைவின் செப்பி,
ஆவது, அவ் அண்ணல் உள்ளத்து அருந் துயர் ஆற்றலே ஆம்;
போவது புலமை' என்னு, பொருக்கென எழுந்து போனார். 11

### வானர வீரரின் உரைப்படி, இராமனிடம் அநுமன் முந்திச் செல்லுதல்

'ஏத நாள் இறந்த; சால வருந்தினது இருந்த சேனை;
ஆதலால் விரைவின் செல்லல் ஆவதுஅன்று; அளியம் எம்மைச்
சாதல் தீர்த்து அளித்த வீர! தலைமகன் மெலிவு தீரப்
போது நீ முன்னர்' என்றார்; 'நன்று' என அநுமன் போனான்.

முத் தலை எஃகினாற்கும் முடிப்ப அருங் கருமம் முற்றி,
வித்தகத் தூதன் மீண்டது இறுதியாய் விளைந்த தன்மை,
அத் தலை அறிந்த எல்லாம் அறைந்தனம்; ஆழியான்மாட்டு
இத் தலை நிகழ்ந்த எல்லாம் இயம்புவான் எடுத்துக் கொண்டாம்.

### சுக்கிரீவன் தேற்ற, இராமன் தேறுதல்

கார் வரை இருந்தனன் கதிரின் காதலன்,
சீரிய சொற்களால் தெருட்ட, செங் கணான்
ஆர் உயிர் ஆயிரம் உடையன் ஆம் எனா,
சோர்தொறும் சோர்தொறும், உயிர்த்துத் தோன்றினான். 14

'தண்டல் இல் நெடுந் திசை மூன்றும் தாயினர்,
கண்டிலர் மடந்தையை' என்னும் கட்டுரை,
உண்டு உயிர் அகத்து என ஒறுக்கவும், உளன்,
திண் திறல் அநுமனை நினையும் சிந்தையான். 15

ஆரியன், அருந் துயர்க் கடலுள் ஆழ்பவன்,
'சீரியது அன்று நம் செய்கை; தீர்வு அரும்
மூரி வெம் பழியொடும் முடிந்ததாம்' என,
சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லுவான்: 16

### சுக்கிரீவனை நோக்கி, இராமன் துயருடன் பேசுதல்

'குறித்த நாள் இகந்தன குன்ற, தென் திசை
வெறிக் கருங் குழலியை நாடல் மேயினர்
மறித்து இவண் வந்திலர்; மாண்டுளாகொலோ?
பிறித்து அவர்க்கு உற்றுளது என்னை?—பெற்றியோய்!* 17

17. இகந்தன குன்ற - கடந்து தேய.

'யாண்டனள் அவள்; ''இவள் மாண்ட வார்த்தையை
மீண்டு அவர்க்கு உரைத்தலின், விளிதல் நன்று'' என,
பூண்டது ஓர் துயர் கொடு பொன்றினர்கொலோ?
தேண்டினர், இன்னமும் திரிகின்றார்கொலோ? 18

'கண்டனர் அரக்கரை, கறுவு கைம்மிக,
மண்டு அமர் தொடங்கினர், வஞ்சர் மாயையால்
விண்தலம்அதனில் மேயினர்கொல்? வேறு இலாத்
தண்டல் இல் நெடுஞ் சிறைத் தளைப் பட்டார்கொலோ? 19

' ''கூறின நாள், அவர் இருக்கை கூடலம்;
ஏறல் அஞ்சுதும்'' என, இன்ப துன்பங்கள்
ஆறினர், அருந் தவம் அயர்கின்றார்கொலோ?
வேறு அவர்க்கு உற்றது என்? விளம்புவாய்!' என்றான். 20

அனுமன், இராமனுக்குச் சீதையின் நிலையைக் குறிப்பினால் உணர்த்துதல்

என்புழி, அனுமனும், இரவி என்பவன்
தென் புறத்து உளன் எனத் தெரிவது ஆயினன்;
பொன் பொழி தடக் கை அப் பொரு இல் வீரனும்,
அன்புறு சிந்தையன், அமைய நோக்கினன். 21

எய்தினன் அனுமனும்; எய்தி, ஏந்தல்தன்
மொய் கழல் தொழுகிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்,
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி, வாழ்த்தினன். 22

செய்தி உணர்ந்த இராமன் மகிழ்ச்சி

திண் திறல் அவன் செயல் தெரிய நோக்கினன்;
'வண்டு உறை ஓதியும் வலியள்; மற்று இவன்
கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று' எனக்
கொண்டனன், குறிப்பினால் உணரும் கொள்கையான். 23

ஆங்கு அவன் செய்கையே அளவை ஆம் என,
ஓங்கிய உணர்வினால், விளைந்தது உன்னினன்;
வீங்கின தோள்; மலர்க் கண்கள் விம்மின;
நீங்கியது அருந் துயர்; காதல் நீண்டதே. 24

24. அளவை - அளவு கருவி.

**சீதையைக் கண்டதை அனுமன் இராமனிடம் கூறுதல்**

'கண்டனென், கற்பினுக்கு அணியை, கண்களால்,
தெண் திரை அலை கடல் இலங்கைத் தென் நகர்;
அண்டர் நாயக! இனி, துறத்தி, ஐயமும்
பண்டு உள துயரும்' என்று, அனுமன் பன்னுவான்: 25

'உன் பெருந் தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப் பெற்ற
மன் பெரு மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன்—
தன் பெருந் தனயை என்னும் தகைமைக்கும், தலைமை சான்றாள்—
என் பெருந் தெய்வம்! ஐயா! இன்னமும் கேட்டி' என்பான்: 26

'பொன் அலது இல்லை பொன்னை ஒப்பு என, பொறையில் நின்றாள்,
தன் அலது இல்லைத் தன்னை ஒப்பு என; தனக்கு வந்த
நின் அலது இல்லை நின்னை ஒப்பு என, நினக்கு நேர்ந்தாள்;
என் அலது இல்லை என்னை ஒப்பு என, எனக்கும் ஈந்தாள். 27

'உன் குலம் உன்னது ஆக்கி, உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய
தன் குலம் தன்னது ஆக்கி, தன்னை இத் தனிமை செய்தான்
வன் குலம் கூற்றுக்கு ஈந்து, வானவர் குலத்தை வாழ்வித்து,
என் குலம் எனக்குத் தந்தாள்; என் இனிச் செய்வது, எம்மோய்? 28

'விற் பெருந் தடந் தோள் வீர! வீங்கு நீர் இலங்கை வெற்பில்,
நற் பெருந் தவத்தள் ஆய நங்கையைக் கண்டேன்அல்லேன்;
இற் பிறப்பு என்பது ஒன்றும், இரும் பொறை என்பது ஒன்றும்,
கற்பு எனும் பெயரது ஒன்றும், களி நடம் புரியக் கண்டேன்.

'கண்ணினும் உளை நீ; தையல் கருத்தினும் உளை நீ; வாயின்
எண்ணினும் உளை நீ; கொங்கை இணைக் குவைதன்னின் ஓவாது
அண்ணல் வெங் காமன் எய்த அலர் அம்பு தொளைத்த ஆறாப்
புண்ணினும் உளை நீ; நின்னைப் பிரிந்தமை பொருந்திற்று ஆமோ? 30

'வேலையுள் இலங்கை என்னும் விரி நகர் ஒருசார், விண் தோய்,
காலையும் மாலைதானும் இல்லது ஓர் கனகக் கற்பச்
சோலை அங்கு அதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள்—ஐய!—தவம் செய்த தவம் ஆம் தையல்

28. மோய் - தாய்; 30. வாயின் எண் - வாயின் எல்லை, எப்பொழுதும் வாயில் இராம நாமமே பயின்றமை குறித்தது.

'மண்ணொடும் கொண்டு போனான்—வான் உயர் கற்பினாள்தன்
புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான், உலகம் பூத்த
கண் அகன் கமலத்து அண்ணல், "கருத்திலாள்-தொடுதல் கண்ணின்,
எண்அருங் கூறாய் மாய்தி" என்றது ஓர் மொழி உண்டு என்பார். 32

'தீண்டிலன் என்னும் வாய்மை—திசைமுகன் செய்த முட்டை
கீண்டிலது; அனந்தன் உச்சி கிழிந்திலது; எழுந்து வேலை
மீண்டில; சுடர்கள் யாவும் விழுந்தில; வேதம் செய்கை
மாண்டிலது;—என்னும் தன்மை வாய்மையால், உணர்தி மன்னோ! 33

'சோகத்தாள் ஆய நங்கை கற்பினால், தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவிமாரும், வான் சிறப்பு உற்றார்; மற்றைப்
பாகத்தாள், இப்போது ஈசன் மகுடத்தாள்; பதுமத்தாளும்,
ஆகத்தாள் அல்லள், மாயன் ஆயிரம் மௌலி மேலாள். 34

'இலங்கையை முழுதும் நாடி, இராவணன் இருக்கை எய்தி,
பொலங் குழையவரை எல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்,
அலங்கு தண் சோலை புக்கேன்; அவ்வழி, அணங்கு அன்னாளை,
கலங்கு தெண் திரையிற்று ஆய கண்ணின் நீர்க் கடலில், கண்டேன்.

'அரக்கியர் அளவு அற்றார்கள், அலகையின் குழுவும் அஞ்ச
நெருக்கினர் காப்ப, நின்பால் நேயமே அச்சம் நீக்க,
இரக்கம் என்ற ஒன்று தானே ஏந்திழை வடிவம் எய்தி,
தருக்கு உயர் சிறை உற்றன்ன தகையள், அத் தமியள்—அம்மா!

'தையலை வணங்கற்கு ஒத்த இடை பெறும் தன்மை நோக்கி,
ஐய! யான் இருந்த காலை, அலங்கல் வேல் இலங்கை வேந்தன்
எய்தினன்; இரந்து கூறி இறைஞ்சினன்; இருந்து நங்கை
வெய்து உரை சொல்ல, சீறி, கோறல் மேற்கொண்டுவிட்டான்.

'ஆயிடை, அணங்கின் கற்பும், ஐய! நின் அருளும், செய்ய
துய நல் அறனும் என்று, இங்கு இனையன தொடர்ந்து காப்ப,
போயினன், அரக்கிமாரை, "சொல்லுமின் பொதுவின்" என்று, ஆங்கு
ஏயினன்; அவர் எலாம் என் மந்திரத்து உறங்கியிற்றார். 38

32. கண்ணின் - செய்வையானால்; 33. முட்டை - அண்ட கோளம்; 34. மாகத்தார் தேவிமார் - இந்திராணி, சரசுவதி போலும் விண்ணவர் மனைவியர்; பதுமத்தாள் - திருமகள்; 36. அலகை - பேய்; தருக்கு உயர் சிறை - கொடுமைமிக்க சிறைக்காவல்; 38. பொதுவின் சொல்லுமின் - நன்மை விளைத்தலும் தீமை பயத்தலுமான சொற்களைப் பொதுப்படக் கூறுங்கள்.

'அன்னது ஓர் பொழுதில் நங்கை ஆர் உயிர் துறப்பதாக
உன்னினள்; கொடி ஒன்று ஏந்தி, கொம்பொடும் உறைப்பச் சுற்றி,
தன் மணிக் கழுத்தில் சார்த்தும் அளவையில் தடுத்து, நாயேன்,
பொன் அடி வணங்கி நின்று, நின் பெயர் புகன்ற போழ்தில், 39

' "வஞ்சனை அரக்கர் செய்கை இது" என மனக்கொண்டேயும்,
"அஞ்சன வண்ணத்தான்தன் பெயர் உரைத்து, அளியை, என்பால்
துஞ்சுறு பொழுதில் தந்தாய் துறக்கம்" என்று உவந்து சொன்னாள்—
மஞ்சு என, வன மென் கொங்கை வழிகின்ற மழைக் கண் நீராள். 40

'அறிவுறத் தெரியச் சொன்ன, பேர் அடையாளம் யாவும்,
செறிவுற நோக்கி, நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை
முறிவு அற எண்ணி, வண்ண மோதிரம் காட்ட, கண்டாள்;
இறுதியின் உயிர் தந்து ஈயும் மருந்து ஒத்தது, அனையது—எந்தாய்! 41

'ஒரு கணத்து இரண்டு கண்டேன்; ஒளி மணி ஆழி, ஆன்ற
திரு முலைத் தடத்து வைத்தாள்; வைத்தலும், செல்வ! நின்பால்
விரகம் என்பதனின் வந்த வெங் கொழுந் தீயினால் வெந்து
உருகியது; உடனே ஆறி, வலித்தது, குளிர்ப்பு உள் ஊற. 42

'வாங்கிய ஆழிதன்னை, "வஞ்சர் ஊர் வந்ததாம்" என்று
ஆங்கு உயர் மழைக் கண் நீரால் ஆயிரம் கலசம் ஆட்டி,
ஏங்கினள் இருந்தது அல்லால், இயம்பலள்; எய்த்த மேனி
வீங்கினள்; வியந்தது அல்லால், இமைத்திலள்; உயிர்ப்பு விண்டாள். 43

'அன்னவர்க்கு, அடியனேன், நிற் பிரிந்த பின் அடுத்த எல்லாம்
சொல் முறை அறியச் சொல்லி, "தோகை! நீ இருந்த சூழல்
இன்னது என்று அறிகிலாமே, இத்தனை தாழ்த்தது" என்றே,
மன்ன! நின் வருத்தப்பாடும் உணர்த்தினென்; உயிர்ப்பு வந்தாள். 44

'இங்கு உள தன்மை எல்லாம் இயைபுளி இயையக் கேட்டாள்;
அங்கு உள தன்மை எல்லாம் அடியனேற்கு அறியச் சொன்னாள்;
"திங்கள் ஒன்று இருப்பென் இன்னே; திரு உளம் தீர்ந்தபின்னை,
மங்குவென் உயிரோடு" என்று, உன் மலரடி சென்னி வைத்தாள்.

**சீதை தந்த சூடாமணியை இராமனிடம் அனுமன் சேர்த்தல்**

'வைத்தபின், துகிலின் வைத்த மா மணிக்கு அரசை வாங்கி,
கைத்தலத்து இனிதின் ஈந்தாள்; தாமரைக் கண்கள் ஆர,
வித்தக! காண்டி!' என்று, கொடுத்தனன்—வேத நல் நூல்
உய்த்துள காலம் எல்லாம் புகழொடும் ஒக்க நிற்பான். 46

41. முறிவு - வேறுபாடு, கேடு; 43. விண்டாள் - அற்றாள்; 45. திரு உளம் தீர்ந்தபின்னை - (எம்பிரானுக்கு) மனமில்லையாயின்.

சூடாமணி பெற்ற இராமன் நிலை

பை பையப் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி,
மெய்யுற வெதும்பி, உள்ளம் மெலிவுறு நிலையை விட்டான்;
ஐயனுக்கு, அங்கி முன்னர், அங்கையால் பற்றும் நங்கை
கை எனல் ஆயிற்று அன்றே—கை புக்க மணியின் காட்சி! 47

பொடித்தன உரோமம்; போந்து பொழிந்தன கண்ணீர்; பொங்கித்
துடித்தன, மார்பும் தோளும்; தோன்றின வியர்வின் துள்ளி;
மடித்தது, மணி வாய்; ஆவி வருவது போவது ஆகித்
தடித்தது, மேனி; என்னே, யார் உளர் தன்மை தேர்வார்? 48

மேலே செய்வன குறித்து இராமன் விரைதல்

ஆண்டையின், அருக்கன் மைந்தன், 'ஐய! கேள், அரிவை நம்பால்
காண்டலுக்கு எளியள் ஆனுள்' என்றலும், 'காலம் தாழ,
ஈண்டு, இனும் இருத்தி போலாம்' என்றனன்; என்றலோடும்,
தூண் திரண்டனைய தோளான், பொருக்கென எழுந்து சொன்னுன்.

வானர சேனை புறப்படுதல்

'எழுக, வெம் படைகள்!' என்றுன்; 'ஏ' எனும் அளவில், எங்கும்
முழு முரசு எற்றி, கொற்ற வள்ளுவர் முடுக்க, முந்தி,
பொழி திரை அன்ன வேலை புடை பரந்தென்னப் பொங்கி,
வழுவல் இல் வெள்ளத் தானை, தென் திசை வளர்ந்தது அன்றே!

வீரர் எளிதில் வழிகடத்தல்

வீரரும் விரைவில் போனுர்; விலங்கல் மேல் இலங்கை, வெய்யோர்
பேர்வு இலாக் காவற்பாடும், பெருமையும், அரணும், கொற்றக்
கார் நிறத்து அரக்கர் என்போர் முதலிய, கணிப்பு இலாத,
வார் கழல் அனுமன் சொல்ல, வழி நெடிது எளிதின் போனுர்.

பன்னிரு நாளில் அனைவரும் தென் கடல் சேர்தல்

அந் நெறி நெடிது செல்ல, அரிக் குலத்து அரசனேடும்,
நல் நெறிக் குமரர் போக, நயந்து உடன் புணர்ந்த சேனை,
இன் நெடும் பழுவக் குன்றில் பகல் எலாம் இறுத்த பின்னர்,
பன்னிரு பகலில் சென்று, தென் திசைப் பரவை கண்டார். 52

52. இன் நெடும் பழுவக் குன்று - இனிய நீண்ட சோலைகளை உடைய மலை வழி.

# மிகைப் பாடல்கள்

1 கடல் தாவு படலம்

சென்றனன், இராமன் பாதம் சிந்தையில் நிறுத்தி—திண் தோள்
வன் திறல் அனுமன்—வாரி கடக்குமாறு உளத்தின் எண்ணி,
பொன் திணி சிகர கோடி மயேந்திரப் பொருப்பின் ஏறி,
நின்றிடும் தன்மை எம்மால் நிகழ்த்தலாம் தகைமைத்து ஆமோ?

இமையவர் ஏத்த வாழும் இராவணன் என்னும் மேலோன்
அமை திரு நகரைச் சூழ்ந்த அளக்கரைக் கடக்க, வீரன்,
சுமை பெறு சிகர கோடித் தொல் மயேந்திரத்தின், வெள்ளிச்
சிமையமேல் நின்ற தேவன் தன்மையின், சிறந்து நின்றான்.

*[இவை இப் படலத்தின் முதற் செய்யுளாகிய 'ஆண்தகை ஆண்டு' எனத் தொடங்கும் பாடலின் முன்னர்க் காணப்படுகின்றன. இவற்றோடு கிட்கிந்தா காண்டத்தின் மயேந்திரப் படலத்தில் இறுதியிலுள்ள நான்கு செய்யுட்களும் (26-29) வரிசை முறை மாறியும் ஒரு சுவடியில் உள்ளன.]*

பெருஞ் சிலம்பு அறையின் வாழும் பெரு வலி அரக்கர் யாரும்—
பொரும் சின மடங்கல் வீரன் பொதுத்திட மிதித்தலோடும்—
அருஞ் சினம் அடங்கி, தம்தம் மாதரைத் தழுவி, அங்கம்
நெரிஞ்சுற, கடலின் வீழ்ந்தார், நெடுஞ் சுறு மகரம் நுங்க, 7-1

விண்ணோர் அது கண்டனர், உள்ளம் வியந்து மேல்மேல்
கண் ஓடிய நெஞ்சினர், காதல் கவற்றலாலே,
எண்ணோடு இயைந்து துணை ஆகும் இயக்கி ஆய
பெண்ணோடு இறை இன்னன பெற்றி உணர்த்தினரால். 64-1

பரவுக் குரல், பணிலக் குரல், பணையின் குரல், பறையின்
விரவுக் குரல், சுருதிக் குரல், விசயக் குரல், விரவா,
அரவக் குலம் உயிர் உக்கு உக, அசனிக் குரல் அடு போர்
உரவுக் கருடனும் உட்கிட, உயிர்க்கின்றன—ஒருபால். 74-1

வானோர் பசுந் தருவின் மா மலர்கள் தூவ,
ஏனோரும் நின்று, 'சயம் உண்டு' என இயம்ப,
தான் ஓர் பெருங் கருடன் என்ன, எதிர தாவிப்
போனான், விரைந்து, கடிதே போகும் எல்லை. 74-2

என்று தன் இதயத்து உன்னி, எறுழ் வலித் தடந் தோள் வீரன்
நின்றனன், நெடிய வெற்பின்; நினைப்ப அரும் இலங்கை மூதூர்
ஒன்றிய வடிவம் கண்டு, ஆங்கு, உளத்திடைப் பொறுக்கல் ஆற்றான்;
குன்று உறழ் புயத்து மேலோன் பின்னரும் குறிக்கலுற்றான். 94-1

2 ஊர் தேடு படலம்

'ஊறு மிகவே உறினும், யானும் அமர் தேரேன்,
தேறல் இல் அரக்கர் புரி தீமை அது தீர்வுற்று,
ஏறும் வகை எங்குள? இராமனிடை அல்லால்,
மாறும் மதி வேறு பிறிது இல்' என மதித்தான். 73-1

'கண்ட வனப்பான், மேனி கரக்கும் கருமத்தான்,
கொண்டல் செறிப்பான், வானரம் என்றும் கொளல் அன்றே;
அண்டம் அனைத்தும் பூரணன் ஆகும் அவன் ஆகும்;
சண்டை கொடுத்தும் கொள்வன்' எனத் தான் சலம் உற்றாள்.
86-1

ஆயவன் அருளால், மீட்டும் அந்தரி அறைந்தாள், 'முன்நாள்
மாய மா நகரம்தன்னை வகுத்து, அயன் என்னும் மேலாம்
தூயவன் என்னை நோக்கி, ''சுந்தரி! காப்பாய்'' என்று, ஆங்கு,
ஏயினன், இதற்கு நாமம் இலங்கை என்று எவரும் போற்ற.
93-1

இத் திறம் அனந்த கோடி இராக்கதக் குழுவின் உள்ளார்
தத்தம செய்கை எல்லாம் தனித் தனி நோக்கி, தாங்காது,
'எத் திறம் இவர்தம் சீரை எண்ணுவது?' எனவே, அண்ணல்
உத்தமன் தேவிதன்னை ஒழிவு அற நாடிப் போனான். 120-1

கிடந்தனன், வடவரை கிடந்தபோல்; இரு
தடம் புயம் திசைகளை அளக்கத் தாங்கிய
உடம்பு உறு முயற்சியின் உறங்கினான், கடை
இடம் பெறு தீவினை யாவும் ஏத்தவே. 123-1

குடம் தரும் செவிகளும், குன்றம் நாணுறத்
தடந் தரு கரங்களும், தாளும், தாங்குறக்
கிடந்தது ஓர் இருள் எனக் கிடந்துளான்தனை
அடைந்தனன், அஞ்சுறுது—அனுமன் ஆண்மையான். 130-1

3 காட்சிப் படலம்

எயிலின் உட்படு நகரின் யோசனை எழு-நூறும்
அயிலினின் படர் இலங்கை மற்று அடங்கலும் அணுகி,
மயல் அறத் தனி தேடிய மாருதி, வனசக்
குயில் இருந்த அச் சோலை கண்டு, இதயத்தில் குறித்தான்.
1-1

அஞ்சனத்து ஒளிர் அமலனை மாயையின் அகற்றி,
வஞ்சகத் தொழில் இராவணன் வவ்வினன் கொடுவந்து,
இஞ்சி உட்படும் இலங்கையின் சிறையில் வைத்திட, ஓர்
தஞ்சம் மற்று இலை; தான் ஒரு தனி இருந்து அயர்வாள். 2-1

கண்ணின் நீர்ப் பெருந் தாரைகள் முலைத் தடம் கடந்து
மண்ணின்மீதிடைப் புனல் என வழிந்து அவை ஓட,
விண்ணை நோக்குறும்; இரு கரம் குவிக்கும்; வெய்து உயிர்க்கும்;
எண்ணும்; மாறு இலாப் பிணியினல் இவை இவை இயம்பும; 10-1

'மாய மானின்பின் தொடர்ந்த நாள், ''மாண்டனன்'' என்று
வாயினல் எடுத்து உரைத்தது வாய்மை கொள் இளையோன்
போய், அவன் செயல் கண்டு, உடல் பொன்றினன் ஆகும்;
ஆயது இன்னது என்று அறிந்திலேன்' என்று என்றும் அயர்வாள். 16-1

இன்ன எண்ணி, இடர் உறுவாள் மருங்கு,
உன் ஓர் ஆயிர கோடி அரக்கியர்
துன்னு காவலுள், தூய திரிசடை
என்னும் மங்கை துணை இன்றி, வேறு இலாள். 29-1

தரும நீதி தழுவிய சிந்தை கொண்டு
உரிய வீடணன் தந்தருள் ஒண்டொடி,
திரிசடைக் கொடி, நாள்தொறும் தேற்று சொல்
அருளினல், தனது ஆவி பெற்று உய்ந்துளாள். 29-2

அன்னள் ஆய அருந்ததிக் கற்பினுள்
மன்னு சோலையில் மாருதியும வர,
தன் இடம் துடித்து எய்துற, சானகி
என்னும் மங்கை, இனிது இருந்தாள்அரோ. 29-3

'தாட்சி இன்று' என, திரிசடையும், 'சாலவும்
மாட்சியின் அமைந்தது, மலர் உளாள் தொழும்
காட்சியாய்! இக் குறி கருதும் காலையில்,
ஆட்சியே கடன் என அறிந்து நல்குவாய். 32-1

மீட்டும், அத் திரிசடை என்னும் மென் சொலாள்,
'தோள் தடம் பொரு குழைத் தொண்டைத் தூய்மொழி!
கேட்டி; வெங் கடு எனக் கிளர் உற்பாதம்ஆய்,
நாட்டினை; யாவரும் நடுக்கம் காண்டுமால். 53-1

சிரம் ஒரு மூன்றினர்; திருக்கு மூன்றினர்;
கரம் ஒரு மூன்றினர்; காலும் மூன்றினர்;
உரம் உறு வன முலை வெரிநின் மூன்று உளார்;
பொரு அரும் உலகையும் புதைக்கும் வாயினர். 55-1

என்ன வாழ்த்திய மாருதி, 'ஈது நாம்
இன்னும் காண்டும்' என, மறைந்து எய்தினன்;
சொன்ன வாள் அரக்கன் சுடு தீச் சுடும்
அன்னை வைகுறும் அவ் இடத்து ஆயினன். 101-1

'இன்று நாளை அருளும் திருவருள்
என்று கொண்டு, இதனால் அழிவேனை நீ
கொன்று இறந்தனை கூடுதியோ? குழை
தின்று உறங்கி மறம் தவாச் செல்வியே! 103-1

என்றனன், எயிறு தின்னு, எரி எழ விழித்து நோக்கி,
நி....லத் தாவி நிலன் ஒளி கலனில் தோய,
மின்தனை மின் சூழ்ந்தென்ன அரம்பையர் சூழ, மெல்லச்
சென்று, அவன்தன்னைச் சார்ந்தாள், மயன் அருள் திலகம் அன்னாள். 149-1

பொருக்கென அவனி....க....கொடி முறுவல் பூப்ப,
அரக்கர் கோமகனை நோக்கி, 'ஆண்மை அன்று; அழகும் அன்றால்—
செருக்கு உறு தவத்தை, கற்பின் தெய்வத்தை, திருவை, இன்னே
வெருக் கொளச் செய்வது! ஐயா!' என, இவை விளம்பலுற்றாள்: 149-2

'செம் மலர்த் திருவின் நாளும் சிறப்பு உறு திலதம் அன்னாள்,
வெம்மை உற்று உம்மேல் வீழ்வார், வெள்கியே நகை செய்து ஓத,
தம் மனத்து ஆசை வேறோர் தலைமகற்கு உடையாள்தன்னை
அம்மலற்று இறைஞ்சும் வேட்கை ஆடவற்கு உரியது அன்றே. 149-3

'புலத்தியன் மரபின் வந்து புண்ணியம் புரிந்த மேன்மைக்
குலத்து இயல்பு அதனுக்கு என்றும் பழி அன்றோ? என்றும் கொள்ளாய்!
வலத்து இயல் ஆண்மைக்கு ஈது மாசு' மதிப்பி........
..... .................................. 149-4

'வாச மென் குழலினாரால், மண்ணினில், வானில், யார்க்கும்
நாசம் வந்து ஏன்று,....மறைகளே நவிலும் மாற்றம்,
பூசல் வண்டு உறையும் தாராய்! அறிந்தும் நீ, புகழால், பொற்பால்,
தேசுடையவளோ, என்னின் சீதையும்?...... 149-5

என்றார்; இன்னும் எத்தனை சொல் கொண்டு இதம் மாறக்
கன்றுநின்றார், காலும் எயிற்றார், கனல் கண்ணார்;
ஒன்றோ? மற்றும் ஆயிர கோடி உளர் அம்மா!
பொன்று வஞ்சம் கொண்டவர் இன்னும் புகல்கின்றார்: 156-2

தீயோர் செய்கைதானும், இராமன் ஒரு தேவித்
தாயாள் துன்பும், மாருதி கண்டே தளர்வு எய்தி,
மாயாது ஒன்றே அன்றி, மனத்தே மலி துன்பத்து
ஓயாது உன்னிச் சோர்பவன் ஒன்று அங்கு உணர்வுற்றான். 159-1

4 உருக் காட்டு படலம்

சுற்றிய கொடி ஒன்றைத் துணித்து, தூயள், ஓர்
பொன் தடங் கொம்பினில் பூட்டி, 'பூமியே!
நல் தவம் உடையள் யான்ஆகின், நாயகன்
வெற்றி சேர் திருவடி மேவுவேன்' என்றாள். 21-1

என்று அருந்ததி, மனத்து, எம்மை ஆளுடைத்
துன்ற அருங் கற்பினள், சுருதி நாயகன்
பொன் தரு மலர்ப் பதம் வழுத்தி, பூங் கொடி
தன் தனிக் கழுத்திடைத் தரிக்கும் ஏல்வையின். 21-2

எய்தினள், பின்னும் எண்ணாத எண்ணி, 'ஈங்கு
உய் திறம் இல்லை!' என்று ஒருப்பட்டு, ஆங்கு ஒரு
கொய் தளிர்க் கொம்பிடைக் கொடி இட்டே தலை
பெய்திடும் ஏல்வையில், தவத்தின் பெற்றியால், 21-3

தோன்றினன், தனது உருக் காண; தூயவள்,
மூன்று உலகினுக்கும் ஓர் அன்னை, மொய்ம் மலர்
தேன் திகழ் திருவடி சென்னியால் தொழுது
ஆன்ற பேர் அன்பு கொண்டு, அறைதல்மேயினன்: 22-1

'நோக்கினேன்; அரக்கியர், நுனிப்பு இல் கோடியர்,
நீக்கினர் துயிலினை; நின்னைக் காணுதற்கு
ஆக்கிய காலம் பார்த்து, அயல் மறைந்து, பின்
தாக்கு அணங்கு அவர் துயில் கண்டு, சார்ந்துளேன். 23-1

'நிலை பெற, அயன் இருந்து, இயற்று நீலத்தின்
சிலை மணி வள்ளமும் உவமை சேர்கல;
''அலவன், அது'' என்பரால், அறிவு இலோர்; அவர்
உலைவு அறு திரு முழங்காலுக்கு ஒப்பு உண்டோ? 43-1

எள்ளற்கு அரிய நிலை ஆகி, இயைந்து தம்மில் இணை உரு ஆய்,
தள்ளப்படாத தகை ஆகி, சார் கத்திரிகை வகை ஒழுகா,
அள்ளற் பள்ளத்து அகன் புனல் சூழ் அகன்ற வாவிக்குள் நின்ற
வள்ளைத் தண்டின் வனப்பு அழித்த, மகரம் செறியாக் குழை' என்றான்.
49-1

தவம் தந்த நெஞ்சின் தனது ஆர் உயிர்த் தம்பியோடும்,
நவம் தந்த குன்றும், கொடுங் கானமும், நாடி ஏகி,
கவந்தன்தனது ஆவி கவர்ந்து, ஒருகாலும் நீங்காச்
சிவம் தந்து, மெய்ம்மைச் சபரிக்குத் தீர்ந்து வந்தான். 88-1

'சென்றேன் அடியேன், உனது இன்னல் சிறிதே உணர்த்தும் அத்துணையும்
அன்றே, அரக்கர் வருக்கம் உடன் அடைவது; அல்லாது, அரியின் கை
மன்றே கமழும் தொடை அன்றே, நிருதர் குழுவும் மாநகரும்'
என்றே இறைஞ்சி, பின்னரும், ஒன்று இசைப்பான் உணர்ந்தான், ஈறு
இல்லான். 117-1

5		சூடாமணிப் படலம்

'சேண் தவா நெறி செல் பகல் தீங்கு அற,
மீண்டு, தம்பியும் வீரனும் ஊர் புக,
பூண்ட பேர் அன்பினோருடன் போதியால்!
ஈண்டு யான் வரம் வேண்டினென், ஈறு இலாய்!' 31-1

என்று உரைத்திடுதி; பின், அயோத்தி எய்தினல்,
வென்றி வெஞ் சிலையினான் மனம் விழைந்திடாது;
அன்றியே, மறை நெறிக்கு அருகன் அல்லனால்;
பொன் திணி மௌலியும் புனைதல் இல்லையால். 38-1

' ''கொற்றவன் சரத்தினால் குலைகுலைந்து உக,
இற்றது இவ் இலங்கை'' என்று, இரங்கி ஏங்கவே,
மற்று ஒரு மயன் மகள் வயிறு அலைத்து உக,
பொற்றொடி! நீயும் கண்டு, இரங்கப் போதியால்.' 65-1

' ''அங்கு, அது அஞ்சி நடுங்கி, அயன் பதி அண்மி,
''இங்கு நின் வரவு என்னை'' எனக் கனல்வு எய்த,
மங்கை பங்கனொடு எண் திசையும் செல, மற்றோர்
தங்கள் தங்கள் இடங்கள் மறுத்தமை தைப்பாய். 77-1

'இந்திரன் தரும் மைந்தன் உறும் துயர் யாவும்
அந்தரத்தினில் நின்றவர் கண்டு, ''இனி, அந்தோ!
எந்தைதன் சரண் அன்றி, ஓர் தஞ்சமும் இன்றால்;
வந்து அவன் சரண் வீழ்க!'' என உற்றதும் வைப்பாய். 77-2

' ''ஐய நின் சரணம் சரண்!'' என்று, அவன் அஞ்சி,
வையம் வந்து வணங்கிட, வள்ளல் மகிழ்ந்தே,
''வெய்யவன் கண் இரண்டொடு போக!'' என, விட்ட
தெய்வ வெம் படை உற்றுள தன்மை தெரிப்பாய். 77-3

' ''எந்தை, நின் சரணம் சரண்!'' என்ற இதனால்,
முந்தை உன் குறையும் பொறை தந்தனம்; முந்து உன்
சந்தம் ஒன்று கொடித் திரள் கண்கள்தமக்கே
வந்து ஓர் நன் மணி நிற்க!'' என, வைத்ததும் வைப்பாய்.
77-4

'வேகம் விண்டு சயந்தன் வணங்கி, விசும்பில்
போக, அண்டர்கள் கண்டு, அலர் கொண்டு பொழிந்தார்;
நாக நம்பன் இளங் கிளை நன்கு உணராத,
பாகு தங்கிய வென்றியின், இன் சொல் பணிப்பாய். 77-5

6 பொழில் இறுத்த படலம்

எனப் பதம் வணங்கி அன்னூர் இயம்பிய வார்த்தை கேளா,
கனக் குரல் உருமு வீழ, கனமலே சிதற, தேவர்
மனத்து அறிவு அழிந்து சோர, மாக் கடல் இரைப்புத் தீர,
சினத்து வாய் மடித்து, தீயோன், நகைத்து, இவை செப்பலுற்ருன். 57-1

7 கிங்கரர் வதைப் படலம்

ஓசையின் இடிப்பும் கேட்டு, ஆங்கு உருத்து எழு சினத்தன் ஆகி,
'ஈசன் மால் எனினும் ஒவ்வாது, ஈது ஒரு குரங்கு போலாம்!
கூசிடாது இலங்கை புக்கு, இக் குல மலர்ச் சோலேயோடு
மாசு அறு நகரை மாய்க்கும் வலிமை நன்று!' என்ன நக்கான். 1-1

என்றலும், இரு கை கூப்பி, இரு நிலம் நுதலில் தோய,
சென்று அடி பணிந்து, 'மண்ணும் தேவரும் திசையும் உட்க,
வென்றி அன்று எனினும், வல்லே விரைந்து நாம் போகி, வீரக்
குன்று அன குரங்கைப் பற்றிக் கொணர்தும்' என்று இசைத்துப் போனூர். 2-1

அதுபொழுது, அவர் அது கண்டார்; அடு படை பலவும் எறிந்தார்;
கதிகொடு சிலவர் தொடர்ந்தார்; கணே பலர் சிலேகள் பொழிந்தார்;
குதிகொடு சிலவர் எழுந்தே குறுகினர்; கதைகொடு அறைந்தார்;
மதியொடு சிலவர் வளேந்தார்; மழு, அயில், சிலவர் எறிந்தார். 24-1

அனுமனும், அவர் விடு படையால், அவர் உடல் குருதிகள் எழவே,
சின அனல் எழ, ஒரு திணி மா மரம்அதில் உடல் சிதறிடவும்
தனுவொடு தலே துகள்படவும், சர மழை பல பொடிபடவும்,
தினவு உறு புயம் ஒடிபடவும், திசைதிசை ஒரு தனி திரிவான். 24-2

உரைத்த எண்பதினுயிர கோடி கிங்கரரோடு
இரைத்து வந்த மாப் பெரும் படை அரக்கர் எண்ணிலரைத்
தரைத்தலத்தின் இட்டு அரைத்து, ஒரு தமியன் நின்றது கண்டு,
உருத்து அவ் எண்பதினுயிர கோடியர் உடன்ருர். 39-1

சினந்து மற்று அவர், தீ எழப் படைக்கலம் சிதறி,
கனம் துவன்றியது என, கரு மலே என, கடல் போல்—
அனந்தனும் தலே துளக்குற, அமரர்கள் அரவின்
மனம் துளக்குற, வளேத்தனர்,—எண் திசை மருங்கும். 39-2

எடுத்து எறிந்தனர் எழு மழுச் சிலர்; சிலர் நெருக்கித்
தொடுத்து எறிந்தனர் சூலங்கள்; சுடு கதைப் படையால்
அடித்து நின்றனர் சிலர்; சிலர் அருஞ் சிலேப் பகழி
விடுத்து நின்றனர்—வெய்யவர் விளேந்த வெஞ் செருவே. 39-3

ஒழிந்திடும் கடை உகத்தினில் உற்ற கார்இனங்கள்
வளைந்து பொன் கிரிமேல் விழும் இடி என, மறவோர்
பொழிந்த பல் படை யாவையும் புயத்திடைப் பொடிபட்டு
அழுந்த, மற்றவரோடும் வந்து அடுத்தனன், அனுமன். 39-4

'கட்டும்' என்றனர்; 'குரங்கு இது கடிய கைப் படையால்
வெட்டும்' என்றனர்; விழி வழி நெருப்பு உக, விறலோர்
கிட்டி நின்று அமர் விளைத்தனர்; மாருதி கிளர் வான்
முட்டும் மா மரம் ஒன்று கொண்டு, அவருடன் முனைந்தான்.
39-5

தலை ஒடிந்திட அடித்தனன், சிலர்தமை; தாளின்
நிலை ஒடிந்திட அடித்தனன்; சிலர்தமை; நெருக்கிச்
சிலை ஒடிந்திட அடித்தனன், சிலர்தமை; வயப் போர்க்
கலை ஒடிந்திட அடித்தனன், அரக்கர்கள் கலங்க. 40-1

என்றலும் அரக்கர் வேந்தன் எரி கதிர் என்ன நோக்கி,
கன்றிய பவழச் செவ் வாய் எயிறு புக்கு அழுந்தக் கவ்வி,
ஒன்று உரையாடற்கு இல்லான், உடலமும் விழியும் சேப்ப,
நின்ற வாள் அரக்கர்தம்மை நெடிதுற நோக்கும்காலை. 61-1

8　　　　　சம்புமாலி வதைப் படலம்

அது கண்டு அரக்கன் சினம் திருகி, ஆடற் பகழி அறுநூறு
முதிரும் வயப் போர் மாருதிதன் புயத்தில் மூழ்க விடுவித்தான்;
புதையுண்டு உருவிப் புறம் போக, புழுங்கி அனுமன் பொடி எழும்பக்
குதிகொண்டு, அவன் தேர் விடும் பாகன் தலையில் சிதறக் குதித்தனன்.
ஆல். 45-1

9　　　　　பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம்

என்று அவர் ஏவு சரங்கள் இறுத்தே,
'பொன்றுவிர் நீர்; இது போது' என, அங்கு ஓர்
குன்று இரு கைக் கொடு எறிந்து, அவர் கொற்றம்
இன்று முடிந்தது எனத் தனி ஆர்த்தான். 57-1

அப்பொழுது அங்கு அவர் ஆயிர கோடி
வெப்பு அடை வெஞ் சரம் வீசினர்; வீசி,
துப்புறு வெற்புஅதனைத் துகள் செய்தே:
மெய்ப்படு மாருதிமேல் சரம் விட்டார். 57-2

விட்ட சரத்தை விலக்கி, அ(வ்) வீரன்,
வட்ட விசும்புறு மா மரம் வாங்கித்
தொட்டு எறிதற்கு மு(ன்)னே, துகளாகப்
பட்டிட, வெய்யவர் பாணம் விடுத்தார். 57-3

10 அக்ககுமாரன் வதைப் படலம்

தடுவையின் மரங்களோடு சகடைகள் திமிலை தாக்க
உடுஇனம் ஆனது எல்லாம் உதிர்ந்த, பூ உதிர்ந்தது என்ன;
அடு புலி அனைய வீரர் அணிகல ஆர்ப்பும், ஆனை
நெடு மணி முழக்கும், ஓங்கி, மண்ணுலகு அதிர்ந்தது அன்றே. 12-1

பத்தியில் தேர்கள் செல்ல, பவளக் கால் புடைகள் சுற்ற,
முத்தினில் கவிகை சூழ, முகில் என முரசம் ஆர்ப்ப,
மத்த வெங் கரிகள் யாவும் மழை என இருண்டு தோன்ற,
தத்திய பரிகள் தன்னின் சாமரை தழைப்ப,—போனான். 15-1

தீய வல் அரக்கர்தம்மில் சிலர் சிலர் செம் பொற் சின்னம்
வாயின் வைத்து ஊத, வீரர் வழி இடம் பெறாது செல்ல,
காயும் வெங் களிறு, காலாள் கடும் பரி, கடுகிச் செல்ல,
நாயகன் தூதன்தானும் நோக்கினன்; நகையும் கொண்டான். 16-1

புலிப் போத்தின் வயவர் எல்லாம்—பொரு கரி, பரி, தேர், பொங்க,
கலித்தார்கள் உம்பர் ஓட, கடையுகத்து எறியும் காலின்
ஒலித்து, ஆழி உவாவுற்றென்ன உம்பர் தோரணத்தை முட்ட—
வலித்தார் திண் சிலைகள் எல்லாம்; மண்டின சரத்தின் மாரி. 23-1

எடுத்தனன் எழு ஒன்று; அங்கை எடுத்து இகல் அரக்கர் சிந்தப்
பொடித்தனன்; இரதம், வாசி, பொரு களிறு, இதனை எல்லாம்
முடித்தனன், நொடிப்பில்; பின்னும், மூசு போர் அரக்கர் வெள்ளம்
அடுத்து அமர் கோல, மேன்மேல் அடு படை தூவி ஆர்த்தார். 24-1

செறி நாண் உரும் ஒலி கொண்டான்; ஒருபது
திசைவாய் கிழிபட அழல்கின்றான்;
'இறுவாய், இது பொழுது' என்றான்; எரி கணை
எழு கார் மழை பொழிவது போல,
பொறிவாய் திசைதொறும் மின் தாரையின் நிலை
பொலியச் சினமொடு பொழிகின்றான்;
உறு மாருதி உடல் உக வெங் குருதிகள்
ஒழியாது, அவனொடு மலைவுற்றான். 32-1

மலைபோல் உறு புய வலி மாருதி சினம்
வந்து ஏறிட, எந்திரமும் தேர்த்
தொலையாது அவன் விடு சர மாரிகள் பல
துண்டப்படும் வகை மிண்டி, தன்
வலி சேர் கரம்அதில் எழுவால் முழுதையும்
மண்டித் துகள் பட மடிவித்தான்;
புலிபோல் அடு சின நிருதன் கண்டு அழல்
பொங்கிப் பொரு சிலை விளைவித்தான். 32-2

'மாய்ந்தான், மாருதி கையால், அகிலமும்
உடையான் மகன்' என வானோர் கண்டு,
ஒய்ந்தார்இலர், குதி கொண்டார்; உவகையின்
ஒழியா நறு மலர் சொரிகின்றார்;
சாய்ந்தார் நிருதர்கள் உள்ளார் தமர் உடல்
இடறித் திரைமிசை விழ ஓடித்
தேய்ந்தார் சிலர்; சிலர் பிடரியில் குதியடி
பட ஓடினர்; சிலர் செயல் அற்றார். 38-1

இன்னன நிகழ்வுழி, இராக்கதக் குழாம்
மன்னிய சோதியும், அரக்கன் மைந்தனும்,
தன் நிகர் அனுமனால் இறந்த தன்மையை
முன்னினர் சொல, அவன் முன்பு கேட்டனன். 47-1

அவ் வகை கண்டவர் அமரர் யாவரும்,
'உய்வகை அரிது' என ஓடி, மன்னவன்
செவ் அடிஅதன்மிசை வீழ்ந்து செப்பினர்,
எவ் வகைப் பெரும் படை யாவும் மாய்ந்ததே. 47-2

ஈது மற்று இசைவுற, இது கண்டு ஏங்கியே,
மா துயரத்தொடு மறுகு நெஞ்சுடைத்
தூதர் உற்று ஓடினர்; தொழுது, மன்னனுக்கு
ஓதினர்; ஓதல் கேட்டு, உளம் துளங்கினன். 47-3

நாடினர்; நாடியே, நனி வரும் கொம்பு அனார்
வாடினர்; கணவர்தம் மார்பு உறத் தழுவியே
வீடினர்; அவ் வயின், வெருவி விண்ணவர்கள்தாம்
ஓடினர்; அரசன்மாட்டு அணுகி நின்று, உரை செய்வார்: 47-4

' ''மைந்தனை மடித்தது குரங்கு'' என்று ஓதவும்
வந்தது போலும், நம் வாழ்வு நன்று!' என,
சிந்தையின் அழன்று, எரி விழித்து, 'சென்று, நீர்
இந்திரன் பகைஞனைக் கொணருவீர்' என்றான். 49-1

என்றலும், ஏவலுக்கு உரியர் ஓடியே
சென்று, மற்று அவன் அடி பணிந்து, தீமை வந்து
ஒன்றிய திறங்களும் உரைத்து, 'நுந்தையும்
இன்று உனைக் கூவினன்' எனவும் சொல்லினர். 49-2

11 பாசப் படலம்

என்றே, 'இவன் இப்பொழுது என் கையினுல் மடிந்தால்,
நன்றே மலர்மேல் உறை நான்முகன் ஆதி தேவர்,
''பொன்றேம் இனி என்றும்; இருந்து உயிர் போற்றுதற்கு
நின்றே துயர் தீர நிறுத்தினன்'' என்ப மன்னே.' 50-1

எழுந்தான்; எழுந்த பொழுது, அங்கு அரக்கரும் எண் இல் கோடி
பொழிந்தார் படைகள்; அவை யாவையும் பொடிந்து சிந்திக்
கழிந்து ஓடிட, தன் கை மராமரம் கொண்டு வீசி,
செழுந் தார்ப் புயத்து அண்ணல் செறுத்து, உடன் மோதலுற்ருன்.
53-1

செறுத்து எழுந்திடும் அரக்கர்கள் திசை திசை நெருக்கி,
மறித்து வெஞ் சமர் மலைதலும், மாருதிக் கடவுள்
கறுத்து வஞ்சகர் சிரத்தொடு கரம் புயம் சிதறிப்
பொறித் தெறித்திடப் புடைத்தனன், பொரு பணை மரத்தால்.
59-1

புகைந்து அரக்கர்கள் விடும் கொடும் படைகளைப் பொறியின்
தகைந்து, மற்று அவர் உடல்களைத் தலைகளைச் சிதறி,
மிகும் திறல் கரி, பரி, மணித் தேர், இவை விளிய,
புகுந்து அடித்தனன், மாருதி; அனைவரும் புரண்டார். 59-2

எடுத்து நாண் ஒலி எழுப்பினன்; எண் திசைக் கரியும்
படித் தலங்களும் வெடி பட, பகிரண்டம் உடைய,
தொடுத்த வானவர் சிரதலம் துளங்கிட, சினம் கொண்டு
அடுத்து, அம் மாருதி அயர்ந்திட, அடு சரம் துரந்தான். 71-1

12 பிணி வீட்டு படலம்

இனையன பற்பலர் இசைப்ப, வெந் திறல்
அனுமனை அமர்க் களம்நின்று, வஞ்சகர்
புனை திரு நகரிடைக் கொண்டு போதலை
நினையினர், நெடிதுற நெருக்கி நேர்ந்துளார். 17-1

என்னக் கேட்ட அரக்கனுக்கு ஈறு இலாத்
தன் ஓர் ஆற்றலின் மாருதி சாற்றுவான்:
'என் ஓர் நாயகன் ஏவலின், வாரிதி-
தன்னைத் தாண்டி வந்தேன், உனைக் காணவே.' 108-1

தன் இறைக்கு உறுகண் வெய்யோர்தாம் இயற்றலும் கேட்டு, 'இன்னே,
அன்னவர்க்கு இறுதி ஆக, அணி நகர் அழிப்பல்' என்னு,
செந் நிறச் சிகைய வெம்போர் மழு, பின்னர்ச்சேறல் ஒக்கும்—
அல் நிறத்து அண்ணல் தூதன் அனல் கெழு கொற்ற நீள் வால்.
135-1

உகக் கடை, உலகம் யாவும் உணங்குற, ஒரு தன் நாட்டம்
சிகைக் கொழுங் கனலை வீசும் செயல் முனம் பயில்வான் போல,
மிகைத்து எழு தீயர் ஆயோர் விரி நகர் வீய; போர் வால்—
தகைத்தல் இல் நோன்மை சாலும் தனி வீரன்—சேணில் உய்த்தான். 136-1

13 இலங்கை எரியூட்டு படலம்

தெய்வ நாயகி கற்பு எனும் செந் தழல்
பெய்து மாருதி வாலிடைப் பேணியே,
பொய் கொள் வஞ்சகப் புல்லர் புரம் எலாம்
வெய்தின் உண்ட தகைமை விளம்புவாம்.

['கொடியைப் பற்றி' என்ற பாட்டின் முன், இப் படலத்தின் முதற் செய்யுளாக உள்ளது.]

தேர் எரிந்தன; எரிந்தன திரள் பரி எவையும்;
தார் எரிந்தன; எரிந்தன தருக்கு உறு மதமா;
நீர் எரிந்தன; எரிந்தன நிதிக் குவை; இலங்கை
ஊர் எரிந்தன; எரிந்தன அரக்கர்தம் உடலம். 37-1

எரிந்த மாளிகை; எரிந்தன இலங்கு ஒளிப் பூண்கள்;
எரிந்த பூந் துகில்; எரிந்தது முரசுஇனம் முதலாய்;
எரிந்த மா மணிப் பந்தர்கள்; எரிந்தது கடி கா;
எரிந்த சாமரை; எரிந்தது வெண் குடைத் தொகுதி. 37-2

ஆடு அரங்குகள் எரிந்தன; அரக்கியர் சிறுவ-
ரோடு எரிந்தனர்; உலப்பில் பல் கொடிகளும் எரிந்த;
தேடு அரும் மணிச் சிவிகையோடு அருந் திறல் அரக்கர்
வீடு எரிந்தன; எரிந்திடாது இருந்தது என், வினவில்? 37-3

இனைய காலையில் மயனும் முன் அமைத்ததற்கு இரட்டி
புனைய, மாருதி நோக்கினன், இன்னன புகல்வான்:
'வனையும் என் உருத் துவசம் நீ பெறுக' என, மகிழ்வோடு
அனையன் நீங்கிட, அனலியும் மறுபடி உண்டான். 37-4

'தா இல் மேலவர்க்கு அருந் துயர் விளைத்திடின், தமக்கே
மேவும், அத் துயர்' எனும் பொருள் மெய்யுற, மேல்நாள்
தேவர்தம் பதிக்கு இராவணன் இட்ட செந் தழல்போல்,
ஓவிலாது எரித்து உண்டமை உரைப்பதற்கு எளிதோ? 43-1

மற்று ஒரு கோடியர் வந்தார்;
உற்று எதிர் ஓடி உடன்றார்;
கற்று உறு மாருதி காய்ந்தே,
சுற்றினன் வால்கொடு, தூங்க. 58-1

உற்றவர் யாரும் உலந்தார்;
மற்று அதுபோதினில் வானோர்
வெற்றி கொள் மாருதிமீதே
பொன் தரு மா மலர் போர்த்தார். 60-1

'வன் திறல் மாருதி கேண்மோ!
நின்றிடின், நீ பழுது; இன்றே
சென்றிடுவாய்!' என, தேவர்
ஒன்றிய வானில் உரைத்தார். 60-2

விண்ணவர் ஓதிய மெய்ம்மை
எண்ணி, 'இராமனை இன்றே
கண்ணுறலே கடன்' என்று, ஆங்கு
அண்ணலும் அவ் வயின் மீண்டான். 60-3

வாலிதின் ஞான வலத்தால்,
மாலுறும் ஐம் பகை மாய்த்தே,
மேல் கதி மேவுறும் மேலோர்
போல், வய மாருதி போனான். 63-1

14 திருவடி தொழுத படலம்

போயினர் களிப்பினோடும், புங்கவன் சிலையின்நின்றும்
ஏயின பகழி என்ன எழுந்து, விண் படர்ந்து, தாவி,
காய் கதிர்க் கடவுள், வானத்து உச்சியில் கலந்த காலை,
ஆயின வீரரும் போய், மதுவனம்அதில் இறுத்தார். 11-1

'''ஏத நாள் இறந்த சால'' என்பது ஓர் வருத்தம் நெஞ்சத்து
ஆதலான், உணர்வு தீர்ந்து வருந்தினம், அளியம்; எம்மைச்
சாதல் தீர்த்து அளித்த வீர! தந்தருள் உணவும்' என்ன,
'போதும் நாம், வாலி சேய்பால்' என்று, உடன் எழுந்து போனார். 11-2

அங்கதன்தன்னை அண்மி, அனுமனும் இரு கை கூப்பி,
'கொங்கு தங்கு அலங்கல் மார்ப! நின்னுடைக் குரக்குச்சேனை,
வெங் கதம் ஒழிந்து சால வருந்தின, வேடை ஓடி;
இங்கு, இதற்கு அளித்தல் வேண்டும், இருல் உமிழ் பிரசம்' என்றான். 11-3

'நன்று' என, அவனும் நேர்ந்தான்; நரலையும் நடுங்க ஆர்த்து,
சென்று, உறு பிரசம் தூங்கும் செழு வனம் அதனினூடே,
ஒன்றின் முன் ஒன்று, பாயும்; ஒடிக்கும்; மென் பிரசம் எல்லாம்
தின்று தின்று உவகை கூரும்—தேன் நுகர் அளியின் மொய்த்தே. 11-4

ஒருவர் வாய்க் கொள்ளும் தேனை ஒருவர் உண்டு ஒழிவர்; உண்ண
ஒருவர் கைக் கொள்ளும் தேனை ஒருவர் கொண்டு ஓடிப் போவர்;
ஒருவரோடு ஒருவர் ஒன்றத் தழுவுவர்; விழுவர்; ஓடி
ஒருவர்மேல் ஒருவர் தாவி ஒல்லென உவகை கூர்வார். 11-5

இன்னன நிகழும்காலை, எரி விழித்து, எழுந்து சீறி,
அந் நெடுஞ் சோலை காக்கும் வானரர் அவரை நோக்கி,
'மன் நெடுங் கதிரோன் மைந்தன் ஆணையை மறுத்து, நீயிர்,
என் நினைத்து என்ன செய்தீர்? நும் உயிர்க்கு இறுதி' என்ன. 11-6

'முனியுமால் எம்மை, எம் கோன்' என்று, அவர் மொழிந்து போந்து,
'கனியும் மா மதுவனத்தைக் கட்டழித்திட்டது, இன்று,
நனி தரு கவியின் தானை, நண்ணலார் செய்கை நாண;
இனி எம்மால் செயல் இன்று' என்னா, ததிமுகற்கு இயம்பினரே. 11-7

கேட்டவன், 'யாவரே அம் மதுவனம் கேடு சூழ்ந்தார்?
காட்டிர்' என்று எழுந்தான்; அன்னார், 'வாலிசேய் முதல கற்றோர்
ஈட்டம் வந்து இறுத்தது ஆக, அங்கதன் ஏவல்தன்னால்,
மாட்டின, கவியின் தானை, மது வளர் உலவை ஈட்டம்.' 11-8

'உரம் கிளர் மதுகையான்தன் ஆணையால், உறுதி கொண்டே,
குரங்குஇனம்தம்மை எல்லாம் விலக்கினம்; கொடுமை கூறி;
கரங்களால் எற்ற நொந்தேம்; காவலோய்!' என்னலோடும்,
'தரம் கிளர் தாதை பட்டது அறிந்திலன் தநயன் போலும்.' 11-9

என உரைத்து, அசனி என்ன எழுந்து, இரைத்து, இரண்டு கோடி
கனை குரல் கவியின் சேனை 'கல்' எனக் கலந்து புல்ல,
புனை மதுச் சோலை புக்கான்; மது நுகர் புனிதச் சேனை,
அனகனை வாழ்த்தி, ஓடி அங்கதன் அடியில் வீழ்ந்த. 11-10

'இந்திரன் வாலிக்கு ஈந்த இன் சுவை மதுவின் கானம்;
அந்தரத்தர்வக்கும் நோக்கற்கு அரிய என் ஆணைதன்னைச்
சிந்தினை; கதிரோன் மைந்தன் திறலினை அறிதி அன்றே?
மந்தரம் அனைய தோளாய்! இற்றது உன் வாழ்க்கை இன்றே. 11-11

'மதுவனம்தன்னை இன்னே மாட்டுவித்தனை, நீ' என்னா,
கதுமென வாலி சேய்மேல் எறிந்தனன், கருங் கற் பாறை;
அதுதனைப் புறங்கையாலே அகற்றி, அங்கதனும் சீறி,
ததிமுகன்தன்னைப் பற்றிக் குத்தினன், தடக் கைதன்னால். 11-12

குத்தினன் என்னலோடும், குலைந்திடும் மெய்யன் ஆகி,
மற்று ஒரு குன்றம்தன்னை வாங்கினன், மதுவனத்தைச்
செற்றனன்மேலே ஏவிச் சிரித்தனன், ததிமுகன்தான்;
'இற்றனன், வாலி சேய்' என்று இமையவர் இயம்புங்காலை, 11-13

ஏற்று ஒரு கையால் குன்றை இருந் துகள் ஆக்கி, மைந்தன்
மாற்று ஒரு கையால் மார்பில் அடித்தலும், மாண்டான் என்ன,
கூற்றின் வாய் உற்றான் என்ன, உம்பர் கால் குலையப் பானு
மேல் திசை உற்றான் என்ன, விளங்கினன், மேரு ஒப்பான். 11-14

வாய் வழிக் குருதி சோர, மணிக் கையால் மலங்க மோதி,
'போய்மொழி, கதிரோன் மைந்தற்கு' என்று, அவன்தன்னைப் போக்கி,
தீ எழும் வெகுளி பொங்க, 'மற்று அவன் சேனைதன்னை,
காய் கனல் பொழியும் கையால் குத்துதிர், கட்டி' என்றான். 11-15

பிடித்தனர்; கொடிகள்தம்மால் பிணித்தனர்; பின்னும் முன்னும்
இடித்தனர், அசனி அஞ்ச, எறும் வலிக் கரங்கள் ஒச்சி;
துடித்தனர், உடலம் சோர்ந்தார்; 'சொல்லும் போய், நீரும்' என்னா,
விடுத்தனன், வாலி மைந்தன்; விரைவினுல் போன வேலை, 11-16

அலை புனல் குடையுமாபோல், மதுக் குடைந்து ஆடி, தம்தம்
தலைவர்கட்கு இனிய தேனும் கனிகளும் பிறவும் தந்தே,
உலைவுறு வருத்தம் தீர்ந்திட்டு, உபவனத்து இருந்தார்; இப்பால்
சிலை வளைத்து உலவும் தேரோன் தெறும் வெயில் தணிவு பார்த்தே. 11-17

'சேற்று இள மரை மலர்த் திருவைத் தேர்க!' எனக்
காற்றின் மா மகன் முதல் கவியின் சேனையை,
நாற்றிசை மருங்கினும் ஏவி, நாயகன்-
தேற்றினன் இருந்தனன்—கதிரின் செம்மலே. 12-1

நோக்கின் தென் திசை அல்லது நோக்குறான்,
ஏக்குற்று ஏக்குற்று இரவி குலத்து உளான்,
'வாக்கில் தூய அனுமன் வரும்' எனா,
போக்கிப் போக்கி, உயிர்க்கும் பொருமலான். 14-1

என்று உரைத்து, இடர் உழந்து இருக்கும் ஏல்வையின்,
வன் திறல் ததிமுகன் வானரேசன் முன்,
தன் தலை பொழிதரு குருதிதன்னொடும்,
குன்று எனப் பணிந்தனன், இரு கை கூப்பியே. 19-1

எழுந்து நின்று, ''ஐய! கேள், இன்று நாளையோடு
அழிந்தது மதுவனம் அடைய' என்றலும்,
வழிந்திடு குருதியின் வதனம் நோக்கியே,
'மொழிந்திடு, அங்கு யார் அது முடித்துளோர்?' என, 19-2

'நீலனும், குமுதனும், நெடிய குன்றமே
போல் உயர் சாம்பனும், புணரி போர்த்தென
மேல் எழு சேனையும், விரைவின் வந்து உரு,
சால்புடை மதுவனம்தனை அழிப்பவே. 19-3

தகைந்த அச் சேனையைத் தள்ளி, நின்னையும்,
இகழ்ந்து உரைத்து, இயைந்தனன் வாலி சேய்; மனக்கு
உகந்தன புகன்ற அவ் உரை பொருமையே,
புகைந்து, ஒரு பாறையின் புணர்ப்பு நீக்கியே. 19-4

'இமைத்தல் முன், ''வாலி சேய், எழில் கொள் யாக்கையைச்
சமைத்தி'' என்று எறிதர, புறங்கையால் தகைந்து,
அமைத்தரு கனல் என அழன்று, எற் பற்றியே
குமைத்து, உயிர் பதைப்ப, ''நீ கூறு போய்'' என்றான். 19-5

'இன்று நான் இட்ட பாடு இயம்ப முற்றுமோ?'
என்று உடல் நடுக்கமோடு இசைக்கும் ஏல்வையில்,
அன்று அவன் உரைத்தல் கேட்டு, அருக்கன் மைந்தனும்
ஒன்றிய சிந்தையில் உணர்ந்திட்டான்அரோ. 19-6

ஏம்பலோடு எழுந்து நின்று, இரவி கான்முளை,
பாம்பு அணை அமலனை வணங்கி, '''பைந் தொடி
மேம்படு கற்பினள்'' என்னும் மெய்ம்மையைத்
தாம் புகன்றிட்டது, இச் சலம்' என்று ஓதினான். 19-7

'பண் தரு கிளவியாள்தன்னைப் பாங்குறக்
கண்டனர்; அன்னது ஓர் களிப்பினால், அவர்
வண்டு உறை மதுவனம் அழித்து மாந்தியது;
அண்டர் நாயக! இனி அவலம் தீர்க' என்றான். 19-8

'வந்தனர் தென் திசை வாவினார்' என,
புந்தி நொந்து, 'என்னைகொல் புகலற் பாலர்?' என்று,
எந்தையும் இருந்தனன்; இரவி கான்முளை,
நொந்த அத் ததிமுகன்தன்னை நோக்கியே, 19-9

'யார் அவண் இறுத்தவர், இயம்புவாய்?' என,
'மாருதி, வாலி சேய், மயிந்தன், சாம்பவன்,
சோர்வு அறு பதினெழுவோர்கள் துன்னினர்,
ஆர்கலி நாண வந்து ஆர்க்கும் சேனையார்.' 19-10

என்று, அவன் உரைத்த போது, இரவி காதலன்,
வன் திறல் ததிமுகன் வதனம் நோக்கியே,
'ஒன்று உனக்கு உணர்த்துவது உளது; வாலி சேய்,
புன் தொழில் செய்கை சேர் புணர்ப்பன் அல்லனால்.' 19-11

'கொற்றவன் பணி தலைக்கொண்டு, தெண் திரை
சுற்றிய திசை எலாம் துருவி, தோகையைப்
பற்றிய பகைஞரைக் குடிந்து, பாங்கர் வந்து
உற்றனர்; அவரை யாம் உரைப்பது என்னையோ? 19-12

'அன்றியும், வாலி சேய் அரசு அது; ஆதலின்,
பின்றுதல் தீதுஅரோ; பிணங்கும் சிந்தையாய்!
ஒன்றும் நீ உணரலை; உறுதி வேண்டுமேல்,
சென்று, அவன்தனைச் சரண் சேர்தி, மீண்டு' என்றான். 19-13

என்ற அத் ததிமுகன் தன்னை, 'ஏனைய
வன் திறல் அரசு இளங் குரிசில் மைந்தனைப்
பின்றுதல் அவனை என் பேசற் பாற்று நீ;
இன்று போய், அவன் அடி ஏத்துவாய்' என்றான். 19-14

வணங்கிய சென்னியன்; மறைத்த வாயினன்;
உணங்கிய சிந்தையன்; ஒடுங்கும் மேனியன்;
கணங்களோடு ஏகி, அக் கானம் நண்ணினன்—
மணம் கிளர் தாரினன் மறித்தும் வந்துஅரோ. 19-15

கண்டனன் வாலி சேய்; கறுவு கைம்மிக,
'விண்டவன், நம் எதிர் மீண்டுளான்எனின்,
உண்டிடுகுதும் உயிர்' என்ன, உன்னினன்;
'தொண்டு' என, ததிமுகன், தொழுது தோன்றினன். 19-16

'போழ்ந்தன யான் செய்த குறை பொறுக்க!' என,
வீழ்ந்தனன் அடிமிசை; வீழ, வாலி சேய்,
தாழ்ந்து, கைப் பற்றி, மெய் தழீஇக்கொண்டு, 'உம்மை யான்
சூழ்ந்ததும் பொறுக்க!' என, முகமன் சொல்லினன். 19-17

'யாம் முதல் குறித்த நாள் இறத்தல் எண்ணியே
ஏமுற, துயர் துடைத்து, அளித்த ஏற்றம்போல்,
தாமரைக் கண்ணவன் துயரம் தள்ள, நீர்
போம்' என, தொழுது, முன் அனுமன் போயினன். 19-18

'வன் திறல் குரிசிலும் முனிவு மாறினன்;
வென்று கொள் கதிரும் தன் வெம்மை ஆறினன்'
என்றுகொண்டு, யாவரும், 'எழுந்து போதலே
நன்று' என, ஏகினர், நவைக்கண் நீங்கினர். 19-19

இப்புறத்து இராமனும், இரவி சேயினை
ஒப்புற நோக்கி. 'வந்துற்ற தானையர்;
தப்பு அறக் கண்டனம் என்பரோ? தகாது
அப்புறத்து என்பரோ? அறைதியால்!' என்றான். 19-20

வனை கருங் குழலியைப் பிரிந்த மாத் துயர்
அனகனுக்கு அவள் எதிர் அணைந்ததாம் எனும்
மன நிலை எழுந்த பேர் உவகை மாட்சி கண்டு,
அனுமனும் அண்ணலுக்கு அறியக் கூறுவான்: 23-1

'மாண் பிறந்து அமைந்த கற்பின் வாணுதல் நின்பால் வைத்த
சேண் பிறந்து அமைந்த காதல், கண்களின் தெவிட்டி, தீராக்
காண் பிறந்தமையால், நீயே, கண் அகன் ஞாலம்தன்னுள்,
ஆண் பிறந்து அமைந்த செல்வம் உண்டனையாதி அன்றே?
35-1

'அயிர்ப்பு இலர், காண்பார்; முன்னும் அறிந்திலர் எனினும், ஐய!—
எயில் புனை இலங்கை மூதூர் இந்திரன் யாக்கைக்கு ஏற்ற
மயில் புரை இயலினாரும், மைந்தரும், நாளும் அங்கே
உயிர்ப்பொடும், உயிரினோடும், ஊசல் நின்று ஆடுவாரும்.'
35-9

ஆயிடை, கவிகளோடும், அங்கதன் முதலினோர்
மேயினர், வணங்கிப் புக்கார், வீரனை, கவியின் வேந்தை;
போயின கருமம் முற்றிப் புகுந்தது ஓர் பொம்மல்தன்னால்,
சேயிரு மதியம் என்னத் திகழ்தரு முகத்தர் ஆனார். 47-1

நீலனை நெடிது நோக்கி, நேமியான் பணிப்பான்: 'நம்தம்-
பால் வரும் சேனைதன்னைப் பகைஞர் வந்து அடரா வண்ணம்,
சால்புற முன்னர்ச் சென்று, சரி நெறி துருவிப் போதி,
மால் தரு களிறு போலும் படைஞர் பின் மருங்கு சூழ.' 49-1

என்று உரைத்து எழுந்த வேலே, மாருதி இரு கை கூப்பி,
'புன் தொழில் குரங்கு எனது என் தோளிடைப் புகுது' என்ன,
தன் தலே படியில் தாழ்ந்தான்; அண்ணலும், சரணம் வைத்தான்;
வன் திறல் வாலி சேயும் இளவலே வணங்கிச் சொன்னன்:
49-2

'நீ இனி என்தன் தோள்மேல் ஏறுதி, நிமல!' என்ன,
வாய் புதைத்து இறைஞ்சி நின்ற வாலி காதலனே நோக்கி,
நாயகற்கு இளேய கோவும், 'நன்று' என அவன்தன் தோள்மேல்,
பாய்தலும், தகைப்பு இல் தானே படர் நெறிப் பரந்தது அன்றே. 49-3

கருடனில் விடையில் தோன்றும் இருவரும் கடுப்ப, காலின்
அருள் தரு குமரன் தோள்மேல், அங்கதன் அலங்கல் தோள்மேல்,
பொருள் தரும் வீரர் போத, பொங்கு ஒளி விசும்பில் தங்கும்
தெருள் தகு புலவர் வாழ்த்திச் சிந்தினர், தெய்வப் பொற் பூ.
49-4

'வையகம்அதனில் மாக்கள் மயங்குவர், வய வெஞ் சேனே
எய்திடின்' என்பது உன்னி, இராகவன் இனிதின் ஏவ,
பெய் கனி, கிழங்கு, தேன் என்று இனேயன பெறுதற்கு ஒத்த
செய்ய மால் வரையே ஆருச் சென்றது, தகைப்பு இல் சேனே.
49-5

'ஒன்றே' என்னின், ஒன்றே ஆம்;
'பல' என்று உரைக்கின், பலவே ஆம்;
'அன்றே' என்னின், அன்றே ஆம்;
'ஆமே' என்னின், ஆமே ஆம்;
'இன்றே' என்னின், இன்றே ஆம்;
'உளது' என்று உரைக்கின், உளதே ஆம்;
நன்றே, நம்பி குடி வாழ்க்கை!
நமக்கு இங்கு என்னே பிழைப்பு? அம்மா!

## 1 கடல் காண் படலம்

**எழுபது வெள்ளம் சேனை சூழ, இராமன் கடலைக் காணுதல்**

ஊழி திரியும் காலத்தும் உலையா
நிலைய உயர் கிரியும்,
வாழி வற்றா மறி கடலும், மண்ணும்,
வட பால் வான் தோய,
பாழித் தெற்கு உள்ளன கிரியும் நிலனும்
தாழ, பரந்து எழுந்த
ஏழு-பத்தின் பெரு வெள்ளம் மகர
வெள்ளத்து இறுத்ததால். 1

பொங்கிப் பரந்த பெருஞ் சேனை,
புறத்தும் அகத்தும், புடை சுற்ற—
சங்கின் பொலிந்த தகையாளைப்
பிரிந்த பின்பு, தமக்கு இனம் ஆம்
கொங்கின் பொலிந்த தாமரையின்
குழுவும் துயில்வுற்று இதழ் குவிக்கும்
கங்குல் பொழுதும், துயிலாத
கண்ணன்—கடலைக் கண்ணுற்றான். 2

**கடவுள் வாழ்த்து:** நம்பி - குண நிறைவுடையவன், இறைவன்; குடி வாழ்க்கை - நிலை, இயல்பு; நன்று - பெரிது.

**1:** 1. பாழி - பெருமை, பெருந்திசை யாகலின் பாழித் தெற்கு என்றார்.

திரைப் பரப்பில் திவலையும், தென்றலும்

'சேய காலம் பிரிந்து அகலத்
திரிந்தான், மீண்டும் சேக்கையின்பால்,
மாயன், வந்தான்; இனிவளர்வான்'
என்று கருதி, வரும் தென்றல்
தூய மலர்போல் நுரைத் தொகையும்
முத்தும் சிந்தி, புடை சுருட்டிப்
பாயல் உதறிப் படுப்பதே ஒத்த—
திரையின் பரப்பு அம்மா. 3

வழிக்கும் கண்ணீர் அழுவத்து
வஞ்சி அழுங்க, வந்து அடர்ந்த
பழிக்கும் காமன் பூங் கணைக்கும்
பற்று நின்றான் பொன் தோளை,
சுழிக்கும் கொல்லன் ஒல் உலையில்
துள்ளும் பொறியின் சுடும், அன்னோ—
கொழிக்கும் கடலின் நெடுந் திரைவாய்த்
தென்றல் தூற்றும் குறுந் திவலை. 4

நென்னல் கண்ட திருமேனி
இன்று பிறிது ஆய், நிலை தளர்வான்-
தன்னைக் கண்டும், இரங்காது
தனியே கதறும் தடங் கடல்வாய்,
பின்னல் திரைமேல் தவழ்கின்ற
பிள்ளைத் தென்றல், கள் உயிர்க்கும்
புன்னைக் குறும் பூ நறுஞ் சுண்ணம்
பூசாது ஒருகால் போகாதே. 5

கடற் கரையில் தோன்றிய பவளமும் முத்தும்

சிலை மேற்கொண்ட திரு நெடுந் தோட்கு
உவமை மலையும் சிறிது ஏய்ப்ப,
நிலை மேற்கொண்டு மெலிகின்ற
நெடியோன் தன்முன், படி ஏழும்
தலை மேல் கொண்ட கற்பினாள்
மணி வாய் என்ன, தனித் தோன்றி,
கொலை மேற்கொண்டு, ஆர் உயிர் குடிக்கும்
கூற்றம் கொல்லோ—கொடிப் பவளம்? 6

3. சேக்கை - படுக்கை; உதறிப் படுத்தல் - உதறி விரித்தல்; 4. பற்று - இலக்கு.

'தூரம் இல்லை, மயில் இருந்த
சூழல்' என்று மனம் செல்ல,
வீர வில்லின் நெடு மானம்
வெல்ல, நாளும் மெலிவானுக்கு,—
ஈரம் இல்லா நிருதரோடு என்ன
உறவு உண்டு உனக்கு?—ஏழை
மூரல் முறுவல் குறி காட்டி,
முத்தே! உயிரை முடிப்பாயோ? 7

**கடலின் தோற்றம்**

'இந்து அன்ன நுதல் பேதை
இருந்தாள், நீங்கா இடர்; கொடியேன்
தந்த பாவை, தவப் பாவை,
தனிமை தகவோ?' எனத் தளர்ந்து,
சிந்துகின்ற நறுந் தரளக் கண்ணீர்
ததும்பி, திரைத்து எழுந்து,
வந்து, வள்ளல் மலர்த் தாளின்
வீழ்வது ஏய்க்கும்—மறி கடலே. 8

பள்ளி அரவின் பேர் உலகம்
பசுங் கல் ஆக, பனிக் கற்றைத்
துள்ளி நறு மென் புனல் தெளிப்ப,
தூ நீர்க் குழவி முறை சுழற்றி,
வெள்ளி வண்ண நுரைக் கலவை,
வெதும்பும் அண்ணல் திருமேனிக்கு
அள்ளி அப்ப, திரைக் கரத்தால்
அரைப்பது ஏய்க்கும்—அணி ஆழி. 9

கொங்கைக் குயிலைத் துயர் நீக்க,
இமையோர்க்கு உற்ற குறை முற்ற,
வெங் கைச் சிலையன், தூணியினன்,
விடாத முனிவின் மேல்செல்லும்
கங்கைத் திரு நாடு உடையானைக்
கண்டு, நெஞ்சம் களி கூர,
அம் கைத் திரள்கள் எடுத்து ஓடி,
ஆர்த்தது ஒத்தது—அணி ஆழி. 10

9. பள்ளி அரவு - படுக்கையாகிய பாம்பு, ஆதிசேடன்.

**மேல் விளைவு எண்ணி இராமன் சிந்தித்தல்**

இன்னது ஆய கருங் கடலை
எய்தி, இதனுக்கு எழு மடங்கு
தன்னது ஆய நெடு மானம்,
துயரம், காதல், இவை தழைப்ப,
'என்னது ஆகும், மேல் விளைவு?' என்று
இருந்தான், இராமன், இகல் இலங்கைப்
பின்னது ஆய காரியமும்
நிகழ்ந்த பொருளும் பேசுவாம்: 11

## 2 இராவணன் மந்திரப் படலம்

**எரியுண்ட இலங்கையை மயன் புதுப்பித்தல்**

பூ வரும் அயனொடும் புகுந்து, 'பொன் நகர்,
மூவகை உலகினும் அழகு முற்றுற,
ஏவு' என இயற்றினன் கணத்தின் என்பரால்—
தேவரும் மருள்கொள, தெய்வத் தச்சனே. 1

பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை
நல் நகர் நோக்கினன், நாகம் நோக்கினன்,
'முன்னையின் அழகு உடைத்து!' என்று, மொய் கழல்
மன்னனும், உவந்து, தன் முனிவு மாறினன். 2

முழுப் பெருந் தனி முதல் உலகின் முந்தையோன்
எழில் குறி காட்டி நின்று, இயற்றி ஈந்தனன்;—
பழிப்ப அரும் உலகங்கள் எவையும் பல் முறை
அழித்து அழித்து ஆக்குவாற்கு அரிது உண்டாகுமோ? 3

திரு நகர் முழுவதும் திருந்த நோக்கிய,
பொரு கழல், இராவணன் அயற்குப் பூசனை
வரன்முறை இயற்றி, 'நீ வழிக்கொள்வாய்' என்றான்—
அரியன தச்சற்கும் உதவி, ஆணையால். 4

2: 2. நாகம் - வானத்தில் உள்ள நகரம், அமராவதி; 3. எழில் குறி - அழகிற்கு உரிய வரையறை.

### இராவணன் ஆலோசனை மண்டபத்து வீற்றிருத்தல்

அவ் வழி, ஆயிரம் ஆயிரம் அவிர்
செவ் வழிச் செம் மணித் தூணம் சேர்த்திய
அவ் எழில் மண்டபத்து, அரிகள் ஏந்திய
வெவ் வழி ஆசனத்து, இனிது மேவினன். 5

வரம்பு அறு சுற்றமும், மந்திரத் தொழில்
நிரம்பிய முதியரும், சேனை நீள் கடல்
தரம் பெறு தலைவரும், தழுவத் தோன்றினன்—
அரம்பையர் கவரியோடு ஆடும் தாரினன். 6

### இராவணன், முனிவர் முதலாயினாரை விலக்குதல்

'முனைவரும், தேவரும், மற்றும் உற்றுளோர்
எனைவரும், தவிர்க!' என ஏய ஆணையான்,
புனை குழல் மகளிரோடு இளைஞர்ப் போக்கினன்—
நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினன். 7

'பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர்,
தண்டல் இல் மந்திரத் தலைவர், சார்க!' எனக்
கொண்டு உடன் இருந்தனன்—கொற்ற ஆணையால்
வண்டொடு காலையும் வரவு மாற்றினன். 8

ஆன்று அமை கேள்வியர்எனினும், ஆண்தொழிற்கு
ஏன்றவர் நண்பினர்எனினும், யாரையும்,
வான் துணைச் சுற்றத்து மக்கள் தம்பியர்
போன்றவர் அல்லரை, புறத்துப் போக்கினன். 9

### திசைகளில் வீரரை நிறுவுதல்

திசைதொறும் நிறுவினன், உலகு சேரினும்
பிசை தொழில் மறவரை; பிறிது என் பேசுவ—
விசையுறு பறவையும், விலங்கும், வேற்றவும்,
அசைதொழில் அஞ்சின, சித்திரத்தினே? 10

### இராவணன் வகுத்த உரை

'தாழ்ச்சி இங்கு இதனின்மேல் தருவது என், இனி?
மாட்சி, ஓர் குரங்கினால் அழிந்த, மாநகர்;
ஆட்சியும், அமைவும், என் அரசும் நன்று!' எனா,
சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்: 11

6. தரம் - மேன்மை; 7. முனைவர் - முனிவர்; 8. கால் - காற்று;
9. ஆண்தொழில் - போர்த்தொழில்; 11. அமைவு - குண நிறைவு.

'சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்
கெட்டது, கொடி நகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்கணும்;
இட்டது இவ் அரியணை இருந்தது, என் உடல். 12

'ஊறுகின்றன கிணறு உதிரம்; ஒண் நகர்
ஆறுகின்றில தழல்; அகிலும் நாவியும்
கூறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு
நாறுகின்றது; நுகர்ந்திருந்தம், நாம் எலாம். 13

'மற்று இலது ஆயினும், ''மலைந்த வானரம்
இற்று, இலதாகியது'' என்னும் வார்த்தையும்
பெற்றிலம்; பிறந்திலம் என்னும் பேர் அலால்,
முற்றுவது என்? இனி, பழியின் மூழ்கினும்!' 14

படைத் தலைவர் பேச்சு

என்று அவன் இயம்பலும், எழுந்து இறைஞ்சினன்,
கன்றிய, கருங் கழல், சேனை காவலன்;
'ஒன்று உளது உணர்த்துவது; ஒருங்கு கேள்!' என,
நின்றனன், நிகழ்த்தினன், புணர்ப்பின் நெஞ்சினன்: 15

' ''வஞ்சனை மனிதரை இயற்றி, வாள் நுதல்,
பஞ்சு அன மெல் அடி, மயிலைப் பற்றுதல்
அஞ்சினர் தொழில்'' என அறிவித்தேன்; அது
தஞ்சு என உணர்ந்திலை—உணரும் தன்மையோய்! 16

'கரன் முதல் வீரரைக் கொன்ற கள்வரை,
விரி குழல் உங்கை மூக்கு அரிந்த வீரரை,
பரிபவம் செய்ஞ்ஞரை, படுக்கலாத நீ,
''அரசியல் அழிந்தது'' என்று அயர்தி போலுமால். 17

'தண்டம் என்று ஒரு பொருட்கு உரிய தக்கரைக்
கண்டவர், பொறுப்பரோ, உலகம் காவலர்?
வண்டு அமர் அலங்கலாய்! வணங்கி வாழ்வரோ,
விண்டவர் உறு வலி அடக்கும் வெம்மையோர்? 18

12. பரிபவம் - அவமானம்; 14. முற்றுவது - அடைவது; 15. புணர்ப்பு - சூழ்ச்சி; 16. தஞ்சு - பற்றுக்கோடு; 18. தண்டம் - தண்டனை; விண்டவர் - பகைவர்.

'செற்றநர், எதிர் எழும் தேவர், தானவர்,
கொற்றமும் வீரமும் வலியும் கூட்டு அற,
முற்றி மூன்று உலகுக்கும் முதல்வன் ஆயது,
வெற்றியோ? பொறைகொலோ? விளம்ப வேண்டுமால். 19

'விலங்கினர் உயிர் கெட விலக்கி, மீள்கலாது,
இலங்கையின் இனிது இருந்து, இன்பம் துய்த்துமேல்,—
குலம் கெழு காவல!—குரங்கின் தங்குமோ?
உலங்கும் நம்மேல் வரின், ஒழிக்கற்பாலதோ? 20

'போயின குரங்கினைத் தொடர்ந்து போய், இவண்
ஏயினர் உயிர் குடித்து, எவ்வம் தீர்கிலம்;
வாயினும் மனத்தினும் வெறுத்து வாழ்துமேல்,
ஓயும், நம் வலி' என, உணரக் கூறினன். 21

மகோதரன் பேச்சு

மற்று அவன் பின்னுற, மகோதரப் பெயர்க்
கல் தடந் தோளினன், எரியும் கண்ணினல்
முற்றுற நோக்கினன், 'முடிவும் அன்னதால்;
கொற்றவ! கேள்' என, இனைய கூறினன்: 22

'தேவரும் அடங்கினர்; இயக்கர் சிந்தினர்;
தா வரும் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்;
யாவரும், ''இறைவர்'' என்று இறைஞ்சும் மேன்மையர்
மூவரும் ஒதுங்கினர்—உனக்கு, மொய்ம்பினோய்! 23

'ஏற்றம் என் பிறிது, இனி—எவர்க்கும் இன் உயிர்
மாற்றுறும் முறைமை சால் வலியின் மாண்பு அமை
கூற்றுவன், ''தன் உயிர் கொள்ளும் கூற்று'' எனத்
தோற்று, நின் ஏவல் தன் தலையில் சூடுமால்? 24

'வெள்ளிஅம் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளி, விண் தொட எடுத்து, ஆர்த்த ஆற்றலாய்!
சுள்ளியில் இருந்து உறை குரங்கின் தோள் வலிக்கு
எள்ளுதி போலும், நின் புயத்தை, எம்மொடும்? 25

'மண்ணினும், வானினும், மற்றும் முற்றும் நின்
கண்ணினும் நீங்கினர் யாவர், கண்டவர்?
நண்ண அரும் வலத்தினர் யாவர், நாயக!
எண்ணிலர் இறந்தவர் எண்ணில் ஆவரோ? 26

25. சுள்ளி - மரத்தின் சிறு கிளை; 26. எண்ணிலர் - மதியாதவர்.

'இடுக்கு இவண் இயம்புவது இல்லை; ஈண்டு எனை
விடுக்குவையாம்எனின், குரங்கை வேர்அறுத்து,
ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு, உன் பகை
முடிக்குவென் யான்' என முடியக் கூறினான். 27

**வச்சிரதந்தன் கூற்று**

இச் சிரத்தவன் உரைத்து இறுக்கும் ஏல்வையின்,
வச்சிரத்துஎயிற்றவன் வல்லை கூறினான்,
அச் சிரத்தைக்கு ஒரு பொருள் இன்று, ஆயினும்,
பச்சிரத்தம் பொழி பருதிக் கண்ணினான். 28

' ''போய் இனி, மனிசரைக் குரங்கைப் பூமியில்
தேயுமின், கைகளால்; தின்மின்'' என்று எமை
ஏயினை இருக்குவது அன்றி, என், இனி
ஆயும் இது? எம்வயின் அயிர்ப்பு உண்டாம்கொலோ? 29

'எவ் உலகத்தும் நின் ஏவல் கேட்கிலாத்
தெவ்வினை அறுத்து, உனக்கு அடிமை செய்த யான்
தவ்வின பணி உளது ஆகத்தான்கொலோ,
இவ் வினை என்வயின் ஈகலாது?' என்றான். 30

**துன்முகன் கூற்று**

'நில், நில்' என்று, அவன்தனை விலக்கி, 'நீ இவை
என் முனும் எளியர்போல் இருத்தியோ?' எனா,
மன் முகம் நோக்கினன், வணங்கி, வன்மையால்,
துன்முகன் என்பவன், இனைய சொல்லினான்: 31

'திக்கயம் வலி இல; தேவர் மெல்லியர்;
முக்கணான் கயிலையும் முரண் இன்றாயது;
மக்களும் குரங்குமே வலியர்ஆம் எனின்,
அக்கட, இராவணற்கு அமைந்த ஆற்றலே! 32

'பொலிவது, பொதுவுற எண்ணும் புன் தொழில்
மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்
வலியினர்எனில், அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ—
ஒலி கழல் ஒருவ!—நம் உயிருக்கு அன்பினால்? 33

27. இடுக்கு - துன்பம்; 28. சிரத்தவன் - தலைமை வாய்ந்தவன், மகோதரன்; சிரத்தை - உறுதிமொழி; பச்சிரத்தம் - புதிய ரத்தம்; 29. அயிர்ப்பு - ஐயம்; 30. தவ்வின - தவறிய; 32. அக்கட - அதிசயம் என்று பொருள்படும் ஒரு திசைச்சொல்; 33. பொலிவது - வருங்கால நிகழ்ச்சி; பொது - நடுநிலை.

'கண்ணிய மந்திரக் கருமம் காவல!—
மண் இயல் மனிசரும், குரங்கும், மற்றவும்,
உண்ணிய அமைந்தன; உணவுக்கு உட்குமேல்,
திண்ணிய அரக்கரின் தீரர் யாவரே? 34

'எரி உற மடுப்பதும், எதிர்ந்துளோர் படப்
பொரு தொழில் யாவையும் புரிந்து, போவதும்
வருவதும், குரங்கு; நம் வாழ்க்கை ஊர் கடந்து,
அரிதுகொல், இராக்கதர்க்கு ஆழி நீந்துதல்? 35

'வந்து, நம் இருக்கையும், அரணும், வன்மையும்,
வெந் தொழில் தானையின் விரிவும், வீரமும்,
சிந்தையின் உணர்பவர் யாவரே சிலர்,
உய்ந்து தம் உயிர்கொடு இவ் உலகத்துள் உளார்? 36

'ஒல்வது நினையினும், உறுதி ஓரினும்,
வெல்வது விரும்பினும், வினையம் வேண்டினும்,
செல்வது அங்கு; அவருழைச் சென்று, தீர்ந்து அறக்
கொல்வது கருமம்' என்று உணரக் கூறினான். 37

**மாபெரும்பக்கன் பேச்சு**

காவலன் கண் எதிர், அவனைக் கை கவித்து,
'யாவது உண்டு, இனி நமக்கு?' என்னச் சொல்லினான்;
'கோவமும் வன்மையும் குரங்குக்கே' என,—
மாபெரும்பக்கன் என்று ஒருவன் வன்மையான். 38

'முந்தினர், முரண் இலர் சிலவர், மொய் அமர்
நந்தினர்தம்மொடு நனி நடந்ததோ?
வந்து ஒரு குரங்கு இடு தீயின் வன்மையால்,
வெந்ததோ, இலங்கையோடு அரக்கர் வெம்மையும்? 39

'மானுடர் ஏவுவார்; குரங்கு வந்து, இவ் ஊர்-
தான் எரி மடுப்பது; நிருதர் தானையே,
ஆனவர் அது குறித்து அழுங்குவார்எனின்,
மேல் நிகழ்தக்கன விளம்ப வேண்டுமோ? 40

'நின்று நின்று, இவை சில விளம்ப நேர்கிலென்;
நன்று இனி நரரொடு குரங்கை நாம் அறக்
கொன்று தின்றல்லது, ஓர் எண்ணம் கூடுமோ?'
என்றனன்—இகல் குறித்து எரியும் கண்ணினான். 41

34. உண்ணிய - உண்ணுதற்கு; 37. வினையம் - சூழ்ச்சி; 39. நடந்ததோ? - கழிந்ததோ?.

பிசாசன் முதலியோர் கருத்துரை

'திசாதிசை போதும் நாம், அரசன் செய் வினை
உசாவினன், உட்கினன்; ஒழிதும் வாழ்வு' என்றான்—
பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற பெய் கழல்
நிசாசரன், உருப் புணர் நெருப்பின் நீர்மையான். 42

'ஆரியன் தன்மை ஈதுஆயின், ஆய்வுறு
காரியம் ஈதுஎனின், கண்ட ஆற்றினால்,
சீரியர் மனிதரே; சிறியம் யாம்' எனா,
சூரியன்பகைஞன் என்று ஒருவன், சொல்லினான். 43

'ஆள்வினை நிலைமையும், அரக்கர் ஆற்றலும்,
தாழ் வினை இதனின்மேல் பகரத் தக்கதோ?
சூழ் வினை மனிதரால் தோன்றிற்றாம்!' எனா,
வேள்வியின் பகைஞனும் உரைத்து, வெள்கினான். 44

'தொகை நிலைக் குரங்குடை மனிதர்ச் சொல்லி என்?
சிகை நிறச் சூலிதன் திறத்துச் செல்லினும்,
நகை உடைத்தாம்; அமர் செய்தல் நன்று' எனா,
புகைநிறக்கண்ணனும் புகன்று, பொங்கினான். 45

மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்,—
'இற்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,
உற்றன உற்றன உரைப்பதுஆயினர்—
புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினர்: 46

கும்பகருணன் கூற்று

வெம்பு இகல் அரக்கரை விலக்கி, 'வினை தேரா
நம்பியர் இருக்க!' என, நாயகனை முன்னா,
'எம்பி எனகிற்கில், உரைசெய்வல் இதம்' என்னா,
கும்பகருணப் பெயரினான் இவை குறித்தான்: 47

'நீ அயன் முதல் குலம் இதற்கு ஒருவன் நின்றாய்;
ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து, அறிவு அமைந்தாய்;
தீயினை நயப்புறுதல் செய்தனை தெரிந்தாய்;
ஏயின உறத் தகைய இத்துணையவேயோ? 48

43. கண்ட ஆறு - நாம் ஆராய்ந்து பார்த்த அளவு; 47. இதம் - நன்மை; 48. ஏயின - விதியினால் ஏவப்பட்டன; உறத்தகைய - விளையக்கூடியன.

'ஓவியம் அமைந்த நகர் தீ உண, உளைந்தாய்,
''கோ-இயல் அழிந்தது'' என; வேறு ஒரு குலத்தோன்
தேவியை நயந்து, சிறை வைத்த செயல் நன்றோ?
பாவியர் உறும் பழி இதின் பழியும் உண்டோ? 49

'''நல் நகர் அழிந்தது'' என நாணினை; நயத்தால்
உன் உயிர் எனத்தகைய தேவியர்கள் உன்மேல்
இன் நகை தரத் தர, ஒருத்தன் மனை உற்றாள்,
பொன் அடி தொழத் தொழ, மறுத்தல் புகழ் போலாம்? 50

'என்று ஒருவன் இல் உறை தவத்தியை, இரங்காய்,
வன் தொழிலினாய், மறை துறந்து, சிறை வைத்தாய்,
அன்று ஒழிவதாயின, அரக்கர் புகழ்; ஐயா!
புன் தொழிலினால் இசை பொறுத்தல் புலமைத்தோ? 51

'ஆசு இல் பர தாரம்அவை அம் சிறை அடைப்பேம்;
மாசு இல் புகழ் காதலுறுவேம்; வளமை கூரப்
பேசுவது மானம்; இடை பேணுவது காமம்;
கூசுவது மானுடரை; நன்று, நம கொற்றம்! 52

'சிட்டர் செயல் செய்திலை; குலச் சிறுமை செய்தாய்;
மட்டு அவிழ் மலர்க் குழலினாளை இனி, மன்னா!
விட்டிடுதுமேல், எளியம் ஆதும்; அவர் வெல்ல,
பட்டிடுதுமேல், அதுவும் நன்று; பழி அன்றால். 53

'மரன் படர் வனத்து ஒருவனே சிலை வலத்தால்,
கரன் படை படுத்து, அவனை வென்று, களை கட்டான்;
நிரம்பிடுவது அன்று, அதுவும்; நின்றது, இனி நம்பால்
உரம் படுவதே; இதனின்மேல் உறுதி உண்டோ? 54

'வென்றிடுவர் மானுடவரேனும், அவர்தம்மேல்
நின்று, இடைவிடாது நெறி சென்று, உற நெருக்கித்
தின்றிடுதல் செய்கிலம்எனின், செறுநரோடும்
ஒன்றிடுவர் தேவர்; உலகு ஏழும் உடன் ஒன்று ஆம். 55

'ஊறு படை ஊறுவதன் முன்னம், ஒரு நாளே,
ஏறு கடல் ஏறி, நரர் வானரரை எல்லாம்
வேறு பெயராதவகை, வேரொடும் அடங்க
நூறுவதுவே கருமம்' என்பது நுவன்றான். 56

50. நயத்தால் - விருப்பத்தோடு; மறுத்தல் - அவள் மறுத்தல்; 51. பொறுத்தல் - அடைய நினைத்தல்; 52. கூசுவது - அஞ்சுவது; 53. சிட்டர் - பெரியோர்; 54. உறுதி - நன்மை; இது ஏளனம் புரியும் குறிப்புமொழி.

கும்பகருணன் கூற்றிற்கு இராவணன் இசைதல்

'நன்று உரை செய்தாய்!—குமர!—நான் அது நினைந்தேன்;
ஒன்றும் இனி ஆய்தல் பழுது; ஒன்னலரை எல்லாம்
கொன்று பெயர்வோம்; நமர் கொடிப் படையை எல்லாம்,
''இன்று எழுக'' என்க!' என இராவணன் இசைத்தான். 57

இந்திரசித்து, தன் தந்தையைத் தடுத்து, வென்று வருவேன் எனல்

என்று அவன் இயம்பியிடும் எல்லையினில், 'வல்லே
சென்று படையோடு, சிறு மானுடர் சினப் போர்
வென்று பெயர்வாய், அரச! நீ கொல்? என வீரம்
நன்று பெரிது!' என்று மகன் நக்கு, இவை நவின்றான்: 58

'ஈசன் அருள் செய்தனவும், ஏடு அவிழ் மலர்ப் பேர்
ஆசனம் உவந்தவன் அளித்தனவும், ஆய
பாசம் முதல் வெம் படை சுமந்து, பலர் நின்றார்;
ஏச உழல்வேன் ஒருவன் யானும் உளென் அன்றோ? 59

'முற்றும் முதலாய் உலகம் மூன்றும், எதிர் தோன்றிச்
செற்ற முதலோரொடு செறுத்தது ஓர் திறத்தும்,
வெற்றி உனது ஆக விளையாதுஒழியின், என்னைப்
பெற்றும் இலை; யான் நெறி பிறந்தும் இலென்' என்றான். 60

'குரங்கு பட, மேதினி குறைத்தலை நடப் போர்
அரங்கு பட, மானுடர் அலந்தலை பட, பேர்
இரங்கு படர் சீதை பட, இன்று இருவர் நின்றார்
சிரம் குவடு எனக் கொணர்தல் காணுதி—சினத்தோய்! 61

'சொல்லிடை கழிக்கிலை, சுருங்கிய குரங்கு என்
கல்லிடை கிழிக்கும் உருமின் கடுமை காணும்
வில்லிடை கிழித்த மிடல் வாளி வெருவி, தம்
பல்லிடை, கிழித்து இரிவ கண்டு, பயன் உய்ப்பாய். 62

'யானை இலர்; தேர் புரவி யாதும் இலர்; ஏவும்
தானை இலர்; நின்ற தவம் ஒன்றும் இலர்; தாமோ,
கூனல் முதுகின் சிறு குரங்கு கொடு வெல்வார்?
ஆனவரும் மானுடர்; நம் ஆண்மை இனிது அன்றோ? 63

'நீரும், நிலனும், நெடிய காலும், நிமிர் வானும்,
பேர் உலகு யாவும், ஒரு நாள் புடைபெயர்த்தே,
யாரும் ஒழியாமை, நரர் வானரரை எல்லாம்,
வேரும் ஒழியாதவகை வென்று அலது, மீளேன்.' 64

61. படர் - துன்பம்.

என்று, அடி இறைஞ்சினன் எழுந்து, ‘விடை ஈமோ,
வன் திறலினாய்!’ எனலும், வாள் எயிறு வாயில்
தின்றனன் முனிந்து, நனி தீவினையை எல்லாம்
வென்றவரின் நன்று உணரும் வீடணன் விளம்பும்: 65

**இந்திரசித்து கூறியதைக் கண்டித்து, வீடணன் விளம்புதல்**

‘நூலினால் நுணங்கிய அறிவு நோக்கினை
போலுமால்!—உறு பொருள் புகலும் பூட்சியோய்!
காலம், மேல் விளை பொருள், உணரும் கற்பு இலாப்
பால!—நீ இனையன பகரற்பாலையோ? 66

‘கருத்து இலான், கண் இலான், ஒருத்தன் கைக்கொடு
திருத்து வான் சித்திரம் அனைய செப்புவாய்;
விருத்த மேதகையவர், வினைஞர், மந்திரத்து
இருத்தியோ?—இளமையால் முறைமை எண்ணலாய்! 67

‘தூயவர் முறைமையே தொடங்கும் தொன்மையோர்
ஆயவர் நிற்க; மற்று அவுணர் ஆதியாம்
தீயவர், அறத்தினால் தேவர் ஆயது
மாயமோ? வஞ்சமோ? வன்மையேகொலோ? 68

‘அறம் துறந்து, அமரரை வென்ற ஆண்தொழில்-
திறம் தெரிந்திடின், அதுதானும் செய் தவம்
நிறம் திறம்பாவகை இயற்றும் நீதியால்,
மறம் துறந்து, அவர் தரும் வரத்தின் வன்மையால். 69

‘மூவரை வென்று, மூன்று உலகும் முற்றுறக்
காவலில்நின்று, தம் களிப்புக் கைம்மிக,
வீவது முடிவு என வீந்தது அல்லது,
தேவரை வென்றவர் யாவர், தீமையோர்? 70

‘வினைகளை வென்று, மேல் வீடு கண்டவர்
எனைவர் என்று இயம்புகேன், எவ்வம் தீர்க்கையான்?
முனைவரும் அமரரும், முன்னும் பின்னரும்,
அனையவர் திறத்து உளர் யாவர், ஆற்றினார்? 71

‘பிள்ளைமை விளம்பினை, பேதை நீ’ என
ஒள்ளிய புதல்வனை உரப்பி, ‘என் உரை
எள்ளலையாமெனின், இயம்பல்ஆற்றுவென்,
தெள்ளிய பொருள்’ என அரசற் செப்பினான்: 72

66. பூட்சி - மன உறுதி; 67. விருத்தம் - முதுமை; 69. நிறம் - பெருமை; 71. எனைவர் - எவ்வளவினர்.

'எந்தை நீ; யாயும் நீ; எம்முன் நீ; தவ
வந்தனைத் தெய்வம் நீ; மற்றும் முற்றும் நீ;
''இந்திரப் பெரும் பதம் இழக்கின்றாய்'' என
நொந்தனென் ஆதலின், நுவல்வதுஆயினேன். 73

'கற்றுறு மாட்சி என்கண் இன்றாயினும்,
உற்று உறு பொருள் தெரிந்து உணர்தல் ஒயினும்,
சொற்றுறு சூழ்ச்சியின் துணிவு சோரினும்,
முற்றுறக் கேட்ட பின், முனிதி—மொய்ம்பினோய்! 74

'கோநகர் முழுவதும், நினது கொற்றமும்,
சானகி எனும் பெயர் உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால், வெந்தது அல்லது, ''ஓர்
வானரம் சுட்டது'' என்று உணர்தல் மாட்சியோ? 75

'எண்பொருட்டு ஒன்றி நின்று, எவரும் எண்ணினால்,
விண்பொருட்டு ஒன்றிய உயர்வு மீட்சியும்,
பெண்பொருட்டு அன்றியும், பிறிது உண்டாம்எனின்,
மண்பொருட்டு அன்றியும், வரவும் வல்லவோ?* 76

'''மீனுடை நெடுங் கடல் இலங்கை வேந்தன்முன்
தானுடை நெடுந் தவம் தளர்ந்து சாய்வது, ஓர்
மானுட மடந்தையால்'' என்னும் வாய்மொழி—
தேனுடை அலங்கலாய்!—இன்று தீர்ந்ததோ? 77

'ஏறிய நெடுந் தவம் இழைத்த எல்லை நாள்,
ஆறிய பெருங் குணத்து அறிவன் ஆணையால்,
கூறிய மனிதர்பால் கொற்றம் கொள்ளலை;
வேறு இனி அவர்வயின் வென்றி யாவதோ? 78

'ஏயது பிறிது உணர்ந்து இயம்ப வேண்டுமோ?
நீ ஒரு தனி உலகு ஏழும் நீந்தினாய்;
ஆயிரம் தோளவற்கு ஆற்றல் தோற்றனை
மேயினைஆம்; இனி, விளம்ப வேண்டுமோ? 79

'மேல் உயர் கயிலையை எடுத்த மேலைநாள்,
நாலு தோள் நந்திதான் நவின்ற சாபத்தால்,
கூல வான் குரங்கினால் குறுகும், கோள்; அது
வாலிபால் கண்டனம்—வரம்பு இல் ஆற்றலாய்! 80

74. சோரினும் - தவறுபடுமாயினும்; 75. தம்மனை - தாய்; 76. எண் பொருட்டு - (யாரும்) ஆராய்தற்கு; விண்பொருட்டு ஒன்றிய - வானளாவ ஓங்கிய; 77. வாய்மொழி - தவறாத சாபமொழி; 78. அறிவன் - கடவுள், பிரமன்; 79. ஆயிரம் தோளன் - கார்த்தவீரியன்; 80. கோள் - தீங்கு.

'தீயிடைக் குளித்த அத் தெய்வக் கற்பினுள்
வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?
''நோய் உனக்கு யான்'' என நுவன்றுளாள் அவள்;
ஆயவள் சீதை, பண்டு அமுதின் தோன்றினுள். 81

'சம்பரப் பெயருடைத் தானவர்க்கு
இறைவனைத் தனு வலத்தால்,
அம்பரத்து உம்பர் புக்கு, அமரிடைத்
தலை துமித்து, அமரர் உய்ய,
உம்பருக்கு இறைவனுக்கு அரசு அளித்து
உதவினுன்—ஒருவன், நேமி
இம்பரில் பணி செய, தசரதப்
பெயரினுன், இசை வளர்த்தான்; 82

'மிடல் படைத்து, ஒருவனுய், அமரர் கோன்
விடையதா வெரிநின் மேலாய்,
உடல் படைத்து அவுணர் ஆயினர்
எலாம் மடிய, வாள் உருவினுனும்,
அடல் படைத்து, அவனியை,
''பெரு வளம் தருக!'' என்று அருளினுனும்,
கடல் படைத்தவரொடும், கங்கை
தந்தவன் வழிக் கடவுள் மன்னன், 83

'பொய் உரைத்து உலகினில் சினவினுர்
குலம் அறப் பொருது, தன் வேல்
நெய் உரைத்து, உறையில் இட்டு,
அறம் வளர்த்து, ஒருவனுய் நெறியில் நின்ருன்,
மை உரைத்து உலவு கண் மனைவிபால்
வரம் அளித்து, அவை மருதே,
மெய் உரைத்து, உயிர் கொடுத்து,
அமரரும் பெறுகிலா வீடு பெற்ருன். 84

81. தீயிடைக் குளித்தவள் வேகவதி; இராவணன் அவள் அழகில் ஈடுபட்டு வலிதில் தீண்டினுன்; அதனுல் அவள் தீயில் வீழ்ந்தாள்; 82. நேமி - ஆணை; 83. அவுணர் மடிய வாள் உருவினுன் ககுத்தனும், அவனியை வளம் தருக என அருளினுன் பிருதுவும், கடல் படைத்தவர் சகரரும், கங்கை தந்தவன் பகீரதனும் ஆவர்; உடல் - மாறுபாடு.

'அனையவன் சிறுவர், எம் பெரும!
உன் பகைஞரானவரை அம்மா
இனையர் என்று உணர்தியேல்,
இருவரும் ஒருவரும் எதிர் இலாதார்;
முனைவரும் அமரரும், முழுது
உணர்ந்தவர்களும், முற்றும் மற்றும்,
நினைவு அருந் தகையர்; நம் வினையினால்
மனிதர் ஆய், எளிது நின்றார். 85

'கோசிகப் பெயருடைக் குல முனித் தலைவன்,
''அக் குளிர் மலர்ப் பேர்
ஆசனத்தவனொடு எவ் உலகமும்
தருவென்'' என்று அமையலுற்றான்,
ஈசனின் பெறு படைக்கலம்,
இமைப்பு அளவில் எவ் உலகில் யாவும்
நாசம் உற்றிட நடப்பன,
கொடுத்தன பிடித்துடையர்—நம்ப! 86

'எறுழ் வலிப் பொரு இல் தோள் அவுணரோடு
அமரர், பண்டு, இகல் செய் காலத்து,
உறு திறல் கலுழன்மேல் ஒருவன் நின்று
அமர் செய்தானுடைய வில்லும்,
தெறு சினத்தவர்கள் முப்புரம்
நெருப்புற உருத்து எய்த அம்பும்,
குறுமுனிப் பெயரினான். நிறை தவர்க்கு
இறை, தரக் கொண்டு நின்றார். 87

'நாவினால் உலகை நக்கிடுவ; திக்கு
அளவிடற்கு உரிய; நாளும்,
மேவு தீ விடம் உயிர்ப்பன; வெயில்
பொழி எயிற்றன; அவ் வீரர்
ஆவம்ஆம் அரிய புற்று உறைவ;—
முற்று அறிவருக்கு அழிவு செய்யும்
பாவ காரியர் உயிர்ப் பதம் அலாது,
இரை பெறு—பகழி நாகம். 88

86. கோசிகன் - விசுவாமித்திரன்; ஈசன் - சிவன்; நம்பன் - விரும்பத் தக்கவன்; 87. குறுமுனி - அகத்திய முனிவன்; 88. ஆவம் - அம்புக்கூடு; பதம் - உணவு.

'பேருமோ ஒருவரால், அவர்களால்
அல்லது? இவ் பெரியவேனும்,
நாரும் மூரியும் அரு; நம்முடைச்
சிலைகள்போல் நலிவ ஆமோ?
தாருவோ, வேணுவோ, தாணுவாய்
உலகினைத் தழுவி நிற்கும்
மேருவோ, மால் வரைக் குலம் எலாம்
அல்லவோ, வில்லும் மன்னே? 89

'உரம் ஒருங்கியது, நீர் கடையும்
வாலியது மார்பு; உலகை மூடும்
மரம் ஒருங்கிய; கராதியர், விராதனது
மால் வரைகள் மானும்
சிரம் ஒருங்கின; இனிச் செரு
ஒருங்கின—இனி, தேவர் என்பார்
பரம் ஒருங்குவது அலால், பிறிது
ஒருங்காதது ஓர் பகையும் உண்டோ? 90

'சொல் வரம் பெரிய மா முனிவர்
என்பவர்கள், தம் துணை இலாதார்,
''எல் வரம் பெரிய தோள் இருவரே
தமரொடும் உலகம் யாவும்
வெல்வர்'' என்பது தெரிந்து, எண்ணினர்,
''நிருதர் வேர் முதலும் வீயக்
கொல்வர்'' என்று உணர்தலால், அவரை
வந்து அணைவது ஓர் இயைபு கொண்டார். 91

'துஞ்சுகின்றிலர்களால், இரவும் நன்
பகலும், நிற் சொல்ல ஒல்கி,
நெஞ்சு நின்று அயரும் இந் நிருதர்;
''பேர் சனகி ஆம் நெடியது ஆய
நஞ்சு தின்றனர்கள்தாம் நண்ணுவார்
நரகம்'' என்று எண்ணி, நம்மை
அஞ்சுகின்றிலர்கள்—நின் அருள் அலால்,
சரண் இலா அமரர் அம்மா! 92

89. நார் - நாணி; மூரி - வலிமை; தாரு - தரு, மரம்; வேணு - மூங்கில்; தாணு - தூண்; 90. பரம் - சுமை. தொகுதி.

‘புகல் மதித்து உணர்கிலாமையின், நமக்கு
எளிமை சால் பொறைமை கூர,
நகல் மதிக்கில மறுப் பொலிய
வாள் ஒளி இழந்து, உதயம் நண்ணும்
பகல் மதிக்கு உவமை ஆம் விபுதராம்,
இரவு கால் பருவ நாளின்
அகல் மதிக்கு உவமை ஆயின
தபோதனர் உளார் வதனம் அம்மா? 93

‘சிந்து முந்து உலகினுக்கு இறுதி புக்கு,
உரு ஒளித்து, உலைதல் செய்வார்,—
இந்துவின் திரு முகத்து இறைவி
நம் உறையுளாள் என்றலோடும்,—
அந்தகன் முதலினோர், அமரரும்
முனிவரும் பிறரும், அஞ்சார்
வந்து, தம் உலகமும் வானமும்
கண்டு உவந்து, அகல்வர் மன்னோ. 94

‘சொலத் தகாத் துன்னிமித்தங்கள்
எங்கணும் வரத் தொடர்வ; ஒன்னார்,
வெலத் தகா அமரரும் அவுணரும்,
செருவில் விட்டன விடாத
குலத்த கால் வய நெடுங் குதிரையும்,
அதிர் குரல் குன்றும், இன்று
வலத்த கால் முந்துறத் தந்து, நம்
மனையிடைப் புகுவ மன்னோ. 95

‘வாயினும் பல்லினும் புனல் வறந்து
உலறினர், நிருதர்; வைகும்
பேயினும் பெரிய பேம் நரிகளும்
புரிதரும்; பிறவும் எண்ணின்,
கோயிலும் நகரமும், மட நலார்
குழலும், நம் குஞ்சியோடும்,
தீயின் வெந்திடுமலால் ஒரு
நிமித்தம் பெறும் திறனும் உண்டோ? 96

93. புகல் - புகலிடம்; மதித்து - ஆராய்ந்து; நகல் - மகிழ்ச்சி; 94. சிந்து - கடல்; 95. விடாத - நீங்காத; குலத்த கால் - சிறந்த கால்; வலத்த கால் - வலக்கால்; 96. பேம் - அச்சம்; புரிதரும் - பல்கும், மிகும்.

'சிந்த மா நாகரைச் செரு முருக்கிய
கரன், திரிசிரத்தோன்,
முந்த மான் ஆயினுன், வாலியே
முதலினேர் முடிவு கண்டால்,
அந்த மான் இடவனேடு, ஆழி மா
வலவனும், பிறரும், ஐயா!
இந்த மானிடவராம் இருவரோடு
எண்ணல் ஆம் ஒருவர் யாரே? 97

'இன்னம் ஒன்று உரை செய்தால்;
இனிது கேள், எம்பிரான்! இருவர் ஆய
அன்னவர் தம்மொடும் வானரத்
தலைவராய் அணுகி நின்ருர்,
மன்னும் நம் பகைஞர் ஆம்
வானுளோர்; அவரொடும் மாறுகோடல்
கன்மம் அன்று; இது நமக்கு உறுதி
என்று உணர்தலும், கருமம் அன்ருல். 98

'இசையும் செல்வமும் உயர் குலத்து இயற்கையும் எஞ்ச,
வசையும் கீழ்மையும் மீக்கொள, கிளையொடும் மடியாது,
அசைவு இல் கற்பின் அவ் அணங்கை விட்டருளுதி; இதன் மேல்
விசையம் இல்' எனச் சொல்லினன்—அறிஞரின் மிக்கான். 99

இராவணன் சினந்து நக்கு, வீடணனைக் கடிந்து பேசுதல்

கேட்ட ஆண்தகை கரத்தொடு கரதலம் கிடைப்பப்
பூட்டி, வாய்தொறும் பிறைக் குலம் வெண் நிலாப் பொழிய,
வாள் தடம் தவழ் ஆரமும் வயங்கு ஒளி மார்பும்
தோள் தடங்களும் குலுங்க, நக்கு, இவை இவை சொன்னுன்:

' ''இச்சை அல்லன உறுதிகள் இசைக்குவென்'' என்ருய்;
பிச்சர் சொல்லுவ சொல்லினை; என் பெரு விறலைக்
கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை; குறித்தது,
அச்சமோ? அவர்க்கு அன்பினே? யாவதோ?—ஐயா! 101

97. சிந்த - சிதறும்படி; மான் இடவன் - சிவன்; 98. கன்மம் - செய்யத்தக்கது; இது - இவ்வாறு மாறுகொள்ளுதல்; 100. கிடைப்ப - பொருந்த; வாள் தடம் - வாளால் உளவான விழுப்புண் தழும்பு; 101. இச்சை அல்லன - விரும்பத்தகாதன; கொச்சை - இழிவு.

'"ஈங்கு மானுடப் பசுக்களுக்கு, இலை வரம்" என்றாய்;
தீங்கு சொல்லினை; திசைகளை உலகொடும் செருக்கால்
தாங்கும் யானையைத் தள்ளி, அத் தழல் நிறத்தவனை
ஓங்கல் ஒன்றொடும் எடுக்கவும் வரம் கொண்டது உண்டோ?

'மனக்கொடு அன்றியும், வறியன வழங்கினை; வானோர்
சினக் கொடும் படை செருக்களத்து என்னை என் செய்த?
எனக்கு நிற்க; மற்று, என்னொடு இங்கு ஒரு வயிற்று உதித்த
உனக்கு மானிடர் வலியர் ஆம் தகைமையும் உளதோ? 103

'சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை; பன் முறை தோற்று,
வெல்லும் ஆற்றலும் ஒரு முறை பெற இலை; விண்ணைக்
கல்லும் ஆற்றல் என் கிளையையும் என்னையும் களத்தில்
கொல்லும் மாற்றலர் உளர் எனக் கோடலும் கொண்டாய்.

'தேவரின் பெற்ற வரத்தினது என் பெருஞ் செருக்கேல்,
மூவரில் பெற்றம் உடையவன்தன்னொடும், முழுதும்
காவலின் பெற்ற திகிரியான்தன்னொடும், கடந்தது
ஏவரின் பெற்ற வரத்தினால்? இயம்புதி—இளையோய்! 105

'"நந்தி சாபத்தின் நமை அடும், குரங்கு" எனின், நம்பால்
வந்த சாபங்கள் எனைப் பல; அவை செய்த வலி என்?
இந்திராதியர், சித்தர்கள், இயக்கர், நம் இறுதி
சிந்தியாதவர் யார்? அவை நம்மை என் செய்த? 106

'அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டுடை வரம் அறியேன்;
இரங்கி யான் நிற்ப, என் வலி அவன்வயின் எய்த
வரம் கொள் வாலிபால் தோற்றனென்; மற்றும் வேறு உள்ள
குரங்கு எலாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி? 107

'நீலகண்டனும் நேமியும் நேர் நின்று நேரின்,
ஏலும் அன்னவருடை வலி அவன்வயின் எய்தும்;
சாலும் நல் வரம் நினைந்து, அவன் எதிர் செலல் தவிர்ந்து,
வாலிதன்னை, அம் மனிதனும், மறைந்து நின்று எய்தான். 108

'ஊன வில் இறுத்து, ஓட்டை மா மரத்துள் அம்பு ஓட்டி,
கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து, உயர் வனம் குறுகி,
யான் இழைத்திட இல் இழந்து, இன் உயிர் சுமக்கும்
மானுடன் வலி, நீ அலாது, யார் உளர் மதித்தார்?' 109

108. ஏலும் - எதிர்க்கும்.

**வீடணன், மேலும் உறுதிமொழி உரைத்தல்**

என்று தன் உரை இழித்து, 'நீ உணர்விலி' என்னு,
'நன்று, போதும் நாம்; எழுக!' எனும் அரக்கனை நணுகா,
'ஒன்று கேள், இனம் உறுதி' என்று, அன்பினன், ஒழியான்,
துன்று தாரவன், பின்னரும், இனையன சொன்னான்: 110

'தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனித் தலைவன்,
அன்ன மானுடன் ஆகி வந்து, அவதரித்து அமைந்தான்,
சொன்ன நம்பொருட்டு, உம்பர்தம் சூழ்ச்சியின் துணிவால்;
இன்னம் ஏகுதி போலும்' என்று அடி தொழுது இரந்தான்.

**இராவணன் மறுமொழி**

அச் சொல் கேட்டு, 'அவன் ஆழியான் என்றனை; ஆயின்,
கொச்சைத் துன்மதி எத்தனை போரிடைக் குறைந்தான்?
இச்சைக்கு ஏற்றன, யான் செய்த இத்தனை காலம்,
முச்சு அற்றான்கொல், அம் முழுமுதலோன்?' என முனிந்தான்.

'இந்திரன்தனை இருஞ் சிறை இட்ட நாள், இமையோர்
தந்தி கோடு இறத் தகர்த்த நாள், தன்னை யான் முன்னம்
வந்த போர்தொறும் துரந்த நாள், வானவர் உலகைச்
சிந்த வென்ற நாள், சிறியன்கொல், நீ சொன்ன தேவன்? 113

'சிவனும், நான்முகத்து ஒருவனும், திரு நெடு மாலாம்
அவனும், மற்று உள அமரரும், உடன் உறைந்து அடங்க,
புவனம் மூன்றும் நான் ஆண்டுளது, ஆண்ட அப் பொரு இல்
உவன் இலாமையினோ? வலி ஒதுங்கியோ? உரையாய்! 114

'ஆயிரம் பெருந் தோள்களும், அத் துணைத் தலையும்,
மா இரும் புவி உள்ளடி அடக்குறும் வடிவும்,
தீய, ''சாலவும் சிறிது'' என நினைந்து, நாம் தின்னும்
ஓயும் மானுட உருவு கொண்டனன்கொலாம்—உரவோன்? 115

'பித்தன் ஆகிய ஈசனும் அரியும், என் பெயர் கேட்டு,
எய்த்த சிந்தையர், ஏகுழி ஏகுழி எல்லாம்,
கைத்த ஏற்றினும் கடவிய புள்ளினும், முதுகில்
தைத்த வாளிகள் நின்று உள, குன்றின் வீழ் தடித்தின்.* 116

111. முன்னிய - சிறந்த; 112. குறைந்தான் - தோற்றான்; முச்சு - மூச்சு;
116. கைத்த ஏறு - செலுத்திய காளை; தடித்து - இடி.

'வெஞ் சினம் தரு போரின் எம்முடன் எழ வேண்டா;
இஞ்சி மா நகர் இடம் உடைத்து; ஈண்டு இனிது இருத்தி;
அஞ்சல், அஞ்சல்!' என்று, அருகு இருந்தவர் முகம் நோக்கி,
நஞ்சின் வெய்யவன் கை எறிந்து, உரும் என நக்கான். 117

**வீடணன், பின்னும் இரணியன் சரிதம் கூறல்**

பின்னும் வீடணன், 'ஐய! நின் தரம் அலாப் பெரியோர்,
முன்னை நாள், இவன் முனிந்திடக் கிளையொடும் முடிந்தார்;
இன்னம் உண்டு, யான் இயம்புவது; இரணியன்என்பான்-
தன்னை உள்ளவா கேட்டி' என்று உரைசெயச் சமைந்தான்:

## 3 இரணியன் வதைப் படலம்

**இரணியன் இயல்பும் ஏற்றமும்**

'வேதம் கண்ணிய பொருள் எலாம் விரிஞ்சனே ஈந்தான்;
போதம் கண்ணிய வரம் எலாம் தரக் கொண்டு போந்தான்;
காதும் கண்ணுதல், மலர் அயன், கடைமுறை காணுப்
பூதம் கண்ணிய வலி எலாம் ஒரு தனி பொறுத்தான். 1

'எற்றை நாளினும் உளன் எனும் இறைவனும், அயனும்,
கற்றை அம் சடைக் கடவுளும், காத்து, அளித்து, அழிக்கும்
ஒற்றை அண்டத்தின் அளவினே? அதன் புறத்து உலவா
மற்றை அண்டத்தும், தன் பெயரே சொல, வாழ்ந்தான். 2

'பாழி வன் தடந் திசை சுமந்து ஓங்கிய பணைக் கைப்
பூழை வன் கரி இரண்டு இரு கைக்கொடு பொருத்தும்;
ஆழம் காணுதற்கு அரியவாய், அகன்ற பேர் ஆழி
ஏழும் தன் இரு தாள் அளவு எனக் கடந்து ஏறும். 3

'வண்டல் தெண் திரை ஆற்று நீர் சில என்று மருவான்;
கொண்டல் கொண்ட நீர் குளிர்ப்பு இல என்று அவை குடையான்;
பண்டைத் தெண் திரைப் பரவை நீர் உவர் என்று படியான்;
அண்டத்தைப் பொதுத்து, அப் புறத்து அப்பினுல் ஆடும். 4

117. இஞ்சி - மதில்; கை எறிதல் - கையொடு கை தாக்கல்.

3: 1. கண்ணிய - கருதிய, குறித்த; கடைமுறை - இறுதியாகிய எல்லை; 2. உலவா - எண்ணில் அடங்காத; 3. பூழை - உள்துளை; 4. சில - சிறிது; பொதுத்து - துளைத்து, பொத்தல் செய்து.

'மரபின், மா பெரும்புறக்கடல் மஞ்சனம் மருவி,
அரவின் நாட்டிடை மகளிரோடு இன் அமுது அருந்தி,
பரவும் இந்திரன் பதியிடைப் பகற் பொழுது அகற்றி,
இரவின் ஓலக்கம் நான்முகன் உலகத்துள் இருக்கும். 5

'சாரும் மானத்தில், சந்திரன் தனிப் பதம் சரிக்கும்;
தேரின் மேலின் நின்று, இரவிதன் பெரும் பதம் செலுத்தும்;
பேர்வு இல் எண் திசைக் காவலர் கருமமும் பிடிக்கும்;
மேரு மால் வரை உச்சிமேல் அரசு வீற்றிருக்கும். 6

'நிலனும், நீரும், வெங் கனலொடு காலும் ஆய், நிமிர்ந்த
தலனுள் நீடிய அவற்றின் அத் தலைவரை மாற்றி,
உலவும் காற்றொடு கடவுளர் பிறரும்ஆய், உலகின்
வலியும் செய்கையும் வருணன்தன் கருமமும், மாற்றும். 7

'தாமரைத் தடங் கண்ணினன் பேர்அவை தவிர,
நாமம் தன்னதே உலகங்கள் யாவையும் நவில,
தூம வெங் கனல் அந்தணர் முதலினர் சொரிந்த
ஓம வேள்வியின், இமையவர் பேறு எலாம் உண்ணும். 8

'காவல், காட்டுதல், துடைத்தல், என்று இத் தொழில் கடவ
மூவரும் அவை முடிக்கிலர், பிடிக்கிலர் முறைமை;
ஏவர் மற்றவர்? யோகியர் உறு பதம் இழந்தார்;
தேவரும், அவன் தாள் அலால் அருச்சனை செய்யார். 9

'மருக் கொள் தாமரை நான்முகன், ஐம்முகன் முதலோர்
குருக்களோடு கற்று, ஓதுவது, அவன் பெருங் கொற்றம்;
சுருக்கு இல் நான்மறை, "தொன்று தொட்டு உயிர்தொறும் தோன்றாது
இருக்கும் தெய்வமும் இரணியனே! நம!" என்னும். 10

'பண்டு, வானவர் தானவர் யாவரும் பற்றி,
தெண் திரைக் கடல் கடைதர, வலியது தேடிக்
கொண்ட மத்தினைக் கொற்றத் தன் குவவுத் தோட்கு அமைந்த
தண்டு எனக் கொளலுற்று, அது நொய்து எனத் தவிர்ந்தான்.

6. சாரும் - ஏறிச் செல்லும்; மானம் - விமானம்; சரித்தல் - உலாவுதல்; சந்திரனுக்கு விமானமும் சூரியனுக்குத் தேரும் ஊர்தி; 7. தலன் - இடன், ஈண்டு அண்டம்; நீடிய - நிலைபெற்ற; 8. இமையவர் பேறு - அவியுணவு; 10. குருக்கள் - தேவகுருவாகிய வியாழன் முதலியோர்; 11. தண்டு - தண்டாயுதம்.

'மண்டலம் தரு கதிரவன் வந்து போய் மறையும்
எண்தலம் தொடற்கு அரியன தட வரை இரண்டும்,
கண்தலம் பசும்பொன்னவன் முன்னவன் காதில்
குண்டலங்கள்; மற்று என், இனிப் பெரு விறல் கூறல்? 12

'மயர்வு இல் மன் நெடுஞ் சேவடி மண்ணிடை வைப்பின்,
அயரும், வாள் எயிற்று ஆயிர நனந் தலை அனந்தன்;
உயருமேல், அண்ட முகடு தன் முடி உற உயரும்;
பெயருமேல், நெடும் பூதங்கள் ஐந்தொடும் பெயரும். 13

'பெண்ணில், பேர் எழில் ஆணினில், அலியினில், பிறிதும்
உள் நிற்கும் உயிர் உள்ளதில், இல்லதில், உலவான்;
கண்ணில் காண்பன, கருதுவ, யாவினும் கழியான்;
மண்ணில் சாகிலன்; வானிலும் சாகிலன்;—வரத்தால். 14

'தேவர் ஆயினர் ஏவரும், திரிதரும் இயக்கர்
யாவரேயும், மற்று எண்ணவும் நினைக்கவும் இயன்ற,
கோவை மால், அயன், மான்இடன், யாவரும் கொல்ல,
ஆவி தீர்கிலன்; ஆற்றலும் தீர்கிலன்—அனையான். 15

'நீரின் சாகிலன்; நெருப்பினும் சாகிலன்; நிமிர்ந்த
மாருதத்தினும், மண்ணின் மற்று எவற்றினும், மாளான்;
ஓரும் தேவரும் முனிவரும் பிறர்களும் உரைப்பச்
சாரும் சாபமும், அன்னவன்தனைச் சென்று சாரா. 16

'உள்ளில் சாகிலன்; புறத்தினும் உலக்கிலன்; உலவாக்
கொள்ளைத் தெய்வ வான் படைக்கலம் யாவையும் கொல்லா;
நள்ளின் சாகிலன்; பகலிடைச் சாகிலன்; நமனார்
கொள்ளச் சாகிலன்; ஆர் இனி அவன் உயிர் கொள்வார்? 17

'பூதம் ஐந்தொடும் பொருந்திய உணர்வினில் புணரா
வேதம் நான்கினும் விளம்பிய பொருள்களால் விளியான்;
தாதை தன்னைத் தான் தனிக் கொலை சூழினும், சாகான்;
ஈது அவன் நிலை; எவ் உலகங்கட்கும் இறைவன். 18

12. எண்தலம் - எண்ணுதற்குக் கருவியாகிய மனம்; தடவரை இரண்டு - உதயமலை, அத்தமலை; 13. மயர்வு - மனச் சோர்வு; 15. மான் இடன் - மானை இடக்கையில் தரித்தவன், சிவன்; 17. நள் - இரவுப்பொழுது; நமனார் - யமன்; 18. பொருள்கள் - மந்திரங்கள்.

இரணியன் மகன் பிரகலாதன் தன்மை

'ஆயவன் தனக்கு அரு மகன், அறிஞரின் அறிஞன்,
தூயர் என்பவர் யாரினும் மறையினும் தூயான்,
நாயகன் தனி ஞானி, நல் அறத்துக்கு நாதன்,
தாயின் மன்னுயிர்க்கு அன்பினன், உளன் ஒரு தக்கோன். 19

தன் மகனை இரணியன் வேதம் ஓதுமாறு சொல்லுதல்

'வாழியான்—அவன்தனைக் கண்டு, மனம் மகிழ்ந்து, உருகி,
''ஆழி ஐய! நீ அறிதியால், மறை'' என அறைந்தான்—
ஊழியும் கடந்து உயர்கின்ற ஆயுளான், உலகம்
ஏழும் ஏழும் வந்து அடி தொழ, அரசு வீற்றிருந்தான். 20

ஓர் அந்தணன் பிரகலாதனுக்கு மறை ஓதுவித்தல்

'என்று, ஓர் அந்தணன், எல்லை இல் அறிஞனை ஏவி,
''நன்று நீ இவற்கு உதவுதி, மறை'' என நவின்றான்;
சென்று மற்றுஅவன்தன்னொடும் ஒரு சிறை சேர்ந்தான்;
அன்று நான்மறை முதலிய ஓதுவான் அமைந்தான். 21

ஆசிரியன் 'இரணியாய நம' என, சிறுவன்
'ஓம் நமோ நாராயணாய!' எனல்

'ஓதப் புக்கு அவன், ''உந்தை பேர் உரை'' எனலோடும்,
போதத் தன் செவித் தொளை இரு கைகளால் பொத்தி,
''மூ தக்கோய்! இது நல் தவம் அன்று'' என மொழியா,
வேதத்து உச்சியின் மெய்ப் பொருட் பெயரினை விரித்தான். 22

'''ஓம் நமோ நாராயணாய!'' என்று உரைத்து, உளம் உருகி,
தான் அமைந்து, இரு தடக் கையும் தலைமிசைத் தாங்கி,
பூ நிறக் கண்கள் புனல் உக, மயிர்ப் புறம் பொடிப்ப,
ஞான நாயகன் இருந்தனன்; அந்தணன் நடுங்கி, 23

அந்தணன் உரையும் சிறுவன் மறுமொழியும்

'''கெடுத்து ஒழிந்தனை, என்னையும் உன்னையும்; கெடுவாய்!
படுத்து ஒழிந்தனை; பாவி! எத் தேவரும் பகர்தற்கு
அடுத்தது அன்றியே அயல் ஒன்று பகர, நின் அறிவில்
எடுத்தது என் இது? என் செய்த வண்ணம் நீ?'' என்றான். 24

20. வாழியான் - நல்வாழ்வுக்குரிய நற்பேறுடையான், பிரகலாதன்; 22. போத - நன்றாக; மூ தக்கோய் - மூத்த அறிவுடைய பெரியோனே; வேதத்து உச்சி - உபநிடதங்கள்.

' ''என்னை உய்வித்தேன்; எந்தையை உய்வித்தேன்; இனைய
உன்னை உய்வித்து, இவ் உலகையும் உய்விப்பான் அமைந்து,
முன்னை வேதத்தின் முதற் பெயர் மொழிவது மொழிந்தேன்;
என்ன குற்றம் நான் இயம்பியது? இயம்புதி'' என்றான். 25

' ''முந்தை வானவர் யாவர்க்கும், முதல்வர்க்கும், முதலோன்
உந்தை; மற்று அவன் திருப்பெயர் உரைசெயற்கு உரிய
அந்தணாளனேன் என்னினும் அறிதியோ? ஐய!
இந்த இப் பெயர் உரைத்து, எனைக் கெடுத்திடல்'' என்றான்.

'வேத பாரகன் அவ் உரை விளம்பலும், விமலன்,
''ஆதி நாயகன் பெயர் அன்றி; யான் பிறிது அறியேன்;
ஓத வேண்டுவது இல்லை; என் உணர்வினுக்கு ஒன்றும்
போதியாததும் இல்லை'' என்று, இவை இவை புகன்றான்: 27

' ''தொல்லை நான்மறை வரன்முறைத் துணி பொருட்கு எல்லாம்
எல்லை கண்டவன் அகம் புகுந்து, இடம் கொண்டது, என் உள்;
இல்லை, வேறு இனிப் பெரும் பதம்; யான் அறியாத,
வல்லையேல், இனி, ஓதுவி, நீதியின் வழாத. 28

' ''ஆரைச் சொல்லுவது, அந்தணர் அரு மறை அறிந்தோர்,
ஓரச் சொல்லுவது எப் பொருள், உபநிடதங்கள்,
தீரச் சொல் பொருள் தேவரும் முனிவரும் செப்பும்
பேரைச் சொல்லுவது அல்லது, பிறிதும் ஒன்று உளதோ? 29

' ''வேதத்தானும், நல் வேள்வியினானும், மெய் உணர்ந்த
போதத்தானும், அப் புறத்துள எப் பொருளானும்,
சாதிப்பார் பெறும் பெரும் பதம் தலைக்கொண்டு சமைந்தேன்;
ஓதிக் கேட்பது பரம்பொருள் இன்னம் ஒன்று உளதோ? 30

' ''காடு பற்றியும், கன வரை பற்றியும், கலைத் தோல்
மூடி முற்றியும், முண்டித்தும், நீட்டியும், முறையால்
வீடு பெற்றவர், 'பெற்றதின் விழுமிது' என்று உரைக்கும்
மாடு பெற்றனென்; மற்று, இனி என், பெற வருந்தி? 31

25. வேதத்தின் முதற்பெயர் - பிரணவம்; 26. என்னினும் - என்னைக் காட்டிலும்; 27. போதியாதது - உணர்த்தப்படாத பொருள்; 28. இடம் கொள்ளல் - (தாம் விரும்பி உறையும்) இடமாகக் கொண்டு அமர்தல்; 31. மாடு - செல்வம்.

'''செவிகளால் பல கேட்டிலர்ஆயினும், தேவர்க்கு
அவி கொள் நான்மறை அகப்பொருள் புறப்பொருள் அறிவார்;
கவிகள் ஆகுவார்; காண்குவார், மெய்ப்பொருள்;—காலால்
புவி கொள் நாயகற்கு அடியவர்க்கு அடிமையின் புக்கார். 32

'''எனக்கும், நான்முகத்து ஒருவற்கும், யாரினும் உயர்ந்த
தனக்கும் தன் நிலை அறிவுஅரும் ஒரு தனித் தலைவன்
மனக்கு வந்தனன்; வந்தன, யாவையும்; மறையோய்!
உனக்கும் இன்னதின் நல்லது ஒன்று இல்'' என உரைத்தான்.

**மறையவன் நிகழ்ந்ததை இரணியனுக்கு அறிவித்தல்**

'மாற்றம் யாது ஒன்றும் உரைத்திலன், மறையவன்; மறுகி,
''ஏற்றம் என்? எனக்கு இறுதி வந்து எய்தியது'' என்னா,
ஊற்றம் இல்லவன் ஓடினன் கனகனை உற்றான்,
தோற்ற வந்தது ஓர் கனவு கண்டனன் எனச் சொன்னான்:

'''எந்தை! கேள்: எனக்கு இம்மைக்கும் மறுமைக்கும் இயம்பச்
சிந்தையால் இறை நினைத்தற்கும் அடாதன செப்பி,
'முந்தையே நினைந்து, என் பொருள் முற்றும்?' என்று உரைத்து, உன்
மைந்தன் ஓதிலன், வேதம்'' என்று உரைத்தனன், வணங்கி.

**மைந்தன் உரைத்ததை அந்தணன் கூற மறுத்தல்**

'அன்ன கேட்டு, அவன், ''அந்தண! அந்தணர்க்கு அடாத,
முன்னர் யாவரும் மொழிதரும் முறைமையின் படாத,
தன்னது உள் உறும் உணர்ச்சியால் புதுவது தந்தது,
என்ன சொல், அவன் இயம்பியது? இயம்புதி'' என்றான். 36

'அரசன் அன்னவை உரைசெய, மறையவன் அஞ்சி,
சிரதலம் கரம் சேர்த்திடா, ''செவித் தொளை சேர்ந்த
உரகம் அன்ன சொல் யான் உனக்கு உரைசெயின், உரவோய்!
நரகம் எய்துவென்; நாவும் வெந்து உகும்'' என நவின்றான்.

**மைந்தனை அழைத்து. இரணியன் நிகழ்ந்தன கேட்டல்**

'''கொணர்க என் மைந்தனை, வல் விரைந்து'' என்றனன், கொடியோன்;
உணர்வு இல் நெஞ்சினன் ஏவலர் கடிதினின் ஓடி,
கணனின் எய்தினர், ''பணி'' என, தாதையைக் கண்டான்—
துணை இலான்தனைத் துணை என உடையவன் தொழுதான். 38

34. ஊற்றம் - நெஞ்சத் துணிவு; 37. உரகம் - பாம்பு; 38. துணை
இலான் - ஒப்பிலாதவன், திருமால்.

'தொழுத மைந்தனை, சுடர் மணி மார்பிடைச் சுண்ணம்
எழுத, அன்பினின் இறுகுறத் தழுவி, மாடு இருத்தி,
முழுதும் நோக்கி, ''நீ, வேதியன் கேட்கிலன் முனிய,
பழுது சொல்லியது என்? அது பகருதி'' என்றான். 39

**மைந்தன், தன் உரையின் சிறப்புக் கூற, இரணியன் அதனைச் சொல்ல வேண்டல்**

'''சுருதி ஆதியில் தொடங்குறும் எல்லையில் சொன்ன
ஒருவன், யாவர்க்கும் நாயகன், திருப் பெயர் உணரக்
கருதக் கேட்டிடக் கட்டுரைத்து, இடர்க் கடல் கடக்க
உரிய மற்று இதின் நல்லது ஒன்று இல்'' என உரைத்தான். 40

'தேவர் செய்கையன் அங்ஙனம் உரைசெய, தீயோன்
''தா இல் வேதியன் தக்கதே உரைசெயத் தக்கான்;
ஆவது ஆகுக; அன்று எனின், அறிகுவம்'' என்றே,
''யாவது, அவ் உரை? இயம்புதி, இயம்புதி!'' என்றான். 41

**எட்டெழுத்தின் பெருமையைப் பிரகலாதன் எடுத்துரைத்தல்**

'''காமம் யாவையும் தருவதும், அப் பதம் கடந்தால்,
சேம வீடு உறச் செய்வதும், செந் தழல் முகந்த
ஓம வேள்வியின் உறு பதம் உய்ப்பதும், ஒருவன்
நாமம்; அன்னது கேள்; நமோ நாராயணாய! 42

'''மண்ணின்நின்று மேல் மலர் அயன் உலகு உற வாழும்
எண் இல் பூதங்கள், நிற்பன திரிவன, இவற்றின்
உள் நிறைந்துள கரணத்தின் ஊங்கு உள உணர்வும்,
எண்ணுகின்றது இவ் எட்டு எழுத்தே; பிறிது இல்லை. 43

'''முக் கண் தேவனும், நான்முகத்து ஒருவனும் முதலா,
மக்கள்காறும், இம் மந்திரம் மறந்தவர் மறந்தார்;
புக்குக் காட்டுவது அரிது; இது பொதுவுறக் கண்டார்
ஒக்க நோக்கினர்; அல்லவர் இதன் நிலை உணரார். 44

'''தோற்றம் என்னும் அத் தொல் வினைத் தொடு கடல் சுழிநின்று
ஏற்று நன் கலன், அருங் கலன் யாவர்க்கும், இனிய
மாற்ற மங்கலம், மா தவர் வேதத்தின் வரம்பின்
தேற்ற மெய்ப்பொருள், திருந்த மற்று இதின் இல்லை, சிறந்த.*

40. சுருதி - கேள்வி, வேதம்; 42. காமம் - விரும்பப்படும் நற்பேறுகள்; சேம வீடு - பாதுகாப்புடையதாய் அமைந்த பரமபதம்; வேள்வியின் உறு பதம் - யாகத்தினால் அடையும் துறக்கம் முதலிய மேலுலகங்கள்; 43. கரணம் - மனம் முதலிய கருவிகள்; உணர்வு - மெய்ஞ்ஞானம்; 45. நன் கலன் - நல்ல மரக்கலம்.

'''உன் உயிர்க்கும், என் உயிர்க்கும், இவ் உலகத்தினுள்ள
மன்னுயிர்க்கும், ஈது உறுதி என்று உணர்வுற மதித்துச்
சொன்னது இப் பெயர்'' என்றனன், அறிஞரின் தூயோன்;
மின் உயிர்க்கும் வேல் இரணியன் தழல் எழ விழித்தான். 46

**இரணியன் சின மொழி**

'''இற்றை நாள் வரை, யான் உள நாள் முதல், இப் பேர்
சொற்ற நாவையும் கருதிய மனத்தையும் சுடும் என்
ஒற்றை ஆணை; மற்று, யார் உனக்கு இப் பெயர் உரைத்தார்?
கற்றது ஆரொடு? சொல்லுதி, விரைந்து'' எனக் கனன்ருன்.

'''முனிவர் வானவர் முதலினர், மூன்று உலகத்தும்
எனைவர் உள்ளவர், யாவரும், என் இரு கழலே
நினைவது; ஓதுவது என் பெயர்; நினக்கு இது நேர
அனையர் அஞ்சுவர்; மைந்த! நீ யாரிடை அறிந்தாய்? 48

'''மறம் கொள் வெஞ் செரு மலைகுவான், பல் முறை வந்தான்,
கறங்கு வெஞ் சிறைக் கலுழன்தன் கடுமையின், கரந்தான்;
பிறங்கு தெண் திரைப் பெருங் கடல் புக்கு, இனம் பெயராது,
உறங்குவான் பெயர் உறுதி என்று ஆர் உனக்கு உரைத்தார்?

'''பரவை நுண் மணல் எண்ணினும், எண்ண அரும் பரப்பின்
குரவர் நம் குலத்து உள்ளவர் அவன் கொலக் குறைந்தார்;
அரவின் நாமத்தை எலி இருந்து ஓதினல், அதற்கு
விரவு நன்மை என்? துன்மதி! விளம்பு'' என வெகுண்டான்.

'''வயிற்றினுள் உலகு ஏழினேடு ஏழையும் வைக்கும்
அயிர்ப்பு இல் ஆற்றல் என் அனுசனை, ஏனம் ஒன்று ஆகி,
எயிற்றினல் எறிந்து, இன் உயிர் உண்டவன் நாமம்
பயிற்றவோ, நினைப் பயந்தது நான்?'' எனப் பகர்ந்தான். 51

'''ஒருவன், யாவர்க்கும் எவற்றிற்கும் உலகிற்கும் முதல்வன்,
தருதல், காத்து, அவை தவிர்த்தல் என்று இவை செயத் தக்கோன்,
கருமத்தால் அன்றிக் காரணத்தால் உள்ள காட்சி,
திருவிலீ! மற்று இது எம் மறைப் பொருள் எனத் தெரிந்தாய்.

48. நேர - உடன்பட்டுச் சொல்ல; 49. கறங்குதல் - சுழலுதல், ஈண்டுச் சுழன்று பறத்தல்; 51. அயிர்ப்பு - ஐயுறவு; அனுசன் - தம்பி, இரணியாட்சன்; 52. கருமம் - காட்சி அளவை (பிரத்தியட்சம்); காரணம் - கருதல் அளவை (அனுமானம்); காட்சி - உணர்வு.

'''ஆதி அந்தங்கள் இதனின் மற்று இல்லை, பேர் உலகின்;
வேதம் எங்கனம், அங்கனம் அவை சொன்ன விதியால்,
கோது இல் நல்வினை செய்தவர் உயர்குவர்; குறித்துத்
தீது செய்தவர் தாழ்குவர்; இது மெய்ம்மை, தெரியின். 53

'''செய்த மா தவம் உடைமையின், அரி, அயன், சிவன் என்று
எய்தினர் பதம் இழந்தனர்; யான் தவம் இயற்றி,
பொய் இல் நாயகம் பூண்டபின், இனி அது புரிதல்
நொய்யது ஆகும் என்று, ஆரும் என் காவலின் நுழைவார். 54

'''வேள்வி ஆதிய புண்ணியம் தவத்தொடும் விலக்கி,
கேள்வி யாவையும் தவிர்த்தனென், 'இவை கிளர் பகையைத்
தாழ்வியாதன செய்யும்' என்று; அனையவர் தம்பால்
வாழ்வு யாது? அயல் எவ் வழிப் புறங்கொண்டு வாழ்வார்? 55

'''பேதைப் பிள்ளை நீ; பிழைத்தது பொறுத்தனென்; பெயர்த்தும்,
'ஏது இல் வார்த்தைகள் இனையன விளம்பலை; முனிவன்
யாது சொல்லினன், அவை அவை இதம் என எண்ணி,
ஓதி; போதி' என்று உரைத்தனன்—உலகு எலாம் உயர்ந்தோன். 56

**பிரகலாதன் அறிவுரை**

'''உரை உளது உணர்த்துவது; உணர்ந்து கோடியேல்,—
விரை உள அலங்கலாய்!—வேத வேள்வியின்
கரை உளது; யாவரும் கற்கும் கல்வியின்
பிரை உளது'' என்பது மைந்தன் பேசினன்: 57

'''வித்து இன்றி விளைவது ஒன்று இல்லை; வேந்த! நின்
பித்து இன்றி உணர்தியேல், அளவைப் பெய்குவேன்;
'உய்த்து ஒன்றும் ஒழிவு இன்றி உணர்தற்பாற்று' என,
கைத்து ஒன்று நெல்லிஅம் கனியின் காண்டியால். 58

'''தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை-
தன்னுளே நின்று, தான் அவற்றுள் தங்குவான்,
பின் இலன் முன் இலன், ஒருவன்; பேர்கிலன்;
தொல் நிலை ஒருவரால் துணியற்பாலதோ? 59

57. வேத வேள்வியின் கரை உளது - (என் உரை) வேத நூலறிவுக்கும் வேள்விப் பயனுக்கும் முடிவிடமாய் உள்ளது; கல்வியின் பிரை உளது - கல்வியாகிய பாலுக்கு உறை மோர்த்துளியாக உள்ளது; 58. பித்து - பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருள், மயக்க உணர்வு; அளவை - (மெய்ப்பொருளை) அறியும் வகை.

'''சாங்கியம், யோகம் என்று இரண்டு தன்மைய,
வீங்கிய பொருள் எலாம் வேறு காண்பன;
ஆங்கு அவை உணர்ந்தவர்க்கு அன்றி, அன்னவன்
ஓங்கிய மேல் நிலை உணரற்பாலதோ? 60

'''சித்து என அரு மறைச் சிரத்தின் தேறிய
தத்துவம் அவன்; அது தம்மைத் தாம் உணர்
வித்தகர் அறிகுவர்; வேறு வேறு உணர்
பித்தரும் உளர் சிலர்; வீடு பெற்றிலார். 61

'''அளவையான் அளப்ப அரிது; அறிவின் அப் புறத்து
உளவை ஆய் உபநிடதங்கள் ஓதுவ;
கிளவி ஆர் பொருள்களான் கிளக்குறுதவன்
களவை யார் அறிகுவார்? மெய்ம்மை கண்டிலார். 62

'''மூவகை உலகும் ஆய், குணங்கள் மூன்றும் ஆய்,
யாவையும் எவரும் ஆய், எண் இல் வேறுபட்டு,
ஓவல் இல் ஒரு நிலை ஒருவன் செய்வினை
தேவரும் முனிவரும் உணரத் தேயுமோ? 63

'''கருமமும், கருமத்தின் பயனும், கண்ணிய
தரு முதல் தலைவனும், தானும், தான்; அவன்
அருமையும் பெருமையும் அறிவரேல் அவர்,
இருமை என்று உரைசெயும் கடல்நின்று ஏறுவார். 64

'''மந்திரம் மா தவம் என்னும் மாலைய,
தந்துறு பயன் இவை, முறையின் சாற்றிய
நந்தல் இல் தெய்வம் ஆய், நல்கும் நான்மறை
அந்தம் இல் வேள்விமாட்டு அவிசும் ஆம்—அவன். 65

60. சாங்கியம் - ஆராய்ச்சியால் வரும் ஞானம்; யோகம் - ஆராய்ச்சியால் வரும் ஞானத்தை அனுபவமாகச் செயற்படுத்தும் நிலை; 62. அளவை - பொருள்களின் உண்மையினை அளந்து துணிதற்குரிய அடிப்படை, பிரமாணம்; உளவை - உள்ளவை, ஈண்டு உள்ள மறை பொருளை; ஆய் - ஆராயும்; களவு - மாயம்; 63. தேய்தல் - அளவிற்பட்டுச் சுருங்குதல்; 64. கருமம் - நன்று தீது எனப்படும் வினைகள்; தானும் - வினை செய்யும் கருத்தாவாகிய உயிரும்; தான் - தானாக விளங்குபவன், இறைவன்; 65. அவிசு - தேவர்களைக் குறித்து வேள்வித் தீயில் இடப்பெறும் தேவருணவு.

' ''முற்பயப் பயன் தரும், முன்னில் நின்றவர்,
பிற்பயப் பயன் தரும், பின்பு போல் அவன்;
தற் பயன் தான் தெரி தருமம் இல்லை; அஃது
அற்புத மாயையால் அறிகிலார் பலர். 66

' ''ஒரு வினை, ஒரு பயன் அன்றி உய்க்குமோ,
இரு வினை என்பவை இயற்றி இட்டவை;
கருதின கருதின காட்டுகின்றது,
தரு பரன் அருள்; இனிச் சான்று வேண்டுமோ? 67

' ''ஓர் ஆவுதி, கடைமுறை வேள்வி ஓம்புவார்,
அரா-அணை அமலனுக்கு அளிப்பரேல்; அது
சராசரம் அனைத்தினும் சாரும்—என்பது
பராவ அரு மறைப் பொருள்; பயனும் அன்னதால். 68

' ''பகுதியின் உட் பயன் பயந்தது; அன்னதின்
விகுதியின் மிகுதிகள் எவையும், மேலவர்
வகுதியின் வசத்தன; வரவு போக்கது;
புகுதி இல்லாதவர் புலத்திற்று ஆகுமோ? 69

' ''எழுத்து இயல் நாளத்தின் எண் இலா வகை,—
முழுத் தனி நான்முகன் முதல முற்று உயிர்—
வழுத்து அரும் பொகுட்டது ஓர் புரையின் வைகுமால்,
விழுத் தனிப் பல் இதழ் விரை இலா முகிழ். 70

' ''கண்ணினும் கரந்துளன்; கண்டு காட்டுவார்
உள் நிறைந்திடும் உணர்வு ஆகி, உண்மையால்,
மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்—
எண்ணினும் நெடியவன் ஒருவன், எண் இலான். 71

66. முற்பயப் பயன் - முன்னே நுகர்தற்குரிய நிலையில் முதிர்ந்த வினைப் பயன்; பிற்பயப் பயன் - பின்னே நுகர்தற்குரிய வகையில் முதிராத நிலையில் உள்ள வினைப்பயன்; பின்பு போல் அவன் - பின்னே இருப்பது போல் இருந்து அவன்; தருமம் - செயல்; 68. வேள்வி ஓம்புவார் கடைமுறை - யாகம் செய் பவர்கள் யாகத்தின் முடிவில்; 69. பகுதியின் - மூலப் பிரகிருதியிலிருந்து; உட் பயன் - காரிய ரூபமாகிய உலகம்; பயந்தது - (திருமாலாகிய பரம்பொருள்) தோற்றுவித்தது; விகுதியின் மிகுதிகள் - விகாரத்தால் உண்டான தொகுதிகள்; வகுதி - தத்துவங்களின் பகுப்பு; வசத்தன - அடங்கியவை; வரவு போக்கது - (அப் பரம்பொருள்) வினை வயத்தால் வரும் பிறப்பு இல்லாதது; புகுதி - அழுந்தியுணரும் நுண்ணறிவு; 70. எழுத்து இயல் - ஓவியத்தின் தன்மை வாய்ந்த; எழுத்து - எழுதப்படுவது, ஈண்டு ஓவியம்; நாளம் - உள் தொளை யுள்ள பூண் தண்டு; புரை - ஒரு பகுதி.

' ''சிந்தையின், செய்கையின், சொல்லின், சேர்ந்துளன்;
இந்தியம்தொறும் உளன்; உற்றது எண்ணிஞல்,
முந்தை ஓர் எழுத்து என வந்து, மும் முறைச்
சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான். 72

' ''காமமும் வெகுளியும் முதல கண்ணிய
தீமையும், வன்மையும், தீர்க்கும் செய்கையான்
நாமமும், அவன் பிற நலி கொடா நெடுஞ்
சேமமும், பிறர்களால் செப்பற்பாலவோ? 73

' ''காலமும் கருவியும் இடனும் ஆய், கடைப்
பால் அமை பயனும் ஆய், பயன் துய்ப்பானும் ஆய்,
சீலமும் அவை தரும் திருவும் ஆய், உளன்—
ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான். 74

' ''உள்ளுற உணர்வு இனிது உணர்ந்த ஓசை ஓர்
தெள் விளி யாழிடைத் தெரியும் செய்கையின்,
உள் உளன்; புறத்து உளன்; ஒன்றும் நண்ணலான்;
தள்ள அரு மறைகளும் மருளும் தன்மையான். 75

' ''ஓம் எனும் ஓர் எழுத்துஅதனின் உள் உயிர்
ஆம் அவன், அறிவினுக்கு அறிவும் ஆயினுன்;
தாம மூஉலகமும் தழுவிச் சார்தலால்,
தூமமும் கனலும்போல் தொடர்ந்த தோற்றத்தான். 76

' ''காலையின் நறு மலர் ஒன்றக் கட்டிய
மாலையின் மலர் புரை சமய வாதியர்
சூலையின் திருக்கு அலால், சொல்லுவோர்க்கு எலாம்
வேலையும் திரையும்போல் வேறுபாடு இலான். 77

' ''இன்னது ஓர் தன்மையன் இகழ்வுற்று எய்திய
நல் நெடுஞ் செல்வமும், நாளும், நாம் அற
மன்னுயிர் இழத்தி! என்று அஞ்சி வாழ்த்தினேன்,
சொன்னவன் நாமம்'' என்று உணரச் சொல்லினுன். 78

72. மும் முறைச் சந்தி - அகர உகர மகரங்களாகிய மூன்று சொற்கள்; 76. தாமம் - இடப் பரப்பு, பரமபதம் எனலும் ஆம்; 77. காலையின் மலர் - மலரும் காலத்தில் மலர்ந்த பூக்கள்; சூலை - கொடிய வயிற்று நோய், ஈண்டு மன எரிவு; திருக்கு - மாறுபாடு.

### இரணியன் சினமுற்று, பிரகலாதனைக் கொல்லப் பணித்தல்

'எதிரில் நின்று, இவை இவை உரைத்திடுதலும்,
எவ் உலகமும் அஞ்ச,
முதிரும் வெங் கத மொழிகொடு மூண்டது,
முது கடற் கடு ஏய்ப்ப;
கதிரும் வானமும் சுழன்றன; நெடு நிலம்
கம்பித்த; கனகன் கண்
உதிரம் கான்றன; தோன்றின புகைக் கொடி;
உமிழ்ந்தது கொடுந் தீயே. 79

'"வேறும் என்னொடு தரும் பகை
பிறிது இனி வேண்டலென்; வினையத்தால்,
ஊறி, என்னுளே உதித்தது; குறிப்பு
இனி உணர்குவது உளது அன்றால்;
ஈறு இல் என் பெரும் பகைஞனுக்கு
அன்பு சால் அடியென் யான்—என்கின்றான்;
கோறிர்" என்றனன்; என்றலும், பற்றினர்,
கூற்றினும் கொலை வல்லார். 80

### வீரர் பிரகலாதனைக் கொல்ல முயல்தலும், அவன் உய்தலும்

'குன்றுபோல் மணி வாயிலின் பெரும் புறத்து
உய்த்தனர், மழுக் கூர் வாள்
ஒன்று போல்வன ஆயிரம் மீது
எடுத்து ஓச்சினர்—"உயிரோடும்
தின்று தீர்குதும்" என்குநர், உரும் எனத்
தெழிக்குநர், சின வேழக்
கன்று புல்லிய கோள் அரிக் குழு எனக்
கனல்கின்ற தறுகண்ணார். 81

'தாயின் மன்னுயிர்க்கு அன்பினன்தன்னை,
அத் தவம் எனும் தகவு இல்லோர்
"ஏ" என் மாத்திரத்து எய்தன,
எறிந்தன, எறிதொறும் எறிதோறும்,—
தூயவன்தனைத் துணை என உடைய
அவ் ஒருவனைத் துன்னுதார்
வாயின் வைதன ஒத்தன—அத்துணை
மழுவொடு கொலை வாளும். 82

80. வினையம் - வஞ்சனை, தீவினை.

'எறிந்த, எய்தன, எற்றின, குத்தின,
ஈர்த்தன, படை யாவும்
முறிந்து, நுண் பொடி ஆயின; முடிந்தன;
முனிவு இலான் முழு மேனி
சொறிந்த தன்மையும் செய்தில ஆயின;
தூயவன் துணிவு ஒன்று
அறிந்த நாயகன் சேவடி மறந்திலன்;
அயர்த்திலன், அவன் நாமம். 83

' ''உள்ள வான் படை உலப்பில யாவையும்
உக்கன—உரவோய்!—நின்
பிள்ளை மேனிக்கு ஓர் ஆனி வந்திலது; இனிச்
செயல் என்கொல், பிறிது?'' என்ன,
''கள்ள உள்ளத்தன் கட்டினன் கருவிகள்;
கதுமெனக் கனல் பொத்தித்
தள்ளுமின்'' என உரைத்தனன்; வயவரும்,
அத் தொழில் தலைநின்றார். 84

'குழியில் இந்தனம் அடுக்கினர், குன்று என;
குடம்தொறும் கொணர்ந்து எண்ணெய்
இழுது நெய் சொரிந்திட்டனர்; நெருப்பு
எழுந்திட்டது, விசும்பு எட்ட;
அழுது நின்றவர் அயர்வுற, ஐயனைப்
பெய்தனர்; ''அரி'' என்று
தொழுது நின்றனன், நாயகன் தாள் இணை;
குளிர்ந்தது, சுடு தீயே. 85

'கால வெங் கனல் கதுவிய காலையில்,
கற்பு உடையவள் சொற்ற
சீல நல் உரை சீதம் மிக்கு அடுத்தலின்,—
கிழியொடு நெய் தீற்றி,
ஆலம் அன்ன நம் அரக்கர்கள் வயங்கு
எரி மடுத்தலின்,—அனுமன்தன்
கூலம் ஆம் என, என்புறக் குளிர்ந்தது,
அக் குரு மணித் திரு மேனி. 86

84. ஆனி - ஹாநி, துன்பம்; பொத்தி - மூட்டி; 85. இந்தனம் - விறகு; 86. கூலம் - வால்.

' ''சுட்டது இல்லை நின் தோன்றலை,
சுடர்க் கனல் சுழி படர் அழுவத்துள்
இட்டபோதிலும்; என் இனிச் செயத் தக்கது?''
என்றனர், இகல் வெய்யோர்.
''கட்டி, தீயையும் கடுஞ் சிறை இடுமின்;
அக் கள்வனைக் கவர்ந்து உண்ண
எட்டுப் பாம்பையும் விடுமின்கள்''
என்றனன், எரி எழு தறுகண்ணன். 87

அனந்தனே முதலாகிய நாகங்கள்,
''அருள் என்கொல்?'' என, அன்னான்
நினைந்த மாத்திரத்து எய்தின, நொய்தினில்;
நெருப்பு உகு பகு வாயால்,
வனைந்ததாம் அன்ன மேனியினான் தன்மேல்,
வாள் எயிறு உற ஊன்றி,
சினம் தம் மீக்கொள, கடித்தன; துடித்திலன்,
திருப் பெயர் மறவாதான். 88

'பக்கம் நின்றவை பயத்தினின் புயற் கறைப்
பசும் புனல் பகு வாயின்
கக்க, வெஞ் சிறைக் கலுழனும்
நடுக்குற, கவ்விய காலத்துள்,
செக்கர் மேகத்துச் சிறு பிறை நுழைந்தன
செய்கைய, வலி சிந்தி
உக்க, பற் குலம்; ஒழுகின, எயிற்று
இரும் புரைதொறும் அமிழ்து ஊறி. 89

' ''சூழப் பற்றின சுற்றும் எயிற்றின்
போழக்கிற்றில'' என்று புகன்றார்;
''வாழித் திக்கின், மயக்கின் மதம் தாழ்,
வேழத்துக்கு இடுமின்'' என விட்டான். 90

'பசையில் தங்கல் இல் சிந்தையர் பல்லோர்
திசையில் சென்றனர்; ''செப்பினன்'' என்னும்
இசையில் தந்தனர்—இந்திரன் என்பான்
விசையின் திண் பணை வெஞ் சின வேழம். 91

87. அழுவம் - பெருங்குழி; 91. பசை - இரக்கம்.

'கையில், கால்களில், மார்பு, கழுத்தில்,
தெய்வப் பாசம் உறப் பிணி செய்தார்;
மையல் காய் கரி முன் உற வைத்தார்;
பொய் அற்ருனும் இது ஒன்று புகன்ருன்: 92

' ''எந்தாய்!—பண்டு ஓர் இடங்கர் விழுங்க,—
முந்தாய் நின்ற முதல் பொருளே! என்று,
உன் தாய் தந்தை இனத்தவன் ஓத,
வந்தான் என்தன் மனத்தினன்'' என்ருன். 93

'என்ன முன்னம், இருங் களிறும் தன்
பொன் ஆர் ஓடை பொருந்த, நிலத்தின்,
அன்னனைத் தொழுது, அஞ்சி அகன்றது;
ஒன்னர் அத் திறம் எய்தி உரைத்தார். 94

' ''வல் வீரைத் துயில்வானை மதித்து, என்
நல் வீரத்தை அழித்தது; நண்ணுற்று,
ஒல்வீர்! ஒற்றை உரக் கரிதன்னைக்
கொல்வீர்'' என்றனன், நெஞ்சு கொதிப்பான். 95

'தன்னைக் கொல்லுநர் சாருதலோடும்,—
பொன்னைக் கொல்லும் ஒளிப் புகழ் பொய்யா
மன்னைக் கொல்லிய வந்தது—வாரா
மின்னைக் கொல்லும் வெயில் தின் எயிற்ருல். 96

'வீரன் திண் திறல் மார்பினில் வெண் கோடு
ஆரக் குத்தி அழுத்திய நாகம்,
வாரத் தண் குலை வாழை மடல் சூழ்
ஈரத் தண்டு என, இற்றன எல்லாம். 97

'வெண் கோடு இற்றன, மேவலர் செய்யும்
கண் கோடல் பொறியின் கடிது ஏகி,
''எண் கோடற்கு அரிது'' என்ன, வெகுண்டான்,
திண் கோடைக் கதிரின் தெறு கண்ணன். 98

' ''தள்ளத் தக்கு இல் பெருஞ் சயிலத்தோடு
எள்ளக் கட்டி எடுத்து விசித்து,
கள்ளத்து இங்கு இவனைக் கரை காணு
வெள்ளத்து உய்த்திடுமின்'' என விட்டான். 99

93. முந்தாய் - மூலமாய்; 95. வீரை - கடல்; 97. வாரம் - விருப்பம்; 98. கண் கோடல் பொறி - கண் இமைக்கும் அளவு; பொறி - அளவு; எண் - (நின் பிள்ளையின்) வலிமை.

' ''ஒட்டிக் கொல்ல உணர்ந்து வெகுண்டான்;
விட்டிட்டான்அலன்'' என்று விரைந்தார்,
கட்டிக் கல்லொடு, கால் விசையின் போய்,
இட்டிட்டார், கடலின் நடு;—எந்தாய்! 100

'நடு ஒக்கும் தனி நாயகன் நாமம்
விடுகிற்கின்றிலன் ஆகலின், வேலை
மடு ஒத்து, அங்கு அதின் வங்கமும் அன்றாய்,
குடுவைத் தன்மையது ஆயது, குன்றம். 101

'தலையில் கொண்ட தடக் கையினான், தன்
நிலையின் தீர்வு இல் மனத்தின் நினைந்தான்—
சிலையில் திண் புனலில், சினை ஆலின்
இலையில் பிள்ளை எனப் பொலிகின்றான். 102

'மோதுற்று ஆர் திரை வேலையில் மூழ்கான்,
மீதுற்று ஆர் சிலை மீது கிடந்தான்,
ஆதிப் பண்ணவன் ஆயிர நாமம்
ஓதுற்றான்—மறை ஒல்லை உணர்ந்தான்: 103

' ''அடியார் அடியேன் எனும் ஆர்வம் அலால்,
ஒடியா வலி யான் உடையேன் உளெனோ?
கொடியாய்! குறியாய்! குணம் ஏதும் இலாய்!
நெடியாய்! அடியேன் நிலை நேர்குதியோ? 104

' ''கள்ளம் திரிவாரவர் கைதவம் நீ;
உள்ளம் தெரியாத உனக்கு உளவோ?
துள்ளும் பொறியின் நிலை சோதனைதான்—
வெள்ளம் தரும் இன் அமுதே!—விதியோ? 105

' ''வரு நான்முகனே முதல் வானவர் தாம்,
திரு நான்மறையின் நெறியே திரிவார்;
பெரு நாள் தெரிகின்றிலர்; பேதைமையேன்,
ஒரு நாள், உனை எங்ஙனம் உள்ளுவெனோ? 106

100. ஒட்டுதல் - சபதம் செய்தல்; 101. நடு ஒக்கும் நாயகன் - எவ்வுயிர்க்கும் நடுவாய் நின்று அருள் சுரக்கும் இறைவன்; வங்கமும் அன்றாய் - மரக்கலம் என்றற்கும் போதாமல்; 104. குறியாய் - மன மொழி மெய்களுக்கு எட்டாத நிலையில் உள்ளாய்; நேர்குதியோ? - எதிர்ப்பட்டு அருள் புரிவாயோ? 105. துள்ளல் - ஒருவழிப்பட அமைந்து நில்லாது வரம்பிகந்து தாவுதல்; விதியோ? - முறையோ?

' ''செய்யாதனவோ இலை; தீவினைதான்
பொய்யாதன வந்து புணர்ந்திடுமால்,
மெய்யே; உயிர் தீர்வது ஓர் மேல்வினை, நீ,
ஐயா! ஒரு நாளும் அயர்த்தனையோ? 107

' ''ஆயப் பெறும் நல் நெறி தம் அறிவு என்று,
ஏயப் பெறும் ஈசர்கள் எண் இலரால்;
நீ அப்புறம் நிற்க, நினைக்கிலர்; நின்
மாயப் பொறி புக்கு, மயங்குவரால். 108

' ''தாமே தனி நாயகர் ஆய், 'எவையும்
போமே பொருள்' என்ற புராதனர்தாம்,
'யாமே பரம்' என்றனர்; என்ற அவர்க்கு
ஆமே? பிறர், நின் அலது, ஆர் உளரே? 109

' ''ஆதிப் பரம் ஆம் எனில், அன்று எனலாம்,
ஓது அப் பெரு நூல்கள் உலப்பு இலவால்;
பேதிப்பன; நீ அவை பேர்கிலையால்;
வேதப் பொருளே! விளையாடுதியோ? 110

' ''அம்போருகனும், அரனும், அறியார்;
எம் போலியர் எண்ணிடின், என், பலவா?
கொம்பொடு, அடை, பூ, கனி, காய் எனினும்,
வம்போ, 'மரம் ஒன்று' எனும் வாசகமே? 111

' ''நின்னின் பிறிதாய், நிலையின் திரியா,
தன்னின் பிறிது ஆயினதாம் எனினும்
உன்னின் பிறிது ஆயினவோ, உலகம்—
பொன்னின் பிறிது ஆகில, பொற் கலனே? 112

' ''தாய் தந்தை எனும் தகை வந்தனைதான்,
நீ தந்தனை; நீ உறு நெஞ்சினென் நான்;
நோய் தந்தவனே! நுவல் தீர்வும்'' என,
வாய் தந்தன சொல்லி, வணங்கினனால். 113

107. உயிர் தீர்வது ஓர் மேல் வினை - (தீவினைப் பயன்கள்) உயிரை விட்டு நீங்குவதற்கு ஏதுவாக இறைவன் செய்யும் திருவருட் செயல்; அயர்த்தனையோ? - மறந்தனையோ? (இல்லை என்றபடி); 108. ஏயப் பெறும் - பொருந்தி ஒழுகும்; ஈசர்கள் - திருவுடைய தலைவர்கள், குறிப்பு மொழியாய்த் திருவில்லாதவர் எனப் பொருள்பட்டது; நிற்க - நிற்றலால்; 109. எவையும் போமே பொருள் - எத்தகைய செயலும் எம்மால் முடிக்கப் பெறுவன; 109. புராதனர் - பழையோர், ஈண்டு அயன் அரன் என்போர்; 112. தன்னின் - தமக்குள்ளே.

'அத் தன்மை அறிந்த அருந் திறலோன்,
''உய்த்து உய்ம்மின், என் முன்'' என, உய்த்தனரால்;
''பித்துண்டது பேர்வு உறுமா பெறுதும்;
கைத்தும், கடு நஞ்சின்'' எனக் கனலா,* 114

'இட்டார் கடு வல் விடம்; எண்ணுடையான்
தொட்டான் நுகரா, ஒரு சோர்வு இலனால்;
கட்டு ஆர் கடு மத்திகை, கண் கொடியோன்,
விட்டான்; அவன்மேல் அவர் வீசினரால். 115

'வெய்யார், முடிவு இல்லவர், வீசிய போது,
''உய்யான்'' எனும் வேலையினுள், ''உறைவோன்
கை ஆயிரம் அல்ல; கணக்கு இல'' என்று,
எய்யா உலகு யாவையும் எண்ணினனால். 116

**இரணியன் - பிரகலாதன் உரையாடல்**

' ''ஊனோடு உயிர் வேறு படா உபயம்
தானே உடையன், தனி மாயையினால்;
யானே உயிர் உண்பல்'' எனக் கனலா,
வான் ஏழும் நடுங்கிட, வந்தனனால். 117

'வந்தானை வணங்கி, ''என் மன் உயிர்தான்
எந்தாய்! கொள எண்ணினையேல், இதுதான்
உம் தாரியது அன்று; உலகு யாவும் உடன்
தந்தார் கொள நின்றதுதான்'' எனலும், 118

' ''ஏவரே உலகம் தந்தார்? என் பெயர் ஏத்தி வாழும்
மூவரே? அல்லர்ஆகின், முனிவரே? முழுதும் தோற்ற
தேவரே? பிறரே? யாரே? செப்புதி, தெரிய'' என்றான்,
கோவம் மூண்டு எழுந்தும் கொல்லான், காட்டுமேல் காட்சி கொள்வான்.

' ''உலகு தந்தானும், பல் வேறு உயிர்கள் தந்தானும், உள் உற்று,
உலைவு இலா உயிர்கள்தோறும், அங்கு அங்கே உறைகின்றானும்,
மலரினில் வெறியும் எள்ளில் எண்ணெயும்; மற்றும் கேளாய்!
அலகு இல் பல் பொருளும் பற்றி முற்றிய அரிகாண்—அத்தா!

114. கைத்தல் - வெறுத்தல், ஈண்டுக் கொல்லுதல்; 115. எண்ணுடையான் - இறைவனைத் தியானித்தலையுடையவன் (பிரகலாதன்); கட்டு - முடிச்சு; மத்திகை - குதிரைச் சம்மட்டி; விடுதல் - செலுத்தல்; 117. உப்யம் - உபாயம்; 118. தாரியது - தரத்தில் உள்ளது, வழிப்பட்டது.

' ''என் கணுல் நோக்கிக் காண்டற்கு எங்கணும் உளன்காண், எந்தை;
உன்கண் நான் அன்பின் சொன்னுல், உறுதி என்று ஒன்றும் கொள்
நின்கணுல் நோக்கிக் காண்டற்கு எளியனே—நினக்குப் பின்னேன்[ளாய்;
பொன்கணுன் ஆவி உண்ட புண்டரீகக் கண் அம்மான்? 121

' ''மூன்று அவன் குணங்கள்; செய்கை மூன்று; அவன் உருவம் மூன்று;
மூன்று கண், சுடர் கொள் சோதி மூன்று; அவன் உலகம் மூன்று;
தோன்றலும் இடையும் ஈறும் தொடங்கிய பொருள்கட்கு எல்லாம்
சான்று அவன்; இதுவே வேத முடிவு; இது சரதம்'' என்றான். 122

'என்றலும், அவுணர் வேந்தன் எயிற்று அரும்பு இலங்க நக்கான்,
''ஒன்றல் இல் பொருள்கள் எல்லாம் ஒருவன் புக்கு உறைவன்—என்றாய்;
நன்று அது கண்டு, பின்னர் நல்லவா புரிதும்; தூணில்
நின்றுளன்என்னின், கள்வன், நிரப்புதி நிலைமை'' என்றான்.

' ''சாணினும் உளன்; ஓர் தன்மை, அணுவினைச் சத கூறு இட்ட
கோணினும் உளன்; மா மேருக் குன்றினும் உளன்; இந் நின்ற
தூணினும் உளன்; நீ சொன்ன சொல்லினும் உளன்; இத் தன்மை
காணுதி விரைவின்'' என்றான்; ''நன்று'' எனக் கனகன் சொன்னான்.

' ''உம்பர்க்கும் உனக்கும் ஒத்து, இவ் உலகு எங்கும் பரந்துளானை,
கம்பத்தின் வழியே காண, காட்டுதி; காட்டிடாயேல்,
கும்பத் திண் கரியைக்கோள் மாக் கொன்றென, நின்னைக்கொன்று,உன்
செம்பு ஒத்த குருதி தேக்கி, உடலையும் தின்பென்'' என்றான்.

' ''என் உயிர் நின்னால் கோறற்கு எளியது ஒன்று அன்று; யான் முன்
சொன்னவன் தொட்ட தொட்ட இடம்தொறும் தோன்றான் ஆயின்,
என் உயிர் யானே மாய்ப்பல்; பின்னும் வாழ்வு உகப்பல்என்னின்,
அன்னவற்கு அடியேன் அல்லேன்'' என்றனன், அறிவின் மிக்கான்.

**இரணியன் தூணை அறைய, நரசிங்கம் தோன்றிச் சிரித்தல்**

'நசை திறந்து இலங்கப் பொங்கி, ''நன்று, நன்று!'' என்ன நக்கு,
விசை திறந்து உருமு வீழ்ந்ததென்ன ஓர் தூணின், வென்றி
இசை திறந்து உயர்ந்த கையால் எற்றினான்; எற்றலோடும்,
திசை திறந்து, அண்டம் கீறச் சிரித்தது, அச் செங் கண் சீயம்.

123. ஒன்றல் இல் பொருள்கள் - ஒன்றுபடுதல் இல்லா வேறுபட்ட பொருள்கள்; 125. கும்பம் - மத்தகம்; கோள்மா - வலிய சிங்கம்.

### பிரகலாதன் பெருமகிழ்ச்சி

'"நாடி நான் தருவென்" என்ற நல் அறிவாளன், நாளும்
தேடி நான்முகனும் காணாச் சேயவன் சிரித்தலோடும்,
ஆடினான்; அழுதான்; பாடி அரற்றினான்; சிரத்தில் செங் கை
சூடினான்; தொழுதான்; ஓடி, உலகு எலாம் துகைத்தான், துள்ளி.

### இரணியன் நரசிங்க மூர்த்தியைப் போருக்கு அழைத்தல்

'"ஆர் அடா சிரித்தாய்? சொன்ன அரிகொலோ? அஞ்சிப் புக்க
நீர், அடா, போதாது என்று, நெடுந் தறி நேடினாயோ?
போர் அடா? பொருதிஆயின், புறப்படு! புறப்படு!" என்றான்—
பேர் அடா நின்ற தாளோடு உலகு எலாம் பெயரப் பேர்வான்.

### நரசிங்க மூர்த்தி வெளிப்பட்டுப் பெருவடிவு கொள்ளல்

'பிளந்தது தூணும்; ஆங்கே பிறந்தது, சீயம்; பின்னை
வளர்ந்தது, திசைகள் எட்டும்; பகிரண்டம் முதல மற்றும்
அளந்தது; அப் புறத்துச் செய்கை யார் அறிந்து அறையகிற்பார்?
கிளர்ந்தது; ககன முட்டை கிழிந்தது, கீழும் மேலும். 130

'மன்றல் அம் துளப மாலை மானுட மடங்கல் வானில்
சென்றது தெரிதல் தேற்றாம்; சேவடி படியில் தீண்ட
நின்றது ஓர் பொழுதின், அண்ட நெடு முகட்டு இருந்த முன்னோன்
அன்று அவன் உந்தி வந்தானும் எனத் தோன்றினானால். 131

'"எத்துணை போதும் கை" என்று இயம்பினால், எண்ணற்கு ஏற்ற
வித்தகர் உளரே? அந்தத் தானவர் விரிந்த சேனை,
பத்து நூறு அமைந்த கோடி வெள்ளத்தால் பகுதி செய்த
அத்தனை கடலும் மாள, தனித் தனி அள்ளிக் கொண்ட. 132

'ஆயிரங்கோடி வெள்ளத்து அயில் எயிற்று அவுணர்க்கு, அங்கு அங்கு,
ஏயின ஒருவர்க்கு ஓர் ஓர் திருமுகம், இரட்டிப் பொன் தோள்,
தீ எனக் கனலும் செங் கண் சிரம்தொறும் மூன்றும், தெய்வ
வாயினில் கடல்கள் ஏழும், மலைகளும், மற்றும், முற்றும். 133

'முடங்கு வால் உளை அவ் அண்டம் முழுவதும் முடிவில் உண்ணும்
கடம் கொள் வெங் காலச் செந் தீஅதனை வந்து அவிக்கும்; கால
மடங்கலின் உயிர்ப்பும், மற்று அக் காற்றினை மாற்றும்; ஆனால்,
அடங்கலும் பகு வாய் யாக்கை அப் புறத்து அகத்தது அம்மா!

129. பேர் அடா நின்ற தாளோடு - புகழ் பொருந்திய பாதத்தால், (தன் பெயர்) பொருந்தி நிற்றற்குக் காரணமாகிய வலிமையோடு எனலும் ஆம்; 132. கை எத்துணை போதும்? - கைகள் எத்தனை உள்ளன; 134. முடங்கு வால் உளை - வளைந்த தூய்மையான பிடரி மயிர்; கடம் - கடமை; கால மடங்கல் - காலனை ஒத்த நரசிங்கம்; அடங்கலும் - (பிடரி மயிர், உயிர்ப்பு என்னும்) அவ்விரண்டும்; அப் புறம் - மேற்புறம்.

'குயிற்றிய அண்டம் குஞ்சை இட்டிலா முட்டைக் கூட்டில்
பயிற்றிய பருவம் ஒத்த காலத்துள்,—அமுது பல்கும்
எயிற்று வன் பகு வாயுள் புக்கு இருக்குந—இருக்கை எய்தி,
வயிற்றின் வந்து, அந்நாள், இந்நாள் வாழும் மன்னுயிர்கள் மன்னோ.

'நன்மையின் தொடர்ந்தார்க்கு உண்டோ, கேடு? நான்முகத்தோன் ஆதி
தொன்மையின் தொடர்ந்த வாய்மை அறத்தொடும் துறந்திலோரை,
அன்வயித்து, ஒரும் தீய அவுணர் அல்லாரை, அந் நாள்,
தன் வயிற்றகத்து வைத்துத் தந்தது, அச் சீயம், தாயின். 136

'பேருடை அவுணர் தம்மைப் பிறை எயிற்று அடக்கும்; பேரா,
பாரிடைத் தேய்க்கும்; மீளப் பகிரண்டத்து அடிக்கும்; பற்றி,
மேருவில் புடைக்கும்; மாள, விரல்களின் பிசையும்; வேலை
நீரிடைக் குமிழி ஊட்டும்; நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்; 137

'வகிர்ப் படுத்து, உரக்கும்; பற்றி வாய்களைப் பிளக்கும்; வன் தோல்
துகிற் படுத்து உரிக்கும்; செந் தீக் கண்களைச் சூலும்; சுற்றிப்
பகிர்ப் படக் குடரைக் கொய்யும்; பசை அறப் பிசையும், பல் கால்;
உகிர்ப் புரைப் புக்கோர்தம்மை உகிர்களால் உறக்கும், ஊன்றி; 138

'யானையும், தேரும், மாவும், யாவையும், உயிர் இராமை,
ஊனொடும் தின்னும்; பின்னை, ஒலி திரைப் பரவை ஏழும்
மீனொடும் குடிக்கும்; மேகத்து உருமொடும் விழுங்கும், விண்ணில்;
தான் ஒடுங்காது என்று, அஞ்சி, தருமமும் சலித்தது அம்மா!

'ஆழி மால் வரையோடு எற்றும், சிலவரை; அண்ட கோளச்
சூழ் இருஞ் சுவரில் தேய்க்கும், சிலவரை; துளக்கு இல் குன்றம்
ஏழினோடு எற்றிக் கொல்லும், சிலவரை; எட்டுத் திக்கும்
தாழ் இருட் பிழம்பின் தேய்க்கும், சிலவரைத் தடக் கை தாக்கி.

'மலைகளின் புரண்டு வீழ, வள் உகிர் நுதியால், வாங்கி,
தலைகளைக் கிள்ளும்; அள்ளித் தழல் எழப் பிசையும்; தக்க
கொலைகளின் கொல்லும்; வாங்கி உயிர்களைக் குடிக்கும்; வான
நிலைகளில் பரக்க, வேலை நீர்களை நிரம்பத் தூர்க்கும்; 141

'முப் புறத்து உலகத்துள்ளும் ஒழிவு அற முற்றும் பற்றி,
தப்புதல் இன்றிக் கொன்று, தையலார் கருவும் தள்ளி,
இப் புறத்து அண்டத்து யாரும் அவுணர் இல்லாமை எற்றி,
அப் புறத்து அண்டம்தோறும் தடவின, சில கை அம்மா! 142

136. அன்வயித்து - சேர்ந்து, பின்தொடர்ந்து; 137. சுரித்தல் - சுருண்டு தீய்தல்; 138. சூலுதல் - தோண்டியெடுத்தல்; பகிர்பட - துண்டுபடுமாறு, சரிந்து விழும்படி எனலும் ஆம்; உகிர்ப் புரை - நகச் சந்துகள்; 140. ஆழி வரை - சக்கரவாள மலை.

'கனகனும், அவனில் வந்த, வானவர் களைகண் ஆன
அனகனும் ஒழிய, பல் வேறு அவுணர் ஆனவரை எல்லாம்
நினைவதன்முன்னம் கொன்று நின்றது—அந் நெடுங் கண் சீயம்.
வனை கழலவனும், மற்று அம் மடங்கலின் வரவு நோக்கி, 143

**இரணியன் வாள் ஏந்தி, போருக்கு எழுதல்**

'வயிர வாள் உறையின் வாங்கி, வானகம் மறைக்கும் வட்டச்
செயிர் அறு கிடுகும் பற்றி, வானவர் உள்ளம் தீய,
அயிர் படர் வேலை ஏழும் மலைகளும் அஞ்ச, ஆர்த்து, அங்கு
உயிருடை மேரு என்ன வாய் மடித்து, உருத்து நின்றான். 144

**பிரகலாதன் சொற்கேளாது, இரணியன் நரசிங்கத்தை எதிர்த்தல்**

'நின்றவன்தன்னை நோக்கி, ''நிலை இது கண்டு, நீயும்,
ஒன்றும் உன் உள்ளத்து யாதும் உணர்ந்திலை போலும் அன்றே;
வன் தொழில் ஆழி வேந்தை வணங்குதி; வணங்கவே, உன்
புன் தொழில் பொறுக்கும்'' என்றான்—உலகு எலாம் புகழ நின்றான்.

' ''கேள், இது; நீயும் காண, கிளர்ந்த கோள் அரியின் கேழ் இல்
தோளொடு தாளும் நீக்கி, நின்னையும் துணித்து, பின், என்
வாளினைத் தொழுவது அல்லால், வணங்குதல் மகளிர் ஊடல்
நாளினும் உளதோ?'' என்னா, அண்டங்கள் நடுங்க நக்கான்.

**நரசிங்கப்பிரான் இரணியன் மார்பைப் பிளத்தல்**

'நகைசெயா, வாயும் கையும் வாளொடு நடந்த தாளும்
புகைசெயா, நெடுந் தீப் பொங்க உருத்து, எதிர் பொருந்தப் புக்கான்;
தொகை செயற்கு அரிய தோளால் தாள்களால் சுற்றிச் சூழ்ந்தான்—
மிகை செய்வார் வினைகட்கு எல்லாம் மேற்செயும் வினையம் வல்லான்.

'இருவரும் பொருந்தப் பற்றி, எவ் உலகுக்கும் மேல் ஆய்,
ஒருவரும் காணா வண்ணம் உயர்ந்ததற்கு உவமை கூறின்,
வெருவரும் தோற்றத்து, அஞ்சா, வெஞ் சின, அவுணன் மேரு
அரு வரை ஒத்தான்; அண்ணல் அல்லவை எல்லாம் ஒத்தான்.

'ஆர்ப்பு ஒலி முழக்கின், வெவ் வாய் வள் உகிர்ப் பாரம் ஆன்ற
ஏற்று அருங் கரத்தின், பல் வேறு எறி திரைப் பரப்பின் உற்ற
பாற்கடல் பரந்து பொங்கிப் பங்கயத்து ஒருவன் நாட்டின்
மேல் சென்றது ஒத்தான் மாயன்; கனகனும் மேரு ஒத்தான்.

144. கிடுகு - கேடகம்; அயிர் - நுண்ணிய மணல்; 149. நரசிங்கத்தின் கர்ச்சனைக்குக் கடலின் முழக்கமும் கைகளின் தொகுதிக்குக் கடலின் அலைப் பரப்பும் ஒப்பு.

'வாளொடு தோளும், கையும், மகுடமும், மலரோன் வைத்த
நீள் இருங் கனக முட்டை நெடுஞ் சுவர் தேய்ப்ப, நேமி
கோளொடும் திரிவது என்னக் குல மணிக் கொடும் பூண் மின்ன,
தாள் இணை இரண்டும் பற்றிச் சுழற்றினன், தடக் கை ஒன்றால். 150

'சுழற்றிய காலத்து, இற்ற தூங்கு குண்டலங்கள் நீக்கி,
கிழக்கொடு மேற்கும் ஓடி விழுந்தன கிடந்த, இன்றும்
அழல் தரு கதிரோன் தோன்றும் உதயத்தோடு அத்தம் ஆன;
நிழல் தரும், காலை மாலை, நெடு மணிச் சுடரின் நீத்தம். 151

' ''போன்றன இனைய தன்மை; பொருவியது இனையது'' என்று
தான் தனி ஒருவன், தன்னை உரைசெய்யும் தரத்தினானோ?
வான் தரு வள்ளல் வெள்ளை வள் உகிர் வயிர மார்பின்
ஊன்றலும், உதிர வெள்ளம் பரந்துளது, உலகம் எங்கும். 152

'ஆயவன்தன்னை, மாயன், அந்தியின், அவன் பொன் கோயில்
வாயிலில், மணிக் கவான்மேல், வயிர வாள் உகிரின் வாயின்,
மீ எழு குருதி பொங்க, வெயில் விரி வயிர மார்பு
தீ எழப் பிளந்து நீக்கி, தேவர்கள் இடுக்கண் தீர்த்தான். 153

தேவர்கள் நரசிங்கத்தைக் கண்டு அஞ்சி நிற்றல்

'முக்கணான், எண்கணானும், முளரி ஆயிரம் கணானும்,
திக்கண் ஆம் தேவரோடு முனிவரும், பிறரும், தேடிப்
புக்க நாடு அறிகுறாமல் திரிகின்றார் புகுந்து மொய்த்தார்,
"எக் கணால் காண்டும், எந்தை உருவம்" என்று, இரங்கி நின்றார். 154

'நோக்கினார் நோக்கினார் முன், நோக்குறு முகமும் கையும்
ஆக்கையும் தாளும் ஆகி, எங்கணும் தானே ஆகி,
வாக்கினால் மனத்தினால் மற்று அறிவினால் அளக்க வாரா,
மேக்கு உயர் சீயம்தன்னைக் கண்டனர், வெருவுகின்றார். 155

'பல்லொடு பல்லுக்கு எல்லை ஆயிரக் காதப் பத்தி,
சொல்லிய வதனம் கோடி கோடி மேல் விளங்கித் தோன்ற,
எல்லை இல் உருவிற்று ஆகி இருந்ததை எதிர நோக்கி,
அல்லி அம் கமலத்து அண்ணல் அவன் புகழ் விரிப்பதானான்:

151. நெடு மணி - (அக் குண்டலத்தில் பதித்த) சிறந்த மாணிக்கம்; 152. இனைய தன்மை - (இவனுடைய) இவ்வியல்புகள்; போன்றன - (இன்னாருடைய இயல்புகளை) ஒத்தன; இனையது - இன்னதொரு பொருள்; பொருவியது - (இவனை) ஒத்தது.

**நரசிங்க மூர்த்தியைப் பிரமன் துதித்தல்**

'"தன்னைப் படைத்ததுவும் தானே எனும் தன்மை
பின்னைப் படைத்ததுவே காட்டும்; பெரும் பெருமை
உன்னைப் படைத்தாய் நீ என்றால், உயிர் படைப்பான்
என்னைப் படைத்தாய் நீ எனும் இதுவும் ஏத்து ஆமோ? 157

'"பல் ஆயிர கோடி அண்டம், பனிக் கடலுள்
நில்லாத மொக்குள் என, தோன்றுமால், நின்னுழையே;
எல்லா உருவமுமாய் நின்றக்கால், இவ் உருவம்
வல்லே படைத்தால், வரம்பு இன்மை வாராதோ? 158

'"பேரை ஒரு பொருட்கே பல் வகையால் பேர்த்து எண்ணும்
தாரை நிலையை; தமியை; பிறர் இல்லை;
யாரைப் படைக்கின்றது? யாரை அளிக்கின்றது?
ஆரைத் துடைக்கின்றது?—ஐயா!—அறியேமால், 159

'"நின்னுளே என்னை நிருமித்தாய்; நின் அருளால்,
என்னுளே, எப் பொருளும் யாவரையும் யான் ஈன்றேன்;
பின் இலேன்; முன் இலேன்; எந்தை பெருமானே!
பொன்னுளே தோன்றியது ஓர் பொற்கலனே போல்கின்றேன்.'

**சிங்கப் பெருமான் சீற்றம் தணிந்து, தேவர்கட்கு அபயம் அளித்தல்**

'என்று ஆங்கு இயம்பி, இமையாத எண்கணனும்,
வன் தாள் மழுவோனும், யாரும், வணங்கினரால்
நின்றார், இரு மருங்கும்; நேமிப் பெருமானும்,
ஒன்றாத சீற்றத்தை உள்ளே ஒடுக்கினன். 161

"எஞ்சும், உலகு அனைத்தும் இப்பொழுதே" என்று என்று,
நெஞ்சு நடுங்கும் நெடுந் தேவரை நோக்கி,
"அஞ்சன்மின்" என்ன, அருள் சுரந்த நோக்கினால்,
கஞ்ச மலர் பழிக்கும் கை அபயம் காட்டினன். 162

157. பெரும் பெருமை - விசுவம் எனப்படும் பிரபஞ்சம்; உன்னை - உன்கண்; ஏத்து - (உன்னைப் போற்றிய) புகழுரை; 158. நீயே உலகத்துக் காணும் எல்லாப் பொருளுமாகி இருக்கையில், புதியதொரு வடிவினைப் படைத்துக் கொள்வாயாயின் உன் படைப்புத் தொழிலில் வரம்பின்மை என்னும் குற்றம் வாராதோ? என்பது கருத்து; 159. தாரை நிலை - ஒழுங்கான நிலை; 160. பின் - காரியம்; முன் - காரணம்; இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையே அமைந்த தொடர்பு, பொன்னுக்கும் அதனால் இயன்று அதனின் வேறாகாத அணிகலன்களுக்கும் உள்ள சம்பந்தம் போன்று அபேத சம்பந்தம் என்பது ஈற்றடியின் கருத்து.

திருமகள் வருதலும், சிங்கப்பிரான் நோக்குதலும்

'பூவில் திருவை, அழகின் புனை கலத்தை,
யாவர்க்கும் செல்வத்தை, வீடு என்னும் இன்பத்தை,
ஆவித் துணையை, அமுதின் பிறந்தாளை,
தேவர்க்கும் தம் மோயை, ஏவினர், பாற் செல்ல. 163

'செந் தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை, நறுந் தாள் இளங் கொழுந்தை,
முந்தா உலகும் உயிரும் முறை முறையே
தந்தாளை, நோக்கினன், தன் ஒப்பு ஒன்று இல்லாதான். 164

பிரகலாதனை நோக்கிச் சிங்கப் பெருமான் இயம்பிய அருள்மொழி

'தீது இலா ஆக உலகு ஈன்ற தெய்வத்தைக்
காதலால் நோக்கினன்; கண்ட முனிக் கணங்கள்
ஓதினர், சீர்த்தி; உயர்ந்த பரஞ்சுடரும்,
நோதல் ஆங்கு இல்லாத அன்பனையே நோக்கினன். 165

' ''உந்தையை உன்முன் கொன்று, உடலைப் பிளந்து அளைய,
சிந்தை தளராது, அறம் பிழையாச் செய்கையாய்!
அந்தம் இலா அன்பு என்மேல் வைத்தாய்! அளியத்தாய்!
எந்தை! இனி இதற்குக் கைம்மாறு யாது?'' என்றான். 166

' ''அயிரா இமைப்பினை ஓர் ஆயிரம் கூறு இட்ட
செயிரின் ஒரு பொழுதில், நுந்தையை யாம் சீறி,
உயிர் நேடுவேம்போல், உடல் அளைய, கண்டும்
செயிர் சேரா உள்ளத்தாய்க்கு, என் இனி யாம் செய்கேம்?†

' ''கொல்லேம், இனி உன் குலத்தோரை, குற்றங்கள்
எல்லை இலாதன செய்தாரே என்றாலும்;
நல்லேம், உனக்கு எம்மை; நாணமல், நாம் செய்வது
ஒல்லை உளதேல், இயம்புதியால்'' என்று உரைத்தான். 168

பிரகலாதன் வரமும், சிங்கப் பெருமான் அருளும்

' ''முன்பு பெறப்பெற்ற பேறே முடிவு இல்லை;
பின்பு பெறும் பேறும் உண்டோ? பெறுகுவெனேல்,
என்பு பெறாத இழி பிறவி எய்தினும், நின்
அன்பு பெறும் பேறு அடியேற்கு அருள்'' என்றான். 169

163. மோய் - தாய்; 165. சீர்த்தி - மிகு புகழ்; 167. அயிரா - நுண்ணிதாக; 168. எம்மை - எப் பிறப்பும்.

'அன்னுனை நோக்கி, அருள் சுரந்த நெஞ்சினன் ஆய்,
''என் ஆனை வல்லன்'' என மகிழ்ந்த பேர் ஈசன்,
''முன் ஆன பூதங்கள் யாவையும் முற்றிடினும்,
உன் நாள் உலவாய் நீ, என் போல் உளை'' என்ருன். 170

' ''மின்னைத் தொழு வளைத்தது என்ன மிளிர் ஒளியாய்!
முன்னைத் தொழும்புக்கே ஆம் அன்றே, மூஉலகும்?
என்னைத் தொழுது ஏத்தி எய்தும் பயன் எய்தி,
உன்னைத் தொழுது ஏத்தி, உய்க, உலகு எல்லாம். 171

' ''ஏனவர்க்கு வேண்டின், எளிது ஒன்ருே?—எற்கு அன்பர்
ஆன வர்க்கம் எல்லாம் நினக்கு அன்பர் ஆயினர்;
தானவர்க்கு வேந்தன் நீ என்னும் தரத்தாயோ?
வானவர்க்கும் நீயே இறை—தொல் மறை வல்லோய்! 172

' ''நல் அறமும் மெய்ம்மையும், நான்மறையும், நல் அருளும்,
எல்லை இலா ஞானமும், ஈறு இலா எப் பொருளும்,
தொல்லை சால் எண் குணனும், நின் சொல் தொழில் செய்ய,
மல்லல் உரு ஒளியாய்! நாளும் வளர்க, நீ!'' 173

**பிரகலாதனுக்கு முடி சூட்ட ஆவன புரியுமாறு தேவர்களைப் பணித்தல்**

'என்று வரம் அருளி, ''எவ் உலகும் கைகூப்ப,
முன்றில் முரசம் முழங்க, முடி சூட்ட,
நின்ற அமரர் அனைவீரும் நேர்ந்து, இவனுக்கு
ஒன்று பெருமை உரிமை புரிக!'' என்ருன். 174

**பிரகலாதன் முடிசூடி மூன்று உலகையும் ஆளுதல்**

'தே மன், உரிமை புரிய, திசை முகத்தோன்
ஓமம் இயற்ற, உடையான் முடி சூட்ட,
கோ மன்னவன் ஆகி, மூஉலகும் கைக்கொண்டான்—
நாம மறை ஓதாது ஓதி, நனி உணர்ந்தான். 175

170. ஆனை - அருமை பாராட்டிக் கூறுவதோர் சொல் விழுக்காடு; 171. மின்னைத் தொழு வளைத்தது என்ன - தோன்றி உடன் மறையும் மின்னலை (மறைய ஒட்டாமல்) தொழுமரத்தில் பிடித்து அகப்படுத்தி வைத்தாற்போன்று; தொழும்பு - அடித்தொண்டு; 175. தே மன் - தேவர்களுக்கு அரசனுகிய இந் திரன்; உடையான் - எல்லா உலகங்களையும் உடையவனுகிய திருமால், ஈண்டுச் சிங்கப் பெருமான்.

**வீடணன் முடிவுரை**

'ஈது ஆகும், முன் நிகழ்ந்தது; எம்பெருமான்! என் மாற்றம்
யாதானும் ஆக நினையாது, இகழ்தியேல்,
தீது ஆய் விளைதல் நனி திண்ணம்' எனச் செப்பினன்—
மேதாவிகட்கு எல்லாம் மேலான மேன்மையான். 176

## 4 வீடணன் அடைக்கலப் படலம்

**இராவணன் சினந்து வீடணனைத் துரத்துதல்**

கேட்டனன் இருந்தும், அக் கேள்வி தேர்கலாக்
கோட்டிய சிந்தையான், உறுதி கொண்டிலன்,—
மூட்டிய தீ என முடுகிப் பொங்கினன்—
ஊட்டு அரக்கு ஊட்டிய அனைய ஒண் கணான். 1

' ''இரணியன் என்பவன் எம்மனோரினும்
முரணியன்; அவன்தனை முருக்கி முற்றினன்,
அரணியன்'' என்று, அவற்கு அன்பு பூண்டனை—
மரணம் என்று ஒரு பொருள் மாற்றும் வன்மையோய்! 2

'ஆயவன் வளர்த்த தன் தாதை யாக்கையை
மாயவன் பிளந்திட மகிழ்ந்த மைந்தனும்,
ஏயும் நம் பகைஞனுக்கு இனிய நண்பு செய்
நீயுமே நிகர்; பிறர் நிகர்க்க நேர்வரோ? 3

'பாழி சால் இரணியன் புதல்வன் பண்பு என,
சூழ்வினை முற்றி, யான் அவர்க்குத் தோற்றபின்,
ஏழை நீ என் பெருஞ் செல்வம் எய்தி, பின்
வாழவோ கருத்து? அது வர வற்று ஆகுமோ? 4

'முன்புற அனையர்பால் அன்பு முற்றினை;
வன் பகை மனிதரின், வைத்த வன்பினை;
என்பு உற உருகுதி; அழுதி; ஏத்துதி;
உன் புகல் அவர்; பிறிது உரைக்க வேண்டுமோ? 5

4 : 1. கோட்டிய - நேர்மையின்றிச் சென்ற; 2. முரணியன் - வலிமையுடையவன்; முரண் - வலிமை; அரணியன் - பாதுகாப்பவன்; அரண் - பாதுகாப்பு; 4. பாழி - வலிமை; வரவற்று - நிகழக்கூடியது; 5. முன்புற - முன்னதாக.

'நண்ணினை மனிதர்பால் நண்பு பூண்டனை;
எண்ணினை செய்வினை; என்னை வெல்லுமாறு
உன்னினை; அரசின்மேல் ஆசை ஊன்றினை;
திண்ணிது உன் செயல்; பிறர் செறுநர் வேண்டுமோ? 6

'அஞ்சினை ஆதலின், அமர்க்கும் ஆள்அலை;
தஞ்சு என மனிதர்பால் வைத்த சார்பினை;
வஞ்சனை மனத்தினை; பிறப்பு மாறினை;
நஞ்சினை உடன் கொடு வாழ்தல் நன்மையோ? 7

'பழியினை உணர்ந்து, யான் படுக்கிலேன், உனை;
ஒழி, சில புகலுதல்; ஒல்லை நீங்குதி;
விழி எதிர் நிற்றியேல், விளிதி' என்றனன்—
அழிவினை எய்துவான், அறிவு நீங்கினான். 8

**வீடணன் வானில் எழுந்து, நீதி பல மொழிதல்**

என்றலும், இளவலும் எழுந்து, வானிடைச்
சென்றனன்; துணைவரும் தானும் சிந்தியா-
நின்றனன்; பின்னரும், நீதி சான்றன,
ஒன்று அல பலப்பல, உறுதி ஓதினான்: 9

'வாழியாய்! கேட்டியால்: வாழ்வு கைம்மிக
ஊழி காண்குறு நினது உயிரை ஓர்கிலாய்,
கீழ்மையோர் சொற்கொடு கெடுதல் நேர்தியோ?
வாழ்மைதான், அறம் பிழைத்தவர்க்கு, வாய்க்குமோ? 10

'புத்திரர், குருக்கள், நின் பொரு இல் கேண்மையர்,
மித்திரர், அடைந்துளோர், மெலியர், வன்மையோர்,
இத்தனை பேரையும், இராமன் வெஞ் சரம்
சித்திரவதை செயக் கண்டு, தீர்தியோ? 11

**வீடணன் இலங்கை விட்டுப் போதல்**

'எத்துணை வகையினும் உறுதி எய்தின,
ஒத்தன, உணர்த்தினேன்; உணரகிற்றிலை;
அத்த! என் பிழை பொறுத்தருளுவாய்' என,
உத்தமன் அந் நகர் ஒழியப் போயினான். 12

6. நண்ணினை - மனத்தால் அவர்களை அடைந்தாய்; 7. தஞ்சு - புகலிடம்; சார்பு - பற்று; 10. வாழ்மை - வாழ்க்கை.

அனலனும், அனிலனும், அரன், சம்பாதியும்
வினையவர் நால்வரும், விரைவின் வந்தனர்:—
கனை கழல் காலினர், கருமச் சூழ்ச்சியர்,—
இனைவரும் வீடணனோடும் ஏயினர். 13

அரக்கனும், ஆங்கண் ஓர் அமைச்சர் நால்வரும்,
'குரக்கு இனத்தவரொடும் மனிதர், கொள்ளை நீர்க்
கரைக்கண் வந்து இறுத்தனர்' என்ற காலையில்,
'பொருக்கென எழுதும்' என்று எண்ணிப் போயினர். 14

**வீடணன் வானரத் தானையைக் கண்டு, வியத்தல்**

அளக்கரைக் கடந்து, மேல் அறிந்து, நம்பியும்,
விளக்கு ஒளி பரத்தலின், பாலின் வெண் கடல்
வளத் தடந் தாமரை மலர்ந்ததாம் என,
களப் பெருந் தானையைக் கண்ணின் நோக்கினன். 15

'ஊனுடை உடம்பின உயிர்கள் யாவையும்
ஏனைய ஒரு தலை நிறுத்தி எண்ணினால்,
வானரம் பெரிது' என, மறு இல் சிந்தையான்,
தூ நிறச் சுடு படைத் துணைவர்ச் சொல்லினான்: 16

**மேலே செய்வன குறித்து அமைச்சரை வீடணன் வினாதல்**

'அறம் தலை நின்றவர்க்கு அன்பு பூண்டனென்;
மறந்தும் நன் புகழ் அலால் வாழ்வு வேண்டலென்;
''பிறந்த என் உறுதி நீ பிடிக்கலாய்'' எனாத்
துறந்தனென்; இனிச் செயல் சொல்லுவீர்' என்றான். 17

**இராமனைக் காணுமாறு அமைச்சர்கள் கூற, வீடணன் மகிழ்ந்து கூறுதல்**

'மாட்சியின் அமைந்தது வேறு மற்று இலை;
தாட்சி இல் பொருள் தரும் தரும மூர்த்தியைக்
காட்சியே இனிக் கடன்' என்று, கல்வி சால்
சூட்சியின் கிழவரும், துணிந்து சொல்லினர். 18

'நல்லது சொல்லினீர்; நாமும், வேறு இனி
அல்லது செய்துமேல், அரக்கர் ஆதுமால்;
எல்லை இல் பெருங் குணத்து இராமன் தாள் இணை
புல்லுதும்; புல்லி, இப் பிறவி போக்குதும். 19

15. களப் பெருந் தானை - போர்க்களத்திற்குச் செல்லும் (அந்தப்) பெரிய வானரப்படை; 17. பிறந்த - உடன்பிறந்த; 18. தாட்சி - தாழ்ச்சி; சூட்சி - சூழ்ச்சி.

'முன்புறக் கண்டிலென்; கேள்வி முன்பு இலென்;
அன்பு உறக் காரணம் அறியகிற்றிலேன்;
என்பு உறக் குளிரும்; நெஞ்சு உருகுமேல், அவன்
புன் புறப் பிறவியின் பகைஞன் போலுமால். 20

'ஆதி அம் பரமனுக்கு அன்பும், நல் அறம்
நீதியின் வழாமையும், உயிர்க்கு நேயமும்,
வேதியர் அருளும், நான் விரும்பிப் பெற்றனென்—
போது உறு கிழவனைத் தவம் முன் பூண்ட நாள். 21

'ஆயது பயப்பது ஓர் அமைதி ஆயது;
தூயது, நினைந்தது; தொல்லை யாவர்க்கும்
நாயகன் மலர்க்கழல் நணுகி, நம் மனத்து
ஏயது முடித்தும்' என்று இனிது மேயினன். 22

'இருளிடை எய்துவது இயல்பு அன்றும்' என,
பொருள் உற உணர்ந்த அப் புலன் கொள் கேள்வியார்,
மருளுறு சோலையின் மறைந்து வைகினர்;
உருளுறு தேரவன் உதயம் எய்தினன். 23

**இராமன் கடற்கரைப் பகுதிகளைக் காணல்**

அப் புறத்து, இராமன், அவ் அலங்கு வேலையைக்
குப்புறக் கருதுவான், குவளை நோக்கிதன்
துப்பு உறச் சிவந்த வாய் நினைந்து சோர்குவான்,
இப் புறத்து இருங் கரை மருங்கின் எய்தினன். 24

கானலும் கழிகளும், மணலும், கண்டலும்,
பானலும் குவளையும், பரந்த புன்னையும்,
மேல் நிறை அன்னமும் பெடையும், வேட்கை கூர்
பூ நிறை சோலையும், புரிந்து நோக்கினன்.† 25

தரளமும், பவளமும், தரங்கம் ஈட்டிய
திரள் மணிக் குப்பையும், கனக தீரமும்,
மருளும் மென் பொதும்பரும், மணலின் குன்றமும்,
புரள் நெடுந் திரைகளும், புரிந்து நோக்கினன்.* 26

20. புன் புறம் - புல்லிதாகிய உடம்பு; 22. தொல்லை நாயகன் - பழமையான தலைவன்; 25. கானல் - கடற்கரைச் சோலை; கண்டல் - தாழை; பானல் - கரு நெய்தல்; 26. கனக தீரம் - பொன் துகள் நிறைந்த கரைப் பரப்பு.

மின் நகு மணி விரல் தேய, வீழ் கணீர்
துன்ன அரும் பெருஞ் சுழி அழிப்ப, சோர்வினேடு
இன் நகை நுஊச்சியர் இழைக்கும் ஆழி சால்
புன்ஊ அல் பொதும்பரும் புக்கு, நோக்கினுன்.* 27

**இயற்கைக் காட்சிகளால் இராமன் கவலே கொள்ளல்**

கூதிர் நுண் குறும் பனித் திவலேக் கோவை கால்,
மோதி வெண் திரை வர, முட வெண் தாழைமேல்,
பாதி அம் சிறையிடைப் பெடையைப் பாடு அணைத்து
ஓதிமம் துயில்வ கண்டு, உயிர்ப்பு வீங்கினுன். 28

அருந்துதற்கு இனிய மீன் கொணர, அன்பினுல்
பெருந் தடங் கொம்பிடைப் பிரிந்த சேவலே,
வருந் திசை நோக்கி, ஓர் மழலே வெண் குருகு,
இருந்தது கண்டு நின்று, இரக்கம் எய்தினுன். 29

ஒரு தனிப் பேடைமேல் உள்ளம் ஓடலால்,
பெரு வலி வயக் குருகு இரண்டும் பேர்கில,
திருகு வெஞ் சினத்தன, தெறு கண் தீ உகப்
பொருவன கண்டு, தன் புருவம் கோட்டினுன். 30

உள் நிறை ஊடலில் தோற்ற ஓதிமம்
கண்ணுறு கலவியில் வெல்லக் கண்டவன்,
தண் நிறப் பவள வாய் இதழை, தற் பொதி
வெண் நிற முத்தினுல், அதுக்கி, விம்மினுன். 31

**சுக்கிரீவன் முதலியோர் சொற்களால் இராமன் மெலிவு நீங்குதல்**

இத் திறம் எய்திய காலே, எய்துறும்
வித்தகர் சொற்களால் மெலிவு நீங்கினுன்
ஒத்தனன் இராமனும், உணர்வு தோன்றிய
பித்தரின், ஒரு வகை பெயர்ந்து போயினுன். 32

**வீடணன் வருகை**

உறைவிடம் எய்தினுன், ஒருங்கு கேள்வியின்
துறை அறி துணைவரோடு இருந்த சூழலில்,
முறை படு தானையின் மருங்கு முற்றினுன்—
அறை கழல் வீடணன், அயிர்ப்பு இல் சிந்தையான். 33

27. ஆழி - கூடற் சுழி; 28. பாதி அம் சிறையிடை - ஒரு பக்கத்துச் சிறகுக்குள்; 30. குருகு - நாரை; 31. கண்ணுறுதல் - இரண்டு உடம்பும் ஒன்றுபடுதல்; கண் - உடம்பு; 33. முற்றுதல் - சேர்தல்.

வீடணனை வானரர் எதிர்த்தல்

முற்றிய குரிசிலை, 'முழங்கு தானையின்
உற்றனர், நிருதர் வந்து' என்ன ஒன்றினர்,
'எற்றுதிர்; பற்றுதிர்; எறிதிர்' என்று, இடை
சுற்றினர்—உரும் எனத் தெழிக்கும் சொல்லினர். 34

'தந்தது தருமமே கொணர்ந்துதான்; இவன்
வெந் தொழில் தீவினை பயந்த மேன்மையான்,
வந்தனன் இலங்கையர் மன்னன் ஆகும்; நம்
சிந்தனை முடிந்தன' என்னும் சிந்தையார். 35

''இருபது கரம்; தலை ஈர்-ஐந்து'' என்னும் அத்
திருவிலிக்கு அன்னவை சிதைந்தவோ?' என்பார்,
'பொரு தொழில் எம்மொடும் பொருதி, போர்' என்பார்,
ஒருவரின் ஒருவர் சென்று, உறுக்கி ஊன்றுவார். 36

'பற்றினம் சிறையிடை வைத்து, பாருடைக்
கொற்றவர்க்கு உணர்த்துதும்' என்று கூறுவார்;
'எற்றுவது அன்றியே, இவனைக் கண்டு, இறை
நிற்றல் என், பிறிது?' என நெருக்கி நேர்குவார். 37

'இமைப்பதன்முன் விசும்பு எழுந்து போய பின்,
அமைப்பது என், பிறிது? இவர் அரக்கர் அல்லரோ?
சமைப்பது கொலை அலால், தக்கது யாவதோ?
குமைப்பது நலன்' என முடுகிக் கூறுவார். 38

அனுமன் ஏவலால், மயிந்தனும் துமிந்தனும் வருதல்

இயைந்தன இயைந்தன இனைய கூறலும்,
மயிந்தனும் துமிந்தனும் என்னும் மாண்பினர்,
அயிந்திரம் நிறைந்தவன் ஆணை ஏவலால்,
நயம் தெரி காவலர் இருவர், நண்ணினர். 39

விலக்கினர் படைஞரை; வேதம், நீதி நூல்,
இலக்கணம், நோக்கிய இயல்பர் எய்தினர்,—
'சலக் குறி இலர்' என, அருகு சார்ந்தனர்—
புலக் குறி அற நெறி பொருந்த நோக்கினர். 40

36. உறுக்கி - வெகுண்டு; ஊன்றுதல் - எதிர்த்தல்; 38. குமைப்பது - அழிப்பது; 39. அயிந்திரம் நிறைந்தவன் - அனுமன்; அயிந்திரம் - இந்திரனால் செய்யப்பட்ட வடமொழி இலக்கணம்; 40. சலக் குறி - வஞ்சகச் செய்கை; புலக் குறி - ஞானமுடைமைக்குரிய அடையாளம்.

**மயிந்தன் வினவும், அனலன் விடையும்**

'யார்? இவண் எய்திய கருமம் யாவது?
போர்அது புரிதிரோ? புறத்து ஓர் எண்ணமோ?
சார்வு உற நின்ற நீர் சமைந்தவாறு எலாம்,
சோர்விலீர், மெய்ம் முறை, சொல்லுவீர்' என்றான். 41

'பகலவன் வழி முதல், பாரின் நாயகன்,
புகல் அவன் கழல் அடைந்து, உய்யப் போந்தனன்—
தகவு உறு சிந்தையன், தரும நீதியன்,
மகன் மகன் மைந்தன் நான்முகற்கு, வாய்மையான். 42

'அற நிலை வழாமையும், ஆதி மூர்த்திபால்
நிறைவரு நேயமும், நின்ற வாய்மையும்,
மறையவர்க்கு அன்பும் என்று இனைய, மா மலர்
இறையவன் தர, நெடுந் தவத்தின் எய்தினான். 43

' ''சுடு தியைத் துகிலிடைப் பொதிந்து, துன்மதி!
இடுதியே, சிறையிடை இறைவன் தேவியை;
விடுதியேல் உய்குதி; விடாது வேட்டியேல்,
படுதி'' என்று உறுதிகள் பலவும் பன்னினான். 44

'மறம் தரு சிந்தையன், மதியின் நீங்கினான்,
''பிறந்தனை பின்பு; அதின் பிழைத்தி; போகுதி;
இறந்தனை, நிற்றியேல்'' என்ன, இன்னவன்
துறந்தனன்' என விரித்து, அனலன் சொல்லினான். 45

**மயிந்தன் இராமனிடம் சென்று செய்தி தெரிவித்தல்**

மயிந்தனும் அவ் உரை மனத்து வைத்து, 'நீ
இயைந்தது நாயகற்கு இயம்புவேன்' எனா,
பெயர்ந்தனன்—'தம்பியும், பெயர்வு இல் சேனையும்,
அயர்ந்திலிர் காமின்' என்று அமைவது ஆக்கியே. 46

தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்,
மருவ அரும் பெருமையும் பொறையும் வாயிலாய்,
கருணை அம் கோயிலுள் இருந்த கண்ணனை,
அருள் நெறி எய்திச் சென்று, அடி வணங்கினான். 47

45. அதின் பிழைத்தி - அதனால் பிழைத்திருக்கின்றாய்; 46. தம்பி - துமிந்தன்; 47. வேலி - மதில்.

'உண்டு, உரை உணர்த்துவது, ஊழியாய்!' எனப்
புண்டரீகத் தடம் புரையும் பூட்சியோன்,
மண்டிலச் சடை முடி துளக்கி, 'வாய்மையாய்!
கண்டதும் கேட்டதும் கழறுவாய்' என்றான். 48

'வினைவினை அறிந்திலம்; வீடணப் பெயர்
நளிர் மலர்க் கையினன், நால்வரோடு உடன்,
களவு இயல் வஞ்சனை இலங்கை காவலற்கு
இளவல், நம் சேனையின் நடுவண் எய்தினன். 49

' ''கொல்லுமின், பற்றுமின்'' என்னும் கொள்கையான்,
பல் பெருந் தானை சென்று அடர்க்கப் பார்த்து, யான்,
''நில்லுமின்'' என்று, ''நீர் யாவிர்? நும் நிலை
சொல்லுமின்'' என்ன, ஓர் துணைவன் சொல்லினன்: 50

' ''முரண் புகு தீவினை முடித்த முன்னவன்
கரண் புகு சூழலே சூழ, காண்பது ஓர்
அரண் பிறிது இல் என, அருளின் வேலையைச்
சரண் புகுந்தனன்'' என முன்னம் சாற்றினன். 51

' ''ஆயவன், தருமமும், ஆதி மூர்த்திபால்
மேயது ஓர் சிந்தையும், மெய்யும், வேதியர்
நாயகன் தர, நெடுந் தவத்தின், நண்ணினன்;
தூயவன்'' என்பது ஓர் பொருளும் சொல்லினன். 52

' ''கற்புடைத் தேவியை விடாது காத்தியேல்,
எற்புடைக் குன்றம் ஆம் இலங்கை; ஏழை! நின்
பொற்புடை முடித் தலை புரளும்—என்று ஒரு
நற் பொருள் உணர்த்தினன்'' என்றும் நாட்டினன். 53

'ஏந்து எழில் இராவணன், ''இனைய சொன்ன நீ
சாம் தொழிற்கு உரியை, என் சார்பு நிற்றியேல்;
ஆம் தினைப் பொழுதினில் அகறியால்—எனப்
போந்தனன்'' என்றனன்; புகுந்தது ஈது' என்றான். 54

48. மண்டிலம் - வட்டம்; 49. நளிர் - குளிர்ச்சி; 51. கரண் புகு சூழல் - மனம் சென்ற வழி; கரண் - கரணம், அந்தக்கரணம்; அருளின் வேலை - இராமன்; 53. எற்பு - எலும்பு.

**இராமன், வீடணன் அடைக்கலம் குறித்து நண்பர்களோடு ஆராய்தல்**

அப் பொழுது, இராமனும், அருகில் நண்பரை,
'இப் பொருள் கேட்ட நீர் இயம்புவீர்—இவன்
கைப்புகற்பாலனோ? கழியற்பாலனோ?—
ஒப்புற நோக்கி, நும் உணர்வினால்' என்றான். 55

**சுக்கிரீவன் கூற்று**

தட மலர்க் கண்ணனைத் தடக் கை கூப்பி நின்று,
'இடன் இது; கால் ஈது' என்ன எண்ணுவான்,
கடன் அறி காவலன் கழறினான்அரோ—
சுடர் நெடு மணி முடிச் சுக்கிரீவனே: 56

'நனி முதல் வேதங்கள் நான்கும், நாம நூல்
மனு முதல் யாவையும், வரம்பு கண்ட நீ,
இனையன கேட்கவோ, எம்மனோர்களை
வினவிய காரணம்?—விதிக்கும் மேல் உளாய்! 57

'ஆயினும், விளம்புவென், அருளின் ஆழியாய்!
ஏயினது ஆதலின், ''அறிவிற்கு ஏற்றன,
தூய அன்று'' என்னினும், ''துணிவு அன்று'' என்னினும்,
மேயது கேட்டியால்; விளைவு நோக்குவாய். 58

'வெம் முனை விளிதலின் அன்று; வேறு ஒரு
சும்மையான உயிர் கொளத் துணிதலால் அன்று;
தம்முனைத் துறந்தது, தரும நீதியோ?
செம்மை இல் அரக்கரில் யாவர் சீரியோர்? 59

'தகை உறு தம்முனை, தாயை, தந்தையை,
மிகை உறு குரவரை, உலகின் வேந்தனை,
பகை உற வருதலும், துறந்த பண்பு இது
நகையுறல் அன்றியும், நயக்கற்பாலதோ? 60

'வேண்டுழி இனியன விளம்பி, வெம் முனை
பூண்டுழி, அஞ்சி, வெஞ் செருவில் புக்கு உடன்
மாண்டு ஒழிவு இன்றி, நம் மருங்கு வந்தவன்
ஆண்தொழில், உலகினுக்கு ஆணி ஆம் அன்றே? 61

55. கைப்புகல் - (நம்) பக்கம் சேர்தல்; 59. வெம்முனை - கொடிய போர்; சும்மை - பழிக்கத்தக்க செயல்; 60. மிகை - மேம்பாடு, சிறப்பு; 61. ஆண் தொழில், உலகினுக்கு ஆணி - இகழ்ச்சிக் குறிப்புகள்.

'மிகைப் புலம் தருமமே வேட்ட போது, அவர்
தொகைக் குலம் துறந்து போய்ச் சார்தல் அன்றியே,
நகைப் புலம் பொதுவுற நடந்து, நாயக!
பகைப் புலம் சார்தலோ? பழியின் நீங்குமோ? 62

'வார்க்குறு வணே கழல் தம்முன் வாழ்ந்த நாள்,
சீர்க்கு உறவு ஆய், இடைச் செறுநர் சீறிய
போர்க்கு உறவு அன்றியே போந்த போது, இவன்
ஆர்க்கு உறவு ஆகுவன்?—அருளின் ஆழியாய்! 63

'ஒட்டிய கனக மான் உருவம் ஆகிய
சிட்டனும், மருமகன் இழைத்த தீவினே
கிட்டிய போதினில், தவமும் கேள்வியும்
விட்டது கண்டும், நாம் விடாது வேட்டுமோ? 64

'கூற்றுவன் தன்னெடு எவ் உலகும் கூடி வந்து
ஏற்றன என்னினும், வெல்ல ஏற்றுளம்;
மாற்றவன் தம்பி நம் மருங்கு வந்து, இவண்
தோற்றுமோ? அன்னவன் துணேவன் ஆகுமோ? 65

' ''அரக்கரை ஆசு அறக் கொன்று, நல் அறம்
புரக்க வந்தனம்'' எனும் பெருமை பூண்ட நாம்,
இரக்கம் இல் அவரையே துணேக் கொண்டு ஏற்றும் ஏல்,
''சுருக்கம் உண்டு அவர் வலிக்கு'' என்று தோன்றுமால். 66

'விண்டுழி, ஒரு நிலே நிற்பர்; மெய்ம் முகம்
கண்டுழி, ஒரு நிலே நிற்பர்; கைப் பொருள்
கொண்டுழி, ஒரு நிலே நிற்பர்; கூழுடன்
உண்டுழி, ஒரு நிலே நிற்பர்—உற்றவர். 67

'வஞ்சனே இயற்றிட வந்தவாறு அலால்,
''தஞ்சு'' என நம்வயின் சார்ந்துளான்அலன்;
நஞ்சினின் கொடியனே நயந்து கோடியோ?—
அஞ்சன வண்ண!' என்று, அறியக் கூறினுன். 68

62. மிகைப்புலம் - மேம்பட்ட அறிவு; 63. வார்க்குறு - உருக்கி வார்த்துச் செய்யப்பட்ட; 64. சிட்டன் - பெரியோன் (மாரீசன்), இகழ்ச்சிக் குறிப்பு; 66. ஏற்றும் ஏல் - ஏற்றுக்கொண்டோம் என்ருல்; சுருக்கம் - குறைவு; 67. விண்டுழி - பிரிந்த காலத்தில்; கூழ் - உணவு.

சாம்பன் கருத்து

அன்னவன் பின்னுற, அலகு இல் கேள்வியின்
தன் நிகர் பிறர் இலாத் தகைய சாம்பனை,
'என்னை உன் கருத்து?' என இறை வினவினன்;
தொன் முறை நெறி தெரிந்து, அவனும் சொல்லுவான்; 69

'அறிஞரே ஆயினும், அரிய தெவ்வரைச்
செறிஞரே ஆவரேல், கெடுதல் திண்ணமாம்;
நெறிதனை நோக்கினும், நிருதர் நிற்பது ஓர்
குறி நனி உளது என உலகம் கொள்ளுமோ? 70

'வெற்றியும் தருகுவர், வினையம் வேண்டுவர்,
முற்றுவர், உறு குறை முடிப்பர், முன்பினால்—
உற்றுறு நெடும் பகை உடையர், அல்லதூஉம்,
சிற்றினத்தவரொடும் செறிதல் சீரிதோ? 71

'வேதமும் வேள்வியும் மயக்கி, வேதியர்க்கு
ஏதமும், இமையவர்க்கு இடரும், ஈட்டிய
பாதகர் நம்வயின் படர்வராம்எனின்,
தீது இலராய், நமக்கு அன்பு செய்வரோ? 72

'கைப் புகுந்து, உறு சரண் அருளிக் காத்துமேல்,
பொய்க் கொடு வஞ்சனை புணர்த்த போதினும்,
மெய்க் கொள விளியினும், ''விடுதும்'' என்னினும்,
திக்கு உறும், நெடும் பழி; அறமும் சீறுமால். 73

'மேல் நனி விளைவது விளம்ப வேண்டுமோ?
கானகத்து இறைவியோடு உறையும் காலையில்,
மான் என வந்தவன் வரவை மானும், இவ்
ஏனையன் வரவும்' என்று இனைய கூறினன். 74

தானை நாயகன் நீலன் கருத்து

பால்வரு பனுவலின் துணிவு பற்றிய
சால் பெருங் கேள்வியன், தானை நாயகன்,
நீலனை, 'நின் கருத்து இயம்பு, நீ' என
மேலவன் விளம்பலும், விளம்பல் மேயினன். 75

70. செறிஞர் - சேர்ந்தவர்; 73. மெய்க் கொள விளிதல் - (இவர்களால் நம்முடைய) உடலையே பிறர் கொள்ளும்படி (நமக்குச்) சாவு நேரிடுதல்; உண்மைத் தன்மை புலப்பட (நம்மை) வெகுண்டு மாறுபடல் எனலும் ஆம்; 75. பால்வரு பனுவல் - பல பகுப்புப் பொருந்திய நூல்கள்.

'பகைவரைத் துணை எனப் பற்றற்பால ஆம்
வகை உள; அன்னவை—வரம்பு இல் கேள்வியாய்!—
தொகையுறக் கூறுவென்; ''குரங்கின் சொல்'' என
நகையுறல் இன்றியே, நயந்து கேட்டியால்! 76

'தம் குலக் கிளைஞரைத் தருக்கும் போரிடைப்
பொங்கினர் கொன்றவர்க்கு எளியர் போந்தவர்,
மங்கையர் திறத்தினில் வயிர்த்த சிந்தையர்,
சிங்கல் இல் பெரும் பொருள் இழந்து சீறினோர், 77

'பேர் அபிமானங்கள் உற்ற பெற்றியோர்,
போரிடைப் புறங்கொடுத்து அஞ்சிப் போந்தவர்,
நேர் வரு தாயத்து நிரப்பினோர், பிறர்
சீரிய கிளைஞரை மடியச் செற்றுளோர். 78

'அடுத்த நாட்டு அரசியல் உடைய ஆணையால்
படுத்தவர் நட்டவர்,—பகைஞரோடு ஒரு
மடக்கொடி பயந்தவர் மைந்தர் ஆயினும்,
உடன் கொளத் தகையர், நம்முழை வந்து ஒன்றினல். 79

'தாம் உற எளிவரும் தகைமையார் அலர்,
நாம் உற வல்லவர், நம்மை நண்ணினல்,
தோம் உற நீங்குதல் துணிவர் ஆதலின்,
யாம் இவன் வரவு இவற்று என் என்று உன்னுவாம். 80

'காலமே நோக்கினும், கற்ற நூல்களின்
மூலமே நோக்கினும், முனிந்து போந்தவன்
சீலமே நோக்கி, யாம் தெரிந்து தேறுதற்கு
ஏலுமே?' என்று எடுத்து இனைய கூறினன். 81

### மற்றைய மந்திரக் கிழவர் கருத்து

மற்றுள மந்திரக் கிழவர், வாய்மையால்,
குற்றம் இல் கேள்வியர், அன்பு கூர்ந்தவர்,
'பற்றுதல் பழுது' என, பழுது உறு ஒரு
பெற்றியின் உணர்வினர், முடியப் பேசினர். 82

78. தாயத்து - பங்காளியால்; நிரம்பினோர் - வறுமையுற்றோர்; 79. படுத்தவர் நட்டவர் - அகப்படுத்தப்பட்டவரின் நண்பர்கள்; 80. நாம் - அச்சம்; தோம் - துன்பம்.

**இராமன் அனுமனைக் குறிப்பின் வினவுதல்**

'உறு பொருள் யாவரும் ஒன்றக் கூறினர்
செறி பெருங் கேள்வியாய்! கருத்து என்? செப்பு' என,
நெறி தரு மாருதி என்னும் நேர் இலா
அறிவனை நோக்கினன், அறிவின் மேல் உளான். 83

**மாருதி பேருரை**

'இணங்கினர் அறிவிலர்எனினும், எண்ணுங்கால்,
கணம் கொள்கை நும்மனோர் கடன்மைகாண்' என
வணங்கிய சென்னியன், மறைத்த வாயினன்,
நுணங்கிய கேள்வியன், நுவல்வதாயினன்: 84

'எத்தனை உளர், தெரிந்து எண்ண ஏய்ந்தவர்,
அத்தனைவரும், ஒரு பொருளை, ''அன்று'' என,
உத்தமர், அது தெரிந்து உணர, ஓதினர்;
வித்தக! இனி, சில விளம்ப வேண்டுமோ? 85

'தூயவர் துணி திறன் நன்று தூயதே;
ஆயினும், ஒரு பொருள் உரைப்பென், ஆழியாய்!
''தீயன்'' என்று இவனை யான் அயிர்த்தல் செய்கிலேன்;
மேயின சில பொருள் விளம்ப வேண்டுமால். 86

'வண்டு உளர் அலங்கலாய்! வஞ்சர் வாள் முகம்,
கண்டது ஓர் பொழுதினில், தெரியும்; கைதவம்
உண்டுஎனின், அஃது அவர்க்கு ஒளிக்க ஒண்ணுமோ?
விண்டவர் நம் புகல் மருவி வீழ்வரோ? 87

'உள்ளத்தின் உள்ளதை, உரையின் முந்துற,
மெள்ளத் தம் முகங்களே விளம்பும்; ஆதலால்,
கள்ளத்தின் விளைவு எலாம் கருத்து இலா இருள்
பள்ளத்தின் அன்றியே வெளியில் பல்குமோ? 88

'வாலி விண் பெற, அரசு இளையவன் பெற,
கோலிய வரி சிலை வலியும் கொற்றமும்,
சீலமும் உணர்ந்து, நிற் சேர்ந்து, தெள்ளிதின்
மேல் அரசு எய்துவான் விரும்பி மேயினன். 89

84. கணம் கொள்கை - இனமாகக் கொண்டு சிறப்பித்தல்; 87. விண்டவர் - பகைவர்; 88. இருள் பள்ளம் - அறியாமையாகிய இருள் நிறைந்த பள்ளம் போன்ற முகம்; வெளி - (அறிவொளி வீசுகின்ற) வெட்டவெளி போன்ற முகம்; பல்குதல் - வெளிப்பட்டுத் தோன்றுதல்; 89. கோலுதல் - வளைத்தல் செய்தல்; மேல் அரசு எய்துவான் - மேலாகிய வீட்டரசு பெறும் பொருட்டு, இனிமேல் அரசு அடையும்பொருட்டு என்பாரும் உண்டு.

'செறி கழல் அரக்கர்தம் அரசு சீரியோர்
நெறி அலது; ஆதலின், நிலைக்கலாமையும்,
எறி கடல் உலகு எலாம் இளவற்கு ஈந்தது ஓர்
பிறிவு அருங் கருணையும், மெய்யும், பேணினன். 90

' ''காலம் அன்று, இவன் வரு காலம்'' என்பரேல்,
வாலிதன் உறு பகை வலியது ஏறிய
தால், இனி அங்கு இவற்கு இறுதி ஆவதால்
மூலம் என் துணைவரைப் பிரிவு முற்றினன். 91

'தீத் தொழில் அரக்கர்தம் மாயச் செய் வினை
வாய்த்துளர், அன்னவை உணரும் மாண்பினல்
காய்த்தவர், அவர்களே கையுற்றார் நமக்கு;
ஏத்த அரும் உறுதியும் எளிதின் எய்துமால். 92

' ''தெளிவுறல் அரிது, இவர் மனத்தின் தீமை; யாம்
விளிவது செய்குவர்'' என்ன வேண்டுதல்,
ஒளி உற உயர்ந்தவர் ஒப்ப, எண்ணலார்;
எளியவர்திறத்து இவை எண்ணல் ஏயுமோ? 93

' ''கொல்லுமின், இவனை'' என்று அரக்கன் கூறிய
எல்லையில், ''தூதரை எறிதல் என்பது
புல்லிது; பழியொடும் புணரும்; போர்த் தொழில்
வெல்லலம், பின்னர்'' என்று இடை விலக்கினன். 94

' ''மாதரைக் கோறலும், மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலும், அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும், தூய்து அன்றாம்'' என,
ஏதுவில் சிறந்தன எடுத்துக் காட்டினன். 95

'எல்லியில் யான் இவன் இரண மாளிகை
செல்லிய போதினும், திரிந்த போதினும்,
நல்லன நிமித்தங்கள் நனி நிகழ்ந்தன;
அல்லதும் உண்டு, நான் அறிந்தது—ஆழியாய்! 96

'நிந்தனை நறவமும், நெறி இல் ஊன்களும்,
தந்தன கண்டிலேன்; தரும தானமும்,
வந்தனை நீதியும், பிறவும், மாண்பு அமைந்து,
அந்தணர் மனை எனப் பொலிந்ததாம்அரோ. 97

91. வாலிது - சிறப்புடையது; ஏறுதல் - வெல்லுதல், கடத்தல்; துணைவர் - உடன்பிறந்தவர்; 92. காய்த்தவர் - தேர்ந்தவர், பழக்கம் முதிர்ந்தவர்; உறுதி - நன்மை; 93. வேண்டுதல் - கருதுதல்; ஒளி - அறிவு; 95. ஆதர் - அறிவிலிகள், பசுப் போன்றவர்; 96. இரணம் - பொன்.

'அன்னவன் தனி மகள், ''அலரின்மேல் அயன்
சொன்னது ஓர் சாபம் உண்டு; உன்னைத் துன்மதி,
நன்னுதல்! தீண்டுமேல், நணுகும் கூற்று'' என,
என்னுடை இறைவிக்கும் இனிது கூறினள். 98

'''பெற்றுடைய பெரு வரமும், பிறந்துடைய
வஞ்சனையும், பிறவும், உன் கை
வில் தொடையின் விடுகணையால் வெந்து ஒழியும்''
எனக் கருதி, விரைவின் வந்தான்;
உற்றுடைய பெரு வரமும், உகந்து உடைய
தண்ணளியும், உணர்வும் நோக்கின்,
மற்று உடையர்தாம், உளரோ, வாள் அரக்கன்
அன்றியே தவத்தின் வாய்த்தார்? 99

'தேவர்க்கும், தானவர்க்கும், திசைமுகனே
முதலாய தேவ தேவர்
மூவர்க்கும், முடிப்ப அரிய காரியத்தை
முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்;
ஆவத்தின் வந்து, ''அபயம்!'' என்றானை
அயிர்த்து அகல விடுதிஆயின்,
கூவத்தின் சிறு புனலைக் கடல் அயிர்த்தது
ஒவ்வாதோ?—கொற்ற வேந்தே! 100

' ''பகைப் புலத்தோர் துணை அல்லர்'' என்று இவனைப்
பற்றாமேல், அறிஞர் பார்க்கின்,
நகைப் புலத்ததாம் அன்றே; நல் தாயம்
உளது ஆய பற்றால் மிக்க
தகைப் புலத்தோர் தந்தையர்கள், தம்பியர்கள்,
தமையர், இவர்தாமே அன்றே,
மிகைப் புலத்து விளைகின்றது ஒரு பொருளைக்
காதலிக்கின், விளிஞர் ஆவர்? 101

98. அயன் சொன்ன சாபம் - பிரமனை வணங்கச் சென்ற புஞ்சிகஸ்தலை என்னும் அமர மகளை இராவணன் வலியக் கற்பழித்தான். அவள் வாயிலாக உண்மை அறிந்த பிரமன், 'இனி நீ அயல் மகளிரைத் தீண்டுவாயாயின் அப்பொழுதே உன் தலை சிதறி அழிவதாக' என்று இராவணனைச் சபித்தான். 100. ஆவத்து - ஆபத்து; கூவம் - கிணறு; 'கடலின் நீரைக் கிணறு கொள்ளாது' என்பது பழமொழி; 101. நல் தாயம் - செத்தாலும் பிள்ளை பெற்றாலும் தீட்டுக் காக்கும்படியுள்ள பங்காளித் தன்மை; தகைப் புலத்தோர் - அன்பு மிகுந்த தகுதியை உடையோர்; மிகைப் புலத்து விளைகின்றது ஒரு பொருள் - மேம்பாட்டுக்குரியதாய் விளைந்துள்ள ஒரு பொருள்; விளிஞர் - பகைப்பவர், கோபிப்பவர்.

'ஆதலால், ''இவன் வரவு நல் வரவே''
என உணர்ந்தேன், அடியேன்; உன்தன்
வேத நூல் எனத் தகைய திருவுளத்தின்
குறிப்பு அறியேன்' என்று விட்டான்—
காதல் நான்முகனுலும் கணிப்ப அரிய
கலை அனைத்தும் கதிரோன் முன் சென்று
ஓதினன், ஓத நீர் கடந்து, பகை கடந்து,
உலகை உய்யக் கொண்டான். 102

**அனுமன் கூறியன கேட்டு உவந்த இராமன் கூற்று**

**மா**ருதி அமுத வார்த்தை செவி மடுத்து, இனிது மாந்தி,
'பேர் அறிவாள! நன்று நன்று' எனப் பிறரை நோக்கி,
'சீரிது; மேல் இம் மாற்றம் தெளிவுறத் தேர்மின்' என்னு,
ஆரியன் உரைப்பதானுன்; அனைவரும் அதனைக் கேட்டார். 103

'கருத்து உற நோக்கிப் போந்த காலமும் நன்று; காதல்
அருத்தியும் அரசின் மேற்றே; அறிவினுக்கு அவதி இல்லை;
"பெருத்து உயர் தவத்தினுனும் பிழைப்பு இலன்" என்னும் பெற்றி
திருத்தியது ஆகும் அன்றே, நம்வயின் சேர்ந்த செய்கை? 104

'மற்று இனி உரைப்பது என்னே? மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி; அன்னது அன்றுஎனின், பிறிது ஒன்றுனும்,
வெற்றியே பெறுக, தோற்க, வீக, வீயாது வாழ்க,
பற்றுதல் அன்றி உண்டோ, அடைக்கலம் பகர்கின்றுனை? 105

'இன்று வந்தான் என்று உண்டோ? எந்தையை யாயை முன்னைக்
கொன்று வந்தான் என்று உண்டோ? அடைக்கலம் கூறுகின்றுன்;
துன்றி வந்து அன்பு செய்யும் துணைவனும் அவனே; பின்னைப்
பின்றும் என்றுலும், நம்பால் புகழ் அன்றிப் பிறிது உண்டாமோ? 106

'பிறந்த நாள் தொடங்கி, யாரும், துலை புக்க பெரியோன் பெற்றி
மறந்த நாள் உண்டோ? என்னைச் சரண் என வாழ்கின்றுனைத்
துறந்த நாட்கு இன்று வந்து துன்னினன் சூழ்ச்சியாலே
இறந்த நாள் அன்றே, என்றும் இருந்த நாள் ஆவது!' என்றுன்.

102. விட்டான் - முடித்தான்; 104. அருத்தி - பெருவிருப்பம்; அரசின் மேற்று - அரசைவிட மேம்பட்டது; அதாவது அரசினும் மேலாகிய வீட்டைப் பற்றியது; இன் - ஐந்தாம் வேற்றுமை உருபு, இலங்கை அரசின் மேலது என்பாரும் உண்டு; அவதி - எல்லை; 105. பெற்றி - காரியம், ஆலோசனை; 106. பின்றுதல் - மாறுபடுதல்; 107. துறந்த நாட்கு - கைவிடுகின்ற நாளைக்காட்டிலும்.

'இடைந்தவர்க்கு, "அபயம், யாம்!" என்று இரந்தவர்க்கு, எறி நீர்வேலை
கடைந்தவர்க்கு, ஆகி, ஆலம் உண்டவற் கண்டிலீரோ?
உடைந்தவர்க்கு உதவான் ஆயின், உள்ளது ஒன்று ஈயான் ஆயின்,
அடைந்தவர்க்கு அருளான் ஆயின், அறம் என் ஆம்? ஆண்மை என் ஆம்?

'பேடையைப் பிடித்து, தன்னைப் பிடிக்க வந்து அடைந்த பேதை
வேடனுக்கு உதவி செய்து, விறகிடை வெந் தீ மூட்டி,
பாடுறு பசியை நோக்கி, தன் உடல் கொடுத்த பைம் புள்
வீடு பெற்று உயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிது அன்றோ? 109

'போதகம் ஒன்று, கன்றி இடங்கர் மாப் பொருத போரின்,
"ஆதிஅம் பரமே! யான் உன் அபயம்!" என்று அழைத்த அந் நாள்,
வேதமும் முடிவு காணு மெய்ப்பொருள் வெளி வந்து எய்தி,
மா துயர் துடைத்த வார்த்தை மறப்பரோ, மறப்பிலாதார்?

'மன்னுயிர் எல்லாம் தானே வருவித்து வளர்க்கும் மாயன்,
தன் அன உலகம் எல்லாம் தருமமும் எவையும் தானே
என்னினும், அடைந்தோர் தம்மை ஏமுற இனிதின் ஓம்பி,
பின்னும் வீடு அளிக்கும் என்றால், பிறிது ஒரு சான்றும் உண்டோ? 111

'நஞ்சினை மிடற்று வைத்த நகை மழுவாளன், "நாளும்
தஞ்சு" என, முன்னம், தானே தாதைபால் கொடுத்து, "சாதல்
அஞ்சினேன்; அபயம்!" என்ற அந்தணற்கு ஆகி, அந் நாள்,
வெஞ் சினக் கூற்றை மாற்றும் மேன்மையின் மேன்மை உண்டோ?

'"சரண் எனக்கு யார்கொல்?" என்று சானகி அழுது சாம்ப,
"அரண் உனக்கு ஆவென்; வஞ்சி! அஞ்சல்!" என்று அருளின் எய்தி,
முரணுடைக் கொடியோன் கொல்ல, மொய் அமர் முடித்து, தெய்வ
மரணம் என் தாதை பெற்றது என்வயின் வழக்கு அன்று ஆமோ?

'உய்ய, "நிற்கு அபயம்!" என்றான் உயிரைத் தன் உயிரின் ஓம்பாக்
கய்யனும், ஒருவன் செய்த உதவியில் கருத்திலானும்,
மய் அற, நெறியின் நோக்கி, மா மறை நெறியில் நின்ற
மெய்யினைப் பொய் என்றானும், மீள்கிலா நரகில் வீழ்வார். 114

108. ஆகி - உதவியாகி; 109. பாடுறு பசி - பெரும் பசி; 109. பைம் புள் - ஆண்புறு, பசுமை இங்குச் சிறுமையை உணர்த்தியது; 112. நாள் - வாழ்நாள்; தஞ்சு - எளிமைப்பட்டது, ஈண்டுக் குறைவானது; தாதை - மிருகண்டு முனிவர்; அந்தணன் - மார்க்கண்டேயன்; 114. கய்யன் - கீழ் மகன்; மெய் - கடவுள்.

'சீதையைக் குறித்ததேயோ, ''தேவரைத் தீமை செய்த
பேதையைக் கொல்வேன்'' என்று பேணிய விரதப் பெற்றி?
வேதியர், "அபயம்!" என்றார்க்கு, அன்று, நான் விரித்துச் சொன்ன
காதையைக் குறித்து நின்ற அவ் உரை கடக்கல் ஆமோ? 115

'காரியம் ஆக! அன்றே ஆகுக! கருணையோர்க்குச்
சீரிய தன்மை நோக்கின், இதனின்மேல் சிறந்தது உண்டோ?
பூரியரேனும் தம்மைப் புகல் புகுந்தோர்க்குப் பொன்றா
ஆர் உயிர் கொடுத்துக் காத்தார், எண் இலா அரசர் அம்மா!

'ஆதலான், ''அபயம்!'' என்ற பொழுதத்தே, அபய தானம்
ஈதலே கடப்பாடு என்பது; இயம்பினீர், என்பால் வைத்த
காதலான்; இனி வேறு எண்ணக் கடவது என்? கதிரோன் மைந்த!
கோது இலாதவனை நீயே என்வயின் கொணர்தி' என்றான். 117

**சுக்கிரீவன், வீடணனை அழைத்துவரச் செல்லுதல்**

ஐயுறவு எல்லாம் தீரும் அளவையாய் அமைந்தது அன்றே;
தெய்வ நாயகனது உள்ளம் தேறிய அடைவே தேறி,
கைபுகற்கு அமைவது ஆனான், 'கடிதினின் கொணர்வல்' என்னா,
மெய்யினுக்கு உறையுள் ஆன ஒருவன்பால் விரைவின் சென்றான். 118

**சுக்கிரீவன் வரவு அறிந்து, வீடணன் எதிர் செல்லுதல்**

வருகின்ற கவியின் வேந்தை, மயிந்தனுக்கு இளைய வள்ளல்,
'"தருக!" என்றான்; அதனால், உன்னை எதிர் கொளற்கு அருக்கன் [தந்த,
இரு குன்றம் அணைய தோளான் எய்தினன்' என்னலோடும்,
திரிகின்ற உள்ளத்தானும், அகம் மலர்ந்து, அவன் முன் சென்றான்.

**சுக்கிரீவனும் வீடணனும் தழுவிக் கொள்ளுதல்**

தொல் அருங் காலம் எல்லாம் பழகினும், தூயர் அல்லார்
புல்லலர்; உள்ளம் தூயார் பொருந்துவர், எதிர்ந்த ஞான்றே;
ஒல்லை வந்து உணர்வும் ஒன்ற, இருவரும், ஒரு நாள் உற்ற
எல்லியும் பகலும் போல, தழுவினர், எழுவின் தோளார். 120

**வீடணனுக்கு இராமன் அடைக்கலம் அருளியதைச் சுக்கிரீவன் தெரிவித்தல்**

தழுவினர் நின்ற காலை, 'தாமரைக்கண்ணன் தங்கள்
முழு முதல் குலத்திற்கு ஏற்ற முறைமையால் உவகை மூள,
வழுவல் இல் அபயம் உன்பால் வழங்கினன்; அவன் பொற் பாதம்
தொழுதியால், விரைவின்' என்று கதிரவன் சிறுவன் சொன்னான். 121

115. காதை - காதா, பாடல், ஈண்டுச் செய்தி; 116. பூரியர் - கீழ் மக்கள்; 118. அடைவு - முறைமை; அமைவது - உடன்படுவது; 119. மயிந்தனுக்கு இளைய வள்ளல் - துமிந்தன்; தருக என்றவன் இராமன்; 120. எல்லி - இரவு.

**வீடணன் மகிழ்ச்சி**

சிங்க ஏறு அனையான் சொன்ன வாசகம் செவி புகாமுன்,
கங்குலின் நிறத்தினன்தன் கண் மழைத் தாரை கான்ற;
அங்கமும் மனம்அது என்னக் குளிர்ந்தது; அவ் அகத்தை மிக்குப்
பொங்கிய உவகை என்னப் பொடித்தன, உரோமப் புள்ளி. 122

' "பஞ்சு" எனச் சிவக்கும் மென் கால் தேவியை பிரித்த பாவி
வஞ்சனுக்கு இளைய என்னை, "வருக!" என்று அருள் செய்தானே?
தஞ்சு எனக் கருதினானே? தாழ் சடைக் கடவுள் உண்ட
நஞ்சு எனச் சிறந்தேன் அன்றோ, நாயகன் அருளின் நாயேன்?

'மருளுறு மனத்தினன் என் வாய்மொழி மறுத்தான்; வானத்து
உருளுறு தேரினானும், இலங்கைமீது ஓடும் அன்றே?
தெருளுறு சிந்தை வந்த தேற்றம் ஈது ஆகின், செய்யும்
அருள் இது ஆயின், கெட்டேன்! பிழைப்பரோ அரக்கர் ஆனோர்?

'தீர்வு அரும் இன்னல் தம்மைச் செய்யினும், செய்ய சிந்தைப்
பேர் அருளாளர் தம்தம் செய்கையின் பிழைப்பது உண்டோ?—
கார் வரை நிறுவி, தன்னைக் கனல் எழக் கலக்கக் கண்டும்,
ஆர்கலி, அமரர் உய்ய, அமுது பண்டு அளித்தது அன்றே? 125

'துறவியின் உறவு பூண்ட தூயவர் துணைவன் என்னை
உற உவந்து அருளி, மீளா அடைக்கலம் உதவினானே!
அற வினை இறையும் இல்லா, அறிவு இலா, அரக்கன் என்னும்
பிறவியின் பெயர்ந்தேன்; பின்னும், நரகினின் பிழைப்பதானேன்.'

**இராமனிடம் விரைவில் செல்லுமாறு சுக்கிரீவன் கூறுதல்**

திருத்திய உணர்வு மிக்க செங் கதிர்ச் செல்வன் செம்மல்,
'ஒருத்தரை நலனும் தீங்கும் தேரினும், உயிரின் ஓம்பும்
கருத்தினன் அன்றே, தன்னைக் கழல் அடைந்தோரை; காணும்
அருத்தியன், அமலன்; தாழாது ஏகுதி, அறிஞ!' என்றான். 127

மொய் தவழ் கிரிகள் மற்றும் பலவுடன் முடுகிச் செல்ல,
மை தவழ் கிரியும் மேருக் குன்றமும் வருவது என்ன,
செய் தவம் பயந்த வீரர், திரள் மரம் ஏழும் தீய
எய்தவன் இருந்த சூழல், இருவரும் எய்தச் சென்றார். 128

*123.* பஞ்சு எனச் சிவக்கும் - தோழியர் செம்பஞ்சுக் குழம்பு ஊட்ட வேணும் என்று சொன்னவுடன் பொருமல் சிவக்கின்ற; *124.* தேற்றம் - உறுதியான எண்ணம்; கெட்டேன் - அரக்கரது அழிவை நினைந்து இரங்கிக் கூறிய மொழி; *126.* துறவியின் - துறவறத்தில்; துறவி - துறவு; *128.* மொய் - வலிமை; தவழ்தல் - பொருந்துதல்; மை - கருமை, மேகமும், ஆம்; கிரி - மலை; மை தவழ் கிரியும் மேரு மலையும் முறையே வீடணன், சுக்கிரீவன் ஆகியோருக்கு உவமையாம்.

**வீடணன், இராமன் திருவடிகளில் விழுந்து வணங்குதல்**

மார்க்கடம் சூழ்ந்த வைப்பின் இளையவன் மருங்கு காப்ப,
நாற் கடல் உடுத்த பாரின் நாயகன் புதல்வன், நாமப்
பாற்கடல் சுற்ற, விற் கை வட வரை பாங்கு நிற்ப,
கார்க் கடல் கமலம் பூத்தது எனப் பொலிவானைக் கண்டான்.

அள்ளி மீது உலகை வீசும் அரிக் குலச் சேனை நாப்பண்,
தெள்ளு தண் திரையிற்று ஆகி, பிறிது ஒரு திறனும் சாரா
வெள்ளி வெண் கடலுள் மேல்நாள் விண்ணவர் தொழுது வேண்ட,
பள்ளி தீர்ந்து இருந்தான் என்னப் பொலிதரு பண்பினானை; 130

கோணுதற்கு அமைந்த கோலப் புருவம்போல் திரையும் கூட,
பூணுதற்கு இனிய முத்தின் பொலி மணல் பரந்த வைப்பில்,
காணுதற்கு இனிய நீள வெண்மையில் கருமை காட்டி,
வாணுதல் சீதை கண்ணின் மணி என வயங்குவானை; 131

படர் மழை சுமந்த காலைப் பருவ வான், அமரர் கோமான்
அடர் சிலை துறந்தது என்ன, ஆரம் தீர் மார்பினானை;
கடர் கடை மத்தின் பாம்பு கழற்றியது என்னக் காசின்
சுடர் ஒளி வலயம் தீர்ந்த சுந்தரத் தோளினானை; 132

கற்றை வெண் நிலவு நீக்கி, கருணை ஆம் அமிழ்தம் காலும்
முற்றுறு கலையிற்று ஆய முழுமதி முகத்தினானை;
பெற்றவன் அளித்த மோலி இளையவன் பெற, தான் பெற்ற
சிற்றவை பணித்த மோலி பொலிகின்ற சென்னியானை; 133

வீரனை—நோக்கி, அங்கம் மென் மயிர் சிலிர்ப்ப, கண்ணீர்
வார, நெஞ்சு உருகி, 'செங் கண் அஞ்சன மலை! அன்று ஆகின்,
கார் முகில் கமலம் பூத்தது! அன்று, இவன் கண்ணன் கொல்லாம்;
ஆர் அருள் சுரக்கும் நீதி அற நிறம் கரிதோ?' என்றான். 134

'மின்மினி ஒளியின் மாயும் பிறவியை வேரின் வாங்க,
செம் மணி மகுடம் நீக்கி, திருவடி புனைந்த செல்வன்
தம்முனோர், கமலத்து அண்ணல் தாதையார், சரணம் தாழ,
எம்முனார் எனக்குச் செய்த உதவி' என்று ஏம்பலுற்றான். 135

129. மார்க்கடம் - மர்க்கடத்தின் தொகுதி; மர்க்கடம் - வானரம்; வைப்பு - இடம்; நாமம் - புகழ்; பாற்கடலுக்கு மார்க்கடமும், வில்லை ஏந்திய இளைய பெருமானுக்கு விற் கை வட வரையும், இராமனுக்குக் கார்க் கடலும் உவமையாம்; 130. நாப்பண் - நடுவில்; 131. கோணுதல் - வளைதல்; புருவத்திற்கு அலை உவமை; 132. கடர் - கடல்; கரிய மேனியனாகிய இராமன் மார்பில் மணியாரம் அணியாமைக்குப் பருவ வான் சிலை துறந்த நிலை உவமை; 134. நீதி - தன்மை; 135. திருவடி புனைந்த செல்வன் - பரதன்; ஏம்பல் - களிப்பு.

'பெருந் தவம் இயற்றினோர்க்கும் பேர்வு அரும் பிறவி நோய்க்கு
மருந்து என நின்றான் தானே வடிக் கணை தொடுத்துக் கொல்வான்
இருந்தனன்; நின்றது, என்னும் இயம்புவது? எல்லை தீர்ந்த
அருந் தவம் உடையர் அம்மா, அரக்கர்!' என்று அகத்துள் கொண்டான்.

கரங்கள் மீச் சுமந்து செல்லும் கதிர் மணி முடியன், கல்லும்
மரங்களும் உருக நோக்கும் காதலன், கருணை வள்ளல்
இரங்கினன் நோக்கும்தோறும், இரு நிலத்து இறைஞ்சுகின்றான்;
வரங்களின் வாரி அன்ன தாள் இணை வந்து வீழ்ந்தான். 137

**இராமன், வீடணனுக்கு இலங்கை அரசை அளித்தல்**

'அழிந்தது, பிறவி' என்னும் அகத்து இயல் முகத்துக் காட்ட,
வழிந்த கண்ணீரின் மண்ணில் மார்பு உற வணங்கினானை,
பொழிந்தது ஓர் கருணை தன்னால், புல்லினன் என்று தோன்ற,
'எழுந்து, இனிது இருத்தி' என்னா, மலர்க்கையால் இருக்கை ஈந்தான்.

ஆழியான் அவனை நோக்கி, அருள் சுரந்து, உவகை கூர,
'ஏழினோடு ஏழாய் நின்ற உலகும் என் பெயரும் எந் நாள்
வாழும் நாள், அன்றுகாறும், வாள் எயிற்று அரக்கர் வைகும்
தாழ் கடல் இலங்கைச் செல்வம் நின்னதே; தந்தேன்' என்றான்.

தீர்த்தன் நல் அருளை நோக்கிச் செய்ததோ? சிறப்புப் பெற்றான்
கூர்த்த நல் அறத்தை நோக்கிக் குறித்ததோ? யாது கொல்லோ?—
வார்த்தை அஃது உரைத்தலோடும், 'தனித் தனி வாழ்ந்தேம்' என்ன
ஆர்த்தன, உலகில் உள்ள சராசரம் அனைத்தும் அம்மா! 140

**வீடணனுக்கு முடி சூட்ட இலக்குவனைப் பணித்தல்**

'உய்ஞ்சனென் அடியனேன்' என்று ஊழ்முறை வணங்கி நின்ற
அஞ்சன மேனியானை அழகனும் அருளின் நோக்கி,
'தஞ்ச நல் துணைவன் ஆன தவறு இலாப் புகழான்தன்னை,
துஞ்சல் இல் நயனத்து ஐய! சூட்டுதி மகுடம்' என்றான். 141

**திருவடி சூட்டுமாறு வீடணன் வேண்டுதல்**

விளைவினை அறியும் மேன்மை வீடணன், 'என்றும் வீயா
அளவு அறு பெருமைச் செல்வம் அளித்தனை ஆயின், ஐய!
களவு இயல் அரக்கன் பின்னே தோன்றிய கடமை தீர,
இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி' என்றான். 142

137. வாரி - கடல், வாயிலும் ஆம்; 139. இதன்கண் கூறப்படும் நிகழ்ச்சி, 'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்' என்னும் புறத்திணைத் துறையுள் அடங்கும்; இராமன் அருளே வீடணனுக்கு வேண்டுவது; இலங்கை அரசோ வந்தேறியானது என்பது பெரியோர் கருத்து; 140. தீர்த்தன் - தான் தூயனாய் இருப்பதோடு தன்னை அடைந்தாரையும் தூயராக்க வல்லவன்; 142. கடமை - தொடர்பு.

**இராமன். வீடணனைத் தம்பியாகக் கொண்டு கூறுதல்**

'குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; பின், குன்று சூழ்வான்
மகனொடும், அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகல் அருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான் நுந்தை.'

**வீடணன். திருவடி நிலைகளைச் சூடிக்கொள்ளுதல்**

'நடு இனிப் பகர்வது என்னே? நாயக! நாயினேனை,
"உடன் உதித்தவர்களோடும் ஒருவன்" என்று உரையாநின்றாய்;
அடிமையின் சிறந்தேன்' என்னா, அயிர்ப்பொடும் அச்சம் நீங்கி,
தொடு கழல் செம் பொன் மோலி சென்னியில் சூட்டிக் கொண்டான்.

திருவடி முடியின் சூடி, செங் கதிர் உச்சி சேர்ந்த
அரு வரை என்ன, நின்ற அரக்கர்தம் அரசை நோக்கி,
இருவரும் உவகை கூர்ந்தார்; யாவரும் இன்பம் உற்றார்;
பொரு அரும் அமரர் வாழ்த்தி, பூமழை பொழிவதானார். 145

ஆர்த்தன—பரவை ஏழும், அவனியும், அமரர் நாடும்,
வார்த் தொழில் புணரும் தெய்வ மங்கல முரசும் சங்கும்;
தூர்த்தன, கனக மாரி; சொரிந்தன, நறு மென் சுண்ணம்;
போர்த்தது வானத்து, அன்று, அங்கு, எழுந்தது துழனிப் பொம்மல்.

'மொழிந்த சொல் அமிழ்தம் அன்னாள் திறத்தினின் முறைமை நீங்கி
இழிந்த என் மரபும் இன்றே உயர்ந்தது' என்று ஏம்பலுற்றான்,
செழுந் தனி மலரோன்; பின்னை, 'இராவணன் தீமைச் செல்வம்
அழிந்தது' என்று, அறனும், தன் வாய் ஆவலம் கொட்டிற்று அன்றே.

**வீடணனோடு பாடிவீட்டை வலம்வர இராமன் பணித்தல்**

இன்னது ஓர் செவ்வித்து ஆக, இராமனும், 'இலங்கை வேந்தன்-
தன் நெடுஞ் செல்வம் தானே பெற்றமை பலரும் கேட்ப,
பல் நெடுந் தானை சூழ, பகலவன் சேயும் நீயும்,
மன் நெடுங் குமர! பாடிவீட்டினை வலம் செய்க!' என்றான். 148

அந்தம் இல் குணத்தினானை அடியிணை-முடியினோடும்
சந்தன விமானம் ஏற்றி, வானரத் தலைவர் தாங்க,
'இந்திரற்கு உரிய செல்வம் எய்தினான் இவன்' என்று ஏத்தி,
மந்தரத் தடந்தோள் வீரர், வலம் செய்தார், தானை வைப்பை.

143. அகன் அமர் காதல் - மனமார்ந்த நேயம்; 146. துழனிப் பொம்மல் - ஆரவாரத்தின் மிகுதி; 147. ஆவலம் கொட்டல் - ஆரவாரித்தல்; 149. சந்தன விமானம் - சந்தன மரத்தால் இயன்ற விமானம்.

பெரியோர் மகிழ்ச்சி

தேடுவார் தேட நின்ற சேவடி, தானும் தேடி
நாடுவான், அன்று கண்ட நான்முகன் கழீஇய நல் நீர்
ஆடுவார் பாவம் ஐந்தும் நீங்கி, மேல் அமரர் ஆவார்;
சூடுவார் எய்தும் தன்மை சொல்லுவார் யாவர்? சொல்லீர்.

'இற்றை நாள் அளவும், யாரும், இருடிகள், இமையோர், ஞானம்
முற்றினர், அன்பு பூண்டார், வேள்விகள் முடித்து நின்றார்,
மற்று மா தவரும், எல்லாம், வாள் எயிற்று இலங்கை வேந்தன்
பெற்றது ஆர் பெற்றார்!' என்று வியந்தனர், பெரியோர் எல்லாம்.

## 5 இலங்கை கேள்விப் படலம்

இராமன் வீடணனுக்கு இடமளித்தல்

வந்து அடி வணங்கிய நிருதர் மன்னவற்கு
அந்தம் இலாதது ஓர் உறையுள் அவ்வழித்
தந்தனன் விடுத்தபின், இரவி, 'தன் கதிர்
சிந்தின வெய்ய' என்று எண்ணி, தீர்ந்தனன். 1

அந்தி மாலையின் தோற்றம்

சந்தி வந்தனைத் தொழில் முடித்து தன் நெடும்
புந்தி நொந்து, இராமனும் உயிர்ப்ப, பூங் கணை
சிந்தி வந்து இறுத்தனன், மதனன்; தீ நிறத்து
அந்தி வந்து இறுத்தது; கறுத்தது அண்டமே. 2

மாத் தடந் திசைதொறும் மறைந்த வல் இருள்
கோத்தது, கருங் கடல் கொள்ளை கொண்டென;
நீத்த நீர்ப் பொய்கையில் நிறைந்த நாள்மலர்
பூத்தென, மீன் குலம் பொலிந்தது, அண்டமே. 3

சில் இயல் கோதையை நினைந்து தேம்பிய
வில்லியைத் திரு மனம் வெதுப்பும் வெம்மையால்,
எல்லியைக் காண்டலும் மலர்ந்த ஈட்டினால்,
மல்லிகைக் கானமும், வானமும் ஒத்ததே. 4

150. அன்று - திருவிக்கிரமாவதாரம் செய்த காலம்; நன்னீர் - நல்ல நீர், கங்கை.

5: 2. அண்டம் - வானம், உலகமும் ஆம்; 4. சில் இயல் கோதை - சீதை; முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என ஐம்பாலாகக் கூந்தல் புனையப் படுதல்பற்றிச் 'சில் இயல் கோதை' எனப்பட்டது; ஈட்டினால் - தன்மையால்; ஈடு - தன்மை.

ஒன்றும் உட் கறுப்பினோடு, ஒளியின் வாள் உரீஇ,
'தன் தனி முகத்தினால் என்னைத் தாழ்த்து அற
வென்றவள் துணைவனை இன்று வெல்குவேன்'
என்றது போல, வந்து எழுந்தது—இந்துவே. 5

'கண்ணினை அப்புறம் கரந்து போகினும்,
பெண் நிறம் உண்டுஎனின், பிடிப்பல் ஈண்டு' என,
உள் நிறை நெடுங் கடல் உலகம் எங்கணும்
வெண் நிற நிலவு எனும் வலையை வீசினான். 6

புடைக்கை வன் திரை எடுத்து ஆர்க்கும் போர்க் கடல்,
'உடைக் கருந் தனி நிறம் ஒளித்துக் கொண்டவன்,
அடைக்க வந்தான் எனை, அரியின் தானையால்:
கிடைக்க வந்தான்' எனக் கிளர்ந்தது ஒத்ததே. 7

மேல் உகத் தொகுதியால் முதிர்ந்த மெய் எலாம்
தோல் உகுத்தாலென, அரவத் தொல் கடல்
வாலுகத்தால் இடைப் பரந்த வைப்பு எலாம்
பால் உகுத்தாலென, நிலவு பாய்ந்ததால். 8

மன்றல்வாய் மல்லிகை எயிற்றின், வண்டுஇனம்
கன்றிய நிறத்தது, நறவின் கண்ணது,
குன்றின்வாய் முழையின்நின்று உலாய கொட்பது,
தென்றல் என்று ஒரு புலி உயிர்த்துச் சென்றதால். 9

கரத்தொடும் பாழி மாக் கடல் கடைந்துளான்
உரத்தொடும், கரனொடும், உருவ ஓங்கிய
மரத்தொடும் தொளைத்தவன் மார்பில், மன்மதன்
சரத்தொடும் பாய்ந்தது, நிலவின் தாரை வாள். 10

**இராமன், சீதையை நினைந்து வருந்தும் நிலை**

உடலினை நோக்கும்; இன் உயிரை நோக்குமால்;
இடரினை நோக்கும்; மற்று யாதும் நோக்கலன்;
கடலினை நோக்கும்; அக் கள்வன் வைகுறும்
திடரினை நோக்கும்; தன் சிலையை நோக்குமால். 11

5. கறுப்பு - பகைமை, களங்கம்; 6. கண்ணினை - கண்ணுக்கு; 7. கிடைக்க வருதல் - கைக்கு அகப்படும்படி வருதல்; 8. மேல் - விசும்பு; விசும்பு தோல் உகுத்தால் எனவும், கடல் வாலுகத்தால் பால் உகுத்தால் எனவும் நிலவு பாய்ந்தது என இயையும். தோல் உகுத்தலாகிய குறிப்பால் வானமாகிய பாம்பு என்ற உருவகமும், பால் உகுத்தலாகிய குறிப்பால் கடலாகிய பெண் என்ற உருவகமும், வாலுகமாகிய நகில் என்ற உருவகமும் பெறப்படுகின்றன; 9. கன்றிய - கருகிய; நறவின் கண்ணது - தேனாகிய செந்நிறக் கண்களை உடையது; 11. திடர் - திட்டு, ஈண்டு இலங்கை.

பணி பழுத்து அமைந்த பூண் அல்குல் பண்பினுல்,
பிணி பழுத்து அமைந்தது ஓர் பித்தின் உள்ளத்தான்,
அணி பழுத்து அமைந்த முத்து அரும்பு செம்மணி
மணி பழுத்து அமைந்த வாய் மறக்க வல்லனே? 12

சுக்கிரீவன், இராமனை 'வீடணனேடு மேல் விளைவது குறித்து எண்ணுக' எனல்

ஆயது ஓர் அளவையின், அருக்கன் மைந்தன், 'நீ
தேய்வது என்? காரியம் நிரப்பும் சிந்தையை;
மேயவன்தன்னெடும் எண்ணி, மேல் இனித்
தூயது நினைக்கிலை' என்னச் சொல்லினுன். 13

அவ்வழி, உணர்வு வந்து, அயர்வு நீங்கினுன்,
'செவ் வழி அறிஞனைக் கொணர்மின், சென்று' என,
'இவ்வழி வருதி' என்று இயம்ப, எய்தினுன்—
வெவ் வழி விலங்கி, நல் நெறியை மேவினுன். 14

இலங்கையின் அரண் பற்றி இராமன் வினவ, வீடணன் விடை பகர்தல்

'ஆர்கலி இலங்கையின் அரணும், அவ் வழி
வார் கெழு கனை கழல் அரக்கர் வன்மையும்,
தார் கெழு தனையின் அளவும், தன்மையும்,
நீர் கெழு தன்மையாய்! நிகழ்த்துவாய்' என்ருன். 15

எழுதலும், 'இருத்தி' என்று இராமன் ஏயினுன்,
முழுது உணர் புலவனை; முளரிக் கண்ணினுன்
பழுது அற வினவிய பொருளைப் பண்பினுல்
தொழுது உயர் கையினுன், தெரியச் சொல்லினுன்: 16

இலங்கையின் அரண்

'நிலையுடை வட வரை குலைய நேர்ந்து, அதன்
தலை என விளங்கிய தமனியப் பெரு
மலையினை முழு முடி வாங்கி, ஒங்கு நீர்
அலை கடல் இட்டனன், அனுமன் தாதையே. 17

'ஏழு நூறு யோசனை அகலம்; இட்ட கீழ்
ஆழம் நூறு யோசனை; ஆழி மால் வரை,
வழியாய்! உலகினை வளைந்த வண்ணமே
சூழும் மா மதில்; அது சுடர்க்கும் மேலதால். 18

12. பணி - வேலைப்பாடு; பழுத்து அமைதல் - நிரம்பிப் பொருந்துதல்; அணி, மணி - அழகு.

'மருங்குடை வினையமும், பொறியின் மாட்சியும்,
இருங் கடி அரணமும், பிறவும், எண்ணினால்,
சுருங்கிடும்; என், பல சொல்லி? சுற்றிய
கருங் கடல் அகழது; நீரும் காண்டிரால். 19

வாயில் முதலியவற்றைக் காப்போர்

'வட திசை வயங்கு ஒளி வாயில் வைகுவோர்,
இடை இலர், எண்-இரு கோடி என்பரால்;
கடையுக முடிவினில் காலன் என்பது என்?
விடை வரு பாகனைப் பொருவும் மேன்மையோர். 20

'மேல் திசை வாயிலின் வைகும் வெய்யவர்க்கு
ஏற்றமும் உள, அவர்க்கு இரண்டு கோடி மேல்;
கூற்றையும் கண்-பொறி குறுகக் காண்பரேல்,
ஊற்றுறு குருதியோடு உயிரும் உண்பரால். 21

'தென் திசை வாயிலின் வைகும் தீயவர்
என்றவர் எண்-இரு கோடி என்பரால்;
குன்று உறழ் நெடியவர் கொடுமை கூறி என்?
வன் திறல் யமனையும் அரசு மாற்றுவார். 22

'கீட்டிசை வாயிலின் வைகும் கீழவர்
ஈட்டமும் எண்-இரு கோடி என்பரால்;
கோட்டு இருந் திசை நிலைக் கும்பக் குன்றையும்
தாள் துணை பிடித்து, அகன் தரையின் எற்றுவார். 23

'விண்ணிடை விழித்தனர் நிற்கும் வெய்யவர்
எண்-இரு கோடியின் இரட்டி என்பரால்;
மண்ணிடை வானவர் வருவர் என்று, அவர்
கண் இலர், கரை இலர், கரந்து போயினர். 24

'பிறங்கிய நெடு மதில் பின்னும் முன்னரும்,
உறங்கலர், உண் பதம் உலவை ஆதலால்,
கறங்கு எனத் திரிபவர் கணக்கு வேண்டுமேல்,
அறைந்துளது ஐ-இரு நூறு கோடியால். 25

20. இடைதல் - பின் வாங்குதல்; 22. அரசு மாற்றுவார் - அரசாட்சியை அழிக்கவல்லார்; 23. இருந் திசை - அகன்ற திக்கு; 24. கண் - கண்ணோட்டம், இரக்கம்; 25. உலவை - காற்று.

'இப்படி மதில் ஒரு மூன்று; வேறு இனி
ஒப்ப அரும் பெருமையும் உரைக்க வேண்டுமோ?
மெய்ப் பெருந் திரு நகர் காக்கும் வெய்யவர்
முப்பது கோடியின் மும்மை முற்றினர். 26

'சிறப்பு அவன் செய்திடச் செல்வம் எய்தினர்,
அறப் பெரும் பகைஞர்கள், அளவு இல் ஆற்றலர்,
உறப் பெரும் பகை வரின் உதவும் உண்மையர்,
இறப்பு இலர், எண்-இரு நூறு கோடியே. 27

**கோயில் வாயிலின் காவலர்**

' ''விடம் அல, விழி'' எனும் வெகுளிக் கண்ணினர்,
''கடன் அல, இமைத்தலும்'' என்னும் காவலர்,
வட வரை புரைவன கோயில் வாயிலின்
இடம் வலம் வருபவர், எண்-எண் கோடியால். 28

'அன்றியும், அவன் அகன் கோயில் ஆய் மணி
முன்றிலின் வைகுவார் முறைமை கூறிடின்,
ஒன்றிய உலகையும் எடுக்கும் ஊற்றத்தார்;
குன்றினும் வலியவர்; கோடி கோடியால். 29

**படைகளின் அளவு**

'தேர் பதினுயிரம் பதுமம்; செம் முகக்
கார்வரை அவற்றினுக்கு இரட்டி; கால் வயத்து
ஊர் பரி அவற்றினுக்கு இரட்டி; ஒட்டகம்
தார் வரும் புரவியின் இரட்டி சாலுமே. 30

'பேயனேன், என், பல பிதற்றி? பேர்த்து அவன்
மா இரு ஞாலத்து வைத்த மாப் படை
தேயினும், நாள் எலாம் தேய்க்க வேண்டுவது,
ஆயிர வெள்ளம் என்று அறிந்தது—ஆழியாய்! 31

**இராவணன் துணைவர் பெருமை**

'இலங்கையின் அரண் இது; படையின் எண் இது;
வலங் கையில் வாள் சிவன் கொடுக்க வாங்கிய
அலங்கல் அம் தோளவன் துணைவர், அந்தம் இல்
வலங்களும் வரங்களும், தவத்தின் வாய்த்தவர். 32

28. கடன் அல - முறையல்ல; 30. பதுமம் - ஒரு பேரெண்; 31. வெள்ளம் - ஒரு பேரளவு, பதுமத்திற்கு மேற்பட்டது; 32. வலங்கள் - வலிமைகள்.

'உகம் பல் காலமும் தவம் செய்து பெரு வரம் உடையான்,
சுகம் பல் போர் அலால் வேறு இலன், பெரும் படைத் தொகையான்,
நகம் பல் என்று இவை இல்லது ஓர் நரசிங்கம் அனையான்,
அகம்பன் என்று உளன்; அலை கடல் பருகவும் அமைவான். 33

'பொருப்பை மீதிடும் புரவியும், பூட்கையும், தேரும்,
உருப்ப விற் படை, ஒன்பது கோடியும் உடையான்,
செருப் பெய் வானிடைச் சினக் கடாய் கடாய் வந்து செறுத்த
நெருப்பை வென்றவன், நிகும்பன் என்று உளன், ஒரு நெடியோன்.

'தும்பி ஈட்டமும், இரதமும், புரவியும், தொடர்ந்த
அம் பொன் மாப் படை ஐ-இரு கோடி கொண்டு அமைந்தான்,
செம் பொன் நாட்டு உள சித்தரைச் சிறையிடை வைத்தான்,
கும்பன் என்று உளன்; ஊழி வெங் கதிரினும் கொடியான். 35

'பேயை யாளியை யானையைக் கழுதையைப் பிணித்தது
ஆய தேர்ப் படை ஐ-இரு கோடி கொண்டு அமைந்தான்,
தாயைஆயினும் சலித்திடு வஞ்சனை தவிரா
மாயையான் உளன், மகோதரன் என்று ஒரு மறவோன். 36

'குன்றில் வாழ்பவர் கோடி நால்-ஐந்தினுக்கு இறைவன்,
''இன்று உளார் பினை நாளை இலார்'' என எயிற்றால்
தின்றுளான், நெடும பல் முறை தேவரைச் செருவின்
வென்றுளான், உளன், வேள்வியின்பகைஞன், ஓர் வெய்யோன்.

' ''மண் உளாரையும் வானில் உள்ளாரையும் வகுத்தால்,
உண்ணும் நாள் ஒரு நாளின்'' என்று ஒளிர் படைத் தானை
எண்ணின் நால்-இரு கோடியன், எரி அஞ்ச விழிக்கும்
கண்ணினன், உளன், சூரியன்பகை என்று ஓர் கழலான். 38

'தேவரும், தக்க முனிவரும், திசைமுகன் முதலா
மூவரும், பக்கம் நோக்கியே மொழிதர, முனிவான்,
தாவரும் பக்கம் எண்-இரு கோடியின் தலைவன்,
மாபெரும்பக்கன் என்று உளன், குன்றினும் வலியான். 39

34. மீதிடும் - மேலிட்டுச் செல்லும், தாண்டும்; உருப்ப - சினத்தை யுடைய; செருப் பெய் கடாய் - போர் புரிகின்ற ஆட்டுக்கடா; கும்ப நிகும்பர் என்பவர் கும்பகருணனுடைய புதல்வர் என்பது வால்மீகம்; 35. சித்தர் - தேவர்களில் ஒருவகைப் பிரிவினர்; 36. சலித்திடு வஞ்சன் - கலக்கம் செய்ய வல்ல வஞ்சன்; 39. பக்கம் நோக்கியே மொழிதர - பக்கம் பார்த்துப் பேசுமாறு.

'உச் சிரத்து எரி கதிர் என உருத்து எரி முகத்தன்,
நச் சிரப் படை நால்-இரு கோடிக்கு நாதன்,
முச் சிரத்து அயில் தலைவற்கும் வெலற்கு அரு மொய்ம்பன்,
வச்சிரத்துஎயிற்றவன், உளன், கூற்றுவன் மாற்றான். 40

'அசஞ்சலப் படை ஐ-இரு கோடியன், அமரின்
வசம் செயாதவன், தான் அன்றிப் பிறர் இலா வலியான்,
இசைந்த வெஞ் சமத்து இயக்கரை வேரொடும் முன் நாள்
பிசைந்து மோந்தவன், பிசாசன் என்று உளன், ஒரு பித்தன்.

'சில்லி மாப் பெருந் தேரொடும், கரி, பரி, சிறந்த
வில்லின் மாப் படை ஏழ்-இரு கோடிக்கு வேந்தன்,
கல்லி மாப் படி கலக்குவான், கனல் எனக் காந்திச்
சொல்லும் மாற்றத்தன், துன்முகன் என்று அறம் துறந்தோன்.

'இலங்கை நாட்டன்ன எறி கடல் தீவிடை உறையும்
அலங்கல் வேற் படை ஐ-இரு கோடிக்கும் அரசன்,
வலம் கொள் வாள் தொழில் விஞ்சையர் பெரும் புகழ் மறைத்தான்,
விலங்குநாட்டத்தன் என்று உளன், வெயில் உக விழிப்பான். 43

'நாமம் நாட்டிய சவம் எனின், நாள் என்றும் ஒருவர்
ஈம நாட்டிடை இடாமல், தன் எயிற்றிடை இடுவான்,
தாமம் நாட்டிய கொடிப் படைப் பதுமத்தின் தலைவன்,
தூமநாட்டத்தன் என்று உளன், தேவரைத் துரந்தான். 44

'போரின் மத்தனும், பொரு வயமத்தனும், புலவர்
நீரின் மத்து எனும் பெருமையர்; நெடுங் கடற் படையார்;
ஆரும் அத்தனை வலி உடையார் இலை; அவரால்
பேரும், அத்தனை எத்தனை உலகமும்; பெரியோய்! 45

**சேனை காவலன் பிரகத்தன்**

'இன்ன தன்மையர் எத்தனை ஆயிரர் என்கேன்—
அன்னவன் பெருந் துணைவராய், அமர்த் தொழிற்கு அமைந்தார்?
சொன்ன சொன்னவர் படைத் துணை இரட்டியின் தொகையான்,
பின்னை எண்ணுவான், பிரகத்தன் என்று ஒரு பித்தன்; 46

40. உச்சிரம் - தலைக்குமேல்; நச்சிரம் - சிறந்த தலைமை, 'ந' சிறப் புணர்த்தும் இடைச்சொல்; 41. அசஞ்சலப் படை - பகைவரைக் கண்டு நடுங் காத சேனை; 42. மாப் படி - பெரிய பூமி; 43. விலங்குநாட்டத்தன் - விரூபாக்கன்; 45. புலவர் - தேவர்; நீர் - ஈண்டு பாற்கடல்.

'சேனை காவலன்; இந்திரன் சிந்துரச் சென்னி
யானை கால் குலைந்து ஆழி ஓர் ஏழும் விட்டு அகல,
ஏனை வானவர் இருக்கை விட்டு இரியலுற்று அலைய,
சோனை மாரியின் சுடு கணை பல முறை துரந்தான். 47

**கும்பகருணன் வலிமை**

'தம்பி, முற்பகல் சந்திரர் நால்வரின் தயங்கும்
கும்ப மாக் கிரிக் கோடு இரு கைகளால் கழற்றி,
செம் பொன் மால் வரை மதம் பட்டதாம் எனத் திரிந்தான்,
கும்பகன்னன் என்று உளன், பண்டு தேவரைக் குமைத்தான். 48

**இராவணன் புதல்வர்களின் ஆற்றல்**

'கோள் இரண்டையும் கொடுஞ் சிறை வைத்த அக் குமரன்
மூளும் வெஞ் சினத்து இந்திரசித்து என மொழிவான்;
ஆளும் இந்திரற்கு அன்னவன் பிணித்ததன் பின்னை,
தாளினும் உள, தோளினும் உள, இனம் தழும்பு. 49

'தன்னையும் தெறும் தருமம் என்று இறை மனம் தாழான்,
முன்னவன் தரப் பெற்றது ஓர் முழு வலிச் சிலையான்,
அன்னவன்தனக்கு இளையவன், அப் பெயர் ஒழித்தான்
பின் ஓர் இந்திரன் இலாமையின்; பேர் அதிகாயன். 50

'தேவராந்தகன், நராந்தகன், திரிசிரா என்னும்
மூவர் ஆம்,—''தகை முதல்வர் ஆம் தலைவரும் முனையின்,
போவராம்; தகை அழிவராம்'' எனத் தனிப் பொருவார்
ஆவராம்—தகை இராவணற்கு அரும் பெறல் புதல்வர். 51

**இராவணன் திறம்**

'இனைய தன்மையர் வலி இஃது; இராவணன் என்னும்
அனையவன் திறம் யான் அறி அளவு எலாம் அறைவென்;
தனையன், நான்முகன் தகை மகன் சிறுவற்கு; தவத்தால்,
முனைவர் கோன் வரம், முக்கணன் வரத்தொடும் உயர்ந்தான்.

'எள் இல் ஐம் பெரும் பூதமும் யாவையும் உடைய
புள்ளிமான் உரி ஆடையன் உமையொடும் பொருந்தும்
வெள்ளி அம் பெருங் கிரியினை வேரொடும் வாங்கி,
அள்ளி விண் தொட எடுத்தனன், உலகு எலாம் அனுங்க. 53

52. முனைவர் கோன் - பிரமன்.

ஆன்ற எண் திசை உலகு எலாம் சுமக்கின்ற யானை
ஊன்று கோடு இற, திரள் புயத்து அழுத்திய ஒண்மை
தோன்றும் என்னவே, துணுக்கமுற்று இரிவர், அத் தொகுதி
மூன்று கோடியின்மேல் ஒரு முப்பத்து மூவர். 54

'குலங்களோடும் தம் குல மணி முடியொடும் குறைய,
அலங்கல் வாள்கொடு காலகேயரைக் கொன்ற அதன்பின்,
"இலங்கை வேந்தன்" என்று உரைத்தலும், இடி உண்ட அரவின்
கலங்குமால் இனம், தானவர் தேவியர் கருப்பம். 55

'குரண்டம் ஆடு நீர் அளகையின் ஒளித்து உறை குபேரன்,
திரண்ட மாடும், தன் திருவொடு நிதியமும், இழந்து,—
புரண்டு, மான் திரள் புலி கண்டது ஆம் என, போனான்—
இரண்டு மானமும், இலங்கை மா நகரமும் இழந்து. 56

' ''புண்ணும் செய்தது முதுகு'' என, புறங்கொடுத்து ஓடி,
''உண்ணும் செய்கை அத் தசமுகக் கூற்றம் தன் உயிர்மேல்
நண்ணும் செய்கையது'' எனக் கொடு, நாள்தொறும், தன் நாள்
எண்ணும் செய்கையன், அந்தகன், தன் பதம் இழந்தான். 57

'இருள் நன்கு ஆசு அற, எழு கதிரவன் நிற்க; என்றும்
அருணன் கண்களும் கண்டிலா இலங்கை, கண்டு அமரில்,
பருணன்தன் பெரும் பாசமும் பறிப்புண்டு, பயத்தால்
வருணன் உய்ந்தனன், மகர நீர் வெள்ளத்து மறைந்து. 58

'என்று உலப்புறச் சொல்லுகேன், இராவணன் என்னும்
குன்று உலப்பினும் உலப்பு இலாத் தோளினான் கொற்றம்?
இன்று உலப்பினும், நாளையே உலப்பினும், சில நாள்
சென்று உலப்பினும் நினக்கு அன்றி, பிறர்க்கு என்றும் தீரான்.

**இலங்கையில் அனுமன் புரிந்த வீரச்செயல்கள்**

'ஈடு பட்டவர் எண்ணிலர் தோரணத்து, எழுவால்;
பாடு பட்டவர் படு கடல் மணலினும் பலரால்;
சூடு பட்டது, தொல் நகர்; அடு புலி துரந்த
ஆடு பட்டது பட்டனர்; அனுமனால் அரக்கர். 60

54. ஒண்மை - செழுமை; 56. குரண்டம் - கொக்கு; இரண்டு மானம் - மானம் (பெருமை), விமானம் என்னும் இரு வகை மானங்கள்; 58. பருணன் - திறமுடையவன், ஈண்டு வருணன்; 60. தோரணம் - (அசோக வனத்தில் வெளியில் அமைந்த) கட்டுவாயில்; எழு - இருப்புத் தடி; பாடு - துன்பம், அழிவு; படு கடல் - ஆழமான கடல்.

எம் குலத்தவர், எண்பதினுயிரர், இறைவர்,
கிங்கரப் பெயர் கிரி அன்ன தோற்றத்தர், கிளர்ந்தார்;
வெங் கரத்தினும் காலினும் வாலினும் வீக்கி,
சங்கரற்கு அழி முப்புரத்தவர் எனச் சமைந்தார். 61

'வெம்பு மாக் கடற் சேனை கொண்டு எதிர் பொர வெகுண்டான்,
அம்பும் ஆயிரத்து ஆயிரம் இவன் புயத்து அழுத்தி,
உம்பர் வானகத்து ஒரு தனி நமனைச் சென்று உற்றான்,
சம்புமாலியும், வில்லினுல் சுருக்குண்டு—தலைவ! 62

'சேனைக் காவலர் ஓர் ஐவர் உளர், பண்டு தேவர்
வானைக் காவலும் மானமும் மாற்றிய மறவர்,
தானைக் கார்க் கருங் கடலொடும், தமரொடும், தாமும்,
யானைக் கால் பட்ட செல் என, ஒல்லையின் அவிந்தார். 63

'காய்த்த அக் கணத்து, அரக்கர்தம் உடல் உகு கறைத் தோல்,
நீத்த எக்கரின், நிறைந்துள கருங் கடல்; நெருப்பின்
வாய்த்த அக்கனை, வரி சிலை மலையொடும் வாங்கி,
தேய்த்த அக் குழம்பு உலர்ந்தில, இலங்கையின் தெருவில். 64

'சொன்ன மா மதில் இலங்கையின் பரப்பினில் துகைத்துச்
சின்னம் ஆனவர் கணக்கு இலர்; யாவரே தெரிப்பார்?
இன்னம் ஆர் உளர், வீரர்? மற்று, இவன் சுட எரிந்த
அன்ன மா நகர் அவிந்தது, அக் குருதியால் அன்று. 65

**இலங்கை எரிதலும், அதை அயன் மீண்டும் படைத்தலும்**

'விலங்கல் வெந்தவா வேறு இனி விளம்புவது எவனோ—
அலங்கல் மாலையும் சாந்தமும் அன்று தான் அணிந்த
கலங்களோடும், அச் சாத்திய துகிலொடும், கதிர் வாள்
இலங்கை வேந்தனும், ஏழு நாள் விசும்பிடை இருந்தான்! 66

'நொதுமல் திண் திறல் அரக்கனது இலங்கையை நுவன்றேன்;
அது மற்று அவ்வழி அரணமும் பெருமையும் அறைந்தேன்;
இது மற்று அவ்வழி எய்தியது; இராவணன் ஏவ,
பதுமத்து அண்ணலே பண்டுபோல் அந் நகர் படைத்தான். 67

**வீடணன் தான் போந்த காரணம் உரைத்தல்**

'காந்தும் வாளியின் கரன் முதல் வீரரும், கவியின்
வேந்தும், என்று இவர் விளிந்தவா கேட்டு அன்று; அவ் இலங்கை
தீந்தவா கண்டும், அரக்கரைச் செருவிடை முருக்கிப்
போந்தவா கண்டும், நான் இங்குப் புகுந்தது—புகழோய்!' 68

63. செல் - சிதல்; 64. நீத்த எக்கர் - வெள்ளத்தோடு கூடிய மணல் மேடுகள்; 65. சொன்னம் - சொர்ணம், பொன்; 67. நொதுமல் - வலிமை; 68. கவியின் வேந்து - வாலி.

**இராமன், அனுமனைப் புகழ்ந்து உரைத்தல்**

கேள் கொள் மேலையான் கிளத்திய பொருள் எலாம் கேட்டான்,
வாள் கொள் நோக்கியை, பாக்கியம் பழுத்தன்ன மயிலை,
நாள்கள் சாலவும் நீங்கலின், நலம் கெட மெலிந்த
தோள்கள் வீங்கி, தன் தூதனைப் பார்த்து, இவை சொன்னான்:

'கூட்டினார் படை பாகத்தின் மேற்படக் கொன்றாய்;
ஊட்டினாய், எரி ஊர் முற்றும்; இனி, அங்கு ஒன்று உண்டோ?
கேட்ட ஆற்றினால், கிளிமொழிச் சீதையைக் கிடைத்தும்
மீட்டிலாதது, என் வில் தொழில் காட்டவோ?—வீர! 70

'நின் செய் தோள் வலி நிரம்பிய இலங்கையை நேர்ந்தோம்;
பின் செய்தோம் சில; அவை இனிப் பீடு ஒன்று பெறுமோ?—
பொன் செய் தோளினாய்!—போர்ப் பெரும் படையொடும் புக்கோம்;
என் செய்தோம் என்று பெரும் புகழ் எய்துவான் இருந்தோம்?

'என்னது ஆக்கிய வலியொடு அவ் இராவணன் வலியும்
உன்னது ஆக்கினை; பாக்கியம் உருக் கொண்டது ஒப்பாய்!
முன்னது ஆக்கிய மூஉலகு ஆக்கிய முதலோன்
பின்னது ஆக்கிய பதம் நினக்கு ஆக்கினென்; பெற்றாய்.' 72

என்று கூறலும், எழுந்து, இரு நிலன் உற இறைஞ்சி,
ஒன்றும் பேசலன் நாணினன், வணங்கிய உரவோன்;
நின்ற வானரத் தலைவரும் அரசும், அந் நெடியோன்
வென்றி கேட்டலும், வீடு பெற்றார் என வியந்தார். 73

## 6 வருணனை வழி வேண்டு படலம்

**கடல் கடக்க வீடணன் வழி கூறுதல்**

'தொடக்கும் என்னில் இவ் உலகு ஒரு மூன்றையும் தோளால்
அடக்கும் வண்ணமும், அழித்தலும், ஒரு பொருள் அன்றால்;
கிடக்கும் வண்ண வெங் கடலினைக் கிளர் பெருஞ் சேனை
கடக்கும் வண்ணமும் எண்ணுதி—எண்ணு நூல் கற்றாய்!' 1

69. கேள் - நட்பு; மேலையான் - வீடணன்; 72. முதலோன் பின்னது ஆக்கிய பதம் - முதல்வனுகிய பிரமனுக்காக ஏற்பட்டுள்ள பதவி.

6: 1. தொடக்கும் என்னில் - இந்தக் கடல் கட்டுக்கு உட்படுமே எனில், போர் தொடங்குமேயானால் எனினும் ஆம்.

‘கரந்து நின்ற நின் தன்மையை, அது, செலக் கருதும்;
பரந்தது, உன் திருக் குல முதல் தலைவரால்; பரிவாய்
வரம் தரும், இந்த மாக் கடல்; படை செல, வழி வேறு
இரந்து வேண்டுதி, எறி திரைப் பரவையை’ என்றான். 2

#### இராமன் கடற் கரையை அடைதல்

‘நன்று, இலங்கையர் நாயகன் மொழி’ என நயந்தான்,
ஒன்று தன் பெருந் துணைவரும் புடை செல, உரவோன்,
சென்று வேலையைச் சேர்தலும், விசும்பிடை, சிவந்த
குன்றின் மேல்நின்று குதித்தன, பகலவன் குதிரை. 3

#### இராமன் புல்லில் அமர்ந்து, வருண மந்திரத்தைத் தியானித்தல்

கொழுங் கதிர்ப் பகைக் கோள் இருள் நீங்கிய கொள்கை,
செழுஞ் சுடர்ப் பனிக் கலை எலாம் நிரம்பிய திங்கள்
புழுங்கு வெஞ் சினத்து அஞ்சனப் பொறி வரி அரவம்
விழுங்கி நீங்கியது ஒத்தது, வேலை சூழ் ஞாலம். 4

‘தருண மங்கையை மீட்பது ஓர் நெறி தருக!’ என்னும்
பொருள் நயந்து, நல் நூல் நெறி அடுக்கிய புல்லில்,
கருணை அம் கடல் கிடந்தனன், கருங் கடல் நோக்கி;
வருண மந்திரம் எண்ணினன், விதி முறை வணங்கி. 5

#### ஏழுநாள் சென்றும் வருணன் வாராமையால் இராமன் சினத்தல்

பூழி சென்று தன் திரு உருப் பொருந்தவும், பொறை தீர்
வாழி வெங் கதிர் மணி முகம் வருடவும், வளர்ந்தான்;
ஊழி சென்றன ஒப்பன, ஒரு பகல்; அவை ஓர்
ஏழு சென்றன; வந்திலன், எறி கடற்கு இறைவன். 6

‘ஊற்றம் மீக் கொண்ட வேலையான், “உண்டு”, “இலை”, என்னும்
மாற்றம் ஈக்கவும் பெற்றிலம், யாம்’ எனும் மனத்தால்,
ஏற்றம் மீக்கொண்ட புனலிடை எரி முளைத்தென்னச்
சீற்றம் மீக்கொண்டு சிவந்தன, தாமரைச் செங் கண். 7

‘மாண்ட இல் இழந்து அயரும் நான், வழி, தனை வணங்கி,
வேண்ட, “இல்லை” என்று ஒளித்ததாம்’ என, மனம் வெதும்பி,
நீண்ட வில்லுடை நெடுங் கனல் உயிர்ப்பொடும் நெடு நாண்
பூண்ட வில் எனக் குனிந்தன, கொழுங் கடைப் புருவம். 8

2. செல - முழுவதும், கடை போக; குல முதல் தலைவர் - சகரர்; 5. தருணம் - இளமை; 7. ஊற்றம் - செருக்கு, வலிமை; ஈக்கவும் - ஈகவும்; ஏற்றம் - பெருக்கு, பொங்குதல்.

'ஒன்றும் வேண்டலர் ஆயினும், ஒருவர்பால் ஒருவர்
சென்று வேண்டுவரேல், அவர் சிறுமையின் தீரார்;
இன்று வேண்டியது எறி கடல் நெறிதனை மறுத்தான்;
நன்று, நன்று!' என, நகையொடும் புகை உக, நக்கான். 9

' ''பாரம் நீங்கிய சிலையினன், இராவணன் பறிப்பத்
தாரம் நீங்கிய தன்மையன், ஆதலின், தகைசால்
வீரம் நீங்கிய மனிதன்'' என்று இகழ்ச்சி மேல் விளைய,
ஈரம் நீங்கியது, எறி கடல் ஆம்' என இசைத்தான். 10

'புரந்து கோடலும், புகழொடு கோடலும், பொருது
துரந்து கோடலும், என்று இவை தொன்மையின்தொடர்ந்த;
இரந்து கோடலின், இயற்கையும் தருமமும் எஞ்சக்
கரந்து கோடலே நன்று; இனி நின்றது என், கழறி? 11

' ''கானிடைப் புகுந்து, இருங் கனி காயொடு நுகர்ந்த
ஊனுடைப் பொறை உடம்பினன்'' என்று கொண்டு உணர்ந்த
மீனுடைக் கடல் பெருமையும், வில்லொடு நின்ற
மானுடச் சிறு தன்மையும், காண்பரால், வானோர். 12

'ஏதம் அஞ்சி, நான் இரந்ததே, ''எளிது'' என இகழ்ந்த
ஓதம் அஞ்சினோடு இரண்டும் வெந்து ஒரு பொடி ஆக,
பூதம் அஞ்சும் வந்து அஞ்சலித்து உயிர்கொண்டு பொரும,
பாதம் அஞ்சலர் செஞ்செவே படர்வர், என் படைஞர். 13

'மறுமை கண்ட மெய்ஞ் ஞானியர் ஞாலத்து வரினும்,
வெறுமை கண்ட பின், யாவரும் யார் என விரும்பார்;
குறுமை கண்டவர் கொழுங் கனல் என்னினும் கூசார்;
சிறுமை கண்டவர் பெருமை கண்டு அல்லது தேறார்.' 14

**இராமன் கடலின்மேல் அம்பு விடுதல்**

திருதி என்பது ஒன்று அழிதர, ஊழியில் சினவும்
பருதி மண்டிலம் எனப் பொலி முகத்தினன், பல கால்,
'தருதி, வில்' எனும் அளவையில், தம்பியும் வெம்பிக்
குருதி வெங் கனல் உமிழ்கின்ற கண்ணினன் கொடுத்தான். 15

10. பாரம் - பெருமை; 11. துரந்து - துரத்திவிட்டு; 13. ஓதம் - கடல்; 14. மறுமை - முத்தி; வெறுமை - சிறப்பியல்பு இன்மை; 15. திருதி - மன வடக்கம்.

வாங்கி வெஞ் சிலை, வாளி பெய் புட்டிலும் மலைபோல்
வீங்கு தோள்வலம் வீக்கினன்; கோதையை விரலால்
தாங்கி, நாணினைத் தாக்கினன்; தாக்கிய தமரம்,
ஓங்கு முக்கணன் தேவியைத் தீர்த்துளது ஊடல். 16

மாரியின் பெருந் துளியினும் வரம்பு இல, வடித்த,
சிரிது என்றவை எவற்றினும் சீரிய, தெரிந்து,
பார் இயங்கு இரும் புனல் எலாம் முடிவினில் பருகும்
சூரியன் கதிர் அனையன சுடு சரம் துரந்தான். 17

பெரிய மால் வரை ஏழினும் பெரு வலி பெற்ற
வரி கொள் வெஞ் சிலை வளர் பிறையாம் என வாங்கி,
திரிவ நிற்பன யாவையும் முடிவினில் தீக்கும்
எரியின் மும் மடி கொடியன சுடு சரம் எய்தான். 18

கடல் பட்ட பாடு

மீனும் நாகமும் விண் தொடும் மலைகளும் விறகா,
ஏனை நிற்பன யாவையும் மேல் எரி எய்த,
பேன நீர் நெடு நெய் என, பெய் கணை நெருப்பால்
கூனை அங்கியின் குண்டம் ஒத்தது, கடற் குட்டம். 19

பாழி வல் நெடுங் கொடுஞ் சிலை வழங்கிய பகழி,
ஏழு வேலையும் எரியொடு புகை மடுத்து ஏகி,
ஊழி வெங் கனல் கொழுந்துகள் உருத்து எழுந்து ஓடி,
ஆழி மால் வரைக்கு அப் புறத்து இருளையும் அவித்த. 20

மரும தாரையின் எரியுண்ட மகரங்கள் மயங்கிச்
செரும, வானிடைக் கற்பக மரங்களும் தீய,
நிருமியா விட்ட நெடுங் கணை பாய்தலின், நெருப்போடு
உருமு வீழ்ந்தெனச் சென்றன, கடல்-துளி உம்பர். 21

கூடும் வெம் பொறிக் கொடுங் கனல் தொடர்ந்தெனக் கொளுந்த,
ஓடும் மேகங்கள் பொரிந்து இடை உதிர்ந்தன; உம்பர்
ஆடும் மங்கையர் கருங் குழல் விளர்த்தன—அளக்கர்க்
கோடு தீந்து எழ, கொழும புகைப் பிழம்பு மீக் கொள்ள. 22

16. கோதை - கோதா, உடும்புத் தோல், ஈண்டு உடும்புத் தோலால் செய்து விரல்களுக்கு இடும் உறை; தமரம் - ஒலி; 18. வரை ஏழு - கைலை; இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன; 19. பேனம் - நுரை; கூனை - வளைவு; 20. ஏழு கடல்களுக்கு அப்பால் சக்கரவாள கிரியும், அக்கிரிக்கு அப்பால் இருள் சூழ்ந்த இடமும் உள்ளன என்பது புராணக் கொள்கை; 21. மரும தாரை - உயிர் நிலைபெற்ற இடம்; மகரங்கள் - சுரு மீன்கள்; செரும - நெருங்க; நிருமியாவிட்ட - தொடுத்துவிட்ட, சங்கற்பித்து விட்ட; 22. கோடு - கரை.

நிமிர்ந்த செஞ் சரம் நிறம்தொறும் படுதலும், நெய்த்தோர்
உமிழ்ந்து உலந்தன மகரங்கள் உலப்பு இல; உருவத்
துமிந்த துண்டமும் பல படத் துரந்தன, தொடர்ந்து
திமிங்கிலங்களும் திமிங்கிலகிலங்களும் சிதறி. 23

நீறு மீச்செல, நெருப்பு எழ, பொருப்பு எலாம் எரிய,
நூறும் ஆயிர கோடியும் கடுங் கணை நுழைய,
ஆறு கீழ்ப் பட, அளறு பட்டு அழுந்திய அளக்கர்
சேறு தீய்ந்து எழ, காந்தின சேடன்தன் சிரங்கள். 24

மொய்த்த மீன் குலம் முதல் அற முருங்கின, மொழியின்
பொய்த்த சான்றவன் குலம் என, பொரு கணை எரிய;
உய்த்த கூம்புடை நெடுங் கலம் ஓடுவ கடுப்ப,
தைத்த அம்பொடும் திரிந்தன, தாலமீன் சாலம். 25

சிந்தி ஓடிய குருதி வெங் கனலொடு செறிய,
அந்தி வானகம் கடுத்தது, அவ் அளப்ப அரும் அளக்கர்;
பந்தி பந்திகளாய் நெடுங் கடுங் கணை படர,
வெந்து தீந்தன, கரிந்தன, பொரிந்தன, சில மீன். 26

வைய நாயகன் வடிக் கணை குடித்திட, வற்றி,
ஐய நீர் உடைத்தாய், மருங்கு அருங் கனல் மண்ட,
கை கலந்து எரி கருங் கடல் கார் அகல் கடுப்ப,
வெய்ய நெய்யிடை வேவன ஒத்தன, சில மீன். 27

குணிப்ப அருங் கொடும் பகழிகள் குருதி வாய் மடுப்ப,
கணிப்ப அரும் புனல் கடையுறக் குடித்தலின், காந்தும்
மணிப் பருந் தடங் குப்பைகள் மறி கடல் வெந்து,
தணிப்ப அருந் தழல் சொரிந்தன போன்றன, தயங்கி. 28

எங்கும் வெள்ளிடை மடுத்தலின், இழுதுடை இன மீன்
சங்கமும், கறி கிழங்கு என, இடை இடை தழுவி,
அங்கம் வெந்து பேர் அளற்றிடை அடுக்கிய கிடந்த;
பொங்கு நல் நெடும் புனல் அறப் பொரித்தன போன்ற. 29

23. நெய்த்தோர் - குருதி; 25. தாலமீன் - பனைமீன்; சாலம் - வரிசை, கூட்டம்; 27. ஐய நீர் - சிறிதளவு நீர்; கார் அகல் - கரிய சட்டி, வாணலி; 28. குணித்தல் - அளவிடல்; குருதி வாய் - இரத்தம் தோய்ந்த வாய்; குப்பைகள் - குவியல்கள்; 29. வெள்ளிடை - வெற்றிடம்; இழுது - நிணம்.

அதிரும் வெங் கணை ஒன்றை ஒன்று அடர்ந்து எரி உய்ப்ப,
வெதிரின் வல் நெடுங் கான் என வெந்தன, மீனம்;
பொதுவின் மன்னுயிர்க் குலங்களும் துணிந்தன பொழிந்த
உதிரமும் கடல் திரைகளும் பொருவன, ஒருபால். 30

அண்ணல் வெங் கணை அறுத்திட, தெறித்து எழுந்து அளக்கர்ப்
பண்ணை வெம் புனல் படப் பட, நெருப்பொடும் பற்றி,
மண்ணில் வேர் உறப் பற்றிய நெடு மரம், மற்றும்,
எண்ணெய் தோய்ந்தென எரிந்தன, கிரிக் குலம் எல்லாம். 31

தெய்வ நாயகன் தெரி கணை, 'திசை முகத்து ஒருவன்
வைவு இது ஆம்' என, பிழைப்பு இல மனத்தினும் கடுக,
வெய்ய அந் நெருப்பு இடை இடை பொறித்து எழ, வெறி நீர்ப்
பொய்கை தாமரை பூத்தெனப் பொலிந்தது, புணரி. 32

செப்பின், மேலவர் சீறினும் அது சிறப்பு ஆதல்
தப்புமே? அது கண்டனம், உவரியில்; 'தணியா
உப்பு வேலை' என்று உலகு உறு பெரும் பழி நீங்கி,
அப்பு வேலையாய் நிறைந்தது; குறைந்ததோ, அளக்கர்? 33

தாரை உண்ட பேர் அண்டங்கள் அடங்கலும் தானே
வாரி உண்டு அருள் செய்தவற்கு இது ஒரு வலியோ?—
பாரை உண்பது படர் புனல்; அப் பெரும் பரவை
நீரை உண்பது நெருப்பு எனும் அப் பொருள் நிறுத்தான்! 34

மங்கலம் பொருந்திய தவத்து மா தவர்,
கங்குலும் பகலும் அக் கடலுள் வைகுவார்,
அங்கம் வெந்திலர், அவன் அடிகள் எண்ணலால்;
பொங்கு வெங் கனல் எனும் புனலில் போயினர். 35

தென் திசை, குட திசை, முதல திக்கு எலாம்
துன்றிய பெரும் புகைப் படலம் சுற்றலால்,
கன்றிய நிறத்தன கதிரவன் பரி
நின்றன; சென்றில; நெறியின் நீங்கின. 36

'பிறிந்தவர்க்கு உறு துயர் என்னும் பெற்றியோர்
அறிந்திருந்து, அறிந்திலர் அனையர் ஆம்' என,
செறிந்த தம் பெடைகளைத் தேடி, தீக் கொள,
மறிந்தன, கரிந்தன—வானப் புள் எலாம். 37

30. வெதிர் - மூங்கில்; 31. அளக்கர்ப் பண்ணை - கடலாகிய நீர்நிலை; 33. அப்பு - நல்ல நீர், கணை என இரு பொருள் பட்டது; 34. தாரை உண்ட அண்டங்கள் - ஒன்றன்மேல் ஒன்றாய் ஒழுங்குபட்டுள்ள அண்டங்கள்.

கமை அறு கருங் கடல், கனலி கைபரந்து,
அமை வனம் ஒத்த போது, அறைய வேண்டுமோ?
சுமையுறு பெரும் புகைப் படலம் சுற்றலால்,
இமையவர் இமைத்தனர்; வியர்ப்பும் எய்தினர். 38

பூச் செலாதவள் நடை போல்கிலாமையால்,
ஏச்சு எலாம் எய்திய எகினம் யாவையும்,
தீச் செலா நெறி பிறிது இன்மையால், திசை
மீச் செலா; புனலவன் புகழின் வீந்தவால். 39

பம்புறு நெடுங் கடல் பறவை யாவையும்,
உம்பரின் செல்லலுற்று, உருகி வீழ்ந்தன;
அம்பரம் அம்பரத்து ஏகல் ஆற்றல,
இம்பரில் உதிர்ந்தன, எரியும் மெய்யன. 40

பட்டன படப் பட, படாத புட் குலம்,
சுட்டு வந்து எரிக் குலப் படலம் சுற்றலால்,
இட்டுழி அறிகில, இரியல் போவன,
முட்டை என்று எடுத்தன, வெளுத்த முத்து எலாம். 41

'வள்ளலை, பாவிகாள், ''மனிசன்'' என்று கொண்டு
எள்ளலுற்று அறைந்தனம்; எண் இலாம்' என
வெள்ளி வெண் பற்களைக் கிழித்து, விண் உறத்
துள்ளலுற்று இரிந்தன—குரங்கு சூழ்ந்தில. 42

தா நெடுந் தீமைகள் உடைய தன்மையார்,
மா நெடுங் கடலிடை மறைந்து வைகுவார்,
தூ நெடுங் குருதி வேல் அவுணர், துஞ்சினர்;
மீன் நெடுங் கிரி என மிதந்து, வீங்கினர். 43

தசும்பு இடை விரிந்தன என்னும் தாரைய
பசும் பொனின் மானங்கள் உருகிப் பாய்ந்தன;
அசும்பு அற வறந்தன, வான ஆறு எலாம்;
விசும்பிடை விளங்கிய மீனும் வெந்தவே. 44

39. புனலவன் - வருணன்; 40. பம்புதல் - பரவுதல்; அம்பரம் - முன்னது மேகங்கள், பின்னது ஆகாயம்; 42. எண் - அறிவு; குரங்கு - நீர்க் குரங்குகள்; 43. தா - வருத்தம்; தூ - தசை; 44. தசும்பு - நீர்க்குடம்; தாரைய - நீர்த்தாரைகளை உடையன; மானங்கள் - விமானங்கள்; நீர்க்குடங்கள் உடைந்தால் நீர் தாரை தாரையாய் ஒழுகுவதுபோல விமானம் உருகித் தாரைகளை உடையவாய்ப் பாய்ந்தன என்க.

செறிவுறு செம்மைய, தீயை ஓம்புவ,
நெறியுறு செலவின, தவத்தின் நீண்டன,
உறு சினம் உறப் பல உருவு கொண்டன,
குறுமுனி எனக் கடல் குடித்த—கூர்ங் கணை. 45

மோதல் அம் கணை கடல் முருக்கும் தீயினால்,
பூதலம் காவொடும் எரிந்த; பொன் மதில்
வேதலும், இலங்கையும், 'மீளப் போயின
தூதன் வந்தான்' எனத் துணுக்கம் கொண்டதால். 46

அருக்கனில் ஒளி விடும் ஆடகக் கிரி,
உருக்கு என உருகின, உதிரம் தோய்ந்தன,
முருக்கு எனச் சிவந்தன; முரிய வெந்தன,
கரிக் குவை நிகர்த்தன, பவளக் காடு எலாம். 47

பேருடைக் கிரி எனப் பெருத்த மீன்களும்,
ஓர் இடத்து, உயிர் தரித்து, ஒதுங்ககிற்றில,
நீரிடைப் புகும்; அதின் நெருப்பு நன்று எனாப்
பாரிடைக் குதித்தன, பதைக்கும் மெய்யன. 48

சுருள் கடல் திரைகளைத் தொலைய உண்டு, அனல்
பருகிடப் புனல் இல பகழி பாரிடம்
மருள் கொளப் படர்வன, நாகர் வைப்பையும்
இருள் கெடச் சென்றன, இரவி போல்வன. 49

கரும் புறக் கடல்களோடு உலகம் காய்ச்சிய
இரும்பு உறச் செல்வன, இழிவ, கீழுற
அரும் புறத்து அண்டமும் உருவி, அப் புறம்,
பெரும் புறக் கடலையும் தொடர்ந்து பின் செல்வ. 50

திடல் திறந்து உகு மணித் திரள்கள், சேண் நிலம்
உடல் திறந்து உதிரம் வந்து உகுவ போன்றன;
கடல் திறந்து எங்கணும் வற்ற, அக் கடல்
குடல் திறந்தன எனக் கிடந்த. கோள் அரா. 51

45. செறிவுறு செம்மை முதலியன இராமனது கணைக்கும் குறுமுனிக்கும் செம்மொழிச் சிலேடைகள்; 47. முருக்கு - பலாசம் பூ; 48. பேருடை - பெருமையுடைய; 49. பாரிடம் - பூமியிலுள்ளார்; 50. கரும் புறக் கடல் - கறுத்துத் தோன்றும் மேற்புறத்தைக் கொண்ட கடல், கருங்கடல்; 51. சேண் நிலம் - பரந்த நிலம்.

ஆழியின் புனல் அற, மணிகள் அட்டிய
பேழையின் பொலிந்தன, பரவை; பேர்வு அறப்
பூழையின் பொரு கணை உருவப் புக்கன,
மூழையின் பொலிந்தன, முரலும் வெள் வளை. 52

நின்று நூருயிரம் பகழி நீட்டலால்,
குன்று நூருயிரம் கோடி ஆயின;—
சென்று தேய்வு உறுவரோ, புலவர் சிறினுல்?—
ஒன்று நூறு ஆயின, உவரி முத்து எல்லாம். 53

சூடு பெற்று ஐயனே தொலைக்கும் மன்னுயிர்
வீடு பெற்றன; இடை மிடைந்த வேணுவின்
காடு பற்றிய பெருங் கனலின் கைபரந்து
ஓடி உற்றது நெருப்பு, உவரி நீர் எலாம். 54

கால வான் கடுங் கணை சுற்றும் கவ்வலால்,
நீல வான் துகிலினை நீக்கி, பூ நிறக்
கோல வான் களி நெடுங் கூறை சுற்றினுள்
போல, மா நிலமகள் பொலிந்து தோன்றினுள். 55

கற்றவர் கற்றவர் உணர்வு காண்கிலாக்
கொற்றவன் படைக்கலம் குடித்த வேலை விட்டு,
உற்று உயிர் படைத்து எழுந்து ஓடல் உற்றதால்,
மற்ருெரு கடல் புக, வடவைத் தீஅரோ. 56

வாழியர் உலகினை வளைத்து, வான் உறச்
சூழ் இரும் பெருஞ் சுடர்ப் பிழம்பு தோன்றலால்,
ஊழியின் உலகு எலாம் உண்ண ஓங்கிய
ஆழியின் பொலிந்தது, அவ் ஆழி, அன்ன நாள். 57

ஏனையர் என்ன வேறு உலகின் ஈண்டினுர்-
ஆனவர் செய்தன அறைய வேண்டுமோ—
மேல் நிமிர்ந்து எழு கனல் வெதுப்ப, மீதுபோய்,
வானவர் மலர் அயன் உலகின் வைகினுர்? 58

52. அட்டுதல் - சேர்த்து வைத்தல்; பூழை - சங்கின் முகப்பில் உள்ள துளை; மூழை - அகப்பை; 54. வேணு - மூங்கில்; 56. கற்றவர் கற்றவர் - கற்றவருள்ளும் கற்றவராக விளங்கும் ஞானிகள்; கொற்றவன் - இராமன்; உயிர் - வலிமை; வடவைத் தீ குடித்த வேலை (கடலை) விட்டு மற்ருெரு கடல் புக ஓடலுற்றது என இயையும்; 57. வாழியர் - அசை.

இராமன், சதுமுகன் கணை ஏவ, நிகழ்ந்த மாறுபாடுகள்

'இடுக்கு இனி எண்ணுவது என்னை? ஈண்டு இனி
முடுக்குவென் வருணனை' என்ன, மூண்டு எதிர்
தடுக்க அரும் வெகுளியான், சதுமுகன் படை
தொடுத்தனன்; அமரரும் துணுக்கம் எய்தினர். 59

மழைக் குலம் கதறின; வருணன் வாய் உலர்ந்து
அழைத்தனன்; உலகமும் அடைத்த, ஆறு எலாம்;
இழைத்தன நெடுந் திசை, யாதும் யார் இனிப்
பிழைப்பிலர் என்பது ஓர் பெரும் பயத்தினல். 60

அண்ட மூலத்துக்கு அப்பால் ஆழியும் கொதித்தது; ஏழு
தெண் திரைக் கடலின் செய்கை செப்பி என்? தேவன் சென்னிப்
பண்டை நாள் இருந்த கங்கை நங்கையும் பதைத்தாள்; பார்ப்பான்
குண்டிகை இருந்த நீரும் குளுகுளு கொதித்தது அன்றே. 61

'இரக்கம் வந்து எதிர்ந்த காலத்து, உலகு எலாம் ஈன்று, மீளக்
கரக்கும் நாயகனைத் தானும் உணர்ந்திலன்; சீற்றம் கண்டும்,
வரக் கருதாது தாழ்த்த வருணனின் மாறு கொண்டார்
அரக்கரே? அல்லர்' என்ன, அறிஞரும் அலக்கண் உற்ருர். 62

'உற்று ஒரு தனியே, தானே, தன்கணே, உலகம் எல்லாம்
பெற்றவன் முனியப் புக்கான்; நடு இனிப் பிழைப்பது எங்ஙன்?
குற்றம் ஒன்று இலாதோர்மேலும் கோள் வரக் குறுகும்' என்ன,
மற்றைய பூதம் எல்லாம், வருணனை வைத மாதோ. 63

வருணன் தோன்றிப் பணிவுரை பகர்தல்

எழு சுடர்ப் படலையோடும் இரும் புகை நிரம்பி எங்கும்
வழி தெரிவு அறிவு இலாத நோக்கினன் வருணன் என்பான்,
அழுது அழி கண்ணன், அன்பால் உருகிய நெஞ்சன், அஞ்சித்
தொழுது எழு கையன், நொய்தின் தோன்றினன், வழுத்தும் சொல்லான்.

'நீ எனை நினைந்த தன்மை, நெடுங் கடல் முடிவில் நின்றேன்
ஆயினேன் அறிந்திலேன்' என்று அண்ணலுக்கு அயிர்ப்பு நீங்க,
காய் எரிப் படலை சூழ்ந்த கருங் கடல் தரங்கத்தூடே,
தீயிடை நடப்பான் போல, செறிபுனற்கு இறைவன் சென்றுன்.

59. இடுக்கு - துன்பம்; 60. அடைத்த - தூர்ந்து போயின; 61. ஆழி - ஆவரணக் கடல், பெரும்புறக் கடல்; 63. கோள் - தீங்கு.

வந்தனன் என்ப மன்னே, மறி கடற்கு இறைவன்; வாயில்
சிந்திய மொழியன், தீந்த சென்னியன், திகைத்த நெஞ்சன்,
வெந்து அழிந்து உருகும் மெய்யன், விழுப் புகை படலம் விம்ம,
அந்தரின் அலமந்து, அஞ்சி, துயர் உழந்து, அலக்கண் உற்றான்.

**வருணன் அடைக்கலம் வேண்டுதல்**

'நவை அறும் உலகிற்கு எல்லாம் நாயக! நீயே சிறின்,
கவயம் நின் சரணம் அல்லால், பிறிது ஒன்று கண்டது உண்டோ?
இவை உனக்கு அரியவோதான்; எனக்கு என வலி வேறு உண்டோ?
அவயம், நின் அவயம்!' என்னா, அடுத்து அடுத்து அரற்றுகின்றான்: 67

'ஆழி நீ; அனலும் நீயே; அல்லவை எல்லாம் நீயே;
ஊழி நீ; உலகும் நீயே; அவற்று உறை உயிரும் நீயே;
வாழியாய்! அடியேன் நின்னை மறப்பெனோ? வயங்கு செந் தீச்
சூழுற உலைந்து போனேன்; காத்தருள்—சுருதி மூர்த்தி! 68

'காட்டுவாய் உலகம்; காட்டிக் காத்து, அவை கடையில் செந் தீ
ஊட்டுவாய்; உண்பாய், நீயே; உனக்கும் ஒண்ணாதது உண்டோ?
தீட்டு வான் பகழி ஒன்றால் உலகங்கள் எவையும் தீய
வீட்டுவாய்; நினையின், நாயேற்கு இத்தனை வேண்டுமோதான்?

'சண்ட வான் கிரண வாளால் தயங்கு இருட் காடு சாய்க்கும்
மண்டலத்து உறையும் சோதி வள்ளலே! மறையின் வாழ்வே!
பண்டை நான்முகனை ஆதி சராசரத்து, உள்ளப் பள்ளப்
புண்டரீகத்து வைகும் புராதனா! போற்றி, போற்றி! 70

' ''கள்ளமாய் உலகம் கொள்ளும் கருணையாய்! மறையில் கூறும்
எள்ளல் ஆகாத மூலத்து யாதுக்கும் முதலாய் உள்ள
வள்ளலே! காத்தி'' என்ற மா கரி வருத்தம் தீர,
புள்ளின்மேல் வந்து தோன்றும் புராதனா! போற்றி, போற்றி!

'அன்னை நீ; அத்தன் நீயே; அல்லவை எல்லாம் நீயே;
பின்னும் நீ; முன்னும் நீயே; பேறும் நீ; இழவும் நீயே;
என்னை, ''நீ இகழ்ந்தது'' என்றது எங்ஙனே? ஈசன் ஆய
உன்னை நீ உணராய்! நாயேன் எங்ஙனம் உணர்வேன், உன்னை?'

பாய் இருள் சீக்கும் தெய்வப் பருதியைப் பழிக்கும் மாலை,
மா இருங் கரத்தால், மண்மேல் அடியுறையாக வைத்து,
'தீயன சிறியோர் செய்தால், பொறுப்பது பெரியோர் செய்கை;
ஆயிர நாமத்து ஐயா! சரணம்' என்று அடியில் வீழ்ந்தான். 73

66. அந்தர் - குருடர்; 67. கவயம் - கவசம், ஈண்டுப் பாதுகாவல்; 70. சண்டம் - கொடுமை; ஈண்டு வெப்பக் கொடுமை; 71. கள்ளமாய் - ஒருவரும் உணராதவாறு; மா கரி - பெருமையுடைய யானை; 73. அடியுறை - அடியின்கண் உறுவதாகிய காணிக்கைப் பொருள்.

### இராமன் சினம் தணிந்து, காலத்தாழ்வுக்குக் காரணம் வினவுதல்

பருப்பதம் வேவது என்னப் படர் ஒளி படராநின்ற
உருப் பெறக் காட்டி நின்று, 'நான் உனக்கு அபயம்' என்ன,
அருப்பு அறப் பிறந்த கோபம் ஆறினன், ஆறு ஆற்றல்
நெருப்பு உறப் பொங்கும் வெம் பால் நீர் உற்றது அன்ன நீரான். 74

'ஆறினம்; அஞ்சல்; உன்பால் அளித்தனம் அபயம், அன்பால்;
ஈறு இலா வணக்கம் செய்து, யாம் இரந்திட, எய்திடாதே,
சீறுமா கண்டு வந்த திறத்தினைத் தெரிவதாகக்
கூறுதி, அறிய' என்றான்; வருணனும், தொழுது கூறும்: 75

'பார்த்தனில் பொறையின் மிக்க பத்தினிக்கு உற்ற பண்பு
வார்த்தையின் அறிந்தது அல்லால், தேவர்பால் வந்திலேன், நான்;
தீர்த்த! நின் ஆணை; ஏழாம் செறி திரைக் கடலில் மீனின்
போர்த் தொழில் விலக்கப் போனேன்; அறிந்திலேன் புகுந்தது ஒன்
[றும்.' 76

### இராமன், அம்பிற்கு இலக்கம் யாது என, வருணன் கூறுதல்

என்றலும், இரங்கி, ஐயன், 'இத் திறம் நிற்க; இந்தப்
பொன்றல் இல் பகழிக்கு அப்பால் இலக்கம் என்? புகறி' என்ன,
'நன்று' என வருணன்தானும், 'உலகத்து நலிவு தீர,
குன்று என உயர்ந்த தோளாய்! கூறுவல்' என்று கூறும்: 77

'மன்னவ! மருகாந்தாரம் என்பது ஓர் தீவின் வாழ்வார்,
அன்னவர் சதகோடிக்கும் மேல் உளார், அவுணர் ஆயோர்,
தின்னவே உலகம் எல்லாம் தீந்தன; எனக்கும் தீயார்;
மின் உமிழ் கணையை வெய்யோர்மேல் செல விடுதி' என்றான்.

### இராமன் அம்பு, அவுணரை அழித்து மீளல்

நேடி, நூல் தெரிந்துளோர்தம் உணர்விற்கும், நிமிர நின்றான்,
'கோடி நூறு ஆய தீய அவுணரைக் குலங்களோடும்
ஓடி நூறு' என்று விட்டான்; ஓர் இமை ஒடுங்கா முன்னம்,
பாடி நூறாக நூறி மீண்டது, அப் பகழித் தெய்வம். 79

ஆய்வினை உடையர் ஆகி, அறம் பிழையாதார்க்கு எல்லாம்
ஏய்வன நலனே அன்றி, இறுதி வந்து அடைவது உண்டோ?
மாய் வினை இயற்றி, முற்றும் வருணன்மேல் வந்த சீற்றம்,
தீவினை உடையார்மாட்டே தீங்கினைச் செய்தது அன்றே. 80

74. உருப் பெறக் காட்டல் - வடிவத்தை நன்றாகக் காட்டல்; அருப்பு அற - சிறிதாக அல்லாமல் (மிகுதியாக); 75. தெரிவதாக - யாவரும் உணரும்படி; 76. பார்த்தனில் - பார்தனில், ஓசை இன்பம் நோக்கி வல்லெழுத்து மிக்கது; 79. நூறு - அழிப்பாய்; பாடி - ஊர், ஈண்டு மருகாந்தாரம்.

பாபமே இயற்றினாரை, பல் நெடுங் காதம் ஓடி,
தாபமே பெருகும் வண்ணம், எரி எழச் சுட்டது அன்றே,
தீபமே அனைய ஞானத் திரு மறை முனிவர் செப்பும்
சாபமே ஒத்தது அம்பு;—தருமமே வலியது அம்மா! 81

**இராமன் வழி வேண்ட, வருணன் சேது கட்டச் சொல்லுதல்**

'மொழி உனக்கு அபயம் என்றாய்; ஆதலான், முனிவு தீர்ந்தேன்;
பழி எனக்கு ஆகும் என்று, பாதகர் பரவை என்னும்
குழியினைக் கருதிச் செய்த குமண்டையைக் குறித்து நீங்க,
வழியினைத் தருதி' என்றான், வருணனை நோக்கி, வள்ளல். 82

'ஆழமும் அகலம்தானும் அளப்ப அரிது எனக்கும், ஐய!
ஏழ் என அடுக்கி நின்ற உலகுக்கும் எல்லை இல்லை;
வாழியாய்! வற்றி நீங்கில், வரம்பு அறு காலம் எல்லாம்
தாழும்; நின் சேனை உள்ளம் தளர்வுறும்—தவத்தின் மிக்காய்!

'கல்லென வலித்து நிற்பின், கணக்கு இலா உயிர்கள் எல்லாம்
ஒல்லையின் உலந்து வீயும்; இட்டது ஒன்று ஒழுகாவண்ணம்
எல்லை இல் காலம் எல்லாம் ஏந்துவென், இனிதின்; எந்தாய்!
செல்லுதி, "சேது" என்று ஒன்று இயற்றி, என் சிரத்தின் மேலாய்.' 84

**இராமன், சேது கட்டப் பணித்தல்**

'நன்று, இது புரிதும் அன்றே; நளிர் கடல் பெருமை நம்மால்
இன்று இது தீரும் என்னில், எளிவரும் பூதம் எல்லாம்;
குன்று கொண்டு அடுக்கி, சேது குயிற்றுதிர்' என்று கூறிச்
சென்றனன், இருக்கை நோக்கி; வருணனும் அருளின் சென்றான். 85

## 7 சேது பந்தனப் படலம்

**நளனை அழைத்தல்**

அளவு அறும் அறிஞரோடு அரக்கர் கோமகற்கு
இளவலும் இனிது உடன் இருக்க, எண்ணினன்,
விளைவன விதி முறை முடிக்க வேண்டுவான்,
'நளன் வருக!' என்றனன்—கவிக்கு நாயகன். 1

82. குமண்டை - ஒருவகை மகிழ்ச்சிக் கூத்து; செருக்கால் செய்யும் செயலும் ஆம்; 84. ஒழுகுதல் - கீழ் விழுந்து ஆழ்தல்; 85. சேது - அணை.

சேது கட்ட நளன் உடன்பட்டு, 'உரியன கொணர்தி' எனல்

வந்தனன், வானரத் தச்சன்; 'மன்ன! நின்
சிந்தனை என்?' என, 'செறி திரைக் கடல்
பந்தனை செய்குதல் பணி நமக்கு' என,
நிந்தனை இலாதவன் செய்ய நேர்ந்தனன். 2

'காரியம் கடலினை அடைத்துக் கட்டலே;
சூரியன் காதல! சொல்லி என் பல;
மேருவும் அணுவும் ஓர் வேறு உருவகை
ஏர்வுற இயற்றுவென்; கொணர்தி' என்றனன். 3

சாம்பன், கடலை அடைக்க வருமாறு சேனைக்குக் கூறல்

'இளவலும், இறைவனும், இலங்கை வேந்தனும்,
அளவு அறு நம் குலத்து அரசும், அல்லவர்
வளைதரும் கருங் கடல் அடைக்க வம்' எனத்
தளம் மலி சேனையைச் சாம்பன் சாற்றினன். 4

வானர சேனை மலைகளைக் கொணர்தல்

கரு வரை காதங்கள் கணக்கு இலாதன
இரு கையில், தோள்களில், சென்னி, ஏந்தின,
ஒரு கடல் அடைக்க மற்று ஒழிந்த வேலைகள்
வருவன ஆம் என, வந்த வானரம். 5

பேர்த்தன மலை சில; பேர்க்கப் பேர்க்க, நின்று
ஈர்த்தன சில; சில சென்னி ஏந்தின;
தூர்த்தன சில; சில தூர்க்கத் தூர்க்க நின்று
ஆர்த்தன; சில சில ஆடிப் பாடின. 6

காலிடை ஒரு மலை உருட்டி, கைகளின்
மேலிடை மலையினை வாங்கி, விண் தொடும்
சூலுடை மழை முகில் சூழ்ந்து சுற்றிய,
வாலிடை, ஒரு மலை ஈர்த்து, வந்தவால். 7

நளன் மலைகளை அடுக்குதல்

முடுக்கினன், 'தருக' என, மூன்று கோடியர்
எடுக்கினும், அம் மலை ஒரு கை ஏந்தியிட்டு,
அடுக்கினன்; தன் வலி காட்டி, ஆழியை
நடுக்கினன்—நளன் எனும் நவையின் நீங்கினன். 8

7: 4. தளம் - கூட்டம்.

மஞ்சினில் திகழ்தரும் மலையை, மாக் குரங்கு,
எஞ்சுறக் கடிது எடுத்து எறியவே, நளன்
விஞ்சையில் தாங்கினன்—சடையன் வெண்ணெயில்,
'தஞ்சம்!' என்றோர்களைத் தாங்கும் தன்மைபோல். 9

**சேது கட்டும்போது நிகழ்ந்த நிகழ்ச்சிகள்**

சயக் கவிப் பெரும் படைத் தலைவர் தாள்களால்,
முயல் கறை மதி தவழ் முன்றில் குன்றுகள்
அயக்கலின், முகில் குலம் அலறி ஓடின;
இயக்கரும் மகளிரும் இரியல்போயினர். 10

வேருடை நெடுங் கிரி தலைவர் வீசின,
ஓர் இடத்து ஒன்றின்மேல் ஒன்று சென்றுக,
நீரிடை நிமிர் பொறி பிறக்க, 'நீண்ட ஈது
ஆருடை நெருப்பு?' என வருணன் அஞ்சினன். 11

ஆனிறக்கண்ணன் என்று ஒருவன், அங்கையால்,
கான் இற மலை கொணர்ந்து எறிய, கார்க் கடல்
தூ நிற முத்துஇனம் துவலையோடும் போய்,
வான் நிறை மீனொடு மாறு கொண்டவே. 12

சிந்துரத் தட வரை எறிய, சேணிடை
முந்துறத் தெறித்து எழு முத்தம் தொத்தலால்,
அந்தரத்து எழு முகில் ஆடையா, அகன்
பந்தர் ஒத்தது, நெடும் பருதி வானமே. 13

வேணுவின் நெடு வரை வீச, மீமிசைச்
சேண் உறு திவலையால் நனைந்த செந் துகில்,
பூண் உறும் அல்குலில் பொருந்திப் போதலால்,
நாணினர், வான நாட்டு உறையும் நங்கைமார். 14

தேன் இவர் தட வரை, திரைக் கருங் கடல்-
தான் நிமிர்தர, இடை குவியத் தள்ளும் நீர்-
மேல் நிமிர் திவலை மீச் சென்று மீடலால்,
வானவர் நாட்டினும் மழை பொழிந்தவால். 15

10. அயக்கல் - அசக்குதல், அசைத்தல்; 13. சிந்துரம் - யானை; ஆடை - மேற்கட்டியாகிய ஆடை; வானம் பந்தரையும், முகில் பந்தருக்குக் கட்டும் சீலையையும், அங்குத் தொத்திய முத்துகள் சீலையில் தொங்கவிடும் முத்துச் சரத்தையும் போன்றன; 15. இவர்தல் - பொருந்துதல்; நிமிர்தர - மேலோங் கும்படி.

மை உறு மலைகளோடும் மறி கடல் வந்து வீழ்ந்த,
வெய்ய வாய் மகரம் பற்ற வெருவின விளிப்ப,—மேல்நாள்,
பொய்கையின் இடங்கர் கவ்வ, 'புராதனு! போற்றி' என்று
கை எடுத்து அழைத்த யானை போன்றன—களி நல் யானை. 16

அசும்பு பாய் தேனும், பூவும், ஆரமும், அகிலும், மற்றும்,
விசும்பு எலாம் உலவும் தெய்வ வேரியின் மிடைந்து விம்ம,
தசும்பெலாம் வாசம் ஊட்டிச் சார்த்திய தண்ணீர் என்ன,
பசும் புலால் நாறும் வேலை பரிமளம் கமழ்ந்தது அன்றே. 17

தேம் முதல் கனியும் காயும், தேனினோடு ஊனும், தெய்வப்
பூ முதலாய எல்லாம், மீன் கொளப் பொலிந்த அன்றே,
மா முதல் தருவோடு ஓங்கும் வான் உயர் மானக் குன்றம்—
தாம் முதலோடும் கெட்டால் ஒழிவரோ, வண்மை தக்கோர்?

மண்ணுறச் சேற்றுள் புக்குச் சுரிகின்ற மாலைக் குன்றம்—
கள் நிறை போதும், காயும், கனிகளும், பிறவும், கவ்வி
வெண் நிற மீன்கள் எல்லாம், வறியவர் என்ன,—மேன்மேல்
உள் நிறை செல்வம் நல்காது ஒளிக்கின்ற உலோபர் ஒத்த. 19

கறங்கு எனத் திரியும் வேகக் கவிக் குலம் கதுவ வாங்கி,
பிறங்கு இருங் கடலில் பெய்த போழ்தத்தும், பெரிய பாந்தள்,
மறம் கிளர் மான யானை வயிற்றின ஆக, வாய் சோர்ந்து,
உறங்கின—கேடு உற்றாலும், உணர்வரோ உணர்வு இலாதார்?

இழை எனத் தகைய மின்னின் எயிற்றின, முழக்கம் ஏய்ந்த,
புழையுடைத் தடக் கை ஒன்றோடு ஒன்று இடை பொருந்தச் சுற்றி,
கழையுடைக் குன்றின் முன்றில், உருமொடு கலந்த கால
மழை எனப் பொருத—வேலை மகரமும் மத்த மாவும். 21

பொன்றின, சிறிய ஆய புண்ணியம் புரிந்தோர் போல,—
குன்றுகள் குரக்கு வீரர் குவித்தன நெருப்புக் கோப்ப,
ஒன்றின் மேல் ஒன்று வீழ, உகைத்து எழுந்து, உம்பர் நாட்டுச்
சென்று, மேல் நிலை பெறாது, திரிந்தன—சிகரச் சில்லி. 22

16. மகரம் - முதலை; 17. அசும்பு - கசிவு, ஊற்று; தசும்பு - குடம்; 18. தேம் முதல் கனி - இனிமையைத் தம்மிடத்தே கொண்ட பழம்; தேம் - இனிமை; முதல் - இடம்; முதலோடும் - அடியோடும்; 19. சுரிதல் - உள்ளே அழுந்துதல்; மாலை - வரிசை; 20. வாய் சோர்ந்து - வாயைத் திறந்தவண்ணம்; 22. சில்லி - சிறு துண்டுகள்.

கூருடை எயிற்றுக் கோள் மாச் சுறவுஇனம் எறிந்து கொல்ல,
போருடை அரியும், வெய்ய புலிகளும், யாளிப் போத்தும்,
நீரிடைத் தோற்ற அன்றே?—தம் நிலை நீங்கிச் சென்றால்,
ஆரிடைத் தோலார் மேலோர், அறிவிடை நோக்கின் அம்மா?

ஒள்ளிய உணர்வு கூட, உதவலர்எனினும் ஒன்றோ,
வள்ளியர் ஆயோர் செல்வம் மன்னுயிர்க்கு உதவும் அன்றே?—
துள்ளின, குதித்த, வானத்து உயர் வரைக் குவட்டில் தூங்கும்
கள்ளினை நிறைய மாந்தி, கவி எனக் களித்த, மீன்கள். 24

மூசு எரி பிறக்க, மீக்கொண்டு, இறக்கிய முடுக்கம்தன்னால்,
கோய் சொரி நறவம் என்னத் தண் புனல் உகுக்கும் குன்றின்
வேய் சொரி முத்துக்கு, அம்மா விருந்து செய்திருந்த—ஈண்ட
வாய் சொரி இப்பியோடும் வலம்புரி உமிழ்ந்த முத்தம். 25

விண்தலம் தொடு மால் வரை வேரொடும்
கொண்டு, அலம் கொள வீரர் குவித்தலால்,
திண் தலம், கடல், ஆனது; நீர் செல,
மண்தலம் கடல் ஆகி மறைந்ததே. 26

அய்யன் வேண்டின், அது இது ஆம் அன்றே—
வெய்ய சீயமும், யாளியும், வேங்கையும்,
மொய் கொள் குன்றின்முதலின, மொய்த்தலால்,
நெய்தல் வேலி குறிஞ்சி நிகர்த்ததால்! 27

'யான் உணுதன் இங்கு இவை' என்னவே,
தீன் உணுதன; என் இது செய்யுமே?
மான் உணுத திரைக் கட்டல் வாழ்தரு
மீன் உணுதன் இல்லை விலங்குஅரோ. 28

வவ் விலங்கு வளர்த்தவர்மாட்டு அருள்
செவ் விலங்கல் இல் சிந்தையின் தீர்வரோ—
'இவ் விலங்கல் விடேம்' இனி என்பபோல்,
எவ் விலங்கும் வந்து எய்தின வேலையே! 29

கனி தரும், நெடுங் காய் தரும், நாள்தொறும்—
இனிது அருந் தவம் நோய்தின் இயற்றலால்,—
பனி தருங் கிரி தம் மனம் பற்று அறு
முனிவரும் முனியார், முடிவு உன்னுவார். 30

25. மீக்கொண்டு - தலையின்மேல் தாங்கிக்கொண்டு வந்து; இறக்கிய முடுக்கம் - கடலில் போட்ட வேகம்; கோய் - கள் முகக்கும் பாத்திரம்; 26. அலம் கொள - உடல் வருத்தமுற; 28. தீன் - தீனி.

புலையின் வாழ்க்கை அரக்கர், பொருப்பு உளார்,
தலையின்மேல் வைத்த கையினர், சாற்றுவார்,
'மலை இலேம்; மற்று, மாறு இனி வாழ்வது ஓர்
நிலை இலேம்' என்று, இலங்கை நெருங்கினர். 31

முழுக்க நீரில் புகா, முழுகிச் செலா,
குழுக்களோடு அணை கோள் அரி, யாளிகள்,
இழுக்கு இல் பேர் அணையின் இரு பக்கமும்
ஒழுக்கின் மாலை வகுத்தன ஒத்தவே. 32

பளிக்கு மால் வரை முந்து படுத்தன
ஒளிக்கும் ஆழி கிடந்தன ஓர்கிலார்,
'வெளிக்கு மால் வரை வேண்டும்' எனக் கொணர்ந்து,
அளிக்கும் வானர வீரர் அநேகரால். 33

பாரினுள் முதுகும் நெடும் பாழ்பட,
மூரி வானரம் வாங்கிய மொய்ம் மலை
வேரின் ஆம் என, வெம் முழையின்னுழை
சோரும் நாகம் நிலன் உறத் தூங்குமால். 34

அருணச் செம் மணிக் குன்று அயலே சில
இருள் நற் குன்றம் அடுக்கின, ஏய்ந்தன—
கருணைக் கொண்டல், 'வறியன் கழுத்து' என
வருணற்கு ஈந்த வருண சரத்தையே. 35

ஏய்ந்த தம் உடம்பு இட்ட உயிர்க்கு இடம்
ஆய்ந்து கொள்ளும் அறிஞரின், ஆழ் கடல்
பாய்ந்து பண்டு உறையும் மலைப் பாந்தள்கள்,
போந்து மா மலையின் முழை, புக்கவே. 36

சேதுவின் பெருமைக்கு இணை செப்ப, ஓர்
ஏது வேண்டும் என்று எண்ணுவது என்கொலோ—
தூதன் இட்ட மலையின் துவலையால்,
மீது விட்டு-உலகு உற்றது, மீன் குலம்? 37

நீலன் இட்ட நெடு வரை நீள் நில
மூலம் முட்டலின், மொய் புனல் கைம்மிக,
கூலம் இட்டிய ஆர்கலி கோத்ததால்,
ஓலமிட்டு எழுந்து ஓடி, உலகு எலாம். 38

32. குழுக்கள் - கூட்டங்கள்; 35. அருணமணி - மாணிக்கம்; இருள் நற்குன்றம் - இருள் நிறம் வாய்ந்த நீல மலைகள் 37. துவலையால் - துவலை யோடு; மீது விட்டு உலகு - மேலதாகிய வீட்டுலகம்; 38. மூலம் - அடிப்பகுதி கூலம் - கரை.

ஒருவன் ஆயிரம் யோசனை ஓங்கிய
அருவி மால் வரை விட்டு எறிந்து ஆர்த்தலால்,
மருவு வான் கொடி மாட இலங்கையில்
தெரு எலாம் புக்கு உலாய, தெண்ணீர் அரோ.* 39

மயிந்தன் இட்ட நெடு வரை வான் உற
உயர்ந்து முட்டி விழ, எழுந்து ஓத நீர்
தியந்தம் முட்ட, திசை நிலை யானையும்,
பெயர்ந்து விட்டவை, யாவும் பிளிறுவ. 40

இலக்கு வன் சரம் ஆயினும், ஏன்று எதிர்
விலக்கினால், விலங்காத விலங்கலால்,
அலக்கண் எய்த,—அமுது எழ ஆழியைக்
கலக்கினான் மகன்—மீளக் கலக்கினான். 41

மருத்தின் மைந்தன் மணி நெடுந் தோள் எனப்
பெருத்த குன்றம், கரடிப் பெரும் படை
விருத்தன் இட்ட விசையினின், வீசிய
திருத்தம், வானவர் சென்னியில் சென்றதால். 42

குமுதன் இட்ட குல வரை கூத்தரின்
திமிதம் இட்டுத் திரியும் திரைக் கடல்
துமி தம் ஊர் புக, வானவர் துள்ளினார்—
அமுதம் இன்னம் எழும் எனும் ஆசையால். 43

கன சினத்து உருமின் கடுங் கார் வரை
பனசன் இட்டன யாவும் பரிக்கிலன்,
மன சினத்த அனந்தனும், வாழ்வு இகந்து,
அனசனத் தொழில் மேற்கொள்வது ஆயினான். 44

எண் இல் எண்குஇனம் இட்ட கிரிக் குலம்,
உண்ண உண்ணச் சென்று, ஒன்றினொடு ஒன்று உற,
சுண்ண நுண் பொடி ஆகித் தொலைந்தன,
புண்ணியம் பொருந்தாத முயற்சிபோல். 45

40. தியந்தம் - திக் அந்தம், திசையின் எல்லையான இடம்; 41. விலங்காத - அசையாத; விலங்கல் - மலை; 42. திருத்தம் - தீர்த்தம், எதுகை நோக்கித் திரிந்தது; 43. துமி - துளி; இச் சொல்லுக்கு இப் பொருள் உண்மையை ஆயமகள் கூற்றால் கம்பர் விளக்கினார் என்பது ஒரு கதைக் குறிப்பு; 44. பரிக்கிலன் - தாங்க இயலாதவன்; அனசனத் தொழில் - உண்ணாமையாகிய தொழில்; அசனம் - உணவு; அன் அசனம் - உண்ணா திருத்தல்.

ஆர ஆயிர யோசனை ஆழமும்
தீர நீண்டு பரந்த திமிங்கிலம்,
பார மால் வரை ஏறப் பதைத்து, உடல்
பேரவே, குன்றும் வேலையும் பேர்ந்தவால். 46

**நளன் சேதுவை அமைத்த வகை**

குலை கொளக் குறி நோக்கிய கொள்கையான்,
சிலைகள் ஒக்க முறித்துச் செறித்து, நேர்
மலைகள் ஒக்க அடுக்கி, மணற் படத்
தலைகள் ஒக்கத் தடவும், தடக் கையால். 47

தழுவி, ஆயிர கோடியர் தாங்கிய
குழுவின் வானரம் தந்த கிரிக் குலம்,
எழுவின் நீள் கரத்து ஏற்றிட, இற்று இடை
வழுவி வீழ்வன கால்களின் வாங்குவான். 48

**மலை சுமந்து வரும் வானரங்கள்**

மலை சுமந்து வருவன வானரம்,
நிலையில் நின்றன, செல்ல நிலம் பெறா—
அலை நெடுங் கடல் அன்றியும், ஆண்டுத் தம்
தலையின்மேலும் ஓர் சேது தருவ போன்ம். 49

பருத்த மால் வரை ஏந்திய பல் படை
நிரைத்தலின், சில செல்ல நிலம் பெறா,
கரத்தின் ஏந்திய கார் வரை, கண் அகன்
சிரத்தின் மேற்கொண்டு, நீந்தின சென்றவால். 50

ஆய்ந்து நீளம், அரிது சுமந்தன
ஓய்ந்த கால, பசியின் உலர்ந்தன,
ஏந்து மால் வரை வைத்து, அவற்று ஈண்டு தேன்
மாந்தி மாந்தி, மறந்து, துயின்றவால். 51

போதல் செய்குநரும், புகுவார்களும்,
மாதிரம்தொறும் வானர வீரர்கள்,
'சேது எத்துணைச் சென்றது?' என்பார் சிலர்;
'பாதி சென்றது' எனப் பகர்வர் சிலர். 52

47. குலை - அணை; 50. நிரைத்தல் - வரிசையாக நிற்றல்; 51. நீளம் ஆய்ந்து - செல்ல வேண்டிய தூரத்தை ஆராய்ந்து; 52. போதல் செய்குநர் - மலைகளை மீண்டும் கொணரச் செல்பவர்கள்; புகுவார் - மலையைக் கொண்டு புகுபவர்.

**மலைகளும் மரங்களும் கடலில் மூழ்குதலால் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்**

குறைவு இல் குங்குமமும், குகைத் தேன்களும்,
நிறை மலர்க் குலமும், நிறைந்து எங்கணும்,
துறைதொறும் கிரி தூக்கின தோய்தலால்,
நறை நெடுங் கடல் ஒத்தது, நாம நீர். 53

நெடும் பல் மால் வரை தூர்த்து நெருக்கவும்,
துடும்பல் வேலை துளங்கியது இல்லையால்—
இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும்,
குடும்பம் தாங்கும் குடிப் பிறந்தாரினே. 54

கொழுந்துடைப் பவளக் கொடியின் குலம்
அழுந்த உய்த்த அடுக்கல் தகர்ந்து, அயல்
விழுந்த பல் மணியின் ஒளி, மீமிசை
எழுந்த எங்கணும், இந்திர வில்லினே. 55

பழுமரம் பறிக்க, பறவைக் குலம்,
தழுவி நின்று ஒருவன் தனித் தாங்குவான்
விழுதலும், புகல் வேற்று இடம் இன்மையால்,
அழுது அரற்றும் கிளை என ஆனவால். 56

'தர வலோம், மலர்' என்று, உயிர் தாங்கிய
மரம் எலாம் கடல் வீழ்தலும், வண்டு எலாம்,
கரவு இலாளர் விழ, களைகண் இலா
இரவலாளரின், எங்கும் இரிந்தவால். 57

தொக்கு அடங்கல ஓடும் துவலைகள்
மிக்கு அடங்கலும் போவன—மீன் குலம்,
அக் கருங் கடல் தூர, அயற் கடல்
புக்கு அடங்கிடப் போவன போன்றவே. 58

மூசு வண்டுஇனம், மூம் மத மாவின்பின்
ஆசை கொண்டனபோல் தொடர்ந்து ஆடிய,
ஓசை ஒண் கடல் குன்றொடு அவை புக,
வேசை மங்கையர் ஆம் என, மீண்டவே. 59

நிலம் அரங்கிய வேரொடு நேர் பறித்து,
அலமரும் துயர் எய்தியஆயினும்,
வல மரங்களை விட்டில, மாசு இலாக்
குல மடந்தையர் என்ன, கொடிகளே.* 60

53. நாம நீர் - அச்சத்தைச் செய்யும் உவர்க்கடல்; 54. துடும்பல் வேலை - பேரொலி படைத்த கடல், அசையும் கடலும் ஆம்; 57. களைகண் - பற்றுக் கோடு; 60. அரங்கிய - அழுந்திய; வல மரங்கள் - உறுதியான மரங்கள், சுற்றியுள்ள மரங்களும் ஆம்.

துப்பு உறக் கடல் தூய துவலையால்,
அப் புறக் கடலும் சுவை அற்றன;
எப் புறத்து உரும்ஏறும் குளிர்ந்தன;
உப்பு உறைத்தன, மேகம் உகுத்த நீர். 61

முதிர் நெடுங் கிரி வீழ, முழங்கு நீர்
எதிர் எழுந்து நிரந்தரம் எய்தலால்,
மதியவன் கதிரின் குளிர் வாய்ந்தன—
கதிரவன் கனல் வெங் கதிர்க் கற்றையே. 62

நன்கு ஒடித்து, நறுங் கிரி சிந்திய
பொன் கொடித் துவலைப் பொதிந்து ஓடுவ,
வன் கொடிப் பவளங்கள் வயங்கலால்,
மின் பொடித்தது போன்றன, விண் எலாம். 63

ஓடும் ஒட்டரின், ஒன்றின் முன் ஒன்று போய்,
காடும் நாடும், மரங்களும் கற்களும்,
நாடும்; நாட்டும்; நளிர் கடல் நாட்டில், ஓர்
பூடும் ஆட்டல் இலாய, இப் பூமியில். 64

வரைப் பரப்பும், வனப் பரப்பும், உவர்
தரைப் பரப்புவது என்ன, தனித் தனி
உரைப் பரப்பும் உறு கிரி ஒண் கவி;
கரைப் பரப்பும், கடற் பரப்பு ஆனதால்.† 65

உற்றதால் அணை ஓங்கல் இலங்கையை,
முற்ற மூன்று பகலிடை; முற்றவும்,
பெற்ற ஆர்ப்பு விசும்பு பிளந்ததால்;
மற்று இவ் வானம் பிறிது ஒரு வான்கொலோ? 66

**சேதுவின் தோற்றம்**

நாடுகின்றது என், வேறு ஒன்று?—நாயகன்
தோடு சேர் குழலாள் துயர் நீக்குவான்,
'ஓடும், என் முதுகிட்டு' என, ஓங்கிய
சேடன் என்னப் பொலிந்தது, சேதுவே! 67

61. உரும் ஏறு - பேரிடி; 63. பொடித்தல் - தோன்றுதல்; 64. ஒட்டர் - ஓட்டக்காரர், விரைந்தோடும் தூதர்; நளிர் கடல் நாடு - குளிர்ந்த கடல் சூழ்ந்த நெய்தல் நிலம்; ஆட்டல் இலாய - ஆடுதல் இல்லையாயின, காணப் படவில்லை; 65. உவர்த்தரை - கடற்பகுதி; உரை - புகழ்; 66. ஓங்கல் - மலை, ஈண்டுத் திரிகூடமலை; 67. சேடன் - ஆதிசேடன்.

மெய்யின் ஈட்டத்து இலங்கை ஆம் மென் மகள்,
பொய்யன் ஈட்டிய தீமை பொறுக்கலாது,
ஐயன் ஈட்டிய சேனை கண்டு, அன்பினால்
கையை நீட்டிய தன்மையும் காட்டுமால். 68

கான யாறு பரந்த கருங் கடல்,
ஞான நாயகன் சேனை நடத்தலால்,
'ஏனை யாறு, இனி, யான் அலது ஆர்?' என,
வான யாறு, இம்பர் வந்தது மானுமால். 69

கல் கிடந்து ஒளிர் காசு இனம் காந்தலால்,
மற்கடங்கள் வகுத்த வயங்கு அணை,
எல் கடந்த இருளிடை, இந்திரன்
வில் கிடந்தது என்ன விளங்குமால். 70

சேது அமைத்த பின், சுக்கிரீவன் முதலியோர் இராமனுக்குத் தெரிவித்தல்

ஆன பேர் அணை அன்பின் அமைத்தனர்,
கான வாழ்க்கைக் கவிக் குல நாதனும்,
மான வேற் கை இலங்கையர் மன்னனும்,
ஏனையோரும், இராமனை எய்தினர். 71

எய்தி, 'யோசனை ஈண்டு ஒரு நூறு இவை
ஐ-இரண்டின் அகலம் அமைந்திடச்
செய்ததால் அணை' என்பது செப்பினர்—
வைய நாதன் சரணம் வணங்கியே. 72

## 8 ஒற்றுக் கேள்விப் படலம்

இராமன் சேது காணச் செல்லுதல்

ஆண்தகையும், அன்பினொடு, காதல் அமிழ்து ஊற
நீண்ட கையினால் அவரை நெஞ்சினொடு புல்லி,
'ஈண்ட எழுக' என்றனன்—இழைத்த படி எல்லாம்
காண்டல் அதன்மேல் நெடிய காதல் முதிர்கின்றான். 1

68. மெய்யின் ஈட்டத்து - வாய்மையாகிய செல்வத்தையுடைய; ஈட்டம் - செல்வம்; பொய்யன் - இராவணன்; 69. ஏனை யாறு - மற்றைய வழி, நதி; 70. கடல் கரிய வானம்போல் தோன்ற, அணை இந்திர வில் போல விளங்கியது.

8 : 1. ஈண்ட எழுக - விரைந்து புறப்படுக.

பண்டை உறையுட்கு எதிர் படைக் கடலின் வைகும்
கொண்டல் என வந்து அவ் அணையைக் குறுகி நின்றான்—
அண்ட முதல்வன் ஒரு தன் ஆவி அனையாளைக்
கண்டனன் எனப் பெரிய காதல் முதிர்கின்றான். 2

நின்று, நெடிது உன்னினன், 'நெடுங் கடல் நிரம்பக்
குன்றுகொடு அடைத்து, அணை குயிற்றியது ஓர் கொள்கை,
அன்று உலகு தந்த முதல் அந்தணன் அமைத்தான்
என்ற பொழுதின்கணும் இது என்று இயலும்?' என்றான். 3

ஊழி முதல் நாயகன் வியப்பினொடு உவந்தான்,
'ஆழம் உரைசெய்யும் அளவே! இனி அது ஒன்றோ?
ஆழியில் இலங்கை பெரிது அத்திசையது ஆமேல்,
ஏழு கடலும் கடிது அடைப்பர், இவர்' என்றான். 4

இராமன் படையொடு அணைவழிக் கடல் கடந்து போதல்

நெற்றியின் அரக்கர்பதி செல்ல, நிறை நல் நூல்
கற்று உணரும் மாருதி கடைக் குழை வர, தன்
வெற்றி புனை தம்பி ஒரு பின்பு செல, வீரப்
பொன் திரள் புயக் கரு நிறக் களிறு போனான். 5

இருங் கவி கொள் சேனை, மணி ஆரம் இடறி, தன்
மருங்கு வளர் தெண் திரை வயங்கு பொழில் மான,
ஒருங்கு நனி போயின—உயர்ந்த கரையூடே
கருங் கடல் புகப் பெருகு காவிரி கடுப்ப. 6

ஓதிய குறிஞ்சி முதலாய நிலன் உள்ள
கோது இல அருந்துவன கொள்ளையின் முகந்துற்று,
யாதும் ஒழியா வகை சுமந்து, கடல் எய்தப்
போதலினும், அன்ன படை பொன்னி எனல் ஆகும். 7

ஆயது நெருங்க, அடி இட்டு, அடி இடாமல்,
தேயும் நெறி மாடு, திரை ஊடு, விசை செல்ல,
போய சில பொங்குதொறு பொங்குதொறு பூசல்
பாய் புரவி விண் படர்வபோல், இனிது பாய்வ. 8

2. பண்டை உறையுள் - பழைய வாழிடமான கடல்; 5. நெற்றி - படையின் முன்னணி; கடைக் குழை - கடைக்கூழை, படையின் பின்னணி; 8. நெறி மாடு - வழியில்

மெய்யிடை நெருங்க, வெளியற்று அயலில் வீழும்
பொய் இடம் இலாத, புனலின் புகல் இலாத,
உய்விடம் அளிக்கும் அருள்ளர் முறை உய்த்தார்
கையினிடை சென்று, கரை கண்ட கரை இல்லே. 9

இழைத்தனைய வெங் கதிரின் வெஞ் சுடர், இராமன்
மழைத்த முகில் அன்ன மணி மேனி வருடாமல்,
தழைத்த நிழல் உற்ற குளிர் சந்தனம், உயர்ந்த
வழைத் தரு, எடுத்த அருகு வந்தனர், அநேகர். 10

ஓம நெறி வாணர் மறை வாய்மை ஒரு தானே
ஆம் அரசன்-மைந்தர் திரு மேனி அலசாமே,
பூ மரன் இறுத்து, அவை பொருத்துவ பொருத்தி,
சாமரையின் வீசினர், படைத் தலைவர்தாமே. 11

அருங் கடகம் அம் கையில் அகற்றி, அயர்வோடும்
மருங்கு அட வளர்ந்த முலை மங்கை மணம் முன்னு,
ஒருங்கு அடல் உயர்ந்த படர் தானையொடும் ஓதத்து
இருங் கடல் கடந்து, கரை ஏறினன்—இராமன். 12

**இராமன், சுவேல மலையில் தங்குதல்**

பெருந் தவம் முயன்று அமரர் பெற்றிடும் வரத்தால்,
மருந்து அனைய தம்பியொடும் வன் துணைவரோடும்,
அருந்ததியும் வந்தனை செய் அம் சொல் இள வஞ்சி
இருந்த நகரின் புறன் ஓர் குன்றிடை இறுத்தான். 13

**இராமன், படைவீடு அமைக்கும்படி பணித்தல்**

நீலனை இனிது நோக்கி, நேமியோன், 'விரைய, நீ நம்
பால் வரு சேனைக்கு எல்லாம் இழைத்தியால் பாடி' என்னு,
கால்வரை வணங்கிப் போனுன், கல்லினுல் கடலைக் கட்டி,
நூல் வரை வழி செய்தானுக்கு அந் நிலை நொய்தின் சொன்னுன்.

9. பொய் இடம் - வெற்றிடம்; முறை - தன்மை; கரை இல்லே - கணக்கில் அடங்கா; 10. வெங்கதிர் - சூரியன்; வருடுதல் - பரிசித்தல்; சந்தனம் - சந்தன மரம்; வழைத் தரு - சுர புன்னை மரம்; 11. ஓமம் - வேள்வி; வாய்மை ஒரு தானே ஆம் அரசன் - மெய்ம்மையின் வடிவம் தான் ஒருவனேயான தயரதன்; 12. கடகம் - வளை; ஓதம் - அலை, நீர்ப்பெருக்கு; 13. மருந்து - அமுதம்; அருந்ததி - வசிட்ட முனிவன் மனைவி; குன்று - சுவேல மலை; 14. பாடி - பாசறை; கால்வரை - அடிகளில்; நூல் வரை - நூல்களில் கூறும் முறை; வழி செய்தான் - நளன்.

நளன் பாசறை அமைத்தல்

பொன்னினும் மணியினுலும் நான்முகன் புனைந்த பொற்பின்
நல் நலம் ஆக வாங்கி, நால் வகைச் சதுரம் நாட்டி,
இன்னர் என்னுத வண்ணம், இறைவர்க்கும் பிறர்க்கும் எல்லாம்
நல் நகர் நொய்தின் செய்தான்; தாதையும் நாண உட்கொண்டான். 15

வில்லினுற்கு இருக்கை செய்யும் விருப்பினுல், பொருப்பின் வீங்கும்
கல்லினுல் கல்லை ஒக்கக் கடாவினன்; கழைகள் ஆன
நெல்லினுல் அலக்கும் காலும் நிரப்பினன்; தருப்பை என்னும்
புல்லினுல் தொடுத்து, வாசப் பூவினுல் வேய்ந்துபோனன். 16

வாயினும் மனத்தினுலும் வாழ்த்தி, மன்னுயிர்கட்கு எல்லாம்
தாயினும் அன்பினனைத் தாள் உற வணங்கி, தம்தம்
ஏயின இருக்கை நோக்கி, எண் திசை மருங்கும் யாரும்
போயினர்; பன்னசாலை இராமனும் இனிது புக்கான். 17

சூரியன் மறைவும், சந்திரன் தோற்றமும்

பப்பு நீர் ஆய வீரர், பரு வரை கடலில் பாய்ச்ச,
துப்பு நீர் ஆய தூய சுடர்களும் கறுக்க வந்திட்டு,
உப்பு நீர் அகத்துத் தோய்ந்த ஒளி நிறம் விளங்க, அப் பால்
அப்பு நீராடுவான்போல், அருக்கனும் அத்தம் சேர்ந்தான். 18

மால் உறு குடக வானின் வயங்கிய வந்து தோன்றும்
பால் உறு பசு வெண் திங்கள், பங்கய நயனத்து அண்ணல்
மேல் உறு பகழி தூர்க்க வெகுண்டனன் விரைவின் வாங்கி,
கால் உற வளைத்த காமன் வில் என, காட்டிற்று அன்றே. 19

நூற்று இதழ்க் கமலம் தந்த நுண் நறுஞ் சுண்ணம் உண்ணத்
திற்றி மென் பனி நீர் தோய்ந்த சீகரத் தென்றல் என்னும்
காற்றினும், மாலை ஆன கனலினும், காமன் வாளிக்
கூற்றினும், வெம்மை காட்டி கொதித்தது—அக் குளிர் வெண் திங்கள்.

15. நலம் - அழகு; சதுரம் - சிற்ப நூல் கூறும் கட்டட அமைதியில் ஒரு வகை; இன்னர் என்னுதவண்ணம் - கட்டட அமைதி கொண்டு இஃது இன்னர் இருக்கை என்று அறிய முடியாதபடி; 16. அலக்கு - வரிச்சு; கால் - தறி, தூண்; 18. பப்பு நீர் - பரவும் தன்மை; துப்பு நீர் ஆய - பவளத்தின் ஒளியுடைய; வந்திட்டு - வந்து; அகம் - மார்பு, ஈண்டு உடல், 19. மால் - பெருமை; குடக வான் - மேற்றிசை வானம்; வயங்கிய - விளங்கும் படி; 20. உண்ணத் திற்றுதல் - தன்மீது படியப் பூசுதல்.

செயிர்ப்பினும் அழகு செய்யும் திருமுகத்து அணங்கைத் தீர்ந்து,
துயிற் சுவை மறந்தான் தோள்மேல் தூ நிலாத் தவழும் தோற்றம்—
மயிற் குலம் பிரிந்தது என்ன, மரகத மலைமேல், வன்னி
உயிர்ப்புடை வெள்ளைப் பிள்ளை வாள் அரா ஊர்வ போன்ற.

மன் நெடு நகரம் மாடே வரவர, வயிரச் செங் கைப்
பொன் நெடுந் திறள் தோள் ஐயன் மெய் உறப் புழுங்கி நைந்தான்;
பல் நெடுங் காதத்தேயும் சுட வல்ல, பவளச் செவ் வாய்,
அந் நெடுங் கருங் கண், தீயை அணுகினுல் தணிவது உண்டோ?

**இராவணன் ஒற்றரை வீடணன் காணுதல்**

இற்றிது காலம் ஆக, இலங்கையர் வேந்தன் ஏவ,
ஒற்றர் வந்து அளவு நோக்கி, குரங்கு என உழல்கின்ருரைப்
பற்றினன் என்ப மன்னே—பண்டு தான் பல நாள் செய்த
நல் தவப் பயன் தந்து உய்ப்ப, முந்துறப் போந்த நம்பி. 23

பேர்வுறு கவியின் சேனைப் பெருங் கடல் வெள்ளம் தன்னுள்,
ஓர்வுறும் மனத்தன் ஆகி, ஒற்றரை உணர்ந்து கொண்டான்,
சேர்வுறு பாலின் வேலைச் சிறு துளி தெறித்தவேனும்,
நீரினை வேறு செய்யும் அன்னத்தின் நீரன் ஆனுன்; 24

பெருமையும் சிறுமைதானும் முற்றுறு பெற்றி ஆற்ற
அருமையின் அகன்று, நீண்ட விஞ்சையுள் அடங்கி, தாமும்
உருவமும் தெரியாவண்ணம் ஒளித்தனர், உறையும் மாயத்து
இருவரை ஒருங்கு காணும் யோகியும் என்னல் ஆனுன். 25

**ஒற்றர் நிலை கண்ட இராமன், 'அவர்களை விடுக' எனல்**

கூட்டிய விரல் திண் கையால் குரங்குகள் இரங்கக் குத்தி,
மீட்டு ஒரு வினை செயாமல் மாணையின் கொடியால் வீக்கிப்
பூட்டிய கையர், வாயால் குருதியே பொழிகின்ருரைக்
காட்டினன், 'கள்வர்' என்னு; கருணைஅம் கடலும் கண்டான்.

பாம்பு இழைப் பள்ளி வள்ளல், பகைஞர் என்று உணரான், 'பல்லோர்
நோம் பிழை செய்தகொல்லோ குரங்கு?' என இரங்கி நோக்கி,
'தாம் பிழை செய்தாரேனும், "தஞ்சம்!" என்று அடைந்தோர்தம்மை
நாம் பிழை செய்யலாமோ? நலியலீர்; விடுதிர்!' என்ருன். 27

21. வன்னி - நெருப்பு; உயிர்ப்பு - மூச்சுக் காற்று; 23. நம்பி - வீடணன்; 24. ஓர்வு - ஆராய்ச்சி; 25. ஒற்றரான சுக சாரருடைய உண்மை நிலை கண்ட வீடணனுக்குச் சீவாத்தும பரமாத்துமாக்களைக் கண்ட யோகி உவமை; ஒளித்தனர் - மறைந்து வாழ்கின்றவராகிய சிவன், ஈசுவரன்.

**இராவணன் ஒற்றர் என்பதை வீடணன் விளக்குதல்**

அகன் உறப் பொலிந்த வள்ளல் கருணையால் அழுத கண்ணன்,
'நகம் நிறை கானின் வைகும் நம் இனத்தவரும் அல்லர்;
தகை நிறைவு இல்லா உள்ளத்து இராவணன் தந்த ஒற்றர்;
சுகன், இவன்; அவனும் சாரன்' என்பது தெரியச் சொன்னான். 28

**ஒற்றரின் உண்மை வடிவை வீடணன் வெளிப்படுத்தல்**

கல்விக்கண் மிக்கோன் சொல்ல, கரு மன நிருதக் கள்வர்,
'வல் விற் கை வீர! மற்று இவ் வானரர் வலியை நோக்கி,
வெல்விக்கை அரிது என்று எண்ணி, வினையத்தால் எம்மை எல்லாம்
கொல்விக்க வந்தான்; மெய்ம்மை; குரங்கு நாம்; கொள்க!' என்றார்.

'கள்ளரே! காண்டி.' என்று மந்திரம் கருத்துள் கொண்டான்;
தெள்ளிய தெரிக்கும் தெவ்வர், தீர் வினை சேர்தலோடும்,
துள்ளியின் இரதம் தோய்ந்து, தொல் நிறம் கரந்து, வேறு ஆய்
வெள்ளி போன்று இருந்த செம்பும் ஆம் என, வேறுபட்டார்.

**இராமன் அபயம் அளித்து, உண்மை கூறப் பணித்தல்**

மின் குலாம் எயிற்றர் ஆகி, வெருவந்து, வெற்பில் நின்ற
வன்கணார்தம்மை நோக்கி, மணி நகை முறுவல் தோன்ற,
புன்கணார் புன்கண் நீக்கும் புரவலன், 'போந்த தன்மை
என்கொலாம்? தெரிய எல்லாம் இயம்புதிர்; அஞ்சல்!' என்றான்.

**ஒற்றர் உண்மை உரைத்தல்**

'தாய் தெரிந்து உலகு காத்த தவத்தியை, தன்னைக் கொல்லும்
நோய் தெரிந்து உணரான், தேடிக் கொண்டனன் நுவல, யாங்கள்,
வாய் தெரிந்து, உணராவண்ணம் கழறுவார், வணங்கி, மாய
வேய் தெரிந்து உரைக்க வந்தோம், வினையினால்—வீர!' என்றார்.

**இராமன் ஒற்றரிடம் கூறுதல்**

'எல்லை இல் இலங்கைச் செல்வம் இளையவற்கு ஈந்த தன்மை
சொல்லுதிர்; மகர வேலை கவிக் குல வீரர் தூர்த்துக்
கல்லினின் கடந்தவாறும் கழறுதிர்; காலம் தாழ்த்த
வில்லினர் வந்தார் என்றும் விளம்புதிர்—வினையம் மிக்கீர்! 33

28. நகம் - மலை; 30. தீர் வினை - மாயத்தை நீக்குதற்குரிய மாற்று உபாயம்; துள்ளி - துளி; இரதம் - பாதரசம்; 32. வாய் தெரிந்து - உண்மை கண்டு; வேய் - ஒற்று; 33. தாழ்த்த - தாமதித்த.

'கொத்துறு தலையான் வைகும் குறும்புடை இலங்கைக் குன்றம்
தத்துறு தட நீர் வேலைதனின் ஒரு சிறையிற்று ஆதல்
ஒத்து உற உணர்ந்திலாமை, உயிரொடும் உறவினேடும்
இத்துணை இருந்தது என்னும் தன்மையும் இயம்புவீரால். 34

' ''சண்டம் கொள் வேகமாகத் தனி விடை உவணம் தாங்கும்,
துண்டம் கொள் பிறையான், மௌலித் துளவினுேடும், தொல்லை
அண்டங்கள் எவையும் தாங்கிக் காப்பினும், அறம் இலாதாற்
கண்டங்கள் பலவும் காண்பென்'' என்பதும் கழறுவீரால். 35

' ''தீட்டுறு மழு வாள் வீரன் தாதையைச் செற்றேன் சுற்றம்
மாட்டிய வண்ணம் என்ன, வருக்கமும் மற்றும் முற்றும்
வீட்டி, என் தாதைக்காக மெய்ப் பலி விசும்புளோரை
ஊட்டுவென் உயிர்கொண்டு'' என்னும் வார்த்தையும் உணர்த்துவீரால்.

' ''தாழ்வு இலாத் தவத்து ஓர் தையல் தனித்து ஒரு சிறையிற்று ஆக,
சூழ்வு இலா வஞ்சம் சூழ்ந்த தன்னைத் தன் சுற்றத்தோடும்,
வாழ்வு எலாம் தம்பி கொள்ள, வயங்கு எரி நரகம் என்னும்
வீழ்வு இலாச் சிறையின் வைப்பென்'' என்பதும் விளம்புவீரால்.

**ஒற்றர் திரும்பிச் செல்லுதல்**

'நோக்கினிர், தானை எங்கும் நுழைந்தனிர்; இனி, வேறு ஒன்றும்
ஆக்குவது இல்லைஆயின் அஞ்சல்' என்று, அஃது உண்டு அன்றே?
'வாக்கினின், மனத்தின், கையின், மற்று இனி வலியா வண்ணம்,
போக்குமின் விரைவின்' என்றான்; 'உய்ந்தனம்' என்று போனார். 38

**இரவில் இராவணன் மந்திராலோசனை செய்தல்**

அரவ மாக் கடல் அஞ்சிய அச்சமும்,
உரவு நல் அணை ஒட்டிய ஊற்றமும்,
வரவும் நோக்கி, இலங்கையர் மன்னவன்,
இரவின், எண்ணிட, வேறு இருந்தான் அரோ. 39

வார் குலாம் முலை மாதரும், மைந்தரும்,
ஆரும் நீங்க, அறிஞரொடு ஏகினன்—
'சேர்க' என்னின் அல்லால், இளந் தென்றலும்
சார்கிலா நெடு மந்திர சாலையே. 40

34. தத்துறுதல் - தாவி வருதல், தடுமாறுதல்; ஒத்துற - பொருந்த; 35. சண்டம் - வேகம், கொடுமையும் ஆம்; 36. வீரன் - பரசுராமன்; தாதை - யமதங்கி முனிவர்; செற்றேன் - கார்த்தவீரியன்; என் தாதை - என் தந்தையாகிய சடாயு; 37. விழ்வு இலா - அழியாத; 38. வலியா வண்ணம் - துன்புறுத்தாதவாறு; 39. அரவம் - ஒலி; 40. குலாம் - குலாவும், விளங்கும்.

உணர்வு இல் நெஞ்சினர், ஊமர், உரைப் பொருள்
புணரும் கேள்வியர் அல்லர், பொறி இலர்,
கொணரும் கூனர், குறளர், கொழுஞ் சுடர்
துணரும் நல் விளக்கு ஏந்தினர், சுற்றினர். 41

இராவணன் வினா

'நணியர், வந்து மனிதர்; நமக்கு இனித்
துணியும் காரியம் யாது?' எனச் சொல்லினன்—
பணியும் தானவர் ஆதியர் பல் முடி
மணியினால் விளங்கும் மணித் தாளினன்.* 42

மாலியவான் கூற்று

'கால வெங் கனல் போலும் கணைகளால்
வேலை வெந்து, நடுங்கி, வெயில் புரை
மாலை கொண்டு வணங்கினவாறு எலாம்
சூலம் என்ன என் நெஞ்சைத் தொளைக்குமால். 43

' ''கிழி படக் கடல் கீண்டதும், மாண்டது,
மொழி படைத்த வலி'' என, மூண்டது ஓர்
பழி படைத்த பெரும் பயத்து, அன்னவன்
வழி கொடுத்தது என் உள்ளம் வருத்துமால். 44

'படைத்த மால் வரை யாவும் பறித்து, வேர்
துடைத்த வானர வீரர், தம் தோள்களைப்
புடைத்தவாறும், புணரியைப் போக்கு அற
அடைத்தவாறும், என் உள்ளத்து அடைத்தவால். 45

'காந்து வெஞ் சின வீரர், கணக்கு இலார்,
தாம் தம் ஆற்றலுக்கு ஏற்ற தரத் தர,
வேந்த! வெற்பை ஒருவன் விரல்களால்
ஏந்தி இட்டது என் உள்ளத்தின் இட்டதால். 46

'சுட்டவா கண்டும், தொல் நகர் வேலையைத்
தட்டவா கண்டும், தா அற்ற தெவ்வரைக்
கட்டவா கண்டும், கண் எதிரே வந்து
விட்டவா கண்டும், மேல் எண்ண வேண்டுமோ?' 47

41. துணர்தல் - கொத்தாய் அமைதல்; 42. மனிதர் வந்து நணியர் என மாற்றுக; நணியர் - நெருங்கினர்; 44. மொழி படைத்த - பாராட்டப் பட்ட ஆற்றல்; என - என்று உலகம் கூற; அன்னவன் - அந்தக் கடலரசனை வருணன்; 45. வேர் துடைத்தல் - வேர் அறும்படி செய்தல்; 46. ஒருவன் - நளன்; 47. தட்டவா - தட்டவாறு, (அணைக்கட்டித்) தடுத்தவாறு.

இராவணன் மாலியவானைச் சினத்தல்

என்று தாயைப் பயந்தோன் இயம்பலும்,
தின்று வாயை, விழிவழித் தீ உக,
'நன்று, நன்று! நம் மந்திரம் நன்று!' என,
'என்றும் வாழ்தி, இளவலொடு; ஏகு' என்றான். 48

சேனைத் தலைவன் பேச்சு

'ஈனமேகொல், இதம்?' என எண்ணுறா,
மோனம் ஆகி இருந்தனன், முற்றினான்.
ஆன காலை, அடியின் இறைஞ்சிய
சேனை நாதன் இனையன செப்பினான்: 49

'கண்மை இந் நகர் வேலை கடந்த அத்
திண்மை ஒன்றும் அலால், திசை காவலர்
எண்மரும் இவற்கு ஏவல் செய்கின்ற அவ்
உண்மை ஒன்றும் உணர்ந்திலைபோல்!' என்றான். 50

' ''சூசி வானரர் குன்று கொடு இக் கடல்
வீசினார்'' எனும் வீரம் விளம்புவாய்;
ஊசி வேரொடும் ஓங்கலை, ஓங்கிய
ஈசனோடும், எடுத்ததும் இல்லையோ? 51

'அது கொடு என் சில? ஆர் அமர் மேல் இனி,
மதி கெடுந் தகையோர், வந்து நாம் உறை
பதி புகுந்தனர்; தம்மைப் படுப்பது ஓர்
விதி கொடு உந்த விளைந்ததுதான்' என்றான். 52

ஒற்றர் வர, இராவணன் அவரிடம் செய்தி அறிதல்

முற்றும் மூடிய கஞ்சுகன், மூட்டிய
வெற்று அனல் பொறிக் கண்ணினன், வேத்திரம்
பற்றும் அங்கையினன், படிகாரன், 'இன்று
ஒற்றர் வந்தனர்' என்ன, உணர்த்தினான். 53

வாயில் காவலன் கூற, வயங்கு எரி
மேய வெங் கண் விறல் கொள் இராக்கதர்-
நாயகன், 'புகுத்து, இங்கு' என, 'நன்று' எனப்
போய், அவன் புகுத்த, புகுந்தார் அரோ. 54

48. இளவல் - வீடணன்; 50. கண்மை - காட்சி (கண்ணுக்கு எதிராக); 51. ஊசி வேர் - மூல வேர்; ஓங்கல் - மலை, கயிலாயம்; 53. கஞ்சுகன் - மெய்ப்பையுடையவன், சட்டை அணிந்தவன்; வேத்திரம் - பிரம்பு; படி காரன் - வாயில் காவலன்.

மனைக்கண் வந்து, அவன் பாதம் வணங்கினர்—
பனைக் கை வன் குரங்கின் படர் சேனையை
நினைக்கும்தோறும் திடுக்கிடும் நெஞ்சினர்,
கனைக்கும்தோறும் உதிரங்கள் கக்குவார். 55

'வெள்ள வாரி விரிவொடு, அவ் வீடணத்
தள்ளவாரி நிலைமையும், தாபதர்
உள்ளவாறும், உரைமின்' என்றான்—உயிர்
கொள்ள வாய் வெருவும் கொடுங் கூற்று அனான். 56

என்னச் சாரர் இசைத்தனர், வேலையைக்
கன்னல் ஒன்றில் கடந்து, கவிக் குலம்
துன்னு பாசறைச் சூழல்கள் தோறுமே
அன்னர் ஆகி, அரிதின் அடைந்தனம்.* 57

'அடியம் அந் நெடுஞ் சேனையை ஆசையால்
முடிய நோக்கலுற்றேம்; முது வேலையின்
படியை நோக்கி, எப் பாலும் படர்குறும்
கடிய வேகக் கலுழனின் கண்டிலம். 58

'நுவல, யாம் வர வேண்டிய நோக்கதோ?
கவலை-வேலை எனும், கரை காண்கிலாது
அவலம் எய்தி அடைத்துழி, ஆர்த்து எழும்
துவலையே வந்து சொல்லியது இல்லையோ? 59

' ''எல்லை நோக்கவும் எய்திலதாம்'' எனும்
சொல்லை நோக்கிய மானுடன், தோள் எனும்
கல்லை நோக்கி, கணைகளை நோக்கி, தன்
வில்லை நோக்கவும், வெந்தது வேலையே. 60

'தார் உலாம் மணி மார்ப! நின் தம்பியே,
தேர் உலாவு கதிரும், திருந்து தன்
பேர் உலாவும் அளவினும், பெற்றனன்,
நீர் உலாவும் இலங்கை நெடுந் திரு. 61

'சேது பந்தனம் செய்தனன் என்றது இப்
போது வந்த புது வலியோ—ஒரு
தூது வந்தவன் தோள் வலி சொல்லிய
ஏது அந்தம் இலாத இருக்கவே? 62

56. வெள்ள வாரி - கடல், ஈண்டுக் கடல் போலும் படை; தள்ளவாரி - சோம்பேறி; தாபதர் - இராம இலக்குவர்; 59. நோக்கதோ? - நோக்கத்தை உடையதோ? 60. எல்லை - இடம், ஈண்டுக் கடற்பரப்பு.

'மருந்து தேவர் அருந்திய மாலைவாய்,
இருந்த தானவர்தம்மை இரவி முன்
பெருந் திண் மாயற்கு உணர்த்திய பெற்றியின்,
தெரிந்து காட்டினன், நும்பி சினத்தினன். 63

'பற்றி, வானர வீரர் பனைக் கையால்,
எற்றி எங்களை, ஏண் நெடுந் தோள் இறச்
சுற்றி, ஈர்த்து அலைத்து, சுடர்போல் ஒளிர்
வெற்றி வீரற்குக் காட்டி, விளம்பினன்.  64

'''சரங்கள் இங்கு இவற்றால் பண்டு தானுடை
வரங்கள் சிந்துவென்'' என்றனன்; மற்று எமைக்
குரங்கு அலாமை தெரிந்தும், அக் கொற்றவன்
இரங்க, உய்ந்தனம்; ஈது எங்கள் ஒற்று' என்றார். 65

மற்றும் யாவையும், வாய்மைய வானவன்
சொற்ற யாவையும் சோர்வு இன்றிச் சொல்லினர்;
'குற்றம் யாவையும் கோளொடு நீங்குக!
இற்றை நாள் முதல் ஆயு உண்டாக!' என்றார். 66

சேனை காவலன் பேச்சு

'''வைதெனக் கொல்லும் விற் கை மானிடர், மகர நீரை
நொய்தினின் அடைத்து, மானத் தானையான் நுவன்ற நம் ஊர்
எய்தினர்'' என்ற போதின் வேறு இனி எண்ண வேண்டும்
செய் திறன் உண்டோ?' என்னச் சேனை காப்பாளன் செப்பும்:

'விட்டனை மாதை என்ற போதினும், ''வெருவி, வேந்தன்
பட்டது'' என்று இகழ்வர் விண்ணோர்; பற்றி, இப் பகையைத் தீர
ஒட்டல்ஆம் போரில், ஒன்னார் ஒட்டினும், உம்பி ஒட்டான்;
கிட்டிய போது, செய்வது என் இனிக் கிளத்தல் வேண்டும்? 68

63. மாலை - சமயம்; திருமால் தேவர்க்கு அமுதம் வழங்குதல் கண்ட சைம்மிகேயன் என்னும் அசுரன் தேவர் உருக்கொண்டு அமுதுண்டான்; சூரிய சந்திரர் அவனைக் காட்டினர்; திருமால் அமுது பகிர்ந்து அளித்த அகப்பையால் தாக்கினார்; அவன் தலை வேறு உடல் வேறு ஆயினன்; எனினும் இறவா நிலை எய்தி இரண்டுடல் பெற்று இராகு கேது என்னும் இருவராய்ச் சூரிய சந்திரரை நலியலாயினர் என்பது புராணம்; 65. தான் - இராவணன்; 66. கோள் - தீமை; 67. வைதல் - சபித்தல்; தானையான் - சேனையோடு; 68. ஒட்டல் ஆம் போர் - தாக்கிப் பொரும் போர்; ஒட்டினும் - சமாதானம் செய்துகொள்ள இசைந்தாலும்.

'ஆண்டுச் சென்று, அரிகளோடும் மனிதரை அமரில் கொன்று,
மீண்டு, நம் இருக்கை சேர்தும் என்பது மேற்கொண்டேமேல்,
ஈண்டு வந்து இறுத்தார் என்னும் ஈது அலாது, உறுதி, உண்டோ?
வேண்டியது எய்தப் பெற்ருல், வெற்றியின் விழுமிது அன்ரே?

'ஆயிரம் வெள்ளம் ஆன அரக்கர்தம் தானை, ஐய!
தேயினும், ஊழி நூறு வேண்டுமால்; சிறுமை என்னே?
நாய்இனம் சீயம் கண்டதாம் என நடப்பது அல்லால்,
நீ உருத்து எழுந்த போது, குரங்கு எதிர் நிற்பது உண்டோ?

'வந்தவர் தானையோடு மறிந்து, மாக் கடலில் வீழ்ந்து,
சிந்தினர் இரிந்து போக, சேனையும் யானும் சென்று,
வெந் தொழில் புரியுமாறு காணுதி; விடை ஈக!' என்ன,
இந்திரன் முதுகு கண்ட இராவணற்கு ஏயச் சொன்னான். 71

**மாலியவான் பேச்சு**

மதி நெறி அறிவு சான்ற மாலியவான், 'நல் வாய்மை
பொது நெறி நிலையது ஆகப் புணர்த்துதல் புலமைத்து' என்ன,
'விதி நெறி நிலையது ஆக விளம்புகின்ருேரும், மீண்டு
செது நெறி நிலையினரே' என்பது தெரியச் சொல்லும்: 72

'"பூசற்கு முயன்று நம்பால், பொரு திரைப் புணரி வேலித்
தேசத்துக்கு இறைவன் ஆன தெசரதன் சிறுவனாக,
மாசு அற்ற சோதி வெள்ளத்து உச்சியின் வரம்பில் தோன்றும்
ஈசற்கும் ஈசன் வந்தான்'' என்பதோர் வார்த்தை இட்டார்.

'அன்னவற்கு இளவல்தன்னை, "அரு மறை, 'பரம்' என்று ஓதும்
நல் நிலை நின்று தீர்ந்து, நவை இலா உயிர்கள்தோறும்
தொல் நிலை பிரிந்தான் என்னப் பல வகை நின்ற தூயோன்
இன் அணை'' என்ன யாரும் இயம்புவர்; ஏது யாதோ? 74

'"அவ்வவர்க்கு அமைந்த வில்லும், குல வரை அவற்றின் ஆன்ற
வெவ் வலி வேறு வாங்கி, விரிஞ்சனே விதித்த, மேல்நாள்;
செவ் வழி நாணும், சேடன்; தெரி கணை ஆகச் செய்த
கவ்வு அயில், கால நேமிக் கணக்கையும் கடந்தது'' என்பார்.

72. மதி - இயற்கை அறிவு; அறிவு - நூலறிவு; பொது நெறி நிலையது ஆகப் புணர்த்துதல் - தன் கூற்ருகக் கூருமல் உலகத்தார் தம்முட் கூறும் மொழிகளாக அவர்தம் கூற்றில் வைத்து உணர்த்துதல்; செது நெறி - சிதையும் கெடுநெறி; 73. பூசல் - போர்; 74. நல் நிலை - பரத்துவ நிலை; அணை - படுக்கை; 75. கால நேமிக் கணக்கு - காலச் சக்கரத்தின் ஆற்றல்.

'"வாலி மா மகன் வந்தானை, "வானவர்க்கு இறைவன்" என்றார்;
நீலனை, "உலகம் உண்ணும் நெருப்பினுக்கு அரசன்" என்றார்;
காலனை ஒக்கும் தூதன், "காற்று எனும் கடவுள்" என்றார்;
மேலும் ஒன்று உரைத்தார், "அன்னான் விரிஞ்சன் ஆம், இனிமேல்"
[என்றார். 76

' "அப் பதம் அவனுக்கு ஈந்தான், அரக்கர் வேர்அறுப்பதாக
இப் பதி எய்தினான் அவ் இராமன்" என்று எவரும் சொன்னார்;
ஒப்பினால் உரைக்கின்றாரோ? உண்மையே உணர்த்தினாரோ?
செப்பி என்? "குரங்காய் வந்தார் தனித் தனி தேவர்" என்றார். 77

'ஆயது தெரிந்தோ? தங்கள் அச்சமோ? அறிவோ?—யார்க்கும்
சேயவள்; எளியள் என்னா, சிந்தையின் இகழல் அம்மா!—
"துயவள் அமிர்தினோடும் தோன்றினாள்" என்றும், "தோன்றாத்
தாய் அவள், உலகுக்கு எல்லாம்" என்பதும், சாற்றுகின்றார்.

'"கானிடை 'வந்ததேயும் வானவர் கடாவவே ஆம்;
மீனுடை அகழி வேலை விலங்கல்மேல் இலங்கை வேந்தன்
தானுடை வரத்தை எண்ணி, தருமத்தின் தலைவர்தாமே
மானுட வடிவம் கொண்டார்" என்பது ஓர் வார்த்தை இட்டார். 79

' "ஆயிரம் உற்பாதங்கள் ஈங்கு வந்து அடுத்த" என்றார்;
"தாயினும் உயிர்க்கு நல்லாள் இருந்துழி அறிய, தக்கோன்
ஏயின தூதன் எற்ற, பற்று விட்டு, இலங்கைத் தெய்வம்
போயினது" என்றும் சொன்னார்; "புகுந்தது, போரும்" என்றார். 80

' "அம்பினுக்கு இலக்கம் ஆவார் அரசொடும் அரக்கர் என்ன,
நம் பரத்து அடங்கும் மெய்யன், நாவினில் பொய் இலாதான்,
உம்பர் மந்திரிக்கும் மேலா ஒரு முழம் உயர்ந்த ஞானத்
தம்பியே சாற்றிப் போனான்" என்பதும் சமையச் சொன்னார்.

'ஈது எலாம் உணர்ந்தேன் யானும்; என் குலம் இறுதி உற்றது
ஆதியின் இவனால் என்றும், உன்தன்மேல் அன்பினாலும்,
வேதனை நெஞ்சின் எய்த, வெம்பி, யான் விளைவ சொன்னேன்;
சீதையை விடுதிஆயின், தீரும் இத் தீமை' என்றான். 82

77. ஒப்பினால் உரைத்தல் - உபசரித்துக் கூறுதல்; 79. வந்ததேயும் - வந்ததும்; 80. உற்பாதம் - தீய நிமித்தம்; 81. நம் பரத்து அடங்கும் மெய்யன் - அரக்கர்களாகிய நமது சார்பில் தோன்றியவன்; உம்பர் மந்திரி - பிருகற்பதி; 82. இவன் - திருமால்; முற்காலத்தில் தேவர்க்கும் துயர் விளைத்த மாலியவான், சுமாலி, மாலி ஆகியோருள் திருமால் மாலியைக் கொன்றார்; ஏனைய இருவரும் தப்பியோடிப் பாதாளத்தில் குடிபுகுந்தனர்; பிற்றை நாளில் மாலியவானுடைய பெண்வழிப் பேரனான இராவணன் தவத்தால் குபேரனை வென்று, இலங்கையில் அரசினை நிறுவியபோது மாலியவான், சுமாலி முதலியோர் மீண்டும் இலங்கையில் குடி புகுந்தனர்.

மாலியவான் பேச்சை இராவணன் இகழ்தல்

'மற்று எலாம் நிற்க, அந்த மனிதர் வானரங்கள், வானில்
இற்றை நாள் அளவும் நின்ற இமையவர் என்னும் தன்மை
சொற்றவாறு அன்றியேயும், "தோற்றி நீ" என்றும் சொன்னாய்;
கற்றவா நன்று! போ' என்று, இனையன கழறலுற்றான்: 83

'பேதை மானிடவரோடு குரங்கு அல, பிறவே ஆக,
பூதல வரைப்பின் நாகர் புரத்தின் அப் புறத்தது ஆக,
காது வெஞ் செரு வேட்டு, என்னைக் காந்தினர் கலந்த போதும்,
சீதைதன் திறத்தின்ஆயின், அமர்த் தொழில் திறம்புவேனோ?

'ஒன்று அல, பகழி, என் கைக்கு உரியன; உலகம் எல்லாம்
வென்றன; ஒருவன் செய்த வினையினும் வலிய; ''வெம் போர்
முன் தருக'' என்ற தேவர் முதுகு புக்கு அமரில் முன்னம்
சென்றன; இன்று வந்த குரங்கின்மேல் செல்கலாவோ? 85

'சூலம் எய் தடக் கை அண்ணல்தானும், ஓர் குரங்காய்த் தோன்றி
ஏலுமேல், இடைவது அல்லால், என் செய வல்லன் என்னே?
வேலை நீர் கடைந்த மேல்நாள், உலகு எலாம் வெருவ வந்த
ஆலமோ விழுங்க, என் கை அயில் முகப் பகழி? அம்மா!* 86

'அறிகிலை போலும், ஐய! அமர் எனக்கு அஞ்சிப் போன
எறி சுடர் நேமியான் வந்து எதிர்ப்பினும், என் கை வாளி
பொறி பட, சுடர்கள் தீயப் போவன; போக்கிலாத
மறி கடல் கடைய, வந்த மணிகொலாம், மார்பில் பூண? 87

'கொற்றவன், இமையோர் கோமன், குரக்கினது உருவம் கொண்டால்,
அற்றை நாள், அவன்தான் விட்ட அயிற்படை அறுத்து மாற்ற,
இற்ற வான் சிறைய ஆகி விழுந்து, மேல் எழுந்து வீங்காப்
பொற்றை மால் வரைகளோ, என் புய நெடும் பொருப்பும்? அம்மா!'

கதிரவன் தோற்றம்

உள்ளமே தூது செல்ல, உயிர் அனுர் உறையுள் நாடும்
கள்ளம் ஆர் மகளிர் சோர, நேமிப்புள் கவற்சி நீங்க,
கொள்ளை பூண்டு அமரர் வைகும் குன்றையும் கோட்டில் கொண்ட
வெள்ள நீர் வடிந்தது என்ன, வீங்கு இருள் விடிந்தது அன்றே.

84. திறம்புதல் - பின்னடைதல்; 86. ஏலுதல் - போரில் எதிர்த்து நிற்றல்; இடைவது - தோற்பது; 89. கொள்ளை - கூட்டம்; குன்று - மேரு மலை; கோட்டில் கொண்ட - உச்சி வரையில் மூடிக்கொண்டிருந்த.

இன்னது ஓர் தன்மைத்து ஆம் என்று எட்டியும் பார்க்க அஞ்சி,
பொன் மதில் புறத்து நாளும் போகின்றான்,—'போர் மேற்கொண்டு
மன்னவர்க்கு அரசன் வந்தான்; வலியமால்' என்று, தானும்
தொல் நகர் காண்பான் போல,—கதிரவன் தோற்றம் செய்தான். 90

## 9 இலங்கை காண் படலம்

**இராமன் பரிவாரங்களுடன் மலைமேல் ஏறுதல்**

அருந்ததி அனைய நங்கை அவ்வழி இருந்தாள் என்று
பொருந்திய காதல் தூண்ட, பொன் நகர் காண்பான் போல,
பெருந் துணை வீரர் சுற்ற, தம்பியும் பின்பு செல்ல,
இருந்த மால் மலையின் உச்சி ஏறினன் இராமன், இப்பால். 1

செரு மலி வீரர் எல்லாம் சேர்ந்தனர் மருங்கு செல்ல,
இரு திறல் வேந்தர் தாங்கும் இணை நெடுங் கமலக் கையான்,
பொரு வலி வய வெஞ் சீயம் யாவையும் புலியும் சுற்ற,
அரு வரை இவர்வது ஆங்கு ஓர் அரிஅரசு அனையன் ஆனான்.

கதம் மிகுந்து இரைத்துப் பொங்கும் கனை கடல் உலகம் எல்லாம்
புதைவு செய் இருளின் பொங்கும் அரக்கர்தம் புரமும், பொற்பும்,
சிதைவு செய் குறியைக் காட்டி, வட திசைச் சிகரக் குன்றின்,
உதயம்அது ஒழியத் தோன்றும், ஒரு கரு ஞாயிறு ஒத்தான். 3

துமிலத் திண் செருவின் வாளிப் பெரு மழை சொரியத் தோன்றும்
விமலத் திண் சிலையன், ஆண்டு ஓர் வெற்பினை மேய வீரன்,
அமலத் திண் கரமும் காலும் வதனமும் கண்ணும் ஆன,
கமலத் திண் காடு பூத்த காள மா மேகம் ஒத்தான். 4

மல் குவடு அனைய திண் தோள் மானவன், வானத்து ஓங்கும்
கல் குவடு அடுக்கி வாரிக் கடலினைக் கடந்த, காட்சி
நல் குவடு அனைய, வீரர் ஈட்டத்தின் நடுவண் நின்றான்.
பொன் குவட்டு இடையே தோன்றும் மரகதக் குன்றம் போன்றான். 5

9 : 1. மலை - சுவேல மலை; 2. அரி அரசு - அரச சிங்கம்; 4. துமிலம் - பேராரவாரம்; 5. மல் குவடு - வலிமை பொருந்திய மலைச் சிகரம்.

**இராமன், இலங்கையின் சிறப்பை இளவலுக்குக் கூறுதல்**

அணை நெடுங் கடலில் தோன்ற, ஆறிய சீற்றத்து ஐயன்,
பிணை நெடுங் கண்ணி என்னும் இன் உயிர் பிரிந்த பின்னை,
துணை பிரிந்து அயரும் அன்றிற் சேவலின் துளங்குகின்றான்,
இணை நெடுங் கமலக் கண்ணால் இலங்கையை எய்தக் கண்டான். 6

'நம் திரு நகரே ஆதி வேறு உள நகர்கட்கு எல்லாம்
வந்த பேர் உவமை கூறி வழுத்துவான் அமைந்த காலை,
இந்திரன் இருக்கை என்பர்; இலங்கையை எடுத்துக் காட்டார்
அந்தரம் உணர்தல் தேற்றார், அருங் கவிப் புலவர் அம்மா! 7

'பழுது அற விளங்கும் செம் பொன் தலத்திடைப் பரிதி நாண
முழுது எரி மணியின் செய்து முடிந்தன, முனைவராலும்
எழுத அருந் தகைய ஆய, மாளிகை இசையச் செய்த
தொழில் தெரிகிலவால், தங்கண் சுடர் நெடுங் கற்றை சுற்ற. 8

'விரிகின்ற கதிர ஆகி, மிளிர்கின்ற மணிகள் வீச,
சொரிகின்ற சுடரின் சும்மை விசும்புறத் தொடரும் தோற்றம்
அரி வென்ற வெற்றி ஆற்றல் மாருதி அமைத்த தீயால்
எரிகின்றதாயே காண், இக் கொடி நகர் இருந்தது இன்னும்! 9

'மாசு அடை பரந்த மான மரகதத் தலத்து வைத்த
காசு அடை சமைந்த மாடம், கதிர் நிறக் கற்றை சுற்ற,
ஆசு அறக் குயின்ற வெள்ளி அகல் மனை அன்னம் ஆக,
பாசடைப் பொய்கை பூத்த பங்கயம் நிகர்ப்ப, பாராய்! 10

'தீச் சிகை சிவணும் சோதிச் செம் மணிச் செய்த தூணின்
தூச் சுடர் மாடம் ஈண்டித் துறுதலால், கருமை தோன்றா
மீச் செலும் மேகம் எல்லாம், விரி சுடர் இலங்கை வேவ,
காய்ச்சிய இரும்பு மானச் சேந்து ஒளி கஞல்வ, காணாய்! 11

'வில் படி திரள் தோள் வீர! நோக்குதி—வெங் கண் யானை
அல் படி நிறத்தவேனும், ஆடகத் தலத்தை, ஆழ,
கல் படி வயிரத் திண் கால் நகங்களின் கல்வி, கையால்
பொற் பொடி என்ன வீசி, பொன்மலை என்னப் போவ! 12

6. பிணை - பெண் மான்; 7. இந்திரன் இருக்கை - அமராவதி நகரம்; அந்தரம் - வேறுபாடு; 8. முனைவர் - முதிர்ந்த அறிவினர்; 9. அரி - பகைவர் 10. மரகதத்தலம் பொய்கையினையும், மாளிகைகள் தாமரை மலர்களையும், வெள்ளி மாடங்கள் அன்னப் பறவைகளையும் ஒத்துத் தோன்றின; 11. கஞலு தல் - விளங்குதல்.

'பூசல் விற் குமர! நோக்காய்—புகர் அற விளங்கும் பொற்பின்
காசுடைக் கதிரின் கற்றைக் கால்களால் கதுவுகின்ற
வீசு பொன் கொடிகள் எல்லாம், விசும்பினின் விரிந்த மேக-
மாசு அறத் துடைத்து, அவ் வானம் விளக்குவ போல்வ மாதோ!

'நூல் படத் தொடர்ந்த பைம் பொன் சித்திரம் நுனித்த பத்திக்
கோல் படு மணிகள் ஆய குல மணி எவையும் கூட்டி,
சால்பு அடுத்து, அரக்கன் மாடத் தனி மணி நடுவண் சார்த்தி,
மால் கடற்கு இறைவன் பூண்ட மாலை போன்று உளது—இம் மூதூர்.

'நல் நெறி அறிஞ! நோக்காய்—நளி நெடுந் தெருவின் நாப்பண்
பல் மணி மாடப் பத்தி நிழல் படப் படர்வ, பண்பால்
தம் நிறம் தெரிகிலாத, ஒரு நிறம் சார்கிலாத,
இன்னது ஓர் குலத்த என்று புலப்படா, புரவி எல்லாம். 15

'வீர! நீ பாராய்—மெல்லென் பளிங்கினால் விளங்குகின்ற,
மாரனும் மருளச் செய்த மாளிகை, மற்றோர் சோதி
சேர்தலும் தெரிவ; அன்றேல், தெரிகில; தெரிந்த காட்சி
நீரினால் இயன்ற என்ன நிழல் எழுகின்ற நீர்மை. 16

'கோல் நிறக் குனி வில் செங் கைக் குமரனே! குளிர் வெண் திங்கள்
கால் நிறக் கதிரின் கற்றை தெற்றிய ஆய காட்சி
வால் நிறத் தரளப் பந்தர், மரகதம் நடுவண் வைத்த,
பால் நிறப் பரவை வைகும் பரமனை நிகர்ப்ப, பாராய்! 17

'தோள் அவாவு அரி ஏறு அன்ன குரிசிலே! கொள்ள நோக்காய்—
நாள் அவாம் மின் தோய் மாடத்து உம்பர், ஓர் நாகர் பாவை,
காள வார் உறையின் வாங்கும் கண்ணடி, விசும்பில் கவ்வி
வாள் அரா விழுங்கிக் காலும் மதியினை நிகர்த்த வண்ணம்! 18

'கொற்ற வான் சிலைக் கை வீர! கொடி மிடை மாடக் குன்றை
உற்ற வான் கழுத்தவான ஒட்டகம், அவற்றது உம்பர்ச்
செற்றிய மணிகள் ஈன்ற சுடரினைச் செக்காரத்தின்
கற்றை அம் தளிர்கள் என்னக் கவ்விய நிமிர்வ, காணாய்! 19

'வாகை வெஞ் சிலைக் கை வீர! மலர்க் குழல் புலர்த்த, மாலைத்
தோகையர் இட்ட தூமத்து அகிற் புகை முழுதும் சுற்ற,
வேக வெங் களிற்றின் வன் தோல் மெய்யுறப் போர்த்த தையல்-
பாகனின் பொலிந்து தோன்றும் பவள மாளிகையைப் பாராய்!

13. புகர் - குற்றம்; கால்கள் - கொடிக் கம்பங்கள்; 15. நளி - பெருமை; 17. கோல் - அம்பு; நிறம் - ஒளி; தெற்றுதல் - இடையிட்டுப் பின்னுதல்; 18. நாள் - விண்மீன்கள்; காளம் - கருமை; வார் உறை - நீண்ட உறை; 19. செக்காரம் - தேமாமரம்; கவ்விய - கவ்வுதற்கு.

'காவலன் பயந்த வீரக் கார்முகக் களிறே! கற்ற
தேவர்தம் தச்சன் நீலக் காசினுல் திருந்தச் செய்தது,
ஈவது தெரியா உள்ளத்து இராக்கதர் ஈட்டி வைத்த
பாவ பண்டாரம் அன்ன, செய்குன்றம் பலவும், பாராய்! 21

'பிணை மதர்த்தனைய நோக்கம் பாழ்பட, பிடியுண்டு, அன்பின்
துணைவரைப் பிரிந்து போந்து, மருங்கு எனத் துவளும் உள்ளப்
பணம் அயிர்ப்பு எய்தும் அல்குல் பாவையர், பருவம் நோக்கும்
கண மயில் குழுவின், நம்மைக் காண்கின்ருர் தம்மைக் காணுய்!

'நாள்மலர்த் தெரியல் மார்ப! நம் பலம் காண்பான், மாடத்து
யாழ் மொழித் தெரிவைமாரும் மைந்தரும் ஏறுகின்ருர்,
''வாழ்வு இனிச் சமைந்தது அன்றே'' என்று மா நகரை எல்லாம்
பாழ்படுத்து இரியல் போவார் ஒக்கின்ற பரிசு பாராய்!' 23

**இராவணன் வானர சேனையைக் காண, கோபுரத்தின் மேல் ஏறுதல்**

இன்னவாறு இலங்கைதன்னை இளையவற்கு இராமன் காட்டி,
சொன்னவா சொல்லாவண்ணம் அதிசயம் தோன்றும் காலை,
அன்ன மா நகரின் வேந்தன், அரிக் குலப் பெருமை காண்பான்,
சென்னி வான் தடவும் செம் பொற் கோபுரத்து உம்பர்ச் சேர்ந்தான்.

## 10 இராவணன் வானரத் தானை காண் படலம்

**கோபுரத்தின்மேல் இராவணன் நின்ற நிலை**

கவடு உகப் பொருத காய் களிறு அன்னுன்,
அவள் துயக்கின் மலர் அம்பு உற வெம்பும்
சுவடுடைப் பொரு இல் தோள்கொடு, அனேகம்
குவடுடைத் தனி ஓர் குன்று என, நின்ருன். 1

21. ஈவது - ஈதல் தொழில்; பாவ பண்டாரம் - பாவங்களாகிய பொருட் குவியல்; 22. பிடியுண்ணல் - சிறைப்படல்; 23. நாழ் - நாள், எதுகை நோக்கித் திரிந்தது; பாழ்படுத்தல் - வெறுமையடையும்படி விட்டு நீங்குதல்; 24. சொன்னவா சொல்லாவண்ணம் - முன் சொன்னதையே மீண்டும் சொல்லாதவாறு.

10: 1. கவடு - (தன்னைக் கட்டிய) மரக்கிளை; துயக்கு - ஆசை.

பொலிந்ததாம் இனிது போர் எனலோடும்,
நலிந்த நங்கை எழிலால் வலி நாளும்
மெலிந்த தோள்கள் வடமேருவின் மேலும்
வலிந்து செல்ல, மிசை செல்லும் மனத்தான். **2**

செம் பொன் மௌலி சிகரங்கள் துயங்க,
அம் பொன் மேரு வரை கோபுரம் ஆக,
வெம்பு காலினை விழுங்கிட, மேல்நாள்
உம்பர் மீதில் நிமிர் வாசுகி ஒத்தான். **3**

தொக்க பூதம்அவை ஐந்தொடு துன்னிட்டு
ஒக்க நின்ற திசை ஒன்பதொடு ஒன்றும்,
பக்கமும், நிழல் பரப்பி, வியப்பால்
மிக்கு நின்ற குடை மீது விளங்க. **4**

கைத் தரும் கவரி வீசிய காலால்,
நெய்த்து இருண்டு உயரும் நீள் வரை மீதில்
தத்தி வீழ் அருவியின் திரள் சால,
உத்தரீகம் நெடு மார்பின் உலாவ, **5**

வானகத்தினில் உருப்பசி, வாசத்
தேன் அகத் திரு திலோத்தமை, செவ் வாய்
மேனகைக் குல அரம்பையர், யாரும்
சானகிக்கு அழகு தந்து, அயல் சார, **6**

வீழியின் கனி இதழ், பணை மென் தோள்,
ஆழி வந்த அர மங்கையர், ஐஞ்ஞூற்று-
ஏழ் இரண்டினின் இரண்டு பயின்றோர்,
சூழ் இரண்டு புடையும் முறை சுற்ற, **7**

முழை படிந்த பிறை முள் எயிறு, ஒள் வாள்
இழை படிந்த இள் வெண் நிலவு ஈன,
குழை படிந்தது ஒரு குன்றில், முழங்கா
மழை படிந்தனைய தொங்கல் வயங்க, **8**

ஓத நூல்கள் செவியின்வழி, உள்ளம்
சீதை சீதை என ஆர் உயிர் தேய,
நாத வீணை இசை நாரதனர் தம்
வேத கீத அமுது அள்ளி விழுங்க, **9**

2. மிசை செல்லும் - (போர்) மேல் செல்லும்; 3. மௌலி - கலசங்கள்; வாசுகி - ஈண்டு ஆதிசேடன்; 7. ஆழி - திருப்பாற்கடல்; ஐஞ்ஞூற்று ஏழ் இரண்டினின் இரண்டு - $7 \times 500 \times 2 \times 2 = 14,000$; 8. குழை - குண்டலம்; தொங்கல் - நீல மணி மாலை.

வெங் கரத்தர், அயில் வாளினர், வில்லோர்,
சங்கரற்கும் வலி சாய்வு இல் வலத்தோர்,
அங்கு அரக்கர் சதகோடி அமைந்தோர்,
பொங்கு அரத்த விழியோர் புடை சூழ, 10

கல்லில் அம் கை உலகம் கவர்கிற்போர்,
நல் இலங்கை முதலோர், நவை இல்லோர்,
சொல்லில் அங்கு ஓர் சதகோடி தொடர்ந்தோர்,
வில் இலங்கு படையோர், புடை விம்ம, 11

பார் இயங்குநர், விசும்பு படர்ந்தோர்,
வார் இயங்கு மழையின் குரல் மானும்
பேரி, அங்கண் முருடு, ஆகுளி, பெட்கும்
தூரியம், கடலின் நின்று துவைப்ப, 12

நஞ்சும் அஞ்சும் விழி நாகியர் நாண
வஞ்சி அஞ்சும் இடை மங்கையர், வானத்து
அம் சொல் இன் சுவை அரம்பையர், ஆடி,
பஞ்சமம் சிவணும் இன் இசை பாட, 13

நஞ்சு கக்கி எரி கண்ணினர், நாமக்
கஞ்சுகத்தர், கதை பற்றிய கையர்,
மஞ்சு உகக் குமுறு சொல்லினர், வல் வாய்க்
கிஞ்சுகத்த கிரி ஒத்தனர், சுற்ற, 14

கூய் உரைப்ப குல மால் வரையேனும்,
சாய் உரைப்ப அரியவாய தடந் தோள்-
வாய் உரைத்த கலவைக் களி வாசம்,
வேய் உரைப்பது என, வந்து விளம்ப, 15

வேத்திரத்தர், எரி வீசி விழிக்கும்
நேத்திரத்தர், இறை நின்றுழி நில்லாக்
காத்திரத்தர், மனை காவல் விரும்பும்
சூத்திரத்தர், பதினாயிரர் சுற்ற. 16

12. வார் - நீர்; ஆகுளி - சிறுபறை; தூரியம் - வாச்சியம்; 13. பஞ்சமம் - ஒருவகைப் பண்; சிவணும் - நிகர்க்கும்; 14. வாய்க் கிஞ்சுகர் - வாயாகிய முள்முருக்க மலரை உடையவர்; 15. கூய் உரைப்ப - (உவமையாதற்கு ஏற்றன என்று) தெளிவாகச் சொல்லுதற்கு; சாய் - சாயல், ஈண்டு ஒப்பு; வேய் - ஒற்று; 16. காத்திரம் - உடம்பு; சூத்திரத்தர் - சூட்சுமத் தன்மை அமைந்தவர்.

### இராவணன், இராமனைக் காணுதல்

தோரணத்த மணி வாயில்மிசை, சூல்
நீர் அணைத்த முகில் ஆம் என நின்றான்,
ஆரணத்தை, அரியை, மறை தேடும்
காரணத்தை, நிமிர் கண் கொடு கண்டான். 17

மடித்த வாயினன்; உழங்கு எரி வந்து
பொடித்து இழிந்த விழியன்; அதுபோழ்தின்,
இடித்த வன் திசை; எரிந்தது நெஞ்சம்;
துடித்த, கண்ணினொடு இடத் திரள் தோள்கள். 18

ஆக, ராகவனை அவ்வழி கண்டான்;
மாக ராக நிறை வாள் ஒளியோனை
ஏக ராசியினின் எய்த எதிர்க்கும்
வேக ராகு என, வெம்பி வெகுண்டான். 19

### இராவணன் வினவும், சாரன் விடையும்

'ஏனையோன் இவன் இராமன் எனத் தன்
மேனியே உரைசெய்கின்றது; வேறு இச்
சேனை வீரர் படையைத் தெரி' என்று
தான் வினவ, எதிர், சாரன் விளம்பும்: 20

'இங்கு இவன், ''படை இலங்கையர் மன்னன்
தங்கை'' என்றலும், முதிர்ந்த சலத்தால்,
அங்கை வாள்கொடு அவள் ஆகம் விளங்கும்
கொங்கை, நாசி, செவி, கொய்து குறைத்தான். 21

'அறக்கண் அல்லது ஒரு கண் இலன் ஆகி,
நிறக் கருங் கடலுள் நேமியின் நின்று,
துறக்கம் எய்தியவரும் துறவாத
உறக்கம் என்பதனை ஓட முனிந்தான். 22

'கை அவன் தொட அமைந்த கரத்தான்,
ஐய! வாலியொடு இவ் அண்டம் நடுங்கச்
செய்த வன் செருவினின் திகழ்கின்றான்
வெய்யவன் புதல்வன்; யாரினும் வெய்யான். 23

19. ராகம் - செந்நிறம்; ஒளியோன் - சூரியன்; மாக நிறை ராக வாள் ஒளியோன் எனக் கூட்டுக; ஏக ராசி - அமாவாசை, சூரியனும் சந்திரனும் ஒருங்கு சேர்தல் பற்றி அமாவாசை ஏகராசி எனப்பட்டது; 22. அறக்கண் - தருமத்தினிடம்; கண்ணிலன் - கண்ணைச் செலுத்தாதவன்; கடலுள் நேமியின் நின்று - கடலுக்குப் பாதுகாப்பாக நிற்கும் சக்கரவாள கிரியைப் போல நின்று.

'தந்தை மற்றையவன் சார்வு இல் வலத்தோர்
அந்தரத்தர் அமுது ஆர்கலி காண,
மந்தரத்தினொடும் வாசுகியோடும்,
சுந்தரப் பெரிய தோள்கள் திரித்தான்.† 24

'நடந்து நின்றவன், நகும் கதிர் முன்பு
தொடர்ந்தவன்; உலகு, சுற்றும் எயிற்றின்
இடந்து எழுந்தவனை ஒத்தவன்; வேலை
கடந்தவன் சரிதை கண்டனை அன்றே? 25

'நீலன், நின்றவன்; நெருப்பின் மகன்; திண்
சூலமும் கயிறும் இன்மை துணிந்தும்,
ஆலம் உண்டவன் அடுந் திறல் மிக்கான்;
''காலன்'' என்பர், இவனைக் கருதாதார். 26

'வேறாக நின்றான், நளன் என்னும் விலங்கல் அன்னான்;
ஏறு, வருணன் வழி தந்திலன் என்று இராமன்
சீறாத உள்ளத்து எழு சீற்றம் உகுத்த செந் தீ
ஆறாதமுன்னம், அகன் வேலையை ஆறு செய்தான். 27

'முக் காலமும் மொய்ம் மதியால் முறையின் உணர்வான்,
புக்கு ஆலம் எழப் புணரிப் புலவோர் கலக்கும்
அக் காலம் உள்ளான், கரடிக்கு அரசு ஆகி நின்றான்,
இக் காலம் நின்றும் உலகு ஏழும் எடுக்க வல்லான். 28

'சேனாபதிதன் அயலே, இருள் செய்த குன்றின்
ஆனா மருங்கே, இரண்டு ஆடகக் குன்றின் நின்றார்,
ஏனோரில் இராமன் இலக்குவன் என்னும் ஈட்டார்;
வானோர்தம் மருத்துவர் மைந்தர்; வலிக்கண் மிக்கார். 29

'உவன்காண் குமுதன்; குமுதாக்கனும் ஊங்கு அவன்காண்,
இவன்காண் கவயன்; கவயாக்கனும் ஈங்கு இவன்காண்;
சிவன்காண் அயன்காண் எனும் தூதனைப் பெற்ற செல்வன்
அவன்காண், நெடுங் கேசரி என்பவன், ஆற்றல் மிக்கான். 30

'முரபன், நகு தோளவன், மூரி மடங்கல் என்னக்
கர பல் நகம் அன்னவை மின் உகக் காந்துகின்றான்;
வர பல் நகம்தன்னையும் வேரொடு வேண்டின் வாங்கும்
சரபன் அவன்; இவன் சதவலி ஆய தக்கோன். 31

25. சரிதை - ஒழுகலாறு, செயல்; 29. சேனாபதி - நீலன்; வானோர்தம் மருத்துவர் - தேவ மருத்துவரான அசுவினி தேவர்; 30. குமுதாக்கன் - அல்லி மலர் போன்ற கண்ணையுடையவன்; கவயாக்கன் - பசுவின் கண்ணைப் போன்ற கண்ணையுடையவன்; 31. வரம் - மேன்மை.

'மூன்று கண் இலன் ஆயினும், மூன்று எயில் எரித்தோன்
போன்று நின்றவன் பனசன்; இப் போர்க்கு எலாம் தானே
ஏன்று நின்றவன் இடபன்; மற்று இவன்தனக்கு எதிரே
தோன்றுகின்றவன் சுடேணன், மூதறிவொடு தொடர்ந்தோன்.

'வெதிர் கொள் குன்று எலாம் வேரொடும் வாங்கி, மேதினியை
முதுகு நொய்து எனச் செய்தவன், கனலையும் முனிவோன்,
கதிரவன் மகற்கு இட மருங்கே நின்ற காளை,
ததிமுகன்; அவன், சங்கன் என்று உரைக்கின்ற சிங்கம். 33

'அண்ணல்! கேள்: இதற்கு அவதியும் அளவும் ஒன்று உளதோ?
விண்ணின் மீனினைக் குணிப்பினும், வேலையுள் மீனை
எண்ணி நோக்கினும், இக் கடல் மணலினை எல்லாம்
கண்ணி நோக்கினும், கணக்கு இலது' என்றனன், காட்டி. 34

**இராவணன், வானரப் படையை இகழ்தல்**

சினம் கொள் திண் திறல் அரக்கனும், சிறு நகை செய்தான்,
'புனம் கொள் புன் தலைக் குரங்கினைப் புகழுதி போலாம்;
வனங்களும் படர் வரைதொறும் திரிதரு மானின்
இனங்களும் பல என் செயும், அரியினை?' என்றான். 35

## 11 மகுட பங்கப் படலம்

**'அரக்கரை இனையர் எனத் தெரிவி' என்று, இராமன் கேட்டல்**

என்னும் வேலையின், இராவணற்கு இளவலை, இராமன்
'கன்னி மா மதில் நகர்நின்று நம் வலி காண்பான்
முன்னி, வானினும் மூடி நின்றார்களை, முறையால்,
இன்ன நாமத்தர், இனையர், என்று இயம்புதி' என்றான். 1

**வீடணன், இராவணனைக் காட்டுதல்**

'நாறு தன் குலக் கிளை எலாம் நரகத்து நடுவான்
சேறு செய்து வைத்தான், உம்பர் திலோத்தமை முதலாக்
கூறும் மங்கையர் குழாத்திடைக் கோபுரக் குன்றத்து
ஏறி நின்றவன், புன் தொழில் இராவணன்' என்றான். 2

33. நொய்து - பாரம் அற்றது.

11: 2. கிளை நாற்றாகவும், நரகம் சேறாகவும் உருவகம் செய்யப்பட்டன.

#### சுக்கிரீவன், இராவணன்மேல் பாய்தல்

கருதி மற்றென்று கழறுதல்முனம், விழிக் கனல்கள்
பொருது புக்கன முந்துற, சூரியன் புதல்வன்,—
சுருதி அன்னவன், 'சிவந்த நல் கனி' என்று சொல்ல,
பருதிமேல் பண்டு பாய்ந்தவன் ஆம் என,—பாய்ந்தான். 3

சுதையத்து ஓங்கிய சுவேலத்தின் உச்சியைத் துறந்து,
சிதையத் திண் திறல் இராவணக் குன்றிடைச் சென்றான்,
ததையச் செங் கரம் பரப்பிய தன் பெருந் தாதை
உதையக் குன்றின்நின்று உகு குன்றில் பாய்ந்தவன் ஒத்தான்.

பள்ளம் போய்ப் புகும் புனல் எனப் படியிடைப் படிந்து
தள்ளும் பொற் கிரி சலிப்புறக் கோபுரம் சார்ந்தான்,
வெள்ளம்போல் கண்ணி அழுதலும், இராவணன்மேல் தன்
உள்ளம்போல் செலும் கழுகினுக்கு அரசனும் ஒத்தான்.* 5

கரிய கொண்டலை, கருணை அம் கடலினை, காணப்
பெரிய கண்கள் பெற்று உவக்கின்ற அரம்பையர், பிறரும்,
உரிய குன்றிடை உரும் இடி வீழ்தலும், உலைவுற்று
இரியல்போயின மயிற் பெருங் குலம் என இரிந்தார். 6

#### இருவரும் கை கலத்தல்

கால இருள் சிந்து கதிரோன்-மதலை கண்ணுற்று,
ஏல எதிர் சென்று அடல் இராவணனை எய்தி,
நீல மலை முன் கயிலை நின்றது என, நின்றான்;
ஆலவிடம் அன்று வர, நின்ற சிவன் அன்னான். 7

'இத் திசையின் வந்த பொருள் என்?' என, இயம்பான்,
தத்தி எதிர் சென்று, திசை வென்று உயர் தடந் தோள்
பத்தினொடு பத்துடையவன் உடல் பதைப்ப,
குத்தினன் உரத்தில், நிமிர் கைத் துணை குளிப்ப. 8

3. பொருது - போட்டியிட்டுக்கொண்டு; பொருது முந்துறப் புக்கன எனக் கூட்டுக; 4. சுதையத்து ஓங்கிய - நட்சத்திர மண்டிலம் வரை உயர்ந்த, வெண்ணிறத்தோடு உயர்ந்த எனலும் ஆம்; உகு குன்று - சூரியன் மறையும் குன்று; 5. பொற் கிரி - திரிகூட மலை, மேருவினின்று பிரிந்தது ஆதலின் அப் பெயர் பெற்றது; 7. கால இருள் - நெடுங்காலமாகச் செறிந்து நிற்கும் புற இருள், இராப்பொழுதின் மிக்கு இருக்கும் இருள்; ஏல - பொருந்த; 8. குளிப்ப - அழுந்த.

திருகிய சினத்தொடு செறுத்து எரி விழித்தான்,
ஒருபது திசைக்கணும் ஒலித்த ஒலி ஒப்ப,
தரு வனம் எனப் புடை தழைத்து உயர் தடக் கை
இருபதும் எடுத்து, உரும் இடித்தென அடித்தான். 9

அடித்த விரல் பட்ட உடலத்துழி இரத்தம்
பொடித்து எழ, உறுக்கி எதிர் புக்கு, உடல் பொருந்தி,
கடுத்த விசையின் கடிது எழுந்து, கதிர் வேலான்
முடித் தலைகள் பத்தினும் முகத்தினும் உதைத்தான். 10

உதைத்தவன் அடித் துணை பிடித்து, ஒரு கணத்தில்,
பதைத்து உலைவுறப் பல திறத்து இகல் பரப்பி,
மதக் கரியை உற்று அரி நெரித்தென மயக்கி,
சுதைத் தலனிடை, கடிது அடிக்கொடு துகைத்தான். 11

துகைத்தவன் உடற் பொறை சுருக்கொள இறுக்கி,
தகைப் பெரு வலத்தொடு தலத்திடை அமுக்கி,
வகைப் பிறை நிறத்து எயிறுடைப் பொறி வழக்கிக்
குகைப் பொழி புதுக் குருதி கைக்கொடு குடித்தான். 12

கைக்கொடு குடித்தவன் உடல் கனக வெற்பை,
பைக் கொடு விடத்து அரவு எனப் பல கை பற்றி,
மைக் கொடு நிறத்தவன் மறத்தொடு, புறத்தில்
திக்கொடு, பொருப்பு உற நெருப்பொடு திரித்தான். 13

திரித்தவன் உரத்தின் உகிர் செற்றும் வகை குத்தி,
பெருத்து உயர் தடக் கைகொடு அடுத்து இடை பிடித்து,
கருத்து அழிவுற,—திரி திறத்து எயில், கணத்து அன்று
எரித்தவனை ஒத்தவன்,—எடுத்து அகழி இட்டான். 14

இட்டவனை இட்ட அகழில் கடிதின் இட்டான்,
தட்ட உயரத்தினில் உறும் தசமுகத்தான்;
ஒட்ட உடனே அவனும் வந்து, அவனை உற்றான்;
விட்டிலர் புரண்டு இருவர், ஓர் அகழின் வீழ்ந்தார். 15

9. ஒலித்த ஒலி ஒருபது திசைக்கணும் ஒப்ப, உரும் இடித்தென, தடக் கை இருபதும் எடுத்து அடித்தான் என இயையும்; 11. சுதைத்தலன் - சுண்ணாம்பு தீற்றப்பட்ட தரை; அடிக்கொடு - கால்களால்; 13. இராவணன் இருபது கைகளாலும் சுக்கிரீவன் உடம்பினைப் பற்றினமை, அனந்தன் பல படங்களால் மேரு மலையினைப் பற்றியது போன்று தோன்றியது; 15. ஒட்டுதல் - இணைந்து பொருதல்.

விழுந்தனர், சுழன்றனர்; வெகுண்டனர், திரிந்தார்;
அழுந்தினர், அழுந்திலர்; அகன்றிலர், அகன்றார்;
எழுந்தனர், எழுந்திலர்; எதிர்ந்தனர் முதிர்ந்தார்;
ஒழிந்தனர், ஒழிந்திலர்; உணர்ந்திலர்கள், ஒன்றும். 16

அந்தர அருக்கன் மகன்,—ஆழி அகழ் ஆக,
சுந்தரமுடைக் கரம் வலிப்பது ஓர் சுழிப்பட்டு,
எந்திரம் எனத் திரி இரக்கம் இல் அரக்கன்
மந்தரம் என,—கடையும் வாலியையும் ஒத்தான். 17

ஊறு படு செம்புனல், உடைத்த கரை உற்ற
ஆறு படர்கின்றன எனப் படர, அன்னார்,
பாறு, பொருகின்றன பருந்து, இவை எனப் போய்,
ஏறினர் விசும்பிடை; இரிந்த, உலகு எல்லாம். 18

தூர நெடு வானின் மலையும் சுடரவன் சேய்,
காரினெடு மேரு நிகர் காய் சின அரக்கன்
தாருடைய தோள்கள் பலவும் தழுவ நின்றான்,
ஊரினெடு கோள் கதுவு தாதையையும் ஒத்தான். 19

பொங்கு அமர் விசும்பிடை உடன்று பொரு போழ்தில்,
செங் கதிரவன் சிறுவனை, திரள் புயத்தால்,
மங்கல வயங்கு ஒளி மறைத்த வல் அரக்கன்,
வெங் கதிர் கரந்தது ஒரு மேகம் எனல் ஆனான். 20

நூபுர மடந்தையர் கிடந்து அலற, நோனார்
மா புரம் அடங்கலும் இரிந்து அயர, வன் தாள்
மீ புர மடங்கல் என, வெங் கதிரவன் சேய்,
கோபுரம் அடங்க இடிய, தனி குதித்தான். 21

ஒன்றுற விழுந்த உருமைத் தொடர ஓடா,
மின் தெரி எயிற்றின் ஒரு மேகம் விழும் என்ன,
'தின்றிடுவென்' என்று எழு சினத் திறல் அரக்கன்
பின் தொடர வந்து, இரு கரத் துணை பிடித்தான். 22

வந்தவனை நின்றவன் வலிந்து, எதிர் மலைந்தான்,
அந்தகனும் அஞ்சிட, நிலத்திடை அரைத்தான்;
எந்திரம் எனக் கடிது எடுத்து, அவன் எறிந்தான்;
கந்துகம் எனக் கடிது எழுந்து, எதிர் கலந்தான். 23

16. இப் போர்ச் செயல் உழிஞைத் திணையுள், 'நீர்ச் செரு வீழ்ந்த பாசி' என்னும் துறையின்பாற்படும்; 19. ஊரினெடு கோள் - ஊர்கோள், பரி வேடம்; 20. மங்கல வயங்கு ஒளி - நலத்துடன் விளங்கும் (மேனியின்) ஒளி- 21. மீ புரம் - உடலின் மேற்பகுதி; மடங்கல் - சிங்கம்; 23. கந்துகம் - பந்து.

படிந்தனர், பரந்தனர், பரந்தது ஓர் நெருப்பின்
கொடுஞ் சினம் முதிர்ந்தனர், உரத்தின்மிசை குத்த,
நெடுஞ் சுவர் பிளந்தன; நெரிந்த நிமிர் குன்றம்;
இடிந்தன, தகர்ந்தன, இலங்கை மதில் எங்கும். 24

செறிந்து உழல் கறங்கு அனையர் மேனி நிலை தேரார்,
பிறிந்தனர் பொருந்தினர் எனத் தெரிதல் பேணார்,
எறிந்தனர்கள், எய்தினர்கள், இன்னர் என, முன் நின்று
அறிந்திலர், அரக்கரும்; அமர்த் தொழில் அயர்ந்தார். 25

#### சுக்கிரீவனைக் காணாது, இராமன் இரங்கி உரைத்தல்

இன்னது ஓர் தன்மை எய்தும் அளவையின், எழிலி வண்ணன்,
மன்னுயிர் அனைய காதல் துணைவனை வரவு காணான்,
'உன்னிய கருமம் எல்லாம் உன்னொடு முடிந்த' என்னா,
தன் உணர்வு அழிந்து, சிந்தை அலமந்து, தளர்ந்து, சாய்ந்தான். 26

'ஒன்றிய உணர்வே ஆய ஓர் உயிர்த் துணைவ! உன்னை
இன்றி யான் உளனாய் நின்று, ஒன்று இயற்றுவது இயைவது அன்றால்;
அன்றியும், துயரத்து இட்டாய், அமரரை; அரக்கர்க்கு எல்லாம்
வென்றியும் கொடுத்தாய்; என்னைக் கெடுத்தது உன் வெகுளி' என்
[றான்.

'தெய்வ வெம் படையும், தீரா மாயமும், வல்ல தீயோன்
கையிடைப் புக்காய்; நீ வேறு எவ்வணம் கடத்தி, காவல்?
வையம் ஓர் ஏழும் பெற்றால், வாழ்வெனோ? வாராய் ஆகில்,
உய்வெனோ?—தமியனேனுக்கு உயிர் தந்த உதவியோனே! 28

'ஒன்றாக நினைய, ஒன்றாய் விளைந்தது, என் கருமம்; அந்தோ!
என்றானும், யானோ வாழேன்; ''நீ இலை'' எனவும் கேளேன்;
இன்று ஆய பழியும் நிற்க, நெடுஞ் செருக் களத்தின் என்னைக்
கொன்றாய் நீ அன்றோ? நின்னைக் கொல்லுமேல், குணங்கள் தீயோன்.

'இறந்தனை என்ற போதும் இருந்து, யான் அரக்கர் என்பார்
திறம்தனை உலகின் நீக்கி, பின் உயிர் தீர்வெனேனும்,
''புறந்தரு பண்பின் ஆய உயிரொடும் பொருந்தினானை
மறந்தனன்; வலியன்'' என்பார்; ஆதலால், அதுவும் மாட்டேன். 30

'அழிவது செய்தாய், ஐய! அன்பினால்; அளியத்தேனுக்கு
ஒழிவு அரும் உதவி செய்த உன்னை யான் ஒழிய வாழேன்;
எழுபது வெள்ளம் தன்னின் ஈண்டு ஓர் பேர் எஞ்சாது ஏகி,
செழு நகர் அடையின் அன்றோ, இத் துயர் தீர்வது உண்டோ?'

27. ஒன்றிய உணர்வு - ஒத்த உணர்ச்சி; 28. தமியனேன் - கதியற்றவன்.

சுக்கிரீவன், இராவணன் மகுடத்துடன் இராமனை அடைதல்

என்று அவன் இரங்கும் காலத்து, இருவரும் ஒருவர்தம்மின்
வென்றிலர் தோற்றிலாராய், வெஞ் சமம் விளைக்கும் வேலை,
வன் திறல் அரக்கன் மௌலி மணிகளை வலியால் வாங்கி,
''பொன்றினென் ஆகின், நன்று'' என்று அவன் வெள்க, இவனும்
[போந்தான்.

தொழு மணி முடிகள்தோறும் கொண்ட நல் மணியின் கூட்டம்
அழுது அயர்வுறுகின்றான்தன் அடித்தலம் அதனில் சூட்டி,
தொழுது, அயல் நாணி நின்றான்; தூயவர் இருவரோடும்
எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓர் உயிர் எய்திற்று அன்றே. 33

இராமன் சுக்கிரீவனைத் தழுவி, தன் அன்பை வெளியிடுதல்

என்பு உறக் கிழிந்த புண்ணின் இழி பெருங் குருதியோடும்
புன் புலத்து அரக்கன்தன்னைத் தீண்டிய தீமை போக;
அன்பனை அமரப் புல்லி, மஞ்சனம் ஆட்டி விட்டான்,
தன் பெரு நயனம் என்னும் தாமரை சொரியும் நீரால். 34

'ஈர்கின்றது அன்றே, என்றன் உள்ளத்தை; இங்கும் அங்கும்
பேர்கின்றது ஆவி; யாக்கை பெயர்கின்றது இல்லை; பின்னை,
தேர்கின்ற சிந்தை அன்றோ திகைத்தனே?' என்று, தெண் நீர்
சோர்கின்ற அருவிக் கண்ணன் துணைவனை நோக்கிச் சொல்லும்:

'கல்லினும் வலிய தோளாய்! நின்னை அக் கருணை இல்லோன்
கொல்லுதல் செய்தான் ஆகின், கொடுமையால் கொற்றம் பேணி,
பல் பெரும் பகழி மாரி வேரொடும் பறிய நூறி,
வெல்லினும், தோற்றேன் யானே அல்லெனோ, விளிந்திலாதேன்?'

'பெருமையும் வண்மைதானும், பேர் எழில் ஆண்மைதானும்,
ஒருமையின் உணர நோக்கின், பொறையினது ஊற்றம் அன்றே!
அருமையும், அடர்ந்து நின்ற பழியையும் அயர்ந்தாய் போல
இருமையும் கெடுக்கலுற்றாய்; என் நினைந்து, என் செய்தாய் நீ!

'இந் நிலை விரைவின் எய்தாது, இத் துணை தாழ்த்தி ஆயின்,
நல் நுதல் சீதையால் என்? ஞாலத்தால் பயன் என்? நம்பீ!
உன்னை யான் தொடர்வல்; என்னைத் தொடரும் இவ் உலகம்; என்றால்,
பின்னை என், இதனைக் கொண்டு? விளையாடி, பிழைப்ப செய்தாய்!' 38

34. தீமை - தீட்டு; 35. தேர்கின்ற சிந்தை - எதனையும் ஆராய்ந்து துணியவல்ல தெளிவுடைய மனம்; 36. கொடுமையால் - கொடுமையோடு; 37. பெருமை - செயற்கரிய செய்தலாகிய பெருந்தகைமை.

**சுக்கிரீவன் மறு மொழி**

'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்;
நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்கமாட்டேன்;
கேட்டிலேன் இன்று கண்டும், கிளி மொழி மாதரானை
மீட்டிலேன்; தலைகள் பத்தும் கொணர்ந்திலேன், வெறுங் கை வந்
[தேன்.

'வன் பகை நிற்க, எங்கள் வானரத் தொழிலுக்கு ஏற்ற
புன் பகை காட்டும் யானோ புகழ்ப் பகைக்கு ஒருவன் போலாம்?
என் பகை தீர்த்து, என் ஆவி அரசொடும் எனக்குத் தந்த
உன் பகை உனக்குத் தந்தேன்; உயிர் சுமந்து உழலாநின்றேன்.

'செம்புக்கும் சிவந்த செங் கண் திசை நிலைக் களிற்றின் சீற்றக்
கொம்புக்கும் குறைந்த அன்றே, என்னுடைக் குரக்குப் புன் தோள்?
''அம்புக்கு முன்னம் சென்று, உன் அரும் பகை முடிப்பல்'' என்று
வெம்புற்ற மனமும், யானும், தீது இன்றி, மீள வந்தேன். 41

'நூல் வலி காட்டும் சிந்தை நும் பெருந் தூதன், வெம் போர்
வேல் வலி காட்டுவார்க்கும், வில் வலி காட்டுவார்க்கும்,
வால் வலி காட்டிப் போந்த வள நகர் புக்கு, மற்று என்
கால் வலி காட்டிப் போந்தேன்; கை வலிக்கு அவதி உண்டோ?'

**வீடணன், சுக்கிரீவனது வீரத்தைப் பாராட்டுதல்**

இன்னன பலவும் பன்னி, இறைஞ்சிய முடியன் நாணி,
மன்னவர் மன்னன் முன்னர், வானர மன்னன் நிற்ப,
அன்னவன் தன்னை நோக்கி, அழகனை நோக்கி, ஆழி
மின் என விளங்கும் பைம் பூண் வீடணன் விளம்பலுற்றான்;

'வாங்கிய மணிகள், அன்னான் தலைமிசை மௌலி மேலே
ஓங்கிய அல்லவோ? மற்று, இனி அப்பால் உயர்ந்தது உண்டோ?
தீங்கினன் சிரத்தின் மேலும், உயிரினும், சீரிது அம்மா!
வீங்கிய புகழை எல்லாம் வேரொடும் வாங்கி விட்டாய்! 44

'பாரகம் சுமந்த பாம்பின் பணாமணி பறிக்க வேண்டின்,
வார் கழல் காலினாலே கல்ல வல்லவனை முன்னா,
தார் கெழு மௌலி பத்தின் தனி மணி வலிதின் தந்த
வீரதை விடைவலோற்கும் முடியுமோ? வேறும் உண்டோ? 45

39. இராமன்மீது பரிவுகொண்டு உதவி புரிந்தமையினாலேயே சடாயுவும் குகனும் முறையே பெரியவுடையார் என்றும், குகப்பெருமாள் என்றும் வைணவ மரபில் பாராட்டிக் கூறப்படுவர்; 41. செம்புக்கும் - தாமிரத்தைக் காட்டிலும்; 42. நூல் வலி - நூல்களின் பெருமை; சிந்தை - ஆராய்ச்சி; கால் வலி காட்டல் - காலால் விரைந்து ஓடி மீளுதல்; 45. முன்னா - முற்பட்டு; வீரதை - வீரத்தன்மை.

'கரு மணி கண்டத்தான்தன் சென்னியில் கறை வெண் திங்கள்,
பரு மணி வண்ணன் மார்பின் செம் மணி, பறித்திட்டாலும்,—
தரு மணி இமைக்கும் தோளாய்!—தசமுகன் முடியில் தைத்த
திரு மணி பறித்துத் தந்த வென்றியே சீரிது அன்றோ? 46

'தொடி மணி இமைக்கும் தோளாய்;—சொல் இனி வேறும் உண்டோ?
வடி மணி வயிர ஒள் வாள் சிவன்வயின் வாங்கிக் கொண்டான்
முடி மணி பறித்திட்டாயோ? இவன் இனி முடிக்கும் வென்றிக்கு
அடி மணி இட்டாய் அன்றே?—அரிக் குலத்து அரச!' என்றான்.

**இராமன், சுக்கிரீவன் பெற்ற வெற்றியைப் போற்றுதல்**

'வென்றி அன்று என்றும், வென்றி வீரர்க்கு விளம்பத்தக்க
நன்றி அன்று என்றும், அன்று; நானிலம் எயிற்றில் கொண்ட
பன்றி அன்றுஆகின், ஈது ஆர் இயற்றுவார் பரிவின்?' என்னா,
'இன்று இது வென்றி' என்று என்று, இராமனும் இரங்கிச் சொன்னான்.

**கதிரவன் மறைவு**

தன் தனிப் புதல்வன் வென்றித் தசமுகன் முடியில் தைத்த
மின் தளிர்த்தனைய பல் மா மணியினை வெளியில் கண்டான்;
'ஒன்றுஒழித்துஒன்று ஆம்' என்று, அவ் அரக்கனுக்கு ஒளிப்பான்போல,
வன் தனிக் குன்றுக்கு அப்பால், இரவியும் மறையப் போனான்.

**இராமனும் இராவணனும் தத்தம் இருக்கை சேர்தல்**

கங்குல் வந்து இறுத்த காலை, கை விளக்கு எடுப்ப, காவல்
வெங் கழல் அரக்கன் மௌலிமிசை மணி விளக்கம் செய்ய,
செங் கதிர் மைந்தன் செய்த வென்றியை நிறையத் தேக்கிப்
பொங்கிய தோளினானும், இழிந்து போய், இருக்கை புக்கான்.

என்றானும் இனைய தன்மை எய்தாத இலங்கை வேந்தன்,
நின்றார்கள் தேவர் கண்டார் என்பது ஓர் நாணம் நீள,
அன்று ஆய மகளிர் நோக்கம் ஆடவர் நோக்கம் ஆக
பொன்றாது பொன்றினான், தன் புகழ் என இழிந்து, போனான்.

46. தரு மணி - புனையப் பெற்று ஒளிரும் மணியணி; தருதல் - புனைதல்; 47. சொல் - புகழ்; வடி மணி - ஆராய்ந்து எடுத்த மணி; 51. ஆய மகளிர் - பலராய்க் குழுமி வந்த அந்தப்புர மகளிர்; ஆடவர் நோக்கம் ஆதல் ; ஆடவர் பார்வை போலக் காதலை உண்டாக்காமல் தோன்றல்.

# 12 அணி வகுப்புப் படலம்

**இராவணன் மானத்தால் வருந்தி, துயில முயலுதல்**

மானத்தான் ஊன்றப்பட்ட மருமத்தான், வதனம் எல்லாம்
கூனல் தாமரையின் தோன்ற, வான் தொடும் கோயில் புக்கான்.
பானத்தான் அல்லன்; தெய்வப் பாடலான் அல்லன்; ஆடல்
தானத்தான் அல்லன்; மெல்லென் சயனத்தான்; உரையும் தாரான்.

வை எயிற்றாலும், நேரா மணி இழந்து இரங்கலாலும்,
பையுயிர்த்து அயரும் பேழ் வாய்ப் பல் தலைப் பரப்பினாலும்,
மெய்யனை, திரையின் வேலை மென் மலர்ப் பள்ளி ஆன
ஐயனை, பிரிந்து வைகும் அனந்தனே—அரக்கர் வேந்தன். 2

தாயினும் பழகினார்க்கும் தன் நிலை தெரிக்கல் ஆகா
மாய வல் உருவத்தான் முன் வருதலும், வாயில் காப்பான்,
'"சேயவர் சேனை நண்ணி, செய் திறம் தெரித்தி நீ" என்று
ஏயவன் எய்தினான்' என்று அரசனை இறைஞ்சிச் சொன்னான்.

**இராவணன் வினவும், ஒற்றன் சார்த்தூலன் மறுமொழியும்**

'அழை' என, எய்தி, பாதம் வணங்கிய அறிஞன்தன்னை,
'பிழை அற அறிந்த எல்லாம் உரைத்தி' என்று அரக்கன் பேச,
முழை உறு சீயம் அன்னான் முகத்தினால் அகத்தை நோக்கி,
குழையுறு மெய்யன், பைய, வரன்முறை கூறலுற்றான்: 4

'வீரிய! விதியின் எய்தி, பதினெழு வெள்ளத்தோடும்,
மாருதி, மேலை வாயில் உழிஞைமேல் வருவதானான்;
ஆரியன், அமைந்த வெள்ளம் அத்தனையோடும், வெற்றிச்
சூரியன் மகனைத் தன்னைப் பிரியலன் நிற்கச் சொன்னான். 5

'அன்றியும், பதினேழ் வெள்ளத்து அரியொடும் அரசன் மைந்தன்,
தென் திசை வாயில் செய்யும் செரு எலாம் செய்வதானான்;
ஒன்று பத்து ஆறு வெள்ளத்து அரியொடும் துணைவரோடும்
நின்றனன், நீலன் என்பான், குண திசை வாயில் நெற்றி. 6

12: 1. பானம் - தேறல் முதலியவற்றைப் பருகுதலாகிய நுகர்ச்சி; ஆடல் தானம் - நாடக அரங்கம்; 2. பையுயிர்த்து - மெல்லப் பெருமூச்சு விட்டு; 5. உழிஞை - பகைவரது மதிலை வளைத்தலாகிய போர்செயல்; 6. அரசன் மைந்தன் - அங்கதன்; நெற்றி - முகப்பு.

'இம்பரின் இயைந்த காயும் கனியும் கொண்டு, இரண்டு வெள்ளம்
வெம்பு வெஞ் சேனைக்கு எல்லாம் உணவு தந்து உழலவிட்டான்;
உம்பியை, வாயில்தோறும் நிலை தெரிந்து உணரச் சொன்னான்;
தம்பியும் தானும் நிற்பதாயினன்; சமைவு ஈது' என்றான். 7

**இராவணன், அமைச்சரோடு ஆலோசனை நிகழ்த்தல்**

சார்த்தூலன் இதனைச் சொல்ல, தழல் சொரி தறுகணானும்,
பார்த்து, ஊழி வடவை பொங்க, 'படுவது படுமா பார்த்தி;
போர்த் தூளி துடைப்பென் நாளை, அவர் உடற்பொறையின்நின்றும்
தேர்த்து ஊறு குருதிதன்னால்' என்றனன், எயிறு தின்னா. 8

மா அணை நீலக் குன்றத்து இள வெயில் வளர்ந்தது என்ன,
தூ அணை குருதிச் செக்கர்ச் சுவடு உறப் பொலிந்த தோளான்,
ஏ அணை வரி வில் காமன் கணை பட எரியாநின்ற
பூ அணை மாறி, வேறு ஓர் புனை மணி இருக்கை புக்கான்.* 9

செய்வன முறையின் எண்ணி, திறத்திறம் உணர்வின் தேர,
மை அறு மரபின் வந்த அமைச்சரை, 'வருக!' என்றான்—
பொய் எனப் பளிங்கின் ஆய இருக்கையின் புறத்தைச் சுற்றி,
ஐ-இரண்டு ஆய கோடிப் பேய்க் கணம் காப்பது ஆக்கி. 10

**இராவணனது வினா**

அளந்து அறிவு அரியர் ஆய அமைச்சரை அடங்க நோக்கி,
'வளைந்தது குரங்கின் சேனை, வாயில்கள்தோறும் வந்து;
விளைந்தது பெரும் போர் என்று விட்டது; விடாது, நம்மை;
உளைந்தனம்; என்ன எண்ணி, என் செயற்கு உரிய?' என்றான்.

**நிகும்பன் எதிரியை இகழ்ந்து கூறுதல்**

'எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம் எயிலை முற்றும்
தழுவின என்று செய்யத் தக்கது சமைதி போலாம்;
அழுவ நீர் வேலை அன்னது ஆயிர வெள்ளம் அன்றே?
உழிஞையைத் துடைக்க, நொச்சி உச்சியில் கொண்டது, உன் ஊர். 12

7. சமைவு - ஏற்பாடு; 8. தேர்த்து ஊறு - தேரின் கண்ணவாய் ஊறிப் பெருகும்; 9. மா அணை - பெருமை பொருந்திய; 11. விட்டது - ஆகி விட்டது; 12. அழுவ நீர் வேலை - ஆழமான நீர்ப்பரப்பையுடைய கடல்; நொச்சி - மாற்றார்க்கு எதிரூன்றித் தம் மதில் காப்போர் சூடும் மாலை; உச்சியில் கொண்டது - தலையில் சூடியுள்ளதாகிய படை.

'எழு, மழு, தண்டு, வேல், வாள், இலை நெடுஞ் சூலம் என்று இம்
முழு முதற் படைகள் ஏந்தி, இராக்கதர் முனைந்த போது,
தொழுது தம் படைகள் முன் இட்டு, ஓடுவார் சுரர்கள் என்றால்,
விழுமிது, குரங்கு வந்து வெறுங் கையால் கொள்ளும் வென்றி!

மாதுலத் தலைவனான மாலி கூறுதல்

'ஈது இவண் நிகழ்ச்சி' என்னா, எரி விழித்து, இடியின் நக்கு,
பூதலத்து அடித்த கையன், நிகும்பன் என்று ஒருவன் பொங்க,
'வேதனைக் காமம் அந்தோ வேரொடும் கெடுத்தது' என்னா,
மாதுலத் தலைவன் பின்னும் அன்பின் ஓர் மாற்றம் சொன்னான்:

'புக்கு எரி மடுத்து, இவ் ஊரைப் பொடி செய்து போயினாற்குச்
சக்கரம் உண்டோ, கையில்? தசமுகன் தலைகள் ஆன
இக் கிரி பத்தின் மௌலி இன மணி இடந்து கொண்ட
சுக்கிரீவற்கும் உண்டோ, சூலமும் வேலும் வாளும்? 15

'தொடைக் கலத்து இராமன் வாளி தோன்றுதல் முன்னம், தோன்று
இடைக்கு அலமருதல் செய்யும் முலையினாள் தன்னை ஈந்து,
படைக்கலம் உடைய நாம், அப் படை இலாப் படையை, ஈண்ட
அடைக்கலம் புகுவது அல்லால், இனிப் புகும் அரணும் உண்டோ?' 16

இராவணன், மாலியைக் கடிந்து கூற, அவன் பேசாதிருத்தல்

என்புழி மாலி தன்னை எரி எழ நோக்கி, 'என்பால்
வன் பழி தருதி போலாம்; வரன்முறை அறியா வார்த்தை,
அன்பு அழி சிந்தை தன்னால், அடாதன அறையல்' என்றான்,
பின் பழி எய்த நின்றான்; அவன் பின்னைப் பேச்சு விட்டான். 17

இராவணன் சேனையை அணிவகுக்குமாறு கட்டளையிடுதல்

'காட்டிய காலகேயர் கொழு நிணக் கற்றை காலத்
தீட்டிய படைக் கை வீரச் சேனையின் தலைவ! தெள்ளி
ஈட்டிய அரக்கர் தானை இருநூறு வெள்ளம் கொண்டு,
கீட்டிசை வாயில் நிற்றி, நின் பெருங் கிளையினோடும். 18

'காலன்தன் களிப்புத் தீர்த்த மகோதர! காலையே போய்,
மால் ஒன்றும் மனத்து வீரன் மாபெரும்பக்கனோடும்
கூலம் கொள் குரங்கை எல்லாம் கொல்லுதி—வெள்ளம் ஆன
நால்-ஐம்பதோடும் சென்று, நமன் திசை வாயில் நண்ணி. 19

14. மாதுலத் தலைவன் - இராவணனுடைய மாமன்மார்களுள் தலைவனாகிய மாலி; 19. நமன் திசை - தென் திசை.

'ஏற்றம் என், சொல்லின் என்பால்? இந்திரன்பகைஞ!—அந் நாள்
காற்றினுக்கு அரசன் மைந்தன் கடுமை நீ கண்டது அன்றோ?
நூற்று-இரண்டு ஆய வெள்ள நுன் பெரும் படைஞர் சுற்ற,
மேல் திசை வாயில் சேர்தி, விடிவதன் முன்னம்—வீர! 20

'இந் நெடுங் காலம் எல்லாம் இமையவர்க்கு இறுதி கண்டாய்;
புன் நெடுங் குரங்கின் சேரல் புல்லிது; புகழும் அன்றால்;
அந் நெடு மூலத்தானை அதனொடும், அமைச்சரோடும்,
தொல் நெடு நகரி காக்க—விருபாக்க!' என்னச் சொன்னான்.

'கட கரி புரவி ஆள் தேர், கமலத்தோன் உலகுக்கு இப்பால்
புடை உள பொருது, கொண்டு, போர் பெறுப் பொங்குகின்ற
இடை இடை மிடைந்த சேனை இருநூறு வெள்ளம் கொண்டு,
வட திசை வாயில் காப்பேன் யான்' என வகுத்து விட்டான்.

**கங்குல் நீங்க, கதிரவன் தோன்றுதல்**

கலங்கிய கங்குல் ஆகி நீங்கிய கற்பம்—காணும்
நலம் கிளர் தேவர்க்கேயோ, நான்மறை முனிவர்க்கேயோ,
பொலம் கெழு சீதைக்கேயோ, பொரு வலி இராமற்கேயோ,
இலங்கையர் வேந்தற்கேயோ,—எல்லார்க்கும் செய்தது இன்பம். 23

அளித் தகவு இல்லா ஆற்றல் அமைந்தவன் கொடுமை அஞ்சி,
வெளிப்படல் அரிது என்று உன்னி, வேதனை உழக்கும் வேலை,
களித்தவற் களிப்பு நீக்கி, காப்பவர்தம்மைக் கண்ணுற்று,
ஒளித்தவர் வெளிப்பட்டென்ன,—கதிரவன் உதயம் செய்தான்.

**வானர சேனை இலங்கையை வளைத்தல்**

உளைப்புறும் ஓத வேலை ஓங்கு அலை ஒடுங்கத் தூர்ப்ப,
அளப்ப அருந் தூளிச் சுண்ணம் ஆசைகள் அலைக்க, பூசல்
இளைப்ப அருந் தலைவர், முன்னம் ஏவலின், எயிலை முற்றும்
வளைத்தனர், விடிய, தத்தம் வாயில்கள்தோறும் வந்து. 25

தந்திரம் இலங்கை மூதூர் மதிலினைத் தழுவித் தாவி,
அந்தரக் குல மீன் சிந்த, அண்டமும் கிழிய ஆர்ப்ப,
செந் தனிச் சுடரோன் சேயும் தம்பியும் முன்பு செல்ல,
இந்திரன் தொழுது வாழ்த்த, இராமனும் எழுந்து சென்றான்.

20. இந்திரன் பகைஞன் - இந்திரசித்தன்; 23. கற்பம் - ஊழி; 24. அளித் தகவு - கருணையாகிய நற்குணம்; 26. தந்திரம் - சேனை, இங்கு வானரப்படை.

நூற் கடல் புலவராலும் நுனிப்ப அரும் வலத்தது ஆய
வேற் கடல்-தானை ஆன விரி கடல் விழுங்கிற்றேனும்,
கார்க் கடல் புறத்தது ஆக, கவிக் கடல் வளைந்த காட்சி,
பாற்கடல் அழுவத்து உள்ளது ஒத்தது, அப் பதகன் மூதூர்.

அலகு இலா அரக்கன் சேனை அகப்பட, அரியின் தானை,
வலைகொலாம் என்ன, சுற்றி வளைத்ததற்கு உவமை கூறின்,
கலை குலாம் பரவை ஏழும் கால் கிளர்ந்து எழுந்த காலத்து
உலகு எலாம் ஒருங்கு கூடி, ஒதுங்கினவேயும் ஒக்கும். 28

## 13　அங்கதன் தூதுப் படலம்

#### இராமன் தூது விடுத்தல்பற்றி வீடணனிடம் பேசுதல்

வள்ளலும் விரைவின் எய்தி, வட திசை வாயில் முற்றி,
வெள்ளம் ஓர் ஏழு-பத்துக் கணித்த வெஞ் சேனையோடும்,
கள்ளனை வரவு நோக்கி, நின்றனன், காண்கிலாதான்,
'ஒள்ளியது உணர்ந்தேன்' என்ன, வீடணற்கு உரைப்பதானான்:

'தூதுவன் ஒருவன்தன்னை இவ் வழி விரைவில் தூண்டி,
"மாதினை விடுதியோ?" என்று உணர்த்தவே, மறுக்கும்ஆகின்,
காதுதல் கடன் என்று உள்ளம் கருதியது; அறனும் அஃதே;
நீதியும் அஃதே' என்றான்—கருணையின் நிலயம் அன்னான். 2

#### வீடணன் முதலியோர் வரவேற்க, இலக்குவன் மறுத்தல்

அரக்கர் கோன் அதனைக் கேட்டான், 'அழகிற்றே ஆகும்' என்றான்;
குரக்கினத்து இறைவன் நின்றான், 'கொற்றவர்க்கு உற்றது' என்றான்;
'இரக்கமது இழுக்கம்' என்றான், இளையவன்; 'இனி, நாம் அம்பு
துரக்குவது அல்லால், வேறு ஓர் சொல் உண்டோ?' என்னச் சொன்னான்.

'தேசியைச் சிறையில் வைத்தான்; தேவரை இடுக்கண் செய்தான்;
பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான்; மன்னுயிர் புடைத்துத் தின்றான்;
ஆசையின் அளவும், எல்லா உலகமும் தானே ஆள்வான்,
வாசவன் திருவும் கொண்டான்; வழி அலா வழிமேல் செல்வான். 4

13: 2. காதுதல் - கொல்லுதல்; 4. தேசி - (கற்பின் திறமாகிய) ஒளி யினைத் தனக்குரிய வடிவமாகப் பெற்றவள், சீதை; வாசவன் - இந்திரன்.

'வாழியாய்! நின்னை அன்று வரம்பு அறு துயரின் வைக,
சூழ்வு இலா மாயம் செய்து, உன் துணைவியைப் பிரிவுசூழ்ந்தான்;
ஏழைபால் இரக்கம் நோக்கி, ஒரு தனி இகல்மேல் சென்ற,
ஊழி காண்கிற்கும் வாழ்நாள், உந்தையை உயிர் பண்டு உண்டான்.

'அன்னவன்தனக்கு, மாதை விடில், உயிர் அருளுவாயேல்,
''என்னுடை நாமம் நிற்கும் அளவு எலாம் இலங்கை மூதூர்
மன்னவன் நீயே'' என்று, வந்து அடைந்தவற்கு வாயால்
சொன்ன சொல் என் ஆம்? முன்னம் சூளுறவு என் ஆம்?—தோன்
[றல்!

'அறம் தரு தவத்தை ஆயும் அறிவினால், அவற்றை முற்றும்
மறந்தனை எனினும், மற்று இவ் இலங்கையின் வளமை நோக்கி,
''இறந்து இது போதல் தீது'' என்று இரங்கினை எனினும், எண்ணின்,
சிறந்தது போரே' என்றான்; சேவகன் முறுவல் செய்தான். 7

**இராமன், 'தூது விடுப்பது நீதி நூல் முறை' எனல்**

'அயர்த்திலென்; முடிவும் அஃதே; ஆயினும், அறிஞர் ஆய்ந்த
நயத் துறை நூலின் நீதி நாம் துறந்து அமைதல் நன்றோ?
புயத் துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத் துறை; அறனும் அஃதே' என்று இவை சமையச் சொன்னான்.

**அங்கதனைத் தூது செல்லுமாறு இராமன் பணித்தல்**

மாருதி இன்னம் செல்லின், மற்று இவன் அன்றி வந்து
சாருநர் வலியோர் இல்லை என்பது சாரும் அன்றே;
ஆர், இனி ஏகத் தக்கார்? அங்கதன் அமையும்; ஒன்னார்
வீரமே விளைப்பரேனும், தீது இன்றி மீள வல்லான்.' 9

'நன்று' என, அவனைக் கூவி, 'நம்பி! நீ நண்ணலார்பால்
சென்று, இரண்டு உரையின் ஒன்றைச் செப்பினை திரிதி' என்றான்;
அன்று அவன் அருளப் பெற்ற ஆண்தகை அலங்கல் பொன் தோள்
குன்றினும் உயர்ந்ததுஎன்றால், மன நிலை கூறலாமோ? 10

'என் அவற்கு உரைப்பது?' என்ன, '''ஏந்திழையாளை விட்டுத்
தன் உயிர் பெறுதல் நன்றோ? அன்றுஎனின், தலைகள் பத்தும்
சின்னபின்னங்கள் செய்ய, செருக்களம் சேர்தல் நன்றோ?
சொன்னவை இரண்டின் ஒன்றே துணிக!'' எனச் சொல்லிடு' என்றான்.

5. உந்தை - உன் தந்தை, சடாயு; 10. திரிதி - மீண்டு வருவாய்.

‘அறத் துறை அன்று, வீரர்க்கு அழகும் அன்று, ஆண்மை அன்று,
மறத் துறை அன்று, சேமம் மறைந்து உறைந்து ஒதுங்கி வாழ்தல்;
நிறத்து உற வாளி கோத்து, நேர் வந்து நிற்கும்ஆகின்,
புறத்து உற எதிரே வந்து போர் தரப் புகல்தி’ என்றான். 12

**அங்கதன், அரக்கனது இருக்கை புகுதல்**

பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப் படர்வதேபோல்,
வீரன் வெஞ் சிலையில் கோத்த அம்பு என, விசையின் போனான்,
‘ “மாருதி வில்லன்ஆகின், நீ” எனும் மாற்றம் பெற்றேன்;
யார் இனி என்னோடு ஒப்பார்?’ என்பதோர் இன்பம் உற்றான்.

அயில் கடந்து எரிய நோக்கும் அரக்கரைக் கடக்க, ஆழித்
துயில் கடந்து அயோத்தி வந்தான் சொல் கடவாத தூதன்,
வெயில் கடந்திலாத காவல், மேருவின் மேலும் நீண்ட,
எயில் கடந்து, இலங்கை எய்தி, அரக்கனது இருக்கை புக்கான்.

**இராவணன் ஆற்றலை அங்கதன் வியத்தல்**

அழுகின்ற கண்ணர் ஆகி, ‘அனுமன்கொல்?’ என்ன அஞ்சித்
தொழுகின்ற சுற்றம் சுற்ற, சொல்லிய துறைகள்தோறும்
மொழிகின்ற வீரர் வார்த்தை முகம்தொறும் செவியின் மூழ்க,
எழுகின்ற சேனை நோக்கி, இயைந்து இருந்தானைக் கண்டான்

‘கல் உண்டு; மரம் உண்டு; ஏழைக் கடல் ஒன்றும் கடந்தேம் என்னும்
சொல் உண்டே; இவனை வெல்லத் தோற்றும் ஓர் கூற்றம் உண்டே?
எல்லுண்ட படை கைக் கொண்டால் எதிர் உண்டே? இராமன் கையில்
வில் உண்டேல், உண்டு’ என்று எண்ணி, ஆற்றலை வியந்து நின்றான்.

‘இன்று இவன் தன்மை எய்த நோக்கினேற்கு எதிர்ந்த போரில்
வென்ற என் தாதை மார்பின் வில்லின்மேல் கணை ஒன்று ஏவிக்
கொன்றவன்தானே வந்தான் என்று உடன் குறிப்பின் அல்லால்,
ஒன்று இவன்தன்னைச் செய்ய வல்லரோ, உயிர்க்கு நல்லார்? 17

‘அணி பறித்து அழகு செய்யும் அணங்கின்மேல் வைத்த ஆசைப்
பிணி பறித்து, இவனை யாவர் முடிப்பவர், படிக்கண்? பேழ் வாய்ப்
பணி பறித்து எழுந்த மானக் கலுழனின், இவனைப் பற்றி,
மணி பறித்து எழுந்த எந்தை யாரினும் வலியன்’ என்றான். 18

12. சேமம் - பாதுகாவலான இடம்; 14. கடத்தல் - வெல்லுதல், நீங்குதல், தாண்டுதல்; 18. பணி - பாம்பு.

நெடுந்தகை விடுத்த தூதன் இனையன நிரம்ப எண்ணி,
கடுங் கனல் விடமும் கூற்றும் கலந்து கால் கரமும் காட்டி,
விடும் சுடர் மகுடம் மின்ன, விரி கடல் இருந்தது அன்ன
கொடுந் தொழில் மடங்கல் அன்னான் எதிர் சென்று, குறுகி நின்றான்.

**இராவணன்–அங்கதன் உரையாடல்**

நின்றவன் தன்னை அன்னான் நெருப்பு எழ நிமிரப் பார்த்து, 'இங்கு,
இன்று, இவண் வந்த நீ யார்? எய்திய கருமம் என்னை?
கொன்று இவர் தின்னாமுன்னம் கூறுதி, தெரிய' என்றான்;
வன் திறல் வாலி சேயும், வாள் எயிறு இலங்க நக்கான். 20

'பூத நாயகன், நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன், அப் பூமேல்
சீதை நாயகன், வேறு உள்ள தெய்வ நாயகன், நீ செப்பும்
வேத நாயகன், மேல் நின்ற விதிக்கு நாயகன், தான் விட்ட
தூதன் யான்; பணித்த மாற்றம் சொல்லிய வந்தேன்' என்றான்.

'அரன்கொலாம்? அரிகொலாம்? மற்று அயன்கொலாம்? என்பார்
குரங்கு எலாம் கூட்டி, வேலை குட்டத்தைச் சேது கட்டி, [அன்றி,
''இரங்குவான்ஆகில், இன்னம் அறிதி'' என்று உன்னை ஏவும்
நரன்கொலாம், உலக நாதன்' என்று கொண்டு, அரக்கன் நக்கான். 22

'கங்கையும் பிறையும் சூடும் கண்ணுதல், கரத்து நேமி
சங்கமும் தரித்த மால், மற்று இந் நகர்தன்னைச் சாரார்;
அங்கு அவர் தன்மை நிற்க, மனிசனுக்காக, அஞ்சாது,
இங்கு வந்து இதனைச் சொன்ன தூதன் நீ யாவன்?' என்றான்.

'இந்திரன் செம்மல், பண்டு, ஓர் இராவணன் என்பான்தன்னை
சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி,
சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன், தேவர் உண்ண
மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினான், மைந்தன்' என்றான்.

'உந்தை என் துணைவன் அன்றே? ஓங்கு அறச் சான்றும் உண்டால்;
நிந்தனை இதன்மேல் உண்டோ, நீ அவன் தூதன் ஆதல்?
தந்தனென் நினக்கு யானே வானரத் தலைமை; தாழா
வந்தனை; நன்று செய்தாய், என்னுடை மைந்த!' என்றான். 25

21. பூத நாயகன் - ஐம்பெரும் பூதங்களுக்குத் தலைவன்; 24. சிந்துரம் - யானைகள்; 25. அறச் சான்று - அறத்தெய்வம் ஆகிய சாட்சி; தாழா - தாழாது, காலந்தாழ்க்காமல்.

' ''தாதையைக் கொன்றான் பின்னே தலை சுமந்து, இரு கை நாற்றி,
பேதையன் என்ன வாழ்ந்தாய்'' என்பது ஓர் பிழையும் தீர்ந்தாய்;
சீதையைப் பெற்றேன்; உன்னைச் சிறுவனுமாகப் பெற்றேன்;
ஏது எனக்கு அரியது?' என்றான்—இறுதியின் எல்லை கண்டான்.

'அந் நரர் இன்று, நாளை, அழிவதற்கு ஐயம் இல்லை;
உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி, ஊழி காலம்;
பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றி செய்ய,
மன்னவன் ஆக, யானே சூட்டுவென், மகுடம்' என்றான். 27

அங்கதன் அதனைக் கேளா, அங்கையோடு அங்கை தாக்கி,
துங்க வன் தோளும் மார்பும் இலங்கையும் துளங்க, நக்கான்;
' ''இங்கு நின்றார்கட்கு எல்லாம் இறுதியே'' என்பது உன்னி,
உங்கள்பால்நின்றும் எம்பால் போந்தனன், உம்பி' என்றான். 28

'வாய் தரத்தக்க சொல்லி, என்னை உன் வசஞ்செய்வாயேல்,
ஆய்தரத் தக்கது அன்றோ, தூது வந்து அரசது ஆள்கை?
நீ தரக் கொள்வென் யானே? இதற்கு இனி நிகர் வேறு எண்ணின்,
நாய் தரக் கொள்ளும் சீயம், நல் அரசு!' என்று நக்கான். 29

'அடுவெனே' என்னப் பொங்கி ஓங்கிய அரக்கன், 'அந்தோ!
தொடுவெனே, குரங்கைச் சீறிச் சுடர்ப் படை?' என்று, தோன்றா
நடுவனே செய்யத்தக்க நாள் உலந்தார்க்குத் தூத!
படுவதே துணிந்தாய்ஆகில், வந்தது பகர்தி' என்றான். 30

'கூவி இன்று என்னை, நீ போய், ''தன் குலம் முழுதும் கொல்லும்
பாவியை, அமருக்கு அஞ்சி அரண் புக்குப் பதுங்கினானை,
தேவியை விடுக! அன்றேல், செருக் களத்து எதிர்ந்து, தன்கண்
ஆவியை விடுக!'' என்றான், அருள் இனம் விடுகிலாதான். 31

' ''பருந்து உணப் பாட்டி யாக்கை படுத்த நாள், படைஞரோடும்
மருந்தினும் இனிய மாமன் மடிந்த நாள், வனத்துள் வைகி
இருந்துழி வந்த நங்கை இருஞ்செவி முலையும் மூக்கும்
அரிந்துழி, வந்திலாதான் இனிச் செய்யும் ஆண்மை உண்டோ?

' ''இளையொடும் படைஞரோடும், கேடு இலா உயிர்கட்கு எல்லாம்
களை என, தம்பிமாரை வேரொடும் களையக் கண்டும்,
இளையவன் பிரிய மாயம் இயற்றி, ஆயிழையை வௌவும்
வளை எயிற்று அரக்கன், வெம் போர்க்கு, இனி எதிர் வருவது உண்டோ?

30. நடுவன் - கூற்றுவன்; 32. பாட்டி - தாடகை; மாமன் - சுபாகு, இவன் தாடகையின் மகன்; 33. தம்பிமார் - கரன், தூடணன் முதலியோர்.

' ''ஏந்திழைதன்னைக் கண்ணுற்று, எதிர்ந்தவர்தம்மை எற்றி,
சாந்து எனப் புதல்வன்தன்னைத் தரையிடைத் தேய்த்து, தன் ஊர்
காந்து எரி மடுத்து, தானும் காணவே, கடலைத் தாவிப்
போந்த பின், வந்திலாதான் இனிப் பொரும் போரும் உண்டோ? 34

' ''உடைக் குலத்து ஒற்றர்தம்பால் உயிர் கொடுத்து உள்ளக் கள்ளம்
துடைத்துழி, வருணன் வந்து தொழுதுழி, தொழாத கொற்றக்
குடைத் தொழில் உம்பி கொள்ளக் கொடுத்துழி, வேலை கோலி
அடைத்துழி, வந்திலாதான் இனி வர ஐயம் உண்டோ? 35

' ''மறிப்புண்ட தேவர் காண, மணி வரைத் தோளின் வைகும்
நெறிப் புண்டரீகம் அன்ன முகத்தியர்முன்னே, நென்னல்,
பொறிப் புண்டரீகம் போலும் ஒருவனால், புனைந்த மௌலி
பறிப்புண்டும், வந்திலாதான் இனிப் பொரும் பான்மை உண்டோ?'' 36

' ''என்று இவை இயம்பி வா'' என்று ஏவினன் என்னை; எண்ணி
ஒன்று உனக்கு உறுவது உன்னித் துணிந்து உரை; உறுதி பார்க்கின்,
துன்று இருங் குழலை விட்டு, தொழுது வாழ்; சுற்றத்தோடும்
பொன்றுதிஆயின், என் பின், வாயிலில் புறப்படு' என்றான். 37

'நீரிலே பட்ட, சூழ்ந்த நெருப்பிலே பட்ட, நீண்ட
பாரிலே பட்ட, வானப் பரப்பிலே பட்ட, எல்லாம்
போரிலே பட்டு வீழப் பொருத நீ, ''ஒளித்துப் புக்கு, உன்
ஊரிலே பட்டாய்'' என்றால், பழி' என, உளையச் சொன்னான்.

**இராவணன், அங்கதனை எற்றப் பணித்தல்**

சொற்ற வார்த்தையைக் கேட்டலும், தொல் உயிர்
முற்றும் உண்பது போலும் முனிவினான்,
'பற்றுமின், கடிதின்; நெடும் பார்மிசை
எற்றுமின்' என, நால்வரை ஏவினான். 39

**அங்கதன் நால்வரையும் அழித்து, எச்சரிக்கை விடுத்தல்**

ஏவினார் பிடித்தாரை எடுத்து எழத்
தாவினான், அவர்தம் தலை போய் அறக்
கூவினான், அவன், கோபுர வாயிலில்
தூவினான், துகைத்தான், இவை சொல்லினான். 40

34. புதல்வன் - அட்சகுமாரன்; 36. மறிப்புண்ட - (தன்னால் சிறையிலே) மடக்கப்பட்ட; நெறிப்புண்ணுதல் - கட்டுவிட்டு அலரப் பெறுதல்; புண்டரீகம் - முன்னது தாமரை, பின்னது புலி; 38. பட்ட - தோன்றியவை; படுதல் - மூன்றும் அடியில் அழிதல்; நான்காம் அடியில் பொருந்தியுறைதல்; 39. எற்றுதல் - மோதித் தாக்குதல்.

'ஏமம் சார, எளியவர் யாவரும்,
தூமம் கால்வன, வீரன் சுடு சரம்,
வேம் மின் போல்வன, வீழ்வதன் முன்னமே,
போமின் போமின், புறத்து' என்று போயினன். 41

**அங்கதன் வந்து, இராமன் அடி பணிந்து, இராவணன் உள்ளக் கருத்தை உரைத்தல்**

அந்தரத்திடை ஆர்த்து எழுந்தான், அவர்
சிந்து ரத்தம் துதைந்து எழும் செச்சையான்,
இந்து விண்நின்று இழிந்துளதாம் என,
வந்து, வீரன் அடியில் வணங்கினன். 42

உற்ற போது, 'அவன் உள்ளக் கருத்து எலாம்,'
கொற்ற வீரன், 'உணர்த்து' என்று கூறலும்,
'முற்ற ஓதி என்? மூர்க்கன், முடித் தலை
அற்றபோது அன்றி, ஆசை அறான்' என்றான். 43

# 14 முதற் போர் புரி படலம்

**வானர சேனைக்கு இராமன் இட்ட கட்டளை**

' ''பூசலே; பிறிது இல்லை'' என, புறத்து
ஆசைதோறும் முரசம் அறைந்து, என
பாசறைப் படையின்னிடம் பற்றிய
வாசல்தோறும் முறையின் வகுத்திரால். 1

'மற்றும் நின்ற மலையும் மரங்களும்
பற்றி,—வீரர்!—பரவையின் மும் முறை,
கற்ற கைகளினால், கடி மா நகர்
சுற்றும் நின்ற அகழியைத் தூர்த்திரால். 2

'இடுமின் பல் மரம்; எங்கும் இயக்கு அறத்
தடுமின்; ''போர்க்கு வருக!'' எனச் சாற்றுமின்;
கடுமின், இப்பொழுதே கதிர் மீச்செலாக்
கொடி மதில் குடுமித்தலைக்கொள்க!' என்றான். 3

42. செச்சை - செஞ்சந்தனக் குழம்பு; 43. மூர்க்கன் - பிடிவாத குணம் உடையவன்.

14: 1. பிறிது - வேறு, ஈண்டுச் சமாதானம்; 3. இயக்கு - போக்குவரவு; கடுமின் - விரைந்தவர்களாய்.

**வானரப்படை அகழியைத் தூர்த்தல்**

தடங் கொள் குன்றும் மரங்களும் தாங்கியே,
மடங்கல் அன்ன அவ் வானர மாப் படை,
இடங்கர் மா இரிய, புனல் ஏறிட,
தொடங்கி, வேலை அகழியைத் தூர்த்ததால். 4

ஏய வெள்ளம் எழுபதும், எண் கடல்
ஆய வெள்ளத்து அகழியைத் தூர்த்தலும்,
தூய வெள்ளம் துணை செய்வது ஆம் என
வாயிலூடு புக்கு, ஊரை வளைந்ததே. 5

விளையும் வென்றி இராவணன் மெய்ப் புகழ்
முளையினோடும் களைந்து முடிப்பபோல்,
தளை அவிழ்ந்த கொழுந் தடந் தாமரை
வளையம், வன் கையில், வாங்கின—வானரம் 6

இகழும் தன்மையன் ஆய இராவணன்
புகழும் மேன்மையும் போயினவாம் என,
நிகழும் கள் நெடு நீலம் உகுத்தலால்,
அகழிதானும் அழுவது போன்றதே. 7

தண்டு இருந்த பைந் தாமரை தாள் அற,
பண் திரிந்து சிதைய, படர் சிறை
வண்டு இரிந்தன; வாய்தொறும் முட்டையைக்
கொண்டு இரிந்தன, அன்னக் குழாம் எலாம். 8

ஈளி தாரம் இயம்பிய வண்டுகள்
பாளை தாது உகு நீர் நெடும் பண்ணைய;
தாள தாமரை அன்னங்கள் தாவிட,
வாளை தாவின, வானரம் தாவவே. 9

தூறு மா மரமும், மலையும் தொடர்
நீறு, நீர்மிசைச் சென்று நெருக்கலான்,
ஏறு பேர் அகழ்நின்றும் எனைப் பல
ஆறு சென்றன, ஆர்கலிமீதுஅரோ. 10

5. எண் கடல் ஆய - எட்டாவது கடல் போன்றதாகிய; 6. இராவணன் வென்றியால் விளையும் புகழ் என இயையும்; தளை - முறுக்கு; தாமரை வளையம் - தாமரைத் தண்டின் அடிப்பகுதி; 9. ஈளி - இளி, எதுகை நோக்கி விகாரமாயிற்று, மந்த ஓசையுடையது; தாரம் - எடுத்தலோசை; 10. தூறு மா மாரம் - புதர் போல அடர்ந்த பெரிய மரங்கள்.

இழுகு மாக் கல் இடும்தொறு இடும்தொறும்,
சுழிகள்தோறும் சுரித்து இடை தோன்று தேன்
ஒழுகு தாமரை ஒத்தன, ஓங்கு நீர்
முழுகி மீது எழு மாதர் முகத்தையே.* 11

தன்மைக்குத் தலையாய தசமுகன்
தொன்மைப் பேர் அகழ் வானரம் தூர்த்ததால்;
இன்மைக்கும், ஒன்று உடைமைக்கும், யாவர்க்கும்
வன்மைக்கும், ஓர் வரம்பும் உண்டாம்கொலோ?* 12

தூர்த்த வானரம், கள்ளி பறித்து இடை,
சீர்த்த பேர் அணைதன்னையும் சிந்தின;
வார்த்தது அன்ன மதிலின் வரம்புகொண்டு
ஆர்த்த, ஆர்கலி காரொடும் அஞ்சவே. 13

வட்ட மேரு இது என, வான் முகடு
எட்ட நீண்ட மதில்மிசை ஏறி, விண்
தொட்ட வானரம், தோன்றின—மீத் தொக
விட்ட வெண் கொடி வீங்கின என்னவே. 14

இறுக்க வேண்டுவது இல்லை; எண் தீர் மணி
வெறுக்கை ஓங்கிய மேரு விழுக் கலால்
நிறுக்க, நேர்வரும் வீரர் நெருக்கலால்,
பொறுக்கலாது, மதிள் தரை புக்கதால். 15

**அரக்கர் சேனையின் எழுச்சி**

அறைந்த மா முரசு; ஆனைப் பதாகையால்
மறைந்தவால், நெடு வானகம்; மாதிரம்
குறைந்த, தூளி குழுமி; விண்ணூடு புக்கு
உறைந்தது, ஆங்கு அவர் போர்க்கு எழும் ஓதையே. 16

கோடு அலம்பின; கோதை அலம்பின;
ஆடல் அம் பரித் தாரும் அலம்பின;
மாடு அலம்பின, மா மணித் தேர்; மணி
பாடு அலம்பின, பாய் மத யானையே. 17

11. இழுகு மாக் கல் - வீசிய பெரிய கற்கள்; சுரித்து - புதைந்து; 12. தன்மை - ஈண்டு வீரத்தன்மை, மேம்பாடும் ஆம்; 13. வரம்பு - உச்சி; 15. இறுத்தல் - இடித்தல்; எண் தீர் மணி - விலை மதிப்புச் சொல்ல முடியாத மணி; 17. கோடு - ஊது கொம்புகள்; அலம்புதல் - ஒலித்தல்; மாடு - பக்கம்; பாடு - பெருமை.

**வானர சேனையும், அரக்கர் சேனையும் பொருதல்**

அரக்கர் தொல் குலம் வேர் அற, அல்லவர்
வருக்கம் யாவையும் வாழ்வுற, வந்தது ஓர்
கருக் கொள் காலம் விதிகொடு காட்டிட,
தருக்கி உற்று, எதிர் தாக்கின—தானையே. 18

பல் கொடும், நெடும் பாதவம் பற்றியும்,
கல் கொடும், சென்றது—அக் கவியின் கடல்,
வில் கொடும், நெடு வேல்கொடும், வேறு உள
எல் கொடும் படையும் கொண்டது—இக் கடல். 19

அம்பு கற்களை அள்ளின; அம்பு எலாம்
கொம்புடைப் பணை கூறு உற நூறின;
வம்புடைத் தட மா மரம் மாண்டன,
செம் புகர்ச் சுடர் வேல்-கணம் செல்லவே. 20

மாக் கை வானர வீரர் மலைந்த கல்
தாக்கி, வஞ்சர் தலைகள் தகர்த்தலால்,
நாக்கினூடும், செவியினும், நாகம் வாழ்
மூக்கினூடும், சொரிந்தன, மூளையே. 21

அற்கள் ஓடும் நிறத்த அரக்கர்தம்
விற்கள் ஓடு சரம் பட, வெம் புணீர்
பற்களோடும் சொரிதர, பற்றிய
கற்களோடும் உருண்ட, கவிகளே. 22

நின்று மேரு நெடு மதில் நெற்றியின்
வென்றி வானர வீரர் விசைத்த கல்
சென்று, தீயவர் ஆர் உயிர் சிந்தின,
குன்றின் வீழும் உருமின் குழுவினே. 23

எதிர்த்த வானரம் மாக் கையொடு இற்றன;
மதில் புறங் கண்டு, மண்ணில் மறைந்தன;—
கதிர்க் கொடுங் கண் அரக்கர் கரங்களால்
விதிர்த்து எறிந்த விளங்கு இலை வேலினே. 24

18. கருக் கொள் காலம் - நன்னிமித்தத்தை உள்ளீடாகக் கொண்ட காலம்; 19. பாதவம் - மரங்கள்; 20. பணை - பருமை. ஈண்டு மரம்; வம்பு - நறுமணம்; 22. அற்கள் - இருள், இருள் தங்கும் இடம் பலவாதலின் அற்கள் எனப்பட்டது; அல் - இருள்; 24. மதில் புறங் காணுதல் - மதிலின் புறத்தே வீழ்தல்.

கடித்த, குத்தின, கையின் கழுத்து அறப்
பிடித்த, வள் உகிரால் பிளவு ஆக்கின,
இடித்த, எற்றின, எண் இல் அரக்கரை
முடித்த—வானரம், வெஞ் சினம் முற்றின. 25

எறிந்தும், எய்தும், எழு முளைத் தண்டு கொண்டு
அறைந்தும், வெவ் அயில் ஆகத்து அழுத்தியும்,
நிறைந்த வெங் கண் அரக்கர் நெருக்கலால்,
குறைந்த—வானர வீரர் குழுக்களே. 26

**போர்க்களத்தின் அவலக் காட்சி**

செப்பின் செம் புனல் தோய்ந்த செம் பொன் மதில்,
துப்பின் செய்தது, போன்றது, சூழ் வரை;
குப்புற்று ஈர் பிணக் குன்று சுமந்துகொண்டு
உப்பின் சென்றது, உதிரத்து ஒழுக்கமே. 27

வந்து இரைத்த பறவை மயங்கின,
அந்தரத்தில் நெருங்கலின், அங்கு ஒரு
பந்தர் பெற்றது போன்றது—பற்றுதல்
இந்திரற்கும் அரிய இலங்கையே. 28

தங்கு வெங் கனல் ஒத்துத் தயங்கிய
பொங்கு வெங் குருதிப் புனற் செக்கர்முன்,
கங்குல் அன்ன கவந்தமும் கையெடுத்து,
அங்கும் இங்கும் நின்று, ஆடினவாம்அரோ. 29

கொன் நிறக் குருதிக் குடை புட்களின்
தொல் நிறச் சிறையில் துளி தூவலால்,
பல் நிறத்த பதாகைப் பரப்பு எலாம்
செந் நிறத்தனவாய், நிறம் தீர்ந்தவே. 30

**வானரங்கள் மதிலினின்று இறங்குதலும், அரக்கர் நிரம்புதலும்**

பொழிந்த சோரிப் புதுப் புனல் பொங்கி மீ
வழிந்த மா மதில் கைவிட்டு, வானரம்,
ஒழிந்த, மேருவின் உம்பர்விட்டு இம்பரின்
இழிந்த மாக் கடல் என்ன, இழிந்ததே. 31

30. கொன் நிறக் குருதி - அச்சம் விளைக்கும் செந்நிற இரத்தம்.

பதனமும், மதிலும், படை நாஞ்சிலும்,
கதன வாயிலும், கட்டும் அட்டாலையும்,
முதல யாவையும் புக்குற்று முற்றின—
விதன வெங் கண் இராக்கதர் வெள்ளமே. 32

பாய்ந்த சோரிப் பரவையில் பற்பல
நீந்தி ஏகும், நெருக்கிடைச் செல்வன;
சாய்ந்து சாய்ந்து, சரம் படத் தள்ளலுற்று
ஓய்ந்த வீழ்ந்த; சில சில ஓடின. 33

**அரக்கர் சேனையின் ஆரவாரம்**

தழிய வானர மாக் கடல் சாய்தலும்,
பொழியும் வெம் படைப் போர்க் கடல் ஆர்த்தவால்—
ஒழியும் காலத்து உலகு ஒரு மூன்றும் ஒத்து
அழியும் மாக் கடல் ஆர்ப்பு எடுத்தென்னவே. 34

முரசும், மா முருடும், முரல் சங்கமும்,
உரை செய் காளமும், ஆகுளி ஓசையும்,
விரைசும் பல் இயம், வில் அரவத்தொடும்,
திரை செய் வேலைக்கு ஓர் ஆகுலம் செய்தவே. 35

**இராவணனது படை வெளிவருதல்**

ஆய காலை, அனைத்து உலகும் தரும்
நாயகன் முகம் நாலும் நடந்தென,
மேய சேனை விரி கடல், விண் குலாம்
வாயிலூடு புறப்பட்டு வந்ததே. 36

நெடிய காவதம் எட்டும் நிரம்பிய,
படிய வாயில் பருப்பதம் பாய்ந்தென,
கொடியொடும் கொடி சுற்றக் கொடுத்த தண்டு
ஒடிய ஊன்றின, மும் மத ஓங்கலே. 37

சூழி யானை மதம் படு தொய்யலின்,
ஊழி நாள் நெடுங் கால் என ஓடுவ,
பாழி ஆள் வயிரப் படி பல் முறை
பூழி ஆக்கின, பொன் நெடுந் தேர்களே. 38

32. பதனம் - பதணம், மதிலினுள் மேடை; படை நாஞ்சில் - அம்பாகிய படை விடுதற்குரிய ஏவறையையுடைய முடக்கு; கதன வாயில் - பகைவர் கலங்குதற்குரிய கோபுர வாயில்; அட்டாலை - கோட்டை மதிலின் மேல் மண்டலம்; விதனம் - துன்பம், அச்சமும் ஆம்; 34. தழிய - தழுவிய, மதிலைத் தழுவி ஏறிய; 35. முருடு - மத்தளம்; ஆகுளி - சிறு பறை; ஆகுலம் - துன்பம்; 36. முகம் - வாய்; 37. படிய வாயில் - படியோடும் கூடிய கோபுர வாயில்; 38. தொய்யல் - சேறு; வயிரப் படி - வயிரம் போன்ற உறுதியுடைய பூமி.

பிடித்த வானரம் பேர் எழில் தோள்களால்
இடித்த மா மதில் ஆடை இலங்கையாள்,
மடுத்த மாக் கடல் வாவும் திரை எலாம்
குடித்துக் கால்வன போன்ற, குதிரையே. 39

கேள் இல் ஞாலம், கிளத்திய தொல் முறை
நாளும் நாளும் நடந்தன நள் இரா,
நீளம் எய்தி, ஒரு சிறை நின்றன,
மீளும் மாலையும் போன்றனர்—வீரரே. 40

பத்தி வன் தலைப் பாம்பின் பரம் கெட,
முத்தி நாட்டின் முகட்டினை முற்றுற,
பித்தி பிற்பட, வன் திசை பேர்வுற,
தொத்தி, மீண்டிலவால்—நெடுந் தூளியே. 41

சேனை நிலைகுலைய, சுக்கிரீவன் சினந்து பொருதல்

நெருக்கி வந்து நிருதர் நெருங்கலால்,
குரக்குஇனப் பெருந் தானை குலைந்து போய்,
அருக்கன் மா மகன், ஆர் அமர் ஆசையால்
செருக்கி நின்றவன், நின்றுழிச் சென்றவால். 42

சாய்ந்த தானைத் தளர்வும், சலத்து எதிர்
பாய்ந்த தானைப் பெருமையும், பார்த்து, உறக்
காய்ந்த நெஞ்சன், கனல் சொரி கண்ணினன்.
ஏய்ந்தது அங்கு ஓர் மராமரம் ஏந்தினன். 43

வாரணத்து எதிர், வாசியின் நேர், வயத்
தேர் முகத்தினில், சேவகர்மேல், செறுத்து,
ஓர் ஒருத்தர்க்கு ஒருவரின் உற்று, உயர்
தோரணத்து ஒருவன் எனத் தோன்றினன். 44

களிறும், மாவும், நிருதரும், கால் அற,
ஒளிறு மா மணித் தேரும் உருட்டி, வெங்
குளிறு சோரி ஒழுக, கொதித்து, இடை
வெளிறு இலா மரமே கொண்டு, வீசினன். 45

40. கேள் - கேழ், ஒப்பு, எதுகை நோக்கி ழகரம் திரிந்தது; 41. பித்தி - (அண்டத்தின்) சுவர்; 43. மராமரம் - வெண் கடம்ப மரம்; 44. தோரணத்து ஒருவன் - தோரணக் கம்பத்திலிருந்து போர் செய்த ஒப்பற்ற அனுமன்; 45. வெளிறு இலா - திண்மையின்மை இல்லாத, வயிரமுள்ள.

அன்ன காலை, அரிக் குல வீரரும்
மன்னன் முன் புக, வன்கண் அரக்கரும்
முன் உழந்த முழங்கு பெருஞ் செருத்
தன்னில் வந்து, தலைமயக்குற்றனர். 46

கல் துரந்த களம் பட, வஞ்சகர்
இற்று உலந்து முடிந்தவர் எண் இலர்;
வில் துரந்தன வெங் கணையால் உடல்
அற்று உலந்து குரங்கும் அனந்தமே. 47

கற்கள் தந்து, நிமிர்ந்து, கடுஞ் செரு
மற்கடங்கள் வலிந்து மலைந்திட,
தற்கு அடங்கி உலந்தவர்தம் உயிர்
தெற்கு அடங்க நிறைந்து செறிந்தவால். 48

பாடுகின்றன, பேய்க் கணம்; பல் விதத்து
ஆடுகின்ற, அறு குறை; ஆழ் கடற்கு
ஓடுகின்ற, உதிரம்; புகுந்து, உடல்
நாடுகின்றனர், கற்புடை நங்கைமார். 49

யானை பட்ட அழி புனல் யாறு எலாம்
பானல் பட்ட; பல கணை மாரியின்
சோனை பட்டது; சொல்ல அரும் வானரச்
சேனை பட்டது; பட்டது, செம் புண்ணீர். 50

**அரக்கர் சேனையின் அழிவு கண்டு, வச்சிரமுட்டி வந்து பொருதல்**

காய்ந்த வானர வீரர் கரத்தினல்
தேய்ந்த ஆயுளர் ஆனவர் செம் புண்ணீர்
பாய்ந்த தானைப் படு களம் பாழ்படச்
சாய்ந்ததால், நிருதக் கடல்-தானையே. 51

தங்கள் மாப் படை சாய்தலும், தீ எழ
வெங் கண் வாள் அரக்கன், விரை தேரினை,
கங்க சாலம் தொடரக் கடற் செலூஉம்
வங்கம் ஆம் என வந்து, எதிர் தாக்கினன். 52

47. துரந்த கல் என மாற்றுக; 48. தற்கு - தருக்கு, எதுகை நோக்கித் திரிந்தது; 50. பானல் - கடல்; 51. தேய்ந்த ஆயுளர் - ஆயுள் தேய்ந்தவர் எனப் பிரித்துக் கூட்டுக; 52. கங்க சாலம் - பருந்துக்கூட்டம்.

வந்து தாக்கி, வடிக் கணை மா மழை
சிந்தி, வானரச் சேனை சிதைத்தலும்,
இந்திராதியரும் திகைத்து ஏங்கினர்;
நொந்து, சூரியன் கான்முளை நோக்கினன். 53

**வச்சிரமுட்டியைச் சுக்கிரீவன் அழித்தல்**

நோக்கி, வஞ்சன் நொறில் வய மாப் பரி
வீக்கு தேரினின் மீது எழப் பாய்ந்து, தோள்
தூக்கு தூணியும் வில்லும் தொலைத்து, அவன்
யாக்கையும் சிதைத்திட்டு, எழுந்து ஏகினன். 54

மலை குலைந்தென, வச்சிரமுட்டி தன்
நிலை குலைந்து விழுதலின், நின்றுளார்
குலைகுலைந்து கொடி நகர் நோக்கினர்;
அலை கிளர்ந்தென, வானரம் ஆர்த்தவே. 55

**கீழை வாசலில் நிகழ்ந்த போர்**

வீழி வெங் கண் இராக்கதர் வெம் படை,
ஊழி ஆழி கிளர்ந்தென ஓங்கின,
கீழை வாயிலில் கிட்டலும், முட்டினர்,
சூழும் வானர வீரர் துவன்றியே. 56

சூலம், வாள், அயில், தோமரம், சக்கரம்,
வாலம், வாளி, மழையின் வழங்கியே,
ஆலம் அன்ன அரக்கர் அடர்த்தலும்,
காலும் வாலும் துமிந்த, கவிக் குலம். 57

வென்றி வானர வீரர் விசைத்து எறி
குன்றும் மா மரமும், கொடுங் காலனின்
சென்று வீழ, நிருதர்கள் சிந்தினர்;
பொன்றி வீழ்ந்த, புரவியும் பூட்கையும். 58

தண்டு, வாள், அயில், சக்கரம், சாயகம்,
கொண்டு, சீறி, நிருதர் கொதித்து எழ,
புண் திறந்து குருதி பொழிந்து உக,
மண்டி ஓடினர், வானர வீரரே. 59

54. நொறில் - விரைவு; 55. குலைகுலைந்து - நடுநடுங்கி; 56. வீழி வெங் கண் - வீழிப்பழம் போன்ற சிவந்த வெவ்விய கண்; 57. வாலம் - பிண்டிபாலம், இது தலையில் பீலி கட்டப்பட்டு எறிவதொரு படை; 59. சாயகம் - அம்பு.

நீலன் நிகழ்த்திய போர்

எரியின் மைந்தன், இரு நிலம் கீழுற,
விரிய நின்ற மராமரம் வேரொடும்
திரிய வாங்கி, நிருதர் வெஞ் சேனை போய்
நெரிய, ஊழி நெருப்பு என வீசினான். 60

தேரும், பாகரும், வாசியும், செம் முகக்
காரும், யாளியும், சீயமும், காண் தகு
பாரின் வீழப் புடைப்ப, பசும் புணின்
நீரும் வாரிஅதனை நிறைத்ததே. 61

அரக்கன் கும்பானுவும், கரடி இடும்பனும், விளைத்த போர்

அரக்கர் சேனை அடு களம் பாழ்பட
வெருக்கொண்டு ஓடிட, வெம் படைக் காவலர்
நெருக்க, நேர்ந்து, கும்பானு நெடுஞ் சரம்
துரக்க, வானரச் சேனை துணிந்தவே. 62

கண்டு நின்ற கரடியின் காவலன்,
எண் திசாமுகம் எண்ணும் இடும்பன், ஓர்
சண்டமாருதம் என்ன, தட வரை
கொண்டு சீறி, அவன் எதிர் குப்புறு. 63

தொடுத்த வாளிகள் வீழும் முன், சூழ்ந்து எதிர்
எடுத்த குன்றை இடும்பன் எறிதலும்,
ஒடித்த வில்லும் இரதமும், ஒல்லெனப்
படுத்த, வாசியும் பதாகையும் பாழ்பட.* 64

தேர் அழிந்து, சிலையும் அழிந்து உக,
கார் இழிந்த உரும் எனக் காய்ந்து, எதிர்
பார் கிழிந்து உகப் பாய்ந்தனன்—வானவர்
போர் கிழிந்து புறம் தர, போர் செய்தான். 65

தத்தி, மார்பின் வயிரத் தடக் கையால்
குத்தி நின்ற கும்பானுவை, தான் எதிர்
மொத்தி நின்று, முடித் தலை கீழ் உற,
பத்தி வன் தடந் தோள் உறப் பற்றுவான். 66

60. எரியின் மைந்தன் - நெருப்பின் மகனான நீலன்; 66. பத்தி - ஒழுங்கு.

கடித்தலத்து இரு கால் உற, கைகளால்
பிடித்துத் தோளை, பிறங்கலின் கோடு நேர்
முடித்தலத்தினைக் கவ்வுற, மூளைகள்
வெடித்து வீழ்தர, வீழ்த்தினனும்அரோ. 67

பிரகத்தனும் நீலனும் பொருதல்

தன் படைத்தலைவன் படத் தன் எதிர்,
துன்பு அடைத்த மனத்தன், சுமாலி சேய்,
முன் படைத்த முகில் அன்ன காட்சியன்,
வன்பு அடைத்த வரி சிலை வாங்கினான். 68

வாங்கி வார் சிலை, வானர மாப் படை
ஏங்க நாண் எறிந்திட்டு, இடையீடு இன்றி,
தூங்கு மாரி என, சுடர் வாளிகள்,
வீங்கு தோளினன், விட்டனனும்அரோ. 69

நூறும் ஆயிரமும் கணை நொய்தினின்
வேறு வேறு படுதலின், வெம்பியே,
ஈறு இல் வானர மாப் படை எங்கணும்
பாற, நீலன் வெகுண்டு, எதிர் பார்ப்புறா, 70

குன்றம் நின்றது எடுத்து, எதிர் கூற்று எனச்
சென்று எறிந்து, அவன் சேனை சிதைத்தலும்,
வென்றி வில்லின் விடு கணை மாரியால்,
ஒன்று நூறு உதிர்வுற்றது, அக் குன்றமே. 71

மீட்டும், அங்கு ஓர் மராமரம் வேரொடும்
ஈட்டி, வானத்து இடி என எற்றலும்,
கோட்டும் வில்லும், கொடியும், வயப் பரி
பூட்டும் தேரும், பொடித் துகள் ஆயவே. 72

தேர் இழந்து, சிலையும் இழந்திட,
கார் இழிந்த உரும் எனக் காந்துவான்,
பார் இழிந்து, பரு வலித் தண்டொடும்,
ஊர் இழந்த கதிர் என, ஓடினான். 73

67. கடித்தலம் - உடம்பின் நடுப் பகுதியான மறைவிடம்; கவ்வுற - கவ்வுற்று, வாயால் கடித்து; 68. சுமாலி சேய் - சுமாலியின் மகன் பிரகத்தன்; 69. தூங்கு மாரி - பொழிகின்ற மழை; 70. பாற - சிதறிப் போக; 72. கோட்டும் வில் - வளைக்கும் தன்மையுள்ள வில்; 73. ஊர் - ஊர்தி; ஊர் கோள் என்பாரும் உண்டு.

வாய் மடித்து அழல் கண்தொறும் வந்து உக,
போய் அடித்தலும், நீலன் புகைந்து, எதிர்
தாய் அடுத்து, அவன்தன் கையின் தண்டொடும்
மீ எடுத்து விசும்பு உற வீசினன். 74

அம்பரத்து எறிந்து, ஆர்ப்ப, அரக்கனும்,
இம்பர் உற்று, எரியின் திரு மைந்தன்மேல்,
செம்புனல் பொழியக் கதை சேர்த்தினன்,
உம்பர் தத்தமது உள்ளம் நடுங்கவே. 75

அடித்தலோடும், அதற்கு இளையாதவன்,
எடுத்த தண்டைப் பறித்து எறியா, 'இகல்
முடித்தும்' என்று, ஒரு கைக்கொடு மோதினன்,
குடித்து உமிழ்ந்தெனக் கக்கக் குருதியே. 76

குருதி வாய்நின்று ஒழுகவும் கூசலன்,
நிருதன், நீலன் நெடு வரை மார்பினில்
கருதலாத முன் குத்தலும், கைத்து, அவர்
பொருத பூசல் புகல ஒண்ணாததே. 77

மற்று, நீலன், அரக்கனை மாடு உறச்
சுற்றி வால்கொடு, தோளினும், மார்பினும்,
நெற்றி மேலும், நெடுங் கரத்து எற்றலும்,
இற்று, மால் வரை என்ன, விழுந்தனன். 78

'இறந்து வீழ்ந்தனனே பிரகத்தன்' என்று
அறிந்து, வானவர் ஆவலம் கொட்டினர்;
வெறிந்த செம் மயிர் வெள் எயிற்று ஆடவர்
முறிந்து, தம்தம் முது நகர் நோக்கினர்.* 79

**தெற்கு வாயிலில் அங்கதன் நிகழ்த்திய போர்**

தெற்கு வாயிலில் சென்ற நிசாசரர்
மல் குலாவு வயப் புயத்து அங்கதன்
நிற்கவே, எதிர் நின்றிலர் ஓடினர்,
பொன் குலாவு சுபாரிசன் பொன்றவே. 80

74. தாய் - தழுவி; 78. கரத்து - கையினால்; 79. ஆடவர் - வெற்றியையுடைய வீரர், இகழ்ச்சிக் குறிப்பு; 80. பொன் - அழகு.

**மேலை வாயிலில் அனுமன் நிகழ்த்திய போர்**

நூற்று-இரண்டு எனும் வெள்ளமும், நோன் கழல்
ஆற்றல் சால் துன்முகனும், அங்கு ஆர்த்து எழ,
மேல் திண் வாயிலில் மேவினர் வீடினார்,—
காற்றின் மா மகன் கை எனும் காலனால். 81

**நால்திசைப் போர் பற்றித் தூதுவர் இராவணனுக்குச் சொல்லுதல்**

அன்ன காலை, அயிந்திர வாய் முதல்
துன்னு போர் கண்ட தூதுவர் ஓடினார்,
'மன்ன! கேள்' என, வந்து வணங்கினார்;
சென்னி தாழ்க்க, செவியிடைச் செப்பினார்: 82

'வடக்கு வாய்தலில் வச்சிரமுட்டியும்,
குடக்கு வாயிலில் துன்முகக் குன்றமும்,
அடக்க அரும் வலத்து ஐம்பது வெள்ளமும்,
படச் சிதைந்தது, நம் படை' என்றனர். 83

'வென்றி வேற் கை நிருதர் வெகுண்டு எழ,
தென் திசைப் பெரு வாயிலில் சேர்ந்துழி,
பொன்றினான், அச் சுபாரிசன்; போயினார்
இன்று போன இடம் அறியோம்' என்றார்.* 84

'கீழை வாயில், கிளர் நிருதப் படை,
ஊழி நாளினும் வெற்றி கொண்டு உற்ற நின்
ஆழி அன்ன அனீகத் தலைமகன்
பூழியான்; உயிர் புக்கது விண்' என்றார். 85

**இராவணன் பெருஞ் சினம் கொள்ளல்**

என்ற வார்த்தை, எரி புகு நெய் எனச்
சென்று, சிந்தை புகுதலும், சீற்றத் தீ
கன்று கண்ணின்வழிச் சுடர் கான்றிட,
நின்று நின்று, நெடிது உயிர்த்தான்அரோ. 86

மறித்தும், 'ஆர் அவன் ஆர் உயிர் வவ்வினான்?
இறுத்துக் கூறும்' என்றான்; 'இசை எங்கணும்
நிறுத்தும் நீலன், நெடும் பெருஞ் சேனையை
ஒறுத்து, மற்று அவனோடு வந்து உற்றனன்; 87

85. பூழியான் - புழுதியின்கண் விழுந்தனன்; 87. அவன் - பிரகத்தன்.

'உற்ற போதின் இருவரும், ஒன்று அல,
சுற்ற போர்கள் எலாம் செய்த காலையில்,
நெற்றிமேல், மற்று அந் நீலன் நெடுங் கையால்
எற்ற, வீந்தனன்' என்ன இயம்பினர். 88

'அன்னவன்னொடும் போன அரக்கரில்
நல் நகர்க்கு வந்தோம், ஐய! நாங்களே'
என்ன என்ன, எயிற்று, இகல் வாய்களைத்
தின்னத் தின்ன, எரிந்தன திக்கு எலாம். 89

**இராவணன் தானே போருக்குச் செல்லத் துணிந்து எழல்**

மாடு நின்ற நிருதரை, வன்கணான்
ஓட நோக்கி, 'உயர் படையான் மற்று அக்
கோடு கொண்டு பொருத குரங்கினால்
வீடினான்!' என்று, மீட்டும் விளம்பினான்: 90

''கட்டது, இந்திரன் வாழ்வை; கடைமுறை
பட்டது, இங்கு ஓர் குரங்கு படுக்க'' என்று
இட்ட வெஞ் சொல் எரியினில், என் செவி
சுட்டது; என்னுடை நெஞ்சையும் சுட்டதால்; 91

'கருப்பைபோல் குரங்கு எற்ற, கதிர் சுழல்
பொருப்பை ஒப்பவன்தான் இன்று பொன்றினான்;
அருப்பம் என்று பகையையும், ஆர் அழல்
நெருப்பையும், இகழ்ந்தால், அது நீதியோ?' 92

நிற்க அன்னது, நீர் நிறை கண்ணினான்,
'வற்கம் ஆயின மாப் படையோடும் சென்று,
ஒற்கம் வந்து உதவாமல் உறுக!' என,
விற் கொள் வெம் படை வீரரை ஏவியே. 93

மண்டுகின்ற செருவின் வழக்கு எலாம்
கண்டு நின்று, கயிலை இடந்தவன்,
புண் திறந்தன கண்ணினன், பொங்கினான்,
திண் திறல் நெடுந் தேர் தெரிந்து ஏறினான்— 94

89. மீண்டவர் நாங்களே என்பதால் மற்றவர் இறந்தனர் என்பது பெற வைத்தமை பாரிசேட அளவை; 91. கட்டது - அழித்தது; 92. கருப்பை - எலி; அருப்பம் - அற்பம், சிறியது; 93. வற்கம் - பெருந் திரள்; ஒற்கம் - தளர்ச்சி.

ஆயிரம் பரி பூண்டது; அதிர் குரல்
மா இருங் கடல் போன்றது; வானவர்
தேயம் எங்கும் திரிந்தது; திண் திறல்
சாய, இந்திரனே பண்டு தந்தது. 95

ஏற்றி, எண்ணி இறைஞ்சி, இடக் கையால்
ஆற்றினான், தன் அடு சிலை; அன்னதின்
மாற்றம் என் நெடு நாண் ஒலி வைத்தலும்,
கூற்றினாரையும் ஆர் உயிர் கொண்டதே. 96

மற்றும், வான் படை, வானவர் மார்பிடை
இற்றிலாதன, எண்ணும் இலாதன,
பற்றினான்; கவசம் படர் மார்பிடைச்
சுற்றினான்; நெடுந் தும்பையும் சூடினான். 97

பேரும் கற்றைக் கவரிப் பெருங் கடல்
நீரும் நீர் நுரையும் என நின்றவன்,
ஊரும் வெண்மை உவா மதிக் கீழ் உயர்
காரும் ஒத்தனன், முத்தின் கவிகையான். 98

போர்த்த சங்கப் படகம் புடைத்திட,
சீர்த்த சங்கக் கடல் உக, தேவர்கள்
வேர்த்து அசங்கிட, அண்டம் வெடித்திட,
ஆர்த்த சங்கம், அறைந்த, முரசமே. 99

தேரும் மாவும் படைஞரும் தெற்றிட,
மூரி வல் நெடுந் தானையின் முற்றினான்;
நீர் ஓர் ஏழும் முடிவில் நெருக்கும் நாள்,
மேரு மால் வரை என்ன, விளங்கினான். 100

ஏழ் இசைக் கருவி வீற்றிருந்ததுஎன்னினும்,
சூழ் இருந் திசைகளைத் தொடரும் தொல் கொடி,
வாழிய உலகு எலாம் வளைத்து வாய் இடும்
ஊழியின் அந்தகன் நாவின், ஓங்கவே; 101

95. சாய - தோற்றதால்; 96. ஆற்றுதல் - தாங்குதல்; அன்னதின் மாற்றம் என - அந்த வில்லின் சொல் என்று சொல்லத்தக்க; 99. போர்த்த - தோல் போர்த்த; சங்கப் படகம் - திரளான படகம் என்னும் போர்ப்பறைகள்; சங்கம் - திரள்; 100. தெற்றிட - நெருங்கிட; 101. ஏழ் இசைக் கருவி - வீணை.

'வேணு உயர் நெடு வரை அரக்கர் வேலைக்கு ஓர்
தோணி பெற்றனர்' எனக் கடக்கும் தொல் செருக்
காணிய வந்தவர், கலக்கம் கைம்மிக,
சேண் உயர் விசும்பிடை அமரர், சிந்தவே; 102

கண் உறு கடும் புகை கதுவ, கார் நிறத்து
அண்ணல் வாள் அரக்கர்தம் அரத்தப் பங்கிகள்
வெண் நிறம் கோடலின், உருவின் வேற்றுமை,
நண்ணினர் நோக்கவும், அயிர்ப்பு நல்கவே; 103

கால் நெடுந் தேர் உயர் கதலியும், கரத்து
ஏனையர் ஏந்திய பதாகை ஈட்டமும்,
ஆனையின் கொடிகளும், அளவித் தோய்தலால்,
வான யாறொடு மழை ஒற்றி வற்றவே; 104

ஆயிரம் கோடி பேய், அங்கை ஆயுதம்
தூயன சுமந்து, பின் தொடர, சுற்று ஒளிர்
சேயிரு மணி நெடுஞ் சேமத் தேர் தெரிந்து,
ஏயின ஆயிரத்து இரட்டி எய்தவே; 105

ஊன்றிய பெரும் படை உலைய, உற்று உடன்
ஆன்ற போர் அரக்கர்கள் நெருங்கி ஆர்த்து எழ,
தோன்றினன்—உலகு எனத் தொடர்ந்து நின்றன
மூன்றையும் கடந்து, ஒரு வெற்றி முற்றினான். 106

**இராவணன் வருகையினை ஒற்றர் இராமனுக்கு அறிவித்தல்**

'ஓதுறு கருங் கடற்கு ஒத்த தானையான்,
தீது உறு சிறு தொழில் அரக்கன், சீற்றத்தால்,
போது உறு பெருங் களம் புகுந்துளான்' எனத்
தூதுவர் நாயகற்கு அறியச் சொல்லினர். 107

**இராமன் மகிழ்ந்து, போர்க் கோலம் பூண்டு புறப்படுதல்**

ஆங்கு, அவன் அமர்த் தொழிற்கு அணுகினான் என,
'வாங்கினென், சீதையை' என்னும் வன்மையால்,
தீங்குறு பிரிவினால் தேய்ந்த தேய்வு அற
வீங்கின, இராகவன் வீரத் தோள்களே. 108

103. பங்கி - மயிர்க்குடுமி; நண்ணினர் - உறவினர்; புகை கதுவலால் மயிர் வெண்ணிறமாகத் தோன்றியது; 104. கால் - சக்கரங்கள்; கதலி - கொடி; 105. சேயிரு மணி - சிவந்த பெரிய மணிகள்; 108. வாங்கினென் - பெற்றுவிட்டேன்.

தொடையுறு வற்கலை ஆடை சுற்றி, மேல்
புடை உறு வயிர வாள் பொலிய வீக்கினன்—
இடை உறு கருமத்தின் எல்லை கண்டவர்,
கடை உறு நோக்கினின், காணும் காட்சியான். 109

ஒத்து இரு சிறு குறட் பாதம் உய்த்த நாள்,
வித்தக அரு மறை உலகை மிக்கு, மேல்
பத்து உள விரல் புடை பரந்த பண்பு என,
சித்திரச் சேவடிக் கழலும் சேர்த்தினன். 110

பூ உயர் மீன் எலாம் பூத்த வான் நிகர்
மேவரும் கவசம் இட்டு இறுக்கி வீக்கினன்—
தேவியைத் திரு மறு மார்பின் தீர்ந்தனன்;
'நோ இலள்' என்பது நோக்கினன்கொலோ? 111

நல் புறக் கோதை, தன் நளினச் செங்கையின்
நிற்புறச் சுற்றிய காட்சி, நேமியான்—
கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால். 112

புதை இருட் பொழுதினும் மலரும் பொங்கு ஒளி
சிதைவு அரு நாள் வரச் சிவந்த தாமரை
இதழ்தொறும் வண்டு வீற்றிருந்ததாம் என,
ததைவுறு நிரை விரற் புட்டில் தாங்கினன். 113

பல் இயல் உலகு உறு பாடை பாடு அமைந்து,
எல்லை இல் நூற் கடல் ஏற நோக்கிய,
நல் இயல், நவை அறு, கவிஞர் நா வரும்
சொல் எனத் தொலைவு இலாத் தூணி தூக்கினன். 114

109. தொடையுறு வற்கலை - தொடுத்தல் அமைந்த மரவுரி; இடை உரு கருமம் - (பரம்பொருளை அடைதற்குத்) தடையாகப் பொருந்தியுள்ள இருவினை; கடை உறு நோக்கு - இறுதியாகப் பொருந்திய ஞானக் கண்; 110. குறட்பாதம் - வாமன மூர்த்தியின் திருவடி; பத்து உள விரல் - ஞானியரின் பக்தியோடு கூடிய விரல்கள்; பத்து - பக்தி, பத்தாக உள்ள விரல்கள் எனலும் ஆம்; 111. பூ - பொலிவு, நோக்கினன் - மனத்தால் நோக்குதல், நினைத்தல்; 112. கோதை - உடும்பின் தோலால் செய்து முன்கையில் அணியும் உறை; 113. வாரம் - மேன்மை; விரற் புட்டில் - விரற் செறி, விரலில் பூணும் கவசம்; 114. அம்பறாத் தூணிக்கு உவமை கூறுமுகத்தால் நல்ல கவிஞரின் சிறப்பியல்பு புலப்படுத்தியவாறு; ஏற நோக்கிய - நன்கு உணர்ந்த.

கிளர் மழைக் குழுவிடைக் கிளர்ந்த மின் என
அளவு அறு செஞ் சுடர்ப் பட்டம் ஆர்த்தனன்;
இள வரிக் கவட்டிலை ஆரொடு ஏர் பெறத்
துளவொடு தும்பையும் சுழியச் சூடினான். 115

ஓங்கிய உலகமும், உயிரும், உட்புறம்
தாங்கிய பொருள்களும், தானும், தான் என
நீங்கியது யாவது? நினைக்கிலோம்; அவன்
வாங்கிய வரி சிலை மற்றென்றேகொலாம்? 116

நாற் கடல் உலகமும், விசும்பும், நாள்மலர்
தூர்க்க, வெஞ் சேனையும் தானும் தோன்றினான்—
மால் கடல் வண்ணன், தான் வளரும் மால் இரும்
பாற்கடலோடும் வந்து, எதிரும் பான்மைபோல். 117

**இராமன் பின்னணியில் நின்ற இலக்குவனைச் சேர்தல்**

ஊழியின் உருத்திரன் உருவுகொண்டு, தான்,
ஏழ் உயர் உலகமும் எரிக்கின்றான் என,
வாழிய வரி சிலைத் தம்பி, மாப் படைக்
கூழையின் நெற்றி நின்றானை, கூடினான். 118

**அரக்கரும் வானரரும் கைகலத்தல்**

என்புழி, நிருதராம் ஏழு வேலையும்,
மின் பொழி எயிறுடைக் கவியின் வெள்ளமும்,
தென் புலக் கிழவனும் செய்கை கீழ்ப்பட,
புன் புலக் களத்திடைப் பொருத போலுமால். 119

துமிந்தன தலை; குடர் சொரிந்த; தேர்க் குலம்
அவிந்தன; புரவியும் ஆளும் அற்றன;
குவிந்தன, பிணக் குவை; சுமந்து கோள் நிலம்
நிமிர்ந்தது; பரந்தது, குருதி நீத்தமே. 120

கடுங் குரங்கு இரு கையால் எற்ற, கால் வயக்
கொடுங் குரம் துணிந்தன, புரவி; குத்தினால்
ஒடுங்கு உரம் துணிந்தனர்; நிருதர்; ஓடின,
நெடுங் குரம்பு என நிறை குருதி நீத்தமே. 121

115. இள வரிக் கவட்டிலை - இளைய வரிகளையுடைய கிளையிற் பொருந்திய இலை; ஆர் - ஆத்தி; ஈண்டு அதன் மாலை; 118. கூழையின் நெற்றி - பின்னணியின் தலைப்பு; 121. நெடுங் குரம்பு - நெடிய நீர்த் தேக்கம்.

'தெற்கு இது; வடக்கு இது' என்னத் தேர்கிலார்,
பற் குவை பரந்தன; குரக்குப் பல் பிணம்
பொற் குவை நிகர்த்தன; நிருதர் போர்ச் சவம்
கற் குவை நிகர்த்தன; மழையும் காட்டின. 122

**இராவணன் வில் நாண் ஒலி கேட்டு, வானரம் இரிதல்**

அவ்வழி, இராவணன் அமரர் அஞ்ச, தன்
வெவ் விழி நெருப்பு உக, வில்லின் நாணினைச்
செவ் வழிக் கோதையின் தெறிக்க, சிந்தின,
எவ்வழி மருங்கினும் இரிந்த, வானரம். 123

உரும் இடித்துழி உலைந்து ஒளிக்கும் நாகம் ஒத்து
இரியலுற்றன, சில; இறந்தவால், சில;
வெருவலுற்றன, சில; விம்மலுற்றன;
பொரு களத்து உயிரொடும் புரண்டு போம் சில. 124

பொர, கரு நிற நெடு விசும்பு போழ்பட,
இரக்கம் இல் இராவணன் எறிந்த நாணிஞல்,
குரக்கினம் உற்றது என், கூறின்? தன் குலத்து
அரக்கரும் அனையது ஓர் அச்சம் எய்தினர். 125

வீடணன் ஒருவனும், இளைய வீரனும்,
கோடு அணை குரங்கினுக்கு அரசும், கொள்கையால்
நாடினர் நின்றனர்; நாலு திக்கினும்
ஓடினர், அல்லவர்; ஒளித்தது, உம்பரே. 126

'எடுக்கின், நானிலத்தை ஏந்தும் இராவணன் எறிந்த நாணல்
நடுக்கினன், உலகை' என்பார்; 'நல்கினன்' என்னற்பாற்றோ?
மிடுக்கினல் மிக்க வானோர், மேக்கு உயர் வெள்ளம், மேல்நாள்,
கெடுக்கும் நாள், உருமின் ஆர்ப்புக் கேட்டனர் என்னக் கேட்டார். 127

**இராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நிகழ்ந்த போர்**

ஏந்திய சிகரம் ஒன்று, அங்கு இந்திரன் குலிசம் என்ன,
காந்திய உருமின் விட்டான், கவிக் குலத்து அரசன்; அக் கல்
நீந்த அரு நெருப்புச் சிந்தி நிமிர்தலும், நிருதர்க்கு எல்லாம்
வேந்தனும், பகழி ஒன்றல், வெறுந் துகள் ஆக்கி, வீழ்த்தான்.

அண்ணல் வாள் அரக்கன் விட்ட அம்பினல் அழிந்து, சிந்தி,
திண் நெடுஞ் சிகரம், நீறாய்த் திசை திசை சிந்தலோடும்,
கண் நெடுங் கடுந் தீக் கால, கவிக் குலத்து அரசன், கையால்,
மண்மகள் வயிறு கீற, மரம் ஒன்று வாங்கிக் கொண்டான். 129

கொண்ட மா மரத்தை அம்பின் கூட்டத்தால், காட்டத் தக்க
கண்டம் ஆயிரத்தின் மேலும் உள என, கண்டம் கண்டான்;
விண்ட வாள் அரக்கன்மீது, விசும்பு எரி பறக்க, விட்டான்,
பண்டை மால் வரையின் மிக்கது ஒரு கிரி, பரிதி மைந்தன். 130

அக் கிரிதனையும் ஆங்கு ஓர் அம்பினால் அறுத்து மாற்றி,
திக்கு இரிதரப் போர் வென்ற சிலையினை வளைய வாங்கி,
சுக்கிரீவன்தன் மார்பில் புங்கமும் தோன்றுவண்ணம்
உக்கிர வயிர வாளி ஒன்று புக்கு ஒளிக்க, எய்தான். 131

**சுக்கிரீவன் தளர்ந்த நிலையில் அனுமன் வருதல்**

சுடு கணை படுதலோடும் துளங்கினான்; துளங்காமுன்னம்,
குட திசை வாயில் நின்ற மாருதி, புகுந்த கொள்கை
உடன் உறைந்து அறிந்தான் என்ன, ஓர் இமை ஒடுங்காமுன்னர்,
வட திசை வாயில் வந்து, மன்னவன் முன்னர் ஆனான். 132

பரிதி சேய் தேருமுன்னம், 'பரு வலி அரக்க! பல் போர்
புரிதிபோ என்னோடு?' என்னா, புகை எழ விழித்துப் பொங்கி,
'வருதியேல், வா, வா!' என்பான்மேல் மலை ஒன்று வாங்கி,
சுருதியே அனைய தோளால் வீசினான், காலின் தோன்றல். 133

மீ எழு மேகம் எல்லாம் வெந்து, வெங் கரியின் சிந்தித்
தீ எழ, விசும்பினூடு செல்கின்ற செயலை நோக்கி,
காய் கணை ஐந்தும் ஐந்தும் கடுப்புறத் தொடுத்துக் கண்டித்து,
ஆயிரம் கூறு செய்தான், அமரரை அலக்கண் செய்தான். 134

மீட்டு ஒரு சிகரம் வாங்கி, வீங்கு தோள் விசையின் வீசி,
ஓட்டினான்; ஓட்ட, வானத்து உருமினும் கடுக ஓடி,
கோட்டு வெஞ் சிலையின் வாளி முன் சென்று, கொற்றப் பொன் தோள்
பூட்டிய வலயத்தோடும், பூழியாய்ப் போயிற்று அன்றே. 135

மெய் எரிந்து அழன்று பொங்கி, வெங் கணான் விம்மி, மீட்டு ஓர்
மை வரை வாங்குவானை, வரி சிலை வளைய வாங்கி,
கையினும் தோளின்மேலும் மார்பினும் கரக்க, வாளி
ஐ-இரண்டு அழுந்த எய்தான்; அவன் அவை ஆற்றி நின்றான்.

130. காட்டத்தக்க கண்டம் - செய்யத்தக்க துண்டம்; வாள் அரக்கன் - கொடிய இராவணன்; 131. புங்கம் - அம்பின் அடிப்பகுதி; உக்கிரம் - கொடுமை; 132. புகுந்த கொள்கை - நேர்ந்த தன்மை; மன்னவன் - இராவணன்; 135. பூழி - பொடி; 136. கரக்க - புக்கு மறையுமாறு.

'யார் இது செய்யகிற்பார்?' என்று கொண்டு இமையோர் ஏத்த,
மாருதி, பின்னும், அங்கு ஓர் மராமரம் கையின் வாங்கி,
வேரொடும் சுழற்றி விட்டான்; விடுதலும், இலங்கை வேந்தன்
சாரதி தலையைத் தள்ளிச் சென்றது, நிருதர் சாய. 137

மாறி ஓர் பாகன் ஏற, மறி திரைப் பரவை பின்னும்
சீறியது அனையன் ஆன செறி கழல் அரக்கன், தெய்வ
நூறுகோல் நொய்தின் எய்தான்; அவை உடல் நுழைதலோடும்,
ஆறுபோல் சோரி சோர, அனுமனும் அலக்கணுற்றான். 138

இராவணன் வீரவுரை

'கல் கொண்டும், மரங்கள் கொண்டும், கைக் கொண்டும், களித்து, நும் வாய்ச்
சொல் கொண்டும், மயிரின் புன் தோல் தோள் கொண்டும் தள்ளி, வெள்ளிப்
பல் கொண்டும், மலைநின்றாரின் பழி கொண்டு பயந்தது; யான் ஓர்
வில் கொண்டு நின்ற போது, விறல் கொண்டு மீள்திர் போலாம்.' 139

என்று உரைத்து, எயிற்றுப் பேழ் வாய் எரி உக நகை செய்து, யாணர்ப்
பொன் தொடர் வடிம்பின் வாளி கடை உகத்து உருமுப் போல,
ஒன்றின் ஒன்று அதிகம் ஆக, ஆயிர கோடி உய்த்தான்;
சென்றது குரக்குச் சேனை, கால் எறி கடலின் சிந்தி. 140

இலக்குவன், இராவணனுடன் பொர வந்து, நாண் ஒலி செய்தல்

கலக்கிய அரக்கன் வில்லின் கல்வியும், கவிகள் உற்ற
அலக்கணும், தலைவர் செய்த தன்மையும், அமையக் கண்டான்,
இலக்குவன், 'என் கை வாளிக்கு இலக்கு இவன்; இவனை இன்று
விலக்குவென்' என்ன வந்தான், வில்லுடை மேரு என்ன. 141

தேயத்தின் தலைவன் மைந்தன் சிலையை நாண் எறிந்தான்; தீய
மாயத்தின் இயற்கை வல்லார் நிலை என்னை? 'முடிவின் மாரி
ஆயத்தின் இடி இது' என்றே அஞ்சின, உலகம்; யானை
சீயத்தின் முழக்கம் கேட்டல் போன்றனர், செறுநர் எல்லாம்.

ஆற்றல் சால் அரக்கன்தானும், அயல் நின்ற வயவர்நெஞ்சம்
வீற்று வீற்று ஆகி உற்ற தன்மையும், வீரன் தம்பி
கூற்றின் வெம் புருவம் அன்ன சிலை நெடுங் குரலும் கேளா,
ஏற்றினன் மகுடம், 'என்னே! இவன் ஒரு மனிசன்' என்னா.

138. கோல் - அம்பு; 140. வடிம்பு - விளிம்பு; 141. தன்மை - சண்டைப் போர்த்தன்மை; விலக்குதல் - தடுத்தல்; 142. தேயத்தின் தலைவன் - நாட்டிற்கெல்லாம் தலைவனாகிய தயரத மன்னன்; ஆயம் - மேகம், கூட்டமும் ஆம்; 143. வயவர் - வீரர்; வீற்று வீற்று ஆகி - வேறு வேறாகி; ஏற்றினன் - உயர்த்திப் பார்த்தான்.

**இலக்குவனுக்கும் இராவணனுக்கும் கடும் போர்**

கட்டு அமை தேரின்மேலும், களி நெடுங் களிற்றின்மேலும்,
விட்டு எழு புரவிமேலும், வெள் எயிற்று அரக்கர்மேலும்,
முட்டிய மழையின் துள்ளி முறை இன்றி மொய்க்குமாபோல்
பட்டன பகழி; எங்கும் பரந்தது, குருதிப் பவ்வம். 144

நகங்களின் பெரிய வேழ நறை மத அருவி காலும்
முகங்களில் புக்க வாளி விபரத்தை முற்றி, மொய்ம்பர்
அகங்களைக் கழன்று, தேரின் அச்சினை உருவி, அப்பால்
உகங்களின் கடை சென்றாலும், ஓய்வு இல ஓடலுற்ற. 145

நூக்கிய களிறும், தேரும், புரவியும், நூழில்செய்ய,—
ஆக்கிய அரக்கர் தானை, ஐ-இரு கோடி, கையொத்து
ஊக்கிய படைகள் வீசி உடற்றிய—உலகம் செய்த
பாக்கியம் அனைய வீரன் தமபியைச் சுற்றும் பற்றி. 146

‘உறு பகை மனிதன், இன்று, எம் இறைவனை உறுகிற்பானேல்,
வெறுவிது, நம்தம் வீரம்’ என்று ஒரு மேன்மை தோன்ற,
எறி படை அரக்கர் ஏற்றார்—‘ஏற்ற கைம் மாற்றான்’ என்னா,
வறியவர், ஒருவன், வண்மை பூண்டவன்மேல் சென்றென்ன.

அறுத்தனன், அரக்கர் எய்த எறிந்தன; அறுத்து, அறாத
பொறுத்தனன்; பகழி மாரி பொழிந்தனன்; உயிரின் போகம்
வெறுத்தனன், நமனும்; வேலை உதிரத்தின் வெள்ளம் மீள
மறித்தன; மறிந்த எங்கும், பிணங்கள் மா மலைகள் மான.

தலை எலாம் அற்ற; முற்றும் தாள் எலாம் அற்ற; தோளாம்
மலை எலாம் அற்ற; பொன்-தார் மார்பு எலாம் அற்ற; சூலத்து
இலை எலாம் அற்ற; வீரர் எயிறு எலாம் அற்ற; கொற்றச்
சிலை எலாம் அற்ற; கற்ற செரு எலாம் அற்ற, சிந்தி. 149

தேர் எலாம் துமிந்த; மாவின் திறம் எலாம் துமிந்த; செங் கண்
கார் எலாம் துமிந்த; வீரர் கழல் எலாம் துமிந்த; கண்டத்
தார் எலாம் துமிந்த; நின்ற தனு எலாம் துமிந்த; தம்தம்
போர் எலாம் துமிந்த; கொண்ட புகழ் எலாம் துமிந்து போய.

144. முட்டிய - நெருங்கிய; 145. நகம் - மலை; நறை - மணம்; அபரம் - பின்பாகம்; அகம் - மார்பு; 146. நூக்கியவாய் நூழில் செய்ய என இயையும்; நூக்குதல் - தள்ளுதல்; நூழில் செய்தல் - கொன்று குவித்தல்; ஒக்கிய - உயர்த்திய; 147. வெறுவிது - பயனற்றது; இலக்குவன் ஒருவன்மேல் அரக்கர் பலர் எதிர்த்துச் சென்றது, ஒரு வள்ளலிடம் இரவலர் பலர் ஏற்கச் சென்றது போன்றது; 148. போகம் - நுகர்ச்சி; 150. போர் எலாம் - போர்த் திறங்கள் எல்லாம்.

அரவு இயல் தறுகண் வன் தாள் ஆள் விழ, ஆள்மேல் வீழ்ந்த
புரவிமேல் பூட்கை வீழ்ந்த; பூட்கைமேல் பொலன் தேர் வீழ்ந்த,
நிரவிய தேரின் மேன்மேல் நெடுந் தலை கிடந்த; நெய்த்தோர்
விரவிய களத்துள் எங்கும் வெள்ளிடை அரிது, வீழ. 151

கடுப்பின்கண், அமரரேயும், 'கார்முகத்து அம்பு கையால்
தொடுக்கின்றான், துரக்கின்றான்' என்று உணர்ந்திலர்; துரந்த வாளி
இடுக்கு ஒன்றும் காணார்; காண்பது, எய்த கோல் நொய்தின் எய்திப்
படுக்கின்ற பிணத்தின் பம்மல் குப்பையின் பரப்பே; பல்கால்.

கொற்ற வாள், கொலை வேல், சூலம், கொடுஞ் சிலை முதல ஆய
வெற்றி வெம் படைகள் யாவும் வெந் தொழில் அரக்கர் மேற்கொண்டு,
உற்றன, கூற்றும் அஞ்ச ஒளிர்வன ஒன்று நூறு ஆய்
அற்றன அன்றி, ஒன்றும் அருதன இல்லை அன்றே. 153

குன்று அன யானை, மானக் குரகதம், கொடித்தேர், கோப
வன் திறல் ஆளி, சீயம், மற்றைய பிறவும், முற்றும்
சென்றன எல்லை இல்லை; திரிந்தில; சிறிது போதும்
நின்றன இல்லை; எல்லாம் கிடந்தன, நெளிந்து, பார்மேல்.

சாய்ந்தது நிருதர் தானை; தமர் தலை இடறித் தள்ளுற்று
ஓய்ந்தது; ஒழிந்தது ஓடி உலந்ததும் ஆக, அன்றே
வேய்ந்தது வாகை, வீரற்கு இளையவன் வரி வில்; வெம்பிக்
காய்ந்தது, அவ் இலங்கை வேந்தன் மனம் எனும் காலச் செந் தீ.

இராவணன், இலக்குவனை நெருங்கிப் பொருதல்

காற்று உறழ் கலின மான் தேர் கடிதினின் கடாவி, கண்ணுற்று
ஏற்றனன், இலங்கை வேந்தன்; எரி விழித்து, இராமன் தம்பி,
கூற்று மால் கொண்டது என்னக் கொல்கினரான், குறுகச் சென்றான்;
சீற்றமும் தானும் நின்றான்; பெயர்ந்திலன், சிறிதும் பாதம்.

'காக்கின்ற என் நெடுங் காவலின் வலி நீக்கிய கள்வா!
போக்கு இன்று உனக்கு அரிதுஆல்' எனப் புகன்றான்; புகை உயிர்ப்
கோக்கின்றன, தொடுக்கின்றன, கொலை அம்புகள், தலையோடு [பான்,
ஈர்க்கின்றன, கனல் ஒப்பன, எய்தான்; இகல் செய்தான். 157

151. நிரவிய தேர் - வரிசைப்பட நிற்கின்ற தேர்கள்; நெய்த்தோர் - குருதி; வெள்ளிடை - வெற்றிடம்; 152. இடுக்குதல் - கவ்வுதல்; பம்மல் குப்பை - நெருங்கிய குவியல்; 154. குரகதம் - குதிரை; 156. மால் - பித்து.

'எய்தான் சரம் எய்தாவகை இற்றீக' என, இடையே,
வைதாலென ஐதாயின வடி வாளியின் அறுத்தான்;
'ஐது ஆதலின் அறுத்தாய்; இனி, அறுப்பாய்!' என, அழிகார்
பெய்தாலெனச் சர மாரிகள் சொரிந்தான், துயில் பிரிந்தான்.

ஆம் குஞ்சரம் அனையான் விடும் அயில் வாளிகள் அவைதாம்
வீங்கும் சரம் பருவத்து இழி மழை போல்வன விலக்கா,
தூங்குஞ் சர நெடும் புட்டிலின், சுடர் வேலவற்கு இளையான்,
வாங்குஞ் சரம் வாங்காவகை அறுத்தான், அறம் மறுத்தான்.

### அயர்வு நீங்கிய அனுமன் இராவணனோடு வீரவுரை நிகழ்த்தல்

அப்போதையின் அயர்வு ஆறிய அனுமான், அழல் விழியா,
'பொய்ப் போர் சில புரியேல், இனி' என வந்து, இடை புகுந்தான்,
கைப் போ தகம் என, முந்து, அவன் கடுந் தேர் எதிர் நடந்தான்,
'இப் போர் ஒழி; பின் போர் உள; இவை கேள்' என இசைத்தான்:

'வென்றாய் உலகு ஒரு மூன்றையும், மெலியா நெடு வலியால்;
தின்றாய் செறி கழல் இந்திரன் இசையை; திசை திரித்தாய்;
என்றாலும், இன்று அழிவு உன்வயின் எய்தும்' என இசையா,
நின்றான் அவன் எதிரே, உலகு அளந்தான் என நிமிர்ந்தான்.

எடுத்தான் வலத் தடக் கையினை; இது போய், உலகு எல்லாம்
அடுத்தான் குறள் அளந்தான் திருவடியின் வரவு அன்னான்,
மடுத்து ஆங்கு உற வளர்ந்தாலென வளர்கின்றவன் உருவம்
கடுத்தான் என, கொடியாற்கு எதிர், 'காண்பாய்' எனக் காட்டா, 162

'வில் ஆயுதம் முதல் ஆகிய வய வெம் படை மிடலோடு
எல்லாம் இடை பயின்றாய்; புயம் நால்-ஐந்தினொடு இயைந்தாய்;
வல்லாய்; செரு வலியாய்; திறல் மறவோய்! இதன் எதிரே
நில்லாய்' என நிகழ்த்தா, நெடு நெருப்பு ஆம் என உயிர்ப்பான்.

'நீள் ஆண்மையினுடனே எதிர் நின்றாய்; இஃது ஒன்றோ?
வாள் ஆண்மையும், உலகு ஏழினொடு உடனே உடை வலியும்,
தாளாண்மையும், நிகர் ஆரும் இல் தனி ஆண்மையும், இனி நின்
தோளாண்மையும், இசையோடு உடன் துடைப்பேன், ஒரு புடைப்பால்;

158. இற்றீக - இற்றுப்போக; வைது - கூர்மை; வடிவாளி - வடிக்கப் பட்ட அம்பு; ஐது - சிறிது, மெல்லிது; 159. சரம் - சரத் காலம், கூதிர்ப் பருவம், ஐப்பசி கார்த்திகை மாதங்கள் கூடிய காலம்; 160. போதகம் - யானை; 162. கடுத்தான் என - நஞ்சுதான் என்னுமாறு; 164. நீள் ஆண்மை - பெரிய துணிவு; தாளாண்மை - முயற்சி; புடைப்பு - குத்து.

'பரக்கப் பல உரைத்து என்? படர் கயிலைப் பெரு வரைக்கும்,
அரக்குற்று எரி பொறிக் கண் திசைக் கரிக்கும், சிறிது அனுங்கா
உரக் குப்பையின் உயர் தோள் பல உடையாய்! உரன் உடையாய்!
குரக்குத் தனிக் கரத்தின் புடைப் பொறை ஆற்றுவை கொல்லாம்? 165

'என் தோள் வலிஅதனால் எடுத்து, யான் எற்றவும், இறவா-
நின்றாய்எனின்; நீ பின் எனை, நின் கைத் தல நிரையால்,—
குன்றே புரை தோளாய்!—மிடல்கொடு குத்துதி; குத்தப்
பொன்றேன்எனின், நின்னோடு எதிர் பொருகின்றிலென்' என்றான்.

அனுமன் கூற்றினை வியந்து, இராவணன் மொழிதல்

காரின் கரியவன், மாருதி கழற, கடிது உகவா,
'வீரற்கு உரியது சொற்றனை;—விறலோய்!—ஒரு தனியேன்
நேர் நிற்பவர் உளரோ, பிறர் நீ அல்லவர்? இனி, நின்
பேருக்கு உலகு அளவே; இனி உளவோ பிற?' என்றான். 167

'ஒன்று ஆயுதம் உடையாய்அலை; ஒரு நீ எனது உறவும்
கொன்றாய்; உயர் தேர்மேல் நிமிர் கொடு வெஞ் சிலை கோலி,
வன் தானையினுடன் வந்த என் எதிர் வந்து, நின் வலியால்
நின்றாயொடு நின்றார் இனி நிகரோ? உரை, நெடியோய்! 168

'முத் தேவர்கள் முதலாயினர்; முழு மூன்று உலகிடையே
எத் தேவர்கள், எத் தானவர், எதிர்வார் இகல், என் நேர்,
பித்து ஏறினர் அல்லால்? இடை பேராது, எதிர், ''மார்பில்
குத்தே'' என நின்றாய்; இது கூறும் தரம் அன்றால். 169

'பொரு கைத்தலம் இருபத்துள; புகழும் பெரிது உளதால்;
வரு கைத்தல மத வெங் கரி வலி கெட்டென வருவாய்!
இரு கைத்தலம் உடையாய்; எதிர் இவை சொற்றனை; இனிமேல்,
தருகைக்கு உரியது ஓர் கொற்றம் என்? அமர் தக்கதும் அன்றால். 170

'திசை அத்தனையையும் வென்றது சிதைய, புகழ் தெறும் அவ்
வசை மற்று இனி உளதே? எனது உயிர்போல் வரும் மகனை
அசையத் தரை அரைவித்தனை; அழி செம் புனல்அதுவோ
பசையற்றிலது; ஒரு நீ, எனது எதிர் நின்று, இவை பகர்வாய்.

165. அரக்குற்று - செந்நிறம் பொருந்தி; உரக்குப்பை - வலிமை, மிகுதி; அனுங்கா - கெடாத, பின்வாங்காத; 167. பேருக்கு உலகு அளவே - புகழுக்கு உலகு உள்ள அளவும் அளவாம்; 168. 'ஆயுதம் ஒன்றும்' என மாற்றி உம்மை விரிக்க; 170. தருகைக்கு உரியது - விளைதற்கு உரியது; 171. மகன் - அட்சய குமாரன்.

'பூணித்து இவை உரைசெய்தனை; அதனால், உரை பொதுவே;
பாணித்தது; பிறிது என் சில பகர்கின்றது? பழியால்
நாணித் தலை இடுகின்றிலென்; நனி வந்து, உலகு எவையும்
காண, கடிது எதிர் குத்துதி' என்றான், வினை கடியான். 172

அனுமன் இராவணனைக் குத்துதலும், அதன் விளைவும்

'வீரத் திறம் இது நன்று!' என வியவா, மிக விளியா,
தேரின் கடிது இவரா, முழு விழியின் பொறி சிதறு,
ஆரத்தொடு கவசத்து உடல் பொடி பட்டு உக, அவன் மா
மார்பில் கடிது எதிர் குத்தினன், வயிரக் கரம்அதனால். 173

அயிர் உக்கன, நெடு மால் வரை; அனல் உக்கன, விழிகள்;
தயிர் உக்கன, முழு மூளைகள்; தலை உக்கன; தரியா
உயிர் உக்கன, நிருதக் குலம்; உயர் வானரம் எவையும்,
மயிர் உக்கன, எயிறு உக்கன; மழை உக்கன, வானம். 174

வில் சிந்தின நெடு நாண்; நிமிர் கரை சிந்தின, விரி நீர்;
கல் சிந்தின, குல மால் வரை; கதிர் சிந்தின, சுடரும்;
பல் சிந்தின, மத யானைகள்; படை சிந்தினர், எவரும்;
எல் சிந்திய எரி சிந்தின, இகலோன் மணி அகலம். 175

கைக் குத்துஅது படலும், கழல் நிருதர்க்கு இறை கறை நீர்
மைக் குப்பையின் எழில் கொண்டு ஒளிர் வயிரத் தடமார்பில்,
திக்கில் சின மத யானைகள் வய வெம் பணை செருவில்
புக்கு இற்றன, போகாதன, புறம் உக்கன, புகழின். 176

அள் ஆடிய கவசத்து அவிர் மணி அற்றன, திசை போய்
விள்ளா நெடு முழு மீன் என; விழி வெம் பொறி எழ நின்று,
உள் ஆடிய நெடுங் கால் பொர ஒடுங்கா, உலகு உலைய,
தள்ளாடிய வட மேருவின் சலித்தான், அறம் வலித்தான்.177

ஆர்த்தார், விசும்பு உறைவோர்; நெடிது அனுமான்மிசை அதிகம்
தூர்த்தார், நறு முழு மென் மலர்; இசை ஆசிகள் சொன்னார்;
வேர்த்தார் நிருதர்கள்; வானரர் வியந்தார், 'இவன் விசயம்
தீர்த்தான்' என உவந்து ஆடினர், முழு மெய்ம்மயிர் சிலிர்த்தார். 178

172. பூணித்தல் - சூளுறுதல், இதனை 'வஞ்சினக் காஞ்சி' என்பர்; பாணித்தது - காலம் தாழ்த்தது; 173. விளித்தல் - ஆரவாரித்தல்; இவர்தல் - ஏறுதல்; 174. அயிர் - நுண்மணல்; 176. கறை நீர் - இரத்தம்; மைக் குப்பை - கரிய மேகத் திரள்; பணை - கொம்புகள்; இரத்தத்தைக் கொண்ட கரிய மேகத்திரள், இரத்த நீர் நிரம்பிக் கருந் தோல் போர்த்துள்ள இராவணன் உடம்பிற்கு உவமை; 177. அள் ஆடுதல் - பற்று விடுதல்; விள்ளா - பிளவுறாத; 178. தீர்த்தல் - நீக்குதல், ஒழித்தல்.

**இராவணன் உணர்வு பெற்று அனுமனுடன் உரையாடல்**

கற்று, அங்கியின் நெடு வாயுவின் நிலை கண்டவர், கதியால்
மற்று அங்கு ஒரு வடிவு உற்று, அது மாறுறுறு காலை,
பற்று அங்கு அருமையின், அன்னது பயில்கின்றது ஓர் செயலால்,
உற்று அங்கு அது புறம் போய், உடல் புகுந்தால் என உணர்ந்தான்.

உணரா, நெடிது உயிரா, உரை உதவா, எரி உமிழா,
இணை ஆரும் இல் அவன் நேர் வரவு எய்தா, 'வலி செய்தாய்!
அணையாய்; இனி, எனது ஊழ்' என அடரா, எதிர் படரா,
பணை ஆர் புயம் உடையானிடை, சில இம் மொழி பகர்வான்:

'வலி என்பதும் உளதே? அது நின் பாலது; மறவோய்!
அலி என்பவர், புறம் நின்றவர்; உலகு ஏழினும்அடைத்தாய்;
'சலி' என்று எதிர் மலரோன் உரை தந்தால், இறை சலியேன்;
மெலிவு என்பதும் உணர்ந்தேன்; எனை வென்றாய், இனி, விறலோய்!

'ஒன்று உண்டு இனி உரை நேர்குவது; உன் மார்பின், என் ஒரு கை,
குன்றின்மிசை கடை நாள் விழும் உரும்ஏறு எனக் குத்த,
நின்று, உன் நிலை தருவாய்எனின், நின் நேர் பிறர் உளரோ?
இன்றும் உளை; என்றும் உளை; இலை, ஓர் பகை' என்றான். 182

**இராவணனைப் புகழ்ந்து, அனுமன் தன் மார்பு காட்டுதல்**

என்றான் எதிர் சென்றான், இகல் அடு மாருதி; 'எனை நீ
வென்றாய் அலையோ? உன் உயிர் வீடாது, உரை செய்தாய்;
நன்றாக நின் நிலை நன்று' என நல்கா, எதிர் நடவா,
குன்று ஆகிய திரள் தோளவன், 'கடன் கொள்க' எனக் கொடுத்தான்.*

**இராவணன் குத்துதலால் அனுமன் சலித்தல்**

உறுக்கி, தனி எதிர் நின்றவன் உரத்தில், தனது ஒளிர் பல்
இறுக்கி, பல நெடு வாய் மடித்து, எரி கண்தொறும் இழிய,
முறுக்கிப் பொதி நிமிர் பல் விரல் நெரிய, திசை முரியக்
குறுக்கிக் கரம் நெடுந் தோள் புறம் நிமிரக் கொடு குத்த, 184

179. கற்று - ஈண்டு யோக நெறி பயின்று; அங்கியின் நிலை - குண்டலியில் எழுப்பிய ஓமாக்கினியின் நிலை; நெடு வாயு நிலை - இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்ற நாடிகளில் இயங்கும் பிராணவாயுவின் நிலை; வடிவு - உடம்பு; மாறுறுறு காலை - மாறும்போது, பிறிதோர் உடம்பில் நுழையப் புறம் போகிய யோகியர் மீட்டும் தம் உடம்பில் நுழைவது போல இராவணனுக்குப் போய உணர்வு மீண்டும் வந்தது என்றவாறு. 180. வலி - துன்பம்; ஊழ் - முறை; பணை - மரக்கிளை, பருமை எனவும் ஆம்; 181. அடைத்தல் - (ஆண்மை) நிரம்புதல்; 184. உறுக்குதல் - அதட்டுதல்; பொதி - திரட்சி, விரலுக்கு அடை.

பள்ளக் கடல் கொள்ளப் படர் படி பேரினும் பதையா
வள்ளல், பெரு வெள்ளத்து எறும் வலியாரினும் வலியான்,
கள்ளக் கறை உள்ளத்து அதிர் கழல் வெய்யவன் கரத்தால்
தள்ள, தளர் வெள்ளிப் பெருங் கிரி ஆம் எனச் சலித்தான். 185

சலித்த காலையின், இமையவர் உலகு எலாம் சலித்த;
சலித்ததால் அறம்; சலித்தது, மெய்ம் மொழி; தகவும்
சலித்தது; அன்றியும், புகழொடு சுருதியும் சலித்த;
சலித்த நீதியும்; சலித்தன கருணையும் தவமும். 186

**வானரத் தலைவர் மலைகளை எடுத்து, இராவணனுடன் மலைதல்**

அனைய காலையின், அரிக் குலத் தலைவர், அவ் வழியோர்
எனையர் அன்னவர் யாவரும், ஒரு குவடு ஏந்தி,
நினைவின் முன் நெடு விசும்பு ஒரு வெளி இன்றி நெருங்க,
'வினை இது' என்று அறிந்து, இராவணன்மேல் செல விட்டார்.

ஒத்த கையினர், ஊழியின் இறுதியின் உலகை
மெத்த மீது எழு மேகத்தின் விசும்பு எலாம் மிடைய,
பத்து நூறு கோடிக்கு மேல் பனி படு சிகரம்,
எத்த, மேல் செல எறிந்தனர்; பிறிந்தனர், இமையோர். 188

தருக்கி வீசிட, விசும்பு இடம் இன்மையின், தம்மின்
நெருக்குகின்றன, நின்றன, சென்றில, நிறைந்த;
அருக்கனும் மறைந்தான்; இருள் விழுங்கியது, அண்டம்;
'சுருக்கம் உற்றனர், அரக்கர்' என்று, இமையவர் சூழ்ந்தார்.

ஒன்றின் ஒன்று பட்டு உடைவன, இடித்து உரும் அதிரச்
சென்ற வன் பொறி மின் பல செறிந்திட, தெய்வ
வென்றி வில் என விழு நிழல் விரிந்திட, மேன்மேல்
கன்றி ஓடிட, கல்-மழை நிகர்த்தன—கற்கள். 190

இரிந்து நீங்கியது இராக்கதப் பெரும் படை; எங்கும்
விரிந்து சிந்தின, வானத்து மீனொடு விமானம்;
சொரிந்த வெம் பொறி பட, கடல் சுவறின; தோற்றம்
கரிந்த, கண்டகர் கண்-மணி; என் பல கழறி? 191

186. சலித்தல் - தளர்தல்; 188. மெத்த - அழிப்பதற்கு; எத்த - எற்ற, மோதித் தாக்குதற்கு; பிறிந்தனர் - பிரிந்தனர், எதுகை நோக்கி ரகரம் றகரமாயிற்று; 191. கண்டகர் - முள்ளைப் போலத் துன்பம் செய்கின்ற அரக்கர்கள்.

இறுத்தது இன்று உலகு என்பது ஓர் திமிலம் வந்து எய்த,
கறுத்த சிந்தையன் இராவணன் அனையது கண்டான்;
ஒறுத்து, வானவர் புகமுண்ட பார வில், உளைய
அறுத்து நீக்கினன், ஆயிர கோடி மேல் அம்பால். 192

காம்பு எலாம் கடுந் துகள் பட, களிறு எலாம் துணிய,
பாம்பு எலாம் பட, யாளியும் உழுவையும் பாற,
கூம்பல் மா மரம் எரிந்து உக, குறுந் துகள் நுறுங்க,
சாம்பர் ஆயின, தட வரை—சுடு கணை தடிய. 193

'உற்றவாறு!' என்றும், 'ஒன்று நூறு ஆயிரம் உருவா
இற்றவாறு!' என்றும், 'இடிப்புண்டு பொடிப் பொடி ஆகி
அற்றவாறு!' என்றும், அரக்கனை, 'அடு சிலை கொடியோன்
கற்றவாறு!' என்றும்,—வானவர் கைத்தலம் குலைந்தார். 194

'அடல் துடைத்தும்' என்று அரிக் குல வீரர் அன்று எறிந்த
திடல் துடைத்தன, தசமுகன் சரம்; அவை திசை சூழ்
கடல் துடைத்தன; களத்தின்நின்று உயர்தரும் பூழி
உடல் துடைத்தன; உதிரமும் துடைத்தது, ஒண் புடவி. 195

**இராவணன் சரமழை பொழிய, வானரர் நிலைகுலைதல்**

'கொல்வென், இக் கணமே மற்று இவ் வானரக் குழுவை;
வெல்வென், மானிடர் இருவரை' எனச் சினம் வீங்க,
வல் வன் வார் சிலை பத்து உடன் இடக் கையின் வாங்கி,
தொல் வன் மாரியின் தொடர்வன சுடு சரம் துரந்தான். 196

அய்-இரண்டு கார்முகத்தினும், ஆயிரம் பகழி,
கய்கள் ஈர்-ஐந்தினுலும், வெங் கடுப்பினில் தொடுத்துற்று
எய்ய, எஞ்சின, வானமும் இரு நில வரைப்பும்;
மொய் கொள் வேலையும் திசைகளும் சரங்களாய் முடிந்த. 197

அந்தி வானகம் ஒத்தது, அவ் அமர்க் களம்; உதிரம்
சிந்தி, வேலையும் திசைகளும் நிறைந்தன; சரத்தால்
பந்தி பந்தியாய் மடிந்தது, வானரப் பகுதி;
வந்து மேகங்கள் படிந்தன, பிணப் பெரு மலைமேல். 198

192. இறுத்தது - அழிந்தது, திமிலம் - பேரொலி, குழப்பமும் ஆம்; 193. காம்பு - மூங்கில்; கூம்பல் - குவிந்து தோன்றுதல்; சுடு கணை தடிய, தடவரை சாம்பர் ஆயின எனக் கூட்டுக; 194, உற்றவாறு! - (இராவணன்) அம்புகள் பட்ட விதம் என்னே!' 196. வல் வன் சிலை - மிக்க வலிமையுள்ள வில்; தொல் வன் மாரி - ஊழிக் கடையில் பெய்யும் வலிய மழை; 197. கார் முகம் - வில்.

நீலன் அம்பொடு சென்றிலன்; நின்றிலன், அனிலன்;
காலனார் வயத்து அடைந்திலன், ஏவுண்ட கவயன்;
ஆலம் அன்னது ஓர் சரத்தொடும் அங்கதன் அயர்ந்தான்;
சூலம் அன்னது ஓர் வாளியால் சோம்பினன், சாம்பன். 199

**வானரர் நிலை கண்டு, இலக்குவன் உருத்துப் பொருதல்**

மற்றும் வீரர்தம் மருமத்தின் அயில் அம்பு மடுப்ப,
கொற்ற வீரமும் ஆண்தொழில் செய்கையும் குறைந்தார்;
சுற்றும் வானரப் பெருங் கடல் தொலைந்தது; தொலையாது
உற்று நின்றவர் ஓடினர்; இலக்குவன் உருத்தான். 200

நூறு கோடிய, நூறு நூறாயிர கோடி,
வேறு வேறு எய்த சரம் எலாம் சரங்களால் விலக்கி,
ஏறு சேவகன் தம்பி, அவ் இராவணன் எடுத்த
ஆறு நாலு வெஞ் சிலையையும் கணைகளால் அறுத்தான். 201

ஆர்த்த, வானவர் ஆவலம் கொட்டினர்; அரக்கர்
வேர்த்து, நெஞ்சமும் வெதும்பினர்; வினை அறு முனிவர்
தூர்த்து, நாள்மலர் சொரிந்தனர்; இராவணன், தோளைப்
பார்த்து உவந்தனன்; குனித்தது, வானரம் படியில். 202

**இலக்குவனைப் புகழ்ந்து, வேற் படையை அவன்மேல் இராவணன் எறிதல்**

'நன்று, போர் வலி; நன்று, போர் ஆள் வலி; வீரம்
நன்று; நோக்கமும் நன்று; கைக் கடுமையும் நன்று;
நன்று, கல்வியும்; நன்று, நின் திண்மையும் நலனும்'
என்று கைம் மறித்து, இராவணன், 'ஒருவன் நீ' என்றான். 203

'கானின் அன்று இகல் கரன் படை படுத்த அக் கரியோன்-
தானும், இந்திரன்தன்னை ஓர் தனு வலம்தன்னால்
வானில் வென்ற என் மதலையும், வரி சிலை பிடித்த
யானும், அல்லவர் யார் உனக்கு எதிர்?' என்றும் இசைத்தான்.

'வில்லினால் இவன் வெலப்படான்' எனச் சினம் வீங்க,
'கொல்லும் நாளும் இன்று இது' எனச் சிந்தையில் கொண்டான்,
பல்லினால் இதழ் அதுக்கினன்; பரு வலிக் கரத்தால்
எல்லின் நான்முகன் கொடுத்தது ஓர் வேல் எடுத்து எறிந்தான்.

199. சென்றிலன் - செல்லாது கிடந்தான்; நின்றிலன் - நிற்க இயலாதவனானான்; 204. கரியோன் - இராமன்; 205. எல்லின் வேல் என இயைக்க.

**இலக்குவன் அயர, இராவணன் அவனை எடுக்க முயலுதல்**

எறிந்த கால வேல், எய்த அம்பு யாவையும் எரித்துப்
பொறிந்து போய் உக, தீ உக, விசையினின் பொங்கி,
செறிந்த தாரவன் மார்பிடைச் சென்றது; சிந்தை
அறிந்த மைந்தனும், அமர் நெடுங் களத்திடை அயர்ந்தான்.

இரியலுற்றது வானரப் பெரும் படை; இமையோர்
பரியலுற்றனர், உலைந்தனர்; முனிவரும் பதைத்தார்;
விரி திரைக் கடற்கு இரட்டி கொண்டு ஆர்த்தனர், விரவார்;
திரிகை ஒத்தது மண்தலம்; கதிர் ஒளி தீர்ந்த. 207

'அஞ்சினான்அலன்; அயன் தந்த வேலினும் ஆவி
துஞ்சினான்அலன்; துளங்கினான்' என்பது துணியா,
'எஞ்சு இல் யாக்கையை எடுத்துக்கொண்டு அகல்வென்' என்று எண்ணி
நஞ்சினால் செய்த நெஞ்சினான் பார்மிசை நடந்தான். 208

உள்ளி, வெம் பிணத்து உதிர நீர் வெள்ளத்தின் ஓடி,
அள்ளி அம் கைகள் இருபதும் பற்றி, பண்டு அரன் மா
வெள்ளிஅம் கிரி எடுத்தது வெள்கினான் என்ன,
எள் இல் பொன் மலை எடுக்கலுற்றான் என, எடுத்தான். 209

**இலக்குவனை இராவணன் எடுக்க இயலாதவனாய் நிற்றல்**

அடுத்த நல் உணர்வு ஒழிந்திலன், அம்பரம் செம் பொன்
உடுத்த நாயகன் தான் என உணர்தலின்; ஒருங்கே
தொடுத்த எண் வகை மூர்த்தியைத் துளக்கி, வெண் பொருப்பை
எடுத்த தோள்களுக்கு எழுந்திலன்—இராமனுக்கு இளையான்.

தலைகள் பத்தொடும் தழுவிய தசமுகத் தலைவன்
நிலை கொள் மாக் கடல் ஒத்தனன்; கரம் புடை நிமிரும்
அலைகள் ஒத்தன; அதில் எழும் இரவியை ஒத்தான்,
இலை கொள் தண் துழாய் இலங்கு தோள் இராமனுக்கு இளையான். 211

**இலக்குவனை அனுமன் எடுத்துச் செல்லுதல்**

எடுக்கல் உற்று, அவன் மேனியை ஏந்துதற்கு ஏற்ற
மிடுக்கு இலாமையின், இராவணன் வெய்துயிர்ப்பு உற்றான்;
இடுக்கில் நின்ற அம் மாருதி புகுந்து எடுத்து ஏந்தி,
தடுக்கலாதது ஓர் விசையினின் எழுந்து, அயல் சார்ந்தான். 212

207. பரியல் - வருத்தம்; திரிகை - குயவனது சக்கரம்; 210. அம்பரம் - ஆடை; செம் பொன் அம்பரம் உடுத்த நாயகன் என்க; எண் வகை மூர்த்தி - எண் வகை வடிவினன் ஆகிய சிவபிரான்; 212. இடுக்கு - மூலை; 213. அகவு காதல் - தழைத்த பக்தி.

தொக ஒருங்கிய ஞானம் ஒன்று எவரினும் தூயான்,
தகவு கொண்டது ஓர் அன்பு எனும் தனித் துணை அதனால்,
அகவு காதலால், ஆண்தகை ஆயினும், அனுமன்
மகவு கொண்டு போய் மரம் புகும் மந்தியை நிகர்த்தான். 213

மையல் கூர் மனத்து இராவணன் படையினுள் மயங்கும்
செய்ய வாள் அரிஏறு அனான் சிறிதினில் தேற,
கையும் கால்களும் நயனமும் கமலமே அனைய
பொய் இலாதவன் நின்ற இடத்து, அனுமனும் போனான். 214

### இராமன் போர்க்குப் புகுதல்

போன காலையில், புக்கனன் புங்கவன், போர் வேட்டு
யானைமேல் செலும் கோள் அரிஏறு இவன் என்ன;
வானுளோர் கணம் ஆர்த்தனர்; தூர்த்தனர் மலர், மேல்;
தூ நவின்ற வேல் அரக்கனும், தேரினைத் துரந்தான். 215

### இராமன், அனுமன் தோள்மேல் ஏறிச் செல்லுதல்

தேரில் போர் அரக்கன் செல, சேவகன் தனியே
பாரில் செல்கின்ற வறுமையை நோக்கினன், பரிந்தான்,
'சீரில் செல்கின்றது இல்லை இச் செரு' எனும் திறத்தால்,
வாரின் பெய் கழல் மாருதி கதுமென வந்தான். 216

'நூறு பத்துடை நொறில் பரித் தேரின்மேல் நுன்முன்
மாறு இல் பேர் அரக்கன் பொர, நிலத்து நீ மலைதல்
வேறு காட்டும், ஓர் வெறுமையை; மெல்லிய எனினும்,
ஏறு நீ, ஐய! என்னுடைத் தோளின்மேல்' என்றான். 217

'நன்று, நன்று!' என, நாயகன் ஏறினன், நாமக்
குன்றின்மேல் இவர் கோள் அரிஏறு என; கூடி,
அன்று வானவர் ஆசிகள் இயம்பினர்; ஈன்ற
கன்று தாங்கிய தாய் என மாருதி களித்தான். 218

மாணியாய் உலகு அளந்த நாள், அவனுடை வடிவை
ஆணியாய் உணர் மாருதி அதிசயம் உற்றான்;
காணி ஆகப் பண்டு உடையனும் ஒரு தனிக் கலுழன்
நாணினான்; மற்றை அனந்தனும், தலை நடுக்குற்றான். 219

215. துரந்தான் - செலுத்தினன்; 216. சீர் - சமம், ஒப்பு; 216. வேறு காட்டும் - தனியே எடுத்துக் காட்டும்; 219. மாணி - பிரமசாரி, வாமன மூர்த்தி, ஆணி - ஆதாரம்; காணி - தனக்கே உரிய பொருள்; இறைவனைத் தானான தன்மையில் தாங்கிச் செல்வதால் கருடனுக்குப் 'பெரிய திருவடி' என்றும், இராமாவதாரத்தில் இராமன் திருவடியைத் தாங்கியதால் அனுமனுக்குத் 'திருவடி' என்றும் வைணவ மரபில் பெயர் வழங்குகின்றது.

ஓதம் ஒத்தனன் மாருதி; அதன் அகத்து உறையும்
நாதன் ஒத்தனன் என்னினே, துயில்கிலன் நம்பன்;
வேதம் ஒத்தனன் மாருதி; வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தனன் இராமன்; வேறு இதின் இலெ பொருவே. 220

தகுதியாய் நின்ற வென்றி மாருதி தனிமை சார்ந்த
மிகுதியை வேறு நோக்கின், எவ் வண்ணம் விளம்பும் தன்மை?
புகுதி கூர்ந்துள்ளார் வேதம் பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை ஒத்தான்; வீரன், மேலைத் தன் பதமே ஒத்தான். 221

மேருவின் சிகரம் போன்றது என்னினும், வெளிறு உண்டாமால்—
மூரி நீர் அண்டம் எல்லாம் வயிற்றிடை முன்னம் கொண்ட
ஆரியற்கு, அனேக மார்க்கத்தால், இடம் வலமது ஆகச்
சாரிகை திரியல் ஆன மாருதி தாமப் பொன்-தோள். 222

ஆசி சொல்லினர் அருந் தவர்; அறம் எனும் தெய்வம்
காசு இல் நல் நெடுங் கரம் எடுத்து ஆடிட, கயிலை
ஈசன், நான்முகன் என்று இவர் முதலிய இமையோர்
பூசல் காணிய வந்தனர், அந்தரம் புகுந்தார். 223

**இராம-இராவணப் போர்**

அண்ணல், அஞ்சன வண்ணனும், அமர் குறித்து அமைந்தான்;
எண்ண அரும் பெருந் தனி வலிச் சிலையை நாண் எறிந்தான்;
மண்ணும் வானமும், மற்றைய பிறவும், தன் வாய்ப் பெய்து,
உண்ணும் காலத்து, அவ் உருத்திரன் ஆர்ப்பு ஒத்தது ஓதை.

ஆவி சென்றிலர், நின்றிலர், அரக்கரோடு இயக்கர்;
நா உலர்ந்தனர்; கலங்கினர், விலங்கினர்; நடுங்கி;
கோவை நின்ற பேர் அண்டமும் குலைந்தன; குலையாத்
தேவதேவனும், விரிஞ்சனும், சிரதலம் குலைந்தார். 225

ஊழி வெங் கனல் ஒப்பன, துப்பு அன உருவ,
ஆழி நீரையும் குடிப்பன, திசைகளை அளப்ப,
வீழின் மீச்செலின், மண்ணையும் விண்ணையும் தொளைப்ப,
ஏழு வெஞ் சரம், உடன் தொடுத்து, இராவணன் எய்தான்.

220. ஓதம் - கடல், ஈண்டுப் பாற்கடல்; போதம் - ஞானம்; 221. மிகுதி - சிறப்பு; பகுதி - மூலப் பகுதி; மேலைத் தன் பதம் - மேலே உள்ள தன் பரமபதம்; 222. வெளிறு - குற்றம்; அனேக மார்க்கம் - பல வழிகள்; சாரிகை திரியல் - இடமும் வலமுமாகத் திரிதல்; தாமம் - மாலை; 225. தேவ தேவன் - சிவபிரான்.

எய்த வாளியை, ஏழினால், ஏழினோடு ஏழு
செய்து, வெஞ் சரம் ஐந்து ஒரு தொடையினில் சேர்த்தி,
வெய்து கால வெங் கனல்களும் வெள்குற, பொறிகள்
பெய்து போம் வகை, இராகவன் சிலைநின்று பெயர்த்தான். 227

வாளி ஐந்தையும் ஐந்தினால் விசும்பிடை மாற்றி,
ஆளி மொய்ம்பின் அவ் அரக்கனும், ஐ-இரண்டு அம்பு
தோளில் நாண் உற வாங்கினன், துரந்தனன்; சுருதி
ஆளும் நாயகன் அவற்றையும் அவற்றினால் அறுத்தான். 228

அறுத்து, மற்று அவன் அயல் நின்ற அளப்ப அரும் அரக்கர்
செறுத்து விட்டன படை எல்லாம் கணைகளால் சிந்தி,
இறுத்து வீசிய கிரிகளை எரி உக நூறி,
ஒறுத்து, மற்று அவர் தலைகளால் சில மலை உயர்த்தான். 229

மீனுடைக் கருங் கடல் புரை இராக்கதர் விட்ட
ஊனுடைப் படை, இராவணன் அம்பொடும் ஓடி,
வானரக் கடல் படா வகை, வாளியால் மாற்றி,
தானுடைச் சரத்தால் அவர் தலைமலை தடிந்தான். 230

இம்பரான் எனில், விசும்பினன் ஆகும், ஓர் இமைப்பில்;
தும்பை சூடிய இராவணன் முகம்தொறும் தோன்றும்;
வெம்பு வஞ்சகர் விழிதொறும் திரியும்;—மேல் நின்றான்
அம்பின் முன் செலும், மனத்திற்கும் முன் செலும், அனுமன்.

போர்க்களக் காட்சிகள்

ஆடுகின்றன, கவந்தமும்; அவற்றோடும் ஆடிப்
பாடுகின்றன, அலகையும்; நீங்கிய பணைக் கைக்
கோடு துன்றிய கரிகளும் பரிகளும் தலைக்கொண்டு
ஓடுகின்றன, உலப்பு இல, உதிர ஆறு உவரி. 232

அற்ற ஆழிய, அறுப்புண்ட அச்சின, அம்போடு
இற்ற கொய் உளைப் புரவிய, தேர்க் குலம் எல்லாம்;
ஒற்றை வாளியோடு உருண்டன, கருங் களிற்று ஓங்கல்;
சுற்றும் வாசியும் துமிந்தன, அமர்க் களம் தொடர்ந்த. 233

231. மேல் நின்றான் - தன் மேல் நின்ற இராமன்; 233. அற்ற ஆழிய - அற்றுப் போன சக்கரங்கள் உடையன; வாசி - குதிரை.

தேர் இழந்து, வெஞ் சிலைகளும் இழந்து, செந் தறுகண்
கார் இழந்து, வெங் கலின மாக் கால்களும் இழந்து,
சூர் இழந்து, வன் கவசமும் இழந்து, துப்பு இழந்து,
தார் இழந்து, பின் இழந்தனர் நிருதர், தம் தலைகள். 234

அரவ நுண் இடை அரக்கியர்; கணவர்தம் அற்ற,
சிரமும் அன்னவை ஆதலின், வேற்றுமை தெரியா,
புரவியின் தலை பூட்கையின் தலை இவை பொருத்தி,
கரவு இல் இன் உயிர் துறந்தனர், கவவுறத் தழுவி. 235

ஆர்ப்பு அடங்கின, வாய் எலாம்; அழற் கொழுந்து ஒழுகும்
பார்ப்பு அடங்கின, கண் எலாம்; பல வகைப் படைகள்
தூர்ப்பு அடங்கின, கை எலாம்; தூளியின் படலைப்
போர்ப்பு அடங்கின உலகு எலாம்; முரசு எலாம் போன. 236

இராவணன் தனித்து நின்று பொருதல்

ஒன்று நூற்றினோடு ஆயிரம் கொடுந் தலை உருட்டி,
சென்று தீர்வு இல, எனைப் பல கோடியும் சிந்தி,
நின்ற தேரொடும் இராவணன் ஒருவனும் நிற்க,
கொன்று வீழ்த்தினது—இராகவன் சரம் எனும் கூற்றம். 237

தேரும் யானையும் புரவியும் அரக்கரும் தெற்றி,
பேரும் ஓர் இடம் இன்று எனத் திசைதொறும் பிறங்கி,
காரும் வானமும் தொடுவன பிணக் குவை கண்டான்,—
மூரி வெஞ் சிலை இராவணன்—அரா என முனிந்தான். 238

முரண் தொகுஞ் சிலை இமைப்பினில் முறையுற வாங்கி,
புரண்டு தோள் உறப் பொலன் கொள் நாண் வலம்படப் போக்கி,
திரண்ட வாளிகள் சேவகன் மரகதச் சிகரத்து
இரண்டு தோளினும் இரண்டு புக்கு அழுந்திட, எய்தான். 239

முறுவல் எய்திய முகத்தினன், முளரி அம் கண்ணன்,
மறு இலாதது ஓர் வடிக் கணை தொடுத்து, உற வாங்கி,
இறுதி எய்தும் நாள், கால் பொர, மந்தரம் இடையிட்டு
அறுவது ஆம் என, இராவணன் சிலையினை அறுத்தான். 240

234. சூர் - சூரத்தன்மை; 235. அரவ நுண் இடை - பாம்பு போலத் துவளுகின்ற சிறிய இடை; 236. பார்ப்பு - பார்த்தல்; 239. பொலன் - அழகு; 240. இடையிட்டு அறுவது - நடுவிலே முரிவது.

மாற்று வெஞ் சிலை வாங்கினன், வடிம்புடை நெடு நாண்
ஏற்றுறு முனம், இடை அறக் கணைகளால் எய்தான்;
காற்றினும் கடிது ஆவன, கதிர் மணி நெடுந் தேர்
ஆற்று, கொய் உளைப் புரவியின் சிரங்களும் அறுத்தான். 241

மற்றும் வெம் படை வாங்கினன் வழங்குறுமுன்னம்,
இற்று அவிந்துக எரி கணை இடை அற எய்தான்;
கொற்ற வெண்குடை கொடியொடும் துணிபடக் குறைத்தான்;
கற்றை அம் சுடர்க் கவசமும் கட்டு அறக் கழித்தான். 242

மாற்றுத் தேர் அவண் வந்தன வந்தன வாரா,
வீற்று வீற்று உக, வெயில் உமிழ் கடுங் கணை விட்டான்;
சேற்றுச் செம் புனல் படு களப் பரப்பிடைச் செங் கண்
கூற்றும் கை எடுத்து ஆடிட, இராவணன் கொதித்தான்.*

மின்னும் பல் மணி மவுலிமேல் ஒரு கணை விட்டான்:
அன்ன காய் கதிர் இரவிமேல் பாய்ந்த போர் அனுமன்
என்னல் ஆயது ஓர் விசையினின் சென்று, அவன் தலையில்
பொன்னின் மா மணி மகுடத்தைப் புணரியில் வீழ்த்த, 244

செறிந்த பல் மணிப் பெருவனம் திசை பரந்து எரிய,
பொறிந்தவாய், வயக் கடுஞ் சுடர்க் கணை படும் பொழுதின்,
எறிந்த கால் பொர, மேருவின் கொடு முடி இடிந்து,
மறிந்து வீழ்ந்ததும் ஒத்தது, அவ் அரக்கன்தன் மகுடம். 245

அண்டர் நாயகன் அடு சிலை உதைத்த பேர் அம்பு
கொண்டு போகப் போய்க் குரை கடல் குளித்த அக் கொள்கை,
மண்டலம் தொடர் வயங்கு வெங் கதிரவன், தன்னை
உண்ட கோளொடும், ஒலி கடல் வீழ்ந்ததும் ஒக்கும். 246

**இராவணன் மகுடம் இழந்து, நாணி நின்ற நிலை**

சொல்லும் அத்தனை அளவையில் மணி முடி துறந்தான்;
எல் இமைத்து எழு மதியமும் ஞாயிறும் இழந்த
அல்லும் ஒத்தனன்; பகலும் ஒத்தனன்; அமர் பொருமேல்,
வெல்லும் அத்தனை அல்லது, தோற்றிலா விறலோன். 247

241. ஆற்றுதல் - நடத்துதல்; 245. பெருவனம் - பெரிய திரள்; 246. கோள் - கேது என்னும் கோள்; 247. மதியமும் ஞாயிறும் இழந்த அல்லும் ஒத்தனன் பகலும் ஒத்தனன் என்பது நிரல்நிறை; ஞாயிறு இழந்த பகல் இன்மையின் அஃது இல்பொருள் உவமை.

மாற்ற அருந் தட மணி முடி இழந்த வாள் அரக்கன்,—
ஏற்றம் எவ் உலகத்தினும் உயர்ந்துளன்எனினும்,
ஆற்றல் நல் நெடுங் கவிஞன் ஓர் அங்கதம் உரைப்ப,
போற்ற அரும் புகழ் இழந்த பேர் ஒருவனும்—போன்றான். 248

'அறம் கடந்தவர் செயல் இது' என்று, உலகு எலாம் ஆர்ப்ப,
நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட, நின்றான்—
இறங்கு கண்ணினன், எல் அழி முகத்தினன், தலையன்,
வெறுங் கை நாற்றினன், விழுதுடை ஆல் அன்ன மெய்யன்.

**இராமன் அறிவுரை கூறி, 'இன்று போய், நாளை வா' எனல்**

நின்றவன் நிலை நோக்கிய நெடுந்தகை, இவனைக்
கொன்றல் உன்னிலன், 'வெறுங் கை நின்றான்' எனக் கொள்ளா;
'இன்று அவிந்தது போலும், உன் தீமை' என்று, இசையோடு
ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான்: 250

'அறத்தினால் அன்றி, அமரர்க்கும் அருஞ் சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி;
பறத்தி, நின் நெடும் பதி புகக் கிளையொடும்; பாவி!
இறத்தி; யான் அது நினைக்கிலென், தனிமை கண்டு இரங்கி.

'உடைப் பெருங் குலத்தினரொடும், உறவொடும், உதவும்
படைக்கலங்களும், மற்றும் நீ தேடிய பலவும்,
அடைத்து வைத்தன திறந்துகொண்டு ஆற்றுதிஆயின்,
கிடைத்தி; அல்லையேல், ஒளித்தியால்; சிறு தொழில் கீழோய்!

'சிறையில் வைத்தவள்தன்னை விட்டு, உலகினில் தேவர்
முறையில் வைத்து, நின் தம்பியை இராக்கதர் முதல் பேர்
இறையில் வைத்து, அவற்கு ஏவல் செய்து இருத்தியேல், இன்னும்,
தறையில் வைக்கிலென், நின் தலை வாளியின் தடிந்து. 253

'அல்லையாம்எனின், ஆர் அமர் ஏற்று நின்று ஆற்ற
வல்லையாம்எனின், உனக்கு உள வலி எலாம் கொண்டு,
''நில், ஐயா!'' என நேர் நின்று பொன்றுதிஎனினும்,
நல்லை ஆகுதி; ''பிழைப்பு இனி உண்டு'' என நயவேல். 254

'ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை; இன்று போய், போர்க்கு
நாளை வா' என நல்கினன்—நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல். 255

248. அங்கதம் - வசைச் செய்யுள்; 251. பறத்தி - விரைவாய்; 252. கிடைத்தி - நெருங்குதல், ஈண்டுப் போர்க்கு வருதல்; 255. பூளை - பூளைப்பூ; நாகு இளங் கமுகு - மிக்க இளமையான கமுகு.

# 15 கும்பகருணன் வதைப் படலம்

**இராவணன் இலங்கை மீளுதல்**

வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும்,
நாரத முனிவற்கு ஏற்ப நயம் பட உரைத்த நாவும்,
தார் அணி மவுலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும்,
வீரமும், களத்தே போட்டு, வெறுங் கையே மீண்டு போனான். 1

கிடந்த போர் வலியார்மாட்டே கொடாத வானவரை எல்லாம்
கடந்து போய், உலகம் மூன்றும் காக்கின்ற காவலாளன்,
தொடர்ந்து போம் பழியினோடும், தூக்கிய கரங்களோடும்,
நடந்து போய், நகரம் புக்கான்; அருக்கனும் நாகம் சேர்ந்தான்.

மாதிரம் எவையும் நோக்கான், வள நகர் நோக்கான், வந்த
காதலர் தம்மை நோக்கான், கடல் பெருஞ் சேனை நோக்கான்,
தாது அவிழ் கூந்தல் மாதர் தனித் தனி நோக்க, தான் அப்
பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான். 3

நாள் ஒத்த நளினம் அன்ன முகத்தியர் நயனம் எல்லாம்
வாள் ஒத்த; மைந்தர் வார்த்தை இராகவன் வாளி ஒத்த;—
கோள் ஒத்த சிறை வைத்து ஆண்ட கொற்றவற்கு, அற்றை நாள், தன்
தோள் ஒத்த துணை மென் கொங்கை நோக்கு அங்குத் தொடர்இலாமை.

மந்திரச் சுற்றத்தாரும், வாணுதல் சுற்றத்தாரும்,
தந்திரச் சுற்றத்தாரும், தன் கிளைச் சுற்றத்தாரும்,
எந்திரப் பொறியின் நிற்ப, யாவரும் இன்றி, தான் ஓர்
சிந்துரக் களிறு கூடம் புக்கென, கோயில் சேர்ந்தான். 5

**இராவணன், தூதரை அழைத்து வர, கஞ்சுகியை ஏவுதல்**

ஆண்டு ஒரு செம் பொன் பீடத்து இருந்து, தன் வருத்தம் ஆறி,
நீண்டு உயர் நினைப்பன் ஆகி, கஞ்சுகி அயல் நின்றானை,
'ஈண்டு, நம் தூதர் தம்மை இவ்வழித் தருதி' என்றான்.
பூண்டது ஓர் பணியன், வல்லை, நால்வரைக் கொண்டு புக்கான்.

15 : 1. வாரணம் - யானை; 3. காதலர் - புதல்வர்; 4. கோள் - நவக் கிரகங்கள்; ஒத்த - பொருத்தமான; துணை மென் கொங்கை - இரட்டையான மெல்லிய தனங்களையுடைய கொற்றவை; 5. தந்திரம் - சேனை; சிந்துரம் - நெற்றியில் அணியும் செம்பொடி; கூடம் - யானை நிற்கும் கொட்டாரம்; 6. கஞ்சுகி - சட்டை அணிந்த மெய்க்காப்பாளன்.

தூதரிடம், எட்டுத் திக்கிலும் உள்ள அரக்கர் சேனையைக் கொணரப் பணித்தல்

மனகதி, வாயுவேகன், மருத்தன், மாமேகன் என்று இவ்
வினை அறி தொழிலர் முன்னு, ஆயிரர் விரவினரை,
'நினைவதன் முன்னம், நீர் போய் நெடுந் திசை எட்டும் நீந்தி,
கனை கழல் அரக்கர் தானை கொணருதிர், கடிதின்' என்றான். 7

'ஏழ் பெருங் கடலும், சூழ்ந்த ஏழ் பெருந் தீவும், எண் இல்
பாழி அம் பொருப்பும், கீழ்பால் அடுத்த பாதாளத்துள்ளும்,
ஆழி அம் கிரியின் மேலும், அரக்கர் ஆனவரை எல்லாம்,
தாழ்வு இலிர் கொணர்திர்' என்றான்; அவர் அது தலைமேல் கொண்டார்.

பின், அமளியில் சேர்ந்து, இராவணன் வருந்தி இருத்தல்

மூவகை உலகுளோரும் முறையில் நின்று ஏவல் செய்வார்,
பாவகம் இன்னது என்று தெரிகிலர், பதைத்து விம்ம,
தூ அகலாத வை வாய் எஃகு உறத் தொளைக் கை யானை
சேவகம் அமைந்தது என்ன, செறி மலர் அமளி சேர்ந்தான். 9

பண் நிறை பவளச் செவ் வாய், பைந் தொடி, சீதை என்னும்
பெண் இறைகொண்ட நெஞ்சில் நாண் நிறைகொண்ட பின்னர்,
கண் இறை கோடல் செய்யான், கையறு கவலை சுற்ற,
உள் நிறை மானம்தன்னை உமிழ்ந்து, எரி உயிர்ப்பதானான். 10

வான் நகும்; மண்ணும் எல்லாம் நகும்;—நெடு வயிரத் தோளான்—
நான் நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று, அதற்கு நாணான்;
வேல் நகு நெடுங் கண், செவ் வாய், மெல் இயல், மிதிலை வந்த,
சானகி நகுவள்—என்றே நாணத்தால் சாம்புகின்றான். 11

மாலியவான், 'உற்றது என்?' என, இராவணனிடம் வினவுதல்

ஆங்கு, அவன்தன் மூதாதை ஆகிய, மூப்பின் யாக்கை
வாங்கிய வரி வில் அன்ன, மாலியவான் என்று ஓதும்
பூங் கழல் அரக்கன் வந்து, பொலங் கழல் இலங்கை வேந்தைத்
தாங்கிய அமளிமாட்டு, ஓர் தவிசுடைப் பீடம் சார்ந்தான். 12

9. பாவகம் - கருத்து; எஃகு - வேல்; சேவகம் - யானைக்கூடம்; 10. இறை கொண்ட - தங்கியிருக்கின்றன; கண் கோடல் - கண் இமை பொருந்தப் பெறுதல்; 11. சாம்புதல் - வாடுதல்; 12. அமளி - படுக்கை; தவிசு - மெத்தை இட்ட இருக்கை.

இருந்தவன், இலங்கை வேந்தன் இயற்கையை எய்த நோக்கி,
பொருந்த வந்துற்ற போரில் தோற்றனன் போலும் என்னு,
'வருந்தினை, மனமும்; தோளும் வாடினை;—நாளும் வாடாப்
பெருந் தவம் உடைய ஐயா!—என், உற்ற பெற்றி?' என்ருன்.

**நிகழ்ந்தவற்றை இராவணன் உரைத்தல்**

கவை உறு நெஞ்சன், காந்திக் கனல்கின்ற கண்ணன், பத்துச்
சிவையின் வாய் என்னச் செந் தீ உயிர்ப்பு உறத் திறந்த மூக்கன்,
நவை அறு பாகை அன்றி அமுதினை நக்கினுலும்
சுவை அறப் புலர்ந்த நாவான், இனையன சொல்லலுற்ருன்:

'சங்கம் வந்து உற்ற கொற்றத் தாபதர்தம்மோடு எம்மோடு
அங்கம் வந்து உற்றது ஆக, அமரர் வந்து உற்ருர் அன்றே;
கங்கம் வந்து உற்ற செய்ய களத்து, நம் குலத்துக்கு ஒவ்வாப்
பங்கம் வந்துற்றது அன்றி, பழியும் வந்துற்றது' அன்றே? 15

'முளை அமை திங்கள் சூடும் முக்கணுன் முதல்வர் ஆக,
கிளை அமை புவனம் மூன்றும் வந்து உடன் கிடைத்தவேனும்,
வளை அமை வரி வில் வாளி மெய் உற வழங்கும்ஆயின்,
இளையவன்தனக்கும் ஆற்ருது, என் பெருஞ் சேனை—நம்ப! 16

'எறித்த போர் அரக்கர் ஆவி எண் இலா வெள்ளம் எஞ்சப்
பறித்த போது, என்னை அந்தப் பரிபவம் முதுகில் பற்றப்
பொறித்த போது, அன்னுன் அந்தக் கூனி கூன் போக உண்டை
தெறித்த போது ஒத்தது அன்றி, சினம் உண்மை தெரிந்தது இல்லை.

'மலை உறப் பெரியர் ஆய வாள் எயிற்று அரக்கர் தானை
நிலையுறச் செறிந்த வெள்ளம் நூற்று-இரண்டுஎனினும், நேரே
குலை உறக் குளித்த வாளி, குதிரையைக் களிற்றை ஆளைத்
தலை உறப் பட்டதுஅல்லால், உடல்களில் தங்கிற்று உண்டோ?

'போய பின், அவன் கை வாளி உலகு எலாம் புகுவது அல்லால்,
ஓயும் என்று உரைக்கலாமோ, ஊழி சென்ருலும்? ஊழித்
தீயையும் தீய்க்கும்; செல்லும் திசையையும் தீய்க்கும்; சொல்லும்,
வாயையும் தீய்க்கும்; முனனின், மனத்தையும் தீய்க்கும் மன்னே. 19

14. கவை - கவ்வை, துன்பம்; சிவை - துருத்தி; 15. சங்கம் - கூட்டம்; தாபதர் - தவக்கோலத்தினராகிய இராம இலக்குவர்; அங்கம் - போர்; கங்கம் - பருந்து; பங்கம் - தோல்வி; 16. கிளை - கிளைத்தல், மேன்மேலும் வளரும் தன்மை; இளையவன் - இலக்குவன்; 17. எறித்த - எறிந்த (படைக் கலங்களை வீசி) எறியப்பெற்ற; 18. குலை உற - கூட்டமாக.

'மேருவைப் பிளக்கும் என்றால், விண் கடந்து ஏகும் என்றால்,
பாரினை உருவும் என்றால், கடல்களைப் பருகும் என்றால்,
ஆருமே, அவற்றின் ஆற்றல்; ஆற்றுமேல், அனந்தகோடி,
மேருவும், விண்ணும், மண்ணும், கடல்களும் வேண்டும் அன்றே? 20

'வரி சிலை நாணில் கோத்து வாங்குதல் விடுதல் ஒன்றும்
தெரிகிலர், அமரரேயும்; ஆர் அவன் செய்கை தேர்வார்?
''பொரு சினத்து அரக்கர் ஆவி போகிய போக'' என்று
கருதவே, உலகம் எங்கும் சரங்களாய்க் காட்டும் அன்றே. 21

'நல் இயல் கவிஞர் நாவில் பொருள் குறித்து அமர்ந்த நாமச்
சொல் என, செய்யுள் கொண்ட தொடை என, தொடையை நீக்கி
எல்லையில் சென்றும் தீரா இசை என, பழுது இலாத
பல் அலங்காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ. 22

'இந்திரன் குலிச வேலும், ஈசன் கை இலை மூன்று என்னும்
மந்திர அயிலும், மாயோன் வளை எஃகின் வரவும் கண்டேன்;
அந்தரம் நீளிது, அம்மா! தாபதன் அம்புக்கு ஆற்றா
நொந்தனென் யான் அலாதார் யார் அவை நோற்ககிற்பார்? 23

'பேய் இருங் கணங்களோடு சுடு களத்து உறையும் பெற்றி
ஏயவன் தோள்கள் எட்டும், இந்திரன் இரண்டு தோளும்,
மா இரு ஞாலம் முற்றும் வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரம் தோளும், அன்னான் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்றா. 24

'சீர்த்த வீரியராய் உள்ளார், செங் கண் மால் எனினும் யான் அக்
கார்த்தவீரியனை நேர்வார் உளர் எனக் கருதல் ஆற்றேன்;
பார்த்த போது, அவனும், மற்று அத் தாபதன் தம்பி பாதத்து
ஆர்த்தது ஓர் துகளுக்கு ஒவ்வான்; ஆர் அவற்கு ஆற்றகிற்பார்?

'முப்புரம் ஒருங்கச் சுட்ட மூரி வெஞ் சிலையும், வீரன்
அற்புத வில்லுக்கு, ஐய! அம்பு எனக் கொளலும் ஆகா;
ஒப்பு வேறு உரைக்கல் ஆவது ஒரு பொருள் இல்லை; வேதம்
தப்பின போதும், அன்னான் தனு உமிழ் சரங்கள் தப்பா. 26

'உற்பத்தி அயனே ஒக்கும்; ஓடும்போது அரியே ஒக்கும்;
கற்பத்தின் அரனே ஒக்கும், பகைஞரைக் கலந்த காலை;
சிற்பத்தின் நம்மால் பேசச் சிறியவோ? என்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்த என்றால், பிறிது ஒரு சான்றும் உண்டோ? 27

20. ஆற்றுமேல் - (அந்த அம்புகளின் ஆற்றலைத்) தாங்க வேண்டுமாயின்; 21. போகிய - போகும்படி; 23. அந்தரம் - வேற்றுமை; நோற்ககிற்பார் - எதிர்த்துத் தாங்க வல்லார்; 27. கற்பம் - உலகம் அழியும் காலம்; சிற்பம் - தொழில் திறமை; தற்பம் - தர்ப்பம், செருக்கு.

'குடக்கதோ? குணக்கதேயோ? கோணத்தின் பாலதேயோ?
தடத்த பேர் உலகத்தேயோ? விசும்பதோ? எங்கும்தானோ?
வடக்கதோ? தெற்கதோ? என்று உணர்ந்திலன்;—மனிதன் வல்வில்—
இடத்ததோ? வலத்ததோ? என்று உணர்ந்திலேன், யானும் இன்னும்.

'ஏற்றம் ஒன்று இல்லை என்பது ஏழைமைப் பாலது அன்றே?
ஆற்றல் சால் கலுழனேதான் ஆற்றுமே, அமரின் ஆற்றல்!—
காற்றையே மேற்கொண்டானோ? கனலையே கடாவினானோ?
கூற்றையே ஊர்கின்றானோ?—குரங்கின்மேல் கொண்டு நின்றான்.

'போய் இனித் தெரிவது என்னே? பொறையினால் உலகம் போலும்
வேய் எனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கி,
தீ எனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்,
நாய் எனத் தகுதும் அன்றே, காமனும் நாமும் எல்லாம். 30

'வாசவன், மாயன், மற்றை மலருளோன், மழு வாள் அங்கை
ஈசன் என்று இனைய தன்மை இளிவரும் இவரால் அன்றி,
நாசம் வந்து உற்ற போதும், நல்லது ஓர் பகையைப் பெற்றேன்;—
பூசல் வண்டு உறையும் தாராய்!— இது இங்குப் புகுந்தது' என்றான். 31

**மாலியவான் அறிவுரை**

''முன் உரைத்தேனை வாளா முனிந்தனை; முனியா உம்பி
இன் உரைப் பொருளும் கேளாய்; ஏது உண்டுஎனினும், ஓராய்;
நின் உரைக்கு உரை வேறு உண்டோ?—நெருப்பு உரைத்தாலும், நீண்ட
மின் உரைத்தாலும், ஒவ்வா விளங்கு ஒளி அலங்கல் வேலோய்!

'உளைவன எனினும், மெய்ம்மை உற்றவர், முற்றும் ஓர்ந்தார்,
விளைவன சொன்னபோதும், கொள்கிலை; விடுதி கண்டாய்;
கிளைதரு சுற்றம், வெற்றி, கேண்மை, நம் கல்வி, செல்வம்,
களைவு அருந் தானையோடும் கழிவது காண்டி' என்றான். 33

**மகோதரன், இராவணனுக்குச் சொல்லிய உறுதிமொழிகள்**

ஆயவன் உரைத்தலோடும், அப் புறத்து இருந்தான், ஆன்ற
மாயைகள் பலவும் வல்ல, மகோதரன் கடிதின் வந்து,
தீ எழ நோக்கி, 'என் இச் சிறுமை நீ செப்பிற்று?' என்னா,
ஓய்வுறு சிந்தையானுக்கு உறுத பேர் உறுதி சொன்னான்: 34

28. தடத்த - அகன்ற; 29. ஏற்றம் - ஊர்தி, வாகனம்; 30. சேவகம் - வீரம்; வீரச் சேவகம் - மிகுந்த வீரம்; 31. இளிவருதல் - இகழ்ச்சிக்கு ஆளாதல்; பூசல் - ஆரவாரம்; 32. ஏது - (நந்தி நவின்ற சாபமும், தீக் குளித்த வேதவதி 'நோய் உனக்கு யான்' என்று கூறிய சாபமும் ஆகிய) காரணங்கள்; 33. விடுதி கண்டாய் - விட்டிடுதலைச் செய்தாய்; 34. ஆன்ற - நிறைந்த.

' ''நன்றி ஈது'' என்று கொண்டால், நயத்தினை நயந்து, வேறு
வென்றியே ஆக, மற்றுத் தோற்று உயிர் விடுதல் ஆக,
ஒன்றிலே நிற்றல் போலாம், உத்தமர்க்கு உரியது; ஒல்கிப்
பின்றுமேல், அவனுக்கு அன்றோ, பழியொடு நரகம் பின்னை?

'திரிபுரம் எரிய, ஆங்கு ஓர் தனிச் சரம் துரந்த செல்வன்,
ஒருவன் இப் புவனம் மூன்றும் ஓர் அடி ஒடுக்கிக் கொண்டோன்,
பொருது, உனக்கு உடைந்து போனார்; மானிடர் பொருத போர்க்கு
வெருவுதி போலும்; மன்ன! கயிலையை வெருவல் கண்டாய்!

' "வென்றவர் தோற்பர்; தோற்றோர் வெல்குவர்; எவர்க்கும் மேலாய்
நின்றவர் தாழ்வர்; தாழ்ந்தோர் உயர்குவர்; நெறியும் அஃதே"
என்றனர் அறிஞர் அன்றே! ஆற்றலுக்கு எல்லை உண்டோ?
புன் தவர் இருவர் போரைப் புகழ்தியோ?—புகழ்க்கு மேலோய்!

'தேவியை விடுதிஆயின், திறல்அது தீரும் அன்றே;
ஆவியை விடுதல் அன்றி, அல்லது ஒன்று ஆவது உண்டோ?
தா அரும் பெருமை அம்மா நீ இனித் தாழ்த்தது என்னே?
காவல! விடுதி, இன்று இக் கையறு கவலை, நொய்தின். 38

'இனி இறை தாழ்த்தி ஆயின், இலங்கையும் யாமும் எல்லாம்
கனியுடை மரங்கள் ஆக, கவிக் குலம் கடக்கும் காண்டி;
பனியுடை வேலைச் சில் நீர் பருகினன் பரிதி என்னத்
துனி உழந்து அயர்வது என்னே? துறத்தியால் துன்பம்' என்றான்.

'முன், உனக்கு, இறைவர் ஆன மூவரும் தோற்றார்; தேவர்
பின், உனக்கு ஏவல் செய்ய, உலகு ஒரு மூன்றும் பெற்றாய்;
புல் நுனைப் பனி நீர் அன்ன மனிசரைப் பொருள் என்று உன்னி,
என், உனக்கு இளைய கும்பகருணனை இகழ்ந்தது?—எந்தாய்!

'ஆங்கு அவன்தன்னைக் கூவி, ஏவுதிஎன்னின், ஐய!
ஓங்கலே போல்வான் மேனி காணவே ஒளிப்பர் அன்றே;
தாங்குவர் செரு முன் என்னின், தாபதர் உயிரைத் தானே
வாங்கும்' என்று இனைய சொன்னான்; அவன் அது மனத்துக் கொண்
[டான்.

35. நன்றி - நல்லது; நயத்தினை நயந்து - இனியதைப் பெற விரும்பி;
36. வெருவல் - அஞ்சுதல்; 37. புன் தவர் - எளிய தவத்தையுடையவர்;
41. தாங்குதல் - எதிர்த்து நிற்றல்.

மகோதரனை இராவணன் புகழ்தல்

'பெறுதியே, எவையும் சொல்லி;—பேர் அறிவாள!—சிறிற்று
அறிதியே; என்பால் வைத்த அன்பிறுக்கு அவதி உண்டோ?
உறுதியே சொன்னாய்' என்னா, உள்ளமும் வேறுபட்டான்;—
இறுதியே இயைவது ஆனால், இடை, ஒன்றால் தடை உண்டாமோ? 42

இராவணன் ஏவ, வீரர்கள் கும்பகருணனைத் துயில் எழுப்புதல்

'நன்று இது கருமம்' என்னா, 'நம்பியை நணுக ஓடிச்
சென்று இவண் தருதிர்' என்றான்; என்றலும், நால்வர் சென்றார்;
தென் திசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவர் என்ன,
குன்றினும் உயர்ந்த தோளான் கொற்ற மாக் கோயில் புக்கார்.

கிங்கரர் நால்வர் சென்று, அக் கிரி அனான் கிடந்த கோயில்
மங்குல் தோய் வாயில் சார்ந்து, 'மன்ன! நீ உணர்தி' என்ன,
தம் கையின் எழுவினாலே தலை செவி தாக்க, பின்னும்
வெங்கணான் துயில்கின்றானை வெகுளியால் இனைய சொன்னார்:†

'உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய வாழ்வு எலாம்
இறங்குகின்றது! இன்று காண்; எழுந்திராய்! எழுந்திராய்!
கறங்கு போல வில்பிடித்த கால தூதர் கையிலே,
உறங்குவாய், உறங்குவாய்! இனிக் கிடந்து உறங்குவாய்'!†45

என்று சொல்ல, அன்னவன் எழுந்திராமை கண்டு போய்,
'மன்றல் தங்கு மாலை மார்ப! வன் துயில் எழுப்பலம்.'
அன்று, 'கொள்கை கேண்மின்' என்று மாவொடு ஆளி ஏவினான்,
'ஒன்றன்மேல் ஓர் ஆயிரம் உழக்கிவிட்டு எழுப்புவீர்.'† 46

'அனைய தானை அன்று செல்ல, ஆண்டு நின்று பேர்ந்திலன்;
இனைய சேனை மீண்டது' என்று இராவணற்கு இயம்பலும்
'வினையம் வல்ல நீங்கள் உங்கள் தானையோடு சென்மின்' என்று,
இனைய மல்லர் ஆயிராரை ஏவி நின்று இயம்பினான்.† 47

சென்றனர் பத்து நூற்றுச் சீரிய வீரர் ஓடி
'மன்றல் அம் தொங்கலான்தன் மனம்தனில் வருத்தம் மாற
இன்று இவன் முடிக்கும்' என்னா, எண்ணினர்; எண்ணி, ஈண்ட,
குன்று என உயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில் புக்கார்.†

44. கிங்கரர் - பணியாளர்; 46. அன்று - அப்பொழுது; கொள்கை - கோட்பாடு, ஈண்டு எழும்பும் வழி; 47. வினையம் - தொழில் திறம்.

திண் திறல் வீரன் வாயில் திறத்தலும், சுவாத வாதம்
மண்டுற, வீரர் எல்லாம் வருவது போவதாக,
கொண்டுறு தடக் கை பற்றி, குலமுடை வலியினாலே
கண் துயில் எழுப்ப எண்ணி, கடிது ஒரு வாயில் புக்கார். 49

ஓதநீர் விரிந்ததென்ன உறங்குவான் நாசிக் காற்றால்
கோது இலா மலைகள் கூடி, வருவது போவதாக,
ஈது எலாம் கண்ட வீரர் ஏங்கினர், துணுக்கமுற்றார்;
போதுவான் அருகு செல்லப் பயந்தனர், பொறி கொள் கண்ணர். 50

'இங்கு இவன் தன்னை யாம் இன்று எழுப்பல் ஆம் வகை எது?' என்று,
துங்க வெவ் வாயும் மூக்கும் கண்டு, மெய் துணுக்கமுற்றார்;
அங்கைகள் திண்ட அஞ்சி, ஆழ் செவிஅதனினூடு,
சங்கொடு தாரை, சின்னம், சமைவுறச் சாற்றலுற்றார். 51

கோடு, இகல் தண்டு, கூடம், குந்தம், வல்லோர்கள் கூடி,
தாடைகள், சந்து, மார்பு, தலை எனும் இவற்றில் தாக்கி,
வாடிய கையர் ஆகி, மன்னவற்கு உரைப்ப, 'பின்னும்
நீடிய பரிகள் எல்லாம் நிரைத்திடும், விரைவின்' என்றான். 52

கட்டுறு கவன மா ஓர் ஆயிரம் கடிதின் வந்து,
மட்டு அற உறங்குவான்தன் மார்பிடை, மாலை மான
விட்டு உற நடத்தி, ஓட்டி, விரைவு உள சாரி வந்தார்;
தட்டுறு குறங்கு போலத் தடந் துயில் கொள்வதானான். 53

கொய்ம் மலர்த் தொங்கலான்தன் குரை கழல் வணங்கி, 'ஐய!
உய்யலாம் வகைகள் என்று, அங்கு எழுப்பல் ஆம் வகையே செய்தும்;
கய் எலாம் வலியும் ஒய்ந்த; கவன மா காலும் ஒய்ந்த;
செய்யலாம் வகை வேறு உண்டோ? செப்புதி, தெரிய' என்றார்.

'இடை பேரா இளையானை, இணை ஆழி மணி நெடுந் தேர்
படை பேரா வரும்போதும், பதையாத உடம்பானை,
மடை பேராச் சூலத்தால், மழு வாள் கொண்டு, எறிந்தானும்,
தொடை பேராத் துயிலானை, துயில் எழுப்பிக் கொணர்க!' என்றான்.

என்றலுமே அடி இறைஞ்சி, ஈர்-ஐஞ்ஞூற்று இராக்கதர்கள்,
வன் தொழிலால் துயில்கின்ற மன்னவன்தன் மாடு அணுகி,
நின்று இரண்டு கதுப்பும் உற, நெடு முசலம் கொண்டு அடிப்ப,
பொன்றினவன் எழுந்தாற்போல், புடைபெயர்ந்து அங்கு எழுந்திருந்
[தான்.

49. சுவாத வாதம் - மூச்சுக் காற்று; 52. கூடம் - சம்மட்டி; குந்தம் - ஈட்டி; சந்து - மூட்டுகள், உடற்பொருத்துகள்; 53. குறங்கு - தொடை; தொடை தட்டுதல் - உலக வழக்கு; 55. மடை பேரா - வாய் மழுங்காத; 56. முசலம் - உலக்கை.

மூவகை உலகும் உட்க, முரண் திசைப் பணைக் கை யானை
தாவரும் திசையின்நின்று சலித்திட, கதிரும் உட்க,
பூவுளான், புணரி மேலான், பொருப்பினன், முதல்வர் ஆய
யாவரும் நுணுக்குற்று ஏங்க, எளிதினின் எழுந்தான், வீரன்.

விண்ணினை இடறும் மோலி; விசும்பினை நிறைக்கும் மேனி;
கண்ணெனும் அவை இரண்டும் கடல்களின் பெரிய ஆகும்;
எண்ணினும் பெரியன் ஆன இலங்கையர் வேந்தன் பின்னோன்,
மண்ணினை அளந்து நின்ற மால் என வளர்ந்து நின்றான். 58

எழுந்த கும்பகருணன் உணவு முதலியன உட்கொள்ளுதல்

உறக்கம் அவ் வழி நீங்கி, உணத் தகும்
வறைக்கு அமைந்த ஊனொடு, வாக்கிய
நறைக் குடங்கள் பெருந், கடை நக்குவான்,
இறக்க நின்ற முகத்தினை எய்துவான்; 59

ஆறு நூறு சகடத்து அடிசிலும்,
நூறு நூறு குடம் களும், நுங்கினன்;
ஏறுகின்ற பசியை எழுப்பினன்—
சீறுகின்ற முகத்து இரு செங்கணன். 60

எருமை ஏற்றை ஓர் ஈர்-அறுநூற்றையும்
அருமை இன்றியே தின்று, இறை ஆறினன்,
பெருமை ஏற்றது கோடும் என்றே—பிறங்கு
உருமைஏற்றைப் பிசைந்து, எரி ஊதுவான். 61

கும்பகருணன் தோற்றம்

இருந்த போதும், இராவணன் நின்றெனத்
தெரிந்த மேனியன், திண் கடலின் திரை
நெரிந்தது அன்ன புருவத்து நெற்றியான்,
சொரிந்த சோரி தன் வாய் வர, தூங்குவான்; 62

உதிர வாரியொடு ஊனொடு எலும்பு தோல்
உதிர, வாரி நுகர்வது ஓர் ஊணினன்;
கதிர வாள் வயிரப் பணைக் கையினன்;
கதிர வாள் வயிரக் கழற் காலினன்; 63

59. வறை - வறுத்தல்; வாக்குதல் - வார்த்தல், ஊற்றுதல்; இறக்க - தாழ, இறங்க என்பது வலிந்து நின்றது; 60. சகடம் - வண்டி; 61. பெருமை ஏற்றது - பெருமை பெற்றதாகிய உணவு, பேருண்டி; கோடும் - உட்கொள் வோம்; உருமை - இடி, ஐ சாரியை; 63. கதிர வாள் வயிரக் கழல் - சந்திர னுடைய ஒளி போன்ற வயிரக் கற்கள்.

இரும் பசிக்கு மருந்து என, எஃகினேடு
இரும்பு அசிக்கும் அருந்தும் எயிற்றினன்;
வரும் களிற்றினைத் தின்றனன்; மால் அரு
அருங் களில் திரிகின்றது ஓர் ஆசையான்; 64

சூலம் ஏகம் திருத்திய தோளினன்;
சூல மேகம் எனப் பொலி தோற்றத்தான்;
காலன்மேல் நிமிர் மத்தன்; கழல் பொரு
காலன்; மேல் நிமிர் செம் மயிர்க் கற்றையான்; 65

எயில் தலைத் தகர, தலத்து இந்திரன்
எயிறு அலைத்த கரதலத்து, எற்றினன்;
அயில் தலைத் தொடர் அங்கையன்; சிங்க ஊன்
அயிறலைத் தொடர் அங்கு அகல் வாயினன். 66

உடல் கிடந்துழி, உம்பர்க்கும் உற்று, உயிர்;
குடல் கிடந்து அடங்கா நெடுங் கோளினன்;
கடல் கிடந்தது நின்றதன்மேல் கதழ்
வட கடுங் கனல்போல் மயிர்ப் பங்கியான்; 67

திக்கு அடங்கலும் வென்றவன் சிறிட,
மிக்கு அடங்கிய வெங் கதிர் அங்கிகள்
புக்கு அடங்கிய மேருப் புழை என,
தொக்கு அடங்கித் துயில்தரு கண்ணினன்; 68

காம்பு இறங்கும் கன வரைக் கைம்மலை
தூம்பு உறங்கும் முகத்தின துய்த்து, உடல்
ஓம்புறும் முழை என்று உயர் மூழ்கினன்;
பாம்பு உறங்கும் படர் செவிப் பாழியான்; 69

**இராவணன்முன் சென்று கும்பகருணன் வணங்குதல்**

'கூயினன் நும் முன்' என்று அவர் கூறலும்,
போயினன், நகர் பொம்மென்று இரைத்து எழ;
வாயில் வல்லை நுழைந்து, மதி தொடும்
கோயில் எய்தினன், குன்று அன கொள்கையான். 70

64. அருந்தும் எயிற்றினன், அசிக்கும் எயிற்றினன் எனத் தனித்தனி இயையும்; அசித்தல் - அவமதித்துச் சிரித்தல்; 65. சூல மேகம் - சூல் கொண்ட முகில்; மத்தன் - செருக்குடையவன், உடற் கொழுப்பு உடையவன்; 66. எயில் தலைத் தகர - மதில் தலையுடைந்திடும்படி; 67. முதல் இரண்டடிகளால் தேவர்களையும் அஞ்சச் செய்யும் உருவத்தையுடையவன் என்பது பெறப்படும்; 69. காம்பு - மூங்கில்; தூம்பு - துளை.

நிலை கிடந்த நெடு மதிள் கோபுரத்து
அலை கிடந்த இலங்கையர் அண்ணலைக்
கொலை கிடந்த வேல் கும்பகருணன், ஓர்
மலை கிடந்தது போல, வணங்கினான். 71

**தம்பியைத் தழுவி, உணவு அளித்துப் போர்க்கோலம் செய்தல்**

வன் துணைப் பெருந் தம்பி வணங்கலும்,
தன் திரண்ட தோள் ஆரத் தழுவினான்—
நின்ற குன்று ஒன்று, நீள் நெடுங் காலொடும்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான். 72

உடன் இருத்தி, உதிரத்தொடு ஒள் நறைக்
குடன் நிரைத்தவை ஊட்டி, தசைக் கொளீஇ,
கடல் நுரைத் துகில் சுற்றி, கதிர்க் குழாம்
புடை நிரைத்து ஒளிர் பல் கலன் பூட்டினான்.* 73

பேர விட்ட பெரு வலி இந்திரன்
ஊர விட்ட களிற்றொடும் ஓடு நாள்,
சோர விட்ட சுடர் மணி ஓடையை
வீரபட்டம் என, நுதல் வீக்கினான். 74

மெய் எலாம் மிளிர் மின் வெயில் வீசிட,
தொய்யில் வாசத் துவர் துதைந்து ஆடிய
கையின் நாகம் என, கடல் மேனியில்
தெய்வம் நாறு செஞ் சாந்தமும் சேர்த்தினான். 75

விடம் எழுந்ததுபோல், நெடு விண்ணினைத்
தொட உயர்ந்தவன் மார்பிடைச் சுற்றினான்,
இடபம் உந்தும், எழில் இரு-நான்கு தோள்,
கடவுள் ஈந்த கவசமும் கட்டினான். 76

**'போர்க் கோலம் செய்தது ஏன்?' என, கும்பகருணன் வினவுதல்**

அன்ன காலையின், 'ஆயத்தம் யாவையும்
என்ன காரணத்தால்?' என்று இயம்பினான்—
மின்னின் அன்ன புருவமும், விண்ணினைத்
துன்னு தோளும், இடம் துடியாநின்றான். 77

73. குடன் - குடம்; 74. ஓடை - யானையினுடைய முகபடாம்; 77. ஆயத்தம் - ஏற்பாடுகள்.

**கும்பகருணனைப் போர் செய்ய இராவணன் ஏவுதல்**

'வானரப் பெருந் தானையர், மானிடர்,
கோ நகர்ப் புறம் சுற்றினர்; கொற்றமும்
ஏனை உற்றனர்; நீ அவர் இன் உயிர்
போனகத் தொழில் முற்றுதி, போய்' என்றான். 78

**கும்பகருணன் அறிவுரை**

'ஆனதோ வெஞ் சமம்? அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்
போனதோ? புகுந்ததோ, பொன்றும் காலமே? 79

'கிட்டியதோ, செரு? கிளர் பொன் சீதையைச்
சுட்டியதோ? முனம், சொன்ன சொற்களால்,
திட்டியின்விடம் அன்ன கற்பின் செல்வியை
விட்டிலையோ? இது விதியின் வண்ணமே! 80

'கல்லலாம் உலகினை; வரம்பு கட்டவும்
சொல்லலாம்; பெரு வலி இராமன் தோள்களை
வெல்லலாம் என்பது, சீதை மேனியைப்
புல்லலாம் என்பது போலுமால்—ஐயா! 81

'புலத்தியன் வழிமுதல் வந்த பொய் அறு
குலத்து இயல்பு அழிந்தது; கொற்றம் முற்றுமோ?
வலத்து இயல் அழிவதற்கு ஏது; மை அறு
நிலத்து இயல் நீர் இயல் என்னும் நீரதால். 82

'கொடுத்தனை, இந்திரற்கு உலகும் கொற்றமும்;
கெடுத்தனை, நின் பெருங் கிளையும்; நின்னையும்
படுத்தனை; பல வகை அமரர் தங்களை
விடுத்தனை; வேறு இனி வீடும் இல்லையால். 83

'அறம் உனக்கு அஞ்சி, இன்று ஒளித்ததால்; அதன்
திறம் முனம் உழத்தலின், வலியும் செல்வமும்
நிறம் உனக்கு அளித்தது; அங்கு அதனை நீக்கி, நீ
இற, முன் அங்கு, யார் உனை எடுத்து நாட்டுவார்? 84

78. ஏனை - எனை, என்னை; போனகத் தொழில் - உண்ணுகின்ற செயல்; 79. சமம் - போர்; 80. திட்டியின்விடம் - திட்டிவிடம், இன் சாரியை, கண்ணில் நஞ்சு உடைய பாம்பு; 82. முற்றுதல் - முடிதல்; 83. வீடு - விடுதலை. 84. அதன் திறம் - அந்த அறத்தின் கூறுபாடு; நிறம் - புகழ்.

'தஞ்சமும் தருமமும் தகவுமே, அவர்
நெஞ்சமும் கருமமும் உரையுமே; நெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம்
உஞ்சுமோ? அதற்கு ஒரு குறை உண்டாகுமோ? 85

'காலினின் கருங் கடல் கடந்த காற்றது
போல்வன குரங்கு உள; சீதை போகிலள்;
வாலியை உரம் கிழித்து ஏக வல்லன
கோல் உள; யாம் உளேம்; குறை உண்டாகுமோ?' 86

என்று கொண்டு இனையன இயம்பி, 'யான் உனக்கு
ஒன்று உளது உணர்த்துவது; உணர்ந்து கோடியேல்,
நன்று அது; நாயக! நயக்கிலாய்எனின்,
பொன்றினை ஆகவே கோடி; போக்கு இலாய்! 87

'தையலை விட்டு, அவன் சரணம் தாழ்ந்து, நின்
ஐயறு தம்பியோடு அளவளாவுதல்
உய் திறம்; அன்று எனின், உளது, வேறும் ஓர்
செய் திறம்; அன்னது தெரியக் கேட்டியால்: 88

'பந்தியில் பந்தியில் படையை விட்டு, அவை
சிந்துதல் கண்டு, நீ இருந்து தேம்புதல்
மந்திரம் அன்று; நம் வலி எலாம் உடன்
உந்துதல் கருமம்' என்று உணரக் கூறினன். 89

**இராவணன் சினமொழி**

'உறுவது தெரிய அன்று, உன்னைக் கூயது;
சிறு தொழில் மனிதரைக் கோறி, சென்று; எனக்கு
அறிவுடை அமைச்சன் நீ அல்லை, அஞ்சினை;
வெறுவிது, உன் வீரம்' என்று இவை விளம்பினன்: 90

'மறம் கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை;
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை;
இறங்கிய கண் முகிழ்த்து, இரவும் எல்லியும்
உறங்குதி, போய்' என, உளையக் கூறினன். 91

85. தஞ்சம் - அடைக்கலம் புகுந்தோரைத் தாங்குதல்; தகவு - நடுவு நின்று உண்மை கூறுதல்; 86. காலினின் - (தன்னுடைய) பாதங்களினால்; காற்றது - து பகுதிப் பொருள் விகுதி; 88. ஐயறு தம்பி - நின்னால் ஐயப் படத்தகாத தம்பி வீடணன்; 89. பந்தியில் பந்தியில் - பகுதி பகுதியாக; 91. உரிமை மாண்டனை - தகுதி இல்லாதவனாயினாய்.

'மானிடர் இருவரை வணங்கி, மற்றும் அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய் தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்;
யான் அது புரிகிலேன்; எழுக போக!' என்ருன். 92

'தருக, என் தேர், படை; சாற்று, என் கூற்றையும்;
வருக, முன் வானமும் மண்ணும் மற்றவும்;
இரு கை வன் சிறுவரோடு ஒன்றி என்னெடும்
பொருக, வெம் போர்' எனப் போதல்மேயினன். 93

'இது பொறுத்தி' என்று கூறி, கும்பகருணன் போருக்கு எழுதல்

அன்னது கண்டு, அவன் தம்பியானவன்
பொன் அடி வணங்கி, 'நீ பொறுத்தியால்' என,
வல் நெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினன்,
'இன்னம் ஒன்று உரை உளது' என்னக் கூறினன்: 94

'வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன்; விதி
நின்றது; பிடர் பிடித்து உந்த நின்றது;
பொன்றுவென்; பொன்றினல், பொலன் கொள் தோளியை,
''நன்று'' என, நாயக விடுதி; நன்றுஅரோ. 95

'இந்திரன் பகைஞனும், இராமன் தம்பி கை
மந்திர அம்பினல் மடிதல் வாய்மையால்;
தந்திரம் காற்றுறு சாம்பல்; பின்னரும்
அந்தரம் உணர்ந்து, உனக்கு உறுவது ஆற்றுவாய். 96

'என்னை வென்றுளர்எனில், இலங்கை காவல!
உன்னை வென்று உயருதல் உண்மை; ஆதலால்,
பின்னை நின்று எண்ணுதல் பிழை; அப் பெய்வளை-
தன்னை நன்கு அளிப்பது தவத்தின் பாலதே. 97

'இற்றைநாள் வரை, முதல், யான் முன் செய்தன
குற்றமும் உள எனின் பொறுத்தி; கொற்றவ!
அற்றதால் முகத்தினில் விழித்தல்; ஆரிய!
பெற்றனென் விடை' என, பெயர்ந்து போயினன். 98

96. அந்தரம் - முடிவு.

கும்பகருணனேடு பெரும் படை செல்லுமாறு இராவணன் பணித்தல்

அவ் வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ் வழி நீரொடும் குருதி தேக்கினன்;
எவ் வழியோர்களும் இரங்கி ஏங்கினர்;
இவ் வழி அவனும் போய், வாயில் எய்தினன். 99

'இரும் படை கடிப்பு எடுத்து எற்றி ஏகுக!
பெரும் படை இளவலோடு' என்ற பேச்சினல்,
வரும் படை வந்தது, வானுளோர்கள்தம்
சுரும்பு அடை மலர் முடி தூளி தூர்க்கவே. 100

படைகளின் பெருக்கம்

தேர்க் கொடி, யானையின் பதாகை, சேண் உறு
தார்க் கொடி என்று இவை ததைந்து வீங்குவ—
போர்க் கொடுந் தூளி போய்த் துறக்கம் பண்புற,
ஆர்ப்பன துடைப்பன போன்ற ஆடுவ. 101

எண்ணுறு படைக்கலம் இழுக எற்றிட
நண்ணுறு பொறிகளும், படைக்கு நாயகர்
கண்ணுறு பொறிகளும், கதுவ, கண் அகல்
விண்ணுறு மழை எலாம் கரிந்து, வீழ்ந்தவால். 102

தேர் செல, கரி செல, நெருக்கிச் செம் முகக்
கார் செல, தேர் செல, புரவிக் கால் செல,
தார் செல, கடை செல, சென்ற தானையும்,
'பார் செலற்கு அரிது' என, விசும்பில் பாய்ந்ததால். 103

கும்பகருணன் தேரில் ஏறுதல்

ஆயிரம் கோள் அரி; ஆளி ஆயிரம்,
ஆயிரம் மத கரி, பூதம் ஆயிரம்,
மா இரு ஞாலத்தைச் சுமப்ப வாங்குவது
ஏய் இருஞ் சுடர் மணித் தேர் ஒன்று ஏறினன். 104

99. எவ் வழியோர்கள் - எல்லாப் பக்கங்களிலும் உள்ளவர்கள்; 100. கடிப்பு - குறுந்தடி; பேச்சு - ஆணை; 102. இழுகுதல் - உராய்தல்; எற்றுதல் - ஈண்டு மோதுதல்; 103. தார் - முன் செல்லும் படை, தூசிப் படை; கடை - பின்அணிப் படை, கூழைப் படை; தானை (இடைவெளியில் சென்ற) சேனை.

**ஆயுதங்களும் உணவு முதலியனவும் சேனைகள் சுமந்து செல்லுதல்**

தோமரம், சக்கரம், சூலம், கோல், மழு,
நாம வேல், உலக்கை, வாள், நாஞ்சில், தண்டு, எழு,
வாம வில், வல்லையம், கணையம், மற்று உள
சேம வெம் படை எலாம் சுமந்து, சென்றவால். 105

நறையுடைத் தசும்பொடு நறிதின் வெந்த ஊன்
குறைவு இல் நல் சகடம் ஓர் ஆயிரம் கொடு,
பிறையுடை எயிற்றவன் பின்பு சென்றனர்,
முறை முறை கைக்கொடு முடுகி நீட்டுவார். 106

ஒன்று அல பற்பலர் உதவும் ஊன் நறை
பின்ற அரும் பிலனிடைப் பெய்யுமாறுபோல்,
வன் திறல் இரு கரம் வாங்கி மாந்தியே,
சென்றனன், யாவரும் திடுக்கம் எய்தவே.* 107

'கணம் தரு குரங்கொடு கழிவதுஅன்று, இது;
நிணம் தரு நெடுந் தடிக்கு உலகு நேருமோ?
பிணம் தலைப்பட்டது; பெயர்வது, எங்கு இனி;
உணர்ந்தது கூற்றம்' என்று, உம்பர் ஓடினர். 108

**கும்பகருணனை, 'இவன் யார்?' என, வீடணனிடம் இராமன் வினவல்**

பாந்தளின் நெடுந் தலை வழுவி, பாரொடும்
வேந்து என விளங்கிய மேரு மால் வரை
போந்ததுபோல் பொலந் தேரில் பொங்கிய
ஏந்தலை, ஏந்து எழில் இராமன் நோக்கினன். 109

'வீணை என்று உணரின், அஃது அன்று; விண் தொடும்
சேண் உயர் கொடியது, வய வெஞ் சீயமால்;
காணினும், காலின் மேல் அரிய காட்சியன்;
பூண் ஒளிர் மார்பினன்; யாவன் போலுமால்? 110

105. வல்லையம் - எறி ஈட்டி; கணையம் - வளைதடி; சேமப் படை - கையில் உள்ள படைக்கலங்கள் அழிந்தபோது உதவுதற்காகச் சேமித்து வைக்கப்பட்டுள்ள படைக்கலங்கள்; 106. நறிதின் - நன்றாக; பிறையுடை எயிற்றவன் - பிறைபோலும் பற்களையுடைய கும்பகருணன்; 107. பின்றுதல் - மீளுதல்; 108. நெடுந்தடி - மிக்க மாமிசம்; 109. பாரொடும் மேரு மால் வரை வந்தது போலத் தேரொடு கும்பகருணன் வந்தான் என்க.

'தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின்,
நாள் பல கழியுமால்; நடுவண் நின்றது ஓர்
தாளுடை மலைகொலாம்; சமரம் வேட்டது ஓர்
ஆள் என உணர்கிலேன்; ஆர்கொலாம் இவன்? 111

'எழும் கதிரவன் ஒளி மறைய, எங்கணும்
விழுங்கியது இருள், இவன் மெய்யினால்; வெரீஇ,
புழுங்கும் நம் பெரும் படை இரியல்போகின்றது;
அழுங்கல் இல் சிந்தையாய்! ஆர் கொலாம் இவன்?* 112

'அரக்கன் அவ் உரு ஒழித்து, அரியின் சேனையை
வெருக் கொளத் தோன்றுவான், கொண்ட வேடமோ?
தெரிக்கிலேன் இவ் உரு; தெரியும் வண்ணம், நீ
பொருக்கென, வீடண! புகறியால்' என்றான். 113

**வீடணன், கும்பகருணனது தன்மையை எடுத்துரைத்தல்**

ஆரியன் அனைய கூற, அடி இணை இறைஞ்சி, 'ஐய!
பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன்; எனக்கு முன்னோன்;
கார் இயல் காலன் அன்ன கழல் கும்பகருணன் என்னும்
கூரிய சூலத்தான்' என்று, அவன் நிலை கூறலுற்றான்: 114

'தவன் நுணங்கியரும் வேதத் தலைவரும் உணரும் தன்மைச்
சிவன் உணர்ந்து, அலரின் மேலைத் திசைமுகன் உணரும் தேவன்-
அவன் உணர்ந்து எழுந்த காலத்து, அசுரர்கள் படுவது எல்லாம்,
இவன் உணர்ந்து எழுந்த காலத்து இமையவர் படுவர், எந்தாய்!

'ஆழியாய்! இவன் ஆகுவான்,
ஏழை வாழ்வுடை எம்முனோன்
தாழ்வு இலா ஒரு தம்பியோன்;
ஊழி நாளும் உறங்குவான், 116

'காலனார் உயிர்க் காலனால்;
காலின் மேல் நிமிர் காலினான்;
மாலினார் கெட, வாகையே,
சூலமே கொடு, சூடினான்; 117

111. சமரம் - போர்; 115. தவன் நுணங்கியர் - தவத்தால் உடல் சுருங்கி அறிவுக் கூர்மையை அடையப் பெற்றவர்; உணர்தல் - தியானித்தல்; தேவன் - திருமால்; 117. காலின் - காற்றைக் காட்டிலும்.

'தாங்கு கொம்பு ஒரு நான்கு கால்
ஓங்கல் ஒன்றினை, உம்பர்கோன்
வீங்கு நெஞ்சன் விழுந்திலான்
தூங்க, நின்று சுழற்றினன்; 118

'கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறு கொள் பெற்றியான்;
அழிந்து மீன் உக, ஆழி நீர்
இழிந்து, காலினின் எற்றுவான்; 119

'ஊன் உயர்ந்த உரத்தினன்,
மேல் நிமிர்ந்த மிடுக்கினன்;
தான் உயர்ந்த தவத்தினன்,
வான் உயர்ந்த வரத்தினன்; 120

'திறம் கொள் சாரி திரிந்த நாள்,
கறங்கு அலாது கணக்கு இலான்;
இறங்கு தாரவன் இன்றுகாறு
உறங்கலால், உலகு உய்ந்ததால்; 121

'சூலம் உண்டு; அது சூர் உளோர்
காலம் உண்டது; கைக் கொள்வான்;
ஆலம் உண்டவன் ஆழிவாய்,
ஞாலம் உண்டவ! நல்கினன்; 122

'மின்னின் ஒன்றிய விண்ணுளோர்,
'முன் நில்' என்று, அமர் முற்றினர்-
என்னில், என்றும் அவ் எண்ணிலார்
வென்னில் அன்றி, விழித்திலான்; 123

' ''தருமம் அன்று இதுதான்; இதால்
வரும், நமக்கு உயிர் மாய்வு'' என,
உருமின் வெய்யவனுக்கு உரை
இருமை மேலும் இயம்பினன். 124

'மறுத்த தம்முனை, வாய்மையால்
ஒறுத்தும், ஆவது உணர்த்தினன்;
வெறுத்தும், 'மாள்வது மெய்' என
இறுத்து, நின் எதிர் எய்தினன். 125

118. தூங்க - தொங்கிக்கொண்டிருக்க; 121. கணக்கு இலான் - (பிறிது ஒன்றின்) தன்மை இல்லாதவன்; 122. சூர் - வீரம்; 123. வென் - வெரிந், முதுகு; இவன் முன் நின்று பொருதார் யாரும் இலர் என்றபடி; 125. ஒறுத்தல் - வன்மொழியால் கடிதல்; ஆவது - மேல் நிகழ்வது.

' ''நன்று இது அன்று நமக்கு'' என,
ஒன்று நீதி உணர்த்தினன்;
இன்று காலன் முன் எய்தினன்'
என்று சொல்லி, இறைஞ்சினன். 126

**சுக்கிரீவன், கும்பகருணனை உடன் சேர்த்துக் கொள்ளுதல் நலம் எனல்**

என்று அவன் உரைத்தலோடும், இரவி சேய், 'இவனை இன்று
கொன்று ஒரு பயனும் இல்லை; கூடுமேல், கூட்டிக்கொண்டு
நின்றது புரிதும்; மற்று இந் நிருதர்கோன் இடரும் நீங்கும்;
"நன்று" என நினைந்தேன்' என்றான்; நாதனும், 'நயன் இது' என்றான்.

**கும்பகருணனை அழைத்துவர வீடணன் செல்லுதல்**

'ஏகுதற்கு உரியார் யாரே?' என்றலும், இலங்கை வேந்தன்,
'ஆகின், மற்று அடியனே சென்று, அறிவினால், அவனை உள்ளம்
சேகு அறத் தெருட்டி, ஈண்டுச் சேருமேல், சேர்ப்பென்' என்றான்;
மேகம் ஒப்பானும், 'நன்று, போக!' என்று விடையும் ஈந்தான்.

தந்திரக் கடலை நீந்தி, தன் பெரும் படையைச் சார்ந்தான்;
வெந் திறலவனுக்கு, 'ஐய! வீடணன் விரைவில் உன்பால்
வந்தனன்' என்னச் சொன்னார்; வரம்பு இலா உவகை கூர்ந்து,
சிந்தையால் களிக்கின்றான்தன் செறிகழல் சென்னி சேர்த்தான்.

**கும்பகருணன், 'வந்தது தகுதி அன்று' என வீடணனுக்குக் கூறுதல்**

முந்தி வந்து இறைஞ்சினானை, முகந்து, உயிர் மூழ்கப் புல்லி,
'உய்ந்தனை, ஒருவன் போனாய்' என மனம் உவக்கின்றேன்தன்
சிந்தனை முழுதும் சிந்த, தெளிவு இலார் போல மீள
வந்தது என், தனியே?' என்றான், மழையின் நீர் வழங்கு கண்ணான்.

'அவயம் நீ பெற்றவாறும், அமரரும் பெறுதல் ஆற்றா,
உவய லோகத்தினுள்ள சிறப்பும், கேட்டு உவந்தேன், உள்ளம்;
கவிஞரின் அறிவு மிக்காய்! காலன் வாய்க் களிக்கின்றேம்பால்
நவை உற வந்தது என், நீ? அமுது உண்பாய் நஞ்சு உண்பாயோ?

'"குலத்து இயல்பு அழிந்ததேனும், குமர! மற்று உன்னைக் கொண்டே
புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற்று" என்ன,
வலத்து இயல் தோளை நோக்கி மகிழ்கின்றேன்; மன்ன! வாயை
உலத்தினை, திரிய வந்தாய்; உளைகின்றது உள்ளம், அந்தோ!

127. நின்றது - மேல் நிகழ வேண்டிய செயல்; 128. சேகு - ஐயம்; 132. வலம் - வெற்றி; உலத்தினை - வாய் ஈரம் உலரச் செய்தனை; திரிய - திரும்பி.

'அறப் பெருந் துணைவர், தம்மை அபயம் என்று அடைந்த நின்னைத்
துறப்பது துணியார், தங்கள் ஆர் உயிர் துறந்த போதும்;
இறப்பு எனும் பதத்தை விட்டாய்; இராமன் என்பளவும் மற்று இப்
பிறப்பு எனும் புன்மை இல்லை; நினைந்து என்கொல் பெயர்ந்த வண்
[ணம்?

'அறம் என நின்ற நம்பற்கு அடிமை பெற்று, அவன்தனாலே
மறம் என நின்ற மூன்றும் மருங்கு அற மாற்றி, மற்றும்,
திறம் என நின்ற தீமை இம்மையே தீர்ந்த செல்வ!
பிறர் மனை நோக்குவேமை உறவு எனப் பெறுதி போலாம்? 134

'நீதியும், தருமம் நின்ற நிலைமையும், புலமைதானும்,
ஆதி அம் கடவுளாலே அருந் தவம் ஆற்றிப் பெற்றாய்;
வேதியர் தேவன் சொல்லால், விளிவு இலா ஆயுப் பெற்றாய்;
சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும்,—தக்கோய்!

ஏற்றிய வில்லோன், யார்க்கும் இறையவன், இராமன் நின்றான்;
மாற்ற அருந் தம்பி நின்றான்; மற்றையோர் முற்றும் நின்றார்;
கூற்றமும் நின்றது, எம்மைக் கொல்லிய; விதியும் நின்ற;
தோற்ற எம் பக்கல், ஐய! வெவ் வலி தொலைய வந்தாய். 136

'ஐய! நீ அயோத்தி வேந்தற்கு அடைக்கலம் ஆகி, ஆங்கே
உய்கிலைஎன்னின், மற்று இவ் அரக்கராய் உள்ளோர் எல்லாம்
எய் கணை மாரியாலே இறந்து, பாழ் முழுதும் பட்டால்,
கையினால் எள் நீர் நல்கி, கடன் கழிப்பாரைக் காட்டாய். 137

'வருவதும், இலங்கை மூதூர்ப் புலை எலாம் மாண்ட பின்னை;
திருவுறை மார்பனோடும் புகுந்து, பின் என்றும் தீராப்
பொருவ அருஞ் செல்வம் துய்க்கப் போதுதி, விரைவின்' என்றான்.
'கருமம் உண்டு உரைப்பது' என்றான்; 'உரை' என, கழறலுற்றான்: 138

**இராமனைச் சரண்புகுமாறு வீடணன் கும்பகருணனுக்கு உரைத்தல்**

'இருள் உறு சிந்தையேற்கும் இன் அருள் சுரந்த வீரன்
அருளும், நீ சேரின்; ஒன்றோ, அவயமும் அளிக்கும்; அன்றி,
மருள் உறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம்; மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை ஒழித்து, வீடு அளிக்கும் அன்றே. 139

134. மறம் என நின்ற மூன்று - பாவத்திற்குக் காரணம் என்னுமாறு நின்ற காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்று; அறியாமை, திரிபு உணர்ச்சி, ஐய உணர்வு எனினும் ஆம்; 135. வேதியர் தேவன் - பிரமன்; 136. வெவ் வலி - மிக்க வலிமை; 138. புலை - புலைத் தொழிலையுடையோர்.

'எனக்கு அவன் தந்த செல்வத்து இலங்கையும் அரசும் எல்லாம்
நினக்கு நான் தருவென்; தந்து, உன் ஏவலின் நெடிது நிற்பென்;
உனக்கு இதின் உறுதி இல்லை; உத்தம! உன் பின் வந்தேன்
மனக்கு நோய் துடைத்து, வந்த மரபையும் விளக்கு வாழி! 140

'போதலோ அரிது; போனால், புகலிடம் இல்லை; வல்லே,
சாதலோ சரதம்; நீதி அறத்தொடும் தழுவி நின்றாய்
ஆதலால், உளதாம் ஆவி அநாயமே உகுத்து என்? ஐய!
வேத நூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமே பிடிக்க வேண்டும். 141

'தீயவை செய்வர் ஆகின், சிறந்தவர், பிறந்த உற்றார்,
தாய்அவை, தந்தைமார் என்று உணர்வரோ, தருமம் பார்ப்பார்?
நீ அவை அறிதி அன்றே? நினக்கு நான் உரைப்பது என்னே?
தூயவை துணிந்த போது, பழி வந்து தொடர்வது உண்டோ?

'மக்களை, குரவர்தம்மை, மாதரை, மற்றுளோரை,
ஒக்கும் இன் உயிர் அன்னாரை, உதவி செய்தாரோடு ஒன்ற,
"துக்கம், இத் தொடர்ச்சி" என்று, துறப்பரால், துணிவு பூண்டோர்;
மிக்கது நலனே ஆக, வீடுபேறு அளிக்கும் அன்றே! 143

'தீவினை ஒருவன் செய்ய, அவனொடும் தீங்கு இலாதோர்
வீவினை உறுதல், ஐய! மேன்மையோ? கீழ்மைதானே?
ஆய் வினை உடையை அன்றே? அறத்தினை நோக்கி, ஈன்ற
தாய் வினை செய்ய அன்றோ, கொன்றனன், தவத்தின் மிக்கான்?

'கண்ணுதல், தீமை செய்ய, கமலத்து முளைத்த தாதை
அண்ணல்தன் தலையின் ஒன்றை அறுக்க அன்று அமைந்தான் அன்றே?
புண் உறு புலவு வேலோய்! பழியொடும் பொருந்தி, பின்னை,
எண்ணுறு நரகின் வீழ்வது அறிஞரும் இயற்றுவாரோ? 145

141. போதல் - உயிர் தப்பிப் போதல்; அநாயம் - வீண்; 142. தாய் அவை - இருபெயரொட்டு, அவ்வை என்பது அவை எனக் குறைந்து நின்றது; 144. வீவினை உறுதல் - இறத்தல்; ஆய் வினை - ஆராய்ச்சி செய்யும் திறமை; தாய் - ஈண்டுப் பரசுராமன் தாயாகிய இரேணுகை; அவள் தண்ணீர் கொண்டுவர நீர்த்துறைக்குச் சென்ற போது, அங்குப் புனல் விளையாட்டு அயர்ந்த சித்திரரதன என்னும் கந்தருவனைக் கண்டு மனம் நெகிழ்ந்தாள். அதனை ஞானக் கண்ணால் அறிந்த அவள் கணவன் சமதக்கினி அவளைக் கொல்லப் பரசுராமனை ஏவ, அவன் அவளைக் கொன்றனன் என்பது இதிகாசக் கதை; 145. பிரமன் தனக்கு உரிய நான்கு தலைகளோடு ஐந்தாவதாக ஒரு தலையினைப் படைத்துக் கொண்டு சிவனோடு ஒப்பத் தன்னையும் எண்ணிச் செருக்கு உற்றான். சிவன், அவன் தலைகளுள் ஒன்றைக் கிள்ளி ஆணவத்தை அடக்கினர் என்பது புராணச் செய்தி.

'உடலிடைத் தோன்றிற்று ஒன்றை அறுத்து, அதன் உதிரம் ஊற்றி,
சுடல் உறச் சுட்டு, வேறு ஓர் மருந்தினுல், துயரம் தீர்வர்;
கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கருமம் அன்ருல்,
மடலுடை அலங்கல் மார்ப! மதி உடையவர்க்கு மன்னே! 146

'காக்கலாம் நும்முன் தன்னை எனின், அது கண்டது இல்லை;
ஆக்கலாம் அறத்தை வேறே என்னினும், ஆவது இல்லை;
தீக் கலாம் கொண்ட தேவர் சிரிக்கலாம்; செருவில் ஆவி
போக்கலாம்; புகலாம், பின்னை நரகு; அன்றிப் பொருந்திற்று உண்டோ?

'மறம் கிளர் செருவில் வென்று வாழ்ந்திலை; மண்ணின்மேலா
இறங்கினை; இன்றுகாறும் இளமையும் வறிதே ஏக,
உறங்கினை என்பது அல்லால், உற்றது ஒன்று உளதோ? என், நீ
அறம் கெட உயிரை நீத்து மேற்கொள்வான் அமைந்தது?—ஐயா! 148

'திரு மறு மார்பன் நல்க, அனந்தரும் தீர்ந்து, செல்வப்
பெருமையும் எய்தி, வாழ்தி; ஈறு இலா நாளும் பெற்ருய்;
ஒருமையே அரசு செய்வாய்; உரிமையே உனதே; ஒன்றும்
அருமையும் இவற்றின் இல்லை; காலமும் அடுத்தது, ஐயா! 149

'தேவர்க்கும் தேவன் நல்க, இலங்கையில் செல்வம் பெற்ருல்,
ஏவர்க்கும் சிறியை அல்லை; யார், உனை நலியும் ஈட்டார்?—
மூவர்க்கும் தலைவர் ஆன மூர்த்தியார், அறத்தை முற்றும்
காவற்குப் புகுந்து நின்ருர், காகுத்த வேடம் காட்டி! 150

'உன் மக்கள் ஆகி உள்ளார், உன்னெடும் ஒருங்கு தோன்றும்
என் மக்கள் ஆகி உள்ளார், இக் குடிக்கு இறுதி சூழ்ந்தான்-
தன் மக்கள் ஆகி உள்ளார், தலையொடும் திரிவர் அன்றே—
புன்மக்கள் தருமம் பூணப் புல மக்கள் தருமம் பூண்டால்? 151

'முனிவரும் கருணை வைப்பர்; மூன்று உலகத்தும் தோன்றி
இனி வரும் பகையும் இல்லை; "ஈறு உண்டு" என்று இரங்க வேண்டா;
துனி வரும் செறுநர் ஆன தேவரே துணைவர் ஆவர்;—
கனி வரும் காலத்து, ஐய! பூக் கொய்யக் கருதலாமோ? 152

146. கோட்டம் - ஒருவகை மணப்பொருள்; 147. தீக் கலாம் - கொடிய மாறுபாடு; 149. ஒருமையே - பொதுமையின்றித் தனியாகவே, இணையின்றி; 151. புல மக்கள் - அறிவுடையோர்.

'வேத நாயகனே உன்னைக் கருணையால் வேண்டி, விட்டான்;
காதலால், என்மேல் வைத்த கருணையால், கருமம் ஈதே;
ஆதலால், அவனைக் காண, அறத்தொடும் திறம்பாது, ஐய!
போதுவாய் நீயே' என்னப் பொன் அடி இரண்டும் பூண்டான்.

**கும்பகருணன் மறுப்புரை**

தும்பி அம் தொடையல் மாலைச் சுடர் முடி படியில் தோய,
பம்பு பொற் கழல்கள் கையால் பற்றினன் புலம்பும் பொன் தோள்
தம்பியை எடுத்து, மார்பில் தழுவி, தன் தறுகணூடு
வெம் புணீர் சொரிய நின்றான், இனையன விளம்பலுற்றான்: 154

'நீர்க் கோல வாழ்வை நச்சி, நெடிது நாள் வளர்த்துப் பின்னைப்
போர்க் கோலம் செய்து விட்டாற்கு உயிர் கொடாது, அங்குப் போகேன்;
தார்க் கோல மேனி மைந்த! என் துயர் தவிர்த்தி ஆகின்,
கார்க் கோல மேனியானைக் கூடுதி, கடிதின் ஏகி. 155

'மலரின்மேல் இருந்த வள்ளல் வழு இலா வரத்தினால், நீ
உலைவு இலாத் தருமம் பூண்டாய்; உலகு உளதனையும் உள்ளாய்;
தலைவன் நீ, உலகுக்கு எல்லாம்; உனக்கு அது தக்கதேயால்;
புலை உறு மரணம் எய்தல் எனக்கு இது புகழதேயால். 156

'கருத்து இலா இறைவன் தீமை கருதினால், அதனைக் காத்துத்
திருத்தலாம் ஆகின் அன்றோ திருத்தலாம்? தீராது ஆயின்,
பொருத்து உறு பொருள் உண்டாமோ? பொரு தொழிற்கு உரியர் ஆகி,
ஒருத்தரின் முன்னம் சாதல், உண்டவர்க்கு உரியது அம்மா.

'தும்பி அம் தொடையல் வீரன் சுடு கணை துரப்ப, சுற்றும்
வெம்பு வெஞ் சேனையோடும், வேறு உள கிளைஞரோடும்,
உம்பரும் பிறரும் போற்ற, ஒருவன் மூவுலகை ஆண்டு,
தம்பியை இன்றி மாண்டு கிடப்பனோ, தமையன் மண்மேல்? 158

'அணை இன்றி உயர்ந்த வென்றி அஞ்சினர் நகையது ஆக,
பிணை ஒன்று கண்ணாள் பங்கன் பெருங் கிரி நெருங்கப் பேர்த்த
பணை ஒன்று திரள் தோள் காலபாசத்தால் பிணிப்ப, கூசி,
துணை இன்றிச் சேரல் நன்றோ, தோற்றுள கூற்றின் சூழல்? 159

'செம்பு இட்டுச் செய்த இஞ்சித் திரு நகர்ச் செல்வம் தேறி,
வம்பு இட்ட தெரியல் எம்முன் உயிர் கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பு இட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை நெஞ்சோடு, ஐய!
கும்பிட்டு வாழ்கிலேன் யான்—கூற்றையும், ஆடல் கொண்டேன்! 160

158. தும்பி - வண்டு; 159. அணை - தடை; 160. இஞ்சி - மதில்;
துன்னம் கொள்ளல் - துளைபடுதல்.

‘அனுமனை, வாலி சேயை, அருக்கன் சேய்தன்னை, அம் பொன்
தனு உடையவரை, வேறு ஓர் நீலனை, சாம்பன்தன்னை,
கனி தொடர் குரங்கின் சேனைக் கடலையும், கடந்து, மூடும்
பனி துடைத்து உலகம் சுற்றும் பரிதியின் திரிவென்; பார்த்தி!

‘ஆலம் கண்டு அஞ்சி அமரர்போல் அரிகள் ஓட,
சூலம் கொண்டு ஓடி, வேலை தொடர்வது ஓர் தோற்றம் தோன்ற,
நீலம் கொள் கடலும் ஓட, நெருப்பொடு காலும் ஓட,
காலம் கொள் உலகும் ஓட, கறங்கு எனத் திரிவென்; காண்டி!

‘செருவிடை அஞ்சார் வந்து, என் கண் எதிர் சேர்வர்ஆகின்,
கரு வரை, கனகக் குன்றம், என்னல் ஆம் காட்சி தந்த
இருவரும் நிற்க, மற்று அங்கு யார் உளர், அவரை எல்லாம்,
ஒருவரும் திரிய ஒட்டேன், உயிர் சுமந்து உலகில்’ என்றான். 163

‘தாழ்க்கிற்பாய்அல்லை; என் சொல் தலைக்கொளத் தக்கது என்று
கேட்கிற்பாய்ஆகின், எய்தி, அவரொடும் கெழீஇய நட்பை
வேட்கிற்பாய்; “இனி, ஓர் மாற்றம் விளம்பினால் விளைவு உண்டு” என்று,
சூழ்க்கிற்பாய்அல்லை; யாரும் தொழ நிற்பாய்!’ என்னச் சொன்னான்.

‘போதி நீ, ஐய! பின்னைப் பொன்றினார்க்கு எல்லாம் நின்ற
வேதியர் தேவன்தன்னை வேண்டினை பெற்று, மெய்ம்மை
ஆதி நூல் மரபினாலே, கடன்களும் ஆற்றி; ஏற்றி,
மா துயர் நரகம் நண்ணாவண்ணமும் காத்தி மன்னோ. 165

‘ஆகுவது ஆகும், காலத்து; அழிவதும், அழிந்து சிந்திப்
போகுவது; அயலே நின்று போற்றினும், போதல் திண்ணம்;
சேகு அறத் தெளிந்தோர் நின்னில் யார் உளர்? வருத்தம் செய்யாது,
ஏகுதி; எம்மை நோக்கி இரங்கலை; என்றும் உள்ளாய்!’ 166

**வீடணன் விடைபெறுதல்**

என்று, அவன்தன்னை மீட்டும் எடுத்து, மார்பு இறுகப் புல்லி,
நின்று நின்று, இரங்கி ஏங்கி, நிறை கணால் நெடிது நோக்கி,
‘இன்றொடும் தவிர்ந்தது அன்றே, உடன்பிறப்பு’ என்று விட்டான்;
வென்றி வெந் திறலினாலும், அவன் அடித்தலத்து வீழ்ந்தான்.

வணங்கினான்; வணங்கி, கண்ணும் வதனமும் மனமும் வாயும்
உணங்கினான்; உயிரோடு யாக்கை ஒடுங்கினான்; ‘உரைசெய்து இன்னும்
பிணங்கினால் ஆவது இல்லை; பெயர்வது;’ என்று உணர்ந்து போந்தான்.
குணங்களால் உயர்ந்தான், சேனைக் கடல் எலாம் கரங்கள் கூப்ப. 168

**வீடணன் செல்லுதல் கண்டு, கும்பகருணன் கண்ணீர் உதிர்த்து நிற்றல்**

'கள்ள நீர் வாழ்க்கையேமைக் கைவிட்டு, காலும் விட்டான்;
பிள்ளைமை துறந்தான்' என்னுப் பேதுறும் நிலையன் ஆகி,
வெள்ள நீர் வேலைதன்னில் வீழ்ந்த நீர் வீழ, வெங் கண்
உள்ள நீர் எல்லாம் மாறி, உதிர நீர் ஒழுக, நின்றான். 169

**வீடணன் உரையைக் கேட்ட இராமன் கூற்று**

எய்திய நிருதர் கோனும், இராமனை இறைஞ்சி, 'எந்தாய்!
உய் திறம் உடையார்க்கு அன்றோ, அறன் வழி ஒழுகும் உள்ளம்?
பெய் திறன் எல்லாம் பெய்து பேசினென்; பெயருந் தன்மை
செய்திலன்; குலத்து மானம் தீர்ந்திலன், சிறிதும்' என்றான்.

கொய் திறச் சடையின் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல்
நொய்தினில் துளக்கி, 'ஐய! ''நுன் எதிர், நும்முனோனை [னேன்;
எய்து இறத் துணித்து வீழ்த்தல் இனிது அன்று'' என்று இனைய சொன்
செய் திறன் இனி வேறு உண்டோ? விதியை யார் தீர்க்ககிற்பார்?' 171

**அரக்கர் சேனை வானர சேனையை வளைத்தல்**

என இனிது உரைக்கும் வேலை, இராக்கதர் சேனை என்னும்
கனை கடல், கவியின் தானைக் கடலினை வளைந்து கட்டி,
முனை தொழில் முயன்றதாக, மூவகை உலகும் முற்றத்
தனி நெடுந் தூளி ஆர்த்தது; ஆர்த்தில, பரவை தள்ளி, 172

ஓடின புரவி; வேழம் ஓடின; உருளைத் திண் தேர்
ஓடின; மலைகள் ஓட, ஓடின உதிரப் பேர் ஆறு;
ஆடின கவந்த பந்தம்; ஆடின அலகை; மேல்மேல்
ஆடின பதாகை; ஓங்கி ஆடின, பறவை அம்மா! 173

மூளையும், தசையும், என்பும், குருதியும், நிணமும், மூரி
வாளொடும் குழம்பு பட்டார், வாள் எயிற்று அரக்கர்; மற்றுஅவ்
ஆள் அழி குருதி வெள்ளத்து அழுந்தின கவிகள்;—அம் பொன்
தோளொடு மரனும் கல்லும் சூலமும் வேலும் தாக்க. 174

169. கை விடுதல் - விட்டுவிடுதல்; கால் விடுதல் - தொடர்பு அறுதல்; 170. குலத்து மானம் - குலப் பற்று; 171. கொய் திறச் சடையின் கற்றைக் கொந்தளம் - கொய்து விடுதற்கு உரிய சடைத் தொகுதியினைக்கொண்ட மயிர் முடி; கொந்தளம் - குந்தலம், மயிர்முடி.

எய்தனர், நிருதர்; கல்லால் எறிந்தனர், கவிகள்; ஏந்திப்
பெய்தனர், அரக்கர்; பற்றிப் பிசைந்தனர் அரிகள்; பின்று
வைதனர், யாதுதானர்; வலித்தனர், வானரேசர்;
செய்தனர், பிறவும் வெம் போர்; திகைத்தனர், தேவர் எல்லாம். 175

கும்பகருணன் போர் தொடங்குதல்

நீரினை ஓட்டும் காற்றும், காற்று எதிர் நிற்கும் நீரும்,
போர் இணை ஆக ஏன்று பொருகின்ற பூசல் நோக்கி,
தேரினை ஓட்டி வந்தான்—திருவினைத் தேவர் தங்கள்
ஊரினை நோக்காவண்ணம், உதிர வேல் நோக்கியுள்ளான். 176

ஊழியில் பட்ட காலின் உலகங்கள் பட்டால் ஒப்ப,
பூழியில் பட்டு, செந்நீர்ப் புணரியில் பட்டு, பொங்கும்
சூழியின் பட்ட நெற்றிக் களிற்றொடும், துரந்த தேரின்
ஆழியில் பட்ட அன்றே—அவனியில் பட்ட எல்லாம். 177

குன்று கொண்டு எறியும்; பாரில் குதிக்கும்; வெங் கூலம் பற்றி
ஒன்று கொண்டு ஒன்றை எற்றும்; உதைக்கும்; விட்டு உழக்கும்; வாரித்
தின்று தின்று உமிழும்; பற்றிச் சிரங்களைத் திருகும்; தேய்க்கும்;
மென்று மென்று இழிச்சும்; விண்ணில் வீசும்; மேல் பிசைந்து பூசும்.

வாரியின் அமுக்கும்; கையால் மண்ணிடைத் தேய்க்கும்; வாரி
நீரிடைக் குவிக்கும்; அப்பால், நெருப்பிடை நிமிர வீசும்;
தேரிடை எற்றும்; எட்டுத் திசையினும் செல்லச் சிந்தும்;
தூரிடை மரத்து மோதும்; மலைகளில் புடைக்கும், சுற்றி. 179

பறைந்தனர், அமரர் அஞ்சி; பல் பெரும் பிணத்தின் பம்மல்
நிறைந்தன, பறவை எல்லாம்; நெடுந் திசை நான்கும் நான்கும்
மறைந்தன; பெருமை தீர்ந்த, மலைக் குலம்; வற்றி வற்றிக்
குறைந்தன, குரக்கு வெள்ளம்; கொன்றனன், கூற்றும் கூச.

'மற்று இனி ஒருவர்மேல் ஓர் மரனெடும் கற்கள் வீசப்
பெற்றிலம் ஆதும் அன்றே; இன்றொடும் பெறுவது ஆமே;
அற்றன, தீங்கும்' என்னா, அரிக் குலத் தலைவர் பற்றி,
எற்றின, எறிந்த, எல்லாம் இணை நெடுந் தோளின் ஏற்றான்.

175. யாதுதானர் - அரக்கர்; 177. ஊழியில் பட்ட - ஊழி இறுதியில் தோன்றிய; 178. வெங் கூலம் - கொடிய வால்; இழிச்சுதல் - துப்புதல்; 179. தூர் - மரத்தின் அடிப்பகுதி; 180. பறைந்தனர் - பறந்தனர்; பம்மல் - தொகுதி.

கல்லொடு மரனும், வேரும், கட்டையும், காலில் தீண்டும்
புல்லொடு பிறவும், எல்லாம், பொடிப் பொடி ஆகிப் போன;
'இல்லை, மற்று எறியத் தக்க, எற்றுவ, சுற்றும்' என்ன,
பல்லொடு பல்லு மென்று பட்டன, குரங்கும் உட்கி. 182

குன்றின் வீழ் குரீஇக் குழாத்தின் குழாம் கொடு குதித்துக் கூடி,
சென்று மேல் எழுந்து பற்றி, கைத்தலம் தேயக் குத்தி,
வன் திறல் எயிற்றால் கவ்வி, வள் உகிர் மடியக் கீளா,
'ஒன்றும் ஆகின்றது இல்லை' என்று, இரிந்து ஓடிப் போன. 183

**நீலன் பொருது தோற்றல்**

மூலமே மண்ணில் மூழ்கிக் கிடந்தது ஓர் பொருப்பை, முற்றும்
காலம் மேல் எழுந்த கால்போல், கையினால் கடிதின் வாங்கி,
நீலன், மேல் நிமிர்ந்தது ஆங்கு ஓர் நெருப்பு எனத் திரித்து விட்டான்;
சூலமே கொண்டு நூறி, முறுவலும் தோன்ற நின்றான். 184

'பெயர்ந்து ஒரு சிகரம் தேடின், அச்சம் ஆம் பிறர்க்கும்' என்னா,
புயங்களே படைகள் ஆகத் தேர் எதிர் ஓடிப் புக்கான்,
இயங்களும் கடலும் மேகத்து இடிகளும் ஒழிய, யாரும்
பயம் கொள, கரங்கள் ஓச்சிக் குத்தினான், உதைத்தான், பல் கால். 185

கைத்தலம் சலித்து, காலும் குலைந்து, தன் கருத்து முற்றான்,
நெய்த்தலை அழலின் காந்தி எரிகின்ற நீலன்தன்னை,
எய்த்து உயிர் குடிப்பல் என்னா எற்றினான், இடது கையால்;
மெய்த்தலை, சூலம் ஓச்சான், வெறுங் கையான் என்று வெள்கி.

**நீலன் தளர்ந்தது கண்டு, அங்கதன் வந்து பொருதல்**

ஆண்டு, அது நோக்கி நின்ற அங்கதன், ஆண்டுச் சால
நீண்டது ஓர் நெடுந் திண் குன்றம் நில முதுகு ஆற்ற வாங்கி,
'மாண்டனன் அரக்கன் தம்பி' என்று உலகு ஏழும் வாழ்த்தத்
தூண்டினன்; அதனை அன்னான் ஒரு தனித் தோளின் ஏற்றான்.

ஏற்ற போது, அனைய குன்றம் எண்ண அருந் துகளது ஆகி,
வீற்று வீற்று ஆகி, ஓடி விழுதலும், கவியின் வெள்ளம்,
'ஊற்றம் ஏது, எமக்கு!' என்று எண்ணி, உடைந்தது; குமரன் உற்ற
சீற்றமும் தானும் நின்றான்; பெயர்ந்திலன், சென்று பாதம்.

183. கீளா - கிழித்து; 184. மூலமே - அடிப்பகுதி முழுமையும்; 188. ஊற்றம் - வலிமை.

இடக் கையால் அரக்கன் ஆங்கு ஓர் எழு முனை வயிரத் தண்டு,
தடுக்கல் ஆம் தரத்தது அல்லா வலியது, தருக்கின் வாங்கி,
'மடக்குவாய் உயிரை' என்று, வீசினன்; அதனை மைந்தன்
தடக் கையால் பிடித்துக் கொண்டான், வானவர் தன்னை வாழ்த்த.

பிடித்தது சுழற்றி, 'மற்று அப் பெரு வலி அரக்கன்தன்னை,
இடித்து, உரும்ஏறு, குன்றத்து எரி மடுத்து, இயங்குமாபோல்,
அடித்து, உயிர் குடிப்பென்' என்று, அனல் விழித்து, ஆர்த்து, மண்டி,
கொடித் தடந்தேரின் முன்னர்க் குதித்து, எதிர் குறுகி, நின்றான்.

**கும்பகருணன்–அங்கதன் உரையாடல்**

நின்றவன்தன்னை அன்னான் நெருப்பு எழ நிமிர நோக்கி,
'பொன்ற வந்து அடைந்த தானைப் புரவலன் ஒருவன்தானோ?
அன்று, அவன் மகனோ? எம் ஊர் அனல் மடுத்து அரக்கர்தம்மை
வென்றவன்தானோ? யாரோ? விளம்புதி, விரைவின்' என்றான்.

'நும்முனை வாலின் சுற்றி, நோன் திசை நான்கும் தாவி,
மும் முனை நெடு வேல் அண்ணல் முளரி அம் சரணம் தாழ்ந்த
வெம் முனை வீரன் மைந்தன்; நின்னை என் வாலின் வீக்கி,
தெம் முனை இராமன் பாதம் வணங்கிட, செல்வென்' என்றான்.

'உந்தையை, மறைந்து, ஓர் அம்பால் உயிருண்ட உதவியோற்குப்
பந்தனைப் பகையைச் செற்றுக் காட்டலை என்னின், பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வர்; நல்லது நினைந்தாய்; நேரே
வந்தனை புரிவர் அன்றே, வீரராய் வசையின் தீர்ந்தார்? 193

'இத்தலை வந்தது, என்னை இராமன்பால், வாலின் ஈர்த்து
வைத்தலைக் கருதி அன்று; வானவர் மார்பின் தைத்த
முத் தலை அயிலின் உச்சி முதுகு உற, மூரி வால்போல்
கைத்தலம் காலும் தூங்க, கிடத்தலைக் கருதி' என்றான். 194

**அங்கதன் எறிந்த தண்டு பல துண்டமாதல்**

அற்று அவன் உரைத்தலோடும், அனல் விழித்து, அசனி குன்றத்து
உற்றது போலும் என்னும் ஒலிபட, உலகம் உட்க,
பொன் தடந் தோளின் வீசிப் புடைத்தனன்; பொறியின் சிந்தி,
இற்றது நூறு கூறாய், எழு முனை வயிரத் தண்டு. 195

189. எழு முனை வயிரத் தண்டு - ஏழு முனைகளை உடைய வயிரத்தால் ஆகிய ஒரு தண்டாயுதம்; மடக்குவாய் - ஒழிப்பாய்; 191. தானைப் புரவலன் - சுக்கிரீவன்; 193. பந்தனைப் பகை - கட்டாக உள்ள பகை; 194. தூங்க - தொங்க.

அங்கதன் தோல்வியுற, அனுமன் அங்கு வந்து எதிர்த்தல்

தண்டு இற, தடக் கை ஓச்சி, 'தழுவி அத் தறுகணனைக்
கொண்டு இறப்புறுவென்' என்ன, தலையுறக் குனிக்குங் காலை,
புண் திறப்புற வலாளன் கையினுல் புகைந்து குத்த,
மண் திறப்பு எய்த வீழ்ந்தான்; மாருதி இமைப்பின் வந்தான்.

மறித்து அவன் அவனைத் தன் கை வயிர வான் சூலம் மார்பில்
குறித்துற எறியலுற்ற காலையில், குன்றம் ஒன்று
பறித்து, அவன் நெற்றி முற்றப் பரப்பிடை, பாகம் உள்ளே
செறித்தெனச் சுரிக்க வீசி, தீர்த்தனை வாழ்த்தி ஆர்த்தான்.

தலையினில் தைத்து வேறு ஓர் தலை என நின்றதன்ன
மலையினைக் கையின் வாங்கி, மாருதி வயிர மார்பின்,
உலை உற வெந்த பொன் செய் கம்மியர் கூடம் ஒப்ப,
குலை உறு பொறிகள் சிந்த, வீசி, தோள் கொட்டி ஆர்த்தான்.

அனுமன் போர் செய்துநிற்க, அங்கதனை வானரர் எடுத்துச் செல்லுதல்

அவ்வழி வாலி சேயை அரிகுல வீரர் அஞ்சார்
வவ்வினர் கொண்டு போனுர்; மாருதி வானை முற்றும்
கவ்வியது அனையது ஆங்கு ஓர் நெடு வரை கடிதின் வாங்கி,
எவ்வம் இல் ஆற்றலானை நோக்கி நின்று, இனைய சொன்னுன்:

அனும-கும்பகருணர் வஞ்சினம்

'எறிகுவென் இதனை நின்மேல்; இமைப்புறும் அளவில் ஆற்றல்
மறிகுவது அன்றி, வல்லை மாற்றினைஎன்னின், வன்மை
அறிகுவர் எவரும்; பின்னை யான் உன்னேடு அமரும் செய்யேன்;
பிறிகுவென்; உலகில், வல்லோய்! பெரும் புகழ் பெறுதி' என்றுன்.

மாற்றம் அஃது உரைப்பக் கேளா, மலை முழை திறந்தது என்னக்
கூற்று உறழ் பகுவாய் விள்ள நகைத்து,'நீ கொணர்ந்த குன்றை
ஏற்றனென்; ஏற்ற காலத்து, இறை அதற்கு ஒற்கம் எய்தின்,
தோற்றனென், உனக்கு; என் வன்மை சுருங்கும்' என்று அரக்கன் [சொன்னுன்.

196. இறப்புறுவென் - இறப்புறச் செய்வேன், செல்வேன் எனவும் ஆம்; வலாளன் - வல்லவனுகிய கும்பகருணன்; மண் திறப்பு எய்தல் - பூமி பிளத்தல்; 197. பாகம் - (மலையின்) பகுதி; சுரிக்க - உள்ளே பதிய; தீர்த்தன் - தூயவனுகிய இராமன்; 198. பொன் - உலோகம், ஈண்டு இரும்பு; கூடம் - சம்மட்டி; குலை - திரள்; 199. எவ்வம் - குற்றம், துன்பம்; 201. ஒற்கம் - தளர்ச்சி.

கும்பகருணன் வலிமை கண்டு, அனுமன் அப்பால் போதல்

மாருதி, 'வல்லைஆகின், நில், அடா! மாட்டாய்ஆகின்,
பேருதி, உயிர்கொண்டு' என்று, பெருங் கையால் நெருங்க விட்ட
கார் உதிர் வயிரக் குன்றைக் காத்திலன், தோள்மேல் ஏற்ருன்;
ஓர் உதிர் நூறு கூருய் உக்கது, எவ் உலகும் உட்க. 202

இளக்கம் ஒன்று இன்றி நின்ற இயற்கை பார்த்து, 'இவனது ஆற்றல்
அளக்குறற்பாலும் ஆகா; குலவரை அமரின் ஆற்ரு;
துளக்குறும் நிலையன் அல்லன்; சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேல், பிளக்கும்' என்ன, மாருதி பெயர்ந்து போஞன்.

குரக்குச் சேனையின் அழிவு

'எழுபது வெள்ளத்துள்ளார் இறந்தவர் ஒழிய, யாரும்
முழுவதும் மாள்வர், இன்றே இவன் வலத்து அமைந்த முச் சூல்
கழுவினில்' என்று வானேர் கலங்கினர், நடுங்கினரால்—
'பொழுதினின் உலகம் மூன்றும் திரியும்' என்று உள்ளம் பொங்கி.

தாக்கினர்; தாக்கினர்தம் கைத்தலம் சலித்தது அன்றி,
நூக்கினர் இல்லை; ஒன்றும் நோவு செய்தாரும் இல்லை-
ஆக்கினன்; களத்தின் ஆங்கு ஓர் குரங்கினது அடியும் இன்றிப்
போக்கினன்; ஆண்மையாலே புதுக்கினன், புகழை அம்மா!

'சங்கத்து ஆர் குரங்கு சாய, தாபதர் என்னத் தக்கார்
இங்கு உற்ருர் அல்லரோ தான்? வேறும் ஓர் இலங்கை உண்டோ?
எங்குற்ருர் எங்குற்ருர்?' என்று எடுத்து அழைத்து, இமையோர் அஞ்ச,
துங்கத் தோள் கொட்டி, ஆர்த்தான்—கூற்றையும் துணுக்கம் கொண்டான்.

பறந்தலைஅதனின் வந்த பல் பெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க, நின்ற இரிதலின், யாரும் இன்றி
வறந்தது; சோரி பாய வளர்ந்தது, மகர வேலை—
குறைந்துளது, உவாவுற்று ஓதம் கிளர்ந்து மீக்கொண்டது என்ன. 207

இலக்குவன் கும்பகருணனுடன் போரிடுதல்

குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன; 'குரங்கின்
வென்றி அம் பெருஞ் சேனை ஓர் பாதியின் மேலும்
அன்று தேய்ந்தது' என்று உரைத்தலும், அமரர் கண்டு உவப்பச்
சென்று தாக்கினன், ஒரு தனிச் சுமித்திரை சிங்கம். 208

203. இளக்கம் - தளர்ச்சி; 204. சூல் - சூலம்; 205. நூக்குதல் - அசைத்துத் தள்ளுதல்; 206. துங்கம் - உயர்ச்சி, வலிமையும் ஆம்; 207. பறந்தலை - போர்க்களம்; உவா - நிறைமதி; ஓதம் - கடல்.

நாண் எறிந்தனன், சிலையினை; அரக்கியர் நகு பொன்
பூண் எறிந்தனர்; படியிடை இடி பொடித்தென்னச்
சேண் எறிந்து எழு திசை செவிடு எறிந்தன; அலகை,
தூண் எறிந்தன கையெடுத்து, ஆடின துணங்கை. 209

இலக்குவன் கடிது ஏவின, இரை பெறுது இரைப்ப,
சிலைக் கடுங் கணை நெடுங் கணம் சிறையுடன் செல்வ,
உலைக் கொடுங் கனல் வெதும்பிட வாய் எரிந்து ஓடி,
குலக் கயங்களில் குளித்தன; குடித்தன, குருதி. 210

அலை புடைத்த வாள் அரக்கரைச் சில கழுத்து அரிவ;
சில, சிரத்தினைத் துணித்து, அவை திசைகொண்டு செல்வ;
கொலை படைத்த வெங் களத்திடை விழா, கொடு போவ;
தலை படைத்தன போன்றனவால், நெடுஞ் சரங்கள். 211

உருப் பதங்கனை ஒப்பன சில கணை, ஓடைப்
பொருப்பதங்களை உருவி, மற்று அப்புறம் போவ,
செருப் பதம் பெறு அரக்கர்தம் தலை பல சிந்தி,
பருப்பதங்கள் புக்கு ஒளிப்பன, முழை புகு பாம்பின். 212

மின் புகுந்தன பல் குழுவாம் என மிளிர்வ,
பொன் புகுந்து ஒளிர் வடிம்பின் கடுங் கணை போவ,
முன்பு நின்றவர் முகத்திற்கும், கடைக் குழை முதுகின்
பின்பு நின்றவர் பிடர்க்கும், இவ் விசை ஒக்கும், பிறழா. 213

போர்த்த பேரியின் கண்ணன, காளத்தின் பொகுட்ட,
ஆர்த்த வாயன, கையன, ஆனையின் கழுத்த,
ஈர்த்த தேரன, இவுளியின் தலையன, எவர்க்கும்
பார்த்த நோக்கன, கலந்தன—இலக்குவன் பகழி. 214

மருப்பு இழந்தன;—களிறு எலாம்—வால் செவி இழந்த;
நெருப்பு உகும் கண்கள் இழந்தன; நெடுங் கரம் இழந்த;
செருப் புகும் கடுங் காத்திரம் இழந்தன; சிகரப்
பொருப்பு உருண்டனவாம் எனத் தலத்திடைப் புரண்ட. 215

209. பொன் பூண் - பொற்றாலி; துணங்கை - முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஒற்றியடித்துக்கொண்டு அசைந்தாடும் ஒருவகைக் கூத்து; 210. குலக் கயம் - திசை யானை; 212. உரு - உருவம்; பதங்கம் - சூரியன்; செருப் பதம் - போர் செய்யும் செவ்வி; 213. வடிம்பு - விளிம்பு; 214. பொகுட்டு - தாமரைப் பூவில் உள்ள கொட்டை, ஈண்டு அந்தக் கொட்டை போன்ற காளத்தின் முனையைக் குறித்தது; 215. காத்திரம் - யானையின் முன்னங் கால்கள்.

நிரந்தரம் தொடை நெகிழ்த்தலின், திசை எங்கும் நிறைந்த
சரம் தலைத்தலை படப் பட மயங்கின சாய்ந்த;
உரம் தலத்துற உழைத்தவால்; பிழைத்தது ஒன்று இல்லை—
குரம் தலத்தினும் விசும்பினும் மிதித்திலாக் குதிரை. 216

பல்லவக் கணை பட, படு புரவிய, பல் கால்
வில்லுடைத் தலையாளொடு சூதரை வீழ்த்த,
எல்லை அற்ற செங் குருதியின் ஈர்ப்புண்ட அல்லால்,
செல்லகிற்றில, நின்றில—கொடி நெடுந் தேர்கள். 217

பேழை ஒத்து அகல் வாயன பேய்க் கணம் முகக்கும்
மூழை ஒத்தன—கழுத்து அற வீழ்ந்தன, முறை சால்
ஊழை ஒத்தன ஒரு கணை தைத்தன, உதிரத்
தாழி ஒத்த வெங் குருதியில் மிதப்பன, தலைகள். 218

ஒட்டி நாயகன் வென்றி நாள் குறித்து ஒளிர் முளைகள்
அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன—அழிந்து
நட்டவாம் என வீழ்ந்தன, துடிகளின் நவை தீர்
வட்ட வான்கணில், வதிந்தன வருண சாமரைகள். 219

எரிந்த வெங் கணை நெற்றியில் படுதொறும், யானை,
அரிந்த அங்குசத்து அங்கையின் கல்வியின் அமைவால்,
திரிந்த வேகத்த, பாகர்கள் தீர்ந்தன, செருவில்
புரிந்த வானரத் தானையில் புக்கன, புயலின். 220

வேனிலான் அன்ன இலக்குவன் கடுங் கணை விலக்க,
மான வெள் எயிற்று அரக்கர்தம் படைக்கல வாரி
போன போன வன் திசைதொறும் பொறிக் குலம் பொடிப்ப,
மீன் எலாம் உடன் விசும்பின்நின்று உதிர்ந்தென வீழ்ந்த. 221

கரம் குடைந்தன, தொடர்ந்து போய்க் கொய் உளைக் கடு மாக்
குரம் குடைந்தன, வெரிநுறக் கொடி நெடுங் கொற்றத்
தரம் குடைந்தன, அணி நெடுந் தேர்க் குலம் குடைந்த,—
அரம் குடைந்தன அயில் நெடு வாளிகள் அம்மா! 222

216. உரம் - மார்பு; குரம் - குளம்பு; 217. பல்லவக் கணை - தளிர் போன்ற அம்பு; தலையாள் - தேரில் இருந்து போர் செய்யும் தேர் வீரர்; சூதர் - தேர்ப்பாகர்; 218. பேழை - பெட்டி; மூழை - அகப்பை; ஊழ் - ஊழ்வினை; தாழி - மிடா; 219. குத்திட்டாற்போல் வீழ்ந்த துடிகளின் கண்களில் சாமரைகள் பதிந்து வீழ்ந்திருப்பது முளைப் பாலிகை போலக் காட்சி யளிக்கின்றது; வருணம் - நல்ல நிறம்; 221. படைக்கல வாரி - படைக்கலங் களாகிய கடல்.

'துரக்கும், மெய்யுணர்வு இரு வினைகளை எனும் சொல்லின்,
கரக்கும் வீரதை தீமையை' எனும் இது கண்டோம்;
இரக்கம் நீங்கினர், அறத்தொடும் திறம்பினர்எனினும்,
அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர், விரும்பி. 223

மறக் கொடுந் தொழில் அரக்கர்கள், மறுக்கிலா மழைபோல்
நிறக் கொடுங் கணை நெருப்பொடு நிகர்வன நிமிர,
இறக்கம் எய்தினர் யாவரும், எய்தினர் எனின், அத்
துறக்கம் என்பதின் பெரியது ஒன்று உளது எனச் சொல்லேம்.

ஒருவரைக் கரம், ஒருவரைச் சிரம், மற்று அங்கு ஒருவர்
குரை கழல் துணை, தோள் இணை, பிற மற்றும் கொளலால்,
விரவலர்ப் பெரு வெறுமைய ஆயின; வெவ்வேறு
இரவு கற்றன போன்றன—இலக்குவன் பகழி. 225

சிலவரைக் கரம், சிலவரைச் செவி, சிலர் நாசி,
சிலவரைக் கழல், சிலவரைக் கண், கொளும் செயலால்,
நில வரைத் தரு பொருள்வழித் தண் தமிழ் நிரப்பும்
புலவர் சொல் துறை புரிந்தவும் போன்றன—சரங்கள். 226

அறத்தின் இன் உயிர் அனையவன் கணை பட, அரக்கர்,
'இறத்தும், இங்கு இறை நிற்பின்' என்று இரியலின் மயங்கி,
திறத்திறம் படத் திசைதொறும் திசைதொறும் சிந்திப்
புறத்தின் ஓடினர், ஓடின குருதியே போல. 227

**இலக்குவன் வில் ஆண்மையைக் கும்பகருணன் வியத்தல்**

செருவில் மாண்டவர் பெருமையும், இலக்குவன் செய்த
வரி வில் ஆண்மையும், நோக்கிய புலத்தியன் மருமான்,
'திரிபுரஞ் செற்ற தேவனும் இவனுமே செருவின்
ஒரு விலாளர்' என்று ஆயிரம் கால் எடுத்து உரைத்தான். 228

படர் நெடுந் தடந் தட்டிடைத் திசைதொறும் பாகர்
கடவுகின்றது, காற்றினும் மனத்தினும் கடியது,
அடல் வயங் கொள் வெஞ் சீயம் நின்று ஆர்க்கின்றது, அம் பொன்
வட பெருங் கிரி பொருவு தேர் ஓட்டினன் வந்தான். 229

223. கரக்கும் - மறைத்துவிடும்; வீரதை - வீரம்; மெய்யுணர்வு இரு வினைகளை ஒழிக்கும் என்பதை உரை அளவையால் கண்டது போல, வீரப் பண்பு பாவத்தைப் போக்கும் என்பதைக் காட்சி அளவையால் கண்டோம் என்பது முதல் ஈரடிகளின் கருத்து; 224. இறக்கம் - இறப்பு; 225. இரவு - இரத்தல் தொழில்; 226. பொருள்வழி - பொருளுக்கு ஏற்ப; தமிழ் - ஈண்டுத் தமிழ்ச் செய்யுள், செல்வரிடத்துப் பொருள் பெற்றுத் தமிழ் பாடும் புன் புலவர் அவர் தந்த பொருள் அளவுக்கு ஏற்பப் பாடி நிரப்பும் தன்மை போல, இலக்குவன் அம்பு கிடைத்த அளவுக்கு ஏற்பத் தமக்கு உரிய அறுத்தல் தொழிலைச் செய்தன; 228. மருமான் - வழித் தோன்றல்.

அனுமன் தோள்மேல் இலக்குவன் ஏறிச் சென்று, பொருதல்

தொளை கொள் வான் நுகச் சுடர் நெடுந் தேர் மிசைத் தோன்றி,
வளை கொள் வெள் எயிற்று அரக்கன் வெஞ் செருத் தொழில் மலைய,
'கிளை கொளாது, இகல்' என்று எண்ணி, மாருதி கிடைத்தான்,
'இளைய வள்ளலே! ஏறுதி தோள்மிசை' என்றான். 230

ஏறினான், இளங் கோளரி; இமையவர் ஆசி
கூறினார்; எடுத்து ஆர்த்தது, வானரக் குழுவும்;
நூறு பத்துடைப் பத்தியின் நொறில் பரி பூண்ட
ஆறு தேரினும் அகன்றது, அவ் அனுமன்தன் தடந் தோள்.

தன்னின் நேர் பிறர் தான் அலாது இல்லவன் தோள்மேல்,
துன்னு பேர் ஒளி இலக்குவன் தோன்றிய தோற்றம்,
பொன்னின் மால் வரை வெள்ளி மால் வரை மிசைப் பொலிந்தது
என்னுமாறு அன்றி, பிறிது எடுத்து இயம்புவது யாதோ? 232

ஆங்கு, வீரனோடு அமர் செய்வான் அமைந்த வாள் அரக்கன்,
தாங்கு பல் கணைப் புட்டிலும் தகை பெறக் கட்டி,
வீங்கு தோள் வலிக்கு ஏயது, விசும்பில் வில் வெள்க,
வாங்கினான், நெடு வடவரை புரைவது ஓர் வரி வில். 233

கும்பகருணன் வீரவார்த்தையும், இலக்குவன் மறுமொழியும்

'இராமன் தம்பி நீ; இராவணன் தம்பி நான்; இருவேம்
பொராநின்றேம்; இது காணிய வந்தனர், புலவோர்;
பராவும் தொல் செரு முறை வலிக்கு உரியன பகர்ந்து,
விராவு நல் அமர் விளைக்குதும், யாம்' என விளம்பா, 234

'பெய் தவத்தினோர் பெண்கொடி, எம்முடன் பிறந்தாள்,
செய்த குற்றம் ஒன்று இல்லவள், நாசி வெஞ் சினத்தால்
கொய்த கொற்றவ! மற்று அவள் கூந்தல் தொட்டு ஈர்த்த
கை தலத்திடைக் கிடத்துவென்; காக்குதி' என்றான். 235

அல்லினால் செய்த நிறத்தவன் அனையது பகர,
மல்லினால் செய்த புயத்தவன், 'மாற்றங்கள் நும்பால்
வில்லினால் சொல்லின் அல்லது, வெந் திறல் வெள்கச்
சொல்லினால் சொலக் கற்றிலம், யாம்' எனச் சொன்னான். 236

230. நுகம் - நுகத்தடி; கிளை - இனம், ஈண்டு ஒப்பு.

இருவரும் செய்த பெரும் போர்

'வின் இரண்டு கூறு ஆயது; பிளந்தது வெற்பு;
மண் இரண்டு உறக் கிழிந்தது' என்று இமையவர் மறுக,
கண் இரண்டினும் தீ உக, கதிர் முகப் பகழி
எண்-இரண்டினோடு இரண்டு ஒரு தொடை தொடுத்து எய்தான். 237

கொம்பு நாலுடைக் குலக் கரிக் கும்பத்தில் குளித்த,
உம்பர் ஆற்றலை ஒதுக்கிய, உரும் எனச் செல்வ,
வெம்பு வெஞ் சினத்து இராவணற்கு இளையவன் விட்ட
அம்பு பத்தினோடு எட்டையும் நான்கினால் அறுத்தான். 238

அறுத்த காலையின், அரக்கனும் அமரரை நெடு நாள்
ஒறுத்தது, ஆயிரம் உருவது, திசைமுகன் உதவப்
பொறுத்தது, ஆங்கு ஒரு புகர் முகக் கடுங் கணைப் புத்தேள்,
'இறுத்து மாற்று, இது வல்லையேல்' என்று, கோத்து, எய்தான்.

புரிந்து நோக்கிய திசைதொறும், பகழியின் புயலால்,
எரிந்து செல்வதை நோக்கிய இராமனுக்கு இளையான்,
தெரிந்து, மற்ற அதுதன்னை ஓர் தெய்வ வெங் கணையால்
அரிந்து வீழ்த்தலும், ஆயிரம் உருச் சரம் அற்ற.* 240

ஆறு-இரண்டு வெங் கடுங் கணை அனுமன்மேல் அழுத்தி,
ஏறு வெஞ் சரம் இரண்டு இளங் குமரன்மேல் ஏற்றி,
நூறும் ஐம்பதும் ஒரு தொடை தொடுத்து, ஒரு நொடியில்,
கூறு திக்கையும் விசும்பையும் மறைத்தனன், கொடியோன்.

மறைத்த வாளிகள் எவற்றையும், அவற்றினால் மாற்றி,
துறைத் தலம்தொறும் தலம்தொறும் நின்று தேர் சுமக்கும்
பொறைக்கு அமைந்த வெங் கரி, பரி, யாளி, மாப் பூதம்,
திறத் திறம் படத் துணித்து, அவன் தேரையும் சிதைத்தான்.

தேர் அழிந்தது, செங் கதிர்ச் செல்வனைச் சூழ்ந்த
ஊர் அழிந்ததுபோல்; துரந்து ஊர்பவர் உலந்தார்;
நீர் அழிந்திடா நெடு மழைக் குழாத்திடை நிமிர்ந்த
பார வெஞ் சிலை அழிந்தெனத் துமிந்தது, அப் பரு வில். 243

செய்த போரினை நோக்கி, இத் தேரிடைச் சேர்ந்த
கொய் உளைக் கடுங் கோள் அரி முதலிய குழுவை
எய்து கொன்றனனோ? நெடு மந்திரம் இயம்பி,
வைது கொன்றனனோ?' என, வானவர் மயர்ந்தார். 244

239. பொறுத்தது - தாங்கப் பெற்றது; புத்தேள் - தெய்வம்;
243. ஊர் - ஊர்கோள், பரிவேடம்; துரத்தல் - செலுத்துதல்.

**கும்பகருணனும் இலக்குவனும் தரையில் நின்று பொருதல்**

ஊன்று தேரொடு சிலை இலன், கடல் கிளர்ந்து ஒப்பான்,
'ஏன்று, மற்று அவன் இன் உயிர் குடிப்பென்' என்று, உலகம்
மூன்றும் வென்றமைக்கு இடு குறி என்ன முச் சிகைத்தாய்த்
தோன்றும் வெஞ் சுடர்ச் சூல வெங் கூற்றினைத் தொட்டான்.

இழியப் பாய்ந்தனன், இரு நிலம் பிளந்து இரு கூறு,—
கிழியப் பாய் புனல் கிளர்ந்தெனக் கிளர் சினத்து அரக்கன்;
'பழி, அப்பால்; இவன் பதாதி' என்று, அனுமன்தன் படர் தோள்
ஒழியப் பார்மிசை இழிந்து சென்று, இளவலும் உற்றான். 246

உற்ற காலையின், இராவணன், தம்பி மாடு உதவ,
இற்ற தானையின் இரு மடி இகல் படை ஏவ,
முற்றி அன்னது, முழங்கு முந்நீர் என முடுகிச்
சுற்றி ஆர்த்தது, சுமித்திரை சிங்கத்தைத் தொடர்ந்து.* 247

இரிந்து வானவர் இரியலின், மயங்கினர் எவரும்;
சொரிந்த வெம் படை துணிந்திட, தடுப்ப அருந் தொழிலால்
பரிந்த அண்ணலும், பரிவிலன் ஒரு புடை படர,
புரிந்த அந் நெடுஞ் சேனை அம் கருங் கடல் புக்கான்.* 248

முருக்கின் நாள்மலர் முகை விரிந்தாலன முரண் கண்
அரக்கர் செம் மயிர்க் கருந் தலை அடுக்கலின் அணைகள்
பெருக்கினான்—பெருங் கனலிடைப் பெய்து பெய்து, எருவை
உருக்கினால் அன்ன குருதி நீர் ஆறுகள் ஓட.* 249

கரியின் கைகளும், புரவியின் கால்களும், காலின்
திரியும் தேர்களின் சில்லியும், அரக்கர்தம் சிரமும்,
சொரியும் சோரியின் துறைதொறும் துறைதொறும் சுழிப்ப,
நெரியும் பல் பிணப் பெருங் கரை கடந்தில, நீத்தம்.* 250

கொற்ற வாள், எழு, தண்டு, வேல், கோல், மழு, குலிசம்,
மற்றும் வேறு உள படைக்கலம், இலக்குவன் வாளி
சுற்றும் ஓடுவ தொடர்ந்து இடை துணித்திட, தொகையாய்
அற்ற துண்டங்கள் படப் பட, துணிந்தன அனந்தம்.* 251

குண்டலங்களும், மவுலியும், ஆரமும், கோவை,
தண்டை, தோள்வளை, கடகம் என்று இனையன, தறுகண்
கண்ட கண்டங்களொடும் கணை துரந்தன, கதிர் சூழ்
மண்டலங்களை மாறுகொண்டு இமைத்தன, வானில்.* 252

246. பதாதி - (ஊர்தியின்றித்) தரையில் நிற்பவன்; 249. எருவை - செம்பு; 252. தறுகண் கண்ட - அஞ்சாமையோடு செய்த.

பரந்த வெண்குடை சாமரை, நெடுங் கொடி, பதாகை,
சரம் தரும் சிலை, கேடகம், பிச்சம், மொய் சரங்கள்
துரந்து செல்வன, குருதி நீர் ஆறுகள்தோறும்
நிரந்த பேய்க்கணம் கரைதொறும் குவித்தன, நீந்தி.* 253

### கும்பகருணன் சுக்கிரீவனோடு போர் விளைத்தல்

ஈண்டு வெஞ் செரு இனையன நிகழ்வுழி எவர்க்கும்,
நீண்ட வெள் எயிற்று அரக்கன், மற்றொரு திசை நின்றான்,
பூண்ட வெஞ் செரு இரவி கான்முளையொடு பொருதான்;
'காண்தகும்' என, இமையவர் குழுக்கொண்டு, கண்டார்.*

பொறிந்து எழு கண்ணினன், புகையும் வாயினன்,—
செறிந்து எழு கதிரவன் சிறுவன்—சீறினான்,
'முறிந்தன அரக்கன் மா முரண் திண் தோள்' என,
எறிந்தனன், விசும்பில், மா மலை ஒன்று ஏந்தியே.* 255

அம் மலைநின்று வந்து அவனி எய்திய
செம் மலை அனைய வெங் களிறும், சேனையின்
வெம் மலை வேழமும், பொருத; வேறு இனி
எம் மலை உள, அவற்கு எடுக்க ஒணாதன?* 256

இவ்வகை நெடு மலை இழிந்த மாசுணம்
கவ்விய, நிருதர்தம் களிறும் கட்டு அற;
அவ் வகை மலையினை ஏற்று, ஓர் அங்கையால்
வவ்வினன், அரக்கன், வாள் அவுணர் வாழ்த்தினார். 257

ஏற்று ஒரு கையினால், 'இதுகொல், நீ, அடா!
ஆற்றிய குன்றம்?' என்று, அளவு இல் ஆற்றலான்,
நீற்று இயல் நுணுகுறப் பிசைந்து, 'நீங்கு' எனா,
தூற்றினன்; இமையவர் துணுக்கம் எய்தினார். 258

### சுக்கிரீவன்மேல் கும்பகருணன் எறிந்த சூலத்தை அனுமன் முறித்தல்

'செல்வெனோ, நெடுங் கிரி இன்னும் தேர்ந்து?' எனா,
எல்லவன் கான்முளை உணரும் எல்வையில்,
'கொல்!' என எறிந்தனன், குறைவு இல் நோன்பினோர்
சொல் எனப் பிழைப்பு இலாச் சூலம், சோர்வு இலான். 259

253. பிச்சம் - பீலிக் குடை; 257. மாசுணம் - மலைப்பாம்புகள்; கட்டு - உடற்கட்டு, உடல்வலிமை.

'பட்டனன் பட்டனன்' என்று, பார்த்தவர்
விட்டு உலம்பிட, நெடு விசும்பில் சேறலும்,
எட்டினன் அது பிடித்து, இறுத்து நீக்கினான்;
ஒட்டுமோ, மாருதி, அறத்தை ஓம்புவான்? 260

சித்திர வன முலைச் சீதை செவ்வியால்
முத்தனார், மிதிலை ஊர், அறிவு முற்றிய
பித்தன் வெஞ் சிலையினை இறுத்த பேர் ஒலி
ஒத்தது, சூலம் அன்று இற்ற ஓசையே. 261

கும்பகருணன், அனுமனைப் போருக்கு அறைகூவ,
அனுமன் மறுத்தல்

நிருதனும் அனையவன் நிலைமை நோக்கியே,
'கருதவும் இயம்பவும் அரிது, உன் கை வலி;
அரியன முடிப்பதற்கு அனைத்து நாட்டினும்
ஒரு தனி உளை; இதற்கு உவமை யாது?' என்றான். 262

'என்னொடு பொருதியேல், இன்னும், யான் அமர்
சொன்னன புரிவல்' என்று, அரக்கன் சொல்லலும்,
'முன், ''இனி எதிர்க்கிலேன்'' என்று முற்றிய
பின், இகல் பழுது' என, பெயர்ந்து போயினான். 263

மீண்டும் சுக்கிரீவனும் கும்பகருணனும் பொருதல்

அற்றது காலையில், அரக்கன், ஆயுதம்
பெற்றிலன், பெயர்ந்திலன்; அனைய பெற்றியில்,
பற்றினன், பாய்ந்து எதிர், பருதி கான்முளை
எற்றினன், குத்தினன், எறுழ் வெங் கைகளால். 264

அரக்கனும்,—'நன்று, நின் ஆண்மை; ஆயினும்,
தருக்கு இனி இன்றொடும் சமையும்தான்' என,
நெருக்கினன், பற்றினன், நீங்கொணாவகை;—
உருக்கிய செம்பு அன உதிரக் கண்ணினான். 265

திரிந்தனர் சாரிகை; தேவர் கண்டிலர்;
புரிந்தனர், நெடுஞ் செரு; புகையும் போர்த்து எழ
எரிந்தன, உரும் எலாம்; இருவர் வாய்களும்
சொரிந்தன, குருதி; தாம் இறையும் சோர்ந்திலார். 266

260. உலம்புதல் - ஆரவாரித்தல், சண்டுக் கதறுதல்; ஒட்டுதல் - உடன்படுதல்; 261. முத்தனார் - முத்தி உலகத்திற்கு உரிய திருமாலின் அவதாரமாகிய இராமபிரான்; பித்தன் - சிவபெருமான்.

உறுக்கினர், ஒருவரை ஒருவர்; உற்று இகல்
முறுக்கினர், முறை முறை; அரக்கன் மொய்ம்பினுல்
பொறுக்கிலாவகை நெடும் புயங்களால் பிணித்து
இறுக்கினுன்; இவன் சிறிது உணர்வும் எஞ்சினுன். 267

உணர்வு இழந்த சுக்கிரீவனைக் கும்பகருணன் எடுத்துச் செல்லுதல்

'மண்டு அமர் இன்ெருடு மடங்கும்; மன் இலாத்
தண்டல் இல் பெரும் படை சிந்தும்; தக்கது ஓர்
எண்தரு கருமம் மற்று இதனின் இல்' என,
கொண்டனன் போயினன், நிருதர்கோ நகர். 268

உரற்றின பறவையை ஊறு கொண்டு எழ,
சிரற்றின பார்ப்பினின் சிந்தை சிந்திட,
விரல் துறு கைத்தலத்து அடித்து, வெய்துயிர்த்து,
அரற்றின, கவிக் குலம்; அரக்கர் ஆர்த்தனர். 269

நடுங்கினர் அமரரும்; நா உலர்ந்து வேர்த்து
ஒடுங்கினர், வானரத் தலைவர்—உள் முகிழ்த்து,
இடுங்கின கண்ணினர், எரிந்த நெஞ்சினர்,
'மடங்கினவாம் உயிர்ப்பு' என்னும் அன்பினர். 270

புழுங்கிய வெஞ் சினத்து அரக்கன் போகுவான்,
அழுங்கல் இல் கோள் முகத்து அரவம் ஆயினுன்;
எழும் கதிர் இரவிதன் புதல்வன், எண்ணுற
விழுங்கிய மதி என, மெலிந்து தோன்றினுன். 271

திக்கு உற விளக்குவான் சிறுவன், தீயவன்
மைக் கரு நிறத்திடை மறைந்த தன் உரு
மிக்கதும் குறைந்ததும் ஆக, மேகத்துப்
புக்கதும் புறத்தும் ஆம் மதியும் போன்றனன். 272

அனுமன் கைபிசைந்து கும்பகருணன் பின் போதல்

'ஒருங்கு அமர் புரிகிலேன், உன்னெடு யான்' என,
நெருங்கிய உரையினை நினைந்து, நேர்கிலன்,
கருங் கடல் கடந்த அக் காலன், காலன் வாழ்
பெருங் கரம் பிசைந்து, அவன் பின்பு சென்றனன். 273

269. உரற்றின பறவை - கூவிக் கொண்டிருந்த தாய்ப் பறவை; ஊறு - வல்லூறு; சிரற்றுதல் - துன்பத்தால் அரற்றுதல்; பார்ப்பு - குஞ்சு; 270. மடங்கின - நின்றுவிட்டன; 271. கோள் முகத்து அரவம் - கோளாகிய முகம் மட்டுமாக உள்ள இராகு என்னும் பாம்பு, பற்றும் தன்மையுடைய முகத்தைக் கொண்ட இராகு என்னும் பாம்பு எனினும் ஆம்; 273. கடல் கடந்த காலன் - கடலைக் கடந்த கால்களையுடைய அனுமன்.

ஆயிரம் பெயரவன் அடியில் வீழ்ந்தனர்,
'நாயகர் எமக்கு இனி யாவர், நாட்டினில்?
காய் கதிர்ப் புதல்வனைப் பிணித்த கையினன்,
போயினன், அரக்கன்' என்று இசைத்த பூசலார். 274

இராமன், கும்பகருணன் செல்லும் வாயிலை அடைத்தல்

தீயினும் முதிர்வுறச் சிவந்த கண்ணினன்,
காய் கணை சிலையொடும் கவர்ந்த கையினன்,
'ஏ' எனும் அளவினில், இலங்கை மா நகர்
வாயில் சென்று எய்தினன்—மழையின் மேனியான். 275

'உடைப் பெருந் துணைவனை உயிரின் கொண்டு போய்,
கிடைப்ப அருங் கொடி நகர் அடையின், கேடு' என,
'தொடைப் பெரும் பகழியின் மாரி தூர்த்து, உற
அடைப்பென்' என்று, அடைத்தனன், விசும்பின் ஆறு எலாம்.

மாதிரம் மறைந்தன; வயங்கு வெய்யவன்
சோதியின் கிளர் நிலை தொடர்தல் ஓவின;
யாதும் விண் படர்கில; இயங்கு கார் மழை
மீது நின்று அகன்றன—விசும்பு தூர்த்தலால். 277

கும்பகருணன் இராமனைக் காணுதல்

மனத்தினும் கடியது ஓர் விசையின் வான் செல்வான்,
இனக் கொடும் பகழியின் மதிலை எய்தினன்;
'நினைத்து அவை நீக்குதல் அருமை, இன்று' என,
சினக் கொடுந் திறலவன் திரிந்து நோக்கினன். 278

கண்டனன்—வதனம், வாய், கண், கை, கால் எனப்
புண்டரீகத் தடம் பூத்து, பொன் சிலை
மண்டலம் தொடர்ந்து, மண் வயங்க வந்தது ஓர்
கொண்டலின் பொலிதரு கோலத்தான்தனை. 279

கும்பகருணன் இராமனை இடித்துரைத்தல்

மடித்த வாய் கொழும் புகை வழங்க, மாறு இதழ்
துடித்தன; புருவங்கள் சுறுக்கொண்டு ஏறிட,
பொடித்த தீ, நயனங்கள்; பொறுக்கலாமையால்,
இடித்த வான் தெழிப்பினல், இடிந்த, குன்று எலாம். 280

277. கிளர் நிலை - விளங்கும் கதிர்கள்: ஓவின - நீங்கின.

' ''மாக் கவந்தனும், வலி தொலைந்த வாலி ஆம்
பூக் கவர்ந்து உண்ணியும், போலும்'' என்று, எனைத்
தாக்க வந்தனை; இவன்தன்னை இன் உயிர்
காக்க வந்தனை; இது காணத் தக்கதால். 281

'உம்பியை முனிந்திலேன், அவனுக்கு ஊர்தியாம்
தும்பியை முனிந்திலேன், தொடர்ந்த வாலிதன்
தம்பியை முனிந்திலேன், சமரம்தன்னில் யான்—
அம்பு இயல் சிலையினாய்!—புகழ் அன்று ஆதலால்.* 282

'தேடினென் திரிந்தனென் நின்னை; திக்கு இறந்து
ஓடியது உன் படை; உம்பி ஒய்ந்து, ஒரு
பாடு உற நடந்தனன்; அனுமன் பாறினன்;
ஈடுறும் இவனைக் கொண்டு, எளிதின் எய்தினேன். 283

'காக்கிய வந்தனைஎன்னின், கண்ட என்
பாக்கியம் தந்தது, நின்னை; பல் முறை
ஆக்கிய செரு எலாம் ஆக்கி, எம்முனைப்
போக்குவென், மனத்துறு காதல் புன்கண் நோய். 284

'ஏதி வெந் திறலினோய்! இமைப்பிலோர் எதிர்,
பேது உறு குரங்கை யான் பிணித்த கைப் பிணி,
கோதை வெஞ் சிலையினால், கோடி வீடுஎனின்,
சீதையும் பெயர்ந்தனள், சிறை நின்றும்' என்றான். 285

**இராமன் வஞ்சினம்**

என்றலும், முறுவலித்து, இராமன், 'யானுடை
இன் துணை ஒருவனை எடுத்த தோள் எனும்
குன்றினை அரிந்து யான் குறைக்கிலேன்எனின்,
பின்றினென் உனக்கு; வில் பிடிக்கிலேன்' என்றான். 286

மீட்டு அவன், சரங்களால் விலங்கலானையே
மூட்டு அற நீக்குவான் முயலும் வேலையில்,
வாள் தலை பிடர்த்தலை வயங்க, வாளிகள்,
சேட்டு அகல் நெற்றியின், இரண்டு சேர்த்தினான். 287

281. பூக் கவர்ந்து உண்ணி - பூவைக் கவர்ந்து உண்ணும் இயல்புள்ள குரங்கு; 282. தும்பி - யானை போன்ற அனுமன்; 283. பாடு - பக்கம்; பாறுதல் - ஓடுதல்; ஈடு உறுதல் - போர் செய்ய வருதல்; 285. ஏதி - வாள், ஈண்டுப் படைக்கலம்; வீடு கோடி எனின் என இயையும்; 286. பின்றுதல் - பின்னிடுதல், தோற்றல்; 287. சேட்டு அகல் - உயர்ந்து அகன்ற, சேடு - பெருமை.

**கும்பகருணன் குருதியால் சுக்கிரீவன் மயக்கம் தெளிதல்**

சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்து எழ,
நெற்றியின் நெடுங் கணெ ஒளிர நின்றவன்,
முற்றிய கதிரவன் முளைக்கும் முந்து வந்து,
உற்று எழும் அருணனது உதயம் போன்றனன். 288

குன்றின் வீழ் அருவியின் குதித்துக் கோத்து இழி
புன் தலைக் குருதி நீர் முகத்தைப் போர்த்தலும்,
இன் துயில் உணர்ந்தென, உணர்ச்சி எய்தினன்;
வன் திறல் தோற்றிலான் மயக்கம் எய்தினன். 289

**சுக்கிரீவன், கும்பகருணன் மூக்கையும் காதையும் கடித்துச் செல்லுதல்**

நெற்றியில் நின்று ஒளி நெடிது இமைப்பன
கொற்றவன் சரம் எனக் குறிப்பின் உன்னினன்;
சுற்றுற நோக்கினன், தொழுது வாழ்த்தினன்—
முற்றிய பொருட்கு எலாம் முடிவுளான்தனை. 290

கண்டனன் நாயகன்தன்னை, கண்ணுறு,
தண்டல் இல் மானமும் நாணும் தாங்கினன்,
விண்டவன் நாசியும் செவியும் வேரொடும்
கொண்டனன், எழுந்து போய்த் தமரைக் கூடினன். 291

**சுக்கிரீவனைக் கண்டு, யாவரும் மகிழ்தல்**

வானரம் ஆர்த்தன; மறையும் ஆர்த்தன;
தான் அர மகளிரும் தமரும் ஆர்த்தனர்;
மீன் நரல் வேலையும் வெற்பும் ஆர்த்தன;
வானவரோடு நின்று அறமும் ஆர்த்ததே. 292

காந்து இகல் அரக்கன் வெங் கரத்துள் நீங்கிய
ஏந்தலை அகம் மகிழ்ந்து, எய்த நோக்கிய
வேந்தனும், சானகி இலங்கை வெஞ் சிறைப்
போந்தனளாம் என, பொருமல் நீங்கினன். 293

மத்தகம் பிளந்து பாய் உதிரம் வார்ந்து எழ,
வித்தகன் சரம் தொட, மெலிவு தோன்றிய
சித்திரம் பெறுதலின், செவியும் மூக்கும் கொண்டு
அத் திசைப் போயினன் அல்லது, ஒண்ணுமோ? 294

*291. விண்டவன் - பகைவன்; 292. நரல் வேலை - ஒலிக்கின்ற கடல்; 294. சித்திரம் - தக்க சமயம்.*

**உணர்வு பெற்ற கும்பகருணன் வாட்போர் புரிதல்**

அக் கணத்து அறிவு வந்து அணுக, அங்கை நின்று
உக்கனன் கவி அரசு என்னும் உண்மையும்,
மிக்கு உயர் நாசியும் செவியும் வேறு இடம்
புக்கதும், உணர்ந்தனன்—உதிரப் போர்வையான். 295

தாது ராகத் தடங் குன்றம், தாரை சால்
கூதிர் கால் நெடு மழை சொரிய, கோத்து இழி
ஊதையோடு அருவிகள் உமிழ்வது ஒத்தனன்—
மீது உறு குருதி யாறு ஒழுகும் மேனியான். 296

எண்ணுடைத் தன்மையன், இனைய எண் இலாப்
பெண்ணுடைத் தன்மையன் ஆய பீடையால்,
புண்ணுடைச் செவியொடு மூக்கும் பொன்றலால்,
கண்ணுடைச் சுழிகளும் குருதி கால்வன. 297

ஏசியுற்று எழும் விசும்பினரைப் பார்க்கும்; தன்
நாசியைப் பார்க்கும்; முன் நடந்த நாளுடை
வாசியைப் பார்க்கும்; இம் மண்ணைப் பார்க்குமால்—
'சீ சி, உற்றது!' எனத் தீயும் நெஞ்சினன். 298

'என் முகம் காண்பதன் முன்னம், யான் அவன்-
தன் முகம் காண்பது சரதம்தான்' என,
பொன் முகம் காண்பது ஓர் தோலும், போரிடை
வல் முகம் காண்பது ஓர் வாளும், வாங்கினன். 299

விதிர்த்தனன், வீசினன், விசும்பின் மீன் எலாம்
உதிர்த்தனன்; உலகினை அனந்தன் உச்சியோடு
அதிர்த்தனன்; ஆர்த்தனன்—ஆயிரம் பெருங்
கதிர்த் தலம் சூழ் வடவரையின் காட்சியான். 300

வீசினன் கேடகம்; முகத்து வீங்கு கால்,
கூசின குரக்கு வெங் குழுவைக் கொண்டு எழுந்து,
ஆசைகள்தோறும் விட்டு எறிய, ஆர்த்து எழும்
ஓசை ஒண் கடலையும் திடர் செய்து ஓடுமால். 301

296. தாது ராகக் குன்றம் - காவிக் கல்லினால் ஆகிய சிவந்த மலை; கோத்து - சேர்ந்து; ஊதை - வாடைக்காற்று; 297. எண் - அறிவு, ஆராய்ச்சி எனலும் ஆம்; எண் இலாப் பெண் - சூர்ப்பணகை; 298. வாசி - வேறுபாடு; 299. தோல் - கேடகம்; வன் முகம் - வலிய வாய்; 300. ஆயிரம் பெருங் கதிர்த்தலம் - ஆயிரம் கதிர்களையுடைய பெரிய சூரிய மண்டிலம்.

தோல் இடைத் துரக்கவும், துகைக்கவும், சுடர்
வேலுடைக் கூற்றினுல் துணிய வீசவும்,
காலிடைக் கடல் எனச் சிந்தி, கை கெட,
வாலுடை நெடும் படை இரிந்து மாய்ந்ததால். 302

ஏறுபட்டதும், இடை எதிர்ந்துளோர் எலாம்
கூறுபட்டதும், கொழுங் குருதி கோத்து இழிந்து
ஆறு பட்டதும், நிலம் அனந்தன் உச்சியும்
சேறு பட்டதும், ஒரு கணத்தில் தீர்ந்தவால். 303

குரக்குச் சேனையின் அழிவைச் சாம்பன் இராமனுக்குப் புலப்படுத்துதல்

'இடுக்கு இலே; எதிர் இனி இவனை இவ் வழித்
தடுக்கிலேயாம்எனின், குரங்கின் தானையை
ஒடுக்கினே, அரக்கரை உயர்த்தினுய்' என
முடுக்கினன், இராமனைச் சாம்பன் முன்னியே. 304

இராமன், கும்பகருணனுடன் பொருதல்

அண்ணலும் தானையின் அழிவும், ஆங்கு அவன்
திண் நெடுங் கொற்றமும், வலியும், சிந்தியா,
நண்ணினன்—நடந்து எதிர், 'நமனை இன்று இவன்
கண்ணிடை நிறுத்துவென்' என்னும் கற்பினுன். 305

ஆறிஞேடு ஏழு கோல், அசனி ஏறு என,
ஈறு இலா விசையன இராமன் எய்தனன்;
பாறு உகு சிறை என விசும்பில் பாறிட
நூறினுன் வாளினுல், நுணங்கு கல்வியான். 306

ஆடவர்க்கு அரசனும் தொடர, அவ் வழி,
கோடையின் கதிர் எனக் கொடிய கூர்ங் கணை
ஈடு உறத் துரந்தனன்; அவையும் இற்று உக,
சேடகப் புறத்தினுல் கிழிய வீசினுன். 307

சிறுத்தது ஓர் முறுவலும் தெரிய, செங் கணுன்,
மறித்து ஒரு வடிக் கணை தொடுக்க, மற்று அவன்
ஒறுத்து ஒளிர் வாள் எனும் உரவு நாகத்தை
அறுத்தது கலுழனின், அமரர் ஆர்க்கவே. 308

302. காலிடைக் கடல் - பெருங் காற்றுல் அலேயும் கடல்; கை கெட - செயல் அற; 303. ஏறு - ஏறுதல், வடுப்படுதல், அதற்குக் கருவியாதலால் படைக்கலம் ஏறு எனப்பட்டது; 304. இடுக்கு - நெருக்கடியான நிலே; 306. பாறு - பருந்து; 307. ஈடு - வலிமை.

'அற்றது தடக் கை வாள் அற்றது இல்' என,
மற்று ஒரு வயிர வாள் கடிதின் வாங்கினன்,
'முற்றினென் முற்றினென்' என்று, முன்பு வந்து,
உற்றனன்—ஊழித் தீ அவிய ஊதுவான். 309

அந் நெடு வாளையும் துணித்த ஆண்தகை,
பொன் நெடுங் கேடகம் புரட்டி, போர்த்தது ஓர்
நல் நெடுங் கவசத்து, நாம வெங் கணை
மின்னொடு நிகர்ப்பன, பலவும் வீசினன். 310

**இராவணன் அனுப்பிய பெரும் படை உதவிக்கு வருதல்**

அந்தரம் அன்னது நிகழும் அவ் வழி,
இந்திரன் தமரொடும் இரியல் எய்திட,
சிந்துவும் தன் நிலை குலைய, சேண் உற
வந்தது, தசமுகன் விடுத்த மாப் படை. 311

வில் வினை ஒருவனும், 'இவனை வீட்டுதற்கு
ஒல் வினை இது' எனக் கருதி, ஊன்றினன்;
பல் வினை தீயன பரந்த போது ஒரு
நல்வினை ஒத்தது, நடந்த தானையே.* 312

**வந்த சேனையை இராமன் எதிர்த்தலும், கும்பகருணன் பொருது தனித்து நிற்றலும்**

கோத்தது புடைதொறும் குதிரை தேரொடு ஆள்
பூத்து இழி மதமலை மிடைந்த போர்ப் படை
காத்தது கருணனை; கண்டு, மாய மாக்
கூத்தனும், 'வருக!' எனக் கடிது கூவினன். 313

சூழி வெங் கட கரி, புரவி, தூண்டு தேர்,
ஆழி வெம் பெரும் படை, மிடைந்த ஆர்கலி
எழ்-இரு கோடி வந்து எய்திற்று என்பரால்;
ஊழியின் ஒருவனும், எதிர் சென்று, ஊன்றினன். 314

காலமும், காலனும், கணக்கு இல் தீமையும்,
மூலம் மூன்று இலை என வகுத்து முற்றிய,
ஞாலமும் நாகமும் விசும்பும் நக்குறும்,
சூலம் ஒன்று அரக்கனும் வாங்கித் தோன்றினன். 315

309. முற்றினென் - முடித்துவிட்டேன்; 311. அந்தரம் - கேடு, முடிவு; சிந்து - கடல்; சேண் - சேய்மை; உற வந்தது - நெருங்க வந்தது; 313. பூத்து - தோன்றி; மாய மாக் கூத்தன் - பெரிய மாயக் கூத்தனாகிய திருமால் (இராமன்); 314. ஆர்கலி - கடலாகிய படை; ஊழியின் ஒருவன் - ஊழிக் காலத்திலும் அழியாது நிற்பவனாகிய திருமால் (இராமன்).

'அரங்கு இடந்தன, அறு குறை நடிப்பன
　　அல்ல' என்று இமையோரும்,
'மரம் கிடந்தன, மலைக் குவை கிடந்தன
　　வாம்' என மாறுடி,
கரம் கிடந்தன காத்திரம் கிடந்தன,
　　கறை படும்படி கவ்விச்
சிரம் கிடந்தன, கண்டனர்; கண்டிலர்,
　　உயிர்கொடு திரிவாரை. 316

இற்ற அல்லவும், ஈர்ப்புண்ட அல்லவும்,
　　இடை இடை முறிந்து எங்கும்
துற்ற அல்லவும், துணிபட்ட அல்லவும்,
　　சுடு பொறித் தொகை தூவி
வெற்ற வெம் பொடி ஆயின அல்லவும்,
　　வேறு ஒன்று நூறு ஆகி
அற்ற அல்லவும், கண்டிலர் படைக்கலம்—
　　அடு களம் திடர் ஆக. 317

படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன பகழிகள்
　　பாகரைப் பறிந்து ஓடி,
குடைந்து, வையகம் புக்குறத் தேக்கிய
　　குருதியால் குடர் சோரத்
தொடர்ந்து, நோயொடும் துணை மருப்பு இழந்து, தம்
　　காத்திரம் துணி ஆகிக்
கிடந்த அல்லது, நடந்தன கண்டிலர்—
　　கிளர் மதகிரி எங்கும். 318

வீழ்ந்த வாளன, விளிவுற்ற பதாகைய,
　　வெயில் உமிழ் அயில் அம்பு
போழ்ந்த பல் நெடும் புரவிய, முறை முறை
　　அச்சொடும் பொறி அற்று,
தாழ்ந்த வெண் நிணம் தயங்கு வெங் குழம்பிடைத்
　　தலைத்தலை மாறுடி,
ஆழ்ந்த அல்லது, பெயர்ந்தன கண்டிலர்—
　　அதிர் குரல் மணித் தேர்கள். 319

316. அரங்கு - கவந்தம் நடிப்பதற்கு இடமாக உள்ள போர்க்களம்; காத்திரம் - உடம்பு; 318. நோய் - மரண நோய்; 319. பொறி - மூட்டு வாய், இணைப்பு; தலைத்தலை - இடந்தோறும் இடந்தோறும்.

ஆடல் தீர்ந்தன, வளை கழுத்து அற்றன,
அதிர் பெருங் குரல் நீத்த,
தாள் துணிந்தன, தறுகண் வெங் கரி நிரை
தாங்கிய பிணத்து ஓங்கல்
கோடு அமைந்த வெங் குருதி நீர் ஆறுகள்
சுழிதொறும் கொணர்ந்து உந்தி,
ஓடல் அன்றி, நின்று உகள்வன கண்டிலர்—
உரு கெழு பரி எல்லாம். 320

வேதநாயகன் வெங் கணை வழக்கத்தின்
மிகுதியை வெவ்வேறு இட்டு
ஓதுகின்றது என்? உம்பரும், அரக்கர் வெங்
களத்து வந்து உற்றாரைக்
காதல் விண்ணிடைக் கண்டனர்; அல்லது,
கணவர்தம் உடல் நாடும்
மாதர் வெள்ளமே கண்டனர்; கண்டிலர்,
மலையினும் பெரியாரை. 321

பனிப் பட்டாலெனக் கதிர் வரப் படுவது
பட்டது, அப் படை; பற்றார்
துனிப்பட்டார் எனத் துளங்கினர் இமையவர்;
'யாவர்க்கும் தோலாதான்
இனிப் பட்டான்' என, வீங்கின அரக்கரும்
ஏங்கினர்; 'இவன், அந்தோ,
தனிப்பட்டான்!' என, அவன் முகம் நோக்கி ஒன்று
உரைத்தனன், தனி நாதன்: 322

**கும்பகருணனை நோக்கி, இராமன் வினவும், அவன் விடையும்**

'ஏதியோடு எதிர் பெருந் துணை இழந்தனை;
எதிர் ஒரு தனி நின்றாய்;
நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்,
நின் உயிர் நினக்கு ஈவென்;
போதியோ? பின்றை வருதியோ? அன்று எனின்,
போர் புரிந்து இப்போதே
சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி,
சமைவுறத் தெரிந்து, அம்மா! 323

320. கோடு - கரை; 322. துளங்குதல் - மகிழ்ச்சியால் விளக்கம் பெறுதல்.

'இழைத்த தீவினை இற்றிலது ஆகலின்,
யான் உனை இளையோனால்
அழைத்த போதினும் வந்திலை, அந்தகன்
ஆணையின் வழி நின்றாய்;
பிழைத்ததால் உனக்கு அருந் திரு, நாளொடு;
பெருந் துயில் நெடுங் காலம்
உழைத்து வீடுவது ஆயினை; என் உனக்கு
உறுவது ஒன்று? உரை' என்றான். 324

'மற்று எலாம் நிற்க: வாசியும் மானமும்,
மறத்துறை வழுவாத
கொற்ற நீதியும், குலமுதல் தருமமும்
என்று இவை குடியாகப்
பெற்ற நுங்களால், எங்களைப் பிரிந்து, தன்
பெருஞ் செவி மூக்கோடும்
அற்ற எங்கைபோல், என் முகம் காட்டி நின்று
ஆற்றலென் உயிர் அம்மா! 325

'நோக்கு இழந்தனர் வானவர், எங்களால்;
அவ் வகை நிலை நோக்கி,
''தாக்கு அணங்கு அனையவள், பிறர் மனை'' எனத்
தடுத்தனென்; ''தக்கோர் முன்
வாக்கு இழந்தது'' என்று அயர்வுறுவேன் செவி-
தன்னொடு மாற்றாரால்
மூக்கு இழந்தபின் மீளல் என்றால், அது
முடியுமோ?—முடியாதாய்! 326

'உங்கள் தோள் தலை வாள்கொடு துணித்து, உயிர்
குடித்து, எம்முன் உவந்து எய்த
நங்கை நல் நலம் கொடுக்கிய வந்த நான்,
வானவர் நகை செய்ய,
செங்கை தாங்கிய சிரத்தொடும் கண்ணின் நீர்
குருதியினொடு தேக்கி,
எங்கைபோல் எடுத்து அழைத்து, நான் வீழ்வெனோ,
இராவணன் எதிர் அம்மா? 327

324. வீடுவது - அழிவது; 325. வாசி - சிறப்பு, தகுதி; 326. நோக்கு - பெருமை; 327. 'இராமன் தோள்களை வெல்லலாம் என்பது, சீதை மேனியைப் புல்லலாம் என்பது போலுமால் ஐயா' என்ற கும்பகருணன், இங்கு இவ்வாறு கூறியது போர்வீரர் கூறும் மரபு பற்றிய கூற்று.

'ஒருத்தன், நீ தனி உலகு ஒரு மூன்றிற்கும்
ஆயினும், பழி ஓரும்
கருத்தினுல் வரும் சேவகன் அல்லேயோ?
சேவகர் கடன் ஓராய்?
செருத் திண் வாளினுல் திறத் திறன் உங்களே
அமர்த் துறைச் சிரம் கொய்து
பொருத்தினுல், அது பொருந்துமோ? தக்கது
புகன்றிலேபோல்' என்றுன். 328

கும்பகருணனுக்கும் இராமனுக்கும் பெரும் போர் நிகழ்தல்

என்று, தன் நெடுஞ் சூலத்தை இடக்கையின்
மாற்றினன்; வலக் கையால்
குன்று நின்றது பேர்த்து எடுத்து, இரு நிலக்
குடர் கவர்ந்தெனக் கொண்டான்,
சென்று விண்ணெடும் பொறியொடும் தீச்செல,
சேவகன் செனி நேரே,
'வென்று தீர்க!' என விட்டனன்; அது வந்து
பட்டது மேல் என்ன, 329

அனைய குன்று எனும் அசனியை, யாவர்க்கும்
அறிவு அரும் தனி மேனி
புனையும் நல் நெடு நீறு என நூறிய
புரவலன் பொர வென்று
நினையும் மாத்திரத்து ஒரு கைநின்று ஒரு கையின்
நிமிர்கின்ற நெடு வேலே,
தினையின் மாத்திரை துணிபட, முறை முறை
சிந்தினன், சரம் சிந்தி. 330

அண்ணல் வில் கொடுங் கால் விசைத்து உகைத்தன,
அலே கடல் வறளாக
உண்ணுகிற்பன, உருமையும் சுடுவன,
மேருவை உருவிப் போய்
விண்ணகத்தையும் கடப்பன, பிழைப்பு இலா
மெய்யன, மேல் சேர்ந்த
கண்ணுதல் பெருங் கடவுள்தன் கவசத்தைக்
கடந்தில கதிர் வாளி. 331

329. செனி - சென்னி, தலே; 330. பொர - தாக்குதற்கு.

தாக்குகின்றன நுழைகில; தலையது,
　　தாமரைத் தடங் கண்ணன்
நோக்கி, 'இங்கு இது சங்கரன் கவசம்' என்று
　　உணர்வுற நுனித்து உன்னி,
ஆக்கி அங்கு அவன் அடு படை தொடுத்து விட்டு
　　அறுத்தனன்; அது சிந்தி
வீக்கு இழந்தது வீழ்ந்தது, வரை சுழல்
　　விரி சுடர் வீழ்ந்தென்ன.　　332

காந்து வெஞ் சுடர்க் கவசம் அற்று உகுதலும்,
　　கண்தொறும் கனல் சிந்தி,
ஏந்து வல் நெடுந் தோள் புடைத்து ஆர்த்து, அங்கு ஓர்
　　எழு முனை வயிரப் போர்
வாய்ந்த வல் நெடுந் தண்டு கைப்பற்றினன்;
　　'வானரப் படை முற்றும்
சாந்து செய்குவனும்' என முறை முறை
　　அரைத்தனன், தரையோடும்.　　333

பறப்ப ஆயிரம், படுவன ஆயிரம்,
　　பகட்டு எழில் அகல் மார்பம்
திறப்ப ஆயிரம், திரிவன ஆயிரம்,
　　சென்று புக்கு உருவாது
மறைப்ப ஆயிரம், வருவன ஆயிரம்,
　　வடிக் கணை என்றாலும்,
பிறப்ப ஆயிடைத் தெழித்துறத் திரிந்தனன்,
　　கறங்கு எனப் பெருஞ் சாரி.　　334

'தண்டு கைத்தலத்து உளதுஎனின், உளதன்று
　　தானை' என்று, அது சாயக்
கொண்டல் ஒத்தவன், கொடுங் கணை பத்து ஒரு
　　தொடையினில் கோத்து எய்தான்;
கண்டம் உற்றது மற்று அது; கருங் கழல்
　　அரக்கனும், கனன்று, ஆங்கு ஓர்
மண்டலச் சுடராம் எனக் கேடகம்
　　வாங்கினன், வாளோடும்.　　335

332. அவன் - ஈண்டுச் சிவன், சிவனது படை பாசுபதக் கணை எனப்படும்; வீக்கு - கட்டுக்கோப்பு.

வாள் எடுத்தலும், வானர வீரர்கள்
மறுகினர், வழிதோறும்
தாள் எடுத்தனர், சமழ்த்தனர்; வானவர்
தலை எடுத்திலர், தாழ்ந்தார்;
'கோள் எடுத்தது, மீள' என்று உரைத்தலும்,
கொற்றவன், 'குன்று ஒத்த
தோள் எடுத்தது துணித்தி' என்று, ஒரு சரம்
துரந்தனன், சுரர் வாழ்த்த. 336

**கும்பகருணன் கை அறுபடல்**

அலக்கணுற்றது தீவினை; நல்வினை
ஆர்த்து எழுந்தது; வேர்த்துக்
கலக்கமுற்றனர், இராக்கதர்—'கால வெங்
கருங் கடல் திரை போலும்
வலக் கை அற்றது, வாளொடும்; கோளுடை
வான மா மதி போலும்;
இலக்கை அற்றது, அவ் இலங்கைக்கும் இராவணன்
தனக்கும்' என்று எழுந்து ஓடி. 337

மற்றும், வீரர்கள் உளர் எனற்கு எளிதுஅரோ,
மறத்தொழில் இவன் மாடு
பெற்று நீங்கினர் ஆம் எனின் அல்லது—
பேர் எழில் தோளோடும்
அற்று வீழ்ந்த கை அருத வெங் கையினல்
எடுத்து, அவன் ஆர்த்து ஓடி
எற்ற, வீழ்ந்தன, எயிறு இளித்து ஓடின
வானரக் குலம் எல்லாம்? 338

வள்ளல் காத்து உடன் நிற்கவும், வானரத்
தானையை மறக் கூற்றம்
கொள்ளை கொண்டிட, பண்டையின் மும்மடி
குமைக்கின்ற படி நோக்கி,
'வெள்ளம் இன்றொடும் வீந்துறும்' என்பதோர்
விம்மலுற்று உயிர் வெம்ப,
உள்ள கையினும் அற்ற வெங் கரத்தையே
அஞ்சின, உலகு எல்லாம். 339

336. தாள் எடுத்தனர் - கால் விசைத்து ஓடினர்; கோள் எடுத்தது - உயிர்க்கொள்ளை தொடங்கிற்று; 339. குமைக்கின்ற படி - அழிக்கின்ற தன்மை; வெள்ளம் - வானர சேனையாகிய வெள்ளம்.

மாறு வானரப் பெருங் கடல் ஓட, தன்
தோள்நின்று வார் சோரி
ஆறு விண் தொடும் பிணம் சுமந்து ஓட, மேல்
அமரரும் இரிந்து ஓட,
கூறு கூறு பட்டு இலங்கையும் விலங்கலும்
பறவையும் குலைந்து ஓட,
ஏறு சேவகன்மேல் எழுந்து ஓடினன்,
மழைக் குலம் இரிந்து ஓட. 340

'ஈற்றுக் கையையும் இக் கணத்து அரிதி' என்று
இமையவர் தொழுது ஏத்த,
தோற்றுக் கையகன்று ஒழிந்தவன் நாள்அவை
தொலையவும், தோன்றாத
கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெட, நெடுங்
கொற்றவன் கொலை அம்பால்,
வேற்றுக் கையையும் வேலையில் இட்டனன்,
வேறும் ஓர் அணை மான. 341

சந்திரப் பெருந் தூணொடுஞ் சார்த்தியது,
அதில் ஒன்றும் தவறு ஆகாது,
அந்தரத்தவர் அலை கடல் அமுது எழக்
கடைவுறும் அந் நாளில்,
சுந்தரத் தடந் தோள் வளை மாசுணம்
சுற்றிய தொழில் காட்ட,
மந்தரத்தையும் கடுத்தது,—மற்று அவன்
மணி அணி வயிரத் தோள். 342

சிவண வண்ண வான் கருங் கடல் கொண்டு வந்த
செயலினும், செறி தாரை
சுவண வண்ண வெஞ் சிறையுடைக் கடு விசை
முடுகிய தொழிலானும்,
அவண அண்ணலது ஏவலின் இயற்றிய
அமைவினும், அயில் வாளி
உவண அண்ணலை ஒத்தது; மந்தரம்
ஒத்தது, அவ் உயர் பொன் தோள். 343

340. ஏறு சேவகன் - சிங்க ஏறு போன்ற வீரனாகிய இராமன்; 342. சந்திரப் பெருந் தூணொடுஞ் சார்த்தியது மந்தரத்தையும் கடுத்தது என இயையும்; கடலிடை வீழ்ந்த தோள்வளை பூண்ட கும்பகருணன் கை பாற்கடலிடையே வாசுகி என்னும் பாம்பாகிய கடை கயிறு சுற்றிய மந்தர மலை போன்று இருந்தது; சந்திரப் பெருந் தூணொடு சார்த்தியது என்பது கடல் கடைந்தகாலத்து மந்தரத்துக்கு இயற்கை அடைமொழி; 343. உவண அண்ணல் - கருடன், திருமால் பாற்கடலைக் கடைதற்பொருட்டுக் கருடனை அனுப்பி மந்தர மலையைக் கொணரச் செய்தான் என்னும் வரலாறு உண்டு என்பது இச்செய்யுளால் புலனாகிறது.

கும்பகருணன் கால்களை இழத்தல்

பழக்க நாள் வரும் மேருவை உள்ளுறத்
தொளைத்து, ஒரு பணை ஆக்கி,
வழக்கினால் உலகு அளந்தவன் அமைத்தது ஓர்
வான் குணில் வலத்து ஏந்தி,
முழக்கினாலென, முழங்கு பேர் ஆர்ப்பினான்,
வானரர் முந்நீரை
உழக்கினான், தசை தோல் எலும்பு எனும் இவை
குருதியொடு ஒன்றாக. 344

நிலத்த கால், கனல், புனல், விசும்பு, இவை முற்றும்
நிருதனது உரு ஆகி,
கொலத் தகாதது ஓர் வடிவு கொண்டாலென
உயிர்களைக் குடிப்பானை,
சலத்த காலனை, தறுகணர்க்கு அரசனை,
தருக்கினின் பெரியானை,
வலத்த காலையும், வடித்த வெங் கணையினால்
தடிந்தனன்—தனு வல்லான். 345

பந்தி பந்தியின் பற் குலம் மீன் குலம்
பாகுபாடு உற, பாகத்து
இந்து வெள் எயிறு இமைத்திட, குருதி யாறு
ஒழுக்கல் கொண்டு எழு செக்கர்
அந்தி வந்தென, அகல் நெடு வாய் விரித்து,
அடி ஒன்று கடிது ஓட்டி,
குந்தி வந்தனன், நெடு நிலம் குழி பட,
குரை கடல் கோத்து ஏற. 346

மாறு கால் இன்றி வானுற நிமிர்ந்து, மாடு
உள எலாம் வளைத்து ஏந்தி,
சூறை மாருதம் ஆம் எனச் சுழித்து, மேல்
தொடர்கின்ற தொழிலானை,
ஏறு சேவகன், எரி முகப் பகழியால்,
இரு நிலம் பொறை நீங்க,
வேறு காலையும் துணித்தனன், அறத்தொடு
வேதங்கள் கூத்தாட. 347

344. பணை - முரசம்; குணில் - குறுந்தடி.

கை இரண்டொடு கால்களும் துணிந்தன;
கரு வரை பொருவும் தன்
மெய் இரண்டு நூறுயிரம் பகழியால்
வெரிந் உறத் தொளே போய;
செய்ய கண் பொழி தீச் சிகை இரு மடி
சிறந்தன; தெழிப்போடும்,
வய்யம் வானிடை மழையினும் பெருத்தது,
வளர்ந்தது, பெருஞ் சீற்றம். 348

**கும்பகருணன், மலேகளேக் கவ்வி, வானரங்களே அழித்தல்**

பாதம் கைகளோடு இழந்தனன், படியிடை
இருந்து, தன் பகு வாயால்,
காதம் நீளிய மலேகளேக் கடித்து இறுத்து
எடுத்து, வெங் கனல் பொங்கி,
மீது மீது தன் அகத்து எழு காற்றினுல்
விசைகொடு திசை செல்ல
ஊத ஊதப்பட்டு, உலந்தன வானரம்,
உருமின் வீழ் உயிர் என்ன. 349

தீயினுல் செய்த கண்ணுடையான், நெடும்
சிகையினுல் திசை தீய
வேயினுல் திணி வெற்பு ஒன்று நாவினுல்
விசும்புற வளேத்து ஏந்தி,
பேயின் ஆர்ப்புடைப் பெருங் களம் எரிந்து எழ,
பிலம் திறந்தது போலும்
வாயினுல் செல, வீசினன்; வள்ளலும்
மலர்க் கரம் விதிர்ப்புற்ருன். 350

**உள் உணர்வு தோன்றிய கும்பகருணன் உரை**

'அய்யன் வில் தொழிற்கு ஆயிரம் இராவணர்
அமைவிலர்; அந்தோ! யான்
கய்யும் கால்களும் இழந்தனென்; வேறு இனி
உதவல் ஆம் துணே காணேன்;
மய்யல் நோய்கொடு முடிந்தவன் நாள் என்று,
வரம்பு இன்றி வாழ்ந்தானுக்கு
உய்யுமாறு அரிது' என்று, தன் உள்ளத்தின்
உணர்ந்து, ஒரு துயருற்ருன். 351

351. மய்யல் நோய் - காம நோய்.

சிந்துரச் செம் பசுங் குருதி திசைகள்தொறும் திரை ஆறு;
எந்திரத் தேர், கரி, பரி, ஆள், ஈர்த்து ஓடப் பார்த்திருந்த
சுந்தரப் பொன்-கிரி ஆண்மைக் களிறு அனையான், கண் நின்ற
சுந்தரப் பொன்-தோளானை முகம் நோக்கி, இவை சொன்னான்:

'புக்கு அடைந்த புறவு ஒன்றின் பொருட்டாகத் துலை புக்க
மைக் கடங் கார் மத யானை வாள் வேந்தன் வழி வந்தீர்!
இக் கடன்கள் உடையீர்! நீர் எம் வினை தீர்த்து, உம்முடைய
கைக்கு அடைந்தான் உயிர் காக்கக் கடவீர், என் கடைக்கூட்டால். 353

'நீதியால் வந்தது ஒரு நெடுந் தரும நெறி அல்லால்,
சாதியால் வந்த சிறு நெறி அறியான், என் தம்பி;
ஆதியாய்! உனை அடைந்தான்; அரசர் உருக்கொண்டு அமைந்த
வேதியா! இன்னம் உனக்கு அடைக்கலம் யான் வேண்டினேன்.

'வெல்லுமா நினைக்கின்ற வேல் அரக்கன், ''வேரோடும்,
கல்லுமா முயல்கின்றான், இவன்'' என்னும் கறுவுடையான்;
ஒல்லுமாறு இயலுமேல், உடன்பிறப்பின் பயன் ஓரான்;
கொல்லுமால், அவன் இவனை; குறிக்கோடி, கோடாதாய்! 355

'தம்பி என நினைந்து, இரங்கித் தவிரான், அத் தகவு இல்லான்;
நம்பி! இவன் தனைக் காணின் கொல்லும்; இறை நல்கானேல்;
உம்பியைத்தான், உன்னைத்தான், அனுமனைத்தான், ஒரு பொழுதும்
எம்பி பிரியானாக அருளுதி; யான் வேண்டினேன். 356

**தலையைக் கடலில் இடுமாறு வேண்ட, இராமனும் உடன்படல்**

' ''மூக்கு இலா முகம்'' என்று முனிவர்களும் அமரர்களும்
நோக்குவார் நோக்காமை, நுன் கணையால் என் கழுத்தை
நீக்குவாய்; நீக்கியபின், நெடுந் தலையைக் கருங் கடலுள்
போக்குவாய்; இது நின்னை வேண்டுகின்ற பொருள்' என்றான்.

'வரம் கொண்டான்; இனி மறுத்தல் வழக்கு அன்று' என்று, ஒரு வாளி
உரம் கொண்ட தடஞ் சிலையின் உயர் நெடு நாண் உள் கொளுவா,
சிரம் கொண்டான்; கொண்டதனைத் திண் காற்றின் கடும் படையால்,
அரம் கொண்ட கருங் கடலின் அழுவத்துள் அழுத்தினான். 358

352. கந்தரம் - தலை; 353. கடைக்கூட்டு - கடைசி விருப்பம்; 355. கறு - உள்ளடக்கிய கோபம்; ஒல்லுமாறு இயலுமேல் - வாய்ப்பு நேருமானால்; 356. நல்குதல் - அருளுதல்; 358. அரம் - அரவம், ஒலி; எதுகை நோக்கி அரம் என வந்தது.

கும்பகருணன் தலை கடலில் மூழ்குதல்

மாக் கூடு படர் வேலை மறி மகரத் திரை வாங்கி,
மேக்கூடு, கிழக்கூடு, மிக்கு இரண்டு திக்கூடு,
போக்கூடு கவித்து, இரு கண் செவியூடும் புகை உயிர்க்கும்
மூக்கூடும் புகப் புக்கு மூழ்கியது, அம் முகக் குன்றம். 359

ஆடினர் வானவர்கள்; அரமகளிர் அமுத இசை
பாடினர்; மா தவரும் வேதியரும் பயம் தீர்ந்தார்;
கூடினர் படைத்தலைவர், கொற்றவனை; குடர் கலங்கி
ஓடினர், அடல் அரக்கர், இராவணனுக்கு உணர்த்துவான்.

## 16 மாயா சனகப் படலம்

மகோதரனிடம் இராவணன் சீதையை அடையும் வழி கேட்டல்

அவ்வழி, கருணன் செய்த பேர் எழில் ஆண்மை எல்லாம்
செவ்வழி உணர்வு தோன்றச் செப்பினம்; சிறுமை தீரா
வெவ் வழி மாயை ஒன்று, வேறு இருந்து எண்ணி, வேட்கை,
இவ்வழி இலங்கை வேந்தன் இயற்றியது இயம்புலுற்றும்: 1

மாதிரம் கடந்த தோளான், மந்திர இருக்கை வந்த
மோதரன் என்னும் நாமத்து ஒருவனை முறையின் நோக்கி,
'சீதையை எய்தி, உள்ளம் சிறுமையின் தீரும் செய்கை
யாது? எனக்கு உணர்த்தி, இன்று, என் இன் உயிர் ஈதி' என்றான். 2

'மருத்தனைச் சனகனாக உரு மாற்றிச் சீதைக்குக் காட்டுக' என
மகோதரன் கூறுதல்

'உணர்த்துவென், இன்று நன்று; ஓர் உபாயத்தின் உறுதி மாயை
புணர்த்துவென், சீதை தானே புணர்வது ஓர் வினையம் போற்றி;
கணத்து, வன் சனகன்தன்னைக் கட்டினென் கொணர்ந்து காட்டின்—
மணத் தொழில் புரியும் அன்றே—மருத்தனை உருவம் மாற்றி?'

359. மாக் கூடு படர் வேலை - கரு நிறம் பொருந்திய பரவிய கடல்; மூக்கூடும் புக - மூக்கின் உள்ளேயும் கடல் நீர் புகுதலால்.

16: 1. சிறுமை - அளவிறந்த காமம்; வெம்மை - பிறர்க்கு இன்னா செய்தலாகிய கொடுமை; மாயை - வஞ்சனைச் செயல்; 2. சிறுமை - துன்பம்.

என அவன் உரைத்தலோடும், எழுந்து மார்பு இறுகப் புல்லி,
'அனையவன் தன்னைக் கொண்டு ஆங்கு அணுகுதி, அன்ப!' என்னா,
புனை மலர்ச் சரளச் சோலை நோக்கினன், எழுந்து போனான்,
வினைகளைக் கற்பின் வென்ற விளக்கினை வெருவல் காண்பான்.

மின் ஒளிர் மகுட கோடி வெயில் ஒளி விரித்து வீச,
துன் இருள் இரிந்து தோற்ப, சுடர் மணித் தோளில் தோன்றும்
பொன்னரி மாலை நீல வரையின் வீழ் அருவி பொற்ப,
நல் நெடுங் களி மால் யானை நாணுற, நடந்து வந்தான். 5

'விளக்கு ஒரு விளக்கம் தாங்கி, மின் அணி அரவின் சுற்றி,
இளைப்புறும் மருங்குல் நோவ, முலை சுமந்து இயங்கும்' என்ன,
முளைப் பிறை நெற்றி வான மடந்தையர், முன்னும் பின்னும்,
வளைத்தனர் வந்து சூழ, வந்திகர் வாழ்த்த, வந்தான். 6

**இராவணன் பீடத்தில் வீற்றிருந்து, சீதையை நோக்கிப் பேசுதல்**

பண்களால் கிளவி செய்து, பவளத்தால் அதரம் ஆக்கி,
பெண்கள் ஆனார்க்குள் நல்ல உறுப்பு எலாம் பெருக்கின் ஈட்ட,
எண்களால் அளவு ஆம் மானக் குணம் தொகுத்து இயற்றினானை,
கண்களால் அரக்கன் கண்டான், அவனை ஓர் கலக்கம் காண்பான். 7

இட்டதோர் இரண பீடத்து, அமரரை இருக்கைநின்றும்
கட்ட தோள்-கானம் சுற்ற, கழல் ஒன்று கவானின் தோன்ற,
வட்ட வெண் கவிகை ஓங்க, சாமரை மருங்கு வீச,
தொட்டது ஓர் சுரிகையாளன் இருந்தனன், இனைய சொன்னான்:

'என்றுதான், அடியனேனுக்கு இரங்குவது? இந்து என்பான்,
என்றுதான், இரவியோடும் வேற்றுமை தெரிவது என்பால்?
என்றுதான், அனங்க வாளிக்கு இலக்கு அலாதிருக்கலாவது?'
என்று, தான் உற்றது எல்லாம் இயம்புவான் எடுத்துக் கொண்டான்.

'வஞ்சனேன் எனக்கு நானே, மாதரார் வடிவு கொண்ட
நஞ்சு தோய் அமுதம் உண்பான் நச்சினேன்; நாளும் தேய்ந்த
நெஞ்சு நேரானது; உம்மை நினைப்பு விட்டு, ஆவி நீக்க
அஞ்சினேன்; அடியனேன் நும் அடைக்கலம், அமுதின் வந்தீர்!

6. அரவின் சுற்றி - பாம்பொடு சுற்றி, இடைக்கு அரவை உவமை கூறுவது தமிழ் மரபு ஆதலால் இடையினை 'அரவு' என்றே கூறினர்; அரவு சுற்றி மின் அணிந்து என இயையும்; வந்திகர் - பரவி வாழ்த்துவோர்; 8. இரண பீடம் - பொன் ஆசனம்; கட்டல் - களைதல்; கானம் - தொகுதி; சுரிகை - குற்றுடை வாள்.

'தோற்பித்தீர்; மதிக்கு மேனி சுடுவித்தீர்; தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர்; வயிரத் தோளை மெலிவித்தீர்; வேனில் வேளை
ஆர்ப்பித்தீர்; என்னை இன்னல் அறிவித்தீர்; அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர்; இன்னம், என் என் செய்வித்துத் தீர்திர் அம்மா!

'பெண் எலாம் நீரே ஆக்கி, பேர் எலாம் உமதே ஆக்கி,
கண் எலாம் நும் கண் ஆக்கி, காமவேள் என்னும் நாமத்து
அண்ணல் எய்வானும் ஆக்கி, ஐங் கணை அரியத் தக்க
புண் எலாம் எனக்கே ஆக்கி, விபரீதம் புணர்த்துவிட்டீர்.* 12

'ஈசனே முதலா மற்றை மானிடர் இறுதி ஆகக்
கூச, மூன்று உலகும் காக்கும் கொற்றத்தென்; வீரக் கோட்டி
பேசுவார் ஒருவற்கு ஆவி தோற்றிலென்; பெண்பால் வைத்த
ஆசை நோய் கொன்றதுஎன்றால், ஆண்மைதான் மாசுணாதோ?

'நோயினை நுகரவேயும், நுணங்கி நின்று உணங்கும் ஆவி
நாய் உயிர் ஆகும் அன்றே, நாள் பல கழித்த காலை?
பாயிரம் உணர்ந்த நூலோர், ''காமத்துப் பகுத்த பத்தி''—
ஆயிரம் அல்ல போன—''ஐ-இரண்டு'' என்பர் பொய்யே.*14

'அறம் தரும் செல்வம் அன்னீர்! அமிழ்தினும் இனியீர்! என்னைப்
பிறந்திலன் ஆக்க வந்தீர்; பேர் எழில் மானம் கொல்ல,
''மறந்தன பெரிய; போன வரும்'' எனும் மருந்துதன்னால்,
இறந்து இறந்து உய்கின்றேன் யான்; யார், இது தெரியும் ஈட்டார்? 15

'அந்தரம் உணரின், மேல்நாள், அகலிகை என்பாள், காதல்
இந்திரன் உணர்த்த, நல்கி எய்தினள், இழுக்குற்றாளோ?
மந்திரம் இல்லை, வேறு ஓர் மருந்து இல்லை, மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ் வாய் அமுது அலால்;—அமுதச் சொல்லீர்!

**சீதையின் முன், நிலத்தில் விழுந்து, இராவணன் வணங்குதல்**

என்று உரைத்து, எழுந்து சென்று, அங்கு, இருபது என்று உரைக்கும்
குன்று உரைத்தாலும் நேராக் குவவுத் தோள் நிலத்தைக் கூட, [நீலக்
மின் திரைத்து, அருக்கன்தன்னை விரித்து, முன் தொகுத்த போலும்
நின்று இமைக்கின்றது அன்ன முடி படி நெடிதின் வைத்தான். 17

11. மதிக்கு - சந்திரனால்; 13. வீரக் கோட்டி - வீரர் வரிசை; 14. பாயிரம் - நூலின் வரலாறு; பத்தி - அவத்தை நிலைகள்; ஐ இரண்டு - பத்து; அவை: காட்சி, வேட்கை, உள்ளுதல், மெலிதல், ஆக்கம் செப்பல், நாணு வரையிறத்தல், நோக்குவதெல்லாம் அவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பன. 15. பெரிய - பெருஞ் செயல்கள்; போன - மறந்து விட்டன; பேர் எழில் மானம் கொல்ல (அதனால்) பெரிய மறந்தன போன என இயை யும்; 16. அந்தரம் - நடுவு நிலைமை.

**சீதை இராவணனுக்குத் தன் கருத்தை உரைத்தல்**

வல்லியம் மருங்கு கண்ட மான் என மறுக்கமுற்று,
மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள், விம்முகின்ருள்,
'கொல்லிய வரினும், உள்ளம் கூறுவென், தெரிய' என்ஞு,
புல்லிய கிடந்தது ஒன்றை நோக்கினள், புகல்வதாஞள்: 18

''பழி இது; பாவம்'' என்று பார்க்கிலே; ''பகரத் தக்க
மொழி இவை அல்ல'' என்பது உணர்கிலே; முறைமை நோக்காய்;
கிழிகிலே நெஞ்சம்; வஞ்சக் கிளேயொடும் இன்றுகாறும்
அழிகிலே என்றபோது, என் கற்பு என் ஆம்? அறம்தான் என் ஆம்?

'வான் உள அறத்தின் தோன்றும் சொல்வழி வாழு மண்ணின்
ஊன் உள உடம்புக்கு எல்லாம் உயிர் உள; உணர்வும் உண்டால்;
தான் உள, பத்துப் பேழ் வாய், தகாதன உரைக்கத் தக்க;
யான் உளென் கேட்க என்ருல், என் சொலாய்? யாது செய்யாய்?

'வாசவன், மலரின் மேலான், மழுவலான் மைந்தன், மற்று அக்
கேசவன் சிறுவர் என்ற இந்தத் தன்மையோர்தம்மைக் கேளாய்;
'பூசலின் எதிர்ந்தேன்' என்ருய்; போர்க்களம் புக்க போது, என்
ஆசையின் கனியைக் கண்ணின் கண்டிலே போலும், அஞ்சி. 21

'ஊண் இலா யாக்கை பேணி, உயர் புகழ் சூடாது, உன் முன்
நாண் இலாது இருந்தேன் அல்லேன்; நவை அறு குணங்கள் என்னும்
பூண் எலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்திதன்னைக்
காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன் கண்டாய்.

'சென்று சென்று அழியும் ஆவி திரிக்குமால்—செருவில், செம்பொன்
குன்று நின்றனைய தம்பி புறக்கொடை காத்து நிற்ப,
கொன்று, நின் தலைகள் சிந்தி, அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின்றருளும் கோலம் காணிய கிடந்த வேட்கை. 23

'எனக்கு உயிர் பிறிதும் ஒன்றுஉண்டு என்று இரேல்,—இரக்கம் அல்லால்
தனக்கு உயிர் வேறு இன்ருகி, தாமரைக் கண்ணது ஆகி,
கனக் கரு மேகம் ஒன்று கார்முகம் தாங்கி, ஆர்க்கும்
மனக்கு இனிது ஆகி, நிற்கும் அஃது அன்றி—வரம்பு இலாதாய்!'

21. ஆசையின் கனி - பேராார்வத்தின் முதிர்ந்த கனி; ஈண்டு இராமன்; 22. ஊண் இலா யாக்கை - உணவு இன்றி இளைத்த உடம்பு; 23. திரித்தல் - திரும்பச் செய்தல், புறத்தே செல்ல ஒட்டாமல் தடுத்து நிறுத்துதல்.

**இராவணன், 'இராமனை வெல்வது மட்டும் அன்று: அயோத்திக்கும் மிதிலைக்கும் அரக்க வீரர் சென்றுள்ளார்' என்று உரைத்தல்**

என்றனள்: என்றலோடும், எரி உகு கண்ணன், தன்னைக்
கொன்றன மானம் தோன்ற, கூற்று எனச் சீற்றம் கொண்டான்,
'வென்று எனை, இராமன் உன்னை மீட்டபின், அவனோடு ஆவி,
ஒன்று என வாழ்திபோல்' என்று இடி உரும் ஒக்க நக்கான்.

'இனத்துளார் உலகத்து உள்ளார், இமையவர் முதலினோர், என்
சினத்துளார் யாவர் தீர்ந்தார்? தயரதன் சிறுவன்தன்னை,
புனத் துழாய் மாலையான் என்று உவக்கின்ற ஒருவன் புக்கு உன்
மனத்துளான்எனினும், கொல்வென்; வாழுதி, பின்னை மன்னோ!

' ''வளைத்தன மதிலை, வேலை வகுத்தன வரம்பு, வாயால்
உளைத்தன குரங்கு பல் கால்'' என்று அகம் உவந்தது உண்டேல்,
இளைத்த நுண் மருங்குல் நங்காய்! என் எதிர் எய்திற்று எல்லாம்,
விளக்கு எதிர் வீழ்ந்த விட்டில் பான்மைய; வியக்க வேண்டா.

'கொற்ற வாள் அரக்கர்தம்மை, ''அயோத்தியர் குலத்தை முற்றும்
பற்றி நீர் தருதிர்; அன்றேல், பசுந் தலை கொணர்திர்; பாரித்து
உற்றது ஒன்று இயற்றுவீர்'' என்று உந்தினேன்; உந்தை மேலும்
வெற்றியர்தம்மைச் செல்லச் சொல்லினென், விரைவின்' என்றான். 28

**மகோதரன், மாயா சனகனை அங்குக் கொண்டு வருதல்**

என்று அவன் உரைத்தகாலை, 'என்னை இம் மாயம் செய்தாற்கு
ஒன்றும் இங்கு அரியது இல்லை' என்பது ஓர் துணுக்கம் உந்த,
நின்று நின்று உயிர்த்து நெஞ்சம் வெதும்பினாள், நெருப்பை மீளத்
தின்று தின்று உமிழ்கின்றாரின், துயருக்கே சேக்கை ஆனாள். 29

'இத் தலை இன்ன செய்த விதியினார், என்னை, இன்னும்
அத் தலை அன்ன செய்யச் சிறியரோ? வலியர் அம்மா!
பொய்த்தலை உடையது எல்லாம் தருமமே போலும்' என்னாக்
கைத்தனள் உள்ளம், வெள்ளக் கண்ணின் நீர்க் கரை இலாதாள். 30

ஆயது ஓர் காலத்து, ஆங்கண், மருத்தனைச் சனகன் ஆக்கி,
வாய் திறந்து அரற்றப் பற்றி, மகோதரன் கடிதின் வந்து,
காய் எரி அனையான் முன்னர்க் காட்டினன்; வணங்கக் கண்டாள்,
தாய் எரி வீழக் கண்ட பார்ப்பு எனத் தரிக்கிலாதாள். 31

26. தீர்ந்தார் - உயிர் தப்பிப் பிழைத்தார்; 27. உளைத்தல் - உரப்பிப் பேரொலி செய்தல்; 29. சேக்கை - தங்குமிடம், நிலைக்களம்; 30. கைத்தல் - வெறுத்தல்; 31. பார்ப்பு - பறவைக் குஞ்சு.

**மாயா சனகனைக் கண்டு, சீதை வாய் விட்டு அரற்றுதல்**

கைகளை நெரித்தாள்; கண்ணில் மோதினாள்; கமலக் கால்கள்
நெய் எரி மிதித்தாலென்ன, நிலத்திடைப் பதைத்தாள்; நெஞ்சம்
மெய் என எரிந்தாள்; ஏங்கி விம்மினாள்; நடுங்கி வீழ்ந்தாள்;
பொய் என உணராள், அன்பால் புரண்டனள், பூசலிட்டாள்.

'தெய்வமோ!' என்னும்; 'மெய்ம்மை சிதைந்ததோ?' என்னும்; 'தீய
வைவலோ, உலகை?' என்னும்; 'வஞ்சமோ, வலியது?' என்னும்;
'உய்வலோ, இன்னம்?' என்னும்; ஒன்று அல துயரம் உற்றாள்;
தையலோ? தருமமேயோ? யார், அவள் தன்மை தேர்வார்? 33

'எந்தையே! எந்தையே! இன்று என் பொருட்டு உனக்கும் இக் கோள்
வந்ததே! என்னைப் பெற்று வாழ்ந்தவாறு இதுவோ? மண்ணோர்
தந்தையே! தாயே! செய்த தருமமே! தவமே!' என்னும்;
வெந் துயர் வீங்கி, தீ வீழ் விறகு என வெந்து, வீழ்ந்தாள்.

'இட்டு, உண்டாய்; அறங்கள் செய்தாய்; எதிர்ந்துளோர் இருக்கை எல்லாம்
சுட்டுண்டாய்; உயர்ந்த வேள்வித் துறை எலாம் கரையும் கண்டாய்;
மட்டு உண்டார், மனிசர்த் தின்ற வஞ்சரால் வயிரத் திண் தோள்
கட்டுண்டாய்; என்னே, யானும் காண்கின்றேன் போலும் கண்ணால்.'

என்று, இன பலவும் பன்னி, எழுந்து வீழ்ந்து இடரில் தோய்ந்தாள்,
'பொன்றினள் போலும்' என்ன,பொறை அழிந்து,உயிர்ப்புப் போவாள்,
மின் தனி நிலத்து வீழ்ந்து புரள்கின்றது அனைய மெய்யாள்,
அன்றில் அம் பெடை போல, வாய் திறந்து அரற்றலுற்றாள்:

'பிறையுடை நுதலார்க்கு ஏற்ற பிறந்த இற் கடன்கள்செய்ய,
இறையுடை இருக்கை மூதூர் என்றும் வந்து இருக்கலாதீர்;
சிறையிடைக் காண, நீரும் சிறையொடும் சேர்ந்தவாறே—
மறையுடை வரம்பு நீங்கா வழி வந்த மன்னர் நீரே? 37

' ''வன் சிறைப் பறவை ஊரும் வானவன், வரம்பு இல் மாயப்
புன் சிறைப் பிறவி தீர்ப்பான் உளன்'' எனப் புலவர் நின்றார்;
என் சிறை தீர்க்குவாரைக் காண்கிலேன்; என்னின் வந்த
உன் சிறை விடுக்கற்பாலார் யார் உளர், உலகத்து உள்ளார்?*

'பண் பெற்றாரொடு கூடாப் பகை பெற்றாய்; பகழி பாய
விண் பெற்றாய்எனினும், நன்றால்; வேந்தராய் உயர்ந்த மேலோர்
எண் பெற்றாய்; பழியும் பெற்றாய்; இது நின்னால் பெற்றது அன்றால்;
பெண் பெற்றாய்; அதனால், பெற்றாய்; யார் இன்ன பேறு பெற்றார்? 39

33. தீய - தீய்ந்து போம்படி; 35. பகைவர் இருக்கையை எரித்தல் புறத்திணையில் 'மழபுல வஞ்சி' எனப்படும்; 37. இறை - நாயகன், இராமன்; 39. பண் - பண்பு, நற்குணம்.

சுற்றுண்ட பாச நாஞ்சில் சுமையொடும் சூடுண்டு, ஆற்ற
எற்றுண்டும், அளற்று நீங்கா, விழு சிறு குண்டை என்ன,
பற்றுண்ட நாளே மாளாப் பாவியேன், உம்மை எல்லாம்
விற்று உண்டேன்; எனக்கு மீளும் விதி உண்டோ, நரகில் வீழ்ந்தால்?*

'இருந்து நான் பகையை எல்லாம் ஈறு கண்டு, அளவு இல் இன்பம்
பொருந்தினேன் அல்லேன்; எம்கோன் திருவடி புனைந்தேன் அல்லேன்;
வருந்தினேன், நெடு நாள்; உம்மை வழியொடு முடித்தேன்; வாயால்
அருந்தினேன், அயோத்தி வந்த அரசர்தம் புகழை அம்மா! 41

' "கொல்" எனக் கணவற்கு ஆங்கு ஓர் கொடும் பகை கொடுத்தேன்;
கல் எனத் திரண்ட தோளைப் பாசத்தால் கட்டக் கண்டேன்; [எந்தை
இல் எனச் சிறந்து நின்ற இரண்டுக்கும் இன்னல் சூழ்ந்தேன்-
அல்லெனோ? எளியெனோ, யான்? அளியத்தேன், இறக்கலாதேன்!

'இணை அறு வேள்வி மேல்நாள் இயற்றி, ஈன்று எடுத்த எந்தை
புணை உறு திரள் தோள் ஆர்த்து, பூழியில் புரளக் கண்டேன்;
மணவினை முடித்து, என் கையை மந்திர மரபின் தொட்ட
கணவனை இனைய கண்டால் அல்லது, கழிகின்றேனோ? 43

'அன்னைமீர்! ஐயன்மீர்! என் ஆர் உயிர்த் தங்கைமீரே!
என்னை ஈன்று எடுத்த எந்தைக்கு எய்தியது யாதும் ஒன்று
முன்னம் நீர் உணர்ந்திலீரோ? உமக்கு வேறு உற்றது உண்டோ?
துன்ன அரு நெறியின் வந்து, தொடர்ந்திலீர்; துஞ்சினீரோ?

'மேருவின் உம்பர்ச் சேர்ந்து, விண்ணினை மீக்கொண்டாலும்,
நீருடைக் காவல் மூதூர் எய்தலாம் நெறியிற்று அன்றால்;
போரிடைக் கொண்டாரேனும், வஞ்சனை புணர்த்தாரேனும்,
ஆர் உமக்கு அறையற்பாலார்? அனுமனும் உளனோ, நும் பால்?

'சரதம்; மற்று இவனைத் தந்தார், தவம் புரிந்து ஆற்றல் தாழ்ந்த
பரதனைக் கொணர்தற்கு ஏதும் ஐயுறவு இல்லை; பல் நாள்
வரதனும் வாழ்வான்அல்லன்; தம்பியும் அனையன் வாழான்;
விரதம் உற்று, அறத்தில் நின்றார்க்கு, இவைகொலாம் விளைவ மேன்
[மேல்? 46

40. பாசம் சுற்றுண்ட நாஞ்சில் - கயிற்றினால் கட்டப்பட்டுள்ள கலப்பை; சூடுண்ணல் - சூட்டுக்கோலாற் சுடப்படுதல்; அளறு - சேறு; குண்டை - எருது; 43. புணை உறு திரள் தோள் - பகைவராகிய கடலைக் கடத்தற்குப் புணைபோல் நின்று உதவும் இயல்பு அமைந்த வலிய திரண்ட தோள்கள்; 46. சரதம் - உண்மை, நிச்சயம்.

'"அடைத்தது கடலை; மேல் வந்து அடைந்தது, மதிலை; ஆவி
துடைத்தது பகையை, சேனை" எனச் சிலர் சொல்லச் சொல்ல,
படைத்தது ஓர் உவகைதன்னை, வேறு ஒரு வினயம் பண்ணி,
உடைத்தது விதியே' என்று என்று, உளைந்தனள், உணர்வு தீர்வாள்.

**மீண்டும், இராவணன் சீதையை இணங்குமாறு வேண்டுதல்**

ஏங்குவாள் இனைய பன்ன, இமையவர் ஏற்றம் எல்லாம்
வாங்கும் வாள் அரக்கன் ஆற்ற மனம் மகிழ்ந்து, இனிதின் நோக்கி,
'தாங்குவாள் அல்லள் துன்பம்; இவளையும் தாங்கி, தானும்
ஒங்குவான்' என்ன உன்னி, இனையன உரைக்கலுற்றான்: 48

'காரிகை! நின்னை எய்தும் காதலால், கருதலாகாப்
பேர் இடர் இயற்றலுற்றேன்; பிழை இது பொறுத்தி; இன்னும்,
வேர் அற மிதிலையோரை விளிகிலேன்; விளிந்த போதும்,
ஆர் உயிர் இவனை உண்ணேன்; அஞ்சலை, அன்னம் அன்னாய்!

'இமையவர் உலகமேதான், இவ் உலகு ஏழுமேதான்,
அமைவரும் புவனம் மூன்றில் என்னுடை ஆட்சியேதான்,
சமைவுறத் தருவென், மற்று இத் தாரணி மன்னற்கு; இன்னல்
சுமையுடைக் காம வெந் நோய் துடைத்தியேல், தொழுது வாழ்வேன்.

'இலங்கை ஊர் இவனுக்கு ஈந்து, வேறு இடத்து இருந்து வாழ்வேன்;
நலம் கிளர் நிதி இரண்டும் நல்குவென்; நாமத் தெய்வப்
பொலம் கிளர் மானம்தானே பொது அறக் கொடுப்பென்; புத்தேள்
வலம் கிளர் வாளும் வேண்டில், வழங்குவென்; யாதும் மாற்றேன்.

'இந்திரன் கவித்த மௌலி, இமையவர் இறைஞ்சி ஏத்த,
மந்திர மரபின் சூட்டி, வானவர் மகளிர் யாரும்
பந்தரின் உரிமை செய்ய, யான் இவன் பணியில் நிற்பேன்—
சுந்தரப் பவள வாய் ஓர் அருள் மொழி சிறிது சொல்லின். 52

'எந்தைதன் தந்தை தாதை, இவ் உலகு ஈன்ற முன்னோன்,
வந்து இவன்தானே வேட்ட வரம் எலாம் வழங்கும்; மற்றை
அந்தகன் அடியார் செய்கை ஆற்றுமால்; அமிழ்தின் வந்த
செந் திரு நீர் அல்லீரேல், அவளும் வந்து, ஏவல் செய்யும். 53

47. வினயம் - சூழ்ச்சி; 49. விளிதல் - கோபித்தல்; 50. தாரணி மன்னன் - விதேக நாட்டு மன்னனாகிய சனகன்; 51. மாற்றுதல் - மறுத்துரைத்தல்; 52. பந்தர் - பந்தல்; உரிமை - உரிய பணிகள்.

'தேவரே முதலா, மற்றைத் திண் திறல் நாகர், மண்ணோர்,
யாவரும் வந்து, நுந்தை அடி தொழுது, ஏவல் செய்வார்;
பாவை! நீ இவனின் வந்த பயன் பழுது ஆவது அன்றால்;
மூஉலகு ஆளும் செல்வம் கொடுத்து, அது முடித்தி' என்றான்.

**இராவணன் உரை கேட்டு, சீதை சினந்து மொழிதல்**

'இத் திருப் பெறுகிற்பானும், இந்திரன்; இலங்கை நுங்கள்
பொய்த் திருப் பெறுகிற்பானும், வீடணன்; புலவர் கோமான்
கைத் திருச் சரங்கள் உன்தன் மார்பிடைக் கலக்கற்பால;
மைத் திரு நிறத்தான் தாள் என் தலைமிசை வைக்கற்பால. 55

'நகுவன நின்னோடு, ஐயன் நாயகன் நாம வாளி,
புகுவன போழ்ந்து, உன் மார்பில் திறந்தன புண்கள் எல்லாம்
தகுவன இனிய சொல்லத் தக்கன; சாப நாணின்,
உகுவன மலைகள் எஞ்ச, பிறப்பன ஒலிகள் அம்மா! 56

'சொல்லுவ மதுர மாற்றம், துண்டத்தால் உண்டு, உன் கண்ணைக்
கல்லுவ, காகம்; வந்து கலப்பன, கமலக் கண்ணன்
வில் உமிழ் பகழி; பின்னர், விலங்கு எழில் அலங்கல் மார்பம்
புல்லுவ, களிப்புக் கூர்ந்து, புலவு நாறு அலகை எல்லாம். 57

'விரும்பி நான் கேட்பது உண்டால், நின்னுழை வார்த்தை: "வீரன்
இரும்பு இயல் வயிர வாளி இடறிட, எயிற்றுப் பேழ் வாய்ப்
பெரும் பியல் தலைகள் சிந்திப் பிழைப்பிலை முடிந்தாய்'' என்ன;
அரும்பு இயல் துளவப் பைந் தார் அனுமன் வந்து அளித்த அந் நாள்.

'புன் மகன்! கேட்டி, கேட்டற்கு உரியது; புகுந்த போரின்,
உன் மகன் உயிரை எம்மோய் சுமித்திரை உய்ய ஈன்ற
நன் மகன் வாளி நக்க, நாய் அவன் உடலை நக்க,
"என் மகன் இறந்தான்" என்ன, நீ எடுத்து அரற்றல்' என்றாள்.* 59

**இராவணன் சினந்து, சீதையினிடம் விரைந்து செல்ல, மகோதரன், 'தந்தை வேண்ட இவள் இணங்குவாள்' என்று கூறி, அவனைத் தடுத்தல்**

வெய்யவன் அனைய கேளா, வெயில் உக விழித்து, வீரக்
கை பல பிசைந்து, பேழ் வாய் எயிறு புக்கு அழுந்தக் கவ்வி,
தையல்மேல் ஓடலோடும், மகோதரன் தடுத்தான்; 'ஈன்ற
மொய் கழல் தாதை வேண்ட, இசையும்; நீ முனியல்' என்றான்.

57. துண்டம் - மூக்கு, அலகு; 58. பியல் - பிடர்.

மாயா சனகன் சீதையை, 'இராவணன் கருத்திற்கு இசைக' எனல்

அன்று அவன் விலக்க மீண்டான் ஆசனத்து இருக்க, 'ஆவி
பொன்றினன் ஆகும்' என்னத் தரையிடைக் கிடந்த பொய்யோன்,
'இன்று இது நேராய்என்னின், என்னை என் குலத்தினோடும்
கொன்றனை ஆதி' என்னா, இனையன கூறலுற்றான்: 61

'பூவின்மேல் இருந்த தெய்வத் தையலும் பொதுமை உற்றாள்;
பாவி! யான் பயந்த நங்கை! நின் பொருட்டாகப் பட்டேன்;
ஆவி போய் அழிதல் நன்றோ? அமரர்க்கும் அரசன் ஆவான்
தேவியாய் இருத்தல் தீதோ? சிறையிடைத் தேம்புகின்றாய்! 62

'என்னை என் குலத்தினோடும் இன் உயிர் தாங்கி, ஈண்டு
நல் நெடுஞ் செல்வம் துய்ப்பேன் ஆக்கினை நல்கி, நாளும்
உன்னை வெஞ் சிறையின் நீக்கி, இன்பத்துள் உய்ப்பாய்' என்னா,
பொன் அடி மருங்கு வீழ்ந்தான், உயிர் உகப் பொருமுகின்றான்.

சீதை, மாயா சனகனைக் கடிந்து கூறுதல்

அவ் உரை கேட்ட நங்கை, செவிகளை அமையப் பொத்தி,
வெவ் உயிர்த்து, ஆவி தள்ளி, வீங்கினள், வெகுளி பொங்க,
'இவ் உரை எந்தை கூறான், இன் உயிர் வாழ்க்கை பேணி;
செவ்வுரை அன்று இது' என்னாச் சீறினள், உளையச் செப்பும்:

'அறம் கெட, வழக்கு நீங்க, அரசர்தம் மரபிற்கு ஆன்ற
மறம் கெட, மெய்ம்மை தேய, வசை வர, மறைகள் ஓதும்
திறம் கெட, ஒழுக்கம் குன்ற, தேவரும் பேணத் தக்க
நிறம் கெட, இனைய சொன்னாய்; சனகனகொல், நினையின்? ஐயா! 65

'வழி கெட வரினும், தம் தம் வாழ்க்கை தேய்ந்து இறினும், மார்பம்
கிழிபட அயில் வேல் வந்து கிடைப்பினும், ஆன்றோர் கூறும்
மொழிகொடு வாழ்வது அல்லால், முறை கெடப் புறம் நின்று ஆர்க்கும்
பழி பட வாழ்கிற்பாரும் பார்த்திவர் உளரோ? பாவம்!* 66

'நீயும், நின் கிளையும், மற்று இந் நெடு நில வரைப்பும், நேரே
மாயினும், முறைமை குன்ற வாழ்வெனோ?—வயிரத் திண் தோள்
ஆயிர நாமத்து ஆழி அரியினுக்கு அடிமை செய்வேன்—
நாயினை நோக்குவேனோ, நான் துறந்து, ஆவி நச்சி? 67

65. நிறம் - புகழ்த்திறமாகிய ஒளி; 66. கிடைத்தல் - எதிர்ப்படல்.

'வரி சிலை ஒருவன் அல்லால், மைந்தர் என் மருங்கு வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டில் அல்லரோ? அரசுக்கு ஏற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை, அங்கணத்து அழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வது உண்டோ—நாயினும் கடைப்பட்டோனே! 68

'அல்லையே எந்தை; ஆனாய் ஆகதான்; அலங்கல் வீரன்
வில்லையே வாழ்த்தி, மீட்கின் மீளுதி; மீட்சி என்பது
இல்லையேல், இறந்து தீர்தி; இது அலால், இயம்பல் ஆகாச்
சொல்லையே உரைத்தாய்; என்றும் பழி கொண்டாய்' என்னச் சொன்
[னாள். 69

இராவணன் மாயா சனகனைக் கொல்லுதற்கு வாள் உருவுதல்

வன் திறல் அரக்கன், அன்ன வாசகம் மனத்துக் கொள்ளா,
'நின்றது நிற்க; மேன்மேல் நிகழ்ந்தவா நிகழ்க; நின்முன்
நின்றவன் அல்லன் போலாம் சனகன்; இக் கணத்தினின் முன்
கொன்று உயிர் குடிப்பென்' என்னா, சுரிகை வாள் உருவிக் கொண்டான்.

'உன்னால் ஒன்றும் இயலாது' எனச் சீதை கூறுதல்

'என்னையும் கொல்லாய்; இன்னே இவனையும் கொல்லாய்; இன்னும்
உன்னையும் கொல்லாய்; மற்று, இவ் உலகையும் கொல்லாய்; யானே
இன் உயிர் நீங்கி, என்றும் கெடாப் புகழ் எய்துகின்றேன்;
பின்னையும், எம் கோன் அம்பின் இளையொடும் பிழையாய்' என்றாள்.

மாயா சனகனைக் கொல்லச் சென்ற இராவணனை மகோதரன்
தடுத்தல்

'இரந்தனன் வேண்டிற்று அல்லால், இவன் பிழை இழைத்தது உண்
புரந்தரன் செல்வத்து ஐய! கொல்கை ஓர் பொருளிற்றேதான்; [டோ?
பரந்த வெம் பகையை வென்றால், நின்வழிப் படரும் நங்கை;
அரந்தையள் ஆகும்அன்றே, தந்தையை நலிவதாயின்?' 72

கும்பகருணன் இறந்தமையை இராவணன் அறிய நேரிடல்

என்று அவன் விலக்க, மீண்டு, ஆண்டு இருந்தது ஓர் இறுதியின் கண்,
குன்று என நீண்ட கும்பகருணனை இராமன் கொல்ல,
வன் திறல் குரங்கின் தானை வான் உற ஆர்த்த ஓதை,
சென்றன செவியினூடு, தேவர்கள் ஆர்ப்பும் செல்ல. 73

'உகும் திறல் அமரர் நாடும், வானர யூகத்தோரும்,
மிகும் திறம் வேறென்று இல்லா இருவர் நாண் ஒலியும், விஞ்ச,
தகும் திறன் நினைந்தேன்; எம்பிக்கு அமரிடைத் தனிமைப்பாடு
புகுந்துளது உண்டு' என்று உள்ளம் பொருமல் வந்து உற்ற போழ்தின்,

68. அங்கணம் - தூய்மையில்லாத முற்றம், புழைக்கடை; 72. அரந்தை -
துன்பம்; 74. திறல் உகும் அமரர் என மாற்றுக.

புறந்தரு சேனை முந்நீர் அருஞ் சிறை போக்கி, போதப்
பறந்தனர் அனைய தூதர் செவி மருங்கு எய்தி, பைய,
'திறம் திறம் ஆக நின்ற கவிப் பெருங் கடலைச் சிந்தி,
இறந்தனன், நும்பி; அம்பின் கொன்றனன், இராமன்' என்றார்.

**இராவணன் அழுது அரற்றுதல்**

ஊரொடும் பொருந்தித் தோன்றும் ஒளியவன் என்ன, ஒண் பொன்
தாரொடும் புனைந்த மௌலி தரையொடும் பொருந்த, தள்ளி,
பாரொடும் பொருந்தி நின்ற மராமரம், பணைகளோடும்
வேரொடும் பறிந்து, மண்மேல் வீழ்வதே போல, வீழ்ந்தான்.

பிறிவு எனும் பீழை தாங்கள் பிறந்த நாள் தொடங்கி என்றும்
உறுவது ஒன்று இன்றி, ஆவி ஒன்றென நினைந்து நின்றான்,
எறி வரும் செருவில் தம்பி தன்பொருட்டு இறந்தான் என்ன
அறிவு அழிந்து, அவசன் ஆகி, அரற்றினன், அண்டம் முற்ற.

'தம்பியோ! வானவர் ஆம் தாமரையின் காடு உழக்கும்
தும்பியோ! நான்முகத்தோன் சேம்மதலை தோன்றலோ!
நம்பியோ! இந்திரனை நாமப் பொறி துடைத்த
எம்பியோ! யான் உன்னைஇவ் உரையும் கேட்டேனோ! 78

'மின் இலைய வேலோனே! யான் உன் விழி காணேன்,
நின் நிலை யாது என்னேன், உயிர் பேணி நிற்கின்றேன்;
உன் நிலைமை ஈதுஆயின், ஓடைக் களிறு உந்திப்
பொன்னுலகம் மீளப் புகாரோ, புரந்தரனார்? 79

'வல் நெஞ்சின் என்னை நீ நீத்துப் போய், வான் அடைந்தால்,
இன்னம் சிலரோடு ஒரு வயிற்றின் யார் பிறப்பார்?
மின் அஞ்சும் வேலோய்! விழி அஞ்ச வாழ்கின்றார்,
தம் நெஞ்சம் தாமே தடவாரோ, தானவர்கள்? 80

'கல் அன்றோ, நீராடும் காலத்து, உன் கால் தேய்க்கும்,—
மல் ஒன்று தோளாய்!—வட மேரு? மானுடவன்
வில் ஒன்று நின்னை விளிவித்துளது என்னும்
சொல் அன்றோ என்னைச் சுடுகின்றது, தோன்றால்! 81

75. புறந்தருதல் - பாதுகாத்தல்; போத - விரைவாக; 76. ஒளியவன் - சூரியன்; 77. பிறிவு - பிரிவு; பீழை - துன்பம்; 78. நாமப் பொறி - புகழுக்குக் காரணமாகிய நல்வினைப் பயன்.

'மாண்டனவாம், சூலமும், சக்கரமும், வச்சிரமும்;
தீண்டினவா ஒன்றும் செயல் அற்றவாம்; தெறித்து,
மீண்டனவாம்; மானிடவன் மெல் அம்பு மெய் உருவ,
நீண்டனவாம்; தாம் இன்னம் நின்றாராம், தோள் நோக்கி! 82

'நோக்கு அறவும் எம்பியர்கள் மாளவும், இந் நொய்து இலங்கை
போக்கு அறவும், மாதுலனார் பொன்றவும், என் பின் பிறந்தாள்
மூக்கு அறவும், வாழ்ந்தேன்—ஒருத்தி முலைக் கிடந்த
ஏக்கறவால்; இன்னம் இரேனோ, உனை இழந்தும்? 83

'தன்னைத்தான், தம்பியைத்தான், தானைத் தலைவனைத்தான்,
மன்னைத்தான், மைந்தனைத்தான், மாருதத்தின் காதலைத்தான்,
பின்னைக் கரடிக்கு இறையைத்தான், பேர் மாய்த்தாய்
என்னத்தான் கேட்டிலேன்; என் ஆனவாறு இதுவே! 84

'ஏழை மகளிர் அடி வருட, ஈர்ந் தென்றல்
வாழும் மணி அரங்கில், பூம் பள்ளி வைகுவாய்!
சூழும் அலகை துணங்கைப் பறை துவைப்ப,
பூழி அணைமேல் துயின்றனையோ, போர்க்களத்தே? 85

'செந் தேன் பருகித் திசை திசையும் நீ வாழ,
உய்ந்தேன்; இனி, இன்று நானும் உனக்கு ஆவி
தந்தேன், பிரியேன், தனி போகத் தாழ்க்கிலேன்,
வந்தேன் தொடர; மதக் களிறே! வந்தேனால்.' 86

**இராவணன் கதற, சீதை மகிழ்ச்சியடைதல்**

அண்டத்து அளவும் இனைய பகர்ந்து அழைத்து,
பண்டைத் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்;
தொண்டைக் கனி வாய் துடிப்ப, மயிர் பொடிப்ப,
கெண்டைத் தடங் கண்ணாள் உள்ளே கிளுகிளுத்தாள். 87

வீங்கினாள் கொங்கை; மெலிந்த மெலிவு அகல
ஓங்கினாள்; உள்ளம் உவந்தாள்; உயிர் புகுந்தாள்;
தீங்கு இலாக் கற்பின் திருமடந்தை சேடி ஆம்
பாங்கினாள் உற்றதனை யாரே பகர்கிற்பார்? 88

82. மாண்டனவாம் - மழுங்கின; 83. மாதுலனார் - மாமனாகிய மாரீசனார்; ஏக்கறவு - ஆசையால் தாழ்தல்; 87. பண்டைத் தன் நாமம் - முன்னாளில் சிவபெருமானால் அளிக்கப்பெற்ற இராவணன் என்ற பெயர். அதன் காரணமாவது அப் பெயரைப் பெறுதற்குக் காரணமாக அமைந்த அழுகை; இராவணம் - அழுகை; பாரித்தல் - வளர்த்தல்.

கண்டாள், கருணனை, தன் கண் கடந்த தோளானை;
கொண்டாள், ஒரு துணுக்கம்; அன்னவனைக் கொற்றவனார்
தண்டாத வாளி தடிந்த தனி வார்த்தை
உண்டாள், உடல் தடித்தாள்; வேறு ஒருத்தி ஒக்கின்றாள். 89

#### இராவணன் சீறுதலும், மந்திரிமார் தேற்ற அவன் அகல்தலும்

'தாவ அரிய பேர் உலகத்து எம்பி சவத்தோடும்
யாவரையும் கொன்று அருக்கி, என்றும் இறவாத
மூவரையும், மேலை நாள் மூவா மருந்து உண்ட
தேவரையும், வைப்பேன் சிறை' என்னச் சீறினான். 90

அக் கணத்து, மந்திரியர் ஆற்ற, சிறிது ஆறி,
'இக் கணத்து மானிடவர் ஈரக் குருதியால்
முக் கைப் புனல் உகுப்பென், எம்பிக்கு' என முனியா,
திக்கு அனைத்தும் போர் கடந்தான், போயினான், தீ விழியான்.

#### 'மாயா சனகனைச் சிறையில் வையுங்கள்' என்று பணித்து, மகோதரன் போதல்

'கூறோம், இனி நாம்; அக் கும்பகருணனார்
பாறு ஆடு வெங் களத்துப் பட்டார்' எனப் பதையா,
'வேறு ஓர் சிறை இவனை வைம்மின், விரைந்து' என்ன,
மாறு ஓர் திசை நோக்கிப் போனார், மகோதரனார். 92

#### திரிசடை தேற்ற, சீதை துயரம் நீங்குதல்

வரி சடை நறு மலர் வண்டு பாடு இலாத்
துரிசு அடை புரி குழல் சும்மை சுற்றிய
ஒரு சடை உடையவட்கு, உடைய அன்பினாள்,
திரிசடை தெருட்டுவாள், இனைய செப்புவாள்: 93

'உந்தை என்று, உனக்கு எதிர் உருவம் மாற்றியே,
வந்தவன், மருத்தன் என்று உளன் ஓர் மாயையான்;
அந்தம் இல் கொடுந் தொழில் அரக்கன் ஆம்' என,
சிந்தையின் உணர்த்தினள், அமுதின் செம்மையாள். 94

நங்கையும் அவள் உரை நாளும் தேறுவாள்,
சங்கையும் இன்னலும் துயரும் தள்ளினாள்;
இங்கு நின்று ஏகிய இலங்கை காவலன்
அங்கு நின்று இயற்றியது அறைகுவாம்அரோ. 95

89. தண்டாத - தவறாமல் அழிக்கவல்ல; 90. தாவ அரிய - கடத்தற்கு அரிய; 91. முக் கைப் புனல் - மூன்று முறை கையால் நீர் இறைத்தலாகிய கடன்; 92. பாறு - பருந்து.

# 17 அதிகாயன் வதைப் படலம்

**இராவணன் அமைச்சரைக் கடிதல்**

கொழுந்து விட்டு அழன்று எரி மடங்கல் கூட்டு அற,
எழுந்து எரி வெகுளியான், இரு மருங்கினும்
தொழும் தகை அமைச்சரைச் சுளித்து நோக்குறு,
மொழிந்தனன், இடியொடு முகிலும் சிந்தவே: 1

'ஏகுதிர், எம் முகத்து எவரும்—என்னுடை
யோக வெஞ் சேனையும், உடற்றும் உம்முடைச்
சாகரத் தானையும், தழுவச் சார்ந்து, அவர்
வேக வெஞ் சிலைத் தொழில் விலக்கி வீட்டிரால். 2

' ''எடுத்தவர் இருந்துழி எய்தி, யாரையும்
படுத்து, இவண் மீடும்'' என்று உரைத்த பண்பினீர்!
தடுத்திலீர் எம்பியை; தாங்ககிற்றிலீர்;
கொடுத்திலீர், உம் உயிர்; வீரக் கோட்டியீர். 3

'உம்மையின் நின்று, நான் உலகம் மூன்றும் என்
வெம்மையின், ஆண்டது; நீர் என் வென்றியால்
இம்மையில் நெடுந் திரு எய்தினீர்; இனிச்
செம்மையின் இன் உயிர் தீர்ந்து தீர்திரால். 4

' ''ஆற்றலம்'' என்றிரேல் என்மின்; யான், அவர்
தோற்று, அலம்வந்து உகத் துரந்து, தொல் நெடுங்
கூற்று அலது உயிர் அது குடிக்கும், கூர்த்த என்
வேல் தலை மானுடர் வெரிநில் காண்பெனல். 5

'அல்லதும் உண்டு, உமக்கு உரைப்பது: ''ஆர் அமர்
வெல்லுதும்'' என்றிரேல், மேல் செல்வீர்; இனி,
வல்லது மடிதலே என்னின், மாறுதிர்;
சொல்லும், நும் கருத்து' என முனிந்து சொல்லினன். 6

**அதிகாயன் தனது வீரத்தை மிகுத்துக் கூறுதல்**

நதி காய் நெடு மானமும் நாணும் உறு,
மதி காய் குடை மன்னனை வைது உரையா,
விதி காயினும் வீரம் வெலற்கு அரியான்
அதிகாயன் எனும் பெயரான் அறைவான்: 7

**17:** 1. மடங்கல் - ஊழித் தீ; 2. யோகம் - உபாயம், சூழ்ச்சி; 3. எடுத்தல் - படையுடன் மேற்செல்லுதல்; வீரக் கோட்டி - வீரர் வரிசை; 4. உம்மையின் நின்று - நெடுங் காலத்திற்கு முன்னிருந்து; 5. அலம் வருதல் - வருந்துதல்; வெரிந் - முதுகு; 6. வல்லது - இயல்வது; மாறுதிர் - மீள்வீராக; 7. நெடுமானம் - பெரிய அவமானம், ஈண்டு அதனுல் தோன்றிய கடுஞ் சினம்.

'வான் அஞ்சுக; வையகம் அஞ்சுக; மா-
லான், அஞ்சு முகத்தவன், அஞ்சுக; ''மேல்,
நான் அஞ்சினென்'' என்று, உனை நாணுக; போர்
யான் அஞ்சினென் என்றும் இயம்புவதோ? 8

'வெம்மைப் பொரு தானவர் மேல் வலியோர்-
தம்மைத் தலையில் கொடு தந்திலெனோ?
உம்மைக் குலையப் பொரும் உம்பரையும்
கொம்மைக் குய வட்டணை கொண்டிலெனோ? 9

'காய்ப்புண்ட நெடும் படை கை உளதாத்
தேய்ப்புண்டவனும், சில சில் கணையால்
ஆய்ப்புண்டவனும், அவர் சொல் வலதால்
ஏய்ப்புண்டவனும், என எண்ணினையோ? 10

அதிகாயன் வஞ்சினம் கூறி, போருக்குச் செல்லல்

'உம்பிக்கு உயிர் ஈறு செய்தான் ஒருவன்
தம்பிக்கு உயிர் ஈறு சமைத்து, அவனைக்
கம்பிப்பது ஓர் வன் துயர் கண்டிலனேல்,
நம்பிக்கு ஒரு நன் மகனோ, இனி நான்? 11

'கிட்டிப் பொருது, அக் கிளர் சேனை எலாம்
மட்டித்து, உயர் வானரர் வன் தலையை
வெட்டித் தரை இட்டு, இரு வில்லினரைக்
கட்டித் தருவென்; இது காணுதியால். 12

' ''சேனைக் கடலோடு இடை செல்க'' எனினும்,
யான் இப்பொழுதே, ''தனி ஏகு'' எனினும்,
தான் ஒத்தது சொல்லுதி; தா விடை' என்-
றான்; இத் திறம் உன்னி அரக்கர் பிரான், 13

'சொன்னாய், இது நன்று துணிந்தனை; நீ
அன்னான் உயிர் தந்தனையாம்எனின், யான்,
பின் நாள், அவ் இராமன் எனும் பெயரான்-
தன் ஆர் உயிர் கொண்டு சமைக்குவெனால். 14

8. அஞ்சு முகத்தவன் - சிவன்; 9. கொம்மை - திரட்சி; குயம் - வாள், மார்பும் ஆம்; வட்டணை கொள்ளுதல் - இடம் வலமாகச் சாரி திரிந்து பொருது வெற்றிகொள்ளுதல், சுழல அடித்தலும் ஆம்; 10. தேய்ப்புண்டவன் - அனுமனால் தரையில் தேய்க்கப்பட்ட அட்சகுமாரன்; ஆய்ப்புண்டவன் - உயிரொடுங்கியவனாகிய கும்பகருணன்; சொல் வலதால் - புகழின் வல்லமையால்; ஏய்ப்புண்டவன் - ஏய்க்கப்பட்டவனாகிய வீடணன்; 11. அதிகாயனது இக் கூற்று 'வஞ்சினக் காஞ்சி' என்னும் புறத்துறையின் பாற்படும்; 12. மட்டித்தல்- அசைதல், அழித்தல்.

'போவாய் இதுபோது—பொலங் கழலோய்!—
மூவாயிர கோடியரோடு, முரண்
கா ஆர் கரி, தேர், பரி, காவலின்' என்று,
ஏவாதன யாவையும் ஏவினனால். 15

'கும்பக் கொடியோனும், நிகும்பனும், வேறு
அம் பொன் கழல் வீரன் அகம்பனும்,—உன்
செம் பொன் பொலி தேர் அயல் செல்குவரால்—
உம்பர்க்கும் வெலற்கு அரியார் உரவோர். 16

'ஓர் ஏறு சிவற்கு உளது ஒப்பு உளவாம்
வார் ஏறு வயப் பரி ஆயிரம், வன்
போர் ஏறிட ஏறுவ, பூண்டு திண்
தேர் ஏறுதி; தந்தனென்—வெந் திறலோய்! 17

'ஆம் அத்தனை மாவுடை அத்தனை தேர்
சேமத்தன பின் புடை செல்ல, அடும்
கோ மத்த நெடுங் கரி கோடியொடும்,
போம், அத்தனை வெம் புரவிக் கடலே.' 18

என்றே விடை நல்க, இறைஞ்சி எழா,
வன் தாள் வயிரச் சிலை கைக் கொடு, வாள்
பொன் தாழ் கவசம் புகுதா, முகிலின்
நின்றான்; இமையோர்கள் நெளிந்தனரால். 19

பல் வேறு படைக்கலம், வெம் பகலோன்
எல் வேறு தெரிப்ப, கொடு ஏகினனால்,
சொல் வேறு தெழிக்குநர் சுற்றுற,—மா-
வில் வேறு தெரிப்புறும் மேனியினான். 20

**அதிகாயனுடன் சென்ற படைகள்**

இழை, அஞ்சன, மால் களிறு, எண் இல் அரி
முழை அஞ்ச முழங்கின; மும் முறை நீர்
குழை அஞ்ச முழங்கின, நாண் ஒலி; கோள்
மழை அஞ்ச முழங்கின, மா முரசே. 21

15. கா - காத்தல், ஆர் - பொருந்திய; 16. கும்பன், நிகும்பன் என்னும் இருவரும் கும்பகருணனுடைய புதல்வர்கள்; அகம்பன் - இவன் சுமாலி என்னும் அரக்கனுடைய மகன்; 17. சிவற்கு உளது ஓர் ஏறு ஒப்பு உளவாம் பரி எனவும், வன்போர் ஏறிட ஏறுவ வார் ஏறு வயப் பரி எனவும், பரி ஆயிரம் பூண்டு திண் தேர் எனவும் இயைக்க; 19. நெளிதல் - நடுங்கி உடல் தளர்தல்; 20. மாவில் வேறு தெரிப்புறும் மேனியினான் - யானையினும் வேறாக (பெரிதாக)த் தோன்றும் உடலையுடையவனான அதிகாயன்; அதிகாயன்- பெரிய உடம்பினை உடையவன்; 21. மும் முறை நீர் - முந்நீர், கடல்; குழை அஞ்ச - குழைந்து அஞ்சும்படி.

ஆர்த்தார், நெடு வானம் நடுங்க; அடிப்
பேர்த்தார், நிலமாமகள் பேர்வள் என;
தூர்த்தார் நெடு வேலைகள், தூளியினால்;
வேர்த்தார், அது கண்டு, விசும்பு உறைவோர். 22

அடியோடு மதக் களி யானைகளின்
பிடியோடு நிகர்த்தன, பின் புறம், முன்—
தடியோடு துடக்கிய தாரைய, வெண்
கொடியோடு துடக்கிய, கொண்மு எலாம். 23

தாறு ஆடின மால் கரியின்புடை தாழ்
மாறாடின மா மதம் மண்டுதலால்,
ஆறு ஆடின, பாய் பரி, யானைகளும்;
சேறு ஆடின, சேண் நெறி சென்ற எலாம். 24

தேர் சென்றன, செங் கதிரோனொடு சேர்
ஊர் சென்றனபோல்; ஒளி ஓடைகளின்
கார் சென்றன, கார் நிரை சென்றனபோல்;
பார் சென்றில சென்றன பாய் பரியே. 25

**அதிகாயன், கும்பகருணனது உடல் கண்டு வருந்துதல்**

மேருத்தனை வெற்புஇனம் மொய்த்து, நெடும்
பாரில் செலுமாறு படப் படரும்
தேர் சுற்றிடவே, கொடு சென்று முரண்
போர் முற்று களத்திடைப் புக்கனனால். 26

கண்டான், அவ் இராமன் எனும் களி மா
உண்டாடிய வெங் களன் ஊடுருவ;
புண்தான் உறு நெஞ்சு புழுக்கம் உறத்
திண்டாடினன், வந்த சினத் திறலோன். 27

மலை கண்டனபோல் வரு தோளொடு தாள்
கலை கண்ட கருங் கடல் கண்டு, உளவாம்,
நிலை கண்டன கண்டு, ஒரு தாதை நெடுந்
தலை கண்டிலன், நின்று, கலித்தனனால். 28

23. அடி ஓடுதல் - அடிச் சுவட்டின் வழியே தொடர்ந்து விரைதல்; தடி - தடித்து, மின்னல்; கொண்மு - கொண்மூ, மேகம்; 24. தாறு ஆடுதல் - அங்குசத்தால் பலமுறை குத்தப்படுதல்; தாறு - அங்குசம்; மதம் மாறுடுதல் - ஒன்றின் ஒன்று மிக்குப் பெருகுதல்; ஆறு ஆடின - ஆற்றின் கண்ணே குளித்தன; 25. பார் சென்றில - பூமியில் அடிவைத்துச் செல்லாமல் தாவிச் சென்றன; 26. மேருத்தனை - மேருவை, தன் என்பது சாரியை; செலுமாறு பட - செல்லும் தன்மை ஒப்ப; 28. கலை கண்ட கடல் - கலைதல் பொருந்திய கடல்; ஈண்டுக் கும்பகருணன் உடல்.

'மிடல் ஒன்று சரத்தொடு மீது உயர் வான்
திடல் அன்று; திசைக் களிறு அன்று; ஒரு திண்
கடல் அன்று; இது என் எந்தை கடக் கரியான்
உடல்' என்று, உயிரோடும் உருத்தனுைல். 29

'எல்லே! இவை காணிய எய்தினெனே!
வல்லே உளராயின மானுடரைக்
கொல்லேன், ஒரு நான், உயிர் கோள் நெற்யில்
செல்லேன், எனின், இவ் இடர் தீர்குவெனே?' 30

**அதிகாயன், இலக்குவன்பால் தூது அனுப்புதல்**

என்னு முனியா, 'இது இழைத்துளவன்
பின்னுனையும் இப்படிச் செய்து பெயர்ந்து,
அன்னுன் இடர் கண்டு, இடர் ஆறுவென்' என்று
உன்னு, ஒருவற்கு இது உணர்த்தினனுல்: 31

'வா நீ, மயிடன்! ஒரு வல் விசையில்
போ! நீ அவ் இலக்குவனில் புகல்வாய்;
நான் ஈது துணிந்தனென், நண்ணினெனுல்;
மேல் இது உணர்ந்து விளம்பிடுவாய். 32

' ''அம் தார் இளவற்கு அயர்வு எய்தி அழும்
தம் தாதை மனத்து இடர் தள்ளிடுவான்,
உந்து ஆர் துயரோடும் உருத்து எரிவான்
வந்தான்'' என, முன் சொல் வழங்குதியால்; 33

'கோளுற்றவன், நெஞ்சு சுடக் குழைவான்,
நாள் உற்ற இருக்கையில், யான், ஒருதன்
தாள் அற்று உருளக் கணை தள்ளிடுவான்,
சூளுற்றதும் உண்டு; அது சொல்லுதியால்; 34

'தீது என்று அது சிந்தனை செய்திலெனுல்;
ஈது என்று அறம் மன் நெறி ஆம்' என, 'நீ
தூது என்று இகழாது, உன சொல் வலியால்,
''போது'' என்று, உடனே கொடு, போதுதியால். 35

'செரு ஆசையினர், புகழ் தேடுறுவார்,
இருவோரையும், நீ வலி உற்று, ''எதிரே
பொருவோர் நமனர் பதி புக்கு உறைவோர்;
வருவோரை எலாம் வருக!'' என்னுதியால். 36

30. எல்லே - அந்தோ; 34. நாள் உற்ற இருக்கை - நாளோலக்கமாகிய சபை; 36. இருவோர் - இராம இலக்குவர்.

'சிந்தாகுலம் எந்தை திரித்திடுவான்,
''வந்தான்'' என என் எதிரே, மதியோய்!
தந்தாய்எனின், யான் அலது, யார் தருவார்,
உம் தாரிய உள்ள உயர்ந்த எலாம்? 37

'வேறே அவ் இலக்குவன் என்ன விளம்பு
ஏறே வருமேல், இமையோர் எதிரே,
கூறே பல செய்து, உயிர் கொண்டு, உனையும்,
மாறே, ஒரு மன் என வைக்குவெனல். 38

'விண் நாடியர், விஞ்சையர், அம் சொலினர்
பெண், ஆர் அமுது அன்னவர், பெய்து, எவரும்
உண்ணுதன கூர் நறவு உண்ட தசும்பு
எண்ணாயிரம்ஆயினும், ஈகுவெனல். 39

'உறைதந்தன செங் கதிரோன் உருவின்
பொறை தந்தன, காசு ஒளிர் பூண், இமையோர்
திறை தந்தன, தெய்வ நிதிக் கிழவன்
முறை தந்தன, தந்து முடிக்குவெனல். 40

'மாறு மத வாரிய, வண்டினெடும்
பாறு ஆடு முகத்தன, பல் பகலும்
தேறாதன, செங் கண வெங் களி மா
நூறாயிரம்ஆயினும் நுந்துவெனல்; 41

'செம் பொன்னின் அமைந்து சமைந்தன தேர்,
உம்பர் நெடு வானினும் ஒப்பு உறழாப்
பம்பும் மணி தார் அணி பாய் பரிமா,
இம்பர் நடவாதன, ஈகுவெனல். 42

'நிதியின் நிரை குப்பை நிறைத்தனவும்,
பொதியின் மிளிர் காசு பொறுத்தனவும்,
மதியின் ஒளிர் தூசு வகுத்தனவும்,
அதிகம் சகடு ஆயிரம் ஈகுவெனல். 43

37. உம் தாரிய - உம்மால் தாங்குதற்கும் முடியாத (மிகுதியான); 38. மாறு - கைம்மாறு; 40. உறைதந்தன - பொருந்தியன; பொறை தந்தன- பாரம் உள்ளன; முறை தந்தன - முறைமை பற்றித் தந்தன; 41. நுந்துதல் - வழங்குதல்; 42. பம்புதல் - நிறைதல்; 43. தூசு - ஆடை; வைத்தல் - வகைவகையாக வைத்தல்; சகடு - வண்டி.

'மற்றும், ஒரு தீது இல் மணிப் பணி தந்து,
உற்று உன் நினைவு யாவையும் உந்துவெனல்;
பொன் திண் கழலாய்! நனி போ' எனலோடு,
எற்றும் திரள் தோளவன் ஏகினனால். 44

**மயிடன் இராமனை அடைதலும், வானரர் அவனைப் பற்றுதலும்**

ஏகி, தனி சென்று, எதிர் எய்தலுறும்
காகுத்தனை எய்திய காலையின்வாய்,
வேகத்தொடு வீரர் விசைத்து எழலும்,
'ஓகைப் பொருள் உண்டு' என, ஓதினனால். 45

**இராமன், வானரரை விலக்கி, 'வந்தது ஏன்?' என, மயிடன், 'இலக்குவனிடமே சொல்லவேண்டும்' எனல்**

போதம் முதல், 'வாய்மொழியே புகல்வான்;
ஏதும் அறியான்; வறிது ஏகினனால்;
தூதன்; இவனைச் சுளியன்மின்' என,
வேதம் முதல் நாதன் விலக்கினனால். 46

'என், வந்த குறிப்பு? அது இயம்பு' எனலும்,
மின் வந்த எயிற்றவன், 'வில் வல! உன்
பின் வந்தவனே அறி பெற்றியதால்,
மன் வந்த கருத்து' என, 'மன்னர்பிரான்!' 47

**இலக்குவன் வினவ, தூதன் தான் வந்த செய்தி உரைத்தல்**

'சொல்லாய்; அது சொல்லிடு, சொல்லிடு' என,
வில்லாளன் இளங்கிளையோன் வினவ,
'பல் ஆயிர கோடி படைக் கடல் முன்
நில்லாய்' என, நின்று நிகழ்த்தினனால்: 48

'உன்மேல் அதிகாயன் உருத்துளனாய்,
நல் மேருவின் நின்றனன்; நாடி அவன்-
தன்மேல் எதிரும் வலி தக்குளையேல்,
பொன் மேனிய! என்னொடு போதுதியால். 49

44. எற்றுதல் - தாக்குதல்; 45. ஓகைப் பொருள் - மகிழ்ச்சிச் செய்தி; 46. போதம் முதல் - மெய்யுணர்வுக்கு முதலாய் இருப்பவன்; சுளிதல்- வெகுளுதல்; போதம் முதலாகிய வேதம் முதல் நாதன் விலக்கினன் என முடிக்க; 48. நில்லாய் - நிற்பாயாக; 49. தக்குளையேல் - தகுதியைப் பெற்றுள்ளாயானால்.

'சையப் படிவத்து ஒரு தந்தையை முன்
மெய் எப்படிச் செய்தனன் நும் முன், விரைந்து,
ஐயப்படல், அப்படி இப் படியில்
செய்யப்படுகிற்றி; தெரித்தமனனுல். 50

' ''கொன்றுன் ஒழிய, கொலே கோள் அறியா
நின்ருெனுடு நின்றது என், நேடி?'' எனின்,
தன் தாதை படும் துயர், தந்தையை முன்
வென்ருனே இயற்றுறும் வேட்கையினுல். 51

'வானேர்களும், மண்ணினுளோர்களும், மற்று
ஏனேர்களும், இவ் உரை கேண்மின்: இவன்-
தனே பொருவான்; அயலே தமர் வந்து
ஆனேரும் உடன் பொருவான், அமைவான். 52

**இராமன், இலக்குவனேப் போர்க்குச் செல்லுமாறு பணித்தல்**

'எழுவாய், இனி என்னுடன்' என்று, எரியும்
மழு வாய் நிகர் வெஞ் சொல் வழங்குதலும்,
தழுவா, 'உடன் ஏகுதி; தாழல்!' எனத்
தொழுவார் தொழு தாள் அரி சொல்லுதலும், 53

**வீடணன், அதிகாயனது திறத்தைக் குறித்துக் கூறியவை**

'எல்லாம் உடன் எய்திய பின், இவனே
வில்லாளுெடு போர் செய வேண்டும்' எனு,
நல்லாறுடை வீடணன், நாரணன்முன்
சொல்லாடினன்; அன்னவை சொல்லுதுமால்: 54

'வார் ஏறு கழற் சின வாள் அரி எம்
போர் ஏறெடு போர் புரிவான் அமையா,
தேர் ஏறு சினக் கடு வெந் தறுகண்
கார் ஏறு என வந்த கதத் தொழிலோன். 55

'ஓவா நெடு மா தவம் ஒன்று உடையான்,
தேவாசுரர் ஆதியர் செய் செருவில்,
சாவான் இறையும், சலியா வலியான்,
மூவா முதல் நான்முகனுர் மொழியால்; 56

50. சையப் படிவம் - மலே போலும் வடிவம்; இப் படி - இப் பூமி; 51. தன் தாதை - அதிகாயனுகிய தன்னேப் பெற்ற தந்தையாகிய இராவணன்; 52. பொருவான் - போர் புரிதற்கு; 53. தாழல் - கால தாமதம் செய்யற்க; அரி - திருமாலாகிய இராமன்; 54. நல்லாறு - நல்ல வழி; 56. ஓவா - ஒழியாத; மூவா - கெடாத.

'கடம் ஏய் கயிலைக் கிரி, கண்ணுதலோடு
இடம் ஏற எடுத்தனம் என்று இவனை,
திடமே உலகில் பல தேவரொடும்
வட மேரு எடுக்க, வளர்த்தனனால்; 57

'மாலாரொடு மந்தரம் மாசுணமும்
மேலாகிய தேவரும் வேண்டும் எனா,
ஆலாலமும் ஆர் அமிழ்தும் அமைய,
காலால் நெடு வேலை கலக்கிடுமால்; 58

'ஊழிக்கும் உயர்ந்து, ஒரு நாள் ஒருவாப்
பாழித் திசை நின்று சுமந்த, பணைச்
சூழிக் கரி தள்ளுதல் தோள் வலியோ?
ஆழிக் கிரி தள்ளும், ஓர் அங்கையினால்; 59

'காலங்கள் கணக்கு இற, கண் இமையா
ஆலம் கொள் மிடற்றவன், ஆர் அழல்வாய்
வேல் அங்கு எறிய, கொடு, 'விட்டது நீள்
சூலம்கொல்?' எனப் பகர் சொல் உடையான்; 60

'பகை ஆடிய வானவர் பல் வகை ஊர்
புகை ஆடிய நாள், புனை வாகையினான்,
''மிகை ஆர் உயிர் உண்'' என வீசிய வெந்
தகை ஆழி தகைந்த தனுத் தொழிலான்; 61

'உயிர் ஒப்புறு பல் படை உள்ள எலாம்,
செயிர் ஒப்புறும் இந்திரர், சிந்திய நாள்,
அயிர் ஒப்பன நுண் துகள்செய்து, அவர்தம்
வயிரப் படை தள்ளிய வாளியினான்; 62

'கற்றான், மறை நூலொடு கண்ணுதல்பால்;
முற்றாதன தேவர் முரண் படைதாம்,
மற்று ஆரும் வழங்க வலார் இலவும்,
பெற்றான்; நெடிது ஆண்மை பிறந்துடையான்; 63

57. கடம் - காடு; 58. மாலார் - திருமால்; 59. ஆழிக் கிரி - சக்கரவாள மலை; 61. பல் வகை ஊர் - பல பகுப்புகளைக் கொண்ட ஊர்; 62. வயிரப் படை - வச்சிராயுதம்; 63. முற்றாதன - பழகாதன; தேவர் முற்றாதன என இயைக்க.

'அறன் அல்லது நல்லது மாறு அறியான்;
மறன் அல்லது பல் பணி மாறு அணியான்;
திறன் அல்லது ஓர் ஆர் உயிரும் சிதையான்;
''உறல் நல்லது, பேர் இசை'' என்று உணர்வான்; 64

'காயத்து உயிரே விடு காலையினும்,
மாயத்தவர் கூடி மலைந்திடினும்,
தேயத்தவர் செய்குதல் செய்திடினும்,
மாயத் தொழில் செய்ய மதித்திலனால். 65

**வீடணன் உரைத்த அதிகாயனது பூர்வ சரிதம்**

'மது கைடவர் என்பவர், வானவர்தம்
பதி கைகொடு கட்டவர், பண்டு ஒரு நாள்,
அதி கைதவர், ஆழி அனந்தனையும்,
விதி கைம்மிக, முட்டிய வெம்மையினர். 66

'நீர் ஆழி இழிந்து, நெடுந்தகையை,
''தாராய் அமர்'' என்றனர், தாம் ஒரு நாள்;
ஆர் ஆழிய அண்ணலும், அஃது இசையா,
''வாரா, அமர் செய்க!'' என வந்தனனால். 67

'வல்லார் உரு ஆயிரம் ஆய் வரினும்,
நல்லார் முறை வீசி, நகும் திறலார்
மல்லால் இளகாது, மலைந்தனன் மால்;
அல் ஆயிரம் ஆயிரம் அஃகினவால். 68

'தன் போல்பவர் தானும் இலாத தனிப்
பொன்போல் ஒளிர் மேனியனை, ''புகழோய்!
என் போல்பவர் சொல்லுவது, எண் உடையார்
உன் போல்பவர் யார் உளர்?'' என்று உரையா, 69

' ''ஒருவோம் உலகு ஏழையும் உண்டு உமிழ்வோம்;
இருவோமொடு நீ தனி இத்தனை நாள்
பொருவோமொடு நேர் பொருதாய்; புகழோய்!
தருவோம் நின் மனத்தது தந்தனமால்; 70

64. அறன் அல்லது - அறநெறி அன்றி; மாறு - வேறு; திறன் அல்லது ஓர் உயிர் - வலிமையற்றதாகிய ஓர் உயிர்; 66. அதி - மிகுதிப் பொருளை உணர்த்தும் ஒரு வடமொழி இடைச்சொல்; கைதவர் - வஞ்சனையுடையவர்; ஆழி அனந்தன் - பாற்கடலில் உள்ள திருமால்; 67. வாரா - இதுவரையில் நிகழ்ந்திராத; 68. நல்லார் முறை வீசி - மகளிர் எனக் கண்டோர் கருதும் முறையில் வீசி, நன்மை மிகுந்த போர் முறையால் வீசி எனலும் ஆம்; அல்- நாள்; அஃகின - கழிந்துபோயின; 69. ஒளிர் மேனியன் - ஒளிரும் திரு மேனியை உடைய திருமால்.

' ''ஒல்லும்படி நல்லது உனக்கு உதவச்
சொல்லும்படி'' என்று, அவர் சொல்லுதலும்,
''வெல்லும்படி நும்மை விளம்பும்'' எனக்
கொல்லும்படியால் அரி கூறுதலும், 71

' ''இடையில் படுகிற்கிலம் யாம்; ஒரு நின்
தொடையில் படுகிற்றும்'' எனத் துணியா,
''அடையச் செயகிற்றி; அது ஆணை'' என,
நடையில் படு நீதியர் நல்குதலும், 72

'விட்டான், உலகு யாவையும், மேலொடு கீழ்,
எட்டா ஒருவன் தன் இடந் தொடையை;
ஒட்டாதவர் ஒன்றினர், ஊழ்வலியால்
பட்டார்; இது பட்டது பண்டு ஒருநாள்.* 73

'தனி நாயகன், வன் கதை தன் கை கொளா,
நனி சாட, விழுந்தனர், நாள் உலவா;
பனியா மது மேதை படப் படர் மே-
தினி ஆனது, பூவுலகு எங்கணுமே. 74

'விதியால், இவ் உகம்தனில், மெய் வலியால்
மது ஆனவன் எம்முன் மடிந்தனனால்;
கதிர்தான் நிகர் கைடவன் இக் கதிர் வேல்
அதிகாயன்; இது ஆக அறைந்தனனால்.' 75

**இராமன், இலக்குவனது வலிமையைத் தெரிவித்தல்**

என்றான், அவ் இராவணனுக்கு இளையான்;
'நன்று ஆகுக!' என்று ஒரு நாயகனும்,
மின் தான் உமிழ் வெண் நகை வேறு செயா-
நின்றான், இது கூறி நிகழ்த்தினனால்: 76

'எண்ணாயிர கோடி இராவணரும்,
விண் நாடரும், வேறு உலகத்து எவரும்,
நண்ணா ஒரு மூவரும், நண்ணிடினும்,
கண்ணால் இவன் வில் தொழில் காணுதியால்; 77

72. இடையில் படுகிற்கிலம் - வேறு இடத்தில் சாகமாட்டோம்; 74. பனியா - நடுங்கி; மது மேதை - மது என்பவன் உடம்பின் எழுவகைத் தாதுக்களில் ஒன்றாகிய மேதசு; மது மேதை எங்கணும் படப் படர் பூவுலகு மேதினி ஆனது என இயைக்க; 75. மது ஆனவன் எம்முன் - மது என்பவனான என் தமையன் (கும்பகருணன்); மது, கைடவன் என்னும் இருவரும் இந்த யுகத்தில் கும்பகருணன் ஆகவும் அதிகாயன் ஆகவும் முறையே பிறந்தார்கள்.

'வான் என்பது என்? வையகம் என்பது என்? மால்-
தான் என்பது என்? வேறு தனிச் சிலேயோர்,
யான் என்பது என்? ஈசன் என்று இமையோர்
கோன் என்பது என்?—எம்பி கொதித்திடுமேல்!* 78

'தெய்வப் படையும், சினமும், திறலும்,
மய் அற்று ஒழி மா தவம், மற்றும், எலாம்,
எய்தற்கு உளவோ—இவன் இச் சிலேயில்
கய் வைப்பு அளவே? இறல் காணுதியால். 79

'என் தேவியை வஞ்சனே செய்து எழுவான்
அன்றே முடிவான்; இவன், ''அன்னவள் சொல்
குன்றேன்'' என ஏகிய கொள்கையிஞல்
நின்ருன் உளன் ஆகி;—நெடுந் தகையாய்! 80

**வீடணனே உடன் சென்று, போரைக் காண, இராமன் ஏவுதல்**

'ஏகாய், உடன் நீயும்; எதிர்த்துளனும்
மாகாயன் நெடுந் தலே வாளியோடும்
ஆகாயம் அளந்து விழுந்ததனேக்
காகாதிகள் நுங்குதல் காணுதியால். 81

'நீரைக் கொடு நீர் எதிர் நிற்க ஒணுமே?
தீரக் கொடியாரொடு தேவர் பொரும்
போரைக் கொடு வந்து புகுந்தது நாம்
ஆரைக் கொடு வந்தது? அயர்த்தனேயோ? 82

'சிவன்; அல்லன்எனில், திருவின் பெருமான்;
அவன் அல்லன்எனில், புவி தந்தருளும்
தவன்; அல்லன்எனில், தனியே வலியோன்
இவன்; அல்லன்எனில், பிறர் யார் உளரோ? 83

'ஒன்றுயிர வெள்ளம் ஒருங்கு உள ஆம்
வன் தானேயர் வந்து வளேந்த எலாம்
கொன்ருன் இவன் அல்லது, கொண்டு உடனே
நின்ருர் பிறர் உண்மை நினேந்தனேயோ? 84

'கொல்வானும் இவன்; கொடியோரை எலாம்
வெல்வானும் இவன்; அடல் விண்டு என
ஒல்வானும் இவன்; உடனே ஒரு நீ
செல்வாய்' என ஏவுதல் செய்தனனுல். 85

83. இவன் - இலக்குவன்.

**இலக்குவன், வீடணனும் உடன் வர, போர்க்களம் புகுதல்**

அக் காலை இலக்குவன் ஆரியனை
முக் காலும் வலம் கொடு, மூதுணர்வின்
மிக்கான், அடல் வீடணன் மெய் தொடரப்
புக்கான், அவன் வந்து புகுந்த களம். 86

**இரு பக்கத்துச் சேனைகளும் நெருங்கிப் பொருதல்**

சேனைக் கடல் சென்றது, தென் கடல்மேல்
ஏனைக் கடல் வந்தது எழுந்தது எனு;
ஆனைக் கடல், தேர், பரி, ஆள், மிடையும்
தானைக் கடலோடு தலைப்படலும், 87

பசும் படு குருதியின் பண்டு சேறுபட்டு,
அசும்பு உற உருகிய, உலகம் ஆர்த்து எழ,
குசும்பையின் நறு மலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையும் கடந்தது, விரிந்த தூளியே. 88

தாம் இடித்து எழும் பணை முழக்கும், சங்கு இனம்
ஆம் இடிக் குமுறலும், ஆர்ப்பின் ஓதையும்,
ஏமுடைக் கொடுஞ் சிலை இடிப்பும், அஞ்சி, தம்
வாய் மடித்து ஒடுங்கின—மகர வேலையே.* 89

உலைதொறும் குருதி நீர் அருவி ஒத்து உக,
இலை துறு மரம் எனக் கொடிகள் இற்று உக,
மலைதொறும் பாய்ந்தென, மான யானையின்
தலைதொறும் பாய்ந்தன, குரங்கு தாவியே. 90

கிட்டின கிளை நெடுங் கோட்ட, கீழ் உகு
மட்டின அருவியின் மதத்த, வானரம்
விட்டன நெடு வரை, வேழம் வேழத்தை
முட்டின ஒத்தன, முகத்தின் வீழ்வன. 91

இடித்தன; உறுக்கின; இறுக்கி ஏய்ந்தன;
தடித்தன; எயிற்றினுல் தலைகள் சந்து அறக்
கடித்தன;—கவிக் குலம். கால்கள் மேற்படத்
துடித்தன குருதியில், துரக ராசியே. 92

88. பசும் படு குருதி - பச்சை இரத்தம்; அசும்பு உற - நீர்க்கசிவு பொருந்தியதனுல்; உருகிய - குழைந்த; குசும்பையின் மலர் - செந்துருக்க மலர்; சுண்ணக் குப்பை - மகரந்தப் பொடிகளின் தொகுதி; 90. உலைதொறும் - அழியும்போதெல்லாம்; இலை துறு மரம் - இலை நெருங்கிய மரம்; 91. மட்டின - தேனையுடையன; 92. தடித்தன - தடிந்தன, வெட்டின.

அடைந்தன கவிக் குலம் எற்ற, அற்றன,
குடைந்து எறி கால் பொர, பூட்கைக் குப்பைகள்;
இடைந்தன முகிற் குலம் இரிந்து சாய்ந்தென
உடைந்தன; குல மருப்பு உகுத்த, முத்தமே. 93

தோல் படத் துதைந்து எழு வயிரத் தூண் நிகர்
கால் பட, கை பட, கால பாசம்போல்
வால் பட, புரண்டனர் நிருதர்; மற்று அவர்
வேல் படப் புரண்டனர், கவியின் வீரரே. 94

மரவமும், சிலையொடு மலையும், வாள் எயிற்று
அரவமும், கரிகளும், பரியும், அல்லவும்,
விரவின கவிக் குலம் வீச, விம்மலால்,
உர வரும் கான் எனப் பொலிந்தது, உம்பரே. 95

தட வரை, கவிக் குலத் தலைவர், தாங்கின,
அடல் வலி நிருதர்தம் அனிக ராசிமேல்
விட விட, விசும்பிடை மிடைந்து வீழ்வன,
படர் கடல் இன மழை படிவ போன்றவே. 96

இழுக்கினர் அடிகளின், இங்கும் அங்குமா,
மழுக்களும், அயில்களும், வாளும், தோள்களும்,
முழுக்கினர், உழக்கினர் மூரி யாக்கையை,
ஒழுக்கினர் நிருதரை, உதிர ஆற்றினே. 97

மிடலுடைக் கவிக் குலம், குருதி வெள்ள நீர்
இடை இடை நீந்தின, இயைந்த யானையின்
திடரிடைச் சென்று, அவை ஒழுக்கச் சேர்ந்தன,
கடலிடைப் புக்கன, கரையும் காண்கில. 98

கால் பிடித்து ஈர்த்து இழி குருதிக் கண்ண, கண்
சேல் பிடித்து எழு திரை ஆற்றில், திண் நெடுங்
கோல் பிடித்து ஒழுகுறு குருடர் கூட்டம்போல்,
வால் பிடித்து ஒழுகின—கவியின் மாலையே.* 99

93. குடைந்து எறி கால் - பெருங் காற்று, சண்டமாருதம்; 94. தோல் - யானை; 95. சிலை - கல்; 97. முழுக்கினர் - முழுகச் செய்தனர்; 99. கண் சேல் - கண்ணை ஒத்த சேல் மீன்.

**செறிய வானரர்க்குத் தேறுதல் கூறி, இலக்குவன் விற்போர் விளைத்தல்**

பாய்ந்தது நிருதர்தம் பரவை; பல் முறை
காய்ந்தது, கடும் படை கலக்கி; கைதொறும்
தேய்ந்தது, சிதைந்தது, சிந்திச் சேண் உறச்
சாய்ந்தது—தகைப் பெருங் கவியின் தானையே. 100

அத் துணை, இலக்குவன், 'அஞ்சல், அஞ்சல்!' என்று,
எத் துணை மொழிகளும் இயம்பி, ஏற்றினன்,
கைத்துணை வில்லினை, காலன் வாழ்வினை,
மொய்த்து எழு நாண் ஒலி முழங்கத் தாக்கினான். 101

நூல் மறைந்து ஒளிப்பினும், நுவன்ற பூதங்கள்
மேல் மறைந்து ஒளிப்பினும், விரிஞ்சன் வீயினும்,
கால் மறைந்து ஒளிப்பு இலாக் கடையின், கண் அகல்
நான்மறை ஆர்ப்பென நடந்தது, அவ் ஒலி. 102

துரந்தன சுடு சரம்; துரந்த, தோன்றல
கரந்தன, நிருதர்தம் கரை இல் யாக்கையின்;
நிரந்தன நெடும் பிணம், விசும்பின் நெஞ்சு உற;
பரந்தன குருதி, அப் பள்ள வெள்ளத்தின். 103

யானையின் கரம் துரந்த, இரத வீரர்தம்
வான் உயர் முடித் தலை தடிந்து, வாசியின்
கால் நிரை அறுத்து, வெங் கறைக்கண் மொய்ம்பரை
ஊனுடை உடல் பிளந்து, ஓடும்—அம்புகள்; 104

வில் இடை அறுத்து, வேல் துணித்து, வீரர்தம்
எல்லிடு கவசமும் மார்பும் ஈர்ந்து, எறி
கல் இடை அறுத்து, மாக் கடிந்து, தேர் அழீஇ,
கொல் இயல் யானையைக் கொல்லும், கூற்றினே. 105

**இலக்குவன் அம்பினால் அழிந்துபட்ட படுகளத்தின் நிலை**

வெற்றி வெங் கரிகளின் வளைந்த வெண் மருப்பு,
அற்று எழு விசைகளின் உம்பர் அண்மின,
முற்று அரு முப் பகல் திங்கள் வெண் முளை
உற்றன விசும்பிடைப் பலவும் ஒத்தன. 106

101. அத் துணை - அவ்வளவில்; 102. கால் மறைந்து ஒளிப்பு இலாக் கடை - கால தத்துவம் மட்டும் ஒடுங்காது உள்ள ஊழி முடிவு; 103. விசும்பின் நெஞ்சு - வானத்தின் நடுவிடம்; பள்ள வெள்ளம் - கடல் நீர்.

கண்டகர் நெடுந் தலை, கனலும் கண்ணன,—
துண்ட வெண் பிறைத் துணை கவ்வி, தூக்கிய
குண்டல மீன் குலம் தழுவி, கோள் மதி
மண்டலம் விழுந்தன போன்ற மண்ணினே. 107

கூர் மருப்பு இணையன, குறைந்த கையன,
கார் மதக் கன வரை கவிழ்ந்து வீழ்வன—
போர்முகக் குருதியின் புணரி புக்கன,
பார் எடுக்குறு நெடும் பன்றி போன்றன. 108

புண் உற உயிர் உகும் புரவி பூட்டு அற,
கண் அகன் தேர்க் குலம், மறிந்த காட்சிய—
எண் உறு பெரும் பதம் வினையின் எஞ்சிட,
மண் உற, விண்ணின் வீழ் மானம் போன்றன. 109

அட, கருங் கவந்தம் நின்று ஆடுகின்றன—
விடற்கு அரும் வினை அறச் சிந்தி, மெய் உயிர்
கடக்க அருந் துறக்கமே கலந்தவாம் என,
உடற் பொறை உவகையின் குனிப்ப ஒத்தன. 110

'ஆடுவ கவந்தம் ஒன்று, ஆறு எண்ணுயிரம்
வீடிய பொழுது' எனும் பனுவல் மெய்யதேல்,
கோடியின் மேல் உள, குனித்த; கொற்றவன்
பாடு இனி ஒருவரால் பகரற்பாலதோ? 111

ஆனையின் குருதியும், அரக்கர் சோரியும்,
ஏனை வெம் புரவியின் உதிரத்து ஈட்டமும்,
கானினும் மலையினும் பரந்த கால் புனல்
வான யாறு ஆம் எனக் கடல் மடுத்தவே. 112

தாக்கிய சரங்களின் தலைகள் நீங்கிய
ஆக்கைய, புரசையோடு அணைந்த தாளன,
மேக்கு உயர் அங்குசக் கைய, வெங் கரி
நூக்குவ, கணிப்பு இல—அரக்கர் நோன் பிணம். 113

கோளுடைக் கணை பட, புரவி கூத்தன,
தோளுடை நெடுந் தலை துமிந்தும், தீர்கில
ஆளுடைக் குறைத்தலை அதிர ஆடுவ—
வாளுடைத் தடக் கைய, வாசி மேலன. 114

109. பெரும் பதம் - பெரிய (துறக்கப்) பதவி; எஞ்சிட - தீர்ந்தொழிய.

வய்வன முனிவர் சொல் அனைய வாளிகள்
கொய்வன தலைகள் தோள்; குறைத்தலைக் குழாம்,
கய் வளை வரி சிலைக் கடுப்பின் கைவிடா
எய்வன எனைப் பல, இரத மேலன. 115

தாதையை, தம்முனை, தம்பியை, தனிக்
காதலை, பேரனை, மருகனை, களத்து
ஊதையின் ஒரு கணை உருவ, மாண்டனர்—
சீதை என்று ஒரு கொடுங் கூற்றம் தேடினர்.* 116

தூண்டு அருங் கணை படத் துமிந்து, துள்ளிய
தீண்ட அரு நெடுந் தலை தழுவிச் சேர்ந்தன,
பூண்டு எழு கரதலம் பொறுக்கலாதன
ஆண்டலை நிகர்த்தன, எருவை ஆடுவ. 117

ஆயிர ஆயிர கோடியாய் வரும்
தீ உமிழ் நெடுங் கணை மனத்தின் செல்வன,
பாய்வன, புகுவன; நிருதர் பல் உயிர்
ஒய்வன, நமன் தமர் கால்கள் ஒயவே. 118

விளக்கு வான் கணைகளால் விளிந்து, மேருவைத்
துளக்குவார் உடற் பொறை துணிந்து, துள்ளுவார்;
இளக்குவார், அமரர் தம் சிரத்தை; ஏன்? முதுகு
உளுக்குவாள் நிலமகள், பிணத்தின் ஓங்கலால். 119

**தாருகன் என்பவன் இலக்குவனுடன் பொருது இறத்தல்**

தாருகன் என்று உளன் ஒருவன்—தான் நெடு
மேருவின் பெருமையான், எரியின் வெம்மையான்,
போர் உவந்து உழக்குவான், புகுந்து தாங்கினன்—
தேரினன், சிலையினன், உமிழும் தீயினன். 120

துரந்தனன் நெடுஞ் சரம், நெருப்பின் தோற்றத்த;
பரந்தன, விசும்பிடை ஒடுங்க; பண்டுடை
வரம்தனின் வளர்வன அவ்றறை, வள்ளலும்,
கரந்தனன் கணைகளால், முனிவு காந்துவான். 121

116. காதல் - அன்புக்குரிய மைந்தன்; 117. ஆண்டலை - ஆண்மகனது தலை போன்ற தலையினையுடையதோர் பறவை; எருவை - பருந்து; 119. விளக்கு வான் கணை - ஒளி விடுகின்ற சிறந்த அம்பு.

அண்ணல்தன் வடிக் கணை துணிப்ப, அற்று அவன்
கண் அகல் நெடுந் தலை, விசையின் கார் என,
விண்ணிடை ஆர்த்தது, விரைவில் மெய் உயிர்
உண்ணிய வந்த வெங் கூற்றும் உட்கவே. 122

**இலக்குவன், காலன் முதலிய ஐவரைக் கொல்லுதல்**

காலனும், குலிசனும், காலசங்கனும்,
மாலியும், மருத்தனும் மருவும் ஐவரும்,
சூலமும் கணிச்சியும் கடிது சுற்றினர்;
பாலமும், பாசமும், அயிலும் பற்றுவார். 123

அன்னவர் எய்தன எறிந்த ஆயிரம்
துன்ன அரும் படைக்கலம் துணித்து, தூவினன்,
நல் நெடுந் தலைகளைத் துணித்து; நால் வகைப்
பல் நெடுந் தானையைப் பாற நூறினான். 124

**இலக்குவன், அதிகாயன் படையுடன் பொருதல்**

ஆண்டு அதிகாயன்தன் சேனை ஆடவர்,
ஈண்டின மதகிரி ஏழ்-எண்ணாயிரம்
தூண்டினர், மருங்கு உறச் சுற்றினர், தொகை
வேண்டிய படைக்கலம் மழையின வீசுவார். 125.

போக்கு இலா வகை புறம் வளைத்துப் பொங்கினர்,
தாக்கினர் திசைதொறும், தடக் கை மால் வரை;
நூக்கினர் படைகளால் நுறுக்கினர்; குழம்பு
ஆக்கினர், கவிகள்தம் குழுவை; ஆர்ப்பினர். 126

எறிந்தன, எய்தன, எய்தி, ஒன்றொடு ஒன்று
அறைந்தன, அசனியின் விசையின் ஆசைகள்
நிறைந்தன, மழை என நெருக்கி நிற்றலால்,
மறைந்தன, உலகொடு திசையும் வானமும். 127

அப் படை அனைத்தையும் அறுத்து வீழ்த்து, அவர்
துப்புடைத் தடக் கைகள் துணித்து, சுற்றிய
முப் புடை மதமலைக் குலத்தை முட்டினான்—
எப் புடை மருங்கினும் எரியும் வாளியான். 128

குன்று அன மதகரி கொம்பொடு கரம் அற,
வன் தலை துமிதர, மஞ்சு என மறிவன
ஒன்று அல; ஒருபதும் ஒன்பதும்,—ஒரு கணை
சென்று அரிதர,—மழை சிந்துவ மதமலை. 129

ஒரு தொடை விடுவன உரும் உறழ் கணை பட,
இரு தொடை புரசையொடு இறுபவர், எறி படை
விருதுடை நிருதர்கள், மலை என விழுவர்கள்;
பொருது உடைவன, மத மழையன புகர் மலை. 130

பருமமும், முதுகு இடு படிகையும், வலி படர்
மருமமும், அழிபட, நுழைவன வடி கணை,
உருமினும் வலியன, உருள்வன திசை திசை,
கரு மலை நிகர்வன;—கதமலை கனல்வன. 131

இறுவன கொடியவை, எரிவன இடை இடை
துறுவன சுடு கணை, துணிவன மதகரி;
அறுவன, அவை அவை கடவினர் தடி தலை;
வெறுமைகள் கெடுவன, விழி குழி கழுதுகள். 132

மிடலொடு விடு கணை மழையினும் மிகை உள
படலொடும், உரும் எறி பரு வரை நிலையன,
உடலொடும் உருள் கரி உதிரமது, உரு கெழு
கடலொடு பொருதது, கரியொடு கரி என. 133

மேலவர் படுதலின், விடும் முறை இல, மிடல்
ஆலமும் அசனியும் அனையன, அடு கரி
மால் உறு களியன, மறுகின, மதம் மழை
போல்வன, தம தம எதிர் எதிர் பொருவன. 134

கால் சில துணிவன; கரம் அறுவன; கதழ்
வால் சில துணிவன; வயிறுகள் வெளி பட,
நால் சில குடர் அன; நகழ்வன சில—வரு
தோல் சில, கணை பல சொரிவன மழை என. 135

முட்டின முட்டு அற, முரண் உறு திசை நிலை
எட்டினும் எட்ட அரு நிலையன எவை? அவன்
விட்டன விட்டன விடு கணை படுதொறும்,
பட்டன பட்டன, படர் பணை குவிவன. 136

131. பருமம் - யானையின் கழுத்தில் இடப்படும் கயிறு; படிகை - யானையின் முதுகில் மேல் இடப்படும் தவிசு, அம்பாரி; மருமம் - உயிர்நிலை; 132. துறுதல் - நெருங்கிச் செறிதல்; 133. இரத்தவெள்ளம் யானையுடன் யானை முட்டிப் பொருது நிற்பதனையொத்துக் கடல் நீருடன் எதிர்த்து நின்றது- 134. மேலவர் - மேலே ஏறியமர்ந்து செலுத்தும் யானை வீரர்; 135. நிகழ்வன; அழுந்தி வருந்தின; தோல் - யானை; 136. பணை - தந்தம்.

அறுபதின் முதல் இடை நால் ஒழி ஆயிரம்
இறுதிய மத கரி இறுதலும், எரி உமிழ்
தறுகணர், தகை அறு நிலையினர், சலம் உறு
கறுவினர், அவன் எதிர் கடவினர், கடல் என. 137

எல்லை இல் மத கரி, இரவினது இனம் நிகர்
செல்வன, முடிவு இல, தெறு தொழில் மறவனை,
வில்லியை, இனிது உற விடு கணை மழையினர்,
'கொல்லுதி' என, எதிர் கடவினர்—கொடியவர். 138

வந்தன மத கரி வளைதலின், மழை பொதி
செந் தனி ஒரு சுடர் என மறை திறலவன்,
இந்திரதனு என, எழு சிலை குனிவுழி,
தந்தியின் நெடு மழை சிதறின, தரையின. 139

மய்யல் தழை செவி முன் பொழி மழை பெற்றன, மலையின்
மெய் பெற்றன, கடல் ஒப்பன, வெயில் உக்கன விழியின்,—
மொய் பெற்று உயர் முதுகு இற்றன, முகம் உக்கன, முரண் வெங்
கய் அற்றன; மதம் முற்றிய கணிதத்து இயல்,—கத மா. 140

உள் நின்று அலை கடல் நீர் உக, இறுதிக் கடை உறு கால்
எண்ணின்தலை நிமிர்கின்றன, இகல் வெங் கணை, இரணப்
பண்ணின் படர் தலையில் பட, மடிகின்றன பல ஆம்,
மண்ணின்தலை உருள்கின்றன—மழை ஒத்தன மதமா. 141

பிறை பற்றிய எனும் நெற்றிய, பிழை அற்றன பிறழ,
பறை அற்றம் இல் விசை பெற்றன, பரியக் கிரி, அமரர்க்கு
இறை, அற்றைய முனிவில் படை எறியப் புடை எழு பொன்
சிறை அற்றன என, இற்றன—சினம் முற்றிய மதமா. 142

கதிர் ஒப்பன கணை பட்டுள, கதம் அற்றில, கதழ் கார்
அதிரத் தனி அதிர்கைக் கரி அளவு அற்றன உளவா,
எதிர்பட்டு அனல் பொழிய, கிரி இடறி, திசை எழு கார்
உதிரத்தொடும் ஒழுகி, கடல் நடு உற்றவும் உளவால். 143

137. அறுபதின் முதலினோடு ஆறு அமை ஆயிரம் - அறுபத்தாறாயிரம்; 139. குனிவுழி - வளைத்தபொழுது; தந்தியின் நெடு மழை - யானைகளாகிய நீண்ட மேகங்கள்; 140. மய்யல் - மதமயக்கம்; 141. இரணப் பண்ணின் படர் தலை - பொன்னாலியன்ற அலங்காரத்தை உடைய பரந்த மத்தகம்; 142. பறை - பறத்தல், பறவை எனலும் ஆம்; அற்றம் - சோர்வு; 143. கதழ்-விரைவு.

கண்ணின்தலை அயில் வெங் கணை பட நின்றன, காணு
எண்ணின்தலை நிமிர் வெங் கதம் முதிர்கின்றன, இனமா
மண்ணின் தலை நெரியும்படி திரிகின்றன, மலைபோல்
உள் நின்று அலை நிருதக் கடல் உலறிட்டன உளவால். 144

ஓர் ஆயிரம் அயில் வெங் கணை, ஒரு கால் விடு தொடையின்,
கார் ஆயிரம் விடு தாரையின் நிமிர்கின்றன, கதுவுற்று,
ஈராயிரம் மத மால் கரி விழுகின்றன; இனி மேல்
ஆராய்வது என்? அவன் வில் தொழில் அமரேசரும் அறியார்!

தேரும், தெறு கரியும், பொரு சின மள்ளரும், வய வெம்
போரின்தலை உகள்கின்றன புரவிக் குலம் எவையும்,
பேரும் திசை பெறுகின்றில—பணையின் பிணை மத வெங்
காரின் தரு குருதிப் பொரு கடல் நின்றன கடவா. 146

**இராவணன் அனுப்பிய யானைப் படையை இலக்குவன் அழித்தல்**

நூறாயிரம் மத வெங் கரி, ஒரு நாழிகை நுவல,
கூறு ஆயின; பயமுற்று ஒரு குலைவு ஆயின; உலகம்
தேருதன, மலை நின்றன, தெரியாதன, சின மா
வேறு ஆயின, அவை யாவையும் உடனே வர விட்டான். 147

ஒரு கோடிய மத மால் கரி, உள வந்தன உடன் முன்
பொரு கோடியில் உயிர் உக்கன ஒழிய, பொழி மத யாறு
அருகு ஓடுவ, வர உந்தினர்—அசனிப் படி கணை கால்
இரு கோடுடை மத வெஞ் சிலை இள வாள் அரி எதிரே. 148

உலகத்து உள மலை எத்தனை, அவை அத்தனை உடனே
கொல நிற்பன, பொருகிற்பன, புடை சுற்றின; குழுவாய்
அலகு அற்றன, சினம் முற்றிய, அனல் ஒப்பன, அவையும்,
தலை அற்றன, கரம் அற்றன, தனி வில் தொழில்அதனல். 149

நாலாயின, நவ யோசனை நனி வன் திசை எவையும்,
மால் ஆயின மத வெங் கரி திரிகின்றன வரலும்,
'தோல் ஆயின, உலகு எங்கணும்' என அஞ்சினர்; துகளே-
போல் ஆயின, வய வானமும்; ஆறுனது, புவியே. 150

*144. இனமா - யானைகள்; 145. கதுவுற்று - கவ்வப்பட்டு; அமரேசர் - அமர ஈசர், தேவர்களில் தலைவர்; 146. பணை - தந்தம்; பணையின் மதம் பிணை வெங்கார் என்க; 149. அலகு - அளவு; 150. நாலாயின நவ யோசனை - முப்பத்தாறு யோசனை; நவம் - ஒன்பது.*

கடை கண்டில, தலை கண்டில, கழுதின் திரள், பிணமா
இடை கண்டன, மலை கொண்டென எழுகின்றன; திரையால்
புடைகொண்டு எறி குருதிக் கடல் புணாகின்றன, பொறி வெம்
படை கொண்டு இடை படர்கின்றன மத யாறுகள் பலவால்.

ஒற்றைச் சரம்அதனோடு ஒரு கரி பட்டு உக, ஒளிர் வாய்
வெற்றிக் கணை, உரும் ஒப்பன, வெயில் ஒப்பன, அயில்போல்
வற்றக் கடல் சுடுகிற்பன, மழை ஒப்பன பொழியும்
கொற்றக் கரி பதினாயிரம் ஒரு பத்தியில் கொல்வான். 152

மலை அஞ்சின; மழை அஞ்சின; வனம் அஞ்சின; பிறவும்
நிலை அஞ்சின, திசை வெங் கரி; நிமிர்கின்றன கடலின்
அலை அஞ்சின; பிறிது என், சில? தனி ஐங் கர கரியும்,
கொலை அஞ்சுதல் புரிகின்றது—கரியின் படி கொளலால். 153

கால் ஏறின சிலை நாண் ஒலி, கடல் ஏறுகள் பட, வான்-
மேல் ஏறின, மிசையாளர்கள் தலை மெய்தொறும் உருவ,
கோல் ஏறின—உரும்ஏறுகள் குடியேறின எனலாய்,
மால் ஏறின களி யானைகள் மழைஏறு என மறிய. 154

**அனுமன், யானைப் படையை அழித்தல்**

இவ் வேலையின், அனுமான்,—முதல் எழு வேலையும் அனையார்,
வெவ் வேலவர், செல ஏவிய கொலை யானையின் மிகையைச்
செவ்வே உற நினையா, ‘ஒரு செயல் செய்குவென்’ என்பான்,
தவ்வேலென வந்தான்,—அவன் தனி வேல் எனத் தகையான்.

ஆர்த்து அங்கு அனல் விழியா, முதிர் மத யானையை அனையான்,
தீர்த்தன் கழல் பரவா, முதல் அரிபோல் வரு திறலான்,
வார்த் தங்கிய கழலான்,—ஒரு மரன், நின்றது, நமனார்
போர்த் தண்டினும் வலிது ஆயது, கொண்டான்—புகழ் கொண்டான்.

151. கடை - இறுதி; தலை - தொடக்கம்; 152. அயில் - வேல், ஈண்டு உக்கிரகுமார பாண்டியன் கடல் சுவறவிட்ட வேற்படை; உக்கிரகுமார பாண்டியனுடன் இகல் கொண்ட இந்திரன் வருணனைக்கொண்டு கடலைப் பொங்கி எழச் செய்து மதுரை நகரத்தை அழிக்கத் தொடங்குகையில், சிவபெருமான் கனவில் தோன்றிப் பணித்தவாறு பாண்டியன் வேற்படையை ஏவிக் கடல் நீரை வற்றச் செய்து வருணனை அடக்கினன் என்பது புராணம். 153. ஐங் கர கரி - ஐந்து கரங்களையுடைய கணபதியாகிய யானை; 154. கால் ஏறின சிலை நாண் - இருமுனைகளிலும் பொருந்திய வில் நாண்; கடல் ஏறு - கடலிடத்தே வாழும் சுரு, மகரம் முதலிய பெரு மீன்கள்; மிசையாளர்கள் - யானை மேலுள்ள வீரர்கள்; 155. தவ்வேலென - தாவிக் குதியற்க, திடீரென்று எனினும் ஆம்; 156. முதல் அரி - முழுமுதற் பொருளாகிய நரசிங்கமூர்த்தி.

கருங் கார் புரை நெடுங் கையன களி யானைகள் அவை சென்று
ஒருங்கு ஆயின, உயிர் மாய்ந்தன; பிறிது என், பல உரையால்?—
வரும் காலனும், பெரும் பூதமும், மழை மேகமும், உடனுப்
பொரும்காலையில் மலைமேல் விழும் உரும்ஏறு எனப் புடைத்தான். 157

மிதியால் பல, விசையால் பல, மிடலால் பல, இடறும்
கதியால் பல, தெழியால் பல, காலால் பல, வாலின்
நுதியால் பல; நுதலால் பல, நொடியால் பல, பயிலும்
குதியால் பல, குமையால் பல, கொன்றான்—அறம் நின்றான்.

பறித்தான் சில, பகிர்ந்தான் சில, வகிர்ந்தான் சில, பணை போன்று
இறுத்தான் சில, இடந்தான் சில, பிளந்தான் சில, எயிற்றால்
கறித்தான் சில, கவர்ந்தான் சில, கரத்தால் சில பிடித்தான்,
முறித்தான் சில, திறத்து ஆனையின் நெடுங் கோடுகள்—முனிந்தான்.

வாரிக் குரை கடலில் புக விலகும்; நெடு மரத்தால்
சாரித்து அலைத்து உருட்டும்; நெடுத் தலத்தில் படுத்து அரைக்கும்;
பாரில் பிடித்து அடிக்கும்; குடர் பறிக்கும்; படர் விசும்பின்
ஊரில் செல, எறியும்; மிதித்து உழக்கும்; முகத்து உதைக்கும்;

வாலால் வர வளைக்கும், நெடு மலைப் பாம்பு என; வளையா,
மேல் ஆளொடு பிசையும்; முழு மலைமேல் செல, விலக்கும்;
ஆலாலம் உண்டவனே என, அகல் வாயின் இட்டு அதுக்கும்;
தோல் ஆயிரம் இமைப்போதினின் அரிஏறு எனத் தொலைக்கும்;

சய்யத்தினும் உயர்வுற்றன தறுகண் களி மதமா,
நொய்தின் கடிது எதிர் உற்றன, நூறாயிரம், மாறா
மய்யல் கரி உகிரின் சில குழை புக்கு உரு மறைய,
தொய்யல் படர் அழுவக் கொழுஞ் சேறாய் உகத் துகைப்பான்.

வேறாயின மத வெங் கரி ஒரு கோடியின், விறலோன்,
நூறாயிரம் படுத்தான்; இது நுவல்காலையின், இளையோன்,
கூறாயின என அன்னவை கொலை வாளியின் கொன்றான்;
தேறாதது ஓர் பயத்தால் நெடுந் திசை காவலர் இரிந்தார். 163

158. இடறும் கதி - இடறிக்கொண்டு நடக்கும் நடை; நொடி - கைவிரல் இரண்டை முறுக்கித் தெறித்தல்; 159. பறித்தல் - வேருடன் பிடுங்குதல்; பகிர்தல் - பிளத்தல்; வகிர்தல் - கூறுபடுத்தல் ; கறித்தல் - கடித்தல்; 160. விலகும் - எறியும்; சாரித்து - சாரி திரிந்து; 162. குழை புக்கு உரு மறைய - தழைகளைப் போன்று உள்ளே அழுந்தி உருவம் மறைய; 163. தேறாதது ஓர் பயம் - தேறுதல் கூறித் தெளிவிக்க ஒண்ணாத ஒப்பற்ற பயம்.

**தேவாந்தகன் அனுமனோடு பொருது இறத்தல்**

இரிந்தார், திசை திசை எங்கணும் யானைப் பிணம் எற்ற,
நெரிந்தார்களும்; நெரியாது உயிர் நிலைத்தார்களும் நெருக்கால்
எரிந்தார்; நெடுந் தடந் தேர் இழிந்து எல்லாரும் முன் செல்ல,
திரிந்தான் ஒரு தனியே, நெடுந் தேவாந்தகன், சினத்தான். 164

உதிரக் கடல், பிண மால் வரை, ஒன்று அல்லன பலவாய்
எதிர, கடு நெடும் போர்க் களத்து ஒரு தான் புகுந்து ஏற்றான்,
கதிர் ஒப்பன சில வெங் கணை அனுமான் உடல் கரந்தான்,
அதிரக் கடல்—நெடுந் தேரினன்—மழைஏறு என ஆர்த்தான்.

அப்போதினின், அனுமானும் ஓர் மரம் ஓச்சிநின்று ஆர்த்தான்,
'இப்போது இவன் உயிர் போம்' என, உரும்ஏறு என எறிந்தான்;
வெப்போ என வெயில் கால்வன அயில் வெங் கணை, விசையால்,
'துப்போ?' என, துணியாம் வகை, தேவாந்தகன் துரந்தான்.

மாறு ஆங்கு ஒரு மலை வாங்கினன், வய வானரக் குலத்தோர்க்கு
ஏறு; ஆங்கு அதும் எறியாதமுன், முறியாய் உக எய்தான்;
கோல் தாங்கிய சிலையானுடன் நெடு மாருதி கொதித்தான்,
பாறு ஆங்கு எனப் புகப் பாய்ந்து, அவன் நெடு வில்லினைப் பறித்தான்.

பறித்தான் நெடும் படை, வானவர் பலர் ஆர்த்திட, பலவா
முறித்தான்; அவன் வலி கண்டு, உயர் தேவாந்தகன் முனிந்தான்,
மறித்து ஆங்கு ஒரு சுடர்த் தோமரம் வாங்கா, மிசை ஓங்கா,
செறித்தான், அவன் இடத் தோள்மிசை; இமையோர்களும் திகைத்தார்.

சுடர்த் தோமரம் எறிந்து ஆர்த்தலும், கனல் ஆம் எனச் சுளித்தான்,
அடல் தோமரம் பறித்தான், திரிந்து உரும்ஏறு என ஆர்த்தான்,
புடைத்தான; அவன் தடந் தேரொடு நெடுஞ் சாரதி புரண்டான்;—
மடல் தோகையர் வலி வென்றவன்—வானோர் முகம் மலர்ந்தார். 169

சூலப் படை தொடுவான்தனை இமையாதமுன் தொடர்ந்தான்;
ஆலத்தினும் வலியானும் வந்து, எதிரே புகுந்து அடர்த்தான்;
காலற்கு இரு கண்ணுன் தன கையால் அவன் கதுப்பின்
மூலத்திடைப் புடைத்தான், உயிர் முடித்தான், சிரம் மடித்தான். 170

166. வெப்போ - கொடிய நெருப்போ; துணியாம் வகை - துண்டுபட்டுச் சிதறுமாறு; 169. மடல் தோகையர் வலி - மடப்பம் பொருந்திய மகளிர் ஏதுவாக உண்டாகும் காமமாகிய அகப் பகை.

**அதிகாயன்-அனுமன் வீர உரை**

கண்டான் எதிர் அதிகாயனும், கனல் ஆம் எனக் கனன்றான்,
புண்தான் எனப் புனலோடு இழி உதிரம் விழி பொழிவான்,
'உண்டேன்! இவன் உயிர் இப்பொழுது; ஒழியேன்' என உரையா,
'திண் தேரினைக் கடிது ஏவு' என, சென்றான்; அவன் நின்றான்.

அன்னான் வரும் அளவின்தலை, நிலைநின்றன அனிகம்;
பின் ஆனதும் முன் ஆனது; பிறிந்தார்களும் செறிந்தார்;
பொன்னால் உயர் நெடு மால் வரை போல்வான் எதிர் புக்கான்,
சொன்னான் இவை, அதிகாயனும், வட மேருவைத் துணிப்பான்: 172

'தேய்த்தாய், ஒரு தனி எம்பியைத் தலத்தோடு ஒரு திறத்தால்;
போய்த் தாவினை நெடு மா கடல், பிழைத்தாய்; கடல் புகுந்தாய்,
வாய்த்தானையும் மடித்தாய், அது கண்டேன், எதிர் வந்தேன்;
ஆய்த்து ஆயது முடிவு, இன்று உனக்கு; அணித்தாக வந்து, உடுத்தாய்.

'இன்று அல்லது, நெடு நாள் உனை ஒரு நாளினும் எதிரேன்;
ஒன்று அல்லது செய்தாய் எமை; இளையோனையும் உனையும்
வென்று அல்லது மீளாத என் மிடல் வெங் கணை மழையால்
கொன்று அல்லது செல்வேன்; இது கொள்' என்றனன், கொடியோன்.

**அனுமன், 'திரிசிரனையும் அழை' என்று கூறல்**

'பிழையாது; இது பிழையாது' என, பெருங் கைத்தலம் பிசையா,
மழை ஆம் எனச் சிரித்தான்—வட மலை ஆம் எனும் நிலையான்—
'முழை வாள் அரி அனையானையும் எனையும் மிக முனிவாய்;
அழையாய் திரிசிரத்தோனையும். நிலத்தோடும் இட்டு அரைப்பான்.' 175

**திரிசிரத்தான் வர, அனுமன் அவனோடு பொருதல்**

'ஆம், ஆம்!' என, தலை மூன்றுடையவன் ஆர்த்து வந்து, அடர்த்தான்;
கோமான் தனிப் பெருந் தூதனும், எதிரே செருக் கொடுத்தான்,
'காமாண்டவர், கல்லாதவர், வல்லீர்!' எனக் கழறு,
நா மாண்டு அற, அயல் நின்று உற நடுவே புக நடந்தான். 176

**திரிசிரத்தானை அழித்து, அனுமன் மேல் திசை வாயில் சேருதல்**

தேர்மேல் செலக் குதித்தான், திரிசிரத்தானை ஓர் திறத்தால்,
கார் மேல் துயில் மலை போலியைக் கரத்தால் பிடித்து எடுத்தான்,
பார்மேல் படுத்து அரைத்தான், அவன் பழி மேற்படப் படுத்தான்,
'போர் மேல்திசை நெடு வாயிலின் உளது ஆம்' என, போனான். 177

173. வாய்த்தான்- பொருதற்குக் கிடைத்தவன், தேவாந்தகன்; ஆய்த்து ஆயது - ஆயிற்று ஆயிற்று, விரைவு பற்றிய அடுக்கு; 176. காமாண்டவர் - காமத்தினால் மிக்கவர்; நா மாண்டு அற - நாக்கு வற்றி ஒழிய.

அதிகாயன், இலக்குவனுடன் பொரத் தேரைச் செலுத்துதல்

இமையிடையாகச் சென்றான்; இகல் அதிகாயன் நின்றான்,
அமைவது ஒன்று ஆற்றல் தேற்றான், அருவியோடு அழல் கால் கண்ணான்,
'உமையொருபாகனேயும், இவன் முனிந்து உருத்த போது,
கமையிலன் ஆற்றல்' என்னா, கதத்தொடும் குலேக்கும் கையான், 178

'பூணிப்பு ஒன்று உடையன் ஆகிப் புகுந்த நான், புறத்து நின்று,
பாணித்தல் வீரம் அன்றால்; பரு வலி படைத்தோர்க்கு எல்லாம்
ஆணிப்பொன் ஆனான்தன்னைப் பின்னும் கண்டு அறிவென்' என்னா,
தூணிப் பொன் புறத்தான், திண் தேர் இளவல்மேல் தூண்டச் சொன்
[னான்.

தேர் ஒலி கடலைச் சீற, சிலை ஒலி மழையைச் சீற,
போர் ஒலி முரசின் ஓதை திசைகளின் புறத்துப் போக,
தார் ஒலி கழற் கால் மைந்தன் தானையும் தானும் சென்றான்;
வீரனும் எதிரே நின்றான், விண்ணவர் விசையம் வேண்ட. 180

அங்கதன் தோள்மேல் நின்று இலக்குவன் பொருதல்

வல்லையின் அணுக வந்து வணங்கினன், வாலி மைந்தன்;
'சில்லி அம் தேரின் மேலான், அவன் அமர் செவ்விது அன்றால்;
வில்லியர் திலதம் அன்ன நின் திருமேனி தாங்கப்
புல்லியன்எனினும், என் தோள் ஏறுதி, புனித!' என்றான். 181

'ஆம்' என, அமலன் தம்பி அங்கதன் அலங்கல் தோள்மேல்
தாமரைச் சரணம் வைத்தான்; கலுழனின் தாங்கி நின்ற
கோமகன் ஆற்றல் நோக்கி, குளிர்கின்ற மனத்தர் ஆகி,
பூ மழை பொழிந்து வாழ்த்திப் புகழ்ந்தனர், புலவர் எல்லாம்.

ஆயிரம் புரவி பூண்ட அதிர் குரல் அசனித் திண் தேர்
போயின திசைகள் எங்கும், கறங்கு எனச் சாரி போமால்;
மீ எழின் உயரும்; தாழின் தாழும்; விண் செல்லின் செல்லும்;—
தீ எழ உவரி நீரைக் கலக்கினான் சிறுவன் அம்மா! 183

அத் தொழில் நோக்கி, ஆங்கு வானரத் தலைவர் ஆர்த்தார்;
'இத் தொழில் கலுழற்கேயும் அரிது' என, இமையோர் எல்லாம்
கைத்தலம் குலேத்தார் ஆக, களிற்றினும் புரவிமேலும்
தைத்தன, இளைய வீரன் சரம் எனும் தாரை மாரி. 184

179. பூணிப்பு - மேற்கொள், தீர்மானம்; பாணித்தல் - காலத்தை நீட்டித்தல்; 184. கைத்தலம் குலேத்தல் - கைகளை விதிர்விதித்தல்.

முழங்கின முரசம்; வேழம் முழங்கின; மூரித் திண் தேர்
முழங்கின; முகரப் பாய்மா முழங்கின; முழு வெண் சங்கம்
முழங்கின; தனுவின் ஓதை முழங்கின; கழலும் தாரும்
முழங்கின; தெழிப்பும் ஆர்ப்பும் முழங்கின, முகிலின் மும்மை.

கரி பட, காலாள் வெள்ளம் களம் பட, கலினக் காலப்
பரி பட, கண்ட கூற்றும் பயம் பட, பைம் பொன் திண் தேர்
எரிபட, பொருத பூமி இடம் பட, எதிர்ந்த எல்லாம்
முரிபட, பட்ட, வீரன் முரண் கணை மூரி மாரி. 186

**இலக்குவன் வினவும், அதிகாயன் மறுமொழியும்**

மன்னவன் தம்பி, மற்று அவ் இராவணன் மகனை நோக்கி,
'என் உனக்கு இச்சை? நின்ற எறி படைச் சேனை எல்லாம்
சின்னபின்னங்கள் பட்டால், பொருதியோ? திரிந்து நீயே
நல் நெடுஞ் செருச் செய்வாயோ? சொல்லுதி, நயந்தது' என்றான்.

'யாவரும் பொருவர் அல்லர், எதிர்ந்துள யானும் நீயும்,
தேவரும் பிறரும் காண, செருவது செய்வ எல்லாம்;
'காவல் வந்து உன்னைக் காப்பார் காக்கவும் அமையும்; வேறே
கூவியது அதனுக்கு அன்றோ?' என்றனன்—கூற்றின் வெய்யோன்.

'உமையனே காக்க; மற்று அங்கு உமை ஒரு கூறன் காக்க;
இமையவர் எல்லாம் காக்க; உலகம் ஓர் ஏழும் காக்க;
சமையும் உன் வாழ்க்கை, இன்றோடு' என்று, தன் சங்கம் ஊதி,
அமை உருக் கொண்ட கூற்றை நாண் எறிந்து, உருமின் ஆர்த்தான்.

**இலக்குவன் புன்முறுவலுடன் அதிகாயனோடு பொருதல்**

அன்னது கேட்ட மைந்தன், அரும்பு இயல் முறுவல் தோன்ற,
'சொன்னவர் வாரார்; யானே தோற்கினும், தோற்கத் தக்கேன்;
என்னை நீ பொருது வெல்லின், அவரையும் வென்றி' என்னா,
மின்னினும் மிளிர்வது ஆங்கு ஓர் வெஞ் சரம் கோதது விட்டான். 190

விட்ட வெம் பகழிதன்னை, வெற்பினை வெதுப்பும் தோளான்,
சுட்டது ஓர் பகழிதன்னால் விசும்பிடைத் துணித்து நீக்கி,
எட்டினோடு எட்டு வாளி, 'இலக்குவ! விலக்காய்' என்னா,
திட்டியின் விடத்து நாகம் அனையன, சிந்தி, ஆர்த்தான். 191

185. முகரம் - கனைத்தல்; 188. வேறே கூவுதல் - தனி நின்று போர்செய்தற்கு அறைகூவி அழைத்தல்; 189. உமையன் - உம் தமையனாகிய இராமன்.

ஆர்த்து அவன் எய்த வாளி அனைத்தையும் அறுத்து மாற்றி,
வேர்த்து, ஒலி வயிர வெங் கோல், மேருவைப் பிளக்கற்பால,
தூர்த்தனன், இராமன் தம்பி; அவை எலாம் துணித்துச் சிந்தி,
கூர்த்தன பகழி கோத்தான், குபேரனை ஆடல் கொண்டான்.

எய்தனன் எய்த எல்லாம், எரி முகப் பகழியாலே,
கொய்தனன் அகற்றி, ஆர்க்கும் அரக்கனைக் குரிசில் கோபம்
செய்தனன், துரந்தான் தெய்வச் செயல் அன்ன கணையை; வெங்கோல்
நொய்து அவன் கவசம் கீறி நுழைவன, பிழைப்பு இலாத. 193

நூறு கோல் கவசம் கீறி நுழைதலும், குழைவு தோன்றத்
தேறல் ஆம் துணையும், தெய்வச் சிலை நெடுந் தேரின் ஊன்றி,
ஆறினன்; அதுகாலத்து அங்கு அவனுடை அனிகம் எல்லாம்
கூறுகூறாக்கி அம்பால், கோடியின் மேலும் கொன்றான். 194

புடை நின்றார் புரண்டவாறும், போகின்ற புங்க வாளி
கடைநின்று கணிக்க ஆங்கு ஓர் கணக்கு இலாவாறும் கண்டான்;
இடைநின்ற மயக்கம் தீர்ந்தான்; ஏந்திய சிலையன் காந்தி,
தொடை நின்ற பகழி மாரி, மாரியின் மும்மை தூர்த்தான். 195

வான் எலாம் பகழி, வானின் வரம்பு எலாம் பகழி, மண்ணும்
தான் எலாம் பகழி, குன்றின் தலை எலாம் பகழி, சார்ந்தோர்
ஊன் எலாம் பகழி, நின்றோர் உயிர் எலாம் பகழி, வேலை
மீன் எலாம் பகழி, ஆக வித்தினன்—வெகுளி மிக்கோன். 196

மறைந்தன திசைகள் எல்லாம்; வானவர் மனமே போலக்
குறைந்தன, சுடரின் மும்மைக் கொழுங் கதிர்; குவிந்து, ஒன்று ஒன்றை
அறைந்தன, பகழி; வையம் அதிர்ந்தது; விண்ணும் அஃதே;
நிறைந்தன, பொறியின் குப்பை; நிமிர்ந்தன, நெருப்பின் கற்றை. 197

'முற்றியது இன்றே அன்றோ, வானர முழங்கு தானை?
மற்று இவன்தன்னை வெல்ல வல்லனோ, வள்ளல் தம்பி?
கற்றது காலனோடோ, கொலை இவன்? ஒருவன் கற்ற
வில் தொழில் என்னே!' என்னா, தேவரும் வெருவலுற்றார். 198

அங்கதன் நெற்றிமேலும், தோளினும், ஆகத்துள்ளும்,
புங்கமும் தோன்றாவண்ணம், பொரு சரம் பலவும் போக்கி,
வெங் கணை இரண்டும் ஒன்றும் வீரன்மேல் ஏவி, மேகச்
சங்கமும் ஊதி, விண்ணோர் தலை பொதிரெறிய ஆர்த்தான். 199

*192.* வயிர வெங் கோல் - திண்ணிய கொடிய அம்பு; ஆடல் - வெற்றி; *194.* குழைவு - வருத்தம், மயக்கம்; தேறல் ஆம்; துணை - தெளிவு பெறும் அளவும்; *195.* புங்கம் - கூர்மை; *198.* முற்றியது - தீர்ந்து ஒழிந்தது; *199.* பொதிரெறிதல் - நடுக்கமுறுதல்.

வாலி சேய் மேனிமேலும், மழை பொரு குருதி வாரி,
கால் உயர் வரையின் செங் சேழ் அருவிபோல் ஒழுகக் கண்டான்;
கோல் ஒரு பத்து-நூற்ருல் குதிரையின் தலைகள் கொய்து,
மேலவன் சிரத்தைச் சிந்தி, வில்லையும் துணித்தான்—வீரன்.

மாற்று ஒரு தடந் தேர் ஏறி, மாறு ஒரு சிலையும் வாங்கி,
ஏற்ற வல் அரக்கன்தன்மேல், எரி முகக் கடவுள் என்பான்
ஆற்றல் சால் படையை விட்டான், ஆரியன்; அரக்கன் அம்மா,
வேற்றுள, 'தாங்க!' என்ளு, வெய்யவன் படையை விட்டான்.

பொரு படை இரண்டும் தம்மில் பொருதன; பொருதலோடும்,
எரி கணை, உருமின் வெய்ய, இலக்குவன் துரந்த, மார்பை
உருவின, உலப்பு இலாத; உளைகிலன், ஆற்றல் ஓயான்,
சொரி கணை மழையின் மும்மை சொரிந்தனன், தெழிக்கும் சொல்
[லான்.

பின் நின்ருர் முன் நின்ருரைக் காணலாம் பெற்றித்து ஆக,
மின் நின்ற வயிர வாளி திறந்தன, மேனி முற்றும்;
அந் நின்ற நிலையின், ஆற்றல் குறைந்திலன், ஆவி நீங்கான்.
பொன் நின்ற வடிம்பின் வாளி மழை எனப் பொழியும் வில்லான்.

காற்றரசன், 'இவன் நான்முகன் படையால் இறப்பான்' எனலும்,
இலக்குவன் அப்படையால் அதிகாயன் தலையை அறுத்தலும்

கோல் முகந்து, அள்ளி அள்ளி, கொடுஞ் சிலை நாணில் கோத்து,
கால்முகம் குழைய வாங்கி, சொரிகின்ற காளை வீரன்-
பால் முகம் தோன்ற நின்று, காற்றினுக்கு அரசன், 'பண்டை
நான்முகன் படையால் அன்றிச் சாகிலன், நம்ப!' என்ருன்.

'நன்று' என உவந்து, வீரன், நான்முகன் படையை வாங்கி,
மின் தனி திரண்டது என்னச் சரத்தொடும் கூட்டி விட்டான்,
குன்றினும் உயர்ந்த தோளான் தலையினைக் கொண்டு, அவ் வாளி
சென்றது, விசும்பினூடு; தேவரும் தெரியக் கண்டார். 205

பூ மழை பொழிந்து, வானோர், 'போயது, எம் பொருமல்' என்ருர்;
தாம் அழைத்து அலறி, எங்கும் இரிந்தனர், அரக்கர் தள்ளி;
தீமையும் தகைப்பும் நீங்கித் தெளிந்தது, குரக்குச் சேனை;
கோமகன் தோளின்நின்றும், குதித்தனன், கொற்ற வில்லான்.

200. கால் உயர் வரை - அடிப்பரப்பு உயர்ந்தோங்கிய தாழ்வரை;
204. நம்பன் - விரும்பத்தக்க குணங்களையுடையோன்; 206. தகைப்பு - தடை.

வீடணன், 'இந்திரசித்தும் இறப்பது உறுதியே' என்று எண்ணுதல்

வெந் திறல் சித்தி கண்ட வீடணன், வியந்த நெஞ்சன்,
அந்தரச் சித்தர் ஆர்க்கும் அமலையும் கேட்டான்; 'ஐயன்
மந்திரசித்தி அன்ன சிலைத் தொழில் வலி இதுஆயின்,
இந்திரசித்தினுர்க்கும் இறுதியே இயைவது' என்ருன். 207

நராந்தகன் அங்கதனுடன் பொருது, வீழ்தல்

'"ஏந்து எழில் ஆகத்து எம்முன் இறந்தனன்" என்று, நீ நின்
சாந்து அகல் மார்பு, திண் தோள், நோக்கி, நின் தனுவை நோக்கி,
போம் தகைக்கு உரியது அன்ருல்; போகலை; போகல்!' என்னு,
நாந்தகம் மின்ன, தேரை நராந்தகன் நடத்தி வந்தான். 208

தேரிடைநின்று, கண்கள் தீ உக, சீற்றம் பொங்க,
பாரிடைக் கிழியப் பாய்ந்து, பகலிடைப் பரிதி என்பான்
ஊரிடை நின்ருன் என்ன, கேடகம் ஒரு கை தோன்ற,
நீருடை முகிலின் மின்போல், வாளொடு நிமிர வந்தான். 209

வீசின மரமும் கல்லும் விலங்கலும், வீற்று வீற்று,
ஆசைகள்தோறும் சிந்த, வாளினுல் அறுத்து மாற்றி,
தூசியும், இரண்டு கையும், நெற்றியும், சுருண்டு, நீர்மேல்
பாசியின் ஒதுங்க, வந்தான்; அங்கதன் அதனைப் பார்த்தான்.

மரம் ஒன்று விரைவின் வாங்கி, வாய் மடித்து உருத்து, வள்ளல்
சரம் ஒன்றின் கடிது சென்று, தாக்கினுன்; தாக்கினுன்தன்
கரம் ஒன்றில் திரிவது ஆரும் காண்கிலாது அதனைத் தன் கை
அரம் ஒன்று வயிர வாளால் ஆயிரம் கண்டம் கண்டான். 211

அவ் இடை வெறுங் கை நின்ற அங்கதன், 'ஆண்மை அன்ருல்
இவ் இடை பெயர்தல்' என்னு, இமையிடை ஒதுங்காமுன்னர்,
வெவ் விடம் என்னப் பொங்கி, அவனிடை எறிந்த வீச்சுத்
தவ்விட, உருமின் புக்கு, வாளொடும் தழுவிக் கொண்டான்.

அத் தொழில் கண்ட வானேர் ஆவலம் கொட்டி ஆர்த்தார்;
'இத் தொழில் இவனுக்கு அல்லால், ஈசற்கும் இயலாது' என்பார்;
குத்து ஒழித்து, அவன்கைவாள் தன்கூர்உகிர்த்தடக்கைகொண்டான்,
ஒத்து இரு கூருய் வீழ வீசி, வான் உலைய ஆர்த்தான். 213

207. சித்தி - நற்செயலின் முற்றிய பயன்; அந்தரச் சித்தர் - வானத்திலே உலவும் சித்தர்கள்; 208. நாந்தகம் - வாள்; 210. தூசி - முன்னணிப் படை; இரண்டு கை - இரு பக்கத்திலும் உள்ள சேனைகள், கைகோட் படை; நெற்றி - நடுவில் நின்று பொரும் படை; சுருண்டு - வாட்டமுற்று; 211. வள்ளல் சரம் - இராம பாணம்; 212. தவ்விட - தவறிட, ஒழியுமாறு.

**போர்மத்தன் நீலனுடன் பொருது மாள்தல்**

கூர்மத்தின் வெரிநின் வைத்து வானவர் அமுதம் கொண்ட
நீர் மத்தின் நிமிர்ந்த தோளான், நிறை மத்த மதுவைத் தேக்கி
ஊர்மத்தம் உண்டாலன்ன மயக்கத்தான், உருமைத் தின்பான்
போர்மத்தன் என்பான், வந்தான்—புகர் மத்தப் பூட்கை மேலான்.

காற்று அன்றேல், கடுமை என் ஆம்? கடல் அன்றேல் முழக்கம் என் ஆம்?
கூற்று அன்றேல், கொலை மற்று என் ஆம்? உரும் அன்றேல், கொடுமை என் [ஆம்?
சீற்றம்தான் அன்றேல், சீற்றம் வேறு ஒன்று தெரிப்பது எங்கே?
மாற்று அன்றே மலை; மற்று என்னே?—மத்தன்தன் மத்த யானை.

வேகமாக் கவிகள் வீசும் வெற்பினம் விழுவ, மேன்மேல்,
பாகர் கால் சிலையின் தூண்டும் உண்டை ஆம் எனவும் பற்று;
மாக மா மரங்கள் எல்லாம், கடாத்திடை வண்டு சோப்பி
ஆகினும் ஆம்; அது அன்றேல், கரும்பு என்றே அறையலாமால்.

காலிடைப்பட்டும், மானக் கையிடைப்பட்டும், கால
வாலிடைப் பட்டும், வெய்ய மருப்பிடைப்பட்டும், மாண்டு,
நாலிடைப்பட்ட சேனை, நாயகன் தம்பி எய்த
கோலிடைப்பட்டது எல்லாம் பட்டது—குரக்குச் சேனை. 217

தன் படை உற்ற தன்மை நோக்கினன், தரிக்கிலாமை,
அன்பு அடை உள்ளத்து அண்ணல் அனலின்தன் புதல்வன், ஆழி
வன் படை அனையது ஆங்கு ஓர் மராமரம் சுழற்றி வந்தான்—
பின் படை செல்ல, நள்ளார் பெரும் படை இரிந்து பேர.*

சேறலும், களிற்றின் மேலான், திண் திறல் அரக்கன், செவ்வே,
ஆறு-இரண்டு அம்பினால் அந் நெடு மரம் அறுத்து வீழ்த்தான்;
வேறு ஒரு குன்றம் நீலன் வீசினன்; அதனை விண்ணில்,
நூறு வெம் பகழி தன்னால், நுறுக்கினன், களிறு நூக்கி. 219

பின், நெடுங் குன்றம் தேடிப் பெயர்குவான் பெயராவண்ணம்,
பொன் நெடுங் குன்றம் சூழ்ந்த பொறி வரி அரவம் போல,
அந் நெடுங் கோப யானை, அமரரும் வெயர்ப்ப, அங்கி-
தன் நெடு மகனைப் பற்றிப் பிடித்தது, தடக் கை நீட்டி. 220

214. கூர்மம் - ஆமை; ஊர்மத்தம் - ஊமத்தங்காய்; 215. மாற்று - ஒப்பு; 216. உண்டை - வில்லுண்டைகள்; வண்டு சோப்பி - வண்டுகளை ஒட்டு தற்குரிய ஈயோட்டி; மலைகள் களிமண் உருண்டைகள் போலவும், மரங்கள் ஈயோட்டி போலவும் கரும்பு போலவும் பயனற்றன; 217. நாலிடைப்பட்ட சேனை - நாலாகப் பொருந்திய படை; 218. அனலின் தன் புதல்வன்- அக்கினி குமாரனாகிய நீலன்; நள்ளார் - பகைவர்.

‘ஒடுங்கினன், உரமும், ஆற்றல் ஊற்றமும், உயிரும்’ என்ன,
கொடும் படை வயிரக் கோட்டால் குத்துவான் குறிக்கும் காலை,
நெடுங் கையும் தலையும் பிய்யா, நொய்தினின் நிமிர்ந்து போனான்;
நடுங்கினர், அரக்கர்; விண்ணோர், ‘நன்று, நன்று!’ என்ன நக்கார். 221

‘தறைத்தலை உற்றான் நீலன்’ என்பது ஓர் காலம்தன்னில்,
நிறைத் தலை வழங்கும் சோரி நீத்தத்து நெடுங் குன்று என்னக்
குறைத் தலை வேழம் வீழ, விசும்பின்மேல் கொண்டு நின்றான்,
பிறைத் தலை வயிர வாளி மழை எனப் பெய்யும் கையான். 222

வாங்கிய சிரத்தின் மற்றை வயிர வான் கோட்டை வவ்வி,
வீங்கிய விசையின் நீலன் அரக்கன்மேல் செல்ல விட்டான்;
ஆங்கு அவன் அவற்றை ஆண்டு ஓர் அம்பினால் அறுத்து, ஓர் அம்பால்,
ஓங்கல்போல் புயத்தினான்தன் உரத்திடை ஒளிக்க, எய்தான்.

எய்த அது காலமாக, விளிந்திலது யானை என்ன,
கையுடை மலை ஒன்று ஏறி, காற்று எனக் கடாவி வந்தான்;
வெய்யவன், அவனைத்தானும் மேற்கொளா, வில்லினோடு
மொய் பெருங் களத்தின் இட்டான், மும் மதக் களிற்றின் முன்னர். 224

இட்டவன் அவனிநின்றும் எழுவதன் முன்னம், யானை
கட்டு அமை வயிரக் கோட்டால் களம் பட வீழ்த்தி, காலால்
எட்டி, வன் தடக் கைதன்னால் எடுத்து, எங்கும் விரைவின் வீச,
பட்டிலன், தானே தன் போர்க் கரியினைப் படுத்து வீழ்த்தான்.

தன் கரி தானே கொன்று, தடக் கையால் படுத்து வீழ்த்தும்
மின் கரிது என்ன மின்னும் எயிற்றினான் வெகுளி நோக்கி,
பொன் கரிது என்னும் கண்கள் பொறி உக, நீலன் புக்கான்,
வன் கரம் முறுக்கி, மார்பில் குத்தினன்; மத்தன் மாண்டான்.

### வயமத்தன்-இடபன் போர்

உன்மத்தன் வயிர மார்பின் உரும் ஒத்த கரம் சென்று உற்ற
வன்மத்தைக் கண்டும், மாண்ட மத மத்தமலையைப் பார்த்தும்,
சன்மத்தின் தன்மையானும், தருமத்தைத் தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் கடைக்கூட்டானும், வயமத்தன் கடிதின் வந்தான்.

222. தறை - தரை; நிறைத் தலை - நிறையினை உடைய தலை, கனமான யானைத் தலை; பிறைத் தலை வயிர வாளி - அர்த்த சந்திர பாணம்; 225. இட்டவன் - இடப்பட்டவன், கீழே தள்ளப்பட்டவன்; கட்டு அமை வயிரக் கோடு - பூண் கட்டுப் பொருந்திய கிம்புரிக் கோடு; 227. சன்மத்தின் தன்மை - (உடன்பிறப்பாகிய) பிறவியின் தன்மை.

பொய்யினும் பெரிய மெய்யான்; பொருப்பினைப் பழித்த தோளான்;
'வெய்யன்' என்று உரைக்கச் சாலத் திண்ணியான்; வில்லின் செல்வன்;
பெய் கழல் அரக்கன் சேனை ஆர்த்து எழ, பிறங்கு பல் பேய்
ஐ-இருநூறு பூண்ட ஆழி அம் தேரின் மேலான்; 228

ஆர்க்கின்றான், உலகை எல்லாம் அதிர்க்கின்றான், உருமும் அஞ்சப்
பார்க்கின்றான், பொன்றினாரைப் பழிக்கின்றான், பகழி மாரி
தூர்க்கின்றான், குரங்குச் சேனை துரக்கின்றான், துணிபை நோக்கி,
'ஏற்கின்றார் இல்லை' என்னா, இடபன் வந்து, அவனோடு ஏற்றான். 229

சென்றவன்தன்னை நோக்கி, சிரித்து, 'நீ சிறியை; உன்னை
வென்று அவம்; உம்மை எல்லாம் விளிப்பெனோ? விரிஞ்சன் தானே
என்றவன் எதிர்ந்த போதும், இராவணன் மகனை இன்று
கொல்றவன் தன்னைக் கொன்றே குரங்கின்மேல் கொதிப்பென்' என் [றான்.

'வாய்கொண்டு சொற்றற்கு ஏற்ற வலி கொண்டு, பலி உண் வாழ்க்கைப்
பேய் கொண்டு, வெல்ல வந்த பித்தனே! மிடுக்கைப் பேணி
நோய் கொண்டு மருந்து செய்யா ஒருவ! நின் நோன்மை எல்லாம்
ஓய்கின்றாய் காண்டி!' என்னா, உரைத்தனன், இடபன் ஒல்கான். 231

' ''ஓடுதி'' என்ன, ஓடாது உரைத்தியேல், உன்னோடு இன்னே
ஆடுவென் விளையாட்டு' என்னா, அயில் எயிற்று அரக்கன், அம் பொன்
கோடு உறு வயிரப் போர் வில் காலொடு புருவம் கோட்டி,
ஈடு உற, இடபன் மார்பத்து ஈர்-ஐந்து பகழி எய்தான். 232

அசும்புடைக் குருதி பாயும் ஆகத்தான், வேகத்தால் அத்
தசும்புடைக் கொடுந்தேர்தன்னைத் தடக் கையால் எடுத்து வீச,
பசுங் கழல் கண்ண பேயும் பறந்தன, பரவை நோக்கி;
விசும்பிடைச் செல்லும் காரின் தாரைபோல் நான்ற மெய்யான், 233

தேரொடும் கடலின் வீழ்ந்து, சிலையும் தன் தலையும் எல்லாம்
நீரிடை அழுந்தி, பின்னும் நெருப்பொடு நிமிர வந்தான்
பாரிடைக் குதியாமுன்னம், இடபனும், 'பதக! நீ போய்
ஆரிடைப் புகுதி!' என்னா, அந்தரத்து ஆர்த்துச் சென்றான். 234

அல்லினைத் தழுவி நின்ற பகல் என, அரக்கன்தன்னை,
கல்லினும் வலிய தோளால், கட்டியிட்டு இறுக்கும் காலை,
பல்லுடைப் பில வாயூடு பசும் பெருங் குருதி பாய,
வில்லுடை மேகம் என்ன, விழுந்தனன், உயிர் விண் செல்ல.

228. பொய் - மாயம், வஞ்சனை; 231. பலி - பிறர் தரப் பெறும் உணவு; 233. அசும்பு - ஊற்றுப்பெருக்கு; பசுங் கழல் கண் - பசிய கழற்சிக்காய் போலும் கண்; பேயின் கண்களுக்குக் கழற்சிக்காயினை உவமை கூறுதல் மரபு; 234. பதகன் - பாதகன்.

**சுக்கிரீவனும் கும்பனும் பொருதல்**

குரங்கினுக்கு அரசும், வென்றிக் கும்பனும், குறித்த வெம் போர்
அரங்கினுக்கு அழகு செய்ய, ஆயிரம் சாரி போந்தார்,
மரம் கொடும், தண்டு கொண்டும், மலை என மலையாநின்றார்;
சிரங்களும் கரமும் எல்லாம் குலைந்தனர், கண்ட தேவர். 236

கிடைத்தார், உடலில் கிழி சோரியை வாரித்
துடைத்தார், விழியில் தழல் மாரி சொரிந்தார்,
உடைத் தாரொடு பைங் கழல் ஆர்ப்ப உலாவிப்
புடைத்தார், பொருகின்றனர்—கோள் அரி போல்வார். 237

தண்டம் கையின் வீசிய தக்க அரக்கன்,
அண்டங்கள் வெடிப்பன என்ன, அடித்தான்;
கண்டு, அங்கு, அது மா மரமே கொடு காத்தான்;
விண்டு அங்கு அது தீர்ந்தது; மன்னன் வெகுண்டான். 238

'பொன்றப் பொருவேன், இனி' என்று, பொருதான்,
ஒன்றப் புகுகின்றது ஓர் காலம் உணர்ந்தான்,
நின்று அப் பெரியோன் நினையாதமுன், நீலன்
குன்று ஒப்பது ஓர் தண்டு கொணர்ந்து கொடுத்தான். 239

அத் தண்டு கொடுத்தது கைக்கொடு அடைந்தான்,
ஒத்து அண்டமும் மண்ணும் நடுங்க உருத்தான்.
பித்தன் தட மார்பொடு தோள்கள் பிளந்தான்;
சித்தங்கள் நடுங்கி, அரக்கர் திகைத்தார். 240

அடியுண்ட அரக்கன், அருங் கனல் மின்னு
இடியுண்டது ஓர் மால் வரை என்ன, விழுந்தான்;
'முடியும் இவன்' என்பது ஓர் முன்னம், வெகுண்டான்,
'ஒடியும் உன தோள்' என, மோதி உடன்றான். 241

தோளில் புடையுண்டு அயர் சூரியன் மைந்தன்,
தாளில் தடுமாறல் தவிர்ந்து, தகைந்தான்,
வாளிக் கடு வல் விசையால் எதிர் மண்டி,
ஆளித் தொழில் அன்னவன் மார்பின் அறைந்தான். 242

அடி ஆயிர கோடியின் மேலும் அடித்தார்;
'முடிவு ஆனவன் யார்?' என, வானவர் மொய்த்தார்;
இடியோடு இடி கிட்டியது என்ன, இரண்டும்
பொடியாயின தண்டு; பொருந்தினர் புக்கார். 243

236. கும்பன் - கும்பகருணன் மைந்தர் இருவருள் ஒருவன்; மற்றொருவன் நிகும்பன்; 241. ஓர் முன்னம் - சிறிது முன்னம், ஓர்தற்கு முன்னே.

மத்தச் சின மால் களிறு என்ன மலைந்தார்;
பத்துத் திசையும் செவிடு எய்தின; பல் கால்
தத்தித் தழுவி, திரள் தோள்கொடு தள்ளி,
குத்தி, 'தனிக் குத்து' என, மார்பு கொடுத்தார். 244

நிலையில் சுடரோன் மகன் வன் கை நெருங்க,
கலையில் படு கம்மியர் கூடம் அலைப்ப
உலையில் படு இரும்பு என வன்மை ஒடுங்க,
மலையின் பிளவுற்றது, தீயவன் மார்பம். 245

'செவ்வாய் இகல்?' என்று அவன் நின்று சிரித்தான்;
ஐ வாய் அரவம் முழை புக்கென, ஐயன்
கை வாய் வழி சென்று, அவன் ஆர் உயிர் கக்க,
பை வாய் நெடு நாவை முனிந்து பறித்தான். 246

**கும்பன் மாண்டதும், நிகும்பன் உருத்து வர, அங்கதன் எதிர்த்தல்**

அக்காலை, நிகும்பன், அனல் சொரி கண்ணன்,
புக்கான், 'இனி, எங்கு அட போகுவது?' என்னா,
மிக்கான் எதிர், அங்கதன் உற்று வெகுண்டான்;
எக்காலமும் இல்லது ஓர் பூசல் இழைத்தார். 247

சூலப் படையானிடை வந்து தொடர்ந்தான்,
ஆலத்தினும் வெய்யவன் அங்கதன், அங்கு ஓர்
தாலப் படை கைக் கொடு சென்று தடுத்தான்,
நீலக் கிரிமேல் நிமிர் பொற்கிரி நேர்வான். 248

**நிகும்பன் எடுத்த சூலத்தைத் தடுத்து, அநுமன் கொல்லுதல்**

எறிவான் உயர் சூலம் எடுத்தலும், 'இன்னே
முறிவான் இகல் அங்கதன்' என்பதன் முன்னே,
அறிவான் அடல் மாருதி அற்றம் உணர்ந்தான்,
பொறி வான் உகு தீ என வந்து புகுந்தான். 249

தடை ஏதும் இல் சூலம் முனிந்து, சலத்தால்,
விடையே நிகர் அங்கதன்மேல் விடுவானை,
இடையே தடைகொண்டு, தன் ஏடு அவிழ் அம் கைப்
புடையே கொடு கொன்று, அடல் மாருதி போனான். 250

245. கலையில் படுதல் - தமக்கு உரிய தொழிலில் நன்கு பயின்றிருத்தல்; கூடம் - சம்மட்டி; 248. சூலப்படையான் - சூலப்படையை உடையவனாகிய நிகும்பன்; தாலப் படை - பனைமரம் ஆகிய படை; 249. அற்றம் - மெலிவு, வந்த எல்லை.

நின்ருர்கள் தடுப்பவர் இன்மை நெளிந்தார்,
பின்ருதவர் பின்றி இரிந்து பிரிந்தார்;
வன் தாள் மரம் வீசிய வானர வீரர்
கொன்ருர்; மிகு தாஜே அரக்கர் குறைந்தார். 251

ஓடிப் புகு வாயில் நெருக்கின் உலந்தார்,
கோடிக்கு அதிகத்தினும் மேல் உளர்; குத்தால்
பீடிப்புறு புண் உடலோடு பெயர்ந்தார்,
பாடித்தலை உற்றவர், எண் இலர் பட்டார். 252

'தண்ணீர் தருக' என்றனர் தாவுற ஓடி,
உண் நீர் அற, ஆவி உலந்தனர், உக்கார்;
கண்ணீரொடும் ஆவி கலுழ்ந்தனர்; காலால்
மண் ஈரம் உற, கடிது ஊர் புக வந்தார். 253

விண்மேல் நெடிது ஓடினர், ஆர் உயிர் விட்டார்,
மண்மேல் நெடு மால் வரை என்ன மறிந்தார்;
எண் மேலும் நிமிர்ந்துளர், ஈருள் தயங்கப்
புண் மேலுடை மேனியினர், திசை போஞர். 254

அறியும்மவர் தங்களை, 'ஐய! இவ் அம்பைப்
பறியும்' என வந்து, பறித்தலும், ஆவி
பிறியும் அவர் எண் இலர்; தம் மனை பெற்ருர்,
குறியும் அறிகின்றிலர், சிந்தை குறைந்தார். 255

பரி பட்டு விழ, சிலர் நின்று பதைத்தார்;
கரி பட்டு உருள, சிலர் கால்கொடு சென்ருர்;
நெரி பட்டு அழி தேரிடையே பலர் நின்ருர்,
எரி பட்ட மலைக்கண் இருந்தவர் என்ன. 256

மண்ணின்தலை வானர மேனியர் வந்தார்,
புண் நின்ற உடற் பொறையோர் சிலர் புக்கார்,
'கண் நின்ற குரங்கு கலந்தன' என்ஞ,
உள் நின்ற அரக்கர் மலைக்க, உலந்தார். 257

இரு கணும் திறந்து நோக்கி, அயல் இருந்து இரங்குகின்ற
உருகு தம் காதலோரை, 'உண்ணும் நீர் உதவும்' என்ருர்,
வருவதன் முன்னம் மாண்டார் சிலர்; சிலர் வந்த தண்ணீர்
பருகுவார் இடையே பட்டார்; சிலர் சிலர் பருகிப் பட்டார்.

252. பாடி - பாசறை; 254. ஈருள் தயங்குதல் - ஈரல் வெளியே தெரிதல்; ஈருள் - ஈரல்; 255. அறியும்மவர் - தமக்கு அறிமுகமாயிருப்பவர்; குறி - அடையாளம்; 257. வானர மேனியர் - குரங்கின் உருவினை மேற்கொண்டவர்.

மக்களைச் சுமந்து செல்லும் தாதையர், வழியின் ஆவி
உக்கனர் என்ன வீசி, தம்மைக் கொண்டு ஓடிப் போனார்;
கக்கினர் குருதி வாயால், கண்மணி சிதற, காலால்
திக்கொடு நெறியும் காணார், திரிந்து சென்று, உயிரும் தீர்ந்தார்.

**அதிகாயனும் பிறரும் இறந்தமையைத் தூதர் இராவணனுக்கு அறிவித்தல்**

இன்னது ஓர் தன்மை எய்தி, இராக்கதர் இரிந்து சிந்தி,
பொன் நகர் புக்கார்; இப்பால், பூசல் கண்டு ஓடிப் போன
துன்ன அருந் தூதர் சென்றார், தொடு கழல் அரக்கர்க்கு எல்லாம்
மன்னவன் அடியில் வீழ்ந்தார், மழையின் நீர் வழங்கு கண்ணார்.

நோக்கிய இலங்கை வேந்தன், 'உற்றது நுவல்மின்' என்றான்;
'போக்கிய சேனை தன்னில் புகுந்துள இறையும் போதா;
ஆக்கிய போரின், ஐய! அதிகாயன் முதல்வர் ஆய
கோக் குலக் குமரர் எல்லாம் கொடுத்தனர், ஆவி' என்றார்.

**இராவணன் நிலையும் செயலும்**

ஏங்கிய விம்மல் மானம், இரங்கிய இரக்கம் வீரம்,
ஓங்கிய வெகுளி துன்பம் என்று இவை ஒன்றற்கு ஒன்று
தாங்கிய தரங்கம் ஆகக் கரையினைத் தள்ளித் தள்ளி,
வாங்கிய கடல்போல் நின்றான்—அருவி நீர் வழங்கு கண்ணான்.

திசையினை நோக்கும்; நின்ற தேவரை நோக்கும்; வந்த
வரையினை நோக்கும்; கொற்ற வாளினை நோக்கும்; பற்றிப்
பிசையுறும் கையை; மீசை சுறுக்கொள உயிர்க்கும்; பேதை
நசையிடைக் கண்டான் என்ன, நகும், அழும், முனியும், நாணும். 263

மண்ணினை எடுக்க எண்ணும்; வானினை இடிக்க எண்ணும்;
எண்ணிய உயிர்கள் எல்லாம் ஒரு கணத்து எற்ற எண்ணும்;
'பெண் எனும் பெயர எல்லாம் பிளப்பென்' என்றும் எண்ணும்;
புண்ணிடை எரி புக்கென்ன, மானத்தால் புழுங்கி நையும். [எண்ணி,

**தானியமாலி, இராவணன் அடியில் விழுந்து, அரற்றுதல்**

ஒருவரும் உரையார் வாயால், உயிர்த்திலர், உள்ளம் ஓய்வார்,
வெருவரும் தகையர் ஆகி, வியமினர் இருந்த வேலை,
தரு வனம் அனைய தோளான்தன் எதிர் தானிமாலி
இரியலிட்டு அலறி, ஓயாப் பூசலிட்டு, ஏங்கி வந்தாள்; 265

263. பேதை நசையிடைக் கண்டான் என்ன - ஆசையினால் பித்தேறியவன் போல; 265. தானிமாலி - தாந்யமாலிநீ என்னும் வடமொழிப் பெயரின் தமிழாக்கம்.

மலைக் குவட்டு இடி வீழ்ந்தென்ன, வளைகளோடு ஆரம் ஏங்க,
முலைக் குவட்டு எற்றும் கையாள்; முழை திறந்தன்ன வாயாள்;
தலைக் குவட்டு அணைந்த செக்கர் சரிந்தன குழல்கள் தத்தி,
உலைக்கு வட்டு உருகு செம்பு ஒத்து உதிர நீர் ஒழுகும் கண்ணுள்; 266

வீழ்ந்தனள் அரக்கன் தாள்மேல், மென்மைத் தோள் நிலத்தை மேவ;
போழ்ந்தனள், பெரும் பாம்பு என்னப் புரண்டனள்; பொருமிப் பொங்கி,
'சூழ்ந்தனை, கொடியாய்!' என்று, துடித்து, அருந் துயர வெள்ளத்து
ஆழ்ந்தனள், புலம்பலுற்றாள், அழக் கண்டும் அறிந்திலாதாள்: 267

மாட்டாயோ, இக் காலம் வல்லோர் வலி தீர்க்க?
மீட்டாயோ, வீரம்? மெலிந்தாயோ, தோள் ஆற்றல்?
கேட்டாய் உணர்ந்திலையோ? என் உரையும் கேளாயோ?
காட்டாயோ, என்னுடைய கண்மணியைக் காட்டாயோ? 268

'"இந்திரற்கும் தோலாத நன் மகனை ஈன்றாள்" என்று,
அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத்தேன்
மந்தரத் தோள் என் மகனை மாட்டா மனிதன்தன்
உந்து சிலைப் பகழிக்கு உண்ணக் கொடுத்தேனே! 269

'அக்கன் உலந்தான்; அதிகாயன்தான் பட்டான்;
மிக்க திறத்து உள்ளார்கள் எல்லாரும் வீடினார்;
மக்கள் இனி நின்று உளான், மண்டோதரி மகனே;
திக்குவிசயம், இனி, ஒருகால் செய்யாயோ? 270

'ஏது ஐயா சிந்தித்து இருக்கின்றாய்' எண் இறந்த
கோதை ஆர் வேல் அரக்கர் பட்டாரைக் கூவாயோ?
பேதை ஆய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ?
சீதையால் இன்னம் வருவ சிலவேயோ? 271

'உம்பி, உணர்வுடையான், சொன்ன உரை கோளாய்;
நம்பி குலக் கிழவன் கூறும் நலம் ஓராய்;
கும்பகருணனையும் கொல்வித்து, என் கோமகனை
அம்புக்கு இரை ஆக்கி, ஆண்டாய் அரசு, ஐய! 272

266. உலைக்கு - உலைக்களத்தின்கண்; வட்டு - திரண்ட பொருள்;
272. குலக்கிழவன் - அரக்கர்குலத் தலைவனாகிய மாலியவான், வீடணன் என்பாரும் உண்டு.

**தானியமாலியை உருப்பசியும் மேனகையும் அரண்மனைக்குக் கொண்டு போதல்**

என்று, பலப்பலவும் பன்னி எடுத்து அழைத்து,
கன்று படப் பதைத்த தாய்போல் கவல்வாளை,
நின்ற உருப்பசியும் மேனகையும் நேர்ந்து எடுத்து,
குன்று புரையும் நெடுங் கோயில் கொண்டு அணைந்தார். 273

**இலங்கையிலுள்ளார் யாவரும் வருந்துதல்**

தானை நகரத்துத் தளர்த் தலைமயங்கி,
போன மகவுடையார் எல்லாம் புலமபினர்;—
ஏனை மகளிர் நிலை என் ஆகும்?—போய் இரங்கி,
வான மகளிரும் தம் வாய் திறந்து மாழ்கினார். 274

தார் அகலத்து அண்ணல் தனிக் கோயில் தாசரதி
பேர, உலகு உற்றது உற்றதால், பேர் இலங்கை;
ஊர் அகலம் எல்லாம், அரந்தை, உவா உற்ற
ஆர்கலியே ஒத்தது, அழுத குரல் ஓசை. 275

## 18 நாகபாசப் படலம்

**அரக்கியர் அழுவது கண்டு, இந்திரசித்தன் எழுதல்**

'குழுமி, கொலை வாட் கண் அரக்கியர், கூந்தல் தாழ,
தழுவித் தலைப்பெய்து, தம் கைகொடு மார்பின் எற்றி,
அழும் இத் தொழில் யாதுகொல்?' என்று, ஓர் அமிர்ப்பும் உற்றான்,
எழிலித் தனி ஏறு என இந்திரசித்து எழுந்தான். 1

'எட்டு ஆகிய திக்கையும் வென்றவன் இன்றும் ஈடு-
பட்டான்கொல்? அது அன்று எனின், பட்டு அழிந்தான்கொல்? பண்டு
சுட்டான் இவ் அகன் பதியைத் தொடு வேலையோடும்
கட்டான்கொல்? இதற்கு ஒரு காரணம் என்கொல்?' என்றான்.

**இந்திரசித்தன்–இராவணன் உரையாடல்**

கேட்டான், 'இடை உற்றது என்?' என்று, கிளத்தல் யாரும்
மாட்டாது நடுங்கினர், மாற்றம் மறந்து நின்றார்.
ஓட்டா நெடுந் தேர் கடிது ஓட்டி, இமைப்பின் உற்றான்,
காட்டாதன காட்டிய தாதையைச் சென்று கண்டான். 3

275. தாசரதி - தசரதன் மைந்தன், இராமன்; அரந்தை - துன்பம்.

18: 2. கட்டல் - பெயர்த்தல்.

கண்டான், இறை ஆறிய நெஞ்சினன், கைகள் கூப்பி,
'உண்டாயது என், இவ்வுழி?' என்றலும், 'உம்பிமாரைக்
கொண்டான் உயிர் காலனும்; கும்ப நிகும்பரோடும்
விண்தான் அடைந்தான், அதிகாயனும்—வீர!' என்றான். 4

சொல்லாத முன்னம், சுடரைச் சுடர் தூண்டு கண்ணன்,
பல்லால் அதரத்தை அதுக்கி, விண்மீது பார்த்தான்;
'எல்லாரும் இறந்தனரோ!' என ஏங்கி நைந்தான்;—
வில்லாளரை எண்ணின், விரற்கு முன் நிற்கும் வீரன். 5

'ஆர் கொன்றவர்?' என்றலுமே, 'அதிகாயன் என்னும்
பேர் கொன்றவன் வென்றி இலக்குவன்; பின்பு நின்றார்
ஊர் கொன்றவனால், பிறரால்' என, உற்ற எல்லாம்,
தார் கொன்றையினான் கிரி சாய்த்தவன்தான் உரைத்தான். 6

'கொன்றார் அவரோ? ''கொலை சூழ்க!'' என நீ கொடுத்தாய்;
வன் தானையர் மானிடர் வன்மை அறிந்தும், மன்னா!
என்றானும் எனைச் செல ஏவலை; இற்றது' என்னா,
நின்றான், நெடிது உன்னி, முனிந்து, நெருப்பு உயிர்ப்பான். 7

'அக்கப் பெயரோனை நிலத்தொடு அரைத்துளானை,
விக்கல் பொரு, வெவ் உரைத் தூதுவன் என்று விட்டாய்;
புக்கத் தலைப்பெய்தல் நினைந்திலை; புந்தி இல்லாய்!
மக்கள்-துணை அற்றனை; இற்றது உன் வாழ்க்கை மன்னா! 8

'என், இன்று நினைந்தும், இயம்பியும், எண்ணியும்தான்?
கொன் நின்ற படைக்கலத்து எம்பியைக் கொன்றுளானை,
அந் நின்ற நிலத்து அவன் ஆக்கையை நீக்கி அல்லால்,
மன் நின்ற நகர்க்கு இனி வாரலென்; வாழ்வும் வேண்டேன். 9

'வெங் கண் நெடு வானரத் தானையை வீற்று வீற்றாய்ப்
பங்கம் உற நூறி, இலக்குவனைப் படேனேல்,
அங்கம் தர அஞ்சி என் ஆணை கடக்கலாத
செங் கண் நெடு மால் முதல் தேவர் சிரிக்க, என்னை! 10

'மாற்றா உயிர் எம்பியை மாற்றிய மானுடன்தன்
ஊற்று ஆர் குருதிப் புனல் பார்மகள் உண்டிலாளேல்,
ஏற்றான் இகல் இந்திரன் ஈர்-இரு கால், எனக்கே
தோற்றான்தனக்கு என் நெடுஞ் சேவகம் தோற்க' என்றான். 11

6. பின்பு நின்றார் - பின்பு நின்றவர்களாகிய கும்ப நிகும்பர் முதலியோர்; ஊர் கொன்றவன் - அனுமன்; கிரி - ஈண்டுக் கயிலாய மலை; 8. விக்கல் பொரு - எச்சிலுக்குச் சமமானவன், தாழ்ந்தவன்; 10. அங்கம் தர - உடம்பைக் கொண்டு எதிரில் வருவதற்கு; அங்கம் - உடம்பு, மார்பு எனினும் ஆம்; 11. மாற்றிய - உயிர் வாங்கிய; ஈர் இரு கால் - நான்கு முறை.

'பாம்பின் தரு வெம் படை, பாசுபதத்திஞேடும்,
தேம்பல் பிறை சென்னி வைத்தான் தரு தெய்வ ஏதி,
ஓம்பித் திரிந்தேன் எனக்கு இன்று உதவாது போமேல்,
சோம்பித் துறப்பென்; இனிச் சோறும் உவந்து வாமேன். 12

'மருந்தே நிகர் எம்பிதன் ஆர் உயிர் வவ்விஞனை
விருந்தே என அந்தகற்கு ஈகிலென், வில்லும் ஏந்தி,
பொரும் தேவர் குழாம் நகைசெய்திடப் போந்து, பாரின்
இருந்தேன்எனின், நான் அவ் இராவணி அல்லென்' என்ருன்.

'ஏகா, இது செய்து, எனது இன்னலை நீக்கிடு; எந்தைக்கு
ஆகாதனவும் உளவோ? எனக்கு ஆற்றலார்மேல்
மா கால் வரி வெஞ் சிலையோடும் வளைத்த போது
சேகு ஆகும் என்று எண்ணி, இவ் இன்னலில் சிந்தைசெய்தேன்.'

இந்திரசித்தன் போர்க்கோலம் பூண்டு, களம் புகுதல்

என்ருனை வணங்கி, இலங்கு அயில் வாளும் ஆர்த்திட்டு,
ஒன்ருனும் அரு, உருவா, உடற்காவலோடும்,
பொன் தாழ் கணையின் நெடும் புட்டில் புறத்து வீக்கி,
வன் தாள் வயிரச் சிலை வாங்கினன்—வானை வென்ருன். 15

வயிரந் நெடு மால் வரை கொண்டு, மலர்க்கண் வந்தான்,
செயிர் ஒன்றும் உரு வகை, இந்திரற்கு என்று செய்த
உயர் வெஞ் சிலை; அச் சிலை பண்டு அவன்தன்னை ஓட்டி,
துயரின்தலை வைத்து, இவன் கொண்டது; தோற்றம் ஈதால்.

தோளில் கணைப் புட்டிலும், இந்திரன் தோற்ற நாளே
ஆளித் திறல் அன்னவன் கொண்டன; ஆழி ஏழும்
மாள, புனல் வற்றினும் வாளி அருத; வன்கண்
கூளிக் கொடுங் கூற்றினுக்கு ஆவது ஓர் கூடு போல்வ. 17

பல்லாயிர கோடி படைக்கலம், பண்டு, தேவர்
எல்லாரும் முனைத்தலை யாவரும் ஈந்த, மேரு
வில்லாளன் கொடுத்த, விரிஞ்சன் அளித்த, வெம்மை
அல்லால் புரியாதன, யாவையும் ஆய்ந்து, கொண்டான். 18

12. தேம்பல் பிறை - குறைந்த கலையினையுடைய பிறை; 14. மா கால் வரி வெஞ் சிலை - பெரிய தண்டினையுடைய கட்டமைந்த கொடிய வில்; சேகு - வயிரம், உறுதி; 15. உடற்காவல் - கவசம்; 16. தோற்றம் - வரலாறு; 18. மேரு வில்லாளன் - மேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான்.

நூறுயிரம் யாளியின் நோன்மை தெரிந்த சியத்து
ஏறும் அவை அன்னவை ஆயிரம் பூண்டது என்ப;
மாறுய் ஓர் இலங்கை நிகர்ப்பது; வானுளோரும்
தேறுதது—மற்று அவன் ஏறிய தெய்வ மாத் தேர். 19

பொன் சென்று அறியா உவணத் தனிப் புள்ளினுக்கும்,
மின் சென்று அறியா மழுவாளன் விடைக்கும், மேல்நாள்,
பின் சென்றது அல்லது ஒரு பெருஞ் சிறப்பு உற்ற போதும்,
முன் சென்று அறியாதது, மூன்று உலகத்தினுள்ளும். 20

'ஏயாத் தனிப் போர் வலி காட்டிய இந்திரன்தன்
சாயாப் பெருஞ் சாய் கெட, தாம்புகளால் தடந் தோள்
போய் ஆர்த்தவன் வந்தனன், வந்தனன்' என்று பூசல்
பேய் ஆர்த்து எழுந்து ஆடு நெடுங் கொடி பெற்றது அம்மா!

செதுகைப் பெருந் தானவர் ஊனெடும் தேய்த்த நேமி-
யது;—'கைத் திசை யானையை ஓட்டியது' என்னலாமே?—
மதுகைத் தடந் தோள் வலி காட்டிய வான வேந்தன்
முதுகைத் தழும்பு ஆக்கிய மொய் ஒளி மொட்டது அம்மா! 22

அத் தேரினை ஏறியது ஒப்பன ஆயிரம் தேர்
ஒத்து ஏய்வன சேமமதாய் வர, 'உள்ளம் வெம் போர்ப்
பித்து ஏறினன்' என்ன, நடந்தனன்—பின்பு அலால், மற்று
எத் தேவரையும் முகம் கண்டு அறியாத ஈட்டான். 23

அன்றுனெடு போயின தானை அளந்து கூற
என்றால் அரிதேனும், இயம்பு வான்மீகன் என்னும்
நல் நான்மறையான், 'அது நாற்பது வெள்ளம்' என்னச்
சொன்னுன்; பிறர் யார், அஃது உணர்ந்து தொகுக்க வல்லார்?

தூமக் கண் அரக்கனும், தொல் அமர் யார்க்கும் தோலா
மாபக்கனும், அந் நெடுந் தேர் மணி ஆழி காக்க,
தாமக் குடை மீது உயர, பெருஞ் சங்கம விம்ம,
நாமக் கடற் பல் இயம் நாற்கடல் மேலும் ஆர்ப்ப, 25

தேர் ஆயிரம் ஆயிர கோடி தன் மாடு செல்ல,
போர் ஆனை புறத்தின் அவற்றின் இரட்டி போத,
தார் ஆர புரவிக் கடல் பின் செல, தானை வீரப்
பேர் ஆழி முகம் செல, சென்றனன்—பேர்ச்சி இல்லான். 26

20. பொன் - பொன் வண்ணம்; சென்று அறியா - நீங்காத; 21. ஏயா - ஒப்பில்லாத; 22. செதுகை - பொருதல்; தானவர் - அசுரர்கள்: 25. நாம - அச்சம், அது ஈறு திரிந்து நாம என நின்றது; 26. வீரப் பேர் ஆழி - வீரப் பெருங் கடல்.

**'வருபவன் யார்' என இலக்குவன் வினவலும், வீடணன் விடையும்**

நின்றனன் இலக்குவன், களந்தை நீங்கலன்—
'பொன்றினன், இராவணன் புதல்வன்; போர்க்கு இனி,
அன்று அவன், அல்லனேல் அமரர் வேந்தனை
வென்றவன், வரும்' என விரும்பும் சிந்தையான். 27

'யார், இவன் வருபவன்? இயம்புவாய்!' என,
வீர வெந் தொழிலினன் வினவ, வீடணன்,
'ஆரிய! இவன் இகல் அமரர் வேந்தனைப்
போர் கடந்தவன்; இன்று வலிது போர்' என்றான். 28

'எண்ணியது உணர்த்துவது உளது, ஒன்று—எம்பிரான்!—
கண் அகன் பெரும் படைத் தலைவர் காத்திட,
நண்ணின துணையொடும் பொருதல் நன்று; இது
திண்ணிதின் உணர்தியால், தெளியும் சிந்தையால். 29

'மாருதி, சாம்பவன், வானரேந்திரன்,
தாரை சேய், நீலன் என்று இனைய தன்மையார்,
வீரர், வந்து உடன் உற,—விமல!—நீ நெடும்
போர் செயத் தகுதியால்—புகழின் பூணினாய்! 30

'பல் பதினாயிரம் தேவர் பக்கமா,
எல்லை இல் சேனை கொண்டு எதிர்ந்த இந்திரன்
ஒல்லையின் உடைந்தனன், உயிர் கொண்டு உய்ந்துளான்—
மல்லல் அம் தோளினாய்!—அமுதின் வன்மையால். 31

'இனி அவை மறையுமோ, இந்திரன் புயப்
பனி வரை உள நெடும் பாசப் பல் தழும்பு?
அனுமனைப் பிணித்துளன் ஆனபோது, இவன்
தனு மறை வித்தகம் தடுக்கற்பாலதோ?' 32

**அனுமன் இலக்குவனை அடைதல்**

என்று, அவன் இறைஞ்சினன்; இளைய வள்ளலும்,
'நன்று' என மொழிதலும், நணுகினான்அரோ—
வன் திறல் மாருதி, 'இலங்கைக் கோ மகன்
சென்றனன் இளவல்மேல்' என்னும் சிந்தையான். 33

30. வானரேந்திரன் - சுக்கிரீவன்; 31. பக்கமா - பக்கபலமாய் வர;
32. தனு மறை வித்தகம் - வில் வேதத் திறமை.

கூற்றமும் கட்புலம் புதைப்ப, கோத்து எழு
தோற்றமும், இராவணி துணிபும், நோக்குறு,
மேல் திசை வாயிலை விட்டு, வெங் கடுங்
காற்று என அனுகினன், கடிதின் வந்துஅரோ. 34

சுக்கிரீவன் முதலியோர் இலக்குவனுக்குத் துணையாக வருதல்

அங்கதன் முன்னரே ஆண்டையான்; அயல்
துங்க வன் தோளினர் எவரும் சுற்றினர்;
செங் கதிரோன் மகன் முன்பு சென்றனன்,
சங்க நீர்க் கடல் எனத் தழீஇய தானையே. 35

இரு திறப் படைகளும் பொருதல்

இரு திரைப் பெருங் கடல் இரண்டு திக்கினும்
பொரு தொழில் வேட்டு எழுந்து ஆர்த்துப் பொங்கின
வருவன போல்வன—மனத்தினல் சினம்
திருகின எதிர் எதிர் செல்லும் சேனையே. 36

'கண்ணினல் மனத்தினல் கருத்தினல் தெரிந்து,
எண்ணினல் பெறு பயன் எய்தும், இன்று' என,
நண்ணினர் இமையவர் நங்கைமாரொடும்—
விண்ணின் நாடு உறைவிடம் வெறுமை கூரவே. 37

ஒத்து இரு தானையும் உடற்ற உற்றுழி,
அத்தனை வீரரும் ஆர்த்த அவ் ஒலி,
நத்து ஒலி, முரசு ஒலி, நடுக்கலால், தலை-
பொத்தினர் செவிகளை—புரந்தராதியர். 38

'எற்றுமின், பற்றுமின், எறிமின், எய்ம்மின்' என்று,
உற்றன உற்றன உரைக்கும் ஓதையும்,
முற்றுறு கடை யுகத்து இடியின் மும் மடி
பெற்றன, பிறந்தன, சிலையின் பேர் ஒலி. 39

கல் பட, மரம் பட, கால வேல் பட,
வில் படு கணை பட, வீழும் வீரர்தம்
எல் படும் உடல் பட, இரண்டு சேனையும்
பிற்பட, நெடு நிலம் பிளந்து பெருமால். 40

35. சங்க நீர்க் கடல் - சங்குகள் நிறைந்த நீரையுடைய கடல்; 36. திருகுதல் - முதிர்தல்; 38. நத்து - சங்கு; தலை பொத்தினர் - மூடிக் கொண்டனர்.

எழுத் தொடர் மரங்களால் எற்ற முற்றிய
விழுத் தலை முழுவதும் சிதறி வீழ்ந்தன,
அழுத்திய பெருஞ் சினத்து அரக்கர் ஆக்கைகள்
கழுத்து உள, தலை இல, களத்தின் ஆடுவ. 41

வெட்டிய தலையன, நரம்பு வீச மேல்
முட்டிய குருதிய, குரங்கின் மொய் உடல்—
சுட்டு உயர் நெடு வனம் தொலைந்தபின், நெடுங்
கட்டைகள் எரிவன போன்று காட்டுவ. 42

பிடித்தன நிருதரை, பெரிய தோள்களை
ஒடித்தன, கால் விசைத்து உதைத்த உந்தின,
கடித்தன கழுத்து அற, கைகளால் எடுத்து
அடித்தன, அரைத்தன, ஆர்த்த—வானரம். 43

வாள்களின் கவிக் குல வீரர் வார் கழல்
தாள்களைத் துணித்தனர், தலையைத் தள்ளினர்,
தோள்களைத் துணித்தனர், உடலைத் துண்ட வன்
போழ்களின் புரட்டினர், நிருதர் பொங்கினர். 44

மரங்களின், அரக்கரை மலைகள் போன்று உயர்
சிரங்களைச் சிதறின; உடலைச் சிந்தின;
கரங்களை, கழல்களை, ஒடியக் காதின—
குரங்கு எனப் பெயர் கொடு திரியும் கூற்றமே. 45

சுடர்த்தலை நெடும் பொறி சொரியும் கண்ணன,
அடர்த்து அலை நெடு மரம் அற்ற கையன,
உடர்த்தலை வைர வேல் உருவ, உற்றவர்
மிடற்றினைக் கடித்து, உடன் விளிந்து போவன. 46

அடர்ந்தன கிரிகளை அசனிஏறு எனத்
தொடர்ந்தன, மழை பொழி தும்பிக் கும்பங்கள்
இடந்தன, மூளைகள் இனிதின் உண்டன,
கடந்தன, பசித் தழல்—கரடி, காதுவ. 47

கொலை மதக் கரியன, குதிரை மேலன,
வல மணித் தேரன, ஆளின் மேலன,
சிலைகளின் குடுமிய, சிரத்தின் மேலன,—
மலைகளின் பெரியன குரங்கு—வாவுவ. 48

41. எழுத் தொடர் மரங்கள் - இரும்புத் தூண் போன்ற மரங்கள்; தொடர் - உவமவுருபு; 42. மொய் உடல் - வலிமை மிக்க உடம்பு; 45. மரங்களில் - மரங்களினால்; காதின - மோதின; 47. தும்பிக் கும்பங்கள் - யானைகளின் மத்தகங்கள்.

தண்டு கொண்டு அரக்கர் தாக்க, சாய்ந்து உகு நிலைய, சந்தின்
துண்டங்கள் ஆக வாளின் துணிந்த பேர் உடலைத் தூவி,
கொண்டு எழும் அலைகளோடும் குரக்கு இனப் பிணத்தின் குப்பை
மண்டு வெங் குருதி ஆறு அம் மறி கடல் மடுத்த மாதோ. 49

பனி வென்ற பதாகை என்றும், பல் உளைப் பரிமா என்றும்,
தனு என்றும், வாளி என்றும், தண்டு என்றும், தனி வேல் என்றும்,
சின வென்றி மதமா என்றும், தேர் என்றும், தெரிந்தது இல்லை—
அனுமன் கை வயிரக் குன்றால் அரைப்புண்ட அரக்கர் தானை.

பொங்கு தேர், புரவி, யானை, பொரு கழல் நிருதர் என்னும்
சங்கையும் இல்லா வண்ணம், தன் உளே தழுவி, கூற்றம்,
'எங்கு உள, உயிர்?' என்று எண்ணி, இணைக் கையால் இளைத்தது என்ப—
அங்கதன் மரம் கொண்டு எற்ற, அளறுபட்டு அழிந்த தானை.

தாக்கிய திசைகள்தோறும் தலைத்தலை மயங்கி, தம்மில்
நூக்கிய களிறும், தேரும், புரவியும், நூழில் செய்ய,
ஆக்கிய செருவை நோக்கி, அமரரோடு அசுரர் போரைத்
தூக்கினர், முனிவர்; 'என்னை? இதற்கு அதுதோற்கும்' என்றார்.

எடுத்தது நிருதர் தானை; இரிந்தது குரங்கின் ஈட்டம்;
தடுத்தனர், முகங்கள் தாங்கி, தனித் தனி தலைவர் தள்ளி;
படுத்தனர் அரக்கர், வேலை பட்டதும்; படவும், பாரார்
கடுத்தனர்; கடுத்த பின்னும், காத்தனர் கவியின் வீரர். 53

**நீலன் முதலிய வானர வீரர் போர்த் திறம்**

சூலமும் மழுவும் தாங்கித் தோள் இரு நான்கும் தோன்ற
மூலம் வந்து உலகை உண்ணும் உருத்திர மூர்த்தி என்ன,
நீலன் நின்றுழியே நின்றான்; நிரந்தரம், கணங்களோடும்,
காலன் என்று ஒருவன், யாண்டும் பிரிந்திலன், பாசக் கையான்.

காற்று அலன்; புனலோ அல்லன்; கனல் அல்லன்; இரண்டு கையால்,
ஆற்றலன், ஆற்றுகின்ற அருஞ் சமம் இதுவே ஆகில்,
ஏற்றம் என் பலவும் சொல்லி? 'என் பதம் இழந்தேன்' என்னா,
கூற்றமும் குலுங்கி அஞ்ச, வெங் கதக் குமுதன் கொன்றான்.

50. பனி வென்ற - வெண்ணிறத்தால் பனியை ஒத்த; பதாகை - பெருங் கொடி; 51. சங்கை - அச்சம்; 52. நூழில் செய்தல் - கொன்று குவித்தல்; 53 முகங்கள் - முன்னணிப் படை.

மறி கடல் புடை சூழ் வைப்பின் மானவன் வாளி போன
செறி பணை மரமே நின்ற, மரங்களில்; தெரியச் செப்பும்
குறியுடை மலைகள்தம்மில் குல வரைக் குலமே—கொள்ளா,
எறிதலோடு அறைதல் வேட்ட, இடவன் அன்று இடந்திலாத.

'வாம் பரி, மத மா, மான் தேர், வாள் எயிற்று அரக்கர் மாய,
பாம்பினும் வெய்யோர் சாலப் படுகுவர்; பயம் இன்று, இன்றே;
தூம்பு உறழ் குருதி மண்ட, தொடர் நெடு மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்ல, சாம்பும்' என்று கொண்டு அமரர் ஆர்த்தார்.

பொரும் குலப் புரவி ஆன திரைகளும், கலம் பொன் தேரும்,
இருங் களி யானை ஆன மகரமும், இரியல் போக,
நெருங்கிய படைகள் ஆன மீன் குலம் நெரிந்து சிந்த,
கருங் கடல் கலக்கும் மத்தின், பனசனும் கலக்கிப் புக்கான்.

மயிந்தனும் துமிந்தன்தானும், மழைக் குலம் கிழித்து, வானத்து
உயர்ந்து எழும் எருவை வேந்தர் உடன்பிறந்தவரை ஒத்தார்;
கயம் குடைந்து ஆடும் வீரக் களிறு ஒத்தான், கவயன்; காலின்
பெயர்ந்திலன், உற்றது அல்லால், கேசரி பெரும் போர் பெற்றான்.

பெரும் படைத் தலைவர் யாரும் பெயர்ந்திலர், பிணத்தின் குப்பை
வரம்பு இல பரப்பி ஆர்த்து மலைகின்ற பொழுதின் வந்துற்று,
இரிந்தன கவியும் கூடி எடுத்தன; எடுத்தலோடும்,
சரிந்தது நிருதர் தானை; தாக்கினன் அரக்கன், தானே. 60

**இந்திரசித்தன் பெரும் போர்**

பூண் எறிந்த குவடு அனைய தோள்கள் இரு
புடை பரந்து உயர, அடல் வலித்
தூண் எறிந்தனைய விரல்கள் கோதையொடு
சுவடு எறிந்தது ஒரு தொழில் பட,
சேண் எறிந்து நிமிர் திசைகளோடு மலை
செவிடு எறிந்து உடைய,—மிடல் வலோன்—
நாண் எறிந்து, முறை முறை தொடர்ந்து, கடல்
உலகம் யாவையும் நடுக்கினான். 61

57. தூம்பு - நீர் விழும் மதகு வாயில்; மதகு வாயில் நீர் வீழ்தல் போல அரக்கர் உடம்பில் குருதி மண்டப் படுகுவர் என்க; 58. மகரம் - மகர மீன்கள்; 59. எருவை வேந்தர் - கழுகு அரசர்; உடன் பிறந்தவர் - சடாயு, சம்பாதி என்போர்; 60. அரக்கன் - ஈண்டு இந்திரசித்தன்; 61. கோதை - உடும்புத்தோலால் ஆகிய விரல் அணி, விரற்செறி.

சிங்கஏறு, கடல்போல் முழங்கி, 'நிமிர்
தேர் கடாய் நெடிது செல்க' என,
அங்கதாதியர் அனுங்க, வானவர்கள்
அஞ்ச, வெஞ் சின அனந்தன் மாச்
சங்கபால குளிகாதி வால் எயிறு
தந்த தீ விடம் உமிழ்ந்து சார்
வெங் கண் நாகம் என, வேகமாய், உருமு
வெள்க, வெங் கணைகள் சிந்தினன். 62

சுற்றும் வந்து, கவி வீரர் வீசிய
சுடர்த் தடங் கல் வரை, தொல் மரம்
இற்று ஒடிந்து பொடியாய் உதிர்ந்தன;
எழுந்து சேணிடை இழிந்தபோல்,
வெற்றி வெங் கணை படப் பட, தலைகள்
விண்ணினூடு திசைமீது போய்,
அற்று எழுந்தன விழுந்து, மண்ணிடை
அழுந்துகின்றன அனந்தமால். 63

சிலைத் தடம் பொழி வயக் கடும் பகழி
செல்ல, ஒல்கினர், சினத்தினால்
உலைத்து எறிந்திட எடுத்த குன்றுதொறு
உடல் பரங்கள் கொடு ஒதுங்கினர்,
நிலைத்து நின்று, சினம் முந்து செல்ல, எதிர்
சென்று சென்று, உற நெருக்கலால்,
மலைத் தடங்களொடு உரத் தலம் கழல,
ஊடு சென்ற, பல வாளியே. 64

முழுத்தம் ஒன்றில், ஒரு வெள்ள வானரம்
முடிந்து மாள்வன, தடிந்து போய்,
கழுத்த, கைய, நிமிர் கால, வால, பல
கண்டமானபடி கண்டு, நேர்
எழுத் தொடர்ந்த படர் தோள்களால் எறிய,
எற்ற, அற்றன எழுந்து மேல்,
விழுத்த பைந் தலைய வேனு மால் வரைகள்
வீசி வீசி, உடன் வீழுமால். 65

62. அனந்தன், சங்கபாலன், குளிகன் என்பன எட்டு நாகங்களுள் மூன்றின் பெயர்; 64. உரத்தலம் - மார்பிடம்.

அற்ற பைந் தலை அரிந்து சென்றன
அயில் கடுங் கணை, வெயில்கள்போல்,
புற்று அடைந்த கொடு வெவ் அராவின் நெடு
நாகலோகம்அது புக்கவால்;
வெற்ற வெள்ளிடை விரைந்து போவது, ஒரு
மேடு பள்ளம் வெளி இன்மையால்,
உற்ற செங் குருதி வெள்ளம், உள்ள திரை
ஓத வேலையொடும் ஒத்ததால்.* 66

விழிக்குமேல் விழிய, நிற்கின் மார்பிடைய,
மீளுமேல் முதுக, மேனிய
கழிக்குமேல், உயர ஓடுமேல் நெடிய
கால, வீசின் நிமிர் கைய, வாய்த்
தெழிக்குமேல் அகவும் நாவ, சிந்தையின்
உன்னுமேல்—சிகரம் யாவையும்
பழிக்கும் மேனிய குரங்கின்மேல், அவன்
விடும் கொடும் பகழி பாயவே. 67

மொய் எடுத்த கணை மாரியால், இடை
முடிந்தது ஒன்றும் முறை கண்டிலார்;
எய்விடத்து எறியும் நாணின் ஓசையலது
யாதும் ஒன்று செவி உற்றிலார்;
'மெய் எடுத்த கவி வெள்ளம் யாவையும்
விழுந்து போன' எனும் விம்மலால்,
கை எடுத்தன குரங்கின் ஓடும் முறை
கண்டு,—தேவர்கள்—கலங்கினர். 68

சுக்கிரீவன் எதிர்த்தல்

கண்ட வானரம் அனந்த கோடி முறை
கண்டமானபடி கண்ட அக்
கண்டன், மாறு ஒருவர் இன்மை கண்டு, கணை
மாறினன், விடுதல் இன்மையாய்;
கண்ட காலையில், விலங்கினன் இரவி
காதல், காதுவது ஓர் காதலால்,
கண்ட கார் சிதைய மீது உயர்ந்து ஒளிர்
மராமரம் சுலவு கையினன்; 69

67. சிகரம் - மலை; 68. மொய் எடுத்த - வலிமை மிக்க; மெய் எடுத்த - உடம்பு எடுத்த; 69. அக் கண்டன் - அந்தக் கொடியவனாகிய இந்திரசித்தன்; சுலவு கை - சுழற்றுகின்ற கை.

உடைந்து, தன் படை உலைந்து சிந்தி, உயிர்
ஒல்க, வெல் செரு உடற்றலால்,
கடைந்து தெள் அமுது கொள்ளும் வள்ளல் என
மேல் நிமிர்ந்தது ஓர் கறுப்பினான்,
இடைந்து சென்றவனை எய்தி, எய்த அரிய
காவல் பெற்று இகல் இயற்றுவான்
மிடைந்து நின்ற படை வேலை கால் தளர,
வீசினான்; நிருதர் கூசினார். 70

சுற்றும் நின்ற படை சிந்தி ஓட, ஒரு
மராமரம் கொடு துகைத்துளான்
வெற்றி கண்டு, 'வலி நன்று, நன்று!' என
வியந்து, வெங் கணை தெரிந்து, அவன்
நெற்றியின்தலை இரண்டு, மார்பிடை
ஓர் அஞ்சு, நஞ்சு என நிறுத்தினான்;
பற்றி வந்த மரம் வேறு வேறு உற
நொறுக்கி, நுண் பொடி பரப்பினான். 71

**அனுமன் குன்று எறிதல்**

அக் கணத்து, அனுமன் ஆலகாலம் என-
லாயது ஓர் வெகுளி ஆயினான்;
புக்கு, அனைத்து உலகமும் குலுங்க நிமிர்
தோள் புடைத்து உருமுபோல் உரு,
'இக் கணத்து அவன் இறக்கும்' என்பது ஒரு
குன்று எடுத்து, மிசை ஏவினான்;
உக்கது அக் கிரி, சொரிந்த வாளிகளின்,
ஊழ் இலாத சிறு பூழியாய். 72

**இந்திரசித்தன் - அனுமன் வீர உரை**

'நில், அடா! சிறிது நில், அடா! உனை
நினைந்து வந்தனென், முனைக்கு நான்;
வில் எடாமை நினது ஆண்மை பேசி, உயி-
ரோடு நின்று விளையாடினாய்;
கல் அடா, நெடு மரங்களோ, வரு
கருத்தினேன் வலி கடக்கவோ?
சொல், அடா!' என இயம்பினான், இகல்
அரக்கன். ஐயன், இவை சொல்லினான்: 73

72. ஊழ் இலாத - முறைமை இல்லாத.

'வில் எடுக்க உரியார்கள், வெய்ய சில
　　வீரர், இங்கும் உளர்; மெல்லியோய்!
கல் எடுக்க உரியானும் நின்றனன்;
　　அது இன்று நாளையிடை காணலாம்;
எல் எடுத்த படை இந்திராதியர் உனக்கு
　　இடைந்து உயிர் கொடு ஏகுவார்;
புல் எடுத்தவர்கள் அல்லம்; வேறு சில
　　போர் எடுத்து, எதிர் புகுந்துளோம். 74

'என்னொடே பொருதியோ? அது அன்று எனின்,
　　இலக்குவப் பெயரின் எம்பிரான்-
தன்னொடே பொருதியோ? உன் உந்தை தலை
　　தள்ள நின்ற தனி வள்ளலாம்
மன்னொடே பொருதியோ? உரைத்தது
　　மறுக்கிலோம்' என, வழங்கினன்—
பொன்னொடே பொருவின் அல்லது ஒன்றொடு
　　பொருப் படா உயர் புயத்தினன். 75

'எங்கு நின்றனன் இலக்குவப் பெயர் அவ்
　　ஏழை, எம்பி அதிகாயனும்
சிங்கம் வந்தவனை வென்று, தன் உயிர்
　　எனக்கு வைத்தது ஓர் சிறப்பினன்?
அங்கு அவன்தனை மலைந்து கொன்று, முனிவு
　　ஆற வந்தனென்; அது அன்றியும்,
உங்கள் தன்மையின் அடங்குமோ, உலகு
　　ஒடுக்கும் வெங் கணை தொடுக்கினே? 76

'யாரும் என் படைஞர் எய்தல் இன்றி அயல்
　　ஏக, யானும், இகல் வில்லும், ஓர்
தேரின் நின்று, உமை அடங்கலும் திரள்
　　சிரம் துணிப்பென்; இது திண்ணமால்;
வாரும்; உங்களுடன் வானுளோர்களையும்
　　மண்ணுளோரையும் வரச் சொலும்;
போரும், இன்று ஒரு பகற்கணே பொருது,
　　வெல்வென்; வென்று அலது போகலேன்.' 77

74. புல் எடுத்தவர் - புல்லை வாயினால் கவ்வினவர், போரில் தோற்றவர் வாயினால் புல்லைக் கவ்வுதல் மரபு.

இந்திரசித்து – அனுமன் போர்

என்று, வெம் பகழி, ஏழு நூறும், இரு நூறும்,
வெஞ் சிலைகொடு ஏவினன்;
குன்று நின்றனைய வீர மாருதிதன்
மேனிமேல் அவை குழுக்களாய்ச்
சென்று சென்று உருவலோடும், வாள் எயிறு
தின்று சீறி, ஒரு சேம வன்
குன்று நின்றது பறித்து எடுத்து, அவனை
எய்தி, நொய்தின் இது கூறினன்: 78

'தும்பி என்று உலகின் உள்ள யாவை, அவை
ஏவையும் தொகுபு துள்ளு தாள்,
வெம்பு வெஞ் சின மடங்கல் ஒன்றின் வலி-
தன்னை நின்று எளிதின் வெல்லுமோ?
நம்பி தம்பி, எனது எம்பிரான், வரு
துணைத் தரிக்கிலை நலித்தியேல்,
அம்பின் முந்தி உனது ஆவி உண்ணும் இது;
கா, அடா! சிலை வல் ஆண்மையால்.' 79

செருப் பயிற்றிய தடக் கை ஆளி செல
விட்ட குன்று, திசை யானையின்
மருப்பை உற்ற திரள் தோள் இராவணன்
மகன்தன் மார்பின், நெடு வச்சிரப்
பொருப்பை உற்றது ஓர் பொருப்பு எனக் கடிது
ஒடிந்து இடிந்து, திசை போயதால்;
நெருப்பை உற்றது ஓர் இரும்பு கூடம் உற,
நீறு பட்டது நிகர்த்ததால். 80

விலங்கல்மேல் வர விலங்கல் வீசிய
விலங்கல் நீறு படு வேலையில்,
சலம் கைமேல் நிமிர, வெஞ் சினம் திருகி,
வஞ்சன் மேல் நிமிர் தருக்கினன்,
வலம் கொள் பேர் உலகம் மேருவோடு உடன்
மறிக்கும் மாருதிதன் வாசம் நாறு
அலங்கல் மார்பும் உயர் தோளும் ஊடுருவ,
ஆயிரம் சரம் அழுத்தினன். 81

78. சேமக் குன்று - தக்க சமயத்தில் உதவ வேண்டும் என்பதை நோக்கிப் பாதுகாவலாக வைத்திருந்த மலை; 79. தொகுபு - ஒன்று கூடி; கா - பாது காத்துக்கொள்; 80. ஆளி - ஆளி போன்ற அனுமன்; கூடம் - சம்மட்டி; 81. விலங்கல்மேல் - தன் மலை போன்ற மார்பின் மேல்; விலங்கல் வீசிய விலங்கல் - மலைபோன்ற அனுமன் வீசிய மலை; சலம் - மாறுபாடு.

ஒன்று போல்வன ஓராயிரம் பகழி
ஊடு போய் உருவ, ஆடகக்
குன்று கால் குடைய மேல் உயர்ந்து இடை
குலுங்கநின்றனைய கொள்கையான்,
மன்றல் நாறு தட மேனிமேல் உதிர
வாரி சோர வரும் மாருதி,
நின்று தேறும் அளவின்கண், வெங் கண் அடல்
நீலன் வந்து, இடை நெருக்கினான். 82

நீலன் போர்

நீலன், நின்றது ஒரு நீல மால் வரை
நெடுந் தடக் கையின் இடந்து, நேர்
மேல் எழுந்து, எரி விசும்பு செல்வது ஒரு
வெம்மையோடு வர வீசலும்,
சூலம் அந்தகன் எறிந்தது அன்னது
துணிந்து சிந்த, இடை சொல்லுறும்
காலம் ஒன்றும் அறியாமல், அம்பு கொடு
கல்லினான், நெடிய வில்லினான். 83

ஊகம் எங்கும் உயிரோடு நின்றனவும்
ஓட, வானவர்கள் உள்ளமும்
மோகம் எங்கும் உள ஆக, மேருவினும்
மும் மடங்கு வலி திண்மை சால்
ஆகம் எங்கும் வெளி ஆக, வெங் குருதி
ஆறு பாய, அனல் அஞ்சு வாய்,
நாக வெங் கண் நகு, வாளி பாய்தொறும்
நடுங்கினான், மலை பிடுங்கினான். 84

அங்கதன் போர்

'மேரு, மேரு' என, 'அல்ல, அல்ல' என
வேரினோடு நெடு வெற்பு எலாம்,
மார்பின்மேலும் உயர் தோளின்மேலும் உற,
வாலி காதலன் வழங்கினான்;
சேருமே அவை, தனுக் கை நிற்க? எதிர்
செல்லுமே? கடிது செல்லினும்,
பேருமே? கொடிய வாளியால் முறி
பெறுக்கலாவகை நுறுக்கினான். 85

83. கல்லுதல் - தோண்டுதல், ஈண்டுச் சினத்தல்; 84. ஊகம் ; வானரங்கள்; மோகம் - திகைப்பு; ஆகம் - உடம்பு; 85. முறி - துண்டம்- பெறுக்கலாவகை - பெறுகலாவகை.

நெற்றிமேலும், உயர் தோளின்மேலும், நெடு
மார்பின்மேலும், நிமிர் தாளினும்,
புற்றினூடு நுழை நாகம் அன்ன, புகை
வேக வாளிகள் புகப் புக,
தெற்றி வாள் எயிறு தின்று, கைத்துணை
பிசைந்து, கண்கள் எரி தீ உக,
வற்றி ஓடு உதிர வாரி சோர்வுற,
மயங்கினான், நிலம் முயங்கினான். 86

**இலக்குவன் உரை**

மற்றை வீரர்கள்தம் மார்பின்மேலும், உயர்
தோளின்மேலும், மழை மாரிபோல்,
கொற்ற வெங் கணை உலக்க, எய்தவை
குளிப்ப நின்று, உடல் குலுங்கினார்;
இற்று அவிந்தன, பெரும் பதாதி; உயிர்
உள்ள எங்கணும் இரிந்த; அப்
பெற்றி கண்டு, இளைய வள்ளல், ஒள் எரி
பிறந்த கண்ணன், இவை பேசினான்: 87

'பிழைத்தது, கொள்கை போத; பெரும் படைத் தலைவர் யாரும்
உழைத்தனர், குருதி வெள்ளத்து; உலந்ததும் உலப்பிற்று அன்றே;
அழைத்து இவன்தன்னை, யானே ஆர் உயிர் கொளப்படாதே?
இழைத்தது பழுதே அன்றோ?—வீடண!' என்னச் சொன்னான்.

**இலக்குவன் கருத்திற்கு வீடணன் இசைதல்**

'ஐய! ஈது அன்னதேயால்; ஆயிர கோடித் தேவர்
எய்தினர்; எய்தினார்கள் ஈடுபட்டு இரிந்தது அல்லால்,
செய்திலர் இவனை ஒன்றும்; நீ இது தீர்ப்பின் அல்லால்,
உய் திறன் உண்டோ, வேறு இவ் உலகினுக்கு உயிரோடு?' என்றான்.

என்பது சொல்லக் கேட்ட, இந்திரவில்லினோடும்
பொன் புரை மேகம் ஒன்று வருவது போல்கின்றானை,
முன்பனை, முன்பு நோக்கி, 'இவன்கொலாம், பரதன் முன்னோன்–
தன் பெருந் தம்பி?' என்றான்; 'ஆம்' எனச் சாரன் சொன்னான்.

88. போத - மிகவும்; உலப்பு - அளவு; 89. இது - இத் துன்பத்தை, இத்தகைய இவனுடைய வலிமையை எனலும் ஆம்.

**அரக்கர் இலக்குவனை எதிர்த்தல்**

தீயவன் இளவல்தன்மேல் செல்வதன் முன்னம், 'செல்க!' என்று
ஏயினர் ஒருவர் இன்றி, இராக்கதத் தலைவர், 'எங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய்! நண்ணினை, நாங்கள் காண;
போய் இனி உய்வது எங்கே?' என்று, எரி விழித்துப் புக்கார்.

**அரக்கர் படையின் அழிவு**

கோடி நூறு அமைந்த கூட்டத்து இராக்கதர், கொடித் திண் தேரும்,
ஆடல் மாக் களிறும், மாவும், கடாவினர் ஆர்த்து மண்டி,
மூடினார்; மூடினாரை முறை முறை துணித்து, வாகை
சூடினான், இராமன் பாதம் சூடிய தோன்றல் தம்பி. 92

அதிர்ந்தன, உலகம் ஏழும்; அனற் பொறி, அசனி என்னப்
பிதிர்ந்தன; மலையும் பாரும் பிளந்தன; பிணத்தின் குன்றத்து
உதிர்ந்தன, தலைகள்; மண்டி ஓடின, உதிர நீத்தம்;
விதிர்ந்தன, அமரர் கைகள்; விளைந்தது, கொடிய வெம் போர்.

விட்டனன், விசிகம் வேகம் விடாதன, வீரன்; மார்பில்
பட்டன; உலகம் எங்கும் பரந்தன; பதாகைக் காட்டைச்
சுட்டன; துரக ராசி துணித்தன; பனைக் கைம்மாவை
அட்டன; கூற்றம் என்ன அடர்ந்தன, அனந்தம் அம்மா! 94

உலக்கின்றார்; உலக்கின்றாரை எண்ணுவான் உற்ற விண்ணோர்,
கலக்குறு கண்ணர் ஆகி, கடையுறக் காணல் ஆற்றார்,
விலக்க அரும் பகழி மாரி விளைக்கின்ற விளைவை உன்னி,
'இலக்குவன் சிலை கொடேகொல், எழு மழை பயின்றது!' என்றார். 95

ஒளி ஒண் கணைகள்தோறும் உந்திய வேழம், ஒற்றை
வாளியின் தலைய, பாரில் மறிவன, மலையின் சூழ்ந்த;
ஆளியின் துப்பின் வீரர் பொரு களத்து, ஆர்த்த ஆழித்
தூளியின் தொகைய, வள்ளல் சுடு கணைத் தொகையும் அம்மா!

'பிறவியில் பெரிய நோக்கின் பிசிதம் உண்டு, உழலும் பெற்றிச்
சிறையன' என்ன நோக்கி, தேவரும் திகைப்ப, தேற்றி,
துறைதொறும் தொடர்ந்து, வானம் வெளி அறத் துவன்றி, வீழும்
பறவையின் பெரிது பட்டார் பிணத்தின்மேல் படிவ மாதோ. 97

94. விசிகம் - அம்புகள்; கைம்மா - யானை; 95. கடையுற - கடைசிவரை; 96. ஒளி - வரிசை; ஆழித் தூளி - கடலில் உள்ள மணல்கள்; 97. பிசிதம் - ஊன்; சிறையன - இறகுகளையுடைய பறவைகள்.

திறம் தரு கவியின் சேனை, செறி கழல் நிருதன் சீற,
இறந்தன கிடந்த வெள்ளம் எழுபதின் பாதி மேலும்,
பறந்தலை முழுதும் பட்ட வஞ்சகர் படிவம் மூட,
மறைந்தன; குருதி ஓடி, மறி கடல் மடுத்திலாத. 98

கை அற்றார்; கால்கள் அற்றார்; கழுத்து அற்றார்; கவசம் அற்றார்;
மெய் அற்றார்; குடர்கள் சோர, விசை அற்றார்; விளிவும் அற்றார்;
மையல் தார்க் கரியும், தேரும், வாசியும், மற்றும் அற்றார்;
உய்யச் சாய்ந்து ஓடிச் சென்றார், உயிர் உள்ளார் ஆகி உள்ளார்.

**இலக்குவன் - இந்திரசித்தன் போர்**

வற்றிய கடலுள் நின்ற மலை என, மருங்கின் யாரும்
சுற்றினர் இன்றி, தோன்றும் தசமுகன் தோன்றல், துள்ளித்
தெற்றின புருவத்தோன், தன் மனம் எனச் செல்லும் தேரான்,
உற்றனன், இளைய கோவை; அனுமனும் உடன் வந்து உற்றான்.

'தோளின்மேல் ஆதி, ஐய!' என்று அடி தொழுது நின்றான்;
ஆளிபோல் மொய்ம்பினானும் ஏறினன்; அமரர் ஆர்த்தார்;
காளியே அனைய காலன் கொலை அன, கனலின் வெய்ய,
வாளிமேல் வாளி தூர்த்தார், மழையின்மேல் மழை வந்தன்னார்.

இடித்தன, சிலையின் நாண்கள்; இரிந்தன, திசைகள் இற்று;
வெடித்தன, மலைகள் விண்டு; பிளந்தது, விசும்பு மேன்மேல்;
பொடித்த, இவ் உலகம் எங்கும்; பொழிந்தன, பொறிகள் பொங்கி;
கடித்தன, கணைகளோடு கணைகள் தம் அயில் வாய் கவ்வி. 102

அம்பினோடு அம்பு ஒன்று ஒன்றை அறுக்க, மற்று அறுக்கிலாத,
வெம் பொறி கதுவ, விண்ணில் வெந்தன, கரிந்து வீழ்ந்த;
உம்பரும் உணர்வு சிந்தி ஒடுங்கினர்; உலகம் யாவும்
கம்பமுற்று உலைந்த; வேலைக் கலம் எனக் கலங்கிற்று, அண்டம்.

அரிஇனம் பூண்ட தேரும், அனுமனும், அனந்த சாரி
புரிதலின், இலங்கை ஊரும் திரிந்தது; புலவரேயும்,
எரி கணைப் படலம் மூட, 'இலர், உளர்' என்னும் தன்மை
தெரிகிலர்; செவிடு செல்லக் கிழிந்தன, திசைகள் எல்லாம். 104

98. திறம் தரு - திறம் பொருந்திய; பறந்தலை - போர்க்களம்; 99. விளிவு - விளிக்கும் தன்மை, கூப்பிடும் சக்தி; 101. காளியே அனைய காலன் - காளி போன்ற கரு நிறமுடைய எமன்; 103. கம்பம் - நடுக்கம்; 104. அனந்த - பலப்பல.

'என் செய்தார்! என் செய்தார்!' என்று இயம்புவார்; 'இனைய தன்மை
முன் செய்தார் யாவர்?' என்பார்; 'முன் எது? பின் எது?' என்பார்;
கோன் செய்தார் வீரர் இன்ன திசையினுர் என்றும் கொள்ளார்;—
பொன் செய் தார் மவுலி விண்ணோர்—உணர்ந்திலர், புகுந்தது ஒன்றும்.

'நாண் பொரு வரி வில் செங் கை, நாம நூல் நவின்ற கல்வி
மாண்பு ஒரு வகையிற்று அன்று; வலிக்கு இலை அவதி; வானம்
சேண் பெரிது' என்று, சென்ற தேவரும், 'இருவர் செய்கை
காண்பு அரிது' என்று, காட்சிக்கு ஐயுறவு எய்திற்று அன்னே!

ஆயிர கோடி பல்லம், அயில் எயிற்று அரக்கன், எய்தான்;
ஆயிர கோடி பல்லத்து அவை துணித்து அறுத்தான், ஐயன்;
ஆயிர கோடி நாகக் கணை தொடுத்து, அரக்கன் எய்தான்;
ஆயிர கோடி நாகக் கணைகளால் அறுத்தான், அண்ணல். 107

கோட்டியின் தலைய கோடி கோடி அம்பு அரக்கன் கோத்தான்;
கோட்டியின் தலைய கோடி கோடியால் குறைத்தான், கொண்டல்;
மீட்டு, ஒரு கோடி கோடி வெஞ் சினத்து அரக்கன் விட்டான்;
மீட்டு, ஒரு கோடி கோடி கொண்டு, அவை தடுத்தான், வீரன்.

கங்கபத்திரம் ஓர் கோடி கை விசைத்து, அரக்கன் எய்தான்;
கங்கபத்திரம் ஓர் கோடி கணை தொடுத்து, இளவல் காத்தான்.
திங்களின் பாதி கோடி, இலக்குவன் தெரிந்து விட்டான்;
திங்களின் பாதி கோடி தொடுத்து, அவை அரக்கன் தீர்த்தான்.

கோரையின் தலைய கோடி கொடுங் கணை அரக்கன் கோத்தான்;
கோரையின் தலைய கோடி தொடுத்து, அவை இளவல் கொய்தான்;
பாரையின் தலைய கோடி பரப்பினுன் இளவல், பல் கால்;
பாரையின் தலைய கோடி, அரக்கனும், பதைக்க எய்தான். 110

தாமரைத் தலைய வாளி, தாமரைக் கணக்கின் சார்ந்த,
தாம் வரத் துரந்து, முந்தி, தசமுகன் தனயன் ஆர்த்தான்;
தாமரைத் தலைய வாளி, தாமரைக் கணக்கின் சார்ந்த,
தாம் வரத் தடுத்து வீழ்த்தான், தாமரைக்கண்ணன் தம்பி.

105. பொன் செய் தார் - பொன் மயமான (கற்பக மலர்) மாலை; 107. பல்லம் - ஒருவகை அம்பு; 108. கோட்டியின் தலைய - துன்பம் செய்யும் இயல்பினைக் கொண்டன; 109. கங்க பத்திரம் - கழுகின் சிறகுகள் பொருந்திய அம்புகள்; 110. கோரையின் தலைய - கோரை போன்ற நுனியினை உடையன; பாரையின் தலைய - பாரை மீன் போன்ற தலையை உடையன; 111. தாமரைக் கணக்கு - பதுமம் என்னும் பேரெண் அளவு.

வச்சிரப் பகழி கோடி வளை எயிற்று அரக்கன் எய்தான்;
வச்சிரப் பகழி கோடி துரந்து, அவை அனகன் மாய்த்தான்;
முச் சிரப் பகழி கோடி இலக்குவன் முடுக விட்டான்;
முச் சிரப் பகழி கோடி தொடுத்து, அவை தடுத்தான், முன்பன்,

அஞ்சலி அஞ்சு கோடி தொடுத்து, இகல் அரக்கன் எய்தான்;
அஞ்சலி அஞ்சு கோடி தொடுத்து, அவை அறுத்தான், ஐயன்;
குஞ்சரக்கன்னம் கோடி இலக்குவன் சிலையில் கோத்தான்;
குஞ்சரக்கன்னம் கோடி தொடுத்து, அவை அரக்கன் கொய்தான். 113

எய்யவும், எய்த வாளி விலக்கவும், உலகம் எங்கும்
மொய் கணைக் கானம் ஆகி முடிந்தது; முழங்கு வேலை
பெய் கணைப் பொதிகளாலே வளர்ந்தது; பிறந்த கோபம்
கைம்மிகக் கனன்றது அல்லால், தளர்ந்திலர், காளை வீரர். 114

வீழியின் கனிபோல் மேனி கிழிபட, அனுமன் வீரச்
சூழ் எழு அனைய தோள்மேல் ஆயிரம் பகழி தூவி,
ஊழியின் நிமிர்ந்த செந் தீ உருமினை உமிழ்வது என்ன,
ஏழ்-இருநூறு வாளி இலக்குவன் கவசத்து எய்தான். 115

'முற்கொண்டான், அரக்கன்' என்று, முளரி வாள் முகங்கள், தேவர்,
பின் கொண்டார்; இளைய கோவைப் பியல் கொண்டான் பெருந் தோள்
கல் கொண்டு ஆர் கிரியின் நாலும் அருவிபோல், குருதி கண்டார் [நின்றும்,
'வில் கொண்டான், இவனே'! என்று, வெருக் கொண்டார், முனிவர் [எல்லாம்.

சீறும் நூல் தெரிந்த சிந்தை இலக்குவன், சிலைக் கை வாளி
நூறு நூறு ஏவி, வெய்தின், நுடங்கு உளை மடங்கல் மாவும்
வேறு வேறு இயற்றி, வீரக் கொடியையும் அறுத்து வீழ்த்தி,
ஆறு நூறு அம்பு செம் பொன் கவசம் புக்கு அழுந்த எய்தான்.

காளமேகத்தைச் சார்ந்த கதிரவன் என்னக் காந்தி,
தோளின்மேல் மார்பின்மேலும், சுடர் விடு கவசம் சூழ,
நீள நீள் பவள வல்லி நிரை ஒளி நிமிர்வ என்ன,
வாளிவாய்தோறும் வந்து பொடித்தன, குருதி வாரி. 118

112. வச்சிரப் பகழி - பல தலைகளையுடைய வச்சிரத்தின் வடிவமானதோர் அம்பு; முச் சிரப் பகழி - மூன்று முனைகளையுடையதோர் அம்பு; 113. குஞ்சரக் கன்னம் - யானையின் காது போன்ற தோற்றம் உடையதோர் அம்பு; 114. பொதி - கூட்டம்; 116. பியல் கொண்டான் - பிடரியின்மேல் கொண்டுள்ள அனுமன்; 117. சீறும் நூல் - சீறிச் செய்யும் போர்த்துறைக்கு உரிய நூல்.

பொன் உறு தடந் தேர் பூண்ட மடங்கல் மாப் புரண்ட போதும்,
மின் உறு பதாகையோடு சாரதி வீழ்ந்த போதும்,
தன் நிறத்து உருவ, வாளி தடுப்பு இல சார்ந்த போதும்,
இன்னது என்று அறியான், அன்னான், இனையது ஓர் மாற்றம் சொன்
[னான்: *

'அந் நரன்; அல்லன்ஆகின், நாரணன் அனையன்; அன்றேல்,
பின், அரன், பிரமன் என்பார்ப் பேசுக: பிறந்து வாழும்
மன்னர், நம் பதியின் வந்து, வரி சிலை பிடித்த கல்வி
இந் நரன்தன்னோடு ஒப்பார் யார் உளர், ஒருவர்?' என்றான்.

**இந்திரசித்தன் தேர் அழிதல்**

வாயிடை நெருப்புக் கால, உடல் நெடுங் குருதி வார,
தீயிடை நெய் வார்த்தன்ன வெகுளியான்,—உயிர் தீர்ந்தாலும்,
ஓய்விடம் இல்லான்—வல்லை, ஓர் இமை ஒடுங்காமுன்னம்,
ஆயிரம் புரவி பூண்ட ஆழி அம் தேரன் ஆனான். 121

ஆசை எங்கணும் அம்பு உக, வெம்பு போர்
ஓசை விம்ம, உருத்திரரும் உடல்
கூச, ஆயிர கோடி கொலைக் கணை
வீசி, விண்ணை வெளி இலது ஆக்கினான். 122

அத் திறத்தினில், அனகனும், ஆயிரம்
பத்தி பத்தியின் எய்குவ பல் கணை
சித்திரத்தினில் சிந்தி, இராவணன்
புத்திரற்கும், ஓர் ஆயிரம் போக்கினான். 123

ஆயிரம் கணை பாய்தலும், ஆற்ற அருங்
காய் எரித்தலை நெய் எனக் காந்தினான்;
தீயவன் பெருஞ் சேவகன் சென்னிமேல்
தூய வெங் கணை நூறு உடன் தூண்டினான்.* 124

நெற்றிமேல் ஒரு நூறு நெடுங் கணை
உற்ற போதினும், யாதும் ஒன்று உற்றிலன்,
மற்று அவ் வன் தொழிலோன் மணி மார்பிடை
முற்ற, வெங் கணை நூறு முடுக்கினான். 125

123. அனகன் - பாவச் செயல் இல்லாதவன், ஈண்டு இலக்குவன்; சித்திரம் - விசித்திரம், வியக்கத்தக்க நிலை; 125. முற்ற - ஊடு உருவுமாறு.

நூறு வெங் கணை மார்பின் நுழைதலின்,
ஊறு சோரியொடு உள்ளமும் சோர்தர,
தேறல் ஆம் துணையும், சிலை ஊன்றியே
ஆறி நின்றனன்—ஆற்றலில் தோற்றிலான். 126

புதையும் நல் மணி, பொன் உருள், அச்சொடும்
சிதைய, ஆயிரம் பாய் பரி சிந்திட,—
வதையின் மற்றொரு கூற்று என மாருதி—
உதையினால் அவன் தேரை உருட்டினான். 127

பேய் ஓர் ஆயிரம் பூண்டது, பெய்ம் மணி
ஏய தேர் இமைப்பின்னிடை ஏறினான்;
தூயவன் சுடர்த் தோள்இணைமேல் சுடர்த்
தீய வெங் கணை ஐம்பது சிந்தினான். 128

ஏறி ஏறி இழிந்தது அல்லால், இகல்
வேறு செய்திலன், வெய்யவன்; வீரனும்,
ஆறு கோடி பகழியின் ஐ-இரு
நூறு தேர் ஒரு நாழிகை நூறினான். 129

ஆசி கூறினர்; ஆர்த்தனர்; ஆய் மலர்
வீசி வீசி, வணங்கினர்;—விண்ணவர்—
ஊசல் நீங்கினர்; உத்தரிகத்தொடு
தூசு வீசினர்;—நல் நெறி துன்னினர். 130

அக் கணத்தின், ஓர் ஆயிரம் ஆயிரம்
மிக்க வெங் கண் அரக்கர், அவ் வீரனோடு
ஒக்க வந்துற்று ஒருவழி நண்ணினர்,
புக்கு முந்தினர், போரிடைப் பொன்றுவான். 131

தேரர், தேரின் இவுளியர், செம் முகக்
காரர்,—காரின் இடிப்பினர், கண்டையின்
தாரர், தாரணியும் விசும்பும் தவழ்
பேரர், பேரி முழக்கு அன்ன பேச்சினர். 132

பார்த்த பார்த்த திசைதொறும், பல் மழை
போர்த்த வானம் என இடி போர்த்து எழ,
ஆர்த்த ஓதையும், அம்பொடு வெம் படை
தூர்த்த ஓதையும், விண்ணினைத் தூர்த்தவால். 133

127. வதையின் - கொலைத் தொழிலில்; 130. ஊசல் - மனத் தடுமாற்றம்; உத்தரிகம்- மேலாடை; 132. கண்டையின் தாரர் - கண்டை மாலை அணிந்தவர், இன் சாரியை.

ஆளி ஆர்த்தன; வாள் அரி ஆர்த்தன;
கூளி ஆர்த்தன; குஞ்சரம் ஆர்த்தன;
வாளி ஆர்த்தன; தேர், இவர் மண்டலம்
தூளி ஆர்த்திலதால், பிணம் துன்னலால். 134

வந்து அணைந்தது ஓர், வாள் அரி வாவு தேர்,
இந்திரன்தனை வென்றவன் ஏறினன்;
சிந்தினன் சர மாரி, திசை திசை;
அந்திவண்ணனும் அம்பின் அகற்றினன். 135

சுற்றும் வந்து படர்ந்து தொடர்ந்தவர்
எற்றுகின்றன, எய்த, எறிந்தன,
அற்று உதிர்ந்தன; ஆயிரம் வன் தலை,
ஒற்றை வெங் கணையோடும் உருண்டவால். 136

குடர் கிடந்தன, பாம்பு என; கோள் மதத்
திடர் கிடந்தன; சிந்தின, தேர்த் திரள்;
படர் கிடந்தனர், பல் படைக் கையினர்—
கடர் கிடந்தன போன்ற களத்தினே. 137

குண்டலங்களும், ஆரமும், கோவையும்,
கண்டநாணும், கழலும், கவசமும்,
சண்டமாருதம் வீச, தலத்து உகும்
விண் தலத்தினின் மீன் என, வீழ்ந்தவால்.† 138

அரக்கன் மைந்தனை, ஆரியன் அம்பினால்,
கரக்க நூறி, எதிர் பொரு கண்டகர்
சிரக் கொடுங் குவைக் குன்று திரட்டினன்—
இரக்கம் எய்தி, வெங் காலனும் எஞ்சவே. 139

அனுமன் விளைத்த போர்

சுற்றும் வால்கொடு; தூவும்; துவைக்கும்; விட்டு
எற்றும்; வானின் எடுத்து எறியும்; எதிர்
உற்று மோதும்; உதைக்கும்; உறுக்குமால்—
கொற்ற வில்லி அன்று ஏறிய கூற்றமே. 140

பார்க்கும் அஞ்ச; உறுக்கும்; பகட்டினால்
தூர்க்கும், வேலையை; தோள் புடை கொட்டி நின்று
ஆர்க்கும்; ஆயிரம் தேர் பிடித்து அம் கையால்
ஈர்க்கும்—ஐயன் அன்று ஏறிய யானையே. 141

140. கொற்ற வில்லி - இலக்குவன்; கூற்றம் - அனுமனாகிய எமன்;
141. பகடு - யானை.

மாவும் யானையும் வாளுடைத் தானையும்,
பூவும் நீரும் புனை தளிரும் என,
தூவும்; அள்ளிப் பிசையும்; துகைக்குமால்—
சேவகன் தெரிந்து ஏறிய சியமை. 142

உரகம் பூண்ட உருளை பொருந்தின
இரதம் ஆயிரம், 'ஏ' எனும் மாத்திரை,
சரதம் ஆகத் தரைப் படச் சாடுமால்—
வரதன் அன்று உவந்து ஏறிய வாசியே.† 143

அவ் இடத்தினில், ஆய் மருந்தால், அழல்
வெவ் விடத்தினை உண்டவர் மீண்டென,
எவ் இடத்தினும் வீழ்ந்த இனத்தலைத்
தெவ் அடக்கும் அவ் வலியவர் தேறினர். 144

தேறினர் கண் நெருப்பு உகச் சீறினர்;
ஊறினர் வந்து, இளவலை ஒன்றினர்;
மாறு மாறு, மலையும் மரங்களும்,
நூறும் ஆயிரமும் கொடு நூறினர். 145

விகடம் உற்ற மரனொடு வெற்புஇனம்
புகட, உற்ற பொறுத்தன போவன,
துகள் தவத் தொழில் செய் துறைக் கம்மியர்
சகடம் ஒத்தன, தார் அணி தேர் எலாம். 146

வாலி மைந்தன் ஓர் மால் வரை வாங்கினன்,
காலின் வந்த அரக்கனை; 'கா; இது
போலும் உன் உயிர் உண்பது, புக்கு' என,
மேல் நிமிர்ந்து, நெருப்பு உக, வீசினன். 147

'ஏர் அழித்தது செய்தவன் ஈண்டு எழில்
சீர் அழி நதவன் ஆம்' என, தேவர்கள்
ஊர் அழித்த உயர் வலித் தோளவன்
தேர் அழித்து, ஓர் இமைப்பிடைச் சென்றதால். 148

143. வாசி - குதிரை போன்ற அனுமன்; 144. இனத்தலைத் தெவ் - இனத்தில் (வானரக் கூட்டத்தில்) உள்ளவர்களான பகை; 146. விகடம் - வேறுபாடு; புகட - வீச; உற்ற பொறுத்தன - உளவான ஊறுபாடுகளைத் தாங்கின; 147. காலின் வந்த - தேரில் வந்த, காற்றுப்போல் விரைந்து வந்த எனினும் ஆம்; 148. ஏர் அழித்தது - அழகு கெட்டது, தீத் தொழில்.

அந்த வேலையின், ஆர்த்த எழுந்து ஆடினர்,
சிந்தை சால உவந்தனர், தேவர்கள்—
'தந்தை தந்தை பண்டு உற்ற சழக்கு எலாம்
எந்தை தீர்த்தனன்' என்பது ஓர் ஏம்பலால். 149

அழிந்த தேரின்நின்று, அந்தரத்து, அக் கணத்து,
எழுந்து, மற்று ஓர் இரதம் உற்று ஏறினன்,—
'கழிந்து போகலை, நில்!' என, கைக் கணை
பொழிந்து சென்றனன்—தீ எனப் பொங்கினன். 150

இந்திரன் மகன் மைந்தனை, 'இன் உயிர்
தந்து போக!' எனச் சாற்றலுற்றுான்தனை,
வந்து, மற்றைய வானர வீரரும்,
முந்து போர்க்கு முறை முறை முற்றினர். 151

மரமும், குன்றும், மடிந்த அரக்கர்தம்
சிரமும், தேரும், புரவியும், திண் கரிக்
கரமும், ஆளியும் வாரிக் கடியவன்
சரமும் தாழ்தர, வீசினர், தாங்கினர். 152

அனைய காலையில், ஆயிரம் ஆயிரம்
வினைய வெங் கண் அரக்கரை. விண்ணவர்
நினையும் மாத்திரத்து, ஆர் உயிர் நீக்கினன்—
மனையும், வாழ்வும், உறக்கமும் மாற்றினன். 153

ஆனையும், தடந் தேரும், தன் ஆர் உயிர்த்
தானையும், பரியும், படும் தன்மையை,
மான வெங் கண் அரக்கன் மனக் கொளா,
போன வென்றியன், தீ எனப் பொங்கினன். 154

சீர்த் தடம் பெருஞ் சில்லி அம் தேரினைக்
காத்து நின்ற இருவரைக் கண்டனன்—
ஆர்த்த தம் பெருஞ் சேனை கொண்டு, அண்டமேல்
ஈர்த்த சோரிப் பரவை நின்று ஈர்த்தலால்.† 155

149. தந்தை தந்தை - பாட்டன், அங்கதன் தந்தையாகிய வாலிக்கு இந்திரன் தந்தையாவன்; சழக்கு - அவமானம்; ஏம்பல் - களிப்பு; 152. கடியவன் - கொடியவனாகிய இந்திரசித்து; 153. மனை - மனைவி; 154. போன வென்றியன் - வெற்றி இல்லாதவன்; 155. காத்து நின்ற இருவர் - புகை நிறக் கண்ணன் (தூம்ராக்ஷன்), மாபக்கன் (மகா பார்சுவன்) என்னும் இருவர்.

நேர் செலாது, இடை நின்றனர்—நீள் நெடுங்
கார் செலா; இருள் கீறிய கண் அகல்
தேர் செலாது; விசும்பிடைச் செல்வது ஓர்
பேர் செலாது;—பிணத்தின் பிறக்கமே.† 156

அன்று தன் அயல் நின்ற அரக்கரை
ஒன்று வாள் முகம் நோக்கி, 'ஒரு விலான்
நன்று நம் படை நாற்பது வெள்ளமும்
கொன்று நின்றபடி!' எனக் கூறினன். 157

ஆய வீரரும், 'ஐய! அமர்த்தலை,
நீயும், நாற்பது வெள்ள நெடும் படை
மாய, வெங் கணை மாரி வழங்கினை;
ஒய்வு இல் வெஞ் செரு ஒக்கும்' என்று ஓதினர். 158

வந்து நேர்ந்தனர்; மாருதிமேல் வரும்
அந்திவண்ணனும், ஆயிரம் ஆயிரம்
சிந்தினன், கணை; தேவரை வென்றவன்
நுந்த நுந்த, முறை முறை நூறினன். 159

ஆறும் ஏழும், அறுபதும் ஐம்பதும்,
நூறும் ஆயிரமும், கணை நூக்கி, வந்து
ஊறினரை உணர்வு தொலைத்து, உயிர்
தேறினரை நெடு நிலம் சேர்த்தினன். 160

கதிரின் மைந்தன் முதலினர், காவலார்,
உதிர வெள்ளத்தின் ஒல்கி ஒதுங்கலும்,
எதிரில் நின்ற இராவணி ஈடுற,
வெதிரின் காட்டு எரிபோல், சரம் வீசினன். 161

உளைவு தோன்ற, இராவணி ஒல்கினன்;
கிளையின் நின்ற இருவர் கிளைத்தலும்,
அளவு இல் சேனை அவிதர, ஆரியற்கு
இளைய வீரன் சுடு சரம் ஏவினன். 162

தெரி கணை மாரி பெய்ய, தேர்களும், சிலைக் கைம்மாவும்,
பரிகளும், தாமும், அன்று பட்டன கிடக்கக் கண்டார்,
இருவரும் நின்றார்; மற்றை இராக்கதர் என்னும் பேர்கள்
ஒருவரும் நின்றார் இல்லை; உள்ளவர் ஓடிப் போனார். 163

156. ஓர் பேர் - ஓர் உயிர்; 162. உளைவு - வருத்தம்; கிளைத்தல் - மனக் கிளர்ச்சியுற்றுப் போர்க்கு எழுதல்.

ஓடினர் அரக்கர், தண்ணீர் உண் நசை உலர்ந்த நாவர்,
தேடினர், தெரிந்து கையால் முகிலினை முகந்து தேக்கி,
பாடு உறு புண்கள்தோறும் பசும் புனல் பாயப் பாய,
வீடினர் சிலவர்; சில்லோர், பெற்றிலர்; விளிந்து வீழ்ந்தார்.

வெங் கணை திறந்த மெய்யர், விளிந்திலர், விரைந்து சென்றார்,
செங் குழல் கற்றை சோரத் தெரிவையர் ஆற்ற, தெய்வப்
பொங்கு பூம் பள்ளி புக்கார், அவர் உடல் பொருந்தப் புல்லி,
அங்கு அவர் ஆவியோடும் தம் உயிர் போக்கி அற்றார். 165

பொறிக் கொடும் பகழி மார்பர், போயினர், இடங்கள் புக்கார்,
மறிக் கொளும் சிறுவர்தம்மை, மற்று உள சுற்றம்தம்மைக்
'குறிக்கொளும்' என்று கூறி, அவர் முகம் குழைய நோக்கி,
நெறிக் கொளும் கூற்றை நோக்கி, ஆர் உயிர் நெடிது நீத்தார்.

'தாமரைக்கண்ணன் தம்பி தன்மை ஈது ஆகின், மெய்யே
வேம், அரைக் கணத்தின் இவ் ஊர்; இராவணி விளிதல் முன்னம்,
மா மரக் கானில், குன்றில், மறைந்திரும்; மறைய, வல்லே
போம்' எனத் தமரைச் சொல்லி, சிலர் உடல் துறந்து போனார்.

வரை உண்ட மதுகை மேனி மருமத்து, வள்ளல் வாளி
இரை உண்டு துயில, சென்றார், 'வாங்கிடின், இறப்பம்' என்பார்,
பிரை உண்ட பாலின் உள்ளம் பிறிதுற, பிறர் முன் சொல்லா
உரையுண்ட நல்லோர் என்ன, உயிர்த்து உயிர்த்து, உழைப்பதானார்.

தேரிடைச் செல்லார், மானப் புரவியில் செல்லார், செங் கண்
காரிடைச் செல்லார், காலின் சால் எனச் செல்லார், காவல்
ஊரிடைச் செல்லார், நாணால் உயிரின்மேல் உடைய அன்பால்,
போரிடைச் செல்லார், நின்று நடுங்கினர், புறத்தும் போகார்.

**இந்திரசித்தன் கவசத்தை இலக்குவன் பிளத்தல்**

நொய்தினின் சென்று கூடி, இராவணி உளைவை நோக்கி,
'வெய்தினின் கொன்று வீழ்ப்பல்' என்பது ஓர் வெகுளி வீங்கி,—
பெய்துழிப் பெய்யும் மாரி அனையவன்—பிணங்கு கூற்றின்
கையினின் பெரிய அம்பால், கவசத்தைக் கழித்து வீழ்த்தான்.

166. பொறிப் பகழி - நெருப்புப் பொறி பறக்கும் அம்பு; மறிக் கொளும் சிறுவர் - மான்மறி போலத் துள்ளி விளையாடும் புதல்வர்; குழைய நோக்குதல் - பரிவொடு பார்த்தல்; 168. வரை உண்ட - மலை போன்ற; உண்ட - உவம உருபு; மருமம் - மார்பு; பிறர் முன் சொல்லா உரை - பிறரிடத்துச் சொல்லாத சொற்கள் (மௌன விரதம்), பிறர்முன் சொல்லத் தகாத பழிச்சொல் எனலும் ஆம்; 170. பெய்துழிப் பெய்யும் - பெய்த இடத்திலேயே பெய்யும்.

கவசத்தைக் கழித்து வீழ்ப்ப, காப்புறு கடன் இன்று ஆகி,
அவசத்தை அடைந்த வீரன் அறிவுறும் துணையின் வீரத்
'துவசத்தின் புரவித் திண் தேர் கடிதுறத் தூண்டி, யாம் இத்
திவசத்தின் முடித்தும், வெம் போர்' எனச் சினம் திருகிச் சென்றார்.*

மாருதிமேலும், ஐயன் மார்பினும் தோளின்மேலும்,
தேரினர் இருவர் சென்றார், செந் தழல் பகழி சிந்தி;
ஆரியன், வாகை வில்லும், அச்சுடைத் தேரும், அத் தேர்
ஊர்குவார் உயிரும், கொண்டான்; புரவியின் உயிரும் உண்டான்.

இருவரும் இழந்த வில்லார், எழு முனை வயிரத் தண்டார்,
உரும் எனக் கடிதின் ஓடி, அனுமனை இமைப்பின் உற்றார்,
பொரு கனல் பொறிகள் சிதறப் புடைத்தனர்; புடைத்தலோடும்,
பரு வலிக் கரத்தினால் தண்டு இரண்டையும் பறித்துக் கொண்டான்.

தண்டு அவன் கையது ஆன தன்மையைத் தறுகணாளர்
கண்டனர்; கண்டு, செய்யலாவது ஒன்றுனும் காணார்;
'கொண்டனன் எறிந்து நம்மைக் கொல்லும்' என்று, அச்சம்கொண்டார்,
உண்ட செஞ்சோறும் நோக்கார், உயிருக்கே உதவி செய்தார்.

**இந்திரசித்தன் வானர வீரர்களைச் சின்னபின்னம் செய்தல்**

காற்று வந்து அசைத்தலாலும், காலம் அல்லாமையாலும்,
கூற்று வந்து உயிரைக் கொள்ளும் குறி இன்மை குறித்தலாலும்,
தேற்றம் வந்து எய்தி, நின்ற மயக்கமும் நோவும் தீர்ந்தார்;
ஏற்றமும் வலியும் பெற்றார்; எழுந்தனர்—வீரர் எல்லாம்.

அங்கதன், குமுதன், நீலன், சாம்பவன், அருக்கன் மைந்தன்,
பங்கம் இல் மயிந்தன், தம்பி, சதவலி, பனசன் முன்னாச்
சிங்க ஏறு அனைய வீரர் யாவரும், சிகரம் ஏந்தி,
மங்கலம் வானோர் சொல்ல, மழை என ஆர்த்து, வந்தார்.

அத்தனையோரும், குன்றம் அளப்பு இல, அசனி ஏற்றோடு
ஒத்தன, நெருப்பு வீசும் உரும் என ஒருங்க உய்த்தார்;
'இத்தனை போலும் செய்யும் இகல்' என, முறுவல் எய்தி,
சித்திர வில் வலோனும் சின்ன பின்னங்கள் செய்தான். 177

*171. அவசம் - தன்னை இழந்த நிலை; திவசம் - நாள்; 172. ஆரியன் - இலக்குவன்; 174. உயிருக்கு உதவி செய்தல் - புறமுதுகு காட்டி ஓடி ஒளிதல்; 175. காலம் - உயிர் போதற்குரிய காலம்; 176. மயிந்தன் தம்பி - துமிந்தன்; 177. சித்திரம் - விசித்திரம், அதிசயம்.*

மரங்களும் மலையும் கல்லும் மழை என வழங்கி, வந்து
நெருங்கினர்; நெருங்கக் கண்டும்; ஒரு தனி நெஞ்சும், வில்லும்,
சரங்களும், துணையாய் நின்ற நிசாசரன் தனிமை நோக்கி,
இரங்கினன் என்ன, மேல்பால் குன்று புக்கு, இரவி நின்றான்.

'வாழிய வேதம் நான்கும், மனு முதல் வந்த நூலும்,
வேள்வியும், மெய்யும், தெய்வ வேதியர் விழைவும் அஃதே,
ஆழி அம் கமலக் கையான் ஆதிஅம் பரமன்' என்ன
ஏழையர் உள்ளம் என்ன இருண்டன—திசைகள் எல்லாம்.†

**வீடணன் தூண்டுதலால் இலக்குவன் இந்திரசித்தைக் கொல்ல முயல்தல்**

'நாகமே அனைய நம்ப! நாழிகை ஒன்று நான்கு
பாகமே காலம் ஆகப் படுத்தியேல், பட்டான்; அன்றேல்,
வேக வாள் அரக்கர் காலம் விளைந்தது; விசும்பின் வஞ்சன்
ஏகுமேல், வெல்வன்' என்பது, இராவணற்கு இளவல் சொன்னான்.

அத்தனை வீரர்மேலும், ஆண் தகை அனுமன்மேலும்,
எத்தனை கோடி, வாளி மழை என எய்யாநின்ற
வித்தக வில்லினானைக் கொல்வது விரும்பி, வீரன்,
சித்திரத் தேரைத் தெய்வப் பகழியால் சிதைத்து வீழ்த்தான்.

**நாகபாசத்தை விடுக்க இந்திரசித்தன் வானில் மறைதல்**

அழித்த தேர் அழுந்தாமுன்னம், 'அம்பொடு கிடந்து வெம்பி,
உழைத்து உயிர் விடுவது அல்லால், உறு செரு வென்றேம் என்று
பிழைத்து இவர் போவர் அல்லர்; பாசத்தால் பிணிப்பன்' என்னா,
விழித்து இமையாத முன்னம், வில்லொடும் விசும்பில் சென்றான்,

'பொன் குலாம் மேனி மைந்தன் தன்னொடும் புகழ்தற்கு ஒத்த,
வன் கலாம் இயற்றி நின்றான், மற்றொரு மனத்தன் ஆகி,
மின் குலாம் கழல் கால் வீரன் விண்ணிடை விரைந்த தன்மை
என்கொலாம்!' என்ன அஞ்சி, வானவர் இரியல்போனார். 183

தாங்கு வில் கரத்தன், தூணி தழுவிய புறத்தன், தன்னுள்
ஓங்கி உற்று எரியாநின்ற வெகுளியன், உயிர்ப்பன், தீயன்,
தீங்கு இழைப்பவர்கட்கு எல்லாம் சீரியன், மாயச் செல்வன்,
வீங்கு இருட் பிழம்பின், உம்பர் மேகத்தின் மீதின் ஆனான். 184

180. நாழிகை ஒன்று நான்கு - கால் நாழிகை; அரக்கர் காலம் - அரக்கர்க்குரிய இராக்காலம்; 182. உறு செரு - பெரும் போர்; 184. புறத்தன் - முதுகையுடையவன்; சீரியன் - தலைசிறந்தவன்.

தணிவு அறப் பண்டு செய்த தவத்தினும், தருமத்தானும்,
பிணி அறுப்பவரில் பெற்ற வரத்தினும், பிறப்பினானும்,—
மணி நிறத்து அரக்கன்—செய்த மாய மந்திரத்தினானும்,
அணு எனச் சிறியது, ஆங்கு, ஓர் ஆக்கையும் உடையன் ஆனான்.

வாங்கினான்—மலரின் மேலான், வானக மணி நீர்க் கங்கை
தாங்கினான், உலகம் தாங்கும் சக்கரத்தவன் என்றாலும்,
வீங்கு வான் தோளை வீக்கி வீழ்த்துஅலால் மீள்கிலாத
ஓங்கு வாள் அரவின் நாமத்து ஒரு தனிப் படையை உன்னி. 186

ஆயின காலத்து, ஆர்த்தார், 'அமர்த்தொழில் அஞ்சி, அப்பால்
போயினன்' என்பது உன்னி, வானர வீரர் போல்வார்;
நாயகற்கு இளைய கோவும் அன்னதே நினைந்து, நக்கான்;
மாயையைத் தெரிய உன்னார், போர்த்தொழில் மாற்றி நின்றார்.

அது கணத்து, அனுமன் தோள்நின்று ஐயனும் இழிந்து, வெய்ய
கது வலிச் சிலையை வென்றி அங்கதன் கையது ஆக்கி,
முதுகு உறச் சென்று நின்ற கணை எலாம் முறையின் வாங்கி,
விதுவிதுப்பு ஆற்றலுற்றான், விளைகின்றது உணர்ந்திலாதான்.

#### இந்திரசித்தன் நாகபாசம் இலக்குவனைப் பிணித்தல்

விட்டனன் அரக்கன் வெய்ய படையினை; விடுத்தலோடும்,
எட்டினோடு இரண்டு திக்கும் இருள் திரிந்து இரிய ஓடி,
கட்டினது என்ப மன்னோ, காகுத்தற்கு இளைய காளை
வட்ட வான் வயிரத் திண் தோள் மலைகளை உளைய வாங்கி. 189

இறுகுறப் பிணித்தலோடும், யாவையும் எதிர்ந்த போதும்
மறுகுறக் கடவான்அல்லன்; மாயம் என்று உணர்வான்அல்லன்;
உறு குறைத் துன்பம் இல்லான்; ஒடுங்கினன்; செய்வது ஓரான்,
அறுகுறைக் களத்தை நோக்கி, அந்தரம் அதனை நோக்கும். 190

#### அனுமன் முதலிய ஏனையோரையும் நாகபாசம் பிணித்தல்

மற்றையோர்தமையும் எல்லாம் வாள் எயிற்று அரவம் வந்து,
சுற்றின; வயிரத் தூணின், மலையினின், பெரிய தோள்கள்,
'இற்றன, இற்ற' என்ன, இறுக்கின; இளகா உள்ளம்
தெற்றென உடைய வீரர் இருந்தனர், செய்வது ஓரார். 191

185. பிணி அறுப்பவர் - பாசப் பிணிப்பை ஒழிப்பவர்களான பிரமன் முதலியோர்; 188. வலி கதுவு சிலை என இயைக்க; விதுவிதுப்பு - விறு விறுப்பு; 190. அந்தரம் - வானம்.

காலுடைச் சிறுவன், 'மாயக் கள்வனைக் கணத்தின்காலை
மேல் விசைத்து எழுந்து நாடிப் பிடிப்பென்' என்று உறுக்கும் வேலை,
ஏல்புடைப் பாசம், மேல்நாள், இராவணன் புயத்தை வாலி
வால் பிணித்தென்ன, சுற்றிப் பிணித்தது, வயிரத் தோளை. 192

**நாகபாசத்தால் கட்டுண்டவரின் நிலை**

மலை என எழுவர்; வீழ்வர்; மண்ணிடைப் புரள்வர்; வானில்
தலைகளை எடுத்து நோக்கி, தழல் எழ விழிப்பர்; தாவி
அலைகிளர் வாலால் பாரின் அடிப்பர்; வாய் மடிப்பர்; ஆண்மைச்
சிலையவற்கு இளைய கோவை நோக்குவர்; உள்ளம் தீவர்; 193

வீடணன் முகத்தை நோக்கி, 'வினை உண்டே, இதனுக்கு?' என்பர்;
மூடின கங்குல் மாலை இருளினை முனிவர்; 'மொய்ம்பின்
ஈடுறத் தக்க போலாம் நம் எதிர்' என்னு, ஏந்தல்
ஆடகத் தோளை நோக்கி, நகை செய்வர்; விழுவர்; அஞ்சார்.

'ஆர், இது தீர்க்க வல்லார்? அஞ்சனை பயந்த வள்ளல்,
மாருதி, பிழைத்தான்கொல்லோ?' என்றனர், மறுகி நோக்கி,
வீரனைக் கண்டு, 'பட்டது இதுகொலாம்!' என்று விம்மி,
'வார் கழல் தம்பி தன்மை காணுமோ, வள்ளல்?' என்பார்.

என், சென்ற தன்மை சொல்லி? எறுழ் வலி அரக்கன் எய்தான்,
மின் சென்றது அன்ன; வானத்து உரும்இனம் வீழ்வ என்ன,
பொன் சென்ற வடிம்பின் வாளி, புகையொடு பொறியும் சிந்தி,
முன் சென்ற முதுகில் பாய, பின் சென்ற மார்பம் உற்ற. 196

மலைத்தலைக் கால மாரி; மறித்து எறி வாடை மோத,
தலைத்தலை மயங்கி வீழும் தன்மையின் தலைகள் சிந்தும்;
கொலைத்தலை வாளி பாயக் குன்று அன குவவுத் தோளார்
நிலைத்திலர் உலைந்து சாய்ந்தார்; நிமிர்ந்தது, குருதி நீத்தம்.

ஆயிர கோடி மேலும் அம்பு தன் ஆகத்தூடு
போயின போதும், ஒன்றும் துடித்திலன், பொடித்து, மானத்
தீ எரி சிதறும் செங் கண் அஞ்சனை சிங்கம், தெய்வ
நாயகன் தம்பிக்கு உற்ற துயர் சுட, நடுங்குகின்றான். 198

192. ஏல்புடைப் பாசம் - எதிர்த்தலையுடைய நாகபாசம்; 193. அலை கிளர் வால் - அலைகின்ற எழுச்சியையுடைய வால்; 194. வினை - பரிகார மான செயல்.

வேறு உள வீரர் எல்லாம் வீழ்ந்தனர், உருமின் வெய்ய
நூறும் ஆயிரமும் வாளி உடலிடை நுழைய, சோரி
ஆறுபோல் ஒழுக; அண்ணல் அங்கதன் அனந்த வாளி
ஏறிய மெய்யனேனும், இருந்தனன், இடைந்திலாதான். 199

கதிரவன் காதல் மைந்தன், கழல் இளம் பசுங் காய் அன்ன,
எதிர் எதிர் பகழி தைத்த, யாக்கையன்; எரியும் கண்ணன்;
வெதிர் நெடுங் கானம் என்ன வேகின்ற மனத்தன், மெய்யன்;
உதிர வெங் கடலுள், தாதை உதிக்கின்றுன் தனையும் ஒத்தான்.

**இலக்குவன் நிலை**

வெப்பு ஆரும் பாசம் வீக்கி, வெங் கணை துளைக்கும் மெய்யன்,—
ஒப்பு ஆரும் இல்லான் தம்பி—உணர்ந்திருந்து இன்னல் உய்ப்பான்,
'இப் பாசம் மாய்க்கும் மாயம், யான் வல்லென்' என்பது ஓர்ந்தும்,
அப் பாசம் வீச ஆற்ருது, அழிந்த நல் அறிவு போன்ருன். 201

அம்பு எலாம் கதிர்கள் ஆக, அழிந்து அழிந்து இழியும் ஆகச்
செம் புனல் வெயிலின் தோன்ற, திசை இருள் இரிய, சீறிப்
பம்பு பேர் ஒளிய நாகம் பற்றிய படிவத்தோடும்,
உம்பர் நாடு இழிந்து வீழ்ந்த ஒளியவனேயும் ஒத்தான். 202

**இராவணன் அரண்மனைக்கு இந்திரசித்தன் செல்லுதல்**

மயங்கினுன் வள்ளல் தம்பி; மற்றையோர் முற்றும் மண்ணை
முயங்கினுர்; மேனி எல்லாம் மூடினுன், அரக்கன் மூரித்
தயங்கு பேர் ஆற்றலானும், தன் உடல் தைத்த வாளிக்கு
உயங்கினுன், உளைந்தான், வாயால் உதிர நீர் உமிழாநின்ருன்.

'சொற்றது முடிந்தேன்; நாளை, என் உடற் சோர்வை நீக்கி,
மற்றது முடிப்பென்' என்னு, எண்ணினுன், 'மனிசன்வாழ்க்கை
இற்றது; குரங்கின் தானை இறந்தது' என்று, இரண்டு பாலும்
கொற்ற மங்கலங்கள் ஆர்ப்ப, இராவணன் கோயில் புக்கான்.

ஈர்க்கு அடைப் பகழி மாரி இலக்குவன் என்ன நின்ற
நீர்க் கடை மேகம்தன்னை நீங்கியும், செருவின் நீங்கான்,
வார்க் கடை மதுகைக் கொங்கை, மணிக் குறு முறுவல், மாதர்
போர்க் கடைக் கருங் கண் வாளி புயத்தொடு பொழியப் புக்கான். 205

201. இப் பாசம் - இந்த உலக பாசம்; நல் அறிவு - நல்ல ஆன்மா;
205. ஈர்க்கு அடைப் பகழி மாரி - இறகுகளை உடைய அம்பாகிய மழை.

ஐ-இரு கோடி செம் பொன் மணி விளக்கு அம் கை ஏந்தி,
மை அறு வான நாட்டு மாதரும், மற்றை நாட்டுப்
பை அரவு அல்குலாரும், பலாண்டு இசை பரவ, தங்கள்
தையலர் அறுகு தூவி வாழ்த்தினர் தழுவ, சார்ந்தான். 206

தந்தையை எய்தி, அன்று ஆங்கு உற்றுள தன்மை எல்லாம்
சிந்தையின் உணரக் கூறி, 'தீருதி, இடர் நீ; எந்தாய்!
நொந்தனென் ஆக்கை; நொய்தின் ஆற்றி, மேல் நுவல்வென்' என்னா,
புந்தியில் அனுக்கம் தீர்வான், தன்னுடைக் கோயில் புக்கான்.

இலக்குவன் முதலியோர் நிலை கண்டு, வீடணன் புலம்பல்

இத் தலை, இன்னல் உற்ற வீடணன் இழைப்பது ஓரான்,
மத்து உறு தயிரின் உள்ளம் மறுகினன், மயங்குகின்றான்,
'அத் தலைக் கொடியன் என்னை அட்டிலன்; அளியத்தேன் நான்;
செத்திலென்; வலியென் நின்றேன்' என்று போய், வையம் சேர்ந்தான்.

பாசத்தால் ஐயன் தம்பி பிணிப்புண்டபடியைக் கண்டு,
'நேசத்தார் எல்லாம் வீழ்ந்தார்; யான் ஒரு தமியென் நின்றேன்;
தேசத்தார், என்னை என் என் சிந்திப்பார்!' என்று, தீயும்
வாசத் தார் மாலை மார்பன் வாய் திறந்து அரற்றலுற்றான்: 209

' "கொல்வித்தான், உடனே நின்று, அங்கு" என்பரோ? "கொண்டு போ
வெல்வித்தான், மகனை" என்று பகர்வரோ? "வினைவிற்கு எல்லாம் [னான்,
நல் வித்தாய் நடந்தான், முன்னே" என்பரோ? நயந்தோர் தம்தம்
கல்வித்து ஆம் வார்த்தை' என்று கரைவித்தான் உயிரைக் கண்போல்.

'போர் அவன் புரிந்த போதே, பொரு அரு வயிரத் தண்டால்,
தேரொடும் புரண்டு வீழச் சிந்தி, என் சிந்தை செப்பும் [ஞான்று
வீரம் முன் தெரித்தேன் அல்லேன்; விளிந்திலேன்; மெலிந்தேன்; இஞ்
ஆர் உறவு ஆகத் தக்கேன்? அளியத்தேன், அழுந்துகின்றேன்!

'ஒத்து அலைத்து, ஒக்க வீடி, உய்வினும் உய்வித்து, உள்ளம்
கைத்தலை நெல்லி போலக் காட்டிலேன்; கழிந்தும் இல்லேன்; [நின்ற
அத் தலைக்கு அல்லேன்; யான், ஈண்டு, "அபயம்!" என்று அடைந்து
இத் தலைக்கு அல்லேன்; அல்லேன்! இரு தலைச் சூலம் போல்வேன்!'

207. புந்தியில் அனுக்கம் - மனத் துன்பம்; 212. உய்வின் - உய்யும் நெறிகள்.

**நிகழ்ந்தவை அறிந்து, இராமன் வருந்துதல்**

அனையன பலவும் பன்னி, ஆகுலித்து அரற்றுவானை,
'வினை உள பலவும் செய்யத்தக்கன;—வீர!—நீயும்
நினைவு இலார் போல நின்று நெகிழ்தியோ? நீத்தி!' என்று,
இனையன சொல்லித் தேற்றி, அனலன் மற்று இனைய செய்தான்:

'நீ இவண் இருத்தி; யான் போய் நெடியவற்கு உரைப்பென்' என்று,
போயினன், அனலன்; போய், அப் புண்ணியன் பொலன் கொள் பாதம்
மேயினன் வணங்கி, உற்ற வினை எலாம் இயம்பி நின்றான்;
ஆயிரம் பெயரினானும், அருந் துயர்க் கடலுள் ஆழ்ந்தான். 214

உரைத்திலன் ஒன்றும்; தன்னை உணர்ந்திலன்; உயிரும் ஓடக்
கரைத்திலன் கண்ணின் நீரை; கண்டிலன் யாதும் கண்ணால்;
அரைத்திலன் உலகம் எல்லாம் அம் கையால்; பொங்கிப் பொங்கி
இரைத்திலன்; 'உளன்' என்று எண்ண இருந்தனன், விம்மி ஏங்கி. 215

விம்மினன், வெதும்பி வெய்துற்று ஏங்கினன், இருந்த வீரன்,
'இம் முறை இருந்து செய்வது யாவதும் இல்' என்று எண்ணி,
பொம்மென விம்மலோடும் பொருக்கென விசையின் போனான்,
தெவ் முறை துறந்து, வென்ற செங்கள மருங்கில் சேர்ந்தான்.

**இராமன் போர்க்களம் காணல்**

இழிந்து எழும் காளமேகம், எறி கடல், அனைய மற்றும்
ஒழிந்தன, நீல வண்ணம் உள்ளன எல்லாம் ஒக்கப்
பிழிந்து அது காலம் ஆகக் காளிமைப் பிழம்பு போதப்
பொழிந்தது போன்றது அன்றே—பொங்கு இருட் கங்குற் போர்வை.

ஆர் இருள் அன்னது ஆக, ஆயிர நாமத்து அண்ணல்,
சீரிய அனலித் தெய்வப் படைக்கலம் தெரிந்து வாங்கி,
பாரிய விடுத்தலோடும், பகை இருள் இரிந்து பாற,
சூரியன் உச்சி உற்றாலொத்தது, அவ் உலகின் சூழல். 218

படை உறு பிணத்தின் பம்மல் பருப்பதம் துவன்றி, பல் வேறு
இடை உறு குருதி வெள்ளத்து, எறி கடல் எழு நீர் பொங்கி,
உடை உறு தலைக் கை அண்ணல் உயிர் எலாம் ஒருங்க உண்ணும்
கடை உறு காலத்து, ஆழி உலகு அன்ன, களத்தைக் கண்டான்.

217. காளிமைப் பிழம்பு - கருமையின் வடிவம்: 218. பாரிய - அழிந்தொழிய.

**தம்பியைக் கண்டு, இராமன், அடைந்த துயரம்**

பிணப் பெருங் குன்றினூடும், குருதி நீர்ப் பெருக்கினூடும்,
நிணப் பெருஞ் சேற்றினூடும், படைக்கல நெருக்கினூடும்,
மணப் பெருங் களத்தில், மோடி மங்கல வாழ்க்கை வைப்பில்,
கணத்தினும் பாதிப் போதில், தம்பியைச் சென்று கண்டான்.

அய் அவன் ஆக்கைதன்மேல் விழுந்து மார்பு அழுந்தப் புல்லி,
'உய்யலன்' என்று, ஆவி உயிர்த்து உயிர்த்து, உருகுகின்றான்;
பெய் இரு தாரைக் கண்ணீர்ப் பெருந் துளி பிறங்க, வானின்
வெய்யவன்தன்னைச் சேர்ந்த நீல் நிற மேகம் ஒத்தான். 221

உழைக்கும்; வெய்து உயிர்க்கும்; ஆவி உருகும்; போய் உணர்வு, சோரும்;
இழைக்குவது அறிதல் தேற்றான், 'இலக்குவா! இலக்குவா!' என்று,
அழைக்கும்; தன் கையை வாயின், மூக்கின் வைத்து, அயர்க்கும்; 'ஐயா!
பிழைத்தியோ!' என்னும்—மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்.

தாமரைக் கையால் தாளைத் தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூ மலர்க் கண்ணை நோக்கும்; 'மார்பிடைத் துடிப்பு உண்டு' என்னா,
ஏமுறும்; விசும்பை நோக்கும்; எடுக்கும்; தன் மார்பின் ஏற்றும்;
பூமியில் வளர்த்தும்; 'கள்வன் போய் அகன்றானோ?' என்னும்.

வில்லினை நோக்கும்; பாச வீக்கினை நோக்கும்; வீயா
அல்லினை நோக்கும்; வானத்து அமரரை நோக்கும்; 'பாரைக்
கல்லுவென், வேரோடு' என்னும்; பவள வாய் கறிக்கும்; கற்றோர்
சொல்லினை நோக்கும்; தன் போல் புகழினை நோக்கும்—தோளான்.

வீரரை எல்லாம் நோக்கும்; விதியினைப் பார்க்கும்; வீரப்
பார வெஞ் சிலையை நோக்கும்; பகழியை நோக்கும்; 'பாரில்
யார் இது பட்டார், என்போல் எளி வந்த வண்ணம்?' என்னும்;
'நேரிது, பெரிது' என்று ஓதும்—அளவையின் நிமிர நின்றான்.

**இராமன் வீடணனை நோதல்**

' "எடுத்த போர், இலங்கை வேந்தன் மைந்தனோடு இளைய கோவுக்கு
அடுத்தது" என்று, என்னை வல்லை அழைத்திலை, அரவின் பாசம்
தொடுத்த கை தலையினோடும் துணித்து, உயிர் குடிக்க; என்னைக்
கெடுத்தனை; வீடணா! நீ' என்றனன்—கேடு இலாதான். 226

220. மணம் - புலால் நாற்றம்; மோடி - துர்க்கை; 222. பிறந்திலாதான் - வினை வயத்தால் பிறவாதவனாகிய இராமன்; 223. கள்வன் - கள்வனாகிய இந்திரசித்தன்; 224. பாச வீக்கு - நாக பாசத்தின் கட்டு.

நிகழ்ந்தவற்றை வீடணன் உரைத்தல்

அவ் உரை அருளக் கேட்டான், அழுகின்ற அரக்கன் தம்பி,
'இவ் வழி, அவன் வந்து ஏற்பது அறிந்திலம்; எதிர்ந்தபோதும்,
''வெவ் வழியவனே தோற்கும்'' என்பது விரும்பி நின்றேன்.
தெய்வ வன் பாசம் செய்த செயல், இந்த மாயச் செய்கை. 227

'அற்று அதிகாயன் ஆக்கை, தலை இலது ஆக்கி, ஆண்ட
வெற்றியன் ஆய வீரன் மீண்டிலன், ''இலங்கை மேல்நாள்
பெற்றவன் எய்தும்'' என்னும் பெற்றியை உன்னி; பிற்போது
உற்றனன், மைந்தன், தானை நாற்பது வெள்ளத்தோடும். 228

'ஈண்டு, நம் சேனை வெள்ளம் இருபதிற்று-இரட்டி மாள,
தூண்டினன், பகழி மாரி; தலைவர்கள் தொலைந்து சோர,
மூண்டு எழு போரில், பாரில் முறை முறை முடித்தான்; பின்னர்,
ஆண்தகையோடும் ஏற்றான், ஆயிரம் மடங்கல்-தேரான். 229

'அனுமன்மேல் நின்ற ஐயன் ஆயிரம் தேரும் மாய,
தனு வலம் காட்டி, பின்னை, நாற்பது வெள்ளத் தானை
பனி எனப் படுவித்து, அன்னான் பலத்தையும் தொலைத்து, ''பட்டான்
இனி'' என, வயிர வாளி, எண் இல, நிறத்தின் எய்தான். 230

'ஏ உண்ட பகு வாயோடும் குருதி நீர் இழிய நின்றான்,
தூவுண்ட தானை முற்றும் பட, ஒரு தமியன் சோர்வான்;
''போவுண்டது என்னின், ஐய! புணர்க்குவன் மாயம்'' என்று,
பாவுண்ட கீர்த்தியானுக்கு உணர்த்தினென்; பரிதி பட்டான்.

'மாயத்தால் இருண்டது ஆழி உலகு எலாம்; வஞ்சன், வானில்
போய், அத் தானுடைய வஞ்ச வரத்தினால் ஒளித்து, பொய்யின்
ஆயத்தார்ப் பாசம் வீசி அயர்வித்தான், அம்பின் வெம்பும்
காயத்தான்' என்னச் சொல்லி, வணங்கினான், கலுழும் கண்ணான். 232

வீடணன், 'யாரும் இறந்திலர்' என்னல்

பின்னரும் எழுந்து, பேர்த்தும் வணங்கி, 'எம் பெரும! யாரும்
இன் உயிர் துறந்தார் இல்லை; இறுக்கிய பாசம் இற்றால்
புல் நுனைப் பகழிக்கு ஒயும் தரத்தரோ? புலம்பி உள்ளம்
இன்னலுற்று அயரல்; வெல்லாது, அறத்தினைப் பாவம்' என்றான். *233

228. பிற்போது - பின்பு; 231. பாவுண்ட - பரவுதல் பொருந்திய.

நாகபாச வரலாறு

'யார், இது கொடுத்த தேவன்? என்னை ஈது? இதனைத் தீர்க்கும்
காரணம் யாது? நின்னால் உணர்ந்தது கழறிக் காண்' என்று,
ஆரியன் வினவ, அண்ணல் வீடணன், 'அமல! சாலச்
சீரிது' என்று, அதனை, உள்ள பரிசு எலாம், தெரியச் சொன்னான்:

'ஆழிஅம் செல்வ! பண்டு இவ் அகலிடம் அளித்த அண்ணல்
வேள்வியில் படைத்தது; ஈசன் வேண்டினன் பெற்று, வெற்றித்
தாழ்வு உறு சிந்தையோற்குத் தவத்தினால் அளித்தது; ஆணை!
ஊழியின் நிமிர்ந்த காலத்து உருமினது; ஊற்றம் ஈதால்; 235

'அன்னதன் ஆற்றல் அன்றே ஆயிரம் கண்ணினானைப்
பின் உற வயிரத் திண் தோள் பிணித்தது;—பெயர்த்து ஒன்று எண்ணி
என், இனி?—அனுமன் தோளை இறுக்கியது; இதனால் ஆண்டும்
பொன்னுலகு ஆளும் செல்வம் துறந்தது, புலவர் எல்லாம். 236

தான் விடின் விடும், இது ஒன்றே; சதுமுகன் முதல்வர் ஆய
வான் விடின், விடாது; மற்று, இம் மண்ணினை எண்ணி என்னே!
ஊன் விட, உயிர் போய் நீங்க, நீங்கும்; வேறு உய்தி இல்லை;
தேன் விடு துளவத் தாராய்! இது இதன் செய்கை' என்றான்.

இராமன் சினமும் சிந்தனையும்

'ஈந்துள தேவர்மேலே எழுகெனோ? உலகம் யாவும்
தீந்து உக நூறி, யானும் தீர்கெனோ? இலங்கை சிந்தப்
பாய்ந்து, அவர் சுற்றம் முற்றும் படுப்பெனோ? இயன்ற பண்போடு
ஏய்ந்தது பகர்தி' என்றான், இமையவர் இடுக்கண் தீர்ப்பான்.

'வரம் கொடுத்து இனைய பாசம் வழங்கினான் தானே நேர் வந்து
இரங்கிடத் தக்கது உண்டேல், இகழ்கிலென்; இல்லைஎன்னின்,
உரம் கெடுத்து, உலகம் மூன்றும், ஒருவன் ஓர் அம்பின் சுட்ட
புரங்களின் தீய்த்து, காண்பென் பொடி, ஒரு கடிகைப் போழ்தின். 239

'எம்பியே இறக்கும் என்னில், எனக்கு இனி, இலங்கை வேந்தன்
தம்பியே! புகழ்தான் என்னை? பழி என்னை? அறம்தான் என்னை?
நம்பியே என்னைச் சேர்ந்த நண்பரின் நல்ல ஆமே,
உம்பரும் உலகத்து உள்ள உயிர்களும், உதவி பார்த்தால்?' 240

234. உணர்ந்தது - உணரப்பட்டு உள்ளது; 237. தான் விடின் விடும் - நாகபாசம் தானே விட்டால்தான் விடும்.

என்று கொண்டு இயம்பி, 'ஈண்டு இங்கு ஒருவன் ஓர் இடுக்கண் செய்ய,
வென்று, இவண் உலகை மாய்த்தல் விதிஅன்றால்' என்று விம்மி,
நின்று நின்று, உன்னி உன்னி, நெடிது உயிர்த்து அலக்கணுற்றான்,—
தன் துணைத் தம்பிதன்மேல், துணைவர்மேல், தாழ்ந்த அன்பான்.

மீட்டும் வந்து, இளைய வீரன் வெற்பு அன்ன விசயத் தோளைப்
பூட்டுறு பாசம்தன்னைப் பல் முறை புரிந்து நோக்கி,
'வீட்டியதுஎன்னின், பின்னை வீவென்' என்று எண்ணும்—வேதத்
தோட்டியின் தொடக்கில் நிற்கும் துணைக் கைம் மால் யானை அன்னான்.

கருடன் வருகை

இத் தன்மை எய்தும் அளவின்கண், நின்ற
இமையோர்கள் அஞ்சி, 'இது போய்
எத் தன்மை எய்தி முடியும்கொல்?' என்று
குலைகின்ற எல்லைஇதன்வாய்,
அத் தன்மை கண்டு, புடை நின்ற அண்ணல்-
கலுழன் தன் அன்பின் மிகையால்,
சித்தம் நடுங்கி இது தீர, மெள்ள,
இருளூடு வந்து தெரிவான்,— 243

அசையாத சிந்தை அரவால் அனுங்க,
அழியாத உள்ளம் அழிவான்,—
இசையா இலங்கை அரசோடும் அண்ணல்
அருள் இன்மை கண்டு நயவான்,—
விசையால் அனுங்க வட மேரு, வையம்
ஒளியால் விளங்க, இமையாத்
திசை யானை கண்கள் முகிழா ஒடுங்க,
நிறை கால் வழங்கு சிறையான்,— 244

காதங்கள் கோடி கடை சென்று காணும்
நயனங்கள் வாரி கலுழ,
கேதங்கள் கூர, அயர்கின்ற வள்ளல்
திரு மேனி கண்டு, கிளர்வான்,—
சீதம் கொள் வேலை அலை சிந்த, ஞாலம்
இருள் சிந்த, வந்த சிறையான்,
வேதங்கள் பாட; உலகங்கள் யாவும்
வினை சிந்த; நாகம் மெலிய; 245

242. வேதத்தோட்டி - வேதமாகிய அங்குசம்; தொடக்கு - கட்டுப்பாடு; துணை - இரண்டு; 245. கேதங்கள் - துன்பங்கள்.

அல்லைச் சுருட்டி, வெயிலைப் பரப்பி,
அகல் ஆசை எங்கும் அழியா
வில்லைச் செலுத்தி, நிலவைத் திரட்டி,
விரிகின்ற சோதி மிளிர;
எல்லைக் குயிற்றி எரிகின்ற மோலி,
இடைநின்ற மேரு எனும் அத்
தொல்லைப் பொருப்பின் மிசையே விளங்கு
சுடரோனின் மும்மை சுடர; 246

நன் பால் விளங்கு மணி கோடியோடு,
நளிர் போது, செம் பொன், முதலாத்
தன்பால் இயைந்த நிழல் கொண்டு அமைந்த
தழுவாது வந்து தழுவ;
மின்பால் இயன்றது ஒரு குன்றம் வானின்
மிளிர்கின்றது என்ன, வெயிலோன்
தென்பால் எழுந்து, வடபால் நிமிர்ந்து,
வருகின்ற செய்கை தெரிய; 247

பல் நாகர் சென்னி மணி கோடி கோடி
பல கொண்டு செய்த வகையால்
மின்னால் இயன்றது எனலாய் விளங்கு
மிளிர் பூண் வயங்க; வெயில் கால்
பொன்னால் இயன்ற நகை ஓடை பொங்க;
வன மாலை மார்பு புரள;
தொல் நாள் பிரிந்த துயர் தீர, அண்ணல்
திரு மேனி கண்டு, தொழுவான்,— 248

முடிமேல் நிமிர்ந்து முகிழ் ஏறு கையன்,
முகில்மேல் நிமிர்ந்த ஒளியான்,
அடிமேல் விழுந்து பணியாமல் நின்ற
நிலை உன்னி உன்னி அழிவான்,
கொடிமேல் இருந்து, இவ் உலகு ஏழொடு ஏழு
தொழ நின்ற கோளும் இலனாய்,
படிமேல் எழுந்து வருவான், விரைந்து,
பல கால் நினைந்து, பணிவான்,— 249

246. வில் - ஒளி; எல்லைக் குயிற்றி - பகலை உண்டாக்கி; 247. நன் பால் - அழகிய (கழுத்தின்) இடத்தில்; நிழல் - ஒளி; 248. பல் நாகர் சென்னி மணி - பலவாய நாகங்களின் தலையில் உள்ள மாணிக்கம்.

கருடன் துதி

'வந்தாய் மறைந்து; பிரிவால் வருந்தும்,
மலர்மேல் அயன்தன் முதலோர்-
தம் தாதை தாதை இறைவா! பிறந்து
விளையாடுகின்ற தனியோய்!
சிந்தாகுலங்கள் களைவாய்! தளர்ந்து
துயர் கூரல் என்ன செயலோ?
எந்தாய்! வருந்தல்; உடையாய்! வருந்தல்'
என, இன்ன பன்னி மொழிவான்: 250

'தேவாதிதேவர் பலராலும் முந்து
திருநாமம் ஓது செயலோய்,
மூவாது எந் நாளும் உலகு ஏழொடு ஏழும்
அரசாளும் மேன்மை முதல்வா!
மேவாத இன்பம் அவை மேவி, மேவ
நெடு வீடு காட்டு அம் முடியாய்!
ஆவாய்! வருந்தி அழிவாய்கொல்!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 251

'எழுவாய், எவர்க்கும் முதல் ஆகி, ஈறுடு
இடை ஆகி; எங்கும் உளேயாய்,
வழுவாது எவர்க்கும் வரம் ஈய வல்லே;
அவரால் வரங்கள் பெறுவாய்;
தொழுவாய், உணர்ச்சி தொடராத தன்மை
உருவாய் மறைந்து; துயரால்
அழுவாய் ஒருத்தன் உளேபோலும்!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 252

'உன் ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி;
ஒருவர்க்கும் உண்மை உரையாய்;
முன் ஒக்க நிற்றி; உலகு ஒக்க ஒத்தி;
முடிவு ஒக்கின், என்றும் முடியாய்;
''என் ஒக்கும், இன்ன செயலோ இது?'' என்னில்,
இருள் ஒக்கும் என்று விடியாய்;
அந் நொப்பமேகொல்? பிறிதேகொல்?—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 253

251. நெடு வீடு - பெரிய முத்தியுலகம்; அதிரேகம் - மிகுதி; 252. உணர்ச்சி - முற்றுணர்வு; உருவாய் - மனித வடிவாகி; 253. நொப்பம் - நொய்ப்பம், (புத்தியின்) சிறுமை.

'வாணுள் அளித்தி, முடியாமல்; நீதி
வழுவாமல் நிற்றி;—மறையோய்!
பேணுய், உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று;
பெறுவான் அருத்தி பிழையாய்;
ஊண் ஆய், உயிர்க்கும் உயிர் ஆகி நிற்றி;
உணர்வு ஆய பெண்ணின் உரு ஆய்,
ஆண் ஆகி, மற்றும் அலி ஆதி!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 254

' ''தான் அந்தம் இல்லை; பல'' என்னும், ஒன்று;
''தனி'' என்னும், ஒன்று; ''தவிரா
ஞானம் தொடர்ந்த சுடர்'' என்னும், ஒன்று;
''நயனம் தொடர்ந்த ஒளியால்,
வானம் தொடர்ந்த பதம்'' என்னும், ஒன்று; மறை
நாலும் அந்தம் அறியாது,
''ஆனந்தம்'' என்னும்; ''அயல்'' என்னும்!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 255

'மீளாத வேதம், முடிவின்கண், நின்னை
மெய்யாக மெய்யின் நினையும்;
''கேளாத'' என்று, ''பிற'' என்று, சொன்ன
கெடுவார்கள் சொன்ன கடவான்,
மாளாத நீதி இகழாமை நின்கண்
அபிமானம் இல்லை, வறியோர்;
ஆளாயும் வாழ்தி; அரசாள்தி!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 256

'சொல் ஒன்று உரைத்தி; பொருள் ஆதி; தூய
மறையும் துறந்து, திரிவாய்;
வில் ஒன்று எடுத்தி; சரம் ஒன்று எடுத்தி;
மிளிர் சங்கம் அங்கை உடையாய்;
''கொல்'' என்று உரைத்தி; கொலையுண்டு நிற்றி;
கொடியாய்! உன் மாயை அறியேன்;
அல் என்று, நிற்றி; பகல் ஆதி!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 257

256. மெய்யாக - மெய்ப்பொருளாக; மெய்யின் - மெய்யுணர்விஞல்.

'மறந்தாயும் ஒத்தி; மறவாயும் ஒத்தி;
மயல், ஆரும் யானும் அறியேம்:
துறந்தாயும் ஒத்தி; துறவாயும் ஒத்தி;
ஒரு தன்மை சொல்ல அரியாய்;
பிறந்தாயும் ஒத்தி, பிறவாயும் ஒத்தி,
பிறவாமல் நல்கு பெரியோய்!
அறம்தான் நிறுத்தல் அரிது ஆக!—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 258

'வினை வர்க்கம் முற்றும் உடனே படைத்தி;
அவை எய்தி, என்றும் விளையா,
நினைவர்க்கு, நெஞ்சின் உறு காமம் முற்றி,
அறியாமை நிற்றி, மனமா;
முனிவர்க்கும் ஒத்தி, அமரர்க்கும் ஒத்தி,
முழு மூடர் என்னும் முதலோர்
அனைவர்க்கும் ஒத்தி, அறியாமை—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 259

'எறிந்தாரும், ஏறுபடுவாரும், இன்ன
பொருள் கண்டு இரங்குபவரும்,
செறிந்தாரின் உண்மை எனல் ஆய தன்மை
தெரிகின்றது, உன்னது இடையே;
பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி;
பிறியாது நிற்றி; பெரியோய்!
அறிந்தார் அறிந்த பொருள் ஆதி—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்? 260

'பேர் ஆயிரங்கள் உடையாய்; பிறந்த
பொருள்தோறும் நிற்றி; பிரியாய்;
தீராய்; பிரிந்து திரிவாய்; திறம்தொறு
அவை தேறும் என்று தெளியாய்;
கூர் ஆழி அம் கை உடையாய்; திரண்டு ஓர்
உரு ஆதி; கோடல் உரிபோல்,
ஆராயின், ஏதும் இலையாதி—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்?' 261

258. மயல் - மாயை; 261. கோடல் உரிபோல் - வெண் காந்தள் கிழங்கினை உரிப்பது போல.

நாகபாசம் நீங்குதல்

என்று, இன்ன பன்னி அழிவான், எறிந்த
எரி சோதி கீற, இருள் போய்,
பொன் துன்னி அன்ன வெயில் வீசுகின்ற
பொருள் கண்டு, நின்ற புகழோன்
நின்று உன்னி உன்னி, 'இவன் யாவன்?'
என்று நினைகின்ற எல்லை, நிமிரச்
சென்று, உன்னும்முன்னர், உடன் ஆயினன், இவ்
உலகு ஏழும் மூடு சிறையான். 262

வாசம் கலந்த மரை நாள நூலின்
வகை என்பது என்னை?—மழை என்று
ஆசங்கை கொண்ட கொடை மீளி அண்ணல்
சரராமன் வெண்ணெய் அனுகும்,
தேசம் கலந்த மறைவாணர், செஞ் சொல்
அறிவாளர், என்று இம் முதலோர்
பாசம் கலந்த பசிபோல், அகன்ற—
பதகன் துரந்த உரகம். 263

பல்லாயிரத்தின் முடியாத பக்கம்
அவை வீச, வந்து படர் கால்
செல்லா நிலத்தின் இருள்ஆதல் செல்ல,
உடல் நின்ற வாளி சிதறுற்று,
எல்லா விதத்தும் உணர்வோடு நண்ணி
அறனே இழைக்கும் உரவோன்
வல்லான் ஒருத்தன் இடையே படுத்த
வடு ஆன, மேனி வடுவும். 264

வானரர் முதலியோர் உயிர் பெற்று எழுதல்

தருமத்தின் ஒன்றும் ஒழுகாத செய்கை
தழுவிப் புணர்ந்த தகையால்,
உரும் ஒத்த வெங் கண், வினை தீய, வஞ்சர்
உடல் உய்ந்தது இல்லை; உலகின்
கருமத்தின் நின்ற கவி சேனை வெள்ளம்,
மலர்மேல் அவ் வள்ளல் கடை நாள்
நிருமித்த என்ன, உயிரோடு எழுந்து
நிலை நின்ற, தெய்வ நெறியால். 265

263. மரை நாள நூல் - தாமரைத் தண்டின் உள்ளேயுள்ள மெல்லிய நூல்; ஆசங்கை - ஐயம்; மீளி அண்ணல் - வலிமை மிக்க பெரியோன்; சரராமன் - சடையப்பர்க்கு உரிய வேறு பெயர்; வெண்ணெய் - திருவெண்ணெய் நல்லூர்; பாசம் கலந்த பசி - சுற்றத்தார்கள் அடைந்துள்ள பசி; 264. வடு ஆன - பழி நெடிது நில்லாது அழிவது போல அழிந்தனவாயின; 265. கடை நாள் நிருமித்த - ஊழி முடிவான பிற்காலத்தில் படைத்த.

இராமன் தம்பியைத் தழுவிக் கருடனுக்கு முகமன் கூறல்

இளையான் எழுந்து தொழுவானை, அன்பின்,
இணை ஆர மார்பின் அணையா,
'விளையாத துன்பம் விளைவித்த தெய்வம்
வெளி வந்தது' என்ன வியவா,
கிளையார்கள் அன்ன துணையோரை, ஆவி
கெழுவா, எழுந்து தழுவா,
முளையாத திங்கள் உகிரான் முன் வந்து,
முறை நின்ற வீரன் மொழிவான்: 266

'ஐய! நீ யாரை? எங்கள் அருந் தவப் பயத்தின் வந்து, இங்கு
எய்தினை; உயிரும் வாழ்வும் ஈந்தனை, எம்மனோரால்
கையுறை கோடற்கு ஒத்த காட்சியை அல்லை; மீட்சி
செய் திறம் இலையால்' என்றான்—தேவர்க்கும் தெரிக்க ஒணாதான்.

'பொருளினை உணர வேறு புறத்தும் ஒன்று உண்டோ, புந்தித்
தெருளினை உடையர் ஆயின்? செயல் அருங் கருணைச் செல்வ!
மருளினில் வரவே, வந்த வாழ்க்கை ஈது ஆகின், வாயால்
அருளினை என்னின், எய்த அரியன உளவோ?—ஐய! 268

'கண்டிலை, முன்பு; சொல்லக் கேட்டிலை; கடன் ஒன்று எம்பால்
கொண்டிலை; கொடுப்பது அல்லால், குறை இலை; இது நின் கொள்கை;
''உண்டு, இலை'' என்ன நின்ற உயிர் தந்த உதவியோனே!
பண்டு இலை நண்பு; நாங்கள் செய்வது என்? பகர்தி!' என்றான்.

கருடன், இராமனிடம் விடை பெறல்

பறவையின் குலங்கள் காக்கும் பாவகன், 'பழைய நின்னோடு
உறவு உள தன்மை எல்லாம் உணர்த்துவென்; அரக்கனோடு அம்
மற வினை முடித்த பின்னர், வருவென்' என்று உணர்த்தி, 'மாயப்
பிறவியின் பகைஞ! நல்கு, விடை' எனப் பெயர்ந்து போனான்.

இராமன் கருடனைப் புகழ்தலும், அனுமன் ஆரவாரம் செய்தலும்

ஆரியன் அவனை நோக்கி, 'ஆர் உயிர் உதவி, யாதும்
காரியம் இல்லான் போனான்; கருணையோர் கடமை ஈதால்;
பேர் இயலாளர், ''செய்கை ஊதியம் பிடித்தும்'' என்னார்;
மாரியை நோக்கிக் கைம்மாறு இயற்றுமோ, வையம்?' என்றான்.

266. வெளிவந்தது - கருடன் வடிவில் வெளிவந்தது; திங்கள் உகிரான் - சந்திரனைப் போன்ற நகங்களையுடைய கருடன்; 267. மீட்சி - கைம்மாறு; 270. பாவகன் - தூயவன், கலுழன்; 271. ஊதியம் - பயன்.

'"இறந்தனன், இளவல்" என்னா, இறைவியும் இடுக்கண் எய்தும்;
மறந்தனர் உறங்குகின்ற வஞ்சரும் மறுகி, "மீளப்
பிறந்தனர்" என்று கொண்டு, ஓர் பெரும் பயம் பிடிப்பர் அன்றே;
அறம் தரு சிந்தை ஐய! ஆர்த்தும்' என்று அனுமன் சொன்னான்.

'அழகிது' என்று அண்ணல் கூற, ஆர்த்தனர்—கடல்கள் அஞ்சிக்
குழைவுற, அனந்தன் உச்சிக் குன்றின்நின்று அண்டகோளம்
எழ மிசை, உலகம் மேல் மேல் ஏங்கிட, இரிந்து சிந்தி
மழை விழ, மலைகள் கீற, மாதிரம் பிளக்க மாதோ. 273

**இராவணன் ஆரவாரத்தைக் கேட்டல்**

பழிப்பு அறு மேனியாள்பால் சிந்தனை படர, கண்கள்
விழிப்பு இலன், மேனி சால வெதும்பினன், ஈசன் வேலும்
குழிப்ப அரிது ஆய மார்பை மன்மதன் கொற்ற வாளி
கிழிப்புற, உயிர்ப்பு வீங்கிக் கிடந்த வாள் அரக்கன் கேட்டான்.

தாதை சொல் தலைமேல் கொண்ட தாபதன், தரும மூர்த்தி
ஈதைகள் தீர்க்கும் நாமத்து இராமனை எண்ணி ஏங்கும்
சீதையும், அவளை உன்னிச் சிந்தனை தீர்ந்தும் தீராப்
பேதையும், அன்றி, அவ் ஊர் யார் உளர், துயில் பெறாதார்?

சிங்கஏறு, அசனிஏறு கேட்டலும், 'சீற்றச் சேனை
பொங்கியது' என்ன, மன்னன் பொருக்கென எழுந்து, '"போரில்
மங்கினர் பகைஞர்" என்ற வார்த்தையே வலியது!' என்னா,
அங்கையோடு அங்கை கொட்டி, அலங்கல் தோள் குலுங்க நக்கான். 276

'இடிக்கின்ற அசனி என்ன இரைக்கின்றது, இராமன் போர் வில்;
வெடிக்கின்றது அண்டம் என்ன, படுவது தம்பி வில் நாண்;
அடிக்கின்றது என்னை வந்து, செவிதொறும் அனுமன் ஆர்ப்பு;
பிடிக்கின்றது உலகம் எங்கும், பரிதி சேய் ஆர்ப்பின் பெற்றி.*

'அங்கதன் அவனும் ஆர்த்தான்; அந்தரம் ஆர்க்கின்றானும்,
வெங் கத நீலன்; மற்றை வீரரும், வேறு வேறு,
பொங்கினர் ஆர்த்த ஓசை அண்டத்தும் புறத்தும் போன;
சங்கை ஒன்று இன்றித் தீர்ந்தார் பாசத்தை, தருமம் நல்க.*

**இராவணன், இந்திரசித்தன் மாளிகைக்கு ஏகுதல்**

என்பது சொல்லி, பள்ளிச் சேக்கைநின்று இழிந்து, வேந்தன்,
ஒன்பது கோடி வாட் கை அரக்கர் வந்து உழையின் சுற்ற,
பொன் பொதி விளக்கம் கோடிப் பூங் குழை மகளிர் ஏந்த,
தன் பெருங் கோயில்நின்றும் மகன் தனிக் கோயில் சார்ந்தான்.*

275. தாபதன் - தவ வேடத்தன்; ஈதைகள் - துன்பங்கள்; 276. மன்னன் சிங்க ஏறு எனக் கூட்டுக; வலியது - இகழ்ச்சிக் குறிப்பு.

தாங்கிய துகிலார், மெள்ளச் சரிந்து வீழ் குழலார், தாங்கி
வீங்கிய உயிர்ப்பார், விண்ணை விழுங்கிய முலையார், மெல்லத்
தூங்கிய விழியார், தள்ளித் துளங்கிய நடையார்,—வல்லி
வாங்கிய மருங்குல் மாதர்,—அனந்தரால் மயங்கி வந்தார்.

பானமும், துயிலும், கண்ட கனவும், பண் கனிந்த பாடல்
கானமும், தள்ளத் தள்ள, களியொடும் கள்ளம் கற்ற,
மீனினும் பெரிய, வாட் கண் விழிப்பது முகிழ்ப்பது ஆக,
வானவர் மகளிர் போனார், மழலை அம் சதங்கை மாழ்க.* 281

மழையினை நீலம் ஊட்டி, வாசமும் புகையும் ஆட்டி,
உழை உழை சுருட்டி, மென் பூக் குவித்து, இடைக்கு இடையூறு என்ன,
பிழையுடை விதியார் செய்த பெருங் குழல், கருங் கண், செவ் வாய்,
இழை அணி, மகளிர் சூழ்ந்தார், அனந்தரால், இடங்கள்தோறும். 282

தேனிடை, கரும்பில், பாலில், அமுதினில், கிளவி தேடி,
மானிடை, கயலில், வாளில், மலரிடை, நயனம் வாங்கி,
மேல் நடை அனைய மற்றும் நல் வழி நல்க வேண்டி,
வானுடை அண்ணல் செய்த மங்கையர் மருங்கு சென்றார். 283

தொடங்கிய ஆர்ப்பின் ஓசை செவிப்புலம் தொடர்தலோடும்,
இடங்கரின் வயப் போத்து அன்ன எறுழ் வலி அரக்கர் யாரும்,
மடங்கலின் முழக்கம் கேட்ட வான் கரி ஒத்தார்; மாதர்
அடங்கலும், அசனி கேட்ட அளை உறை அரவம் ஒத்தார். 284

**இந்திரசித்தன் நிலையை இராவணன் காணல்**

அரக்கனும், மைந்தன் வைகும் ஆடகத்து அமைந்த மாடம்
பொருக்கெனச் சென்று புக்கான், புண்ணினில் குமிழி பொங்கத்
தரிக்கிலன், மடங்கல்ஏற்றால் தொலைப்புண்டு சாய்ந்து போன,
கருக் கிளர் மேகம் அன்ன, களிறு அனையானைக் கண்டான். 285

எழுந்து அடி வணங்கல் ஆற்றான், இரு கையும் அரிதின் ஏற்றித்
தொழும் தொழிலானை நோக்கித் துணுக்குற்ற மனத்தன், 'தோன்றல்!
அழுங்கினை; வந்தது என்னை அடுத்தது?' என்று எடுத்துக் கேட்டான்;
புழுங்கிய புண்ணினானும், இனையன புகலலுற்றான்: 286

280. அனந்தர் - தூக்க மயக்கம்; 281. பானம் - (அருந்திய) மது பானம்; 282. பிழையுடைய விதியார் - பிழையையுடைய பிரமதேவர், 283. வானுடை அண்ணல் - சத்திய லோகத்தைத் தனக்கு உரிமையாக உடைய பிரமன்; 284. இடங்கரின் வயப் போத்து - ஆண் முதலை.

இந்திரசித்தனின் மறுமொழி

'உருவின உரத்தை முற்றும் உலப்பு இல உதிரம் வற்றப்
பருகின அளப்பிலாத பகழிகள்; கவசம் பற்று அற்று
அருகின; பின்னே, சால அலசினென்; ஐய! கண்கள்
செருகின அன்றே, யானும் மாயையின் தீர்ந்திலேனேல்? 287

இந்திரன், விடையின் பாகன், எறுழ் வலிக் கலுழன் ஏறும்
சுந்தரன் அருக்கன் என்று இத் தொடக்கத்தார் தொடர்ந்த போரில்,
நொந்திலென்; இனையதுஒன்றும் நுவன்றிலென்; மனிதன் நோன்மை,
மந்தரம் அனைய தோளாய்! வரம்பு உடைத்து அன்று மன்னே.

'இளையவன் தன்மை ஈதால்; இராமனது ஆற்றல் எண்ணின்,
தளை அவிழ் அலங்கல் மார்ப! நம்வயின் தங்கிற்று அன்றால்;
விளைவு கண்டு உணர்தல் அல்லால் வென்றி மேல் விளையும் என்ன
உளை; அது அன்று' என்னச் சொன்னான், உற்றுளது உணர்ந்திலாதான்.

'வென்றது, பாசத்தாலும், மாயையின் விளைவினாலும்;
கொன்றது, குரக்கு வீரர் தம்மொடு அக் கொற்றத்தோனை;
நின்றனன், இராமன் இன்னும்; நிகழ்ந்தவா நிகழ்க, மேன்மேல்'
என்றனன்; என்னக் கேட்ட இராவணன் இதனைச் சொன்னான்:

இராவணன் உரையும் இந்திரசித்தன் பேச்சும்

'வார் கழல் கால! மற்று அவ் இலக்குவன் வயிர வில்லின்
பேர் ஒலி அரவம் விண்ணைப் பிளந்திட, குரங்கு பேர்ந்த,
கார் ஒலி மடங்க, வேலை கம்பிக்க, களத்தின் ஆர்த்த
போர் ஒலி ஒன்றும், ஐய! அறிந்திலை போலும்!' என்றான். 291

'ஐய! வெம் பாசம் தன்னால் ஆர்ப்புண்டார்; அசனி என்னப்
பெய்யும் வெஞ் சரத்தால் மேனி பிளப்புண்டார்; உணர்வு பேர்ந்தார்;
''உய்யுநர்'' என்று உரைத்தது உண்மையோ? ஒழிக்க ஒன்றோ?
"செய்யும்" என்று எண்ண, தெய்வம் சிறிது அன்றோ தெரியின்
[அம்மா.'

தூதுவர் களத்தில் நிகழ்ந்தவை கூறல்

ஈது உரை நிகழும் வேலை, எய்தியது அறியப் போன
தூதுவர், விரைவின் வந்தார், புகுந்து, அடி தொழுதலோடும்,
'யாது அவண் நிகழ்ந்தது?' என்ன இராவணன் இயம்ப, ஈறு இன்று
ஓதிய கல்வியாளர் புகுந்துளது உரைக்கலுற்றார்: 293

293. கல்வியாளர் கல்வியறிவுடைய தூதர்கள்.

'பாசத்தால் பிணிப்புண்டாரை, பகழியால் களப்பட்டாரை,
தேசத்தார் அரசன் மைந்தன் இடை இருள் சேர்ந்து நின்றே,
ஏசத் தான் இரங்கி, ஏங்கி, "உலகு எலாம் எரிப்பென்" என்றான்;—
வாசத் தார் மாலை மார்ப!—வான் உறை கலுழன் வந்தான்;

'அன்னவன் வரவு காணு, அயில் எயிற்று அரவம் எல்லாம்
சின்னபின்னங்கள் ஆன; புண்ணொடும் மயர்வு தீர்ந்தார்;
முன்னையின் வலியர் ஆகி, மொய்க் களம் நெருங்கி, மொய்த்தார்;
இன்னது நிகழ்ந்தது' என்றார். அரக்கன் ஈது எடுத்துச் சொன்னான்:

இராவணன், கருடனைக் குறித்து எள்ளி நகையாடுதல்

''ஏத்த அருந் தடந் தோள் ஆற்றல் என் மகன் எய்த பாசம்
காற்றிடைக் கழித்துத் தீர்த்தான், கலுழனும்; காண்மின், காண்மின்!
வார்த்தை ஈதுஆயின், நன்றால், இராவணன் வாழ்ந்த வாழ்க்கை!
மூத்தது, கொள்கை போலாம்? என்னுடை முயற்சி எல்லாம்?

'உண்டு உலகு ஏழும் ஏழும் உமிழ்ந்தவன் என்னும் ஊற்றம்
கொண்டவன், என்னோடு ஏற்ற செருவினில், மறுக்கம் கொண்டான்;
மண்டலம் திரிந்த போதும், மறி கடல் மறைந்த போதும்,
கண்டிலன்போலும், சொற்ற கலுழன், அன்று, என்னைக் கண்ணால்?

'கரங்களில் நேமி சங்கம் தாங்கிய கரியோன் காக்கும்
புரங்களும் அழியப் போன பொழுதில், என் சிலையின் பொங்கி,
உரங்களில், முதுகில், தோளில், உறையுறு சிறையில், உற்ற
சரங்களும் நிற்கவேகொல், வந்தது, அவ் அருணன் தம்பி? 298

இந்திரசித்தன், 'நாளைப் போர் புரிவேன்' எனல்

'ஈண்டு அது கிடக்க; மேன்மேல் இயைந்தவாறு இயைக! எஞ்சி
மீண்டவர்தம்மைக் கொல்லும் வேட்கையே வேட்கும் அன்றே;
ஆண்தகை! நீயே இன்னும் ஆற்றுதி, அருமைப் போர்கள்;
காண்டலும், நாணும்' என்றான்; மைந்தனும் கருத்தைச் சொன்னான்:

'இன்று ஒருபொழுது தாழ்த்து, என் இகல் பெருஞ் சிரமம் நீங்கி,
சென்று, ஒரு கணத்தில், நாளை, நான்முகன் படைத்த தெய்வ
வென்றி வெம் படையினால், உன் மனத் துயர் வீட்பென்' என்றான்;
'நன்று' என, அரக்கன் போய், தன் நளிமலர்க் கோயில் புக்கான். 300

294. மைந்தன் - இராமன்; 295. மொய்க் களம் - போர்க்களம்; 296. கொள்கை மூத்தது - முயற்சி எல்லாம் கருத்துவகையால் முதுமை அடைந்துவிட்டது; 297. மறுக்கம் - கலக்கம்; மண்டலம் திரிதல் - (தோற்றுச்) சுற்றித் திரிதல்; 298. சிறை - சிறகு; அருணன் தம்பி - அருணன் தம்பியாகிய கருடன்.

# 19 படைத் தலைவர் வதைப் படலம்

**படைத் தலைவர் போரிட இசைவு**

ஆர்த்து எழும் ஓசை கேட்ட அரக்கரும், முரசம் ஆர்ப்ப,
போர்த் தொழில் வேட்கை பூண்டு, பொங்கினர், புகுந்து மொய்த்தார்;
தார்த் தட மார்பன்தன்னை, 'தா, விடை' என்னச் சார்ந்தார்;
பார்த்தனன், முனிந்து மன்னன், இனையன பகர்வது ஆனான்: 1

மாபெரும்பக்கனோடு வான் புகைக்கண்ணன் வந்தான்;
'ஏவுதி எம்மை' என்பார்; தம் முகம் இனிதின் நோக்கி,
'போவது புரிதிர்' என்னப் புகறலும், பொருத தூதர்,
'தேவ! மற்று இவர்கள் செய்கை கேள்!' எனத் தெரியச் சொன்னார்: 2

'ஆனையும் பரியும் தேரும் அரக்கரும் அமைந்த ஆழித்
தானைகள் வீய, நின்ற தலைமகன் தனிமை ஓரார்,
''மானவன் வாளி, வாளி!'' என்கின்ற மழலை வாயார்,
போனவர் மீள வந்து புகுந்தனர் போலும்!' என்றார். 3

அற்று அவர் கூறலும், ஆர் அழலிற்றாய்
முற்றிய கோபம் முருங்க முனிந்தான்,—
'இற்றிதுவோ இவர் சேவகம்?' என்னா,
'பற்றுமின்!' என்றனன்—வெம்மை பயின்றான். 4

என்றலும், எய்தினர், கிங்கரர் என்பார்,
பின்றலினோரை வலிந்து பிடித்தார்,
நின்றனர்; ஆயிடை, நீல நிறத்தான்,
'கொன்றிடுவீர்அலிர்; கொண்மின், இது' என்றான். 5

'ஏற்றம் இனிச் செயல் வேறு இலை; ஈர்வீர்,
நாற்றம் நுகர்ந்து உயர் நாசியை; நாமக்
கோல் தரு திண் பணை கொட்டினிர், கொண்டு, ஊர்
சாற்றுமின், ''அஞ்சினர்'' என்று உரைதந்தே.' 6

அக் கணனே, அயில் வாளினர் நேரா,
மிக்கு உயர் நாசியை ஈர விரைந்தார்,
புக்கனர்; அப் பொழுதில், 'புகழ் தக்கோய்!
தக்கிலது' என்றனன், மாலி, தடுத்தான். 7

19: 3. மானவன் - மனிதன், ஈண்டு இலக்குவன்; 5. பின்றலினோர் - (போர்க்களத்தினின்றும்) ஓடி வந்தவர்கள்; நீல நிறத்தான்.- கரு நிறமுடைய இராவணன்; 4. ஏற்றம் - உயர்வு, ஈண்டு மிகுதி; 6. நாமக் கோல் - சிறந்த கோல்.

'அம் சமம் அஞ்சி அழிந்துளர் ஆனர்,
வெஞ் சமம் வேறலும், வென்றியது இன்றாய்த்
துஞ்சலும் என்று இவை தொல்லைய அன்றே?
தஞ்சு என ஆர் உளர், ஆண்மை தகைந்தார்? 8

'அந்தரம் ஒன்றும் அறிந்திலெ அன்றே;
வந்தன நம்வயின் எத்தனை, மன்னா!
தந்திரம், வானவர் தானவர் என்னும்,
இந்திரன் அஞ்சினன்; எண்ணுதி அன்றே! 9

'வருணன் நடுங்கினன், வந்து வணங்கிக்
கருணை பெறும் துணையும், உயிர் கால்வான்;
இருள் நிற வஞ்சகர் எங்கு உளர்? எந்தாய்!
பருணிதர் தண்டம் இது அன்று, பகர்ந்தால். 10

'பத்து-ஒரு நாலு பகுத்த பரப்பின்
அத்தனை வெள்ளம் அரக்கர் அவிந்தார்;
ஒத்து ஒரு மூவர் பிழைத்தனர், உய்ந்தார்;
வித்தக! யார் இனி வீரம் விளைப்பார்? 11

'பாசமும் இற்றது; பாதியின் மேலும்
நாசமும் உற்றது; நம்பி! நடந்தாய்;
பூசல் முகத்து ஒரு கான்முளை போதா,
நீசரை ஈருதியோ, நெடு நாசி? 12

' ''வாழி இலக்குவன்'' என்ன, மறுக்குற்று
ஆழி அரக்கர் தம் வாயில் அடைப்பார்;
ஏழு கடல் துணையோ? இனி, நாசி
ஊழி அறுத்திடினும், உலவாதால். 13

'தூது நடந்தவனைத் தொழுது, அந் நாள்,
ஓது நெடுஞ் செரு அஞ்சி உடைந்தார்,
தீது இலர் நின்றவர், சேனையின் உள்ளார்
பாதியின் மேலுளர், நாசி படைத்தார்! 14

8. ஆண்மை தஞ்சு எனத் தகைந்தார் ஆர்.உளர்? எனக் கூட்டுக; தஞ்சு - நிலையாக, தன்னிடத்திலேயே அடைக்கலமாக; 9. அந்தரம் - வேறுபாடு, நடுவுநிலையும் ஆம்; 10. பருணிதர் தண்டம் - அறிவுடையோர் கொடுக்கும் தண்டனை; 11. பத்து ஒரு நாலு - நாற்பது; மூவர் - புகைக்கண்ணன், மாபெரும்பக்கன், இந்திரசித்து என்னும் மூவர்; 12. கான்முளை - புதல்வனேடு.

'விட்டிலே சீதையை ஆம்எனின், வீரர்
ஒட்டிய போரினில் ஆர் உளர், ஓடார்?
''வெட்டுதி நாசியை, வெந் தொழில் வல்லோர்
பட்டிலர்'' என்றிலே' என்று பகர்ந்தான். 15

**இராவணன் சினம் தணியக் கண்டு, மாபெரும்பக்கனும் புகைக்கண்ணனும் பேசுதல்**

ஆறினன் என்பது அறிந்தனர், அன்னார்
தேறினர், அன்னது சிந்தை உணர்ந்தார்,
சீறிய நெஞ்சினர், செங் கணர், ஒன்றோ
கூறினர்? தம் நிலை செய்கை குறித்தார்: 16

'உன் மகன் ஒல்கி ஒதுங்கினன் அன்றோ?
மின் நகு வானிடை ஏக, விரைந்தான்,
அன்னதின் மாயை இயற்றி அகன்றான்;
இந் நகர் எய்தினன், உய்ந்தனன்—எந்தாய்! 17

'இப் பகல், அன்றுஎனின் நாளையின், அல்லால்,
முப் பகல் தீர்கிலம்; ஆவி முடிப்போம்,
வெப்பு அகலா எரி வெந் தழல் வெந்த
செப்பு அகல் வெண்ணெயின்—நோன்மை தெரிந்தோய்! 18

'விட்டனை எம்மை, விடுத்து, இனி, வெம் போர்
பட்டனர் ஒன்று, படுத்தனர் ஒன்றோ,
கெட்டனர் என்பது கேளலை' என்னா,
ஒட்டினர், ஆவி முடிக்க உவந்தார். 19

**இராவணன் பெரும் படையை அவர்களோடு அனுப்புதல்**

அன்னவர்தம்மொடும் ஐ-இரு வெள்ளம்
மின்னு படைக் கை அரக்கரை விட்டான்;
சொன்ன தொகைக்கு அமை யானை, சுடர்த் தேர்,
துன்னு வயப் பரியோடு தொகுத்தான். 20

நெய் அழல் வேள்வி நெடும் பகை, நேர் விண்
தைவரு சூரியசத்துரு என்பான்,
பெய் கழல் மாலி, பிசாசன் எனும் பேர்
வெய்யவன், வச்சிரம் வென்ற எயிற்றான், 21

18. முப் பகல் - மூன்றும் நாள்; தீர்கிலம் - போகவிடோம், தவற மாட்டோம்; 19. ஒட்டினர் - சூள் உரைத்தனர்.

என்றவரோடும் எழுந்து, உலகு ஏழும்
வென்றவன் ஏவலின், முன்னம் விரைந்தார்;
சென்றன, மால் கரி, தேர், பரி; செல்லக்
குன்றுஇனம் என்ன நடந்தனர், கோட்பால். 22

விண்ணை விழுங்கிய தூளியின் விண்ணோர்
கண்ணை விழுங்குதலின், கரை காணார்;
எண்ணை விழுங்கிய சேனையை, யாரும்,
பண்ணை விழுங்க உணர்ந்திலர், பண்பால். 23

கால் கிளர் தேரொடு, கால் வரையோடும்,
மேல் கிளர் பல் கொடி வெண் திரை வீச,—
மால் கடலானது, மாப் படை—வாள்கள்
பால் கிளர் மீனிடை ஆடிய பண்பால். 24

பேரி கலித்தன, பேர் உலகைச் சூழ்
ஏரி கலித்தன ஆம் என; யானை
கார் இகலிக் கடலோடு கலித்த;
மாரி கலித்தென, வாசி கலித்த. 25

சென்றன சென்ற சுவட்டொடு செல்லா
நின்று பிணங்கிய, கல்வியின் நில்லா,
ஒன்றினை ஒன்று தொடர்ந்தன, ஓடைக்
குன்று நடந்தனபோல்—கொலை யானை. 26

மாக நெடுங் கரம் வானின் வழங்கா,
மேக நெடும் புனல் வாரின, மேன்மேல்,
போக விலங்கின, உண்டன போலாம்—
காக நெடுங் களி யானை களிப்பால். 27

எரிந்து எழு பல் படையின் ஒளி, யாணர்
அருங் கல மின் ஒளி, தேர் பரி யானை
பொருந்திய பண் ஒளி, தார் ஒளி, பொங்க,
இரிந்தது பேர் இருள், எண் திசைதோறும். 28

22. கோட்பு - கொள்கை; 24. கால் வரை - கால் படைத்த மலை போன்ற யானை; 25. உலகைச் சூழ் ஏரி - உலகைச் சூழ்ந்த கடல்; வாசி - குதிரை; 26. கல்வி - பாகரின் சொல்; 27. மாக வான் எனக் கூட்டி, இரு பெயரொட்டாக்குக; மாகவான் - உயர்ந்த வானம்; போக விலங்கின - போதலைத் தவிர்ந்தன; காக நெடுங் களி யானை - காகங்கள் சூழப் பெற்ற மதத்தையுடைய யானை; 28. பண் ஒளி - அலங்காரங்களின் ஒளி.

**வீடணன், வருபவர்பற்றி இராமனுக்கு உரைத்தல்**

எய்திய சேனையை, ஈசன் எதிர்ந்தான்,
'வெய்து இவண் வந்தவன், மாயையின் வெற்றி
செய்தவனேகொல்? தெரித்தி இது' என்றான்;
ஐயம் இல் வீடணன் அன்னது உரைத்தான்: 29

'முழைக் குலச் சீயம் வெம் போர் வேட்டது முனிந்தது என்ன,
புழைப் பிறை எயிற்றுப் பேழ் வாய், இடிக் குலம் பொடிப்ப, ஆர்த்து,
தழைப் பொறி வாளிப் புட்டில் கட்டி, வில் தாங்கி, சார்வான்,
மழைக் குரல் தேரின் மேலான், மாபெரும்பக்கன் மன்னோ. 30

'சிகை நிறக் கனல் பொழி தெறு கண் செக்கரான்,
பகை நிறத்தவர் உயிர் பருகும் பண்பினான்,
நகை நிறப் பெருங் கடைவாயை நக்குவான்,
புகைநிறக்கண்ணவன், பொலம் பொன் தேரினான். 31

'பிச்சரின் திகைத்தன பெற்றிப் பேச்சினான்,
முச் சிரத்து அயிலினான், மூரித் தேரினான்,
''இச் சிரம் உம்மதே?'' என வந்து எய்துவான்,
வச்சிரத்து எயிற்றவன், மலையின் மேனியான். 32

'காலையும் மனத்தையும் பிறகு காண்பது ஓர்
வாலை உளைப் புரவியன், மடித்த வாயினான்,
வேலையின் ஆர்ப்பினன், விண்ணை மீக்கொளும்
சூலம் ஒன்று உடையவன், பிசாசன், தோன்றுவான். 33

'சூரியன்பகைஞன், அச் சுடர் பொன் தேரினன்,
நீரினும் முழக்கினன், நெருப்பின் வெம்மையான்;
ஆரிய! வேள்வியின்பகைஞன் ஆம்அரோ,
சோரியும் கனலியும் சொரியும் கண்ணினான். 34

'சாலி வண் கதிர் நிகர் புரவித் தானையான்,
மூல வெங் கொடுமையின் தவத்தின் முற்றினான்,
சூலியும் வெருக்கொளத் தேரில் தோன்றுவான்,
மாலி' என்று, அடி முறை வணங்கிக் கூறினான். 35

29. ஈசன் - தலைவனாகிய இராமன்; வெய்து - கோபம் கொண்டு; 30. பேழ் வாய் - பிளந்த வாயினால்; பொறி தழை வாளி - நெருப்புப் பொறி மிகுதியாகக் கக்குகின்ற அம்பு; 31. பகை நிறம் - பகைத் தன்மை; நகை - சிரிப்பினால்; 32. பெற்றி - தன்மை; 33. கால் - காற்று; பிறகு காண்பது - பின்னிடச் செய்வது; 34. நீர் - கடல்; சோரி - இரத்தம்; 35. மூல வெங் கொடுமையின் - பழைமையாக உள்ள வெவ்விய கொடுமையோடு; சூலி - சிவன்.

ஆர்த்து எதிர் நடந்தது, அவ் அரியின் ஆர்கலி
தீர்த்தனை வாழ்த்தி; உற்று இரண்டு சேனையும்
போர்த் தொழில் புரிந்தன; புலவர் போக்கு இலார்;
வேர்த்து உயிர் பதைத்தனர், நடுங்கி விம்மியே. 36

கல் எறிந்தன, கடை உருமின்; கார் என
வில் எறிந்தன, கணை; விசும்பின் மேகத்துச்
செல் எறிந்தன எனச் சிதறி வீழ்ந்தன,
பல்; எறிந்தன தலை, மலையின் பண்பு என, 37

கடம் படு கரி பட, கலின மாப் பட,
இடம் படு சில்லியின் ஈர்த்த தேர் பட,
உடம்பு அடும் அரக்கரை, அனந்தன் உச்சியில்
படம் படும் என, படும் கவியின் கல் பல. 38

கொலை ஒடுங்கா நெடும் புயத்தின் குன்றொடும்,
நிலை நெடுங் காலொடும், நிமிர்ந்த வாலொடும்,
மலையொடும், மரத்தொடும், கவியின் வல் நெடுந்
தலையொடும், போம்—விசைத்து எறிந்த சக்கரம். 39

ஆண் தகைக் கவிக் குலத் தலைவர் ஆக்கையைக்
கீண்டன; புவியினைக் கிழித்த—மாதிரம்
தாண்டுவ, குலப் பரி, மனத்தின் தாவுவ,
தூண்டினர் கை விசைத்து எறிந்த தோமரம்.* 40

சில்லி அம் தேர்க் கொடி சிதைய, சாரதி
பல்லொடு நெடுந் தலை மடிய, பாதகர்
வில்லொடு கழுத்து இற, பகட்டை வீட்டுமால்—
கல்லெனக் கவிக்குலம் வீசும் கல்அரோ. 41

கரகம் உந்திய மலை முழையில், கட் செவி
உரகம் முந்தின என ஒளிக்கும், ஒள் இலை
அரகம் முந்தின நெடுங் கவியின் ஆக்கையில்—
துரகம் உந்தினர் எடுத்து எறியும் சூலமே. 42

41. பகடு - யானை; கல்லென - கல்லென்ற ஒலி தோன்ற; 42. கரகம் உந்திய - நீர்க்குடத்தைப் போன்று வெளிப்பட்டுத் தோன்றும்; கட் செவி உரகம் - கண்ணே செவியாக உடைய பாம்புகள்; அரகம் - அரங்கம், போர்க் களம்.

வால் பிடித்து அடிக்கும் வானரத்தை, மால் கரி;
கால் பிடித்து அடிக்கும், அக் கரியினைக் கவி;
தோல் பிடித்து அரக்கரை எறியும், சூர் முசு;
வேல் பிடித்து எறிவர், அம் முசுவை வெங் கணார்.* 43

முற்படு கவிக்குலம் முடுக வீசிய
கல் பட, களம் படும், அரக்கர் கார்க் கடல்;
பல் படு தலை படப் படுவ, பாதகர்
வில் படு கணை பட, குரங்கின் வேலையே. 44

கிச்சு உறு கிரி பட, கிளர் பொன் தேர் நிரை
அச்சு இற, செல்கில, ஆடல் வாம் பரி—
எச்சு உறு துயரிடை எய்த, ஈத்து உணா
முச்சு இறு வாழ்க்கையின் மூண்டுளோர் என. 45

மீயவர் யாவரும் வீய, வெங் கரி
சேயிருங் குருதியில் திரிவ, சோர்வு இல,—
நாயகர் ஆளொடும் அவிய, நவ்விதம்
பாயொடும் வேலையில் திரியும் பண்பன. 46

படையொடு மேலவர் மடிய, பல் பரி,
இடை இடைதர விழுந்து இழிந்த பண்ணன,
கடல் நெடுங் குருதிய,—கனலி காலுறு
வடவையை நிகர்த்தன—உதிர வாயன. 47

எயிற்றொடு நெடுந் தலை, இட்ட கல்லொடும்
வயிற்றிடைப் புக, பல பகலும் வைகிய
பயிற்றியர் ஆயினும், தெரிக்கும் பண்பு இலார்,
அயிர்ப்பர், தம் கணவரை அணுகி அந் நலார். 48

தூமக்கண்ணனும் அனுமனும் எதிர் எதிர் தொடர்ந்தார்;
தாமத்து அங்கதன் மாபெரும்பக்கனைத் தடுத்தான்;
சேமத் திண் சிலை மாலியும் நீலனும் செறுத்தார்;
வாமப் போர் வயப் பிசாசனும் பனசனும் மலைந்தார். 49

43. தோல் - யானை, கிடுகுப் படை எனினும் ஆம்; சூர் முசு - அச்சத்தைச் செய்யும் குரங்கு; 44. பல் படு தலை - பற்களைக் காட்டுகின்ற தலை; 45. கிச்சு உறு கிரி - நெருப்பைக் கொண்ட மலைகள்; கிச்சு - நெருப்பு; எச்சு உறு துயர் -. இளைத்தலை உண்டாக்கும் வறுமைத் துயர்; எச்சு - எய்த்து; மூச்சு இறு வாழ்க்கை - மூச்சு அற்றுப் போகும் உலக வாழ்க்கை; வறுமை உற்றோர்க்கு இல்வாழ்க்கை இனிது நடவாதது போலக் குதிரைகட்கு அச்சிற்ற தேரை ஈர்த்துச் செல்லுகை இயலாததாயிற்று; 46. மீயவர் - மேலே உள்ள வீரர்; நவ்வி - கப்பல்; 48. பயிற்றியர் - பழக்கத்தையுடையவர்.

சூரியன் பெரும்பகைஞனும் சூரியன் மகனும்
நேர் எதிர்ந்தனர்; நெருப்புடை வேள்வியின்பகையும்
ஆரியன் தனித் தம்பியும் எதிர் எதிர் அடர்ந்தார்;
வீர வச்சிரத்துஎயிற்றனும் இடபனும் மிடைந்தார். 50

வெங் கண் வெள் எயிற்று அரக்கரில், கவிக் குல வீரச்
சிங்கம் அன்ன போர்த்தலைவரில், தலைவராய்த் தெரிந்தார்,
அங்கு அமர்க்களத்து ஒருவரோடு ஒருவர் சென்று அடர்ந்தார்;
பொங்கு வெஞ் செருத் தேவரும் நடுக்குறப் பொருதார். 51

இன்ன காலையின், ஈர்-ஐந்து வெள்ளம், வந்து ஏற்ற
மின்னும் வெள் எயிற்று அரக்கர்தம் சேனையில், வீரன்
அன்ன வெஞ் சமத்து ஆறு வெள்ளத்தையும் அவித்தான்;
சொன்ன நாலையும் இலக்குவன் பகழியால் தொலைத்தான். 52

உப்புடைக் கடல் மடுத்தன உதிர நீர் ஓதம்
அப்பொடு ஒத்தன கடுத்தில; ஆர்கலி முழுதும்
செப்பு உருக்கு எனத் தெரிந்தது; மீன் குலம் செருக்கித்
துப்பொடு ஒத்தன, முத்துஇனம் குன்றியின் தோன்ற. 53

தத்து நீர்க் கடல் முழுவதும் குருதியாய்த் தயங்க,
சித்திரக் குலப் பல் நிற மணிகளும் சேந்த;
ஒத்து வேறு உருத் தெரியல, உயர் மதத்து ஓங்கல்
மத்தகத்து உகு தரளமும், வளை சொரி முத்தும்.* 54

அதிரும் வெஞ் செரு அன்னது ஒன்று அமைகின்ற அளவில்,
கதிரவன், செழுஞ் சேயொளிக் கற்றை அம் கரத்தால்,
எதிரும் வல் இருட் கரி இறுத்து, எழு முறை மூழ்கி,
உதிர வெள்ளத்தின் எழுந்தவன் ஆம் என, உதித்தான். 55

அரக்கர் என்ற பேர் இருளினை இராமன் ஆம் இரவி
துரக்க, வெஞ் சுடர்க் கதிரவன் புறத்து இருள் தொலைக்க,
புரக்கும் வெய்யவர் இருவரை உடையன போல,
நிரக்கும் நல் ஒளி பரந்தன, உலகு எலாம் நிமிர. 56

படுகளக் காட்சி

நிலை கொள் பேர் இருள் நீங்கலும், நிலத்திடை நின்ற
மலையும் வேலையும் வரம்பு இல வயின்தொறும் பரந்து,
தொலைவு இல் தன்மைய தோன்றுவ போன்றன—சோரி
அலை கொள் வேலையும், அரும் பிணக் குன்றமும் அணவி. 57

53. துப்பு - பவளம்; 54. வளை - சங்கு; 56. வெய்யவர் - சூரியர்; நிரக்கும் - நிரம்பிய; 57. விடியற்காலத்தில் கடலும் மலையும் வெளிப்பட்டுத் தோன்றுவன போல, இரத்தப் பெருக்கும் யானைகளும் விளங்கிக் காணப்பட்டன.

நிலம் தவாத செந்நீரிடை, நிணக் கொழுஞ் சேற்றில்,
புலர்ந்த காலையில், பொறி வரி அம்பு எனும் தும்பி
கலந்த தாமரைப் பெரு வனம், கதிரவன் கரத்தால்,
மலர்ந்தது ஆம் எனப் பொலிந்தன, உலந்தவர் வதனம். 58

தேரும் யானையும் புரவியும் விரவின,—தேவர்
ஊரும் மானமும் மேகமும் உலகமும் மலையும்
பேரும் மான வெங் காலத்துக் கால் பொர, பிணங்கிப்
பாரின் வீழ்ந்தன போன்றன—கிடந்தன பரந்த. 59

**போர்க்களம் போந்த அரக்கியர் நிலை**

எல்லி சுற்றிய மதி நிகர் முகத்தியர், எரி வீழ்
அல்லி சுற்றிய கோதையர், களம் புகுந்து அடைந்தார்,
புல்லி முற்றிய உயிரினர் பொருந்தினர் கிடந்தார்,
வல்லி சுற்றிய மா மரம் நிகர்த்தனர் வயவர். 60

வணங்கு நுண் இடை, வன முலை, செக்கர் வார் கூந்தல்,
அணங்கு வெள் எயிற்று, அரக்கியர் களத்து வந்து அடைந்தார்,
குணம் கொளும் துணைக் கணவர்தம் பசுந் தலை கொடாது
பிணங்கு பேய்களின் வாய்களைப் பிளந்தனர், பிடித்தே. 61

சுடரும் வெள் வளைத் தோளி, தன் கொழுநனைத் தொடர்வாள்,
உடரும் அங்கமும் கண்டு, கொண்டு ஒரு வழி உய்ப்பாள்,
குடரும், ஈரலும், கண்ணும், ஓர் குறு நரி கொள்ள,
தொடர ஆற்றலள், நெடிது உயிர்த்து, ஆர் உயிர் துறந்தாள்.

பெரிய வாள் தடங் கண்ணியர், கணவர்தம் பெருந் தோள்
நரிகள் ஈர்த்தன, வணங்கவும் இணங்கவும் நல்கா
இரியல்போவன தொடர்ந்து, அயல் இனப் படை கிடைந்த
அரிய, நொந்திலர், அலத்தகச் சீறடி அயர்ந்தார். 63

நலம் கொள் நெஞ்சினர், தம் துணைக் கணவரை நாடி,
விலங்கல் அன்ன வான் பெரும் பிணக் குப்பையின் மேலார்,
அலங்கல் ஓதியர்,—அருந் துணை பிரிந்து நின்று அயரும்,
பொலம் கொள், மா மயில் வரையின்மேல் திரிவன போன்றார்.

58. நிலம் தவாத - நிலத்தினின்று நீங்காத; பொறி - தீப் பொறி, புள்ளி; தும்பி - வண்டு; 59. மானம் - விமானம்; 60. எல்லி சுற்றிய - இரவில் சுற்றி வருகின்ற; அல்லி - அகவிதழ், ஈண்டுப் பூமாலை; கோதையர் - கூந்தலையுடையவர்; முற்றிய - முடிந்த; 63. அரிய - அறுத்திடவும்; 64. பொலம் - அழகு.

சிலவர்—தம் பெருங் கணவர்தம் செருத் தொழில் சினத்தால்,
பலரும், வாய் மடித்து, உயிர் துறந்தார்களைப் பார்த்தார்,
'அலைவு இல் வெள் எயிற்றால் இதழ் மறைத்துளது, அயலாள்
கலவியின் குறி காண்டும் என்று ஆம்' எனக் கனன்றார். 65

நவை செய் வன் தலை இழந்த தம் அன்பரை நணுகி,
அவசம் எய்திய மடந்தையர் உருத் தெரிந்து அறியார்,
துவசம் அன்ன தம் கூர் உகிர்ப் பெருங் குறி, தோள்மேல்
கவசம் நீக்கினர், கண்டு கண்டு, ஆர் உயிர் கழிந்தார்.* 66

மாரி ஆக்கிய கண்ணியர், கணவர்தம் வயிரப்
போர் யாக்கைகள் நாடி, அப் பொரு களம் புகுந்தார்,
பேர் யாக்கையின் பிணப் பெருங் குன்றிடைப் பிறந்த
சோரி ஆற்றிடை அழுந்தினர், இன் உயிர் துறந்தார்.* 67

**அனுமன் - புகைக்கண்ணன் போர்**

வகை நின்று உயர் தாள் நெடு மாருதியும்,
புகையின் பொரு கண்ணவனும் பொருவார்;
மிகை சென்றிலர், பின்றிலர், வென்றிலரால்;
சிகை சென்று நிரம்பிய தீ உமிழ்வார். 68

ஐ-அஞ்சு அழல் வாளி, அழற்கொடியோன்,
மெய் அஞ்சனை கான்முளை மேனியின்மேல்,
வை அம் சிலை ஆறு வழங்கினனால்,
மொய் அஞ்சன மேகம் முனிந்தனையான். 69

பாழிப் புயம் அம்பு உருவப் படலும்,
வீழிக் கனிபோல் புனல் வீச, வெகுண்டு,
ஆழிப் பெருந் தேரை அழித்தனனால்,—
ஊழிப் பெயர் கார் நிகர் ஒண் திறலான். 70

சில்லிப் பொரு தேர் சிதைய, சிலையோடு
எல்லின் பொலி விண்ணின் விசைத்து எழுவான்,
வில் இற்றது, இலக்குவன் வெங் கணையால்;
புல்லித் தரை இட்டனன், நேர் பொருவான். 71

65. அலைவு - அசைவு; கலவியின் குறி - கூடற்காலத்தில் வாயிதழில் செய்த பற்குறிகள்; 66. துவசம் அன்ன குறி என இயைக்க; துவசம் - கொடி; 68. வகை நின்று உயர் தாள் - அழகாக ஓங்கி நின்ற கால்கள்; 69. அழற்கொடியோன் - புகைக்கண்ணன்; அழற்கொடி - புகை; 70. ஒண் திறலான் - பெருந் திறமையுடைய அனுமன்; 71. எல்லின் - சூரியனைப்.

மலையின் பெரியான் உடல் மண்ணிடை இட்டு,
உலையக் கடல் தாவிய கால் கொடு உதைத்து,
அலையின், பருகிப் பரு வாய் அனல் கால்
தலை கைக்கொடு எறிந்து, தணிந்தனனால். 72

**மாபக்கன் – அங்கதன் போர்**

மாபக்கனும் அங்கதனும் மலைவார்,
தீபத்தின் எரிந்து எழு செங் கணினர்,
கோபத்தினர், கொல்ல நினைந்து அடர்வார்,
தூபத்தின் உயிர்ப்பர், தொடர்ந்தனரால். 73

ஐம்பத்தொரு வெங் கணை அங்கதன் மா
மொய்ம்பில் புக உய்த்தனன், மொய் தொழிலான்—
வெம்பி, களியோடு விளித்து எழு திண்
கம்பக் கரி, உண்டை கடாய் எனவே. 74

ஊரோடு மடுத்து ஒளியோனை உறும்
கார் ஓடும்நிறக் கத நாகம் அனான்,
தேரோடும் எடுத்து, உயர் திண் கையினால்,
பாரோடும் அடுத்து எறி பண்பிடையே. 75

வில்லைச் செல வீசி, விழுந்து அழியும்,
எல்லின் பொலி தேரிடை நின்று இழியா,
சொல்லின் பிழையாதது ஓர் சூலம், அவன்
மல்லின் பொலி மார்பின் வழங்கினனால். 76

'சூலம் எனின், அன்று; இது தொல்லை வரும்
காலம்' என உன்னு கருத்தினனாய்;
ஞாலம் உடையான், அது நாம் அற, ஓர்
ஆலம் முக அம்பின் அறுத்தனனால். 77

உளம்தான் நினையாதமுன், உற்று, உதவாக்
கிளர்ந்தானை, இரண்டு கிழித் துணையாய்ப்
பிளந்தான்—உலகு ஏழினொடு ஏழு பெயர்ந்து
அளந்தான், 'வலி நன்று' என,—அங்கதனே. 78

72. அலையின் எறிந்து எனக் கூட்டுக; அலையின் - கடலின்கண்; 74. மொய் தொழிலான் - மாபக்கன் (மகா பாரிசுவன்); உண்டை - மண் உருண்டை; 75. ஊரோடு மடுத்து - ஊர்கோளைப் பொருந்தி; தேரைப் பற்றுமாறு சென்ற அங்கதனுக்குச் சூரியனைப் பற்றுமாறு செல்லும் காரும் பாம்பும் உவமைகள்; 77. நாம் - நாமம், பெயர்; ஆலம் முக அம்பு - நஞ்சு தோய்ந்த முனையினை யுடைய அம்பு.

**மாலி - நீலன் போர்**

மா மாலியும் நீலனும், வானவர்தம்
கோமானொடு தானவர்கோன் இகலே
ஆமாறு, மலைந்தனர் என்று இமையோர்
பூ மாரி பொழிந்து, புகழ்ந்தனரால். 79

கல் ஒன்று கடாவிய காலை, அவன்
வில் ஒன்று இரு கூறின் விழுந்திடலும்,
அல் ஒன்றிய வாளொடு தேரினன் ஆய்,
'நில்'! என்று இடை சென்று, நெருக்கினனால். 80

அற்று, அத் தொழில் எய்தலும், அக் கணனே,
மற்றப் புறம் நின்றவன், வந்து அணுகா,
கொற்றக் குமுதன், ஒரு குன்று கொளா,
எற்ற, பொரு தேர் பொடி எய்தியதால். 81

தாள் ஆர் மரம் நீலன் எறிந்ததனை
வாளால் மடிவித்து, வலித்து அடர்வான்
தோள் ஆசு அற, வாளி துரந்தனனால்—
மீளா வினை நூறும் விடைக்கு இளையான். 82

மின்போல் மிளிர் வாளொடு தோள் விழவும்
தன் போர் தவிராதவனை, சலியா,
'என் போலியர் போர்எனின், நன்று; இது ஓர்
புன் போர்' என, நின்று அயல் போயினனால். 83

நீர் வீரை அனுன் எதிர் நேர் வரலும்,
பேர் வீரனை, வாசி பிடித்தவனை,
'யார், வீரதை இன்ன செய்தார்கள்?' என,
போர் வீரர் உவந்து, புகழ்ந்தனரால். 84

**வேள்விப்பகைஞன் முதலியோர் அழிதல்**

வேள்விப்பகையோடு வெகுண்டு அடரும்
தோள் வித்தகன், அங்கு ஓர் சுடர்க் கணையால்,
'வாழ்வு இத்தனை' என்று, அவன் மார்பு அகலம்
போழ்வித்தனன்; ஆர் உயிர் போயினனால். 85

82. மீளா வினை நூறும் விடை - போக்குதற்கு அரிய வினைகளைப் போக்கு பவனாகிய இடபம் போன்ற இராமன்; 83. போர் தவிராதவன் - மாலி; அயல் போயினவன் - இலக்குவன்; 84. நீர் வீரை அனுன் - இராமன்; வீரை - கடல்; வீரன் - இலக்குவன்; வாசி - அம்பு, போர்; வேறுபாடு என்பாரும் உண்டு; 85. தோள் வித்தகன் - தோள் வலியையுடைய இலக்குவன்.

மல்லல் தட மார்பன் வடிக் கணையால்
எல்லுற்று உயர் வேள்விஇரும்பகைஞன்
வில் அற்றது, தேரொடு மேல் நிமிரும்
கல் அற்ற, கழுத்தொடு கால்களொடும். 86

தன் தாதையை முன்பு தடுத்து, ஒருநாள்,
வென்றானை, விலங்கலின் மேனியனை,
பின்றாத வலத்து உயர் பெற்றியனை,
கொன்றான்—கவியின்குலம் ஆளுடையான். 87

இடபன்,—தனி வெஞ் சமம் உற்று எதிரும்
விட வெங் கண் எயிற்றவன், விண் அதிரக்
கடவும் கதழ் தேர், கடவு ஆளினொடும்
பட,—அங்கு ஒரு குன்று படர்த்தினனால். 88

திண் தேர் அழிய, சிலை விட்டு, ஒரு தன்
தண்டோடும் இழிந்து, தலத்தினன் ஆய்,
'உண்டோ உயிர்?' என்ன உருத்து, உருமோடு
எண் தோளனும் உட்கிட, எற்றினனால். 89

'அடியுண்டவன் ஆவி குலைந்து அயரா,
இடியுண்ட மலைக் குவடு இற்றதுபோல்
முடியும்' எனும் எல்லையில் முந்தினனால்—
'நெடியன், குறியன்' எனும் நீர்மையினான். 90

கிடைத்தான் இகல் மாருதியை, கிளர் வான்
அடைத்தான் என மீது உயர் ஆக்கையினைப்
படைத்தானை, நெடும் புகழ்ப் பைங்கழலான்
புடைத்தான், அகல் மார்பு பொடிச் சிதற. 91

எற்றிப் பெயர்வானை இடக் கையினால்
பற்றி, கிளர் தண்டு பறித்து எறியா,
வெற்றிக் கிளர் கைக்கொடு, மெய் வலி போய்
முற்ற, தனிக் குத்த, முடிந்தனனால். 92

காத்து, ஓர் மரம் வீசுறு கைக் கதழ் வன்
போத்து ஓர் புலிபோல் பனசன் புரள,
கோத்து ஓட நெடுங் குருதிப் புனல், திண்
மாத் தோமரம் மார்பின் வழங்கினனால். 93

88. கடவு ஆள் - ஓட்டும் பாகன்; 90. 'நெடியன், குறியன்' எனும் நீர்மையினான் - அனுமன்.

கார் மேலினனோ? கடல் மேலினனோ?
பார் மேலினனோ? பகல் மேலினனோ?
யார் மேலினனோ? இன என்று அறியாம்—
போர் மேலினன், வாசி எனும் பொறியான். 94

'நூறுயிர் கோடிகொல்? அன்றுகொல்?' என்று
ஆறுயிர் வானவரும், அறிவின்
தேறு வகை நின்று, திரிந்துளதால்—
பாறு ஆடு களத்து, ஒரு பாய் பரியே. 95

கண்ணின் கடுகும்; மனனின் கடுகும்;
விண்ணில் படர் காலின் மிகக் கடுகும்;
உள் நிற்கும் எனின், புறன் நிற்கும்; உலாய்,
மண்ணில் திரியாத வயப் பரியே. 96

மாப் புண்டரவாசியின் வட்டணைமேல்
ஆப்புண்டவன் ஒத்தவன், ஆர் அயிலால்
பூப் புண் தர,—ஆவி புறத்து அகல,
கோப்புண்டன, வானர வெங் குழுவே. 97

'நூறும் இரு நூறும், நொடிப்பு அளவின்,
ஏறும்; நுதி வேலின், இறைப்பொழுதில்,
சீறும் கவி சேனை சிதைக்கும்?' என,
ஆறும் திறல் உம்பரும் அஞ்சினரால். 98

தோற்றும் உரு ஒன்று எனவே துணியா,
கூற்றின் கொலையால் உழல் கொள்கையனை,
ஏற்றும் சிலை ஆண்மை இலக்குவன், வெங்
காற்றின் படை கொண்டு கடந்தனனால். 99

குலையப் பொரு சூலன் நெடுங் கொலையும்
உலைவுற்றில, உய்த்தலும் ஒய்வு இலன், ஒண்
தலை அற்று உகவும், தரை உற்றிலனால்—
இலையப் பரிமேல் கொள் இருக்கையினான். 100

94. வாசி எனும் பொறியான் - குதிரை எனப்படுகின்ற எந்திரத்தை உடையவன், பிசாசன்; 96. உள் - போர்க்களத்தின் உள்ளே; 97. புண்டர வாசி - கழுகினை ஒத்த குதிரை; வட்டணை - விரைந்த நடை; 98. திறல் ஆறும் உம்பர் - வலிமை ஒய்ந்த தேவர்; 99. துணியா - துணிய முடியாத; கொலையால் - கொலையொடு; 100. இலையப் பரி - தாளத்திற்கேற்ப அடியிட்டு நடக்கும் குதிரை; இலையம் - இலயம், தாளத்தின் கால அளவு.

# 20        மகரக்கண்ணன் வதைப் படலம்

#### தூதுவர் நகருக்கு ஏகி, இராவணனுக்கு அறிவித்தல்

'இன்று ஊதியம் உண்டு' என இன்னகைபால்
சென்று ஊதின தும்பிகள்; தென் திசையான்
வன் தூதரும் ஏகினர், வஞ்சனையான்-
தன் தூதரும் ஏகினர், தம் நகர்வாய். 1

ஏகி, தனி மன்னன் இருந்துழி புக்கு,
'ஓகைப் பொருள் இன்று' என, உள் அழியா,
வேகத்து அடல் வீரர் விளிந்த எலாம்
சோகத்தொடு, இறைஞ்சினர், சொல்லினரால். 2

சொன்னார்; அவர் சொல் செவியில் தொடர்வோன்,
இன்னாத மனத்தின் இலங்கையர்கோன்,
வெந் நாக உயிர்ப்பினன், விம்மினனால்;
அன்னான் நிலை கண்டு, அயல் நின்று அறைவான்: 3

#### மகரக்கண்ணன் போர்க்குச் செல்லல்

'முந்தே, என தாதையை மொய் அமர்வாய்,
அந்தோ! உயிர் உண்டவன் ஆர் உயிர்மேல்
உந்தாய்; எனை யாதும் உணர்ந்திலையோ?
எந்தாய்! ஒரு நீ இடர் கூருதியோ? 4

'யானே செல எண்ணுவென்; எய்த அவன்
தான் நேர்வது தீது எனவே தணிவேன்;
வானே, நிலனே, முதல் மற்றும் எலாம்,
கோனே! எனை வெல்வது ஓர் கொள்கையதோ? 5

'அருந் துயர்க் கடலுளாள் என் அம்மனை, அழுத கண்ணன்,
பெருந் திருக் கழித்தல் ஆற்றாள், "கணவனைக் கொன்று போந்தோன்
கருந் தலைக் கலத்தின் அல்லால், கடனது கழியேன்" என்றாள்;
பருந்தினுக்கு இனிய வேலாய்! இன் அருள் பணித்தி' என்றான்.

அவ் உரை மகரக்கண்ணன் அறைதலும், அரக்கன், 'ஐய!
செவ்விது; சேறி! சென்று, உன் பழம் பகை தீர்த்தி!' என்றான்.
வெவ் வழியவனும், பெற்ற விடையினன், தேர் மேற்கொண்டான்,
வவ்விய வில்லன் போனான், வரம் பெற்று வளர்ந்த தோளான்.

20: 1. தென் திசையான் - இயமன்; 2. ஓகை - மகிழ்ச்சி; 4. என தாதை - 'என்னுடைய தந்தையாகிய கரன்; 6. அம்மனை - தாய்; பெருந் திரு - பெருமை பெற்ற மங்கல நாண்.

தன்னுடைச் சேனை கோடி ஐந்து உடன் தழுவ, தானை
மன்னுடைச் சேனை வெள்ளம் நால்-ஐந்து மழையின் பொங்கிப்
பின்னுடைத்தாக, பேரி கடல் பட, பெயர்ந்த தூளி
பொன்னுடைச் சிமயத்து உச்சிக்கு உச்சியும் புதைய, போனான்.

'சோணிதக்கண்ணனோடு, சிங்கனும், துரகத் திண் தேர்த்
தாள்முதல் காவல் பூண்டு செல்க' என, 'தக்கது' என்னா,
ஆள் முதல் தானையோடும், அனைவரும் தொடரப் போனான்,
நாள் முதல் திங்கள்தன்னைத் தழுவிய அனைய நண்பான். 9

பல்பெரும் பதாகைப் பத்தி மீமிசைத் தொடுத்த பந்தர்
எல்லவன், சுடர் ஒண் கற்றை முற்ற இன் நிழலை ஈய,
தொல் சின யானை அம் கை விலாழி நீர்த் துவலை தூற்ற,
செல் பெருங் கவியின் சேனை அமர்த் தொழில் சிரமம் தீர்ந்த.

'முழங்கின யானை; வாசி ஒலித்தன; முரசின் பண்ணை,
தழங்கின; வயவர் ஆர்த்தார்' என்பதோர் முறைமை தள்ள,
வழங்கின, பதலை ஓதை, அண்டத்தின் வரம்பின்காறும்;
புழுங்கின உயிர்கள் யாவும், கால் புகப் புரை இன்றாக. 11

அரக்கர்க்கும் வானரர்க்கும் போர் நிகழ்தல்

வெய்தினின் உற்ற தானை முறை விடா நூழில் வெம் போர்
செய்தன; செருக்கிச் சென்று நெருக்கினர், தலைவர் சேர்த்தி;
கையொடு கைகள் உற்றுக் கலந்தன; கல்லும் வில்லும்
எய்தன எறிந்த; யானை ஈர்த்தன, கோத்த சோரி. 12

வானர வீரர் விட்ட மலைகளை அரக்கர் வவ்வி,
மீனெடு மேகம் சிந்த விசைத்தனர் மீட்டும் வீச,
கானகம் இடியுண்டென்னக் கவிக்குலம் மடியும்—கவ்வி,
போனகம் நுகரும் பேய்கள் வாய்ப் புறம் புடைப்போடு ஆர்ப்ப. 13

மைந் நிற அரக்கர் வன் கை வயிர வாள் வலியின் வாங்கி,
மெய்ந் நிறத்து எறிந்து கொல்வர், வானர வீரர்; வீரர்
கைந் நிறைத்து எடுத்த கல்லும் மரனும் தம் கரத்தின் வாங்கி,
மொய்ந் நிறத்து எறிவர்; எற்றி முருக்குவர், அரக்கர் முன்பர்.

9. தாள்முதல் - சக்கரத்தின் இடத்து; நாள் முதல் - விண்மீன்கள் முதலியவை; 10. எல்லவன் - சூரியன்; 11. பதலை - ஒருவகைத் தோற்கருவி; புரை - இடம்; 12. நூழில் - கொன்று குதித்தல்; 13. போனகம் - உணவு.

மகரக்கண்ணன் வஞ்சினம்

வண்டு உலாம் அலங்கல் மார்பன் மகரக்கண், மழை ஏறு என்ன,
திண் திறல் அரக்கன் கொற்றப் பொன் தடஞ் சில்லித் தேரை,
தண்டலை மருத வைப்பின் கங்கை நீர் தழுவும் நாட்டுக்
கொண்டல்மேல் ஓட்டுச் சென்றான்; குரங்கு இனப் படையைக் கொன்
[றான். 15

'இந்திரன் பகைஞனேகொல்?' என்பது ஓர் அச்சம் எய்தித்
தந்திரம் இரிந்து சிந்த, படைப் பெருந் தலைவர், தாக்கி
எந்திரம் எறிந்த என்ன, ஏவுண்டு புரண்டார்; எய்தி;
சுந்தரத் தோளினானை நோக்கி நின்று, இனைய சொன்னான்: 16

' "என்னுடைத் தாதைதன்னை இன் உயிர் உண்டாய்" என்னும்
முன் உடைத்தாய தீய முழுப் பகை மூவர்க்கு அன்றி,
நின்னுடைத்து ஆயது அன்றே; இன்று அது நிமிர்வென்' என்றான்—
பொன்னுடைத் தாதை வண்டு குடைந்து உணும் பொலம் பொன் தா
[ரான்.

தீயவன் பகர்ந்த மாற்றம் சேவகன் தெரியக் கேட்டான்,—
'நீ கரன் புதல்வன்கொல்லோ? நெடும் பகை நிமிர வந்தாய்;
ஆயது கடனே அன்றோ, ஆண் பிறந்து அமைந்தார்க்கு? ஐய!
ஏயது சொன்னாய்' என்றான்,—இசையினுக்கு இசைந்த தோளான். 18

மகரக்கண்ணன் – இராமன் போர்

உரும் இடித்தென்ன வில் நாண் ஒலி படுத்து, 'உன்னோடு எந்தை
செரு முடித்து, என்கண் நின்ற சினம் முடித்து அமைவென்' என்னா,
கரு முடித்து அமைந்த மேகம், கால் பிடித்து எழுந்த காலம்,
பெரு முடிக் கிரியில் பெய்யும் தாரைபோல், பகழி பெய்தான்.

சொரிந்தன பகழி எல்லாம் சுடர்க் கடுங் கணைகள் தூவி,
அரிந்தனன் அகற்றி, மற்றை ஆண்தகை அலங்கல் ஆகத்து,
தெரிந்து ஒரு பகழி பாய எய்தனன், இராமன்; ஏவ
நெரிந்து எழு புருவத்தான்தன் நிறத்து உற்று நின்றது அன்றே.

ஏவுண்டு துளக்கம் எய்தா, இரத்தகப் பரிதி ஈன்ற
பூவுண்ட கண்ணனை, வாயின் புகை உண்டது உமிழ்வான் போல்வான்
தேவுண்ட கீர்த்தி அண்ணல் திரு உண்ட கவசம் சேர,
தூவுண்ட வயிர வாளி ஆயிரம் தூவி ஆர்த்தான். 21

16. தந்திரம் - சேனை; 17. மூவர் - மும்மூர்த்திகள்; நிமிர்வென் - நீக்கித் தலையெடுப்பேன்; 18. நிமிர - தீர்த்துக் கொள்ளுதற்கு; 19. கரு முடித்து - கருவை நிரம்பப் பெற்றுள்ள; கால் பிடித்து - காற்றோடு கூடி; 21. இரத்தகம் - செந்நிறம்; தூவுண்ட - மாமிசத்தில் படிந்த.

அன்னது கண்ட வானோர் அதிசயம் உற்றார்; ஆழி
மன்னனும், முறுவல் எய்தி, வாய் அம்பு ஓர் ஆறு வாங்கி,
பொன் நெடுந் தடந் தேர் பூண்ட புரவியின் குரங்கள் போக்கி,
வில் நடு அறுத்து, பாகன் தலையையும் நிலத்தில் வீழ்த்தான்.

மார்பிடை நின்ற வாளிவாயிடை வெயிலின் வாரும்
சோரியன், விசும்பினூடு ஓர் இமைப்பிடைத் தோன்றுநின்றான்,
கார் உருமேறும், காற்றும், கனலியும், கடைநாள் வையம்
பேர்வுறு காலம் என்ன, பெருக்கினன், தவத்தின் பெற்றான்.

உரும் முறை அனந்த கோடி, உதிர்ந்தன; ஊழி நாளின்,
இரு முறை காற்றுச் சீறி எழுந்தது; விழுந்தது, எங்கும்
கரு முறை நிறைந்த மேகம்; கான்றன, கல்லின் மாரி;
பொரு முறை மயங்கி, சுற்றும் இரியலின் கவிகள் போன. 24

போயின திசைகள் எங்கும் புகையொடு நெருப்புப் போர்ப்ப,
தீஇனம் அமையச் செல்லும் மாய மா மாரி சிந்த,
ஆயிர கோடி மேலும் அவிந்தன, கவிகள்; ஐயன்,
'மாயமோ? வரமோ?' என்றான்; வீடணன் வணங்கிச் சொல்வான்: 25

'நோற்றுடைத் தவத்தின் நோன்மை நோக்கினர், கருணை நோக்கி,
காற்றுடைச் செல்வன்தானும், மழையுடைக் கடவுள்தானும்,
மாற்றலர், ஈந்த தெய்வ வரத்தினால் வந்தது' என்றான்; [றான்.
நூற்று இதழ்க் கமலக் கண்ணன், 'அகற்றுவென், நொடியில்' என்

காலவன் படையும், தெய்வக் கடலவன் படையும், காலக்
கோல வன் சிலையில் கோத்து கொடுங் கணையோடும் கூட்டி,
மேலவன் துரத்தலோடும், விசும்பின்நின்று எரிந்து, வெய்தின்
மால் இருங் கடலின் வீழ்ந்து மறைந்தன, மழையும் காற்றும்.

அத் துணை, அரக்கன் நோக்கி, அந்தர வானம் எல்லாம்
ஒத்தன உருவே ஆக்கி, தான் மறைந்து ஒளித்து, சூலப்
பத்திகள் கோடி கோடி பரப்பினன்; அதனைப் பார்த்த
வித்தகன், 'ஒருவன் செய்யும் வினையம்!' என்று இனைய சொன்னான்:

22. வாய் - கூர்மை; குரங்கள் - குளம்புகள்; 23. தவத்தின் பெற்றான் - தவத்தினால் சித்தி பெற்றவன், மகரக்கண்ணன்; 26. நோக்கினர் - பார்த்து; 27. காலவன் - வாயுதேவன்; கடலவன் - வருணதேவன்.

மகரக்கண்ணன் மடிதலும் மாயை அகல்தலும்

'மாயத்தால் வகுத்தான், யாண்டும் வரம்பு இலா உருவம்; தான் எத்
தேயத்தான் என்னும் வண்ணம் கரந்தனன்; தெரிந்திலாதான்;
காயத்தால் இனையன் என்று நினையல் ஆம் கருத்தன் அல்லன்;
தீ ஒத்தான் திறத்தில் என்னே செயல்?' எனச் சிந்தை நொந்தான். 29

அம்பின்வாய் ஆறு சோரும் அரக்கன்தன் அருள் இல் யாக்கை
உம்பரில் பரப்பி, தான் வேறு ஒளித்தனன் என்ன ஓர்வான்,
செம்புனல் சுவடு நோக்கி, 'இது நெறி' என்று, தேவர்
தம்பிரான் பகழி தூண்ட, தலை அற்றுத் தலத்தன் ஆனான். 30

அயில் படைத்து உருமின் செல்லும் அம்பொடும், அரக்கன் யாக்கை,
புயல் படக் குருதி வீசி, படியிடைப் புரள்தலோடும்,
வெயில் கெடுத்து இருளை ஓட்டும் காலத்தின் விளைவினோடும்,
துயில் கெடக் கனவு மாய்ந்தால் ஒத்தது—சூழ்ந்த மாயை. 31

குருதிக்கண்ணன், சிங்கன் வீழ்ச்சி

குருதியின்கண்ணன், வண்ணக் கொடி நெடுந் தேரன், கோடைப்
பருதியின் நடுவண் தோன்றும் பசுஞ் சுடர் மேகப் பண்பன்,
எரி கணை சிந்தி, காலின் எய்தினான் தன்னோடு ஏற்றான்—
விரி கடல் தட்டான், கொல்லன், வெஞ் சினத் தச்சன், வெய்யோன். 32

அன்று, அவன் நாம வில் நாண் அலங்கல் தோள் இலங்க வாங்கி,
ஒன்று அல பகழி மாரி, ஊழித் தீ என்ன, உய்த்தான்;
நின்றவன்,—நெடியது ஆங்கு ஓர் தருவினால் அகல நீக்கி,
சென்றனன்—கரியின் வாரிக்கு எதிர் படர் சீயம் அன்னான். 33

கரத்தினில் திரியாநின்ற மரத்தினைக் கண்டமாகச்
சரத்தினின் துணித்து வீழ்த்த தறுகணான் தன்னை நோக்கி,
உரத்தினைச் சுருக்கிப் பாரில் ஒடுங்கினான், தன்னை ஒப்பான்
சிரத்தினில் குதித்தான்; தேவர் திசைமுகம் கிழிய ஆர்த்தார்.

எரியும் வெங் குன்றின் உம்பர், இந்திரவில் இட்டென்ன,
பெரியவன் தலைமேல் நின்ற பேர் எழிலாளன், சோரி
சொரிய, வன் கண்ணின் மூக்கின் செவிகளின், மூளை தூங்க,
நெரிய, வன் தலையைக் காலால் உதைத்து, மா நிலத்தில் இட்டான். 35

29. தேயம் - இடம்; 30. தேவர் தம்பிரான் - தேவர்களுக்குத் தலைவன், இராமன்; 32. தட்டான் - தடுத்து அணை கட்டியவன்; தச்சன் - தச்சுத் தொழில் புரியும் நளன்.

அங்கு அவன் உலத்தலோடும், அழற் கொழுந்து ஒழுகும் கண்ணன்,
சிங்கன், வெங் கணையன், வில்லன், தார் அணி தேரின் மேலான்,
'எங்கு, அடா! போதி?' என்னு, எய்தினன்; எதிர் இலாத,
பங்கம் இல் மேரு ஆற்றல், பனசன் வந்து, இடையில் பாய்ந்தான். 36

பாய்ந்தவன் தோளில், மார்பில், பல்லங்கள் நல்ல பண்போடு
ஆய்ந்தன, அசனி போல, ஐ-இரண்டு அழுந்த எய்தான்;
காய்ந்தனன், கனலி நெய்யால் கனன்றது போலக் காந்தி;
எய்ந்து எழு தேரினேடும், இமைப்பிடை எடுத்துக் கொண்டான். 37

தேரொடும் எடுத்தலோடு, நிலத்திடைக் குதித்த செங் கண்
மேருவின் தோற்றத்தான்தன் உச்சிமேல் அதனை வீச;
பாரிடை விழுதலோடும், தானவன் உம்பர் பாய்ந்து
சோரியும் உயிரும் சோர, துகைத்தனன், வயிரத் தோளன். 38

தராதல வேந்தன் மைந்தர் சரத்தினும், கவியின் தானை
மராமரம், மலை என்று இன்ன வழங்கவும், வளைந்த தானை,
பராவ அரும் வெள்ளம் பத்தும் பட்டன; பட்டிலாதார்,
இராவணன் தூதர் போனார், படைக்கலம் எடுத்திலாதார். 39

## 21 பிரமாத்திரப் படலம்

### இராவணன் இந்திரசித்தை அழைத்தல்

கரன் மகன் பட்டவாறும், குருதியின்கண்ணன் காலின்
சிரன் நெரிந்து உக்கவாறும், சிங்கனது ஈறும், சேனைப்
பரம் இனி உலகுக்கு ஆகாது என்பதும், பகரக் கேட்டான்;
வரன்முறை துறந்தான், 'வல்லைத் தருதிர், என் மகனை!' என்றான். 1

'கூயினன், நுந்தை' என்றார்; குன்று எனக் குவிந்த தோளான்,
'போயின நிருதர் யாரும் பொன்றினர் போலும்!' என்றான்;
'ஏயின பின்னை, மீள்வார் நீ அலாது யாவர்?' என்னு,
மேயது சொன்னார், தூதர்; தாதைபால் விரைவின் வந்தான். 2

37. பல்லம் - ஒருவகை அம்பு.

21: 1. சேனைப் பரம் - சேனைக் கூட்டம்; 2. மேயது - நிகழ்ந்தது.

**தந்தையைத் தேற்றி, இந்திரசித்தன் போர்க்களம் செல்லுதல்**

வணங்கி, 'நீ, ஐய! ''நொய்தின் மாண்டனர் மக்கள்'' என்ன
உணங்கலை; இன்று காண்டி, உலப்பு அறு குரங்கை நீக்கி,
பிணங்களின் குப்பை; மற்றை நரர் உயிர் பிரிந்த யாக்கை
கணங் குழைச் சீதைதானும், அமரரும் காண்பர்' என்றான். 3

வலங்கொண்டு வணங்கி, வான் செல் ஆயிரம் மடங்கல் பூண்ட
பொலங் கொடி நெடுந் தேர் ஏறி, போர்ப் பணை முழங்கப் போனான்;
அலங்கல் வாள் அரக்கர் தானை அறுபது வெள்ளம், யானைக்
குலங்களும், தேரும் மாவும், குழாம் கொளக் குழீஇய அன்றே.

கும்பிகை, திமிலை, செண்டை, குறடு, மாப் பேரி கொட்டி,
பம்பை, தார் முரசம், சங்கம், பாண்டில், போர்ப் பணவம், தூரி,
கம்பலி, உறுமை, தக்கை, கரடிகை, துடி, வேய், கண்டை,
அம்பலி, கணுவை, ஊமை, சகண்டையோடு ஆர்த்த அன்றே. 5

யானைமேல் பறைசால் ஈட்டத்து அறை மணி ஆர்த்தது ஆழி,
மான மாப் புரவிப் பொன்-தார், மாக் கொடி கொண்ட மானச்
சேனையோர் கழலும் தாரும், சேண் தரப் புலம்ப, மற்றை
வானகத்தோடும் ஆழி அலை என, வளர்ந்த அன்றே. 6

சங்கு ஒலி, வயிரின் ஓசை, ஆகுளி, தழங்கு காளம்
பொங்கு ஒலி, வரி கண் பீலிப் பேர் ஒலி, வேயின் பொம்மல்,
சிங்கத்தின் முழக்கம், வாசிச் சிரிப்பு, தேர் இடிப்பு, திண் கைம்
மங்குலின் அதிர்வு—வான மழையொடு மலைந்த அன்றே. 7

பண் தரு கிளவிச் செவ்விப் பல்லியத்து ஒழுகு தீம் தேன்,
கண்டினின் குயின்ற வீணை நரம்பொடு கமழும் தேறல்,
வண்டினின் பொலியும் நல் யாழ் வழியுறு நறவம், வானத்து
அண்டர்தம் செவியின் உண்ணும் அமிழ்து எனல் ஆய அன்றே. 8

வில் ஒலி, வயவர் ஆர்க்கும் விளி ஒலி, தெழிப்பின் ஓங்கும்
ஒல்லொலி, வீரர் பேசும் உரை ஒலி, உரப்பில் தோன்றும்
செல் ஒலி, திரள் தோள் கொட்டும் சேண ஒலி, நிலத்தில் செல்லும்
கல்லொலியோடும் கூடக் கடல் ஒலி கரந்தது அன்றே. 9

4. வலங்கொண்டு வணங்குதல் - வலமாகச் சுற்றி வந்து வீழ்ந்து பணிதல்; 5. கொட்டி - கொடு கொட்டி என்னும் பறை; பாண்டில் - கஞ்ச தாளம்; 7. வயிர் - ஊது கொம்பு; காளம் - எக்காளம்; மங்குல் - மேகம், ஈண்டு யானை; 8. கண்டினின் குயின்ற வீணை - கற்கண்டு போன்ற இன்சுவையுடையதாய் அமைந்த வீணை; 9. தெழித்தல் - அதட்டுதல்; உரப்புதல் - கனைத்தல்; செல் - இடி.

நாற் கடல் அனைய தானை நடந்திட, கிடந்த பாரின்-
மேல் கடந்து எழுந்த தூளி விசும்பின்மேல் கொழுந்து வீச,
மால் கடல் சேனை காணும் வானவர் மகளிர், மானப்
பாற்கடல் அனைய, வாட் கண் பனிக் கடல் படைத்தது அன்றே.

ஆயிர கோடித் திண் தேர், அமரர்கோன் நகரம் என்ன
மேயின சுற்ற, தான் ஓர் கொற்றப் பொன் தேரின் மேலான்,
தூய அச் சுடர்கள் எல்லாம் சுற்றுற, நடுவண் தோன்றும்
நாயகப் பரிதி போன்றான்—தேவரை நடுக்கம் கண்டான். 11

இந்திரசித்து நாண் ஒலி செய்தல்

சென்று வெங் களத்தை எய்தி, சிறையொடு துண்டம், செங் கண்,
ஒன்றிய கழுத்து, மேனி, கால், உகிர், வாலோடு ஒப்ப,
பின்றல் இல் வெள்ளத் தானை முறை படப் பரப்பி, பேழ் வாய்
அன்றிலின் உருவம் ஆய அணி வகுத்து, அமைந்து நின்றான்.

புரந்தரன் செருவில் தந்து போயது, புணரி ஏழும்
உரம் தவிர்த்து, ஊழி பேரும் காலத்தின் ஒலிக்கும் ஓதை
கரந்தது வயிற்றில், கால வலம்புரி கையின் வாங்கி,
சிரம் பொதிர்ந்து அமரர் அஞ்ச, ஊதினான், திசைகள் சிந்த. 13

சங்கத்தின் முழக்கம் கேட்ட கவிப் பெருந் தானை, தள்ளி
சிங்கத்தின் நாதம் வந்து செவிப் புக விலங்கு சிந்தி,
'எங்கு உற்ற?' என்னுவண்ணம் இரிந்த போல் இரிந்த; ஏழை-
பங்கத்தன் மலை வில் அன்ன சிலை ஒலி பரப்பி, ஆர்த்தான். 14

வானர சேனையின் ஓட்டம்

கீண்டன, செவிகள்; நெஞ்சம் கிழிந்தன; கிளர்ந்து செல்லா
மீண்டன, கால்கள்; கையின் விழுந்தன, மரனும் வெற்பும்;
பூண்டன, நடுக்கம்; வாய்கள் புலர்ந்தன; மயிரும் பொங்க,
'மாண்டனம் அன்றோ?' என்ற—வானரம் எவையும் மாதோ.

செங் கதிர்ச் செல்வன் சேயும், சமீரணன் சிறுவன்தானும்,
அங்கதப் பெயரினானும், அண்ணலும், இளைய கோவும்,
வெங் கதிர் மௌலிச் செங் கண் வீடணன், முதல வீரர்
இங்கு இவர் நின்றார் அல்லது, இரிந்தது, சேனை எல்லாம். 16

10. படைத்தது - தோற்றுவித்தது; 12. துண்டம் - மூக்கு; அன்றில் - கிரவுஞ்சம் என்னும் பறவை; 13. சிரம் பொதிர்தல் - தலை நடுக்குறுதல்; 14. என்னுவண்ணம் - என்று அறிந்துகொள்ள முடியாதவாறு; ஏழை பங்கத்தன் - பெண்ணொரு பாகத்தனாகிய சிவபெருமான்; மலை வில் - மேருமலையாகிய வில்; 16. சமீரணன் - வாயுதேவன்.

படைப் பெருந் தலைவர் நிற்க, பல் பெருந் தானை வேலை,
உடைப்புறு புனலின் ஓட, ஊழிநாள் உவரி ஓதை
கிடைத்திட முழங்கி ஆர்த்துக் கிளர்ந்தது; நிருதர் சேனை,
அடைத்தது, திசைகள் எல்லாம்; அன்னவர் அகத்தர் ஆனார்.

**அனுமன் - அங்கதர் தோள்களில் முறையே இராம - இலக்குவர்**

மாருதி அலங்கல் மாலை மணி அணி வயிரத் தோள்மேல்
வீரனும், வாலி சேய்தன் விறல் கெழு சிகரத் தோள்மேல்
ஆரியற்கு இளைய கோவும், ஏறினர்; அமரர் வாழ்த்தி,
வேரி அம் பூவின் மாரி சொரிந்தனர், இடைவிடாமல். 18

விடையின்மேல், கலுழன்தன்மேல், வில்லினர் விளங்குகின்ற
கடை இல் மேல் உயர்ந்த காட்சி இருவரும் கடுத்தார்—கண்ணுற்று
அடையின் மேருவையும் சாய்க்கும் அனுமன் அங்கதன் என்று இன்னார்,
தொடையின் மேல் மலர்ந்த தாரர், தோளின்மேல் தோன்றும் வீரர். 19

நீலனை முதலாய் உள்ள நெடும் படைத் தலைவர் நின்றார்,
தாலமும் மலையும் ஏந்தி, தாக்குவான் சமையும் காலை,
ஞாலமும் விசும்பும் காத்த நானிலக் கிழவன் மைந்தன்
மேல் அமர் விளைவை உன்னி, விலக்கினன், விளம்பலுற்றான்:

'கடவுளர் படைகள் நும்மேல் வெய்யவன் துரந்தகாலை,
தடை உளஅல்ல; தாங்கும் தன்மையிர் அல்லீர்; தாக்கிற்கு
இடை உளது எம்பால் நல்கி, பின் நிரை நிற்றிர்; ஈண்டு இப்
படை உளதனையும், இன்று, எம் வில்தொழில் பார்த்திர்' என்றான். 21

**இராம - இலக்குவரின் போர்த் திறன்**

அருள்முறை அவரும் நின்றார்; ஆண் தகை வீரர், ஆழி
உருள் முறை தேரின், மாவின், ஓடை மால் வரையின், ஊழி
இருள் முறை நிருதர்தம்மேல், ஏவினர்—இமைப்பிலோரும்,
'பருள் முறை எய்திற்று' என்பர்—சிலை வழங்கு அசனி மாரி.

இமைப்பதன் முன்னம் வந்த இராக்கத வெள்ளம் தன்னைக் [மால்
குமைத்தொழில் புரிந்த வீரர் தனுத் தொழில் குறித்து இன்று எம்
அமைப்பது என்? பிறிது ஒன்று உண்டோ? மேரு என்று அமைந்த
உமைக்கு ஒருபாகன், மாய்த புரங்களின் ஒருங்கி வீழ்ந்த. [வில்லான்,

17. அகத்தர் - உள்ளிடத்தவர்; 18. வேரி - தேன்; 19. வில்லினர் - வில்லை ஏந்திய சிவனும் திருமாலும் ஆகிய இருவர்; பினாகம் சிவனது வில்; சார்ங்கம் திருமாலது வில்; 20. தாலம் - பனை; நானிலக் கிழவன் - தசரதன்; 21. வெய்யவன் - கொடியோனாகிய இந்திரசித்தன்; 22. அருள் முறை - இராமன் பணித்தருளிய முறை; 23. குமைத்தொழில் - அழிக்கும் தொழில்; ஒருங்குதல் - அழிதல்.

தேரின்மேல் சிலையின் நின்ற இந்திரசித்து என்று ஓதும்
வீரருள் வீரன் கண்டான்—விழுந்தன விழுந்த என்னும்
பாரின்மேல் நோக்கின் அன்றேல், பட்டனர் பட்டார் என்னும்
போரின்மேல் நோக்கு இலாத இருவரும் பொருத பூசல். 24

'யானை பட்டனவோ!' என்றான்; 'இரதம் இற்றனவோ!' என்றான்;
'மான மா வந்த எல்லாம் மறிந்து ஒழிந்தனவோ!' என்றான்;
'ஏனை வாள் அரக்கர் யாரும் இல்லையோ, எடுக்க!' என்றான்—
வான் உயர் பிணத்தின் குப்பை மறைத்தலின், மயக்கம் உற்றான். 25

'செய்கின்றார் இருவர், வெம் போர்; சிதைகின்ற சேனை நோக்கின்,
''அய்யம்தான் இல்லா வெள்ளம் அறுபதும் அவிக!'' என்று,
வய்கின்றார்; அல்லர் ஆக, வரி சிலை வலத்தால் மாள
எய்கின்றார் அல்லர்; ஈது எவ் இந்திரசாலம்?' என்றான். 26

போர் நிகழ்ச்சியை இந்திரசித்தன் வியந்து நோக்குதல்

அம்பின் மா மழையை நோக்கும்; உதிரத்தின் ஆற்றை நோக்கும்;
உம்பரின் அளவும் சென்ற பிணக் குன்றின் உயர்வை நோக்கும்;
கொம்பு அற உதிர்ந்த முத்தின் குப்பையை நோக்கும்; கொன்ற
தும்பியை நோக்கும்; வீரர் சுந்தரத் தோளை நோக்கும்; 27

மலைகளை நோக்கும்; மற்று அவ் வான் உறக் குவிந்த வன் கண்
தலைகளை நோக்கும்; வீரர் சரங்களை நோக்கும்; தாக்கி,
உலை கொள் வெம் பொறியின் உக்க படைக்கலத்து ஒழுக்கை நோக்கும்;
சிலைகளை நோக்கும்; நாண் ஏற்று இடியினைச் செவியின் ஏற்கும்;

ஆயிரம் தேரை, ஆடல் ஆனையை, அலங்கல் மாவை,
ஆயிரம் தலையை, ஆழிப் படைகளை, அறுத்தும், அப்பால்
போயின பகழி வேகத் தன்மையைப் புரிந்து நோக்கும்;
பாயும் வெம் பகழிக்கு ஒன்றும் கணக்கு இலாப் பரப்பைப் பார்க்கும்; 29

அறுபது வெள்ளம் ஆய அரக்கர்தம் ஆற்றற்கு ஏற்ற,
எறிவன, எய்வ, பெய்வ, எற்றுறு படைகள் யாவும்,
பொறி வனம் வெந்த போலச் சாம்பராய்ப் போயதுஅல்லால்,
செறிவன இல்லா ஆற்றைச் சிந்தையால் தெரிய நோக்கும்; 30

25. மான மா - மானமுள்ள குதிரைகள்; 27. கொம்பு - யானைக்கோடு; தும்பி - யானை; 30. பொறி - தீப் பொறி.

வயிறு அலைத்து ஓடி வந்து கொழுநர்மேல் மகளிர் மாழ்கி,
குயில் தலத்து உக்க என்னக் குழைகின்ற குழைவை நோக்கும்;
எயிறு அலைத்து இடிக்கும் பேழ் வாய்த் தலை இலா ஆக்கை ஈட்டம்
பயிறலை, பறவை பாரில் படிகிலாப் பரப்பை, பார்க்கும்; 31

'அங்கதர் அனந்த கோடி உளர்' எனும்; 'அனுமன் என்பாற்கு
இங்கு இனி உலகம் யாவும் இடம் இலை போலும்' என்னும்;
'எங்கும் இம் மனிதர் என்பார் இருவரேகொல்!' என்று உன்னும்;—
சிங்கஏறு அனைய வீரர் கடுமையைத் தெரிகிலாதான். 32

ஆர்க்கின்ற அமரர்தம்மை நோக்கும்; அங்கு அவர்கள் அள்ளித்
தூர்க்கின்ற பூவை நோக்கும்; துடிக்கின்ற இடத் தோள் நோக்கும்;
பார்க்கின்ற திசைகள் எங்கும் படும் பிணப் பரப்பை நோக்கும்;
ஈர்க்கின்ற குருதி ஆற்றின் யானையின் பிணத்தை நோக்கும். 33

ஆயிர கோடித் தேரும் அரக்கரும் ஒழிய, வல்ல
மா இருஞ் சேனை எல்லாம் மாய்ந்தவா கண்டும், வல்லை
போயின குரக்குத் தானை புகுந்திலது அன்றே, பொன் தேர்த்
தீயவன்தன்மேல் உள்ள பயத்தினால் கலக்கம் தீரா. 34

தளப் பெருஞ் சேனை வெள்ளம் அறுபதும் தலத்தது ஆக,
அளப்ப அருந் தேரின் உள்ள ஆயிர கோடி ஆக,
துளக்கம் இல் ஆற்றல் வீரர் பொருத போர்த் தொழிலை நோக்கி,
அளப்ப அருந் தோளைக் கொட்டி, அஞ்சனை மதலை ஆர்த்தான்.

ஆர் இடை அனுமன் ஆர்த்த ஆர்ப்பு ஒலி அசனி கேளா,
தேரிடைநின்று வீழ்ந்தார் சிலர்; சிலர் படைகள் சிந்தி,
பாரிடை கிழிந்து போகப் பாரித்தார்; பைம் பொன் இஞ்சி
ஊரிடை நின்றுளாரும், உயிரினோடு உதிரம் கான்றார். 36

**இந்திரசித்தன் தனியனாகப் பொருதல்**

'அஞ்சினிர், போமின்; இன்று, ஓர் ஆர்ப்பு ஒலிக்கு அழியற்பாலிர்
வெஞ் சமம் விளைப்பது என்னோ? நீரும் இவ் வீரரோடு
துஞ்சினிர் போலும் அன்றே?' என்று அவர்ச் சலித்து நோக்கி,—
மஞ்சினும் கரிய மெய்யான்—இருவர்மேல் ஒருவன் வந்தான்.

31. பயிறல் - பழகுதல், ஈண்டுக் கூத்தாடுதல்; 34. தீயவன் - இந்திர சித்தன்; 35. தளம் - கூட்டம்; 36. ஆர் இடை - அரிய போர்க்களத்தில்; பாரித்தல் - பரபரப்படைதல்; இஞ்சி ஊர் - மதிலால் சூழப்பட்ட இலங்கை; 37. கரிய மெய்யான் - இந்திரசித்தன்.

அக் கணத்து, ஆர்த்து மண்டி, ஆயிர கோடித் தேரும்
புக்கன—நேமிப் பாட்டில் கிழிந்தன புவனம் என்ன,
திக்கிடை நின்ற யானை சிரம் பொதிர் எறிய, சிந்தி
உக்கன விசும்பின் மீன்கள் உதிர்ந்திட, தேவர் உட்க. 38

**இலக்குவன் வஞ்சினம்**

மாற்றம் ஒன்று, இளையவன் வளை வில் செங் கரத்து
ஏற்றினை வணங்கி நின்று, இயம்புவான்: ' ''இகல்-
ஆற்றலன் அரவு கொண்டு அசைப்ப, ஆர் அமர்
தோற்றனென்'' என்று கொண்டு உலகம் சொல்லுமால்; 39

' ''காக்கவும் கற்றிலன், காதல் நண்பரை;
போக்கவும் கற்றிலன், ஒருவன்; போய்ப் பிணி
ஆக்கவும் கற்றிலன்; அமரில் ஆர் உயிர்
நீக்கவும் கற்றிலன்'' என்று நின்றதால்; 40

'இந்திரன்பகை எனும் இவனை, என் சரம்
அந்தரத்து அருந் தலை அறுக்கலாது எனின்,
வெந் தொழிற் செய்கையன் விருந்தும் ஆய், நெடு
மைந்தரில் கடை எனப் படுவன், வாழியாய்! 41

'நின்னுடை முன்னர், இந் நெறி இல் நீர்மையான்-
தன்னுடைச் சிரத்தை என் சரத்தின் தள்ளினல்,—
பொன்னுடை வளை கழல் பொலம் பொன் தோளினுய்!—
என்னுடை அடிமையும் இசையிற்று ஆம்அரோ. 42

'கடிதினில் உலகு எலாம் கண்டு நிற்க, என்
சுடு சரம் இவன் தலை துணிக்கலாதுஎனின்,
முடிய ஒன்று உணர்த்துவென்; உனக்கு நான் முயல்
அடிமையின் பயன் இகந்து அறுக, ஆழியாய்!' 43

**இராமன் பாராட்டு**

வல்லவன் அவ் உரை வழங்கும் ஏல்வையுள்,
'அல்லல் நீங்கினம்' என, அமரர் ஆர்த்தனர்;
எல்லை இல் உலகங்கள் யாவும் ஆர்த்தன;
நல் அறம் ஆர்த்தது; நமனும் ஆர்த்தனன். 44

38. நேமிப் பாடு - சக்கரம் ஆழப்பதிதல்; 41. வெந் தொழிற் செய்கையன் - கொடுந்தொழில் புரியும் யமன்; நெடு மைந்தர் - பெருமை பெற்ற வீரர்கள்; 43. முடிய உணர்த்துதல் - முடிந்த முடிபாகத் தனது துணிவினை எடுத்துரைத்தல்.

முறுவல் வாள் முகத்தினன், முளரிக்கண்ணனும்,
'அறிவ! நீ, ''அடுவல்'' என்று அமைதி ஆம்எனின்,
இறுதியும் காவலும் இயற்றும் ஈசரும்
வெறுவியர்; வேறு இனி விளைவது யாது?' என்றான். 45

**இராமனைத் தொழுது, இலக்குவன் போருக்கு எழுதல்**

சொல் அது கேட்டு, அடி தொழுது, 'சுற்றிய
பல் பெருந் தேரொடும் அரக்கர் பண்ணையைக்
கொல்வல்; இங்கு அன்னது காண்டிகொல்' என,
ஒல்லையில் எழுந்தனன்—உவகை உள்ளத்தான். 46

அங்கதன் ஆர்த்தனன், அசனி ஏறு என,
மங்குல்நின்று அதிர்ந்தன வய வன் தேர் புனை
சிங்கமும் நடுக்குற; திருவின் நாயகன்
சங்கம் ஒன்று ஒலித்தது, கடலும் தள்ளுற. 47

எழு, மழு, சக்கரம், ஈட்டி, தோமரம்,
முழு முரண் தண்டு, வேல், முசுண்டி, மூவிலை,
கழு, அயில் கப்பணம், கவண் கல், கன்னகம்,
விழு மழைக்கு இரட்டி விட்டு, அரக்கர் வீசினர். 48

மீன் எலாம் விண்ணின்நின்று ஒருங்கு வீழ்ந்தென,
வான் எலாம் மண் எலாம் மறைய வந்தன;
தான் எலாம் துணிந்து போய்த் தகர்ந்து சாந்தின;—
வேனிலான் அனையவன் பகழி வெம்மையால். 49

ஆயிரம் தேர், ஒரு தொடையின், அச்சு இறும்;
பாய் பரிக் குலம் படும்; பாகர் பொன்றுவர்;
நாயகர் நெடுந் தலை துமியும், நாம் அற;
தீ எழும், புகை எழும், உலகும் தீயுமால். 50

அடி அறும் தேர்; முரண் ஆழி அச்சு இறும்;
கடி நெடுஞ் சிலை அறும்; கவச மார்பு இறும்;
கொடி அறும்; குடை அறும்; கொற்ற வீரர்தம்
முடி அறும்; முரசு அறும்; முழுதும் சிந்துமால். 51

45. வெறுவியர் - ஒன்றுமில்லாதவர்; 46. பண்ணை - கூட்டம்; 47. திருவின் நாயகன் - இராமன்; 50. ஒரு தொடையின் - ஒரு முறை தொடுத்து எய்த அம்பினால்.

'இன்னது ஓர் உறுப்பு; இவை இனைய தேர் பரி;
மன்னவர் இவர்; இவர் படைஞர், மற்றுளோர்'
என்ன ஓர் தன்மையும் தெரிந்தது இல்லையால்—
சின்னபின்னங்களாய் மயங்கிச் சிந்தலால். 52

தந்தையர் தேரிடைத் தனயர் வன் தலை
வந்தன; தாதையர் வயிர வான் சிரம்
சிந்தின, காதலர்க்கு இயைந்த தேரிடை—
அந்தரத்து அம்பொடும் அற்று எழுந்தன. 53

செம் பெருங் குருதியின் திகழ்ந்த, செங் கண் மீன்
கொம்பொடும் பரவையில் திரியும் கொட்பு என—
தும்பை அம் தொடையலர் தடக் கை, தூணி வாங்கு
அம்பொடும் துணிந்தன சிலையொடு அற்றன. 54

தடிவன கொடுஞ் சரம் தள்ள, தள்ளுற
மடிவன கொடிகளும், குடையும், மற்றவும்,
வெடி படு பெரும் பிணக் களத்தில் மொய்த்தன,
படிவன, ஒத்தன, பறவைப் பான்மையா. 55

சிந்துரங்களின் பருமமும், பகழியும், தேரும்,
குந்து வல் நெடுஞ் சிலை முதல் படைகளும், கொடியும்,
இந்தனங்களாய், இறந்தவர் விழிக் கனல் இலங்க,
வெந்த வெம் பிணம் விழுங்கின, கழுதுகள் விரும்பி. 56

சில்லி ஊடு அறச் சிதறின சில; சில, கோத்த
வல்லி ஊடு அற, மறிந்தன; புரவிகள் மடியப்
புல்லி மண்ணிடைப் புரண்டன சில; சில, போர் ஆள்
வில்லி சாரதியொடும் பட, திரிந்தன வெறிய. 57

அலங்கு பல் மணிக் கதிரன, குருதியின் அழுந்தி,
விலங்கு செஞ் சுடர் விடுவன, வெளி இன்றி மிடைந்த,—
குலம் கொள் வெய்யவர் அமர்க் களத் தீயிடைக் குளித்த
இலங்கை மா நகர் மாளிகை நிகர்த்தன—இரதம். 58

ஆன காலையில், இராமனும், அயில் முகப் பகழி
சோனை மாரியின் சொரிந்தனன், அனுமனைத் தூண்டி;
வான மானங்கள் மறிந்தெனத் தேர் எலாம் மடிய,
தானும் தேருமே ஆயினன், இராவணன் தனயன். 59

53. காதலர் - புதல்வர்; அந்தரம் - விசும்பு; 56. சிந்துரம் - யானை; பருமம் - யானைமேல் இடும் தவிசு; குந்துதல் - ஊன்றுதல், வளைதல்; இந்தனம் - விறகு; கழுது - பேய்; 57. வல்லி - குசைக் கயிறு.

பல் விலங்கொடு புரவிகள் பூண்ட தேர்ப் பரவை
வல் விலங்கல்போல் அரக்கர்தம் குழாத்தொடு மடிய,
வில் இலங்கிய வீரரை நோக்கினன், வெகுண்டான்,
சொல், விலங்கலன், சொல்லினன்—இராவணன் தோன்றல்.

'இருவிர் என்னொடு பொருதிரோ? அன்றுஎனின், ஏற்ற
ஒருவிர் வந்து, உயிர் தருதிரோ? உம் படையோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ? உறுவது புகலும்;
தருவல், இன்று உமக்கு ஏற்றுளது யான்' எனச் சலித்தான். 61

**இலக்குவன் தன் வஞ்சினம் பற்றிக் கூறுதல்**

'வாளின், திண் சிலைத் தொழிலினின், மல்லினின், மற்றை
ஆளுற்று எண்ணிய படைக்கலம் எவற்றினும், அமரில்
கோளுற்று, உன்னொடு குறித்து, அமர் செய்து, உயிர் கொள்வான்
சூளுற்றேன்; இது சரதம்' என்று, இலக்குவன் சொன்னான். 62

**இந்திரசித்தன் மறுமொழி**

'முன் பிறந்த உன் தம்முனை முறை தவிர்த்து, உனக்குப்
பின்பு இறந்தவன் ஆக்குவென்; பின் பிறந்தோயை
முன்பு இறந்தவன் ஆக்குவென்; இது முடியேனேல்,
என், பிறந்ததனால் பயன் இராவணற்கு?' என்றான். 63

'இலக்குவன் எனும் பெயர் உனக்கு இயைவதே என்ன,
இலக்கு வன் கணைக்கு ஆக்குவென்; ''இது புகுந்து இடையே
விலக்குவன்'' என விடையவன் விலக்கினும், வீரம்
கலக்குவன்; இது காணும், உன் தமையனும் கண்ணால். 64

'அறுபது ஆகிய வெள்ளத்தின் அரக்கரை அம்பால்,
இறுவது ஆக்கிய இரண்டு வில்லீரும் கண்டு இரங்க,
மறுஅது ஆக்கிய எழுபது வெள்ளமும் மாள,
வெறுவிது ஆக்குவென், உலகை இக் கணத்தின் ஓர் வில்லால்.

'கும்பகன்னன் என்று ஒருவன், நீர் அமரிடைக் கொன்ற
தம்பி, அல்லன் நான்; இராவணன் மகன்; ஒரு தமியேன்;
எம்பிமாருக்கும், என் சிறு தாதைக்கும், இருவீர்
செம் புனீர்கொடு கடன் கழிப்பேன்' எனத் தீர்ந்தான். 66

60. பரவை - கடல், ஈண்டுத் தொகுதி; 62. ஆளுற்று - ஆளுதல் பொருந்தி; கோளுற்று - வலிமை பொருந்தி; 64. விடையவன் - சிவபெருமான்; 65. மறு - பழி; 66. தீர்ந்தான் - சொல்லி முடித்தான்.

### இலக்குவன் மாற்றுரை

'அரக்கர் என்பது ஓர் பெயர் படைத்தீர்க்கு எலாம் அடுத்த,
புரக்கும் நன் கடன் செய உளன், வீடணன் போந்தான்;
கரக்கும் நுந்தைக்கு நீ செயக் கடவன கடன்கள்,
இரக்கம் உற்று, உனக்கு அவன் செயும்' என்றனன், இளையோன்.

### இந்திரசித்தன் – இலக்குவன் கடும் போர்

ஆன காலையின், அயில் எயிற்று அரக்கன் நெஞ்சு அழன்றான்,
வானும் வையமும் திசைகளும் யாவையும் மறைய,
பால் நல் வேலையைப் பருகுவ சுடர் முகப் பகழி,
சோனை மாரியின் இரு மடி மும் மடி சொரிந்தான். 68

அங்கதன்தன்மேல் ஆயிரம்; அவற்றினுக்கு இரட்டி,
வெங் கண் மாருதி மேனிமேல்; வேறு உள வீரச்
சிங்கம் அன்னவர் ஆக்கைமேல் உலப்பு இல செலுத்தி,
எங்கும் வெங் கணை ஆக்கினன்—இராவணன் சிறுவன். 69

இளைய மைந்தன்மேல், இராமன்மேல், இராவணி இகலி,
விளையும் வன் தொழில் வானர வீரர்மேல், மெய் உற்று
உளையும் வெஞ் சரம் சொரிந்தனன்; நாழிகை ஒன்று,
வளையும் மண்டலப் பிறை என நின்றது, அவ் வரி வில். 70

பச்சிமத்தினும், மருங்கினும், முகத்தினும், பகழி,
உச்சி முற்றிய வெய்யவன் கதிர் என உமிழ,
கச்சம் உற்றவன் கைத் துணைக் கடுமையைக் காணு,
அச்சம் உற்றனர், கண் புதைத்து ஒடுங்கினர், அமரர். 71

மெய்யில் பட்டன பட, படாதன எலாம் விலக்கி,
தெய்வப் போர்க் கணைக்கு அத்துணைக்கு அத்துணைச் செலுத்தி,
ஐயற்கு ஆங்கு இளங் கோளரி, அறிவு இலான் அறைந்த
பொய்யின் போம்படி ஆக்கினன், கடிதினின் புக்கான். 72

பிறகின் நின்றனன் பெருந்தகை, இளவலைப் பிரியான்;
'அறன் இது அன்று' என, அரக்கன்மேல் சரம் துரந்து அருளான்;
இறவு கண்டிலர் இருவரும், ஒருவரை ஒருவர்;
விறகின் வெந்தன, விசும்பிடைச் செறிந்தன விசிகம். 73

68. சோனை மாரி - பெரு மழை; 71. பச்சிமம் - மேல்திசை, ஈண்டு மேற்புறம்; கச்சம் உற்றவன் - ஆடையை இறுக உடுத்தவனாகிய இந்திர சித்தன்; 73. பிறகின் - பின்புறத்தில்; இறவு - இறத்தல்; விசிகம் - அம்பு.

மாடு எரிந்து எழுந்து, இருவர் தம் கணைகளும் வழங்க,
காடு எரிந்தன; கன வரை எரிந்தன; கனக
வீடு எரிந்தன; வேலைகள் எரிந்தன; மேகம்
ஊடு எரிந்தன; ஊழியின் எரிந்தன, உலகம். 74

படம் கொள் பாம்பு-அணை துறந்தவற்கு இளையவன், பகழி,
விடம் கொள் வெள்ளத்தின்மேலன வருவன விலக்கி,
இடங்கர்ஏறு அன எறுழ் வலி அரக்கன் தேர் ஈர்க்கும்
மடங்கல் ஐ-இருநூற்றையும் கூற்றின்வாய் மடுத்தான். 75

தேர் அழிந்திட, சேமத் தேர் பிறிது இலன், செறிந்த
ஊர் அழிந்திடத் தனி நின்ற கதிரவன் ஒத்தான்;
'பார் அழிந்தது, குரங்கு எனும் பெயர்' எனப் பகைத்த
சூர் அழிந்திட துரந்தனன், சுடு சரம் சொரிந்தான். 76

அற்ற தேர்மிசை நின்று, போர் அங்கதன் அலங்கல் -
கொற்றத் தோளினும், இலக்குவன் புயத்தினும், குளித்து
முற்ற, எண் இலா முரண் கணை தூர்த்தனன்; முரண் போர்,
ஒற்றைச் சங்கு எடுத்து ஊதினன், உலகு எலாம் உலைய. 77

சங்கம் ஊதிய தசமுகன் தனி மகன் தரித்த
கங்கணத்தொடு கவசமும் மூட்டு அறக் கழல,
வெங் கடுங் கணை ஐ-இரண்டு உரும் என வீசி,
சிங்கஏறு அன்ன இலக்குவன் சிலையை நாண்எறிந்தான். 78

**இலக்குவன் வெற்றிக்கு வானரர் ஆர்த்தல்**

கண்ட கார் முகில் வண்ணனும், கமலக்கண் கலுழ,
துண்ட வெண் பிறை நிலவு என முறுவலும் தோன்ற,
அண்டம் உண்ட தன் வாயினால், 'ஆர்மின்' என்று அருள,
'விண்டது அண்டம்' என்று, உலைந்திட ஆர்த்தனர், வீரர். 79

**இலக்குவன், அயன் படை தொடப்புக, இராமன் தடுத்தல்**

கண் இமைப்பதன் முன்பு போய் விசும்பிடைக் கரந்தான்;
அண்ணல், மற்றவன் ஆக்கை கண்டறிகிலன் ஆகி,
பண்ணவற்கு, 'இவன் பிழைக்குமேல், படுக்கும் நம் படையை;
எண்ணம் மற்று இலை; அயன் படை தொடுப்பென்' என்று இசைத்தான்.

76. சூர் - சூரத்தன்மை; 78. சிலையை நாண் எறிதல் - வில்லின் நாணைத் தெறித்துப் பேரொலி உண்டாக்குதல்; 80. பண்ணவன் - தேவன், ஈண்டு இராமன்.

ஆன்றவன் அது பகர்தலும், 'அறநிலை வழாதாய்!
ஈன்ற அந்தணன் படைக்கலம் தொடுக்கில், இவ் உலகம்
மூன்றையும் சுடும்; ஒருவனல் முடிகலது' என்றான்,
சான்றவன்; அது தவிர்ந்தனன், உணர்வுடைத் தம்பி. 81

**இந்திரசித்தன் தெய்வப்படையை விட எண்ணி மறைதல்**

மறைந்துபோய் நின்ற வஞ்சனும், அவருடை மனத்தை
அறிந்து, தெய்வ வான் படைக்கலம் தொடுப்பதற்கு அமைந்தான்,
'பிறிந்து போவதே கருமம், இப்பொழுது' எனப் பெயர்ந்தான்,
செறிந்த தேவர்கள் ஆவலம் கொட்டினர், சிரித்தார். 82

செஞ் சரத்தொடு செம்மழை விசும்பின்மேல் செல்ல,
மஞ்சின் மா மழை போயினது ஆம் என மாற,
'அஞ்சினன் அகன்றான்' என்பது அறிந்தனர் ஆர்த்தார்—
வெஞ் சினம் தரு களிப்பினர், வானர வீரர். 83

உடைந்த வானரச் சேனையும், ஓத நீர் உவரி
அடைந்தது ஆம் என வந்து, இரைத்து, ஆர்த்து, எழுந்து ஆடி,
தொடர்ந்து சென்றது; தோற்றவன், யாவர்க்கும் தோற்றான்
கடைந்த வேலைபோல் கலங்குறும் இலங்கையில் கரந்தான். 84

**இராவணி கருத்து உணராத இராம–இலக்குவர் போர்க்கோலம் களைதல்**

'எல் கொள் நான்முகன் படைக்கலம், இவர் என்மேல் விடா முன்,
முற்கொல்வேன்' எனும் முயற்சியன், மறை முறை மொழிந்த
சொல் கொள் வேள்வி போய்த் தொடங்குவான் அமைந்தவன் துணிவை
மல் கொள் தோளவர் உணர்ந்திலர்; அமர்த் தொழில் மறந்தார். 85

அனுமன் அங்கதன் தோளின்நின்று இழிந்தனர் ஆகி,
தனுவும், வெங் கணைப் புட்டிலும், கவசமும், தடக் கைக்கு
இனிய கோதையும், துறந்தனர், இருந்தனர், இமையோர்
பனி மலர் பொழிந்து ஆர்த்தனர்; வாழ்த்தினர் பல்கால்.* 86

ஆர்த்த சேனையின் அமலை போய் விசும்பினை அலைக்க,
ஈர்த்த தேரொடும் கடிது சென்றான், அகன்று இரவி;
'தீர்த்தன்மேல் அவன் திசைமுகன் படைக்கலம் செலுத்தப்
பார்க்கிலேன்; முந்திப் படுவல் என்பான்' எனப் பட்டான். 87

82. ஆவலம் கொட்டுதல் - செருக்குத் தோன்றக் கை கொட்டுதல்; 84. யாவர்க்கும் தோற்றான் - யாவர் கண்ணுக்கும் புலப்படாதவனாகி; 85. மறை முறை மொழிந்த சொல் - மந்திரம்; 87. தீர்த்தன் - இலக்குவன்; அவன் - இந்திரசித்தன்.

‘இரவும் நன் பகலும் பெரு நெடுஞ் செரு இயற்றி,
உரவு நம் படை மெலிந்துளது; அருந்துதற்கு உணவு
வரவு தாழ்த்தது; வீடண! வல்லையின் ஏகி,
தரவு வேண்டினென்’ என்றனன், தாமரைக்கண்ணன். 88

‘இன்னதே கடிது இயற்றுவென்’ எனத் தொழுது எழுந்தான்,
பொன்னின் மௌலியன் வீடணன், தமரொடும், போனான்;
கன்னல் ஒன்றில் ஓர் காலினில் வேலையைக் கடந்தான்;
அன்ன வேலையின் இராமன் ஈது இளையவற்கு அறைந்தான். 89

‘தெய்வ வான் பெரும் படைகட்கு வரன்முறை திருந்து
மெய் கொள் பூசனை இயற்றினம் விடும் இது விதியால்;
ஐய! நான் அவை ஆற்றினென் வருவது ஓர் அளவும்,
கை கொள் சேனையைக் கா’ எனப் போர்க்களம் கடந்தான். 90

**இந்திரசித்தன் இராவணனுக்குத் தன் திட்டத்தைக் கூறல்**

தந்தையைக் கண்டு, புகுந்துள தன்மையும், தன்மேல்
முந்தை நான்முகன் படைக்கலம் தொடுக்குற்ற முறையும்,
சிந்தையுள் புகச் செப்பினன்; அனையவன் திகைத்தான்;
‘எந்தை! என், இனிச் செயத் தக்கது? இசை’ என, இசைத்தான். 91

‘ ‘‘தன்னைக் கொல்வது துணிவரேல், தனக்கு அது தகுமேல்,
முன்னர்க் கொல்லிய முயல்க!’’ என்று அறிஞரே மொழிந்தார்;
அன்ன போர் அவர் அறிவுறுவகை மறைந்து, அயன்தன்
வெல் நற் போர்ப் படை விடுதலே நலம்; இது விதியால். 92

‘தொடுக்கின்றேன் என்பது உணர்வரேல், அப் படை தொடுத்தே,
தடுப்பர்; காண்பரேல், கொல்லவும் வல்லர், அத் தவத்தோர்;
இடுக்கு ஒன்று ஆகின்றது இல்லை; நல் வேள்வியை இயற்றி,
முடிப்பன், அன்னவர் வாழ்வை, ஓர் கணத்து’ என முடித்தான்.

‘என்னை அன்னவர் மறந்தனர் நின்று இகல் இயற்ற,
துன்னு போர்ப் படை முடிவு இலாது அவர்வயின் தூண்டின்,
பின்னை, நின்றது புரிவென்’ என்று அன்னவன் பேச,
மன்னன், முன் நின்ற மகோதரற்கு இம் மொழி வழங்கும்: 94

88. உரவு - வலிமை; தரவு - தருதல்; 89. கன்னல் - நாழிகை; காலினின் - காற்றைப் போன்று; 91. தொடுக்குற்ற முறை - (பகைவர்) தொடுத்தற்கு எண்ணிய முறைமை; 92. தகுமேல் - இயல்வதாயின்; 94. அன்னவன் - அவ் இந்திரசித்தன்.

'வெள்ளம் நூறுடை வெஞ் சினச் சேனையை, வீர!
அள் இலைப் படை அகம்பனே முதலிய அரக்கர்
எள் இல் எண் இலர் தம்மொடு விரைந்தனை ஏகி,
கொள்ளை வெஞ் செரு இயற்றுதி, மனிதரைக் குறுகி. 95

'மாயை என்றன, வல்லவை யாவையும், வழங்கி,
தீ இருட் பெரும் பரப்பினைச் செறிவு உறத் திருத்தி,
நீ ஒருத்தனே உலகு ஒரு மூன்றையும் நிமிர்வாய்;
போய் உருத்து, அவர் உயிர் குடித்து உதவு' எனப் புகன்றான்.

மகோதரன் போர்க்குச் செல்லல்

என்ற காலையின், 'என்றுகொல் ஏவுவது?' என்று,
நின்ற வாள் எயிற்று அரக்கனும் உவகையின் நிமிர்ந்தான்;
சென்று தேர்மிசை ஏறினன்; இராக்கதர் செறிந்தார்,
குன்று சுற்றிய மத கரிக் குலம் அன்ன குறியார். 97

கோடி கோடி நூறாயிரம் ஆயிரம் குறித்த
ஆடல் ஆனைகள், அணிதொறும் அணிதொறும் அமைந்த;
ஓடு தேர்க் குலம், உலப்பு இல, ஓடி வந்து உற்ற;
கேடு இல் வாம் பரி, கணக்கையும் கடந்தன, கிளர்ந்த. 98

படைக்கலங்களும், பரு மணிப் பூண்களும், பகு வாய்
இடைக் கலந்தன எயிற்று இளம் பிறைகளும், எறிப்ப,
புடைப் பரந்தன வெயில்களும் நிலாக்களும் புரள,
விடைக் குலங்கள்போல், இராக்கதப் பதாதியும் மிடைந்த. 99

கொடிக் குழீஇயின கொழுந்து எடுத்து எழுந்து மேற்கொள்ள,
இடிக் குழீஇ எழு மழைப் பெருங் குலங்களை இரித்த;
அடிக் குழீஇயிநம் இடம்தொறும் பிதிர்ந்து எழுந்து ஆர்த்த
பொடிக் குழீஇ, அண்டம் படைத்தவன் கண்ணையும் புதைத்த.

ஆனை என்னும் மா மலைகளின் இழி மத அருவி
வான யாறுகள், வாசி வாய் நுரையொடு மயங்கி,
கான மா மரம் கல்லொடும் ஈர்த்தன, கடிதில்
போன, போக்க அரும் பெருமைய, புணரியுள் புக்க. 101

95. அள் - கூர்மை; 96. நிமிர்வாய் - வெல்லவல்லாய்; 97. குறியார் - நிலையினர்; 99. பதாதி - காலாட்படை; 101. பெருமைய - பெருக்கத்தை யுடையன.

தடித்து மீன்குலம் விசும்பிடைத் தயங்குவ—சலத்தின்
மடித்த வாயினர், வாள் எயிற்று அரக்கர், தம் வலத்தின்
பிடித்த திண் படை விதிர்த்திட விதிர்த்திடப் பிறழ்ந்து,
பொடித்த வெம் பொறி கொதித்து மேல் போவன—போன்ற.

சொன்ன நூறுடை வெள்ளம், அன்று இராவணன் துரந்த
அன்ன சேனையை வாயிலூடு உமிழ்கின்ற அமைதி,
முன்னம் வேலையை முழுவதும் குடித்தது, 'முறை ஈது'
என்ன, மீட்டு உமிழ் தமிழ்முனி ஒத்தது, அவ் இலங்கை. 103

சங்கு பேரியும், காளமும், தாளமும், தலைவர்
சிங்க நாதமும், சிலையின் நாண் ஒலிகளும், சின மாப்
பொங்கும் ஓதையும், புரவியின் அமலையும், பொலந் தேர்
வெங் கண் ஓலமும், மால் என, விழுங்கிய உலகை. 104

**அரக்கர்க்கும் வானரர்க்கும் நிகழ்ந்த பெரும் போர்**

புக்கதால் பெரும் போர்ப் படை, பறந்தலைப் புறத்தில்;
தொக்கதால், நெடு வானரத் தானையும் துவன்றி,
ஒக்க ஆர்த்தன, உறுக்கின, தெழித்தன, உருமின்
மிக்க வான் படை விடு கணை மா மழை விலக்கி. 105

குன்று கோடியும் கோடிமேல் கோடியும் குறித்த
வென்றி வானர வீரர்கள், முகம்தொறும் வீச,
ஒன்றின், நால்வரும் ஐவரும் இராக்கதர் உலந்தார்;
பொன்றி வீழ்ந்தன, பொரு கரி, பாய் பரி, பொலந் தேர். 106

மழுவும், சூலமும், வலயமும், நாஞ்சிலும், வாளும்,
எழுவும், ஈட்டியும், தோட்டியும், எழு முனைத் தண்டும்,
தழுவும் வேலொடு கணையமும், பகழியும், தாக்க,
குழுவினோடு பட்டு உருண்டன, வானரக் குலங்கள். 107

முற்கரங்களும், முசலமும், முசுண்டியும், முளையும்,
சக்கரங்களும், பிண்டிபாலத்தொடு தண்டும்,
கப்பணங்களும், வளையமும், கவண் உமிழ் கல்லும்,
வெற்புஇனங்களை நுறுக்கின; கவிகளை வீழ்த்த. 108

102. தடித்து மீன்குலம் - மின்னலும் விண்மீன் தொகுதிகளும்; 103. அமைதி - தன்மை; தமிழ் முனி - அகத்திய முனிவர்; 104. சின மா - கறுக் கொள்ளும் தன்மையுள்ள விலங்காகிய யானை; 107. வலயம் - சக்கரப்படை.

கதிர் அயில் படைக் குலம் வரன்முறை முறை கடாவ,
அதிர் பிணப் பெருங் குன்றுகள் படப் பட, அழிந்த
உதிரம் ஊற்ற பேர் ஆறுகள் திசை திசை ஓட,
எதிர் நடக்கில, குரக்குஇனம்; அரக்கரும் இயங்கார். 109

யாவர் ஆங்கு இகல் வானரம் ஆயினர், எவரும்
தேவர் ஆதலின், அவரொடும் விசும்பிடைத் திரிந்தார்;
மேவு காதலின் மெலிவுறும் அரம்பையர் விரும்பி,
ஆவி ஒன்றிடத் தழுவினர், பிரிவு நோய் அகன்றார். 110

கரக்கும் மாயமும், வஞ்சமும், களவுமே, கடனா,
இரக்கமே முதல் தருமத்தின் நெறி ஒன்றும் இல்லா,
அரக்கரைப் பெருந் தேவர்கள் ஆக்கின அமலன்
சரத்தின், வேறு இனிப் பவித்திரம் உள எனத் தகுமே? 111

அந்தகன் பெரும் படைக்கலம் மந்திரத்து அமைந்தான்,
இந்து வெள் எயிற்று அரக்கரும், யானையும், தேரும்,
வந்த வந்தன, வானகம் இடம் பெறாவண்ணம்
சிந்தினான் சரம், இலக்குவன், முகம்தொறும் திரிந்தான். 112

**கும்பகருணன் களத்தில் இட்ட தண்டைக் கொண்டு அனுமன் பொருதல்**

கும்பகன்னன் ஆண்டு இட்டது, வயிர வான் குன்றின்
வெம்பு வெஞ் சுடர் விரிப்பது, தேவரை மேல்நாள்
தும்பையின் தலைத் துரந்தது, சுடர் மணித் தண்டு ஒன்று,
இம்பர் ஞாலத்தை நெளிப்பது, மாருதி எடுத்தான். 113

'காற்று அன்று, இது கனல் அன்று' என இமையோரிடை காணா
ஏற்றம் கடு விசையோடு உயர் கொலை நீடிய இயல்பால்,
சீற்றம் தனி உருவாய், இடை தேறாதது ஓர் மாறு ஆய்க்
கூற்றம் கொடு முனை வந்தெனக் கொன்றான், இகல் நின்றான்.

வெங் கண் மதமலைமேல், விரை பரிமேல், விடு தேர்மேல்,
சங்கம் தரு படை வீரர்கள் உடல்மேல், அவர் தலைமேல்,
''எங்கும் உளன் ஒருவன்'' என இரு நாள் மறை தெரிக்கும்
செங் கண்ணவன் இவனே' எனத் திரிந்தான்—கலை தெரிந்தான்.

110. தேவர்களே வானரராய்ப் பிறந்தனர் ஆதலின், அவர்கள் போரில் இறந்து தேவ உடம்பினராய் விண் புக, அவர்தம் மனைவியரான அரம்பையர் தழுவிப் பிரிவுத் துயர் தவிர்ந்தனர் என்பதாம்; 111. பவித்திரம் - தூய்மை; 112. அந்தகன் பெரும்படைக்கலம் - இயமாத்திரம்; மந்திரத்து அமைத்தல் - மந்திரத்தால் படைக்கலமாக அமைத்துக் கொள்ளுதல்; 113. தும்பையின் தலை - போரில்; 115. சங்கம் - தொகுதி.

கிளர்ந்தாரையும் கிடைத்தாரையும் கிழித்தான், கனல் விழித்தான்;
களம்தான் ஒரு குழம்பு ஆம் வகை அரைத்தான், உருக் கரைத்தான்;
வளர்ந்தான் நிலே உணர்ந்தார், 'உலகு ஒரு மூன்றையும் வலத்தால்
அளந்தானும் முன் இவனே?' என இமையோர்களும் அயிர்த்தார். 116

மத்தக் கரி நெடு மத்தகம் வகிர்பட்டு உக மணி மேல்
முத்தின் பொலி முழு மேனியன், முகில் விண் தொடு மெய்யான்,
ஒத்தக் கடையுகம் உற்றுழி, உறு கால் பொர, உடு மீன்
தொத்தப் பொலி கனகக் கிரி வெயில் சுற்றியது ஒத்தான். 117

இடித்தான் நிலம் விசும்போடு என, இட்டான் அடி, எழுந்தான்;
பொடித்தான், கடற் பெருஞ் சேனையை; பொலந் தண்டு தன் வலத்தால்
பிடித்தான்; மத கரி, தேர், பரி, பிழம்பு ஆனவை குழம்பா
அடித்தான்; உயிர் குடித்தான்; எடுத்து ஆர்த்தான்; பகை தீர்த்தான்.

நூறுயிரம் மத மால் கரி, ஒரு நாழிகை நுவல்போது,
ஆறுய், நெடுங் கடுஞ் சோரியின் அளறு ஆம் வகை அரைப்பான்,
ஏறு ஆயிரம் எனலாய் எழு வய வீரரை இடறி,
தேருது உறு கொலே மேவிய திசை யானேயின் திரிந்தான். 119

தேர் ஏறினர், பரி ஏறினர், விடை ஏறினர், சின வெங்
கார் ஏறினர், மழை ஏறினர், கலே ஏறினர், பல வெம்
போர் ஏறினர், புகழ் ஏறினர், புகுந்தார் புடை வளேந்தார்;
நேர் ஏறினர் விசும்பு ஏறிட, நெரித்தான், கதை திரித்தான்.

அரி குல மன்னன், நீலன், அங்கதன், குமுதன், சாம்பன்,
பரு வலிப் பனசன் என்று இப் படைத் தலே வீரர் யாரும்,
பொரு சினம் திருகி, வென்றிப் போர்க் கள மருங்கில் புக்கார்;
ஒருவரை ஒருவர் காணுர்; உயர் படைக் கடலின் உள்ளார். 121

**அனுமன் – அகம்பன் போர்**

தொகும் படை அரக்கர் வெள்ளம் துறைதொறும் அள்ளித் தூவி,
நகம் படை ஆகக் கொல்லும் நரசிங்கம் நடந்தது என்ன,
மிகும் படைக் கடலுள் செல்லும் மாருதி, வீர வாழ்க்கை
அகம்பனேக் கிடைத்தான், தண்டால் அரக்கரை அரைக்கும் கையான்.

116. கிளர்தல் - (சினத்தால்) பொங்கி எழுதல்; கிடைத்தல் - எதிர்த்தல், கையில் அகப்படலும் ஆம்; 117. மத்தம் - மதம்; 122. நகம் படை ஆக - நகத்தையே படையாகக் கொண்டு.

மலைப் பெருங் கழுதை ஐஞ்ஞூற்று இரட்டியான், மனத்தின் செல்லும்
தலைத் தடந் தேரன், வில்லன், தாருகன் என்னும் தன்மைக்
கொலைத் தொழில் அவுணன்; பின்னை, இராக்கத வேடம் கொண்டான்,
சிலைத் தொழில் குமரன் கொல்ல, தொல்லை நாள் செருவில் தீர்ந்தான்.

'பாகசாதனனும், மற்றைப் பகை அடும் திகிரி பற்றும்
ஏக சாதனனும், மூன்று புரமும் பண்டு எரித்துளோனும்
போக; தாம் ஒருவர் மற்று இக் குரங்கொடு பொரக் கற்றுரே,
ஆக; கூற்று ஆவி உண்பது இதனின் மேற்று ஆகும்' என்றான்.

'யான் தடேன்என்னின், மற்று இவ் எழு திரை வளாகம் என் ஆம்?
வான் தடாது; அரக்கர் என்னும் பெயரையும் மாய்க்கும்' என்னு,
ஊன் தடாநின்ற வாளி மழை துரந்து, உருத்துச் சென்றான்;
மீன் தொடாநின்ற திண் தோள் அனுமனும், விரைவின் வந்தான்.

தேரொடு களிறும் மாவும் அரக்கரும் நெருக்கித் தெற்ற,
காரொடு கனலும் காலும் கிளர்ந்தது ஓர் காலம் என்ன,
வாரொடு தொடர்ந்த பைம் பொற் கழலினன் வருதலோடும்,
சூரொடும் தொடர்ந்த தண்டைச் சுழற்றினன், வயிரத் தோளான். 126

எற்றின, எறிந்த, வல்லை ஏயின, எய்த, பெய்த,
முற்றின படைகள் யாவும், முறை முறை முறிந்து சிந்த,
சுற்றின வயிரத் தண்டால் துகைத்தனன், அமரர் துள்ள;
கற்றிலன் அன்று கற்றான், கதையினுல் வதையின் கல்வி. 127

அகம்பனும் காணக் காண, ஐ-இரு கோடிக் கைம்மா,
முகம் பயில் கலினப் பாய்மா, முனை எயிற்று அரக்கர், மூரி
நுகம் பயில் தேரினோடும் நுறுக்கினன்; நூழில் தீர்த்தான்;—
உகம் பெயர் ஊழிக் காற்றின் உலைவு இலா மேரு ஒப்பான். 128

'இன்று இவன்தன்னை விண்ணுடு எற்றி, வாள் இலங்கை வேந்தை
வென்றியன் ஆக்கி, மற்றை மனிதரை வெறியர் ஆக்கி,
நின்று உயர் நெடிய துன்பம் அமரர்பால் நிறுப்பல்' என்னுச்
சென்றனன் அரக்கன்; 'நன்று, வருக!' என அனுமன் சேர்ந்தான்.*

123. முருகக் கடவுளால் அழிக்கப்பட்ட தாருகாசுரனே இப்பொழுது அகம்பன் என்னும் அரக்கனுய்ப் பிறந்துள்ளான் என்றவாறு; 124. பாக சாதனன் - பாகன் என்னும் அசுரனைக் கொன்றவனுகிய இந்திரன்; ஏக சாதனன் - ஒப்பற்ற கருவியையுடையவன்; 125. ஊன் தடா நின்ற வாளி - ஊனுடம்பினையுடைய உயிர்களைத் தடுத்து அழிக்கவல்ல அம்பு; 126. தெற்ற - செறிந்து உடன் வர; 128. முகம் பயில் கலினம் - முகத்தில் பொருந்திய கடிவாளம்.

படுகளப் பரப்பை நோக்கி, பாழி வாய் அதுக்கி, நூழில்
சுடு கனற் பொறிகள் வெங் கண் தோன்றிட, கொடித்தேர் தூண்டி,
விடு கனல் பகழி மாரி மழையினும் மும்மை வீசி,
முடுகுறச் சென்று, குன்றின் முட்டினன், முகிலின் ஆர்ப்பான்.

சொரிந்தன பகழி மாரி தோளினும் மார்பின்மேலும்
தெரிந்தன—அசனி போலத் தெறு பொறி பிதிர்வ திக்கின்,
வரிந்தன எருவை மானச் சிறைகளால், அமரர் மார்பை
அரிந்தன, வடிம்பு பொன் கொண்டு அணிந்தன, வாங்கு கண்ண. 131

மார்பினும் தோளின்மேலும், வாளி வாய் மடுத்த வாயில்,
சோர் பெருங் குருதி சோரத் துவங்குவான், தேருமுன்னம்,
தேர் இரண்டு அருகும் பூண்ட கழுதையும் அச்சும் சிந்த,
சாரதி, புரள, வீரத் தண்டினால் கண்டம் செய்தான். 132

'வில்லினால் இவனை வெல்லல் அரிது' என, நிருதன்—வெய்ய
மல்லினால் இயன்ற தோளின், வலியினால், வானத் தச்சன்
கொல்லினால் உமைந்தது, ஆங்கு, ஓர் கொடுமுனைத் தண்டு கொண்டான்,
அல்லினால் வகுத்தது அன்ன மேனியான், கடலின் ஆர்ப்பான்.

தாக்கினர்; வலத்து மற்றை இடத்தினும் திரிந்தார் சாரி;
ஓக்கினர்; ஊழின் ஆர்ப்புக் கொட்டினர்; கிட்டினர்; கீழ்த்
தூக்கினர்; சுழற்றினர், மேல்; சுற்றினர், எற்றி வெற்றி;
நீக்கினர்; நெருக்கினர் போய்; நீங்கினர், ஏங்கினர் மேல். 134

தட்டினர்; தழுவினர்; மேல் தாவினர்; தரையினேடும்
கிட்டினர்; கிடைத்தார்; வீசிப் புடைத்தனர் கீழும் மேலும்
கட்டினர்; காத்தார்; ஒன்றும் காண்கிலார், இறவு; கண்ணுற்று,
ஒட்டினர்; மோதி வட்டம் ஓடினர்; ஆதி போனர். 135

மய்யொடும் பகைத்து நின்ற நிறத்தினன் வயிர மார்பில்,
பொய்யொடும் பகைத்து நின்ற குணத்தினன் புகுந்து மோத,
வெய்யவன், அதனைத் தண்டால் விலக்கினன்; விலக்கலோடும்,
கய்யொடும் இற்று, மற்று அக் கதை களம் கண்டது அன்றே. *

கய்யொடு தண்டு நீங்க, கடல் எனக் கலக்கம் உற்ற
மெய்யொடு நின்ற வெய்யோன், மிடலுடை இடக் கை ஓச்சி,
அய்யனை அலங்கல் ஆகத்து அடித்தனன், அடித்த ஓசை,
ஒய்யென வயிரக் குன்றத்து உருமின்ஏறு இடித்தது ஒத்த. *

*131.* எருவை மானச் சிறைகளால் வரிந்தன எனக் கூட்டுக; *132.* வாயில் - இடங்கள்; *133.* வானத் தச்சன் - விசுவகருமா; கொல் - கொற்றொழில்; *134.* ஓக்கினர் - ஓங்குவித்தார்; *135.* வட்டம் ஓடுதல் - வட்டமாகச் சுற்றி ஓடுதல், சாரி போதல்; ஆதி போதல் - நேராக ஓடுதல்.

அடித்தவன்தன்னை நோக்கி, அசனிஏறு அனைய தண்டு
பிடித்து நின்றேயும் எற்ருன், 'வெறுங்கையான்; பிழையிற்று' என்னு,
மடித்து வாய், இடத்த கையால் மார்பிடைக் குத்த, வாயால்
குடித்து நின்று உமிழ்வான் என்னக் கக்கினன், குருதி வெள்ளம். 138

மீட்டும் அக் கையால் வீசி, செவித்தலத்து எற்ற, வீழ்ந்தான்;
கூட்டினுன் உயிரை, விண்ணேர் குழாத்திடை; அரக்கர் கூட்டம்
காட்டில் வாழ் விலங்கு மாக்கள் கோள் அரி கண்ட என்ன,
ஈட்டம் உற்று எதிர்ந்த எல்லாம் இரிந்தன, திசைகள் எங்கும்.

**அனுமன் முதலியோர் ஒருவரை ஒருவர் காணுது திகைத்தல்**

ஆர்க்கின்ற குரலும் கேளான்; இலக்குவன் அசனி ஏற்றைப்
பேர்க்கின்ற சிலையின் நாணின் பேர் ஒலி கேளான்; வீரன்
யார்க்கு இன்னல் உற்றது என்பது உணர்ந்திலன்; இசைப்போர் இல்லை;
போர்க் குன்றம் அனைய தோளான் இனையது ஓர் பொருமல் உற்ருன்.

வீசின நிருதர் சேனை வேலையில் தென்மேல் திக்கின்
யோசனை ஏழு சென்ருன் அங்கதன்; அதனுக்கு அப்பால்,
ஆசையின் இரட்டி சென்ருன் அரி குலத்து அரசன்; அப்பால்,
ஈசனுக்கு இளைய வீரன் இரட்டிக்கும் இரட்டி சென்ருன். 141

மற்றையோர் நாலும் ஐந்தும் யோசனை மலைந்து புக்கார்;
கொற்ற மாருதியும் வள்ளல் இலக்குவன் நின்ற சூழல்
முற்றினன்—இரண்டு மூன்று காவதம் ஒழிய, பின்னும்
சுற்றிய சேனை நீர்மேல் பாசிபோல் மிடையும் துள்ளி. 142

'இளையவன் நின்ற சூழல் எய்துவென், விரைவின்' என்று ஓர்
உளைவு வந்து உள்ளம் தூண்ட, ஊழி வெங் காலின் செல்வான்,
களைவு அருந் துன்பம் நீங்கக் கண்டனன் என்ப மன்னே—
விளைவன செருவில் பல் வேறு ஆயின குறிகள் மேய. 143

ஆனையின் கோடும், பீலித் தழைகளும், ஆரத்தோடு
மான மா மணியும், பொன்னும், முத்தமும், கொழித்து வாரி,
மீன் என அங்கும் இங்கும் படைக்கலம் மிளிர, வீசும்
பேன வெண் குடைய ஆய, குருதிப் பேர் ஆறு கண்டான். 144

138. பிடித்து நின்றேயும் - பிடித்திருந்தும்; 139. செவித்தலம் - கன்னம், காதும் ஆம்; 140. பொருமல் - பெருந் துயரம்; 141. வீசின - வெகு தூரம் பரவியிருந்த; 143. உளைவு - வருத்தம்; 144. பேனம் - நுரை.

ஆசைகள்தோறும் சுற்றி அலைக்கின்ற அரக்கர்தம்மேல்
வீசின பகழி, அற்ற தலையொடும் விசும்பை முட்டி,
ஓசையின் உலகம் எங்கும் உதிர்வுற, ஊழி நாளில்
காசு அறு கல்லின் மாரி பொழிவபோல், விழுவ கண்டான்.*

மான வேல் அரக்கர் விட்ட படைக்கலம், வான மாரி
ஆன வன் பகழி சிந்த, திசைதொறும் பொறியோடு அற்று
மீன் இனம் விசும்பின்நின்றும் இருள் உக விழுவ போல,
கானகம் தொடர்ந்த தீயின் சுடுவன பலவும் கண்டான். 146

அருளுடைக் குரிசில் வாளி, அந்தரம் எங்கும் தாம் ஆய்,
தெருள் உறத் தொடர்ந்து வீசிச் செல்வன, தேவர் காண
இருளிடைச் சுடலை ஆடும் எண் புயத்து அண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்று எனச் சுடர்வ, கண்டான்.

நெய் உறக் கொளுத்தப்பட்ட நெருப்பு என, பொருப்பின் ஓங்கும்
மெய் உறக் குருதித் தாரை விசும்பு உற, விளங்குகின்ற—
அய்யனை, கங்குல் மாலை, அரசு என அறிந்து, காலம்,
கய் விளக்கு எடுத்தது என்ன—கவந்தத்தின் காடு கண்டான்.

ஆள் எலாம் இழந்த தேரும் ஆனையும் ஆடல் மாவும்,
நாள் எலாம் எண்ணினும் தொலைவு இலர் நாதர் இன்றி,
தாள் எலாம் குலைய ஓடித் திரிவன, தாங்கல் ஆற்றும்
கோள் இலா மன்னன் நாட்டுக் குடி எனக் குலைவ கண்டான்.

மிடல் கொளும் பகழி மாரி, வானினும் மும்மை வீசி,
மடல் கொளும் அலங்கல் மார்பன் மலைந்திட, உலைந்து மாண்டார்
உடல்களும், உதிர நீரும், ஒளிர் படைக்கலமும், உற்ற
கடல்களும், நெடிய கானும், கார் தவழ் மலையும், கண்டான்.

சுழித்து எறி ஊழிக் காலின் துருவினன் தொடரும் தோன்றல்,
தழிக் கொண்ட குருதி வேலை தாவுவான், 'தனிப் பேர் அண்டம்
கிழித்தது, கிழித்தது' என்னும் நாண் உரும்ஏறு கேட்டான்;
அழித்து ஒழி காலத்து ஆர்க்கும் ஆர்கலிக்கு இரட்டி ஆர்த்தான். 151

147. சுடலை - சுடுகாடு; எண் புயத்து அண்ணல் - சிவபெருமான், இரவில் ஒளிரும் வாளிகட்குச் சிவன் சடைக்கற்றையின் ஒளிவட்டம் உவமை; 148. கங்குல் மாலைக் காலம் - கங்குல் எனப்படுகின்ற இராக்காலம்; காடு - மிகுதி; 149. தாங்கல் - காத்தல்; கோள் - கொள்கை; 151. தாவுவான் - கடந்து செல்பவனாகிய அனுமன்.

### அனுமனைத் தழுவி, இலக்குவன் சேனையின் நிலைமை உசாவுதல்

ஆர்த்த பேர் அமலை கேளா, அணுகினன் அனுமன்; 'எல்லா
வார்த்தையும் கேட்கல் ஆகும்' என்று, அகம் மகிழ்ந்து, வள்ளல்
பார்ப்பதன் முன்னம் வந்து வணங்கினன், விசயப் பாவை
தூர்த்தனை; இளைய வீரன் தழுவினன், இனைய சொன்னான்; 152

'அரி குல வீரர், ஐய! யாண்டையர்? அருக்கன் மைந்தன்
பிரிவு உனைச் செய்தது எவ்வாறு? அங்கதன் பெயர்ந்தது எங்கே?
விரி இருள் பரவைச் சேனை வெள்ளத்து விளைந்தது ஒன்றும்
தெரிகிலென்; உரைத்தி' என்றான். சென்னிமேல் கையன் சொல்வான்.

### அனுமன் மறுமொழி

'போயினார் போயவாறும், போயினது அன்றிப் போரில்
ஆயினார் ஆயது ஒன்றும், அறிந்திலென், ஐய! யாரும்
மேயினார் மேய போதே தெரிவது, விளைந்தது' என்றான்—
தாயினான் வேலையோடும் அயிந்திரப் பரவைதன்னை. 154

'மந்திரம் உளதால், ஐய! உணர்வுறும் மாலைத்து; அஃது உன்
சிந்தையின் உணர்ந்து, செய்யற்பாற்று எனின், செய்தி; தெவ்வர்
தந்திரம்அதனைத் தெய்வப் படையினால் சமைப்பின் அல்லால்,
எந்தை! நின் அடியர் யாரும் எய்தலர், நின்னை' என்றான். 155

### இலக்குவன், சிவன் படை தொடுத்தல்

'அன்னது புரிவென்' என்னா, ஆயிர நாமத்து அண்ணல்-
தன்னையே வணங்கி வாழ்த்தி, சரங்களைத் தெரிந்து தாங்கி,
பொன் மலை வில்லினான்தன் படைக்கலம் பொருந்தப் பற்றி,
மின் எயிற்று அரக்கர்தம்மேல் ஏவினான்—வில்லின் செல்வன்.

முக்கணான் படையை மூட்டி விடுதலும், மூங்கில் காட்டில்
புக்கது, ஓர் ஊழித் தீயின், புறத்தின் ஓர் உருவும் போகாது
அக் கணத்து எரித்து வீழ்த்தான், அரக்கர்தம் சேனை; ஆழித்
திக்கு எலாம் இருளும் தீர்ந்த; தேவரும் மயக்கம் தீர்ந்தார்.

தேவர்தம் படையை விட்டான் என்பது சிந்தை செய்யா,
மா பெருந் தேரில் நின்ற மகோதரன் மறையப் போனான்;
யாவரும் இரிந்தார் எல்லாம், இன மழை கழிய ஆர்த்து,
கோ இளங் களிற்றை வந்து கூடினர்; ஆடல் கொண்டார். 158

152. வார்த்தை - செய்தி; விசயப் பாவை தூர்த்தன் - வெற்றி மங்கையின் ஆசைநாயகனாகிய அனுமன்; 154. மேயினார் - சென்றவர்; மேய போது - மீண்டு வந்தபோது; அயிந்திரப் பரவை - ஐந்திர வியாகரணமாகிய நூற்கடல்; 155. சமைத்தல் - அழித்தல், போக்குதல்.

யாவர்க்கும் தீது இலாமை கண்டு கண்டு, உவகை ஏற,
தேவர்க்கும் தேவன் தம்பி திரு மனத்து ஐயம் தீர்ந்தான்;
காவல் போர்க் குரங்கின் சேனைக் கடல் எனக் கலந்து புல்ல,
பூ வர்க்கம் இமையோர் தூவ, பொலிந்தனன்; தூதர் போனார்.

**தூதர், இராவணனுக்கும் இந்திரசித்தனுக்கும் செய்தி கூறுதல்**

இலங்கையர் கோனை எய்தி, எய்தியது உரைத்தார், 'நீவிர்
விலங்கினிர் போலும்; வெள்ளம் நூற்றை ஓர் வில்லின், வேழக்
குலங்களினோடும் கொல்லக் கூடுமோ?' என்ன, 'கொன்றை
அலங்கலான்படையின்' என்றார். 'அன்னதேல், ஆகும்' என்றான். 160

'வந்திலன் இராமன்; வேறு ஓர் மலை உளான்; உந்தை, மாயம்
தந்தன தீர்ப்பான் போனான், உண்பன தாழ்க்க; தாழா
எந்தை! ஈது இயன்றது' என்றார். 'மகோதரன் யாண்டை?' என்ன,
'அந்தரத்திடையன்' என்றார். இராவணி, 'அழகிற்று!' என்றான். 161

**இந்திரசித்தன் பிரமாத்திரம் ஏவ வேள்வி செய்தல்**

'காலம் ஈது' எனக் கருதிய இராவணன் காதல்,
ஆல மா மரம் ஒன்றினை விரைவினில் அடைந்தான்;
மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகள் முறையால்
கூலம் நீங்கிய இராக்கதப் பூசுரர் கொணர்ந்தார். 162

அம்பினால் பெருஞ் சமிதைகள் அமைத்தனன்; அனலில்
தும்பை மா மலர் தூவினன்; காரி எள் சொரிந்தான்;
கொம்பு பல்லொடு, கரிய வெள்ளாட்டு இருங் குருதி,
வெம்பு வெந் தசை, முறையின் இட்டு, எண்ணெயால் வேட்டான். 163

**பிரமாத்திரத்துடன் வானில் மறைந்திருத்தல்**

வலம் சுழித்து வந்து எழுந்து எரி, நறு வெறி வயங்கி,
நலம் சுரந்தன பெருங் குறி முறைமையின் நல்க,
குலம் சுரந்து எழு கொடுமையான், முறையினில் கொண்டே,
'நிலம் சுரந்து எழு வென்றி' என்று உம்பரில் நிமிர்ந்தான். 164

161. உந்தை - உன் சிறிய தந்தையாகிய வீடணன்; இயன்றது - நிகழ்ந்தது; 162. இராவணன் காதல் - இராவணன் மகனாகிய இந்திரசித்து; கலப்பைகள் - வேள்வி செய்தற்கு வேண்டப்படும் சாதனங்கள்; கூலம் - ஒழுக்கநெறி; 163. காரி எள் - கருமை நிறமுடைய எள்; வேட்டான் - ஓமஞ் செய்தான்; 164. நறு வெறி - நறு மணம்.

விசும்பு போயினன், மாயையின் பெருமையான்; மேலைப்
பசும் பொன் நாட்டவர் நாட்டமும் உள்ளமும் படரா,
அசும்பு விண்ணிடை அடங்கினன், முனிவரும் அறியாத்
தசும்பு நுண் நெடுங் கோளொடு காலமும் சார. 165

**மகோதரன் இந்திர வடிவுடன் வந்து பொருதல்**

அனையன் நின்றனன்; அவ் வழி, மகோதரன் அறிந்து, ஓர்
வினையம் எண்ணினன், இந்திர வேடத்தை மேவி,
துனை வலத்து அயிராவதக் களிற்றின்மேல் தோன்றி,
முனைவர் வானவர் எவரொடும் போர் செய மூண்டான். 166

'அரக்கர், மானிடர், குரங்கு, எனும் அவை எலாம் அல்லா
உருக்கள் யா உள, உயிர் இனி உலகத்தின் உழல்வ,
தருக்கும் போர்க்கு வந்தனவாம்' எனச் சமைத்தான்;
வெருக்கொளப் பெருங் கவிப் படை குலைந்தது, விலங்கி. 167

'கோடு நான்குடைப் பால் நிறக் களிற்றின்மேல் கொண்டான்
ஆடல் இந்திரன்; அல்லவர் யாவரும் அமரர்,
சேடர், சிந்தனை முனிவர்கள்; அமர் பொரச் சீறி,
ஊடு வந்து உற்றது என்கொலோ, நிபம்?' என உலைந்தார். 168

**இலக்குவன், அனுமனை முனிவர் முதலியோர் பொரும் காரணம் வினவல்**

அனுமன் வாள் முகம் நோக்கினன், ஆழியை அகற்றித்
தனு வலம் கொண்ட தாமரைக் கண்ணவன்தம்பி,
'முனிவர் வானவர் முனிந்து வந்து எய்த, யாம் முயன்ற
துனி இது என்கொலோ? சொல்லுதி, விரைந்து' எனச் சொன்னான்.

**இந்திரசித்தன் பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் விடுதலும் அதன் விளைவுகளும்**

இன்ன காலையின் இலக்குவன் மேனிமேல் எய்தான்,
முன்னை நான்முகன் படைக்கலம்; இமைப்பதன்முன்னம்,
பொன்னின் மால் வரைக் குரீஇஇனம் மொய்ப்பது போல,
பன்னல் ஆம் தரம் அல்லன சுடர்க் கணை பாய்ந்த. 170

165. அசும்பு விண் - நீர்த்திவலையையுடைய வானம்; தசும்பு கோள் - அசையும் கிரகங்கள்; காலம் - வெற்றி பெறுதற்குரிய நற்காலம்; 166. துனை வலத்து அயிராவதம் - விரைவும் வன்மையும் உடைய வெள்ளை யானை; முனைவர் - முனிவர்; 168. சேடர் - எஞ்சியோர்; 169. துனி - வெறுப்பு, ஈண்டுக் குற்றம்; 170. பன்னல் - சொல்லல்.

கோடி கோடி நூறுயிரம் சுடர்க் கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச் சுற்றின மூழ்க,
ஊடு செய்வது ஒன்று உணர்ந்திலன், உணர்வு புக்கு ஒடுங்க,
ஆடல் மாக் கரி சேவகம் அமைந்தென, அயர்ந்தான். 171

அனுமன், 'இந்திரன் வந்தவன் என்கொல், ஈது அமைந்தான்?
இனி என்? எற்றுவென் களிற்றிேேடு எடுத்து' என எழுந்தான்;
தனுவின் ஆயிர கோடி வெங் கடுங் கணை தைக்க,
நினைவும் செய்கையும் மறந்துபோய், நெடு நிலம் சேர்ந்தான்.

அருக்கன் மா மகன், ஆடகக் குன்றின்மேல் அலர்ந்த
முருக்கின் கானகம் ஆம் என, குருதி நீர் முடுக
தருக்கி, வெஞ் சரம் தலைத்தலை மயங்கின தைக்க,
உருக்கு செம்பு என கண்ணினன், நெடு நிலம் உற்றான். 173

அங்கதன், பதினுயிரம் அயில் கணை அழுந்த,
சிங்கஏறு இடியுண்டென நெடு நிலம் சேர்ந்தான்;
சங்கம் ஏறிய பெரும் புகழ்ச் சாம்பனும் சாய்ந்தான்,
துங்க மார்பையும் தோளையும் வடிக் கணை துளைக்க. 174

நீலன், ஆயிரம் வடிக் கணை நிறம் புக்கு நெருங்க,
காலனார் முகம் கண்டனன்; இடபன் விண் கலந்தான்;
ஆலமே அன்ன பகழியால், பனசனும் அயர்ந்தான்;
கோலின் மேவிய கூற்றினால், குமுதனும் குறைந்தான். 175

வேலை கட்டவன், ஆயிரம் பகழியால், வீழ்ந்தான்;
வாலி நேர் வலி மயிந்தனும் துமிந்தனும் மடிந்தார்;
கால வெந் தொழில் கவயனும் வானகம் கண்டான்;
மாலை வாளியின் கேசரி மண்ணிடை மடிந்தான். 176

கனகன் ஆயிரம் கணை பட, விண்ணிடைக் கலந்தான்;
அனகன் ஆயின சங்கனும் அக் கணத்து அயர்ந்தான்;
முனையின் வாளியின் சதவலி என்பவன் முடிந்தான்;
புனையும் அம்பினில் தம்பனும் பொருப்பு எனப் புரண்டான்.†

விந்தம் அன்ன தோள் சதவலி, சுசேடணன், வினதன்,
கெந்தமாதனன், இடும்பன், வன் ததிமுகன், கிளர,
உந்து வார் கணை கோடி தம் உடலம் உற்று ஒளிப்ப,
தம்தம் நல் உணர்வு ஒடுங்கினர், மண் உறச் சாய்ந்தார்.† 178

171. சேவகம் - யானை துயிலும் இடம்; 173. அருக்கன் மாமகன் - சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன்; 174. சங்கம் - (வீரர்) கூட்டம், அறிஞர் கூடிய அவை; 176. வேலை கட்டவன் - கடலை அணை கட்டித் தடுத்தவனாகிய நளன்; மாலை வாளி - மாலை போலத் தொடர்ச்சியாக வந்த அம்பு.

மற்றை வீரர்கள் யாவரும் வடிக் கணை மழையால்
முற்றும் வீந்தனர்; முழங்கு பேர் உதிரத்தின் முந்நீர்
எற்று வான் திரைக் கடலொடும் பொருது சென்று ஏற,
ஒற்றை வான் கணை ஆயிரம் குரங்கினை உருட்ட. 179

தளைத்து வைத்தது, சதுமுகன் பெரும் படை தள்ளி;
ஒளிக்க, மற்றொரு புகலிடம் உணர்கிலர்; உருமின்
வளைத்து வித்திய வாளியால், மண்ணொடும் திண்ணம்
முளைப் புடைத்தன ஒத்தன; வானரம் முடிந்த. 180

குவளைக் கண்ணினை வான் அர மடந்தையர் கோட்டித்
துவள, பாரிடைக் கிடந்தனர்; குருதி நீர் சுற்றித்
திவள, கீழொடு மேல் புடை பரந்து இடை செறிய,
பவளக் காடுடைப் பாற்கடல் ஒத்தது, அப் பரவை. 181

விண்ணில் சென்றது, கவிக் குலப் பெரும் படை வெள்ளம்;
கண்ணில் கண்டனர் வானவர், விருந்து எனக் கலந்தார்,
உள் நிற்கும் பெருங் களிப்பினர், அளவளாய் உவந்தார்;
'மண்ணில் செல்லுதிர், இக் கணத்தே' எனும் மனத்தார். 182

'பார் படைத்தவன் படைக்கு ஒரு பூசனை படைத்தீர்;
நீர் படக் கடவீர்அலீர்;—வரி சிலை நெடியோன்
பேர் படைத்தவற்கு அடியவருக்கு அடியரும் பெறுவார்,
வேர் படைத்த வெம் பிறவியில் துவக்குறு, வீடு. 183

'நங்கள் காரியம் இயற்றுவான் உலகிடை நடந்தீர்;
உங்கள் ஆர் உயிர் எம் உயிர்; உடல் பிறிது உற்றீர்;
செங் கண் நாயகற்காக வெங் களத்து உயிர் தீர்ந்தீர்;
எங்கள் நாயகர் நீங்கள்' என்று இமையவர் இசைத்தார். 184

**இந்திரசித்தன் தந்தையின் இருப்பிடம் சென்று செய்தி சொல்லுதல்**

'வெங் கண் வானரக் குழுவொடும், இளையவன் விளிந்தான்;
இங்கு வந்திலன், இராமன் இப்போது' என இகழ்ந்தான்;
சங்கம் ஊதினன்; தாதையை வல்லையில் சார்ந்தான்;
பொங்கு போரிடைப் புகுந்துள பொருள் எலாம் புகன்றான். 185

180. முளைப் புடைதல் - முளையடித்து நிறுத்துதல்; 181. கோட்டி - தலை சாய்த்து; திவளுதல் - விளங்குதல்; 185. புகுந்துள பொருள் - விளைந்துள்ள நிகழ்ச்சிகள்.

**'இராமன் இறந்திலனோ?' என்ற இராவணன் வினவும் இந்திரசித்தன் விடையும்**

'இறந்திலன்கொலாம் இராமன்?' என்று இராவணன் இசைத்தான்;
'துறந்து நீங்கினன்; அல்லனேல், தம்பியைத் தொலேத்து,
சிறந்த நண்பரைக் கொன்று, தன் சேனையைச் சிதைக்க,
மறந்து நிற்குமோ, மற்று அவன் திறன்?' என்ருன், மதலே. 186

'அன்னதே' என, அரக்கனும் ஆதரித்து அமைந்தான்;
சொன்ன மைந்தனும், தன் பெருங் கோயிலேத் தொடர்ந்தான்;
மன்னன் ஏவலின் போயினன், மகோதரன் வந்தான்;
என்னே ஆளுடை நாயகன் வேறு இடத்து இருந்தான். 187

**இராமன் தெய்வப் படைகளுக்கு வழிபாடு இயற்றிப் போர்க்களம் புகுதல்**

செய்ய தாமரை நாள்மலர்க் கைத் தலம் சேப்ப,
துய்ய தெய்வ வான் படைக்கு எலாம் வரன்முறை துரக்கும்
மெய்கொள் பூசனே விதிமுறை இயற்றி, மேல், வீரன்,
'மொய்கொள் போர்க் களத்து எய்துவாம் இனி' என முயன்ருன். 188

கொள்ளியின் சுடர் அனலிதன் பகழி கைக்கொண்டான்;
அள்ளி நுங்கலாம் ஆர் இருட் பிழம்பினே அழித்தான்;
வெள்ள வெங் களப் பரப்பினேப் பொருக்கென விழித்தான்;
தள்ளி, தாமரைச் சேவடி நுடங்குறச் சார்ந்தான். 189

**இராமன், வீழ்ந்து கிடக்கும் சுக்கிரீவன் முதலியோரைத் தனித் தனி கண்டு வருந்துதல்**

நோக்கினுன் பெருந் திசைதொறும்; முறை முறை நோக்கி,
ஊக்கினுன்; தடந் தாமரைத் திரு முகத்து உதிரம்
போக்கினுன்; நிணப் பறந்தலே அழுவத்துள் புக்கான்;
காக்கும் வன் துணேத் தலேவரைத் தனித் தனி கண்டான். 190

சுக்கிரீவனே நோக்கி, தன் தாமரைத் துணேக் கண்
உக்க நீர்த்திரள் ஒழுகிட, நெடிது நின்று உயிர்த்தான்;
'தக்கதோ, இது நினக்கு!' என்று, தனி மனம் தளர்ந்தான்;
பக்கம் நோக்கினன்; மாருதி தன்மையைப் பார்த்தான். 191

'கடல் கடந்து புக்கு' அரக்கரைக் கருவொடும் கலக்கி,
இடர் கடந்து நான் இருக்க, நீ நல்கியது இதற்கோ?
உடல் கடந்தனவோ, உனே அரக்கன் வில் உதைத்த
அடல் கடந்த போர் வாளி?' என்று, ஆகுலித்து அழுதான். 192

188. துய்ய - தூய; 189. நுங்குதல் - உண்ணுதல்; 192. ஆகுலித்தல் - துன்புறுத்தல்.

'முன்னைத் தேவர்தம் வரங்களும், முனிவர்தம் மொழியும்,
பின்னைச் சானகி உதவியும், பிழைத்தன; பிறந்த
புன்மைச் செய் தொழில் என் வினைக் கொடுமையால் புகழோர்
என்னைப் போல்பவர் ஆர் உளர், ஒருவர்?' என்று இசைத்தான்.

'புன் தொழில் புலை அரசினை வெஃகி, என் பூண்டேன்?
கொன்று ஒருக்கினேன், எந்தையை; சடாயுவைக் குறைத்தேன்;
இன்று ஒருக்கினேன், இத்தனை வீரரை; இருந்தேன்!
வன் தொழிற்கு ஒரு வரம்பும் உண்டாய் வரவற்றோ? 194

'தமையனைக் கொன்று, தம்பிக்கு வானரத் தலைமை
அமைய நல்கினென், அடங்கலும் அவிப்பதற்கு அமைந்தேன்;
கமை பிடித்து நின்று, உங்களை இத்துணைக் கண்டேன்;
சுமை உடல் பொறை சுமக்க வந்தேன்' எனச் சொன்னான். 195

விடைக் குலங்களின் நடுவண் ஓர் விடை கிடந்தென்ன,
கடைக்கண் தீ உக, அங்கதக் களிற்றினைக் கண்டான்;
'படைக்கலங்களைச் சுமக்கின்ற பதகனேன், பழி பார்த்து,
அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிது' என்று அழுதான்.

**இலக்குவனைக் கண்டு இராமன் அடைந்த துயரம்**

உடரிடைத் தொடர் பகழியின் ஒளிர் கதிர்க் காற்றைச்
சுடருடைப் பெருங் குருதியில், பாம்பு எனச் சுமந்த
மிடருடைப் பண மீமிசை, தான் பண்டை வெள்ளக்
கடரிடைத் துயில்வான் அன்ன தம்பியைக் கண்டான். 197

பொருமினான், அகம்; பொங்கினான்; உயிர் முற்றும் புகைந்தான்;
குரு மணித் திரு மேனியும், மனம் எனக் குலைந்தான்;
தருமம் நின்று தன் கண் புடைத்து அலமர, சாய்ந்தான்;
உருமினால் இடியுண்டது ஓர் மராமரம் ஒத்தான். 198

உயிர்த்திலன் ஒரு நாழிகை; உணர்ந்திலன் ஒன்றும்;
வியர்த்திலன், உடல்; விழித்திலன், கண் இணை; விண்ணோர்,
'அயிர்த்து இலன் கொல்?' என்று அஞ்சினர்; அங்கையும் தாளும்
பெயர்த்திலன்; உயிர் பிரிந்திலன்—கருணையால் பிறந்தான்.

தாங்குவார் இல்லை; தம்பியைத் தழீஇக்கொண்ட தடக் கை
வாங்குவார் இல்லை; வாக்கினால் தெருட்டுவார் இல்லை;
பாங்கர் ஆயினர் யாவரும் பட்டனர்; பட்ட
தீங்குதான் இது; தமியனை யார் துயர் தீர்ப்பார்? 200

194. வரவற்றோ - அமைய வல்லதோ; 195. கமை - பொறுமை.

கவந்த பந்தமும், கழுதும், தம் கணவரைக் காணுர்
சிவந்த பண்ணியர் தேடினர் திரிபவர் திரளும்,
உவந்த சாதகர் ஈட்டமும், ஓரியின் ஒழுங்கும்,
நிவந்த; அல்லது, பிறர் இல்லை, களத்திடை நின்ருர். 201

வான நாடியர் வயிறு அலைத்து அழுது, கண் மழை நீர்
சோனை மாரியின் சொரிந்தனர்; தேவரும் சோர்ந்தார்;
ஏனை நிற்பவும் திரிபவும் இரங்கின, எவையும்
ஞான நாயகன் உருவமே ஆதலின், நடுங்கி. 202

முகையின் நாள்மலர்க் கிழவற்கும், முக்கணுன்தனக்கும்,
நகையும் நீங்கிய; திருமுகம், கருணையும் நலிந்த;
தொகையுள் நின்றவர்க்கு உள்ளது சொல்லி என்? தொடர்ந்த
பகையும் பார்க்கின்ற பாவமும் கலுழ்ந்தது, பரிவால். 203

அண்ணலும், சிறிது உணர்விஞேடு அயாவுயிர்ப்பு அணுகிக்
கண் விழித்தனன், தம்பியைத் தெரிவுறக் கண்டான்;
'விண்ணை உற்றனன்; மீள்கிலன்' என்று, அகம் வெதும்பா,
புண்ணின் உற்றது ஓர் எரி அன்ன துயரினன் புலம்பும்: 204

**சிறிது உணர்வு பெற்ற இராமன் இலக்குவனைக் குறித்துப் புலம்புதல்**

'எந்தை இறந்தான்'' என்றும் இருந்தேன்; உலகு எல்லாம்
தந்தனென் என்னும் கொள்கை தவிர்ந்தேன்; தனி அல்லேன்;
கந்தன் இருந்தாய் நீ என நின்றேன்; உரை காணேன்;
வந்தனென், ஐயா! வந்தனென், ஐயா! இனி வாழேன்! 205

'தாயோ நீயே; தந்தையும் நீயே; தவம் நீயே;
சேயோ நீயே; தம்பியும் நீயே; திரு நீயே;
போயோ நின்ருய்; என்னை இகந்தாய்; புகழ் பாராய்,
நீயோ; யானே, நின்னினும் நெஞ்சம் வலியேனே? 206

'ஊருநின்ற புண்ணுடையாய்பால் உயிர் காணேன்;
ஆருநின்றேன், ஆவி சுமந்தேன்; அழிகின்றேன்;
ஏறே! இன்னும் உய்யினும் உய்வேன்; இரு கூருக்
கீரு நெஞ்சம் பெற்றனென் அன்ருே, கெடுவேனே? 207

201. சாதகர் - பூதங்கள்; ஓரி - நரி; 202. ஞான நாயகன் - ஞானத் தினையே தன் உண்மை உருவாகக் கொண்டுள்ள இறைவன்; ஈண்டு இராமன்; 205. கந்தன் - முருகன்; 206. இகந்தாய் - நீங்கினவன் ஆனுய்.

'பயிலும் காலம் பத்தொடு நாலும் படர் கானத்து
அயில்கின்றேனுக்கு ஆவன நல்கி, அயிலாதாய்!
வெயில் என்று உன்னுய், நின்று தளர்ந்தே மெலிவு எய்தி,
துயில்கின்ருயோ இன்று? இவ் உறக்கம் துறவாயோ? 208

அயிரா நெஞ்சும் ஆவியும் ஒன்றே எனும் அச் சொல்
பயிரா எல்லேப் பாதகனேற்கும் பரிவு உண்டோ?
செயிரோ இல்லா உன்னே இழந்தும், திரிகின்றேன்;
உயிரோ, நானே, ஆர் இனி உன்னேடு உறவு, ஐயா! 209

'வேள்விக்கு ஏகி, வில்லும் இறுத்து, ''ஓர் விடம் அம்மா
வாழ்விக்கும்!'' என்று எண்ணினென், முன்னே வருவித்தேன்;
சூழ்வித்து, என்னேச் சுற்றினரோடும் சுடுவித்தேன்;
தாழ்வித்தேனே, இத்தனே கேடும் தருவித்தேன்? 210

'மண்மேல் வைத்த காதலின், மாதா முதலோர்க்கும்
புண்மேல் வைத்த தீ நிகர் துன்பம் புகுவித்தேன்;
பெண்மேல் வைத்த காதலின், இப் பேறுகள் பெற்றேன்;
எண்மேல் வைத்தேன், என் புகழ்; யான்தான் எளியேனே! 211

'மாண்டாய் நீயோ; யான் ஒருபோதும் உயிர் வாழேன்;
ஆண்டான்அல்லன் நானிலம், அந்தோ, பரதன்தான்!
பூண்டார் எல்லாம் பொன்றுவர், துன்பப் பொறையாற்ருர்;
வேண்டாவோ, நான் நல் அறம் அஞ்சி, மெலிவுற்ருல்? 212

'அறம், தாய், தந்தை, சுற்றமும், மற்றும், எனே அல்லால்,
துறந்தாய்! என்றும் என்னே மருதாய்! துணே வந்து
பிறந்தாய்! என்னேப் பின்பு தொடர்ந்தாய்! பிரிவு அற்ருய்!
இறந்தாய்; உன்னேக் கண்டும் இருந்தேன், எளியேனே? 213

'சான்ருேர் மாதைத் தக்க அரக்கன் சிறை தட்ட,
ஆன்ருேர் சொல்லும் நல் அறம் அன்னுன் வயமானுல்,
மூன்று ஆய் நின்ற பேர் உலகு ஒன்ருய் முடியாவேல்,
தோன்ருவோ, என் வில் வலி வீரத் தொழில் அம்மா? 214

'வேலேப் பள்ளக் குண்டு அகழிக்கும், விராதற்கும்,
காலின் செல்லும் கவந்தன் உயிர்க்கும், கரனுக்கும்,
மூலப் பொத்தல் செத்த மரத்து ஏழ் முதலுக்கும்,
வாலிக்கும்மே ஆயினவாறு என் வலி அம்மா? 215

209. அயிரா நெஞ்சு - ஐயுருத தெளிந்த நெஞ்சம்; செயிர் - குற்றம்;
210. ஓர் விடம் - ஒரு நஞ்சு, ஈண்டுச் சீதை; 214. தட்ட - வைக்க.

'இருந்தேனுனல், இந்திரசித்தே முதலாய
பெருந் தேராரைக் கொன்று பிழைக்கப் பெறுவேனு?
வருந்தேன்; ''நீயே வெல்லுதி'' என்னும் வலி கொண்டேன்;
பொருந்தேன், நான், இப் பொய்ப் பிறவிக்கும் பொறை அல்லேன்! 216

'மாதாவும், நம் சுற்றமும், நாடும் மறையோரும்,
''ஏது ஆனுரோ?'' என்று தளர்ந்தே இறுவாரை,
தாதாய்! காணச் சால நினைந்தேன்; தரை ஆள்வேம்;
போதாய்; ஐயா; பொன் முடி என்னைப் புனைவிப்பான்! 217

'பாசமும் முற்றச் சுற்றிய போதும், பகையாலே
நாசமும் முற்ற இப்போதும், நடந்தேன், உடன் அல்லேன்;
நேசமும் அற்ருர் செய்வன செய்தேன்; நிலை நின்றேன்;
தேசமும் மற்று, என் கொற்ற நலத்தைத் தெரியாதோ? 218

'கொடுத்தேன் அன்றே, வீடணனுக்குக் குலம் ஆள
முடித்து ஓர் செல்வம்; யான் முடியாதே முடிகின்றேன்;
படித்தேன் அன்றே, பொய்ம்மை? குடிக்குப் பழி பெற்றேன்;
ஒடித்தேன் அன்றே என் புகழ் நானே, உணர்வு அற்றேன்?' 219

என்று என்று ஏங்கும், விம்மும், உயிர்க்கும், இடை அஃகி,
சென்று ஒன்று ஒன்ருேடு இந்தியம் எல்லாம் சிதைவு எய்த,
பொன்றும் என்னுத் தம்பியை ஆர்வத்தொடு புல்லி,
ஒன்றும் பேசான்; தன்னை மறந்தான், துயில்வுற்ருன். 220

**தேவர்கள் இராமனுக்கு உண்மை உணர்த்துதல்**

கண்டார் விண்ணேர்; கண்கள் புடைத்தார், கலுழ்கின்ருர்;
கொண்டார், துன்பம்; 'என் முடிவு?' என்னுக் குலைகின்ருர்;
'அண்டா! ஐயா! எங்கள் பொருட்டால் அயர்கின்ருய்;
உண்டோ, உன்பால் துன்பு?' என விண்பால் உரை செய்தார்.

'உன்னை உள்ளபடி அறியோம்; உலகை உள்ள திறம் உள்ளோம்;
பின்னை அறியோம்; முன் அறியோம்; இடையும் அறியோம், பிறழாமல்;
நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கும் இது அல்லால்,
என்னை, அடியோம் செயற்பால?—இன்ப-துன்பம் இல்லோனே!

'"அரக்கர் குலத்தை வேர் அறுத்து, எம் அல்லல் நீக்கி அருளாய்"
இரக்க, எம்மேல் கருணையினல், ஏயா உருவம் இவை எய்தி, [என்று
புரக்கும் மன்னர் குடிப் பிறந்து, போந்தாய்! அறத்தைப் பொறை
கரக்க நின்றே, நெடு மாயம் எமக்கும் காட்டக்கடவாயோ? [தீர்ப்பான்,

217. தாதாய் - அப்பனே, ஈண்டு முறையைக் குறியாது அன்பு பற்றி நின்றது; 219. ஒடித்தல் - சிதைத்து அழித்தல்; 221. அண்டா - தேவனே.

'ஈன்று, எம் இடுக்கண் துடைத்து அளிப்பான் இரங்கி, அரசர் இல் பிறந்
"மூன்று ஆம் உலகம் துயர் தீர்த்தி" என்னும் ஆசை முயல்கின்றோம்; [தாய்!
என்றும் மறந்தோம், "அவன் அல்லன்; மனிதன்" என்றே; இது மாயம்
போன்றது இல்லை; ஆளுடையாய்! பொய்யும் புகலப் புக்காயோ? 224

'அண்டம் பலவும், அனைத்து உயிரும், அகத்தும் புறத்தும் உள ஆக்கி,
உண்டும் உமிழ்ந்தும், அளந்து இடந்தும், உள்ளும் புறத்தும் உளை ஆகிக்
கொண்டு, சிலம்பி தன் வாயின் கூர் நூல் இயையக் கூடு இயற்றி,
பண்டும் இன்றும் அமைக்கின்ற படியை ஒருவாய்—பரமேட்டி!

'துன்ப விளையாட்டு இதுவேயும், உன்னைத் துன்பம் தொடர்பு இன்மை,
இன்ப விளையாட்டு ஆம்; எனினும், அறியாதேமுக்கு இடர் உற்றால்,
அன்பு விளையும், அருள் விளையும், அறிவு விளையும், அவை எல்லாம்,—
முன்பு, பின்பு, நடு, இல்லாய்!—முடித்தால் அன்றி, முடியாவே. 226

'வருவாய் போல வாராதாய்! வந்தாய் என்று மனம் களிப்ப,
வெருவாதிருந்தே நீ இடையே துன்பம் விளக்க, மெலிகின்றேம்;
கரு ஆய் அளிக்கும் களைகண்ணே! நீயே இதனைக் காவாயேல்,
திரு வாழ் மார்ப! நின் மாயை எம்மால் தீர்க்கத் தீருமோ?'

'அம்பரீடற்கு அருளியதும், அயனார் மகனுக்கு அளித்ததுவும்,
எம்பிரானே! எமக்கு இன்று பயந்தாய் என்றே ஏமுறுவேம்;
வெம்பு துயரம் நீ உழக்க, வெளி காணாது மெலிகின்றேம்;
தம்பி துணைவா! நீ இதனைத் தவிர்த்து, எம் உணர்வைத் தாராயோ?'†

225. படி - தன்மை; 227. வெருவுதல் - அஞ்சுதல்; 228. அம்பரீடன் ஏகாதசி நோன்பு மேற்கொண்டு அடுத்த நாள் பாரணை (பட்டினிக்குப்பின் உண்ணுதல்) செய்ய இருக்கையில், விருந்தினராக வந்த துருவாச முனிவர் நாட்கடனை முடிக்கச் சென்றார். அவர் திரும்பு முன்னே, பாரணை முடித்தற்குரிய காலம் கடத்தலால் அம்பரீடன் இறைவனை வழிப்பட்ட தீர்த்தத்தை உட்கொண்டு பாரணை முடித்தான். முனிவர் அதனை அறிந்து வெகுண்டு தன் சடை மயிரில் ஒன்றை மண்ணில் எறிந்தார். அதிலிருந்து பூதம் ஒன்று தோன்ற, மன்னன் திருமாலைத் தியானித்தான். சக்கரப் படை தோன்றி அதனை அழித்து முனிவனைத் துரத்தியது. முனிவன் திரிமூர்த்திகளிடமும் அடைக்கலம் பெறாது மன்னனை அடைய, அவன் அவரைக் காத்தான். அயனார் மகன் - சிவன்; பஸ்மாசூரன் சிவனிடம் தான் எவர் தலைமீது கை வைத்தாலும் அவர் சாம்பராய்ப் போகும்படி வரம் பெற்று, அதனைச் சிவனிடமே சோதிக்கத் தொடங்கினான். அந்நிலையில் சிவன் மறையத் திருமால் ஒரு பெண்ணாகத் தோன்றவும், அசுரன் காமுற்று அணைய வர, அப் பெண், 'நீராடித் தூயோனாக வருக' என்ன, அசுரன் நீரில் முழுகித் தன் தலையைத் துவட்டியபொழுது பெற்ற வரத்தின்படி சாம்பராய் அழிந்தான்.

இராவணனிடம் தூதர், 'உன் பகை முடிந்தது' என அறிவித்தல்

என்ப பலவும் எடுத்து இயம்பி, இமையாதோரும் இடர் உழந்தார்;
அன்பு மிகுதியால், ஐயன் ஆவி உள்ளே அடங்கினன்,
துன்ப மனிதர் கருமமே புரிய முன்பு துணிந்தமையால்;
புன்கண் நிருதர் பெருந் தூதர் போனர், அரக்கனிடம் புகுந்தார். 229

'என் வந்தது, நீர்?' என்று அரக்கர்க்கு இறைவன் இயம்ப, 'எறி செருவில்,
நின் மைந்தன்தன் நெடுஞ் சரத்தால், துணைவர் எல்லாம் நிலம் சேர,
பின்வந்தவனும் முன் மடிந்த பிழையை நோக்கி, பெருந்துயரால், [தார்.
முன்வந்தவனும் முடிந்தான்; உன் பகை போய் முடிந்தது' என மொழிந்

## 22 சீதை களம் காண் படலம்

வெற்றிவிழாக் கொண்டாட இராவணன் கட்டளையிடுதல்

பொய்யார் தூதர் என்பதனல்,
பொங்கி எழுந்த உவகையன் ஆய்,
மெய் ஆர் நிதியின் பெரு வெறுக்கை
வெறுக்க வீசி, 'விளைந்தபடி
கய் ஆர் வரைமேல் முரசு ஏற்றி,
சாற்றி, ''நகரம் களி சிறப்ப,
நெய் ஆர் ஆடல் கொள்க!'' என்று,
நிகழ்த்துக' என்றான்;—நெறி இல்லான். 1

மாய்ந்த அரக்கர் உடலைக் கடலில் தள்ளல்

அந்த நெறியை அவர் செய்ய,
அரக்கன் மருத்தன்தனைக் கூவி,
'முந்த நீ போய், அரக்கர் உடல்
முழுதும் கடலில் முடுக்கிடு; நின்
சிந்தை ஒழியப் பிறர் அறியின்,
சிரமமும் வரமும் சிந்துவென்' என்று
உந்த, அவன் போய் அரக்கர் உடல்
அடங்கக் கடலினுள் இட்டான். 2

22: 1. நிதியின் பெரு வெறுக்கை - நிதியாகிய பெரிய செல்வம்; கய் ஆர் வரை - துதிக்கை பொருந்திய மலை போன்ற யானை; நெய் ஆர் ஆடல் - எண்ணெயிட்டு முழுகுகின்ற நீராடல்.

சீதையைக் களத்திற்குக் கொணர்தல்

'தெய்வ மானத்திடை ஏற்றி
மனிசர்க்கு உற்ற செயல் எல்லாம்
தய்யல் காணக் காட்டுமின்கள்;
கண்டால் அன்றி, தனது உள்ளத்து
அய்யம் நீங்காள்' என்று உரைக்க,
அரக்கர் மகளிர் இரைத்து ஈண்டி,
உய்யும் உணர்வு நீத்தாளை
நெடும் போர்க் களத்தின்மிசை உய்த்தார். 3

இராமனைக் கண்ட சீதையின் துயர்

கண்டாள் கண்ணால் கணவன் உரு;
அன்றி, ஒன்றும் காணாதாள்;
உண்டாள் விடத்தை என, உடலும்
உணர்வும் உயிர்ப்பும் உடன் ஓய்ந்தாள்;
தண் தாமரைப் பூ நெருப்புற்ற
தன்மை உற்றாள்; தரியாதாள்;
பெண்தான் உற்ற பெரும் பீழை
உலகுக்கு எல்லாம் பெரிது அன்றோ! 4

மங்கை அழலும்—வான் நாட்டு
மயில்கள் அழுதார்; மழ விடையோன்
பங்கின் உறையும் குயில் அழுதாள்;
பதுமத்து இருந்த மாது அழுதாள்;
கங்கை அழுதாள்; நாமடந்தை
அழுதாள்; கமலத் தடங் கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
அரக்கிமாரும் தளர்ந்து அழுதார். 5

பொன் தாழ் குழையாள்தனை ஈன்ற
பூ மா மடந்தை புரிந்து அழுதாள்;
குன்றா மறையும், தருமமும், மெய்
குழைந்து குழைந்து, விழுந்து அழுத;
பின்றாது உடற்றும் பெரும் பாவம்
அழுத; பின் என் பிறர் செய்கை?
நின்றார் நின்றபடி அழுதார்;
நினைப்பும் உயிர்ப்பும் நீத்திட்டாள்.* 6

5. பதுமத்து இருந்த மாது - செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள்; கமலத் தடங் கண்ணன் தங்கை - திருமாலின் தங்கையான கொற்றவை; 6. உடற்றுதல் - துன்புறுதல்.

**சீதை தெளிந்து, துன்புற்று ஏங்குதல்**

நினைப்பும் உயிர்ப்பும் நீத்தாளை
நீரால் தெளித்து, நெடும் பொழுதின்
இனத்தின் அரக்கர் மடவார்கள்
எடுத்தார்; உயிர் வந்து ஏங்கினுள்;
கனத்தின் நிறத்தான்தனைப் பெயர்த்தும்
கண்டாள்; கயலைக் கமலத்தால்
சினத்தின் அலைப்பாள் என, கண்ணைச்
சிதையக் கையால் மோதினுள். 7

அடித்தாள் முலைமேல்; வயிறு அலைத்தாள்;
அழுதாள்; தொழுதாள்; அனல் வீழ்ந்த
கொடித்தான் என்ன, மெய் சுருண்டாள்;
கொதித்தாள்; பதைத்தாள்; குலைவுற்றுள்;
துடித்தாள், மின்போல்; உயிர் கரப்பச்
சோர்ந்தாள்; சுழன்றுள்; துள்ளினுள்;
குடித்தாள் துயரை, உயிரோடும்
குழைத்தாள்; உழைத்தாள்,—குயில் அன்னுள். 8

விழுந்தாள்; புரண்டாள்; உடல் முழுதும்
வியர்த்தாள், அயர்த்தாள்; வெதும்பினுள்;
எழுந்தாள்; இருந்தாள்; தளிர்க் கரத்தை
நெரித்தாள்; சிரித்தாள்; ஏங்கினுள்;
'கொழுந்தா!' என்றுள்; 'அயோத்தியர்தம்
கோவே!' என்றுள்; 'எவ் உலகும்
தொழும் தாள் அரசேயோ!' என்றுள்;
சோர்ந்தாள்; அரற்றத் தொடங்கினுள்; 9

**சீதை அரற்றுதல்**

'உற மேவிய காதல் உனக்கு உடையார்,
புறம் ஏதும் இலாரொடு, பூண்முலையார்;
மறமே புரிவார் வசமாயினையோ—
அறமே!—கொடியாய், இதுவோ, அருள்தான்? 10

'முதியார் உணர் வேதம் மொழிந்த அலால்,
கதி ஏதும் இலார் துயர் காணுதியோ?
மதியேன் மதியேன் உனை—வாய்மை இலா
விதியே!—கொடியாய், விளையாடுதியோ? 11

7. கனம் - மேகம்; 10. புறம் - பாவச் செயல், புறம்பானுர் எனலும் ஆம்.

'கொடியேன் இவை காணகிலேன்; உயிர் கோள்
முடியாய், நமனே! முறையோ! முறையோ!
விடியா இருள்வாய் எனை வீசினையே?—
அடியேன் உயிரே! அருள் நாயகனே! 12

'எண்ணு, மயலோடும் இருந்தது நின்
புண் ஆகிய மேனி பொருந்திடவோ?—
மண்ணோர் உயிரே! இமையோர் வலியே!
கண்ணே! அமிழ்தே! கருணாகரனே! 13

'மேவிக் கனல் முன், மிதிலைத்தலை, என்
பாவிக் கை பிடித்தது, பண்ணவ! நின்
ஆவிக்கு ஒரு கோள் வரவோ?—அலர் வாழ்
தேவிக்கு அமிழ்தே! மறையின் தெளிவே! 14

'உய்யாள், உயர் கோசலை தன் உயிரோடு;
அய்யா! இளையோர் அவர் வாழ்கிலரால்;
மெய்யே, வினை எண்ணி, விடுத்த கொடுங்
கய்கேசி கருத்து இதுவோ?—களிறே! 15

' ''தகை வான் நகர் நீ தவிர்வாய்'' எனவும்,
வகையாது, தொடர்ந்து, ஒரு மான் முதலா,
புகை ஆடிய காடு புகுந்து, உடனே
பகை ஆடியவா! பரிவு ஏதும் இலேன்! 16

' ''இன்று ஈகிலையேல், இறவு இவ் இடை; மான்
அன்று, ஈ'' எனவும் பிரிவோடு அடியேன்
நின்று ஈவது, நின்னை நெடுஞ் செருவில்,
கொன்று ஈவது ஓர் தீமை குறித்தலினோ? 17

'நெய் ஆர் பெரு வேள்வி நிரப்பி, நெடுஞ்
செய் ஆர் புனல் நாடு திருத்துதியால்;
மெய் ஆகிய வாசகமும் விதியும்
பொய் ஆன, என் மேனி பொருந்துதலால். 18

12. விடியா இருள் - முடிவு இல்லாத துன்பம்; 14. பண்ணவன் - கடவுள்; கோள் - தீங்கு; 15. இளையோர் - பரத சத்துருக்கனர்; 16. வகையாது - பிரியாது; 17. ஈகிலையேல் - (மானைப் பிடித்துக்) கொடுக்கவில்லையானால்; இறவு - இறப்பு.

'மேதா! இளையோய்! விதியார் வினைவால்,
போதா நெறி எம்மொடு போதுறுநாள்,
''மூது ஆனவன் முன்னம் முடிந்திடு'' எனும்,
மாதா உரையின்வழி நின்றனையோ? 19

'பூவும் தளிரும் தொகு பொங்கு அணைமேல்
கோவும் துயில, தவிர்வாய்! கொடியார்
ஏவின்தலை வந்த இருங் கணையால்
மேவும் குளிர் மெல் அணை மேவினையோ? 20

திரிசடை சீதையின் மயக்கம் தீர்த்தல்

'மழு வாள் வரினும் பிளவா மனன் உண்டு
அழுவேன்; இனி, இன்று இடர் ஆறிட, யான்
விழுவேன், அவன் மேனியின்மீதில்' என,
எழுவாளை விலக்கி இயம்பினளால்: 21

'மாடு உற வளைந்து நின்ற வளை எயிற்று அரக்கிமாரைப்
பாடு உற நீக்கி, நின்ற பாவையைத் தழுவிக் கொண்டு,
கூடினள் என்ன நின்று, செவியிடை, குறுகிச் சொன்னாள்—
தேடிய தவமே என்னத் திரிசடை, மறுக்கம் தீர்ப்பாள். 22

'மாய மான் விடுத்தவாறும், சனகனை வகுத்தவாறும்,
போய நாள் நாகபாசம் பிணித்தது போனவாறும்,
நீ அமா! நினையாய்; மாள நினைதியோ? நெறி இலாரால்
ஆய மா மாயம்; ஒன்றும் அறிந்திலை, அன்னம் அன்னாய்! 23

'கண்ட அச் கனவும், பெற்ற நிமித்தமும், நினது கற்பும்,
தண்ட வாள் அரக்கர் பாவச் செய்கையும், தருமம் தாங்கும்
அண்டர் நாயகர் தம் வீரத் தன்மையும், அயர்க்கலாமோ?
புண்டரீகற்கும் உண்டோ, இறுதி, இப் புலையர்க்கு அல்லால்?

ஆழியான் ஆக்கைதன்னில் அம்பு ஒன்றும் உறுகிலாமை,
ஏழை! நீ காண்டி அன்றே? இளையவன் வதனம் இன்னும்
ஊழி நாள் இரவி என்ன ஒளிர்கின்றது; உயிருக்கு இன்னல்
வாழியார்க்கு இல்லை; வாளா மயங்கலை—மண்ணில் வந்தாய்!

19. மேதா - அறிவு நிரம்பியவனே; போதா நெறி - மக்கள் போக்கு வரவு புரியாத காட்டுவழி; மூது ஆனவன் - மூத்தவன்; 20. பொங்கு அணை - சிறந்த படுக்கை; 23. அமா - அம்மா; 24. தண்ட வாள் - தண்டாயுதமும் வாளும்; 25. ஆழியான் - சக்கரப்படைக்கு உரியவனான இராமன்; வாழியார் - நெடிது நாள் வாழும் தன்மையுள்ளவர் (இராம - இலக்குவர்).

'ஒய்ந்துளன், இராமன், என்னின், உலகம் ஓர் ஏழும் ஏழும்
தீய்ந்துறும்; இரவி பின்னும் திரியுமோ? தெய்வம் என் ஆம்?
வீய்ந்துறும், விரிஞ்சன் முன்னா உயிர்எலாம்; வெருவல், அன்னை!
ஆய்ந்தவை உள்ள போதே, அவர் உளர்; அறமும் உண்டால்.

'மாருதிக்கு இல்லை அன்றே, மங்கை நின் வரத்தினாலே
ஆர் உயிர் நீங்கல்! நின்பால் கற்புக்கும் அழிவு உண்டாமே?
சீரியது அன்று, இது ஒன்றும்; திசைமுகன் படையின் செய்கை
பேரும், இப்பொழுதே; தேவர் எண்ணமும் பிழைப்பது உண்டோ? 27

'தேவரைக் கண்டேன்; பைம் பொன் செங் கரம் சிரத்தில் சேர்த்தி,
மூவரைக் கண்டாலென்ன, இருவரை முறையின் நோக்கி,
ஆவலிப்பு எய்துகின்றார்; அயர்த்திலர்; அஞ்சல்; அன்னை!
''கூவலில் புக்கு, வேலை கோட்படும்'' என்று கொள்ளேல். 28

'மங்கலம் நீங்கினாரை, ஆர் உயிர் வாழ்கினாரை,
நங்கை! இக் கடவுள் மானம் தாங்குறும் நவையிற்று அன்றால்;
இங்கு, இவை அளவை ஆக, இடர்க் கடல் கடத்தி' என்றாள்;
சங்கையள் ஆய தையல் சிறிது உயிர் தரிப்பதானாள். 29

**சீதையின் மறுமொழி**

'அன்னை! நீ உரைத்தது ஒன்றும் அழிந்திலது; ஆதலானே
உன்னையே தெய்வமாக் கொண்டு, இத்தனை காலம் உய்ந்தேன்;
இன்னம், இவ் இரவு முற்றும் இருக்கின்றேன்; இறத்தல் என்பால்
முன்னமே முடிந்தது அன்றே?' என்றனள்—முளரி நீத்தாள். 30

'நாண் எலாம் துறந்தேன், இல்லின் நன்மையின் நல்லார்க்கு எய்ந்த;
பூண் எலாம் ஆகி நின்ற என்தன் பொரு சிலை மேகம்தன்னைக்
காணலாம் என்றும் ஆசை தடுக்க, என் ஆவி காத்தேன்;
ஏண் இலா உடலம் நீக்கல் எளிது, எனக்கு' எனவும் சொன்னாள்.

**சீதையை மீண்டும் அசோகவனத்திற்குச் செலுத்துதல்**

தய்யலை, இராமன் மேனி தைத்த வேல் தடங் கணாளை,
கய்களின் பற்றிக் கொண்டார், விமானத்தைக் கடாவுகின்றார்,—
மெய் உயிர் உலகத்து ஆக, விதியையும் வலித்து, விண்மேல்
பொய் உடல் கொண்டு செல்லும் நமனுடைத் தூதர் போன்றார். 32

28. ஆவலிப்பு - செருக்கு; கூவல் - கிணறு; 29. சங்கை - ஐயம்; 30. அழிந்திலது - பழுதுபட்டதில்லை; 31. ஏண் - வலிமை, பெருமை; 32. தைத்த - பதிந்த; வலித்து - வலிமையால் கடந்து.

# 23 மருத்துமலைப் படலம்

**உணவு கொணர்ந்து, பாசறையில் சேர்த்த வீடணன் களங்கண்டு மயங்கி வீழ்தல்**

போயினள் தையல்; இப்பால், 'புரிக' எனப் புலவர் கோமான்
ஏயின கருமம் நோக்கி, எய்திய இலங்கை வேந்தன்,
மேயின உணவு கொண்டு, மீண்டு, அவை உறையுள் விட்ட
ஆயின ஆக்கி, தான் வந்து, அமர்ப் பெருங் களத்தன் ஆனான்.

நோக்கினான்; கண்டான், பண்டு, இவ் உலகினைப் படைக்க நோற்றான்
வாக்கினால் மாண்டார் என்ன, வானர வீரர் முற்றும்
தாக்கினார் எல்லாம் பட்ட தன்மையை; விடத்தைத் தானே
தேக்கினான் என்ன நின்று, தியங்கினான், உணர்வு தீர்ந்தான். 2

விளைந்தவாறு உணர்கிலாதான், வெங்கினான்; வெதும்பினான்; மெய்
உளைந்து உளைந்து உயிர்த்தான், 'ஆவி உண்டு, இலை' என்ன, ஓய்ந்தான்;
வளைந்த பேய்க் கணமும் நாயும் நரிகளும் இரிய, வந்தான்;
இளங் கிளையோடும் சாய்ந்த இராமனை இடையில் கண்டான்.

**வீடணன், இராமன் மேனியில் வடு இன்மை கண்டு துயரம் தணிதல்**

'என்பு என்பது, யாக்கை என்பது, உயிர் என்பது, இவைகள் எல்லாம்,
பின்பு என்ப அல்ல; என்றும் தம்முடை நிலையின் பேரா;
முன்பு என்றும் உளது என்றாலும், முழுவதும் தெரிந்தவாற்றால்,
அன்பு என்பது ஒன்றின் தன்மை அமரரும் அறிந்ததுஅன்றே.

'ஆயினும், இவருக்கு இல்லை அழிவு' எனும் அதனால் ஆவி
போயினது இல்லை; வாயால் புலம்பலன், பொருமி; பொங்கித்
தீயினும் எரியும் நெஞ்சன் வெருவலால், தெரிய நோக்கி,
'நாயகன் மேனிக்கு இல்லை வடு' என நடுக்கம் தீர்ந்தான். 5

**வீடணன், துயர் தீர்க்கும் வழி ஆராய்தல்**

அந்தணன் படையால் வந்தது என்பதும், ஆற்றல் சான்ற
இந்திரசித்தே எய்தான் என்பதும், இளவற்கு ஆக
நொந்தனன் இராமன் என்னும் நுண்மையும், நொய்தின் நோக்கி,
சிந்தையின் எண்ணி எண்ணி, தீர்வது ஓர் உபாயம் தேர்வான்;

23: 2. தியங்குதல் - மயங்குதல்.

'உள்ளுறு துன்பம் ஊன்ற, உற்றனன் உறக்கம் அன்றே?
தெள்ளிதின் உணர்ந்த பின்னை, சிந்தனை தெரிவென் அன்றே;
வள்ளலோ, தம்பி மாள வாழ்கிலன்; மாய வாழ்க்கைக்
கள்ளனோ வென்றான்?' என்றான், மழை எனக் கலுழும் கண்ணான். 7

'பாசம் போய் இற்றாற் போலப் பதுமத்தோன் படையும் இன்னே
நாசம் போய் எய்தும்; நம்பி தம்பிக்கு நடுக்கம் இல்லை;
வீசும் போர்க் களத்து வீழ்ந்த சேனையும் மீளும்; வெய்ய
நீசன் போர் வெல்வது உண்டோ?' என்று உளம் நிலையில் நின்றான். 8

'இறவாதவர் இருப்பரோ?' என வீடணன் தேடுதல்

'உணர்வதன்முன்னம், இன்னே உற்றுழி உதவற்கு ஒத்த
துணைவர்கள், துஞ்சல் இல்லார், உளர்எனின், துருவித் தேடிக் [டான்
கொணர்குவென், விரைவின்' என்னா, கொள்ளி ஒன்று அம்கைக்கொண்
புணரியின் உதிர வெள்ளத்து, ஒரு தனி விரைவின் போனான். 9

வீடணன், அனுமனைக் காணல்

வாய் மடித்து, இரண்டு கையும் முறுக்கி, தன் வயிரச் செங் கண்
தீ உக, கனகக் குன்றின் திரண்ட தோள் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப் பெரும் பிணத்து அமளி மேலான்,
காய் சினத்து அனுமன் என்னும் கடல் கடந்தானைக் கண்டான்.

கண்டு, தன் கண்களூடு மழை எனக் கலுழி வார,
'உண்டு உயிர்' என்பது உன்னி, உடற் கணை ஒன்று ஒன்று ஆக,
விண்டு உதிர் புண்ணின்நின்று மெல்லென விரைவின் வாங்கி,
கொண்டல் நீர் கொணர்ந்து, கோல முகத்தினைக் குளிரச்செய்தான். 11

உணர்வு பெற்ற அனுமன், இராமனைப்பற்றி உசாவி அறிதல்

உயிர்ப்பு முன் உதித்த பின்னர், உரோமங்கள் சிலிர்ப்ப ஊறி
வியர்ப்பு உளதாக, கண்கள் விழித்தன, மேனி மெல்லப்
பெயர்த்து, வாய் புனல் வந்து ஊற, விக்கலும் பிறந்ததாக,
அயர்த்திலன் இராம நாமம், வாழ்த்தினன்; அமரர் ஆர்த்தார்.

அழுகையோடு உவகை உற்ற வீடணன் ஆர்வம் கூர,
தழுவினன் அவனை, தானும் அன்பொடு தழுவி, 'தக்கோய்!
வழு இலன் அன்றே, வள்ளல்?' என்றனன்; 'வலியன்' என்றான்;
தொழுதனன், உலகம் மூன்றும் தலையின்மேல் கொள்ளும் தூயான்.

7. கள்ளன் - கள்வன், ஈண்டு இராவணன்.

**இருவரும் சாம்பனைத் தேடிச் சென்று அடைதல்**

அன்பு தன் தம்பிமேல் ஆத்து, அறிவினை மயக்க, ஐயன்,
துன்பொடும் துயிலன் ஆனான்; உணர்வு இனித் தொடர்ந்த பின்னே
என் புகுந்து எய்தும் என்பது அறிகிலென்!' என்றலோடும்,
'தன் பெருந் தகைமைக்கு ஒத்த சாம்பன் எத் தலையன்?' என்றான். 14

'அறிந்திலென் அவனை; யாண்டும் கண்டிலென்; "ஆவி யாக்கை [என்று
பிறந்திலன் உளன்" என்று ஒன்றும் தெரிந்திலென், பெயர்ந்தேன்'
செறிந்த தார் நிருதர் வேந்தன் உரைசெய, காலின் செம்மல்,
'இறும் திறம் அவனுக்கு இல்லை; நாடுதும், ஏகி' என்றான். 15

'அன்னவன் தன்னைக் கண்டால், ஆணையே, அரக்கர்க்கு எல்லாம்
மன்னவ! நம்மை ஈண்டு வாழ்விக்கும் உபாயம் வல்லன்'
என்னலும், 'உய்ந்தோம், ஐய! ஏகுதும் விரைவின்' என்றான்;
சில் நெறி இருளில் சென்றார்; சாம்பனை விதியில் சேர்ந்தார். 16

எரிகின்ற மூப்பினாலும், ஏவுண்ட நோவினாலும்,
அரிகின்ற துன்பத்தாலும், ஆர் உயிர்ப்பு அடங்கி, ஒன்றும்
தெரிகின்றது இல்லா மம்மர்ச் சிந்தையன்எனினும், வீரர்
வருகின்ற சுவட்டை ஓர்ந்தான், செவிகளால்—வயிரத் தோளான். 17

'அரக்கனோ? என்னை ஆளும் அண்ணலோ? அனுமன் தானோ?
இரக்கம் உற்று அருள வந்த தேவரோ? முனிவரேயோ?
வரக் கடவார்கள், அல்லர்; மாற்றலர், மலைந்து போனார்;
புரக்க உள்ளாரே!' என்னாக் கருதினன், பொருமல் தீர்ந்தான்.

**அனுமன் வருகையால் சாம்பன் மகிழ்தல்**

வந்து அயல் நின்று, குன்றின் வார்ந்து வீழ் அருவி மானச்
சிந்திய கண்ணின் நீரர் ஏங்குவார்தம்மைத் தேற்றி,
'ஆந்தம் இல் குணத்திர்! யாவிர், அணுகினிர்?' என்றான்; 'ஐய!
உயந்தனம்; உய்ந்தோம்!' என்ற வீடணன் உரையைக் கேட்டான். 19

'மற்று அயல் நின்றான் யாவன்!' என்ன, மாருதியும், 'வாழி!
கொற்றவ! அனுமன் நின்றேன்; தொழுதனென்' என்று கூற,
'இற்றனம், ஐய! எல்லோம் எழுந்தனம், எழுந்தேம்!' என்னா,
உற்ற பேர் உவகையாலே, ஓங்கினான், ஊற்றம் மிக்கான். 20

14. துயிலன் - துயில் உடையவன் (மூர்ச்சித்தவன்); 16. சில் நெறி - சிறிது தொலைவு; 17. எரிதல் - வருந்துதல்.

சாம்பன், மருத்துமலை கொணர வழி கூறி, அனுமனை ஏவுதல்

'விரிஞ்சன்தன் படை என்றாலும், வேதத்தின் வேதம் அன்ன
அரிந்தமன்தன்னை ஒன்றும் ஆற்றிலது என்னும் ஆற்றல் [றான்;
தெரிந்தனென்; முன்னே, அன்னான் செய்தது என்? தெரித்தி' என்
'பெருந்தகை துன்ப வெள்ளத் துயில் உளான், பெரும!' என்றான். 21

'அன்னவன்தன்மை கண்டால் ஆற்றுமோ? ஆக்கை வேறே;
இன் உயிர் ஒன்றே; மூலத்து இருவரும் ஒருவரேயால்;
இன்னது கிடைப்பத் தாழாது, இங்குஇனி இமைப்பின்முன்னம்,
கொன் இயல் வயிரத் தோளாய்! மருந்து போய்க் கொணர்தி' என்றான்.

'எழுபது வெள்ளத்தோரும், இராமனும், இளைய கோவும்,
முழுதும் இவ் உலகம் மூன்றும், நல் அற மூர்த்திதானும்,
வழு இலா மறையும், உன்னால் வாழ்ந்தன ஆகும்; மைந்த!
பொழுது இறை தாழாது, என் சொல் நெறி தரக் கடிது போதி. 23

'பின்பு உளது இக் கடல் என்னப் பெயர்ந்ததற்பின்
யோசனைகள் பேச நின்ற
ஒன்பதினாயிரம் கடந்தால், இமயம் எனும்
குலவரையை உறுதி; உற்றால்,
தன் பெருமை ஓர் இரண்டாயிரம் உளது
யோசனை; பின் தவிரப் போனால்,
முன்பு உள யோசனை எல்லாம் முற்றினை, பொற்-
கூடம் சென்று உறுதி, மொய்ம்ப! 24

'அம் மலைக்கும் ஒன்பதினாயிரம் உளதால்,
யோசனையின் நிடதம் என்னும்
செம் மலையம்; உளவாய அத்தனை யோசனை
கடந்தால், சென்று காண்டி,
எம் மலைக்கும் பெரிது ஆய வடமலையை;
அம் மலையின் அகலம் எண்ணின்,
மொய்ம் மலைந்த திண் தோளாய்! முப்பத்து ஈர்-
ஆயிரம் யோசனையின் முற்றும்; 25

21. அரிந்தமன் - பகைவரை அழிக்கவல்ல இராமன்; 22. அன்னவன் - அந்த இலக்குவன்; கொன் - வலிமை; 24. தன் பெருமை - (அது) தன் பரப்பு; பொற்கூடம் - ஏமகூடம்; ஏமம் - பொன்; 25. வடமலை - மேருமலை.

மேருவினைக் கடந்து, அப்பால் ஒன்பதினாயிரம்
உள ஓசனையை விட்டால்,
நேர் அணுகும் நீலகிரிதான் இரண்டா-
யிரம் உள யோசனையின் நிற்கும்;
மாருதி! மற்று அதற்கு யோசனை
நாலாயிரத்தின் மருந்து வைகும்,
கார் வரையைக் காணுதி; மற்று, அது காண,
இத் துயர்க்குக் கரையும் காண்டி; 26

'மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்றும்,
உடல் வேறு வகிர்களாகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்,
படைக்கலங்கள் கிளைப்பது ஒன்றும்,
மீண்டேயும் தம் உருவை அருளுவது ஓர் மெய்ம்
மருந்தும், உள; நீ, வீர!
ஆண்டு ஏகி, கொணர்தி' என அடையாளத்தொடும்
உரைத்தான், அறிவின் மிக்கான். 27

'இன்ன மருந்து ஒரு நான்கும், பயோததியைக்
கலக்கிய ஞான்று, எழுந்த; தேவர்
உன்னி அமைத்தனர்; மறைக்கும் எட்டாத
பரஞ்சுடர், இவ் உலகம் மூன்றும்
தன் இரு தாள் உள் அடக்கிப் பொலி போழ்தின்,
யான் முரசம் சாற்றும் வேலை,
அன்னவை கண்டு, உயாவுதலும், தொல் முனிவர்
அவற்று இயல் எற்கு அறிவித்தாரால்;† 28

'இம் மருந்து காத்து உறையும் தெய்வங்கள் எண் இலவால்;
இரங்கா, யார்க்கும்;
நெய்ம் மருங்கு படரகில்லா நெடு நேமிப்
படையும் அவற்றுடனே நிற்கும்;
பொய்ம் மருங்கின் நில்லாதாய்! புரிகின்ற
காரியத்தின் பொதுமை நோக்கி,
கைம் மருங்கு உண்டாம்; நின்னைக் காவாய் என்று;
அப்புறம் போய்க் கரக்கும்' என்றான். 29

27. வகிர்கள் - பிளவுகள்; கிளைப்பது - அகற்றுவது; தம் உரு - தம் முன்னைய வடிவம்; 28. பயோததி - பாற்கடல்; உன்னல் - நினைத்தல், ஈண்டு பயனை நோக்குதல்; 29. நெய்ந் நேமி, மருங்கு படரகில்லா நேமி எனக் கூட்டுக; மருங்கு படரகில்லா - பக்கத்தில் செல்வதற்கும் முடியாத.

அனுமன் மருந்து கொணரப் பெரு வடிவு கொண்டு எழுதல்

'ஈங்கு இதுவே பணி ஆகில், இறந்தோரும்
பிறந்தோரே; எம் கோற்கு யாதும்
தீங்கு இடையூறு எய்தாமல், தெருட்டுதிர், போய்'
எனச் சொல்லி, அவரைத் தீர்ந்தான்—
ஓங்கினன் வான் நெடு முகட்டை உற்றனன்; பொன்
தோள் இரண்டும் திசையோடு ஒக்க
வீங்கின; ஆகாயத்தை விழுங்கினனே
என வளர்ந்தான்—வேதம் போல்வான். 30

கோளோடு தாரகைகள், கோத்து அமைந்த
மணி ஆரக் கோவை போன்ற;
தோளோடு தோள் அகலம் ஆயிரம்
யோசனை அளவு சொல்ல ஒண்ணு;
தாளோடு தாள் பெயர்க்க, இடம் இலது-
ஆயின இலங்கை; தடக் கை வீச,
நீளோடு திசை போதா; விசைத்து எழுவான்
உருவத்தின் நிலை ஈது அம்மா! 31

வால் விசைத்து, கைந் நிமிர்த்து, வாயினையும்
சிறிது அகல வகுத்து, மானக்
கால் நிலத்தினிடை ஊன்றி, உரம் நெருக்கி,
கழுத்தினையும் சுருக்கிக் காட்டி,
தோல் மயிர்க் குந்தளம் சிலிர்ப்ப, விசைத்து எழுந்தான்,
அவ் இலங்கை, துளங்கிச் சூழ்ந்த
வேலையில் புக்கு அழுந்தியது ஓர் மரக்கலம்போல்,
சுரித்து உலைய,—விசையத் தோளான். 32

அனுமன் வேகத்தால் நிகழ்ந்தவை

கிழிந்தன, மா மழைக் குலங்கள்; கீண்டது, நீண்டு
அகல் வேலை; கிழக்கும் மேற்கும்
பொழிந்தன, மீன்; தொடர்ந்து எழுந்த, பொருப்புஇனமும்,
தருக் குலமும், பிறவும், பொங்கி;
அழிந்தன, வானவர் மானம், ஆகாயத்து
இடையன பேர் அசனி என்ன
விழுந்தன, நீர்க் கடல் அழுந்த; ஏறின மேல்,
கீறின போய்த் திசைகள் எல்லாம். 33

31. நீளோடு திசை - நீள்மாக ஓடுகின்ற திசை; 32. மயிர்க் குந்தளம் - மயிர்ச் செறிவுகள்; 33. மானம் - விமானம்.

பாய்ந்தனன், அங்கு அப்பொழுதத்தே; பரு வரைகள்
எனைப் பலவும் வடபாகத்துச்
சாய்ந்தன; 'பேர் உடல் பிறந்த சண்டமா-
ருதம் வீச, தாதை சால
ஓய்ந்தனன்' என்று உரைசெய்ய, விசும்பூடு
படர்கின்றான், உரு வேகத்தால்,
காய்ந்தன வேலைகள்; மேகம் கரிந்தன; வெந்து
எரிந்த, பெருங் கானம் எல்லாம். 34

கடல் முன்னே நிமிர்ந்து ஓட, கால் பின்னே
தொடர்ந்து ஓட, கடிதின் செல்வான்
உடல் முன்னே செல, உள்ளம் கடைக் குழையாய்ச்
செல, செல்வான் உருவை நோக்கி,
'அடல் முன்னே தொடங்கிய நாள், ஆழ் கடல் சூழ்
இலங்கை எனும் அரக்கர் வாழும்
திடல் முந்நீர்க்கிடை அறிந்தான்; முரிந்தது நம்
துயர்' என்றார், தேவர் எல்லாம். 35

விரைந்து செல்லும் அனுமனைக் கண்ட வானவர் கூற்று

மேகத்தின் பதம் கடந்து, வெங் கதிரும்
தண் கதிரும் விரைவில் செல்லும்
மாகத்தின் நெறிக்கு அப்பால், வானமீன்
குலம் விளங்கும் வரம்பு நீங்கி,
போகத்தின் நெறி கடந்தார் புகலிடங்கள்
பிற்படப் போய், 'பூவின் வந்த
ஏகத்து அந்தணன் இருக்கை இனிச் சேய்த்து அன்-
றும்' என்ன, எழுந்து சென்றான். 36

வான நாட்டு உறைகின்றார், 'வயக் கலுழன்
வல் விசையால், மாயன் வைகும்
தான நாட்டு எழுகின்றான்' என்று உரைத்தார்,
சிலர்; சிலர்கள், 'விரிஞ்சன்தான் தன்
ஏனை நாட்டு எழுகின்றான்' என்று உரைத்தார்;
சிலர் சிலர்கள், 'ஈசன் அல்லால்,
போன நாட்டிடை போக வல்லாரோ?
இவன் முக் கண் புனிதன்' என்றார். 37

35. கடைக் குழை - கடைக்கூழை, பின்னணி இறுதி வரிசை; 36. போகத்தின் நெறி கடந்தார் - சிற்றின்ப நெறியைக் கடந்தவர்களான தவத்தினர்; புகலிடங்கள் - இருப்பிடங்கள்; 37. மாயன் வைகும் தான நாடு - வைகுந்தம்; ஏனை நாடு - (பிரமன் தான் படைத்த பூமண்டலம் அல்லாத) வேறு உலகு.

'வேண்டு உருவம் கொண்டு எழுந்து, விளையாடு-
கின்றான்; மெய் வேதம் நான்கும்
தீண்டு உருவன் அல்லாத திருமாலே
இவன்' என்றார்; ' ''தெரிய நோக்கிக்
காண்டும்'' என இமைப்பதன்முன், கட் புலமும்
கடந்து அகலும்; இன்னும் காண்மின்;
மீண்டு வரும் தரம் அல்லான் வீட்டுலகம்
புகும்' என்றார், மேன்மேல் உள்ளார். 38

'உரு' என்றார், சிலர் சிலர்கள்; 'ஒளி' என்றார்,
சிலர் சிலர்கள்; 'ஒளிரும் மேனி
அரு' என்றார், சிலர் சிலர்கள்; 'அண்டத்துக்கு
அப் புறம் நின்று, உலகம் ஆக்கும்
கரு' என்றார், சிலர் சிலர்கள்; 'மற்று' என்றார்,
சிலர் சிலர்கள்; கடலைத் தாவிச்
செரு வென்றான் நிலை ஒன்றும் தெரியகிலார்—
உலகு அனைத்தும் தெரியும் செல்வர். 39

வாச நாள் மலரோன்தன் உலகு அளவும்
நிமிர்ந்தன, மேல் வானம் ஆன
காசம் ஆயின எல்லாம் கரந்த தனது
உருவிடையே கனகத் தோள்கள்
வீச, வான் முகடு உரிஞ்ச, விசைத்து எழுவான்
உடல் பிறந்த முழக்கம் விம்ம,
ஆசை காவலர் தலைகள் பொதிர் எறிந்தார்;
விதிர் எறிந்தது, அண்டகோளம். 40

**தொ**டுத்த நாள்மாலை வானோர், முனிவரே முதல தொல்லோர்,
அடுத்த நான்மறைகள் ஓதி வாழ்த்தலால், அவுணர் வேந்தன்
கொடுத்த நாள், அளந்து கொண்ட குறளனார் குறிய பாதம்
எடுத்த நாள் ஒத்தது—அண்ணல் எழுந்த நாள், உலகுக்கு எல்லாம்.

தேவரும் முனிவர்தாமும், சித்தரும் தெரிவைமாரும்,
மூவகை உலகினுள்ளார், உவகையால் தொடர்ந்து மொய்த்தார்;
தூவின மணியும் சாந்தும் சுண்ணமும் மலரும் தொத்த,
பூவுடை அமரர் தெய்வத் தரு என, விசும்பில் போனான். 42

39. கரு - காரணப்பொருள்; 40. வானம் ஆன காசம் - மேல் வானமான ஆகாயம்; பொதிர் எறிதல் - நடுக்கங் கொள்ளுதல்; 41. அவுணர் வேந்தன் - மாபலி; குறளனார் - வாமனமூர்த்தி.

**கயிலையைக் கண்டு வணங்கி, அனுமன் செல்லுதல்**

இமய மால் வரையை உற்றான்; அங்கு உள இமைப்பிலோரும்,
கமையுடை முனிவர், மற்றும் அறன் நெறி கலந்தோர், எல்லாம்,
அமைக, நின் கருமம்!' என்று வாழ்த்தினர்; அதனுக்கு அப்பால்,
உமையொருபாகன் வைகும் கயிலை கண்டு, உவகை உற்றான்.*

வட குண திசையில் தோன்றும், மழுவலான் ஆண்டுஉன் வைகும்
தட வரை அதனை நோக்கி, தாமரைக் கைகள் கூப்பி,
படர்குவான்தன்னை, அன்பால் பரமனும் விசும்பில் பார்த்தான்;
தட முலை உமைக்குக் காட்டி, 'வாயுவின் தனயன்' என்றான்.

**உமையின் வினவும், ஈசனது உரையும்**

'என், இவன் எழுந்த தன்மை?' என்று, உலகு ஈன்றாள் கேட்ப,
'மன்னவன் இராமன் தூதன் மருந்தின்மேல் வந்தான்; வஞ்சர்
தென் நகர் இலங்கைத் தீமை தீர்வது திண்ணம், சேர்ந்து,
நன்னுதல்! நாமும் வெம் போர் காணுதும், நாளை' என்றான்.

**ஏமகூடத்தைத் தாண்டி, அனுமன் மேரு மலையின்மீது போதல்**

நாம யோசனைகள் கொண்டது ஆயிரம் நடுவு நீங்கி,
ஏமகூடத்தின் உம்பர் எய்தினன், இறுதி இல்லாக்
காமமே நுகரும் செல்வக் கடவுளர் ஈட்டம் கண்டான்;—
நேமியின் விசையின் செல்வான்—நிடதத்தின் நெற்றி உற்றான்.

எண்ணுக்கும், அளவு இலாத அறிவினோர் இருந்து நோக்கும்
கண்ணுக்கும், கருதும் தெய்வ மனத்திற்கும், கடியன் ஆனான்,
மண்ணுக்கும், திசைகள் வைத்த வரம்பிற்கும், மலரோன் வைகும்
விண்ணுக்கும், அளவை ஆன மேருவின்மீது சென்றான். 47

**பிரமன் முதலிய தேவர்களை வணங்கிச் செல்லுதல்**

'யாவதும் நிலைமைத் தன்மை இன்னது' என்று, இமையா நாட்டத்
தேவரும் தெரிந்திலாத வடமலைக்கு உம்பர்ச் சென்றான்;
நாவலம் பெருந் தீவு என்னு நளிர் கடல் வளாக வைப்பில்,
காவல் மூன்று உலகும் ஓதும் கடவுள் மா மரத்தைக் கண்டான்.† 48

அன்ன மா மலையின் உம்பர், உலகு எலாம் அமைத்த அண்ணல்
நல் நெடு நகரம் நோக்கி, அதன் நாடு நாப்பண் நாம
பொன் மலர்ப் பீடம்தன்மேல் நான்முகன் பொலியத் தோன்றும்
தன்மையும் கண்டு, கையால் வணங்கினான்—தருமம் போல்வான்.† 49

43. கமை - பொறுமை; 46. நாம யோசனைகள் - பேர் பெற்ற (ஒன்பதின்) ஆயிரம் யோசனைகள்; நேமியின் - சக்கரப்படை போல; நிடதத்தின் நெற்றி - நிடத மலையின் உச்சி; 47. கடியன் - விரைவுடையவன்.

தரு வனம் ஒன்றில், வானோர் தலைத்தலை மயங்கித் தாழ,
பொரு அரு முனிவர் வேதம் புகழ்ந்து உரை ஓதை பொங்க,
மரு விரி துளவ மோலி, மா நிலக் கிழத்தியோடும்
திருவொடும் இருந்த, மூலத் தேவையும் வணக்கம் செய்தான்.

ஆயதன் வட கீழ்ப் பாகத்து, ஆயிரம் அருக்கர் ஆன்ற
காய் கதிர் பரப்பி, ஐந்து கதிர் முகக் கமலம் காட்டி,
தூய பேர் உலகம் மூன்றும் தூவிய மலரின் சூழ்ந்த
சேயிழை பாகத்து, எண் தோள் ஒருவனை வணக்கம் செய்தான்.

சந்திரன் அனைய கொற்றத் தனிக் குடை தலையிற்று ஆக,
சுந்தர மகளிர் அங்கைச் சாமரை தென்றல் தூற்ற,
அந்தர வான நாடர் அடி தொழ, முரசம் ஆர்ப்ப,
இந்திரன் இருந்த தன்மை கண்டு உவந்து, இறைஞ்சிப் போனான்.†

பூ அலர் மரத்தைப் போர்ப்ப அந்தரம் விரிந்து பொங்கும்
தேவர்தம் இருக்கையான மேருவின் சிகர வைப்பில்,
மூவகை உலகும் சூழ்ந்த முரண் திசை முறையின் காக்கும்
காவலர் எண்மர் நின்ற தன்மையும் தெரியக் கண்டான்.† 53

அத் தடங் கிரியை நீங்கி, அத் தலை அடைந்த வள்ளல்,
உத்தரகுருவை உற்றான்; ஒளியவன் கதிர்கள் ஊன்றி,
செத்திய இருள் இன்றாக, விளங்கிய செயலை நோக்கி,
வித்தகன், 'விடிந்தது!' என்னா, 'முடிந்தது, என் வேகம்!' என்றான்.

'ஆதியான் உணராமுன்னம் அரு மருந்து உதவி, அல்லின்
பாதியால், அனைய துன்பம் அகற்றுவான் பாவித்தேற்குச்
சோதியான் உதயம் செய்தான்; உற்றது ஓர் துணிதல் ஆற்றேன்;
எது யான் செய்வது?' என்னா, இடர் உற்றான், இணை இலாதான். 55

கால் திசை சுருங்கச் செல்லும் கடுமையான்,—'கதிரின் செல்வன்
மேல் திசை எழுவான் அல்லன்; விடிந்ததும் அன்று; மேரு
மாற்றினன், வடபால் தோன்றும் என்பது மறைகள் வல்லோர்
சாற்றினர்' என்ன, துன்பம் தவிர்ந்தனன்—தவத்து மிக்கான்.

54. வித்தகன் - எடுத்துக்கொண்ட செயலைத் திறம்படச் செய்பவன்; 55. ஆதியான் - ஆதி மூர்த்தியாகிய இராமன்; அல்லின் பாதியால் - பாதி இரவுக்குள்; 56. கால் திசை - காற்றும் திசையும்; மேருமலைக்குத் தெற்கில் கீழ்த்திசையில் உதயமாகும் சூரியன் அவ்வியல்பை மாற்றி அதன் வடதிசையில் மேல்திசையில் உதயமாவான் என்பது புராணக் கொள்கை.

உத்தரகுரு நாட்டைக் கண்டு, அனுமன் அப்பால் போதல்

இருவரே தோன்றி, என்றும் ஈறு இலா ஆயுள் எய்தி,
ஒருவரோடு ஒருவர், உள்ளம் உயிரோடும் ஒன்றே ஆகி,
பொரு அரும் இன்பம் துய்த்து, புண்ணியம் புரிந்தோர் வைகும,
திரு உறை கமலம் அன்ன, நாட்டையும் தெரியக் கண்டான்.

வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன், மலரின் மேலான்,
கன்னி நாள் திருவைச் சேரும் கண்ணனும், ஆளும் காணி,
சென்னி நாள் தெரியல் வீரன், தியாக மா விநோதன் தெய்வப்
பொன்னி நாட்டு உவமை வைப்பை, புலன் கொள, நோக்கிப்போனான்.*

நீலமலைக்கு அப்பால் மருத்துமலையை அனுமன் காணுதல்

விரிய வன் மேரு என்னும் வெற்பினின் மீது செல்லும்
பெரியவன், அயனார் செல்வம் பெற்றவன், பிறப்பும் பேர்ந்தான்,
அரியவன், உலகம் எல்லாம் அளந்த நாள் வளர்ந்து தோன்றும்
கரியவன் என்ன நின்ற, நீல மால் வரையைக் கண்டான். 59

அல் குன்ற அலங்கு சோதி அம் மலை அகலப் போனான்,
பொன் குன்றம் அனைய தோளான் நோக்கினான், புலவன் சொன்ன
நல் குன்றம் அதனைக் கண்டான், உணர்ந்தனன்—'நாகம் முற்ற
எல் குன்ற எறியும் தெய்வ மருந்து அடையாளம்' என்ன. 60

மருத்துமலையை அனுமான் பெயர்த்து எடுத்து மீளுதல்

பாய்ந்தனன்; பாய்தலோடும், அம் மலை பாதலத்துச்
சாய்ந்தது; காக்கும் தெய்வம் சலித்தன, கடுத்து வந்து,
காய்ந்தது, 'நீதான் யாவன்? கருத்து என்கொல்? கழறுக!' என்ன,
ஆய்ந்தவன் உற்ற தன்மை அவற்றினுக்கு அறியச் சொன்னான். 61

கேட்டு அவை, 'ஐய! வேண்டிற்று இயற்றி, பின் கெடாமல் எம்பால்
காட்டு' என உரைத்து, வாழ்த்திக் கரந்தன; கமலக்கண்ணன்
வாள் தலை நேமி தோன்றி, மறைந்தது; மண்ணின்நின்றும்
தோட்டனன், அனுமன், மற்று அக் குன்றினை, வயிரத் தோளால். 62

57. நாடு - ஈண்டு உத்தரகுரு நாடு; 58. வன்னி நாட்டிய பொன் மௌலி- நெருப்பை நாட்டினாற் போன்ற பொன்னிறச் சடை, வன்னியிலை சூடியுள்ள பொன்னிறச் சடை எனலும் ஆம்; வன்னி - ஒரு மரம், ஈண்டு அதன் இலை; நாள் கன்னி - செவ்வி மாறாத கன்னிப் பருவம்; தியாக விநோதன் - சோழனுடைய பட்டப் பெயர்களுள் ஒன்று; தியாகத்தையே பெரும் போதுபோக்காகக் கொண்டவன்; 59. அயனார் செல்வம் - பிரமபதம்; பெற்றவன் - பெறப்போகிறவன், தெளிவு பற்றி இறந்த காலத்தில் கூறினார்; 60. நாகம் - விண்ணுலகம்; எல் - ஒளி; 61. ஆய்ந்தவன் - ஆராய்ந்தறியும் தன்மையுடையவனான அனுமன்; 62. வாள் தலை - கூரிய முனை; தோட்டல் - தோண்டுதல், பெயர்த்தல்.

'இங்கு நின்று, இன்னன மருந்து என்று எண்ணினால்,
சிங்குமால் காலம்' என்று உணரும் சிந்தையான்,
அங்குஅது வேரொடும் அங்கை தாழ்கினான்,
பொங்கிய விசும்பிடைக் கடிது போகுவான். 63

ஆயிரம் யோசனை அகன்று மீ உயர்ந்து,
ஆயிரம் யோசனை ஆழ்ந்தது அம் மலை,
'ஏ' எனும் மாத்திரத்து, ஒரு கை ஏந்தினான்.
தாயினன்—உலகு எலாம் தவழ்ந்த சீர்த்தியான். 64

அனுமனை அனுப்பிய பின், சாம்பனும் வீடணனும் இராமனைச் சென்று காணுதல்

அத் தலை, அன்னவன் அனையன் ஆயினான்;
இத் தலை, இருவரும் விரைவின் எய்தினார்,
கைத் தலத்தால் அடி வருடும் காலையில்,
உத்தமற்கு உற்றதை உணர்த்துவாம் அரோ. 65

வண்டு அன மடந்தையர் மனத்தை வேரொடும்
கண்டன, கொள வரும் கருணை தாம் எனக்
கொண்டன, கொடுப்பன வரங்கள், கோள் இலாப்
புண்டரீகத் துணை தருமம் பூத்தென; 66

நோக்கினன்—கரடிகட்கு அரசும், நோன் புகழ்
ஆக்கிய நிருதனும், அழுத கண்ணினர்,
தூக்கிய தலையினர், தொழுத கையினர்,
ஏக்கமுற்று, அருகு இருந்து, இரங்குவார்களை. 67

இராமன் அவர்களை உசாவுதல்

'ஏவிய காரியம் இயற்றி எய்தினை?
நோவிலை? வீடணா!' என்று நோக்கி, பின்,
தா அரும் பெரும் புகழ்ச் சாம்பன்தன்னை, 'நீ
'ஆவி வந்தனைகொல்?' என்று அருளினான் அரோ. 68

'ஐயன்மீர்! நம் குலத்து அழிவு இது ஆதலின்,
செய்வகை பிறிது இலை; உயிரின் தீர்ந்தவர்
உய்கிலர்; இனிச் செயற்கு உரியது உண்டுஎனின்,
பொய் இலீர்! புகலுதிர், புலமை உள்ளத்தீர்! 69

63. சிங்குதல் - குறைதல், ஈண்டுக் கழிதல்; பொங்கிய - விரிந்த; 65. இருவர் - வீடணன், சாம்பன் என்னும் இருவர்; 66. கோள் இலாப் புண்டரீகத் துணை - குற்றமற்ற தாமரைகளாகிய இரு கண்கள்; தாமரைக்குக் குற்றமாவது பனிக்குத் தேம்புதல்.

'சீதை என்று ஒருத்தியால் உள்ளம் தேம்பிய
பேதையேன், சிறுமையால் உற்ற பெற்றியை
யாது என உணர்த்துகேன்! உலகொடு ஈர்வுருக்
காதை, வன் பழியொடும் நிறுத்திக் காட்டினேன். 70

' '' மாயை இம் மான் '' என, எம்பி, வாய்மையான்,
தூயன உறுதிகள் சொன்ன சொல் கொளேன்,
போயினென்; பெண் உரை மறுது போகலால்,
ஆயது, இப் பழியுடை மரணம்—அன்பினீர்! 71

'கண்டனென், இராவணன்தன்னைக் கண்களால்;
மண்டு அமர் புரிந்தனென், வலியின்; ஆர் உயிர்
கொண்டிலென், உறவு எலாம் கொடுத்து, மாள, நான்,
பண்டுடைத் தீவினை பயந்த பண்பினால். 72

' '' தேவர்தம் படைக்கலம் தொடுத்து, தீயவன்
சாவது காண்டும் '' என்று இளவல் சாற்றவும்,
ஆவதை இசைந்திலென்,—அழிவது என்வயின்
மேவுதல் உறுவது ஓர் விதியின் வெம்மையால். 73

' நின்றிலென் உடன், நெறி படைக்கு நீதியால்
ஒன்றிய பூசனை இயற்ற உன்னினேன்;
பொன்றினர் நமர் எலாம்; இளவல் போயினான்;
வென்றிலென் அரக்கனை, விதியின் மேன்மையால்.* 74

' ஈண்டு, இவண் இருந்து, இவை இயம்பும் ஏழைமை
வேண்டுவது அன்று; இனி, அமரின் வீடிய
ஆண் தகை அன்பரை அமரர் நாட்டிடைக்
காண்டலே நலம்; பிற கண்டது இல்லையால். 75

' எம்பியைத் துணைவரை இழந்த யான், இனி,
வெம்பு போர் அரக்கரை முருக்கி, வேர்அறுத்து,
அம்பினின் இராவணன் ஆவி பாழ்படுத்து,
உம்பருக்கு உதவி, மேல் உறுவது என்அரோ? 76

' இளையவன் இறந்தபின், எவரும் என் எனக்கு?
அளவு அறு சீர்த்தி என்? அறன் என்? ஆண்மை என்?
கிளை உறு சுற்றம் என்? அரசு என்? கேண்மை என்?
விளைவுதான் என்? மறை விதி என்? மெய்ம்மை என்? 77

70. காதை - (என்) கதை.

'இரக்கமும் பாழ்பட எம்பி ஈறு கண்டு,
அரக்கரை வென்று நின்று, ஆண்மை ஆள்வெனேல்,
மரக் கண் வன் கள்வனே, வஞ்சனேன்; இனி,
கரக்குமது அல்லது, ஓர் கடன் உண்டாகுமோ? 78

' ''தாதையை இழந்தபின், சடாயு இற்றபின்,
காதலின் துணைவரும் மடிய, காத்து உழல்
கோது அறு தம்பியும் விளிய, கோள் இலன்,
சீதையை உவந்துளான்'' என்பர், சீரியோர். 79

'வென்றனென், அரக்கரை வேரும் வீய்ந்து அறக்
கொன்றனென், அயோத்தியைக் குறுகினேன், குணத்து
இன் துணை எம்பியை இன்றி, யான் உளேன்;
நன்று அரசு ஆளுமா, சால நன்றுஅரோ. 80

'படி இனது ஆதலின், யாதும் பார்க்கிலென்,
முடிகுவென், உடன்' என முடியக் கூறலும்,
அடி இணை வணங்கிய சாம்பன், 'ஆழியாய்!
நொடிகுவது உளது' என நுவல்வதாயினன்: 81

'உன்னை நீ உணர்கிலை; அடியனேன் உனை
முன்னமே அறிகுவேன்; மொழிதல் தீது, அது;
என் எனில், இமையவர் எண்ணுக்கு ஈனம் ஆம்;
பின்னரே தெரிகுதி;—தெரிவு இல் பெற்றியோய்! 82

'அம்புயத்து அயன் படை ஆதல் தேறினேன்,
உம்பியை, உலப்பு அரும் உருவை ஊன்றிட,
வெம்பு போர்க் களத்திடை வீழ்த்த வென்றியால்;
எம் பெருந் தலைவ! ஈது எண்ணம் உண்மையால்; 83

'அன்னவன் படைக்கலம், அமரர் தானவர்-
தன்னையும், விடின் உயிர் குடிக்கும்; தற்பர!
உன்னை ஒன்று இழைத்திலது, ஒழிந்து நீங்கியது;
இன்னமும் உவமை ஒன்று எண்ண வேண்டுமோ? 84

'பெருந் திறல் அனுமன், ஈண்டு உணர்வு பெற்றுளான்,
அருந் துயர் முடிக்குறும் அளவு இல் ஆற்றலான்,
மருந்து இறைப் பொழுதினில் கொணரும் வாய்மொழி
பொருந்தினன், வட திசைக் கடிது போயினன்.* 85

78. கரத்தல் - உயிர் போய் ஒளித்தல்; 79. கோள் இலன் - நல்ல கொள்கை இல்லாதவன்; 81. படி இனது - (என்) நிலைமை இவ்வாறு உளது; இனது - இன்னது; 84. தற்பரன் - மேலானவன்.

'பனி வரை கடந்தனன், பருப்பதங்களின்
தனி அரசு அதன்புறம் தவிர்ந்து சார்ந்துளான்,
இனி ஒரு கணத்தின் வந்து எய்தும்; ஈண்டுறும்
துனி வரு துன்பம் நீ துறத்தி, தொல்லையோய்! 86

'யான் அலால், எந்தையாய் உலகை ஈன்றுளான்-
தான் அலால், சிவன் அலால், நேமி தாங்கிய
கோன் அலால், எவரும் உணரும் கோள் இலர்,—
வேனிலான் மேனியாய்!—மருந்தை மெய் உற. 87

'ஆர்கலி கடைந்த நாள், அமிழ்தின் வந்தன;
கார் நிறத்து அண்ணல்தன் நேமி காப்பன;
மேருவின் உத்தரகுருவின்மேல் உள;
யாரும் மற்று உணர்கிலா அரணம் எய்தின;* 88

'தோன்றிய நாள் முதல் யாரும் தொட்டில;
ஆன்ற பேர் அண்ணலே! அவற்றின் ஆற்றல் கேள்:
மூன்று என ஒன்றிய உலகம், முன்னை நாள்,
ஈன்றவன் இறப்பினும், ஆவி ஈயுமால்; 89

'சல்லியம் அகற்றுவது ஒன்று; சந்துகள்
புல்லுறப் பொருத்துவது ஒன்று; போயின
நல் உயிர் நல்குவது ஒன்று; நல் நிறம்
தொல்லையது ஆக்குவது ஒன்று;—தொல்லையோய்! 90

'வருவது திண்ணம்; நீ வருந்தல்; மாருதி,
தரு நெறி தருமமே காட்ட, தாழ்க்கிலன்;
அருமையது அன்று' என, அடி வணங்கினன்;
இருமையும் துடைப்பவன் ஏம்பல் எய்தினன். 91

அனுமன் மலை கொண்டு வருதல்

' ''பொன்மலைமீது போய், போக பூமியின்
நல் மருந்து உதவும்'' என்று உரைத்த நல் உரைக்கு
அன்வயம் இல்லை என்று அயிர்க்கின்றேன்அலேன்'
என்னலும், விசும்பிடை எழுந்தது, அங்கு ஒலி, 92

86. பருப்பதங்களின் தனி அரசு - மேருமலை; 87. வேனிலான் - மன்மதன்; 88. அரணம் - பாதுகாவல்; 90. சல்லியம் - அம்பு; சந்துகள் - மூட்டுவாய்கள்; அம்புகளை உடலினின்றும் நீக்கும் மருந்து விசல்லிய கரணி என்றும், மூட்டுகளைப் பொருத்துவது சந்தான கரணி என்றும், போன உயிரைத் தருவது சஞ்சீவி கரணி என்றும், வடு நீக்கி முன்னைய உடலைத் தருவது சாவர்ணிய கரணி என்றும் பெயர் பெறும் என்பர்; 91. ஏம்பல் - மகிழ்ச்சி.

கடல் கிளர்ந்து எழுந்து மேல் படர, கார் வரை
இடை இடை பறிந்து விண் ஏற, இற்று இடை
தடை இலது உடற்றுறு சண்டமாருதம்
வட திசை தோன்றிய மறுக்கம் வந்ததால். 93

மீன் குலம் குலேந்து உக, வெயிலின் மண்டிலம்
தான் குலேந்து உயர் மதி தழுவ, தன்னுழை
மான் குலம் வெருக் கொள, மயங்கி, மண்டி, வான்,
தேன் குலம் கலங்கிய நறவின், சென்றவால். 94

வேர்த்துள தூரொடு விசும்பை மீச் செலப்
போர்த்தன, மலேயொடு மரனும், முன்புபோல்
தூர்த்தன, வேலேயை; காலின் தோன்றலும்,
ஆர்த்தனன், அனேயவர் அரந்தை ஆற்றுவான். 95

மழைகளும் கடல்களும், மற்றும் முற்றும், மண்-
உழையவும் விசும்பவும் ஒலித்தற்கு ஒத்துள,
குழீஇயின, குமுறின கொள்கை கொண்டதால்—
உழுவையின் சினத்தவன் ஆர்த்த ஓசையே. 96

எறி திரைப் பெருங் கடல் கடைய ஏற்ற நாள்,
'செறி சுடர் மந்தரம் தருதி, சென்று' என,
'வெறிதுகொல்!' எனக் கொடு, விசும்பின் மீச்செலும்
உறு வலிக் கலுழனே ஒத்துத் தோன்றினன். 97

பூதலத்து, அரவொடு மலேந்து போன நாள்,
ஓதிய வென்றியன், உடற்றும் ஊற்றத்தன்,
ஏதம் இல் இலங்கை அம் கிரிகொடு எய்திய
தாதையும் ஒத்தனன், உவமை தற்கு இலான்.* 98

'வந்தான்' என்பதற்குள்ளாக, அனுமன் வந்து,
நிலத்தில் அடி இடுதல்

'தோன்றினன்' என்னும் அச் சொல்லின் முன்னம் வந்து
ஊன்றினன், நிலத்து அடி; கடவுள் ஓங்கல்தான்
வான்தனில் நின்றது, வஞ்சர் ஊர் வர
ஏன்றிலதுஆதலின்; அனுமன் எய்தினன். 99

93. மறுக்கம் - கலக்கம்; 94. தன்னுழை - (சந்திரனிடத்து) தன்னிடத்து; நறவு - தேன், ஈண்டுத் தேன் கூடு; 96. உழுவை - புலி; 97. வெறிது - உள்ளீடு இல்லாதது.

மருத்துமலையின் காற்றால் யாவரும் உயிர் பெற்று எழுதல்

காற்று வந்து அசைத்தலும்,—கடவுள் நாட்டவர்
போற்றினர் விருந்து உவந்திருந்த புண்ணியர்—
ஏற்றமும் பெரு வலி அழகொடு எய்தினர்,
கூற்றினை வென்று, தம் உருவும் கூடினர். 100

அரக்கர்தம் ஆக்கைகள் அழிவு இல் ஆழியில்
கரக்கலுற்று ஒழிந்தன ஒழிய, கண்டன
மரக்குலம் முதலவும் உய்ந்து வாழ்ந்தன;
குரக்குஇனம் உய்ந்தது கூற வேண்டுமோ? 101

கழன்றன, நெடுங் கணை; கரந்த புண்; கடுத்து
அழன்றில குளிர்ந்தன, அங்கம்; செங் கண்கள்
சுழன்றன; உலகு எலாம் தொழுவ; தொங்கலின்
குழன்ற பூங் குஞ்சியான் உணர்வு கூடினன். 102

யாவரும் எழுந்தனர்; ஆர்த்த ஏழ் கடல்
தாவரும் பேர் ஒலி செவியில் சார்தலும்,—
தேவர்கள் வாழ்த்து ஒலி கேட்ட செங் கணன்
யோகம் நீங்கினன் என,—இளவல் ஓங்கினன். 103

இராமன் தம்பியைத் தழுவித் துயர் தீர்தல்

ஓங்கிய தம்பியை, உயிர் வந்து உள் உற
வீங்கிய தோள்களால் தழுவி, வெந் துயர்
நீங்கினன், இராமனும்; உலகில் நின்றில,
தீங்கு உள; தேவரும் மறுக்கம் தீர்ந்தனர். 104

அரம்பையர் ஆடினர்; அமிழ்த ஏழ் இசை,
நரம்பு இயல் கின்னரம் முதல நன்மையே
நிரம்பின; உலகு எலாம் உவகை நெய் விழா
பரம்பின; முனிவரும் வேதம் பாடினர். 105

வேதம் நின்று ஆர்த்தன; வேத வேதியர்
போதம் நின்று ஆர்த்தன; புகழும் ஆர்த்தன;
ஓதம் நின்று ஆர்த்தன; ஓத வேலையின்
சீதம் நின்று ஆர்த்தன, தேவர் சிந்தனை. 106

101. மரக்குலம் - (வானரர்களால் பறிக்கப்பட்டுப் பட்டுப்போன) மரங்கள்; 102. பூங் குஞ்சியான் - அழகிய மயிர் முடியை உடைய இலக்குவன்; 105. பரம்புதல் - பரவுதல்; 106. ஓதம் - அலை.

அயன் படை அகல்தல்

'உந்தின பின் கொலை ஒழிவு இல் உண்மையும்
தந்தனை நீ; அது நினக்குச் சான்று' என,
சுந்தரவில்லியைத் தொழுது, சூழ வந்து,
அந்தணன் படையும் நின்று, அகன்று போயதால். 107

ஆய காலையின், அமரர் ஆர்த்து எழ,
தாயின் அன்பனைத் தழுவினன்,—தனி
நாயகன், பெருந் துயரம் நாம் அற,
தூய காதல் நீர் துளங்கு கண்ணினன். 108

எழுது குங்குமத் திருவின் ஏந்து கோடு
உழுத மார்பினன், உருகி, உள் உறத்
தழுவி நிற்றலும், தாழ்ந்து, தாள் உறத்
தொழுத மாருதிக்கு, இனைய சொல்லினன்: 109

இராமன் அனுமனைப் புகழ்ந்து, வாழ்த்துக் கூறுதல்

'முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது.
என்னின் தோன்றிய துயரின், ஈறு சேர்
மன்னின் தோன்றினோம் முன்னம்; மாண்டுளோம்;
நின்னின் தோன்றினோம், நெறியின் தோன்றினாய்! 110

'அழியுங்கால் தரும் உதவி, ஐயனே!
மொழியுங்கால், தரும் உயிரும் முற்றுமே?
பழியும் காத்து, அரும் பகையும் காத்து, எமை
வழியும் காத்தனை; நம் மறையும் காத்தனை. 111

'தாழ்வில் இங்கு இறைப்பொழுது தக்கதே.
வாழி எம்பிமேல் அன்பு மாட்ட, வான்
ஏழும் வீயும்; என் பகர்வது?—எல்லை நாள்
ஊழி காணும் நீ, உதவினாய் அரோ! 112

'இன்று வீகலாது, எவரும் எம்மொடு
நின்று வாழுமா நெடிது நல்கினாய்;
ஒன்றும் இன்னல் நோய் உறுகிலாது, நீ
என்றும் வாழ்தியால் இனிது, என் ஏவலால்!' 113

107. உந்தின பின் - செலுத்தின பின்பு; 108. நாம் அற - பெயரும் அற்றதாய் ஒழிய; 109. திரு - சீதை; கோடு - யானைக்கொம்பு போன்ற கொங்கைகள்.

மற்றையோர்களும், அனுமன் வண்மையால்,
பெற்ற ஆயுளார், பிறந்த காதலார்,
சுற்றும் மேவினர்; தொழுது வாழ்த்தினர்;
உற்றவாறு எலாம் உணரக் கூறினன். 114

மருத்துமலையுடன் அனுமன் மீண்டு போதல்

'உய்த்த மா மருந்து உதவ, ஒன்னலார்,
பொய்த்த சிந்தையார், இறுதி பொய்க்குமால்;
மொய்த்த குன்றை அம் மூல ஊழிவாய்
வைத்து, மீடியால்—வரம்பு இல் ஆற்றலாய்!' 115

என்று சாம்பன் ஆண்டு இயம்ப, ' ஈதுஅரோ
நன்று, சால!' என்று, உவந்து, ' ஓர் நாழிகைச்
சென்று மீள்வென் ' என்று எழுந்து, தெய்வ மாக்
குன்று தாங்கி, அக் குரிசில் போயினன். 116

## 24 களியாட்டுப் படலம்

பகை ஒழிந்தது என்று உவந்த இராவணன், மகளிரின் களியாட்டம் காணுதல்

இன்னது இத் தலையது ஆக, இராவணன் எழுந்து பொங்கி,
தன்னையும் கடந்து நீண்ட உவகையன், சமைந்த கீதம்
கின்னரர் முதலோர் பாட, முகத்திடைக் கிடந்த கெண்டைக்
கன்னி நன் மயில் அன்னாரை நெடுங் களியாட்டம் கண்டான். 1

அரம்பையர், விஞ்சை, மாதர், அரக்கியர், அவுணர் மாதர்,
குரும்பை அம் கொங்கை நாகர் கோதையர், இயக்கர் கோது இல்
கரும்பினும் இனிய சொல்லார், சித்தர்தம் கன்னிமார்கள்,
வரம்பு அறு சும்மையோர்கள், மயில்-குலம் மருள, வந்தார். 2

மேனகை, விசய வாட்கண் திலோத்தமை. அரம்பை, மெல்லென்
தேன் நகு மழலை இன் சொல் உருப்பசி, முதலாம் தெய்வ
வானக மகளிர் வந்தார்—சில் அரிச் சதங்கை பம்ப,
ஆனகம், முரசம், சங்கம், முருட்டொடும் இரட்ட, ஆடி. 3

115. மூல ஊழி - பழமையான இடம்; ஊழி - இடம்; மீடி - மீள்தி.

24: 2. சும்மை - திரள், கூட்டம்; 3. ஆனகம் - படகம், ஒருவகை இசைக்கருவி; முருடு - மத்தளம்.

தோடு உண்ட சுருளும், தூங்கும் குழைகளும், சுருளின் தோய்ந்த
ஏடு உண்ட பசும் பொன் பூவும், திலதமும், இலவச் செவ் வாய்
மூடுண்ட முறுவல் முத்தும், முள்ளுண்ட முளரிச் செங்கண்,
காடு உண்டு புகுந்தது என்ன, முனிந்தது—கறை வெண் திங்கள். 4

மூளைக் கொழுங் கதிரின் கற்றை முறுவல் வெண் நிலவும், மூரி
ஒளிப் பிழம்பு ஒழுகும் பூணின் உமிழ் இள வெயிலும், ஒண் பொன்
விளக்கையும் விளக்கும் மேனி மிளிர் கதிர்ப் பரப்பும், வீச,
வளைத்த பேர் இருளும், கண்டோர் அறிவு என, மருளும் மாதோ. 5

கள்ளுண்டார் நிலை

நல் பெருங் கல்விச் செல்வம் நவை அறு நெறியை நண்ணி,
முன் பயன் உணர்ந்த தூயோர் மொழியொடும் பழகி, முற்றி,
பின் பயன் உணர்தல் தேற்றாப் பேதைபால், வஞ்சன் செய்த
கற்பனை என்ன ஓடிக் கலந்தது, கள்ளின் வேகம். 6

பல பட முறுவல் வந்து பரந்தன; பனித்த, மெய் வேர்;
இலவு இதழ் துடித்த; முல்லை எயிறு வெண் நிலவை ஈன்ற;
கொலை பயில் நயன வேல்கள் கொழுங் கடை சிவந்த; கொற்றச்
சிலை நிகர் புருவம் நெற்றிக் குனித்தன; விளர்த்த செவ் வாய்;

கூந்தல் அம் பாரக் கற்றைக் கொந்தளக் கோலக் கொண்டல்
ஏந்து அகல் அல்குல் தேரை இகந்துபோய் இறங்க, யாணர்ப்
பூந் துகிலோடும் பூசல் மேகலை, சிலம்பு பூண்ட
மாந் தளிர் எய்த, நொய்தின் மயங்கினர்—மழலைச் சொல்லார்.

கோத்த மேகலையினோடும் துகில் மணிக் குறங்கைக் கூட,
காத்தன, கூந்தற் கற்றை, அற்றம், அத் தன்மை கண்டு—
வேத்தவை, 'கீழ் உளோர்கள் கீழ்மையே விளைத்தார்; மேலோர்
சீர்த்தவர் செய்யத் தக்க கருமமே செய்தார்' என்ன. 9

4. தோடு உண்ட சுருள் - பனந்தோட்டின் தன்மை பொருந்திய காதணி; சுருளில் தோய்ந்த பூ - ஐம்பால் முடிவகையில் ஒன்றான சுருளில் அமைந்த பூ; 6. செல்வம் - செல்வத்தால்; பேதைபால் வஞ்சன் செய்த கற்பனை, அப்பேதையின் உள்ளத்தில் விரைந்து பதிவதுபோலக் கள்ளின் மயக்கம் பெண்டிர்பால் விரைந்து கலந்தது; 8. கொந்தளக் கொண்டல் - பொங்கி எழுதலையுடைய மேகம்; மாந்தளிர் - மாந்தளிர் போன்ற அடிகள்; 9. அற்றம் - மறைவிடம்; வேத்தவை - அரசவை; ஈண்டு இராவணனுடைய அவை எனக் கோடலும் ஆம்; சீர்த்தவர் - சிறந்த குணமுடையோர்.

பாணியின் தள்ளி, கால மாத்திரைப் படாது பட்ட
நாணியின் முறையின் கூடாது, ஒரு வழி நடையின் செல்லும்
ஆணியின் அழிந்த பாடல் நவின்றனர்—அனங்க வேள் தன்
தூணியின் அடைத்த அம்பின் கொடுந் தொழில் துறந்த கண்ணார். 10

வங்கியம் வகுத்த கானம் வயங்கிய மழலை வாயர்,
சங்கை இல் பெரும் பாண் உற்ற நிறத்துறை நிரம்பித் தள்ள,
சிங்கல் இல் அமுதினோடும் புளி அளாம் தேறல் என்ன,
வெங் குரல் எடுத்த பாடல் விளித்தனர், மயக்கம் வீங்க. 11

ஏனைய பிறவும் கண்டார்க்கு இந்திரசாலம் என்ன,—
தான் அவை உருவில் தோன்றும் பாவனைத் தகைமை சான்றோர்,—
மான் அமர் நோக்கினாரை மைந்தரைக் காட்டி, வாயால்
ஆனையை விளம்பி, தேரை அபிநயத்து இயற்றி உற்றார். 12

அழுகுவர்; நகுவர்; பாடி ஆடுவர்; அயல் நின்றாரைத்
தொழுகுவர்; துயில்வர்; துள்ளித் தூங்குவர்; துவர் வாய் இன் தேன்
ஒழுகுவர்; ஒல்கி ஒல்கி; ஒருவர்மேல் ஒருவர் புக்கு,
முழுகுவர், குருதி வாட் கண் முகிழ்த்து, இடை, மூரி போவர்

உயிர்ப்புறத்து உற்ற தன்மை உணர்த்தினர், 'உள்ளத்து உள்ளது
அயிர்ப்பினில் அறிதிர்' என்றே; அது களியாட்டம் ஆக,
செயிர்ப்பு அறு தெய்வச் சிந்தைத் திரு மறை முனிவர்க்கேயும்,
மயிர்ப்புறம்தோறும் வந்து பொடித்தது, காம வாரி. 14

மாப் பிறழ் நோக்கினார் தம் மணி நெடுங் குவளை வாட் கண்
சேப்புற, அரத்தச் செவ் வாய்ச் செங் கிடை வெண்மை சேர,
காப்பு உறு படைக் கைக் கள்வ நிருதர்க்கு ஓர் இறுதி காட்டி,
பூப் பிறழ்ந்து உருவம் வேறாய்ப் பொலிந்தது ஓர் தன்மை போன்ற. 15

கயல், வரு காலன் வை வேல், காமவேள் கணை, என்றாலும்,
இயல் வருகிற்கிலாத நெடுங் கணார், இணை மென் கொங்கைத்
துயல்வரு கனக நாணும், காஞ்சியும், துகிலும், வாங்கி,
புயல் வரு கூந்தல் பாரக் கற்றையின் புனையலுற்றார். 16

10. பாணி - தாளமுறை; கால மாத்திரை - கால அளவு; நாணியின் முறை - நரம்பு ஒலிக்கும் முறை; ஆணி - வரம்பு; 11. வங்கியம் - புல்லாங் குழல்; சங்கை - குற்றம்; பெரும் பாண் உற்ற - பெரும் பாணர்கள் கண்டறிந்த; நிறத் துறை - விளக்கமான துறை; நிரம்பித் தள்ள - மிக்கு மாறுபட்டுப் போக; சிங்கல் - குறைதல்; 12. தான் - அசைநிலை; அவை உருவில் தோன்றும் பாவனை - அவ்வப் பொருள்களைத் தம் உருவில் தோற்றுவிக்கும் அபிநயம்; 13. மூரிபோதல் - சோம்பல் முறித்தல்; 14. உயிர்ப்புறம் - உடம்பு; காம வாரி - காம உணர்ச்சியாகிய வெள்ளம்; 15. மாப் பிறழ் நோக்கினர் - வண்டுகள் பிறழ்வது போலும் கண்ணினர்; செங் கிடை - சிவந்த நெட்டி; 16. காஞ்சி - மேகலை என்னும் இடையணி.

**வானரர் ஆர்ப்பொலியும் அதன் விளைவும்**

முத்து அன்மை மொழியல் ஆகா முகிழ் இள முறுவல் நல்லார்,
இத் தன்மை எய்த நோக்கி, அரசு வீற்றிருந்த எல்லை,
அத் தன்மை அரியின் சேனை ஆர்கலி ஆர்த்த ஓசை
மத்தன் மெய் மயங்க வந்து, செவிதொறும் மடுத்தது அன்றே.

ஆடலும், களியின் வந்த அமலையும், அமிழ்தின் ஆன்ற
பாடலும், முழவின் தெய்வப் பாணியும், பவள வாயார்
ஊடலும், கடைக்கண் நோக்கும், மழலை வெவ் உரையும், எல்லாம்
வாடல் மென் மலரே ஒத்த—ஆர்ப்பு ஒலி வருதலோடும். 18

தறி பொரு களி நல் யானை சேவகம் தள்ளி ஏங்க,
துறு சுவல் புரவி தூங்கித் துணுக்குற, அரக்கர் உட்க,
செறி கழல் இருவர் தெய்வச் சிலை ஒலி பிறந்தது அன்றே—
எறி கடல் கடைந்த மேல்நாள், எழுந்த பேர் ஓசை என்ன. 19

முத்து வாள் முறுவல் மூரல் முகத்தியர், முழுக் கண் வேலால்
குத்துவார், கூட்டம் எல்லாம் வானரக் குழுவின் தோன்ற,
மத்து வார் கடலின் உள்ளம் மறுகுற, வதனம் என்னும்
பத்து வாள் மதிக்கும், அந் நாள், பகல் ஒத்தது இரவும், பைய.

ஈது இடை ஆக, வந்தார், அலங்கல்மீது ஏறினர்போய்
ஊதினர், வேய்கள், வண்டின் உருவினர், உற்ற எல்லாம்;
'தீது இலர், பகைஞர்' என்ன, திட்கென்ற மனத்தன், தெய்வப்
போது உகு பந்தர்நின்று, மந்திரத்து இருக்கை புக்கான். 21

## 25 மாயா சீதைப் படலம்

**இந்திரசித்து முதலியோர்க்கு இராவணன் நிலைமையைக் கூறுதல்**

மைந்தனும், மற்றுளோரும், மகோதரன் முதலோர் ஆய
தந்திரத் தலைமையோரும், முதியரும், தழுவத் தக்க
மந்திரர் எவரும், வந்து, மருங்கு உறப் படர்ந்தார்; பட்ட
அந்தரம் முழுதும் தானே அனையவர்க்கு அறியச் சொன்னான்;

17. அரி - குரங்கு; மத்தன் - காமப் பித்தனாகிய இராவணன்; 18. வெவ் உரை - விருப்பமூட்டும் சொல்; 19. சேவகம் - யானைக் கூடம்; தள்ளி ஏங்க - சோர்ந்து ஏங்க; துறு சுவல் - நெருங்கிய பிடரி மயிர்; 20. மத்து - மந்தரமலையாகிய மத்து; 21. வேய்கள் - ஒற்றர்கள்.

25 : 1. தந்திரம் - சேனை.

மாலியவான் அறிவுரை

'நம் கிளை உலந்தது எல்லாம் உய்ந்திட, நணுகும் அன்றே,
வெங் கொடுந் தீமைதன்னல் வேலையில் இட்டிலேமேல்?
இங்கு உள எல்லாம் மாள்தற்கு இனி வரும் இடையூறு இல்லை,
பங்கயத்து அண்ணல் மீளாப் படை பழுதுற்ற பண்பால். 2

'இலங்கையின்நின்று, மேரு பிற்பட, இமைப்பில் பாய்ந்து,
வலம் கிளர் மருந்து, நின்ற மலையொடும், கொணர வல்லான்
அலங்கல் அம் தடந் தோள் அண்ணல் அனுமனே ஆதல் வேண்டும்—
கலங்கல் இல் உலகுக்கு எல்லாம் காரணம் கண்ட ஆற்றல். 3

'நீரினைக் கடக்க வாங்கி, இலங்கையாய் நின்ற குன்றைப்
பாரினில் கிழிய வீசின், ஆர் உளர், பிழைக்கற்பாலார்?
போர் இனிப் பொருவது எங்கே? போயின அனுமன், பொன் மா
மேருவைக் கொணர்ந்து, இவ் ஊர்மேல் விடும் எனின், விலக்கல் ஆமோ?

'முறை கெட வென்று, வேண்டின் நினைந்ததே முடிப்பன்; முன்னின்,
குறை இல குணங்கட்கு; என்னே, கோள் இலா வேதம் கூறும்
இறைவர்கள் மூவர் என்பது? எண் இலார் எண்ணமேதான்;
அறை கழல் அனுமனேடும் நால்வரே முதல்வர் அம்மா. 5

'இறந்தவர் இறந்து தீர; இனி ஒரு பிறவி வந்து
பிறந்தனம்ஆகின்; உள்ளேம்; உய்ந்தனம், பிழைக்கும் பெற்றி
மறந்தனம்; எனினும், இன்னம் சனகியை மரபின் ஈந்து, அவ்
அறம் தரு சிந்தையோரை அடைக்கலம் புகுதும், ஐய! 6

'வாலியை வாளி ஒன்றால் வானிடை வைத்து, வாரி
வேலையை வென்று, கும்பகருணனை வீட்டினனை,
ஆலியின் மொக்குள் அன்ன அரக்கரோ, அமரின் வெல்வார்?—
சூலியைப் பொருப்பினேடும் தூக்கிய விசயத் தோளாய்! 7

'மறி கடல் குடித்து, வானை மண்ணெடும் பறிக்க வல்ல
எறி படை அரக்கர் எல்லாம் இறந்தனர்; இலங்கை ஊரும்,
சிறுவனும் நீயும் அல்லால், ஆர் உளர், ஒருவர் தீர்ந்தார்?
வெறிது, நம் வென்றி' என்றான், மாலி, மேல் விளைவது ஓர்வான். 8

4. விலங்கல் - தடுத்தல்; 5. எண் இலார் - ஆராயும் வன்மை இல்லாதவர்; 7. ஆலி - மழை நீர்; சூலி - சிவபிரான்; 8. சிறுவன் - இந்திரசித்தன்.

சீதையை விட ஒருப்படாது, இராவணன் வீரம் பேசுதல்

கட்டுரை அதனைக் கேளா, கண் எரி கதுவ நோக்கி,
'பட்டனர் அரக்கர் என்னின், படைக்கலம் படைத்த எல்லாம்
கெட்டன எனினும், வாழ்க்கை கெடாது; இனி, கிளி அனை
விட்டிட எண்ணியோ நான் பிடித்தது, வேட்கை வீய? 9

'மைந்தன் என்? மற்றையோர் என்? அஞ்சினிர்; வாழ்வு வேட்டிர்!
உய்ந்து நீர் போமின்; நாளை, ஊழி வெந் தீயின் ஓங்கி,
சிந்திய மனித்தரோடு, அக் குரங்கினைத் தீர்ப்பென்' என்றான்,
வெந் திறல் அரக்கர் வேந்தன். மகன் இவை விளம்பலுற்றான்:

நிகும்பலை வேள்வி குறித்து இந்திரசித்தன் கூறுதல்

'உளது நான் உணர்த்தற்பாலது, உணர்ந்தனை கோடல் உண்டேல்;
தள மலர்க் கிழவன் தந்த படைக்கலம் தழலின் சார்த்தி,
அளவு இலது அமைய விட்டது, இராமனை நீக்கி அன்றால்;
விளைவு இலது, அனையன் மேனி திண்டில, மீண்டது அம்மா! 11

'மானிடன் அல்லன்; தொல்லை வானவன் அல்லன்; மற்றும்,
மேல் நிமிர் முனிவன் அல்லன்; வீடணன் மெய்யின் சொன்ன,
யான் எனது எண்ணல் தீர்ந்தார் எண்ணுறும் ஒருவன் என்றே,—
தேன் உகு தெரியல் மன்ன!—சேகு அறத் தெரிந்தது அன்றே.

'அனையது வேறு நிற்க; அன்னது பகர்தல் ஆண்மை
வினையன அன்று; நின்று வீழ்ந்தது வீழ்க! வீர!
இனையல் நீ; மூண்டு யான் போய், நிகும்பலை விரைவின் எய்தி,
துனி அறு வேள்வி வல்லை இயற்றினால், முடியும், துன்பம். 13

இராவணன், நிகும்பலை வேள்வி முடிக்கும் உபாயம் வினவல்

'அன்னது நல்லதேயால்; அமைதி' என்று அரக்கன் சொன்னான்;
நல் மகன், 'உம்பி கூற, நண்ணலார் ஆண்டு நண்ணி,
முன்னிய வேள்வி முற்றாவகை செரு முயல்வர்' என்ன,
'என், அவர் எய்தாவண்ணம் இயற்றலாம் உறுதி?' என்றான்:

இந்திரசித்தன் விடை

'சானகி உருவமாகச் சமைத்து, அவள் தன்மை கண்ட
வான் உயர் அனுமன்முன்னே, வாளினால் கொன்று மாற்றி,
யான் நெடுஞ் சேனையோடும் அயோத்திமேல் எழுந்தேன் என்னப்
போனபின், புரிவது ஒன்றும் இலாது அவர் துயரம் பூண்பார்.

11. தளம் - இதழ்; விளைவு இலது - பயன் இல்லாததாய்; 12. சேகு - ஐயம்; 14. அமைதி - அவ்வாறே செய்வாய்.

' "இத் தலைச் சீதை மாண்டாள்; பயன் இவண் இல்லை" என்பார்,
அத் தலை, தம்பிமாரும், தாயரும், அடுத்துளோரும்,
உத்தம நகரும், மாளும் என்பது ஓர் வருத்தம் ஊன்ற,
பொத்திய துன்பம் மூள, சேனையும் தாமும் போவார். 16

'போகலர் என்ற போதும், அனுமனை ஆண்டுப் போக்கி,
ஆகியது அறிந்தால் அன்றி, அருந் துயர் ஆற்றல் ஆற்றார்;
ஏகிய கருமம் முற்றி, யான் இவண் விரைவின் எய்தி,
வேக வெம் படையின் கொன்று, தருகுவென் வென்றி' என்றான். 17

மாயா சீதை அமைக்க மேகநாதனும், இலங்கையை எரியூட்ட வானரங்களும் செல்லுதல்

'அன்னது புரிதல் நன்று' என்று அரக்கனும் அமைய, அம் சொல்
பொன் உரு அமைக்கும் மாயம் இயற்றுவான் மைந்தன் போனான்;
இன்னது இத் தலையது ஆக, இராமனுக்கு, இரவி செம்மல்,
'தொல் நகர்அதனை வல்லைக் கடி கெடச் சுடுதும்' என்றான்.

'அத் தொழில் புரிதல் நன்று' என்று அண்ணலும் அமைய, எண்ணி,
தத்தினன், இலங்கை மூதூர்க் கோபுரத்து உம்பர்ச் சார்ந்தான்;
பத்துடை ஏழு சான்ற வானரப் பரவை பற்றிக்
கைத்தலத்து ஓர் ஓர் கொள்ளி எடுத்தது, எவ் உலகும் காண.

எண்ணின கோடிப் பல் படை யாவும்,
மண்ணுறு காவல் திண் மதில் வாயில்,
வெண் நிற மேகம் மின்இனம் வீசி
நண்ணின போல்வ, தொல் நகர் நாண. 20

ஆசைகள்தோறும் அள்ளின கொள்ளி,
மாசு அறு தானை மர்க்கட வெள்ளம்,
'நாசம் இவ் ஊருக்கு உண்டு' என, நள்ளின்
வீசின, வானின் மீன் விழும் என்ன. 21

வஞ்சனை மன்னன் வாழும் இலங்கை,
குஞ்சரம் அன்னார் வீசிய கொள்ளி,
அஞ்சன வண்ணன் ஆழியில் ஏவும்
செஞ் சரம் என்னச் சென்றன மென்மேல்.* 22

16. பொத்திய துன்பம் - கலந்த துயரம்; 18. பொன் உரு - சீதையின் உருவம்; 19. எண்ணி அமைய என மாற்றுக.

இலங்கையில் தீ பரவுதல்

கை அகல் இஞ்சிக் காவல் கலங்க,
செய்ய கொழுந் தீ சென்று நெருங்க,
ஐயன் நெடுங் கார் ஆழியை அம்பால்
எய்ய எரிந்தால் ஒத்தது, இலங்கை. 23

பரல் துறு தொல் பழுவத்து எரி பற்ற,
நிரல் துறு பல் பறவைக் குலம், நீளம்
உரற்றின, விண்ணின் ஒலித்து எழும் வண்ணம்
அரற்றி எழுந்தது, அடங்க இலங்கை.* 24

மூஉலகத்தவரும், முதலோரும்
மேவின வில் தொழில் வீரன் இராமன்,
தீவம் எனச் சில வாளி செலுத்த,
கோவுரம் இற்று விழுந்தது, குன்றின். 25

மீண்ட அனுமான் ஆர்ப்பொலியால் இலங்கை நடுங்குதல்

இத் தலை, இன்ன நிகழ்ந்திடும் எல்லை,
கைத்தலையில் கொடு காலின் எழுந்தான்,
உய்த்த பெருங் கிரி மேருவின் உப்பால்
வைத்த, நெடுந் தகை மாருதி வந்தான். 26

அறை அரவக் கழல் மாருதி ஆர்த்தான்;
உறை அரவம் செவி உற்றுளது, அவ் ஊர்;
சிறை அரவக் கலுழன் கொடு சீறும்
இறை அரவக் குலம் ஒத்தது, இலங்கை. 27

அனுமன் முன்னிலையில், இந்திரசித்தன் மாயாசிதையைக் 'கொல்வேன்' எனல்

மேல் திசை வாயிலை மேவிய வெங் கண்
காற்றின் மகன்தனை வந்து கலந்தான்—
மாற்றல் இல் மாயை வகுக்கும் வலத்தான்,
கூற்றையும் வென்று உயர் வட்டணை கொண்டான். 28

23. கை அகல் இஞ்சி - இடம் அகன்ற மதில்; 24. நீளம் - கூடு; எழும் வண்ணம் - எழுதல் போல; 25. தீவம் - தீபம்; கோவுரம் - கோபுரம், எதுகை நோக்கித் திரிந்தது; 27. உறை அரவம் - (அங்குத்) தோன்றிய அரவம்; இறை அரவக் குலம் - தலைமையுடைய பாம்பின் கூட்டம்; 28. வட்டணை கொள்ளல் - பெருந்தாளம் இடுதல்.

சானகி ஆம்வகை கொண்டு சமைத்த
மான் அனையாளை வடிக் குழல் பற்று,
ஊன் நகு வாள் ஒரு கைக்கொடு உருத்தான்,
ஆனவன் இன்னன சொற்கள் அறைந்தான்: 29

'வந்து, இவள் காரணம் ஆக மலைந்தீர்;
எந்தை இகழ்ந்தனன்; யான் இவள் ஆவி
சிந்துவென்' என்று செறுத்து, உரை செய்தான்;
அந்தம் இல் மாருதி அஞ்சி அயர்ந்தான். 30

**அனுமன் இந்திரசித்தனுக்கு நீதி கூறுதல்**

'கண்டவளே இவள்' என்பது கண்டான்,
'விண்டதுபோலும், நம் வாழ்வு' என வெந்தான்;
கொண்டு, இடை தீர்வது ஓர் கோள் அறிகில்லான்,
'உண்டு உயிரோ!' என, வாயும் உலர்ந்தான். 31

'யாதும் இனிச் செயல் இல்' என எண்ணு,
'நீதி உரைப்பது நேர்' என, ஓரா,
'கோது இல் குலத்து ஒரு நீ குணம் மிக்காய்!
மாதை ஒறுத்தல் வசைத் திறம் அன்றோ? 32

'நான்முகனுக்கு ஒரு நால்வரின் வந்தாய்;
நூல்முகம் முற்றும் நுணங்க உணர்ந்தாய்;
பால் முகம் உற்ற பெரும் பழி அன்றோ,
மால் முகம் உற்று, ஒரு மாதை வதைத்தல்? 33

'மண் குலைகின்றது; வானும் நடுங்கிக்
கண் குலைகின்றது; காணுதி, கண்ணால்;
எண் குலைகின்றது இரங்கல் துறந்தாய்!
பெண் கொலை செய்கை பெரும் பழி அன்றோ? 34

'என்வயின் நல்கினை ஏகுதி என்றால்,
நின் வயம் ஆம், உலகு யாவையும்; நீ நின்
அன்வயம் ஏதும் அறிந்திலை; ஐயா!
புன்மை தொடங்கல்; புகழ்க்கு அழிவு' என்றான்.* 35

30. செறுத்து - சினந்து; 33. நான்முகனுக்கு ஒரு நால்வரின் - பிரமனுக்கு ஒரு நாலாம் தலைமுறையில்; பால் முகம் உற்ற - (விலக்கப்பட்ட) பகுதிகளில் முதன்மை பெற்ற; மால் முகம் உற்று - அறிவு மயங்கி; 35. அன்வயம்- குலம், ஈண்டுக் குலப் பெருமை.

இந்திரசித்தன் மறுமொழி

'எந்தையும் இந்த இலங்கை உளோரும்,
உய்ந்திட, வானவர் யாவரும் ஓடச்
சிந்துவென் வாளினில்' என்று செறுத்தான்,
இந்திரசித்தவன் இன்ன இசைத்தான்: 86

'போமின், அடா! வினை போயது போலாம்;
ஆம் எனில், இன்னும் அயோத்தியை அண்மி,
காமின்; அது இன்று கனல் கரி ஆக
வேம்; அது செய்து, இனி மீள்குவென்' என்றான். 87

'தம்பியர்தம்மொடு தாயரும் ஆயோர்,
உம்பர் விலக்கிடினும், இனி உய்யார்;
வெம்பு கடுங் கனல் வீசிடும் என் கை
அம்புகளோடும் அவிந்தனர் அம்மா! 88

'இப்பொழுதே கடிது ஏகுவென், யான்; இப்
புட்பக மானம்அதில் புக நின்றேன்;
தப்புவரே அவர், சங்கை இலா என்
வெப்பு உறு வாளிகள் ஓடி விரைந்தால்? 89

மாயா சீதையை வெட்டி, இந்திரசித்தன் படையுடன் வடக்கு நோக்கி எழுதல்

'ஆளுடையாய்! அருளாய், அருளாய்!' என்று
ஏழை வழங்குறு சொல்லின் இரங்கான்,
வாளின் எறிந்தனன்; மா கடல் போலும்
நீள் உறு சேனையினோடு நிமிர்ந்தான். 40

தென் திசைநின்று வடாது திசைக்கண்
பொன் திகழ் புட்பகம்மேல்கொடு போனான்;
ஒன்றும் உணர்ந்திலன், மாருதி, உக்கான்,
வென்றி நெடுங் கிரி போல விழுந்தான். 41

இந்திரசித்தன் நிகும்பலை புகுதல்

போய், அவன் மாறி நிகும்பலை புக்கான்;
தூயவன் நெஞ்சு துயர்ந்து சுருண்டான்;
ஓய்வொடு நெஞ்சம் ஒடுங்க உலர்ந்தான்;
ஏயன பன்னினன், இன்னன சொன்னான்: 42

39. சங்கை - எண்ணிக்கை; வெப்புறு வாளிகள் - வெப்பம் பொருந்திய அம்புகள்; 42. துயர்ந்து - வருந்தி, துயர் என்ற பெயரினடியாகப் பிறந்த வினையெச்சம்.

அனுமன் அரற்றல்

'அன்னமே!' என்னும்; 'பெண்ணின் அருங் குலக் கலமே!' என்னும்;
'என் அமே!' என்னும்; 'தெய்வம் இல்லையோ, யாதும்?' என்னும்;
'சின்னமே செய்யக் கண்டும், தீவினை நெஞ்சம் ஆவி
பின்னமே ஆயதுஇல்லை' என்னும்—பேர் ஆற்றல் பேர்ந்தான்.

எழுந்து, அவன்மேலே பாய எண்ணும்; பேர் இடரில் தள்ளி
விழுந்து, வெய்து உயிர்த்து, விம்மி, வீங்கும்; போய் மெலியும்; வெந்தீக்
கொழுந்துகள் உயிர்க்கும்; யாக்கை குலைவுறும்; தலையே கொண்டுற்று
உழும் தரைதன்னை; பின்னும் இனையன உரைப்பதானான்: 44

' ''முடிந்தது நம்தம் எண்ணம்; மூஉலகிற்கும் கங்குல்
விடிந்தது'' என்று இருந்தேன்; மீள வெந் துயர் இருளின் வெள்ளம்
படிந்தது; வினையச் செய்கை பயந்தது; பாவி! வாளால்
தடிந்தனன் திருவை! அந்தோ, தவிர்ந்தது தருமம் அம்மா! 45

'பெருஞ் சிறைக் கற்பினாளைப் பெண்ணினைக் கண்ணின் கொல்ல,
இருஞ் சிறகு அற்ற புள் போல், யாதும் ஒன்று இயற்றல் ஆற்றேன்;
இருஞ் சிறை அழுந்துகின்றேன்; எம்பிரான் தேவி பட்ட
அருஞ் சிறை மீட்ட வண்ணம் அழகிது பெரிதும், அம்மா! 46

'பாதக அரக்கன், தெய்வப் பத்தினி, தவத்துளாளை,
பேதையை, குலத்தின் வந்த பிழைப்பு இலாதாளை, பெண்ணை,
சீதையை, திருவை, தீண்டிச் சிறை வைத்த தீயோன் சேயே
காதவும், கண்டு நின்ற கருமமே கருணைத்து அம்மா! 47

'கல்விக்கும் நிமிர்ந்த கீர்த்திக் காகுத்தன் தூதன் ஆகி,
சொல்விக்க வந்து போனேன், ஆய இத் துயர் செய்தாரை
வெல்விக்க வந்து, நின்னை மீட்பிக்க அன்று; வெய்தின்
கொல்விக்க வந்தேன் உன்னை; கொடும் பழி கூட்டிக் கொண்டேன்.* 48

'வஞ்சியை எங்கும் காணாது, உயிரினை மறந்தான் என்ன,
செஞ் சிலை உரவோன் தேடித் திரிகின்றான் உள்ளம் தேற, [கொல்லத்
''அம் சொலாள் இருந்தாள்; கண்டேன்'' என்ற யான், ''அரக்கன்
துஞ்சினாள்'' என்றும் சொல்லத் தோன்றினேன்; தோற்றம் ஈதால்! 49

43. அமே - அம்மையே! 45. வினையச் செய்கை - வஞ்சகச் செய்கை; 46. பெருஞ் சிறைக் கற்பு - பெரிய காவலாகிய கற்பு; 47. கருணைத்து - குறிப்பு மொழி, கருணையற்றது என்பது பொருள்.

'அருங் கடல் கடந்து, இவ் ஊரை அள் எரி மடுத்து, வெள்ளக்
கருங் கடல் கட்டி, மேருக் கடந்து ஒரு மருந்து காட்டி,
''குரங்கு இனி உன்னோடு ஒப்பது இல்'' என, களிப்புக் கொண்டேன்;
பெருங் கடல் கோட்டம் தேய்த்தது ஆயது, என் அடிமைப் பெற்றி! 50

'விண்டு நின்று ஆக்கை சிந்தப் புல் உயிர் விட்டிலாதேன்,
கொண்டு நின்றுனைக் கொல்லக் கூசினேன்! எதிரே கொல்லக்
கண்டு நின்றேனே நன்று; என் கையினின், கலத்தின் வெண் சோறு
உண்டு நின்று, உய்ய வல்லேன்; எளியனோ? ஒருவன் உள்ளேன்!'

என்ன நின்று இரங்கி, 'கள்வன் ''அயோத்திமேல் எழுவென்'' என்று
சொன்னதும் உண்டு; போன சுவடு உண்டு; தொடர்ந்து செல்லின்,
மன்னன் இங்கு உற்ற தன்மை உணர்கிலன்; வருவது ஓரேன்;
பின் இனி முடிப்பது யாது?' என்று இரங்கினான், உணர்வு பெற்றான்.

**அனுமன், இராமனிடம் செய்தி கூறல்**

'உற்றதை உணர்த்தி, பின்னை உலகுடை ஒருவனோடும்,
இற்று உறின், இற்று மாள்வென்; அன்று எனின், எண்ணம் எண்ணி,
சொற்றது செய்வென்; வேறு ஓர் பிறிது இலன் துணிவிற்று' என்னா,
பொன் தடந் தோளன், வீரன் பொன் அடி மருங்கில், போனான். 53

சிங்கஏறு அனைய வீரன் செறி கழல் பாதம் சேர்ந்தான்,
அங்கமும் மனமும் கண்ணும் ஆவியும் அலக்கணுற்றான்,
பொங்கிய பொருமல் வீங்கி, உயிர்ப்பொடு புரத்தைப் போர்ப்ப,
வெங் கண் நீர் அருவி சோர, மால் வரை என்ன வீழ்ந்தான்.

வீழ்ந்தவன்தன்னை, வீரன், 'விளைந்தது விளம்புக' என்னா,
தாழ்ந்து, இரு தடக் கை பற்றி எடுக்கவும், தரிக்கிலாதான்,
'ஆழ்ந்து எழு துன்பத்தாளை, அரக்கன், இன்று, அயில் கொள் வாளால்
போழ்ந்தனன்' என்னக் கூறி, புரண்டனன், பொருமுகின்றான்.

**இராமனும் வானரர் முதலியோரும் உற்ற துயரம்**

துடித்திலன்; உயிர்ப்பும் இல்லன்; இமைத்திலன்; துள்ளிக் கண்ணீர்
பொடித்திலன்; யாதும் ஒன்றும் புகன்றிலன்; பொருமி, உள்ளம்
வெடித்திலன்; விம்மிப் பாரின் வீழ்ந்திலன்; வியர்த்தான் அல்லன்;
அடுத்து உள துன்பம் யாவும் அறிந்திலர், அமரரேயும். 56

50. கோட்டம் - ஒரு வாசனைப் பண்டம்; 54. அலக்கண் - பெருந் துன்பம்; 56. துள்ளி - துளி.

சொற்றது கேட்டலோடும், துணுக்குற, உணர்வு சோர,
நல் பெரு வாடை உற்ற மரங்களின் நடுக்கம் எய்தா,
கற்பகம் அனைய வள்ளல் கருங் கழல் கமலக் கால்மேல்,
வெற்புஇனம் என்ன வீழ்ந்தார், வானர வீரர் எல்லாம். 57

சித்திரத் தன்மை உற்ற சேவகன், உணர்வு தீர்ந்தான்,
மித்திரர் வதனம் நோக்கான், இளையவன் வினவப் பேசான்,
பித்தரும் இறை பொருத பேர் அபிமானம் என்னும்
சத்திரம் மார்பில் தைக்க, உயிர் இலன் என்னச் சாய்ந்தான்.

நாயகன் தன்மை கண்டும், தமக்கு உற்ற நாணம் பார்த்தும்,
ஆயின கருமம் மீள அழிவுற்ற அதனைப் பார்த்தும்,
வாயொடு மனமும் கண்ணும் யாக்கையும் மயர்ந்து சாம்பி,
தாயினை இழந்த கன்றின், தம்பியும் தலத்தன் ஆனான். 59

#### வீடணன் கொண்ட ஐயம்

தொல்லையது உணரத் தக்க வீடணன், துளக்கம் உற்றான்,
எல்லை இல் துன்பம் ஊன்ற, இடை ஒன்றும் தெரிக்கிலாதான்,
''வெல்லவும் அரிது; நாசம் இவள்தனால் விளைந்தது'' என்னா,
கொல்வது அடுக்கும்' என்று மனத்தின் ஓர் ஐயம் கொண்டான்.

சீத நீர் முகத்தின் அப்பி, சேவகன் மேனி தீண்டி,
போதம் வந்து எய்தற்பால யாவையும் புரிந்து, பொன் பூம்
பாதமும் கையும் மெய்யும் பற்றினன் வருடலோடும்,
வேதமும் காணா வள்ளல் விழித்தனன், கண்ணை மெல்ல. 61

#### இலக்குவன் பேச்சு

'ஊற்று வார் கண்ணீரோடும் உள் அழிந்து, உற்றது எண்ணி,
ஆற்றுவான் அல்லன் ஆகி, அயர்கின்றான்எனினும், ஐயன்,
மாற்றுவான் அல்லன்; மானம் உயிர் உக வருந்தும்' என்னா,
தேற்றுவான் நினைந்து, தம்பி இவை இவை செப்பலுற்றான்: 62

'முடியும் நாள் தானே வந்து முற்றினால், துன்ப முந்நீர்
படியுமாம், சிறியோர் தன்மை; நினக்கு இது பழியிற்றாமால்;
குடியும் மாசு உண்டதுஎன்னின், அறத்தொடும் உலகைக் கொன்று,
கடியுமாறு அன்றி, சோர்ந்து கழிதியோ, கருத்து இலார்போல்?

58. மித்திரர் - நண்பர், ஈண்டு வானரத் தலைவர்கள்; சத்திரம் - படைக்கலம்; 60. தொல்லையது - அரக்கரின் இயல்பான மாயச் செயல்; தொல்லை - இயல்பு; 62. மாற்றுதல் - பகைவரை அழித்தல்.

'தையலை, துணை இலாளை, தவத்தியை, தருமக் கற்பின்
தெய்வதம்தன்னை, மற்று உன் தேவியை, திருவை, தீண்டி,
வெய்யவன் கொன்றான்என்றால், வேதனை உழப்பது, இன்னம்
உய்யவோ? கருணையாலோ? தருமத்தோடு உறவும் உண்டோ?

'அரக்கர் என், அமரர்தாம் என், அந்தணர்தாம் என், அந்தக்
குருக்கள் என், முனிவர்தாம் என், வேதத்தின் கொள்கைதான் என்;
செருக்கினர் வலியர் ஆகி, நெறி நின்றார் சிதைவர்என்றால்,
இருக்குமிது என்னும், இம் மூன்று உலகையும் எரி மடாதே? 65

'முழுவது ஏழ் உலகம் இன்ன முறை முறை செய்கைமேல் மூண்டு,
எழுவதே! அமரர் இன்னம் இருப்பதே! அறம் உண்டு என்று
தொழுவதே! மேகம் மாரி சொரிவதே! சோர்ந்து நாம் வீழ்ந்து
அழுவதே! நன்று, நம்தம் வில் தொழில் ஆற்றல் அம்மா! 66

'புக்கு, இவ் ஊர் இமைப்பின் முன்னம் பொடிபடுத்து, அரக்கன் போன
திக்கு எலாம் சுட்டு, வானோர் உலகு எலாம் தீத்து, தீரத்
தக்க நாம், கண்ணீர் ஆற்றி, தலை சுமந்து இரு கை நாற்றி,
துக்கமே உழப்பம்என்றால், சிறுமையாய்த் தோன்றும் அன்றே?

'அங்கும், இவ் அறமே நோக்கி, அரசு இழந்து, அடவி எய்தி,
மங்கையை வஞ்சன் பற்ற, வரம்பு அழியாது வாழ்ந்தோம்;
இங்கும், இத் துன்பம் எய்தி இருத்துமேல், எளிமை நோக்கி,
பொங்கு வன் தளையில் பூட்டி, ஆட்செயப் புகல்வர் அன்றே?

'மன்றல் அம் கோதையாளைத் தம் எதிர் கொணர்ந்து, வாளின்
கொன்றவர் தம்மைக் கொல்லும் கோள் இலர், நாணம் கூரப்
பொன்றினர்' என்பர், ஆவி போக்கினால்; பொதுமை பார்க்கின்,
அன்று, இது கருமம்; என், நீ அயர்கின்றது, அறிவு இலார்போல்?'

சுக்கிரீவன், 'அரக்கனைத் தாக்குவோம்' எனல்

அனையன இளவல் கூற, அருக்கன் சேய், அயர்கின்றான், ஓர்
கனவு கண்டனனே என்னக் கதுமென எழுந்து, 'காணும்
வினை இனி உண்டே? வல்லை, விளக்கின் வீழ் விட்டில் என்ன,
மனை உறை அரக்கன் மார்பில் குதித்தும், நாம்; வம்மின்' என்றான். 70

'இலங்கையை இடந்து, வெங் கண் இராக்கதர் என்கின்றாரைப்
பொலங் குழை மகளிரோடும், பால் நுகர் புதல்வரோடும்,
குலங்களோடு அடங்கக் கொன்று, கொடுந் தொழில் குறித்து, நம்மேல்
விலங்குவார் என்னின், தேவர் விண்ணையும் மண்ணில் வீழ்த்தும்.

71. வீழ்த்தும் - வீழ்த்துவோம்.

'அறம் கெடச் செய்தும் என்றே அமைந்தனம் ஆகின், ஐய!
புறம் கிடந்து உழைப்பது என்னே? பொழுது இறை புவனம் மூன்றும்
கறங்கு எனத் திரிந்து, தேவர் குலங்களைக் கட்டும்' என்னு,
மறம் கிளர் வயிரத் தோளான் இலங்கைமேல் வாவலுற்முன்.

அனுமன், இந்திரசித்தன் அயோத்தி சென்றமை தெரிவித்தல்

மற்றைய வீரர் எல்லாம் மன்னனின் முன்னம் தாவி,
'எற்றுதும், அரக்கர் தம்மை இல்லொடும் எடுத்து' என்று, ஏகல்
உற்றனர்; உறுதலோடும், 'உணர்த்துவது உளது' என்று உன்னு,
சொற்றனன் அனுமன், வஞ்சன் அயோத்திமேல் போன சூழ்ச்சி. 73

இராமன் மனம் அழிதல்

தாயரும் தம்பிமாரும் தவம் புரி நகரம் சாரப்
போயினன் என்ற மாற்றம் செவித் துளை புகுதலோடும்,
மேயின அடியின் நின்ற வேதனை கனைய, வெந்த
தீயிடைத் தணிந்தது என்ன, சீதைபால் துயரம் தீர்ந்தான். 74

அழுந்திய பாலின் வெள்ளத்து ஆழிநின்று, அனந்தர் நீங்கி
எழுந்தனன் என்ன, துன்பக் கடலின்நின்று ஏறி, ஆறுக்
கொழுந்து உறு கோபத் தீயும் நடுக்கமும் மனத்தைக் கூட,
உழுந்து உருள் பொழுதும் தாழா விரைவினன், மறுக்கம் உற்முன். 75

'தீரும் இச் சீதையோடும் என்கிலது அன்று, என் தீமை;
வேரொடு முடிப்பது ஆக விளைந்தது; வேறும் இன்னும்
யாரொடும் தொடரும் என்பது அறிகிலேன்; இதனை, ஐய!
பேரிட அவதி உண்டோ? எம்பியர் பிழைக்கின்ருரோ? 76

'நினைவதன் முன்னம் செல்லும் மானத்தில் நெடிது போனுன்,
வினை ஒரு கணத்தின் முற்றி மீள்கின்ருன்; வினையேன் வந்த
மனை பொடி பட்டது, அங்கு; மாண்டது, தாரம் ஈண்டும்;
எனையன தொடரும் என்பது உணர்கிலேன்! இறப்பும் காணேன்! 77

'தாதைக்கும், சடாயுவான தந்தைக்கும், தமியள் ஆய
சீதைக்கும், கூற்றம் காட்டித் தீர்ந்திலது, ஒருவன் தீமை;
பேதைப் பெண் பிறந்து, பெற்ற தாயர்க்கும், பிழைப்பு இலாத
காதல் தம்பியர்க்கும், ஊர்க்கும், நாட்டிற்கும், காட்டிற்று அன்றே. 78

72. வாவல் - பாய்தல்; 74. அடியின் உற்ற வேதனை - அடிபட்டதனுல் உண்டான துன்பம்; 76. பேரிட - பேர்த்திடுமாறு செய்கை; அவதி - வகை.

'உற்றது ஒன்று உணரகில்லார்; உணர்ந்து வந்து, உருத்தாரேனும்,
வெற்றி வெம் பாசம் வீசி விசித்து, அவன் கொன்று வீழ்த்தால்,
மற்றை வெம் புள்ளின் வேந்தன் வருகிலன்; மருந்து நல்கக்
கொற்ற மாருதி அங்கு இல்லை; யார் உயிர் கொடுக்கற்பாலார்?

**'அயோத்திக்கு விரைய வழி உண்டோ?' என இராமன் வினவுதல்**

'மாக ஆகாயம் செல்ல, வல்லையின், வயிரத் தோளாய்!
ஏகுவான் உபாயம் உண்டேல், இயம்புதி, நின்ற எல்லாம்
சாக; மற்று, இலங்கைப் போரும் தவிர்க, அச் சழக்கன் கண்கள்
காகம் உண்டதற்பின், மீண்டும் முடிப்பென் என் கருத்தை' என்றான்.

**பரதனைப்பற்றிய இலக்குவன் கணிப்பு**

அவ் இடத்து, இளவல், 'ஐய! பரதனை அமரின் ஆர்க்க,
எவ் விடற்கு உரியான் போன இந்திரசித்தே அன்று;
தெவ் இடத்து அமையின், மும்மை உலகமும் தீந்து அருவோ?
வெவ் இடர்க் கடலின் வைகல்; கேள்' என, விளம்பலுற்றான்: 81

'தீக் கொண்ட வஞ்சன் வீச, திசைமுகன் பாசம் தீண்ட,
வீக் கொண்டு வீழ, யானோ பரதனும்? வெய்ய கூற்றைக்
கூய்க்கொண்டு, குத்துண்டு அன்னான் குலத்தொடு நிலத்தன் ஆதல்,
போய்க் கண்டு கோடி அன்றே?' என்றனன், புழுங்குகின்றான்.

**இராம-இலக்குவர் அயோத்தி செல்லத் தன் தோல்மேல் ஏறுமாறு அனுமன் வேண்டுதல்**

அக் கணத்து அனுமன் நின்றான், 'ஐய! என் தோளின் ஆதல்,
கைத் துணைத் தலத்தே ஆதல், ஏறுதிர்; காற்றும் தாழ,
இக் கணத்து அயோத்தி மூதூர் எய்துவென்; இடம் உண்டு என்னின்,
திக்கு அனைத்தினிலும் செல்வென்; யானே போய்ப் பகையும் தீர்வென்;

'கொல்ல வந்தானை நீதி கூறினென், விலக்கிக் கொள்வான்,
சொல்லவும் சொல்லி நின்றேன்; கொன்றபின், துன்பம் என்னை
வெல்லவும், தரையின் வீழ்வுற்று உணர்ந்திலென்; விரைந்து போனான்!
இல்லை என்று உளனேல், தீயோன் பிழைக்குமோ? இழுக்கம் உற்றான்!

'மனத்தின் முன் செல்லும் மானம் போனது வழியது ஆக,
நினைப்பின் முன் அயோத்தி எய்தி, வருநெறி பார்த்து நிற்பென்;
இனி, சில தாழ்ப்பது என்னே? ஏறுதிர், இரண்டு தோளும்,
புனத் துழாய் மாலை மார்பீர்! புட்பகம் போதல் முன்னம்'. 85

79. புள்ளின் வேந்தன் - கலுழன்; 80. மாக ஆகாயம் - மாகம் எனப்படும் ஆகாய வழி; 81. வைகல் - தங்க வேண்டா; 82. கண்டு கோடி அன்றே - கண்டு கொள்வாய் அல்லவா?

**வீடணன், 'இது மாயம்' எனல்**

'ஏறுதும்' என்னு, வீரர் எழுதலும், இறைஞ்சி, 'ஈண்டுக்
கூறுவது உளது: துன்பம் கோளுறக் குலுங்கி, உள்ளம்
தேறுவது அரிது; செய்கை மயங்கினென்; திகைத்து நின்றேன்;
ஆறினென்; அதனை, ஐய! மாயம் என்று அயிர்க்கின்றேனல். 86

'பத்தினிதன்னைத் தீண்டிப் பாதகன் படுத்தபோது,
முத் திறத்து உலகும் வெந்து சாம்பராய் முடியும் அன்றே?
அத் திறம் ஆனதேனும், அயோத்திமேல் போன வார்த்தை
சித்திரம்; இதனை எல்லாம் தெரியலாம், சிறிது போழ்தின். 87

**வீடணன் வண்டு உருக் கொண்டு சென்று, சீதையைக் காணுதல்**

'இமை இடையாக யான் சென்று, ஏந்திழை இருக்கை எய்தி,
அமைவுற நோக்கி, உற்றது அறிந்து வந்து அறைந்த பின்னைச்
சமைவது செய்வது' என்று வீடணன் விளம்ப, 'தக்கது;
அமைவது' என்று இராமன் சொன்னான்; அந்தரத்து அவனும் சென்
[றான்.

வண்டினது உருவம் கொண்டான், மானவன் மனத்தின் போனான்;
தண்டலை இருக்கைதன்னைப் பொருக்கெனச் சார்ந்து, தானே
கண்டனன் என்ப மன்னோ, கண்களால்—கருத்தில், 'ஆவி
உண்டு, இலை' என்ன நின்ற, ஓவியம் ஒக்கின்றாளை. 89

**வீடணன், இந்திரசித்தின் சூழ்ச்சியை உணர்தல்**

'தீர்ப்பது துன்பம், யான் என் உயிரொடு' என்று உணர்ந்த சிந்தை
பேர்ப்பன செஞ் சொலாள், அத் திரிசடை பேசப் பேர்ந்தாள்,
கார்ப் பெரு மேகம் வந்து கடையுகம் கலந்தது என்ன
ஆர்ப்பு ஒலி அமுதம் ஆக, ஆர் உயிர் ஆற்றினாளை, 90

வஞ்சனை என்பது உன்னி, வான் உயர் உவகை வைகும்
நெஞ்சினன் ஆகி, உள்ளம் தள்ளுறல் ஒழிந்து நின்றான்,
'வெஞ் சிலை மைந்தன் போனான், நிகும்பலை வேள்வியான்' என்று,
எஞ்சல் இல் அரக்கர் சேனை எழுந்து, எழுந்து, ஏகக் கண்டான்.

'வேழ்விக்கு வேண்டற்பால கலப்பையும், விறகும், நெய்யும்,
வாழ்விக்கும் தாழ்வில்' என்னும் வானவர் மறுக்கம் கண்டான்,
சூழ்வித்த வண்ணம் ஈதோ நன்று!' எனத் துணிவு கொண்டான்,
தாழ்வித்த முடியன், வீரன் தாமரைச் சரணம் தாழ்ந்தான். 92

86. கோளுற - கவர்ந்துகொண்டதனல்; 87. சித்திரம் - விசித்திரம், அதிசயம்; 88. இமை இடையாக - இமைப் பொழுதிற்குள்ளாக; 91. தள்ளுறல் - தடுமாற்றம்; 92. தாழ்வில் வாழ்விக்கும் என மாற்றுக,

வீடணன் வந்து, இராமனை வணங்கி, நிலைமையை எடுத்துரைத்தல்

'இருந்தனள், தேவி; யானே எதிர்ந்தனென், என் கண் ஆர;
அருந்ததிக் கற்பினளுக்கு அழிவு உண்டோ? அரக்கன் நம்மை
வருந்திட மாயம் செய்து, நிகும்பலை மருங்கு புக்கான்;
முருங்கு அழல் வேள்வி முற்றி, முதல் அற முடிக்க மூண்டான்.'

என்றலும், 'உலகம் ஏழும், ஏழு மாத் தீவும், எல்லை
ஒன்றிய கடல்கள் ஏழும், ஒருங்கு எழுந்து ஆர்க்கும் ஓதை
அன்று' என, 'ஆகும்' என்ன, அமரரும் அயிர்க்க, ஆர்த்து,
குன்றுஇனம் இடியத் துள்ளி, ஆடின—குரக்கின் கூட்டம். 94

## 26 நிகும்பலை யாகப் படலம்

இராமன் வீடணனைப் புகழ்தல்

வீரனும் ஐயம் தீர்ந்தான்; வீடணன்தன்னை மெய்யோடு
ஆர்வமும் உயிரும் ஒன்ற அழுந்துறத் தழுவி, 'ஐய!
தீர்வது பொருளோ, துன்பம்? நீ உளை; தெய்வம் உண்டு;
மாருதி உளன்; நாம் செய்த தவம் உண்டு; மறையும் உண்டால்.

என்றலும், இறைஞ்சி, 'யாகம் முற்றுமேல், யாரும் வெல்லார்;
வென்றியும் அரக்கர் மேற்றே; விடை அருள்; இளவலோடும்
சென்று, அவன் ஆவி உண்டு, வேள்வியும் சிதைப்பென்' என்றான்;
'நன்று அது; புரிதிர்!' என்னா, நாயகன் நவில்வதானான்: 2

இராமன் இலக்குவனுக்கு அம்பு விடுவதுபற்றி அறிவுறுத்தல்

தம்பியைத் தழுவி, 'ஐய! தாமரைத் தவிசின் மேலான்
வெம் படை தொடுக்கும்ஆயின், விலக்குமது அன்றி, வீர!
அம்பு நீ துரப்பாய்அல்லை; அனையது துரந்த காலை,
உம்பரும் உலகும் எல்லாம் விளியும்; அஃது ஒழிதி' என்றான். 3

'முக்கணான் படையும், ஆழி முதலவன் படையும், முன் நின்று
ஒக்கவே விடுமே; விட்டால், அவற்றையும், அவற்றால் ஒயத்
தக்கவாறு இயற்றி, மற்று, உன் சிலை வலித் தருக்கினாலே,
புக்கவன் ஆவி கொண்டு, போதுதி—புகழின் மிக்கோய்! 4

26 : 1. பொருளோ? - அரிய செயலோ; 2. புரிதிர் - செய்யுங்கள்.

'வல்லன மாய விஞ்சை வகுத்தன அறிந்து, மாள,
கல்லுதி, தருமம் என்னும் கண் அகன் கருத்தைக் கண்டு;
பல் பெரும் போரும் செய்து வருந்தலை; அற்றம் பார்த்து,
கொல்லுதி, அமரர்தங்கள் கூற்றினை—கூற்றம் ஒப்பாய்! 5

'பதைத்து அவன், வெம்மை ஆடி, பல் பெரும் பகழி மாரி
விதைத்தவன் விதையா நின்று விலக்கினை, மெலிவு மிக்கால்,
உதைத்த வன் சிலையின் வாளி மருமத்தைக் கழிய ஓட்டி,
வதைத் தொழில் புரிதி—சாப நூல் நெறி மறப்பிலாதாய்! 6

'தொடுப்பதன்முன்னம், வாளி தொடுத்து, அவை துறைகள்தோறும்
தடுப்பன தடுத்தி; எண்ணம் குறிப்பினுல் உணர்ந்து, தக்க
கடுப்பினும், அளவு இலாத கதியினும், கணைகள் காற்றின்
விடுப்பன அவற்றை நோக்கி, விடுதியால்—விரைவு இலாதாய். 7

**திருமாலின் வில் முதலியன இராமன் கொடுத்தல்**

என்பன முதல் உபாயம் யாவையும் இயம்பி, ஏற்ற
முன்பனை நோக்கி, 'ஐய! மூவகை உலகும் தான் ஆய்,
தன் பெருந் தன்மை தானும் அறிகிலா ஒருவன் தாங்கும்
வன் பெருஞ் சிலை ஈது ஆகும்; வாங்குதி; வலமும் கொள்வாய்!

'இச் சிலை இயற்கை மேல்நாள்; தமிழ் முனி இயம்பிற்று எல்லாம்
அச்செனக் கேட்டாய் அன்றே? ஆயிரம் மௌலி அண்ணல்
மெய்ச் சிலை; விரிஞ்சன் தானே வேள்வியின் வேட்டுப் பெற்ற
கைச் சிலை கோடி' என்று கொடுத்தனன், கவசத்தோடும். 9

ஆணி, இவ் உலகுக்கு, ஆன அழியான் புறத்தின் ஆர்த்த
தூணியும் கொடுத்து, மற்றும் உறுதிகள் பலவும் சொல்லி,
தாணுவின் தோற்றத்தானைத் தழுவினன்; தழுவலோடும்,
சேண் உயர் விசும்பில் தேவர், 'தீர்ந்தது எம் சிறுமை' என்றார்.

5. மாளக் கல்லுதல் - முற்றும் கெட்டொழியுமாறு வேருடன் பெயர்த்து எறிதல்; அற்றம் - தளர்ச்சியுற்ற சமயம்; 6. வெம்மை ஆடி - வெகுளியை மேற்கொண்டு; மருமம் - மார்பு; கழிய ஓட்டுதல் - துளைத்து ஊடுருவிச் செல்லுமாறு செலுத்துதல்; சாப நூல் - வில் வேதம்; 7. கடுப்பு - விரைவு; 8. முன்பன் - வலிமையுடையோன், ஈண்டு இலக்குவன்; 9. அச்சென - மனத்திற்பதியும் விதமாக, உறுதியுடைய சொல்லாக; 10. ஆணி - ஆதாரம்; தாணு - சிவபெருமான்; சிறுமை - துன்பம்.

நிகும்பலை செல்லுதல்

மங்கலம் தேவர் கூற, வானவ மகளிர் வாழ்த்தி,
பங்கம் இல் ஆசி கூறி, பலாண்டு இசை பரவ,—பாகத்
திங்களின் மோலி அண்ணல் திரிபுரம் தீக்கச் சீறிப்
பொங்கினன் என்ன, தோன்றிப் பொலிந்தனன்—போர்மேல் போவான்.

'மாருதி முதல்வர் ஆய வானரர் தலைவரோடும்,
வீர! நீ சேறி' என்று விடை கொடுத்தருளும் வேலை,
ஆரியன் கமல பாதம், அகத்தினும் புறத்தும் ஆக,
சீரிய சென்னி சேர்த்து, சென்றனன், தருமச் செல்வன். 12

பொலங் கொண்டல் அனைய மேனிப் புரவலன், பொருமி, கண்ணீர்
நிலம் கொண்டு படர நின்று, நெஞ்சு அழிவானை, தம்பி
வலம் கொண்டு, வயிர வல் வில் இடம் கொண்டு, வஞ்சன்மேலே,
சலம் கொண்டு, கடிது சென்றான், 'தலை கொண்டு வருவென்' என்றே.

தான் பிரிகின்றிலாத தம்பி வெங் கடுப்பின் செல்வான்,
ஊன் பிரிகின்றிலாத உயிர் என, மறைதலோடும்,
வான் பெரு வேள்வி காக்க, வளர்கின்ற பருவ நாளில்
தான் பிரிந்து ஏகக் கண்ட தயரதன்தன்னை ஒத்தான். 14

நிகும்பலையில் வானரர் அரக்கர் சேனையைக் காணுதல்

சேனாதிபதியே முதல் சேவகர்தாம்
ஆனார், நிமிர் கொள்ளி கொள் அங்கையினார்,
கான் ஆர் நெறியும் மலையும் கழியப்
போனார்கள், நிகும்பலை புக்கனரால். 15

உண்டாயது ஓர் ஆல், உலகுள் ஒருவன்
கொண்டான் உறைகின்றதுபோல் குலவி,
விண்தானும் விழுங்க விரிந்ததனைக்
கண்டார்—அவ் அரக்கர் கருங் கடலை, 16

நேமிப் பெயர் யூகம் நிரைத்து, நெடுஞ்
சேமத்தது நின்றது, தீவினையோன்
ஓமத்து அனல் வெவ் வடவைக்கு உடனே
பாமக் கடல் நின்றது ஓர் பான்மையதை, 17

12. சீரிய - சிறப்புடைய; 13. பொலம் - அழகு; 15. நிகும்பலை - இந்திரசித்தன் யாகம் செய்கின்ற வேள்விக் களம்; 17. பாமக் கடல் - பரவிய கடல்; பாம் - பரவும்; ஒளியை உடைய கடல் என்பாரும் உண்டு.

கார் ஆயின காய் கரி, தேர், பரிமா,
தார் ஆயிர கோடி தழீஇயதுதான்,
நீர் ஆழியொடு ஆழி நிறீஇயதுபோல்,
ஓர் ஆயிரம் யோசனை உள்ளதனை, 18

பொன்-தேர், பரிமா, கரிமா, பொரு தார்
எற்றே? படை வீரரை எண்ணிலமால்!
உற்று ஏவிய யூகம் உலோகமுடைச்
சுற்று ஆயிரம் ஊடு சுலாயதனை, 19

வண்ணக் கரு மேனியின்மேல் மழை வாழ்
விண்ணைத் தொடு செம் மயிர் வீசுதலால்,
அண்ணல் கரியான் அனலம்பு அட, வெம்
பண்ணைக் கடல் போல்வது ஓர் பான்மையதை. 20

வழங்கா சிலை நாண் ஒலி, வானில் வரும்
பழங் கார்முகம் ஒத்த; பணைக் குலமும்
தழங்கா, கடல் வாழ்வனபோல்; தகை சால்
முழங்கா முகில் ஒத்தன, மா முரசே. 21

வலியான இராகவன் வாய்மொழியால்
சலியாத நெடுங் கடல்தான் எனலாய்
ஒலியாது உறு சேனையை உற்று, ஒரு நாள்
மெலியாதவர் ஆர்த்தனர், விண் கிழிய. 22

**அரக்கர் சேனையுடன் வானரர் பொருதல்**

ஆர்த்தார் எதிர், ஆர்த்த, அரக்கர் குலம்;
போர்த் தார் முரசங்கள் புடைத்த; புகத்
தூர்த்தார் இவர், கற் படை; சூல் முகிலின்
நீர்த் தாரையின், அம்பு அவர் நீட்டினரால். 23

மின்னும் படை வீசலின், வெம் படைமேல்
பன்னும் கவி சேனை படிந்துளதால்—
துன்னும் துறை நீர் நிறை வாவி தொடர்ந்து
அன்னங்கள் படிந்தனவாம் எனலாய். 24

18. தார் - காலாள்; 19. எற்றே - எவ்வளவோ?; யூகம் - சேனை அணி; உலோகம் - உலகம்; சுலாயது - சூழ்ந்து நிற்பது; 20. பண்ணைக் கடல் - நீர்த்திரளையுடைய கடல்; 21. கார்முகம் - வில்; பணைக் குலம் - போர்ப் பறை; 23. கற் படை - கல்லாகிய படைக்கலங்கள்; 24. பன்னும் - பாராட்டிக் கூறப்படும்.

வில்லும், மழுவும், எழுவும், மிடலோர்,
பல்லும், தலையும், உடலும், படியில்
செல்லும்படி சிந்தின, சென்றனவால்—
கல்லும் மரமும் கரமும் கதுவ. 25

வாளும் தலையும், உடலும் வயிறும்,
காலும் கரமும், தரை கண்டனவால்—
கோலும், மழுவும், எழுவும், கொழுவும்,
வேலும், கணையும், வளையும் விசிற. 26

**உடனே வேள்வியைச் சிதைக்குமாறு வீடணன் இலக்குவனுக்கு உரைத்தல்**

வென்றிச் சிலை வீரனை, வீடணன், 'நீ
நின்று இக் கடை தாழுதல் நீதியதோ?
சென்று, இக் கடி வேள்வி சிதைத்திலையேல்,
என்று, இக் கடல் வெல்குதும் யாம்?' எனலும், 27

**தேவர் முதலியோரும் வியந்து காண, இலக்குவன் அரக்கர் சேனையை அழித்தல்**

தேவாசுரரும், திசை நான்முகனும்,
மூவா முதல் ஈசனும், மூஉலகின்
கோ ஆகிய கொற்றவனும், முதலோர்
மேவாதவர் இல்லை, விசும்பு உறைவோர்.* 28

பல்லார் படை நின்றது; பல் அணியால்,
பல் ஆர் படை நின்றது; பல் பிறை வெண்
பல்லார் படை நின்றது; பல்லியம் உம்-
பல் ஆர் படை நின்றது—பல் படையே.* 29

அக் காலை, இலக்குவன், அப் படையுள்
புக்கான், அயில் அம்பு பொழிந்தனனால்;
உக்கார் அவ் அரக்கர்தம் ஊர் ஒழிய,
புக்கார், நமனார் உறை தென் புலமே. 30

27. இக் கடை - இவ்விடம்; 28. மூவா முதல் ஈசன் - சிவன், திருமால் எனலும் ஆம்; மூஉலகின் கோ - இந்திரன்; 29. பல்லார் படை - பல வீரர் ஏறிய தேர்ப்படை; பல் ஆர் படை - பலவாகப் பொருந்திய குதிரைப் படை; பிறை வெண் பல்லார் படை - பிறை போலும் வெண்மையான பற்களை உடைய அரக்கர் சேனை; உம்பல் ஆர் படை - யானைகள் நிரம்பிய படை.

தேறு மத மால் கரி, தேர், பரிமா,
நூறுயிர கோடியின் நூழில்பட,
சேறு ஆர் குருதிக் கடலில், திடராய்க்
கூறு ஆய் உக, ஆவி குறைத்தனனால். 31

வாமக் கரிதான் அழி வார் குழி, வன்
தீ மொய்த்த அரக்கர்கள் செம் மயிரின்
தாமத் தலை உக்க, தழங்கு எரியின்
ஓமத்தை நிகர்த்த; உலப்பு இலவால். 32

சிலையின் கணையூடு திறந்தன, திண்
கொலை வெங் களி மால் கரி செம் புனல் கொண்டு,
உலைவு இன்று கிடந்தன, ஒத்தனவால்,
மலையும் சுனையும், வயிறும் உடலும். 33

வில் தொத்திய வெங் கணை, எண்கின் வியன்
பல் தொத்தியபோல் படியப் பலவும்,
முற்றச் சுடர் மின்மினி மொய்த்துள வன்
புற்று ஒத்த—முடித் தலை பூழியன. 34

படு மாரி நெடுங் கணை பாய்தலினால்,
விடும் ஆறு உதிரப் புனல் வீழ்வனவால்;
தடுமாறு நெடுங் கொடி, தாழ் கடல்வாய்
நெடு மா முகில் வீழ்வ நிகர்த்தனவால். 35

மின் ஆர் கணை தாள் அற வீச, விழுந்து,
அன்னார் உதிரத்துள் அழுந்துதலால்,
ஒன்னார் முழு வெண் குடை ஒத்தனவால்,
செந் நாகம் விழுங்கிய திங்களினை. 36

கொடு நீள் கரி, கையொடு தாள் குறைய,
படு நீள் குருதிப் படர்கின்றனவால்,
அடு நீள் உயிர் இன்மையின் ஆழ்கிலவால்,
நெடு நீரின் இடங்கர் நிகர்த்தனவால். 37

32. வாமம் - அழகு; வார் குழி - நீண்ட குழி; தாமத் தலை - மாலை அணிந்த தலைகள்; 34. வில் தொத்திய - வில்லினின்று வெளிப்பட்டுத் தொடர்ந்த; அம்புகள் தைத்துப் புழுதியில் கிடக்கும் முடித்தலைகள் மின்மினிப் பூச்சிகள் மொய்த்துள்ள புற்றுகள் போலக் காட்சியளித்தன; 36. தாள் - காம்பு; செந் நாகம் - செந்நிறப் பாம்பு, கேது; 37. இடங்கர் - முதலை.

கரி உண்ட களத்திடை உற்றன, கார்
நரி உண்டி உகப்பன நட்டனவால்;
இரியுண்டவர் இன் இயம் இட்டிடலால்,
மரியுண்ட உடற் பொறை மானினவால். 38

வாயில் கனல் வெங் கடு வாளிஇனம்
பாய, பருமக் குலம் வேவனவால்,
வேய் உற்ற நெடுங் கிரி மீ வெயில் ஆம்
தீ உற்றன ஒத்த—சினக் கரியே. 39

அலை வேலை அரக்கரை, எண்கின் உகிர்,
தலைமேல் முடியைத் தரை தள்ளுதலால்,
மலைமேல் உயர் புற்றினை, வள் உகிரால்,
நிலை பேர, மறிப்ப நிகர்த்தனவால். 40

மா வாளிகள் மா மழைபோல் வரலால்,
மா ஆளிகள் போர் தெறு மா மறவோர்,
மா ஆளிகள் வன் தலையின்தலை வாம்
மா ஆளிகளோடு மறிந்தனரால். 41

அங்கம் கிழியத் துணி பட்டதனால்,
அங்கு அங்கு, இழிகுற்ற அமர்த் தலைவர்,
அம் கங்கு, இழி செம்புனல் பம்ப, அலைந்து,
அம் கங்கள் நிரம்பி அலம்பியதால். 42

வன் தானையை, வார் கணை மாரியினால்,
முன், தாதை ஒர் தேர்கொடு, மொய் பல தேர்ப்
பின்று எதிர் தானவர் பேர் அணியைக்
கொன்றான் என, எய்து குறைத்தனனால். 43

**இந்திரசித்தன் யாகம் சிதைதல்**

மலைகளும், மழைகளும், வான மீன்களும்,
அலைய வெங் கால் பொர, அழிந்த ஆம் என,
உலை கொள் வெங் கனல் பொதி ஓமம் உற்றவால்,
தலைகளும் உடல்களும் சரமும் தாவுவ. 44

38. கரி உண்ட களம் - யானைகளைத் தன்பால் கொண்ட போர்க்களம்; நட்டன - விரும்பிச் சேர்ந்தன; மரியுண்ட - இறத்தலையுற்ற; மானின - ஒத்தன; 39. பருமக் குலம் - யானையின் கழுத்திலிடும் மெத்தையின் தொகுதிகள்; 40. எண்கு - கரடி, சாம்பன் தலைமையில் வானர சேனையிலுள்ள கரடிப்படை; 41. மாஆளிகள் - இரண்டாம் அடியில் பெரிய சிங்கங்கள்; மூன்றும் அடியில் யானை குதிரை ஆகிய விலங்குகளைப் போரில் செலுத்தும் யானை, குதிரை வீரர்கள்; நான்காம் அடியில் கரிய வண்டுகள் (மா அளிகள்); வன் தலையின்தலை - வலிய தலையினிடத்து. 42. அம் கங்கு - அழகிய பருந்து; அம் கங்கள் - கிடக்கின்ற தலைகள்; 43. தாதை - தந்தையாகிய தயரதன்.

வாரணம் அனையவன் துணிப்ப, வான் படர்
தார் அணி முடிப் பெருந் தலைகள் தாக்கலால்,
ஆரண மந்திரம் அமைய ஓதிய
பூரண மணிக் குடம் உடைந்து போயதால். 45

தாறு கொள் மதகரி சுமந்து, தாமரை
சீறிய முகத் தலை உருட்டி, செந் நிறத்து
ஊறுகள் சொரிந்த பேர் உதிரத்து ஓங்கு அலை
யாறுகள் எழுங் கனல் அவியச் சென்றவால். 46

தெரி கணை விசும்பிடைச் சுமந்து, செம் மயிர்
வரி கழல் அரக்கர்தம் தடக் கை வாளொடும்
உரும் என வீழ்தலின், அனலுக்கு ஒக்கிய
எருமைகள் மறிந்தன; மறியும் ஈர்ந்தவால். 47

அம் கடம் கழிந்த பேர் அருவிக் குன்றின்நின்று
அம் கடம் கிழிந்திலர், அழிந்த ஆடவர்,
அங்கு அடங்கலும் படர் குருதி ஆழியின்
அங்கு அடங்கினர், தொடர் பகழி அஞ்சினர். 48

கால் தலத்தொடு துணிந்து அழிய, காய் கதிர்க்
கோல் தலைத்தலை உற, மறுக்கம் கூடினர்,
வேல் தலத்து ஊன்றினர், துளங்கு மெய்யினர்,
நாறு அலைக் குடலினர், பலரும் நண்ணினர்.* 49

பொங்கு உடல் துணிந்த தம் புதல்வர்ப் போக்கிலார்,
தொங்கு உடல் தோள்மிசை இருந்து சோர்வுற,—
அங்கு உடல் தம்பியைத் தழுவி அண்மினர்—
தம் குடர் முதுகிடைச் சொரியத் தள்ளுவார். 50

மூடிய நெய்யொடு நறவம் முற்றிய
சாடிகள், பொரியொடு தகர்ந்து தள்ளுற,
கோடிகள் பல படும் குழாம் குழாங்களாய்
ஆடின, அறு குறை அறுக்கும் ஆக்கைகள். 51

45. ஆரணம் - வேதம்; 46. தாறு - தாற்றுக் கோலாகிய அங்குசம்; ஊறுகள் - புண்கள்; 47. அனலி - அக்கினியாகிய தெய்வம்; ஒக்குதல் - வரைந்து வைத்தல், உரிமை செய்து வைத்தல்; 48. அம் கடம் - முதலடியில் அழகிய கன்னம்; இரண்டாம் அடியில் அழகிய உடம்பு; 49. நாறு அலைக்குடல் - (புறத்தே வெளிப்பட்டுத்) தோன்றிய அலைதலையுடைய குடர்; 50. உடல் தம்பி- பொருது நிற்கும் தம்பி, இலக்குவன் எனினும் ஆம். 51. அறு குறை - குறையுடலாகிய கவந்தம்; அறுக்கும் ஆக்கைகள் - (தலை) அறுபட்ட உடம்பு.

கால் என, கடு என, கலிங்கக் கம்மியர்
நூல் என, உடற் பொறை தொடர்ந்த நோய் என,
பால் உறு பிரை என, கலந்து, பல் முறை
வேல் உறு சேனையைத் துணித்து வீழ்த்தினன். 52

கண்டனன்—திசைதொறும் நோக்கி, கண் அகல்
மண்தலம், மறி கடல் அன்ன மாப் படை,
விண்டு எறி கால் பொர மறிந்து வீற்றுறும்
தண்டலை ஆம் எனக் கிடந்த தன்மையே. 53

மிடலின் வெங் கட கரிப் பிணத்தின் விண் தொடும்
திடலும், வெம் புரவியும், தேரும், சிந்திய
உடலும், வன் தலைகளும், உதிரத்து ஓங்கு அலைக்
கடலும், அல்லாது, இடை ஒன்றும் கண்டிலன். 54

நூறு நூறாயிர கோடி நோன் கழல்
மாறு இல் போர் அரக்கரை, ஒருவன் வாட் கணை
கூறு கூறு ஆக்கிய குவையும், சோரியின்
ஆறுமே, அன்றி, ஓர் ஆக்கை கண்டிலன். 55

நஞ்சினும் வெய்யவர் நடுங்கி, நா உலர்ந்து,
அஞ்சினர், சிலர் சிலர் அடைகின்றார்; சிலர்
வெஞ் சின வீரர்கள், மீண்டிலாதவர்,
துஞ்சினர், துணை இலர் எனத் துளங்கினர். 56

வேள்வித் தீ அவிதல் கண்டு, இந்திரசித்தன், வெதும்புதல்

ஓம வெங் கனல் அவிந்து, உழைக் கலப்பையும்
காமர் வண் தருப்பையும் பிறவும் கட்டு அற,
வாம மந்திரத் தொழில் மறந்து, நந்துறு
தூம வெங் கனல் எனப் பொலிந்து தோன்றினன். 57

அக் கணத்து, அடு களத்து, அப்பு மாரியால்
உக்கவர் ஒழிதர, உயிர் உளோர் எலாம்
தொக்கனர், அரக்கனைச் சூழ்ந்து சுற்றுற,
புக்கது, கவிப் பெருஞ் சேனைப் போர்க் கடல். 58

52. கலிங்கம் - ஆடை; கம்மியர் - ஆடை நெய்வோராகிய காருகர்; 53. தண்டலை - சோலை; 55. சோரி - இரத்தம்; 57. உழைக் கலப்பை - (வேள்வியில்) பயன்படுதற்குரிய பொருளைத் தன்னகத்தே கொண்ட பை; காமர் - அழகு; வாம மந்திரத் தொழில் - வாம மார்க்கத்திற்குரிய மத்திரங்களை எண்ணி உருவேற்றும் தொழில்.

ஆயிரம் மலருடை ஆழி மாப் படை
'ஏ' எனும் மாத்திரத்து இற்ற கொற்றமும்,
தூயவன் சிலை வலித் தொழிலும், துன்பமும்
மேயின வெகுளியும், கிளர வெம்பினன். 59

மெய் குலைந்து, இரு நில மடந்தை விம்முற,
செய் கொலைத் தொழிலையும், சென்ற தீயவர்
மொய் குலத்து இறுதியும், முனிவர் கண்டவர்
கை குலைக்கின்றதும், கண்ணின் நோக்கினன். 60

இந்திரசித்தன் நியமம் குலைந்து, வருந்திப் புலம்புதல்

மானமும் பாழ்பட, வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட, முடிவு இலா முரண்
சேனையும் பாழ்பட, சிறந்த மந்திரத்து
ஏனையும் பாழ்பட, இனைய செப்பினன்: 61

'வெள்ளம் ஐ-ஐந்துடன் விரிந்த சேனையின்
உள்ளது அக்குரோணி ஈர்-ஐந்தொடு ஒயுமால்;
எள்ள அரு வேள்வி நின்று, இனிது இயற்றுதல்
பிள்ளைமை; அனையது சிதைந்து பேர்ந்ததால். 62

'தொடங்கிய வேள்வியின் தூம வெங் கனல்
அடங்கியது அவிந்துளது, அமையுமாம் அன்றே?
இடம் கொடு வெஞ் செரு வென்றி இன்று எனக்கு
அடங்கியது என்பதற்கு ஏது ஆகுமால். 63

'அங்கு அது கிடக்க: நான் மனிதற்கு ஆற்றலென்
சிங்கினென் என்பது ஓர் எளிமை; தேய்வுற,
இங்கு நின்று, இவை இவை நினைக்கிலேன்; இனி,
பொங்கு போர் ஆற்றல் என் தோளும் போனதோ? 64

'"மந்திர வேள்வி போய் மடிந்ததாம்" எனச்
சிந்தையின் நினைந்து, நான் வருந்தும் சிற்றியல்,
அந்தரத்து அமரரும், "மனிதர்க்கு ஆற்றலன்;
இந்திரர்க்கே இவன் வலி!" என்று ஏசவோ?' 65

59. மலர் - தாமரை, தாமரை என்பது ஒரு பேரெண்; 60. சென்ற - பொரச் சென்ற; 62. வெள்ளம் - பேரெண்; 57 தானங்களைக் கொண்டது; 63. ஏது - நிமித்தம், அறிகுறி; 65. சிற்றியல் - சிறுமைத் தன்மை.

என்று அவன் பகர்கின்ற எல்லை, வல் விசை,
குன்றொடு மரங்களும், பிணத்தின் கூட்டமும்,
பொன்றின கரிகளும், கவிகள் போக்கின;
சென்றன பெரும் படை இரிந்து சிந்தின. 66

ஒதுங்கினர், ஒருவர் கீழ் ஒருவர் புக்குறப்
பதுங்கினர், நடுங்கினர்; பகழி பாய்தலின்,
பிதுங்கினர்; குடர் உடல் பிளவு பட்டனர்;
மதம் புலர் களிறு எனச் சீற்றம் மாறினார். 67

வீரன் வெங் கணையொடும் கவிகள் வீசிய
கார் வரை அரக்கர்தம் கடலின் வீழ்ந்தன,
போர் நெடுங் கால் பொர, பொழியும் மா மழைத்
தாரையும் மேகமும் படிந்த தன்மைய. 68

அனுமன் இந்திரசித்தனை எள்ளி நகையாடுதல்

திரைக் கடற் பெரும் படை இரிந்து சிந்திட
மரத்தினின் புடைத்து அடர்த்து உருத்த மாருதி,
அரக்கனுக்கு அணித்து என அணுகி, அன்னவன்
வரக் கதம் சிறப்பன மாற்றம் கூறுவான்: 69

'தடந் திரைப் பரவை அன்ன சக்கர யூகம் புக்குக்
கிடந்தது கண்டது உண்டோ? நாண் ஒலி கேட்டிலோமே?
தொடர்ந்து போய் அயோத்தி தன்னைக் கிளையொடும் துணிய நூறி,
நடந்தது எப்பொழுது? வேள்வி முடிந்ததே? கருமம் நன்றே!

'ஏந்து அகல் ஞாலம் எல்லாம் இனிது உறைந்து, இயற்கை தாங்கும்
பாந்தளின் பெரிய திண் தோள் பரதனை, பழியின் தீர்ந்த
வேந்தனை, கண்டு, நீ நின் வில் வலி காட்டி, மீண்டு
போந்ததோ, உயிரும் கொண்டே ஆயினும், புதுமை அன்றே! 71

'அம்பரத்து அமைந்த வல் வில் சம்பரன் ஆவி வாங்கி,
உம்பருக்கு உதவி செய்த ஒருவனுக்கு உதயம் செய்த
நம்பியை, முதல்வர் ஆன மூவர்க்கும் நால்வர் ஆன
தம்பியை, கண்டு, நின்தன் தனு வலம் காட்டிற்று உண்டோ?

66. போக்குதல் - வீசி எறிதல்; 68. போர் நெடுங் கால் - பொருது அலைத் தலையுடைய பெருங்காற்று; 69. சிறத்தல் - மிகுதல்; 71. பாந்தள் - பாம்பு, ஆதிசேடன்; 72. ஒருவன் - தயரதன்; தம்பி - சத்துருக்கனன்.

'தீ ஒத்த வயிர வாளி உடல் உற, சிவந்த சோரி
காயத்தின் செவியினூடும், வாயினும், கண்களூடும்,
பாய, போய், இலங்கை புக்கு, வஞ்சனை பரப்பச் செய்யும்
மாயப் போர் ஆற்றல் எல்லாம் இன்றொடு மடியும் அன்றே! 73

'பாசமோ, மலரின் மேலான் பெரும் படைக்கலமோ, பண்டை
ஈசனார் படையோ, மாயோன் நேமியோ, யாதோ, இன்னம்
வீச, நீர் விரும்புகின்றீர்? அதற்கு நாம் வெருவி, சாலக்
கூசினோம்; போதும், போதும்; கூற்றினார் குறுக வந்தார். 74

'வரங்கள் நீர் உடையவாறும், மாயங்கள் வல்லவாறும்,
பரம் கொள் வானவரின் தெய்வப் படைக்கலம் படைத்தவாறும்,
உரங்களோடு உன்னி அன்றோ, உம்மை நாம், ''உயிரினோடும்
சிரங்கொளத் துணித்தும்'' என்னக் கண்டது? திறம்பினோமோ?

'விடம் துடிக்கின்ற கண்டத்து அண்ணலும், விரிஞ்சன்தானும்,
படம் துடிக்கின்ற நாகப் பாற்கடல் பள்ளியானும்,
சடம் துடிக்கிலராய் வந்து தாங்கினும், சாதல் திண்ணம்;
இடம் துடிக்கின்றது உண்டே? இருத்திரோ? இயம்புவீரே! 76

'"கொள்வென்" என்று, உன்னைத்தானே குறித்து, ஒருசூளும் கொண்ட
வில்லி வந்து அருகு சார்ந்து, உன் சேனையை முழுதும் வீட்டி,
"வல்லை நீ பொருவாய்" என்று, விளிக்கின்றான்; வரி வில் நாணின்
ஒல்லொலி, ஐய! செய்யும் ஓமத்துக்கு உறுப்பு ஒன்று ஆமோ?

'மூவகை உலகும் காக்கும் முதலவன் தம்பி பூசல்,
தேவர்கள், முனிவர், மற்றும் திறத்திறத்து உலகம் சேர்ந்தார்,
யாவரும், காண நின்றார்; இனி, இறை தாழ்ப்பது என்னோ?
சாவது சரதம் அன்றோ?' என்றனன், தருமம் காப்பான். 78

**அனுமன் முதலியோரை இந்திரசித்தன் இகழ்தல்**

அன்ன வாசகங்கள் கேளா, அனல் உயிர்த்து, அலங்கல் பொன்-தோள்
மின் நகு பகு வாயூடு வெயில் உக, நகை போய் வீழ்க,
'முன்னரே வந்து, இம் மாற்றம் ஆற்றலின் மொழிந்தவாறே?
என்னதோ, நீயிர் என்னை இகழ்ந்தது?' என்று இனைய சொன்னான்: 79

75. உரங்கள் - உடல் உள்ள உரன்கள்; உரம் - வலிமை; 76. சடம் துடித்தல் - உடல் நடுக்குறுதல்; இடம் துடித்தல் - ஆடவர்க்கு இடப் பக்கத் துத் தோளும் கண்ணும் துடித்தல், இது தீ நிமித்தம்; 79. என்னதோ - என்ன பொருளுடையதோ?

'மூண்ட போர்தோறும் பட்டு முடிந்த நீர், முறையின் தீர்ந்து
மீண்டபோது, அதனை எல்லாம் மறத்திரோ? விளிதல் வேண்டி,
''ஈண்ட வா!'' என்று நின்றீர்; இத்தனை பேரும் இன்னம்
மாண்ட போது, உயிர் தந்தீயும் மருந்து வைத்தனையோ மான?

'இலக்குவன் ஆக, மற்றை இராமனே ஆக, ஈண்டு,
விலக்குவர் எல்லாம் வந்து விலக்குக; குரக்கின் வெள்ளம்
குலக் குலம் ஆக மாளும் கொற்றமும், மனிதர் கொள்ளும்
அலக்கணும், முனிவர்தாமும் அமரரும் காண்பர் அன்றே. 81

'யானுடை வில்லும், என் பொன்-தோள்களும், இருக்க, இன்னும்,
ஊனுடை உயிர்கள் யாவும் உய்யுமோ, ஒளிப்பு இலாமல்?
கூனுடைக் குரங்கினோடு மனிதரைக் கொன்று, சென்று, அவ்
வானினும் தொடர்ந்து கொல்வென்; மருந்தினும் உய்யமாட்டீர். 82

'வேட்கின்ற வேள்வி இன்று பிழைத்தது; ''வென்றோம்'' என்று
கேட்கின்ற வீரம் எல்லாம் கிளத்துவீர்! கிளத்தல் வேண்டா;
தாழ்க்கின்றது இல்லை; உம்மைத் தனித் தனி தலைகள் பாறச்
சூழ்க்கின்ற வீரம் என் கைச் சரங்களாய்த் தோன்றும் அன்றே.

'மற்று எலாம் நும்மைப் போல வாயினால் சொல்ல மாட்டேன்;
வெற்றிதான் இரண்டும் தந்தீர்; விரைவது வெல்லற்கு ஒல்லாம்;
உற்று நான் உருத்த காலத்து, ஒரு முறை எதிரே நிற்கக்
கற்றிரோ? இன்னம் மாண்டு கிடத்திரோ? நடத்திரோ தான்?

**இந்திரசித்தன் சங்கு முழக்கி வருதல்**

'நின்மின்கள்; நின்மின்!' என்னா, நெருப்பு எழ விழித்து, நீண்ட
மின்மின்கொள் கவசம் இட்டான்; வீக்கினன், தூணி; வீரப்
பொன் மின்கொள் கோதை கையில் பூட்டினன்; பொறுத்தான், போர்
எல் மின்கொள் வயிரத் திண் தேர் ஏறினன்; எறிந்தான், நாணி; [வில்;

ஊதினன் சங்கம்; வானத்து ஒண் தொடி மகளிர் ஒண் கண்
மோதினர்; 'கனத்தின் முன்னே முழுவதும் முருக்கி முற்றக்
காதினன்' என்ன, வானோர் கலங்கினர்; கயிலையானும்,
போதினன்தானும், 'இன்று புகுந்தது, பெரும் போர்' என்றார்.

80. ஈண்ட வா - நெருங்க வா; 83. பிழைத்தது - நிறைவேறாமல் தவறியது; சூழ்க்கின்ற - சூழ்கின்ற, எதுகை நோக்கி வல்லொற்று மிக்கது; 84. இரண்டு - இருமுறை, நாகபாசம் விடுத்தபோதும் பிரமாத்திரம் விடுத்தபோதும் என்க; 85. கோதை - அம்பு எய்தற்பொருட்டு விரல்களில் செறித்துக் கொள்ளும் விரல் உறை; எல் - சூரியன்; மின் - ஒளி; 86. போதினன் - பிரமன்.

'இழைத்த பேர் யாகம்தானே, யாம் செய்த தவத்தினாலே,
பிழைத்தது; பிழைத்ததேனும், வானரம் பிழைக்கல் ஆற்றா;
அழைத்தது, விதியேகொல்?' என்று அஞ்சினார்; 'அம்பினோடும்
உழைத்தது காண்கின்றோம்' என்று, உணங்கினார், உம்பர் உள்ளார். 87

நாண்தொழில் ஓசை வீசிச் செவிதொறும் நடத்தலோடும்,
ஆண்தொழில் மறந்து, கையின் அடுக்கிய மரனும் கல்லும்
மீண்டன மறிந்து சோர விழுந்தன; விழுந்த, 'மெய்யே
மாண்டனம்' என்றே உன்னி, இரிந்தன குரங்கின் மாலை. 88

படைப் பெருந் தலைவர் நின்றார்; அல்லவர், இறுதி பற்றும்
அடைப்ப அருங் காலக் காற்றால் ஆற்றலது ஆகிக் கீறிப்
புடைத்து இரிந்து ஓடும் வேலைப் புனல் என, இரியலுற்றார்;
கிடைத்த பேர் அனுமன், ஆண்டு, ஓர் நெடுங் கிரி கிழித்துக் கொண்டான்.

இந்திரசித்தன் – அனுமன் போர்

'நில், அடா! நில்லு நில்லு! நீ, அடா! வாசி பேசிக்
கல் எடாநின்றது என்னைப் போர்க்களத்து, அமரர் காண,
கொல்லலாம் என்றோ? நன்று; குரங்கு என்றால் கூடும் அன்றே?
நல்லை; போர், வா வா!' என்றான்—நமனுக்கும் நமனாய் நின்றான்.

வில் எடுத்து உருத்து நின்ற வீரருள் வீரன் நேரே,
கல் எடுத்து, எறிய வந்த அனுமனைக் கண்ணின் நோக்கி,
'மல் எடுத்து உயர்ந்த தோளாற்கு என்கொலோ வலியது?' என்னா,
சொல் எடுத்து, அமரர் சொன்னார்; தாதையும் துணுக்கமுற்றான். 91

வீசினன் வயிரக் குன்றம், வெம் பொறிக் குலங்கள் விண்ணின்
ஆசையின் நிமிர்ந்து செல்ல; 'ஆயிரம் உரும் என்று ஆகப்
பூசின பிழம்பு இது' என்ன வரும் அதன் புரிவை நோக்கி,
கூசின உலகம் எல்லாம்; குலைந்தது, அவ் அரக்கர் கூட்டம். 92

குண்டலம் நெடு வில் வீச, மேருவின் குவிந்த தோளான்,
அண்டமும் குலுங்க ஆர்த்து, மாருதி, அசனி அஞ்ச,
விண் தலத்து எறிந்த குன்றம் வெறுந் துகள் ஆகி வீழக்
கண்டனன்; எய்த தன்மை கண்டிலர், இமைப்பு இல் கண்ணார்.

87. உழைத்தது - வருந்துவது; 89. கிடைத்த - எதிர்ப்பட்டு நின்ற; 90. வாசி - வேறுபட்ட மொழி; 91. தாதை - தந்தையாகிய வாயுதேவன்; 92. பூசுதல் - இயைதல்; புரிவு - செயல்.

மாறு ஒரு குன்றம் வாங்கி மறுகுவான் மார்பில், தோளில்,
கால் தரு காலில், கையில், கழுத்தினில், நுதலில், கண்ணில்,
ஏறின என்ப மன்னோ—எரி முகக் கடவுள் வெம்மை
சீறின பகழி மாரி, தீக் கடு விடத்தின் தோய்ந்த. 94

வெதிர் ஒத்த சிகரக் குன்றின் மருங்கு உற விளங்கலாலும்,
எதிர் ஒத்த இருளைச் சீறி எழுகின்ற இயற்கையாலும்,
கதிர் ஒத்த பகழிக் கற்றை கதிர் ஒளி காட்டலாலும்,
உதிரத்தின் செம்மையாலும், உதிக்கின்ற கதிரோன் ஒத்தான்.* 95

**இந்திரசித்தன், 'இலக்குவன் எங்குள்ளான்?' எனல்**

ஆயவன் அயர்தலோடும், அங்கதன் முதல்வர் ஆனோர்.
காய் சினம் திருகி, வந்து கலந்துளார் தம்மைக் காணா,
'நீயிர்கள் நின்மின், நின்மின்; இரு முறை நெடிய வானில்
போயவன் எங்கே நின்றான்?' என்றனன், பொருள் செயாதான்.

வெம்பினர் பின்னும் மேன்மேல் சேறலும், வெகுண்டு, 'சீயம்
தும்பியைத் தொடர்வது அல்லால், குரங்கினைச் சுளிவது உண்டோ?
அம்பினை மாட்டி, என்னை சிறிது போர் ஆற்ற வல்லான்
தம்பியைக் காட்டித் தாரீர்; சாதிரோ, சலத்தின்?' என்றான்.

'அனுமனைக் கண்டிலீரோ? அவனினும் வலியிரோ? என்
தனு உளதன்றே? தோளின் அவ் வலி தவிர்ந்தது உண்டோ?
இனும், முனை நீர் அலீரோ, எவ் வலி ஈட்டி வந்தீர்?
மனிசனைக் காட்டி, நும் தம் மலைதொறும் வழிக்கொளீரே.' 98

என்று உரைத்து, இளவல் தன்மேல் எழுகின்ற இயற்கை நோக்கி,
குன்றமும் மரமும் வீசிக் குறுகினார்; குழாங்கள்தோறும்
சென்றன பகழி மாரி, மேருவை உருவித் தீர்வ,
ஒன்று அல கோடி கோடி நுழைந்தன; வலியும் ஒய்ந்தார். 99

'படுகின்றது அன்றோ, மற்று உன் பெரும் படை? பகழி மாரி
விடுகின்றது அன்றோ, வென்றி அரக்கனும் காள மேகம்?
இடுகின்ற வேள்வி மாண்டது; இனி, அவன் பிழைப்புறுமே
முடுகு' என்றான் அரக்கன் தம்பி; நம்பியும் சென்று மூண்டான்.

96. வானில் போயவன் - விசும்பாகிய துறக்கத்தை அடைந்தவன், இலக்குவன்; 97. தும்பி - யானை; 98. வழிக்கொள்ளுதல் - வந்த வழியே திரும்புதல்; 100. முடுகு - விரைவாய்.

வந்தான் நெடுந் தகை மாருதி, மயங்கா முகம் மலர்ந்தான்,
'எந்தாய்! கடிது ஏறாய், எனது இரு தோள்மிசை' என்றான்;
'அந்தாக' என்று உவந்து, ஐயனும் அமைவு ஆயினன்; இமையோர்
சிந்தாகுலம் துறந்தார்; அவன் நெடுஞ் சாரிகை திரிந்தான். 101

இந்திரசித்தன் – இலக்குவன் பெரும் போர்

'கார் ஆயிரம் உடன் ஆகியது' எனல் ஆகிய கரியோன்,
ஓர் ஆயிரம் பரி பூண்டது ஓர் உயர் தேர்மிசை உயர்ந்தான்;
நேர் ஆயினர் இருவோர்களும்; நெடு மாருதி, நிமிரும்
பேர் ஆயிரம் உடையான் என, திசை எங்கணும் பெயர்ந்தான்.

தீ ஒப்பன, உரும் ஒப்பன, உயிர் வேட்டன, திரியும்
பேய் ஒப்பன, பசி ஒப்பன, பிணி ஒப்பன, பிழையா
மாயக் கொடு வினை ஒப்பன, மனம் ஒப்பன, கழுகின்
தாய் ஒப்பன, சில வாளிகள் துரந்தான்—துயில் துறந்தான்.

அவ் அம்பினை அவ் அம்பினின் அறுத்தான், இகல் அரக்கன்;
எவ் அம்பு இனி உலகத்து உளது என்னும்படி எய்தான்—
எவ் அம்பரம், எவ் எண் திசை, எவ் வேலைகள், பிறவும்,
வவ்வும் கடையுக மா மழை பொழிகின்றது மான. 104

ஆயோன், நெடுங் குருவிக் குலம் எனலாம் சில அம்பால்
போய் ஓடிடத் துரந்தான்; அவை, 'பொறியோ' என, மறிய,
தூயோனும், அத்துணை வாளிகள் தொடுத்தான், அவை தடுத்தான்;
தீயோனும், அக் கணத்து, ஆயிரம் நெடுஞ் சாரிகை திரிந்தான்.

கல்லும், நெடு மலையும், பல மரமும், கடை காணும்
புல்லும், சிறு கொடியும், இடை தெரியாவகை, புரியச்
செல்லும் நெறிதொறும், சென்றன—தெறு கால் புரை மறவோன்
சில்லின் முதிர் தேரும், சின வய மாருதி தாளும். 106

இரு வீரரும், 'இவன் இன்னவன், இவன் இன்னவன்' என்னச்
செரு வீரரும் அறியாவகை திரிந்தார், கணை சொரிந்தார்;
'ஒரு வீரரும் இவர் ஒக்கிலர்' என, வானவர் உவந்தார்;
பொரு வீரையும் பொரு வீரையும் பொருதாலெனப் பொருதார். 107

101. அந்தாக - அப்படியே ஆகுக, அந்து - கன்னடச் சொல்; 106. கடை காணும் புல் - தாவரங்களில் கடையாகிய புல்; 107. பொரு வீரை - அலை மோதும் கடல்.

'விண் செல்கில, செல்கின்றன, விசிகம்' என, இமையோர்
கண் செல்கில; மனம் செல்கில; கணிதம் உறும்எனின், ஓர்
எண் செல்கில; நெடுங் காலவன் இடை செல்கிலன்; உடல்மேல்
புண் செல்வன அல்லால், ஒரு பொருள் செல்வன தெரியா. 108

எரிந்து ஏறின, திசை யாவையும்; இடி ஆம் எனப் பொடியாய்
நெரிந்து ஏறின, நெடு நாண் ஒலி; படர் வான் நிறை உருமின்
சொரிந்து ஏறின, சுடு வெங் கணை; தொடுந் தாரகை முழுதும்
கரிந்து ஏறின, உலகு யாவையும் கனல் வெம் புகை கதுவ. 109

வெடிக்கின்றன திசை யாவையும், விழுகின்றன இடி வந்து
இடிக்கின்றன சிலை நாண் ஒலி; இரு வாய்களும் எதிராக்
கடிக்கின்றன, கனல் வெங் கணை; கலி வான் உற விசைமேல்
பொடிக்கின்றன, பொறி வெங் கனல்; இவை கண்டனர், புலவோர். 110

கடல் வற்றின; மலை உக்கன; பருதிக் கனல் கதுவுற்று
உடல் பற்றின; மரம், உற்றன கனல் பட்டன; உதிரம்
சுடர் வற்றின; சுறு மிக்கது; துணிபட்டு உதிர் கணையின்,
திடர் பட்டது, பரவைக் குழி; திரிவுற்றது புவனம். 111

எரிகின்றன அயில் வெங் கணை—இரு சேனையும் இரியத்
திரிகின்றன, புடை நின்றில, திசை சென்றன; சிதறிக்
கரி பொன்றின; பரி மங்கின; கவி சிந்தின; கடல்போல்
சொரிகின்றன, பொரு செம்புனல்; தொலைகின்றன, கொலையால். 112

புரிந்து ஓடின; பொரிந்து ஓடின; புகைந்து ஓடின; புகை போய்
எரிந்து ஓடின; கரிந்து ஓடின; இடம் ஓடின; வலமே
திரிந்து ஓடின; பிரிந்து ஓடின; செறிந்து ஓடின; திசைமேல்
சரிந்து ஓடின;—கருங் கோள் அரிக்கு இளையான் விடு சரமே.

நீர் ஒத்தன; நெருப்பு ஒத்தன; பொருப்பு ஒத்தன; நிமிரும்
கார் ஒத்தன; உரும் ஒத்தன; கடல் ஒத்தன; கதிரோன்
தேர் ஒத்தன; விடை மேலவன் சிரிப்பு ஒத்தன; உலகின்
வேர் ஒத்தன;—செரு ஒத்து இகல் அரக்கன் விடு விசிகம். 114

108. விசிகம் - அம்பு; எண் செல்கில - எண்கள் போதியனவாகச் செல்ல வில்லை; நெடுங் காலவன் - நெடிய வாயுதேவன்; 110. கலி வான் - ஒலிக்கும் வானம்; 111. சுறு - மயிர் முதலியன தீயிற் பொசுங்குதலால் உண்டாகும் தீ நாற்றம்; 113. கருங் கோள் அரி - கரிய வலிய சிங்கம், ஈண்டு இராமன்.

ஏமத் தடங் கவசத்து இகல் அகலத்தன; இருவோர்
வாமப் பெருந் தோள் மேலன; வதனத்தன; வயிரத்
தாமத்தன; குறங்கோடு இரு சரணத்தன;—தம் தம்
காமக் குல மட மங்கையர் கடைக்கண் எனக் கணைகள். 115

'எந் நாளினின், எத் தேவர்கள், எத் தானவர், எவரே,
அன்னார் செரு விளைத்தார்?' என, இமையோர் எடுத்து அழைத்தார்;
பொன் ஆர் சிலை இரு கால்களும், ஒரு கால் பொறை உயிரா,
முன்நாளினில் இரண்டாம் பிறை முளைத்தாலென வளைத்தார்.

வேகின்றன உலகு, இங்கு இவர் விடுகின்றன விசிகம்;
போகின்றன சுடர் வெந்தன; இமையோர்களும் புலர்ந்தார்;
'ஆகின்றது ஓர் அழிகாலம் இது ஆம், அன்று' என அயிர்த்தார்;
நோகின்றன திசை யானைகள், செவி நாண் ஒலி நுழைய. 117

மீன் உக்கது, நெடு வானகம்; வெயில் உக்கது, சுடரும்;
மான் உக்கது, முழு வெண் மதி; மழை உக்கது, வானம்;
தான் உக்கது, குல மால் வரை; தலை உக்கது, தகை சால்
ஊன் உக்க, எவ் உலகத்தினும் உளவாயின உயிரும். 118

அக் காலையின், அயில் வெங் கணை ஐ-ஐந்து புக்கு அழுந்த,
திக்கு ஆசு அற வென்றான் மகன், இளங்கோ உடல் செறித்தான்;
கைக் கார்முகம் வளையச் சில கனல் வெங் கணை, கவசம்
புக்கு, ஆகமும் கழன்று ஓடிட, இளங் கோளரி பொழிந்தான்.

தெரிந்தான் சில சுடர் வெங் கணை, தேவேந்திரன் சின மா
இரிந்து ஓடிடத் துரந்து ஓடின, இமையோரையும் முன் நாள்
அரிந்து ஓடின, எரிந்து ஓடின, அவை கோத்து, அடல் அரக்கன்
சொரிந்தான், உயர் நெடு மாருதி தோள் மேலினில் தோன்ற.

குருதிப் புனல் சொரிய, குணம் குணிப்பு இல்லவன், குணபால்
பருதிப்படி பொலிவுற்றதை இளங் கோளரி பார்த்தான்;
ஒரு திக்கிலும் பெயராவகை, அவன் தேரினை உதிர்த்தான்;
'பொருது இக் கணம் வென்றான்' என, சர மாரிகள் பொழிந்தான்.

115. இகல் அகலம் - வலிய மார்பு; 116. ஒரு கால் - ஒரே சமயத்தில்; பொறை உயிர்த்தல் - வெளிப்பட்டு முளைத்தல்; முன் நாள் - வளர் பிறை நாளாகிய முதற் பக்கம்; 118. ஊன் - உடம்பு; 121. குணம் குணிப்பு இல்லவன் - எண்ண முடியாத குணங்களையுடையவனாகிய அனுமன்.

அத் தேர் அழிந்தது நோக்கிய இமையோர் எடுத்து ஆர்த்தார்,
முத் தேவரும் உவந்தார்; அவன் உரும்ஏறு என முனிந்தான்;
தத்தா, ஒரு தடந் தேரினைத் தொடர்ந்தான், சரம் தலைமேல்
பத்து ஏவினன், அவை பாய்தலில், இளங் கோளரி பதைத்தான்.

பதைத்தான், உடல் நிலைத்தான், சில பகு வாய் அயில் பகழி
விதைத்தான்; அவன் விலக்காதமுன், விடைமேல் வரு விமலன்,
மதத்தால் எதிர் வரு காலனை, ஒரு கால் உற மருமத்து
உதைத்தாலென, தனித்து ஓர் கணை அவன் மார்பிடை உய்த்தான்.

கவசத்தையும் நெடு மார்பையும் கழன்று அக் கணை கழிய,
அவசத் தொழில் அடைந்தான்; அதற்கு இமையோர் எடுத்து ஆர்த்தார்;
திவசத்து எழு கதிரோன் எனத் தெரிகின்றது ஓர் கணையால்
துவசத்தையும் துணித்தே, அவன் மணித் தோளையும் துளைத்தான்.*

உள் ஆடிய உதிரப் புனல் கொழுந் தீ என ஒழுக,
தள்ளாடிய வட மேருவின் சலித்தான்; உடல் தரித்தான்,
தொள்ளாயிரம் கடும் போர்க் கணை துரந்தான்; அவை துறை போய்
விள்ளா நெடுங் கவசத்திடை நுழையாது உக, வெகுண்டான்.

மறித்து ஆயிரம் வடி வெங் கணை, மருமத்தினை மதியாக்
குறித்து, ஆயிரம் பரித் தேரவன் விடுத்தான்; அவை குறி பார்த்து
இறுத்தான் நெடுஞ் சரத்தால், ஒரு தனி நாயகற்கு இளையோன்;
செறித்தான் உடல் சில பொற் கணை, சிலை நாண் அறத் தெறித்தான்.

'வில் இங்கு இது, நெடு மால், சிவன் எனும் மேலவர் தனுவே-
கொல்?' என்று கொண்டு அயிர்த்தான்; நெடுங் கவசத்தையும் மூலையாச்
செல்லுங் கொடுங் கணை யானவயும் சிதையாமையும் தெரிந்தான்;
வெல்லும் தரம் இல்லாமையும் அறிந்தான், அகம் மெலிந்தான்.

**இந்திரசித்தன் மெலிவினை வீடணன் இலக்குவனுக்குக் கூறுதல்**

அத் தன்மையை அறிந்தான் அவன் சிறுதாதையும், அணுகா,
முத்தன் முகம் நோக்கா, 'ஒரு மொழி கேள்' என மொழிவான்,
' எத் தன்மையும் இமையோர்களை வென்றான் இகல் கண்டால்,
பித்தன் மனம் தளர்ந்தான்; இனிப் பிழையான்' எனப் பகர்ந்தான்.

122. தத்தா - தத்தி, தாவிப் பாய்ந்து; 124. திவசம் - நாள்; ஈண்டுப் பகல்; 128. முத்தன் - பாசங்களினின்று விடுபட்ட தூயோனாகிய இலக்குவன்.

**இந்திரசித்தன் படைகளை இலக்குவன் விலக்கல்**

கூற்றின்படி கொதிக்கின்ற அக் கொலை வாள் எயிற்று அரக்கன்
ஏற்றும் சிலை நெடு நாண் ஒலி உலகு ஏழினும் எய்த,
சீற்றம் தலைத்தலை சென்று உற, 'இது தீர்' எனத் தெரியா,
காற்றின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு காத்தான்.

அனலின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு தடுத்தான்;
புனலின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு பொறுத்தான்;
கன வெங் கதிரவன் வெம் படை துரந்தான், மனம் கரியான்;
சின வெந் திறல் இளங் கோளரி அதுவே கொடு தீர்த்தான். 130

'இது காத்திகொல்?' என்னு, எடுத்து, இசிகப் படை எய்தான்;
அது காப்பதற்கு அதுவே உளது என்னு, தொடுத்து அமைந்தான்;
செதுகாப் படை தொடுப்பேன் என நினைந்தான், திசைமுகத்தோன்
மூது மாப் படை துரந்தான், 'இனி முடிந்தாய்' என மொழிந்தான்.

வானின்தலை நிலைநின்றவர் மழுவாளியும், மலரோன்-
தானும், முனிவரும், பிற தவத்தோர்களும், அறத்தோர்
கோனும், பிற பிற தேவர்கள் குழுவும், மனம் குலைந்தார்;
'ஊனம் இனி இலது ஆகுக, இளங்கோக்கு!' என உரைத்தார்.

ஊழிக்கடை இறும் அத்தலை, உலகு யாவையும் உண்ணும்
ஆழிப் பெருங் கனல்தன்னொடு சுடர் என்னவும் ஆகாப்
பாழிச் சிகை பரப்பித் தனி படர்கின்றது பார்த்தான்,—
ஆழித் தனி முதல் நாயகற்கு இளையான்—அது மதித்தான்.

' "மாட்டான் இவன், மலரோன் படை முதற் போது தன்வலத்தால்,
மீட்டான்அலன்; தடுத்தான்அலன்; முடிந்தான்" என, விட்டான்;
'காட்டாது இனிக் கரந்தால், அது கருமம் அலது' என்னு,
'தாள் தாமரை மலரோன்படை தொடுப்பேன்' எனச்சமைந்தான். 134

'நன்று ஆகுக, உலகுக்கு!' என, முதலோன் மொழி நவின்றான்;
'பின்றாதவன் உயிர்மேல் செலவு ஒழிக' என்பது பிடித்தான்;
'ஒன்றாக இம் முதலோன் படைதனை மாய்க்க' என்று உரைத்தான்,
நின்றான், அது துரந்தான்; அவன் நலம் வானவர் நினைந்தார்.

129. கூற்றின்படி - கூற்றுவனை ஒப்ப; இது தீர் - இதனை விலக்கி அழிப்பாய்; 130. அனலின் படை - ஆக்கினேயாத்திரம்; புனலின் படை - வருணாத்திரம்; கதிரவன் படை - சூரியாத்திரம்; 131. இசிகப் படை - ஒரு வகை அம்பு, இஷீகாஸ்திரம்; 133. பாழிச் சிகை - வலிய தீக் கொழுந்துகள்; 135. முதலோன் மொழி - பிரமதேவனுக்குரிய மந்திரம்.

'தான் விட்டது மலரோன் படைஎனின், மற்று இடைதருமே?
வான் விட்டதும், மண் விட்டதும், மறவோன் உடல் அறுமே?
"தேன் விட்டிடு மலரோன் படை தீர்ப்பாய்" எனத் தெரிந்தான்;
ஊன் விட்டவன் மறம் விட்டிலன்' என, வானவர் உவந்தார்.

உரும்எறு வந்து எதிர்த்தால், அதன் எதிரே, நெருப்பு உய்த்தால்,
வரும் ஆங்கது தவிர்ந்தாலென, மலரோன் படை மாய,
திருமால்தனக்கு இளையான் படை உலகு ஏழையும் தீய்க்கும்
அரு மா கனல் என நின்றது, விசும்பு எங்கணும் ஆகி, 137

படை அங்கு அது படராவகை, பகலோன் குல மருமான்,
இடை ஒன்று அது தடுக்கும்படி செந் தீ உக எய்தான்,
தொடை ஒன்றினை; 'கணை மீமிசைத் துறுவாய், இனி' என்றான்!
விடம் ஒன்று கொண்டு ஒன்று ஈர்ந்ததுபோல் தீர்ந்தது, வேகம்.

விண்ணோர் அது கண்டார், 'வய வீரர்க்கு இனி மேன்மேல்
ஒண்ணாதன உளவோ?' என மனம் தேறினர், உவந்தார்;
கண் ஆர் நுதல் பெருமான், 'இவர்க்கு அரிதோ?' எனக் கடை பார்த்து,
'எண்ணாது இவை பகர்ந்தீர்; பொருள் கேளீர்!' என இசைத்தான்;

'நாராயண நரர் என்று இவர் உளராய், நமக்கு எல்லாம்
வேராய், முழு முதல் காரணப் பொருளாய், வினை கடந்தோர்;
ஆராயினும் தெரியாதது ஓர் நெடு மாயையின் அகத்தார்;
பாராயண மறை நான்கையும் கடந்தார்; இவர் பழையோர்;

' "அறத்தாறு அழிவு உளது ஆம்" என அறிவும் தொடர்ந்து அணு
புறத்தார், புகுந்து அகத்தார் எனப் புகுந்து, அன்னது புரப்பார், [காப்
மறத்தார் குலம் முதல் வேர்அற மாய்ப்பான், இவண் வந்தார்;
திறத்தால் அது தெரிந்து, யாவரும் தெரியாவகை திரிவார்;

' "உயிர்தோறும் உற்றுளன், தோத்திரத்து ஒருவன்" என உரைக்கும்
அயிரா நிலை உடையான் இவன்; அவன், இவ் உலகு அனைத்தும்
தயிர் தோய் பிரை எனல் ஆம் வகை கலந்து, ஏறிய தலைவன்;
பயிராதது ஓர் பொருள் இன்னது என்று உணர்வீர்; இது பரமால். 142

136. இடை தருமே? - பின்னடையுமோ?; விட்டது - அழிக்காமல் விட்டது; மறவோன் - இந்திரசித்து; 138. மருமான் - வழித்தோன்றல், ஈண்டு இலக்குவன்; 142. இவன் - இலக்குவன்; அவன் - இராமன்; பயிராதது - (இத் தன்மையது என்று) சொல்லவொண்ணாதது.

'நெடும் பாற்கடல் கிடந்தாரும், பண்டு, இவர் நீர் குறை நேர,
விடும் பாக்கியம் உடையார்களைக் குலத்தோடு அற வீட்டி,
இடும் பாக்கியத்து அறம் காப்பதற்கு இசைந்தார்' என, இது எலாம்,
அடும்பு ஆக்கிய தொடைச் செஞ்சடைமுதலோன் பணித்து அமைந்தான்.

'அறிந்தே இருந்து, அறியேம், அவன் நெடு மாயையின் அயர்ப்போம்;
பிறிந்தோம் இனி முழுது ஐயமும்; பெருமான் உரை பிடித்தோம்;
எறிந்தோம் பகை முழுதும்; இனித் தீர்ந்தோம் இடர், கடந்தோம்;
செறிந்தோர் வினைப் பகைவா!' எனத் தொழுதார், நெடுந் தேவர்.

மாயோன் படை இலக்குவனை விலகிப் போதல்

மாயோன் நெடும் படை வாங்கிய வளை வாள் எயிற்று அரக்கன்
'நீயோ இது தடுத்தாய்எனின், நினக்கு ஆர் எதிர் நிற்பார்?
போயோ விசும்பு அடைவாய்; இது பிழையாது' எனப் புகலா,
தூயோன்மிசை, உலகு யாவையும் தடுமாறிட, துரந்தான். 145

சேமித்தனர் இமையோர் தமை, சிரத்து ஏந்திய கரத்தால்;
ஆம் இத் தொழில், பிறர் யாவரும் அடைந்தார்; பழுது அடையாக்
காமிப்பது முடிவிப்பது படிகின்றது கண்டான்;
'நேமித் தனி அரி, தான்' என நினைந்தான், எதிர் நடந்தான்.

தீக்கின்றது இவ் உலகு ஏழையும் எனச் செல்வதும் தெரிந்தான்;
நீக்கும் தரம் அல்லா முழு முதலோன் என நினைத்தான்;
மீச் சென்றிலது, அயல் சென்று, அது விலங்கா, வலம் கொடு மேல்
போய்த்து; அங்கு அது கனல் மாண்டது, புகை வீய்ந்தது, பொதுவே.

ஏத்து ஆடினர், இமையோர்களும்; கவியின் குலம் எல்லாம்
கூத்து ஆடினர்; அர மங்கையர் குனித்து ஆடினர்; தவத்தோர்,
'காத்தாய் உலகு அனைத்தும்' எனக் களித்து ஆடினர்; கமலம்
பூத்தானும், அம் மழுவாளியும், முழு வாய்க்கொடு புகழ்ந்தார்.

சிவன் படையை இந்திரசித்து விடுத்தல்

அவன் அன்னது கண்டான்; 'இவன் ஆரோ?' என அயிர்த்தான்;
'இவன் அன்னது முதலே உடை இறையோன்' என வியவா,
'எவன் என்னினும் நன்று ஆகுக! இனி எண்ணலென்' என்னா,
'சிவன் நன் படை தொடுத்து, ஆர் உயிர் முடிப்பேன்' எனத் தெரிந்தான்;

143. பாக்கியம் - நற்பேறு; அடும்பு ஆக்கிய தொடை - அடப்ப மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலை; 145. மாயோன் படை - சக்கராயுதம், நாராயணாத்திரம் எனினும் ஆம்; 146. சேமித்தனர் - (தம்மைப்) பாதுகாத்துக் கொண்டனர்; படிகின்றது - படிந்து போவது; 147. மீ - மேல்; போய்த்து - போயிற்று.

'பார்ப்பான் தரும் உலகு யாவையும், ஒரு கால், ஒரு பகலே,
தீர்ப்பான் படை தொடுப்பேன்' எனத் தெரிந்தான்; அது தெரியா,
மீப் பாவிய இமையோர் குலம் வெருவுற்றது; 'இப்பொழுதே
மாய்ப்பான்' என, உலகு யாவையும் மறுகுற்றன, மயங்கா.

'தானே சிவன் தரப் பெற்றது, தவம் நாள் பல உழந்தே;
தானே, ''பிறர் அறியாதது தந்தேன்'' எனச் சமைந்தான்;
ஆனால், இவன் உயிர் கோடலுக்கு ஐயம் இலை' என்னா,
மேல் நாளும் இதனை ஏவிடின் எதிர்நிற்பவர் இல்லை. 151

மனத்தால், மலர் புனல் சாந்தமொடு அவி தூபமும் வகுத்தான்;
நினைத்தான்; 'இவன் உயிர் கொண்டு இவண் நிமிர்வாய்' என நிமிர்த்
சினத்தால் நெடுஞ்சிலை நாண் தடந்தோள்மேல் உறச்செலுத்தா,[தான்;
எனைத்து ஆயது ஓர் பொருளால் இடை தடை இல்லதை விட்டான்.

சூலங்களும், மழுவும், சுடு கணையும், கனல் சுடரும்,
ஆலங்களும், அரவங்களும், அசனிக் குலம் எவையும்,
காலன் தனது உருவங்களும், கரும் பூதமும், பெரும் பேய்ச்
சாலங்களும், நிமிர்கின்றன, உலகு எங்கணும் தான் ஆய். 153

ஊழிக் கனல் ஒருபால் அதன் உடனே தொடர்ந்து உடற்றும்;
சூழிக் கொடுங் காற்று அதன் உடனே வர, தூர்க்கும்—
ஏழிற்கும் அப் புறத்தாய் உள பெரும் போர்க் கடல் இழிந்தாங்கு
ஆழித்தலைக் கிடந்தாலென நெடுந் தூங்கு இருள் அடைய. 154

இரிந்தார் குல நெடுந் தேவர்கள்; இருடிக் குலத்து எவரும்
பரிந்தார், 'இது பழுது ஆகிலது; இறுவான்' எனும் பயத்தால்;
நெரிந்து ஆங்கு அழி குரங்கு உற்றது; பகரும் துணை நெடிதே?
திரிந்தார், இரு சுடரோடு உலகு ஒரு மூன்று உடன் திரிய. 155

பார்த்தான் நெடுந் தகை வீடணன், உயிர் காலுற, பயத்தால்
வேர்த்தான், 'இது விலக்கும் தரம் உளதோ, முதல் வீரா!
தீர்த்தா!' என அழைத்தான்; அதற்கு இளங் கோளரி சிரித்தான்;
போர்த்தார் அடர் கவி வீரரும், அவன் தாள் நிழல் புகுந்தார்.

**150. பார்ப்பான் - வேதங்களைப் பார்ப்பவன், ஈண்டுப் பிரமன்; பாவிய- பரவி நின்ற; 152. அவி - திருவமுது; 153. சாலங்கள் - தொகுதிகள்; 154. ஆழித்தலை - (சேனைக்) கடலிடத்தில்; 155. இருடிக் குலம் - முனிவர் கூட்டம்; 156. போர்த்தார் - போர் நிகழ்ச்சியில் அணிதற்குரிய அடையாள மாலை.**

இலக்குவனும் சிவன் படையை விடுதல்

'அவயம்! உனக்கு அவயம்!' எனும் அனைவோரையும், 'அஞ்சேல்!
அவயம் உமக்கு அளித்தோம்' என, தன் கைத் தலத்து அமைத்தான்;
'உவயம் உறும் உலகின் பயம் உணர்ந்தேன், இனி ஒழியேன்;
சிவன், ஐம் முகம் உடையான், படை தொடுப்பேன்' எனத் தெளிந்தான்.

அப் பொன் படை மனத்தால் நினைத்து, அர்ச்சித்து, 'அதை அழிப்பாய்;
இப் பொன் படைதனை மற்றொரு தொழில் செய்கிலை' என்னா,
துப்பு ஒப்பது ஓர் கணை கூட்டினன் துரந்தான்; இடைதொடரா,
எப் பொன் படை எவையும் விழுங்குற்றது, ஓர் இமைப்பின்.

விண் ஆர்த்தது; மண் ஆர்த்தது; மேலோர் மணி முரசின்
கண் ஆர்த்தது; கடல் ஆர்த்தது; மழைஆர்த்தது; கலையோர்
எண் ஆர்த்தது; மறை ஆர்த்தது; 'விசயம்' என இயம்பும்
பெண் ஆர்த்தனள்; அறம் ஆர்த்தது; புறம் ஆர்த்தது, பெரிதால். 159

இறுகாலையின் உலகு யாவையும் அவிப்பான் இகல் படையை,
மறுகாவகை வலித்தான், அது வாங்கும்படி வல்லான்; [தான்;
தெறு காலனின் கொடியோனும், மற்று அது கண்டு, அகம் திகைத்
அறு கால் வயக் கவி வீரரும் அரி என்பதை அறிந்தார். 160

'தெய்வப் படை பழுது உற்றது எனக் கூசுதல் சிதைவால்;
எய் வித்தகம் உளது; அன்னது பிழையாது' என இசையா,
கை வித்தகம் அதனால் சில கணை வித்தினன்; அவையும்
மொய் வித்தகன் தடந் தோளினும் நுதற் சூட்டினும் மூழ்க.

வெய்யோன் மகன் முதல் ஆகிய விறலோர், மிகு திறலோர்,
கை ஒய்வு இலர், மலை மாரியின் நிருதக் கடல் கடப்பார்,
'உய்யார்' என, வடி வாளிகள் சத கோடிகள் உய்த்தான்;
செய்யோன் அயல் தனி நின்ற தன் சிறு தாதையைச் செறுத்தான்.

வீடணனை இந்திரசித்தன் சினத்தால் இகழ்தல்

'முரண் தடந் தண்டும் ஏந்தி, மனிதரை முறையைக் குன்றிப்
பிரட்டரின் புகழ்ந்து, பேதை அடியரின் தொழுது, பின்சென்று,
இரட்டுறும் முரசம் என்ன, இசைத்ததே இசைக்கின்றாயைப்
புரட்டுவென் தலையை, இன்று; பழியொடும் ஒழிவென் போலாம் 163

*157. அவயம் - அபயம்; உவயம் - உபயம், இரண்டு; 158. துப்பு - வலிமை; 159. கலையோர் - கலை வல்ல அறிஞர்; எண் - உள்ளம்; 160. அறு கால் - நடக்கும் செயல் ஒய்ந்த கால்; அரி - திருமால்; 161. சிதைவு- குற்றம்; எய் வித்தகம் - எய்யும் திறமை; நுதற் சூடு - நெற்றியின் உச்சி; 162. வெய்யோன் மகன் - சூரியன் மகனாகிய சுக்கிரீவன்; செய்யோன் - செம் மேனியனாகிய இலக்குவன்; சிறு தாதை - சிறிய தந்தையாகிய வீடணன்; 163. பிரட்டர் - நெறியின் நீங்கினர், சாதி ஒழுக்கத்தில் தவறினர்.*

'விழி பட, முதல்வர் எல்லாம் வெதும்பினர், ஒதுங்கி வீழ்ந்து
வழிபட, உலகம் மூன்றும் அடிப்பட வந்ததேனும்,
அழி படை தாங்கல் ஆற்றும் ஆடவர், யாண்டும் வெஃகாப்
பழி பட வந்த வாழ்வை யாவரே நயக்கற்பாலார்? 164

'நீர் உளதனையும் உள்ள மீன் என, நிருதர் எல்லாம்
வேர் உளதனையும் வீவர், இராவணனோடு; மீளார்;
ஊர் உளது; ஒருவன் நின்றாய் நீ உளை; உறைய; நின்னோடு
ஆர் உளர் அரக்கர் நிற்பார், அரசு வீற்றிருக்க? ஐயா! 165

'முந்தை நாள், உலகம் தந்த மூத்த வானோர்கட்கு எல்லாம்
தந்தையார் தந்தையாரைச் செருவிடைச் சாயத் தள்ளி,
கந்தனார் தந்தையாரைக் கயிலையோடு ஒரு கைக் கொண்ட
எந்தையார் அரசு செய்வது, இப் பெரும் பலம் கொண்டேயோ?

'பனி மலர்த் தவிசின் மேலோன் பார்ப்பனக் குலத்துக்கு எல்லாம்
தனி முதல் தலைவன் ஆன உன்னை வந்து அமரர் தாழ்வார்;
மனிதருக்கு அடிமையாய் நீ இராவணன் செல்வம் ஆள்வாய்;
இனி உனக்கு என்னோ, மானம்? எங்களோடு அடங்கிற்று அன்றே. 167

'சொல்வித்தும், பழித்தும் நுங்கை மூக்கினைத் துணிவித்தோர் ஆர்?
எல் வித்தும் படைக் கை உங்கள் தமையனை எங்களோடும்
கொல்வித்தும், தோற்று நின்ற கூற்றினர் குலத்தை எல்லாம்
வெல்வித்தும் வாழும் வாழ்வின் வெறுமையே விழுமிது அன்றோ? 168

'எழுதி வர் அணிந்த திண் தோள் இராவணன், இராமன் அம்பால்,
புழுதியே பாயல் ஆகப் புரண்ட நாள், புரண்டு மேல்வீழ்ந்து,
அழுதியோ? நீயும் கூட ஆர்த்தியோ? அவனை வாழ்த்தித்
தொழுதியோ? யாதோ, செய்யத் துணிந்தனை?—விசயத் தோளாய்!

'ஊனுடை உடம்பின் நீங்கி, மருந்தினால் உயிர் வந்து எய்தும்
மானிடர் இலங்கை வேந்தைக் கொல்வரே? நீயும் அன்னான்-
தானுடைச் செல்வம் துய்க்கத் தகுதியோ? சரத்தினோடும்
வானிடைப் புகுதி அன்றே, யான் பழி மறுக்கில்!' என்றான்.

166. இப் பெரும் பலம் - (மனிதரின்) இந்தப் பெரிய வலிமை, பெரும் பலம் என்றது இகழ்ச்சிக் குறிப்பு; 170. பழி மறுத்தல் - தந்தையைக் கொல்லுதல் பழி என்னும் உண்மையை உடன்படாது கொல்லுதல்.

**வீடணன் மறுமொழி**

அவ் உரை அமையக் கேட்ட வீடணன், அலங்கல் மோலி
செவ்விதின் துளக்கி, மூரல் முறுவலும் தெரிவது ஆக்கி,
'வெவ்விது பாவம்; சாலத் தருமமே விழுமிது; ஐய!
இவ் உரை கேட்டி!' என்னு, இனையன விளம்பலுற்றான்: 171

'அறம் துணை ஆவது அல்லால், அரு நரகு அமைய நல்கும்
மறம் துணை ஆக, மாயாப் பழியொடும் வாழ மாட்டேன்;
துறந்திலேன் மெய்ம்மை, எய்தும் பொய்ம்மையே துறப்பது அல்லால்;
பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின்னவன், பிழைத்த போதே.

'உண்டிலென் நறவம்; பொய்ம்மை உரைத்திலென்; வலியால் ஒன்றும்
கொண்டிலென்; மாய வஞ்சம் குறித்திலென்; யாரும் குற்றம்
கண்டிலர் என்பால்; உண்டே? நீயிரும் காண்டிர் அன்றே?
பெண்டிரின் திறம்பினாரைத் துறந்தது பிழையிற்று ஆமே? 173

' "மூவகை உலகும் ஏத்தும் முதலவன், எவர்க்கும் மூத்த
தேவர்தம் தேவன், தேவி கற்பினில் சிறந்துளாளை
நோவன செய்தல் தீது" என்று உரைப்ப, நுன் தாதை சீறி
"போ!" எனப் போந்தேன்; இன்று நரகதில் பொருந்துவேனே? 174

'வெம்மையின், தருமம் நோக்கா, வேட்டதே வேட்டு, வீயும்
உம்மையே புகழும் பூண்க; துறக்கமும் உமக்கே ஆக;
செம்மையில் பொருந்தி மேலோர் ஒழுக்கினோடு அறத்தைத் தேறும்
எம்மையே பழியும் பூண்க; நரகமும் எமக்கே ஆக. 175

' "அறத்தினைப் பாவம் வெல்லாது" என்னும் அது அறிந்து, "ஞானத்
திறத்தினும் உறும்" என்று எண்ணி, தேவர்க்கும் தேவைச் சேர்ந்தேன்;
புறத்தினில் புகழே ஆக; பழியொடும் புணர்க; போகச்
சிறப்பு இனிப் பெறுக; தீர்க' என்றனன், சீற்றம் தீர்ந்தான்.

'பெறும் சிறப்பு எல்லாம் என் கைப் பிறை முகப் பகழி பெற்றால்,
இறும் சிறப்பு அல்லால், அப் பால் எங்கு இனிப் போவது?' என்னு,
தெறுஞ் சிறைக் கலுழன் அன்ன ஒரு கணை தெரிந்து, செம் பொன்
உறும் சுடர்க் கழுத்தை நோக்கி, நூக்கினன், உருமின் வெய்யோன்.

அக் கணை அசனி என்ன, அன்று என, ஆலம் உண்ட
முக்கணன் சூலம் என்ன, முடுகிய முடிவை நோக்கி,
'இக் கணத்து இற்றான், இற்றான்' என்கின்ற இமையோர்காண,
கைக் கணை ஒன்றால், வள்ளல், அக் கணை கண்டம் கண்டான்.

175. வெம்மையின் - கொடுமையினாலே; 176. ஞானத் திறத்தினும் உறும் - ஞானத்தின் கூறுபாட்டிலும் பொருந்தும்.

கோல் ஒன்று துணிதலோடும், கூற்றுக்கும் கூற்றம் அன்னான்,
வேல் ஒன்று வாங்கி விட்டான்; வெயில் ஒன்று விழுவது என்ன,
நால் ஒன்றும் மூன்றும் ஆன புவனங்கள் நடுங்கலோடும்,
நூல் ஒன்று வரி விலானும், அதனையும் நுறுக்கி வீழ்த்தான்.

'வேல்கொடு கொல்லல் உற்றான்' என்று, ஒரு வெகுளி பொங்க,
கால்கொடு காலின் கூடிக் கை தொடர் கனகத் தண்டால்,
கோல் கொளும் ஒருவனோடும், கொடித் தடந் தேரில் பூண்ட
பால் கொளும் புரவி எல்லாம் படுத்தினன், துடிப்பு மாற. 180

அழிந்த தேர்மீது நின்றான், ஆயிர கோடி அம்பு
பொழிந்து, அவன் தோளின்மேலும், இலக்குவன் புயத்தின்மேலும்
ஒழிந்தவர் உரத்தின்மேலும், உதிர நீர் வாரி ஓதம்
அழிந்து இழிந்துஓட, நோக்கி, அண்டமும் இரிய ஆர்த்தான்.

**இந்திரசித்து இராவணனிடம் போதல்**

ஆர்த்தவன், அனைய போழ்தின், 'அழிவு இலாத் தேர் கொண்டு அன்றிப்
போர்த் தொழில் புரியலாகாது' என்பது ஓர் பொருளை உன்னி,
பார்த்தவர் இமையாமுன்னம், 'விசும்பிடைப் படர்ந்தான்' என்னும்
வார்த்தையை நிறுத்திப் போனான், இராவணன் மருங்கு புக்கான்.

## 27 இந்திரசித்து வதைப் படலம்

**இராவணன் இந்திரசித்திடம், 'நிகழ்ந்தது உரை' எனல்**

விண்ணிடைக் கரந்தான் என்பார், 'வஞ்சனை விளைக்கும்' என்பார்,
கண்ணிடைக் கலக்க நோக்கி, ஐயுறவு உழக்கும் காலை,
புண்ணிடை யாக்கைச் செந்நீர் இழிதர, புக்கு நின்ற
எண்ணுடை மகனை நோக்கி, இராவணன் இனைய சொன்னான்: 1

'தொடங்கிய வேள்வி முற்றுப் பெற்றிலாத் தொழில், நின் தோள்மேல்
அடங்கிய அம்பே என்னை அறிவித்தது; அழிவு இல் யாக்கை
நடுங்கினை போலச் சாலத் தளர்ந்தனை; கலுழன் நண்ணப்
படம் குறை அரவம் ஒத்தாய்; உற்றது பகர்தி' என்றான். 2

180. கோல் கொளும் ஒருவன் - தேர்ப்பாகன்.

27: 1. எண் - மதிப்பு; 2. என்னை - எனக்கு.

'சூழ் வினை மாயம் எல்லாம் உம்பியே துடைக்க, சுற்றி,
வேள்வியைச் சிதைய நூறி, வெகுளியால் எழுந்து வீங்கி,
ஆள்வினை ஆற்றல்தன்னால் அமர்த் தொழில் தொடங்கி, யார்க்கும்
தாழ்வு இலாப் படைகள் மூன்றும் தொடுத்தனென்; தடுத்து விட்டான்.

'நிலம் செய்து, விசும்பும் செய்து, நெடிய மால் படை, நின்றானை
வலம் செய்து போயிற்றுஎன்றால், மற்று இனி வலியது உண்டோ?
குலம் செய்த பாவத்தாலே கொடும் பகை தேடிக்கொண்டாய்;
சலம் செயின், உலகம் மூன்றும் இலக்குவன் முடிப்பன், தானே.

'முட்டிய செருவில், முன்னம் முதலவன் படையை என்மேல்
விட்டிலன், உலகை அஞ்சி; ஆதலால், வென்று மீண்டேன்;
கிட்டிய போதும் காத்தான்; இன்னமும் கிளர வல்லான்;
சுட்டிய வலியினாலே கோறலைத் துணிந்து நின்றான். 5

'ஆதலால், ''அஞ்சினேன்'' என்று அருளலை; ஆசைதான் அச்
சீதைபால் விடுதி ஆயின், அனையவர் சீற்றம் தீர்வர்;
போதலும் புரிவர்; செய்த தீமையும் பொறுப்பர்; உன்மேல்
காதலால் உரைத்தேன்' என்றான்—உலகு எலாம் கலக்கி வென்றான்.

**இராவணன் இந்திரசித்தைக் கடிந்து பேசுதல்**

இயம்பலும், இலங்கை வேந்தன், எயிற்று இள நிலவு தோன்ற,
புயங்களும் குலுங்க நக்கு, 'போர்க்கு இனி ஒழிதி போலாம்;
மயங்கினை; மனிசன்தன்னை அஞ்சினை; வருந்தல்; ஐய!
சயம் கொடு தருவென், இன்றே, மனிசரைத் தனு ஒன்றாலே. 7

'முன்னையோர், இறந்தார் எல்லாம், இப் பகை முடிப்பர் என்றும்,
பின்னையோர், நின்றோர் எல்லாம், வென்றனர் பெயர்வர் என்றும்,
உன்னை, "நீ அவரை வென்று தருதி" என்று உணர்ந்தும், அன்றால்;
என்னையே நோக்கி, யான் இந் நெடும் பகை தேடிக் கொண்டேன். 8

'பேதைமை உரைத்தாய்; பிள்ளாய்! உலகு எலாம் பெயர, பேராக்
காதை என் புகழினோடு நிலைபெற, அமரர் காண,
மீது எழும் மொக்குள் அன்ன யாக்கையை விடுவது அல்லால்,
சீதையை விடுவது உண்டோ, இருபது திண் தோள் உண்டால்?

3. உம்பி - உன் தம்பி, வீடணன்; படைகள் மூன்று - பிரமாத்திரம், நாராயணாத்திரம், பாசுபதம் என்பன; 4. சலம் - வெகுளி; 5. கிளர்தல் - ஆர்வங்கொண்டு போர் செய்தல்; சுட்டிய வலி - மதித்தற்குக் காரணமான வில் வலிமை; சுட்டுதல் - மதித்தல்.

'வென்றிலென் என்ற போதும், வேதம் உள்ளளவும், யானும்
நின்றுளென் அன்றே, மற்று அவ் இராமன் பேர் நிற்கும்ஆயின்?
பொன்றுதல் ஒரு காலத்தும் தவிருமோ? பொதுமைத்து அன்றே?
இன்று உளார் நாளை மாள்வர்; புகழுக்கும் இறுதி உண்டோ?

' ''விட்டனென், சீதைதன்னை'' என்றலும், விண்ணோர் நண்ணி,
கட்டுவது அல்லால், என்னை யான் எனக் கருதுவாரோ?
''பட்டனென்'' என்ற போதும், எளிமையின் படுகிலேன் யான்,
எட்டினோடு இரண்டும் ஆன திசைகளை எறிந்து வென்றேன். 11

'சொல்லி என், பலவும்? நீ நின் இருக்கையைத் தொடர்ந்து, தோளில்
புல்லிய பகழி வாங்கி, போர்த் தொழில் சிரமம் போக்கி,
எல்லியும் கழித்தி' என்னா, எழுந்தனன்; எழுந்து, பேழ் வாய்
வல்லியம் முனிந்தாலன்னான், 'வருக, தேர் தருக!' என்றான்.

**இராவணனைத் தடுத்து, இந்திரசித்துப் போர்க்குச் செல்லுதல்**

எழுந்தவன்தன்னை நோக்கி, இணை அடி இறைஞ்சி, 'எந்தாய்!
ஒழிந்தருள், சீற்றம்; சொன்ன உறுதியைப் பொறுத்தி; யான் போய்க்
கழிந்தனென் என்ற பின்னர், நல்லவா காண்டி' என்னா
மொழிந்து, தன் தெய்வத் தேர்மேல் ஏறினன், முடியலுற்றான்.

படைக்கல விஞ்சை மற்றும் படைத்தன பலவும், தன்பால்
அடைக்கலம் என்ன ஈசன் அளித்தன, தேர்மேல் ஆக்கி, [யோன் தன்னைக்
கொடைத் தொழில் வேட்டோர்க்கு எல்லாம் கொடுத்தனன், கொடி
கடைக்கணால் நோக்கி நோக்கி, இரு கண் நீர் கலுழப் போனான். 14

இலங்கையின் நிருதர் எல்லாம் எழுந்தனர், விரைவின் எய்தி,
'விலங்கல் அம் தோளாய்! நின்னைப் பிரிகலம்; விளிதும்' என்று,
வலங்கொடு தொடர்ந்தார் தம்மை, 'மன்னனைக் காமின்; யாதும்
கலங்கலிர்; இன்றே சென்று, மனிசரைக் கடப்பென்' என்றான்.

வணங்குவார், வாழ்த்துவார், தன் வடிவினை நோக்கித் தம் வாய்
உணங்குவார், உயிர்ப்பார், உள்ளம் உருகுவார் வெருவலுற்றுக்
கணங் குழை மகளிர் ஈண்டி இரைத்தவர், கடைக்கண் என்னும்
அணங்குடை நெடு வேல் பாயும் அமர் கடந்து, அரிதின் போனான். 16

ஏயினன் இன்னன் ஆக, இலக்குவன், எடுத்த வில்லான்,
சேய் இரு விசும்பை நோக்கி, 'வீடண! தீயோன் அப் பால்
போயினன் ஆதல் வேண்டும்; புரிந்திலன் ஒன்றும்' என்பான்,
ஆயிரம் புரவி பூண்ட தேரின் பேர் அரவம் கேட்டான். 17

10. பொன்றுதல் - இறத்தல்; 12. தொடர்ந்து - அடைந்து; எல்லி - இரவு; வல்லியம் - புலி; 13. நல்லவா - நல்லனவாக; 15. பிரிகலம் - பிரிய மாட்டோம்; 16. இரைத்தவர் - அரற்றினவர்.

குன்று இடை நெரிதர, வடவரையின்
　　குவடு உருள்குவது என முடுகுதொறும்,
பொன் திணி கொடியினது, இடி உருமின்
　　அதிர் குரல் முரல்வது, புனை மணியின்
மின் திரள் சுடரது, கடல் பருகும்
　　வடவனல் வெளி உற வருவது எனச்
சென்றது, திசை திசை உலகு இரிய,—
　　திரி புவனமும் உறு தனி இரதம்.　　18

கடல் மறுகிட, உலகு உலைய, நெடுங்
　　கரி இரிதர, எதிர் கவி குலமும்
குடர் மறுகிட, மலை குலைய, நிலம்
　　குழியொடு கிழிபட, வழி படரும்
இடம் மறுகிய பொடி முடுகிடவும்,
　　இருள் உளது என எழும் இகல் அரவின்
படம் மறுகிட, எதிர் விரவியது—அவ்
　　இருள் பகல் உற வரு பகை இரதம்.　　19

**இந்திரசித்தும் இலக்குவனும் பொருதல்**

ஆர்த்தது நிருதர்தம் அனிகம்; உடன்,
　　அமரரும் வெருவினர்; கவி குலமும்
வேர்த்தது, வெருவலொடு அலம்வரலால்;
　　விடு கணை சிதறினன், அடு தொழிலோன்;
தீர்த்தனும், அவன் எதிர் முடுகி, நெடுந்
　　திசை செவிடு எறிதர, விசை கெழு திண்
போர்த் தொழில் புரிதலும், உலகு கடும்
　　புகையொடு சிகை அனல் பொதுளியதால்.　　20

**'இந்திரசித்தை உடனே கொல்க' என வீடணன் இலக்குவனுக்கு உரைத்தல்**

வீடணன் அமலனை, 'விறல் கெழு போர்
　　விடலையை இனி இடை விடல் உளதேல்,
சூடலை, துறு மலர் வாகை' எனத்
　　தொழுதனன்; அவ் அளவில் அழகனும் அக்
கோடு அணை வரி சிலை உலகு உலைய,
　　குல வரை பிதிர்பட, நிலவரையில்
சேடனும் வெருவுற, உரும் உறழ் திண்
　　தெறு கணை முறை முறை சிதறினனால்.　　21

18. பொன் திணி - பொற்கம்பம்; 19. இருள் உளது என எழும் அரவு - இரவின் (இருளுக்கு மேலும்) இருள் உள்ளது என்னுமாறு நஞ்சு கக்கிக் கொண்டு எழும் ஆதிசேடனாகிய பாம்பு; 20. அனிகம் - சேனை; அலம்வரல் - வருந்துதல்; 21. தெறு கணை - அழிக்கும் அம்பு.

ஆயிர அளவின அயில் முக வாய்
அடு கணை அவன் விட, இவன் விட, அத்
தீயினும் எரிவன உயிர் பருக,
சிதறின கவிகளொடு இன நிருதர்,
போயின போயின திசை நிறையப்
புரள்பவர் முடிவு இலர்; பொரு திறலோர்
ஏயின, ஒருவரை ஒருவர் குறித்து,
எரி கணை, இரு மழை பொழிவனபோல். 22

அற்றன, அனல் விழி நிருதன் வழங்கு
அடு கணை இடை இடை; அடல் அரியின்
கொற்றவன் விடு கணை முடுகி, அவன்
உடல் பொதி குருதிகள் பருகின கொண்டு
உற்றன; ஒளி கிளர் கவசம் நுழைந்து
உறுகில; தெறுகில அனுமன் உடல்;
புற்றிடை அரவு என நுழைய, நெடும்
பொரு சரம் அவன் அவை உணர்கிலனால். 23

ஆயிடை, இளையவன், விடம் அனையான்
அவன் இடு கவசமும் அழிவுபட,
தூயினன், அயில் முக விசிகம்; நெடுந்
துளைபட, விழி கனல் சொரிய, முனிந்து;
ஏயின நிருதனது எரி கணைதான்
இடன் இல படுவன இடை இடை வந்து
ஒய்வுறுவன; அது தெரிவுறலால்,
உரறினர் இமையவர், உவகையினால். 24

'வில்லினின் வலி தரல் அரிது' எனலால்,
வெயிலினும் அனல் உமிழ் அயில், 'விரைவில்
செல்' என, மிடல் கொடு கடவினன்; மற்று
அது திசைமுகன் மகன் உதவியதால்;
எல்லினும் வெளி பட எதிர்வது கண்டு,
இளையவன் எழு வகை முனிவர்கள்தம்
சொல்லினும் வலியது ஓர் சுடு கணையால்,
நடு இரு துணிபட உரறினனால். 25

24. இடம் படுவன இல - குறித்த இடத்திலே படுதல் இல்லாதன; 25. திசை முகன் மகன் - பிரமன் மகனாகிய சிவன்; எல் - பகற்பொழுது; எழு வகை முனிவர் - அத்திரி, பிருகு, குச்சன், வசிட்டன், கௌதமன், காசியபன், ஆங்கிரீசன் என்பார்.

ஆணியின் நிலையன விசிகம், நுழைந்து,
ஆயிரம் உடல் புக, அழிபடு செஞ்
சோணிதம் நிலம் உற, உலறிடவும்,
தொடு கணை விடுவன மிடல் கெழு திண்
பாணிகள் கடுகின முடுகிடலும்,
பகலவன் மருமகன், அடு கணை வன்
தூணியை உரும் உறழ் பகழிகளால்
துணிபட, முறை முறை சிதறினனால். 26

'தேர் உளது எனின், இவன் வலி தொலையான்'
எனும் அது தெரிவுற, உணர் உறுவான்,
'போர் உறு புரவிகள் படுகிலவால்;
புனை பிணி துணிகில, பொரு கணையால்;
சீரிது, பெரிது, இதன் நிலைமை' எனத்
தெரிபவன் ஒரு சுடு தெறு கணையால்,
சாரதி மலை புரை தலையை நெடுந்
தரையிடை இடுதலும், முறை திரிய. 27

உய் வினை ஒருவன் தூண்டாது உலத்தலின், தவத்தை நண்ணி,
அய்வினை நலிய, நைவான் அறிவிற்கும் உவமை ஆகி
மெய் வினை அமைந்த காமம் விற்கின்ற விரகின் தோலாப்
பொய்வினைமகளிர் கற்பும் போன்றது—அப் பொலம் பொன் திண்தேர்.

துள்ளு பாய் புரவித் தேரும் முறை முறை தானே தூண்டி,
அள்ளினன் பறிக்கும் தன் பேர் ஆகமே ஆவம் ஆக,
வள்ளல்மேல், அனுமன்தன்மேல், மற்றையோர் மல் திண்தோள்மேல்,
உள்ளுறப் பகழி தூவி, ஆர்த்தனன், எவரும் உட்க. 29

**இந்திரசித்தின் வீரம் கண்டு, தேவரும் இலக்குவனும் வியத்தல்**

'வீரர் என்பார்கட்கு எல்லாம் முன் நிற்கும் வீரர் வீரன்;
பேரர் என்பார்கள் ஆகும் பெற்றியின் பெற்றித்து ஆமே?
சூரர் என்று உரைக்கற்பாலார், துஞ்சும் போது உணர்வின் சோராத்
தீரர்' என்று அமரர் செப்பி, சிந்தினர், தெய்வப் பொற் பூ. 30

26. சோணிதம் - இரத்தம்; பாணி - கை, திசைச்சொல்; 28. உய் வினை - தேரைச் செலுத்தும் செயல்; அய் வினை - ஐம்புலன்கள், ஈண்டு ஐம்பொறி; மெய்வினை அமைந்த காமம் - உடம்பின் செயலாக மட்டும் அமைந்த காம நுகர்ச்சி; பாகன் அற்றதனால் ஒருநிலைப்படாத தேருக்கு, தவத்தைத் தொடங்கிச் செய்தும் ஐம்பொறிகளை அடக்கமாட்டாதவனுடைய மனமும் விலைமகளின் கற்பும் உவமை.

'எய்த வன் பகழி எல்லாம் பறித்து, இவன் என்மேல் எய்யும்;
கய் தடுமாறுது; உள்ளம் உயிர் இனம் கலங்கா; யாக்கை
மொய் கணை கோடி கோடி மொய்க்கவும், இளைப்பு ஒன்று இல்லான்;'
அய்யனும், 'இவனோடு எஞ்சும் ஆண்தொழில் ஆற்றல்' என்றான். 31

**இந்திரசித்தன் இரவில் இறவான் என இலக்குவனுக்கு வீடணன் இயம்புதல்**

'தேரினைக் கடாவி, வானில் செல்லினும் செல்லும்; செய்யும்
போரினைக் கடந்து, மாயம் புணர்க்கினும் புணர்க்கும்; போய் அக்
காரினைக் கடந்தும் வஞ்சம் கருதினும் கருதும்; காண்டி,
வீர! மெய்; பகலின் அல்லால், விளிகிலன் இருளின், வெய்யோன்.' 32

என்று எடுத்து இலங்கை வேந்தற்கு இளையவன் இயம்ப, 'இன்னே
பொன்றுவது அல்லால், அப்பால் இனி ஒரு போக்கும் உண்டோ?
சென்றுழிச் செல்லும் அன்றே தெறு கணை; வலியின் தீர்ந்தான்;
வென்றி இப்போதே கோடும்; காண்' என விளம்பும் எல்லை. 33

செம் புனல் சோரிச் செக்கர் திசை உறச் செறிகையாலும்,
அம்பு என உற்ற கொற்றத்து ஆயிரம் கதிர்களாலும்,
வெம்பு பொன் தேரில் தோன்றும் சிறப்பினும், அரக்கன் மெய்யோடு
உம்பரில் செல்கின்றான் ஒத்து, உதித்தனன், அருக்கன் உப்பால்.

விடிந்தது பொழுதும்; வெய்யோன் விளங்கினன், உலகம் மீதாய்;
இடுஞ் சுடர் விளக்கம் என்ன அரக்கரின் இருளும் வீய,
'கொடுஞ் சின மாயச் செய்கை வலியொடும் குறைந்து குன்ற,
முடிந்தனன், அரக்கன்' என்னு, முழங்கினர், உம்பர் முற்றும்.

**'சிவன் ஈந்த தேரும் சிலையும் இருக்கும்வரை அழியான்' என வீடணன் குறிப்பித்தல்**

'ஆர் அழியாத சூலத்து அந்தணன் அருளின் ஈந்த
தேர் அழியாத போதும், சிலை கரத்து இருந்த போதும்,
போர் அழியான், இவ் வெய்யோன்; புகழ் அழியாத பொன்—தோள்
வீர! இது ஆணை' என்றான்—வீடணன், விளைவது ஓர் வான். 36

31. அய்யன் - ஐயன், உயர்ந்தோனாகிய இலக்குவன்; 36. ஆர் அழியாத சூலம் - கூர்மை கெடாத சூலப்படை; ஆர் - கூர்மை, இலை என்பாரும் உண்டு.

**இலக்குவன் இந்திரசித்தின் தேரைச் சிதைக்க, அவன் விண்ணில் மறைந்து ஆரவாரித்தல்**

'பச்சை வெம் புரவி வீயா; பல்லியச் சில்லி பாரில்
நிச்சயம் அற்று நீங்கா' என்பது நினைந்து, வில்லின்
விச்சையின் கணவன் ஆனான், வின்மையால், வயிரம் இட்ட
அச்சினோடு ஆழி வெவ்வேறு ஆக்கினான், ஆணி நீக்கி. 37

மணி நெடுந் தேரின் கட்டு விட்டு, அது மறிதலோடும்,
அணி நெடும் புரவி எல்லாம் ஆற்றல ஆய அன்றே—
திணி நெடு மரம் ஒன்று, ஆழி வாள் மழுத் தாக்க, சிந்திப்
பணை நெடு முதலும் நீங்க, பாங்கு உறை பறவை போல. 38

அழிந்த தேர்த் தட்டின்நின்றும் அங்குள்ள படைகள் அள்ளிப்
பொழிந்தனன்; இளைய வீரன் கணைகளால் துணித்துப் போக்க,
மொழிந்து இருவகையில் விண்ணை முட்டினான், உலகம் மூன்றும்
கிழிந்தன என்ன ஆர்த்தான்; கண்டிலர், ஓசை கேட்டார். 39

**இந்திரசித்தன் – இலக்குவன் போர்**

மல்லின் மா மாரி அன்ன தோளினான், மழையின் வாய்ந்த
கல்லின் மா மாரி, பெற்ற வரத்தினால், சொரியும்காலை,
செல்லும் வான் திசைகள் ஓரார், சிரத்தினோடு உடல்கள் சிந்தப்
புல்லினார் நிலத்தை, நின்ற வானர வீரர், போகார். 40

காண்கிலன், கல்லின் மாரி அல்லது, காளை வீரன்,
சேண் கலந்து ஒளித்து நின்ற செய்கையால், திசைகள் எங்கும்
மாண் கலந்து அளந்த மாயன் வடிவு என, முழுதும் வௌவ,
ஏண் கலந்து அமைந்த வாளி ஏவினான், இடைவிடாமல். 41

மறைந்தன திசைகள் எங்கும்; மாறு போய் மலையும் ஆற்றல்
குறைந்தனன்; இருண்ட மேகக் குழாத்திடைக் குருதிக் கொண்மூ
உறைந்துளது என்ன நின்றான் உருவினை, உலகம் எல்லாம்
நிறைந்தவன் கண்டான்; காணா, இனையது ஓர் நினைவது ஆனான்:

'சிலை அறுது எனினும், மற்று அத் திண்ணியோன் திரண்ட தோளாம்
மலை அறுது ஒழியாது' என்னா, வரி சிலை ஒன்று வாங்கி,
கலை அருத் திங்கள் அன்ன வாளியால், கையைக் கொய்தான்—
விலை அரு மணிப் பூணோடும், வில்லொடும், நிலத்து வீழ. 43

37. விச்சை - வித்தை, கல்வி; கணவன் - தலைவன்; ஆணி - கடையாணி;
38. ஆழிவாள் மழு - சக்கரப்படை போன்று கூர்மையுடைய கோடாலி;
42. மாறு போய் - எதிராகச் சென்று.

பாக வான் பிறைபோல் வெவ் வாய்ச் சுடு கணை படுதலோடும்,
வேக வான் கொடுங் கால் எற்ற முற்றும் போய் விளியும் நாளில்,—
மாக வான் தடக் கை மண்மேல் விழுந்தது மணிப் பூண் மின்ன—
மேகம் ஆகாயத்து இட்ட வில்லொடும் வீழ்ந்தது என்ன. 44

படித்தலம் சுமந்த நாகம் பாக வான் பிறையைப் பற்றிக்
கடித்தது போல, கோல விரல்களால் இறுகக் கட்டிப்
பிடித்த வெஞ் சிலையினோடும், பேர் எழில் வீரன் பொன்-தோள்
துடித்தது,—மரமும் கல்லும் துகள் பட, குரங்கும் துஞ்ச. 45

அந்தரம் அதனில் நின்ற வானவர், 'அருக்கன் வீழா,
சந்திரன் வீழா, மேரு மால் வரை தகர்ந்து வீழா,
இந்திரசித்தின் பொன்-தோள் இற்று இடைவிழுந்தது என்றால்,
எந்திரம் அனைய வாழ்க்கை இனிச் சிலர் உகந்து என்? என்றார்.

மொய் அற மூர்த்தி அன்ன மொய்ம்பினன் அம்பினால், அப்
பொய் அறச் சிறிது என்று எண்ணும் பெருமையான் புதல்வன், பூத்த
மை அறக் கரிது என்று எண்ணும் மனத்தினன், வயிரம் அன்ன,
கை அற, தலை அற்றார் போல் கலங்கினார், நிருதர் கண்டார்.

அன்னது நிகழும் வேலை, ஆர்த்து எழுந்து, அரியின் வெள்ளம்
மின் எயிற்று அரக்கர் சேனை யாவரும் மீளா வண்ணம்,
கொல் நகக் கரத்தால், பல்லால்; மரங்களால், மானக் குன்றால்,
பொன் நெடு நாட்டை எல்லாம் புதுக் குடி ஏற்றிற்று அன்றே.

காலம் கொண்டு எழுந்த மேகக் கருமையான், 'செம்மை காட்டும்
ஆலம் கொண்டு இருண்ட கண்டத்து அமரர் கோன் அருளின் பெற்ற
சூலம் கொண்டு எறிவல்' என்று தோன்றினான், 'பகையின் தோற்ற
மூலம் கொண்டு உணரா நின்னை முடித்து அன்றி முடியேன்' என்றான்.

காற்று என, உரும்ஏறு என்ன கனல் என, கடை நாள் உற்ற
கூற்றம் ஓர் சூலம் கொண்டு குறுகியது என்ன, கொல்வான்
தோற்றினன்; அதனைக் காணா, 'இனி, தலை துணிக்கும் காலம்
ஏற்றது' என்று, அயோத்தி வேந்தற்கு இளையவன் இதனைச் செய்தான்.

**இலக்குவன் பிறை முக அம்பு எய்து, இந்திரசித்தின் தலையை அறுத்தல்**

'மறைகளே தேறத் தக்க, வேதியர் வணங்கற்பால,
இறையவன் இராமன் என்னும் நல் அற மூர்த்திஎன்னின்,
பிறை எயிற்று இவனைக் கோறி' என்று, ஒரு பிறை வாய் வாளி
நிறை உற வாங்கி விட்டான்—உலகு எலாம் நிறுத்தி நின்றான்.

46. எந்திரம் அனைய வாழ்க்கை - தேர்ச் சக்கரம் போன்று மாறிமாறிச் செல்லும் உயிர்வாழ்க்கை; 48. மானக் குன்று - பெரிய குன்று; 49. காலம் கொண்டு - கார்காலத்து நீரைக்கொண்டு; தோற்ற மூலம் - பிறப்பு வரலாறு.

நேமியும், குலிச வேலும், நெற்றியின் நெருப்புக் கண்ணன்
நாம வேல்தானும், மற்றை நான்முகன் படையும், நாண,
தீ முகம் கதுவ ஓடிச் சென்று, அவன் சிரத்தைத் தள்ளி,
பூ மழை அமரர் சிந்த, பொலிந்தது—அப் பகழிப் புத்தேள். 52

அற்றவன் தலைமீது ஓங்கி, அண்டம் உற்று அணுகாமுன்னம்,
பற்றிய சூலத்தோடும், உடல்நிறை பகழியோடும்,
எறறிய காலக் காற்றால், மின்னொடும் இடியினோடும்
சுற்றிய புயல் வீழ்ந்தென்ன, வீழ்ந்தது, சோரன் யாக்கை. 53

விண்தலத்து இலங்கு திங்கள் இரண்டொடும், மின்னு வீசும்
குண்டலத் துணைகளோடும், கொந்தளக் குஞ்சிச் செங்கேழ்ச்
சண்ட வெங் கதிரின் கற்றைத் தழையொடும், இரவிதான் அம்
மண்டலம் வீழ்ந்தது என்ன, வீழ்ந்தது, தலையும் மண்மேல். 54

உயிர் புறத்து உற்ற காலை, உள் நின்ற உணர்வினோடும்,
செயிர் அறு பொறியும் அந்தக்கரணமும் சிந்துமாபோல்,
அயில் எயிற்று அரக்கர் உள்ளார், ஆற்றலர் ஆகி, ஆன்ற
எயிலுடை இலங்கை நோக்கி, இரிந்தனர், படையும் விட்டார்

வில்லாளர் ஆனார்க்கு எல்லாம் மேலவன் விளிதலோடும்,
'செல்லாது, அவ் இலங்கை வேந்தற்கு அரசு' எனக் களித்த தேவர்
எல்லாரும், தூசு நீக்கி ஏறிட ஆர்த்த போது,
கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்டம் ஒத்தார். 56

வரம் தரு முதல்வன், மற்றை மான் மறிக் கரத்து வள்ளல்,
புரந்தரன், முதல்வர் ஆய நான்மறைப் புலவர், பாரில்
நிரந்தரம் தோன்றி நின்றார்; அருளினால் நிறைந்த நெஞ்சர்
கரந்திலர்; அவரை யாக்கை கண்டன, குரங்கும், கண்ணால். 57

'அறம் தலை நின்றார்க்கு இல்லை அழிவு' எனும் அறிஞர் வார்த்தை
சிறந்தது—சரங்கள் பாயச் சிந்திய சிரத்த ஆகி,
பறந்தலைஅதனில் மற்று அப் பாதக அரக்கன் கொல்ல,
இறந்தன கவிகள் எல்லாம் எழுந்தன, இமையோர் ஏத்த. 58

52. நாம வேல் - அஞ்சத்தக்க சூல வேல்; 53. சோரன் - திருடன், இந்திரசித்தன்; 54. கொந்தளக் குஞ்சி - சுருண்ட குடுமி; கதிரின் தாழை கற்றை எனக் கூட்டுக; 55. சிந்துமாபோல் - அழிவது போல; 56. தூசு - தம் அரையில் உடுத்திருந்த ஆடை; கொல்லாத விரதத்தார் - அருக சமயத் தவர்; 57. முதல்வன் - திருமால்.

### இந்திரசித்தின் தலையை ஏந்தி, அங்கதன் முன் செல்ல, இலக்குவன் பின் செல்லுதல்

ஆக்கையின்நின்று வீழ்ந்த அரக்கன்தன் தலையை அம் கை
தூக்கினன், உள்ளம் கூர்ந்த வாலி சேய் தூசி செல்ல,
மேக்கு உயர்ந்து அமரர் வெள்ளம் அள்ளியே தொடர்ந்து வீசும்
பூக் கிளர் பந்தர் நீழல், அனுமன்மேல் இளவல் போனான். 59

வீங்கிய தோளன், தேய்ந்து மெலிகின்ற பழியன், மீதுற்று
ஓங்கிய முடியன், திங்கள் ஒளி பெறு முகத்தன், உள்ளால்
வாங்கிய துயரன், மீப் போய் வளர்கின்ற புகழன், வந்துற்று
ஓங்கிய உவகையாளன், இந்திரன், உரைப்பதானான்; 60

' '' எல்லி வான் மதியின் உற்ற கறை என, என்மேல் வந்து
புல்லிய வடுவும் போகாது '' என்று அகம் புலம்புகின்றேன்,
வில்லியர் ஒருவர் நல்க, துடைத்துறும் வெறுமை தீர்ந்தேன்;
செல்வமும் பெறுவதற்கு உண்டோ குறை? இனி, சிறுமை யாதோ? 61

தென்தலை ஆழி தொட்டோன் சேய் அருள் சிறுவன் செம்மல்,
வென்று அலைத்து என்னை ஆர்த்துப் போர்த் தொழில் கடந்த வெய்
தன் தலை எடுப்பக் கண்டு, தானவர் தலைகள் சாய, [யோன்,
என் தலை உடுக்கலானேன்; இனிக் குடை எடுப்பென்' என்றான்.

வரதன், போய் மறுகாநின்ற மனத்தினன், 'மாயத்தோனைச்
சரதம் போர் வென்று மீளும், தருமமே தாங்க' என்பான்,
விரதம் பூண்டு, உயிரினோடும் தன்னுடை மீட்சி நோக்கும்
பரதன் போன்று இருந்தான், தம்பி வருகின்ற பரிசு பார்த்தான். 63

வன் புலம் கடந்து மீளும் தம்பிமேல் வைத்த மாலைத்
தன் புல நயனம் என்னும் தாமரை சொரியும் தாரை,
அன்புகொல்? அழு கணீர்கொல்? ஆனந்த வாரியேகொல்?
என்புகள் உருகிச் சோரும் கருணைகொல்? யார், அது ஓர்வார்?

### இராமன் திருவடிகளில் இந்திரசித்தின் தலையை வைக்க அவன் களிப்புக் கொள்ளுதல்

விழுந்து அழி கண்ணின் நீரும், உவகையும், களிப்பும், வீங்க,
எழுந்து எதிர் வந்த வீரன் இணை அடி முன்னர் இட்டான்—
கொழுந்து எழும் செக்கர்க் கற்றை வெயில் விட, எயிற்றின் கூட்டம்
அழுந்துற, மடித்த பேழ் வாய்த் தலை அடியுறை ஒன்று ஆக. 65

59. உள்ளம் கூர்தல் - மனமகிழ்ச்சி மிகுதல்; தூசி - முன்னணி; மேக்கு - மேலிடம், விண்; 62. தென்தலை ஆழி தொட்டோன் - தெற்குத் திசையில் ஆணைச் சக்கரம் செலுத்தியவன், இராவணன்; குடை எடுத்தல் - வெற்றி பெற்றதற்கு அடையாளமாக வெண்கொற்றக் குடையைப் பிடித்தல்; 63. சரதம் - நிச்சயம்; 64. வன் புலம் - வலிதாகிய பகைப் புலம்; தாமரை மாலை சொரியும் தாரை என இயையும்.

தலையினை நோக்கும்; தம்பி கொற்றவை தழீஇய பொன் தோள்
மலையினை நோக்கும்; நின்ற மாருதி வலியை நோக்கும்;
சிலையினை நோக்கும்; தேவர் செய்கையை நோக்கும்; செய்த
கொலையினை நோக்கும்; ஒன்றும் உரைத்திலன், களிப்புக் கொண்டான்.

காள மேகத்தைச் செக்கர் கலந்தென, கரிய குன்றில்
நாள் வெயில் பரந்தது என்ன, நம்பிதன் தம்பி மார்பில்
தோளின்மேல் உதிரச் செங் கேழ்ச் சுவடு தன் உருவில் தோன்ற
தாளின்மேல் வணங்கிஞனைத் தழுவினன், தனித்து ஒன்று இல்லான்.

'கம்ப மதத்துக் களி யானைக் காவல் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து குறுகினுள் என்று அகம் குளிர்ந்தேன்;
வம்பு செறிந்த மலர்க் கோயில் மறையோன் படைத்த மா நிலத்தில்,
"தம்பி உடையான் பகை அஞ்சான்" என்னும் மாற்றம் தந்தனையால்.*

தூக்கிய தூணி வாங்கி, தோளொடு மார்பைச் சுற்றி
வீக்கிய கவச பாசம் ஒழித்து, அது விரைவின் நீக்கி,
தாக்கிய பகழிக் கூர் வாய் தடிந்த புண் தழும்பும் இன்றிப்
போக்கினன்—தழுவிப் பல்கால், பொன் தடந் தோளின் ஒற்றி.

**வீடணனை இராமன் புகழ்ந்து பேசி, இனிது இருத்தல்**

'ஆடவர் திலக! நின்னால் அன்று; இகல் அனுமன் என்னும்
சேடனால் அன்று; வேறு ஓர் தெய்வத்தின் சிறப்பும் அன்று;
வீடணன் தந்த வென்றி, ஈது' என விளம்பி மெய்ம்மை,
ஏடு அவிழ் அலங்கல் மார்பன் இருந்தனன், இனிதின், இப்பால்.

# 28 இராவணன் சோகப் படலம்

**தூதர் இராவணனுக்கு இந்திரசித்து இறந்தமை தெரிவித்தல்**

ஓத ரோதன வேலை கடந்துளார்,
பூதரோதரம் புக்கென, போர்த்து இழி
சீதரோதக் குருதித் திரை ஒரீஇ,
தூதர் ஓடினர், தாதையின் சொல்லுவார். 1

68. கம்பம் - கட்டுத்தறி, அசைந்தாடுதல் எனினும் ஆம்; வம்பு - மணம்; 69. கவச பாசம் - கவசத்தின் கயிறு; 70. சேடன் - சிரேட்டன், உயர்ந்த பண்பினன்.

**28:** 1. ரோதன ஓத வேலை - அழுகையாகிய அலை கடல்; பூதரோதரம் - பூதர உதரம், மலையின் வயிறு; சீதரோதக் குருதித் திரை - குளிர்ச்சியையும் கரையையும் உடைய இரத்தக் கடல்.

அன்றில் அம் கரும் பேடைகள் ஆம் என,
முன்றில் எங்கும் அரக்கியர் மொய்த்து அழ,
‘ இன்று இலங்கை அழிந்தது ’ என்று ஏங்குவார்,
சென்று, இலங்கு அயில் தாதையைச் சேர்ந்துளார். 2

பல்லும் வாயும் மனமும் தம் பாதமும்
நல் உயிர்ப் பொறையோடு நடுங்குவார்,—
‘ இல்லை ஆயினன், உன் மகன் இன்று ’ எனச்
சொல்லினர்—பயம் சுற்றத் துளங்குவார். 3

மாடு இருந்த வர மாதவர், வானவர்,
ஆடல் நுண் இடையார் மற்றும் யாவரும்,
‘ வீடும், இன்று, இவ் உலகு ’ என விம்முவார்,
ஓடி, எங்கணும் சிந்தி ஒளித்தனர். 4

தூதரை இராவணன் வாளால் வீசுதல்

சுடர்க் கொழும் புகை தீ விழி தூண்டிட,
தடற்று வாள் உருவி, தரும் தூதரை
மிடற்று வீசல் உரு, விழுந்தான்அரோ—
கடல் பெருந் திரைபோல் கரம் சோரவே. 5

இராவணன் புலம்பல்

‘வாய்ப் பிறந்தும், உயிர்ப்பின் வளர்ந்தும், வான்
காய்ப்பு உறும்தொறும் கண்ணிடைக் காந்தியும்,
போய்ப் பிறந்து, இவ் உலகைப் பொதியும் வெந்
தீப் பிறந்துளது, இன்று’ எனச் செய்ததால். 6

படம் பிறங்கிய பாந்தளும் பாரும் பேர்ந்து,
இடம் பிறங்கி, வலம்பெயர்ந்து ஈடு உற,
உடம்பு இறங்கிக் கிடந்து உழைத்து, ஓங்கு தீ
விடம் பிறந்த கடல் என வெம்பினன். 7

திருகு வெஞ் சினத் தீ நிகர் சீற்றமும்,
பெருகு காதலும், துன்பும், பிறழ்ந்திட,
இருபது என்னும் எரி புரை கண்களும்,
உருகு செம்பு என, ஓடியது ஊற்று நீர். 8

2. தாதை - (இந்திரசித்தன்) தந்தை, இராவணன்; 3. உயிர்ப் பொறை - உயிர்ப் பாரம்; 5. தடறு - உறை; 7. ஈடு - வலிமை.

கடித்த பற் குலம், கற் குலம் கண் அற
இடித்த காலத்து உரும் என எங்கணும்,
அடித்த கைத்தலம் அம் மலை, ஆழி நீர்,
வெடித்த வாய்தொறும் பொங்கின, மீச் செல. 9

' மைந்தவோ!' எனும்; ' மா மகனே! ' எனும்;
' எந்தையோ! ' எனும்; ' என் உயிரே! ' எனும்;
' முந்தினேன் உனை; நான் உளெனோ! ' எனும்;—
வெந்த புண்ணிடை வேல் பட்ட வெம்மையான். 10

' புரந்தரன் பகை போயிற்று அன்றோ! ' எனும்;
' அரந்தை வானவர் ஆர்த்தனரோ! ' எனும்;
' கரந்தை சூடியும், பாற்கடல் கள்வனும்,
நிரந்தரம் பகை நீங்கினரோ!' எனும். 11

' நீறு பூசியும் நேமியும் நீங்கினார்,
மாறு குன்றொடு வேலை மறைந்துளார்,
ஊறு நீங்கினராய், உவணத்தினோடு
ஏறும் ஏறி, உலாவுவார் ' என்னுமால்.* 12

' வான மானமும், வானவர் ஈட்டமும்,
போன போன திசை இடம் புக்கன,
தானம் ஆனவை சார்கில; சார்குவது,
ஊன மானிடர் வென்றிகொண்டோ?' எனும். 13

' கெட்ட தூதர் கிளத்தினவாறு ஒரு
கட்ட மானிடன் கொல்ல, என் காதலன்
பட்டு ஒழிந்தனனே! ' எனும்; பல் முறை
விட்டு அழைக்கும்; உழைக்கும்; வெதும்புமால். 14

எழும்; இருக்கும்; இரைக்கும்; இரக்கம் உற்று
அழும்; அரற்றும்; அயர்க்கும்; வியர்க்கும்; போய்
விழும்; விழிக்கும்; முகிழ்க்கும்; தன் மேனியால்,
உழும் நிலத்தை; உருளும்; புரளுமால். 15

' அய்யனே!' எனும், ஓர் தலை; 'யான் இனம்
செய்வெனே அரசு!' என்னும், அங்கு ஓர் தலை;
' கய்யனேன், உனைக் காட்டிக் கொடுத்த நான்,
உய்வெனே! ' என்று உரைக்கும், அங்கு ஓர் தலை. 16

9. கற் குலம் - மலைக்கூட்டம்; 11. கரந்தை சூடி - கரந்தையை அணிந்த சிவன்; 13. தானம் - இருப்பிடம்; 14. கட்ட மானிடன் - வருத்தம் மிக்க மானிடன்; 15. இரைத்தல் - பெருமூச்சுவிடுதல்; 16. கய்யன் - கீழ்மகன்.

'எழுவின் கோலம் எழுதிய தோள்களால்
தழுவிக் கொள்கிலையோ!' எனும், ஓர் தலை;
'உழுவைப் போத்தை உழை உயிர் உண்பதே!
செழு வில் சேவகனே!' எனும், ஓர் தலை. 17

'நீலம் காட்டிய கண்டனும், நேமியும்,
ஏலும் காட்டின், எறிந்த படை எலாம்
தோலும் காட்டி, துரந்தனை; மீண்டும் நின்
ஓலம் காட்டிலையோ!' எனும், ஓர் தலை.* 18

'துஞ்சினுய்கொல், துணை பிரிந்தேன்' எனும்;
'வஞ்சமோ!' எனும்; 'வாரலையோ!' எனும்;
'நெஞ்சு நோவ, நெடுந் தனியே கிடந்து,
அஞ்சினேன்!' என்று அரற்றும்;—அங்கு ஓர் தலை.* 19

'காகம் ஆடு களத்திடைக் காண்பெனே,
யாகசாதனன் மௌலியொடும் பொறித்து
ஓகை மாதவர் உச்சியின் வைத்த நின்
வாகை நாள்மலர்?' என்னும்—மற்று ஓர் தலை. 20

'சேல் இயல் கண் இயக்கர்தம் தேவிமார்,
மேல் இனித் தவிர்கிற்பர்கொல், வீர! நின்
கோல வில் குரல் கேட்டுக் குலுங்கித் தம்
தாலியைத் தொடல்' என்னும்—மற்று ஓர் தலை. 21

'கூற்றம் உன் எதிர் வந்து, உயிர் கொள்வது ஓர்
ஊற்றம்தான் உடைத்து அன்று; எனையும் ஒளித்து
ஏற்ற எவ் உலகு உற்றனை? எல்லை இல்
ஆற்றலாய்!' என்று உரைக்கும்—அங்கு ஓர் தலை. 22

**இராவணன், மைந்தன் உடலைத் தேடிக் களம் புகுதல்**

இன்னவாறு அழைத்து ஏங்குகின்றான் எழுந்து,
உன்னும் மாத்திரத்து ஓடினன், ஊழி நாள்
பொன்னின் வான் அன்ன போர்க்களம் புக்கனன்,
நன் மகன்தனது ஆக்கையை நாடுவான். 23

17. உழுவைப் போத்தை - ஆண்புலி; உழை - பெண்மான்; 18. ஏலும் - பொருந்திய; தோல் - தோல்வி; கேடகம் எனலும் ஆம்; ஓலம் - குரல்; 20. யாகசாதனன் - யாகத்தால் பதவி அடைந்தவன், இந்திரன்; ஓகை - உவகை; 22. எனையும் ஒளித்து - எனக்குத் தெரியாமல் மறைந்து.

தேவரே முதலாகிய சேவகர்
யாவரும் உடனே தொடர்ந்து ஏகினர்,
'மூவகைப் பேர் உலகின் முறைமையும்
ஏவது ஆகும்?' என்று எண்ணி இரங்குவார். 24

அழுதவால் சில; அன்பின போன்று, அடி
தொழுதவால் சில; தூங்கினவால் சில;
உழுத யானைப் பிணம் புக்கு ஒளித்தவால்—
கழுதும் புள்ளும், அரக்கனைக் காண்டலும்.* 25

கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்,
ஆடல் வென்றி அரக்கர்தம் ஆக்கையும்,
ஓடை யானையும், தேரும், உருட்டினன்,
நாடினன், தன் மகன் உடல், நாள் எலாம்.* 26

மெய் கிடந்த விழி வழி நீர் விழ,
நெய் கிடந்த கனல் புரை நெஞ்சினன்,
மொய் கிடந்த சிலையொடு மூரி மாக்
கய் கிடந்தது கண்டனன், கண்களால். 27

பொங்கு தோள்வளையும் கணைப் புட்டிலோடு
அங்கதங்களும் அம்பும் இலங்கிட,
வெங் கண் நாகம் எனப் பொலி வெய்ய கை
செங் கையால் எடுத்தான், சிரம் சேர்த்தினன். 28

கல் திண் மார்பில் தழுவும்; கழுத்தினில்
சுற்றும், சென்னியில் சூட்டும்; சுழல் கணோடு
ஒற்றும்; மோந்திட்டு உருகும்; உளைக்குமால்;
முற்றும் நாளின் விடும் நெடு மூச்சினன். 29

கை கண்டான், பின் கருங் கடல் கண்டென,
மெய் கண்டான், அதன்மேல் விழுந்தான்அரோ—
பெய் கண் தாரை அருவிப் பெருந் திரை,
மொய் கண்டார் திரை வேலையை மூடவே. 30

அப்பு மாரி அழுந்திய மார்பைத் தன்
அப்பு மாரி அழுது இழி யாக்கையின்
அப்பும்; மார்பில் அணைக்கும்; அரற்றுமால்;
அப் புமான் உற்றது யாவர் உற்றார்அரோ! 31

24. சேவகர் - பணியாளர்; 25. கழுது - பேய்; 28. அங்கதங்கள் - வாகுவலயம், தோள் வளை; 29. முற்றும் நாள் - இறக்கும் நாள்; 31. புமான்- ஆடவன், ஈண்டு ஆண்மையுள்ள இராவணன்.

பறிக்கும், மார்பின் பகழியை; பல் முறை
முறிக்கும்; மூர்ச்சிக்கும்; மோக்கும்; முயங்குமால்;
'எறிக்கும் வெங் கதிரோடு உலகு ஏழையும்
கறிக்கும், வாயில் இட்டு, இன்று' எனக் காந்துமால். 32

தேவரோடு முனிவரும், சீரியோர்
ஏவரோடும், இடம் இன்றி நின்றவன்—
'மூவரோடும், உலகு ஒரு மூன்றொடும்
போவதேகொல், முனிவு?' எனும் பொம்மலான். 33

**இந்திரசித்தின் தலை காணாது, இராவணன் அரற்றுதல்**

கண்டிலன் தலை; 'காந்தி, அம் மானிடன்
கொண்டு இறந்தனன்' என்பது கொண்டவன்,
புண் திறந்தன நெஞ்சன், பொருமலன்,
விண் திறந்திட, விம்மி, அரற்றினான். 34

'நிலையின் மாதிரத்து நின்ற யானையும், நெற்றிக் கண்ணன்
மலையுமே, எளியவோ, நான் பறித்தற்கு? மறு இல் மைந்தன்
தலையும் ஆர் உயிரும் கொண்டார் அவர் உடலோடும் தங்க,
புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும் போலும்!

'எரி உண அளகை மூதூர், இந்திரன் இருக்கை எல்லாம்
பொரி உண, உலகம் மூன்றும் பொது அறப் புரந்தேன் போலாம்!
அரி உணும் அலங்கல் மௌலி இழந்த என் மதலை யாக்கை
நரி உணக் கண்டேன்; ஊனின், நாய் உணும் உணவு நன்றால்!

'பூண்டு, ஒரு பகைமேல் புக்கு, என் புத்திரனோடும் போனார்
மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்; விரதியர் இருவரோடும்
ஆண்டு உள குரங்கும், ஒன்றும் அமர்க் களத்து, ஆரும் இன்னும்
மாண்டிலர்; இனி மற்று உண்டோ, இராவணன் வீர வாழ்க்கை?

'கந்தர்ப்பர், இயக்கர், சித்தர், அரக்கர்தம் கன்னிமார்கள்,
சிந்து ஒக்கும் சொல்லினார், உன் தேவியர், திருவின் நல்லார், [தால்,
வந்து உற்று, 'எம் கணவன்தன்னைக் காட்டு' என்று, மருங்கில் வீழ்ந்
அந்து ஒக்க அரற்றவோ, நான் கூற்றையும் ஆடல் கொண்டேன்!' 38

32. கறித்தல் - கடித்தல்; 33. பொம்மல் - மிகுதி; சண்டுச் சீற்ற மிகுதி;
36. அரி - வண்டு; ஊனின் - (யான் உண்ணும்) உணவைக் காட்டிலும்,
38. சிந்து - பண்; அந்து - அப்படி.

'சினத்தொடும் கொற்றம் முற்றி, இந்திரன் செல்வம் மேவி,
நினைத்தது முடித்து நின்றேன்; நேரிழை ஒருத்தி நீரால்,
எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி ஏங்கி,
உனக்கு நான் செய்வதானேன்! என்னின் யார் உலகத்து உள்ளார்?' 39

**இந்திரசித்தின் உடலோடு இராவணன் இலங்கை புகல்**

என்பன பலவும் பன்னி, எடுத்து அழைத்து, இரங்கி ஏங்கி,
அன்பினால் மகனைத் தாங்கி, அரக்கியர் அரற்றி வீழ,
பொன் புனை நகரம் புக்கான்; கண்டவர் புலம்பும் பூசல்,
ஒன்பது திக்கும், மற்றை ஒரு திக்கும், உற்றது அன்றே. 40

கண்களைச் சூல்கின்றாரும், கழுத்தினைத் தடிகின்றாரும்,
புண் கொளத் திறந்து, மார்பின் ஈருளைப் போக்குவாரும்,
பண்கள் புக்கு அலம்பும் நாவை உயிரொடு பறிக்கின்றாரும்,—
எண்களில் பெரிய ஆற்றார்—இருந் துயர் பொறுக்கல் ஆற்றார்.

மாதிரம் கடந்த திண் தோள் மைந்தன்தன் மகுடச் சென்னி
போதலைப் புரிந்த யாக்கை பொறுத்தனன் புகுதக் கண்டார்,
ஓத நீர் வேலை அன்ன கண்களால் உகுத்த வெள்ளக்
காதல் நீர் ஓடி, ஆடல் கருங் கடல் மடுத்தது அன்றே. 42

ஆவியின் இனிய காதல் அரக்கியர் முதல்வர் ஆய
தேவியர் குழாங்கள் சுற்றி, சிரத்தின்மேல் தளிர்க்கைசேர்த்தி,
ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து புரள்வன ஒப்ப, ஒல்லைக்
கோ இயல் கோயில் புக்கான், குருதி நீர்க் குமிழிக் கண்ணன்.

**மண்டோதரி மைந்தன்மேல் வீழ்ந்து புலம்புதல்**

கருங் குழல் கற்றைப் பாரம் கால் தொட, கமலப் பூவால்
குரும்பையைப் புடைக்கின்றாள்போல் கைகளால் முலைமேல் கொட்டி,
அருங் கலச் சும்மை தாங்க, 'அகல் அல்குல் அன்றி, சற்றே
மருங்குலும் உண்டு உண்டு' என்ன,—மயன் மகள்— மறுகி வந்தாள்.

தலையின்மேல் சுமந்த கையள், தழலின்மேல் மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேல் மிதிக்கும் தாளள், நேசத்தால் நிறைந்த நெஞ்சள்,
கொலையின் மேல் குறித்த வேடன் கூர்ங் கணை உயிரைக் கொள்ள,
மலையின்மேல் மயில் வீழ்ந்தென்ன, மைந்தன்மேல் மறுகிவீழ்ந்தாள்.*

39. நீரால் - காரணமாக; 40. நகரம் - இலங்கை நகரம்; 41. சூல்கின்றார் - தோண்டுகிறவர்கள்; ஈருள் - ஈரல்.

உயிர்த்திலள்; உணர்வும் இல்லள்; 'உயிர் இலள்கொல்லோ!' என்னப்
பெயர்த்திலள், யாக்கை; ஒன்றும் பேசலள், விம்மி யாதும்
வியர்த்திலள்; நெடிது போது விம்மலள்; மெல்ல மெல்ல,
அயர்த்தனள் அரிதின் தேறி, வாய் திறந்து, அரற்றலுற்றாள்:

'கலையினால் திங்கள் என்ன வளர்கின்ற காலத்தே உன்,
சிலையினால் அரியை வெல்லக் காண்பது ஓர் தவம் முன் செய்தேன்;
தலை இலா ஆக்கை காண எத் தவம் செய்தேன்! அந்தோ!
நிலை இலா வாழ்வை இன்னும் நினைவெனோ, நினைவு இலாதேன்?

'ஐயனே! அழகனே! என் அரும் பெறல் அமிழ்தே! ஆழிக்
கையனே; மழுவனே, என்று இவர் வலி கடந்த கால
மொய்யனே!—முளரி அன்ன நின் முகம் கண்டிலாதேன்,
உய்வெனோ?—உலகம் மூன்றுக்கு ஒருவனே! செரு வலோனே!

'தாள் அரிச் சதங்கை ஆர்ப்பத் தவழ்கின்ற பருவம்தன்னில்,
கோள் அரி இரண்டு பற்றிக் கொணர்ந்தனை; கொணர்ந்து, கோபம்
மூளுறப் பொருத்தி, மாட முன்றிலில் முறையின் ஓடி
மீள அரு விளையாட்டு இன்னம் காண்பெனோ, விதியிலாதேன்!

'அம்புலி! அம்ம வா!' என்று அழைத்தலும், அமர் வெண் திங்கள்
இம்பர் வந்தானை அஞ்சல் என இரு கரத்தின் ஏந்தி,
வம்புறும் மறுவைப் பற்றி, 'முயல்' என வாங்கும் வண்ணம்,
எம் பெருங் களிறே! காண, ஏசற்றேன்; எழுந்திராயோ! 50

'இயக்கியர், அரக்கிமார்கள், விஞ்சையர் ஏழைமாதர்,
முயல் கறை பயிலாத் திங்கள் முகத்தியர், முழுதும் நின்னை
மயக்கிய முயக்கம்தன்னால், மலர் அணை அமளிமீதே
அயர்த்தனை உறங்குவாயோ? அமர் பொருது அலசினாயோ? 51

'முக்கணான் முதலினோரை, உலகு ஒரு மூன்றினோடும்,
புக்க போர் எல்லாம் வென்று நின்ற என் புதல்வன்போலாம்,
மக்களில் ஒருவன் கொல்ல, மாள்பவன்? மான மேரு
உக்கிட, அணு ஒன்று ஓடி உதைத்தது போலும் அம்மா! 52

'பஞ்சு எரி உற்றது என்ன அரக்கர்தம் பரவை எல்லாம்
வெஞ் சின மனிதர் கொல்ல, விளிந்ததே; மீண்டது இல்லை;
அஞ்சினேன் அஞ்சினேன்; அச் சீதை என்று அமுதால் செய்த
நஞ்சினால், இலங்கை வேந்தன் நாளை இத் தகையன் அன்றோ?'

47. அரி - இந்திரன்; 49. அரிச் சதங்கை - பரலோடு கூடிய சதங்கை; கோள் அரி - வலிமையுள்ள சிங்கம்; 52. உக்கிட - சிதறும்படி.

இராவணன் சீதையை வெட்டச் செல்லுதல்

என்று அழைத்து இரங்கி ஏங்க, 'இத் துயர் நமர்கட்கு எல்லாம்
பொன் தழைத்தனைய அல்குல் சீதையால் புகுந்தது' என்ன,
'வன் தழைக் கல்லின் நெஞ்சின் வஞ்சகத்தாளை, வாளால்
கொன்று இழைத்திடுவென்' என்னு, ஓடினன், அரக்கர் கோமான்.

மகோதரன் இராவணனைத் தடுத்தல்

ஓடுகின்றானை நோக்கி, 'உயர் பெரும் பழியை உச்சிச்
சூடுகின்றான்' என்று அஞ்சி, மகோதரன், துணிந்த நெஞ்சன்,
மாடு சென்று, அடியின் வீழ்ந்து, வணங்கி, 'நின்புகழ்க்கு மன்னு!
கேடு வந்து அடுத்தது' என்னு, இனையன கிளத்தலுற்றான்: 55

'நீர் உளதனையும், சூழ்ந்த நெருப்பு உளதனையும், நீண்ட
பார் உளதனையும், வானப் பரப்பு உளதனையும், காலின்
பேர் உளதனையும், பேராப் பெரும் பழி பிடித்தி போலாம்—
போர் உளதனையும் வென்று; புகழ் உளதனையும் உள்ளாய். 56

'தெள்ள அருங் காலகேயர் சிரத்தொடும், திசைக் கை யானை
வெள்ளிய மருப்புச் சிந்த வீசிய விசயத்து ஒள் வாள்,
வள்ளி அம் மருங்குல், செவ் வாய், மாதர்மேல் வைத்த போது,
கொள்ளுமே ஆவி தானே, நாணத்தால் குறைவது அல்லால்? 57

'மங்கையை, குலத்துளாளை, தவத்தியை, முனிந்து, வாளால்
சங்கை ஒன்று இன்றிக் கொன்றால், "குலத்துக்கே தக்கான்" என்று,
கழ்கை அம் சென்னியானும், கண்ணனும், கமலத்தோனும்,
செங்கையும் கொட்டி, உன்னைச் சிரிப்பரால், "சிறியன்" என்னு. 58

'நிலத்து இயல்பு அன்று; வானின் நெறி அன்று; நீதி அன்று;
தலத்து இயல்பு அன்று; மேலோர் தருமமேல், அதுவும் அன்று;
புலத்தியன் மரபின் வந்து, புண்ணிய விரதம் பூண்டாய்!
வலத்து இயல்பு அன்று; மாயாப் பழி கொள மறுகுவாயோ? 59

'இன்று நீ இவளை வாளால் எறிந்துபோய், இராமன் தன்னை
வென்று மீண்டு, இலங்கை மூதூர் எய்தினை வெதும்புவாயோ?
பொன்றினள் சீதை; இன்றே, புரவல! புதல்வன் தன்னைக்
கொன்றவர் தம்மைக் கொல்லக் கூசினை போலும்!' என்றான்.

54. வன் தழைக் கல்லின் நெஞ்சு - வன்மை தழைத்தலைக் கொண்ட கல் நெஞ்சம்; 57. காலகேயர் - காசிபருக்குக் கலை என்பாளிடம் பிறந்த அசுரர்கள், கடலில் இருந்தவர்கள்; குறைவது - குன்றுவது; 58. குலத்துக்கே தக்கான் - அரக்கர் குலத்துக்கு ஏற்ற செயலைச் செய்தான்; 59. நிலம் - மண்ணுலகம்; தலம் - பாதலம்.

இந்திரசித்தின் உடலைத் தைலத் தோணியில் இடப் பணித்தல்

என்னலும், எடுத்த கூர் வாள் இரு நிலத்து இட்டு, மீண்டு,
மன்னவன், 'மைத்தன்தன்னை மாற்றலார் வலியால் கொண்ட
சின்னமும், அவர்கள் தங்கள் சிரமும் கொண்டு அன்றிச் சேர்கேன்;
துன்னரும் தயிலத்தோணி வளர்த்துமின்' என்னச் சொன்னான்.

## 29 படைக் காட்சிப் படலம்

அரக்கர் சேனை இலங்கையில் நிறைதல்

அத் தொழில் அவரும் செய்தார்; ஆயிடை, அனைத்துத் திக்கும்
பொத்திய நிருதர் தானை கொணரிய போய தூதர்,
ஒத்தனர் அணுகி வந்து வணங்கினர், 'இலங்கை உன் ஊர்ப்
பத்தியின் அடைந்த தானைக்கு இடம்இலை; பணிஎன்?' என்றார்.

ஏம்பலுற்று எழுந்த மன்னன், 'எவ் வழி எய்திற்று?' என்றான்;
கூம்பலுற்று உயர்ந்த கையர், 'ஒரு வழி கூறலாமோ?
வாம் புனல் பரவை ஏழும் இறுதியின் வளர்ந்தது என்னத்
தாம் பொடித்து எழுந்த தானைக்கு உலகு இடம் இல்லை' என்றார். 2

மண் உற நடந்த தானை வளர்ந்த மாத் தூளி மண்ட,
விண் உற நடக்கின்றாரும் மிதித்தனர் ஏக, மேல் மேல்,
கண்ணுற அருமை காணக் கற்பத்தின் முடிவில் கார்போல்,
எண்ணுற அரிய சேனை எய்தியது, இலங்கை நோக்கி. 3

வாள்தனின் வயங்க மின்னா; மழை அதின் இருளமாட்டா;
ஈட்டிய முரசின் ஆர்ப்பை, இடிப்பொடு முழக்கமாட்டா;
மீட்டு இனி உவமை இல்லை, வேலை மீச் சென்ற என்னின்—
தீட்டிய படையும் மாவும் யானையும் தேரும் செல்ல. 4

உலகினுக்கு உலகு போய்ப் போய், ஒன்றின் ஒன்று ஒதுங்கலுற்ற,
தொலைவு அருந்தானை மேன்மேல் எழுந்தது தொடர்ந்து சுற்ற;
நிலவினுக்கு இறையும் மீனும் நீங்கின, நிமிர்ந்து; நின்றான்,
அலரியும்; முந்து செல்லும் ஆறு நீத்து, அஞ்சி, அப்பால். 5

61. சின்னம் - துண்டிக்கப்பட்டது, ஈண்டு இந்திரசித்தின் தலை; தயிலத் தோணி - எண்ணெய்த்தாழி.

29: 1. பொத்திய - நிரம்பியுள்ள; பத்தி - வரிசை; 2. ஏம்பல் -மகிழ்ச்சி; 5. அலரி - சூரியன்.

மேற்பட விசும்பை முட்டி, மேருவின் விளங்கி, விண்ட
நாற் பெரு வாயிலூடும், இலங்கை ஊர், நடக்கும் தானை,—
கார்க் கருங் கடலை, மற்றோர் இடத்திடை, காலன்தானே
சோர்ப்பது போன்றது, யாண்டும் சுமை பொறுது உலகம் என்ன. 6

'நெருக்குடை வாயிலூடு புகும் எனின், நெடிது காலம்
இருக்கும் அத்தனையே' என்னா, மதிலினுக்கு உம்பர் எய்தி,
அரக்கனது இலங்கை உற்ற—அண்டங்கள் அனைத்தின் உள்ள
கருக் கிளர் மேகம் எல்லாம் ஒருங்கு உடன் கலந்தது என்ன. 7

**இராவணன் சேனைகளை நோக்குதல்**

அதுபொழுது, அரக்கர்கோனும், அணிகொள் கோபுரத்தின் எய்தி,
பொதுவுற நோக்கலுற்றான், ஒரு நெறி போகப் போக,
விதி முறை காண்பென் என்னும் வேட்கையான், வேலை ஏழும்
கதுமென ஒருங்கு நோக்கும் பேதையின் காதல் கொண்டான். 8

மாதிரம் ஒன்றின்நின்று, மாறு ஒரு திசைமேல் மண்டி,
ஓத நீர் செல்வது அன்ன தானையை, உணர்வு கூட்டி,
வேத வேதாந்தம் கூறும் பொருளினை விரிக்கின்றார்போல்,
தூதுவர் அணிகள்தோறும் வரன்முறை காட்டிச் சென்றார்: 9

'சாகத் தீவினின் உறைபவர், தானவர் சமைத்த
யாகத்தில் பிறந்து இயைந்தவர், தேவரை எல்லாம்
மோகத்தின் பட முடித்தவர், மாயையின் முதல்வர்,
மேகத்தைத் தொடும் மெய்யினர், இவர்' என விரித்தார். 10

'குசையின் தீவினின் உறைபவர், கூற்றுக்கும் விதிக்கும்
வசையும் வன்மையும் வளர்ப்பவர், வான நாட்டு உறைவார்
இசையும் செல்வமும் இருக்கையும் இழந்தது, இங்கு, இவரால்;
விசையம்தாம் என நிற்பவர், இவர்—நெடு விறலோய்! 11

'இலவத் தீவினின் உறைபவர், இவர்கள்; பண்டு இமையாப்
புலவர்க்கு இந்திரன் பொன்னகர் அழிதரப் பொருதார்;
நிலவைச் செஞ் சடை வைத்தவன் வரம் தர, நிமிர்ந்தார்;
உலவைக் காட்டு உறு தீ என வெகுளி பெற்றுடையார். 12

7. உம்பர் - மேல்; 9. வேத வேதாந்தங்கள் கூறும் பரம்பொருளின் தன்மையை ஞானசிரியன் மாணுக்கனுக்கு விளக்கிக் கூறுவது போலத் தூதுவர் இராவணனுக்குப் பரந்த சேனையை அணி அணியாகப் பிரித்துக் கூறினர்; 11. விசையம் - வெற்றி; 12. உலவை - உலர்ந்த மரம்.

'அன்றில் தீவினின் உறைபவர், இவர்; பண்டை அமரர்க்கு
என்றைக்கும் இருந்து உறைவிடம் என்றிட மேருக்
குன்றைக் கொண்டு போய், குரை கடல் இட, அறக் குலைந்தோர்
சென்று, 'இத் தன்மையைத் தவிரும்' என்று இரந்திடத் தீர்ந்தோர். 13

'பவளக் குன்றினின் உறைபவர்; வெள்ளி பண்பு அழிந்து, ஓர்
குவளைக் கண்ணி, அங்கு, இராக்கதக் கன்னியைக் கூட,
அவளின் தோன்றினர், ஐ-இரு கோடியர்; நொய்தின்
திவளப் பாற்கடல் வறள்படத் தேக்கினர், சில நாள். 14

'கந்தமாதனம் என்பது, இக் கருங் கடற்கு அப் பால்
மந்தமாருதம் ஊர்வது ஓர் கிரி; அதில் வாழ்வோர்,
அந்த காலத்து அவ் ஆலகாலத்துடன் பிறந்தோர்;
இந்த வாள் எயிற்று அரக்கர் எண் இறந்தவர்—இறைவ! 15

'மலயம் என்பது பொதிய மாமலை; அதில் மறவோர்
நிலயம் அன்னது சாகரத் தீவிடை நிற்கும்;
''குலையும் இவ் உலகு'' எனக் கொண்டு, நான்முகன் கூறி,
''உலைவிலீர்! இதில் உறையும்'' என்று இரந்திட, உறைந்தார்.

'முக்கரக் கையர், மூ இலை வேலினர்; முசுண்டி
சக்கரத்தினர்; சாபத்தர்; இந்திரன் தலைவர்;
நக்கரக் கடல் நால் ஒரு மூன்றுக்கும் நாதர்;
புக்கரப் பெருந் தீவிடை உறைபவர்—புகழோய்! 17

'மறலியை, பண்டு, தம் பெருந் தாய் சொல, வலியால்,
புற நிலைப் பெருஞ் சக்கர மால் வரைப் பொருப்பின்,
விறல் கெடச் சிறையிட்டு, அயன் இரந்திட, விட்டோர்;
இறலி அப் பெருந் தீவிடை உறைபவர்—இவர்கள். 18

'வேதாளக் கரத்து இவர், ''பண்டு புவியிடம் விரிவு
போதாது உம்தமக்கு; எழு வகையாய் நின்ற புவனம்,
பாதாளத்து உறைவீர்'' என, நான்முகன் பணிப்ப,
நாதா! புக்கு இருந்து, உனக்கு அன்பினுல், இவண் நடந்தார்.

14. வெள்ளி - சுக்கிரன்; திவளப் பாற்கடல் - வெண்ணிறமுடைய பாற்கடல்; தேக்குதல் - நிரம்பப் பருகுதல்; 15. அந்த காலம் - அந்தக் காலம், எதுகை நோக்கி ஒற்று மிகாமல் நின்றது; 17. முசுண்டி சக்கரம் - ஒருவகைச் சக்கரப் படை; நக்கரம் - முதலை; 19. வேதாளம் - பேய்.

'நிருதி தன் குலப் புதல்வர்; நின் குலத்துக்கு நேர்வர்;
''பருதி தேவர்கட்கு'' எனத் தக்க பண்பினர்; பானக்
குருதி பெற்றிலரேல், கடல் ஏழையும் குடிப்பார்;
இருள் நிறத்தவர்; ஒருத்தர் ஏழ் மலையையும் எடுப்பார். 20

'பார் அணைத்த வெம் பன்றியை அன்பினுல் பார்த்த
காரணத்தின், ஆதியின் பயந்த பைங் கழலோர்;
பூரணத் தடந் திசைதொறும் இந்திரன் புலரா
வாரணத்தினை நிறுத்தியே, சூடினர் வாகை. 21

'மறக் கண் வெஞ் சின மலை என இந் நின்ற வயவர்,
இறக்கம் கீழ் இலாப் பாதலத்து உறைகின்ற இகலோர்;
அறக் கண் துஞ்சிலன், ஆயிரம் பணந் தலை அனந்தன்,
உறக்கம் தீர்ந்தனன், உறைகின்றது, இவர் தொடர்ந்து ஒறுக்க.

'காளியைப் பண்டு கண்ணுதல் காட்டியகாலை,
மூள முற்றிய சினக் கடுந் தீயிடை முளைத்தோர்;
கூளிகட்கு நல் உடன்பிறந்தார்;—பெருங் குழுவாய்
வாள் இமைக்கவும், வாள் எயிறு இமைக்கவும், வருவார். 23

'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்;
தீவம் தோன்றிய முழைத் துணை எனத் தறுகண்ணர்;
கோவம் தோன்றிடின், தாயையும் உயிர் உணும் கொடியோர்;—
சாவம் தோன்றிட, வட திசைமேல் வந்து சார்வார். 24

'சீற்றம் ஆகிய ஐம்முகன்; உலகு எலாம் தீப்பான்,
ஏற்ற மா நுதல் விழியிடைத் தோன்றினர், இவரால்;
கூற்றம் ஆகிய கொம்பின் ஐம்பாலுடை, கொடுமைக்கு
ஊற்றம் ஆகி, பண்டு உதித்தனர் என்பவர், உவரால். 25

'காலன் மார்பிடைச் சிவன் கழல் பட, பண்டு கான்ற
வேலை ஏழ் அன்ன குருதியில் தோன்றிய வீரர்,
சூலம் ஏந்தி முன் நின்றவர்; இந் நின்ற தொகையார்,
ஆலகாலத்தின், அமிழ்தின், முன் பிறந்த போர் அரக்கர். 26

20. நிருதி - தென்மேற்குத் திசைக்குக் காவலன்; இவன் மனைவி தீர்க்கா தேவியின் வயிற்றுப் பிறந்த மக்கள் இப் படையினர் ஆவர்; 21. பூரணத் தடந் திசை - நிறைவுடைய பெரிய திசைகள்; 23. காளியை நடனத்தில் வெல்லச் சிவன் காலைத் தலைவரையிலும் தூக்கி ஊர்த்துவ தாண்டவம் புரிய, அவள் அவனைப் புரிய நாணிச் சிவன் செய்த வஞ்சகச் செயலுக்காகச் சினந்தாள்; அச் சினத் தீயில் தோன்றியவர்கள் இவர்கள். கூளி - பேய்; 24. தீவம் - தீபம்; சாவம் - சாபம், வில்; 25. ஐம்முகன் - சிவன்.

'வடவைத் தீயினை, வாசுகி கான்ற மாக் கடுவை
இட, அத் தீயிடை எழுந்தவர், இவர்; இன மழையைத்
தடவ, தீ நிகர் குஞ்சியர் இவர்; உவர், தனித் தேர்
கடவ, தீந்த வெம் புரத்திடைத் தோன்றிய கழலோர். 27

'இனையர் இன்னவர் என்பது ஓர் அளவு இலர்—ஐய!—
நினையவும், குறித்து உரைக்கவும், அரிது; இவர் நிறைந்த
வினையமும் பெரு வரங்களும் தவங்களும் விளம்பின்,
அனைய பேர் உகம் ஆயிரத்து அளவினும் அடங்கா. 28

'ஒருவரே சென்று, அவ் உறு திறல் குரங்கையும், உரவோர்
இருவர் என்றவர்தம்மையும், ஒரு கையோடு எற்றி,
வருவர்; மற்று இனிப் பகர்வது என்?—வானவர்க்கு அரிய
திருவ!' என்றனர், தூதுவர், இராவணன் செப்பும்: 29

'எத் திறத்து இதற்கு எண் எனத் தொகை வகுத்து, இயன்ற
அத் திறத்தினை அறைதிர்' என்று உரைசெய, அவர்கள்,
'ஒத்த வெள்ளம் ஓர் ஆயிரம் உளது' என உரைத்தார்,
பித்தர்; இப் படைக்கு 'எண் சிறிது' என்றனர், பெயர்ந்தார். 30

'படைப் பெருங் குலத் தலைவரைக் கொணருதிர், என்பால்—
கிடைத்து, நான் அவர்க்கு உற்றுள பொருள் எலாம் கிளத்தி,
அடைத்த நல் உரை விளம்பினென் அளவளாய், அமைவுற்று,
உடைத்த பூசனை வரன்முறை இயற்ற' என்று உரைத்தான். 31

தூதர் கூறிட, திசைதொறும் திசைதொறும் தொடர்ந்தார்,
ஓத வேலையின் நாயகர் எவரும் வந்து உற்றார்;
போது தூவினர், வணங்கினர், இராவணன் பொலன் தாள்
மோதும் மோலியின் பேர் ஒலி வானினை முட்ட. 32

அனையர் யாவரும் அருகு சென்று, அடி முறை வணங்கி,
வினையம் மேவினர், இனிதின் அங்கு இருந்தது ஓர் வேலை,
'நினையும் நல் வரவு ஆக, நும் வரவு!' என நிரம்பி,
'மனையும் மக்களும் வலியரே?' என்றனன், மறவோன். 33

31. உடைத்த பூசனை - உரித்தான பூசனை; பூசனை - வீரர்க்குச் செய்ய வேண்டிய பெருஞ்சோறு அளித்தல், பரிசு நல்கல் முதலியன; 33. வினையம் - வினயம், வணக்கம், பணிவு.

'பெரிய திண் புயன் நீ உளே; தவ வரம் பெரிதால்;
உரிய வேண்டிய பொருள் எலாம் முடிப்பதற்கு ஒன்றோ?
இரியல் தேவரைக் கண்டனம்; பகை பிறிது இல்லை;
அரியது என் எமக்கு?' என்றனர், அவன் கருத்து அறிவார். 34

'மாதரார்களும் மைந்தரும் நின் மருங்கு இருந்தார்
பேது உறுதவர் இல்லை; நீ வருந்தினை, பெரிதும்;
யாது காரணம்? அருள்' என, அனையவர் இசைத்தார்;
சிதை காதலின் புகுந்துள பரிசு எலாம் தெரித்தான். 35

'கும்பகன்னனோடு இந்திரசித்தையும், குலத்தின்
வெம்பு வெஞ் சினத்து அரக்கர்தம் குழுவையும், வென்றார்
அம்பினால், சிறு மனிதரே! நன்று, நம் ஆற்றல்!
நம்ப! சேனையும் வானரமே!' என நக்கார். 36

உலகைச் சேடன்தன் உச்சிநின்று எடுக்க அன்று, ஓர் ஏழ்
மலையை வேரொடும் வாங்க அன்று, அங்கையால் வாரி
அலைகொள் வேலையைக் குடிக்க அன்று, அழைத்தது; மலரோடு
இலைகள் கோதும் அக் குரங்கின்மேல் ஏவக்கொல், எம்மை?' 37

என்ன, கை எறிந்து, இடி உரும்ஏறு என நக்கு,
மின்னும் வாள் எயிற்று அரக்கரை அம் கையால் விலக்கி,
வன்னி என்பவன், புட்கரத் தீவுக்கு மன்னன்,
'அன்ன மானுடர் ஆர் வலியாவது' என்று அறைந்தான். 38

**மாலியவான் மனிதர் வலிமையை உரைத்தல்**

மற்று அவ் வாசகம் கேட்டலும், மாலியவான் வந்து,
'உற்ற தன்மையும், மனிதரது ஊற்றமும், உடன் ஆம்
கொற்ற வானரத் தலைவர்தம் தகைமையும், கூறக்
கிற்றும், கேட்டிரால்' என்றனன், கிளத்துவான் துணிந்தான்:

'பரிய தோளுடை விராதன், மாரீசனும் பட்டார்;
கரிய மால் வரை நிகர் கர தூடணர், கதிர் வேல்
திரிசிரா, அவர் திரைக்கடல் அன பெருஞ் சேனை,
ஒரு விலால், ஒரு நாழிகைப் பொழுதினின், உலந்தார். 40

'ஆழி அன்ன நீர் அறிதிர் அன்றே, கடல் அனைத்தும்
ஊழிக் கால் எனக் கடப்பவன் வாலி என்போனை?
ஏழு குன்றமும் எடுக்குறும் மிடுக்கனை, இந் நாள்,
பாழி மார்புஅகம் பிளந்து, உயிர் குடித்தது, ஓர் பகழி. 41

34. ஒன்றோ?- ஒரு பொருளோ?; 39. கூறக்கிற்றும் - சொல்லும் வல்லமை யுடையேம்; 40. ஒரு விலால் - ஒரு வில்லால்.

'இங்கு வந்து நீர் வினையது என்? எறி திரைப் பரவை
அங்கு வெந்திலதோ? சிறிது அறிந்ததும் இலிரோ?
கங்கைசூடிதன் கடுஞ் சிலை ஒடித்த அக் காலம்,
உங்கள் வான் செவி புகுந்திலதோ, முழங்கு ஓதை? 42

'ஆயிரம் பெரு வெள்ளம் உண்டு, இலங்கையின் அளவில்,
தீயின் வெய்ய போர் அரக்கர்தம் சேனை; அச் சேனை
போயது, அந்தகன் புரம் புக நிறைந்தது போலாம்,
ஏயும் மும்மை நூல் மார்பினர் எய்த வில் இரண்டால். 43

'கொற்ற வெஞ் சிலைக் கும்பகன்னனும், நுங்கள் கோமான்
பெற்ற மைந்தரும், பிரகத்தன் முதலிய பிறரும்,
மற்றை வீரரும், இந்திரசித்தொடு மடிந்தார்;
இற்றை நாள் வரை, யானும் மற்று இவனுமே இருந்தேம். 44

'மூலத் தானை என்று உண்டு; அது மும்மை நூறு அமைந்த
கூலச் சேனையின் வெள்ளம்; மற்று அதற்கு இன்று குறித்த
காலச் செய்கை நீர் வந்துளீர்; இனி, தக்க கழலோர்
சீலச் செய்கையும், கவிப் பெருஞ் சேனையும், தெரிக்கில், 45

'ஒரு குரங்கு வந்து இலங்கையை மலங்கு எரியூட்டி,
திருகு வெஞ் சினத்து அக்கனை நிலத்தொடும் தேய்த்து,
பொருது, தூது உரைத்து, ஏகியது,—அரக்கியர் புலம்ப,
கருது சேனையாம் கடலையும் கடலையும் கடந்து. 46

'கண்டிலீர்கொலாம், கடலினை மலை கொண்டு கட்டி,
மண்டு போர் செய, வானரர் இயற்றிய மார்க்கம்?
உண்டு வெள்ளம் ஓர் எழுபது; மருந்து ஒரு நொடியில்
கொண்டு வந்தது, மேருவுக்கு அப்புறம் குதித்து. 47

'இது இயற்கை; ஓர் சீதை என்று இருந் தவத்து இயைந்தாள்,
பொது இயற்கை தீர் கற்புடைப் பத்தினி பொருட்டால்,
விதி விளைத்தது; அவ் வில்லியர் வெல்க! நீர் வெல்க!
முதுமொழிப் பதம் சொல்லினென்' என்று, உரை முடித்தான்.

**வன்னி, 'பொருதலே தக்கது' எனல்**

வன்னி, மன்னனை நோக்கி, 'நீ இவர் எலாம் மடிய,
என்ன காரணம், இகல் செயாதிருந்தது?' என்று, இசைத்தான்;
'புன்மை நோக்கினென்; நாணினுல் பொருதிலேன்' என்றான்;
'அன்னதேல், இனி அமையும் எம் கடமைஅஃது' என்றான். 49

43. மும்மை நூல் - முந்நூல்; 45. கூலச் சேனை - தொகுதியான படை.

'மூது உணர்ந்த இம் முது மகன் கூறிய முயற்சி
சீதை என்பவள்தனை விட்டு, அம் மனிதரைச் சேர்தல்;
ஆதியின்தலை செயத்தக்கது; இனிச் செயல் அழிவால்,
காதல் இந்திரசித்தையும் மாய்வித்தல் கண்டும்?* 50

'விட்டம்ஆயினும் மாதினை, வெஞ் சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலெம்; பெறுவது பழியால்;
முட்டி, மற்றவர் குலத்தொடு முடிக்குவது அல்லால்,
கட்டம், அத் தொழில்; செருத் தொழில் இனிச் செயும் கடமை' 51

என்று, எழுந்தனர் இராக்கதர், 'இருக்க நீ; யாமே
சென்று, மற்றவர் சில் உடல் குருதி நீர் தேக்கி,
வென்று மீளுதும்; வெள்குதுமேல், மிடல் இல்லாப்
புன் தொழில் குலம் ஆதும்' என்று உரைத்தனர், போனர். 52

## 30 மூலபல வதைப் படலம்

### இராவணன் படைத்தலைவர்களுக்கு இட்ட கட்டளை

'வானரப் பெருஞ் சேனையை யான் ஒரு வழி சென்று,
ஊன் அறக் குறைத்து, உயிர் உண்பன்; நீயிர் போய், ஒருங்கே
ஆன மற்றவர் இருவரைக் கோறிர் என்று அறைந்தான்—
தானவப் பெருங் கரிகளை வாள் கொண்டு தடிந்தான். 1

என உரைத்தலும், எழுந்து, தம் இரதமேல் ஏறி,
கனை திரைக் கடல் சேனையைக் கலந்தது காணு,
'வினையம் மற்று இலை; மூல மாத் தானையை விரைவோடு
இனையர்முன் செல, ஏவுக!' என்று இராவணன் இசைத்தான். 2

ஏவி அப் பெருந் தானையை, தானும் வேட்டு எழுந்தான்,
தேவர் மெய்ப் புகழ் தேய்த்தவன், சில்லிஅம் தேர்மேல்,
காவல் மூவகை உலகமும் முனிவரும் கலங்க,
பூவை வண்ணத்தன் சேனைமேல் ஒரு புறம் போனன். 3

50. விடுதல் - சிறையிலிருந்து விடுதல்; 51. கட்டம் - வருத்தம் தருவது. செய்யத்தகாதது; 52. வெள்குதல் - நாணிப் பின் வாங்குதல்.

30 : 1. தானவப் பெருங்கிரிகள் - அசுரர்களாகிய பெரிய மலைகள்; 2. வினையம் - செயல்; 3. பூவை - காயாமரம், ஈண்டுக் காயாம்பூ.

மூலபலப் படையின் இயல்பு

'எழுக, சேனை!' என்று, யானைமேல் மணி முரசு எற்றி,
வழு இல் வள்ளுவர் துறைதொறும் விளித்தலும், வல்லைக்
குழுவி ஈண்டியது என்பரால், குவலயம் முழுதும்
தழுவி, விண்ணையும் திசையையும் தடவும் மாத் தானை. 4

அடங்கும் வேலைகள், அண்டத்தின் அகத்து; அகல் மலையும்
அடங்கும், மன் உயிர் அனைத்தும்; அவ் வரைப்பிடை அவைபோல்,
அடங்குமே, மற்று அப் பெரும் படை அரக்கர்தம் யாக்கை,
அடங்கும் மாயவன் குறள் உருத் தன்மையின் அல்லால்? 5

அறத்தைத் தின்று, அருங் கருணையை பருகி, வேறு அமைந்த
மறத்தைப் பூண்டு, வெம் பாவத்தை மணம் புணர் மணாளர்,
நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர்; நெருப்புக்கு நெருப்பாய்,
புறத்தும் பொங்கிய பங்கியர், காலனும் புகழ்வார்; 6

நீண்ட தாள்களால் வேலையைப் புறம் செல நீக்கி,
வேண்டும் மீனொடு மகரங்கள் வாயிட்டு விழுங்கி,
தூண்டு வான் உரும்ஏற்றினைச் செவிதொறும் தூக்கி,
மூண்ட வான் மழை உரித்து உடுத்து, உலாவரும் மூர்க்கர்; 7

மால் வரைக் குலம் பரல் என, மழைக் குலம் சிலம்பா,
கால் வரைப் பெரும் பாம்பு கொண்டு அசைத்த பைங் கழலார்;
மேல் வரைப்பு அடர் கலுழன் வன் காற்று எனும் விசையோர்;
நால் வரைக் கொணர்ந்து உடன் பிணித்தால் அன்ன நடையார்;

உண்ணும் தன்மைய ஊன் முறை தப்பிடின், உடனே
மண்ணில் நின்ற மால் யானையை வாயிடும் பசியார்;
தண்ணின் நீர் முறை தப்பிடின், தடக் கையால் தடவி,
விண்ணின் மேகத்தை வாரி, வாய்ப் பிழிந்திடும் விடாயர்; 9

உறைந்த மந்தரம் முதலிய கிரிகளை உருவ
எறிந்து, வேல் நிலை காண்பவர், இந்துவால் யாக்கை
சொறிந்து, தீர்வு உறு தினவினர்; மலைகளைச் சுற்றி
அறைந்து, கற்ற மாத் தண்டினர்; அசனியின் ஆர்ப்பர்; 10

4. வள்ளுவர் - அரசன் பணித்த செய்திகளைப் பறையறைந்து அறிவிப்போர்; 6. பங்கி - தலைமயிர்; 7. உரும் ஏறு - பேரிடி, ஈண்டு மின்னல்; 8. மழைக் குலம் - மேகங்கள்; மேல் வரை - மேல் எல்லை; நால் வரை - தொங்கும் (வாயினையுடைய) மலை போன்ற யானை; 9. முறை தப்புதல் - கிடைக்க வேண்டிய நேரத்தில் கிடைக்காமல் தடைப்படுதல்; விடாயர் - நீர் வேட்கையுடையவர்; 10. வேல் நிலை - வேலின் கூர்மை.

சூலம் வாங்கிடின், சுடர் மழு எறிந்திடின், சுடர் வாள்
கோல வெஞ் சிலை பிடித்திடின், கொற்ற வேல் கொள்ளின்,
சால வன் தண்டு தரித்திடின், சக்கரம் தாங்கின்,
காலன், மால், சிவன், குமரன் என்று, இவரையும் கடப்பார்;

ஒருவரே வல்லர், ஓர் உலகத்தினை வெல்ல;
இருவர் வேண்டுவர், ஏழ் உலகத்தையும் இறுக்க;
திரிவரேல், உடன் திரிதரும், நெடு நிலம்; செவ்வே
வருவரேல், உடன், கடல்களும் தொடர்ந்து, பின் வருமால். 12

நால் வகைச் சேனை

மேகம் எத்தனை, அத்தனை மால் கரி; விரிந்த
நாகம் எத்தனை, அத்தனை தேர்; நனி நாளாப்
போகம் எத்தனை, அத்தனை புரவியின் ஈட்டம்;
ஆகம் உற்றன எத்தனை, அத்தனை அனிகம். 13

இன்ன தன்மைய யானை, தேர், இவுளி என்று இவற்றின்
பன்னு பல்லணம், பருமம், மற்று உறுப்பொடு பலவும்,
பொன்னும் நல் நெடு மணியும் கொண்டு அல்லது புனைந்த
சின்னம் உள்ளன இல்லன, மெய்ம் முற்றும் தெரிந்தால். 14

இப் பெரும் படை எழுந்து இரைத்து ஏக, மேல் எழுந்த
துப்பு உதிர்ந்தன தூளியின் படலம் மீத் தூர்ப்ப,
தப்பு இல் கார் நிறம் தவிர்ந்தது, கரி மதம் தழுவ.
உப்பு நீங்கியது, ஓங்கு நீர் வீங்கு அலை உவரி. 15

மலையும், வேலையும், மற்று உள பொருள்களும், வானோர்
நிலையும், அப் புறத்து உலகங்கள் யாவையும், நிரம்ப
உலைவுறுவகை உண்டு, பண்டு உமிழ்ந்த பேர் ஒருமைத்
தலைவன் வாய் ஒத்த—இலங்கையின் வாயில்கள் தருவ. 16

கடம் பொரு மதக் களிறு, தேர், பரி, மிடை கடல்கள்,
படம் பொருமையின் நனந் தலை அனந்தனும் பதைத்தான்;
விடம் பொருது இரி அமரர்போல் குரங்குஇனம் மிதிக்கும்
இடம் பொருமையின், இரிந்து போய், வடதிசை இறுத்த. 17

*11. கடத்தல் - போரில் வென்று மேம்படுதல்; 13. நாகம் - யானை; நனி நாளாப் போகம் - நீண்ட நாள்களாக விளைந்து முற்றிய நெற்கதிர்கள்; போகம் - விளைவு; 14. பன்னுதல் - சிறப்பித்துச் சொல்லுதல்; பல்லணம் - குதிரைக் கலன்; பருமம் - யானைமேல் இடும் தவிசு; 15. துப்பு உதிர்ந்தன - பவளத்தைப் பொடி செய்தால் ஒத்த; 16. ஒருமைத் தலைவன் - ஒப்பற்ற முதல்வனுகிய திருமால்; 17. கடம் - யானையின் கன்னம்; விடம் - ஆலகால நஞ்சு.*

ஆழி மால் வரை வேலி சுற்றிட வகுத்து அமைத்த
ஏழு வேலையும், இடு வலை; அரக்கரே, இன மா;
வாழி காலனும் விதியும் வெவ் வினையுமே, மள்ளர்;
தோழம் மா மதில் இலங்கை; மால் வேட்டம் மேல் தொடர்ந்தார். 18

ஆர்த்த ஓசையோ? அலங்கு தேர் ஆழியின் அதிர்ப்போ?
கார்த் திண் மால் கரி முழக்கமோ? வாசியின் கலிப்போ?
போர்த்த பல் இயத்து அரவமோ?—நெருக்கினுல் புழுங்கி
வேர்த்த அண்டத்தை வெடித்திடப் பொடிந்தது, மேன்மேல்.

வழங்கு பல் படை மீனது; மத கரி மகரம்
முழங்குகின்றது; முரி திரைப் பரியது; முரசம்
தழங்கு பேர் ஒலி கலிப்பது; தறுகண் மா நிருதப்
புழுங்கு வெஞ் சினச் சுறவது—நிறைபடைப் புணரி. 20

தசும்பின் பொங்கிய திரள் புயத்து அரக்கர்தம் தானை
பசும் புல் தண் தலம் மிதித்தலின், கரி படு மதத்தின்
அசும்பின் சேறு பட்டு, அளறு பட்டு, அமிழுமால், அடங்க;
விசும்பின் சேறலின் கிடந்தது, அவ் விலங்கல்மேல் இலங்கை.

**வானவர் சிவபெருமானிடம் முறையிடுதல்**

படியைப் பார்த்தனர்; பரவையைப் பார்த்தனர்; படர் வான்
முடியைப் பார்த்தனர்; பார்த்தனர், நெடுந் திசை முழுதும்;
வெடியப் பார்ப்பது ஓர் வெள்ளிடை கண்டிலர்; மிடைந்த
கொடியைப் பார்த்தனர்; வேர்த்தனர், வானவர் குலைந்தார்.

'உலகில் நாம் அலா உரு எலாம் இராக்கத உருவா,
அலகு இல் பல் படை பிடித்துஅமர்க்கு எழுந்தவோ? அன்றேல்,
விலகு நீர்த் திரை வேலை ஓர் ஏழும் போய் விதியால்
அலகு இல் பல் உருப் படைத்தனவோ?' என அயிர்த்தார். 23

நடுங்கி, நஞ்சு அடை கண்டனை, வானவர், 'நம்ப!
ஒடுங்கி யாம் கரந்து உறைவிடம் அறிகிலம்; உயிரைப்
பிடுங்கி உண்குவர்; யார்; இவர் பெருமை பண்டு அறிந்தார்?
முடிந்தது, எம் வலி' என்றனர், ஓடுவான் முயல்வார். 24

18. ஆழி மால் வரை - சக்கரவாள மலை; தோழம் - தொழுவம், கொட்டில்; மால் - இராமன்; 19. பொடித்தல் - தோன்றுதல்; 20. படைப் புணரி - சேனையாகிய கடல்; 21. தசும்பின் - குடம் போன்று; அசும்பு - வழுக்கு நிலம், நீர் பொசியும் நிலம்; 22. வெடிதல் - படைக்கடல் இல்லாது இருத்தல்; வெள்ளிடை - வெற்றிடம்.

'ஒருவரைக் கொல்ல, ஆயிரம் இராமர் வந்து, ஒருங்கே
இருபதிற்றிரண்டு ஆண்டு நின்று அமர் செய்தால், என் ஆம்?
நிருதரைக் கொல்வது, இடம் பெற்று ஓர் இடையில் நின்று அன்றோ?
பொருவது, இப் படை கண்டு, தம் உயிர் பொறுத்து அன்றோ?'

என்று இறைஞ்சலும், மணி மிடற்று இறைவனும், 'இனி, நீர்
ஒன்றும் அஞ்சலிர்; வஞ்சனை அரக்கரை ஒருங்கே
கொன்று நீக்கும், அக் கொற்றவன், இக் குலம் எல்லாம்
பொன்றுவிப்பது ஓர் விதி தந்ததாம்' எனப் புகன்றான். 26

**மூலபலப் படையைக் கண்டு, வானரங்கள் அஞ்சி ஓடுதல்**

புற்றின்நின்று வல் அரவுஇனம் புறப்பட, பொருமி,
'இற்றது, எம் வலி' என விரைந்து இரிதரும் எலிபோல்,
மற்ற வானரப் பெருங் கடல் பயம் கொண்டு மறுகி,
கொற்ற வீரரைப் பார்த்திலது; இரிந்தது, குலைவால். 27

அணையின்மேல் சென்ற, சில சில; ஆழியை நீந்தப்
புணைகள் தேடின, சில; சில நீந்தின போன;
துணைகளோடு புக்கு, அழுந்தின சில; சில தோன்றாப்
பணைகள் ஏறின; மலை முழை புக்கன, பலவால். 28

'அடைத்த பேர் அணை அளித்தது நமக்கு உயிர்; அடைய
உடைத்துப் போதுமால், அவர் தொடராமல்' என்று, உரைத்த;
'புடைத்துச் செல்குவர், விசும்பினும்' என்றன; 'போதோன்
படைத்த திக்கு எலாம் பரந்தனர்' என்றன, பயத்தால். 29

அரியின் வேந்தனும், அனுமனும், அங்கதன்அவனும்,
பிரியகிற்றிலர் இறைவனை, நின்றனர் பின்றார்;
இரியலுற்றனர் மற்றையோர் யாவரும்; எறி நீர்
விரியும் வேலையும் கடந்தனர்; நோக்கினன், வீரன். 30

**இப் புதுப்படை பற்றி இராமன் வினவ, வீடணன் மூலபலம் பற்றிக் கூறுதல்**

'இக் கொடும் படை எங்கு உளது? இயம்புதி' என்றான்;
மெய்க் கொடுந் திறல் வீடணன் விளம்புவான்: 'வீர!
திக்கு அனைத்தினும், ஏழு மாத் தீவினும், தீயோர்
புக்கு அழைத்திடப் புகுந்துளது, இராக்கதப் புணரி. 31

25. இருபதிற்றிரண்டு ஆண்டு - இரண்டு பன்னிரண்டாண்டு, இருபத்து நான்கு ஆண்டு, இரண்டு வியாழ வட்டம்; 28. பணை - கிளை.

'ஏழ் எனப்படும் கீழ் உள தலத்தின்நின்று ஏறி,
ஊழி முற்றிய கடல் எனப் புகுந்ததும் உளதால்;
வாழி மற்று அவன் மூல மாத் தானை முன் வருவ;
ஆழி வேறு இனி அப் புறத்து இல்லை, வாள் அரக்கர். 32

'ஈண்டு, இவ் அண்டத்துள் இராக்கதர் எனும் பெயர் எல்லாம்
மூண்டு வந்தது, தீவினை முன் நின்று முடுக்க;
மாண்டு வீழும் இன்று, என்கின்றது என் மதி; வலி ஊழ்
தூண்டுகின்றது' என்று, அடி மலர் தொழுது, அவன் சொன்னான். 33

**வானர வீரரை அழைத்து வருமாறு அங்கதனை இராமன் ஏவுதல்**

கேட்ட அண்ணலும், முறுவலும் சீற்றமும் கிளர,
'காட்டுகின்றனென்; காணுதி ஒரு கணத்து' என்னா,
ஓட்டின் மேற்கொண்ட தானையைப் பயம் துடைத்து, உரவோய்!
மீட்டிகொல்?' என, அங்கதன் ஓடினன் விரைந்தான். 34

**அங்கதன், ஓடிய படை வீரரை அழைக்க, படைத் தலைவர்கள் பதிலுரைத்தல்**

சென்று சேனையை உற்றனன், 'சிறை சிறை கெடுவீர்!
நின்று கேட்டபின், நீங்குமின்' எனச் சொல்லி நேர்வான்;
'ஒன்றும் கேட்கிலம்' என்றது அக் குரக்குஇனம்; உரையால்
வென்றி வெந் திறல் படைப் பெருந் தலைவர்கள் மீண்டார். 35

மீண்டு, வேலையின் வட கரை, ஆண்டு ஒரு வெற்பின்
ஈண்டினார்களை, 'என் குறித்து இரிவுற்றது?' என்றான்;
'ஆண்ட நாயக! கண்டிலை போலும், நீ அவரை?
மாண்டு செய்வது என்?' என்று உரை கூறினர், மறுப்பார். 36

'ஒருவன் இந்திரசித்து என உள்ளவன் உள நாள்,
செருவின் உற்றவை, கொற்றவ! மறத்தியோ? தெரியின்,
பொரு இல் மற்றவர் இற்றிலர், யாரொடும் பொருவார்;
இருவர் வில் பிடித்து, யாவரைத் தடுத்து நின்று எய்வார்? 37

'புரம் கடந்த அப் புனிதனே முதலிய புலவோர்
வரங்கள் தந்து, உலகு அளிப்பவர் யாவரும், மாட்டார்,
கரந்து அடங்கினர்; இனி, மற்று அவ் அரக்கரைக் கடப்பார்
குரங்கு கொண்டு வந்து, அமர் செயும் மானுடர்கொல்லாம்?

32. ஆழி அப்புறத்து அரக்கர் வேறு இல்லை என இயையும்; 34. ஓட்டு - ஓடுதல்; 35. சிறை சிறை கெடுவீர்! - பல பக்கங்களிலும் சிதறி ஓடுகின்றவர்களே!; 36. ஆண்ட நாயக - எம்மை ஆளாக உடைய தலைவ!; 38. புரம் - முப்புரம்.

'ஊழி ஆயிர கோடி நின்று, உருத்திரனேடும்
ஆழியானும் மற்று அயனெடு புரந்தரன் அவனும்,
சூழ ஓடினர்; ஒருவரைக் கொன்று, தம் தோளால்
வீழுமா செய்ய வல்லரேல், வென்றியின் நன்றே! 39

'என் அப்பா! மற்று, இவ் எழுபது வெள்ளமும், ஒருவன்
தின்னப் போதுமோ? தேவரின் வலியமோ, சிறியேம்?
முன் இப் பார் எலாம் படைத்தவன்; நாள் எலாம் முறை நின்று,
உன்னிப் பார்த்து நின்று, உறையிடப் போதுமோ, யூகம்? 40

' ''நாயகன் தலை பத்து உள; கையும் நால்-ஐந்து'' என்று
ஓயும் உள்ளத்தேம்; ஒருவன் மற்று அவன் வந்து, இங்கு உற்ருர்
ஆயிரம் தலை; அதற்கு இரட்டிக் கையர்; ஐயா!
பாயும் வேலையின் கூலத்து மணலினும் பலரால்! 41

'கும்பகன்னன் என்று உளன், மற்று இங்கு ஒருவன், கைக்கொண்ட
அம்பு தாங்கவும் மிடுக்கு இலம்; அவன் செய்தது அறிதி;
உம்பர் அன்றியே, உணர்வு உடையார் பிறர் உளரோ?
நம்பி? நீயும் உன் தனிமையை அறிந்திலை; நடந்தாய். 42

'அனுமன் ஆற்றலும், அரசனது ஆற்றலும், இருவர்
தனுவின் ஆற்றலும், தம் உயிர் தாங்கவும் சாலா;
கனியும் காய்களும் உணவு உள; முழை உள, கரக்க;
மனிதர் ஆளின் என், இராக்கதன் ஆளின் என், வையம்? 43

'தாம் உளார் அன்றே புகழினைத் திருவொடும் தரிப்பார்?
யாம் உளோம் எனின், எம் கிளை உள்ளது; எம் பெரும!
''போமின் நீர்'' என்று விடை தரத் தக்கனை, புரப்போய்!
''சாமின் நீர்'' என்றல் தருமம்அன்று' என்றனர், தளர்ந்தார்.

''சாம்பனை வதனம் நோக்கி, வாலிசேய், 'அறிவு சான்ருேய்!
''பாம்புஅணை அமலனே மற்று இராமன்'' என்று, எமக்குப் பண்டே
ஏம்பல் வந்து எய்தச் சொல்லித் தேற்றினுய் அல்லையோ, நீ?
ஆம்பல் அம் பகைஞன்தன்னேடு அயிந்திரம் அமைந்தோன் அன்னுய்!

'தேற்றுவாய் தெரிந்து சொல்லால் தெருட்டுவாய் தெளிவிலோரை
ஆற்றுவாய்அல்லை; நீயும் அஞ்சினை போலும்! ஆவி
போற்றுவாய் என்ற போது; புகழ் என் ஆம்? புலமை என் ஆம்?
கூற்றின்வாய்உற்ருல், வீரம் குறைவரே இறைமை கொண்டார்?

40. உறையிடுதல் - பேரளவுள்ள பொருளை எண்ணும்போது கணக்குத் தெரியுமாறு நூற்றுக்கு ஒன்று என இவ்வாருகக் குறித்தல்; 41. கூலம் - கரை; 45. ஆம்பல் அம் பகைஞன் - அல்லி மலர்ப் பகைவனுகிய அழகிய சூரியன்; 46. இறைமை - தலைமைக் குணம்.

'அஞ்சினும்; பழியும் பூண்டாம்; அம் புவி யாண்டும், ஆவி
துஞ்சுமாறு அன்றி, வாழ ஒண்ணுமோ, நாள்மேல் தோன்றின்?
நஞ்சு வாய் இட்டாலன்னது அமுது அன்றோ? நம்மை, அம்மா,
தஞ்சம் என்று அணைந்த வீரர் தனிமையின் சாதல் நன்றே! 47

'தானவரோடும், மற்றைச் சக்கரத் தலைவனோடும்,
வானவர் கடைய மாட்டா மறி கடல் கடைந்த வாலி-
ஆனவன் அம்பு ஒன்றாலே உலந்தமை அயர்த்தது என் நீ?
மீன் அலர் வேலை பட்டது உணர்ந்திலைபோலும்?—மேலோய்!

'எத்தனை அரக்கரேனும், தருமம் ஆண்டு இல்லை அன்றே;
அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்தது உண்டோ?
பித்தரைப் போல நீயும் இவருடன் பெயர்ந்த தன்மை
ஒத்திலது' என்னச் சொன்னான், அவன் இவை உரைப்பதானான்:

சாம்பன் மறுமொழி

நாணத்தால் சிறிது போது நலங்கினன் இருந்து, பின்னர்,
'தூண் ஒத்த திரள் தோள் வீர! தோன்றிய அரக்கர் தோற்றம்
காணத்தான், நிற்கத்தான், அக் கறை மிடற்றவற்கும் ஆமே?
கோணற் பூ உண்ணும் வாழ்க்கைக் குரங்கின்மேல் குற்றம் உண்டோ?

'தேவரும் அவுணர்தாமும் செருப் பண்டு செய்த காலம்,
ஏவரே என்னால் காணப்பட்டிலர்? இருக்கை ஆன்ற
மூவகை உலகின் உள்ளார்; இவர் துணை ஆற்றல் முற்றும்
பாவகர் உளரே? கூற்றை அஞ்சினால், பழியும் உண்டோ? 51

'மாலியைக் கண்டேன்; பண்டை, மாலியவானைக் கண்டேன்;
கால நேமியையும் கண்டேன்; இரணியன்தனையும் கண்டேன்;
ஆல மா விடமும் கண்டேன்; மதுவினை அனுசனோடும்
வேலையைக் கலக்கக் கண்டேன்; இவர்க்கு உள மிடுக்கும் உண்டோ? 52

'வலி இதன் மேலே, பெற்ற வரத்தினர்; மாயம் வல்லார்;
ஒலி கடல் மணலின் மிக்க கணக்கினர்; உள்ளம் நோக்கின்,
கலியினும் கொடியர்; கற்ற படைக்கலக் கரத்தர்; எஃதால்,
மெலிகுவது அன்றி உண்டோ, விண்ணவர் வெருவல் கண்டால்?

47. நாள்மேல் தோன்றல் - இயமன் நம்முடைய வாழ்நாளை முடித்தற்பொருட்டுத் தோன்றுதல்; போரில் மடியாது தப்பினோம் என்றால் அக் காலத்து நாம் நுகரும் இனிய அமுதும் இன்னாத நஞ்சினை வாயில் இட்டால் ஒத்த வெறுப்பினை விளைப்பதாகும் என்பது மூன்றாம் அடியின் கருத்து. 48. அலர்தல் - விளங்குதல்; 50. கோணற் குரங்கு - கூன் உடைய குரங்கு; 51. பாவகர் - கொடியோர்; 52. கால நேமி - இரணியன் மகன், நூறு தலைகளையும் நூறு கைகளையும் படைத்தவன்; மது - ஓர் அசுரன்; அனுசன் - தம்பி; மதுவின் தம்பியாகிய கைடபன்; 53. கலி - கலி புருடன்.

'ஆகினும், ஐய! உண்டால், ஆர்க்கேனும் அமரின் அஞ்சிச்
சாகினும், பெயர்ந்த தன்மை பழி தரும்; நரகில் தள்ளும்;
ஏகுதும், மீள; இன்னும் இயம்புவது உளதால்; எய்தி,
மேகமே அனையான் கண்முன் எங்ஙனம் விழித்து நிற்றும்? 54

'எடுத்தலும், சாய்தல்தானும், எதிர்த்தலும் எதிர்ந்தோர்தம்மைப்
படுத்தலும், வீர வாழ்க்கை பற்றினர்க்கு உற்ற, மேல்நாள்;
அடுத்ததே அஃது; நிற்க, அன்றியும் ஒன்று கூறக்
கடுத்தது; கேட்டீர் நீரும் கருத்துளீர், கருதி நோக்கின். 55

'ஒன்றும் நீர் அஞ்சல், ஐய! யாம் எலாம் ஒருங்கு சென்று,
நின்றும், ஒன்று இயற்றல் ஆற்றேம்; நேமியான் தானே நேர்ந்து,
கொன்று போர் கடக்கும்ஆயின், கொள்ளுதும் வென்றி; அன்றேல்,
பொன்றுதும், அவனோடு' என்றான்; 'போதலோ' புகழ் அன்று என்
[றான்.

**வானரப்படை மீளலும் அரக்கர் படைபற்றி இராமன் உரைத்தலும்**

'ஈண்டிய தானை நீங்க, நிற்பது என்? யாமே சென்று,
பூண்ட வெம் பழியினோடும் போந்தனம்; போதும்' என்னா,
மீண்டனர் தலைவர் எல்லாம், அங்கதனோடும்; வீரன்
மூண்ட வெம் படையை நோக்கி, தம்பிக்கு மொழிவதானான்:

'அத்த! நீ உணர்தி அன்றே, அரக்கர்தான், அவுணரேதான்,
எத்தனை உளர்என்றாலும், யான் சிலை எடுத்தபோது,
தொத்துறு கனலின் வீழ்ந்த பஞ்சு எனத் தொலையும் தன்மை!
ஒத்தது; ஓர் இடையூறு உண்டு என்று உணர்விடை உதிப்பது அன்றால்.

**வானரச் சேனையைக் காக்குமாறு இராமன் தம்பிக்கு உரைத்தல்**

'காக்குநர் இன்மை கண்ட கலக்கத்தால், கவியின் சேனை
போக்கு அறப் போகித் தம்தம் உறைவிடம் புகுதல் உண்டால்;
தாக்கி, இப் படையை முற்றும் தலை துமிப்பளவும், தாங்கி,
நீக்குதி, நிருதர் ஆங்கு நெருக்குவார் நெருங்காவண்ணம். 59

'இப் புறத்து இனைய சேனை ஏவி, ஆண்டு இருந்த தீயோன்,
அப் புறத்து அமைந்த சூழ்ச்சி அறிந்தவன், அயலே வந்து,
தப்பு அறக் கொன்று நீக்கில், அவனை யார் தடுக்கத் தக்கார்,—
வெப்புறுகின்றது உள்ளம்,—வீர! நீ அன்றி, வில்லோர்? 60

57. வீரன் - இராமன்; 58. தொத்துறு கனல் - திரளாகப் பொருந்திய நெருப்பு; 60. வெப்புறுதல் - வெதும்பி வருந்துதல்.

'மாருதியோடு நீயும், வானரக்கோனும், வல்லே,
பேருதிர் சேனை காக்க, என்னுடைத் தனிமை பேணிச்
சோருதிர்என்னின், வெம் போர் தோற்றும், நாம்' என்னச்சொன்னான்,
வீரன், மற்று அதனைக் கேட்ட இளையவன் விளம்பலுற்றான்: 61

அனுமன், இராமனுக்கு அருகே இருக்க வேண்டுதல்

'அன்னதே கருமம்; ஐய! அன்றியும், அருகே நின்றால்,
என் உனக்கு உதவி செய்வது—இது படை என்ற போது,
சென்னியில் சுமந்த கையர், தேவரே போல, யாமும்
பொன்னுடைவரிவில் ஆற்றல் புறன் நின்று காண்டல்போக்கி?'

என்று அவன் ஏகலுற்ற காலையின், அனுமன், 'எந்தாய்!
''புன் தொழில் குரங்கு'' எனாது, என் தோளின்மேல் ஏறிப் புக்கால்,
நன்று எனக் கருதாநின்றேன்; அல்லது, நாயினேன் உன்
பின் தனி நின்றபோதும், அடித் தொழில் பிரியேன்' என்றான்.

அனுமன் முதலியோரை இலக்குவன் பின் செல்ல இராமன் ஏவுதல்

'ஐய! நிற்கு இயலாது உண்டோ? இராவணன் அயலே வந்துற்று,
எய்யும் அல் கரத்து வீரன் இலக்குவன்தன்னோடு ஏற்றால்,
மொய் அமர்க் களத்தின் உன்னைத் துணை பெறான்என்னின், முன்ப!
செய்யும் மா வெற்றி உண்டோ? சேனையும் சிதையும் அன்றே?

'ஏரைக் கொண்டு அமைந்த குஞ்சி இந்திரசித்து என்பான்தன்
போரைக் கொண்டு இருந்த முன்நாள், இளையவன் தன்னைப் போக்கிற்று
ஆரைக் கொண்டு? உன்னால் அன்றே, வென்றது அங்கு அவனை? இன்
வீரர்க்கும் வீர! நின்னைப் பிரிகலன், வெல்லும் என்பேன். [னம்,

'சேனையைக் காத்து, என் பின்னே திரு நகர் தீர்ந்து போந்த
யானையைக் காத்து, மற்றை இறைவனைக் காத்து, எண் தீர்ந்த
வானை இத் தலத்தினோடும் மறையொடும் வளர்த்தி' என்றான்;
ஏனை மற்று உரைக்கலாதான், இளவல்பின் எழுந்து சென்றான்.

'வீடண! நீயும் மற்று உன் தம்பியோடு ஏகி, வெம்மை
கூடினர் செய்யும் மாயம் தெரிந்தனை கூறி, கொற்றம்
நீடுறு தானைதன்னைத் தாங்கினை, நில்லாய்என்னின்,
கேடு உளது ஆகும்' என்றான்; அவன் அது கேட்பதானான். 67

65. ஏர் - அழகு; 66. எண் தீர்ந்த வான் - மன எல்லையைக் கடந்து நின்ற வானுலகு; ஏனை மற்று உரைக்கலாதான் - மாறாக வேறு உரைக்கமாட்டாத வணங்கிய அனுமன்.

சூரியன் சேயும், செல்வன் சொற்றதே எண்ணும் சொல்லன்,
ஆரியன் பின்பு போனான்; அனைவரும், 'அதுவே நல்ல
காரியம்' என்னக் கொண்டார்; கடற்படை காத்து நின்றார்;
வீரியன் பின்னர்ச் செய்த செயல் எலாம் விரிக்கலுற்றாம்: 68

இராமன், முன்னணியில் வந்து பொருதல்

வில்லினைத் தொழுது, வாங்கி, ஏற்றினான்; வில் நாண் மேருக்
கல் எனச் சிறந்ததேனும், கருணை அம் கடலே அன்ன
எல் ஒளி மார்பில் தீராக் கவசம் இட்டு, இழையா வேதச்
சொல் எனத் தொலையா வாளித் தூணியும் புறத்துத் தூக்கி,

ஓசனை நூற்றின் வட்டம் இடைவிடாது உறைந்த சேனைத்
தூசி வந்து அண்ணல்தன்னைப் போக்கு அற வளைந்து சுற்றி,
வீசின படையும் அம்பும் மிடைதலும், விண்ணோர் ஆக்கை
கூசின, பொடியால்; எங்கும் குமிழ்த்தன, வியோம கூடம். 70

'கண்ணனே! எளியேம் இட்ட கவசமே! கடலே அன்ன
வண்ணனே! அறத்தின் வாழ்வே! மறையவர் வலியே! மாறு
ஒண்ணுமே, நீ அலாது, ஓர் ஒருவர்க்கு இப் படைமேல் ஊன்ற?
எண்ணமே முடித்தி!' என்னா, ஏத்தினர், இமையோர் எல்லாம்.

முனிவரே முதல்வர் ஆய அறத் துறை முற்றினோர்கள்,
தனிமையும், அரக்கர் தானைப் பெருமையும், தரிக்கலாதார்,
பனி வரு கண்ணர், விம்மிப் பதைக்கின்ற நெஞ்சர், 'பாவத்து,
அனைவரும் தோற்க! அண்ணல் வெல்க!' என்று ஆசி சொன்னார்.

இராமன் தனியே நின்று பொருதல்

'இரிந்து சேனை சிந்தி, யாரும் இன்றி ஏக, நின்று, நம்
விரிந்த சேனை கண்டு, யாதும் அஞ்சல் இன்றி, வெஞ் சரம்
தெரிந்த சேவகம் திறம்பல் இன்றி நின்ற செய்கையான்
புரிந்த தன்மை வென்றி மேலும் நன்று! மாலி பொய்க்குமோ?

'புரங்கள் எய்த புங்கவற்கும் உண்டு தேர்; பொருந்தினார்,
பரந்த தேவர்; மாயன் நம்மை வேர்அறுத்த பண்டை நாள்,
விரைந்து புள்ளின்மீது விண்ணுளோர்களோடு மேவினான்;
கரந்திலன், தனித்து ஒருத்தன் நேரும், வந்து, காவினான். 74

68. வீரியன் - இராமன்; 69. இழையா வேதம் - செய்யப்படாத வேதம்; 70. தூசி - முன்னணிப் படை; பொடி - புழுதித் துகள்; வியோம கூடம் - வானப் பரப்பு; 71. படைமேல் ஊன்றல் - தன் மேல் வந்த பகைப் படையினை எதிர்த்து நின்று பொருதல்; 73. சேவகம் - வீரர்க்குரிய கட்டுப்பாடு.

'தேரும், மாவும், யானையோடு சீயம், யாளி, ஆதியா
மேரு மானும் மெய்யர் நின்ற வேலை ஏழின் மேலவா;
''வாரும், வாரும்'' என்று அழைக்கும் மானுடற்கு, இம் மண்ணிடைப்
பேருமாறும் நம்முழைப் பிழைக்குமாறும் எங்ஙனே?' 75

என்று சென்று, அடர்த்து இடைத்து, ஓர் சீய ஏறு அடர்ந்ததைக்
குன்று வந்து சூழ் வளைந்தபோல், தொடர்ந்து கூடலும்,
'நன்று இது!' என்று, ஞாலம் ஏழும் நாகம் ஏழும் மானும் தன்
வென்றி வில்லை வேத நாதன் நாண் எறிந்த வேலைவாய், 76

கதம் புலர்ந்த, சிந்தை வந்த, காவல் யானை; மாலொடு
மதம் புலர்ந்த; நின்ற வீரர் வாய் புலர்ந்த; மா எலாம்
பதம் புலர்ந்த; வேகம் ஆக, வாள் அரக்கர் பண்பு சால்
விதம் புலர்ந்தது; என்னின், வென்ற வென்றி சொல்ல வேணுமோ?

வெறித்து இரிந்த வாசியோடு, சீய மாவும் மீளியும்,
செறித்து அமைந்த சில்லி என்னும் ஆழி கூடு தேர் எலாம்
முறித்து எழுந்த முற்கை யானை வீசும் மூசு பாகரைப்
பிறித்து இரிந்து சிந்த, வந்து ஓர் ஆகுலம் பிறந்ததால். 78

'இந் நிமித்தம் இப் படைக்கு இடம் துடித்து அடுத்தது ஓர்
துன்னிமித்தம்' என்று கொண்டு, வானுளோர்கள் துள்ளினர்;
அந் நிமித்தம் உற்ற போது, அரக்கர் கண்அரங்க, மேல்
மின் நிமிர்த்தது அன்ன வாளி வேதநாதன் வீசினன். 79

ஆளி மேலும், ஆளின் மேலும், ஆனை மேலும், ஆடல் மா
மீளி மேலும், வீரர் மேலும், வீரர் தேரின் மேலும், வெவ்
வாளி மேலும், வில்லின் மேலும், மண்ணின்மேல் வளர்ந்த மாத்
தூளி மேலும் ஏற ஏற, வீரன் வாளி தூவினன். 80

மலை விழுந்தவா விழுந்த, மான யானை; மள்ளர் செந்
தலை விழுந்தவா விழுந்த, தாய வாசி, தாள் அறும்
சிலை விழுந்தவா விழுந்த, திண் பதாகை; திங்களின்
கலை விழுந்தவா விழுந்த, வெள் எயிற்ற காடு எலாம். 81

வாடை நாலு பாலும் வீச, மாக மேக மாலை வெங்
கோடை மாரி போல வாளி கூட, ஓடை யானையும்,
ஆடல் மாவும், வீரர் தேரும், ஆளும், மாள்வது ஆனவால்;
பாடு பேருமாறு கண்டு, கண் செல் பண்பும் இல்லையால். 82

75. பேருமாறு - தப்பிப் போகும் வகை; 76. நாகம் - மேலுலகம்; மானும் - ஒக்கும்; 77. பதம் - கால்கள்; 78. வாசி - குதிரை; மீளி - பேய்; மூசுதல் - மொய்த்தல்; 79. கண்அரங்க - கண் கலங்கி வருந்த; 81. தாய - தாவிய; தாள்அறும் சிலை - அடியற்ற விற்கள்.

விழித்த கண்கள், கைகள், விற்கள், வேல்கள், வாள்கள், விண்ணினுள்
தெழித்த வாய்கள், செல்லலுற்ற தாள்கள், தோள்கள், செல்லினைப்
பழித்த வாளி சிந்த, நின்று பட்ட அன்றி, விட்ட கோல்
கழித்த ஆயுதங்கள் ஒன்று செய்தது இல்லை கண்டதே. 83

தொடுத்த வாளியோடு வில் துணிந்து வீழும், முன்; துணிந்து
எடுத்த வாள்களோடு தோள்கள் இற்று வீழும்; மற்று உடன்
கடுத்த தாள்கள் கண்டம் ஆகும்; எங்ஙனே, கலந்து நேர்
தடுத்து வீரர்தாமும் ஒன்று செய்யுமா, சலத்தினால்? 84

குரம் துணிந்து, கண் சிதைந்து, பல்லணம் குலைந்து, பேர்
உரம் துணிந்து, வீழ்வது அன்றி, ஆவி ஓட ஒண்ணுமே—
சரம் துணிந்த ஒன்றை நூறு சென்று சென்று தள்ளலால்,
வரம் துணிந்த வீரர் போரின் முந்த உந்து வாசியே? 85

ஊர உன்னின், முன்பு பட்டு உயர்ந்த வெம் பிணங்களால்,
பேர ஒல்வது அன்று; பேரின், ஆயிரம் பெருஞ் சரம்
தூர, ஒன்று நூறு கூறுபட்டு உகும்; துயக்கு அலால்,
தேர்கள் என்று வந்த பாவி என்ன செய்கை செய்யுமே?* 86

எட்டு வன் திசைக்கண் நின்ற யாவும், வல்ல யாவரும்,
கிட்டின், உய்ந்து போகிலார்கள் என்ன நின்ற, கேள்வியால்;
முட்டும் வெங் கண் மான யானை, அம்பு உராய, முன்னமே
பட்டு வந்தபோல் விழுந்த; என்ன தன்மை பண்ணுமே?* 87

வாவி கொண்ட புண்டரீகம் அன்ன கண்ணன் வாளி ஒன்று
ஏவின், உண்டை நூறு கோடி கொல்லும் என்ன, எண்ணுவான்
பூவின் அண்டர்கோனும், எண் மயங்கும்; அன்ன போரின் வந்து
ஆவி கொண்ட காலனார் கடுப்பும் அன்னது ஆகுமே? 88

கொடிக் குலங்கள், தேரின் மேல, யானை மேல, கோடை நாள்
இடிக் குலங்கள் வீழ வெந்த காடுபோல் எரிந்தவால்—
முடிக் குலங்கள் கோடி கோடி சிந்த, வேகம் முற்றுறு
வடிக் குலங்கள் வாளி ஓட வாயினூடு தீயினால்!* 89

85. குரம் - குளம்பு; பல்லணம் - குதிரைக் கலன்; துணிந்த ஒன்று - தனக்கு இலக்காகத் துணிந்த ஒன்று; 86. துயக்கு - மனச்சோர்வு; 87. கேள்வி - கேட்கப்படுவது, ஈண்டுப் புகழ்; 88. கடுப்பு - விரைவு; 89. வடி வாளிக் குலங்கள் என மாற்றுக.

அற்ற வேலும் வாளும் ஆதி ஆயுதங்கள் மீது எழுந்து,
உற்ற வேகம் உந்த ஓடி, ஓத வேலை ஊடுற,
துற்ற வெம்மை கைம்மிக, சுறுக்கொளச் சுவைத்ததால்,
வற்றி நீர் வறந்து, மீன் மறிந்து, மண் செறிந்தவால். 90

போர் அரிந்தமன் துரந்த புங்க வாளி, பொங்கினுர்
ஊர் எரிந்த நாள் துரந்தது என்ன மின்னி ஓடலால்,
நீர் எரிந்த வண்ணமே, நெருப்பு எரிந்த, நீள் நெடுந்
தேர் எரிந்த, வீரர்தம் சிரம் பொடிந்து சிந்தவே. 91

பிடித்த வாள்கள் வேல்களோடு, தோள்கள் பேர் அரா எனத்
துடித்த; யானைமீது இருந்து போர் தொடங்கு சூரர்தம்
மடித்த வாய்ச் செழுந் தலைக் குலம் புரண்ட, வானின் மின்
இடித்த வாயின் இற்ற மா மலைக் குலங்கள் என்னவே. 92

கோர ஆளி, சீயம், மீளி, கூளியோடு ஞாளியும்,
போர வாளினேடு தேர்கள் நூறு கோடி பொன்றுமால்—
நார ஆளி, ஞால ஆளி, ஞான ஆளி, நாந்தகப்
பார ஆளி, வீர ஆளி, ஏக வாளி பாயவே. 93

ஆழி பெற்ற தேர் அழுந்தும்; ஆள் அழுந்தும்; ஆளொடும்
சூழி பெற்ற மா அழுந்தும்; வாசியும் சுரிக்குமால்;—
பூழி பெற்ற வெங் களம் குளம் பட, பொழிந்த பேர்
ஊழி பெற்ற ஆழி என்ன சோரி நீரினுள்அரோ. 94

அற்று மேல் எழுந்த வன் சிரங்கள்தம்மை அண்மி, மேல்
ஒற்றும் என்ன அங்கும் இங்கும் விண்ணுளோர் ஒதுங்குவார்;
'சுற்றும் வீழ் தலைக் குலங்கள் சொல்லு கல்லின் மாரிபோல்
எற்றும்' என்று, பாரின் எங்கும் வாழுவார்; இரங்குவார். 95

மழைத்த மேகம் வீழ்வ என்ன, வான மானம் வாடையின்
சுழித்து வந்து வீழ்வ என்ன, மண்ணின்மீது துன்னுமால்—
அழித்து ஒடுங்கு கால மாரி அன்ன வாளி ஒளியால்,
விழித்து எழுந்து, வானினூடு மொய்த்த பொய்யர் மெய் எல்லாம். 96

90. சுறுக்கொளல் - தீயிற்பட்டுப் பழுக்கக் காய்ந்த படைக்கலங்கள் கடல் நீரில் விழுந்தபொழுது உண்டாகிய சுறு என்னும் ஓசை; சுவைத்தல் - பருகுதல்; 91. அரிந்தமன் - பகைவரை அடக்குவோன்; 92. இடித்த வாய் - இடி தாக்கிய இடம்; 93. ஞாளி - நாய்; நார ஆளி - உயிர் ள்தோறும் கரந்து நின்று ஆள்பவன்; ஞான ஆளி - ஞானமே திருமேனியாகக் கொண்டு ஆள்பவன்; நாந்தகப் பார ஆளி - நாந்தகம் என்னும் பெருமை வாய்ந்த வாட் படையை உடையவன்; 95. எற்றுதல் - தாக்குதல்; 96. வான மானம் - வானிடத்தே செல்லும் விமானம்; வாளி ஒளி - அம்பின் தொகுதி.

தெய்வ நெடும் படைக் கலங்கள் விடுவர் சிலர்;
சுடு கணைகள் சிலையில் கோலி,
எய்வர் சிலர்; எறிவர் சிலர்; எற்றுவர்
சுற்றுவர், மலைகள் பலவும் ஏந்தி;
பெய்வர் சிலர்; 'பிடித்தும்' எனக் கடுத்து உறுவர்;
படைக் கலங்கள் பெருது, வாயால்,
வைவர் சிலர்; தெழிப்பர் சிலர்; வருவர் சிலர்;
திரிவர் சிலர்—வயவர் மன்னே. 97

ஆர்ப்பர் பலர்; அடர்ப்பர் பலர்; அடுத்து அடுத்தே,
படைக் கலங்கள் அள்ளி அள்ளித்
தூர்ப்பர் பலர்; மூவிலைவேல் துரப்பர் பலர்;
கரப்பர் பலர்; சுடு தீத் தோன்றப்
பார்ப்பர் பலர்; நெடு வரையைப் பறிப்பர் பலர்;—
பகலோனைப் பற்றிச் சுற்றும்
கார்ப் பருவ மேகம் என, வேக நெடும்
படை அரக்கர் கணிப்பு இலாதார். 98

எறிந்தனவும், எய்தனவும், எடுத்தனவும்,
பிடித்தனவும், படைகள் எல்லாம்
முறிந்தன, வெங் கணைகள் பட; முற்றின,
சுற்றின தேரும், மூரி மாவும்;
நெறிந்தன குஞ்சிகளோடும் நெடுந் தலைகள்
உருண்டன; பேர் இருளின் நீங்கி,
பிறிந்தனன் வெய்யவன் என்னப் பெயர்ந்தனன்—மீது
உயர்ந்த தடம் பெரிய தோளான். 99

சொல் அறுக்கும் வலி அரக்கர், தொடு கவசம்
துகள் படுக்கும்; துணிக்கும் யாக்கை;
வில் அறுக்கும்; தலை அறுக்கும்; மிடல் விறுக்கும்;
அடல் அறுக்கும்; மேல் மேல் வீசும்
கல் அறுக்கும்; மரம் அறுக்கும்; கை அறுக்கும்;
செய்ய மள்ளர் கமலத்தோடு
நெல் அறுக்கும் திரு நாடன் நெடுஞ் சரம்
என்றால், எவர்க்கும் நிற்கலாமோ? 100

100. சொல் அறுக்கும் வலி - சொல்ல முடியாத உடல் வலிமை; திரு நாடன் - கோசல நாட்டையுடையானாகிய இராமன்.

'கால் இழந்தும், வால் இழந்தும், கை இழந்தும்,
கழுத்து இழந்தும், பருமக் கட்டின்
மேல் இழந்தும், மருப்பு இழந்தும், விழுந்தன'
என்குநர் அல்லால், வேலை அன்ன
மால் இழந்து, மழை அனைய மதம் இழந்து;
வலி இழந்து, மலைபோல் வந்த
தோல் இழந்த தொழில் ஒன்றும் சொல்லினர்கள்
இல்லை—நெடுஞ் சுரர்கள் எல்லாம். 101

வேல் செல்வன, சத கோடிகள்; விண்மேல் நிமிர் விசிகக்
கோல் செல்வன, சத கோடிகள்; கொலை செய்வன, மலையை;
தோல் செல்வன, சத கோடிகள்; துரகம் தொடர் இரதக்
கால் செல்வன, சத கோடிகள்; ஒருவன், அவை கடிவான்! 102

ஒரு வில்லியை, ஒரு காலையின், உலகு ஏழையும் உடற்றும்
பெரு வில்லிகள், முடிவு இல்லவர், சர மா மழை பெய்வார்;
பொரு வில்லவர் கணை மாரிகள் பொடியாம் வகை பொழிய,
திருவில்லிகள் தலை போய் நெடு மலைபோல் உடல் சிதைவார்.

'நூறுயிர மத யானையின் வலியோர்' என நுவல்வோர்,
மாறு ஆயினர், ஒரு கோல் பட, மலை போல் உடல் மறிவார்;
ஆறு ஆயிரம் உளவாகுதல் அழி செம் புனல் அவை புக்கு,
ஏறுது, எறி கடல் பாய்வன, சின மால் கரி இனமால். 104

மழு அற்று உகும்; மலை அற்று உகும்; வளை அற்று உகும்; வயிரத்து
எழு அற்று உகும்; அயில் அற்று உகும்; இலை அற்று உகும்; எழு வேல்;
பழு அற்று உகும், மத வெங் கரி; பரி அற்று உகும்; இரதக்
குழு அற்று உகும்;—ஒரு வெங் கணை தொடை பெற்றது ஓர் குறியால்.

ஒரு காலையின், உலகத்து உறும் உயிர் யாவையும் உண்ண
வரு காலனும், அவன் தூதரும், நமனதானும், அவ் வரைப்பின்
இரு கால் உடையவர் யாவரும் திரிந்தார இளைத்திருந்தார்;
அருகு ஆயிரம் உயிர் கொண்டு தம் ஆறு வகலர், அயர்த்தார். 106

அடுக்குற்றன மத யானையும், அழி தேர்களும், பரியும்
தொடுக்குற்றன விசும்பூடு உறச் சுமந்து ஓங்கின எனினும்,
மிடுக்குற்றன கவந்தக் குலம் எழுந்து ஆடலின், எல்லாம்
நடுக்குற்றன, பிணக் குன்றுகள், உயிர் நண்ணின என்ன.* 107

*101. பருமக் கட்டு - அம்பாரி; தோல் - யானை; 102. சதம் - நூறு; துரகம் - குதிரை; 105. பழு - விலா எலும்பு.*

பட்டார் உடல் படு செம்புனல் திருமேனியில் படலால்,
சுட்டு ஆர் சிலைக் கரு ஞாயிறு புரைவான், கடையுகநாள்,
சுட்டு, ஆசு அறுத்து உலகு உண்ணும் அச் சுடரோன் எனப் பொலிந்
ஒட்டார் உடல் குருதிக் குளித்து எழுந்தானையும் ஒத்தான்.* [தான்;

தீ ஒத்தன உரும் ஒத்தன சரம் சிந்திட, சிரம் போய்
மாய, தமர் மடிகின்றனர் எனவும், மறம் குறையா,
காயத்திடை உயிர் உண்டிட, உடன் மொய்த்து எழு களியால்
ஈ ஒத்தன நிருதக் குலம்; நறவு ஒத்தனன் இறைவன்.* 109

மொய்த்தாரை ஓர் இமைப்பின்தலை, முடுகத் தொடு சிலையால்
தைத்தான்; அவர், கழல்-திண் பசுங் காய் ஒத்தனர், சரத்தால்;
கைத்தார் நெடுந் தேரும், கடுங் களிறும், களத்து அழுந்தக்
குத்தான், அழி குழம்பு ஆம்வகை, வழுவாச் சரக் குழுவால்.*

பிரிந்தார் பலர்; இரிந்தார் பலர்; பிழைத்தார் பலர்; உழைத்தார்;
புரிந்தார் பலர்; நெரிந்தார் பலர்; புரண்டார் பலர்; உருண்டார்;
எரிந்தார் பலர்; கரிந்தார் பலர்; எழுந்தார் பலர்; விழுந்தார்;
சொரிந்தார் குடல்; துமிந்தார் தலை; இடந்தார், எதிர் தொடர்ந்தார்.

மணி குண்டலம், வலயம், குழை, மகரம், சுடர் மகுடம்,
அணி கண்டிகை, கவசம், கழல், திலகம், முதல் அகலம்
துணியுண்டவர் உடல், சிந்தின; சுடர்கின்றன தொடரும்
திணி கொண்டலினிடை மின் குலம் மிளிர்கின்றன சிவண.*

முன்னே உளன்; பின்னே உளன்; முகத்தே உளன்; அகத்தின்-
தன்னே உளன்; மருங்கே உளன்; தலைமேல் உளன்; மலைமேல்
கொன்னே உளன்; நிலத்தே உளன்; விசும்பே உளன்; கொடியோர்,
'என்னே ஒரு கடுப்பு!' என்றிட, இருஞ் சாரிகை திரிந்தான்.

'என் நேரினன்; என் நேரினன்' என்று யாவரும் எண்ண,
பொன் நேர் வரு வரி வில் கரத்து ஒரு கோளரி பொருவான்,
ஒன்னார் பெரும் படைப் போர்க் கடல் உறை அன்று உளது எனினும்,
அல் நேரலர் உடனே திரி நிழலே எனல் ஆனான். 114

பள்ளம் படு கடல் ஏழினும், படி ஏழினும், பகையின்
வெள்ளம் பல உள என்னினும், வினையம் பல தெரியா,
கள்ளம் படர் பெரு மாயையின் கரந்தார், உருப் பிறந்தார்
உள் அன்றியும், புறத்தேயும் உற்று, உளனும் என உற்றான்.*

110. கழல் - திண் பசுங்காய் - பசிய கழற்சிக்காய்; கைத்தார் - தேரைச் செலுத்தி வந்த அரக்கர்; குத்தான் - உகுத்தான், முதற்குறை; 114. என் நேரினன் - என் நேரில் உள்ளான்; அல் நேரலர் - இருளை ஒத்த பகைவர்கள்.

நாலுவிதப் பெருஞ் சாரிகை திரிகின்றது நவிலார்,
போனுன் இடை புகுந்தான், எனப் புலன் கொள்கிலர், மறந்தார்,
'தானுவதும் உணர்ந்தான், உணர்ந்து, உலகு எங்கணும் தானே
ஆனுன்; வினை துறந்தான்' என, இமையோர்களும் அயிர்த்தார்.

சண்டக் கடு நெடுங் காற்றிடை துணிந்து எற்றிட, தரைமேல்
கண்டப் படு மலைபோல், நெடு மரம்போல், கடுந் தொழிலோர்
துண்டப் பட, கடுஞ் சாரிகை திரிந்தான், சரம் சொரிந்தான்—
அண்டத்தினை அளந்தான் எனக் கிளர்ந்தான், நிமிர்ந்து அகன்றுன்.

களி யானையும், நெடுந் தேர்களும், கடும் பாய் பரிக் கணனும்,
தெளி யாளியும், முரட் சீயமும், சின வீரர்தம் திறமும்,
வெளி வானகம் இலதாம்வகை விழுந்து ஓங்கிய பிணப் பேர்
நளிர் மா மலை பல தாவினன், நடந்தான்—கடல் கிடந்தான்.

அம்பரங்கள் தொடும் கொடி ஆடையும்,
அம்பரங்களொடும் களி யானையும்,
அம்பு அரங்க, அழுந்தின, சோரியின்,
அம்பரம் கம் அருங் கலம் ஆழ்ந்தென. 119

கேட கங்கண அம் கையொடும் கிளர்
கேடகங்கள் துணிந்து கிடந்தன;
கே அகம் கிளர்கின்ற களத்த நன்கு
ஏட கங்கள் மறிந்து கிடந்தவே.* 120

அங்கதம் களத்து அற்று அழி தாரொடும்
அம் கதம் களத்து அற்று அழிவுற்றவால்—
புங்கவன் கணைப் புட்டில் பொருந்திய
புங்க வன் கணைப் புற்று அரவம் பொர.* 121

தம் மனத்தில் சலத்தர் மலைத் தலை
வெம்மை உற்று எழுந்து ஏறுவ மீளுவ,
தெம் முனைச் செரு மங்கை தன் செங் கையால்
அம்மனைக் குலம் ஆடுவ போன்றவே. 122

119. அம்பரங்கள் - முதலடியில் ஆகாயம்; இரண்டாம் அடியில் அம் பாரிகள்; நான்காம் அடியில் கடல்; கம் - நீர்; கலம் - நாவாய்; 120. கேட - அழித்தற்றெழிலையுடைய; ஏட கங்கள் - (தும்பை) மலர் மாலையையுடைய தலைகள்; 121. அங்கதம் - தோள் வளை; அம் கதம் - வீரர்க்கு அழகினைத் தரும் வெகுளி; புங்க வன் கணை - கூரிய நுனியையுடைய வலிய கணை; 122. அம்மனைக் குலம் - அம்மனைக் காய்களின் தொகுதி.

கயிறு சேர் கழல் கார் நிறக் கண்டகர்
எயிறு வாளி படத் துணிந்து, யானையின்
வயிறுதோறும் மறைவன, வானிடைப்
புயல்தொறும் புகு வெண் பிறை போன்றவே.* 123

வென்றி வீரர் எயிறும், விடா மதக்
குன்றின் வெள்ளை மருப்பும், குவிந்தன—
என்றும் என்றும் அமைந்த இளம் பிறை
ஒன்றி மா நிலத்து உக்கவும் ஒத்தவால். 124

ஓவிலார் உடல் உந்து உதிரப் புனல்
பாவி வேலை உலகு பரத்தலால்,
தீவுதோறும் இனிது உறை செய்கையார்,
ஈவு இலாத நெடு மலை ஏறினர். 125

விண் நிறைந்தன, மெய் உயிர்; வேலையும்,
புண் நிறைந்த புனலின் நிறைந்தன;
மண் நிறைந்தன, பேர் உடல்; வானவர்
கண் நிறைந்தன, வில் தொழில் கல்வியே.* 126

செறுத்த வீரர் பெரும் படை சிந்தின,
பொறுத்த சோரி புகக் கடல் புக்கன,
இறுத்த நீரின் செறிந்தன, எங்கணும்
அறுத்து, மீனம் உலந்த அனந்தமே.* 127

**வன்னி, வெகுண்டு பேசுதல்**

'ஒல்வதே! இவ் ஒருவன், இவ் ஊகத்தைக்
கொல்வதே, நின்று! குன்று என யாம் எலாம்
வெல்வது ஏதும் இலாமையின், வெண் பலை
மெல்வதே!' என வன்னி விளம்பினான். 128

'கோல் விழுந்து அழுந்தாமுனம், கூடி யாம்
மேல் விழுந்திடினும், இவன் வீயுமால்;
கால் விழுந்த மழை அன்ன காட்சியீர்!
மால் விழுந்துளிர் போலும், மயங்கி, நீர்!* 129

24. என்றும் என்றும் - நாளும் நாளும்; 125. ஓவிலார் - பொருதல் தொழிலினின்றும் நீங்காத அரக்க வீரர்கள்; பாவி - பரவி; ஈவு - ஒழிதல், அழிதல்; 128. ஊகம் - வியூகம்; படை வகுப்பு; வன்னி - புட்கரத் தீவின் மன்னன், படையைத் தலைமை தாங்கி நடத்தியவன்; 129. மழை கால் விழுதல் - மழை பெய்தற்குக் கருமுகில் கால் கொண்டு இறங்குதல்.

'ஆயிரம் பெரு வெள்ளம் அரைபடத்
தேய நிற்பது; பின்பு, இனி என் செய?
பாயும், உற்று, உடனே' எனப் பன்னினன்.
நாயகற்கு ஓர் உதவியை நல்குவான்.* 130

**உருத்து எழுந்த அரக்கர் படை இராம பாணத்தால் மடிதல்**

உற்று, உருத்து எழு வெள்ளம் உடன்று எழா,
சுற்றும் முற்றும் வளைந்தன, தூவின—
ஒற்றை மால் வரைமேல் உயர் தாரைகள்
பற்றி மேகம் பொழிந்தென, பல் படை. 131

குறித்து எறிந்தன, எய்தன, கூறுறத்
தறித்த தேரும் களிறும் தரைப் பட,
மறித்த வாசி துணித்து, அவர் மாப் படை
தெறித்துச் சிந்த, சர மழை சிந்தினன். 132

வாய் விளித்து எழு பல் தலை வாளியில்
போய் விளித்த குருதிகள் பொங்கு உடல்,
பேய் விளிப்ப நடிப்பன, பெட்புறும்
தீ விளிப்புறு தீபம் நிகர்த்தவால்.* 133

நெய் கொள் சோரி நிறைந்த நெடுங் கடல்
செய்ய ஆடையள், அன்ன செஞ் சாந்தினள்,
வைய மங்கை பொலிந்தனள், மங்கலச்
செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள். 134

உப்பு, தேன், மது, ஒண் தயிர், பால், கரும்பு,
அப்புத்தான் என்று உரைத்தன ஆழிகள்
துப்புப்போல் குருதிப் புனல் சுற்றலால்,
தப்பிற்று அவ் உரை, இன்று ஓர் தனுவினல். 135

ஒன்றுமே தொடை; கோல் ஒரு கோடிகள்
சென்று பாய்வன; திங்கள் இளம் பிறை
அன்றுபோல் எனல் ஆகியது அச் சிலை;
என்று மாள்வர் எதிர்த்த இராக்கதர்? 136

130. உற்று உடனே பாயும் என இயையும்; 133. வாளியில் - அம்பினல்; விளிப்புறு தீபம் - கலங்கரை விளக்கம்; 135. அப்பு - நீர், சண்டுத் தூய நீர்க்கடல்; 136. தொடை - தொடுத்து விடுவது.

எடுத்தவர், இரைத்தவர், எறிந்தவர்,
　　செறிந்தவர், மறங்கொடு எதிரே
தடுத்தவர், சலித்தவர், சரிந்தவர்,
　　பிரிந்தவர், தனிக் களிறுபோல்
கடுத்தவர், கலித்தவர், கறுத்தவர்,
　　செறுத்தவர், கலந்து, சரம் மேல்
தொடுத்தவர், துணிந்தவர், தொடர்ந்தனர்,
　　கிடந்தனர்—துரந்த கணையால். 137

தொடுப்பது சுடர்ப் பகழி ஆயிரம்
　　நிரைத்தவை துரந்த துறை போய்ப்
படுப்பது, வயப் பகைஞர் ஆயிரரை
　　அன்று, பதினாயிரவரை;
கடுப்பு அது; கருத்தும் அது; கட்புலன்
　　மனம் கருதல் கல்வி இல; வேல்
எடுப்பது படப் பொருவது அன்றி, இவர்
　　செய்வது ஒரு நன்றி உளதோ? 138

தூசியொடு நெற்றி இரு கையினொடு
　　பேர் அணி கடைக் குழை தொகுத்து,
ஊசி நுழையா வகை சரத்து அணி
　　வகுக்கும்; அவை உண்ணும் உயிரை;
ஆசைகளை உற்று உருவும்; அப் புறமும்
　　ஓடும்; அதன் இப் புறம் உளார்,
ஈசன் எதிர் உற்று, உகுவது அல்லது, இகல்
　　முற்றுவது ஓர் கொற்றம் எவனோ? 139

ஊன் நகு வடிக் கணைகள் ஊழி அனல்
　　ஒத்தன; உலர்ந்த உலவைக்
கானகம் நிகர்த்தனர் அரக்கர்; மலை
　　ஒத்தன, களித்த மத மா;
மானவன் வயப் பகழி வீசு வலை
　　ஒத்தன; வளைப்புனலுள் வாழ்
மீன குலம் ஒத்தன, கடற் படை,
　　இனத்தொடும் விளிந்துறுதலால். 140

138. நன்றி - நற்செயல்; 139. தூசி, நெற்றி, கை (கைகோட் படை), பேரணி, கடைக் குழை (கூழை) என்பன படை வகைகள்; 140. நகுதல் - விளங்குதல்; மானவன் - மனுகுலத்தில் தோன்றியவன், இராமன்.

ஊழி இறுதிக் கடுகு மாருதமும்
ஒத்தனன், இராமன்; உடனே
பூழி என உக்கு உதிரும் மால் வரைகள்
ஒத்தனர், அரக்கர், பொருவார்;
ஏழ் உலகும் உற்று உயிர்கள் யாவையும்
முருக்கி, இறுதிக்கணின் எழும்
ஆழியையும் ஒத்தனன்; அம் மன்னுயிரும்
ஒத்தனர், அலைக்கும் நிருதர். 141

மூல முதல்ஆய், இடையும் ஆய், இறுதி
ஆய், எவையும் முற்றும் முயலும்
காலம் எனல் ஆயினன் இராமன்; அவ்
அரக்கர், கடைநாளில் விளியும்
கூலம் இல் சராசரம் அனைத்தினையும்
ஒத்தனர்; குரை கடல் எழும்
ஆலம் எனலாயினன் இராமன்; அவர்
மீனம் எனல் ஆயினர்களால். 142

வஞ்ச வினை செய்து, நெடு மன்றில் வளம்
உண்டு, கரி பொய்க்கும் மறம் ஆர்
நெஞ்சம் உடையோர்கள் குலம் ஒத்தனர்,
அரக்கர்; அறம் ஒக்கும் நெடியோன்;
நஞ்ச நெடு நீரினையும் ஒத்தனன்;
அடுத்து அதனை நக்குநரையும்,
பஞ்சம் உறு நாளில் வறியோர்களையும்,
ஒத்தனர், அரக்கர், படுவார். 143

வெள்ளம் ஒரு நூறு படும் வேலையின், அவ்
வேலையும் இலங்கை நகரும்,
பள்ளமொடு மேடு தெரியாதவகை
சோர் குருதி பம்பி எழலும்,
உள்ளும் மதிலும் புறமும் ஒன்றும் அறியாது
அலறி ஓடினர்களால்,
கள்ள நெடு மான் விழி அரக்கியர்
கலக்கமொடு கால்கள் குலைவார். 144

141. பூழி - புழுதி; 142. கூலம் - அளவு, எல்லை; சர அசரம் - இயங்குவன நிற்பனவாகிய உயிர்த்தொகுதிகள்; ஆலம் - ஆலகால நஞ்சு; 143. நெடு மன்று - பெருமை வாய்ந்த நீதிமன்றம்; வளம் உண்ணுதல் - கைக்கூலியாகிய பொருளைப் பெற்று உயிரோம்புதல்; கரி பொய்த்தல் - பொய்ச் சான்று பகர்தல்; 144. வேலை - முன்னது பொழுது, பின்னது கடல்.

நீங்கினர், நெருங்கினர் முருங்கினர்;
உலைந்து உலகில் நீளும் மலைபோல்
வீங்கின, பெரும் பிணம் விசும்பு உற;
அசும்பு படு சோரி விரியுற்று,
ஓங்கின, நெடும் பரவை, ஒத்து உயர
எத் திசையும் உற்று, எதிர் உற;
தாங்கினர், படைத் தலைவர், நூறு சத
கோடியர், தடுத்தல் அரியார். 145

தேரும், மதமாவும், வரை ஆளியொடு
வாசி, மிகு சீயம், முதலா
ஊரும் அவை யாவையும் நடாயினர்,
கடாயினர்கள், உந்தினர்களால்;
காரும் உரும்ஏறும் எரிஏறும் நிகர்
வெம் படையொடு அம்பு கடிதின்
தூரும்வகை தூவினர்; துரந்தனர்கள்,
எய்தனர், தொடர்ந்தனர்களால். 146

'வம்மின், அட, வம்மின்! எதிர் வந்து, நுமது
ஆர் உயிர் வரங்கள் பிறவும்
தம்மின்!' என இன்னன மொழிந்து, எதிர்
பொழிந்தன, தடுப்ப அரியவாம்,
வெம் மின் என, வெம் பகழி, வேலை என
ஏயினன்; அவ் வெய்ய வினையோர்
தம் இனம் அனைத்தையும் முனைந்து எதிர்
தடுத்தனன், தனித் தனிஅரோ. 147

அக் கணையை அக் கணம் அறுத்தனர்
செறுத்து, இகல் அரக்கர் அடைய,
புக்கு அணையலுற்றனர், மறைத்தனர்
புயற்கு அதிகம் வாளி பொழிவார்.
திக்கு அணை வகுத்தனர் எனச் செல
நெருக்கினர், செருக்கின் மிகையால்;
முக்கணனை உற்று அடி வணங்கி
இமையோர் இவை மொழிந்தனர்களால்: 148

145. தடுத்தல் அரியார் - தடுத்து நிறுத்த ஒண்ணாதவர்; 146. எரி ஏறு - பெருந் தீ.

'படைத் தலைவர் உற்று ஒருவர் மும் மடி
இராவணன் எனும் படிமையோர்;
கிடைத்தனர் அவர்க்கு ஒரு கணக்கு இலை;
வளைத்தனர் கிளைத்து, உலகு எலாம்
அடைத்தனர், தெழித்தனர், அழித்தனர்;
தனித்து உளன் இராமன்; அவரோ,
''துடைத்தனர் எம் வெற்றி'' என உற்றனர்;
இனிச் செயல் பணித்தி—சுடரோய்! 149

'எய்த கணை எய்துவதன் முன்பு, இடை
அறுந்து, இவர்கள் ஏழ் உலகமும்
பெய்த கணை மா முகில் எனப் புடை
வளைத்தனர், பிடித்தனர்கள் போய்;
வைது அகலின் அல்லது மறப் படை,
கொடிப் படை, கடக்கும் வலிதான்
செய்ய திருமாலொடும் உனக்கும் அரிது'
என்றனர், திகைத்து விழுவார்.* 150

'அஞ்சி, அயரன்மின்! அவர் எத்தனையர்
ஆயிடினும், அத்தனைவரும்,
பஞ்சி எரி உற்றதென, வெந்து அழிவர்;
இந்த உரை பண்டும் உளதால்;
நஞ்சம் அமுதத்தை நனி வென்றிடினும்,
நல் அறம் நடக்கும்அதனை
வஞ்ச வினை பொய்க் கருமம் வெல்லினும்,
இராமனை இவ் வஞ்சர் கடவார். 151

'அரக்கர் உளர் ஆர் சிலர், அவ் வீடணன்
அலாது, உலகின் ஆவி உடையார்?
இரக்கம் உளதுஆகின், அது நல் அறம்
எழுந்து வளர்கின்றது; இனி நீர்
கரக்க, முழை தேடி உழல்கின்றிலிர்கள்;
இன்று ஒரு கடும் பகலிலே
குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய
கோள் உழுவை கொல்லும், இவரை.' 152

*149. மும் மடி - மூன்று மடங்கு; 152. கோள் உழுவை - வலியுடைய புலி.*

என்று பரமன் பகர, நான்முகனும்
அன்ன பொருளே இசைதலும்,
நின்று நிலை ஆறினர்கள், வானவரும்;
மானவனும் நேமி எனல் ஆம்
வென்றி நெடு வாளி மழை, மாரியினும்
மேலன துரந்து, விரைவின்
கொன்று, குல மால் வரைகள் மானு தலை
மா மலை குவித்தனன்அரோ. 153

மகர மறி கடலின் வளையும் வய நிருதர்
சிகரம் அனைய உடல் சிதறி, இருவர் உயிர்—
பகர அரிய பதம் விரவ, அமரர் பழ
நகரம் இடம் அருக, நவையர் நலிவு பட. 154

உகளும், இவுளி தலை துமிய—உறு கழல்கள்
தகளி அற, வலிய தலைகள் அறு தலைவர்
துகளின் உடல்கள் விழ, உயிர்கள் சுரர் உலகின்
மகளிர் வன முலைகள் தழுவி அகம் மகிழ. 155

மலையும், மறி கடலும், வனமும், வறு நிலனும்,
உலைவு இல் அமரர் உறை உலகும், உயிர்களொடு
தலையும் உடலும் இடை தழுவு தவழ் குருதி
அலையும் அரியது ஒரு திசையும் இலது, அணுக. 156

இனைய செரு நிகழும் அளவின், எதிர் பொருத
வினையமுடை முதல்வர், எவரும் உடன் விளிய,
அனைய படை நெளிய, அமரர் சொரி மலர்கள்
நனைய விசையின் எழு துவலை மழை நலிய. 157

இரியல் உறு படையை, நிருதர், இடை விலகி,
எரிகள் சொரியும் நெடு விழியர், 'இழுதையர்கள்!
திரிக, திரிக!' என உரறு மதழி குரலர்,
கரிகள், அரிகள், பரி, கடிதின் எதிர் கடவ. 158

உலகு செவிடு பட, மழைகள் உதிர, உயர்
அலகு இல் மலை குலைய, அமரர் தலை அதிர,
இலகு தொடு படைகள் இடியொடு உரும் அனைய,
விலகியது, திமிலம் வளையும்வகை விளைய. 159

154. மகர மறி கடல் - மகர மீன்கள் உலாவும் கடல்; பதம் - துறக்கப் பதவி; நவையர் - தீவினையாளர்; 155. இவுளி - குதிரை; தகளி - அகல் விளக்கு; 158. இழுதையர் - அறிவில்லாதவர்; 159. திமிலம் - பேரொலி.

'அழகிது, அழகிது!' என அழகன் உவகையொடு
பழகும் அதிதியரை எதிர்கொள் பரிசு பட,
விழைவின் எதிர அதிர் எரிகொள் விரி பகழி
மழைகள் முறை சொரிய, அமரர் மலர் சொரிய, 160

தினகரனை அணவு கொடிகள் திசை அடைவ,
சினவு பொரு பரிகள் செறிவ அணுக, உயர்
அனகனெடும் அமரின் முடுகி எதிர, எழு
கனக வரை பொருவ, கதிர் கொள் மணி இரதம்.* 161

பாறு, படு சிறகு கழுகு, பகழி பட,
நீறு படும் இரத நிரையின் உடல் தழுவி,
வேறு படர் படர, இரவி சுடர் வலையம்
மாறு பட, உலகின் மலைகள் அளறு பட.* 162

அருகு கடல் திரிய, அலகு இல் மலை குலைய,
உருகு சுடர்கள் இடை திரிய,—உரனுடைய
இரு கை ஒரு களிறு திரிய, விடு குயவர்
திரிகை என உலகு முழுதும் முறை திரிய.* 163

சிவனும், அயனும், எழு திகிரி அமரர் பதி
அவனும், அமரர் குலம் எவரும், முனிவரொடு
கவனம் உறு கரணம் இடுவர்—கழுதுஇனமும்,
நமனும், வரி சிலையும், அறனும், நடன் நவில. 164

தேவர் திரிபுவன நிலையர் செரு இதனை
ஏவர் அறிவுறுவர் இறுதி? முதல் அறிவின்
மூவர் தலைகள் பொதிர் எறிவர், 'அற முதல்வ!
பூவை நிறவ!' என வேதம் முறை புகழ. 165

எய்யும் ஒரு பகழி, ஏழு கடலும், இடு
வெய்ய களிறு பரியாளொடு இரதம் விழ,
ஒய்ய ஒரு கதியின் ஓட உணர் அமரர்
கைகள் என, அவுணர் கால்கள் கதி குலைவ. 166

160. அதிதியர் - விருந்தினர்கள்; 161. தினகரன் - சூரியன்; அணவுதல்- தீண்டுதல்; 162. பாறு - பருந்து; படர் - வழி; சுடர் வலையம் - ஒளி வட்டம்; 163. களிறு - களிறு போன்ற இராமன்; 164. கவனம் உறு கரணம் - விரைவு பொருந்திய குட்டிக் கரணம்.

அண்ணல் விடு பகழி, யானை, இரதம், அயல்
பண்ணு புரவி, படை வீரர், தொகு பகுதி
புண்ணின் இடு குறிகள் புள்ளி என, விரைவின்
எண்ணுவன அனைய எல்லை இல நுழைவ. 167

**இராமன் சர மதில் அமைத்தல்**

'சுருக்கம் உற்றது படை; சுருக்கத்தால் இனிக்
கரக்கம், உற்று ஒரு புறத்து' என்னும் கண்ணினால்,
அரக்கருக்கு அன்று செல்வு அரியதாம்வகை
சரக் கொடு நெடு மதில் சமைத்திட்டான்அரோ. 168

மாலியை, மாலியவானை, மால் வரை
போல் உயர் கயிடனை, மதுவை, போன்று உளார்,
சாலிகை யாக்கையர், தணப்பு இல் வெஞ் சர
வேலியைக் கடந்திலர், உலகை வென்றுளார். 169

மாண்டவர் மாண்டு அற, மற்றுளோர் எலாம்
மீண்டனர், ஒரு திசை—ஏழு வேலையும்
மூண்டு அற முருக்கிய ஊழிக் காலத்தில்
தூண்டுறு சுடர் சுட, சுருங்கித் தொக்கபோல். 170

'புரம் சுடு கடவுளும், புள்ளின் பாகனும்,
அரம் சுடு குலிச வேல் அமரர் வேந்தனும்,
உரம் சுடுகிற்கிலர்; ஒருவன் நாமுடை
வரம் சுடும்; வலி சுடும்; வாழும் நாள் சுடும். 171

'ஆயிர வெள்ளம் உண்டு; ஒருவர், ஆழி சூழ்
மா இரு ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்;
மேயின பெரும் படை இதனை, ஓர் விலால்
''ஏ'' எனும் மாத்திரத்து எய்து கொன்றனன். 172

'இடை, படும், படாதன இமைப்பிலோர் படை;
புடைபட, வலம்கொடு விலங்கிப் போகுமால்;
படை படும் கோடி ஓர் பகழியால் பழிக்
கடைபடும் அரக்கர்தம் பிறவி கட்டமால். 173

167. புள்ளி - எண்ணி அளவிடுங்கால் நூறு அல்லது ஆயிரம் ஆகிவிட்டமைக்கு அடையாளமாக இடும் குறி; 168. கண் - கருத்து; 169. சாலிகை - கவசம்; 173. இடை - போர்க்களமாகிய இடம்; பழிக் கடைபடுதல் - பழியின்கண்ணே பொருந்துதல்; கட்டம் - துன்பம்.

'பண்டு உலகு அளித்தவனோடும், பண் அமை
குண்டையின் பாகனும், பிறரும் கூடினர்;
அண்டர்கள் விசும்பினின்று ஆர்க்கின்றாருழைக்
கண்டிலம்; இவன் நெடு மாயக் கள்வனால். 174

'கொன்றனன், இனி ஒரு கோடி கோடி மேற்று;
அன்று எனின், பதுமம் அன்று; ஆயின் வெள்ளமா
நின்றது; நின்று இனி நினைவது என் பிற?
ஒன்று என நினைக' என, வன்னி ஓதினான்: 175

**ஒருமுகமாக இராமனை எதிர்க்குமாறு வன்னி அரக்கர்க்குக் கூறுதல்**

'விழித்துமோ, இராவணன் முகத்து மீண்டு, யாம்—
பழித்துமோ, நம்மை,—நாம் படுவது அஞ்சினால்?
அழித்தும் ஓர் பிறப்பு உறு நெறி சென்று அண்ம, யாம்
கழித்தும் இவ் ஆக்கையை, புகழைக் கண்ணுற. 176

'இடுக்கு, இனிப் பெயர்ந்து உறை எண்ணுவேம்எனின்,
அடுத்த கூர் வாளியின் அரணம் நீங்கலோம்;
எடுத்து ஒரு முகத்தினால் எய்தி, யாம் இனிக்
கொடுத்தும் நம் உயிர்' என, ஒருமை கூறினான். 177

இளக்க அரு நெடு வரை ஈர்க்கும் ஆறு எலாம்
அளக்கரின் பாய்ந்தென, பதங்கம் ஆர் அழல்
விளக்கினில் வீழ்ந்தென, விதிகொடு உந்தலால்,
வளைத்து இரைத்து அடர்த்தனர், மலையின் மேனியார். 178

மழு, எழுத் தண்டு, கோல், வலயம், நாஞ்சில், வாள்,
எழு, அயில், குந்தம், வேல், ஈட்டி, தோமரம்,
கழு, இகல் கப்பணம் முதல கைப் படை,
தொழுவினில் புலி அனான் உடலில் தூவினார். 179

காந்தருப்பம் எனும் கடவுள் மாப் படை,
வேந்தருக்கு அரசனும், வில்லின் ஊக்கினான்;
பாந்தளுக்கு அரசு என, பறவைக்கு ஏறு என,
போந்து உருத்தது, நெருப்பு அனைய போர்க் கணை. 180

174. பண் அமை குண்டை - தவிசு அமைந்த எருது; 177. இடுக்கு - சங்கடமான துயர் நிலை; உறை - உறைதல்: ஒருமை - ஒருதலையான முடிவு; 178. இளக்குதல் - அசைத்தல்; பதங்கம் - விட்டில்; 179. தொழுவினில் புலி - தொழுவத்திலே புக்க புலி. 180. பாந்தளுக்கு அரசு - ஆதிசேடன்; பறவைக்கு ஏறு - கருடன்,

மூன்று கண் அமைந்தன, ஐம் முகத்தன,
ஆன்ற மெய் தழலன, புனலும் ஆடின,
வான் தொட நிமிர்வன வாளி மா மழை
தோன்றின, புரம் சுடும் ஒருவன் தோற்றத்த. 181

அய்-இரு கோடியர் அரக்கர் வேந்தர்கள்
மொய் வலி வீரர்கள் ஒழிய முற்றுற,
'எய்' எனும் மாத்திரத்து, அவிந்தது என்பரால்—
செய் தவத்து இராவணன் மூலச் சேனையே. 182

மாப் பெருந் தீவுகள் ஏழும், மாதிரம்,
பாப்பு அரும் பாதலத்துள்ளும், பல் வகைக்
காப்பு அரு மலைகளும் பிறவும் காப்பவர்,
யாப்புறு காதலர் இராவணற்கு அவர். 183

மாத் தட மேருவை வளைந்த வான் சுடர்
கோத்து அகல் மார்பிடை அணியும் கொள்கையார்,
பூத் தவிசு உகந்தவன் புகன்ற பொய் அறு
நாத் தழும்பு ஏறிய வரத்தர், நண்ணினர். 184

'நம்முள் ஈண்டு ஒருவனை வெல்லும் நன்கு எனின்,
வெம் முனை, இராவணன்தனையும் வெல்லுமால்;
இம்மென உடன் எடுத்து எழுந்து சேறுமோ?
செம்மையில் தனித் தனி செய்துமோ செரு? 185

'எல்லோம் எல்லோம் ஒன்றி வளைந்து, இந் நெடியோனை
வல்லே வல்ல போர் வலி முற்றி மலையோமேல்,
வெல்லோம் வெல்லோம்!' என்றனன், வன்னி; மிடலோரும்,
'தொல்லோன் சொல்லே நன்று' என, அஃதே துணிவுற்றார்.

அன்னார்தாமும், ஆர்கலி ஏழும் என, ஆர்த்தார்;
'மின் ஆர் வானம் இற்று உறும்' என்றே, விளி சங்கம்
கொன்னே ஊதி, தோள் புடை கொட்டிக்கொடு சார்ந்தார்;
என் ஆம், வையம்? என்படும் வானம்? திசை ஏதாம்? 187

ஆர்த்தார் அன்னார்; அன்ன கணத்தே, அவர் ஆற்றல்
தீர்த்தானும் தன் வெஞ் சிலை நாணைத் தெறிப்புற்றான்;
பேர்த்தான் பொன்-தோள்; முற்றும் அளந்தான் பிறழ் சங்கம்
ஆர்த்தால் ஒத்தது, அவ் ஒலி, எல்லா உலகுக்கும். 188

183. பாப்பு - பாம்பு.

பல் ஆயிர கோடியர்; பல் படை நூல்
வல்லார்; அவர் மெய்ம்மை வழங்க வலார்;
எல்லா உலகங்களும் ஏறிய போர்
வில்லாளர்; அரக்கரின் மேதகையார். 189

வென்றார், உலகங்களை, விண்ணவரோடு
ஒன்று உயர் தானவர் யூகம் எலாம்;
கொன்றார் நிமிர் கூற்று என, எவ் உயிரும்
தின்றார்;—எதிர் சென்று, செறிந்தனரால். 190

வளைத்தார் மத யானையை, வன் தொழுவில்
தளைத்தார் என, வந்து, தனித் தனியே
உளைத்தார் உரும்ஏறு என; ஒன்று அல போர்
விளைத்தார், இமையோர்கள் வெதும்பினரால். 191

விட்டிய வழங்கிய வெம் படையின்
சுட்டிய நிமிர்ந்த சுடர்ச் சுடரும்,
கண் தீயும், ஒருங்கு கலந்து எழலால்,
உள் தீ உற வெந்தன, ஏழ் உலகும். 192

தேர் ஆர்ப்பு ஒலி, வீரர் தெழிப்பு ஒலியும்,
தார் ஆர்ப்பு ஒலியும், கழல் தாக்கு ஒலியும்,
போர் ஆர் சிலை நாணி புடைப்பு ஒலியும்,
காரால் பொலியும் களிறு ஆர்ப்பு ஒலியும். 193

**இராமன் அம்பு மழை பொழிய, அரக்கர் சேனை அழிந்துபடுதல்**

'எல்லாரும் இராவணனே அனையார்;
வெல்லா உலகு இல்லவர்; மெய் வலியார்;
தொல்லார் படை வந்து தொடர்ந்தது' என,
நல்லானும் உருத்து, எதிர் நண்ணினனால். 194

ஊழிக் கனல் போல்பவர் உந்தின போர்
ஆழிப் படை அம்பொடும் அற்று அகல,
பாழிக் கடை நாள் விடு பல் மழைபோல்,
வாழிச் சுடர் வாளி வழங்கினனால். 195

190. யூகம் - சேனைகளின் அணி; 192. விட்டிய - (பகைவன் போர்க் களத்தை) விட்டொழியுமாறு; சுட்டிய - சுடும்படி; 193. காரால் - கரு நிறத்தோடு; 195. பாழி - வலிமை.

சூரோடு தொடர்ந்த சுடர்க் கணைதான்
தாரோடு அகலங்கள் தடிந்திடலும்,
தேரோடு மடிந்தனர், செங் கதிரோன்
ஊரோடு மறிந்தனன் ஒத்து, உரவோர். 196

கொல்லோடு சுடர்க் கணை கூற்றின் நிணப்
பல்லோடு தொடர்ந்தன பாய்தலினால்,
செல்லோடு எழு மா முகில் சிந்தினபோல்,
வில்லோடும் விழுந்த, மிடல் கரமே. 197

செம்போடு உதிரத் திரை ஆழியின்வாய்—
வெம்பு ஓடு அரவக் குலம் மேல் நிமிரும்
கொம்போடும் விழுந்தன ஒத்த—குறைந்து,
அம்போடும் விழுந்த அடல் கரமே. 198

முன் ஓடு உதிரப் புனல், மூதுலகைப்
பின் ஓடி வளைந்த பெருங் கடல்வாய்,
மின்னோடும் விழுந்தன மேகம் என,
பொன் ஓடை நெடுங் கரி புக்கனவால். 199

மற வெற்றி அரக்கர் வலக் கையொடும்,
நறவக் குருதிக் கடல் வீழ் நகை வாள்
சுறவு ஒத்தன; மீது துடித்து எழலால்,
இறவு ஒத்தன, வாவும் இனப் பரியே. 200

தாமச் சுடர் வாளி தடிந்து அகல,
பாமக் குருதிப் படிகின்ற படைச்
சேமப் படு கேடகம், மால் கடல் சேர்
ஆமைக் குலம் ஒத்தன அத்தனையால்! 201

காம்போடு பதாகைகள் கார், உதிரப்
பாம்போடு கடல் படிவுற்றனவால்—
வாம் போர் நெடு வாடை மலைந்து அகல,
கூம்போடு உயர் பாய்கள் குறைந்தனபோல். 202

196. சூர் - கொடுமை; ஊர் - ஊர்கோள்; 197. கொல்லோடு - கொல்லுதல் தொழிலில்; 198. செம்போடு - செந்நிறத்தோடு; கொம்பு - மரக்கிளை; 199. ஓடை - நெற்றிப்பட்டம்; 200. நறவக் குருதிக் கடல் - மணமுள்ள இரத்தக் கடல்; இறவு - இறு என்னும் ஒருவகை மீன்; 201. தாமச் சுடர் - பேரொளி, ஒரு பொருட் பன்மொழி; பாமக் குருதி - பரவிய குருதி; 202. கார் - கருமுகில் போலும் யானைகள்; பாம்போடு உதிரக் கடல்- பரவியோடுதலையுடைய குருதிக் கடல்.

மண்டப் படு சோரியின் வாரியின் வீழ்
கண்டத் தொகை கவ்விய காலொடு தோள்
முண்டத் திரி தண்டின் முரட்டு ஒருவன்
துண்டச் சுறவு ஒத்த, துடித்தனவால். 203

தெளிவுற்ற பளிங்கு உறு சில்லிகொள் தேர்
விளிவுற்றுக, வேறுற வீழ்வனதாம்,
அளி முற்றிய சோரியின் வாரியின் ஆழ்
ஒளி முற்றிய திங்களை ஒத்துளவால். 204

நிலை கோடல் இல் வென்றி அரக்கரை நேர்
கொலை கோடலின், மன் குறி கோளுறுமேல்,
சிலை கோடியதோறும் சிரத் திரள் வன்
மலை கோடியின் மேலும் மறிந்திடுமால்.* 205

திண் மார்பின்மிசைச் செறி சாலிகையின்-
கண், வாளி கடைச் சிறை காண நுழைந்து,
எண் வாய் உற மொய்த்தன, இன் நறை உற்று
உண் வாய் வரி வண்டுஇனம் ஒத்தனவால். 206

பாறு ஆடு களத்து, ஒருவன், பகலின்
கூறு ஆகிய நாலில் ஓர் கூறிடையே,
நூறு ஆயின யோசனை, நூழில்கள் அம்
மாறுது உழல் சாரிகை வந்தனனால். 207

நின்றுருடன் நின்று, நிமிர்ந்து அயலே
சென்றார் எதிர் சென்று, சிதைத்திடலால்,
'தன் தாதையை ஓர்வு உறு தன் மகன் நேர்
கொன்றான் அவனே இவன்' என்று கொள்வார். 208

'இங்கே உளன்; இங்கு உளன்; இங்கு உளன்' என்று,
அங்கே உணர்கின்ற அலந்தலைவாய்,
வெங் கோப நெடும் படை வெஞ் சரம் விட்டு
எங்கேனும் வழங்குவர், ஏகுவரால். 209

203. முரட்டு - முரடான, பருமனான; 204. அளி முற்றிய சோரி - மதுவினைப் போலும் குருதி; பாணங்களினால் நிரம்பித் தோன்றிய குருதி என்பாரும் உளர்; 206. வாளி கடைச் சிறை - அம்புகளின் கடைப் பகுதியாகிய சிறகுகள்; 208. தாதை - தந்தையாகிய இரணியன்; மகன் - பிரகலாதன்; அவன் - நரசிங்கமூர்த்தி; 209. அலந்தலை - கலக்க நிலை.

ஒருவன் என உன்னும் உணர்ச்சி இலார்,
'இரவு அன்று இது; ஓர் பகல்' என்பர்களால்;
'கரவு அன்று இது; இராமர் கணக்கு இலரால்;
பரவை மணலின் பலர்' என்பர்களால். 210

ஒருவன் ஒருவன் மலைபோல் உயர்வோன்;
ஒருவன் படை வெள்ளம் ஓர் ஆயிரமே;
ஒருவன் ஒருவன் உயிர் உண்டது அலால்,
ஒருவன் உயிர் உண்டதும் உள்ளதுவோ?* 211

தேர்மேல் உளர்; மாவொடு செந் தறுகண்
கார்மேல் உளர்; மா கடல்மேல் உளர், இப்
பார்மேல் உளர்; உம்பர் பரந்து உளரால்—
போர்மேலும் இராமர் புகுந்து அடர்வார். 212

என்னும்படி, எங்கணும் எங்கணுமாய்த்
துன்னும்; சுழலும்; திரியும்; சுடரும்;
பின்னும், அருகும், உடலும், பிரியான்—
மன்னன் மகன்! வீரர் மயங்கினரால். 213

**இராமனது வில் திறம்**

படு மத கரி, பரி, சிந்தின; பனி வரை இரதம் அவிந்தன;
விடு படை திசைகள் பிளந்தன; விரி கடல் அளறது எழுந்தன;
அடு புலி அவுணர்தம் மங்கையர் அலர் விழி அருவிகள் சிந்தின;—
கடுமணி நெடியவன் வெஞ்சிலை, 'கணகண, கணகண' எனுந்தொறும்.

ஆனை ஆயிரம், தேர் பதினாயிரம், அடல் பரி ஒரு கோடி;
சேனை காவலர் ஆயிரம் பேர் படின், கவந்தம் ஒன்று எழுந்தாடும்;
கானம் ஆயிரம் கவந்தம் நின்று ஆடிடின், கவின் மணி கணில்என்
ஏனை அம் மணி எழரை நாழிகை ஆடியது இனிது அன்றே.* [னும்;

ஊன் ஏறு படைக் கை வீரர் எதிர் எதிர் ஊரும்தோறும்,
கூன் ஏறு சிலையும் தானும் குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்,
வான் ஏறினார்கள் தேரும், மலைகின்ற வயவர் தேரும்,
தான் ஏறி வந்த தேரே ஆக்கினான்—தனி ஏறு அன்னான். 216

211. ஒருவன் ஒருவன் - ஒவ்வொருவன்; 214. பனி வரை - இமயமலை; அவுணர் - அரக்கர்; நெடியவன் வெஞ்சிலை கடுமணி என மாற்றிக் கூட்டுக; 216. கொட்பு - சுழற்சி; வான் ஏறினார் - (போரில் மடிந்து) விண்ணுலகு அடைந்த அரக்கர்.

காய் இருஞ் சிலை ஒன்றேனும், கணைப் புட்டில் ஒன்றதேனும்,
தூய் எழு பகழி மாரி மழைத் துளித் தொகையின் மேல;
ஆயிரம் கைகள் செய்த செய்தன, அமலன் செங் கை;
ஆயிரம் கையும் கூடி, இரண்டு கை ஆனது அன்றே? 217

பொய்; ஒரு முகத்தன் ஆகி மனிதன் ஆம் புணர்ப்பு இது அன்றால்;
மெய்யுற உணர்ந்தோம்; வெள்ளம் ஆயிரம் மிடைந்த சேனை
செய்யுறு வினையம் எல்லாம் ஒரு முகம் தெரிவது உண்டே?
அய்-இருநூறும் அல்ல; அனந்தம் ஆம் முகங்கள் அம்மா! 218

கண்ணுதல்-பரமன்தானும், நான்முகக் கடவுள்தானும்,
'எண்ணுதும், தொடர எய்த கோல்' என, எண்ணலுற்றார்,
பண்ணையால் பகுக்க மாட்டார், தனித் தனி பார்க்கலுற்றார்,
'ஒண்ணுமோ, கணிக்க?' என்பார், உவகையின் உயர்ந்த தோளார்.*

'வெள்ளம் ஈர்-ஐந்து நூறே; விடு கணை அவற்றின் மெய்யே
உள்ளவாறு உளவாம்' என்று, ஓர் உரை கணக்கு உரைத்துமேனும்,
'கொள்ளை ஓர் உருவை நூறு கொண்டன பலவால்; கொற்ற
வள்ளலே வழங்கினானோ?' என்றனர், மற்றை வானோர். 220

'குடைக்கு எலாம், கொடிகட்கு எல்லாம், கொண்டன குவிந்த கொற்றப்
படைக்கு எலாம், பகழிக்கு எல்லாம், யானை தேர் பரிமா ஆதி
கடைக்கு எலாம், துரந்த வாளி கணித்ததற்கு அளவை காட்டி
அடைக்கலாம் அறிஞர் யாரே?' என்றனர் முனிவர், அப்பால்.

கண்டத்தும் கீழும் மேலும், கபாலத்தும், கடக்கல் உற்ற,
சண்டப்போர் அரக்கர்தம்மைத் தொடர்ந்து, கோல் புணரும் தன்மை—
பிண்டத்தில் கரு ஆம் தன் பேர் உருக்களைப் பிரமன் தந்த
அண்டத்தை நிறையப் பெய்து குலுக்கியது அனைய ஆன. 222

கோடி ஐ-இரண்டு தொக்க படைக்கல மள்ளர் கூவி,
ஓடி ஓர் பக்கம் ஆக, உயிர் இழந்து, உலத்தலோடும்,
'வீடி நின்று அழிவது என்னே! விண்ணவர் படைகள் வீசி,
மூடுவது இவனை' என்று, யாவரும் மூண்டு மொய்த்தார். 223

விண்டுவின் படையே ஆதி வெய்யவன் படை ஈறாக,
கொண்டு ஒருங்கு உடனே விட்டார்; குலுங்கியது அமரர் கூட்டம்;
அண்டமும் கீழ் மேலாக ஆகியது; அதனை அண்ணல்
கண்டு, ஒரு முறுவல் காட்டி, அவற்றினை அவற்றால் காத்தான்.

218. புணர்ப்பு - தோற்றம்; 220. ஓர் உரு - ஓர் உடம்பு? 221. கடைக்கு எலாம் - சேனைகளின் எல்லை எல்லாவற்றிற்கும்.

'தான் அவை தொடுத்த போது, தடுப்ப அரிது; உலகம்தானே
பூ நனி வடவைத் தீயின் புக்கெனப் பொரிந்து போம்' என்று,
ஆனது தெரிந்த வள்ளல் அளப்ப அருங் கோடி அம்பால்
ஏனையர் தலைகள் எல்லாம் இடியுண்ட மலையின் இட்டான். 225

ஆயிர வெள்ளத்தோரும் அடு களத்து அவிந்து வீழ்ந்தார்;
மா இரு ஞாலத்தாள் தன் வன் பொறைப் பாரம் நீங்கி,
மீ உயர்ந்து எழுந்தாள் அன்றே, வீங்கு ஒலி வேலைநின்றும்
போய் ஒருங்கு அண்டத்தோடும் கோடி யோசனைகள் பொங்கி!

**தேவர்கள் முதலியோர் துயர் தீர்ந்து, இராமனை வாழ்த்துதல்**

'நினைந்தன முடித்தேம்' என்னா, வானவர் துயரம் நீத்தார்;
'புனைந்தனென் வாகை' என்னா, இந்திரன் உவகை பூத்தான்;
வனைந்தன அல்லா வேதம் வாழ்வு பெற்று உயர்ந்தமாதோ;
அனந்தனும் தலைகள் ஏந்தி, அயாவுயிர்த்து, அவலம் தீர்ந்தான்.

தாய், 'படைத்துடைய செல்வம் ஈக!' என, தம்பிக்கு ஈந்து,
வேய் படைத்துடைய கானம் விண்ணவர் தவத்தின் மேவி,
தோய் படைத் தொழிலால் யார்க்கும் துயர் துடைத்தானை நோக்கி,
வாய் படைத்துடையார் எல்லாம் வாழ்த்தினர், வணக்கம் செய்தார்.

தீ மொய்த்த அனைய செங் கண் அரக்கரை முழுதும் சிந்தி,
பூ மொய்த்த கரத்தர் ஆகி விண்ணவர் போற்ற, நின்றான்—
பேய் மொய்த்து, நரிகள் ஈண்டி, பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்
ஈமத்துள் தமியன் நின்ற கறை மிடற்று இறைவன் ஒத்தான்.

அண்டம் மாக் களமும், வீந்த அரக்கரே உயிரும் ஆக,
கொண்டது ஓர் உருவம்தன்னால், இறுதிநாள் வந்து கூட,
மண்டு நாள், மறித்தும் காட்ட, மன்னுயிர் அனைத்தும் வாரி
உண்டவன் தானே ஆன தன் ஒரு மூர்த்தி ஒத்தான். 230

**இலக்குவன் இராவணனோடு பொரும் இடத்திற்கு இராமன் செல்லுதல்**

ஆகுலம் துறந்த தேவர் அள்ளினர் சொரிந்த வெள்ளச்
சேகு அறு மலரும் சாந்தும் செருத் தொழில் வருத்தம் தீர்க்க,
மா கொலை செய்த வள்ளல், வாள் அமர்க் களத்தைக் கைவிட்டு
ஏகினன், இளவலோடும் இராவணன் ஏற்ற கைம்மேல். 231

226. ஞாலத்தாள் - பூமிதேவி; 227. முடித்தேம் - முடியப் பெற்றோம்; 228. தோய் படை - (உலைக்களத்தில்) தோய்த்து வடிக்கப் பெற்ற படைக்கலம். 230. மாக் களம் - பெரிய போர்க்களம்; மண்டு நாள் - படைப்புக் காலம்; மறித்து - மீளவும்; 231. சேகு - குற்றம்; இராவணன் ஏற்ற கை - இராவணன் எதிர்த்துப் பொரும் போர்க்களம்.

இவ் வழி இயன்ற எல்லாம் இயம்பினும்; இரிந்து போன
தெவ் அழி ஆற்றல் வெற்றிச் சேனையின் செயலும், சென்ற
வெவ் வழி அரக்கர் கோமான் செய்கையும், இளைய வீரன்
எவ்வம் இல் ஆற்றல் போரும், முற்றும் நாம் இயம்பலுற்றாம்.

## 31 வேல் ஏற்ற படலம்

### குரக்குச் சேனை களத்திற்கு மீண்டு வருதல்

'பெரும் படைத் தலைவர் யாரும் பெயர்ந்திலர்; பெயர்ந்து போய், நாம்
விரும்பினம் வாழ்க்கை என்றால், யார் இடை விலக்கற்பாலார்;
வரும் பழி துடைத்தும்; வானின் வைகுதும், யாமும்' என்னா,
இருங் கடல் பெயர்ந்தது என்ன, தானையும் மீண்டது, இப்பால்.

### இராவணன் போர்க்களம் செல்லுதல்

சில்லி ஆயிரம், சில் உளைப் பரியொடும் சேர்ந்த,
எல்லவன் கதிர் மண்டிலம் மாறு கொண்டு இமைக்கும்,
செல்லும் தேர்மிசைச் சென்றனன்—தேவரைத் தொலைத்த
வில்லும், வெங் கணைப் புட்டிலும், கொற்றமும், விளங்க. 2

நூறு கோடி தேர், நொறில் பரி நூற்று இரு கோடி,
ஆறுபோல் மத கரி ஐ-இரு கோடி,
ஏறு கோள் உறு பதாதியும் இவற்று இரட்டி,
சீறு கோள் அரிஏறு அனானுடன் அன்று சென்ற. 3

'மூன்று வைப்பினும், அப் புறத்து உலகினும், முனையின்
ஏன்று கோளுறும் வீரர்கள் வம்மின்!' என்று இசைக்கும்
ஆன்ற பேரியும், அதிர் குரல் சங்கமும், அசனி
ஈன்ற காளமும், ஏழொடு ஏழ் உலகினும் இசைப்ப. 4

அனைய ஆகிய அரக்கர்க்கும் அரக்கனை, அவுணர்
வினைய வானவர் வெவ் வினைப் பயத்தினை, வீரர்
நினையும் நெஞ்சையும் சுடுவது ஓர் நெருப்பினை, நிமிர்ந்து
கனையும் எண்ணையும் கடப்பது ஓர் கடலினைக் கண்டார். 5

31 : 2. எல்லவன் - சூரியன்; மாறு - மாறுபாடு, ஒப்புமை எனினும் ஆம்;
3. ஏறுகோள் - ஆண் சிங்கத்தின் வலிமை.

கண்டு, கைகளோடு அணி வகுத்து, உரும் உறழ் கற்கள்
கொண்டு, கூற்றமும் நடுக்குறத் தோள் புடை கொட்டி,
அண்ட கோடிகள் அடுக்கு அழிந்து உலேவுற, ஆர்த்தார்—
'மண்டு போரிடை மடிவதே நலம்' என மதித்தார். 6

**இரு படையும் கைகலத்தல்**

அரக்கன் சேனேயும், ஆர் உயிர் வழங்குவான் அமைந்த
குரக்கு வேலேயும், ஒன்ருெடு ஒன்று, எதிர் எதிர் கோத்து,
நெருக்கி நேர்ந்தன; நெருப்பு, இடை பொடித்தன; நெருப்பின்
உருக்கு செம்பு என, அம்பரத்து, ஓடினது, உதிரம். 7

அற்ற வன் தலே அறு குறை எழுந்து எழுந்து, அண்டத்து
ஒற்ற, வானகம் உதய மண்டிலம் என ஒளிர,
சுற்றும் மேகத்தைத் தொத்திய குருதி நீர் துளிப்ப,
முற்றும் வையகம் போர்க் களம் ஆம் என முயன்ற. 8

தூவி அம் பெடை அரிஇனம் மறிதர, சூழி
தூவி, அம்பு எடை சோர்ந்தன, சொரி உடல் சுரிப்ப,
மே வியம் படை படப் படர் குருதியின் வீழ்ந்த,
மேவி அம் படைக் கடலிடை, குடரொடு மிதந்த. 9

கண் திறந்தன கணவர்தம் முகத்து அவர் முறுவல்
கண்டு இறந்த அன மடந்தையர், உயிரொடும் கலந்தார்—
பண்டு இறந்தன பழம் புணர்வு அகம் புக, பன்னி,
பண் திறந்தன புலம்பு ஒலி, சிலம்பு ஒலி பனிப்ப. 10

ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் யாவும்
ஊழி பேர்வதே ஒப்பது ஓர் உலேவுற, உடற்றும்
நூழில் வெஞ் சமம் நோக்கி, அவ் இராவணன் நுவன்ருன்—
'தாழ் இல் என் படை தருக்கு அறும்' என்பது ஓர் தன்மை.

மரமும் கல்லுமே, வில்லொடு வாள், மழு, சூலம்,
அரமும், கல்லும், வேல் முதலிய் அயில் படை அடக்கி,
சிரமும் கல் எனச் சிந்தலின், சிதைந்தது, என் சேனே;
உரமும் கல்வியும் உடையவன் செரு நின்றது ஒருபால். 12

9. தூவி - சிறகு; அரி - வண்டு; சூழி தூவி - (யானேகள்) முகபடாத்தை அப்பால் எறிந்து; எடை - எடுத்தல்; வியம் மே படை - பெருமை பொருந்திய படை; 10. இறந்தன - கழிந்தன; பழம் புணர்வு - பழைய கூடல் நிகழ்ச்சிகள்; அகம் புகுதல் - நெஞ்சில் நினேவுக்கு வருதல்.

அழலும் கண் களிறு அணியொடும் துணி படும்; ஆவி
சுழலும் பல் படைத் தொகுதியும்; அன்னதே சுடர்த் தேர்;
கழலும் சோரி நீர் ஆற்ஞெடும் கடலிடைக் கலக்கும்—
குழலும் நூலும்போல் அனுமனும் தானும் அக் குமரன். 13

'வில்லும் கூற்றுவற்கு உண்டு' என, திரிகின்ற வீரன்
கொல்லும் கூற்று எனக் குறைக்கும், இந் நிறைபெருங் குழுவை;
ஒல்லும் கோள் அரி, உரும், அன்ன குரங்கினது உகிரும்
பல்லும் கூர்க்கின்ற; கூர்க்கில அரக்கர்தம் படைகள். 14

**இராவணன் கொதித்தல்**

'கண்டு நின்று, இறைப் பொழுது, இனிக் காலத்தைக் கழிப்பின்,
உண்டு கைவிடும் கூற்றுவன், நிருதர் பேர் உயிரை;
மண்டு வெஞ் செரு நான் ஒரு கணத்திடை மடித்தே
கொண்டு மீள்குவென், கொற்றம்' என்று இராவணன் கொதித்தான்.

ஊதை போல்வன, உரும் உறழ் திறலன, உருவிப்
பூதலங்களைப் பிளப்பன, அண்டத்தைப் பொதுப்ப,
மாதிரங்களை அளப்பன, மாற்ற அருங் கூற்றின்
தூது போல்வன, சுடு கணை முறை முறை துரந்தான். 16

ஆளிபோன்று உளன் எதிர்ந்த போது, அமர்க் களத்து அடைந்த
ஞாளி போன்று உள என்பது என்? நள் இருள் அடைந்த
காளி போன்றனன் இராவணன்; வெள்ளிடைக் கரந்த
பூளை போன்றது, அப் பொரு சினத்து அரிகள்தம் புணரி. 17

**இலக்குவன் - இராவணன் போர்**

இரியல் போகின்ற சேனையை இலக்குவன் விலக்கி,
'அரிகள்! அஞ்சன்மின், அஞ்சன்மின்' என்று அருள் வழங்கி,
திரியும் மாருதி தோள் எனும் தேர்மிசைச் சென்ருன்;
எரியும் வெஞ் சினத்து இராவணன் எதிர் புகுந்து ஏற்ருன். 18

ஏற்றுக் கோடலும், இராவணன் எரி முகப் பகழி
நூற்றுக் கோடியின்மேல் செலச் சிலைகொடு நூக்க,
காற்றுக்கு ஓடிய பஞ்சு எனத் திசைதொறும் கரக்க,
வேற்றுக் கோல்கொடு விலக்கினன், இலக்குவன் விசையால். 19

16. பொதுத்தல் - துளைத்தல்; 17. ஞாளி - நாய்; வெள்ளிடை - வெற்றிடம்; 19. வேற்றுக் கோல் - வேறு அம்புகள்.

விலக்கினுன் தடந் தோளினும் மார்பினும், விசிகம்
உலக்க உய்த்தனன், இராவணன்; ஐந்தொடு ஐந்து உருவக்
கலக்கம் உற்றிலன் இளவலும், உள்ளத்தில் கனன்ருன்,
அலக்கண் எய்துவித்தான், அடல் அரக்கனை, அம்பால். 20

காக்கல் ஆகலாக் கடுப்பினில் தொடுப்பன கணைகள்
நூக்கினுன், கணை நுறுக்கினுன், அரக்கனும், 'நூழில்
ஆக்கும் வெஞ் சமத்து அரிது இவன்தனை வெல்வது, அம்பால்;
நீக்கி, என் இனிச் செய்வது?' என்று இராவணன் நினைந்தான்.

**இராவணன் மோகப் படையும் இலக்குவன் ஆழிப் படையும்**

'கடவுள் மாப் படை தொடுக்கின், மற்று அவை முற்றும் கடக்க
விடவும் ஆற்றவும் வல்லனேல், யாரையும் வெல்லும்;
தடவும் ஆற்றலைக் கூற்றையும்; தமையனைப் போலச்
சுடவும் ஆற்றும் எவ் உலகையும்; எவனுக்கும் தோலான். 22

'மோகம் ஒன்று உண்டு, முதலவன் வகுத்தது முன்னுள்;
ஆகம் அற்றது; கொற்றமும் சிவன்தனை அழிப்பது;
ஏகம் முற்றிய விஞ்சையை இவன்வயின் ஏவி,
காகம் உற்று உழல் களத்தினில் கிடத்துவென் கடிதின்'— 23

என்பது உன்னி, அவ் விஞ்சையை மனத்திடை எண்ணி,
முன்பன்மேல் வரத் துரந்தனன்; அது கண்டு முடுகி,
அன்பின் வீடணன், 'ஆழியான் படையினின் அறுத்தி'
என்பது ஓதினன்; இலக்குவன் அது தொடுத்து எய்தான். 24

**வீடணனுல் படை வலி அழிய, இராவணன் அவன்மேல் வேல் எறிதல்**

வீடணன் சொல, விண்டுவின், படைக்கலம் விட்டான்,
மூடு வெஞ் சின மோகத்தை நீக்கலும், முனிந்தான்,
'மாடு நின்றவன் உபாயங்கள் மதித்திட, வந்த
கேடு நம்தமக்கு' என்பது மனம்கொண்டு கிளர்ந்தான். 25

மயன் கொடுத்தது, மகளொடு; வயங்கு அனல் வேள்வி,
அயன் படைத்துளது; அழியும் குலிசமும் அனையது;
உயர்ந்த கொற்றமும் ஊழியும் கடந்துளது; உருமின்,
சயம்தனைப் பொரும் தம்பியை, உயிர்கொளச் சமைந்தான்.

23. ஆகம் - வடிவம்.

விட்ட போதினின் ஒருவனை வீட்டியே மீளும்,
பட்ட போது அவன் நான்முகன் ஆயினும் படுக்கும்,
வட்ட வேல்அது வலம்கொடு வாங்கினன், வணங்கி,
எட்ட நிற்கலாத் தம்பிமேல் வல் விசைத்து எறிந்தான். 27

**வீடணன், 'ஈது என் உயிர் அழிக்கும்' என, இலக்குவன், 'போக்குவன், அஞ்சல் நீ!' எனல்**

எறிந்த காலையில், வீடணன் அதன் நிலை எல்லாம்
அறிந்த சிந்தையன், 'ஐய! ஈது என் உயிர் அழிக்கும்;
பிறிந்து செய்யல் ஆம் பொருள் இலை' என்றலும், பெரியோன்,
'அறிந்து போக்குவல்;அஞ்சல், நீ!' என்று இடை அணைந்தான்.

எய்த வாளியும், ஏவின படைக்கலம் யாவும்,
செய்த மா தவத்து ஒருவனைச் சிறு தொழில் தீயோன்
வைத வைவினில் ஒழிந்தன; 'வீடணன் மாண்டான்;
உய்தல் இல்லை' என்று, உம்பரும் பெரு மனம் உலைந்தார். 29

**இலக்குவன் வேலைத் தன் மார்பில் ஏற்க எதிர்தல்**

''தோற்பென் என்னினும், புகழ் நிற்கும்; தருமமும் தொடரும்,
ஆர்ப்பர் நல்லவர்; அடைக்கலம் புகுந்தவன் அழியப்
பார்ப்பது என்? நெடும் பழி வந்து தொடர்வதன் முன்னம்,
ஏற்பென்,என் தனி மார்பின்' என்று, இலக்குவன் எதிர்ந்தான்.

**வேலை ஏற்கப் பலரும் முந்த, இறுதியில் இலக்குவன் ஏற்றல்**

இலக்குவற்கு முன் வீடணன் புகும்; இருவரையும்
விலக்கி, அங்கதன் மேற்செலும்; அவனையும் விலக்கி,
கலக்கும் வானரக் காவலன்; அனுமன் முன் கடுகும்;
அலக்கண் அன்னதை இன்னது என்று உரை செயல் ஆமோ? 31

முன் நின்றார் எலாம் பின் உற, காலினும் முடுகி,
'நின்மின்; யான் இது விலக்குவென்' என்று உரை நேரா,
மின்னும் வேலினை, விண்ணவர் கண் புடைத்து இரங்க,
பொன்னின் மார்பிடை ஏற்றனன், முதுகிடைப் போக. 32

**வீடணன், இராவணன் தேர்க் குதிரையையும் சாரதியையும் அழித்தல்**

'எங்கு நீங்குதி நீ?' என வீடணன் எழுந்தான்,
சிங்கஏறு அன்ன சீற்றத்தான், இராவணன் தேரில்
பொங்கு பாய் பரி சாரதியொடும் படப் புடைத்தான்,
சங்க வானவர் தலை எடுத்திட, நெடுந் தண்டால். 33

31. அலக்கண் - துன்பம்; 33. சங்கம் - திரள்.

சேய் விசும்பினில் நிமிர்ந்து நின்று, இராவணன் சீறி,
பாய் கடுங் கணை பத்து அவன் உடல் புகப் பாய்ச்சி,
ஆயிரம் சரம் அனுமன்தன் உடலினில் அழுத்தி,
போயினன், 'செரு முடிந்தது' என்று, இலங்கை ஊர் புகுவான்.

'தேடிச் சேர்ந்த என் பொருட்டினுல், உலகுடைச் செல்வன்
வாடிப் போயினன்; நீ இனி வஞ்சனை மதியால்
ஓடிப் போகுவது எங்கு? அடா! உன்னெடும் உடனே
வீடிப்போவென்' என்று அரக்கன்மேல் வீடணன் வெகுண்டான்.

**வீடணனைக் கொல்லாது விடுத்து இராவணன் மீளுதல்**

'வென்றி என் வயம் ஆனது; வீடணப் பசுவைக்
கொன்று இனிப் பயன் இல்லை' என்று, இராவணன் கொண்டான்;
நின்றிலன், ஒன்றும் நோக்கிலன், முனிவு எலாம் நீத்தான்,
பொன் திணிந்தன மதிலுடை இலங்கை ஊர் புக்கான். 36

**வீடணன் ஆற்ருது அரற்றுதல்**

அரக்கன் ஏகினன்; வீடணன் வாய் திறந்து அரற்றி,
இரக்கம்தான் என இலக்குவன் இணை அடித் தலத்தில்,
கரக்கல் ஆகலாக் காதலின் வீழ்ந்தனன் கலுழ்ந்தான்;
குரக்கு வெள்ளமும் தலைவரும் துயரிடைக் குளித்தார். 37

'பொன் அரும்பு உறு தார்ப் புயப் பொருப்பினுன் பொன்ற,
என் இருந்து நான்? இறப்பென், இக் கணத்து; எனை ஆளும்
மன் இருந்து இனி வாழ்கிலன்' என்றனன் மறுக,
'நில், நில்' என்றனன், சாம்பவன் உரை ஒன்று நிகழ்த்தும்:

'அனுமன் நிற்க, நாம் ஆர் உயிர்க்கு இரங்குவது அறிவோ?
நினையும் அத்துணை மாத்திரத்து, உலகு எலாம் நிமிர்வான்,
வினையின் நல் மருந்து அளிக்கின்ருன்; உயிர்க்கின்ருன், வீரன்;
தினையும் அல்லல் உற்று அழுங்கன்மின்' என்று இடர்தீர்த்தான்.

**அனுமன், மருந்து கொண்டு வந்து, இலக்குவனை உயிர்ப்பித்தல்**

மருத்தின் காதலன் மார்பிடை அம்பு எலாம் வாங்கி,
'இருத்தியோ, கடிது ஏகலை? இளவலை இங்ஙன்
வருத்தம் காணுமோ மன்னவன்?' என்னலும், அன்னுன்
கருத்தை உன்னி, அம் மாருதி உலகு எலாம் கடந்தான். 40

35. உலகுடைச் செல்வன் - இலக்குவன்; 38. பொன் - அழகு; 40. காதலன் - மகன்.

உய்த்து ஒரு திசைமேல் ஓடி, உலகு எலாம் கடக்கப் பாய்ந்து,
மெய்த் தகு மருந்துதன்னை, வெற்பொடும் கொணர்ந்த வீரன்,
பொய்த்தல் இல் குறி கெடாமே பொது அற நோக்கி, பொன்போல்
வைத்தது வாங்கிக் கொண்டு வருதலில், வருத்தம் உண்டோ?

தந்தனன், மருந்துதன்னை; தாக்குதல் முன்னே யோகம்
வந்தது, மாவடார்க்கு எல்லாம்; உயிர் தரும் வலத்தது என்றால்,
நொந்தவர் நோவு தீர்க்கச் சிறிது அன்றோ? நொடிதல் முன்னே,
இந்திரன் உலகம் ஆர்க்க, எழுந்தனன் இளைய வீரன். 42

**இலக்குவன் அனுமனைத் தழுவி, வீடணன் நலம் உசாவல்**

எழுந்து நின்று, அனுமன்தன்னை இரு கையால் தழுவி, 'எந்தாய்!
விழுந்திலன் அன்றோ, மற்று அவ் வீடணன்!' என்ன, விம்மித்
தொழும் துணையவனை நோக்கி, துணுக்கமும் துயரும் நீக்கி, [டான்.
'கொழுந்தியும் மீண்டாள்; பட்டான் அரக்கன்' என்று உவகை கொண்

**வானரத் தலைவர் இராமன்பால் செல்ல, அவன் 'விளைந்தது என்?' எனல்**

' "தருமம்" என்று அறிஞர் சொல்லும் தனிப் பொருள்தன்னை இன்னே
கருமம் என்ற அனுமன் ஆக்கிக் காட்டிய தன்மை கண்டால்,
அருமை என் இராமற்கு? அம்மா! அறம் வெல்லும், பாவம் தோற்கும்,
இருமையும் நோக்கின்' என்னா, இராமன்பால் எழுந்து சென்றார்.

ஒன்று அல பல என்று ஓங்கும் உயர் பிணத்து உம்பரோடும்
குன்றுகள் பலவும், சோரிக் குரை கடல் அனைத்தும், தாவிச்
சென்று அடைந்து, இராமன் தன்னைத் திருவடி வணக்கம் செய்தார்,
வென்றியின் தலைவர்; கண்ட இராமன், 'என் விளைந்தது?' என்றான்.

**இராமன், அனுமனை வாழ்த்துதல்**

உற்றது முழுதும் நோக்கி, ஒழிவு அற, உணர்வு உள் ஊற,
சொற்றனன் சாம்பன்; வீரன் அனுமனைத் தொடரப் புல்லி,
'பெற்றனென் உன்னை; என்னை பெறுதன? பெரியோய்! என்றும்
அற்ற இடையூறு செல்லா ஆயுளை ஆக!' என்றான். 46

**இலக்குவனை இராமன் பாராட்டல்**

புயல் பொழி அருவிக் கண்ணன், பொருமலன் பொங்குகின்றான்,
உயிர் புறத்து ஒழிய நின்ற உடல் அன்ன உருவத் தம்பி,
துயர் தமக்கு உதவி, மீளாத் துறக்கம் பெற்று, உயர்ந்த
தயரதற் கண்டால் ஒத்த தம்முனைத் தொழுது சார்ந்தான். 47

42. தாக்குதல் - உடல்மேல் படுதல்; யோகம் - நீங்கிய அறிவு வந்து சேர்தல்.

இளவலை நோக்கி, 'ஐய! இரவிதன் குலத்துக்கு ஏற்ற
அளவினம்; அடைந்தோர்க்கு ஆகி, மன் உயிர் கொடுத்த வன்மைத்
துளவு இயல் தொங்கலாய்! நீ அன்னது துணிந்தாய் என்றால்,
அளவு இயல் அன்று; செய்தற்கு அடுப்பதே ஆகும் அன்றே? 48

புறவு ஒன்றின் பொருட்டின் யாக்கை புண் உற அரிந்த புத்தேள்
அறவனும், ஐய! நின்னை நிகர்க்கிலன்; அப்பால் நின்ற
பிற வினை உரைப்பது என்னே? பேர் அருளாளர் என்பார்
கறவையும் கன்றும் ஒப்பார், தமர்க்கு இடர் காண்கில்' என்றான். 49

சாலிகை முதல ஆன போர்ப் பரம் தாங்கிற்று எல்லாம்
நீல் நிற ஞாயிறு அன்ன நெடியவன் முறையின் நீக்கி,
கோல் சொரி தனுவும் கொற்ற அனுமன் கைக் கொடுத்து, கொண்டல்
மேல் நிறை குன்றம் ஒன்றில் மெய்ம் மெலிவு ஆற்றலுற்றான்.

## 32 வானரர் களம் காண் படலம்

### மூலபலப் படையின் அழிவு காணச் சுக்கிரீவனை இராமன் ஏவல்

ஆய பின், கவியின் வேந்தும், அளப்ப அருந் தானையோடும்,
மேயினன், இராமன் பாதம் விதி முறை வணங்கி; வீந்த
தீயவர் பெருமை நோக்கி, நடுக்கமும் திகைப்பும் உற்றார்,
ஒய்வுறு மனத்தார் ஒன்றும் உணர்ந்திலர், நாணம் உற்றார். 1

'மூண்டு எழு சேனை வெள்ளம் உலகு ஒரு மூன்றின் மேலும்
நீண்டு உள அதனை, ஐய! எங்ஙனம் நிமிர்ந்தது?' என்னத்
தூண் திரண்டனைய திண் தோள் சூரியன் சிறுவன் சொல்ல,
'காண்டி நீ, அரக்கர் வேந்தன்தன்னொடும் களத்தை' என்றான்.

தொழுதனர் தலைவர் எல்லாம்; தோன்றிய காதல் தூண்ட,
'எழுக' என விரைவின் சென்றார், இராவணற்கு இளவலோடும்;
கழுகொடு பருந்தும், பாறும், பேய்களும், கணங்கள் மற்றும்,
குழுவிய களத்தைக் கண்ணின் நோக்கினர், துணுக்கம் கொண்டார். 3

ஏங்கினார்; நடுக்கமுற்றார்; இரைத்து இரைத்து, உள்ளம் ஏற,
வீங்கினார்; வெருவலுற்றார்; விம்மினார்; உள்ளம் வெம்ப,
ஓங்கினார்; மெள்ள மெள்ள உயிர் நிலைத்து, உவகை ஊற,
ஆங்கு அவர் உற்ற தன்மை யார் அறிந்து அறையகிற்பார்? 4

48. அளவினம் - தன்மையுடையவரானோம்; 50. சாலிகை - கவசம்.

32: 2. நிமிர்ந்தது - வென்றது.

**உயிர் இழந்து கிடக்கும் அரக்கர் சேனை குறித்து வீடணன் கூறுதல்**

ஆயிரம் பருவம் கண்டால், காட்சிக்கு ஓர் கரையிற்று அன்றால்;
மேயின துறைகள்தோறும் விம்மினர் நிற்பது அல்லால்,
பாய் திரைப் பரவை ஏழும் காண்குறும் பதகர் என்ன,
'நீ இருந்து உரைத்தி' என்றார்; வீடணன் நெறியின் சொல்வான்: 5

'**கா**கப் பந்தர்ச் செங் களம் எங்கும், செறி கால
ஓகத்து அம்பின் பொன்றினவேனும், உடல் ஒன்றி,
மேகச் சங்கம் தொக்கன, வீழும் வெளி இன்றி,
நாகக் குன்றின் நின்றன காண்மின்—நமரங்காள்! 6

'வென்றிச் செங் கண் வெம்மை அரக்கர் விசை ஊர்வ,
ஒன்றிற்கு ஒன்று உற்று அம்பு தலைப்பட்டு உயிர் நுங்க,
பொன்றி, சிங்கம் நாக அடுக்கல் பொலிகின்ற
குன்றில் துஞ்சும் தன்மை நிகர்க்கும் குறி காணீர். 7

'அளியின் பொங்கும் அங்கணன் ஏவும் அயில் வாளிக்
களியில் பட்டார் வாள் முகம், மின்னும் கரை இல்லாப்
புளினத் திட்டின் கண் அகன் வாரிக் கடல் பூத்த
நளினக் காடே ஒப்பன காண்மின்—நமரங்காள்! 8

'ஒழுகிப் பாயும் மும் மத வேழம் உயிரோடும்
எழுகிற்கில்லாச் செம்புனல் வெள்ளத்திடை இற்ற;
பழுகிற்கில்லாப் பல் திரை தூங்கும் படர் வேலை
முழுகித் தோன்றும் மீன் அரசு ஒக்கும் முறை நோக்கீர்! 9

'பூ வாய் வாளிச் செல் எறி காலைப் பரி பொன்ற,
கோ ஆர் விண்வாய் வெண் கொடி திண் பாயொடு கூட,
மா வாய் திண் தேர் மண்டுதலால், நீர் மறி வேலை
நாவாய் மானச் செல்வன காண்மின்—நமரங்காள்! 10

'கடக் கார் என்னப் பொங்கு கவந்தத்தொடு கைகள்
தொடக்காநிற்கும் பேய், இலயத்தின் தொழில் பண்ணி,
மடக்கோ இல்லா வார் படிமக் கூத்து அமைவிப்பான்,
நடக் கால் காட்டும் கண்ணுளர் ஒக்கும்—நமரங்காள்! 11

5. பருவம் - ஆண்டு; பதகர் - பாதகர்; 6. காகப் பந்தர் - காகங்களின் பந்தல்; ஓகம் - பெருங்கூட்டம், தொடர்பு என்பாரும் உண்டு; நாகக் குன்று - யானைகளால் இயன்ற மலைகள்; நமரங்காள்! - நம்மவர்களே; 8. அளி - அருள்; களியில் - மதக் களிப்போடு; நளினக் காடு - தாமரைத் தொகுதி; 9. மீன் அரசு - மகர மீன்; 10. பூ - கூர்மை; வாளிச் செல் - அம்பாகிய இடி; கோ - சிறப்பு; மா வாய் திண் தேர் - அழகு பொருந்திய திண்ணிய தேர்; 11. இலயம் - தாள ஒற்று; மடக்கு - மடக்குதல், சோம்புதல்; படிமக் கூத்து - அபிநயக் கூத்து; நடக் கால் - நடனம் செய்யும் காலின் முறை; கண்ணுளர் - கூத்தர்.

'மழுவின் கூர் வாய் வன் பல் இடுக்கின் வய வீரர்
குழுவின் கொண்டந் நாடி தொடக்கப் பொறி கூட்டித்
தழுவிக் கொள்ள, கள்ள மனப் பேய் அவைதம்மை
நழுவிச் செல்லும் இயல்பின காண்மின்—நமரங்காள்! 12

'பொன்னின் ஓடை மின் பிறழ் நெற்றிப் புகர் வேழம்,
பின்னும் முன்னும் மாறின வீழ்வின் பிணையுற்ற,
தன்னின் நேரா மெய் இரு பாலும் தலை பெற்ற
என்னும் தன்மைக்கு ஏய்வன பல் வேறு இவை காணீர். 13

'நாமத் திண் போர் முற்றிய கோப நகை நாறும்
பாமத் தொல் நீர் அன்ன நிறத்தோர் பகு வாய்கள்,
தூமத்தோடும் வெங் கனல் இன்னும் சுடர்கின்ற
ஓமக் குண்டம் ஒப்பன பல் வேறு இவை காணீர். 14

'மின்னும் ஓடை ஆடல் வயப் போர் மிடல் வேழக்
கன்னம் மூலத்து உற்றன வெண் சாமரை காணீர்;
மன்னும் மா நீர்த் தாமரை மானும் வதனத்த
அன்னம் மெல்லத் துஞ்சுவ ஒக்கின்றவை காணீர். 15

'ஒளிம் முற்றுது உற்று உயர் வேழத்து ஒளிர் வெண் கோடு,
ஆளின் முற்றுச் செம் புனல் வெள்ளத்தவை காணீர்;
கோளின் முற்றுச் செக்கருள் மேகக் குழுவின்கண்
நாளின் முற்று வெண் பிறை போலும்—நமரங்காள்! 16

'கொடியும் வில்லும், கோலொடு வேலும், குவி தேரும்,
துடியின் பாதக் குன்றின்மிசைத் தோல் விசியின் கட்டு
ஓடியும் வெய்யோர் கண் எரி செல்ல உடன் வெந்த
தடி உண்டு ஆடிக் கூளி தடிக்கின்றன காணீர். 17

'சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளம் தடுமாறு,
மகரம் தம்மின் வந்தன காணு, மனம் உட்கி,
''சிகரம் அன்ன! யானைகொல்?'' என்னச் சில நாணி,
நகரம் நோக்கிச் செல்வன காண்மின்—நமரங்காள்! 18

12. கொண்டந் நாடி - கொண்ட நாடி, விரித்தல் விகாரம்; நாடி - உடலின் நரம்புகள்; தொடக்கப் பொறி - தொடக்குதலை (கட்டுதலை) உடைய எந்திரம்; 14. பாமம் - பரவுதல்; 15. கன்னம் மூலத்து - செவி களின்மேல்; 16. ஒளிம் முற்றுது - ஒழுங்காக முற்றுகை செய்யாது; 17. துடியின் பாதக் குன்று - துடி போன்ற கால்களையுடைய மலை, அதாவது யானை; தோல் விசியின் கட்டு - தோலால் கட்டப்பெற்ற அம்பாரியிலும்; தடி - மாமிசம்; தேரிலும் கட்டின்கண்ணும் கூளி ஆடித் தடிக்கின்றன என இயையும்.

'விண்ணில் பட்டார் வெற்பு உறழ் காயம் பல, மேன்மேல்,
மண்ணில் செல்வார் மேனியின் வீழ, மடிவுற்ருர்,
எண்ணின் தீரா அன்னவை தீரும் மிடல் இல்லாக்
கண்ணில் தோன்ருர், விம்மி உளைக்கும் படி காணீர். 19

'அச்சின் திண் தேர், ஆனையின், மாமேல், காலாளின்
மொய்ச்சுச் சென்ருர் மொய் குருதித் தாரைகள் முட்ட,
உச்சிச் சென்ருன் ஆயினும், வெய்யோன், உதயத்தின்
குச்சிச் சென்ருன் ஒத்துளன் ஆகும் குறி காணீர். 20

'கால் தோய் மேனிக் கண்டகர் கண்டபடு காலை,
''ஆருே!'' என்ன, விண் படர் செஞ் சோரியது ஆகி,
வேருய் நின்ற வெண் மதி செங் கேழ் நிறம் விம்மி,
மாறு ஓர் வெய்யோன் மண்டிலம் ஒக்கின்றது காணீர். 21

'வான் நனைய, மண் நனைய, வளர்ந்து எழுந்த
கொழுங் குருதி மகர வேலை-
தான் நனைவுற்று எழும் பறவைச் சிறை தெளித்து,
புது மழையின் துள்ளி தாங்கி,
மீன் அனைய நறும் போதும், விரை அரும்பும்,
சிறை வண்டும், நிறம் வேறு எய்தி,
கானகமும் கடி பொழிலும் முறி ஈன்ற
போன்று ஒளிர்வ காண்மின்! காண்மின்! 22

'வரை பொருத மத யானைத் துணை மருப்பும்,
கிளர் முத்தும், மணியும், வாரி,
திரை பொருது புறம் குவிப்பத் திறம் கொள் பணை
மரம் உருட்டி, சிறைப் புள் ஆர்ப்ப,
நுரை கொடியும் வெண் குடையும் சாமரையும்
எனச் சுமந்து, பிணத்தின் நோன்மைக்
கரை பொருது கடல் மடுக்கும் கடுங் குருதிப்
பேர் ஆறு காண்மின்! காண்மின்! 23

19. மடிவுற்ருர் - உயிர் சோர்ந்தார்; 20. மொய்ச்சு - மொய்த்து, நெருங்கி; முட்டுதல் - பாய்தல்; உதயத்தின் குச்சி - உதய மலையின் முகடு; 22. முறி - செந்தளிர்.

'கய்க் குன்றப் பெருங் கரைய, நிருதர் புயக்
கல் செறிந்த, கதலிக் கானம்
மொய்க்கின்ற பரித் திரைய, முரண் கரிக் கைக்
கோள் மாவ, முளரிக் கானின்
நெய்க்கின்ற வாள் முகத்த, விழும் குடரின்
பாசடைய, நிணமேல் சேற்ற,
உய்க்கின்ற உதிர நிறக் களம் குளங்கள்,
உலப்பு இறந்த, உவையும் காண்மின்! 24

'நெடும் படை வாள் நாஞ்சில் உழு நிணச் சேற்றின்,
உதிர நீர் நிறைந்த காப்பின்,
கடும் பகடு படி கிடந்த கரும் பரம்பின்,
இன மள்ளர் பரந்த கையில்,
படுங் கமல மலர் நாறும் முடி பரந்த
பெருங் கிடக்கைப் பரந்த பண்ணை,
தடம் பணையின் நறும் பழனம் தழுவியதே
எனப் பொலியும் தகையும் காண்மின்! 25

'வெளில் தீர்த்த வரை புரையும் மிடல் அரக்கர்
உடல் விழவும், வீரன் வில்லின்
ஒளிறு ஈர்த்த முழு நெடு நாண் உரும்ஏறு
பல படவும், உலகம் கீண்டு
நளில் தீர்த்த நாகபுரம் புக்கு, இழிந்த
பகழி வழி நதியின் ஓடி,
களிறு ஈர்த்துப் புக மண்டும் கடுங் குருதித்
தடஞ் சுழிகள் காண்மின்! காண்மின்! 26

'கய்த்தலமும், காத்திரமும், கருங் கழுத்தும்,
நெடும் புயமும், உரமும், கண்டித்து
எய்த்தில போய், திசைகள்தொறும் இரு நிலத்தைக்
கிழித்து இழிந்தது என்னின் அல்லால்,
மத்த கரி வய மாவின், வாள் நிருதர்
பெருங் கடலின், மற்று இவ் வாளி
தய்த்து உளவாய் நின்றது என ஒன்றேயும்
காண்பு அரிய தகையும் காண்மின்! 27

24. கதலிக் கானம் - கொடிகளின் தொகுதி; கோள் மாவ - முதலைகளை யுடையன; கோள் மா - முதலை; 25. வாள் நாஞ்சில் - வாளாகிய கலப்பை; காப்பு - தேக்கம்; கடும் பகடு - விரைவினையுடைய யானை, எருமை; மள்ளர் - வீரர், உழவர்; நாறும் முடி - மணம் நாறும் மகுடம், நாற்று முடி; 26. வெளில் தீர்த்த வரை - கட்டுத் தறியைப் போக்கிய மலை போன்ற யானை; ஒளிறு நாண் - விளங்குகின்ற வில்லின் நாண்; நளில் தீர்த்த நாகபுரம் - செறிவு இல்லாத பாதாளம்; 27. காத்திரம் - யானையின் முன்னங்கால்; எய்த்தல் - இளைத்தல்.

‘குமுதம் நாறும் மதத்தன, கூற்றன,
சமுதரோடு மடிந்தன, சார்தரும்
திமிர மா அன்ன செய்கைய, இத் திறம்
அமிர்தின் வந்தன, ஐ-இரு கோடியால். 28

‘ஏறு நான்முகன் வேள்வி எழுந்தன;
ஊறும் மாரியும், ஓங்கு அலை ஓதமும்,
மாறும் ஆயினும், மா மதமாய் வரும்
ஆறு மாறில, ஆறு-இரு கோடியால். 29

‘உயிர் வறந்தும், உதிரம் வறந்து தம்
மயர் வறந்தும், மதம் மறவாதன,
புயலவன் திசைப் போர் மத யானையின்
இயல் பரம்பரை ஏழ்-இரு கோடியால். 30

‘கொடாது நிற்றலின், கொற்ற நெடுந் திசை
எடாது நிற்பன, நாட்டம் இமைப்பு இல,
வடாது திக்கின் மதவரையின் வழிக்
கடாம் முகத்த, முளரிக் கணக்கவால். 31

‘வானவர்க்கு இறைவன் திறை தந்தன
ஆன வர்க்கம் ஓர் ஆயிர கோடியும்,
தானவர்க்கு இறைவன் திறை தந்தன
ஏனை வர்க்கம் கணக்கு இல, இவ் எலாம். 32

‘பாற்கடல் பண்டு அமிழ்தம் பயந்த நாள்,
ஆர்த்து எழுந்தன, ஆயிரம் ஆயிரம்
மால் கணப் பரி இங்கு இவை; மாறு இவை;
மேற்கின் வேலை வருணனை வென்றவால். 33

‘இரு நிதிக் கிழவன் இழந்து ஏகின
அரிய அப் பரி ஆயிரம ஆயிரம்;
விரி சினத்து இகல் விஞ்சையர் வேந்தனைப்
பொருது பற்றிய, தாமரை போலுமால்.’ 34

28. சமுதர் - ஸம்மிதர், ஒத்தவர், ஈண்டு ஒத்துப் பழகும் பாகர்; திமிர மா - இருள் நிறமுடைய பன்றி, கரும்பன்றி; அமிர்தின் - (பாற்கடலில் தோன்றிய) அமுதத்தோடு; 29. ஏறு - பெருமை; 30. மயர் - மதமயக்கம்; புயலவன் - இந்திரன்; 31. வடாது திக்கின் மதவரை - வட சைக்குரிய சாருவபௌமம் என்னும் பெயரையுடைய யானை; வழி - மரபு; முளரி - தாமரை என்னும் பேரெண்; 33. மேற்கின் வேலை வருணன் - மேலைக் கடலில் உள்ள வருணபகவான்; வென்ற - வென்று பெற்றவை; 34. விஞ்சையர் - வித்தியாதரர்.

என்று, 'காணினும், காட்டினும், ஈது இறைக்
குன்று காணினும் கோள் இலது; ஆதலால்,
நின்று காணுதும்; நேமியினுனுழைச்
சென்று காண்டும்' என்று ஏகினர், செவ்வியோர். 35

ஆரியன்-தொழுது, ஆங்கு அவன் பாங்கரும்,
போர் இயற்கை நினைந்து எழு பொம்மலார்,
பேர் உயிர்ப்பொடு இருந்தனர்; பின்பு உறும்
காரியத்தின் நிலைமை கழறுவாம்: 36

# 33 இராவணன் களம் காண் படலம்

### போர் வீரர்க்கு விருந்து அளிக்க இராவணன் முனைதல்

பொருந்து பொன் பெருங் கோயிலுள், போர்த் தொழில்
வருந்தினர்க்கு, தம் அன்பினின் வந்தவர்க்கு,
அருந்துதற்கு அமைவு ஆயின ஆக்குவான்,
விருந்து அமைக்க மிகுகின்ற வேட்கையான், 1

வான நாட்டை 'வருக!' என, வல் விரைந்து,
ஏனை நாட்டவரோடும் வந்து எய்தினர்;
'மான நாட்டு அந்த போகம் அமைத்திர்; மற்று
ஊனம் நாட்டின், இழத்திர் உயிர்' என்றான். 2

நறவும் ஊனும், நவை அற நல்லன
பிறவும், ஆடையும், சாந்தமும், பெய்ம் மலர்த்
திறமும், நானப் புனலொடு சேக்கையும்,
புறமும் உள்ளும் நிறையப் புகுந்தவால். 3

நானம் நெய் நன்கு உரைத்து, நறும் புனல்
ஆன கோது அற ஆட்டி, அமுதொடும்
பானம் ஊட்டி, சயனம் பரப்புவான்,
வான நாடியர் யாவரும் வந்தனர். 4

35. இறைக் குன்று - குன்றுக்கு இறை, மலையரசு, இமயமலை; நின்று - பொறுத்திருந்து; 36. பொம்மல் - மகிழ்ச்சி.

33: 3. நானப் புனல் - கத்தூரி கலந்த நீர்; 4. சயனம் - பரப்புதல் - படுக்கை விரித்தல், இடக்கரடக்கலாய் உடனுறைவைக் குறித்தது.

பாடுவார்கள்; பயில் நடம் பாவகத்து
ஆடுவார்கள்; அமளியில் இன்புறக்
கூடுவார்கள்; முதலும் குறைவு அறத்
தேடினான் என, பண்ணையின் சேர்ந்ததால். 5

அரைசர் ஆதி, அடியவர் அந்தமா,
வரை செய் மேனி இராக்கதர் வந்துளார்,
விரைவின் இந்திர போகம் விழைதர,
கரை இலாத பெரு வளம் கண்ணினார். 6

மூலபல அழிவினைத் தூதர் அறிவித்தல்

இன்ன தன்மை அமைந்த இராக்கதர்
மன்னன் மாடு வந்து எய்தி வணங்கினார்,
அன்ன சேனை களப் பட்ட ஆறு எலாம்
துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்: 7

நடுங்குகின்ற உடலினர், நா உலர்ந்து
ஒடுங்குகின்ற உயிர்ப்பினர், உள் அழிந்து
இடுங்குகின்ற விழியினர், ஏங்கினார்,
பிடுங்குகின்ற உரையினர், பேசுவார்: 8

'இன்று யார் விருந்து இங்கு உண்பார்?—இகல் முகத்து இமையோர் [தந்த
வென்றியாய்!—ஏவச் சென்ற ஆயிர வெள்ளச் சேனை
நின்றுளார் புறத்தது ஆக, இராமன் கை நிமிர்ந்த சாபம்
ஒன்றினால், இரண்டு மூன்று கடிகையின் உலந்தது' என்றார். 9

'வலிக் கடன் வான் உளோரைக் கொண்டு, நீ வகுத்த போகம்,
''கலிக் கடன் அளிப்பல்'' என்று நிருதர்க்குக் கருதினாயேல்,
பலிக் கடன் அளிக்கற்பாலை அல்லது, உன் குலத்துளபாலோர்
ஒலிக் கடல் உலகத்து இல்லை; ஊர் உளார் உளரே உள்ளார்.*

இராவணன் தூதர் பேச்சை ஐயுற்றுக் கூறுதல்

ஈட்ட அரும் உவகை ஈட்டி இருந்தவன், இசைத்த மாற்றம்
கேட்டலும், வெகுளியோடு துணுக்கமும் இழவும் கிட்டி,
ஊட்டு அரக்கு அனைய செங் கண் நெருப்பு உக, உயிர்ப்பு வீங்க,
தீட்டிய படிவம் என்னத் தோன்றினன், திகைத்த நெஞ்சன்.

5. பாவகம் - பாவனை; பண்ணையின் - மகளிர் கூட்டத்தால்; 9. புறம் - போர்க்களம்; 10. கலிக் கடன் - மகிழ்ச்சியின் முறைமை: 11. படிவம் - சித்திரம்.

'என்னினும் வலியர் ஆன இராக்கதர் யாண்டும் வீயார்;
உன்னினும், உலப்பு இலாதார்; உவரியின் மணலின் நீள்வார்;
''பின் ஒரு பெயரும் இன்றி மாண்டனர்'' என்று பேசும்
இந் நிலை இதுவோ? பொய்ம்மை விளம்பினிர் போலும்' என்றான். 12

மாலியவான், 'தூதர் பொய் உரையார்' எனல்

கேட்டு அயல் இருந்த மாலி, 'ஈது ஒரு கிழமைத்து ஆமோ?
ஒட்டு உறு தூதர் பொய்யே உரைப்பரோ? உலகம் யாவும்
வீட்டுவது இமைப்பின் அன்றே, வீங்கு எரி? விரித்த எல்லாம்
மாட்டுவன் ஒருவன் அன்றே, இறுதியில் மனத்தால்?'' என்றான்.

' ''அளப்ப அரும் உலகம் யாவும் அமைத்துக் காத்து அழிக்கின்றான் தன்
உளப் பெருந் தகைமைதன்னால் ஒருவன்'' என்று உண்மை வேதம்
கிளப்பது கேட்டும் அன்றே? ''அரவின்மேல் கிடந்து, மேல் நாள்,
முளைத்த பேர் இராமன்'' என்ற வீடணன் மொழி பொய்த்து ஆமோ?

'ஒன்று இடின் அதனை உண்ணும் உலகத்தின் உயிர்க்கு ஒன்றாத
நின்றன எல்லாம் பெய்தால், உடன் நுங்கு நெருப்பும் காண்டும்;
குன்றொடு மரனும், புல்லும், பல் உயிர்க் குழுவும், கொல்லும்
வன் திறல் காற்றும் காண்டும்; வலிக்கு ஒரு வரம்பும் உண்டோ?

'பட்டதும் உண்டே உன்னை, இந்திரச் செல்வம்; பற்று
விட்டதும் மெய்ம்மை; ஐய! மீட்டு ஒரு வினையும் இல்லை;
கெட்டது, உன் பொருட்டினாலே, நின்னுடைக் கேளிர் எல்லாம்;
சிட்டது செய்தி' என்றான்; அதற்கு அவன் சீற்றம் செய்தான்.

இராவணன் மறுமொழி

'இலக்குவன் தன்னை வேலால் எறிந்து, உயிர் கூற்றுக்கு ஈந்தேன்;
அலக்கணில் தலைவர் எல்லாம் அழுந்தினர்; அதனைக் கண்டால்,
உலக்குமால் இராமன்; பின்னர் உயிர்ப் பொறை உகவான்; உற்ற
மலக்கம் உண்டாகின் ஆக; வாகை என் வயத்தது' என்றான்.

தூதர், இலக்குவன் உயிர் பெற்றமை உரைத்தல்

ஆண்டு அது கண்டு நின்ற தூதுவர், ஐய! மெய்யே
மீண்டது, அவ் அளவின் ஆவி, மாருதி மருந்து மெய்யில்
தீண்டவும்; தாழ்த்தது இல்லை; யாரும் அச் செங்கணானைப்
பூண்டனர் தழுவிப் புக்கார்; காணுதி போதி' என்றார். 18

13. கிழமை - முறைமை; மாட்டுவன் - அழிக்கின்றவன், உருத்திரன்; 15. ஒன்றாத - உண்ணப் பொருந்தாதன; 16. பட்டதும் - பொருந்தி இருந்த காலமும்; சிட்டது - சிறந்தது; 17. மலக்கம் - துன்பம்.

### இராவணன் கோபுரத்தில் ஏறி, களம் காணுதல்

தேறிலன் ஆதலானே, மறுகுறு சிந்தை தேற,
ஏறினன், கனகத்து ஆரைக் கோபுரத்து உம்பர் எய்தி,
ஊறின சேனை வெள்ளம் உலந்த பேர் உண்மை எல்லாம்,
காறின உள்ளம் நோவ, கண்களால் தெரியக் கண்டான். 19

கொய் தலைப் பூசல் பட்டோர் குலத்தியர் குவளை தோற்று
நெய்தலை வென்ற வாள்-கண் குமுதத்தின் நீர்மை காட்ட,
கய் தலை உற்ற பூசல் கடலொடு நிமிரும்காலை,
செய்தலை உற்ற ஓசைச் செயலதும் செவியின் கேட்டான். 20

எண்ணும் நீர் கடந்த யானைப் பெரும் பிணம் ஏந்தி, யாணர்
மண்ணின் நீர் அளவும் கல்லி, நெடு மலை பறித்து, மண்டும்
புண்ணின் நீர் ஆறும், பல் பேய்ப் புதுப் புனல் ஆடும் பொம்மல்,
கண்ணின் நீர் ஆறும், மாருக் கருங் கடல் மடுப்பக் கண்டான்.

குமிழி நீரோடும், சோரிக் கனலொடும், கொழிக்கும் கண்ணன்
தமிழ் நெறி வழக்கம் அன்ன தனிச் சிலை வழக்கில் சாய்ந்தார்
அமிழ் பெருங் குருதி வெள்ளம் ஆற்று வாய்முகத்தின் தேக்கி,
உமிழ்வதே ஒக்கும் வேலை ஓதம் வந்து உடற்றக் கண்டான். 22

விண்களில் சென்ற வன் தோள் கணவரை, அலகை வெய்ய
புண்களில் கைகள் நீட்டி, புது நிணம் கவர்வ நோக்கி,
மண்களில் தொடர்ந்து, வானில் பிடித்து, வள் உகிரின் மானக்
கண்களைச் சூன்று நீக்கும் அரக்கியர் குழாமும் கண்டான்.* 23

### இராவணன் அரசவை அடைதல்

விண் பிளந்து ஒல்க ஆர்க்கும் வானரர் வீக்கம் கண்டான்;
மண் பிளந்து அழுந்த ஆடும் கவந்தத்தின் வருக்கம் கண்டான்;
கண் பிளந்து அகல நோக்கும் வானவர் களிப்பும் கண்டான்;
புண் பிளந்தனைய நெஞ்சன் கோபுரத்து இழிந்து போந்தான்.

நகை பிறக்கின்ற வாயன், நாக்கொடு கடை வாய் நக்கப்
புகை பிறக்கின்ற மூக்கன், பொறி பிறக்கின்ற கண்ணன்,
மிகை பிறக்கின்ற நெஞ்சன், வெஞ் சினத் தீமேல் வீங்கி,
சிகை பிறக்கின்ற சொல்லன், அரசியல் இருக்கை சேர்ந்தான்.

19. ஆரை - மதில், காறின உள்ளம் - வருந்திய மனம்; 20. குமுதம் - செவ்வாம்பல்; பூசல் - அழுகை ஒலி; 22. ஆற்று வாய்முகம் - ஆற்றின் முகத் துவாரம், சங்க முகமாகிய வாயில்; 25. மிகை - செருக்கு.

# 34 இராவணன் தேர் ஏறு படலம்

**இராவணன் எஞ்சிய படையைத் திரட்டுதல்**

பூதரம் அனைய மேனி, புகை நிறப் புருவச் செந் தீ,
மோதரன் என்னும் நாமத்து ஒருவனை முறையின் நோக்கி,
' "ஏது உளது இறந்திலாதது இலங்கையுள் இருந்த சேனை
யாதையும் எழுக!" என்று ஆனை மணி முரசு எற்றுக!' என்றான். 1

எற்றின முரசினோடும் ஏழ்-இரு நூறு கோடி
கொற்றவாள் நிருதர்சேனை குழீஇயது; கொடித் திண் தேரும்,
சுற்றுறு துளைக் கைம் மாவும், துரகமும், பிறவும் தொக்க,
வற்றிய வேலை என்ன, இலங்கை ஊர் வறளிற்று ஆக. 2

ஈசனை, இமையா முக் கண் ஒருவனை, இருமைக்கு ஏற்ற
பூசனை முறையின் செய்து, திரு மறை புகன்ற தானம்
வீசினன் இயற்றி, மற்றும் வேட்டன வேட்டோர்க்கு எல்லாம்
ஆசு அற நல்கி, ஒல்காப் போர்த் தொழிற்கு அமைவது ஆனான்.

**இராவணன் போர்க்கோலம் பூணுதல்**

அருவி அஞ்சனக் குன்றிடை ஆயிரம் அருக்கர்
உருவினோடும் வந்து உதித்தனர் ஆம் என ஒளிர,
கருவி நான்முகன் வேள்வியில் படைத்ததும், கட்டிச்
செருவில் இந்திரன் தந்த பொன் கவசமும், சேர்த்தான். 4

வாள் வலம் பட, மந்தரம் சூழ்ந்த மாசுணத்தின்
தாள் வலந்து ஒளிர் தமனியக் கச்சொடும் சார்த்தி;
கோள் வலந்தன குவிந்தன ஆம் எனும் கொள்கை
மீள்வு இல் கிம்புரி மணிக் கடி சூத்திரம் வீக்கி; 5

மறை விரித்தன்ன மாடுறு மான மாக் கலுழன்
சிறை விரித்தன்ன கொய்சகம் மருங்கு உறச் சேர்த்தி;
முறை விரித்தன்ன முறுக்கிய கோசிக மருங்கில்
பிறை விரித்தன்ன வெள் எயிற்று அரவமும் பிணித்து; 6

மழைக் குலத்தொடு வான் உரும்ஏறு எலாம் வாரி
இழைத் தொடுத்தன அனைய வாள் உடை மணி ஆர்த்து;
முழைக் கிடந்த வல் அரிஇனம் முழங்குவ போல்வ
தழைக்கும் மின் ஒளிப் பொன் மலாச் சதங்கையும் சாத்தி; 7

34 : 1. மோதரன் - மகோதரன்; 4. கருவி நான்முகன் - உலகத் தோற்றத்துக்குக் காரணமான பிரமதேவன்; 5. வலத்தல் - சுற்றுதல்; 6. கோசிகம் - வெண்பட்டாடை.

உரும் இடித்த போது அரவு உறு மறுக்கம், வான் உலகின்
இரு நிலத்திடை, எவ் உலகத்திடை, யாரும்
புரிதரப் படும் பொலங் கழல் இலங்குறப் பூட்டி;
சரியுடைச் சுடர் சாய் நலம் சார்வுறச் சாத்தி; 8

நால்-அஞ்சு ஆகிய கரங்களில் நனந் தலை அனந்தன்
ஆலம் சார் மிடற்று அருங் கறை கிடந்தென, இலங்கும்
கோலம் சார் நெடுங் கோதையும் புட்டிலும் கட்டி;
தாலம் சார்ந்த மாசுணம் எனக் கங்கணம் தழுவ; 9

கடல் கடைந்த மால் வரையினைச் சுற்றிய கயிற்றின்
அடல் கடந்த தோள் அலங்கு போர் வலயங்கள் இலங்க;
உடல் கடைந்த நாள் ஒளியவன் உதிர்த்த பொன் கதிரின்
சுடர் தயங்குற, குண்டலம் செவியிடைத் தூக்கி; 10

உதயக் குன்றத்தோடு அத்தத்தின் உலாவுறு கதிரின்
துதையும் குங்குமத் தோளொடு தோளிடைத் தொடர;
புதை இருள் பகைக் குண்டலம் அனையவை பொலிய;
சிதைவு இல் திங்களும் மீனும்போல், முத்துஇனம் திகழ; 11

வேலைவாய் வந்து, வெய்யவர் அனைவரும் விடியும்
காலை உற்றனர் ஆம் எனக் கதிர்க் குலம் காலும்
மாலை பத்தின்மேல், மதியம் முன் நாளிடைப் பலவாய்
ஏல முற்றிய அனைய முத்தக் குடை இமைப்ப; 12

பகுத்த பல் வளக் குன்றினில் முழை அன்ன பகு வாய்
வகுத்த வான் கடைக் கடைதொறும் வளை எயிற்று ஈட்டம்,
மிகுத்த நீல வான் மேகம் சூழ் விசும்பிடை, தசும்பூடு
உகுத்த செக்கரின் பிறைக் குலம் முளைத்தன ஒக்க; 13

ஒத்த தன்மையின் ஒளிர்வன, தரளத்தின் ஓதம்
தத்துகின்றன, வீர பட்டத் தொகை தயங்க;
முத்த ஓடைய முரண் திசை முழு மத யானை
பத்து நெற்றியும் சுற்றிய பேர் எழில் படைக்க; 14

8. சரியுடை - சரிந்த உடையில்; சுடர் - சாய் நலம் - (கழலின்) சுடர் காய்தலினாலான அழகு; 9. தாலம் - நாக்கு, பனை மரம் என்பாரும் உண்டு; 10. கயிறு - கடை கயிறு, ஈண்டு வாசுகி என்னும் பாம்பாகிய கடை கயிறு; ஒளியவன் - சூரியன்; துவட்டா என்பவன் மகளாகிய சஞ்சை தன் கணவனான சூரியனது வெம்மை ஒளியைத் தாங்க முடியாமல் தனது உடல் நிழலைத் தேவியாக அமைத்துத் தந்தை வீட்டை அடைந்தாள். பிறகு பலகாலம் சென்றபின் துவட்டாவின் விருப்பத்திற்கு இணங்கிச் சூரியன் தன் ஒளி குறையு மாறு சாணை பிடிக்க ஒருப்பட்டனன் என்பது புராண வரலாறு; 12. மாலை - வரிசை, ஈண்டு முடியின் வரிசை; 14. தரளத்தின் ஓதம் - முத்துக்களின் ஒலி அலை.

புலவி மங்கையர் பூஞ் சிலம்பு அரற்று அடி போக்கி,
தலைமை கண்ணினர்த் தாழ்கிலா மணி முடித் தலங்கள்
உலகம் ஒன்றினை விளக்குறும் கதிரினை ஓட்டி,
அலகுஇல் எவ் உலகத்தினும் வயங்கு இருள் அகற்ற; 15

நாகம் நானிலம் நான்முகன் நாடு என நயந்த
பாகம் மூன்றையும் வென்று கொண்டு, அமரர் முன்பு அணிந்த
வாகை மாலையும் மருங்கு உற, வரி வண்டொடு அளவி;
தோகை அன்னவர் விழி தொடர் தும்பையும் சூட்டி; 16

அகழும் வேலையை, காலத்தை, அளக்கர் நுண் மணலை,
நிகழும் மீன்களை, விஞ்சையை, நினைப்பது என்? நின்ற
இகழ்வு இல் பூதங்கள் இறப்பினும், இறுதிசெல்லாத
புகழ் என, சரம் தொலைவு இலாத் தூணி பின் பூட்டி; 17

'வருக, தேர்!' என, வந்தது—வையமும் வானும்
உரக தேயமும் ஒருங்கு உடன் இவரினும், உச்சிச்
சொருகு பூ அன்ன சுமையது; துரகம் இன்று எனினும்.
நிருதர் கோமகன் நினைந்துழிச் செல்வது, ஓர் இனைப்பில். 18

ஆயிரம் பரி அமுதொடு வந்தவும், அருக்கன்
பாய் வயப் பசுங் குதிரையின் வழியவும், படர் நீர்
வாய் மடுக்கும் மா வடவையின் வயிற்றின், வன் காற்றின்
நாயகற்கு, வந்து உதித்தவும், பூண்டது நலத்தின். 19

பாரில் செல்வது, விசும்பிடைப் படர்வது; பரந்த
நீரில் செல்வது; நெருப்பினும் செல்வது; நிமிர்ந்த
போரில் செல்வது; பொன் நெடு முகட்டிடை விரிஞ்சன்
ஊரில் செல்வது; எவ் உலகத்தும் செல்வது, ஓர் இமைப்பின்.

எண் திசைப் பெருங் களிற்றிடை மணி என இசைக்கும்
கண்டை ஆயிர கோடியின் தொகையது; கதிரோன்
மண்டிலங்களை மேருவில் குவித்தென வயங்கும்
அண்டம் விற்கும் நன் காசுஇனம் குயிற்றியது, அடங்க. 21

முனைவர் வானவர் முதலினர், அண்டத்து முதல்வர்
எனைவர் ஈந்தவும், இகலினில் இட்டவும், இயம்பா
வினையின் வெய்யன படைக்கலம், வேலை என்று இசைக்கும்
சுனையின் நுண் மணல் தொகையன சுமந்தது, தொக்க. 22

15. அடி போக்கி - பாதங்களைத் தவிர்த்து; தலைமை கண்ணினர் - தலைமையைக் கருதுகின்றவர்கள்; 16. நாகம் - பாதாளம்; அணிந்த - அணிவித்த; 18. இவர்தல் - ஏறி அமர்தல்; 21. கண்டை - ஒலிக்கும் மணி; அண்டம் விற்கும் காசு - அண்டத்தையே விலையாகக் கொள்ளும் சிறந்த இரத்தினம்.

கண்ணன் நேமியும், கண்ணுதல் கணிச்சியும், கமலத்து
அண்ணல் குண்டிகைக் கலசமும், அழியினும், அழியாத்
திண்மை சான்றது; தேவரும் உணர்வு அருஞ் செய்கை
உண்மை ஆம் எனப் பெரியது, வென்றியின் உறையுள். 23

**முறைப்படி தேருக்கு வழிபாடு செய்து, இராவணன் தேர் ஏறுதல்**

அனைய தேரினை அருச்சனை வரன்முறை ஆற்றி,
இனையர் என்பது ஓர் கணக்கு இலா மறையவர் எவர்க்கும்
வினையின் நல் நிதி முதலிய அளப்ப அரும் வெறுக்கை
நினையின் நீண்டது ஓர் பெருங் கொடை அருங் கடன் நேர்ந்தான். 24

ஏறினான் தொழுது; இந்திரன் முதலிய இமையோர்
தேறினார்களும் தியங்கினார், மயங்கினார், திகைத்தார்;
வேறு நாம் செயும் வினை இலை, மெய்யின் ஐம் புலனும்
ஆறினார்களும் அஞ்சினார், உலகு எலாம் அனுங்க. 25

**இராவணன் வஞ்சினம்**

'மன்றல் அம் குழல் சனகி தன் மலர்க் கையான் வயிறு
கொன்று, அலந்தலைக் கொடு, நெடுந் துயரிடைக் குளித்தல்;
அன்று இது என்றிடின், மயன் மகள் அத் தொழில் உறுதல்;
இன்று, இரண்டின் ஒன்று ஆக்குவென், தலைப்படின்' என்றான்.

பல களம் தலை மௌலியோடு இலங்கலின், பல் தோள்
அலகு அளந்து அறியா நெடும் படைகளோடு அலங்க,
விலகு அளம் தரு கடல் தரை விசும்பொடு வியப்ப,
உலகு அளந்தவன் வளர்ந்தனன் ஆம் என உயர்ந்தான். 27

விசும்பு விண்டு இரு கூறுற, கல் குலம் வெடிப்ப,
பசும் புண் விண்டெனப் புலி பட, பகலவன் பசும் பொன்
தசும்பு நின்று இடைந்து இரிந்திட, மதி தகை அமிழ்தின்
அசும்பு சிந்தி நொந்து உலைவுற, தோள் புடைத்து ஆர்த்தான்.

'நணித்து வெஞ் சமம்' என்பது ஓர் உவகையின் நலத்தால்,
திணித் தடங் கிரி வெடித்து உக, சிலையை நாண் தெறித்தான்;
மணிக் கொடுங் குழை வானவர், தானவர், மகளிர்
துணுக்கம் எய்தினர், மங்கல நாண்களைத் தொட்டார். 29

23. செய்கை - தொழில் நுட்பம்; 26. அலந்தலை - கலக்கம்; மயன் மகள் - மண்டோதரி; 27. களம் - கழுத்து; விலகு அளம் - விலகியுள்ள உப்பளம்; 29. குழை - குண்டலம்.

போர்க்களத்தில் இராவணன் தோன்றுதல்

சுரிக்கும் மண்டலம் தூங்கு நீர்ச் சுரிப்பு உற, வீங்க,
இரைக்கும் பல் உயிர் யாவையும் நடுக்கமுற்று இரிய,
'பரித்திலன் புவி, படர் சுடர் மணித் தலை பலவும்
விரித்து எழுந்தனன், அனந்தன்மீது' என்பது ஓர் மெய்யான்.

தோன்றினன் வந்து—சுரர்களோடு அசுரரே தொடங்கி
மூன்று நாட்டினும் உள்ளவர் யாவரும் முடிய,
'ஊன்றினன் செரு' என்று உயிர் உமிழ்தர, உதிரம்
கான்று, நாட்டங்கள் வடஅனற்கு இரு மடி கனல. 31

உலகில் தோன்றிய கலக்கம் கண்டு, சுக்கிரீவன் முதலியோர் துணுக்கமுறுதல்

உலகில் தோன்றிய மறுக்கமும், இமைப்பிலர் உலைவும்,
மலையும் வானமும் வையமும் மறுகுறு மறுக்கும்,
அலை கொள் வேலைகள் அஞ்சின சலிக்கின்ற அயர்வும்,
தலைவனே முதல் தண்டல் இலோர் எலாம் கண்டார். 32

'பீறிற்றும் அண்டம்!' என்பது ஓர் ஆகுலம் பிறக்க,
வேறிட்டு ஓர் பெருங் கம்பலை பம்பி மேல் வீங்க,
'மாறிப் பல் பொருள் வகுக்குறும் காலத்து மறுக்கம்
ஏறிற்று; உற்றுளது என்னைகொலோ?' என எழுந்தார். 33

கடல்கள் யாவையும், கல் மலைக் குலங்களும், காரும்,
திடல் கொள் மேருவும், விசும்பிடைச் செல்வன சிவண,
அடல் கொள் சேனையும், அரக்கனும், தேரும், வந்து ஆர்க்கும்
கடல் கொள் பேர் ஒலிக் கம்பலை என்பதும் கண்டார். 34

இராவணன் வருகையை வீடணன் இராமனுக்குக் கூறுதல்

'எழுந்து வந்தனன் இராவணன்; இராக்கதத் தானைக்
கொழுந்து முந்தி வந்து உற்றது; கொற்றவ! குலுங்குற்று
அழுந்துகின்றது, நம் பலம்; அமரரும் அஞ்சி,
விழுந்து சிந்தினர்' என்றனன், வீடணன், விரைவான். 35

30. சுரித்தல் - வளைந்து கிடத்தல், சுழலுதல்; பரித்தல் - தாங்குதல்; 32. தண்டல் இலோர் - தடுத்தற்கு அரிய வலிமையுடையோர்; 33. பல் பொருள் மாறி வகுக்குறும் காலம் - ஊழி முடிவுக் காலம்.

# 35 இராமன் தேர் ஏறு படலம்

### இராமன் போர்க்கோலம் பூண்டு எழுதல்

தொழும் கையொடு, வாய் குழறி, மெய்ம் முறை துளங்கி,
விழுந்து கவி சேனை இடு பூசல் மிக, விண்ணோர்
அழுந்து படு பால் அமளி, 'அஞ்சல்' என, அந் நாள்,
எழுந்தபடியே கடிது எழுந்தனன், இராமன். 1

கடக் களிறு எனத் தகைய கண்ணன், ஒரு காலன்
விடக் கயிறு எனப் பிறழும் வாள் வலன் விசித்தான்,
'மடக்கொடி துயர்க்கும், நெடு வானின் உறைவோர்தம்
இடர்க் கடலினுக்கும், முடிவு இன்று' என இசைத்தான். 2

தன் அக வசத்து உலகு தங்க, ஒரு தன்னின்
பின்னக அசத்த பொருள் இல்லை; பெரியோனை
மன்ன கவ சத்து உற வரிந்தது என என்கோ?
இன்ன கவசத்தையும் ஓர் ஈசன் எனலாமால். 3

புட்டிலொடு கோதைகள், புழுங்கி எரி கூற்றின்
அட்டில் எனலாய மலர் அங்கையின் அடக்கிக்
கட்டி, உலகின் பொருள் எனக் கரை இல் வாளி
வட்டில் புறம் வைத்து, அயல் வயங்குற வரிந்தான். 4

### இராமனுக்குத் தேர் அனுப்புமாறு, சிவபெருமான் தேவர்களிடம் கூறுதல்

'மூண்ட செரு இன்று அளவில் முற்றும்; இனி, வெற்றி
ஆண்தகையது; உண்மை; இனி அச்சம் அகல்வுற்றீர்,
பூண்ட மணி ஆழி வய மா நிமிர் பொலந் தேர்
ஈண்ட விடுவீர், அமரில்' என்று, அரன் இசைத்தான். 5

### இந்திரன், மாதலிக்குக் கட்டளையிட அவன் தேர் கொணர்தல்

தேவர் அது கேட்டு, 'இது செயற்கு உரியது' என்றார்;
ஏவல் புரி இந்திரனும், அத் தொழில் இசைந்தான்;
'மூஉலகும் முந்தும் ஓர் கணத்தின்மிசை முற்றிக்
கோவில் புரிகேன்; பொரு இல் தேர் கொணர்தி' என்றான். 6

35 : 3. தன் அக வசத்து - தன்னுள்ளே; பின்னகம் - வேறுபட்டது; அசத்தம் - அசக்தம், வலிமை பெறாதது; கவ - கவ்வ; சத்து - வலிமை; கடவுள் எல்லாப் பொருளிலும் தங்கி அவ்வப் பொருட்குச் சத்தியைத் தருகின்றான் என்பதும், அவனிலும் வேறாகி அவனால் வலிவு பெறாத ஒரு பொருளும் இல்லை என்பதும் நூற்கொள்கை; 4. வட்டில் - அம்பறாத் தூணி.

மாதலி கொணர்ந்த தேரின் சிறப்பு

**மா**தலி கொணர்ந்தனன், மகோததி வளாவும்
பூதலம் எழுந்து படர் தன்மைய பொலந் தேர்;
சீத மதி மண்டலமும் ஏனை உளவும் திண்
பாதம் என நின்றது, படர்ந்தது விசும்பில். 7

குலக் கிரிகள் ஏழின் வலி கொண்டு உயர் கொடிஞ்சும்,
அலைக்கும் உயர் பாரின் வலி ஆழியினின் அச்சும்,
கலக்கு அற வகுத்தது; கதத்து அரவம் எட்டின்
வலக் கயிறு கட்டியது; முட்டியது வானை. 8

ஆண்டினொடு நாள், இருது, திங்கள், இவை என்னு,
மீண்டனவும் மேலனவும் விட்டு, விரி தட்டில்
பூண்டு உளது; தாரகை மணிப் பொரு இல் கோவை
நீண்ட புனை தாரினது; நின்றுளது குன்றின். 9

மாதிரம் அனைத்தையும் மணிச் சுவர்கள் ஆகக்
கோது அற வகுத்தது; மழைக் குழுவை எல்லாம்
மீது உறு பதாகை என வீசியது; மெய்ம்மைப்
பூதம் அவை ஐந்தின் வலியின் பொலிவது அம்மா! 10

மரத்தொடு மருந்து உலகில் யாவும் உள வாரித்
தரத்தொடு தொடுத்த கொடி தங்கியது; சங்கக்
கரத்தொடு தொடுத்த கடல் மீது நிமிர் காலத்து,
உரத்தொடு கடுத்த கதழ் ஓதை அதன் ஓதை. 11

பண்டு அரிதன் உந்தி அயன் வந்த பழ முந்தைப்
புண்டரிக மொட்டு அனைய மொட்டினது; பூதம்
உண்டவை வயிற்றிடை ஒடுக்கி உமிழ்கிற்போன்,
அண்டச மணிச் சயனம் ஒப்பது, அகலத்தின்.* 12

வேதம் ஒரு நாலும், நிறை வேள்விகளும், வெவ் வேறு
ஓதம் அவை ஏழும், மலை ஏழும், உலகு ஏழும்,
பூதம் அவை ஐந்தும், எரி மூன்றும், நனி பொய் தீர்
மா தவமும், ஆவுதியும், ஐம் புலனும், மற்றும். 13

7. மகோததி - பெருங்கடல்; 9. மீண்டன - கழிந்தன; மேலன - இனி வர இருப்பன; 11. சங்கக் கரம் - தொகுதியான அலை; கதழ் - கடுமை; 12. அண்டசம் - முட்டையில் தோன்றியது, ஈண்டு ஆதிசேடனாகிய பாம்பு.

அருங் கரணம் ஐந்து, சுடர் ஐந்து, திசை நாலும்,
ஒருங்கு அரணம் மூன்றும், உழல் வாயு ஒரு பத்தும்,
பெரும் பகலும், நீள் இரவும் என்று இவை பிணிக்கும்
பொரும் பரிகள் ஆகி நனி பூண்டது, பொலந் தேர். 14

**மாதலி இராமனிடம் தேர் கொணர்தல்**

வந்ததனை வானவர் வணங்கி, 'வலியோய்! நீ
எந்தை தர வந்தனை; எமக்கு உதவுகிற்பாய்;
தந்தருள்வை வென்றி' என நின்று, தகை மென் பூச்
சிந்தினர்கள்; மாதலி கடாவி, நனி சென்றான். 15

'வினைப் பகை விசைக் கொடு விசும்பு உருவி, மான
மனத்தின் விசை பெற்றுளது வந்தது' என, வானோடு
அனைத்து உலகமும் தொழ, அடைந்தது, அமலன்பால்;
நினைப்பும் இடை பிற்பட, நிமிர்ந்தது நெடுந் தேர். 16

'அலரி தனி ஆழி புனை தேர் இது எனில், அன்றால்;
உலகின் முடிவில் பெரிய ஊழ் ஒளி இது அன்றால்;
நிலைகொள் நெடு மேரு கிரி அன்று; நெடிதுஅம்மா;
தலைவர் ஒரு மூவர் தனி மானம் இதுதானோ? 17

'என்னை இது நம்மை இடை எய்தல்?' என எண்ணா,
மன்னவர்தம் மன்னன் மகன், மாதலியை, 'வந்தாய்,
பொன்னின் ஒளிர் தேர் இது கொடு, ஆர் புகல?' என்றான்;
அன்னவனும் அன்னதனை ஆக உரை செய்தான்; 18

'முப் புரம் எரித்தவனும், நான்முகனும், முன்நாள்,
அப் பகல் இயற்றி உளது; ஆயிரம் அருக்கர்க்கு
ஒப்பு உடையது; ஊழி திரிகாறும் உலைவு இல்லா
இப் பொரு இல் தேர் வருவது இந்திரனது;—எந்தாய்! 19

'அண்டம் இது போல்வன அளப்பு இல அடுக்கிக்
கொண்டு பெயரும்; குறுகும்; நீளும்; அவை கோளுற்று
உண்டவன் வயிற்றினையும் ஒக்கும், உவமிக்கின்;
புண்டரிக! நின் சரம் எனக் கடிது போமால். 20

14. சுடர் ஐந்து - நாற்றிசையில் நான்கு தீயும் மேலே சூரியனும் ஆகிய பஞ்சாக்கினிகள்; வாயு ஒரு பத்து - பிர ணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பன; 16. வினைப் பகை - வினைக்குப் பகையாகிய மெய்ஞ்ஞானம்; 17. அலரி - சூரியன்; தனி ஆழி - ஒற்றைச் சக்கரம்; 18. ஆக - பொருந்துமாறு.

‘கண்ணும் மனமும் கடிய காலும் இவை கண்டால்,
உண்ணும் விசையால்; உணர்வு பின் படர ஓடும்;
விண்ணும் நிலனும் என விசேடம் இலது; அஃதே,
எண்ணும் நெடு நீரினும், நெருப்பிடையும்—எந்தாய்! 21

‘நீரும் உளவே, அவை ஓர் ஏழு? நிமிர்கிற்கும்
பாரும் உளவே, அதின் இரட்டி? அவை பண்பின்
பேரும் ஒரு காலை, ஒரு காலும் இடை பேராத்
தேரும் உளதே, இது அலால்?—உலகு செய்தோய்! 22

‘தேவரும், முனித் தலைவரும், சிவனும், மேல்நாள்,
மூஉலகு அளித்த அவனும், முதல்வ! முன் நின்று
ஏவினர்; சுரர்க்கு இறைவன் ஈந்துள இது’ என்றான்,
மாவின் மனம் ஒப்ப உணர் மாதலி, வலித்தான். 23

**தேர் குறித்து இராமன் கொண்ட ஐயமும் தெளிவும்**

ஐயன் இது கேட்டு, ‘இகல் அரக்கர் அகல் மாயச்
செய்கைகொல்?’ எனச் சிறிது சிந்தையில் நினைந்தான்;
மெய் அவன் உரைத்தது என வேண்டி, இடை பூண்ட
மொய் உளை வயப் பரி மொழிந்த, முது வேதம். 24

‘இல்லை இனி, ஐயம்’ என எண்ணிய இராமன்,
நல்லவனை, ‘நீ உனது நாமம் நவில்க!’ என்ன,
‘வல் இதனை ஊர்வது ஒரு மாதலி எனப் பேர்
சொல்லுவர்’ எனத் தொழுது, நெஞ்சினொடு சொன்னான். 25

மாருதியை நோக்கி, இள வாள் அரியை நோக்கி,
‘நீர் கருதுகின்றதை நிகழ்த்தும்’ என, நின்றான்
ஆரியன்; வணங்கி, அவர், ‘ஐயம் இலை, ஐயா!
தேர் இது புரந்தரனது’ என்றனர், தெளிந்தார். 26

விழுந்து புரள் தீவினை நிலத்தொடு வெதும்ப,
தொழும் தகைய நல்வினை களிப்பினொடு துள்ள,
அழுந்து துயரத்து அமரர் அந்தணர் கை முந்துற்று
எழுந்து தலை ஏற, இனிது ஏறினன்—இராமன். 27

21. விசையால் உண்ணும் - வேகத்தினால் (அவற்றை) உண்டு விடும் (வெல்லும்); உணர்வு - உயிரின் அறிவு; விசேடம் - வேறுபாடு; 23. சுரர்க்கு இறைவன் - தேவர் தலைவனாகிய இந்திரன்; மா - குதிரை.

# 36 இராவணன் வதைப் படலம்

### இராமன் தேரில் செல்லுதல்

ஆழி அம் தடந் தேர், வீரன் ஏறலும், அலங்கல் சில்லி
பூழியில் சுரித்த தன்மை நோக்கிய புலவர் போத,
ஊழி வெங் காற்றின் வெய்ய கலுழனை ஒன்றும் சொல்லார்,
வாழிய அனுமன் தோளை ஏத்தினர், மலர்கள் தூவி 1

'எழுக, தேர்; சுமக்க, எல்லோம் வலியும்; புக்கு இன்றே பொன்றி
விழுக, போர் அரக்கன்; வெல்க, வேந்தர்க்கு வேந்தன்; விம்மி
அழுக, பேர் அரக்கிமார்' என்று ஆர்த்தனர், அமரர்; ஆழி
முழுகி மீது எழுந்தது என்னச் சென்றது, மூரித் திண் தேர். 2

### தேரை இராமன் எதிரே விடுமாறு இராவணன் சாரதிக்குக் கூறுதல்

அன்னது கண்ணின் கண்ட அரக்கனும், 'அமரர் ஈந்தார்
மன் நெடுந் தேர்' என்று உன்னி, வாய் மடித்து எயிறு தின்றான்;
பின், 'அது கிடக்க' என்னா, தன்னுடைப் பெருந் திண் தேரை,
மின் நகு வரி வில் செங் கை இராமன்மேல் விடுதி' என்றான். 3

இரிந்த வான் கவிகள் எல்லாம், 'இமையவர் இரதம் ஈந்தார்;
அரிந்தமன் வெல்லும் என்றற்கு ஐயுறவு இல்' என்று, அஞ்சார்,
திரிந்தனர்; மரமும் கல்லும் சிந்தினர்; 'திசையோடு அண்டம்
பிரிந்தனகொல்!' என்று எண்ணப் பிறந்தது, முழக்கின் பெற்றி.

வார்ப் பொலி முரசின் ஓதை, வாய்ப்புடை வயவர் ஓதை,
போர்த் தொழில் களத்து மற்றும் முற்றிய பொம்மல் ஓதை,
ஆர்த்தலின், யாரும் பார் வீழ்ந்து அடங்கினர், இருவர் ஆடல்
தேர்க் குரல் ஓதை பொங்க, செவி முற்றும் செவிடு செய்த. 5

### இராமன் கருத்துக்கு இயைய மாதலி தேர் ஓட்டுதல்

மாதலி வதனம் நோக்கி, மன்னர்தம் மன்னன் மைந்தன்,
'காதலால் கருமம் ஒன்று கேட்டியால்; களித்த சிந்தை
ஏதலன் மிகுதி எல்லாம் இயற்றிய பின்றை, என்தன்
சோதனை நோக்கிச் செய்தி; துடிப்பு இலை' என்னச் சொன்னான்.

36 : 2. ஆழி - சக்கரம்; 4. அரிந்தமன் - பகைவரை வெல்ல வல்லவன்; இராமன்; 5. ஆடல் தேர் - இயக்கம் உடைய தேர்; 6. காதலால் - அன்போடு.

'வள்ளல்! நின் கருத்தும், மாவின் சிந்தையும், மாற்றலார்தம்
உள்ளமும், மிகையும், உற்ற குற்றமும், உறுதிதானும்,
கள்ளம் இல் காலப் பாடும், கருமமும், கருதேன்ஆகில்,
தெள்ளிது என் விஞ்சை!' என்றான்; அமலனும், 'செவ்விது!' என்றான்.

மகோதரனை, இராவணன், 'இலக்குவனோடு போர் செய்' எனல்

'தோன்றினன் இராமன், ஈதால், புரந்தரன் துரகத் தேர்மேல்;
என்று இருவருக்கும் வெம் போர் எய்தியது; இடையே, யான் ஓர்
சான்று என நிற்றல் குற்றம்; தருதியால் விடை ஈண்டு' என்றான்—
வான் தொடர் குன்றம் அன்ன மகோதரன் இலங்கை மன்னை. 8

'அம்புயம் அனைய கண்ணன்தன்னை யான் அரியின் ஏறு
தும்பியைத் தொலைத்தது என்னத் தொலைக்குவென்; தொடர்ந்து நின்ற
தம்பியைத் தடுத்தியாயின், தந்தனை கொற்றம்' என்றான்; [டான்.
வெம்பு இகல் அரக்கன், 'அஃதே செய்வென்' என்று, அவனின் மீண்

மகோதரன் இராமனுடன் பொருது மடிதல்

மீண்டவன் இளவல் நின்ற பாணியின் விலங்கா முன்னம்,
ஆண்தகை தெய்வத் திண் தேர் அணுகியது; அணுகும்காலை,
மூண்டு எழு வெகுளியோடும், மகோதரன் முனிந்து, 'முட்டத்
தூண்டுதி தேரை' என்றான்; சாரதி தொழுது சொன்னான்: 10

'எண் அருங் கோடி வெங் கண் இராவணரேயும், இன்று
நண்ணிய பொழுது மீண்டு நடப்பரோ, கிடப்பது அல்லால்?
அண்ணல்தன் தோற்றம் கண்டால், ஐய! நீ கமலம் அன்ன
கண்ணனை ஒழிய, அப் பால் செல்வதே கருமம்' என்றான். 11

என்றலும், எயிற்றுப் பேழ் வாய் மடித்து, 'அடா! எடுத்து நின்னைத்
தின்றனென்எனினும் உண்டாம் பழி' என, சீற்றம் சிந்தும்
குன்று அன தோற்றத்தான்தன் கொடி நெடுந் தேரின் நேரே
சென்றது, அவ் இராமன் திண் தேர்; விளைந்தது, திமிலத் திண் போர்.

பொன் தடந்தேரும், மாவும், பூட்கையும், புலவு உண் வாட்கைக்
கல் தடந் திண் தோள் ஆளும், நெருங்கிய கடல்கள் எல்லாம்
வற்றின, இராமன் வாளி வடஅனல் பருக; வன் தாள்
ஒற்றை வன் தடந் தேரோடும் மகோதரன் ஒருவன் சென்றான்.

7. விஞ்சை - வித்தை, ஈண்டுத் தேரோட்டும் கலை; 10. இளவல் நின்ற பாணி - இலக்குவன் நின்ற இடம்; 13. பூட்கை - யானை; வன் தாள் - வலிய சக்கரம்.

அசனிஏறு இருந்த கொற்றக் கொடியின்மேல், அரவத் தேர்மேல்,
குசை உறு பாகன்தன்மேல், கொற்றவன் குவவுத் தோள்மேல்,
விசை உறு பகழி மாரி வித்தினான்; விண்ணினோடும்
திசைகளும் கிழிய ஆர்த்தான்; தீர்த்தனும், முறுவல் செய்தான்.

வில் ஒன்றால், கவசம் ஒன்றால், விறலுடைக் கரம் ஓர் ஒன்றால்,
கல் ஒன்று தோளும் ஒன்றால், கழுத்து ஒன்றால், கடிதின் வாங்கி,
செல் ஒன்று கணைகள், ஐயன் சிந்தினான்; செப்பி வந்த
சொல் ஒன்றாய்ச் செய்கை ஒன்றாய்த் துணிந்தனன், அரக்கன் துஞ்சி.

**மகோதரன் இறந்தபின் இராவணன், இராமனொடு பொர விரைதல்**

மோதரன் முடிந்த வண்ணம், மூவகை உலகத்தோடும்
மாதிரம் எவையும் வென்ற வன் தொழில் அரக்கன் கண்டான்;
சேதனை உண்ணக் கண்டான்; 'செல விடு, செல விடு!' என்றான்
சூதனும் முடுகித் தூண்ட, சென்றது, துரகத் திண் தேர். 16

'பனிப் படாநின்றது என்னப் பரக்கின்ற சேனை பாறித்
தனிப்படான் ஆகின் இன்னம் தாழ்கிலன்' என்னும் தன்மை
நுனிப் படாநின்ற வீரன், அவன் ஒன்றும் நோக்காவண்ணம்
குனிப் படாநின்ற வில்லால், ஒல்லையின் நூறிக் கொன்றான். 17

அடல் வலி அரக்கற்கு அப் போழ்து, அண்டங்கள் அழுந்த, மண்டும்
கடல்களும் வற்ற, வெற்றிக் கால் கிளர்ந்து உடற்றும்காலை,
வடவரை முதல ஆன மலைக் குலம் சலிப்ப மானச்,
சுடர் மணி வலயம் சிந்தத் துடித்தன, இடத்த பொன்-தோள்.

உதிர மாரி சொரிந்தது, உலகு எலாம்;
அதிர வானம் இடித்தது; அரு வரை
பிதிர வீழ்ந்தது, அசனி; ஒளி பெருக்
கதிரவன்தனை ஊரும் கலந்ததால். 19

வாவும் வாசிகள் தூங்கின; வாங்கல் இல்
ஏவும் வெஞ் சிலை நாண் இடை இற்றன;
நாவும் வாயும் உலர்ந்தன; நாள்மலர்ப்
பூவின் மாலை புலால் வெறி பூத்ததால்.* 20

எழுது வீணை கொடு ஏந்து பதாகைமேல்
கழுகும் காகமும் மொய்த்தன; கண்கள் நீர்
ஒழுகுகின்றன, ஓடு இகல் ஆடல் மா;
தொழுவில் நின்றன போன்றன, சூழி மா. 21

14. அசனி ஏறு - இடியேறு, இராமன் ஏறியிருந்த தேர் இந்திரனுக்கு உரியதாகலின் அவன் கொடியாகிய இடிக்கொடி கட்டப்பட்டிருந்தது; குசை - கடிவாளம்; 16. சோதனை உண்ணல் - பிளவுபடுதல்; சேதனை - பிளவு; 19. ஊர் - ஊர்கோள், பரிவேடம்.

இன்ன ஆகி, இமையவர்க்கு இன்பம் செய்
துன்னிமித்தங்கள் தோன்றின; தோன்றவும்,
அன்னது ஒன்றும் நினைந்திலன், 'ஆற்றுமோ,
என்னை வெல்ல, மனித்தன்?' என்று எண்ணுவான்.* 22

வீங்கு தேர் செலும் வேகத்து, வேலை நீர்
ஓங்கு நாளின் ஒதுங்கும் உலகுபோல்
தாங்கல் ஆற்றகிலார், தடுமாறித் தாம்
நீங்கினர், இரு பாலும் நெருங்கினர். 23

**எதிர் எதிரே நிற்கும் இராம - இராவணர் தோற்றம்**

கருமமும் கடைக்கண் உறு ஞானமும்,
அருமை சேரும் அவிஞ்சையும் விஞ்சையும்,
பெருமை சால் கொடும் பாவமும் பேர்கலாத்
தருமமும் எனச் சென்று, எதிர் தாக்கினர். 24

சிரம் ஓர் ஆயிரம் தாங்கிய சேடனும்,
உரவு கொற்றத்து உவணத்து அரசனும்,
பொர உடன்றனர் போலப் பொருந்தினர்,
இரவும் நண்பகலும் என ஏற்றனர். 25

வென்றி அம் திசை யானை வெகுண்டன
ஒன்றை ஒன்று முனிந்தவும் ஒத்தனர்;
அன்றியும், நரசிங்கமும் ஆடகக்
குன்றம் அன்னவனும் பொரும் கொள்கையார். 26

துவனி வில்லின்பொருட்டு ஒரு தொல்லைநாள்,
'எவன் அவ் ஈசன்?' என்பார் பொர, ஏற்று, எதிர்
புவனம் மூன்றும் பொலங் கழலால் தொடும்
அவனும் அச் சிவனும் எனல் ஆயினர். 27

கண்ட சங்கரன் நான்முகன் கைத் தலம்
விண்டு அசங்க, தொல் அண்டம் வெடித்திட,
அண்ட சங்கத்து அமரர்தம் ஆர்ப்பு எலாம்
உண்ட சங்கம் இராவணன் ஊதினன். 28

24. கருமம் - வினை; கடைக்கண் உறு ஞானம் - நன்னெறியின் கடைசியில் உள்ள ஞானம்; 27. துவனி வில் - ஒலியுடைய வில்; 28. அசங்குதல் - நடுங்குதல்; சங்கத்து அமரர் - தொகுதியாய் உள்ள தேவர்கள்.

சொன்ன சங்கினது ஓசை துளக்குற,
'என்ன சங்கு?' என்று இமையவர் ஏங்குற,
அன்ன சங்கைப் பொருமையினுல், அரி-
தன்ன வெண் சங்கு தானும் முழங்கிற்ருல். 29

ஐயன் ஐம் படைதாமும் அடித் தொழில்
செய்ய வந்து அயல் நின்றன; தேவரில்
மெய்யன் அன்னவை கண்டிலன், வேதங்கள்
பொய் இல் தன்னைப் புலன் தெரியாமைபோல். 30

ஆசையும் விசும்பும் அலை ஆழியும்
தேசமும் மலையும் நெடுந் தேவரும்
கூச, அண்டம் குலுங்க, குலம் கொள் தார்
வாசவன் சங்கை மாதலி வாய்வைத்தான். 31

இராம – இராவணப் போர் தொடக்கம்

துமில வாளி அரக்கன் துரப்பன
விமலன் மேனியின் வீழ்வதன் முன்னமே,
கமல வான் முக நாடியர் கண் கணை
அமலன் மேனியில் தைத்த அனந்தமால். 32

சென்ற தேர் ஓர் இரண்டினும் சேர்த்திய
குன்றி வெங் கண் குதிரை குதிப்பன,
ஒன்றை ஒன்று உற்று, எரி உக நோக்கின;
தின்று தீர்வன போலும் சினத்தன. 33

கொடியின்மேல் உறை வீணையும், கொற்ற மா
இடியின் ஏறும், முறையின் இடித்தன—
படியும் விண்ணும் பரவையும் பண்பு அற
முடியும் என்பது ஓர் மூரி முழக்கினுல். 34

ஏழு வேலையும் ஆர்ப்பு எடுத்து என்னலாம்,
வீழி வெங் கண் இராவணன் வில் ஒலி;
ஆழி நாதன் சிலை ஒலி, அண்டம் விண்டு
ஊழி பேர்வுழி, மா மழை ஒத்ததால். 35

31. குலம் - சிறப்பு; 32. துமிலம் - ஆரவாரம்; 33. குன்றி - குன்றிமணி; 35. வீழி - விழுதி என்னும் ஒருவகைச் செடி, இங்கு வீழியின் கனி.

ஆங்கு நின்ற அனுமனை ஆதியாம்
வீங்கு வெஞ் சின வீரர் விழுந்தனர்—
ஏங்கி நின்றது அலால், ஒன்று இமைத்திலர்,
வாங்கு சிந்தையர், செய்கை மறந்துளார். 36

'ஆவது என்னை கொலாம்?' என்று அறிகிலார்,
'ஏவர் வெல்வர்?' என்று எண்ணலர் ஏங்குவார்,
போவர், மீள்வர், பதைப்பர், பொருமலால்,
தேவரும் தங்கள் செய்கை மறந்தனர். 37

சேண அந்தரம் நோக்கலும் திண் சரம்,
பூண முந்தின, சிந்தின பூ மழை,
காண வந்த கடவுளர் கை எலாம்—
ஆணவம் துணை யார் உளர் ஆவரோ? 38

நீண்ட மின்னெடு வான் நெடு நீல வில்
பூண்டு இரண்டு எதிர் நின்றன போன்றன—
ஆண்ட வில்லிதன் வில்லும், அரக்கன்தன்
தீண்ட வல்லர் இலாத சிலையுமே. 39

அரக்கன் அன்று எடுத்து ஆர்க்கின்ற ஆர்ப்பும், போர்ப்
பொருப்பு மெய் வில் தெழிப்பும் உண்டேகொலாம்—
குரைக்கும் வேலையும் மேகக் குழாங்களும்
இரைத்து இடிக்கின்ற, இன்றும் ஓர் ஈறு இல! 40

மண்ணில் செல்வன செல், இனும் மாசு அற
எண்ணின் சூல் மழை அல்ல; இராவணன்
கண்ணின் சிந்திய தீக் கடு வேகத்த
விண்ணில் செல்வன, மீண்டு இன்று வீழ்வன. 41

மால் கலங்கல் இல் சிந்தையன் மாதிரம்
நால் கலங்க நகும்தொறும், நாவொடு
கால் கலங்குவர், தேவர்; கண மழைச்
சூல் கலங்கும்; இலங்கை துளங்குமால். 42

இக் கணத்தும் எறிப்ப தடித்து என,
நெக்க மேகத்து உதிக்கும் நெருப்பு என,
பக்கம் வீசும் படைச் சுடர், பல் திசை
புக்குப் போக, பொடிப்பன போக்கு இல. 43

36. வாங்கு சிந்தையர் - பறிகொடுத்த சிந்தையர்; 39. நீல வில் - வான வில்; நீல நிறமே ஏனையவற்றினும் மேம்பட்டுத் தோன்றுதலின் நீல வில் எனப் பட்டது; 41. செல்வன - வீழ்வன; செல் - இடி; மழை அல்ல - மழை தந்தன அல்ல.

### இராவணன் சின மொழி

'கொற்ற அம்பிற் கொடு கொல்லுதல் கோள் இலாச்
சிற்றையாளனைத் தேவர்தம் தேரொடும்
பற்றி வானில் சுழற்றி, படியின்மேல்
எற்றுவேன்' என்று உரைக்கும், இரைக்குமால். 44

'தடித்து வைத்தன்ன வெங் கணை தாக்கு அற,
வடித்து வைத்தது மானிடற்கே? வலி
ஒடித்து, தேரை உதிர்த்து, ஒரு வில்லொடும்
பிடித்துக் கொள்வென், சிறை' எனப் பேசுமால். 45

### இராவணன் அம்பு எய்தலும், இராமன் தடுத்தலும்

பதைக்கின்றது ஓர் மனமும், இடை படர்கின்றது ஓர் சினமும்,
விதைக்கின்றன பொறி பொங்கின விழியும், உடைவெய்யோன்,
குதைக்கின்றன நிமிர் வெஞ் சிலை குழைய, கொடுங் கடுங் கால்
உதைக்கின்றன சுடர் வெங் கணை, உரும்ஏறு என, எய்தான்.

உரும் ஒப்பன, கனல் ஒப்பன, ஊற்றம் தரு கூற்றின்
மருமத்தினும் நுழைகிற்பன, மழை ஒப்பன, வானோர்
நிருமித்தன, படை பற்று அற நிமிர்வுற்றன, அமிழ்தப்
பெரு மத்தினை முறை சுற்றிய பெரும் பாம்பினும் பெரிய. 47

'துண்டப்பட நெடுமேருவைத் தொளைத்து, உள் உறை தொங்காது [தார்;
அண்டத்தையும் பொதுத்து ஏகும்' என்று, இமையோர்களும் அயிர்த்
கண்டத் தெறு கணைக் காற்றினை, கருணைக் கடல், கனகச்
சண்டச் சர மழை கொண்டு, அவை இடையே அறத் தடுத்தான்.

உடையான் முயன்றுறு காரியம் உறு தீவினை உடற்ற,
இடையூறு உறச் சிதைந்தாங்கெனச் சரம் சிந்தின, விறலும்;
தொடை ஊறிய கணை மாரிகள் தொகை தீர்த்தன துரந்தான்—
கடை ஊறு உறு கண மா மழை கால் வீழ்த்தென, கடியான்.

விண் போர்த்தன; திசை போர்த்தன; மலை போர்த்தன; இமையோர்
கண் போர்த்தன; கடல் போர்த்தன; படி போர்த்தன; கலையோர்
எண் போர்த்தன; எரி போர்த்தன; இருள் போர்த்தன; 'என்னே,
திண் போர்த் தொழில்!' என்று, ஆனையின் உரி போர்த்தவன் திகைத்
[தான்.

44. சிற்றையாளன் - சிறு ஆளன்; சிறுமையை உடையவன்; 45. தடித்து - மின்னல்; 46. குதைக்கின்றன - குதையினின்று வெளிவருவனவாகிய அம்புகள்; 47. மருமம் - மார்பு; 48. கண்டத் தெறு - துண்டு துண்டாக அழிக்கவல்ல; கணைக் காற்று - கணைகளாகிய காற்று; கருணைக் கடல் - அருட் கடலாகிய இராமன்; தொடை ஊறிய - தொடுத்தல் பொருந்திய.

அல்லா நெடும் பெருந் தேவரும் மறைவாணரும் அஞ்சி,
எல்லார்களும் கரம் கொண்டு இரு விழி பொத்தினர், இருந்தார்;
செல் ஆயிரம் விழுங்கால் உகும் விலங்கு ஒத்தது சேனே;
வில்லாளனும் அது கண்டு, அவை விலக்கும் தொழில் வேட்டான்.

செந் தீ வினே மறைவாணனுக்கு ஒருவன், சிறுவிலே நாள்,
முந்து ஈந்தது ஓர் உணவின் பயன் எனல் ஆயின, முதல்வன்
வந்து ஈந்தன வடி வெங் கணே; அனேயான் வகுத்து அமைத்த
வெந் தீவினேப் பயன் ஒத்தன, அரக்கன் சொரி விசிகம். 52

இராமனும் இராவணனும் ஒத்துச் செரு விளேத்தல்

நூறுயிரம் வடி வெங் கணே நொடி ஒன்றினின் விடுவான்,
ஆரு விறல் மறவோன்; அவை தனி நாயகன் அறுப்பான்;
கூறு ஆயின, கனல் சிந்துவ, குடிக்கப் புனல் குறுகி,
சேறு ஆயின, பொடி ஆயின, திடர் ஆயின, கடலும். 53

வில்லால் சரம் துரக்கின்றவற்கு, உடனே, மிடல் வெம் போர்
வல்லான், எழு, மழு, தோமரம், மணித் தண்டு, இருப்பு உலக்கை,
தொல் ஆர் மிடல் வளே, சக்கரம், சூலம், இவை தொடக்கத்து
எல்லாம் நெடுங் கரத்தால் எடுத்து எறிந்தான், செரு அறிந்தான்.

வேல் ஆயிரம், மழு ஆயிரம், எழு ஆயிரம், விசிகக்
கோல் ஆயிரம், பிற ஆயிரம், ஒரு கோல் படக் குறைவ—
கால் ஆயின, கனல் ஆயின, உரும் ஆயின, கதிய
சூல் ஆயின, மழை அன்னவன் தொடை பல் வகை தொடுக்க.

ஒத்துச் செரு விளேக்கின்றது ஓர் அளவின்தலே,—உடனே
பத்துச் சிலே எடுத்தான், கணே தொடுத்தான், பல முகிலா
தொத்துப் படு நெடுந் தாரைகள் சொரிந்தாலெனத் துரந்தான்—
குத்துக் கொடு நெடுங் கோல் படு களிறு ஆம் எனக் கொதித்தான். 56

ஈசன் விடு சர மாரியும், எரி சிந்துறு தறுகண்
நீசன் விடு சர மாரியும், இடை எங்கணும் நெருங்க,
தேசம் முதல் ஐம் பூதமும் செருக் கண்டனர் செருக்கி,
கூசிம் மயிர் பொடிப்பு அற்றன; அனல் ஆயின கொடிய. 57

52. சிறுவிலே நாள் - பெரு விலே கொடுத்துச் சிறு பொருளே வாங்கும் பஞ்ச காலம்; 56. தொத்து - தொகுதி, கொத்து.

மந்தரக் கிரி என, மருந்து மாருதி
தந்த அப் பொருப்பு என, புரங்கள்தாம் என,
கந்தருப்பந் நகர் விசும்பில் கண்டென
அந்தரத்து எழுந்தது, அவ் அரக்கன் தேர்அரோ. 58

எழுந்து உயர் தேர்மிசை இலங்கை காவலன்
பொழிந்தன சர மழை உருவிப் போதலால்,
ஒழிந்ததும் ஒழிகிலது என்ன, ஒல்லெனக்
கழிந்தது, கவிக் குலம், இராமன் காணவே. 59

'முழவு இடு தோளொடு முடியும் பல் தலை
விழ விடுவேன், இனி; விசும்பு சேமமோ?
மழ விடை அனைய நம் படைஞர் மாண்டனர்;
எழ விடு, தேரை' என்று இராமன் கூறினன். 60

'அந்து செய்குவென்' என அறிந்த மாதலி
உந்தினன், தேர் எனும் ஊழிக் காற்றினை;
இந்து மண்டிலத்தின்மேல் இரவி மண்டிலம்
வந்தென, வந்தது, அம் மானத் தேர்அரோ. 61

இரிந்தன மழைக் குலம், இமுகித் திக்கு எலாம்;
உரிந்தன உடுக் குலம், உதிர்ந்து சிந்தின;
நெரிந்தன நெடு வரைக் குடுமி; நேர் முறை
திரிந்தன சாரிகை, தேரும் தேருமே. 62

வலம் வரும்; இடம் வரும்; மறுகி வானொடு
நிலம் வரும்; இடம் வலம் நிமிரும்; வேலையும்,
அலம்வரு குல வரை அனைத்தும், அண்டமும்,
சலம் வரும், குயவன திகிரித் தன்மைபோல். 63

'எழும் புகழ் இராமன் தேர்; அரக்கன் தேர் இது' என்று
உழுந்து உருள் பொழுதின் எவ் உலகும் சேர்வன,
தழும்பிய தேவரும் தெரிவு தந்திலர்,
பிழம்பின திரிவன என்னும் பெற்றியார். 64

58. கந்தருப்பந் நகர் - கந்தருவ நகர், நகர ஒற்று விரித்தல் விகாரத்தால் மிக்கது; 59. ஒழிந்தது - எஞ்சி இருந்த வானரப்படை; ஒழிகிலது - இனி எஞ்சி நில்லாது; 60. சேமம் - பாதுகாப்பு; 61. அந்து - அவ்வாறே, கன்னடச் சொல் என்பர்; 62. சாரிகை திரிதல் - மாறிமாறிச் சுற்றி வருதல்; 63. அலம்வரு குல வரை - அமைதியாகப் பொருந்தியுள்ள குல மலைகள்; அலம் - அமைதி; சலம் வருதல் - சுழலுதல்; 64. தழும்பிய - பழகிய; தெரிவு - தெளிவு, அறிதல்.

உக்கிலா உடுக்களும், உருள்கள் தாக்கலின்,
நெக்கிலா மலைகளும், நெருப்புச் சிந்தலின்,
வக்கிலாத் திசைகளும், உதிரம் வாய் வழி
கக்கிலா உயிர்களும், இல்லை, காண்பன. 65

'இந்திரன் உலகத்தார்' என்பர்; 'ஏன்றவர்,
சந்திரன் உலகத்தார்' என்பர்; 'தாமரை
அந்தணன் உலகத்தார்' என்பர்; 'அல்லரால்,
மந்தர மலையினர்' என்பர்—வானவர். 66

'பாற்கடல் நடுவணர்' என்பர்; 'பல் வகை
மாக் கடலினுக்கும் அவ் வரம்பினர்' என்பர்;
'மேல் கடலார்' என்பர்; 'கிழக்கு உளார்' என்பர்;
'ஆர்க்கடை உரும்' என்பர்—அறியும் வானவர். 67

'மீண்டனவோ?' என்பர்; 'விசும்பு விண்டு உகக்
கீண்டனவோ?' என்பர்; 'கீழவோ?' என்பர்;
'பூண்டன புரவியோ? புதிய காற்று!' என்பர்;—
'மாண்டன உலகம்' என்று, உரைக்கும் வாயினர். 68

ஏழுடைக் கடலினும், தீவு ஓர் ஏழினும்,
ஏழுடை மலையினும், உலகு ஓர் ஏழினும்,
சூழுடை அண்டத்தின் சுவர்கள் எல்லையா,
ஊழியில் காற்று எனத் திரிந்த, ஓவில. 69

**இராமன், அரக்கன் படைக்கலங்களைத் தடுத்தல் அன்றிப் போர் செய்யாமை**

உடைக் கடல் ஏழினும், உலகம் ஏழினும்,
இடைப் படு தீவினும், மலை ஓர் ஏழினும்,
அடைக்கலப் பொருள் என அரக்கன் வீசிய
படைக்கலம், மழை படு துளியின் பான்மைய. 70

ஒறுத்து உலகு அனைத்தையும் உழலும், ஒட்டிடை
இறுத்தில; இராவணன் எறிந்த எய்தன
அறுத்ததும் தடுத்ததும் அன்றி, ஆரியன்
செறுத்து ஒரு தொழிலிடைச் செய்தது இல்லையால். 71

விலங்கலும் வேலையும், மேலும் கீழரும்,
அலங்கு ஒளி திரிதரும் உலகு அனைத்தையும்,
கலங்குறத் திரிந்தது ஓர் ஊழிக் காலக் காற்று,
இலங்கையை எய்தின, இமைப்பின் வந்துஅரோ. 72

65. வக்கிலாத் திசைகள் - பிளவாத திசைகள்; 71. ஒட்டு - ஒட்டம்.

உய்த்து உலகு அனைத்தினும் உழன்ற சாரிகை
மொய்த்தது, கடலிடை மணலின் மும்மையால்;
வித்தகர் கடவிய விசயத் தேர்ப் பரி,
எய்த்தில வியர்த்தில, இரண்டு பாலவும். 73

இராமன் தேர்க் கொடியை இராவணன் அறுத்தல்

இந்திரன் தேரின்மேல் உயர்ந்த, ஏந்து எழில்
உந்த அரும் பெரும் வலி உருமின் ஏற்றினை,
சந்திரன் அனையது ஓர் சரத்தினால், தரைச்
சிந்தினன், இராவணன், எரியும் சிந்தையான். 74

சாய்ந்த வல் உருமு போய், அரவத் தாழ் கடல்
பாய்ந்த வெங் கனல் என முழங்கிப் பாய்தலும்,
காய்ந்த பேர் இரும்பின வன கட்டி காலுறத்
தோய்ந்த நீர் ஆம் எனச் சுருங்கிற்று, ஆழியே. 75

இராமனின் குதிரைகள்மீதும், மாதலிமீதும் இராவணன் சரம் விடுத்தல்

எழுத்து எனச் சிதைவு இலா இராமன் தேர்ப் பரிக்
குழுக்களைக் கூர்ங் கணைக் குப்பை ஆக்கி, நேர்
வழுத்த அரு மாதலி வயிர மார்பிடை
அழுத்தினன கொடுஞ் சரம், ஆறொடு ஆறுஅரோ. 76

மாதலி மார்பில் அம்பு தைத்தமை கண்டு, இராமன் வருந்துதல்

நீல் நிற நிருதர்கோன் எய்த, நீதியின்
சால்புடை மாதலி மார்பில் தைத்தன
கோலினும் இலக்குவன் கோல மார்பின் வீழ்
வேலினும் வெம்மையே விளைத்த, வீரற்கு.* 77

இராமனை இராவணன் அம்புகள் மறைத்தல்

மண்டில வரி சிலை வானவில்லொடும்
துண்ட வெண் பிறை எனத் தோன்ற, தூவிய
உண்டை வெங் கடுங் கணை ஒருங்கு மூடலால்,
கண்டிலர் இராமனை, இமைப்பு இல் கண்ணினர். 78

'தோற்றனனே இனி' என்னும் தோற்றத்தால்
ஆற்றல் சால் அமரரும் அச்சம் எய்தினார்;
வேற்றவர் ஆர்த்தனர்; மேலும் கீழரும்
காற்று இயக்கு அற்றது; கலங்கிற்று அண்டமே. 79

73. வித்தகர் - திறமை மிக்கவர்; ஈண்டுத் தேர்ப்பாகர்; 76. எழுத்து - வேதம்; நேர் வழுத்தல் - உவமை சொல்லுதல், நேரே துதித்தலும் ஆம்.

அங்கியும் தன் ஒளி அடங்கிற்று; ஆர்கலி
பொங்கில திமிர்ந்தன; விசும்பில் போக்கு இல,
வெங் கதிர் தண்கதிர், விலங்கி மீண்டன;
மங்குலின் நெடும் புனல் மழை வறந்ததால். 80

திசை நிலைக் கட கரி செருக்குச் சிந்தின;
அசைவு இல வேலைகள், ஆர்க்க அஞ்சின;
விசை கொடு விசாகத்தை நெருக்கி ஏறினன்
குசன்; நெடு மேருவும் குலுக்கம் உற்றதே. 81

வானரத் தலைவனும், இளைய மைந்தனும்,
ஏனை, 'அத் தலைவனைக் காண்கிலேம்' எனக்
கானகக் கரி எனக் கலங்கினர்; கடல்
மீன் எனக் கலங்கினர், வீரர் வேறு உளார். 82

**இராமன், இராவணன் தேர்க் கொடியை வீழ்த்தல்**

எய்தன சரம் எலாம் இமைப்பின் முந்துறக்
கொய்தனன் அகற்றி, வெங் கோலின் கோவையால்
நொய்து என அரக்கனை நெருங்க நொந்தன
செய்தனன், இராகவன்; அமரர் தேறினர். 83

தூணுடை நிரை புரை கரம் அவைதொறும் அக்
கோணுடை மலை நிகர் சிலை இடை குறைய,
சேணுடை நிகர் கணை சிதறினன்—உணர்வொடு
ஊணுடை உயிர்தொறும் உறைவுறும் ஒருவன். 84

கயில் விரிவு அற வரு கவசமும் உருவிப்
பயில் விரி குருதிகள் பருகிட, வெயிலொடு
அயில் விரி சுடு கணை கடவினன்—அறிவின்
துயில்வுழி உணர்தரு சுடர் ஒளி ஒருவன். 85

திசை உறு துகிலது, செறி மழை சிதறும்
விசை உறு முகிழது, விரிதரு சிரனோடு
இசை உறு கருவியின் இனிது உறு கொடியைத்
தசை உறு கணைகொடு தரை உற விடலும், 86

80. திமிர்ந்தன - அசைவற்றுக் கிடந்தன; 81. விசாகம் - விசாக நட்சத்திரம்; குசன் - அங்காரகன், அங்காரகன் விசாகத்தில் நுழைந்தால் அரசர்க்குத் தீங்கு உண்டாகும் என்பது சோதிட நூற் கொள்கை; 84. கோணுடை மலை - வளைதலையுடைய மலை; குறைதல் - துண்டுபடுதல்; 85. கயில் - மூட்டுவாய்; ஒருவன் உருவிப் பருகிடக் கணை எய்தனன் என இயையும்; 86. துகில் - கொடிச் சீலை; முகிழ் - அரும்பு போன்ற உறுப்பு; இசை உறு கருவி - வீணை.

படை உக, இமையவர் பருவரல் கெட, வந்து
இடை உறு திசை திசை இழுகுற, இறைவன்
அடையுறு கொடிமிசை அணுகினன்—அளவு இல்
கடை உக முடிவு எழு கடல் புரை கலுழன். 87

பண்ணவன் உயர் கொடி என ஒரு பரவைக்
கண் அகன் உலகினை வலம் வரு கலுழன்
நண்ணலும், இமையவர், 'நமது உறு கருமம்
எண்ணலம், முனிவினின் இவறினன்' எனவே. 88

இராவணன், தாமதப் படையை விடுதலும், அதன் தன்மையும்

ஆயது ஓர் அமைதியின், அறிவினின் அறிவான்
நாயகன் ஒருவனை நலிகிலது உணர்வான்,
ஏயினன், இருள் உறு தாமதம் எனும் அத்
தீவினை தரு படை—தெறு தொழில் மறவோன். 89

தீ முகம் உடையன சில; முகம் உதிரம்
தோய் முகம் உடையன; சுரர் முகம் உடைய;
பேய் முகம் உடையன; பிலமுகம் நுழையும்
வாய்முகம் வரி அரவு அனையன வருவ. 90

ஒரு திசை முதல் கடை ஒரு திசை அளவும்,
இரு திசை எயிறு உற வருவன; பெரிய;
கருதிய கருதிய புரிவன; கனலும்
பருதியை மதியொடு பருகுவ—பகழி. 91

இருள் ஒரு திசை, ஒரு திசை வெயில் விரியும்;
சுருள் ஒரு திசை, ஒரு திசை மழை தொடரும்;
உருள் ஒரு திசை, ஒரு திசை உரும் முரலும்;
மருள் ஒரு திசை, ஒரு திசை சிலை வருடம். 92

இராமன், சிவன் படையை விட்டு, தாமதப்படையைத் தொலைத்தல்

இனையன நிகழ்வுற, எழு வகை உலகும்
கனை இருள் கதுவிட, உயிர் இடை கதற,
வினை உறு தொழிலிடை விரவலும், விமலன்
நினைவுறு தகையினன் நெறியுறு முறையின், 93

88. பண்ணவன் - தேவன், ஈண்டு இராமன்; இவறுதல் - குறைதல்; 92. சுருள் - சுழல்காற்று; சிலை வருடம் - கல்மழை; 93. வினை உறு தொழில் - தீவினையால் நேர்ந்தாற்போலும் செயல்.

கண்ணுதல் ஒருவனது அடு படை கருதிப்
பண்ணவன் விடுதலும், அது நனி பருக;
எண்ணுறு கனவினெடு உணர்வு என, இமையில்,
துண்ணெனும் நிலேயினின் எறி படை தொலேய, 94

**இராவணன் ஆசுரப் படையும், இராமன் அக்கினிப் படையும்**

விரிந்த தன் படை மெய் கண்ட பொய் என வீய,
எரிந்த கண்ணினன், எயிற்றிடை மடித்த வாயினன், தன்
தெரிந்த வெங் கணே, கங்க வெஞ் சிறை அன்ன, திறத்த
அரிந்தமன் திரு மேனிமேல் அழுத்தி, நின்று ஆர்த்தான். 95

ஆர்த்து, வெஞ் சினத்து ஆசுரப் படைக்கலம், அமரர்
வார்த்தை உண்டது, இன் உயிர்களால் மறலிதன் வயிற்றைத்
தூர்த்தது, இந்திரன் துணுக்குறு தொழிலது, தொடுத்து,
தீர்த்தன்மேல் செலத் துரந்தனன், உலகு எலாம் தெரிய. 96

'நுங்குகின்றது, இவ் உலகை ஓர் நொடி வரை' என்ன,
எங்கும் நின்று நின்று அலமரும் அமரர் கண்டு இரைப்ப,
மங்குல் வல் உருமேற்றின்மேல் எரி மடுத்தென்ன
அங்கி தன் நெடும் படை தொடுத்து, இராகவன் அறுத்தான்.

கூற்றுக் கோடினும் கோடல, கடல் எலாம் குடிப்ப,
நீற்றுக் குப்பையின் மேருவை நூறுவ, நெடிய
காற்றுப் பின் செலச் செல்வன, உலகு எலாம் கடப்ப,
நூற்றுக் கோடி அம்பு எய்தனன், இராவணன், நொடியில்.

'என்ன கைக் கடுப்போ!' என்பர் சிலர்; சிலர், 'இவையும்
அன்ன மாயமே; அம்பு அல' என்பர்; 'அவ் அம்புக்கு
இன்னம் உண்டுகொல் இடம்!' என்பர் சிலர்; சிலர், 'இகல் போர்
முன்னம் இத்தனே முயன்றிலனும்' என்பர்—முனிவர். 99

மறைமுதல் தனி நாயகன், வானினே மறைத்த
சிறையுடைக் கொடுஞ் சரம் எலாம் இமைப்பு ஒன்றில் திரிய,
பொறை சிகைப் பெருந் தலேநின்றும் புங்கத்தின் அளவும்
பிறை முகத் தடங் கடுங் கொடுஞ்சரம் கொண்டு பிளந்தான்.

94. கனவினெடு உணர்வு என - கனவில் தோன்றிய பொருள் உணர்வு தோன்றியபோது மறைந்துவிடுதல்போல; 95. கங்கம் - பருந்து; 96. அமரர் வார்த்தை - தேவர்களின் புகழ்ச் சொல்; 98. கூற்றுக் கோடினும் - கூற்றுவன் தன் கொல்லுதல் தொழிலினின்று மாறுபட்டாலும்; 100. பொறை சிகைப் பெருந்தலே - பாரமான உச்சியைக் கொண்ட பெரிய அம்பின் அடிப்பாகம்; புங்கத்தின் அளவு - அம்பின் கூரிய நுனி.

**மயன் படையும் கந்தருவக் கணையும்**

அயன் படைத்த பேர் அண்டத்தின் அருந் தவம் ஆற்றி,
பயன் படைத்தவர் யாரினும் படைத்தவன், 'பல் போர்
வியன் படைக்கலம் தொடுப்பென் நான், இனி' என விரைந்தான்;
மயன் படைக்கலம் துரந்தனன், தயரதன் மகன்மேல். 101

'விட்டனன் விடு படைக்கலம் வேரொடும் உலகைச்
சுட்டனன்' எனத் துணுக்கமுற்று, அமரரும் சுருண்டார்;
'கெட்டனம்' என வானரத் தலைவரும் கிழிந்தார்;
சிட்டர்தம் தனித் தேவனும், அதன் நிலை தெரிந்தான். 102

'பாந்தள் பல் தலைப் பரப்பு அகன் புவியிடைப் பயிலும்
மாந்தர்க்கு இல்லையால் வாழ்வு' என வருகின்ற அதனைக்
காந்தர்ப்பம் எனும் கடுங் கொடுங் கணையினால் கடந்தான்—
ஏந்தல் பல் மணி எறுழ் வலித் திரள் புயத்து இராமன். 103

**தண்டும் அம்பும்**

'பண்டு நான்முகன் படைத்தது, கனகன் இப் பாரைத்
தொண்டு கொண்டது, மது எனும் அவுணன் முன் தொட்டது,
உண்டு இங்கு என்வயின்; அது துரந்து உயிர் உண்பென்' என்னா,
தண்டு கொண்டு எறிந்தான், ஐந்தொடு ஐந்துடைத் தலையான்.

தாருகன் பண்டு தேவரைத் தகர்த்தது, தனி மா
மேரு மந்தரம் புரைவது, வெயில் அன்ன ஒளியது,
ஓர் உகம்தனின் உலகம் நின்று உருட்டினும் உருளாச்
சீர் உகந்தது, நெரித்தது, தானவர் சிரங்கள் 105

பசும் புனல் பெரும் பரவை பண்டு உண்டது, பனிப்புற்று
அசும்பு பாய்கின்றது, அருக்கனின் ஒளிர்கின்றது, அண்டம்
தசும்புபோல் உடைந்து ஒழியும் என்று அனைவரும் தளர,
விசும்பு பாழ்பட, வந்தது மந்தரம் வெருவ. 106

கண்டு, 'தாமரைக் கண்ணன் அக் கடவுள் மாக் கதையை
அண்டர் நாயகன் ஆயிரம் கண்ணினும் அடங்காப்
புண்டரீகத்தின் முகை அன்ன புகர் முகம் விட்டான்,
உண்டை நூறுடை நூறுபட்டுளது என உதிர்த்தான். 107

101. அருந் தவம் ஆற்றிப் பயன் படைத்தவர் யாரினும் படைத்தவன்- இராவணன்; 102. சிட்டர் - உயர்ந்தோர்; 104. தொண்டு கொண்டது - தன்னடிப்படுத்துதற்குக் கருவியாய் இருந்தது; 106. பனிப்புறல் - குளிர்ச்சி மிகுதல்; அசும்பு - நீர்க்கசிவு; தசும்பு - குடம்.

**இராவணன் மாயையின் படையை விட, இறந்த அரக்கர் எழுந்து ஆரவாரித்தல்**

'தேய நின்றவன், சிலை வலம் காட்டினன், தீராப்
பேயை என் பல துரப்பது? இங்கு இவன் பிழையாமல்
ஆய தன் பெரும் படையொடும் அடு களத்து அவிய
மாயையின் படை தொடுப்பென்' என்று, இராவணன் மதித்தான். 108

பூசனைத் தொழில் புரிந்து, தான் முறைமையின் போற்றும்
ஈசனைத் தொழுது, இருடியும் சந்தமும் எண்ணி,
ஆசை பத்தினும் அந்தரப் பரப்பினும் அடங்கா
வீசினன் செல, வில் இடைத் தொடை கொடு விட்டான். 109

மாயம் பொத்திய வயப் படை விடுதலும், வரம்பு இல்
காயம் எத்தனை உள, நெடுங் காயங்கள் கதுவ,
ஆயம் உற்று எழுந்தார் என ஆர்த்தனர்—அமரில்
தூய கொற்றவர் சுடு சரத்தால் முன்பு துணிந்தார். 110

இந்திரற்கு ஒரு பகைஞனும், அவற்கு இளையோரும்,
தந்திரப் பெருந் தலைவரும், தலைத் தலையோரும்,
மந்திரச் சுற்றத்தவர்களும், வரம்பு இலர் பிறரும்,
அந்தரத்தினை மறைத்தனர், மழை உக ஆர்ப்பார். 111

குடப் பெருஞ் செவிக் குன்றமும், மற்றுள குழுவும்,
படைத்த மூல மாத் தானையும், முதலிய பட்ட,
விடைத்து எழுந்தன—யானை, தேர், பரி, முதல் வெவ்வேறு
அடைத்த ஊர்திகள் அனைத்தும் வந்து, அவ் வழி அடைத்த.

ஆயிரம் பெரு வெள்ளம் என்று அறிஞரே அறைந்த
காய் சினப் பெருங் கடற்படை களப் பட்ட எல்லாம்,
ஈசனின் பெற்ற வரத்தினால் எய்திய என்ன,
தேசம் முற்றவும் செறிந்தன, திசைகளும் திகைப்ப. 113

சென்ற எங்கணும், தேவரும் முனிவரும் சிந்த—
'வென்றது எங்களைப்போலும்; யாம் விளிவதும் உளதே?
இன்று காட்டுதும்; எய்துமின், எய்துமின்' என்னா,
கொன்ற கொற்றவர்தம் பெயர் குறித்து அறைகூவி. 114

109. இருடி - (மந்திரத்துக்கு உரிய) முனிவன்; சந்தம்- சந்தசு; மந்திரம்; 110. காயம் - முன்னது உடம்பு, பின்னது புண்; 112. குடப் பெருஞ் செவிக் குன்றம் - கும்பகருணன் என்னும் பெயரின் தமிழாக்கம்.

பார் இடந்து கொண்டு எழுந்தன பாம்பு எனும் படிய,
பாரிடம் துனைந்து எழுந்தன மலை அன்ன படிய,
'பேர் இடம் கதுவ அரிது, இனி விசும்பு' என, பிறந்த,
பேர் இடங்கரின் கொடுங் குழை அணிந்தன பேய்கள். 115

தாமசத்தினில் பிறந்தவர், அறம் தெறும் தகையர்,
தாம் அசத்தினில் செல்கிலாச் சதுமுகத்தவற்கும்
தாமசத்தினைச் செய்பவர், பரிந்தனர் தளரத்
தாம சத்திரம் சித்திரம் பொருந்தினர், தயங்க. 116

தாம் அவிந்து மீது எழுந்தவர்க்கு இரட்டியின் தகையர்,
தாம இந்துவின் பிளவு எனத் தயங்கு வாள் எயிற்றர்,
தாம் அவிஞ்சையர், கடல் பெருந் தகையினர், தரளத்
தாம விஞ்சையர் துவன்றினர், திசைதொறும் தருக்கி. 117

தாம் மடங்கலும், முடங்கு உளை யாளியும் தகுவார்,
தாம் அடங்கலும் நெடுந் திசை உலகொடும் தகைவார்,
தா மடங்கலும் கடலும் ஒத்து ஆர்தரும் தகையார்,
தாம் மடங்கலும் கொடுஞ் சுடர்ப் படைகளும் தரித்தார். 118

இனைய தன்மையை நோக்கிய இந்திரை கொழுநன்,
'வினையம் மற்று இது மாயமோ? விதியது விளைவோ?
வனையும் வன் கழல் அரக்கர்தம் வரத்தினோ? மற்றோ?
நினைதியாமெனின், பகர்' என, மாதலி நிகழ்த்தும்: 119

**இராமன் ஞானக் கணை விடுத்தல்**

'இருப்புக் கம்மியற்கு இழை நுழை ஊசி என்று இயற்றி,
விருப்பின், "கோடியால் விலக்கு" எனும் பதடியின், விட்டான்—
கருப்புக் கார் மழை வண்ண!—அக் கடுந் திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன் மீள அரு மாயம். 120

'வீக்கு வாயிலில் வெள் எயிற்று அரவின் வெவ் விடத்தை
மாய்க்குமா நெடு மந்திரம் தந்தது ஓர் வலியின்,—
நோய்க்கும், நோய் தரு வினைக்கும், நின் பெரும் பெயர் நொடியின்,
நீக்குவாய்!—நினை நினைக்குவார் பிறப்பு என, நீங்கும். 121

115. இடங்கரின் கொடுங்குழை - முதலைகளை ஒத்த வளைந்த குழை; 116. தாமசம் - முதலடியில் இருள்; மூன்றாமடியில் தாமத குணம்; அசத்து - நேர்மையற்ற வழி; தாம சத்திரம் - ஒளி வாய்ந்த படைக்கலம்; சித்திரம் - விசித்திரம், முதற்குறை; 117. தாம இந்து - ஒளி வாய்ந்த சந்திரன்; தரளத் தாமம் - முத்து மாலை; விஞ்சையர் - வித்தியாதரர்; 118. மடங்கல் - சிங்கம், ஊழித் தீ, இடி; 119. இந்திரை - திருமகள்; 120. பதடி - அறிவிலி.

'வரத்தின் ஆயினும், மாயையின் ஆயினும், வலியோர்
உரத்தின் ஆயினும், உண்மையின் ஆயினும், ஓடத்
துரத்தியால்' என, ஞான மாக் கடுங் கணை துரந்தான்—
சிரத்தின் நான்மறை இறைஞ்சவும் தொடரவும் சேயோன். 122

துறத்தல் ஆற்று உறு ஞான மாக் கடுங் கணை தொடர,
அறத்து அலாது செல்லாது, நல் அறிவு வந்து அணுக,
பிறத்தல் ஆற்றுறும் பேதைமை பிணிப்புறத் தம்மை
மறத்தலால் தந்த மாயையின் மாய்ந்தது, அம் மாயை. 123

**இராவணன் சூலம் கொண்டு வீசுதல்**

நீலம் கொண்டு ஆர் கண்டனும், நேமிப் படையோனும்,
மூலம் கொண்டார், கண்டகர் ஆவி முடிவிப்பான்,
காலம் கொண்டார்; கண்டன முன்னே கழிவிப்பான்,
சூலம் கொண்டான், அண்டரை எல்லாம் தொழில் கொண்டான். 124

கண்டா குலம் முற்று ஆயிரம் ஆர்க்கின்றது, கண்ணில்
கண்டு ஆகுலம் உற்று உம்பர் அயிர்க்கின்றது, 'வீரர்-
கண்தா, குலம், முற்றும்' சுடும் என்று அக் கழல் வெய்யோன்,
கண் தாகுதல் முன், செல்ல விசைத்துள்ளது கண்டான்.* 125

எரியாநிற்கும் பல் தலை மூன்றும் எரி அஞ்ச,
திரியாநிற்கும் தேவர்கள் ஓட, திரள் ஓட,
இரியாநிற்கும் எவ் உலகும் தன் ஒளியே ஆய்,
விரியாநிற்கும்; நிற்கிலது, ஆர்க்கும் விழி செல்லா, 126

'செல்வாய்' என்னச் செல்ல விடுத்தான்; 'இது தீர்த்தற்கு
ஒல்வாய் நீயே; வேறு ஒருவர்க்கும் உடையாதால்;
வல் வாய் வெங் கண் சூலம் எனும் காலனை, வள்ளால்!
வெல்வாய், வெல்வாய்! என்றனர், வானோர், மெலிகின்றார்.

**இராமன் அம்புகள் சூலப்படையை அழிக்க முடியாமல் போக,
அவன் உங்காரத்தால் அழித்தல்**

துனையும் வேகத்தால் உரும்ஏறும் துண்ணென்ன
வனையும் காலின் செல்வன,—தன்னை மறவாதே
நினையும் ஞானக் கண் உடையார்மேல் நினையாதார்
வினையம் போலச் சிந்தின—வீரன் சரம் வெய்ய. 128

123. துறத்தல் - துரத்தல், விடுத்தல்; பிறத்தல் ஆற்றுறும் பேதைமை - பிறப்பிற்குக் காரணமான அறியாமை; தம்மை மறத்தல் - உயிர் தன்னை உணராது தளையில் அழுந்தியிருத்தல்; 125. கண்டா குலம் - கண்டா மணியின் கூட்டம்; தா - வலிமை; குலம் - சிறப்பு; கண் தாகுதல் - கண் தாக்குதல், கண்ணிமைத்தல்; 128. நினையாதார் வினையம் - இறைவனை நினையாத கீழ் மக்கள் செய்யும் தீங்குகள்.

எய்யும், எய்யும் தேவருடையத் திண் படை எல்லாம்;
பொய்யும் துய்யும் ஒத்து, அவை சிந்தும்; புவி தந்தான்
வய்யும் சாபம் ஒப்பு என வெப்பின் வலி கண்டான்,
அய்யன் நின்றான், செய் வகை ஒன்றும் அறிகில்லான். 129

'மறந்தான் செய்கை; மற்று எதிர் செய்யும் வகை எல்லாம்
துறந்தான்' என்னா, உம்பர் துணுக்கம் தொடர்வுற்றார்;
அறம்தான் அஞ்சிக் கால் குலைய, தான் அறியாதே,
பிறந்தான் நின்றான்; வந்தது சூலம், பிறர் அஞ்ச, 130

சங்காரத்தான் கண்டை ஒலிப்ப, தழல் சிந்த,
பொங்கு ஆரத்தான் மார்பு எதிர் ஓடிப் புகலோடும்,
வெங் காரத்தான் முற்றும் முனிந்தான்; வெகுளிப் பேர்
உங்காரத்தால் உக்கது, பல் நூறு உதிர் ஆகி. 131

ஆர்ப்பார் ஆனார்; அச்சமும் அற்றார்; அலர் மாரி
தூர்ப்பார் ஆனார்; துள்ளல் புரிந்தார்; தொழுகின்றார்,
'தீர்ப்பாய் நீயே தீ என வேறாய் வரு தீமை
பேர்ப்பாய் போலாம்!' என்றனர்—வானோர், உயிர் பெற்றார்.

**இராமனை 'வேத முதல்வனோ?' என இராவணன் கருதுதல்**

'வென்றான்' என்றே உள்ளம் வியந்தான், 'விடு சூலம்
பொன்றான் என்னின் போகலது' என்னும் பொருள் கொண்டான்;
ஒன்றுஆம் உங்காரத்திடை உக்கு, ஓடுதல் காணா
நின்றான், அந் நாள் வீடணனார் சொல் நினைவுற்றான். 133

'சிவனோ? அல்லன்; நான்முகன் அல்லன்; திருமாலாம்
அவனோ? அல்லன்; மெய் வரம் எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின், செய்து முடிக்கும் தரன் அல்லன;
இவனோதான் அவ் வேத முதல் காரணன்?' என்றான். 134

**நிருதிப் படையும் கருடக் கணையும்**

'யாரேனும் தான் ஆகுக! யான் என் தனி ஆண்மை
பேரேன்; நின்றே வென்றி முடிப்பென்; புகழ்பெற்றேன்;
நேரே செல்லும் கொல்லும் எனில் தான் நிமிர்வென்றி,
வேரே நிற்கும்; மீள்கிலென்' என்னா, விடலுற்றான். 135

131. சங்காரத்தான் - அழிவினைச் செய்யும் எண்ணத்தோடு; வெங் காரத்தான் - கொடிய வெறுப்புணர்ச்சியோடு; 134. மெய் வரம் - இராவணன் பெற்றிருந்த உண்மையான வரம்; அடுதல் - பயன்படாமல் செய்தல்.

நிருதித் திக்கில் நின்றவன் வென்றிப் படை நெஞ்சில்
கருதி, தன்பால் வந்தது அவன் கைக்கொடு, காலன்
விருதைச் சிந்தும் வில்லின் வலித்து, செலவிட்டான்—
குருதிச் செங் கண் தீ உக, ஞாலம் குலைவு எய்த. 136

வய்யம் துஞ்சும் வன் பிடர் நாகம் மனம் அஞ்ச,
பய்யும் கோடிப் பல் தலையோடும் அளவு இல்லா
மெய்யும் வாயும் பெற்றன, மேருக் கிரி சால
நொய்து என்று ஓதும் தன்மைய ஆக நுழைகின்ற, 137

வாய் வாய்தோறும் மா கடல் போலும் விட வாரி
போய் வார்கின்ற, பொங்கு அனல் கண்ணின் பொழிகின்ற,
மீவாய் எங்கும் வெள்ளிடை இன்றி மிடைகின்ற,
பேய் வாய் என்ன வெள் எயிறு எங்கும் பிறழ்கின்ற, 138

'கடித்தே தீரும்; கண் அகன் ஞாலம் கடலோடும்
குடித்தே தீரும்' என்று உயிர் எல்லாம் குலைகின்ற,
'முடித்தான் அன்றோ, வெங் கண் அரக்கன்? முழு முற்றும்
பொடித்தான் ஆகும், இப்பொழுது' என்னப் புகைகின்ற 139

அவ்வாறு உற்ற ஆடு அரவம் தன் அகல் வாயால்
கவ்வாநின்ற மால் வரை முற்றும் அவை கண்டான்,
'எவ் வாய்தோறும் எய்தின' என்னா, எதிர் எய்தான்.
தவ்வா மெய்ம்மைக் காருடம் என்னும் படைதன்னால். 140

எவண் எத்தன்மைத்து ஏகின நாகத்துஇனம் என்ன,
பவணத்து அன்ன வெஞ் சிறை வேகத் தொழில் பம்ப,
சுவணக் கோலத் துண்டம் நகம் தொல் சிறை வெல் போர்
உவணப் புள்ளே ஆயின, வானோர் உலகு எல்லாம். 141

அளக்க அரும் புள்இனம் அடைய ஆர் அழல்
துளக்க அரும் வாய்தொறும் எரியத் தொட்டன,
'இளக்க அரும் இலங்கை தீ இடுதும், ஈண்டு' என
விளக்குஇனம் எடுத்தன போன்ற, விண் எலாம். 142

136. நிருதித் திக்கில் நின்றவன் - வடமேற்காகிய நிருதி திசையில் நின்ற திசை காவலன்; 140. காருடம் - கருடனது வடிவுடைய கணை; 141. பவணம்- பவனம், காற்று; சுவணம் - பொன்; துண்டம் - மூக்கு; 142. ஒவ்வொரு பாம்பினுக்கும் ஒவ்வொரு கருடனாக வாயில் நெருப்புக் கால அவற்றைப் பற்றிய தோற்றம் விண்ணக முழுமையும் விளக்குகளை ஏற்றினாற்போலத் தோன்றியது.

குயின்றன சுடர் மணி, கனலின் குப்பையின்
பயின்றன, சுடர் தரப் பதும நாளங்கள்
வயின்தொறும் கவர்ந்தென்ன, துண்ட வாள்களால்
அயின்றன, புள்இனம் உகிரின் அள்ளின. 143

ஆயிடை அரக்கனும், அழன்ற நெஞ்சினன்,
தீயிடைப் பொடிந்து எழும் உயிர்ப்பன், சீற்றத்தன்,
மா இரு ஞாலமும் விசும்பும் வைப்பு அறத்
தூயினன், சுடு சரம் உருமின் தோற்றத்த. 144

அங்கு அவ் வெங் கடுங் கணை அயிலின் வாய்தொறும்
வெங் கணை படப் பட, விசையின் வீழ்ந்தன;
புங்கமே தலை எனப் புக்க போலுமால்;
துங்க வாள் அரக்கனது உரத்தில் தோற்றல! 145

**இராவணன் விஞ்சைகள் தளர்தலும், இராமன் வீரமும் வலியும் மிகுதலும்**

ஒக்க நின்று எதிர் அமர் உடற்றும் காலையில்,
முக்கணுன் தட வரை எடுத்த மொய்ம்பற்கு
நெக்கன, விஞ்சைகள், நிலையின் தீர்ந்தன;
மிக்கன, இராமற்கு வலியும் வீரமும். 146

**இராமன், இராவணன் தலையை அறுத்தல்**

வேதியர் வேதத்து மெய்யன், வெய்யவர்க்கு
ஆதியின் அணுகிய அற்றம் நோக்கினன்,
சாதியின் நிமிர்ந்தது ஓர் தலையைத் தள்ளினன்,
பாதியின் மதி முகப் பகழி ஒன்றினல். 147

மேருவின் கொடுமுடி, வீசு கால் எறி
போரிடை, ஒடிந்து போய், புணரி புக்கென
ஆரியன் சரம் பட அரக்கன் வன் தலை
நீரிடை விழுந்தது, நெருப்பொடு அன்று போய். 148

குதித்தனர் பாரிடை, குன்று கூறுற,
மிதித்தனர்; வடகமும் தூசும் வீசினர்;
துதித்தனர்; பாடினர்; ஆடித் துள்ளினர்;
மதித்தனர், இராமனை—வானுளோர் எலாம். 149

144. வைப்பு - இடம், வெற்றிடம்; 145. புங்கம் - அம்பின் அடிப் பகுதியாகிய குதை; 147. வெய்யவர்க்கு ஆதியன் - கொடிய அரக்கர்க்குத் தலைவனுகிய இராவணன்; 149. வடகம் - மேலாடை; தூசு - அரையாடை.

இறந்தது ஓர் உயிருடன் தருமத்து ஈட்டினுல்
பிறந்துளதாம் எனப் பெயர்த்தும், ஓர் தலை
மறந்திலது எழுந்தது, மடித்த வாயது;—
சிறந்தது தவம் அலால், செயல் உண்டாகுமோ! 150

கொய்தது, 'கொய்திலது' என்னும் கொள்கையின்
எய்த வந்து, அக் கணத்து எழுந்தது ஓர் சிரம்,
செய்த வெஞ் சினத்துடன் சிறக்கும் செல்வனை
வைத்து, தெழித்தது, மழையின் ஆர்ப்பது. 151

இடந்தது கிரிக் குவடு என்ன எங்கணும்
படர்ந்தது, குரை கடல் பருகும் பண்பது,
விடம் தரு விழியது, முடுகி, வேலையில்
கிடந்ததும், ஆர்த்தது, மழையின் கேழது. 152

இராவணனது கையை இராமன் அறுக்க, அது மீட்டும் முளைத்தல்

'விழுத்தினன் சிரம்' எனும் வெகுளி மீக்கொள,
வழுத்தின, உயிர்களின் முதலின் வைத்த ஓர்
எழுத்தினன், தோள்களின் ஏழொடு ஏழு கோல்
அழுத்தினன்—அசனிஏறு அயிர்க்கும் ஆர்ப்பினுன். 153

'தலை அறின், தருவது ஓர் தவமும் உண்டு' என,
நிலை உறு நேமியான் அறிந்து, நீசனைக்
கலை உறு திங்களின் வடிவு காட்டிய
சிலை உறு கையையும் தலத்தில் சேர்த்தினுன். 154

கொற்ற வெஞ் சரம் பட, குறைந்து போன கை
பற்றிய கிடந்தது சிலையைப் பாங்குற
மற்று ஓர் கை பிடித்தது போல வவ்வியது;
அற்ற கை, பிறந்த கை, யார் அது ஓர்குவார்? 155

இராவணன் மாதலியைத் தாக்குதல்

பொன் கையிற்று ஊர்தியான் வலியைப் போக்குவான்
முன்கையில் துறு மயிர் முள்ளின் துள்ளுற,
மின் கையில் கொண்டென வில்லை விட்டிலா
வன் கையைத் தன் கையின் வலியின் வாங்கினுன். 156

151. ஈடு - பெருமை; 153. உயிர்களின் முதலின் வைத்த ஓர் எழுத்தினன் - உயிர் எழுத்துகளின் முதலில் வைக்கப்பட்டதாகிய அகரம் என்னும் எழுத்தாக இருப்பவனுகிய இராமன்.

விளங்கு ஒளி வயிர வாள் அரக்கன் வீசிய
தளம் கிளர் தடக் கை தன் மார்பில் தாக்கலும்,
உளம் கிளர் பெரு வலி உலைவு இல் மாதலி
துளங்கினன், வாய் வழி உதிரம் தூவுவான். 157

மா மாரத்து ஆர் கையால் வருந்துவானை ஓர்
தோமரத்தால் உயிர் தொலைப்பத் தூண்டினன்—
தாம் அரத்தால் பொராத் தகை கொள் வாட் படை,
காமரத்தால், சிவன் கரத்து வாங்கினான். 158

'மாண்டது இன்றொடு மாதலி வாழ்வு' என,
மூண்ட வெந் தழல் சிந்த முடுக்கலும்,
ஆண்ட வில்லி ஓர் ஐம் முக வெங் கணை
தூண்டினான்; துகளானது, தோமரம். 159

**இராவணன் தலைகள் அறுபட்டுச் சிதறி வீழ்தல்**

ஒய்வு அகன்றது, ஒரு தலை நூறு உற,
போய் அகன்று புரள, பொரு கணை
ஆயிரம் தொடுத்தான்—அறிவின் தனி
நாயகன் கைக் கடுமை நடத்தியே. 160

நீர்த் தரங்கங்கள்தோறும், நிலம்தொறும்,
சீர்த்த மால் வரைதோறும், திசைதொறும்,
பார்த்த பார்த்த இடம்தொறும், பல் தலை
ஆர்த்து வீழ்ந்த—அசனிகள் வீழ்ந்தென. 161

தகர்ந்து மால் வரை சாய்வுறத் தாக்கின;
மிகுந்த வான்மிசை மீனம் மலைந்தன;
புகுந்த மா மகரக் குலம் போக்கு அற
முகந்த வாயின், புணரியை முற்றுற. 162

பொழுது நீட்டிய புண்ணியம் போன பின்,
பழுது செல்லும் அன்றே, மற்றைப் பண்பு எலாம்?—
தொழுது சூழ்வன முன், இன்று தோன்றவே,
கழுது சூன்ற, இராவணன் தண் எலாம். 163

157. தளம் - கனம், பருமை; 158. காமரம் - ஒருவகைப் பண்; 163. பொழுது நீட்டிய புண்ணியம் - நெடுநாளாக நுகர்ந்து வந்த புண்ணியப் பயன்.

வாளும், வேலும், உலக்கையும், வச்சிரக்
கோளும், தண்டும், மழு எனும் கூற்றமும்,
தோளின் பத்திகள்தோறும் சுமந்தன,
மீளி மொய்ம்பன் உரும் என வீசினான். 164

அனைய சிந்திட, ஆண்தகை வீரனும்
'வினையம் என் இனி? யாதுகொல் வெல்லுமா?
நினைவென்' என்ன, 'நிசாசரன் மேனியைப்
புனைவென், வாளியினால்' எனப் பொங்கினான். 165

**இராவணன் மேனியை இராமன் முற்றும் அம்பினால் மூடுதல்**

மஞ்சு அரங்கிய மார்பினும், தோளினும்,
நஞ்சு அரங்கிய கண்ணினும், நாவினும்,
வஞ்சன் மேனியை, வார் கணை அட்டிய
பஞ்சரம் எனல் ஆம் படி பண்ணினான். 166

வாய் நிறைந்தன, கண்கள் மறைந்தன,
மீ நிறங்களின் எங்கும் மிடைந்தன,
தோய்வுறும் கணை, செம்புனல் தோய்ந்தில,
போய் நிறைந்தன, அண்டப் புறம் எலாம். 167

மயிரின் கால்தொறும் வார் கணை மாரி புக்கு,
உயிரும் தீர உருவின ஒடலும்,
செயிரும் சீற்றமும் நிற்க, திறல் திரிந்து,
அயர்வு தோன்ற, துளங்கி அழுங்கினான். 168

**இராவணன் தேரில் உணர்வு இழந்து கிடக்க, சாரதி தேரினை விலக்கி நிறுத்தல்**

வாரி நீர்நின்று எதிர் மகரம் படச்
சோரி சோர, உணர்வு துளங்கினான்;
தேரின்மேல் இருந்தான்—பண்டு தேவர்தம்
ஊரின்மேலும் பவனி உலாவுவான். 169

ஆர்த்துக்கொண்டு எழுந்து உம்பர்கள் ஆடினார்;
வேர்த்துத் தீவினை வெம்பி விழுந்தது;
'போர்த்துப் பொய்த்தனன்' என்று, பொலம் கொள் தேர்
பேர்த்துச் சாரதி போயினன், பின்றுவான். 170

164. மீளி மொய்ம்பன் - பெருவலி படைத்த இராவணன்; 166. அரங்குதல் - வருத்துதல்; பஞ்சரம் - கூடு, ஈண்டு அம்பறுத்தூணி; 167. நிறம்- மார்பு; 168. செயிர் - பகைமை.

கை துறந்த படையினன், கண் அகல்
மெய் துறந்த உணர்வினன், வீழ்தலும்,
எய் திறம் தவிர்ந்தான்—இமையோர்களை
உய் திறம் துணிந்தான், அறம் உன்னுவான். 171

மாதலி, இராவணனைக் கொல்லத் தூண்டலும், இராமன் நீதியன்று எனலும்

'தேறினால், பின்னை யாதும் செயற்கு அரிது;
ஊறுதான் உற்றபோதே உயிர்தனை
நூறுவாய்' என, மாதலி நூக்கினான்;
ஏறு சேவகனும், இது இயம்பினான்: 172

'படை துறந்து, மயங்கிய பண்பினான்
இடை பெறும் துயர் பார்த்து, இகல் நீதியின்
நடை துறந்து, உயிர் கோடலும் நன்மையோ?
கடை துறந்தது போர், என் கருத்து' என்றான். 173

உணர்வு பெற்ற இராவணன், சாரதியைச் சினத்தல்

கூவிரம் செறி பொன் கொடித் தேரொடும்
போவர் அஞ்சினர், அன்னது ஓர் போழ்தினின்,
ஏவர் அஞ்சலியாதவர்? எண்ணுடைத்
தேவர் அஞ்ச, இராவணன் தேறினான். 174

உறக்கம் நீங்கி உணர்ச்சியுற்றான் என,
மறக் கண் வஞ்சன், இராமனை வான் திசைச்
சிறக்கும் தேரொடும் கண்டிலன்; சீற்றத் தீப்
பிறக்க நோக்கினன், பின்னுற நோக்கினான். 175

'தேர் திரித்தனை, தேவரும் காணவே;
வீர விற்கை இராமற்கு வெண் நகை
பேர உய்த்தனையே; பிழைத்தாய்' எனா,
சாரதிப் பெயரோனைச் சலிப்புறா, 176

'தஞ்சம் நான் உனைத் தேற்ற, தரிக்கிலா
வஞ்ச! நீ பெருஞ் செல்வத்து வைகினை;
''அஞ்சினேன்'' எனச் செய்தனை; ஆதலால்,
உஞ்சு போதிகொலாம்!' என்று உருத்து எழா, 177

174. கூவிரம் - தேர்த்தட்டின் எதிரில் நடப்பட்டதாய் வீரர் பற்றிக் கொள்ளுதற்குரிய தாமரை மொட்டுப்போன்ற ஓர் உறுப்பு; 176. பிழைத்தல்- பிழை செய்தல்; 177. தஞ்சம் - துணை.

**சாரதி தந்த விளக்கம்**

வாள் கடைக்கணித்து ஓச்சலும், வந்து, அவன்
தாள் கடைக்கு அணியாத் தலை தாழ்வுறு,
'மூள் கடைக் கடுந் தீயின் முனிவு ஒழி,
கோள் கடைக்கணித்து' என்று அவன் கூறுவான்: 178

'ஆண்தொழில் துணிவு ஒய்ந்தனை; ஆண்டு இறை
ஈண்ட நின்றிடின், ஐயனே! நின் உயிர்
மாண்டது இக் கணம் என்று, இடர் மாற்றுவான்,
மீண்டது, இத் தொழில்; எம் வினை மெய்ம்மையால். 179

'ஓய்வும் ஊற்றமும் நோக்கி, உயிர் பொறைச்
சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்,
மாய்வு நிச்சயம் வந்துழி; வாளினால்
காய்வு தக்கது அன்றால்; கடை காண்டியால்.' 180

என்று இறைஞ்சலும், எண்ணி இரங்கினான்,
'வென்றி அம் தடந் தேரினை மீட்க!' என,
சென்று எதிர்ந்தது, தேரும்; அத் தேர்மிசை
நின்ற வஞ்சன் இராமனை நேர்வுறு, 181

கூற்றின் வெங் கணை கோடியின் கோடிகள்
தூற்றினான், வலி மும் மடி தோற்றினான்;
வேற்று ஓர் வாள் அரக்கன் என, வெம்மையால்
ஆற்றினான் செரு; கண்டவர் அஞ்சினர். 182

**இராமன், இராவணன் வில்லைத் துண்டித்தல்**

'"எல் உண்டாகின் நெருப்பு உண்டு" எனும் இது ஓர்
சொல் உண்டாயதுபோல், இவன் தோளிடை
வில் உண்டாகின் வெலற்கு அரிது ஆம்' எனா,
செல் உண்டால் அன்னது ஓர் கணை சிந்தினான். 183

நாரணன் படை நாயகன் உய்ப்புறு,
பார் அணங்கினைத் தாங்குறும் பல் வகை
வாரணங்களை வென்றவன் வார் சிலை
ஆர் அணங்கை இரு துணி ஆக்கினான். 184

178. கடைக்கணித்தல் - நோக்குதல், ஆராய்தல்; கோள் - எண்ணம்; 179. ஆண் தொழில் - போர்த்தொழில்; 180. சாய்வு - வீழ்ச்சி; கடை காணுதல் - தீர ஆலோசித்தல்; 183. எல் - ஒளி; 184. சிலை ஆர் அணங்கு - வில் என்னும் அச்சுறுத்தும் தெய்வம்.

அயன் படைத்த வில், ஆயிரம் பேரினன்
வியன் படைக்கலத்தால் அற்று வீழ்தலும்,
உயர்ந்து உயர்ந்து குதித்தனர் உம்பரார்,
'பயன் படைத்தனம், பல் தவத்தால்' என்றார். 185

மாறி மாறி, வரி சிலை வாங்கினன்
நூறு நூறினொடு ஐ-இருநூறு அவை
வேறு வேறு திசை உற, வெங் கணை
நூறி நூறி, இராமன் நுறுக்கினன். 186

இருப்புலக்கை, வேல், தண்டு, கோல், ஈட்டி, வாள்,
நெருப்பு உலக்க வரும் நெடுங் கப்பணம்,
திருப் புலக்க உய்த்தான்—திசை யானையின்
மருப்பு உலக்க வழங்கிய மார்பினன். 187

அவை அனைத்தும் அறுத்து, அகன் வேலையில்
குவை அனைத்தும் எனக் குவித்தான், குறித்து,
'இவை அனைத்தும் இவனை வெல்லா' என,
நவை அனைத்தும் துறந்தவன் நாடினன். 188

'கண்ணினுள் மணியூடு கழிந்தன,
எண்ணின் நுண் மணலின் பல வெங்கணை;
புண்ணினுள் நுழைந்து ஓடிய, புந்தியோர்
எண்ணின் நுண்ணிய; என் செயற்பாற்று' என, 189

'நாரணன் திரு உந்தியில் நான்முகன்
பார வெம் படை வாழ்கி, இப் பாதகன்
மாரின் எய்வென்' என்று எண்ணி, வலித்தனன்,
ஆரியன், அவன் ஆவி அகற்றுவான். 190

முந்தி வந்து உலகு ஈன்ற முதற் பெயர்
அந்தணன் படை வாங்கி அருச்சியா,
சுந்தரன் சிலை நாணில் தொடுப்புறா,
மந்தரம் புரை தோள் உற வாங்கினன். 191

புரம் சுடப் பண்டு அமைத்தது, பொன் பணை
மரம் துளைத்தது, வாலியை மாய்த்துளது,
அரம் சுடச் சுடர் நெஞ்சின் அரக்கர் கோன்
உரம் சுட, சுடரோன் மகன் உந்தினன். 192

190. மார் - மார்பு; 192. சுடரோன் மகன் - சூரிய குலத் தோன்றலாகிய இராமன்.

அயன் படையால் இராவணன் உயிர் இழத்தல்

காலும் வெங் கனலும் கடை காண்கிலா,
மாலும் கொண்ட வடிக் கணை, மா முகம்
நாலும் கொண்டு நடந்தது, நான்முகன்
மூல மந்திரம் தன்னொடு மூட்டலால். 193

ஆழி மால் வரைக்கு அப்புறத்து அப்புறம்,
பாழி மா கடலும் வெளி பாய்ந்ததால்—
ஊழி ஞாயிறு மின்மினி ஒப்புற,
வாழி வெஞ் சுடர் பேர் இருள் வாரவே. 194

அக் கணத்தின் அயன் படை ஆண்தகை
சக்கரப் படையோடும் தழீஇச் சென்று,
புக்கது, அக் கொடியோன், உரம்; பூமியும்,
திக்கு அனைத்தும், விசும்பும், திரிந்தவே. 195

முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய
பெருந் தவமும், முதல்வன் முன்நாள்,
'எக் கோடியாராலும் வெலப்படாய்'
எனக் கொடுத்த வரமும், ஏனைத்
திக்கோடும் உலகு அனைத்தும் செருக் கடந்த
புய வலியும், தின்று, மார்பில்
புக்கு ஓடி உயிர் பருகி, புறம் போயிற்று,
இராகவன்தன் புனித வாளி. 196

ஆர்க்கின்ற வானவரும், அந்தணரும்,
முனிவர்களும், ஆசி கூறித்
தூர்க்கின்ற மலர் மாரி தொடரப் போய்,
பாற்கடலில் தூய் நீர் ஆடி,
தேர்க் குன்ற இராவணன்தன் செழுங் குருதிப்
பெரும் பரவைத் திரைமேல் சென்று,
கார்க் குன்றம் அனையான்தன் கடுங் கணைப்
புட்டிலின் நடுவண் கரந்தது அம்மா. 197

193. மாலும் - உம்மை எதுகை நோக்கி வந்த அசை; 196. முதல்வன் - பிரமன்.

இறந்த இராவணன் முகப் பொலிவு

கார் நின்ற மழைநின்றும் உரும் உதிர்வ
 என, திணி தோட் காட்டின்நின்றும்,
தார் நின்ற மலைநின்றும், பணிக் குலமும்
 மணிக் குலமும் தகர்ந்து சிந்த,
போர் நின்ற விழிநின்றும் பொறிநின்று
 புகையோடும் குருதி பொங்க,
தேர்நின்று நெடு நிலத்துச் சிரமுகம் கீழ்ப்
 பட விழுந்தான், சிகரம் போல்வான். 198

வெம் மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க,
 மனம் அடங்க, வினையம் வீய,
தெவ் மடங்க, பொரு தடக் கைச் செயல் அடங்க,
 மயல் அடங்க, ஆற்றல் தேய,
தம் அடங்கு முனிவரையும் தலை அடங்கா,
 நிலை அடங்கச் சாய்த்த நாளின்
மும் மடங்கு பொலிந்தன, அம் முறை துறந்தான்
 உயிர் துறந்த முகங்கள் அம்மா! 199

இராமன், இராவணன் உடம்பைப் பார்த்தல்

'பூதலத்தது ஆக்குவாயாக, இனிப்
 பொலந் தேரை' என்ற போதில்,
மாதலிப் பேரவன் கடவ, மண் தலத்தின்
 அப் பொழுதே வருதலோடும்,
மீது அலைத்த பெருந் தாரை விசும்பு அளப்பக்
 கிடந்தான்தன் மேனி முற்றும்
காதலித்த உரு ஆகி, அறம் வளர்க்கும்
 கண்ணுளன் தெரியக் கண்டான். 200

'தேரினை நீ கொடு விசும்பில் செல்க' என்ன
 மாதலியைச் செலுத்தி, பின்னர்,
பாரிடம்மீதினின் அணுகி, தம்பியொடும்
 படைத்தலைவர் பலரும் சுற்ற,
போரிடை மீண்டு ஒருவருக்கும் புறங்கொடாப்
 போர் வீரன் பொருது வீழ்ந்த
சீரினையே மனம் உவப்ப, உரு முற்றும்
 திருவாளன் தெரியக் கண்டான். 201

199. தம் அடங்குதல் - தம் ஐம்பொறி அடங்க நிற்றல்; நிலை - தவநிலை;
200. பெருந் தாரை - பெரிய இரத்த தாரை.

புலேமேலும் செலற்கு ஒத்துப் பொது நின்ற
செல்வத்தின் புன்மைத் தன்மை
நிலேமேலும் இனி உண்டே? 'நீர் மேலேக்
கோலம்' எனும் நீர்மைத்து அன்றே
தலேமேலும் தோள்மேலும் தடமுதுகின்
படர்புறத்தும் தாவி ஏறி,
மலேமேல் நின்று ஆடுவபோல் ஆடினவால்
வானரங்கள், வரம்பு இலாத. 202

தோடு உழுத நறுந் தொடையல் தொகை உழுத
கிளே வண்டின் சுழியத் தொங்கல்
பாடு உழுத படர் வெரிநின் பணி உழுத
அணி நிகர்ப்ப, பணேக் கை யானேக்
கோடு உழுத நெடுந் தழும்பின் குவை தழுவி,
எழு மேகக் குழுவின் கோவைக்
காடு உழுத கொழும் பிறையின் கறை கழன்று
கிடந்தனபோல் கிடக்கக் கண்டான்: 203

**இராவணன் புறப்புண் கண்ட இராமன் முறுவலித்தல்**

தளிர்இயல் பொருட்டின் வந்த சீற்றமும், தருக்கிஞேன்தன்
கிளர் இயல் உருவிஞேடும் கிழிப்புறக் கிளர்ந்து தோன்றும்
வளர் இயல் வடுவின் செம்மைத் தன்மையும், மருவ நின்ற
முளரி அம் கண்ணன், மூரல் முறுவலன், மொழிவதாஞன்: 204

'வென்றியான் உலகம் மூன்றும் மெய்ம்மையால் மேவிஞலும்,
பொன்றிஞன் என்று தோளேப் பொது அற நோக்கும் பொற்பும்
குன்றி ஆசுற்றதுஅன்றே—இவன் எதிர் குறித்த போரில்
பின்றியான் முதுகில் பட்ட பிழம்பு உள தழும்பின் அம்மா.

' ''கார்த்தவீரியன் என்பாஞல் கட்டுண்டான்'' என்னக் கற்கும்
வார்த்தை உண்டு; அதனேக் கேட்டு, நாணுறு மனத்தினேற்குப்
போர்த்தலே புறகிட்டு ஏற்ற புண்ணுடைத் தழும்பும் போலாம்
நேர்த்ததும் காணலுற்ற; ஈசஞர் இருக்கை நிற்க! 206

'மாண்டு ஒழிந்து உலகில் நிற்கும் வயங்கு இசை முயங்க மாட்டாது,
ஊண்தொழில் உகந்து, தெவ்வர் முறுவல் என் புகழை உண்ண,
பூண் தொழில் உடைய மார்பா! போர்ப் புறங்கொடுத்தோர்ப் போன்ற
ஆண்தொழிலோரின் பெற்ற வெற்றியும் அவத்தம்' என்ருன்.

202. புலே - கீழ்மை; 203. பாடு உழுத - பெருமை பொருந்திய; பணி உழுத - வேலேப்பாடு அமைந்த; 207. அவத்தம் - பொய்.

**வீடணன் வருந்திக் கூறுதல்**

'அவ் உரைக்கு இறுதி நோக்கி, வீடணன், அருவிக் கண்ணன,
வெவ் உயிர்ப்போடு நீண்ட விம்மலன், வெதும்பும் நெஞ்சன்,
'செவ்வியின் தொடர்ந்த அல்ல செப்பலை, செல்வ!' என்னு,
எவ் உயிர்ப் பொறையும் நீங்க இரங்கி நின்று, இனைய சொன்னன்:

'ஆயிரம் தோளினுனும், வாலியும், அரிதின், ஐய!
மேயின வென்றி விண்ணேர் சாபத்தின் விளைந்த; மெய்ம்மை;
தாயினும் தொழத் தக்காள்மேல் தங்கிய காதல்-தன்மை
நோயும் நின் முனிவும் அல்லால், வெல்வரோ நுவலற்பாலார்?

'நாடு உளதனையும் ஓடி நண்ணலார்க் காண்கிலாமல்,
பீடு உள குன்றம் போலும் பெருந் திசை எல்லை யானைக்
கோடு உளதனையும் புக்குக் கொடும் புறத்து அழுந்து புண்ணின்
பாடு உளது அன்றி, தெவ்வர் படைக்கலம் பட்டுஎன் செய்யும்?

'அப் பணை அனைத்தும் மார்புக்கு அணி எனக் கிடந்த; வீரக்
கைப் பணை முழங்க, மேல்நாள், அமரிடைக் கிடைத்த காலன்
துப்பு அணை வயிர வாளி விசையினும், காலின் தோன்றல்
வெப்பு அணை குத்தினுலும், வெரிநிடைப் போய அன்றே.*

'அவ் வடு அன்றி, இந்த அண்டத்தும் புறத்தும் ஆன்ற
தெவ் அடு படைகள் அஞ்சாது இவன்வயின் செல்லின், தேவ!
வெவ் விடம் ஈசன்தன்னை விழுங்கினும், பறவை வேந்தை
அவ் விட நாகம் எல்லாம் அணுகினும், அணுகல் ஆற்று. 212

'வென்றியாய்! பிறிதும் உண்டே வேலை சூழ் ஞாலம், ஆண்டு, ஓர்
பன்றியாய் எயிற்றுக் கொண்ட பரம்பரன் முதல பல்லோர்,
"என்று யாம் இடுக்கண் தீர்வது?" என்கின்றுர்; "இவன் இன்று உன்னுல்
பொன்றினன்" என்றபோதும், புலப்படார், "பொய்கொல்?" என்பார்.'

**இராவணனுக்கு இறுதிக் கடன் செய்ய வீடணனை ஏவுதல்**

'அன்னதோ?' என்னு, வீரன் ஐயமும் நாணும் நீங்கி,
தன்ன தோள் இணையை நோக்கி, 'வீடண! தக்கது அன்றுல்;
என்னதோ, இறந்துளான்மேல் வயிர்த்தல்? நீ இவனுக்கு, ஈண்டு
சொன்னது ஓர் விதியினலே கடன் செயத் துணிதி' என்றுன்.

209. தாயினும் தொழத்தக்காள் - சீதை; 211. பணை - யானைகளின் கொம்புகள்; கைப் பணை - சங்குகள்.

அவ் வகை அருளி, வள்ளல் அனைத்து உலகங்களோடும்
எவ் வகை உள்ள தேவர் யாவரும் இரைத்துப் பொங்கிக்
கவ்வையின் தீர்ந்தார் வந்து வீழ்கின்றார் தம்மைக் காண,
செவ்வையின் அவர் முன் சென்றான்; வீடணன் இதனைச் செய்தான்.

வீடணன், இராவணன் மேனிமேல் விழுந்து அரற்றுதல்

'போழ்ந்தென அரக்கன் செய்த புன் தொழில் பொறையிற்று ஆமால்;
வாழ்ந்த நீ இவனுக்கு ஏற்ற வழிக் கடன் வகுத்தி' என்ன,
தாழ்ந்தது ஓர் கருணை தன்னால், தலைமகன் அருள, தள்ளி,
வீழ்ந்தனன் அவன்மேல், வீழ்ந்த மலையின்மேல் மலை வீழ்ந்தென்ன.

ஏவரும் உலகத்து எல்லா உயிர்களும் எரியின் நெஞ்சின்
தேவரும் முனிவர்தாமும் சிந்தையின் இரக்கம் சேர,
தா அரும் பொறையினான்தன் அறிவினால் தகைக்க நின்ற
ஆவலும் துயரும் தீர, அரற்றினான் பகு வாய் ஆர, 217

வீடணன் புலம்பல்

உண்ணாதே உயிர் உண்ணாது ஒரு நஞ்சு;
சனகி எனும் பெரு நஞ்சு உன்னைக்
கண்ணாலே நோக்கவே, போக்கியதே
உயிர்; நீயும் களப் பட்டாயே!
எண்ணாதேன் எண்ணிய சொல் இன்று இனித் தான்
எண்ணுதியோ?—எண் இல் ஆற்றல்
அண்ணாவோ! அண்ணாவோ! அசுரர்கள்தம்
பிரளயமே! அமரர் கூற்றே! 218

' ''ஓர் ஆசை ஒருவன்மேல் உயிர் ஆசைக்
குலமகள்மேல் உடைய காதல்
தீர்; ஆசை பழி'' என்றேன்; எனை முனிந்த
முனிவு ஆறித் தேறினாயோ?
போர் ஆசைப்பட்டு எழுந்தகுலம் முற்றும்
பொன்றவும்தான் பொங்கி நின்ற
பேர் ஆசை பெயர்ந்ததோ?—பெயர்ந்து ஆசைக்
கரி இரியப் புருவம் பேர்த்தாய்! 219

216. போழ்ந்தென - உடம்பைப் பிளந்தாற்போல; 218. எண்ணாதேன்- நின்னால் மதிக்கப்படாத யான்; 219. ஓர் அசை ஒருவன் - ஒருதிறப்பட்ட ஆசையை உடைய ஒப்பற்ற இராமன்; ஆசைக் கரி - திசை யானை.

' ''அன்று எரியில் விழு வேதவதி இவள்காண்;
உலகுக்கு ஓர் அன்னை'' என்று,
குன்று அனைய நெடுந் தோளாய்! கூறினேன்;
அது மனத்துள் கொள்ளாதே போய்,
உன்தனது குலம் அடங்க, உருத்து அமரில்
படக் கண்டும், உறவு ஆகாதே
பொன்றினையே! இராகவன்தன் புய வலியை
இன்று அறிந்து, போயினையோ!* 220

'மன்றல் மா மலரானும், வடி மழு வாள்
படையானும், வரங்கள் ஈந்த
ஒன்று அலாதன உடைய முடியோடும்
பொடி ஆகி உதிர்ந்து போன;
அன்றுதான் உணர்ந்திலையே ஆனாலும்
அவன் நாட்டை அணுகாநின்ற
இன்றுதான் உணர்ந்தனையே, இராமன்தான்
யாவருக்கும் இறைவன் ஆதல்? 221

'வீர நாடு உற்றாயோ? விரிஞ்சனும்
யாவருக்கும் மேலாம் முன்பன்
பேரன் நாடு உற்றாயோ? பிறை சூடும்
பிஞ்ஞகன்தன் புரம் பெற்றாயோ?
ஆர், ஐயா! உன் உயிரை, அஞ்சாதே,
கொண்டு அகன்றார்? அது எலாம் நிற்க,
மாரனார் வலி ஆட்டம் தவிர்ந்தாரோ?
குளிர்ந்தானோ, மதியம் என்பான்? 222

' ''கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்'' என்று,
அது குறித்துக் கொடுமை சூழ்ந்து,
பல்லாலே இதழ் அதுக்கும் கொடும் பாவி
நெடும் பாரப் பழி தீர்ந்தாளே!
நல்லாரும் தீயாரும் நரகத்தார்
துறக்கத்தார், நம்பி! நம்மோடு
எல்லாரும் பகைஞரே; யார் முகத்தே
விழிக்கின்றாய்? எளியை ஆனாய்! 223

222. பேரன் - பாட்டன், இங்குப் பிரமதேவன்; 223. இராவணன் நிவாத கவச காலகேயருடன் போர் செய்யும்போது சூர்ப்பணகையின் கணவனைத் தெரியாமல் கொன்றுவிட்டான். அதனையே, 'மைத்துனனைக் கொன்றாய்' என்ற தொடர் குறிக்கிறது. இதழ் அதுக்கல் - உதட்டைக் கடித்தல்.

‘போர்மகளை, கலைமகளை, புகழ்மகளை,
தழுவிய கை பொருமை கூர,
சீர்மகளை, திருமகளை, தேவர்க்கும்
தெரிவு அரிய தெய்வக் கற்பின்
பேர்மகளை, தழுவுவான் உயிர் கொடுத்து,
பழி கொண்ட பித்தா! பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ, திசை யானைப்
பணை இறுத்த பணைத்த மார்பால்?’ 224

**வீடணன் தேறுதல்**

என்று ஏங்கி, அரற்றுவான்தனை எடுத்து,
சாம்பவனும் எண்கின் வேந்தன்,
‘குன்று ஓங்கு நெடுந் தோளாய்! விதி நிலையை
மதியாத கொள்கைத்து ஆகிச்
சென்று ஓங்கும் உணர்வினையோ? தேருது
வருந்துதியோ?’ என்ன, தேறி
நின்றான், அப்புறத்து; அரக்கன் நிலை கேட்டாள்,
மயன் பயந்த நெடுங் கண் பாவை. 225

**மண்டோதரியும் அரக்கியரும் இராவணன் கிடக்கும் இடம் அடைதல்**

அனந்தம் நூறாயிரம் அரக்கர் மங்கைமார்,
புனைந்த பூங் குழல் விரித்து அரற்றும் பூசலார்,
இனம் தொடர்ந்து உடன் வர, எய்தினாள் என்ப—
நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள். 226

இரக்கமும் தருமமும் துணைக்கொண்டு, இன் உயிர்
புரக்கும் நன் குலத்து வந்து ஒருவன் பூண்டது ஓர்
பரக்கழி ஆம் எனப் பரந்து, நீண்டதால்—
அரக்கியர் வாய் திறந்து அரற்றும் ஓதையே. 227

நூபுரம் புலம்பிட, சிலம்பு நொந்து அழ,
கோபுரம்தொறும் புறம் குறுகினார் சிலர்;
‘ஆ! புரந்தரன் பகை அற்றது ஆம்’ எனா,
மா புரம் தவிர, விண் வழிச் சென்றார் சிலர். 228

227. பரக்கழி - பெரும்பழி; 228. மா புரம் தவிர - பெரிதாகிய மதில் வழி தவிர்ந்து.

அழைப்பு ஒலி முழக்கு எழ, அழகு மின்னிட,
குழைப் பொலி நல் அணிக் குலங்கள் வில்லிட,
உழைப் பொலி உண் கண் நீர்த் தாரை மீது உக,
மழைப் பெருங் குலம் என, வான் வந்தார் சிலர். 229

அரக்கிமார் அழுகை

தலைமிசைத் தாங்கிய கரத்தர், தாரை நீர்
முலைமிசைத் தூங்கிய முகத்தர், மொய்த்து வந்து,
அலைமிசைக் கடலின் வீழ் அன்னம்போல், அவன்
மலைமிசைத் தோள்கள்மேல் வீழ்ந்து, மாழ்கினர். 230

தழுவினர் தழுவினர் தலையும் தாள்களும்,
எழு உயர் புயங்களும், மார்பும், எங்கணும்,
குழுவினர், முறை முறை கூறு கூறு கொண்டு
அழுதனர் அயர்த்தனர், அரக்கிமார்களே. 231

வருத்தம் ஏது எனின், அது புலவி; வைகலும்,
பொருத்தமே வாழ்வு எனப் பொழுது போக்குவார்,
ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து, உயிரின் புல்லினர்—
திருத்தமே அனையவன் சிகரத் தோள்கள்மேல். 232

இயக்கியர், அரக்கியர், உரகர் ஏழையர்,
மயக்கம் இல் சித்தியர், விஞ்சை மங்கையர்,—
முயக்கு இயல் முறை கெட முயங்கினர்கள்—தம்
துயக்கு இலா அன்பு மூண்டு, எவரும் சோரவே. 233

'அறம் தொலைவுற மனத்து அடைத்த சீதையை
மறந்திலையோ, இனும்? எமக்கு உன் வாய்மலர்
திறந்திலை; விழித்திலை; அருளும் செய்கிலை;
இறந்தனையோ?' என இரங்கி, ஏங்கினர். 234

மண்டோதரி இராவணன் மார்பில் விழுந்து புலம்புதல்

தரங்க நீர் வேலையில் தடித்து வீழ்ந்தென
உரம் கிளர் மதுகையான் உருவின் உற்றனள்,
மரங்களும் மலைகளும் உருக, வாய் திறந்து,
இரங்கினள்—மயன் மகள்,—இனைய பன்னினள்: 235

232. பொருத்தம் - பொருந்தி இருப்பது, கூடல்; திருத்தமே அனையவன்- வீரந் தங்கிய துறை என்னத்தக்க இராவணன்; திருத்தம் - தீர்த்தம், ஈண்டு வீரம் தங்கிய துறை; 233. துயக்கு - மாறுபாடு.

'அன்னேயோ! அன்னேயோ! ஆ, கொடியேற்கு
அடுத்தவாறு! அரக்கர் வேந்தன்
பின்னேயோ, இறப்பது? முன் பிடித்திருந்த
கருத்து அதுவும் பிடித்திலேனே?
முன்னேயோ விழுந்ததுவும், முடித் தலேயோ?
படித் தலைய முகங்கள்தானே?
என்னேயோ, என்னேயோ, இராவணனார்
முடிந்த பரிசு! இதுவோ பாவம்! 236

'வெள் எருக்கஞ் சடை முடியான் வெற்பு எடுத்த
திரு மேனி, மேலும் கீழும்,
எள் இருக்கும் இடன் இன்றி, உயிர் இருக்கும்
இடன் நாடி, இழைத்தவாறோ?
''கள் இருக்கும் மலர்க் கூந்தல் சானகியை
மனச் சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும்'' எனக் கருதி, உடல் புகுந்து,
தடவியதோ ஒருவன் வாளி? 237

'ஆரம் போர் திரு மார்பை அகல் முழைகள்
எனத் திறந்து, இவ் உலகுக்கு அப்பால்
தூரம் போயின, ஒருவன் சிலை துரந்த
சரங்களே; போரில் தோற்று,
வீரம் போய், உரம் குறைந்து, வரம் குறைந்து,
வீழ்ந்தானே! வேறே! கெட்டேன்!
ஓர்அம்போ, உயிர் பருகிற்று, இராவணனை?
மானுடவன் ஊற்றம் ஈதோ! 238

'காந்தையருக்கு அணி அனைய சானகியார்
பேர் அழகும், அவர்தம் கற்பும்,
ஏந்து புயத்து இராவணனார் காதலும், அச்
சூர்ப்பணகை இழந்த மூக்கும்,
வேந்தர் பிரான், தயரதனார், பணியதனால்
வெங் கானில் விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்
பெருந் தவமாய்ப் போயிற்று, அம்மா! 239

236. முன் பிடித்திருந்த கருத்து - முன்பு தொடங்கி உறுதியாகக் கொண்டிருந்த மனக்கருத்து; 238. போர்த்தல் - அணிதல்; 239. காந்தையர் - பெண்பாலார்; கடைமுறை - முடிவில்; புரந்தரன் - இந்திரன்.

'"தேவர்க்கும், திசைக் கரிக்கும், சிவனுர்க்கும்,
அயனுர்க்கும், செங் கண் மாற்கும்,
ஏவர்க்கும், வலியானுக்கு என்று உண்டாம்
இறுதி?" என ஏமாப்புற்றேன்;
ஆவற்கண் நீ உழந்த அருந் தவத்தின்
பெருங் கடற்கும், வரம் என்று ஆன்ற
காவற்கும், வலியான் ஓர் மானுடவன்
உளன் என்னக் கருதினேனே? 240

'அரை கடை இட்டு அமைவுற்ற முக்கோடி
ஆயுவும் முன் அறிஞர்க்கேயும்
உரை கடையிட்டு அளப்ப அரிய பேர் ஆற்றல்,
தோள் ஆற்றற்கு உலப்போ இல்லை;
திரை கடையிட்டு அளப்ப அரிய வரம் என்னும்
பாற்கடலைச் சீதை என்னும்
பிரை கடை இட்டு அழிப்பதனை அறிந்தேனே,
தவப் பயனின் பெருமை பார்ப்பேன்? 241

'ஆர் அனுர், உலகு இயற்கை அறிதக்கார்?
அவை ஏழும் ஏழும் அஞ்சும்
வீரனுர் உடல் துறந்து, விண் புக்கார்;
கண் புக்க வேழ வில்லால்,
நார நாள் மலர்க் கணையால், நாள் எல்லாம்
தோள் எல்லாம், நைய எய்யும்
மாரனுர் தனி இலக்கை மனித்தனுர்
அழித்தனரே, வரத்தினுலே! 242

மண்டோதரி உயிர் பிரிதல்

என்று அழைத்தனள், ஏங்கி எழுந்து, அவன்
பொன் தழைத்த பொரு அரு மார்பினைத்
தன் தழைக் கைகளால் தழுவி, தனி
நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினுள். 243

வான மங்கையர், விஞ்சையர், மற்றும் அத்
தான மங்கையரும், தவப் பாலவர்,
ஆன மங்கையரும், அருங் கற்புடை
மான மங்கையர்தாமும், வழுத்தினுர். 244

240. ஆவற்கண் - ஆவலோடு; 241. ஆயு - ஆயுள், வாழ்நாள்; உரை கடை இடுதல் - சொல்லால் முடிவுகட்டல்; 242. கண் புக்க வேழ வில் - கணுப் பொருந்திய கருப்பு வில்; நார நாள் மலர்க் கணை - (வண்டொழுக்காகிய) நாணியைக் கொண்ட நாள்மலராகிய அம்பு.

பின்னர், வீடணன், பேர் எழில் தம்முனே,
வன்னி கூவி, வரன்முறையால், மறை
சொன்ன ஈம விதி முறையால் தொகுத்து,
இன்னல் நெஞ்சினெடு இந்தனத்து எற்றினன். 245

கடன்கள் செய்து முடித்து, கணவனேடு
உடைந்து போன மயன் மகளோடு உடன்
அடங்க வெங் கனலுக்கு அவி ஆக்கினன்—
குடம் கொள் நீரினும் கண் சோர் குமிழியான். 246

**வீடணன், யாவர்க்கும் உரிய கடன்களே இயற்றி, இராமனே அடைதல்**

மற்றையோர்க்கும் வரன்முறையால் வகுத்து,
உற்ற தீக் கொடுத்து, உண்குறு நீர் உகுத்து,
'எற்றையோர்க்கும் இவன் அலது இல' என,
வெற்றி வீரன் குரை கழல் மேவினன். 247

வந்து தாழ்ந்த துணைவனே, வள்ளலும்,
'சிந்தை வெந் துயர் தீருதி, தெள்ளியோய்!
முந்தை எய்தும் முறைமை இது ஆம்' என,
அந்தம் இல் இடர்ப் பாரம் அகற்றினன். 248

## 37　　மீட்சிப் படலம்

**இராமன் ஆணைப்படி, இலக்குவன் வீடணனுக்கு முடி சூட்டுதல்**

'வருந்தல், நீதி மனு நெறி யாவையும்
பொருந்து கேள்விப் புலமையினேய்!' என,
அருந் தவப் பயனுல் அடைந்தாற்கு அறைந்து,
இருந் தவத்து இளேயோற்கு இது இயம்பினன்:* 1

'சோதியான் மகன், வாயுவின் தோன்றல், மற்று
ஏது இல் வானர வீரரொடு ஏகி, நீ
ஆதி நாயகன் ஆக்கிய நூல் முறை
நீதியானே நெடு முடி சூட்டுவாய்.'* 2

245. வன்னி கூவி - அக்கினியைப் பிரதிட்டை செய்து.

37: 2. ஆதி நாயகன் - நாராயணன்; நூல் - வேதம்.

என்று கூறி, இளவலொடு ஆரையும்
வென்றி வீரன் விடை அருள் வேலையில்,
நின்ற தேவர் நெடுந் திசையோரொடும்
சென்று, தம் தம செய்கை புரிந்தனர்.* 3

சூழ் கடல் புனலும், பல தோயமும்,
நீள் முடித் தொகையும், பிற நீர்மையும்,
பாழி துற்று அரி பற்றிய பீடமும்,
தாழ்வுஇல் கொற்றத்து அமரர்கள் தந்தனர்.* 4

வாச நாள் மலரோன் சொல, மான்முகன்
காசும் மா நிதியும் கொடு, கங்கை சூடு
ஈசனே முதலோர் வியந்து ஏத்திட
தேசு உலாம் மணி மண்டபம் செய்தனன்.* 5

மெய் கொள் வேத விதி முறை விண்ணுளோர்
தெய்வ நீள் புனல் ஆடல் திருத்திட,
ஐயன் ஆணையினல், இளங் கோளரி
கையினல் மகுடம் கவித்தான் அரோ.* 6

கரிய குன்று கதிரினைச் சூடி ஓர்
எரி மணித் தவிசில் பொலிந்தென்னவே,
விரியும் வெற்றி இலங்கையர் வேந்தன் நீடு
அரியணைப் பொலிந்தான், தமர் ஆர்த்து எழ. 7

தேவர் பூ மழை, சித்தர் முதலினேர்
மேவு காதல் விரை மலர், வேறு இலா
மூவரோடு, முனிவர், மற்று யாவரும்,
நாவில் ஆசி நறை மலர், தூவினர்.* 8

முடி புனைந்த நிருதர் முதலவன்
அடி வணங்கி இளவலை, ஆண்டை அந்
நெடிய காதலினேர்க்கு உயர் நீர்மை செய்து,
இடி கொள் சொல்லன் அனலற்கு இது இயம்பினன்.* 9

'விலங்கல் நாண மிடைதரு ,தோளினய்!
இலங்கை மா நகர் யான் வரும் எல்லை, நீ
கலங்கலா நெடுங் காவல் இயற்று' என,
அலங்கல் வீரன் அடி இணை எய்தினன்.* 10

3. செய்கை - கடமை; 4. தோயம் - தீர்த்தம், புண்ணிய நீர்; துற்றுதல் - பொருந்துதல்; 5. மான் முகன் - மானின் முகம் உடையவனகிய மயன்; 9. உயர் நீர்மை - உயர்ந்த சிறப்பு.

வணங்கிய வீடணனை இராமன் தழுவி, நீதிகள் உரைத்தல்

குரக்கு வீரன், அரசு, இளங் கோளரி,
அரக்கர் கோமகனோடு அடி தாழ்தலும்,
பொருக்கெனப் புகல் புக்கவற் புல்லி, வித்
திருக் கொள் மார்பன் இனையன செப்பினான்:* 11

'உரிமை மூஉலகும் தொழ, உம்பர்தம்
பெருமை நீதி அறன் வழிப் பேர்கிலாது,
இருமை ஏய் அரசாளுதி, ஈறு இலாத்
தரும சீல!' என்றான்—மறை தந்துளான்.* 12

பன்னும் நீதிகள் பல் பல கூறி, 'மற்று
உன்னுடைத் தமரோடு, உயர் கீர்த்தியோய்!
மன்னி வாழ்க! என்று உரைத்து, அடல் மாருதி—
தன்னை நோக்கினன், தாயர் சொல் நோக்கினான்.* 13

சீதைக்குச் செய்தி சொல்லி வர, இராமன் அனுமனை அனுப்புதல்

இப் புறத்து, இன எய்துறு காலையில்,
அப் புறத்ததை உன்னி, அனுமனை,
'துப்பு உறச் செய்ய வாய் மணித் தோகைபால்
செப்புறு, இப்படிப் போய்' எனச் செப்பினான். 14

அனுமன் சீதையிடம் செய்தி கூறுதல்

வணங்கி, அந்தம் இல் மாருதி, மா மலர்
அணங்கு சேர் கடி காவு சென்று அண்மினான்;
உணங்கு கொம்புக்கு உயிர் வரு நீர் என,
சுணங்கு தோய் முலையாட்கு இவை சொல்லுவான்: 15

'ஏழை, சோபனம்! ஏந்திழை, சோபனம்!
வாழி, சோபனம்! மங்கல சோபனம்!
ஆழி ஆன அரக்கனை ஆரியச்
சூழி யானை துகைத்தது, சோபனம்!' 16

பாடினான் திரு நாமங்கள்; பல் முறை
கூடு சாரியின் குப்புற்றுக் கூத்து நின்று
ஆடி, அங்கை இரண்டும் அலங்குறச்
சூடி நின்றனன், குன்று அன்ன தோளினான். 17

11. குரக்கு வீரன் - சுக்கிரீவன்; இளங் கோளரி - இளவரசனாகிய வலிய சிங்கம் போன்ற அங்கதன்; 16. சோபனம் - மங்கலம்; 17. குப்புறுதல் - குதித்தல்.

'தலை கிடந்தன, தாரணி தாங்கிய
மலை கிடந்தனபோல்; மணித் தோள் எனும்
அலை கிடந்தன; ஆழி கிடந்தென,
நிலை கிடந்தது, உடல் நிலத்தே' என்றான். 18

'அண்ணல் ஆணையின், வீடணனும் மறக்
கண் இலாதவன் காதல் தொடர்தலால்,
பெண் அலாது, பிழைத்துளதாகும் என்று
எண்ணல் ஆவது ஓர் பேர் இலதால்' என்றான். 19

ஒரு கலைத் தனி ஒண் மதி நாளொடும்
வரு கலைக்குள் வளர்வது மானுறப்
பொரு கலைக் குலம் பூத்தது போன்றனள்—
பருகல் உற்ற அமுது பயந்த நாள். 20

ஆம்பல் வாயும் முகமும் அலர்ந்திட,
தேம்பும் நுண் இடை நோவ, திரள் முலை
ஏம்பல் ஆசைக்கு இரட்டி வந்து எய்தினாள்—
பாம்பு கான்ற பனி மதிப் பான்மையாள். 21

புந்தி ஓங்கும் உவகைப் பொருமலோ,
உந்தி ஓங்கும் ஒளி வளைத் தோள்கொலோ,
சிந்தி ஓடு கலையுடைத் தேர்கொலோ—
முந்தி ஓங்கின யாவை—முலைகொலோ? 22

குனித்த, கோலப் புருவங்கள்; கொம்மை வேர்
பனித்த, கொங்கை; மழலைப் பணிமொழி
நுனித்தது ஒன்று, நுவல்வது ஒன்று, ஆயினாள்;—
கனித்த இன் களி கள்ளினின் காட்டுமோ? 23

அனையள் ஆகி, அனுமனை நோக்கினாள்,
இனையது இன்னது இயம்புவது என்பது ஓர்
நினைவு இலாது நெடிது இருந்தாள்—நெடு
மனையின் மாசு துடைத்த மனத்தினாள். 24

' ''யாது இதற்கு ஒன்று இயம்புவல்?'' என்பது
மீது உயர்ந்த உவகையின் விம்மலோ?
தூது பொய்க்கும் என்றோ?' எனச் சொல்லினான்,
நீதி வித்தகன்; நங்கை நிகழ்த்தினாள்: 25

21. ஏம்பல் ஆசை - மகிழ்ச்சிவழிப்பட்ட விருப்பம்; 22. பொருமல் - பூரிப்பு; உந்துதல் - (உடல் பூரிப்பால்) தள்ளுதல்; 23. கொம்மை - பருமை; வேர் - வியர்வை; இன் களி - இனிய மகிழ்ச்சி.

**சீதை மறுமொழி**

'மேக்கு நீங்கிய வெள்ள உவகையால்
ஏக்கமுற்று, ''ஒன்று இயம்புவது யாது?'' என
நோக்கி நோக்கி, அரிது என நொந்துளேன்;
பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ? 26

'முன்னை, ''நீக்குவென் மொய் சிறை'' என்ற நீ
பின்னை நீக்கி, உவகையும் பேசினை;
''என்ன பேற்றினை ஈகுவது?'' என்பதை
உன்னி நோக்கி, உரை மறந்து ஓவினேன். 27

'உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி
விலை இலாமையும் உன்னினென்; மேல் அவை
நிலை இலாமை நினைந்தனென்; நின்னை என்
தலையினால் தொழவும் தகும்—தன்மையோய்! 28

'ஆதலான், ஒன்று உதவுதல் ஆற்றலேன்;
''யாது செய்வது?'' என்று எண்ணி இருந்தனென்;
வேத நல் மணி வேகடம் செய்தன்ன
தூத! என் இனிச் செய் திறம்? சொல்' என்றாள். 29

**அனுமன் விருப்பும் சீதையின் மறுப்பும்**

'எனக்கு அளிக்கும் வரம், எம்பிராட்டி! நின்
மனக் களிக்கு மற்று உன்னை அம் மானவன்-
தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ?—
புனக் களிக் குல மா மயில் போன்றுளாய்!' 30

என உரைத்து, 'திரிசடையாள், எம் மோய்!
மனவினில் சுடர் மா முக மாட்சியாள்-
தனை ஒழித்து, இவ் அரக்கியர் தங்களை
வினையினில் சுட வேண்டுவென், யான்' என்றான்.* 31

'உரை அலா உரை உன்னை உரைத்து, உராய்
விரைய ஓடி, ''விழுங்குவம்'' என்றுளார்
வரை செய் மேனியை வள் உகிரால் பிளந்து,
இரை செய்வேன், மறலிக்கு இனி' என்னுமால்.* 32

26. மேக்கு நீங்கிய - தனக்கு மேலானது இல்லாத; ஏக்கமுறுதல் - திகைப் படைதல்; 27. ஓவினேன் - செயலற்றிருந்தேன்; 29. வேத மணி - துளையிட்டு அணிவதற்குரிய மணி; வேதம் - துளையிடுகை, வடசொல்; வேகடம் செய்தல் - சாணை பிடித்துத் தூய்மை செய்தல்: 30. மானவன் - மனுவின் வழியில் தோன் றியவன்; 31. மனவு - மணி; மா - அழகு; வினையினின் - ஊழ்வினையை ஒத்து.

'குடல் குறைத்து, குருதி குடித்து, இவர்
உடல் முருக்கியிட்டு உண்குவேன்' என்றலும்,
அடல் அரக்கியர், 'அன்னே! நின் பாதமே
விடலம்; மெய்ச் சரண்' என்று விளம்பலும்,* 33

அன்னே, 'அஞ்சன்மின், அஞ்சன்மின்! நீர்' எனு,
மன்னும் மாருதி மா முகம் நோக்கி, 'வேறு
என்ன தீமை இவர் இழைத்தார், அவன்
சொன்ன சொல்லினது அல்லது?—தூய்மையோய்!* 34

'யான் இழைத்த வினையினின் இவ் இடர்-
தான் அடுத்தது, தாயினும் அன்பினேய்!
கூனியின் கொடியார் அலரே, இவர்!
போன அப் பொருள் போற்றலே, புந்தியோய்!'* 35

'எனக்கு நீ அருள், இவ் வரம்; தீவினே-
தனக்கு வாழ்விடம் ஆய சழக்கியர்
மனக்கு நோய் செயல்!' என்றனள்—மா மதி-
தனக்கு மா மறுத் தந்த முகத்தினல்.* 36

**இராமன், வீடணனே நோக்கி, 'தேவியைச் சீரொடும் தா' எனல்**

என்ற போதின், இறைஞ்சினன், 'எம்பிரான்-
தன் துணைப் பெருந் தேவி தயா' எனு
நின்ற காலே, நெடியவன், 'வீடண!
சென்று தா, நம தேவியை, சீரொடும்.'* 37

என்னும் காலே, இருளும் வெயிலும் கார்
மின்னும் காலே இயற்கைய வீடணன்,
' உன்னும் காலக் கொணர்தி ' என்று ஓத, அப்
பொன்னின் கால் தளிர் சூடினன், போந்துளான். 38

**'கோலம் புனேர்து வருக' என வீடணன் கூறல்**

'வேண்டிற்று முடிந்தது அன்றே; வேதியர் தேவன் நின்னேக்
காண்டற்கு விரும்புகின்ருன்; உம்பரும் காண வந்தார்;
''பூண் தக்க கோலம் வல்லே புனைந்தனே, வருத்தம் போக்கி,
ஈண்டுக்கொண்டுஅணைதி'' என்ருன்; எழுந்தருள், இறைவி!' என்ருன்.

36. செயல் - செய்யற்க; 38. பொன் - திருமகளின் கூறுபாடாகிய சீதை.

**சீதை, இங்கு இருந்த தன்மையில் வருதலே தக்கது எனல்**

'யான் இவண் இருந்த தன்மை, இமையவர் குழுவும், எங்கள்
கோனும், அம் முனிவர் தங்கள் கூட்டமும், குலத்துக்கு ஏற்ற
வான் உயர் கற்பின் மாதர் ஈட்டமும், காண்டல், மாட்சி;
மேல் நிலை கோலம் கோடல் விழுமியது அன்று—வீர!' 40

**வீடணன் வற்புறுத்தல்**

என்றனள், இறைவி; கேட்ட இராக்கதர்க்கு இறைவன், 'நீலக்
குன்று அன தோளினான் தன் பணியினின் குறிப்பு இது' என்றான்;
'நன்று' என நங்கை நேர்ந்தாள், நாயகக் கோலம் கொள்ள;
சென்றனர், வான நாட்டுத் திலோத்தமை முதலோர், சேர. 41

**வான மாதர்கள் சீதைக்குக் கோலம் புனைதல்**

மேனகை, அரம்பை, மற்றை உருப்பசி, வேறும் உள்ள
வானக நாட்டு மாதர் யாரும், மஞ்சனத்துக்கு ஏற்ற
நான நெய் ஊட்டப் பட்ட நவை இல கலவை தாங்கி,
போனகம் துறந்த தையல் மருங்குற நெருங்கிப் புக்கார். 42

காணியைப் பெண்மைக்கு எல்லாம், கற்பினுக்கு அணியை, பொற்பின்
ஆணியை, அமிழ்தின் வந்த அமிழ்தினை, அறத்தின் தாயை,
சேண் உயர் மறையை எல்லாம் முறை செய்த செல்வன் என்ன,
வேணியை, அரம்பை, மெல்ல, விரல் முறை சுகிர்ந்து விட்டாள்.

பாகு அடர்ந்து அமுது பில்கும் பவள வாய்த் தரளப் பத்தி
சேகு அற விளக்கி, நானம் தீட்டி, மண் சேர்ந்த காசை
வேகடம் செய்யுமாபோல், மஞ்சன விதியின்; வேதத்து
ஓகை மங்கலங்கள் பாடி, ஆட்டினர், உம்பர் மாதர். 44

உரு விளை பவள வல்லி பால் நுரை உண்டதென்ன
மரு விளை கலவை ஊட்டி, குங்குமம் முலையின் ஆட்டி,
கருவிளை மலரின் காட்சிக் காசு அறு தூசு, காமன்
திரு விளை அல்குற்கு ஏற்ப மேகலை தழுவச் சேர்த்தார். 45

42. நான நெய் - கத்தூரி, புனுகு; போனகம் - உணவு; 43. செல்வன் - திருமால், வியாத முனிவன் எனலும் ஆம்; வேணி - சடைப்பட்ட கூந்தல்; 44. ஓகை மங்கலம் - உவகையினை விளக்கும் மங்கல வாழ்த்துப் பாடல்கள்; 45. உரு - நிறம், ஈண்டுச் செந்நிறம்; மரு - மணம்.

சந்திரன் தேவிமாரின் தகை உறு தரளப் பைம் பூண்,
இந்திரன் தேவிக்கு ஏற்ப, இயைவன பூட்டி, யாணர்ச்
சிந்துரப் பவளச் செவ் வாய்த் தேம் பசும் பாகு தீற்றி,
மந்திரத்து அயினி நீரால் வலஞ்செய்து, காப்பும் இட்டார். 46

**சீதையை இராமனிடம் வீடணன் அழைத்து வருதல்**

மண்டல மதியின் நாப்பண் மான் இருந்தென்ன, மானம்
கொண்டனர் ஏற்றி, வான மடந்தையர் தொடர்ந்து கூட,
உண்டை வானரரும் ஒள் வாள் அரக்கரும் புறம் சூழ்ந்து ஓட,
அண்டர் நாயகன்பால், அண்ணல் வீடணன் அருளின் சென்றான்.

இப் புறத்து இமையவர், முனிவர் ஏழையர்,
துப்பு உறச் சிவந்த வாய் விஞ்சைத் தோகையர்,
முப் புறத்து உலகினும் எண்ணில் முற்றினோர்,
ஒப்புறக் குவிந்தனர், ஓகை கூறுவார். 48

அருங் குலக் கற்பினுக்கு அணியை அண்மினர்,
மருங்கு பின் முன் செல வழி இன்று என்னலாய்,
நெருங்கினர்; நெருங்குழி, நிருதர் ஓச்சலால்,
கருங் கடல் முழக்கு எனப் பிறந்த, கம்பலை. 49

அவ் வழி, இராமனும் அலர்ந்த தாமரைச்
செவ்வி வாள் முகம்கொடு செயிர்த்து நோக்குறா,
'இவ் ஒலி யாவது?' என்று இயம்ப, இற்று என,
கவ்வை இல் முனிவரர் கழறினர்அரோ. 50

முனிவரர் வாசகம் கேட்புறுதமுன்,
நனி இதழ் துடித்திட நகைத்து, வீடணன்-
தனை எழ நோக்கி, 'நீ, தகாத செய்தியோ,
புனித நூல் கற்று உணர் புந்தியோய்?' என்றான். 51

'கடுந் திறல் அமர்க் களம் காணும் ஆசையால்,
நெடுந் திசைத் தேவரும் நின்ற யாவரும்
அடைந்தனர்; உவகையின் அடைகின்றார்களைக்
கடிந்திட யார் சொனார்?—கருது நூல் வலாய்! 52

46. சந்திரன் தேவிமார் - இருபத்தேழு விண்மீன்கள்; அயினி நீர் - ஆலத்தி நீர்; 49. ஓச்சுதல் - அடித்தற்குக் கையினை மேலே உயர்த்தல்; 50. கவ்வை - பழிச்சொல்.

'பரசுடைக் கடவுள், நேமிப் பண்ணவன், பதுமத்து—அண்ணல்,
அரசுடைத் தெரிவைமாரை இன்றியே அமைவது உண்டோ?
கரை செயற்கு அரிய தேவர், ஏனையோர், கலந்து காண்பான்
விரசுறின், விலக்குவாரோ? வேறு உளார்க்கு என்கொல்?—வீர!

'ஆதலான், அரக்கர் கோவே! அடுப்பது அன்று உனக்கும், இன்னே
சாதுகை மாந்தர் தம்மைத் தடுப்பது' என்று அருளி, செங் கண்
வேதநாயகன்தான் நிற்ப, வெய்து உயிர்த்து, அலக்கண் எய்தி,
கோது இலா மனனும் மெய்யும் குலைந்தனன் குணங்கள் தூயோன். 54

**இராமன் கோலம் கண்ட சீதை அனுமன் உதவியைப் பாராட்டல்**

அருந்ததி அனைய நங்கை அமர்க் களம் அணுகி, ஆடல்
பருந்தொடு கழுகும் பேயும் பசிப் பிணி தீருமாறு
விருந்திடு வில்லின் செல்வன் விழா அணி விரும்பி நோக்கி,
கருந் தடங் கண்ணும் நெஞ்சும் களித்திட, இனைய சொன்னாள்:

'சீலமும் காட்டி, என் கணவன் சேவகக்
கோலமும் காட்டி, என் குலமும் காட்டி, இஞ்
ஞாலமும் காட்டிய கவிக்கு நாள் அருக்
காலமும் காட்டும்கொல், என் கற்பு?' என்றாள். 56

'எச்சில், என் உடல்; உயிர் ஏகிற்றே; இனி
நச்சு இலை' என்பது ஓர் நவைஇலாள் எதிர்,
பச்சிலை வண்ணமும் பவள வாயும் ஆய்க்
கைச் சிலை ஏந்தி நின்றானைக் கண்ணுற்றாள். 57

**சீதை இராமனைத் தொழுது. ஏக்கம் நீங்குதல்**

மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்,
போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல்
தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல்
ஆனனம் காட்டுற, அவனி எய்தினாள். 58

பிறப்பினும் துணைவனை, பிறவிப் பேர் இடர்
துறப்பினும் துணைவனை, தொழுது, 'நான் இனி
மறப்பினும் நன்று; இனி மாறு வேறு வீழ்ந்து
இறப்பினும் நன்று' என ஏக்கம் நீங்கினாள். 59

53. பரசு - மழுப்படை; 54. சாதுகை மாந்தர் - நல்லொழுக்கமுடைய வர்கள்; 56. சேவகக் கோலம் - வீரத் தோற்றம்; குலம் - குலத்தின் பெருமை; 57. எச்சில் - தூய்மை இழந்தது; நச்சு - விருப்பம்; 58. ஆனனம்- முகம்.

**இராமன் சீதையை அமைய நோக்குதல்**

கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை,
பொற்பினுக்கு அழகினை, புகழின் வாழ்க்கையை,
தற் பிரிந்து அருள் புரி தருமம் போலியை,
அற்பின் அத் தலைவனும் அமைய நோக்கினான். 60

**சீதையை இராமன் கடிந்து உரைத்தல்**

சுணங்கு உறு துணை முலை முன்றில் தூங்கிய
அணங்கு உறு நெடுங் கணீர் ஆறு வார்வுற,
வணங்கு இயல் மயிலினை, கற்பின் வாழ்வினை,
பணம் கிளர் அரவு என எழுந்து, பார்ப்புறு, 61

'ஊண் திறம் உவந்தனை; ஒழுக்கம் பாழ்பட,
மாண்டிலை; முறை திறம்பு அரக்கன் மா நகர்
ஆண்டு உறைந்து அடங்கினை; அச்சம் தீர்ந்து, இவண்
மீண்டது என் நினைவு? ''எனை விரும்பும்'' என்பதோ? 62

'உன்னை மீட்பான்பொருட்டு, உவரி தூர்த்து, ஒளிர்
மின்னை மீட்டுறு படை அரக்கர் வேர்அற,
பின்னை மீட்டு, உறு பகை கடந்திலேன்; பிழை
என்னை மீட்பான்பொருட்டு, இலங்கை எய்தினேன். 63

'மருந்தினும் இனிய மன்னுயிரின் வான் தசை
அருந்தினையே; நறவு அமைய உண்டியே;
இருந்தனையே? இனி எமக்கும் ஏற்பன
விருந்து உளவோ? உரை—வெறுமை நீங்கினாய்! 64

'கலத்தினின் பிறந்த மா மணியின் காந்துறு
நலத்தின் நிற் பிறந்தன நடந்த; நன்மை சால்
குலத்தினில் பிறந்திலை; கோள் இல் கீடம்போல்
நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய்அரோ. 65

'பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும்
திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்,
உண்மையும், நீ எனும் ஒருத்தி தோன்றலால்,
வண்மை இல் மன்னவன் புகழின், மாய்ந்தவால். 66

60. பொற்பு - அழகு; போலி - போன்றவள்; அற்பு - அன்பு; 62. ஊண்- உணவு; 63. மின்னை மீட்டுறு படை - மின்னலைப் புறங்கொடுத்து மீளச் செய்யும் ஆயுதங்கள்; 65. கோள் - கொள்கை; நல்லுணர்வு; கீடம் - புழு; நிரம்புதல் - நிறைவு செய்தல், உறுதிப்படுத்தல்.

‘அடைப்பர், ஐம் புலன்களை; ஒழுக்கம் ஆணியாச்
சடைப் பரம் புனைந்து, ஒளிர் தகையின் மா தவம்
படைப்பர்; வந்து இடை ஒரு பழி வந்தால், அது
துடைப்பர், தம் உயிரொடும்—குலத்தின் தோகைமார். 67

‘யாது யான் இயம்புவது? உணர்வை ஈடு அறச்
சேதியாநின்றது, உன் ஒழுக்கச் செய்தியால்;
சாதியால்; அன்று எனின், தக்கது ஓர் நெறி
போதியால்’ என்றனன்—புலவர் புந்தியான். 68

முனைவரும், அமரரும், மற்றும் முற்றிய
நினைவு அரு மகளிரும், நிருதர் என்று உளார்
எனைவரும், வானரத்து எவரும், வேறு உளார்
அனைவரும், வாய் திறந்து, அரற்றினர்அரோ. 69

**இராமனின் சுடுமொழி கேட்ட சீதையின் துயர நிலை**

கண் இணை உதிரமும், புனலும் கான்று உக,
மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்,
புண்ணினைக் கோல் உறுத்தனைய பொம்மலால்
உள் நினைப்பு ஓவி நின்று, உயிர்ப்பு வீங்கினள். 70

பருந்து அடர் சுரத்திடை, பருகு நீர் நசை
வருந்து அருந் துயரினல் மாளலுற்ற மான்,
இருந் தடம் கண்டு, அதின் எய்துறுவகைப்
பெருந் தடை உற்றெனப் பேதுற்றாள்அரோ. 71

உற்று நின்று, உலகினை நோக்கி, ஒடு அரி
முற்றுறு நெடுங் கண் நீர் ஆலி மொய்த்து உக,
‘இற்றது போலும், யான் இருந்து பெற்ற பேறு;
உற்றதால் இன்று அவம்!’ என்று என்று ஓதுவாள் 72

‘மாருதி வந்து, எனைக் கண்டு, ‘‘வள்ளல் நீ
சாருதி ஈண்டு’’ எனச் சமையச் சொல்லினன்;
யாரினும் மேன்மையான் இசைத்தது இல்லையோ,
சோரும் என் நிலை? அவன் தூதும் அல்லனோ? 73

68. சாதியால் - சாதி, சாவாய், ஆல் அசை; போதியால் - போதி, போவாய், ஆல் அசை; 70. கோல் - அம்பு; பொம்மல் - மிகுதி, ஈண்டுத் துயர மிகுதி; உள் நினைப்ப - உள்ளத்தின் நினைவாகிய உணர்வு; 72. அரி - செவ்வரி.

'எத் தவம், எந் நலம், என்ன கற்பு, நான்
இத்தனை காலமும் உழந்த ஈது எலாம்
பித்து எனல் ஆய், அவம் பிழைத்ததாம் அன்றே,
உத்தம! நீ மனத்து உணர்ந்திலாமையால். 74

'பார்க்கு எலாம் பத்தினி; பதுமத்தானுக்கும்
பேர்க்கல் ஆம் சிந்தையள் அல்லள், பேதையேன்;
ஆர்க்கு எலாம் கண்ணவன், ''அன்று'' என்றால், அது
தீர்க்கல் ஆம் தகையது தெய்வம் தேறுமோ? 75

'பங்கயத்து ஒருவனும், விடையின் பாகனும்,
சங்கு கைத் தாங்கிய தருமமூர்த்தியும்,
அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்,
மங்கையர் மன நிலை உணர வல்லரோ? 76

'ஆதலின், புறத்து இனி யாருக்காக என்
கோது அறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்?
சாதலின் சிறந்தது ஒன்று இல்லை; தக்கதே,
வேத! நின் பணி; அது விதியும்' என்றனள். 77

**சீதை தான் வேண்டியபடி இலக்குவன் அமைத்த தீயை அணுகுதல்**

இளையவன்தனை அழைத்து, 'இடுதி, தீ' என,
வளை ஒலி முன் கையாள் வாயின் கூறினள்;
உளைவுறு மனத்தவன் உலகம் யாவுக்கும்
களைகணைத் தொழ, அவன் கண்ணின் கூறினன். 78

ஏங்கிய பொருமலின் இழி கண்ணீரினன்,
வாங்கிய உயிரினன் அனைய மைந்தனும்,
ஆங்கு எரி விதி முறை அமைவித்தான்; அதன்
பாங்குற நடந்தனள், பதுமப் போதினள். 79

தீயிடை, அருகுறச் சென்று, தேவர்க்கும்
தாய் தனிக் குறுகலும், தரிக்கிலாமையால்,
வாய் திறந்து அரற்றின—மறைகள் நான்கொடும்,
ஒய்வு இல் நல் அறமும், மற்று உயிர்கள் யாவையும். 80

74. அவம் பிழைத்தது - பயனின்றி வறிதே கழிந்தது; 75. ஆர்க்கு எலாம் - உலகத்தவர் எல்லோருக்கும்; 79. பொருமல் - விம்முதல்.

வலம்வரும் அளவையில் மறுகி, வான் முதல்
உலகமும் உயிர்களும் ஓலமிட்டன;
அலம்வரல் உற்றன; அலறி, 'ஐய! இச்
சலம்இது தக்கிலது' என்னச் சாற்றின. 81

இந்திரன் தேவியர் முதல ஏழையர்,
அந்தர வானின் நின்று அரற்றுகின்றவர்,
செந் தளிர்க் கைகளால் சேயரிப் பெருஞ்
சுந்தரக் கண்களை எற்றித் துள்ளினர். 82

நடுங்கினர், நான்முகன் முதல நாயகர்;
படம் குறைந்தது, படி சுமந்த பாம்பு; வாய்
விடம் பரந்துளது என, வெதும்பிற்றால் உலகு;
இடம் திரிந்தன, சுடர்; கடல்கள் ஏங்கின. 83

**சீதை தீயிடைப் புகுதல்**

கனத்தினால் கடந்த பூண் முலைய கைவளை,
'மனத்தினால், வாக்கினால், மறு உற்றேன்எனின்,
சினத்தினால் சுடுதியால், தீச் செல்வா!' என்றாள்;
புனத் துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினாள். 84

நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்
பாய்ந்தனள்; பாய்தலும், பாலின் பஞ்சு எனத்
தீய்ந்தது அவ் எரி, அவள் கற்பின் தீயினால். 85

**சீதை எரியால் வாட்டமுறாது விளங்குதல்**

அழுந்தின நங்கையை அங்கையால் சுமந்து
எழுந்தனன்—அங்கி, வெந்து எரியும் மேனியான்,
தொழும் கரத் துணையினன், சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட்டு அரற்றும் கொள்கையான். 86

ஊடின சீற்றத்தால் உதித்த வேர்களும்
வாடிய இல்லையால்; உணர்த்துமாறு உண்டோ?
பாடிய வண்டொடும், பனித்த தேனொடும்,
சூடின மலர்கள் நீர் தோய்த்த போன்றவால். 87

81. சலம் - கோபம்; 84. கனத்தினால் கடந்த - நிறையினால் மிக்குள்ள; 85. பாலின் பஞ்சு - பால் போல வெண்ணிறமுடைய பஞ்சு; 86. சுருதி ஞானத்தின் கொழுந்து - வேதங்கள் உணர்த்தும் தத்துவ ஞானத்தின் கொழுந்தாகிய இராமன்; 87. வேர் - வியர்வை.

திரிந்தன உலகமும் செவ்வை நின்றன;
பரிந்தவர் உயிர் எலாம் பயம் தவிர்ந்தன;
அருந்ததி முதலிய மகளிர் ஆடுதல்
புரிந்தனர், நாணமும் பொறையும் நீங்கினர். 88

**அக்கினிதேவன் முறையீடும், இராமன் வினவும்**

'கனிந்து உயர் கற்பு எனும் கடவுள்-தீயினால்,
நினைந்திலை, என் வலி நீக்கினாய்' என,
அநிந்தனை அங்கி, 'நீ அயர்வு இல் என்னையும்
முனிந்தனை ஆம்' என முறையிட்டான்அரோ. 89

இன்னது ஓர் காலையில், இராமன், 'யாரை நீ?
என்னை நீ இயம்பியது, எரியுள் தோன்றி? இப்
புன்மை சால் ஒருத்தியைச் சுடாது போற்றினாய்;
அன்னது ஆர் சொல்ல? ஈது அறைதியால்' என்றான். 90

**அக்கினிதேவன் மறுமொழி**

'அங்கி, யான்; என்னை இவ் அன்னை கற்பு எனும்
பொங்கு வெந் தீச் சுடப் பொறுக்கிலாமையால்,
இங்கு அணைந்தேன்; உறும் இயற்கை நோக்கியும்,
சங்கியாநிற்றியோ, எவர்க்கும் சான்றுளாய்? 91

'வேட்பதும், மங்கையர் விலங்கினர் எனின்
கேட்பதும், பல் பொருட்கு ஐயம் கேடு அற
மீட்பதும், என்வயின் என்னும் மெய்ப்பொருள்—
வாள்-பெருந் தோளினாய்!—மறைகள் சொல்லுமால். 92

'ஐயுறு பொருள்களை ஆசு இல் மாசு ஒரீஇக்
கையுறு நெல்லி அம் கனியின் காட்டும் என்
மெய்யுறு கட்டுரை கேட்டும், மீட்டியோ?—
பொய் உரு மாருதி உரையும் போற்றலாய்! 93

'தேவரும் முனிவரும், திரிவ நிற்பவும்,
மூவகை உலகமும், கண்கள் மோதி நின்று,
''ஆ!'' எனல் கேட்கிலை; அறத்தை நீக்கி, வேறு
ஏவம் என்று ஒரு பொருள் யாண்டுக் கொண்டியோ? 94

89. அநிந்தனை அங்கி - பழிப்பில்லாத தீக் கடவுள்; 91. சங்கியாநிற்றல்- ஐயுற்று நிற்றல், 92. கேட்பது - (சான்றாக வைத்து) உறுதிமொழியைக் கேட்பது; 94. ஏவம் - பாவம்.

‘பெய்யுமே மழை? புவி பிளப்பது அன்றியே
செய்யுமே, பொறை? அறம் நெறியில் செல்லுமே?
உய்யுமே உலகு, இவள் உணர்வு சீறினால்?
வய்யுமேல், மலர்மிசை அயனும் மாயுமே.’ 95

#### சீதையை இராமன் ஏற்றுக் கொள்ளல்

பாடு உறு பல் மொழி இனைய பன்னி நின்று,
ஆடுறு தேவரோடு உலகம் ஆர்த்து எழ,
சூடு உறும் மேனிய அலரி, தோகையை
மாடு உறக் கொணர்ந்தனன்; வள்ளல் கூறுவான்: 96

‘அழிப்பு இல சான்று நீ, உலகுக்கு; ஆதலால்,
இழிப்பு இல சொல்லி, நீ இவளை, ‘‘யாதும் ஓர்
பழிப்பு இலள்’’ என்றனை; பழியும் இன்று; இனிக்
கழிப்பிலள்’ என்றனன்—கருணை உள்ளத்தான். 97

#### பிரமன், இராமனது உண்மை நிலை உணர்த்துதல்

உணர்த்துவாய் உண்மை ஒழிவு இன்று, காலம் வந்துளதால்,
புணர்த்தும் மாயையில் பொதுவுற நின்று, அவை உணரா
இணர்த் துழாய்த் தொங்கல் இராமற்கு’ என்று இமையவர் இசைப்ப,
தணப்பு இல் தாமரைச் சதுமுகன் உரைசெயச் சமைந்தான்:

‘மன்னர் தொல் குலத்து அவதரித்தனை; ஒரு மனிதன்
என்ன உன்னலை உன்னை, நீ; இராம! கேள், இதனை;
சொன்ன நான்மறைத் துணிவினில் துணிந்த மெய்த் துணிவு
நின் அலாது இல்லை; நின்னின் வேறு உளது இலை—நெடியோய்!

‘பகுதி என்று உளது, யாதினும் பழையது, பயந்த
விகுதியால் வந்த விளைவு, மற்று அதற்குமேல் நின்ற
புகுதி, யாவர்க்கும் அரிய அப் புருடனும், நீ; இம்
மிகுதி உன் பெரு மாயையினால் வந்த வீக்கம். 100

95. வய்தல் - வைதல், சபித்தல்; 96. பாடு - பெருமை; அலரி - அக்கினி; மாடு - பக்கம்; 99. உன்னலை - எண்ணாதே; 100. பகுதி - பிரகிருதி, மூலப் பகுதி, விகுதி - விகிருதி, காரியங்களாகிய ஏனைய தத்துவங்கள்; புகுதி - தத்துவங்களின் இயல்புகளை உட்புகுந்து அழுந்தி உணரவல்ல நுண்ணுணர்வாகிய ஞானம்; புருடன் - புருடதத்துவம், சீவான்மா; மிகுதி - மிக்கு விரிந்து காணப்படும் பிரபஞ்சம்.

'முன்பு பின்பு இரு புடை எனும் குணிப்பு அரு முறைமைத்
தன் பெருந் தன்மை தான் தெரி மறைகளின் தலைகள்,
''மன் பெரும் பரமார்த்தம்'' என்று உரைக்கின்ற மாற்றம்,
அன்ப! நின்னை அல்லால், மற்று இங்கு யாரையும் அறையா. 101

'எனக்கும், எண் வகை ஒருவற்கும், இமையவர்க்கு இறைவன்-
தனக்கும், பல் பெரு முனிவர்க்கும், உயிருடன் தழீஇய
அனைத்தினுக்கும், நீயே பரம் என்பதை அறிந்தார்
வினைத் துவக்குடை வீட்ட அருந் தளைநின்று மீள்வார். 102

'என்னைத்தான் முதல் ஆகிய உருவங்கள் எவையும்
முன்னைத் தாய் தந்தை எனும் பெரு மாயையில் மூழ்கி,
தன்னைத் தான் அறியாமையின், சலிப்ப; அச் சலம் தீர்ந்து,
உன்னைத் தாதை என்று உணர்குவ, முத்தி வித்து, ஒழிந்த.

' ''ஐ-அஞ்சு ஆகிய தத்துவம் தெரிந்து அறிந்து, அவற்றின்
மெய் எஞ்சாவகை மேல் நின்ற நினக்குமேல் யாதும்
பொய் எஞ்சா இலது'' என்னும் ஈது அரு மறை புகலும்;
வய்யம் சான்று; இனி, சான்றுக்குச் சான்று இலை, வழக்கால்.

'அளவையால் அளந்து,''ஆம்'', ''அன்று'', என்று அறிவுறும் அமைதி
உளவை யாவையும் உனக்கு இல்லை; உபநிடத்து உனது
களவை ஆய்ந்து உறத் தெளிந்திலது ஆயினும், கண்ணால்,
துளவை ஆய் முடியாய்! ''உளை நீ'' எனத் துணியும். 105

'கரணம் என்று உள உன்னை வந்து அறிவு காணுமே,
அரணம் அல்லவர்க்கு இவை கடந்து அகல்வு அரிது ஆக,
மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப; அவர்க்கு உன்
சரணம் அல்லது ஓர் சரண் இல்லை, அன்னவை தவிர்ப்பான்.

'தோற்றம் என்பது ஒன்று உனக்கு இல்லை; நின்கணே தோற்றும்,
ஆற்றல் சால் முதல் பகுதி; மற்று அதனுள் ஆம், பண்பால்
காற்றை முன்னுடைப் பூதங்கள்; அவை சென்று, கடைக்கால்
வீற்று வீற்று உற்று வீவுறும்; நீ என்றும் விளியாய். 107

101. குணிப்பு - அளவு; மறைகளின் தலைகள் - உபநிடதங்கள்; பரமார்த்தம் - மேலான பரம்பொருள்; 102. எண் வகை ஒருவன் - எண் வகை வடிவங்களையுடைய சிவன்; 104. பொய் எஞ்சா இலது - பொய்யாகாமல் (மெய்யாக) இல்லை; 105. துளவை - திருத்துழாய்; 106. அரணம் - அரண், ஈண்டுப் பெருந்தடை; சரணம் - திருவடி; சரண் - புகலிடம்.

'மின்னைக் காட்டுதல்போல் வந்து விளியும் இவ் உலகம்-
தன்னைக் காட்டவும், தருமத்தை நாட்டவும், தனியே
என்னைக் காட்டுதி; இறுதியும் காட்டுதி; எனக்கும்
உன்னைக் காட்டலை; ஒளிக்கின்றும் இலை, மறை உரையால்,

'என் உருக் கொடு இவ் உலகினை ஈனுதி; இடையே
உன் உருக் கொடு புகுந்து நின்று ஓம்புதி; உமைகோன்-
தன் உருக் கொடு துடைத்தி; மற்று இது தனி அருக்கன்,
முன் உருக் கொடு பகல் செயும் தரத்தது—முதலோய்! 109

'ஓங்காரப் பொருள் தேருவோர்தாம் உனை உணர்வோர்;
ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து, இரு வினை உகுப்போர்;
"ஓங்காரப் பொருள் ஆம்", "அன்று" என்று ஊழி சென்றாலும்,
ஓங்காரப் பொருளே பொருள் என்கலா உரவோர். 110

'இனையது ஆகலின், எம்மை மூன்று உலகையும் ஈன்று, இம்
மனையின் மாட்சியை வளர்த்த எம் மோயினை வாளா
முனையல்' என்று அது முடித்தனன்—முந்து நீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிகள் அனைத்தையும் செய்தோன். 111

**சிவபெருமான் இராமனுக்கு உண்மையை உணர்த்துதல்**

என்னும் மாத்திரத்து, ஏறு அமர் கடவுளும் இசைத்தான்:
'உன்னை நீ ஒன்றும் உணர்ந்திலை போலுமால், உரவோய்!
முன்னை ஆதி ஆம் மூர்த்தி நீ; மூவகை உலகின்
அன்னை சீதை ஆம் மாது, நின் மார்பின் வந்து அமைந்தாள்.

'துறக்கும் தன்மையள் அல்லளால், தொல்லை எவ் உலகும்
பிறக்கும் பொன் வயிற்று அன்னை; இப் பெய்வளை பிழைக்கின்,
இறக்கும் பல் உயிர்; இராமன்! நீ இவள் திறத்து இகழ்ச்சி
மறக்கும் தன்மையது' என்றனன்—வரதர்க்கும் வரதன். 113

**இராமனைத் தெருட்டுமாறு துறக்கத்திலுள்ள தயரதனுக்குச் சிவபெருமான் பணித்தல்**

பின்னும் நோக்கினன், பெருந் தகைப் புதல்வனைப் பிரிந்த
இன்னலால் உயிர் துறந்து, இருந் துறக்கத்துள் இருந்த
மன்னவற் சென்று கண்டு, 'நின் மைந்தனைத் தெருட்டி,
முன்னை வன் துயர் நீக்குதி, மொய்ம்பினோய்!' என்றான். 114

108. காட்டுதி - படைத்தாய்; 109. சூரியன் தனது தோற்றத்தால் பகலை உண்டாக்கி, மேலெழுந்து உச்சமடைந்து கழிதலால் பகலை நடத்தி, தனது மறைவால் பகலை முடித்தல் போலத் திருமால் மும்மூர்த்திகளின் உள்ளே கரந்து நின்று முத்தொழிலையும் செய்கின்றான் என்க; 111. எம் மோய் - எம்முடைய தாய்; மோய் - தாய்; சினையின் பந்தம் - தேகங்களின் சம்பந்தம், அண்டப் பரப்பு எனவும் ஆம்; பகுதிகள் - யோனி பேதங்கள், உடம்பு முதலிய கூறுகள் எனவும் ஆம்; 113. வரதர் - வரந்தரும் கடவுளர்.

**பூதலம் வந்த தயரதன் – இராமன் உரையாடல்**

ஆதியான் பணி அருள் பெற்ற அரசருக்கு அரசன்
காதல் மைந்தனைக் காணிய உவந்தது ஓர் கருத்தால்,
பூதலத்திடைப் புக்கனன்; புகுதலும், பொரு இல்
வேத வேந்தனும் அவன் மலர்த் தாள்மிசை விழுந்தான். 115

வீழ்ந்த மைந்தனை எடுத்து, தன் விலங்கல் ஆகத்தின்
ஆழ்ந்து அழுந்திடத் தழுவி, தன் கண்ணின் நீர் ஆட்டி,
வாழ்ந்த சிந்தையின் மனங்களும் களிப்புற, மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட, நின்று இவை புகன்றான்: 116

'அன்று கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில் வேல்
இன்றுகாறும் என் இதயத்தினிடை நின்றது, என்னைக்
கொன்று நீங்கலது, இப்பொழுது அகன்றது, உன் குலப் பூண்
மன்றல் ஆகம் ஆம் காந்த மா மணி இன்று வாங்க. 117

'மைந்தரைப் பெற்று வான் உயர் தோற்றத்து மலர்ந்தார்,
சுந்தரப் பெருந் தோளினாய்! என் துணைத் தாளின்
பைந் துகள்களும் ஒக்கிலர் ஆம் எனப் படைத்தாய்;
உய்ந்தவர்க்கு அருந் துறக்கமும் புகழும் பெற்று உயர்ந்தேன்.

'பண்டு நான் தொழும் தேவரும் முனிவரும் பாராய்,
கண்டு கண்டு எனைக் கைத்தலம் குவிக்கின்ற காட்சி;
புண்டரீகத்துப் புராதனன்தன்னொடும் பொருந்தி
அண்டமூலத்து ஓர் ஆசனத்து இருத்தினை, அழக!' 119

**வணங்கிய சீதைக்குத் தயரதன் தேறுதல் கூறுதல்**

என்று, மைந்தனை எடுத்து எடுத்து, இறுகுறத் தழுவி,
குன்று போன்று உள தோளினான், சீதையைக் குறுக,
தன் துணைக் கழல் வணங்கலும், கருணையால் தழுவி
நின்று, மற்று இவை நிகழ்த்தினன், நிகழ்த்த அரும் புகழோன்:

' ''நங்கை! மற்று நின் கற்பினை உலகுக்கு நாட்ட,
அங்கி புக்கிடு'' என்று உணர்த்திய அது மனத்து அடையேல்;
சங்கை உற்றவர் பெறுவதும் உண்டு; அது சரதம்;
கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல். 121

116. மனங்கள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள்; 117. குலப் பூண் - நலம் சிறந்த அணிகள்; மன்றல் - மணம்; 121. சரதம் - சத்தியம்.

'''பொன்னைத் தீயிடைப் பெய்தல் அப் பொன்னுடைத் தூய்மை—
தன்னைக் காட்டுதற்கு'' என்பது மனக் கொளல் தகுதி;
உன்னை காட்டினன், ''கற்பினுக்கு அரசி'' என்று, ''உலகில்,
பின்னைக் காட்டுவது அரியது'' என்று எண்ணி, இப் பெரியோன்.

'பெண் பிறந்தவர், அருந்ததியே முதல் பெருமைப்
பண்பு இறந்தவர்க்கு அருங் கலம் ஆகிய பாவாய்!
மண் பிறந்தகம் உனக்கு; நீ வான்நின்றும் வந்தாய்;
எண் பிறந்த நின் குணங்களுக்கு இனி இழுக்கு இலையால்'.

**தயரதன் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுதல்**

என்னச் சொல்லி, அவ் ஏந்திழை திரு மனத்து யாதும்
உன்னச் செய்வது ஓர் முனிவு இன்மை மனம் கொளா உவந்தான்;
பின்னைச் செம்மல் அவ் இளவலை, உள் அன்பு பிணிப்ப,
தன்னைத் தான் எனத் தழுவினன், கண்கள் நீர் ததும்ப. 124

கண்ணின் நீர்ப் பெருந் தாரை மற்று அவன் சடைக் கற்றை
மண்ணின் நீத்தம் ஒத்து இழிதர, தழீஇ நின்று, 'மைந்த!
எண் இல் நீக்க அரும் பிறவியும் என் நெஞ்சின் இறந்த
புண்ணும் நீக்கினை, நுமையனைத் தொடர்ந்து உடன் போந்தாய்.

'புரந்தரன் பெரும் பகைஞனைப் போர் வென்ற உன்தன்
பரந்து உயர்ந்த தோள் ஆற்றலை தேவரும் பலரும்
நிரந்தரம் புகல்கின்றது; நீ இந்த உலகின்
அரந்தை வெம் பகை துடைத்து, அறம் நிறுத்தினை—ஐய!'

**தயரதன், வரம் கேள் எனலும், இராமன் கேட்ட வரமும்**

என்று, பின்னரும், இராமனை, 'யான் உனக்கு ஈவது
ஒன்று கூறுதி, உயர் குணத்தோய்!' என, 'உனை யான்
சென்று வானிடைக் கண்டு, இடர் தீர்வென் என்று இருந்தேன்;
இன்று காணப் பெற்றேன்; இனிப் பெறுவது என்?' என்றான்.

'ஆயினும், உனக்கு அமைந்தது ஒன்று உரை' என, அழகன்,
'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்,
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக!' எனத் தாழ்ந்தான்;
வாய் திறந்து எழுந்து ஆர்த்தன, உயிர் எலாம், வழுத்தி. 128

123. பண்பு இறந்தவர் - குணங்களால் மிக்கோர்; 124. முனிவு - வெறுப்பு; 125. நுமையன் - நின் அண்ணன், ஈண்டு இராமன்; 126. அரந்தை - துன்பம்; 128. தெய்வம் - கைகேயி; மகன் - பரதன்.

'வரத கேள்!' எனத் தயரதன் உரை செய்வான்: 'மறு இல்
பரதன் அன்னது பெறுக! தான் முடியினைப் பறித்து, இவ்
விரத வேடம் மற்று உதவிய பாவிமேல் விளிவு
சரதம் நீங்கலதாம்' என்றான், தழீஇய கை தளர. 129

**கைகேயின்மேல் தயரதன் கொண்ட கோபம் தணிதல்**

'ஊன் பிழைக்கிலா உயிர் நெடிது அளிக்கும் நீள் அரசை
வான் பிழைக்கு இது முதல் எனாது, ஆள்வுற மதித்து,
யான் பிழைத்தது அல்லால், என்னை ஈன்ற எம் பிராட்டி—
தான் பிழைத்தது உண்டோ?' என்றான், அவன் சலம் தவிர்ந்தான்.

எவ் வரங்களும் கடந்தவன் அப் பொருள் இசைப்ப,
'தெவ் வரம்பு அறு கானிடைச் செலுத்தினாட்கு ஈந்த
அவ் வரங்களும் இரண்டு; அவை ஆற்றினாற்கு ஈந்த
இவ் வரங்களும் இரண்டு' என்றார், தேவரும் இரங்கி. 131

வரம் இரண்டு அளித்து, அழகனை, இளவலை, மலர்மேல்
விரவு பொன்னினை, மண்ணிடை நிறுத்தி, விண்ணிடையே
உரவு மானம்மீது ஏகினன்—உம்பரும் உலகும்
பரவும் மெய்யினுக்கு உயிர் அளித்து, உறு புகழ் படைத்தோன்.

**இராமன் தேவர்களிடம் வரம் வேண்டல்**

கோட்டு வார் சிலைக் குரிசிலை அமரர்தம் குழாங்கள்
மீட்டும் நோக்குறா, 'வீர! நீ வேண்டுவ வரங்கள்
கேட்டியால், என, 'அரக்கர்கள் கிளர் பெருஞ் செருவில்
வீட்ட, மாண்டுள குரங்கு எலாம் எழுக!' என விளம்பி. 133

பின்னும் ஓர் வரம், 'வானரப் பெருங் கடல் பெயர்ந்து,
மன்னு பல் வனம், மால் வரைக் குலங்கள், மற்று இன்ன
துன் இடங்கள், காய் கனி கிழங்கோடு தேன் துற்ற,
இன் உண் நீர் உளவாக! என இயம்பிடுக' என்றான். 134

வரம் தரும் முதல், மழுவலான், முனிவரர், வானோர்,
புரந்தராதி, மற்று ஏனையோர், தனித் தனி புகழ்ந்து ஆங்கு,
'அரந்தை வெம் பிறப்பு அறுக்கும் நாயக! நினது அருளால்
குரங்கு இனம் பெறுக!' என்றனர், உள்ளமும் குளிர்ப்பார்.

129. விளிவு - கோபம்; சரதம் - நிச்சயம்; 130. முதல் - காரணம்; சலம் - வெகுளி; 133. கோட்டு வார் சிலை - வளைகின்ற நெடிய வில்; 134. துன் இடங்கள் - சேரத்தக்க இடங்கள்; 135. முதல் - முதல்வனாகிய பிரமதேவன்.

முந்தை நாள் முதல் கடை முறை அளவையும் முடிந்த
அந்த வானரம் அடங்கலும் எழுந்து, உடன் ஆர்த்து,
சிந்தையோடு கண் களிப்புற, செரு எலாம் நினையா,
வந்து தாமரைக் கண்ணனை வணங்கின, மகிழ்ந்து. 136

கும்பகன்னனோடு இந்திரசித்து, வெங் குலப் போர்
வெம்பு வெஞ் சினத்து இராவணன், முதலிய வீரர்
அம்பின் மாண்டுள வானரம் அடங்க வந்து ஆர்ப்ப,
உம்பர் யாவரும் இராமனைப் பார்த்து, இவை உரைத்தார்.

'இடை உவாவினில் சுவேலம் வந்து இறுத்து, எயில் இலங்கைப்
புடை அவாவுறச் சேனையை வளைப்பு உறப் போக்கி,
படை அவாவுறும் அரக்கர்தம் சூலம் முற்றும் படுத்து,
கடை உவாவினில் இராவணன் தன்னையும் கட்டு. 138

' ''வஞ்சர் இல்லை இவ் அண்டத்தின்'' எனும்படி மடித்த
கஞ்ச நாள் மலர்க் கையினாய்! அன்னை சொல் கடவா,
அஞ்சொடு அஞ்சு நான்கு என்று எணும் ஆண்டு போய் முடிந்த;
பஞ்சமிப் பெயர் படைத்துள திதி இன்று பயந்த. 139

'இன்று சென்று, நீ பரதனை எய்திலை என்னின்,
பொன்றுமால் அவன் எரியிடை; அன்னது போக்க,
வென்றி வீர! நீ போதியால்' என்பது விளம்பா,
நின்ற தேவர்கள் நீங்கினார்; இராகவன் நினைந்தான். 140

**இராமன் விரைந்து செல்ல விமானம் வேண்டல்**

'ஆண்டு பத்தொடு நாலும் இன்றோடு அறும்ஆயின்,
மாண்டதாம் இனி என் குலம், பரதனே மாயின்;
ஈண்டுப் போக ஓர் ஊர்தி உண்டோ?' என, 'இன்றே
தூண்டு மானம் உண்டு' என்று, அடல் வீடணன் தொழுதான்.

வாங்கினான் இரு நிதியொடு தனதனில், வள்ளால்!
ஓங்குமால், வெள்ளம் ஏழு பஃது ஏறினும்; ஒல்காது;
ஈங்கு உளார் எலாம் இவருவது; இவரின் நீ இனிது
பூங் குலா நகர் புகுதி, இஞ் ஞான்று' எனப் புகன்றான். 142

138. இடை உவா - தேய்பிறையாகிய பிற்பக்கத்தின் இடை (அட்டமி); கடை உவா - பிற்பக்கத்தின் கடைசி நாள் (அமாவாசை); 142. தனதன் - குபேரன்; ஒல்காது - தளராது; பூங் குலா நகர் - அழகு விளங்குகின்ற அயோத்தி நகர்.

'இயக்கர் வேந்தனுக்கு அரு மறைக் கிழவன் அன்று ஈந்த,
துயக்கு இலாதவர் மனம் எனத் தூயது, சுரர்கள்
வியக்க வான் செலும் புட்பக விமானம் உண்டு' என்றே
மயக்கு இலான் சொல, 'கொணருதி வல்லையின்' என்றான்.*

அண்டகோடிகள் அனந்தம் ஒத்து, ஆயிரம் அருக்கர்
விண்டது ஆம் என விசும்பிடைத் திசை எலாம் விளங்க,
கண்டை ஆயிர கோடிகள் மழை எனக் கலிப்ப,
கொண்டு அணைந்தனன் நொடியினின், அரக்கர்தம் கோமான்.*

**இராமன், சீதை இலக்குவன் முதலியோருடன் விமானத்தில் ஏறித் துணைவர்க்கு விடைதரல்**

'அனைய புட்பக விமானம் வந்து அவனியை அணுக,
இனிய சிந்தனை இராகவன் உவகையோடு, 'இனி நம்
வினையும் முற்றியது' என்று கொண்டு ஏறினன்; விண்ணோர்
புனை மலர் சொரிந்து ஆர்த்தனர், ஆசிகள் புகன்றே. 145

வணங்கு நுண் இடைத் திரிசடை வணங்க, வான் கற்பிற்கு
இணங்கர் இன்மையாள் நோக்கி, 'ஓர் இடர் இன்றி இலங்கைக்கு
அணங்குதான்' என இருத்தி' என்று, ஐயன்மாட்டு அணைந்தாள்;
மணம் கொள் வேல் இளங் கோளரி மானம் மீப் படர்ந்தான்.*

அண்டம் உண்டவன் மணி அணி உதரம் ஒத்து, அனிலன்
சண்ட வேகமும் குறைதர, நினைவு எனும் தகைத்தாய்,
விண்தலம் திகழ் விமானப் புட்பகம் எனும் அதன்மேல்
கொண்ட கொண்டல், தன் துணைவரைப் பார்த்து, இவை குணித்தான்:*

வீடணன்தனை அன்புற நோக்குறா, விமலன்,
'தோடு அணைந்த தார் மவுலியாய்! சொல்வது, ஒன்று உளது; உன்
மாடு அணைந்தவர்க்கு இன்பமே வழங்கி, நீள் அரசின்,
நாடு அணைந்தவர் புகழ்ந்திட, வீற்றிரு நலத்தால்.* 148

'நீதி ஆறு எனத் தெரிவுறு நிலைமை பெற்று உடையாய்!
ஆதி நான்மறைக் கிழவன் நின் குலம் என அமைந்தாய்!
ஏதிலார் தொழும் இலங்கை மா நகரினுள், இனி நீ
போதியால்' எனப் புகன்றனன்—நான்மறை புகன்றான்.* 149

144. கண்டை - மணி; 146. இணங்கர் இன்மையாள் - ஒப்பு இல்லாதவள், சீதை; 149. நீதி ஆறு - நீதியின் நெறி; ஏதிலார் - பகைவர்.

'சுக்கிரீவ! நின் தோளுடை வன்மையால் தசம் தொகு
அக் கிரீவனைத் தடிந்து, வெம் படையினுல் அசைந்த
மிக்க வானரச் சேனையின் இளைப்பு அற மீண்டு, ஊர்
புக்கு, வாழ்க!' எனப் புகன்றனன்—ஈறு இலாப் புகழோன்.*

வாலி சேயினை, சாம்பனை, பனசனை, வயப் போர்
நீலன் ஆதிய நெடும் படைத் தலைவரை, நெடிய
காலின் வேலையைத் தாவி மீண்டு அருளிய கருணை
போலும் வீரனை, நோக்கி, மற்று இம் மொழி புகன்ருன்.* 151

**துணைவர் முடிசூட்டு விழாக் காண அனுமதி வேண்டலும் இராமன் இசைதலும்**

ஐயன் இம் மொழி புகன்றிட, துணுக்கமோடு அவர்கள்,
மெய்யும் ஆவியும் குலைதர, விழிகள் நீர் ததும்ப,
செய்ய தாமரைத் தாள் இணை முடி உறச் சேர்த்தி,
'உய்கிலேம், நின்னை நீங்கின்' என்று இனையன உரைத்தார்.*

'பார மா மதில் அயோத்தியின் எய்தி, நின் பைம் பொன்
ஆர மா முடிக் கோலமும் செவ்வியும் அழகும்,
சோர்வு இலாது, யாம் காண்குறும் அளவையும் தொடர்ந்து
பேரவே அருள்' என்றனர்—உள் அன்பு பிணிப்பார்.* 153

அன்பினுல் அவர் மொழிந்த வாசகங்களும், அவர்கள்
துன்பம் எய்திய நடுக்கமும், நோக்கி, 'நீர் துளங்கல்;
முன்பு நான் நினைந்திருந்தது அப் பரிசு; நும் முயற்சி
பின்பு காணுமாறு உரைத்தது' என்று உரைத்தனன்—பெரியோன்.

ஐயன் வாசகம் கேட்டலும், அரி குலத்து அரசும்,
மொய் கொள் சேனையும், இலங்கையர் வேந்தனும், முதலோர்
வையம் ஆளுடை நாயகன் மலர்ச் சரண் வணங்கி,
மெய்யினேடு அருந் துறக்கம் உற்ருர் என வியந்தார்.* 155

**யாவரும் புட்பகத்தின்மேல் ஏறுதல்**

அனையது ஆகிய சேனையோடு அரசனை, அனிலன்
தனயன் ஆதியாம் படைப் பெருந் தலைவர்கள்தம்மை,
வனையும் வார் கழல் இலங்கையர் மன்னனை, 'வந்து இங்கு
இனிதின் ஏறுமின், விமானம்' என்று, இராகவன் இசைத்தான்.

150. தசம் தொகு - பத்தாகக் கூடிய; அக் கிரீவன் - அக் கழுத்தினை யுடையவன், இராவணன்; தடிந்து - தடிந்தேன்; 153. பேர்தல் - மீண்டு செல்லுதல்; 156. அனிலன் - வாயுதேவன்.

சொன்ன வாசகம் பிற்பட, சூரியன் மகனும்,
மன்னு வீரரும், எழுபது வெள்ள வானரரும்,
கன்னி மா மதில் இலங்கை மன்னொடு கடற்படையும்,
துன்னினார், நெடும் புட்பகமிசை ஒரு சூழல்.* 157

பத்து நால் என அடுக்கிய உலகங்கள் பலவின்
மெத்து யோனிகள் ஏறினும் வெளியிடம் மிகுமால்;
முத்தர் ஆனவர் இதன் நிலை மொழிகுவது அல்லால்;
இத் தராதலத்து இயம்புதற்கு உரியவர் யாரே! 158

எழுபது வெள்ளத்தோரும், இரவி கான்முளையும், எண்ணின்
வழு இலா இலங்கை வேந்தும், வான் பெரும் படையும், சூழ,
தழுவு சீர் இளைய கோவும், சனகன் மா மயிலும், போற்ற,
விழுமிய குணத்து வீரன் விளங்கினன், விமானத்து உம்பர்.

அண்டமே போன்றது ஐயன் புட்பகம்: அண்டத்து உம்பர்,
எண் தரும் குணங்கள் இன்றி, முதல் இடை ஈறு இன்றி ஆகி,
பண்டை நான்மறைக்கும் எட்டாப் பரஞ்சுடர் பொலிவதே போல்,
புண்டரீகக் கண் வென்றிப் புரவலன் பொலிந்தான் மன்னோ?

தேனுடை அலங்கல் மௌலிச் செங் கதிர்ச் செல்வன் சேயும்,
மீனுடை அகழி வேலை இலங்கையர் வேந்தும், வெற்றித்
தானையும், பிறரும், மற்றைப் படைப் பெருந்தலைவர்தாமும்,
மானுட வடிவம் கொண்டார், வள்ளல்தன் வாய்மைதன்னால்.

**வழிக் காட்சிகளைச் சீதைக்கு இராமன் காட்டுதல்**

குட திசை மறைந்து, பின்னர்க் குண திசை உதயம் செய்வான்
வட திசை அயனம் உன்னி வருவதே கடுப்ப, மானம்
தடை ஒருசிறிது இன்று ஆகி, தாவி வான் படரும் வேலை,
படை அமை விழியாட்கு ஐயன் இனையன பகரலுற்றான்.* 162

வென்றி வீடணன் கொணர்ந்த புட்பக விமானம் தன்மேல்,
ஒன்றும் நல் சீதையோடும், உம்பரும் பிறரும் காண,
வென்று உயர் சேனையோடும், இராமனும் விரைவின் எய்தி,
தென் திசை இலங்கை ஆதி, தேவிக்குத் தெரியக் காட்டும்.*

'இலங்கையை வலஞ்செய்து ஏக' என நினைந்திடுமுன் விமானம்
வலம் கிளர் கீழை வாயில் வர, 'பிரகத்தன், நீலன்
நலம் கிளர் கையின் மாண்டது இவண்' என, நமன்தன் வாயில்
கலந்திட, 'ஈங்குக் கண்டாய், சுபாரிசற் கட்டது' என்றான்.*

158. வெளியிடம் - வெறுமையான இடப்பரப்பு; 162. அயனம் - வழி.

குடதிசை வாயில் ஏக, 'குன்று அரிந்தவனை வென்ற
விட நிகர் மேகநாதன் இளவலால் வீழ்ந்தது' என் முன்,
வட திசை வாயில் மேவ, 'இராவணன் மவுலி பத்தும்,
உடலமும் இழந்தது இங்கு' என்று உணர்த்திவேறு உரைக்கலுற்றான்.*

**சேதுவைக் காட்டி, அதன் தூய்மையைப் புகழ்தல்**

'நன்னுதல்! நின்னை நீங்கி, நாள் பல கழிந்த பின்றை,
மன்னவன் இரவி மைந்தன், வான் துணையாக நட்ட
பின்னை, மாருதி வந்து, உன்னைப் பேதறுத்து, உனது பெற்றி
சொன்னபின், வானரேசர் தொகுத்தது இச் சேது கண்டாய்.

'மற்று இதன் தூய்மை எண்ணின், மலர் அயன்தனக்கும் எட்டா;
பொன் தொடித் தெரிவை! யான் என் புகலுகேன்! கேட்டி, அன்பால்
பெற்ற தாய் தந்தையோடு தேசிகற் பிழைத்து, சூழ்ந்த
சுற்றமும் கெடுத்துளோரும் எதிர்ந்திடின் சுரர்கள் ஆவார்.

'இந்திரற்கு அஞ்சி, மேல் நாள், இருங் கடல் புக்கு, நீங்காக்
கந்தர சயிலம், தன்னைக் கண்டவர் வினைகள் தீர்க்கும்
கந்தமாதனம் என்று ஓதும் கிரி, இவண் கிடப்ப கண்டாய்;
பைந்தொடி! அடைத்த சேது பாவனம் ஆயது' என்றான். 168

'கங்கையோடு, யமுனை, கோதாவரி, நருமதை, காவேரி,
பொங்கு நீர் நதிகள் யாவும், படிந்து அலால், புன்மை போகா;
சங்கு எறி தரங்க வேலை தட்ட இச் சேது என்னும்
இங்கு இதின் எதிர்ந்தோர் புன்மையாவையும் நீங்கும்அன்றே.*

'நெற்றியின் அழலும் செங் கண் நீறு அணி கடவுள் நீடு
கற்றை அம் சடையில் மேவு கங்கையும், ''சேது ஆகப்
பெற்றிலம்'' என்று கொண்டு, பெருந் தவம் புரிகின்றாளால்;
மற்று இதன் தூய்மை எவ்வாறு உரைப்பது?—மலர்க்கண் வந்தாய்!'*

தெவ் அடும் சிலைக் கை வீரன் சேதுவின் பெருமை யாவும்,
வெவ் விடம் பொருது நீண்டு மிளிர்தரும் கருங் கண் செவ்வாய்,
நொவ் இடை, மயில் அனாட்கு நுவன்றுழி, 'வருணன் நோனாது
இவ் இடை வந்து கண்டாய், "சரண்" என இயம்பிற்று' என்றான்.

168. கந்தர சயிலம் - குகைகளுடன் பொருந்திய மலை; பாவனம் – தூய்மை; 169. தட்ட - தடுத்துக் கட்டப்பெற்ற.

'இது தமிழ் முனிவன் வைகும் இயல் தரு குன்றம்; முன் நாறு
அது வளர் மணிமால் ஓங்கல்; உப்புறத்து, உயர்ந்து தோன்றும்
அது திகழ் அனந்த வெற்பு' என்று அருள் தர, 'அனுமன் தோன்றிற்று
எது?' என, அணங்கை நோக்கி, இற்று என இராமன் சொன்னான்:

'வாலி என்று அளவு இல் ஆற்றல் வன்மையான், மகர நீர் சூழ்
வேலையைக் கடக்கப் பாயும் விறல் உடையவனை வீட்டி,
நூல் இயல் தரும நீதி நுனித்து அறம் குணித்த மேலோர்-
போல் இயல் தபனன் மைந்தன் உறைதரும் புரம் ஈது' என்றான்.

'கிட்கிந்தை இதுவேல், ஐய! கேட்டியால்: எனது பெண்மை
மட்கும்தான், ஆய வெள்ள மகளிர் இன்று ஆகி, வானோர்
உட்கும் போர்ச் சேனை சூழ, ஒருத்தியே அயோத்தி எய்தின்;
கள் கொந்து ஆர் குழலினாரை ஏற்றுதல் கடன்மைத்து' என்றாள்.

அம் மொழி இரவி மைந்தற்கு அண்ணல்தான் உரைப்ப, அன்னான்
மெய்ம்மை சேர் அனுமன் தன்னை நோக்கி, ''நீ விரைவின், வீர!
மைம் மலி குழலினாரை மரபினின் கொணர்தி' என்ன,
செம்மைசேர் உள்ளத்து அண்ணல் கொணர்ந்தனன், சென்று மன்னோ.

வரிசையின் வழாமை நோக்கி, மாருதி மாதர் வெள்ளம்
கரை செயல் அரிய வண்ணம் கொணர்ந்தனன், கணத்தின் முன்னம்;
விரை செறி குழலினார் தம் வேந்தனை வணங்கி, பெண்மைக்கு
அரசியை ஐயனோடும் அடி இணை தொழுது, நின்றார். 176

மங்கலம் முதல்வாய மரபினின் கலப்பை யாவும்
அங்கு அவர் கொணர்ந்து, பெண்மைக்கு அரசியைத் தொழுது சூழ,
நங்கையும் உவந்து, 'வேறு ஓர் நவை இலை, இனி மற்று' என்றாள்;
பொங்கிய விமானம்தானும், மனம் என, எழுந்து போன. 177

போதா விசும்பில் திகழ் புட்பகம் போதலோடும்,
சூது ஆர் முலைத் தோகையை நோக்கி, 'முன் தோன்று சூழல்
கோதாவரி: மற்று அதன் மாடு உயர் குன்று நின்னை,
பேதாய்! பிரிவுத் துயர் பீழை பிணித்தது' என்றான். 178

172. நாறுதல் - தோன்றுதல்; மால் ஓங்கல் - திருமாலிருஞ்சோலை மலை; அனந்தவெற்பு - திருவேங்கட மலை; 173. தபனன் - சூரியன்; 174. மட்குதல்- பொலிவழிந்து சிதைத்தல்; ஆய வெள்ள மகளிர் - தோழியர் கூட்டமாகிய மகளிர். கள் கொந்து - தேன் நிறைந்த பூங்கொத்து.

'சிரத்து வாச வண்டு அலம்பிடு தெரிவை! கேள்: இது நீள்
தரத்து உவாசவர், வேள்வியர், தண்டகம்: அதுதான்
வரத்து வாசவன் வணங்குறு சித்திரகூடம்;
பரத்துவாசவன் உறைவிடம் இது' எனப் பகர்ந்தான். 179

மின்னை நோக்கி, அவ் வீரன் ஈது இயம்பிடும் வேலை,
தன்னை நேர் இலா முனிவரன் உணர்ந்து, தன் அகத்தின்;
'என்னை ஆளுடை நாயகன் எய்தினன்' என்னு,
துன்னு மா தவர் சூழ் தர, எதிர்கொள்வான், தொடர்ந்தான்.

**பரத்துவாசன் ஆச்சிரமத்தில் இராமன் இறங்குதல்**

ஆதபத்திரம், குண்டிகை, ஒரு கையின் அணைத்து,
போதம் முற்றிய தண்டு ஒரு கையினில் பொலிய,
மா தவப் பயன் உருவு கொண்டு எதிர் வருமாபோல்,
நீதி வித்தகன் நடந்தமை நோக்கினன், நெடியோன். 181

எண் பக, தினை அளவையும் கருணையோடு இசைந்த
நட்பு அகத்து இலா அரக்கரை நருக்கி, மா மேரு
விட்பு அகத்து உறை கோள் அரி எனப் பொலி வீரன்.
புட்பகத்தினை வதிகென நினைந்தனன், புவியில். 182

**பரத்துவாசனது உபசரிப்பு**

உன்னும் மாத்திரத்து, உலகினை எடுத்து உம்பர் ஓங்கும்
பொன்னின் நாடு வந்து இழிந்தெனப் புட்பகம் தாழ,
என்னை ஆளுடை நாயகன், வல்லையின் எதிர் போய்,
பன்னு மா மறைத் தபோதனன் தாள்மிசைப் பணிந்தான். 183

அடியின் வீழ்தலும் எடுத்து, நல் ஆசியோடு அணைத்து,
முடியை மோயினன் நின்றுழி, முளரி அம் கண்ணன்
சடில நீள் துகள் ஒழிதர, தனது கண் அருவி
நெடிய காதல் அம் கலசம்அது ஆட்டினன், நெடியோன். 184

கருகு வார் குழல் சனகியோடு இளவல் கை தொழுதே,
அருகு சார்தர, அருந் தவன் ஆசிகள் வழங்கி,
உருகு காதலின் ஒழுகு கண்ணீரினன், உவகை
பருகும் ஆர் அமிழ்து ஒத்து, உளம் களித்தனன், பரிவால். 185

179. உவாசவர் - உபாசகர்; மனத்தைப் பொறிவழிப் போகாது தடுத்து இறைவன்பால் செலுத்துதல்; வரத்து வாசன் - பெருமை பெற்ற தேவேந்திரன்; 181. ஆதபத்திரம் - குடை; 182. எண் - நெஞ்சம்; விட்பு - (மலையில் உள்ள) பிளப்பு; 184. சடிலம் - சடை; நீள் துகள் - மிக்க புழுதி; 185. கருகு குழல்- கறுத்த கூந்தல்.

வானரேசனும், வீடணக் குரிசிலும், மற்றை
ஏனை வீரரும், தொழும்தொறும் ஆசிகள் இயம்பி,
ஞான நாதனைத் திருவொடு நன் மனை கொணர்ந்தான்,
ஆன மாதவர் குழாத்தொடும் அரு மறை புகன்றே. 186

பன்னசாலையுள் புகுந்து, நீடு அருச்சனை பலவும்
சொன்ன நீதியின் புரிந்து, பின், சூரியன் மருமான்-
தன்னை நோக்கினன், பல் முறை கண்கள் நீர் ததும்ப,
பின் ஓர் வாசகம் உரைத்தனன், தபோதரின் பெரியோன். 187

'முனிவர் வானவர் மூவுலகத்துளோர் யாரும்
துனி உழந்திடத் துயர் தரு கொடு மனத் தொழிலோர்
நனி மடிந்திட, அலகைகள் நாடகம் நடிப்ப,
குனியும் வார் சிலைக் குரிசிலே! என், இனிக் குணிப்பாம்? 188

'விராதனும், கரனும், மானும், விறல் கெழு கவந்தன்தானும்,
மராமரம் ஏழும், வாலி மார்பமும், மகர நீரும்,
இராவணன் உரமும், கும்பகருணனது ஏற்றம்தானும்,
அராவ அரும் பகழி ஒன்றால் அழித்து, உலகுஅளித்தாய்—ஐய!'

'சித்திர கூடம் தீர்ந்து, தென் திசைத் தீமை தீர்த்திட்டு
இத் திசை அடைந்து, எம் இல்லின் இறுத்தமை இறுதியாக,
வித்தக! மறந்திலேன் யான்; விருந்தினையாகி; எம்மோடு
இத்திறம் இருத்தி' என்றான், மறைகளின் இறுதிகண்டான்'*

'கரதலம் அதனின் நீடு கார்முகம் வளைய வாங்கி,
சரத வானவர்கள் துன்பம் தணித்து, உலகங்கள் தாங்கும்
மரகத மேனிச் செங்கண் வள்ளலே! வழுவா நீதிப்
பரதனது இயல்பும் இன்றே பணிக்குவென்; கேட்டி' என்றான்.*

'வெயர்த்த மேனியன்; விழி பொழி மழையன்; மூ வினையைச்
செயிர்த்த சிந்தையன்; தெருமரல் உழந்து உழந்து அழிவான்;
அயிர்த்து நோக்கினும், தென் திசை அன்றி, வேறு அறியான்;
பயத்த துன்பமே உருவு கொண்டென்னலாம் படியான்.* 192

இந்தியம் களைந்து, இருங் கனி காய் நுகர்ந்து, இவுளிப்
பந்தி வந்த புல் பாயலான்; பழம்பதி புகாது,
நந்தியம்பதி இருந்தனன், பரதன்—நின் நாமம்
அந்தியும், பகல் அதனினும், மறப்பிலன் ஆகி.'* 193

187. மருமான் - வழித்தோன்றல், ஈண்டு இராமன், தபோதர் - தவச் செல்வர்; 188. குணித்தல் - எண்ணியுரைத்தல்; 192. மூவினை - மூத்த வினை, முதிர்ந்த ஊழ்வினை; பயத்த துன்பம் - அச்சத்துடன் கூடிய துன்பம்.

என்று உரைத்து, 'அரக்கர் வேந்தன் இருபது என்று உரைக்கும் நீலக்
குன்று உரைத்தனைய தோளும், குலவரைக் குவடும் ஏய்க்கும்
என்று உரைத்தனைய மௌலித் தலை பத்தும், இறுத்த வீர!
நின்தனைப் பிரிந்தது உண்டே, யான்' என நிகழ்த்தினானால்.*

'மின்னை ஏய் உமையினானும், விரை மலர்த் தவிசினானும்,
நின்னையே புகழ்தற்கு ஒத்த நீதி மாதவத்தின் மிக்கோய்!
உன்னையே வணங்கி, உன்தன் அருள் சுமந்து உயர்ந்தேன்; மற்று இங்கு
என்னையே பொருவும் மைந்தன் யான் அலாது இல்லை' என்றான்*

அவ் உரை புகலக் கேட்ட அறிவனும், அருளின் நோக்கி,
'வெவ் அரம் பொருத வேலோய்! விளம்புகேன்; கேட்டி,
எவ் வரம் எனினும்; தந்தேன்; இயம்புதி' எனலும், ஐயன்,
'கவ்வை இன்று ஆகி வென்றி கவிக்குலம் பெற்று வாழ்க.'*

' ''அரி இனம் சென்ற சென்ற அடவிகள் அனைத்தும் வானம்
சொரி தரு பருவம் போன்று, கிழங்கொடு கனி காய் துன்றி,
விரிபுனல் செழுந்தேன் மிக்கு, விளங்கு!'' என இயம்புக' என்றான்;
விரியும் மாதவனும், 'அஃதே ஆக!' எனப் புகன்றிட்டானால்.*

அருந்தவன், 'ஐய! நின்னோடு அனிக வெஞ் சேனைக்கு எல்லாம்
விருந்து இனிது அமைப்பென்' என்னா, விளங்கும் முத்தீயின் நாப்பண்,
புரிந்து ஓர் ஆகுதியை ஈந்து, புறப்படும் அளவில், போகம்
திருந்திய வானநாடு சேர வந்து இறுத்தது அன்றே.* 198

அரைசரே ஆதியாக, அடியவர் அந்தமாக,
கரைசெயல் அரிய போகம் துய்க்குமா கண்டு, இராமற்கு
அரைசியல் வழாமை நோக்கி, அறுசுவை அமைக்கும் வேலை,
விரைசெறி கமலக்கண்ணன் அனுமனை விளித்துச் சொன்னான்:*

அனுமனைப் பரதன்பால் அனுப்புதல்

'இன்று நாம் பதி வருதுமுன், மாருதி! ஈண்டச்
சென்று, தீது இன்மை செப்பி, அத் தீமையும் விலக்கி
நின்ற காலையின் வருதும்' என்று ஏயினன், நெடியோன்;
'நன்று' என, அவன், மோதிரம் கைக் கொடு நடந்தான். 200

195. மின்னை ஏய் உமையினான் - மின்னலைப் போன்ற உமாதேவியைப் பாகத்திற்கொண்ட சிவபெருமான்; 196. கவ்வை - துன்பம்; 199. துய்க்குமா கண்டு - நுகருமாறு; அரைசியல் - அரசர்க்கு உரிய சிறப்பு முறையாகிய தகுதி; 200. ஈண்ட - விரைந்து.

தந்தை வேகமும், தனது நாயகன் தனிச் சிலேயின்
முந்து சாயகக் கடுமையும், பிற்பட முடுகி,
சிந்தை பின் வரச் செல்பவன், குகற்கும் அச் சேயோன்
வந்த வாசகம் கூறி, மேல் வான் வழிப் போனான். 201

இன்று இசைக்கு இடம் ஆய இராகவன்
தென் திசைக் கருமச் செயல் செப்பினும்.
அன்று இசைக்கும் அரிய அயோத்தியில்
நின்று இசைத்துள தன்மை நிகழ்த்துவாம்: 202

நந்தியம்பதியில் பரதன் இருந்த நிலை

நந்தியம்பதியின்தலை, நாள்தொறும்
சந்தி இன்றி நிரந்தரம், தம்முனார்
பந்தி அம் கழல் பாதம் அருச்சியா,
இந்தியங்களை வென்றிருந்தான்அரோ. 203

துன்பு உருக்கவும், சுற்றி உருக்க ஒணா
என்பு உருக்கும் தகைமையது இட்டது ஆய்,
முன்பு உருக் கொண்டு ஒரு வழி முற்றுரு
அன்பு உருக் கொண்டது ஆம் எனல் ஆகுவான்; 204

நினைந்தவும் தடம் கண் இணை நீர் வர,
இனத்த தண்டலை நாட்டு இருந்தேயும், அக்
கனத்த கந்தமும் காயும் கனிகளும்
வனத்த அல்ல அருந்தல் இல் வாழ்க்கையான்; 205

நோக்கின் தென் திசை அல்லது நோக்குறான்;
ஏக்குற்று, ஏக்குற்று, 'இரவி குலத்து உளான்
வாக்கில் பொய்யான்; வரும், வரும்' என்று, உயிர்
போக்கிப் போக்கி, உழக்கும் பொருமலான்; 206

உண்ணும் நீர்க்கும் உயிர்க்கும் உயிரவன்,
எண்ணும் கீர்த்தி இராமன், திரு முடி
மண்ணும் நீர்க்கு வரம்பு கண்டால் அன்றி,
கண்ணின் நீர்க்கு ஓர் கரை எங்கும் காண்கிலான். 207

201. சாயகம் - அம்பு; 203. சந்தி - இடையீடு; 207. மண்ணும் நீர்- திருமஞ்சனம் ஆட்டும் நீர்.

**சோதிடர், 'இராமன் வரவேண்டிய நாள் இன்று' எனல்**

அனையன் ஆய பரதன், அலங்கலின்
புனையும் தம்முனார் பாதுகைப் பூசனை
நினையும் காலை, நினைத்தனனும்அரோ,
மனையின் வந்து அவன் எய்த மதித்த நாள். 208

'யாண்டு வந்து இங்கு இறுக்கும்?' என்று எண்ணினான்,
'மாண்ட சோதிட வாய்மைப் புலவரை
ஈண்டுக் கூய்த் தருக' என்ன, வந்து எய்தினார்,
'ஆண்தகைக்கு இன்று அவதி' என்றார் அரோ. 209

**இராமன் வாராமையால் பரதன் அவலமுறுதல்**

என்ற போதத்து, இராமன் வனத்திடைச்
சென்ற போதத்தது அவ் உரை, செல்வத்தை
வென்ற போதத்த வீரனும் வீழ்ந்தனன்,
கொன்ற போதத்து உயிர்ப்புக் குறைந்துளான். 210

மீட்டு எழுந்து, விரிந்த செந் தாமரைக்
காட்டை வென்று எழு கண் கலுழிப் புனல்
ஓட்ட, உள்ளம் உயிரினை ஊசல் நின்று
ஆட்டவும், அவலத்து அழிந்தான்அரோ. 211

'எனக்கு இயம்பிய நாளும், என் இன்னலும்,
தனைப் பயந்தவள் துன்பமும், தாங்கி, அவ்
வனத்து வைகல் செய்யான்; வந்து அடுத்தது ஓர்
வினைக் கொடும் பகை உண்டு' என விம்மினான். 212

'மூவகைத் திருமூர்த்தியர் ஆயினும்,
பூவகத்தில், விசும்பில், புறத்தினில்,
ஏவர் கிற்பர் எதிர் நிற்க, என்னுடைச்
சேவகற்கு?' என ஐயமும் தேறினான். 213

'என்னை, ''இன்னும் அரசியல் இச்சையன்
அன்னன் ஆகின், அவன் அது கொள்க'' என்று
உன்னினான்கொல், உறுவது நோக்கினான்?
இன்னதே நலன்' என்று இருந்தான்அரோ. 214

208. அலங்கலின் - மலர்மாலைகளால்; 210. போதத்த வீரன்-ஞானத்தையுடைய வீரன், பரதன்; 211. ஓட்ட - சொரிய; 212. பயந்தவள் - கோசலை; 213. பூவகம் - பூவுலகம்; புறம் - புறம்பான பாதலம்.

பரதன், சத்துருக்கனை அழைத்தல்

'அனைத்தில் அங்கு ஒன்றும் ஆயினும் ஆகுக;
வனத்து இருக்க; இவ் வையம் புகுதுக;
நினைத்து இருந்து நெடுந் துயர் மூழ்கிலேன்;
மனத்து மாசு என் உயிரொடும் வாங்குவேன்.' 215

என்னப் பன்னி, 'இளவலை என்னுழைத்
துன்னச் சொல்லுதிர்' என்னலும், தூதர் போய்,
'உன்னைக் கூயினன், உம்முன்' எனா முனம்,
முன்னர்ச் சென்றனன், மூவர்க்கும் பின் உளான். 216

பரதன் வரம் வேண்டுதல்

தொழுது நின்ற தன் தம்பியை, தோய் கணீர்
எழுது மார்பத்து இறுகத் தழுவினன்,
அழுது, 'வேண்டுவது உண்டு, ஐய! அவ் வரம்,
பழுது இல் வாய்மையினாய்! தரற்பாற்று' என்றான். 217

' ''என்னது ஆகும்கொல், அவ் வரம்?'' என்றியேல்,
சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்;
மின்னு தீயிடை யான் இனி வீடுவென்;
மன்னன் ஆதி; என் சொல்லை மறாது' என்றான். 218

கேட்ட சத்துருக்கன் வருந்தி, நொந்து உரைத்தல்

கேட்ட தோன்றல், கிளர் தடக் கைகளால்
தோட்ட தன் செவி பொத்தி, துணுக்குறா,
ஊட்டு நஞ்சம் உண்டான் ஒத்து உயங்கினான்;
நாட்டமும் மனமும் நடுங்காநின்றான். 219

விழுந்து, மேக்கு உயர் விம்மலன், வெய்து உயிர்த்து,
எழுந்து, 'நான் உனக்கு என்ன பிழைத்துளேன்?
அழுந்து துன்பத்தினாய்!' என்று அரற்றினான்—
கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான். 220

'கான் ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்து, பின்பு
போனானும் ஒரு தம்பி; ''போனவன்
தான் வரும் அவதி போயிற்று'' என்னா,
ஆனாத உயிர் விட என்று அமைவானும்
ஒரு தம்பி; அயலே நாணாது,
யானும் இவ் அரசு ஆள்வென்? என்னே,
இவ் அரசாட்சி! இனிதே அம்மா! 221

218. ஆதி - ஆவாய்; 221. அவதி - கால எல்லை.

'''மன்னின் பின், வள நகரம் புக்கு
　இருந்து வாழ்ந்தானே, பரதன் என்னும்
சொல் நிற்கும்'' என்று அஞ்சி, புறத்து
　இருந்தும், அருந் தவமே தொடங்கினாயே!
''என்னின் பின் இவன் உளனும்'' என்றே
　உன் அடிமை உனக்கு இருந்ததேனும்,
உன்னின் பின் இருந்ததுவும், ஒரு
　குடைக் கீழ் இருப்பதுவும் ஒக்கும்' என்றான். 222

பரதன் எரி அமைக்கப் பணித்தல்

மூத்து உருக் கொண்டு அமைந்தனைய முழு வெள்ளிக்
　கொழு நிறத்து, முளரிச் செங் கண்,
சத்துருக்கன் அஃது உரைப்ப, 'அவன் இங்குத்
　தாழ்க்கின்ற தன்மை, யான் இங்கு
ஒத்திருக்கலால் அன்றே? உலந்ததன்பின்,
　இவ் உலகை உலைய ஒட்டான்;
அத் திருக்கும் கெடும்; உடனே புகுந்து ஆளும்
　அரசு; எரி போய் அமைக்க' என்றான். 223

கோசலை விரைந்து வருதல்

அப்பொழுதின், இவ் உரை சென்று, அயோத்தியினின்
　இசைத்தலுமே, அரியை ஈன்ற
ஒப்பு எழுத ஒண்ணாத கற்புடையாள்,
　வயிறு புடைத்து, அலமந்து ஏங்கி,
'இப்பொழுதே உலகு இறக்கும், யாக்கையினை
　முடித்து ஒழிந்தால், மகனே!' என்னா,
வெப்பு எழுதினால் அன்ன மெலிவுடையாள்
　கடிது ஓடி, விலக்க வந்தாள். 224

மந்திரியர், தந்திரியர், வள நகரத்தவர்,
　மறையோர், மற்றும் சுற்ற,
சுந்தரியர் எனைப் பலரும் கை தலையில்
　பெய்து இரங்கித் தொடர்ந்து செல்ல,
இந்திரனே முதல் ஆய இமையவரும்
　முனிவரரும் இறைஞ்சி ஏத்த,
அந்தர மங்கையர் வணங்க, அழுது அரற்றி,
　பரதனை வந்து அடைந்தாள் அன்றே. 225

222. மன் - மன்னன் ஆதற்குரிய இராமன்; 223. திருக்கு - மாறுபாடு;
225. தந்திரியர் - சேனைத் தலைவர்.

கோசலை பரதனைத் தடுத்துக் கூறுதல்

விரி அமைத்த நெடு வேணி புறத்து அசைந்து
வீழ்ந்து ஒசிய, மேனி தள்ள,
எரி அமைத்த மயானத்தை எய்துகின்ற
காதலனை இடையே வந்து,
சொரிவு அமைப்பது அரிது ஆய மழைக் கண்ணுள்
தொடருதலும், துணுக்கம் எய்தா,
பரிவு அமைந்த திரு மனத்தான் அடி தொழுதான்;
அவள் புகுந்து, பற்றிக் கொண்டாள். 226

'மன் இழைத்ததும், மைந்தன் இழைத்ததும்,
முன் இழைத்த விதியின் முயற்சியால்;
பின் இழைத்ததும், எண்ணில், அப் பெற்றியால்;
என் இழைத்தனை, என் மகனே?' என்றாள். 227

'நீ இது எண்ணினையேல், நெடு நாடு எரி
பாயும்; மன் அருஞ் சேனையும் பாயுமால்;
தாயர் எம் அளவு அன்று; தனி அறம்
தீயின் வீழும்; உலகும் திரியுமால். 228

'தரும நீதியின்தன் பயன் ஆவது உன்
கருமமே அன்றிக் கண்டிலம், கண்களால்;
அருமை ஒன்றும் உணர்ந்திலை; ஐய! நின்
பெருமை, ஊழி திரியினும், பேருமோ? 229

'எண் இல் கோடி இராமர்கள் என்னினும்,
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ?
புண்ணியம் எனும் நின் உயிர் போயினால்,
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ? 230

'இன்று வந்திலனேஎனின், நாளையே
ஒன்றும் வந்து, உனை; உன்னி, உரைத்த சொல்
பின்றும் என்று உணரேல்; பிழைத்தான்எனின்,
பொன்றும் தன்மை புகுந்தது போய்' என்றாள். 231

226. விரி அமைத்த வேணி - விரித்தல் பொருந்திய சடை; 227. மன் இழைத்தது - தயரதன் இறந்தது; மைந்தன் இழைத்தது - இராமன் காடுபுகுந்தது; பின் இழைத்தது - பின்பு குறித்த காலத்தில் வாராதிருப்பது.

'ஒருவன் மாண்டனன் என்று கொண்டு, ஊழி வாழ்
பெரு நிலத்துப் பெறல் அரும் இன் உயிர்க்
கருவும் மாண்டு அறக் காணுதியோ?—கலைத்
தருமம் நீ அலது இல் எனும் தன்மையாய்! 232

' ''இறக்கையும், சிலர் ஏகலும், மோகத்தால்
பிறக்கையும், கடன்'' என்று, பின் பாசத்தை
மறக்கைகாண், மகனே! வலி ஆவது;
துறக்கைதானும்?' என்றாள்—மனம் தூய்மையாள். 233

**கோசலையின் உரையைப் பரதன் மறுத்தல்**

' ''மைந்தன் என்னை மறுத்து உரைத்தான்'' எனல்;
எந்தை மெய்ம்மையும், இக் குலச் செய்கையும்,
நைந்து போக, உயிர் நிலை நச்சிலேன்;
முந்து செய்த சபதம் முடிப்பனால். 234

'யானும், மெய்யினுக்கு இன் உயிர் ஈந்து போய்,
வானுள் எய்திய மன்னவன் மைந்தனால்;
கானுள் எய்திய காகுத்தற்கே கடன்?
ஏனையோர்க்கும் இது இழுக்கு இல் வழக்கு அன்றோ? 235

'தாய் சொல் கேட்டலும், தந்தை சொல் கேட்டலும்,
பாசத்து அன்பினைப் பற்று அற நீக்கலும்,
ஈசற்கே கடன்; யான் அஃது இழைக்கிலேன்;
மாசு அற்றேன், இது காட்டுவென், மாண்டு' என்றான். 236

**அனுமன், பரதன் முன் தோன்றி எரியை அவித்தல்**

என்று தீயினை எய்தி, இரைத்து எழுந்து
ஒன்று பூசலிடும் உலகோருடன்
நின்று பூசனை செய்கின்ற நேசற்கு,
குன்றுபோல் நெடு மாருதி கூடினான். 237

'அய்யன் வந்தனன்; ஆரியன் வந்தனன்;
மெய்யின் மெய் அன்ன நின் உயிர் வீடினால்,
உய்யுமே, அவன்?' என்று உரைத்து, உள் புகா,
கய்யினால் எரியைக் கரி ஆக்கினான். 238

232. கலை - நூல்கள்; 233. மோகம் - அவா, அவிச்சை; 235. இது - மேற்கொண்ட விரதத்தை நிறைவேற்றுவது; 236. ஈசன் - தலைவனாகிய இராமன்.

ஆக்கி, மற்று அவன் ஆய் மலர்த் தாள்களைத்
தாக்கத் தன் தலை தாழ்ந்து வணங்கி, கை
வாக்கின் கூடப் புதைத்து, 'ஒரு மாற்றம் நீ
தூக்கிக் கொள்ளத் தகும்' எனச் சொல்லினான். 239

'இன்னம் நாழிகை எண்-ஐந்து உளது, ஐய!
உன்னை முன்னம் வந்து எய்த உரைத்த நாள்;
இன்னது இல்லைஎனின், அடி நாயினேன்
முன்னம் வீழ்ந்து, இவ் எரியில் முடிவெனால். 240

'ஒன்றுதான் உளது; உன் அடியேன் சொலால்,
நின்று தாழ்த்தருள், நேமிச் சுடர் நெடுங்
குன்று தோன்றளவும்; இது குன்றுமேல்,
பொன்றும், நீயும், உலகமும்—பொய் இலாய்! 241

'எங்கள் நாயகற்கு இன் அமுது ஈகுவான்,
பங்கயத்துப் பரத்துவன் வேண்டலால்,
அங்கு வைகினன் அல்லது, தாழ்க்குமோ?
இங்கண், நல்லது ஒன்று இன்னமும் கேட்டியால்: 242

இராமனது மோதிரத்தை அடையாளம் காட்டல்

'அண்டர் நாதன் அருளி அளித்துளது
உண்டு ஓர் பேர் அடையாளம்; உனக்கு அது
கொண்டு வந்தனென்; கோது அறு சிந்தையாய்!
கண்டு கொண்டருள்வாய்' எனக் காட்டினான். 243

காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்,
மூட்டு தீ வல் விடம் உற்று முற்றுவார்க்கு
ஊட்டிய நல் மருந்து ஒத்ததாம்அரோ,
ஈட்டிய உலகுக்கும் இளைய வேந்தற்கும். 244

அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன;
விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின;
உழுகின்ற தலை எலாம் உயர்ந்து எழுந்தன;
தொழுகின்ற, கை எலாம், காலின் தோன்றலை. 245

239. வாக்கு - வாய்; தூக்கிக் கொள்ளுதல் - கேட்டல்.

மோதிரம் பெற்ற பரதன் நிலை

மோதிரம் வாங்கி, தன் முகத்தின்மேல் அணைத்து,
'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ?' என
ஓதினர் நாண் உற, ஓங்கினான்—தொழும்
தூதனை முறை முறை தொழுது துள்ளுவான். 246

ஆதி வெந் துயர் அலால், அருந்தல் இன்மையால்,
ஊதுறப் பறப்பதாய் உலர்ந்த யாக்கை போய்,
'ஏதிலன் ஒருவன்கொல்' என்னல் ஆயது;
மாதிரம் வளர்ந்தன, வயிரத் தோள்களே. 247

அழும்; நகும்; அனுமனை ஆழிக் கைகளால்
தொழும்; எழும்; துள்ளும், வெங் களி துளக்கலால்;
விழும் அழிந்து; ஏங்கும்; போய் வீங்கும்; வேர்க்கும்; அக்
குழுவொடும் குனிக்கும்; தன் தடக் கை கொட்டுமால். 248

'ஆடுமின், ஆடுமின்!' என்னும்; 'ஐயன்பால்
ஓடுமின், ஓடுமின்!' என்னும்; 'ஓங்கு இசை
பாடுமின், பாடுமின்!' என்னும்; 'பாவிகாள்!
சூடுமின், சூடுமின், தூதன் தாள்!' எனும். 249

'வஞ்சனை இயற்றிய மாயக் கைகையார்
துஞ்சுவர், இனி' எனத் தோளைக் கொட்டுமால்;
குஞ்சித அடிகள் மண்டிலத்தில் கூட்டுற,
அஞ்சனக் குன்றின் நின்று ஆடும், பாடுமால். 250

வேதியர்தமைத் தொழும்; வேந்தரைத் தொழும்;
தாதியர்தமைத் தொழும்; தன்னைத் தான் தொழும்;
ஏதும் ஒன்று உணர்குறுது இருக்கும்; நிற்குமால்;—
காதல் என்றதுவும் ஓர் கள்ளின் தோன்றிற்றே! 251

பரதன் அனுமனைப் பாராட்டி, 'நீ யார்?' எனல்

அத் திறத்து ஆண்தகை, அனுமன்தன்னை, 'நீ
எத் திறத்தாய்? எமக்கு இயம்பி ஈதியால்!
முத் திறத்தவருளே ஒருவன்; மூர்த்தி வேறு
ஒத்திருந்தாய் என உணர்கின்றேன்' என்றான். 252

246. ஆதரம் - இராமனது அன்பு; 250. கைகையார் - கைகேயி; குஞ்சித அடிகள் - மடித்த அடிகள்; மண்டலம் - வட்ட வடிவம்.

'மறையவர் வடிவு கொண்டு, அணுக வந்தனை;
இறைவரின் ஒருத்தன் என்று எண்ணுகின்றனென்;
''துறை எனக்கு யாது எனச் சொல்லு, சொல்!'' என்றான்;
அறை கழல் அனுமனும் அறியக் கூறுவான்: 253

**அனுமன் தன் வரலாறு கூறுதல்**

'காற்றினுக்கு அரசன்பால் கவிக் குலத்தினுள்
நோற்றனள் வயிற்றின் வந்து உதித்து, நும் முனாற்கு
ஏற்றிலா அடித் தொழில் ஏவலாளனேன்;
மாற்றினென் உரு, ஒரு குரங்கு, மன்ன! யான். 254

'அடித் தொழில் நாயினேன் அருப்ப யாக்கையைக்
கடித் தடந் தாமரைக் கண்ணின் நோக்கு' எனா,
பிடித்த பொய் உருவினைப் பெயர்த்து நீக்கினான்,
முடித்தலம் வானவர் நோக்கின் முன்னுவான். 255

வெஞ் சிலை இருவரும், விரிஞ்சன் மைந்தனும்,
'எஞ்சல் இல் அதிசயம் இது' என்று எண்ணினார்;
துஞ்சிலது ஆயினும், சேனை துண்ணென
அஞ்சினது, அஞ்சனை சிறுவன் ஆக்கையால். 256

'ஈங்கு நின்று யாம் உனக்கு இசைத்த மாற்றம் அத்
தூங்கு இருங் குண்டலச் செவியில் சூழ்வர
ஓங்கல ஆதலின், உலப்பு இல் யாக்கையை
வாங்குதி, விரைந்து' என, மன்னன் வேண்டினான். 257

**அனுமனுக்குப் பரதன் பரிசு கொடுத்தல்**

சுருக்கிய உருவனைத் தொழுது, முன் நின்ற
அருக்கன் மாணாக்கனை ஐயன், அன்பினால்
பொருக்கென வனத்திடைப் புகுந்த தன்மையை
உருக்கி என் உணர்வுற உரைத்தியால்' என்றான். 258

சித்திரகூடத்தைத் தீர்ந்த பின், சிரம்
பத்து உடையவனுடன் விளைந்த பண்பும், தான்
இத் தலை அடைந்ததும், இறுதி ஆய, போர்
வித்தகத் தூதனும் விரிக்கும் சிந்தையான். 259

253. துறை - வரலாறு; 255. அருப்ப யாக்கை - சிறுமையுள்ள குரங்கு உடம்பு; அருப்பம் - அற்பம்; 256. இருவர் - பரத சத்துருக்கனர்; விரிஞ்சன் மைந்தன் - பிரமன் புதல்வனாகிய வசிட்டன்; 258. அருக்கன் மாணாக்கன் - சூரியன் மாணாக்கனாகிய அனுமன்.

‘குன்று உறழ் வரி சிலைக் குரிசில், எம்பிரான்
தென் திசைச் சித்திரகூடம் தீர்ந்தபின்,
வன் திறல் விராதனை மடித்து, மா தவர்
துன்றிய தண்டக வனத்துள் துன்னினான். 260

‘ஆங்கு உறை தபோதனர், ‘‘அரக்கர்க்கு ஆற்றலேம்,
நீங்கினம் தவத் துறை, நீதியோய்!’’ என,
‘தீங்கு செய்பவர்களைச் செகுத்தல் திண்ணம்; நீர்
வாங்குமின் மனத் துயர், வாய்மையால்’ என்றான். 261

‘ஆறு நால் ஆண்டு அவண் வைகி, அப் புறத்து
ஈறு இலா முனிவரர் ஏய ஆணையால்
மாறு இலாத் தமிழ் முனி வனத்தை நண்ணினான்,
ஊறு இலா முனிவரன் உவந்து முன் வர. 262

‘குடங்கையில் வாரிதி அனைத்தும் கொண்டவன்
தடங் கணான்தனை எதிர் தழுவி, சாபமும்,
கடுங் கணைப் புட்டிலும், கவசம்தானும், அத்
திடம் படு சுரிகையும், சேர ஈந்தனன். 263

‘அப் புறத்து எருவையின் அரசைக் கண்ணுறு,
துப்பு உறச் சிவந்த வாய்த் தோகைதன்னுடன்
மெய்ப் புகழ்த் தம்பியும் வீரன்தானும் போய்,
மைப் பொழில் துறு பஞ்சவடியின் வைகினர். 264

‘பல் பகல் இறந்த பின்றை, பாதக அரக்கி தோன்றி,
மெல்லிய இடையினாளை வெகுண்டுழி, இளைய வீரன்
அல்கிய திருவைத் தேற்றி, அவளுடைச் செவியும் மூக்கும்
மல்கிய முலையும் கொய்தான்; மறித்து, அவள் கரற்குச் சொன்னாள்.

‘கரனொடு திரிசிராவும், கடிய தூடணனும், காந்தி
எரியும் மூன்று அனலை ஒப்பார், எழுந்து, வெஞ் சேனையோடும்
விரவினர்; ஐயன் செங் கை வில்லினை நோக்கும் முன்பு, ஓர்
எரி தவழ் பஞ்சின் உக்கார்; அரக்கியும்; இலங்கை புக்காள்.

‘இருபது தடக் கையான்மாட்டு இசைத்தலும், எழுந்து பொங்கி,
ஒருபது திசையும் உட்க, வஞ்சக உழை ஒன்று ஏவி,
தரு பதம் சமைந்த முக்கோல் தாபத வடிவம் கொண்டு,
திருவினை நிலத்தொடு ஏந்தி, தென் திசை இலங்கை புக்கான்.

262. ஏய - ஏவிய; 263. குடங்கை - உள்ளங்கை; சுரிகை - வாள்;
265. அல்குதல் - உள்ளம் நெகிழ்தல்; 267. பதம் - பக்குவம்.

'போகின்ற காலை, ஏற்ற சடாயுவைப் பொருது வீட்டி,
வேகின்ற உள்ளத்தானை வெஞ் சிறை அதனின் வைத்தான்;
ஏகின்ற வஞ்ச மான் மாரீசன்-கொன்று, இளவலோடு
பாகின்ற கீர்த்தி அண்ணல் தந்தையைப் பரிவின் கண்டான்.

'அன்னவன்தனக்கு வேண்டும் அருங் கடன் முறையின் ஆற்றி,
நன்னுதல்தன்னைத் தேடித் தென் திசை நடக்கும் ஐயன்,
மன்னிய கவந்தன்தன்னை உயிரொடு சாபம் மாற்றி,
தன்னையே மறப்பிலாத சவரி பூசனையும் கொண்டான். 269

'ஆங்கு அவள்தனது சொல்லால், அருக்கன் மா மகனை அண்மி,
பாங்குற நட்டு, ''வாலி பருவரல் கெடுப்பென்'' என்னா,
ஓங்கிய மரமும் வாலி உரமும் ஊடுருவ எய்திட்டு,
ஆங்கு அவன்தனக்குச் செல்வம் அரசொடும் அருளின் ஈந்தான்.

'கால மா மாரி நீங்க, கவயனோடு இடபன், காந்து
நீலன், மா மயிந்தன், சாம்பன், சதவலி, பனசன், நீடு
வாலி மா மைந்தன் என்று இவ் வானரத் தலைவரோடு
கூல வான் சேனை சூழ, அடைந்தனன், எங்கள் கோமான்.

'எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம் எழுந்து பொங்கி,
அழுவ நீர் வேலை என்ன அடைந்துழி, அருக்கன் மைந்தன்,
தழுவிய திசைகள்தோறும் தனித்தனி இரண்டு வெள்ளம்
பொழுது இறை தடாது மீளப் போக்கினன், திருவை நாடி.

'தென் திசை இரண்டு வெள்ளம் சேனையும், வாலி சேயும்
வன் திறல் சாம்பனோடு வாவினர் ஏவ, நாயேன்
குன்றிடை இலங்கை புக்கு, திருவினைக் குறித்து மீண்ட
பின்றை வந்து, அளக்கர் வேலைப் பெரும் படை இறுத்தது அன்றே.

அறிவினுக்கு அறிவு போல்வான் வீடணன், அலங்கல் தோளான்,
செறி புயத்து அரக்கன் தம்பி, ''திருவினை விடுதி; அன்றேல்,
இறுதி உற்றனை, நின் வாணாள்'' என அவன் உரைப்ப, சீறிக்
கறுவுற, பெயர்ந்து போந்து, கருணையான் சரணம் பூண்டான்.

'ஆங்கு அவற்கு அவயம் நல்கி, அரசொடு முடியும் ஈந்து,
பாங்கினால் வருணன்தன்னை அழைத்திட, பரிவு இலாமை
தாங்கினன் சிறிது போது, தாமரை நயனஞ் சேப்ப,
ஓங்கும் நீர் ஏழும் அன்னான் உடலமும் வெந்த அன்றே. 275

268. பாகின்ற கீர்த்தி - பரவுகின்ற புகழ்; 271. கூலம் - வால், குரங்கு.

'மற்று அவன் அவயம் என்ன, மலர்ச் சரண் அடைந்த வேலை,
வெற்றி வானரர்கள் பொங்கி, வெற்பினுல் வேலை தட்டல்
முற்றுற நன்கு இயற்றி, மொய் ஒளி இலங்கை புக்கு,
பற்றினர் சுற்றி ஆர்த்தார், வானவர் பயங்கள் தீர்ந்தார்.

'மலையினை எடுத்த தோளும், மதமலை திளைத்த மார்பும்,
தலை ஒரு பத்தும் சிந்தி, தம்பிதன் தோளும் தாளும்
கொலைதொழில் அரக்கர் ஆயோர் குலத்தொடும் தலத்து வீழ,
சிலையினை வளைவித்து, ஐயன் தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்.

'இலக்குவன் பகழி ஒன்ருல் இந்திரசித்து என்று ஓதும்
விலக்க அரு வலத்தினனும் இளைஞரும் கிளையும் வீழ்ந்தார்;
மலக்கம் உண்டு உழலும் தேவர் மலர் மழை தூவி ஆர்த்து, அன்று
உலக்குநர் குழுக்கள்தோறும் உடற் குறை ஆடல் கண்டார்.

'தேவரும் முனிவர்தாமும், சித்தரும் தெரிவைமாரும்,
மூவகை உலகுளோரும், முறை முறை தொழுது மொய்ப்ப,
பூவைபோல் நிறத்தினனும், வீடணப் புலவர் கோமாற்கு
யாவையும் இயம்பி, "மாண்டோர்க்கு இயற்றுதி கடன்கள்" என்ருன்.

'நான்முகன், விடையை ஊரும் நாரி ஓர் பாகத்து அண்ணல்,
மான்முகன் முதலாய் உள்ள வானவர் தொழுது போற்ற,
ஊன்முகம் கெழுவு வேலாய்! உம்பர் நாயகியைச் சீறி,
தேன் முகம் மலரும் தாரான், அரி சொல, சீற்றம் தீர்ந்தான்.

'மெய்யினுக்கு உயிரை ஈந்த வேந்தர்கோன் விமானத்து எய்த,
அய்யனும் இளைய கோவும் அன்னமும் அடியில் வீழ,
கய்யினுல் பொருந்தப் புல்லி, கண்ணின் நீர்க் கலசம் ஆட்டி,
"செய்வரம் அருளுக" என்ருன்; திருவின் நாயகனும் கொன்டான்.

' ''என்னை நன் கருணைதன்னுல் ஈன்று எடுத்து, இனிது பேணும்
அன்னையும் மகனும் முன்போல ஆக'' என, அருளின் ஈந்து,
மன்னவன் போய பின்றை, வானரம் வாழ்வு கூர,
பொன் நெடு நாட்டில் உள்ளார் வரம் பல வழங்கிப் போனர்.

'வெள்ளம் ஓர் ஏழு பத்தும், விலங்க அரும் வீரர் ஆகி
உள்ளவர் அறுபத்து ஏழு கோடியும், ஒற்றை ஆழி
வள்ளல்தன் மகனும், உள்ளம் மகிழ்வுற விமானம் ஈந்தான்-
எள்ளல் இல்லாத கீர்த்தி வீடணன், இலங்கை வேந்தன். 283

278. உலக்குநர் - இறப்பவர்; 280. மான்முகன் - மானின் முகமுடைய மயன்; அரி - அங்கியங் கடவுள்; 283. ஒற்றை ஆழி வள்ளல்தன் மகன் - சூரியன் மகனுகிய சுக்கிரீவன்.

'ஆரியன் பின்னை நின்னை அன்பினுல் நினைந்து, காதல்
சூரியன் மகனும், தொல்லைத் துணைவரும், இலங்கை வேந்தும்,
பேர் இயல் படையும், சூழ, பெண்ணினுக்கு அரசியோடும்
சீரிய விமானத்து ஏறி, பரத்துவன் இருக்கை சேர்ந்தான்.

'அன்பினுல் என்னை, நின்பால் ஆழியும் காட்டி, ''ஆன்ற
துன்பு எலாம் துடைத்தி என்று'' துரந்தனன், தோன்றல்' என்று,
முன்பினுல் இயன்ற எல்லாம் மொழிந்தனன்—முது நீர் தாவி
வன்பினுல் இலங்கை முற்றும் எரிக்கு உணவாக வைத்தோன்.

பரதன், அனுமனது கையைப் பற்றிக்கொண்டு கங்கை சார்தல்

காலின் மா மதலை சொல்ல, பரதனும் கண்ணீர் சோர,
'வேலி மா மதில்கள் சூழும் இலங்கையில் வேட்டம் கொண்ட
நீல மா முகில் பின் போனுன் ஒருவன்; நான் நின்று நைவேன்,
போனுமால்; இவைகள் கேட்பேன்; புகழ் உடைத்து, அடிமை மன்னே.'

என்று அவன் இரங்கி ஏங்கி, இரு கணும் அருவி சோர,
வன் திறல் அனுமன் செங் கை வலக் கையால் பற்றி, காலின்
சென்றனன் இருளினூடு, செறி புனல் கங்கை சேர்ந்தான்,
குன்றினை வலஞ் செய் தேரோன் குண கடல் தோன்றும் முன்னர்.*

இராவணன் வேட்டம் போய் மீண்டு, எம்பிரான், அயோத்தி எய்தி,
தராதல மகளும் பூவின் தையலும் மகிழ, சூடும்
அராவு பொன் மௌலிக்கு எய்ந்த சிகாமணி, குணபால் அண்ணல்
விராவுற எடுத்தாலென்ன, வெய்யவன் உதயம் செய்தான்.*

காலை வந்து இறுத்த பின்னர், கடன் முறை கமலக்கண்ணன்
கோல நீள் கழல்கள் ஏத்தி, குரக்கினத்து அரசை நோக்கி,
'சாலவும் கலைகள் வல்லோய்! தவறு உண்டு போலும், வாய்மை;
மூலமே உணரின், உன்தன் மொழிக்கு எதிர் மொழியும் உண்டோ?

'எழுபது வெள்ளம் சேனை வானரர், இலங்கை வேந்தன்
முழு முதல் சேனை வெள்ளம், கணக்கு இல மொய்த்த என்ருல்,
அழுவ நீர் வேலை சுற்றும் அரவம் இன்ருக வற்ருே?
விழுமிது, ''எம்பிரான் வந்தான்'' என்று உரைத்தது, வீர!' என்ருன்.

285. ஆன்ற துன்பு - நிறைந்த துன்பம்; 288. குணபால் அண்ணல் - கிழக்குத் திசைக்குக் காவலனுகிய இந்திரன்.

‘ஓசனை இரண்டு உண்டு அன்றே, பரத்துவன் உறையும் சோலை;
வீசு தெண் திரையிற்று ஆய வெள்ளம் ஓர் ஏழு பத்தும்
மூசிய பழுவம் இங்ஙன் கிடப்பதோ, முரற்றல் இன்றி?
பேசியது அமையும்; நம் கோன் எங்கு உளன், பெரும!’ என்றான்.

பரதன் அஃது உரைத்தலோடும், பணிந்து மாருதியும், ‘சீர் சால்
விரத மா தவத்து மிக்கோய்! விண்ணவர் தமையும் வேண்டி
வரதன் ஆண்டு அளிப்ப வந்த வரத்தினால், மலரும் தேனும்
சரதமே மாந்தி மாந்தித் துயின்றது, தானை எல்லாம். 292

‘வானவர் கொடுக்க வந்த வரத்தினால், மதுபம் மூசும்
தேனொடு கிழங்கும் காயும் கனிகளும் பிறவும் சீர்த்துக்
கானகம் பொலிதலாலே, கவிக் குலம் அவற்றை மாந்தி,
ஆனனம் மலர்ந்தது இல்லையாகும்; நீ துயரல், எந்தாய்!

‘இனி ஒரு கணத்தின், எம் கோன் எழுந்தருள் தன்மை ஈண்டுப்
பனி வரும் கண்ணின் நீயே பார்த்தி’ என்று உரைத்தான்; இப்பால்,
முனிதனது இடத்து வந்த முளரி அம் கண்ணன், வண்ணக்
குனி சிலைக் குரிசில், செய்தது இற்று எனக் குணிக்கலுற்றாம்:

குகன், பரத்துவாசன் இருக்கை சேர்தல்

அருந்தவன் சுவைகள் ஆறோடு அமுது இனிது அளிப்ப, ஐயன்
கருந் தடங் கண்ணியோடும் களைகணும் துணைவரோடும்,
விருந்து இனிது அருந்தி, நின்ற வேலையின், வேலை போலும்
பெருந் தடந் தானையோடும், கிராதர் கோன் பெயர்ந்து வந்தான்.

தொழுதனன்; மனமும் கண்ணும் துளங்கினன்; சூழ ஓடி
அழுதனன்; கமலம் அன்ன அடித்தலம்அதனின் வீழ்ந்தான்;
தழுவினன் எடுத்து, மார்பில் தம்பியைத் தழுவுமாபோல்;
‘வழு இலர் வலியர்அன்றே, மக்களும் மனையும்?’ என்றான்.

‘அருள் உனது உளது, நாயேற்கு; அவர் எலாம் அரிய ஆய
பொருள் அலர்; நின்னை நீங்காப் புணர்ப்பினால் தொடர்ந்து போந்து
தெருள்தரும் இளைய வீரன் செய்வன செய்கலாதேன்;
மருள் தரு மனத்தினேனுக்கு இனிது அன்றே, வாழ்வு மன்னே?

291. மூசுதல் - மொய்த்தல், நெருங்குதல்; பழுவம் - பரப்பு; முரற்றல் - ஒலித்தல்; 294. குணிக்கல் - சொல்லுதல்; 295. கிராதர் கோன் - வேடர் தலைவனாகிய குகன்.

ஆயன பிறவும் பன்னி, அழுங்குவான்தன்னை, 'ஐய!
நீ இவை உரைப்பது என்னே; பரதனின் நீ வேறு உண்டோ?
போய், இனிது இருத்தி' என்ன, புளிஞர்கோன் இளவல் பொன் தாள்
மேயினன் வணங்கி, அன்னை விரை மலர்த் தாளின் வீழ்ந்தான்.

தொழுது நின்றவனை நோக்கி, துணைவர்கள்தமையும் நோக்கி,
முழுது உணர் கேள்வி மேலோன் மொழிகுவான்; 'முழு நீர்க் கங்கை
தழுவு இரு கரைக்கும் நாதன்; தாயினும் உயிர்க்கு நல்லான்;
வழுவு இலா எயினர் வேந்தன்; குகன் எனும் வள்ளல் என்றான்;

அண்ணல் அஃது உரைத்தலோடும், அரி குலத்து அரசன் ஆதி
நண்ணிய துணைவர் யாரும் இனிது உறத் தழுவி, நட்டார்;
கண்ணகல் ஞாலம் எல்லாம் கங்குலால் பொதிவான் போல,
வண்ண மால் வரைக்கும் அப் பால் மறைந்தனன், இரவி என்பான்.

அலங்கல் அம் தொடையினானும், அந்தியின் கடன்கள் ஆற்றி,
பொலங் குழை மயிலினோடு துயிலுற, புணரி போலும்
இலங்கிய சேனை சூழ, இளவலும் எயினர் கோனும்,
கலங்கலர் காத்து நின்றார்; கதிரவன் உதயம் செய்தான். 301

கதிரவன் உதிப்ப, காலைக் கடன் கழித்து, இளவலோடும்
அதிர் பொலன் கழலினான் அவ் அருந் தவன்தன்னை ஏத்தி,
விதி தரு விமானம் மேவி, விளங்கிழையோடும், கொற்றம்
முதிர் தரு கருணையோடும், முனி மனம் தொடரப் போனான்.

தாவி வான் படர்ந்து மானம் தடையிலாது ஏகும் வேலை,
தீவிய கன்னி ஆகிச் செருக்கிய காமச் செவ்வி
ஓவியம் உயிர் பெற்றென்ன உம்பர்கோன் நகரும் ஒவ்வா
மா இயல் அயோத்தி சூழும் மதில் புறம் தோன்றிற்று அன்றே.

பொன் மதில் கிடக்கை சூழப் பொலிவுடை நகரம் தோன்ற,
நன் மதிக் கிழவர்தம்மை நோக்கிய ஞான மூர்த்தி,
'சொல் மதித்து ஒருவராலும் சொலப்படா அயோத்தி தோன்றிற்று'
என்னலும், கரங்கள் கூப்பி எழுந்தனர், இறைஞ்சி நின்றார்.

### புட்பக விமானத்தின் வருகை

**அ**ன்னது ஓர் அளவையின், விசும்பின் ஆயிரம்
துன் இருங் கதிரவர் தோன்றினர் என,
பொன் அணி புட்பகப் பொரு இல் மானமும்,
மன்னவர்க்கு அரசனும், வந்து தோன்றினர். 305

‘அண்ணலே! காண்டியால்—அலர்ந்த தாமரைக்
கண்ணனும், வானரக் கடலும், கற்புடைப்
பெண் அருங் கலமும், நின் பின்பு தோன்றிய
வண்ண வில் குமரனும், வருகின்றார்களே. 306

‘ஏழ்-இரண்டு ஆகிய உலகம் ஏறினும்
பாழ் புறம் கிடப்பது, படி இன்றுயது, ஓர்
சூழ் ஒளி மானத்துத் தோன்றுகின்றனன்
ஊழியான்’ என்று கொண்டு, உணர்த்தும் காலையே. 307

பொன் ஒளிர் மேருவின் பொதும்பில் புக்கது ஓர்
மின் ஒளிர் மேகம்போல் வீரன் தோன்றலும்,
அந் நகர் ஆர்த்த பேர் ஆர்ப்பு, இராவணன்
தென் நகர்க்கு அப் புறத்து அளவும் சென்றதால். 308

**இராமனைப் பரதன் காணுதல்**

ஊனுடை யாக்கை விட்டு உண்மை வேண்டிய
வானுடைத் தந்தையார் வரவு கண்டென,
கானிடைப் போகிய கமலக்கண்ணனை,
தானுடை உயிரினை, தம்பி நோக்கினன். 309

கெட்ட வான் பொருள் வந்து கிடைப்ப, முன்பு தாம்
பட்ட வான் படர் ஒழிந்தவரின் பையுள் நோய்
சுட்டவன், மானவன்-தொழுதல் உன்னியே,
விட்டனன் மாருதி கரத்தை, மேன்மையான். 310

அக் கணத்து அனுமனும் அவண் நின்று ஏகி, அத்
திக்குறு மானத்தைச் செவ்வன் எய்தி, அச்
சக்கரத்து அண்ணலைத் தாழ்ந்து முன் நின்றான்;
உக்கு உறு கண்ண நீர் ஒழுகும் மார்பினன். 311

‘உருப்பு அவிர் கனலிடை ஒளிக்கலுற்ற அப்
பொருப்பு அவிர் தோளனைப் பொருந்தி, நாயினேன்,
திருப் பொலி மார்ப! நின் வரவு செப்பினேன்;
இருப்பன ஆயின, உலகம் யாவையும். 312

‘தீவினை யாம் பல செய்ய, தீர்வு இலா
வீவினை முறை முறை விளைவ, மெய்ம்மையாய்!
நீ அவை துடைத்து நின்று, அழிக்க நேர்ந்ததால்;
ஆயினும், அன்பினாய்! யாம் செய் மா தவம்.’ 313

310. பையுள் நோய் - பெருந்துன்பம்; 313. வீவினை - சாதற்குரிய வினை.

என்று உரைத்து, அனுமனை இறுகப் புல்லினன்;
ஒன்று உரைத்து இறுப்பது என், உனக்கும், எந்தைக்கும்,
இன் துணைத் தம்பிக்கும், யாய்க்கும்?' என்றனன்—
குன்று இணைத்தன உயர் குவவுத் தோளினன். 314

ஈடுறு வான் துணை இராமன் சேவடி
சூடிய சென்னியன், தொழுத கையினன்,
ஊடு உயிர் உண்டு என உலர்ந்த யாக்கையன்,
பாடு உறு பெரும் புகழ்ப் பரதன் தோன்றினன். 315

தொழுது நெருங்கிய பரதனை அனுமன் இராமனுக்கு அறிவிக்க, இராமனும் தம்பியைக் கண்டு மகிழ்தல்

தோன்றிய பரதனைத் தொழுது, தொல் அறச்
சான்று என நின்றவன், 'இனைய தம்பியை,
வான் தொடர் பேர் அரசு ஆண்ட மன்னனை,
ஈன்றவள் பகைஞனை, காண்டி ஈண்டு' என, 316

காட்டினன் மாருதி, கண்ணின் கண்ட அத்
தோட்டு அலர் தெரியலான் நிலைமை சொல்லுங்கால்,
ஓட்டிய மானத்துள் உயிரின் தந்தையார்
கூட்டு உருக் கண்டன்ன தன்மை கூடினன். 317

புட்பக விமானம் நிலத்தைச் சார்தல்

ஆனது ஓர் அளவையின், அமரர்கோனொடும்
வானவர் திரு நகர் வருவது ஆம் என,
மேல் நிறை வானவர் வீசும் பூவொடும்
தான் உயர் புட்பகம் நிலத்தைச் சார்ந்ததால். 318

இராமனது வருகையால் தாயர் முதலியோர் உற்ற நிலை

தாயருக்கு அன்று சார்ந்த கன்று எனும் தகையன் ஆனான்;
மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம் மனோலயம் வந்தது ஒத்தான்;
ஆய் இளையார்க்குக் கண்ணுள் ஆடு இரும் பாவை ஆனான்;
நோய் உறுத்து உலந்த யாக்கைக்கு உயிர் புகுந்தாலும் ஒத்தான்.

எளிவரும் உயிர்கட்கு எல்லாம் ஈன்ற தாய் எதிர்ந்தது ஒத்தான்;
அளி வரும் மனத்தோர்க்கு எல்லாம் அரும் பத அமுதம் ஆனான்;
ஒளி வரப் பிறந்தது ஒத்தான், உலகினுக்கு; ஒண்கணார்க்குத்
தெளிவு அருங் களிப்பு நல்கும் தேம் பிழித் தேறல் ஒத்தான்.

*317.* கூட்டு உரு - பொருந்திய உருவம்; *319.* மாயையின் பிரிந்தோர் - மாயையிலிருந்து நீங்கிய துறவிகள்; மனோலயம் - மனம் இறைவனோடு ஒன்று -படும் நிலை.

ஆவி அங்கு அவன் அலால் மற்று இன்மையால், அனையன் நீங்க,
காவி அம் கழனி நாடும், நகரமும், கலந்து வாழும்
மா இயல் ஒண்கணாரும், மைந்தரும், வள்ளல் எய்த,
ஓவியம் உயிர் பெற்றென்ன ஓங்கினர், உணர்வு பெற்றார். 321

கண்ணமும், சாந்தும், நெய்யும், சுரி வளை முத்தும், பூவும்,
எண்ணெயும், கலின மா விலாழியும், எண் இல் யானை
வண்ண வார் மதமும், நீரும், மான்மதம் தழுவும் மாதர்
கண்ண ஆம் புனலும், ஓடிக் கடலையும் கடந்த அன்றே, 322

அனைவரும் அனையர் ஆகி அடைந்துழி, அருளின் வேலை-
தனை இனிது அளித்த தாயர் மூவரும், தம்பிமாரும்
புனையும் நூல் முனிவன்தானும், பொன் அணி விமானத்து ஏற,
வனை கழல் குரிசில் முந்தி, மா தவன் தாளில் வீழ்ந்தான்.*

எடுத்தனன் முனிவன், மற்று அவ் இராமனை ஆசி கூறி,
அடித்துள துன்பம் நீங்க, அணைத்து அணைத்து, அன்பு கூர்ந்து,
விடுத்துழி, இளைய வீரன் வேதியன் தாளில் வீழ,
வடித்த நூல் முனியும் முன்போல, வாழ்த்தினன், ஆசி கூறி.*

**இராமன் தாயரை வணங்கல்**

கைகயன் தனயை முந்தக் கால் உறப் பணிந்து, மற்றை
மொய் குழல் இருவர் தாளும் முறைமையின் வணங்கு செங் கண்
ஐயனை, அவர்கள்தாமும் அன்புறத் தழுவி, தம் தம்
செய்ய தாமரைக் கணீரால் மஞ்சனத்தொழிலும் செய்தார்.

**சீதையும் இலக்குவனும் வணங்கல்**

அன்னமும் முன்னர்ச் சொன்ன முறைமையின் அடியில் வீழ்ந்தாள்;
தன் நிகர் இலாத வென்றித் தம்பியும் தாயர்தங்கள்
பொன் அடித் தலத்தில் வீழ, தாயரும் பொருந்தப் புல்லி,
'மன்னவற்கு இளவல் நீயே; வாழி!' என்று ஆசி சொன்னார்.*

**அடியில் வீழ்ந்து வணங்கிய பரதனை இராமன் அன்புறத் தழுவுதல்**

சேவடி இரண்டும் அன்பும் அடியுறையாகச் சேர்த்தி,
பூ அடி பணிந்து வீழ்ந்த பரதனைப் பொருமி விம்மி,
நாவிடை உரைப்பது ஒன்றும் உணர்ந்திலன், நின்ற நம்பி,
ஆவியும் உடலும் ஒன்றத் தழுவினன், அழுது சோர்வான்.

321. மா இயல் ஒண்கணார் - மாவடுவின் பிளவு போன்ற ஒளி வாய்ந்த கண்களையுடைய மகளிர்; 323. அருளின் வேலை - கருணைக் கடலாகிய இராமன்; 327. அடியுறை - காணிக்கை.

தழுவினன் நின்றகாலை, தத்தி வீழ் அருவி சாலும்
விழு மலர்க் கண்ணீர் மூரி வெள்ளத்தால், முருகின் செவ்வி
வழுவுற, பின்னி மூசு மாசுண்ட சடையின் மாலை
கழுவினன், உச்சி மோந்து, கன்று காண் கறவை அன்னான்.

இலக்குவன், பரதனது பாதங்களில் விழுந்து வணங்குதல்

அனையது ஓர் காலத்து, அம் பொன் சடை முடி அடியது ஆக,
கனை கழல் அமரர் கோமாற் கட்டவன்-படுத்த காளை,
துனை பரி, கரி, தேர் ஊர்தி என்று இவை பிறவும், தோலின்
வினை உறு செருப்புக்கு ஈந்தான் விரை மலர்த் தாளின் வீழ்ந்தான்.

ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறும் சிவிறி ஓட,
தாள்தொடு தடக் கை ஆரத் தழுவினன்—'தனிமை நீங்கி,
காடு உறைந்து உலைந்த மெய்யோ, கையறு கவலை கூர
நாடு மறைந்து உலைந்த மெய்யோ, நைந்தது?' என்று உலகம் நைய.

சத்துருக்கன் அனைவரையும் வணங்கல்

மூவர்க்கும் இளைய வள்ளல், முடிமிசை முகிழ்த்த கையன்,
தேவர்க்கும் தேவன் தாளும், செறி கழல் இளவல் தாளும்,
பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தான்; எடுத்தனர் பொருந்தப் புல்லி,
வாவிக்குள் அன்னம் அன்னாள் மலர் அடித் தலத்து வீழ்ந்தான்.

சத்துருக்கனையும் இராமன் தழுவி, பரத சத்துருக்கனர்களைத்
துணைவர்களுக்கு அறிமுகப்படுத்த, அவர்கள் அவ்
இருவரையும் வணங்குதல்

பின் இணைக் குரிசில்தன்னைப் பெருங் கையால் வாங்கி, வீங்கும்
தன் இணைத் தோள்கள் ஆரத் தழுவி, அத் தம்பிமாருக்கு,
இன் உயிர்த் துணைவர்தம்மைக் காட்டினன்; இருவர் தாளும்,
மன் உயிர்க்கு உவமை கூர வந்தவர், வணக்கம் செய்தார்.

குரக்கினத்து அரசை, சேயை, குமுதனை, சாம்பன்தன்னை
செருக் கிளர் நீலன்தன்னை, மற்றும் அத் திறத்தினோரை,
அரக்கருக்கு அரசை, வெவ்வேறு அடைவினின் முதன்மை கூறி,
மருக் கமழ் தொடையல் மாலை மார்பினன், பரதன், நின்றான். *

329. அமரர் கோமாற் கட்டவன் - இந்திரனை வென்றவனாகிய இந்திர சித்து; காளை - காளை போன்ற இலக்குவன்; 330. சிவறி - பரவி; 332. குரிசில் - ஈண்டுச் சத்துருக்கனன்.

மந்திரச் சுற்றத்துள்ளார் தம்மொடும், வயங்கு தானைத்
தந்திரத் தலைவரோடும், தமரொடும், தரணி ஆளும்
சிந்துரக் களிறு போல்வார் எவரொடும், சேனையோடும்,
சுந்தரத்தடந் தோள் வெற்றிச் சுமந்திரன் தோன்றினான்.*

அழுகையும் உவகைதானும் தனித்தனி அமர் செய்து ஏற,
தொழுதனன், எழுந்து விம்மி, சுமந்திரன் நிற்றலோடும்,
தழுவினன் இராமன், மற்றைத் தம்பியும் அனைய நீரான்,
'வழு இனி உளது அன்று, இந்த மா நிலக் கிழத்திக்கு' என்றான்.*

'ஏறுக சேனை எல்லாம் விமானமீது' என்று, தன்போல்
மாறு இலா வீரன் கூற, வந்துள அனிக வெள்ளம்
ஊறு இரும் பரவை வானத்து எழிலியுள் ஒடுங்குமாபோல்
ஏறி, மற்று இளைய வீரன் இணை அடி தொழுதது அன்றே.*

'உரைசெயின், உலகம் உண்டான் மணி அணி உதரம் ஒவ்வா,
கரை செயல் அரிய வேதக் குறுமுனி கையும் ஒவ்வா,
விரை செறி அலங்கல் மாலைப் புட்பக விமானம்' என்று என்று,
உரைசெய்து, வான் உளோர்கள் ஒண் மலர் தூவி ஆர்த்தார்.*

அசனியின் குழுவும், ஆழி ஏழும் ஒத்து ஆர்த்ததென்ன,
விசையுறு முரசும், வேதத்து ஓதையும், விளி கொள் சங்கும்,
இசையுறு குரலும், ஏத்தின் அரவமும், எழுந்து பொங்கி,
திசை உறச் சென்று, வானோர் அந்தரத்து ஒலியின் தீர்ந்த.

# 38 திருமுடி சூட்டு படலம்

### இராமன் தம்பியரோடு அரச கோலம் கொள்ளுதல்

நம்பியும் பரதனோடு நந்தியம்பதியை நண்ணி,
வம்பு இயல் சடையும் மாற்றி, மயிர் வினை முற்றி, மற்றைத்
தம்பியரோடு தானும் தண் புனல் படிந்த பின்னர்,
உம்பரும் உவகை கூர, ஒப்பனை ஒப்பச் செய்தார். 1

நிருதியின் திசையில் தோன்றும் நந்தியம்பதியை நீங்கி,
குருதி கொப்பளிக்கும் வேலோன் கொடி மதில் அயோத்தி மேவ,
சுருதி ஒத்தனைய வெள்ளைத் துரகதக் குலங்கள் பூண்டு,
பருதி ஒத்து இலங்கும் பைம் பூண் பரு மணித் தேரின் ஆனான்,*

38 : 2. நிருதியின் திசை - தென்மேற்குத் திசை.

தம்பிமார் பணி செய்ய, தேர் ஏறி, இராமன் அயோத்தி புகுதல்

ஊழியின் இறுதி காணும் வலியினது உயர் பொன் தேரின்,
ஏழ் உயர் மதமா அன்ன இலக்குவன் கவிகை ஏந்த,
பாழிய மற்றைத் தம்பி பால்நிறக் கவரி பற்ற,
பூமியை அடக்கும் கண்ணீர்ப் பரதன் கோல் கொள்ளப் போனான். 3

வீடணக் குரிசில், மற்றை வெங் கதிர்ச் சிறுவன், வெற்றிக்
கோடு அணை குன்றம் ஏறி, கொண்டல் தேர் மருங்கு செல்ல,
தோடு அணை மவுலிச் செங் கண் வாலி சேய் தூசி செல்ல,
சேடனைப் பொருவும் வீர மாருதி பின்பு சென்றான்.* 4

அறுபத்து ஏழ் அமைந்த கோடி யானைமேல் வரிசைக்கு ஆன்ற
திறம் உற்ற சிறப்பர் ஆகி, மானுடச் செவ்வி வீரம்
பெறுகுற்ற வனப்பர் உச்சி பிறங்கு வெண் குடையர் செச்சை
மறு உற்ற அலங்கல் மார்பர், வானரத் தலைவர் போனார். 5

எட்டு என இறுத்த பத்தின் ஏழ் பொழில் வளாக வேந்தர்
பட்டம் வைத்து அமைந்த நெற்றிப் புகட்டினர், பைம் பொன் தேரர்,
வட்ட வெண்குடையர், வீசு சாமரை மருங்கர், வானைத்
தொட்ட வெஞ் சோதி மோலிச் சென்னியர், தொழுது சூழ்ந்தார். 6

வானர மகளிர் எல்லாம் வானவர் மகளிராய் வந்து
ஊனம் இல் பிடியும் ஒண் தார்ப் புரவியும் பிறவும் ஊர்ந்து,
மீன்இனம் மதியைச் சூழ்ந்த தன்மையின் விரிந்து சுற்ற,
பூ நிற விமானம்தன்மேல் மிதிலை நாட்டு அன்னம் போனாள். 7

தேவரும் முனிவர்தாமும் திசைதொறும் மலர்கள் சிந்த,
ஓவல் இல் மாரி ஏய்ப்ப, எங்கணும் உதிர்ந்து வீங்கிக்
கேவல மலராய், வேறு ஓர் இடம் இன்றிக் கிடந்த ஆற்றால்,
பூ எனும் நாமம், இன்று இவ் உலகிற்குப் பொருந்திற்று அன்றே. 8

கோடையில் வறந்த மேகக் குலம் எனப் பதினால் ஆண்டு
பாடு உறு மதம் செய்யாத பணை முகப் பரும யானை,
காடு உறை அண்ணல் எய்த, கடாம் திறந்து உகுத்த வாரி
ஓடின, உள்ளத்து உள்ள களி திறந்து உடைந்ததேபோல். 9

3. ஏழ் உயர் மதமா - ஏழு முழம் உயர்ந்த களிற்றியானை; 4. தூசி - முன்னணி; சேடன் - ஆதிசேடன்; 5. செச்சை - சந்தனக்குழம்பு; 6. எட்டு என இறுத்த பத்து - எட்டு என்று முடிகின்ற பத்து (பதினெட்டு); வளாகம் - பூமி, ஈண்டுத் தேயம்; 8. ஓவல் - நீங்குதல்; கேவலம் - தனிமை; பிறிதொன்றின் கலப்பில்லாதது.

துரகதத் தார்ப் புரவி எல்லாம், மூங்கையர் சொல் பெற்றென்ன,
அரவப் போர் மேகம் என்ன, ஆலித்த; மரங்கள் ஆன்ற
பருவத்தால் பூத்த என்னப் பூத்தன; பகையின் சீறும்
புருவத்தார் மேனி எல்லாம் பொன் நிறப் பசலை பூத்த. 10

**இராமன் அரண்மனை அடைதல்**

ஆயது ஓர் அளவில், செல்வத்து அண்ணலும் அயோத்தி நண்ணி,
தாயரை வணங்கி, தங்கள் இறையொடு முனியைத் தாழ்ந்து,
நாயகக் கோயில் எய்தி, நானிலக் கிழத்தியோடும்
சேயொளிக் கமலத்தாளும் திரு நடம் செய்யக் கண்டான். 11

**நகர மாந்தரின் மகிழ்ச்சி**

'வாங்குதும் துகில்கள்' என்னும் மனம் இலர், கரத்தின் பல்கால்
தாங்கினர் என்ற போதும், மைந்தரும் தையலாரும்,
வீங்கிய உவகை மேனி சிறக்கவும், மேன் மேல் துள்ளி
ஓங்கவும், களிப்பால் சோர்ந்த உடை இலாதாரை ஒத்தார். 12

வேசியர் உடுத்த கூறை வேதியர் சுற்ற, வெற்றிப்
பாசிழை மகளிர் ஆடை அந்தணர் பறித்துச் சுற்ற,
வாசம், மென் கலவைச் சாந்து, என்று இனையன, மயக்கம்தன்னால்
பூசினர்க்கு இரட்டி ஆனார்; பூசலார் புகுந்துளோரும். 13

இறைப் பெருஞ் செல்வம் நீத்த ஏழ்-இரண்டு ஆண்டும், யாரும்
உறைப்பு இலர் ஆதலானே, வேறு இருந்து ஒழிந்த மின்னார்,
பிறைக் கொழுந்து அனைய நெற்றிப் பெய் வளை மகளிர், மெய்யை
மறைத்தனர் பூணின், மைந்தர் உயிர்க்கு ஒரு மறுக்கம் தோன்ற. 14

விண் உறைவோர்தம் தெய்வ வெறியொடும், வேறுளோர்தம்
தண் நறு நாற்றம் தம்மில் தலைதடுமாறும் நீரால்,
மண் உறை மாதரார்க்கும் வான் உறை மடந்தைமார்க்கும்,
உள் நிறைந்து உயிர்ப்பு வீங்கி ஊடல் உண்டாயிற்று அன்றே.

ஆயது ஓர் அளவில், ஐயன், பரதனை அருளின் நோக்கி,
'தூய வீடணற்கும், மற்றைச் சூரியன் மகற்கும், தொல்லை
மேய வானரர்கள் ஆய வீரர்க்கும், பிறர்க்கும், நம்தம்
நாயகக் கோயில் உள்ள நலம் எலாம் தெரித்தி' என்றான்.*

10. துரகதம் - குதிரை கட்டும் தறி; 11. இறை - குலதெய்வமாகிய அரங்கநாதன்; 12. களிப்பு - கள் குடித்த மகிழ்ச்சி; 15. வேறுளோர் - வேறுயுள்ள மக்கள்.

என்றலும், இறைஞ்சி, மற்றைத் துணைவர்கள் யாவரோடும்
சென்றனன் எழுந்து, மாடம் பல ஒரீஇ, உலகில் தெய்வப்
பொன் திணிந்து அமரரோடும் பூமகன் உறையும் மேருக்
குன்று என விளங்கித் தோன்றும் நாயகக் கோயில் புக்கான்.*

வயிரம், மாணிக்கம், நீலம், மரகதம் முதலாய் உள்ள
செயிர் அறு மணிகள் ஈன்ற செழுஞ் சுடர்க் கற்றை சுற்ற,
உயிர் துணுக்குற்று நெஞ்சும் உள்ளமும் ஊசலாட,
மயர்வு அறு மனத்து வீரர், இமைப்பிலர், மயங்கி நின்றார்.

விண்டுவின் மார்பில் காந்தும் மணி என விளங்கும் மாடம்
கண்டனர்; பரதன் தன்னை வினவினர், அவர்க்கு, 'காதல்
புண்டரீகத்துள் வைகும் புராதனன், கன்னல் தோளான்,
கொண்ட நல் தவம்தன்னாலே உவந்து, முன் கொடுத்தது' என்றான்.*

'பங்கயத்து ஒருவன் இக்குவாகுவிற்கு அளித்த பான்மைத்து
இங்கு இது மலராள் வைகும் மாடம்' என்று இசைத்த போதில்,
'எங்களால் துதிக்கலாகும் இயல்பதோ' என்று கூறி,
செங் கைகள் கூப்பி, வேறு ஓர் மண்டபம்அதனில் சேர்ந்தார்.

இருந்தனர், அனைய மாடத்து இயல்பு எலாம் எண்ணி எண்ணி,
பரிந்தனன் இரவி மைந்தன், பரதனை வணங்கி, 'தூயோய்!
கருந் தட முகிலினுக்குக் காப்பு நாண் அணியும் நல் நாள்
தெரிந்திடாது இருத்தல் என்னோ?' என்றலும், அண்ணல் செப்பும்:

'ஏழ் கடல் அதனில் தோயம், இரு நதி பிறவில் தோயம் [என்ன,
தாழ்வு இலாது இவண் வந்து எய்தற்கு அருமைத்து ஓர் தன்மைத்து'
ஆழி ஒன்று உடையோன் மைந்தன், அனுமனைக் கடிதின் நோக்க,
சூழ் புவி அதனை எல்லாம் கடந்தனன், காலின் தோன்றல். 22

'கோமுனியோடு மற்றைக் கணிதரைக் கொணர்க!' என்னா
ஏவினன்; தேர் வலான் சென்று இசைத்தலும், உலகம் ஈன்ற
பூமகன் தந்த அந்தப் புனித மா தவன் வந்து எய்த,
யாவரும் எழுந்து போற்றி, இணை அடி தொழுது நின்றார். 23

அரியணை பரதன் ஈய, அதன்கண் ஆண்டு இருந்த அந்தப்
பெரியவன், அவனை நோக்கி, 'பெரு நிலக் கிழத்தியோடும்
உரிய மா மலராளோடும் உகந்தனர் ஒருவு இல் செல்வம்
கரியவன் உய்த்தற்கு ஒத்த காப்பு நாள் நாளை' என்றான். 24

10. மணி - கவுத்துவ மணி; கன்னல் தோளான் - கரும்பைப் போன்ற தோள்களை உடையவனாகிய இட்சுவாகு, இக்ஷ்வாகு என்பதன் தமிழாக்கம்; 22. தோயம் - நீர்; 23. கணிதர் - சோதிடர்; 24. பெரியவன் - பெரியவனாகிய வசிட்ட முனிவன்.

இந்திர குருவும் அன்னூர் ஏனையவர் என்ன நின்ற
மந்திர விதியினரும், வசிட்டனும், வரைந்து விட்டார்—
சந்திர கவிகை ஓங்கும் தயரத ராமன் தாமச்
சுந்தர மவுலி சூடும் ஓரையும் நாளும் தூக்கி. 25

அடுக்கிய உலகம் மூன்றும், ஆதரத் தூதர் கூற,
இடுக்கு ஒரு பேரும் இன்றி, அயோத்தி வந்து இறுத்தார் என்றால்,
தொடுக்குறு கவியான் மற்றைத் துழனியை இறுதி தோன்ற
ஒடுக்குறுத்து உரைக்கும் தன்மை நான்முகத்து ஒருவற்கு உண்டோ?

அவ் வயின் முனிவனோடும் பரதனும், அரியின் சேயும்,
செவ்வியின் நிருதர்கோனும், சாம்பனும், வாலி சேயும்,
எவ்வம் இல் ஆற்றல் வீரர் யாவரும், எழுந்து சென்று, ஆங்கு
அவ்வியம் அவித்த சிந்தை அண்ணலைத் தொழுது சொன்னர்.*

'நாளை நீ மவுலி சூட நன்மை சால் பெருமை நல்நாள்;
காளை! நீ அதனுக்கு ஏற்ற கடன்மைமீது இயற்றுக!' என்று,
வேளையே பொடியதாக விழிக்கும் நீள் நுதலின் வெண் பூம்
பூளையே சூடுவானைப் பொருவும் மா முனிவன் போனன்.* 28

நான்முகத்து ஒருவன் ஏவ, நயன் அறி அயன் என்று ஓதும்
நூல் முகத்து ஓங்கு கேள்வி நுணங்கியோன், வணங்கு நெஞ்சன்,
கோல் முகத்து அளந்து, குற்றம் செற்று, உலகு எல்லாம் கொள்ளும்
மான் முகத்து ஒருவன், நல் நாள் மண்டபம் வயங்கக் கண்டான். 29

**இராமன் புண்ணிய நீரில் ஆடுதல்**

'சூழ் கடல் நான்கின் தோயம், எழு வகை ஆகச் சொன்ன
ஆழ் திரை ஆற்றின் நீரோடு அமைத்தி இன்று' என்ன, 'ஆம்' என்று.
ஊழியின் இறுதி செல்லும் தாதையின் உலாவி, ஒன்று
ஏழ் கடல் நீரும் தந்தான், இருந்து உய்ய மருந்து தந்தான்.

எரி மணிக் குடங்கள் பல் நூற்று யானைமேல் வரிசைக்கு ஆன்ற
விரி மதிக் குடையின் நீழல், வேந்தர்கள் பலரும் ஏந்தி,
புரை மணிக் காளம் ஆர்ப்ப, பல்லியம் துவைப்ப, பொங்கும்
சரயுவின் புனலும் தந்தார், சங்குஇனம் முரல மன்னே.* 31

25. இந்திர குரு - இந்திரனுக்குக் குருவாகிய வியாழன்; 26. ஆதரத் தூதர் - ஆர்வம் பொருந்திய தூதர்; ஒடுக்குறுத்து உரைத்தல் - அடக்கிக் கூறுதல், தொகுத்துக் கூறுதல்; 27. அவ்வியம் - பொறாமை; அண்ணல் - இராமன்; 28. பூளையே சூடுவான் - பூளைப் பூவைச் சூடுபவனாகிய சிவபெருமான்.

மாணிக்கப் பலகை தைத்து, வயிரத் திண் கால்கள் சேர்த்தி,
ஆணிப்பொன் சுற்றி முற்றி, அழகுறச் சமைத்த பீடம்,
ஏண் உற்ற பளிக்கு மாடத்து இட்டனர்; அதனின்மீது
பூண் உற்ற திரள் தோள் வீரன் திருவொடும் பொலிந்தான் மன்னோ.*

மங்கல கீதம் பாட, மறை ஒலி முழங்க, வல் வாய்ச்
சங்குஇனம் குமுற, பாண்டில் தண்ணுமை ஒலிப்ப, தா இல்
பொங்கு பல்லியங்கள் ஆர்ப்ப, பூ மழை பொழிய, விண்ணோர்,
எங்கள் நாயகனை வெவ்வேறு எதிர்ந்து, அபிடேகம் செய்தார்.*

மா தவர், மறைவலாளர், மந்திரக் கிழவர், மற்றும்
மூதறிவாளர், உள்ள சான்றவர் முதல் நீராட்ட,
சோதியான் மகனும், மற்றைத் துணைவரும், அனுமன்தானும்,
தீது இலா இலங்கை வேந்தும், பின் அபிடேகம் செய்தார். 34

'அம் கண் வான், உலகம், தாய அடி, மலர்த் தவிசோன் ஆட்டும்
கங்கை வார் சடையின் ஏற்றான், கண்ணுதல் ஒருவன்; இந் நாள்
சிங்கஏறு அனையான் செய்ய திருமுடி ஆட்டும் நல் நீர்
எங்கண் ஏற்று அன்னோன் வாழும்?' என்றனர், புலவர் எல்லாம்.*

மரகதச் சயிலம் செந் தாமரை மலர்க் காடு பூத்து,
திரை கெழு கங்கை வீசும் திவலையால் நனைந்து, செய்ய
இரு குழை தொடரும் வேற் கண் மயிலொடும் இருந்தது எய்ப்ப,
பெருகிய செவ்வி கண்டார், பிறப்பு எனும் பிணிகள் தீர்ந்தார்.*

தெய்வ நீராடற்கு ஒத்த செய் வினை வசிட்டன் செய்ய,
ஐயம் இல் சிந்தையான் அச் சுமந்திரன் அமைச்சரோடும்
நொய்தினின் இயற்ற, நோன்பின் மாதவர் நுனித்துக் காட்ட,
எய்தின இயன்ற பல் வேறு, இந்திரற்கு இயன்ற என்ன, 37

#### வசிட்டன் இராமனுக்குத் திருமுடி புனைதல்

அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடை வாள் ஏந்த,
பரதன் வெண் குடை கவிக்க, இருவரும் கவரி பற்ற,
விரை செறி குழலி ஓங்க, வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி, வசிட்டனே புனைந்தான், மௌலி.

வெள்ளியும் பொன்னும் ஒப்பார் விதி முறை மெய்யின் கொண்ட
ஒள்ளிய நாளின், நல்ல ஓரையின், உலகம் மூன்றும்
துள்ளின குனிப்ப, மோலி சூடினன்—கடலின் வந்த
தெள்ளிய திருவும், தெய்வப் பூமியும், சேரும் தோளான். 39

32. ஏண் - பெருமை; 36. சயிலம் - மலை; 39. வெள்ளி - அசுர குருவாகிய சுக்கிரன்; பொன் - தேவ குருவாகிய வியாழன்.

சித்தம் ஒத்துளன் என்று ஓதும் திரு நகர்த் தெய்வ நன்னூல்
வித்தகன் ஒருவன் சென்னி மிலைச்சியதுஎனினும், மேன்மை
ஒத்த மூஉலகத்தோர்க்கும் உவகையின் உறுதி உன்னின்,
தம்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தது, அத் தாம மோலி.

பல் நெடுங் காலம் நோற்று, தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற
பின் நெடுங் கணவன்தன்னைப் பெற்று, இடைப் பிரிந்து, முற்றும்
தன் நெடும் பீழை நீங்கத் தழுவினள், தளிர்க் கை நீட்டி,
நல் நெடும் பூமி என்னும் நங்கை, தன் கொங்கை ஆர. 41

**பரதனுக்கு இளவரசு பட்டம் சூட்டல்**

விரத நூல் முனிவன் சொன்ன விதி நெறி வழாமை நோக்கி,
வரதனும், இளைஞற்கு ஆங்கண் மா மணி மகுடம் சூட்டி,
பரதனைத் தனது செங்கோல் நடாவுறப் பணித்து, நாளும்
கரை தெரிவு இலாத போகக் களிப்பினுள் இருந்தான் மன்னோ. 42

## 39 விடை கொடுத்த படலம்

**இராமன் சீதையோடு அரியணையில் வீற்றிருத்தல்**

பூமகட்கு அணிஅது என்னப் பொலி பசும் பூரி சேர்த்தி,
மா மணித் தூணின் செய்த மண்டபம்அதனின் நாப்பண்,
கோமணிச் சிவிகைமீதே, கொண்டலும் மின்னும் போல,
தாமரைக் கிழத்தியோடும் தயரத ராமன் சார்ந்தான். 1

விரி கடல் நடுவண் பூத்த மின் என ஆரம் வீங்க,
எரி கதிர்க் கடவுள்தன்னை இனமணி மகுடம் ஏய்ப்ப,
கரு முகிற்கு அரசு செந்தாமரை மலர்க் காடு பூத்து, ஓர்
அரியணைப் பொலிந்தது என்ன, இருந்தனன், அயோத்தி வேந்தன். 2

மரகதச் சயிலமீது வாள் நிலாப் பாய்வது என்ன,
இரு குழை இடறும் வேற் கண், இளமுலை, இழை நலார்தம்
கரகமலங்கள் பூத்த கற்றை அம் கவரி தெற்ற,
உரகரும், நரரும், வானத்து உம்பரும், பரவி ஏத்த, 3

உலகம் ஈர்-ஏழும் தன்ன ஒளி நிலாப் பரப்ப, வானில்
திலக வாள் நுதல் வெண் திங்கள் சிந்தை நொந்து, எளிதின் தேய,
கலக வாள் நிருதர் கோனைக் கட்டழித்திட்ட கீர்த்தி
இலகி மேல் நிவந்தது என்ன, எழு தனிக் குடை நின்று ஏய. 4

40. வித்தகன்; வசிட்ட முனிவன்; ஒருவன் - இராமன்.
39 : 1. பூரி - பொன்.

மங்கல கீதம் பாட, மறையவர் ஆசி கூற,
சங்குஇனம் குமுற, பாண்டில் தண்ணுமை துவைப்ப, தா இல்
பொங்கு பல்லியங்கள் ஆர்ப்ப, பொரு கயல் கருங் கண், செவ் வாய்
பங்கய முகத்தினார்கள் மயில் நடம் பயில மாதோ. 5

திரை கடல் கதிரும் நாணச் செழு மணி மகுட கோடி
கரை தெரிவு இலாத சோதிக் கதிர் ஒளி பரப்ப, நாளும்
வரை பொரு மாட வாயில் நெருக்குற வந்து, மன்னர்
பரசியே வணங்கும்தோறும் பதயுகம் சேப்ப மன்னோ. 6

மந்திரக் கிழவர் சுற்ற, மறையவர் வழுத்தி ஏத்த,
தந்திரத் தலைவர் போற்ற, தம்பியர் மருங்கு சூழ,
சிந்துரப் பவளச் செவ் வாய்த் தெரிவையர் பலாண்டு கூற,
இந்திரற்கு உவமை ஏய்ப்ப எம்பிரான் இருந்தகாலை. 7

**சுக்கிரீவன் முதலியோர் வணங்குதல்**

மயிந்தன், மா துமிந்தன், கும்பன், அங்கதன், அனுமன், மாறு இல்
சயம் தரு குமுதக்கண்ணன், சதவலி, குமுதன், தண் தார்
நயம் தெரி ததிமுகன், கோகசமுகன் முதல நண்ணார்
வியந்து எழும் அறுபத்து ஏழு கோடியாம் வீரரோடும். 8

ஏனையர் பிறரும் சுற்ற, எழுபது வெள்ளத்து உற்ற
வானரரோடும் வெய்யோன் மகன் வந்து வணங்கிச் சூழ,
தேன் இமிர் அலங்கல் பைந் தார் வீடணக் குரிசில், செய்ய
மான வாள் அரக்கரோடு வந்து, அடி வணங்கிச் சூழ்ந்தான். 9

வெற்றி வெஞ் சேனையோடும், வெறிப் பொறிப் புலியின் வெவ் வால்
சுற்றுறத் தொடுத்து வீக்கும் அரையினன், சுழலும் கண்ணன்,
கல் திரள் வயிரத் திண் தோள் கடுந் திறல் மடங்கல் அன்னான்.
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை, குகன், தொழுது சூழ்ந்தான்.

**இராமன், அனைவரையும் இனிது இருக்கப் பணித்தல்**

வள்ளலும் அவர்கள்தம்மேல் வரம்பு இன்றி வளர்ந்த காதல்
உள்ளுறப் பிணித்த செய்கை ஒளி முகக் கமலம் காட்டி,
அள்ளுறத் தழுவினான் போன்று அகம் மகிழ்ந்து, இனிதின் நோக்கி,
‘எள்ளல் இலாத மொய்ம்பீர்! ஈண்டு இனிது இருத்திர்’ என்றான். 11

5. பாண்டில் - கஞ்ச தாளம்; 10. வெறிப் பொறிப் புலி - வெவ்விய புள்ளிகளையுடைய புலி; 11. அள்ளுற - அழுந்த.

நல் நெறி அறிவு சான்றோர், நான்மறைக் கிழவர், மற்றைச்
சொல் நெறி அறிவு நீரார், தோம் அறு புலமைச் செல்வர்,
பல் நெறிதோறும் தோன்றும் பருணிதர், பண்பின் கேளிர்,
மன்னவர்க்கு அரசன் பாங்கர், மரபினுல் சுற்றமன்னே. 12

தேம் படு படப்பை மூதூர்த் திருநகர் அயோத்தி சேர்ந்த
பாம்பு-அணை அமலன்தன்னைப் பழிச்சொடும் வணக்கம் பேணி,
வாம் புனல் பரவை ஞாலத்து அரசரும் மற்றுளோரும்
எம்பல் உற்று இருந்தார்; நொய்தின், இரு மதி இறந்தது அன்றே. 13

நெருங்கிய அமரர் எல்லாம் நெடுங் கடற் கிடை நின்று ஏத்த,
பொருக்கென அயோத்தி எய்தி, மற்று அவர் பொருமல் தீர,
வருக்கமோடு அரக்கர் யாரும் மடிதர, வரி வில் கொண்ட
திருக் கிளர் மார்பினன் பின் செய்தது செப்பலுற்றும்: 14

இராமன், மறையவர் முதலியோர்க்குத் தானம் வழங்குதல்

மறையவர்தங்கட்கு எல்லாம் மணியோடு முத்தும் பொன்னும்,
நிறை வளம் பெருகு பூவும், சுரபியும், நிறைத்து, மேல் மேல்,
'குறை இது; என்று இரந்தோர்க்கு எல்லாம் குறைவு அறக் கொடுத்து,
அறை கழல் அரசர்தம்மை 'வருக' என அருள, வந்தார். [பின்னர்,

இராமன், யாவருக்கும் விடை கொடுத்தல்

அய்யனும் அவர்கள்தம்மை அகம் மகிழ்ந்து, அருளின் நோக்கி,
வய்யகம், சிவிகை, தொங்கல், மா மணி மகுடம், பொன் பூண்,
கொய் உளைப் புரவி, திண் தேர், குஞ்சரம், ஆடை இன்ன
மெய் உறக் கொடுத்த பின்னர், கொடுத்தனன் விடையும் மன்னே. 16

சம்பரன்தன்னை வென்ற தயரதன் ஈந்த காலத்து
உம்பர்தம் பெருமான் ஈந்த ஒளி மணிக் கடகத்தோடும்,
கொம்புடை மலையும், தேரும், குரகதக் குழுவும், தூசும்,—
அம்பரம்தன்னை நீத்தான்—அலரி காதலனுக்கு ஈந்தான். 17

அங்கதம் இலாத கொற்றத்து அண்ணலும், அகிலம் எல்லாம்
அங்கதன் என்னும் நாமம் அழகுறத் திருத்துமாபோல்,
அங்கதம் கன்னல் தோளாற்கு அயன் கொடுத்ததனை ஈந்தான்;
அங்கு அதன் பெருமை மண்மேல் ஆர் அறிந்து அறையகிற்பார்?

12. பருணிதர் - பக்குவம் பெற்றவர்; 13. பழிச்சு - துதி; இரு மதி - இரண்டு மாதக் காலம்; 16. வய்யகம் - வையகம், பூமி; குஞ்சரம் - யானை; 17. உம்பர்தம் பெருமான் - தேவேந்திரன்; அம்பரம் - பரமபதம்; 18. அங்கதம் இலாத - குற்றமில்லாத; அங்கதன் என்னும் நாமம் - அங்கதன் என்னும் பெயர்; அங்கதம் ஈந்தான் - அங்கதம் என்னும் தோள்வளையைக் கொடுத்தான்.

பின்னரும், அவனுக்கு ஐயன் பெரு விலை ஆரத்தோடும்
மன்னும் நுண் தூசும், மாவும், மதமலைக்கு அரசும்; ஈயா,
'உன்னை நீ அன்றி, இந்த உலகினில் ஒப்பு இலாதாய்!
மன்னுக, கதிரோன் மைந்தன்தன்னொடும் மருவி' என்றான்.

மாருதிதன்னை ஐயன் மகிழ்ந்து, இனிது அருளின் நோக்கி,
'ஆர் உதவிடுதற்கு ஒத்தார், நீ அலால்? அன்று செய்த
பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது இல்லை; பைம் பூண்
போர் உதவிய திண் தோளாய்! பொருந்துறப் புல்லுக!' என்றான். 20

என்றலும், வணங்கி நாணி, வாய் புதைத்து, இலங்கு தானை
முன்தலை ஒதுக்கி நின்ற மொய்ம்பனை முழுதும் நோக்கி,
பொன் திணி வயிரப் பைம் பூண் ஆரமும், புனை மென் தூசும்,
வன் திறல் கயமும், மாவும், வழங்கினன், வயங்கு சீரான். 21

பூ மலர்த் தவிசை நீத்து, பொன் மதில் மிதிலை பூத்த
தேமொழித் திருவை ஐயன் திருவருள் முகத்து நோக்க,
பா மறைக் கிழத்தி ஈந்த பரு முத்த மாலை கைக் கொண்டு
ஏமுறக் கொடுத்தாள், அந்நாள், இடர் அறிந்து உதவினாற்கே.

சந்திரற்கு உவமை சான்ற, தாரகைக் குழுவை வென்ற,
இந்திரற்கு ஏய்ந்ததாகும் என்னும் முத்தாரத்தோடு
கந்து அடு களிறு, வாசி, தூசு, அணிகலன்கள், மற்றும்
உந்தினன், எண்கின் வேந்தற்கு—உலகம் முந்து உதவினானே.

நவ மணிக் காழும், முத்தும், மாலையும், நலம் கொள் தூசும்,
உவமை மற்று இலாத பொன் பூண் உலப்பு இல பிறவும், ஒண் தார்க்
கவன வெம் பரியும், வேகக் கதமலைக்கு அரசும், காதல்
பவனனுக்கு இனிய நண்பன் பயந்தெடுத்தவனுக்கு ஈந்தான்.

பத வலிச் சதங்கைப் பைந் தார்ப் பாய் பரி, பணைத் திண் கோட்டு
மதவலிச் சைலம், பொன் பூண், மா மணிக்கோவை, மற்றும்
உதவலின் தகைவ அன்றி, இல்லன உள்ள எல்லாம்
சதவலிதனக்குத் தந்தான்—சதுமுகத்தவனைத் தந்தான். 25

21. கயம் - யானை; 22. பா மறைக் கிழத்தி - வேதத்திற் கூறப்படுபவளான கலைமகள்; 24. பவனனுக்கு இனிய நண்பன் - காற்றுக் கடவுளின் இனிய நண்பனாகிய நெருப்புக் கடவுள்; பயந்தவன் - பெற்றெடுக்கப்பட்டவன், ஈண்டு நீலன்; 25. பத வலிச் சதங்கை - வலிய காலில் அணிந்த சதங்கை, பதவலி என்றே கொண்டு பாதத்தில் உள்ள வல்லி (கொடி) போலும் சதங்கை என்பாரும் உண்டு.

‘பேச அரிது ஒருவர்க்கேயும் பெரு விலை; இதனுக்கு ஈதுக்
கோ, சரி இலது’ என்று எண்ணும் ஒளி மணிப் பூணும், தூசும்,
மூசு அரிக்கு உவமை மும்மை மும் மதக் களிறும் மாவும்,
கேசரிதனக்குத் தந்தான்—கிளர் மணி முழவுத் தோளான்.

வளன் அணி கலனும் தூசும், மா மதக் களிறும் மாவும்,
நளனொடு குமுதன், தாரன், நவை அறு பனசன், மற்றோர்
உளம் மகிழ்வு எய்தும் வண்ணம் உலப்பில பிறவும் ஈந்தான்—
களன் அமர் கமல வேலிக் கோசலக் காவலோனே. 27

அவ் வகை அறு பத்து ஏழு கோடியாம் அரியின் வேந்தர்க்கு
எவ் வகைத் திறனும் நல்கி, இனியன பிறவும் கூறி,
பவ்வம் ஒத்து உலகில் பல்கும் எழுபது வெள்ளம் பார்மேல்
கவ்வை அற்று இனிது வாழக் கொடுத்தனன், கடைக் கண் நோக்கம்.

மின்னை ஏர் மௌலிச் செங் கண் வீடணப் புலவர் கோமான்-
தன்னையே இனிது நோக்கி, ‘சராசரம் சுமந்த சால்பின்
நின்னையே ஒப்பார் நின்னை அலது இலர், உளரேல்; ஐய!
பொன்னையே இரும்பு நேரும் ஆயினும் பொரு அன்று’ என்றான்.

என்று உரைத்து, அமரர் ஈந்த எரி மணிக் கடகத்தோடு
வன் திறல் களிறும், தேரும், வாசியும், மணிப் பொன் பூணும்,
பொன் திணி தூசும், வாசக் கலவையும், புது மென் சாந்தும்,
நன்று உற, அவனுக்கு ஈந்தான்—நாகணைத் துயிலைத் தீர்ந்தான்.

சிருங்கபேரம் அது என்று ஓதும் செழு நகருக்கு இறையை நோக்கி,
‘மருங்கு இனி உரைப்பது என்னோ, மறு அறு துணைவற்கு?’ என்னா,
கருங் கைம் மாக் களிறும், மாவும், கனகமும், தூசும், பூணும்,
ஒருங்குற உதவி, பின்னர் உதவினன் விடையும் மன்னோ. 31

அனுமனை, வாலி சேயை, சாம்பனை, அருக்கன் தந்த
கனை கழல் காலினானை, கருணை அம் கடலும் நோக்கி,
‘நினைவதற்கு அரிது நும்மைப் பிரிக என்றல்; நீவிர் வைப்பும்
எனது; அது காவற்கு இன்று என் ஏவலின் ஏகும்’ என்றான்.

இலங்கை வேந்தனுக்கும் இவ்வாறு இனியன யாவும் கூறி,
அலங்கல் வேல் மதுகை அண்ணல் விடைகொடுத்தருளலோடும்,
நலம் கொள் பேர் உணர்வின் மிக்கோர், நலன் உறும் நெஞ்சர்,
கலங்கலர், ‘ஏய செய்தல் கடன்’ எனக் கருதிச் சூழ்ந்தார். [பின்னர்க்

32. நீவிர் வைப்பு - நீவிர் வாழும் இடங்கள்.

பரதனை, இளைய கோவை, சத்துருக்கனனை, பண்பு ஆர்
விரத மா தவனை, தாயர் மூவரை, மிதிலைப் பொன்னை,
வரதனை, வலம்கொண்டு எத்தி, வணங்கினர் விடையும் கொண்டே,
சரத மா நெறியும் வல்லோர் தத்தம பதியைச் சார்ந்தார். 34

குகனைத் தன் பதியின் உய்த்து, குன்றினை வலம் செய் தேரோன்
மகனைத் தன் புரத்தில் விட்டு, வாள் எயிற்று அரக்கர் சூழ,
ககனத்தின்மிசையே ஏகி, கனை கடல் இலங்கை புக்கான்,—
அகன் உற்ற காதல் அண்ணல், அலங்கல் வீடணன், சென்று, அன்றே.

**இராமன் பூவுலகைக் காத்துவருதல்**

அய்யனும் அவரை நீக்கி, அருள் செறி துணைவரோடும்
வய்யகம் முழுதும் செங்கோல் மனு நெறி முறையில் செல்ல,
செய்ய மா மகளும் மற்றச் செகதல மகளும் சற்றும்
நய்யுமாறு இன்றிக் காத்தான், நானிலப் பொறைகள் தீர்த்தே.

உம்பரோடு இம்பர்காறும், உலகம் ஓர் ஏழும் ஏழும்,
'எம் பெருமான்!' என்று ஏத்தி, இறைஞ்சி நின்று, ஏவல் செய்ய,
தம்பியரோடும், தானும், தருமமும், தரணி காத்தான்—
அம்பரத்து அனந்தர் நீங்கி, அயோத்தியில் வந்த வள்ளல். 37

34. சரதமா நெறி - உண்மையான நெறி (நன்னெறி); 35. குன்று - மேருமலை; 37. வள்ளல் - வள்ளலாகிய இராமன்.

# மிகைப் பாடல்கள்

1 கடல் காண் படலம்

மூன்றரைக் கோடியின் உகத்து ஓர் மூர்த்தியாய்த்
தான் திகழ் தசமுகத்து அவுணன், சாலவும்
ஆன்ற தன் கருத்திடை, அயனோடே மயன்
தோன்றுற நினைதலும், அவரும் துன்னினர். 11-1

வந்திடும் அவர் முகம் நோக்கி, மன்னவன்,
'செந் தழல் படு நகர் அனைத்தும் சீர் பெறத்
தந்திடும், கணத்திடை' என்று சாற்றலும்,
புந்தி கொண்டு அவர்களும் புனைதல் மேயினர். 11-2

2 இராவணன் மந்திரப் படலம்

மின் அவிர் குழைகளும் கலனும் வில் இட,
சென்னியின் மணி முடி இருளைச் சீறிட,
அன்னபேர் அவையின் ஆண்டு இருந்த ஆண்டகை
முன்னியது உணர்த்துவான், முறையின் நோக்கினன். 6-1

மோதரன் முதலிய அமைச்சர் தம் கணக்கு
ஓதும் நூருயிர கோடியோரொடும்,
காது வெஞ் சேனையின் காவலோர் கணக்கு
ஓதிய வெள்ள நூறவர்கள்தம்மொடும், 10-1

கும்பகம் மேவியோன், குறித்த வீடணத்
தம்பியர்தம்மொடும், தருக்கும் வாசவன்
வெம் புயம் பிணித்த போர் வீரன் ஆதியாம்,
உம்பரும் போற்றுதற்கு உரிய, மைந்தரும், 10-2

மாலியவான் முதல் வரம்பு இல் முந்தையோர்
மேலவர்தம்மொடும், விளங்கு சுற்றமாம்
சால்வுறு கிளையொடும், தழுவி, மந்திரத்து
ஏலுறும் இராவணன் இசைத்தல் மேயினன்: 10-3

பின்னும் ஒன்று உரைத்தனன்: ' பிணங்கு மானிடர்
அன்னவர் அல்லர்; மற்று அரக்கர் என்பதற்கு
இந் நிலை பிடித்தனை; இறைவ! நீ' எனா,
முன் இருபக்கன் ஈது உரைத்து முற்றினன். 21-1

'எரி விழி நுதலினன், இசையும் நின் தவத்து
அருமை கண்டு, அளித்தனன் அழிவு இலாதது ஓர்
பெரு வரம் என்றிடின், பேதை மானிடர்
இருவரும் குரங்கும் என் செய்யல் ஆவதே?' 26-1

'கறை மிடற்று இறை அன்று; கமலத் தேவு அன்று;
நிறை கடல் துயில் பரன் அன்று; நின்று வாழ்
சிறு தொழில் குரங்கொடு சிறிய மானிடர்
உறு திறத்து உணர்ச்சியின் உறுதி யாவதோ?' 40-1

'ஓது பல் அருந் தவம் உஞற்றல் இலதேனும்,
கோதுறு குலச் சிறுமை கொண்டுடையதேனும்,
வாதுறு பகைத் திறம் மலிந்துடையதேனும்,
நீதியதில் நின்றிடின் நிலைக்கு அழிவும் உண்டோ? 52-1

'உந்து தமரோடு உலகினூடு பல காலம்
நந்துதல் இலாது இறைவன் ஆயிட நயந்தோ,
சிந்தையில் விரும்புதல்செய் மங்கையர் திறத்தோ,
புந்திகொடு நீ தவம் முயன்ற பொறை மேனாள்? 52-2

'ஆசைகொடு வெய்தில் இரு மானிடரை அஞ்சி,
காசு இல் ஒரு மங்கையவளைத் தனி கவர்ந்தும்,
கூசியதனால் விளையவும் பெறுதல் கூடாய்,
வீசு புகழ் வாழ்வு வெறிதே அழிவது ஆமோ? 52-3

'நிரம்பிடுகில் ஒன்றுஅதை நெடும் பகல் கழித்தும்,
விரும்பி முயல்வுற்று இடைவிடாது பெறல் மேன்மை;
வரும்படி வருந்தினும் வாரத பொருள் ஒன்றை
நிரம்பும் எனவே நினைதல் நீசர் கடன், ஐயா! 52-4

'ஆசு இல் பல அண்டம் உனதே அரசுஅது ஆக
ஈசன் முன் அளித்தது, உன் இருந் தவ வியப்பால்;
நீசர் தொழில் செய்து அதனை நீங்கியிடலாமோ?—
வாச மலரோன் மரபில் வந்த குல மன்னா! 52-5

' ''ஆலம் அயில்கின்றவன் அருஞ் சிலை முறித்து,
வாலியை வதைத்து, எழு மராமரமும் உட்க,
கோல வரி வில் பகழி கொண்டுடையன்'' என்றார்;
சீலம் உறு மானிடன் எனத் தெளியலாமோ? 52-6

'ஆதிபரனும் அவன் அடித் துணை வணங்கி,
சீதையை விடுத்து, ''எளியர் செய் பிழை பொறுக்க'' என்று
ஓதல் கடனும்' என ஒருப்பட உரைத்தான்;
மூதுரை கொள்வோனும், 'அதுவே முறைமை' என்றான். 52-7

என்று அவன் உரைத்திட, இராவணனும், நெஞ்சம்
கன்றி, நயனத்திடை பிறந்தன கடைத் தீ;
'இன்று முடிவுற்றது உலகு' என்று எவரும் அஞ்ச,
குன்று உறழ் புயக் குவை குலுங்கிட நகைத்தான். 52-8

நகைத்து, இளவலைக் கடிது நோக்கி, நவில்கின்றான்;
'பகைத்துடைய மானுடர் வலிச் செயல் பகர்ந்தாய்;
திகைத்தனை கொலாம்; எனது சேவகம் அறிந்தும்,
வகைத்திறம் உரைத்திலை; மதித்திலை; என்?—எம்பி! 52-9

'புரங்கள் ஒரு மூன்றையும் முருக்கு புனிதன்தன்
வரங்களும் அழிந்திடுவதோ? மதியிலாதாய்!
தரம்கொடு இமையோர் எனது தாள் பரவ, யான் என்
சிரம்கொடு வணங்குவதும், மானுடன் திறத்தோ? 52-10

'பகுத்த புவனத் தொகை எனப் பகர் பரப்பும்,
மிகுத்த திறல் வானவரும், வேத முதல் யாவும்,
வகுத்து, அரிய முத்தொழில் செய் மூவரும் மடிந்தே
உகுத்த பொழுதத்தினும், எனக்கு அழிவும் உண்டோ? 52-11

'நிறம்தனில் மறம் தொலைய, நீ துயில் விரும்பி,
துறந்தனை, அருஞ் சமரம், ஆதல், இவை சொன்னாய்;
இறந்துபட வந்திடினும், இப் பிறவிதன்னில்
மறந்தும் உளதோ, சனகன் மங்கையை விடுத்தல்?' 52-12

எனக் கதம் எழுந்து அவன் உரைக்க, இளையோனும்,
நினைத்தனன், மனத்திடை நிறுத்து உறுதி சொல்ல;
'சினத்தொடும் மறுத்து இகழ்வு செய்தனன்; இது ஊழின்
வினைத் திறம்; எவர்க்கும் அது வெல்வது அரிது அன்றே!' 52-13

கறுத்து அவன் உரைத்திடு கருத்தின் நிலைகண்டே,
'பொறுத்தருள் புகன்ற பிழை' என்று அடி வணங்கி,
உறுத்துதல் செய் கும்பகருணத் திறலினானும்,
'மறுத்தும் ஒரு வாய்மை இது கேள்' என உரைத்தான்: 52-14

'ஏது இல் கருமச் செயல் துணிந்திடுதல் எண்ணி,
தீதொடு துணிந்து, பினும் எண்ணுதல் சிறப்போ?
யாதும் இனி எண்ணியதில் என்ன பயன்? ஐயா!
போதியது நம் அரசு, பொன்ற வரு காலம். 52-15

என, அவன் அடித் துணை இறைஞ்சி, வாய் புதைத்து,
இனிய சித்திரம் என ஏங்கி நின்று, தான்
நனை மலர்க் கண்கள் நீர் சொரிய, நல் நெறி
வினை பயில் வீடணன் விளம்பல் மேயினான்: 74-1

'சானகி, உலகு உயிர் எவைக்கும் தாய் எனல்
ஆனவள், கற்பினால் எரிந்தது அல்லது,
கோ நகர் முழுவதும் நினது கொற்றமும்,
வானரம் சுட்டது என்று உணர்தல் மாட்சியோ?'' 74-2

'ஈசன்தன்வயின் வரம் கொளும்முன்னம், யான் அவனை
வீசும் வான் சுடர் வரையொடும் விசும்பு உற எடுத்தேன்;
ஆசு இல் அங்கது கண்டு அவன் அரும் பதத்து ஊன்றக்
கூசி, என் வலி குறைந்திலென், பாதலத்து அமர்ந்தேன்; 116-1

'அமர்ந்து, நீங்குதற்கு அருமை கண்டு, ''அவன் பதம் அகத்தே
சுமந்து, நீ தவம் புரிக!'' எனச் சுக்கிரன் உரைப்ப,
தமம் திரண்டு உறும் புலப் பகை சிமிழ்த்திடத் தருக்கி
நிமிர்ந்து நின்றனென், நெடும் பகல் அருந் தவ நிலையின். 116-2

'நின்று பல் பகல் கழிந்திட, நிமலன் நெஞ்சு உருகி,
''நன்று, நன்று!'' என நயந்து, எனை வரும்படி அழைத்து,
''ஒன்றினாலும் நீ அழிவு இலாது உகம் பல கழியச்
சென்று வாழுதி '' எனத் தந்த வரம் சிதைந்திடுமோ? 116-3

'கார்த்தவீரியன், வாலி என்று அவர் வலி கடக்கும்
மூர்த்தம் என்னிடத்து இல் எனக் கோடலை; முதல் நாள்
சீர்த்த நண்பினர் ஆயபின், சிவன் படை உவர்மேல்
கோத்து, வெஞ் சமம் புரிந்திலென், எனது உளம் கூசி. 116-4

'இந்த மெய்ம்மை நிற்கு உரைப்பது என்? இவ் வரம் எனக்குத்
தந்த தேவனுக்குஆயினும் என் வலி தவிர்த்துச்
சிந்த ஒண்ணுமோ? மானிடர்திறத்து எனக்கு அழிவு
வந்தது என்று உரைத்தாய்; இது வாய்மையோ?—மறவோய்!
116-5

'ஆயது ஆக, மற்று அந்த மானுடவரோடு அணுகும்
தீய வான் குரங்கு அனைத்தையுஞ் செறுத்து, அற நூறி,
தூய வானவர் யாரையும் சிறையிடைத் தொடுத்துக்
காய்வென்' என்று தன் கண் சிவந்து இனையன கழறும். 116-6

3 இரணியன் வதைப் படலம்

'ஓதும் ஆயிர கோடியின் உகத்து ஒரு முதல் ஆய்,
தாது உலாவிய தொடைப் புயத்து இரணியன் தமரோடு
ஆதி நாள் அவன் வாழ்ந்தனன்; அவன் அருந் தவத்துக்கு
ஏது வேறு இல்லை; யார் அவன்போல் தவம் இழைத்தார்?

[இப் படலத்தின் தொடக்கச் செய்யுளாக, 'வேதம் கண்ணிய' எனத் தொடங்கும் பாடலின் முன்னர், அமைந்துள்ளது.]

'இந்த இந்திரன் இமையவர் அவனுக்கு ஓர் பொருளோ?
உந்தும் அண்டங்கள் அனைத்தினும் உள்ள இந்திரரும்,
அந்த நான்முகர் உருத்திரர் அமரர் மற்று எவரும்,
வந்து, இவன் பதம் முறை முறை வணங்கிட வாழ்ந்தான். 2-1

'திருமகட்கு இறை உலகினும், சேண்படு புரம் மூன்று
எரிபடுத்திய ஈசன்தன் பொருப்பினும், ஏகி,
சுரர் எனப்படும் தூயவர் யாவரும் தொழுது, ஆங்கு
''இரணியாய நம!'' என்று கொண்டு ஏத்தல் கேட்டிருக்கும் 5-1

' ''ஓம் அரியாய நம!'' என ஒழிவுறுது ஓதும்
நாம நான் மறை விடுத்து அவன்தனக்கு உள்ள நாமம்,
காமமே முதல் குறும்பு எறி கடவுளர் முனிவர்-
ஆம் அது ஓதுகில், அவன்தனக்கு ஒப்பவர் யாரோ? 9-1

'ஆலும் வெவ் வலி அவுணர் கோன் அருந் தவப் பெருமை
ஏலுமோ, எமக்கு இயம்பிட? இறைவ! மற்று அவன் பேர்
மூல மா மறை இது என, மூஉலகு உள்ளோர்
தாலமே மொழிந்திட்டது சான்று எனத் தகுமால். 10-1

'குனிப்பு இலாத பல் ஆயிர கோடி அண்டத்தின்
நுனிக்கும் வானவர் முதலிய உயிர்த் தொகை நோக்கில்,
அனைத்தும் அன்னவன் ஏவலைத் தலைக்கொண்டு, அங்கு அவன் பேர்
நினைத்து வாழ்த்திட, மூவர்போல் ஒரு தனி நின்றான். 18-1

'அன்னவன், புகழ், சீலம், நல் அறம், தனி மெய்ம்மை,
உன்னும் நான்மறையோடு அருள் நீதியும் பொறையும்,
இன்ன யாவும் மற்று உருவு கொண்டுளது என உவந்தே,
மன்னுயிர்த் தொகை மகிழ்ந்திட, ஒரு தனி வாழ்ந்தான். 19-1

'நடுங்கி அந்தணன், நாப் புலர்ந்து அரும் புலன் ஐந்தும்
ஒடுங்கி, உள்ளுயிர் சோர்ந்து, உடல் பதைத்து, உளம் வெருவி,
''அடங்கும், இன்று நம் வாழ்வு'' என அயர்ந்து ஒருபடியாய்ப்
பிடுங்கும் மெல் உரை, புதல்வனுக்கு இனையன பேசும். 23-1

'என்று, அவ் வேதியன் இவை இவை இயம்பலும், இது கேட்டு,
ஒன்று மெய்ப்பொருள் உணர்ந்துள சிறுவனும், ''உரவோய்!
நன்று நீ எனக்கு உரைத்தது?'' என்று, இன் நகை புரிந்து, ஆங்கு,
''இன்று கேள் இதின் உறுதி'' என்று எடுத்து இவை உரைப்பான்: 24-1

'என்னும் வாசகம் கேட்டலும், எழுந்து நின்று, இறைவன்
பொன்னின் வார் கழல் பணிந்து, வாய் புதைத்து, அரும் புதல்வன்,
''மன்னர் மன்ன! யான் பழுது ஒன்றும் உரைத்திலென்; மரபால்
உன்னும் உண்மையை உரைத்தனென்; கேள்'' என உரைப்பான். 39-1

'அழிவு இல் வச்சிர யாக்கை என் அருந் தவத்து அடைந்தேன்;
ஒழிவு இல் ஆயிர கோடி கொள் உகம் பல கழியத்
தெளிவு பெற்று, இறை பூண்டுளேன்; யான் அலால் தெய்வம்,
மொழி இல் மூடரும், வேறு உளது ஆம் என்று மொழியார்.
55-1

'உயிர்க்கு உயிர் ஆகி நின்று உதவும் பான்மை, பார்
அயிர்க்குறும் நேயர் தம் செயலில் காண்டல்போல்.
பயிர்ப்பு உறும் அதனிலே பாசம் நீக்கி, வேறு
அயிர்ப்பு அறும் அறிவினில் அறிவர், சீரியோர். 67-1

'நான்முகத்து ஒருவனும், நாரி பாகனும்,
தான் அகத்து உணர்வதற்கு அரிய தத்துவத்-
தோன் இகத்தொடு பரம் இரண்டும் எங்குமாய்,
ஊனகத்து உயிரகத்து உலவும் மூர்த்தியான். 67-2

'வையமேல் இனி வரும் பகை உள எனின்,
வருவது ஒன்று என்றாலும்,
''உய்ய உள்ளுளே ஒருவனை உணர்ந்தனென்''
என்று என் முன் உரைசெய்தாய்;
செய்ய வேண்டுவது என் இனி? நின் உயிர்
செகுக்குவென்; சிறப்பு இல்லாப்
பொய்யிலாளனைப் பொருந்திய பெரும் பகை
போய பின், புகழ் ஐயா! 79-1

' ''இவனை ஏழ் நிலை மாளிகை, உம்பர்மேல் ஏற்றிப்
புவனம்தன்னிலே நூக்கும்'' என்று அவுணர் கோன் புகல,
புவனம் உண்டவன் கழல் இணைப் புண்ணியன்தன்னைப்
பவனன்தன்னிலும் வெய்யவர் பற்றியே எடுத்தார். 98-1

'உற்று எழுந்தனர், மாளிகை உம்பர்மேல் கொண்டு,
கற்று அறிந்தவர்க்கு அரசனைக் கடுந் திறல் அவுணர்
பற்றி நூக்கலும், பார் மகள் பரிவுடன், நார் ஆர்
நல் தவற்கு ஒரு தீங்கு இலை என அவன் நயந்தாள். 98-2

'ஓதத்தில் மிதந்து ஓடிய கலமேல்
தீது அற்றே தெளிவோடு திகழ்ந்தாள்;
வேதத்து உச்சியின் மெய்ப் பொருள் நாமம்
ஓதிப் பின்னும் உரைப்பதை உற்றான்: 103-1

'கயம் மேவும் இடங்கர் கழற் கதுவ,
பயம் மேவி அழைத்தது பன்முறை உன்
நயம் மேவிய நாமம்; மதக் கரி அன்று
உயுமாறு உதவுற்றிட, வந்திலையோ? 112-1

'வேதன் சிரம் ஒன்றை வெறுத்தமையால்,
காதும் பிரமக் கொலை காய, உலைந்து,
ஓது உன் திரு நாமம் உரைத்த சிவன்
ஏதம் கெட வந்து, இரவு ஓட்டிலையோ? 112-2

'அது கண்டு, அடல் வஞ்சகர், அப் பொழுதில்,
கதம் மிஞ்சிய மன்னன் முனே கடுகி,
''புதல்வன் இறவாது பொருப்பு முநீர்
மிதவைப்பட மேவினன்'' என்றனரால். 113-1

'மிடல் கொண்டு அவர் வீசு கரம் பொடிபட்டு
உடல் சிந்திட, உட்கினர்; ''மற்று அவனுக்கு
ஒடிவு ஒன்று இலது '' என்று அவர் ஓதும் முனம்,
விடம் அஞ்ச எழுந்தனன், வெய்யவனே. 116-1

'நாணி நின் எதிரே ஆண்டு நடுவதாயினது ஓர் செம் பொன்
தூணில் நின்றனனே அன்றி, தோன்றியது இலது' என்று ஒன்ற,
வேணுதண்டு உடையோன் வெய்ய வெள்ளியே விளம்ப, வெள்ளி
காண வந்து அனைய சீயம் கணத்திடைக் கதிர்த்தது அம்மா!
128-1

'ஈது அவன் மகிழ்தலோடும், இரணியன் எரியின் பொங்கி,
''சாதலை இல்லா என் முன் தருக்குறு மாயம் எல்லாம்
போதும்; ஓர் கணத்தில் இன்னே போக்குவேன் போக்குவேன்'' என்று
ஓதினன், அண்ட கோளம் உடைந்திட உருத்துச் சொல்வான்.
128-2

அப் புறத்து அளவுஇல் கோடி அண்டங்கள் அனைத்து உள்ளாக,
வெப்புறும் அனந்த கோடி வெள்ளம் என்று உரைப்பர், மேலாம்
துப்புடைக் கனகன் சேனைத் தொகை; அவை அனைத்தும் செந் தீ
ஒப்புற நகைத்து, நீறாய் எரித்தது, ஓர் கடவுள் சீயம். 142-1

'இத் திறம் அமரின் ஏற்று, ஆங்கு இருவரும் பொலிந்தகாலை,
பொய்த்திறற் கனகன் வேண்டும் போர் பல இயற்றி, பின்னும்,
எத்தனை கோடி கோடி மாயங்கள் இயற்ற, நோக்கி,
முத்தனும் முறுவல்கொண்டு,ஆங்கு அவை எலாம் முடித்து நின்றான்.
149-1

நெருப்பு எனக் கனகன் சீறி, நிலம் முதல் புவனம் அஞ்ச,
பொருப்பு இனம் எவையும் சிந்திப் பொடிபடக் குதித்து, போர் வாள்
தரிப்புறச் சுழற்றித் தாக்க வருதலும், தரும மூர்த்தி
பருப்பதம் கடந்த தோளான் பதம் இரண்டு ஒரு கை பற்றி,
149-2

'அழிவு இலான் வயிர மார்பத்து, அமலன் மானுடம் ஆம் சீய
எழில் உலாம் உருவு கொண்டு, ஆங்கு இரு கையின் உகிர் வாள் ஓச்சி,
கழியவே பிளத்தலோடும், கனக மா மேரு விண்டு
கிழியவே, குருதி ஓதம் கிளர்ந்தபோல் கிளர்ந்தது அம்மா!
153-1

'இரணியன் வயிர மார்பும் இரு பிளவாகக் கீறிக்
கரை அறும் அவுண வெள்ளப் படை எலாம் கடிதின் மாய்த்து,
தரை முதல் ஆன அண்டப் பரப்பு எலாம் தானே ஆகி,
கருணை கொள் அமலன் பல்வேறு உயிர் எலாம் காத்து நின்றான்.
153-2

'மங்கை ஒரு பாகன் முதல் அமரர், மா மலர்மேல்
நங்கைதனை ஏவுதலும், நாராயணக் கடவுள்
சிங்கல் இலா மானுடம் ஆம் சீய உருவம் போக்கி,
பொங்கு பரஞ் சுடராய் எங்கும் பொலிய நின்றான். 164-1

'ஈது ஆங்கு அமலன் இயம்ப, எழிற் புதல்வன்
நாதாங்கு அரு மறையும் நாடற்கு அரிய செழும்
பாதாம்புய மலரில் பல் முறையும் தான் பணிந்து,
'வேதாந்த மெய்ப்பொருளே!' என்று விளம்பலுற்றான். 168-1

' ''சீலம் உறுவோய்!' உனக்குச் செப்பும் திருநாமம்
மேலோர் புகழ் பிரகலாதன்'' என, விரும்பி
நால் வேத வாய்மை நனி மா தவத்தோரும்,
மேலாம் அமரர்களும், யாரும், விளம்ப' என்றான். 173-1

4　　வீடணன் அடைக்கலப் படலம்

சிரத்தொகை அனைத்தையும் துளக்கி, தீ எழக்
கரத்தொடு கரம் பல புடைத்து, '' காளை! நீ
உரைத்திடும் உறுதிகள் நன்று, நன்று!' எனச்
சிரித்தனன், கதம் எழுந்து இனைய செப்புவான்: 1-1

'அன்று வானரம் வந்து, நம் சோலையை அழிப்ப,
''கொன்று தின்றிடுமின்'' என, ''தூதரைக் கோறல்
வென்றி அன்று'' என விலக்கினை; மேல் விளைவு எண்ணித்
துன்று தாரவன்-துணை எனக் கோடலே துணிந்தாய். 6-1

'நேர் வரும் உறுதியின் நிலை உரைத்தனென்;
சீரிது என்று உணர்கிலை; சீறிப் பொங்கினுய்;
ஓர்தரும் அறிவு இலார்க்கு உரைக்கும் புந்தியார்,
தேர்வுறின், அவர்களின் சிறந்த பேதையோர்.' 11-1

'மற்று ஒரு பொருள் உளது என்? நின் மாறு இலாக்
கொற்றவ! சரண்' எனக் கூயது ஓர் உரை
உற்றது, செவித்தலத்து; ஐயன் ஒல்லென
நல் துணைவரை முகம் நயந்து நோக்குறு, 33-1

'எந்தையே இராகவ! சரணம்' என்ற சொல்
தந்தவர் எனைவரோ? சாற்றுமின்!' என,
மந்தணம் உற்றுழீஇ, வய வெஞ் சேனையின்
முந்தினர்க்கு உற்றதை மொழிகுவாம்அரோ: 33-2

'மேலைநாள், அமுதமும் விடமும் வெண்கடல்
மூலமாய் உதித்தன; முறையின் முற்றுதல்
சாலுமோ, ஒன்று எனக் கருதல் தக்கதோ—
ஞால நாயக!—தெரிந்து எண்ணி நாடிலே? 86-1

'ஒருவயிறு உதித்தனர், அதிதி, ஒண் திதி,
இருவர்; மற்று அவரிடத்து எண்ணில், எம்பிரான்!
சுரரொடு சுடு சினத்து அவுணர் தோன்றினர்;
கருதின் மற்று ஒன்று எனக் கழறலாகுமோ? 86-2

'எப்பொருள்? ஏவரே? உலகில் ஓர் முறை
ஒப்பினும், குணத்து இயல் உணரின், பேதமாம்
அப் பொருள் நலன் இழிவு இரண்டும் ஆய்ந்து, அகம்
மெய்ப் பொருள் கோடலே விழுமிது' என்பரால். 86-3

'ஆவலின் அடைக்கலம் புகுந்துளான் கருத்து
ஓவலின் இவர்தமக்கு உணர ஒண்ணுமோ?
தேவர்கள் தேவன் நீ; தெளியின், அன்னவர்க்
கூவி, இங்கு அறிவது கொள்கை ஆகுமால். 91-1

மோதி வந்து அடரும் சீய முனிவினுக்கு உடைந்து,வேடன்
மீது ஒரு மரத்தில் சேர, வேண்டு உரை அரிக்குச் சொல்லி;
பேதம் அற்று இருந்தும், அன்னான் பிரிந்த வஞ்சத்தை ஓர்ந்தும்,
காதலின் கனி காய் நல்கிக் காத்ததும் கவியது அன்றோ? 116-1

என்ன முன் பருதிமைந்தன் எழுந்து அடி வணங்கி, 'எந்தாய்
சொன்னதே துணிவது அல்லால், மறுத்து ஒரு துணிவும் உண்டோ?
உன் உளத்து உணராது ஏது? உனக்கு அரிது யாதோ?' என்னப்
பன்னி, மற்று அவரை எல்லாம் பார்த்திருந்து உரைக்கலுற்றான். 117-1

வானவர் இதனைக் கூற, வலங்கொடு தானை வைப்பை,
தானை அம் தலைவரோடும் சார்ந்த வீடணனும், 'தாழாது
ஊனுடைப் பிறவி தீர்ந்தேன்' என மனத்து உவந்து, ஆங்கு அண்ணல்
தேன் உகு கமல பாதம் சென்னியால் தொழுது நின்றான். 151-1

## 5 இலங்கை கேள்விப் படலம்

திரு மறு மார்பனை இறைஞ்ச, செல்வனும்,
அருள் சுரந்து, அரக்கனை அருகு இருத்தியே,
'அரு வரை அனைய தோள் அறிஞ! நீ புகல்
பொருள் உளது எமக்கு; அது புகலக் கேட்டியால். 14-1

மருக் கிளர் தாமரை வாச நாள்மலர்
நெருக்கிடு தடம் என இருந்த நீதியான்,
திருக் கிளர் தாமரை பணிந்த செம்மலை,
'இருக்க, ஈண்டு எழுந்து' என இருந்த காலையில். 14-2

'வலம் பெறு தசமுகன் தவத்தின் மாட்சி கண்டு,
இலங்குறு மலர் அயன் எண் இல் யோசனைத்
தலம் கொடு சமைத்து, நல் நகரும் தந்து, இதற்கு
''இலங்கை'' என்று ஒரு பெயர் ஈந்த மேலைநாள். 18-1

'ஆய இந் நகரிடை, அரக்கர் ஆகிய
தீயவர் தொகையினைத் தெரிக்கின், எண்இல் நாள்
போயிடத் துணிந்து, அவை புந்தி ஓரினும்
ஒயுமோ? அறிந்தவை உரைப்பென், ஆழியாய்! 19-1

'பேயர்கள் என்ன யான் பிதற்ற, பேர்கிலா
மா இரும் புற மதில் வகுத்த மாப் படை
ஏயின நாள் எலாம் எண்ணும் பித்தர்கள்
ஆயிர வெள்ளமே அறிந்தது, ஆழியாய்! 28-1

'ஈங்கு இவை அன்றியும், ஏழு தீவினும்,
ஓங்கு பாதலத்தினும், உயர்ந்த வானத்தும்,
தாங்கிய சக்கர வாளச் சார்பினும்,
ஆங்கு அவன் படைதனக்கு அளவை இல்லையால். 30-1

'ஆயவர் அளவிலர், அறத்தை நுங்கிய
தீயவர், தேவரைச் செறுத்து, தேவர் ஊர்
காய் எரி படுத்திய கடுமையார்களில்,
நாயக! அறிந்தமை நவிலக் கேட்டியால். 32-1

'இன்னும் மைந்தர்கள் இயம்பின், மூவாயிர கோடி
என்ன உண்டு; அவர் இரதமும், கரிகளும், பரியும்,
துன்னும் ஆள் வகைத் தொகுதியும், செறிந்திட, மேல்நாள்
பன்னகாதிபன் உலகினைப் பரிபவப் படுத்தோர். 51-1

கோ....ன் குடைப்பரா கடு களிற்றை மீக்கொள்ளா
வாடலிந்திர......ளடைவர வமரிற்
கோடி வெங்கரி கோள் அரி கண்டெனக் குலையா
ஓடினன் தரு முதலியர் பிற விழுந் துருகி. 56-1

'பண்டு அவன் தவத்து உமை ஒரு பாகன் முன் கொடுக்கும்
திண் திறல் பெறும் வானகத் தேர் ஒன்றின் இவர்ந்தே,
அண்ட கோடிகள் எவற்றினும் புகுந்து, அரசுரிமை
கொண்டு மீளுவான் ஒரு கணத்து இலங்கையில், கொடியோன். 58-1

'சுற்று தன் கிளைப் பரப்பொடும் தொலைவு இன்றி வாழ்தற்கு
உற்ற மூன்றரைக் கோடியின் உகம் அவன் தவத்தின்
பெற்றனன், சிவன் கொடுத்திடப் பெரு வரம்; பெரியோய்!
இற்று அவன் செயல்' என்று கொண்டு இனையன உரைப்பான் 58-2

'ஈது நிற்க, மற்று எந்தை! நீ ஏவிய தூதன்
மோது வாரிதி கடந்து, ஒரு கணத்தினில் முடுகி,
ஆதி நாயகிதன்னைக் கண்டு, அணி நகர் அரணும்,
காது வெஞ் சினத்து அரக்கர்தம் வலிமையும், கடந்தான். 59-1

மழுவும் ஈட்டியும் தோட்டியும் முசலமும் மலையும்
தழுவு மாப் படை முடிவு இலாது அதனொடும் தாமும்,
எழுவர் சூட்சியின் தலைவர்கள், கிளர் ஒளி இரவிக்
குழுவின் வாய்ப்படு புழு என, வழுவுறக் குறைந்தார். 63-1

'இலங்கை வெந்தது; வேறு இனி இயம்புவது எவனோ?
அலங்கலோடு செஞ் சாந்தமும், அன்று தான் அணிந்த
கலன்களோடும் அச் சாத்திய துகிலொடும், கதிர் வாள்
இலங்கை வேந்தனும் விசும்பிடை ஏழு நாள் இருந்தான். 65-1

6 வருணனை வழி வேண்டு படலம்

என்று உரைத்து, இன்னும் சொல்வான்: இறைவ! கேள்; எனக்கு
என்றும் மெய்ப் பகைவர் ஆகி, ஏழு பாதலத்தின் ஈறாய் [வெய்யோர்
நின்றுள தீவின் வாழ்வார், நிமல! நின் கணையால், ஆவி
கொன்று எமைக் காத்தி!' என்றான்; குரிசிலும் கோறலுற்றான்;
78-1

7 சேது பந்தனப் படலம்

சாற்று மா முரசு ஒலி கேட்டு, தானையின்
ஏற்றமோடு எழுந்தனர், 'எறி திரைக் கடல்
ஊற்றமீது ஒளித்து, ஒரு கணத்தில் உற்று, அணை
ஏற்றுதும்' எனப் படைத் தலைவர் யாருமே. 4-1

வல் விலங்கு வழாத் தவர் மாட்டு அருள்
செல் வலம் பெறுஞ் சிந்தையின் தீர்வரோ?
'இவ் விலங்கல் விடோம் இனி' என்பபோல்.
எல் வயங்கும் இரவி வந்து எய்தினன். 25-1

தம் இனத்து ஒருவற்கு ஒரு சார்வு உற,
விம்மல் உற்று, விடாது உறைவோர்கள்போல்,
செம்மை மிக்க குரக்கினம் சேர்க்கையால்,
எம் மலைக் குலமும் கடல் எய்துமே. 29-1

இன்னவாறு அங்கு எழுபது வெள்ளமும்,
அன்ன சேனைத் தலைவரும், ஆழியைத்
துன்னி நின்று, விடாது இடை தூர்த்தலால்,
பொன் இலங்கை தொடுத்து அணை புக்கதே. 65-1

8 ஒற்றுக் கேள்விப் படலம்

என்று, நளனைக் கருணையின் தழுவி, அன்பாய்
அன்று வருணன் உதவும் ஆரமும் அளித்து,
துன்று கதிர் பொற்கலனும் மற்றுள தொகுத்தே,
'வென்றி, இனி' என்று, படையோடு உடன் விரைந்தான். 4-1

இறுத்தனன்—ஏழு-பத்து வெள்ளமாம் சேனையோடும்,
குறித்திடும், அறுபத்தேழு கோடியாம் வீரரோடும்,
பொறுத்த மூ-ஏழு தானைத் தலைவர்களோடும், பொய் தீர்
அறத்தினுக்கு உயிராய் என்றும் அழிவு இலா அமலன் அம்மா! 13-1

[நளனுக்கு முடி சூட்டு படலம்]

என்று மகிழ் கொண்டு, இரவி மைந்தனை இராமன்,
'வன் திறலினான் நளன் வகுத்த அணை, மானக்
குன்றம் நெடுநீரின்மிசை நின்று இலகு கொள்கை
நன்று என முயன்ற தவம் என்கொல்? நவில்க!' என்றான். 13-2

நவிற்றுதிர் எனக் கருணை வள்ளல் எதிர் நாமக்
கவிக்கு இறைவன் எய்தி, இரு கை மலர் குவித்தே,
'புவிக்கு இறைவ! போதின் அமர் புங்கவனிடத்தே
உவப்புடன் உதித்தவர்கள் ஓர் பதின்மர் என்பார். 13-3

'மலரவனிடத்தில் வரு காசிபன், மரீசி,
புலகனுடன் அத்திரி, புலத்தியன், வசிட்டன்,
இலகு விசுவன், பிருகு, தக்கன், இயல்பு ஆகும்
நலம் மருவு அங்கிரவு எனப் புகல்வர் நல்லோர். 13-4

'மக்கள்தனில் ஒன்பதின்மர் வானம் முதலாக
மிக்க உலகைத் தர விதித்து, விசுவப் பேர்
தொக்க பிரமற்கு ஒரு தொழில்தனை விதித்தான்
அக் கணம் நினைத்தபடி அண்டம் முதல் ஆக. 13-5

'அன்ன தொழிலால் விசுவகன்மன் எனல் ஆனான்,
பொன்னுலகை ஆதிய வகுத்திடுதல் போல,
நென்னல் இகல் மாருதி நெருப்பினில் அழிந்த
நன் நகரம் முன்னையினும் நன்கு உற அளித்தான். 13-6

'மூ-உலகின் எவ் எவர்கள் முன்னு மணி மாடம்
ஆவது புரிந்து, மயன் ஆகவும் இருந்தான்;
தேவர் இகல் மா அசுரர் சொற்ற முறை செய்தற்கு
ஆவளவில் வானவர்கள் தச்சன் எனல் ஆனான். 13-7

'அன்னவன் இயற்கை அறிதற்கு அரிய; மேல்நாள்
பன்னு மறை அந்தணன் விதித்தபடி, பார்மேல்
மன்னும் இறையோர் எவரும் வந்தபடி தானே
உன்னும் அவன் மைந்தன் நளன் என்றிட உதித்தான். 13-8

'தாயரொடு தந்தை மகிழும் தனயன், வானின்
மேய மதி போல வளர் மெய்யின் மணி மாட
நாயகம்அது ஆன திரு வீதியில் நடந்தே
ஏய சிறு பாலருடன் ஆடி மனை எய்தும். 13-9

'சிந்தை மகிழ் இல்லில் விளையாடு சிறுவன், தேர்
தந்தை வழிபாடுபுரியும் கடவுள்தன்னை
வந்து திகழ் மா மணி மலர்த்தவிசினோடே
கந்த மலர் வாவியினிடைக் கடிதின் இட்டான். 13-10

'மற்றைய தினத்தின் இறை எங்கு என மருண்டே
பொற்றொடி மடந்தையை விளித்து, '' உரை '' என, போய்
நல் தவ மகச் செயல் நடுக்கி, அயல் நண்ணிச்
சொற்றனள் எடுத்து; வழிபாடு புரி தூயோன். 13-11

'பூசனை புரிந்தவன் வயத்து இறை புகாமே
கோசிகம் அமைத்து, மணி மாடம்அது கோலி,
நேசம் உற வைத்திடவும், நென்னல் என ஓடி
ஆசையின் எடுத்து, அவனும் ஆழ்புனலில் இட்டான். 13-12

'இப்படி தினந்தொறும் இயற்றுவது கண்டே
மெய்ப் புதல்வனைச் சினம் மிகுத்திட வெகுண்டும்,
அப்படி செய் அத்திறம் அயர்த்திலன்; '' இவன்தன்
கைப்படல் மிதக்க '' என ஓர் உரை கதித்தான். 13-13

'அன்று முதல் இன்னவன் எடுத்த புனல் ஆழா
என்று அரிய மாதவர் இசைத்தபடி இன்னே
குன்று கொடு அடுக்க, நிலைநின்றது, குணத்தோய்!'
என்று நளன் வன்திறம் எடுத்துமுன் இசைத்தான். 13-14

சொற்றவை அனைத்தையும் கேட்டு, தூய் மறை
கற்றவர் அறிவுறும் கடவுள், ' இத் தொழில்
முற்றுவித்தனை, உளம் மகிழ, மொய்ம்பினோய்!—
மற்று உனக்கு உரைப்பது என், முகமன்?—வாழியாய்!' 13-15

'ஐயன் நல் இயற்கை, எப் பொருளும் அன்பினால்
எய்தினர் மகிழ்ந்திட ஈயும், எண்ணினால்;
செய் தொழில் மனக்கொள, செய்த செய்கை கண்டு
உய் திறம் நளற்கும் அன்று உடைமை ஆதலான். 13-16

'இத் திறம் புரி நளற்கு இன்பம் எய்தவே
வித்தக இயற்றிட வேண்டும்' என்றனன்;
உத்தமன் உரைப்படி, உஞற்றற்கு எய்தினர்
முத் திறத்து உலகையும் ஏந்தும் மொய்ம்பினர். 13-17

இங்கு இவை தாதையை எண்ணும் முன்னமே
அங்கு அவன் வணங்கினன், அருகின் எய்தினான்;
'புங்கவ நின் மகற்கு இனிய பொன் முடி
துங்க மா மணிக் கலன் தருதி, தூய்மையாய்!' 13-18

என்றலும், மணி முடி, கலன்கள், இன் நறுந்
துன்று மா மலர்த் தொடை, தூய பொன்-துகில்,
குன்று எனக் குவித்தனன்; கோல மா மலர்
மன்றல் செய் விதானமும் மருங்கு அமைத்து அரோ. 13-19

முடி புனை மண்டபம் ஒன்று முற்றுவித்து,
இடி நிகர் பல் இயம் இயம்ப, வானரர்
நெடிய வான் கங்கையே முதல நீத்த நீர்
கடிது கொண்டு அணைந்தனர் கணத்தின் என்பவே. 13-20

நளன்தனை விதிமுறை நானம் ஆடுவித்து,
இளங் கதிர் அனைய பொன்-துகிலும் ஈந்து, ஒளிர்
களங்கனி அனையவன் ஏவ, கண் அகல்
வளம் திகழ் மண்டப மருங்கின் எய்தினான். 13-21

ஆனதோர் காலையின் அருக்கன் மைந்தனும்
ஏனைய வீரரும் இலங்கை மன்னனும்
வானரர் அனைவரும் மருங்கு சூழ்வர,
தேன் நிமிர் அலங்கலும் கலனும் சேர்த்தியே, 13-22

பொலங்கிரி அனைய தோள்-தம்பி போந்து, ஒளி
இலங்கிய மணி முடி இரு கை ஏந்தினன்,
அலங்கல் அம் தோள் நளற்கு அன்பின் சூட்டினான்—
'குலங்களோடு இனிது வாழ்க!'' என்று கூறியே. 13-23

இளையவன் திரு மலர்க் கையின் ஏந்திய
ஒளி முடி புனைந்திட உலகம் ஏழினும்
அளவு இலா உயிர்த்தொகை அனைத்தும் வாழ்த்தியே,
'நளன் இயற்றிய தவம் நன்று' என்று ஓதினர். 13-24

முடி புனை நளன் எழுந்து, இறைவன் மொய் கழல்
அடிமிசை வணங்கிட, அவனுக்கு அந்தம் இல்
படி புகழ் ஆசிகள் பகர்ந்து, 'பார்மிசை
நெடிது உற நின் குலம்!' என நிகழ்த்தினன். 13-25

மற்றையர் அனைவரும் அருள் வழங்கவே
பொன்-திரள் மணி முடி புனைந்த போர்க் களிறு
உற்று, அடி வணங்கிட, உவந்து தாதையும்,
பெற்றனன் விடை கொடு, பெயர்ந்து போயினன். 13-26

இன்னணம் நிகழ்ந்தபின், இனிதின், எம்பிரான்
தன் நிகர் சேதுவை நோக்கி, தையலாள்
இன்னல் தீர்த்திட எழுந்தருள எண்ணினன்;
பின் அவண் நிகழ்ந்தமை பேசுவாம்அரோ. 13-27

கேட்டலும், நளன் என்று ஓதும் கேடு இலாத் தச்சன், கேள்வி
வாட்டம் இல் சிந்தையான், தன் மனத்தினும் கடுகி, வல்லே
நீட்டுறும் அழிவு இல்லாத யோசனை நிலையதாகக்
காட்டினன், மதிலினோடும் பாசறை, கடிதின் அம்மா! 14-1

போயினன், அமலன் பாதம் பொருக்கென வணங்கி, 'இன்னே
ஆயினது அணி கொள் பாடி நகர் முழுது, அமல!' என்றான்;
நாயகன்தானும், வல்லே நோக்கினன் மகிழ்ந்து, 'நன்று!'' என்று
ஏயினன், எவரும் தம்தம் பாசறை இருக்க என்றே. 16-1

அவ் வகை அறிந்து நின்ற வீடணன், அரியின் வீரர்க்கு
ஒவ்வுற உருவம் மாறி அரக்கர் வந்தமை அங்கு ஓத,
செவ்விதின் மாயச் செய்கை தெளிந்திடுமாறு, தாமே
கைவலியதனால் பற்றிக் கொண்டனர், கவியின் வீரர். 25-1

என அவர் இயம்பக் கேட்ட இறைவனுக்கு, இலங்கை வேந்தன்
தனது ஒரு தம்பி, 'அன்னோர் சாற்றிய வாய்மை மெய்யும்
எனது ஒரு மனத்தில் வஞ்சம் இருந்ததும், இன்னே காண்டி;
நினைவதன்முன்னே விஞ்சை நீக்குவென்' என்று நேர்ந்தான்.
29-1

ஆங்கு அவர் புகலக் கேட்ட ஐயனும், அவரை நோக்கி,
'ஈங்கு இது கருமமாக எய்தினீர்என்னின், நீர் போய்,
தீங்கு உறும் தசக்கிரீவன் சிந்தையில் தெளியுமாறே
ஓங்கிய உவகை வார்த்தை உரையும்' என்று ஓதலுற்றான். 32-1

இன்னவாறு இவர்தம்மை இங்கு ஏவிய
மன்னர் மன்னவன் ஆய இராவணன்
அன்ன போது அங்கு அளவு இல் அமைச்சரோடு
உன்னும் மந்திரத்து உற்றதை ஓதுவாம்: 38-1

சொல்லும் மந்திரச் சாலேயில், தூய் மதி
நல் அமைச்சர், நவை அறு கேள்வியர்,
எல்லை இல்லவர்தங்களை நோக்கியே,
அல் அரக்கர் பதியும் அங்கு ஓதுவான். 41-1

'ஈது எலாம் உரைத்து என் பயன்? இன்று போய்க்
காதி, மானுடரோடு கவிக் குலம்
சாதல் ஆக்குவென், தான் ஓர் கணத்து' எனும்
போதில், மாலியவானும் புகலுவான்: 46-1

என்னும் வாய்மை இயம்புறு போதினில்,
முன்னமே சென்ற ஒற்றர் முடுகி, 'எம்
மன்னவர்க்கு எம் வரவு உரைப்பீர்!' என,
துன்னு காவலர்தம்மிடைச் சொல்லினர். 52-1

வருணன் அஞ்சி, வழி கொடுத்து 'ஐய! நின்
சரணம்' என்று அடி தாழ்ந்து, அவன் தன் பகை
நிருதர் வெள்ளம் அனந்தம் நிகழ்த்து முன்,
திரிபுரச் செயல் செய்தது, அங்கு ஓர் கணை. 60-1

செவித் துளை இருபதூடும், தீச் சொரிந்தென்னக் கேட்டு,
புவித்தலம் கிழிய, அண்டம் பொதிர் உற, திசையில் நின்ற
இபத் திரள் இரிய, வானத்து இமையவர் நடுங்க, கையால்
குவித் தடம் புயமே கொட்டி, கொதித்து இடை பகரலுற்றான்.
66-1

தானை அம் தலைவன் ஈது சாற்றலும், தறுகண் வெம் போர்க்
கோன் அழன்று உருத்து, 'வீரம் குன்றிய மனிதரோடு
வானரக் குழுவை எல்லாம் வயங்கும் என் கரத்தின் வாளால்
ஊன் அறக் குறைப்பென் நாளை, ஒரு கணப் பொழுதில்' என்றான்! 70-1

மன்னவர் மன்னன் கூற, மைந்தனும் வணங்கி, 'ஐயா!
என்னுடை அடிமை ஏதும் பிழைத்ததோ? இறைவ! நீ போய்,
''மன்னிய மனித்தரோடும் குரங்கொடும் மலேவென்'' என்ருல்,
பின்னே என் வீரம் என்னும்?' என்றனன், பேசலுற்ருன்: 70-2

'இந்திரன் செம்மல் தம்பி, யாவரும் எவரும் போற்றும்
சந்திரன் பதத்து முன்னேன்' என்றனர்; 'சமரை வேட்டு,
வந்தனர்; நமது கொற்றம் வஞ்சகம் கடப்பது என்னும்
சுந்தரன் அவனும் இன்னேன்' என்பதும் தெரியச் சொன்ஞர். 75-1

எரி எனச் சீறி, இவ்வாறு உரைத்து, இரு மருங்கில் நின்ற
நிருதரைக் கணித்து நோக்கி, 'நெடுங் கரி, இரதம், வாசி,
விருதர்கள் ஆதி வெள்ளப் படைத் தொகை விரைந்து, நாளைப்
பொரு திறம் அமையும்' என்ரு, புது மலர்ச் சேக்கை புக்கான். 88-1

9 இலங்கை காண் படலம்

கண்டு அகம் மகிழ்ந்து, ஆங்கு அண்ணல், கடி நகர் இலங்கை மூதூர்
விண்தலம் அளவும் செம் பொற் கோபுரம், விளங்கும் வீதி,
மண்டபம், சிகர கோடி, மாளிகை, மலர்க் கா ஆதி
எண் திசை அழகும் நோக்கி, இளவலுக்கு இயம்புகின்ருன். 6-1

10 இராவணன் வானரத் தானே காண் படலம்

'ஏறிட்ட கல்லு வீழும் இடம் அற, எண்கினுலே
நாறு இட்டதென்ன ஒவ்வோர் ஓசனே நாலுபாலும்
சூறிட்ட சேனே நாப்பண் தோன்றுவோன் இடும்பன் என்றே
கூறிட்ட வயிரத் திண் தோள் கொடுந் தொழில் மடங்கல் போல்வான்.
27-1

'மற்று இவன் படையில் ஒன்ஞர் அன்றி, வானவர்களே வந்து
உற்றனர் எனினும், பற்றி உயிர் உகப் பிசைந்திட்டு ஊத,
கொற்றவன் அருளும் கொண்டோன்; குடாவடிக்கு இறைவன்; கூற்றம்
பெற்றவன்; அடைந்தோர்தம்மை உயிர் எனப் பேணும் நீரான். 27-2

'ஆங்கு அவன் எதிரே வேறு ஓர் ஆடகக் குன்றம் ஒன்றை
வாங்கு நீர் மகரவேலே வந்து உடன் வளைந்ததென்ன,
ஓங்கு மைம் முகத்தின் தானேயுள் பொலிந்திடுவான், வெற்றி
ஓங்கிய குவவுத் திண்தோள் வினதன் என்று உரைக்கும் வெய்யோன்.
27-3

'அன்னவன்தனக்கு வாமத்து ஐம்பது கோடி யூகம்
தன்னை வந்து இடையில் சுற்ற, தட வரை என்ன நிற்பான்,
கொல் நவில் குலிசத்து அண்ணல் கொதித்து எதிர்கொடுக்கு மேனும்,
வென்னிடக் குமைக்கும் வேகதெரிசி என்று உரைக்கும் வீரன். 27-4

பிளக்கும் மண்பதையும், நாகர் பிலனையும்; இளக்கும் வேரோடு
இளக்கும் இக் குடுமிக் குன்றத்து இனம் எலாம் பிடுங்கி, ஏந்தி,
அளக்கர் கட்டவனும் மாட்டாது அலக்கணுற்றிட விட்டு, ஆர்க்கும்
துளக்கம் இல் மொய்ம்பர் சோதிமுகனும் துன்முகனும் என்பார். 27-5

'குன்றொடு குணிக்கும் கொற்றக் குவவுத் தோள் குரக்குச் சேனை
ஒன்று பத்து ஐந்தொடு ஆறு கோடி வந்து ஒருங்கு சுற்ற,
மின் தொகுத்து அமைந்த போல விளங்கு எயிறு இலங்க, மேருச்
சென்றென வந்து நிற்பான், திறல் கெழு தீர்க்கபாதன். 27-6

'நூற்றிரண்டாய கோடி நோன் கவித் தானை சுற்ற,
காற்றின் மா மகற்குக் கீழ்பால் கன வரை என்ன நிற்பான்,
கூற்றின் மா மைந்தன்; கூற்றும் குலுக்கமுற்று அலக்கண் எய்தச்
சீற்றமே சிந்தும் செங் கண் ததிமுகன் என்னும் சீயம். 27-7

'நாடில், இங்கு இவர் ஆதியாய் நவின்ற மூ-எழுவர்
ஆடல் வெம் படைத் தலைவர்கள் ஆறு பத்து ஏழு
கோடி வீரர்கள், குன்று எனக் குவவிய தோளாய்!
கூடு சேனையும் எழுபது வெள்ளமாய்க் குறிப்பார். 33-1

'அழிவு இலா வலி படைத்துள நம் படை அரக்கர்
ஒழிவு இலாத பல் ஆயிர வெள்ளத்துக்கு உறை ஓர்
துளியும் ஒவ்விடா எழுபது வெள்ளத்தின் தொகை சேர்
எளிய புன் குரங்கு என் செயும்?' என்றனன், இகலோன். 35-1

## 11 மகுட பங்கப் படலம்

பிடித்தவன் விழித் துணை பிதுங்கிட நெருக்கி,
இடித்து அலம்வரக் கதறி எய்த்திட, இரங்காது
அடிக் கொடு துகைத்து அலை கடற்குள் ஒரு கையால்
எடுத்து உக, இராவணன் எறிந்து, இகலின் ஆர்த்தான். 22-1

எறிந்திட விழுந்து, இரவி சேய் அறிவு சோர்வுற்று,
அறிந்ததொர் இமைப்பளவில் ஆகமது தேறி,
பிறிந்திலன் எனத் தொனி பிறந்திட, மருங்கில்
செறிந்து, 'அமர் அரக்கனொடு செய்வென்!' என வந்தான்.
22-2

என இவை அமலன் கூற, இரு கையும் எடுத்துக் கூப்பி,
மனம் மிக நாணி, ஒன்றும் வாய் திறந்து உரைக்கலாற்ருன்,
பனியினை வென்ருேன் மைந்தன் பின்னரும் பணிந்து நின்றே,
அனகனுக்கு அன்பினேடும் அடுத்தமை அறையலுற்ருன். 38-1

என்றனன்; என்றலோடும், இணை அடி இறைஞ்சி, ஆங்கு,
குன்று உறழ் குவவுத் திண் தோள் கொற்ற வல் வீரற் காண,
தன் தனி உள்ள நாணுல் தழல் விழிக் கொலை வெஞ் சீயம்
நின்றென, எருத்தம் கோட்டி, நிலனுற நோக்கிக் கூறும். 38-2

ஏர் அணி மாட கூடம் இலங்கிய இலங்கை வேந்தை
காரணம் ஆக வாலால் கட்டிய வாலி, அன்றிப்
போரணம் ஆளும் அம்பால் புடைத்த மால் பாதம் போற்றி,
காரணச் சுடரோன் மைந்தன் தலைவனை வணங்கிச் சொல்லும்.
38-3

இரவி போய் மறையும் முன்பு, அங்கு இராமனும், இலங்கை நின்ற
வரை இழிந்து, அனைவரோடும் வந்து, தன் இருக்கை எய்தி,
நிருதர்தம் குலத்தை எல்லாம் நீறு எழப் புரியுமாறே
பொரு திறம் முயன்ற செய்கை புகலுவான் எடுத்துக்கொண்டாம். 49-1

தெய்வத் தாமரையோன் ஆகி யாவையும் தெரியக் காட்டி,
மெய் வைத்த அருளினுலே அவை எலாம் விரும்பிக் காத்து,
சைவத்தன் ஆகி, யாவும் தடிந்திடும் செயலின் மேவும்
கை வைத்த நேமியோன்தன் கால் வைத்த கருத்தமே, யாம்.
49-2

பூசலைக் குறித்து இராமன், பொரும் கவிச் சேனை வெள்ளம்
மாசு அற வகுத்து, நாலு திக்கினும் வளையச் செய்து,
பாசமுற்றுடைய நண்பின் படைத் துணையவர்களோடும்
பாசறை இருந்தான்; அந்தப் பதகனும் இழிந்துபோனுன். 49-3

## 12 அணி வகுப்புப் படலம்

இறைவன் மற்று இதனைக் கூற, எறுழ் வலி அமைச்சர் பொங்கி,
'பிறை முடிப் பரமனேடும் பெரு வரை எடுத்த மேலோய்!
உறு சமர்க்கு எம்மைக் கூவி, ஏவிடாதொழிந்தாய்; யாமும்
சிறு தொழில் குரங்கு அது என்ற திறத்தினும் தாழ்த்தது என்ருர்.
11-1

அமைச்சர் மற்று இதனைக் கூறி, 'அரச! நீ விடைதந்தீமோ?
இமைப்பிடைச் சென்று, வந்த குரங்குஇனப் படையை எல்லாம்
கமைப்பு அறக் கடிது கொன்றே களைகுவம்' என்ற போதில்,
சுவைத் தட வரைத் தோள் கும்பகருணன்சேய் நிகும்பன் சொல்வான்:
12-1

எரி நெருப்பு என்னப் பொங்கி, இராவணன் என்னும் மேலோன்
உரை செறி அமைச்சரோடும், உறு படைத் தலைவரோடும்,
கரி, பரி, இரதம், காலாள், கணக்கு அறும் வெள்ளச் சேனை
மருவுற, திசை நான்கு உம்பர் வகுத்து, அமர் புரியச் சொன்னான். 17-1

இம் முறை அரக்கர் கோமான் அணி வகுத்து, இலங்கை மூதூர்,
மும் மதில் நின்ற தானை நிற்க, மூதமைச்சரோடும்
விம்முறு சேனை வெள்ளத் தலைவர்க்கு விடையும் நல்கி,
கம்மெனக் கமழும் வாச மலர் அணை கருகச் சேர்ந்தான். 22-1

13 அங்கதன் தூதுப் படலம்

'சூனுறும் வஞ்சனாகத் தோன்றிய இலங்கை வேந்தன்
கோனுறும் சிறையை நீக்கி, குரை கழல் வணங்கும் ஆகில்,
வீழுறும் இலங்கைச் செல்வம் வீடணற்கு அளிப்பென்; எம்பி
ஆளுறும் அயோத்திதன்னை இராவணற்கு அளிப்பென்' என்றான். 7-1

'தப்பு இல வீடணற்கு இலங்கை, தானமாச்
செப்பிய வாய்மைதான் சிதையலாகுமோ?
இப்பொழுது இராவணன் ஈங்கு வந்திடில்,
அப்பொழுது, அயோத்தி நாடு அளிப்பென் ஆணையே.' 7-2

அரி முதல் தேவர் ஆதி அமரிடைக் கலந்த போதும்,
வரி சிலை இராமன் வாளி வந்து உயிர் குடிப்பது அல்லால்,
புறம் ஒரு மூன்றும் தீயப் பொடி செய்தோன்தன்னொடு, அந் நாள்,
அரு வரை எடுத்த வீரன் ஆண்மைக்கும் அவதி உண்டோ? 17-1

வந்தது என், குரங்கு? ஒன்று இல்லை, அடைத்தது என், கடல் வாய்? [மந்தி
சிந்தையின் களியால் என் பேர் தெரியுமோ? தெரியாது ஆகில்,
இந்த எம் பதியைக் காக்கும் இறைவனோ? அறிதும்; எங்கள்
விந்தை எம் பெருமான்! வாழி! வீடணன் என்னும் வேந்தன். 19-1

'முந்த ஓர் தசக்கிரீபன் ஆக்கையை மொய்ம்பால் வீக்கும்
அந்த ஆயிரத்தோளானை அரக்கிய மழுவலாளன்
வந்து எதிர்கொள்ள, வீரச் சிலையும் வெவ் வலியும் வாங்கும்
சுந்தரத் தோளன் விட்ட தூதன் நான்' என்னச் சொன்னான். 20-1

'பசை அறு சிந்தையானைத் தமரொடும் படுத்த போதும்,
இசை எனக்கு இல்லை அன்றே' என்பது ஓர் இகழ்வு கொண்டான்;
வசை அற இசைக்கும் ஊரை வளைக்கவும் வந்திலாதான்,
திசையினை வென்ற வென்றி வரவரச் சீர்த்தது!' என்றான். 36-1

ஆதி அம் பரன், அங்கதன் ஓதல் கேட்டு,
'ஈது அவன் கருத்து என்றிடின் நன்று' என,
சோதியான் மகன் ஆதித் துணைவருக்கு
ஓதினான், அங்கு அமரர்கள் உய்யவே. 43-1

## 14 முதற் போர் புரி படலம்

ஆதி நாயகன் ஆங்கு அது கூறுமுன்;
பாதமீது பணிந்து, அருள் பற்றியே,
காது வெம் படைக் காவலர் ஆதியோர்
மோது போரை முயலுதல் மேயினார். 3-1

அந்த வேலை, அரக்கர் அழன்று கண்,
சிந்து தீயில் திசை எரி சேர்த்தவன்
முந்து உரைத்த முறைமையின் முந்துற,
வந்து எதிர்த்தனர், வாயில்கள்தோறுமே. 15-1

அன்ன போது அங்கு அரக்கர் பிரான் படை
உன்னும் ஆயிர வெள்ளம் உடன்று எழா,
கன்னி மா மதிலின் புறம் காத்து, உடன்
முன்னி வெஞ் சமர் மூண்டு எழுந்துற்றதே. 15-2

ஆனை பட்ட; அடு பரி பட்டன;
தானை பட்ட, தார் இரதம்; கணை
சோனைபட்டது; துன் அரும் வானரச்
சேனை பட்டது; பட்டது செங்களம். 50-1

ஆர்த்த போதில்; அருந் திறல் சிங்கனும்,
சூர்த்த நோக்குடைச் சூரனும், துற்கனும்,
கூர்த்த வெங் கதிர்க் கோபனொடு ஆதியாய்,
வேர்த்து, அரக்கர் வியன் படை வீசினார். 55-1

போர் செய் காலை, இடும்பனும் பொங்கி, அக்
கார் செய் மேனி அரக்கனைக் கைகளால்
மேருமீது இடி வீழ்ந்தெனத் தாக்கலும்,
சோர்வு இலாத அரக்கனும் துள்ளினான். 65-1

வரு சுமாலி மகன் பிரகத்தன் அங்கு
இரதம் ஒன்றதின் ஏறினன்; பின்னரும்,
வரி நெடுஞ் சிலை வேறு ஒன்று வாங்கியே,
சொரியும் மா மழைபோல், சரம் தூவினான். 72-1

வால் அறுந்து, வயிறு துணிந்து, இரு
கால் அறுந்து, கழுத்து அறுந்து, அங்கம் ஆம்
மேல் அறுந்து விளிந்தன—வெஞ் சமர்
ஆலும் வானரச் சேனை அனேகமே. 72-2

நீலன் நெஞ்சிடை அஞ்சு நெடுஞ் சரம்
ஆலம் அன்ன அரக்கன் அழுத்தலும்,
சால நொந்தனன்; நொந்து, தருக்கு அரு,
கால வெங் கனல்போல் கனன்றான்அரோ. 72-3

கனலும் வெங் கண் அரக்கன், கடுஞ் சிலை
புனையும் தேர் பரி பாகொடு போய் அற,
நினைவதற்குமுன் நீலன் அங்கு ஓர் நெடுந்
தனி மராமரம்தான் கொண்டு, தாக்கினான். 72-4

நிருதர் தானை உடைந்தது; நேர்கிலாத்
தரும கோபன், சதமகன், சண்டியோடு
எரிமுகன் இவர் ஆதி இராக்கதர்
செருவின், வெற்றி திகழ, வந்து எய்தினார். 79-1

ஏவி, மற்று அயல் நின்ற அரக்கரை,
'தா இல் என் ஒரு தேரினைத் தம்' எனக்
கூவ, மற்று அவர் கொண்டு உடன் நண்ணினார்,
தேவர் ஆதியர் நெஞ்சம் திடுக்கென. 93-1

ஆய்வு அருஞ் சத கோடி அடல் பரி
மாய்வு அருந் திரைபோல் வரப் பூண்டது;
தேயம் எங்கும் திரிந்தது; திண் திறல்
சாய, இந்திரனே பண்டு தந்தது. 93-2

ஏறினான் இடத் தோள் துடித்தே; அறக்
கூறினான், 'குரங்கோடு மனிதரை
நீறது ஆக்குவென்' என்று, நெருப்பு எழச்
சீறினான், சிவன் போல அத் தேரின்மேல். 94-1

'அண்ட கோடி அகிலமும் இன்றொடே
விண்டு நீங்குறும்' என்று உயர் விண்ணவர்,
கொண்ட ஆகுலத்தால், மனம் கூசியே,
புண்டரீகன் பதியிடைப் போயினார். 99-1

வெள்ளம் ஆங்கு அளப்பில; வெள்ளம், வாம் பரி;
கொள்ளை யார் அதன் கணக்கு அறிந்து கூறுவார்?
உள்ளம் ஆய்ந்து ஓது இரு நூறு வெள்ளம் ஆம்
கள்ள வாள் அரக்கர்கள் கடலின் சூழவே. 105-1

நிருதர்கள் எவருமே நோக்கி நின்று போர்
பொருதனர், அயில் முதல் படைகள் போக்கியே;
மரமொடு மலைகளைப் பிடுங்கி, வானரர்
செருவிடைத் தியவர் சிதறத் தாக்கினர். 119-1

அண்ட கோளகை வெடித்து, அவனி கீண்டுற,
எண் திசாமுகங்களும் இடிய, ஈசனைக்
கொண்ட வான் கயிலையும் சிகர கோடிகள்
விண்டு நீங்கியது எனில், விளம்ப வேண்டுமோ? 123-1

வச்சிர வரைப் புயத்து அரக்கன் வாங்கிய
கைச் சிலை நாண் ஒலி கலந்த காலையில்,
அச்சம் இல் புரந்தரன் ஆதி தேவர்கள்,
உச்சிகள் பொதிர் எறிந்து, உரம் மடங்கினர். 123-2

இப் புறத்து உயிர்கள் எல்லாம் இரிந்திட, அரக்கர் கோமான்
கைப் படு சிலையை வாங்கி, கால மா மழையும் எஞ்ச,
முப் புறத்து உலகம் எல்லாம் மூடியது என்ன, மூளும்
அப்பு மா மாரி சிந்தி, அண்டமும் பிளக்க ஆர்த்தான். 127-1

ஆர்த்தவன் பகழி மாரி சொரிந்து, அரிச் சேனை எல்லாம்
தீர்த்து, ஒரு கணத்தில் போக்க, செங் கதிர்ச் சிறுவன்தானும்
பார்த்து, உளம் அழன்று பொங்கி, பரு வலி அரக்கனோடும்
போர்த் தொழிற்கு ஒருவன் போலப் பொருப்பு ஒன்று ஆங்கு ஏந்திப் புக்கான் 127-2

அலக்கணுற்று அனுமன் சோர, அங்கதன் முதலாம் வீரர்
மலைக்குற மரங்கள் வாங்கி வருதல் கண்டு, அரக்கன், வாளி
சிலைக்கிடை தொடுத்து, அங்கு ஏந்து மா மலை சிதைத்திட்டு, அன்னோர்
கலக்கமுற்று இரிய, ஒவ்வோர் பகழியின் காய்ந்து கொல்வான். 138-1

நகைத்து, 'இது புரிந்தான்கொல்லோ?' என்பதன் முன்பு, நாண்வாய்த்
துகைத்து ஒலி ஒடுங்காமுன்னம், சேனை அம் புயலும் எஞ்ச,
மிகைப் படு சரத்தின் மாரி வீரனுக்கு இளையோன் மேவும்
பகைப் புலத்துஅரக்கன் சேனைப் பரவைமேல் பொழிவதானான், 143-1

எரி முகப் பகழி மாரி இலக்குவன் சிலையின் கோலிச்
சொரிதர, களிறு, பொன் தேர், துரங்கமோடு இசைந்த காலாள்
நிருதர்கள் அளப்பு இல் கோடி நெடும் படைத் தலைவர், வல்லே
பொரு களமீதில் சிந்திப் பொன்றினர் என்ப மன்னோ. 153-1

எதிர் வரும் அரக்கர் கோமான் இலக்குவன்தன்னை நோக்கி,
'மதியிலி! மனிதன் நீயும் வாள் அமர்க்கு ஒருவன் போலாம்!
இது பொழுது என் கை வாளிக்கு இரை' என நகைத்தான்; வீரன்
முதிர்தரு கோபம் மூள, மொழிந்து அமர் முடுக்கலுற்றான்.
156-1

அரக்கன் மனம் கொதித்து, ஆண்தகை அமலன்தனக்கு இளையோன்
துரக்கும் பல விசிகம் துகள்பட நூறினன்; அது கண்டு,
அருக்கன் குல மருமான், அழி காலத்திடை எழு கார்
நெருக்கும்படி, சர தாரையின் நெடு மா மழை சொரிந்தான்.
158-1

'மாயத்து உரு எடுத்து, என் எதிர் மதியாது, இது பெரிது என்-
றே இத் தரை நின்றாய்; எனது அடல் வார் சிலையிடையே
தீ ஒத்து எரி பகழிக்கு இரை செய்வேன் இது பொறுத்தேன்;
ஞாயத்தொடும் ஒரு குத்து அமர் புரிதற்கு எதிர் வரும் நீ.
171-1

கல் தங்கிய முழுமார்பிடைக் கவியின் கரம்அதனால்
உற்று ஒன்றிய குத்தின் வலிஅதனால் உடல் உளைவான்,
பற்று இன்றிய ஒரு மால் வரை அனையான், ஒரு படியால்
மல் தங்கு உடல் பெற்று ஆர் உயிர் வந்தாலென உய்ந்தான்.
179-1

கொதித்து ஆங்கு அடல் அரக்கன் கொடுங் கரம் ஒன்றதின் வலியால்
மதித்தான் நெடு வய மாருதி மார்பத்திடை வர, மேல்
புதைத்து ஆங்குறும் இடிஏறு எனப் பொறி சிந்திய புவனம்;
விதித்தான் முதல் இமையோர் உளம் வெள்கும்படி விட்டான்.
184-1

உருத்து, வெஞ் சினத்து அரக்கன் அங்கு ஒரு கையின் புடைப்ப,
வரைத் தடம் புய மாருதி மயங்கியது அறிந்து, ஆங்கு
இரைத்த திண் பரித் தேர்நின்றும் இரு நிலத்து இழியச்
சரித்து, வானரம் மடிந்திட, சர மழை பொழிந்தான். 186-1

உருத்து இலக்குவன் ஒரு கணத்து அவன் எதிர் ஊன்றிக்
கரத்தின் வெஞ் சிலை வளைக்குமுன், கடுஞ் சினத்து அரக்கன்
சிரித்து, வெம் பொறி கதுவிட, திசைமுகம் அடையப்
பொருத்தி, வெஞ் சரம் பொழிந்து, 'இவை விலக்கு' எனப் புகன்றான்.
200-1

பண்டை நாள் தரு பனித் திரைப் புனல் சடை ஏற்றுக்
கொண்ட தூயவன், கொடுந் தொழில் நிருதர்கள் குழுமி
மண்டு வாள் அமர்க் களத்தில், அம் மலர்க் கழல் சேறல்
கண்டு, கூசலன் நிற்கும்என்றால், அது கடனே? 216-1

அனைய கண்டு, இகல் அரக்கருக்கு இறைவன், அப் பொழுதில்,
மனம் நெருப்பு எழக் கொதித்து, 'ஒரு மனிதன் என் வலியை
நினையகிற்றிலன்; நெடுஞ் சமர் என்னொடும் துணிந்த
வினையம் இன்றொடும் போக்குவென்' என விழி சிவந்தான்.
225-1

அடுக்கி நின்றிடு பகிரண்டப் பரப்பு எலாம் அதிர,
துடிக்கும் நெஞ்சகத்து இமையவர் துளங்குற, கூற்றும்
நடுக்கம் உற்றிட, நல் அறம் ஏங்கிட, கயிலை
எடுக்கும் திண் திறல் அரக்கனும் சிலையை நாண்எறிந்தான்.
225-2

எறிந்து அடல் சிலை வளைத்து, ஒரு கணத்திடை, எரியின்
நிறம் தகும் பல நெடுஞ் சுடர்ப் பகழிகள், நெறியின்
அறிந்திடற்கு அரிது ஆகிய அளப்பு இல் பல் கோடி
செறிந்திட, திசை வானகம் வெளி இன்றிச் செறித்தான். 225-3

ஐயன் நோக்கினன், 'நன்று!' என நகைத்து, அவன் சிலைவாய்
எய்த வெஞ் சரம் பொடிபட, யாவையும் முருக்கி,
வெய்தின் அங்கு அவன்மேற் செல, எழு கணை விடுத்தான்;
கைதவன், கணை ஏழு கொண்டு, அக் கணை கடிந்தான். 225-4

எய்து வெள்ளம் நூற்று-இரண்டு எனத் திரண்ட கால் வயவர்,
மொய் கொள் சேனை அம் தலைவர்கள், முரண் கரி, பரி, தேர்,
வெய்ய வீரர்கள், அளப்பிலர் கோடியர், விறல் சேர்
ஐயன் வெஞ் சரம் அறுத்திட, அனைவரும் அவிந்தார். 236-1

அறுத்த வில் இழந்து அழியுமுன், ஐ-இரு கரத்தும்
பொறுத்து வெஞ் சிலை, நாண் ஒலி புடைத்து, அடற் பகழி
நிறுத்தி வீசினன்—நெடுந் திசை விசும்பொடு நிமிரக்
கறுத்த வான் முகில் கல் மழை பொழிதரும் கடுப்பின். 240-1

நிரைக்கும் ஐ-இரு சிலையிடைச் சர மழை நிருதன்
துரக்க, மாருதி, உடல் உறு குருதிகள் சொரிந்த;
குரக்கு வான் படை குறைந்தன; கூசி வானவர்கள்
இரக்கமுற்று உலைந்து ஓடினர்; இருண்டது எவ் உலகும். 240-2

எறும் வலிப் புயத்து இராகவன் இள நகை எழும்ப,
முறுவலித்து, அவன் பகழிகள் யாவையும் முருக்கி,
பிறை முகச் சரம் ஐ-இரண்டு ஒரு தொடை பிடித்து, ஆங்கு
உறுதி அற்றவன் சிலை ஒரு பத்தையும் ஒறுத்தான். 240-3

'வளைத்த வில்லும் இரதமும் மற்றும் நின்
கிளைத்த யானையும் சேனையும் கெட்டது; இங்கு
இளைத்து நின்றனை; இன்று போய் நாளை வா,
விளைக்கும் வெஞ் சமர் செய் விருப்பு உள்ளதேல்'. 255-1

என்று இராமன் இயம்ப; இராவணன்
ஒன்றும் ஓதலன்; 'உள்ளத்தின், என் வலி
நின்ற நேர்மை நினைத்திலன், மானிடன்;
நன்று சொன்னது!' என நகைத்து ஏகினன். 255-2

## 15 கும்பகருணன் வதைப் படலம்

என்று எடுத்து உரைத்தோன், பின்னும் உளம் கனன்று, இனைய சொல்
'வன் திறல் மனிதன் வெம் போர் எவரினும் வலியனேனும், [வான்:
பொன்றுதல் இல்லா என்னைப் போர் வெலற்கு எளிதோ? காலம்
ஒன்று அல; உகங்கள் கோடி உடற்றினும், ஒழிவது உண்டோ?
31-1

'மானிடன் என்றே நாணி, கடவுள் மாப் படைகள் யாதும்
யான் எடுத்து ஏகல் விட்டேன்; இன்றை வெஞ் சமரம் போக,
தான் அமர் அழிந்தேன் என்னத் தக்கதோ?' என்றான், அந்த
மானம் இல் அரக்கன்; பின்னர், மாலியவானும் சொல்வான்:
31-2

' ''முப்புரம் எரித்தோன் ஆதி தேவரும் முனிவர் தாமும்,
தப்பு அற உணர்தற்கு எட்டாத் தருமமே, கை வில் ஏந்தி,
இப் பிறப்பு இராமன் என்றே, எம்மனோர் கிளையை எல்லாம்
துப்பு அற, முருக்க வந்தான்'' என்ற சொல் பிழைப்பது உண்டோ?
31-3

'ஆதலின் இறைவ! கேட்டி; அவன் பெருந் தேவி ஆன
மாதினை விடுத்து, வானோர் முனிவரர் வருந்தச் செய்யும்
தீதினை வெறுத்து, தேவர் தேவனும் சிலை இராமன்
பாதமே பணியின், நம்பால் பகை விடுத்து, அவன் போம்' என்றான்.
33-1

'என்றும் ஈறு இலா அரக்கர் இன்ப மாய வாழ்வு எலாம்
சென்று தீய, நும் முனோன் தெரிந்து தீமை தேடினான்;
இன்று இறத்தல் திண்ணமாக, இன்னும் உன் உறக்கமே?'
அன்று அலைத்த செங்கையால் அலைத்து அலைத்து, உணர்த்தினார்.
45-1

சாற்றிய சங்கு தாரை ஒலி அவன் செவியில் சார,
ஆற்றலின் அமைந்த கும்பகருணனுக்கு அதுவும் தாராட்டு
ஏற்றது ஒத்து, அனந்தல் முன்னர்க்கு இரட்டி கொண்டு உறங்க, மல்லர்,
கூற்றமும் குலைய, நெஞ்சம் குறித்து இவை புரியலுற்றார். 51-1

அன்னவர் உரைப்பக் கேளா, அரசன் மோதரனை நோக்கி,
'மின் எனும் எயிற்று வீர எம்பியைக் கொணர்தி!' என்ன,
'இன்னதே செய்வென்' என்னா, எழுந்து அடி வணங்கிப் போவான்,
பொன் என விளங்குவான் போய்த் தன் பெருங் கோயில் புக்கான்.
54-1

இனைய கும்பகருணன், இராக்கதர்-
தனை முனிந்து இடிஏறு எனச் சாற்றினன்;
'எனை நெடுந் துயில் போக்கியது என்?' என,
மனம் நடுங்கினர், வாய் புதைத்து ஓதினர். 69-1

வட்ட விண்ணையும் மாதிரம் எட்டையும்
சுட்டி, வீரம் கணிப்பு அரும் காவலான்
தொட்ட பல் கலனும் சுடர் மௌலியும்
தெட்ட சோதி திளைப்ப நின்றான்அரோ. 76-1

என்ற போதில் எறும் வலிச் செம் மணிக்
குன்றம் ஐ-இரண்டு ஏந்திக் குல வரை
சென்றது என்னத் திரிந்து உலகு யாவையும்
வென்ற வீரன் இனைய விளம்பினன். 77-1

அக் கணத்து அரக்கர் கோன், 'அளப்பு இல் யானை, தேர்
மிக்க வான் புரவி, கால் வயவர் வெள்ளமோடு,
ஒக்க வான் படைப் பெருந் தலைவர் ஒன்று அறப்
புக்குமின், இளவலைப் புறத்துச் சூழ்ந்து' என்றான். 99-1

வெள்ளம் நூறு இரதம்; மற்று இரட்டி வெங் கரி;
துள்ளு வான் பரி அதற்கு இரட்டி; தொக்குறும்
வெள்ளி வேல் அரக்கர் மற்று இரட்டி; மேம்படும்
கொள்ளை வான் படைப் பெருந் தலைவர் கோடியால். 102-1

அன்ன போது இராவணற்கு இளவல் ஆகிய
மின்னு வேல் கும்பகன் என்னும் மேலையோன்,
துன்னு போர் அணிகலம் யாவும் சூடியே,
தன் ஒரு தேரினைத் தொழுது தாவினன். 103-1

தொண்டகம், துடி, கன பேரி, துந்துமி,
திண்டிமம், படகம், மா முரசு, திண் மணிக்
கண்டைகள், கடையுகத்து இடிக்கும் ஓதையின்
எண் திசை செவிடு எறிதரச் சென்று உற்றதால். 106-1

எழு கருங் கடல் கரை எறிந்திட்டு, ஊழி நாள்,
முழுது உலகு அடங்கலும் மூடும் தன்மையின்
தழுவியது என, தசமுகன் தன் ஆணையால்,
கிளர் பெரும் படைக் கடல் கெழுமிப் போந்ததால். 106-2

இரைக்கும் மும் மதம் பொழி தறுகண் யானையின்,
நெருக்கமும், நெடுங் கொடித் தொகையின் தேர்க் குலப்
பெருக்கமும், புரவிகள் பிறங்கும் ஈட்டமும்
அரக்கர்தம் பெருக்கமும், ஆயது எங்குமே. 106-3

நாற்படை வகை தொகை நடக்க, தூளிகள்
மேற்பட, விசும்பகம் மறைந்த; வெண் திரைப்
பாற்கடல் எனப் பொலி கவிப் பெரும் படை
காற் படு கதியினின் கரந்தது, ஓடியே. 108-1

குரக்கினப் பெரும் படை குலைகுலைந்து போய்
வெருக் கொள, விசும்பிடை வெய்ய மாயையின்
அரக்கன் இன்று அமைத்தது ஓர் உருக்கொலாம்? நினது
உருக் கொடே கரிய குன்று உற்றவேகொலாம்? 111-1

ஏழு யோசனைக்கு மேலாய் உயர்ந்திடும் முடி பெற்றுள்ளான்;
சூழி வெங் கரிகள் தாங்கும் திசை எலாம் சுமக்கும் தோளான்;
தாழ்வு அறு தவத்தின் மேலாம் சதுமுகன் வரத்தினாலே
வீழ் பெருந் துயிலும் பெற்றான்—வெங் கடுங் கூற்றின் வெய்யோன்,
114-1

சிலை பொழி பகழி, வேல், வாள், செறி சுடர்க் குலிசம், ஈட்டி,
பல வகைப் படைகள் வாங்கி, நிருதர்கள் பல் போர் செய்தார்;
மலையொடு மரங்கள் ஓச்சி, வயிரத் தோள் கொண்டு, மாறுக்
கொலை அமர் எடுத்து, வாகை குரங்குகள் மலைந்த அம்மா.
172-1

பற்றினன் வசந்தன்தன்னை, பனைத் தடங் கைகளாலே;
எற்றினன், 'இவனை மீள விடவொண்ணாது' என்று சொல்லி,
'கொற்றமும் உடையான்' என்னா, குழம்பு எழப் பிசைந்து கொண்டு
நெற்றியில் திலதமாக இட்டனன்—நிகர் இலாதான். 177-1

அளப்பு இல் வெங் கரிகள், பூதம், ஆளி, வெம் பரிகள் பூண்டு, ஆங்கு
இழுப்ப வந்து உடைய தோர் விட்டு, இரு நிலதது இழிந்து, வெம் போர்க்
களப் படக் கவியின் சேனைக் கடல் வறந்து உலைய, 'கையால்
குளப் படுக' என்று வெய்யோன் குறித்து, உளம் கனன்று புக்கான், 177-2

நிகர் அறு கவியின் சேனை நிலை கெட, சிலவர் தம்மைத்
துகள் எழக் கயக்கி ஊதும்; சிலவரைத் துகைக்கும், காலின்;
தகர் படச் சிலவர் தம்மைத் தாக்கிடும், தடக் கைதன்னால்;
புகவிடும் சிலவர் தம்மை, விசும்பிடைப் போக, வெய்யோன். 177-3

வலிதினின், சிலவர் தம்மை வன் கையால் பற்றிப் பற்றி,
தலையொடு தலையைத் தாக்கும்; சிலவரைத் தனது தாளால்
நிலமதில் புதைய ஊன்றி மிதித்திடும்; சிலவர் நெஞ்சைக்
கொலை நகப் படையின் கீறி, குருதி வாய்மடுத்துக் கொள்ளும். 177-4

கடும் பிணக் குவையினூடே சிலவரைப் புதைக்கும்; கண்ணைப்
பிடுங்குறும் சிலவர் தம்மை; சிலவரைப் பிடித்து, வெய்தின்
கொடுங் கொலை மறலி ஊரில் போய் விழக் குறித்து வீசும்;
நெடும் பெரு வாலின் பற்றிச் சிலவரைச் சுழற்றி நீக்கும். 177-5

பருதி மண்டலத்தில் போகச் சிலவரைப் பற்றி வீசும்;
குருதி வாய் பொழியக் குத்திச் சிலவரைக் குமைக்கும்; கூவித்
திரிதரத் தேவர் நாட்டில் சேர்த்திடும் சிலவர் தம்மை;
நெரிதரச் சிலவர் தம்மைக் கொடுங் கையின் நெருக்கும் அன்றே. 177-6

ஆயிர கோடி மேலும் அடல் குரங்கு அதனை வாரி,
வாயிடைப் பெய்து மூட, வயிற்றிடைப் புகுந்து, வல்லே
கூய் உளம் திகைத்து, பின்னும் கொடியவன் செவியினூடே,
போயது வெளியில் மீண்டும், புற்றிடைப் பறவை என்றே. 179-1

அவ் வழி விரியின் சேனை அதர்பட வசந்தன் என்பான்
தவ் அழி வீரன் நாலு வெள்ளத்தின் தலைவன் என்றுன்;
எவ் வழி? பெயர்ந்து போவது எங்கு? என இரு குன்று ஏந்தி,
வெவ் வழிஇசை அக் கும்பகருணன்மேல் செல்ல விட்டான். 180-1

விசைந்திடு குன்றம் நின்ற விண்ணவர் இரியல் செல்ல,
இசைந்திடு தோளின் ஏற்றுன், இற்று நீறு ஆகிப் போக;
வசந்தனைச் சென்று பற்றி வாசம் கொண்டுவந்து கையால்
பிசைந்து சிந்தூரமாகப் பெரு நுதற்கு அணிந்து கொண்டான். 180-2

நீலனை அரக்கன் தேரால் நெடு நிலத்து இழியத் தள்ளி,
சூலம் அங்கு ஒரு கை சுற்றி, 'தொடர்ந்திடும் பகைஞர் ஆவி
காலன் ஊர் தன்னில் ஏற்றி, கடிதில் என் தமையன் நெஞ்சில்
கோலியதுயரும்தீர்ப்பென்' எனக்கொதித்து, அமரின் எற்றான். 186-1

செய்துறு பகையை வெல்வார், நின்னைப் போல் அம்மை செய்து,
வைதுறு வந்த போது, வலுமுகம் காட்டி, யாங்கள்
கைதுறு வினையை வென்று கடன் கொள்வார் மார்க்கமுள்ளார்;
எய்துறும் இதற்கு என் போல் உன் தகை சில உதவி என்றான்.
193-1

மாருதி போதலோடும், வயப் படைத் தலைவர், மற்று ஓர்
மாருதம் என்னப் பொங்கி, வரையொடு மரங்கள் வாரி,
போர் எதிர் புகக் கண்டு, அன்னோர் அனைவரும் புரண்டு போரில்
சோர்தர படைகள் வாரிச் சொரிந்து, அடல் அரக்கன் ஆர்த்தான். 203-1

மழுவொடு கணிச்சி, சூலம், வாள், மணிக் குலிசம், ஈட்டி,
எழு, அயில், எஃகம் என்று இப் படை முதல் எவையும் வாரி,
மழை எனப் பொழிந்து, நூறு யோசனை வரைப்பில் மேவும்
அளவு அறு கவியின் சேனை அறுத்து, ஒரு கணத்தில் வந்தான்.
203-2

இலக்குவன் கொடுமரத்திடை எறியும் வெம் பகழி
கலக்கம் அற்றிடும் அரக்கர்தம் கரங்களைக் கடிந்தே,
முலைக்குவட்டு, அவர் கன்னியர், முன்றிலின் எறிய,
விலக்க அரும் விறலாளி கண்டு, அவர் உயிர் விளிந்தார். 226-1

வடி சுடர்ப் பெரும் பகழிகள் ஏற்றின வதனத்து
அடல் அரக்கரும் சிலர் உளர்; அவர் தலை அறுத்து, ஆங்கு
உடன் எடுத்து, அவர் மனையினுக்கு உரிய கன்னியர்பால்
இட, உவப்பொடும் புழுக்கினர், ஊன் இவை அறியார். 226-2

குஞ்சரத் தொகை, தேர்த் தொகை, குதிரையின் தொகை,மேல்
விஞ்சு வாள் எயிற்று அரக்கர்தம் தொகை எனும் வெள்ளம்,
பஞ்சினில் படும் எரி என, இலக்குவன் பகழி
அஞ்செனப் படு கணத்து, அவை அனைத்தையும் அழித்த. 227-1

வந்து அம் மாப் படை அளப்பு இல வெள்ளங்கள் மடிய,
அந்தி வான் எனச் சிவந்தது. அங்கு அடு களம்; அமரில்
சிந்தி ஓடிய அரக்கரில் சிலர், 'தசமுகனுக்கு
இந்த அற்புதம் உரைத்தும்' என்று ஓடினர், இப்பால். 227-2

உரைத்து, நெஞ்சு அழன்று, 'ஒரு கணைத்து இவன் உயிர் குடித்து, என்
கருத்து முற்றுவென்' எனச் சினம் கதுவிட, கடுந் தேர்
பரித்த திண் திறல் பாகரை, 'பகைவனுக்கு எதிரே
பொருத்தும்' என்று அடல் கும்பகன் பொருக்கெனப் புகன்றான். 228-1

நாண் தெறித்தனன், பகிரண்டப் பரப்பொடு நவை போய்
மாண்ட விண்ணவர் மணித் தலை துளங்கிட, வயப் போர்
பூண்ட வானரம் நின்றதும் புவியிடை மறிய,
தூண்டி, மற்று அவன் இலக்குவன்தனக்கு இவை சொல்வான்; 233-1

அது கண்டார் அடல் வானவர், ஆசிகள் கூறித்
துதி கொண்டார்; அடல் அரக்கனும் துணை விழி சிவந்து ஆங்கு,
'இது கண்டேன்; இனிக் கழிந்தது, உன் உயிர்' எனக் கூனன்றே
கொதி கொண்டான், அடல் சிலையினைக் குழைவுற வளைத்தான். 240-1

புக்க போதில், அங்கு இலக்குவன் பொருக்கெனத் துயர் தீர்ந்து,
அக் கணம்தனில் அரக்கர்தம் பெரும் படை அவிய,
மிக்க வார் சிலை வளைத்து, உரும்ஏறொடு விசும்பும்
உட்க, நாண் எறிந்து, உக முடிவு என, சரம் பொழிந்தான். 248-1

'காய் கதிர்ச் சிறுவனைப் பிணித்த கையினன்,
போயினன் அரக்கன்' என்று உரைத்த போழ்தின்வாய்,
நாயகன் பொருக்கென எழுந்து, நஞ்சு உமிழ்
தீ அன வெகுளியன், இனைய செய்தனன். 272-1

ஆயிரம் பேய் சுமந்து அளித்தது ஆங்கு, ஒரு
மா இருங் கேடகம் இடத்து வாங்கினன்;
பேய் இரண்டாயிரம் சுமந்து பேர்வது ஓர்
காய் ஒளி வயிர வாள் பிடித்த கையினன். 299-1

வீசினன் கேடகம்; விசும்பின் மீன் எலாம்
கூசின; அமரரும் குடர் குழம்பினர்;
காய் சின அரக்கனும் கனன்ற போது, அவன்
நாசியும் செவியும் வெங் குருதி நான்றவே. 299-2

கும்பகன் கொடுமையும் குலைகுலைந்து போம்
வெம்பு வெஞ் சேனையின் மெலிவும், நோக்கிய
நம்பனும் அரக்கன் கை நடுவண் பூட்டுறும்
செம் பொனின் கேடகம் சிதைத்து வீழ்த்தினன். 301-1

ஆயிரம் பெயரவன் அறுத்து மாற்றுறப்
போயின கேடகம் புரிந்து நோக்கினன்;
பேய் இரண்டாயிரம் சுமக்கப் பெற்றுடை
மா இருங் கேடகம் கடிதின் வாங்கினன். 301-2

போயின கேடகம் போக நோக்கினன்,
ஆயிரம் பெயரவன், அறியும் முன்பு; அவன்
பேய் இரண்டு ஆயிரம் பேணும் கேடகம்
'ஏ' எனும் அளவினில் எய்தச் சென்றதால். 301-3

ஆலம் உண்டவன் முதல் அளித்தது, அன்னவன்
சூலம் உண்டு; அளப்பு இல கோடி பேய் சுமந்து,
ஓலம் இட்டு அமரர்கள் ஓட, ஊழியில்
காலன் ஒத்தவன் கரத்து அளித்தது, அக் கணம். 310-1

பிடித்தனன் வலக் கையில் சூலம், பெட்பொடு;
முடித்தனன், பூசனை மனத்தின் முன்னியே;
விடுத்தனன், 'பகைவனை வென்று மீள்க' என;
தடுப்ப அரிது எனத் தளர்ந்து, அமரர் ஓடினர். 315-1

சூலம் அங்கு அது வரும் துணிவை நோக்கியே,
ஞால நாயகன், அரிக் கடவுள் ஏந்திய
கால வெங் கனல் படை கடிதின் ஏவி, அச்
சூலம் அற்று இரண்டு எனத் துணித்து வீழ்த்தினன். 315-2

அழிந்தது சூலம்; அங்கு அமரர் யாவரும்
தொழும் தகை அமலனைப் புகழ்ந்து துள்ளியே,
'கழிந்தது, எம் மனத் துயர்' என்று கண்ணன்மேல்
பொழிந்தனர், அவன் பெயர் புகன்று, பூமழை. 315-3

வந்த வெஞ் சேனைகள் வளைந்த எல்லையில்
இந்திரன் முதலினர் ஏத்த, வள்ளலும்
சுந்தர நெடுங் கணை மாரி தூவினன்;
சிந்தியது, அப் பெருஞ் சேனை வெள்ளமே. 315-4

இரண்டு பத்து நூறு எனும் படை வெள்ளம்
மற்று இன்றொடு முடிவு எய்திப்
புரண்டு தத்துறப் பொழிந்தனர்; இருவர் தம்
பொரு சிலைக் கணை மாரி;
இருண்டது எத்திசை மருங்கினும், பறவையின்
இனம் பல படி மூடி;
திரண்ட வச்சிரக் கதை கரத்து எடுத்தனன்,
கும்பகன் சினம் மூள. 321-1

என்ற போதில், அரக்கனும் நோக்கினன்,
'எம்பிரான் நுவல் மாற்றம்
நன்று, நன்று!' எனு, சிரம் துளக்கினன்,
நகைத்து, இவை இவை நவில்கின்ருன்;
'வென்றி தந்து, தம் புறம் கொடுத்து ஓடிய
விண்ணவர் எதிர் போரில்
பொன்றுமாறு இளைத்து, இன்று போய் வருவெனேல்,
புகழுடைத்தது போலாம்.' 324-1

இனைய திண் திறல் அரக்கனுக்கு அவ் வழி
இதயத்தில் பெரு ஞான
நினைவு எழுந்தது; 'இங்கு இவன் பெருங் கடவுள்;
மற்று இவன் பத நிழல் காண
வினை அறுந்தது; வேறு இனிப் பிறப்பு இலை'
என்று, தன் மன வேகம்-
தனை மறந்தனன்; மறந்து அவன் தன்மையை
நினைந்தனன், கருத்தோடும். 350-1

16 மாயா சனகப் படலம்

இம் மொழி அரக்கன் கூற, ஏந்திழை இரு காதூடும்
வெம்மை சேர் அழலின் வந்த வே . . . . . . . . . .
. . . . . ல் வஞ்சி நெஞ்சம் தீய்ந்தவள் ஆனுள்; மீட்டும்
விம்முறும் உளத்தினேடும் வெகுண்டு, இவை விளம்பலுற்ருள்;
54-1

மங்கையை, குலத்துளாளை, தவத்தியை முனிந்து, வாளால்
சங்கை ஒன்று இன்றிக் கொன்ருன், குலத்துக்கே தக்கான் என்று
கங்கை அம் சென்னியானும் கண்ணனும் கமலத்தோனும்
செங்கைகள் கொட்டி உன்னைச் சிரிப்பரால், சிறுமை என்னு.
72-1

அம் தாமரையின் அணங்கு அதுவே ஆகி உற,
நொந்து, ஆங்கு அரக்கன் மிக நோனு உளத்தினன் ஆய்,
சிந்தாகுலமும் சில நாணும் தன் கருத்தின்
உந்தா, உளம்கொதித்து, ஆங்கு ஒரு வாசகம் உரைத்தான். 89-1

17 அதிகாயன் வதைப் படலம்

முதிர் போர் உறு மொய்ம்பன், முனைத்தலையில்
சதிர் ஏறிய தானை தழைத்திட, அங்கு
எதிர் தேரிடை ஏறினன்; மற்று ஒரு வெங்
கதிரோன் இகல் கண்டிட ஏகினனல். 20-1

தேர் வெள்ளம் அளப்பு இல; திண் புரவித்
தார் வெள்ளம் அளப்பு இல; தந்திஇனக்
கார் வெள்ளம் அளப்பு இல; கண்டகராம்
பேர் வெள்ளம் அளப்பு இல பெற்றதுவால். 20-2

மல் ஏறிய திண் புய மள்ளர் கரத்து
எல் ஏறிய வாள், எழு, வல் முசலம்,
வில்லோடு அயில், வெங் கதை, வேல் முதலாம்
பல் ஆயுத பத்தி பரித்து உடையார். 25-1

என, வந்த நிசாசரன், இவ் உரையைத்
தனு வல்லவனோடு எதிர் சாற்றுதலும்,
சனகன் மகள்தன் ஒரு நாயகன் ஆம்
அனகன் அது கேட்டு, இது அறைந்திடுவான். 50-1

என்றே உலகு ஏழினொடு ஏழினையும்
தன் தாமரைபோல் இரு தாள் அளவா-
நின்றான் உரை செய்ய, நிசாசரனும்
பின்றா உரை ஒன்று பிதற்றினனால். 52-1

வெங் கொலை மத கரி வெள்ளம் ஆயிரம்
துங்க நீள் வரைப் புயத்து அரக்கர் தூண்டினர்;
வெங் கணை இலக்குவன் வெகுண்டு, உகாந்தத்தில்
பொங்கிய மாரியின் பொழிதல் மேயினன். 103-1

முடிவுறும் உகம் பொழி மாரி மும்மையின்
விடு கணை மழை நெடுந் தாரை, வெம் மதக்
கட களிறு அடங்கலும் கழிய, கால், கரம்,
குடல், தலை, குறைத்தமை கூறல் ஆவதோ? 103-2

அறுந்தன, தலை, கழுத்து; அறுந்த, தாள், கரம்;
அறுந்தன, செவி, முகம்; அறுந்த, வால், மருப்பு;
அறுந்தன, குடல், உடல்; அறுந்த, வாய், விழி;
அறுந்தன, கட களிறு ஆய நாமமே. 103-3

அறுத்தன, சில கணை, அறுத்த கூறுகள்
செறுத்தன, சில கணை; சின்னபின்னமாய்
ஒறுத்தன, சில கணை; உம்பர் ஊர் புகத்
தெறித்தன, சில கணை, செப்பல் ஆவதோ? 103-4

மத கரி வெள்ளம் ஆயிரமும் மாண்டுற,
முதிர் சினத்து இலக்குவன், கடிகை மூன்றினில்,
கொதி கொள் வெஞ் சர மழை கொழிப்பக் கண்டு, தாள்
அதிர்வுறு பொலன் கழல் அரக்கர் அண்மினர். 103-5

அடுத்தனர் ஆனை, தேர், புரவி, ஆழியை;
தொடுத்தனர் அணி படச் சூழ்ந்து, வள்ளல்மேல்
விடுத்தனர் படைக் கலம்; வெகுண்டு வீரனும்
தடுத்தனன், ஒரு தனித் தனுவின் வன்மையால். 103-6

பெருங் கடை யுக மழை பிறழ, தன் ஒரு
கரம் படு சிலையினின் கான்ற மாரியின்,
சரம் படச் சரம் பட, தாக்கு இராக்கதக்
கருங் கடல் வறந்தது கழறல் ஆகுமோ? 103-7

இலக்குவக் கடவுள்தன் ஏவின் மாரியால்,
விலக்க அருங் கரி, பரி, இரதம், வீரர் என்று
உலப்ப அரும் வெள்ளமாம் சேனை ஒன்று அற
நிலப் படச் சாய்ந்தமை நிகழ்ந்த போதிலே, 119-1

காந்திய அரக்கனும் கணையின் மாரிகள்
பாய்ந்திட, பருஞ் சிலை விசையின் பற்றினன்;
மாய்ந்தது குரங்கு; அது கண்டு, மா மறை
வேந்தனுக்கு இளவலும் வெகுளி வீங்கவே. 121-1

கார்முக விசை உறும் கணையின் மாரியால்
பார வெஞ் சிலை அறுத்து, அவன்தன் பாய் பரித்
தேரினைப் பாகனோடு அழியச் சிந்தி, மற்று
ஓர் கணை அவன் சிரம் உருளத் தூண்டினன். 121-2

'தாருகன் எனும் படைத் தலைவன் தன் வயப்
போர் அழிந்தவன் உயிர் பொன்றினன்' என,
கார் நிற அரக்கர்கள் கனலின் பொங்கியே,
வீரனை வளைத்தனர், வெகுளி மிக்குளார். 122-1

மழை உற்றன முகில் ஒப்பன செவி மும் மத வழியே
விழ உற்றன, வெறி வெங் கணை நிமிரப் பொறி சிதற,
முழை உற்றன முகில் சிந்தின முன்பு ஏறில முடிய,
உழை உற்றன உலவும்படி உலவுற்றன—கரிகள். 140-1

துள்ளிக் களி வய வானரர் ஆர்த்தார்; அவை தோன்றக்
கள்ளக் கடு நிருதக் குலம் கண்டப்படக் கண்டே,
உள்ளக் கடு வேகத்தொடு தேவாந்தகன், உளத்தே
கொள்ளைப் படை அனையஃது ஒரு கொடுஞ் சூலம் கைக் கொண்டான். 169-1

ஆங்கு அது நிகழக் கண்ட அடல் அதிகாயன் சீறி,
தாங்கு பல் அண்ட கோடிதான் பிளந்து உடைய, தன் கை
வாங்கினன் சிலை; நாண் ஓசை படைத்தபின், வாளி மாரி
பாங்குறு கவியின் சேனைக் கடல்மிசைப் பரப்பி ஆர்த்தான். 186-1

ஆர்த்து அரும் பகழி மாரி ஆயிர கோடி மேலும்
தூர்த்து, அடல் கவியின் சேனை துகள் படத் துணிந்து சிந்தப்
போர்த்தனன் சிலை நாண் ஓதை; பிறை முகப் பகழி பின்னும்
கோத்தனன், அனந்த கோடி கோடியின்—கொதித்து வெய்யோன்.
186-2

உருத்து அதிகாயன், மேன்மேல் ஒண் சுடர்ப் பகழி மாரி
நிரைத்தலின், இடைவிடாது நெடுங் கவிச் சேனை வெள்ளம்
தரைத் தலம்அதனில் பட்டுத் தலை உடல் சிதற, சோரி
இரைத்து எழு கடலின் பொங்க, இமையவர் அலக்கணுற்றார். 186-3

கரடியின் சேனையோடு கவிக் குலத் தானை எல்லாம்
தரைப் பட, சரத்தின் மாரித் தசமுகன் சிறுவன்-சீற,
கரை அறு கவியின் சேனைத் தலைவர்கள் கனலின் பொங்கி,
வரையொடு மரமும் கல்லும் வாங்கினர், விரைவின் வந்தார்.
186-4

வானரத் தலைவர் பொங்கி வருதலும், அரக்கன் மைந்தன்,
போன திக்கு அறிவுறாமல், பொழிந்திடும் பகழிதன்னால்
ஆனவர் உடலம் முற்றும் அழித்தனன்; குருதி பொங்க,
தான் அறிவு அழிந்து, யாரும் தனித் தனி தலத்தின் வீழ்ந்தார்.
186-5

திசை முகம் கிழிய, தேவர் சிரம் பொதிர் எறிய, திண் தோள்
தசமுகன் சிறுவன், பின்னும், தடஞ் சிலை குழைய வாங்கி,
விசை கொள் நாண் எறிந்து, மேன்மேல் வெங் கவித் தானை வெள்ளம்
பசை அறப் புலர்ந்து போகப் பொழிந்தனன், பகழி மாரி.
186-6

'வீரருக்கு ஒருவரான விறல் அதிகாயன் வெம் போர்
ஆர் இனித் தடுக்க வல்லார்?' எனப் பதைத்து, அமரர் எல்லாம்
சோர்வுறத் துளங்கி, நில்லாது ஓடினர்; சுடரும் வை வேல்
போர் வலி அரக்கன் சேனை புகுந்தது, கடலின் பொங்கி 186-7

அங்கதன் தோளில் நின்ற அண்ணல், ஆங்கு அதனைக் கண்டே,
செங் கையில் பிடித்த வீரச் சிலையை நாண் எறிந்து, தீரா
வெங் கொலை அரக்கன் விட்ட கணை எலாம் விளிய வீசி,
துங்க வேல் நிருதர் சேனை துணி படச் சொரிந்தான், வாளி.
186-8

உரை பெறு புவனம் மூன்றும் ஒழிந்திடும் காலத்து, ஏழு
கரு முகில் பொழிவதென்னக் கணை மழை சொரிந்து, காலாள்
இரதமொடு இபங்கள் வாசி யாவையும் களத்தின் வீழ்த்தி,
பொரு திறல் அரக்கனோடும் புகுந்து, அமர் கடிதின் ஏற்றான்.
186-9

புரம் எரித்துடைய புத்தேள் முதலிய புலவர் உள்ளம்
திரிதர, அரக்கன் சீறி, திண் சிலை குழைய வாங்கி,
எரி முகப் பகழி மாரி இடைவிடாது அனந்த கோடி
சொரிதர, அனுமன் ஆதி வீரர்கள் சோர்ந்து வீழ்ந்தார். 195-1

வில்லினுக்கு ஒருவன் ஆகி, உலகு ஒரு மூன்றும் வென்ற
வல் அதிகாயன் என்னும் வாள் எயிற்று அரக்கன் ஓயான்,
கல் இடும் மாரி என்னக் கணை மழை பொழியக் கண்ட
வில்லியும், விடாது, வெய்ய கணை மழை விலக்கி நின்றான்.
203-1

விறல் அதிகாயன் வீழ, வெந் திறல் அரக்கன் மைந்தர்
குறுகினர், மும்மையான ஆயிர கோடி உள்ளார்;
எறி கடற் சேனையோடும் எங்கணும் இரிய ஆர்த்து,
செறிய எண் திசையும் வந்து சூழ்ந்தனர், தெழிக்கும் சொல்லார்.
207-1

வருதலும் அரக்கன், மற்று(அவ்) வானரச் சேனை பின்னும்
பொரு சினம் திருகி முற்றா, பொங்கு அழல் என்னப் பொங்கி,
மரமொடு மலைகள் ஏந்தி, மாதிரம் மறைய, வல்லே
உரும் எனச் சொரிய வீசி உடற்றினர், ஒழிவு இலாதார். 209-1

மற்றும் திறல் வானர வீரர்கள் யாரும்,
கொற்றம் கொள் இராவணன் மைந்தர் குலைந்தே
முற்றும்படி மோதினர்; மோத முடிந்தே
அற்று, அங்கு அவர் யாவரும் ஆவி அழிந்தார். 250-1

அளப்பு இல மைந்தர் எல்லாம், ஆனை, தேர், பரி, ஆள் என்னும்
வழக்குறும் சேனை வெள்ளம் அளப்பு இல மடிய, தாமும்
களத்திடைக் கவிழ்ந்தார் என்ற மொழியினைக் காதில் கேளா,
துளக்கம் இல் அரக்கன், மேருத் துளங்கியது என்ன, சோர்ந்தான். 261-1

18 நாகபாசப் படலம்

எரி முகப் பகழி மாரி தொடுத்து, இகல் அரக்கன் எய்தான்;
எரி முகப் பகழி மாரி தொடுத்து, அவை இறுத்தான், எந்தை;
உரும்இனப் பகழி மாரி உருத்து விட்டு, அரக்கன் ஆர்த்தான்;
உரும்இனப் பகழி மாரி உருத்து விட்டு, இளவல் கொன்றான்.
106-1

நெருக்கி மற்று அனந்த கோடி நெடுங்
கணை அரக்கன் கோத்தான்;
நெருக்கி மற்று அனந்த கோடி நெடுங்
கணை நிமலன் மாய்த்தான்;
முருக்கின் உற்று அனந்த கோடி முகைக்
கணை அரக்கன் மொய்த்தான்;
முருக்கின் உற்று அனந்த கோடி முகைக்
கணை முடித்தான், மொய்ம்பன். 106-2

சிந்து வாளி செறிதலும், சேவகன்
ஐந்து நூறு கடுங் கணையால் அவன்
உந்து தேரை ஒறுத்தனன்; வெய்யவன்
வந்து தேர் ஒன்றின் வல்லையில் ஏறினன். 128-1

அழித்தனன் தடந் தேர் என்று அழன்று, தீ
விழித்தனன்; கடு நெஞ்சம் வெகுண்டு எழத்
தெழித்தனன்; சிலையால் திறல் வாளிகள்
கொழித்தனன்; இமையோர் மெய் குலுங்கினர். 148-1

அங்கதன் தடந் தோளினும் மார்பினும்
புங்க வாளி புகப் புக, தேர் எதிர்,
சிங்கஏறு அனையான் திரள் தோள்வரை
மங்க, வேறு ஓர் மராமரம் வீசினன். 148-2

மல் திண் தோளின் அடித்த மராமரம்
இற்று நூறு திறத்தது, இமைப்பிலோர்
பொன் திண் தேர்மிசைத் தாவினன் பொங்கெலி
முற்று நாளில் முயற்சி முரஞ்சவே. 148-3

கண்ட வாலிதன் காதலனும், கனல்
விண்டதாம் என வெஞ் சினம் உற்றவன்
மண்டு தேர்மிசையில், குதியா வலி
கொண்டு, வான் இடிஏறு எனக் குத்தினன். 148-4

குத்தி, மற்று அவன் கொய் உளை மாப் பரி
பத்தி பத்தியின் வீழ, பரிந்து எதிர்
தத்தி, வல் வில் தடக் கையினல், சரம்
வித்துராமுனம் வீழ்த்தினன், தேர்அரோ. 148-5

மாறு ஓர் தேரின் மடங்கல் என, கனன்று
ஏறினன், சரம் எண்-இரண்டு ஏவினன்;
ஊறு சோரி சொரிய, உயக்கம் உற்று,
ஆறினன் கடிது, அங்கதன் ஆண்மையான். 148-6

கோல் கொள் ஆளும் பரியும் குழம்பதாய்,
காலின் நூறி, கரங்களின் மற்று அவன்
தாலு மூலத்து அடிப்ப, தனு வலான்,
மால் உழந்தவர் போல மயங்கினன். 148-7

பல் ஆயிரத்தின் முடியாத பக்கம் அவை வீச வந்த படர் கால்
செல்லா நிலத்தின் அருளோடு செல்ல, உடல் நின்ற வாளி சிதறற்று,
எல்லாம் அவித்தும் உணர்வோடும் எண்ணி, அறனே விளக்கும் உரவோன்,
வல்லான் ஒருத்தன், இடையே படுத்த வடு ஆன, மேனி வடுவும். 264-1

பறவை நாயகன்தான் ஏக, படர் உறு துயரம் நீங்கி,
கறவையும் கன்றும் போலக் களிக்கின்ற மனத்தர் ஆகி,
இறைவனும் இளைய கோவும் யாவரும் எழுந்து நின்றார்;
மறை ஒரு நான்கும், மண்ணும், வானமும், மகிழ்ந்த மாதோ.
270-1

இரு நிலம் கிழிய, பாயும் எறி கடல் இரைப்புத் தீர,
பரவும் எண் திசையைத் தாங்கும் பகட்டினம் இரியல் போக,
கரு வயிறு உடைந்து சிந்தி அரக்கியர் கலங்கி வீழ,
அரு வரை அண்டகோளம் பிளக்க, நின்று, அனுமன் ஆர்த்தான்.
273-1

## 19 படைத் தலைவர் வதைப் படலம்

'அளப்ப அரும் வெள்ளச் சேனை நமர் திறத்து அழிந்தது அல்லால்,
களப்படக் கிடந்தது இல்லை, கவிப் படை ஒன்றதேனும்;
இளைப்புறும் சமரம் மூண்ட இற்றை நாள்வரையும், என்னே
விளைப்ப அரும் இகல் நீர் செய்து வென்றது, விறலின் மிக்கீர்!
1-1

'இகல் படைத் தலைவர் ஆய எண்பது வெள்ளத்து எண் இல்
தொகைப்பட நின்றோர் யாரும் சுடர்ப் படை கரத்தின் ஏந்தி,
மிகைப்படும் தானை வெள்ளம் ஈர்-ஐந்தோடு ஏகி, வெம் போர்ப்
பகைப் பெருங் கவியின் சேனை படுத்து, இவண் வருதிர்' என்றான். 1-2

'மன்னவர் மன்னவ! மற்று இது கேண்மோ!
துன்னும் அரக்கரின் வீரர் தொகைப்பட்டு
உன்னிய நாற்பது வெள்ளமும் உற்று, ஆங்கு
அந் நரன் அம்பினில் ஆவி அழிந்தார். 16-1

மத்த மதக் கரியோடு மணித் தேர்,
தத்துறு வாசி, தணப்பு இல காலாள்,
அத்தனை வெள்ளம் அளப்பு இல எல்லாம்,
வித்தக மானிடன் வாளியின், வீந்த. 16-2

இப் படையோடும் எழுந்து இரவின்வாய்
வெப்பு உறு வன் கவி வீரர்கள் ஓதை
எப் புறமும் செவிடு உற்றதை எண்ணி,
துப்புறு சிந்தையர் (வீரர்) தொடர்ந்தார். 20-1

தேர் நிரை சென்றது; திண் கரி வெள்ளக்
கார் நிரை சென்றது; கால் வய வாசித்
தார் நிரை சென்றது; தாழ்வு அறு காலாள்
பேர் நிரை சென்றது; பேசுவர் யாரே? 22-1

'ஐய! கேள்: சிவன் கை வாள் கொண்டு, அளப்ப அரும் புவனம் [காக்கும்
வெய்யவன் வெள்ளச் சேனைத் தலைவரின் விழுமம் பெற்றோர்,
கை உறும் சேனையோடும் கடுகினர் கணக்கிலாதோர்,
மொய் படைத் தலைவர்' என்று, ஆங்கு அவர் பெயர் மொழியலுற்றான். 29-1

'இன்னவர் ஆதியர் அளப்பிலோர்; இவர்
உன்ன அருந் தொகை தெரிந்து உரைக்கின், ஊழி நாள்
பின்னரும் செல்லும்' என்று ஒழியப் பேசினான்;
அன்ன போர் அரக்கரும் களத்தை அண்மினார். 35-1

கொடுமரத்திடை இராகவன் கோத்த வெம் பகழி
அடல் அரக்கர் என்று உரைத்திடும் கானகம் அடங்கக்
கடிகை உற்றதில் களைந்தது கண்டு, விண்ணவர்கள்,
'விடியலுற்றது நம் பெருந் துயர்' என வியந்தார். 58-1

வெற்றி வெம் படைத் தலைவர் என்று உரைத்திடும் வெள்ளத்து
உற்ற போர் வலி அரக்கர்கள், ஒரு தனி முதல்வன்
கொற்ற வெஞ் சரம் அறுத்திட, அளப்பு இலர் குறைந்தார்;
மற்றும் நின்றவர் ஒரு திசை தனித் தனி மலைந்தார். 67-1

தேர் போய் அழிவுற்றது எனத் தெளியா,
போர் மாலி பொருந்து தரைப்பட, முன்
ஓர் மா மரம் நீலன் உரத்தொடு கொண்டு
ஏர் மார்பிடை போக எறிந்தனனால். 81-1

அப் போது அழல் வேள்வி அடல் பகைஞன்,
வெப்பு ஏறிய வெங் கனல் போல வெகுண்டு,
'இப் போர் தருக!' என்ற இலக்குவன்மேல்
துப்பு ஆர் கணை மாரி சொரிந்தனனால். 85-1

சொரி வெங் கணை மாரி தொலைத்து, இரதம்
பரி உந்திய பாகு படுத்து, அவன் வெம்
பொரு திண் திறல் போக, இலக்குவன் அங்கு
எரி வெங் கணை மாரி இறைத்தனனால். 85-2

முடிவுற்றனன், மாருதி மோதுதலால்,
கொடு வச்சிர எயிற்றன் எனும் கொடியோன்;
விடம் ஒத்த பிசாசன் விறற் பனச-
னொடும் உற்று, இருவோரும் உடன்றனரால். 92-1

பொர நின்ற பணைப் புய வன் பனசன்
நிருதன் களமீது நெருக்கி, அதில்
பரி வெள்ளம் அளப்பு இல பட்டு அழியத்
தரு அங்கை கொடே எதிர் தாக்கினனால். 92-2

பனசன் அயர்வுற்று ஒருபால் அடைய,
தனி வெம் பரி தாவு நிசாசரன் வெங்
கனல் என்ன வெகுண்டு, கவிப் படையின்
இனம் எங்கும் இரிந்திட, எய்தினனால். 93-1

விசை கண்டு உயர் வானவர் விண் இரிய,
குசை தங்கிய கோள் என, அண்டமொடு எண்
திசை எங்கணும் நின்று திரிந்துளதால்—
பசை தங்கு களத்து ஒரு பாய் பரியே. 96-1

மற்றும் படை வீரர்கள் வந்த எலாம்
உற்று அங்கு எதிரேறி உடன்று, அமர்வாய்
வில் தங்கும் இலக்குவன் வெங் கணையால்,
முற்றும் முடிவு எய்தி முடிந்தனரால். 100-1

20 மகரக்கண்ணன் வதைப் படலம்

இந்திரியத்தை இகழ்ந்தவன், அந்தோ!
மந்திர வெற்றி வழங்க வழங்கும்
இந்திரம் அற்றது எனக் கடிதிகொல்?
வந்தது என், வில் தொழிலைக் கொலை மான? 5-1

அம்புயக் கண்ணன் கண்டத்து ஆயிரம் பகழி நாட்டி,
தம்பிதன் கவசமீதே இரட்டி சாயகங்கள் தாக்கி,
வெம்பு இகல் அனுமன்மீதே வெங் கணை மாரி வித்தி,
உம்பர்தம் உலகம் முற்றும் சரங்களாய் மூடி உய்த்தான். 19-1

'இந்திரன் பகைஞன் போல இவனும் ஓர் மாய வீரன்;
தந்திரக் குரக்குச் சேனை உளது எலாம் தரையின் வீழ்த்தான்;
எந்திரம் ஆகிப் பார்த்த இடம் எலாம் தானே ஆனான்;
அந்தரம் அவனோடு ஒப்பார் ஆர்?' என அமலன் சொன்னான். 29-1

மற்று அவன் இறத்தலோடும், மறைகளும் தேடிக் காணுக்
கொற்றவன் சரத்தின் மாரி கடையுக மழையின் கொள்ளப்
பற்றி, அங்கு அரக்கர் தானை வெள்ளம் அத்தனையும் பாரில்
அற்றவை அழிந்து சிந்த அறுத்து, ஒரு கணத்தில் மாய்த்தான், 31-1

மடிந்தனன் சிங்கன் என்னும் மறம் தரு வயிரத் தோளான்;
தொடர்ந்தனர் அரக்கர், பின்னும்; தொடர்ந்தவர்தம்மை எல்லாம்
கடந்தனர், கவியின் வீரர்; களத்திடைக் கணத்தில் மாய்த்தார்;
நெடுந் திரைப் பரவைமீது நிறைந்தது, குருதி நீத்தம். 38-1

## 21 பிரமாத்திரப் படலம்

தலைகளை நோக்கும்; தான் தன் சரங்களை நோக்கும்; தன் கைச்
சிலையினை நோக்கும்; செம் பொன் தேரினை நோக்கும்; செய்த
கொலைகளை நோக்கும்; கொன்ற கொற்றவர் தம்மை நோக்கும்;
அலை பொரும் குருதி என்னும் அளக்கரை அமைய நோக்கும்.
25-1

ஆர்த்த வானரர் வாய் எலாம் கை எலாம் அசைய,
பார்த்த கண் எலாம் அங்கதன் உடல் எலாம் பாரில்
சீர்த்த வீரியன் இளையவன் இராமன்மேல் செறிய,
தூர்த்த வாளியன் சிலையொடும் விசும்பினைத் தொடர்ந்தான்.
77-1

இன்னது இவ் வழி நிற்க, மற்று இருஞ் சமர்க்கு உடைந்தே,
துன்னு வான் வழி இலங்கையில் போகின்ற தோன்றல்,
பொன்னின் வார் சிலைக் கரத்தொடும் பொருக்கெனப் புகுந்து,
தன்னை ஈன்றிடும் ஒரு தனித் தந்தையைக் கண்டான். 88-1

மாண்டனன் அகம்பன், மண்மேல்; மடிந்தன, நிருதர் சேனை,
மீண்டனர், குரக்கு வீரர்; விழுந்தன, சினக் கை வேழம்;
தூண்டின கொடித் தேர்; அற்றுத் துணிந்தன, தொடுத்த வாசி;—
ஆண்தகை இளைய வீரன் அடு சிலை பொழியும் அம்பால். 137-1

அருந் திறல் அகம்பன் ஆதி அரக்கரோடு, அளவு இல் ஆற்றல்
பொரும் திறல் களிறு, காலாள், புரவி, தேர், அளப்பு இல் கோடி,
இரிந்திடக் கொன்று, தான் அங்கு ஒரு திசை, யாரும் இன்றிப்
பொருந்திய இருளின் பொம்மல் பொலிய, மாருதியும் நின்றான்.
140-1

'தோடு அவிழ் அலங்கல் என் சேய்க்கு உணர்த்துமின்' என்னச் சொன்
ஓடினார் சாரர்; வல்லை உணர்த்தினர்; துணுக்கம் எய்தா, [னான்;
ஆடவர் திலகன், 'யாண்டையான் இகல் அனுமன்? ஏனோர்,
வீடணன், யாங்கண் உள்ளார்? உணர்த்துமின்' விரைவின் என்றான்.
157-1

தந்தை இறந்தும், தாயர் பிரிந்தும், தலம் விட்டும்,
பின் தனி மேவும் மாது பிரிந்தும், பிரிவு இல்லா
எம் துணை நீ என்று இன்பம் அடைந்தேன்; இது காணேன்;
வந்தனென், எம்பி! வந்தனென், எந்தாய்! இனி வாழேன்! 202-1

## 22 சீதை களம் காண் படலம்

அயன் சிவன் அறிவுரு ஆதி நாயகன்,
வியன் கர நேமி அம் படை அவ் வெற்பினை
நியங்கொடு தாங்கி விண் நின்றதால்; அதில்
இயங்கிய ஊதை வெங் களத்தின் எய்தவே. 99-1

சூர் எலாம் திரண்ட பொன்-தோள் தாபதர்க்கு இளைய தோன்றல்
நீர் எலாம் மறந்தீர் போலும்; யான் செரு ஏற்று நின்று,
கார் எலாம் சொரிவது என்னும் கணைகளால் கவியின் வெள்ளம்
போர் எலாம் மடிந்து நூறி, இறத்தலும் இருகால் பெற்றீர். 84-1

'விடு வாளிகள் கடிது ஓடுவ; வீற்று ஆகுவ; வீயா
நெடு நாணிடை சிதையாதவர், நேர் ஏவிய விசிகம்,
தொடு கார் விசை நுழையா, எதிர் மீளாது, இடை சோரா,
எடு பாணமும் அழியா, முதுகு இடு தூணியை அறுத்தான்.'
126-1

அரு ஆகியும், உரு ஆகியும், அழியா முழுமுதல் ஆம்
கரு ஆகியும், எமை ஆளுறு கருணாகர வடிவாம்
பொருள் ஆகியும், இருள் ஆகியும், ஒளி ஆகியும், பொலியும்
திருமார்பினன் நெடு மாயையை யாரே தெரிந்து அறிவார்?
142-1

ஈது அங்கு அவை நெடு வானிடை நிகழ்கின்றது; இப்பாலில்
காதும் கொலை அரக்கன் அது கண்டான்; 'தகை மலர்மேல்
போதன் தரு படை போக்கினன் போலாம்' எனப் புகைந்தான்; [பான்.
ஏது இங்கு இவன் வலி நன்று; மற்று இது காண்பென்' என்று இசைப்
144-1

உமை பற்றிய பாகன் முதல் இமையோர் பல உருவம்
சமைவுற்றது தான் அல்லது ஓர் பொருள் வேறு இலது எனவே
அமைவுற்றது, பகிரண்டமும் அழிகாலம் இது எனவே
குமைவுற்றிட, வடவைப் பொறி கொழிக்கின்றது, எவ் உலகும். 145-1

## 27 இந்திரசித்து வதைப் படலம்

என்று அவன் இகழ்ந்தது எல்லாம் இந்திரசித்து கேளான்,
நன்று நம் ஆணை என்னு, நகைசெய்யா, அவனைப் பார்த்து,
'கொன்று நான் இருவர்தம்மைக் குரக்குஇனத்தோடும் மாய்த்து,
வென்று நான் வருவன்,—எந்தாய்!—கேள்' என, விளம்பலுற்றான்.
10-1

'வாசக் குழலாள் மயில் சீதையை நீ
ஆசைப்படுகின்றது நன்று அல காண்;
நாசத்தை உறும், உயிர் போய்; நானே
நேசப்படுகின்றனன்' என்றனனே. 10-2

'சிறியோர் செயல் துன்மதி செய்தனை நீ;
வெறி ஆர் குழல் சீதையை விட்டு அகல,
செறி ஆர் மணி மாளிகை சேர் தரு, நின்
அறியாமையினால் அழிவானதுவே. 10-3

'வண்டு ஆர் குழலார் மலர்மாதினை நீ
கண்டே மனம் வைப்பது கற்பிலகாண்;
வீண்டே எதிர் வாலிதன் மார்பு உருவக்
கண்டோன் அவனே, கணை ஒன்றதனால். 10-4

'ஆரே, பிறர் தாரம் உறுப்புஅதனில்
நேரே நினைகின்றவர்? நீ நினைவாய்;
பாரே இழிவு ஆனது; தான் நிலையின்
பேரே ஒழிவு ஆனது' என்று சொன்னான். 10-5

'வட்ட மா மதி முகத்து எம் மங்கையை மூக்கு அரிந்த
கட்ட மானிடவர்தங்கள் கை வலி காட்டினாலும்,
இட்ட நாள் எல்லைதன்னை யாவரே விலக்க வல்லார்?
பட்டு, நான் விழுந்தால் அன்றி, பாவையை விடுவது உண்டோ
11-1

'பழுது இலா வடிவினாளை, பால் அன்ன மொழியினாளை,
தழுவினால் அன்றி, ஆசை தவிருமோ? தவம் இலாதாய்!
முழுதும் வானவரை வென்றேன்; மூவர் என் முன் நில்லார்கள்;
அழிவுதான் எனக்கும் உண்டோ? ஆண் அலாய்; பேடி!' என்றான். 11-2

சிறு தொழிற்கு உரியர் ஆகி, தீவினைக்கு உறவாய் நின்ற
எறி படை அரக்கர் என்னும் எண் இலா வெள்ளச் சேனை
மறி திரைக் கடலின் போத, வான் முரசு இயம்ப, வல்லே,
தெறு சினத்து அரக்கன், வானோர் திகைத்து உளம் குலைய, சென்றான்.
16-1

அச்சு எனலாக முன்பின் தோன்றலும், அருத மெய்யன்
தச்சன பகழி மாரி எண்ணல்ஆம் தகவும் தத்தி
பச்செனும் மரத்தவாறு பெருக்கவும், பதையாநின்றான்,
நிச்சயம் போரில் ஆற்றல் ஒய்வு இலன்; நெஞ்சும் அஞ்சான்.
30-1

'வான் தலை எடுக்க, வேலை மண் தலை எடுக்க, வானோர்
கோன் தலை எடுக்க, வேதக் குலம் தலை எடுக்க, குன்றாத்
தேன் தலையெடுக்கும் தாராய்! தேவரை வென்றான் தீய
ஊன் தலை எடுத்தாய், நீ' என்று உரைத்தனர், உவகை மிக்கார்
62-1

## 28 இராவணன் சோகப் படலம்

தொழும்புசெய்து உளர் ஆம் தேவர் துயரினர் போலத் தாமும்
பழங்கண் உற்று, உடைய வேந்தன் இணை அடி விடாது பற்றி,
உளம் களிப்புறுவோர் ஓயாது அழுதனர்; மைந்தன் ஆவி
இழந்தனன் என்னக் கேட்டு, ஆங்கு, இடி உறும் அரவை ஒத்தாள்.
43-1

சூர் எலாம் திரண்ட பொன்-தோள் தாபதர்க்கு இளைய தோன்றல்
நீர் எலாம் மறந்தீர் போலும்; யான் செரு ஏற்று நின்று,
கார் எலாம் சொரிவது என்னும் கணைகளால் கவியின் வெள்ளம்
போர் எலாம் மடிந்து நூறி, இறத்தலும் இருகால் பெற்றீர். 84-1

'விடு வாளிகள் கடிது ஓடுவ; வீற்று ஆகுவ; வீயா
நெடு நாணிடை சிதையாதவர், நேர் ஏவிய விசிகம்,
தொடு கார் விசை நுழையா, எதிர் மீளாது, இடை சோரா,
எடு பாணமும் அழியா, முதுகு இடு தூணியை அறுத்தான்.'
126-1

அரு ஆகியும், உரு ஆகியும், அழியா முழுமுதல் ஆம்
கரு ஆகியும், எமை ஆளுறு கருணாகர வடிவாம்
பொருள் ஆகியும், இருள் ஆகியும், ஒளி ஆகியும், பொலியும்
திருமார்பினன் நெடு மாயையை யாரே தெரிந்து அறிவார்?
142-1

ஈது அங்கு அவை நெடு வானிடை நிகழ்கின்றது; இப்பாலில்
காதும் கொலை அரக்கன் அது கண்டான்; 'தகை மலர்மேல்
போதன் தரு படை போக்கினன் போலாம்' எனப் புகைந்தான்; [பான்.
ஏது இங்கு இவன் வலி நன்று; மற்று இது காண்பென்' என்று இசைப்
144-1

உமை பற்றிய பாகன் முதல் இமையோர் பல உருவம்
சமைவுற்றது தான் அல்லது ஓர் பொருள் வேறு இலது எனவே
அமைவுற்றது, பகிரண்டமும் அழிகாலம் இது எனவே
குமைவுற்றிட, வடவைப் பொறி கொழிக்கின்றது, எவ் உலகும். 145-1

## 27 இந்திரசித்து வதைப் படலம்

என்று அவன் இகழ்ந்தது எல்லாம் இந்திரசித்து கேளான்,
நன்று நம் ஆணை என்னு, நகைசெய்யா, அவனைப் பார்த்து,
'கொன்று நான் இருவர்தம்மைக் குரக்குஇனத்தோடும் மாய்த்து,
வென்று நான் வருவன்,—எந்தாய்!—கேள்'என, விளம்பலுற்றான்.
10-1

'வாசக் குழலாள் மயில் சீதையை நீ
ஆசைப்படுகின்றது நன்று அல காண்;
நாசத்தை உறும், உயிர் போய்; நானே
நேசப்படுகின்றனன்' என்றனனே. 10-2

'சிறியோர் செயல் துன்மதி செய்தனை நீ;
வெறி ஆர் குழல் சீதையை விட்டு அகல,
செறி ஆர் மணி மாளிகை சேர் தரு, நின்
அறியாமையினால் அழிவானதுவே. 10-3

'வண்டு ஆர் குழலார் மலர்மாதினை நீ
கண்டே மனம் வைப்பது கற்பிலகாண்;
விண்டே எதிர் வாலிதன் மார்பு உருவக்
கண்டோன் அவனே, கணை ஒன்றதனால். 10-4

'ஆரே, பிறர் தாரம் உறுப்புஅதனில்
நேரே நினைகின்றவர்? நீ நினைவாய்;
பாரே இழிவு ஆனது; தான் நிலையின்
பேரே ஒழிவு ஆனது' என்று சொன்னான். 10-5

'வட்ட மா மதி முகத்து எம் மங்கையை மூக்கு அரிந்த
கட்ட மானிடவர்தங்கள் கை வலி காட்டினாலும்,
இட்ட நாள் எல்லைதன்னை யாவரே விலக்க வல்லார்?
பட்டு, நான் விழுந்தால் அன்றி, பாவையை விடுவது உண்டோ
11-1

'பழுது இலா வடிவினாளை, பால் அன்ன மொழியினாளை,
தழுவினால் அன்றி, ஆசை தவிருமோ? தவம் இலாதாய்!
முழுதும் வானவரை வென்றேன்; மூவர் என் முன் நில்லார்கள்;
அழிவுதான் எனக்கும் உண்டோ? ஆண் அலாய்; பேடி!' என்றான். 11-2

சிறு தொழிற்கு உரியர் ஆகி, தீவினைக்கு உறவாய் நின்ற
எறி படை அரக்கர் என்னும் எண் இலா வெள்ளச் சேனை
மறி திரைக் கடலின் போத, வான் முரசு இயம்ப, வல்லே,
தெறு சினத்து அரக்கன், வானோர் திகைத்து உளம் குலைய, சென்றான்.
16-1

அச்சு எனலாக முன்பின் தோன்றலும், அருத மெய்யன்
தச்சன பகழி மாரி எண்ணல்ஆம் தகவும் தத்தி
பச்செனும் மரத்தவாறு பெருக்கவும், பதையாநின்றான்,
நிச்சயம் போரில் ஆற்றல் ஒய்வு இலன்; நெஞ்சும் அஞ்சான்.
30-1

'வான் தலை எடுக்க, வேலை மண் தலை எடுக்க, வானோர்
கோன் தலை எடுக்க, வேதக் குலம் தலை எடுக்க, குன்றாத்
தேன் தலையெடுக்கும் தாராய்! தேவரை வென்றான் தீய
ஊன் தலை எடுத்தாய், நீ' என்று உரைத்தனர், உவகை மிக்கார்
62-1

## 28 இராவணன் சோகப் படலம்

தொழும்புசெய்து உளர் ஆம் தேவர் துயரினர் போலத் தாமும்
பழங்கண் உற்று, உடைய வேந்தன் இணை அடி விடாது பற்றி,
உளம் களிப்புறுவோர் ஓயாது அழுதனர்; மைந்தன் ஆவி
இழந்தனன் என்னக் கேட்டு, ஆங்கு, இடி உறும் அரவை ஒத்தாள்.
43-1

உம்பரின் உலவும் தெய்வ உருப்பசி முதல ஆய
ஐம்பது கோடி தெய்வத் தாதியர் அழுது சூழ்ந்தார்;
தும்பியின் இனத்தை எல்லாம் தொலைத்திடும் குருளை மாய,
கம்பம் உற்று, அரியின் பேடு கலங்கியது என்னச் சோர்ந்தாள்.
43-2

பத்து எனும் திசையும் வென்று, கயிலையில் பரனை எய்தி,
அத் தலை அமர் செய்து, ஆற்றான்; அவன் இடத்து உமை அன்பால் தன்
கைத்தலக் கிளி நிற்கு ஈய, கவர்ந்து எனக்கு அளித்து நின்ற
வித்தகக் களிறே! இன்னும் வேண்டினேன், எழுந்திராயே!
50-1

'மஞ்சு அன மேனி வள்ளல் வளரும் நாள், மன்னர் தோள் சேர்
நஞ்சு அன விழியால் அன்றி, நகை மணிப் புதல்வர், நல்லோர்,
செஞ் சிலை மலரால் கோலித் திரிந்தவா என்னில், செல்லும்
வெஞ் சமர் இன்னும் காண வல்லனோ விதி இலாதேன்!' 52-1

29 படைக் காட்சிப் படலம்

தொல்லை சேர் அண்ட கோடித் தொகையில் மற்று அரக்கர் சேனை
இல்லையால் எவரும்; இன்னே எய்திய இலங்கை என்னும்
மல்லல் மா நகரும் போதா; வான் முதல் திசைகள் பத்தின்
எல்லை உற்றளவும்நின்று, அங்கு எழுந்தது, சேனை வெள்ளம்
2-1

மேய சக்கரப் பொருப்பிடை மேவிய திறலோர்,
ஆயிரத் தொகை பெருந் தலை உடையவர், அடங்கா
மாயை கற்றவர், வரத்தினர், வலியினர், மறப் போர்த்
தீயர், இத் திசை வரும் படை அரக்கர்—திண் திறலோய்!
22-1

சீறு கோள் அரி முகத்தினர்; திறற் புலி முகத்து ஐஞ்-
ஞூறு வான் தலை உடையவர்; நூற்றிதழ்க் கமலத்து
ஏறுவான் தரும் வரத்தினர்; ஏழ் பிலத்து உறைவோர்;
ஈறு இலாத பல் அரக்கர்; மற்று எவரினும் வலியோர். 25-1

சாலும் மா பெருந் தலைவர்கள் தயங்கு எரி நுதற் கண்
சூலபாணிதன் வரத்தினர், தொகுத்த பல் கோடி
மேலையாம் அண்டத்து உறைபவர், இவர் பண்டு விறலால்
கோல வேலுடைக் குமரனைக் கொடுஞ் சமர் துரந்தோர்.
27-1

ஆதி அம் படைத் தலைவர்கள், வெள்ளம் நூறு; அடு போர்
மோது வீரர், மற்று ஆயிர வெள்ளம்; மொய் மனத்தோர்,
'காது வெங் கொலைக் கரி, பரி, கடுந் திறல் காலாள்,
ஓது வெள்ளம் மற்று உலப்பு இல கோடி' என்று உரைப்பார்;
30-1

அன்னது அன்றியும், ஆழி நீர்க்கு அப் புறத்து உலகில்,
துன்னுறும் சத கோடி வெள்ளத் தொகை அரக்கர்-
தன்னை ஓர் கணத்து எரித்தது, சலபதி வேண்ட,
மன் இராகவன் வாளி ஒன்று; அவை அறிந்திலிரோ? 43-1

30 மூலபல வதைப் படலம்

போனபின், பல புவனம் என்று உரைக்கின்ற பொறை சேர்
ஆன அண்டங்கள் எவற்றினும் அமர்ந்திடும் மூலத்
தானை தன்னையும், 'எழுக' எனச் சாற்றினர்—தறுகண்
கோன் உரைத்தமை தலைக்கொளும் கொடும் படைத்தலைவர்.
3-1

மூன்றின் நூற்றினோடு ஆயிரம் மூள்வன வெள்ளம்
ஆன்ற தேர், பரி, கரியவை, ஆளையும், அடங்கி,
மூன்று லோகமும் முற்றும் போய் முடிவுறும் என்ன
ஏன்று சென்றது, அவ் இராமன்மேல், இராக்கதப் பரவை. 23-1

'தான் அல்லாது ஒரு பொருள் இலை எனத் தகும் முதல்வன்-
தான் இராமன் என்று எழில் உரு எடுத்ததும் தவறோ?
தான் எம்மோடு பல் புவனங்கள் தனி வயிற்று அடக்கும்
தானம் மேவினர்க்கு இவர் ஒரு பொருள் எனத் தகுமோ? 26-1

'நின்று காண்குதிர், இறைப் பொழுது; இங்கு நீர் வெருவல்;
இன்று இராகவன் பகழி மற்று இராக்கதப் புணரி
கொன்று வற்றிடக் குறைத்து உயிர் குடிக்கும்' என்று அமரர்க்கு
அன்று முக்கணன் உரைத்தல் கேட்டு, அவர் உளம் தெளிந்தார். 26-2

வானின் மேவிய அமரருக்கு இத் துணை மறுக்கம்
ஆனபோது, இனி அகலிடத்து உள்ள பல் உயிர்கள்
ஈனம் எய்தியது இயம்பல் என்? எழுபது வெள்ளத்
தானை ஆகிய கவிப் படை சலித்தது, பெரிதால். 26-3

வாய் உலர்ந்தன சில சில; வயிறு எரி தவழ்வுற்று
ஓய்தல் உந்தின சில சில; ஓடின நடுங்கிச்
சாய்தல் உந்தின சில சில; தாழ் கடற்கு இடையே
பாய்தல் உந்தின சில சில—படர் கவிப் படைகள். 29-1

அனுமன் ஆற்றலும், அரசனது ஆற்றலும், இருவர்
தனுவின் ஆற்றலும், தங்களைத் தாங்குவர் தாங்கார்,
'கனியும் காய்களும் உணவு உள; மலை உள காக்க;
மனிதர் ஆளில் என், இராக்கதர் ஆளில் என், வையம்?' 44-1

என்று, சாம்பவன் முதலிய தலைவர்கள் இயம்ப,
குன்று உலாம் புயத்து அங்கதன் குறுநகை புரிந்தே,
'நன்று நும் உரை; நாயகர்ப் பிழைத்து, நம் உயிர்கொண்டு,
ஒன்றி வாழ்தலும் உரிமையதே?' என உரைப்பான். 44-2

'ஆளி மா முகவர், சீறும் அடு புலி முகவர், மிக்க
யாளி மா முகவர், யானை முகவர், மற்று எரியும் வெங் கண்
கூளி மா முகவர் ஆதி அளப்பு இல கோடி உள்ளார்;
ஊழி சென்றாலும் உட்கார்; ஒருவர் ஓர் அண்டம் உண்பார்.
52-1

என்று எடுத்து, எண்ணின் தானைக்கு இறையவன் இயம்பலோடும்,
வன் திறல் குலிசம் ஓச்சி, வரைச் சிறகு அரிந்து, வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ அமர்ந்தென, மதத் திண் குன்றில்
நின்றவன் அளித்த மைந்தன் மகன் இவை நிகழ்த்தலுற்றான்
54-1

'இசைந்தனன் அமருக்கு; எல்லா உலகமும் இமைப்பின் வாரிப்
பிசைந்து, சிற்றுதரத்து உண்ணப்பெற்ற நாள் பிடித்த மூர்த்தம்
இசைந்தது போலும்!' என்று, ஆங்கு, அயன் சிவன் இருவர் தத்தம்
வசம் திகழ் கருத்தினூடே மதித்திட, வயங்கி நின்றான். 69-1

மற்றும் வேறு அறத்துள் நின்ற வான நாடு அணைந்துளோர்,
'கொற்ற வில்லி வெல்க! வஞ்ச மாயர் வீக! குவலயத்து
உற்ற தீமை தீர்க, இன்றொடு!' என்று கூறினர்; நிலம்
துற்ற வெம் படைக் கை நீசர் இன்ன இன்ன சொல்லினர்: 72-1

அரைக் கணத்து அரக்கர் வெள்ளம் அளவு இல் கோடி ஆவி போய்த்
தரைப் பட, பல் அண்ட கோடி தகர, அண்ணல்தன் கை வில்
இரைக்கும் நாண் இடிப்பினுக்கு உடைந்து, 'இராம ராம!' என்று
உரைக்கும் நாமமே எழுந்தது, உம்பரோடும் இம்பரே. 76-1

சிரம் ஒடிந்து சிந்தினர்கள் சிலவர்; செஞ் சுடர்ப் படைக்
கரம் ஒடிந்து சிந்தினர்கள் சிலவர்; கல்லை வெல்லு மா
உரம் ஒடிந்து சிந்தினர்கள் சிலவர்; ஊழி காலம் வாழ்
வரம் ஒடிந்து சிந்தினர்கள் சிலவர்;—மண்ணின்மீது அரோ.
76-2

அண்ட கோளம் எண் திசாமுகங்கள் எங்கும் ஆகியே,
மண்டி மூடி வாழ் அரக்கர்தாமும், வாகை வீரன்மேல்,
கொண்டல் எழும், ஊழிவாய், ஓர் குன்றில் மாரி பொழிவபோல்,
சண்ட வேகம் ஏறி, வாளி மழை சொரிந்து தாக்கினர். 83-1

தேரின்மீது அனந்த கோடி நிருதர், சீறு செம் முகக்
காரின்மீது அனந்த கோடி வஞ்சர், காலின் வாவு மாத்
தாரின்மீது அனந்த கோடி தறுகண் நீசர், தாழ்வு இலாப்
பாரின்மீது அனந்த கோடி பதகர், தந்து பற்றினர். 83-2

துடி, தவண்டை, சங்கு, பேரி, துந்துமிக் குலங்கள், கைத்
தடி, துவண்ட ஞாண், இரங்கு தக்கையோடு பம்பை, மற்று
இடி பொதிந்த முரசம் ஆதி எண் இல் பல்லியக் குழாம்
படி நடுங்கவே, பகைக் களத்தின் ஓசை விஞ்சவே. 83-3

இரைத்து அடர்ந்து அரக்கர் வெள்ளம், எண் இல் கோடி, இடைவிடாது
உருத்தல் கண்டு, இராகவன் புன்முறுவல் கொண்டு, ஒவ்வொருவருக்கு
ஒருத்தனுய தன்மை தானும் உணர்வுறுதபடி எழ,
சரத்தின் மாரி பெய்து, அரக்கர் தலை தரைக்கண் வீழ்த்தினுன்
83-4

'நுனித்திடற்கு அருங் கடுப்பின் நொடிவரைக்குள் எங்குமாய்க்
குனித்த வில் கை வாளி மாரி மழை சொரிந்து கோறலால்,
மனித்தன் மற்று ஒருத்தன் என்ற வாய்மை நன்று நன்று' எனு,
வினைத் திறத்து அரக்கர் விம்மிதத்தர் ஆய், விளம்புவார்.
83-5

'விண்ணின்மீது அனந்த கோடி வீரன்' என்பர்; 'அல்ல இம்
மண்ணின்மீது அனந்த கோடி மனிதன்' என்பர்; அல்ல வெங்
கண்ணினூடு அனந்த கோடி கண்ணன்' என்பர்; 'அல்ல உம்
எண்ணமீது அனந்த கோடி உண்டு, இராமன்' என்பரால்.
83-6

இத் திறத்து அரக்கர் வெள்ளம் எங்கும் ஈது இயம்ப, நின்று
எத் திறத்தினும் விடாது, இராமன் எங்கும் எங்குமாய்,
அத் திறத்து அரக்கரோடும், ஆனை, தேர், பரிக் குலம்,
தத்துறச் சரத்தின் மாரியால் தடித்து, வீழ்த்தினுன், 83-7

இடைவிடாது அளப்பு இல் வெள்ளம் இற்று இறந்து போகவும்,
படைவிடாது அரக்கர் ஆளிபோல் வளைந்து பற்றவும்,
கொடைவிடாதவன் பொருள் குறைந்திடாதும் வீதல்போல்,
தொடைவிடாது இராமன் வாளி வஞ்சர்மீது தூவினுன். 83-8

இன்னவாறு இராமன் எய்து, சேனை வெள்ளம் யாவையும்,
சின்னபின்னமாக, நீறு செய்தல் கண்டு, திருகியே,
மின்னு வாள் அரக்கர் வெள்ளம், எண்ணில் கோடி, வெய்தினின்
துன்னி, மூடும் அந்தகாரம் என்ன வந்து சுற்றினுர். 96-1

வானின்மீது அனந்த கோடி மாய வஞ்சர் மண்டினுர்;
ஆனைமீது அனந்த கோடி அடல் அரக்கர் அண்மினுர்;
சோனை மேகம் ஒத்து அனந்த கோடி தீயர் சுற்றினுர்,
மீன வேலை ஒத்து அனந்த கோடி வஞ்சர் மேவினுர். 96-2

அடல் வார் சிலை அமலன் சொரி கனல் வெங் கணை கதுவி,
தொடர் போர் வய நிருதக் கடல் சுவறும்படி பருக,
படுமாறு அயல் வரு தீயவர் பல கோடியர் பலரும்
சுடர் ஏறிய படை மாரிகள் சொரிந்தார், புடை வளைந்தார்.
101-1

கோல் பொத்திய நெடு நாணினில் கோமான் தொடை நெகிழ,
மேல் பொத்திய நிருதக் குலம் வேரோடு உடன் விளிய,
தோல் பொத்திய உயிர் யாவையும் தொடக்கற்று உடன் மடிய,
கால் பொத்திய கை ஒத்தன, காகுத்தன் வெங் கணையால்.
102-1

அது போது அகல் வானில் மறைந்து, அரு மாயை செய் அரக்கர்,
எதுபோதினும் அழிவு அற்றவர், இருள் வான் உற மூடி,
சத கோடிகள் கணை மாரிகள் தான் எங்கும் நிறைத்தார்;
சது மா மறை அமலன் அவை தடிந்தான், தழற் படையால்.
108-1

அமலன் விடும் அனல் வெம் படை அடு வெம் பொறி சிதறி,
திமிலம்கொடு ககனம் செறி திறல் வஞ்சகர் புரியும்
பிமரம் கெட, அவர்தம் உடல் பிளவுண்டு உயிர் அழிய,
சமரம் புகும் அளவு இல்லவர்தமை வென்றது, ஓர் நொடியின்.
108-2

காலாள் எனும் நிருதப் படை வெள்ளம் கறைகணித்தற்கு
ஏலாதன பல கோடிகள் இமையோர் கரை காணார்;
பாலாழியின்மிசையே துயில் பரமன் சிலை பொழியும்
கோலால் அவர் குறைவுற்றனர்; குறையாதவர் கொதித்தார்;
112-1

கொதித்தார் எழு கடல்போல் வளைவுற்றார்: கொடு முசலம்
குதித்து ஓடிய சிலை வாளிகள், கூர் வேல், கதை, குலிசம்,
விதைத்தார், பொரும் அமலன்மிசை வெய்தே; பல உயிரும்
விதித்தானையும் விதித்தான் சிலை வளைத்தே, சரம் விதைத்தான். 112-2

கொள்ளை வெஞ் சமர் கோலும் இராக்கத
வெள்ளமும் குறைவுற்றது; மேடொடு
பள்ளம் இன்றிப் படும் குருதிக் கடல்
உள்ள வான் கடற்கு ஓடியது இல்லையால். 127-1

தேயம் எங்கும் இடம் சிறிது இன்றியே,
மாய வஞ்சர் மடிய, பிண மலை
போய் வளர்ந்து விசும்பொடும் புல்லிற்றால்;
ஆய தன்மை அங்கு அண்ணலும் நோக்கியே, 127-2

கடல் எரித்த கனற் படை கார்முகத்து-
இடை தொடுத்து, அதை ஏவி, 'இரும் பிணத்
திடல் அனைத்தையும் தீர்க்க' எனச் செப்பினன்;
பொடி-படுத்தி இமைப்பில் புகுந்ததால். 127-3

அண்டம் முற்றும் அனைத்து உயிரும் எடுத்து
உண்டு உமிழ்ந்து படைக்கும் ஒருவனுக்கு
உண்டு எனற்கு அரிது என்? உளது இச் செயல்
எண் தரும் தவர் எண்ணுவது இல்லையால். 127-4

இற்றது ஆக இராக்கத வீரர்கள்
உற்று, ஓர் ஆயிர வெள்ளம் உடன்று, எதிர்
சுற்றினர், படை மாரி சொரிந்துளார்;
வெற்றி வீரனும் கை வில் வணக்கினன். 127-5

தலை அறுந்தவரும், தடத் திண் புய
மலை அறுந்தவரும், வயக் கையொடு
சிலை அறுந்தவரும், திமிரத்தின் மெய்ந்
நிலை அறுந்தவரும், அன்றி, நின்றது ஆர்? 127-6

தேர் அளப்பு இல பட்ட; சிறு கண் மாக்
கார் அளப்பு இல பட்ட: கடும் பரித்
தார் அளப்பு இல பட்ட; தடம் புயப்
பேர் அளப்பு இலர் பட்டனர், பீடு இலார். 127-7

வானகத்தோடு, மா நிலம், எண் திசை
ஆன திக்கு ஒரு பத்தும், அடுத்துறத்
தான் நெருக்கிய வஞ்சகர்தம் தலை,
போன திக்கு அறியாது, புரட்டினன். 127-8

சுடரும் வேல், கணை, தோமரம், சக்கரம்,
அடரும் மூஇலைச் சூலம், மற்று ஆதியாம்
படையின் மாரி பதகர் சொரிந்து, இடை
தொடர, வீரன் துணித்தனன் வாளியால். 127-9

ஏனமோடு, எண்கு, சீயம், எழு மத
யானை, ஆளி, புலி என்று இவை முகம்
ஆன தீய அரக்கர் மடிந்திட,
வானவன் கணை மாரி வழங்கினன். 127-10

வடி சுடர்க் கணை மாற்ற, அங்கு ஆயிர
முடியுடைத் தலையோர் தலையும் முடிந்து
இடுவது இத் தலத்தே, இடி ஏற்றில் வான்
வட வரைச் சிகரங்கள் மறிவபோல். 127-11

இரதம், யானை, இவுளியொடு எண் இலா,
நிருதர் வெள்ளம் நெடு நிலத்து இற்றிட,
சரதம் அன்னை சொல் தாங்கி, தவத்து உறும்
விரத வீரன் தன் வாளியின் வீட்டினன். 127-12

கடு வைத்து ஆர் களன் கைப் படு கார்முகம்
ஒடியத் தாக்கும் ஒருவன் சிலையின்வாய்,
வடவைத் தீச் சொரி வாளியின் மா மழை
பட, மற்று ஆயிர வெள்ளமும் பட்டதால். 127-13

பால் ஒத்து ஆழியில் பாம்பு-அணைமேல் துயில்
சீலத்தான், இமையோர் செய் தவத்தினின்
ஞாலத்து ஆய இறைவன், இராவணன்
மூலத் தானை முடிய முருக்கினன். 127-14

ஈது அவர் சொல, கயிலை ஈசனும் நகைத்து,
'இமையவர்க்கும் ஒளி வான்
ஓதம் இல் அரும் பிரம தத்துவம் முதல்
கடவுள் யாமும் உணராப்
பேதம் உறு மாயை பல பேணி விளையாடுதல்
செய்யாது, பெருமான்
நீத உருவம் கொளும் இராமன் எனவே சுருதி
நின்ற மொழி பொன்றி விடுமோ? 149-1

பாறு தொடர் பகழி மாரி நிரைகள் பட,
நீறுபடும் இரத நிரையின் உடல் தவிர,
வேறு படர அடர் விரவு சுடர் வலயம்
மாறுபட, உலகின் மலைகள் அளறுபட, 154-1

திரிய அலகு இல் மலை, திரிய இரு சுடர்கள்,
திரிய ஒருவன், எதிர் சின விலொடும் அடர
வரி கை ஒரு களிறு திரிய, விடு குயவர்
திரிகை என உலகு முழுதும் இடை திரிய. 163-1

கரிய திலத மலை திரிய, வளி சுடர்கள்
இரிய, ஒரு விலுடை இரு கை ஒரு களிறு
திரிய, விடு குயவர் திரிகை என உலகு
தெரிய, எழு கடலும் முழுதும் முறை திரிய, 164-1

ஆய வல் அரக்கர், மற்று அளவு இல்லாதவர்,
தீ எழும் விழியினர், சினம் கொள் சிந்தையர்,
காயும் வெம் படையினர், கடலின் பொங்கியே,
மேயினர், தம்தமில் இவை விளம்புவார். 170-1

'அன்றியும், ஒருவன், இங்கு அமரில், நம் படை
என்று உள கரி, பரி, இரதம், ஈறு இல் போர்
வென்றிடும் பதாதியர், அனந்த வெள்ளமும்
கொன்றனன், கொதித்து, ஒரு கடிகை ஏழினே. 171-1

இவ் உரை வன்னி அங்கு இயம்ப, 'ஈதுபோல்
செவ் உரை வேறு இலை' என்று, தீயவர்
அவ் உரைக்கு அனைவரும் அமைந்து, அங்கு அண்ணலோடு
எவ் உரையும் விடுத்து, அமரின் ஏற்றுளார். 177-1

இன்னவர் ஐ-இரு கோடி என்று உள
மன்னவர் சதமுகம் உடையர்; மற்று அவர்
துன்னினர், மனத்து அனல் சுறுக்கொண்டு ஏறிட
உன்னினர், ஒருவருக்கு ஒருவர் ஓதுவார். 184-1

அடல் ஐ-இரு கோடி அரக்கர் எனும்
மிடல் மன்னவர் வீரனொடும் பொருவார்;
கடை கண்டிலர், காய் கரி, தேர், பரிமாப்
படை கண்டிலர்; கண்டிலர், பட்ட திறம். 206-1

அங்கு அங்கு அவர்தம்மொடும் ஐயன் உயிர்க்கு
அங்கு அங்கு உளன் என்பது தான் அறியாற்கு,
எங்கு எங்கும் இராமன் இராமன் என,
எங்கு எங்கும் இயம்பவும் உற்றுளனல். 212-1

ஏயும் ஐ-இரண்டு கோடி இறைவர் ஒவ்வொருவர் சேனை
ஆயிர வெள்ளம்தானும் அத் துணை வெள்ளம் ஆகி,
தூயவன் அவர்தம் சேனை தொலைத்தபின், இறைவர் ஆவி
போய் அறப் பகழி மாரி பொழிந்தனன், பொன்றி வீழ்ந்தான்.
213-1

இட்டதோர் பேயரின் ஈர் - ஐயாயிரம்
பட்டபோது, ஆடும் ஓர் படு குறைத்தலை
கட்ட நூறாயிரம் கவந்தம் ஆடிடத்
தொட்டனன், சிலை அணி மணி துணுக்கென. 220-1

மாத்திரைப் போதினில், மணி தொனித்திட,
போர்த் தொழில் அரக்கர்மேல் பொருத பூசலில்,
ஏத்திடை இடைவிடாது, ஏழு நாழிகை
கீர்த்தியன் சிலை மணி கிணிகிணென்றதே. 220-2

மொய்த்தனர், நூறு வெள்ள முரண் படைத்தலைவர் கூட்டம்,
பத்து நூறு ஆய வெள்ளப் படையொடு மாயை பற்றி,
ஒத்த யோசனை நூறு என்ன ஓதிய வரைப்பின் ஓங்கி,
பத்து எனும் திசையும் மூடி; சொரிந்தனர் படையின மாரி.
222-1

யோசனை நூற்றின் வட்டம் இடையருது உற்ற சேனைத்
தூசி வந்து, அண்ணல்தன்னைப் போக்கு அற வளைத்துச் சுற்றி,
வீசின படையும் அம்பும் மிடைதலின், விண்ணோர் யாக்கை
கூசினர், பொடியர் என்றும் குமிழ்த்தனர், ஓமக் கூடம். 222-2

முன்னவன் அதனை நோக்கி, முறுவலித்து, அவர்கள் ஏவும்
பல் நெடும் பருவ மாரிப் படை எலாம் பொடிபட்டு ஓட,
தன் நெடுஞ் சிலையின் மாரிதனக்கு எழு முகிலும் அஞ்சத்
துன்னுவித்து, அரக்கர் வெள்ளச்சேனையைத் தொலைத்தல் செய்தான்.
222-3

கால வெங் கனலின் மாயக் கடும் படை சிலையில் பூட்டி,
மேலவன் விடுதலோடும், வெம் படை அரக்கர் வெள்ளம்
நாலும் மூ-இரண்டும் ஆன நூறு ஒரு கணத்தில் நண்ணி,
தாலமேல் படுத்து மீண்டது, அவன் சரம் தலைவர்த் தள்ளி.
222-4

முடிந்தது மூலத்தானை; மூவுலகு இருண்ட தீமை
விடிந்தது; மேலை வானோர் வெந் துயர் அவரினோடும்
பொடிந்தது; புனிதன் வாளி போக்கு உறப் பொய்யர் ஆவி
படிந்தது, ககனம் எங்கும்; பலித்தது, தருமம் அன்றே. 222-5

'ஈது ஒரு விளையாட்டு; அன்பின், இத்துணை தாழ்த்தான், ஐயன்;
ஏது அவன் துணியின் இப்பால்? நீசர் ஓர் பொருளோ? இன்னும்
போதுமோ? புவன கோடி போதினும், கணத்தில் பொன்றிப்
போதும்' என்று, அயனோடு ஈசன் அமரர்க்குப் புகன்று நின்றான்.
222-6

சேனை அம் தலைவர், சேனை முழுவதும் அழிந்து சிந்த,
தான் எரி கனலின் பொங்கி, தரிப்பு இலர், கடலின் சூழ்ந்தே
வானகம் மறைய, தம் தம் படைக் கல மாரி பெய்தார்:
ஆனவை முழுதும் சிந்த அறுத்தனன், அமலன் அம்பால். 222-7

பகிரண்டப் பரப்பில் நின்ற பல பல கோடி வெள்ளத்
தொகை மண்டும் அரக்கர் யாரும் துஞ்சினர், கருவும் துஞ்ச;
செகம் உண்ட ஒருவன் செங் கைச் சிலையுறு மணியின் ஓசை
புக, அண்டம் முழுதும் பாலின் பிரை எனப் பொலிந்தது அன்றே.
225-1

நணியனுய்த் தமியன் தோன்றும் நம்பியை வளைந்த வஞ்சர்
அணி உருது அகன்ற வெள்ளம் அவை மடிந்து இறந்த காலக்
கணிதம் ஏழரையே கொண்ட கடிகை; அக் கடிகைவாய் வில்
மணி ஒலி எழும்ப, வானோர் வழுத்திட, வள்ளல் நின்றான். 225-2

31 வேல் ஏற்ற படலம்

அரக்கர் சேனை ஓராயிர வெள்ளத்தை, 'அமரில்
துரக்க, மானுடர்தம்மை' என்று, ஒருபுடை துரந்து,
வெருக் கொள் வானரச் சேனைமேல் தான் செல்வான் விரும்பி,
இருக்கும் தேரொடும் இராவணன் கதுமென எழுந்தான். 2-1

32 வானரர் களம் காண் படலம்

என்று உரைத்து, 'உயர் வான் பிறப்பு எய்திய
வென்றி வெஞ் சின வேழங்கள்தம்மொடும்
துன்று வாசித் தொகைகளும் கேண்ம்' என,
நின்ற வீடணன்தானும் நிகழ்த்துவான். 27-1

33 இராவணன் களம் காண் படலம்

அலக்கண் எய்தி அமரர் அழிந்திட,
உலக்க வானர வீரரை ஓட்டி, அவ்
இலக்குவன்தனை வீட்டி, இராவணன்
துலக்கம் எய்தினன், தோம் இல் களிப்பினே.

[இப் பாடல் இந்தப் படலத்தின் முதற் செய்யுளாக உள்ளது.]

முற்று இயல் சிலை வலாளன் மொய் கணை துமிப்ப, ஆவி
பெற்று, இயல் பெற்றி பெற்றுலென்ன, வாள் அரக்கர் யாக்கை,
சிற்றியல் குறுங் கால் ஓரிக் குரல் கொளை இசையா, பல் பேய்
கற்று இயல் பாணி கொட்ட, களி நடம் பயிலக் கண்டான். 21-1

34 இராவணன் தேர் ஏறு படலம்

ஏழ்-இருநூறு கோடி எனும் படைத் தலைவரோடும்
ஆழியின் வளைந்த சேனை ஐ-இருநூறு வெள்ளம்
ஊழியின் எழுந்த ஓதத்து ஒலித்தலும், அரக்கர் வேந்தன்,
'வாள் அமர் முடிப்பென் இன்றே' என மணித் தவிசு நீத்தான் 2-1

உரை செயற்கு அருந் தவத்தினுக்கு உவந்து, உமை கேள்வன்
அருள உற்றது, அங்கு அவன் மழுக் குலிசமோடு ஆழி
முரிய, மற்றவை முனை மடித்து, ஒன்றினும் முடியா
விரவு வச்சிரக் கவசத்தை மேற்படப் புனைந்தான். 4-1

அண்ட கோடிகள் எவற்றினும் தன் அரசு உரிமை
கண்டு போய் வரும் காட்சியின், கண்ணுதற் பரமன்,
பண்டு அவன் செய்யும் தவத்தினின் பரிந்து, இனிது அளிக்கக்
கொண்ட வானகத் தேரது; குதிரையைக் குறிக்கின், 18-1

ஐம் முகம் பயின்று இரட்டி, அங்கு அடல் புயன் நால்-ஐந்
தும், ஐந் நான்கு எனும் கரத்தொடும், உமையவள் ஒழிய
இம்மை இவ் உரு இயைந்து, எழில் கயிலேயோடு ஈசன்
வெம்மை ஆடு அமர்க்கு எழுந்தென, தேர்மிசை விரைந்தான்.
27-1

35 இராமன் தேர் ஏறு படலம்

இத் தகையன் ஆகி, 'இகல் செய்து, இவனே இன்னே
கொத்து முடி கொய்வென்' என, நின்று எதிர் குறிப்ப,
தம்தம் முறுவல் செயல் தவிர்ந்தது என, வானில்,
சித்தர்கள், முனித் தலேவர், சிந்தை மகிழ்வுற்ருர். 4-1

36 இராவணன் வதைப் படலம்

புரந்தரன் பகைவன் ஆவி போக்கிய புனிதன், வென்றி
சுரந்தருள் அனுமன், நீலன், அங்கதன், சுக்கிரீவன்,
உரம் தரும் வீரர் ஆதிக் கவிப் படைத் தலேவருள்ளார்,
பரந்திடும் அரக்கன் சேனே படுத்தனர், திரியலுற்ருர். 5-1

வரம் படைத்து உயர்ந்த வன் போர் வயப் படைத் தலேவரோடு
நிரம்பிய வெள்ளச் சேனே நிருதரும், களிறும், தேரும்,
மரம் படர் கானில் தீப்போல், வள்ளல்தன் பகழி மாரி
பொரும்படி உடல்கள் சிந்தி, பொன்றினர் எவரும் அம்மா.
17-1

பொங்கிய குருதி வெள்ளம் பொலிந்து எழு கடலில் போக,
தங்கிய பிணத்தின் குப்பை தடுத்தது; சமரபூமி
எங்கணும் கவந்தம் ஆட, எய்தி அங்கு அரக்கிமார்கள்,
தங்கள்தம் கணவர்ப் பற்றி, தம் உடல் தாங்கள் நீத்தார்.
17-2

எழும் படை வெள்ளம் எல்லாம், இரண்டு ஒரு கடிகை தன்னில்,
களம் பட, கமலக்கண்ணன் கடுங் கனல் பகழி மாரி [ஆங்கு
வளம் படச் சிலேயில் கோலி, பொழிந்து, அவை மடித்தான்; கண்டு,
உளம் கனல் கொளுந்த, தேரின் உருத்து, எதிர், அரக்கன் வந்தான்.
17-3

மூஉலகு அடங்கலும் மூடும் அண்டமேல்,
தாவினன் தேரொடும், அரக்கன்; தாவியே,
கூவினன்; அங்கு அறைகூவ, கொண்டலும்
மேவினன், அரக்கனே விடாது பற்றியே. 71-1

அண்டம் ஓராயிர கோடி எங்கணும்
மண்டினர், செருத் தொழிலே மலேதல் விட்டிலர்;
அண்டர்கள் கலங்கினர்; 'அரக்கராயுளோர்
உண்டு, இனிக் கரு' என ஓதற்கு இல்லேயால். 71-2

உமையவள் ஒரு புடை உடையவன் உதவியது,
அமைவுறும் மயல் வினை அளவு இல புரிவது,
சுமை பெறும் உலகு ஒரு நொடிவரை தொடருவது,
இமையவர் அடல் வலி பருகியது, எளிமையின். 89-1

ஆசுரப் பெரும் படைக்கலம், அமரரை அமரின்
ஏசுவிப்பது, எவ் உலகமும் எவரையும் வென்று
வீசு வெற்பு இறத் துரந்த வெங் கணையது,—விசையின்
பூசுரர்க்கு ஒரு கடவுள்மேல் சென்றது போலாம். 96-1

மயன் படைக்கலம் அழிந்தது கண்டு, இகல் மறவோன்,
'சயம் படைத்தது நன்று; இவன் செருக்கினைத் தடுக்க,
பயன் படைத்துள தண்ட மாப் படைகள் உண்டு; அதனால்,
நயம் படைப்பென்' என்று, ஒரு கதை நாதன்மேல் எறிந்தான்.
103-1

அன்ன மாக் கதை விசையொடு வருதலும், அமலன்
பொன்னின் ஆக்கிய சிலையிடை ஒரு கணை பொறுத்தான்;
முன்னது ஆக்கிய கரங்களும் முதிர் பொதிர் எறிய,
சின்னமாக்கினன்; அது கண்டு, அங்கு அரக்கனும் சினந்தான்.
105-1

ஆயது ஆக்கிய செய்கை கண்டு அரக்கனும் சினந்தே,
தீயின் மாப் படை செலுத்த, அப் படையினின் செறுத்தான்;
தூய நீக்கம் இல் வாயுவின் படை தொட, அரக்கன்
ஏய அப் படை ஏவி, அங்கு அமலனும் இறுத்தான். 107-1

இரவிதன் படை ஏவினன், அரக்கன்; மற்று அமலன்
கருதி, அன்ன திண் படைகொடு காத்தனன்; மதியின்
விரவு வெம் படை வெய்யவன் விடுத்தலும், வீரன்,
உரவு திங்களின் படை கொண்டு, அங்கு அதனையும் ஒறுத்தான்
107-2

வாருதிக்கு இறை படை கொண்டு அங்கு அரக்கனும் மறைத்
நேர் உதிக்க அப் படை கொண்டு நிமலனும் நீக்க, [தான்;
தார் உதித்திடு தடம் புயத்து அரக்கனும் தருக்கி,
'பேருவிப்பென், மற்று இவன் உயிர்' எனும் உளம் பிடித்தான்.
107-3

முக்கணன் படை முதலிய தேவர்தம் படைகள்
ஒக்க வாரி, அங்கு அரக்கனும் ஊழ் முறை துரப்ப,
புக்கி, அண்ணலை வலங்கொண்டு போனதும், பொடிபட்டு
உக்கி, ஓடினதும் அன்றி, ஒன்று செய்துளதோ? 107-4

இத் திறம்பட மாயையின் படை வகுத்து, எழுந்து, அங்கு
எத் திறங்களும் இடிஉரும் எறிந்திட வெருவி,
சித்திரம் பெற அடங்கிய கவிப் பெருஞ் சேனை
மொய்த்து மூடியது, அண்டங்கள் முழுவதும் மாய. 118-1

'அண்ட கோடிகள் முழுவதும் அடுக்கு அழிந்து உலையக்
கொண்ட காலம் ஈதோ!' எனக் குலைகுலைந்து, அமரர்
துண்ட வான் பிறை சூடியைத் தொழ, அவன் துயரம்
கண்டு, 'இராகவன் கடிந்திடும்; கலங்கலீர்' என்றான். 118-2

மாயையின் படை தொலைந்திட, வகுப்பொடும் எழுந்த
தீய வெவ் வினைச் செய்கைகள் யாவையும் சிதைந்தே
போயது; எங்கணும் இருள் அற ஒளித்தது; அப் பொழுதில்
காயும் வெஞ் சினத்து அரக்கனும் கண்டு, உளம் கறுத்தான்.
123-1

நெற்றி விழியான்—அயன், நிறைந்த மறையாளர்,
மற்றை அமரர், புவியில் வானவர்கள், 'ஈர்-ஐந்து
உற்ற தலை தானவன் விடும் கொடிய சூலம்
இற்று ஒழிய ஆன்று அழியுமோ?' என—இசைத்தான். 130-1

'வேதம் ஒரு நாலும், உள வேள்விகளும், வெவ்வேறு
ஓத முதலாய் உதவு பூதல் அவை ஐந்தும்,
நீதியொடு கால்குலைய, நீசன் விடு சூலம்
ஈது அழியும்' என்று இதயம் எண்ணினன், இராமன். 130-2

எவ் வகை உரகமும் இரியல் போயின,
நொவ்வியல் உற்றென; நொடிப்பது என் இனி?
அவ் வயின் அரன் அணி அடல் அராவுமே
கவ்வையின் உழந்தன, சிறையின் காற்றினே. 143-1

பிறைத் தலைப் பகழியால் பின்னும் ஓர் தலை
அறுத்தனன்; முளைத்தது, அங்கு அதுவும் ஆர்த்து; உடன்
மறுத்து இரு தலைதனை மாற்ற, வள்ளலும்
குறைத்திலன் எனும்படி முளைத்த, குன்றுபோல். 150-1

ஆயிரப் பதின் மடங்கு அரக்கன் மாத் தலை
தீமுகப் பகழியால் சினந்து, இராகவன்
ஒய்வு அறத் துணிக்கவும், உடன் முளைத்ததால்,
தீயவன் தவப் பெருஞ் செயலின் வன்மையால். 150-2

அண்ணலும் இடைவிடாது அறுத்து வீழ்த்தலால்,
மண்ணொடு வானகம், மருவும் எண் திசை,
எண்ணுறும் இடல் எலாம் இராவணன் தலை
நண்ணியது; அமரரும் நடுக்கம் எய்தினர். 151-1

இத் திறத்து இராமன் அங்கு ஏவும் வாளியின்
தத்துறும் தலை முளைத்து எய்தும் தன்மையால்,
அத் திறத்து அரக்கனும் அமர் ஒழிந்திலன்—
முத் திறத்து உலகமும் முருக்கும் வெம்மையான். 152-1

தொடுத்த ஆழியின் தோமரம் தூள்பட,
விடுத்த வீரன் அவ் வெய்யவன் மாத் தலை
அடுத்து மீளவும் நின்று அறுத்தான்; உயிர்
முடித்திலன் விளையாடலை முன்னியே.  159-1

ஆனபோது, அங்கு அரக்கன் அத் தேரொடும்
வானமீது எழ, மாதலி தூண்டிட,
ஞான நாயகன் தேரும் எழுந்துறப்
போனது; அண்டப்புறத்து அமர் கோலினர்.  163-1

அஞ்சல் இன்றி, அமர்க் களத்து, ஆரியன்
வெஞ் சினத்தொடு வேல் அரக்கன் பொர,
எஞ்ச ஏழு திவசம் இராப் பகல்
விஞ்சு போர் செயும் வேலையில், வீரனும்,  182-1

ஆய கண்டு, அங்கு அமலன் விடும் சரம்
சாயகங்களை நூறி, தலைத்தொகை
போய் அகன்றிடச் செய்தலும், போக்கிலாத்
தீயவன் சினந்து, இம் மொழி செப்புவான்:  182-2

'துறக்கும் என்பதை எண்ணி, சிரத் தொகை
அறுக்குமுன் முளைத்து உய்குவது அன்றியே,
மறுக்கும் என்று மனக் கொளல், மா நிலத்து
இறக்கும் மானுடர் போன்று, என் உயிரும், நீ.'  182-3

ஈது அரக்கன் புகல, இராமனும்,
'தீது இருக்குறும் சிந்தையின் நீ தெளிந்து,
ஓது உரைக்கு எதிருற்று, என் பகழி இப்
போது உரைக்கும்' எனக் கொடு பொங்கினன்.  182-4

மாறுபடத் தேவர்களை ஏவல்கொளும்
 வாள் அரக்கன் மடிய, அன்னான்
ஏறி வரு பொன் தடந் தேர் பாகனும்
 பொன்றிட, பண்டு அங்கு இமையா முக் கண்
ஈறு இல் பரன் புகன்றபடி கரந்து இமைப்பின்
 ஏகியதால்—இடையே கூடித்
தேறுதல் செய்து உழல் போதில், தீவினை
 மாய்த்திடப் போம் நல் வினையே போல,  199-1

'வான் கயிலை ஈசன், அயன், வானவர் கோன்,
முதல் அமரர் வாழ்த்தி ஏத்த,
தான் புவனம் ஒரு மூன்றும் தனி புரந்து,
வைகிய நீ, தாய் சொல் தாங்கி,
கான் புகுந்த மறை முதல்வன் விடும் கடவுள்
வாளி ஒன்று கடிதின் வந்து, உன்
ஊன் புகும் கல் உரம் உருவி ஓட,
உளம் நாணினையோ? உயிரும் உண்டோ? 219-1

'அரு வினை வந்து எய்தியபோது, ஆர் அரசே! உன்தன்
திரு வினை நீ பெறுவதற்குத் திருநாமங்களைப் பரவ,
ஒருபது வாய் உள; வணங்க, ஒண் முடி பத்து உள; இறைஞ்ச,
இருபது கை உள; இலங்கை என்னுகை வீந்தாயே! 221-1

'அரு வினை வந்தெய்திய போழ்து
ஆர் தடுப்பார்? ஆர் அதனை அறிவார்? வீட்டின்
திருவினை நீ பெறுவதற்கு இங்கு இவன்
திருநாமங்கள்தமைச் சிந்தித்து ஏத்த,
ஒருபது நா உள; வணங்க, ஒண் முடிகள்
பத்து உளவே; இறைஞ்ச, மேரு
இருபது கை உள; இலங்கை என்னுகை
உயிரோடும் இழந்திட்டாயே! 221-2

'அன்னை அவள் சீதை அனைத்து உலகும் ஈன்றாள்' என்று
உன்னி உரைத்தேன்; உரை கேளாது, உத்தமனே!
பின்னை இராமன் சரத்தால் பிளப்புண்ட
உன்னுடையபேர் உடலம் உற்று ஒருகால் நோக்காயோ? 242-1

'ஆரா அமுதாய் அலை கடலில் கண்வளரும்
நாராயணன் என்று இருப்பேன் இராமனை நான்;
ஓராதே கொண்டு அகன்றாய், உத்தமனார் தேவிதனை;
பாராயோ, நின்னுடைய மார்பு அகலம் பட்ட எலாம்? 242-2

இந்தனத்து அகில் சந்தனம் இட்டு, மேல்
அந்த மானத்து அழகுறத் தான் அமைத்து,
எந்த ஓசையும் கீழுற ஆர்த்து, இடை
முந்து சங்கு ஒலி எங்கும் முழங்கிட, 245-1

கொற்ற வெண்குடையோடு கொடி மிடைந்து,
உற்ற ஈம விதியின் உடம்படீஇ,
சுற்ற மாதர் தொடர்ந்து உடன் சூழ்வர,
மற்ற வீரன் விதியின் வழங்கினான். 245-2

இனைய வீரன் இளவலை நோக்கி, 'நீ
புனையும் நன் முடி சூட்டுதி, போய்' என,
அனைய வீரன் அடியின் இறைஞ்சவே,
'அனையனோடும் அனுமனைச் சார்க' என. 248-1

37 மீட்சிப் படலம்

மாருதிச் செல, மங்கலம் யாவையும்
மாருதிப் பெயர்கொண்டு உடன் வந்தனன்;
வீர விற் கை இளவல் அவ் வீடணன்
வீரபட்டம் என, நுதல் வீக்கினன். 4-1

செய்த மா மணி மண்டபத்தே செழுந்
துய்ய நல் மணிப் பீடமும் தோற்றுவித்து,
எய்து வானவ..............................கம்மி...
........................................................ 5-1

மேவி நாரதனே முதல் வேதியர்
ஓவு இல் நான்மறை ஓதிய நீதியில்
கூவி, ஓம விதிமுறை கொண்டிட,
தா இல் சங்கொலி ஆதி தழைக்கவே. 5-2

பொய்யினுக்கு ஒரு வெ..............................
........................................................
உய் திறத்தினுக்கே உவந்து உம்பர்கள்
கையினின் கலசப் புனல் ஆட்டினர். 5-3

வேத ஓசை விழா ஒலி மேலிட,
நாத துந்துமி எங்கும் நடித்திட,
வேத பாரகர் ஆசி விளம்பிட,
ஆதி தேவர் அலர் மழை ஆர்த்திட, 6-1

வீர மா முடி சூடிய வீடணன்
வீர ராகவன் தாள் இணை மேவிட,
ஆர மார்பொடு அழுந்திடப் புல்லினன்,
ஆரினும், அறிவரும் ஆதியான். 10-1

'ஆதி நாளில், ''அருள் முடி நின்னது'' என்று
ஓதினேன்; அவை உற்றுளது; உத்தம!
வேத பாரகர் வேறுளர் யாவரும்
ஓதும் நீதி ஒழுக்கின் ஒழுக்குவாய். 11-1

‘ ‘‘வஞ்சகக் கொடியான் முனம் வவ்விட,
பஞ்சரக் கிளி என்னப் பதைப்பவள்,
நெஞ்சினில் துயர் நீக்கியது’’ என்று, நீ
அஞ்சனைப் புதல்வா! அருள்வாய்’ என்றான். 13-1

‘மங்கை, சோபனம்! மா மயில், சோபனம்!
பங்கயத்து உறை பாவையே, சோபனம்!
அங்கு அ(வ்) ஆளி அரக்கனை ஆரியச்
சிங்கம் இன்று சிதைத்தது, சோபனம்! 16-1

‘வல்லி, சோபனம்! மாதரே, சோபனம்!
சொல்லின் நல்ல நல் தோகையே, சோபனம்!
அல்லின் ஆளி அரக்கனை ஆரிய
வல்லியங்கள் வதைத்தது, சோபனம்! 16-2

‘அன்னை, சோபனம்! ஆயிழை, சோபனம்!
மின்னின் நுண் இடை மெல்லியல், சோபனம்!
அன்ன ஆளி அரக்கனை ஆரிய
மன்னன் இன்று வதைத்தது, சோபனம்! 16-3

‘நாறு பூங் குழல் நாயகி, சோபனம்!
நாறு பூங் குழல் நாரியே, சோபனம்!
ஆறு வாளி அரக்கனை ஆரிய
ஏறும் இன்றும் எரித்தது, சோபனம்!’ 16-4

சொன்ன சோபனம் தோகை செவி புக,
அன்னம் உன்னி, அனுமனை நோக்கியே,
‘அன்ன போரில் அறிந்துளது, ஐய! நீ
இன்னம் இன்னம் இயம்புதியால்’ என்றாள். 16-5

சென்றவன்தன்னை நோக்கி, ‘திருவினள் எங்கே?’ என்ன,
‘மன்றல் அம் கோதையாளும் வந்தனள், மானம்தன்னில்’
என்றனன்; என்னலோடும், ‘ஈண்டு நீ கொணர்க!’ என்ன,
‘நன்று!’ என வணங்கிப் போந்து, நால்வரை, ‘கொணர்க!’ என்றான்.
46-1

காத்திரம் மிகுத்தோர், நால்வர், கஞ்சுகிப் போர்வையாளர்,
வேத்திரக் கையோர், ஈண்டி, விரைவுடன் வெள்ளம்தன்னைப்
பாத்திட, பரந்த சேனை பாறிட, பரமன் சீறி,
‘ஆர்த்த பேர் ஒலி என்?’ என்ன, ‘அரிகள் ஆர்ப்பரவம்’ என்றார். 46-2

என்றபோது இராமன், 'ஐய! வீடணா! என்ன கொள்கை!
மன்றல் அம் குழலினாளை மணம் புணர் காலம் அன்றி,
துன்றிய குழலினார்தம் சுயம்வர வாஞ்சை, சூழும்
வென்றி சேர் களத்தும், வீர! விழுமியது அன்று, வேலோய்!'
*46-3*

அற்புதன் இனைய கூற, ஐய வீடணனும் எய்தி,
செப்பு இள முலையாள்தன்பால் செப்பவும், திருவனாளும்,
அப்பினுள் துயிலை நீத்து அயோத்தியில் அடைந்தஅண்ணல்
ஒப்பினைக் கண்ணின் கண்டே, உளம நினைந்து, இனைய சொன்னாள்.
*46-4*

'அழி புகழ் செய்திடும் அரக்கர் ஆகையால்,
பழிபடும் என்பரால், பாருளோர் எலாம்;
விழுமியது அன்று, நீ மீண்டது; இவ் இடம்
கழிபடும்' என்றனன், கமலக்கண்ணனே. *67-1*

கண்ணுடை நாயகன், 'கழிப்பென்' என்றபின்,
மண்ணிடைத் தோன்றிய மாது சொல்லுவாள்:
'எண்ணுடை நங்கையர்க்கு இனியள் என்ற நான்
விண்ணிடை அடைவதே விழுமிது' என்றனள். *67-2*

பொங்கிய சிந்தையள் பொருமி, விம்முவாள்,
'சங்கையென்' என்ற சொல் தரிக்கிலாமையால்,
மங்கையர் குழுக்களும் மண்ணும் காணவே,
அங்கியின் வீழலே அழகிதாம்அரோ. *67-3*

'அஞ்சினென், அஞ்சினென், ஐய! அஞ்சினென்;
பஞ்சு இவர் மெல்லடிப் பதுமத்தாள்தன்மேல்
விஞ்சிய கோபத்தால் விளையும் ஈது எலாம்;
தஞ்சமோ, மறை முதல் தலைவ! ஈது?' என்றான். *86-1*

கற்பு எனும் கனல் சுட, கலங்கி, பாவகன்
சொல் பொலி துதியினன், தொழுத கையினன்,
'வில் பொலி கரத்து ஒரு வேத நாயகா!
அற்புதனே! உனக்கு அபயம் யான்' என்றான். *88-1*

'இன்னும், என் ஐய! கேள்: இசைப்பென் மெய், உனக்கு;
அன்னவை மனக் கொளக் கருதும் ஆகையால்,
முன்னை வானவர் துயர் முடிக்குறும் பொருட்டு
அன்னை என் அகத்தினுள் அருவம் ஆயினாள். *95-1*

'யான் புரி மாயையின், சனகி என்று உணர்ந்-
தான் கவர் அரக்கன்; அம் மாயை என் சுடர்க்
கான் புகக் கரந்தது; இக் கமல நாயகி
தான் புரி தவத்து உனைத் தழுவ உற்றுளாள்.' 95-2

ஐயன் அம் மொழியினை அருளும் வேலையில்,
மை அறு மன்னுயிர்த் தொகைகள் வாய் திறந்து,
ஒய்யென ஒலித்ததால்; உவகை மீக்கொள,
துய்ய வானவர் துதித்து, இனைய சொல்லுவார்: 97-1

'மிகுத்த மூன்றரைக் கோடியில் மெய் அரைக் கோடி
உகத்தின் எல்லையும் இராவணன் ஏவல் செய்துள எம்
அகத்தின் நோய் அறுத்து, அருந் துயர் களைந்து, எமக்கு அழியாச்
சுகத்தை நல்கிய சுருதி நாயக!' எனத் தொழுதார். 97-2

'திருக் குவால் மலி செல்வத்துச் செருக்குவேம்திறத்துத்
தருக்கு மாய்வுற, தானவர் அரக்கர் வெஞ் சமரில்
இரிக்க, மாழ்கி நொந்து, உனைப் புகல் யாம் புக, இயையாக்
கருக்குளாய் வந்து தோற்றுதி! ஈங்கு இது கடனே?' 109-1

என்ற வாசகம் எறுழ் வலித் தோளினன் இயம்ப,
மன்றல் தாங்கிய மலரவன், வாசவற் கூவி,
'துன்று தாரினோன் சுரருடன் துருவினை துடரச்
சென்று, மற்று அவன்-தருக' என வணங்கினன், சென்றான்.
114-1

'எனக்கும், எண் வகை முனிவர்க்கும், இமையவர் உலகம்-
தனக்கும், மற்று இவள் தாய் என மனக் கொளத் தகுதி;
மனத்தின் யாவர்க்கும் மறு அறுத்திடும் இவள் மலராள்;
புனத் துழாய் முடிப் புரவலன் நீ; நிறை புகழோய்!' 123-1

'வங்க நீள் நெடு வட திசை வானவன் விமானம்
துங்க மா கவி எழுபது வெள்ளமும் சூழ்ந்தால்
எங்குளார் எனும் இடம் உளது; அதன்மிசை ஏறி,
பொங்கு மா நகர் புகுதி, இப் பொழுதினில்' என்றான். 141-1

'மங்கலா நிதி வடதிசை வானவன் மானம்;
துங்கம் ஆர் கவி எழுபது வெள்ளமும் சூழ்ந்தால்,
எங்கு உளார்?'' எனும் இடம் உளது; இதன்மிசை ஏறி,
பொங்கு மா நகர் புகுதி, இப் பொழுதினில்' என்றான். 142-1

'வாங்கினான், அளகேசனைத் துரந்து, இந்த மானம்;
ஓங்கும் மூவுலகத்தவர் ஏறினும்! உரவோய்!
ஆங்கு இடம் பினும் உடையதாம்; அதுதனில் ஏறி,
பூங் குலா நகர் புகுதி, இப் பொழுதினில்' என்றான். 142-2

வாங்கினான் அது, மா நிதியோடு அவன் மானம்;
ஏங்கு வெள்ளம் ஓர் எழுபதும் ஏறினால், இன்னும்,
ஆங்கு உளோர் எலாம் ஏறுவது; அதனை நீ ஏறி,
பூங் குலா நகர் புகுதி, இப் பொழுதினில்' என்றான். 142-3

என்று, தேரினை வீடணன் எய்தியது என்றான்;
'நன்றுதான்' என நாயகன் ஏறினன், அவரோடு
அன்றுதான் இளங் கோவொடும் அக் கவி வெள்ளம்
ஒன்றுதான் என ஒரு திசை இருந்ததும் ஒக்கும். 142-4

ஏறினன் விமானம்தன்னில் இராமனும், இளைய கோவும்,
மாறு இலாச் சனகியோடு, வள நகர் இலங்கை வேந்தும்,
கூறிய அனுமன், சாம்பன், குமரன், வெங் கவி வந்து ஏற;
மாறிலோர் நிலத்து நின்றார், வயந்தனார் கொத்தில் உள்ளார்.
142-5

[இது முதல் 142-17 வரையில் 'இயமப் படலம்' என்றும், 'வசந்தன் உயிர்வரு படலம்' என்றும், சில பிரதிகளில் உள்ளன.]

மாறதாய் வெள்ளம் சேனை மானத்தின் வராமை நோக்கி,
'ஏறும் நீர் தேரில்' என்ன, 'கருணன் வந்து எதிர்ந்தபோது,
சீறிய நுமரில் எம்கோன் தாக்கிட, அரக்கன் சீறி,
நீறு எழப் பிசைந்தே இட்டான் நெற்றியில்' என்னச் சொன்னார். 142-6

என்ற வாசகம் கேட்டலும், வானரர் இறங்கி,
நின்ற போதினில் இராகவன் தேரின்நின்று இழிந்தான்;
'பொன்றுமா வரக் காரணம்என்?' எனப் புழுங்கா'
துன்று தார்ப் புயத்து இலக்குவ! பொறி' எனச் சொன்னான்.
142-7

'வரி சிலை இராமன் ஓலை, மறம் புரி மறலி, காண்க!
எரிகொளும் இலங்கைப் போரில், இன் உயிர் துறந்து போந்த
குரிசிலை, வயந்தன் தன்னைத் தேடியே கொணர்க; அன்றேல்,
உரிய தன் பதமும் வாழ்வும் ஒழிப்பென்' என்று எழுதிவிட்டான்.
142-8

அக் கணத்து அருகு நின்ற அனுமன், கைத் திருமுகத்தைத்
தக்கவன் நீட்ட, வாங்கி, தன் தலைமிசையில் சூடி,
'இக்கணம் வருவென்; வாழி! இராம!' என்று, இரு தோள் கொட்டி,
மிக்க மா மடங்கல் போல, விண்ணிடை விசைத்துப் பாய்ந்தான். 142-9

மண்டிப் புக்கனன், மறலிதன் பெரும் பதம்; நரகில்
தண்டிப்புண்டு, அறுப்புண்டு, எரிப்புண்டவர்தம்மைக்
கண்டு, மாருதி கண் புதைத்து, 'அரி! அரி' என்ன,
மிண்டி ஏறினர், நரகிடை வீழ்ந்தவர் எல்லாம். 142-10

துளங்கி, அந்தகன் வந்து, அடி தொழுதலும், தோலா
வளம் கொள் மாருதி, 'வசந்தனைக் காட்டு' என, அவனும்
உளம் கலங்கி, 'உன் நாயகன் அடியர் இங்கு உறார்கள்;
விளங்கு கீர்த்தியாய்! தேடு விண்ணவர் புரத்து' என்றான்.
142-11

சொன்ன கூற்றுவன்தன்னைத் தன் வாலிடைத் துவக்கி,
பொன்னின் கற்பகப் பதியிடைக் கொண்டு போய்ப் புகலும்,
முன்னை வந்து கண்டு, இந்திரன், 'முனிவு ஏனோ?' என்ன,
'மன்ன! ஏகுவென்; வயந்தனைக் காட்டுதி' என்றான். 142-12

'வல் அரக்கரை மடித்து, எமை எடுத்த மாருதியே!
இல்லை இங்கு; அயன் உலகிடை அறிதி' என்று இசைப்ப,
சொல்லும் அங்கு அவன்தன்னையும் வாலிடைத் துவக்கி,
பல் உயிர்த் திறம் படைத்தவன் உலகிடைப் பாய்ந்தான்.
142-13

சிந்தை தூயவன் செல, உளம் துளங்கு நான்முகனும்,
'வந்த காரியம் எது?' என, 'வயந்தனைப் பார்த்துச்
சுந்தரத் தடந் தோள் வில்லி நின்றனன்; அவன்தான்
உந்தன் நீள் பதத்துளான்எனின், காட்டு' என உணர்த்தும்:
142-14

'என்னுடைப் பெரும் பதத்தின் மேலாகிய எந்தை-
தன்னுடைப் பெருஞ் சோதியின் கீழதாய்த் தழைத்த
மின்னும் நீடு ஒளி விண்டுவின் பதத்துளான்; விறலோய்!
அன்னவன்தனைக் கொணருதி, ஆங்கு அணைந்து' என்றான்.
142-15

என்ற நான்முகன்தன்னையும், இந்திரன் யமனோடு
ஒன்ற, வால்கொடு துவக்கினன், ஒரு குதிகொண்டான்;
மின் திகழ்ந்து ஒளி விளங்கிடும் விண்டுவின் பதத்தில்
சென்று, கண்டு கொண்டு இழிந்தனன், திசைமுகன் பதியில்.
142-16

மலரின்மேல் அயன் வசந்தற்கு முன் உரு வழங்க,
குலவு வாசவன், யமனை, விட்டு, இரு நிலம் குறுகி,
அலகு இல் வீரன்தன் அடி இணை அவனொடும் வணங்கி,
சலமும் தீர்த்தனன்; படையையும் ஏற்றினன், தேர்மேல்.
142-17

[வேறு சில பிரதிகளில் 142-4 பாடலுக்குப்பின் 142-18 முதல் 142-25 வரையில் உள்ள பாடல்களுடன் வசந்தன் வரலாறு பற்றி, (142-5 முதல் 142-17 வரை) முன்வந்த பாடல்களில் சிலவற்றையும் இடையில் கொண்டு, இவ் வரலாறு வேறு வகையில் அமைந்துள்ளது.]

ஏறினன் இராமன் தேர்மேல் எழில் மலர் மாதினேடும்;
ஏறினன் இளைய கோவும், இராக்கதர் வேந்தனேடும்;
ஏறினன் அனுமன்; சாம்பன், இடபனே, முதலோர் ஏற,
மாறினர் நிலத்து நின்றார், வசந்த கோத்திரத்திலுள்ளார். 142-18

ஏறினன், இளைய கோவும்; இரவி சேய், சாம்பன், நீலன்,
'ஏறினன், வாலி மைந்தன்' என்றனர்; பலரும் ஏற,
சீறிய கும்பகன்னன் சினத்திடைச் சிதைந்து பட்ட,
மாறிலா வசந்தன் சேனை நின்றது, மாறி மண்மேல். 142-19

வண்டு அலம்பு தார் அமலனும் தம்பியும், மயிலும்,
கண்டு கைதொழு வானரக் கடலும், மற்று யாரும்
எண் தவாத பொன் மானமீது இருந்திடும் இயற்கை
அண்டர் நாதனும், வானமும், அமரரும் ஆமால். 142-20

பாரில் நின்றது அங்கு ஒரு வெள்ளப் படை; அவர்தம்மை,
'வாரும் தேரின்மேல்' என, 'கும்பகர்ணன் வந்து ஏன்ற
போரில் எம் படைத் தலைவனே பொன்றினன்; அவனை
நீர் எழப் பிசைந்து, இட்டனன் நெற்றியில்' என்றார். 142-21

ஆழி வெள்ளம் ஓர் எழுபதும், அனுமனே முதலாம்
ஏழும் மூன்றும் ஆம் பெரும் படைத் தலைவரை இராமன்
சூழ நோக்கினன்; சுக்கிரீவன்தனைப் பாரா,
'வாழி மாப் படை அனைத்தும் வந்தன கொலோ?' என்றான். 142-22

இரவி கான்முளை இறங்கி வந்து, இராமனை இறைஞ்சி,
'சுருதியாய்! ஒரு பேர் அருள் சொல்லுவ; தொடர்ந்து
வருவதான இச் சேனையில் வசந்தன் என்று உரைக்கும்
ஒருவன் வந்திலன்; கண்டருளுதி' என உரைத்தான். 142-23

கசிந்த ஞானங்கள் கலங்கல் இல் கழல் கும்பகருணன்
இசைந்த போரின் வந்து எய்தலும், இவன்தனை எடுத்துத்
தசைந்த தோல், மயிர், எலும்பு, இவைதமைத் தெரியாமல்,
பிசைந்து மோந்து, உடற் பூசினன், பெரு நுதற்கு அணிந்தே. 142-24

'இசைந்த சீராமன் ஒலே; இலங்கையில் பூசல்தன்னில்
வசந்தனைக் கண்டதில்லை; மதித்தவாறு அழகிது அம்மா!
வசந்தனைக் கொண்டுதானும் வருக! ஏனே? வாரானுகில்,
நமன் குலம் களைவென்' என்றான்—'நாளை வா' என்ற வீரன். 142-25

[இதன்பின் 142-8, 9, 10, 11 என்ற பாடல்கள் உள்ளன.]

'செல்வனே! இன்னம் கேளாய்; யான் தெரி பாசக் கையால்
அல் எனும் அரக்கர்தம்மை வம்மின்!' என்று அழைத்து, மெள்ள
நல் இருட் பரவை மேனி நாரணன் தமரைக் கண்டால்,
'செல்லவே போமின்' என்று விடுக்குவென், செவியில், செப்பி
142-30

[இதன்பின் 142-12, 13, 14, 15, 16, 17 என்ற பாடல்கள் உள்ளன.]

'மையல் இன்றியே இலங்கை மா நகர் காத்து, மாதே!
செய்யளாகிய திரு எனப் பொலிந்து, இனிது இருத்தி'
கைகளால் மிகப் புல்கியே, கண்கள் நீர் ததும்ப,
பொய் இலா மனத் திரிசடை, 'விடை' எனப் போனாள். 146-1

என்ற காலையில், எழுந்தவன் இயற்கையை நோக்கி,
நன்று நாயகன் அறிவொடு நினைவன நயந்தான்;
சென்று சேனையை நாடினன், திரிந்து வந்து எய்தி,
வென்றி வீரரில் வசந்தனைக் கண்டிலர், வெறுத்தார். 157-3

[சில பிரதிகளில், 'சொன்ன வாசகம் பிற்பட' (157) என்ற பாடலுக்குப் பின், 'வசந்தன் உயிர் வரு படலம்' தொடங்குகிறது. 157-3 என்னும் இந்தப் பாடலுக்கு முன இதன் முன்னர்த் தந்துள்ள 142-19, 21 என்ற இரு பாடல் களும் காணப்பெறுகின்றன. இதன் பின் 142-22 என்ற பாடல் உள்ளது.]

என்னும் காலை (யில்), இராமனும் யமபடர் யாரும்
மன்னும் தொல் புரம் நோக்கியே, 'மணி நகை முறுவல்
உன்னின் அன்றி, யான் தேவருக்கு உதவி செய்து' என்னா,
பொன்னின் வார் சிலை எடுத்தனன், பொறுத்தனன் பொரவே
157-5

எண் திசாமுகம் இரிந்து உக, யமபுரம் குலைய,
அண்டகோளகை அடுக்கு அழிந்து உலைவுற அழியாப்
புண்டரீகத்துப் புராதனன் முதலிய புலவோர்
தொண்டை வாய் உலர்ந்து அலமர, தொடு வில் நாண் எறிந்தான்.
157-6

பாக வான் பிறையாம் என, பலர் நின்று துதிப்ப,
வாகை கொண்ட வெஞ் சிலையினை வளைவுற வாங்கி,
மேக சாலங்கள் குலைவுற, வெயிற் கதிர் மாட்சி
சோகம் எய்தி மெய் துளங்கிட, சுடு சரம் துரந்தான். 157-7

வல்லை மாதிரம் மறைந்திட, வானவர் மயங்க,
எல்லை காண்குறு யாவரும் இரியலில் ஏக,
வில்லை வாங்கிய கரம் அவை விதிர்விதிர்ப்பு எய்த,
தொல்லை நான்மறை துளங்கிட, சுடு சரம் துரந்தான். 157-8

வன் புலம் கிளர் நிருதரை வருக்கமோடு அறுக்க,
மின் புலம் கொளும் உரும் என்ன, வீக்கிய வில்லைத்
தன் பொலங் கையில் தாங்கியே தொடுத்த அச் சரங்கள்
தென் புலன்தனை நிறைந்தது; செறிந்தன, சேணில். 157-9

தருமராசனும், காலனும், யமபடர்தாமும்,
உருமு வீழ்ந்தென, சரம் வந்து வீழ்ந்ததை உணர்ந்து,
மருமதாரையில் பட்டது, ஓர் வடிக் கணை வாங்கி
நிருமியா, 'இது இராகவன் சரம்' என நினைந்தார். 157-10

'கெட்டது இன்று இனித் தென்புலம்; கேடு வந்து எய்தி;
பட்டனம்; இனிப் பிழைப்பு இலம்' என்பது ஓர் பயத்தால்,
முட்ட எய்திய முயற்சியோடு யாவரும் மொய்ப்ப,
சிட்டர்தம் தனித் தேவனை வணங்கினர், சென்றார். 157-11

'சிறந்த நின் கருணை அல்லால், செய் தவம் பிறிது இலார்மேல்
புறம் தரு முனிவு சாலப் போதுமோ? புத்தேள்! நின்னை
மறந்திருந்து உய்வது உண்டோ? மலர்மிசை அயனைத் தந்த,
அறம் தரு சிந்தை ஐய! அபயம், நின் அபயம்' என்றார். 157-12

'அய்யனே! எமை ஆளுடை அண்டர் நாயகனே!
மெய்யனே!' என, சரணில் வந்து, யாவரும் வீழ்ந்தார்;
'பொய்யினேர் செய்த பிழை பொறுத்தருள்!' என, போர் மூண்டு
எய்ய நேரிலாச் சிலையினை மடக்கினன், இராமன். 157-13

வந்து அடைந்து, 'உனக்கு அபயம்' என்று, அடியினில் வணங்கி,
''எம் தனிப் பிழை பொறுத்தி'' என்று, இயம்பினர்; இதனால்
உம்தம்மேல் சலம் தவிர்ந்தனென்; யூக நாயகன்தான்
தந்த சேனையில் வசந்தன் வந்திலன்; தருக' என்றான். 157-14

தன் தனிச் சரண் வணங்கலும், இராகவன் சாற்றும்;
'''என் தனிப் பிழை பொறுத்தி'' என்று இயம்பினை; அதனால்
உன்தன்மேல் சலம் தவி ந்தனம்; யூபநாயகன்தான்
தந்த சேனையின் வசந்தன் வந்திலன்; தருக' என்றான். 157-15

அண்ணல் ஆரியன், 'தருதி' என்று அருளலும், அவர் போய்,
விண் எலாம் புகுந்து ஓடியே, வசந்தனை விரைவில்
கண்ணின் நாடி, நல் உயிரினைக் காண்கிலாது இருந்தார்;
'திண்ணன் யாக்கை எங்கே?' என, சாம்புவன் செப்பும்: 157-16

[இதன்பின் 142-23, 142-8, 142-9 என்னும் பாடல்கள் உள்ளன.]

அன்னதே என, 'அவன் உயிர்க்கு அமரர்தம் பதிக்கே
முன்னது ஓர் உடல் கொண்டு, இவண் தருக!' என மொழிய,
சொன்ன வாய்மை கேட்டு, அனுமனும் துணைவரைப் பாரா,
'பொன்னின் பாதுகம் பணிந்தனென், விடை' எனப் போனான். 157-17

[இதன்பின் 142-10, 11, 25, 12, 15, 16 என்னும் பாடல்கள் வர, 'வசந்தன் உயிர் வரு படலம்' முடிவு பெறுகிறது.]

அன்னது ஆதலின் அமரர் அந் நகரிடை, ஆங்கண்
முன்னது ஓர் உடல் நாடியே கொணர்ந்திட, முந்தச்
சொன்ன வாயுவைத் தரிசிக்க, வசந்தனும் தோன்றி,
பொன்னின் பாதுகம் புனைந்தனன்; தருமனும் போனான். 157-29

அன்னகாலையில், புட்பக விமானம் ஆங்கு அடைய,
முன் இராகவன், சானகி, இலக்குவன் முதலா,
மன்னு வானரம் எழுபது வெள்ளமும் வரையா
உன்னி ஏறலும், உச்சியில் சொருகு பூப் போன்ற. 157-30

என்ற புட்பக விமானத்தின் ஏறினர் எவரும்;
'நன்றுதான்' என நாயகன் ஏறினன் திருவோடு;
அன்றுதான் இளங்கோவொடும் அக் கவி வெள்ளம்
ஒன்றுதான் என ஒரு திசை இருந்ததும் ஒக்கும். 158-1

ஆய கண்டு, அமலன் உள்ளம் மகிழ்ந்தனன்; அனுமன் தன்பால்
நேயம் மூண்டு அதுதான் நிற்க, நெடியவன் சரணம் சூடி,
மேயினன், தமர்களோடு வசந்தனும்; விண்மீதாகப்
போயினது, இராமன் சொல்லின், புட்பக விமானம் அம்மா! 158-2

வென்றி சேர் கவியின் வெள்ளக் கடல் முகந்து எழுந்து, விண்மேல்
சென்றது விமானம்; செல்ல, திசையொடு தேசம் ஆதி
என்றவை அனைத்தும் தோன்ற, இராமனும் இனிது தேறி,
தென் திசை இலங்கையின் சீர் சீதைக்குத் தெரிக்கலுற்றான்: 162-1

'மன்னு பொற் கொடிகள் ஆட, மாட மாளிகையின் ஆங்குத்
துன்னு பைம் பொழில்கள் சுற்ற, தோரணம் துவன்றி, "வானோர்
பொன்னகர் ஒக்கும்" என்று புகழ்தலின், புலவராலும்
பன்ன அரும் இலங்கை மூதூர், பவளவாய் மயிலே! பாராய். 162-2

'வெதிர் எதிர் அஞ்சும் மென் தோள் வெண் நகைக் கனி வாய் வல்லி!
எதிர் பொர வந்த விண்ணோர்-இறைவனைச் சிறையில் வைத்த
அதிர் கழல் அரக்கர் தானை அஞ்சல் இல் ஆறு செல்ல,
கதிர் மதி விலங்கி ஏகும் கடி மதில் மூன்றும் காணாய். 162-3

'வென்றி வேல் கருங் கண் மானே! என்னொடும் இகலி, வெய்ய
வன் திறல் அரக்கன் ஏற்ற வட திசை வாயில் நோக்காய்;
கன்றிய அரக்கன் சேனைக் காவலன்தன்னை நீலன்
கொன்று, உயிர் கூற்றுக்கு ஈந்த குண திசை வாயில் நோக்காய்.
162-4

'மறத் திறல் வாலி மைந்தன், வச்சிரத்து எயிற்றோன்தன்னைச்
செறுத்து, உயிர் செகுத்து, நின்ற தென் திசை வாயில் நோக்காய்;
அறத்தினுக்கு அலக்கண் செய்யும் அகம்பன்தன் உடலை ஆவி
வெறுத்து, எதிர் அனுமன் நின்ற மேல் திசை வாயில் நோக்காய்.
162-5

'கருங் கடல் நிகர்ப்ப ஆன அகழி ஓர் மூன்றும் காணாய்;
மருங்கு அடர் களபக் கொங்கை மதி நுதல் மிதிலை வல்லி!
இருங் கட முகத்த யானை, இவுளி, தேர், காலாள் துஞ்சி,
பொரும் கடர் நிறத்தர் வீய்ந்த போர்க்களம்தன்னைப் பாராய்.
162-6

'கொடி மதில் இலங்கை வேந்தன் கோபுரத்து உம்பர்த் தோன்ற,
அடு திறல் பரிதி மைந்தன் அவன் நிலை குலையத் தாக்கி,
சுடர் முடி பறித்த அந் நாள், அன்னவன் தொல்லை வெம் போர்ப்
படியினை நோக்கி நின்ற சுவேல மால் வரையைப் பாராய். 162-7

'பூக் கமழ் குழலினாய்! நின் பொருட்டு யான் புகலா நின்றேன்;
மேக்கு உயர் தச்சன் மைந்தன் நளன் இவன் விலங்கலால் அன்று
ஆக்கிய இதனை, வெய்ய பாதகம் அனைத்தும், வந்து
நோக்கிய பொழுதே, நூறும் சேதுவை, நீயும் நோக்காய். 162-8

ஆவினை, குரவரோடும் அரு மறை முனிவர்தம்மை,
பாவையர் குழுவை, இன்சொல் பாலரை, பயந்து தம் இல்
மேவின அவரை, செற்றோர், விரி கடல் சேது வந்து
தோய்வரேல், அவர்கள் கண்டாய், சுரர் தொழும் சுரர்கள் ஆவார்.
169–1

மரக்கலம் இயங்கவேண்டி, வரி சிலைக் குதையால் கீறித்
தருக்கிய இடத்து, பஞ்ச பாதகரேனும் சாரின்,
பெருக்கிய ஏழு மூன்று பிறவியும் பிணிகள் நீங்கி,
நெருக்கிய அமரர்க்கு எல்லாம் நீள் நிதி ஆவர் அன்றே. 169-2

ஆங்கு அது காட்டக் கண்ட ஆயிழை, 'கமலம் அன்ன
பூங் கழற் புயல்போல் மேனிப் புனித! என் பொருட்டால் செய்த
ஈங்கிதற்கு ஏற்றம் நீயே இயம்பு' என, இரதம் ஆங்கே
பாங்குற நிறுவி நின்று, இங்கு இவை இவை பகரலுற்றான்:
170-1

'அந்தணர்தம்மைக் கொன்றோர், அருந் தவர்க்கு இடுக்கண் செய்தோர்,
செந் தழல் வேள்வி செற்றோர், தீ மனை இடுவோர், தம்பால்
வந்து இரந்தவர்க்கு ஒன்று ஈயா வைக்கும் வன் நெஞ்சர், பெற்ற
தந்தையைத் தாயைப் பேணாத் தறுகணர், பசுவைச் செற்றோர், 170-2

'குருக்களை இகழ்வோர் கொண்ட குலமகள் ஒழியத் தங்கள்
செருக்கினால் கணிகைமாரைச் சேர்பவர், உயிர் கொல் தீம்பர்,
இருக்குடன் அமரும் தெய்வம் இகழ்பவர், ஊன்கள் தின்று
பெருக்கிய உடலர், பொய்ம்மை பிதற்றுவோர், பீடை செய்வோர், 170-3

'வெய்யவன் உச்சி சேர மிக வழி நடந்து போவோர்,
மை அறும் முன்னோன்தன்னை வலி செயும் தம்பிமார்கள்,
கை உள முதல்கள்தம்மைக் கரந்து தம்பிக்கு ஒன்று ஈயார்,
துய் அன சொற்கள் சொல்வோர், சோம்பரைச் சுளித்துக் கொல்வோர். 170-4

'ஊரது முனிய வாழ்வோர், உண்ணும்போது உண்ண வந்தோர்க்கு
ஆர்வமோடு அளியாது இல்லம் அடைப்பவர், அமணே சென்று
நீரினுள் இழிவோர், பாவ நெறிகளில் முயல்வோர், சான்றோர்
தாரமது அணைவோர், மூத்தோர்தமை இகழ் அறிவிலாதோர். 170-5

'கண்டிலாது 'ஒன்று கண்டோம்'' என்று கைக்கூலி கொள்வோர்,
மண்டலாதிபர் முன் சென்று வாழ் குடிக்கு அழிவு செய்வோர்,
மிண்டுகள் சபையில் சொல்வோர் மென்மையால் ஒருவன் சோற்றை
உண்டிருந்து, அவர்கள்தம்பால் இகழ்ச்சியை உரைக்கும் தீயோர், 170-6

'பின்னை வா, தருவென்' என்று பேசித் தட்டுவிக்கும் பேதை,
கன்னியைக் கலக்கும் புல்லோர், காதலால் கள்ளும் மாந்தர்,
துன்னிய கலை வல்லோரைச் சுளிந்து உரைத்து இகழ்வோர், சுற்றம்
இன்னலுற்றிடத் தாம் வாழ்வோர், எளியரை இன்னல் செய்வோர், 170-7

'ஆண்டவன் படவும் தங்கள் ஆர் உயிர் கொண்டு மீண்டோர்,
நாண் துறந்து உழல்வோர், நட்பானவரை வஞ்சிப்போர், நன்மை
வேண்டிடாது இகழ்ந்து, தீமை செய்பவர், விருந்தை நீப்போர்,
பூண்டு மேல் வந்த பேதை அடைக்கலம் போக்கி வாழ்வோர். 170-8

'கயிற்றிலாக் கண்டத்தாரைக் காதலித்து அணைவோர், தங்கள்
வயிற்றிடைக் கருவைத் தாமே வதைப்பவர், மாற்றார்தம்மைச்
செயிர்க்குவது அன்றிச் சேர்ந்த மாந்தரின் உயிரைச்செற்றோர்,
மயிர்க் குருள் ஒழியப் பெற்றம் வெளவுவோர், வாய்மை இல்லோர், 170-9

'கொண்டவன்தன்னைப் பேணுக் குலமகள், கோயிலுள்ளே
பெண்டிரைச் சேர்வோர், தங்கள் பிதிர்க்களை இகழும் பேதை,
உண்டலே தருமம் என்போர், உடைப்பொருள் உலோபர், ஊரைத்
தண்டமே இடுவோர், மன்று பறித்து உண்ணும் தருகண்ணாளர், 170-10

'தேவதானங்கள் மாற்றி, தேவர்கள் தனங்கள் வௌவும்
பாவ காரியர்கள், நெஞ்சில் பரிவிலாதவர்கள், வந்து
'கா' என, 'அபயம்' என்று, கழல் அடைந்தோரை விட்டோர்,
பூவைமார்தம்மைக் கொல்லும் புல்லர், பொய்ச் சான்று போவோர், 170-11

'முறையது மயக்கி வாழ்வோர், மூங்கை அந்தகர்க்குத் தீயோர்,
மறையவர் நிலங்கள்தன்னை வன்மையால் வாங்கும் மாந்தர்,
கறை படு மகளிர் கொங்கை கலப்பவர், காட்டில் வாழும்
பறவைகள், மிருகம், பற்றிப் பஞ்சரத்து அடைக்கும் பாவர், 170-12

கார்க் கன வரை சேர் கானில் கடுங் குழி கல்லும் கட்டர்,
நீர்க் கரை அதனில் ஒட்டி நெடுங் கலை முயல் மான் கொல்வோர்,
ஊர்க் கெழு கூவல் வீழ்ந்த உயிர்ப் பசு எடாது போவோர்,
வார்க் கெழு தன மின்னாரை வழியில் விட்டு ஏகும் மாக்கள், 170-13

வழி அடித்து உண்போர், கேட்டால் வழி
சொல்லாதவர்கள், வைப்பைப்
பொழி இருள் களவு காண்போர்,
பொய் சொல்லிப் பண்டம் விற்போர்,
அழிவு இலா வாய்மை கொன்றோர்,
அடைந்தது.......................
.....................................
தெரிசிக்கத் தீர்க என்றான். 170-14

'ஆதியர் மூவர்க்கு அந் நாள், அரு மறை அறைந்த அந்த
நீதியாம் புராணம்தன்னை இகழ்பவர், நிறையக் கேளார்,
பாதியில் விட்டு வைப்போர், படித்தவர்ப்பிரியப்படுத்தார்,
போதம் இலாதார் ''மற்றச் சமயம் பொல்லாதது'' என்பார், 170-15

'என்று இவர் முதலா மற்றும் எழு நரகு அடையும் பாவம்
ஒன்றினர், நன்றிதன்னை மறந்தவர் ஒழிய உள்ளோர்,
துன்றிய வினைகள் எல்லாம், சுடர் கண்ட இருளே போல,
தென் திசை வந்து, சேதுத் தரிசிக்க, தீரும்' என்றான். 170-16

ஆங்கது கேட்டு, அருந்ததியே அனையாளும், 'அவதியுடன்
இங்கு அணுகும் செய்ந் நன்றி மறந்திடும் தீ மனத்தோர்கள்
தாங்க அரும் பாவங்களையும் எனக்காகத் தவிர்க்க' என,
'நீங்கிடுக அதுவும்' என்றான்—நிலமடந்தை பொறை தீர்த்தான். 170-17

'பார் எழுவி வாழ்வோர்கள் பஞ்ச மா பாதகமும்
சீர் எழுவு திரு அணையைத் தெரிசிக்கத் தீர்க' என,
கார் எழுவு திரு மேனிக் கண்ணன் நினைப்பின்படியே,
ஈர்-எழுவர் நால்வர் என்னும் இருடிகளும் எழுதினரால். 170-18

'பார் மேவும் மாந்தர்கள் செய் பஞ்ச மா பாதகமும்
சீர் மேவும் திரு அணையைத் தெரிசிக்கத் தீர்க' என,
கார் மேவும் திரு மேனிக் காகுத்தன் கட்டுரைத்து,
வார் மேவும் முலைச் சனகி மாதோடும் வழிக்கொண்டான். 170-19

என்பன பலவும் அந்த ஏந்திழைக்கு இருந்து கூறி,
தன் பெருஞ் சேனையோடும் தம்பியும் அரக்கர் கோவும்
பொன் பொரு விமானம்தன்மேல் போகின்றபோது, மிக்க
இன்புடை இராமன் வேலைக்கு இப் புறத்து இழிந்து, என் செய்வான். 170-20

முன் பெல அரக்கன்தன்னை முனி கொலை தொடரக் கண்டு, ஆங்கு,
'அன்பினால் அரி பால் தோன்றும் அரனை அர்ச்சித்தால் அன்றி,
துன்பமே தொடரும் பொல்லாச் சூழ் கொலை தொலையாது' என்று ஆங்கு
இன்புறும் இராமன் வேலைக்கு இப் புறத்து இழிந்து நின்றான். 170-21

திருவணை உயர் பதம் செப்பி மீண்டபின்,
அருகு அணை திருமகட்கு, ஆங்கு மற்று உள
தரு அணை திரள் புயச் சனக வல்லிக்கு, ஆம்
கரு வரை முகில் நிற வண்ணன் காட்டுவான். 170-22

கப்பை எனும் கன்னியையும், சுந்தனர் தாதையையும்,
அப்பொழுதே திருவணைக்குக் காவலராய் அங்கு இருத்தி,
செப்ப அரிய சிலையாலே திருவணையை வாய் கீறி,
ஒப்பு அரியாள்தன்னுடனே, உயர் சேனைக் கடலுடனே, 170-23

வேந்தர் வேந்தனும் வேலையின் கரையினில் வரவே,
வாய்ந்த சாய்கையும் வந்தது; வானவர் வணங்க,
ஏந்து தோள் புயத்து இராமனும், இலக்குவன்தானும்,
வாய்ந்த சீதையும், மானமும், வானர வேந்தும், 170-24

பாய்ந்த வேலையின் கரையிடைப் பரமன் அங்கு உறவே,
சாய்ந்த சாய்கையும் வந்து, அணுகாது அயல் கிடக்க,
ஏந்து திண் புயத்து இராமனும், இளையவன்தானும்,
வாய்ந்த சீதையும், சேனையும், மற்றுள பேரும், 170-25

நின்ற போதினில், நிகர் இலா அகத்தியன் முதலோர்
குன்றுபோல் புயத்து இராகவன்தனை வந்து குறுக,
''நன்று நின் வரவு'' என்னவே, நாதனும் வணங்கி,
வென்றி வேந்தனும் வேதியர்தம்மொடு வியந்து. 170-26

சேதுவின் கரை சேர்ந்த அத் திறல் புனை இராமன்,
'ஏது இத் தலம்?' எனக் குறுமுனிவனைக் கேட்ப,
'வாத ராசனும் வாசுகிதானும் முன் மலைந்த
போது, தந்தது, இப் பொன் நகர்' என்று அவன் புகன்றான்.
170-27

புகன்றவன்தனைப் பூங் கழல் இராகவன் சாய்கை
அகன்ற காரணம் குறுமுனி உரைசெய, அவனும்,
'பகர்ந்த தேவரும், பாற்கடல் பள்ளியான், பரமன்,
புகுந்தது இவ் வழி; பூவில் வந்தவனும், மற்று யாரும்,
170-28

'இருப்பது இத் தலம்; ஆகையால், இராவணன் சாய்கை,
அருத்தி இன்றியே, அகன்றது' என்று அருள் முனி அறைய,
பெருத்த தோளுடை அண்ணலும் பிரியம் வந்து எய்தி,
'கருத்து மற்று இனி உரை' என, குறுமுனி கழறும்:
170-29

'இந்த மா நகர்தன்னிலே இறைவனை அருச்சித்து,
உன்தன் மா நகர் எய்தினால், சாய்கை போம், உரவோய்!'
'அந்த நீதியே செய்தும்' என்று, அனுமனை அழைத்திட்டு,
'எம்தம் நாதனை இமைப்பினில் கொடுவருக' என்றான். 170-30

அந்த வேலை, முனிவன் அளி தெருள்
இந்த மா நிலத்து யாவரும் இன்புற,
'கந்த மேவிய கங்கையில் ஓர் சிலை
தந்து காண்' என, மாருதி தாவினான். 170-31

'போதி' என்று, அவற் போக்கிய இராமனும், இந்த
மாது சீதையும், மைந்தனும் இலக்குவன்தானும்,
தீது தீரவே தீர்த்தங்கள் யாவையும் ஆடி,
ஆதி நாதனும் இருந்தனன், அமரர்கள் வியப்ப. 170-32

ஆன போதினில், ஐயன் மனத்துளே
தான் நினைந்ததுதான் ஆர் அறிகுவார்?
ஞானம் ஓர் வடிவு ஆகிய நாரணன்
மோனமாகி இருந்தனன், மூவரான். 170-33

காலம் சென்றது எனக் கருதி, கையால்
கோலமான மணலினைக் கூட்டியே,
'ஆலம் உண்ட தே இவர் ஆம்' என
ஞாலம் உண்டவர் தம் மனம் நாட்டவே. 170-34

'முகுத்தம் ஆனதே' என முனி மொழிதலும், இராமன்
மிகுத்தது ஓர் இடத்து எய்தியே, வெண் மணல் கூப்பி,
அகத்தினில் புறம் பூசித்தே, அடி மலர் இறைஞ்சி,
செகுத்த தோளுடைத் தம்பியும், சீதையும், தானும், 170-35

ஒத்த பூசனை செய்யவும், அமைதியின் உள்ளச்
சுத்தி மேவிய ஞானமும் தொடர்விடாது இருந்தோன்
அத்தன் பாதகம் ஆனவை அழிதர இயற்றி,
சித்தம் வாழ்தர நின்றனன், தேவர்கள் துதிப்ப. 170-36

நின்ற போதினில், நிறங்களும் படலமும் கொண்டு,
வென்றி சேர் புய மாருதி விரைவினில் வந்து,
'நன்று செய்தனை!' என்னப் போய் நாதனைப் பிடுங்கி,
வென்றி வால் அற்று, மேதினி வீழ்ந்தனன், வீரன். 170-37

[இந்தப் பாடல் காணும் இடத்தில், இதற்குப் பிரதியாக, பின்வரும் ஐந்து பாடல்கள் ஒரு பிரதியில் உள்ளன.]

ஆய வேலையில், கங்கையின் அருஞ் சிலை வாங்கி,
தூய வார் கழல் அனுமனும் தோன்றினன்; தோன்று,
சீயமாய் மலி அண்ணல் முன் திருச் சிலை வைத்து,
நேயமோடு இரு தாள் பணிந்து, அங்கு அவன் நின்றான்.
170-37(அ)

நின்ற காலையில், அமலன் அங்கு அனுமனை நோக்கி,
ஒன்று அலாத பல் முகமன் அங்கு உரைத்து, 'நம் பூசை
சென்றது ஆதலின், திருச் சிலை தாழ்த்தது; இப் புளினக்
குன்றினுல் சிவன் தன்னுருக் குறித்தனென், கோடி'.
170-37(ஆ)

என்னும் வாய்மை அங்கு இராகவன் இயம்பிட, இறைஞ்சி,
முன்னி மாருதி மொழிந்தனன்: 'மூவுலகு உடையோய்!
இன்னும் யான் தரும் கங்கையின் சிலையிடைப் பிழையாது
அன்ன தானத்தின் அமைப்பென் ஓர் இமைப்பிடை' எனவே.
170-37(இ)

ஈர்த்தனன் வாலினுலே, இராகவன் பூசை கொள்ளும்
கூத்தனே; அனந்தன் வாழும் குவலயம் அளவும் கூடி.
வார்த்த பேர் உருவம் கொள்ள, வால் விசைத்து, அனுமன் அந்த
மூர்த்தி என்று உணரான், நெஞ்சம் மூச்சு அற, தளர்ந்து வீழ்ந்தான். 170-37(ஈ)

மனுபரன் அனுமன்தன்னே வரவழைத்து, ஈசன் வன்மை-
தனே உரைத்து, 'இடை நீ தந்த நாதனே நடுவே நாட்டி,
முனம் அதை ஏத்தி, பின் இம் மூர்த்தியை ஏத்தும்' என்ன,
அனைவரும் அமரர்தாமும் அம் முறை ஏத்தி நின்ருர். 170-37(உ)

விழுந்தவன்தனே வெந் திறல் இராகவன் நோக்கி,
'அழுந்து சிந்தையாய்! அறிவு இலாது அதனே என் செய்தாய்?
பொழிந்து மா மலர் இட்டு நீ அருச்சி' என்று உரைப்ப,
எழுந்து போய், அவன், இறைவனே அருச்சனே செய்தான். 170-38

அவ் இடத்து, 'அனுமன் தந்த, கங்கைமேல்
வவ்விடப்படும் வந்திடுவான் சிலே
இவ் இடத்தினில் யாவரும் ஏத்து' எனு,
தெவ் அடக்கும் சிலேயவன் செப்பினுன். 170-39

'எம்தன் நாதன் இவன்' என்று இறைமகன்
தந்த நாமம் சராசரம் சார்ந்தபோது,
இந்திரன், பிரமா முதல் எய்தினுர்;
வந்து, வானவர் யாவரும் வாழ்த்தினுர். 170-40

'இத் தலத்தினில் யாரும் அங்கு ஓர் சிலே
வைத்து மா மனத்து உள்ளே வழுத்துவார்,
நத்து உலாய கை நாரணன், நான்முகன்,
பித்தன், மூவரும் ஏத்தப் பெறுக' எனு. 170-41

என்று, இராகவன் ஈசன் பெருமையின்
நன்றிதன்னே நவில, அடங்குமோ?
சென்று சென்று, 'செய, செய! போற்றி!' என்று,
அன்று இராச குமாரன் அறைகுவான்: 170-42

பூசனேத் தொழில் முடிந்தபின், பூங் கழல் இராமன்
தேவத் தச்சனே அழைத்து, 'நீள் திரைக் கடல் கிடந்த
காவல் மா மலே கொணர்ந்து, நீ கண்ணுதல் கோயில்
பூவில் வந்தவன் சொல்வழிச் சமை' எனப் புகன்ருன். 170-43

நந்தியம் பதி இறைவனை நாதனும் அழைத்தே,
'இந்த மா மலை இரும்' என, யாவையும் நல்கி,
'விந்தை தங்கிய தோளினீர்! வேந்தனைப் பூசித்து,
இந்த மா நகர் இரும்' என, இராமனும் அகன்றான். 170-44

போன காலையில், பூங் கழல் இராகவன் பின்னே
சேனை தான் வர, தேவர்கள் யாவரும் வணங்கி,
மேல் நிலத்தவர் சென்றிட, விடை கொடுத்தருளி,
தானும், சீதையும், தம்பியும், சேதுவைச் சார்ந்தார். 170-45

தேர் ஏறி, மா நாகம் சென்னிமிசைச் சென்று ஏற,
கார் ஏறு கண்ணபிரான், காவலவன் கமழ் துளபத்
தார் ஏறு தடந் தோளான், தனி வயிரக் குனி சிலைக் கைப்
போர் ஏறு, பொலிவுடனே வட திசையில் போயினனால். 170-46

சேர்ந்து, சேதுவின் தென் கரை கடந்து, வந்து எய்தி,
கூர்ந்த மானமேல் இருந்தவன் வட திசை குறுகிப்
போந்து, வானரப் புதுமையும் சனகிக்குப் புகன்று,
தீர்ந்த சேதுவின் கரையையும் காட்டினன், திறலோன். 170-47

வரையலுற்றனன், மலர்க் கரத்து இருந்த வன் சிலையால்,
திரையில் உற்றிட மரக்கலத் தொகுதிகள் செல்ல,
விரைவில் உற்றிடும் விமானத்தின் மீதினில் இருந்தே;
உரை செய்து உற்றனன், சனகிக்குப் பின்னும் அங்கு உரவோன்:
170-48

'நின்னை மீட்பதே நினைந்து, சில் நெறி எலாம் நீந்தி,
என்னை ஈட்டிய திறத்தினில் திருவுடன் இருப்ப,
சொன்ன வேற் படை அரக்கரைக் குறைத்த இச் சேனை
மன்னனால் பெற்ற வலி இது; வென்றியும் அதனால். 170-49

'தேய்ந்த மா மதி போலும் சிலைநுதல்!
வாய்ந்த வானர வாரணம், மாருதி,
ஆய்ந்த மா மணி ஆழியை அன்றுதான்
பாய்ந்த வெற்பு மயேந்திரம் பார்த்தியால். 171-1

'மாருதி நின்னை நாடி வருபவன், ஏறிப் பாயப்
பாரிடைக் குளித்து நின்ற பவள மால் வரையைப் பாராய்;
போரிடைப் பொலன் கொள் பொன் தார்ப் புரவிகள் போக்கு இற்று
நீரிடைத் தரங்கம் ஓங்கும் நெறி கடல் அதனை நோக்காய்!' [என்ன,
171-2

ஆரியன் அனைய கூற, அடி இணை இறைஞ்சி, ஐய
வேரி அம் கமலை செப்பும்: 'விரிந்த கிட்கிந்தை உள்ளார்,
சீரிய அயோத்தி சேரத் திருவுளம் செய்தி' என்ன,
கார் நிற அண்ணல், 'மானம் காசினி குறுக' என்றான். 173-1

என்றவன் சேயை நோக்கி, இசைந்து, கிட்கிந்தை உள்ளார்,
நன்று நம் பதியைக் காண, நாயக! அழைத்தி' என்ன,
சென்று அவன் சாம்பன்தன்னை, 'திசை எட்டும் திரியச் சாற்றி,
இன்று நம் சுற்றம் எல்லாம் இயல்புடன் அழைத்திடு' என்றான்.
174-1

என்றபோது, எழுந்து சாம்பன், இசைந்த கிட்கிந்தை உள்ளார்க்கு
ஒன்று ஒழியாத வண்ணம் ஓதினான்; ஓதக் கேட்டே,
ஒன்றிய கடல்கள் ஏழும் உற்று உடன் உவா உற்றென்ன,
மன்றல்அம் குழலினார்கள் துவன்றினர், மகிழ்ச்சி கூட. 174-2

சந்திர மானம்தன்மேல் தாரகை சூழ்ந்தது என்ன,
இந்திரன் மகனார் தாரத் தாரையும், ருமையும், கூடி
வந்தனர்; வந்து மொய்த்தார், வானர மடந்தைமார்கள்;
இந்திரை கொழுநன்தன்னை ஏத்தினர்; இறைஞ்சி நின்றார்.
176-1

நின்ற வாரிதியை முன்பு நெருப்பு எழக் கடைந்தபோது, அங்கு
ஒன்றல பலவும் ஆங்கே உற்பவித்தவற்றினுள்ளே,
தன்னுடன் பிறந்த முத்து மாலையை, தரையில் தோன்றி
மின் என நின்ற சீதைக்கு அளித்தனள், விரைவில் தாரை.
176-2

தாரையைச் சீதை புல்கி, 'தாமரைக்கண்ணன் அம்பால்
பாரை விட்டு அகன்றான் வாலி; பார்உளோர்க்கு அவதி உண்டோ?
சீரிது மலரோன் செய்கை; தெரியுமோ? தெரியாது அன்றே?
ஆர் இது தெரியகிற்பார், காலத்தின் அளவை அம்மா?' 176-3

என்றிட, தாரை நிற்க; எரி கதிர்க் கடகம் ஒன்று,
மின் திரிந்தனைய கொள்கை மேலைநாள் விரிஞ்சன் ஈந்தது,
அன்று அது இரவி பெற்று நாயகற்கு ஈந்தது, அன்று
சென்று அடி இணையில் இட்டே, இறைஞ்சியே, ருமையும் நின்றாள்.
176-4

நின்றவள்தன்னை நங்கை அம் கையால் தழுவி நின்று,
வன் துணை மங்கைமாரும் மைந்தரும் அங்குச் சூழ,
தன் திருக் கைகளாலே தழுவினள் என்னக் கண்ணால்
ஒன்று அல பலவும் கூற, உணர்ந்து உளம் உவகை உற்றே.
176-5

'கடி கமழ் குழலினாளே! கார்காலம் யாங்கள் வைகும்
வடிவுடைச் சிகரம் ஓங்கும் மாலியவானை நோக்காய்;
அடு திறல் பரிதி மைந்தன் நகர்அதன் அழகு பாராய்;
வடிவு உள மலை ஏழ் அன்ன மராமரம் ஏழும் நோக்காய். 177-1

'கனி வளர் பவளச் செவ் வாய்க் கனங் குழை! நின்னைக் காணாத்
துனி வளர் துன்பம் நீங்க, தோழமை நாங்கள் கொண்ட
பனி வளர் இருளை மாற்றும் பகலவன் சேயும் யாமும்
நனி வளர் நட்புக் கொண்ட நலம் தரு நாகம் நோக்காய்.
177-2

'மாழை ஒண் கண்ணாய்! உன்னைப் பிரிந்து யான் வருந்தும் நாளில்,
தாழ்வு இலாத் துயரம் நீங்க, தாமரை உந்தியான் கை
ஆழி ஆம் ஆற்றலானை, அனுமனை, அரக்கர் அஞ்சும்
பாழியான்தன்னை, கண்ட பம்பையாறு அதனைப் பாராய். 177-3

"பொய் வித்தி, வஞ்சம் காத்து, புலை விளைத்து, அறைத்தைத் தின்
கை வித்தும் சரத்தினான் அக் கடல் பெரும் படையை எல்லாம் [றேன்
நைவித்த இரவு நான்கால் மருந்துக்கு நடந்து, நம்மை
உய்வித்த வீரன்தன்னைக் கண்ட இடம் உது கண்டாயே. 177-4

'சவரியது இருக்கைதானும், கவந்தனைத் தடிந்த கானும்,
இவர் செய எழுந்த ஆற்றல் கரன் உயிர் இழந்த பாரும்,
சவையுறு சுகுட்டன் மைந்தன், சரவங்கன் முதலோர் காதல்
கவை அறு முனிவர்தங்கள் இடங்களும் கருதி நோக்காய்.
177-5

'விரை கமழ் ஓதி மாதே! விராதன் வந்து எதிர்ந்து போர் செய்
நிரை தவழ் அருவி ஓங்கும் நெடு வரை அதனை நோக்காய்;
'சரதம் நான் அரசு வேண்டேன்; தடமுடி சூடுக' என்று
பரதன் வந்து அழுது வேண்டும் பரு வரை அதனைப் பாராய்
177-6

'வளை பயில் தளிர்க் கை மாதே! வரு புனல் பெருகக் கண்டு,
துளை பயில் வேயின் தெப்பம் இயற்றி, யான் துயரம் இன்றி
விளைதரு புனலை நோக்கி வியந்து உடன் இருப்ப, வெல் போர்
இளையவன் தனியே நீந்தும் யமுனை யாறு இதனைப் பாராய்.
177-7

'பயன் உறு தவத்தின் மிக்க பரத்துவன் இருக்கை பாராய்;
கயல் பொரு கங்கை யாறும், குகன் உறை நகரும், காணாய்;
அயன் முதல் அமரர் போற்ற அனந்தன்மேல் ஆதிமூலம்
துயில் வரும் கடலே அன்ன அயோத்தியைத் தொழுது நோக்காய்',
177-8

என்று உரைத்து, இளவலோடு சனகியும், இரவி சேயும்,
வென்றி வீடணனும், சேனை வெள்ளமும் விளங்கித் தோன்ற,
பொன் திகழ் புட்பகத் தேர் பூதலத்து இழிய ஏவி,
இன் துணைப் பரத்துவாசன் இடவகை இழிந்தான் அன்றே.
177-9

என்று, மன்னவன் பற்பல புதுமையும் யாவும்
மன்றல் அம் குழல் சனகிக்குக் காட்டினன், மகிழ்ந்து,
குன்று துன்றிய நெறி பயில் குடதிசைச் செவ்வே
சென்று, கங்கையின் திரு நதித் தென் கரை சேர்ந்தான். 182-1

ஆர்த்து விண்ணவர் ஆடினர், ஆடகத் தேரும்
பேர்த்த போதினில் நிலமிசை அணுகுற, பெரியோர்க்கு
ஆர்த்தம் ஆகிய அடல் கரு மலை என நடந்து,
தீர்த்தம் ஆகிய கங்கையின் தென் கரை சேர்ந்தான். 182-2

மான மானம் மீப்போனது, வட திசை வருவது
ஆன காலையில், அறிவனும் ஆயிழை அறிய,
சேனையோர் திறல் சேது வான் பெருமையும் செப்ப,
தானமாகிய தீர்த்தம் ஆம் திரு நதி சார்ந்தார். 182-3

'பாகம் மங்கையோடு அமர்ந்தவன் பயில்வுறு கங்கை
ஆகும் ஈது' என அறநெறி வழுவுரு அலங்கல்
மேக வண்ணனும் துணைவரும் வியந்து உடன் ஆடி,
தாகம் நீங்கினர்: அவ் இடைத் தேவரும் சார்ந்தார். 182-4

இறுத்த தேரினை இருடிகள் எவரும் வந்து எய்தி,
வெறித் துழாய் முடி வேத மெய்ப் பொருளினை வியவா,
'புறத்ததாம் உயிர் பெற்றனம்' என அகம் பொங்க,
திறத்து இராமன்பால் திருமுனி அவனும் வந்துற்றான். 182-5

வந்த மா முனிவோர்களை வணங்கும் முன், அவர்கள்,
'எந்தை! நீ இன்று இங்கு இருந்து, உள வருத்தமும் நீக்கி,
செந்து, நாளை அத் திருநகர் அடைக' எனச் செப்பி,
உந்து சித்திரகூடத்துள் யாரும் வந்துற்றார். 186-1

'தகும் அருந் தவங்கள் ஈட்டி, தசமுகத்து அரக்கன் பெற்ற
யுகம் அரைக் கோடிகாறும் ஏவல் செய்து உழலும் தேவர்
சுகம் உற, சிலை கைக் கொண்ட தொல் மறை அமல! யார்க்கும்
இக பரம் இரண்டும் காக்கும் இறைவன் நீ அன்றி உண்டோ?'
188-1

இந்த வாசகம் இயம்பினன், பின்னரும் இசைப்பான்,
'எந்தை! நீ இன்று இங்கு இருந்து உள வருத்தமும் போக்கி,
சிந்தை அன்பு செய் திருநகர் நாளை நீ சேர்க!' என்று
அந்தம் இல் பரத்துவன் சொல, அவ் இடத்து அடைந்தான்.
189-1

அடைந்த மா முனித் தலைவனை அருச்சனை செய்து,
மிடைந்த சேனைஅம் பெருங் கடல் சூழ்தர, மேல் நாள்,
கடைந்த பாற்கடல் கண் துயில் நீங்கி, வானவர்கள்
படிந்து போற்றிட இருந்தென, பரிவுடன் இருந்தான். 189-2

இருந்த போது, இராமன் தன்னை இருடியும் இயம்பும்: 'எந்தாய்!
பெருந் திறல் இலங்கைதன்னை எங்ஙனம், பெரியோய்! நீயே
வருந்தினை, குரங்கு கொண்டு, மாய வல் அரக்கன் தன்னைத்
திருந்த அப் போரில் வென்று மீண்டவா செப்புக!' என்றான்.
189-3

இராகவன் அவனை நோக்கி, 'இறந்த வாள் அரக்கர் எல்லாம்
அராவின் மாருதியும், மேன்மை வீடணன்தானும், ஆங்கே
குராவருஞ் சேனை எல்லாம் கொன்றிட, கொற்றம் கொண்டு
விராவியே மீண்டது' என்று, மீளவும் பகரலுற்றான்: 189-4

'தந்திரம் உற்ற சேனை தரைப்பட, மறுப்படாமல்
அந்தரம் உற்ற போது, அங்கு அரு மருந்து அனுமன் தந்தான்;
மந்திர வித்தே! எம்பி வரி சிலை வளைத்த போரில்
இந்திரசித்தும் பட்டான்; இலங்கையும் அழிந்தது அன்றே.
189-5

'கறங்கு கால் செல்லா, வெய்ய கதிரவன் ஒளியும் காணா,
மறம் புகா, நகரம்தன்னில் வானவர் புகுதல் வம்பே;
திறம் புகாது அவிரும் நாளும் சிதைவு இலர்; தேரும் காலை,
அறம் புகா மறத்தினாலே அழிந்தது அப் பதியும், ஐயா! 189-6

'மறக் கண், வெஞ் சினத்தின் வன்கண், வஞ்சக அரக்கர் யாரும்
இறக்க, மற்று இறந்தது எல்லாம் எம்பிதன் ஈட்டின், எந்தாய்!
பிறப்பு மேல் உளதோ? சூழ்ந்த பெருந் திசை பேரின், பேராத்
துறக்கத்தோ, யாதோ, பெற்றார்? அறிந்தருள், சுருதி நூலோய்!'
189-7

என்ற வாசகம் இருந் தவன் கேட்டு, இகல் இராமன்
தன் துணைப் பெருந் தம்பியைத் தழுவி, ' நீ தக்கோய்!
வென்று மீண்டிலை ஆயின், அவ் விண்ணவர் முனிவர்
பொன்றுமாறு அன்றி, ஆர் உயிர் புரப்பது ஒன்று உளதோ?
189-8

மா தவன் சொன்ன வாய்மையை மனங்கொண்டு, மறையோன்
பாதம் முந்துற வணங்கி, மா முனிவனைப் பாரா,
'ஏதும் யான் செய்தது இல்லை; அவ் இலங்கைமேல் வெகுண்டு
வேத நாயகன் புருவத்தை நெரித்தனன்; விளிந்தார். 189-9

'அன்றியும் பிறிது உள்ளது ஒன்று உரைசெய்வென்: அது அத்
துன்று தார் புனை மாருதி பெரும் புயத் துணையால்
வென்றி கொண்டனம், யாங்கள்; மேல் விளம்புவது எவனோ?'
என்று இயம்பினன், இருடிக்கும் இளவலும் இயைந்தே.
189-10

அனுமன் என்பவன் வாள்முகம் நோக்கினன்; அவனும்
புனித மா தவன்தனைத் தொழா, 'புண்ணியப் பொருளாம்
தனு வலம் கொண்ட தாமரைக்கண்ணவன் தனயன்
எனும்அது என்கொலோ? யாவர்க்கும் தந்தை நீ' என்றான்.
189-11

அங்கு அவன் சொல, அனுமனும் உரைசெய்வான்: அருணப்
பங்கயந்தனில் சீதையாம் பராபரையாட்டி,
சங்கரன் அயன்தன்னையும் தரணி ஈர்-ஏழும்
தங்கு பொன் வயிற்று அன்னைதன் தன்மையை நிகழ்த்தும்:
189-12

'இராகவன் பெருங் குலத்தையும், இப் பெருஞ் செல்வத்
தராதலம் புகழ் சனகன்தன் மரபையும், தந்து, என்
பராபரத்தினைப் பங்கயத்து அமுது எனப் பணிந்தாள்;
புராதனர்க்கு அரசே!' என மாருதி புகன்றான். 189-13

அன்ன வாசகம் கேட்டலும், அந்தணர் கோவும்,
'என்ன வாசகம் சீதைக்கு இன்று இயம்புவது, யாம்?' என்று,
ஒன்றும் வாசகம் உரைத்திலன்; உள் அன்பு குளிர,
'அன்னை வாசவன் திருவினைத் தந்தது' என்று அறைந்தான்.
189-14

பண் குலாவிய சுக்கிரீவன்தனைப் பாரா,
கண்குலா மனம் களித்தவன் கழல்மிசைப் பணிந்து,
மண்குலாம் புகழ் வீடணன், 'நீலனே முதலாம்
எண்கின் வேந்தனும் அழித்தனர் இலங்கையை' என்றான்.
189-15

என்று அவன் இயம்பக் கேட்டு, அங்கு இருந்த மா தவனும், 'இந்த
வென்றிஅம் தானைக்கு எல்லாம் விருந்தொடு சயனம் மேவிக்
குன்று என வருக!' என்று கூறலும், இமையோர் நாட்டில்
அன்று இனிது அரம்பைமார்கள் அமுது எடுத்து, ஆங்கு வந்தார்.
189-16

பான நெய்யுடன் நானமும் சாந்தமும் பல் பூண்
ஏனை வானவர் மகளிர்கள் ஏந்தி வந்து, இழிந்தார்;
ஆன மெய்ப்படை தம்முடைப் போகத்துள் அழுந்த,
ஆன கற்பினுளுடன் எழுந்து, இராமனும் அறைவான்: 189-17

முனிவன் வாள் முகம் நோக்கி, 'மெய் முழுது உணர் முனியே!
அனுமன் ஆண்தகை அளித்த பேர் உதவி இன்று எம்மால்
நினையவும், உரை நிரப்பவும், அரிது; இனி, நீதிப்
புனித! உண்டி எம்முடன்' எனப் புரவலன் புகன்றான். 189-18

என்ற வாசகம் கேட்டலும், இருந் தவத்து எவரும்,
'நன்று, நாயகன் கருணை!' என்று உவகையின் நவில,
துன்று தாரவன் பாதுகம் தொழுது, 'அருந் தொல்லோய்!
ஒன்று கேள்' என, உவகையின் மாருதி உரைக்கும்: 189-19

'செய்த மா தவம் உடைமையின், நினக்கு அன்பு சிறந்து
பொய் இல் சாதனம் பூண்டனன்; புண்டரீகக் கண்
ஐய! நின் பெருங் கருணைதான் அடியனேற்கு அமையும்;
உய்யுமாறு இதின் வேறு உளதோ?' என்று மொழிந்தான்.
189-20

திருந்து மா தவன் செய்தது ஓர் பூசனை செய, ஆண்டு
இருந்தபோது, தன் திருவுளத்து இராகவன் நினைந்தான்;
'பொருந்த மா முடி புனைக!' எனப் பொருந்துறுன், போத
வருந்து தம்பிக்கு, 'வருவென் யான்' என்பதோர் வாக்கை.
189-21

முனிவன் இம் மொழி கூறலும், முது மறைப் பெருமான்-
தனை நினைந்து உளம் வருந்திய தம்பியால் அயரும்
மனம் நெகிழ்ந்து, இரு கண்கள் நீர் வார, அங்கு அமலன்
நினைவின் முந்துறும் மாருதிக்கு, இனையன நிகழ்த்தும்: 193-1

அன்று அவர்தம்மை நோக்கி, அந்த மா தவனும், 'இந்த
வென்றி அம் தானைக்கு எல்லாம் விருந்தொடு சயனம் மற்றும்
குன்றினில் அருளும்' என்று கூறலும், வான நாட்டுள்
ஒன்றிய அரம்பை மாதர் அமுது எடுத்து, ஒருங்கு வந்தார்.
198-1

மாருதி விடைகொண்டு ஏக, வரதனும் மறையோன் பாதம்
ஆர் அருளோடு நீட வணங்கினன்; அவனும் ஆசி
சீரிது கூறி 'சேறி' என்றலும், மானம் சேர்ந்து,
போர் இயல் தானையோடும் பொருக்கென எழுந்து போனான்.
201-1

'மான் நேர் விழியாளுடனே வனம் முன்
போனான் ஒரு நாள்; வரும் நாள் இலதோ?
தேனே! அமுதே! தெளிவே! தெளிவின்
ஊனே! உயிரே! உலகு ஆளுடையாய்! 201-2

'அம் பவளச் செவ் வாய், அணி கடகச் சேவகன்,
வம்பு அவிழும் சோலைக் கோசல நாடுடை வள்ளல்,
எம் பெருமான், என்னை, இழி குணத்து நாயேனை,
'தம்பி' என உரைத்த தாசரதி தோன்றானோ! 201-3

வாழி மலைத் திண் தோள் சனகன்தன் மா மயிலை,
ஏழ் உலகும் ஆளும் இறைவன் மருமகளை,
''தாழ்வு இல் பெருங் குணத்தாள்தான் உன் கொழுந்தி; நீ
தோழன்'' என உரைத்த தோன்றலார் தோன்றாரோ!' 201-4

'துங்க வில் கரத் தோளினர் சொன்ன நாள்,
இங்கு வந்திலர்; யான் இறப்பேன்' என,
மங்கைமாரும் படையும் வன் சுற்றமும்
அங்கு நீர்க் கங்கை அம்பியில் ஏற்றினான். 201-5

'வேத நாதனும், வில்லியும், விரை மலர்த் திருவும்,
ஏது செய்யினும், என் உயிர் முடிப்பென்' என்று எண்ணி,
ஓத நீரிடை ஓடம்அது உடைத்து, உயிர் விடுவான்,
காதலாருடன் கங்கையின் நடுவுறச் சென்றான். 201-6

'கண்ணும் தோளும் வலம் துடிக்கும்; கரை
வண்ணப் புள்ளும் வலியும் வலத்திலே,'
எண்ணும் காலையிலே, எழில் மாருதி,
'அண்ணல் வந்தனன்' என்று உரையாடினான். 201-7

உள்ள வான் கிளை ஏற்றி, உயர் குகன்
வெள்ளக் கங்கையின் ஆக்கி, விரைந்து, அவண்
உள்ளும் நெற்றி உடைப்பளவில், புகும்
வள்ளலார் விடும் மாருதி தோன்றினான். 201-8

ஓங்கு வாலினை ஓட்டி, அவ் ஓடங்கள்
தீங்கு உருவகைச் சுற்றி, திருகி, நீர்
ஆங்கு நின்று அங்கு அவை வலித்தான்; அவை
தீங்கு இலாவகை தென் கரை சேர்ந்தவால். 201-9

'கை ஆர் வெய்ய சிலைக் கருணாகரற்குக் காதலுடைத் தோழ-
மை ஆர், சிருங்கவேரபுரம் உடையாய்! மிகு கோசலை களிறு,
மை ஆர் நிறத்தான், வந்தொழிந்தான், மிதிலை வல்லி அவளுடனே;
ஐயா! வந்தான் தம்பியொடும்; அடியேம் உய்ய, வந்தானே.
201-10

'ஆர்? உனை உரை' என, அனுமன் கூறுவான்:
'சீரிய வாயுவின் தோன்றல்; சீரியோய்!
சூருடை இராமற்குத் தூதன்' என்று எனது
ஏருடைத் தலையின்மேல் எழுதப்பட்டுளேன். 201-11

பரதனைத் தீயையும் விலக்கி, பாருடை
வரதனை, இராமனை, மாறிக் காண்பது
சரதமே; இனி இறை தாழ்க்க ஒணாது' என,
கரதலத்து ஆழியும் காட்டிப் போயினான். 201-12

பரத்துவன் வருதலும், பரிந்து, இராமனும்
கரத் துணை குவித்தனன், இளைய காளையோடு;
எரித் திற முனியும் ஆசிகள் இயம்பிட,
விருப்பொடும் இடவகை இனிது மேயினான். 241-1

கோவொடு தூசு, நல் குல மணிக் குழாம்,
மாவொடு கரிக் குலம், வாவு தேர் இனம்,
தாவு நீர் உடுத்த நல் தரணிதன்னுடன்,
ஏ வரும் சிலை வலான், யாவும் நல்கினான். 258-1

நின்றவன், 'இவ் வயின் நெடியவன்தனைச்
சென்று இறைப் பொழுதினில் கொணர்வென், சென்று' எனா,
பொன் திணி பொலங் கழல் வணங்கிப் போயினான்,
வன் திறல் மாருதி வளர்ந்த கீர்த்தியான். 258-2

ஆய காலையில், ஐயனைக் கொண்டு, தன்
தூய காவின் உறைவு இடம் துன்னினான்;
'மேய சேனைக்கு அமைப்பென் விருந்து' எனா,
தீயின் ஆகுதி செங் கையின் ஒக்கினான். 258-3

பான நெய்யொடு, நானமும், சாந்தமும், பலவும்,
ஆன வெள்ளிலையோடு அடைக்காய், கருப்பூரம்,
தேன் அளாவிய முக் கனி காயொடு தேன், பால்,
வான நாட்டு அர மங்கையர் மகிழ்ந்து கொண்டு இழிந்தார்.
258-4

கங்கை தரு கழலாற்கும், இளவலுக்கும், காரிகைக்கும்,
துங்க முடி வீடணற்கும், சுக்கிரிவப் பெருமாற்கும்,
தங்கு பெருஞ் சேனைக்கும், தனித்தனியே, பொன் கலத்தால்
அங்கு அடைவின் மண்டலம் இட்டு, அணி விளங்க நிறைத்தனரால். 258-5

வெள்ளை நறும் போனகமும், மிகு பருப்பும், பொரிக் கறியும்,
தள்ள அரிய முக்கனியும், சருக்கரையும், நறு நெய்யும்,
எள்ள அரிய பலவிதத்துக் கறியமுதும், இமையவர்தம்
வள்ளல் முதல் அனைவோர்க்கும் வரிசை முறை படைத்தனரால். 258-6

நீர் உலவி, நீர் குடித்து, நினைந்திருந்து, ஆகுதி பண்ணி,
கார் உலவு மேனியனும், காரிகையும், இளங் கோவும்,
தேர் இரவி திருமகனும், தென் இலங்கைப் பெருமானும்,
போரின் உயர் சேனையுடன் போனகம் பற்றினர், பொலிவால். 258-7

'இரவி காதலன், இலங்கையர் கோன், இவர் உதவி
அரசின் ஆசையது என்னலாம்; அனுமனே! என்பால்
விரவு காதலின் நீ செய்த உதவிக்கு வேறு
தருவது ஒன்று இலை, உடன் உணும் தரமது அல்லால்.' 258-8

[இதன்பின் 189-18, 19, 20 எண்ணுள்ள பாடல்கள் உள்ளன.]

'கொற்றவன் உடன் உண்ணுமோ?—கோது இல் மாதவனே!
வெற்றி வீரனே!' என அஞ்சி நின்றனன்; விமலன்
மற்றப் போனகம் ஒரு கை வாய் வைத்தபின், வாராப்
பற்றி, அப்பொழுது அனுமனும் பரிகலம் பறித்தான். 258-9

பரிகலத்து அமுது ஏந்தியே, பந்திகள்தோறும்
இரவி காதலற்கு, அங்கதற்கு, இலங்கையர் வேந்தற்கு,
உரிய வீரர்கட்கு அளித்து, தான் அவர்கள் ஒபாதி
வரிசையால் உண்ண, மா முனி விருந்தும் உண்டனரால். 258-10

பரிகலத்து ஒ(வ்)வோர் பிடிகொடு, பந்திகள்தோறும்
இரவி புத்திரற்கு, இலங்கையர் வேந்துக்கும் உதவி,
உரிய நல் தமர் அனைவர்க்கும் உதவி, பின், அவனும்
வரிசையின் கொண்டு, மா முனி விருந்தும் உண்டனனல். 258-11

அன்ன காலையில் போனகம் அமரர் பொற்கலத்தே
முன்னம்போல் படைத்து, திருமுன்பு வைத்தனரால்;
உன்னும் பேர் உலகு அனைத்தும் உண்டும், பசி தீரா
மன்னன் மா முனி விருந்தும் உண்டு, அகம் மகிழ்ந்தனனல். 258-12

பான நல் அமுதுடன் கருப்பூரமும், பலவும்,
ஏனை வானவர் மகளிர்கள் ஏந்தி, முன் நிற்ப,
தான மெய்ப் படைத் தம்முடைப் போகத்துள் தந்த
ஆன கற்பக நாட்டு அமிழ்து என்பதும் அயின்றான். 258-13

அண்ணல் மா முனி அருளிய போனகம் அளக்கர்-
வண்ணனே முதல் வானரக் கடல் எலாம் வாய்ப் பெய்து,
உண்ணும் வாசகம் கேட்டு, இமையோர், முனிவோரும்,
மண்ணும், நாகரும், யாவரும், அருந் துயர் மறந்தார். 258-14

மான வேந்தரும் வள்ளலும் மலர்க் கரம் விளக்கி,
ஆன வெள்ளிலையோடு அடைக்காய் அமுது அருந்தி,
ஞான மா முனி பெருமையைப் புகழ்ந்து, நாயகனும்
பானல் வேல் விழியாளொடும் படையொடும் இருந்து, 258-15

ஆர் இருள் அகலும்காலை, அமலனும், மறையோன் பாதம்,
ஆர்வமோடு எழுந்து சென்று, வணங்கலும், அவனும் ஆசி
சீரிது கூறி, 'சேறி' என்றலும், தேர்மேல் கொண்டு,
சீரிய தானையோடும் சிறப்பொடும் மகிழ்ந்து சென்றான். 258-16

விருந்தும் உண்டு, மா முனிவனை விடைகொண்டு, தேர்மேல்
அருந்ததிக் கற்பினாளொடும் படையொடும் அமைந்தான்;
வருந்து கோசல நாடுடன் அயோத்தியும் வாழ,
பரிந்து, இராமனும் ஏகினன், பரதனைக் காண்பான். 258-17

இராவணன் வேட்டம் போய் மீண்டு, எம்பிரான் அயோத்தி எய்தி,
தராதல மகளும் பூவில் தையலும் மகிழ, சூடும்
அராவு பொன் மௌலிக்கு எய்ந்த சிகாமணி, குணபால் அண்ணல்
விராவுற எடுத்தாலென்ன, வெய்யவன் உதயம் செய்தான்.
258-18

இளவலை, '"அண்ணலுக்கு எதிர் கொளணும்" என்று, நம்
வளை மதில் அயோத்தியில் வாழும் மக்களை,
"கிளையொடும் ஏகு" எனக் கிளத்தி, எங்கணும்
அளை ஒலி முரசுஇனம் அறைவிப்பாய்' என்றான். 258-19

' "தோரணம் நட்டு, மேல் துகில் பொதிந்து, நல்
பூரணப் பொற் குடம் பொலிய வைத்து, நீள்
வாரணம் இவுளி தேர் வரிசைதான் வழாச்
சீர் அணி அணிக!" எனச் செப்புவாய்' என்றான். 258-20

பரத்துவன் உறைவிடத்து அளவும், பைம் பொன் நீள்
சிரத் தொகை மதில் புறத்து இறுதி சேர்தர,
வரத் தகு தரள மென் பந்தர் வைத்து, வான்
புரத்தையும் புதுக்குமா புகறி, போய்' என்முன். 258-21

என்றலும், அவன் அடி இறைஞ்சி எய்தி, அக்
குன்று உறழ் வரி சிலைக் குவவுத் தோளினன்,
நன்று உணர் கேள்வியன், நவை இல் செய்கையன்,
தன் துணைச் சுமந்திரற்கு அறியச் சாற்றினன். 258-22

அவ் உரை கேட்டலும், அறிவின் வேலையான்,
கவ்வை இல் அன்பினல் களிக்கும் சிந்தையால்,
'வெவ் வெயில் எறி மணி வீதி எங்கணும்
எவ்வம் இன்று, அறை பறை எற்றுக!' என்றிட, 258-23

'வானையும் திசையையும் கடந்த வான் புகழ்க்
கோனை இன்று எதிர்கொள்வான், கோல மா நகர்த்
தானையும் அரசரும் எழுகதான்' என,
யானையின் வள்ளுவர் முரசம் எற்றினர். 258-24

முரசு ஒலி கேட்டலும், முழங்கு மா நகர்
அரசரும் மாந்தரும் அந்தணாளரும்,
கரை செயல் அரியது ஓர் உவகை கைதர,
திரை செறி கடல் என, எழுந்து சென்றவால். 258-25

'அனகனை எதிர்கொள்க' என்று, அறைந்த பேரி, நல்
கனகம் நல்கூர்ந்தவர் கைப்பட்டென்னவும்,
சனகனது ஊர்க்கு என முன்னம் சாற்றிய
வனை கடிப் பேரியும், ஒத்த ஆம்அரோ. 258-26

அறுபதினாயிரம் அக்குரோணி என்று
இறுதி செய் சேனையும், ஏனை வேந்தரும்
செறி நகர் மாந்தரும், தெரிவைமார்களும்,
உறுபொருள் எதிர்ந்தென, உவந்து போயினர். 258-27

அன்னையர் மூவரும், அமரர் போற்றிட,
பொன் இயல் சிவிகையின் எழுந்து போய பின்,
தம் நிகர் முனிவரும் தமரும் சூழ்தர,
மன்னவன் மாருதி மலர்க்கை பற்றுரு, 258-28

திருவடி இரண்டுமே செம் பொன் மௌலியா,
இரு புறம் சாமரை இரட்ட, ஏழ் கடல்
வெருவரும் முழக்கு என வேழம் ஆர்த்து எழ,
பொரு அரு வெண்குடை நிழற்ற, போயினன். 258-29

எல்லவன் மறைந்தனன்—என்னை ஆளுடை
வில்லியை எதிர் கொள, பரதன் மீச் செல்வான்.
அல்லி அம் கமலமே அனைய தாள்களில்
கல் அதர் சுடும் தன கதிரின் என்னவே. 258-30

அவ் வழி மாருதி அம் கை பற்றிய
செவ் வழி உள்ளத்தான், 'திருவின் நாயகன்,
எவ் வழி உறைத்தது? அச் செயல் எலாம் விரித்து,
இவ் வழி எமக்கு நீ இயம்புவாய்' என்றான். 258-31

என்றலும், மாருதி வணங்கி, 'எம்பிரான்,
மன்றல் அம் தொடையினாய்! அயோத்தி மா நகர்
நின்றதும், மணவினை நிரப்பி மீண்டு கான்
சென்றதும், நாயினேன் செப்பல் வேண்டுமோ?' 258-32

'"ஏடுணர் அலங்கல் மார்பத்து இராவணன் முதலோர்க்கு எல்லாம்
வீடணன் கடன்கள் செய்து மீண்டனன்; அவனுக்கு இன்னே
சூடுக மௌலி" என்ன, சுந்தர இராமன் தம்பி
மாடு அணை துணைவரோடும் மகுடமே புனைந்து விட்டான்.
258-33

தோன்றலும், சுமந்திரன் தொழுத கையினன்,
ஈன்று, காத்து, அழித்து, அவை இயற்றும் அவ் உரு
மூன்றுமாய் நான்குமாய் ஐந்துமாம் முதல்
சான்றினைப் பரதற்குச் சுட்டி, சாற்றுவான். 305-1

அப் பொழுது அவ் வயின் அடைந்துளோர்களைத்
'தப்பு அறக் காண்பென்' என்று ஐயன் தன் மனத்து
ஒப்பு அற எண்ணும் முன், உம்பர் நாடு வந்து
இப் புறத்து இழிந்தென இழிந்த, மானமும். 317-1

அவ் வயின், 'அயோத்தி வைகும் சனமொடும், அக்குரோணி
தவ்வல் இல் ஆறு பத்து ஆயிரமொடும், தாயரோடும்,
இவ் வயின் அடைந்துளோரைக் காண்பென்' என்று இராமன் உன்ன,
செவ்வையின் நிலத்தை வந்து சேர்ந்தது, விமானம்தானும்.
317-2

எவ் வயின் உயிர்கட்கும், இராமன் ஏறிய
செவ்விய புட்பகம் நிலத்தைச் சேர்தலும்,
அவ் அவர்க்கு அணுகிய அமரர் நாடு உய்க்கும்
எவ்வம் இல் மானம் என்று இசைக்கல் ஆயதால். 317-3

நீடு வேல் ஏற்றவற்கு இளைய நின்மலன்
வாடிய மனத்தனுய் வசிட்டன் முன் வர,
சூடிய கடி மலர் தூவி ஆர்த்தனன்;
ஏடு அவிழ் தாமரை இறைஞ்சி, எய்தினன். 329-1

ஆயிடைக் குகனும் வந்து, ஆங்கு, ஆண்டவன் அடியில் வீழ,
நாயகன் உவந்து புல்லி, 'நண்ணி, என் பின்பு வந்த
தூயனே! கிளையினோடும் சுகம் இருந்தனையோ?' என்று
வாயிடை மொழிந்தான்,—மற்றை மறைகளும் காணு அண்ணல்.
332-1

வேறு வேறு உள்ள சுற்றத்தவர்களும் வேந்தர் ஆதி
கூறிய குழுவினோரும் குழுமி, அங்கு இராமன் பாதம்,
ஊறிய உவகை தூண்ட, தொழுதனர்; உவந்த பின்பு
தேறிய கமலக்கண்ணன் திரு நகர்க்கு எழுதலுற்றான். 332-2

நம்பியும் பரதனோடு நந்தியம்பதியை நண்ணி,
'வெம்பிய எரியின் பாங்கர், விலக்குவென்' என்று விம்மும்
கொம்பு இயல் மருங்குல் தெய்வக் கோசலை குளிர் பொன் பாதம்
தம்பியரோடும் தாழ்ந்தான், தாமரைக் கண்ணீர் தாழ.
332-3

மூன்று என நின்ற தன்மைக் குணங்களின் உயிர்கட்கு எல்லாம்
சான்று என நின்ற மானச் சிறுவனைத் தலைப்பட்டாட்குத்
தோன்றிய உவகைக்கு ஆங்கு ஓர் எல்லையும் சொல்லற்பாற்றோ?
ஈன்ற போது ஒத்தது அன்றே, எதிர்ந்த போது ஒத்த தன்மை!
332-4

இணை மலர்த் தாளின் வீழ்ந்த இலக்குவன்தன்னை ஏந்தி,
பணை முலைப் பாலும் கண்ணீர்த் தாரையும் பாய, நின்றாள்;
பிணை எனத்தகைய நோக்கின் சீதையை, பேடை அன்னத்
துணையினை, உலகில் கற்பின் பெருங் கதித் துறையை, கண்டாள்.
332-5

நான்முகன் தாதைதான் தன் மகன் என்று நல்கி, விம்மி,
பால் முலை சோர நின்ற பல் பெருந் தவத்தினாளை,
கால்முதல் தொழுது, தங்கள் கட்டு இரும் பாவம் விட்டார்,
மான் முயல் உருவத்தோடும் தோன்றிய வானோர் எல்லாம்.
332-6

அவ் வயின் விமானம் தாவி, அந்தரத்து, அயோத்தி நோக்கி,
செவ்வையின் படரல் உற்ற, செகதல மடந்தையோடும்;
இவ் உலகத்து உளோர்கள் இந்திரர் உலகு காண்பான்,
கவ்வையின் ஏகுகின்ற நீர்மையைக் கடுக்கும் அன்றே. 332-7

வளம் கெழு கயிலை ஈசன், மலர் அயன், மறைகள் நான்கும்,
ஒழுங்கு உறும் அமரர் ஆதி உயிர்களும் உணர்தற்கு எட்டா
விளங்கு தத்துவங்கள் மூன்றும் கடந்து உயர் வெளிப் பாழ் மேலாய்,
விளங்குறும் நேமிப் புத்தேள் மேவும் மா அயோத்தி கண்டார்.
332-8

விளங்கிய புட்பகம் நிலத்தின்மீது உற,
தொழும் தகை அமரர்கள் துள்ளி ஆர்த்திட,
களங்கனி அனைய அக் கண்ணன் மாதொடும்
விளங்கினன் நகரிடை, விளைவு கூரவே. 332-9

புகுந்தனர் நகரிடை—பொங்கும் ஓகையின்
மிகுந்துள கவிப் பெருங் கடலும், மேதகு
மகம் பயில் முனிவனும், மற்று உளோர்களும்,
அகம்தனில் அருங் களிப்பு எழுந்து துள்ளவே. 332-10

நம்பியும் வசிட்டன் கூற, நந்தியம்பதியில் சென்று,
வம்பு இயல் சடையும் மாற்றி, மயிர் வினை முற்றி, மாதோடு
இம்பரின் எவரும் ஏத்த ஈர்ம் புனல் படிந்த பின்னர்,
உம்பரும் உவகை கூர, ஒப்பனை ஒப்பம் செய்தார். 332-11

உயிர் வரும் உலவை அன்ன பரதனை இளவலோடும்
மயிர் வினை செய்வித்து, ஆங்கே மாசு அற மண்ணில் தாழும்
செயிர் அறு சடிலக் கற்றைத் திரள் அறக் களைந்து நீக்கி,
குயில்புரைமொழியர் ஆவிகொள்வது ஓர்கோலம் கொண்டார். 332-12

## 38 திருமுடி சூட்டு படலம்

எழு வகை முனிவரோடும், எண் திசைத் திசைகாப்பாளர்
குழுவினர், திசைகள்தோறும் குழாம் கொண்டு களித்துக் கூடி,
தொழுவன அமரர் கைகள் சுமக்கலாம் விசும்பில் துன்னி,
வழுவல் இல் மலர்கள் சிந்தி, மானிடம் சுருங்கச் சார்ந்தார்.
6-1

ஆயது நிகழ, செங் கண் இராமனும் அயோத்தி நண்ணி,
தாயரை வணங்கி, தங்கள் இறையொடு முனியைத் தாழ்ந்து,
நாயகக் கோயில் எய்தி, நானிலக் கிழத்தியோடும்
சேயொளிக் கமலத்தாளும் திரு நடம் செய்யக் கண்டான். 8-1

உம்பரும் உலகும் உய்ய உதித்திடும் ஒருவன்தானே
செம் பதுமத்தில் வாழும் செல்வி சானகியாம் மாதும்,
தம்பியர்தாமும், மற்றும் தாபதர் சங்கத்தோடும்,
அம் புவிதன்னில் மேலாம் அயோத்தியில், அமர்ந்தான் அம்மா. 8-2

இருபத்து ஏழ் அமைந்த கோடி யானைமேல் வரிசைக்கு ஏற்ற
திரு ஒத்த சிறப்பர் ஆகி, மானிடச் செவ்வி வீரர்
உருவத் தோள் ஒளிரும் பூணர், உச்சி வெண் குடையர், பச்சை
மரு ஒத்த அலங்கல் மார்பர், வானரத் தலைவர் போனர். 11-1

கயிலையில் வாழும் ஈசன் முதலிய கடவுளோர் தம்
அயில் விழி அரிவைமாரோடு அந்தரம் புகுந்து மொய்த்தார்,
குயில் மொழிச் சீதை கொண்கன் நிலமகள்தன்னைக் கொள்ளும்
இயல்புடை வதுவை காணும் ஆதரம் இதயத்து எய்த. 26-1

வேறு இனி உரைப்பது என்னே? வியன் தருக் குலங்கள் ஆதி
கூறிய பொருள்கள் எல்லாம் கொற்றவன் வதுவை காண,
தேறு தம் உருவு நீத்து, மானிட உருவில் சேர்ந்து, ஆங்கு
ஊறிய உவகையோடும் அயோத்தி வந்து உற்ற அன்றே. 26-2

தேவர் கம்மியன்தான் செய்த செழு மணி மாட கோடி
யாவரும் புகுந்து மொய்த்தார்; எழுந்த மங்கலத்தின் ஓசை
நா வரும் பனுவல் வீணை நாரதன் முதலாய் உள்ள
மேவரு முனிவர் எல்லாம் விதிமுறை வேள்வி கொண்டார். 29-1

அந்தணர், வணிகர், வேளாண் மரபினோர், ஆலி நாட்டுச்
சந்து அணி புயத்து வள்ளல் சடையனே அனைய சான்றோர்,
'உய்ந்தனம் அடியம்' என்னும் உவகையின் உவரி நாண
வந்தனர், இராமன் கோயில் மங்கலத்து உரிமை மாக்கள். 32-1

'வான் உறு முகுர்த்தம் வந்தது' என்று மா மறைகள் நான்கும்
தான் உருக் கொண்டு போற்ற, சலம் தவிர்ந்து அமரர் ஏத்தி,
தேன் உறு மலர்கள் சிந்தி, திசைமுகம் பரவ, தெய்வ
வான் உறை மகளிர் ஆட, மா தவர் மகிழ்ந்து வாழ்த்த. 37-1

இப்படித் தழுவி, மாதர் இருவரும், இரண்டு பாலும்,
செப்புறல் அரிய இன்பச் செல்வத்துள் செலுத்தும் நாளில்,
கப்புடைச் சிரத்தோன் சென்னி கடிந்த வில் இராமன், காதல்
வைப்புடை வளாகம்தன்னில், மன்னுயிர் வாழ்த்த, வந்தான். 41-1

மறையவர் வாழி! வேத மனுநெறி வாழி! நன்னூல்
முறை செயும் அரசர், திங்கள் மும் மழை, வாழி! மெய்ம்மை
இறையவன் இராமன் வாழி! இக் கதை கேட்போர் வாழி!
அறை புகழ்ச் சடையன் வாழி! அரும் புகழ் அனுமன் வாழி! 42-1

39 விடை கொடுத்த படலம்

கெவனொடு கெவாக்கன், தூம்பன், கேசரி, கெந்தமாதன்,
தவன் உறு சரபன், சாம்பன், சுடேணன், சம்பாதி, நீலன்,
நவை அறு பனசன், தாரன், கெசன், நளன், சமீரன், நண்பாம்
இவன் அரிலோமன், மின்போல் எயிற்றினன், இடபன் என்பான்.
7-1

விரதன், வீமாக்கன், வேகதரிசியே, விந்தன், வெற்றிக்
கரமுடைச் சதுக்கன், சோதிமுகன், ததிமுகன், கயந்தன்,
அரன், விறல் கொடிய கோபன், இடும்பனோடு அரம்பன், ஆண்மை
தெரிதரு வசந்தன், கொற்றத் துன்முகன், தீர்க்கபாதன். 7-2

வான் வளம் சுரக்க; நீதி மனு நெறி முறையே என்றும்
தான் வளர்ந்திடுக; நல்லோர்தம் கிளை தழைத்து வாழ்க;
தேன் வழங்கு அமுத மாலைத் தெசரத ராமன் செய்கை
யான் அளந்து அறைந்த பாடல் இடைவிடாது ஒளிர்க, எங்கும்.
37-1

எறி கடல் ஞாலம்தன்னுள் இன் தமிழ்ப் புலவர்க்கு எல்லாம்
முறுவலுக்கு உரியவாக முயன்றனம் இயன்ற எம் சொல்,
சிறுமையே நோக்கார், தங்கள் பெருமையே சிந்தை செய்யும்
அறிவுடை மாந்தர்க்கு எல்லாம் அடைக்கலம் ஆக வாழி.
37-2

வாழிய, சீர் இராமன்! வாழிய, சீதை கோமான்!
வாழிய, கௌசலேசை மணி வயிற்று உதித்த வள்ளல்!
வாழிய, வாலி மார்பும் மராமரம் ஏழும் சாய,
வாழிய கணை ஒன்று ஏவும் தசரதன் மதலை வாழி! 37-3

இராவணன்தன்னை வீட்டி, இராமனாய் வந்து தோன்றி,
தராதலம் முழுதும் காத்து, தம்பியும் தானும் ஆகப்
பராபரம் ஆகி நின்ற பண்பினைப் பகருவார்கள்
நராபதி ஆகி, பின்னும் நமனையும் வெல்லுவாரே. 37-4

# படல அகராதி



*காண்டம்: 1. பால காண்டம்; 2. அயோத்தியா காண்டம்; 3. ஆரணிய காண்டம்; 4. கிட்கிந்தா காண்டம்; 5. சுந்தர காண்டம்; 6. யுத்த காண்டம்.

# பாடல் முதற்குறிப்பு அகராதி



குறிப்பு:—எண்கள் பக்கங்களைக் குறிக்கும்.

## ஆ

## இ

### கா

## கோ

## ச

## சா



## சி

## சே

## சை



## சொ

## தா

தி

## தீ

## து

## நீ

## பெ

## போ

## மா

மூ

### மெ



### மே

## மை



## மொ



## மோ



## யா

## யோ



## வ

## வி

## வெ

## வே

## வை